# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

இரண்டாம் மடலம் - முதற்பாகம்
VOL. II - PART I


சு. இராமகிருட்டிணன், இ.ஆ.ப.
இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)

முனைவர் இரா. மதிவாணன்
முதன்மைப்பதிப்பாசிரியர்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட
இயக்கக வெளியீடு

2000

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

## இரண்டாம் மடலம் – முதற் பாகம்

## (க)

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

## VOLUME II - PART I


**சு. இராமகிருட்டிணன்,** இ.ஆ.ப
இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)

முனைவர் **இரா. மதிவாணன்**
முதன்மைப்பதிப்பாசிரியர்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்திற்காக அச்சடிப்பு:
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், தரமணி, சென்னை – **600 113.**

செ.சொ.பி. அகரமுதலித்திட்ட இயக்கக வெளியீடு-4
முதற்பதிப்பு : சுறவம் (தை); தி.பி. ௨௦௩௧; சனவரி 200[illegible]



**A Comprehensive Etymological Dictionary of the Tamil Language, Vol. II, Part-I**

## விலை உருபா 300.00

குறியீட்டெண்: Colon No. P.J1-J, 314" K.M4

**Published by:**
Directorate of Tamil Etymological
Dictionary Project,
Govt. Museum Campus,
Egmore, Chennai - 600 008.

**Copies available at:**
International Institute of Tamil Studies
Tharamani,
Chennai - 600 113.

**Type Setting by:**
Gayathri Printers
177, Triplicane High Road, Chennai - 600 005.

**Printed at:**
Royapettai Stationery and Printing and Allied Products Producers
Industrial Co-op. Society Ltd.,
Royapettai, Chennai - 600 014.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல்
அகரமுதலித் திட்ட இயக்ககத்தை உருவாக்கிய
மாண்புமிகு தமிழக முதலமைச்சர்

'முத்தமிழறிஞர்'

# கலைஞர் மு. கருணாநிதி



அகழ்ந்தாய்வுச் சொற்பிறப்பு செந்தமிழ்க்கு நல்கி
புகழார்ந்த பாவாணர் வேர்ச்சொல் நெறிகளிலே
ஏர்பூட்டிப் பன்மடல நல்விளைச்சல் காண்கலைஞர்
பேர்வாழ்த்தி நன்றி சொல்வாம்

வள்ளுவர்க்கு வான்முட்டும் கற்படிமம்! கூன்விழுந்த
உள்ளக் குலச்சண்டை தீர்சமனூர் - பார்வியக்க
எண்ணில செய்து தமிழினத்தை மேலுயர்த்தும்
ஒண்கலைஞர்க் கிந்நூல் படைப்பு

**மு. கருணாநிதி**
முதலமைச்சர்




தலைமைச் செயலகம்
சென்னை – 600 009.
நாள் : 7 . 1 . 2000

# அணிந்துரை

அய்யன் திருவள்ளுவருக்குக் குமரிமுனையில் சிலை எடுக்கப்படுமென 1975 டிசம்பர் 31 அன்று அறிவிக்கப்பட்ட பணி, தமிழகத்தில் பிற அரசு காலங்களில் இடையிடையே தடைபட்டு, கழக அரசு அமைந்த காலங்களில்மட்டுமே விரைவுபடுத்தப்பட்டு கடந்த 1.1.2000 அன்று நிறைவேற்றி முடிக்கப்பட்டுத் திறந்து வைக்கப்பட்டுள்ளது என்பதனை நாடும் மக்களும் நன்கறிவார்கள். அதுபோலவே கழக அரசு அமையும் காலங்களில் மட்டுமே கவனம் பெற்றுவரும் மற்றொரு மகத்தான பணி "செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகர முதலி" யை உருவாக்கிடும் பெருமைக்குரிய பணி.

"செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி" ஒன்றை உருவாக்கிடத் திட்டமிட்டு, அதன்பொருட்டு, 8.5.1974 அன்று, அன்றைய கழக அரசு புதிய இயக்ககம் ஒன்றைத் தோற்றுவித்தது. தமிழ்மொழியின் செம்மையையும், செழுமையையும், விரிவையும் வெளிப்படுத்திடும் சீரிய சிந்தனையுடன் சொல்லாராய்ச்சிப் பணிகளில் பல ஆண்டுகளாக ஈடுபட்டிருந்த மொழிஞாயிறு ஞா. தேவநேயப் பாவாணர் அவர்களை அதன் இயக்குநராகவும் அமர்த்தி, இவ்வரும்பணியை அன்னாரிடம் ஒப்படைத்தது. அவர் இப்பணியைத் தம் வாழ்வின் மிக உயரியதாகக் கருதி, அதனைச் செம்மையாக நிறைவேற்றிட உறுதிபூண்டு ஊக்கமுடன் ஈடுபட்டார்.

இந்த அகர முதலி 12 மடலங்களாகவும், அவற்றுள் அடங்கிய 31 தொகுதிகளாகவும் வெளியிடத் திட்டமிடப்பட்டு நூல் தயாரிக்கும் பணிகள் நடைபெற்றன. 1976 சனவரி 31 அன்று அன்றைய கழக அரசு கலைக்கப்பட்டபின் இத்திட்டத்தில் தொய்வு ஏற்பட்டது. எனினும், முதல் மடலத்தின் முதல்பாகம் 1985இல் வெளியிடப்பட்டது. தொடர் பணிகள் நின்றன. 1989இல் கழக அரசு மீண்டும் அமைந்தபின் இப்பணிகளுக்கு அளிக்கப்பட்ட ஊக்கம் காரணமாக முதல் மடலத்தின் இரண்டாம் பாகம் தயாரிக்கப்பட்டு, அச்சுப்பணிகள் நடைபெற்றுவந்த வேளையில் கழக அரசு 1991 சனவரி 31இல் மீண்டும் கலைக்கப்பட்டது. அதன் பின்னர் அந்த இரண்டாம் பாகம் 1993இல்

வெளியிடப்பட்டது. அடுத்த நூல் பகுதிகள் தயாரிக்கப்படுவது அத்துடன் நின்றது. அடுத்து 1996இல் கழக அரசு நான்காம் முறையாக அமைந்தபின், இத்திட்டத்திற்கு அளிக்கப்படும் பேரூக்கம் காரணமாக 1997 ஆம் ஆண்டில் முதல் மடலத்தின் 3 ஆம் பாகம் சிறப்பாக வெளியிடப்பட்டது.

அதனைத் தொடர்ந்து, 2000 ஆண்டு திருவள்ளுவர் நாளில் இரண்டாம் மடலத்தின் முதல் பாகமாக இந்த நூல் வெளியிடப்படுகிறது. அடுத்து, இதன் இரண்டாம், மூன்றாம் பாகங்கள் அச்சில் உள்ளன. தொய்வின்றித் தொடர்ந்து இப்பணிகள் நடைபெற்று அனைத்து மடலங்களும், அனைத்துப் பாகங்களும் விரைவில் வெளியிடப்படுவதன் மூலம் அன்னைத் தமிழ் மொழியின் சொற்களஞ்சியச் செல்வம் முற்றாக நிரல்படுத்தப்பட்டு, இது உலகினர் அனைவர்க்கும் மிகச்சிறந்த முறையில் பயன்படும் என்பதுடன், இப்பணி உலகப் புகழை ஈட்டி, "உயர்தனிச் செம்மொழி – தமிழ்" என்பதை உலகில் நிறுவும் எனவும் உறுதியாய் எண்ணுகிறேன்.

முத்திரை பதித்திடும் இவ்வரிய பணியில் ஈடுபட்டுள்ள தமிழ் ஆட்சி மொழித் துறை அமைச்சர் உள்ளிட்ட அறிஞர் பெருமக்கள் அனைவர்க்கும் என் உளங்கனிந்த பாராட்டுகள்.

(மு. கருணாநிதி)

முனைவர் **மு. தமிழ்க்குடிமகன்,**
எம்.ஏ., பி.எச்.டி.,
தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப் பண்பாடு,
இந்து சமயம் மற்றும்
அறநிலையத் துறை அமைச்சர்



தலைமைச் செயலகம்,
சென்னை – 600 009.

நாள் : 9 . 1 . 2000
தி.பி. 2030 சிலை, (மார்கழி) 25.

# அணிந்துரை

1967–ஆம் ஆண்டு மொழியறிஞர் ஞா. தேவநேயப் பாவாணரின் மணிவிழா நடைபெற்றபோது நம் தமிழக முதல்வர் **கலைஞர்** அவர்கள் பாவாணரை வாழ்த்தினார். 1968–இல் நடைபெற்ற உலகத் தமிழ் மாநாட்டில் பாவாணர் **அறிஞர் அண்ணா** அவர்களால் சிறப்பிக்கப்பட்டார்.

பாவாணரது புலமைத் திறத்தினையும் அவரால் அடிக்கடி வலியுறுத்தப்பட்டு வந்த சொற்பிறப்பியல் அகரமுதலியின் சிறப்பையும் உணர்ந்த இன்றைய முதல்வர் முத்தமிழறிஞர் கலைஞர் அவர்கள் 1974–ஆம் ஆண்டில் (8.5.1974) செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தை நிறுவி, அதற்குப் பாவாணர் அவர்களையே இயக்குநராகவும் ஆக்கினார். 25 ஆண்டுகள் ஓடிவிட்டன. இதற்கிடையில் 1985–இல் 'அ' என்பதில் தொடங்கி 'அனோபகம்' (பேய்த்தேற்றா எனும் பெயர்) என்பதனுடன் கூடிய முதல் தொகுதி வெளிவந்தது.

இரண்டாவது, மூன்றாவது தொகுதிகட்குப்பின் இப்போது நான்காம் தொகுதி வந்துள்ளது. இதன் தொடர்ச்சி மிக விரைவில் வருவதற்கேற்ப, துறையில் கணினிகள் அமைக்கப்பட்டுள்ளன.

ஆங்கிலத்தில் உள்ள சொற்பிறப்பியல் அகரமுதலிகள் சொற்பொருள் விளக்கி, இனச்சொற்கள் மூலத்தோடு காட்டும். அதற்குமேல் சொல் வரலாற்றை விரிவாகத் தருவதில்லை. காரணம் அதற்கு அங்கு இடமில்லை. ஆனால் சொற்பிறப்பியல் வரலாற்றை விரிவாக வரைந்திடத் தமிழ் மிக விரிவான வாய்ப்பைத் தருகிறது. இந்தச் சொற்பிறப்பியல் அகரமுதலியின் பயன் குறித்துப் பாவாணர் அவர்கள் பின்வருமாறு தெரிவித்துள்ளார்:–

"போர் வீரனுக்குச் செவ்விய படைக்கலங்கள் வெற்றிக்குத் துணைபுரிவது போலப் பல்வேறு துறைகளில் அறிவை வளர்த்துக்கொள்ள விழையும் அம்மொழியினர்க்கும் அம்மொழியில்

அவ்வத்துறைத் தொடர்பான கலைச்சொற்கள் பெரிதும் துணைநிற்கும். தக்க சொல்வளம் தாய்மொழியில் கிட்டாதவிடத்து வேற்றுமொழியையே தம் அறிவு வளர்ச்சிக்குத் துணைகொள்ள நேரும்; தாய்மொழியின்பால் பற்றுக் குறைபடும். நல்ல அகரமுதலி மக்களைச் செவ்விய மொழிப் பாங்குடையவராக மாற்றும்.

தாய்மொழியே கல்வி வாயிலாக அமையும் நிலையில் தாய்மொழியின் வெற்றிக்கும் பற்றுக்கும், தாய்மொழியில் ஊற்றாய்ப் பெருகும் சொல்வளம் மிகவும் இன்றியமையாதது. அத்தகு சொல்வளக் களஞ்சியமாக அகரமுதலிகள் விளங்கும்.''

தேவநேயப் பாவாணர் அவர்களின் சொல்லாராய்ச்சித் திறனை நேரில் கண்டவர்களில் நானும் ஒருவன். அரிசி எப்படி rize ஆகிறது, பின் 'rice' ஆகிறது என்பதை அவர் சான்றுகளுடன் விளக்கும்போது வியக்காமல் இருக்கமுடியாது. எமனோ, பர்ரோ போன்றவர்களை மேற்கோள் காட்டி, திருந்திய திராவிட மொழிகளில் உள்ள மூலம் காட்டி, உலகியல் வழக்கில் உள்ள சொல்லுடன் பொருத்திக் காட்டி அவர் கூறும் விளக்கம் அவரது பேராற்றலை மட்டுமின்றி, தமிழ்ச் சொல்வளத்தையும், அதன் ஆழத்தையும் உலகுக்கு உணர்த்துவதாக அமையும்.

'கடை' எனும் தலைப்புச் சொல்லை விரிவாக்கும்போது 'கடைக்கண்' கூட்டுச்சொல்லாகவும், 'கடைக்கணித்தல்' கூட்டுத் திரிசொல்லாகவும், கடைக்கண் சாத்துதல் – தொடர்ச்சொல்லாகவும் 'கடைசி' என்பது திரிசொல்லாகவும் வரும் என்று காட்டும் வல்லமை படைத்தவர் பாவாணர். இத்தனை மடலங்கள் அடுத்தடுத்து வரும்போது இருந்து பார்த்து மகிழ முடியாமற் போயிற்று அவரால். எனினும் உயர்ந்தோர் தோற்றுவித்த அறக்கொடைகளை மரபுரிமையினர் பொறுப்புடன் தொடர்ந்து நடத்தி வருவதுபோல, இந்தச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டத்தையும் இன்று தொய்வின்றிக் காத்து வருகிறது கழக அரசு. அதிலும் 1974–இல் இயக்ககத்தைத் தோற்றுவித்த, பாவாணர்க்குப் பொறுப்பினை அளித்த மாண்புமிகு கலைஞர் அவர்களே இன்றும் முதல்வராக இருந்து அணிந்துரை வழங்கியிருக்கிறார் என்றால் இதைவிடப் பாவாணர்க்கு வேறு என்ன பெருமை வேண்டும்?

வெகு விரைவில் – ஓராண்டுக்குள் அடுத்த தொகுதியையும் வெளியிட்டு விடுவோம் என்ற நம்பிக்கையுடன் என்னை இப்பணிக்கு ஆளாக்கிய முதல்வர் கலைஞர் அவர்களுக்கு நெஞ்சார்ந்த நன்றியினைப் புலப்படுத்திக்கொள்கிறேன். அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் பணியாற்றும் அனைவரும் ஒரு மாபெருஞ் செயலுக்குத் தங்களை ஒப்புக் கொடுத்துள்ளோம் எனும் உணர்வுடன் செயலாற்றுமாறு கேட்டுக்கொள்கிறேன்.

சொன்மூலம் மட்டுமே காண்பதும் – பிற நூல்களில் காணப்பட்டாலன்றித் தாமே துணியாமையும் மேனாட்டார் முறை. ஆனால் பாவாணரோ சொல் மூலத்துடன் வேருக்கு வேர் காணும் திறனும், அதன் வாயிலாக ஒரு சொல் எம்மொழிக்குரியது என்று கண்டறியும் துணிவும் படைத்தவர்.

அவரது வழியில் வந்த ஆய்வாளர்களும் அவரையொட்டியே இந்த நூலைப் படைத்திருப்பது பாராட்டுக்குரியது.

சிற்றூரில் உள்ள மக்களோடு சேர்ந்து பழகுபவர்களுக்குப் பல சொற்கள் தெரியும்; பொழுது புலரும் முன்னே எழுந்திருப்பவனிடம் 'என்னப்பா விடியற் கருக்கலிலேயே எழுந்துவிட்டாய்' என்று கேட்பார்கள். கதிர் அடிக்கும் களத்துக்குச் செல்பவர்கள் பதராக விழும் 'கருக்காயை'ப் பார்ப்பார்கள்.

இவற்றைக் குளிர்பதன அறைக்குள் இருந்துகொண்டு ஆராய்ந்துவிட முடியாது.

இந்த நூலை உருவாக்கியோர் எந்த அளவுக்கு ஆழ்ந்து ஆய்வு செய்துள்ளனர் என்பதற்கு ஓர் எடுத்துக்காட்டைக் காட்டலாம்.

பக்கம் : **426**

**கருக்கல்** *karukkal*, பெ. (n.) **1.** காரிருள்; darkness. அமாவாசைக் கருக்கல் (வின்.). 2. மங்கலிருட்டு; twilight. விடியற்காலைக் கருக்கிருட்டு (மு.தா.180). **3.** காலையில் பொழுது விடியும் முன் உள்ள மெல்லிருட்டு; pre-dawn darkness. 4. வானத்தில் முகில் படிதல்; cloudiness. வானம் கருக்கலிட்டிருக்கிறது (உ.வ.). 5. காய்ந்த பயிர் (யாழ்ப்.); sunburnt paddy crop. 6. ***கருக்கல்நெல்*** (வின்.) பார்க்க; see *karukkal-nel.*

**ம.** கருக்கல்; **தெ.** கனுமப்பு.

*[கர்→ கரு →கருத்தல் = கருப்பாதல். கரு→ கருகு = நிறங்கருத்தல், இருளாதல், பயிர் தீய்ந்து போதல். கருகு→கருக்கு = மருந்துச் சரக்கு; காய்ச்சிய சாறு. கருக்கு→ கருக்கல் (வே.க.122).]*

'கவை' என்ற சொல்லுக்கு மட்டும் எத்தனைப் பொருள்கள்? நமக்குத் தெரிந்தது ஒன்றிரண்டு. இந்த அகரமுதலி – பல பொருள்களை நமக்குக் கற்றுத் தருகிறது. மேனாட்டார்க்கும் பயன்படும் அளவில் ஆங்கிலத்திலும் விளக்கம் தரப்பட்டுள்ளது. இலக்கிய மேற்கோள் காட்டி, அச்சொல் எந்தப் பொருளில் ஆளப்பட்டுள்ளது என்பதும் தெளிவாக்கப்பட்டுள்ளது.

இவ்வளவு சிறப்புடைய இத்தொகுதியை வெளிக்கொணர்ந்த அனைவர்க்கும் பாராட்டுகள். அழகியதோர் அணிந்துரை தந்து எங்களை வாழ்த்தியும் வெளியிட்டும் சிறப்புச் சேர்க்க இருக்கும் மாண்புமிகு முதல்வர் அவர்கட்கு நெஞ்சார்ந்த நன்றிகள்.

கடந்த பதிப்பில் முதல்வர் அவர்கள் இப்படிக் குறிப்பிட்டார்:

"இந்தப் பணியில் ஈடுபட்டுள்ளோர் அனைவரும் இலக்கை அடைய முழுமையான ஒப்படைப்புடன் செயற்பட்டுக் கடுமையாக உழைக்க வேண்டும். ஏற்கனவே காலம் விரயமாகியிருக்கிறது என்கிற எச்சரிக்கை உணர்வை அடிக்கடி மனதில் உச்சரித்துக் கொண்டு ஒவ்வொரு நிமிடமும் அரும்பணியாற்ற வேண்டும்."

அவர் சொல்வதெல்லாம் ஆணையாக, சட்டமாக ஆகும் காலம் இது. எனவே இந்தக் கட்டளையைச் சட்டமாக எடுத்துக்கொண்டு இந்த இரண்டாயிரத்தில் மற்றொரு தொகுதியையும் கொண்டுவந்துவிட வேண்டும்.

**மு. தமிழ்க்குடிமகன்**

# வண்ணப்படங்களின் பட்டியல்

# வண்ணப்படங்களின் பட்டியல்

# வண்ணப்படங்களின் பட்டியல்

# வண்ணப்படங்களின் பட்டியல்

# வண்ணப்படங்களின் பட்டியல்

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி
# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

## க

**க்** *k.* தமிழ் நெடுங்கணக்கில் அடியண்ண எடுத்தொலிப்பு வல்லின முதல் மெய்யெழுத்து; the first consonant of the Tamil alphabet; velar, voiceless stop.

உயிரொடு புணராத தனித்தனி மெய்யெழுத்துகள், புறத்தே ஓசை புலப்பட ஒலித்தற்கரியனவாதலின், உயிரொடு புணர்த்து க,ங,ச,ஞ என அவற்றை உயிர்மெய்களாக எழுதுவதும், ஓதுவதும் மரபாயிற்று. தனித்து ஒலிக்க நேரின் முன்னால் இகரம் சேர்த்து 'இக்' (இகரம் எழுதப்படுவதில்லை) என ஒலிப்பது மரபு. தனி மெய்யெழுத்துகளாக *(open syllable)* இவை எழுதப்படுவது முதலெழுத்துகளின் வரையறை நோக்கம் கருதியது. தமிழின் பண்டைய நெடுங்கணக்கு முறை அசையெழுத்து *(closed syllable)* அல்லது கூட்டெழுத்து வகைமையைச் சார்ந்தது. ஆதலால் நெடுங்கணக்கு பயிற்றிய தமிழிலக்கண ஆசிரியர் தம் மாணாக்கர்க்கு உயிர்மெய் எழுத்துகளை அசையெழுத்துகளாகப் பயிற்றி வந்துள்ளனர்.

இத்தகு தமிழிலக்கண மரபின் தாக்கம் வடபுலமொழிகளில் புகுந்ததால் 'கலம்' என்னும் சொல்லைக் 'கலம' என உயிர்மெய்யாக எழுதி வேண்டுமிடத்தில் வேண்டிய எழுத்தை மெய் யெழுத்தாகப் (கலம-கலம்) படிக்கும் இயல்பை அவர்கள் வளர்த்துக்கொண்டனர்.

இத்தகு குழப்பம் ஏற்படாமல் தவிர்க்க நம் முன்னோர் முன்னுணர்ந்து தமிழ் நெடுங்கணக்கைத் தெளிவும், திட்பமும் வாய்ந்ததாக ஆக்கும் பொருட்டு உயிர்மெய் வாய்பாட்டு நிரலின் ஈற்றில் புள்ளிபெற்ற மெய்யெழுத்துகளை இடம்பெறச் செய்துள்ளனர். இதன் நோக்கம் புள்ளிபெற்ற மெய்யெழுத்துகள் மொழி முதலில் வாரா என்பதையும், வல்லின மெய் யெழுத்துகள் புள்ளி பெற்ற வடிவில் சொல்லீறாக நில்லா என்பதையும் தெளிவுபடுத்துவதற்கே எனலாம்.

இடைக்காலத்தில் ஓலைச் சுவடிகளில் மெய்யெழுத்துகள் புள்ளியில்லாமல் எழுதப்பட்டன; எனினும் புள்ளிகளை உய்த்துணர்ந்து கொண்டு எளிதில் படித்தனர். இது தமிழின் தொன்மரபன்று; சமணத் தாக்கத்தால் ஊடாடிய புத்தாக்கம். குற்றியலுகரம் கூடப் புள்ளிபெறுவதைத் தெளிவாக வரையறுத்த மரபிலக்கண வல்லார் உயிர்மெய்க்கும், மெய்க்கும் வேறுபாடு காட்டாது இரார் என்பது ஒருதலை. "மெய்யீ றெல்லாம் புள்ளியொடு நிலையல்" என்னும் தொல்காப்பிய நூற்பாவே இக் கருத்தை வலியுறுத்தும்.

**ககரத்தின் வரிவடிவ வளர்ச்சி**

கி.பி. 3 ஆம் நூற்றாண்டு அரச்சலூர்க் கல்வெட்டில் தமிழி வரிவடிவமே உள்ளது. நடுவிலுள்ள நேர் கோட்டைப் பொறுத்தவரையில் இவ் வுருவம் கி.பி. 12ஆம் நூற்றாண்டு வரை மாறவில்லை. --- +

கி.பி. 8ஆம் நூற்றாண்டைச் சார்ந்த கூரம் செப்பேடுகளில், குறுக்குக் கோடு வளையத் தொடங்கியது. --- (symbol)

தஞ்சாவூர் இராசராசேச்சுரத்துக் கல்வெட்டுகளில் கி.பி.1010ஆம் ஆண்டு, தலைக்கட்டு உருவாகத் தொடங்கியது. --- (symbol)

இராசேந்திர சோழன் காலத்திய திருவாலங்காட்டுச் செப்பேடுகளில் தலைக்கட்டிலிருந்து இடப்புறம் கீழ் நோக்கிய கோடு தோன்றத் தொடங்கியது. கி.பி. 11ஆம் நூற்றாண்டிற்கு முன்பும் பின்பும் இவ் வுருவமே நீடித்தது. --- (symbol)

மெல்லமெல்லத் தலைக் கட்டிலிருந்து இடப்புறம் இறங்கி வந்த கோடு, நடுவில் வளைந்த குறுக்குக் கோட்டைத் தொட்டுநின்றது. இந்தக் குறுக்குக் கோடு நன்றாக வளைந்து, நடு நேர் கோட்டுக்குச் சமமான அளவில் வந்து நின்றது. இந்த வடிவம் குன்றத்தூர் இராச நாராயண சம்புவராயன் கல்வெட்டில் (கி.பி. 1343) காணப்படுகின்றது. தெற்கில் அதே காலத்தில் இரண்டாம், மூன்றாம் சடையவர்மன் சுந்தர பாண்டியனின் கல்வெட்டுகளிலும் காணப்படுகின்றது. --- (symbol)

நடுக்கோடு இறங்கி, வளைவின் இட முனையுடன் வளைந்து சேர்ந்து இன்றைய வடிவம் பெற்றது. விசயநகர அரசன் அச்சுத தேவராயனின் (கி.பி.1534) திருவரங்கக் கல்வெட்டிலும் இவ்வாறு காணப்படுகிறது. --- க

**க**[1] *ka.* வல்லின உயிர்மெய்யெழுத்து; the compound of க் + அ, secondary vowel consonantal symbol *ka.*

*[க் + அ - க]*

ககரம் மெய்முன்னாகவும், உயிர்பின்னாகவும் ஒலிக்கப்படினும், மாத்திரையளவில் மெய்யின் ஒலிப்புக் கரந்து உயிரின் ஒலிப்பளவே ஒலிப்பளவாய், ஒரு மாத்திரைக் குறிலாய் ஒலிப்பது மரபு. நீரில் கரைந்த உப்பைப்போல ஒன்றில்ஒன்று கரையும் என்பதாம். நீர் சுவையையும், உப்பு பருவடிவையும் இழப்பதைப் போலக் ககரமெய் தன் ஒலிப்பளவையும், அகரஉயிர் தன் வரிவடிவத்தையும் இழத்தலாலும், ஒலிப்பளவினாலே மட்டும் ஒரெழுத்துத் தன்னைப் புலப்படுத்திக் கொள்வதாலும், அவ்வாறு ஒலிப்பளவைப் புலப்படுத்திக்கொள்ளும் உயிரெழுத்தை முன்னிலைப் படுத்தி உயிர்மெய்யெழுத்து என இலக்கண வல்லார் குறியீடு இட்டனர் என்க. மெய்யுயிரெழுத்து என வழங்காததும் இதன்பொருட்டே எனலாம்.

**க²** *ka*, ஒன்றென்னும் எண்ணின் குறியீடு; sign in Tamil numerals indicative of figure one.

ஒன்று என்னும் எண்ணின் சொற்பொருளாகிய ஒன்றித்தல், ஒன்றாகக் கட்டப்பட்டு அல்லது குடத்தில் பெய்யப்பட்டு இருக்கும் நிலையை உணர்த்தும் பட எழுத்தின் பண்டைய எழுத்து வடிவம். ககரப் படவெழுத்தின் வரலாற்று வழிவந்த ககர எழுத்து வடிவங்களும், ஒன்று எனும் எண்ணைக் குறிப்பனவாயின. எண் குறியீடுகள் பார்க்க; see *eṇ kuṟi-y-īḍugaḷ*.

**க³** *ka*, ஏழிசைக் குறியீடுகளுள் மூன்றாவதாகிய 'கைக்கிளை'யின்(காந்தாரம்) எழுத்து; symbol representing the third note of the gamut.

**க⁴** *ka*, இடை.(part.) ஒரு வியங்கோள் ஈறு (நன்.338); verb ending of the optative, as in வாழ்க. *"வான்முகில் வழாது பெய்க"* (கந்தபு.பாயிரம். வாழ்த்து,5).

ம. க

[காண் → கா → க.]

காண் என்னும் வினை போய்க்காண், இருந்துகாண் என்றாற் போன்று ஈற்று அசைநிலையாயிற்று. பின்னர் காண் → கா → க எனக் குறைந்து வழக்கூன்றியது. உண்கா, செல்கா என்பவை உண்க, செல்க என வியங்கோள் ஈறாயின. இன்றும் வட தருமபுரி மாவட்டத்து வேளாளரும், பழந்தமிழரும் இருகா (இருங்கள்), போகா (போங்கள்), என்னகா (என்ன) எனப் பேசுதலையும், தஞ்சைக் கிளை வழக்கில் வாங்காணும், போங்காணும் எனக் காண் துணைவினையை ஏவலீற்றுச் சொல்லசையாகப் புணர்த்திப் பேசுதலையும் காணலாம்.

**க⁵** *ka*, பெ.(n.) 1. நான்முகன்; Brahma. *"கவ்வென்ப தயன்பேர்"* (காஞ்சிப்பு.தலவி.26). 2. திருமால்; Vishṇu. 3. காமன்; Kaman, God of love. 4. கதிரவன்; Sun. 5. நிலவு; Moon. 6. ஆதன்; soul.

க. க

ககரம் ஒன்று என்னும் எண்ணைக் குறித்த குறியீடாதலின் படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் முத்தொழில்களுள் முதற்றொழிலைச் செய்யும் நான்முகனை முதலாவது எண்ணாகிய ககரம் குறித்தது எனத் தொன்ம நூலார் உன்னிப்பாகக் கட்டுரைத்தனர். இது நாளடைவில் முதன்மை பெறத்தக்கனவாகக் கருதப்பட்டவற்றிற்கும் ஆளப்பட்டிருக்கலாம்.

ஆயின் முதுபண்டைக் காலத்திலிருந்து தாழி அல்லது மட்பாண்டத்தின்மீது அல்லது அடிமரம், குறுந்தறி போன்றவற்றின்மீது தாம் வழிபடும் தெய்வத்தின் குறி அல்லது உரு எழுதி வழிபடுவது மரபாதலின், ககரத்தின் வெவ்வேறு கால வரிவடிவக் குறியீடுகள் பல்வேறு தெய்வங்களைக் குறித்திருக்கலாம். இத்தகைய வழிபாட்டு முறை ஆரியர்க்கு இன்மையின் இக் குறியீட்டுக் கோலங்கள் தமிழரிடமிருந்தே ஏனையோரால் கடன் கொள்ளப் பட்டதாகல் வேண்டும்.

த. க > Skt. *ka*.

**க⁶** *ka*, பெ.(n.) அழல்; fire. *"நரகங்களிலே கவின்று"* (புலியூரந்.7).

க. க

[காய்தல் = வேதல். காய் → கா → க = தீ.

த. க > Skt. ka.]

**கஃகான்** *kakkāṉ*, பெ.(n.) ககரவெழுத்து; the letter 'ka'.

[க + கான் - கஃகான். கான் - எழுத்துச்சாரியை. இது புணருங்கால் இடையே ஆய்தந் தோன்றியது (நன்.எழுத்து.17)].

**கஃசு** *kakšu*, பெ.(n.) காற்பலம் கொண்ட நிறையளவு; a measure of 1/4 palam. *"தொடிப்புழுதி கஃசா வுணக்கின்"* (குறள்,1037). *'சர்க்கரை இருபதின் பலமும் - கண்டசர்க்கரை முக்கஃசும்'* (S.I.I.iii.2 (கல்.அக.)

க. கஃசு

[கால் + து - கால்து → கால்சு → கஃசு. கால் → கஃசு. த. கஃசு → Skt. karṣa (வ.மொ.வ.101.)]

5 மஞ்சாடி - ஒரு கழஞ்சு

2 கழஞ்சு - ஒரு கஃசு

4 கஃசு - ஒரு பலம் (ஒரு தொடி) (கணக்கதி.)

**கஃறெனல்** *kakṟeṉal*, பெ.(n.) கறுத்துள்ளமை காட்டும் குறிப்பு; an expression signifying blackness. *'கஃஃ றென்னுங் கல்லதர் அத்தம்'* (தொல். எழுத்து.40, நச்.உரை).

[கல் → கஃறு = கருமை, கருமைக்குறிப்பு. கஃறு + எனல். கல் = கருமை, இருள் (வ.மொ.வ.111)]

**கக்கக்குழி** *kakka-k-kuḻi*, பெ.(n.) கையும் தோளும் இணையுமிடத்துக் கீழ்ப்பகுதியில் அமைந்த குழி; armpit.

ம. கக்ழகுழி; க. கங்குழி, கங்குழு, கவுங்குழ், கொங்கழ், கொங்கழு, கொங்குழ்; து. கங்குள; தெ. கௌங்கிலி; பர். கவ்கொர், கவ்கொட்; பட. கக்குவ.

*[கக்கம் + குழி. கக்கம் = அக்குள்.]*

**கக்கக்கெனல்** *kakkak-k-eṉal*, பெ.(n.) 1. கோழிகள், குஞ்சுகளை அழைக்கும் ஒலிக்குறிப்பு. (வின்.); onom. expression of clucking, as fowls. 2. சிரித்தற் குறிப்பு; onom. expression meaning laughter. *"கக்கக்கென்றேநே நகைப்பார்" (பாஞ்.சப.ii.53).*

*[கெக்கெக்கெனல் → கக்கக்கெனல் (ஒலிக்குறிப்பு)]*

**கக்கக்கொடு-த்தல்** *kakka-k-koḍu-*, 4 செ.குன்றாவி.(v.t.) 1. உணவை மிதமிஞ்சி யூட்டுதல் (வின்.); to pamper, feed to surfeit, used in reproach. 2. உட்கொண்ட பொருளைக் கக்கி வெளிப்படுத்த மாற்றுப்பொருளைப் புகட்டுதல்; to feed to stimulate vomiting.

*[கக்கு → கக்க + கொடு-.]*

**கக்கசம்** *kakkašam*, பெ.(n.) 1. களைப்பு; weariness. 2. கடுமை; hardness. 3. வயிறுமுட்ட உண்பது, வேகமாக ஓடுவது போன்றவற்றால் ஏற்படும் மூச்சுத்திணறல் (கருநா.); trouble (heavy breathing, etc.) arising from an overloaded stomach or resulting from running fast.

க. கக்கச

*[கடும் + கட்டம் - கடுங்கட்டம் → கக்கட்டம் → கக்கத்தம் → கக்கச்சம் → கக்கசம் = மிகு வருத்தம் (தொ.வ.). த. கக்கத்தம் > Skt. karkaša.]*

**கக்கட்டம்** *kakkaṭṭam*, பெ.(n.) உரத்த குரற் சிரிப்பு; onom. expression signifying laugh.

*[கக்கக் கக்க (ஒலிக்குறிப்படுக்கு) → கக்கட்டம் = உரத்த குரற் சிரிப்பு. kakk, kakh, kakkh, khakkh என வடசொன் முதனிலை நால்வடிவில் உளது.]*

மா.வி. அகரமுதலியில் இச் சிறப்புப் பொருள் குறிக்கப்பெறவில்லை; சென்னை அகரமுதலியில்தான் குறிக்கப்பட்டுள்ளது. (வ.மொ.வ.101).

*த. கக்கட்டம் → Skt. kakkhaṭa.*

**கக்கட்டமிடு-தல்** *kakkaṭṭam-iḍu-*, 20 செ.கு.வி.(v.i.) குதிரை கனைப்பதுபோல் இடையிட்டுச் சிரித்தல்; onom. expression meaning to laugh loudly, as horse-neigh. *கந்தன் கக்கட்டமிட்டுச் சிரித்தான் (யாழ்ப்.).*

*[கெக்கலி → கெக்கட்டமிடு → கக்கட்டமிடு.]*

**கக்கடி** *kakkaḍi*, பெ.(n.) துத்தி (நாமதீப.); wrinkle leaved evening mallow.

*[கள் + கடி. கள் = நெருக்கம், சுருக்கம்.]*

**கக்கடை** *kakkaḍai*, பெ.(n.) ஒருவகைக் குத்துவாள்; a kind of dagger.


கக்கடை

ம. கக்கட; க. கக்கடெ, கர்கடெ; Skt. karkaša.

*[கை + கடி → கைக்கடி → கைக்கடை. கடிதல் = வெட்டுதல். கள் → கடு → கடி = வெட்டு, வெட்டும் கருவி, குத்தும் கருவி. கை = சிறிய. கைக்கடி = குத்துவாள்]*

**கக்கதண்டம்** *kakka-taṇḍam*, பெ.(n.) அக்குளில் இடுக்கி நடக்குங் கழி; crutch. முறிந்த கால் சரியாகும்வரை கக்க தண்டம் வைத்துக் கொள் (உ.வ.).


கக்கதண்டம்

*[அக்குள் → கக்குள் → கக்கம் + தண்டம். தண்டம் = கோல். தண்டு → தண்டம்.]*

*த. கக்கம் > Skt. kakṣa.*

**கக்கதாசம்** *kakka-dāšam*, பெ.(n.) தருமபுரி மாவட்டத்தில் உள்ள ஊர்; a village in Dharmapuri district.

*[கக்கன் + தாசன் - கக்கதாசன் → கக்கதாசம் (மகர மெய் ஈற்றுத் திரிபு) கக்கதாசன் என்பவனின் பெயரில் அமைந்த ஊராகலாம்.]*

**கக்கப்பாளம்** *kakka-p-pāḷam,* பெ.(n.) துறவிகள் கக்கத்திடுக்குங் கலம் அல்லது மூட்டை (வின்.); vessel or bag carried under the arm by ascetics.

*[கக்கம் + பாளம். பள்ளம் → பாளம் = உட்குழிவான ஏனம். ஒ.நோ. தாம்பாளம். கக்கம் = அக்குள்.]*

இரப்போர் அக்குளில் இடுக்கி எடுத்துச்செல்லும் உண்கலமாகிய திருவோட்டையே இச் சொல் குறித்தது. இதனை மண்டையோடு எனப் பொருள்கொள்வது பொருந்தாது.

**கக்கப்பை** *kakka-p-pai,* பெ.(n.) துறவிகள் அக்குளில் கொண்டு செல்லும் மூட்டை, பை; bag carried under the arm by ascetics and mendicants.

*[கக்கம் + பை. கக்கம் = அக்குள். முதலில் அக்குளில் இடுக்கி எடுத்துச் செல்லும் மூட்டை அல்லது சிறுபையைக் குறித்து, பின்னர்த் தோளில் தொங்கவிட்டுக் கொள்ளும் பையைக் குறித்தது.]*

**கக்கப்பொட்டணம்** *kakka-p-poṭṭaṇam,* பெ.(n.) கக்கத்தில் இடுக்கிய துணிமூட்டை (வின்.); bundle of cloth carried under the arm.

*[கக்கம் + பொட்டணம். கக்கம் = அக்குள். பொக்கணம் → பொட்டணம்.]*

**கக்கபிக்கவெனல்** *kakka-pikka-v-eṉal,* பெ.(n.) 1. மனக்குழப்பத்தால் விழித்தற்குறிப்பு; blinking in confusion. 2. உளறுதற்குறிப்பு; blabbering or talking incoherently.

*[கக்கபிக்க (ஒலிக்குறிப்பு) + எனல்.]*

**கக்கம்**[1] *kakkam,* பெ.(n.) 1. அக்குள், கமுக்கூடு; armpit, axilla. *"கட்டிச் சுருட்டித்தங் கக்கத்தில் வைப்பர்" (பட்டினத். திருப்பா. பொது.30).* 2. மறைவிடம்; lurking place. 3. இடுப்பு; waist. குழந்தையைக் கக்கத்தில் வைத்துக்கொள் (உ.வ.).

மறுவ. கமுக்கட்டு, கம்முக்கட்டு, கம்மங்கூடு, கமுக்கூடு.

ம. கக்ழம்; க. கங்குழு, கங்குள், கவுங்குள்; தெ. சங்க, கொஙகுலி; து. கங்குள; பட. கக்குவ; குவி. கக.

*[அக்குள் → கக்குள் → கக்கம் > Skt. kakṣa.]*

கக்கம் என்னும் தமிழ்ச்சொல்லே வடமொழியில் கக்ஷ ஆயிற்று. கஷ் (தேய்), கச்(ஒலி) என்பனவற்றை வடவர் மூலமாகக் காட்டுவது பொருந்தாது. மறைவிடம் என்னும் பொருளில் இருக்கு வேதத்திலும், அக்குள் என்னும் பொருளில் அதர்வண வேதத்திலும் கக்ஷ என்னும் சொல் ஆளப்பெற்றிருப்பதாக மா.வி.அகரமுதலி கூறும் (வ.மொ.வ.102). மேலையாரிய மொழிகளில் இச் சொன்மூலம் இன்மையால் வடமொழியில் மூலம் காட்டுவது சிறிதும் பொருந்தாது.

**கக்கம்**[2] *kakkam,* பெ.(n.) எண்ணெயின் அடியில் தங்கும் கசடு, கசண்டு; dregs, lees, sediment of oil.

ம. கல்கம்

த. கக்கம் > Skt. kalka

*[கரு = கருப்பு, கசடு. கரு → கருக்கு → கக்கு → கக்கம்.]*

**கக்கர்** *kakkar,* பெ.(n.) ஒரு சிற்றூர்த் தெய்வம்; name of a village deity (மதுரை).

*[கா = காத்தல். கா → காக்கன் → காக்கர் → கக்கர்.]*

**கக்கரி** *kakkari,* பெ.(n.) முள்வெள்ளரி (சூடா.); kakri-melon.

ம. கக்கரி, கக்கிரி; Pkt. kakkḍia; Ori. kākuri; H. kakrī; Guj. kākḍī; Nep. kākri; Sinh. kākira Skt. karkaṭī.

*[கள் = முள். கள் + கு - கட்கு → கக்கு = முள். கக்கு + வெள்ளரி - கக்குவெள்ளரி → கக்கரி. வெள் + அரி- வெள்ளரி = வெண்மையான வித்துகளைக் கொண்ட காய்.]*

**கக்கரிகம்** *kakkarigam,* பெ.(n.) **கக்கரி** பார்க்க; see *kakkari.*

*[கக்கரி → கக்கரிகம்.]*

**கக்கரிபிக்கரி** *kakkari-pikkari,* பெ.(n.) தெளிவின்றிப் பேசுதற் குறிப்பு; onom. expression signifying wishy-wishy talk.

க. கக்காபிக்கரி; தெ. கக்கரிபிக்கரி.

*[கக்கரி + பிக்கரி - கக்கரிபிக்கரி (எதுகை மரபிணைச் சொல்.)]*

**கக்கரியெண்ணெய்** *kakkari-y-eṇṇey,* பெ.(n.) முள்வெள்ளரி விதையினின்று எடுக்கப்படும் எண்ணெய்; oil extracted from kakkari-melon seeds.

ம. கக்கரியெண்ண

*[கக்கரி + எண்ணெய். கக்கரி = முள்வெள்ளரி]*

**கக்கரை** *kakkarai,* பெ.(n.) தஞ்சை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Thanjavur district.

*[கை = சிறுமை, கை + கரை - கைக்கரை → கக்கரை = சிறிய கரை.]*

**கக்கரைமண்** *kakkarai-maṇ,* பெ.(n.) மண்தளக் கூரைகளின் மேற்றளத்தில் பரப்பும் மண்வகை (மதுரை.); a soil used for terrace floor of mudroofed buildings.

*[களிக்கல் → கக்கல் → கக்கரை (மணல் கலந்த களிமண்) + மண்.]*

**கக்கல்**[1] *kakkal,* பெ.(n.) 1. வாயாலெடுக்கை (பிங்.); vomiting. 2. கக்கிய பொருள்; vomit, anything cast out, as from the mouth.

ம. கக்கல்; **தெ.** கக்கு; **க.** கக்கு, கழ்க்கு; **குவி.** கக்வ; **கோத.** கக்கு; **துட.** கக்.

*[கக்கு → கக்கல். கக்கு = வாயால் எடுக்கும்போது ஏற்படும் ஒலி குறிப்பால் அமைந்த வினைச்சொல்.]*

**கக்கல்**[2] *kakkal,* பெ.(n.) தெற்றிப்பேசுவோர் இடையில் எழுப்பும் ஒலிக்குறிப்பு; stammering.

ம. கக்கல்

*[கக்கு → கக்கல். கக்கு அல்லது கக்கக்கு. ஒலிக்கத் தடையாகவுள்ள எழுத்துகளுக்கு முன் எழுப்பும் ஒலிக்குறிப்பு.]*

**கக்கல்**[3] *kakkal,* தொ.பெ.(vbl.n.) 1. கழன்று வெளிவருதல்; coming out of one's position. கமலையின் சிறு கப்பி கக்கிக்கொண்டு விழுந்துவிட்டது (உ.வ.). 2. திருடுதல்; stealing.

ம. கக்குக; படு. கக்கலு.

*[கள் = களைதல், நீங்குதல், வெளிவருதல், விலகுதல். கள் → கக்கு → கக்கல். 'அல்' (தொ.பெ.ஈறு.)]*

**கக்கல்**[4] *kakkal,* பெ.(n.) 1. இருமல்; cough. 2. கக்குவான் நோய்; chin - cough or whooping cough.

*[கக்கு → கக்கல்.]*

**கக்கல்கரைசல்** *kakkal-karaišal,* பெ.(n.) 1. கலங்கல் நீர்; muddy water, as that which flows at the beginning of a flood in a river. ஆற்றுவெள்ளம் கக்கலுங் கரைசலுமாய் ஓடுகிறது (உ.வ.). 2. நீர்த்த மலம்; liquidy excrement.

*[கக்கல் + கரைசல்.]*

**கக்கல்கழிச்சல்** *kakkal-kaḻiccal,* பெ.(n.) வாயாலெடுத்தலும் வயிற்றுப்போக்கும்; vomitting and diarrhoea.

*[கக்கல் + கழிச்சல். கக்கல் = வாயாலெடுத்தல். கழிச்சல் = வயிற்றுப்போக்கு]*

**கக்கலாத்து** *kakkalāttu,* பெ.(n.) கரப்பான் பூச்சி; cockroach.

*[கருக்கல் → கக்கல். கக்கல் = கரியது. அந்து → ஆந்து → ஆத்து. கக்கல் + ஆத்து.]*

**கக்கலும்விக்கலுமாய்** *kakkal-um-vikkal-um-āy,* கு.வி.எ.(adv.) கதிர் ஈன்றதும் ஈனாததுமாய்; just half shooting forth, as grain in the ear of corn. *நெல்லெல்லாம் கக்கலும் விக்கலுமாயிருக்கிறது (வின்.).*

*[கக்கலும் + விக்கலும் + ஆய்.]*

**கக்கவை-த்தல்** *kakka-vai-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. வாயாலெடுக்கச்செய்தல்; to make vomit. 2. கடனை நெருக்கி வாங்குதல்; to press hard for the discharge of a debt; to dumb a debtor and force him to pay. அவன் தனக்குச் சேரவேண்டிய பாக்கியைக் கக்க வைத்தான் (உ.வ.). 3. கமுக்கச் செய்தியை மிரட்டிப் பெறுதல்; to extract secret information. காவலர் நெருக்கியதில் திருடன் உண்மையைக் கக்கிவிட்டான் (உ.வ.).

**க.** கக்கிசு; **து.** கக்காவுனி.

*[கக்கல் + வை. 'வை' (து.வி.)]*

**கக்கழி** *kakkaḻi,* பெ.(n.) குச்சி விளையாட்டிற்குப் பயன்படும் கழி; stick used for martial art.

*[கைக்கழி → கக்கழி (கொ.வ.). கழி = பெரும்பான்மை மூங்கிற்கழி.]*

**கக்கள்ளூர்** *kakkaḻḻūr,* பெ.(n.) இலால்குடி வட்டத்திலிருந்த பழைய ஊர்; an old place in Lalgudi taluk; *"திருத்தவத்துறை பெருமாநடிகளுக்கு கூவங்குடாங் சிங்கம் பொதுவந்தும் கக்கள்ளூர் எழினி அங்காரி நாரணியும் ஆக இருவரும்" (தெ.இ.கல்.தெ.19.கல்.270).*

*[ஒருகா. கக்கன் + அள்ளூர் → கக்கனள்ளூர் கக்கள்ளூர்.]*

**கக்கன்**[1] *kakkaṉ,* பெ.(n.) 1. பெரியவன்; a great person. 2. வலிமை சான்றவன்; able bodied man.

*[கருக்கன் → கக்கன். கரு = பெரிய, வலிமைசான்ற.]*

**கக்கன்**[2] *kakkaṉ,* பெ.(n.) 1. ஆண்பாற் பெயர்; proper name (masc.). 2. தலைவன்; lord, master.

*[கா → காக்கன் → கக்கன். கா = பெருமை, பெரியவன், தலைவன்.]*

**கக்கன்**[3] *kakkaṉ,* பெ.(n.) கரிய நிறமுடையவன்; man of black complexion.

*[கக்கு = கரிய நிறம். கக்கு + அன் (ஆ.பா.ஈறு)]*

**கக்கன்**[4] *kakkaṉ,* பெ.(n.) திக்கிப் பேசுபவன்; a stammerer (சேரநா.).

ம. கக்கன்

*[கக்கு*[2] *+ அன் (ஆ.பா.ஈறு)]*

**கக்கனூர்** *kakkaṉūr,* பெ.(n.) விழுப்புரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Villuppuram district.

*[கக்கன் + ஊர் - கக்கனூர். கக்கன் பெயரில் அமைந்த ஊர்.]*

**கக்கா** *kakkā,* பெ.(n.) 1. அழுக்கு; dirt. 2. மலம்; faeces.

*[கள் + கு - கக்கு → கக்கா. கள் = நீங்கல், வெளிவரல்.]*

**கக்காட்சேரி** *kakkāṭ-cēri,* பெ.(n.) கன்னியாக்குமரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kaṉṉiyā-k-kumari district.

*[கல் + காடு + சேரி - கற்காட்டுச்சேரி → கக்காட்சேரி (கொ.வ.).]*

**கக்காட்டூர்** *kakkāṭṭūr,* பெ.(n.) கன்னியாக்குமரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kaṉṉiyā-k-kumar district.

*[கல் + காடு + ஊர் - கற்காட்டூர் → கக்காட்டூர்.]*

**கக்கார்** *kakkār,* பெ.(n.) தித்திப்பு மாங்காய்; sweet mango (சா.அக.).

*[கரு = பெரியது, நல்லது, இனியது. கருக்கல் → கருக்கர் → கருக்கார் → கக்கார்.]*

**கக்காரக்கோட்டை** *kakkāra-k-kōṭṭai,* பெ.(n.) தஞ்சை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Thanjavur district.

*[கை + கரை - கைக்கரை → கக்கரை + கோட்டை - கக்கரைக்கோட்டை → கக்கராக்கோட்டை. கக்கரை பார்க்க; see kakkarai.]*

**கக்கி** *kakki,* பெ.(n.) பெண்பாற்பெயர்; proper name (feminine).

பட. கக்கி (ஆண்பாற் பெயர்)

*[கக்கு + இ - கக்கி. கக்கன் (ஆ.பா.) > கக்கி (பெ.பா.)]*

இ - பெண்பால் ஈறாக வரும்போது பெண்பாற் பெயரையும், பண்புப்பெயர் ஈறாக வரும்போது ஆண்பாற் பெயர் உள்ளிட்ட அனைத்தையும் குறிக்கும். இவ் வடிப்படையில் இஃது, ஆண்பால் பெண்பாற் பெயர்களாகப் பிற திராவிட மொழிகளிலும், பெண்பாற் பெயராகத் தமிழிலும் வழக்கூன்றியுள்ளது.

**கக்கிக்கொடு-த்தல்** *kakki-k-koḍu-,* 4 செ.குன்றாவி. (v.t.) பறவை தன் வாயிற் கொண்டதைத் தன் குஞ்சுகளுக்கு ஊட்டுதல்; to feed from its own mouth, as a bird to its young ones. காகம் தன் குஞ்சுக்குக் கக்கிக் கொடுக்கிறது (உ.வ.).

*[கக்கு → கக்கி + கொடு.]*

**கக்கிசம்** *kakkišam,* பெ.(n.) **கக்கசம்** பார்க்க: see *kakkašam.*

*[கக்கசம் → கக்கிசம்.]*

**கக்கு**[1]**-தல்** *kakku-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. வாயா லெடுத்தல்; to vomit, spew from the stomach. 2. வெளிப்படுத்துதல்; to eject, as a snake its poison. *"புனல்பகுவாயிற் கக்க" (கம்பரா.யுத்த. இரணி.89).*

ம. கக்குக; **குவி.** கக்வி; **க.** கக்கு, கழ்க்கு; **கோத.** கக்; துட. கக்; குட. கக்க; **து.** கக்குனி; **தெ.** கக்கு, க்ராயு, க்ரக்கு; **கோண.** கக்கானா; **பிரா.** கழ்ழ்ங்க்; பட. கக்கு.

*[கள் + கு - கக்கு (நீக்கு).]*

**கக்கு**[2]**-தல்** *kakku-,* 5 செ.கு.வி.(v.i.) 1. ஆணி முதலியன பதியாமல் எதிரெழுதல் (வின்.); to skip with a rebound, fly back, recoil, as a nail. வயிர மேறிய மரத்தில் அடிக்கும் ஆணி கக்குகிறது (உ.வ.).

2. ஆறு முதலியன பெருக்கெடுத்தல்; to overflow, as a river. ஆற்றில் வெள்ளம் கக்கிப்பாய்கிறது (உ.வ.). 3. கதிரீனுதல் (வின்.); to shoot out as ears of corn. நெற்பயிர் கதிர் கக்கும் பருவம். 4. மருந்துச் சாறமிறங்குதல்; to yield the essence, as drugs put in boiling water. 5. தோலி லிருந்து எண்ணெய் முதலியன கசிதல்; to ooze out, as oil through the pores of the skin.

ம. கக்குக; **க.** கக்கு; **து.** கக்கு; **பிரா.** கழிழ்ங்; பட. கக்கு.

*[கள் → கக்கு (கள் - நீக்கல் கருத்து வேர்) ஒ.நோ. வெள் → வெஃகு.]*

**கக்கு[3]-தல்** *kakku-,* 5 செ.கு.வி.(v.i.) 1. திரிபு பெறல்; to change from the normal position. 2. விலகுதல்; withdraw. 3. திக்குதல்; stammering.

*[கள் + கு - கக்கு.]*

**கக்கு[4]-தல்** *kakku-,* 5 செ.கு.வி.(v.i.) இருமுதல்; to cough.

**கோத.** கக்கு; பட. கக்கு (இருமச் செய்யும் நெடி).

*[கள் + கு - கஃகு → கக்கு. கஃகு - ஒலிக்குறிப்பு.]*

**கக்கு[5]** *kakku,* பெ.(n.) கக்குவான்; whooping cough. *"கக்கு களைவரு நீரடைப்பு" (திருப்பு.627).*

*[கள் + கு - கஃகு → கக்கு.]*

**கக்கு[6]** *kakku,* பெ.(n.) கற்கண்டு; sugar candy.

*[கற்கண்டு → கக்கண்டு → கக்கு (மரூஉ).]*

**கக்கு[7]** *kakku,* பெ.(n.) பிஞ்சு, இளையது; young, tender.

**ம.** கக்கு
*[கரு → கருக்கு → கக்கு = பிஞ்சு.]*

**கக்கு[8]** *kakku,* பெ.(n.) 1. கக்குவள்ளி, ஒருவகைக் கொடி; a kind of climber. 2. பறவைகளின் இரண்டாம் வயிறு; gizzard, second stomach of a bird (thick and muscular) (சேரநா.).

**ம.** கக்கு

*[கள் + கு - கக்கு = சேர்தல், ஒட்டுதல், இணைதல்.]*

**கக்குலத்தை** *kakkulattai,* பெ.(n.) அன்பு, மனவிரக் கம்; love, compassion.

**க.** ககுலதெ, ககுலாதெ; **தெ.** கக்குரிதி, கக்கூர்தி; **ம.** கக்கத.

*[கக்கு = பிஞ்சு, இளமை, மென்மை (சேரநாட்டு வழக்கு). மென்மைப்பொருள், அன்பு, இரக்கப்பொருள்களில் புடைபெயர்ந்தது. கக்கு → கக்குல் → கக்குலிதம் → கக்குலத்தை (இ.வ.).]*

**கக்குவாய்** *kakku-vāy,* பெ.(n.) **கக்குவான்** பார்க்க; see *kakkuvāṉ.*

*[கக்குவான் → கக்குவாய்.]*

**கக்குவான்** kakkuvāṉ, பெ.(n.) இருமலையும், மூச்சிரைப்பையும் உண்டாக்கும் நோய், கக்கிருமல் (பாலவா.1000); whooping cough.

மறுவ. கக்குவாய், கக்கிருமல்.

**க.** கக்கிசு; **துட., கோத.** கக்கச; **து.** கக்காவுனி.

*[கக்கு → கக்குவான்.]*

**கக்குள்** *kakkuḷ,* பெ.(n.) அக்குள், கமுக்கூடு; arm-pit, axilla.

**க.** கங்குளி; **தெ.** சங்க; **து.** கங்கள; பட. கக்குவ.

*[அக்குள் → கக்குள். அக்குள் பார்க்க; see akkuḷ.]*

**கக்குளி-த்தல்** *kakkuḷi-,* 4 செ.கு.வி.(v.i.) அக்குளில் விரலிட்டுக் கூச்சமுண்டாக்குதல்; to tickle.

மறுவ. கிச்சுக்கிச்சு மூட்டல்

**க.** கக்குளிசு; **பட.** கிலிகிருசு.

*[அக்குள் → கக்குள் → கக்குளி. இகரம் ஏவலீறு.]*

**கக்குறம்பொத்தை** *kakkuṟam-pottai,* பெ.(n.) கன்னியாக்குமரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kaṉṉiyā-k-kumari district.

*[கான் + குறம் + பொற்றை - காக்குறம் பொற்றை → கக்குறம் பொத்தை. கான்குறம் = கானக்குன்றம். கான் = புதர்க்காடு. பொற்றை = பாறை, பாறைகளமைந்த பகுதி. பொற்றை → பொத்தை (திரிபு).]*

**கக்கோட்டுத்தலை** *kakkōṭṭu-t-talai,* பெ.(n.) கன்னியாக்குமரி மாவட்டத்துக் கல்குளம் வட்டத்துச் சிற்றூர்; a village in Kal-kuḷam taluk in Kaṉṉiyā-k-kumari district.

*[கல் + கோடு + தலை - கற்கோட்டுத் தலை → கக்கோட்டுத்தலை. கல்கோடு = கல்லால்கட்டிய ஏரிக்கரை. தலை = முகப்பிலுள்ளது. கற்கோட்டுத்தலை = கல்லால் அமைந்த ஏரிக்கரையின் முகப்பிலுள்ள ஊர்.]*

**கக்கோடு** *kakkōḍu,* பெ.(n.) கன்னியாக்குமரி மாவட்டத்துக் கல்குளம் வட்டத்துச் சிற்றூர்; a village in Kal-kuḷam taluk in Kaṉṉiyā-k-kumari district.

[கல் + கோடு - கற்கோடு → கக்கோடு. கோடு = ஏரிக்கரை.]

**ககரம்** kagaram, பெ.(n.) 'க' என்னும் எழுத்து; the letter 'ka'.

ம. ககாரம்

[க + கரம் - ககரம். கரம் - எழுத்துச்சாரியை. 'க' பார்க்க; see 'ka".]

**ககாரம்** *kagāram,* பெ.(n.) ககரவெழுத்து; the letter 'ka'.

[க + காரம் - ககாரம். காரம் - எழுத்துச்சாரியை.]

கரம், காரம், கான் என்னும் மூன்றும் பழந்தமிழ் எழுத்துச் சாரியைகள். இவற்றுள் கரம், கான் இரண்டும் நெட்டெழுத்திற்கு வாரா. ஆயின் கரம், காரம், கான் இம் மூன்றும் குற்றெழுத்துச் சாரியைகளாய் வரும் (தொல்.எழுத்து.137). கரம் குற்றெழுத்திற்கும் காரம் நெட்டெழுத்திற்கும் சொல்லும் வழக்கு அச் சாரியைகளில் அமைந்துள்ள குறில் நெடில் வடிவங்களால் ஏற்பட்டதென்க.

**ககுத்து** *kaguttu,* பெ.(n.) காளையின் திமில்; hump of the bull. *'ஏற்றின் ககுத்தை முறித்தாய்'* (ஈடு.4,3:1).

மறுவ. திமில், மோபுரம் (மீப்புறம்).

க. ககுத; ம. ககுத்து; Skt. kakuda; L. cacumen.

[கழுத்து → ககுத்து. த. கழுத்து > Skt. kakuda.]

எருத்தின் திமில் கழுத்தின் மீப்புறத்தைக் குறித்தது. இதற்குத் திமில் என்றும் மோபுரம் (மீப்புறம்) என்றும் பெயர் வழங்கக் காணலாம். கழுத்தின் பெயர் மீப்புறத்திற்கு ஆகி வந்தது. ககுத்து என்னும் கொச்சை வடிவம் பொருத்தமான தன்று.

**ககுதி** *kagudi,* பெ.(n.) முத்திரை குத்தின எருது; stamped bull.

[ககுத்து → ககுதி = திமிலின்மீதிடும் முத்திரை.]

**கங்கடிக்காய்** *kaṅgaḍi-k-kāy,* பெ.(n.) சிறு தும்மட்டிக் காய்; fowl's cucumber.

[கங்கு + அடி + காய்.]

**கங்கடிகம்** *kaṅgaḍigam,* பெ.(n.) குருந்தொட்டி எனும் மருந்துச் செடி; common balah.

[கங்கடி + அகம் - கங்கடிகம். கரு → கக்கு → கங்கு = கரியது, தீய்ந்தது, கசப்பானது. கங்கு → கங்கடி.]

**கங்கண எடுப்பு** *kaṅgaṇa-eḍuppu,* பெ.(n.) காப்பு நாண் நீக்கும் நிகழ்வு (சடங்கு); ceremony of removing the *kaṅgaṇam.*

[கங்கணம் + எடுப்பு.]

**கங்கணங்கட்டு-தல்** *kaṅgaṇaṅ-kaṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. திருமணம் முதலிய நிகழ்வு (சடங்கு) களில் கையில் காப்புநாண் கட்டுதல்; to tie a cord round one's wrist at the commencement of a wedding ceremony etc. 2. ஒரு செயலை முடிக்க மூண்டு நிற்றல், உறுதி எடுத்தல்; to take a vow to accomplish something, to be pertinacious in the realization of the aim. *இந்த மாத இறுதிக்குள் கடனைத் திருப்பிக் கொடுத்துவிடுவேன் என்று கங்கணம் கட்டிக்கொண்டான்.*

க., து. கங்கணகட்டு

[கங்கணம் + கட்டு-.]

**கங்கணத்தி** *kaṅgaṇatti,* பெ.(n.) சிறு பறவை; myna.

ம. கங்ஙணத்தி

[குறுங்கழுத்தி → கங்கணத்தி.]



கங்கணத்தி

**கங்கணம்**[1] *kaṅgaṇam,* பெ.(n.) 1. மங்கல நிகழ்வுகளைச் செய்து முடிக்கும் பொருட்டு மணிக்கட்டில் கட்டப்படும் மஞ்சள் துண்டு அல்லது மஞ்சள் கயிறு; a sacred thread or string tied with a piece of turmeric (usually) around the right arm

or wrist (on auspicious occasions as a symbol of initiation to a specific ritual). கங்கணம் கட்டிய மாப்பிள்ளை வெளியூர் செல்லக்கூடாது (உ.வ.). 2. ஒரு செயலைச் செய்யும் பொருட்டு மனத்திற்கொள்ளும் உறுதிப்பாடு; determination of mind to do a particular job. *மாநிலத்தில் முதல் மாணவனாக வரவேண்டு மென்று கங்கணம் கட்டிக்கொண்டு படிக்கிறான்.* 3. ஒருவகைக் கைவளை; bangle, bracelet, wristlet. *"கங்கணம் பாடி"* (திருவாச. 9:19). 4. *இறந்தார்க்குச் செய்யும் இறுதி நடப்பில் அவரது கால்வழியினர் கையில் கட்டும் மஞ்சள் கயிறு அல்லது துண்டு; a turmeric tied string or yellow string tied on the hand of the dead person's son or sons at the time of the funeral rites. தந்தையின் இறுதி நடப்புக்கு பிள்ளைகள் கங்கணம் கட்டிக் கொண்டனர்.* 5. தான் கொண்ட உறுதியை நிறைவேற்றுவதற்காக இடக்கை மணிக்கட்டில் கட்டிக்கொள்ளும் மஞ்சள் துண்டு அல்லது மஞ்சள் கயிறு; *a turmeric piece tied string or yellow string tied on the left hand of the person who takes a vow or vengence. இந்த மாத இறுதிக்குள் கடனைத் திருப்பிக் கொடுத்து விடவேண்டும் என்று கங்கணம் கட்டிக்கொண்டான்.*

ம. கங்கணம்; க., து. கங்கண; தெ. கங்கணமு; எரு. கங்கடோ.

த. கங்கணம் > Skt. kaṅkaṇa, Nep. kaṅkan (a large iron bracelet worn by sādhus).

*[குல் → குங்கு → கங்கு → கங்கணம் (வட்டமாகக் கட்டிய காப்பு) (சொ.ஆ.க.55).]*

கங்கணமென்ற தென்சொல்லே வடசொற்கும் மூலமாகுமென்றும் இது கணகண என்ற ஒலிக் குறிப்படிப்படையில் உருவானதென்றும் கிற்றல் (kittel) பெருமகனார் கூறுவார். ஆயின் கங்கு அடியினின்றே கங்கணம் தோன்றுவதன் பொருத்தத்தைக் காண்க. கங்கணம் ஒருவன் தன் பகைவனிடத்தில் பழிக்குப்பழி வாங்க வேண்டுமென்று அதற்கு அடையாளமாகக் கட்டிக் கொள்ளும் காப்பு. அவ் வடிப்படையில் இது சூள் வகைகளுள் ஒன்றாகக் காட்டத்தக்கது. திருமணத்தில் ஆணுக்கு வலக்கை மணிக்கட்டிலும், பெண்ணிற்கு இடக்கை மணிக்கட்டிலும் கங்கணம் கட்டுவது மரபு. நீத்தார் நினைவுக் கடன் செய்யும் பொருட்டு மறைந்தாரது கால்வழியினர் கையில் கங்கணம் கட்டிக்கொள்வர். கோயில் திருவிழாவின் போதும் கங்கணம் கட்டுவது உண்டு. கங்கணமாகப் பெரும்பான்மை சிறு மஞ்சள் துண்டு அல்லது மஞ்சள் கயிறு பயன்படுத்துவது வழக்கு.

**கங்கணம்**[2] *kaṅgaṇam,* பெ.(n.) நீர்வாழ் பறவை வகை(வின்.); a kind of water fowl (சா.அக.).

தெ. கங்கணமு; க. கங்க.

*[கொங்கு → கங்கு → கங்கணம் = வளைந்த மூக்குள்ள பறவை.]*

**கங்கணம்**[3] *kaṅgaṇam,* பெ.(n.) முடி; hair (த.சொ.அக.).

*[கங்கு (கருமை) → கங்கணம்.]*

**கங்கணரேகை** *kaṅgaṇa-rēgai,* பெ.(n.) கங்கணவரை பார்க்க; see *kaṅgaṇa-varai.*

ம. கங்கணரேக (கங்கணம் போன்று மணிக்கட்டில் அமைந்த வரை).

*[கங்கணம் + ரேகை (வரிகை → ரேகை)- கங்கணரேகை. த. வரிகை (ரேகை) > Skt. rēkhā.]*

**கங்கணவரை** *kaṅgaṇa-varai,* பெ.(n.) 1. மணிக் கட்டில் வளையல்போல் உள்ள கைவரி வகை; a kind of line below the palm (in the wrist) resembling a bracelet. 2. திருமண வாய்ப்பைக் காட்டுவதாகக் கருதப்படும் கைவரி; a line in the palm indicating marital opportunity.

*[கங்கணம் + வரை. வரை = கோடு. கங்கணம் = கங்கணம் கட்டும் முன்கைப்பகுதி.]*

**கங்கணாரேந்தல்** *kaṅgaṇār-ēndal,* பெ.(n.) இராமநாதபுரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Ramanathapuram district.

*[கங்கன் + ஆர் + ஏந்தல் - கங்கனாரேந்தல் → கங்கணாரேந்தல். கங்கன் என்பதன் ஆண்பாலீற்று னகரம் ணகரமாகத் திரிந்திருப்பது வழு. 'ஆர்' உ.பன்.ஈறு. ஏந்தல் = ஏரி, கங்கனார் ஏந்தல் = கங்கன் பெயரிலமைந்த ஏரி.]*

**கங்கணி** *kaṅgaṇi,* பெ.(n.) இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள ஓர் ஊர்; name of a village in Rāmanātapuram district.

*[கண் + காணி - கண்காணி = மேற்பார்வையாளன், மேற்பார்வையாளன் பெயரிலமைந்த ஓர் ஊர். கண்காணி → கங்காணி → கங்கணி (மரூஉ).]*

**கங்கபத்திரம்** *kaṅga-pattiram,* பெ.(n.) 1. பருந்தினிறகு; kite's feather. *"கங்கபத்திர நன்னீழல்"* (இரகு. நாட்டுப்.59). 2. அம்பு (திவா.); arrow winged with the feathers of a kite or heron.

க. கங்கபத்ர; ம. கங்கபத்ரம்.

*[கொங்கு = பறவையின் வளைந்த அலகு, அலகுடைய பறவை. கொங்கு → கொங்க → கங்க + பத்திரம். வ. பத்ர > த. பத்திரம் = இலை, இறகு, இறகுசெருகிய அம்பு. கங்கம் = பருந்து.]*

**கங்கபாடி** *kaṅga-pāḍi,* பெ.(n.) கங்கவரசர் ஆண்ட நாடு; name of the southern part of the Mysore province which was ruled over by the kings of the Ganga dynasty. *'வேங்கை நாடுங் கங்கபாடியும்' (S.I.I.i.94).*

*[கங்கர் + பாடி.]*

கங்கமரபினர் குவலாளபுரத்தைத் (கோலார்) தலைநகராகக் கொண்டு கங்க நாட்டை (கங்கபாடி) ஆண்டுவந்தனர். கங்கபாடி 96000 என்று கங்கர்களின் செப்பேடுகளில் குறிக்கப்பெற்றுள்ளது. கங்கபாடி என்பது இன்றைய கருநாடக மாநிலத்தின் தென்பகுதி.

**கங்கம்**[1] *kaṅgam,* பெ.(n.) 1. தீப்பொறி (வின்.); spark of fire. 2. கோளக நஞ்சு (மூ.அ.); a mineral poison.

ம. கங்கில்

*[கங்கு = தீ. கங்கு + அம் = கங்கம்.]*

**கங்கம்**[2] *kaṅgam,* பெ.(n.) 1. பருந்து; common kite. *"கங்கவிப்படா நிழலும்" (இரகு.மீட்சி.48).* 2. கழுகு (பிங்.); eagle.

க. கங்க; ம. கங்கம்.

*[கொங்கு → கங்கு → கங்கம் (வளைந்த மூக்குடையது.)]*

**கங்கம்**[3] *kaṅgam,* பெ.(n.) சீப்பு (பிங்.); comb.

க. கங்கத.

*[கங்கு + அம் - கங்கம். கங்கு = முனை. த. கங்கம் > Skt. kaṅgata.]*

**கங்கம்**[4] *kaṅgam,* பெ.(n.) கங்க அரசமரபினரால் ஆளப்பட்ட தமிழ்நாட்டை அடுத்துள்ள ஒரு நாடு; name of a territory adjoining the Tamil country and ruled over by the Kaṅgar. *கங்க மகதங் கடாரம் (நன்.272.மயிலை.).*

*[கங்கை → கங்கம். கங்கபாடி பார்க்க; see kaṅga-pāḍi.]*

**கங்கம்**[5] *kaṅgam,* பெ.(n.) பெருமரம் (யாழ்.அக.); tooth leaved tree of heaven.

*[கங்கு = கருப்பு. கங்கு + அம் - கங்கம் = கரிய அடிப்பாகத்தைக் கொண்ட பெருமரம்.]*

**கங்கம்**[6] *kaṅgam,* பெ.(n.) இறப்பு; death (சா.அக.).

*[கங்கு = தீ, அனல், நெருப்பு. கங்கு + அம் - கங்கம் = தீப்பட்டு அழிவது போன்ற மறைவு, சாவு.]*

**கங்கபாளையம்** *kaṅga-pāḷaiyam,* பெ.(n.) கோயம்புத்தூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Coimbatore district.

*[கங்கன் + பாளையம் - கங்கன் பாளையம் → கங்கம்பாளையம். பாளையம் = படை தங்கிய இடம், பாடிவீடு. கங்கன் பெயரில் அமைந்த ஊர்.]*

**கங்கமநாய்க்கன்குப்பம்** *kaṅgamanāy-k-kaṉkuppam,* பெ.(n.) கடலூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Cuddalore district.

*[கங்கன் → கங்கமன் + நாயக்கன் + குப்பம் - கங்கமநாயக்கன் குப்பம். தற்போது கங்கணங்குப்பம் என்று வழங்குகிறது.]*

**கங்கர்**[1] *kaṅgar,* பெ.(n.) கருநாடக மாநிலத்தின் குவலாளபுரம் (கோலார்), தலைக்காடு ஆகிய ஊர்களைத் தலைநகராகக் கொண்டு நாடாண்ட அரசமரபினர்; name of a dynasty of kings who formerly ruled over a portion of Karnataka territory with Kolar and Thalaikkadu as their capitals. *''பங்களர் கங்கர் பல்வேற் கட்டியர்'' (சிலப்.25:157).*

*[கங்கை → கங்கர். கங்கைப்பகுதியில் வாழ்ந்த தமிழ் வேளாளர்.]*

கங்கமரபினர் பண்டைக்காலத்தில் கி.மு.7ஆம் நூற்றாண்டு வரை கங்கைப்பகுதியில் வாழ்ந்திருந்து பின்னர்த் தென்னாட்டில் பல மாநிலங்களில் குடியேறிக் கங்கமரபினர் என்னும் பெயர் பெற்றனர். தமிழகத்தில் குடியேறியோர் கங்கைக்குல வேளாளர் என்று அழைக்கப்பெற்றனர். கங்கமரபினரான சிற்றரசர் கடைக்கழகக் காலத்திலேயே மறத்திற் சிறந்து பெயர் பெற்றவராயிருந்தனர்.

"நன்ன னேற்றை நறும்பூ ணத்தி
துன்னருங் கடுந்திறற் கங்கன் கட்டி" (அகநா.44).

"பங்களர் கங்கர் பல்வேற் கட்டியர்" (சிலப்.25:157) எனப் பழைய நூல்கள் கூறுதல் காண்க.

இக்கங்க மரபைச் சேர்ந்தவனே, 12ஆம் நூற்றாண்டில் மூன்றாங் குலோத்துங்க சோழன் காலத்தவனும், 'அமராபரணன்'

'ஸ்ரீமத் குவலாளபுரப் பரமேசுவரன்', 'கங்ககுலோற்பவன்' என்று தன் மெய்க்கீர்த்திகளில் பாராட்டப்பெறுபவனும், பவணந்தி முனிவரைக் கொண்டு நன்னூலை ஆக்குவித்தவனும் ஆகிய சீயகங்கன் என்பவன். (திரவிடத்தாய், பக்.58,59).

**கங்கர்²** *kaṅgar,* பெ.(n.) 1. பக்குவப்படாத சுக்கான்கல்; kankar limestone, an impure concretionary carbonate of lime. 2. பருக்கைக்கல்; gravel.

மறுவ. ஒடைக்கல், சுண்ணாம்புக்கல்.

க. கங்கரெ; ம. கங்கா; தெ. கங்கர; Skt. karkara (hard, firm); Pkt. Kakkara; Mar., Guj. kaṅkara; Beng. kaṅkāra; H. kaṅkār.

*[கொங்கு = கூர், கூர்முனை. கொங்கு → கங்கு + அல் - கங்கல் → கங்கர். கங்கர் = கூர் முனை அல்லது விளிம்பு கொண்ட கல்வகை. சாம்பல் → சாம்பர் என்றாற் போன்று 'கங்கல் → கங்கர்' என ஈற்றுப் போலியாயிற்று.]*

**கங்கரம்** *kaṅgaram,* பெ.(n.) மோர் (யாழ்.அக.); butter-milk.

*[கங்கு → கங்கல் → கங்கலம் → கங்கரம் = மெலிவு, இளக்கம், இளக்கமான மோர். த. கங்கலம் > வ. கங்கரம்.]*

**கங்கல்¹** *kaṅgal,* பெ.(n.) துண்டுக்கயிறு; a short rope. தண்ணீர் மட்டம் இறங்கிவிட்டது; தாம்புக் கயிற்றுடன் ஒரு கங்கலைச் சேர்த்துக்கொள் (உ.வ.).

*[கங்கு → கங்கல், கங்கு = ஓரம், விளிம்பு, சிறியது.]*

மீன்பிடிவலையின் அடிப்பகுதி கடலடித்தரையில் படியாத நிலையில் கங்கல் சேர்த்து அவ் வலையைத் தரைவரை எட்டச்செய்வது நெல்லை மீனவர் வழக்கு.

மாட்டைக் கட்டி மேய்க்கும் பொழுது கயிற்றின் நீளத்தைத் தான் விரும்பும் எல்லைவரை எட்டச்செய்யக் கங்கல் இணைத்து மேயச்செய்வது வேளாளர் வழக்கு.

கிணற்றிலிருந்து நீரிறைக்கும் பொழுது நீர் இருக்கும் எல்லையைக் கயிறு எட்டாத நிலையில் அதனுடன் கங்கல் இணைத்து நீரிறைப்பது உலக வழக்கு. இதுபோல் பல்லாற்றானும் கயிற்றின் நீளத்தை நீட்டிக்கக் கங்கல் (துண்டுக் கயிறு) பயன்படுமாற்றைக் காண்க.

**கங்கல்²** *kaṅgal,* பெ.(n.) மாலை மயங்கிய இருள் அல்லது வைகறை; dusk or dawn.

*[கங்குல் → கங்கல் = கருக்கல், இருட்டான விடியற்காலை.]*

**கங்கல்கருக்கல்** *kaṅgal-karukkal,* பெ.(n.) எற்பாடும் வைகறையும்; dusk and dawn.

*[கங்கல் + கருக்கல். கங்குல் → கங்கல் = மாலைப்பொழுது, இரவு. கருக்கல் = காலை இருள். கங்கல்கருக்கல் - எதுகைநோக்கி வந்த மரபிணைமொழி.]*

**கங்கலப்பம்பாளையம்** *kaṅgalappam-pāḷaiyam,* பெ.(n.) கோயம்புத்தூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Coimbatore district.

*[கங்கல் + அப்பன் + பாளையம். கங்கலப்பன் பாளையம் → கங்கலப்பம் பாளையம். 'அப்பன்' என்பதன் ஈற்று னகரம் மகரமாகத் திரிந்தது. கங்கல் ஊரினனாகிய கங்கலப்பனின் பெயரிலமைந்த ஊராகலாம்.]*

**கங்கலி** *kaṅgali,* பெ.(n.) பருந்து வகை; a kind of kite (சா.அக.).

*[கங்கு → கங்கல் → கங்கலி = சிறிய பருந்துவகை.]*



கங்கலி

**கங்கவரம்** *kaṅgavaram,* பெ.(n.) விழுப்புரம் வட்டத்துச் சிற்றூர்; a village in Villuppuram district.

*[கங்கன் + புரம் - கங்கபுரம் → கங்கவரம். புரம் என்னும் இடப்பெயரீறு வரம் எனத் திரிந்தது.]*

**கங்கவள்ளி** *kaṅgavaḷḷi,* பெ.(n.) சேலம் மாவட்டம் ஆத்தூர் வட்டத்தில் உள்ள ஊர்; a village in Attur taluk in Salem district.

*[கங்கன் + பள்ளி - கங்கன்பள்ளி → கங்கன்அள்ளி →கங்கவள்ளி. த. பள்ளி > க. அள்ளி. பள்ளி = சிற்றூர்.]*

**கங்களன்** *kaṅgaḷaṉ,* பெ.(n.) பார்வையிழந்தவன், குருடன் (கருநா.); blind man.

க. கங்கள

*[கண் + (களை) கள + அன்.]*

**கங்கன்**[1] *kaṅgaṉ*, பெ.(n.) சீயகங்கன் (நன். சிறப்புப். மயிலை.); a chief of the ancient Tamil country.

*[கங்கம் → கங்கன் (கங்க நாட்டினன், கங்கமரபினன்).]*

**கங்கன்**[2] *kaṅgaṉ*, பெ.(n.) சீர்பந்த செய்நஞ்சு; a mineral poison (சா.அக.).

*[கங்கு → கங்கன் (தீப்போல் கொல்லும் தன்மையது).]*

**கங்கன்குளம்** *kaṅgaṉ-kuḷam*, பெ.(n.) தூத்துக்குடி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Tuttukkudi district.

*[கங்கன் + குளம் - கங்கன்குளம். கங்கன் பெயரிலமைந்த சிற்றூர்.]*

**கங்கனூர்** *kaṅgaṉūr*, பெ.(n.) தருமபுரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Dharumapuri district.

*[கங்கன் + ஊர் - கங்கனூர். கங்கன் பெயரிலமைந்த சிற்றூர்.]*

**கங்காணம்** *kaṅgāṇam*, பெ.(n.) **கண்காணம்** பார்க்க; see *kaṅgāṇam*.

ம. கங்காணம்

*[கண்காணம் → கங்காணம்.]*

**கங்காணி**[1] *kaṅgāṇi*, பெ.(n.) 1. சிற்றூர் ஆட்சி அலுவலரின் பணியாளர்; the menial of the village administrator. 2. ஊரிலுள்ள விளைநிலங்களின் எல்லையறிந்தவன்; one who knows the topography of a village.

*[கங்கு + காணி. கங்கு = எல்லை, ஓரம், விளிம்பு. காணி = மேற்பார்ப்பவன்.]*

**கங்காணி**[2] *kaṅgāṇi*, பெ.(n.) **கண்காணி** பார்க்க; see *kaṇkāṇi*. 'திருமாகேசுவரக் கங்காணி' *(S.I.I.iii.43)*.

ம. கங்காணி

*[கண் + காணி - கண்காணி → கங்காணி.]*

**கங்காபுரம்**[1] *kaṅgā-puram*, பெ.(n.) **கங்கைகொண்ட சோழபுரம்** பார்க்க; see *kaṅgai-koṇḍa-cōḷa-puram*. குளிர்பொழில்சூழ் கங்காபுர மாளிகை **(தண்டி.95,14 உரை)**.

*[கங்கை + கொண்ட + சோழபுரம் - கங்கை கொண்ட சோழபுரம் → கங்காபுரம் (மரூஉ).]*

**கங்காபுரம்**[2] *kaṅgā-puram*, பெ.(n.) ஈரோடு மாவட்டம், ஈரோடு வட்டத்துச்சிற்றூர்; a village in Erode taluk in Erode district.

*[கங்கன் + புரம் - கங்கன்புரம் → கங்காபுரம். கங்கன் பெயரிலமைந்த சிற்றூர்.]*

**கங்காமணியம்மாள்** *kaṅgāmaṇi-y-ammāḷ*, பெ.(n.) மீனவர் வணங்கும் பெண்தெய்வம் (செங்கை மீனவ.); a Goddess worshipped by the fishermen.

*[கங்கை + மணி + அம்மாள்.]*

**கங்காரு** *kaṅgāru*, பெ.(n.) தாவிச்செல்வதற்கேதுவாய் நீண்ட பின்னங்கால்களையும் குட்டையான முன்னங்கால்களையும் உடைய, உருவில் பெரிய ஆத்திரேலியப் புல்லுண்ணி விலங்கு; a large Australian herbivorous marsupial (family Macropoclidal) with short forelimbs, very long hindlegs and great leaping power, kangaroo.

ம. கங்கரு

*[காண்கு + அருது - காண்கருது → காண்கரு → கங்காரு எனத் திரிந்த திரிபாகலாம். இன்றும் கொங்கு நாட்டுப்புறவழக்கில் நான் பார்க்கவில்லை என்பதை நான் காங்கலெ எனக் குறிப்பிடுவதைக் கேட்கலாம்.]*


கங்காரு

கங்காரு என்னும் சொல் ஆத்திரேலியப் பழங்குடிகளின் மொழியில் 'தெரியாது' எனப் பொருள்படும். அவர்கள் தமக்குத் தெரியாது எனச் சொல்லிய சொல்லையே இவ் விலங்குக்குப் பெயராகத் தவறுதலாகச் சூட்டியதால் அதுவே பெயராக நிலைபேறடைந்தது என்பர். ஆத்திரேலியப் பழங்குடிகளின் மொழிகள் தமிழொடு தொடர்புடையன என ஆய்வாளர் J.C. Prichard - 1847 and Cold well - 1856 பத்தொன்பதாம் நூற்றாண்டின் நடுவிலேயே கண்டறிந்துள்ளனர்.

"All Australian oborigines are supposed to be descended from Dravidians who migrated about 15,000 years ago from India and Ceylon" - Doglas Lockwood. "We the Aborigines", Cassels, Australia, 1963.

"Only the Dravidian suggestion deserves to be taken at all seriously" [as regards the affinity of Australian Languages] - R.M.W. Dixon: "The Languages of Australia", Cambridge University Press, 1980.

**கங்காள்** *kaṅgāḷ,* பெ.(n.) மெலிவு, வலுவின்மை; weak, feeble.

க. கங்காடு

*[கங்காளம் → கங்காள்.]*

**கங்காளம்**[1] *kaṅgāḷam,* பெ.(n.) பித்தளை அல்லது வெண்கலத்தாலான ஏனம்; large metal vessel generally of brass or bronze for holding water etc.

ம. கங்ஙானம் (சமைக்கப் பயன்படுத்தும் ஏனம்); க. கங்காள; தெ. கங்காளமு.

*[கொங்கு → கங்கு → கங்காளம் = வட்டமான பெரிய ஏனம்.]*

**கங்காளம்**[2] *kaṅgāḷam,* பெ.(n.) 1. தசைகிழிந்த உடலின் எலும்புக்கூடு (திவா.); skeleton. 2. பிணம்; dead body.

ம. கங்காளம்

*[கங்காளம்[1] → கங்காளம்[2]. கங்காளம் = பெரிய ஏனம். உடம்பை ஒரு மட்பாண்டத்திற்கு ஒப்பிடுதலின் உடலையும் எலும்பையும் குறித்தது. த. கங்காளம் > Skt. kaṅkāla (skeleton)]*

**கங்காளமாலி** *kaṅgāḷa-māli,* பெ.(n.) எலும்புமாலை அணிந்த சிவன்; Šivā who wears garland of bones.

ம. கங்காளமாலி; *Skt. kaṅkālamālin*

*[கங்காளம்[2] + மாலி. மாலையாகக் கொண்டவன் மாலி. 'இ' உடைமை ஈறு.]*

**கங்காளமூலி** *kaṅgāḷa-mūli,* பெ.(n.) சிவகரந்தை (கரந்தையில் ஒருவகை); Ceylon toolsy.

*[கங்காளன் + மூலி. மூலி = மூலிகை.]*

**கங்காளன்**[1] *kaṅgāḷaṉ,* பெ.(n.) சிவன்; Šivā.

*[கங்காளம்[2] → கங்காளன்.]*

**கங்காளன்**[2] *kaṅgāḷaṉ,* பெ.(n.) துருசு; blue vitriol; copper - sulphate.

*[கங்கு[2] → கங்காள் → கங்காளன்.]*

**கங்காளி**[1] *kaṅgāḷi,* பெ.(n.) 1. மாகாளி (பிங்.); Kāḷi being the consort of Kaṅgāḷaṉ. 2. மலைமகள்; Pārvatī. *"மலைமாது கங்காளி" (மறைசை.17).*

ம. கங்காளி

*[கங்காளன் → கங்காளி = எலும்பு மாலை அணிந்த (சிவன்) கங்காளன் மனைவி. த. கங்காளி > Skt. kaṅkāli.]*

**கங்காளி**[2] *kaṅgāḷi,* பெ.(n.) 1. ஏழை; poor. 2. இரவலன்; miserable person, begger.

க. கங்காலி; தெ. கங்காளி; Skt. kaṅkāla (Sekeleton); Beng., Nep. kaṅgāl; Ori., Pkt. kaṅgāla; Persn. kangālah (whore monger, miser); U. kaṅgāḷ; Mar., H. kaṅgāli.

*[அங்கம் = எலும்பு. அங்கம் → கங்கம் + ஆளி - கங்காளி (எலும்புமாலை அணிந்தவன்). எலும்புமாலை அணிந்த சிவன். இரந்துண்பவன் என்னும் பொருளில் இச்சொல் இரவலனையும் ஏழையையும் குறித்தது.]*

**கங்கான்** *kaṅgāṉ,* பெ.(n.) எலும்பும் தோலுமாய் மெலிந்தவன்; a skeleton like person.

*[கங்காளம் (எலும்பு) → கங்காளன் → கங்கான்.]*

**கங்கில்**[1] *kaṅgil,* பெ.(n.) 1. காளம் என்னுங் குழலிசைக் கருவியின் உறுப்புகளுளொன்று; a part of the trumpet. 'கங்கில் ஒன்றும் குழல் இரண்டும் மோதிரம் ஐஞ்சும் உடைய பொன்னின் காளங்கள்' *(S.I.I.ii,5).* 2. விளக்குத்திரியின் கரிந்த பகுதி; burnt part of the wick in a lamp.

ம. கங்கில்

*[கங்கு → கங்கில் = குழலில் தீச்சுட்ட பகுதி; காளத்தின் துளைப்பகுதி.]*

**கங்கில்**[2] *kaṅgil,* பெ.(n.) மீன்பிடிவலை மிதக்க உதவும் மரக்கட்டைகளை வலையோடு சேர்த்துக் கட்டும் கயிறு; cord used for tieing pieces of wooden blocks in fishing nets (சேரநா.).

*[கங்கல் → கங்கில். கங்கல் = துண்டுக்கயிறு.]*

**கங்கு**[1] *kaṅgu,* பெ.(n.) 1. எல்லை (ஈடு,5.4;7); limit, border. *"எம்மோராக்கக் கங்குண்டே" (புறநா.396:25).* 2. வயல்வரப்பு; ridge to retain water in paddy fields.

"கங்குபயில் வயல்" (சேதுபு. திருநாட்.66). 3. வரப்பின் பக்கம் (திவா.); side of a bank or ridge. கசியும் நீரைத் தடுக்கக் கங்கு மண்ணை வெட்டிப்போடு (உ.வ). 4. அணை; dam. "கங்குங் கரையுமறப் பெருகுகிற" (திவ்.திருப்பா.8, வியா. 108). 5. வரிசை; row, regular order. "கங்குகங்காய் முனைதரப் பொங்கி" (இராமநா. ஆரணி.14). 6. பனைமட்டையின் அடிப்புறம் (யாழ்ப்.); base of palmyra stem. பனைமரத்தில் ஏறினால் கங்கு கையைக் கிழிக்கும் (உ.வ.).

ம. கங்கு; **கோத.** கக்.

*[கள் = துண்டு, சிறிது. கள் → கங்கு = சிறிதாக, முனையாக இருக்கும் ஓரம், விளிம்பு.]*

**கங்கு**[2] *kaṅgu,* பெ.(n.) 1. தீப்பொறி, கனல்துண்டு; cinder, glowing coal. அடுப்புக்கங்கை முழுவதுமாய் அணைத்துவிடு (உ.வ.). 2. அம்மைநோய்; a kind of smallpox.

ம. கங்கில், கங்கல், கங்ஙில். (விளக்குத் திரியின் எரிந்த பகுதி.)

*[காங்கு → கங்கு (வே.க.186).]*

**கங்கு**[3] *kaṅgu,* பெ.(n.) துண்டு; shred, piece. சீலை கங்குகங்காய்க் கிழிந்துபோயிற்று (உ.வ.).

*[கள் → கங்கு. கள் = சிறியது, துண்டு.]*

**கங்கு**[4] *kaṅgu,* பெ.(n.) 1. கழுகு; eagle. "நரிகள் கங்கு காகம்" (திருப்பு.120). 2. பருந்து (சூடா.); kite.

*[கொங்கு → கங்கு. கொங்கு = வளைந்த அலகு, வளைந்த அலகுடைய பறவை. த. கங்கு > Skt. kaṅka.]*

**கங்கு**[5] *kaṅgu,* பெ.(n.) 1. கருப்பு; black. 2. கருந்தினை(பிங்.); black Italian millet. 3. கருஞ் சோளம்; black jowar. மாட்டுக்குத் தீனியாகு மென்று கங்கு விதைத்துள்ளேன் (உ.வ.).

ம. கங்கு; **க.** கங்கள (குருடன்).

*[கள் = கருப்பு. கள் → (கண்) → (கண்கு) → கங்கு = கருந்தினை (வே.க.124.) த. கங்கு > Skt. kaṅgu.]*

**கங்கு**[6] *kaṅgu,* பெ.(n.) சினம், சீற்றம்; anger. சண்டைக்குப் பின்னும் கங்கு மனத்தில் பதிந்துள்ளது (உ.வ.).

**க.** கங்கு, கங்காரு, கங்காலு.

*[காங்கை → காங்கு → கங்கு. காங்கை = அனல், வெப்பம், அனல்போன்ற சீற்றம்.]*

**கங்கு**[7] *kaṅgu,* பெ.(n.) 1. வரகு போன்றவற்றின் உமி; husk, as of millet. 2. கம்புபோன்ற பயிர்களின் கதிர்; ear of grain. கம்பு கங்கு விட்டுள்ளது (உ.வ.).

**க.** கங்கு, கங்கி; **தெ.** கங்கி (தவசக் கதிர்).

*[கொங்கு → கங்கு.]*

**கங்குக்கூடு** *kaṅgu-k-kūḍu,* பெ.(n.) தச்சுக் கருவி வகை; carpenter's instrument.

மறுவ: வருவு (வரைவு).

*[கங்கு + கூடு. கங்கு = கூரிய விளிம்பு. கங்குக்கூடு = கூரிய விளிம்புள்ள அலகு கொண்ட தச்சுக்கருவி. பலகையை இழைப்பதற்கும், குறைப்பதற்கும் தேவையான அளவைக் கோடிட்டுக் காட்டப் பயன்படும் கருவி.]*



கங்குக் கூடு

**கங்குகரை** *kaṅgu-karai,* பெ.(n.) 1. வரம்பு, எல்லை; bank, shore, limit. "கங்குகரை காணாத கடலே" (தாயுமான.1). 2. எண்ணிக்கை; number.

*[கங்கு + கரை. கங்கு, கரை என்னும் இரு சொற்களும் ஒரு பொருளைக் குறித்து நின்ற இணைமொழி. கங்கு = நிலத்தின் எல்லை, வரம்பு. கரை = நீர்நிலையின் எல்லை, வரம்பு.]*

**கங்குட்டம்** *kaṅguṭṭam,* பெ.(n.) 1. ஒருவகைக் காவி. இது 64 கடைச் சரக்குகளுள் ஒன்று; a kind of Indian red earth. It forms one of the 64 bazaar drugs described in Tamil medicine. 2. மிருதாறுசிங்கு எனும் நஞ்சுவகை; a kind of poison from lead (சா.அக.).

*[கங்கு = கருமை. கங்குள் → கங்குடு → கங்குட்டம்.]*

**கங்குணம்** *kaṅgunam,* பெ.(n.) நான்முகப் புல்; a kind of grass which has four edges.

[கங்கு = விளிம்பு, பக்கம். கங்கு → கங்குணம்.]

**கங்குணி** *kṅguṇi,* பெ.(n.) ***கங்குளி*** பார்க்க; see *kaṅguḷi.*

[கங்குளி → கங்குணி.]

**கங்குநோய்** *kaṅgu-nōy,* பெ.(n.) கொப்புளநோய் வகையில் ஒன்று (சீவரட்.144); small blisters on the skin, resembling grains of millet.

[காங்கு → கங்கு + நோய்.]

**கங்குப்பலா** *kaṅgu-p-palā,* பெ.(n.) காட்டுப் பலா; jungle jack (சா.அக.).

[காங்கு = வெப்பம், கானல். காங்கு → கங்கு + பலா.]

**கங்குப்பனை** *kaṅgu-p-paṉai,* பெ.(n.) 1. அடியிற் கருக்குச் சூழ்ந்த பனை (யாழ்ப்.); rough palmyra tree that is difficult to climb. 2. அடுக்குப்பனை; a species of palm tree. (சா.அக.)

[கங்கு¹ + பனை.]

**கங்குமட்டை** *kaṅgu-maṭṭai,* பெ.(n.) பனையின் அடிக்கருக்கு (வின்.); base of a palmyra leaf-stalk encircling the tree.

[கங்கு¹ + மட்டை.]

**கங்குர்** *kaṅgur,* பெ.(n.) தினை; millet (சா.அக.).

[கங்கு⁵ → கங்குர்.]

**கங்குரு** *kaṅguru,* பெ.(n.) கண்கட்டி; sty in the eye.

ம. கங்குரு

[கண் + குரு - கண்குரு → கங்குரு.]

**கங்குல்¹** *kaṅgul,* பெ.(n.) 1. இரவு; night. *"நள்ளென் கங்குலும் வருமரோ" (நற்.145:10).* 2. இருட்டு; darkness. 3. தாழி (பரணி) நாண்மீன் (வின்.); the second star.

[கங்கு⁵ → கங்குல் = கரிய இரவு, இருட்டு.]

**கங்குல்²** *kaṅgul,* பெ.(n.) எல்லை (சங்.அக.); ridge, boundary.

[கங்கு¹ → கங்குல்.]

**கங்குல்வாணர்** *kaṅgul-vāṇar,* பெ.(n.) 1. இரவில் விலங்குகளை வேட்டையாடுவோர்; those who go for hunting during night hours. 2. இரவில் திரியும் அரக்கர்; Rakṣasās, as those who usually carry on their activities during the night time. *"கங்குல் வாணர்தங் கடனிறப்பதே" (பாரத.வேத்திர.11).*

[கங்குல்¹ + வாழ்நர். வாழ்நர் → வாணர்.]

**கங்குல்விழிப்பு** *kaṅgul-viḻippu,* பெ.(n.) 1. கூகை (யாழ்.அக.); rock horned-owl. 2. கோட்டான்; the small screech-owl (சா.அக.).

[கங்குல்¹ + விழிப்பு. ( = இரவில் விழித்திருப்பது.)]

**கங்குல்வெள்ளத்தார்** *kaṅgul-veḷḷattār,* பெ.(n.) குறுந் தொகை 387ஆம் பாடல் ஆசிரியர்; author of verse 387 of *Kuṟundogai.*

[கங்குல் + வெள்ளத்தார். கங்குல்வெள்ளம் என்ற தொடரால் பெற்ற பெயர்.]

பிரிவிடை வருந்திய தலைவி, செயலறுதற்குரிய மாலைக் காலத்தையும் ஒருவாறு நீந்துவோம்; ஆயின் நீந்திக் கரைகாண இயலாததாக இரவு இருக்கிறது, என்று துன்பப்படுவதாக இரவை வெள்ளமாக உருவகப்படுத்திக் கங்குல்வெள்ளம் என்ற தொடரை நயம்படப் பெய்துள்ளார். கங்குல் = இரவு.

**கங்குவடலி** *kaṅgu-vaḍali,* பெ.(n.) அடிக்கருக்குள்ள மட்டைகள் சூழ்ந்த இளம் பனைமரம்; young palmyra with the dried leaves still adhering to its trunk (சா.அக.).

[கங்கு¹ + வடலி.]

**கங்குழ்** *kaṅguḻ,* பெ.(n.) கைக்குழி; the arm pit (கருநா.).

க. கங்குழ், கங்குழ, கங்குழு, கவுங்குழ், கொங்கழ், கொங்கழ; து. கங்குள; தெ. சங்கெ, சங்கிலி; பட. கக்குவ.

[அக்குள் → கக்குள் → கங்குள் → கங்குழ்.]

**கங்குளி** *kaṅguḷi,* பெ.(n.) சிறுவாலுளுவையரிசி; the seed of the spindle tree (சா.அக.).

[கங்கு → கங்குளி. கங்கு = கூர்மை.]

**கங்குற்கிறை** *kaṅguṟkiṟai,* பெ.(n.) 1. திங்கள் விரும்பி (சந்திரகாந்தி); moon flower. 2. திங்கள் (சா.அக.); the Moon.

[கங்குல்¹ + இறை (தலைவன்).]

**கங்குற்சிறை** *kaṅguṟ-ciṟai,* பெ.(n.) இராக்காவல் (வின்.); watch or guard kept during night.

*[கங்குல்¹ + சிறை.]*

**கங்குனி** *kaṅguṉi,* பெ.(n.) வாலுளுவை மரம்; intellect tree (சா.அக.).

*[கங்குளி → கங்குனி.]*

**கங்குனிறம்** *kaṅguṉiṟam,* பெ.(n.) கறுப்பு நிறம்; black colour.

*[கங்குல் + நிறம். கங்கு → கங்குல் = கரிய இரவு, கருமை நிறம்.]*

**கங்கை** *kaṅgai,* பெ.(n.) 1. நீர்; water. கங்கை தூவி (மேகம்) (யாழ்.அக.) 2. ஆற்றைக் குறிக்கும் பொதுப்பெயர்; river. *"உவரிமிசைக் கங்கைகள் வந்தெய்தும்" (கந்தபு.தாரக.37).* 3. பனிமலை (இமய மலை)யில் கங்கோத்திரி என்னுமிடத்தில் தோன்றி வங்கக்கடலில் கலக்கும் ஆறு; the river which orginates at Gangotri of Himalyan mountain and ends at Bay of Bengal, river Ganges. *"மன்பதை யெல்லாம் சென்றுணக் கங்கைக் கரைபொரு மலிநீர்" (புறநா.161:6).*

ம. கங்க; க. கங்கெ; Skt., Nep. gaṅgā.

*[அம் = நீர். அம் → கம் + கை = கங்கை. கை - சொல்லாக்க ஈறு.]*

நீரைக் குறித்த சிறப்புப் பெயர், ஆற்றுப் பொதுவிற்கும், வெள்ளம் பெருக்கெடுத்தோடும் ஆற்றுக்கும், கங்கைக்கும் ஆகிவந்துள்ளது.

ஒ.நோ. கம் = நீர். கம் + அம் - கம்மம் (நன்செய் உழவுத்தொழில்). கம் என்னும் நீரைக் குறித்த சொல் 'அம்' ஈறு பெற்று உழவுத்தொழிலைக் குறித்தது போல, இச் சொல் 'கை' ஈறு பெற்றுக் கம் + கை - கங்கை எனத் திரிந்து நீர்ப்பெருக்கான ஆற்றையும் நீர்நிலையையும் சுட்டியது.

கங்கை என்பதற்கு வடமொழியில் 'கம்' (gam) என்னும் வேர்ச்சொல்லைக் காட்டி, விரைந்து செல்வது (swift goer) என்று மானியர் வில்லியம்சு காரணம் காட்டியிருப்பது பொருந்தாது. எல்லா ஆறுகளும் விரைந்து செல்வனவே.

கங்கை என்பதற்கு நீர் என்னும் பொருளும் வடமொழியில் இல்லை. கங்கை தூவி (மேகம்), கங்கை சாற்றி (மணித்தக்காளி), கங்கைப்பாலிலை (கள்ளி) போன்ற சொற்களில் கங்கை, நீர் என்னும் பொருளில் ஆளப்பட்டிருத்தல் காண்க.]

**கங்கைக்குளியல்** *kaṅgai-k-kuḷiyal,* பெ.(n.) 1. கங்கையில் குளித்த பலனை அடைவதற்குச் செய்யும் கொடை; gift to obtain the spiritual benefit of a bath in the Ganges. 2. விளக்கணிவிழா (தீபாவளி)அன்று செய்யும் எண்ணெய்க் குளியல்; oil bath on the Deepavali day.

*[கங்கை + குளியல்.]*

**கங்கைகுலம்** *kaṅgai-kulam,* பெ.(n.) கங்கைச் சமவெளியிலிருந்து வந்து குடியேறியதாகக் கூறப்படும் வேளாளர்குலம்; the Vēlāla tribe, who claim to have migrated from the Gangetic region.

*[கங்கை + குலம் - கங்கைகுலம். கங்கைச் சமவெளியிலிருந்து தென்னாடு நோக்கி வந்தவராகக் கங்கை குல வேளாளர் கருதப்படினும், தமிழ்நாட்டிலிருந்து வடநாடு முழுவதும் பரவி வாழ்ந்து காலப்போக்கில் தென்னகம் திரும்பிய ஒருசாரார் என்பதே இதன் பொருள்.]*

**கங்கைகொண்டசோழச்சேரி** *kaṅgai-koṇḍa-cōḻaccēri,* பெ.(n.) இலால்குடி வட்டம் ஆலம்பாக்கம் அருகிலிருந்த ஒரூர்; a village near Alambakkam near Lalgudi. "ஸ்ரீ கங்கை கொண்ட சோழ சேரி சிறு கொட்டையூர் தத்தந்" (தெ.இ.கல்.தொ.26. கல்.769).

*[கங்கை + கொண்ட + சோழன் + சேரி.]*

**கங்கைகொண்டசோழபுரம்** *kaṅgai-koṇḍa-cōḻa-puram,* பெ.(n.) முதலாம் இராசேந்திர சோழன் காலத்திருந்து சோழமன்னர்களின் தலைநகராகத் திகழ்ந்ததும் உடையார்பாளையத்திலிருந்து பத்துக்கல் தொலைவிலமைந்ததுமான ஓர் ஊர்; capital of the Chola kings from the time of Rajendra-I, a town about ten miles from Uḍaiyār-pāḷaiyam.

*[கங்கை + கொண்ட + சோழன் + புரம்.]*

கங்கைப்பகுதியை வென்றதால் இராசேந்திர சோழனுக்குக் கங்கைகொண்ட சோழன் என்னும் சிறப்புப் பெயரமைந்தது. அவனால் நிறுவப்பட்ட கோநகரம் கங்கை கொண்ட சோழபுரம்.

**கங்கைகொண்டசோழன்** *kaṅgai-koṇḍa-cōḻaṉ,* பெ.(n.) முதலாம் இராசேந்திரசோழன் (கலிங்.223); Rajendra I, (1012-44) a Cōḻa king, who conquered the Gangetic region.

*[கங்கை + கொண்ட + சோழன்.]*

கங்கை வரை படையெடுத்து வென்றவனாதலின் இப் பெயர் பெற்றான். இவனைத் தென்னாட்டு நெப்போலியன் என்றும் வரலாற்று ஆசிரியர் சிறப்பித்துக் கூறுவர்.

**கங்கைகொண்டான்** *kaṅgai-koṇḍāṉ* பெ.(n.) **கங்கைகொண்ட சோழபுரம்** பார்க்க; see *kaṅgai-koṇḍa-cōḻa-puram.*

*[கங்கை கொண்ட சோழபுரம் → கங்கை கொண்டான்.]*

**கங்கைசாற்றி** *kaṅgai-śāṟṟi,* பெ.(n.) மணித்தக்காளி (சா.அக.); black night shade.

*[கங்கை + சாற்றி. கங்கை = நீர், நீரார்ந்த பழம்.]*

**கங்கைதூவி** *kaṅgai-tūvi,* பெ.(n.) முகில் (யாழ்.அக.); cloud.

*[அம் = நீர். அம் → கம். கம் + கை - கங்கை = நீர், நீர்த்திரள், வெள்ளம். கங்கை + தூவி. தூவு → தூவி.]*

**கங்கைப்பாலிலை** *kaṅgai-p-pālilai,* பெ.(n.) சதுரக்கள்ளி; square spurge (சா.அக.).

*[கங்கை + பாலிலை = வெண்ணிறப் பாலினைக் கொண்டது.]*

**கங்கைமகன்** *kaṅgai-magaṉ,* பெ.(n.) 1. முருகன்; Murugan. 2. வீடுமன்; Bīṣmā.

மறுவ: கங்கை மைந்தன்.

*[கங்கை + மகன். கங்கை = கங்கையாறு, கங்கைத்தேவி.]*

**கங்கைமாத்திரர்** *kaṅgai-māttirar,* பெ.(n.) உத்தி பிரித்துச் சிறுவர் ஆடும் விளையாட்டில் ஒருசாரார்க்கு வழங்கிய பெயர் (தொல்.சொல்.165, சேனா.); name given to one of two groups in a boy's game of ancient times.

*[கங்கை + மாத்திரர். மாத்திரம் → மாத்திரர். மாத்தல் = அளவிடுதல், திறமையுடையவராதல்.]*

கங்கைமாத்திரர் = கங்கையை அளவிடுபவர். மக்களால் அளவிடற்கரிய கங்கையினையும் அளவிட்டறியும் ஆற்றலுடையார் என்பதை விளக்க, கங்கை மாத்திரர் என்றார் (சேனாவரையர்). இப் பெயர்கள் (பட்டிபுத்திரர், கங்கைமாத்திரர்) பண்டைக்காலத்துச் சிறார் விளையாடுங் காலத்துப் படைத்திட்டுக் கொண்ட பெயராம்.

இக்காலத்தும் பலர் குழுமித் தம்மிற் கூடி விளையாடல் குறித்த போழ்தத்து அம் மகாரில் இருவர் தலைவராக நிற்க ஏனையோர் இருவர் இருவராகப் பிரிந்து தனியிடஞ் சென்று தம்மிற் பெயர் புனைந்து தலைவர்களை யண்மிக் 'காற்றைக் கலசத்திலடைத்தவன் ஒருவன்', 'கடலைக் கையால் நீந்தினவன் ஒருவன்' இருவருள் நுமக்கு யாவன் வேண்டுமெனவும் 'வானத்தை வில்லாக வளைத்தவன் ஒருவன்' 'ஆற்று மணலைக் கயிறாகத் திரித்தவனொருவன்' இவருள் யாவன் நுமக்கு வேண்டுமெனவும் வினவுவர். அத் தலைவர்கள் இன்னின்னார் வேண்டுமென, அவர்கள் பகுதியிற் சேர்ந்து ஆடலியற்றுவர் என்க. ஆசிரியர் நச்சினார்க்கினியர், 'இளந்துணை மகார் தம்மிற் கூடி விளையாடல் குறித்த பொழுதைக்குப் படைத்திட்டுக் கொண்ட பெயர். அவை பட்டிபுத்திரர், கங்கைமாத்திரர்' என்றதனாலும் இது நன்கு விளங்கும். (பாவாணர். தொல்.சொல்.165, அடிக்குறிப்பு).

**கங்கைமீட்டான்** *kaṅgai-mīṭṭāṉ,* பெ.(n.) தண்ணீர்விட்டான் கிழங்கு; water-root (சா.அக.).

*[கங்கை + மீட்டான். கங்கை = தண்ணீர்.]*

**கங்கைமைந்தன்** *kaṅgai-maindaṉ,* பெ.(n.) **கங்கைமகன்** பார்க்க; see *kaṅgai-magaṉ.*

*[கங்கை + மைந்தன் (மகன்).]*

**கங்கையம்மன்** *kaṅgai-y-ammaṉ,* பெ.(n.) சிற்றூர்ப் பெண்தெய்வம்; female village deity.

*[கங்கை + அம்மன்.]*

ஆற்றினைப் பெண்ணாக உருவகிக்கும் மரபினடிப்படையில் கங்கையம்மன் என்னும் தெய்வப் பெயர் உண்டாயிற்று.

**கங்கையான்** *kaṅgaiyāṉ,* பெ.(n.) கங்கையாற்றை முடியில் கொண்டவனாகக் கருதப்படும் சிவன்; Śivā, who is believed to be adorned with the river Ganga on his tuft.

*[கங்கை + ஆன்.]*

**கங்கையோன்** *kaṅgaiyōṉ,* பெ.(n.) துருசு; blue vitriol (சா.அக.).

*[கங்கு² → கங்கை → கங்கையோன்.]*

**கங்கைவேணியன்** *kaṅgai-vēṇiyaṉ,* பெ.(n.) சிவன்; Śivā.

*[கங்கை + வேணியன். வேணி = சடை.]*

**கங்கொளி** *kaṅgoḷi,* பெ.(n.) இருட்டில் ஒளிரும் மரம் (அசோகு); a tree shining in darkness, luminous tree (சா.அக.).

*[கங்குல் + ஒளி - கங்குல்ஒளி → கங்கொளி. கங்குல் = இருள். கங்கொளி = இருளில் ஒளிர்வது.]*

**கங்கோலம்** *kaṅgōlam,* பெ.(n.) வால்மிளகு; tail pepper (சா.அக.).

*[கொங்கு + வாளம் → கொங்குவாளம் (வளைந்து நீண்டது) → கங்கோலம் (கொ.வ.)]*

**கங்கோலை** *kaṅgōlai,* பெ.(n.) தென்னை மட்டையின் அடியோலை (குஞ்சை); short leaves on the stalk of a coconut leaf. கங்கோலை வாருகோல் நன்கு உழைக்கும்.

*[கங்கு + ஒலை. கங்கு = விளிம்பு.]*

**கச்சக்கட்டைமரம்** *kacca-k-kaṭṭai-maram,* பெ.(n.) சின்னாஞ்சிமரம்; crape myrtle.

*[கச்சல் + கட்டை + மரம்.]*

**கச்சக்கடாய்** *kacca-k-kaḍāy,* பெ.(n.) ஆமையோடு; the shell of a tortoise.

*த. கச்சம் > Skt. kacchapaka (tortoise).*

*[கச்சம் + கடாய். கடாய் = வாயகன்ற மட்கலம். கச்சம் = ஆமை. கச்சம்[9] பார்க்க; see* ***kaccam[9]****]*

**கச்சக்கயிறு** *kacca-k-kayiṟu,* பெ.(n.) 1. யானையின் கழுத்தில் கட்டும் பட்டைக் கயிறு; rope tied round the neck of an elephant. 2. யானையின் வயிற்றைச் சுற்றிக் கட்டும் கயிறு; elephant's girth (சேரநா.).

ம. கச்சக்கயறு

*[கச்சு[2] + கயிறு.]*

**கச்சக்குமிட்டி** *kacca-k-kumiṭṭi,* பெ.(n.) 1. தலை விரித்தான் செடி, ஒருவகைக் கொம்மட்டி; a kind of bitter plant. 2. பேய்க்கொம்மட்டி; wild gourd (சா.அக.).

*[கச்சல்[1] + குமிட்டி. கொம்மட்டி → குமிட்டி.]*

**கச்சக்குறிஞ்சான்** *kacca-k-kuṟiñjāṉ,* பெ.(n.) கசப்புக் குறிஞ்சான்; a plant (சா.அக.).

*[கச்சல்[1] + குறிஞ்சான்.]*

**கச்சக்கோரை** *kacca-k-kōrai,* பெ.(n.) உப்பங்கோரை; a sedge that grows only by the side of salt marshes (சா.அக.).

*[கச்சல்[2] + கோரை. கச்சல் = சிறுமை, மென்மை.]*

**கச்சகம்[1]** *kaccagam,* பெ.(n.) குரங்கு; monkey (சா.அக.).

ம. கச்சகம்

*[கொள் = வளைவு. கொள் → கொச்சு → கொச்சகம் → கச்சகம் (முதுகு வளைந்த விலங்கு, குரங்கு).]*

**கச்சகம்[2]** *kaccagam,* பெ.(n.) கொள்; horse-gram.

மறுவ. கொள்ளு, காணம், உருளி.

*[கொள் = வளைவு. கொள் → கொச்சு → கொச்சகம் → கச்சகம் (வளைந்து காணப்படும் கொள்ளுக்காய்).]*

**கச்சகர்** *kaccagar,* பெ.(n.) ***கச்சகம்[2]*** பார்க்க; see *kaccagam[2]*.

*[கச்சகம் → கச்சகர்.]*

**கச்சங்கட்டு-தல்** *kaccaṅ-kaṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) ***கச்சைக்கட்டு*** பார்க்க; see *kaccai-k-kaṭṭu-.*

*[கச்சை → கச்சம் + கட்டு.]*

**கச்சங்கம்** *kaccaṅgam,* பெ.(n.) கச்சம், ஒப்பந்தம்; agreement, binding. "நாங்க ளெம்மிலிருந் தொட்டிய கச்சங்கம் நானுமவனு மறிதும்" (திவ். நாய்ச்.5:8).

*[கச்சு = பிடிப்பு, கட்டுப்பாடு. கச்சு → கச்சங்கம்]*

**கச்சச்சாலி** *kacca-c-cāli,* பெ.(n.) சிவப்பு நெல்; a kind of red paddy (சா.அக.).

*[கச்சல் = சிறிய, இளைய. கச்சல் + சாலி (நெல்).]*

**கச்சச்செல்வம்** *kacca-c-celvam,* பெ.(n.) கச்சமீனின் எலும்பு (வின்.); bone of the kaccam fish.

மறுவ. கச்சத்தினங்கம்

*[கச்சம் + அத்து - கச்சத்து → கச்சச்சு. எல் = எலும்பு. எல் + அம் - எல்வம். கச்சச்சு + எல்வம் = கச்சமீனின் எலும்பு. 'அம்' பெருமைப்பொருட் பெயரீறு.]*

**கச்சட்டம்** *kaccaṭṭam,* பெ.(n.) 1. உடைமடிப்பு; folds in the garment. 2. கோவணம்; loin-cloth.

ம. கச்சட்டம்; க. கச்சட்ட; தெ. கோசி; பட. கச்ச.

*[கொள் + சு - கொட்சு → கட்சு → கச்சு (வளைத்துக் கட்டுவது). கச்சு + அட்டம் - கச்சட்டம். அட்டம் = குறுக்காக.]*

**கச்சடம்**[1] *kaccaḍam,* பெ.(n.) கோவணம்; loin-cloth.

ம. கச்சடம்; **Skt.** kacchakka (கொசுவம்).

*[கச்சட்டம் → கச்சடம்.]*

**கச்சடம்**[2] *kaccaḍam,* பெ.(n.) நீர் பிப்பிலி; an aquatic plant supposed to be a variety of long-pepper.

*[கச்சம் = நீர்கோத்த நிலம். கச்சம் → கச்சடம் = நீர்நிலத்துப் பயிரி.]*

**கச்சடம்**[3] *kaccaḍam,* பெ.(n.) வண்டி; cart.

ம. கச்சடம்; **தெ.** கச்சடமு.

*[சகடம் → கசடம் → கச்சடம். சகடம் = வண்டி. சகடம் என்னும் சொல்லைக் கச்சட எனப் பிறழப் பலுக்கிய அயன்மொழியாரால் திரிபுற்ற இச் சொல் மலையாளத்திலும் தெலுங்கிலும் வழக்கூன்றியது.]*

**கச்சடா** *kaccaḍā,* பெ.(n.) 1. இழிவு; baseness, meanness, uselessness. 2. போக்கிரித்தன்மை; knavery. *அவனொரு கச்சடாப் பேர்வழி (உ.வ.).*

ம.,தெ.,க.,து. கச்சட; **பட.** கச; **இந்.** கச்சரா; **Skt.** kaccara; **Mar.** kacarā; **Nep.** kacar.

*[கழிசடை → கச்சடா (கொ.வ.)]*

**கச்சடி** *kaccaḍi,* பெ.(n.) கோவணம்; loin-cloth.

ம. கச்சடி

*[கச்சடம்[1] → கச்சடி.]*

**கச்சண்டம்** *kaccaṇḍam,* பெ.(n.) அலரி (சா.அக.); oleander.

*[கச்ச(ம்) + அண்டம். கய் = கசப்பு; கய்ப்பு → கசப்பு. கய் → கச → கசம் → கச்சம்.]*

**கச்சணிமுலை** *kaccaṇi-mulai,* பெ.(n.) முலைக்கச்சம் கட்டியுள்ள மார்பகம்; a woman's breast with a garment on, well-girded breast.

ம. கச்சணிமுல

*[கச்சு + அணி + முலை]*

**கச்சத்தரம்** *kaccattaram,* பெ.(n.) முரட்டுத்துணி; coarse cloth.

ம. கச்சத்தரம்

*[கச்சம் + தரம்.]*

**கச்சத்தீவு** *kaccattīvu,* பெ.(n.) இராமேசுவரத்திற்கும், இலங்கையின் தலைமன்னாருக்கும் இடையில் உள்ள சிறிய தீவு; an island located in between Rameswaram and Thalaimannar of Ceylon.

*[கச்சம் + தீவு. கச்சம் = ஒருவகை ஆமை. **கச்சம்**[9] பார்க்க; see kaccam[9].]*

இந்தியக் கடலெல்லையின் கிழக்கே இரண்டு கடற்கல் தொலைவில் உள்ளது. முன்னம் இராமநாதபுரம் அரசருக்கு உரிய இத் தீவு, கடலெல்லை வகுத்த போது இலங்கை எல்லைப் பகுதியில் அமைந்துவிட்டது.



கச்சத் தீவு

**கச்சந்தி** *kaccandi,* பெ.(n.) கோணிப்பை; gunny bag. *கச்சந்தி எடுத்துக் கால்மிதியாகப் போடு (கோவை).*

ம. கச்சத்தரம் (முரட்டுத்துணி)

*[கச்ச(ம்) + அந்தி. கச்சம் = துணி, சணல் நாரினால் துணி போல் நெய்யப்பட்ட சாக்குப்பை. உம்முதல் = கூடுதல், பொருந்துதல், ஒன்றுசேர்தல். உம் → உந்து → அந்து → அந்தி = விளிம்பு ஒருசேரத் தைக்கப்பட்டது. கச்சந்தி = துணியின் விளிம்பைக் கூட்டி ஆக்கப்பட்டது, பை.]*

**கச்சந்தியவிழ்-த்தல்** *kaccandi-y-aviḻ-,* 4. செ.குன்றாவி. (v.t.) பொய்மூட்டையவிழ்த்தல்; to spin a yarn, to utter falsehood, to untie the bag.

*[கச்சந்தி + அவிழ். கச்சந்தி = கோணிப்பை, மூட்டை. பொய்யை மூட்டையிலுள்ள பொருளாக உருவகப்படுத்தி உரைக்கும் கூற்று. அவிழ்தல் (த.வி.) → அவிழ்த்தல் (பி.வி.). கச்சந்தியவிழ்த்தல் = பல பொய்களை அடுக்கிச் சொல்லுதல்.]*

**கச்சநாரத்தை** *kacca-nārattai,* பெ.(n.) 1. இளநாரத்தை; unripe citron. 2. கசப்பு நாரத்தை; bitter citron (சா.அக.).

ம. கச்ச (கசப்பு); **க.** கசரெ (கசப்பு).

[கச்சல்² + நாரத்தை. கச்சல் = இளமை, பிஞ்சுக்காய். துவர்ப்புச்சுவை அல்லது கசப்புச் சுவையுடையதாய் இருக்கும். சில சொற்களுக்குக் 'கச்ச' அடையாய் வந்துள்ளது. மலையாளத்தில் கசப்பு எனப் பொருள்படும் 'கச்ச' என்பது 'கய்க்கு' (கைத்தல்) என்னும் வினையின் பெயரெச்ச வடிவாகும்.]

**கச்சப்பட்டை** *kacca-p-paṭṭai,* பெ.(n.) மெல்லிய இரும்புப்பட்டை (முகவை); a thin iron sheet.

[கச்சல்² + பட்டை.]

**கச்சப்பணம்** *kacca-p-paṇam,* பெ.(n.) பழைய திருவிதாங்கூரில் நிலவிய படைப்பயிற்சிப் பரிசுத் தொகை; presents given for military training (சேரநா.).

ம. கச்சப்பணம், கச்சாப் பணம்.

[கச்சு² + பணம் - கச்சுப்பணம் → கச்சப்பணம். கச்சு = இடையாடை, உடுப்புகள். படைமறவர்க்கு உடுப்புகளுக்காகத் தரப்பட்ட பணத்தைக் குறித்த சொல்லாகலாம்.]

**கச்சம்¹** *kaccam,* பெ.(n.) நீர்நிலையின் கரை; bank of river, lake. etc. 2. கடற்கரை; sea-shore.

ம. கச்சம்; Skt. kaccha.

[கள் → கவ்வு → கச்சு (கடித்தாற்போல் இறுக்கிப்பிடிக்கும் பிடிப்பு, நீர் கசியாமலும் வழிந்தோடாமலும் தடுக்கும் கரை.) கச்சு + அம் - கச்சம் (கரை). 'அம்' சொல்லாக்க ஈறு. நீர்கசியும் ஏரிக்கரை சார்ந்த நிலமும் இப் பெயர் பெற்றது.]

**கச்சம்²** *kaccam,* பெ.(n.) 1. நீரால் அரிக்கப்படும் நிலப்பகுதி; land corroded by flow or wave of the river and sea. 2. நீர்கோத்த நிலம்; marshy land. 3. கடலுள் நீட்டி நிற்கும் தீவக்குறை; cape.

[கொச்சுதல் = மெல்லப் புடைத்தல், சிதறுதல், மண்ணை நீர் அரித்தல். கொச்சு → கச்சு → கச்சம். நீரால் அரிக்கப்படும் நிலப்பகுதி.]

**கச்சம்³** *kaccam,* பெ.(n.) 1. அளவை (திவா.); standard of measure. 2. மரக்கால் (திவா.); a grain measure. 3. ஒரு பேரெண்; a certain very large number. *"களிறு பொற்றேர் நான்கரைக் கச்சமாகும்" (சீவக. 2219).*

[கச்சு⁷ + அம் - கச்சம். கச்சு = கரை, எல்லை, அளவு.]

**கச்சம்⁴** *kaccam,* பெ.(n.) 1. ஒருவகைச் சிறுமீன் (மூ.அ.); a small kind of fish. 2. இறகு (பிங்.); wing, feather.

[கொச்சு → கச்சு = சிறிய, சிறிது. கச்சு + அம் - கச்சம்.]

**கச்சம்⁵** *kaccam,* பெ.(n.) 1. ஒப்பந்தம்; agreement, binding. *"இவ்வெழுதின கச்சம் பிழைக்குமூராளன்" (தெ.கல்.தொ.7. க.171).* 2. கடன் (த.சொ.அக.); debt.

ம. கச்சம்; Pkt. kajja.

[கச்சு² = கடி, இறுக்கிப்பிடி, பிணைப்பு; கச்சு + அம் - கச்சம்.]

**கச்சம்⁶** *kaccam,* பெ.(n.) ஒருவகை மூலிகை, (கடுகுரோகிணி) (தைலவ.); Christmas rose herb.

[கச்சு = கய்ப்பு, கசப்பு. ம. கச்ச (கசப்பு). . கச்சு + அம் - கச்சம்.]

**கச்சம்⁷** *kaccam,* பெ.(n.) ஒருவகைச் செய்நஞ்சு (மூ.அ.); a mineral poison.

[காய்ச்சல் → கய்ச்சல் → கச்சல். கச்சல் → கச்சம் = காய்ச்சிய செய்நஞ்சு.]

**கச்சம்⁸** *kaccam,* பெ.(n.) இடையாடையின் ஒரு முனையை ஒருங்குசேர்த்துக் கால்களுக்கிடையே விட்டு இடுப்பில் செருகிக் கட்டும் பாங்கு; a mode of wearing cloth, the one end of dhoti or saree is folded up from behind between the legs and tucked into the waist band.

ம., தெ. கச்ச; க., து., குட., பட. கச்செ; துட. கொச்; கோத. கச்வ்; Skt. kaccha; Pkt. kacca.

[கொள் → கொச்சு (சிறிது சிறிதாக வளைத்து மடித்தல்). கொச்சு → கச்சு → கச்சம். த. கச்சம் > Pkt. kacca > Skt. kaccha.]

**கச்சம்⁹** *kaccam,* பெ.(n.) ஆமை; tortoise. *"கடல்புக்குழிக் கச்சமாகி" (கம்பரா. கடறாவு.42).*

ம. கச்சம்; க. கச்சப; Skt. kacchapa.

[கொள் → கொச்சு = வளைவு, வட்டம். கொச்சு → கச்சு → கச்சம் = வட்ட வடிவுள்ள ஆமை.]

**கச்சம்¹⁰** *kaccam,* பெ.(n.) துணிவு; determination.

[கவ்வு → கச்சு(பிடிப்பு) → கச்சம். பிடிப்புக் கருத்துத் துணிவுப்பொருளில் புடைபெயர்ந்தது.]

**கச்சம்¹¹** *kaccam,* பெ.(n.) 1. யானைக் கழுத்தில் கட்டப்படும் கயிறு (திவா.); rope tied round the neck of an elephant. 2. குதிரை அங்கவடி (பிங்.); stirrup.

ம. கச்சகயறு

[கட்டு → கச்சு → கச்சம்.]

**கச்சம்**[12] *kaccam*, பெ.(n.) மெய்புதையரணம் (கவசம்); armour.

[கவ்வு → கச்சு → கச்சம்.]

**கச்சம்**[13] *kaccam*, பெ.(n.) வார்; belt.

[கச்சு[2] → கச்சம் = கட்ட உதவுவது.]

**கச்சம்**[14] *kaccam*, பெ.(n.) 1. துணி; cloth. 2. முன்றானை (த.சொ.அக.); the outer end of a saree or cloth. 3. முலைக்கச்சு; bodice, stays for the breast (த.சொ.அ).

[கச்சு[2] → கச்சம்.]

**கச்சமுண்டு** *kacca-muṇḍu*, பெ.(n.) முரட்டுத்துணி; a coarse cloth, waist-dress or upper garment (சேரநா.).

ம. கச்சமுண்டு

[கச்சம்[14] + முண்டு.]

**கச்சமுறி** *kacca-muṟi*, பெ.(n.) வேட்டி, இடுப்பில் கட்டும் எட்டுமுழத் துணி; cloth worn around the waist (சேரநா.).

ம. கச்சமுறி

[கச்சு + முறி. மடி = துணி. மடி → மறி → முறி (கொ.வ.).]

**கச்சரா** *kaccarā*, பெ.(n.) **கழிசடை** பார்க்க; see *kaḻicaḍai*.

ம. கச்ர; கசபா. கசெ; து. கச்சடெ (இழிகுலத்தான்); Skt. kaccara (dirty, foul, spoiled by dirt)

[கழிசடை → கச்சடை → கச்சடா → கச்சரா (கொ.வ).]

**கச்சல்**[1] *kaccal*, பெ.(n.) கசப்பு; bitterness. வாய் கச்சலாயிருக்கிறது (உ.வ.).

ம. கச்ச

[கயப்பு → கசப்பு → கச்சல்]

**கச்சல்**[2] *kaccal*, பெ.(n.) 1. இளம்பிஞ்சு; very tender, unripe or green fruit. 2. ஒல்லி; leanness. அவன் கச்சலாள் (உ.வ.). 3. சிறியது; that which is small. 4. மென்மை, இளமை; tenderness. 5. வாழைப்பிஞ்சு (வை.மூ.); tender plantain fruit.

க. கச்ச; து. கச்சா (பச்சை, பழுக்காத).

[கள் → கய் → கய → கயச்சல் → கச்சல். கய → இளமை, மென்மை, சிறுமை.]

**கச்சல்**[3] *kaccal*, பெ.(n.) 1. வெறுப்பு (த.சொ.அக.); hate. 2. இழிவு; low, mean. 3. பயன்படாதது; useless.

[கள் → கய் → கய → கயச்சல்(கசப்பு) → கச்சல்(வெறுப்பு).]

**கச்சல்**[4] *kaccal*, பெ.(n.) 1. தோன்றிய நிலையிலேயே உள்ளது; that which is remaining in the original state. 2. பக்குவம் செய்யப்படாதது; that which is not properly processed.

[கள் = இளமை. கள் → கய → கயச்சல் → கச்சல்.]

**கச்சல்**[5] *kaccal*, பெ.(n.) கருமை; blackness.

[கள் = கருமை. கள் → கய் → கய்ச்சல் → கச்சல்.]

**கச்சல்**[6] *kaccal*, பெ.(n.) வெளிர்நிறம்; light colour; pale.

[கச்சல் = பிஞ்சு, பசுமைநிறம், முதிராத இளமை, வெளிர்நிறம். கச்சல்[2] → கச்சல்[6]. இளம்பிஞ்சுகளின் வெளிர்நிறத்தை இச்சொல் குறிப்பதாயிற்று.]

**கச்சல்**[7] *kaccal*, பெ.(n.) சிறுமீன் (முகவை. மீனவ.); small fish.

மறுவ. குஞ்சுமீன், சென்னாக்குன்னி, கச்சலி.

[குஞ்சு → குச்சு → கொச்சு = சிறியது. கொச்சுப்பையன் = சிறுவன். ம. கொச்சு. கொச்சு → கொச்சன் = சிறுவன். (வே.கட்.149.) கொச்சு → கச்சு + அல் - கச்சல்.]

**கச்சலம்** *kaccalam*, பெ.(n.) 1. கண்ணிற்கிடும் மை; lamp black used as collyrium and applied to eye-lashes as decoration. 2. முகில்; cloud.

Skt. kajjala

[கச்சல்[5] → கச்சலம்.]

**கச்சலி** *kaccali*, பெ.(n.) **கச்சல்**[7] பார்க்க; see *kaccal*[7].

[கச்சல்[7] → கச்சலி. கச்சல் = சிறியது. 'இ' உடைமைப் பொருள் ஈறு.]

**கச்சலிமாத்திரை** *kaccali-māttirai,* பெ.(n.) நான்முகமுனி (பிரமமுனி) மருத்துவத்தில் சொல்லியுள்ள ஒருவகை மாத்திரை; a medicinal pill prescribed in the work of Brahmamuni on medicine (சா.அக.).

*[கச்சல்[1] → கச்சலி + மாத்திரை. கச்சல் = கய்ப்புச்சுவை, கசப்பு.]*

**கச்சலோடி** *kaccalōḍi,* பெ(n.) வெள்ளை வெற்றிலை; white betel leaf.

மறுவ. கச்சோடி

*[கச்சல் = வெளிர்நிறம். கச்சல் + ஒடி.]*

**கச்சவடக்காரன்** *kaccavaḍa-k-kāraṉ,* பெ.(n.) வணிகன் (வின்.); merchant, trader.

மறுவ. கச்சவடன், வணிகன்.

ம. கச்சவடக்காரன்

*[கச்சவடம் + காரன். கச்சவடம் = சிறு வணிகம், வணிகம்.]*

**கச்சவடக்காற்று** *kaccavaḍa-k-kāṟṟu,* பெ.(n.) வணிகத்திற்கு ஏந்தான காற்று; trade-wind.

ம. கச்சவடக்காற்று

*[கச்சவடம் + காற்று.]*

கச்சவடம் = துணி வணிகம், நிலைப்பாடான வணிகம். நிலக்கோளத்தின் கிழக்குமுகச் சுற்றால் மேற்கு முகமாகத் திருப்பப்பட்ட வெப்பக்காற்று, நிலநடுக்கோட்டை நோக்கி வீசும் போது கச்சவடக்காற்றாம் (Chambers Dictionary). வணிகத்திற்கு ஏற்றதான காற்று, கச்சவடக்காற்று எனப் பெயர்பெற்று வணிகத்திற்கு ஏற்ற சூழலைக் குறித்து நின்றது.

**கச்சவடப்பாடு** *kaccavaḍa-p-pāḍu,* பெ.(n.) வணிகத் தொடர்புடைய செயல்; commercial transaction (சேரநா.).

ம. கச்சவடப்பாடு

*[கச்சவடம் + பாடு. பாடு = உழைப்பு, தொழில். கச்சவடம்[2] பார்க்க; see kaccavaḍam[2] .]*

**கச்சவடம்[1]** *kaccavaḍam,* பெ.(n.) 1. இடுப்பில் அணியும் ஆடை; cloth or clothes worn around waist. 2. உடுப்புகள்; dress. 3. துணிமணி; clothing.

*[கச்சு =இடுப்பில் அணியும் துணி. கச்சு → கச்சம் + (படம்) வடம் - கச்சவடம். படம் = துணி. படம் → வடம். (ப → வ சொற்பலுக்கத் திரிபு) கச்சபடம் = (இருபெயரொட்டுப் பண்புத்தொகை.) இடுப்பில் அணியும் துணியைமட்டும் குறித்த கச்சம் என்னும் சொல் புதிய ஆடைகளையும் உடுப்புகளையும குறிக்கும் பொதுப்பெயராயிற்று.]*

**கச்சவடம்[2]** *kaccavaḍam,* பெ.(n.) 1. வணிகம்; *trading.* 2. துணிவணிகம்; *cloth trading.* பிச்சைக்கு மூத்தது கச்சவடம் (யாழ்ப்.).

ம. கச்சவடம்; Pkt. kaccavada; Skt. kaccatika.

*[கச்சு + (படம்) வடம். கச்சுவடம் = இடையில் உடுக்கும் துணி முதலியவை. கச்சு = வட்டுடை, இடையில் அணியும் உடுப்பு வகைகள், துணி. படம் → வடம். ப → வ (சொற்பலுக்கத் திரிபு). துணியைக் குறித்த சொல் துணிவாணிகத்தையும் குறித்தது. கச்சவடம் = துணி விற்கும் கடை, அறுவை வாணிகம். இடுப்பில் அணியும் உடையை மட்டும் குறித்த இச் சொல் நாளடைவில் பொதுவாக உடுக்கும் எல்லா உடைகளையும், விற்பனைக்கு வரும் புதிய துணிகளையும் குறித்தது. மலையாள நாட்டில் மணமக்களுக்கு வழங்கும் புத்தாடையைச் சிரியன் கிறித்தவர் கச்சதழுகல் (கச்சம் தழுவல் = மகிழ்ந்து ஏற்றல்) என்று வழங்குதலைக் காணலாம்.]*

**கச்சவடம்[3]** *kaccavaḍam,* பெ.(n.) குழப்புகை (இ.வ.); mixing up of things cause confusion.

*[கச்சவடம் = சிறுவணிகம், வெவ்வேறு பொருள் வணிகம். காலத்திற்கேற்றவாறு அடிக்கடி வணிகப் பொருள்களை மாற்ற வேண்டிய சூழலின் போது அடுத்து எப்பொருளின் வணிகம் என்றறியா நிலைப்பாடற்ற தன்மையைக் குறிக்கும் முகத்தான் கச்சவடம் குழப்பத்தைக் குறித்து நின்றது.]*

**கச்சவடமுத்திரை** *kaccavaḍa-muttirai,* பெ.(n.) வணிகக்குறியீடு; trade-mark.

ம. கச்சவடமுத்திரை

*[கச்சவடம் + முத்திரை.]*

**கச்சவலை** *kacca-valai,* பெ.(n.) ஒருவகை மீன்வலை; a kind of fishing net.

ம. கச்சவல

*[கொச்சு → கச்சு = மடிப்பு. கச்சு + வலை - கச்சவலை = மடிப்புவலை.]*

**கச்சவாழை** *kacca-vāḻai,* பெ.(n.) கற்றாழை; the plant aloe vera.

ம. கச்சவாழ; க. கத்தாழெ.

*[கச்சு = மடிப்பு, அடுக்கு. கச்சு + வாழை.]*

**கச்சழி** *kaccaḻi*, பெ.(n.) சிறப்பு விருது கைவளையம்; arm ring bestowed as award.

க. கச்சழி, கச்சளி.

*[கச்சு + ஆழி - கச்சாழி → கச்சழி. கச்சு = செறிவு, இறுக்கம். ஆழி = வளையம்.]*

**கச்சளம்** *kaccaḷam*, பெ.(n.) 1. கண்ணிடு மை (யாழ்.அக.); collyrium for the eyes. 2. கரிப்புகை (இ.வ); lamp black. 3. இருள் (பிங்.); darkness. 4. அரக்காம்பல்; red water-lily.

Skt., Mar. kajjala

*[கள் → கச்சு + அளம் - கச்சளம். கள் = கருமை. அளம் - சொல்லாக்க ஈறு. கருமைப்பொருள், கருஞ்சிவப்பு ஆம்பலுக்குமாகி வந்துள்ளது.]*

**கச்சற்கருவாடு** *kaccaṟ-karuvāḍu*, பெ.(n.) கச்சல் மீனின் உணங்கல்; kaccal fish salted and dried. "கண்டாற் பசியெழும்பும் கச்சற் கருவாடு" (பதார்த்த.921).

*[கச்சல்[7] + கருவாடு.]*

**கச்சற்கோரை** *kaccaṟ-kōrai*, பெ.(n.) 1. நெய்தல் நிலத்துப் புல்வகை (வின்.); a sedge that grows near the sea-shore on saline ground (W.). 2. ஒருவகைக் கசப்புக் கோரைப்புல்; a kind of bitter kōray or sedge grass.

*[கச்சல்[1] + கோரை.]*

**கச்சற்புல்** *kaccaṟ-pul*, பெ.(n.) ***கச்சற்கோரை*** பார்க்க; see *kaccaṟ-kōrai*.

*[கச்சல்[1] + புல்.]*

**கச்சன்[1]** *kaccaṉ*, பெ.(n.) ஆமை (மூ.அக.); tortoise.

க. கச்சப; Skt. kaccapaka; Mar. Kacchapa.

*[கச்சம்[9] → கச்சன்.]*

**கச்சன்[2]** *kaccaṉ*, பெ.(n.) காயாமரம்; ironwood tree.

*[கச்சு[5] → கச்சன். கச்சு = சிறியது. கச்சன் = சிறு வித்துகளைக் கொண்ட மரவகை.]*

**கச்சனம்** *kaccaṉam*, பெ.(n.) திருவாரூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Thiruvarur district.

*[கச்சல் + அம் - கச்சலம் → கச்சனம். கச்சல் = சிறியது. கச்சனம் = சிற்றூர்.]*

**கச்சனாவிளை** *kaccaṉāviḷai*, பெ.(n.) தூத்துக்குடி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Tuttukudi district.

*[கச்சல் + அம் - கச்சலம் + விளை. கச்சலாவிளை - கச்சனாவிளை. கச்சல் = சிறியது. விளை = பனந்தோப்பு, காவற்காடு. கச்சனாவிளை = பனந்தோப்பு அல்லது காவற்காடு இருந்த இடத்தில் அமைந்த சிற்றூர்.]*

**கச்சா** *kaccā*, பெ.(n.) 1. பயன்பாட்டிற்குகந்தவாறு தூய்மை செய்யப்படாதது; unrefined. கச்சாயெண்ணெய் (உ.வ.). 2. கரடானது; crude. கச்சாப்பருத்தி (உ.வ.). 3. தாழ்ந்தது, இழிந்தது; low, mean. இவன் ஒரு கச்சாப்பயல் (உ.வ.).

ம.,க. கச்சா; ஒ. காச்சா. Urdu. kaccha (crude); H. kanco, kacca; Guj. kāncu; Sind. kaco; Mar., Nep. kaccā;Beng. kanca.

*[கச்சல்[4] → கச்சா.]*

துப்புரவு செய்யாததால் நேரடியாகப் பயன்கொள்ள இயலாத கனிம மூலப்பொருள்களும், ஆலைத் தொழில்களுக்கான இயற்கை மூலப்பொருள்களும் நாளடைவில் இச் சொல்லால் குறிக்கப்படலாயின. கச்சல் என வழங்குவதே செஞ்சொல்லாம்.

**கச்சாக்கழி** *kaccā-k-kaḻi*, பெ.(n.) கச்சாவலையில் உள்ள கைப்பிடிக் கழி (மீனவ.); small stick on both ends of a fishing net.

*[கச்சல்[2] → கச்சா + கழி - கச்சாக்கழி. கச்சல் = சிறியது.]*

இக் கொம்புகள் கட்டுமரத்தின் மிக அருகில் மேய்ந்து வரும் மீன்களைக் கீழேந்தி வலைக்க உதவும்.

**கச்சாங்காற்று** *kaccāṅ-kāṟṟu*, பெ.(n.) மேற்கிலிருந்து கிழக்குமுகமாய் வீசுங் காற்று (மீனவ.); west wind.

*[கச்சான் + காற்று. கச்சான் = மேற்கு.]*

**கச்சாங்கொட்டை** *kaccāṅ-koṭṭai*, பெ.(n.) நிலக்கடலை (யாழ்.அக.); groundnut.

*[கச்சான் + கொட்டை. கச்சான் = மேற்கு.]*

கச்சாங்கொட்டை = மேலைக்கடல் வழியாக இறக்குமதியான பயிரி (தாவரம்). மலையாளமொழியில் இதனைக் கப்பலண்டி - கப்பல் வழியாக வந்த அண்டி (கொட்டை) என வழங்குதலை ஒப்பிட்டு நோக்குக.

**கச்சாங்கோடை** *kaccāṅkōḍai,* பெ.(n.) தென்மேற்குப் பருவக்காற்று; south west wind.

*[கச்சான் + கோடை. கச்சான் = மேற்கு. கோடை = கோடைக்காலக் காற்று.]*

**கச்சாங்கோரை** *kaccāṅ-kōrai,* பெ.(n.) *கச்சற்கோரை* பார்க்க; *see kaccaṟ-kōrai.*

**கச்சாச்சேர்** *kaccā-c-cēr,* பெ.(n.) 8 பலம் கொண்ட ஒரு நிறை; a small measure of weight which made up of 8 palams.

*[கச்சா + சேர். கஃசு = சிறிய நிறுத்தலளவை, காற்பலம். கஃசு → கச்சா. கச்சா + சேர். சேர் = அளவை., (சிறுமை முன்னொட்டு)]*

**கச்சாத்து**[1] *kaccāttu,* பெ.(n.) 1. வரிபெற்றுக் கொண்டதற்கான பற்றுச்சீட்டு (ரசீது); tax receipt. *'காணி விலைப் பிரமாணக் கச்சாத்து'* (S.I.I.78). 2. ஒப்புகைச்சீட்டு; acknowledgement. நகையை அடைமானம் வைத்துக் கச்சாத்துப் பெற்றுவா (உ.வ.). 3. வாடிக்கையாளருக்கு வணிகர் அனுப்பிய பொருள்களின் பட்டியல்; Invoice, list of goods sent by a tradesman to his customer.

ம. கச்சாத்து

*[கை + சாத்து - கைச்சாத்து → கச்சாத்து (கொ.வ). கைச்சாத்து பார்க்க; see kai-c-cāttu.]*

**கச்சாத்து**[2] *kaccāttu,* பெ.(n.) வணிகம்; marketing, business.

*[கச்சு + சாத்து - கச்சுச்சாத்து → கச்சாத்து. சாத்து = வணிகக்கூட்டம், வணிகம். கச்சு = உடுப்புகள், துணிகள்.]*

**கச்சாத்து**[3] *kaccāttu,* பெ.(n.) தொடர்பு, உறவு; contact, relationship. இவனுக்கும் அவனுக்கும் கச்சாத்துக் கிச்சாத்து இல்லாதபோது எதை வைத்துப்பேசுவது (உ.வ.).

*[கைச்சாத்து → கச்சாத்து. கச்சாத்து = பற்றுச்சீட்டு, ஒப்புகை.]*

வரி செலுத்துதல், பொருட்பட்டியல் அனுப்புதல், ஒப்புகையளித்தல் போன்றவற்றில் இருவழித் தொடர்பு இருப்பதைக் காண்க. இவ்வாறு கொடுக்கல் வாங்கல் தன்மை, தொடர்பு, உறவு எனப் பொருள்பட வழிகோலியது.

**கச்சாந்தகரை** *kaccāntagarai,* பெ.(n.) பவளமல்லிகை (யாழ்.அக.); night jasmine.

*[கச்சான் + தகரை. தகரம் = மணப்பொருள், மணம் பரப்புவது. கொச்சு → கச்சு = சிறிய, சிறிது. கச்சு → கச்சான் = சிறிய பூவையுடையது.]*

**கச்சாப்பொருள்** *kaccā-p-poruḷ,* பெ.(n.) மூலப்பொருள்; raw material.

*[கச்சா + பொருள்.]*

**கச்சாயம்**[1] *kaccāyam,* பெ.(n.) கடலுட் செல்லும் தரைப்பகுதி, நிலமுனை (யாழ்.அக.); cape.

*[கச்சுதல் = நீரால் அரிக்கப்படுதல். மலையாள மொழியில் நீர்கோத்த நிலப்பகுதி கச்சம் எனப்படுதலை ஒப்பிடுக. கச்சு = நீரால் அரிக்கப்படும் நிலப்பகுதி, கடலுள் நீட்டிநிற்கும் தீவக்குறை. கச்சு → கச்சாயம்.]*

**கச்சாயம்**[2] *kaccāyam,* பெ.(n.) ஒருவகைச் சிற்றுண்டி; a kind of sweet cake.

*[கொச்சு → கச்சு → கச்சாயம்.]*

**கச்சாயி** *kaccāyi,* பெ.(n.) ஒருவகை மீன்; a kind of fish.

ம. கச்சாயி, கச்சாடி; Skt. kajjale.

*[கச்சம்[1] = கரை, கடற்கரை. கச்சம் → கச்சா → கச்சாயி.]*

**கச்சாயெண்ணெய்** *kaccā-y-eṇṇey,* பெ.(n.) தூய்மை செய்யப்படாத நில எண்ணெய்; crude oil.

*[கச்சு → கச்சா + எண்ணெய். கச்சா பார்க்க; see kaccā.]*

**கச்சாரம்**[1] *kaccāram,* பெ.(n.) 1. செப்பம், செறிவு, ஒழுங்கு; accuracy, compact. 2. சரியான அளவு; correctness. 3. மிகப்பொருத்தம்; quite fitting.

*[கவ்வு → கச்சு + ஆரம் - கச்சாரம் (பிடித்தமாக, செறிவாக அமைந்தது, பொருத்தமாக இருப்பது.) 'ஆரம்' சொல்லீறு. இச் சொல்லைக் கச்சிதம் என வழங்குவது பொருத்தமில்லாதது. 'இதம்' வடசொல்லாக்க ஈறு. அதனைத் தவிர்த்தல் வேண்டும். கச்சிதம் என்பதற்கு நிகரான தமிழ்ச்சொல் கச்சாரம்.]*

**கச்சாரம்**[2] *kaccāram,* பெ.(n.) பாய்முடையுந் தொழில்; mat-making. *வண்ணாரம் துன்னாரம் மச்சிகமே கச்சாரம் (நீலகேசி,280, உரை).*

மறுவ. கச்சுக்குத்துதல்.

*[கள் → கச்சு = பின்னுதல், முடைதல், பிணைத்தல். கச்சு + ஆரம் - கச்சாரம். 'ஆரம்' சொல்லீறு.]*

**கச்சால்**[1] *kaccāl*, பெ.(n.) மீன் பிடிக்குங் கூடு (யாழ்ப்.); wicker basket for catching fish.

ம. கச்சால்; குரு. கச்ல.

*[கை + சால் - கைச்சால் → கச்சால் = கைக்கூடை. (கொ.வ.)]*

**கச்சால்**[2] *kaccāl*, பெ.(n.) சிறிய காலவாய்; a small channel for irrigation.

ம. கச்சால்

*[கை + சால் - கைச்சால் → கச்சால். கால் (நீட்சி) → சால்.]*

**கச்சால்**[3] *kaccāl*, பெ.(n.) நக்கவாரத் (நிக்கோபார்) தீவுகளுள் காணப்படும் ஒரு சிறுதீவு; one of the small islands in Nicobar Islands.

*[கச்சம்[2] → கச்சல் → கச்சால்]*

**கச்சாலம்** *kaccālam*, பெ.(n.) சுரநஞ்சு அல்லது காய்ச்சல் நஞ்சு; a kind of native arsenic (சா.அக).

*[காய் → காய்ச்சல் → காய்ச்சலம் → கச்சாலம்.]*

**கச்சாலை**[1] *kaccālai*, பெ.(n.) **1.** வீட்டுக் கூரையின் வெளித்திண்ணை; raised pial at the entrance of a thatched front roof. **2.** நெடுங்கூடம் அல்லது கொட்டாரத்தின் முன்திண்ணைத் தாழ்வாரம்; front verandah of a hall. **3.** சிறிய இடம்; a small area. **4.** பணிசெய்யும் அலுவலகம்; office. **5.** பலர் கூடி உரையாடும் மன்றம்; an assembly.

**ம.** கச்சேரி; **க.** கசேரி; **தெ.** கச்சேரி; **Mar.**kacĕrī; **H., U.** kachhari; **Pkt.** kaccaari; **Ar.,Beng.** kăcāri; **Sinh.** kacari; **Persn.** kacēri; **Skt.** krityākāra.

*[கை + சாலை - கைச்சாலை → கச்சாலை. கச்சால்[2] = சிறிய கால்வாய். ஒ.நோ. கை + சால் - கைச்சால் → கச்சால்[1] = மீன்பிடிக்கும் கூடு. கை = சிறிய. சாலை = ஓலை வேய்ந்த கூரை, இடம், பள்ளி, மன்றம். கச்சாலை = வீட்டுக் கூரையின்கீழுள்ள வெளித்திண்ணை.]*

சாலை என்பது நீண்ட கொட்டகையைக் குறித்த சொல். நீண்ட கொட்டகையின் முன்திண்ணையில் தாழ்வாரம் இறக்கியிருந்தால் முன்திண்ணை நிழலிடம் கைச்சாலை எனப்படும். சிறிய சுவர் கைச்சுவர் எனப்படும். கை + சாலை - கைச்சாலை → கச்சாலை. இச் சொல் நாட்டுப்புறங்களில் மட்டும் வழங்கிய சொல். முன்திண்ணையில் அமர்ந்து ஊர்ப் பொதுச்செய்திகள் பேசுவதும் வழக்குகள் தீர்த்து வைப்பதும் திண்ணைப்பள்ளிக்கூடம் நடத்துவதும் பண்டுதொட்டு நடைபெற்று வந்த நிகழ்வுகள். ஆயின் இச் சொல் பொதுமக்கள் வாயிலாக இந்தியமொழிகள் அனைத்திலும் கச்சேரி என்று உருத்திரிந்து ஊடாடியுள்ளது. இச் சொல்லுக்குப் பிறமொழிகளில் வேர்மூலம் இல்லை. வடமொழியாளர் இதனைச் செயலாற்றும் இடம் என்னும் பொருளில் 'க்ருத்யாகார' என மொழிபெயர்த்துக் கொண்டனர்.

**கச்சாலை**[2] *kaccālai*, பெ.(n.) காஞ்சிபுரத்திலுள்ள சிவன் கோயில்களுள் ஒன்று; one of Śivā temples at Kāñjipuram. *கச்சிக் கச்சாலைக் கனி (தண்டி. 95,13 உரை).*

*[காஞ்சி → கச்சி + ஆலை. கச்சு = சிறிய. ஆலை = ஆலயம், கோயில். காஞ்சி = காஞ்சிமரத்தின் பெயர் அவ்வூரின் பெயராயிற்று.]*

**கச்சாவலை** *kaccā-valai*, பெ.(n.) இறால், நண்டு ஆகியவற்றைப் பிடிக்கப் பயன்படும் கூம்பு வடிவினதாகிய சிறிய வலை; a small conical shaped fishing net for fishing prawns, crabs, etc.

*[கச்சல் = சிறியது. கச்சல்[2] → கச்சா + வலை.]*

**கச்சாவீடு** *kaccā-vīḍu*, பெ.(n.) குறுங்காலிகமாக அமைக்கப்படும் வீடு; house built temporarily.

*[கச்சல்[2] + வீடு - கச்சவீடு → கச்சாவீடு. கச்சல் = சிறியது. குறுங்காலிகமாகக் கட்டப்படும் சிறியவீடு 'கச்சாவீடு' எனப்பட்டது.]*

**கச்சான்** *kaccāṉ*, பெ.(n.) **1.** கடற்கரை; sea-shore. **2.** மேற்குத்திசை; western direction. **3.** மேல்காற்று, கோடைக்காற்று; west wind. **4.** தென்மேற்குக் காற்று; south west wind. **5.** சாரல்காற்று; a wind accompanied by drizzling.

ம. கச்சான்

*[கச்சம்[1] → கச்சான். கச்சம் = கரை, கடற்கரை. கச்சம்[1] பார்க்க; see kaccam[1]. கிழக்குக் கடற்கரையிலுள்ள தமிழக மீனவர்கள் கடலிலிருந்து பார்க்கும்போது கடற்கரைப் பகுதியிலிருந்து வீசும் காற்று மேற்றிசைக் காற்றாகத் தெரிதலின் கரைக்காற்றைக் கச்சான் காற்று என்றனர். இதனால் கச்சான் என்னும் சொல் மேற்கு எனப் பொருள் தருவதாயிற்று.]*

**கச்சான்கிடத்தல்** *kaccāṉ-kiḍattal*, தொ.பெ.(vbl.n.) கடற்பரப்பில் நெடுநேரமாய்த் தென்றல் வீசுதல் (மீனவ.); a western gentle breeze blowing for a long time.

*[கச்சான் + கிடத்தல். கச்சான் = மேற்கு, மேற்கிலிருந்து வீசும் காற்று. இங்குத் தென்மேற்குக் காற்றையே குறித்தது.]*

**கச்சான்கோடை** *kaccāṉ-kōḍai,* பெ.(n.) **கச்சாங் கோடை** பார்க்க; see *kaccāṅ-kōḍai.*

*[கச்சான் + கோடை.]*

**கச்சான்தொவகரை** *kaccāṉ-tovakarai,* பெ.(n.) மேற்கிலிருந்து கிழக்காய்ச் செல்லும் கரையோரத்துக் கடல்நீரோட்டம்; current of water flow along the seacoast from west to east.

*[கச்சான் + (தூவு → தொவ) + கரை. கச்சான் = மேற்கு. தூவு = செலுத்தல், போதல், வீசுதல்.]*

**கச்சான்பிடி-த்தல்** *kaccāṉ-piḍi-,* 4 செ.குன்றாவி.(v.t.) கச்சான்காற்றை ஏற்குமாறு பாயோட்டம் செய்தல்; to adjust the sail of a boat towards west wind.

*[கச்சான் + பிடி-.]*

**கச்சான்வலைப்பு** *kaccāṉ-valaippu,* பெ.(n.) கடற்பரப்பின் மேற்குத் திசையில் மீன் வலைத்தல் (முகவை மீனவ.); fishing with net in the western direction.

*[கச்சான் + வலைப்பு. வலை → வலைப்பு = வலையில் மீன்பிடித்தல்.]*

**கச்சானாள்** *kaccāṉāḷ,* பெ.(n.) கோடைக்காலம் (செங்கை.மீனவ.); summer.

*[கச்சான் + நாள்.]*

**கச்சானில்கூட்டு** *kaccāṉilkūṭṭu,* பெ.(n.) மேலைக்காற்றும் தென்றலும் கலந்த காற்று; wind, gentle breeze.

*[கச்சான் + இல் + கூட்டு. 'இல்' இடப்பொருள் உருபு.]*

**கச்சானீர்** *kaccā-ṉīr,* பெ.(n.) **கச்சான் தொவகரை** பார்க்க; see *kaccāṉ-tovakarai.*

*[கச்சான் + நீர்.]*

**கச்சி**[1] *kacci,* பெ.(n.) காஞ்சிபுரம்; the city of Kāñjipuram. *"பூங்கொடி கச்சி மாநகர் புக்கதும்" (மணிமே.பதி.90).*

*[காஞ்சி → கஞ்சி → கச்சி.]*

**கச்சி**[2] *kacci,* பெ.(n.) வைக்கோற்போர்; hay, straw.

ம. கச்சி; Skt. kakṣa (உலர்ந்த புல்)

*[கழி → கழிச்சு → கச்சு → கச்சி = தாளடித்து ஒதுக்கப்பட்டது.]*

**கச்சி**[3] *kacci,* பெ.(n.) 1. கொட்டாங்கச்சி (வின்.); coconut shell. 2. உலர்ந்த பனங்கொட்டையின் பாதி, ஊமற்பிளவு (யாழ்.அக.); half of a dried palmyra nut.

*[காய்ச்சு → கச்சு → கச்சி.]*

**கச்சி**[4] *kacci,* பெ.(n.) 1. சீந்தில்; moon creeper. 2. வெண்காரவுள்ளி; white pungent onion. 3. சின்னி; acalpha shrub (சா.அக.).

*[கச்சல் → கச்சி (சிறியது).]*

**கச்சி**[5] *kacci,* பெ.(n.) 1. கணுக்காலெலும்பு; ankle bone. 2. மீன்வலைகளின் இணைப்பு வலை (குஞ்சை.மீனவ.); linking fishing net.

*[கவ்வு → கச்சு → கச்சி.]*

**கச்சி**[6] *kacci,* பெ.(n.) துடைப்பம்; broom.

ம. கச்சி

*[குச்சி → கச்சி; குச்சி = தென்னை ஈர்க்குக் குச்சிகளால் செய்த விளக்குமாறு. தமிழ்நாட்டில் குச்சி என்றும் சேரநாட்டில் கச்சி என்றும் இச் சொல் வழங்கியுள்ளது.]*

**கச்சிக்கல்** *kacci-k-al,* பெ.(n.) மணற்கல்; sand stone.

ம. கச்சிக்கல்லு

*[கச்சு = சிறியது. கச்சு → கச்சி + கல்.]*

**கச்சிக்கலம்பகம்** *kacci-k-kalambagam,* பெ.(n.) 1. பூண்டி அரங்கநாதர் இயற்றிய சிற்றிலக்கியம்; a treatise of kalambagam variety composed by Pūṇḍi Araṅganādar. 2. கச்சி ஞானப்பிரகாசர் இயற்றிய சிற்றிலக்கியம்; a kalambagam composed by Gnānapprakāšar.

*[கச்சி + கலம்பகம். காஞ்சி → கஞ்சி → கச்சி. கலம்பகம் பார்க்க; see kalambagam.]*

**கச்சிக்கிழங்கு** *kacci-k-kiḻaṅgu,* பெ.(n.) சின்னிக்கிழங்கு; root of acalpha (சா.அக.).

*[கச்சி + கிழங்கு. கச்சி = சிறிது, சிறிய.]*

**கச்சிக்குழல்** *kacci-k-kuḻal,* பெ.(n.) ஒருவகைக் கழுத்தணி; a kind of neck ornament.

மறுவ. நோன்பு முடி

ம. கச்சிக்குழல்

*[கச்சு → கச்சி + குழல். கச்சு = கவ்வு, பிடிப்பு.]*



கச்சிக்குழல்

**கச்சிதம்** *kaccidam,* பெ.(n.) *கச்சாரம்*[1] பார்க்க; see *kaccāram*[1].

தெ. கச்சிதமு; க. கச்சிதா; Pali. kaccita; Pkt. kacciya; H. kacith.

*[கச்சு = இறுக்கமாகப் பிணைந்திருப்பது. கச்சு + இதம் - கச்சிதம்.]*

கச்சாரம் எனின் முற்றுந் தமிழாம். 'இதம்' வடமொழிச் சொல்லீறு. ஒ.நோ. தத்திதம், இங்கிதம், தப்பிதம். இதம் என்னும் ஈறு தமிழாகாது. அதனை நீக்குதல் வேண்டும்.

**கச்சிப்பள்ளி** *kacci-p-paḷḷi* பெ(n.) சேலம் மாவட்டம் ஓமலூர் வட்டத்திலுள்ள தாசசமுத்திரத்தில் ஏரி அமைத்த தலைவரின் ஊர், சங்ககிரி - ஓமலூர் இடையே உள்ளது; the native place of a headman who had built a tank at Dasasamudram in Salem district,Omalur taluk, situated in between Omalur and Sankagiri. *"வடபூவானிய நாட்டுக் கச்சிப்பள்ளியில் காமிண்டன்"* **(ஆவணம், 1991-6).**

*[கச்சி*[1] *+ பள்ளி. காஞ்சிபுரம் பகுதியில் இருந்து சென்றவர்கள் வாழ்ந்த ஊராகலாம்.]*

**கச்சிப்பெருமாள்** *kacci-p-perumāḷ,* பெ.(n.) பெரம்பலூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Perambalur district.

*[கச்சி + பெருமாள் - கச்சிப்பெருமாள் (இ.பெ.) - கச்சிப்பெருமாள் என்பவன் பெயரிலமைந்த ஊர்.]*

**கச்சிப்பெருமாள்நத்தம்** *kacchi-p-perumāḷ nattam,* பெ.(n.) கடலூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Cudalore district.

*[கச்சி + பெருமாள் + நத்தம் - கச்சிப்பெருமாள் நத்தம். கச்சிப்பெருமாள் பெயரிலமைந்த குடியிருப்பு. நத்தம் = குடியிருப்பு அமைப்பதற்காக விடப்பட்ட நிலம்.]*

**கச்சிப்பேட்டு இளந்தச்சனார்** *kacci-p-pēṭṭu-iḷandaccaṉār,* பெ.(n.) நற்றிணை 266ஆம் பாடலைப் பாடிய புலவர்; author of 266th verse of Naṟṟiṇai.

*[காஞ்சி → கச்சி + பேடு + இளம் + தச்சன் + ஆர். பேடு = பொட்டல் நிலம்.]*

**கச்சிப்பேட்டுக்காஞ்சிக்கொற்றனார்** *kacci-p-pēṭṭu-k-kāñji-k-koṟṟaṉār,* பெ.(n.) குறுந்தொகையில் 213, 216ஆம் பாடல்களைப் பாடிய கடைக்கழகப் புலவர்; author of verses 213 and 216th of *Kuṟuntogai.*

*[கச்சிப்பேடு + காஞ்சிக்கொற்றனார்.]*

**கச்சிப்பேட்டுநன்னாகையார்** *kacci-p-pēṭṭu nannāgaiyār,* பெ.(n.) குறுந்தொகையில் 30, 172, 180, 192, 197, 287 ஆகிய ஆறு பாடல்களைப் பாடிய கடைக்கழகப் புலவர்; author of verses 30, 172, 180, 192, 197, 287th of *Kuṟuntogai.*

*[கச்சிப்பேடு + நன்னாகையார்.]*

**கச்சிப்பேட்டுப்பெருந்தச்சனார்** *kacci-p-pēṭṭu-p- peruntaccaṉār,* பெ.(n.) நற்றிணையில் 144, 273 ஆகிய பாடல்களைப் பாடிய கடைக்கழகப் புலவர்; author of verses 144 and 273rd of *Naṟṟiṇai.*

*[கச்சிப்பேடு + பெருந்தச்சனார்.]*

**கச்சிப்பேடு** *kacci-p-pēḍu,* பெ.(n.) காஞ்சிபுரத்தின் அருகில் உள்ள சிற்றூர்; a hamlet near Kanchipuram. *'கச்சிப்பேட்டுப் பெரிய திருக்கற்றளி'* ***(S.I.I.i.113).***

*[காஞ்சி → கச்சி + பேடு. போடு → பேடு = பொட்டல் நிலம்.]*

கட்டாந்தரை, அல்லது போடான (பொட்டல்) நிலத்திலமைந்த ஊர், போடூர் என வழங்கப்படுதல் காண்க.

**கச்சிமுற்றம்** *kacci-muṟṟam,* பெ.(n.) காஞ்சிநகரத்தின் உள்ளெல்லைப் பகுதி; inner

boundary of Kanchipuram. *"கச்சி முற்றத்து நின்னுயிர் கடைகொள" (மணிமே.21:174).*

*[கச்சி[1] + முற்றம். முற்றம் = நுழைவாயில், எல்லை.]*

**கச்சியப்பசிவாச்சாரியார்** *kacci-y-appa-śivāccāriyār,* பெ.(n.) கந்தபுராண ஆசிரியர்; the author of Kandapurāṇam.

*[காஞ்சி → கச்சி + அப்பன் + சிவ + ஆச்சாரியார்.]*

**கச்சியப்பமுனிவர்** *kacci-y-appa-muṉivar,* பெ.(n.) தணிகைப்புராணம் முதலியவற்றின் ஆசிரியர்; the author of Taṉigai-p-purāṇam and other śaivite works, 18th c A.D.

*[காஞ்சி → கச்சி + அப்பன் + முனிவர்.]*

**கச்சிராயநத்தம்** *kaccirāya-nattam,* பெ.(n.) கடலூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Cudalore district.

*[கச்சி + அரையன் + நத்தம் - கச்சியரையன்நத்தம் - கச்சிராயன்நத்தம்.]*

**கச்சிராயபாளையம்** *kaccirāya-pāḷayam,* பெ.(n.) விழுப்புர மாவட்டத்துச் சிற்றூர்; a village in Villuppuram district.

*[கச்சி + அரையன் + பாளையம் - கச்சியரையன்பாளையம் → கச்சிராயன்பாளையம்.]*

**கச்சிராயன்பட்டி** *kacci-rāyaṉ-paṭṭi,* பெ.(n.) மதுரை மாவட்டத்தில் உள்ள சிற்றூர்; a village in Madurai district.

*[கச்சி + அரையன் + பட்டி - கச்சியரையன்பட்டி - கச்சிராயன்பட்டி. கச்சிராயன் பெயரிலமைந்த சிற்றூர்.]*

**கச்சில்[1]** *kaccil,* பெ.(n.) பேரீச்சை; date (சா.அக.).

*[காய்ச்சில் → கச்சில். காய்ச்சு → கச்சு = உலர்ந்தது. ம. கச்சில = உலர்ந்த இலை.]*

**கச்சில்[2]** *kaccil,* பெ.(n.) ***கச்சி[2]*** பார்க்க; see *kacci[2]*.

ம. கச்சில்

*[கச்சி[2] → கச்சில்.]*

**கச்சிவம்** *kaccivam,* பெ.(n.) பளிங்குக்கல்; marble (சா.அக.).

ம. கச்சி

*[கச்சு → கச்சி → கச்சிவம். கச்சு = சிறிது, சிறிய.]*

**கச்சினி** *kacciṉi,* பெ.(n.) தொடர் நிகழ்வில் முதல் மாதம்; the first month (சா.அக.).

*[கச்சு → கச்சினி. கச்சு = இளமை, பிஞ்சு, தொடக்கம்]*

**கச்சினித்திங்கள்** *kacciṉi-t-tiṅgaḷ,* பெ.(n.) ஒரு திங்கள் காலம்; one month period.

*[கச்சினி + திங்கள். கச்சினி = முதல்.]*

**கச்சு[1]-தல்** *kaccu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. கடித்தல்; to bite. 2. இணைத்தல்; to bind. 3. அரித்தல்; gnawing (சா.அக.). 4. இறுக்கிக் கட்டுதல்; to tie tightly.

க., பட., கச்சு; கொலா., பர். கச்ச; கட. கச்ச், கச்; மால். கீரசவெ; து. கச்சுனி; குவி. கசளி; கூ. கச்ச்.

*[கடித்தல் → கச்சல் → கச்சு.]*

**கச்சு[2]** *kaccu,* பெ.(n.) 1. இடையில் கட்டும் பட்டை, கச்சை; belt, girdle, sash, cummerbund. *"மள்ளர் . . . யாத்த பூங்கச்சு" (சீவக.16).* 2. கச்சைக்கயிறு; broad tape band. *"தாழ் கச்சிற் பிணிப்புண்டு" (சீவக.1748).* 3. ஆடைவகை; a kind of garment. *"கருங்கச்சு யாத்த" (அகநா.376:8). 4. துணி;* cloth.

ம. கச்சு; க. கச்செ, Vedic. kachchu.

*[கட்டு → கச்சு = கட்ட உதவும் பட்டை, கயிற்றுத்துணி, இறுக்குகை, பிணைப்பு.]*

**கச்சு[3]** *kaccu,* பெ.(n.) முலைக்கச்சு; a kind of corset worn by women in ancient times. *"மார்பின் விரவுவரிக் கச்சின்" (பெரும்பாண்.70-71).*

ம. கச்சு; குரு. கச்சி; கசபா. கச்சு; Skt. kancuka.

*[கவ்வு → கச்சு.]*

**கச்சு[4]** *kaccu,* பெ.(n.) கசப்புச்செடி; bitter plant (சா.அக.).

*[கள் → கய் → கய → கயச்சு → கச்சு. கய = கசப்பு.]*

**கச்சு[5]** *kaccu,* பெ.(n.) 1. மா, பலா முதலிய பழங்களைச் சிறு துண்டுகளாக நறுக்கிச் செய்யும் உணவு வகை; fruit salad. 2. தக்காளி, வெள்ளரி முதலிய காய்களைச் சிறு துண்டுகளாக நறுக்கி உருவாக்கும் உணவுவகை; vegetable salad. 3. சிறிது; little.

*[குஞ்சு → கொஞ்சு → கொஞ்சம் = சிறிது. கொஞ்சு → கொச்சு = சிறிது, சிறிய. கொச்சு → கச்சு (வே.க.150).]*

**கச்சு**[6] *kaccu,* பெ.(n.) 1. நெருப்பு; fire. 2. மீன்; fish.

க., பட. கிச்சு.

*[கிச்சு → கச்சு. கிச்சு = நெருப்பு. கிச்சு பார்க்க; see* kiccu. *இஃது திராவிடத் திரிபு.]*

**கச்சு**[7] *kaccu,* பெ.(n.) 1. மடிப்பு; fold. 2. எல்லை; border. 3. கரை; bank. 4. அளவு; measure.

*[கவ்வு → கச்சு.]*

**கச்சுக்கச்செனல்** *kaccu-k-kaccenal,* பெ.(n.) ஓயாது பிதற்றுதற் குறிப்பு (யாழ்.அக.); onom. expr. of babbling interminably.

*[கச்சு + கச்சு + எனல் - ஒலிக்குறிப்பு இடைச்சொல்.]*

**கச்சுக்கட்டில்** *kaccu-k-kaṭṭil,* பெ.(n.) *கச்சைக்கட்டில்* பார்க்க; see *kaccai-k-kaṭṭil.*

*[கச்சு*[2] *+ கட்டில்.]*

**கச்சுக்கழி** *kaccu-k-kaḻi,* பெ.(n.) கூரை அமைக்கப் பயன்படும் மரக்கழி வகைகளுள் ஒன்று; a stick used for roofing purpose.

*[கச்சு*[5] *+ கழி. கச்சு = சிறிய, சிறிது.]*

**கச்சுக்காய்** *kaccu-k-kāy,* பெ.(n.) *கழற்சிக்காய்* பார்க்க; see *kaḻarcci-k-kāy.*

*[கழற்சிக்காய் → கச்சுக்காய்.]*

**கச்சுக்கெண்டை** *kaccu-k-keṇḍai,* பெ.(n.) கருங்கெண்டை; bitter carp.

*[கச்சு*[4] *+ கெண்டை.]*

**கச்சுகம்** *kaccugam,* பெ.(n.) மாமரம்; mango tree (சா.அக.).

ம. கச்சு (காய்ச்சிப் பதப்படுத்திய மாம்பழச்சாறு)

*[கச்சு → கச்சுகம். கச்சு = சிறியது. சிறிய காய்களைக் காய்க்கும் மாமரம்.]*

**கச்சுகோரம்** *kaccu-kōram,* பெ.(n.) ஏனத்தின்வகை; a kind of vessel. *'தயிர்ப் போனகம் அமுதுசெய்தருள இட்ட வெள்ளிக் கச்சுகோரம்' (S.I.I.V.272.).*

*[கச்சோலம்*[2] *→ கச்சுகோரம்.]*

**கச்சுப்பிச்சுப்படு-தல்** *kaccu-p-piccu-p-paḍu-,* 20 செ.கு.வி.(v.i.) கம்பலைப்படுதல்; meaningless uproar.

*[கச்சு + பிச்சு + படு. கச்சுப்பிச்சு = எதுகை நோக்கிவந்த ஒலிக்குறிப்பு இணைச்சொல்.]*

**கச்சுப்பிச்செனல்** *kaccu-p-piccenal,* பெ.(n.) தெளிவில்லாமல் பேசுதற்குறிப்பு. (வின்.); onom. expression signifying muttering, speaking indistinctly.

*[கச்சு + பிச்சு + எனல். கச்சுப்பிச்சு - எதுகைநோக்கி வந்த ஒலிக்குறிப்பு இணைச்சொல்.]*

**கச்சுப்புல்** *kaccu-p-pul,* பெ.(n.) ஒருவகைக் கசப்புப்புல்; a bitter variety of grass (சா.அக.).

*[கயப்பு = கசப்பு. கயப்பு → கசப்பு → கச்சு + புல்.]*

**கச்சுப்பூடு** *kaccu-p-pūḍu,* பெ.(n.) கசப்புப்பூடு; any bitter plant (சா.அக.).

*[கச்சு*[4] *+ பூடு.]*

**கச்சுமதி** *kaccu-madi,* பெ.(n.) உடம்பில் பட்டால் தினவுண்டாக்கும் பூனைக்காலிச்செடி; cowhage plant (சா.அக.).

*[கச்சு*[6] *+ மதி.]*

**கச்சுரம்**[1] *kaccuram,* பெ.(n.) 1. அசட்டுப்புண்; a scabby sore. 2. அரிப்பு; itching. 3. சொறியால் துன்புறல்; being affected by a skin disease.

*[கச்சு*[6] *→ கச்சுரம் = அரிப்பு, அரிப்பால் உண்டாகும் சொறி, புண்.]*

**கச்சுரம்**[2] *kaccuram,* பெ.(n.) 1. கத்தூரி மஞ்சள்; Cochin turmeric. 2. கற்பூரக் கிச்சிலிக் கிழங்கு; camphor turmeric.

க. கச்சூர; Skt. karcura.

*[கச்சல் = இளமை, மென்மை. கச்சல் → கச்சலம் → கச்சுரம் = மென்மையான மணமுடையது.]*

**கச்சுரி**[1] *kaccuri,* பெ.(n.) 1. நெருப்பு (அக.நி.); fire.

*[கிச்சு → கச்சு → கச்சுரி.]*

**கச்சுரி**[2] *kaccuri,* பெ.(n.) ஒட்டொட்டிப்புல்; a kind of grass with prickly seeds which stick to the clothes.

*[கச்சு*[1]*→கச்சுரி. கச்சு = பிணைதல், சேர்தல், ஒட்டுதல்.]*

**கச்சுரு** *kaccuru,* பெ(n.) நெருப்பு; fire (சா.அக.).

*[கச்சு*[6] *→ கச்சுரு.]*

**கச்சுரை** *kaccurai,* பெ.(n.) 1. பெருங்காஞ்சொறி; big nettle (சா.அக.).

[கச்சு[6] → கச்சுரை = உடம்பில்பட்டால் நெருப்புப் போல் எரியும் தன்மையுடைய இலைகளையுடையது.]

**கச்சூர்** *kaccūr,* பெ.(n.) செங்கல்பட்டு வட்டத்தைச் சேர்ந்த திருக்கச்சூர்; Thirukkachur of Chengalput taluk. *"களத்தூராக் கோட்டத்துச் செங்குன்ற நாட்டுக் கச்சூர்" (தெ.இ.கல்.தொ.26 கல்.284).*

[கச்சி + ஊர் - கச்சியூர் → கச்சூர்.]

**கச்சூர்க்கட்டை** *kaccūr-k-kaṭṭai,* பெ.(n.) 1. தண்டியப் பலகை (C.G.); perch. 2. பலகையைத் தாங்கச் சுவரிற் பதிக்கும் கட்டை; wooden prop fixed into a wall to support a shelf.

மறுவ. கச்சூரிக்கட்டை

[கச்சு[3] + உறு + கட்டை. கச்சு = கவ்வு (பிடித்து) நிற்றல்.]




கச்சூர்க் கட்டை

**கச்சூரம்** *kaccūram,* பெ.(n.) 1. கழற்சிக்கொடி; molucca-bean. 2. கழற்சிக்காய் (L.); bonduc-nut. *"கச்சூர முந்துங் கலைசையே" (கலைசைச்.23).* 3. சிறுகுறட்டைக்காய்; small corattay gourd.

[கழற்சி → கழச்சி → கச்சி → கச்சு → கச்சூரம்.]

**கச்சேரி** *kaccēri,* பெ.(n.) ***கச்சாலை*** பார்க்க; see *kaccālai.* என் வீட்டுக்காரரும் கச்சேரிக்குப் போனார் (உ.வ.).

[கச்சாலை → கச்சேரி.]

**கச்சை[1]** *kaccai,* பெ.(n.) 1. கயிறு (பிங்.); rope. 2. யானையின் கீழ்வயிற்றிற் கட்டும் கயிறு; elephant's girth. *"கச்சை யானை" (சிலப்.5:142).* 3. கட்ட உதவும் நாடாப்பட்டை; broad tape. 4. நாடாவாற் கட்டப்பட்ட பயணத் தூளி (kodai.); canvas chair for hill travel. 5. அரைக்கச்சு; girdle. *"மாகணக் கச்சை பாடி" (திருவாச.9:19).* 6. பாதிரியார் அணியும் இடைவார்; cincture. 7. ***கச்சம்[8]*** பார்க்க; see *kaccam[8].* 8. முழுமையான புதுத்துணி; whole piece of a new cloth. *"நீலக் கச்சைப் பூவா ராடை" (புறநா.274:1).* 9. வார்; belt. 10. மெய்புதையரணம் (கவசம்); armour.

ம. கச்ச; கோத. கச்வ்; துட. கொக்; து., க., குட., கச்செ; தெ., கச்ச; Skt. kaksya, kaccha. Pkt. kachcha.

[கட்டு → கச்சு → கச்சை = கட்ட உதவும் நாடாப்பட்டை. கச்சு → கச்சம்.]

**கச்சை[2]** *kaccai,* பெ.(n.) தழும்பு; scar.

[கள் (= கவ்வு) + சு - கச்சு → கச்சை.]

**கச்சை[3]** *kaccai,* பெ.(n.) கிண்கிணி; a tinkling ornament. *"கருடன் காலிற் கச்சை கட்டினதுபோல்" (பெண்மதிமாலை,115).*

ம. கச்சு (பூண்); தெ. கெச்ச; க. கெச்செ.

[கச்சு[5] → கச்சை. கச்சு = சிறிது.]

**கச்சை[4]** *kaccai,* பெ.(n.) 1. மேலாடை (நாநார்த்த.); upper garment. 2. கோவணம்; loin-cloth.

ம. கச்ச; க. கச்செ; து., குட. கச்செ; தெ. கச்ச; Skt. kacchu (below); Pali. kaccha.

[கச்சு[2] → கச்சை.]

**கச்சை[5]** *kaccai,* பெ.(n.) ஒப்பு (நாநார்த்த.); similarity.

[கச்சு[2] → கச்சம்[5] → கச்சை = ஒன்றைப்போலிருப்பது.]

**கச்சைக்கட்டில்** *kaççai-k-kaṭṭil,* பெ.(n.) நாடாக் கட்டில்; cot which is plaited with cloth or tapes. கச்சைக்கட்டில் படுப்பதற்கு இதமாயிருக்கும் (உ.வ.).

[கச்சை[1] + கட்டில். கச்சை = துணி, நாடா. கட்டு → கட்டில் (வ.மொ.வ.102)]

**கச்சைக்கட்டை** *kaccai-k-kaṭṭai,* பெ.(n.) 1. பேய்க் கடுக்காய்; a species of crape myrtle. 2. வெண் தேக்கு (L.); benteak.

மறுவ. சின்னாஞ்சி.

[கச்சல் = பிஞ்சு, பசுமைநிறம், முதிராத இளமை, வெளிர்நிறம். கச்சல்[2] → கச்சை + கட்டை.]

**கச்சைக்கொடியோன்** *kaccai-k-kodiyōṉ,* பெ.(n.) யானையின் கீழ்வயிற்றிற் கட்டும் கயிற்றைக்

கொடியில் கொண்டோன், கன்னன்; Karna, whose banner bore the device of an elephant's rope. *“கச்சைக் கொடியோன் மறைக்கொடியோன்” (நல்.பாரத.பதினெட்டாம். 144).*

*[கச்சை[1] + கொடியோன்.]*

**கச்சைகட்டு-தல்** *kaccai-kaṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. ஆடையை இறுகக் கட்டுதல்; to tuck up one's cloth, to gird up one's loins. 2. ஒன்றைச் செய்ய மூண்டு நிற்றல்; solemnly determine to do a thing. *“வழித்தொண்டு செய்திடக் கச்சை கட்டிக்கொண்டே” (குற்றாலக்.).* 3. வீண் சண்டைக்கு நிற்றல்; to be ready for a quarrel. இவன் அவனைத் தொலைத்துவிடுவதாகக் கச்சைகட்டு கிறான் (உ.வ.).

மறுவ. வரிந்து கட்டுதல்

க. கச்செயகட்டு

*[கச்சு[2] → கச்சை + கட்டு.]*

ஒரு செயலை முனைப்போடு செய்யும்போதும், சண்டையிடும் போதும் ஆடைகளை வரிந்து கட்டிக்கொள்வது இயல்பு; இச் செயற்பாடு பற்றியே கச்சைகட்டுதல் இப் பொருளுக்கு ஆகி வந்துள்ளது.

**கச்சைப்பட்டை** *kaccai-p-paṭṭai,* பெ.(n.) குடலண்ட ஊதையினால் குடல் நின்ற இடத்தினின்று நழுவியிருப்பதைப் பழையபடி நிலைநிறுத்துவதற்காக இழுத்துக் கட்டுமோர் வரிநாடாப் பட்டை (வின்.); an abdominal belt used formerly in cases of hernia for holding up the intestines in position.

மறுவ. கச்சுப்பட்டை

*[கச்சு → கச்சை + பட்டை.]*

**கச்சைப்புறம்** *kaccai-p-puṟam,* பெ.(n.) மகளிர் இடுப்பில் அணியும் பொன்னாலான தொடரி (சங்கலி); a kind of plaited gold chain, a girdle ornament of a woman.

ம. கச்சப்புறம்

*[கச்சை[1] + புறம் - கச்சைப்புறம் = இடுப்புக்கு அருகில் (புறத்து) அணிவது.]*

**கச்சைபோடு-தல்** *kaccai-pōḍu-,* 19 செ.குன்றாவி. (v.t.) கைம்பெண்ணுக்குப் புதுத்துணியளித்தல். (தூத்துக்.மீனவ.); to offer new cloths to a widow.

*[கச்சை + போடு. கச்சு[2] → கச்சை = துணி, புதுத்துணி.]*

**கச்சையுளுவை** *kaccai-y-uḷuvai,* பெ.(n.) உண்பதற் கொவ்வா உளுவைமீன் (முகவை.மீனவ.); the unedible uḷuvai fish.

*[கச்சை + உளுவை. கச்சு[4] → கச்சை. கள் → கய் → கய → கயச்சு → கச்சு. கய = கசப்பு.]*

**கச்சோடி** *kaccōḍi,* பெ.(n.) வெள்ளை வெற்றிலை; the white betel leaf.

*[கச்சல்[6] + ஓடி - கச்சலோடி → கச்சோடி. கச்சல் = வெளிர்நிறம். கச்சோடி = வெளிர்நிறம் பாய்ந்த வெற்றிலை.]*

**கச்சோடு** *kaccōḍu,* பெ.(n.) காரமும் மென்மையுமில்லாத கருப்புநிறமான ஒருவகை மட்ட வெற்றிலை; an inferior kind of black betel-leaf devoid of tenderness and pungency (சா.அக.).

*[கச்சல் + ஓடு - கச்சோடு. கச்சோடு = கருநிறம் பாய்ந்த வெற்றிலை. கள் = கருமை. கள் → கய் → கச்சல் = கருமை. ஓடு = கருநிறம் ஒடியது, கருமை படர்ந்தது. ஓடு - தொழிலாகுபெயர்.]*

**கச்சோணி** *kaccōṇi,* பெ.(n.) வெற்றிலையோடு சேரும் நறுமணப்பொருள்வகை (மூ.அக.); compound of spices used with betel.

*[கச்சோலம்[1] = நறுமணப்பொருள். கச்சோலம் → கச்சோணம் → கச்சோணி.]*

**கச்சோதம்** *kaccōdam,* பெ.(n.) 1. மின்மினி; glow-worm, firefly. *“சிறுகொள்ளி தன்னை... கச்சோதமென்று கருதி” (கந்தபு.அவைபு.43).* 2. சுழல் வண்டு; an insect found whirling in water (சா.அக.).

*[கிச்சு = நெருப்பு. கிச்சு → கிச்சுதம் → கிச்சோதம் → கச்சோதம் (கொ.வ.).]*

**கச்சோரம்** *kaccōram,* பெ.(n.) **கச்சோலம்[1] 1,2** பார்க்க; *see kaccōlam[1]. 1,2.*

ம. கச்சோரம்

*[கச்சு + ஊரம் - கச்சூரம் → கச்சோரம். கச்சல்[2] → கச்சு = இளமை, மென்மை.]*

**கச்சோலம்[1]** *kaccōlam,* பெ.(n.) 1. பூலாங்கிழங்கு (தைலவ.தைல.39); long zedoary. 2. கிச்சிலிக் கிழங்கு (தைலவ.தைல.21); spiked garland-flower. 3. மாஞ்சில் (மூ.அக.); spikenard. 4. ஒருவகை நறுமணப்பொருள் (சிலப்.6.77, உரை.); a kind of aromatic substance. 5. ஏலக்காய்த்தோல் (வின்.); husk of cardamom. 6. சாதிக்காய்த்தோல்; the rind of nutmeg (சா.அக.).

ம. கச்சோலம்

[கச்சோரம் → கச்சோலம்.]

**கச்சோலம்**[2] *kaccōlam,* பெ.(n.) 1. சிறிய ஏனம்; small metal vessel for holding rice, sandal paste, etc. 2. வட்டவடிவில் பிடியுடன் மெருகிட்டுப் பளபளப்பாக அமைக்கப்பட்ட வெண்பொன்னாலான வழிபாட்டுக் கலங்களுள் ஒன்று; one of the worshipping vessels, circular in shape, made of silver. *(S.I.I.ii,91).*

மறுவ. கச்சோளம், கச்சட்டி.

[கச்சு + ஒலம். கச்சு[5] = சிறியது.]

**கச-த்தல்** *kaša-,* 3 செ.கு.வி.(v.i.) 1. கைத்தல்; to taste bitter. *வேப்பங்காய் கசக்கும், வேப்பம் பழம் இனிக்கும் (உ.வ.).* 2. வெறுப்படைதல்; to be embittered, as the mind, to be disgusted, alienated.

ம. கசப்க்குக

[கள் → கய் → கய → கச. கய = கசப்பு.]

**கசக்கம்** *kašakkam,* பெ.(n.) சுணக்கம் (யாழ்.அக.); delay.

[கசகு = பின்வாங்கு, தயங்கு. கசகு → கசக்கம்.]

**கசக்கல்** *kašakkal,* பெ.(n.) கசங்கச்செய்கை; rubbing, crushing, bruising.

[கசக்கு → கசக்கல்.]

**கசக்கால்** *kaša-k-kāl,* பெ.(n.) ஊற்றுக்காலோரம் கசிவு நீருக்காகத் தோண்டப்படும் வாய்க்கால்; spring channel, channel dug out in beds of deep sand in a river to tap the underflow of water.

[கயம் + கால் - கயக்கால் → கசக்கால். கயம் = நீர்நிலை.]

**கசக்கிப்பிழி-தல்** *kašakki-p-piḻi-,* 2 செ.குன்றாவி. (v.t.) 1. துவைத்து நீர் பிழிதல்; to wring out, as wet clothes. ஆடையைக் கசக்கிப் பிழி (உ.வ.). 2. நெருக்கிவருத்துதல்; to trouble a person, to harass, oppress. அவனைக் கசக்கிப் பிழி (உ.வ.). 3. பச்சிலையை இரண்டு உள்ளங்கைகளுக்கு மிடையில் வைத்துக் கசக்கிச் சாறு எடுத்தல்; wringing or squeezing out as is being done to get juice from herbs, placing them between the palms. *முருங்கைக் கீரையைக் கசக்கிப் பிழிந்து சாறுண்டால் மாந்தம் போகும் (சா.அக.).*

[கசக்கு[2] → கசக்கி + பிழி (து.வி.)]

**கசக்கு[1]-தல்** *kašakku-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. கசங்கச்செய்தல் (வின்.); to rub; to bruise between the fingers or hands; to squeeze, as a lemon; to crumple, as paper; to mash, as fruits. எலுமிச்சையைக் கசக்கிக் கொடு (உ.வ.). 2. ஆடையைக் கும்முதல்; to roll gently and wash, as linen. *'கந்தை யானாலும் கசக்கிக் கட்டு' (பழ.).* 3. நெருக்குதல்; to harass, nag, bring under discipline. வங்கி மேலாளர் கசக்குதலால் கடன் தண்டல் அதிகரித்துள்ளது (உ.வ.).

ம. கசக்குக, கயக்குக; குரு. கச்னா, கச்சச்.

[கள் → கய → கச → கசக்கு. கள் = கூடுதல், நெருங்குதல், நெருக்குதல்.]

**கசக்கு**[2] *kašakku,* தொ.பெ.(vbl.n.) கசங்கச் செய்கை; squeezing, bruising. அவன் எனக்கு ஒரு கசக்குக்குக் காணமாட்டான் (உ.வ.).

[கசங்கு → கசக்கு.]

**கசக்குப்புகையிலை** *kašakku-p-pugai-y-ilai,* பெ.(n.) புகைப்பதற்காகப் பதமாக்கப்பட்ட ஒருவகைப் புகையிலை (யாழ்ப்.); tobacco prepared in a certain way for smoking.

[கசக்கு[1] + புகை + இலை.]

**கசக்குமுப்பு** *kašakkum-uppu,* பெ.(n.) கசப்புச் சுவையும் தீமணமும் கொண்ட ஒருவகையுப்பு; a species of salt with a bad smell and bitterness (சா.அக.).

[கசக்கும் + உப்பு. கச → கசக்கும் (செய்யும் என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சம்). உம் = ஐம்பால் மூவிடங்களில் வரும் இறப்பல்லாக் கால பெயரெச்ச ஈறு.]

**கசகச-த்தல்** *kaša-kaša-,* 4 செ.கு.வி.(v.i.) 1. இறுக்கத்தால் அல்லது புழுக்கத்தால் உடல் வியர்த்தல்; to feel uneasy from clamminess due to perspiration on account of heat or sultriness. உடம்பெல்லாம் கசகசத்துப் போயிற்று (உ.வ.). 2. ஒழுங்கற்று ஒலித்தல் (வின்.); to sound rattle, as the crumpling of fine paper to rustle. கூட்டம் தொடங்கும் முன் உறுப்பினர்கள் கசகச வென்று பேசிக்கொண்டனர் (உ.வ.).

[கச → கசகச → கசகச-த்தல்.]

**கசகசப்பு** *kašakašappu,* பெ.(n.) 1. கசப்பு; bitterness. 2. வெறுப்பு; aversion, hatred.

ம. கசகசப்பு

[கச + கச - கசகச → கசகசப்பு.]

**கசகசவெனல்** *kaša-kaša-v-enal,* பெ.(n.) 1. ஒலிக்குறிப்பு; onom. expression signifying rustling, gurgling. நேற்று முழுதும் கசகசவெனத் தூறலாக இருந்தது. 2. வியர்வையால் பிசுபிசுப்பாக உணர்தல்; feel sticky with sweat. உடம்பு கசகசக்கிறது (உ.வ.). 3. செழிப்புக்குறிப்பு; affluence, prosperity. அவருக்கு இப்போது கசகசவென்று நடக்கிற காலம் (வின்.).

[கச + கச + எனல்.]

**கசகசா** *kašakašā,* பெ.(n.) 1. கசகசாச்செடி; poppy plant. 2. கசகசாச் செடியின் விதை; seed of the white poppy plant (சா.அக.).

க. கசகசெ, கசகசி; Ar.,Mar. khaskhas.

[கச்சு = சிறிது, சிறிய. கச்சு → கச. கய் → கச = மென்மை, இளமை, வெளிர்நிறம். கச + கச - கசகசா = சிறியதும் வெண்மையாயுள்ளதுமான விதை, அவ் விதையைத் தரும் செடி. இவ் விதையினின்று பால்வரும்; எண்ணெயும் எடுக்கலாம். கசகசாவெண்ணெய் மருந்திற்குப் பயன்படும்.]



கசகசாச் செடி

**கசகசாநெய்** *kaša kašā-ney,* பெ.(n.) கசகசா வினின்று எடுக்கும் எண்ணெய்; the oil extracted from the poppy seeds.

[கசகசா + நெய்.]

கசகசாநெய் உணவு சமைக்கவும் விளக்கெரிக்கவும் பயன்படும். உறக்கத்தைத் தூண்டும் இயல்புள்ள இந் நெய் ஓவிய வேலைகளுக்கும் பயன்படுகிறது.

**கசகபாலி** *kašakabāli,* பெ.(n.) கிளிமுருக்கு; red bean tree (சா.அக.).

[கள் → கய → கயக → கசக (மென்மை) + பாலி. பால் = பற்றுதல், காத்தல், வளர்த்தல். பாலி = முளைக்கவிட்ட குற்றிளந்தவச நாற்று. மிக்கிளமையின் வெளிர்பச்சை நிறம் கிளிமுருக்கின் நிறத்திற்கு ஆகி வந்தது.]

**கசகம்**[1] *kašagam,* பெ.(n.) வெள்ளரி; cucumber.

[கள் = மென்மை, இளமை, பிஞ்சு. கள் → கய → கச → கசகம்.]

**கசகம்**[2] *kašagam,* பெ.(n.) கருங்கொள்; black horsegram.

[கள் = கருமை. கள் → கச → கசகம்.]

**கசகம்**[3] *kašagam,* பெ.(n.) ஒருவகைக் காளான்; a species of mushroom.

[கள் = திரட்சி. கள் → கச → கசகம்.]

**கசகரணி** *kaša-karaṇi,* பெ.(n.) 1. வெருகஞ்செடி (தைலவ.தைல.38); 2.வெருகங்கிழங்கிலிருந்து இறக்கும் எண்ணெய்; an oil extracted from the root of the plant arum macrorizon (சா.அக.).

[கள் = திரட்சி. கள் → கய → கச → கசம் + கரணி. கரணி = மருந்து, திரட்சியான கிழங்கிலிருந்து இறக்கிய எண்ணெய்.]

**கசகு**[1]**-தல்** *kašagu-,* 9 செ.கு.வி.(v.i.) 1. பின்வாங்குதல்; to be unwilling, reluctant. 2. நழுவுதல்; to skid, slip. 3. ஐயத்தாற்றளர்தல்; to have misgivings; to show hesitancy.

[கலங்கல் → கயங்கல் → கசங்கல் → கசகல் → கசகு (கொ.வ.). கலங்கல் கருத்தினின்றும் தயங்கல் கருத்து முகிழ்த்தது.]

**கசகு**[2]**-தல்** *kašagu-,* 9 செ.கு.வி. (v.i.) பண்டமாற்று முதலியவற்றில் சிறு ஆதாயம் கருதிச் சொல்லாடுதல்; to bargain.

[கழல் → கயல் → கசல் → கசகு. கழல்தல் = உரையாடுதல், பேசுதல்.]

**கசங்கம்** *kašaṅgam,* பெ.(n.) மரவகை (பீநாறி) (மலை.); fetid tree.

[கசங்கு → கசங்கம்.]

**கசங்கு[1]-தல்** *kaśaṅgu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. குழைதல்; to be squeezed, crumpled, rubbed, as a leaf. 2. தொடுவதால் மெல்லிய பொருள் தன் நிலை கெடுதல்; to lose freshness, as a flower that has been much handled. மலர்கள் கசங்கிவிட்டன (உ.வ.). 3. வேலையினால் இளைத்தல் (வின்.); to be exhausted, worn out by labour; to become wearied, as by walking too much. பணிச்சுமையால் கசங்கிவிட்டான் (உ.வ.). 4. மனம் நோதல்; to be displeased, hurt in mind. அவனுடைய மனம் கசங்கிப் போயிற்று (உ.வ.).

ம. கசங்க; குரு. கச்னா.

*[குழை → குழ → கழ → கச → கசங்கு-.]*

**கசங்கு[2]** *kaśaṅgu,* பெ.(n.) 1. பேரீச்சை மரம் (மூ.அக.); wild date-palm. 2. ஓலை கழித்த ஈச்சமட்டை (வின்.); stalk, as of the date-leaf. 3. நார்; fibre.

*[கள் = முள். கள் → கயங்கு → கசங்கு.]*

**கசங்குக்கூடை** *kaśaṅgu-k-kūḍai,* பெ.(n.) ஈச்சங்கூடை; wicker basket.

*[கசங்கு[2] + கூடை.]*

**கசங்குத்தட்டு** *kaśaṅgu-t-taṭṭu,* பெ.(n.) கசங்குகொண்டு முடையப்பட்ட தட்டு; wicker basket made of palm-leaf stalk.

மறுவ. தட்டு, தட்டுக்கூடை.

*[கசங்கு[2] + தட்டு.]*

*ஒ.நோ: சோளத்தட்டு → சோளத்தட்டை.*

**கசட்டம்புல்** *kaśaṭṭam-pul,* பெ.(n.) சுக்குநாறிப்புல்; ginger grass (சா.அக.).

*[கசள் → கசடு + அம் → கசட்டம் + புல். கசள் = இளமை, மென்மை.]*

**கசட்டை** *kaśaṭṭai,* பெ.(n.) 1. துவர்ப்பு (யாழ்ப்.); astringency, as of unripe fruit. 2. இளமை; youthhood (சா.அக.).

*[கள் → கசள் → கச → கசட்டை. கசள் = இளமை, மென்மை.]*

**கசட்டைத்தயிர்** *kaśaṭṭai-t-tayir,* பெ.(n.) ஆடை எடுத்த தயிர் (யாழ்ப்.); curd from which the butter has been removed.

*[கள் = திரண்டது. கள் → கய → கச → கசட்டை + தயிர்.]*

**கசட்டைப்பிஞ்சு** *kaśaṭṭai-p-piñju,* பெ.(n.) 1. கசப்புப்பிஞ்சு அல்லது இளங்காய்; bitter and tender fruit. 2. துவர்ப்புப்பிஞ்சு; tender astringent fruit. 3. இளம்பிஞ்சு; tender and young fruit. 4. பழுக்காத காய்; an unripe fruit (சா.அக.).

*[கசட்டை + பிஞ்சு.]*

**கசடர்** *kaśaḍar,* பெ.(n.) கீழ்மக்கள் (இ.நூ.அக.); mean and unscrupulous persons.

*[கசடு[1] + அர் (ப.பா.ஈறு) - கசடர்.]*

**கசடறு-த்தல்** *kaśaḍaṟu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. அழுக்குப் போக்கல்; to remove filth. 2. தூய்மை செய்தல்; to clean, as of metal from rust. 3. மனத்தின் மாசுபோக்கல்; to get rid of the impurities of the mind (சா.அக.).

*[கசடு[1] + அறு.]*

**கசடறுக்கும்மண்** *kaśaḍaṟukkum-maṇ,* பெ.(n.) உழமண்; dhoby's earth which removes dirt from clothes.

*[கசடு[1] + அறுக்கும் + மண்.]*

**கசடன்** *kaśaḍaṉ,* பெ.(n.) குற்றமுள்ளவன்; he who is low-minded, wicked. பணத்திற்காக எதையும் செய்யும் கசடன்.

ம. கசடன்

*[கசடு[1] + அன் (ஆ.பா.ஈறு) - கசடன்.]*

**கசடு[1]** *kaśaḍu,* பெ.(n.) 1. குற்றம்; blemish, fault, defect, imperfection. *"கற்க கசடற" (குறள்,391).* 2. அழுக்கு (பிங்.); uncleanliness, dirtiness. *"ஐயமறாஅர் கசடீண்டு காட்சி" (புறநா.214:2.).* 3. ஐயம்(பிங்.); doubt. 4. அடிமண்டி; dregs, lees. நெய்யுருக்கினால் கசடிருக்கும் (உ.வ.). 5. கழிவு; waste, impurities. ஆலைக்கசடு (உ.வ.).

க. கசட, கசடா, கசரா, கச்சட; ம. கசடு; தெ. கசடு; து. கசவு; கசாவு; துட. கொசவ்; குரு. கச்சா்; மா. கசெ; பட. கச. Skt. kaccacra; H. kacra; Pali. kacaḍu ; Mar. kacara; Pkt. sakada.

*[கசள்² → கசண்டு → கசடு (திரு.தமி.மர.739.) கசடு மண்டி போன்ற குற்றம் (சொல்.கட்.42)]*

**கசடு²** *kašaḍu,* பெ.(n.) 1. குறைவு (யாழ்.அக.); deficiency. 2. ஈளைநோய்; consumption. 3. தழும்பு, வடு; scar. *"கைக்கச டிருந்தவென் கண்ணகன் தடாரி" (பொருந.70).* 4. சளி; phlegm.

*[கசள்² → கசடு.]*

**கசடு³** *kašaḍu,* பெ.(n.) மயிர்; hair.

*[கள் = கருமை. கள் → கய → கயல் → கசள் → கசடு.]*

**கசடு⁴-தல்** *kašaḍu-,* 5 செ.கு.வி.(v.i.) **கசகு²-தல்** பார்க்க; *see kašagu²-.*

**கசண்டு** *kašaṇḍu,* பெ.(n.) 1. அடிமண்டி, வண்டல்; dregs, lees (சா.அக.). 2. குற்றம்; blemish. 3. அழுக்கு; uncleanliness, fault, defect, imperfection, dirtiness. 4. வடு; scar.

க. கசடு; தெ. கசி; து. கசண்டு.

*[கசள்² → கசண்டு.]*

**கசப்பகத்தி** *kašapagatti,* பெ.(n.) பேயகத்தி; bitter fig or wild fig (சா.அக.).

*[கசப்பு + அகத்தி.]*

**கசப்பி¹** *kašappi,* பெ.(n.) 1. வேம்பு (மலை.); margosa. 2. வல்லாரை (மலை.); Indian pennywort, herb.3. காசித்தும்பைப்பூ (சங்.அக.); white dead nettle flower. 4. பேய்ப்பீர்க்கு; bitter gourd. 5. சிறுவாலுளுவை; small variety of spindle tree. 6. கருங்காலி; ebony tree. 7. பொன்னூமத்தை; datura plant bearing yellow flowers (சா.அக.).

*[கசப்பு → கசப்பி.]*

**கசப்பி²** *kašappi,* பெ.(n.) மயிலின் தலைக் கொண்டை; peacock fan fern, like a miniature palm.

*[கசள்² → கசப்பி.]*

**கசப்பு** *kašappu,* பெ.(n.) 1. அறுசுவைகளுளொன்று; one of the elementary sensations of taste, bitterness. 2. வெறுப்பு; disgust, aversion. உடன் பிறந்தார்களுக் குள் கசப்பு மண்டிக் கிடந்தது (உ.வ.). 3. கக்கல்கழிச்சல் (வாந்திபேதி); cholera. அவன் ஒரேயடியாய்க் கசப்படித்துக் கிடக்கிறான் (உ.வ.).

ம. கசப்பு, கய்பு; க. கய், கயி, கய்யி, கய்பு, கய்பெ; தெ. கசு; கை. கயிபெ, கைபெல; இரு. கேசபெ; எரு. கய்ச்சு; கோத. கய்; குட. கய்; கோண். கேககே, கைத்தானா; பர். கேபி; மா. க்வசெ; பட. கைமெ.;ஙு கோண். (அடிலா). கைய்ய.

இமயமலை சார்ந்த மொழிகள்:

Gyar. kuchchek; Takpa. khakbo; Thochu. khak; Tibet (col) khako; Serpa. khakti; Sunwar. kaso; Magar. khacho; Newar. khaiyu; Limbu. kckhikpa; Kiranti. khakho; Rung. kha - kwa; Chhing. khak'no; Achher. khik'do; Aling. khak; Yakha. khika; Chouras. khacho; Kulung. khike; Thulung. khepa; Bahing. kaba; Lohor. khik'ka; Lambich. khik'yukha; Balali. kheukup; Sangpang. khiki; Dumi. khepa; Khaling. khapa; Dungmali. khaki; Pahri. khakhadha; Bhram. kyakhai; Vayu. khachin; Kusunda. katuk; Lepcha (sikkim). krimbo; Bhutani. khako; Bodo. gakha; Dhimal. khakha; Kocch. kaduva; Kachari. goka; Mithan Naga. kha; Tableung Naga. kha; Khari Naga. kha; Sibsagar Miri. kodak; Deoria chutia. kai; Singpho. kha; Angami Naga. (k = ch) chasi; Burmese(Lit). kha; Burmese (Lit). kha; Burmese (Col). kha; Khyeng V. khau-show; Kami. kha; Talain v Mon. ka- taw; Sgau-Karen. kah; Pwo - Karen. khah; Toungh - thu. khu; Shan. khon; Siamese. khom; Ahom. khum; Khamti. khom; Laos. khom.

*[கைப்பு → கயப்பு → கசப்பு.]*

கசப்புச் சுவையைக் குறிக்கக் காடு, புனம், பேய் ஆகிய சொற்கள் அடைகளாய் வந்துள்ளன. (எ-டு. காட்டுக்கொள், புன முருங்கை, பேய்ப்பீர்க்கு). காட்டில் விளைவன மிகு உரத்தினால் கொழுத்துக் கசப்புச் சுவையுடன் இருக்கும். அதனால் கசப்புக்கு இச் சொற்கள் (காடு, புனம்) அடைகளாய் வந்துள்ளன.

**கசப்புக்கசகசா** *kašappu-k-kašakašā,* பெ.(n.) கருப்புக் கசகசா; black poppy (சா.அக.).

*[கசப்பு + கசகசா.]*

**கசப்புக்காய்** *kašappu-k-kāy,* பெ.(n.) பேய்ச்சுரைக் காய்; bitter bottle-gourd (சா.அக.).

*[கசப்பு + காய்.]*

**கசப்புக்கிச்சிலி** *kašappu-k-kiccili,* பெ.(n.) தஞ்சாவூர் நாரத்தை; Thanjavur bitter orange (சா.அக.).

ம. கைப்பநாரங்க

*[கசப்பு + கிச்சிலி.]*

**கசப்புக்கெண்டை** *kašappu-k-keṇḍai,* பெ.(n.) கருங்கெண்டை மீன்; bitter carp.

ம. கய்பு

*[கசப்பு + கெண்டை.]*

**கசப்புக்கையான்** *kašappu-k-kaiyāṉ,* பெ.(n.) கசப்புக்கரிசலை; a bitter variety of eclipse plant (சா.அக.).

*[கசப்பு + கையான் (இலையுடையது).]*

**கசப்புக்கொடிச்சி** *kašappu-k-koḍicci,* பெ.(n.) செந்திராய்; a red variety of Indian chick weed (சா.அக.).

*[கயப்பு → கசப்பு + கொடிச்சி.]*

**கசப்புக்கொழுமிச்சை** *kašappu-k-koḻumiccai,* பெ.(n.) காட்டுக் கொழுமிச்சை; bitter citron (சா.அக.).

*[கசப்பு + கொழுமிச்சை.]*

**கசப்புக்கொள்** *kašappu-k-koḷ,* பெ.(n.) பேய்க்கொள்; jungle horse-gram.

*[கசப்பு + கொள்.]*

**கசப்புச்சுரிஞ்சான்** *kašappu-c-curiñjāṉ,* பெ.(n.) வயிற்றுப்போக்கை உண்டாக்கும் ஒருவகைக் கசப்பு மூலிகைவேர்; a bitter Unani drug; mercury's finger.

*[கசப்பு + சுரிஞ்சான். சுரிஞ்சான் = ஒருவகைப் பழுப்புநிறக் கிழங்கு. கசப்புச்சுரிஞ்சான் உட்கொள்ளத் தரப்படுவதில்லை.]*

**கசப்புச்சுரை** *kašappu-c-curai,* பெ.(n.) பேய்ச்சுரை; bitter bottle-gourd.

மறுவ. கசப்புக்காய்

*[கசப்பு + சுரை.]*

**கசப்புத்திரு** *kašappu-t-tiru,* பெ.(n.) சிவதை வேர்; the root of Indian jalap (சா.அக.).

*[கசப்பு + திரு. தூறு → துறு → திறு → திரு.]*

**கசப்புத்துவரை** *kašappu-t-tuvarai,* பெ.(n.) பேய்த்துவரை; bitter pigeon pea, wild pigeon pea (சா.அக.).

*[கசப்பு + துவரை.]*

**கசப்புநீர்** *kašappu-nīr,* பெ.(n.) கறியுப்பு எடுத்தபின் நின்ற கைப்பு நீர்; the residual water after crystallisation of sodium chloride (சா.அக.).

*[கசப்பு + நீர்.]*

**கசப்புப்பசலை** *kašappu-p-pašalai,* பெ.(n.) கசப்புச்சுவையுடைய ஒருவகைப் பசலைக்கீரை; a bitter species of spinach.

மறுவ. தரைப்பசலை.

*[கசப்பு + பசலை.]*

மலைப்பாங்கான இடங்களில் வளருகின்ற இப் பசலையால் இதளியம் (பாதரசம்) மணியாகும்; சாதிலிங்கம் பொடியாகும்; நாகம் செந்தூரமாகும்; பொன்னுக்கு மாற்றேறும் என்பர்.

**கசப்புப்பாலை** *kašappu-p-pālai,* பெ.(n.) பேய்ப்பாலை; a bitter plant (சா.அக.).

*[கசப்பு + பாலை.]*

**கசப்புப்பீர்க்கு** *kašappu-p-pīrkku,* பெ.(n.) பேய்ப்பீர்க்கு; wild-luffa (சா.அக.).

*[கசப்பு + பீர்க்கு.]*

**கசப்புப்பீவேல்** *kašappu-p-pīvēl,* பெ.(n.) கசப்பான பீவேல மரம்; a bitter variety of fetid memosa (சா.அக.).

*[கசப்பு + பீவேல்.]*

**கசப்புப்புகையிலை** *kašappu-p-pugaiyilai,* பெ.(n.) கைப்புப் புகையிலை; bitter tobacco (சா.அக.).

*[கசப்பு + புகையிலை.]*

**கசப்புப்போளம்** *kašappu-p-pōḷam,* பெ.(n.) கரியபோளம்; black myrrh, hepatic aloe.

*[கசப்பு + போளம்.]*

மலைக் கற்றாழையின் சாற்றை உறையவைத்துப் பதப்படுத்தி அணியமாக்கிய ஒரு கருப்புக் கூட்டு மருந்து (சா.அக.).

*வகைகள்: அரபிப் போளம்; இந்துப்போளம்; பாரசீகப் போளம்.*

**கசப்புமாஞ்சகி** *kašappu-māñjagi,* பெ.(n.) கசப்புக்கும்மட்டி; bitter apple (சா.அக.).

மறுவ. பேய்க்கும்மட்டி

*[கசப்பு + மாஞ்சகி.]*

**கசப்புமுருங்கை** *kašappu-muruṅgai,* பெ.(n.) கசப்புச்சுவையுடைய முருங்கை; bitter drumstick (சா.அக.).

*[கசப்பு + முருங்கை.]*

**கசப்புவாதுமை** *kašappu-vādumai,* பெ.(n.) கசப்பு வாதுமைமரம்; bitter almond tree.

*[கசப்பு + வாதுமை.]*

**கசப்புவெட்பாலை** *kašappu-vetpālai,* பெ.(n.) குடசப்பாலை; conessi bark.

*[கசப்பு + வெள் + பாலை. வெட்பாலை = வெண்மையான பூக்கள் உள்ள பாலை. இதன் அரிசி கசப்பு வெட்பாலையரிசி.]*

**கசப்புவெள்ளரி** *kašappu-veḷḷari,* பெ.(n.) காட்டு வெள்ளரி; bitter cucumber.

*[கசப்பு + வெள்ளரி.]*

**கசப்புவேர்** *kašappu-vēr,* பெ.(n.) சிவப்பு உரோகிணிச் செடியின் வேர்; bitter root of red rōkiṇi (சா.அக.).

*[கசப்பு + வேர்.]*

**கசப்பூலிகம்** *kašappūligam,* பெ.(n.) மிதிபாகல்; prostrate creeper, a small variety of bitter gourd (சா.அக.).

ம. கசில்லகம்; Skt. kacillaka.

*[கசப்பு + ஊலிகம்.]*

**கசப்பெலுமிச்சை** *kašappelumiccai,* பெ.(n.) காட்டெலுமிச்சை; jungle lime (சா.அக.).

*[கசப்பு + எலுமிச்சை.]*

**கசப்பைந்து** *kašappaindu,* பெ.(n.) நொச்சி, வேம்பு, கண்டங்கத்தரி, சீந்தில், பேய்ப்புடல் ஆகிய ஐந்து கசப்பு மருந்துப்பூடுகள்; the five bitter drug plants viz., common gendarussa, margosa tree, prickly night shade, moon-creeper, wild snake-gourd (சா.அக.).

*[கசப்பு + ஐந்து.]*

**கசபுசல்** *kašapušal,* பெ.(n.) கமுக்கம் ஒன்றைப்பற்றிய ஊர்ப்பேச்சு; gossip about a secret, tittle-tattle. *ஊரில் அதைப்பற்றிக் கசபுசலாயிருக் கிறது (உ.வ.).*

*[கசமுச (ஒலிக்குறிப்பு) → கசபுச → கசபுசல். ஒலிக்குறிப்பு அடிப்படையாக வந்த கமுக்கப் பொருள், ஊர்ப்பேச்சைக் குறித்தது.]*

**கசபுடம்** *kašapuḍam,* பெ.(n.) நூறு எருமுட்டையை வைத்தெரிக்கும் புடம்; a fire prepared with one hundred cakes of dried cowdung for calcining medicines.

*[கள் (கூடுதல்) → கய → கச → கசம் + புடம் - கசபுடம்.]*

ஆயிரம் எருமுட்டை என்ற வழக்குமுண்டு.

**கசம்**[1] *kašam,* பெ.(n.) 1. காரிருள்; dense darkness. 2. குற்றம்; fault. 3. துன்பம்; distress.

*[கள் (கருமை) → கய → கயம் → கசம். கள் = இருள் (வே.க.125).]*

'இருட்டுக் கசம்' என்பது நெல்லை வழக்கு.

**கசம்**[2] *kašam,* பெ.(n.) ஆழ்கடல்; deep sea.

*[கள் → கயம் → கசம். கயம் = ஆழம்.]*

**கசம்**[3] *kašam,* பெ.(n.) தாமரை (மூ.அ.); lotus.

*[கயம் → கசம் = நீரில் உள்ளது.]*

**கசம்**[4] *kašam,* பெ.(n.) 1. இரும்பு; iron. 2. கனிமம்; mineral.

*[கசம்[1] → கசம்[4].]*

**கசம்பி** *kašambi*, பெ.(n.) கருவண்டு; black beetle (சா.அக.).

*[கசம்¹ → கசம்பி. கசம் = கருமை.]*

**கசமாதுகம்** *kašamādugam*, பெ.(n.) ஊமத்தை; datura, thorn apple (சா.அக.).

மறுவ. கசமாது, கசமேடு.

*[கசம் (கசப்பு) + (மத்தம்) மாதுகம். மத்தம் = கலக்கம், மயக்கம்.]*

**கசமீன்** *kašamīṉ*, பெ.(n.) ஆழ்கடலில் மேயும் மீன் (முகவை.மீனவ.); a kind of sea fish.

*[கயம் → கசம் + மீன் - கசமீன். கயம் = ஆழ்ந்த நீர்நிலை.]*

**கசமுச** *kaša-muša*, பெ.(n.) 1. தாறுமாறு தன்மையைக் குறிக்கும் ஓர் ஒலிக்குறிப்புச் சொல்; onom. expression signifying disorderliness. 2. குழப்பம், தீங்கு போன்றவற்றைக் குறிக்கும் ஒலிக் குறிப்புச் சொல்; onom. expression signifying bewilderment, perplexity. 3. வெளிப்படையாக இல்லாதது; வெற்றுரை; gossip. *தலைவரைப் பற்றி நிறையக் கசமுசாப் பேச்சுகள் வந்துவிட்டன* (உ.வ.).

மறுவ. கசமுசா.

ம. கசசி; பட. கசபிச, கசபுச.

*[கச + முச - எதுகை மரபிணைச்சொல்.]*

**கசமுசவெனல்** *kaša-muša-v-eṉal*, பெ.(n.) **கசமுச** பார்க்க; see *kaša-muša*.

*[கச + முச + எனல்.]*

**கசர்¹** *kašar*, பெ.(n.) 1. இளநீர் முதலியவற்றின் துவர்; astringency of tender coconut water etc. 2. ஒரு மருந்து வகை; a kind of drug. 3. துவர்ப்பு; astringency in general.

*[கள் → கய → கச → கசர் = கசப்பு, துவர்ப்பு]*

**கசர்²** *kašar*, பெ.(n.) 1. மிகுதி; excess. 2. குறைவு; shortage.

*[கசிதல் = மிகுதல், மிகுந்து வெளியேறுவதால் நேரும் குறைவு. கசி → கசிர் → கசர்.]*

**கசர்³** *kašar*, பெ.(n.) சிவப்புக்கல்லின் குற்றவகை; flaw in a ruby.

*[கள் → கய → கச (கருமை, குற்றம், சேறு, கறை) → கசர்.]*

**கசர்⁴** *kašar*, பெ.(n.) வணிகன் பகர்ந்த விலைக்கும், கொள்வோன் கொடுத்த தொகைக்கும் இடைப்பட்ட எச்சத்தொகை; the extra amount obtained by bargaining.

*[கசி → கசர் = இடையில் எஞ்சியது, ஈவுத்தொகை.]*

**கசர்⁵** *kašar*, பெ.(n.) சேறு; mud.

மறுவ. சகதி

க. கெசறு

*[கள் → கய → கச → கசர். கள் = இளமை. கசர் = இளகிய சேறு.]*

**கசர்ப்பாக்கு** *kašar-p-pākku*, பெ.(n.) துவர்ப்பு மிகுந்த பாக்கு (யாழ்ப்.); highly astringent arecanut.

*[கள் → கய → கயர் → கசர் + பாக்கு. கள் = இளமை.]*

**கசர்பிடி-த்தல்** *kašar-piḍi-*, 4 செ.கு.வி.(v.i.) கறைபடுதல்; to be soiled with juice of a vegetable.

*[கசர் = சேறு, கறை. கசர் + பிடி.]*

**கசரி** *kašari*, பெ.(n.) துவையல் (நாமதீப.); a kind of strong relish prepared by adding paste of chilli to coconut, ginger, curry or similar things.

*[கசம்² → கசரி (நீர்த்தது, நீரொடு சேர்ந்தது.).]*

**கசரை** *kašarai*, பெ.(n.) காலே யரைக்காற் பலம் (S.I.I.ii,127.); a measure in weight = 1½ க°°சு.

*[க°°சு + அரை → க°°சரை → கசரை.]*

**கசலி** *kašali*, பெ.(n.) மீன்வகை (நாமதீப.); a kind of fish.

*[கச்சல்⁷ → கச்சலி → கசலி.]*

**கசலை¹** *kašalai*, பெ.(n.) துன்பம் (யாழ்.அக.); trouble.

*[கசி¹ → கசல் → கசலை.]*

**கசலை²** *kašalai*, பெ.(n.) கெண்டைமீன்; a small variety of keṇḍai fish.

*[கச்சல்⁷ → கசல் → கசலை. கச்சல் = சிறியது.]*

**கசவம்** *kašavam,* பெ.(n.) கடுகு (மலை.); Indian mustard.

*[கயம் → கயவம் → கசவம். கயம் = கருமை.]*

**கசவர்** *kašavar,* பெ.(n.) தமிழ்நாட்டின் நீலமலை மாவட்டத்திலும் கருநாடக மாநிலத்தின் தென்பகுதியிலும் வாழும் திராவிடப் பழங்குடியினர்; a Dravidian tribe who inhabit the Nilgiri district of Tamilnadu and Southern part of Karnataka state.

*[கச → கசவு → கசவர்.]*

**கசவாளி** *kaša-v-āḷi,* பெ.(n.) **கயவாளி** பார்க்க; see *kaya-v-āḷi.*

*[கயவன் → கயவாளி → கசவாளி.]*

**கசவிருள்** *kaša-v-iruḷ,* பெ.(n.) பேரிருள் (வின்.); pitch darkness.

*[கயம் + இருள் - கயவிருள் → கசவிருள். கயம் = ஆழம், நிறைவு, செறிவு. காரிருளை இருட்டுக்கசம் என்பது நெல்லை வழக்கு (வே.க.127).]*

**கசவு** *kašavu,* பெ.(n.) 1. நார்ச் செடிவகை; a fibrous plant. 2. வைக்கோல்; hay. 3. மஞ்சள் நிறம்; yellow.

மறுவ. கசா (கசவு → கசா).

**தெ.** கசவு; **க.** கச.

*[காலுதல் = நீளுதல். கால் → காய் → காசு → கசு → கச → கசவு.]*

**கசள்**[1] *kašaḷ,* பெ.(n.) 1. இளமை; youth-hood. 2. மென்மை; tenderness.

*[கள் → கய → கச → கசள். கள் = இளமை.]*

**கசள்**[2] *kašaḷ,* பெ.(n.) 1. முதிராமை, செப்பமுறாமை; not matured, not refined. 2. குறையுடைமை, குற்றம்; blemish, defect. 3. கருமை; blackness. 4. மயிர்; hair.

**க.** கசரு

*[கள் (கருமை, இழிவு) → கய → கயள் → கசள்.]*

**கசளி** *kašaḷi,* பெ.(n.) சிறு கெண்டைமீன்; a small fresh water fish, barbus.

**க.** கெசளி

*[குல் → குழ → குத → கத → கதலி → கசலி → கசளி (வே.க.147). குல் - தோன்றற் கருத்து வேர். இம் மீனைக் கெண்டைக் கசளி என்றும் அழைப்பர்.]*

**கசறு**[1] *kašaṟu,* பெ.(n.) மாணிக்கத் (புட்பராகம்) தன்மைகளுளொன்று (மதி.களஞ்.2:47.); a quality in (puṣparagam) gems.

*[கசம் = இருள், குற்றம். கசம் → கச் → கசர் → கசறு.]*

**கசறு**[2] *kašaṟu,* பெ.(n.) சிக்கல்; tangle, complication.

*[கள் → கச → கசறு. கள் = கூடுதல், நெருங்குதல்.]*

**கசனை**[1] *kašaṉai,* பெ.(n.) 1. ஈரம்; dampness, moisture, as round a well. *வீடு கசனைகொண்டு விட்டது (உ.வ.).* 2. உப்புப்பற்று; impregnation, as with salt. 3. பற்று; attachment, love. *"மாதர்கள் கசனையை விடுவது" (திருப்பு.143).*

*[கசி → கசினை → கசனை. கசி = ஈரம், பசை, பற்று.]*

**கசனை**[2] *kašaṉai,* பெ.(n.) சூட்டுக்குறி (யாழ்ப்.); mark with which cattle are branded.

*[கசம் = இருள், கருமை. கசம் → கச → கசனை.]*

**கசனை**[3] *kašaṉai,* பெ.(n.) செம்மண்; red earth, red ochre (சா.அக.).

*[கசி = மஞ்சள், மஞ்சள் கலந்த செம்மை. கசி → கசிரி = செம்புளிச்சை. கசி → கசினை → கசனை.]*

**கசா** *kašā,* பெ.(n.) **கசவு** பார்க்க; see *kašavu* (சா.அக.).

*[கசவு → கசா.]*

**கசாகு** *kašāgu,* பெ.(n.) பாம்பு; a snake (சா.அக.).

*[கசகு → கசாகு. கசகுதல் = பின்வாங்குதல், அசைதல், நகர்தல், நழுவிச்செல்லல்.]*

**கசாகூளம்** *kašā-kūḷam,* பெ.(n.) 1. தாறுமாறு; confusion. 2. குப்பை; garbage, refuse. 3. கடைப் பட்டோர்; dregs of society, scum, offscourings. 4. பலஇனக் கலப்பு; hybrid.

*[கழி → கசி → கசம் + கூளம் - கசகூளம் → கசாகூளம். கூளம் = குப்பைக்குவியல்.]*

**கசாடு** *kašāḍu,* பெ.(n.) வலையில் பிடிபடும் உண்பதற்கொவ்வா உயிரிகள் (இராமநா. மீனவ.); unedible fish varieties found in net.

*[கசடு¹ → கசாடு.]*

**கசாது** *kašātu,* பெ.(n.) 1. **கைச்சாத்து** பார்க்க; see *kai-c-cāttu.* 2. திருமணப்பதிவு; registration of marriage. *கசாது எழுதிக் கலியாணம் பண்ணியாயிற்று* (உ.வ.).

*[கைச்சாத்து → கச்சாத்து → கசாது.]*

**கசாமுசாபண்ணு-தல்** *kašā-mušā-paṇṇu-,* 5 செ.குன்றாவி.(v.t.) தாறுமாறாகச் செய்தல்; to make improper.

*[கசாமுசா + பண்ணு.]*

**கசாரிப்பட்டி** *kašāri-p-paṭṭi-,* பெ.(n.) அசாம் மாநிலத்தில் உள்ள ஊர்ப்பெயர்; a Tamil name of a village in Assam state.

*[கசவர் → கசவரன் + பட்டி - கசவரன்பட்டி → கசவாரிப்பட்டி → கசாரிப்பட்டி.]*

**கசாலை¹** *kašālai,* பெ.(n.) 1. கோக்காலி; shelf, bracket. 2. சுவர்மேல் ஆரல் (நெல்லை); protective covering on a wall.

*[கச்சல் + ஆலை - கச்சாலை (சிறியவிடம், சிறிய கூடம்) → கசாலை. கச்சல் = பிஞ்சு, இளமை, சிறிய.]*

**கசாலை²** *kašālai,* பெ.(n.) சமையற்கூடம்; kitchen.

*[கச்சல் + ஆலை - கச்சாலை → கசாலை. கச்சல் = சிறிய. ஆலை = இடம். கச்சாலை = சிற்றிடம்; சமையற்கூடம்.]*

**கசி¹-தல்** *kaši-,* 4 செ.கு.வி.(v.i.) 1. ஈரங்கசிதல்; to ooze out as moisture from a wall; to spread as humidity around a water body. சென்ற மழையில் மேற்றிசைச் சுவர் முழுவதும் கசிந்தது (உ.வ.). 2. நுண்துளை வழியாக வளி முதலியன வெளியேறுதல்; to leak as gases through pores. நச்சுக்காற்றுக் கசிந்தால் உயிருக்கு ஏதம் ஏற்படும் (உ.வ.). 3. ஊறுதல்; water coming out from sand bed. ஆற்றுப்படுகையில் பல கசிவு வாய்க்கால்கள் தோன்றுவதுண்டு (உ.வ.). 4. வியர்த்தல்; to perspire as the hands and feet. கடும் உழைப்பால் வியர்வை கசிந்தது (உ.வ.). 5. குருதி, கண்ணீர், சீழ் முதலியன அரும்பி ஒழுகுதல்; to dribble as of blood, tears, pus etc. கடிவாயிலிருந்து குருதி கசிந்துகொண்டிருக்கிறது (உ.வ.). 6. அழுதல் (திவா.); to weep. 7. உப்பு, வெல்லம் முதலியன இளகுதல்; to melt as of salt, jaggery etc. மழைச்சாரலால் உப்புக் கசிந்துவிட்டது (உ.வ.). 8. மனம் நெகிழ்தல்; to relent as the heart in pity. *"காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி"* (தேவா.3,307:1). 9. கவலைப்படுதல் (நாநார்த்த.); to be distressed, troubled.

க. கசி; கசபா. கசி.

*[கள் → கழி → கயி → கசி.]*

**கசி²** *kaši,* பெ.(n.) 1. மஞ்சள்; turmeric. 2. மஞ்சள் நிறம்; yellow. 3. சிவப்பு; red.

*[கசவு → கசி.]*

**கசிகசிப்பு** *kaši-kašippu,* பெ.(n.) 1. கசிவு (வின்.); being damp, dank, moist to the touch. 2. கசகசப்பு; perspiration (சா.அக.).

*[கசி + கசி + பு - கசிகசிப்பு. கசிகசி - அடுக்குத் தொடர். பு - சொ.ஆ.ஈறு.]*

**கசிதம்¹** *kašidam,* பெ.(n.) 1. **கச்சிதம்** பார்க்க; see *kaccidam.* 2. பதிக்கை; setting, mounting with precious stones, inlaying.

மறுவ. கச்சிதம், கச்சாரம்.

*[கச்சிதம் → கசிதம்.]*

**கசிதம்²** *kašidam,* பெ.(n.) எண்ணெய், தைலம், இளகியம் இவற்றைக் கிண்டுவதற்குப் பயன்படுத்தும் சிறிய துடுப்பு (சா.அக.); a small ladle used for stirring medicinal oils and electuaries in their preparation.

*[கழிதம் → கசிதம்.]*

**கசிந்து** *kašindu,* பெ.(n.) பொன்; gold (சா.அக.).

*[கசி → கசிந்து. கசம் → கசி = வெளிறிய மஞ்சள் நிறம்; மஞ்சள் நிறம்; அந்நிறமுடைய பொன்.]*

**கசிப்பு** *kašippu,* பெ.(n.) கள்ளச்சாறாயம் (யாழ்ப்.); illicit liquor.

*[கசி → கசிப்பு]*

ஆவியாக்கிக் குளிர வைக்கும் முறையில் காய்ச்சப்படும் சாறாயம். இது சாறாயவகை அனைத்திற்கும் பொதுப்பெயராயினும் இடவழக்காகக் கள்ளச் சாறாயத்தைக் குறித்தது.

**கசியம்** *kašiyam,* பெ.(n.) கள்; toddy (சா.அக.).

*[கசிதல் = வடிதல். கசி → கசியம். ஒ.நோ. சுழி → சுழியம் (தின்பண்டம்).]*

பனைமரத்தில் கட்டிய முட்டியில் (சிறிய சட்டி) சிறிது சிறிதாகக் கசிந்து ஒழுகும் இயல்புபற்றி இப் பெயர் பெற்றது.

**கசிர்** *kašir,* பெ.(n.) ஏலச்சீட்டில் சீட்டை ஏலம் விட்டுக் கிடைக்கும் ஆதாயப் பணத்தில் உறுப்பினர்களுக்குக் கிடைக்கும் பங்குத் தொகை; dividend. *இம்மாதச் சீட்டில் அதிகமாகக் கசிர் கிடைத்தது (உ.வ.).*

மறுவ. கசர்

*[கழி → கசி → கசிர்.]*

**கசிரடி-த்தல்** *kašir-aḍi-,* 4 செ.குன்றாவி.(v.t.) கசிவு ஏற்படுதல்; to seep; ooze.

மறுவ. கசரடித்தல்.

*[கசி → கசிர் → கசிரடி-.]*

**கசிரம்** *kaširam,* பெ.(n.) 1. கடம்பு; cadamba tree. 2. வாலுளுவை; spindle tree (சா.அக.).

*[கசி → கசிரம். கசி = மஞ்சள் நிறம்.]*

**கசிரி** *kaširi,* பெ.(n.) செம்புளிச்சை; red çedar (சா.அக.).

*[கசி → கசிரி. கசி = மஞ்சள், மஞ்சள் கலந்த சிவப்பு.]*

**கசிவகத்துண்மை** *kašivagattuṇmai,* பெ.(n.) இரக்கம், பரிவு, முதலிய வேளாண்மாந்தரியல்புகளுள் ஒன்று (திவா.); kind-heartedness, one of the characteristics of the Vēḷāḷās.

*[கசிவு + அகத்து + உண்மை. கசி → கசிவு = மனத்தில் சுரக்கும் பரிவுணர்வு.]*

**கசிவறல்** *kašivaṟal,* தொ.பெ.(vbl.n.) கசிவு நீங்குதல்; stop oozing; getting rid of moisture (சா.அக.).

*[கசிவு + அறல். அறு → அறல். அல் - தொ.பெ.ஈறு.]*

**கசிவிறு-த்தல்** *kašiviṟu,* 4 செ.குன்றாவி.(v.t.) கசிந்த நீரை இறுத்துக் கொள்ளல்; collecting the water oozing out (சா.அக.).

*[கசிவு + இறு. இறுத்தல் = வடித்தல்.]*

**கசிவு**[1] *kašivu,* பெ.(n.) 1. ஊறுகை; ooze, discharge. *மடையைக் கசிவில்லாமல் கட்டு (உ.வ.).* 2. ஈரம்; moisture as of land, dampness. அடுத்த வயலில் நீர்நிற்பதால் இந்த வயலில் கசிவு ஏற்பட்டுள்ளது (உ.வ.). 3. சிறிய ஒழுக்கு; leak. தண்ணீர்த் தொட்டியில் கசிவு உள்ளது (உ.வ.). 4. அடைக்கப்பட்ட குடுவை போன்றவற்றினின்று வளி முதலியன வெளியேறுகை; leak of gas from a container. *நச்சுக் காற்றுக் கசிவால் பலர் இறந்தனர் (உ.வ.).* 5. மின்கடத்தலில் ஏற்படும் மின்னிழப்பு; energy loss in conduction. 6.வியர்வை; perspiration. *"பசிதினத் திரங்கிய கசிவுடை யாக்கை" (புறநா.160:4).*

*[கசி[1] → கசிவு.]*

**கசிவு**[2] *kašivu,* பெ.(n.) 1. மனநெகிழ்வு; to relent as the heart in pity. *"கசிவறு மனத்தி னேனும்" (தணிகைப்பு.அவையடக்.2).* 2. வருத்தம்; distress; pain. *"கசிவெனும் கடலை நீந்தி" (சீவக.1132).* 3. இரக்கம்; pity. *"கண்பொறி போகிய கசிவொடு உரனழிந்து" (புறநா.161:13).* 4. உவகையால் உண்டாகும் அழுகை (சூடா.); weeping. *"மூதிற் பெண்டிர் கசிந்தழ" (புறநா.19:15).*

*[கசி[1] → கசிவு.]*

மனநெகிழ்வானது வருத்தம், இரக்கம், அழுகை ஆகியவற்றிற்குக் கரணியமாய் அமைதல்போல் இன்பத்திற்கும் கரணியமாய் நிற்பதை ஓர்ந்துகொள்க.

**கசு** *kašu,* பெ.(n.) காற்பலம்; measure of weight = 1/4 பலம். *'அமுது செய்யச் சர்க்கரை முக்கசும்' (S.I.I.ii,127).*

*[கஃசு (காற்பலம்) → கசு. கஃசு பார்க்க; see kaḵḳšu.]*

**கசுகசு-த்தல்** *kašu-kašu-,* 4 செ.கு.வி.(v.i.) ஈரமாயிருத்தல், கசிவாயிருத்தல் (இ.நூ.அக.); to form moisture, to be sticky or adhesive.

*[கசு + கசு - கசுகசு. கசகச-த்தல் பார்க்க; see kaša-kaša-.]*

**கசுகசுப்பு** *kašu-kašuppu,* பெ.(n.) ஒட்டீரம், உள்ளீரம் (யாழ்.அக.); being moist, sticky or adhesive.

*[கசு + கசுப்பு - கசுகசுப்பு.]*

**கசுகுசு-த்தல்** *kašu-kušu-*, 4 செ.கு.வி.(v.i.) கமுக்கமாய்ப் பேசுதல்; to tell in secret, to reveal a secret.

*[கசு + குசு - கசுகுசு - ஒலிக்குறிப்பு. இரட்டைக்கிளவி குசுகுசு பார்க்க; see kušu-kušu.]*

**கசுகுசெனல்** *kašu-kušenal,* பெ.(n.) காதுக்குள் மெதுவாய்ப் பேசுங் குறிப்பு; whispering into the ear. *"கசுகுசெனவே சொலசுகை யென்னடி" (மதுரகவி.).*

பட. குசுகுசு

*[கசு + குசு + எனல்.]*

**கசுபிசு-த்தல்** *kašu-pišu-,* 4 செ.கு.வி.(v.i.) ஒட்டீரமாக்கி இளகவைத்தல் (இ.நூ.அக.); to be sticky.

*[கசு + பிசு-.]*

**கசுபிசுக்கை** *kašu-pišukkai,* பெ.(n.) பிசுபிசுக்கை; being sticky, adhesive so as to stick to the hands or feet.

ம. கசு

*[கசு + பிசுக்கை.]*

**கசுமாலம்** *kašumālam,* பெ.(n.) **கழிமாலம்** பார்க்க; see *kaḻimālam.*

*[கழிமாலம் → கசுமாலம் (கொ.வ.).]*

**கசுமாலர்** *kašumālar,* பெ.(n.) தூய்மையற்றவர்; dirty slovenly persons. *"பேயமு தூணிடு கசுமாலர்" (திருப்பு.644).*

*[கழிமாலம் → கசுமாலம் → கசுமாலர். அர் - ப.பா.ஈறு.]*

**கசுமாலி** *kašumāli,* பெ.(n.) 1. தூய்மையற்றவள்; slut, dirty woman. 2. சண்டைக்காரி (வின்.); termagant.

*[கழிமாலம் → கசுமாலம் → கசுமாலி. 'இ'-பெ.பா.ஈறு.]*

**கசுவுநார்** *kašuvu-nār,* பெ.(n.) கசவுச் செடியின் நார் (வின்.); fibre of the plant kaša.

*[கசவு + நார். கசவுநார் → கசுவுநார்.]*

**கசை[1]** *kašai,* பெ.(n.) 1. நீண்ட கயிறு; long rope. 2. சாட்டையாகப் பயன்படுத்தும் வீச்சுக்கயிறு; horse whip, whip. *"கசையால் வீசியுடல் போழ்ந்தார்" (சிவரக. கத்தரிப்பூ.37).* 3. நீண்ட மென்கம்பி; rod, as an instrument of correction. *"உபாத்தியாயன் கையிற் கசைகண்டு" (திவ். திருமாலை.11.வியா).*

ம. கச; க. கசெ; Skt. kašā.

*[கசவு → கசை = கசவுச் செடியின் நாரால் செய்த கயிறு அல்லது சாட்டை.]*

**கசை[2]** *kašai,* பெ.(n.) மயிர்மாட்டி; hair ornament fastened by a hook from the top of the ear to the back of the head.

*[கழி → கசி → கசை (நீளமானது).]*

**கசை[3]** *kašai,* பெ.(n.) சித்திரவேலை; decorative work. கசைவேலைக்கு நாளும் கூலியும் மிகுதியாகும் (உ.வ.).

*[கசை[2] → கசை[3]. கசை = நார், மென்கம்பி. கை வேலைப்பாட்டுடன் செய்யும் பணிக்கு நீண்ட மென்கம்பி அடிப்படை. அக் கம்பி பொன்னாயிருப்பது சிறப்பு. இதுபற்றியே கசை பொன்னையும், பொன்கம்பியையும், அக் கம்பியால் செய்யும் கைவேலையையும் குறிப்பதாயிற்று.]*

**கசை[4]** *kašai,* பெ.(n.) 1. மெய்புதையரணம் (கவசம்); coat of mail. 2. பசை (வின்.); cement, paste.

*[கச்சம்[12] → கச்சை → கசை = ஒட்டிக்கொள்வது; மேலுறைக் காப்பாக இருப்பது.]*

**கசை[5]** *kašai,* பெ.(n.) கடிவாளம் (சம்.அக.Ms.); horse's bit.

*[கழி → கசி → கசை (நீளமான கயிற்றுடன் கூடிய கடிவாளம்).]*

**கசைமுறுக்கி** *kašai-muṟukki,* பெ.(n.) தட்டான்குறடு (வின்.); goldsmith's pincers.

*[கசை[1] + முறுக்கி. கசை = நீண்ட கம்பி. முறுக்கி = முறுக்கப் பயன்படுவது.]*

**கசையடி** *kašai-y-aḍi,* பெ.(n.) கசையால் தரப்படும் தண்டனை; whiplash as punishment. *கள்ளனுக்குக் கசையடி கொடுத்தா னரசன் (நன்.விருத்.298).*

*[கசை + அடி. கசை = விளார், கயிற்று விளார் (சவுக்கு). அடு = கொல்லுதல், வருத்துதல். அடு → அடி. அடித்தல் = புடைத்தல், வருத்துதல், கொல்லுதல்.]*

**கசைவளையல்** *kašai-vaḷaiyal,* பெ.(n.) பொற்கம்பி வளை (வின்.); bracelets made of braided gold wire.

*[கசை[1] + வளையல்.]*

**கசைவேலை** *kašai-vēlai,* பெ.(n.) பொற்கம்பி வேலை (வின்.); braiding with gold wire.

*[கசை[1] + வேலை.]*

**கசைவைத்தபுடவை** *kašai-vaitta-puḍavai,* பெ.(n.) பொன்னிழைக்கரைச்சீலை (வின்.); gold fringed cloth.

*[கசை[1] + வைத்த + புடவை.]*

**கஞ்சக்கருவி** *kañja-k-karuvi,* பெ.(n.) ஐவகை இசைக்கருவிகளுள் ஒன்றான வெண்கலத்தால் செய்யப்பட்ட தாளக்கருவி (பிங்.); musical instruments made up of bell-metal, as cymbals, one of five musical instruments.

*[கஞ்சம் + கருவி. கஞ்சம் = வெண்கலம்.]*

*ஐவகை இசைக் கருவிகள்: 1. தோற்கருவி, 2. துளைக்கருவி, 3. நரம்புக்கருவி, 4. மிடற்றுக்கருவி, 5. கஞ்சக்கருவி.*

**கஞ்சகம்[1]** *kañjagam,* பெ.(n.) **கறிவேம்பு** பார்க்க; see *kaṟi-vēmbu.* *"கஞ்சக நறுமுறி அளைஇ" (பெரும்பாண்.308).*

*[கள் (கருமை) → கச்சு → கஞ்சு → கஞ்சுகம் → கஞ்சகம்]*

**கஞ்சகம்[2]** *kañjagam,* பெ.(n.) 1. கச்சின் தலைப்பு (பிங்.); outer end of a warrior's girdle. 2. முன்றானை; free end of the saree.

*[கச்சு[2] → கஞ்சு → கஞ்சகம்.]*

**கஞ்சகம்[3]** *kañjagam,* பெ.(n.) கண்ணிலிடும் மருந்துவகை; an eye-balm.

*[கள் = கருமை. கள் → கச்சு → கஞ்சு → கஞ்சகம்]*

**கஞ்சகன்** *kañjagaṉ,* பெ.(n.) கண்ணன்; Kaṇṇaṉ.

*[கள் → கச்சு → கஞ்சு → கஞ்சுகம் → கஞ்சகன் = கருநிறத்தவன்.]*

**கஞ்சகாரன்** *kañja-kāraṉ,* பெ.(n.) வெண்கலக் கன்னான்; brazier. *"கஞ்ச காரரும் செம்பு செய்குநரும்" (சிலப்.5:28).*

Skt. kānsyakāra

*[கன் → கஞ்சு → கஞ்சகாரன். ஒ.நோ. பன் → பஞ்சு.]*

**கஞ்சங்குடுக்கை** *kañjaṅ-kuḍukkai,* பெ.(n.) புகைகுடிகலம்; Indian pipe for smoking bhang, the bowl of which is made of coconut shell.

*[கஞ்சம்[2] + குடுக்கை. கஞ்சம் = கஞ்சா. குடுக்கை = கலம்.]*

**கஞ்சங்குல்லை** *kañjaṅ-kullai,* பெ.(n.) **கஞ்சாங் கோரை[1]** பார்க்க; see *kañjāṅ-kōrai[1].* (சா.அக.).

மறுவ. கஞ்சாங்கொல்லை.

*[கஞ்சம்[3] + குல்லை - கஞ்சங்குல்லை.]*

**கஞ்சங்குலை** *kañjaṅ-kulai,* பெ.(n.) கஞ்சாவின் வேர்; the root of the ganjah plant (சா.அக.).

*[கஞ்சம்[2] + குலை.]*

**கஞ்சண்ணாமண்டபம்** *kañjaṇṇā-maṇḍapam,* பெ.(n.) புதுக்கோட்டை மாவட்டத்தில் உள்ள ஒரூர்; a village in Pudukkottai district.

*[கஞ்சண்ணன் + மண்டபம் - கஞ்சண்ணன்மண்டபம் → கஞ்சண்ணாமண்டபம். இயற்பெயரீறு விளியீறாகத் திரிந்திருப்பது வழு.]*

**கஞ்சத்தகடு** *kañja-t-tagaḍu,* பெ.(n.) 1. ஒருவகைப் பளபளப்புத் தகடு (வின்.); tinsel used for decoration purposes. 2. வெண்கலத்தகடு; bell-metal sheet.

*[கஞ்சம்[4] + தகடு. கஞ்சம் = வெண்கலம்.]*

**கஞ்சத்தனம்** *kañja-t-taṉam,* பெ.(n.) செல்வம் சேர்க்கும் முகத்தான், இன்றியமையாத செலவைக் கூடத் தவிர்த்து வாழும் பண்பு; niggardliness. சிக்கனமாக இருக்கலாம்; ஆனால் கஞ்சத்தனமாக இருக்கக் கூடாது (உ.வ.).

U. cañjūs

*[கஞ்சம்[8] + தனம்.]*

**கஞ்சத்தொழில்** *kañja-t-toḻil,* பெ.(n.) வெண்கலத் தொழில்; bell-metal work. *"செம்பின் செய்நவும் கஞ்சத் தொழிலவும்" (சிலப்.14:174).*

*[கஞ்சம்[4] + தொழில்.]*

**கஞ்சநன்** *kañjanaṉ,* பெ.(n.) காமன் (மன்மதன்); god of love (த.சொ.அக.).

*[மன்மதன் கருநிறமுடையவனாகக் கருதப்படுதலின், கள் = கருமை. கள் → கஞ்சு → கஞ்சநன்.]*

**கஞ்சம்**[1] *kañjam,* பெ.(n.) ஒருவகை அப்பம் (திவா.); a kind of pastry.

*[காய்ச்சு → கச்சு → கஞ்சு → கஞ்சம்.]*

**கஞ்சம்**[2] *kañjam.* பெ.(n.) கஞ்சா; Indian hemp.

ம. கஞ்சாவு

*[கள் = கருப்பு, தீமையானது. கள் →களஞ்சம் → கஞ்சம்.]*

**கஞ்சம்**[3] *kañjam,* பெ.(n.) துளசி (மூ.அக.); sacred basil.

*[கள் = திரட்சி, மணமுடையது. கள் → கஞ்சா → கஞ்சம்.]*

**கஞ்சம்**[4] *kañjam,* பெ.(n.) 1. வெண்கலம் (திவா.); bell-metal. 2. கைத்தாளம் (திவா.); cymbal. 3. நீர் அருந்தும் கலம்; goblet, drinking vessel.

மறுவ. வெண்கலம்.

க. கஞ்சு, கஞ்ச; Skt. Kānsya

*[கன் → கஞ்சு → கஞ்சம். கன் = செம்பு.]*

செம்பும் தகரமும் கலந்து கன்னுத்தொழிலாளரால் (கன்னார்) செய்யப்பட்ட கலப்பு மாழையான வெண்கலம் கஞ்சம் எனப்பட்டது.

**கஞ்சம்**[5] *kañjam,* பெ.(n.) ஏய்ப்பு, ஏமாற்று (வஞ்சனை) (பிங்.); deception, villainy.

*[கள் = கருமை; தீமை. கள் → கச்சு → கஞ்சு → கஞ்சம்.]*

**கஞ்சம்**[6] *kañjam,* பெ.(n.) 1. நீர்; water. *"கஞ்ச வேட்கையிற் காந்தமன் வேண்ட" (மணிமே.பதி.10).* 2. தாமரை (திவா.); lotus. *"கஞ்சங் கலங்குவன" (நள.சுயம்.15).*

*[அம் → கம் (நீர்) → கஞ்சு → கஞ்கம் → கஞ்சம். கஞ்சவேட்கை = நீர்வேட்கை.]*

**கஞ்சம்**[7] *kañjam,* பெ.(n.) 32 வகைச் செய்நஞ்சு களுள் ஒன்று; one of the 32 kinds of native arsenic.

*[கள் = கரியது, தீமைதரத்தக்கது. கள் → கஞ்சு → கஞ்சம்.]*

**கஞ்சம்**[8] *kañjam,* பெ.(n.) இவறன்மை; miserliness.

*[காய் = காய்தல், உலர்தல். காய் → காய்ச்சல் → காய்ஞ்சல் → காஞ்சம் → கஞ்சம் (இரக்கம் என்னும் ஈரப்பசை இன்மை.)]*

**கஞ்சம்**[9] *kañjam,* பெ.(n.) **கஞ்சகம்**[3] பார்க்க; see *kañjagam*[3].

*[கஞ்சகம்[3] → கஞ்சம்[9].]*

**கஞ்சரி** *kañjari,* பெ.(n.) சிறுமுரசு; a kind of tabor (மாம்பழக்.தனிச்செய்.25).

மறுவ. பணவை.

*[கச்சு[5] → கஞ்சு → கஞ்சரி.]*

**கஞ்சல்**[1] *kañjal,* பெ.(n.) தாழ்ந்த தரமான பொருள் (யாழ்.அக.); article of poor quality.

*[கழி → கழிச்சல் → கச்சல் → கஞ்சல்.]*

**கஞ்சல்**[2] *kañjal,* பெ.(n.) 1. கூளம்; sweepings, rubbish heap. 2. குப்பை; refuse, litter.

ம. கஞ்சல்; க. கச, கசவு; தெ. கசவு; து. கசவு, கச; பட.கச.

*[கழி → கழிச்சல் → கச்சல் → கஞ்சல்.]*

ஒரு நீர்ப்பொருட்கலத்தில் கசண்டு அடியில் தங்கிச் செறிவதனாலும், கழிபொருளான குப்பையிற் பலவகைப் பொருள் கலப்பதாலும், செறிதல் அல்லது கலத்தற் கருத்தினின்று, கழிபொருள் கருத்துத் தோன்றிற்று (வே.க.141).

**கஞ்சவதைப்பரணி** *kañja-vadai-p-paraṇi,* பெ.(n.) கம்சனின் போர்பற்றிக் கூறும் பரணிநூல்; a paraṇi on extermination of Kamšā (by lord Krishna).

*[கஞ்சன்[3] + வதை + பரணி.]*

**கஞ்சவாதம்** *kañja-vādam,* பெ.(n.) நொண்டி நடக்கச் செய்யும் ஊதை நோய் (சீவரட்.); a kind of rheumatism that causes lameness.

*[கஞ்சன்¹ → கஞ்சம் + வாதம். Skt. வாதம்.]*

**கஞ்சன்¹** *kañjaṉ,* பெ.(n.) 1. நொண்டி; lame man. 2. குறளன் (சூடா.); dwarf, who walks with an awkward slouch.

*[கஞ்சல் - கஞ்சன்.]*

**கஞ்சன்²** *kañjaṉ,* பெ.(n.) தாமரையில் பிறந்த நான்முகன்; Brahma, who was born in a lotus.

*[கஞ்சம்⁶ → கஞ்சன், கஞ்சம் = தாமரை, நீர்.]*

**கஞ்சன்³** *kañjaṉ,* பெ.(n.) 1. ஏய்ப்பவன்; deceiver. 2. கம்சன்; Kamšā. *"கஞ்சன் வஞ்சம் கடத்தற் காக அஞ்சன வண்ணன் ஆடிய ஆடலுள்" (சிலப்.6:46).*

*[கள் → கஞ்சு → கஞ்சன் = கரியவன்; கரவுள்ளவன்.]*

த. கஞ்சன் Skt. Kamšā.

**கஞ்சன்⁴** *kañjaṉ,* பெ.(n.) 1. இவறன் (உலோபி); miser.

*[கஞ்சம்⁵ → கஞ்சன்.]*

**கஞ்சன்அம்மானை** *kañjaṉ-ammāṉai,* பெ.(n.) கம்சனைப்பற்றி அம்மானை என்னும் சிற்றிலக்கிய வகையால் செய்யப்பட்ட நூல்; a minor rabandham, a kind of folk song in Tamil on Kamšā.

*[கஞ்சன்³ + அம்மானை.]*

**கஞ்சனம்¹** *kañjaṉam,* பெ.(n.) 1. கைத்தாளம் (வின்.); cymbals. 2. கண்ணாடி (திவா.); mirror.

*[கஞ்சம்⁴ → கஞ்சனம். பண்டு பளபளப்பாக்கப்பட்ட வெண்கலம் முகம் பார்க்கப் பயன்பட்டது.]*

**கஞ்சனம்²** *kañjaṉam,* பெ.(n.) 1. கரிக்குருவி (பிங்.); king-crow. 2. வலியன் (பிங்.); pied wagtail.

*[கல் → கள் - கருமைக் கருத்துவேர். கள் → கச்சு → கஞ்சு → கஞ்சனம்.]*

**கஞ்சனை¹** *kañjaṉai,* பெ.(n.) கண்ணாடி; mirror. *"திருமுன் கஞ்சனை பிடிப்பவர்" (அரிச்.பு.விவாக.123).*

*[கஞ்சனம்¹ → கஞ்சனை.]*

**கஞ்சனை²** *kañjaṉai,* பெ.(n.) புகைக்கலம்; censer. *"கருமணி முகடு வேய்ந்த கஞ்சனை" (சீவக.2140).*

*[கஞ்சம்⁴ → கஞ்சனம் → கஞ்சனை (வெண்கலத்தால் செய்யப்பட்ட நறுமணப் புகைக்கலம்).]*

**கஞ்சா** *kañjā,* பெ.(n.) 1. செடிவகை; Indian hemp. 2. பூங்கஞ்சா; the dried flowering tops of the cultivated female plants of Indian hemp.

பெண் ஆண்

கஞ்சாசெடி

மறுவ. அனுவல்லிப் பூடு, கஞ்சங்குல்லை.

ம. கஞ்சாவு; க. கஞ்சா, கஞ்சி; தெ. கஞ்சாயி, Skt. ganja, ganjika.

*[களஞ்சம் → கஞ்சம்² → கஞ்சா.]*

**கஞ்சாக்குடுக்கை** *kañjā-k-kuḍukkai,* பெ.(n.) கஞ்சங் குடுக்கை பார்க்க; see *kañjaṅ-kuḍukkai.*

மறுவ. சிலும்பி.

ம. கஞ்சாவு, கடுக்க.

*[கஞ்சம்² → கஞ்சா + குடுக்கை.]*

**கஞ்சாக்கெளுத்தி** *kañjā-k-keḷutti,* பெ.(n.) கடல்மீன்வகை; a sea fish.

*[கஞ்சம்⁴ → கஞ்சா + கெளுத்தி. கஞ்சம் = வெண்கலம், பழுப்புநிறம்.]*



கஞ்சாக்கெளுத்தி

**கஞ்சாங்குப்பம்** *kañjāṅkuppam,* பெ.(n.) திருவண்ணாமலை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Thiruvannamalai district

[கஞ்சம் + குப்பம் - கஞ்சங்குப்பம் → கஞ்சாங்குப்பம். கஞ்சம் = கஞ்சம் புல் சார்ந்த நிலம். குப்பம் = சிறிய குடியிருப்பு.]

**கஞ்சாங்கொல்லை** *kañjāṅ-kollai,* பெ.(n.) கடலூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Cudalore district.

[கஞ்சம் + கொல்லை - கஞ்சங்கொல்லை → கஞ்சாங்கொல்லை = கஞ்சம்புல்லடர்ந்த நிலம், அந் நிலம் சார்ந்த ஊர்.]

**கஞ்சாங்கொற்றி**[1] *kañjāṅ-koṟṟi,* பெ.(n.) பெருமையில்லாதவன் (வின்.); worthless person.

[கஞ்சல் → கஞ்சம் + கொற்றி. கஞ்சம் = கருமை, தீமை. கொற்றி = பதுமை.]

**கஞ்சாங்கொற்றி**[2] *kañjāṅ-koṟṟi,* பெ.(n.) 1. கனமற்றது; weightless. 2. பாலற்றது; genderless. 3. பிச்சிப்பேய்; evil spirit.

[காய்ந்த → காஞ்ச → கஞ்சா + கொற்றி.]



கஞ்சாங்கோரை

**கஞ்சாங்கோரை** *kañjāṅ-kōrai,* பெ.(n.) 1. நாய்த்துளசி (பதார்த்த.298); white-basil. 2. திருநீற்றுப்பச்சை; sweet basil.

[கஞ்சம்[3] + கோரை - கஞ்சங்கோரை → கஞ்சாங்கோரை.]

**கஞ்சாரி** *kañjāri,* பெ.(n.) கண்ணன்; Lord Kaṇṇaṉ (த.சொ.அக.).

[கள் → கச்சு → கஞ்சு → கஞ்சம் (கருமை) → கஞ்சாரி.]

**கஞ்சாறர்** *kañjāṟar,* பெ.(n.) மானக்கஞ்சாற நாயனார்; one of the sixty three Šaiva Šaints who lived at Kañjāṟu. *"சென்று அவரும் கஞ்சாறர் மணமிசைந்தபடி செப்ப"* (பெரியபு. மானக்கஞ்.18:1).

[கஞ்சாறு = ஊர்ப்பெயர். கஞ்சாறு + அர் - கஞ்சாறர். அர் - உயர்வுப் பன்மையீறு. மானக்கஞ்சாறர் பார்க்க; see *māṉa-k-kañjāṟar.*]

**கஞ்சாறன்** *kañjāṟaṉ,* பெ.(n.) பாபநாசம் வட்டம் ஆடுதுறையில் குகை வெட்டிக்கொடுத்தவர்; one who had caused a cave in Aduthurai of Papanasam taluk. *"இக்குகை செய்வித்தாந் கஞ்சாறன் திருநட்டப்பெருமாளான வந்தொண்டர்"* (தெ.இ.கல்.தெ.23 கல்.369).

[கஞ்சாறு + அன்.]

**கஞ்சி**[1] *kañji,* பெ.(n.) 1. நீர்ப்பதமான, குழைந்த சோற்றுணவு; canjee, rice gruel. 2. சோற்று வடி நீர்; water in which rice has been boiled and drained off after the rice has been cooked. *"சோறு வாக்கிய கொழுங்கஞ்சி யாறுபோலப் பரந்தொழுகி"* (பட்டினப்.44,45). 3. கஞ்சிப்பசை; starch, used by washerman. *"கஞ்சி தேய்ப்புண்டு அகில் கமழும் பூந்துகில்"* (கந்தபு.பாட்டுப்.50.). 4. நீராய்க் கரைத்த உணவு; liquid food. *"வாயிலட்டிய கஞ்சியும் மீண்டே கடைவழி வாரக் கண்ட மடைப்ப."* (திவ்.பெரியாழ்.4.5:5). 5. நீர் கலந்த உணவு; gruel prepared from cereals. 'கஞ்சி கண்ட இடம் கயிலாயம்; சோறு கண்ட இடம் சொர்க்கம்' (பழ.).

மறுவ. அன்னப்பால் (வன்னப்பால்).

ம. கஞ்ஞி, கஞ்சி; க., து., பட., தெ., குட., குரு., கொர., உராலி. கஞ்சி; கோத. கச்நிஹர்; துட. கொச்; த. கஞ்சி; > Skt. kanjika; Pali. khajjata; E. conjee.

[கழி + நீர் → கழிநி → கஞ்ஞி → கஞ்சி. கஞ்சி = நீராளமான உணவு.]

வடமொழியில் மூலமில்லை. புளித்த கஞ்சி என்பதும் பொருந்தாது. இளம்பதத்தைக் குறிக்கும் கஞ்சி என்னும் சொல், இளமையைக் குறிக்கும் குஞ்சு (குஞ்சி) என்னும் சொல்லொடு தொடர்புடையது. (வ.மொ.வ.102).

**கஞ்சி**[2] *kañji,* பெ.(n.) காஞ்சிபுரம்; the city of *Kanchipuram. "கஞ்சி குடியென்றான்"* (தனிப்பா.தி.1, 39:76).

மறுவ. காஞ்சி, காஞ்சிபுரம், கச்சி.

[காஞ்சி → கஞ்சி. வஞ்சி மரங்களால் பெயர் பெற்ற வஞ்சிமாநகரம் போன்று, காஞ்சி மரங்களால் பெயர் பெற்றது காஞ்சி.]

**கஞ்சிக்கலம்** *kañji-k-kalam,* பெ.(n.) 1. கஞ்சி ஊற்றிவைக்கும் ஏனம்; pot to keep kañji.

2. பருவமடைதல் (சேரநா.); a girl at her first menstruation.

ம. கஞ்ஞிக்கலம்

*[கஞ்சி[1] + கலம் - கஞ்சிக்கலம்.]*

முதற்பூப்பின்போது, தனியே இருத்திக் கஞ்சிக்கலத்தில் உணவு படைத்தல் தொடர்புபற்றிக் கஞ்சிக்கலம் என்னும் சொல், முதல் பூப்பையும் குறிக்கலாயிற்று. இவ் வழக்குச் சேரநாட்டிலும் உள்ளதை மலையாள அகரமுதலி குறித்துள்ளது.

**கஞ்சிக்காடி** *kañji-k-kāḍi,* பெ.(n.) கஞ்சியிலிருந்து செய்யப்படும் காடி; vinegar produced from the fermentation of kañji.

*[கஞ்சி[1] + காடி. கள் (புளிப்பு) → காளி → காடி.]*

**கஞ்சிகாய்ச்சு[1]-தல்** *kañji-kāyccu-,* 5 செ.குன்றாவி.(v.t.) உணவு சமைத்தல்; to prepare food, as gruel, slop or boiled rice. இன்றைக்கு எங்களூர் மாரியம்மன் கோயிலில் கஞ்சிகாய்ச்சி ஊற்றுகிறார்கள் (உ.வ.).

*[கஞ்சி[1] + காய்ச்சு-.]*

**கஞ்சிகாய்ச்சு[2]-தல்** *kañji-kāyccu-,* 5 செ.கு.வி.(v.i.) பலர் ஒன்றாகச் சேர்ந்துகொண்டு ஒருவரை அளவுக்கதிகமாக நகையாடுதல்; to make fun of; tease excessively. அந்தச் சின்னப்பையனை ஏன் இப்படிக் கஞ்சி காய்ச்சுகிறீர்கள்? (உ.வ.)

*[கஞ்சி[1] + காய்ச்சு. குழையும்படி சூடேற்றிக் காய்ச்சுதல், மனம் வருந்தும்படி வருத்துதல்.]*

**கஞ்சிக்கூடை** *kañji-k-kūḍai,* பெ.(n.) சோற்றுக்கஞ்சி வடிக்கும் கூடை; colander by which kañji is strained off.

ம. கஞ்ஞியாற்றி

*[கஞ்சி[1] + கூடை.]*

**கஞ்சிகை[1]** *kañjigai,* பெ.(n.) 1. குதிரைபூட்டிய தேர் (பிங்.); carriage or chariot drawn by horses. 2. சிவிகை (சூடா.); palanquin.

*[கள் → கவ்வு → கச்சு → கச்சிகை → கஞ்சிகை (பூட்டப்பட்டது, பொருத்தப்பட்டது).]*

**கஞ்சிகை[2]** *kañjigai,* பெ.(n.) 1. ஆடை (சூடா.); garment, cloth. 2. உருவுதிரை; curtain. *"கஞ்சிகை வையம்" (சீவக.858).*

*[கொய்து → கொய்துவம் → கொய்சுகம் → கொஞ்சுகம் → கஞ்சுகம் → கஞ்சிகை. கொய்சகம் → கொசுவம் (கொ.வ.).]*

**கஞ்சிகொடு[1]-த்தல்** *kañji-koḍu-,* 4 செ.குன்றாவி.(v.t.) மீன்பிடி வலைக்குக் கஞ்சியிடுதல்; to apply starch to the fishing net. வலைக்குக் கஞ்சி கொடுத்துக் காய வை (உ.வ.).

மறுவ. கஞ்சிவை-த்தல்.

*[கஞ்சி[1] + கொடு.]*

**கஞ்சிகொடு[2]-த்தல்** *kañji-koḍu-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. ஏழைகளுக்கு உணவளித்தல் (கஞ்சி); to feed the poor. வள்ளலார் மன்றத்தில் நாள்தோறும் கஞ்சிகொடுக்கப்படுகிறது (உ.வ.). 2. முதியோர் நோயாளி ஆகியோருக்கு உணவளித்தல்; to feed aged and ailing patients.

*[கஞ்சி + கொடு.]*

**கஞ்சித்தண்ணீர்** *kañji-t-taṇṇīr,* பெ.(n.) 1. வடிகஞ்சி; kañji, water drawn off from boiled rice. 2. நீர்கலந்த உணவு; term for food in general as applied by the poorer classes; liquid food.

ம. கஞ்ஞிவெள்ளம்; பட. கஞ்சி நீரு; கோத. கச்நிர்

*[கஞ்சி[1] + தண்ணீர்.]*

**கஞ்சித்தண்ணீர்குடி-த்தல்** *kañji-t-taṇṇīr-kuḍi-,* 4 செ.குன்றாவி.(v.t.) இறுதிச்சடங்கினை முடித்தபின் கஞ்சிநீர் கொடுத்தல்; to feed conjee water after a funeral ceremony.

*[கஞ்சி[1] + தண்ணீர் + குடி-.]*

**கஞ்சித்தெளிவு** *kañji-t-teḷivu,* பெ.(n.) இறுத்த கஞ்சி; water strained from rice after it has been well cooked, used as a light diet.

மறுவ. அன்னப்பால்.

ம. கஞ்ஞித்தெளி

*[கஞ்சி[1] + தெளிவு.]*

**கஞ்சித்தொட்டி** *kañji-t-toṭṭi,* பெ.(n.) ஏழைகளுக்குக் கஞ்சி வழங்குமிடம்; place where gruel is given free to the poor. வறட்சிக்காலத்தில்

கஞ்சித்தொட்டி வைத்து ஏழைகளுக்குக் கஞ்சி ஊற்றப்படும் (உ.வ.).

[கஞ்சி¹ + தொட்டி.]

**கஞ்சித்தொந்தி** *kañji-t-tondi,* பெ.(n.) செல்வத்தினாற் பெருத்த வயிறு; potbelly, as due to luxurious living. *கள்ளுத் தொந்தியா, கஞ்சித் தொந்தியா? (குஞ்சை).*

[கஞ்சி¹ + தொந்தி (இளகிய தொந்தி).]

**கஞ்சிப்பசை** *kañji-p-pašai,* பெ.(n.) கஞ்சிப்பற்று (வின்.); starch. கஞ்சிப்பசை போட்ட துணியைத் தேய்த்து உடுத்துதல் நல்லது (உ.வ.).

ம. கஞ்ஞிப் பச

[கஞ்சி¹ + பசை.]

**கஞ்சிப்புரம்** *kañji-p-puram,* பெ.(n.) ஏழைகளுக்கு இலவயமாகக் கஞ்சி ஊற்றுமிடம்; a charity-home where kañji (rice gruel) is supplied to the poor (சேரநா.).

ம. கஞ்சிபுர

[கஞ்சி + புரை - கஞ்சிப்புரை → கஞ்சிப்புரம். புரை = சிறிய அறை.]

**கஞ்சிப்பொழுது** *kañji-p-poḻudu,* பெ.(n.) பணியாளர் கஞ்சி அல்லது உணவு உட்கொள்ளும் வேளை; உச்சிவேளை; midday, from its being the time when the labourer, takes his kañji or food.

[கஞ்சி¹ + பொழுது.]

**கஞ்சிபோடு-தல்** *kañji-pōḍu-,* 19 செ.குன்றாவி.(v.t.) நூற்பாவு, துணி ஆகியவற்றுக்குக் கஞ்சிப்பசையூட்டுதல்; to apply starch to warp and cloths. கஞ்சிபோட்ட பாவே தறிநெய்யப் பயன்படும் (உ.வ.).

மறுவ. கஞ்சியூட்டுதல்

[கஞ்சி¹ + போடு.]

**கஞ்சிமாரியாயி** *kañji-māri-y-āyi,* பெ.(n.) ஒருவகை வெப்புக் கொப்புள நோய்; a skin disease characterised by eruption of vesicles or pustules in different parts of the body.

[கஞ்சி + மாரி + ஆயி. மாரியம்மனுக்குக் கஞ்சி ஊற்றுவதால் நோய் தணியும் என நாட்டுப்புற மக்களால் கருதப்படும் அம்மைநோய் வகை.]

**கஞ்சியாடை** *kañji-y-āḍai,* பெ.(n.) கஞ்சியின் மேற்பகுதியில் படியும் ஏடு; cream of gruel.

[கஞ்சி + ஆடை.]

**கஞ்சியிடு-தல்** *kañji-y-iḍu-,* 18 செ.குன்றாவி.(v.t.) *கஞ்சிபோடு-தல்* பார்க்க; see *kañji-pōḍu-.*

[கஞ்சி¹ + இடு-.]

**கஞ்சியில்வடி-த்தல்** *kañji-y-il-vaḍi-,* 4 செ.கு.வி.(v.i.) 1. மிக்க இவறன்மையாயிருத்தல்; to show extreme stinginess. 2. சிறியதைப் பெரிதாக்கிப் பேசுதல்; to magnify very insignificant things out of all proportion to their importance, to strain at a gnat.

[கஞ்சி + இல் + வடி. **கஞ்சியில்வடித்தல்** = வெறுங் கஞ்சி வடித்துக் கஞ்சியையே உணவாக விருந்தினர்க்குத் தரும் வறுமைநிலை. பிறரோடு பேசும்பொழுது மனமிளகப் பேசி இசையச் செய்தல். அதற்காகச் சிறியதையும் பெரிதாக இட்டுக்கட்டிப் பேசி மகிழ்த்துதல்.]

**கஞ்சிரா** *kañjirā,* பெ.(n.) **கஞ்சுறை** பார்க்க; see *kañjuṟai.*


கஞ்சிரா

மறுவ. கஞ்சிலி, கஞ்சுறை.

[கஞ்சு + உறை - கஞ்சுறை → கஞ்சிரா. கஞ்சு = வெண்கல உருள்வட்டை.]

**கஞ்சிலி** *kañjili,* பெ.(n.) **கஞ்சுறை** பார்க்க; see *kañjuṟai.*

[கஞ்சுறை → கஞ்சிரி → கஞ்சிலி (கொ.வ.).]

**கஞ்சிவடிச்சான்** *kañji-vaḍiccāṉ,* பெ.(n.) கும்பாதிரி மரம்; gum lac tree.

[கஞ்சி + வடித்தான் (வடிச்சான்).]

**கஞ்சிவாய்** *kañji-vāy,* பெ.(n.) நாகப்பட்டினம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Nagappattinam district.

[கஞ்சி + வாயில் - கஞ்சிவாயில் → கஞ்சிவாய்.]

**கஞ்சிவார்-த்தல்** kañji-vār-, 4 செ.குன்றாவி.(v.t.) 1. உணவளித்தல்; to feed, as with kañji. 2. காப்பாற்றுதல்; to maintain, support. *அந்தச் செல்வர்தாம் இவருக்கு இப்போது கஞ்சிவார்த்து வருகிறார்.*

ம. கஞ்ஞிகழிக்குக

*[கஞ்சி + வார்-.]*

**கஞ்சிவை-த்தல்** *kañji-vai-*, 4 செ.குன்றாவி.(v.t.) *கஞ்சிகொடு-த்தல்* பார்க்க; see *kañji-koḍu-*.

*[கஞ்சி[1] + வை-.].*

**கஞ்சீயம்** *kañjīyam,* பெ.(n.) வெண்கலம் (யாழ்.அக.); bell-metal.

*[கஞ்சம்[4] → கஞ்சீயம்.]*

**கஞ்சு[1]** *kañju,* பெ.(n.) கம்சன்; Kamšan, *"முன்கஞ்சைக் கடந்தானை" (திவ்.இயற்.3:34).*

*[கஞ்சன்[3] → கஞ்சு.]*

**கஞ்சு[2]** *kañju,* பெ.(n.) 1. இடையுடுப்பு, இடையாடை; waist cloth or clothe. 2. ஆடை, உடுப்பு; dress. 3. மேலாடை, சட்டை, மெய்ப்பை; upper garment.

*[கச்சு[2] → கஞ்சு.]*

**கஞ்சு[3]** *kañju,* பெ.(n.) வெண்கலம்; bell-metal.

க. கன்சு; பட. கச்சு; Skt. Kānsya

*[கஞ்சம்[4] → கஞ்சு.]*

**கஞ்சுகம்[1]** *kañjugam,* பெ.(n.) 1. அதிமதுரம்; liquorice plant. *"கஞ்சுகம் வாய்த்த கவளந்தன் கைக்கொண்ட குஞ்சரம் வென்ற கொலைவேழம்" (பு.வெ.12, வென்றிப்.45).* 2. சிலந்திக்கோரை (மூ.அக.); nutgrass.

*[அம் → கம் = நீர். கம் → கஞ்சு = நீர்ஊறச்செய்வது. கஞ்சு → கஞ்சுகம்.]*

**கஞ்சுகம்[2]** *kañjugam,* பெ.(n.) 1. சட்டை; tunic, jacket and stitched clothe. *"கஞ்சுக முதல்வர்" (சிலப்.26:138).* 2. பாம்புச்சட்டை (வின்.); slough, excoriated skin of a snake.

*[கொய்து + அம் → கொய்துவம் → கொய்சுகம் → கொஞ்சுகம் → கஞ்சுகம். கொய்தல் = மடித்து உடுத்துதல். கஞ்சுகம் = மடித்துடுக்கப்படும் ஆடை.]*

**கஞ்சுகன்[1]** *kañjugaṉ,* பெ.(n.) 1. ஆடையணிந்தவன்; one who wears a tunic or jacket. *"ஞான கஞ்சுக னகரியை யெங்ஙனே நாம் வியப்பது மன்னோ" (பாரத.சூதுப்போர்.56).* 2. சிறப்புஆடை அணிந்த அமைச்சர்; king's chief minister, in ancient times, so called because he wore a distinguishing jacket. *"காவலற் றொழுது கஞ்சுக னுரைப்போன்" (மணிமே.25:11).*

*[கஞ்சுகம்[2] → கஞ்சுக .]*

**கஞ்சுகன்[2]** *kañjugaṉ,* பெ.(n.) மெய்க்காப்பாளன் (யாழ்.அக.); body-guard.

*[கஞ்சுகம்[2] → கஞ்சுகன். கஞ்சுகன் = தைத்த ஆடை அணிந்தவன். மடித்துடுக்கும் ஆடையைக் குறிக்கும் கஞ்சுகம் என்னும் சொல், தைத்துடுத்த ஆடையையும் குறிப்பதாயிற்று.]*

**கஞ்சுகி[1]** *kañjugi,* பெ.(n.) 1. மெய்க்காப்பாளன் (சூடா.); the body-guard of a king, wearing a jacket. 2. பாம்பு; snake. *"உரத்த கஞ்சுகி முடிநெறு நெறுவென" (திருப்பு.6).*

*[கஞ்சுகன்[2] → கஞ்சுகி.]*

**கஞ்சுகி[2]** *kañjugi,* பெ.(n.) 1. சட்டை; jacket. 2. திரைச்சீலை; curtain.

*[கச்சு[2] → கஞ்சு → கஞ்சுகம் → கஞ்சுகி.]*

**கஞ்சுள்** *kañjuḷ,* பெ.(n.) ஈரமுள்ளது; that which has dampness.

*[அம் → கம் = நீர். கம் → கஞ்சு → கஞ்சுள்.]*

**கஞ்சுளி** *kañjuḷi,* பெ.(n.) 1. சட்டை (திவா.); jacket. 2. துறவியின் பொக்கணம் (வின்.); wallet of a religious mendicant.

*[கஞ்சுகம்[2] + உளி - கஞ்சுகவுளி → கஞ்சுளி. உளி - சொல்லாக்க ஈறு.]*

**கஞ்சுளியன்** *kañjuḷiyaṉ,* பெ.(n.) அங்காளம்மையை வணங்குபவன் (m.m.); votary of Aṅgāḷammaṉ.

*[கஞ்சுளி + அன். நெடுங்குப்பாயம் அணிந்தவன். தோள் முதல் பாதம்வரை நீளங்கி அணிந்தவனைப் பாவாடைராயன் (பாவாடை அரையன்) எனக் கூறுவதுண்டு. காளி பெண்தெய்வ மாதலின், பூசகனும் பெண் தெய்வத்திற்குரிய உடை உடுப்பது மரபாயிற்று.]*

**கஞ்சுறை** *kañjuṟai*, பெ.(n.) சிறு கைப்பறை வகை; small tambourine with bells.

மறுவ. கஞ்சிரா, கஞ்சிலி.

*[கஞ்சு + உறை - கஞ்சுறை. கஞ்ச. = வெண்கல உருள்வட்டை.]*

**கஞ்சூழ்** *kañjūḻ*, பெ.(n.) பேரீந்து (பச்.மூ.); date palm.

*[கஞ்சுள் - கஞ்சூள் - கஞ்சூழ்.]*

**கஞ்சை** *kañjai*, பெ.(n.) சாறாயம் வடிக்குமிடம் (இ.நூ.அக.); arrack distilling place.

*[கஞ்சி[1] → கஞ்சை. கஞ்சி வடிநீராதலின் செயலொப்புமை கருதி, இப் பெயர் பெற்றது.]*

**கஞல்[1](லு)-தல்** *kañal-*, 13 செ.கு.வி.(v.i.) 1. நெருங்குதல்; to be close, crowded, to be densely packed. *"புதுமலர் கஞல" (புறநா.147:8).* 2. சிறிதாதல்; to wear out, to attenuate. 3. சினத்தல் (திவா.); to become enraged. 4. செறிதல்; crowded. *"துவரப் புலர்ந்து தூமலர் கஞலித் தகரம் நாறும் தண்ணறுங் கதுப்பிற் புதுமண மகடூஉ" (அகநா.141:12-13).*

*[குள் → குய் → குஞல் → கஞல்.]*

**கஞல்[2](லு)-தல்** *kañal-*, 13 செ.கு.வி.(v.i.) 1. எழுதல் (பிங்.); to rise, ascend. 2. சிறப்புறுதல் (திவா.); to flourish, prosper. 3. மிகுதியாதல், ஊறுதல் (திவா.); to abound. 4. விளங்குதல்; to be prominent; to shine forth. *"நூல் கஞலு மார்பன்" (கம்பரா. அய்யோத்தியா.கைகேசி.99).*

*[குள் → குய் → குஞல் → கஞல் → (கஞலு).]*

**கஞற்று-தல்** *kañaṟṟu-*, 8 செ.குன்றாவி.(v.t.) 1. நிரப்புதல்; to fill, cause to be filled. *"தீர்த்தமும் ... கஞற்றினார்" (திருவானைக்.அகிலா.73).* 2. செய்தல்; to do, perform. *"பூசனை கஞற்றி" (தணிகைப்பு. அகத்.257).*

*[குள் → குய் → குஞல் → கஞல். கஞல் (த.வி.) → கஞற்று (பி.வி.).]*

**கஞறம்** *kañaṟam*, பெ.(n.) 1. கள் (சது.); toddy. 2. நொதிக்கவைத்த நீர்மம்; fermented liquor.

*[கஞறம் = கள்ளூறி வழிந்து நிரம்புதல். கனல் → கஞல் → கஞறம்.]*

**கஞன்றல்** *kañaṉṟal*, பெ.(n.) 1. எழுச்சி; rising. 2. நெருக்கம்; closeness. *"நீர்நீவிக் கஞன்றபூக் கமழுங்கால், நின்மார்பின் தார்நாற்றம் என" (கலித்.126:10-11).*

*[கஞல்[1] → கஞன்றல்.]*

**கட்கட்டி** *kaṭ-kaṭṭi*, பெ.(n.) **கண்கட்டி** பார்க்க; see *kaṇ-kaṭṭi.*

மறுவ. கண்கட்டி, கங்கட்டி.

ம. கங்கோட்டி; க. கண்ணுகுடிகெ, கண்ணுசட்டி.

*[கண் + கட்டி - கண்கட்டி → கட்கட்டி (வழூ).]*

கண்கட்டி என்பதே மரபு. கட்கட்டி எனின் வழுவாம். கண்கட்டி - உருபும் பயனும் உடன் தொக்கதொகை. மட்பாண்டம், கட்செவி என்றாற்போன்று, பிற வேற்றுமை அல்வழிப் புணர்ச்சிகளில், பொருள் சிறவாமை காண்க.

**கட்கடாசன்னல்** *kaṭkaḍā-šaṉṉal*, பெ.(n.) நான்கு பிரிவுகள் உடைய காலதர் (சன்னல்); a window with four divisions of framework.

*[கண் + கண் - கட்கண் = கண்ணுக்குள் கண், அதாவது பலகணிக்குள், பலகணிப் பிரிவுகள் எனப் பொருள்பட்டது. கண் + கண் - கட்கண் + சன்னல் → கட்கண்சன்னல் → கட்கணாசன்னல் → கட்கடாசன்னல் (கொ.வ.).]*

**கட்கண்[1]** *kaṭ-kaṇ*, பெ.(n.) ஊனக்கண்; the physical eye. *"கட்கண்ணாற் காணாத அவ்வுருவை நெஞ்சமென்னும் உட்கண்ணால் காணு முணர்ந்து" (திவ். இயற். பெரியதிருவந்.28.).*

*[கண் + கண் - கட்கண் = கண்ணாகிய கண்.]*

**கட்கண்[2]** *kaṭ-kaṇ*, வி.எ.(adv.) அங்கங்கே; at all points, throughout. *"கவைபடு நெஞ்சங் கட்கண் அகைய" (அகநா.339:8).*

*[கண் + கண் (அங்கங்கே.)]*

**கட்கண்டு** *kaṭ-kaṇḍu*, பெ.(n.) கண்ணிமையில் ஏற்படும் கட்டி; sty, small tumour in the eye.

*[கண் + கண்டு - கட்கண்டு. கண்டு = கட்டி.]*

**கட்கம்**[1] *katkam,* பெ.(n.) 1. வாள் (திவா.); sword. 2. கல்யானையின் (காண்டாமிருகம்) கொம்பு; horn of rhinoceros. *"கட்க நுனித்த கடைக்கட் டிண்ணுகம்" (பெருங்.உஞ்சைக்.38:338).*

*[கள் + கு → கட்கு + அம். கட்கு = திரட்சி, திரண்டுருண்டது.]*


கட்கம்

**கட்கம்**[2] *katkam,* பெ.(n.) கக்கம்[1] பார்க்க; see *kakkam*[1]. *"கதிர்மணி கட்கத்துத் தெறிப்ப" (பெருங்.உஞ்சைக்.38:333).*

*[த. கக்கம் > வ. கட்கம் (மறைவான இடம்).]*

**கட்காஞ்சி** *kat-kāñji,* பெ.(n.) அரசன் வீரர்க்குக் குடிக்க மதுவளிக்கும் புறத்துறை (பு.வெ.4:21.); a puram theme of a king's entertaining his troops with toddy before leading them to a campaign.

*[கள் + காஞ்சி - கட்காஞ்சி. காஞ்சி = நிலையாமையைக் குறித்த புறத்துறை.]*

**கட்கிலி** *katkili,* பெ.(n.) கண்ணுக்குப் புலப்படாதவன்; one who is invisible; God as the unseen providence. *"கட்கிலீ யுன்னைக் காணுமா றருளாய்" (திவ். திருவாய்.7.2:3).*

*[கண் + கு → கட்கு + இலி. இலி = இல்லாதவன், புலனாகாதவன்.]*

**கட்குடியர்** *kat-kudiyar,* பெ.(n.) கள்முதலிய மது அருந்துவோர்; those who drink toddy; drunkards.

*[கள் + குடியர்.]*

**கட்குத்திக்கள்வன்** *kat-kutti-k-kalvan,* பெ.(n.) விழித்திருக்கும் போதே ஏமாற்றுபவன்; very skilful deceiver; one who is able to hoodwink, or throw dust into the eyes of even a wide-awake person. *"ஏறுபோல் வைகற் பதின்மரைக் காமுற்றுச் செல்வாயோர் கட்குத்திக் கள்வனை நீயெவன் செய்தி" (கலித்.108:48-50).*

*[கண் + குத்தி + கள்வன். விழித்திருக்கும் போதே கண்குத்த வருபவனைப் போல், அஞ்சாது தீமை செய்யும் திறஞ்சான்ற கொடியவனை, இது குறித்துநின்றது.]*

**கட்கு-தல்** *katku-,* 5 செ.குன்றாவி.(v.t.) களைதல்; weed out. *"சிறுமா ணெய்த லாம்பலொடு கட்கும் மலங்குமிளிர் செறு" (புறநா.61:2).*

*[கள் + கு - கட்கு (களையத்தக்கது).]*

**கட்குரு** *katkuru,* பெ.(n.) கண்ணில் தோன்றும் பரு; sty (சேரநா).

ம. கங்குரு

*[கண் + குரு. குரு = கட்டி.]*

**கட்குவளை** *kat-kuvalai,* பெ.(n.) கண்ணின் குழி; the bony cavity in which the eye is situated.

*[கண் + குவளை.]*

**கட்குறுவை** *katkuruvai,* பெ.(n.) தஞ்சை, நெல்லை மாவட்டங்களில் பயிராவதும், இரண்டு அல்லது மூன்று மாதங்களில் விளைவதுமான கல்லுக்குறுவை நெல்; a short-crop paddy of 2 or 3 months yielding a hard round rice, common in Thanjavur and Tirunelveli districts (சா.அக.).

*[கண் + குறுவை - கண்குறுவை → கட்குறுவை. கண் = திரண்ட, பருமனான நெல்.]*

**கட்கேள்வி** *katkēlvi,* பெ.(n.) பாம்பு; snake. *"கட்கேள்விக் கவைநாவின்" (புறநா.382:12).*

மறுவ. கட்செவி.

*[கண் + கேள்வி - கட்கேள்வி. கண்ணால் கேட்பது, செவிஇல்லாதது.]*

**கட்சி**[1] *katci,* பெ.(n.) 1. மரமடர்ந்த காடு; forest, jungle. *"மணிவரைக் கட்சி மடமயில் ஆலும் நம் மலர்ந்த வள்ளியங் கானக்கிழ வோனே" (ஐங்குறு.250).* 2. புகலிடம்; refuge. *"வெட்சிக் கானத்து வேட்டுவ ராட்டக் கட்சி காணாக் கடமா நல்லேறு" (புறநா.202:1).* 3. மக்கள் துயிலிடம் (திவா.); sleeping place. 4. பறவைக்கூடு (பிங்.); bird's nest.

"புள்ளுடன் கமழ்பூம் பொதும்பர்க் கட்சி" (நற்.117:3-4).

[கள் → களம் = பலர் கூடுமிடம். கள் → (கள்சி) → கட்சி. கள் = செறிதல், திரளுதல், கூடுதல், ஒன்றுசேர்தல். த. கட்சி > Skt. kakṣa.]

**கட்சி²** *kaṭci,* பெ.(n.) 1. பலர் சேர்ந்து நிற்கும் பிரிவு, பகுதி; faction, party. அவன் ஒரு கட்சியிலும் சேராதவன் (உ.வ.). 2. பலர் தாமாக ஒன்றுகூடி அமைத்துக்கொண்ட தனிக்குழு; group organised by voluntary participation. திருவிழா தொடர்பாக இவ்வூர் இரண்டு கட்சியாக நிற்கிறது (உ.வ.). 3. குடியாட்சி முறையில் பங்கேற்கும் அரசியல் குழு; political party. பாராளுமன்றத்தில் பெரும்பான்மை உறுப்பினர்களைக் கொண்ட கட்சியே அரசு அமைக்கும் (உ.வ.). 4. குறிப்பிட்ட கொள்கையைச் சார்ந்தவர்களின் குழு; people of same principle. பகுத்தறிவு அடிப்படையில் பிறந்த கட்சி திராவிடர் கழகம் (உ.வ.). 5. சேர்க்கை; union. "எற்படு பொழுதி னினந்தலை மயங்கிக் கட்சி காணாக் கடமா நல்லேறு" (புறநா.157:9-10). 6. போர்க்களம்; battlefield. 'கட்சியும் கரந்தையும் பாழ்பட' (சிலப்.12,உரைப்.23).

ம. கக்ழி; படை. கச்சி; Skt. kakṣya.

[கள் → கள்சி → கட்சி (சேருமிடம், ஒரு பிரிவு).]

**கட்சி³** *kaṭci,* பெ.(n.) 1. உடம்பு; body. 2. பங்கு; share. 3. வழி; way (யாழ்.அக.).

[கள் → (கள்சி) → கட்சி = ஒன்றுகூடியது, உடம்பு, ஒருமித்த பங்கு, ஓரிடத்தில் கூடும் வழி.]

**கட்சிக்காரன்** *kaṭci-k-kāraṉ,* பெ.(n.) 1. ஏதேனும் ஓர் அரசியல் கட்சியைச் சார்ந்தவன்; member of a political party. 2. வழக்காளி; a party in a suit. கட்சிக்காரன் தன் வழக்குரைஞரிடம் எதையும் மறைக்கக் கூடாது (உ.வ.). 3. வழக்காளன் அல்லது எதிராளி; plaintiff or defendant in a case.

படை. கச்சிக்காரு; Skt. kakṣin.

[கட்சி + காரன். காரன் - சொல்லாக்க ஈறு.]

**கட்சிகட்டு-தல்** *kaṭci-kaṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. ஒன்றன்பொருட்டு முரணி நிற்றல்; to oppose for a reason. அவரைத் தலைவராக்கக் கூடாதென்று இவர் கட்சிகட்டினார் (உ.வ.). 2. ஒரு தரப்பை ஆதரித்தல்; குறிப்பிட்ட தரப்புக்கு எதிரான நிலை எடுத்தல்; to support a team, take sides. அவன் யாருக்கு எதிராகக் கட்சிகட்டுகிறான் என்றே தெரியவில்லை (உ.வ.).

[கட்சி + கட்டு-.]

**கட்சிகை** *kaṭcigai,* பெ.(n.) காட்டுச்சீயக்காய்; soap-pod (சா.அக.).

[காடு + சிகை(க்காய்) - காட்டுச்சிகை → கட்சிகை (கொ.வ.)].

**கட்சிதாவு-தல்** *kaṭci-tāvu-,* 5 செ.குன்றாவி.(v.t.) ஓர் அணியிலிருந்து வேறோர் அணிக்கு மாறுதல்; to switch over from one party to another. பதவிக்காகக் கட்சிதாவக்கூடாது (உ.வ.).

[கட்சி + தாவு].

**கட்சிமா** *kaṭcimā,* பெ.(n) நிலவேம்பு; ground neem (சா.அக.).

[கட்சி = காடு. கட்சி + மா].

**கட்சிமாறி** *kaṭci-māṟi,* பெ.(n.) நிலைமாறுபவன்; fickle-minded person, unstable, unreliable man, turn-coat.

[கட்சி² + மாறி.]

**கட்சியாடு-தல்** *kaṭci-y-āḍu-,* 5 செ.குன்றாவி.(v.t.) அணிசேர்த்துக்கொண்டு வழக்காடுதல்; argue in a partisan manner. எதற்கெடுத்தாலும் கட்சியாடுவதே இவன் பிழைப்பாய்ப் போயிற்று (உ.வ.).

[கட்சி + ஆடு-.]

**கட்சியார்** *kaṭciyār,* பெ.(n.) 1. வழக்குடை ஒரு பிரிவினர்; members of a faction. 2. அரசியல் கட்சி ஒன்றினைச் சேர்ந்தவர், கட்சிக்காரர்; members of a political party.

[கட்சி + ஆர் (ப.பா.ஈறு).]

**கட்சுரா** *kaṭ-curā,* பெ.(n.) பூனைக் காஞ்சொறி; common cowitch plant.

[கள்(முள்) + சுரா.]

**கட்சுறா** *kaṭ-šuṟā,* பெ.(n.) முதுகில் சிறு கல்லுடன் கூடிய சுறாவகை; a species of shark spotted or studded with small stones on its back.

மறுவ. கட்ட சுறா

*[கல் + சுறா - கற்சுறா → கட்சுறா.]*



கட் சுறா

**கட்செவி¹** *kaṭ-cevi,* பெ.(n.) கண்ணையே செவியாகப் பயன்படுத்தும் பாம்பு; snake, its eyes, in folk belief, serving as the sensory organ of sight as well as of hearing. *"மலைமுழையிற் கட்செவி" (கம்பரா. யுத்த. படைத்தலை.42).*

*[கண் + செவி.]*

**கட்செவி²** *kaṭ-cevi,* ஒன்பதாவது உடுவான கவ்வை விண்மீன் *(ஆயிலியம்.);* the ninth nakṣatra. *"மங்கட்செவி யொண்பூரம்" (இலக்.வி.793).*

*[கண் + செவி - கட்செவி. பாம்பின்தோற்றம் போன்ற விண்மீன்.]*

**கட்டக்கசப்பு** *kaṭṭa-k-kašappu,* பெ.(n.) கடுங்கசப்பு (இ.வ.); extreme bitterness of taste.

*[கடு → கட்ட + கசப்பு.]*

**கட்டக்கல்** *kaṭṭakkal,* பெ.(n.) மீன்வலையிற் கட்டப்படும் பெருங்கல் (மீனவ.); stone used to be tied.

*[கட்டை + கல் - கட்டைக்கல் → கட்டக்கல்.]*

**கட்டக்கால்** *kaṭṭa-k-kāl,* பெ.(n.) ***கட்டைக்கால்²*** பார்க்க; see *kaṭṭai-k-kāl.*

**கட்டக்கீச்சான்** *kaṭṭa-k-kīccāṉ,* பெ.(n.) பத்துவிரலம் நீளம்வரை வளர்வதும் வெள்ளிநிற முடையதுமான கடல்மீன் வகை; a sea fish, silvery with lateral bands, attaining at least 10 inches in length.

*[கடு → கட்டம் + கீச்சான் - கட்டக்கீச்சான் = உடம்பில் கட்டுக்கட்டாக வரி உள்ள கடல்மீன்.]*

**கட்டக்குடி** *kaṭṭa-k-kuḍi,* பெ.(n.) வறுமையில் வாடும் குடும்பம் (ஈடு, 2.2:3); poverty stricken family.

*[கடு → கட்டம் (துன்பம்) + குடி.]*

**கட்டக்கோல்** *kaṭṭa-k-kōl,* பெ.(n.) ***கட்டிக்கோல்*** பார்க்க; see *kaṭṭi-k-kōl.*

ம. கட்டக்கோல்

*[கட்டிக்கோல் → கட்டக்கோல்.]*

**கட்டகம்** *kaṭṭagam,* பெ.(n.) 1. சித்திரவேலைப்பாடு; artistic design. *"பத்தி பயின்ற கட்டகக் கம்மத்து" (பெருங்.உஞ்சைக்.38:146).* 2. காந்தக்கல்; magnet. *"நலமலி கட்டகம்" (ஞானா.55:13).* 3. மரம் அல்லது இரும்புக்கோப்புத் திரள், கட்டுமானம்; structure.

*[கள் → கட்டு → கட்டகம் (வே.க.136). கள் = திரளல், ஒன்றுசேர்தல் ஒ.நோ: பெட்டி = பெட்டகம்.]*

**கட்டகன்** *kaṭṭagaṉ,* பெ.(n.) 1. வெட்டுபவன், கொல்பவன்; one who cuts or kills. 2. புலால் விற்பவன்; butcher.

க. கடக

*[கள் → கடி → கட்ட → கட்டகன்.]*

**கட்டகு** *kaṭṭagu,* பெ.(n.) ஒருவகை வெள்ளை அல்லது சிவப்பு மண், / களிமண்; a sort of white or reddish earth or clay.

க. கடக; Skt. khatika.

*[கட்டகம் → கட்டகு (வடிவமைக்கத் தக்கது).]*

**கட்டங்கட்டு-தல்** *kaṭṭaṅ-kaṭṭu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. செய்தியின் முதன்மை கருதி அதனை நான்கு பக்கமும் கோடுகள் இட்டு வெளியிடுதல்; to publish news within a box as of box news. இந்தச் செய்தி கட்டங் கட்டி வெளியிடப்படும் (உ.வ.). 2. ஓர் அரசியல் கட்சியில்

விரைவில் விலக்கப்பட விருக்கும் ஒருவரைக் குறித்தல்; one who is likely to be expelled soon from a political party. தலைவர் அவரைக் கட்டங் கட்டிவிட்டார் (உ.வ.).

*[கட்டம் + கட்டு-.]*

**கட்டங்கம்**[1] *kaṭṭaṅgam*, பெ.(n.) 1. சிவனுடைய மழுப்படை; battle-axe of Šivā. *"சுத்திய பொக்கணத் தென்பணி கட்டங்கஞ்சூழ்" (திருக்கோ.242). 2.* கடும் போர்; a severe battle.

மறுவ. கட்டங்கு (யாழ்ப்.)

க. கட்டங்க

*[கடு → கட்டு + அங்கம் - கட்டங்கம் = வெட்டுவாள், மழுப்படை, போர்வாளால் செய்யும் போர்.]*

**கட்டங்கம்**[2] *kaṭṭaṅgam*, பெ.(n.) காளையின் கழுத்தில் கட்டப்படுங் கயிறு; string tied on the neck of oxen.

ம. கட்டங்ஙம்

*[கட்டு + அக்கம் - கட்டக்கம் → கட்டங்கம். அக்கம் = கயிறு.]*

**கட்டங்கன்** *kaṭṭaṅgaṉ*, பெ.(n.) மழுப்படை கொண்டவன் (சிவன்); Šivā who carries a battle-axe. *"காபாலி கட்டங்கன்" (தேவா.769:5).*

*[கட்டங்கம்[1] → கட்டங்கன்.]*

**கட்டசீவி** *kaṭṭa-šīvi*, பெ.(n.) 1. ஆயக்காரன்; toll keeper. 2. துறை காவற்காரன்; guard of dock.

*[கட்டம் + (சேவி)சீவி. கட்டம் = நீர்த்துறை. சேவி = பணியாள்.]*

**கட்டசுறா** *kaṭṭa-šuṟa*, பெ.(n.) *கட்சுறா* பார்க்க; see *kaṭ-šuṟa*.

*[கட்சுறா → கட்டசுறா.]*

**கட்டட ஒலிக்கட்டு** *kaṭṭaḍa-oli-k-kaṭṭu*, பெ.(n.) கட்டடத்தின் சுவரில் எப்பகுதியில் தட்டினாலும் அவ் வோசை எல்லாச் சுவர்களிலும் எதிரொலிக்கும் கட்டட அமைப்பு வகை; a special technic in building construction, in which even a slight knock at the wall will echo in all the walls simultaneously.

*[கட்டடம் + ஒலி + கட்டு.]*

ஒலிக்கட்டு = ஒலிக்கட்டமைதி. தகடூர் அதியமான் அரண்மனை கட்டட ஒலிக்கட்டுடன் கட்டப்பட்டிருந்ததாகவும், இந் நுட்பம் அறிந்த பகைவர் அதன் வீழ்ச்சிக்கு ஏற்ற சூழ்ச்சி செய்தனர் எனவும், நாட்டுப்புறக்கதை கூறுகிறது.

**கட்டடக்கலை** *kaṭṭaḍa-k-kalai*, பெ.(n.) கட்டட வடிவமைப்பு இலக்கணம்; building architecture.

*[கட்டடம் + கலை.]*

**கட்டடக்கலைஞர்** *kaṭṭaḍa-k-kalaiñar*, பெ.(n.) 1. கட்டடக்கலை வல்லுநர்; an architect and designer of a building. 2. சிற்பி; the sculptor. *கல்லில் கலைநயம் காண்பதில் இடைக்காலக் கட்டடக் கலைஞர் சிறந்து விளங்கினர்* (உ.வ.).

*[கட்டடம் + கலை + ஞ் + அர் - கட்டடக் கலைஞர், ஞ்- பெயரிடைநிலை. 'அர்' - ப.பா.ஈறு.]*

**கட்டடங்க** *kaṭṭaḍaṅga*, வி.எ.(adv.) முழுதும்; wholly, entirely. *'கட்டடங்க இவனையே சொல்லுகையாலே' (ஈடு.3,4:6).*

*[கட்டு + அடங்கு - கட்டடங்கு → கட்டடங்க = முழுதும்.]*

**கட்டடத்தைச்சதுரி-த்தல்** *kaṭṭaḍattai-chaduri-*, 4 செ.கு.வி.(v.i.) 1. வீடமைக்கும் போது நான்கு மூலைகளும், மூலைமட்டத்திற்குச் சரியாக உள்ளவாறு அமைத்தல்; to check whether the corners of all walls correspond to set square. 2. வரைபடத்திலுள்ளதைத் தரையில் குறித்தல்; to transfer the layout to ground.

*[கட்டடம் + ஐ + சதுரி. சட்டம் → சடம் → சடல் → சதர் → சதுர் → சதுரி.]*

**கட்டடம்** *kaṭṭaḍam*, பெ.(n.) 1. வீடு முதலிய கட்டடம்; building. 2. மண் அல்லது கற்களால் செய்யும் பணி; any earth or stone work. 3. புத்தகக் கட்டடம்; binding of a book. இந்த அச்சுப்புத்தகத்தின் கட்டடம் அழகாயிருக்கிறது(உ.வ.). 4. பொன்னின் உம்மிசத்திற் கற்பதித்துச் செய்யும் வேலைப்பாடு; setting of a jewel, encasement. 5. அமைப்பு; structure.

ம. கெட்டு, கெட்டக; க. கட்டண, கட்டணெ; பட. கட்டட; தெ. கட்டட; து. கட்டண, கட்டல்மெ.

*[கட்டு → கட்டடம் (வேக.136). கட்டடம் - தொழிற்பெயர்; கட்டிடம் - இடப்பெயர். கட்டடம், கட்டிடம் இவற்றுக்கிடையே, பொருள் ஒற்றுமை இருப்பது போலத் தோன்றினாலும், இரண்டும் வெவ்வேறு பொருள் அடிப்படையில் தோன்றியனவாகும்.]*

**கட்டடமேளக்கட்டு** *kaṭṭaḍa-mēḷa-k-kaṭṭu*, பெ.(n.) கட்டட அமைப்புவகையுள் ஒன்று; one of the building plan varieties.

[கட்டடம் + மேளம் + கட்டு.]

இவ்வகைக் கட்டடத்தில் இசைநிகழ்ச்சிகள் நடை பெற்றால், அதன் ஒலி கட்டடத்தின் எல்லாப் பக்கமும் பரவி எதிரொலியில்லாமல், மன்றம் முழுமையும் ஒருசீராகக் கேட்கும் தன்மையது. கட்டடத்தின் சுவரமைப்பு ஒலியை உள்வாங்கிக் கொள்ளும் என்பதாம்.

**கட்டடவி** *kaṭṭaḍavi*, பெ.(n.) அடர்ந்த காடு; a thick, impervious jungle.

க. கட்டடவி

[கட்டு[12] + அடவி. அடவி = காடு.]

**கட்டடி[1]-த்தல்** *kaṭṭaḍi-*, 4 செ.குன்றா.வி.(v.t.) அரிந்த நெற்கதிர்களை அடித்தல்; to thresh or beat out the grain from the sheaves of paddy.

[கட்டு + அடி. கட்டு = நெற்கட்டு.]

**கட்டடி[2]** *kaṭṭaḍi*, பெ.(n.) 1. கட்டடத்தின் அடிப்பரப்பு; plinth area. 2. கட்டட அடிமட்டம்; plinth level.

[கட்டு[10] + அடி.]

**கட்டணகம்** *kaṭṭaṇagam*, பெ.(n.) *கட்டணங்கம்* பார்க்க; see *kaṭṭaṇaṅgam*.

க. கட்டணக

[கட்டு[11] + அணகம். அணங்கம் → அணகம். அணங்கம் = இலக்கணம்.]

**கட்டணங்கம்** *kaṭṭaṇaṅgam*, பெ.(n.) 1. உடற்கூற்றுக்குரிய இலக்கணங்களோடு அமைந்த உடல்; a well built body. 2. மிக்க வலிமை; great strength.

[கட்டு[10] + அணங்கம்.]

**கட்டணம்[1]** *kaṭṭaṇam*, பெ.(n.) கட்டடம்; building. *பிறர் புகுதற்கரிய மாளிகைக் கட்டணம் என்றவாறு (பதிற்றுப்.64:7, உரை).*

ம. கெட்டு, கெட்டக; து. கட்டண, கட்டல்மெ.

[கட்டு[10] = கல்லடுக்கிக் கட்டுகை. கட்டு + அணம். அணம் - சொ.ஆ.ஈறு. ஒ.நோ. பொட்டணம்.]

**கட்டணம்[2]** *kaṭṭaṇam*, பெ.(n.) 1. தோளில் சுமந்துசெல்லும் ஏணை, தோளி; doolie, litter. *"ஆழ்வானை ஒரு கட்டணத்திலே எழுந்தருள் வித்துக் கொண்டு"* (குருபரம்.385.பன்னி.). 2. பாடை; bier, coffin. *"இட்டபொறி தப்பிப் பிணங்கொண்டதின் சிலர்கள் கட்டணமெடுத்துச் சுமந்தும்" (திருப்பு.58).* 3. கட்டில்; cot.

ம. கட்டணம்; க. கட்டண, கட்டோண, கட்டணெ.

[கட்டு[10] + அணம்.]

**கட்டணம்[3]** *kaṭṭaṇam*, பெ.(n.) நுகர்வு, நுழைவு, உழைப்பு ஆகியவற்றிற்கான செலுத்தும்தொகை; fare, charges, fee, dues. மின்கட்டணம், திரைப்படக்கட்டணம், தேர்வுக் கட்டணம்.

[கட்டு[5] + அணம். கட்டு = செலுத்து.]

**கட்டணியர்** *kaṭṭaṇiyar*, பெ.(n.) மிக அழகான பெண்கள்; very beautiful women (கருநா.).

க. கட்டணியர்

[கட்டு + அணி + அர். கடு → கட்டு = மிகுதி. அணி = அழகு. அர் - பலர்பாலீறு.]

**கட்டத்தாரி** *kaṭṭa-t-tāri*, பெ.(n.) வெள்ளைப் பூண்டு; garlic.

[கடு → கட்ட + (தாரம்) தாரி. கடுத்தல் = உறைத்தல்.]

**கட்டதரம்** *kaṭṭa-daram*, பெ.(n.) மிகக்கொடியது; that which is very agonising, hard to bear. *"கட்டதரங் கட்டதரம்" (சிவதரு. சுவர்க்கநரக.174).*

[கடு → கட்டம் + தரம். கடு = கடுமை, கொடுமை.]

**கட்டப்பாரை** *kaṭṭa-p-pārai* பெ.(n.) சேவற்கோழியின் பின்னங்காலில் முள்போல் இருக்கும் விரல்;the spur on the heel of a cock.

[கள்(முள்) → கடு → கட்டம் + பாரை - கட்டப்பாரை]

**கட்டப்பொருள்** *kaṭṭa-p-poruḷ*, பெ.(n.) பயனற்ற செய்தி; useless matter, far-fetched and hence unacceptable sense. *"கட்டப் பொருளை மறைப்பொருளென்று" (திவ்.இராமானுச.93).*

[கட்டை → கட்ட + பொருள். கட்டை = குட்டை, குறைவானது பயனற்றது.]

**கட்டம்[1]** *kaṭṭam*, பெ.(n.) 1. நான்கு பக்கங்களும் சமமாகவும் நான்கு மூலைகளிலும் செங்கோணமாகவும் உள்ள வடிவ கணிதத்தின் ஓர் உருவம்; a geometrical figure having four equal sides and four right angles. 2. தள ஒடு, சதுரங்கம், தாயக்கட்டம், கைக்குட்டை போன்று ஏறத்தாழச் சரியாகவுள்ள சதுரவடிவப் பொருள்கள், இடம், வடிவம் போன்றன; an object, piece, space, figure

of approximately that shape, eg. paving stone, space on chess board, a kerchief. 3. கவறாட்டத்தில் வரைந்துள்ள அறைகள் (பெருங். மகத.14:56); square, chequered space as in a chess-board. 4. ஓர் எல்லைக்கு உட்பட்ட வடிவம்; a form that has its own limit.

ம. கட்டம்

*[கள் → கடு → கட்டு → கட்டம். கள் = திரளல், நாற்புறமும் வந்து மொய்த்தல், சதுரமாதல், சதுரம்.]*

**கட்டம்**[2] *kaṭṭam,* பெ.(n.) 1. நிகழ்வின் ஒரு குறிப்பிட்ட நிலை; a stage, phase of a programme. *நிகழ்வின் ஒவ்வொரு கட்டத்திலும் மீளாய்வு செய்தல் வேண்டும்* (உ.வ.). 2. குறிப்பிட்ட நேரம். particular time. *அந்த நாடகத்தின் உச்ச கட்டம் மிக விறுவிறுப்பாக இருந்தது* (உ.வ.). 3. கதை நிகழ்நிலை; particular stage in the narration or recital of a story. இந்த நாடகத்தில் வள்ளித்திருமணக் கட்டம் சிறப்பாக இருக்கும் (உ.வ.).

*[கள் → கட்டு + அம் - கட்டம்.]*

**கட்டம்**[3] *kaṭṭam,* பெ.(n.) 1. கடுமை, வருத்தம்; hardship, difficulty, body pain. *"கட்டமே காதல்"* (*திவ்.திருவாய்.7.2:4*). 2. பீழை (பீடை); affliction, misfortune. *"கட்டங் கழிக்குங் கலைசையே"* (*கலைசைச்.31*). 3. மலம்; excrement; dung. *"நாய்க்கட்ட மெடுத்தும்"* (பதினோ. *திருவிடை.28*).

க., பட. கட்ட; Nep. Kaṣṭa

*[கள் → கடு → கட்டம். கள் = நெருக்கம், துன்பம், வெறுப்பு, இழிவு, இழப்பு. கடு → கடுமை = வன்மை, வருத்தம், செயற்கருமை. கடு → கட்டம். ஒ.நோ. அடு → அட்டம், கொடு → கொட்டம், அறு → அற்றம், செறு → செற்றம். த. கட்டம் > Skt. kaṣṭa.]*

கட்டம் என்பதற்கு வடமொழியில் வேர் மூலமில்லை (வ.மொ.வ.273). கஷ் என்பதன் இறந்தகால வினையெச்சமாயிருக்கலா மென்றும் மா.வி.அ. கூறும். கஷ்- (தேய், சுறண்டு, சேதப்படுத்து, கொல், அழி) சொன்மூலங்களுக்கும், வடமொழி வேர்மூலம் இல்லை. வேட்டியை வேஷ்டி எனத் திரித்துக்கொண்டது போலக் கட்டம் என்னும் தூய தென்சொல்லைக் கஷ்டம் என வடமொழியாளர் திரித்துக்கொண்டனர்.

**கட்டம்**[4] *kaṭṭam,* பெ.(n.) காடு (திவா.); forest, jungle.

*[கள் → கடு → கட்டம் = துன்பம் தரும் இடம்.]*

**கட்டம்**[5] *kaṭṭam,* பெ.(n.) 1. நீராடுதுறை; bathing ghat or landing stairs for bathers on the sides of a river or tank. 2. துறைமுகம் (யாழ்ப்.); harbour.

*[கள் → கட்டு → கட்டம் = நான்கு பக்க எல்லையைக் கொண்ட வரைவு; ஒழுங்கான படிக்கட்டுப்பகுதி, நீர்த்துறை, கட்டப்பட்ட வரப்பு அல்லது படிகள், இறங்குதுறைப் படிகள்.]*

**கட்டம்**[6] *kaṭṭam,* பெ.(n.) 1. திண்மை, வன்மை; strength, 2.மோவாய்க்கட்டை (பிங்.); chin.

மவ. தாடை.

க., பட. கட்ட; தெ. கட்டமு.

*[கள் → கட்டு → கட்டம் = சதுரம், ஒழுங்கு, ஒழுங்கான மோவாய்.]*

**கட்டம்**[7] *kaṭṭam,* பெ.(n.) தாடி; beard about the chin.

தெ. கட்டமு; கொலா. நா. கட்டம்; பர். கட்டொம்; கோண். கட்டொ, கட்டொகா; கொண். காடம்கு; து. கட்ட.

*[கள் → கட்டு → கட்டம் = மோவாய்க்கட்டை, மோவாய்க்கட்டையில் வளரும் மயிர்.]*

**கட்டம்**[8] *kaṭṭam,* பெ.(n.) ஏலரிசி; cardamom seed.

[கடு - கட்டம்]

**கட்டம்பலம்** *kaṭṭam-balam,* பெ.(n.) வரி தண்டும் பணியிடம்; office of collecting revenue in a zamindary.

*[கட்டு[5] + அம்பலம். வரி கட்டும் பொதுவிடம். கட்டு = செலுத்துதல். அம்பலம் = வளாகம்.]*

**கட்டமுது** *kaṭṭamudu,* பெ.(n.) கட்டுச்சோறு (பதார்த்த. 1410); boiled rice bundled up as provision for a journey.

மறுவ. கட்டுச்சோறு.

*[கட்டு[1] + அமுது.]*

**கட்டமை** *kaṭṭamai,* பெ.(n.) கட்டுப்பாடு; social rules,strict rules. "கட்டமை ஒழுக்கத்து" (தொல்.பொருள்.புறத்.21).

*[கட்டு[11] → கட்டமை.]*

**கட்டமைப்பாளர்** *kaṭṭamaippāḷar,* பெ.(n.) கட்டட அமைப்பை வரையறை செய்பவர்; architect.

*[கட்டமைப்பு + ஆளர்.]*

**கட்டமைப்பு** *kaṭṭamaippu,* பெ.(n.) 1. அமைப்புமுறை; structure, construction. *இதன் கட்டமைப்பு நன்றாக உள்ளது* (உ.வ.). 2. பொத்தகம் கட்டடம் செய்யும்முறை; book binding. *இந்தப் பொத்தகத்தின் கட்டமைப்புச் சரியில்லை* (உ.வ.).

*[கட்டு[10] + அமைப்பு.]*

**கட்டர்** *kaṭṭar,* பெ.(n.) இன்னலுறுவோர்; unfortunate people, people destined to suffer. *"கட்டராய் நின்று நீங்கள் காலத்தைக் கழிக்க வேண்டா"* (தேவா.389:2).

*[கடு → கட்டம் → கட்டர். கட்டம் = துன்பம், இன்னல்.]*

**கட்டரிதாரம்** *kaṭṭaridāram,* பெ.(n.) கட்டியான அரிதாரம் (வின்.); orpiment or arsenic crystal.

*[கள் → கட்டு + அரிதாரம். கட்டு = திரண்டது. அரி = மஞ்சள். தாரம் = சரக்கு.]*

**கட்டல்[1]** *kaṭṭal,* பெ.(n.) 1. திருடுதல்; theft robbery,plundering. *"கட்போ ருளரெனின்"* (சிலப்.5:115). 2. பறித்தல்; plucking off, pulling out. 3. களைபறித்தல் (குறள்,1039,உரை); weeding.

*[கள் + தல் - கட்டல். (வே.க.129.) கள் = களைதல், நீக்குதல், விலக்குதல், பிடுங்குதல் அல் - (தொ.பெ.ஈறு.)]*

**கட்டல்[2]** *kaṭṭal,* பெ.(n.) ஒகநிலை; yoga. *"கைநிமிர்த்தல் கானிமிர்த்தல் கட்டல்"* (குத்துவர்.108).

*[கள் → கட்டு = பிணைத்தல், இணைத்தல். கட்டு + அல் (தொ.பெ.ஈறு) - கட்டல் = ஒருமுகப்படுத்துதல்.]*

**கட்டல்[3]** *kaṭṭal,* பெ.(n.) 1. கட்டுண்ட நிலை; the state of being bound. 2. அகப்பட்ட நிலை; the state of being tied or surrounded.

க. கட்டல், கட்டலு.

*[கட்டு + அல்.]*

**கட்டவிழ்-தல்** *kaṭṭaviḻ-,* 2 செ.கு.வி.(v.i) 1. முடிச்சு அவிழ்தல்; to loosen the knot. 2. முறுக்கு நெகிழ்தல்; to loosen as the petals of a flower. *"கட்டவிழ் கண்ணி வேய்ந்து"* (திருவிளை. உக்கிர.வேல்வளை.42). 3. ஒற்றுமை நீக்குதல்; become disunited.

பட. கட்டகி

*[கட்டு[10] + அவிழ்.]*

**கட்டவிழ்த்துவிடு-தல்** *kaṭṭaviḻttu-viḍu-,* 18 செ.குன்றாவி.(v.t.) கட்டுப்பாட்டைத் தளர்த்திவிடுதல்; to loose the control. ஊர்வலத்தில் ஒழுங்கின்மையைக் கட்டவிழ்த்து விட்டதால் வன்முறை நிகழ்ந்தது (உ.வ.).

*[கட்டு[11] + அவிழ்த்து + விடு-]*

**கட்டழகன்** *kaṭṭaḻagaṉ,* பெ.(n.) 1. உடற்பயிற்சி செய்து உடலைக் கட்டாக வைத்திருப்பவன்; எடுப்பான தோற்றமுடையவன்; one who has a well built physique. 2. அழகிய ஆண்மகன்; handsome man. *அவன் நல்ல கட்டழகன்* (உ.வ.).

*[கட்டு[10] + அழகன்.]*

**கட்டழகி** *kaṭṭaḻagi,* பெ.(n.) பேரழகுள்ளவள்; very beautiful woman. *"காணத் தெவிட்டாத கட்டழகி"* (பணவிடு.355).

*[கடு → கட்டு + அழகி. கடு = மிகுதி.]*

**கட்டழகு** *kaṭṭaḻagu,* பெ.(n.) பேரழகு. (கந்தபு.வள்ளி.182); great beauty.

மறுவ. ஏர், வனப்பு, எழில், யாணர், மாமை, கேழ், தோட்டி, கவின், ஒப்பு, மஞ்சு, பொற்பு, அணி, சொக்கு, அயில், தகை, தொட்டிமை, மணி, பொலம், செவ்வி, வனப்பு.

*[கடு (மிகுதி) → கட்டு + அழகு.]*

**கட்டழல்** *kaṭṭaḻal,* பெ.(n.) பெருநெருப்பு; raging fire. *"கட்டழ லீமத்து"* (மணிமே.21:12).

*[கடு → கட்டு + அழல். கடு = மிகுதி.]*

**கட்டழி[1]-தல்** *kaṭṭaḻi-,* 4 செ.கு.வி.(v.i.) கட்டுக்குலைதல்; to lose vigour; to become shattered, as in health. *"சரீரங் கட்டழிந்து"* (ஈடு.6.1:4).

*[கட்டு[10] + அழி-]*

**கட்டழி[2]-த்தல்** *kaṭṭaḻi-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. நிலைகெடுத்தல்; to ruin, degrade; to cause humiliation. *"இலங்கை கட்டழித்தவன்"* (திவ்.திருச்சந்.54). 2. காவலைச் சிதைத்தல்; to deprive of protection. *"கடிமதிலுங் கட்டழித்த"* (சீவக.1245). 3. கற்பைக் குலைத்தல்; to seduce.

*[கட்டு[11] + அழி-]*

**கட்டளவு** *kaṭṭaḷavu,* பெ.(n.) கட்டியளக்கும் அளவு; measurement by heaping up, dist. fr. level measuring.

*[கட்டு[1] + அளவு.]*

**கட்டளை**[1] *kaṭṭaḷai,* பெ.(n.) 1. அளவு (பிங்.); standard of measurement. *"கடவரவ் வருடக் கட்டளைக் கிறுதி" (திருவிளை. இந்திரன்முடி.23).* 2. உருவங்கள் வார்க்கும்கருவி (வின்.); matrix in which any thing is cast; mould. தெரிவைமாருக்கோர் கட்டளை யெனச் செய்த திருவே (வின்.). 3. செங்கல்லச்சு; mould for making bricks. *"கட்டளை கோடித் திரியிற் கருதிய இட்டிகையுங் கோடும்" (அறநெறி. 37).* 4. ஒன்றைப்போல் அமைக்கப்பட்ட உருவம்; portrait, image, statue. *"தீட்டிரும் பலகையிற் றிருத்தித் தேவர் காட்டி வைத்ததோர் கட்டளை போல" (பெருங். உஞ்சைக். 33:112).* 5. உவமை; similitude, likeness, resemblance. 6. ஒழுங்கு; regularity, order; rule. *'வேதம் கட்டளைப்பட்டது அவ் வூரிலுள்ளார் கைக்கொண்ட பின்பாயிற்று' (ஈடு.6.5:8).* 7. வாயிற் கால்; door-frame, door-case.

கட்டளை

ம. கட்டள

*[கள்→கட்டு → கட்டம் = நான்குபக்கங்கள் கொண்ட வரைவு. கட்டு → கட்டளை = நான்கு பக்கங்கள் இணைந்த கட்டம்; வாசற்கால், செங்கல் அச்சு, அளவு, ஒழுங்கு, உருவம், உருவொப்புமை].*

**கட்டளை**[2] *kaṭṭaḷai,* பெ.(n.) 1. நிறைகோல்; balance, scales weighing apparatus. கட்டளைகொண்டு இதை நிறுத்துப்பார்(உ.வ.). 2. நிறையறி கல்; standard weight. 3. உரைகல்; touchstone. *"சால்பிற்குக் கட்டளை யாதெனின்" (குறள், 986).* 4. தரம்; grade,rank. *"கட்டளை வலிப்ப நின்தானை உதவி" (பதிற்றுப்.81:17).* 5. துலை ஓரை (திவா.); Libra, a sign of the zodiac.

*[கள் → கட்டு → கட்டளை = அளவு, உருவொப்புமை. கட்டளை[1] → கட்டளை[2] = அளவிடவுதவும் நிறைகோல், தரத்தை அளவிடவுதவும் கல்.]*

**கட்டளை**[3] *kaṭṭaḷai,* பெ.(n.) 1. முறைமை; way, method, manner. *"நமக்கின்றி தன்றோ கயலைப் பொருத கண்ணாண்மேலும் வாழ்விக்குங் கட்டளையே" (தஞ்சைவா. 333).* 2. எல்லை; limit. 'கழுத்தே கட்டளையாக நீரை முகந்து' (ஈடு 5.6:8). 3. கட்டுப்பாடு (ஈடு, அடைய. அரும்.); community law; code of laws regulating the conduct of individual members of a caste or community. 4. ஆண்டவன் கட்டளை; God's will. அனைத்தும் அவன் கட்டளைப்படி நடக்கும்(உ.வ.). 5. ஊழ்வினை; destiny, fate. *"கட்டளைப் படிமையில் பிழையாது" (சீவக. 2752).* 6. ஆணை, உத்தரவு; order, command; precept; direction, decree for execution; injunction, warrant. உச்சமுறைமன்ற நடுவரின் கட்டளையை நிறைவேற்றியே ஆக வேண்டும்(உ.வ.). 7. மெய்ம்மம் (தத்துவம்) உணர்த்தும் நூல்; treatise which presents within a small compass the fundamental principles of a religion. வேதாந்தக் கட்டளை.

*[கள் → கட்டு → கட்டளை = ஒழுங்கு, கட்டுப்பாடு, ஆணை.]*

**கட்டளை**[4] *kaṭṭaḷai,* பெ.(n.) 1. அரண்காவல்; protection by fortification. *"கட்டளைப் பட்டலங்கை யென்கை" (திவ். திருநெடுந். 20. வியா. 154).* 2. மேற்பூணி, கவித்தி (சேணம்); saddle, harness and other equipments for a horse. *"கட்டளைப் புரவி சூழ்ந்து கால்புடை காப்ப வேவி" (சீவக.767).*

*[கள் → கட்டு → கட்டளை.]*

**கட்டளை**[5] *kaṭṭaḷai,* பெ.(n.) 1. ஒரே வாய்க்கால் வழியாக நீர்பாயும் சமநிலமான வயற்பரப்பு; a field on same level which is capable of irrigation by a single channel. 2. நிறைவு (அக.நி.); fullness.

*[கள் → கட்டு → கட்டளை = அளவு, ஒழுங்கு.]*

**கட்டளை**[6] *kaṭṭaḷai,* பெ.(n.) 1.கோயில் சிறப்பு நடைமுறைக்காக உண்டாக்கும் அறம்; endowment for some special services in a temple. திருமுழுக் குக்கட்டளை. 2. இறைபயணத் தார்க்கு உணவளிக்க உண்டாக்கும் அறம்; provision for the free feeding of pilgrims.

*[கள் → கட்டு → கட்டளை.]*

**கட்டளை**[7] *kaṭṭaḷai,* பெ. (n.) நீர் அதிகம் கலக்காத மோர்; thick buttermilk (without an admixture of water).

க. கட்டளெ

*[கட்டு+அளை. கட்டு = கெட்டியானது. அளை = தயிர், தயிரைக் குறித்த சொல் கிளைமொழி வழக்கில் மோரைக் குறிப்பதாயிற்று.]*

**கட்டளை**[8] *kaṭṭaḷai,* பெ. (n.) ஊர்ப்பெயர்; name of a village.

*[கட்டு + அளை → அளவு → அளை. கட்டு = முறை, ஒழுங்கு, எல்லை, பகுதி.]*

சோழநாட்டுத் தஞ்சைப் பெருவுடையார் கோயிலில் வழிபாடு நடத்தும் ஏழு படிநிலைப் பூசனைகளை நிறைவேற்றும் பொருட்டுப் பணிக்கப்பட்ட ஊர்கள். இவை முதலாம் கட்டளை, இரண்டாம் கட்டளை என்பன போன்று ஏழு ஊர்ப்பெயர்களாக அமைந்துள்ளன.

**கட்டளை[3]** *kaṭṭaḷai,* பெ. (n.) 1. முதன்மை; first. 2. சிறப்பு; speciality. *"கட்டளை யானையும் மத்தக உவாவும் வையப் புறத்தொடு கைபுனைந் தியற்றி"* (பெருங்.42:30).

*[கட்டு → கட்டளை.]*

**கட்டளைக்கல்** *kaṭṭaḷai-k-kal,* பெ.(n.) 1. பொன் உரைகல்; touchstone. *"தத்தங் கருமமே கட்டளைக் கல்" (குறள்,505).* 2. படிக்கல் (வின்.); standard weight.

ம. கட்டள

*[கட்டளை[2] + கல். கட்டளைக்கல் = செப்பத்தை வரையறுக்கும் கல்.]*

**கட்டளைக்கலி** *kaṭṭaḷai-k-kali,* பெ.(n.) கலம்பகக் கலிப்பாப் போன்று அல்லாமல் எல்லா வடிகளும் ஒற்று நீங்க எழுத்தொத்துவருங் கலிப்பா (யாப்.வி.95, 470); a kali verse with equal number of letters excluding consonants in each line opp. to kalambakakkali.

*[கட்டளை + கலி. கட்டளை = ஒழுங்கு, செப்பம்.]*

**கட்டளைக்கலித்துறை** *kaṭṭaḷai-k-kali-t-tuṟai,* பெ.(n.) பாவினத்துள் கலித்துறை வகை: a kind of kali-t-tuṟai verse.

*[கட்டளை + கலித்துறை.]*

ஐந்தாஞ்சீர் மட்டும் கருவிளங்காய் அல்லது கூவிளங்காய் வர வெண்டளை வழுவாது முடியும் நெடிலடிகள் நான்குடைத்தாகி வந்து இறுதி ஏகாரத்தால் முடிவது. நேரசையில் தொடங்கும் அடியாயின் ஒற்றுநீங்க 16 எழுத்துகளும், நிரையசையில் தொடங்கும் அடியாயின் ஒற்றுநீங்க 17 எழுத்துகளும் வருமாறு நான்கடிக் கலித்துறையாக அமையும் பாவகை. ஒரே சீரான கட்டுக்கோப்பு உடைமையின் கட்டளைக் கலித்துறை எனப்பட்டது.

நூற்பா:
"கலித்துறை நெடிலடி நான்கொத் தவற்றுள்
இடைநேர் வெண்சீ ரியற்சீர் முதனான்கு
இடைநிரை வெண்சீ ரிறுதிச்சீர் மோனையாய்க்
கடையே கொண்டிறுங் கட்டளைக் கலித்துறை"
(தொல்.வி.241.)

எ.டு.
"சுந்தாரம் பாடிக் களித்தாடும் வண்டினங் காமுறுபூஞ்
சந்தார நாறு நிழற்சோலைக் காவலூர் தங்கியவா
னிந்தாரம் பூண்ட திருவடி கண்டேத்த வெவ்வுயிரும்
வந்தாரக் காண்பேனோ வானவங் கொண்ட ா
வையகமே!"
(தொல்.வி.241. மேற்.)

**கட்டளைக்கலிப்பா** *kaṭṭaḷai-k-kali-p-pā,* பெ.(n.) கலிப்பா இனத்திலொன்று (தொல்.வி.236); a species of Kali verse.

*[கட்டளை (ஒழுங்கு) + கலிப்பா.]*

கட்டளைக்கலிப்பா முதலாஞ்சீரும், ஐந்தாஞ்சீரும் தேமா அல்லது புளிமாவாகவும் மற்றைய ஆறுசீரும் பெரும்பான்மையுங் கூவிள மாகவும் முடியும் எண்சீரடி நான்குடையதாய் வருவது; நேரசையை முதற்கொண்டுவரும் பாதியடிக்கு அலகுபெறு மெழுத்துப் பதினொன்றெனவும் நிரையசையை முதற்கொண்டுவரும் பாதியடிக்கு எழுத்துப் பன்னிரண்டெனவுங் கொள்ளப்படும்.

நூற்பா:
"கட்டளைக் கலிப்பாக் காட்டும் காலை
ஒருமாக் கூவிளம் ஒருமூன்று இயைய
நேர்பதி னொன்று நிரை பன்னீர் எழுத்து ஆய்
நடந்துஅடி பாதியாய் நான்குஅடி ஒத்தவாய்
வருவது இன்று வழங்கு நெறியே"
(தொல்.வி. 236.)

**கட்டளைக்கால்** *kaṭṭaḷai-k-kāl,* பெ. (n.) வாசற்காலில் நேராக நிறுத்தப்படும் பக்கச்சாத்து; the vertical beam at either end of a door-frame.

ம. கட்டிளக்கால்

*[கட்டளை + கால். கட்டளை = ஒழுங்கு, நேர்.]*

**கட்டளைக்குரு** *kaṭṭaḷai-k-kuru,* பெ. (n.) ***கட்டளைத் தம்பிரான்*** பார்க்க; see *kaṭṭaḷai-t-thambirāṉ.*

*[கட்டளை[3] + குரு.]* து. குரு > Skt : guru

**கட்டளைக்கூட்டம்** *kaṭṭaḷai-k-kūṭṭam,* பெ.(n.) குறிப்பிட்ட நோக்கத்தின் பேரில் நடக்கும் ஊர்க் கூட்டம்; special meeting. *'ஊரிலே கூட்டங்களிலே சேரவும், பிரித்துக் கட்டளைக்கூட்டம் என்று செய்யக் கடவதல்லாததாகவும்'* (S.I.I.Vol.6. Insc.58).

*[கட்டளை[3] + கூட்டம்.]*

**கட்டளைக்கொடி** *kaṭṭaḷai-k-koḍi,* பெ.(n.) கவிழ் தும்பை; stooping tumbai (சா.அக.).

*[கட்டளை + கொடி.]*

**கட்டளைக்கொடு-த்தல்** *kaṭṭaḷai-k-koḍu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. அனுமதியளித்தல்; to give permission 2. சிறப்புரிமையளித்தல்; to grant privileges. 3. பற்றாணை கொடுத்தல் (வின்.); to issue warrant.

*[கட்டளை[3] + கொடு.]*

**கட்டளைக்கோல்** *kaṭṭaḷai-k-kōl,* பெ.(n.) நெறிமுறை (யாழ்.அக.); regulation, enactment, edict, statute.

**மறுவ.** கட்டளைச் சட்டம்

*[கட்டளை[1] + கோல்.]*

**கட்டளைகேள்(ட்)-த(ட)ல்** *kaṭṭaḷai-kēḷ-,* 12 செ.குன்றாவி.(v.t.) முறைமன்றத் தீர்ப்பை நிறைவேற்ற அனுமதி கேட்டல்; to request for the execution of a decree.

*[கட்டளை[3] + கேள்-.]*

**கட்டளைச்சட்டம்[1]** *kaṭṭaḷai-c-caṭṭam,* பெ.(n.) ***கட்டளைக்கோல்*** பார்க்க; see *kaṭṭaḷai-k-kōl.*

*[கட்டளை[1] + சட்டம்.]*

**கட்டளைச்சட்டம்[2]** *kaṭṭaḷai-c-caṭṭam,* பெ.(n.) அரசின் சட்டதிட்டங்கள். (சி.சி. VI. திருவிளங்.); law, rules of Government.

*[கட்டளை[3] + சட்டம்.]*

**கட்டளைச்சட்டம்[3]** *kaṭṭaḷai-c-caṭṭam,* பெ.(n.) அளவு அல்லது நிறைபற்றிய நெறிகள்; rules of measure or weight (சா.அக.).

*[கட்டளை[1] + சட்டம்.]*

**கட்டளைச்சாமி** *kaṭṭaḷai-c-cāmi,* பெ.(n.) ***கட்டளைத் தம்பிரான்*** பார்க்க; see *kaṭṭaḷai-t-tambirāṉ.*

*[கட்டளை[3] + சாமி.]*

**கட்டளைச்சுவடி** *kaṭṭaḷai-c-cuvaḍi,* பெ.(n.) வழிக் குறிப்புகள் தரும் புத்தகம்; directory.

*[கட்டளை [3]+ சுவடி.]*

**கட்டளைச்செலவு** *kaṭṭaḷai-c-celavu,* பெ.(n.) ஆண்டுக் கணக்கு முடிக்கும் சிற்றூர்க் கணக்கர் கட்குக் கொடுக்கப்படும் செலவுத்தொகை; allowance paid to village karnams as compensation for expenses incurred by them in connection with the preparation of the annual accounts.

*[கட்டளை[6] + செலவு.]*

**கட்டளைசொல்(லு)-தல்** *kaṭṭaḷai-col-,* 8 செ.குன்றாவி. (v.t.) ஆணை அறிவிப்புச் செய்தல் (வின்.); to give or publish an order.

*[கட்டளை[3] + சொல்-.]*

**கட்டளைத்தம்பிரான்** *kaṭṭaḷai-t-tambirāṉ,* பெ.(n.) சிவனிய மடத்தைச் சார்ந்த கோயில்களை மேற்பார்க்க மடத்தின் தலைவராய் அமர்த்தப்பட்ட சிவத் துறவி; ascetic appointed by the chief of Saiva mutt to supervise and administer the temples belonging to the mutt.

*[கட்டளை[3] + தம்பிரான். தம்பெருமான் → தம்பிரான்.]*

**கட்டளைநிறைவேற்று-தல்** *kaṭṭaḷai-niṟaivēṟṟu-,* 5 செ.குன்றாவி.(v.t.) முறைமன்ற ஆணையை நிறைவேற்றுதல்; to execute the order or decree of a court.

*[கட்டளை[3] + நிறைவேற்று-.]*

**கட்டளைப்படி** *kaṭṭaḷai-p- paḍi,* பெ.(n.) நிலைப்படியின் குறுக்குச்சட்டம்; the horizontal beam at either end of a door frame.

**ம.** கட்டளப்படி

*[கட்டளை[1] + படி.]*

**கட்டளைப்படிவா(ரு)-தல்** *kaṭṭaḷai-p-paḍi-varu-,* 8 செ.கு.வி.(v.i.) ஆணைப்படி வருதல்; to come according to order.

*[கட்டளை[3] + படி + வரு-.]*

**கட்டளைப்பதம்** *kaṭṭaḷai-p-padam,* பெ.(n.) கப்பற் கலைச்சொல். (மாலுமிசா.97); technical terms of ship.

*[கட்டளை[1] + பதம். பதம் = சொல்.]*

**கட்டளைப்பாம்பு** *kaṭṭaḷai-p-pāmbu,* பெ.(n.) ஒருவகைப் பாம்பு; a species of snake (சா.அக.).

*[கட்டளை[1] + பாம்பு.]*

**கட்டளைபிடித்துவார்(ரு)–தல்** *kaṭṭaḷai-piḍitt(u)-vāru-*, 5 செ.குன்றாவி. (v.t.) சுவடி சேர்ப்பதற்காக ஒலையை வாரி ஒழுங்குபடுத்துதல் (யாழ்ப்.); to pare and trim palmyra leaves for making a book.

*[கட்டளை[1] + பிடித்து + வாரு–.]*

**கட்டளைபுதையனேரி** *kaṭṭaḷai-pudaiyaṉēri*, பெ.(n.) திருநெல்வேலி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Thirunelveli district.

*[கட்டளை + புதையன் + ஏரி. அறப்பயன் கருதி கட்டளையாக அமைந்த புதையனேரிஉ சிற்றூர்.]*

**கட்டளைபோடு–தல்** *kaṭṭaḷai-pōḍu-*, 18 செ.குன்றாவி. (v.t.) ***கட்டளையிடு–தல்*** பார்க்க; see *kaṭṭaḷai-y-iḍu-*.

*[கட்டளை[3] + போடு–.]*

**கட்டளைமிச்சம்** *kaṭṭaḷai-miccam*, பெ.(n.) வரையறுத்து வழங்கப்பட்டதில் மீதம் பிடித்தல்; savings from sanctioned expenditure.

**ம.** கட்டளமிச்சம்

*[கட்டளை[3] + மிச்சம். மீதி → மீதம் → மிச்சம்.]*

**கட்டளைமீறு–தல்** *kaṭṭaḷai-mīṟu-*, 5 செ.குன்றாவி. (v.t.) ஆணையை மீறுதல் (வின்.); to break or violate an order.

*[கட்டளை[3]+ மீறு–.]*

**கட்டளையடி** *kaṭṭaḷai-y-aḍi*, பெ.(n.) எழுத்துக் கணக்கில் அமைந்த செய்யுளடி (தொல்.பொருள். 337, உரை); a line in a poem whose length is determined by the number of letters.

*[கட்டளை[1] + அடி.]*

*எ.டு.*

"செல்வப்போர்க் கதக்கண்ணன் செயிர்த்தெ தறிந்த சினவாழி" [யாப்.வி.மேற்.15]. இது பதினாறு எழுத்துகளால் ஆகிய கட்டளையடி யாகும்.

**கட்டளையாசிரியம்** *kaṭṭaḷai-y-āsiriyam*, பெ.(n.) எல்லாவடிகளும் ஒற்றுநீங்க எழுத்தொத்து வரும் அகவல்; a variety of agaval verse in which every line has the same number of syllables, excluding consonants.

*[கட்டளை[1] + ஆசிரியம்.]*

எ.டு.

"மேனமக் கருளும் வியனருங் கலமே
மேலக விசும்பின் விழவொடும் வருமே
மேருவரை யன்ன விழுக்குணத் தவமே
மேவதன் றிறநனி மிக்கதென் மனமே"

(யாப்.வி.52 மேற்.)

இது 13 எழுத்துகளாலான கட்டளையாசிரியம்.

**கட்டளையிடு–தல்** *kaṭṭaḷai-y-iḍu-*, 20 செ. குன்றாவி. (v.t.) 1. பணித்தல்; order, command, direct, prescribe. *`சர்வ மானியமாகக் கட்டளையிட்டு' ( S.I.I. V 452A10.)* 2. வழங்குதல்; to bestow. 3. முடிவாக உரைத்தல்; utter a decision. *நமக்கீசனிட்ட கட்டளை இதுதான் (உ.வ.).*

*[கட்டளை[3] + இடு–.]*

**கட்டளைவஞ்சி** *kaṭṭaḷai-vañji*, பெ.(n.) எல்லா வடிகளும் ஒற்றுநீங்க எழுத்தொத்துவரும் வஞ்சிப்பா; the vañji verse in which each line has the same number of syllables.

*[கட்டளை[1] + வஞ்சி.]*

எ.டு.

"உரிமை யின்கண் இன்மையால்
அரிமதர் மழைக்கண்ணாள்
செருமதிசெய் தீமையால்
பெருமகொன்ற என்பவே"

(யாப். வி.15 மேற்.)

இதில் எல்லாவடிகளும் ஒற்று நீங்க எட்டு எட்டு எழுத்துகளால் ஆகியதால் இது கட்டளை வஞ்சி.

**கட்டளைவலி–த்தல்** *kaṭṭaḷai-vali-*, 4 செ.குன்றாவி. (v.t.) அவரவர் தரத்தை வரையறுத்தல்; to assign rank or grade as of an office. *"கட்டளை வலிப்ப நின்தானை யுதவி" (பதிற்றுப்.81: 17).*

*[கட்டளை[3] + வலி. வலித்தல் = சொல்லுதல்; உடன்படுதல்; வரையறை செய்தல்.]*

**கட்டளைவெண்பா** *kaṭṭaḷai-veṇbā*, பெ.(n.) ஈற்றடி ஒழித்து ஏனையடிகள் எழுத்து ஒத்து வரும் வெண்பா (யாப்.வி. ஒழிபி.95 497.); veṅbā verse having equal number of letters in all lines other than last line.

*[கட்டளை[1] + வெண்பா.]*

எ.டு.
"நடைக்குதிரை ஏறி நறுந்தார் வழுதி
அடைப்பையா! கோறா எனலும் – அடைப்பையான்
கொள்ளச் சிறுகோல் கொடுத்தான் தலைபெறினும்
எள்ளாதி யாங்காண் டலை"

(யாப்.வி.9. மேற்.)

**கட்டன்** *kattan,* பெ.எ.(adj.) 1. நச்சுத்தன்மை பொருந்திய; slightly poisonous. 2. காட்டம் மிகுந்த; extremely strong, undiluted. 3. விறைப்பான; hard. 4. பழுக்காத, பச்சை; raw, unripe.

ம. கட்டன்

*[கடு (கட்டு) + அன் – கட்டன். கடு = நஞ்சு, கடுமை நிறைந்த, பக்குவப்படாத.]*

**கட்டனன்** *kattanan,* பெ.(n.) குள்ளன்; dwarf. (கழக).

*[குட்டன் → கட்டன் → கட்டனன். குட்டன் = குள்ளன், குட்டையானவன்.]*

**கட்டனை** *kattanai,* பெ.(n.) தரையிறுகத் திமிசு போடுகை; tamping, ramming down. கட்டனை போட்ட பிறகுதான், தரை வழிக்கவேண்டும்.

க. கட்டனெ.

*[கொட்டு → கொட்டல் → கொட்டனை → கட்டனை. ஒருகா. கட்டு(உறுதி) → கட்டனை – சுத்தியால் புளி நசுக்குதலைக் கொட்டனம் போடுதல் என்பர்.]*

**கட்டனைமரம்** *kattanai-maram,* பெ.(n.) திமிசுக் கட்டை; wooden tamper, rammer.

*[கொட்டனை → கட்டனை + மரம்.]*



கட்டனை மரம்

**கட்டா** *katta,* பெ.(n.) 20 விரலம் நீளம் வளர்வதும் இளங்கருப்பு நிறமுடையதுமான கடல்மீன் வகை; sea fish, soft dorsal black, attaining atleast 20 inches in length.

ம. கட்டா, கட்டாவு.

*[கடு → கட்டா.]*

**கட்டாக்கயிறு** *kattā-k-kayiru,* பெ. (n.) கல் முடியப் பெறும் வலைக்கயிறு (செங்கை. மீனவ.); a fishing net with small stones tied.

*[கட்டு + கயிறு – கட்டுக்கயிறு → கட்டாக்கயிறு (கொவ.).]*

**கட்டாக்காலி** *kattā-k-kāli,* பெ.(n.) ஒருவருக்கும் உரியதல்லாத, கட்டி வளர்க்கப்படாத, தெருவில் அலையும் மாடு; stray cattle. தெருவில் அலையும் கட்டாக்காலிகளைப் பிடித்துப் பட்டியிலடை(உ.வ.). 2. பட்டிமாடு (வின்.); ox or cow suffered to roam at large, or that is not put into the stall by night.

*[கட்டாத + காலி.]*

**கட்டாக்குட்டி** *katta-k-kutti,* பெ.(n.) . அறை கலன்கள், தட்டுமுட்டுப் பொருள்கள்; loose things, chattels, movables, household stuff.

ம. கட்டாக்குட்டி

*[கட்டு + குட்டி – கட்டுகுட்டி → கட்டாக்குட்டி. சின்னி + குன்னி – சின்னிகுன்னி → சென்னாக்குன்னி எனவும்; நட்டு + முட்டி – நட்டாமுட்டி எனவும் திரியும் திரிபுகளை ஒப்பு நோக்குக. வீட்டுப் பொருள்கள் கட்டாகத் திரட்டி வைக்கப் பட்டனவாகவும் சிதறிக் கிடப்பனவாகவும் பொதுப்படக் காணப்படுதலின் அவை கட்டுகுட்டி எனக் கிளைமொழி வழக்காகக் கூறப்படுவதுண்டு.]*

**கட்டாகட்டி** *kattā-katti,* பெ.(n.) விடாத்தன்மை; stubbornness. கட்டாகட்டியாயிருந்து வேலையை முடிக்க வேண்டும். (இ.வ.)

*[கட்டுதல் = காத்தல். ஒ.நோ. தன்னக்கட்டி = தன்னலம் பேணுபவன். கட்டி = கட்டிக்காத்தல், யாருக்கும் எதுவும் விட்டுத் தராமை. கட்டி + கட்டி – கட்டாகட்டி (ஒரு பொருள்மேல் ஈரடுக்காய் வந்த அடுக்குச் சொல்). ஒ.நோ. முட்டி + முட்டி – முட்டாமுட்டி. (முழங்கையோடு முழங்கையும் முழங்காலோடு முழங்காலும் மோதிச் செய்யும் மற்போர் வகை).]*

**கட்டாகட்டிமை** *katta-kattimai,* பெ.(n.) 1. ஈயாமை; extreme miserliness. 2. மிக்க கட்டுப்பாடு (யாழ்.அக.); excessive restraint.

மறுவ. கட்டூரி

*[கட்டு = சிக்கனம், பிடிப்பு. கட்டாக வாழ்தல் = ஈயாமல் வாழ்தல். கட்டு + கட்டு – கட்டுகட்டு → கட்டாகட்டு + மை – கட்டாகட்டிமை. 'மை' பண்புப் பெயரீறு. கட்டு என்பதன் ஈற்றுகரம் பண்புப் பெயரீறு ஏற்கும் போது இகரமாகத் திரிந்தது. முட்டி + முட்டி முட்டாமுட்டி எனத் திரிதலை ஒப்பு நோக்குக.]*

**கட்டாகட்டிமையான்** *katta-kattimaiyān,* பெ.(n.) மிகுந்த கட்டுப்பாடுள்ள அல்லது வலிவுள்ள மாந்தன்; a man of a very strong built body, a robust man.

*[கட்டாகட்டிமை + ஆன்.]*

**கட்டாங்கள்** *kattāṅgaḷ,* பெ.(n.) புளித்த கள்; fermented toddy.

ம. கட்டாங்கள்ளு

*[கடு = உறைப்பு. கடு + ஆம் – கட்டாம் + கள் – கட்டாங்கள் = உறைப்பு மிகுந்த கள். உறைப்பு இங்குப் புளிப்பு மிகுதியைக் குறித்தது.]*

**கட்டாஞ்சி** *kattāñji,* பெ.(n.) 1. முள்வேல மரம் (வின்.); entire leaved staff-tree. 2. முள்வேல வகை; thorny staff-tree.3. சிறுவாலுளுவை; climbing staff plant. (சா.அக.)

*[கள் → கட்டு → கட்டாஞ்சி. கள் = முள்.]*

**கட்டாட்டம்** *kattāttam,* பெ.(n.) பல்லாங்குழியாட்டத்துள் ஒருவகை; a kind of game, in pallāṅ-kuḻi.

*[கட்டு + ஆட்டம்.]*

**கட்டாடி**[1] *kattāḍi,* பெ.(n.) குறிசொல்வோன்; fortune-teller.

*[கட்டு +ஆடி – கட்டாடி. (வே.க. 136) கட்டு = கட்டுரைத்தல், வருவது கூறல், எதிர்கால நிகழ்ச்சிகளை உன்னித்துக் கூறுதல்.]*

**கட்டாடி**[2] *kattāḍi,* பெ.(n.) 1. வண்ணத்தன், வண்ணான்; washerman. 2. வண்ணாரத் தலைவன்; head of washermen.

மறுவ. வண்ணான், அரசவன், ஏகாலி, சலவையாளன், ஈரங்கொல்லி, வண்ணத்தன், துவையன், வெளுத்தாடன், சாக்கலன், அலுக்கன்.

*[கட்டாடி[1] → கட்டாடி[2].]*

குறிசொல்வோனே துணிவெளுப்பவனாகவும் இருந்ததால் பெற்ற பெயர். மருத்துவம் செய்பவனே முகம்மழிப் பவனாகவும் இருந்ததால் மருத்துவன் எனப் பெயர் பெற்றமை நோக்குக.

**கட்டாடிச்சி** *kattāḍicci,* பெ.(n.) குறிசொல்பவள்; fem. of *kattāḍi*

*[கட்டு + ஆடிச்சி. கட்டு = குறி சொல்லுதல். ஆடி (ஆ.பா.) → ஆடிச்சி (பெபா.).]*

**கட்டாடியார்** *kattāḍiyār,* பெ.(n.) கோயிற் பூசகன்; temple priest.

*[கட்டு + ஆடி + ஆர் – கட்டாடியார்.]*

**கட்டாண்மை** *kattāṇmai,* பெ.(n.) 1. பெருவீரம், பேராண்மை; manliness, great prowess. *"கை வருபல் படைக்குமொரு வீரரொவ்வாக் கட்டாண்மை யரசே". (பாரத. பதினேழாம். 18)* 2. மிகுந்த ஆண்தன்மை; great potent power.

*[கடு = மிகுதி. கடு → கட்டு + ஆண்மை – கட்டாண்மை = பேராண்மை.]*

**கட்டாணி**[1] *kattāṇi,* பெ.(n.) 1. ஈயாதவன்; miser. 2. பேராசைக்காரன்; avaricious man. 3. இழிந்தவன்; wicked man, vagabond.

தெ. கட்டாணி

*[கடு → கட்டு + ஆளி – கட்டாளி → கட்டாணி. கட்டு = கட்டுப்பாடு, இறுக்கம், ஈயாமை.]*

**கட்டாணி**[2] *kattāṇi,* பெ.(n.) 1. காதணி முதலியவற்றின் கடைப் பூட்டாணி; pin or screw for fastening a woman's ear-ring. *"கட்டாணி முதலானவை... ஒக்கடிக்கிறதும்" (கோயிலொ.93).* 2. சிறு பொன் மணிகளுடன் உருவாக்கப்பட்ட கழுத்தணி; a necklace of five or seven strings of gold beads, each having a gold coin in the middle.

*[கடை → கட்டு + ஆணி.]*

**கட்டாணி**[3] *kattāṇi,* பெ. (n.) 1. திறமைசாலி; very capable man. 2. வலியவன்; strong well-built man.

க. கட்டாணி

*[கட்டு = உறுதி, ஆற்றல். கட்டு + ஆளி – கட்டாளி → கட்டாணி.]*

**கட்டாணி**[4] *kattāṇi,* பெ.(n.) 1. அழகு; beautiful. 2. இனிமை; sweetness. *"கட்டாணி முத்தம்*

*இனிக்கும் என்றாள்" (பாரதிதாசன்.)* 3. பேரழகு, மண் போன்றவற்றின் முதல் தரம்; exquisite, great excellency, first class, as soil. 4. ஆணிமுத்து, முத்துப் போன்றவற்றின் அழகு அல்லது விலையுயர்ந்த நிலை; the state of being very fine or costly, as pearls. "கட்டாணி முத்தே" (நாட்டுப்புறப்.).

*[கட்டு (செப்பம், ஒழுங்கு) + ஆணி. ஆணி – சொல்லாக்க ஈறு.]*

**கட்டாணி**[5] *kaṭṭāṇi,* பெ.(n.) ***கட்டாவணி*** பார்க்க; see *kaṭṭāvaṇi* (வின்.).

*[கட்டாவணி–கட்டாணி.]*

**கட்டாணித்தனம்** *kaṭṭāṇi-t-taṉam,* பெ.(n.) இவறன்மை, ஈயாத்தன்மை (கஞ்சத்தனம்); stinginess. *கட்டாணித்தனமாய்க் கலியாணம் செய்தான்(உ.வ.).*

*[கட்டாணி + தனம்.]*

**கட்டாத்தி** *kaṭṭāti,* பெ.(n.) புதுக்கோட்டை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Pudukkottai district.

*[கொடு (வளைவு)→கொட்டு + ஆத்தி-கொட்டாத்தி (வளைந்த ஆத்திமரத்து ஊர்) → கட்டாத்தி.]*

**கட்டாதனம்** *kaṭṭātaṉam,* பெ.(n.) ***கட்டிருக்கை*** பார்க்க; see *kaṭṭirukkai.*

*[கட்டு + ஆதனம். வ. ஆசன > ஆதனம். கட்டிருக்கை எனின் முற்றுந்தமிழாம்.]*

**கட்டாந்தரை** *kaṭṭān-tarai,* பெ.(n.) 1. வறண்டிறுகிய நிலம்; dryland, hard barren soil. *"கட்டாந்தரை யட்டையைப் போல" (இராமநா. அயோத்.17).* 2. வெறுந்தரை; floor.

மறுவ. வெட்டாந்தரை

ம. கட்டாந்தர

*[குட்டு → கட்டு + ஆம் + தரை – கட்டாந்தரை = வெற்றுநிலம் (மு.தா.99,100).]*

**கட்டாப்பாறை** *kaṭṭā-p-pāṟai,* பெ.(n.) சிறிய பாறைமீன் (செங்கைமீனவ.); a kind of small fish.

*[கட்டை + பாறை – கட்டைப்பாறை → கட்டாப்பாறை. கட்டை = குட்டை, சிறியது.]*



கட்டாப் பாறை

**கட்டாப்பு** *kaṭṭāppu,* பெ.(n.) 1. வேலியடைத்த நிலம் (வின்.); fenced ground, enclosed field. 2. செய்மானம், கட்டுவிப்பு; build up. 3. செய்வித்த வடிவமைப்பு; set up. 4. காவல் நிலம்; guarded land. 5. பொத்தகக் கட்டுமானம்; book binding.

*[கட்டு + ஆப்பு. (ஆப்பு – சொல்லாக்க ஈறு.) கட்டு → கட்டாப்பு (வே.க. 136).]*

**கட்டாம்பாரை** *kaṭṭām-pārai,* பெ.(n.) 28 விரலம் வளரக்கூடிய, குதிரை வடிவப் பச்சைநிறமுடைய கடல்மீன் வகை; horsemackerel, greenish, attaining 28 inches in length.

*[குட்டாம் → கட்டாம் + பாரை.]*

**கட்டாம்புளி** *kaṭṭām-puḷi,* பெ.(n.) நெல்லை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Thirunelvēli district.

*[கொடு → கொட்டு + அம் + புளி – கொட்டம்புளி→ கட்டாம்புளி. (வளைந்து கவிந்த புளியமரம், புளியமரத்தூர்)]*

**கட்டாமரம்** *kaṭṭā-maram,* பெ.(n.) சிறு கட்டுமரம் (நெல்லை. மீனவ.); small catamaran.

*[கட்டு மரம் → கட்டாமரம்.]*

**ஒன்றிற்கு மேற்பட்ட மரங்களைப் பிணைத்து அமைப்பது கட்டுமரம். அவ்வாறு கட்டாமல் ஒரே மரத்தால் ஆனது கட்டாமரமாகலாம்.**

**கட்டாயக்காத்திருப்பு** *kaṭṭāya-k-kāttiruppu,* பெ.(n.) ஒரு துறையிலிருந்து மற்றொரு துறைக்கு மாற்றப்படும்போதோ நீண்ட விடுப்பிலிருந்து திரும்பும்போதோ பணியேற்கக் காத்திருத்தல்; interim period of compulsory waiting.

*[கட்டாயம் + காத்திருப்பு.]*

**கட்டாயம்**[1] *kaṭṭāyam,* பெ.(n.) 1. பண்டைய வரிகளில் ஒன்று (i.m.p. cg.1095); an ancient tax. 2. குறித்த பருவங்களில் உறுதியாகச் செலுத்தி ஆகவேண்டிய வரி(S.I.I.Vol.5, 257.); the tax that must be paid.

*[கட்டு + ஆயம். ஆயம் = தீர்வை, வரி. கட்டாயம் = கட்டியே தீரவேண்டிய வரி வகை.]*

**கட்டாயம்**[2] *kaṭṭāyam,* பெ.(n.) 1. வலக்காரம், வன்முறை; force. முடியாது என்று எவ்வளவோ மறுத்தும் கட்டாயமாகக் கையொப்பம் வாங்கி விட்டான் (உ.வ.). 2. கட்டுப்பாடு; compulsion, constraint. விரும்பாத விழாவிற்கு வருமாறு கட்டாயப்படுத்தாதே (உ.வ.). 3. உறுதி; certain. இன்று கட்டாயமாகத் தொல்காப்பியக் கூட்டத் திற்குச் செல்வேன் (உ.வ.).

**ம.** கட்டாயம்; **க.** கட்டாய; **தெ.** கட்டாயமு.

*[கட்டு → கட்டாயம் (வே.க. 136).]*

கட்டவேண்டிய ஆயம் கட்டாயம். கட்டுதல் = செலுத்துதல்; ஆயம் = வரி. வரி கட்டுவது பொதுவாக மக்கள் விரும்பாததும் தவறாது செய்ய வேண்டுவதுமான செயல். வரி கட்டுவது போன்ற கண்டிப்பு கட்டாயம் [சொ.ஆ.க.14].

**கட்டாயம்**[3] *kaṭṭāyam,* பெ.(n.) குறுக்காகச் செங்கல்லை அடுக்கும் வகை; piling up bricks breadthwise, opp. to நெட்டாயம்.



கட்டாயம்

**ம.** கட்டாயம்

*[குத்து → குட்டு → கட்டு + ஆயம் - கட்டாயம். ஆயம் = தொகுதி, வரிசை.]*

**கட்டாயம்பண்ணு-தல்** *kaṭṭāyam-paṇṇu-,* 11 செ.கு.வி.(v.i.) ஒரு செயலைச் செய்யுமாறு வற்புறுத்துதல் (வின்.); to compel, force.

*[கட்டாயம் + பண்ணு-.]*

**கட்டாயவரி** *kaṭṭāya-vari,* பெ.(n.) ***கட்டாயம்***[3] பார்க்க; see *kaṭṭāyam.*

*[கட்டாயம் + வரி.]*

**கட்டாரங்குளம்** *kaṭṭāraṅkuḷam,* பெ.(n.) தூத்துக்குடி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Tūttukuḍi district.

*[கொட்டாரன் → கட்டாரன் + குளம் - கட்டாரங்குளம்.]*

**கட்டாரம்** *kaṭṭāram,* பெ.(n.) உடைவாள், குத்துவாள். (யாழ்.அக.); poniard.

**மறுவ.** கட்டாரி

**ம.** கட்டார

*[கள் → கடு → கட்டு + ஆரி - கட்டாரி → கட்டாரம். ஆரி - சொல்லாக்க ஈறு. கடு = வெட்டு. **கட்டாரி** பார்க்க. see kaṭṭāri.]*

**கட்டாரி**[1] *kaṭṭāri,* பெ. (n.) 1. குத்துவாள்; hilted dagger. *"கட்டாரிவருங் கலைசையே"* *(கலைசைச். 83).* 2. சூலம்; trident of śivā. *"கட்டாரி யேந்திய காளத்தி நாதர்"* *(தனிப்பா. 160, 399).* 3 எழுத்தாணிப்பூண்டு (மலை.); style plant.


கட்டாரி

**ம.** கட்டாரி; **க.** கடாரி; **தெ.** கடாரி.

*[கடு (வெட்டு) + ஆரி - கட்டாரி. 'ஆரி' சொல்லாக்க ஈறு.]*

**கட்டாரி**[2] *kaṭṭāri,* பெ.(n.) ஒருவகை மர ஏனம்; a kind of wooden vessel.

**ம.** கட்டாரி

[குடம்→கடம்→கடாய்→ கடாரி→கட்டாரி. 'ஆரி' - சொல்லாக்க ஈறு.]

**கட்டாரிக்குத்துணி** *kaṭṭāri-k-kuttuṇi,* பெ.(n.) வாள்வடிவில் கருங்கோடுகளமைந்த பட்டுத்துணி; a kind of silk with black stripes resembling daggers.

[கட்டாரி + குத்து + உணி. உண்ணி → உணி = உண்டது, பெற்றது, கட்டாரியின் வடிவம் குத்தப்பெற்றது.]

**கட்டாரிக்கையொலி** *kaṭṭāri-k-kai-y-oli,* பெ.(n.) ***கட்டாரிக்குத்துணி*** பார்க்க; see *kaṭṭāri-k-kuttuṇi.*

[கட்டாரி+கையொல.]

**கட்டாரிப்பாம்பு** *kaṭṭāri-p-pāmbu,* பெ.(n.) கோலா வலையிற்படும் பாம்பு வகை; a kind of sea snake (தஞ்சை மீனவ.).

[கட்டாரி + பாம்பு. கட்டாரி = குத்துவாள், குத்துவாள் போன்ற பாம்பு.]

**கட்டாலங்குளம்** *kaṭṭālangkuḷam,* பெ.(n.) தூத்துக்குடி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Tūttukkuḍi dt.

[கொடு → கொட்டு + ஆலம் + குளம் - கெட்டாலங்குளம்→ கட்டாலங்குளம். கொட்டாலம் = வளைந்து கவிந்த ஆலமரம்.]

**கட்டாவணி** *kaṭṭāvaṇi,* பெ.(n.) கதிர் அறுப்பு (p.); reaping.

மறுவ. கட்டாணி, கட்டாவு.

[கள் → கடு → கட்டு + அணி → (கடு = வெட்டு, அறு.) கட்டுவணி → கட்டாவணி.]

**கட்டாவு** *kaṭṭāvu,* பெ.(n.) ***கட்டாவணி*** பார்க்க; see *kaṭṭāvaṇi.*

[கட்டாவணி → கட்டாவு.]

**கட்டாள்** *kaṭṭāḷ,* பெ.(n.) 1. வலிமையுடைய ஆள்; a strong valiant man. 2. அடியாள்; hooligan hired for beating enemies.

க. கட்டாள், கட்டாளு.

[கட்டு + ஆள். கட்டு = உடற்கட்டு, வலிமை.]

**கட்டாள்தனம்** *kaṭṭāḷ-taṉam,* பெ.(n.) மிக்க வலிமை; great stateliness, great valour.

க. கட்டாள்தன

[கட்டாள் + தனம். 'தனம்' - சொ.ஆ.ஈறு.]

**கட்டான்** *kaṭṭāṉ,* பெ.(n.) 1. ஆட்டத்திற்கென்று வகுத்த இடம்; chequered square on board for games. 2. கோடிட்டமைத்த அறைகளுக்குள் காய் வைத்தாடும் ஒருவகை விளையாட்டு; a game played on a chequered board.

[கள் → கடு → கட்டம் → காட்டாம்→கட்டான். கட்டம் = சதுரம்.]

**கட்டானக்கால்** *kaṭṭaṉa-kāl,* பெ.(n.) கருவண்டு; black beetle.

[கட்டு + ஆன + கால். = குட்டையான கால்களையுடைய வண்டு.]

**கட்டி**[1] *kaṭṭi* பெ.(n.) 1. இறுகின பொருள்; உறைந்த பொருள்; cold, lump, concretion; anything hardened; coagulated. மண்ணாங்கட்டி, பனிக்கட்டி. 2.கருப்புக்கட்டி; jaggery, coarse palm-sugar. *"கட்டியின் அரிசியும் புழுக்கும் காணமும் புட்டில் வாய்ச் செறித்தனர்" (சீவக. 1938).* 3. கற்கண்டு (பிங்.); sugar candy. *"சாறடு கட்டி எள்ளுச் சாமை கொள் இறுங்கு தோரை" (திருவிளை. திருநாட்டு. 29).* 4. சிலந்திப்புண்; boil, abscess, tumour. *'துக்கத்தைச் சொல்லி ஆற்ற வேண்டும்; கட்டியைக் கீறி ஆற்ற வேண்டும்' (பழ.).* 5. சுரக்கட்டி; enlarged spleen. 6. கருப்பிண்டம் (வின்.); foetus. 7. கனிமம்; ore. 8. பொன்; gold; bar of gold. *"அழல்வினை யமைந்த நிழல்விடு கட்டி" (பதிற்றுப். 81 : 16).* 9. வளையல் செய்யும் அரக்கு; stick of lac made of ant-hill earth and resin melted and drawn out for making bangles. 10. 25 பலம் கொண்ட நிறையளவு; a measure of weight 25 palams. 11. துண்டு; bar, cake. சவர்க்காரக்கட்டி, சுண்ணக்கட்டி. 12. கனசதுரம்; cube. 13. எலும்பு; bone. 14. திரண்ட மாத்திரளை; moulded flour. கட்டிமாவிளக்கேற்றிக் காணிக்கை செலுத்தினர் (உ.வ.).

ம. கட்டி; க. கட்டெ; தெ. கட்ட; கோத. கட்ய; குட. கட்டிமோரி (கட்டித்தயிர்); து. கட்டி; பட.கட்டி

[குள் → கள் → கட்டு → கட்டி. (மு.தா. 244) கள் = திரளல், பெருகுதல், உருண்டையாதல், உருண்டு கட்டியாதல், திரண்டுபெருகுதலால் தோற்றப் பொலிவு பெறுதல்.]

பரு, கொப்புளம், ஊமைவீக்கம், கழலை, பிளவை, அரையாப்பு, நெறிக் கட்டு, ஈரல்நோய், கண்டமாலை போன்றவை அனைத்தையும் 'கட்டி.' என்றே அழைத்தல் பெருவழக்கு.

**கட்டி**[2] *katti* பெ.(n.) அகமகிழ்ச்சி (திவா.); inward delight.

*[கள் → கட்டு = நிறைவு, மகிழ்வு. கள் = திரண்டது.]*

**கட்டி**[3] *katti* பெ.(n.) புள்வகை, கரிக்குருவி; a kind of bird. *'கட்டி' இடமானால் வெட்டி அரசாளலாம் (பழ.).*

*[கட்டு = குறி செல்லுதல், வருங்காலத்தைக் கணித்துக் கூறுதல்; புள்நிமித்தம். கட்டு → கட்டி =கட்டு அல்லது குறியைக் குறிப்பால் உணர்த்தும் பறவை]*

**கட்டி**[4] *katti* பெ.(n.) பாடை (யாழ்.அக.); bier.

*[கட்டில் → கட்டி. 'ல்' ஈறுகெட்டது. இலக்கிய வழக்கில் 'கால்கழி கட்டில்' எனக் குறிக்கப்படுதல் ஒப்புநோக்கத் தக்கது.]*

**கட்டி**[5] *katti* பெ.(n.) 1. திறமை; ability, competence. 2. மனஉறுதி; strong will.

ம. கெட்டி; க. கட்டி (திறமை); து., தெ. கட்டி; குட. கெட்டிகெ (கெட்டிக்காரன்)

*[கட்டு → கட்டி.]*

**கட்டி**[6] *katti* பெ.(n.) கடைக்கழகக் காலக் குறுநில மன்னன்; local chieftain of Sangam period. *"குல்லைக் கண்ணி வடுகர் முனையது பல்வேற் கட்டி நன்னாட் டும்பர்" (குறுந். 11).*

*[கட்டி[5] → கட்டி[6].]*

**கட்டிக்கசடு** *katti-k-kasadu*, பெ.(n.) வண்டல்; sediment. 2. கட்டியின் மாசு; matter from an abscess (சா.அக.).

*[கட்டி + கசடு.]*

**கட்டிக்கற்காரை** *katti-k-kar-kārai* பெ.(n.) உரிய விழுக்காட்டில் சுதைமாவு (சிமிட்டி), மணலுடன் ஒன்றரை விரலளவுள்ள சல்லி கலந்து இரும்பிடையில்லாமல் வார்க்கும் கற்காரை; mass concrete, with 1½" size jelly, sand and cement in the designed proportion without reinforcement rods.

*[கட்டி + கல் + காரை.]*

**கட்டிக்கா-த்தல்** *katti-k-kā-*, 11 செ.குன்றாவி.(v.t.) கவனித்துப் பாதுகாத்தல்; to guard with care, to pay the utmost attention possible. 2. விடாது காத்தல்; to serve unremittingly. *"அவர் மனதறிந்து கட்டிக்காத் திருப்பதே" (திருவேங்.சத.52).*

*[கட்டி + கா-. கட்டி = மனத்தில் உறுதியாய் இருத்தல்.]*

**கட்டிக்காப்பு** *katti-k-kāppu*, பெ.(n.) உட்டுளையில்லாமல் முழுமையாகப் பொன்னால் செய்யப்பட்ட காப்பு; solid (gold) bangle.

ம. கட்டிக்காப்பு; தெ. கெட்டிக்காப்பு.

*[கட்டி + காப்பு.]*

**கட்டிக்கார்** *katti-k-kār*, பெ. (n.) கார்நெல் வகை (A); a kind of 'kār' paddy.

*[கட்டி + கார். கரு → கார். கருமையைக் குறித்த 'கார்' கறுப்பாயிருக்கும் முகிலையும், அம்முகிலால் பெய்யும் மழையையும், அம் மழை பெய்யும் பருவத்தையும் அப் பருவத்தில் விளையும் நெல்லையும் குறிப்பதாயிற்று. கார்நெல்லென்றும் காரரிசியென்றும், 'கார்' அடையாய் வருவதுமுண்டு.]*

**கட்டிக்காரன்** *katti-k-kāran*, பெ.(n.) வல்லாளன், திறமைசாலி; clever, active man.

ம. கட்டிக்காரன்; க. தட்டிக; துட. கொட்யகொர்ன்; குட. கெட்டிகெ; து. தட்டிகெ; தெ. கட்டிவாடு; பட. தட்டிகார.

*[கட்டி[5] + காரன்.]*

**கட்டிக்காலா** *katti-k-kālā*, பெ.(n.) பொன்னிறமான ஏழரை விரலம் வளரக்கூடிய கடல்மீன் வகை; robaut, golden fish, attaining 7½ inch in length.

ம. கட்டிக்காலா

*[கட்டி[1] + காலா. காலா = மீன்வகை.]*

**கட்டிக்கொடு-த்தல்** *katti-k-kodu-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1.பெண்ணுக்குத் திருமணம் செய்தல்; to give a girl in marriage. 2. மிகவும் உதவுதல்; to help liberally; to pay handsomely. 3. ஈடுசெய்தல்; to make good, as loses, compensate. 4. சோறு முதலிய வற்றைப் பயணத்திற்காக கட்டித்தருதல்; to pack food for travel. *'கட்டிக்கொடுத்த சோறும் சொல்லிக் கொடுத்த சொல்லும் எதுவரைக்கும்?' (பழ.).*

*[கள் + து – கட்டு → கட்டி + கொடு- (து.வி.). கள் பிணைத்தல், சேர்த்தல். கட்டுதல் = சேர்த்துப் பிணைத்தல்.]*

**கட்டிக்கொண்டழு-தல்** *katti-k-kondalu-*, 1 செ. குன்றாவி.(v.t.) பயனில்லை எனத் தெரிந்தும் தொடர்ந்து ஈடுபட நேர்தல்; to exert continuously, knowing the negative result.

*[கட்டி + கொண்டு + அழு-.]*

இழவு வீட்டில், பிணத்தைச் சுற்றி நின்று ஒருவரையொருவர் கட்டிப் பிடித்து அழுவது இயல்பு. இங்கு அழுவோர் அனைவருக்கும் இறந்தோர் மீண்டெழார் என்பது தெரிந்தும் ஒப்புக்காக அழுவது போல், பயனளிக்காத ஒன்றைத் தொடர்ந்து செய்வதையும் இது குறிப்பதாயிற்று.

**கட்டிக்கொள்(ளு)[1]-தல்** *katti-k-kol -*, 7 செ. குன்றாவி.(v.t.) 1. தழுவுதல்; to hug; embrace. இறுகக் கட்டிக்கொண்டு கண்ணீருடன் வழியனுப் பினான்(உ.வ.). 2. மணம் செய்துகொள்ளுதல்; to marry. முறைப்பெண்ணைக் கட்டிக்கொள்ள இவனுக்கு விருப்பமில்லை(உ.வ.). 3. பற்றுதல்; to cling to. அவ்வேலையைக் கட்டிக்கொண்டு இன்னலுறு கிறான்(உ.வ.). 4. வயமாக்குதல்; to bring within one's power or influence; to bring round; conciliate. அவன் தன் பக்கமாக இருக்கும்படி எல்லாரையும் கட்டிக்கொண்டான்(உ.வ.). 5. ஏற்றுக் கொள்ளுதல்; to lay up; accumulate, as virtuous deeds to store up; as sins for future retribution. அந்தப் புண்ணியத்தை அவன் கட்டிக் கொண்டான் (உ.வ.). 6. பறித்தல்; to seize, acquire, annexe, take unjustly. அவன் அனைத் தையும் கட்டிக்கொண்டு போனதால் இவன் ஏதிலியானான்(உ.வ.).

**தெ.** கட்டுகொனு

*[கள் → கட்டு → கட்டி + கொள்-.]*

**கட்டிக்கொள்(ளு)[2]-தல்** *katti-k-kol-*, 7 செ.குன்றாவி. (v.t.) உடுத்தல்; to tie around as a garment.

*[கள் → கட்டு → கட்டி கொள்-. கள் = சேர், இணை.]*

**கட்டிக்கொள்(ளு)[3]-தல்** *katti-k-kol*, 7 செ.குன்றாவி. (v.t.) மருந்தியலில் ஒரு சரக்கை மற்றொரு சரக்கு, கட்டிக்கொள்ளுதல்; to bind a drug by another.

*[கட்டி + கொள்-. கள் → கட்டு → கட்டி = மூடுதல், தடுத்தல், அடக்குதல்.]*

**கட்டிக்கோல்** *katti-k-kōl*, பெ.(n.) உழுதபின் மண்கட்டிகளைத் தட்டி உடைக்கப் பயன்படுத்தும் வேளாண் கருவி; an agricultural implement for breaking the clods after ploughing.

**மறுவ.** கட்டக்கோல்

**ம.** கட்டக்கோல், கட்டக்கொட்டுவடி, கட்டமுட்டி.

*[கட்டி + கோல் – கட்டிக்கோல் = மண்கட்டிகளை உடைக்கும் கோல்.]*

நன்செய் நிலத்தை உழுதபின் நிற்கும் கட்டிகளைத் தட்டிச் சமமாக்கப் பலகையையும், புன்செய் நிலத்தை உழுதபின் நிற்கும் கட்டிகளைத் தட்டிச் சமமாக்கக் கோல்களையும் பயன் படுத்துவதுண்டு.

**கட்டிச்சம்பா** *katti-c-cambā*, பெ.(n.) நான்கு திங்களில் பயிராகும் சம்பா நெல்வகை; a kind of paddy maturing in four months.

**ம.** கட்டிச்சம்பாவு

*[கள் → கடு → கட்டி + சம்பா. கள் → கட்டி = திரட்சி.]*

**கட்டிச்சவுக்காரம்** *katti-c-cavukkāram*, பெ.(n.) 1. சவுக்காரக்கட்டி; lump of fuller's earth found naturally in the soil. 2. நாட்டுச்சவுக்காரக்கட்டி; soap cake (சா.அக.).

*[கட்டி + சவுக்காரம். சவுள் → சவர் + காரம் – சவர்க்காரம் → சவுக்காரம் (உவர் மண், அளமண்). உவர்மண் துணிவெளுக்கப் பயன்படுத்தப்பட்டதை ஒப்பு நோக்குக.]*

**கட்டிச்சி** *katticci*, பெ.(n.) வாணாள் நீட்சிக்குச் சித்தர் பயன்படுத்தியதாக அறியப்படும் மருந்து, செந்திராய்; a drug with high potency said to be used by Siddhars for promoting longevity (சா.அக.).

*[கட்டு + கட்டுச்சி – கட்டிச்சி.]*

**கட்டிச்சுருட்டு-தல்** *katti-c-curuttu-*, 6 செ.குன்றாவி. (v.t.) 1. பொருளைச் சுருட்டிக் கட்டுதல்; to pack up one's goods. *"முட்டித் ததும்பி முளைத்தோங்கு சோதியை மூடரெல்லாங் கட்டிச் சுருட்டிக் கக்கத்தில் வைப்பர் கருத்தில் வையார்" (பட்டினத்.பொது.30).* 2. திருடிய பொருளைத் திரட்டுதல்; to pack up stolen goods before running away; to carry of plunder, as a thief. 3. செய்தொழிலை நிறுத்துதல்; to stop one's activities. உன் கடையைக் கட்டிச்சுருட்டு (உ.வ.).

*[கட்டு → கட்டி + சுருட்டு-.]*

**கட்டிச்சோறு** *katti-c-cōru*, பெ.(n.) குழைந்து, ஒன்றோடொன்று ஒட்டிக்கொண்டிருக்கும் பச்சரிசிச்

சோறு; a cake of cooked rice (from rice not boiled in the husk).

ம. கட்டிச்சோறு, கட்டச்சோறு.

*[கள் → கட்டு → கட்டி + சோறு. கள் = சேர்தல், பிணைதல்.]*

**கட்டிச்சுரம்** *katti-c-ch-šuram,* பெ.(n.) 1. குருக்களை எழுப்பும் சுரம் அல்லது குருக்களினாலேற்படும் சுரம்; an eruptive fever and also the eruation which characterises such a fever. 2. கட்டியினுடைய வேகத்தால் காணும் காய்ச்சல்; fever arising from acute abscess. (சா.அக.)

*[கட்டி + சுரம். சுரம் = காய்ச்சல்.]*

**கட்டிடம்**[1] *kattidam,* பெ.(n.) வீடு கட்டும் இடம், மனை; building site, plot.

*[கட்டு + இடம் – கட்டிடம் (கட்டுகின்ற இடம்). கட்டிடத்தைக் கட்டடம் எனப் பொருள் கொள்வது தவறு.]*

**கட்டிடம்**[2] *kattidam,* பெ.(n.) 1. ***கட்டடம்*** பார்க்க; see *kattadam.*

*[கட்டடம் → கட்டிடம். கட்டிடம் என்பது மலையாளத்தின் வழித் தமிழில் புகுந்த இடவழக்கு (பொருட்குற்றமுள்ள கொச்சை வழக்கு).]*

**கட்டப்படுவது கட்டடம். ஒற்றப்படுவது ஒற்றடம். கட்டப்பட்டது கட்டடமாதலால் கட்டிடம் என வழங்குவது தவறு. தமிழும் மலையாளமும் தவிர்ந்த திரவிட மொழிகளில் வீட்டைக் கட்டடம் என்று வழங்குதல் காண்க.**

**கட்டித்தங்கம்** *katti-tangam,* பெ.(n.) ***கட்டிப்பொன்*** பார்க்க; see *katti-p-pon.*

*[கட்டி + தங்கம்.]*

**கட்டித்தயிர்** *katti-t-tayir,* பெ.(n.) கட்டியாக இறுகிய தயிர், கடைந்து உடைக்கப்படாத தயிர்; unchurned curd.

ம. கட்டத்தைரு; க. கட்டுமொசரு.

*[கட்டி + தயிர்.]*

**கட்டித்தரம்** *katti-t-aram,* பெ.(n.) முரட்டுத்துணி; thick cloth.

ம. கட்டித்தரம்.

*[கட்டி + தரம். த. திரம் > வ. தரம்.]*

**கட்டிதட்டு**[1]**–தல்** *katti-tattu-,* 5 செ.கு.வி.(v.i.) ***கட்டிப்பிடி**[1]**–த்தல்*** பார்க்க;see *katti-p-pidi-*[1].

*[கட்டி + தட்டு-. தட்டு = படுதல், மோதுதல், சேர்தல்.]*

**கட்டிதட்டு**[2]**–தல்** *katti-tattu-,* 5 செ.குன்றாவி.(v.t.) கட்டிகளை உடைத்தல்; to break clods.

*[கட்டி + தட்டு-.]*

**கட்டிநாயக்கன்தொட்டி** *katti-nāyakkan-totti,* பெ.(n.) தருமபுரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Dharumapuri district.

*[கட்டி + நாயக்கன் + தொட்டி. தொட்டி = மாட்டுப்பட்டி. த. தொழுவம் > க. தொட்டி > த. தொட்டி.]*

**கட்டிப்பால்** *katti-p-pāl,* பெ.(n.) 1. (இனிப்புச்சுவை சேர்த்துச் சற்று) கெட்டியாக்கப்பட்ட பால்; condensed milk. 2.நீர் கலவாத பால்; pure milk.

*[கட்டி + பால்.]*

**கட்டிப்பிடி–த்தல்** *katti-p-pidi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. இறுகத் தழுவுதல்; to hug, embrace. 2. குளிர்சுரம் முதலிய நோய்களினாலும், அன்பு அச்சம், காமம் முதலிய மனவேறுபாடுகளினாலும் தனக்குத்தானே இறுகத் தழுவுதல்; grasp or seize by himself indelirium etc. 3. செலவை மிகச் சுருக்குதல்; to practice severe economy.

ம. கெட்டிப்பிடிக்குக; **Thai.** kord.

*[கட்டு → கட்டி + பிடி-.]*

**கட்டிப்பு** *katti-p-pu,* பெ. (n.) ஏமாற்றம்; deceit, fraud.

ம. கட்டிப்பு

*[கள் → கடு → கட்டு → கட்டி + பு.]*

**கட்டிப்புகு–தல்** *katti-p-pugu-,* 21 செ.கு.வி.(v.i.) கைம்பெண் மறுமணம் செய்துகொள்ளுதல் (இராட்.); to be remarried, attributed to be a remarrying widow.

*[கட்டி + புகு-. கட்டி = தாலிகட்டிக்கொண்டு.]*

**கட்டிப்புரள்–தல்** *katti-p-pural-,* 12 செ.கு.வி.(v.i.) ஒருவரை ஒருவர் வலிமையாகப் பிடித்துக்கொண்டு உருளுதல்; to roll over, one holding the other as in a fight. அவர்கள் கட்டிப்புரண்டு சண்டையிட்டார்கள் (உ.வ.).

*[கட்டி + புரள்.]*

**கட்டிப்புகுந்தவள்** *katti-p-pugundaval,* பெ.(n.) மறுமணம் செய்துகொண்டவள் (வின்.); woman who has remarried after the death of her husband.

*[கட்டி + புகுந்தவள்.]*

**கட்டிப்புழுக்கு** *katti-p-pulukku,* பெ.(n.) அவரைப் பருப்பை வேக வைத்து வெல்லம் சேர்த்துக் கடைந்த இனிப்புத் துவையல் உருண்டை; a slightly boiled confection containing Egyptian bean mixed with jaggery. *"கட்டிப் புழுக்கிற் கொங்கர்கோவே" (பதிற்றுப். 90: 25).*

*[கட்டி + புழுக்கு. கட்டி = வெல்லக்கட்டி. புழுக்கு = வேகவைத்து வெல்லம் சேர்த்துக் கடைந்த அவரைத் துவையல்.]*

பதிற்றுப்பத்து உரையாசிரியர் அவரை முதலியவற்றின் விதைகளை இடித்துப் பெற்ற மாவோடு சர்க்கரையைக் கலந்தமைத்த உணவு என்று விளக்கம் தந்திருப்பது தவறு.

**கட்டிப்பூண்டி** *katti-p-pundi,* பெ.(n.) திருவண்ணாமலை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Thiruvannamalai district.

*[கட்டி + பூண்டி– கட்டிப் பூண்டி. பூண்டி = ஏரி. கட்டி என்பவன் பெயரிலமைந்த ஏரியைச் சார்ந்த ஊர்.]*

**கட்டிப்பேசு–தல்** *katti-p-pēsu-,* 8 செ.குன்றாவி.(v.t.) மிகைப்படுத்திப் புனைந்து பேசுதல்; to fabricate, exaggerate, overstate.

ம. கெட்டிப்பறுக

*[கட்டி + பேசு.]*

**கட்டிப்பொன்** *katti-p-pon,* பெ.(n.) அணிகலனாகச் செய்யப் படாமற் கட்டியாயிருக்கும் பொன் (திவ். திருப்பா.3,வியா.); gold in lump, opp. to பணிப்பொன்.

*[கட்டி + பொன்.]*

**கட்டிப்போடு–தல்** *katti-p-pōdu-,* 20 செ.கு.வி. (v.i.) ***கட்டிவை–த்தல்*** பார்க்க; see *katti-vai-.*

*[கட்டி + போடு.]*

**கட்டிபிடி[1]–த்தல்** *katti-pidi-,* 4 செ.கு.வி.(v.i.) கூழ், உப்புமா, களி முதலிய உணவுப் பொருள் ஆக்கும் போது சரியாகக் கிண்டி விடாததால் கட்டிகட்டியாக நின்றுவிடுதல்; to form into a lump while preparing porridge - like eatable (சா.அக.).

*[கட்டி + பிடி.]*

**கட்டிபிடி[2]–த்தல்** *katti-pidi-,* 4 செ.கு.வி.(v.i.) வெல்லம் பிடித்தல்; to give a shape of balls as of jaggery. *இன்று எத்தனை கொப்பரைப் பாகினைக் கட்டிபிடித்தீர்?*

*[கள் + கட்டி + பிடி. கட்டி = திரண்டது, உறைந்தது.]*

**கட்டிபுடை–த்தல்** *katti-pudai-,* 4 செ.கு.வி.(v.i.) கட்டி வீங்குதல்; protrusion or swelling of an abscess. (சா.அக.).

*[கட்டி + புடை.]*

**கட்டிமாங்கோடு** *katti-māṅgōdu,* பெ.(n.) கன்னியாக்குமரி மாவட்டத்துக் கல்குளம் வட்டத்துச் சிற்றூர்; a village in Kalkulam Taluk in Kaniyakumari district.

*[கட்டி + மா + கோடு – கட்டிமாங்கோடு = கட்டி என்பவன் பெயரிலமைந்த மாமரத்து ஏரி, அதனைச் சார்ந்த ஊர். கோடு = ஏரிக்கரை, ஏரி.]*

**கட்டிமாலை** *katti-mālai,* பெ.(n.) மாலை வகை; (T.A.S. iii, 225); a kind of garland.

*[கட்டி + மாலை. கட்டி = திரண்டது.]*

**கட்டிமுட்டி[1]** *katti-mutti,* பெ.(n.) சிறியதும் பெரியதுமான கட்டிகள் (வின்.); clots, loose mould in a newly ploughed clayey soil; large and small loose bundles in a bag.

மறுவ. கட்டியும் கசடும்; கட்டியுங்கரளையும்.

*[கட்டி + முட்டி. கட்டி = திரட்சி. முட்டி = முட்டைபோன்று உருண்டது.]*

**கட்டிமுட்டி[2]** *katti-mutti,* பெ.(n.) கஞ்சி, மருந்தெண்ணெய் (தைலம்), சுவைக்குடிநீர் முதலியவற்றைக் காய்ச்சும்போது பதம் தவறுவதால் அவை குழம்பாகத் திரளாமல், சிறுகட்டிகளாகவும், நீர்மமாகவும் அமையும் பதம்; the stage at which the intended solution of conjee, medicated oil, syrup and other liquids, instead of thickening evenly, are converted into small irregular masses, while boiling as a result of the imperfect process adopted during their preparation.

*[கட்டி + முட்டி.]*

**கட்டிமுதலிகள்** *katti-mudaligal,* பெ.(n.) கொங்கு நாட்டுக் குறுநில மன்னர்கள்; a chieftains of Kongu country. *'மங்கை வரோதயன் கட்டிமுதலி ஒன்றே'(இளமீசர் கோயில் கல்வெட்டு).*

*[கட்டி + முதலிகள்.]*

கோவை மாவட்டம் பவானி வட்டத்தில் உள்ள அமரகுந்தி என்னும் ஊரைத் தலைநகராக கொண்டு ஆண்டவர்கள். பவானி, திருச் செங்கோடு, தாரமங்கலம் போன்ற இடங்களில் கோயில் கட்டியுள்ளனர். தொடக்கத்தில் வாடாமாலை, வண்ணத்தடுக்கு இவர்களின் அரசு சின்னமாக இருந்தன. இவற்றுடன் வில், வேங்கை, இணைக்கயல் முதலியவற்றைச் சேர்த்துக் கொண்டனர். தாரமங்கலத்தில் உள்ள அம்மன் குளம் இவர்களின் கட்டட கலைக்குச் சான்று. கீழே சதுரமாயும், அதற்கும் மேலே எண்கோணமாயும் அதற்கடுத்து வட்டவடிவாமாயும் அமைந்தது அம்மன் குளம்.



கட்டிமுதலிகள் அரச இலச்சினை

**கட்டிமூதண்டம்** *katti-mūtandam,* பெ.(n.) கொடுக் காய்ப்புளி; malabar tamarind (சா.அக.).

*[கட்டி + மூதண்டம். கள் → கட்டி = திரண்டது. மூதண்டம் = முகடு, வளைந்தது. முள் நிறைந்த இம் மரத்தின் காய்கள் கொடுக்குப்போல் வளைந்து காணப்படும்.]*

**கட்டிமேய்-த்தல்** *katti-mēy-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. கால்நடைகளை ஓரிடத்தில் மேயச் செய்தல்; to take out cattle for pasture. 2. அடக்கி நடத்துதல்; to set limits to, prescribe bounds for. *'நரகங்களும் கட்டிமேய்க்கை தவிர்ந்து கோப்புக் குலைந்தது' (ஈடு. 52:1).*

*[கட்டி + மேய்-.]*

**கட்டிமை** *kattimai.* பெ.(n.) 1. இவறன்மை; miserliness. 2. கட்டுப்பாடு (யாழ்.அக.); agreement, compact.

*[கட்டு → கட்டிமை. கட்டு = இறுக்கம், சுருக்கம்.]*

**கட்டியக்காரன் ஆசிரமம்** *kattiya-k-kāraṉ-āśiramam,* பெ.(n.) இராமநாதபுரம் மாவட்டச் சிற்றூர்; a village in Ramanathapuram dt.

*[கட்டியக்காரன் + ஆசிரமம் – கட்டியக்காரன் ஆசிரமம்.]*

**கட்டியக்காரன்** *kattiya-k-kāraṉ,* பெ.(n.) ***கட்டியங்காரன்*** பார்க்க; see *kattiyaṅ-kāraṉ.*

**கட்டியக்கோல்** *kattiya-k-kōl,* பெ.(n.) கட்டியங் காரன் கையில் வைத்திருக்கும் ஒரு பக்கம் வளைந்த இருப்புக்கோல் (கோவை.); an iron stick bent on one end which is usually held in the right hand of *kattiyaṅkāraṉ.*

*[கட்டியம் + கோல்.]*

**கட்டியங்காரன்**[1] *kattiyaṅ-kāraṉ,* பெ.(n.) 1. முன் னுரைப் போன்; panegyrist, herald. 2. கூத்தில் வரும் கோமாளி; buffoon. *"கதமில் கட்டியங்காரர் பல்லோர்" (சேதுபு.விதூம.5).*

மறுவ. கட்டியக்காரன்

ம. கட்டியக்காரன்

*[கட்டியம் + காரன் – கட்டியங்காரன்.]*

அரசன் அரண்மனைக்கு வெளியே நகரிலும் நாட்டிலும் செல்லும்போதெல்லாம் அவனுடைய பரிவாரத்திற்கு முன் சென்று, அவன் வருகையைக் கூறி மக்களை வழியினின்றும் விலக்கு பவனுக்குக் கட்டியங்காரன் என்று பெயர் (பழந்தமிழாட்சி, 30.).

**கட்டியங்காரன்**[2] *kattiyaṅ-kāraṉ,* பெ.(n.) சீவக சிந்தாமணியின் காப்பியத் தலைவன் சீவகனின் தந்தை சச்சந்தனிடம் அமைச்சனா யிருந்து சூழ்ச்சி யால் அரசனைக் கொன்று அரியணை ஏறியவனும், இறுதியில் சீவகனால் கொலையுண்ட வனுமாகிய கட்டியங்காரன்; name of the prime minister of king Caccantan, who treacherously killed his master and usurped his throne but who was subsequently slain by Caccantan's son šivagāṉ, the hero of Šivaga-cintāmaṇi.

*[கட்டியம் + காரன்.]*

**கட்டியங்கூறு-தல்** *kattiya-ṅ-kūṟu-,* 7 செ.குன்றாவி. (v.t.) 1. மரபுவழிப் பெருமை கூறுதல்; to recite a panegyric. *"கட்டியங் கூறுஞ்சீர்க் கலைசையே" (கலைசைச்.45).* 2. வருகைபற்றிய முன்னறிவிப்புச்

செய்தல்; to announce the arrival of somebody or something. தவளையின் கத்தல் பெய்யும் மழைக்குக் கட்டியங் கூறுவது போலிருந்தது(உ.வ.).

*[கட்டு → கட்டியம் + கூறுதல். கட்டியம் = கட்டுரைத்தல், முறைப்பட எடுத்துரைத்தல். அரசர், திருமடத்துத் தலைவர் உலாவரும்பொழுது கட்டியம் கூறுதல் பழந்தமிழ் மரபு. இறைவன் திருவீதியுலா வருதலைத் திருச்சின்னம் மூலம் ஒலியெழுப்பி அறிவித்தலுமுண்டு.]*

**கட்டியசொல்** *kaṭṭiya-šol,* பெ.(n.) பொருளில்லாமற் படைத்துக்கொண்ட தொடர்மொழி (பிர.விவே.19, உரை); coined compound word that refers to something which never exists, as முயற்கோடு.

*[கட்டு → கட்டிய (பெ.எ.) + சொல். வலிந்து கட்டி எடுத்துரைக்கும் சொல்.]*

**கட்டியடி-த்தல்** *kaṭṭi-y-aḍi-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. தண்டனையாகக் கட்டிவைத் தடித்தல்; flog a person after binding him with a post. அவன் திருடியதற்காகக் கட்டியடிக்கப்பட்டான்(உ.வ.). 2. மாட்டை ஏரில் அல்லது வண்டியில் பூட்டி ஓட்டுதல்; to yoke the bulls to the plough for ploughing, or in a cart.

*[கட்டி + அடி.]*

**கட்டியடுப்பு**[1] *kaṭṭi-y-aḍuppu,* பெ.(n.) மண்கட்டியாலான அடுப்பு; rectangular earthen oven in two parts, like the figure made by two brackets.

*[கட்டி + அடுப்பு.]*

**கட்டியடுப்பு : நடுவில் ஆசாக, அம்மிக்குழவியை வைத்துக் களிமண்ணால் மூடிச் சற்று இறுகியதும் அம்மிக்குழவியை எடுத்துவிட்டு இரண்டாக அறுத்துக் குமிழ் வைத்துச் செய்யப்படும் பிறைக்குறி அடைப்புப் போன்ற அடுப்பு வகை [தஞ்சை].**



கட்டியடுப்பு[2]

**கட்டியடுப்பு**[2] *kaṭṭi-y-aḍuppu,* பெ.(n.) கிளையடுப்பு பார்க்க; see *kiḷai-aḍuppu.*

*[கட்டி + அடுப்பு.]*

**கட்டியப்பம்** *kaṭṭi-y-appam,* பெ.(n.) அரிசியை இடித்து அதில் தேங்காய்த் துருவல், உப்பு முதலியவற்றைச் சேர்த்து உருட்டி ஆவியில் வேகவைக்கும் ஒருவகைத் தின்பண்டம்; a kind of cake baked by steam, with the ingredients of rice, scraped coconut, salt etc.

ம. கட்டியப்பம்

*[கட்டி + அப்பம்.]*

**கட்டியம்** *kaṭṭiyam,* பெ.(n.) 1. வேந்தர், தெய்வம் முதலியோரைக் குறித்துக் கூறும் புகழ்த்தொடர்; panegyric sung before a king; praises chanted before an idol. *"இருடியோர்கள் கட்டியம் பாட" (திருப்பு.730).* 2. கூத்துவகை (யாழ்.அக.); a kind of dancing. 3. சிற்றிலக்கிய வகையுளொன்று (சிற்றிலக். அக.); a kind of prabantham.

ம. கட்டியம்

*[கட்டு + இயம் – கட்டியம். கட்டியம் = கட்டுரைத்தல், முறைப்பட எடுத்துரைத்தல், புகழ்ந்துரைத்தல். கட்டு = செறிவு, ஒழுங்குமுறை. இயம் – சொல்லாக்க ஈறு. ஒ.நோ. கறுவியம் = தீராப்பகை.]*

**கட்டியர்** *kaṭṭiyar,* பெ.(n.) தமிழ்நாட்டின் மேற்பால் ஆட்சிபுரிந்த ஒருசார் சிற்றரச வகுப்பினர்; a clan of the royal dynasty which ruled over the western part of Tamil Nadu. *"பங்களர் கங்கர் பல்வேற் கட்டியர்" (சிலப். 25: 157).*

*[கட்டி → கட்டியர். கட்டு = திரட்சி, கும்பல், குழு.]*

**கட்டியரக்கு** *kaṭṭi-y-arakku,* பெ.(n.) அவலரக்கை உருக்கிக் கட்டியாகத் திரட்டிய அரக்கு; seed-lac melted into a mass (சா.அக.).

*[கட்டி + அரக்கு.]*

**கட்டியரிதாரம்** *kaṭṭi-y-aritāram,* பெ.(n.) கட்டியாக உள்ள முகஅழகு பூச்சுப்பொடி; orpiment in lumps (சா.அக.).

*[கட்டி + அரிதாரம்.]*

**கட்டியள-த்தல்** *kaṭṭi-y-aḷa-,* 3 செ.குன்றாவி.(v.t.) கூடுதலாகத் தவசம் வருமாறு படிக்குமேல் விரலை

வைத்து அளத்தல்; to measure the grains by keeping the fingers or palm over and above the actual measurement; fraudulent measurement. *"கனக்கும் சிறப்பமையக் கட்டியளப்பார் கங்காணப் படிபண்ணைக் காரனார் முன்னே" (முக்கூடற். 139).*

*[கட்டி + அள.]*

**கட்டியன்** *kaṭṭiyaṉ*, பெ.(n.) **கட்டியக்காரன்** பார்க்க see *kaṭṭiya-k-kāraṉ*. *"கட்டியரை நோக்கி ... சேனாபதி களுக்குஞ் சொல்லுமென்றான்" (கூளப்ப.41).*

ம. கட்டியன். (கூத்தில் வரும் கோமாளி, கேளிக்கைக் காரன், வேடிக்கைக்காரன்.)

*[கட்டு → கட்டியம் → கட்டியன்.]*

**கட்டியாக்கு–தல்** *kaṭṭi-y-ākku-*, 5.செ.குன்றாவி.(v.t.) 1. உறையச் செய்தல்; to solidify or to condense. 2. தோய்த்தல்; to curdle as is done to milk. 3. கட்டியாகச் செய்தல்; to make into a lump. (சா.அக.).

*[கட்டி + ஆக்கு → ஆகு.]*

**கட்டியாகு–தல்** *katti-y-āku-*, 6 செ.கு.வி.(v.i.) இறுகுதல்; hardening.

*[கட்டி + ஆகு.]*

ஒரு நீர்மம் முழுமையாக இறுகுதல் கட்டியாதலாகும். சிறு சிறு பகுதிகளாக இறுகுதல் கட்டி தட்டுதலாகும். கட்டிதட்டுதல் கட்டிபடுதல் என்றும் குறிக்கப்படும்.

**கட்டியாரம்**[1] *kaṭṭi-y-āram*, பெ.(n.) 1. செறிவு (யாழ் அக.); denseness. 2. கடுமை; hardness (த.சொ.அ).

*[கள் = செறிவு, நெருக்கம், கட்டி + ஆரம். ஆரம் = சொ.ஆ.ஈறு. ஒ.நோ. ஒட்டாரம்.]*

**கட்டியாரம்**[2] *kaṭṭi-y-āram*, பெ.(n.) நெருங்கத் தொடுத்த பூமாலை; thickly woven garland of flowers.

*[கட்டி + ஆரம். ஆரம் = பூமாலை. கள் → கட்டு → கட்டி = நெருக்கித் தொடுத்தது.]*

**கட்டியாள்(ளு)–தல்** *kaṭṭi-y-āḷu-*, 16 செ.குன்றாவி.(v.t.) அடக்கியாளுதல்; to rule. ஆட்சியில் இல்லாத போதும் கட்சியைப் பல்லாண்டு கட்டியாண்ட பெருமை அவருக்குண்டு (உ.வ.).

*[கட்டி + ஆள்.]*

**கட்டியிழு–த்தல்** *kaṭṭi-y-iḻu-*, 4 செ.குன்றாவி.(v.t.) 1.பழுதுபட்ட படகு, வண்டி முதலியவற்றை இழுத்தல்; to toe. 2. பெரிய பொருள்களைக் கட்டியிழுத்தல்; to pull heavy weight. 3. கடமையை வலிந்து ஏற்றுக் கொள்ளுதல்; to take up a responsibility voluntarily. தந்தை இறந்தபின் இவன்தான் அக் குடும்பத் தைக் கட்டியிழுத்து வருகிறான் (உ.வ.).

*[கட்டி + இழு.]*

**கட்டியிளி** *kaṭṭi-y-iḷi*, பெ.(n.) திண்ணமான தோலுடைய கடலுயிரி (செங்கை மீனவ.); thick skined sea creature.

*[கட்டி + இளி. இளி = இழிந்தது, தீமை தரும் உயிரி.]*

**கட்டியுங்கசடும்** *kaṭṭiyuṅ-gaśaḍum*, பெ.(n.) ***கட்டி முட்டி***[2] பார்க்க; see *kaṭṭi-muṭṭi* (சா.அக.).

*[கட்டி + உம் + கசடு + உம்.]*

**கட்டியுங்கரளையும்** *kaṭṭiyuṅkaraḷaiyum*, பெ.(n.) ***கட்டிமுட்டி*** பார்க்க; see *kaṭṭi-muṭṭi* (சா.அக.).

*[கட்டி + உம் + கரளை + உம்.]*

**கட்டியுடை**[1]**–த்தல்** *kaṭṭi-y-uḍai-*, 4 செ.குன்றாவி.(v.t.) 1. கட்டியை உடைத்தல்; to break clods. *வயலில் கட்டியுடைக்கச் சிலர் தேவை.* 2. உடலிற் றோன்றும் கட்டிகளையுடைத்தல்; to remove as of abscess.

*[கட்டி + உடை.]*

**கட்டியுடை**[2]**–தல்** *kaṭṭi-y-uḍai-*, 2. செ.கு.வி.(v.i.) புண் கட்டி வாய் திறத்தல்; to open as of an abscess. *காலிலிருந்த கட்டியுடைந்ததால் வலி குறைந்தது (உ.வ.).* 2. கட்டியாகத் திரண்டு பிறகு உடைதல்; to become a clod and then break (சா.அக.).

*[கட்டி + உடை.]*

**கட்டியெரு** *kaṭṭi-y-eru*, பெ.(n.) கட்டியாகிய சாணி (குமரேச.சத.37.); animal manure.

*[கட்டி + எரு.]*

**கட்டியெழும்பு–தல்** *kaṭṭi-y-eḻumbu-*, 5 செ.கு.வி.(v.i.) புண்கட்டி புடைகொண்டு மேற்கிளம்பல்; to grow as point of an abscess (சா.அக.).

*[கட்டி + எழும்பு.]*

**கட்டிருக்கை** *kaṭṭirukkai* பெ.(n.) ஒகநிலை வகை; a kind of yogic posture.

*[கட்டு + இருக்கை.]*

**கட்டில்**[1] *kaṭṭil*, பெ.(n.) 1. கால் கோத்த நீளிருக்கை, துயிலணை (மஞ்சம்); cot, bedstead, couch, sofa. *"பல்வினைப் பவளப் பாய்காற் பசுமணி யிழிகை வம்பார் நல்லகில் விம்மு கட்டில்" (சீவக. 558). 'ஒட்டினால் தொட்டிலும் கொள்ளும் ஒட்டாவிட்டால் கட்டிலும் கொள்ளாது' (பழ.).* 2. அரியணை; throne. *"கட்டில் வீறுபெற்று மறந்த மன்னன்போல" (குறுந். 225).*

**ம.** கட்டில்; **கோத.** கட்ள்; **குட.** கட்டி; **தெ.** கட்லி; **கோண்.** கடூல், கட்டூல்; **குவி.** கதெலி, குதெலி; **பர்.** கடெய; **கூ.** கடெ; **குரு.** கடீ; **மா.** கடெ, கடி; **பிரா.** கட்.

**Skt.** katvā, khaṭṭi (abier) H., **Nep.** khaṭiyā; **Ori.** khaṭiā; **E.** Cot.; **Port.** katal; **Mal.** katil.

**த.** கட்டில் > **Skt.** katvā.

*[கட்டு + இல் – கட்டில் = கட்டப்பட்டது. 'இல்' சொல்லாக்க ஈறு.]*

கட்டில் என்பது இருக்கை. அரசனது கட்டில் 'அரசு கட்டில்' என்றும் 'அரசிருக்கை' என்றும் அழைக்கப்பெறும். அதன் கால்கள் அரி [சிங்க] வடிவாய் அமைத்திருந்ததனால், அதற்கு அரியணை [சிங்காசனம்] என்றும் பெயர். தலைநகரிலும் பிற பாடிவீடுகளிலும் அரசனுக்கு அரியணையுண்டு. தலைநகரில், அரசன் அரசு வீற்றிருக்கும் ஓலக்க மண்டபத்திலும், (Durbar Hall) அமைச்சரொடு சூழும் சூழ்வினை மண்டபத்திலும், அறங்கூறும் மன்றத்திலும் ஒவ்வோர் அரியணை இருக்கும்.

அரியணைகட்குச் சிறப்புப்பெயரிட்டு வழங்குவது மரபு. சடாவர்மன் குலசேகர பாண்டியனுக்கு மதுரையில் 'மழவராயன்', 'கலிங்கராயன்', 'முனையதரையன்' என மூன்று அரியணைகளும், விக்கிரமபாண்டியனுக்கு மதுரையில் 'முனையதரையன்' என்னும் அரியணையும், இராசேந்திரனுக்கு 'மலைய தரையன்' என்னும் அரியணையும் இருந்தன. [பாவாணர்: பழந்தமிழாட்சி, பக். 22, 23].

அரசனுடைய படைக்கலங்களை வைப்பதற்கும் முரசினை வைப்பதற்கும் கட்டில்கள் உண்டு. அது படைக்கலக்கட்டில் எனப்பெறும். [பழந்தமிழாட்சி , 50].

**கட்டில்**[2] *kaṭṭil*, பெ.(n.) பாடை; bier. *"கட்டிலேற்றிக் கைதொழூஉ" (ஞானா. 6).*

*[கட்டு + இல்.]*

**கட்டில்நாடா** *kaṭṭil-nāḍā*, பெ.(n.) கச்சுக்கட்டிலுக்குரிய அகன்ற நூலிழைப் பட்டை; broad tape for cots.

*[கட்டில் + நாடா.]*

**கட்டிலெய்து–தல்** *kaṭṭil-eydu-*, 10 செ.கு.வி.(v.i.) அரியணை ஏறுதல்; to ascend the throne. *'பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனாற் பிணியிருந்த யானைக்கட்சேய் மாந்தரஞ்சேர லிரும்பொறை வலிதிற்போய்க் கட்டிலெய் தினானைக் குறுங்கோழியூர் கிழார் பாடியது' (புறநா.17, உரைத்தலைப்பு).*

*[கட்டில் + எய்து. கட்டில் = அரசுக் கட்டில், அரியணை.]*

**கட்டிலேறு**[1]**–தல்** *kaṭṭilēṟu-*, 5 செ.கு.வி.(v.i.) அரசுப் பொறுப்பேற்றல்; to ascend the throne. *இவர் கட்டிலேறினார் என்பது தொழிலிற் பிரிந்த பெண்ணொழி மிகுசொல் (தொல். சொல். 50, சேனா.உரை).*

*[கட்டில் + ஏறு–.]*

**கட்டிலேறு**[2]**–தல்** *kaṭṭilēṟu-* 5 செ.கு.வி.(v.i.) மணவறைக் கட்டிலிற் பள்ளிகொள்ளுதல்; to consummate a marriage. *"வணங்கப்பட்ட சின்னுதற் பதுமா பதியொடு கட்டி லேறினனாற் கருதியது முடித்தென்" (பெருங் . மகத. 22:285).*

*[கட்டில் + ஏறு–.]*

**கட்டிவயல்** *kaṭṭi-vayal*, பெ.(n.) கும்பகோணம் வட்டம் திருவிடைமருதூர் அருகில் உள்ள ஒரூர்; a village near Thiruvidaimarudur in Kumbakonam taluk. *'பாண்டி நாட்டு முத்தூற்றுக் கூற்றத்துக் கட்டிவயல்' (S.I.I. 23:266).*

*[கட்டி + வயல். கட்டி என்பவனின் பெயரிலமைந்த ஊர்.]*

**கட்டிவராகன்** *kaṭṭi-varāgaṉ*, பெ.(n.) ஒரு பழைய நாணயம்; a gold coin, the varāgaṉ. *"கட்டிலோ மெத்தையோ கட்டிவராகனோ" (குற்றா.குற. 72 : 22).*

**ம.** கட்டி வராகன்

*[கட்டி*[1] *+ வராகன். கட்டி = பொன். வராகம் = பன்றி. வராகம் → வராகன். பன்றி இலச்சினை பொறிக்கப்பட்ட நாணயம்.]*

**கட்டிவளர்–த்தல்** *katti-valar-,* 4 செ.கு.வி. (v.i.) பாதுகாத்து முன்னேறச்செய்தல்; to nurture. *மூவேந்தரும் தமிழைக் கட்டிவளர்த்தனர்.*

*[கட்டி + வளர்-.]*

**கட்டிவா(வரு)–தல்** *katti-vā-,* 18 செ.கு.வி. (v.i.) போதியதாதல்; to be enough; to be affordable. வாங்குகிற சம்பளம் வீட்டுச் செலவுக்குக் கட்டிவர வில்லை (உ.வ.). 2. வருவாய் மிக வருதல்; to be profitable, as a transaction. 3. கட்டுபடியாதல்; be reasonable. நீங்கள் கேட்கும் விலை எனக்குக் கட்டி வராது (உ.வ.).

*[கட்டு → கட்டி + வா-.]*

**கட்டிவாங்கிக்கொள்(ளு)–தல்** *katti-vāṅgi-k-kol-,* 10 செ.குன்றாவி.(v.t.) அரையாப்புக் கட்டியாகிய பால்வினை நோய்க்கு ஆளாதல்; to contact a venereal bubo. *கண்டவளிடம் போனதால் கட்டி வாங்கிக் கொண்டான்.*

*[கட்டி + வாங்கி + கொள்-. கொள் (து.வி.) = கட்டி, இங்கு அரையாப்புக்கட்டியைக் குறித்து நின்றது. வாங்கிக் கொள்தலாவது இந் நோய் உள்ளோரிடம் கூடுவதால் தாமே பெறுவதாகும். அரையாப்புக்கட்டி தொடை இடுக்கில் அல்லது கவட்டியில் நெறிகள் பெருத்துக் கட்டியைப்போற் காணும் ஒருவகைப் புண்நோய். **அரையாப்பு** பார்க்க; see arai-y-āppu.]*

**கட்டிவிடு[1]–தல்** *katti-vidu-,* 18 செ.குன்றாவி.(v.t.) 1. கட்டடம் முதலியன கட்டுதல்; to build up. 2. ஒன்றாகச் சேர்த்துக் கட்டுதல்; to tie up. 3. சிப்பங் கட்டுதல்; to bundle up.

*[கட்டி + விடு-.]*

**கட்டிவிடு[2]–தல்** *katti-vidu-,* 17 செ.குன்றாவி. (v.t.) செலுத்துதல்; to pay up. *தேர்வுக்கட்டணத்தை நாளைக்குள் கட்டிவிடு (உ.வ.).*

*[கட்டி + விடு-.]*

**கட்டிவிடு[3]–தல்** *katti-vidu-,* 18 செ.குன்றாவி.(v.t.) 1. விலக்கி வைத்தல்; to out caste; to deprive a person of the service of village servants. ஊர்ப்பஞ்சா யத்தை மதியாதவன் வீட்டிற்கு ஊர்ப் பணியாளர்கள் செல்ல வேண்டாவெனக் கட்டிவிட்டார்கள்(உ.வ.). 2. ஒன்றின் செயற்றிறனை அடக்குதல்; to control one's vigouressness. அவன் மேல் ஏவிவிட்ட ஆவியைக் கட்டிவிடச்சொல் (உ.வ.).

*[கட்டி + விடு-.]*

**கட்டிவிடு[4]–தல்** *katti-vidu-,* 18 செ.குன்றாவி.(v.t.) பொய்க் குறளையுண்டாக்குதல்; to spread a false rumour. *அவனையும் அவளையும் இணைத்துக் கதை கட்டிவிட்டார்கள் (உ.வ.).*

மறுவ. குறளை பேசுதல்

*[கட்டி + விடு-.]*

**கட்டிவிழு[1]–தல்** *katti-vilu-,* 2 செ.கு.வி.(v.i.) கருவழிந்து விழுதல் (வின்.); to suffer a miscarriage.

*[கட்டி + விழு-.]*

**கட்டிவிழு[2]–தல்** *katti-vilu-,* 2 செ.கு.வி.(v.i.) வயிற்றில் கட்டியுண்டாதல்; to be enlarged as the spleen.

*[கட்டி + விழு-. இங்கு விழுதலாவது தோன்றுதலாகும்.]*

**கட்டிவெள்ளி** *katti-velli,* பெ.(n.) மாசு நீக்கிய வெள்ளி; refined silver; pure silver (சா.அக.).

*[கட்டி + வெள்ளி.]*

**கட்டிவை[1]–த்தல்** *katti-vai-,* 4 செ.குன்றாவி. (v.t.) பிணைத்து வைத்தல்; to tie. 2. வரம்புக்குள் அடக்கி வைத்தல்; to bind within a limit.

*[கட்டி+ வை-.]*

**கட்டிவை[2]–த்தல்** *katti-vai-,* 4 செ.குன்றாவி.(v.t.) ***கட்டிக்கொடு–த்தல்*** பார்க்க; see *katti-k-kodu-.*

*[கட்டி + வை-.]*

**கட்டிழைக்கச்சை** *kattilai-k-kaccai,* பெ.(n.) ஆடை விளிம்பில் இணைக்கப்படும் இழைக்கச்சை; galloon.

*[கட்டு + இழை + கச்சை.]*

**கட்டிளம்** *kattilam,* பெ.எ.(adj.) இளமை நிறைந்த தன்மை; youthful. *கட்டிளங்காளை, கட்டிளம் பெண் (உ.வ.).*

*[கட்டு + இளம்.]*

**கட்டிளமை** *kattilamai,* பெ.(n.) இளமைப்பருவம்; vigorous, virile youth.

*[கட்டு + இளமை. கட்டு = திரட்சி, மிகுதி.]*

**கட்டினலிங்கம்** *kattinalingam,* பெ.(n.) மூலிகைகளைக் கொண்டாவது காரச் சரக்குகளைக் கொண்டாவது கட்டிய மருந்து; vermilion consolidated with the aid of drugs or acids and salts, consolidated vermilion (சா.அக.).

*[கட்டின+லிங்கம் (கட்டி).]*

கட்டினலிங்கம் இருவகைப்படும். மருத்துவத்திற்காகப் பயன்படுத்த வேண்டி அணியம் செய்ததை அரைக்கட்டு இலிங்கமென்றும், நெருப்பிற்கு ஓடாதபடி கட்டியதை ஊதைக்குப் பயன்படுத்தும் முழுக்கட்டு இலிங்கமென்றும் கூறுவர்.

**கட்டினவள்** *kattinaval,* பெ.(n.) திருமணவுறவால் ஓர் ஆணுடன் வாழும் உரிமை பெற்றவள்; a woman who is having right to live with a man by marriage, wife. கட்டினவளைக் கைவிடல் முறையோ?(உ.வ.).

**மறுவ.** இல்லவள், இல்லாள், கற்பினாள், கிழத்தி, குடும்பினி, தடை, துணைவி, நாயகி, மணவாட்டி, மனைவி, மனையாட்டி, வாழ்க்கைத்துணை, விருத்தம்.

*[கட்டு + இன் + அவள். தாலி கட்டிக்கொண்டவள்.]*

**கட்டினவன்** *kattinavan,* பெ.(n.) திருமணவுறவால் ஒரு பெண்ணுடன் வாழும் உரிமை பெற்றவன்; a man who is having right to live with a woman by marriage, husband கட்டினவனே கைவிட்டால், காப்பார் யாரோ? (உ.வ.).

**மறுவ.** உரியோன், கணவன், கேள்வன், கொண்கன், கொழுநன், தலைவன், துணைவன், மணவாளன், வல்லவன்.

**ம.** கெட்டியவன்

*[கட்டு + இன் + அவன். (தாலி கட்டியவன்).]*

**கட்டீறு** *kattiru,* பெ.(n.) ஒரு சொல்லுடன் சேர்ந்தே வரும் தன்மையுடைய சொல்லுறுப்பு; bound morpheme.

*[கட்டு + ஈறு.]*

வேற்றுமை உருபுகள், எண்ணும்மை, தேற்றேகாரம் போன்றன சொல்லுடன் இணைந்துமட்டும் வரும் தன்மையன. இவையனைத்தும் முன்னர் முழுச் சொற்களாய் இருந்து காலவோட்டத்தில் சுருங்கி ஈறு நிலையில் நின்றுள்ளன என்க. பலவிடங்களில் இவற்றின் முந்தைய தன்மைகளை அறியவியலாத அளவிற்கு இவை மாற்றம் பெற்று நிற்கின்றன.

**கட்டு[1]–தல்** *kattu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. பிணைத்தல்; to tie, to bind, fasten, shackle; *"நாரினாற் கட்டி" (நாலடி.153).* 2. அமைத்தல்; to build; construct, erect. *'திருமணம் செய்து பார்; வீட்டைக் கட்டிப்பார்' (பழ.).* 3. பதித்தல்; to fix. அட்டிகைக்குக் கல்கட்டிக் கொடு(உ.வ.). 4. தோற்றுவித்தல்; to establish as a theory. *"கட்டிய மெய்ந்நிலை காணா வெகுளியும்" (திரிகடு. 65).* 5. தழுவுதல்; to hug, embrace. *"கால்கள் கால்களோடு கட்டவும்" (பாரத. வேத். 60).* 6. தாலிபூட்டி மணத்தல்; to marry. அத்தைமகளை இவன் கட்டிக்கொள்வான்(உ.வ.). 7. இறுகச் செய்தல்; to harden, condense, consolidate. *"கட்டுச்சரக் கெல்லாம்" (பணவிடு. 226).*

**தெ., க.** கட்டு; **ம.** கெட்டு; **கோத.** கட்; **து., கொர.** கட்டி; குட. கேட்; **கொலா.** கட்; **நா., கோண்.** கட்ட்; **பர்.** கட்ட், கட், கட.

**Egypt.** q-d; **Hung.** kōto; **Ost.** kattem; **Syr.** kuta; **Fin.** keitt; **Lap.** kareto; **Si.** kuda.

*[கள் → கட்டு → கட்டு-.]*

**கட்டு[2]–தல்** *kattu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. பேணுதல்; to support; sustain. *'நான் என்னுடம்பைக் கட்டிக்கொண்டு கிடக்கவோ' (ஈடு. 4.8:9).* 2. வெல்லுதல்; to win, checkmate, overcome. 3. அடக்குதல்; to control. இவன் ஆவியைக் கட்டுவதில் வல்லவன்(உ.வ.). 4. ஒரு வரம்பிற்குள் அடக்கிவைத்தல்; to thrust into a limited space. அனைத்துத் தட்டுமுட்டுச் சாமான்களையும் இந்தப் பெட்டியிலேயே கட்டிவை (உ.வ.).

*[கள் → கட்டு.]*

**கட்டு[3]–தல்** *kattu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. சூடுதல்; to tie on, adorn with. *"கட்டுதிர் கோதை" (கல்லா.10).* 2. உடுத்தல்; to wear, to be dressed in, to put on as clothes. *"கட்டப் புடவையின்றி" (பணவிடு. 160).*

*[கள்→ கட்டு.]*

**கட்டு[4]–தல்** *kattu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1.தடைசெய்தல்; to bind by spells, magic. *"கரடி வெம்புலி வாயையும் கட்டலாம்" (தாயு.தேசோ.8).* 2. மூடுதல்; to shut up, close up. நேரமாகிவிட்டது கடையைக் கட்டு (உ.வ.). 3. விலக்குதல்; to make aloof, remove. பஞ்சாயத்திற்குக் கட்டுப்படாததால் ஊர்ப் பணியாளர்களைக் கட்டிவிட்டார்கள் (உ.வ.).

[குள் → குட்டு → கட்டு → கட்டுதல் = தடுத்தல், வழியிற் குறுக்காகச் செல்லுதல். "காடை கட்டினால் பாடை கட்டும்" என்பது பழமொழி (மு.தா.93)].

**கட்டு[5]–தல்** *kaṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. செலுத்துதல்; to remit; pay up. தேர்வுக்கட்டணம் கட்டியாயிற்று (உ.வ.). 2. பொருள் சேர்த்தல்; to acquire. *'இவர் கவிபாடிக் கட்டின யானை' (ஈடு. 3.9:1).* 3. மொத்தமாகச் சேர்த்தல்; to store, gather, together. நெல் கிடைக்கும்போது வாங்கிக்கட்டு (உ.வ.). 4. தேக்குதல்; to fill, as a tank with water. *ஒடைநீரைக் குளத்தில் கட்டு (உ.வ.).* 5. சோறு கட்டிக் கொடுத்தல்; to prepare packed meals for tour etc. 6. அயலூருக்குப் பண்டம் அனுப்புதல்; to export. 7. சுற்றுதல்; to wander. உலகத்தைக் கட்டி வந்தவன்(உ.வ.).

*[கள் → கட்டு-.]*

**கட்டு[6]–தல்** *kaṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) செய்யுள் இயற்றுதல்; to compose, as verse. கவிஞன் கட்டிய பாட்டு (உ.வ.). 2. பொய்யாகப் புனைதல்; to fabricate; contrive, invent. *"பறிதலையவர்கள் கட்டிய மொழி" (தேவா. 553:10).*

*[கள் → கட்டு-.]*

**கட்டு[7]–தல்** *kaṭṭu,* 5 செ.கு.வி.(v.i.) 1. குறி சொல்லுதல்; foretell; to prophecy. 2. கெட்ட குறியாதல்; to be a bad omen, to portend misfortune. கட்டுகாடை கட்டிற்று (உ.வ.).

*[கள் → கட்டு-.]*

**கட்டு[8]–தல்** *kaṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. பிடுங்குதல்; to pluck, to pull off. *"அடாத வான்களைக் கட்டினர்" (கந்தபு. திருநாட்டு.15).*

*[கள் → கட்டு-.]*

**கட்டு[9]–தல்** *kaṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. இறுகுதல்; to harden, consolidate, form, as concretions; to congeal, coagulate. நெறி கட்டிற்று (உ.வ.). 2. தொண்டை கட்டுதல்; to be congested, as the throat in acute pharyngitis. 3. புண்கட்டி திரளுதல்; to swell, as a boil, or a tumour. 4. முகில் மூடுதல்; to overspread as clouds. மேகங் கட்டியிருக்கிறது (உ.வ.). 5. செலவோடு வரவு பொருந்துதல்; to be worth while, just paying. இந்த விலைக்கு விற்றால் கட்டும் (உ.வ.). 6. இணையாதல்; to compare with, to be equal to. அதற்கு இது கட்டாது (உ.வ.). 7. கையை மடக்கிவைத்தல்; fold. கையைக் கட்டிக்கொண்டு நின்றான் (உ.வ.). 8. பிணைத்தல், பூட்டுதல்; yoke. வண்டி கட்டிக்கொண்டு ஊருக்குப் போனான் (உ.வ.).

*[கள் → கட்டு → கட்டு–தல்.]*

**கட்டு[10]** *kaṭṭu,* பெ.(n.) 1. பிணைப்பு; tie, band, fastening, ligature. *"கட்டவிழ்தார் வாட்கலியன்" (அட்ட நூற்றெட்.காப்பு).* 2. கட்டடம்; building, structure. எங்கள் மனையில் கட்டுவேலை நடக்கிறது (உ.வ.). 3. மூட்டை; bundle, packet, pack, bale. *'கட்டோடு போனால் கனத்தோடு வரலாம்' (பழ.).* 4. முறைமன்றத்தில் கட்சிக்காரருடைய வழக்கேடுகளின் தொகுதி; bundle of paper pertaining to a case, as of a client. இந்தத் தாளைக் கட்டில் சேர்த்துவிடு (உ.வ.). 5. உறுதி; strength; firmness, certainty. *"கட்டுடைச் செல்வக் காப்புடைத் தாக" (மணிமே. 20:8).* 6. உடற்கட்டு; robust build, strong constitution. *"கட்டுடைச் சூருடல்" (கல்லா. 8:4).* 7. அணைக்கட்டு; dam, ridge, causeway. வெள்ளம் பெருகியதால் கட்டு உடைந்தது (உ.வ.). 8. புண்கட்டி; abscess, boil, tumour. 9. அஞ்சற்கட்டு; postal bag. கட்டு வந்துவிட்டதா (உ.வ.). 10. அஞ்சல்; post. கட்டு எடுத்தாயிற்றா?(உ.வ.).

ம. கெட்டு

*[கள்→ கடு → கட்டு = இணைத்தல், சேர்த்தல்.]*

**கட்டு[11]** *kaṭṭu,* பெ.(n.) 1. கட்டுப்பாடு; bounds, regulation of society, community law. அவன் கட்டுக்கு அடங்காத கயவாளி (உ.வ.). 2. ஆணை; commandment. *"கட்டுடைக் காவலிற் காமர் கன்னியே", (சீவக.98).* 3. கற்பிக்கை (கல்லா.8.உரை); direction, instruction. 4. உறவின் கட்டு; social relationship, family affinity. கட்டும் கனமுமாயிருந்தால் எல்லோரும் வருவர் (உ.வ.). 5. திருமணம்; marriage. அவனுக்கு ஒரு கட்டுப் போடாதவரை அடங்க மாட்டான் (உ.வ.). 6. பற்று, பாசம்; bond, tie, attachment. *"கட்டறுத்துனை ஆண்டு கண்ணார நீறு இட்ட அன்பரொடு"* (திரு வாச.5:49). 7. மதிப்புரவு; decorum. *"கற்புடையாட்டி இழந்தது கட்டே" (திவ்.திருவாய். 6.6:10).* 8. காவல்; guard, sentry, watch, patrol. *"மதுவனத்தைக் கட்டழித்திட்டது" (கம்பரா. திருவடி.18).* 9. அரண்; fortification, protection, defence. *"கட்டவை மூன்றும் எரித்த பிரான்" (தேவா. 386:7).* 10. வண்டிச் சக்கர

வட்டையின் மேலிருக்கும் இரும்புப்பட்டை; steel tyre of a cart wheel. வண்டிக்குக் கட்டுவிடக் கன்னார் கூலி மிக அதிகம் (உ.வ.). 11. மலைப்பக்கம்; side of a mountain. 12. வளைப்பு; surrounding, encirclement, forcing into a corner as in chess. *"தெறுகட் டழிய" (திருக்கோ.313).*

*[கள் → கடு → கட்டு.]*

**கட்டு**[12] *kattu,* பெ.(n.) 1. கரை; bank, shore. 2. வகுப்பு; class, section. *"கட்டமை நீதி தன்மேல்" (சீவக.1145).* 3. மிகுதி (திருக்கோ.303 உரை); abundance, plenty. 4. முழுமை; whole, entire. *'ஆசரித்த தெய்வ மெல்லாம் கட்டோடே மாண்டது' (பழ.).* 5. கிளை; branch.

**கோண்.** கட்டா; **கொர.** கணட்ட; **குற.** கட்டு; **கசபா.** கட்டி; **Mar.** kattha.

*[கள் → கடு → கட்டு.]*

**கட்டு**[13] *kattu,* பெ.(n.) 1. நிகழ்வதைச் சொல்லும் குறி; divination, foretelling events. *"கட்டினும் கழங்கினும்" (தொல்.பொருள்.115).* 2. பொய்யுரை; fabrication, false-hood, invention. *"கருமங் கட்டளையென்றால் கட்டதோ" (கம்பரா. கிட். அரசி.16).* 3. அச்சம்; fear. *"கழிகட் டிரவின் வரல்" (திருக்கோ. 255).*

*[கள் → கடு → கட்டு.]*

**கட்டு**[14] *kattu,* பெ.(n.) தளம், வீட்டின் பகுதி; apartment in a house. சமையற்கட்டுத் தூய்மையாக இருக்கவேண்டும்.

*[கள் → கட்டு = கட்டப்பட்ட இடம்.]*

உட்கட்டு, சமையற்கட்டு, சுற்றுக்கட்டு, தாழ்வாரக்கட்டு, நடைக்கட்டு, முதல்கட்டு, இரண்டாம் கட்டு ஆகிய சொற்களில் 'கட்டு' பின்னொட்டாய் அமைந்து முறையே வீட்டின் உட்பகுதி, சமையலறை, சுற்றுப்புறம், தாழ்வாரப்பகுதி, நடைபாதை, முதல்பகுதி, இரண்டாம் பகுதி ஆகியவற்றைக் குறிக்கின்றது. 'படிக்கட்டு' போன்றும் வரும்.

**கட்டு**[15] *kattu,* பெ.(n.) வடிதெளிவு; filtered liquid, a decoction. *"பயறு வடித்த கட்டை... சட்டியிலே ஊற்றுவாள்" (எங்களூர், 129).*

*[கள் → கண்டு → கட்டு = கசண்டு நீங்கிய தெளிநீர்.]*

**கட்டு**[16] *kattu,* பெ.அ.(adj.) நிறைவான, உறுதியான வடிவம்; (firm and solid) build. கட்டுடல், கட்டழகி (உ.வ.).

*[கள் → கடு → கட்டு.]*

**கட்டு**[17] *kattu,* து.வி. (aux.v.) முதல்வினைச் செயலை முடுக்கிவிடும் வகையில் நிற்கும் துணை வினை; an auxiliary verb modifying the action expressed by the main verb.

*[கள் → கட்டு.]*

'கட்டு' துணை வினையாய் நின்று பல்வேறு வினைகளை உருவாக்குகிறது.

எ.டு.

அணைகட்டு [தற்காத்தல்], கங்கணம் கட்டு [உறுதி எடுத்தல், சண்டைக்கு நிற்றல்], கதை கட்டு [பொய்ச்செய்தி கிளப்புதல்], கால்கட்டு [திருமணம்].

**கட்டு**[18] *kattu,* பெ.(n.) அடக்கவிலை; cost price. இந்த விலைக்கு விற்றால் எனக்குக் கட்டாது (உ.வ.).

F. cout; **Sp.** coste; **It.** costo; **Port.** custo; **G.** kosten; **Du.** kosten; **Swed.** kostnad; **Pol.** koszt; **Ser.croa.** koštati; **Hung.** koltseg; **Finn.** hinta; **Esp.** kosto; **Gk.** kos'tos; **Yid.** kosten.

*[கட்டுதல் = பொருந்திவருதல், அடக்கவிலையாதல்.]*

**கட்டுக்கட்டு**[1]**-தல்** *kattu-k-kattu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. மூட்டை முதலியன கட்டுதல்; to tie up a bundle or packet. 2. அறுத்த நெல் அரிகளைக் கட்டுகளாகக் கட்டுதல்; bundling harvested paddy for thrashing. 3. மருந்து வைத்துக் கட்டுதல்; to bandage, as a boil after applying medicine.

*[கட்டு + கட்டு.]*

**கட்டுக்கட்டு**[2]**-தல்** *kattu-k-kattu-,* 5 செ.குன்றாவி. (v.t.) பொய்யாகப் புனைந்துரைத்தல்; to fabricate, invent, utter a canard. கட்டுக்கட்டி விடுவதே இவனது வழக்கம் (உ.வ.).

*[கட்டு + கட்டு (து.வி.).]*

**கட்டுக்கட்டு**[3]**-தல்** *kattu-k-kattu-,* 5 செ.குன்றாவி. (v.t.) குமுகாயத்தால் புறக்கணிக்கப்படுதல்; to be separated by the society. *ஒழுக்கக்கேடனுக்குப் பிறர் உதவக் கூடாதென்று ஊர்க்கூட்டத்தில் கட்டுக்கட்டிவிட்டனர் (கோவை.).*

*[கட்டு + கட்டு -.]*

**கட்டுக்கடங்கு–தல்** *kaṭṭu-k-kaḍaṅgu-*, 9 செ.கு.வி. (v.i.) ஒரு வரம்புக்குட்படுதல்; come into bound, limit.

[கட்டு + கு + அடங்கு.]

**கட்டுக்கட[1]–த்தல்** *kaṭṭu-k-kaḍa-*, 3 செ.குன்றாவி. (v.t.) வரம்பு மீறுதல்; to transgress, exceed the limits pass beyond bounds, violate established rules, disregard positive injunctions. உன் குறும்புத்தனம் கட்டுக்கடந்து போச்சு (உ.வ.).

[கட்டு + கட. கட்டு = ஒழுங்கு, கட்டுப்பாடு.]

**கட்டுக்கட[2]–த்தல்** *kaṭṭu-k-kaḍa-*, 3 செ.குன்றாவி. (v.t.) மந்திரத்தால் பாம்பு, விலங்கு முதலியவற்றின் வாயைக் கட்ட முயலும்போது அவை மந்திர ஆற்றலுக்கு அடங்காமல் மீறுதல்; to transgress the limits or bounds of mantric power, while one is trying to bind mouths of snakes, wild animals etc.

[கட்டு + கட–. கட்டு = கட்டுப்பாடு.]

**கட்டுக்கடுக்கன்** *kaṭṭu-k-kaḍukkaṉ*, பெ.(n.) மணி பதித்த கடுக்கன் (யாழ்ப்.); ear-ring set with gems.

[கட்டு + கடுக்கன். கட்டுதல் = சேர்த்தல், பிணைத்தல், பதித்தல்.]

**கட்டுக்கடுகு** *kaṭṭu-k-kaḍugu*, பெ.(n.) நாய்க்கடுகு; dog-mustard (சா.அக.).

[கள் (கருமை, இருள்) → கட்டு + கடுகு.]

**கட்டுக்கடை** *kaṭṭu-k-kaḍai*, பெ.(n.) 1. எதிர் காலத்தில் பயன்படுத்துவதற்காகச் சேர்த்து வைக்கை; the act of preserving for future use. 2. சேர்த்து வைக்கப் பட்டது; that which is stored up for further use (சா.அக.).

[கட்டு + கடை.]

**கட்டுக்கடைநீர்** *kaṭṭu-k-kaḍai-nir*, பெ.(n.) பயன்படுத்துவதற்காக வெளிவிடாதபடி தடுத்து வைத்த நீர்; water collected and kept for use (சா.அக.).

[கட்டு + கடை + நீர்.]

**கட்டுக்கதை** *kaṭṭu-k-kadai*, பெ. (n.) 1. புனைந்துரை; fable, fiction. கட்டுக்கதை சொல்வதில் கைதேர்ந்தவன் (உ.வ.). 2. பொய்யான செய்தி; concocted tale. அவன் கூறும் செய்தி வெறுங்கட்டுக் கதை (உ.வ.).

க. கட்டுகதெ

[கட்டு + கதை. கட்டு = புனைவு.]

**கட்டுக்கம்பி** *kaṭṭu-k-kambi*, பெ. (n.) இணைத்துக் கட்டப் பயன்படும் கம்பி; binding wire. கட்டட வேலைக்கு இரண்டு கல்லெடை (கிலோ) கட்டுக் கம்பி வாங்கிவா (உ.வ.).

[கட்டு + கம்பி. கட்டு = இணை, சேர்.]

**கட்டுக்கயிறு[1]** *kaṭṭu-k-kayiṟu*, பெ. (n.) கூந்தலிற் கட்டி முடிக்கப் பயன்படுத்தும் பின்னல், சவுரி; false hair, a number of plaited hair threads knotted at one end used by women to supplement natural tuft.

[கட்டு + கயிறு.]

**கட்டுக்கயிறு[2]** *kaṭṭu-k-kayiṟu*, பெ. (n.) 1. கட்டு மரத்தைக் கட்டுதற்குரிய வலுவான செயற்கை யிழையாலான கயிறு (தஞ்சை. மீனவ.); strong rope which is used to tie catamaran. 2. பொருள்களைக் கட்டுவதற்குப் பயன்படும் நார்க் கயிறு; rope used to bundle up things.

[கட்டு + கயிறு.]

**கட்டுக்கரணை** *kaṭṭu-k-karaṇai*, பெ.(n.) கட்டுமான வேலைகளில் கொத்தனார் பயன்படுத்தும் கைப் பிடியுள்ள இரும்புக் கரண்டி; trowel.



கட்டுக்கரணை

மறுவ: கொல்லுரு, கொத்துக்கரண்டி. சவட்டுக் கரண்டி.

[கட்டு + கரணை.]

முழுக்கரணை, முக்கால் கரணை, அரைக் கரணை, கால்கரணை, அரைக்கால் கரணை என்றவாறு ஐந்து அளவுகளில் கரணை அமையும்.

**கட்டுக்கரப்பான்** *kaṭṭu-k-karappāṉ*, பெ.(n.) குழந்தைக்களுக்குண்டாகும் ஒருவகைச் சொறி புண் (வின்.); a kind of eruption with itching affecting children.

[கட்டு + கரப்பான்.]

**கட்டுக்கரை** *kaṭṭu-k-karai*, பெ. (n.) 1. சரக்கிறக்குந் துறை; pier. 2. செயற்கைக் கரை; articificial bund.

*[கட்டு + கரை. கரை = செயற்கையாக அமைக்கப்பட்ட இறங்குதுறை.]*

**கட்டுக்கலவை** *kaṭṭu-k-kalavai*, பெ. (n.) மணல், சுதைநீர் சுதைமா (சிமெண்டு), 'சுண்ணாம்பு' போன்ற கட்டுமானப் பொருள்கள் குறித்த அளவில் கலந்த கலவை; mortar, a mixer of cement, lime, sand, etc., in the designated proportion.

*[கட்டு + கலவை.]*

**கட்டுக்கலியாணம்** *kaṭṭu-k-kaliyāṇam*, பெ. (n.) 1. தாலி கட்டும் திருமணம் (யாழ்ப்.); wedding, marriage ceremony, in which the bridegroom ties the tāli around the bride's neck. 2. மணப்பெண்ணும் உறவினர்களும் எதிர்பாராத நேரத்தில், பெண்ணின் கழுத்தில், தாலி கட்டச் செய்யும் திருமணம்; marriage, tying of tāli in the neck of a young girl at an unexpected time.

மறுவ. கட்டுத்தாலி

*[கட்டு + கலியாணம்.]*

**கட்டுக்கழுத்தி** *kaṭṭu-k-kaḻutti*, பெ.(n.) 1. மணமாகிக் கணவனுடன் வாழும் பெண், வாழ்வரசி; married woman, living with her husband and who, there fore, wears a tāli around her neck. 2. மனைவி; wedded wife. *'கைப்பொருளற்றால் கட்டுக்கழுத்தியும் பாராள்'* (பழ.).

மறுவ. வாழ்வரசி

*[கட்டு + கழுத்தி.]*

**கட்டுக்காரன்** *kaṭṭu-k-kāraṉ*, பெ.(n.) குறி சொல்லுவோன் (யாழ்ப்.); one who foretells future events; soothsayer.

*[கட்டு + காரன். கட்டு = கட்டியுரைக்கை.]*

**கட்டுக்காலி**[1] பெ.(n.) *kaṭṭu-k-kāli*, கொண்டிமாடு; stray cattle.

*[கட்டு + காலி. காலி = கால்நடை, மாடு.]*

கட்டி வைக்காமல் எங்கும் திரியும் பட்டிமாடு கட்டாக்காலியாம். கட்டுப்பாட்டிற்கு அடங்காததைக் கொம்புக்கும் காலுக்கும், அல்லது கால்களுக்கிடையே அல்லது கழுத்தில் கட்டையைக் கட்டி வைப்பது கட்டுக் காலியாம். இவ்வியல்பு பற்றியே எதிர்மறைப் பொருளனவாகிய இவ்விரு சொற்களும் ஒரு பொருள் குறித்து நின்றமை காண்க.

**கட்டுக்காலி**[2] *kaṭṭu-k-kāli*, பெ.(n.) மணமான பின்னும் பொறுப்பின்றித் திரிபவன்-ள்; a married man - woman roaming without minding their responsibility. கட்டுக்காலியின் பேச்சைக் கருத்தில் கொள்ள வேண்டா (உ.வ.).

*[கட்டு + காலி.]*

**கட்டுக்காலி**[3] *kaṭṭu-k-kāli*, பெ.(n.) ஒரே குழந்தை பெற்றெடுத்தவள்; a woman who has borne birth to only one child.

ம. கட்டுக்காலி

*[கட்டு + காலி. கால் = வழி, மரபு, குழந்தைச் செல்வம். வழிமரபு கட்டுற்ற நிலையினள்.]*

**கட்டுக்காவல்** *kaṭṭu-k-kāval*, பெ.(n.) கடுங்காவல்; strict guard, close custody, great care.

*[கட்டு + காவல். கடு → கட்டு (கடுமை).]*

**கட்டுக்காடை** *kaṭṭu-k-kāḍai*, பெ.(n.) 1. பாற்குருவி; Indian roller, larger blue bird. 2. சிரல், நீர்ப்பறவை வகை. (வின்.); king fisher; a kind of water-bird resembling the roller that preys on fish. *'கட்டுக் காடை இடமானால் குட்டிச்சுவரும் பொன்னாகும்'* (பழ.).

*[கட்டு + காடை.]*



கட்டுக் காடை

**கட்டுக்கிடை** *kaṭṭu-k-kiḍai*, பெ.(n.) 1. நாட்பட்ட சரக்கு; old stock. *"கட்டுக் கிடையாமென் கன்ம வித்திலே"* (மதுரைப்பதிற்.38). 2. ஓடாது தேங்கிய நீர்;

stagnant water. போக்கிற்கு வழி இல்லாததால் மழைநீர் கட்டுக்கிடையாய் நிற்கிறது; (உ.வ.).

*[கட்டு + கிடை. கட்டு = கட்டுப்பட்ட நிலை, தேக்கமுற்ற நிலை. கிடை = கிடப்பு, நிலைமை.]*

**கட்டுக்குட்டு** *kattu-k-kuttu,* பெ.(n.) உடற்கட்டு; robust build; strong sturdy constitution.

*[கட்டு + குட்டு – கட்டுக்குட்டு. கட்டு = கட்டான உடலமைப்பு. குட்டு = இளமை. கட்டுக்குட்டு = கட்டிளமைத் தோற்றம் தரும் உடல்வாகு.]*

**கட்டுக்குத்தகை** *kattu-k-kuttagai,* பெ.(n.) 1. நீட்டித்து விடும் மொத்த குத்தகை; a long-term lease of land; fixed rent; rent collected in a lump sum; joint tenancy. 2. பெற்றுக்கொண்ட தொகைக்காக நிலத்தைக் குறித்த காலத்துக்குத் தொகை கொடுத்தவனுடைய துய்ப்பில் விட்டு வைத்தல்; tenure by which land is mortgaged stipulating that the principal and interest be set off against enjoyment of the proceeds of the land for a specified period. 3. தோணிக்குத்தகை (வின்.); contract for a full *tōni* without reference to the number of trips or weight of cargo.

மறுவ. ஒற்றிக்கு வைத்தல், போக்கியம்.

*[கட்டு + குத்தகை. கட்டு = திரட்சி, மொத்தம்.]*

**கட்டுக்குலை–தல்** *kattu-k-kulai-,* 17 செ.கு.வி.(v.i.) 1. அவிழ்தல்; to become loose. ஏற்றி இறக்கும் பொழுது கட்டுக்குலையாமல் பார்த்துக்கொள் (உ.வ.). 2. ஒற்றுமை கெடுதல்; to be disassociated. தலைவர் சரியில்லாததால் கட்சி கட்டுக் குலைந்து விட்டது(உ.வ.). 3. நிலைகெடுதல்; to be deranged, upset. வணிக நட்டத்தினால் கட்டுக் குலைந்து விட்டான்(உ.வ.). 4. மனம் குழைதல்; to loose one's heart, become melted, softened. அக் கதையைக் கேட்டு நான் கட்டுக்குலைந்து போனேன்(உ.வ.). 5. சினத்தல்; to show signs of anger.

*[கட்டு + குலை-.]*

**கட்டுக்கூட்டு** *kattu-k-kūttu,* பெ.(n.) 1. *கட்டுக்கதை* பார்க்க; see *kattu-k-kadai.* 2. மாற்றியெழுதப் பட்டது; special code for the communication of secret correspondence, cipher. 3. ஒன்றாய்க் கூடுதல்; congregate.

*[கட்டு + கூட்டு.]*

**கட்டுக்கூடை** *kattu-k-kūdai,* பெ.(n.) 1. வாய்ப்பகுதி எளிதில் பிரிந்திடா வண்ணம் பனை நாரால் கட்டப்பெறுங் கூடை; a basket made of palm fibre with stronger neck. நெற்குவியலைக் கட்டுக் கூடையால் அள்ளிக் கொட்டு (உ.வ.). 2. எளிதாய்ச் சுமப்பதற்கு ஏதுவாய் கழிகள் பிணைத்த கூடை; a basket which is fitted with small poles on both sides to carry easily. சோறு வடிக்கக் கட்டுக்கூடை கொண்டுவா (உ.வ.).

*[கட்டு + கூடை.]*

**கட்டுக்கூலி** *kattu-k-kūli,* பெ.(n.) 1. ஒழுங்குபடுத்தப் பட்ட கூலி; regulated wages. 2. சரக்குந்துகளில் பொருள்களை ஏற்றியபின் கயிற்றால் கட்டுதற்காகக் கொடுக்கப்படும் கூலி; wage for tying loads. 3. தாளரிகளைக் கட்டும் கூலி; wages for bundling the paddi stacks, hay etc.

*[கட்டு + கூலி.]*

**கட்டுக்கேள்(ட்)–த(ட)ல்** *kattu-k-kēl-,* 11 செ.குன்றாவி. (v.t.) குறிகேட்டல். (வின்.); to consult a diviner.

*[கட்டு + கேள்–. கட்டு = கட்டியுரைத்தல்.]*

**கட்டுக்கொடி** *kattu-k-kodi,* பெ.(n.) 1.ஆடு மாடுகளை வரிசையாகக் கட்டும் கயிறு (வின்.); rope stretched along the ground to which cattle and goats are tethered by the neck in a row at night. 2. புல் முதலிய வற்றைக் கட்டப் பயன்படும் கொடிவகை. (மூ.அ.); a kind of creeper; used for tying bundles of grass etc. சுமை கட்டுவதற்குக் கட்டுக்கொடி யொன்றைத் தேடி அறுத்துவா (உ.வ.).

*[கட்டு + கொடி.]*

**கட்டுக்கொதி–த்தல்** *kattu-k-kodi-,* 4 செ.கு.வி. (v.i.) புண் கட்டி, சீழ் நிறைந்து குத்துதல் (யாழ்ப்.); to give throbbing pain, as a boil when pus collects.

*[கட்டு + கொதி-.]*

**கட்டுக்கோப்பு**[1] *kattu-k-kōppu,* பெ.(n.). 1. கட்டகம், கட்டடம் (வின்.); structure, building. 2. மேற்கூரை; roof of a house; super structure. 3. காப்புடையது; that which is guarded. 4. கட்டுப்பாட்டோடு கூடிய தன்மை, உறுதியான பிணைப்பு; being well knit or well disciplined; solidarity. கட்டுக்கோப்பான கட்சியை எவராலும் குலைக்க முடியாது (உ.வ.).

5. ஒற்றுமை; unity, association. தொழிலாளர் சங்கம் கட்டுக் கோப்பாக உள்ளது (உ.வ.).

*[கட்டு + கோப்பு.]*

**கட்டுக்கோப்பு**[2] *kaṭṭu-k-kōppu*, பெ.(n.) உயர்வு நவிற்சி, புனைந்துரை (வின்.); concoction, exaggeration.

*[கட்டு + கோப்பு.]*

**கட்டுக்கோரைப்பாசி** *kaṭṭu-k-kōrai-p-pāśi*, பெ.(n.) கடலடிப் பாசி வகையு ளொன்று (நெல்லை. மீனவ.); a kind of moss under sea.

*[கட்டு + கோரை + பாசி.]*

**கட்டுங்காவலுமா-தல்** *kaṭṭuṅ-kāvalumā-*, 6 செ.கு.வி. (v.i.) பெருங்காவலுடையதாதல்; to be carefully watched, strictly guarded. *"கட்டுங் காவலுமா யிருக்கிற வாசலிலே" (திவ். திருப்பா.10. வியா.)*

*[கட்டும் +காவலும் + ஆ.]*

**கட்டுங்கூலி** *kaṭṭuṅg-kūli*, பெ. (n.) ஏற்புடையதான கூலி; acceptable wages. கட்டுங்கூலி கிடைத்தால் எந்தப் பணியையும் செய்துவிடலாம் (உ.வ.).

*[கட்டுக்கூலி → கட்டுங்கூலி.]*

**கட்டுச்சரக்கு**[1] *kaṭṭu-c-carakku*, பெ.(n.) 1. மொத்த மாக விற்கப்படும் பண்டம்; goods sold wholesale. 2. நாட்பட்ட சரக்கு; old stock of goods.

*[கட்டு + சரக்கு.]*

**கட்டுச்சரக்கு**[2] *kaṭṭu-c-carakku*, பெ.(n.) தமிழ் மருத்துவத்தின்படி மூலிகைகளைக் கொண்டு, நெருப்பிற்கு ஓடாதபடி எரித்தோ, ஊதியோ, புடமிட்டோ கட்டிய சரக்குகள்; minerals or substances which are consolidated with the aid of acids, alkalies and compounds of salt by burning, heating or calcining according to the process laid down in the Tamil Alchemical works. (சா.அக.).

*[கட்டு + சரக்கு. கட்டு = பிணை, சேர்.]*

**இதளியம், கந்தகம், 64 வகைப் நஞ்சுகள், வெடியுப்பு, சோற்றுப்பு, நவச்சாரம், வெண்காரம், பொரிகாரம் முதலியன கட்டுச் சரக்குகளாம்.**

**கட்டுச்சாட்சி** *kaṭṭu-c-cāṭci*, பெ.(n.) ***கட்டுச் சான்று*** பார்க்க; see *kaṭṭu-c-cāṉṟu.*

*[கட்டு + சாட்சி.* **Skt.** sakshi > சாட்சி.*]*

**கட்டுச்சாதம்** *kaṭṭu-c-cādam*, பெ.(n.) ***கட்டுச்சோறு*** பார்க்க; see *kaṭṭu-c-cōṟu.*

*[கட்டு + சாதம். தெ. சாதமு > த. சாதம்.]*

**கட்டுச்சாரை** *kaṭṭu-c-cārai*, பெ.(n.) மருளூமத்தை; confusion creeper (சா.அக.).

மறுவ. திகைப்பூண்டு

*[கட்டு + சாரை.]*

**கட்டுச்சாரையான்** *kaṭṭu-c-cāraiyāṉ*, பெ.(n.) ***கட்டுச்சாரை*** பார்க்க; see *kaṭṭu-c-cārai* (சா.அக.).

*[கட்டு + சாரை + ஆன்.]*

**கட்டுச்சான்று** *kaṭṭu-c-cāṉṟu*, பெ.(n.) பொய்ச் சான்று; false witness.

*[கட்டு + சான்று.]*

**கட்டுச்சி** *kaṭṭucci*, பெ.(n.) உச்சிவேளை; noon-day. *"கட்டுச்சி தீபனமாம்" (பதார்த்த. 1446).*

*[கட்டு + உச்சி. கடு → கட்டு = மிகுதி. ஒ.நோ. கட்டுப்பு, கட்டழகு.]*

**கட்டுச்சூலை**[1] *kaṭṭu-c-cūlai*, பெ.(n.) 1. குதிரை நோய் வகை. (அசுவசா. 51); a disease of the horse. 2. தீராத வயிற்றுவலி; acute stomach pain.

*[சுல் → சூல் → சூலை. சுல் = எரித்தல், குத்துதல். கட்டு + சூலை. சூலை = குத்துதற்போல் வலியை உண்டாக்கும் நோய்.]*

**கட்டுச்சூலை**[2] *kaṭṭu-c-cūlai*, பெ. (n.) சூலைக்கட்டு, ஊதப்பிடிப்பினால் ஏற்படும் நோய்; a form of gout arising from the severe inflammation of the joints of the limbs or by attack of acute arthritis-Articular gout.

*[கட்டு + சூலை. கட்டுச்சூலை = கை, கால் மூட்டுகளில் பிடிப்பு ஏற்பட்டுக் குத்துவதைப்போல் பொறுக்க முடியாத வலியை உண்டாக்கும் நோய்.]*

**கட்டுச்செட்டு** *kaṭṭu-c-ceṭṭu*, பெ.(n.) சிக்கனம்; thrift. *செலவு கட்டுச்செட்டாக இருக்கட்டும்.*

*[கட்டு + செட்டு. செட்டு = சிக்கனம். எதுகை நோக்கி வந்த மரபிணை மொழி.]*

**கட்டுச்செம்பு** *kaṭṭu-c-cembu,* பெ.(n.) களிம்பற்ற செம்பு; copper free from verdigris. (சா.அக.)

*[கட்டு + செம்பு.]*

**கட்டுச்சொல்** *kaṭṭu-c-col,* பெ.(n.) 1. குறி கூறுதல்; sooth-saying, fore telling. 2. பொய்; lie. 3.பேயாட்டக் கூற்று; devil's telling.

*[கட்டு + சொல். கட்டு = புனைந்துரை, பொய்யுரை.]*

**கட்டுச்சொல்(லு)-தல்** *kaṭṭu-c-col-,* 13 செ.கு.வி. (v.i.) குறிகூறுதல்; to divine, to foretell.

*[கட்டு[13] + சொல்(லு)-.]*

**கட்டுச்சோறு** *kaṭṭu-c-cōṟu,*பெ.(n.) வழிநடைக்காகக் கட்டி எடுத்துச் செல்லும் உணவு; packed meals for a trip or journey. *'கட்டுச்சோறும் கற்ற வித்தையும் கைவிட்டுப் போகாது'. (பழ.)*

**மறுவ.** பொதிச்சோறு

**க.** கட்டன்ன

*[கட்டு[5] + சோறு.]*

**கட்டுடல்** *kaṭṭuḍal,* பெ.(n.) அமைவான உடல்; well built physique. உடற்பயிற்சியே கட்டுடலுக்கு வழி (உ.வ.).

*[கள் → கட்டு = திரண்டது. கட்டு + உடல்.]*

**கட்டுடை[1]-தல்** *kaṭṭuḍai-,* 2 செ.கு.வி.(v.i.) 1. நோய், மூப்பு ஆகியவற்றால் உடல் தளர்வுறுதல்; to suffer a breakdown in constitution. 2. பூ முறுக்கவிழ்தல்; to blossom, open the petals. 3. கொப்புளம் உடைதல்; to open, as of a boil. 4. நெறிமுறை (விதி) அல்லது உறுதியினின்று தளர்வுறுதல்; to violate a rule or fail to keep a promise. 5. கட்டமைப்புச் சிதைவுறுதல்; to be dissolved as of an association, committee etc.

**க.** கட்டொடெ

*[கட்டு + உடை-. உடைதல் = சிதைதல், மலர்தல், குறைதல், தளர்தல்.]*

**கட்டுடை[2]-த்தல்** *kaṭṭuḍai-,* 2 செ.குன்றாவி.(v.t.) 1. அஞ்சல் (மடல்) கட்டிய பையை உடைத்தல். (வின்.); to break the seal, as of a letter bag. 2. கருத்தை வெளிப்படுத்துதல்; to reveal one's mind. 3. கரையுடைத்தல்(வின்.); to make a breach of banks in a channel. 4. மந்திரத்தினால் உடம்பு தளர்ச்சி அடையும்படி செய்தல்; to cause breakdown of constitution through sorcery. 5. கட்டி, புண் இவை உடையும்படி செய்தல்; to cause boils and abcessess to open (சா.அக.)

*[கட்டு + உடை-.]*

**கட்டுண்(ணு)[1]-தல்** *kaṭṭuṇ(ṇu)-,* 12 செ.கு.வி.(v.i.) கை, கால் பிணிக்கப்படல்; to be bound, hand and foot (சா.அக.).

*[கட்டு + உண்(ணு)-.]*

**கட்டுண்(ணு)[2]-தல்** *kaṭṭuṇ(ṇu)-,* 12 செ.கு.வி.(v.i.) 1. கட்டுப்படல், நெருப்புக்கு ஓடாதபடி கட்டிப்போதல்; to become consolidated, so as not to pass off into vapour or flame, as the case may be, when exposed to fire (சா.அக.).

*[கட்டு + உண்(ணு)-. உண் - செயப்பாட்டு வினைப்பொருளுணர்த்தும் விகுதி.]*

**கட்டுண்(ணு)[3]-தல்** *kaṭṭuṇ(ṇu)-,* 2 செ.குன்றாவி. (v.t.) கட்டுச்சோற்றை உண்ணல்; to eat packet meals.

*[கட்டு + உண்(ணு)-. கட்டு = கட்டுச்சோறு.]*

**கட்டுண்கை** *kaṭṭuṇgai,* பெ.(n.) கட்டுப்படுகை; submitting, yielding. *"கலக்கியகை யசோதையார் கடை கயிற்றாற் கட்டுண்கை" (சிலப்.17: முன்னிலைப் பரவல்.1)*

*[கட்டு + உண் + கை. கை - தொ. பெ. ஈறு.]*

**கட்டுண்டுகிட-த்தல்** *kaṭṭuṇḍu-kiḍa-,* 3 செ.கு.வி. (v.i.) கொள்கை, ஆணை முதலியவற்றிற்கு அடங்கி நடத்தல்; to obey orders, to follow a principle strictly.

**மறுவ.** கட்டுண்டிரு

**து.** கட்டொணுநி

*[கட்டு + உண்டு + கிட (து.வி.)-.]*

**கட்டுண்ணி** *kaṭṭuṇṇi,* பெ.(n.) 1. கட்டப்பட்டவன். (வின்.); a person who suffers himself to be bound. 2. சூலைக்கட்டினால் வருந்துபவன்; one who suffers from arthritis. 3. மனைவிக்குக் கட்டுப்பட்ட அல்லது அடங்கிய கணவன்; a husband controlled or restricted by his wife. *ஊருக்குத் தலைவன் வீட்டுக்குக் கட்டுண்ணி (பழ.).*

*[கட்டு + உண்ணி. உண்ணி = உள்ளவன். உண் + இ - உண்ணி . இ = வினை முதல். ஈறு.]*

**கட்டுத்தரையன்** *kaṭṭu-t-taraiyaṉ,* பெ.(n.) சிறுவர் விளையாட்டு வகை. (எங்களூர், 89); a kind of children's game.

*[கட்டு + தரையன்.]*

**கட்டுத்தறி[1]** *kaṭṭu-t-taṟi,* பெ.(n.) 1. யானை முதலியன கட்டுங்கம்பம்; post for tying elephants, bulls etc. 2. தொழுவம், கால்நடைகளை இரவில் கட்டி வைக்கும் கொட்டகை; place where the cattle are allowed to rest at night. 3. மரக்கலத்தின் மேல்தளத்தில் உள்ள கம்பம்; bollard (க.ப.அக.). 4. நெசவுத்தறி; weavers loom; *'கம்பன் வீட்டுக் கட்டுத் தறியும் கவிபாடும்.' (பழ.)*

**தெ.** கட்டுகுஞ்செ, கட்டுகொய்ய.

*[கட்டு + தறி. கட்டும் தறியுள்ள தொழுவம்.]*

**கட்டுத்தாலி[1]** *kaṭṭu-t-tāli,* பெ.(n.) மறுமணம் செய்து கொள்ளும் பெண் அணியும் தாலி; a tāli worn on remarriage of a lady.

**ம.** கெட்டுதாலி

*[கட்டு + தாலி.]*

**கட்டுத்தாலி[2]** *kaṭṭu-t-tāli,* பெ.(n.) மறவருக்குள் வழங்கும் ஒருவகைத் தாலி; a kind of tāli among maravars.

**ம.** கெட்டுதாலி

*[கட்டு + தாலி.]*

**கட்டுத்திரள்(ளு)-தல்** *kaṭṭu-t-tiraḷḷu-,* 16 செ.கு.வி. (v.i.) புண் பழுத்தல் (வின்.); to gather to a head, as a boil.

*[கட்டு + திரள்(ளு)-. திரளுதல் = உருண்டையாதல், மிகக் கூடுதல், வீங்குதல்.]*

**கட்டுத்தூண்** *kaṭṭu-t-tūṇ,* பெ.(n.) நான்கு மூலை களையுடையதும் (சதுரமானது), நடுப்பகுதி எட்டுப் பட்டைகளையுடையதுமான தூண்; a pillar which is of squarely in shape at bottom and octagonal above.

*[கட்டு + தூண்.]*

**கட்டுத்தேர்** *kaṭṭu-t-tēr,* பெ.(n.) குறிப்பிட்ட திருவிழாவிற்காக, ஆண்டுதோறும் புதிதாகச் செய்து, தெய்வத் திருமேனியை அமர்த்தி, ஆடவர் தோளில் சுமந்து செல்லுமாறு அமைக்கப்பட்ட தேர்; car built temporarily for an occasion, and lifted by sturdy persons.

*[கட்டு + தேர்.]*

கொங்குநாட்டில் பனஞ்சட்டத்தால் செய்த கட்டுத்தேர்கள் வழக்கிலுள்ளன.

**கட்டுத்தையல்** *kaṭṭu-t-taiyal,* பெ.(n.) அழுத்தமான தையல்; a kind of firm sewing.

*[கட்டு + தையல்.]*

**கட்டுத்தொகை** *kaṭṭu-t-togai,* பெ.(n.) மொத்தத் தொகை; grand total in accounts.

*[கட்டு + தொகை.]*

**கட்டுத்தோணி** *kaṭṭu-t-tōṇi,* பெ.(n.) கடற்கரை யருகில் ஆழமில்லா நீரிற் செல்லவிடும் ஒருவகைப் படகு; surf boat, boat of which the seams are sewn together.

**ம.** கெட்டுதோணி

*[கட்டு + தோணி.]*

**கட்டுதாலி** *kaṭṭu-tāli,* பெ.(n.) மறுமணம்; remarriage. கட்டுதாலியா கொட்டுமேளமா (உ.வ.).

*[கட்டு + தாலி.]*

**கட்டுப்படகு** *kaṭṭu-p-paḍagu,* பெ.(n.) ***கட்டுத் தோணி*** பார்க்க; see *kaṭṭu-t-tōṇi.*

*[கட்டு + படகு.]*

**கட்டுப்படாமை** *kaṭṭu-p-paḍāmai,* பெ.(n.) 1. எளிதில் வயப்படாமை; not easily restricted or controlled. 2. திரளாமை; not easily solidified or condensed.

*[கட்டு + படு + ஆ (எதிர்மறை ஒட்டு) + மை.]*

**கட்டுப்படு[1]-த்தல்** *kaṭṭu-p-paḍu-,* 18 செ.குன்றாவி. (v.t.) 1. கட்டுவிச்சிபாற் குறிகேட்டல்; to consult omens, signs, as through a female soothsayer. *"கட்டுப்படுத்திரே லாரானு மெய்ப்படுவன்" (திவ். இயற். சிறிய திரு ம. 19).* 2. பிடித்தல், கட்டுதல்; to bind, to tie, to fetter, as culprits. 3. ஒழுங்கு படுத் துதல்; to make a regulation, to order, to discipline.

மறுவ. கட்டுப்படுத்தி

*[கட்டு + படு .]*

**கட்டுப்படு[2]–தல்** *kaṭṭu-p-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. கட்டுக்குள் அடங்குதல்; to yield, to submit; to be influenced by; to become bound, as by a compact or engagement. ஆசிரியர் ஆணைக்கு மாணவர்கள் கட்டுப்படுவர் (உ.வ.). 2. தடைப்படுதல்; to be constipated, to be obstructed, as blood, as fluid in the system. 3. கட்டப்படுதல்; to be worn, to be tied.

ம. கெட்டுபெடுக; தெ. கட்டுபடு; க. கட்டும்படு, கட்டுபடு, கட்டுவடு.

*[கட்டு + படு . கட்டு = வரம்பு. படுதல் = அமைதல்.]*

**கட்டுப்பவளம்** *kaṭṭu-p-pavaḷam,* பெ.(n.) பவளத்தாலான கையணி; coral wristlet. *"கட்டுப் பவளங் கனகவளை பொற்கடகம்". (கூளப்ப. காதல். 136).*

*[கட்டு + பவளம்.]*

**கட்டுப்பழம்** *kaṭṭ(u)uppākku,* பெ.(n.) கட்டிப் பாதுகாக்கப்பட்ட கனி; fruit protected by being packed up in a bag or case just before ripening.

*[கட்டு + பழம்.]*

**கட்டுப்பனை** *kaṭṭu-p-paṉai,* பெ.(n.) ***கட்டுப்பாளை*** பார்க்க; see *kaṭṭu-p-pāḷai.*

*[கட்டு + பனை.]*

**கட்டுப்பாக்கு** *kaṭṭu-p-pākku,* பெ.(n.) வாய்ச்சூடு படத் துணியாலிடும் ஒற்றடம்; fomentation with a small roll of cloth previously warmed by blowing on it with the mouth. கண்வலிக்குக் கட்டுப்பாக்குக் கொடுக்கிறது வழக்கம் (உ.வ.).

*[கட்டு + உப்பாக்கு – கட்டுப்பாக்கு (கட்டிய துணி முடிச்சாயால் வாய் வெதுப்பு ஏற்றுதல்.) உருப்புவெப்பம் → உப்பு + ஆக்கு – உப்பாக்கு = வெப்பம், வேது. 'ஆக்கு' ஆக்கம் எனப் பொருள்படும் முதனிலைத் தொழிற்பெயர்.]*

**கட்டுப்பாட்டறை** *kaṭṭu-p-pāṭṭarai,* பெ.(n.) ஒரு துறை அல்லது நிறுவனத்தின் செய்தித்தொடர்பு பணிகளை மேற்கொள்ளும் இடம்; control room. வானூர்தி நிலையக் கட்டுப்பாட்டு அறையில் குண்டு வைத்திருப்பதாக மிரட்டினார்கள் (உ.வ.).

*[கட்டுப்பாடு + அறை.]*

**கட்டுப்பாட்டாளர்** *kaṭṭuppāṭṭāḷar,* பெ.(n.) செயலொழுங்குபடுத்துபவர்; controller.

*[கட்டுப்பாடு + ஆளர்.]*

**கட்டுப்பாட்டுரிமை** *kaṭṭu-p-pāṭṭurimai,* பெ.(n.) கட்டுப்படுத்தும் உரிமை; right of control.

*[கட்டுப்பாடு + உரிமை.]*

**கட்டுப்பாடு[1]** *kaṭṭu-p-pāḍu,* பெ.(n.) 1. பொதுநல ஏற்பாடு; compact, social bond, community law. 2. கட்சி. (வின்.); league, party, faction, confederacy. 3. வரையறை; restriction.

ம. கெட்டுபாடு; க.,தெ.,து.கட்டுபாடு.

*[கட்டுப்படு → கட்டுப்பாடு.]*

**கட்டுப்பாடு[2]** *kaṭṭu-p-pāḍu,* பெ.(n.) ***கட்டுப்பொய்*** பார்க்க; see *kaṭṭu-p-poy.*

**கட்டுப்பாடுபண்ணு–தல்** *kaṭṭu-p-pāḍu-paṇṇu-,* 11 செ.கு.வி. (v.i.) வரையறை செய்தல்; to bind, put a restraint upon.

*[கட்டுப்பாடு + பண்ணு .]*

**கட்டுப்பாம்பு** *kaṭṭu-p-pāmbu,* பெ.(n.) ஒருவகை நல்ல பாம்பு; a fierce species of cobra.

க. கட்டு காவு

*[கட்டு + பாம்பு.]*

**கட்டுப்பாளை** *kaṭṭu-p-pāḷai,* பெ.(n.) பதநீருக்கென்று பாளைசீவிக் கட்டப்பட்ட ஆண்பனை. (G.Tn.D.222); male palmyra which is tapped for its juice.

*[கட்டு + பாளை.]*

**கட்டுப்பானை** *kaṭṭu-p-pāṉai,* பெ.(n.) பானையாற் கட்டப்பட்ட மிதவை. (வின்.); float or raft, constructed on inverted pots.

*[கட்டு + பானை – கட்டுப்பானை.]*

**கட்டுப்பிரியன்** *kaṭṭu-p-piriyaṉ,* பெ.(n.) உடம்பிலும் நெற்றியிலும் புள்ளிகளையுடைய ஒரு கடல்மீன் வகை; a kind of sea fish which is having dots on its forehead and body.

*[கட்டு + பிரியன். புரியன் → பிரியன்.]*

இது கபில நிறமுடையது. இதன் புள்ளிகள் நீல வண்ணத்திலிருக்கும். 15 விரலம் நீளமுடையது.

**கட்டுப்பு**[1] *kattuppu,* பெ.(n.) மிகுதியாக உவர்ப்பாகி யிருப்பது; excessive saltiness.

க. கட்டுப்பு.

*[கட்டு + உப்பு. கடு = மிகுதி. கடு → கட்டு.]*

**கட்டுப்பு**[2] *kattuppu,* பெ.(n.) நெருப்புக்கு ஓடாதபடி கட்டிய உப்பு; consolidated with the aid of nitre, alum, salt ammoniac, sea water, etc., used in due proportions.

*[கட்டு + உப்பு.]*

பொதுவாக உப்பை வெடியுப்பு, சீனம், நவச்சாரம், கடல்நீர் முதலானவற்றைக் கொண்டு கட்டலாம் என்பர். அது கசிவு நீங்கிக் கெட்டியாக ஆகும். அதற்குப் பல சிறந்த குணங்களுண்டு. பாம்பைப் போல் சட்டைபோக்கிக் கொள்ளலாம். சடத்தை வயிரம் போலாக்கி நெடுங்கால மிருக்கலாம். ஓகத்தில் அது மூச்சாடவொட்டாது; தூக்கமிராது; உடம்பில் வியர்வை உண்டாகாது. 'உப்பைக் கட்டியவன் உலோகத்தைக் கட்டுவான்'. (பழ.) (சா.அக.)

**கட்டுப்புணை** *kattu-p-punai,* பெ.(n.) ***கட்டுமரம்*** பார்க்க; see *kattu-maram.*

*[கட்டு + புணை.]*

**கட்டுப்புரியம்** *kattu-p-puriyam,* பெ.(n.) தேசிக் கூத்துக்குரிய கால் வகை (சிலப்.3 அடியார்க்கு நல்லார் உரை); a posture of the legs in dancing.

*[கட்டு + புரியம்.]*

**கட்டுப்புனை** *kattu-p-punai,* பெ.(n.) கட்டுமரம் (சிலப். 13:179. அரும்.); catamaran.

*[கட்டு + புனை.]*

**கட்டுப்பூட்டு** *kattu-p-pūttu,* பெ.(n.) அணிகலன் (யாழ்ப்.); ornament, jewel.

*[கட்டு + பூட்டு. பூண் → பூட்டு.]*

**கட்டுப்பெட்டி** *kattu-p-petti,* பெ.(n.) 1. பிரம்பு ஓலை, மூங்கிற்பற்றை முதலியவற்றால் முடைந்த பெட்டி; stiff basket braided with rattan, or palmyra leaf or bamboo splits. 2. பழைய வழக்கங்களைவிட்டுப் புதிய வழக்கங்களைக் கைக்கொள்ளாதவர் (இ.வ.); old fashioned ways; impervious to modern manners, out of place in fashionable society. இன்னும் இவர் கட்டுப்பெட்டியாகத்தான் வாழ்கின்றார்(உ.வ.)

*[கட்டு + பெட்டி.]*

**கட்டுப்பேச்சு** *kattu-p-pēccu,* பெ.(n.) 1. பொய்யாகக் கற்பித்த சொல்; fabricated story, ingenious statement fictiously made up, concoction. 2. அடக்கமான பேச்சு; un restrained speech.

*[கட்டு + பேச்சு.]*

**கட்டுப்பொய்** *kattu-p-poy,* பெ.(n.) வேண்டுமென்றே பொய்யாகக் கூறுஞ் செய்தி (இ.வ.); fib, concoction.

*[கட்டு + பொய்.]*

**கட்டுப்போடு**[1]**-தல்** *kattu-p-pōdu-,* 19 செ. குன்றாவி. (v.t.) ***கட்டுக்கட்டு-தல்*** பார்க்க; see *kattu-k-attu-,*

*[கட்டு + போடு-.]*

**கட்டுப்போடு**[2]**-தல்** *kattu-p-pōdu-,* 19 செ.குன்றாவி. (v.t.) வண்டிச் சக்கரத்திற்கு இரும்புப்பட்டை மாட்டுதல்; to fix iron plate around wooden wheel of cart.

*[கட்டு + போடு.]*

**கட்டுபடி** *kattu-padi,* பெ.(n.) 1. போதுமான அளவு; just sufficient. அரிசி இந்த விலைக்கு விற்றால்தான் கட்டுபடியாகும் (உ.வ.). 2. மறுமணம்; remarriage. அந்தக் கைம்பெண்ணை இவனுக்குக் கட்டுபடி செய்தார்கள் (இ.வ.).

க. கட்டப்பணெ

*[கட்டுபடு → கட்டுபடி. கட்டுதல் = மிகுதல், நிறைதல், போதியதாதல். செல்லுபடி, அத்துபடி, கட்டுபடி போன்றவற்றில் 'படி' என்பது பெயரீறு. படி = தன்மை. செல்லுபடி = செல்லும் தன்மை. கட்டுபடி = கட்டும் (போதியதாகும்) தன்மை. 'கட்டுபடி' கூட்டுச்சொல்லன்று. சென்னைப் பல்கலைக்கழக அகரமுதலியில் இடையில் வல்லெழுத்து மிகுத்து கட்டுப்படி என குறித்திருத்தல் தவறு.]*

**கட்டுபடியாகு-தல்** *kattu-padi-y-āgu-,* 7 செ.கு.வி. (v.i.) 1. போதியதாய் இருத்தல்; to be enough. சம்பளம் எனக்குக் கட்டுபடியாகவில்லை (உ.வ.). 2. ஈடுகொடுத்தல்; to meet adequately. சம்பளத்தில் பாதி கொடுத்தால்தான் செலவுக்குக் கட்டு படியாகும் (உ.வ.).

மறுவ. கட்டு படியாதல்

*[கட்டு + படி + ஆகு-.]*

**கட்டுபடியினாம்** *kattuppadi-y-inām,* பெ.(n.) குறைந்த தீர்வைக்குட்பட்ட நிலம்; land held at favourable quit-rent.

*[கட்டுபடி + இனாம். U. inām > த. இனாம் (கொடை).]*

**கட்டுமசது** *kattu-masatu,* பெ.(n.) *கட்டுமட்டு* பார்க்க; see *kattu-mattu.*

*[கட்டு + மசது. மட்டு → மசது.]*

**கட்டுமட்டு** *kattu-mattu,* பெ.(n.) 1. அளவாய்ச் செலவிடுகை (யாழ்ப்.); economy, frugality, thrift. 2. ஒத்த தன்மை (யாழ்ப்.); unanimity, oneness of feeling. 3. சொல்லடக்கம் (யாழ்ப்.); taciturnity. 4. ஆற்றல், திறமை; ability, கட்டுமட்டாய்ப் பேசு (உ.வ.). 5. நல்ல உடற்கட்டு; robust build of body, strong, hardy, constitution.

மறுவ. கட்டுகிட்டு, கட்டுமுட்டு.

க. கட்டுமசது; **Mar.** katamast, kathamast.

*[கட்டு + மட்டு. கட்டுமட்டு என்பது வடபுலத்தில் கட்டு மஸ்து எனத் திரிந்தது. மஸ்து உருதுச்சொல்லாகத் தோற்றமளிப்பினும் அது 'மட்டு' என்பதன் திரிபே. கட்டுமட்டு - எதுகை குறித்த மரபிணைச் சொல் .]*

**கட்டுமண்** *kattu-man,* பெ.(n.) ஏனம் வார்க்கும் மண்கரு; earthe n mould for casting metal vessels, crucible.

*[கட்டு + மண். கட்டமைந்த மண்வார்ப்பு.]*

**கட்டுமரம்** *kattu-maram,* பெ.(n.) 1. மீன் பிடிப்பதற்காக மரங்களாற் பிணைக்கப்பட்ட மிதவை; catamaran, used for deep sea fishing; raft made of logs of wood lashed or joined together. 2. கூத்தாண்டை என்ற பாரதக்கதைபற்றிய விழாக் கொண்டாட்டத்தில், அரவானைப் பலியாகக் கொணர்ந்து கட்டும் மரம்; post to which is bound Aravāṉ to be offered as a sacrifice in the festival of kūttaṇḍai held to commemorate certain incidents in the Mahabharata.

ம. கெட்டுமரம், கட்டுமரம், கட்டமரம்; க. கட்டுமர; தெ. கட்டுமரமு, கட்டுமாநு; **E.** catamaran.

*[கட்டு + மரம். 'இரு கடையும் வளைந்த மரக்கட்டு, கட்டுமரம்' (சொல்.ஆ.க.41).]*

**கட்டுமருந்து** *kattu-marundu,* பெ.(n.) 1. கக்கல் (வாந்தி) கழிச்சல் (வயிற்றுப்போக்கு), அரத்த, பெரும்பாடு முதலிய போக்குகளை நிறுத்தும் மருந்து; medicine that can arrest vomitting, or purging, hemorrhage, excess discharge at menstruation etc - astringents. 2. காயம், புண் முதலியவற்றுக்குக் கட்டுவதற்கு முன் இடும் மருந்து; medicines applied externally for healing a wound, injury, ulcer, sore etc.3. தமிழ் மருத்துவ முறைப்படி வீரம், பூரம், இலிங்கம் முதலியவற்றைக் கட்டி, நோய்களுக்குத் தேன், முலைப்பால், மூலிகைச்சாறு முதலியவற்றில் இழைத்துக் கொடுக்கும் மருந்து; pills of corrosive sublimate, meriate of mercury, vermiltion etc., consolidated (partially) as per rules of Tamil Medicine and prescribed by vaithyans as internal remedies after macerating in honey, breastmilk, juice of green herbs etc., (சா.அக.).

*[கட்டு + மருந்து.]*

**கட்டுமலை** *kattu-malai,* பெ.(n.) செய்குன்று; artificial hillock, decorative-mound raised in a garden.

*[கட்டு + மலை. கட்டுதல் = செய்தல்.]*

**கட்டுமா** *kattu-mā,* பெ.(n.) ஒட்டுமா; grafted mango tree. *"கட்டுமாவின் றீங்கனியே". (திருப்போ.சந். பெருங்கழி.1,7).*

*[கட்டு + மா.]*

**கட்டுமாக்களி** *kattu-mākkali,* பெ.(n.) கட்டிகளுக்கு வைத்துக் கட்டப் பயன்படும் மாவுக்களி; a soft composition of baked flour applied to abscesses - poultice. (சா.அக.)

*[கட்டு + மா(வு) + களி.]*

**கட்டுமாத்திரை** *kaṭṭu-māttirai,* பெ.(n.) 1. இறுகச் சேர்க்கப்பட்ட மருந்துக்கட்டு; a crystallized pill made of various medicinal ingredients. 2. வயிற்றுப்போக்கை நிறுத்தும் குளிகை; a medicinal pill administered to bind loose bowels.

*[கட்டு + மாத்திரை.]*

**கட்டுமாந்தம்** *kaṭṭu-māndam,* பெ.(n.) மலச் சிக்கலால் குழந்தைகட்கு வரும் நோய்வகை. (பாலவா. 38.); a disease of children caused by constipation.

*[கட்டு + மாந்தம்.]*

**கட்டுமாமரம்** *kaṭṭu-māmaram,* பெ.(n.) ஒட்டுமா மரவகை; a kind of mango tree.

*[கட்டு + மாமரம்.]*

**கட்டுமாலை** *kaṭṭu-mālai,* பெ.(n.) கோயில் கோபுர (விமான) உச்சியில் அமையும் ஒருறுப்பு; a part of the top of a "gopuram".

*[கட்டு + மாலை.]*

**கட்டுமாறு** *kaṭṭumāṟu,* பெ.(n.) 1. துடைப்பம்; broom. 2. தடியில் கட்டிய துடைப்பம் (மட்ட.அக.); wooden-broom.

*[கட்டு + மாறு.]*

**கட்டுமானக்கோயில்** *kaṭṭu-māṉa-k-kōyil,* பெ.(n.) கல், செங்கல், முதலியவற்றால் கட்டப்படும் கோயில்; constructed temple.

*[கட்டு + மானம் + கோயில்.]*

குடைவரை போன்று ஒரு கல்லில் குடையாமல், செங்கல், கருங்கல் கொண்டு அடுக்கிக் கட்டப்படும் கோயில்.

**கட்டுமானம்**[1] *kaṭṭumāṉam,* பெ.(n.) 1. கட்டடம் கட்டுதல்; construction of buildings. இது செங்கல் கட்டுமானம்; கருங்கல் கட்டுமானம் அன்று (உ.வ.). 2. நாவாய் முதலியன கட்டுதல்; fabrication as of boat, ship etc. இவன் கப்பல் கட்டுமானப் பணியில் பணியாற்றுகிறான்(உ.வ.). 3. கணிப்பொறி வடிவமைத்தல்; design and fabcriation of computers; சப்பான் நாட்டுக் கட்டுமானக் கணிப்பொறிகள் தரம் வாய்ந்தவை(உ.வ.). 4. நகைகளில் மணி பதிக்கும் வேலை; setting of precious stones, as in jewels.

*[கட்டு + மானம். 'மானம்' தொ.பெ.ஈறு.]*

**கட்டுமானம்**[2] *kaṭṭu-māṉam,* பெ.(n.) ஆக்கப் பொருள் அல்லது விற்பனைப் பொருளின் அடக் கவிலை; cost of produce of salable material.

*[கட்டு + மானம்.]*

**கட்டுமானியம்** *kaṭṭu-māṉiyam,* பெ.(n.) ஏரி அமைத்தற்காக அளிக்கப்படும் மானியம்; grant given for construction of a lake.

க. கட்டுமான்ய

*[கட்டு + மானியம். Skt. mānya > த. மானியம்.]*

**கட்டுமுக்கை** *kaṭṭu-mu-k-kai,* பெ.(n.) மூன்று நெற்கட்டுகளை வரியாகச் செலுத்தும் கோயிற்குரிய கடமை வகை (M.E.R.1916, p.152); a levy payable to temple in the form of three bundles of paddy sheaf.

*[கட்டு + முக்கை. முக்கை = மூன்று. கட்டுமுக்கை = கட்டுகள் மூன்று. ஒற்றை, இரட்டை, முக்கை என்பது மரபு.]*

அரிமுக்கையினின்றும் வேறுபடுத்திக் காட்டு வதற்காகப் பெரிய நெற்கட்டு மூன்று, கட்டுமுக்கை எனப்பட்டது. கட்டு என்பது கயிற்றால் கட்டப்பட்ட நெற்கட்டு.

**கட்டுமுகனை** *kaṭṭu-mugaṉai,* பெ.(n.) 1. அதிகாரம்; authority. 2. மேலாண்மை; management, direction, supervision, superintendence. 3. கண்டிப்பு, strictness, rigour. 4. தடை; exclusion, debarring. 5. அடக்கம்; restraint, restriction, check. 6. சிக்கனம்; economy, frugality, thrift.

*[கட்டு + முகனை. முகம் → முகனை எனத் திரிந்தது இடவழக்குத் திரிபு. முகம் = தோற்றம், வெளிப்பாடு. கட்டுமுகம் = கண்டிப்பின் வெளிப்பாடு.]*

**கட்டுமுட்டு** *kaṭṭu-muṭṭu,* பெ.(n.) 1. அமைதி; quietness, good behaviour with reference to children. 2. உடற்கட்டு; strong physique. 3. ***கட்டுமட்டு*** பார்க்க; see *kaṭṭu-maṭṭu*-5.

*[கட்டு + (மட்டு→) முட்டு.]*

**கட்டுமுடி** *kattu-mudi*, பெ(n.) 1. பின்னிமுடிந்த கூந்தல்; a knot of braided hair (கருநா.). 2. இடுமுடி (சவுரி); attached hair, false hair. 3. அடர்த்தியான முடி; thickly irown hair.

க. கட்டுமுடி

*[கட்டு + முடி.]*

**கட்டுமுள்** *kattu-mul*, பெ.(n.) 1. சேவற் காலின் பின் பக்க நகம்; the heel or spur of a cock. 2. வேலி வரிசைபிடிக்க இரண்டு பக்கமும் குறுக்காக வைத்துக் கட்டப்படும் முள்; thorn poles used to keep both sides of a fence intact.

*[கட்டு + முள்.]*

**கட்டுமுளை** *kattu-mulai*, பெ.(n.) 1. கொளுவி வகை (C.E.M); riveted hook. 2. கடலோரத்தில் மரக் கலத்தை நிறுத்திட ஏதுவான சிறிய மரக்கொம்பு (செங்கை. மீனவ.); peg used to tie boats at the shore.

*[கட்டு + முளை. முளை = குறுந்தறி.]*

**கட்டுமுறி-த்தல்** *kattu-muri-*, 4. செ.குன்றாவி. (v.t.) கட்டுடைத்தல், கட்டுப்பாடு மீறுதல்; to go beyond the rules.

*[கட்டு + முறி-.]*

**கட்டுமுறை** *kattu-murai*, பெ.(n.) ஓடுஞ் சரக்குகளை நெருப்பிற்கோடாதபடி செய்யச் சித்தர்களின் ஊதை (வாத) நூல்களிற் சொல்லியுள்ள வழிகள்; the several methods or processes laid down in the šiddhar's works on Alchemy for consolidating or fixing substances which pass off as flames or into vapour in fire or when exposed to heat. (சா.அக.).

*[கட்டு + முறை.]*

**கட்டுமை** *kattumai*, பெ.(n.) கட்டுப்பாடு (யாழ்.அக.); social rules, caste rules.

*[கட்டு → கட்டுமை. ஒ.நோ ஒன்று → ஒற்றுமை. கட்டுமை → கட்டமை. கட்டுமை = கட்டுப்பாடு அல்லது ஒருங்கிணைப்பு கட்டமைவு.]*

**கட்டுருபன்** *katturūban*, பெ.(n.) தனித்து நின்று பொருள்தரும் தன்மை இன்றிப் பிறவற்றோடு இணைந்து வரும் உருபன்; bound morpheme.

*[கட்டு + உருபன்.]*

ஓர் ஒலியனோ (phoneme) ஒன்றுக்கு மேற்பட்ட ஒலியன்களோ இணைந்து ஒரு பொருளை உணர்த்துமாயின் அதனை உருபன் என்பர், இன்றைய மொழிநூலார். தனித்து நிற்கவல்ல உருபன்கள் தனியுருபன் (free morpheme) என்றும், தனித்து நிற்க இயலாதவை கட்டுருபன் (bound morpheme) என்றும் கருதப்படும். மரபிலக்கண முறைப்படி இடைநிலை, ஈறு முதலியவை கட்டுருபன்களாகும்.

**கட்டுரை[1]-த்தல்** *katturai-*, 4 செ.குன்றாவி.(v.t.) 1. உறுதியாகச் சொல்லுதல்; to speak with assurance, say with certainty. *"அக்குடிலையின் பயனினைத் தென்றே கட்டுரைத்திலன்" (கந்தபு. அயனைச் சிறைபு.14).* 2. தெளிவாகச் சொல்லுதல் (திவ். திருவாய். 3.1:1); to say clearly; express distinctly.

*[கட்டு + உரை – கட்டுரை-. கட்டு = உறுதி, செறிவு. கட்டுரைத்தல் = உறுதி மொழிதல். கட்டுரை – இரண்டன் தொகை.]*

**கட்டுரை[2]** *katturai*, பெ.(n.) 1. உறுதிச்சொல்; a vowal, solemn declaration. *"கட்டுரை விரித்துங் கற்றவை பகர்ந்தும் பட்டவை துடைக்கும் பயங்கெழு மொழிஃபினள்" (மணிமே.23:5).* 2. பொருள் பொதிந்த சொல்; pithy, sententious expression. *"கோட்டமில் கட்டுரை கேட்டனன்" (சிலப். பதி.54).* 3. பழமொழி; proverb. *"உற்றலாற் கயவர் தேறா ரென்னுங் கட்டுரை" (தேவா.523: 8).*

*[கட்டு + உரை. கட்டு = உறுதி, செறிவு. கட்டுரை = கட்டாக, செறிவாக, உறுதிப்பட உரைப்பது.]*

கட்டுநிட்டு, கட்டுப்பாடு, கட்டி நிற்றல் போன்றவற்றில் கட்டு என்னும் சொல் உறுதிப்பாட்டைக் குறித்தமை காண்க. உறுதியாகிய உரை கட்டுரை என்றும், கட்டி உரைக்கும் அல்லது புனைந்துரைக்கும் உரை கட்டு + உரை – கட்டுரை என்றும் ஒரே வடிவு கொண்டாலும் முன்னது பெயரும் பெயருமாகிய **பண்புத்தொகை**; பின்னது ஏவல் வினையும் பெயருமாகிய வினைத்தொகை என வேறுபாடறிக. ஒ.நோ. கட்டுக் கதை, கட்டுகதை.

**கட்டுரை**[3] *katturai,* பெ.(n.) குறிப்பிட்ட தலைப்பில் எழுதப்படும் குறுகிய பொருள் விளக்கம்; eassy, shart price of writing on a given subject. தமிழாசிரியர் பொங்கல் விழாவைக் குறித்த கட்டுரை எழுதச் சொன்னார் (உ.வ.).

*[கட்டு + தொகுப்பு கட்டு + உரை – கட்டுரை (பண்புத் தொகை).]*

**கட்டுரை**[4] *katturai,* பெ.(n.) 1. புனைந்துரை; figurative language, magnifying or deprecating. *"பலபல கட்டுரை பண்டையிற் பாராட்டி" (கலித். 14).* 2. பொய்; falsehood, fabrication. *"மிண்டர் கட்டிய கட்டுரை" (தேவா. 1033-10 ).*

*[கட்டு + உரை – கட்டுரை (வினைத்தொகை). கட்டுதல் = இட்டுக் கட்டிப் பேசுதல். ]*

**கட்டுரைச்சுவை** *katturai-c-cuvai,* பெ.(n.) இலக்கிய வுரைநடைச் சுவை; stylistic beauty of prose *'தோற்றந் தாமே வினையொடு வருமே'* என்பதில் *'தாமே'* என்பது கட்டுரைச் சுவைப்பட நின்றது *(தொல்.சொல்.10,சேனா.).*

*[கட்டுரை + சுவை. கட்டுரை = பேச்சின் செறிவு.]*

**கட்டுரைப்போட்டி** *katturai-p-pōtti,* பெ.(n.) கட்டுரை வரைதிறன் காண நடத்தும் போட்டி; essay competition.

*[கட்டுரை + போட்டி.]*

**கட்டுரைப்போலி** *katturai-p-pōli,* பெ.(n.) உரை நடையின் ஒருவகை; a kind of prose. *கத்தியமாவது கட்டுரைப்போலியும் செய்யுட் போலியும் என இரண்டு வகைப்படும் (வீரசோ. யாப்பு.6, உரை).*

*[கட்டுரை + போலி.]*

**கட்டுரையாளர்** *katturai-y-ālar,* பெ.(n.) ஆய்வுரை படைப்பாளர்; essayist.

*[கட்டுரை + ஆளர்.]*

**கட்டுவடம்** *kattu-vadam,* பெ.(n.) 1. கழுத்தணி வகை (கலித்.96,உரை); necklace of beads. 2. காலணி வகை; an anklet. *"கட்டுவடக் கழலினர்" (பரிபா.12:24).*

*[கட்டு + வடம். கட்டுவடம் (வினைத்தொகை). கட்டுதல் = தொடுத்தல், கோத்தல். வட்டம் → வடம் = வட்டவடிவாகத் தொடுக்கப்பட்டது.]*

**கட்டுவம்** *kattuvam,* பெ.(n.) 1. கட்டப்பட்டது; that which is bound. 2. பெண்கள் காலின் நான்காம் விரலில் அணியும் காலாழி (யாழ்ப்.); ring worn on their fourth toe by women.

**மறுவ.** விரலாழி (யாழ்ப்.)

**ம.** கட்டுவம்

*[கட்டு + அம் – கட்டுவம். நடிப்பது (நட்டம் → நாட்டியம்) நட்டுவம் எனத் திரிந்து நாட்டியம் ஆடுதலைக் குறித்தது. இதுபோன்று கட்டுவது → கட்டுவம் எனத் திரிந்து பிறவினைப் பொருளில் கட்டுவிக்கப்பட்ட கால்விரலணியைக் குறித்தது. காலில் அணிவிக்கும் சடங்கை முதலில் குறித்துப் பின்னர் விரலணியைச் சுட்டியது.]*

**கட்டுவலை** *kattu-valai* பெ.(n.) 1. இருபக்கமும் திறந்த வாயுள்ளதும் அதில் குறுகிய வாய்ப் பக்கத்தைக் கயிற்றால் கட்டி விரிந்த வாய்ப்பக்கத்தை ஆற்றில் வீசுவதுமான வலை வகை; a fishing net open at both ends one of which is narrower being tied when in use and the mouth distended by hoop or pegs when set in a stream. 2. பெருவலையின் முதன்மைக் கூறுகளில் ஒன்றானதும் தலை வலையையும் சிறு வலையையும் இணைப்பதுமான வலை (தஞ்சை மீனவ.); a part of the net which connects the main net and the small net.

**க.** கட்டெவலெ, கட்டபலே

*[கட்டு + வலை.]*

**கட்டுவளையம்** *kattu-valaiyam,* பெ.(n.) நீளக்கம்பிகளுக்கு ஒழுங்கும் வலிமையும் தருவதற் காகக் கட்டப்படும் வளையம்; rings which connect straight rods to get shape and strength.

*[கட்டு + வளையம்.]*

**கட்டுவன்** *kattuvan* பெ.(n.) ஆண்பால் இயற்பெயர்; masculine proper name.

**ம.** கட்டுவன்

*[கட்டு + வ் + அன் – கட்டுவன். கட்டு = உறுதி, வலிமை. ஒ.நோ. கட்டுடல்.]*

**கட்டுவாங்கம்**[1] *kaṭṭuvāṅgam*, பெ.(n.) 1. மழு; battle axe. *"கட்டுவாங்கங் கபாலங் கைக்கொண்டிலா" (தேவா.1210:7).* 2. தடி (யாழ்.அக.); mace, club. 3. ஓகிகள் வைத்திருக்கும் தண்டு (த.சொ.அக.); arm stand for yogis. 4. தடுக்கும் போர்க்கருவி;resisting weapon.

**மறுவ.** கட்டங்கம், கட்டங்கு

*[கடு → கட்டு + வாங்கம். கடு = வெட்டு. வாங்கம் = வளைவுக் கருவி.]*



கட்டுவாங்கம் [ஓகியரின் கைத்தண்டு]

**கட்டுவாங்கம்**[2] *kaṭṭuvāṅgam*, பெ.(n.) ஒருவகை எண்ணெய். (தைலவ. தைல.51); a kind of medicinal oil.

*[கட்டுவம் + அங்கம். கட்டுவம் = பலவற்றோடு சேரக் காய்ச்சியது, திரட்டாக்கியது. அங்கம் = வகை, வகைகளுள் ஒன்று. ஒ. நோ: நட்டுவம் → நட்டுவாங்கம்.]*

**கட்டுவாங்கன்** *kaṭṭuvāṅgaṉ*, பெ.(n.) மழுவைப் படைக்கலமாகக் கொண்ட சிவன்; Siva, one of whose weapon is a battle-axe.

*[கட்டுவாங்கம்¹ → கட்டுவாங்கன்.]*

**கட்டுவாதி** *kaṭṭuvāti*, பெ.(n.) நெருப்பிற்கு ஓடும் சரக்குகளை ஓடாமற் கட்டி இதளிய மாற்றம் (இரசவாதம்) செய்பவன்; an alchemist who is skilled in the art of fixing volatile bodies for purposes of transmutation (சா.அக.).

*[கட்டு + (வா) வாதி. ஆள் → ஆளி → வாளி → வாதி. கட்டாளி எனின் செந்தமிழாம்.]*

**கட்டுவாய்வலை** *kaṭṭu-vāy-valai*, பெ.(n.) மணி வலையின் கீழ்ப்பகுதி. (தஞ்சை மீனவ.); lower part of the fishing net known as manivalai.

*[கட்டுவாய் + வலை (விளிம்பில் கட்டுமுடிச்சுகள் உள்ள வலை.)]*

**கட்டுவாயில்** *kaṭṭu-vāyil*, பெ.(n.) மேல் வளைவு இட்டு அமைக்கப்பட்ட வாயில்; arched door-way, portal.

**மறுவ:** தோரணவாயில்

*[கட்டு + வாயில். கட்டு = மேற்கட்டு.]*

**கட்டுவி-த்தல்** *kaṭṭuvi-*, பி.வி.(caus.) ஏற்பாடு செய்வித்தல்; to arrange. *"காவலன்நான் நிபந்தங்கள் கட்டுவித்தே" (திருத்தொண்டர் புராணசார.31).*

*[கட்டு → கட்டுவி-.]*

**கட்டுவிச்சி** *kaṭṭu-vicci*, பெ.(n.) குறிசொல்பவள்; female sooth sayer. *"அதுகேட்டுக் காரார் குழற்கொண்டை கட்டுவிச்சி கட்டேறி" (திவ். இயற். சிறிய . ம.20.) .*

**மறுவ.** கட்டுவித்தி

*[கட்டுவித்தி → கட்டுவிச்சி.]*

கட்டுப்பார்க்கும் வழக்கம் நற். 288, அகநா.98, குறிஞ்சிப் 7. பெருங் 37:235, திவ். சிறிய திருமடல். 20:2; திவ். திருவாய் 4.6:3. மீனாட்சி யம்மை குறம் 26 ஆகியவற்றில் குறிப்பிடப் பட்டுள்ளது. கட்டு = குறி சொல்லுதல்.

**கட்டுவிட்டுப்பாய்-தல்** *kaṭṭu-viṭṭu-p-pāy-*, 2 செ.கு.வி.(v.i.) உடைப்பு உண்டாகும்படிப் பெருகுதல் (வின்.); to burst out and flow, as a flood by breaching an embankment.

*[கட்டு + விட்டு + பாய்.]*

**கட்டுவிடு-தல்** *kaṭṭu-viḍu-*, 2 செ.கு.வி.(v.i.) 1. கட்டவிழ்தல்; தளர்தல்; to be loosened; untied. 2. உடல் வலுவிழத்தல்; to be weakenod, as a body. 3. முதுமூப்புக் காலத்தில் மூட்டுகள் தளர்தல்; to relax; as the joints and muscles at old age (வின்.). 4. வண்டிச்சக்கரத்து வட்டையின் இரும்புப் பட்டையை மாற்றுதல்; to change the iron tyre of bullock carts.

*[கட்டு + விடு. கட்டு = இறுக்கம், செறிவு, திண்மை. விடுதல் = குறைவுபடுதல்.]*

**கட்டுவித்தி** *kaṭṭuvitti*, பெ.(n.) குறிசொல்பவள்; female sooth sayer.

*[கட்டுவம் + அத்து + இ. – கட்டுவத்தி → கட்டுவித்தி. கட்டு → கட்டுவம் = கட்டுரைத்தல், குறி சொல்லுதல். அத்து – சாரியை, 'இ' பெண்பாலீறு.]*

**கட்டுவிரியன்** *kaṭṭu-viriyaṉ,* பெ.(n.) விரியின் பாம்பு வகை (M.M.); a snake with rings on its body.

*[கட்டு + வரியன் – கட்டுவரியன் → கட்டுவிரியன். கட்டு = வரிவரியான தோற்றம்.]*



கட்டு விரியன்

**கட்டுவினா** *kaṭṭu-viṉā,* பெ.(n.) பெருக்கற் கணக்கு வகை; a kind of multiflication.

*[கட்டு + வினா.]*

**கட்டுவேலை** *kaṭṭu-vēlai,* பெ.(n.) 1. கட்டடம் கட்டும் தொழில்; construction work, masonry work. 2. கம்பி கட்டும் தொழில்; bar binding work.

*[கட்டு + வேலை. கட்டு = பிணை, சேர்.]*

கருங்கல், செங்கல் போன்றவற்றைப் பயன்படுத்திக் கட்டடம் உருவாக்குவதால் பெற்ற இப்பெயர் கட்டடம் கட்டக் கம்பிகளைப் பிணைத்துத்தரும் தொழிலையும் குறிப்பதாயிற்று.

**கட்டுவேலைக்காரர்** *kaṭṭu-vēlai-k-kārar,* பெ.(n.) கட்டடம் கட்டுபவர்; கம்பி கட்டுபவர்; mason or bar binder.

*[கட்டு + வேலை + காரர்.]*

**கட்டுவை** *kaṭṭuvai,* பெ.(n.) 1. கட்டில்; cot. *"கட்டுவை யதனையு முதவினார்" (சிவதரு. சுவர்க்க. நரகவி.9).* 2. செம்பு; copper.

*[கட்டு + வை – கட்டுவை (கயிற்றால் கட்டப்பட்ட கட்டில்). வை = தங்குமிடம், இருக்குமிடம். வை – முதனிலைத் தொழிற்பெயர், தொழிலாகு பெயராய்த் தங்குமிடத்தைக் குறித்தது. கல் போன்றவற்றையும் இறுகப்பிணைக்கும் தன்மை பற்றியே செம்பிற்கும் கட்டுவை பெயராயிற்று.]*

**கட்டுறவி** *kaṭṭuṟavi,* பெ.(n.) இறகுள்ள கட்டெறும்பு; ant. *"கட்டுறவி தேள்பணி கருங்குளவி பூரம்" (அரிச்சந்.பு.நகர்நீ. 39).*

க. கட்டிறும்பெ, கட்டிறுவெ, கட்டிருவே, கட்டிருபெ; பட. கட்டிருப்பு.

*[கட்டு + (இறுவு) → இறுவி – கட்டிறவி → கட்டுறவி. இல் (குத்துதல்) → இறுவி.]*

**கட்டுறுதி** *kaṭṭuṟuti,* பெ.(n.) வலிமை; strong.

*[கட்டு + உறுதி.]*

**கட்டூண்** *kaṭṭūṉ,* பெ.(n.) களவு செய்து உண்கை; living by plunder. *"கட்டூண் மாக்கள்" (சிலப். 16:169 ).*

*[கள் + து – கட்டு + ஊண். ஊண் = உணவு. கட்டு = களவு.]*

**கட்டூண்மாக்கள்** *kaṭṭūṉ-mākkaḷ,* பெ.(n.) திருட்டுத் தொழிலால் உடல் வளர்ப்போர்; person who is living upon- robbery. *"கட்டூண் மாக்கள் கடந்தரு மெனவாங்கு" (சிலப். 12:19).*

*[கள் (களவு) → கட்டு + உண் + மாக்கள்.]*

**கட்டூர்** *kaṭṭūr,* பெ.(n.) படைவீடு; military camp. *"ஆரிறை யஞ்சா வெருவரு கட்டூர்" (பதிற்.82:2). "புகழ்சால் சிறப்பிற் காதலி புலம்பத் துறந்து வந் தனையே யருந்தொழிற் கட்டூர்" (ஐங்குறு. 445).*

மறுவ. பாடி, பாசறை

*[கட்டு + ஊர். கட்டுதல் = செய்தல். இடைக்காலப் பயன்பாட்டுக்காகக் கட்டுவிக்கப்பட்ட போர்மறவர் குடியிருப்பு.]*

**கட்டெலி** *kaṭṭeli,* பெ.(n.) கடித்தால் இறப்புண் டாக்கும் எலிவகை (வின்.); a rat, the bite of which is said to be fatal.

*[கள் → கடு + எலி கடு = நஞ்சு.]*

**கட்டெழில்** *kaṭṭeḻil,* பெ. (n.) பேரழகு ; great beauty. *"கட்டெழில் சேர்ந்த வட்டணைப் பலகை" (பெருங். உஞ். 42:63,64).*

மறுவ. கட்டழகு

*[கட்டு + எழில். கட்டு = மிகுதி.]*

**கட்டெறும்பு** *kaṭṭeṟumbu,* பெ.(n.) பெரிய கறுப்பெறும்பு; large black ant. *கழுதை தேய்ந்து கட்டெறும்பு*

ஆனது (பழ.). "கன்றுக ளோடச் செவியில் கட்டெறும்பு பிடித்திட்டால்". (திவ். பெரியாழ். 2,4:2)

**ம.** கட்டுறும்பு; **க.** கட்டிருவெ, கட்டிறும்பெ; **பட.** கட்டிருப்பு; **தெ.** கட்டெசீம.

[கள் → கட்டு + எறும்பு. கள் = கருமை.]

**கட்டேறு-தல்** *kattēṟu-*, 5 செ.கு.வி.(v.i.) வெறி யாடல்; to become possessed by a spirit. "கட்டுவிச்சி கட்டேறி". (திவ். இயற். சிறிய திரும. 20)

[கட்டு + ஏறு – கட்டேறு-. கட்டுதல் = கட்டுரைத்தல், தானாக ஒன்று இட்டுரைத்தல். ஏறுதல் = அத்தன்மை எய்தப்பெறுதல்.]

**கட்டை**[1] *kaṭṭai*, பெ.(n.) 1. குட்டையான கற்றை போன்ற வேர். (சொ.ஆ.க.65 ); short and bushy root. 2. நெல், சோளம், கரும்பு முதலியவற்றில் அறுவடை செய்தது போகத் தரையில் உள்ள எஞ்சிய பகுதி ; stalks of paddy, jowar, sugarcane etc,after harvest on the field. கட்டை குத்திக்கொள்ளாமல் பார்த்து உழு (உ.வ.).

[குள் → குட்டு → குட்டை → கட்டை.]

**கட்டை**[2] *kaṭṭai*, பெ.(n.) திண்ணை; pial.

**க.** கட்டெ

[கட்டு→ கட்டை (கட்டப்பட்ட திண்ணை).]

**கட்டை**[3] *kaṭṭai*, பெ.(n.) 1. காய்ந்த கொம்பும் கவையு மாகிய விறகு. (சூடா.); firewood. 2. ஈம விறகு; funeral pyre. "நடுக்கட்டையிலே கிடத்துமட்டும்" (தனிப்பா.1 : 195:10). 3. குற்றி; block, small stump, piece of timber. 4. கடாவுமுளை (வின்.); stake. 5. கடலுள் வலையிருக்கு மிடம் காட்டும் குற்றி; wooden float of a big sea-fishing net. 6. உடல்; body. கட்டையிருக்கையிற் சிதம்பரம் போய் காண வேண்டும் (உ.வ.). 7. உயிரற்ற உடல் (மூ.அக.) corpse. 8. செம்புக் கட்டை(இ.வ.); copper core. 9. ஒரு கல் தொலைவு (யாழ்ப்.); one mile distance.

**ம.** கெட்டு, கட்டை; **க.,தெ., குட., பட.** கட்டெ, கட்ட; **து.** கெட்ட; **கொலா.** கட்டா; **நா., பர்.** கட்ட; **கோண்.** கட்டா.

**Skt.** kaṭa (corpse); **Nep.** kaṭ(wood); **Aust.** kaṭṭe (digging stick)

**த.** கட்டை> **வ.** காஷ்ட.

[கள் → கட்டு → கட்டை (வ. மொ.வ. 102). கள் = திரட்சி. கட்டை = திரண்டது.]

உயிர் நீங்கியபின் உடல், கட்டைபோலக் கிடந்து மண்ணோடு மண்ணாய்ப் போவது கட்டை. [சொ.ஆ.க. 30].

**கட்டை**[4] *kaṭṭai* பெ.(n.) 1. அணை; dam. 2. கைப்பிடிச் சுவர்; small, parapet,wall. 3. திண்ணையுடன் சேரக்கட்டிய சாய்வணை; a structure in the shape of a pillow constructed along with a pial in an Indian dwelling house. 4. ஒரு கல் தொலைவு (யாழ்ப்.); one mile distance.

[கட்டு → கட்டை = கட்டப்பட்டது.]

கல் [மைல்] கணக்கைக் குறிக்க மரக்கட்டை நடுவது யாழ்ப்பாண வழக்கு. அதனாற்றான் கட்டை அங்கு ஒரு கல் [மைல்] தொலைவைக் குறித்து நின்றது.

**கட்டை**[5] *kaṭṭai*, பெ.(n.) குறிஞ்சிமலர்; kuṟinji.

**பட.** கட்டெ, கட்டெ சொப்பு; **இரு.** கட்டெ, கட்டெ; **கோத., து.** கட்.

[கட்டு → கட்டை.]

பன்னிரு ஆண்டுவரை பூக்காது வெறுமனே கட்டைபோல் இருத்தலால் கட்டை என வழக்கெய்தியது. குறிஞ்சி, பண்பாட்டு அடிப் படையில் வியப்புமிக்க செடி. அதன் நீலநிற மலர் நீலமலை (blue mountain) எனப் பெயரமைவிற்குக் காரணமாயிற்று. பழந்தமிழில் இச் செடி, திருமணத் திற்கு முன் இருபாலார்க்கும் இடையே ஏற்படும் அன்பையும் அது நிகழ்விடமான மலையையும் குறித்து நின்றது. [தமிழ் சுவலபில். திராவிட மொழியியல் ஓர் அறிமுகம் . ப.69.].

**கட்டை**[6] *kaṭṭai*, பெ.(n.) 1. உயரக்குறைவு; shortness of stature. *ஆள் கட்டையானவன்.* 2. மதிப்புக் குறைவு; defect, imperfection; lowness, as of price; inferiority. விலைக்கட்டை(உ.வ.). 3. தேய்ந்தது; that which is short, low, dwarfish; that which is diminished or worn out by use, as a broom - stick. கட்டைத் துடைப்பம் (உ.வ.). 4. பற்றாதது; deficiency in length or in breadth, insufficiency. *அகலக்*

கட்டை. 5. ஓசைக்குறைவு; lowness of sound. கட்டைக்குரல் (சாரீரம்). 6. திப்பி (வின்.); refuse or residum,of the grains after pounding and sifting. 7. மயிர்க்கட்டை; roughness of the beard after shaving hair stump. கட்டையை தட்டுகிறது நன்றாக மழி (உ.வ.). 8. கழற்சிக்காய் ஆட்டத்தின் முதற்றொகை; the first count in a game of jack tones. கட்டை விழாமல் காய்களைப் போடு(உ.வ.). 9. ஒருவகை இசைக் குற்றம் (திருவாலவா.57: 26.); flatting, as a defect in singing.

ம. கட்டை; **கசபா., கோண்(அடிலா).** கட்டே; **Ar.** qasir; **Heb.** katsar; **F.** court; **Sp.,It.** corto; **Port.** curto; **Rum.** scurt; **G.** kurz; **Du.,Swed.,Dan.,Norw.** kort; **Pol.** krotki; **Cz.** kracky; **Ser.croa.** kratak; **Turk.** kisa; **Russ.** karothi; **Yid.** kurts; **Gk.** kondos'.

*[முனை மழுங்கின பொருளும் மேன்மேலும் முனை தேயும் பொருளும் குட்டையாகும். குறைதலும் குட்டையாதலே. குள் → குள்ளம், குள்→ குள்ளை. குள் → குள்ளல். குள் → குட்டை → கட்டை (மு.தா.107).]*

இதன் மூலத்தை அறியாது, மரக்கட்டை விறகுகட்டை, செப்புக் கட்டை, முதலியவற்றின் தடிப்பத்தைக் குறிக்கும் 'கட்டை' யென்னும் சொல்லோடு இணைத்துள்ளது சென்னைப் பல்கலைக்கழக அகரமுதலி [பாவாணர்,வே.க.152].

**கட்டை[7]** *kaṭṭai,* பெ.(n.) மத்தளத்தின் மரத்தாலான பகுதி (கலைமகள். XII, 399); the wooden portion of a mattaḷam.

*[கள் → கட்டு → கட்டை = திரண்ட மரத்துண்டு, திரண்ட விறகு. வடமொழியில் திரட்சி என்னும் சிறப்புப் பொருளில்லை. (வ.மொ.வ.102.).]*

**கட்டைக்கயிறு** *kaṭṭai-k-kayiṟu,* பெ.(n.) வலையில் மிதப்புக் கட்டை பிணைத்தற்குரிய சிறு கயிறு (தஞ்சை மீனவ.); cord used for tying pieces of wooden blocks to fishing nets.

ம. கங்கிலி

*[கட்டை + கயிறு.]*

**கட்டைக்கரி** *kaṭṭai-k-kari,* பெ.(n.) மரக்கட்டையைக் காற்றுப்படாமல் எரித்து உண்டாக்கும் கரி; charcoal. கும்மட்டி அடுப்பிற்குக் கட்டைக்கரி வாங்கிவா(உ.வ.).

மறுவ. அடுப்புக்கரி

ம. கட்டக்கரி

*[கட்டை + கரி.]*

மரக்கட்டைகளை அடுக்கி, மண்பூச்சுப் பூசித் தீயூட்டி, காற்றுப்புகாமல் மூட்டமிட்டுக் உருவாக்குவது கட்டைக்கரி.

**கட்டைக்கருத்து** *kaṭṭai-k-karuttu,* பெ.(n.) மந்தக் கருத்து; obtuse notion.

*[கட்டை[6] + கருத்து.]*

**கட்டைக்கரும்பு** *kaṭṭai-k-karumbu,* பெ.(n.) கரும்பை அறுவடை செய்தபின் மண்ணில் புதைந்திருக்கும் வேர்க்கரும்பினின்று வளரும் கரும்பு; succeeding growth of cane raised from a portion of stalk which is replanted. கட்டைக்கரும்பானதால் வயலில் பயிர்ச்செலவு குறைவு (உ.வ.).

*[கட்டை + கரும்பு.]*

பெரும்பாலும் முதற்போக விளைபயனி லிருந்து இதன் விளைபலன் சற்றே குறைவாக இருக்கும்.

**கட்டைக்கழுத்தன்** *kaṭṭai-k-kaḻuttaṉ,* பெ.(n.) மரவட்டை; wood louse (சா.அக.).

*[கட்டை[6] + கழுத்தன்.]*

**கட்டைக்கற்றாளை** *kaṭṭai-k-kaṟṟāḷai,* பெ.(n.) நெல்வகை; a kind of coarse paddy.

*[கட்டை[6] + கற்றாளை.]*

**கட்டைக்காணம்** *kaṭṭai-k-kāṇam,* பெ. (n.) நிலவுடைமையாளருக்குக் குத்தகைக்காரர் தரும் அன்பளிப்பு; a complimentary present made by a tenant or lease-holder to the proprietor of an estate.

ம. கட்டக்காணம்

*[கட்டை + காணம். காணம். = பொன், பொற்காசு, பொருள். கட்டைக்காணம் = சிறுபொருள்.]*

**கட்டைக்காப்பு** *kaṭṭai-k-kāppu,* பெ.(n.) உள்ளே செப்புக் கட்டையும் மேலே பொற்றகடுமாக அமைத்த காப்பு (இ.வ.); bangles of copper encased in gold.

*[கட்டை[3] + காப்பு.]*

**கட்டைக்காரன்** *kaṭṭai-k-kāraṉ,* பெ.(n.) கள்ளிச் செடி; prickly pear.

ம. கட்டகாரன்

*[கட்டை + காரன்.]*

**கட்டைக்காரை** *kaṭṭai-k-kārai,* பெ.(n.) முட்செடி வகை (நாஞ்.); a thorny shrub.

*[கட்டை + காரை. காரை = காட்டுச்செடிவகை.]*

**கட்டைக்கால்**[1] *kaṭṭai-k-kāl,* பெ.(n.) 1. வயல் அல்லது ஆற்றுப் பக்கத்திலுள்ள தாழ்ந்த நிலம்; low land adjoining rice-field or river.

ம. கட்டக்கால்; க. கட்டெ (அணை).

*[குட்டை → கட்டை + கால்.]*

**கட்டைக்கால்**[2] *kaṭṭai-k-kāl,* பெ.(n.) 1. ஊனமுற்ற காலுக்குப் பொருத்தப்படும் செயற்கைக் கால்; artificial leg for deformed leg. கட்டைக்கால் பொருத்தி இருந்தும் வேகமாக நடக்கிறான்(உ.வ.). 2. குறுகிய தடித்த கால்; a deformed leg appearing short and stout. 3. பொய்க்கால் குதிரை; dummy horse.

*[கட்டை + கால் – கட்டைக்கால் = குட்டையான காலுள்ளது.]*

**கட்டைக்கால்**[3] *kaṭṭai-k-kāl,* பெ.(n.) கூரையைத் தாங்க உத்தரத்தின்மேல் வைக்கும் சிறுகால் (இ.வ.); short upright prop over the beam in a roof. கட்டைக் காலை உத்தரத்தில் நிறுத்து (உ.வ.).

*[கட்டை[3] + கால்.]*

**கட்டைக்காலி** *kaṭṭai-k-kāli,* பெ.(n.) 1. குறுகிய காலுள்ளவன்–ள்–து; short legged man, woman or animal. 2. கரடி; bear. 3. பன்றி; pig.

*[குட்டை → கட்டை[6] + காலி.]*

**கட்டைக்கீச்சான்** *kaṭṭai-k-kiccaṉ,* பெ.(n.) ***கட்டக்கீச்சான்*** பார்க்க see *kaṭṭa-k-kiccaṉ.*

*[கட்டை + கீச்சான்.]*

**கட்டைக்குத்துவீடு** *kaṭṭai-k-kuttu-viḍu,* பெ.(n.) உத்தரம், விட்டம் ஆகிய கட்டைகள் அமைத்து மேற்றளம் போட்ட வீடு; house terraced with timber rafters.

*[கட்டை + குத்து + வீடு.]*

**கட்டைக்குரல்** *kaṭṭai-k-kural,* பெ.(n.) 1. தடித்த குரல்; harsh, grating voice. 2. கம்மிய குரல் (யாழ்ப்.); weak, low voice. 3. மந்தக் குரல்; short and dull voice due to some disorder of the larynx (சா.அக.).

*[குட்டை → கட்டை + குரல். குட்டை = குறைந்தது, கம்மியது, மந்தமானது.]*

**கட்டைக்குருகில்** *kaṭṭai-k-kurugil,* பெ.(n.) ஒரு வகைச் சிறிய பறவை; a kind of small bird.

ம. கட்டக்குரிகில்

*[கட்டை + குருகில். குருகு → இல். 'இல்' சிறுமை, குறுமைப்பொருள் பின்னொட்டு. குருகு பறவையினப் பொதுப்பெயர்.]*

**கட்டைக்குருத்து** *kaṭṭai-k-kuruttu,* பெ.(n.) வாழையின் ஈற்றிலை (யாழ்ப்.); last tender leaf of a plantain which envelopes the sheath or blossom and shoots out a little before it.

ம. கட்டக்குருந்நு

*[குட்டை → கட்டை + குருத்து.]*

**கட்டைக்கெளுத்தி** *kaṭṭai-k-keḷutti,* பெ.(n.) ஆற்றில் வாழ்வதும், 18 விரலம் வரை வளர்வதுமாகிய வெள்ளைக் கெளிற்றுமீன் வகை; a river fish, silvery, attaining 18 inches in length.

*[குட்டை → கட்டை + கெளுத்தி. கெளிறு → கெளிற்றி → கெளுத்தி.]*

**கட்டைக்கை** *kaṭṭai-k-kai,* பெ.(n.) மீன்வலையின் முனை; the rear edge of a kind of fishing net.

ம. கட்டக்கை

*[குட்டை → கட்டை + கை.]*

**கட்டைக்கொக்கான்** *kaṭṭai-k-kokkāṉ,* பெ.(n.) ஏழு கற்களை ஒவ்வொன்றாக மேலே எறிந்து, கையால் பிடித்து விளையாடும் மகளிர் விளையாட்டு வகை (யாழ்ப்.); a kind of indoor game of women in which one takes seven pebbles in a hand and tosses these singly and in combination marking score for each successful tossing.

மறுவ. ஏழாங்கல், கொக்கான், கட்டைவைக்கை.

*[குட்டை → கட்டை + கொக்கான்.]*

ஏழு கற்களை வைத்து விளையாடுவது சேரநாட்டு வழக்கு. ஐந்து கற்களை வைத்து விளையாடுவதும் உண்டு. இதனை ஐந்தாங்கல் [அஞ்சாங்கல்] என்பர்.

**கட்டைக்கொம்பன்** *kaṭṭai-k-kombaṉ,* பெ.(n.) தலையில் கொம்புள்ள ஒருவகை மீன்; a hammer headed shark.

**ம.** கட்டக்கொம்பன்

*[கட்டை + கொம்பன்.]*



கட்டைக்கொம்பன்

**கட்டைகட்டு – தல்** *kaṭṭai-kaṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. கொண்டி மாட்டுக்குத் தடி கட்டுதல்; to suspend a piece of wood from the neck of an unruly cow so that the block may act as a drag and thus prevent the animal from straying away. 2. மணம் புரிவித்து இணைத்து வைத்தல் (இ.வ.); lit., to bind or yoke, fig., to unite a person in marriage that he may there after be obliged to lead a steady life.

*[கட்டை + கட்டு–. கட்டைகட்டுதல் = தன் விருப்பம் போல் அலையாமலிருக்கத் தடைபோடுதல்.]*

**கட்டைச்சகடு** *kaṭṭai-c-cagaḍu,* பெ.(n.) ***கட்டை வண்டி*** பார்க்க; see *kaṭṭai-vaṇḍi.*

*[கட்டை + சகடு.]*

**கட்டைச்சம்பா** *kaṭṭai-c-cambā,* பெ.(n.) ***கட்டையன்***[2] பார்க்க; see *kaṭṭaiyaṉ.*

*[கட்டை + சம்பா.]*

**கட்டைச்சாரீரம்** *kaṭṭai-c-cārīram,* பெ.(n.) ***கட்டைக்குரல்*** பார்க்க; see *kaṭṭai-k-kural.*

**Skt.** sārira > **த.**சாரீரம்.

*[கட்டை + சாரீரம்.]*

**கட்டைச்சி** *kaṭṭaicci,* பெ.(n.) குள்ளமான பெண் (யாழ்ப்.); short woman.

**ம.** கட்டச்சி

*[குட்டை → கட்டை → கட்டைச்சி.]*

**கட்டைச்சுவர்** *kaṭṭai-c-cuvar,* பெ.(n.) 1. சிறு சுவர்; low wall. 2. கைப்பிடிச் சுவர்; balustrade; parapet wall.

*[குட்டை → கட்டை + சுவர்.]*

**கட்டைச்சுறா** *kaṭṭai-c-cuṟā,* பெ.(n.) ***கட்சுறா*** பார்க்க; see *kaṭ-cuṟā.*

*[கட்டை + சுறா.]*

**கட்டைச்செம்பாளை** *kaṭṭai-c-cembāḷai,* பெ.(n.) பெருநெல்வகை (தஞ்சை.); a kind of coarse paddy.

*[கட்டை + செம்பாளை. செம்பாளை = சிவப்பு நிற அரிசியைத் தரும் நெல்வகை.]*

**கட்டைச்செம்பு** *kaṭṭai-c-cembu,* பெ.(n.) தரமற்ற செம்பு; inferior or impure copper.

*[கட்டை + செம்பு.]*

**கட்டைத்தடி** *kaṭṭai-t-taḍi,* பெ.(n.) செங்கல் வடிவமைக்கப் பயன்படும் சட்டம்; a wooden mould for making bricks.

**மறுவ.** கட்டளை

**ம.** கட்டத்தடி

*[கட்டை + தடி.]*

**கட்டைத்தூக்கு** *kaṭṭai-t-tūkku,* பெ.(n.)சுவர் எழுப்பும்பொழுது பயன்படுத்தும் நூல்குண்டு; plumb-line.

**மறுவ.** தூக்குக் குண்டு

**ம.** கட்டத்தூக்கு

*[கட்டை + தூக்கு. கட்டை = மரக்கட்டை.]*

**கட்டைத்தூண்** *kaṭṭai-t-tūṇ,* பெ.(n.) தாழ்வாரத்தைத் தாங்கும் சிறிய தூண்; wooden pillar of veranda.

*[குட்டை → கட்டை + தூண்.]*

**கட்டைத்தொட்டி** *kaṭṭai-t-toṭṭi,* பெ.(n.) விறகு விற்கும் கிடங்கு; firewood depot.

[கட்டை + தொட்டி. கட்டை = விறகு. தொட்டி = நாற்புறமும் அடைப்புள்ள இடைநிலப் பகுதி. ஒ.நோ. தொட்டிவீடு, ஆட்டுத்தொட்டி.]

**கட்டைதட்டல்** *kaṭṭai-taṭṭal,* பெ. (n.) விரியன் பாம்பு கடித்தல் ( நெல்லை); bite of viper snake.

[கட்டை + தட்டல். கட்டை = கட்டுவிரியன். தட்டல் = தாக்குதல், முட்டுதல், கடித்தல்.]

**கட்டைப்பஞ்சாயத்து** *kaṭṭai-p-pañjāyattu,* பெ.(n.) சிற்றூர், பேரூர்களில் அடிதடி, வன்முறைகளில் வல்லவர்கள் மரத்தடியில் அல்லது பொதுவிடத்தில் கூடிச் சமன் செய்து சீர்தூக்காமல் யாரேனும் ஒருவர்க்கே சார்பாக முறையல்லாது தீர்ப்பு வழங்குதல்; kangaroo court held by local toughs often with political backing.

U. panjayattu > த. பஞ்சாயத்து

[கட்டை + பஞ்சாயத்து. கட்டை = மரக்கட்டை.]

**கட்டைப்படகு** *kaṭṭai-p-paḍagu,* பெ.(n.) சிறிய படகு (இராம. மீனவ.); small boat.

[குட்டை → கட்டை + படகு.]

**கட்டைப்பயிர்** *kaṭṭai-p-payir,* பெ.(n.) முதிர்ந்த பயிர்; full grown plant (சா.அக.).

[குட்டை → கட்டை + பயிர்.]

**கட்டைப்பயிர்வெற்றிலை** *kaṭṭai-p-payir-veṟṟilai,* பெ.(n.) முதிர்ந்த காலினின்று கிள்ளிய வெற்றிலை (இ.வ. ); betal plucked from a full-grown betal vine.

[கட்டை + பயிர் + வெற்றிலை. கட்டை = முதிர்வு.]

**கட்டைப்பருத்தி** *kaṭṭai-p-parutti,* பெ.(n.) முன்பருவத் தாளில் வளர்ந்த பருத்திச்செடி; cotton grown on the previous season's stubble.

[கட்டை + பருத்தி.]

**கட்டைப்பொலி** *kaṭṭai-p-poli,* பெ.(n.) தூற்றாத சூட்டடிநெல்; paddy before the chaff is blown away.

[கட்டை + பொலி.]

**கட்டைப்பொன்** *kaṭṭai-p-poṉ* பெ.(n.) தரம் குறைந்த பொன்; inferior gold.

மறுவ. கட்டைத் தங்கம்

[கட்டை + பொன். கட்டை = குறைந்த, தரமற்ற.]

**கட்டைபறி-த்தல்** *kaṭṭai-pari-,* 4 செ.குன்றாவி.(v.t.) வேரடிகளை நிலத்தினின்று தோண்டிக் களைதல்; to remove roots. *'காடுவெட்டிக் கட்டைபறித்து' (S.I.I. V-i,470).*

[கட்டை + பறி-.]

**கட்டைபுரட்டு-தல்** *kaṭṭai-puraṭṭu-* 5 செ.குன்றாவி. (v.t.) 1. ***கட்டைபறி-த்தல்*** பார்க்க; see *kaṭṭai-pa-ri,* கரும்புக் கொல்லையைக் கட்டை புரட்டினால்தான் நடவு நடமுடியும்(உ.வ.). 2. மீன் வலையிலுள்ள மிதப்புக்கட்டைகள் உலருமாறு திருப்பிப் போடுதல்; to turn the floats of the fishing net to get it dried fully.

[கட்டை + புரட்டு. புரட்டு = கீழ்மேலாகத் திருப்புதல், வேருடன் களைதல்.]

**கட்டைபோடு[1]-தல்** *kaṭṭai-poḍu-,* 20 செ.குன்றாவி. (v.i.) முட்டுக்கட்டை போடுதல்; to thwart, obstruct. *தேரைக் கட்டை போட்டு நிறுத்து.* 2. தடை செய்தல்; to hinder, prevent.

[கட்டை + போடு-. கட்டை = மரக்கட்டை.]

**கட்டைபோடு[2]-தல்** *kaṭṭai-pōḍu-,* 20 செ.கு.வி.(v.i.) 1. மயக்கமடைதல்; to faint or swoon from any cause. 2. சாதல்; to die. நலமாக இருந்தவர் கட்டையைப் போட்டு விட்டார் (உ.வ.).

[கட்டை + போடு. கட்டை = மரக்கட்டை போன்ற (உயிர்பிரிந்த) உடல்.]

**கட்டைபோடு[3]-தல்** *kaṭṭai-pōḍu-,* 20 செ.குன்றாவி. (v.i.) திண்டுக்கட்டை (திமிசு) யால் இடித்துத் தரையைக் கெட்டிப்படுத்துதல்; to tamp loose earth to consolidate the subgrade for road.புதிய வீட்டுத்தரைக்குக் கட்டை போடுகிறார்கள் (உ.வ.).

[கட்டை + போடு-.]

**கட்டைமட்டம்** *kaṭṭai-maṭṭam,* பெ.(n.) மேற்கூரை அமையும் சுவரின் மேல்மட்டம்; the upper part of a wall on which the roof rests.

[கட்டை + மட்டம். கட்டை = சுவர்.]

**கட்டைமண்** *kaṭṭai-maṇ,* பெ.(n.) சிறு மண்சுவர்; small mud-wall. *'நீ கட்டை மண்ணாய்ப் போவாய்'. (நெல்லை.)*

*[கட்டை + மண். மண் = மண்ணாலாகி சுவர்.]*

**கட்டைமண்குட்டிச்சுவர்** *kaṭṭai-maṇ-kuṭṭi-c-cuvar,* பெ.(n.) மேற்கூரையின்றிச் பழுதடைந்து நிறைவுறாமல் நிற்குஞ் சுவர்; roofless ruined small mud-wall.

*[கட்டை + மண் + குட்டிச்சுவர். கட்டைமண் = கட்டைச்சுவர், சிறுசுவர். குட்டிச்சுவர் = இடிந்த சிறுசுவர், பாழ்மனை.]*

**கட்டைமாடு** *kaṭṭai-māḍu,* பெ.(n.) கொம்பு மழித்த காளை; hornless bull.

மறுவ. மொட்டை மாடு

*[குட்டை → கட்டை + மாடு. கட்டை = தேய்ந்த,குறைந்த.]*

**கட்டைமுடி** *kaṭṭai-muḍi,* பெ.(n.) கூரையின் அடிப்பாகத்தில் பரப்பி வேய்வதற்காகக் கம்பந்தட்டின் அல்லது புற்கட்டின் நுனிப்பகுதி வெட்டப்பட்ட சிறு கட்டு; top chopped plants of kambu or maize sprsad as plants for bottom layer of roof.

*[கட்டை + முடி.]*

**கட்டைமுறுக்கி** *kaṭṭai-muṟukki,* பெ.(n.) கயிறு திரிக்கப் பயன்படும் துளையிட்ட கட்டை; holed drilled wooden planks with holes used in twisting ropes.

ம. கட்டமுறுக்கி

*[கட்டை + முறுக்கி.]*

**கட்டையஞ்சீலா** *kaṭṭai-yañjīlā,* பெ.(n.) சீலா வகையைச் சேர்ந்த மீன் (இராம. மீனவ.); a kind of šīlā fish.

*[கட்டை + அம் + சீலா.]*

**கட்டையடி[1]-த்தல்** *kaṭṭai-y-aḍi-,* 4 செ.குன்றாவி. (v.i.) 1. முளை அடித்தல்; to drive a wooden peg into the ground to hold an animal. 2. பலாக்காய் பழுப்ப தற்காக வேப்பமுளையை ஆப்பாக அடித்தல் (வின்.); to drive a wooden wedge into a plucked jack-fruit to ripen it. 3. கால்மிதியால் கெட்டிப் படுத்தப்பட்ட உப்பளத் தளத்தைக் கனமான மரக்கட்டை கொண்டு அடித்து இறுகும்படிச் செய்தல்; to ram,beat the loose floor of salt pan to solidify.

*[கட்டை + அடி-.]*

**கட்டையடி[2]-த்தல்** *kaṭṭai-y-aḍi-,* 4 செ.கு.வி.(v.i.) காலிற் கட்டை இடறுதல்; to hurt one's foot against a stump.

*[கட்டை + அடி-.]*

**கட்டையரி** *kaṭṭai-y-ari,* பெ.(n.) மூங்கிலரிசி; bamboo seed.

ம. கட்டயரி

*[கட்டை + அரி. கட்டை = தடிப்பு. அரி = அரிசி.]*

**கட்டையவிழ்[1]-த்தல்** *kaṭṭai-y-aviḻ-,* 4 செ.குன்றாவி. (v.i.) பொய் கூறத் தொடங்குதல்; to begin to spin a yarn; to commence uttering false stories.

*[கட்டு → கட்டை + அவிழ்-. கட்டு = மூட்டை.]*

**கட்டையவிழ்[2]-த்தல்** *kaṭṭai-y-aviḻ,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. சோற்று மூட்டையை அவிழ்த்தல்; to open the food packet. 2. கமுச்கச்செய்தியினை வெளிப்படுத்தல்; to expose secret matters. 3. கட்டுப்பாட்டைத் தளரவிடுதல்; to loose as of control. வன்முறை கட்டவிழ்த்து விடப்பட்டது (உ.வ.).

*[கட்டை + அவிழ்-.]*

**கட்டையன்[1]** *kaṭṭaiyaṉ,* பெ.(n.) குள்ளன்; short person. கட்டையன் வந்தானா?(உ.வ.).

ம. கட்டயன்; குற. கட்டயா.

*[குட்டை → கட்டை + அன்.]*

**கட்டையன்[2]** *kaṭṭaiyaṉ,* பெ.(n.) சம்பா நெல்வகை; a kind of samba paddy. *"மட்டுப் படாத குறுவைக் கிளையான் கட்டையன்" (நெல்விடு.180).*

ம. கட்டயன்

மறுவ. கட்டைச்சம்பா

[குட்டை → கட்டை → கட்டையன்.]

**கட்டையாடு** *kaṭṭai-y-āḍu,* பெ.(n.) பள்ளையாடு; a species of dwarf goat.

[குட்டை → கட்டை + ஆடு.]

**கட்டையிலடி-த்தல்** *kaṭṭai-y-il-aḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) தண்டனையாக இருகைகளுக்கும் தலைக்கும் தனித்தனி துளையுள்ள கட்டையில் ஒருவனை மாட்டுதல் (இ.வ. ); to be put in stocks.

[கட்டையில் + அடி.]

**கட்டையிலேகிட-த்தல்** *kaṭṭaiyilē-iḍa-,* 3 செ.கு.வி. (v.i. ) இறத்தல்; to suffer death. *கட்டையிலே கிடக்குமட்டும் கவலைதானே (சா.அக.).*

[கட்டையில் + கிட-. கட்டை = பாடை.]

**கட்டையிலை** *kaṭṭai-y-ilai,* பெ.(n.) ஏடாக நறுக்கிய அடி வாழையிலை (இ.வ.); portion of the plantain leaf cut across near the stem, for use as a plate.

[குட்டை → கட்டை + இலை.]

**கட்டையிழைப்புளி** *kaṭṭai-y-iḻaippuḷi,* பெ.(n.) மரத்தை இழைப்பதற்குரியத் தச்சுக்கருவிகளில் சிறியது; small smoothing plane.

[கட்டை + இழைப்பு + உளி.]

**கட்டைவண்டி** *kaṭṭai-vaṇḍi,* பெ.(n.) 1. சுமை ஏற்றும் மாட்டுவண்டி; a bullock-cart., 2. வில் இல்லாத வண்டி; springless country cart.

மறுவ. கட்டைச்சகடு

ம. கட்டவண்டி; பட. கட்டெ புண்டி.

[கட்டை + வண்டி. கட்டை = மரக்கட்டை.]



கட்டை வண்டி

**கட்டைவலை** *kaṭṭai-valai,* பெ.(n.) மிதப்புக் கட்டைகள் பிணைத்துக் கட்டப்பட்டட மீன்பிடி வலை (தஞ்சை மீனவ.); a fishing net with the floating wooden blocks tied in proper places.

[கட்டை + வலை. கட்டை = மிதப்புக்கட்டை.]

**கட்டைவலை²** *kaṭṭai-valai,* பெ.(n.) சிறுவலை (தஞ்சை மீனவ.); small fishing net.

[கட்டை (குட்டை, சிறிய) + வலை.]

**கட்டைவாக்கு** *kaṭṭai-vākku,* பெ.(n.) ஒன்பான் மணிகளின் மங்கலொளி; dimness in gems.

[கட்டை + வாக்கு. வாகு → வாக்கு = பக்கம். குட்டை → கட்டை = குறைவு, மங்கல். கட்டைவாக்கு = பளபளப்பு மழுங்கிய பக்கம்.]

**கட்டைவிரல்** *kaṭṭai-viral,* பெ.(n.) 1. கைப் பெருவிரல்; thumb. 2. கால்பெருவிரல்; great toe.

மறுவ. பெருவிரல்

[கட்டை +விரல். விரி → விரல்.]



கட்டை விரல்

**கட்டைவிழு-தல்** *kaṭṭai-viḻu-,* 2 செ.கு.வி.(v.i.) வடிவுபெறாத கருச்சிதைந்து விழுதல்; to suffer abortion of unformed foetus.

[கட்டை + விழு-. கட்டை = உயிரற்ற உடல்.]

**கட்டைவிளக்குமாறு** *kaṭṭai-viḷakkumāṟu,* பெ.(n.) தேய்ந்து போன துடைப்பம்; short or worn out broom.

[குட்டை → கட்டை + விளக்குமாறு.]

**கட்டைவெள்ளி** *kaṭṭai-veḷḷi,* பெ.(n.) மட்டவெள்ளி; inferior or impure silver.

*[கட்டை + வெள்ளி. கட்டை = சிறியது, தாழ்ந்தது தரக்குறைவானது.]*

**கட்டைவெள்ளை** *kaṭṭai-veḷḷai,* பெ.(n.) நெல்வகை; a kind of paddy.

*[கட்டை + வெள்ளை. கட்டை = தடிப்பு.]*

**கட்டைவைக்கை** *kaṭṭai-vaikkai,* பெ.(n.) 1. கொக்கான் விளையாட்டு (யாழ்ப்.); collecting the pebbles in a game of jackstones, a kindergarten game with cubes(J). 2. ஈற்றெழுத்துச் செய்யுள் பாடுதலில் வெல்லுகை; winning in the game of composing poems with particular last letters.

*[கட்டை + வைக்கை. கட்டைவைத்தல் = திறன்காட்டுதல் பொருளில் விரிந்தது.]*

**கட்டைவைத்தல்** *kaṭṭai-vaittal,* தொ.பெ(vbl.n.) சிறுவரின் குச்சி விளையாட்டு; a kind of children's game.

மறுவ. கிள்ளான் வைத்தல், கிச்சு கிச்சுத்தம்பலம்.

*[கட்டை + வைத்தல். = மணலுள் சிறு குச்சி அல்லது மரச் சிம்பு ஒளிய வைத்து இருகைவிரல் எதிரெதிர் பிணைத்துக் குச்சி அகப்படுமா எனக் குறிப்பிட்ட இடத்தை உட்கவிந்த கையால் மூடிக் கிண்டிப்பார்த்தல்.]*

**கட்டோசை** *kaṭṭōsai,* பெ.(n.) பேரொலி; loud report tremendous noise.

*[கடு → கட்டு + ஓசை. கட்டு = செறிவு, மிகுதி.]*

**கட்டோடு** *kaṭṭōḍu,* வி.அ. (adv.) முழுவதும்; utterly, absolutely, used with words implying negative sense.

மறுவ. கூண்டோடு

*[கட்டு + ஓடு. கட்டு = முழுவதும்.]*

**கட்டோர்** *kaṭṭōr,* பெ.(n.) கள்ளர் (பிங்.); thieves, robbers.

*[கள் → கடு → கட்டோர். ஒ.நோ. தள் → தடு→தட்டோர் (தடுத்தோர், அணைகட்டியோர்) எனத் திரிந் தாறபோன்று கள் → கடு → கட்டோர் எனத் திரிந்ததாகல் வேண்டும். களவாடுதல் பொருளில் வழங்கிய 'கடு' வினைச்சொல் பண்டே வழக்கற்றது.]*

**கட்படாம்** *kaṭ-paḍām,* பெ.(n.) யானையின் முகத் தணியும் அழகுதுணி; ornamental fillet or frontlet for blindfolding an elephant. *"கடா அக் களிற்றின்மேல் கட்படாம்"* (குறள்: 1087).

*[கண் + படாம். படாம் = துணி.]*

**கட்பலம்** *kaṭpalam,* பெ.(n.) 1. தேக்கு (மலை.); teak. 2. தான்றி (மலை.); belleric myrobalan.

*[கள் + பலம். கள் = திரட்சி, வலிமை.]*

**கட்பலா** *kaṭpalā,* பெ.(n.) காட்டுப் பலா; jungle jack (சா.அக.).

*[காட்டுப்பலா → கட்பலா.]*

**கட்பவர்** *kaṭpavar,* பெ.(n.) களைபவர்; cutter, remover. *"வரிவரால் பிறழ்வயற் குவளை கட்பவர்" (சீவக.1249).*

*[கள் + ப் + அவர் – கட்பவர். வெட்டுவோர், களைபறிப்பவர், திருடுவோர். 'ப்' எதிர்கால இடைநிலை.]*

**கட்பனி** *kaṭpaṉi,* பெ.(n.) கண்ணீர்த்துளி; tear drop.

*[கண் + பனி.]*

**கட்பு** *kaṭpu,* பெ.(n.) 1. களைபறிக்கை; weeding. *"கரும்பின் எந்திரம் கட்பி னோதை" (மதுரைக். 258).* 2. திருட்டு; theft.

**தெ.** கலுபு

*[கள் + பு – கட்பு. பு. சொல்லாக்க ஈறு. கள்=நீக்கு, வெட்டு. கட்பு = நீக்குதல், பறித்தல்.]*

**கட்புலம்** *kaṭ-pulam,* பெ.(n.) 1. பார்வை; sight, vision. *"கடவுட் கோலங் கட்புலம் புக்கபின்" (சிலப்.30:2).* 2. கண் என்னும் பொறி; sense of sight.

*[கண் + புலம்.]*

**கட்புலன்** *kaṭ-pulaṉ,* பெ.(n.) கண்; eye. *"கட்புலன் கதுவா துயர்ந்து பின்னே வருங்காண்" (நைடத. அன்னத்தைத் தூது.38).*

*[கண் + புலன். புலம் → புலன்.]*

**கட்போன்** *kaṭpōṉ,* பெ.(n.) திருட்டுத் தொழில் செய்பவன்; thief. *"கட்போ ருளரெனிற் கடுப்ப" (சிலப். 5:115).*

*[கள் + பு – கட்பு + (ஆன்) ஓன்.]*

**கட-த்தல்** *kaḍa-,* 3 செ.கு.வி.(v.i.) 1. கடந்து போதல். to pass through; to traverse, cross, as a river, a

country. *"கடக்கருங் கானத்து"* (நாலடி. 398). 2. தாவுதல் (திவா.); to jump over, step over. 3. மேற்படுதல்; to exceed, excel, surpass, transcend. *"கரும்பையும் கடந்த சொல்லாள்" (கம்பரா. கிட்கிந்தா. நாடவிட்.36).* 4. மீறுதல்; to transgress, disobey, contravene, violate, as a rule, a command, a custom. *"கவராக் கேள்வியோர் கடவா ராகலின்" (மணிமே.1:10).* 5. அளத்தல்; to measure. *"இருநிலங் கடந்த திருமறு மார்பின் முந்நீர் வண்ணன் பிறங்கடை" (பெரும்பாண்.29).* 6. நீங்குதல்; to keep clear of, get away from, escape from, as the world, the sea of births. *"நேசத்தால் பிறப்பிறப்பைக் கடந்தார் தம்மை, ஆண்டானே" (திருவா.5:24).* 7. நேரே பொருதல்; to openly resist. "சிலம்பிற் சிலம்பிசை ஒவாது ஒன்னார்க் கடந்தட்டான் கேழிருங் குன்று *(பரிபா.15:45).* 8. வெல்லுதல்; to win, overcome, conquer, vanquish. *"பேரமர்க் கடந்த கொடுஞ்சி நெடுந்தேர் ஆராச் செருவின் ஐவர் போல" (பெரும்பாண்.416,17.)* 9. அழித்தல்; to destroy. *"வெப்புடைய வரண்கடந்து துப்புறுவர்" (புறநா.11:8).*

**ம.** கடக்க; **தெ.** கடட்சு; **கோத.** கர்வ்; **துட.** கட்; **பட.** கடெ; **து.** கடபுனி; **Russ:** kod.

*[கள் → கட. கள் = வெட்டு, பிரி, நீக்கு.]*

**கடக்கம்**[1] *kaḍakkam,* பெ.(n.) பேரரசன் இராசேந்திரன் வென்ற இடங்களில் ஒன்று; a place conquered by Rajendran-I. *"நண்ணற் கருமுரண் மண்ணை கடக்கமும்" (மெய்க்கீர்த்தி).*

**கடக்கம்**[2] *kaḍakkam,* பெ.(n.) நாகப்பட்டினம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Nagappattinam district.

*[கடகம் → கடக்கம். கடகம்=வளையம், வட்டம், வட்டாரம், எல்லை வகுக்கப்பட்ட தனியூர்.]*

கருநாடகத்தில் கடக்கம் என்ற ஊர் கடக் என்று குறுகியுள்ளது. பேச்சுவழக்கில் கதக் என்றும் அழைக்கப்படுகிறது.

**கடக்கல்** *kaḍakkal,* தொ.பெ.(vbl.n.) கடந்து போதல்; to pass through. *"கண்டவர் கடக்க லாற்றா" (சீவக. 1047).*

*[கட → கடக்க + அல். அல் – தொ. பெ. ஈறு.]*

**கடக்கை**[1] *kaḍakkai,* பெ.(n.) இசைக்கருவி வகை; a kind of musical instrument. *"இடக்கை கடக்கை மணிக்காளம்"(சேக்கிழார் பு. 73).*

*[குடம் → கடம் + கை.]*

**கடக்கை**[2] *kaḍakkai,* பெ.(n.) ஒன்றுபட்ட சேர்க்கை நிலம்; adjacent pieces of land. *'இந்நிலம் ஒருமா வரையம், இதனோடேய் விலை கொண்டுடைய பதினைந்து குழியும் ஆக இவ்விரண்டு கடக்கை நிலத்தாலும்' (கல்வெட்டு).*

*[கட → கடக்கை. கட=மீறுதல், அதிகமாதல், ஒருங்கே இருத்தல்.]*

**கடக்கோட்டி** *kaḍakkōṭṭi,* பெ.(n.) 1. தும்பை; bitter-lucas. 2. கவிழ்தும்பை; stooping plant (சா.அக.).

*[கடைக்கோடி → கடக்கோடி → கடக்கோட்டி .]*

**கடகக்குடி** *kaḍagakkuḍi,* பெ.(n.) திருவாரூர் மாவட்டத்தில் உள்ள ஊர்; a village in Tiruvarur district.

*[கடகம் + குடி – கடகக்குடி. **கடகம்** பார்க்க; see kaḍagam]*

**கடகக்கை** *kaḍaga-k-kai*, பெ.(n.) சிற்பங்களின் கை அமைப்பு முறைகளில் ஒன்று; a hand and finger position in sculpture works.

*[கடகம் + கை. கடகம் = நண்டு.]*

கடகக்கை என்பது பெருவிரல் நுனியுஞ் சுட்டு விரல் நுனியும் பொருந்த வளைந்து நக நுனியைப் பொருத்தி நிற்ப மற்றைய மூன்று விரல்களும் நிமிர்ந்து நிற்கும். கைகளில் கயிறு [பாசம்], அங்குசம், தண்டம், அம்பு போன்ற கருவிகள் பிடிக்க

ஏற்ற நிலை. புறத்தோற்றம் நண்டின் வடிவில் உள்ளதால் கடகக்கை என்றாயிற்று.



கடகக்கை

**கடகட—த்தல்** *kaḍa-kaḍa-,* 3 செ.கு.வி.(v.i.) 1. நெகிழ் வடைதல்; to become loose, as teeth. பல்லெல்லாங் கடகடத்துப் போயிற்று (உ.வ.). 2. ஆட்டங்கொடுத்தல்; to rattle, as a pin in a Jewel. கொலுசுத் திருகாணி கடகடத்திருக்கிறது (உ.வ.).

பட. கடகட

*[கட + கட.]*

**கடகடப்பு** *kaḍa-kaḍappu,* பெ.(n.) ஒலியோடு அசைகை; clatter, rattling, rumbling, clicking.

*[கட + கடப்பு.]*

**கடகடப்பை** *kaḍakaḍappai,* பெ.(n.) வயிற்றிரைச்சல்; rumbling noise in the stomach (சா.அக.).

*[கடகட → கடகடப்பை.]*

**கடகடவெனல்** *kaḍakaḍa-v-eṉal,* பெ.(n.) 1. ஒலிக் குறிப்பு (திவா.); clattering, rattling, rumbling, clicking. 2. விரைவுக்குறிப்பு; sounding rapidly, expr. signifying rapidity. கடகடவென்று பாடம் ஒப்பித்தான்(உ.வ.).

க. கடகடிசு

*[கடகட + எனல். கடகட – ஈரடுக்கு ஒலிக்குறிப்பு.]*

**கடகண்டு** *kaḍa-kaṇḍu,* பெ.(n.) ஒரு பழைய நாடக நூல் (தொல்.பொருள். 492 உரை); an ancient treatise on dancing.

*[கட + கண்டு.]*

**கடகத்தண்டு** *kaḍaka-t-taṇḍu,* பெ.(n.) பல்லக்கு (சிவிகை) (சிலப்.14: 126, உரை); palanquin.

*[கடகம் + தண்டு. கடகம் = ஓலை, ஓலைப்பெட்டி. ஓலைப்பெட்டி வடிவிலமைந்த மூடாப்புக் கொண்டதும் தூக்குதற்கான தண்டோடு இணைந்ததுமான பல்லக்கு.]*

**கடகத்தூர்** *kaḍagattūr,* பெ.(n.) தருமபுரி மாவட்டத்தில் உள்ள ஊர்; a village in Dharmapuri district.

*[கடகம் + அத்து + ஊர் – கடகத்தூர், கடகம்: தன்னாட்சி பெற்ற தனியூர்.]*

மராட்டியத்தில் முற்காலத்தில் தானிய கடகம், மண்ணிக் கடகம் போன்ற ஊர்கள் இருந்தன. இங்குப் பல போர்கள் நடந்துள்ளன. மண்ணிக்கடகம் இன்று 'மான்கெட்' என்று திரிந்துள்ளது.

**கடகநல்லூர்** *kaḍaga-nallūr,* பெ.(n.) திருவள்ளூர் மாவட்டத்திலுள்ள ஊர்; a village in Thiruvallur district.

*[கடகம் + நல்லூர் – கடகநல்லூர். கடகம்: தன்னாட்சி பெற்ற தனியூர்.]*

**கடகநாதன்** *kaḍaga-nādaṉ,* பெ.(n.) படைத்தலைவன்; chief of army. *"கடக நாதனுட னணிந்து திருந்தனன்" (பாரத. இரண்டாம்.6).*

*[கடகம் + நாதன். கடகம் = படை.]*

**கடகம்**[1] *kaḍagam,* பெ.(n.) 1. பனைமரத்தின் அகணியால் முடையப்பட்ட பெரிய பெட்டி (புறநா.33 உரை); large tray made of upper rind of the palmyra frond. 2. கெண்டி (வின். ); vessel with a kind of spout. 3. பாய்; straw-mat.

ம. கடவம்

*[குள் → குண் → குணம் → குடம் = வளைவு, உருண்ட கலம், சக்கரக்குறடு. குடந்தம் = வளைவு, வணக்கம். குடக்கு → குடக்கி = வளைவானது. (குடகம்) → கடகம் = வட்டமான பெரு நார்ப்பெட்டி (வ.மொ.வ6.).]*

**கடகம்**[2] *kaḍagam,* பெ.(n.) 1. கங்கணம்; bracelet, armlet. *"கடகம் செறிந்த கையை"* (மணிமே.6:114). 2. வளையல்; bangles. 3. அரைஞாண்; a girdle or zone 4. கேடயம் (திவா.); shield. 5. வட்டம் (பிங்.); circle, ring wheel. 6. பெருவிரலுஞ் சுட்டுவிரலும் வளைந்து ஒன்றோடொன்று உகிர் கவ்வ மற்றை மூன்று விரல்களும் நிமிர்ந்துநிற்கும் இணையா வினைக்கை (சிலப்.3:18, உரை.); (natya) a gesture with one hand in which the tips of the thumb and of the forefinger are joined together and the other three fingers are held upright. 7. படை (பிங்.); army. *"கடக நாதனுட னணிந்து நின்றனன் களத்திலே"*

(பாரத. இரண்டாம். 6). 8. படைவீடு (அக.நி.); cantonment, military camp. 9. மதில் (பிங். ); fortified wall. 10. மதில் சூழ்ந்த ஒட்டரநாட்டுத் தலைநகர் (தமிழ்நா. 223.); Cuttack, the capital of Orissa. 11. மலை; mountain (சா.அக.). 12. மலைப்பக்கம் (பிங்.); mountainside, ridge of a hill. 13. பள்ளத் தாக்கு; a valley. 14. ஓர் ஆறு (பிங்.); a river. 15. தலை நகரம்; a royal capital or metropolis. 16. வாழ்விடம், வீடு; a house or dwelling. 17. தேற்றாங்கொட்டை; water cleaning nut. 18. கண்ணாடி ஏனம்; glass tray. (சா.அக.).

ம. கடகம்; க. கடக; **Skt.** kataka.

*[குடா = வளைவு. குடங்குதல் = வளைதல். குடந்தம் = வணக்கம். குட → குடம் → (குடகம்) → கடகம் = வளையல், தோள்வளை, வட்டம், வட்டமான பெருநார்ப்பெட்டி, நகர் சூழ்ந்தமதில், மதில் சூழ்ந்த ஒட்டர நாட்டுத் தலைநகர் (வ.மொ.வ. 102,103).]*

**கடகம்**[3] *kaḍagam,* பெ. (n.) 1. கடக ஓரை (பிங்.); cancer, a sign of the zodiac. 2. நண்டு; crab. 3. நான்காம் மாதம் (ஆடி); the fourth Tamil month.

ம. கடகம்; **Skt.** kataka; **Malay.** ketam.

*[குட → குடம் → (குடகம்) → கடகம் = வளைந்தது, வட்டமானது, நண்டு.]*

**கடகம்**[4] *kaḍagam,* பெ.(n.) 1. யானைத்திரள் (பிங்.); troop of elephants. *"கடக முள்வயிற் காட்டிய கூடங்கள்" (தணிகைப்பு. 32.)* 2. ஓர் எண் (பிங். ); a number.

*[கள் → கடகு → கடகம். கள் = திரட்சி, குழு, கூட்டம், மந்தை.]*

**கடகம்**[5] *kaḍagam,* பெ.(n.) குள்ளநரி; a jackal.

ம. கடகம்.

*[குடகம் → கடகம் = வளைவு, சூழ்ச்சி, ஏமாற்றுந்திறன்.]*

**கடகம்**[6] *kaḍagam,* பெ.(n.) 1. பூவாது காய்க்கும் மரம்; any tree yielding fruits without apparent flowers. 2. அத்திமரம்; a fig tree (சா.அக.).

*[குடகம் → கடகம். கடகம் = உட்துளையுள்ளது.]*

**கடகம்**[7] *kaḍagam,* பெ.(n.) திருவாரூர் மாவட்டத்தில் உள்ள சிற்றூர்; a village in Tiruvarur district.

*[குடகம் → கடகம் = வளையம், வட்டம், வட்டாரம், எல்லை வகுக்கப்பட்ட தனியூர், தன்னாட்சி வழங்கப்பட்ட ஊர்.]*

**கடகம்**[8] *kaḍagam,* பெ.(n.) தன்னாட்சி பெற்ற தனியூர்; self governed town or village

மறுவ. தனியூர்

*[கடகம் = வளையம், வட்டம், வட்டாரம், எல்லை, எல்லை வகுக்கப்பட்ட தனியூர், தன்னாட்சி வழங்கப்பட்ட ஊர்.]*

**கடகல்** *kaḍakal,* பெ.(n.) கடவைப் புல்; a kind of grass growing in water-logged areas.

ம. கடகல், கடவப்புல்லு.

*[கடம் → கடவம் → கடகம் → கடகல். கடம் = பாலை.]*

**கடகவிணைக்கை** *kaḍaga-viṇaikkai,* பெ.(n.) இரண்டு கையும் கடகமாய் மணிக்கட்டுக்கு ஏற இயைந்து நிற்கும் இணைக்கை (சிலப். 3:18 உரை); a gesture in dancing in which the wrists of both the hands in kadagam gusture are brought close together.

*[கடகம் + இணை + கை.]*

**கடகன்** *kaḍagaṉ,* பெ.(n.) 1. செயலைக் கூட்டி வைப்பவன்; தேர்ந்தவன் (திவ். திருப்பா.அவ. ப. 18); agent, commissioner, middleman, 2. வல்லவன்; a well-versed, proficient person. *அவன் எல்லாச் செயல்களிலும் கடகன்.* 3. மணமுடிப்போன்; match maker; negotiator of matrimonial alliances.

*[கடத்தல் = மிஞ்சுதல்,தேர்தல், வெல்லுதல். கட → கடகன் = கடந்தவன், தேர்ந்தவன். த. கடகம் > **Skt.** ghaṭaka. (வ.மொ.வ.103).]*

**கடகால்** *kaḍakāl,* பெ.(n.) நீரிறைக்கும் வாளி; நீர்ச்சால் (இராம.); bucket, cylindrical bucket.

*[கடையால் → கடகால்.]*

**கடகி** *kaḍagi,* பெ.(n.) மனை; house.

*[கடகம்[2] → கடகி.]*

**கடகிகம்** *kaḍagigam,* பெ.(n.) பெருந்தும்பை; a big variety toombay. (சா.அக.).

*[கடகு → கடகிகம்.]*

**கடகு** *kadgu,* பெ.(n.) 1. கேடகம் (சீவக.2218, உரை); shield. 2. காப்ப-வன்-வள்-து; protector. *"அவனைக் கடகாகக் கொண்டு" (ஸ்ரீவசன.245).*

*[கடகம் → கடகு. கடகம் = வள்ளைவு, வட்டம்.]*

**கடங்கனேரி** *kaḍaṅganēri*, பெ.(n.) திருநெல்வேலி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Thirunelveli district.

*[கடங்கன் + ஏரி – கடங்கனேரி. கடங்கன் என்பவன் பெயரிலமைந்த சிற்றூர்.]*

**கடசம்** *kaḍašam*, பெ.(n.) கங்கணம்; bracelet, wrist-let.

*[கடகம்² → கடசம்.]*

**கடசியம்** *kaḍašiyam*, பெ.(n.) சிறிய துலைத்தட்டு; pan of a small balance.

*[கடகம் → கடசியம். கடகம் = அளவு.]*

**கடத்தல்**[1] *kaḍattal*, தொ.பெ.(vbl.n.) 1. பொருள்களை ஓரிடத்தினின்று மற்றோரிடத்திற்குக் கொண்டு செல்லல்; ferrying, carrying across. 2. திருட்டுத் தனமாகப் பொருள்களைக் கொண்டு செல்லல்; smuggling. 3. ஆளைக் கடத்துதல்; kid-napping. 4. தாண்டுதல்; passing. *"அண்டமுங் கடந்தான்"* (கந்தபு.நகர.87). 5. நடத்தல்; walk. 6. வெல்லுதல்; winning. *"வடமீனுக் கடக்கும்" (திருக்கோ. 305).*

**ம.** கடத்தல்

*[கட → கடத்தல்.]*

**கடத்தல்**[2] *kaḍattal*, பெ.(n.) ஒரோசையான தன்மை நீங்கிப் பலவோசையாக வரும் இசைக்குற்றம் (திருவாலவா.57:26); defect in singing, flaw of changing from one note to many.

*[கட → கடத்தல்.]*

**கடத்தல்காரன்** *kaḍattal-kāraṉ*, பெ.(n.) 1. திருட்டுத்தனமாகப் பொருள்களைக் கொண்டு செல்பவன்; smuggler. 2. ஆளைக் கடத்துபவன் kid-napper. 3. சுமை தூக்குபவன்; porter.

*[கடத்தல் + காரன்.]*

**கடத்தி**[1] *kaḍatti*, பெ.(n.) மின்சாரம், வெப்பம் போன்றன ஒரு முனையிலிருந்து மறுமுனைக் குச்செல்லப் பயன்படும் ஊடகம்; conductor, that which transmits electricity to heat etc. from one end to the another end by contact. செம்பு ஓர் எளிதில் கடத்தி (உ.வ.).

*[கட → கடத்து → கடத்தி.]*

**கடத்தி**[2] *kaḍati*, பெ.(n.) கடமை, புள்ளியில்லாத மான் வகை; a spotless deer.

*[கடம் → கடத்தி. கடம் = காடு. கடத்தி = காட்டில் வாழ்வது. பாலைக்காடுகளில் வாழ்வது.]*

**கடத்திமுட்டம்** *kaḍatti-muṭṭam*, பெ.(n.) தருமபுரி மாவட்டத்துச் சிற்றூர்; a village belongs to Dharmapuri district.

*[கடம் +அத்து + முட்டம் – கடத்திமுட்டம் >க.கடத்தி முட்லு.]*

**கடம் = பாலைநிலம், வறண்ட புன்செய்நிலம். முட்டம் = ஈடுகட்டித்தரப்பட்ட உழுநிலம், அந்நிலம் சார்ந்த ஊர்.**

**கடத்து**[1]**–தல்** *kaḍattu-*, 5 செ.குன்றாவி.(v.t.) 1. செலுத்துதல்; to cause to go; to drive. 2. கடப்பித்தல்; to transport, carry across. *"அடியார் பவக்கடலைக் கடத்துமணியை" (திருப்போ. சந்த பிள்ளைக் காப்பு.6.)* 3. காலம் போக்குதல்; to pass, as time. இளமையில் கல்லாமல் நாளைக் கடத்தி விட்டான் (உ.வ.). 4. குழப்புதல்; to do carelessly, as work; to dawdle. அவன் வேலையைக் கடத்துகிறான்(உ.வ.). 5. வானூர்தி முதலிய வற்றை அச்சுறுத்திக், கொண்டு செல்லுதல்; hijack. 6. தடைசெய்யப்பட்ட பொருள்களை–ஆள்களை இசை வின்றிக் கொண்டு போதல்; kidnap, smuggle. போதைப் பொருள்களைக் கடத்துதல் சட்ட மீறலாகும் (உ.வ.). 7. விலக்குதல்; to remove.

**க.** கடெகாயிசு; **ம.** கடத்துக; **தெ.** கடபு, கடுபு; **து.** கடபாவுனி; **கோத., துட.** கட்த்; **பட.** கடுசு. **கசபா .** கய்த்தி.

*[கட → கடத்து-.]*

**கடத்து**[2] *kaḍattu*, பெ.(n.) தோணி; boat.

**ம.** கடத்து; **க.** கட (படகு.)

*[கட → கடத்து.]*

**கடத்துக்கூலி** *kaḍattu-k-kūli*, பெ.(n.) தோணி அல்லது படகு செலுத்தக் கொடுக்கும் கூலி; ferri-age.

*[கடத்து +கூலி.]*

**கடத்துத்தோணி** *kaḍattu-t-tōṇi*, பெ.(n.) படகு; a ferry boat.

**மறுவ.** கடத்து

ம. கடத்துதோணி.

*[கடத்து + தோணி.]*

**கடத்துரு** *kaḍat-turu,* பெ.(n.) 1. கத்தூரிமான்; musk deer. 2. மான்மணத்தி (கத்தூரி) என்னும் நறுமணப்பொருள்; secretion from the navel of muskdeer.

*[கடம் + அத்து + துரு → கடத்துரு. கடம் = பாலைநிலம், வெற்றுநிலம். துரு = செம்மறியாடு. கடத்துரு = செம்மறியாடுபோன்ற காட்டுமான். கடத்துரு → கத்துரு → கத்தூரி (kasturi) எனத் திரிந்தது.]*

**கடத்தூர்** *kaḍattūr,* பெ.(n.) கோயம்புத்தூர் மாவட்டத்துச் சிற்றூர்; village name in Coimbatore district.

*[கடம் +அத்து + ஊர் –கடத்தூர். கடம் = பாலைநிலம், வறட்சி மிகுந்த நிலப்பகுதி.ஈரோடு, தருமபுரிமாவட்டத்திலும் இவ்வூர் உள்ளது.]*

**கடதீபம்** *kaḍa-tībam,* பெ.(n.) பூசையின்போது பயன்படுத்தும் 16 வகைப் பூசைக் கருவிகளுள் ஒன்று; குடவிளக்கு; lamp fixed on a brass pot and waved before an idol during puja time, which is one of the 16 items.

*[குடம் + தீபம் – குடதீபம் → கடதீபம். (கொ.வ.)]*

**கடந்த** *kaḍanda,* பெ.எ.(adj.) கழிந்த; past, last. கடந்த கால வாழ்க்கையை எண்ணி நடந்துகொள் (உ.வ.).

*[கட → கடந்த (இ.கா.பெ.எ).]*

**கடந்தகாலம்** *kaḍanda-kālam,* பெ.(n.) இறந்த காலம்; past period.

*[கடந்த (இ.கா.பெ.எ) + காலம்.]*

**கடந்தவன்** *kaḍandavaṉ,* பெ.(n.) 1. எல்லையைக் கடந்தவன்; one who transgresses a limit. 2. ***கடவுள்*** பார்க்க; see *kaḍavuḷ.*

*[கட → கடந்தவன்.]*

**கடந்தவெண்ணம்** *kaḍanda-v-eṇṇam,* பெ.(n.) முதிர்ச்சியான எண்ணம்; mature thought.

*[கடந்த + எண்ணம்.]*

**கடந்தேறு-தல்** *kaḍandēṟu-,* 10 செ.கு.வி.(v.i.) 1. கடந்துபோதல்; to pass through, traverse. *"இருதா ளளவெனக் கடந்தேறும்" (கம்பரா. யுத்த. இரணிய. 3).* 2. இடையூறு கடத்தல் (வின்.); to be saved; to overcome obstacles; to get over difficulties. 3. நற்பேறு அடைதல் (வின்.); to rise to a higher plane as in spiritualism.

*[கடந்து + ஏறு-.]*

**கடந்தை**[1] *kaḍantai,* பெ.(n.) 1. பெருந்தேனீ; a kind of bee. 2. குளவிவகை; a kind of wasp.

ம. கடன்னல், கடந்த; **க.** கடந்துறு, கடந்துறுதெ; **தெ.** கடுதுறு, கணுதுறு, கடசு, கணசு; **துட.** கொட்டத்; குட. கடந்தி; **து.** கணசட புரி; **கொலா.** தாந்தில் பொத்தே; **கோண்.** கந்தேல்; **குவி.** க்ராந்தி; **Skt.** kanaba; **Pkt.** gandalli; **Mar.**gadil.

*[கடு → கடந்தை.]*

**கடந்தை**[2] *kaḍandai,* பெ.(n.) திருப்பெண்ணாகடம்; name of a village Thiruppenakadam. *"கடந்தைநகர் வணிகர்" (திருத்தொண்டர் புராணசார.49).* *[கடம் → கடந்தை.]*

**கடப்படி** *kaḍa-p-paḍi,* பெ.(n.) வாயில் (யாழ்ப்.); door way.

*[கடவு + படி – கடவுப்படி → கடப்படி.]*

**கடப்படு-தல்** *kaḍa-p-paḍu-,* 20 செ.கு.வி.(v.i.) நிறைவேறுதல் (ரகஸ்ய.782); to be accomplished.

*[கடு = மிகுதி, நிறைவு. கடு → கட + படு-.]*

**கடப்பந்தாங்கல்** *kaṭappantāṅgal,* பெ.(n.) திருவண்ணாமலை, திருவள்ளூர் மாவட்டங்களில் உள்ள சிற்றூர்; village name in Thiruvannamalai district and Thiruvallur district.

*[கடப்பன் + தங்கல் – கடப்பந்தாங்கல்.]*

**கடப்பநந்தல்** *kaṭappanantal,* பெ.(n.) விழுப்புரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Villuppuram district.

*[கடப்பன் + ஏந்தல்–கடப்பனேந்தல்→ கடப்பநந்தல் (கொ.வ.) ஏந்தல் = ஏரி, ஏரியைச் சார்ந்த ஊர்.]*

**கடப்பநெல்** *kaḍappa-nel,* பெ.(n.) 1. மூன்று மாதத்தில் விளையும் கருங்குறுவை நெல் (யாழ்ப்.); a kind of

dark paddy, maturing in three months. 2. நான்கு மாதத்தில் விளையும் குறுவை நெல் வகை (G.D.94); a species of kuruvai paddy, maturing in four months.

**மறுவ.** கடப்பு

*[கடு → கடுப்பு → கடப்பு + நெல் – கடப்பநெல். கடுப்பு = விரைவு, குறுகிய காலத்தில் விளைவது. கருங்குறுவை நெல்லை ஒகப்பயிற்சியில் சித்தர்கள் பத்திய உணவாகக் கொள்வர்.]*

**கடப்பமரம்** *kaḍappa-maram,* பெ.(n.) **கடம்பம்** பார்க்க; see *kaḍambam.*

*[கடம்பு + மரம் – கடம்பமரம் → கடப்பமரம்.]*

**கடப்பளி** *kaḍappaḷi,* பெ.(n.) 1. ஒழுக்கமில்லாதவன்; knave. 2. ஈகையில்லாதவன்; miser, close-fisted person.

*[கடன் → கடப்பு + (அழி) அளி.]*

**கடப்பாக்கம்** *kaḍappākkam,* பெ.(n.) காஞ்சிபுரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kanchipuram district.

*[கடப்பன் + பாக்கம் – கடப்பன்பாக்கம் → கடப்பாக்கம்.]*

**கடப்பாட்டாளன்** *kaḍappāṭṭāḷaṉ,* பெ.(n.) 1. கடமையறிந்து அதனைச் செய்பவன்; he who does what he knows to be his duty. 2. கொடை யாளி; public benefactor. *இவை மூன்று பாட்டானும் கடப்பாட்டாளனுடைய பொருள் பயன்படுமாறு கூறப்பட்டது (குறள்,217 உரை).*

*[கடப்பாடு + ஆளன்– கடப்பாட்டாளன்.]*

**கடப்பாட்டுப்பத்திரம்** *kaḍappāṭṭu-p-pattiram,* பெ.(n.) உறுதிமொழி ஆவணம்; recognisance.

*[கடப்பாடு + பத்திரம்.]*

**கடப்பாடு** *kaḍappāḍu,* பெ.(n.) 1. கடமை; duty, obligation. *"கைத்திருத் தொண்டுசெய் கடப்பாட்டினார்" (பெரியபு. திருக்கூட்.5).* 2. முறைமை; established custom, order, usage. *"கடப்பா டறிந்த புணரிய லான" (தொல். எழுத்து.37).* 3. கொடை; gift. *"நாளும் பெருவிருப்பா னண்ணுங் கடப்பாட்டில்" (பெரியபு. ஏனாதி.4).* 4. ஒப்புரவு; liberality, munificence, *"கைம்மாறு வேண்டா கடப்பாடு" (குறள், 211.).* 5. தகுதி; capacity. 6. நடை; conduct, behaviour, 7. நேர்மை; honesty.

**ம.** கடப்பாடு

*[கடன் + (படு) பாடு.]*

ஒருவன் கடமையாகச் செய்யவேண்டிய பல வினைகளுள் அறமும் ஒன்றாகும். உயர்திணையைச் சார்ந்த காரணத்தினாலும், உலகம் கடவுளைத் தலைமையாகக் கொண்ட ஒரு மாபெருங் குடும்பம் என்னுங் கருத்தினாலும், ஒவ்வொருவனும் பிறர்க்கு, அவருள்ளும், சிறப்பாக, ஏழை எளியவர்க்குத் தன்னால் இயன்றவரை உதவியும் நன்மையும் செய்தல் வேண்டும். இங்ஙனம் செய்தற்குக் கடப்பாடு என்று பெயர். "கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட் டென்னாற்றுங் கொல்லோ வுலகு" (குறள்,211.) என்றார் திருவள்ளுவர். கடப்பாடு என்னும் சொல்லின் முதற்பொருள் கடன் என்பதே. ஒவ்வொருவரும் அறஞ்செய்ய வேண்டுவது கடன் என்னும் கருத்தினால், அச் சொல்லுக்கு ஒப்புரவொழுகல் (உபகாரஞ் செய்தல்) என்பது வழிப்பொருளாய்த் தோன்றிற்று. (வே.க. 106.)

**கடப்பாரை** *kaḍa-p-pārai,* பெ.(n.) நீண்டதும், வலிவானதும் ஒரு முனை கூர்மையுடையதுமான இரும்புக்கம்பி; crow bar.

**ம.** கட்பார; **தெ.** கட்டபாரா.

*[கடுதல் = வெட்டுதல். பார் → பாரை = நீண்டது. கடு → கட + பாரை – கடப்பாரை. கட்டப்பாரை, கட்டைப்பாரை என்பன வழு; விலக்கத் தக்கன.]*

**கடப்பான்** *kaḍappāṉ,* பெ.(n.) நண்டு வகை (நெல்லை); a kind of crab.

*[குடப்பு → கடப்பு → கடப்பான் = வளைந்த கால் உடையது.]*

**கடப்பு**[1] *kaḍappu,* பெ.(n.) 1. கடக்கை; passing. *"விற்க டப்பரும் விறலி ராகவன்" (சேதுபு.தேதுவ.6);* 2. விலங்குகள் செல்லவியலாமல் மாந்தர் மட்டுஞ் செல்லுதற்கு அமைக்கப்படும் இடுக்குமர வழி முதலியன (வின்.); wicket or narrow passage in a lane, wall or hedge for the use of people only but

not for cattle. 3. மிகுதியானது; that which is abundant; large quantity. *"கவ்வையிற் கடப்பன்றோ". (கலித்.66:18).*

ம. கடப்பு; க. கடகல்; தெ. கடபு.

*[கட → கடப்பு. கட = செல், போ. செல்லுதல் = மேற்பட்டுச் செல்லுதல், மிகுதல்.]*

**கடப்பு**[2] *kaḍḍapu,* பெ.(n.) வெற்றி; victory. *"பாடுவன் மன்னாற் பகைவரைக் கடப்பே" (புறநா.53).*

*[கட → கடப்பு = யாவரினும் மேம்பட்டு நின்றதால் பெற்ற வெற்றி]*

**கடப்புக்கால்**[1] *kaḍappu-k-kāl,* பெ.(n.) 1. வளைந்த கால் (யாழ்ப்.); bandy legs. 2. ஊனமுள்ள கால்; club-foot. 3. தொழுவம் முதலியவற்றில் மாடுகள் புகாமல் தடுப்பதற்கு உழலையிழுத்துப் போடும்படி துளை யிட்டு நிறுத்தியிருக்கும் மரம் (இ.வ.); wooden posts with holes in them for cross-bars, fixed at the entrance of cattle sheds.

*[குடப்பு (வளைவு) → கடப்பு + கால்.]*

**கடப்பூவிச்சி** *kaḍa-ppūvicci,* பெ.(n.) 1. கருநொச்சி; black notchi. 2. நீலநொச்சி; purple notchi (சா.அக.).

*[கள் → கரு + பூவிச்சி – கடுப்பூவிச்சி → கடப்பூவிச்சி]*

**கடப்பேரி** *kaṭappēri,* பெ.(n.) காஞ்சிபுரம், வேலூர் மாவட்டத்துச் சிற்றூர்; village names in Kanchipuram and Vellur district.

*[கடம்பு + ஏரி – கடம்பேரி → கடப்பேரி. கடம்பு மரத்தைச் சார்ந்த ஏரி, ஏரியைச் சார்ந்த ஊர்.]*

**கடப்பேரிக்குப்பம்** *kaṭappēri-k-kupam,* பெ.(n.) விழுப்புரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Viluppuram district.

*[கடம்பு + ஏரி + குப்பம் – கடம்பேரிகுப்பம் → கடப்பேரிக்குப்பம்.]*

**கடப்பைக்கல்** *kaḍappai-k-kal,* பெ.(n.) கடப்பைப் பகுதியில் கிடைக்கும் ஒருவகைக் கறுப்புக் கற்பலகை; Cuddapah-slab.

*[கடப்பை + கல்]*

கூறைநாட்டில் நெய்யப்பட்ட புடைவையைக் "கூறைப்புடைவை" என்றாற் போன்று ஆந்திர மாநிலத்துக் கடப்பை மாவட்டத்தில் இருந்து கொணரப்பட்ட கல் கடப்பைக்கல் எனப்பட்டது.

**கடப்பைமரம்** *kaḍappai-maram* பெ.(n.) சிறு மூங்கில் வகை; Chinese dwarf bamboo.

*[குடப்பு → கடப்பு → கடப்பை + மரம்.]*

**கடபடமெனல்** *kaḍa-paḍam-eṉal,* பெ.(n.) ஒலிமாய்மாலத்தால் மருட்டிப் பேசுதற்குறிப்பு; onom. expr. used to signify metaphysical Jargon, the high sounding verbiage generally indulged in by dialecticians to confound people. *"கற்றதுங் கேட்டதுந்தானே யேதுக்காகக் கடபடமென் றுருட்டுதற்கோ" (தாயு. நின்றநிலை.3).*

*[கடபடம் + எனல்.]*

**கடபடாவெனல்** *kaḍapaḍā-v-eṉal,* பெ.(n.) ஓர் ஒலிக்குறிப்பு; rattling sound.

*[கடபட + எனல்.]*

**கடபம்** *kaḍapam,* பெ.(n.) கெண்டி (நாமதீப.); a kind of vessel with nozzle.

*[குடம் → கடம் → கடபம் (கொ.வ.).]*

**கடம்**[1] *kaḍam,* பெ.(n.) 1. கடன்; debt. *"கடமுண்டு வாழாமை"* (இனி.நாற்.11). 2.இறைக்கடன் (தொல். பொருள்.150); homage due to god; religious obligation. 3. கடமை, முறைமை (சூடா.); duty,proper conduct. *"காரிகை நின் பண்கடமென் மொழி யாரப் பருக வருகவின்னே" (திருக்கோ.220).* 4. நயன் (நீதி) (சூடா.); right Justice.

ம. கடம்; க., து. கட.

*[கடு → கடன் → கடம். கடு = விரைவு, விரைந்து செய்தல். கடன் = விரைந்து செய்யத்தக்க பணி. கடமை என்னும் சொல்லும் விரைந்து கட்டாயம் செய்ய வேண்டிய பணியைக் குறித்தமை காண்க. நிலன் → நிலம் எனத் திரிந்தவாறு. கடன் → கடம் என ஈறு திரிபுற்ற ஈற்றுப்போலி.]*

**கடம்**[2] *kaḍam,* பெ.(n.) 1. காடு; forest. *"கடத்திடைக் கணவனை யிழந்த" (பு.வெ.10.சிறப்பி.1).* 2. மலை; mountain. 3. பாலைநிலத்து வழி; hard dfficult path in a barren tract. "கடம்பல கிடந்த காடுடன் கழிந்து" (சிலப்.11:90). 4. சுடுகாடு (சூடா.); cremation ground. 5. தோட்டம்; garden.

*[கடு → கடம். கடு = கடுமையானது. 'அம்' பருமை (அகற்சி) குறித்த சொல்லாக்க ஈறு.]*

**கடம்**[3] *kaḍam,* பெ.(n.) கரிசு; sin. *"கடமுண்டார் கல்லாதவர்" (திவ்.இயற். 4:52).*

*[கடை → கட → கடம்.]*

**கடம்**[4] *kaḍam,* பெ.(n.) 1. யானைக் கதுப்பு (பிங்.); elephant's temple, from which a secretion flows. 2. யானை மதம்; rut flow of a must elephant. *"கடக்களிறு" (திருவாச.3:155.); "முட்ட வெங்கடங்கள் பாய்ந்து முகிலென முழங்கி" (பெரியபு. எறிபத்.51).*

*[கதுப்பு → கதம் → கடம் = கன்னம்.]*

**கடம்**[5] *kaḍam,* பெ.(n.) கயிறு (பிங்.); rope.

*[கள் → களம் → கடம். கள் = கட்டுதல், இணைத்தல்.]*

**கடம்**[6] *kaḍam,* பெ.(n.) 1. குடம்; water, vessel. *"மலயந் தன்னிற் கடமுனி சேரலோடும்" (கந்தபு. திருக்கல். 65).* 2. கும்பவோரை; sign of Aquarius in the Zodiac. 3. குடமுழுவு (சூடா.); hand drum played on at both ends. 4. பதக்கு (முகத்தலளவை.) (தைலவ. தைல.); dry cubic measure of two kuṟuṇi. 5. உடம்பு (பிங்.); body, human or other. *"ஒழிந்த வாவி கடமுறா" (ஞான. வைராக்.39).*

த. குடம் > வ. கடம்

*[குடம் → கடம்.]*

மட்பாண்டமே அளக்கும் கருவியாகவும் இருந்ததால் இருகுறுணி அளவு கொள்ளும் மட்பாண்டம் பதக்கு எனப்பட்டது. அழியும் உடம்பு மட்பாண்டம் போன்றதாதலின் (குடம்) கடம் எனப்பட்டது.



கடம்

**கடம்**[7] *kaḍam,* பெ.(n.) 1. யானைக் கூட்டம் (பிங்.); herd of elephants. 2. நிலக்கடலை; groundnut. 3. கோழை; coward.

*[கள் → கடு → கடம். கள் = கூடுதல், திரளுதல்.]*

**கடம்**[8] *kaḍam* பெ.(n.) மலைச்சாரல் (பிங்.); mountain side. *"பெருங்கட மலைக்குலம்" (பாரத.சூது. 104).*

*[தடம் → கடம். தடம் = மலை.]*

**கடம்**[9] *kaḍam,* பெ.(n.) மரமஞ்சள்; tree turmeric. *"அரத்தை யொலிகட மதுரங்காயந்... சீராறும்". (தைல. தைலவ. 18).*

*[கடு (வலிமை) → கடம் = வலிமை சான்ற மரம்.]*

**கடம்**[10] *kaḍam,* பெ.(n.) 1. சினம்; anger. 2. ஒரு மந்திரம்; a mantric spell.

*[கதம் → கடம்.]*

**கடம்பக்காடு** *kaḍamba-k-kāḍu,* பெ.(n.) 1. கடம்ப மரம் நிறைந்த காடு; a forest of *kadamba* trees. 2. மதுரை; city of Madurai.

*[கடம்பு + காடு – கடம்புக்காடு (கொ.வ.).]*

மதுரையைச் சுற்றி கடம்பமரம் இருந்ததாகத் தொன்மங்கள் குறிக்கின்றன. அதனாற்றான் மதுரைக்குக் கடம்பக்காடு (வனம்) என்று பெயராயிற்று.

**கடம்பக்குடி** *kaḍamba-k-kuḍi,* பெ.(n.) இராமநாதபுர மாவட்டத்துச் சிற்றூர்; a village in Ramanathapuram district.

*[கடம்பு + குடி – கடம்புக்குடி + கடம்பக்குடி. கடம்பு = கடம்புமரம். அம்மரத்தைச் சார்ந்த ஊர்.]*

**கடம்பக்கூனன்** *kaḍamba-k-kūṉaṉ,* பெ.(n.) ஆமை; tortoise.

**மறுவ.** கடம்பக்கூனி, கடம்பக்கூனை.

*[குடம் → கடம் → கடம்பம் + கூனன்.]*

**கடம்படு**[1]**–தல்** *kaḍam-paḍu-,* 18 செ.குன்றாவி.(v.t.) நேர்ந்துகொள்ளுதல்; to devote, as fruits etc. to the temple, in pursuance of a vow. *"கருவயிறு றுகெனக் கடம்படு வோரும்" (பரிபா. 8:106).*

*[கடன் → கடம் + படு.]*

**கடம்படு**[2]**–தல்** *kaḍam-paḍu-,* 20 செ.கு.வி.(v.i.) சினமடைதல் (சிலப்.29,காவற்பெண்டுசொல்.); to be angry, to grow indignant.

*[கதம் → கடம் + படு .]*

**கடம்பந்துறை** *kaḍamabandurai,* பெ.(n.) 1. திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் உள்ள தேவாரப் பாடல் பெற்ற ஊர்; name of a village in

Tiruchirappalli district having been sung in Devaram. *"வண்ணநன்மலரான் பலதேவரும் கண்ணனும் அறியான் கடம்பந்துறை" (தேவா. அப்பர். 132–4).*

*[கடம்பு + துறை.]*

கடம்பமரங்கள் நிறைந்த நீர்த்துறை அமைந்ததால் பெற்ற பெயர். இன்று, குழித்தலை என்று இவ்வூர் அழைக்கப்படுகிறது.

**கடம்பப்பெருந்தேவி** *kaḍamba-p-perundēvi,* பெ.(n.) திருக்கோவலூர் வட்டத்தில் சென்னகுணம் என்ற ஊரில் கி.பி. 7ஆம் நூற்றாண்டளவில் ஏரி அமைக்க உதவிய பெருமகள்; lady who donated to form a tank in Chennakunam in Thirukkovalur Taluk during 7th Century. *"ஸ்ரீ கடம்பப் பெருந்தேவி செய்பித்த தூம்பு" (ஆவணம், ப. 158).*

*[கடம்பர் + பெருந்தேவி.]*

கடம்பர் வடகருநாடாகப் பகுதியை ஆண்டவர். பல்லவ மன்னர்களோடு மணத் தொடர்பு கொண்டிருந்தனர்.

**கடம்பம்[1]** *kaḍambam,* பெ.(n.) 1. மரவகை (மூ.அ.); common cadamba. *"திணிநிலைக் கடம்பின் றிரளரை வளைஇய". (குறிஞ்சிப்.176).* 2. வெண்கடம்பு; see-side Indian oak.

**மறுவ.** கடம்பு

**ம.** கடம்பு; **க.** கடம்ப; **தெ.** கடாமி, கடிமி.

*[கடம்பு → கடம்பம் (வன்மையான மரம்).]*

**த.** கடம்பம் > **Skt.** kadamba.

அம்மீறு பெற்ற வடிவே ஈறுகெட்டு வடமொழியிலுள்ளது. அதோடு, கடம்பம் என்னும் மரப் பெயரும் கதம்பம் என்னும் கலவைப் பெயரும் ஒன்றாக மயக்கப்பட்டுள்ளன. [வ.மொ.வ. 10].

**வகைகள்** : கடம்பு, நீர்க்கடம்பு, வெண்கடம்பு, மஞ்சட்கடம்பு.



கடம்பு மரக்கிளை

**கடம்பம்[2]** *kaḍambam,* பெ.(n.) 1. அம்பு; arrow. 2. கீரைத்தண்டு; stalk of greens. 3. வாலுளுவை; a spindle tree.

*[கட → கடம்பு → கடம்பம். கட = செல். கடம்பு = நீட்சி.]*

**கடம்பர்[1]** *kaḍambar,* பெ.(n.) கடம்புமரத்தைக் காவல் மரமாகக் கொண்டிருந்தவர்கள்; chieftain who choose Kadamba as their guardian tree.

*[கடம்பு + அர். கடம்பு → கடம்பர்.]*

சிலர், பயன்படா மரஞ்செடி கொடிகளையும் ஒவ்வொரு காரணம்பற்றித் தெய்வத்தன்மை யுடையனவாகக் கருதி அவற்றை அணிந்தும் வழிபட்டும் வந்திருக்கின்றனர். கடம்பர் என்னும் வகுப்பார் கடப்ப மரத்தைக் கடிமரமாகக் கொண்டிருந்தனர். ஆப்பிரிக்க, அமெரிக்கப் பழங்குடி மக்கட்கும் இத்தகைய கொள்கையுண்டு. சைவர் அக்கமணியையும் [உருத்திராக்கத்தையும்] மாலியர் [வைணவர்] துளசியையும், பௌத்தர் அரசையும், சமணர் அசோகையும் தெய்வத்தன்மை யுடையன வாகக் கருதுவதும் இத்தகையதே. [சொ.ஆ. க.19]

**கடம்பர்[2]** *kaḍambar,* பெ.(n.) 1. குறும்பர்; Kurumbar. (community). 2. கடம்பு எனும் தோற்கருவி இசைப்பவர்; a community who have `Kadambu' musical instrument.

*[கடம் + கடம்பர்.]*

**கடம்பர்கோவில்** *kaḍampar-kovil,* பெ.(n.) காஞ்சிபுரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kanchipuram district.

*[கடம்பு + அர் + கோவில் – கடம்பர்கோவில். கடம்பு = கடம்பு மரம். கடம்பர் = கடம்பு மரத்தைக் காவல் மரமாகக் கொண்ட மரபினர்.]*

**கடம்பர்வாழ்கரை** *kaḍampar-vāḻ-karai,* பெ.(n.) நாகைப்பட்டின மாவட்டத்துச் சிற்றூர்; a village in Nagappatinam district.

*[கடம்பு + அர் + வாழ் + கரை.]*

**கடம்பரை** *kaḍambari,* பெ.(n.) கடுகுச்சிவலை (கடுகு ரோகிணி) என்னும் பூண்டு; Christmas rose, herb.

**மறுவ.** கடுசிவதை, கருரோகிணி, கடுகு ரோகிணி.

*[கடம் + கடம்பு + ஆரை–கடம்பாரை → கடம்பரை. ஆரை= கீரைவகை.]*

**கடம்பவனசமுத்திரம்** *kadamba-vana-samuddiram,* பெ.(n.) இராமநாதபுர மாவட்டத்துச் சிற்றூர்; a village in Ramanathapuram distict.

*[கடம்பு + வனம் + சமுத்திரம்– கடம்பவனசமுத்திரம்.]*

கடம்பவனத்துச் சமுத்திரன் பெயரிலமைந்த ஊர். கடல் வாணிகம் செய்யும் வணிகனுக்குரிய கடலன் என்னும் தமிழ்ப் பெயரின் வடமொழியாக் கமாகிய சமுத்திரன் என்பது சமுத்திரம் எனத் திரிந்தது. கடலன் பெயரிலமைந்த ஊர் கடலன்குடி → கடலங்குடி என வழங்குவதை ஒப்பு நோக்குக.

**கடம்பன்**[1] *kadamban,* பெ.(n.) 1. கடம்பமாலை அணிந்த முருகக்கடவுள் (மணிமே.4:49); Skanda, wearing a garland of kadambam flowers. *"செம்பொற் கடம்பன் செவ்வேளும்". (சிந்தா.1664)* 2. கடம்பு எனும் தோற்கருவியை இசைக்கும் ஒரு பழைய குடி; an ancient caste. *"துடியன் பாணன் பறையன் கடம்பனெ ன்றிந்நான் கல்லது குடியு மில்லை". (புறநா.335:7,8)*

ம. கடம்பன்

*[1. கடம்பு → கடம்பன் = கடம்பின் மலரை அணிந்தவன். 2. கடம்பு = தோற்கருவி. கடம்பு + அன் – கடம்பன் = கடம்பு எனும் தோற்கருவி இசைப்பவன்.]*

கடம்பு எனும் தோற்கருவி நீலமலை பழங்குடியினரிடமும் உள்ளது.

**கடம்பன்**[2] *kadamban,* பெ. (n.) முரடன்; unruly person.

*[கடம்பு + அன்–கடம்பன் = கடம்ப மரம் போன்ற வலிமையானவன்.]*

**கடம்பன்குறிச்சி** *kadamban-kuricci,* பெ.(n.) கரூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Karur district.

*[கடம்பு + அன் + குறிச்சி.]*

**கடம்பன்மாறன்** *kadamban-māran,* பெ.(n.) இலால்குடி (திருத்தவத்துறை), மணற்கால் கோயிலில் அணையா விளக்கெரிய நன்கொடை வழங்கிய மாற்றுக்கள்வி என்பவளின் தந்தை; father of Mārrukkalvi who made donations for perpetual lamp in the temple of Manarkal at Lalkudi. *"இடையாற்று நாட்டு சபையோம் நல்லிமங்கலத்துக் கோயிலான் கடம்பன்மாறன் மகள் மாற்றுக்கள்வி வைத்த பொன்" (தெ.இ.கல்.தொ.19 கல்.71).*

*[கடம்பன் + மாறன். கடம்பனின் மகன் மாறன்.]*

**கடம்பன்வயல்** *kadamban-vayal,* பெ.(n.) திருப்பேரையூர்க் கோயிலுக்குக் வரியில்லா நிலமாக வழங்கப்பட்ட வயலின் பெயர்; the name of a field donated to the temple of Peraiyur as tax free land. *"குடி னீங்காத் தேவதானமாகக் கொண்ட கடம்பன் வயலுக்குப் பெருநான் கெல்லை" (தெ.இ.கல்.தொ.23 கல்.163 கி.பி. 1289–90).*

*[கடம்பன் + வயல்.]*

**கடம்பாடி** *kadam-pādi,* பெ.(n.) மதுரை; Madurai.

*[கடம்பு + அடி – கடம்படி → கடம்பாடி.]*

**கடம்பாளம்** *kadam-pālam,* பெ.(n.) மிதவை போன்ற அடையாளக் கருவியை நிலைநிறுத்தும் நங்கூரக் கயிறு; buoy anchor rope. (க.ப.அக.)

*[கடு → கட → கடம்பு + ஆளம். கடம்பு = நீட்சி. ஆளம்– சொ.ஆ.ஈறு.]*

**கடம்பானை** *kadambānai,* பெ.(n.) ஒருவகைக் கடல் மீன்; a two-gilled cuttle fish.

இது கணவாய் மீன் வகையைச் சார்ந்தது. இதற்கு இரண்டு மூச்சுறுப்புகளும் எட்டுக் கைகளும் உண்டு.

**கடம்பி**[1] *kadambi,* பெ.(n.) கெட்டவள்; lewd woman. *"நீசரோடு மிணங்கு கடம்பிகள்" (திருப்பு.67.).*

*[கெடு → கெடம்பி → கடம்பி.]*

**கடம்பி**[2] *kadambi,* பெ.(n.) கடம்பவினத்தார்; kadamba clan.

*[கடம்பு → கடம்பி.]*

**கடம்பு**[1] *kadambu,* பெ.(n.) 1. பழங்காலத் தமிழினத் தாருள் ஒவ்வொரு குடியினரும் தமக்கு உரியதாக

உரிமையாக்கி வழிபட்டு வந்த காவல் மரவகைகளுள் ஒன்று; one of guardian trees specially worshipped by each of the different clans among the ancient Tamil Nadu. 2. ஒரு காட்டுமரம்; common cadamba tree.

**கடம்பின் வகைகள்.**

1. நீலக்கடம்பு, 2. கடற்கடம்பு, 3. நீர்க்கடம்பு, 4. மஞ்சட்கடம்பு, 5. விசாலக்கடம்பு, 6. செங்கடம்பு, 7. சீனக்கடம்பு, 8. நீபக்கடம்பு, 9. வெண்கடம்பு, 10. நிலக்கடம்பு, 11. முட்கடம்பு அல்லது முள்ளுக்கடம்பு, 12. சிறுகடம்பு, 13. பூதக்கடம்பு, 14. நாய்க்கடம்பு, 15. நெய்க்கடம்பு, 16. பட்டைக்கடம்பு, 17. பெருங்கடம்பு, 18. மல்லிகைக் கடம்பு, 19. அக்கமணி (உருத்திராக்க)க் கடம்பு.

*[கடு → கடம்பு.]*

**கடம்பு**[2] *kaḍambu,* பெ. (n.) தீங்கு; evil, mishap, misfortune. *"வித்தாரமும் கடம்பும் வேண்டா" (பட்டினத். பொது).* 2. ஒரு காட்டுமரம்; common cadamba tree.

*[கடு → கடும்பு → கடம்பு.]*

**கடம்பு**[3] *kaḍambu,* பெ.(n.) 1. காடு; forest. *'வடவெல்லை கரடி கும்பல் கடம்புக்குத் தெற்கு' (திருவேங். கல்வெ. 2.பக்.18).* 2. மலைச்சாரல் கறட்டு நிலம்; dryland of mountain slope.

*[கடு → கடம்பு. கடம் = பாலைநிலம்.]*

**கடம்பு**[4] *kaḍambu,* பெ.(n.) அறுபது நாளில் விளைவதும் ஓகிகள் விரும்பி உண்பதுமான கருங்குறுவை நெல்; a black paddy with red rice inside, reaped in 60 days, yogic diet.

*[கள் → கடு → கடம்பு.]*

**கடம்பு**[5] *kaḍambu,* பெ.(n.) பிள்ளை பிறந்தவுடன் சுரக்கும் பால், சீம்பால்; the first milk of a woman after confinement.

*[கடு → கடும்பு → கடம்பு. கடு = விரைவு, ஈன்றணிமை.]*

**கடம்புநெல்** *kaḍambu-nel,* பெ.(n.) கருங்குறுவை நெல்; a black paddy with red rice inside.

*[கடம்பு + நெல். கடம்பு = தடிப்பு.]*

**கடம்புப்பால்** *kaḍambu-p-pāl,* பெ.(n.) சீம்பால்; the first milk of woman after confinement.

*[கடம்பு + பால்.]*

**கடம்பூர்** *kaḍambūr,* பெ.(n.) சோழ நாட்டில் தேவாரப் பாடல் பெற்ற ஊர்; name of a village of Cōḻa country having been sung in Thēvaram. *"காவிரி கொன்றை கலந்த கண் ணுதலான் கடம்பூர்" (தேவா. 204:5).*

*[கடம்பு + ஊர். முருகனுக்கு விருப்பமானது எனக் கருதப்படும் கடம்ப மரங்கள் நிறைந்த தன்மையால் பெற்ற பெயர். அப்பராலும், சம்பந்தராலும் பாடல் பெற்ற தஞ்சை மாவட்ட ஊர். இன்று மேலைக் கடம்பூர் என வழங்கப்படுகிறது.]*

**கடம்பூரணி** *kaḍamburaṇi,* பெ.(n.) இராமநாதபுர மாவட்டத்துச் சிற்றூர்; a village in Ramanathapuram district.

*[கடம்பு + ஊருணி–கடம்பூருணி→கடம்பூரணி. ஊருணி = கேணி, குளம்.]*

**கடம்பூராயப்பட்டி** *kaḍampu-rāya-p-paṭṭi,* பெ.(n.) புதுக்கோட்டை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Pudukkottai district.

*[கடம்பு + அரையன் + பட்டி– கடம்பரையன்பட்டி → கடம்பராயன்பட்டி. கடம்பு = கடம்பமரம்.]*

**கடம்பூலிகம்** *kaḍampūligam,* பெ.(n.) ஒட்டுப்புல்; a plant growing in light sandy soil with bristles which cling to clothes.

*[கடம்பு + ஊலிகம்.]*

**கடம்பை**[1] *kaḍambai,* பெ.(n.) 1. குளவிவகை (இ.வ.); a kind of hornet. 2. காட்டுப்பசு; wild cow.

**ம.** கடன்னல், கடுன்னல்; **க.** கடஞ்ச, கடச, கனச; **து.** கணசத; **குட.** கடந்தி; **தெ.** கடச்சு, கணசு.

*[கடு → கடம் → கடம்பை.]*

**கடம்பை**[2] *kaḍambai,* பெ. (n.) தென்னை நார் (இ.வ.); coconut fibre.

*[கட → கடம் = கயிறு. கடம் → கடம்பை.]*

**கடம்பொடுவாழ்வு** *kaḍambodu-vāḻvu,* பெ.(n.) திருநெல்வேலி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Thirunelveli district.

*[கடம்பு + ஒடு + வாழ்வு = கடம்பொடுவாழ்வு. கடம்பு = முருகனுக்குரிய கடம்பு மரம். கடம்பொடு வாழ்வு என்பது முருகனொடு வாழ்வு எனப் பொருள் படுவதோர் மரபுச்சொல் லாட்சி. செந்தில் வாழ்வே என முருகனைக் குறிப்பிடுதலை ஒப்பு நோக்குக.]*

**கடம்போடு–தல்** *kaḍam-pōḍu-,* 18 செ.குன்றாவி. (v.t.) நெட்டுருப்பண்ணுதல்; to cram unintelligently; to learn a lesson by rote rather than by heart.

**மறுவ.** மனனம் செய்தல், மனப்பாடஞ் செய்தல், நெட்டுருப் போடுதல்.

*[கடம் + போடு. குடம் → கடம்.]*

பொருளறியாமல் மனப்பாடம் செய்தல். கடம் [குடம்] முழக்கும் இரைச்சலைப்போல் சொற்பொருளுணராத குருட்டாம் போக்கு மனப்பாடம் என்று பொருள்.

**கடமக்கோடு** *kaḍamkkōḍu,* பெ.(n.) குமரி மாவட்டத்து விளவங்கோடு வட்டத்துச் சிற்றூர்; a village in Vilavangodu Taluk in Kanyakumari district.

*[கடம்பன் + கோடு – கடம்பன் கோடு → கடம்பங்கோடு → கடமக்கோடு. கோடு = ஏரிகரை, ஏரி, ஏரியைச் சார்ந்த ஊர்.]*

**கடமணை** *kaḍa-maṇai,* பெ.(n.) தேர் அல்லது வண்டியின் முன்னுறுப்பு (பெருங். உஞ்சைக்.36:33); the front part of an ancient cart or car.

*[கடை → கட + மணை.]*

**கடமலை** *kaḍa-malai,* பெ.(n.) களிறு; the male elephant. *"கலிங்க மிரியக் கடமலை நடாத்தி" (விக்கிரம சோழன் மெய்க்கீர்த்தி).*

*[கடம் + மலை. கடம் = மதநீர். மலை = மலைபோன்ற யானை.]*

**கடமலைக்குன்று** *kaḍamalai-k-kuṉṟu,* பெ.(n.) குமரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kanyakumari district.

*[கடமலை + குன்று. கடமலை = யானை. கடமலைக்குன்று = யானைக் குன்று.]*

**கடமலைப்புத்தூர்** *kaḍamalai-p-puttūr,* பெ.(n.) மதுராந்தகம் வட்டத்தில் பெருங்கற்காலச் சின்னங்கள் பெருமளவில் காணப்படும் ஊர்; a place in Maduranthagam Taluk, where megalithic remains are seen on a large scale.

*[கடம் + மலை + புத்தூர்.]*

அலெக்சாந்தர் ரீ என்பவர் இங்கு ஆய்வு செய்தார். மூன்று கால்களும் மேல்பக்கம் மூன்று வாயும் கொண்ட சிவப்புத் தாழி [சாடி] இங்குக் கிடைத்தது.

**கடமா**[1] *kaḍamā,* பெ.(n.) காட்டுஆ (காட்டுப்பசு); bison, wild cow. *"கடமா தொலைச்சிய கானுறை வேங்கை" (நாலடி.300).*

**மறுவ.** கடம்பை, கடத்தி, ஆமா.

**ம.** கடமா(வு)

*[கடம் + (ஆன்→) ஆ. கடம் = காடு.]*

**கடமா**[2] *kaḍamā,* பெ.(n.) மதயானை; must elephant. *"கடமா முகத்தினாற்கு" (தேவா.1047:9.).*

*[கடம் + மா. கடம் = மதநீர்.]*

**கடமாதம்** *kaḍa-mādam,* பெ.(n.) கும்ப (மாசி) மாதம். the 11th Tamil month, corresponding to February, March so called as the Sun is then in Kumbam or Katagam the sign of acquarius. *"கடமாதங் கம்பப் பிரானை" (கம்பரந்.87).*

*[குடம் → கடம் + மாதம். குடம் = கும்ப ஓரை.]*

**கடமாரி** *kaḍa-māri,* பெ.(n.) சிறுபுள்ளடி என்னும் மூலிகை (நாமதீப.); scabrous ovate unifoliate tick-trefoil (சா.அக.).

*[கடம் + மூலி – கடமூலி . கடமாலி → கடமாரி (கொ.வ.).]*

**கடமாவடி** *kaḍamā-vaḍi,* பெ.(n.) புதுக்கோட்டை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Pudukkottai dt.

*[காட்டு → கட்டு + மா + அடி – கட்டுமாவடி → கடமாவடி. மாவடி = மாமரத்தைச் சார்ந்த நிலம்.]*

**கடமான்** *kada-māṉ,* பெ.(n.) 1. நீண்டு கிளைத்த கொம்புகளையுடைய கடமை என்னும் மான்வகை; elk. 2. காட்டா (காட்டுப்பசு); bison, wild cow. *"அடற்கடமான்... பாலும்" (தஞ்சைவா.320). "தேனோடு கடமான் பாலும்" (கந்தபு. வள்ளிய.76).*

மறுவ. கடமை

**ம.** கடமான்; **க.** கடவெ, கடவ, கடப, கடபெ, கடவு, கடக; **குட.** கடமெ; **து.** கடம; **தெ.** கடுசு, கடதி, கணதி; **கொலா.** கடக; **குரு.** காட்சா; **பிரா.** கசம்; **கோல:** கடசு.

*[கடம் + மான். கடம் = வன்கரம்பு, காட்டுநிலம்.]*



கடமான்

**கடமி** *kaḍami,* பெ.(n.) செங்கடம்பு; small Indian oak (சா.அக.).

*[கடம்பு → கடம்பி → கடமி.]*

**கடமுடெனல்** *kaḍa-muḍeṉal,* பெ.(n.) ஒலிக்குறிப்பு; rattling, as the bowels.

*[கடமுட + எனல். கடமுட – ஒலிக்குறிப்பு இணைமொழி.]*

**கடமுறி** *kaḍamuṟi,* பெ.(n.) ***கடன்முறி*** பார்க்க; see *kaḍaṉ-muṟi.*

**ம.** கடமுறி

*[கடன் + முறி – கடமுறி. முறி = ஓலையில் எழுதிய பற்றுச்சீட்டு, சீட்டு.]*

**கடமுனி** *kaḍa-muṉi,* பெ.(n.) அகத்தியர்; the sage Agastya, said to have been born in a pot. *"மலயந் தன்னிற் கடமுனி சேறலொடும்" (கந்தபு. திருக்கல்.65).*

*[குடம் = மேற்கு. குடம் + முனி – குடமுனி – கடமுனி (கொ.வ.).]*

மேற்குமலையில் வாழ்ந்த [குட] முனிவரைக் குடத்தில் பிறந்த முனிவராகத் திரித்துக் கூறுவது தவறு.

**கடமை[1]** *kaḍamai,* பெ.(n.) 1. கடப்பாடு; duty, obligation. 2. கடன்; debt. 3. தகுதி; ability. 4. முறைமை; right, propriety.

*[கடம்[1] → கடமை.]*

**கடமை[2]** *kaḍamai,* பெ.(n.) குடியிறை, அரசு ஊர் நிலங்களை அளந்து, அதன் விளைவிற்கேற்ப உரிமையாளரிடம் பெறும் வரி வகை (கல்.); tax assessment tribute, toll. *"ஆறிலொன்று கொற்றவர் கடமை கொள்ள" (திருவிளை. நாட்டுப்.28).*

**ம.** கடம; **கசபா.** கடமெ.

*[கடன் → கடமை = கொடுக்கக் கடமைப்பட்டுள்ள வரிப்பணமும் கடமை ஆயிற்று.]*

**கடமை[3]** *kaḍamai,* பெ.(n.) 1. பெண் ஆடு (தொல். பொருள்.619); ewe. 2. காட்டு ஆன் (காட்டுப்பசு) (யாழ்.அக.); wild cow. *"தடமரை கடமை யாதி... மேவிய விலங்கு" (கந்தபு.மார்க்.4.)*

**ம.** கடமான்.

*[குள் → குள → கள → கட → கடமை குள் = இளமை, மென்மை, பெண்மை.]*

**கடமை[4]** *kaḍamai,* பெ.(n.) ***கடமான்*** பார்க்க; see *kaḍa-māṉ.*

*[கடம் → கடமை (கடத்தில் வாழ்வது).]*

**கடமைக்கால்** *kaḍamai-k-kāl,* பெ.(n.) வரிக்குரிய தவசங்களை அளந்துகொள்வதற்கு அரசு ஏற்படுத்திய அளவு மரக்கால்; authorized measure of capacity.

[கடமை + கால். கடமை = வரி. கால் = முகத்தல் அளவை கருவி, மரக்கால்.]

**கடமைக்கொடுமுளூர்** *kaḍamai-k-koḍumuḷur,* பெ.(n.) திருநெல்வேலி வட்டம் சுத்துமல்லி அருகிலுள்ள ஊர்;a village in Thirunelvelli Taluk near Suthumalli. *"கடமைற் கொடுமுளூரான உத்தம பாண்டியநல்லூர்" (தெ.இ.கல்.தொ.26 கல். 480).*

[கடமைக்கோடு + முள்ளூர்–கடமைக் கோடுமுள்ளூர் → கடமைக்கொடுமுளூர்.]

**கடமைச்செலவு** *kaḍamai-c-celavu,* பெ.(n.) ஒரு பணிக்கு ஆகும் செலவு; expenditure for particular work.

[கடமை + செலவு.]

**கடமைத்தட்டு** *kaḍamai-t-taṭṭu,* பெ.(n.) வரி செலுத்துவதில் கணக்கம் அல்லது கட்டுப்பாடு (S.I.I.vol.8.insc.303); shortages in paying taxes.

[கடமை + தட்டு.]

**கடமைப்படு–தல்** *kaḍamai-p-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. நன்றியுடன் இருத்தல்; be indebted to. உங்கள் உதவிக்கு நான் கடமைப் பட்டுள்ளேன் (உ.வ.). 2. பொறுப்புடன் இருத்தல்; be obliged to. உங்கள் கட்டளையை ஏற்கக் கடமைப்பட்டுள்ளேன் (உ.வ.).

[கடமை + படு. படு – து.வி.]

**கடமைப்பற்று** *kaḍamai-p-paṟṟu,* பெ.(n.) மேல் வாரத்தைத் தலைவர்க்குப் பணமாகச் செலுத்தும் சிற்றூர் (i.m.p.tp.250); village paying the share of the produce to the government or landlord in coin and not in kind.

[கடமை + பற்று. பற்று = சிற்றூர்.]

நிலவரி தீர்வை என்றும், வாரம் என்றும் இருவகை யாயிருந்தது. இவற்றுள் முன்னது ஒரு குறிப்பிட்ட அளவும், பின்னது கண்டு முதலில் ஒரு பகுதியுமாகும். தீர்வைக் குரிய நிலம் தீர்வைப்பற்று என்றும், வாரத்திற்குரிய நிலம் வாரப்பற்று என்றும், வாரத்தைப் பணமாகச் செலுத்தும் நிலம் கடமைப்பற்று என்றும் கூறப்பட்டன (பழந்தமி.75).

**கடமையில்தட்டிறை** *kaḍamayil-taṭṭiṟai,* பெ.(n.) கடமை செலுத்துவதற்கு தவறிய காலத்தில் அரசு நேரடியாக வாங்கும் இறைமுறை; direct collection of taxes by govt. from the defaulters (கல்.அக.).

[கடமை + இல் + தட்டு + இறை.]

**கடமையிறு–த்தல்** *kaḍamai-y-iṟu-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. ஆயம், வரி அல்லது தீர்வை செலுத்துதல்; to pay tax, toll etc. *'இவ்வூர் கடமையிறுக்குங்கொல்' (S.I.I.Vol.5.Part-I Insc.431.)* 2. வரியினை அறுதியிடுதல் (S.I.I.Vol.5. Insc.30 S.No.8.) ; to fix the tax.

[கடமை + இறு.]

**கடயம்** *kaḍayam,* பெ.(n.) கடகம் (இ.வ.); bracelet.

[கழல் → கழலம் → கழயம் → கடயம்.]

**கடயல்** *kaḍayal,* பெ.(n.) குமரி மாவட்டத்துச் விளவங்கோடு வட்டத்துச் சிற்றூர்; a village in Vilavangode Taluk in Kanyakumari dt.

[கடல் + அயல் – கடலயல் → கடயல் = கடலடுத்த சிற்றூர்.]

**கடரி** *kaḍari,* பெ.(n.) மரமஞ்சள் (மலை.); tree turmeric.

[கடம் → கடரி.]

**கடல்[1]–தல்** *kaḍal-,* 13 செ.கு.வி.(v.i.) அகலுதல், விரிதல்; to expand, to extend.

தெ. கடலு

[கட → கடல்(பரவுதல்).]

**கடல்**[2] *kaḍal,* பெ.(n.) உலகில் பெரும்பான்மை நிலப் பரப்பைச் சூழ்ந்துள்ள பரந்துபட்ட உவர்நீர்ப் பரப்பு; expanse of salt water that covers most of earth's surface. *"நெடுங்கடலும் தன்நீர்மை குன்றும்" (குறள்,17) 'கடல் வற்றிக் கருவாடு தின்னலாம் என்று குடல் வற்றிச் செத்ததாம் கொக்கு' (பழ.).*

**மறுவ.** அத்தி, அளக்கர், ஆர்கலி, ஆழி, பெருநீர், வாரம், வாரிதி, வாரி, பரவை, புணரி, கார்கோள், ஓதம், உவரி, குரவை, அழுவம், தெண்டிரை, நரலை, நீர், நீராழி, திரை, அரலை, பெருவெள்ளம், தோயம், வீரை, முந்நீர், தொன்னீர், உப்பு, உந்தி, அரி, வேலை.

**ம.** கடல்; **க., து.** கடல், கடலு; **தெ.** கடலி; **குட.** கட.

*[கட → கடல். கட = செல்லுதல், போதல், அகலுதல். கடல் = அகன்றது, பரந்தது. பரு → பர → பரல் எனப் பெயராதல் போல கட → கடல் பெயராயிற்று. 'ல்' சொல்லாக்க ஈறு. தெலுங்கில் கடல் என்னும் வினைச்சொல் அகலுதல், விரிதல் பொருளுடையது. 'கடலிகடலி' என்னும் சொல் தெலுங்கில் அகன்றகன்று எனப் பொருள் படுதலை ஒப்பு நோக்குக.]*

**கடல்**[3] *kaḍal,* பெ.(n.) 1. மிகுதி; abundance. *அண்ணாவின் பேச்சைக் கேட்க மக்கள் அலை கடலெனத் திரண்டனர்.* 2. நூறு கோடி கோடி என்னும் பேரெண் (வெள்ளம்); the large number of hundred crores of crore. 3. குன்று விண்மீன் (சதயநாள்); the 24th nakṣatra, so called from Varuna the sea-god being the deity of the constellation.

*[கட = செல், போ, அகல். கடல் = அகன்றது, பரந்தது. மிகுந்தது, மிகுதி, பெரிது, மதிக்கத்தக்கது என்னும் பொருளில் சதயம் எனப்படும் குன்று நாண்மீனைக் குறித்தது.]*

**கடல்**[4] *kaḍal,* பெ.(n.) அலை; wave.

**தெ.** கடல்.

*[கட → கடல். அடுத்தடுத்துச் செல்வது, அடுத்தடுத்துப் பாய்வது.]*

**கடல்**[5] *kaḍal,* பெ.(n.) பெற்றம், ஆன் (அக.நி.); cow.

*[கட → கடல். அகற்சி, அகன்ற மடியுடையது, பெரிய மடியுடைய பெற்றம்.]*

**கடல்**[6] *kaḍal,* பெ.(n.) கட்டியாக உள்ளது, கல், பாறை (கருநா.); that which is firm, a stone, a rock.

**க.** கடல்

*[கடு → கட → கடல். கடு = கடுமை.]*

**கடல்கட்டி** *kaḍal-kaṭṭi,* பெ.(n.) 1. கடலாளிகளை மந்திரத்தால் ஏதங்களிலிருந்து காப்பவன்; one who saves the divers by conjuration. 2. செம்படவன்; fisherman.

**ம.** கடல்க்கெட்டி

*[கடல் + கட்டி - கடல்கட்டி. (இரண்டன் தொகை). கட்டி = கட்டுபவன்.]*

மந்திர வலிமையால் கட்டிக்காப்பவன். மந்திரவலிமையால் கொடிய விலங்குகள் தாக்காதவண்ணம் அவற்றின் வாயைக் கட்டும் மந்திரக்காரனை இச் சொல் குறித்தது.

**கடல்கட்டு-தல்** *kaḍal-kaṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. மந்திரத்தால் வலையில் மீன் விழாதபடி செய்தல்; (நாஞ்.); to prevent, the fish from being caught in the net by sorcery. 2. மந்திரத்தால் புயல் முதலியன கடலில் வீசாதபடி செய்தல் (இ.வ.); to prevent, the tempest by sorcery.

*[கடல் + கட்டு - கடல்கட்டு. (இரண்டன் தொகை).]*

கடல் கட்டுதல் என்பது மீனவரிடை நிலவும் பழைய நம்பிக்கை.

**கடல்கல்** *kaḍal-kal,* பெ.(n.) கடற்பயணத் தொலைவுக்குரிய நீட்டல் அளவை, 6080 அடித் தொலைவு; a nautical mile.

**மறுவ.** கடல்மைல்

*[கடல் + கல் - கடல்கல். இஃது அன்மொழித் தொகையாகிய அல்வழிப் புணர்ச்சியாதலின் லகரம் றகர மெய்யாகத் திரியவில்லை என்க. கடல்மைல் பார்க்க; see kaḍal-mile.]*

**கடல்கலக்கி** *kaḍal-kalakki,* பெ.(n.) பேய்முசுட்டை, மருந்துக்குப் பயன்படும் பாலைக் கொடிவகை; elephant creeper.

**மறுவ.** சமுத்திரப்பாலை, கடலக்கம், கடலடக்கி.

**கடல்கால்** *kaḍal-kāl,* பெ.(n.) **கடற்கால்** பார்க்க; see *kaḍaṟ-kāl.*

*[கடல் + கால்.]*

**கடல்குச்சி** *kaḍal-kucci,* பெ.(n.) **கடற்குச்சி** பார்க்க; see *kaḍaṟ-kucci.*

*[கடல் + குச்சி.]*

**கடல்குதிரை** *kaḍal-kudirai,* பெ.(n.) **கடற்குதிரை** பார்க்க; see *kaḍaṟ-kudirai.*

*[கடல் + குதிரை.]*

**கடல்கூம்பு** *kaḍal-kūmbu,* பெ.(n.) **கடற்கூம்பு** பார்க்க; see *kaḍaṟ-kūmbu.*

*[கடல் + கூம்பு.]*

**கடல்கெலித்தல்** *kaḍal-kelittal,* தொ.பெ.(vbl.n.) இரவுப் பொழுதில் கடல்நீர் பளபளத்துக் காணுதல் (நெல்லை மீனவ.); glittering of the sea water at night.

*[கடல் + கெலித்தல்.]*

**கடல்கொடி** *kaḍal-koḍi,* பெ.(n.) **கடற்கொடி** பார்க்க; see *kaḍaṟ-koḍi* (சா.அக.).

*[கடல் + கொடி.]*

**கடல்கொள்(ளு)-தல்** *kaḍal-koḷ(ḷu)-,* 10 செ. குன்றாவி.(v.t.) கடற்பெருக்கத்தால் நிலப்பகுதி கடலுள் மூழ்கல்; to deluge. *"குமரிக் கோடும் கொடுங்கடல் கொள்ள" (சிலப்.11:20).*

*[கடல் + கொள்(ளு).]*

**கடல்கோ-த்தல்** *kaḍal-kō-,* 4 செ.கு.வி.(v.i.) **கடல் சோர்-தல்** பார்க்க; see *kaḍal-šōr-.*

*[கடல் + கோ. கோத்தல் = கூடுதல், பெருகுதல்.]*

**கடல்கோள்** *kaḍal-kōḷ,* பெ.(n.) **கடற்கோள்** பார்க்க; see *kaḍaṟ-koḷ.*

*[கடல் + கோள்.]*

**கடல்சம்பு** *kaḍal-cambu,* பெ.(n.) பத்தியத்திற்குதவும் ஒரு வகைக் கடல் நத்தை; a kind of sea snail; this is useful in diet for patients (சா.அக.).

*[கடல் + சம்பு. சம்பு = நத்தை. (சா.அக)]*

**கடல்சிரை** *kaḍal-širai,* பெ.(n.) கொட்டையிலந்தை; seed jujube.

*[கடல் + சிரை.]*

**கடல்சுரப்பு** *kaḍal-šurappu,* பெ.(n.) **கடற்கொந்தளிப்பு** பார்க்க; see *kaḍaṟ-kondaḷippu.*

*[கடல் + சுரப்பு.]*

**கடல்சோர்-தல்** *kaḍal-šōr-,* 2 செ.கு.வி.(v.i.) கடல் பொங்கி எழுந்து எங்கும் பெருகுதல் (ஈடு, 4,5:9.); to rage and swell as the sea.

*[கடல் + சோர்.]*

**கடல்திட்டு** *kaḍal-tiṭṭu,* பெ.(n.) **கடற்றிட்டு** பார்க்க; see *kaḍaṟṟiṭṭu.*

*[கடல் + திட்டு.]*

**கடல்தேங்காய்** *kaḍal-tēṅgāy,* பெ.(n.) **கடற்றேங்காய்** பார்க்க; *kaḍaṟṟēṅgāy* (சா.அக.).

*[கடல் + தேங்காய்.]*

**கடல்நச்சுயிரி** *kaḍal-naccuyiri,* பெ.(n.) கடல்வாழ் உயிரிகளுக்கும் மாந்தர்களுக்கும் கேடு விளைவிக்கும் கடலுயிரி; sea-poisonous animal.

*[கடல் + நச்சுயிரி.]*

**வகைகள்:** 1. ஒற்றைப்புரையன் (ஒருசெல்) உயிரினங்கள் 2. குழியுடலிகள் 3. செல்லிமீன்கள் 4. மெல்லுடலிகள்.

**கடல்நண்டு** *kaḍal-naṇḍu,* பெ.(n.) 1. கடலில் வாழும் நண்டு; sea - crab. 2. ஓர் அரிய கடல் மூலிகை; a sea herbal. (சா.அக.)

*[கடல் + நண்டு. பெரிய நண்டு; நண்டு வடிவிலான மூலிகை.]*

**கடல்நாக்கு** *kaḍal-nākku,* பெ.(n.) **கணவாய்**[2] பார்க்க; see *kaṇavāy*[2].

ம. கடல்நாக்கு; க. கடலநாலகே.

*[கடல் + நாக்கு.]*

# கடல்நச்சுயிரி வகைகள்



ஒற்றைப் புரையன்



குழியுடலிகள்



செல்லி மீன்கள்



மெல்லுடலிகள்

**கடல்நாய்** *kaḍal-nāy,* பெ.(n.) கடல்வாழ் விலங்கு; seal.

**மறுவ.** நீர் நாய்

**ம., க.** கடல் நாய்.

*[கடல் + நாய்.]*



கடல்நாய்

**கடல்நீறு** *kaḍal-nīṟu ,* பெ.(n.) கடல் சிப்பிகளின் சாம்பல்; lime got by burning sea shells.

**ம.** கடல்நூறு

*[கடல் + நீறு. நூறு → நீறு.]*

**கடல்நுரை** *kaḍal-nūṟai,* பெ.(n.) **1.** கடலலையில் உண்டாகும் நுரை; foam of the sea. **2.** கணவாய் மீனெலும்பு; cuttle fish bone.

**ம.** கடல்நுர; **து.** கடல்நுரை.

*[கடல் + நுரை.]*

**கடல்நூல்** *kaḍal-nūl,* பெ.(n.) கடலின் தன்மைகளை விளக்கும் நூல்; a book about Oceanography.

*[கடல் + நூல்.]*

**கடல்படுபொருள்** *kaḍal-paḍu-poruḷ,* பெ.(n.) **கடற்படுபொருள்** பார்க்க; see *kaḍaṟ-paḍu-poruḷ.*

*[கடல் + படு + பொருள்.]*

**கடல்மகள்** *kaḍal-magaḷ,* பெ.(n.) **கடற்பிறந்தாள்** பார்க்க; see *kaḍaṟ-piṟandāḷ.*

**ம.** கடல்மகள்

*[கடல் + மகள்.]*

**கடல்மங்கலம்** *kaḍal-magalam,* பெ.(n.) காஞ்சிபுர மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kanchipuram district.

**ம.** கடல்மகள்

*[கடலன் + மங்கலம் - கடலன்மங்கலம் - கடல்மங்கலம். கடலன் = கடல்வாணிகன். மங்கலம் = நன்கொடையாக அளிக்கப்பட்ட ஊர்.]*

**கடல்மங்கை** *kaḍal-mangai,* பெ.(n.) **கடற்பிறந்தாள்** பார்க்க (சேரநா.); see *kaḍaṟ-piṟandāḷ.*

**ம.** கடல்மங்க

*[கடல் + மங்கை.]*

**கடல்மட்டம்** *kaḍal-maṭṭam,* பெ.(n.) நிலப்பரப்பின் உயரத்தையும் நீர்ப்பரப்பின் ஆழத்தையும் கணக்கிட உருவாக்கிக் கொண்ட பொது அளவு; mean sea level.

*[கடல் + மட்டம்.]*

**கடல்மது** *kaḍal-madu,* பெ.(n.) **கடலுப்பு** பார்க்க; see *kaḍal-uppu.*

*[கடல் + மது.]*

**கடல்மல்லை** *kaḍal-mallai,* பெ.(n.) சென்னைக்குத் தெற்கே கடலோரம் அமைந்துள்ள மாமல்லபுரத்தின் முன்னைப் பெயர்; the old name of Māmallapuram situated on the shore south of Chennai.

**மறுவ.** மகாபலிபுரம், மாமல்லபுரம், மல்லை.

*[கடல் + மல்லை. மாமல்லன் பெயரிலமைந்த ஊர்.]*

பெரிப்ளூசு ஆப் எரித்ரியன் சீ என்ற நூலிலும் தாலமியின் பயண நூலிலும் குறிப்பிடப்படும் பழைய துறைமுகம். ஏழாம் நூற்றாண்டுத் திருமங்கையாழ்வாரின் பாடல்களில் 'கடல்மல்லை' என்று குறிக்கப்படுகிறது. பல்லவர்களின் குடைவரைக் கோயில்களாலும் ஒற்றைக் கற்றளிகளாலும் உலகப் புகழ் பெற்றது. ஒன்றிய நாடுகள் பேரவை 'உலகவரலாற்றுச் சின்னங்கள்' பட்டியலில் இதனைச்சேர்த்துப் பெருமைப்படுத்தியுள்ளது.

**கடல்மாது** *kaḍal-mādu,* பெ.(n.) **கடற்கன்னி** பார்க்க; see *kaḍaṟ-kaṉṉi.*

**ம.** கடல்மாது

*[கடல் + மாது.]*

**கடல்மீன்** *kaḍal-mīṉ,* பெ.(n.) கடலில் வாழும் மீன்; sea fish. *'கடல் மீனுக்கு நுளையான் இட்டது சட்டம்'* (பழ.).

*[கடல் + மீன்.]*

**கடல்முதலை** *kaḍal-mudalai,* பெ.(n.) கடலில் வாழும் முதலை; sea crocodile.

*[கடல் + முதலை.]*



கடல் முதலை

**கடல்முயல்** *kaḍal-muyal,* பெ.(n.) ஓடில்லாத நத்தை (க.ப.அக.); a kind of snail.

*[கடல் + முயல்.]*

**கடல்முள்ளி** *kaḍal-muḷḷi,* பெ.(n.) 1. தாழைச்செடி; fragrant screw-pine. 2. கடற்பழவகை (சமுத்திரப்பழவகை); Andamāṉ Indian oak. 3. ஒருவகைக் கத்தரி; Indian night shade.

*[கடல் + முள்ளி.]*

**கடல்முறைக்காசு** *kaḍal-muṟai-k-kāšu,* பெ.(n.) கரைவலை வளைப்பில் மீனவர் அடையும் அல்லது பெறும் காசு (துஞ்சை மீனவ.); cash given to fisherman while executing 'drag-net' for catching fish.

*[கடல் + முறை + காசு.]*

**கடல்முனை** *kaḍal-muṉai,* பெ.(n.) கடல்முடிவிடம்; cape. (க.ப.அக.)

*[கடல் + முனை.]*

**கடல்மைல்** *kaḍal-mail,* பெ.(n.) கடலில் கலஞ்செலுத்துவோர் கலஞ்செல்லும் தொலைவை அளவிடும் நீட்டல் அளவு; nautical mile, the distance on the surface of the earth subtended by one minute at the centre of the earth.

*[கடல் + ஃமைல். E. mile. > த. மைல். மைல் = ஒரு கல் தொலைவு. கடல்கல் பார்க்க; see kaḍalkal.]*

உலக உருண்டையின் மேற்பரப்பு நிலநூலாரால் 360 பாகை நெடுங்கோடு (நெட்டாங்கு - longtitude) களாகவும், 180 பாகை அகலக்கோடு (அகலாங்கு - latitude)களாகவும் பிரிக்கப்பட்டுள்ளது. கடல்நூலார் நெடுங்கோடு பாகை ஒவ்வொன்றையும் 60 கீழ்ப்பாகை (கலை) களாகப் பிரித்து ஒரு கீழ்ப்பாகை (கலை - minute) கோணத் தொலைவுக்குக் கடல்கல் (கடல்மைல் - nautical mile) எனப் பெயரிட்டனர். இத் தொலைவு உலகின் சுற்றளவில் 1/21600 பங்கு அல்லது 6080 அடி என்பர். 1.150779 நிலக்கல் (land mile) அல்லது 1.852 கி.மீ. தொலைவுக்கு நிகரானது.

**கடல்யாத்திரை** *kaḍal-yāttirai,* பெ.(n.) **கடற்செலவு** பார்க்க; see *kaḍaṟ-celavu.*

ம. கடலோட்டம்

*[கடல் + யாத்திரை.]*

**கடல்யானை**[1] *kaḍal-yāṉai,* பெ.(n.) யானையைப்போல் நீண்ட துதிக்கையுடைய கடல் உயிரி; elephant-seal.

*[கடல் + யானை.]*

*இவ் உயிரிகள் இந்துமாக் கடலில் வாழ்கின்றன (அபி.சிந்.).*

**கடல்யானை**[2] *kaḍal-yāṉai,* பெ.(n.) திமிங்கிலம்; whale.

ம. கடல்ஆன.

*[கடல் + யானை.]*

**கடல்வண்டு** *kaḍal-vaṇḍu,* பெ.(n.) ஒருவகைக் குடை வண்டு (யாழ்.அக.); a kind of perforating beetle.

*[கடல்[1] + வண்டு.]*

**கடல்வண்ணத்துப்பூச்சி** *kaḍal-vaṇṇattu-p-pūcci,* பெ.(n.) திமிங்கிலத்தின் உணவாகும் ஒருவகைக் கடலுயிரி; sea butterfly.

*[கடல் + வண்ணம் + அத்து + பூச்சி. அத்து - சாரியை].*

**கடல்வண்ணன்** *kaḍal-vaṇṇaṉ,* பெ.(n.) 1. திருமால்; an epithet of Viṣṇu or Kriṣṇaṉ. 2. ஐயனார் (சூடா.); Aiyaṉār, a village deity. "பூவுளானு மப்பொருகடல் வண்ணனும்" (தேவா.திருக்கேதீச். திருஞா.9.)

ம. கடல்வர்ணன்.

*[கடல் + வண்ணன்.]*

**கடல்வண்ணனை** *kaḍal-vaṇṇaṉai,* பெ.(n.) பெருங்காப்பிய வுறுப்புகளுளொன்று; a discription of the ocean being one of the ingredients of the epic.

*[கடல் + வண்ணனை.]*

**கடல்வரால்** *kaḍal-virāl,* பெ.(n.) நாலடி நீளம் வளரக்கூடியதும் பழுப்புநிறமுடையதுமான பெரிய கடல்மீன் வகை; a sea fish olivaceous brown, attaining more than 4 ft. in length.

*[கடல் + வரால்.]*

**கடல்வாணிகம்** *kaḍal-vāṇigam,* பெ.(n.) கடல் கடந்து செய்யும் வாணிகம்; trade by sea.

*[கடல் + வாணிகம்.]*

**கடல்வாத்து** *kaḍal-vāttu,* பெ.(n.) மீன்வகை; eider.

ம. கடல்வாத்து. (penguin)

*[கடல் + வாத்து.]*

**கடல்வாய்க்கால்** *kaḍal-vāykkāl,* பெ.(n.) *கடற்கழி* பார்க்க; see *kaḍaṟ-kaḻi.*

*[கடல் + வாய்க்கால்.]*

**கடல்வாயில்** *kaḍal-vāyil,* பெ.(n.) தஞ்சை மாவட்டம் திருச்சோற்றுத்துறை அருகில் இருந்த ஒரூர்; a place near Tiruchchotturai in Tanjore district. *"பொய்கை நாட்டு மிய்ப்பிலாற்று கடல்வாயில் கிழான் திருவடி பூதி"* **(தெ.இ.கல்.தொ.19.கல்.36).**

**மறுவ.** கடற்புறம், கடற்கரை, கடல்முகம்.

*[கடல் + வாயில் - கடல்வாயில் = கடலோரத்து ஊர்.]*

**கடல்விசிறி** *kaḍal-viširi,* பெ.(n.) விசிறிபோல் முகப்புள்ள ஒருவகைப் பவழப்புற்று; sea-fan.

*[கடல் + விசிறி.]*



கடல் விசிறி

**கடல்விராஞ்சி** *kaḍal-virāñji,* பெ.(n.) ஒருவகைக் கடற் பாசி; a kind of sea shrub.

*[கடல் + விராஞ்சி.]*

**கடல்விளக்கு** *kaḍal-viḷakku,* பெ.(n.) ஒருவகைக் கடல் மீன் (சேரநா.); a kind of marine fish.

ம. கடல்விளக்கு

*[கடல் + விளக்கு.]*

**கடல்விளையமுதம்** *kaḍal-viḷai-y-amudam,* பெ.(n.) கடலுப்பு; salt, being a valuable product of the sea. "கடல்விளை யமுதங் கண்ட பொழுதின்" (சீவக. 805).

*[கடல் + விளை + அமுதம்.]*

**கடல்வெள்ளரிக்காய்** *kaḍal-veḷḷari-k-kāy,* பெ.(n.) **கடலட்டை**[1] பார்க்க; *kaḍal-aṭṭai*[1]. (க.ப.அக.)

*[கடல் + வெள்ளரி + காய்.]*



கடல் வெள்ளரிக்காய்

**கடல்வேட்டம்** *kaḍal-vēṭṭam,* பெ.(n.) கடலிலே மீன் பிடித்தல்; fishing in sea. *"பாயிரும் பனிக்கடல் வேட்டஞ் செல்லாது"* (பட்டினப்.93).

*[கடல் + வேட்டம் (வேட்டை).]*

**கடல்வைப்பு** *kaḍal-vaippu,* பெ.(n.) கடல் வடிந்த பிறகு தெரியும் தரைப்பகுதி, முழுவடை; land formed by the receding of the sea.

**மறுவ.** கடல் முழுவடை.

ம. கடல் வப்ப்பு.

*[கடல் + வைப்பு. வைப்பு = மூழ்கடிக்காமல் கடல் வைத்துவிட்டுப்போன நிலப்பகுதி; விட்டுவைத்த நிலப்பகுதி. வைத்தல் = இருத்துதல், இருத்திக் கொள்ளுதல். நீர் வடிந்த நிலப்பகுதியை முழுவடை என்றும் கூறுவர்.]*

**கடலகப்பெருபடைத்தலைவன்** *kadalaga-p-perumpadai-t-talaivan,* பெ.(n.) கடலில் நிலையாகத் தங்கிய பெருங்கப்பற்படையின் தலைவன்; Admiral, Commander-in-chief of Navy stationed at the mid-sea with a standing army skilled in marine warfare. *"வேள் மருகன்மகன் கடலகப் பெரும்படைத் தலைவன் எங்குமான்" (ஆவணம் 1991: பக்.68-69-பூலாங்குறிச்சிக் கல்வெட்டு).*

*[கடல் + அகம் + பெரும் + படை + தலைவன் = கடலகப் பெரும்படைத் தலைவன்.]*

அயல் நாட்டுக் கடற்போர்களிலும் தம் நாட்டோரக் கடற் போர்களிலும் வரலாற்றுக் கால நெடுகிலும் தொடர்ந்து ஈடுபட நேர்ந்ததால், தமிழ் வேந்தர்கள் நிலைத்த கடற்படையை நடுக்கடலில் நிறுத்தியிருந்தனர் என்பதற்கு அறுதியிட்ட உறுதியான சான்றாக முகவை (இராமநாதபுரம்) மாவட்டப் பூலாங்குறிச்சி கல்வெட்டு அமைந்துள்ளது.

கடலகப் பெரும் படைத்தலைமைப் பொறுப்பேற்றிருந்த வேள் மருகன் மகனாகிய எங்குமான் (கோச்சேந்தன் கூற்றன் 192 ஆம் ஆண்டில்) ஒல்லையூர்க் கூற்றத்து வேள்துர் பச்செறிச்சில் மலைமுகட்டில் தேவகுலம் (நீத்தார் கோயில்-பள்ளிப்படை) கட்டினான் என்று கூறப்படுகிறது. இது களப்பிரர்க்குப் பிற்பட்ட பாண்டியர் காலத்துக் கல்வெட்டாகலாம்.

**கடலகம்** *kadal-agam,* பெ.(n.) 1. நிலம் (யாழ்.அக.); earth. 2. ஆமணக்கு; castor. 3. ஊர்க்குருவி; a sparrow. 4. நாயுருவி; Indian burr.

*[கடல் + அகம் - கடலகம். கடலுதல் + விரிதல்.]*

அகன்றநிலம், அகன்றஇலை கொண்ட ஆமணக்கு, பருத்தகுருவி, படர்ந்தசெடி ஆகியவற்றைக் குறிப்பால் உணர்த்தியது.

**கடலகழாய்வு** *kadal-agal-āyvu,* பெ.(n.) கடலுள் அமிழ்ந்தவற்றை ஆராயும் முறை; method to conduct archaeological research on the ocean floor.

*[கடல் + அகழ் + ஆய்வு.]*

தரையில் அகழ்ந்து, புதைந்துள்ள பொருள்களை ஆராய்வது போன்று கடலுள் ஆழ்ந்தவற்றை ஆராய்தல்.

**கடலஞ்சுகம்** *kadal-añjugam,* பெ.(n.) தருப்பைப்புல்; a sacrificial grass.

*[கடல் = அகன்ற. கடல் + அஞ்சுகம்.]*

**கடலட்டை**[1] *kadal-attai,* பெ.(n.) வெள்ளரிக்காய் போன்ற உடலமைப்போடு கடற்பகுதியில் வாழும் அட்டை வகை; a kind of sea leech, in the shape of a cucumber.

ம. கடலட்ட.

*[கடல் + அட்டை.]*


கடலட்டை

**கடலட்டை**[2] *kadal-attai,* பெ.(n.) பந்து போன்ற உடலமைப்புடையதும் கடலடிப் பாறைப் பகுதிகளில் வாழ்வதுமான முட்டோலித் தொகுதிசார் விலங்கு; sea urchin - an animal having a ball shaped and thorny body which is dewelling in deep sea, rocky places (அறி.கள.).

ம. கடலட்ட

*[கடல் + அட்டை.]*

**கடலடம்பு** *kadal-adambu,* பெ.(n.) கடற்கரையில் வளரும் ஒருவகைச் செடி; a species of sea-side potato (சா.அக.).

*[கடல் + அடம்பு.]*

**கடலடி**[1] *kadal-adi,* பெ.(n.) கடலின் அடிப்படுகை; senthic, sea bottom. (க.ப.அக.)

*[கடல் + அடி.]*

**கடலடி**[2] *kadaladi,* பெ.(n.) கருவாமரம்; cinnamon tree.

*[கடுவல் + அடி - கடுவலடி → கடலடி.]*

**கடலடிக்குன்று** *kaḍal-aḍi-k-kuṉṟu,* பெ.(n.) கடலின் கீழுள்ள பாறை; submarine ridge. (க.ப.அக.)

[கடல் + அடி + குன்று.]

**கடலத்தி** *kaḍal-atti,* பெ.(n.) காரைச்செடி; common honey thorn. (சா.அக.)

[கடல் = கட்டி; முள்முருடு. கடல்[6] + அத்தி.]

**கடலப்பம்** *kaḍal-appam,* பெ.(n.) கடலடி மணலில் புதைந்து வாழும் முட்டோலிவகை விலங்கு; cake urchin (அறி.களஞ்.).

[கடல் + அப்பம். அப்பம் = வட்டமானது, வட்டமான உடலையுடைய விலங்கு.]


கடலப்பம்

**கடலம்** *kaḍalam,* பெ.(n.) ஆமணக்கு; castor plant (சா.அக.).

[கடல் = அகன்றது. கடல் → கடலம் = அகன்ற இலையுடை ஆமணக்கு.]

**கடலம்மை** *kaḍal-ammai,* பெ.(n.) கடல் தாய், கடல்; sea considered as a mother, sea. (க.ப.அக.)

ம. கடலம்மை

[கடல் + அம்மை.]

**கடலமிழ்து** *kaḍal-amiḻdu,* பெ.(n.) **கடல்விளையமுதம்** பார்க்க; see *kaḍal-viḷai-y-amudam.*

[கடல் + அமிழ்து.]

**கடலமுதம்** *kaḍal-amudam,* பெ.(n.) **கடலுப்பு** பார்க்க; see *kaḍal-uppu.*

[கடல் + அமுதம்.]

**கடலர்** *kaḍalar,* பெ.(n.) நெய்தல்நில மக்கள் (திவா.); fishermen, inhabitants of marine tract.

[கடல் + அர்.]

**கடலரிமா** *kaḍal-arimā,* பெ.(n.) கடலில் வாழும் பாலூட்டி இன விலங்கு; sea lion.

[கடல் + அரிமா. அரிமா போன்ற தோற்றமுடைய விலங்கு.]


கடலரிமா

**கடலல்லி** *kaḍal-alli,* பெ.(n.) கடலடிப்பாறையில் வாழ்வதும் (அல்லி)மலர் போன்ற அமைப்புடைய உயிரி; sea-lilly.

[கடல் + அல்லி. அல்லிமலர் போன்ற அமைப்புடை உயிரி.]


கடலல்லி

**கடலலை** *kaḍal-alai,* பெ.(n.) கடல் பரப்பின்மேல் காற்று வீசும்போது கடல் நீரில் ஏற்படும் அசைவுகள்; wave of the sea.

[கடல் + அலை.]

**கடலழிஞ்சில்** *kaḍal-aḻiñjil,* பெ.(n.) அழிஞ்சில் மரவகை (மூ.அ.); a species of alangium.

*[கடல் + அழிஞ்சில்.]*

**கடலறைவோடல்** *kaḍal-aṟai-vōḍal,* தொ.பெ.(vbl.n.) எரிகல் விண்ணிலிருந்து வீழ்தல்; meteor falling down from the sky.

*[கடல் + அறை + ஒடல். அறை = அற்று. அறைஒடல் = அற்று ஓடுதல், இருக்கும் இடத்திலிருந்து நிலைகெட்டு வீழ்தல்.]*

பரதவர் விண்மீன்களை வெள்ளி என்பர். வானிலிருந்து எரிகல் விழுவதை அறைவோடல் என்பர். பரதவர்கள் கடலிலிருந்து இந்நிகழ்வைப் பார்ப்பதால் கடலறைவோடல் என்றனர். பரதவர்கள் வெள்ளியை அரும்வெள்ளி, கடப்பவெள்ளி, கூட்டுவெள்ளி, சோற்றுவெள்ளி, விடிவெள்ளி எனப் பல பெயர்களால் அழைப்பர். விழும் விண்மீனை இருப்பிட அடிப்படையில் கூட்டு வெள்ளி அறைஒடுதல், விடிவெள்ளி அறைஒடுதல் என்று அழைப்பர். விண்மீன் அறைஒடினால் புயல், காற்று கொந்தளிப்பு ஏற்படும் என்று நம்பினர். (க.ப.அக.)

**கடலன்** *kaḍal-aṉ,* பெ.(n.) 1. நெய்தல் நிலத்தவன்; fisherman, inhabitants of marine regions. 2. கடற்பயணம் செய்வோன்; sea farer. 3. கடல் வாணிகம் செய்வோன்; a trader by sea.

*[கடல் + அன். 'அன்' ஆ.பா. ஈறு.]*

**கடலாடி**[1] *kaḍal-āḍi,* பெ.(n.) நாயுருவி (மலை.); a plant growing in hedges and thickets.

ம. கடலாடி

*[குடில் + அடி - குடிலடி → கடலடி → கடலாடி.]*

**கடலாடி**[2] *kaḍal-āḍi,* பெ.(n.) இராமநாதபுர மாவட்டக் கடற்கரையூர்; sea shore village in Rāmanāda puram district.

*[கடல் + அடி - கடலடி → கடலாடி.]*

நீர்த்துறைக்கு நீரடி என்னும் வழக்கு உள்ளது. அதுபோன்றே கடற்றுறை என்ற பொருளில் கடலடி என்று வழங்கிக் 'கடலாடி' என மருவி இருக்கலாம்.

**கடலாடு-தல்** *kaḍal-āḍu-,* 5 செ.கு.வி.(v.i.) கடலில் நீராடுதல்; to bathe in the sea. (கடலாடுகாதை - சிலம்பு.) (சா.அக.)

ம. கடலாடுக; தெ. கடலாடு (கடற்பயணம்)

*[கடல் + ஆடு.]*

**கடலாத்தி** *kaḍal-ātti,* பெ.(n.) 1. வெடங்குருணி, ஒருவகை ஆத்தி; stag's horn trumpet flower. 2. பசலாத்தி; spathe trumpet tree (சா.அக.).

*[கடல் + ஆத்தி.]*

**கடலாமணக்கு** *kaḍal-āmaṇakku,* பெ.(n.) *காட்டாமணக்கு* (மலை.); common physic nut.

ம. கடலாவணக்கு

*[கடல் + ஆமணக்கு.]*

**கடலாமை** *kaḍal-āmai,* பெ.(n.) கடலில் வாழும் ஆமைவகை (தேவா.1218-5); a kind of marine turtle.

ம. கடலாம

*[கடல் + ஆமை.]*

வகைகள்: அழுங்காமை, ஏழுவரியாமை, சிற்றாமை, பச்சையாமை, பெருந்தலையாமை.

**கடலாரம்** *kaḍal-āram,* பெ.(n.) கடல் முத்துமாலை; a garland of pearls collected from the oyster. *"கோவா மலையாரம் கோத்த கடலாரம்" (சிலப்.17:உள்வரி.1).*

*[கடல் + ஆரம்.]*

**கடலாரை** *kaḍalārai,* பெ.(n.) காட்டாரை; wild sorrel of the Marsilea genus (சா.அக.).

*[கடல் + ஆரை.]*

**கடலாளி** *kaḍal-āḷi,* பெ.(n.) 1. கடற்பரப்பிலேயே தம் வாழ்நாளின் பெரும்பகுதியைச் செலவிடுவோர்; a sailor, mariner. 2. கடலை ஆளும் மாந்தர், மீனவர்; fisher men.

ம. கடலாளி

*[கடல் + ஆளி.]*

**கடலானை** *kaḍal-āṉai,* பெ.(n.) *கடல்யானை*[2] பார்க்க; *see kaḍal-y-āṉai*[2].

ம. கடலாந

*[கடல் + ஆனை.]*

**கடலி** *kaḍali,* பெ.(n.) 1. பூமருது; bloodwood tree. 2. மூக்கறட்டை; spreading hogweed. 3. அடம்பு; sea-flower. 4. சீனப்பூ; China minde. 5. பூங்காலா மீன்; golden carp (சா.அக.).

*[கடல் → கடலி. கடல்வழிக் கொண்டு வந்தவை.]*

# கடலாமை வகைகள்



பச்சையாமை



அழுங்காமை



சிற்றாமை



ஏழுவரியாமை



பெருந்தலையாமை

**கடலிச்சி** *kaḍal-icci,* பெ.(n.) சீனக் கற்பூரமரம்; camphor tree of China (சா.அக.).

*[கடல் + இச்சி.]*

**கடலிடுக்கு** *kaḍal-iḍukku,* பெ.(n.) இருபெரும் நீர்ப்பகுதிகளை இணைக்கும் குறுகலான நீரிணைப்பு; a strait.

ம. கடலிடுக்கு; க. கடல்காலுவெ, கடலுகாலுவெ.

*[கடல் + இடுக்கு.]*

**கடலிதயம்** *kaḍal-idayam,* பெ.(n.) கடலடித் தரையில் மண்ணில் புதைந்து வாழ்வதும் மாந்த இதயத்தையொத்த வடிவுடையதும் முட்டோலி வகையுமான கடலுயிரி; heart urchin. (அறி.கள.)

*[கடல் + இதயம். இதயம் போன்ற அமைப்புடைய விலங்கு.]*

**கடலிமுகை** *kaḍali-mugai,* பெ.(n.) கடலிப் பூவா மரம்; sea-flower wood (சா.அக.).

*[கடலி + முகை.]*

**கடலியல்** *kaḍal-iyal,* பெ.(n.) கடல்வாழ் உயிர்கள், கடல்படு பொருள்கள் பற்றிய ஆய்வியற்றுறை; oceanography.

*[கடல் + இயல்.]*

**கடலிறக்கம்** *kaḍal-iṟakkam,* பெ.(n.) அலைவாய் நீர் இறக்கம்; low tide.

*[கடல் + இறக்கம்.]*

**கடலிறஞ்சி** *kaḍal-iṟañji,* பெ.(n.) கடற்கரை மரவகை. (பதார்த்த.901); seaside-plum.

*[கடல் + இறஞ்சி.]*

**கடலிறாஞ்சி** *kaḍāl-iṟāñji,* பெ.(n.) **கடலிறஞ்சி** பார்க்க; see *kaḍāl-iṟañji.*

*[கடலிறஞ்சி → கடலிறாஞ்சி.]*

**கடலிறைவன்** *kaḍal-iṟaivaṉ,* பெ.(n.) வாரணன் (உபதேசகா.உருத்திராக்க.245); Varunan, the god of the sea.

*[கடல் + இறைவன்].*

**கடலு-தல்** *kaḍalu-,* 5 செ.கு.வி.(v.i.) அகலுதல், பரவுதல்; to expand, to get enlarged.

தெ. கடலு

*[கடல் → கடலு. கடல்[1]-தல் பார்க்க; see kaḍal[1]-.]*

**கடலுடும்பு** *kaḍal-uḍumbu,* பெ.(n.) ஒருவகைக் கடல்மீன் (வின்.); a kind of sea-fish.

ம. கடலுடும்பு

*[கடல் + உடும்பு.]*

**கடலுண்மாய்ந்த இளம்பெருவழுதி** *kaḍaluṇ-māynda-iḷamperuvaḻudi,* பெ.(n.) கடலில் உயிர்நீத்த பாண்டியன்; a Pāṇḍiaṉ king who attained watery grave in the sea.

*[கடல் + உள் + மாய்ந்த + இளம் + பெரு + வழுதி.]*

பாண்டிய அரசமரபினரான இவர் இளமையில் கற்பவை கசடறக்கற்று, அக் கல்விக்குத் தக ஒழுகும் மேம்பாடுடையவர். 'உண்டாலம்ம' எனத் தொடங்கும், புகழ்மிக்க புறநானூற்றுப் பாடலைப் பாடியவர். கலமூர்ந்து செல்கையில் கடும் புயற்காலத்தில் கலங்கவிழ்ந்து மாண்டார். அதனால் அவரைச் சான்றோர் கடலுண் மாய்ந்த இளம்பெரும் வழுதி என்று குறித்தனர்.

**கடலுப்பு** *kaḍal-uppu,* பெ.(n.) கறியுப்பு; sea-salt. "கர்ப்பூரம் போலக் கடலுப் [illegible] தாலும்" (நீதிவெண்.33).

ம. கடலுப்பு

*[கடல் + உப்பு.]*

**கடலுராய்ஞ்சி** *kaḍal-urāyñji,* பெ.(n.) கடற்பறவை வகை (வின்.); a kind of sea-bird.

*[கடல் + உராய்ஞ்சி. கடல் மட்டத்தில் தாழப் பறக்கும் பறவை.]*

**கடலுல்லம்** *kaḍal-ullam,* பெ.(n.) கடலில் வாழும் உல்லமீன்வகை (வின்.); a kind of hilsa fish in sea.

*[கடல் + உல்லம்.]*

**கடலுளி** *kaḍaluḷi,* பெ.(n.) கருவண்டு; black beetle (சா.அக.).

*[கடல் + உளி - கடலுளி.]*

**கடலுளுவை** *kaḍal-uḷuvai,* பெ.(n.) 1. கப்பலோட்டி மீன்; sucker-fish. 2. ஓர் உளுவை; sea - mud - fish distinguished from river fish.

*[கடல் + உளுவை.]*

**கடலூசிமீன்** *kaḍal-ūši-mīṉ,* பெ.(n.) கடலில் வசிக்கும் ஊசி மீன்; the garfish (சா.அக.).

*[கடல் + ஊசி + மீன்.]*

**கடலூர்**[1] *kaḍalūr,* பெ.(n.) சோழ மண்டலக் கடற்கரையில் அமைந்துள்ள கடலூர் மாவட்டத்தின் தலைநகரம்; a well known sea-side city, capital of Cuddalore district, situated on the Coromondal coast.

**மறுவ.** திருப்பாதிரிப்புலியூர்

[கூடல் + ஊர் - கூடலூர் → கடலூர். இந் நகரின் முந்துபெயர் கூடலூர். இப் பெயர் மருவிக் கடலூர் என்றாயிற்று. இன்றும் இந் நகரத்தின் ஒரு பகுதி கடலூர் பழைய நகரம் என்றும், கூடலூர் என்றும் வழங்கப்படுவது இதனை அரண் செய்வதைப் போலுள்ளது. கடற்கரையில் அமைந்ததால் கடலூர் என்று வழங்குதலும் பொருத்தமுடையதாயிற்று.]

**கடலூர்**[2] *kaḍalūr,* பெ.(n.) காஞ்சிபுரம் வட்டத்து ஊர்; a village in Kanchipuram district.

[கடலன் + ஊர் - கடலனூர் → கடலூர்.]

**கடலெடு-த்தல்** *kaḍal-eḍu-,* 4 செ.கு.வி.(v.i.) கடல் பொங்குதல் (வின்.); to overflow or encroach, as the sea.

**ம.** கடலெடுக்குக

[கடல் + எடு.]

**கடலெடுப்பு** *kaḍal-eḍuppu,* பெ.(n.) கடலரிப்பு (சேரநா.); sea erosion.

**ம.** கடலெடுப்பு

[கடல் + எடுப்பு.]

**கடலெண்ணெய்** *kaḍal-eṇṇey,* பெ.(n.) **கடலை யெண்ணெய்** பார்க்க; see *kaḍalai-y-eṇṇey.*

[கடலையெண்ணெய் → கடலெண்ணெய் (கொ.வ.).]

**கடலெல்லை** *kaḍal-ellai,* பெ.(n.) உலகம்; the earth, so called because it has the sea as its limit or boundary. *"வெண்குடை யின்னிழல்... கடலெல்லை நிழற்றலால்" (சீவக. 2580).*

[கடல் + எல்லை.]

**கடலெலி** *kaḍal-eli,* பெ.(n.) கடல்மீன்வகை (வின்.); a kind of sea - fish.

[கடல் + எலி.]

**கடலெள்** *kaḍel-eḷ,* பெ.(n.) எள்வகை (வின்.); a variety of gingelly seed.

[கடல் + எள். கடல் வழியாக இறக்குமதியான எள்.]

**கடலேடி** *kaḍal-ēḍi,* பெ.(n.) கொழுமீன், கடற்பன்றி (சேரநா.); porpoise sea-pig.

[கடல் + ஏடி. ஏடி = கடல் பன்றி.]

**கடலேத்தம்** *kaḍal-ēttam,* பெ.(n.) **கடலேற்றம்** பார்க்க; see *kaḍal-ēṟṟam.*

[கடல் + (ஏற்றம்) ஏத்தம்.]

**கடலேலகம்** *kaḍal-ēlagam,* பெ.(n.) காரெள்; black gingelly seed (சா.அக.).

[கடல் + (எள்) → ஏலகம். (கொ.வ.).]

**கடலேற்றம்** *kaḍal-ēṟṟam,* பெ.(n.) அலைவாய் நீரேற்றம்; high tide. (சேரநா.)

**ம.** கடலேற்றம்

[கடல் + ஏற்றம்.]

**கடலைக்கட்டி** *kaḍalai-k-kaṭṭi,* பெ.(n.) உடம்பு முழுவதும் கடலையைப் போல் கொப்புளங்களை யெழுப்பித் துன்புறுத்துமோர் நோய்; a disease of the skin devloping blisters of about the size of, lentil seeds (சா.அக.).

Skt. vasūrikai

[கடலை + கட்டி.]

**கடலைக்கம்பி** *kaḍalai-k-kambi,* பெ.(n.) ஆடையின் ஒருவகைக்கரை; narrow border for clothings, resembling *kaḍalai.*

[கடலை + கம்பி.]

**கடலைக்காடி** *kaḍalai-k-kāḍi,* பெ.(n.) **கடலைப்புளிப்பு** பார்க்க; see *kaḍalai-p-puḷippu* (சா.அக.).

[கடலை + காடி.]

**கடலைக்காய்** *kaḍalai-k-kāy,* பெ.(n.) நிலக்கடலை; ground nut, peanut.

**மறுவ.** வேர்க்கடலை, மணிலாக்கொட்டை.

க. கடலெகாயி; ம. கடலயிக்கா; உரா. கடலெகாயி.

*[கடலை + காய்.]*

**கடலைக்கொட்டை** *kaḍalai-k-koṭṭai,* பெ.(n.) *கடலைக்காய்* பார்க்க; see *kaḍalai-k-kāy.*

*[கடலை + கொட்டை.]*

**கடலைச்சுண்டல்** *kaḍalai-c-cuṇḍal,* பெ.(n.) ஊற வைத்த கடலையை வேகவைத்துத் தாளித்த உண்பண்டம்; a preparation of bengal gram, pea etc.

ம. கடலச்சுண்டல்

*[கடலை + சுண்டல்.]*

**கடலைப்பட்டாணி** *kaḍalai-p-paṭṭāṇi,* பெ.(n.) 1. பட்டாணிக்கடலை (இ.வ.); pea nut. 2. புடைவை வகை (பஞ்ச. திருமுக.1162); a kind of saree.

*[கடலை + பட்டாணி. பட்டாணிக் கடலையைப் போல் கரையிட்ட புடைவை வகை.]*

**கடலைப்பணியாரம்** *kaḍalai-p-paṇiyāram,* பெ.(n.) 1. திருமணக்காலத்தில் மணமகனுக்குக் கொடுக்க நீளுருண்டை வடிவில் கடலை முதலியவற்றைச் சருக்கரைப்பாகோடு சேர்த்து செய்யப்படும் தின்பண்டம்; cone shaped confection of Bengal gram etc., presented in a wedding to the bride - groom. 2. கடலைமாவாலான பணியாரவகை (நெல்லை); a confection made of Bengal gram flour. 3. கடலை உருண்டை; a ball or cake of fried ground nut and sugar (சா.அக.).

மறுவ. பருப்புத்தேங்காய்

*[கடலை + பணியாரம்.]*

**கடலைப்பயறு** *kaḍalai-p-payaṟu,* பெ.(n.) கடலையின் மேல்தோல் நீக்கிய பருப்பு (இ.வ.); halved grams.

*[கடலை + பயறு.]*

பயறு என்னும் சொல் பருப்பு என்னும் பொதுப்பொருளில் வருவது அருகி வழங்கும் இடவழக்கு. அளவில் சிறிய வித்துப் பயறு ஆகும். (எ.டு.) நரிப்பயறு, பாசிப்பயறு. கொட்டையினின்று உடைத்தெடுப்பது பருப்பு. பெரும்பாலும் பருப்பு சற்றுப் பருத்த தொலி, தோடு அல்லது ஓடு கொண்டதாய் இருக்கும்.

**கடலைப்பருப்பு** *kaḍalai-p-paruppu,* பெ.(n.) உடைத்த கொண்டைக்கடலை; broken Bengal - gram.

ம. கடலுண்டி; க. கடலெ பேளெ; பட. கள்ளெபே

*[கடலை + பருப்பு.]*

**கடலைப்புளிப்பு** *kaḍalai-p-puḷippu,* பெ.(n.) கடலைச் செடியின் மேல்படியும் பனிநீர் எடுத்துச் செய்யப்படும் காடிவகை (இங்.வை.77); vinegar made by collecting the dew drops of water on Bengal-gram leaves.

*[கடலை + புளிப்பு.]*

**கடலைமணி** *kaḍalai-maṇi,* பெ.(n.) கடலைவித்துப் போலும் பொன்மணிகளாலான கழுத்தணிவகை; a kind of necklace with beads resembling Bengal - gram pulse.

*[கடலை + மணி.]*

**கடலையிடல்** *kaḍalai-y-iḍal,* பெ.(n.) கடலை முதலிய தவச வகைகளை உடைக்கை; **crushing** of grains (சா.அக.).

*[கடலை + இடல்.]*

**கடலையுருண்டை** *kaḍalai -y-uruṇḍai,* கடலையுடன் இனிப்புப்பாகைக் கலந்து உருண்டையாக்கிய தின்பண்டம்; a ball shaped sweets made up of grams.

*[கடலை + உருண்டை.]*

**கடலையெண்ணெய்** *kaḍalai-y-eṇṇey,* பெ(n.) வேர்க்கடலையினின்று எடுக்கப்படும் எண்ணெய்; oil extracted from groundnut.

*[கடலை + எண்ணெய்.]*

**கடலொச்சு** *kaḍal-occu,* பெ.(n.) ஒருவகைக் கடல் விலங்கு (சேரநா.); a sea-snail.

ம. கடலொச்சு

*[கடல் + ஒச்சு. கடலில் வாழும் ஒருவகை விலங்கு.]*

**கடலொடுக்கம்** *kaḍal-oḍukkam,* பெ(n.) கடலில் ஆரவாரம் எழாதிருக்கும் நிலை (நெல்லை மீனவ.); roarless sea.

*[கடல் + ஒடுக்கம்.]*

**கடலோசை** *kaḍal-ōšai,* பெ.(n.) பொருளற்ற வெற்றோசை; empty noise, as the roar of the sea; senseless jumble of words balderdash. *"கடலோசை யாகாதபடி" (திவ். (திருநெடுந்.21, வியா.)*

*[கடல் + ஓசை.]*

**கடலோட்டம்** *kaḍal-ōṭṭam,* பெ.(n.) கடற்பயணம் (சேரநா.); sea voyage, navigation.

ம. கடலோட்டம்; க. கடலோட.

*[கடல் + ஓட்டம். ஓட்டம் = செலவு, பயணம்.]*

**கடலோட்டு-தல்** *kaḍal-ōṭṭu-,* 5 செ.குன்றாவி.(v.t.) கப்பலோட்டுதல்; to sail a ship (க.ப.அக).

*[கடல் + ஓட்டு-.]*

**கடலோடி** *kaḍal-ōḍi,* பெ.(n.) 1.மீகாமன், கலம் செலுத்துவோன்; mariner. 2. கடலில் செல்பவன் (சிலப்.2:2,அரும்.); seafarer. 3. கடற்செலவுக்குரிய ஒருவகைப்படகு (சேரநா.); a kind of boat. 4. கடல் வாணிகன்; sea merchant. 5. பரதவர்; fishermen.

ம. கடலோடி

*[கடல் + ஓடி.]*

**கடலோடு-தல்** *kaḍal-ōḍu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. கடலில் பயணம் செய்தல்; to go on a voyage. *''திரைகட லோடியுந் திரவியந் தேடு'' (கொன்றைவே.39).* 2. நீரோட்டத்தின் விரைவு (செங்கை. மீனவ.); fast current.

ம. கடலோடுக

*[கடல் + ஓடு.]*

**கடலோரம்** *kaḍal-ōram,* பெ.(n.) கடற்கரையையொட்டியுள்ள நிலப்பகுதி, நெய்தல்நிலம்; coastal area, seashore, beach, maritime tract.

ம. கடலோரம்

*[கடல் + ஓரம்.]*

**கடவஞ்சி** *kaḍa-vañji,* பெ.(n.) பொருள்களை வைக்கும்படி அமைக்குஞ் சட்டமிட்ட கால்களுள்ள திறப்படுக்கு; a large wooden rack on four or more legs for keeping household utensils etc.

*[குடம் → கடம் + வஞ்சி. மஞ்சம் → மஞ்சி → வஞ்சி.]*

**கடவட்டி** *kaḍavaṭṭi,* கடவாய்ப்பட்டி பார்க்க (சேரநா.); see *kaḍavāy-p-paṭṭi.*

ம. கடவட்டி

*[குடம் → கடம் + வாய் + (பட்டி) → வட்டி.]*

**கடவத்தடி** *kaḍava-t-taḍi,* பெ.(n.) 1. ஏணிப்படி; a stile, ladder. 2. வாய்க்காலைக் கடப்பதற்காக அதன் கரைகளுக்கிடையே ஏந்தான வகையில் இடப்படும் மரத்துண்டு; a wooden bar placed across a canal, stream for crossing over.

க. கட, கடகு, கடவு, கடுவு; து. கடபு, கடவு.

*[கடவு + தடி.]*

**கடவது** *kaḍavadu,* வினையா.பெ.(vbl.n) செய்ய வேண்டியது; that which should be done, duty. *"காவன் மன்னருங் கடிகையுங் கடவது நிறைத்தார்" (சீவக.2367).*

ம. கடவது. (எ.டு.) வாழக்கடவது, சாகக்கடவது.

*[கட + (வ்) + அது.]*

கட என்னும் வினைப்பகுதி இருதிணை ஐம்பால் மூவிடங்களுக்கும் பொதுவாய் அமைந்து வாழ்த்திலும் இழிப்பிலும் பயன்படும் துணைவினையாய் நிற்கும்.

**கடவப்புரசு** *kaḍava-p-purasu,* பெ.(n.) முதிரைமரம்; east Indian satin-wood.

*[கடவம் + புரசு.]*

**கடவம்பாக்கம்** *kaḍavam-bakkam,* பெ.(n.) விழுப்புரமாவட்டத்துச் சிற்றூர்; a village in Villuppuram district.

*[கடவு + அம் + பாக்கம் - கடவம்பாக்கம். கடவு = வாயில், வழி, நெடுஞ்சாலை. கடவம்பாக்கம் = பழங்காலத்து நெடுஞ்சாலை அருகில் இருந்த சிற்றூர்.]*

**கடவர்** *kaḍavar,* பெ.(n.) உரிமையாளர், உரிமை பூண்டவர்; one who has rights, heir. *'கடவரன்றி விற்று விலையாவணஞ்செய்து'* (S.I.I.Vol.19 insc.211. S.No.19,16.)

*[கடன் → கடம் + அர் - கடமர் → கடவர்.]*

**கடவல்** *kaḍaval,* பெ.(n.) 1. ஒரு வகைப் பெரிய புல் (சேரநா.); the lemon-grass. 2. கடம்பமரம் (கருநா.); common cadamba.

ம. கடவல்; க. கடவல், கடவல, கடவால, கடலா.

[கடவு → கடவல்.]

**கடவழி** *kaḍa-vaḻi,* பெ.(n.) வேலி முதலியவற்றைக் கடக்கும் குறுக்குவழி (சேரநா.); a stile.

ம. கடவழி

[கடவு → கட + வழி.]

**கடவன்**[1] *kaḍavaṉ,* பெ.(n.) 1. கடமைப்பட்டவன்; one who is under obligation. "கடவன் பாரி கைவண் மையே" (புறநா. 106). 2. தலைவன்; master, lord. 'ஒருவன் ஒரு கிருகத்துக்குக் கடவனாயிருக்கும்' (ஈடு,1.1:5).

ம. கடவன், கடவியன்.

[கடன் → கடவன்.]

**கடவன்**[2] *kaḍavaṉ,* பெ.(n.) 1. கடன் கொடுத்தவன், creditor. "தொடுத்த கடவர்க்கு" (புறநா.327).

[கடன் + அவன் - கடனவன் → கடவன்.]

**கடவனாள்** *kaḍavaṉāḷ,* பெ.(n.) சென்ற நாள்; yesterday. (இ.நா.அக.)

ம. கடவியன்

[கடவு + நாள்.]

**கடவாகோட்டை** *kaḍava-kōṭṭāi,* பெ.(n.) இது புதுக்கோட்டை மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர்; a village in Pudukkottai district.

[கடவு + கோட்டை - கடவுக்கோட்டை → கடவக்கோட்டை → கடவாகோட்டை. கடவு = வாயில், வழி, நெடுஞ்சாலை.]

**கடவாச்சியம்** *kaḍa-vācciyam,* பெ.(n.) இசைக்கருவியாகப் பயன்படுத்தும் மட்குடம் (பரத. பாவ.23.); earthen pot used as a musical instrument of percussion.

[குடம் → கடம் + ( வாத்தியம்) வாச்சியம்.]

**கடவாச்சேரி** *kaḍavāc-chēri,* பெ.(n.) கடலூர் மாவட்டத்துச் சிற்றூர்; a small village in Cuddalore district.

[கடவு + சேரி - கடவுச்சேரி - கடவச்சேரி - கடவாச்சேரி. கடவு = வாயில், வழி, நெடுஞ்சாலை.]

**கடவாய்** *kaḍavāy,* **கடைவாய்** பார்க்க; see *kaḍai-vāy.*

ம. கடவா

[கடைவாய் → கடவாய் (கொ.வ).]

**கடவாய்ப்பட்டி** *kaḍa-vāy-p-paṭṭi,* பெ.(n.) பனை அகணிகளால் முடையப்பட்ட அகன்ற வாயையுடைய கூடை; basket made up of palmyra-stems (நெல்லை.)

மறுவ. கடைவாய்ப்பெட்டி

ம. கடவட்டி

[குடம் → கடம் + வாய் + (புட்டி) → பட்டி.]

**கடவாய்ப்பல்** *kaḍavāy-p-pal,* பெ.(n.) **கடைவாய்ப் பல்** பார்க்க; see *kaḍaivāy-p-pal.*

[கடைவாய்ப்பல் → கடவாய்ப்பல்.]

**கடவார்** *kaḍavār,* பெ.(n.) 1. பணிசெய்பவர்; workmen. 'அடுத்தமுறை கடவாரின்றிப் பொழி'. (S.I.I.Vol.2 insc.65.S.No.4). 2. உரிமை உடையவர்; one who has right. 'அவ்வவர்க்கு அடுத்தமுறை கடவார் அந்நெல்லுப்பெற்று' (S.I.I.Vol.2 insc.65 S.No.3.)

[கட +(வ்) + ஆர். கட = கடமை.]

**கடவாரம்** *kaḍa-vāram,* பெ.(n.) 1. கடற்கரை; seashore. 2. கப்பலில் சரக்கு ஏற்றுவதற்கும் இறக்குவதற்கும் ஏற்றாற்போல் அமைக்கப்பட்ட மேடை (சேரநா.); wharf, guay.

ம. கடவாரம்

[கடல் + வாரம். வாரம் = நீர்க்கரை.]

**கடவான்**[1] *kaḍavāṉ,* பெ.(n.) 1. வயல் பரப்பில் கழிவுநீர் அல்லது மிகுதியான நீர் அதனை ஒட்டியுள்ள வயலுக்குச் செல்லுதற்கு வெட்டப்பட்ட நீர்மடை. (யாழ்ப்.); channel cut through the ridge of a paddy field to let the surplus water drain or for allowing water to run on to the adjoining field.

க. கடகு

[கடவு → கடவான்.]

**கடவி** *kaḍavi,* பெ.(n.) 1. தணக்கு (சித்.அக.); whirlnut tree. 2. மரமஞ்சள்; tree turmeric.

[கடம் → கடவ → கடவி.]

**கடவிழி** *kaḍavil̤i,* பெ.(n.) கலைமான்; sambar, the Indian elk (சா.அக.).

*[கட + விழி - கடவிழி = பெரிய விழியுடைய மான்.]*

**கடவிறங்கு-தல்** *kaḍaviṟaṅgu-,* 5 செ.கு.வி.(v.i.) கால்கழுவுதல் (சேரநா.); to wash after defecating.

ம. கடவிறங்ஙுக

*[கடவு + இறங்கு. கடவு = நீர்த்துறை.]*

**கடவு**[1]**-தல்** *kaḍavu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. செலுத்துதல்; to cause to go; to ride, drive, as animal or vehicle. *"ஆனந்த மாக் கடவி"* (திருவாச. 35:4). 2. விரைவுபடுத்துதல்; to speed up. 3. முடுக்குதல்; to urge. *"விரைபரி கடவி"* (பு.வெ, 1:8). 4. ஓட்டுதல்; to drive as animals. 5. படைக்கலன் செலுத்துதல் (வின்.); to despatch, to discharge, as a missile. 6. உசாவுதல்; to enquire. *"யான்தற் கடவின்"* (குறுந்.276).

ம. கடவுக; **க.** கடயிசு; **கோத.** கட்த; **து.** கடபாபுளி; **கே.** கடப்பு; **குரு.** கற்னான; **மால.** கட்டத்ரே.

*[கட → கடவு.]*

**கடவு**[2] *kaḍavu,* பெ.(n.) 1. கடந்து செல்லும் வழி; way. 2. படகு; boat. 3. பக்கம்; direction. *எந்தக் கடவிலிருந்து வருகிறாய்?* (இ.வ.). 4. நீர்த்துறை; port. 5. சந்து, முடுக்கு; lane.

ம. கடவு; **க.** கட.; **து.** கடபு.

*[கட → கடவு.]*

**கடவு**[3] *kaḍavu,* பெ.(n.) 1. எருமைக்கடா; male buffalo. *"முதுகடவு கடவி"* (அழகர்கலம்.33). 2. ஆட்டுக்கடா; male goat or sheep.

**க.,பட.** கோண; **ம.** கூள; **து.** கோண, கோணே; **தெ.** கோணே.

*[கடு → கடவு.]*

**கடவுக்காரன்** *kaḍavu-k-kāraṉ,* பெ.(n.) படகோட்டி; boat-man (கருநா.).

**க.** கடவுகார

*[கடவு + காரன். காரன் - செய்யபவனைக் குறித்த பெயரீறு.]*

**கடவுச்சீட்டு** *kaḍavu-c-cīṭṭu,* பெ.(n.) வெளிநாடு களுக்குச் செல்ல வழங்கப்படும் நுழைவுச்சீட்டு; pass port.

*[கடவு + சீட்டு.]*

**கடவுட்கணிகை** *kaḍavuṭ-kaṇigai,* பெ.(n.) வானவருலக ஆடற் கலைமகள்; dancing girl of the celestial world. *"கடவுட்கணிகை காதலஞ் சிறுவர்"* (மணிமே.13:95).

*[கடவுள் + கணிகை.]*

**கடவுட்சடை** *kaḍavuṭ-caḍai,* பெ.(n.) வரிக்கூத்து வகை (சிலப்.3:13 உரை); a kind of masquerade dance.

*[கடவுள் + சடை.]*

**கடவுட்டீ** *kaḍavuṭṭī,* பெ.(n.) ஊழித்தீ; submarine fire. *"கடவுட் டீயா லடலை செய்து"* (பிரமோத்.12:4).

*[கடவுள் + தீ.]*

**கடவுட்பணி**[1] *kaḍvuṭ-paṇi,* பெ.(n.) இறைத்தொண்டு; service to God.

*[கடவுள் + பணி.]*

**கடவுட்பணி**[2] *kaḍvuṭ-paṇi,* பெ.(n.) 1. பாம்பணை (ஆதிசேடன்); Ādišēṣa. 2. சிவன் அணிந்துள்ள பாம்பு; ornamental snake around the neck of Šivā.

*[கடவுள் + பணி. பணி = பாம்பு.]*

**கடவுட்பள்ளி** *kaḍavuṭ-paḷḷi,* பெ.(n.) பௌத்தர் கோயில்; Buddhist temple. *"சிறந்துபுறங் காக்குங் கடவுட்பள்ளி"* (மதுரைக்.467).

*[கடவுள் + பள்ளி.]*

**கடவுட்பொறையாட்டி** *kaḍavuṭ-poṟai-y-āṭṭi,* பெ.(n.) தேவராட்டி (பெரியபு.கண்.65); woman having oracular powers under divine inspiration.

*[கடவுள் + பொறை + ஆட்டி - கடவுட்பொறையாட்டி. பொறு → பொறை (சுமத்தல்). கடவுள் மெய் நிறைந்து (தன்மேல் ஏறப்பெற்று) சுமந்தாடியவாறு அருள்வாக்கு கூறும் பெண்.]*

**கடவுண்மங்கலம்** *kaḍvuṇ-maṅgalam,* பெ.(n.) தெய்வம் எழுந்தருளச் செய்தல்; ceremony of consecration of a new idol in a temple. *"கடவுண் மங்கலஞ் செய்கென வேவலின்" (சிலப். 28:233).*

மறுவ. சாந்தி

*[கடவுள் + மங்கலம்.]*

**கடவுண்மண்டிலம்** *kaḍavuṇ-maṇḍilam,* பெ.(n.) கடவுளாகக் கருதப்படும் ஞாயிறு; Sun-God who manifests himself in the form of *a sphere. "கடவுள் மண்டிலங் காரிருள் சீப்ப" (மணிமே.22:1).*

*[கடவுள் + மண்டிலம். மண்டலம் → மண்டிலம்.]*

**கடவுண்மணி** *kaḍavuṇ-maṇi,* பெ.(n.) 1. தெய்வமணி (திவா.); celestial gem. 2. ***அக்கமணி*** பார்க்க; see *akka-maṇi.*

*[கடவுள் + மணி.]*

**கடவுண்மாமுனிவர்** *kaḍavuṇ-mā-muṉivar,* பெ.(n.) திருவாதவூரடிகள் புராணத்தின் ஆசிரியர்; author of ***Tiruvādavūr-aḍigaḷ-purāṇam.***

*[கடவுள் + மா + முனிவர்.]*

**கடவுணதி** *kaḍavuṇadi,* பெ.(n.) தெய்வத்தன்மை வாய்ந்ததாகக் கருதப்படும் கங்கையாறு (அமுதா.பிள்.காப்பு.6); the river Ganges which according to Hindu mythology is said to have a divine origin.

*[கடவுள் + நதி.]*

**கடவுணீலி** *kaḍavuṇīli,* பெ.(n.) காளி; Kāḷi, the Goddess of black complexion.

*[கடவுள் + நீலி. நீலி = காளிக்குக் கருநிறத்தால் அமைந்த பெயர்.]*

**கடவுநர்**[1] *kaḍavunar,* பெ.(n.) செலுத்துவோர்; those who conduct, lead or manage. *"கடும்பரி கடவுநர்" (சிலப்.5:54).*

*[கட → கடவு + நர்.]*

**கடவுநர்**[2] *kaḍavunar,* பெ.(n.) வினவுவோர்; questioner.

*[கடாவு + நர் - கடாவுநர் → கடவுநர்.]*

**கடவுள்** *kaḍavuḷ,* பெ(n.) 1. மனம், மெய், மொழி இவற்றைக் கடந்து நிற்கும் பரம்பொருள். God, who transcends body speech and mind. *"ஈன்றாளோ டெண்ணக் கடவுளுமில்" (நான்மணிக்.57).* 2. வானவன்; celestial Being. *"கடவுள ரதனை நோக்கி" (கந்தபு. தாரக.59.).* 3. முனிவன்; sage. *"தொன்முது கடவுட்பின்னர் மேய" (மதுரைக்.41).* 4. குரவன் (குரு) (பிங்.); Guru, spiritual preceptor. 5. நன்மை; goodness, auspiciousness. *"கடிமண மியற்றினார் கடவு ணாளினால்" (சீவக.1490).* 6. தெய்வத்தன்மை; divine nature. *"கடவுட் கடிநகையொடு" (மணிமே. 15:57).*

மறுவ. பகவன், இறைவன், முதற்பொருள், இயவுள், தெய்வம் (தேவு), ஆண்டவன், வாலறிவன், அறவாழி அந்தணன்.

ம. கடவுள் **க.** கடவுள்.

H.,U. khuda; **G.** gott; **O.S.,O.E.,Du.,E.** god; **Swed., Dan., Norw.** gud; **Yid.** got; **M.E.,A.S.** god; **Icel.** gudh; **Goth.** guth; **M.H.G.,O.H.G.** got; **O.N.** gudh.

*[கடவு → கடவுள் (இயக்குபவன், செலுத்துபவன்). ஒ.நோ. இயவு → இயவுள்.]*

கடவுள் என்னும் பெயர், மனமொழி மெய்களையும் எல்லாவற்றையுங் கடந்த முழுமுதற்கடவுளையே குறிக்க எழுந்த சொல்லென்பது அதன் பகுதியாலேயே விளங்கும் (சொ.ஆ.க.87).

மாந்தன் இயற்றமுடியாத இயற்கையை இயற்றிய ஒரு தலைவன் இருத்தல் வேண்டுமென்றும் அவன் எல்லாவற்றையுங் கடந்தவன் என்றும் கண்டு அல்லது கொண்டு அவனைக் கடவுள் என்றனர், முதற்றமிழர்.

கடவுள் என்னும் பெயர்க்கு எல்லாவற்றையும் இயக்குபவன் அல்லது செலுத்துபவன் என்றும் பொருளுரைக்கலாம். கடவுதல் - செலுத்துதல் (சொ.ஆ.க.31). ஒ.நோ. **த.** கடவுள் > E. god.

அச்சத்தினாலும் அன்பினாலும் தொழப்பட்ட தெய்வ வழிபாடு கடவுள் கொள்கையாயிற்று. "அஞ்சியாகிலும் அன்பு பட்டாகிலும் நெஞ்சமே நீ நினை" என்னும் தேவாரப் பாடலை நோக்குக. நன்மை சேர்க்கும் ஆற்றலை அன்பினாலும் தம்மால் எதிர்க்க முடியாத தீமை தரும் ஆற்றல்களை (நாகவணக்கம் போன்றவை) அச்சத்தினாலும் தொழுதனர். அச்சத்தினால் வணங்கியவை சிறு தெய்வங்களாகவும் அன்பினால் வணங்கியவை பெருந்தெய்வங்களாகவும் ஆயின.

ஆரியர்களின் வேதநெறி போற்றிப்பாடல்கள் பல்வேறு துன்பங்களிலிருந்து தம்மைக்காக்குமாறு வேண்டிய அச்சவழிபாடாகும். பிறவிப்பிணி நீக்கும் பேரின்ப வீட்டுலகம் நல்கும் முதற்பொருளை

அடைவதற்காக அனைத்துயிர்க்கும் அன்பு காட்டும் தமிழர் நெறி, சித்தர் நெறி எனவும் சிவனிய நெறி எனவும் அறியப்பட்ட அன்பு வழிபாடாகும்.

இறைவனைக் குறித்த தமிழ்ச்சொற்கள் இறைவனுக்குரிய எண்குணங்களைக் குறிப்பிடுவனவாக அமைந்துள்ளன.

**பகவன்:** அணுவுக்குள் அணுவாக எல்லாவற்றிலும் நிறைந்து தன்வயத்தனாய் இருப்பவன்.

**தேவன்:** (தெய்வம்) தீச்சுடர் போல் ஒளிவடிவான மாசு மறுவற்ற தூய உடம்பினன்.

**இயவுள்:** ஒப்புயர்வற்ற இயற்கை உணர்வினன். இயவு = வழி, பாதை. இயவன் = தன் போக்கில் இயங்குபவன்.

**வாலறிவன்:** எல்லாம் அறியும் முற்றுணர்வினன் (பற்றற்றான்), முற்றுணர்வால் பற்றற்றவன்.

**கடவுள்:** என்றும் நின்று நிலைத்து எல்லாவற்றையும் இயக்குபவன். (கடவுதல் = செலுத்துதல், இயக்குதல்.) தொடர்ந்து இயக்குதலே, நின்று நிலைத்த தன்மையைச் சுட்டும்.

**அறவாழி அந்தணன்:** பேரருள் உடையவன். அருளே அறத்தின் திறவுகோல். ஆதலால் அறக்கடல் என்பது அருட்கடலே.

**முதற்பொருள்:** எல்லாம் வல்லதான முடிவிலா ஆற்றலுடையவன்.

**ஆண்டவன்:** உயிர்களுக்குக் காவலனாகி ஏமவைகல் தரும் திறத்தால் வரம்பிலாத இன்பம் நல்கும் ஆளுமை நிறைந்தவன்.

சமய நோக்கில் கடவுளை எண்குணத்தானாக உருவகப்படுத்தினாலும் தொல்காப்பியர் அறிவியல் நோக்கில் முதற்பொருள் என்றார். எல்லாக் கருப்பொருள்களும் தோன்றுதற்கு நிலைக்களமாகிய காலமும் இடமும் முதற்பொருளாதலின் அதுவே இறைவன் என்னும் உருவகச் சொல்லுக்கும் இயல் வரையறை யாகும். மணிவாசகரும், "போற்றி என் வாழ்முதலாகிய பொருளே" என்றார். இக் கருத்து இறைப்பற்றாளரும் இறை மறுப்பாளரும் ஒப்ப முடிந்த ஒன்றாகும்.

அறிவியல் அறிஞர் ஐன்சுடீனும் ஒரு பொருளின் (நீள அகல உயரம்) கனத்தோடு காலத்தையும் சேர்த்தே கணக்கிட வேண்டும் என்றார். தொல்காப்பியம் எல்லாப் பொருள்களும் உயிர்களும் தோன்றுதற்கு அடிப்படையான முதற்பொருளை, "காலமும் இடமும் முதற்பொருள் என்ப" (தொல்.பொருள்.மரபி.) என விளக்கியிருத்தல் ஒப்புநோக்கத் தக்கது. தமிழர் சமயக் கோட்பாடு அறிவியல் தழுவியது என்பதைக் கடவுளைக் குறித்த முதற்பொருள் சொல்லாட்சி நிறுவுகிறது.

**கடவுள்காப்பு** *kaḍavuḷ-kāppu,* பெ.(n.) ***கடவுள் வணக்கம்*** பார்க்க; see *kaḍavuḷ-vaṇakkam.*

*[கடவுள் + காப்பு.]*

**கடவுள்நெறி** *kaḍavuḷ-neṟi,* பெ.(n.) இறையுணர்வு கொண்டொழுகும் ஒழுகலாறு; theological path.

*[கடவுள் + நெறி.]*

ஊர்பேர் குணங்குறியற்று, மனமொழி மெய்களைக் கடந்து எங்கும் நிறைந்திருத்தல், எல்லாம் அறிந்திருத்தல், எல்லாம் வல்லதாதல், என்றுமுண்மை, அருள் வடிவுடைமை, இன்பநிலை நிற்றல், ஒப்புயர்வின்மை, மாசுமறுவின்மை ஆகிய எண் குணங்களையுடையதாய் எல்லாவுலகங் களையும் படைத்துக் காத்தழித்து வரும் ஒரு பரம்பொருளுண்டென்று நம்பி, அதனை வழிபடுவதே கடவுள் நெறியாம். இது சித்தமதம் எனவும் படும் (பண்.நா.ப.86).

**கடவுள்நெறிகள்** *kaḍavuḷ-neṟigaḷ,* பெ.(n.) இறையுணர்வு கொண்டொழுகும் வெவ்வேறு ஒழுகலாறுகள்; different paths of theology.

*[கடவுள் + நெறிகள்.]*

**கடவுள்வணக்கம்** *kaḍavuḷ-vaṇakkam,* பெ.(n.) 1. தெய்வத்தைத் தாழ்ந்து பணிந்து வணங்குதல்; praying the God, prayer, to make humble petition (with submission) with devoutness. 2. நூல் அல்லது நூற்பகுதியின் முதலிற் கூறும் தெய்வவாழ்த்து; invocation to the deity either at the commencement of a treatise or at the beginning of each part or section of the same. 3. விழாத் தொடக்கத்தில் பாடும் பாடல்.; invocation song of a function.

**மறுவ.** கடவுள் வாழ்த்து, கடவுட் காப்பு, இறை வாழ்த்து, கடவுள் வழிபாடு, காப்புச் செய்யுள்.

*[கடவுள் + வணக்கம்.]*

கடவுள் வணக்கம் என்பது கடவுள் முன் தாழ்ந்து பணிவதைக் குறிக்கும். "தலையே நீ வணங்காய்" என்னும் அப்பர் தேவாரமும் "பணிக நும் தலையே முக்கட் செல்வர் நகர்வலஞ் செயற்கே" என்னும் புறப்பாடலையும் ஒப்பு நோக்குக.

**கடவுள்வழிபாடு** *kaḍavuḷ-vaḻipāḍu,* பெ.(n.) குழுவாக நின்று கடவுளைப் பரவுதல், போற்றுதல்; to praise the God, worship.

*[கடவுள் + வழிபாடு. வழிபடு → வழிபாடு.]*

வழிபடுதல் என்பது கடவுள் நெறியைப் பின்பற்றுதலைக் குறிக்கும். "பொய்தீர் ஒழுக்க நெறிநின்றார்" என்று வள்ளுவர் கூறுவது காண்க. அது ஒவ்வொரு சமயத்தார்க்கும் வேறுபட்ட வழிமுறைகளையும், நெறிமுறைகளையும் கொண்டதாயினும் ஒவ்வொரு சமய நம்பிக்கைக் கூட்டத்தாரும் தமக்கென ஒரு தலைமை வழிபாட்டுநெறி வகுத்துக்கொண்டு ஒன்றுபட்டு இயங்க வழிவகுத்தது. கடவுள் வழிபாடு தன் பொருள் இழந்து கடவுளைப் போற்றி வணங்குகின்ற கடவுள் வாழ்த்துப் பொருளில் மட்டும் ஆளப்படுகின்றது. தேவாரக் காலத்தில் வழிபாடு என்பது கூட்டுவழிபாட்டையே குறித்தது. "கூடிநின் அடியார்..." என்னும் திருவாசகக் கருத்தை நோக்குக.

**கடவுள்வாழ்த்து** *kaḍavuḷ-vāḻttu,* பெ.(n.) 1. கடவுளை வேண்டிப் போற்றுதல்; to pray God requesting to fulfil desires or to relieve from sufferings. 2. தெய்வத்தைப் போற்றுதல்; praising the God. 3. தான் வழிபடு கடவுளையாதல், எடுத்துக் கொண்ட பொருட்கு ஏற்புடைக் கடவுளையாதல் வாழ்த்துதல் (குறள் உரை); invoking personal deity or deity relevant to the subject concerned. 4. முக்கடவுளருள் ஒருவரை வேந்தன் உயர்த்திச் சொல்லும் துறை (பு.வெ.9:3); theme of the king's praising one of the Hindu trinity as superior to the other two.

மறுவ. கடவுள் வணக்கம், இறை வாழ்த்து, கடவுள் காப்பு, கடவுள் வழிபாடு, காப்புச் செய்யுள்.

*[கடவுள் + வாழ்த்து.]*

அரசன் தொழும் கடவுள் என்னாது (யாவரேனும்) கடவுளை வாழ்த்துதல் பாடாண் திணையாம் என்பது ஆசிரியர் தொல்காப்பியனார் கருத்தாகும்.

கடவுளொடு உறவுகோல் நட்டு உணர்வுகயிற்றால் இணைப்புண்டு அன்பொடு குறையிரந்து வேண்டும் வேண்டுகோள்களே வாழ்த்தாக மலர்தலின் கடவுள் வாழ்த்து எனப் பெயர் பெற்றது. வாழ் (வாழ் - த.வி.) வாழ்த்து (வாழச் செய்தல்) வாழ்த்துதல் போற்றுதலைக் குறிப்பினும் நன்றி யறிதலை (நன்றிசெலுத்துதலை) முதன்மைக் கருத்தாகக் கொண்டது. செய்ந்நன்றியறிதல் நெஞ்சத்தின் அன்பு வாயிலைத் திறக்கும் ஆற்றலுடையது. செருக்கும் சினமும் சிறுமையும் போக்கி நற்பண்பு வளர வழிவகுப்பது என முன்னையோர் கருதினர்.

**கடவுள்வேள்வி** *kaḍavuḷ-vēḷvi,* பெ.(n.) தேவர் பொருட்டு ஓமத்தீயிற் செய்யும் ஐவகை வேள்விகளுள் ஒன்று (பிங்.); sacrifice to deities performed in the consecrated fire, one of ***aivagai-vēḷvi.***

*[கடவுள் + வேள்வி.]*

**கடவுள் வேள்வி, நான்முகன் (படைப்புக் கடவுள்) வேள்வி, பூதவேள்வி, மாந்தவேள்வி, தென்புலத்தார் வேள்வி ஆகியன ஐவகை வேள்விகளாகும்.**

தீவளர்க்கும் வேள்விகள் ஆரியர்க்கே உரியனவாதலின் தமிழ் மரபுக்கு ஒவ்வாதன.

**கடவுளர்** *kaḍavuḷar,* பெ.(n.) 1. வானவர்; celestial Being. 2. தேவர்; Devas. 3. செலுத்துவோர்; those who lead.

*[கடவுள் + அர்.]*

**கடவுளரிடன்** *kaḍavuḷar-iḍaṉ,* பெ.(n.) கோயிலுக்குரிய இறையிலி நிலம் (சீவக. 2373); temple lands that are rent-free.

*[கடவுளர் + இடன். இடம் → இடன்.]*

**கடவுளா** *kaḍavuḷā,* பெ.(n.) சிறு சிறு முட்களுடைய, அளவில் பெரிய ஊளாமீன் (நெல்லை மீனவ.); sea Uḷāfish bigger in size.

*[கள் (முள்) → கடு → கட + உளா.]*

**கடவுளாளர்** *kaḍavuḷ-āḷar,* பெ.(n.) **கடவுளர்** பார்க்க; see *kaḍavuḷar. "கரந்துரு வெய்திய கடவுளாளரும்" (மணிமே.1:15).*

*[கடவுள் + ஆள் + அர்.]*

**கடவுளெழுது-தல்** *kaḍavuḷ-eḻudu-,* 10 செ.கு.வி. (v.i.) தெய்வ வடிவை ஓவியமாக வரைதல் (நிருமித்தல்); to draw an idol. *"கடவுளெழுதவோர் கற்றாரா னெனின்" (சிலப். 25:130.)*

*[கடவுள் + எழுது.]*

**கடவூர்** *kaḍavūr,* பெ.(n.) மதுரை மாவட்ட சிற்றூர்; a village in Madurai district.

[கடவு + ஊர் - கடவூர். கடவு = வாயில், வழி, நெடுஞ்சாலை. கடவூர் = பழங்காலத்து நெடுஞ்சாலை அருகில் இருந்த ஊர்.]

**கடவை**[1] *kaḍavai,* பெ.(n.) 1. கடக்கை (யாழ்ப்.); leaping, jumping, passing over. 2. வழி; way. 3. தலைவாயில் (வின்.); door-way having a raised sill to be stepped over. 4. ஏணி (திவா.); ladder. 5. வேலித் திறப்பில் தாண்டிச் செல்லக் கூடிய தடை மரம் (யாழ்ப்.); break or opening in a fence with some obstruction at the bottom. 6, கவரிருக்கு மரம் (பிங்.); turnstile. 7. பாசறை (பிங்); military camp. 8. குற்றம் (பிங்); fault, defect, crime.

மறுவ. கடவுமரம்

ம. கடவ; க. கட்கல்; து. கடபு; துட. கட்ப்.

[கட → கடவை.]

கவர்த்த வழியும், கருத்து வேறுபாட்டிற்குரிய நிலையும் குறையீடு, குற்றம் எனப் பொருள்பட்டன.

**கடவை**[2] *kaḍa-vai,* பெ.(n.) தணக்கு (மலை.); whirling-nut.

[கட + கடவை.]

காற்றில் பறக்கும் இலை வித்துகளால் பெற்ற பெயர்.

**கடவைப்படு-தல்** *kaḍavai-p-paḍu,* 20 செ.கு.வி.(v.i.) 1. நீங்குதல்; to go off, depart. 2. காணமற் போதல்; to disappear, as property by stealth.

[கடவை + படு.]

**கடற்கட்டை** *kaḍaṟ-kaṭṭai,* பெ.(n.) கடலின் தொலைவை அளக்கப் பயன்படும் நீட்டலளவு. nautical mile.

[கடல் + கட்டை.]

*கடல்மைல்* பார்க்க; see *kaḍal mile.*

கட்டை என்பது யாழ்ப்பாணத்தில் ஒருகல் தொலைவைக் குறிக்குஞ் சொல்.

**கடற்கடம்பர்** *kaḍaṟ-kaḍambar,* பெ.(n.) கடற்கொள்ளையில் ஈடுபட்ட கடம்ப மரபினர்; pirates of Kadamba clan.

[கடல் + கடம்பர்.]

**கடற்கடம்பு** *kaḍaṟ-kaḍambu,* பெ.(n.) கடற் கரையிலுள்ள கடம்பமரம் (சிலப். 28:135); seaside Indian oak.

[கடல் + கடம்பு.]

**கடற்கம்பி** *kaḍaṟ-kambi,* பெ.(n.) தொலைத்தொடர்புக் காகக் கடலடியில் இடப்படும் கம்பி; cable laid under sea for the purpose of communication.

[கடல் + கம்பி.]

**கடற்கரண்டி** *kaḍaṟ-karaṇḍi,* பெ.(n.) கடற்கரையில் முளைக்கும் ஒருவகைச் செடி (நெல்லை மீனவ.); a plant grown on sea-shore.

[கடல் + கரண்டி.]

**கடற்கலம்** *kaḍaṟ-kalam,* பெ.(n.) மீன்பிடி தொழிலுக்குப் பயன்படுத்தும் வலை, படகு முதலியன; fishing equipments.

[கடல் + கலம்.]

**கடற்கழி** *kaḍaṟ-kaḻi,* பெ.(n.) கடலினின்று மணல் திட்டுகளால் பிரிக்கப்பட்ட உப்புநீர்த் தேக்கம் (நெல்லை மீனவ.); firth, lagoon.

[கடல் + கழி.]

**கடற்கழுகு** *kaḍaṟ-kaḻugu,* பெ.(n.) பறவைவகை (பரண்டி.); a kind of sea-bird.

[கடல் + கழுகு.]

**கடற்கள்ளன்** *kaḍaṟ-kaḷḷaṉ,* பெ.(n.) *கடற்கொள்ளைக் காரன்* பார்க்க; see *kaḍaṟ-koḷḷai-k-kāraṉ.*

க. கடல்கள்ள, கடலுள்ள; ம. கடல்க் கள்ளன்.

[கடல் + கள்ளன்.]

**கடற்கன்னி** *kaḍaṟ-kaṉṉi,* பெ.(n.) 1. மேற்பகுதி பெண்ணுருக் கொண்டும் அடிப்பகுதி மீனுருக் கொண்டும் கடலில் வாழ்வதாகக் கருதப்படும் உயிரி; sea nymph. 2 கடல்மீன் வகை; a kind of sea fish. 3. திருமகள்; daughter of the sea, Lakṣmi.

தெ. கடலிகூத்துரு

[கடல் + கன்னி.]

**கடற்காக்கை** *kaḍar-kākkai,* பெ.(n.) 1. கடலில் வாழும் காக்கை; sea-crow, sea-gull. 2. கடலிறஞ்சிமரம்; seaside-plum. 3. கழுத்தில் பழுப்பு நிறமுள்ள ஒருவகைக் காகம்; species of crow with grey neck (சேரநா.).

ம. கடல்க்காக்கை

[கடல் + காக்கை.]



கடற்காக்கை

**கடற்காடை** *kaḍar-kāḍai,* பெ(n.) காடை இனத்தைச் சார்ந்த ஒருவகைக் கடற்பறவை; a curlew-stint or pigmy sand piper.

ம. கடல்காட

[கடல் + காடை.]

**கடற்காய்** *kaḍar-kāy,* பெ.(n.) சிப்பி; oyster. (சேரநா.)

ம. கடக்கா

[கடல் + காய்.]

**கடற்கால்** *kaḍar-kāl,* பெ.(n.) இருபெரும் நீர்நிலை அல்லது கடல்களை இணைக்கும் குறுகி நீண்ட கடல்நீர் இடைகழி; strait, narrow passage of water connecting two seas or large bodies of water.

[கடல் + கால். கால் = நீண்ட கால்வாய் போன்றது.]

**கடற்காளான்** *kaḍar-kāḷāṉ,* பெ.(n.) கடற்பஞ்சு; sponge.

[கடல் + காளான்.]

**கடற்காற்று** *kaḍar-kāṟṟu,* பெ.(n.) கடலினின்று நிலத்திற்கு வீசுங்காற்று; sea-breeze, dist.fr. தரைக்காற்று.

ம. கடல் காற்று.

[கடல் + காற்று.]

கடற்காற்று உடலுக்கு நல்லுரம் தரும்; ஆனால் மூலிகைகளுக்கு இக் காற்றுப் பயன் தராது என்பர்.

**கடற்கிளி** *kaḍar-kiḷi,* பெ.(n.) ஒருவகைக் கடற் பறவை; small puffin, a kind of sea bird.

ம. கடல்க்கிளி.

[கடல் + கிளி.]



கடற் கிளி

**கடற்குச்சி** *kaḍar-kucci,* பெ.(n.) கரும்பலகையில் எழுதுவதற்குப் பயன்படும் குச்சி வடிவிலான கடற் பொருள் (நெல்லை மீனவ.); a part of marine vegetation used to write on black board.

[கடல் + குச்சி.]

**கடற்குதிரை**[1] *kaḍar-kudirai,* பெ.(n.) 1. மேற்பகுதி குதிரையைப் போலவும், கீழ்ப்பகுதி மீனைப் போலவுமுள்ளவோர் விலங்கு; a fabulous animal partly horse and partly fish; avalrus or morse. 2. கடலில் வாழும் குதிரையைப் போன்ற சிறுமீன்; sea-horse; the name of a small fish having the

head and foreparts horse-like in form - Hippocampus guttalatus. 3. கடற்பாம்பு; whip-fish or pipe-fish. (சா.அக.)

மறுவ. நீர்க்குதிரை

ம. கடல்க்குதிரை; க. கடல்குதிரை.

[கடல் + குதிரை.]



கடற் குதிரை

**கடற்குதிரை**[2] *kaḍar-kudirai,* பெ.(n.) 1. தோணி; boat (மட்.அக.).

[கடல் + குதிரை.]

**கடற்குரவை** *kaḍar-kuravai,* பெ.(n.) ஒருவகைக் குரவை மீன் (இரா. மீனவ.); a kind of ***'kuravai'*** fish.

[கடல் + குரவை.]

**கடற்குருவி**[1] *kaḍar-kuruvi,* பெ.(n.) 1. கல்லுப்பு, கடலில் தானாய் வளரும் உப்பு (மூ.அ.); rock salt; salt found in lumps on beds of rocks at the bottom of the sea owing to evaporation of sea-water. 2. சோற்றுப்பு; common salt (சா.அக).

[கடல் + குருவி. குரு → குருவி. குருத்தல் = தோன்றுதல்.]

**கடற்குருவி**[2] *kaḍar-kuruvi,* பெ.(n.) 1. கடற்கரையோரங்களில் வாழும் குருவி; squat sparrow.

[கடல் + குருவி.]

**கடற்கூம்பு** *kaḍarkūmbu,* பெ.(n.) ***கடற்கழி*** பார்க்க; see *kaḍar-kaḻi.*

[கடல் + கூம்பு.]

**கடற்கொஞ்சி** *kaḍar-koñji,* பெ.(n.) சீமைக் கொஞ்சி (மூ.அ.); Chinese box.

[கடல் + கொஞ்சி. கொளுஞ்சி → கொஞ்சி.]

**கடற்கொடி** *kaḍar-koḍi,* பெ.(n.) 1. தும்பை (மலை.); a bitter medicinal herb. 2. கடற்றாமரை; sea-creeper, sea-lotus.

[கடல் + கொடி.]

**கடற்கொடிச்சி** *kaḍar-koḍicci,* பெ.(n.) ***கடற்கொடி*** பார்க்க; see *kaḍar-koḍi.*

[கடல் + (கொடி) கொடிச்சி.]

**கடற்கொடித்தூமம்** *kaḍar-koḍi-t-tūmam,* பெ.(n.) ***கடவி*** (சித்.அக.) பார்க்க; see *kaḍavi.*

[கடல் + கொடி + தூமம்.]

**கடற்கொந்தளிப்பு** *kaḍar-kondaḷippu,* பெ.(n.) காற்றழுத்தத் தாழியின்போதும், காருவா, வெள்ளுவா நாளின்போதும் கடற்பரப்புப் பொங்கியெழும் நிலை; rough, tumultuous, due to the low pressure and in the days of new moon and full moon days.

[கடல் + கொந்தளிப்பு.]

**கடற்கொழுப்பை** *kaḍar-koḻuppai,* பெ.(n.) எழுத்தாணி வடிவப்பூவையுடைய கடல் மணற்பரப்பின்மீது படர்ந்து வளரும் ஒருவகைச் செடி (M.M.); style plant.

ம. கடல்கொழுப்ப

[கடல் + கொழுப்பை.]

**கடற்கொள்(ளு)-தல்** *kaḍar-koḷ(ḷu)-,* 10 செ. குன்றாவி.(v.t.) ***கடல்கொள்(ளு)-தல்*** பார்க்க; see *kaḍal-koḷ(ḷu)-.*

[கடல் + கொள்(ளு).]

**கடற்கொள்ளை** *kaḍar-koḷḷai,* பெ.(n.) கப்பற் கொள்ளை; piracy.

ம. கடல்கொள்ள

[கடல் + கொள்ளை.]

**கடற்கொள்ளைக்காரன்** *kaḍar-koḷḷai-k-kāraṉ*, பெ.(n.) கப்பற் பயணிகளை வழிமறித்துக் கொள்ளை யடிப்பவன்; pirate.

*[கடல் + கொள்ளை + காரன்.]*

**கடற்கோ** *kaḍar-kō*, பெ.(n.) வாரணன்; Vāraṇaṉ, the god of or lord of the sea. *"அன்னவன் கடற்கோ வணங்கி யேத்துற" (உபதேசகா. உருத்திராக்க.230.)*

*[கடல் + கோ. கோல் → கோன் → கோ.]*

**கடற்கோடி** *kaḍarkōḍi*, பெ.(n.) **கடலோடி** பார்க்க; see *kaḍal-ōḍi*.

ம. கடல்கோட்டி

*[கடல் + கோட்டி. கோட்டி = குழு. கூட்டு → கூட்டி → கோட்டி. கடற்கோடி = கடல் வாணிகக் குழுவைச் சார்ந்தவன்.]*

**கடற்கோடு** *kaḍar-kōḍu*, பெ.(n.) 1. கடற்கரை; sea-coast. "மல்கு திரைய கடற்கோட் டிருப்பினும்" (நாலடி.263). 2. கடல் நத்தை; sea-snail. 3. கடற்சங்கு; conch found in the sea (சா.அக.).

ம. கடக்கோடி, கடற்கோடு.

*[கடல் + கோடு. கோடு = கரை.]*

**கடற்கோரை** *kaḍar-kōrai*, பெ.(n.) கடல் நீர்ப்பயிர்; agar (க.ப.அக.).

*[கடல் + கோரை.]*

**கடற்கோழி** *kaḍar-kōḻi*, பெ.(n.) கடலில் வாழும் கோழியைப் போன்ற பறவை; a kind of bird resembling the fowl as the grey plover (சா.அக.).

*[கடல் + கோழி.]*

**கடற்கோள்** *kaḍar-kōḷ*, பெ.(n.) கடற்பெருக்கத்தால் நிலப்பகுதிகளுக்கு ஏற்படும் பேரழிவு; great deluge. ''கருவி வானங் கடற்கோண் மறப்பவும்'' (பொருந.236.)

*[கடல் + கோள்.]*

பண்டைத் தமிழிலக்கியத்திற் சொல்லப்பட்டுள்ள கடற்கோள்கள் மொத்தம் நான்கு. அவற்றுள், முதலது தலைக்கழக இருக்கையாகிய தென்மதுரையைக் கொண்டது; இரண்டாவது ''நாகநன்னாடு நானூறுயோசனை" கொண்டது (மணிமே.9:21); மூன்றாவது நான்காவது காவிரிப்பூம்பட்டினத்தையும் குமரியாற்றையுங் கொண்டது. குமரி என்பது குமரிக் கண்டத்தின் தென்கோடி யடுத்திருந்த ஒரு பெருமலைத் தொடர்க்கும், அதன் வடகோடியடுத்துக் குமரி முனைக்குச் சற்றுத் தெற்கிலிருந்த காவிரி போலும் பேராற்றிற்கும் பொதுப்பெயராம். காவிரிப்பூம்பட்டினம் முழுகிய பின்பும் குமரியாறிருப்பதுபோல் கபாடபுரம் முழுகியபின்பும் குமரியாறிருந்தமை "வடவேங்கடந் தென்குமரி" என்னும் தொல்காப்பியச் சிறப்புப் பாயிர அடியாலும்,

"தெனாஅ துருகெழு குமரியின் தெற்கும்", "குமரியம் பெருந்துறை யயிரை மாந்தி" என்னும் புறப்பாட்டடிகளாலும் (6,67) அறியப்படும் (தமி.வ.10).

**கடற்சரக்கு** *kaḍar-carakku*, பெ.(n.) கடலின் வழியாக வந்த பொருள்; goods imported through sea. (சேரநா.)

ம. கடல்சரக்கு

*[கடல் + சரக்கு.]*

**கடற்சார்பு** *kaḍar-cārbu*, பெ.(n.) நெய்தல் நிலப்பகுதி; land adjoining the sea, maritime tract.

*[கடல் + சார்பு.]*

**கடற்சாரை** *kaḍar-cārai*, பெ.(n.) கடலில் வாழும் ஒருவகை சாரைப்பாம்பு; sea snake.

*[கடல் + சாரை.]*

**கடற்சிங்கம்** *kaḍar-šiṅgam*, பெ.(n.) **கடலரிமா** பார்க்க; see *kaḍal-arimā*.

*[கடல் + சிங்கம்.]*

**கடற்சில்** *kaḍar-cil*, பெ.(n.) கடல்மரக்கொட்டை (வின்.); flat, round seeds of a sea plant.

*[கடல் + சில்.]*

**கடற்சிலந்தி** *kaḍar-cilandi*, பெ.(n.) கடலின் அலையிடப் பகுதியிலிருந்து ஆழ்கடல் பகுதி வரை காணப்படும் சிலந்திபோன்ற பூச்சி; sea-spider.

*[கடல் + சிலந்தி.]*



கடற்சிலந்தி

**கடற்செலவு** *kaḍaṟ-celavu,* பெ.(n.) கடற்பயணம், கடல் வழிப்பயணம்; voyage.

*[கடல் + செலவு. செல் - செலவு.]*

தமிழினம் கடற்பயணத்தைத் தரைப்பயணம் போலவே கருதி வாழ்ந்த நெஞ்சுரம் மிக்க இனம். தென் கிழக்காசிய நாடுகள் பலவற்றிற்குப் பலகலம் செலுத்திய பிற்காலச் சோழப் பெருவேந்தர்க்கு ஆயிரமாண்டுகட்கு முற்பட்ட கடைக்கழகப் பெருவேந்தர்கள் "நளியிருமுந்நீர் நாவாயோட்டியும் உலகு கிளர்ந்தன்ன உருகெழு வங்கமோட்டியும்" வாழ்ந்தனர். anchor, catamaran, navy. முதலான 'கடல் தொடர்புடைய ஆங்கிலச் சொற்கள் நங்கூரம், கட்டுமரம், நாவாய் என்ற செந்தமிழ்ச் சொன் மூலத்தினவேயாம்.

**கடற்சேதம்** *kaḍaṟ-cēdam,* பெ.(n.) *கப்பலழிவு* பார்க்க; (வின்.); see *kappalaḻivu.*

த. சேதம் > Skt. cheda. செது → செற்று → செத்து → சிதை → சேதம்.)

*[கடல் + சேதம்.]*

**கடற்சேர்ப்பன்** *kaḍaṟ-cērppaṉ,* பெ.(n.) நெய்தல் நிலத் தலைவன்; chief or overlord of maritime tract. *"தில்லைச்சூழ் கடற்சேர்ப்பா" (திருக்கோ.277).*

*[கடல் + சேர்ப்பவன்.]*

**கடற்சேனை** *kaḍaṟ-cēṉai,* பெ.(n.) பாம்பு போன்ற ஒருவகைக் கடல்மீன் (வின்.); a sea-eel.

*[ஒருகால், கடல்சேடன் → கடல்சேனன் → கடல்சேனை.]*

**கடற்சொறி** *kaḍaṟ-soṟi,* பெ.(n.) கடலில் சிவப்பாக மிதக்குமோர் பொருள்; a red substance found floating on the sea.

*[கடல் + சொறி.]*

**கடற்பக்கி** *kaḍaṟ-pakki,* பெ.(n.) *கடற்பறவை* பார்க்க; see *kaḍaṟ-paṟavai.*

*[கடல் + (பட்சி) பக்கி. பக்கி > Skt. பட்சி.]*

**கடற்பச்சை** *kaḍaṟ-paccai,* பெ.(n.) *கடற்பாலை* பார்க்க; see *kaḍar-pālai.*

*[கடல் + பச்சை.]*

**கடற்பசு** *kaḍaṟ-pašu,* பெ.(n.) *கடற்பெற்றம்* பார்க்க; see *kaḍaṟ-peṟṟam.*

ம. கடல்ப்பசு

*[கடல் + பசு.]*

**கடற்பஞ்சு** *kaḍaṟ-pañju,* பெ.(n.) *கடற்காளான்* பார்க்க; see *kaḍaṟ-kālāṉ.*

*[கடல் + பஞ்சு.]*

**கடற்படப்பை** *kaḍaṟ-paḍappai,* பெ.(n.) கடற்கரையைச் சார்ந்த பகுதி; maritime. *'கடற்படப்பை ஒற்றி மூதாருகந்தருளி' (S.I.I. Vol.12 insc.93).*

*[கடல் + படப்பை.]*

**கடற்படுகை** *kaḍaṟ-paḍugai,* பெ.(n.) கடலடிப் படுகை; sea bed.

*[கடல் + படுகை.]*

**கடற்படுபொருள்** *kaḍaṟ-paḍu-poruḷ,* பெ.(n.) கடலில் தோன்றும் முதன்மையன பொருள்களான ஓர்க்கோலை. சங்கம், பவளம், முத்து, உப்பு போன்றவை; products of the sea.

*[கடல் + படு + பொருள்.]*

**கடற்படுவளம்** *kaḍaṟ-paḍu-vaḷam,* பெ.(n.) *கடற்படுபொருள்* பார்க்க; see *kaḍaṟ-paḍu-poruḷ.*

*[கடல் + படு + வளம்.]*

**கடற்படை** *kaḍaṟ-paḍai,* பெ.(n.) கப்பற்படை (இறை.39, உதா.செய்.241); naval force, navy.

ம. கடல்ப்பட்டாளம்

*[கடல் + படை.]*

மூவேந்தரிடத்துத் தொன்றுதொட்டுக் கலப்படை (கப்பற்படை) யிருந்துவந்தது. சேரமான் கடலோட்டிய வேல்கெழு குட்டுவன் செய்த கடற்போரைப் பற்றிப் புறச்செய்யுள் (12) கூறுவதையும், கி.பி. 10ஆம் நூற்றாண்டுகளிலிருந்தே முதலாம் இராசராச சோழன், ஈழத்தையும், 'முந்நீர்ப் பழந்தீவு' பன்னீராயிரத்தையும் (Maldive Islands.) கலப்படை கொண்டு வென்று, சேரநாட்டுக் 'காந்தளூர்ச்சாலை கலமறுத்தருளிய' தையும், அவன் மகன் இராசேந்திரன் நக்கவரம், (Nicobar) மலையம், (Malaya) சுமதுரை (Sumatra) முதலியவற்றை வென்றதையும் நோக்குக. (பழந்தமி.45,46).

**கடற்பயணம்** *kaḍaṟ-payaṉam,* பெ.(n.) *கடற்செலவு* பார்க்க; see *kaḍaṟ-celavu.*

**மறுவ.** தொலைப்பயணம்; கப்பற் பயணம்.

*[கடல் + பயணம்.]*

**கடற்பறவை** *kaḍaṟ-paṟavai,* பெ.(n.) நீள்மூக்குடைய கடற்பறவை வகை; tern.

**ம.** கடல் மீவல்

*[கடல் + பறவை.]*

**கடற்பன்றி** *kaḍaṟ-paṉṟi,* பெ.(n.) பெருமீன்வகை. (மூ.அ.); porpoise.

**ம.** கடப்பள்ளி; **து.** கடல்பஞ்சு.

*[கடல் + பன்றி.]*



கடற்பன்றி

**கடற்பாசி** *kaḍaṟ-pāši,* பெ.(n.) 1. ஒருவகைக் காளான் (மூ.அ.); celon moss. 2. **கடற்பூடு** பார்க்க. (M.M.); see *kaḍaṟ-pūḍu.*

**ம.** கடப்பாயல், கடல்பாசி.

*[கடல் + பாசி.]*

**கடற்பாம்பு** *kaḍaṟ-pāmbu,* பெ.(n.) 1. கடலில் வாழும் ஐந்தடி நீளமுள்ள ஒருவகை நச்சுப்பாம்பு; sea Bungar, venomous snake, attaining five ft. in length. 2. ஆறடி நீளமுள்ள கடற் பாம்புவகை; chital, venomous sea snake greenish, 6 ft. in length. 3. கடலில் வாழும் 12 அடி நீளமுள்ள நச்சுப்பாம்பு வகை; a venomous sea-snake with elevated and compressed tail, attaining 12ft. in length.

**ம.** கடற்பாம்பு

*[கடல் + பாம்பு.]*



கடற்பாம்பு

**கடற்பாய்** *kaḍaṟ-pāy,* பெ.(n.) மரக்கலத்தைக் கடலில் இயக்குதற்குரிய பாய் (மீனவ.); sail of a catamaran.

*[கடல் + பாய்.]*

**கடற்பாய்ச்சி** *kaḍaṟ-pāycci,* பெ.(n.) கடலில் கப்பல் செலுத்துவோன் (கல்வெட்டு); sailor, mariner.

**மறுவ.** மீகான்.

*[கடல் + பாய்ச்சி.]*

**கடற்பாலை** *kaḍaṟ-pālai,* பெ.(n.) வட்டத்திருப்பி என்னும் கொடி (மலை.); elephant creeper.

**ம.** கடல்ப்பால

*[கடல் + பாலை.]*

**கடற்பாறை**[1] *kaḍaṟ-pāṟai,* பெ.(n.) 1. கடலோரத்தில் காணப்படும் பாறைகள்; reefs. 2. பவழ உயிரினங்கள் வாழும் பாறை; coral reef.

**மறுவ.** பவழப்பாறை

*[கடல் + பாறை.]*

முகவை (இராமநாதபுரம்) மாவட்டக் கடற்பகுதியில் உள்ள நல்ல தண்ணீர்த்தீவு, உப்புத்தீவு, தலையாரித் தீவு, வெள்ளித்தீவு, முள்ளித்தீவு, முயல்தீவு, மண்ணளித்தீவு, குருசடைத்தீவு, கச்சத்தீவு ஆகிய தீவுகளைச் சுற்றியும், கடலோரத்திலும் இப் பாறைகள் உண்டாகின்றன. தெளிந்த நீராறுகள் வந்து சேரா இடமாகவும், படிவங்கள் சேரா இடமாகவும் இருப்பின் இப்படிப்பட்ட கடற் பாறைகள் உருவாகும் (க.ப.அக.).

**கடற்பாறை**[2] *kaḍaṟ-pāṟai-,* பெ.(n.) ஒருவகை மீனின் பெயர்; a kind of sea - fish.

[கடல் + பாறை - கடற்பாறை. கடற்பாறைகளிடையில் வாழும் மீன் வகையாதலின் இப் பெயர் பெற்றது.]

**கடற்பிணா** *kaḍaṟ-piṇā,* பெ.(n.) நெய்தனிலப்பெண் (திவா.); woman of the tribe living in the maritime tract.

[கடல் + பிணா. பெண் → பிணவு → பிணா.]

**கடற்பிறந்தகோதை** *kaḍaṟ-piṟanda-kōdai,* பெ.(n.) கடற்பிறந்தாள் (சூடா.) பார்க்க; see *kaḍaṟ-piṟandāḷ.*

[கடல் + பிறந்த + கோதை.]

**கடற்பிறந்தாள்** *kaḍaṟ-piṟandāḷ,* பெ.(n.) திருமகள் (பிங்.); Laksmi, goddess of wealth, who sprang from the sea of milk when that sea was churned.

[கடல் + பிறந்தாள். திருமகள் திருப்பாற்கடலில் பிறந்தாள் என்பது தொன்மக் கதை.]

**கடற்புலி** *kaḍaṟ-puli,* பெ.(n.) கடல்வாழ் உயிரினம், சுறாமீன்; sea - tiger, shark.

[கடல் + புலி.]

**கடற்புற்று** *kaḍaṟ-puṟṟu,* பெ.(n.) பவளம் (சேரநா.); coral.

ம. கடல்ப்புற்று

[கடல் + புற்று.]

**கடற்புறம்** *kaḍaṟ-puṟam,* பெ.(n.) 1. ஆறுகள் கடலுடன் கூடுமுகத்துள்ள மணலடைப்பு; unopened bar of a river; sand-bank that totally closes many Indian river mouth during the dry weather. 2. கடற் கரை; beach.

ம. கடல்ப்புறம் (கடற்கரை)

[கடல் + புறம்.]

**கடற்புறா** *kaḍaṟ-puṟā,* பெ.(n.) கடலில் பறந்தும் நடந்தும் வாழும் ஒருவகைப் புறா; petrel.

ம. கடப்றாவு.

[கடல் + புறா.]



கடற்புறா

**கடற்பூ** *kaḍaṟ-pū,* பெ.(n.) செம்மருது; blood wood.

ம. கடல்ப்பூ.

[கடல் + பூ.]

**கடற்பூடு** *kaḍaṟ-pūḍu,* பெ.(n.) ஒருவகைப் பூடு; marine algae collectively; Malay agaragar, sea-weed.

ம. கடல்ச்சண்டி

[கடல் + பூடு.]

**கடற்பெருக்கு** *kaḍaṟ-perukku,* பெ.(n.) கடலின் நீரேற்றம்; high tide.

[கடல் + பெருக்கு.]

**கடற்பெற்றம்** *kaḍaṟ-peṟṟam,* பெ.(n.) 1. கடற்குதிரை வகையுனுள் ஒன்று; a kind of sea - horse. 2. தழையுண்ணும் கடல்வாழ் பாலூட்டி வகை; dugong.

[கடல் + பெற்றம்.]

8 முதல் 12 அடி நீளம் உடையதும் கடற்பூண்டுகளைத் தின்று வாழ்வதுமாகிய ஒரு சிறிய திமிங்கிலம் (க.ப.அக.).


கடற்பெற்றம்

**கடற்பேய்** *kaḍaṟ-pēy,* பெ.(n.) அச்சந்தரும் வகையில் உருவமும் பற்களும் கொண்ட மீன்வகை; a sea fish of whose teeth and shape are of dreadful look (க.ப.அக.).

[கடல் + பேய்.]



**கடற்றாமரை[1]** *kaḍaṟṟāmarai,* பெ.(n.) பெருந்தாமரை (சித்.அக.); a kind of lotus.

[கடல் + தாமரை.]

**கடற்றாமரை[2]** *kaḍaṟṟāmarai,* பெ.(n.) ஒருவகைக்கடல் மீன்; a kind of sea-fish. (சா.அக.)

[கடல் + தாமரை.]

**கடற்றாரா** *kaḍaṟṟārā,* பெ.(n.) கடற்பறவை; sea-bird.

[கடல் + தாரா.]

**கடற்றாழை** *kaḍaṟṟāḻai,* பெ.(n.) 1. கொந்தாழை (மூ.அ.); sea-weed. 2. வாட்டாழை; a sea plant yielding an edible fruit.

[கடல் + தாழை.]

**கடற்றிட்டு** *kaḍaṟṟiṭṭu,* பெ.(n.) கடலின் நடுவிலுள்ள சிறு நிலப்பகுதி; island.

[கடல் + திட்டு.]

**கடற்றிரை** *kaḍaṟṟirai,* பெ.(n.) **கடலலை** பார்க்க; see *kaḍalalai.*

மறுவ. அலை, அறல், தரங்கம், புணரி ஓதம், பெருங்கலி, கல்லோலம்.

[கடல் + திரை.]

**கடற்றீ** *kaḍaṟṟī,* பெ.(n.) கடல் நுரை (மூ.அ.); froth of the sea.

[கடல் + தீ. - கடற்றீ. தீயின் சுடர் போன்ற தோற்றம் தந்தமையின் பெற்ற பெயராகலாம்.]

**கடற்றுயின்றோன்** *kaḍaṟṟuyiṉṟōṉ,* பெ.(n.) கடலில் அறிதுயிலமர்ந்த திருமால் (திவா.); Viṣṇu, who accg. to Hindu mythology, is sleeping a conscious kind of sleep on the sea.

[கடல் + துயின்றோன்.]

**கடற்றுறை** *kaḍaṟṟuṟai,* பெ.(n.) துறைமுகம்; harbour.

ம. கடல்த்துரா

[கடல் + துறை.]

**கடற்றுறைத்தொழில்** *kaḍaṟ-ṟuṟai-t-toḻil,* பெ.(n.) கடல் துறையில் செய்யும் தொழில்; occupations at sea port.

[கடல் + துறை + தொழில்.]

மீன் விலை கூறுதல், வலைப்பூரை பொத்துதல், கட்டுமரம் கட்டுதல், முத்துச்சிப்பி விலைகூறுதல் ஆகியன கடல்துறையில் செய்யப்படும் தொழில்களாம்.

**கடற்றெங்கு** *kaḍaṟṟeṅgu,* பெ.(n.) தென்னை வகை; double coconut, l.tr. native only on the Seychelles.

மறுவ. இரட்டைத்தேங்காய்

ம. கடத்தேங்ஙா; க. கடல் தெங்கு.

[கடல் + தெங்கு.]

ஒரு காயுள் இரண்டு விதையுள்ள தேங்காய். உயரமாக வளரும் இத் தென்னை கடலகத் தீவுகளில் காணப்படுகிறது.

ஒரு பக்கம் வளைந்தும் ஒரு பக்கம் சப்பையாகவும் இருமுனையும் கூராகவும் இரு தேங்காய் ஒட்டியிருப்பது போலவும் மேற்றொலி கறுத்தும் உள்ள இக் காய் நஞ்சுமுறிக்கும் தன்மையது என்பர்.



கடற்றெங்கு

**கடற்றெய்வம்** *kaḍaṟṟeyvam,* பெ.(n.) வாரணன்; Varuṇā, the god of the sea. *"கடற்றெய்வம் காட்டிக் காட்டி" (சிலப். 7:5).*

*[கடல் + தெய்வம்.]*

**கடற்றேங்காய்** *kaḍaṟṟēṅgāy,* பெ.(n.) கடலின் வழியாய்ப் படகின்மேலேற்றிக் கொண்டு வந்து இறக்குமதியாகும் தேங்காய்; coconuts brought by boats over the sea, sea-coconuts.

ம. கடல்த்தேங்கா

*[கடல் + தேங்காய்.]*

**கடற்றொழில்** *kaḍaṟṟoḻil,* பெ.(n.) மீன்பிடிதொழில்; sea fishing.

*[கடல் + தொழில்.]*

**கடறு** *kaḍaṟu,* பெ.(n.) 1. காடு; forest, jungle. *"கானவர் கடறுகூட் டுண்ணும்" (பெரும்பாண்.116).* 2. அருநெறி (பிங்.); hard or difficult path. 3. பாலை நிலம்; desert tract. *"இன்னாக் கடறிதிப் போழ்தே கடந்து" (திருக்கோ.217).* 4. மலைச்சாரல்; mountains slope. *"கடறுமணி கிளர" (புறநா.202:3).*

*[கடு → கடம் → கடன் → கடறு. கடு = கடுமை, துன்பம்.]*

**கடன்** *kaḍaṉ,* பெ.(n.) 1. கடமை; duty, obligation. *"நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே" (புறநா.312:4).* 2. கடனாகப் பெற்ற பணம்; loan amount. *"இன்னா கடனுடையார் காணப் புகல்" (இன்.நாற்.12).* 3. இரவற் பொருள்; borrowed article. 4. இயல்பு; nature, natural attribute. *"கடனென்ப நல்லவை யெல்லாம்" (குறள், 981.).* 5. முறைமை; order, manner, plan, system. *"எழுத்துக்கடனிலவே" (தொல். எழுத்து.142).* 6. மரபுவழிச் செயல்கள்; observance like the daily ablutions and other devotional exercises enjoined by religion. *"அந்தி அந்தணர் அருங்கட னிறுக்கும்" (புறநா.2:22).* 7. விருந்தோம்பல்; hospitality. *"அருங்கடன் முறையினாற்றி" (கம்பரா.பால.மிதி.93).* 8. அளவை (திவா.); measure, definite, quantity. 9. மரக்கால் (தைலவ.); a dry measure. 10. குடியிறை (திவா.); tribute, tax. 11. காரணியம்; cause. *"உணர்வியா னல்லவான கடனிய தென்னின்" (சி.சி.4,27).* 12. மானம்; honour. *"கரப்பிலா நெஞ்சிற் கடனறிவார்" (குறள்,1053).*

மறுவ. கைமாற்று, பற்று.

ம. கடம்; க.,து. கட; பட. கடனு; Malay. hutan.

*[கட = இயங்கு, செல், செய், ஒழுங்குறுத்து. கட → கடன் = செய்யத்தக்கது, செலுத்தத்தக்கது.]*

கடமைப் பொருளிலிருந்து முறைமை, இயல்பு, மரபுவழிச் செயல்கள், விருந்தோம்பல், காரணம், மானம், அளவை, மரக்கால் பொருள்களும், பின்னர் வரிசெலுத்துதலும், குடிமக்கள் கடமையாதலின் குடியிறைப்பொருளிலும், வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுத்தல் கடமையாதலின் கடன் வாங்குதல் பொருளிலும் இச் சொல் வழங்கலாயிற்று. "கடன் வாங்கிச் செலவு செய்தவனும் மரம் ஏறிக் கைவிட்டவனும் சரி"

'கடன் இல்லாத கஞ்சி கால்வயிறு', 'கடன் பட்டார் நெஞ்சம் போல் கலங்குகிறது', 'கடனோடு கடன் கந்தகப் பொடி காற்பணம்', 'போகாமல் கெட்டது உறவு; கேட்காமல் கெட்டது கடன்', 'சிறியோர் செய்த பிழையைப் பெரியோர் பொறுப்பது கடன்' என்னும் பழமொழிகளை நோக்குக.

**கடன் உடன்** *kaḍaṉ-uḍaṉ,* பெ.(n.) கடன் முதலிய வற்றைக் குறிக்கும் இணைச்சொல்; word pair signifying loan etc. **கடனோ உடனோ வாங்கித் திருமணத்தைச் செய்தான் (உ.வ.). கடன் உடன் பட்டுக் கடமையைச் செய்தல் நன்று (உ.வ.). கடனோ உடனோ வாங்கிக் கட்டடம் கட்டினான் (உ.வ.).**

*[கடன் + உடன். எதுகை நோக்கி வந்த மரபிணைமொழி.]*

**கடன்கட்டாப்பேசு-தல்** *kaḍaṉ-kaṭṭā-p-pēšu,* 7 செ.கு.வி.(v.i.) கடுமையாகப் பேசுதல் (வின்.); to speak rudely of uncivilly.

*[கடன் + கட்டு + ஆய் + பேசு.]*

**கடன்கட்டு** *kaḍaṉ-kaṭṭu,* பெ.(n.) 1. கடனாகக் கொடுக்கை; credit in account. கடன்கட்டு வணிகம் அந்தக் கடையில் இல்லை (உ.வ.). 2. மனம் நிறைவில்லாத செய்கை (வின்); doing a thing for the sake of formality but not heartily.

*[கடன் + கட்டு.]*

**கடன்கழி-த்தல்** *kaḍaṉ-kaḻi-,* 4 செ.கு.வி(v.i.) 1. கடமையைச் செய்தல்; to perform a duty, as repaying a kindness. "செஞ்சோற்றுக் கடன் கழித்தேன்" (பாரத. பதினேழாம்.248) 2. சமயச் செய்கைக்குரிய செயல்களைச் செய்தல்; to perform the rites enjoined by religion. 3. மனமின்றிச் செய்தல் (வின்.); to do a service for another out of mere compliment and not heartily.

*[கடன் + கழி.]*

**கடன்காரன்[1]** *kaḍaṉ-kāraṉ,* பெ.(n.) 1. கடன் பட்டவன்; debtor. அவன் வெகுநாளைக் கடன்காரன். 2. கடன் கொடுத்தவன்; payee. *"வழியிலே கடன்காரர் மறித்துக் கொள்ள" (தனிப்பா.i 275:17).*

ம. கடக்காரன்; பட. கடனுகாரு.

*[கடன் + காரன்.]*

**கடன்காரன்[2]** *kaḍaṉ-kāraṉ,* பெ.(n.) 1. முதிராச் சாவடைந்தவன்; man or boy who attain a premature death. 2. பெற்றோர் இருக்கத் திடீரென இறந்தவன் (இ.வ.): he who dies a premature death leaving his parents to survive him.

*[கடன் + காரன்]*

பிறப்பே முன்வினைக் கடனாகக் கருதப் பட்டதனால் முதிராக்கால இறப்பு (அகால மரணம்) கடனை அடைப்பதற்கு முன் சென்றதாகிறது. அதனாற்றான் கடன் காரனென அழைக்க இடமளிக்கிறது.

**கடன்காரன்[3]** *kaḍaṉ-kāraṉ,* பெ.(n.) மேற்பார்வை யிருந்தால் மட்டும் ஊழியஞ் செய்பவன் (யாழ்.அக.); eye-servant.

*[கடன் + காரன்.]*

**கடன்காரி** *kaḍaṉ-kāri,* பெ.(n.) 1. முதிராச் சாவடைந்தவள்; woman or girl who died a premature death. 2. தண்டச் செலவுக்குக் காரணமானவள்; woman who causes useless expenditure.

*[கடன் + காரி.]*

**கடன்கேள்(ட்)-த(ட)ல்** *kaḍaṉ-kēḷ-,* 11 செ.குன்றாவி. (v.t.) 1. கடன் கொடுக்கும்படி கேட்டல்; to ask for a loan. 2. கொடுத்த கடனைக் கேட்டல்; to demand the return of a loan.

*[கடன் + கேள்.]*

**கடன்கொடு-த்தல்** *kaḍaṉ-koḍu-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. பின்னர்த் திருப்பித்தரவேண்டும் என்ற கட்டளையின் பேரில் பணம் கொடுத்தல்; to lend some money and other things. 2. ஒரு மொழியின் வழக்காறுகள் பிறமொழிக்குச் செல்லுதல்; usages of one language supplied to another language.

து. கடகொர்பினி; க. கடங்கொடு.

*[கடன் + கொடு.]*

**கடன்கொள்(ளு)-தல்** *kaḍaṉ-koḷ(ḷu)-,* 7 செ.குன்றாவி. (v.t.) கடன்பெறுதல்; to get loan, borrow. அடுத்தடுத்து வழங்கும் மொழிகள் தம்முள் ஒன்றினொன்று கடன் கொள்ளும் (உ.வ.).

து. கடதெப்புனி; க. கடகொள்.

*[கடன் + கொள்.]*

**கடன்கோடல்** *kaḍaṉ-kōḍal,* பெ.(n.) பணத்தைக் கடனாகக் கொள்ளும் வழிவகை (குறள், உரைப்பாயிரம்); borrowing money, one of 18 vivakārapatam.

*[கடன் + கோடல்.]*

**கடன்சீட்டு** *kaḍaṉ-cīṭṭu,* பெ.(n.) கடன் வாங்கியதற்கான ஆவணம்; bond of debt.

ம. கடமுறி.

*[கடன் + சீட்டு.]*

**கடன்செய்-தல்** *kaḍaṉ-sey-,* 4 செ.குன்றாவி.(v.t.) இறந்தோர்க்கு நூல்களில் சொல்லியவண்ணம் செயல்களை (சடங்கு)ச் செய்தல்; to perform obsequies as per śāsthra.

*[கடன் + செய்]*

**கடன்தணிப்பு** *kaḍaṉ-taṇippu,* பெ.(n.) கடனைத் தள்ளுபடி செய்தல்; right off a debt.

*[கடன் + தணிப்பு.]*

**கடன்திருநாள்** *kaḍaṉ-tiru-nāḷ*, பெ.(n.) நேர்த்திக்கடன் நிறைவேற்றுதற்குரிய திருவிழா (வின்.); day of religions observances.

ம. கடநாள்

*[கடன் + திருநாள். கடன் = நேர்த்திக்கடன்.]*

**கடன்திருப்பு-தல்** *kaḍaṉ-tiruppu-*, 5 செ.குன்றாவி. (v.t.) வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுத்தல்; to pay back the loan completely.

*[கடன் + திருப்பு.]*

**கடன்பட்டவன்** *kaḍaṉ-paṭṭavaṉ*, பெ.(n.) 1. கடமை ஆற்றுதற்கு உரியவன்; one who is under obligation. 2. கடனாளி; a debtor.

ம. கடவியன், கடப்பெட்டவன்.

*[கடன் + பட்டவன்.]*

**கடன்பட்டார்** *kaḍaṉ-paṭṭār*, பெ.(n.) **கடன்பட்டவன்** பார்க்க; see *kaḍaṉ-paṭṭavaṉ*. *'கடன்பட்டார் நெஞ்சம்போல் கலங்கினான்' (பழ.).*

ம. கப்புக்காரன்

*[கடன் + பட்டார்.]*

**கடன்படு-தல்** *kaḍaṉ-paḍu-*, 20 செ.கு.வி.(v.i.) 1. கடனுக்குள்ளாதல்; to become indebted. *"தாளாள னென்பான் கடன்படா வாழ்பவன்" (திரிகடு.12).* 2. செய்த உதவிக்குக் கைம்மாறு செய்யும் உணர்வில் இருத்தல்; to feel a debt of gratitude to some one.

ம. கடப்பெருக; து. கடதெப்புனி.

*[கடன் + படு.]*

**கடன்பத்திரம்** *kaḍaṉ-pattiram*, பெ.(n.) **கடன்சீட்டு** பார்க்க; see *kaḍaṉ-cīṭṭu*.

மறுவ. கடன் ஓலை, கடன்சீட்டு.

ம. கடப்பத்ரம்

*[கடன் + பத்திரம். வ. பத்ர > த. பத்திரம்.]*

**கடன்பற்று[1]-தல்** *kaḍaṉ-paṟṟu-*, 5 செ.கு.வி.(v.i.) கொடுத்த கடனை வாங்கிக் கொள்ளுதல்; to recover a debt.

*[கடன் + பற்று. பற்றல் = கைக்கொளல், பெற்றுக்கொளல்.]*

**கடன்பற்று[2]** *kaḍaṉ-paṟṟu*, பெ.(n.) கடனாகப் பெற்ற பொருள்; anything received as a loan.

*[கடன் + பற்று. பற்றல் = பெறல்.]*

**கடன்பெறு-தல்** *kaḍaṉ-peṟu-*, 5 செ.குன்றாவி.(v.t.) கடன்வாங்கு-தல் பார்க்க; see *kaḍaṉ-vāṅgu-*.

க. கடம்படெ

*[கடன் + பெறு.]*

**கடன்மரம்** *kaḍaṉ-maram*, பெ.(n.) மரக்கலம்; wooden sailing craft. *"கடன்மரங் கவிழ்ந்தெனக் கலங்கி" (நற்.30).*

*[கடல் + மரம்.]*

**கடன்மல்லை** *kaḍaṉ-mallai*, பெ.(n.) **கடல்மல்லை** பார்க்க; see *kaḍal-mallai*. *"கள்வா கடன்மல்லைக் கிடந்த கரும்பே" (திவ்.பெரியதி.7.1:4).*

*[கடல் + மல்லை.]*

**கடன்மலைநாடு** *kaḍaṉ-malai-nāḍu*, பெ.(n.) சேரநாட்டில் குட (மேற்குத் தொடர்ச்சி) மலைக்கு மேற்கிலிருந்த நாடு; region on the werstern side of western ghats of Kerala state.

*[கடல் + மலை + நாடு. கடலுக்கும் மலைக்கும் இடைப்பட்ட நாடு.]*

கடன்மலை நாட்டின் வடபாகம் குட்டம், குடம், துளுவம், கொங்கணம் என்னும் பல பகுதிகளைக் கொண்டிருந்தது (பழ.த.ப.4).

**கடன்மீட்டு-தல்** *kaḍaṉ-mīṭṭu-*, 5 செ.குன்றாவி.(v.t.) கடனைத் திரும்பப் பெறுதல்; to get back the debt. "பண்டாரத்தில் கடன்வகையில் நூற்றன்பது கோட்டை நெல்லுக்கடன் மீட்டிக் கொண்டு" (திருவாங். Vol.6. Part II insc.123. S.No.26).

*[கடன் + மீட்டு. மீள் (த.வி) → மீட்டு (பி.வி).]*

**கடன்முரசோன்** *kaḍaṉ-muraśōṉ*, பெ.(n.) கடலை முரசாகக் கொண்டவன், காமன் (பிங்.); Kāmaṉ who is reputed to use the sea as his drum.

*[கடல் + முரசோன்.]*

**கடன்முள்ளி** *kaḍaṉ-muḷḷi*, பெ.(n.) **கடல்முள்ளி** (புறநா.24,உ.வே.சா.உரை) பார்க்க; see *kaḍal-muḷḷi*.

*[கடல் + முள்ளி.]*

**கடன்முறி** *kaḍaṉ-muṟi,* பெ.(n.) **கடன்சீட்டு** பார்க்க; see *kaḍaṉ- ciṭṭu.*

ம. கடமுறி

*[கடன் + முறி.]*

**கடன்முறை** *kaḍaṉ-muṟai,* பெ.(n.) பெரியோருக்குச் செய்யும் தொண்டு; duty of showing courtesy to elders. *"கடன்முறைகள் யாவு மீந்து" (கம்பரா.பால. திருவ.62).*

*[கடன் + முறை. கடன் = கடமை. முறை = செய்முறை.]*

**கடன்முறைகழி-த்தல்** *kaḍaṉmuṟai-kaḻi-,* 4 செ.கு.வி.(v.i.) பெரியோருக்குத்தொண்டு செய்தல்; to serve elders.

*[கடன் + முறை + கழி.]*

**கடன்மூர்த்தி** *kaḍaṉ-mūrtti,* பெ.(n.) அருகன்; Arhat.

*[கடன் + மூர்த்தி.]*

**கடன்மை** *kaḍaṉmai,* பெ.(n.) 1. தன்மை; condition, circumstance. *"களவிய லரக்கன் பின்னே - தோன்றிய கடன்மை தீர" (கம்பரா.யுத்த.விபீட.145).* 2. முறை; rotation.

*[கடன் + மை.]*

**கடன்வாங்கிக்கழி-த்தல்** *kaḍaṉ-vāṅgi-k-kaḻi-,* 4 செ.குன்றாவி.(v.t.) கழித்தலில் கழிக்கப்படும் எண் கழிக்கும் எண்ணைக் காட்டிலும் பெரியதாக இருக்கும் பொழுது அதற்கு அடுத்த இடமதிப்பி லிருந்து ஓர் எண்ணைக் கடன் வாங்குதல்; to deduct by borrowing method.

*[கடன் + வாங்கி + கழி.]*

**கடன்வாங்கு-தல்** *kaḍaṉ-vāṅgu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. பிறரிடமிருந்து வட்டிக்குப் பணம் பெறுதல்; to borrow money, contract a debt. *'கடன்வாங்கிக் கடன்கொடுத்தவனும் செத்தான், மரமேறிக் கைவிட்டவனும் செத்தான்' (பழ.).* 2. ஒரு மொழியினின்று இன்னொரு மொழி சொல்லையும் இலக்கணக் கூறுகளையும் கடன் வாங்குதல்; to borrow words and other grammatical elements from other languages. 3. கணிதத்தில் ஓர் இட மதிப்பிலிருந்து ஓர் எண்ணைக் கடன் வாங்குதல்; to borrow from next decimal number, in deduction.

*[கடன் + வாங்கு.]*

**கடனடை-த்தல்** *kaḍaṉ-aḍai-,* 4 செ.குன்றாவி.(v.t.) வாங்கின கடனைத் திருப்பித் தருதல்; to discharge, pay off a debt.

*[கடன் + அடை.]*

**கடனண்டு** *kaḍaṉaṇḍu,* பெ.(n.) கடலில் வாழும் நண்டுவகை (பதார்த்த.944); sea crab.

*[கடல் + நண்டு.]*

**கடனம்**[1] *kaḍaṉam,* பெ.(n.) தாழ்வாரம் (யாழ்.அக.); verandah.

*[கட + அனம் - கடனம் = கடந்து செல்லும் இடைகழி அல்லது தாழ்வாரப் பகுதி. அனம் - சொல்லாக்க ஈறு.]*

**கடனம்**[2] *kaḍaṉam,* பெ.(n.) முயற்சி (யாழ்.அக.); effort.

*[கடலுதல் = செல்லுதல், அகலுதல், விரிவுபடுத்துதல், முன்னேற்றுதல், முயலுதல். கடலு → கடலம் → கடனம்.]*

**கடனவயல்** *kaḍaṉa-vayal,* பெ.(n.) திருவாரூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Thiruvarur district.

*[கடலன் + வயல் - கடலன்வயல் → கடலவயல் → கடனவயல். கடலன் = கடல் வாணிகன்.]*

**கடனாக்கு** *kaḍaṉākku,* பெ.(n.) 1. பவளத்திட்டு; coral rock. 2. சிவப்புச் சோற்றுக்கற்றாழை; curacoa aloes.

*[கடல் + நாக்கு - கடனாக்கு. முதலில் பவளப் பாறையையும், நிறஒப்புமையால் சிவப்புச் சோற்றுக் கற்றாழையையும் குறித்தது.]*

**கடனாக்குமீன்** *kaḍaṉākku-mīṉ.* பெ.(n.) 16 விரலம் வளர்வதும் கரும்பழுப்பு நிறமுடையதுமான எருமை நாக்கு வடிவிலமைந்த கடல் மீன்; flat fish, brownish or purplish black, attaining at least 16 inch in length.

ம. கடநாக்கு

*[கடல் + நாக்கு + மீன்.]*

**கடனாதாயம்** *kaḍaṉādāyam,* பெ.(n.) ஊர் வேலைக்காரருக்கும், அறப்பணிக்கும் கொடுப்பதற் காக நிலக்கிழார் குத்தகைப் பணத்தோடு வாங்கும் தொகை (R.T.); income received by the landholder as part of rent, to be disbursed later to the village servants and to charities.

[கடன் + ஆதாயம் (வருவாய்).]

**கடனாய்** *kaḍaṉāy,* பெ.(n.) நீர்நாய் (வின்.); sea otter.

மறுவ. மீனாய் (மீன்நாய்)

[கடல் + நாய்.]

**கடனாளி** *kaḍaṉ-āḷi,* பெ.(n.) 1. கடன்பெற்றவன்; debtor. 2. நன்றிக்கடன் பட்டவன்; one who is under an obligation to do a thing.

[கடன் + ஆளி.]

**கடனிவாரணம்** *kaḍaṉivāraṇam,* பெ.(n.) **கடன் தணிப்பு** பார்க்க (வின்.); see *kaḍaṉ- taṇippu.*

[கடன் + நிவாரணம்.]

**கடனிறவண்ணன்** *kaḍaṉiṟa-vaṇṇaṉ,* பெ.(n.) **கடல்வண்ணன்** பார்க்க; see *kaḍal-vaṇṇaṉ.*

[கடல் + நிறம் + வண்ணன்.]

**கடனிறு-த்தல்** *kaḍaṉ-iṟu-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. கடனைத் திருப்பிக் கொடுத்தல்; to clear off a debt. 2. கடமை செய்தல்; to discharge an obligation, perform a duty. *"தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும்"* (புறநா.9).

[கடன் + இறு.]

**கடனுதவுபேர்** *kaḍaṉ-udavu-pēr,* பெ.(n.) கடன் கொடுத்தவர் (குமரேச.சத.23); one who provides debt.

[கடன் + உதவு + பேர்.]

**கடனுரை** *kaḍaṉurai,* பெ.(n.) 1. ஒருவகைக் கடல்மீன் ஓடு (மூ.அ.); cuttle fish bone, shell of sepia. 2. ஒருவகைப் பணிகாரம் (வின்.); a kind of pastry.

ம. கடநாக்கு

[கடல் + நுரை.]

**கடனெடு-த்தல்** *kaḍaṉ-eḍu-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. கடன் வாங்குதல்; to borrow. 2. பழி கூறுதல்; to slandar.

[கடன் + எடு.]

**கடனை** *kaḍaṉai,* பெ.(n.) இறுகிய சவ்வு; hardening of tissue in the body, sclerois.

[கடு → கடுனை → கடனை. கடு = கடுமை, இறுக்கம்.]

**கடா[1]-தல்** *kaḍā-,* 5 செ.குன்றாவி.(v.t.) வினாதல்; to inquire, question. *"ஈங்குளவோ வென்னக் கடாதலும்"* (காஞ்சிப்பு. திருநகர.58).

[கட → கடவு → கடாவு → கடா = செலுத்தல், வினாவைச் செலுத்துதல், வினாதல்.]

**கடா[2]** *kaḍā,* பெ.(n.) வினா; interogation, question. *"கடாவிடை"* (ஞான.63:10).

[கடாவு → கடா.]

**கடா[3]** *kaḍā,* பெ.(n.) 1. வெள்ளாடு, செம்மறியாடு இவற்றின் ஆண் (பிங்.); male of sheep or goat. 2. ஆட்டின் பொது (திவா.); sheep. 3. ஆண் விலங்கு; male animal. *'உள்ளூர் மருகனும் உழுகிற கடாவும் சரி'* (பழ.). 4. ஆண் எருமை; he - buffalo *"பட்டிக்கடா வில்வரு மந்தகா"* (கந்தரல.64).

மறுவ. கடாய், கடவி, கடமா.

ம. கடா, கிடா, கிடாவு; **க.** கடசு (ஈனாப்பெற்றம்); **கோத.** கடச்; **துட.** கர் (கன்றுகளின் தொழுவம்); **குட.** குடிசு; **தெ.** கிரேபு (கன்று); **கோண்.** காரா (இளம் எருமை); **கொண்.** க்ராலு (கன்று); **கூ.** க்ராடு, ட்ராடு, காரொ, (எருமை); **குவி.** டாலு, தாலு. (கன்று); **குரு.** கரா (இளம் ஆண்எருமை); **கூரி.** (இளம் பெண்எருமை); **பிரா.** கராச் (எருது); **கை.** கடெ; **பட.** கடசு; (ஈனாப்பெற்றம்) **Skt.** kataha (a young female buffalo whose horns are just appearing, goat).

**Ar.** gidye; **Du.** geit; **Swed.** get; **Dan.** ged; **Norw.** geit; **Cz.,Pol.** Koza; **Ser.Croa.** Koza; **Hung.** kecske; **Turk.** keci; **Russ.** Kaza; **Gk.** katsi-ka; **Yid.** koze; **E.** goat.

[குள் → கள் → கடு → கடா = வலிமை மிக்க ஆண் விலங்கு. கடு = திண்மை, வலிமை. (மு.தா.241)]

**கடா[4]** *kaḍā,* பெ.(n.) 1. சருக்கரை காய்ச்சும் ஏனம்; shallow iron boiler for boiling sugar. 2. பருமை; largeness. *"கடாஅ உருவொடு"* (குறள்,585).

[கடு = மிகுதி, பருமை. கடு → கடா = பெரிய வட்டமான ஏனம். ஒ.நோ. கடாநாரத்தை = பெருநாரத்தை.]

**கடா**[5] *kaḍā*, பெ.(n.) மதநீர் பெருகுவதால் உண்டாகும் வெறியுணர்வு; rage due to excess must. *"கடாஅ யானைக் கலிமான்" (புறநா.141).*

*[கடாம் → கடா.]*

**கடா**[6] *kaḍā*, பெ.எ.(adj.) பெரிய; big, large.

*[குரு = பருமை. குரு → குரை = பருமை. குரு → கரு → கருமை = பருமை. குள் → கள் → கடு → கடா = பருமையானது. (எ.டு.) கடாநாரத்தை = பெரியநாரத்தை (மு.தா.214, 215).]*

**கடாக்கண்** *kaḍā-k-kaṇ*, பெ.(n.) பெரிய கண்; big eye. *'செத்தவன் கண் கடாக்கண் இருந்தவன் கண் இல்லிக்கண்' (பழ.).*

*[கடா[6] + கண்.]*

**கடாக்களிறு** *kaḍā-k-kaḷiṟu*, பெ.(n.) மதயானை; must elephant. *"கடாஅக் களிற்றின்மேற் கட்படாம்" (குறள்,1087).*

*[கடம் → கடாம் → கடா + களிறு. கடம் = மதநீர்.]*

**கடாக்கன்று** *kaḍā-k-kaṉṟu*, பெ.(n.) ஆண் எருமைக்கன்று (வின்.); young he-buffalo.

குருக். கட்

*[கடு → கடா + கன்று.]*

**கடாக்குட்டி** *kaḍā-k-kuṭṭi*, பெ.(n.) ஆட்டுக்குட்டி (வின்.); lamb or kid.

*[கடா[3] + குட்டி.]*

**கடாகம்** *kaḍāgam*, பெ.(n.)1.பெருவெளிக்கோளகை (பிங்.); sphere, globe. 2. வட்டமான கொப்பரை (சூடா.); brass boiler with rings for handles.

*[கடு → கடகம் → கடாகம். கடகம் = பெரியது, வட்டமானது, வட்டமான கொப்பரை, பெருவெளிக் கோளகை.]*

த. கடாகம் > Skt. kadaha. (வ.மொ.வ.103)

**கடாகு** *kaḍāgu*, பெ.(n.) பறவை; bird.

*[கடாவு = கடந்து செல்லுதல். கடாவு → கடாகு.]*

**கடாசு-தல்** *kaḍāśu-*, 5 செ.குன்றாவி.(v.t.) 1. ஆணி, ஆப்பு முதலியன அடித்தல்; to drive, as a wedge, a nail. 2. எறிதல்; to throw, fling.

*[கடவு → கடாவு → கடாசு.]*

**கடாட்சம்** *kaḍāṭcam*, பெ.(n.) **கடைக்கண்** பார்க்க; see *kaḍai-k-kaṇ*.

*[கடை + அட்சம் - கடாட்சம். வ. அக்ஷ > த. அட்சம்.]*

**கடாத்தன்மை** *kaḍā-t-taṉmai*, பெ.(n.) 1. சுறுசுறுப் பின்மை; indolence, laziness, sloth. 2. திருத்தமின்மை (வின்.); unmannerliness, clownishness. 3. கீழ்ப்படி யாமை (வின்.); stubbornness, disobedience. கடாத்தனமாகச் சுற்றாதே (உ.வ.).

*[கடா + தன்மை. கடா = விலங்கினுள் ஆண், எருமைக் கடா.]*

**கடாம்**[1] *kaḍām*, பெ.(n.) 1. யானையின் மதம்படு துளை (கலித்.63:3 உரை); orifice in an elephant's temple, from which must flows. 2. யானை மதநீர்; secretion of a must elephant. *"கமழ்கடாஅத்து யானை" (புறநா.3:8).*

*[கடு → கடம் → கடாம். கடாம்[1] = மிகுதியாகப் பெருகும் மதநீர்.]*

**கடாம்**[2] *kaḍām*, பெ.(n.) **மலைபடுகடாம்** பார்க்க; see *malai-paḍu-kaḍām*. *"முருகு. . . கடாத்தொடும் பத்து" (பத்துப்பாட்டு,முகவுரை,ப.5).*

*[மலைபடுகடாம் → கடாம். மலைபடுகடாம் நூலின் சுருக்கப்பெயர்.]*

**கடாம்பெய்-தல்** *kaḍām-pey-*, 1 செ.கு.வி.(v.i.) மதஞ் சொரிதல்; to exude secretion, said of a must elephant. *"நாகங் கடாம்பெய்து" (சீவக. 981.)*

*[கடாம் + பெய்.]*

**கடாமுடா** *kaḍā-muḍā*, பெ.(n.) ஒலிக்குறிப்பு, பெருத்த ஒலி; with a rumbling or rubbing noise. பூனை பானைகளைக் கடாமுடா என உருட்டிற்று.

க. கடாவணே

*[கடா[6] + முடா.]*

**கடாய்** *kaḍāy*, பெ.(n.) 1. பொரிக்குஞ் சட்டி (இ.வ.); frying pan; a large round boiler of copper, bell-metal or iron. 2. கொப்பரை (P.T.L.); a kind of vessel.

**மறுவ.** வாணலி, சீனிச்சட்டி, இருப்புச்சட்டி, எண்ணெய்ச்சட்டி, பொரிக்குஞ்சட்டி.

**க.** கடாயி, கடாய; **குட.** கடாய; **பர்.** கடா (பானை); **து.** கடாயி.

H. kadhai, kadahi, kaḍhaiyā; Mar. kaḍhai; Pkt. kadāha; Skt. katāha.

[கடா[4] → கடாய்.]

**கடாய்க்கன்று** *kaḍāy-k-kaṉṟu,* பெ.(n.) காளைக்கன்று; (யாப்.வி.3); bull-calf.

[கடா + இ - கடாய் + கன்று - கடாக்கன்று. கடா என்னும் சொல் கடாத்தன்மையுள்ளது என்னும் பொருளைத் தருதற்காக ஒன்றன்பால் இகர ஈறு பெற்றுக் கடா + இ - கடாய் எனத் திரிந்தது. ஒ.நோ. நாஇ → நாய்.]

**கடாய்க்கோல்** *kaḍāy-k-kōl,* பெ.(n.) கட்டுமரம், தோணி ஆகியவற்றின் பின் பகுதியிலிருந்து குத்திக் கலத்தை முன்னோக்கிச் செலுத்தும் கோல்; an oar like stick used to push farward catamaran and boat (க.ப.அக.).

[கடவு → கடாவு → கடாய் + கோல்.]

**கடாயம்[1]** *kaḍāyam,* பெ.(n.) கருக்கு நீர் (தைலவ.); decoction.

மறுவ. கசாயம்.

[கடு + ஆயம். கடுமையான (காரப்பு) பொருள்களால் ஆகியது. த. கடாயம் > Skt. kaṣaya. ஒ.நோ. கட்டம் > Skt. kaṣṭa. வேட்டி > Skt. vēṣṭi.]

**கடாயம்[2]** *kaḍāyam,* பெ.(n.) துவர்ப்பு (நாமதீப.); astringency.

[கடு = விரைப்பு, துவர்ப்பு. கடு → கடாயம்.]

**கடாரங்காய்** *kaḍāra-ṅ-kāy,* பெ.(n.) *கடாரநாரத்தை* பார்க்க; see *kaḍāra -nārattai.*

[கடாரம் + காய். கடாரம் = வடமலேயா.]

**கடாரங்கொண்டான்** *kaḍāraṅkoṇḍāṉ,* பெ.(n.) 1. முதலாம் இராசேந்திர சோழனின் சிறப்புப் பெயர்களிலொன்று; one of the titles of king Rajendra-I. 2. கங்கை கொண்ட சோழபுரத்திற்கு அருகிலுள்ள ஓர் ஊர்ப்பெயர்; name of a village near *Gaṅgaikoṇḍa Coḻapuram.*

[கடாரம் + கொண்டான். மலேய நாட்டின் கடாரப் பகுதியை வெற்றி கொண்டதால் பெற்ற சிறப்புப் பெயர். இச் சிறப்புப் பெயரே இராசேந்திர சோழனின் நினைவைப் போற்றும் ஊர்ப்பெயருமாயிற்று.]

**கடாரநாரத்தை** *kaḍāra-nārattai,* பெ.(n.) நாரத்தை வகை (மலை.); seville orange.

மறுவ. கடாநாரத்தை

[கடாரம் + நாரத்தை. கடார (வடமலேயா)த்திலிருந்து கொண்டு வரப்பட்ட நாரத்தை.]

**கடாரம்[1]** *kaḍāram,* பெ.(n.) கொப்பரை (பிங்.); brass or copper boiler, cauldron.

ம. கடாரம்; க. கடார; பர். கடா; Skt. katana.

[கடு → கடா → கடாரம்.]

**கடாரம்[2]** *kaḍāram,* பெ.(n.) வடமலேயா; North Malay. *'தொடுகடற் காவற் கடுமுரட் கடாரமும்'* (S.I.I.ii, 107).

[கடு → கடா → கடாரம். பரப்பில் பெரிய வடமலேசியப் பகுதியின் பெயர்.]

கடாரம், சாவகம், சீனம் என்பவை முற்காலக் கொடுந்தமிழ் நாடுகளைச் சேர்ந்தவையல்ல. தமிழொழிந்த பதினேழ் நிலங்களில் பல முற்காலக் கொடுந்தமிழ் நாடுகளாயிருந்தமையின், கொடுந்தமிழ் நாடல்லாத பிறவற்றையுஞ் சேர்த்துக் கூறிவிட்டார் பவணந்தியார் (பாவாணர்,திராவிடத்தாய்,முன்.ப.14) தற்காலத்தில் கடாரம் என்பது வடமலேசியாவில் 'கெடா' மாநிலத்தில் உள்ளது. தமிழரின் கடல் வணிகத்திற்கும் கடல் ஆதிக்கத்திற்கும் சான்று பகர்வனவாகப் பல இடிபாடுகளும் சிதைவுகளும் உள்ளன. உலகில் கடற்படை கொண்டு வெகுதொலைவு படையெடுத்து வென்ற இராசராச சோழனின் திறனையும், இராசேந்திர சோழனின் வெற்றியையும் வெகுவாகப் பாராட்டுகிறார் முன்னாள் தலைமை அமைச்சர் பண்டித சவகர்லால் நேரு. இராசேந்திர சோழனை இந்திய நெப்போலியன் என்பர்.

**கடாரி** *kaḍāri,* பெ.(n.) 1. ஈனாத இளம்பெற்றம் (பசு); heifer, young cow that has not calved. 2. பெண்எருமை, நாகு; she-buffalo.

க.,து., பட. கடசு; குட. கடிசி; கூ. க்ரை.

[கடு → கடா → கடாரி = பருத்து வளர்ந்தது. ஆர் சாரியை, 'இ' ஒன்றன்பாலீறு. இங்கு விலங்கினுள் பெண்பாலை சுட்டியது.]

*Skt. gradi, a young steer, a lazy ox; gali, a strong but lazy bull. It is not impossible that the two terms are connected with D. Kaḍašu, or kaḍi, or gaṭṭi, or gaṇḍā. (K.K.E.D. - XX).*

வடமொழியில் ஆண்பாற் சொல்லாகவே ஆளப்பட்டிருத்தலின் விலங்கினுள் பெண்பாலைச் சுட்டிய செந்தமிழாட்சியினும் வடமொழி மூலம் முற்றிலும் வேறுபட்டது.

**கடாரிக்கன்று** *kaḍāri-k-kaṉṟu*, பெ.(n.) ஆவின் பெண்கன்று; cow-calf.

*[கடாரி + கன்று.]*

**கடாரை** *kaḍārai*, பெ.(n.) ***கடாரநாரத்தை***(மலை) பார்க்க; see *kaḍāra-nārattai*.

*[கடாரம்² → கடாரை.]*

**கடாவடி** *kaḍā-v-aḍi*, பெ.(n.) களத்தில் கடாக்களைவிட்டுப் பிணையடிக்கை (வின்.); treading out grain by buffaloes or bulls.

*[கடா + அடி. கடா = எருது. அடி = அடித்தல்.]*

**கடாவிடு¹-தல்** *kaḍā-viḍu-*, 20 செ.கு.வி.(v.i.) பிணை யடித்தல் (பதிற்றுப்.62:15,உரை); to thresh out grain with buffaloes or bulls after beating the sheaves upon the threshing floor.

*[கடா → விடு.]*

**கடாவிடு²-தல்** *kaḍā-viḍu-*, 20 செ.கு.வி.(v.i.) விலங்குகளைச் சினையாக்குதல்; to impregnate. அதிரான கடாரிக்குக் கடாவிட ஆயத்தம் செய்.

*[கடா → விடு.]*

**கடாவு¹-தல்** *kaḍāvu-*, 5 செ.குன்றாவி.(v.t.) 1. ஏவுதல்; to discharge, as missiles; to propel. *"கடாயின கொண்டொல்கும் வல்லி"* (திவ்.இயற்.திருவிருந்.6). 2. செலுத்துதல்; to ride, as an animal; to dirive, as a car. *"தேர்கடாவி"* (தேவா.839, 3). 3. ஆணி முதலியன அறைதல்; to drive in, as a nail, a peg, a wedge; to nail on; to join by nail as boards. *"கவியாப்பைக் கடாவுவனே"* (*தனிப்பா.171.24*) 4. குட்டுதல்; to buffet, cuff. *"வேதன் பொற் சிரமீது கடாவி"* (*திருப்பு.164*). 5. வினாவுதல் (திவா.); to interrogate, question. 6. தூண்டுதல்; to urge, impel, influence. இயற்கை யன்பினானும்... செயற்கை யன்பினானும் கடாவப்பட்டு (திருக்கோ.11, உரை).

மறுவ. கடாவல்

ம. கடாவுக; க. கடாயிசு; தெ. கடவு; து. கடபாவுனி.

*[கடவு¹ → கடாவு.]*

**கடாவு²** *kaḍāvu*, பெ.(n.) செலுத்துகை; emitting. *"காலை ஞாயிற்றுக் கதிர்கடா வுறுப்ப"* (சிறுபாண்.10).

*[கடவு¹ → கடாவு.]*

**கடாவுவட்டி** *kaḍāvu-vaṭṭi*, பெ.(n.) வட்டிக்கு வட்டி; compound interest.

ம. கடாவு வட்டி

*[கடாவு + வட்டி. கடாவுதல் = அகல்தல், விரிதல், வளர்தல், பெருகுதல்.]*

**கடாவெட்டி** *kaḍā-veṭṭi*, பெ.(n.) 1 புலால் வெட்டுங் கத்தி (வின்.); butcher's knife, cleaver. 2. ஆட்டுக்கடா முதலியன வெட்டுபவன்; butcher, slaughterer.

*[கடா³ + வெட்டி.]*

**கடாவெட்டு** *kaḍā-veṭṭu*, பெ.(n.) சிற்றூர்த் தெய்வங்களுக்கு நேர்த்திக் கடனாக ஆண் விலங்கைக் கொன்று பூசையிடல் (இ.வ.); killing a male animals in front of the village deities is a sacrificial ceremony to mark the fulfilment of a desire.

*[கடா³ + வெட்டு.]*

**கடான்** *kaḍāṉ*, பெ.(n.) ***கடா*** பார்க்க; see *kaḍā*.

*[கடா → கடான்.]*

**கடி¹-த்தல்** *kaḍi-*, 4 செ.குன்றாவி.(v.t.) 1. பல்லாற் கடித்தல்; to bite with teeth. *"கடித்த வாயிலே"* (*திருவாச.41:37*). 2. பற்களை இடுக்கி நெரித்தல்; to clench teeth. பல்லைக் கடித்துக் கொண்டு கையை ஓங்கினான். 3. உண்பதற்காகக் கடித்தல், கறித்தல்; to bite off, as a piece of bread. *'கடித்தவாய் துடைத்தாற் போல்'* (*பழ.*). 4. மெல்லுதல்; to chew. கடித்துண்ணுதல் உடலுக்கு நல்லது (உ.வ.). 5. பாம்பு முதலியன தீண்டுதல்; to bite, as snake. *'காலைச் சுற்றின பாம்பு கடிக்காமல் விடாது'* (*பழ.*). 6. கொடுக்கால் கொட்டுதல்; to sting, as of scorpion. 7. பூச்சிகடித்தல்; to puncture as of mosquito. கொசுக்கடி தொல்லை தாளவில்லை. 8. சிறுபூச்சி அரித்தல்; to gnaw, gnash. புத்தகத்தைப் பூச்சி கடித்துவிட்டது (உ.வ.). 9. தேனீப் போன்றவை கொட்டுதல்; to smart as of bee. குளவி கடித்தால் தடிக்கும் (உ.வ.). 10. துண்டித்தல்; to cut off. *"கடித்துக் கரும்பினை"* (*நாலடி.156*). 11. வடுப்படுத்துதல்; to pinch, hurt. *"பயமின்றி யீங்குக் கடித்தது நன்றே"* (*கலித்.96:30*). 12. செத்தி எடுத்தல்; to chip as a plank. 13. குழித்தல்; to dig as a well ditch, etc.

ம. கடிக்குக; க. கடி; **தெ.** கரசு, கரன்சு; **து.** கடெபினி, கடெபுனி, கடெவுனி; **கோத.** கயிட், கட்ச்; **துட.** கொட்ய, கொட்ச்; குட. கடி; **கொலா.** கச்ச்; **பர்.** கட்; **கட.** கச்; **கோண்.** கச்கானா, கசானா; **கூ.** கசி, கச; **குவி.** கசலி; **குரு.** கச்னா; **மா.** கக்வே; **பிரா.** கட்ட்; பட. கச்சு.

*[கள் → கடு → கடி. (வ.மொ.வ.103).]*

கடி > **வ.** காத் (khad).

**கடி[2]-த்தல்** *kaḍi,* 4 செ.கு.வி.(v.i.) 1. கமழ்தல்; to waft an aroma; to emit fragrance. *"துழாய்க் கடிக்கும்" (அஷ்டப்.திருவரங்கத்தந்.43).* 2. நிறைவேறுதல்; to be successful. *"கடிக்கும் பணியறமெல்லாம்" (அஷ்டப்.திருவரங்கத்தந்.43).*

*[கடு → கடி.]*

**கடி[3]-த்தல்** *kaḍi-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. கவ்வுதல்; to gorge, to cram in to mouth, to seize with a mouth. 2. இறுகப்பிடித்தல்; to hold. 3. ஒன்றாக இணைத்தல்; to join. 4. விடாது பற்றுதல்; to clutch. 5. வயிறு வலித்தல்; to be painful as of stomach. 6. கயிறு முதலியன இறுகப்பிடித்தல்; to be tight. அரைநாண் இடுப்பிற் கடித்துக் கொண்டிருக்கிறது.

*[கள் → கடு → கடி.]*

**கடி[4]-த்தல்** *kaḍi-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. மிகுதல்; to be excess. 2. காரத்தன்மையாதல்; to be pungent.

*[கடு → கடி.]*

**கடி[5]-த்தல்** *kaḍi-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. பிறர் கேளா வண்ணம் காதோடு சொல்லுதல்; to say something in the ear without being audiable to other. அவன் ஏதோ காதைக் கடிக்கிறான், என்னவென்று பார் (உ.வ.)

*[கடு → கடி.]*

**கடி[6]-தல்** *kaḍi-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. விலக்குதல்; to exclude, discard, reject renounce, disapprove. *"கொடிது கடிந்து கோற்றிருத்தி" (புறநா.17:5).* 2. ஓட்டுதல்; to scare away drive off, as birds. *"கலாஅற் கிளிகடியும்" (நாலடி, 283).* 3. ஒழித்தல்; to get rid off. *"குடிபுறங்காத்தோம்பிக் குற்றங் கடிதல் வடுவன்று வேந்தன் தொழில்" (குறள்,549).* 4. அரிதல்; to cut away. *"தங்கை மூக்கினைக் கடிந்துநின்றான்" (கம்பரா.ஆரண்ய.மாரீச.83).* 5. அழித்தல்; to destroy. *"செற்றவனை யினிக்கடியுந் திற மெவ்வாறு" (பெரியபு. திருநாவுக்.108).*

ம. கடியுக (முள்ளிலிருந்து மூங்கிலை விலக்குதல்); **க.** கடி; **து.** கடி, கட்; **குரு.** கட்நா; **மால்.** கடெ; **தெ.** கடி(கவளம்), கடி கண்டலு(துண்டுகள்).

*[கள் → கடு → கடி.]*

**கடி[7]-தல்** *kaḍi-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. குற்றஞ் செய்தவனைச் சினந்து கண்டித்தல்; to rebuke. *"குற்றங்கண் டெனைநீ கடியவம் போதமுன் கண்ட துண்டோ" (மருதூரந்.56).* 2. அடக்குதல்; to restrain, subdue, as the senses; to overmaster, overpower. *"ஐம்புலன் கடிந்து நின்றே"* (அறிவானந்த சித்தியார் : வின்.).

*[கடு → கடி.]*

**கடி[8]** *kaḍi,* பெ.(n.) 1. புதுமை; newness, modernness. *"கடிமலர்ப் பிண்டி" (சீவக.2739).* 2. நறுமணம்; scent, odour, fragrance. *"கடிசுனைக் கவினிய காந்தள்" (கலித்.45).* 3. திருமணம்; wedding. *"கன்னிக் காவலுங் கடியிற் காவலும்" (மணிமே.18:98).* 4. இன்பம் (பிங்.); delight, gratification, pleasure. 5. பூசை; worship homage. *"வேலன் கடிமரம்" (பரிபா.17:3).*

ம. கடி; Skt. kaḍu.

*[கள் → கடு → கடி.]*

**கடி[9]** *kaḍi,* பெ.(n.) 1. பல்லாற் கடிக்கை; biting. நாய்க்கடிக்கு மருந்து. 2. கடித்த வடு; mark or scar of bite. 3. நச்சுக்கடி; poisoning as the result of bites or stings. 4. ஊறுகாய்; pickle. *"மாங்காய் நறுங்கடி" (கலித்.109).* 5. அரைக்கடி; gall, abrasion, being the result of great tightness or rubbing of apparel. 6. மேகப்படை; ringworm. இடுப்பிற் கடி வந்திருக்கிறது. 7. கடித்து உண்ணக்கூடிய சிறு தின்பண்டம், நொறுவல் (சேரநா.); crisp edibles, snacks.

ம. கடி; **கோத.** கய்ர்; **க.** கடித, கடத, காடு; **குட.** கடி; **தெ.** காடு; **பிரா.** கட; **Mal.** git, **Thai.** kad;

**த.** கடி > **Skt.** khad.

*[கடு → கடி.]*

**கடி**[10] *kaḍi,* பெ.(n.) நீக்கம் (பிங்.); removal, rejection.

*[கடு → கடி.]*

**கடி**[11] *kaḍi,* பெ.(n.) 1. மிகுதி; abundance, copiousness, plantifulness. *"கடிமுர சியம்பக் கொட்டி" (சீவக.440).* 2. விரைவு; speed, swiftness. *"எம்மம்பு கடிவிடுதும்" (புறநா.9:5).* 3. விளக்கம்; brightness; transparency. *"அருங்கடிப் பெருங்காலை" (புறநா.166:24).* 4. தேற்றம் (நேமி. சொல்.58.); certainty assurance. 5. சிறப்பு; beauty, excellence. *"அருங்கடி மாமலை தழிஇ" (மதுரைக். 301).* 6. ஓசை; sound, sonorousness. கடிமுரசு (நன்.457,உரை).

*[கடு → கடி.]*

**கடி**[12] *kaḍi,* பெ.(n.) 1. அச்சம்; fear. *"அருங்கடி வேலன்" (மதுரைக்.611).* 2. வியப்பு (சூடா.); wonder, astonishment. 3. ஐயம் (தொல்.சொல்.384, உரை); doubt. 4. பேய்; devil, evil spirit. *"கடிவழங் காரிடை" (மணிமே.6:49).*

*[கள் → கடு → கடி.]*

**கடி**[13] *kaḍi,* பெ.(n.) காலம் (பிங்.); time.

*[கழிகை → கடிகை → கடி.]*

**கடி**[14] *kaḍi,* பெ.(n.) 1. கூர்மை (திவா.); sharpness, keenness. 2. கரிப்பு; pungency. *'கடிமிளகு தின்ற கல்லா மந்தி' (தொல்.சொல்.384, உரை).*

*[கள் → கடு → கடி.]*

**கடி**[15] *kaḍi,* பெ.(n.) 1. சிறு கொடி (வின்.); small creeper.

*[கொடி → கடி (கொ.வ.).]*

**கடி**[16] *kaḍi,* பெ.(n.) காவல்; protection, safeguard, defence. *"கடியுடை வியனகரவ்வே" (புறநா. 95:3).*

*[கள் → கடு → கடி.]*

**கடி**[17] *kaḍi,* பெ.(n.) 1. கடித்தலால் ஏற்படும் காயம்; wound caused by bite. 2. நொறுக்குத் தீனி; something bitten off, a mouth ful. 3. தோல் நோய்; skin disease.

ம. கடி; **க.** கடித, கடக, காடு; **கோத.** கய்ட், கய்ட்ள்; **துட.** கொட்ய (கீறுவதற்கு விரும்புதல்); **தெ.** காடு; **பிரா.** கட்.

*[கள் → கடு → கடி. கள்ளுதல் = நெருங்குதல், நெருக்குதல், இறுக்குதல், நறுக்குதல்.]*

**கடி**[18] *kaḍi,* பெ.(n.) 1. துண்டு; piece. 2. குறுந்தடி; drumstick. *"கடிப்புடை யதிரும் போர்ப்புறு முரசம்" (பதிற்றுப்.84:1).*

*[கழி → கடி.]*

**கடி**[19] *kaḍi,* பெ.(n.) பெருமை; greatness. 2. பருமை, பெரியது; large, big.

*[கடு → கடி.]*

**கடி**[20] *kaḍi,* பெ.(n.) 1. இடுப்பு; waist. *"கடிக்கீழ் தொடிற் கைகழுவுக" (சைவச.பொது.220).* 2. *நடுப்பகுதி;* middle.

ம. கடி, கடிக.

*[கடை → கடி.]*

முதுகின் முடிவு இடுப்பாதலின் கடை எனப்பெற்றது. இடுப்பின் பின்கீழ்ப்பகுதி மடிமுதுகு எனப்படுவதையும் ஒப்பு நோக்குக.

**கடி**[21] *kaḍi,* பெ.(n.) இரப்போர் கலம்; beggar's bowl. *'கைவளை பலியொடுங் கடியுட் சோர்ந்தவால்' (வின்.).*

**க.** கடி, கடிகை.

*[குடம் → கடம் → கடி. கடி = வட்டமானது.]*

**கடி**[22] *kaḍi,* பெ.(n.) பூந்தோட்டம்; flower garden.

*[கள் → கடு → கடி.]*

**கடிக்குளம்** *kaḍi-k-kuḷam,* பெ.(n.) தஞ்சைமாவட்டத்தில் உள்ள ஊர்; a village in Tanjore district. *"கடிகொள் பூம்பொழில் சூழ் தரு கடிக்குளத்துறையும்" (தேவா.சம்பந்.240-1).*

**மறுவ.** கற்பகனார் கோயில், கற்பகனார் குளம்.

*[கடி + குளம் - கடிகுளம் = மணம்கொண்ட குளம்.]*

**கடிக்கூறு** *kaḍi-k-kūṟu,* பெ.(n.) கழித்தற்குரிய பகுதி; the part to be deducted. *"அதிலே செம்பாதி கடிக்கூறாகப் பாழாய் நித்தையாலே கழியும்" (திவ். திருமாலை, 3.வியா.ப.21).*

*[கடி + கூறு.]*

**கடிக்கை** *kaḍikkai,* பெ.(n.) கருக்குவாய்ச்சி மரம்; jagged jujube.

*[கள் → கடு → கடி → கடிக்கை.]*

**கடிகண்டு** *kaḍi-kaṇḍu,* பெ.(n.) பூனைக்காலிச்செடி (மலை.); cowhage.

*[கடி + கண்டு.]*

**கடிகா**[1] *kaḍi-kā,* பெ.(n.) காவலோடு கூடிய சோலை; gaurded grove. *"கடிகாவிற் பூச்சூடினன்" (புறநா.239:2).*

*[கடி + கா. கடி = காவல்.]*

**கடிகா**[2] *kaḍi-kā,* பெ.(n.) பெரும்பொழில், பரந்த சோலை; a big or vast park of flowery gardens. *"கடிகாவிற் காலொற்ற வொல்கி" (கலித்.92:51).*

*[கடி + கா. கடி = பெரியது, பரந்தது.]*

**கடிகாரச்சங்கிலி** *kaḍi-kāra-c-caṅgili,* பெ.(n.) 1. கைக்கடிகாரத்தில் மாட்டியுள்ள தொடரி (சங்கிலி); watch chain. 2. ஒருவகைக் கழுத்தணி; gold chain, necklace worn by woman in one or more strands, resembling a watch chain.

*[கடிகாரம் + சங்கிலி.]*

**கடிகாரம்** *kaḍigāram,* பெ.(n.) காலங்காட்டும் கருவி, நேரங்காட்டுங்கருவி (Mod.); clock, watch, time piece. *காலங்காட்ட அவனுக்கில்லை கைக்கடிகாரம் (உ.வ.).*

மறுவ. கடியாரம்

**ம.** கடியாள்; **தெ.** கடியாரம்; **க.** களிகெ (kliga); பட கடிகார.

**Mar.** ghadyāl; **U., H.** ghady; **Guj.** ghadiāl; **Ori.** ghari; **W.** cloc.

*[கடிகை + ஆரம் - கடிகையாரம் → கடிகாரம். கடிகை → கழிகை. ஒ.நோ. வட்டு + ஆரம் - வட்டாரம். கொட்டு + ஆரம் - கொட்டாரம். 'ஆரம்' (சொ.ஆ.ஈறு.) (வே.க.158).]*

பழங்காலத்தில் காலம் அறிதற்குப் பயன்படுத்திய கருவி நீர்க்கடிகை எனப்பட்டது. கடிகை = சிறிய மட்பானை, நீர்க்கலம், நாழிகைவட்டில். கடீயந்திர, கடிகா யந்திர என்னும் வடசொற் புணர்ப்பினின்று கடிகாரம் என்னும் தென் சொல் வந்ததன்று (வ.மொ.வ.103).

**கடிகாரவிசிறி** *kaḍigāra-viśiṟi,* பெ.(n.) சேலைவகை; a kind of saree.

*[கடிகாரம் + விசிறி.]*

**கடிகாவன்கள்ளான்** *kaḍikāvan-kaḷḷan,* பெ.(n.) அரிஞ்சய சோழரின் வேளக்காரப் படைவீரன்; a member of the bodyguards of the Arinjaya Chola, with a title Viracōla. *'வீரசோழத் தெரிஞ்ச கைக்கோளரில் கடிகாவன் கள்ளான்' (தெ.இ.கல்.தொ.19.கல்.8).*

*[கடிகாவல் → கடிகாவலன் → கடிகாவன் + கள்ளான். கடிகாவல் = விழிப்பான காவற்பணி, மெய்க்காப்பாளன் பணி, பெரும்பணி. 'கள்ளான்' இயற்பெயர்.]*

**கடிகுரங்கு** *kaḍi-kuraṅgu,* பெ.(n.) குரங்கின் உருவினதாகி, நெருங்குவோரைக் கடிக்கும் மதிற்பொறி; an ancient catapultic military engine of the shape of monkey mounted on the ramparts of a fort for seizing and biting hostile troops approaching the fort. *"கடிகுரங்கும் விற்பொறியும்" (பு.வெ.6:112).*

*[கடி[3] + குரங்கு.]*

**கடிகை**[1] *kaḍigai,* பெ.(n.) 1. துண்டம்; piece cut off. *"கரும்பெறி கடிகையோடு . . . கவளங் கொள்ளா" (சீவக.1076).* 2. காம்பு; handle; hilt, as of spear. *"தாளுடைக் கடிகை" (அகநா.35:3).* 3. குத்துக்கோல் *(சிலப்.14:173);* pike-staff. 4. கதவிடுதாழ் (பிங்.); bolt, sliding catch. 5. கேடகம் (சிலப்.4:173,அரும்); shield. 6. திரைச்சீலை (சிலப்.14:173,அரும்); curtain.

**ம.** கடிக; **தெ.,க.** கடி; **து.** கடி, கடி;

*[கள் → கடு → கடி → கடிகை. கடி = வெட்டுதல். கடிகை = வெட்டப்பட்ட துண்டு, காம்பு, குத்துக்கோல், தாள், கேடயம்.]*

**கடிகை**[2] *kaḍigai,* பெ.(n.) 1. நாழிகை வட்டில்; clepsydra, ancient clock worked by flow of water; hour-glass. 2. நாழிகை (24 நிமையம்); Indian hour of 24 minutes. 3. தகுந்த சமயம் (திவா.); opportunity; conjuncture of circumstances. 4. நிமித்திகன், மங்கல நேரம் குறிப்பவன்; astrologer who fixes the auspicious time for ceremonies etc. *"குறிக்கும் கணியர் கண்ண னாரொடு கடிகையும் வருகென" (சீவக.2362).* 5. மங்கலப் பாடகன்; bard

whose function it is to invoke prosperity unto his patron on special occations. *"காவன் மன்னருங் கடிகையுங் கடவது நிறைத்தார்" (சீவக.2367).*

*[குள் → குண்டு = குழி, ஆழம். குண்டு → குண்டான் = குழிந்த அல்லது குண்டான கலம். குண்டான் → குண்டா. குண்டு → குண்டிகை → குடிகை → குடுக்கை → குடுவை. குடிகை = நீர்க்கலம் (கமண்டலம்). குடிகை → கடிகை = நீர்க்கலம்; நாழிகைவட்டில், நாழிகை, மங்கல நாழிகை குறிக்கும் கணியன், மங்கலப் பாடகன் (வ.மொ.வ.103).]*

கடிகை > Skt. ghaṭa, ghaṭi, ghaṭikā.

**கடிகை**[3] *kaḍigai,* பெ.(n.) சோளங்கிபுரம் என்றழைக் கப்படும் ஊரின் பழைய பெயர் (திவ்.பெரியதி.8.9:4); ancient name of the modern town of Sholinghur, where there is a shrine dedicated to Viṣṇu.

*[கழல் (கழறு) → கழகம் (கலந்துரையாடுமிடம், பேசுமிடம், ஊர் மன்றம், பள்ளி, கல்லூரி, விளையாடுமிடம், பலர் கூடுமிடம் அல்லது மன்றமிருந்த ஊர்). கழகம் → கடகம் → கடிகம் → கடிகை.]*

**கடிகை**[4] *kaḍigai,* பெ.(n.) விரைவு (திவா.); swiftness, rapidity.

*கடிகை > வ. கட, கடீ கடிகா. (gh,t); H. kaḍiga.*

*[கடு → கடி → கடிகை. கடு = விரைவு]*

**கடிகை**[5] *kaḍigai,* பெ.(n.) 1. கெண்டி; drinking vessel with a spout. 2. உண்கலம்; plate from which food is eaten. 3. மட்பானை (கருநா.); pot.

க. கடிகெ; Skt. ghaṭa.

*[கடம் → கடிகை.]*

**கடிகை**[6] *kaḍigai,* பெ.(n.) கட்டுவடம்; necklace. *"நீலமணிக் கடிகை" (கலித்.96).*

*[கண்டிகை → கடிகை (வேர்.க.150). கடிப்பாக அல்லது சற்று இறுக்கமாகக் கழுத்தில் அணியப்படுதலின் கடிகை எனப்பட்டது. அட்டிகை என்பது இப் பொருளினிதே.]*

**கடிகை**[7] *kaḍigai,* பெ.(n.) 1. தோள்வளை; epaulette, an ancient ornament for men's shoulders. *"கடிகைவா ளார மின்ன" (சீவக.2808).* 2. காப்பு; bracelet, a piece of string which one ties round his wrist as token of the fulfilment of a vow. *"வலம்புரி வளையொடு கடிகைநூல் யாத்து" (நெடுநல்.142).*

*[கடகம் → கடிகை.]*

**கடிகை**[8] *kaḍigai,* பெ.(n.) அரையாப்பு (மூ.அ.); bubo in the groin.

ம. கடி

*[கடி → கடிகை. கடி = இடுப்பு.]*

**கடிகை**[9] *kaḍigai,* பெ.(n.) ஊரவை (i.m.p.cg.129); village assembly.

*[குடி = குலம், கூட்டம். குடி → குடிகை → கடிகை = சிறுகூட்டம், ஊரவை. இங்குக் கை என்பது சிறுமைப்பொருட் பின்னொட்டு. வடவர் காட்டும் ghat என்னும் மூலம் தொடர்பற்ற பல்வேறு பொருள் கொண்ட சொல். கூடுதல் என்னும் பொருளில் அது குட என்னும் தென்சொற் றிரிபாகும். குல் → குள் → குழு → குழ → குட → குடம் = திரட்சி. குடத்தல் = கூட்டுதல், திரளுதல் (வ.மொ.வ.104).]*

**கடிகை**[10] *kaḍigai,* பெ.(n.) உயர்கல்வி நிலையம் (S.I.I.Vol.III. Part. II); institute of higher education.

*[கழல் (கழறு) → கழகம் = கலந்துரையாடுமிடம், மன்றம், கற்குமிடம். கழகம் → கடகம் → கடிகம் → கடிகை.]*

**கடிகை**[11] *kaḍigai,* பெ.(n.) செங்கற்பட்டு மாவட்டத்தில் பொய்யாமொழி மங்கலத்தில் இருந்த ஒரு தமிழ்க்கழகம் (சங்கம்); a Tamil Saṅgam at *Poyyāmoḻi Maṅgalam* in Chengalpattu district (அபி.சிந்.).

*[கழகம் → கடகம் → கடிகம் → கடிகை.]*

கழகம் என்னும் தமிழ்ச்சொல் பிராகிருதம் என்னும் வடதமிழில் கடகம் எனத் திரிந்து பின் வடமொழிக்குச் சென்று இருமடித் திரிபாகிக் கடிகா எனத் திரிந்து மீண்டும் தமிழில் கடிகை என வழக்கூன்றியது. இது சிறப்பாகத் தமிழ் மன்றத்தையும், தமிழ்க்கல்வி கற்பிக்கும் பள்ளியையும் பள்ளிக்கூடம் உள்ள ஊரையும் குறிப்பதாயிற்று.

**கடிகைக்கோல்** *kaḍigai-k-kōl,* பெ.(n.) ஒருவகை அளவுகோல்; a kind of measuring rod. *'கடிகைக்கோல் அளந்து' (S.I.I.iv.81).*

*[கடிகை + கோல். கடிகை = ஊரவை. கடிகைக்கோல் = ஊரவையினரின் ஒப்புதல் பெற்ற அளவுகோல்.]*

**கடிகைமாக்கள்** *kaḍigai-mākkaḷ,* பெ.(n.) மங்கலப் பாடகர்; panegyrists who sing songs on special occasions invoking prosperity unto their patrons. *"கடிகை மாக்கள் வைகறைப் புகழ" (இரகு.அயனெழு.139).*

மறுவ. எட்டர், பெருநம்பிகள், வந்திகள், கற்றோர், கவிகள், வண்டர், மெய்க்கற்றோர், நாவலர், பாவலர், பலகலை வல்லோர், கடிகையர் (ஆ.நிக.).

*[கடிகை + மாக்கள். கடிகை = ஊரவை.]*

**கடிகைமாராயன்** *kaḍigai-mārāyaṉ*, பெ.(n.) 1. தலைமை இசைக்காரன் (சாஸனத்.197); head musician. 2. கண்காணிப்பாளர்; supervisor. 3. கல்விச் சாலைத் தலைவன் (S.I.I. Vol. 2:2 insc. 25); principal.

*[கடிகை + மாராயன் (பெருமை கருதி வழங்கப்படும் பட்டம்).]*

**கடிகைமுத்துப்புலவர்** *kaḍigai-muttu-p-pulavar*, பெ.(n.) திருநெல்வேலி மாவட்டம் எட்டையபுரத்து வேங்கடேச ரெட்டப்ப பூபதியின் அரசவைப் புலவராய் இருந்து அந்தச் சிற்றரசன் மீது பல பாடல்களைப் பாடிய புலவர்; court poet of Veṅkatēša Rettappa Būpati Ettayapuram, Tirunelveli district (அபி.சிந்.).

*[கடிகை + முத்துப்புலவர். கடிகை = தமிழ் மன்றம்.]*

**கடிகையர்** *kaḍigaiyar*, பெ.(n.) **கடிகையார்**[1] பார்க்க; see *kaḍigaiyār*[1]. *"கடிகையர் கவிதை யோதை" (கம்பரா.பால.எழுச்சி.79).*

*[கடிகை + ஆர் - கடிகையார் → கடிகையர்.]*

**கடிகையார்** *kaḍigaiyār*, பெ.(n.) 1. அரசனுக்குச் சென்ற நாழிகை அறிந்து சொல்லும் நாழிகைக் கணக்கர்; time keeper who sings appropriate songs to notify the periods of the day in the royal court. 2. பறை மூலம் அரசாணையை அறிவிப்போர்; one who announces the orders of the king by beating the drums. *'திருக்கொடியேற்று நாளன்று திருப்பறை யறைவு கேட்பிக்குங் கடிகையார் ஐவர்க்கு' (S.I.I.ii.125).* 3. கடிகை என்னும் பள்ளியைச் சார்ந்தவர் (சாசனச்சொல் அக.Vol-iii. part-ii); the school of court bards.

*[கடிகை + ஆர்.]*

**கடிகையாரம்** *kaḍigai-y-āram*, பெ.(n.) 1. கைக்கடிகை; wrist watch. 2. கடியாரம் (பாண்டி.); clock.

**தெ.** கடியாரமு

*[கடிகை + ஆரம் - கடிகையாரம். கடிகை = நேரம் காட்டும் கருவி. ஆரம் = வட்டத் தொடரி (சங்கிலி). கைக்கடிகை (wrist watch) = கையில் கட்டப்படுதலால் பெற்ற பெயர்.]*

**கடிகைவெண்பா** *kaḍigai-veṇbā*, பெ.(n.) அரசர், கடவுளர் முதலியோரது அருஞ் செயல்கள் ஒரு கடிகைப்பொழுதில் நடந்தனவாகக் கூறும் 32 நேரிசை வெண்பாவாலான சிற்றிலக்கியம் (தொன்.வி.283. உரை); poem consisting of 32 stanzas in *nērišai - veṇpā* metre, recounting the noble deeds of kings or of gods as if they were performed within one nāḻigai time.

*[குடிகை → கடிகை + வெண்பா.]*

**கடிகைவேளாளர்** *kaḍigai-vēlāḷar*, பெ.(n.) வேளாளருள் மக்களைக் காக்கும் பொறுப்பேற்ற ஒரு பிரிவினர்; a caste among *Vēlālar* community.

*[கடிகை + வேளாளர். கடிகை = காவல், காவலமைந்த இடம், ஊர்.]*

**கடிகொள்**[1]**(ளு)-தல்** *kaḍi-koḷ(ḷu)-*, 7 செ. குன்றாவி.(v.t.) விளக்குதல்; to open to view, make vivid. *"தண்கதிர் மதியந் தான்கடிகொள்ள" (சிலப்.28:46.).*

*[கடி + கொள். கடி = விளக்கம்.]*

**கடிகொள்**[2]**(ளு)-தல்** *kaḍi-koḷ(ḷu)-*, 7 செ. குன்றாவி.(v.t.) காத்துக் கொள்ளுதல்; protect or care for self. *"தம்நெஞ்சத் தெம்மைக் கடிகொண்டார் நாணார்கொல் எம்நெஞ்சத் தோவா வரல்" (குறள்,1205).*

*[கடி + கொள். கடி = காவல்.]*

**கடிகோல்** *kaḍi-kōl*, பெ.(n.) 1. பறவை ஓட்டுங் கழி; stick that is brandished to scare away birds that prey upon ripening corn. 2 நாய்க்கழுத்திற் கட்டுந் தடி (வின்.); rod tied to the neck of a dog and fastened elsewhere to keep it from mischief. 3. கடப்பாரை; a crow-bar.

ம. கடிகோல்

*[கடி + கோல்.]*

**கடிச்சவன்** *kaḍiccavaṉ*, பெ.(n.) ஈயாதவன்; sordid, wretch, skinflint. வீட்டுச் சொந்தக்காரன் கடிச்சவன் ஆதலால் வீட்டைப் பழுதுபார்க்கமாட்டான் (உ.வ.).

*[கடுத்தவன் → கடித்தவன் → கடிச்சவன்.]*

**கடிச்சவாய்தடிச்சான்** *kaḍicca-vāy-taḍiccāṉ*, பெ.(n.) காஞ்சொறி என்னும் பூடுவகை; climbing nettle (சா.அக.).

**கடிச்சவாய்துடைச்சான்** *kaḍicca-vāy-tuḍaiccāṉ,* பெ.(n.) 1. எருக்கு; maddar. 2. காஞ்சொறி; climbing nettle (சா.அக.).

*[கடித்த → கடிச்ச + வாய் + (துடைத்தான்) துடைச்சான்.]*

**கடிச்சான்** *kaḍiccāṉ,* பெ.(n.) பனங்கொட்டையி லுள்ள கட்டித் தகண் (நெல்லை); hard pulp inside a sprouting palmyra nut.

*[கடுத்தான் → கடிச்சான்.]*

**கடிச்சை**[1] *kaḍiccai,* பெ.(n.) 1. ஒரு செடி (மூ.அ.); a shrub. 2. மரவகை; downy-leaved Faise Kamela.

**க.** கடிச; **தெ.** கடிசெ.

*[கடுத்தை → கடிச்சை.]*

**கடிச்சை**[2] *kaḍiccai,* பெ.(n.) கடலில் வாழ்வதும் 16 விரலம் வரை வளர்வதும் பழுப்புநிறமும் பக்கங்களில் கறுப்புப் பட்டைகளும் கொண்ட மீன்வகை; a sea-fish, greyish, with black blotches on its sides, attaining 16 in. in length.

*[கடுத்தை → கடிச்சை.]*

**கடிச்சை**[3] *kaḍiccai,* பெ.(n.) ஈயாத்தனம் (வின்.); niggardliness.

*[கடு → கடுத்தை → கடித்தை → கடிச்சை.]*

**கடிச்சைக்காரன்** *kaḍiccai-k-kāraṉ,* பெ.(n.) ஈயாதவன் (வின்.); niggard, penurious man.

*[கடிச்சை → கடிச்சைக்காரன்.]*

**கடிசரி** *kaḍišari,* பெ.(n.) தேசிக் கூத்துக்குரிய அடவு வகைகளுள் ஒன்று (சிலப்.3:16. உரை); one of the postures of the feet in the *dēši* dance.

*[கடி + சரி. கடி = விரைவு. சார் → சாரி → சரி, வரிசை, முறை.]*

**கடிசு** *kaḍišu,* பெ.(n.) 1. கடுமை; asperity, severity. 2. நிமிர்வு (வின்.); being too perpendicular, too little bent, as a hoe or adze to the handle, ploughshare to the shaft opp. to தணிசு.

**தெ.** கடிசு; **க.** கடிதை.

*[கடு → கடுத்து → கடுசு → கடிசு.]*

**கடிசூத்திரம்** *kaḍi-šūttiram,* பெ.(n.) **கடிஞாண்**[1] பார்க்க; see *kaḍiñāṇ*[1]. *"மணிக்கடிசூத்திரம் வீக்கி" (கம்பரா.யுத்த.இராவணன் தேரேறு.5).*

**க.** கறதாபே (நடுப்பட்டி), கடிபந்தே; **ம.** கடிபந்தம்.

*[கடி + சூத்திரம். Skt. šūtrā > த. சூத்திரம். கடி = இடை, இடுப்பு. சூத்திரம் = கயிறு.]*

**கடிசை** *kaḍišai,* பெ.(n.) பாய்மரந்தாங்கி (சங்.அக.); plank that supports the mast of a boat.

*[கடு → கடி → கடிசை.]*

**கடிஞாண்**[1] *kaḍi-ñaṇ,* பெ.(n.) அரைஞாண் கயிறு; a waist cord or waist - chain.

**மறுவ.** அரைஞாண்

*[கடி + ஞாண். கடி = இடை, இடுப்பு. ஞாண் = கயிறு.]*

**கடிஞாண்**[2] *kaḍi-ñāṇ,* பெ.(n.) கடிவாளம் (சேரநா.); a bride, bit.

**ம.** கடிஞ்ஞாண்

*[கடி = கடித்தல், வாயால் பற்றுதல். கடி + ஞாண்.]*

**கடிஞை**[1] *kaḍiñai,* பெ.(n.) 1. இரப்போர் (பிச்சை) கலம்; begging bowl. *"பிச்சையேற்ற பெய்வளை கடிஞையின்" (மணிமே.பதி.63).* 2. மட்கலம் (பிங்.); earthern vessel.

*[கடம் → கடி → கடிஞை.]*

**கடிஞை**[2] *kaḍiñai,* பெ.(n.) கவறாடும் (சூதாடும்) காய் அல்லது பொருள்; dice.

*[கடு → கடி → கடிஞை. (பிடித்தாடும் இயல்பால் பெற்ற பெயர்.]*

**கடித்தகம்** *kaḍittagam,* பெ.(n.) தற்காப்பிற்கியன்ற கிடுகுபடைக்கலன் (கேடயம்); shield. *"கடித்தகப் பூம்படை கைவயி னடக்கிக் காவல்" (பெருங். உஞ்சை.53:140).*

*[கடி*[16] *→ கடித்தகம்.]*

**கடித்திரம்** *kaḍittiram,* பெ.(n.) மேகலை; an ornament worn by woman.

**ம.** கடிதீரம்

*[கடி*[20] *→ கடித்திரம்.]*

**கடிதடம்** *kaḍi-taḍam,* பெ.(n.) 1. அரை (இடுப்பு) (திவா.); waist. 2. பெண்குறி (சூடா.); pudendum muliebre.

**ம.** கடித்தடம்

[கடி + தடம். கடி = இடுப்பு. கடிதடம் = இடுப்பு, இடுப்பைச் சார்ந்த பகுதி.]

**கடிதம்** *kaḍidam,* பெ.(n.) 1. மடல் எழுதவேனும் பூவேலைப்பாடு அல்லது ஓவியம் (சித்திரம்) வரையவேனும் பயன்பட்ட பசைக்கூழ் தடவிய சீலை; canvas on which paste is applied before writing, painting or drawing upon. *"நெய்த்தகூழ் வருடக் கடிதமே யெனவும்" (வேதா.சூ.43).* 2. தாள்; paper. 3. மடல்; letter. 4. பிசின் (மூ.அ.); gum.

ம. கடிதம்; **க.** கடித, கடத; **து.** கடத; **தெ.** கடிதமு; Mal. kertas; Thai. kradad.

[கடி → கடிது → கடிதம். கடிது = திண்ணமானது, தடிப்பானது.]

பசை சேர்த்த தடிப்பான துணி கடிதம் எனப்பட்டது. ஓவியம் வரைதற்குப் பழங்காலத்தில் பயன்படுத்தப்பட்ட பசை தடவிய துணியை அரசர் முதலியோர் திருமுகம் (மடல்) எழுதவும் பயன்படுத்தியதால் நாளடைவில் வெறும் மடலை மட்டும் குறிக்கும் சொல்லாக இது வளர்தற்கு இடமாயிற்று.

**கடிதல்** *kaḍidal,* பெ.(n.) ஒரு தப்பிசை (திருவாலவா.57:26); a discordant note.

[கள் → கடு → கடி → கடிதல். கடிதல் = நீக்குதல், நீக்கத்தக்கது.]

**கடிது**[1] *kaḍidu,* பெ.(n.) 1. கடியது, கடுமையானது; that which is difficult, hard, arduous. *"தீயினுங் கடிதவர் சாயலிற் கனலுநோய்" (கலித்.137:22).* 2. விரைவு; quickness. *"காலத் தீப்பெய ருருத்திரன் வந்தனன் கடிதில்" (கந்தபு.கணங்கள்.4).*

**க.** கடிது; **தெ.** கடிதி; **து.** கடு, கட்தீ.

[கடி → கடிது.]

**கடிது**[2] *kaḍidu,* வி.எ.(adv.) 1. விரைவாய்; speedily, quickly. *"கைசென்று தாங்குங் கடிது" (சிவப். பிரபந். நன்.31).* 2. மிக; exceedingly, very greatly, to a great degree. *"உடையான்றாள் சேர்தல் கடிதினிதே" (இனி.நாற்.1).*

[கடி → கடிது.]

**கடிந்தமன்** *kaḍindaman,* பெ.(n.) குயவன் (த.சொ. அக.); potter.

[கடி → கடிந்தமன்.]

**கடிந்தான்** *kaḍindān,* பெ.(n.) 1. காமம் வெகுளி மயக்கம் மூன்றையும் ஒழித்தவன் (கோ.த.கை); he who discarded three undeservable things. *"மாணாக்கன் கற்பனைத்து மூன்றுங் கடிந்தான்" (சிறுபஞ்.29).* 2. முனிவன் (திவா.); he who has renounced the world recluse.

மறுவ. கடிந்தோன்

[கடி = விலக்குதல். கடி → கடிந்தான்.]

**கடிந்தீவார்** *kaḍin-dīvār,* பெ.(n.) வெறுப்பார் (கழக.அக.); one who dislikes. *"கனற்றிநீ செய்வது கடிந்தீவார் இல்வழி" (கலித்.73:10).*

[கடிந்து + ஈவார்.]

கடிந்தீவார் என்பது வினையெச்சத் தொடரன்று. போதருவார் என்பதில் தருவார் என்னும் துணைவினை போதலைச் செய்வார் என முதல்வினைப் பொருளே சுட்டி நின்றது போலக் கடிந்தீவார் என்பதில் 'ஈவார்' செய்வார் என்னும் பொதுப்பொருள் தந்து முதல்வினைக்குத் துணை வினையாயிற்று.

**கடிந்துகொள்(ளு)-தல்** *kaḍindu-koḷ(ḷu)-,* 6 செ.கு.வி.(v.i.) சினங்கொள்ளுதல்; to get angry with someone. தமிழைப் பிழைபடப் பேசினால் பாவாணர் கடிந்து கொள்வார்.

[கடி → கடிந்து + கொள்.]

**கடிநகர்** *kaḍi-nagar,* பெ.(n.) 1. காவல்மிகுந்த நகரம், தலைநகரம்; fortified town, guarded city, capital city. *"காஞ்சனபுரக் கடிநக ருள்ளேன்" (மணிமே.17:22)* 2. மணவீடு; marriage house. *"கடிநகர் புனைந்து கடவுட் பேணி" (அகநா.136:6).*

[கடி + நகர்.]

தலைநகர்கள், அவற்றின் பெருமை பற்றிப் பேரூர் அல்லது மாநகர் என்றும், ஆரவாரம் பற்றிக் "கல்லென் பேரூர்" என்றும், பழமையான வெற்றியுடைமை பற்றிப் "பழவிறன் மூதூர்" என்றும் காவல் மிகுதி பற்றிக் "கடிநகர்" என்றும் புலவராற் சிறப்பித்துக் கூறப்பெறும் (பழந்தமி.ப.13).

**கடிநாய்** *kaḍi-nāy,* பெ.(n.) கடிக்கும்நாய்; vicious, snappish dog. *"கடிநா யெனச்சீறி" (அறப்.சத.21).*

**ம.** கடியன்பட்டி

[கடி + நாய்.]

**கடிநிலை** *kaḍi-nilai,* பெ.(n.) நீக்கும் நிலை; inadmissibility, unacceptability. *"திணைமயக்*

குறுதலுங் கடிநிலை இலவே" (தொல்.பொருள். அகத்.12).

[கடி + நிலை. கடி = நீக்குதல்.]

**கடிப்பகை** *kaḍi-p-pagai,* பெ.(n.) 1.வேம்பு; neem tree. "அரவாய்க் கடிப்பகை" (மணிமே.7:73). 2. வெண்கடுகு; white mustard, so called from its being used in exorcising devils. "கடிப்பகை யனைத்தும் . . . அரலைதீர வுறீஇ" (மலைபடு.22). 3. கடுகு (மலை.); mustard.

[கடி + பகை. பேய்முதலிய தீய ஆவிகளின் பகையை நீக்குந் தன்மை வாய்ந்தவனவாகக் கருதப்படுவதால் வேம்பும், வெண்கடுகும், கடுகும் கடிப்பகை என வழங்கலாயிற்று.]

**கடிப்பம்**[1] *kaḍippam,* பெ.(n.) 1. காதணி (பிங்.); ear ornament. 2. அணிகலச்செப்பு (திவா.); jewel casket.

[கடி → கடிப்பம் = மேல்மூடி செறிவாகப் பொருந்துவது.]

**கடிப்பம்**[2] *kaḍippam,* பெ.(n.) கெண்டி; drinking vessel with a spout. "குலமணி கடிப்பத் தங்கள்" (இரகு.குறைகூறு.3).

ம. கடிப்பம்

[கடி → கடிப்பம்.]

**கடிப்பான்** *kaḍippāṉ,* பெ.(n.) **கடுப்பான்** பார்க்க; see *kaḍuppāṉ.*

[கடி → கடிப்பான்.]

**கடிப்பிடுகோல்** *kaḍippiḍu-kōl,* பெ.(n.) முரசறை கோல் (கழக.அக.); drumstick.

[கடிப்பு → கடிப்பிடுகோல். கடிப்பு = பறையடிக்கும் கோல்.]

**கடிப்பிணை** *kaḍi-p-piṇai,* பெ.(n.) ஒருவகைக் காதணி (சீவக.488, உரை); a kind of a pair of ear-rings.

[கடிப்பு + இணை. கடிப்பு = செறிவு, செறிந்த காதணி. இணை = இரண்டு.]

இக்காலத்துப் பாண்டி நாட்டுப் பழ நாகரிக மகளிர்போல், அக்காலத்தில் எல்லாத் தமிழப் பெண்டிரும் காது வளர்த்திருந்தனர். காது வளர்க்கும் போது அணிவது குதம்பையும், வளர்த்த பின் அணிவது குழையும் கடிப்பிணையுமாகும். குதம்பை இன்று குணுக்கு என வழங்குகின்றது (பண்.நா.ப.54).

**கடிப்பு**[1] *kaḍippu,* பெ.(n.) 1. பறையடிக்கும் குறுந்தடி; drumstick. "நாக்கடிப் பாக வாய்ப்பறை யறைந்தீர்" (மணிமே.25:51). 2. படைக்கலன் வகை; a kind of weapon. "வாய்செறித்திட்ட மாக்கடிப் பிதுவே" (கல்லா.6). 3. துருத்தியின் கைப்பிடி; handle of the bellows. "கடிப்புவா ரங்குலி கொளீஇய கை" (சீவக.2830).

[கடி[18] → கடிப்பு.]

**கடிப்பு**[2] *kaḍippu,* பெ.(n.) குமிழ்; tambourine bells. "கடிப்புடல் விசித்த சல்லரி" (கல்லா.8).

[கடி = ஓசை. கடி[11] → கடிப்பு.]

**கடிப்பு**[3] *kaḍippu,* பெ.(n.) காதணி; ear ornament. "காதிற் கடிப்பிட்டு" (திவ்.பெரியதி.10.8:1).

ம. கடிம்பு

[கடிப்பிணை → கடிப்பு.]

**கடிப்பு**[4] *kaḍippu,* பெ.(n.) ஆமை; (பிங்.); tortoise.

[கடு → கடி → கடிப்பு.]

**கடிப்பு**[5] *kadippu,* பெ.(n.) கடி பட்ட தழும்பு; scar left by a bite.

ம. கடிப்பு

[கடி[9] → கடிப்பு.]

**கடிப்பேறு** *kaḍi-p-pēṟu,* பெ.(n.) முரசினைக்கோலால் அடிக்கை; drum beat. 'கடிப்பேற்றினால் முரசுசார்வாக ஒலி பிறந்தாற்போல' (நீலகேசி. 509.உரை).

[கடி[11] + பேறு.]

**கடிப்பை** *kaḍippai,* பெ.(n.) **கடிப்பகை-2** பார்க்க; see *kaḍi-p-pagai-2.*

[கடி + பகை - கடிப்பகை → கடிப்பை.]

**கடிபிடி** *kaḍi-piḍi,* பெ.(n.) சண்டை; quarrel, affray.

ம. கடிபிடி; க. கடபட, கடபடே, கடிபடி; து. கடிப்பிடி; Mar. khatpat.

[கடி[7] + பிடி.]

**கடிமரம்** *kaḍi-maram,* பெ.(n.) பகைவர் நெருங்காதபடி வளர்த்துக் காக்கப்படும் காவன்மரம்; tree planted and well guarded as a symbol of sovereign power or dominion in ancient times. *"கடிமரத்தாற் களிறணைத்து" (பதிற்றுப்.33:3).*

*[கடி + மரம். கடி = காவல்.]*

கடிமரமாவது ஒவ்வோர் அரச குடியினராலும் அவரவர் குடியொடு தொடர்புள்ளதாகவும் தெய்வத்தன்மை யுள்ளதாகவும் கருதப்பட்டு, கொடியும் முத்திரையும் போலத் தன்ஆள்குடிச் சின்னமாகக் கொண்டு, பகைவர் வெட்டாதவாறும் அவர் யானையை அதிற் கட்டாதவாறும் காத்துத் தொன்றுதொட்டுப் பேணப்பட்டுவரும் ஏதேனுமொரு வகையான காவல் மரம். அது தலைமையரசர்க்கும் சிற்றரசர்க்கும் பொதுவாகும். பாண்டிநாட்டிலிருந்த பழையன் என்னும் குறுநிலமன்னன், ஒரு வேம்பைக் காவல்மரமாக வளர்த்து வந்தான். செங்குட்டுவனின் பகைவருள் ஒருவன் கடப்பமரத்தைக் காவல்மரமாகக் கொண்டிருந்தான்.

கடிமரம், சில அரசரால் தலைநகரில் மட்டும் தனிமரமாகவும், சிலரால் ஊர்தொறும் தனிமரமாகவும், சிலரால் சோலைதொறும் தனிமரமாகவும் வளர்க்கப்பட்டதாகத் தெரிகிறது (பழந்தமி.ப.24,25).

**கடிமனை** *kaḍi-manai,* பெ.(n.) காவலமைந்த குடியிருப்பு; fortified place. *"காஞ்சி சூடிக் கடிமனை கருதின்று" (பு.வெ.4:61).*

*[கடி[16] + மனை.]*

**கடிமாடம்** *kaḍi-māḍam,* பெ.(n.) காவலமைந்த கன்னிமாடம்; guarded residence for maidens. *"கடிமாட மடைந்த வாறும்" (சீவக.13).*

*[கடி[16] + மாடம்.]*

**கடிமாலை** *kaḍi-mālai,* பெ.(n.) 1. அரைஞாண்; a zone. 2. ஒட்டியாணம் (சேரநா.); a girdle.

ம. கடிமாலிக

*[கடி = இடை, இடுப்பு. கடி + மாலை.]*

**கடிமிளை** *kaḍi-miḻai,* பெ.(n.) காவற்காடு; gaurded forest.

க. மிளே (காடு)

*[கடி + மிளை. மிடைதல் = செறிதல், நிறைதல், மிகுதல், மரமடர்ந்த காடு. மிடை → மிளை.]*

**கடிமுரசம்** *kaḍi-murašam,* பெ.(n.) காவல் முரசம்; royal drum, a symbol of sovereign authority, in ancient times. *"இடிமுரசம் தானை இகலரிய எங்கோன் கடிமுரசங் காலைசெய" (பு.வெ.9:202.)*

*[கடி + முரசம். முரசு + அம் - முரசம். 'அம்' பெ.பொ.ஈறு.]*

**கடிமூலம்** *kaḍi-mūlam,* பெ.(n.) முள்ளங்கி (சங்அக.); radish.

க. மூலங்கி, மூலக (முள்ளங்கி).

*[கடி[18] + மூலம். மூலம் = கிழங்கு.]*

**கடிய[1]** *kaḍiya,* வி.எ.(adv.) விரைவில்; quickly. கடிய வா (உ.வ.).

*[கடி + அ. 'அ' வி.எ.ஈறு.]*

**கடிய[2]** *kaḍiya,* பெ.எ.(adj.) 1. கட்டியான; that which is difficult, hard. கடியபொருளைக் கடிக்காதே (உ.வ.). 2. காரமான; pungent.

ம. கடிய; க. கடது; தெ. கடிதி.

*[கடி + அ. 'அ' பெ.எ.ஈறு.]*

**கடியடு** *kaḍiyaḍu,* பெ.(n.) சிற்றரத்தை; lesser galangal.

*[கடியன் → கடியடு.]*

**கடியந்திரம்** *kaḍi-yandiram,* பெ.(n.) ஏற்ற மரம் (யாழ்.அக.); picottah.

*[கடி + எந்திரம். கடி = விரைவு. நீரேற்றத்தின் விரைவைக்குறித்து அடையானது.]*

**கடியநெடுவேட்டுவன்** *kaḍiya-neḍu-vēṭṭuvaṉ,* பெ.(n.) பெருந்தலைச்சாத்தனாராற் பாடப்பட்ட ஒரு வேடர் தலைவன்; name of a chief of hunters, sung by *Peruntalai-c-cāttaṉār.*

*[கடிய + நெடு + வேட்டுவன் (விரைந்து அம்பெய்யும் ஆற்றலன்).]*

**கடியர்** *kaḍiyar,* பெ.(n.) கொடியவர் (கழக.அக.); cruel person.

*[கடு[8] → கடி + அர்.]*

**கடியல்[1]** *kaḍiyal,* பெ.(n.) பாய்மரத்தை அல்லது பிறவற்றைக் கயிற்றால் இணைத்துக் கட்டுவதற்கு ஏந்தாகப் பொருந்திய தோணியின் குறுக்குமரம் (யாழ்ப்.); beam set across a small sailing boat so

as to extend to either side of the vessel, in order that a temporary stay for the mast or any other rope. might be attached thereto.

மறுவ. கடியை

ம. கடிப்பூட்டு

[கடி[20] + அல். கடி = நடுவு, நடுப்பகுதி. கடியல் = தோணியின் நடுவிலிடும் குறுக்குமரம்.]

**கடியல்**[2] *kaḍiyal,* தொ.பெ.(vbl.n.) விலக்குதல், நீக்குதல்; neglecting, rejecting. *"அவ்வழக்கு உண்மையின் கடிய லாகா கடனறிந் தோர்க்கே" (தொல்.பொருள்.மரபு.69).*

[கடி + அல். 'அல்' தொ.பெ.ஈறு.]

**கடியலூர்** *kaḍiyalūr,* பெ.(n.) கடியலூார் உருத்திரங் கண்ணனார் வாழ்ந்த ஊர்; a place in which Śaṅgam poet *Kaḍiyalūr Uruddiraṅg-kaṇṇanār* lived.

[கடி → கடியல் + ஊர் - கடியலூர். கடி = நடுவு, நடுப்பகுதி.]

**கடியலூருருத்திரங்கண்ணன்** *kaḍiyalūr-uruttiraṅ-kaṇṇaṉ,* பெ.(n.) பெரும்பாணாற்றுப்படை, பட்டினப்பாலை என்னும் நூல்களை இயற்றிய கடைக்கழகப் புலவர்; a poet who wrote the poems, *Perumpāṇ-āṟṟu-p-paḍai* and *Paṭṭina-p-pālai,* in praise of *Coḻaṉ Karikālaṉ.*

[கடியலூர் + உருத்திரன் + கண்ணன். கடியலூர் = நடுவிலிருக்கும் ஊர்.]

**கடியவன்** *kaḍiyavaṉ,* பெ.(n.) **கடியன்** பார்க்க (சேரநா.); see *kaḍiyaṉ.*

ம. கடியவன்

[கடு → கடி + அவன்.]

**கடியறை** *kaḍiyaṟai,* பெ.(n.) மணவறை; decorated place in a house to seat the bride and the bridegroom at a wedding. *"கடியறை மருங்கி னின்ற மைந்தனை" (சீவக.2059).*

[கடி + அறை. கடி = நறுமணம், திருமணம்.]

**கடியன்** *kaḍiyaṉ,* பெ.(n.) 1. கொடுங்கோலன்; tyrant. *"இறைகடிய னென்றுரைக்கு மின்னாச்சொல் வேந்தன் உறைகடுகி ஒல்லைக் கெடும்" (குறள்.564.)* 2. கொடுமைக்காரன்; cruel hearted man. 3. துன்புறுத்தி மகிழ்பவன்; sadist. 4. இரக்கமற்றவன்; inhuman.

ம. கடியவன்

[கடு[8] → கடி + அன் - கடியன். கடு = கடுமை, கொடுமை.]

**கடியாரத்தோடு** *kaḍiyāra-t-tōḍu,* பெ.(n.) காதணி வகை; large ear ring with stones set in gold, the decorated form of kammal.

[கடிகாரம் → கடியாரம் + தோடு.]

**கடியாரவட்டிகை** *kaḍiyāra-v-aṭṭigai,* பெ.(n.) பொன்னாலான மகளிர் கழுத்தணி வகை, அட்டிகை வகை; a kind of woman's necklace made of gold wire.

[கடிகாரம் → கடியாரம் + அட்டிகை.]

**கடியாரேந்தல்** *kaḍiyār-ēndal,* பெ.(n.) சிவகங்கை மாவட்டத்துச் சிற்றூர்; a village in *Śivagaṅgai* district.

[கடிகையார் + ஏந்தல் - கடிகையாரேந்தல் → கடியாரேந்தல். ஏந்தல் = ஏரி, ஏரியைச் சார்ந்த ஊர். கடிகை = ஊரவை.]

**கடியிரத்தம்** *kaḍi-y-irattam,* பெ.(n.) மூக்கிரட்டை (மலை.); spreading hogweed.

[கடி + இரத்தம்.]

**கடியிருக்கை** *kaḍi-y-irukkai,* பெ.(n.) திருமணக்கூடம்; wedding pavilion. *"அருங்கடி யிருக்கையு ளமர நல்கினான்" (கந்தபு.வரைபுனை.19).*

[கடி[8] + இருக்கை.]

**கடிவட்டு** *kaḍi-vaṭṭu,* பெ.(n.) வட்டுடை; cloth tied round the waist and reaching down the knee, or up to the knee.

[கடி[18] + வட்டு. வள் → வட்டு.]

**கடிவாய்** *kaḍi-vāy,* பெ.(n.) கடித்த இடம்; bite, lips of a wound caused by a bite. கடிவாயில் மருந்துவை (உ.வ.).

ம. கடிவாய்

[கடி[9] + வாய்.]

**கடிவால்** *kaḍivāl,* பெ.(n.) கும்மட்டிக்காய்; bitter apple (சா.அக.).

*[கடி[15] → கடிவால்.]*

**கடிவாலுவன்** *kaḍi-vāluvaṉ,* பெ.(n.) சமைப்போன்; cook. *"நெறியறிந்த கடிவாலுவன்" (மதுரைக்.36).*

*[கடி[9] + வாலுவன்.]*

**கடிவாள்** *kaḍivāḷ,* பெ.(n.) கடிவாளம் (சம்.அக.Ms.); horse's bit, bridle.

*[கடி[9] + வாள்.]*

**கடிவாளப்புண்** *kaḍivāḷa-p-puṇ,* பெ.(n.) 1. குதிரை நோய்களுளொன்று; a kind of horse disease. 2. வாயின் இருபக்கங்களிலும் ஏற்படும் புண்; skin affection on the corners of the mouth.

*[கடிவாளம் + புண்.]*

கடிவாள இறுக்கத்தால் குதிரைவாயின் இருபுறங்களிலும் உண்டாகும் புண்போன்று மாந்தர் கடைவாயில் உண்டாகும் புண்ணுக்கும் இப் பெயர் வழங்கலாயிற்று.

**கடிவாளம்** *kaḍi-vāḷam,* பெ.(n.) குதிரைவாயில் பொருத்தப்படும் இரும்புத்தொடரி (சங்கிலி) இழுகயிறு அல்லது வார் (திவா.); horse bit, bridle. *'பரிக்கு இடும் கடிவாளத்தை நரிக்கு இடுவதா' (பழ.).*

**ம.** கடிவாளம், கடிஞாண், கடிஞாணம், கடிவாறு; **க.** கடியண, கடியாண, கடிவாண; **தெ.** கள்ளியமு, கள்ளெமு, கள்யமு; **து.** கட்யன, கடிவாண; **கோத.** கட்வாளம்; **துட.** கடொணம்; **கோண்.** கரியார்.

*[கடி[9] + வாளம். பாளம் → வாளம் = வார்ப்பிரும்பு, வார்ப்பிரும்புத்தொடரி (சங்கிலி).]*

**கடிவாளம்வெட்டல்** *kaḍivāḷam-veṭṭal,* பெ.(n.) கடிவாள வாரைத் தளர்த்தி யிழுத்துவிடுகை (வின்.); slackening and pulling, jerking the reins of a horse.

*[கடிவாளம் + வெட்டல்.]*

**கடிவாளவார்** *kaḍivāḷa-vār,* பெ.(n.) குதிரையின் வாயுடன் பொருத்தப்பட்டுக் குதிரையைச் செலுத்துவோன் கையில் பிடிக்கும் கயிறு (வின்.); bridle reins.

*[கடிவாளம் + வார்.]*

**கடிவாறு** *kaḍi-vāṟu,* பெ.(n.) **கடிவாளம்** பார்க்க; see *kaḍi-vāḷam.*

*[கடிவாளவார் → கடிவார் → கடிவாறு (கொ.வ.).]*

**கடிவி-த்தல்** *kaḍivi,* 4 செ.குன்றாவி.(v.t.) நீக்கிவிடுமாறு ஆணையிடுதல்; to order to reject. *"கலிங்கர்மன் வீரவாமேகனைக் கடக்களிற்றோடும் அகப்படக் கதிர்முடி கடிவித்து" (க.க.சொ.அக.).*

*[கடி + வி. 'வி' பி.வி.ஈறு.]*

**கடிவு** *kaḍivu,* பெ.(n.) **கடிவுகம்** பார்க்க; see *kaḍivugam.*

*[கடி[20] → கடிவு.]*

**கடிவுகம்** *kaḍivugam,* பெ.(n.) இடுப்பின்கீழ் வரும் வீக்கம்; a swelling below the hip (சா.அக.).

*[கடி[20] + ஊதம் - கடிவூதம் → கடிவூகம் → கடிவுகம். ஊதை → ஊதம்.]*

**கடிவேல்** *kaḍi-vēl,* பெ.(n.) வேலமரவகை; sweet scented babul.

*[கடி[8] + வேல்.]*

**கடிவை** *kaḍivai,* பெ.(n.) **கடிறு** பார்க்க; see *kaḍiṟu.*

**கடிறு** *kaḍiṟu,* பெ.(n.) யானை; elephant. *"கடிறு பலதிரி கானதரிடை" (திவ்.பெரியாழ்.3.2:6).*

*[களிறு → கடிறு (கொ.வ.).]*

**கடினப்படு-த்தல்** *kaḍiṉa-p-paḍu-,* 18 செ. குன்றாவி.(v.t.) இறுகச் செய்தல், கெட்டிப்படுத்துதல்; to consolidate, to harden.

*[கடுமம் → கடினம் + படு. படு (த.வி.) → படுத்து (பி.வி.).]*

**கடினப்புல்** *kaḍiṉa-p-pul,* பெ.(n.) **கடும்புல்** பார்க்க; see *kaḍum-pul* (சா.அக.).

*[கடினம் + புல்.]*

**கடினப்புற்று** *kaḍiṉa-p-puṟṟu,* பெ.(n.) **கடும்புற்று** பார்க்க; see *kaḍum-puṟṟu.*

*[கடி → கடினம் + புற்று.]*

**கடினபலம்** *kaḍiṉa-palam,* பெ.(n.) **கடுங்கனி** பார்க்க; see *kaḍuṅ-kaṉi* (சா.அக.).

*[கடினம் + பலம். பழம் → பலம்.]*

**கடினம்** *kaḍiṉam,* பெ.(n.) 1. வன்மை, உறுதி; hardness, firmness. 2. கொடுமை (திவா.); severity, cruelty, harshness, rigorousness. 3. துன்பம், இடர்ப்பாடு; difficulty. 4. மென்மையின்மை; roughness, ruggedness.

**த.** கடுமம் > **Skt.** kaṭiṉa.

H.kadin; **Heb.** karra; **Nub.** ko-ger; **G.** hart; **Du.** hard; **Swed.** hard; **Yid.** hart; **Afrik.** hard; **Norw.** hard; **Jap.** katai; **Dan.** hard; **Chin.** kunnan; **W.** caled; **Ori.** kaṣṭe.

*[கடு → கடுமம் → கடுனம் → கடினம். கடினம் என்பது வடதமிழ் (pkt) உலக வழக்குத் திரிபு. வடமொழியிலும் கடன் சொல்லாய் வழங்குகிறது.]*

**கடு[1]-த்தல்** *kaḍu-,* 4 செ.கு.வி.(v.i.) 1. நோவெடுத்தல், பூச்சிக்கடி முள் தைப்பு போன்றவற்றால் உடலில் குத்துவலி உண்டாதல்; to throb and pain, as from a sting, a venomous bite, a prick or toothache. *"நுணிங்கிக் கடுத்தலுந் தணிதலும் இன்றே" (குறுந்.136).* 2. உளைதல் (மூட்டுவலி, வயிற்றுளைச்சல், நடப்பதால் உண்டாகும் சோர்வு, சுமப்பதால் ஏற்படும் களைப்பு போன்றன); to ache, as from rheumatism, colic or dysentery; to pain, as the leg from walking, the head from carrying a load, the arm from writing. *"புணரிக ணீந்தி நீந்திக் கையிணை கடுத்து" (பிரமோத்.4:53).* 3. உறைத்தல்; to be too highly seasoned, pungent, as curry. உணவில் உப்புக்கடுத்தால் சுவை கெடும் (உ.வ.). 4. மிகுதல்; to be full; to pervade. *"நெஞ்சங் கடுத்தது காட்டும் முகம்" (குறள்,706).*

ம. கடுக்க; **க.,தெ.,து.,கொண்.** கடு; குட. கடிப; **கொலா.** கெடெட்; **நா.** கறு (கசப்பு, புளிப்பு); **கோண்.** கடி; **கூ.** கடிநோமொழி (கடுங்காய்ச்சல்).

**த.** கடு > **Skt.** kaṭ.

*[கள் → கடு (வே.க.187). கள் = முள். கள்ளி = முட்செடி. கடு = முள் குத்துவதால் ஏற்படும் வலி, கார்ப்பு, கைப்பு, மிகுதி, வெம்மை, கொடுமை. கடு → கடி = கூர்மை, மிகுதி, கார்ப்பு.]*

வடமொழியில் மூலமில்லை. க்ருத் (வெட்டு) என்னும் வடசொல் கட்டு (வெட்டு) என்னும் தென்சொற் றிரிபாதலின், மூலமாகாது (வ.மொ.வ.104).

**கடு[2]-த்தல்** *kaḍu-,* 4 செ.கு.வி.(v.i.) விரைந்தோடுதல்; to move swiftly, run fast. *"காலெனக் கடுக்கும் கவின்பெறுதேரும்" (மதுரைக்.388).*

*[(உடு) → (ஒடு) → ஓடு. ஓடுதல் = விரைந்து செல்லுதல். குடு → குடுகுடு (வி.கு.). குடுகுடு வென்று ஓடுகிறான் என்னும் வழக்கைக் காண்க. குடுகுடுத்தான் = விரைவாளன் (அவசரக்காரன்). குடு → கடு. கடுத்தல் = விரைதல். விரைந்தோடுதல். கடும்பா = விரைந்து பாடும் பா. கடுநடை = வேகநடை (முதா.57).]*

**கடு[3]-த்தல்** *kaḍu-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. சினத்தல்; to be angry, indignant wrath. *"மங்கையைக் கடுத்து" (அரிச்சந்.நகர்நீ.110).* 2. வெறுத்தல்; to dislike, detest, abhor. *"பொன்பெய ருடையோன் தன்பெயர் கடுப்ப" (கல்லா.5).* 3. ஐயுறுதல்; to doubt. *"நெஞ்சு நடுக்குறக் கேட்டுங் கடுத்தும்" (கலித்.24)* 4. ஒத்தல்; to resemble. *"அவிரறல் கடுக்கு மம்மென் குவையிருங் கூந்தல்" (புறநா.25:13).*

*[கள் → கடு.]*

**கடு[4]-தல்** *kaḍu-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1 வெட்டுதல்; to cut. 2. களை எடுத்தல்; to weed. *"கண்ணீலக் கடைசியர்கள் கடுங்களையிற் பிழைத்தொதுங்கி" (பெரியபு.மானக்கஞ்.2).*

*[கள் → கடு.]*

**கடு[5]** *kaḍu-,* பெ.(n.) 1. கைப்பு; bitterness. 2. கார்ப்பு; pungency. 3. வெறுப்பு; dislike. *"கடுநேர் கடுமொழியும்" (நீதிவெண்.22).* 4. துவர்ப்பு; astringency.

*[கள் → கடு.]*

சமற்கிருத அகரமுதலியில் மோனியர் வில்லியம்சு 'கடு' என்னும் சொல் முற்றிலும் தமிழிலிருந்து கடன் கொள்ளப்பட்ட சொல் என்றறியாமல் க்ருத் என்னும் மூலத்திலிருந்து பிறந்திருக்கலாம் என்று கருதினார். க்ருத் என்னும் வடசொன் மூலம், செய்தலையே குறிக்கும். கடு என்னும் உரிச்சொல் தமிழில் விரிந்த வேர்மூலப் பொருட்பாட்டுப் புடைபெயர்ச்சியுடையது என்பதை அவர் அறியார். செய்தற்பொருளில் வழக்கூன்றும் சொல் வினைச்சொல்லாக நீடித்தலன்றி உரிச்சொல் தன்மை எய்துவதில்லை.

கடு - sharp pungent, fierce etc. Cl. (P.455.) He does not doubt that the origin of this words is 'D'. He campares kaḍi., kaḍugu, Cf also kḍu etc. kay, etc., kasar, kataz etc. Sk. khara (khašu) sharp pungent acid, etc. are propably also related to these 'D' terms (K.K.E.D. XXXIX).

**கடு[6]** *kaḍu,* பெ.(n.) 1. பாம்பு; snake. 2. முதலை; crocodile. 3. நஞ்சு; poison. 4. நச்சுக்கடி;

poisonous bite. *"காரிகை மதியோடுற்ற காலையிற் கடுவினீற்றில" (சேதுபு.இராமணருள்.17).*

*[கல் → கள் → கடு. கல் = கருமை, நஞ்சு.]*

**கடு**[7] *kaḍu,* பெ.(n.) 1. முள்ளி (மலை.); Indian nightshade. 2. மாவிலங்கு; mund berried cuspidate leaved lingam tree. 3. முள்; thron. *"வெள்ளிலிற் பாய்ந்து மந்திவியன் கடுவுளைப்ப மீழ்வ" (கந்தபு.வள்.12).* 4. கடுக்காய்; chebulic myrobalan. "கடுக்கலித் தெழுந்த கண்ணகன் சிலம்பில்" (மலைபடு.14).

*[கள் → கடு. கள் → முள்.]*

**கடு**[8] *kaḍu,* பெ.(n.) 1. கடுமை; hard. 2. கூர்மை; sharpness. 3. விரைவு; speed.

*[கள் → கடு.]*

**கடு**[9] *kaḍu,* பெ.எ.(adj.) 1. மிகுதி; excess. *"அல்கிரை யாகிக் கடுநவைப் படீஇயரோ" (குறுந்.107).*

*[கள் → கடு.]*

**கடு**[10] *kaḍu-,* வி.எ.(adv.) விரைந்து; speedy. *"வெந்திறற் கடுவளி பொங்கர்ப் போந்தென" (குறுந்.39).*

ம. கடு

*[கள் → கடு.]*

**கடு**[11] *kaḍu,* பெ.(n.) குறித்த காலம்; term, period. சொன்ன கடு தவறாமல் திரும்பிவா (உ.வ.).

ம. கடு, கெடு; **க.** கடு, கடுவு; **து.**,பட. கடு.

*[கள் → கடு. கள் = கூடுதல், திரட்சி, தொகுதி, குறிப்பிட்ட காலவரம்பு. இதனைக் 'கெடு' எனத் திரித்து வழங்குவது வழுவமைதி. இது இலக்கண மருங்கின் சொல்லாறு அன்று.]*

**கடுக்கம்** *kaḍukkam,* பெ.(n.) விரைவு; celerity, speed. *"கருமக் கடுக்க மொருமைமி னாடி" (பெருங். இலாவன.17:9).*

*[கடு → கடுகு → கடுக்கம் (மு.தா.62).]*

**கடுக்கம்பாளையம்** *kaḍukkam-pāḷaiyam,* பெ.(n.) ஈரோடு மாவட்டத்துச் சிற்றூர்; a village in Erode district.

*[கடுக்கன் + பாளையம் - கடுக்கன்பாளையம் → கடுக்கம்பாளையம். னகர ஈறு மகர ஈறாகத் திரிந்தது.]*

**கடுக்கரை** *kaḍukkarai,* பெ.(n.) கன்னியாகுமரி மாவட்டத்துத் தோவாளை வட்டத்துச் சிற்றூர்; a village in *Tōvāḷai* taluk in *Kaṉyā-kumari* district.

*[கடுக்கன் + கரை - கடுக்கங்கரை → கடுக்கரை.]*

**கடுக்கல்** *kaḍukkal,* தொ.பெ.(vbl.n.) கடுக்குதல், உளைதல்; boring pain.

*[கடு → கடுக்கல்.]*

**கடுக்கல்லூர்** *kaḍukkallūr,* பெ.(n.) காஞ்சிபுர மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kanchipuram district.

*[கடுக்கன் + நல்லூர் - கடுக்கனல்லூர் - கடுக்கல்லூர்.]*

**கடுக்களா** *kaḍu-k-kaḷā,* பெ.(n.) எட்டி; nux vomica tree. (சா.அக.)

*[கடு + களா. களை → களா.]*

**கடுக்கன்**[1] *kaḍukkaṉ,* பெ.(n.) ஆடவர் காதணி; ear ring for men. *"காதுப்பொ னார்ந்த கடுக்கன்" (திருமந்.1424).*

ம. கடுக்கன்; **கோத.** கட்க்; குட.. கடிக.

*[கடி → கடு → கடுக்கன். கடித்தல் = பொருத்துதல், பிடிப்பாக இருத்தல்.]*



கடுக்கன்

**கடுக்கன்**[2] *kaḍukkaṉ,* பெ.(n.) 1. குப்பைமேனி; rubbish plant. 2. ஒட்டுப்புல்; sticking grass (சா.அக.).

*[கடுக்கன்[1] → கடுக்கன்[2].]*

**கடுக்காசா** *kaḍu-k-kāšā,* பெ.(n.) பழுப்பு நிறமான சுவையில்லாத மீன் (செங்கை மீனவ.); a kind of grey coloured and testeless fish.

*[கடு + கச்சல் - கடுக்கச்சல் → கடுக்காசா.]*

**கடுக்காய்**[1] *kaḍu-k-kāy,* பெ.(n.) 1. திரிபலையென்னும் முக்காய்களுள் ஒன்று; gall-nut, one of the tiri palai. 2. கடுமரம்; chebulic myrobalan.

ம. கடுக்க, கடுக்கா, கடுகாய்; தெ. கரக, கரகாய; துட. கொட்கோய்; கோண். கர்காக, ககா; பர். கர்க; குவி. கர்க; கூ. கட்ரு காஉ (கார்ப்புச்சுவையுள்ள ஒரு பழம்).

*[கடு + காய். கடு = கசப்பு. நெல்லிக்காய், கடுக்காய், தான்றிக்காய் ஆகிய முக்காய்களும் தமிழ் மருத்துவரால் திரிபலை எனப்பட்டன.]*

**கடுக்காய்**[2] *kaḍu-k-kāy,* பெ.(n.) நுங்கின் முற்றிய பதம்; முற்றிய பனங்காய்; the hardened stage of the kernal of palm-fruit. கடுக்காய் வேண்டாம், இளங்காய் நுங்கு கொடு (உ.வ.).

*[கடு + காய். கடுத்தல் = முற்றுதல்.]*

**கடுக்காய்க்கற்பம்** *kaḍukkāy-k-kaṟpam,* பெ.(n.) கடுக்காயிலிருந்து உண்டாக்கும் ஒருவகை மூலிகை மருந்து; a kind of medicine prepared with a potent black gall-nut grown on the Himlayas,.

*[கடுக்காய் + கற்பம்.]*

**கடுக்காய்கொடு-த்தல்** *kaḍukkāy-k-koḍu-,* 4 செ.கு.வி. (v.i.) ஏமாற்றிவிடுதல்; to deceive, cheat, gull, hoax, to give one the slip.

*[கடுக்காய் + கொடு. நுங்கின் முதிர்ந்த காய் (உட்பருப்பு) கடுமைப்படுதலால் கடுக்காய் எனப்பட்டது. இளம் நுங்கினை வழுவைப் பதத்தில் தராமல் கடுக்காய்ப் பதத்தில் தந்து ஏமாற்றி விற்பதைக் கடுக்காய் கொடுத்தல் என்பர். நாளடைவில் ஏமாற்றுதல் என்னும் பொதுப் பொருளில் வழக்கூன்றியது.]*

**கடுக்காய்ச்சாயம்** *kaḍukkāy-c-cāyam,* பெ.(n.) கடுக்காய் நீர் தோய்த்து ஊட்டிய சாயம்; gall-nut dye.

*[கடுக்காய் + சாயம்.]*

**கடுக்காய்ச்சிப்பி** *kaḍukkāy-c-cippi,* பெ.(n.) குளத்தில் வளரும் ஒருவகைச் சிப்பி; a kind of shell found in tanks (சா.அக.).

*[கடுக்காய் + சிப்பி.]*

**கடுக்காய்த்தலையன்** *kaḍukkāy-t-talaiyaṉ,* பெ.(n.) 1. சிறியதலையுடைய ஒருவகைப் பாம்பு (மூ.அ.); a kind of snake with a small head. 2. சிறியதலையையுடைய ஆள் அல்லது காளை (யாழ்ப்.); man or bull with a small round head.

*[கடுக்காய் + தலையன்.]*

**கடுக்காய்த்துவர்ப்பு** *kaḍukkāy-t-tuvarppu,* பெ.(n.) கடுக்காயினின்று இறக்கும் வடிநீரைப் போன்றதொரு துவர்ப்புச் சுவையையுடைய ஊட்டச் சத்து; an astringent acid obtained from nut galls.

*[கடுக்காய் + துவர்ப்பு.]*

**கடுக்காய்நண்டு** *kaḍukkāy-nanḍu,* பெ.(n.) சிறு நண்டுவகை; a kind of small crab of the size of a gall-nut.

*[கடுக்காய் + நண்டு.]*

**கடுக்காய்நீர்** *kaḍukkāy-nīr,* பெ.(n.) கடுக்காய் ஊறிய நீர்; gall-nut soaked water.

*[கடுக்காய் + நீர். சிற்ப வேலைகளில் பிடிப்பு விசைக்காக சுண்ணாம்பு, மணல் கலந்த காரையோடு கடுக்காய்நீர் கலப்பர். மச்சு வீட்டிற்கு மேற்றளம் கட்டும்போது சுண்ணாம்புச் சுருக்கியில் பதநீருடன் கடுக்காய் நீரும் கலப்பதுண்டு (சுண்ணாம்புச் சுருக்கி = சுண்ணாம்பும் செங்கல்லும் கலந்த கலவை.]*

**கடுக்காய்ப்பூ** *kaḍukkāy-p-pū,* பெ.(n.) கடுக்காய் மரத்தின் பட்டை அல்லது இலைகளின் மேல் பூச்சிமுட்டைகளினால் ஏற்படும் புடைப்பு; curious gall-like excrescences on leaves, or barks of the gall-nut tree.

*[கடுக்காய் + பூ.]*



கடுக்காய் பூ

**கடுக்காவயல்** *kaḍukkā-vayal,* பெ.(n.) சிவகங்கை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Šivagaṅgai district.

*[கடுக்காய் + வயல் - கடுக்காய்வயல் → கடுக்காவயல். (கடுக்காய் மரத்தைச் சார்ந்த வயல்).]*

**கடுக்கிரந்தி** *kaḍukkirandi,* பெ.(n.) 1. இஞ்சி (யாழ்.அக.); ginger. 2. சுக்கு; dried ginger. 3. திப்பிலி மூலம்; the root of long-peper.

*[கடு + கிரந்தி.]*

**கடுக்கு[1]-தல்** *kaḍukku-,* 5. செ.குன்றாவி.(v.t.) 1. மேற்பூசுதல்; to gild. *'செம்பின்மேல் பொன் கடுக்கின குடம்' (S.I.I.ii,245).* 2. சுளித்தல்; to twist, as the face; to sneer, turn up one's nose at. முகத்தைக் கடுக்காதே. 3. ஒதுக்குதல்; to draw up, as one's bracelets. *"கையில் வளையைக் கடுக்கி" (திவ்.திருப்பா.18,வியா.172).*

*[கடு → கடுக்கு.]*

**கடுக்கு[2]-தல்** *kaḍukku-,* 5 செ.கு.வி.(v.i.) சினக்குறி காட்டுதல்; to show signs of indignation. *"ராமதூத னானென்று கடுக்கி" (இராமநா.உயுத்.62).*

*[கடுகு → கடுக்கு.]*

**கடுக்கு[3]-தல்** *kaḍukku-,* 5 செ.கு.வி.(v.i.) 1. நச்சுயிரிகளின் கடியினாலும் முள்ளின் குத்தலினாலும் கடிவாய் வலித்தல்; to throb with pain due to venomous insect bite or pricking of thorn. 2. நரம்புத்தளர்வாலும், கடுங்குளிராலும் இசிவு ஏற்படுதல்; to ache due to severe cold and weakness of nerves (சா.அக.).

*[கடு → கடுக்கு.]*

**கடுக்குமிழ்** *kaḍukkumiḻ-,* பெ.(n.) நிலக்குமிழமரம்; small cashmere tree (சா.அக.).

*[கடு + குமிழ்.]*

**கடுக்கென்(னு)-தல்** *kaḍukken(ṉu)-,* 11 செ.கு.வி.(v.i.) 1 வளருதல்; to grow up, grow in stature. அவன் கடுக்கென்ன நாட்செல்லும் (யாழ்ப்.). 2. மிகுதல் (வின்.); to increase in wealth or in learning, used sarcastically.

*[கடு → கடுக்கு + என்.]*

**கடுக்கென்றவன்** *kaḍukkeṉṟavaṉ,* பெ.(n.) இளமை கடந்தவன் (யாழ்ப்.); grown-up-man.

*[கடுக்கு + என்றவன். கடுக்கு = முதிர்ச்சி.]*

**கடுக்கென** *kaḍukkeṉa,* வி.எ.(adv.) விரைவாக; quickly.

ம. கடுகனெ; க. கட, கடது, கடிது. குட. கடிப.

*[கடுக்கு + என.]*

**கடுக்கெனல்** *kaḍukkeṉal,* பெ.(n.) கடுமைக் குறிப்பு; being hasty, passionate, peppery. *"கடுக்கெனச் சொல்வற்றாம்" (நாலடி.348).* 2. வன்மையாயிருத்தல்; being strict, adamant.

*[கடு → கடுக்கு + எனல். கடுக்கு - ஒலிக்குறிப்பு இடைச்சொல். ஒ.நோ. துணுக்கெனல், திடுக்கெனல்.]*

**கடுக்கை[1]** *kaḍukkai,* பெ.(n.) 1. கொன்றை; Indian laburnum. *"கடுக்கைமலர் மாற்றி வேப்பமலர் சூடி" (கல்லா.2).* 2. மருது (மலை.); saj. 3. கடுக்காய்; gall-nut.

க. கக்கெ, கக்கி; து. கக்கை.

*[கடி (மணம்கமழ்தல்) → கடு → கடுக்கை.]*

**கடுக்கை[2]** *kaḍukkai,* பெ.(n.) குறும்புச்செயல் (சேஷ்டை); naughtiness, mischief.

*[கடு → கடுக்கை.]*

**கடுக்கைக்கண்ணியன்** *kaḍukkai-k-kaṇṇiyaṉ,* பெ.(n.) சிவன்; Śiva.

*[கடுக்கை + கண்ணியன்.]*

**கடுக்கொடி** *koḍu-k-koḍi,* பெ.(n.) 1. கொடிவகை; (L.); leathery ovate-leaved moon seed. 2. கசப்புக்கொடி; bitter creeper. 3. நஞ்சுக்கொடி; naval cord. 4. நச்சுக்கொடி; a poisonous creeper (சா.அக.).

*[கடு + கொடி.]*

**கடுக** *kaḍuga,* வி.எ.(adv.) விரைந்து; quickly. *"மாரி கடிகொளக் காவலர் கடுக" (ஐங்குறு.29:1).*

மறுவ. சுருக்கா

*[கடு → கடுக. கடு = விரைவு.]*

**கடுகடு-த்தல்** *kaḍu-kaḍu-,* 4 செ.கு.வி.(v.i.) 1. சினக் குறிப்புக் காட்டுதல்; to show signs of anger, as by sour looks, harsh words, etc. *"முகங்கடு கடுத்தான்" (பிரபோத.11:46).* 2. விறுவிறுப்போடு வலித்தல்; to throb, as from the sting of a scorpion. தேள் கொட்டினால் கடுகடுவென்று இருக்கும். 3. உறைத்தல் (வின்.); to be too highly seasoned. கறி கடுகடுத்துப் போயிற்று.

தெ. கடகடா சூலிபடு (சினப்படுதல்)

*[கடு → கடுகடு.]*

**கடுகடுப்பு[1]** *kaḍu-kaḍuppu,* பெ.(n.) சினக்குறிப்பு; sign of hot temper, sternness, austerity, displeasure of countenance.

*[கடு + கடுப்பு.]*

**கடுகடுப்பு**[2] *kaḍu-kaḍuppu,* பெ.(n.) குத்துவலி; throbbing pain.

*[கடு + கடுப்பு.]*

**கடுகடுப்பு**[3] *kaḍu-kaḍuppu,* பெ.(n.) மிக்க உறைப்பு (வின்.); excessive seasoning.

*[கடு + கடுப்பு.]*

**கடுகத்தி** *kaḍukatti,* பெ.(n.) 1. மான்மணத்தி (கத்தூரி) மணமுடைய எலும்பு; a fragrant bone. 2. பேயத்தி; bitter fig (சா.அக.).

*[கடு → கடுகு + அத்தி.]*

**கடுகதி** *kaḍu-kadi,* பெ.(n.) விரைவு (யாழ்ப்.); high speed.

*[கடு + கதி.]*

**கடுகந்தம்** *kaḍukandam,* பெ.(n.) 1. இஞ்சிக்கிழங்கு; ginger-root. 2. வெள்ளைப்பூண்டு; garlic (சா.அக.).

*[கடு + கந்தம். கந்தம் = வேர்.]*

**கடுகம்**[1] *kaḍugam,* பெ.(n.) 1. கார்ப்பு (திவா.); pungency. 2 திரிகடுகங்களுள் ஒன்று; any one of the three special spices used in medicine viz, சுக்கு, மிளகு, திப்பிலி. 3. திரிகடுகம் என்னும் நூல்; a didactic poem. *"முப்பால் கடுகங் கோவை" (தனிப்பா.).* 4. கடுகுச்சிவலை (கடுகுரோகிணி); Christmas rose.

*[கடுகு → கடுகம். ஒ.நோ. உலகு → உலகம், குமுது → குமுதம், நஞ்சு → நஞ்சம் (செல்வி. 78, பிப். பக்.283).]*

கடுகம் > **வ.** கடுக (katuka) உகரவீற்றுப் பொருட் பெயர்ச் சொற்கள் எல்லாம் பெருமைப் பொருள் கருதாவிடத்தும் அம்மீறு பெறுவது இயல்பு.

**கடுகம்**[2] *kaḍugam,* பெ.(n.) 1. குடம்; vessel, pot. 2. விரற்செறி; ring.

*[கடு → கடுகு → கடுகம்.]*

**கடுகம்மை** *kaḍugammai,* பெ.(n.) காய்ச்சலடித்த மூன்றாம் நாளில் தலையில் கடுகைப்போல் குருக்கள் தோன்றிப் பிறகு உடம்பில் பரவி, வலி, தொண்டைக்கம்மல், கழிச்சல் முதலிய குணங்களைக் காட்டும் ஓர்வகை அம்மை நோய்; a kind of measles appearing on the third day of fever with eruptions of the size of mustard seed, on the head which thence spreads over the body. It is marked by bodily pain, sore throat, purging etc., (சா.அக.).

*[கடுகு + அம்மை.]*

**கடுகர்** *kaḍukar,* பெ.(n.) **கடுக்காய்** பார்க்க; see *kaḍu-k-kāi* (சா.அக.).

*[கடு → கடுகர்.]*

**கடுகரஞ்சம்** *kaḍugarañjam,* பெ.(n.) கழற்கொடி; bonduc creeper (சா.அக.).

*[கடு + கரஞ்சம்.]*

**கடுகல்** *kaḍugal,* பெ.(n.) விரைவு; quickness.

*[கடுகு + அல் 'அல்' தொ.பெ.ஈறு.]*

**கடுகன்** *kaḍugaṉ,* பெ.(n.) ஆண்பால் இயற்பெயர்; proper name of a male.

*[கடு → கடுகு → கடுகன். 'அன்' ஆ.பா.ஈறு.]*

**கடுகனூர்** *kaḍugaṉūr,* பெ.(n.) வடார்க்காடு மாவட்டத்துச் சிற்றூர்; a village in North Arcot district.

*[கடுகன் + ஊர். கடுகன் - இயற்பெயர்.]*

**கடுகாரம்** *kaḍu-gāram,* பெ.(n.) 1. கடுகுச்சிவலை (கடுகுரோகிணி); Christmas rose. 2. சாதிபத்திரி; the mace or pulp of myristica fragrance (சா.அக.).

*[கடு + காரம்.]*

**கடுகாலாத்தி** *kaḍugālātti,* பெ.(n.) கடுகினாற் சுற்றும் ஆலாத்தி (யாழ்ப்.); mustard seeds waved before a newly married couple or others, and then cast into fire to dispel the effects of the evil eye.

*[கடுகு + (ஆலத்தி) → ஆலாத்தி.]*

**கடுகாலி** *kaḍu-gāli,* பெ.(n.) குன்றிமணி; red bead vine (சா.அக.).

*[கடு + கால். கால் → காலி. கால் = விதை, வித்து. காழ் → கால் (வித்து).]*

**கடுகாளன்** *kaḍugāḷaṉ,* பெ.(n.) இழிந்தவன் (கருநா.); a wickedman.

**க.** கடுகாள

**கடுகாற்சுரை** *kaḍu-gāṟšurai,* பெ.(n.) பேய்ச்சுரை; bitter-bottle guard (சா.அக.).

[கடுகால் + சுரை.]

**கடுகி** *kaḍugi,* பெ.(n.) **சுண்டை** (தைலவ.) பார்க்க; see *šuṇḍai.*

[கடு → கடுகி.]

**கடுகு[1]-தல்** *kaḍugu-,* 9 செ.கு.வி.(v.i.) 1. விரைதல்; to move fast; to blow hard, as wind. *"கால்விசை கடுகக் கடல்கலக் குறுதலின்"* (மணிமே.14:80). 2. மிகுதல்; to increase. *"பசி கடுகுதலும்"* (இறை.1:6).

**ம.** கடுகுக; **க.** கடு (விரைவு); **குட.** கடிப (விரைவு).

[கடு → கடுகு (வே.க.18).]



கடுகு செடி

**கடுகு[2]** *kaḍugu,* பெ.(n.) 1. கறுப்பு நிறமுள்ள தாளிப்பிற்குப் பயன்படும் கூலம் (பதார்த்த.1039); Indian mustard. *'கடுகு சிறுத்தாலும் காரம் போகாது'* (பழ.). 2. குன்றி (மலை.); crab's eye. 3. எண்ணெய்க் கசடு; lees of oil.

**ம., பட.** கடுகு, கட்க்; **துட.** கொட்க்; **குட.** கடு. **Cz.** horcice; **Ser.** croa, gorushica; **Turk., Ar.** hardal; **Swahili.** karadali.

Kaṭuka, kaṭu, sharp, pungent, fierce; assumed Šanṣkrit derivation kaṭ, to go. The corresponding Dravidian words is in Tamil kaḍ-u, the root meaning of which appears to be 'excessive'. Dr. Buhler derives kaṭu. from kṛit, to cut, and thinks kaṭu stands for kartu. The word kaṭu is deeply rooted in Sanskrit, and is a priori unlikely to have been borrowed from the Dravidian tongues; and yet it can scarcely be doubted, I think, that its origin is Dravidian. Not only are the direct derivatives of this word more numerous in Tamil than in Sanskrit, but collateral themes and meanings are also very abundant, whereas in Sanskrit no correlative root exists. kaḍ-u, Tam, to be sharp, is one of a cluster of roots which are united together by a family resembalance. Some of those are kaḍ-u-gu, to make haste; kaḍ-i, to cut, to reprove; kaḍ-i (with another formative), to bite; kaṟi, probably identical with kaḍi, curry; kaḍu-kaḍu (a mimetic word), to appear angry; kāḍu, and also kaḍam, kaḍaṟu, a forest. Moreover, the Sanskrit kaṭuka, pungent, appears to have been derived from the Tamil kaḍugu; mustard. Nouns formed from verbal themes in this manner, by suffixing the formative ku, pronounced gu, are exceedingly abundant in Tamil. (C.G.D.F.L.P. 568, 569)

[கள் = கடுப்பு. கள் → கடு → கடுகு = காரமுள்ள பொருள். **த.** கடுகு > **Skt.** *katuka.* அம்மீறு பெற்ற வடிவே ஈறுகெட்டு வடமொழியிலுள்ளது (வ.மொ.வ.104).]

**கடுகு[3]** *kaḍugu,* பெ.(n.) 1. முற்றி உலர்ந்த நிலை; stages of ripened and dried. 2. நன்கு முற்றி காய்ந்தகாய்; fully dried seed.

**க.** கடுகு

[கள் → கடு → கடுகு.]

**கடுகு[4]** *kaḍugu,* பெ.(n.) பழங்கால நீட்டலளவையுள் ஒன்று; one of the linear measure of olden times. எட்டு நுண்மணல் ஒரு கடுகு என்பதாம் (ஒ.மொ.138.)

[கடு → கடுகு.]

**கடுகு[5]-தல்** *kaḍugu-,* 9 செ.கு.வி.(v.i.) குறைதல்; to diminish, grow short. *"உறைகடுகி ஒல்லைக் கெடும்"* (குறள்,564).

[கெடு → கடு → கடுகி.]

**கடுகுக்கட்டி** *kaḍugu-k-kaṭṭi,* பெ.(n.) கடுகுபோன்ற சிறுகொப்புளம் (சீவரட்.); minute pustule on the skin, as small as a mustard seed.

[கடுகு + கட்டி.]

**கடுகுக்களி** *kaḍugu-k-kaḷi,* பெ.(n.) கடுகை அரைத்துக் களியாகக் கிண்டிச் செய்யும் கட்டு மருந்து; mustard poultice (சா.அக.).

[கடுகு + களி.]

**கடுகுக்காய்** *kaḍugu-k-kāy,* பெ.(n.) கடுகு கலந்த ஒருவகை ஊறுகாய்; a kind of pickle in which mustard is added to it with other ingredients (சா.அக.).

*[கடுகு + காய்.]*

**கடுகுச்சிவலை** *kaḍugu-c-civalai,* பெ.(n.) ஒருவகை மூலிகை; a kind of herb, Christmas rose.

*[கடுகு + சிவலை. சிவலை = சிவந்தது.]*

**கடுகுச்சோறு** *kaḍugu-c-cōṟu,* பெ.(n.) நெய்யுங் கடுகும் கலந்த அரிசிச் சோறு (வின்.); special preparation of boiled rice mixed with mustard seed and ghee.

*[கடுகு + சோறு.]*

**கடுகுடு-த்தல்** *kaḍuguḍu-,* 4 செ.கு.வி.(v.i.) 1. தெளிவின்றிப் பேசுதல்; to gabble, rattle in speaking, to speak rapidly and indistinctly. 2. சினந்து பேசுதல்; to speak angrily.

*[கடுகடு → கடுகுடு.]*

**கடுகுடுத்தான்** *kaḍuguḍuttāṉ,* பெ.(n.) துடிதுடிப்புள்ளவன் (யாழ்ப்.); fidgety person; restless man.

*[கடுகடுத்தான் → கடுகுடுத்தான்.]*

**கடுகுதிரள்(ளு)-தல்** *kaḍugu-diraḷ(ḷu)-,* 13 செ.கு.வி.(v.i.) காய்ச்சும்போது எண்ணெய்க்கடுகு கூடுதல் (வின்.); to form as a concretion when boiling oil.

*[கடுகு + திரள்.]*

**கடுகுநெய்** *kaḍugu-ney,* பெ.(n.) கடுகெண்ணெய் (பதார்த்த.165); oil extracted from mustard seeds.

ம. கடுகெண்ண

*[கடுகு + நெய்.]*

**கடுகுப்பட்டு** *kaḍugu-p-paṭṭu,* பெ.(n.) காஞ்சிபுர மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kanchipuram district.

*[கடுகு + பற்று - கடுகுப்பற்று → கடுகுப்பட்டு. கடுகுப்பற்று = கடுகு விளைந்த நிலம்.]*

**கடுகுப்பற்று** *kaḍugu-p-paṟṟu,* பெ.(n.) கடுகை அரைத்து வீக்கம் வலி முதலியவைகளுக்குப் போடும் பற்று; a coating of the mustard paste used generally in swelling, pain etc. (சா.அக.)

*[கடுகு + பற்று.]*

**கடுகுபதம்** *kaḍugu-padam,* பெ.(n.) மருந்தெண்ணெய் கடுகைப்போல் திரளும் பதம்; a stage in the preparation of medicinal oil, one of *marundeṇṇey-padam* (சா.அக.).

*[கடுகு + பதம்.]*

**கடுகுமணி** *kaḍugu-maṇi,* பெ.(n.) 1. வெண்கடுகு; white mustard. 2. கழுத்தணிவகை; a kind of necklace of small gold beads.

*[கடுகு + மணி.]*

**கடுகுமாங்காய்** *kaḍugu-māṅkāy,* பெ.(n.) மாங்காய் ஊறுகாய் வகை (ஆவக்காய்.); a kind of mango pickle, containing mustard in its composition.

ம. கடுகுமாங்ங

*[கடுகு[3] + மாங்காய்.]*

**கடுகுரோகிணி** *kaḍugu-rōgiṇi,* பெ.(n.) **கடுகுச்சிவலை** பார்க்க; see *kaḍugu-c-civalai.*

**கடுகெண்ணெய்** *kaḍugeṇṇey,* பெ.(n.) **கடுகுநெய்** பார்க்க; see *kaḍugu-ney.*

ம. கடுகெண்ண

*[கடுகு + எண்ணெய்.]*

**கடுகென** *kaḍugeṉa,* வி.எ.(adv.) விரைவாக; swiftly, quickly.

ம. கடுகெ

*[கடு → கடுக்க → கடுகு + என.]*

**கடுகை** *kaḍugai,* பெ.(n.) கடுகுச்சிவலை (கடுகுரோகிணி) (தைலவ. தைல.2); Christmas rose.

*[கடுகு → கடுகை.]*

**கடுகோரை** *kaḍukōrai,* பெ.(n.) *கடுகுச்சோறு* பார்க்க; see *kaḍugu-c-cōṟu.*

*[கடுகு + ஓரை. உறை (உணவு) → ஓரை → ஓரை. ஒ.நோ. புளியோரை, எள்ளோரை.]*

**கடுகோல்** *kaḍu-kōl,* பெ.(n.) பாகற்கொடி; balsam - pear, climber.

மறுவ. காவல்லி, கூலம் (சா.அக.).

*[கடு + கோல்.]*

**கடுங்கசப்பு** *kaḍuṅ-kaśappu,* பெ.(n.) மிகு கசப்பு; strong bitterness.

து. கடுகைபெ

*[கடும் + கசப்பு.]*

**கடுங்கண்**[1] *kaḍu-ṅ-kaṇ,* பெ.(n.) 1. தறுகண்மை; bravery. 2. கொடுமை; cruelty. *"கடுங்கணுழுவையடி போல வாழை" (கலித்.43:24).*

*[கடும் + கண். கடு = கொடுமை. கண் = திரட்சி, செறிவு. கடுங்கண் = கொடுமை மிகுதி, தீய குணங்களின் செறிவு. கள் → கண். திரட்சிப் பொருள் தந்து பண்புப் பெயர்களுக்கு ஈறாயிற்று. அலக்கண், இடுக்கண், இன்கண் போன்ற சொற்களை ஒப்பிடுக.]*

**கடுங்கண்**[2] *kaḍu-ṅ-kaṇ,* பெ.(n.) ஓலைச் சட்டத்தில் விழுந்துள்ள பதிவு அல்லது கீறல்; scratch or impression on a palm leaf mat.

*[கடும் + கண். கண் = குழி, பள்ளம், கீறல்.]*

**கடுங்கணாளன்** *kaḍu-ṅ-kaṇ-āḷaṉ,* பெ.(n.) கொடியவன்; cruel, savage, barbarous man.

*[கடும் + கண் + ஆளன்.]*

**கடுங்கதிர்** *kaḍu-ṅ-kadir,* பெ.(n.) கதிரவன்; Sun. *"கடுங்கதிர் திருகிய வேய்பயில் பிறங்கல்" (அகநா.17).*

*[கடும் + கதிர்.]*

**கடுங்கருத்து** *kaḍu-ṅ-karuttu,* பெ.(n.) நேரே பொருளைத் தாராத கருத்து; abstruse, far-fetched idea or meaning.

*[கடும் + கருத்து.]*

கடு, காரம் முதலியன மிக்கிருத்தலைக் காட்டுமோர் அடை. இங்கு மறைபொருள் உட்கருத்தாய் இருப்பதால், 'கடு' மறைபொருளுக்கு ஆளப்பட்டுள்ளது.

**கடுங்கழிச்சல்** *kaḍu-ṅ-kaḻiccal,* பெ.(n.) களைப்பை உண்டாக்கும் மிகு கழிச்சல்; purgative acting with violence so as to cause fatigue.

*[கடும் + கழிச்சல்.]*

**கடுங்கள்** *kaḍu-ṅ-kaḷ,* பெ.(n.) அழன்றகள்; toddy.

*[கடும் + கள்.]*

**கடுங்காடி** *kaḍu-ṅ-kāḍi,* பெ.(n.) மிகவும் புளித்த கள்; fermented toddy.

*[கடும் + காடி. காடி = புளித்த கள்.]*

**கடுங்காந்தி** *kaḍu-ṅ-kāndi,* பெ.(n.) 1. வைப்புச் செய்நஞ்சு; prepared arsenic. 2. வெள்ளைச் செய்நஞ்சு; white arsenic (சா.அக.).

*[கடும் + காந்தி (எரிதல், அழித்தல்).]*

**கடுங்காப்பு** *kaḍu-ṅ-kāppu,* பெ.(n.) *கடுங்காவல்* பார்க்க; see *kaḍu-ṅ-kāval.*

க. கடுகாபு (கருநா.)

**கடுங்காய்**[1] *kaḍu-ṅ-kāy,* பெ.(n.) 1. பழுக்காத பச்சைக்காய் (வின்.); unripe fruit. 2. துவர்ப்புக்காய்; astringent fruit. 3. முதிர்ந்த காய்; full grown fruit.

க. கடுகாயி

*[கடும் + காய்.]*

**கடுங்காய்**[2] *kaḍu-ṅ-kāy,* பெ.(n.) சாதிக்காய் (யாழ்.அக.); nutmeg.

*[கடும் + காய்.]*

**கடுங்காய்ச்சல்** *kaḍu-ṅ-kāyccal,* பெ.(n.) 1. மிகுதியான காய்ச்சல்; high fever. 2. அதிகமாகக் காய்கை; being over-heated as in the fire; being dried or scorched as in the Sun. 3. நச்சுக் காய்ச்சல்; malarial fever (சா.அக.).

க. கடுகாய்பு

*[கடும் + காய்ச்சல்.]*

**கடுங்காய்நுங்கு** *kaḍu-ṅ-kāy-nuṅgu,* பெ.(n.) முதிர்ந்த நுங்கு (யாழ்ப்.); palmyra fruit, the kernel or pulp of which is too far advanced to be eatable.

மறுவ. கடுக்காய்நுங்கு.

[கடும் + காய் + நுங்கு.]

**கடுங்காரக்குகை** *kaḍu-ṅ-kāra-k-kugai,* பெ.(n.) காரமான பொருள்களைக் கொண்டு செய்த குடுவை; a crucible made out of substance highly acrid to stand the test of great fire or high temperature. ஒ.நோ. ஐந்து சுண்ணக் குகை (சா.அக.).

[கடுங்காரம் + குகை (குடுவை).]

**கடுங்காரக்கூர்மன்** *kaḍu-ṅ-kāra-k-kūrmaṉ,* பெ.(n.) அமுரியுப்பு; salt extracted from urine, uric salt (சா.அக.).

[கடுங்காரம் + கூர்மன். கூர்மன் = விரைந்து பயன் தருவது.]

**கடுங்காரச்சத்து** *kaḍu-ṅ-kāra-c-cattu,* பெ.(n.) 1. பூண்டெரித்த சாம்பலின் சத்து; the popular name for a vegetable alkali potash soda etc. in an impure state procured from the ashes of plants. 2. கொடிய காரச்சத்து; caustic potash or caustic soda (சா.அக.).

[கடும் + காரம் + சத்து.]

**கடுங்காரச்சுண்ணம்** *kaḍu-ṅ-kāra-c-cuṇṇam,* பெ.(n.) *கடுஞ்சுண்ணம்* பார்க்க; see *kaḍu-ñ-juṇṇam* (சா.அக.).

[கடும் + காரம் + சுண்ணம்.]

**கடுங்காரச்செயநீர்** *kaḍu-ṅ-kāra-c-ceyanīr,* பெ.(n.) காரமான உப்புகளைக் கொண்டு இராப் பனியில் வைத்துச் செய்த ஊதைக்குதவும் ஒரு காரமான நீர்; a strong acrid preparation of a liquid obtained from the mixture of pungent salts by exposing it to night dew. This plays an important part in alchemy (சா.அக.).

[கடும் + காரம் + செயநீர்.]

**கடுங்காரநீர்** *kaḍu-ṅ-kāra-nīr,* பெ.(n.) 1. முட்டை வெண்கரு; the albumen of an egg. 2. பூ நீர்; efflorescent salt obtained from the soil of fuller's earth.

[கடும் + காரம் + நீர்.]

**கடுங்காரம்**[1] *kaḍu-ṅ-kāram,* பெ.(n.) ஒருவகை எரிமருந்து; powerful caustic.

[கடும் + காரம்.]

**கடுங்காரம்**[2] *kaḍu-ṅ-kāram,* பெ.(n.) மிக்க உறைப்பு; severe pungency.

[கடும் + காரம்.]

**கடுங்காரம்**[3] *kaḍu-ṅ-kāram,* பெ.(n.) சாதிபத்திரி; mace.

[கடும் + காரம்.]

**கடுங்காரவுப்பு** *kaḍu-ṅ-kāra-v-uppu,* பெ.(n.) எரியுப்பு; caustic soda or caustic potash.

[கடும் + காரம் + உப்பு.]

**கடுங்காரி** *kaḍu-ṅ-kāri,* பெ.(n.) தேவையற்ற தசைவளர்ச்சியைத் தடுக்கும் மருந்து; a medicine which reduces the unnecessary growth of flesh.

[கடும் + காரி (காரம் → காரி).]

**கடுங்கால்**[1] *kaḍu-ṅ-kāl,* பெ.(n.) பெருங்காற்று; cyclone. *"கடுங்கால் மாரி கல்லே பொழிய"* *(திவ்.பெரியதி.6.10:8).*

[கடும் + கால்.]

**கடுங்கால்**[2] *kaḍu-ṅ-kāl,* பெ.(n.) 1. வீங்கிய கால்; swollen leg. 2. கடிய உழைப்பால் முரட்டுத்தன்மை யுற்றகால்; the leg which became hard due to over exertion. 3. யானைக்கால்; elephantiasis (சா.அக.).

[கடும் + கால்.]

**கடுங்காலம்**[1] *kaḍu-ṅ-kālam,* பெ.(n.) 1. இன்னற்காலம்; hard times. 2. வற்கடக் காலம் (வின்.); hard season, as drought, scarcity, famine.

[கடும் + காலம்.]

**கடுங்காலம்**[2] *kaḍu-ṅ-kālam,* பெ.(n.) வெப்பமான காலம் (வின்.); hot season.

[கடும் + காலம்.]

**கடுங்காவல்** *kaḍu-ṅ-kāval,* பெ.(n.) வன்சிறை; rigorous imprisonment, opp. to வெறுங்காவல்.

க. கடுகாவல்

[கடும் + காவல்.]

**கடுங்குகை** *kaḍu-ṅ-kugai,* பெ.(n.) கடுங்காரக் குகை பார்க்க; see *kaḍu-ṅ-kāra-k-kugai.*

[கடுங்காரகுகை → கடுங்குகை.]

**கடுங்குட்டத்தாளி** *kaḍu-ṅ-kuṭṭa-t-tāḷi,* பெ.(n.) மிளகு தக்காளி; *pepper takkāḷi.*

மறுவ. மிளகுதக்காளி

[கடும் + குட்டம் + தாளி (குட்டம் = சிறியது).]

**கடுங்குடி** *kaḍu-ṅ-kuḍi,* பெ.(n.) அளவுக்குமிஞ்சிய குடிப் பழக்கம்; excessive drinking.

[கடும் + குடி.]

**கடுங்குரல்** *kaḍu-ṅ-kural,* பெ.(n.) கடிய ஒலி; harsh noise. *"கடுங்குரல் பம்பை"* **(நற்.212:5).**

க. கடுதனி

[கடும் + குரல்.]

**கடுங்கூர்மை**[1] *kaḍu-ṅ-kūrmai,* பெ.(n.) அறக்கூர்மை; extreme sharpness.

[கடும் + கூர்மை.]

**கடுங்கூர்மை**[2] *kaḍu-ṅ-kūrmai,* பெ.(n.) 1. சிறுநீருப்பு; uric salt. 2. கடலுப்பு; sea salt. 3. கந்தகவுப்பு; black salt. 4. வளையலுப்பு; glass gall; medicinel salt (சா.அக.).

[கடும் + கூர்மை (உறைப்பு).]

**கடுங்கொட்டை**[1] *kaḍu-ṅ-koṭṭai,* பெ.(n.) காட்டுமாங் கொட்டை; nut of wild mango.

மறுவ. கானல்மா

[கடும் + கொட்டை. கடும் = வலுத்த. கெட்டியான.]

**கடுங்கொட்டை**[2] *kaḍu-ṅ-koṭṭai,* பெ.(n.) எட்டிக் கொட்டை; nut of strycnine tree (சா.அக.).

[கடும் + கொட்டை. கடும் = கசப்பு.]

**கடுங்கோடை** *kaḍu-ṅ-kōḍai,* பெ.(n.) முதுவேனில்; hottest season.

க. கடுவேசிகெ, கடுபேசிகெ (மிகுவெயில்); து. கடுபைசாக.

[கடும் + கோடை.]

**கடுங்கோபம்** *kaḍu-ṅ-kōbam,* பெ.(n.) கடுஞ்சீற்றம் பார்க்க; see *kaḍu-ñ-cīṟṟam.*

க. கடுகோப, கடுகோப; து. கடுகோபு.

[கடும் + கோபம்.]

**கடுங்கோள்** *kaḍu-ṅ-kōḷ,* பெ.(n.) ஆதித்தர்; Ādityas. *"கடுங்கோள்க ளீராறு நாணக் கலித்தே"* **(தக்கயாகப்.542).**

[கடும் + கோள் - கடுங்கோள். கடும் = வெப்பக்கடுமை.]

**கடுங்கோன்** *kaḍu-ṅ-kōṉ,* பெ.(n.) தலைக்கழகத்தின் இறுதியிலிருந்த பாண்டிய வேந்தன்; a Pandya king who patronized the talai-k-kaḻagam at its close. *'காய்சின வழுதி முதல் கடுங்கோன் ஈறாக'* **(இறை.1 உரை).**

[கடும் + கோன்.]

**கடுச்சதம்** *kaḍu-c-cadam,* பெ.(n.) 1. ஆண்டு முழுதும் பூக்கும் மருந்துச்செடி; a medicinal shrub which gives flowers through out the year. 2. நந்தியாவட்டம்; Indian rose bay.

[கடு + சதம். சதம் = எப்பொழுதும்.]

ஆண்டு முழுவதும் பூக்கும் தன்மையால் சதம் எனப்பட்டது. இப் பயிரியின் வேர், தண்டு, இலை, பூ அனைத்தும் நோய் தீர்க்கும் தன்மை கருதிக் கடு அடையானது.

**கடுசரம்** *kaḍu-šaram,* பெ.(n.) கடுகுச்சிவலை பார்க்க (மலை.); see *kaḍugu-c-civaḷai.*

**கடுசித்தாழை** *kaḍu-ši-t-tāḻai,* பெ.(n.) பைந்தாழை (அன்னாசி)ப் பழம்; pine apple.

[கடு + சித்தாழை. சிறு + தாழை - சிற்றாழை → சித்தாழை.]

**கடுஞ்சளி** *kaḍu-ñ-caḷi,* பெ.(n.) கட்டியான சளி; phlegm. (சா.அக.)

[கடும் + சளி.]

**கடுஞ்சாதனை** *kaḍu-ñ-cādaṉai,* பெ.(n.) 1. விடாப்பிடி; perseverance. 2. ஒட்டாரம் (பிடிவாதம்); obstinacy. 3. அரும்பாடுபட்டு பெற்ற வெற்றி; accomplishment after difficult effort.

மறுவ. அருஞ்செயல், அருவினை.

*[கடும் + சாதனை. சாதனை = அருவினை, கடுஞ்செயல்.]*

**கடுஞ்சாரம்** *kaḍu-ñ-cāram,* பெ.(n.) 1. கடுமையான சாரம்; concentrated solution. 2. கொடிய சாரம் அல்லது நவச்சாரம்; a strong salt. 3. கொடிய அமிலம்; strong acid (சா.அக.).

*[கடும் + சாரம்.]*

**கடுஞ்சினநிலம்** *kaḍu-ñ-ciṉa-nilam,* பெ.(n.) உழமண் நிலம் (மூ.அ.); alkaline earth.

*[கடும் + சினம் + நிலம்.]*

**கடுஞ்சீதளத்தி** *kaḍu-ñ-cīdaḷatti,* பெ.(n.) பொன்னாங்கண்ணி; a vegetable green (சா.அக.).

*[கடும் + சீதளம் + அத்தி.]*

**கடுஞ்சீற்றம்** *kaḍu-ñ-cīṟṟam,* பெ.(n.) மிகுசினம்; violent anger, wrath.

**க.** கடுகோப்ப

*[கடும் + சீற்றம்.]*

**கடுஞ்சுண்ணக்காரம்** *kaḍu-ñ-cuṇṇa-k- kāram,* பெ.(n.) மிகக் கொடிய சுண்ணத்தின் காரம்; a strong stinging property of calcined salt; any alkaline salt of high potency (சா.அக.).

*[கடும் + சுண்ணம் + காரம்.]*

**கடுஞ்சுண்ணத்தி** *kaḍu-ñ-cuṇṇatti,* பெ.(n.) சீனக்காரம் (வின்.); alum.

*[கடும் + சுண்ணத்தி.]*

**கடுஞ்சுண்ணம்** *kaḍu-ñ-cuṇṇam,* பெ.(n.) 1. காரமான சுண்ணம்; powerful alkaline compound. 2. உலோகங்களை உருக்கவும், ஊதை நோய்க்கு வேண்டிய பெரிய மருந்துகளைப் பற்பமும் செந்தூரமும் ஆக்குவதற்கும், பெருந்தீயினுக்கும் அசையாது பழுதுறா வண்ணம் குகை செய்வதற்கும் பயன்படுத்தும் கல்லுப்பு, தாளகம், கற்சுண்ணம், பூநீறு, சீனக்காரம் ஆகிய இவை சேர்ந்த சுண்ணம்; severe acrid compound.

*[கடும் + சுண்ணம்.]*

**கடுஞ்சுரம்** *kaḍu-ñ-curam,* பெ.(n.) கொடிய காய்ச்சல்; a virulent type of fever (சா.அக.).

**க.** கடுஞ்சர்

*[கடும் + சுரம்.]*

**கடுஞ்சூடு** *kaḍu-ñ-cūḍu,* பெ.(n.) 1. மிகக் கொடுமையான சூடு; severe or fierce heat. 2. அதிகச் சூடு; over heat (சா.அக.).

*[கடும் + சூடு.]*

**கடுஞ்சூல்** *kaḍu-ñ-cūl,* பெ.(n.) 1. தலைச்சூல்; first pregnancy. 2. முதலில் பிறக்கும் குழந்தை; first born baby. *"நின்னயந் துறைவி கடுஞ்சூற் சிறுவன்" (ஐங்குறு.381).* 3. முதிர்ந்த கருப்பம்; advance pregnancy. *"இரைவேட்டுக் கடுஞ்சூல் வயவொடு கான லெய்தாது" (நற்.263).* 4. சிறந்த சூல்; choice pregnancy. *"கடும்புடைக் கடுஞ்சூல் நங்குடிக் குதவி" (நற்.370).* 5. முதன்மழை; opening shower of the rainy season. *"கடுஞ்சூல் மாமழை".*

**ம.** கடிஞ்நூல் (முதலில் பிறந்த மாந்தன் அல்லது விலங்கு), கடும்பிள்ள (முதலில் பிறந்த குழந்தை); **துட.** கரேச; **து.** கடிரு.

*[கடும் + சூல். சுல் → சூல்.]*

தலைப்பேறு கடுமையாகவும் மருட்சி தருவதாகவும் இருப்பதால் கடுஞ்சூல் எனப்பட்டது.

**கடுஞ்செட்டு** *kaḍu-ñ-ceṭṭu,* பெ.(n.) 1. மிக்க சிக்கனம்; extreme niggardliness. 2. அல்முறை வணிகம் (வின்.); unfair traffic, trading at an exorbitant profit. 3. கடும்பற்றுள்ளம்; stinginess. *'கடுஞ்செட்டுக் கண்ணைக் கெடுக்கும்' (பழ.).*

*[கடும் + செட்டு.]*

**கடுஞ்சொல்** *kaḍu-ñ-col,* பெ.(n.) கொடிய சொல்; harsh words, offensive language, one of four kinds of foul words. *"கடுஞ்சொல்லன் கண்ணிலன் ஆயின்" (குறள்,566).*

*[கடும் + சொல்.]*

**கடுஞ்சொல்லன்** *kaḍu-ñ- collaṉ,* பெ.(n.) வன் சொலாளன்; one who utters harsh words

"காட்சிக் கெளியன் கடுஞ்சொல்லன் அல்லனேல் மீக்கூறும் மன்னன் நிலம்" (குறள், 386).

[கடும் + சொல்லன்.]

**கடுஞ்சொறி** *kaḍ-ñ-coṟi,* பெ.(n.) ஒருவகைத் தோல்நோய்; a kind of skin disease.

[கடும் + சொறி.]

வீட்டு விலங்குகளிடமிருந்து பரவும் ஒருவகை நோய்; உடலின் தோல் தடித்துச் சுரசுரப்புப் பெற்ற நோயானதால் இப் பெயர் பெற்றது (சா.அக.).

**கடுத்தது** *kaḍuttadu,* பெ.(n.) மிக்கது; that which over flows. "நெஞ்சம் கடுத்தது காட்டும் முகம்" (குறள்,706).

[கடுத்த + அது - கடுத்தது (குறிப்பு வினையாலணையும் பெயர்).]

**கடுத்தம்**[1] *kaḍuttam,* பெ.(n.) 1. அழுத்தம்; closeness, tightness, compactness of cloth. 2. ஈயாத்தனம்; stinginess, close-fistedness. 3. நோய் முதலியன அழுந்தப் பற்றுகை; deep-seatedness, as of a disease or of a wound.

க. கடுதெ

[கடு → கடுத்தம்.]

**கடுத்தம்**[2] *kaḍuttam,* பெ.(n.) கடுமை; harshness. கடுத்தமானபேச்சு (உ.வ.).

[கடு → கடுத்தம்.]

**கடுத்தம்**[3] *kaḍuttam,* பெ.(n.) அட்டைக்கடுதாள்; card board. கடுத்தமிடுதல் (பாண்டி.).

[கடு → கடுத்தம்.]

**கடுத்தம்**[4] *kaḍuttam,* பெ.(n.) முகமதியருடைய சீர்வரிசை உடன்படிக்கை (யாழ்.அக.); deed of settlement of dowry among, Mohammadans.

[கடு → கடுத்தம்.]

**கடுத்தல்** *kaḍuttal,* பெ.(n.) கடுத்தவாயெறும்பு; an ant. 2. மீன்வகை (வின்.); a kind of fish.

[கடு → கடுத்தல்.]

**கடுத்தலூசி** *kaḍuttal-ūši,* பெ.(n.) **கல்லுளி** பார்க்க; see *kalluḷi.*

[கடுத்தல் + ஊசி.]

**கடுத்தலை** *kaḍu-t-talai,* பெ.(n.) வாள் (திவா.); sword.

ம. கடத்தல

[கடு + தலை. கடு = வெட்டு.]

**கடுத்தவாயெறும்பு** *kaḍutta-vāy-eṟumbu,* பெ.(n.) கட்டெறும்பு (வின்.); a large black ant.

[கடுத்த + வாய் + எறும்பு.]

**கடுத்தானெறும்பு** *kaḍuttāṉ-eṟumbu,* பெ.(n.) **கடுத்தவாயெறும்பு** பார்க்க; see *kaḍutta-vāy-eṟumbu.*

[கடுத்தான் + எறும்பு.]

**கடுத்தி** *kaḍutti,* பெ.(n.) தேள்கொடுக்கி; scorpian plant (சா.அக.).

[கடு → கடுத்தி (எரிச்சல் தருவது).]

**கடுத்திரயம்** *kaḍu-t-tirayam,* பெ.(n.) முக்கடுகம் (திரிகடுகு); medicinal stuff, numbering three (சா.அக.).

[கடு + திரயம் (மூன்று).]

வ. த்ரயம் > த. திரயம்.

**கடுத்திறங்கல்** *kaḍuttiṟaṅgal,* பெ.(n.) வலி உறுத்து வந்து பின்னடைதல்; pain subsiding after irritation (சா.அக.).

[கடுத்து + இறங்கல் (குறைதல்).]

**கடுத்திறவாலி** *kaḍu-t-tiṟavāli,* பெ.(n.) இறக்கை முளைத்த எறும்புவகை (நெல்லை); a species of winged ant.

[கடு → கடுத்தி + இறவாளி. இறகு + ஆளி - இறகாளி → இறவாளி (கொ.வ.).]

**கடுத்துவாய்** *kaḍuttu-vāy,* பெ.(n.) 1. எறும்பு (நாமதீப.); ant. 2. **கடுத்தானெறும்பு** பார்க்க; see *kaḍuttāṉ-eṟumbu.*

[கடு → கடுத்து + வாய். கடித்தவிடத்தில் கடுகடுக்கும் கொட்டுவாய் உள்ள ஏறும்பு.]

**கடுத்தேறு** *kaḍuttēṟu*, பெ.(n.) குளவி (இ.வ.); wasp.

[கடு → கடுத்து + ஏறு - கடுத்தேறு(எரிச்சல் மிகுவது).]

**கடுதலம்** *kaḍutalam*, பெ.(n.) முள்வெள்ளரி; prickly melon (சா.அக.).

[கள் (முள்) → கடு + (தலை) தலம்.]

**கடுதலைமுடிச்சு** *kaḍu-talai-muḍiccu*, பெ.(n.) கெடுசெயல்; treacherous act (யாழ்ப்.).

[கடு + தலை + முடிச்சு.]

**கடுதலைவிற்பூட்டு** *kaḍu-talai-viṟpūṭṭu*, பெ.(n.) வழுவாத பூட்டான சொல்; an oath.

[கடு + தலை + வில் + பூட்டு.]

**கடுதித்தம்** *kaḍu-tittam*, பெ.(n.) பேய்ப்புடல்; wild snake-gourd.

[கடு + தித்தம்.]

**கடுதித்தா** *kaḍu-tittā*, பெ.(n.) வெண்கடுகு; white mustard (சா.அக.).

[கடு + (நுல் → தில் → திலம் → தித்தம் →) தித்தா.]

**கடுதும்பி** *kaḍu-tumbi*, பெ.(n.) பேய்ச்சுரை; wild melon.

மறுவ. கடுத்தும்பை

[கடு + (தூம்பி →) தும்பி.]

**கடுதுரத்தி** *kaḍu-turatti*, பெ.(n.) அம்மான்பச்சரிசி; raw rice plant (சா.அக.).

[கடு + துரத்தி.]

இது குளிர்க்கழிச்சல் (சீதபேதி) நோய்க்குப் பயன்படுதலால் இப் பெயர் பெற்றது.

**கடுதைலம்** *kaḍu-tailam*, பெ.(n.) வெண்கடுகு; white mustard (சா.அக.).

[கடு + தைலம். (திலம் → தைலம்).]

**கடுந்தணல்நிலம்** *kaḍun-taṇal-nilam*, பெ.(n.) உழமண்நிலம்; soil of fuller's earth.

[கடும் + தணல் + நிலம்.]

**கடுந்தணற்கார்த்தி** *kaḍun-taṇaṟ-kārti*, பெ.(n.) நாயுருவி; Indian burr.

[கடும் + தணல் + கார்த்தி (காத்து + இ - காத்தி → கார்த்தி. கொ.வ.). இது நெருப்பைத் தாக்கிச் சுடாதிருக்கும்படிச் செய்வதால் இப் பெயர் பெற்றது.]

**கடுந்தரை** *kaḍun-tarai*, பெ.(n.) வன்னிலம்; hard soil.

[கடும் + தரை.]

**கடுந்தவம்** *kaḍun-davam*, பெ.(n.) நோன்பு; act of austerity.

க. கடுநேம

[கடும் + தவம்.]

**கடுந்தழற்பூமி** *kaḍun-taḻaṟ-pūmi*, பெ.(n.) **கடுந்தணல் நிலம்** பார்க்க; see *kaḍun-taṇal-nilam*.

[கடும் + தழல் + பூமி.]

**கடுந்தாகம்** *kaḍun-tāgam*, பெ.(n.) மிக்க தாகம்; extreme or intense thirst (சா.அக.).

[கடும் + தாகம். தவ்வு → தாவு → தாவம் → தாகம்.]

**கடுந்தாம்** *kaḍuntām*, பெ.(n.) **கடுந்தாகம்** பார்க்க; see *kaḍun-tāgam*. *"கடுந்தாம் பதிபாங்குக் கைதெறப் பட்டு" (கலித்.12:5).*

க. கடுநீரஅடசு

[கடும் + (தாவம்) தாம்.]

**கடுந்தாளி** *kaḍun-tāḷi*, பெ.(n.) 1. வெண்தாளி; a white variety of *tāḷi*. 2. வெள்ளைப் பூத் தாளி; false tragacanth (சா.அக.).

[கடும் + தாளி]

**கடுந்தி** *kaḍundi*, பெ.(n.) **கடுந்தணற்கார்த்தி** பார்க்க; *see kaḍun-taṇar-kārti.*

[கடு → கடுந்தி.]

**கடுந்திரு-த்தல்** *kaḍundiru-*, 4 செ.கு.வி.(v.i.) முகங்கடுத்துக் கடுப்பாதல் (இ.வ.); to show anger in one's countenance.

[கடு → கடுந்து (வி.எ.) + இரு.]

**கடுந்திலாலவணம்** *kaḍun-tilā-lavaṇam,* பெ.(n.) எள்ளுப்பு; salt obtained from sesame seed.

*[கடும் + திலம் + லவணம். த. நுல் → தில் > Skt. திலம் = எள், லவணம் = உப்பு.]*

**கடுந்தீ** *kaḍun-tī,* பெ.(n.) 1. மிகு நெருப்பு; wild fire. *"ஊர்தலைக் கொண்டு கனலுங் கடுந்தீயுள் நீர்பெய்தக் காலே சினந்தணியும்" (கலித்.144:59).* 2. மிகுவெப்பம்; extreme heat.

க. கடுகிச்சு

*[கடும் + தீ.]*

**கடுந்துடி** *kaḍun-tuḍi,* பெ.(n.) 1. ஒருவகை இசைக்கருவி; a musical instrument, tamaruka. *"கணைத்தொடை நாணுங் கடுந்துடி யார்ப்பின்" (கலித்.15:4).* 2. சிறார் விளையாட்டுகளுளொன்று; a game of children. 3. எறியக்கூடிய ஆய்தம் (சேரநா.); a kind of missile.

ம. கடுந்துடி

*[கடும் + துடி.]*

**கடுந்துன்பம்** *kaḍun-tunbam,* பெ.(n.) பெருந்துன்பம்; deep sorrow.

து. கடுதுக்கதெ

*[கடும் + துன்பம்.]*

**கடுந்தூக்கம்** *kaḍun-tūkkam,* பெ.(n.) ஆழ்ந்த உறக்கம்; deep sleep (சா.அக.).

*[கடும் + தூக்கம்.]*

**கடுந்தேறு** *kaḍun-tēṟu,* பெ.(n.) குளவிவகை; wasp. *"கடுந்தேறு றுகிளை" (பதிற்றுப்.71).*

க. கடந்தேறு

*[கடும் + தேறு.]*

**கடுந்தொழில்** *kaḍun-toḻil,* பெ.(n.) கரவினால் (வஞ்சத்தால்) செய்யும் கொடுந்தொழில்; wicked deed. *"காய்சின அவுணர் கடுந்தொழில் பொறாஅன்" (சிலப்.6:58).*

*[கடும் + தொழில்.]*

**கடுந்தோய்ச்சல்** *kaḍun-tōyccal,* பெ.(n.) படைக்கலன்களை உலையில் மிகுந்த சூடேற்றி முனையை மட்டும் நீரில் நனைத்தல் (வின்.); over-tempering as of a weapon.

மறுவ. துவச்சல்

க. கடுகூர்ப்பு

*[கடும் + தோய்ச்சல் (தோய்க்கை). இதனால் மிகுந்த கெட்டிமுனை கிடைக்கும்.]*

**கடுந்தோயல்** *kaḍun-tōyal,* பெ.(n.) **கடுந்தோய்ச்சல்** பார்க்க; see *kaḍun-tōyccal.*

*[கடும் + தோயல்.]*

**கடுநகை** *kaḍu-nagai,* பெ.(n.) 1. பெருஞ்சிரிப்பு; guffe.. 2. எள்ளல்பற்றிய நகை ; laughter of scorn, sarcastic laugh. *"கண்டனை யாகெனக் கடுநகை யெய்தி" (மணிமே.16:91).*

*[கடு + நகை.]*

**கடுநட்பு** *kaḍu-naṭpu,* பெ.(n.) மிக்க நட்பு; too close intimacy or friendship. *'கடுநட்புப் பகைகாட்டும்' (சீவக.909,உரை).*

க. கடுநண்

*[கடு + நட்பு.]*

**கடுநடை** *kaḍu-naḍai,* பெ.(n) 1. விரைந்த நடை; fast walk. *"கடுநடை யானை கன்றொடு வருந்த" (நற்.105:4).* 2. வருத்தத்தை யுண்டாக்கும் நடை (வின்.); tiresome walk, long tramp. 3. கடிய மொழிநடை; difficult style in writing.

*[கடு + நடை.]*

**கடுநிம்பம்** *kaḍu-nimbam,* பெ.(n.) **நிலவேம்பு** பார்க்க; see *nila-vēmbu.*

*[கடு + நிம்பம்.]*

**கடுநிலம்** *kaḍu-nilam,* பெ.(n.) கரம்பு நிலம் (சேரநா.); sterile land.

ம. கடுநிலம்

*[கடு + நிலம்.]*

**கடுநீர்** *kaḍu-nīr*, பெ.(n.) 1. காட்டம் மிகுந்த உப்புநீர்; concentrated salty water. 2. விரைந்து ஓடும் நீர்; water current.

*[கடு + நீர்.]*

**கடுநெருப்பு** *kaḍu-neruppu*, பெ.(n.) பெருந்தீ (வின்.); bonfire; wild-fire.

*[கடு + நெருப்பு.]*

**கடுநெறி** *kaḍu-neṟi*, பெ.(n.) 1. இடர்ப்பாடுடைய தடம்; path beset with hindrances. *"ஆண்டலை வழங்குங் கானுணங்கு கடுநெறி" (பதிற்.25:8).* 2. சான்றோரல்லாத பிறரால் ஒழுக வியலாத வாழ்க்கை; life style, which is very difficult for ordinary people.

*[கடு + நெறி.]*

**கடுநோய்** *kaḍu-nōy*, பெ.(n.) உளைமாந்தை என்னும் உள்நோய் (வின்.); internal abscess. 2. நாட்பட்ட நோய்; chronic disease.

க. கடுநோவு (பெருந்துன்பம்)

*[கடு + நோய்.]*

**கடுநோவு** *kaḍu-nōvu*, பெ.(n.) சாத்துயர் (மரண வேதனை); death agony.

*[கடு + வேதனை.]*

**கடுநோன்பு** *kaḍu-nōṉbu*, பெ.(n.) நீரும் பருகா நோன்பு; fast practiced without taking even water.

து. கடுவுபவாச

*[கடு + நோன்பு.]*

**கடுப்ப** *kaḍuppa*, இடை.(part.). ஓர் உவமவுருபு (தொல்.பொருள்.290); a particle of comparison.

*[கடு → கடுப்ப. கடு = பொருந்துதல், ஒத்திருத்தல்.]*

**கடுப்படக்கி** *kaḍu-p-paḍakki*, பெ.(n.) உடல்சூட்டைத் தணிக்கும் வெதுப்படக்கி எனும் மூலிகை; a kind of herb which reduces the internal heat.

மறுவ. எருமுட்டைப்பீநாறி, பேய் மிரட்டி.

*[கடுப்பு + அடக்கி.]*

கோடையில் வளரும் மிகுந்த நாற்றமுடைய இச் செடி மிகுதியான உடல் வெப்பத்தைத் தணிப்பதால் இப் பெயர் பெற்றது.

**கடுப்படி**[1] *kaḍu-p-paḍi*, பெ.(n.) 1. மனஉளைச்சல்; mental agony. 2. ஆரவாரம்; hubbub.

*[கடு = விரைவு. கடு → கடுப்பு + அடி.]*

**கடுப்படி**[2]**-த்தல்** *kaḍu-p-paḍi-*, 4 செ.குன்றாவி.(v.t.) *கடுப்புண்டாக்கு-தல்* பார்க்க; see *kaḍu-p-puṇḍākku-*.

*[கடுப்பு + அடி.]*

**கடுப்பான்** *kaḍu-p-pāṉ*, பெ.(n.) உறைப்பானதொரு கறி; strong flavoured side dish, curry. கடுப்பான் இல்லாமல் எப்படிச் சாப்பிடுவது (இ.வ.).

*[கடு → கடுப்பான்.]*

**கடுப்பிஞ்சு** *kaḍu-p-piñju*, பெ.(n.) 1. கடுக்காய்ப் பிஞ்சு; unripe fruit. 2. கசப்புப்பிஞ்சு; bitter tender fruit (சா.அக.).

*[கடு + பிஞ்சு.]*

**கடுப்பிறக்கு-தல்** *kaḍu-p-piṟakku-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. செருக்கை அகற்றல்; to reduce arrogance; conceit. 2. சீற்றத்தைத் தணித்தல்; to reduce anger.

*[கடுப்பு + இறக்கு.]*

**கடுப்பு**[1] *kaḍuppu*, பெ.(n.) 1. உறுதி; firmness. 2. கடுவினை, கடுமை; intensity, severity, saturation. 3. வன்திறம்; harshness, hardness.

து. கட்பு, கட்ப.

*[கடு → கடுப்பு.]*

**கடுப்பு**[2] *kaḍuppu*, பெ.(n.) 1. தேள்கொட்டினாற் போன்று வலி மிகுவிக்கும் உறைப்புணர்வு; throbbing pain. *"கடுப்புடைப் பறவைச் சாதியன்ன" (பெரும்பான்.229).* 2. நோவு; aching. *'முலைக் கடுப்பாலே தரையிற் பீச்சுவாரைப் போலே' (ஈடு.1.1:1). 'காலுக்குக் கடுப்பே தவிரக் கண்டபயன் ஏதுமில்லை' (பழ.).*

ம. கடுப்பு

*[கடு → கடுப்பு.]*

**கடுப்பு**[3] *kaḍuppu,* பெ.(n.) 1. விரைவு; speed. *"காற்கடுப் பன்ன கடுஞ்செலல் இவுளி" (அகநா.224:5).* 2. மிகுதி; excessive.

**து.** கடுப்பு, கடுப்ப.

*[கடு → கடுப்பு.]*

**கடுப்பு**[4] *kaḍuppu,* பெ.(n.) ஒப்பு (திவா.); comparing.

*[கடு → கடுப்ப → கடுப்பு.]*

**கடுப்பு**[5] *kaḍuppu,* பெ.(n.) 1. முகஞ்சுளிக்கை; twitching the face, to indicate either displeasure or anger. 2. வெகுளி; anger. *"கடுநவை யணங்குங் கடுப்பும் நல்கலும்" (பரிபா.4:49).*

*[கடு → கடுப்பு.]*

**கடுப்பு**[6] *kaḍuppu,* பெ.(n.) கருவூமத்தை (மலை.); purple stramony.

*[கரு → கடு → கடுப்பு.]*

**கடுப்பு**[7] *kaḍuppu,* பெ.(n.) செருக்கு; haughtiness, arrogance, self-conceit pride. *அவன் கடுப்பை இறக்கி விட்டான் (வின்.).*

**து.** கட்பு, கட்ப.

*[கடு → கடுப்பு.]*

**கடுப்பு**[8] *kaḍuppu,* பெ.(n.) 1. மிக்க வலிமை; great valour. 2. வன்கண்மை; bravery; fortitude. 3. உணர்ச்சித் துடிப்பு; force, vehmence.

**து.** கட்பு, கட்ப.

*[கடு → கடுப்பு.]*

**கடுப்பு**[9] *kaḍuppu,* பெ.(n.) கொண்டைவலையிற் கட்டுங் கோல்; pole attached to the fishing net, *koṇḍai-valai.*

*[கள் → கடு → கடுப்பு = பிடிப்பாயிருப்பது.]*

**கடுப்பு**[10] *kaḍuppu,* பெ.(n.) கடுக்காய் வேர் (வை.மூ.); root of gall-nut.

*[கடு → கடுப்பு.]*

**கடுப்பு**[11] *kaḍuppu,* பெ.(n.) மிகு உறைப்பு; pungency.

*[கடு → கடுப்பு. கடு = உறைப்பு.]*

**கடுப்புக்கழி** *kaḍuppu-k-kaḻi,* பெ.(n.) குழிவலையின் வாய்ப்புறத்தில் கட்டப்பட்டிருக்குங் கழி; stick tied at the mouth of fishing net known as *kuḻi-valai.*

*[கடுப்பு + கழி. கடுப்பு = வலிமை.]*

**கடுப்புக்கழிச்சல்** *kaḍuppu-k-kaḻiccal,* பெ.(n.) வயிற்றுப்போக்கு (வின்.); dysentery attended with gripping pain.

*[கடுப்பு + கழிச்சல். கடுப்பு = வலி, எரிச்சல்.]*

**கடுப்புச்சூடு** *kaḍuppu-c-cūḍu,* பெ.(n.) எருத்திற்கு விதையடித்த பின் இடும் சூடு (வின்.); cauterizing oxen after castrating, as a counter operation to promote healing.

*[கடுப்பு + சூடு - கடுப்புச்சூடு = செருக்கு அடக்கும் சூடு.]*

**கடுப்புண்டாக்கு-தல்** *kaḍuppuṇḍākku-,* 5 செ. குன்றாவி.(v.t.) 1. தினவை யுண்டாக்குதல்; causing an itching or stinging sensation. 2. பெண்ணின்பால் விருப்பு யுண்டாக்குதல்; to promote or excite passion in a female as per methods contemplated in the erotic science. 3. சினமூட்டல்; to excite anger. 4. எரிவுண்டாக்கல்; causing burning sensation (சா.அக.).

*[கடுப்பு + உண்டாக்கு.]*

**கடுப்புமரம்** *kaḍuppu-maram,* பெ.(n.) எள் முதலியன ஆட்டும் ஆலை (யாழ்ப்.); a kind of oil press.

*[கடுப்பு + மரம் - கடுப்புமரம் = வலிய மரம். கடுப்பு = வன்மை.]*

**கடுப்புரசு** *kaḍu-p-purašu,* பெ.(n.) வெள்ளைப்புரசு (L.); lilac silky laburnum.

*[கடுப்பு + புரசு. கடுப்பு = வன்மை.]*

**கடுப்பூ** *kaḍu-p-pū,* பெ.(n.) கடுக்காய்வேர்; the root of the gall-nut tree (சா.அக.).

*[கடு + பூ. கடு = உறைப்பு.]*

**கடுப்பூமத்தை** *kaḍuppūmattai,* பெ.(n.) கருப்பு ஊமத்தை; black datura (சா.அக.).

*[கடு → கடுப்பு + ஊமத்தை.]*

**கடுப்பெடு[1]-த்தல்** *kaḍuppeḍu-*, 4 செ.கு.வி.(.v.i.) நோவுண்டாதல்; to feel pain.

*[கடுப்பு + எடு.]*

**கடுப்பெடு[2]-த்தல்** *kaḍuppeḍu-*, 4 செ.குன்றாவி. (v.t.) செருக்கடக்குதல்; to put down a person`s pride.

*[கடுப்பு + எடு.]*

**கடுப்பை** *kaḍuppai*, பெ.(n.) வெண்கடுகு (மலை.); white mustard.

*[கடிப்பகை → கடிப்பை → கடுப்பை.]*

**கடுபங்கம்** *kaḍupaṅgam*, பெ.(n.) சுக்கு; dried ginger (சா.அக.).

*[கடுப்பு + அங்கம். கடுப்பு = உறைப்பு.]*

**கடுபடி** *kaḍupaḍi*, பெ.(n.) ஆரவாரம்; hubbub, confusion, commotion, tumult, bustle, agitation.

U. gadpadi

*[கடுப்பு + அடி - கடுப்படி → கடுபடி.]*

**கடுபத்திரம்** *kaḍu-pattiram*, பெ.(n.) சுக்கு (தைலவ.); dried ginger.

*[கடு + பத்திரம்.]*

**கடுபலம்** *kaḍu-palam*, பெ.(n.) **கடும்பலம்** பார்க்க; see *kaḍum-palam*.

Pkt. kaṭuāpala (one) having bitter fruit.

*[கடு (கசப்பு) + பலம்.]*

**கடுபாகம்** *kaḍupāgam*, பெ.(n.) 1. செரிமான காலத்தில் நெஞ்சுக்கரிப்பு ஏற்படும் நிலைமை; a stage producing acrid humours in digestion. 2. எண்ணெய் காய்ச்சும்பொழுது கடுத் திரளும் பாகம்; a degree of progression in the preparation of medicated oil, in which the oil is separated from its ingredients. 3. நச்சுப்பாகம்; poisoning (சா.அக.).

*[கடு + பாகம். கடு = உறைப்பு நஞ்சு.]*

**கடுபுடுகொள்ளு** *kaḍupuḍu-koḷḷu*, பெ.(n.) காட்டுக் கொள்ளு; jungle horse-gram (சா.அக.).

*[காடு + படு - காடுபடு → கடுபுடு + கொள்ளு.]*

**கடும்** *kaḍum*, கு.பெ.எ.(adj.) 1. மிகுதியாக, அதிகமாக; extreme. 2. வலுத்த; intense, fierce, vehement. *"கடுங்கண்ண கொல்களிற்றால்"* (புறநா.14). 3. மிகவும் கடினமாக; harsh, stringent. *'கடும்நட்பு கண்ணுக்குப் பொல்லாப்பு'* (பழ.).

து. கடுமுட்டு, கர்முட்டு; Pkt. kaṭuya.

*[கடு → கடும்.]*

**கடும்பகடு** *kaḍumpagaḍu*, பெ.(n.) வல்விலங்கு; ferocious animal.

*[கடும் + பகடு.]*

பகடு = விலங்குகளில் ஆண் வன்மைமிக்கதாயிருப்பதால் வல்விலங்கினைக் குறிப்பதாயிற்று.

**கடும்பகல்** *kaḍum-pagal*, பெ.(n.) 1. கடுமையாக வெப்பமுள்ள உச்சியம்பொழுது (தொல்.சொல்.383, உரை); noonday, being the time of intense heat. "கல்லாக் குறள கடும்பகல் வந்தெம்மை" (கலித்.94:14) 2. பட்டப்பகல்; broad day.

ம. கடும்பகல்

*[கடும் + பகல்.]*

**கடும்பகை** *kaḍum-pagai*, பெ.(n.) மிகு பகை; வன்மம் மீதூர்ந்த பகை; bitter enmity.

ம. கடும்பக; க. கடுவகெ.

*[கடும் + பகை.]*

**கடும்பச்சை** *kaḍum-paccai*, பெ.(n.) நாகப்பச்சைக்கல் (வின்.); a kind of green precious stone.

*[கடும் + பச்சை.]*

**கடும்பசி** *kaḍum-paši*, பெ.(n.) மிக்க பசி; extreme hunger, ravenous appetite. *"கடும்பசி கலக்கிய விடும்பை"* (புறநா.230:9).

*[கடும் + பசி.]*

**கடும்பட்டம்** *kaḍumpaṭṭam,* பெ.(n.) கன்னி (புரட்டாசி) மாதத்தில் ஒன்று முதல் பத்து நாள்களில் விதைக்கும் பருவம்; specific period of sowing during the first ten days of *puraṭṭāši.*

மறுவ. முதற் பட்டம்

*[கடு = விரைவு. கடு → கடும் + பட்டம்.]*

**கடும்பத்தியம்** *kaḍu-m-pattiyam,* பெ.(n.) உப்புப் புளி முதலியன சேர்க்காமல் உண்ணும் பத்தியம்; rigid diet, strict diet, as for eg. a milk diet eschewing salt, tamarind and chillies.

*[கடு → கடும் + பத்தியம். பதம் → பத்தியம்.]*

**கடும்பர்** *kaḍumbar,* பெ.(n.) தூக்கத்தில் உளறுதல்; muttering in sleep (துளுநா.).

து. கடும்பர்

*[கடு → கடும்பர்.]*

**கடும்பலம்** *kaḍum-palam,* பெ.(n.) 1. இஞ்சி; ginger. 2. கருணைக்கிழங்கு; yam.

*[கடு + பலம். கடு = உறைப்பு.]*

இஞ்சியின் உறைப்புத் தன்மை, கருணையின் காறல் தன்மை ஆகியவை நோக்கிக் 'கடு' அடையாயிற்று.

**கடும்பற்றுள்ளம்** *kaḍum-paṟṟuḷḷam,* பெ.(n.) இவறன்மை (குறள்,44 அதிகார விளக்கம், பரி. உரை); miserliness.

*[கடும் + பற்று + உள்ளம்.]*

வேந்தனும் தன்கண் நிகழாவண்ணம் கடியத்தகும் குற்றங்கள் ஆறு அவை - காமம், வெகுளி, கடும்பற்றுள்ளம், மான்ம், உவகை, மதம் (பற்று = பொருளின்மேலுள்ள ஆசை) என்பன என்று பரிமேலழகர் சுட்டிக்காட்டுகிறார்.

**கடும்பால்** *kaḍum-pāl,* பெ.(n.) 1. சீம்பால், ஈன்றணிமைப்பால்; beestings. 2. எருக்கம்பால்; the milky juice of caltrope (சா.அக.).

*[கடு + பால்.]*

**கடும்பிட்டலை** *kaḍum-piṭṭalai,* பெ.(n.) பொரித்த குழம்பு (இ.வ.); a kind of liquid curry for seasoning food.

*[கடும் + பிட்டலை.]*

**கடும்பிடி** *kaḍum-piḍi,* பெ.(n.) ஒட்டாரம், (பிடிவாதம்), விட்டுக் கொடுக்காமை; obstinacy, stubbornness (சேரநா.).

ம. கடும்பிடி

*[கடும் + பிடி.]*

**கடும்பிணி** *kaḍum-piṇi,* பெ.(n.) 1. எளிதில் தீராத நோய்; a disease not easily curable. 2. கடுமையான நோய்; serious illness (சா.அக.).

*[கடும் + பிணி.]*

**கடும்பிரி** *kaḍum-piri,* பெ.(n) சிக்கல்; wrong twist, over twisting (சேரநா.).

ம. கடும்பாரி

*[கடும் + பிரி.]*

**கடும்பு**[1] *kaḍumbu,* பெ.(n.) சுற்றம்; relations. *"கடும்பின் கடும்பசி களையுநர்க் காணாது" (புறநா.68:2).*

*[குடும்பு → கடும்பு (சு.வி.72).]*

**கடும்பு**[2] *kadmbu,* பெ.(n) 1. சும்மாடு (வின்.); pad of straw placed over the head, used in carrying a load. 2. துடைப்பக்குற்றி; the stump of a broom (சேர.நா.).

ம. கடும்பு

*[கடு → கடும்பு.]*

**கடும்பு**[3] *kaḍumbu,* பெ.(n.) ***கடும்புப்பால்*** பார்க்க; see *kaḍumbu-p-pāl.*

*[கள் (செறிவு, திரட்சி,) → கடு → கடும்பு.]*

**கடும்பு**[4] *kaḍumbu,* பெ.(n.) வயிறு; stomach.

தெ. கடுப்பு

*[கடு (மிகுதி, பெருக்கம், பெரிது) → கடும்பு.]*

**கடும்பு**[5] *kaḍumbu,* பெ.(n.) 1. கூட்டம்; gathering, multitude. *"மீனினங்கள் ஓர்கடும்பாய்" (பாகவத.9, இக்குவாகு.6).* 2. பாத்தி; the raised seed-bed (in rice field) (சேரநா.).

*[கடு (மிகுதி, பெருக்கம்) → கடும்பு.]*

**கடும்பு**[6] *kaḍumbu,* பெ.(n.) கொழுக்கட்டை; a bolus like preparation of rice flour (சேரநா.).

ம. கடும்பு; க. கடுபு.

*[கடு (செறிவு, திரட்சி) → கடும்பு.]*

**கடும்புப்பால்** *kaḍumpu-p-pāl,* பெ.(n.) 1. ஈன்றணிமைப்பால், சீம்பால்; first milk drawn immediately after calving. 2. காய்ச்சித் திரட்டிய சீம்பால்; beestings boiled into a paste.

*[கடு (செறிவு, திரட்சி) → கடும்பு + பால். கடும்பு = திரள், கட்டி.]*

**கடும்புல்** *kaḍum-pul,* பெ.(n.) ஒருவகைப்புல்; a kind of hard or rough grass (சா.அக.).

*[கடும் + புல்.]*

**கடும்புளிப்பு** *kaḍum-puḷippu,* பெ.(n.) மிகுபுளிப்பு; excessive sour (சா.அக.).

*[கடும் + புளிப்பு.]*

**கடும்புற்று** *kaḍum-puṟṟu,* பெ.(n.) 1. கெட்டியான புற்றுப்புண்; a hard or indurated sore-chancre. 2. கெட்டியான சொறிப்புண்; a hard cancerous tumour (சா.அக.).

*[கடும் + புற்று.]*

**கடும்புனல்** *kaḍum-punal,* பெ.(n.) 1. விரைந்தோடும் நீர்; fast flowing water. *"கடும்புனன் மலிந்த காவிரி" (அகநா.62:9).* 2. கடல்; sea, from its abundance of water. *"காமக் கடும்புன னீந்திக் கரைகாணேன்" (குறள்,1167).*

*[கடும் + புனல்.]*

**கடும்பெயல்** *kaḍum-peyal,* பெ.(n.) பெருமழை; torrential rain. *"கடும்பெயல் பொழியும் கலிகெழு வானே" (நற்.387:11).*

*[கடு → கடும் + பெயல்.]*

**கடும்பேதி** *kaḍumpēti,* பெ.(n.) **கடும்கழிச்சல்** பார்க்க; see *kaḍum-kaḻical.*

*[கடும் + பேதி.]*

**கடும்பை** *kaḍumbai,* பெ.(n.) **கடுப்பை** பார்க்க; see *kaḍuppai.*

*[கடிப்பகை → கடிப்பை → கடுப்பை → கடும்பை.]*

**கடும்போக்கு** *kaḍumpōkku,* பெ.(n.) கடிய நடைமுறை; extremism.

*[கடு → கடும் + போக்கு.]*

**கடும்வெயில்** *kaḍum-veyil,* பெ.(n.) கதிரவனின் மிகு வெப்பம்; scorching heat of the sun (சா.அக.).

*[கடு → கடும் + (வெய்யில்) வெயில்.]*

**கடுமம்** *kaḍumam,* பெ.(n.) கடுமை; hardness, difficulty.

H.,U. kaḍin; Ori. kaste; Jap. katai; Ar. gamid; Heb. karra; Chin. kunnan; G. hart; Du. hard; Dan.,Swed. hard; Norw. hard; Yid. hart; W. caled; O.E. heard; Gk. kratys; Nubian. ko-ger; Afrik. hard.

*[கடு → கடுமம். ஒ.நோ. கரு → கருமம். இச்சொல் வடமொழியில் கடினம் எனத்திரிந்தது.]*

**கடுமரம்** *kaḍu-maram,* பெ.(n.) 1. கடுக்காய்மரம் (திவா.); chebulic myrobalan. 2. எட்டி (மலை.); strychnine tree.

*[கடு (உறைப்பு, கசப்பு) + மரம்.]*

**கடுமலை** *kaḍu-malai,* பெ.(n.) காரீயமலை (மூ.அ.); graphite mountain.

*[கரு → கடு + மலை.]*

**கடுமழை** *kaḍu-maḻai,* பெ.(n.) பெருமழை; heavy rain.

*[கடு (மிகுதி) + மழை.]*

**கடுமறம்** *kaḍu-maṟam,* பெ.(n.) பீடார்ந்த நெஞ்சுரம்; strong will; bold attempt. *'உறுவலியுங் கடுமறமுங் காரணமாகத் துணிசெயல் நாடிச் சேணெடுந் தொலைவு சென்றுவாழும் இளைஞருமுளர்' (மு.தா.முன்.ப.23).*

*[கடு (செறிவு) + மறம்.]*

**கடுமன்** *kaḍuman,* பெ.(n.) 1. கொடுமை (யாழ்.அக.); cruelty. 2. கல்மனம் கொண்டவன், தீயவன்; a hard-hearted man, wicked man.

ம. கடுமன்

[கடு → கடும் → கடுமன்.]

**கடுமா**[1] *kaḍumā*, பெ.(n.) 1. குதிரை; horse. *"கடுமா கடவுவோருங் களிறுமேல் கொள்வோரும்"* (பரிபா.12:28).

[கடு (விரைவு) + மா. கடிய நடையுடைய தாகலின் கடுமா எனப்பட்டது.]

**கடுமா**[2] *kaḍumā*, பெ.(n.) 1. வல்விலங்கு; ferocious animal. *"கடுமா வழங்குதல் அறிந்தும்"* (நற்.257:9). 2. புலி; tiger.

[கடு + மா.]

அரிமா (சிங்கம்), வரிமா (புலி), கைம்மா (யானை), கரடி போன்றவற்றின் வன்மை கருதி அவை கடுமா எனப்பட்டன.

**கடுமாங்காய்** *kaḍu-māṅgāy*, பெ.(n.) மாங்காய் ஊறுகாய்; a kind of mango pickles.

ம. கடுகுமாங்ங, கடுமாங்ங.

[கடு + மாங்காய்.]

**கடுமான்**[1] *kaḍumāṉ*, பெ.(n.) சேரர் குடிப்பெயர்களுள் ஒன்று; one of the name of the kings of Chera clan.

[கடு → கடுவன் + மகன் - கடுவன் மகன் → கடுவன்மான் → கடுமான். ஒ.நோ. வெளி → வெளியன். கடுவன் - இயற்பெயர்.]

**கடுமான்**[2] *kaḍu-māṉ*, பெ.(n.) அரிமா; lion. *"கடுமான் கீழ்ந்த கடமலை"* (கல்லா.67:16).

[கடு + மான். மா → மான் = விலங்கு.]

**கடுமான்கோதை** *kaḍumāṉ-kōdai*, பெ.(n.) சேரமான் குட்டுவன் கோதை; a Cera king.

[கடுமான் + கோதை.]

கடுமான் சேரர் குடிப்பெயர்களுள் ஒன்று.

**கடுமானம்** *kaḍu-māṉam*, பெ.(n.) அணிகலன்களில் விலையுர்ந்த கற்களை இறுகப்பிடிக்க அடியில் வைக்கும் உலோகமாழைத் தகடு; a foil put under a precious stone set in an ornament (சேரநா.).

ம. கடுமானம்

[கடு + மானம். மானம் = அளவு, தன்மை.]

**கடுமீன்** *kaḍu-mīṉ*, பெ.(n.) சுறா முதலியன; ferocious fish, shark. *"கடுமீன் கலிப்பினும்"* (அகநா.52).

ம. கடிமீன்

[கடு + மீன்.]

**கடுமுட்டு**[1] *kaḍu-muṭṭu*, பெ.(n.) 1. இறுகப் பொருந்திய பொருத்து; tight joint. *ஏர்த்தடியைக் கடுமுட்டாகக் கலப்பையில் செருகிவிட்டார்கள்* (உ.வ.). 2. பெருத்த இடர்ப்பாடு; great trouble. *அவர் கடுமுட்டில் மாட்டிக் கொண்டார்* (உ.வ.).

[கடு + முட்டு = மோதுதல். மோதிப் பொருத்தல், மோதிச் சிதறல்.]

**கடுமுட்டு**[2] *kaḍu-muṭṭu*, பெ.(n.) பெருந்தட்டுப்பாடு, கிட்டாமை, முடை; severe scarcity. இங்கு எதுவும் கிடைப்பதில்லை, கடுமுட்டாக இருக்கிறது (உ.வ.).

[கடு + முட்டு. முட்டு = மட்டு, போதாமை.]

**கடுமுடு-த்தல்** *kaḍumuḍu-*, 4 செ.கு.வி.(v.i.) விரைதல்; to move quickly, to hurry.

[கடு + முடு. முடுக்கு → முடு.]

**கடுமுடுக்கு** *kaḍu-muḍukku*, பெ.(n.) 1. விரைந்து நடக்கை; hastening, speeding. 2. முடுக்கான அதிகாரம்; oppression, rigour, as by petty, arrogant officers dressed in brief authority. *'கடுமுடுக்குச் சேவகமாம் கம்பரிசிச் சம்பளமாம்'* (பழ.).

[கடு + முடுக்கு.]

**கடுமுடெனல்** *kaḍu-muḍeṉal*, இடை. (part.) ஓர் ஒலிக்குறிப்பு; rumbling, as the bowels; crackling sound as that produced when biting hard, dry things. நாய் எலும்பைக் கடுமுடென்று கடிக்கிறது (உ.வ.).

தெ. கடகட; க. கடகுட; து.,பட. கடகட.

[கடு + முடு + எனல்.]

**கடுமுடை**[1] *kaḍu-muḍai*, பெ.(n.) பெருந் தட்டுப்பாடு, பணமுடை; severe scarcity. விழாச் செலவுக்குப் பணம் கடுமுடையாய் இருக்கிறது (உ.வ.).

[கடு + முடை.]

**கடுமுடை**[2] *kaḍu-muḍai*, பெ.(n.) புலால்; flesh. *"புலவுப்புலி துறந்த கலவுக்கழி கடுமுடை" (அகநா. 3:9).*

மறுவ. கவுச்சு

*[கடு + முடை. முடை = நாற்றம் ஆகுபெயராய்ப் புலாலைக் குறித்தது.]*

**கடுமுரண்** *kaḍu-muran*, பெ.(n.) மிகுவலிமை; great valour. *"கடுமுரண் முதலைய நெடுநீ ரிலஞ்சி" (புறநா.37:10).*

ம. கடுமூலம்; க. கடுகலிதன.

*[கடு + முரண்.]*

**கடுமுள்**[1] *kaḍu-muḷ*, பெ.(n.) 1. போர்க்கருவி (திவா.); weapon used in warfare.

*[கடு + முள்.]*

**கடுமுள்**[2] *kaḍu-muḷ*, பெ.(n.) கண்டங்கத்தரி (மலை.); a prickly plant with diffuse branches.

*[கடு + முள். கடு = மிகுதி.]*

**கடுமுறவு** *kaḍum-uṟavu*, பெ.(n.) நெருங்கிய உறவு; intimate relationship. 'கடுமுறவு கண்ணைக்குத்தும்' (பழ.).

*[கடும் + உறவு. கடும் = மிகுதி, நெருக்கம்.]*

**கடுமுனை** *kaḍu-muṉai*, பெ.(n.) போர்க்களம்; battle field. "நெடுநெறிக் குதிரைக் கூர்வேல் அஞ்சி கடுமுனை யலைத்த கொடுவி லாடவர்" (அகநா. 372:9,10).

*[கடு + முனை. கடு = வீரம், மறத்தன்மை. முனை = மறத்தன்மையர் வீறார்ப்புடன் முனைந்து செல்லுமிடம், போர்க் களம்.]*

**கடுமூர்க்கம்** *kaḍu-mūrkkam*, பெ.(n.) மிகுசினம்; anger.

த. மூர்க்கம் > Skt. mūrga.

*[கடு + மூர்க்கம். முறுக்கு → முறுக்கம் → மூர்க்கம்.]*

**கடுமூலம்** *kaḍu-mūlam*, பெ.(n.) திப்பிலி வேர்; the root of long pepper (சேரநா.).

ம. கடுமூலம்; த. கடுமூலம்; Skt. kaṭumūla.

*[கடு + மூலம். கடு = காரம்.]*

**கடுமை** *kaḍumai*, பெ.(n.) 1. கொடுமை (சூடா.); severity, harshness, cruelty, hard-heartedness. *"தண்ணீர் பெறாஅத் தடுமாற் றருந்துயரங் கண்ணீர் நனைக்குங் கடுமைய" (கலித்.6:5).* 2. கண்டிப்பு (இ.வ.); rigour, strictness, sternness. 3. வன்மை; vehemence, ferocity, furiousness. 4. விரைவு; rapidity, speed. *"கடுவர லருவிக் கடும்புனல் கொழித்த" (மணிமே.17:25).* 5. கடினம் (வின்.); hardness, tenacity, firmness, roughness, ruggedness. 6. மிகுதி (ஐங்குறு.335.அரும்.); excessiveness, intensity, immoderateness, vastness. *"பனிக் கடுமையின் நனிபெரிது அழுங்கி (நற்.281:9).* 7. சினம் (சிலப்.5:55.உரை); anger, wrath. 8. வெம்மை (கலித்.12:5.உரை); heat. 9. வலிமை (வின்.); strength, sturdiness.

ம. கடும, கடுப்பம்; து. கட்ட்; குரு. கா்கா; மா. க்யா்கெ; பிரா. கரேன்; க. கடுமெ.

Skt. kharma (virility, strength); H. kaḍōradā.

*[கடு → கடுமை.]*

**கடுமொட்டு** *kaḍu-moṭṭu*, பெ.(n.) இளம்அரும்பு; tender bud. *"கடுமொட்டாயிருந்தால் தேன் உத்பந்நமாகிற வளவாகையாலே" (திவ்.திருநெடுந்.29, வியா.ப.226).*

*[கடு + மொட்டு.]*

அரும்பு, பூ, மலர், வீ, செம்மல் என்பன பூவின் நிலைகள். அரும்பு, மொட்டு, முகை என்பன ஒருபொருட் பன்மொழி. சிறிதாயும் கூராயுமிருப்பது அரும்பு (மல்லி, முல்லை போன்றன). பெரிதாயும் மொட்டையாயுமிருப்பது மொட்டு (அடுக்குமல்லி). பெரிதாயிருக்கும் அரும்பு முகை (தாமரை). அரும்பின் இளமையைக் குறிக்கக் கடு அடையானது.

**கடுமொடெனல்** *kaḍu-moḍeṉal*, இடை.(part.) *கடுமுடெனல்* பார்க்க; see *kaḍu-muḍeṉal*.

*[கடுமுடு → கடுமொடு + எனல்.]*

**கடுமொலியெக்காளம்** *kaḍum-oli-y-ekkāḷam*, பெ.(n.) எக்காளவகை (பாண்டி.); a kind of clarion.

*[கடும் + ஒலி + எக்காளம். எக்காளம் = எழுச்சியூட்டும் உரத்த ஒலி. அதை உண்டாக்கும் கருவி. கடும் - மிகுதிப் பொருள் முன்னொட்டு.]*

**கடுமொழி** *kaḍu-moḻi*, பெ.(n.) 1. **கடுஞ்சொல்** பார்க்க; see *kaḍuñcol*. "கடுமொழியுங் கையிகந்த

தண்டமும்" (குறள்,567). 2. வீரவுரை; courageous declaration.

க. கடுநுடி

[கடு + மொழி.]

**கடுரம்** *kaḍuram*, பெ.(n.) நீர்மோர் (யாழ்.அக.); butter - milk with water.

ம. கடுரம்

[கழலம் → கழரம் → கடரம் → கடுரம்.]

**கடுரவம்** *kaḍuravam*, பெ.(n.) தவளை; frog (சா.அக.).

[கடு + அரவம் - கடுரவம்.]

**கடுரவி** *kaḍu-ravi*, பெ.(n.) 1 கடுமையான வெயில்; scorching sun. 2. சித்திரை மாதத்து வெயில்; April sun (சா.அக.).

[கடு + இரவி - கடுரவி.]

**கடுலன்** *kaḍulaṉ*, பெ.(n.) கூனன்; hump backed man.

[குடுவல்(வளைவு) → குடுவலன் → கடுவலன் → கடுலன்(கொ.வ.).]

**கடுவங்கம்** *kaḍu-vaṅgam*, பெ.(n.) 1. இஞ்சி (மலை.); ginger. 2. வெள்வங்கம்; tin (சா.அக.).

[கடு + வங்கம்.]

**கடுவட்டி** *kaḍu-vaṭṭi*, பெ.(n.) மிகுவட்டி; exorbitant rate of interest.

[கடு + வட்டி.]

**கடுவந்தையார்** *kaḍuvantaiyār*, பெ.(n.) போரில் இறந்த விற்சிதை என்பானின் தந்தை; father of Viṟcitai, who died in war (செங்கம் நடுகற்கள்).

[கடுவன் + அந்தை + ஆர். கடுவன் - இயற்பெயர். அந்தை மதிப்புரவுப் பெயரீறு. ஆதன் + அந்தை - ஆதந்தை. ஆந்தை பார்க்க; see āndai. ஆர் உயர்வுப் பன்மையீறு; ஈறடுக்கி வந்தது.]

விற்சிதை என்பவன் தன் தலைவனுக்காகப் போரிட்டு உயிர் நீத்த வீரன்.

**கடுவயக்குன்றம்** *kaḍu-vaya-k-kuṉṟam*, பெ.(n.) இரும்புக்கனிமம் உள்ள மலை; a hill or mountain containing iron ore (சா.அக.).

[கடு + அயம் (இரும்பு) + குன்றம்.]

**கடுவரல்** *kaḍu-varal*, பெ.(n.) விரைந்து வருகை; hastening, running fast. "கடுவர லருவி" (மணிமே. 17:25).

க. கடுபரவு

[கடு + வரல்.]

**கடுவரை** *kaḍu-varai*, பெ.(n.) செந்தூக்கான மலை; precipitous mountain. "கடுவரை நீரிற் கடுத்துவர" (பு.வெ.11).

[கடு + வரை.]

**கடுவல்** *kaḍuval*, பெ.(n.) 1. வன்னிலம் (வின்.); ground hardened by sunshine after rain. 2. கடுங்காற்று; heavy gale, hurricane.

[கடு → கடுவு + அல். 'அல்' தொ.பெ.ஈறு.]

**கடுவழி** *kaḍu-vaḻi*, பெ.(n.) முள்ளும் கல்லும் பெருகி நெடுந்தொலைவாகிய கடுமையான பாதை (குமரேச.சத.30); rough path with stone and thorn.

[கடு + வழி.]

**கடுவன்**[1] *kaḍuvaṉ*, பெ.(n.) 1. தலைவன், மாவீரன்; a courageous man. 2. அறிவாளி; clever man. 3. செல்வன்; a rich man (துளுநா.).

து. கடுவெ

[கடு + அன்.]

**கடுவன்**[2] *kaḍuvaṉ*, பெ.(n.) 1. வலிமை மிக்க ஆண் விலங்கு; male animal. 2. ஆண் குரங்கு; he monkey. "கடுவனும் அறியும் அக் கொடியோ னையே" (குறுந்.26). 3. ஆண் பூனை; tom-cat.

ம. கடுவன்; க. கடவ; கோத். கட்வன்; மால. கட; பெர். கடோ; தெ. கோத்தி; குட., துடவ. கொடன்; கொலா(சிங்.) கடி; சந்தாலி. கடி; கை. க்வொடி; கோண். கொஜு; பட. கோத்தி.

**Asian:** - **Indon.** kutjing; **Ar.** qit; **Heb.** chat-ul; **Jap.** neko.

**European:** - **Pol.** kot; **Russ.** koshka; **Cz.** kocka; **Ser.croa.** Macka; **Hung.** macska; **G.** katze, kut; **Du.,Dan.**

kat; Ice. kottr; ME. catt, catte; OE.,E.cat; AS. car; Norw. katt; Yid. kats; Afrik. kat; L.L. cattus; L. catta; Gk. ga'ta; It. gatto; F. chat; Sp.,Port. gato; W. cath; Ir. cathu; Gael. cat; Ṭurk. kẹdi; Finn. kissa, katti; O.H.G. kazza; M.H.G. kartze; O.Ir. cat; O.Slav. koṭuka, kotel'a; Swed. katt; Pol. kot; Finn. kissa; Esp. kato; Lith. kate.

African:- Nubi. kadis.

[கடு + அன்.]

**கடுவன்**[3] *kaḍuvaṉ*, பெ.(n.) ஆண்பால் இயற்பெயர்; a proper name of the males. கடுவன் இளவெயினனார் கடைக்கழகப் புலவருள் ஒருவர்.

[கடு + அன் - கடுவன் (உடல் வலிமை சான்றவன்.]

**கடுவன்**[4] *kaḍuvaṉ*, பெ.(n.) இடையிற் படரும் படை; eruption on the waist.

[கடு + அன்.]

**கடுவன்**[5] *kaḍuvaṉ*, பெ.(n.) மாவிலங்கை; round berried cuspidate-leaved Singam tree.

[கடு + அன்.]

இம் மரத்தின் வன்மைகருதிக் கடுவன் எனப்பட்டது.

**கடுவன்**[6] *kaḍuvaṉ*, பெ.(n.) மற்போரில் வல்லவன், மல்லன்; boxer.

[கடு → கடுவன்.]

**கடுவன்**[7] *kaḍuvaṉ*, பெ.(n.) 1. கொடியவன்; wicked man. 2. கொடுமை; cruelty.

ம. கடுமன்

[கடு + வ் + அன்.]

**கடுவன்**[8] *kaḍuvaṉ*, பெ.(n.) சத்துணவுக் குறைவினால் ஏற்படும் காற்கடுவன் நோய்; a kind of skin disease which affects the leg between knee and ankle due to the malnutrition.

[கடு → கடுவன்.]

**கடுவன்கரப்பன்** *kaḍuvaṉ-karappaṉ*, பெ.(n.) கடுவான்கரப்பான் பார்க்க; see *kaḍuvāṉ-karappāṉ*.

[கடுவன் + கரப்பன்.]

**கடுவன்குருவி** *kaḍuvaṉ-kuruvi*, பெ.(n.) ஆண்குருவி; male sparrow.

[கடுவன் + குருவி.]

**கடுவன்பன்றி** *kaḍuvaṉ-paṉṟi*, பெ.(n.) ஆண்பன்றி; boar.

ம. கடுவன் (பன்றி, பூனை ஆகியவற்றின் ஆண்.)

[கடுவன் (ஆண்) + பன்றி.]

**கடுவன்பூனை** *kaḍuvaṉ-pūṉai*, பெ.(n.) ஆண்பூனை; tom-cat.

[கடுவன் + பூனை.]

**கடுவன்முசல்** *kaḍuvaṉ-mušal*, பெ.(n.) கடுவன்முயல் பார்க்க; see *kaḍuvaṉ-muyal*.

[கடுவன்முயல் → கடுவன்முசல் (கொ.வ.).]

**கடுவன்முயல்** *kaḍuvaṉ-muyal*, பெ.(n.) ஆண்முயல் (வின்.); buck hare.

[கடுவன் + முயல். கடுவன் = ஆண்.]

**கடுவனிளமள்ளனார்** *kaḍuvaṉ-iḷa-maḷḷaṉār*, பெ.(n.) கடைக்கழகப் புலவர்களில் ஒருவர் (நற்.150); a poet of last Šangam age.

[கடுவன் + இள + மள்ளனார். கடுவன் = மற்போரில் வல்லவன். மள்ளன் = செழியன்.]

**கடுவனிளவெயினனார்** *kaḍuvaṉ-iḷa-v-veyiṉaṉār*, பெ.(n.) கடைக்கழகப் புலவர்களில் ஒருவர் (பரிபா.3,4,5); a poet of the last Šangam age.

[கடுவன் + இள + எயினன் + ஆர். குறிஞ்சி நிலத்து எயினக்குடியினர்.]

**கடுவா** *kaḍuvā*, பெ.(n.) கண்களை மஞ்சணிறமாக்கும் குதிரைநோய் (அசுவசா.88); a disease of the horse in which its eyes grow yellow (சா.அக.).

[கடுவு → கடுவா.]

**கடுவாக்கு** *kaḍu-vākku*, பெ.(n.) கொடுஞ்சொல்; hard word, unkind word, cruel word (சேரநா.).

ம. கடுவாக்கு

[கடு + வாக்கு.]

**கடுவாகம்** *kaḍuvāgam,* பெ.(n.) புறாமுட்டை; the egg of a dove (சா.அக).

*[கடுவு + அகம் - கடுவகம் → கடுவாகம்.]*

**கடுவாய்**[1] *kaḍu-vāy,* பெ.(n.) 1. கழுதைப்புலி; hyena. *"செங்கை வெங்கடுவாய்" (இரகு.தசரதன் சாப.62).* 2. கொடூரமான வலியவன்; a violent, cruel person. 3. கொடுவாய் மீன்வகை; a kind of *koduva* fish (சேரநா).

ம. கடுவ (வரிப்புலி); து. கடுவாயி (ஒருவகை மீன்.); கொலா. டுவா; கூய். டுவ்வு (புலி) H. bāg.

*[கடு + வாய் - கடுவாய்.]*

கோடிய வாயுடைய கொடுவாய் மீனைக் கடுவாய் மீன் என வழங்குவது கொச்சை வழக்கு.

**கடுவாய்**[2] *kaḍuvāy,* பெ.(n.) **கடுவாய்ப்பறை** பார்க்க; see *kaḍu-vāy-p-paṟai. "கடுவா யிரட்ட வளைவிம்ம" (நந்திக்.6).*

*[கடு + வாய் - கடுவாய் (உரத்த ஒசை எழுப்புவது).]*

**கடுவாய்**[3] *kaḍu-vāy,* பெ.(n.) காவிரியின் கிளையாறு; name of a branch of the river Kāveri in Tanjore district. "*கடுவாய் மலிநீர்க் குடவாயில்" (தேவா.762-11).*

*[கடு + வாய். கடு = விரைவு. வாய் = வழி. கடுவாய் = விரைந்து ஓடிவரும் நீர்ப்பெருக்கு.]*

**கடுவாய்**[4] *kaḍuvāy,* பெ.(n.) நாய்; dog (சா.அக.).

*[கடு + வாய்.]*

**கடுவாய்**[5] *kaḍu-vāy,* பெ.(n.) நாய்த்துளசி; hoary basil (சா.அக.).

*[கடு → கடுவை → கடுவாய்]*

**கடுவாய்ப்பறை** *kaḍu-vāy-p-paṟai,* பெ.(n.) ஒருவகை போர்ப்பறை; a kind of drum producing a big volume of sound. *"கடல்போன் முழங்குங் குரற்கடுவாய்ப் பறையுடைப் பல்லவர்கோன்" (திவ். பெரியதி.2.9:9).*

*[கடு + வாய் + பறை.]*

அகன்ற வாயுடைமையின் இப்பெயர் பெற்றது.

**கடுவாயன்**[1] *kaḍuvāyaṉ,* பெ.(n.) 1. சினத்தால் எரிந்து விழும் இயல்பினன்: one who bawls out in anger (கொ.வ.). 2. கழுதை; ass.

க. கடுநுடிகார

*[கடுவாய் + அன்.]*

வன்சொல் உடைமையால் சினப்பவனையும், வல்லோசை உடைமையால் கழுதையையும் கடுவாய் குறித்தது. 'அன்' ஒன்.பா.ஈறு.

**கடுவாயன்**[2] *kaḍu-vāyaṉ,* பெ.(n.) நஞ்சுடைய பாம்பு; poisonous snake.

*[கடு + வாயன். கடு = நஞ்சு.]*

**கடுவாயெறும்பு** *kaḍu-vāy-eṟumbu,* பெ.(n.) ஒருவகைக் கருப்பு எறும்பு; a kind of black-ant.

*[கடுவாய் + எறும்பு.]*

கடுவாய் = கடுக்கும் படியாகக் கடிக்கும் இயல்புடைய வாய். கடித்த இடத்தில் குருதி வருதலும் உண்டு (சா.அக.).

**கடுவான்** *kaḍuvāṉ,* பெ.(n.) **கடுவான்கரப்பான்** பார்க்க; see *kaḍuvāṉ-karappāṉ.*

*[கடு → கடுவான்.]*

**கடுவான்கரப்பான்** *kaḍuvāṉ-karappāṉ,* பெ.(n.) குழந்தைகளின் முழந்தாளுக்குங் காற்பரட்டுக்கும் இடையில்வரும் கரப்பான்நோய் (வின்.); eruption between the knee and ankle, in children.

*[கடு → கடுவான் + கரப்பான். கரை = குறைதல், இளைத்தல். கரப்பான் பார்க்க; see karappāṉ.]*

**கடுவிரைவு** *kaḍu-viraivu,* **கடுவேகம்** பார்க்க; see *kaḍu-vēgam.*

*[கடு + விரைவு.]*

**கடுவிலி** *kaḍuvili,* பெ.(n.) கடுகுச்சிவலை (கடுகுரோகணி); black hellebore (சா.அக.).

*[கடு + இல் + இ - கடுவிலி. இலி = இல்லாதது.]*

**கடுவிலை** *kaḍu-vilai,* பெ.(n.) மிகுவிலை; exorbitant price.

*[கடு + விலை.]*

**கடுவினை** *kadu-viṉai,* பெ.(n.) தீவினை; evil destiny. *"கடுவினை களையலாகும்" (திவ்.திருவாய். 10.2:8).*

க. கடுவோன, கடுபோன (மிக்கவலி, பிள்ளைப்பேற்று வலி).

*[கடு + வினை.]*

**கடுவு**[1] *kaduvu,* பெ.(n.) 1. வன்மை, உறுதி; hardness, strength. 2. உறுதியான காலவரம்பு; agreed time limit.

மறுவ. கெடுவு, கெடு.

க. கெடுவு (காலவரம்பு)

*[கடு (வன்மை, உறுதி) → கடுவு.]*

**கடுவு**[2] *kaduvu,* பெ.(n.) பாழ்நிலங்களில் முளைக்கும் வேளை; a herb which grows wildly on waste lands.

*[கடு → கடுவு.]*

வண்ணத்திலும் வடிவத்திலும் கடுகை ஒத்திருப்பதால் இப்பெயர் இதற்காயிற்று. இது நல்லவேளை நாய் வேளை என்று இருவகைப்படும். நல்ல வேளையின் ஊறுகாய் பித்தத்திற்கு மருந்தாம். நாய் என்னும் சொல் பயன்பாட்டிற்கு அதிகம் உதவாத செடிகளுக்கு வந்தது. ஒ.நோ. நாய்த்துளசி.

**கடுவெப்பம்** *kaduveppam,* பெ.(n.) மிக்க சூடு; excessive heat.

து. கடுசிகெ

*[கடு + வெப்பம்.]*

**கடுவெயில்** *kadu-veyil,* பெ.(n.) மிக்க வெயில்; scorching sun. *"கடுவெயில் திருகிய வேனில் வெங்காட்டு" (அக.நா.353:10).*

க. கடுவிசிலு, கடுவிசில், கடுபிசிலு.

*[கடு + வெயில்.]*

**கடுவெயிலுலர்-த்தல்** *kadu-veyil-ular-,* 4 செ.குன்றாவி.(v.t.) மருந்துப் பொருள்களைக் கொடிய வெயிலில் காய வைத்தல்; exposing any medicinal preparation to the scorching sun (சா.அக.).

*[கடு + வெயில் + உலர்.]*

**கடுவெளி** *kadu-veḷi,* பெ.(n.) 1. நிழலற்ற வெளியிடம்; dry, extensive plain, treeless waste. *"கானலை நீரென் றெண்ணிக் கடுவெளி" (விவேக.சிந்.).* 2. வானம்; ethereal sky. *"கடுவெளியோ டோரைந்து மானார்" (தேவா.44-7).*

*[கடு + வெளி.]*

**கடுவெளிச்சித்தர்** *kaduveḷi-c-cittar,* பெ.(n.) 15ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த புலவர்; a poet of 15th century.

*[கடுவெளி + சித்தர்.]*

**கடுவெளிநாற்பது** *kaduveḷi-nāṟpadu,* பெ.(n.) கடுவெளிச் சித்தரால் இயற்றப்பட்ட சிற்றிலக்கியம்; a version written by *Kaduveḷi-c-cittar.*

*[கடுவெளி + நாற்பது.]*

**கடுவேக்காடு** *kadu-vēkkādu,* பெ.(n.) 1. கடுஞ்சூடு; intense heat. 2. மிகுதியாக எரிதல்; burning with intense heat. 3. அதிகமாக வேகவைத்தல்; boiling excessively (சா.அக.).

*[கடு + வேக்காடு.]*

**கடுவேகம்** *kadu-vēgam,* பெ.(n.) மிகு விரைவு; super fast.

க. கடுபேக

*[கடு + வேகம்.]*

**கடுவேகன்** *kadu-vēgaṉ,* பெ.(n.) நீலச் செய்நஞ்சு; a prepared arsenic (சா.அக.).

*[கடு + (வேகம்) வேகன்.]*

**கடுவேகி** *kadu-vēgi,* பெ.(n.) சோர செய்நஞ்சு; a kind of prepared arsenic (சா.அக.).

*[கடு + (வேகம்) வேகி.]*

**கடுவேட்கை** *kadu-vēṭgai,* பெ.(n.) மிகுந்த நாவறட்சி; extreme thirst.

*[கடு + வேட்கை. வேள் + கை - வேட்கை.]*

**கடுவேலை** *kadu-vēlai,* பெ.(n.) கடற்பாசி; sea weed or sea - moss (சா.அக.).

*[கடு + (வேளை) வேலை.]*

**கடுவேலைக்கந்தரம்** *kaḍu-vēlai-k-kandaram*, பெ.(n.) **கடுவேலை** பார்க்க; see *kaḍu-vēlai* (சா.அக.).

*[கடு + (வேளை) வேலை + கந்தரம்.]*

**கடுவேனில்** *kaḍu-vēṉil*, பெ.(n.) **கடுங்கோடை** பார்க்க; see *kaḍuṅkōḍai*. *"கல்காயுங் கடுவேனிலொடு" (மதுரைக்.106).*

*[கடு + வேனில்.]*

**கடுவை**[1] *kaḍuvai*, பெ.(n.) 1. பறவை வகை (பிங்.); a kind of bird. 2. செம்பு; copper (சா.அக.).

*[கடு → கடுவை.]*

**கடுவை**[2] *kaḍuvai*, பெ.(n.) 1. தலைவன்; hero. 2. துணிவுள்ளவன்; courageous man. 3.அறிவாளி; clever man (துளுநா.).

**து.** கடுவெ

*[கடு → கடுவை.]*

**கடூகம்** *kaḍūgam*, பெ.(n.) நத்தைச்சூரி (நாமதீப.); bristly button weed.

*[கடு → கடூகம்.]*

**கடூரம்** *kaḍūram*, பெ.(n.) கொடுமை; cruelty.

*[கடு + அரவம் - கடுரவம் → கடூரம் = கூச்சல், குழப்பம், கொடுமை.]*

**கடூரி**[1] *kaḍūri*, பெ.(n.) 1. சதுரக்கள்ளி; square spurge. 2. முருங்கை; drumstick tree.

*[கடு + ஊரி.]*

**கடூரி**[2] *kaḍūri*, பெ.(n.) ஒருவகைத் தோல்நோய்; a kind of skin disease.

*[கள் → கடு (முள்) + ஊரி - கடூரி. நோயாளியின் தோல் முள் முளைத்தது போன்றிருப்பதால் இப்பெயர் பெற்றது.]*

**கடூழியச்சிறை** *kaḍūḻiya-c-ciṟai*, பெ.(n.) கடுங்காவல் (யாழ்ப்.); rigorous imprisonment.

*[கடு + ஊழியம் + சிறை.]*

**கடேந்திரநாதர்** *kaḍēndiranādar*, பெ.(n.) ஒரு சித்தர்; a šiddar.

*[கடு + இந்திரநாதர்.]*

**கடை**[1]**-தல்** *kaḍai-*, 2 செ.குன்றாவி.(v.t.) 1 கெட்டி நீர்மப் பொருளில் மத்துப் போன்றவற்றைக் கொண்டு சுழலச் செய்தல்; to churn. *"நெய்கடை பாலின் பயன்யாதும் இன்றாகி" (கலித்.110:17)* 2. மரம், இரும்புப் போன்றவற்றை குடைதல்; to turn in lathe. *"கடைந்த மணிச் செப்பென வீங்கு" (கூர்மபு.தக்கன்வே.52).* 3. மசித்தல்; to mash to a pulp. 4. அரைத்தல்; to grind.

ம. கடயுக; **க.** கடெ, கடி; **கோத.** கட்வ்; **துட.** கட், கற்த்; **குட.** கடெ; **து.** கடெயுனி, கடெவுனி; **மா.** கட்யெ; **கூ.** கட்ச; **Skt** khaja (stirring, churning).

*[குடை → கடை.]*

**கடை-**[2]**தல்** *kaḍai-*, 2 செ.கு.வி.(v.i.) மிகச் செய்தல், பெருகுதல்; to increase, as the passion of love *"காதலாற் கடைகின்றது காமமே" (சீவக.1308).*

*[கடு → கடை (கடைதல்).]*

**கடை**[3]**-தல்** *kaḍai-*, 2 செ.கு.வி.(v.i.) 1. அரித்தல்; to trickle. *"கடையுங் கட்குரல்" (சீவக.1202).* 2. தொண்டையில் ஏற்பட்ட சளியினால் கடைவது போன்ற ஒலியுண்டாதல்; to rattle and wheeze, as the throat from accumulation of phlegm. தொண்டையிற் கோழை கடைகிறது (இ.வ.).

*[குடை + கடை.]*

**கடை**[4] *kaḍai*, பெ.(n.) 1. இறுதி; end, termination. *"வான் இகுபு சொரிந்த வயங்கு பெயற் கடைநாள்" (நற்.142:1).* 2. முடிபு; conclusion. *"நீர் நிலந்தீவளி விசும் போடைந்தும் அளந்து கடையறியினும்" (பதிற்று.24: 15).* 3. எல்லை; outskirt, boundary. *"கடையழிய நீண்டகன்ற கண்ணாளை" (பரிபா.11:46).* 4. வாயில்; threshold. *"மடவோர் காட்சி நாணிக் கடையுடைத்து (சிறுபாண்.138).* 5. தலைவாயில்; entrance. *"அடையா வாயிலவன் அருங்கடை குறுகி" (சிறுபாண்.206).* 6. நுனி; edge. *"கயிறு கடையாத்த கடுநடை எறி உளி" (நற்.388:3).* 7. முனை; tip. *"வெண்கடைச்

*சிறுகோலகவன் மகளிர்" (குறுந்.298:6).* 8. முன்றில்; courtyard of a house. *"ஆசில் வியன் கடைச் செந்நெல்" (குறுந்.277:1).* 9. பின்; back. *"வில்லிற்கடை மகரமேவ" (பரிபா.11:7).* 10. இறப்பு; death. *"கையாறு கடைக்கூட்டக் களிக்குறூஉம்" (கலித்.31:7).* 11. வரையறை; limit. 12. இறுதிநிலை; at last, position of last. 13. கடைக்கோடி; aside. 14. இடம்; place, side, direction. *"வெரூஉதுங் காணுங் கடை" (கலித். 87:2).* 15. கீழ்மை; lowness, worst. *"கடையாய்க் கிடந்த வடியேற்கு" (திருவாச.1:60).* 16. தாழ்ந்தோன்; low, mean person, stupid fellow. *"கல்லாத சொல்லுங் கடையெல்லாம்" (நாலடி.255).*

**ம.** கட; **க.** கட, கட; **தெ.** கட.

**Aram.** harooyo.

*[குல் → குள் → குடு → கடு → கடை.]*

ஒன்று இன்னொன்றை முட்டும் முனை அதன் கடையாதலால், முட்டற்கருத்தில் கடைமைக் கருத்துத் தோன்றிற்று. பக்கம் நோக்கியதும் மேனோக்கியதும் எனக் கடை இருவகை. பக்கம் நோக்கியது முனை அல்லது கடை. மேனோக்கியது உச்சி. தலை என்பது இவ்விரண்டிற்கும் பொதுக் கருத்தையும் அடிப்படையாய்க் கொண்டவை யென்றறிக

முட்டுங்கடை ஒரு பொருளின் முடிவிடமாய் அல்லது எல்லையாயிருப்பதால், முட்டற்கருத்தில் எல்லைக் கருத்துத் தோன்றிற்று (மு.தா.95).

**Skt.** khaṭakkikā, khaḍakkikkā, a side door; a private or back door, a small or venetian door or window. These curious words are probably identical with Tbhs. kitaki etc (=Mhr., H. khiḍaki); if not, Dravidian kaṭa, kaḍa, side and kada, a door, might, though very diffidently, be compared. [K.K.Ed.XL]

**கடை**[5] *kaḍai,* பெ.(n.) 1. கதவு; entrance, gate, outer gateway. *"மடவோர் காட்சி நாணிக் கடையடைத்து" (சிறுபாண்.138).* 2. அங்காடி (பிங்.); shop, bazaar, market.

**க.** கட; **ம.** கட.

**Skt.** ghatta (landing - place); **Chin.** dain; **Indon.** kado; **Mal.** kedai; **Swahili.** duka.

*[கட → கடை (தமி.வ.138).]*

பண்டு பகற்கடையை நாளங்காடியென்றும் மாலைக்கடையை அல்லங்காடி யென்றும் வழங்கினர்.

**கடை**[6] *kaḍai,* பெ.(n.) காம்பு; handle, hilt. *"கருங்கடை யெஃகம்" (மலைபடு.490).*

*[கட → கடை.]*

**கடை**[7] *kaḍai,* இடை.(part.) 1. ஏழனுருபு (நன்.302); locative case marker. *"செம்புனல் ஊருடனாடுங் கடை" (பரி.5:15).* 2. ஒரு முன்னொட்டு; verbal prefix. *"கடைகெட்ட" (திருப்பு.831).* 3. ஒரு வினையெச்ச ஈறு; termination of a verbal participle. *"ஈத லியையாக் கடை" (குறள்,230).* 4. சொல்லிறுதி; termination suffix of a word.

*[கட → கடை.]*

**கடை**[8] *kaḍai,* பெ.(n.) சோர்வு (அக.நி.); tiredness.

*[களை → கடை.]*

**கடை**[9] *kaḍai,* பெ.(n.) 1. வழி (யாழ்.அக.); way. 2. பெண்குறி (யாழ்.அக.); pudendum muliebre.

*[கட → கடை = கடைவாயில், வழி, வழித்துளை.]*

**கடைக்கட்டு** *kaḍai-k-kaṭṭu,* பெ.(n.) முடிப்பு; knot.

*[கடை + கட்டு.]*

**கடைக்கண்** *kaḍai-k-kaṇ,* பெ.(n.) 1. கண்ணின் கடை; the outer corner of the eye. 2. கடைக்கண் பார்வை; a glance, side long look. 3. அருள்நோக்கு; graceful look. 4. கரும்பு போன்றவற்றின் நுனிப்பகுதி; end, tip, as of a sugarcane stalk. *"கரும்பின் கடைக்கண் ணனையம்" (நாலடி.390).*

**ம.** கடக்கண்ணு, கடமிழி; **க.** கடெகண்; **தெ.** கடகன்னு; **து.** கடெகண்ணு; **பட.** கடைகண்ணு.

*[கடை + கண்.]*

**கடைக்கண்பார்வை** *kaḍai-k-kaṇ-pārvai,* பெ.(n.) 1. அன்புக் குறிப்போடு சாய்த்து நோக்குகை; significant sidelook, oblique glance. 2. அருள் நோக்கம்; benign look.

**க.** கடெநோட; **ம.** கடக்கண்ணேறு.

*[கடை + கண் + பார்வை.]*

**கடைக்கல்** *kaḍaikkal,* பெ.(n.) கட்டடச்சுவரின் அடிப்பகுதியில் வைக்கும் கல்; foundation stone.

*[கடை + கல்.]*

**கடைக்கயிறு** *kaḍai-k-kayiṟu,* பெ.(n.) பாய்ப் பருமலுக்கும் கடையா மரத்திற்கும் இணைப்புடைய கயிறு (செங்கை மீனவ.); rope used to join the sail and base.

*[கடை + கயிறு. கடை = கடையாமரம், அடிமரம்.]*

**கடைக்கவர்** *kaḍai-k-kavar,* பெ.(n.) பல்; tooth.

*[கடை + கவர் (கவர்ந்தபல்).]*

**கடைக்கணி-த்தல்** *kaḍai-k-kaṇi,* 4 செ.கு.வி. (v.i.) 1. அருள் நோக்கு நோக்குதல்; to cast a benignant glance at, to look favourably upon. *"கருவெந்து வீழக் கடைக் கணித்து" (திருவாச.11:5).* 2. கடைக்கண்ணாற் பார்த்தல்; to look athwart; to look by the corner of the eye; to ogle. *"கருமலர்க் கூந்த லொருத்தி தன்னைக் கடைக்கணித்து" (திவ். பெருமாள். 6:3).*

**க.** கடெகணிசு

*[கடைக்கண் → கடைக்கணி.]*

**கடைக்கணோக்கம்** *kaḍai-k-kaṇōkkam,* பெ.(n.) ***கடைக்கண்பார்வை*** பார்க்க; see *kaḍai-k-kaṇ-pārvai.*

*[கடை + கண் + நோக்கம்.]*

**கடைக்கருவி** *kaḍai-k-karuvi,* பெ.(n.) உடுக்கை யென்னும் இசைக் கருவி (சிலப். 3:27, உரை); a drum that has the shape of an hour-glass.

*[கடை (கடைசல்) + கருவி. கடைக்கருவி = கடைசல் செய்து அமைத்த கருவி.]*

**கடைக்கழகம்** *kaḍai-k-kaḻagam,* பெ.(n.) பாண்டியர்களால் தமிழ் வளர்க்க நிறுவப்பட்ட மூன்று தமிழ்க்கழகங்களுள் மதுரையில் கூட்டிய மூன்றாவது தமிழ்க்கழகம் (இறை.பாயி.ப.6); the last sangam, the third of the three ancient Tamil Academies, it is said to have flourished in Madurai.

*[கடை + கழகம்.]*

கடைக்கழகம் தொடர்பாக இறையனார் களவியல் கூறுவது:

கடைச்சங்கமிருந்து தமிழாராய்ந்தார் சிறுமேதாவி யாரும், சேந்தம்பூதனாரும், அறிவுடையரனாரும், பெருங்குன்றூர்கிழாரும், இளந்திருமாறனும், மதுரை ஆசிரியர் நல்லந்துவனாரும், மதுரை மருதனிளநாகனாரும், கணக்காயனார் மகனார் நக்கீரனாரும் என இத் தொடக்கத்தார் நாற்பத்தொன்பதின்மர் என்ப. அவருள்ளிட்டு நானூற்று நாற்பத்தொன்பதின்மர் பாடினார் என்ப. அவர்களாற் பாடப்பட்டன நெடுஞ்தொகை நானூறும், குறுந்தொகை நானூறும், நற்றிணை நானூறும், புற நானூறும், ஐங்குறு நூறும், பதிற்றுப்பத்தும, நூற்றைம்பது கலியும், எழுபது பரிபாடலும், கூத்தும், வரியும், சிற்றிசையும், பேரிசையும் என்று இத் தொடக்கத்தன. அவர்க்கு நூல் அகத்தியமும், தொல்காப்பியமும் என்ப. அவர் சங்கமிருந்து தமிழ் ஆராய்ந்தது ஆயிரத்து எண்ணூற்று ஐம்பதிற்றியாண்டு என்ப. அவர்களைச் சங்க மிரீஇயினார் கடல்கொள்ளப் பட்டுப் போந்திருந்த முடத்திருமாறன் முதலாக உக்கிரப் பெருவழுதி ஈறாக நாற்பத்தொன்பதின்மர் என்ப. அவருட் கவியரங்கேறினார் மூவர் என்ப. அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது உத்தரமதுரை என்ப (இறை.பாயி.ப.6).

**கடைக்கழகநூல்கள்** *kaḍai-k-kaḻaga-nūlgaḷ,* பெ.(n.) கடைக்கழக (சங்க) காலத்தில் இயற்றப்பட்ட நூல்கள்; the treatises of sangam age.

*[கடைக்கழகம் + நூல்கள்.]*

பத்துப்பாட்டும் எட்டுத் தொகையும் ஆகிய பதினெண் மேற்கணக்கு நூல்கள் கடைக் கழக நூல்களாகும். கழகமருவிய காலத்து எழுந்த பதினெண் கீழ்க்கணக்கு நூல்களும் கடைக்கழக நூல்களாகவே கருதப்படுகின்றன. கடைக்கழகப் புலவர் எண்ணிக்கை 473. அவர்களால் பாடப்பட்ட பாடல்களின் எண்ணிக்கை 2381.

**கடைக்கனல்** *kaḍai-k-kaṉal,* பெ.(n.) ஊழித்தீ; final deluge of fire; fire which destroys everything at the end of the world. *"கட்கடைக் கடைக்கனலும்" (மீனாட்.பிள்ளைத்.காப்பு.).*

*[கடை + கனல் – கடைக்கனல். கடை = ஊழிக்கால இறுதி. கனல் = தீ.]*

**கடைக்காட்சி** *kaḍai-k-kāṭci,* பெ.(n.) கண்காணிப்பு (S.I.I.iii,372); supervision.

*[கடை + காட்சி – கடைக்காட்சி = கடைக்கண் பார்வை.]*

**கடைக்காண்(ணு)-தல்** *kaḍai-k-kāṇ(ṇu)-,* 12 செ.கு.வி. (v.i.) 1. மேற்பார்த்தல்; to supervise. 'பெருமக்கள் இத் தர்மங் கடைக்காண்பதாகவும்' (S.I.I.iii,21). 2. இறுதியைப்பார்த்தல்; to see the end (கருநா.).

**க.** கடெகாண், கடெகாணு.

*[கடை + காண். கடை = இறுதி. கடைக்காணுதல் = இறுதிவரை செப்பம் பார்த்தல்.]*

**கடைக்காண்பார்** *kaḍai-k-kāṇbār,* பெ.(n.) கண்காணிப்பவர்; superviser. *'இத் தர்மம் ஆசந்ரகாலமும், முட்டாமை ஊட்டுவிப்பதாக இப்பெரு மக்களே கடைக்காண்பாரானார்'* (S.I.I.Vol.12.part-I, insc.104).

*[கடை + காண்.]*

**கடைக்காப்பு** *kaḍai-k-kāppu,* பெ.(n.) பதிகத்தின் இறுதி முத்திரைப்பாட்டு; last verse which is an invocation song in the poem known as padigam. *``திருப்பதிக நிறைவித்துத் திருக்கடைக் காப்பு சாத்தி'' (பெரியபு.திருஞான.80).*

*[கடை + காப்பு.]*

**கடைக்காரன்** *kaḍai-k-kāraṉ,* பெ.(n.) கடைக் குரியவன்; bazar-keeper, shop-keeper.

**ம.** கடக்காரன்

*[கடை + காரன்.]*

**கடைக்கால்**[1] *kaḍai-k-kāl,* பெ.(n.) 1. வயலுக்குத் தொலைவிலுள்ள வாய்க்கால்; channel that is far away from a field. 2. கட்டடச் சுவரின் அடிப்பகுதி, அடிமானம்; foundation. 3. மிகத் தாழ்ந்த கீழிடம்; lowest place. *"கடைக்கா றலைக்கண்ண தாகி" (நாலடி.368).* 4. ஊழிக்காற்று (மீனாட்.பிள்ளைத். காப்பு.); destructive wind that prevails at the end of the world. 5. வழியின் ஓரங்களில் நீர் ஓடுவதால் ஏற்படும் தாழ்வான பகுதி; a gutter (சேரநா.).

**ம.** கடய்க்கால்; **க.** கடெகால் (காலின் கடை)

*[கடை + கால்.]*

**கடைக்கால்**[2] *kaḍai-k-kāl,* பெ.(n.) வருங்காலம்; future time. *"கடைக்கால் . . . செங்கோல் செலீஇயினான்" (பழ.239).*

*[கடை + கால்.]*

**கடைக்கால்சக்கை** *kaḍai-k-kāl-šakkai,* பெ.(n.) கடைக்கால்குழியில் போட்டு நிரப்பப்படும் சல்லிக் கற்கள். small stones used as the filler in foundation.

*[கடை + கால் + சக்கை.]*

**கடைக்கால்வரிசை** *kaḍai-k-kāl-varišai,* பெ.(n.) கடைக்காலை அடுத்து அமையும் முதல் வரிசைச் சுவர் (செங்கை); the first line of bricks on the foundation.

*[கடை + கால் + வரிசை.]*

**கடைக்காலம்** *kaḍai-k-kālam,* பெ.(n.)1.இறுதிக் காலம்; final period. 2. ஊழிக்காலம்; period of final deluge.

*[கடை + காலம்.]*

**கடைக்குடர்** *kaḍai-k-kuḍar,* பெ.(n.) கடைக்குடல் பார்க்க; see *kaḍai-k-kuḍal.*

*[கடைக்குடல் → கடைக்குடர்.]*

**கடைக்குட்டி** *kaḍai-k-kuṭṭi,* பெ.(n.) 1. ஒரு வீட்டில் கடைசியாகப் பிறந்த பிள்ளை; the last born child in a family. 2. கடைசியாகப் பொரித்த குஞ்சு; the chik which last chips the shell. 3. ஒரே ஈற்றில் இறுதியாகப் பிறக்கும் குட்டி; last born in a litter.

**மறுவ.** கடைச்சான்

**தெ.** கடதொட்டு; **க.** கடெகுட்டு; **ம.** கடக்குட்டி; **து.** கடெகஞ்சி (கடைசி கன்று).

கடைக்குட்டி, பிள்ளைக்குட்டி, கன்று கயந்தலை என்னும் வழக்குகள் போன்றன இருதிணைப் பொதுவாய் இருவகை வழக்கிலும் வழங்கி வருதலான், முதற்காலத்தில் எல்லாச் சொற்களும் திணை வேறுபாடின்றி எண் வேறுபாட்டோடு மட்டும் வழங்கி வந்தன என்பதும், மக்கட்கும் விலங்குகட்கும் பெரும் வேறுபாடில்லை யென்பதும் அறியப்படும் [சொ.ஆ.க.19].

**கடைக்குடல்** *kaḍai-k-kuḍal,* பெ.(n.) கீழ்க்குடல், பெருங்குடலிருந்து எருவாய் வரையிலுமுள்ளது; the lower or the distal part of the large intestine extending from the colon to the anus (சா.அக.).

[கடை + குடல்.]

**கடைக்குறை** *kaḍai-k-kuṟai,* பெ.(n.) சொல்லினிறுதி குறைந்து வருஞ் செய்யுள் வகை (நன்.156,உரை); apocope; poetical style which consists in the shortening of a word by elision of one or more letters in the end.

[கடை + குறை – கடைக்குறை.]

"ஒரு மொழி மூவழிக் குறைதலும் உரித்தே" என்ற நன்னூல் நூற்பாவிற்கேற்ப தனிச் சொல் முதல் இடை கடை என முந்நிலைகளிலும் குறைந்து வருவது செய்யுள் திரிபு.

முதற் குறை : தாமரை – மரை; இடைக்குறை : ஓந்தி – ஓதி. கடைக்குறை : நீலம் – நீல்.

**கடைக்கூட்டப்பெறு–தல்** *kaḍai-k-kuṭṭa-p-peṟu-,* 18 செ.குன்றாவி.(v.t.) முழுவதுமாகப் பெறுதல்; to receive the entire thing. 'இது முட்டில் பன்மாயெசவரரே கடைக் கூற்றப் பெற்றார்'. (S.I.I.Vol.14. insc.20-3.)

[கடை + கூட்ட + பெறு.]

**கடைக்கூட்டம்** *kaḍai-k-kūṭṭam,* பெ.(n.) முழுவதும் கொடுத்தல்; to give the whole. *'இப்பொலியூட்டுப் பொன் கடைக்கூட்ட வந்தார்க்கு நிசதி இரண்டு சோறு குடுப்போமானோம்'* (S.I.I.Vol.12,Part-1 insc.91-19).

[கடை + கூட்டம்.]

**கடைக்கூட்டல்** *kaḍai-k-kūṭṭal,* பெ.(n.) பழக்கத்தில் கொண்டு வந்து சேர்த்தல்; to bring to practice.

[கடை + கூட்டல்.]

**கடைக்கூட்டன்** *kaḍai-k-kūṭṭaṉ,* பெ.(n.) செயலாளன்; one who is capable of managing affairs on behalf of other people; a highly capable agent. *"அழகன் இதற்குக் கடைக்கூட்டனாகவுங் கடவன்" (திவ். திருப்பா.1,வியா.18).*

[கடை + கூட்டன்.]

**கடைக்கூட்டு[1]–தல்** *kaḍai-k-kūṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. செய்து முடித்தல்; to effect, carry out, as a plan programme. *"செலவு கடைக்கூட்டுதிராயின்" (பொருந.175).* 2. செய்வினைப் பயனை ஒரு வழிப்படுத்தல்; to bring to a head as the karma of previous births. *"மூதைவினை கடைக்கூட்ட" (சிலப்.9:78)* 3. பொருளீட்டுதல்; to acquire, gather, secure. *'அற்றைக்கன்று பொருள் கடைக்கூட்டற்கு' (குறள்,1060,உரை)* 4. இறுதி யடைவித்தல்; to cause death. *"காமநோய் கடைக்கூட்ட வாழுநாள்" (கலித்.99).* 5. நடைமுறைக்குக் கொண்டுவந்து சேர்த்தல்; to bring to practice (சா.அக.).

[கடை + கூட்டு.]

**கடைக்கூட்டு[2]** *kaḍai-k-kūṭṭu,* பெ.(n.) இறக்கும் காலம்; time of death. *"உயிர்காக்கக் கடவீரென் கடைக்கூட்டால்" (கம்பரா.யுத்த.கும்ப.355).*

[கடை + கூட்டு.]

**கடைக்கூட்டு[3]** *kaḍai-k-kūṭṭu,* பெ.(n.) மேலாண்மை, ஆளுவம்; management. கடைக்கூட்டுச் சேவகப் பெருமாள் (M.E.R.598 of 16) (சம்.அக.Ms.).

[கடை + கூட்டு.]

**கடைக்கூட்டுத்தானத்தார்** *kaḍai-k-kūṭṭu-t-tāṉattār,* பெ.(n.) கோயிலதிகாரிகள் (S.I.I.Vol.V, 512); temple authorities.

[கடைக்கூட்டு + தானத்தார்.]

**கடைக்கூட்டிலக்கை** *kaḍai-k-kūṭṭilakkai,* பெ.(n.) 1. ஒரு பழைய வரி (S.I.I.Vol.ii.115); an ancient tax. 2. பொதுவிடத்தைப் பயன் கொள்ளுவோர் ஆண்டு தோறும் செலுத்தும் இடவரி (S.I.I. Vol.V,part-I,411); annual rent for using particular public place for building. 3. ஆளுவ (நிர்வாக)ப் பணியாளர் வாழுமிடம்; administrative officers' residence.

[கடை + கூட்டு + இலக்கை.]

**கடைக்கூடு–தல்** *kaḍai-k-kūḍu-,* 5 செ.கு.வி.(v.i.) இசைதல்; to agree. *"இரவலன் கடைக்கூடின்று" (பு.வெ.9:24,கொளு).*

[கடை + கூடு.]

**கடைக்கூழை** *kaḍai-k-kūḻai,* பெ.(n.) 1. செய்யுளில் அளவடியுள் முதற்சீரொழிந்த மூன்று சீர்க்கண்ணும் வரும் தொடைவகை (யா.கா.ஒழிபி.5); a species of

toṭai occuring in every foot except the first in a line of four feet. 2. படையின் பின்னணி; rear division of an army. *"கடைக்கூழையிலே வாரா நின்றான்" (ஈடு.4.4:9).*

*[கடை + கூழை.]*

**கடைக்கூழைமுரண்** *kaḍai-k-kūḻai-muraṉ*, பெ.(n.) செய்யுளில் ஓரடியின் முதற்சீர் ஒழித்து ஏனைய சீர்க்கண் முரணி வருவது; oxymoron occuring in other feet in contrast to the first foot.

*[கடை + கூழை + முரண்.]*

*(எ.டு.) "காவியங் கருங்கட் செவ்வாய் பைந்தொடி" இது முதற்சீரொழிந்த மூன்று சீரும் மறுதலைப்படத் தொடுத்தமையால் கடைக்கூழை மு ரண் எனப்பட்டது.*

**கடைக்கூழைமோனை** *kaḍai-k-kūḻai-mōṉai*, பெ.(n.) செய்யுளில் முதற்சீர் அல்லாத ஏனைய சீர்களில் மோனை வருவது; alliteration occurring in all the feet except the first foot. *"சீறடிச் சிலம்பு சிலம்பொடு சிலம்ப" (யாப்.வி. ப.160).*

*[கடை + கூழை + மோனை.]*

**கடைக்கூழையளபெடை** *kaḍai-k-kūḻai-y-aḷabaḍai*, பெ.(n.) செய்யுளில் முதற்சீர் ஒழிந்த ஏனைய சீர்கள் அளபெடுத்து வருவது; elongation occurring in all the feet except the first foot. *"விரிமலர் மராஅம் கராஅம் விராஅம்" (யாப்.வி.ப.161).*

*[கடை + கூழை + அளபெடை.]*

**கடைக்கூழையியைபு** *kaḍaikūḻaiyiyaibu*, பெ.(n.) செய்யுளில் கடைச்சீர் ஒழித்து ஏனைய சீர்கள் இயைந்து வருவது; concord occurring in all the feet except the last. *"குயிலும் பாலும் ஆம்பலும் மொழியே" (யாப்.வி.ப.161).*

*[கடை + கூழை + இயைபு.]*

**கடைக்கூழையெதுகை** *kaḍai-k-kūḻai-y-edugai*, பெ.(n.) செய்யுளில் முதற்சீர் ஒழித்து யேனைய சீர்களில் எதுகை வருவது; consonance occurring in all the feet except the first foot. *"வான்கதிர் வடமலி தடமுலை மடவரல்" (யாப்.வி.ப.160).*

*[கடை + கூழை + எதுகை.]*

**கடைக்கொம்பு**[1] *kaḍai-k-kombu*, பெ.(n.) விலங்கின் அடிக்கொம்பு (வின்.); stump of horn.

*[கடை + கொம்பு.]*

**கடைக்கொம்பு**[2] *kaḍai-k-kombu*, பெ.(n.) ஏரியின் கோடியிலுள்ள கரை; the edge of tank-bund. *"கீழ்க்கடைக்கொம்பு மேல மறுகாலுடைக்குதே" (குருகூர்ப்.31).*

*[கடை + கொம்பு.]*

**கடைக்கொள்**[1]**(ளு)-தல்** *kaḍai-k-koḷ(ḷu)-*, 7 செ.குன்றாவி.(v.t.) 1. இறுதிவரைக் கொண்டிருத்தல்; to hold up to the end. 2. உறுதியாகக் கொள்ளுதல்; to have a determined will. *"கடைக்கொண் டிருமின் றிருக்குறிப்பை" (திருவாச.45:4).* 3. பின் செல்லுதல்; to follow. 4. சேர்த்தல்; to join together, collect. *"விறன்மறவரைக் கடைக் கொண்டு" (பு.வெ.2:6).*

*[கடை + கொள்.]*

**கடைக்கொள்**[2]**(ளு)-தல்** *kaḍai-k-koḷ(ḷu)-*, 16 செ.கு.வி.(v.i.) முடிவுபெறுதல்; to be finished, to come to an end. *"ஆடலுங்கோலமு மணியுங் கடைக்கொள" (சிலப்.6:74).*

*[கடை + கொள்.]*

**கடைக்கொள்ளி** *kaḍai-k-koḷḷi*, பெ.(n.) 1. கடைசியாக எரியும் கொள்ளி; last firebrand. 2. பெரும்பகுதி எரிந்து இறுதி (முனை)யில் எரியுங் கொள்ளிக்கட்டை; a burning firebrand of which major portion has been consumed. *"குறத்திமாட்டிய வறற்கடைக்கொள்ளி" (புறநா.108).* 2. ஈமத்தீ; the funeral pyre.

ம. கடக்கொள்ளி

*[கடை + கொள்ளி.]*

**கடைக்கோடி** *kaḍai-k-kōḍi*, பெ.(n.) 1. அறக்கடைசி; the very last, utmost limit. *அவன் கடைக்கோடியில் நின்றிருக்கிறான்.* 2. கடைசியாகப் பிறந்த பிள்ளை; the last child (சா.அக.). *கந்தன் தான் இவர்கள் வீட்டில் கடைக்கோடி (இ.வ.).*

பட. கடெகோடி

*[கடை + கோடி.]*

**கடைக்கோள்** *kaḍai-k-kōḷ*, பெ.(n.) 1. முடிவு பெறுகை; state of being concluded, finished.

ished. *"காமஞ் சான்ற கடைக்கோட் காலை" (தொல். பொருள்.கற்பி.51).* 2. தீதாகக் கருதுதல்; regarding a thing as an evil.

*[கடை + கோள்.]*

**கடைகட்டு-தல்** *kaḍai-kaṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. கடையை மூடுதல்; to shut up shop. 2. கோயில் வெளி மூடுதல்; to close the outer door of a temple. 3. செயலை நிறுத்திவிடுதல்; to terminate, discontinue a work, used depreciatingly. *"அடா கடைகட்டடா" (இராமநா.கிட்.8).*

மறுவ. ஏறக்கட்டு

*[கடை + கட்டு.]*

**கடைகண்ணி** *kaḍai-kaṇṇi,* பெ.(n.) 1. கடை; shop. *கடைகண்ணிக்குப் போய்வர வேண்டும் (உ.வ.).* 2. கடைத்தெரு; bazaar. *கடைகண்ணியில் திரியாதே (உ.வ.).*

*[கடை + கண்ணி. `கண்ணி' மீமிசை மோனைச் சொல். முதற்சொல் பொருள் சுட்டிய மரபிணை மொழி.]*

**கடைகணி-த்தல்** *kaḍai-kaṇi-,* 4 செ.குன்றாவி.(v.t.) ஒதுக்குதல் (கருநா.); to neglect.

**க.** கடைகணிசு

*[கடை + கணி.]*

**கடைகயிறு** *kaḍai-kayiṟu,* பெ.(n.) தயிர்கடையும் மத்தினைச் சுழலச் செய்யும் கயிறு; cord used for turning a churn-staff. *"யசோதையார் கடை கயிற்றாற் கட்டுண்கை" (சிலப்.17,முன்னிலைப்.1).*

**ம.** கடகயறு; **க.** கடெகண்ணி.

*[கடை + கயிறு (வி.தொ.).]*

**கடைகல்** *kaḍai-kal,* பெ.(n.) மரநங்கூரத்திற்குரிய கல் (மீனவ.); stone anchor.

*[கடை + கல்.]*

**கடைகழிமகளிர்** *kaḍai-kaḻi-magaḷir,* பெ.(n.) பொதுமகளிர் (சிலப்.14:71); prostitutes, lit. those who immodestly step out their doors.

**மறுவ.** பொதுப்பெண்டிர்

*[கடை + கழி + மகளிர். வெளியில் எவ்விடத்தும் செல்லும் விலை மகளிர்.]*

**கடைகாண்(ணு)-தல்** *kaḍai-kāṇ(ṇu)-,* 13 செ.குன்றாவி.(v.t.) 1. இறுதிவரை பார்த்தல்; to see upto end. 2. முழுவதுமாகப் பார்த்தல்; to see or study thoroughly.

*[கடை + காண்.]*

**கடைகாப்பாளர்** *kaḍai-kāppāḷar,* பெ.(n.) ***கடைகாப்பாளன்*** பார்க்க; see *kaḍai-kāppāḷaṉ.*

*[கடை + காப்பு + ஆள் + ஆர். 'அர்' உ.ப.ஈறு. கடை = வாயில். காப்பு = காவல்.]*

**கடைகாப்பாளன்** *kaḍai-kāppāḷaṉ,* பெ.(n.) 1. வாயில்காப்போன் (திவா.); gate keeper. 2. நாட்டு எல்லைகாப்போன்; one who guards the border.

**மறுவ.** கடைகாவலன்

*[கடை + காப்பாளன்.]*

**பண்டை அரசர்க்கு உதவியாக இருந்த எண்பேராயத்தின் ஒரு பிரிவினராகிய கடைகாப் பாளர், நாடு காவல் அதிகாரிகளாவர்.**

**கடைகால்[1]** *kaḍai-kāl,* பெ.(n.) பால்கறக்கும் மூங்கிற்குழல் ஏனம்; bamboo tube, used as pail for milking.

*[குடைகால் → கடை கால்.]*

**கடைகால்[2]** *kaḍai-kāl,* பெ.(n.) 1. அணிகலக் கொக்கியின் ஓர் உறுப்பு (யாழ்.அக); a part in the clasp of an ornament. 2. அடிமானத்திற்குத் தோண்டும் குழி; foundation ditch. 3. கட்டடச் சுவரின் அடிப்பகுதி; foundation of building. 4. காலின் முனை (சேரநா.); the toe.

**மறுவ.** அடித்தளம், அடிக்கால்.

**க.** கடகால்

*[குடைகால் → கடைகால்.]*

**கடைகாலம்** *kaḍai-kālam,* இறுதிக்காலம்; the last period of one's life in the world.

**க.** கடெகாலம்

*[கடை + காலம்.]*

**கடைகாவலன்** *kaḍai-kāvalaṉ,* பெ.(n.) வாயில் காப்போன்; gate keeper. *"கண்டு கடை காவலர்கள் கழற" (சீவக. 2012).*

மறுவ. கடைகாப்பாளன்

[கடை + காவலன்.]

**கடைகூடு—தல்** *kaḍai-kūḍu-*, 5 செ.கு.வி.(v.i.) கைகூடுதல், எடுத்த செயலில் வெற்றி பெறல்; to meet with success; to be successful. *'கடை கூடாதிருக்கும் பொருள் யாவதும் இல்லை' (சிலப்.11:159,உரை).*

[கடை + கூடு.]

**கடைகெட்டமரம்** *kaḍai-keṭṭa-maram*, பெ.(n.) கற்றேக்கு மரம்; racemed fish bone tree (சா.அக.).

[கடைகெட்ட = உதவாத. கடைகெட்ட + மரம்.]

**கடைகெட்டவன்** *kaḍai-keṭṭavaṉ*, பெ.(n.) கீழ்மகன்; low person.

[கடைகெட்ட = பயன்படாத, உதவாத. கடைகெட்ட + அவன்.]

**கடைகெடு—தல்** *kaḍai-keḍu-*, 20 செ.கு.வி.(v.i.) மிக இழிவடைதல்; to reach the stage of grovelling wretchedness. *'கடைகெட்ட மூளிக்குக் கோபம் கொண்டாட்டம்' (பழ.).*

[கடை + கெடு. கடை = இறுதி, முடிவு. கடைகெடல் = இறுதியாக முழுமையாகக் கெட்டுப்போதல்.]

**கடைகேடு** *kaḍai-kēḍu*, பெ.(n.) மிகு இழிவு; destitution, wretched condition.

[கடை + கேடு. கடை = இழிவு.]

**கடைகொள்(ளு)—தல்** *kaḍai-kol(lu)-*, 15 செ.கு.வி. (v.i.) முடிவுபெறுதல்; to be finished, to come to an end. *"கடவுட் பீடிகைப் பூப்பலி கடைகொள" (மணிமே.7:121).*

[கடை + கொள்.]

**கடைகோல்** *kaḍai-kōl*, பெ.(n.) 1. கடைந்து தீயுண்டாக்கும் கோல் (வின்.); stick used for producing fire by friction. 2. மத்து; churning rod. 3. பருத்தியைப் பிரித்தெடுக்கும் கருவி; a stick used for carding cotton.

**மறுவ.** ஞெலிகோல், தீக்கடைகோல்.

**ம.** கடகோல்; **க.** கடெகோல்.

[கடை + கோல். கடை = கடைதல்.]

**கடைச்சங்கம்** *kaḍai-c-caṅgam*, பெ.(n.) **கடைக்கழகம்** பார்க்க; see *kaḍai-k-kaḻagam.*

[கடை + சங்கம். Skt. śaṅga. > த. சங்கம். கடை = இறுதி.]

**கடைச்சரக்கு** *kaḍai-c-carakku*, பெ.(n.) கடையில் விற்கப்படும் மூலிகை மருந்துச் சரக்கு; collection of medicinal seeds, herbals and roots sold in the bazaar.

[கடை + சரக்கு.]

**கடைச்சரக்கு 64 :** அதிமதுரம், அதிவிடயம், அரக்கு, அரத்தை, ஏலக்காய், ஓமம், கடுக்காய், கடுக்காய்ப்பூ, கடுகு, கடுகுச்சிவலை (கடுகு ரோகிணி), கருங்கொடிவேலி, கருஞ்சீரகம், கருப்புக்காய், கற்கடகசிங்கி, காட்டுச்சதகுப்பை, கார்போகவரிசி, கிச்சிலிக்கிழங்கு, கிராம்பு, குங்கிலியம், குங்குமப்பூ, குந்திரிக்கம், கூகைநீறு, கொத்துமல்லி, கொருக்கைப்புளி, கோட்டம், கோரோசனை, சடாமாஞ்சில், சதகுப்பை, சந்தனக்கட்டை, சாதிக்காய், சாதிபத்திரி, சித்திரமூலம், சிறுதேக்கு, சிறுநாகப்பூ, சிறுவாலுளுவை, சீரகம், சுக்கு, செஞ்சந்தனம், செவ்வாலம் (அ) நேர்வாளம், செவ்வியம், சேங்கொட்டை, தமாலபத்திரி, தாளிசபத்திரி, தான்றிக்காய், திப்பிலி, திப்பிலிமூலம், தூணிப்பிசின், நிலாவிதை, நெல்லிக்காய், பாக்கு, புளி, பெருங்காயம், மஞ்சள், மஞ்சிட்டி, மரமஞ்சள், மான்மணத்தி (கஸ்தூரி), மிளகு, மெழுகு, யானைத்திப்பிலி, வசம்பு, வாய்விளங்கம், வாலுளுவை, வெண்கடுகு, வெந்தயம் (சா.அக.).

**கடைச்சரி** *kaḍai-c-cari*, பெ.(n.) முன்கையின் வளை; (ஈடு,2.5:6); the lowest bracelet on the fore-arm.

[கடை + சரி - கடைச்சரி. செறி → சரி.]

**கடைச்சல்** *kaḍaiccal*, பெ.(n.) 1. மரம் முதலியவற்றைக் கடைகை; turning on a lathe or a brazier's wheel. *கட்டிலுக்கு கடைச்சல் கால் போடு (உ.வ.).* 2. எந்திரக் கடைசல்; turning work. 3. கடையப்பட்ட பொருள்; that which is turned on a lathe. *கடைக்குச்சென்று கடைச்சல் வாங்கிவா (உ.வ.).*

**ம.** கடச்சில்; **க.** கடெசலு.

[கடை → கடையல் → கடைச்சல். 'அல்' தொ.பெ.ஈறு.]

**கடைச்சல்மரம்** *kaḍaiccal-maram,* பெ.(n.) ***கடைச்சற்பட்டை*** பார்க்க; see *kaḍaiccar̤-paṭṭai. கடைச்சல் மரத்தால் செய்த கட்டில் கண்ணிற் கழகு.*

*[கடை → கடைச்சல் + மரம்.]*

**கடைச்சலுளி** *kaḍaiccal-uḷi,* பெ.(n.) கடையுங் கருவி (வின்.); chisel of turner or wood - engraver.

**ம.** கடைச்சலுளி

*[கடைச்சல் + உளி.]*

**கடைச்சற்காரன்** *kaḍaiccar̤-kāraṉ,* பெ.(n.) கடைச்சல்வேலை செய்வோன் (வின்.); turner.

*[கடைச்சல் + காரன்.]*

**கடைச்சற்பட்டை** *kaḍaiccar̤-paṭṭai,* பெ.(n.) 1. கடைச்சலுளியின் சுற்றுக்கட்டை (C.E.M.); turner's lathe.

*[கடைச்சல் + பட்டை.]*

**கடைச்சன்** *kaḍaiccaṉ,* பெ.(n.) கடைசிப்பிள்ளை; (வின்.); youngest child.

*[கடை → கடையன் → கடைச்சன்.]*

**கடைச்சாப்பாடு** *kaḍai-c-cāppāḍu,* பெ.(n.) உண்டிச்சாலை உணவு; meal prepared in hotel or mess.

*[கடை + சாப்பாடு.]*

**கடைச்சான்** *kaḍaiccāṉ,* பெ.(n.) ***கடைச்சன்*** பார்க்க; see *kaḍaiccaṉ.*

**மறுவ.** கடைக்குட்டி

*[கடைச்சன் → கடைச்சான்.]*

**கடைச்சி**[1] *kaḍaicci,* பெ.(n.) வயலில் வேலை செய்தற்குரிய மருதநிலப்பெண் (திவா.); woman of the agricultural tract who works in the field.

**ம.** கடச்சி

*[கடையர் = களைபறிப்போர், வயல் பணியாளர்களை → கடை → கடையன் → கடைச்சி என்பது வழக்கம்.]*

**கடைச்சி**[2] *kaḍaicci,* பெ.(n.) 1. நெட்டி (மலை.); sola, pithy stemmed tropical swamp plant. 2. ஈழத்தலரி; cemetry flower (சா.அக.).

**ம.** கடச்சி

*[கிடைச்சி (இளமை, மென்மை) → கடைச்சி.]*

**கடைச்சி**[3] *kaḍaicci,* பெ.(n.) கடைசியாகப் பிறந்த பெண் (யாழ்.அக.); the youngest girl of a family.

*[கடை → கடைச்சி.]*

**கடைச்சித்தாழை** *kaḍaicci-t-tāḻai,* பெ.(n.) பைந்தாழை; pine-apple.

**மறுவ.** பறங்கித் தாழை (யாழ்ப்)

*[கிடைச்சி → கடைச்சி + தாழை.]*

**கடைச்செலவு** *kaḍai-c-celavu,* பெ.(n.) 1. வீட்டுக்கு வேண்டிய நுகர்வு (மளிகை)ப் பொருள்; groceries. *கடைச்செலவிற்குக் காசில்லை (உ.வ.)* 2. கடையில் வாங்கும் பொருள்களுக்கு ஆன செலவு; expenses incurred in buying groceries and sundries from bazaar.

*[கடை + செலவு.]*

**கடைசல்** *kaḍaišal,* பெ.(n.) 1. **கடைச்சல்** பார்க்க; see *kaḍaiccal.* 2. மெருகிடுகை; polishing, enamelling.

**H.** karāt.

*[கடை → கடைசல்.]*

**கடைசல்பிடி-த்தல்** *kaḍaišal-piḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) மரம் முதலியவற்றைக் கடையும் வேலை செய்தல்; to turn in a lathe.

*[கடைசல் + பிடி 'பிடி' து.வி.]*

**கடைச்சீப்பு** *kaḍai-c-cīppu,* பெ.(n.) வாழைக் குலையின் கடைசிச்சீப்பு; last comb of a plantain bunch opp. to முன் சீப்பு (சேரநா.).

**ம.** கடச்சீப்பு

*[கடை + சீப்பு.]*

**கடைசற்பட்டறை** *kaḍaišar̤-paṭṭar̤ai,* பெ.(n.) கடைசல் வேலை செய்யுஞ் சாலை; turner's shop.

*[கடைசல் + பட்டறை.]*

**கடைசன்** *kaḍaišaṉ,* பெ.(n.) ***கடையன்***[1] பார்க்க; see *kaḍaiyaṉ*[1].

*[களையன் → கடைசன்.]*

**கடைசார்**[1] *kaḍai-šār,* பெ.(n.) 1. தொழில்; business, transaction.

*[கடை + சார்.]*

*கடைசார்பான வணிகத் தொழில் முயற்சி.*

**கடைசார்**[2] *kaḍai-šār,* பெ.(n.) புழைக்கடை; backyard of house.

*[கடை + சார் – கடைசார். கடை = இறுதி, வீட்டின் பின்புறம். சார் = சார்ந்தது.]*

**கடைசாரம்** *kaḍai-šāram,* பெ.(n.) செயல்முடிவு; completion of a business.

**ம.** கடசாரம்

*[கடை + சாரம்.]*

**கடைசாரி** *kaḍai-šāri,* பெ.(n.) கற்பென்னும் திண்மையிழந்தவள்; immoral woman; drab.

*[கடை + சாரி. கடை = இழிவு. சாரி = சார்ந்தவள். சார் + இ (உடைமை குறித்த ஈறு) ஒ.நோ. அவிசாரி (இழி வழக்கு).]*

**கடைசால்** *kaḍai-šāl,* பெ.(n.) கப்பலின் பின்பக்கம் (யாழ்ப்.); stern of a vessel.

*[கடை + சால். சால் = நீட்சி, நீண்டஇருப்பிடம், இடம்.]*

**கடைசாலொதுக்கு-தல்** *kaḍai-šāl-oḍukku-,* 7 செ.கு.வி.(v.i.) கைவேலையை முடித்தல் (வின்.); to finish the business in hand.

*[கடை + சால் + ஒதுக்கு.]*

**கடைசி**[1] *kaḍaiši,* பெ.(n.) முடிவு; termination, conclustion, resolution. *அமைச்சரின் சொற்பொழிவைக்கடைசி வரைக் கேட்டு மகிழ்ந்தேன்.*

**ம.** கடசி; **க.,குட., து.,பட.** கடே; **பர்.**கட; **தெ.** கடெபல; **துட.**கட்ச்; **எருக்.** கடக்கோட்டு; **Mar.** kaṭee, kaḍa.

*[குடு → (கடு) → கடை → கடைசி (மு.தா.96).]*

**கடைசி**[2] *kaḍaiši,* பெ.(n.) மருதநிலப்பணிப்பெண் (உழத்தி); a maid servant in the farm. *"கரியவாய் நெடியகட் கடைசி மங்கையர்" (சீவக.1249).*

*[கடைச்சி → கடைசி (மு.தா.103).]*

**கடைசிப்பந்தி** *kaḍaiši-p-pandi,* பெ.(n.) **கடைப்பந்தி** பார்க்க; see *kaḍai-p-pandi.*

**பட.** கடைஅத்தே

*[கடைசி + பந்தி.]*

**கடைசியர்** *kaḍaišiyar,* பெ.(n.) மருதநிலப் பெண்கள்; women of agricultural tract.

**மறுவ.** உழத்தியர்

*[கடைசி + அர் – கடைசியர். 'அர்' பலர் பாலீறு.]*

**கடைசெறி** *kaḍai-šeṟi,* பெ.(n.) கைவிரலணி (சிலப்.6:97, உரை); finger ornaments; ring.

*[கடை + செறி. ஒ.நோ. தோட்செறி, காற்செறி.]*

**கடைசோரி** *kaḍai-šōri,* பெ.(n.) அப்பக்கடை; (சங்.அக.); stall for selling appam.

*[கடை + சோரி. தொழில் → தோலி → சோலி (joli) → சோரி.]*

**கடைஞ்சன்** *kaḍaiñcaṉ,* பெ.(n.) ***கடைஞன்*** பார்க்க; see *kaḍaiñaṉ. "வேந்தனாம் புலைக்கடைஞ்சன்" (ஞானவா.காதி.16).*

*[கடையன் → கடைஞன் → கடைஞ்சன் (கொ.வ.).]*

**கடைஞ்சாணி** *kaḍaiñcāṇi,* பெ.(n.) கடைசியானது; that which is last or remotest. கடைஞ்சாணி வயல் (நெல்லை).

**மறுவ.** கடைக்கோடி

*[கடை + சாணி. சேண் → சாண் → சாணி.]*

**கடைஞன்** *kaḍaiñaṉ,* பெ.(n.) 1. மருதநிலத்தவன் (திவா.); man of the labouring caste in an agricultural tract. 2. இழிந்தோன்; low person, *"இப்படித்தாகிய கடைஞ ரிருப்பினின்" (பெரியபு. திருநாளை.11).* 3. குணக்கேடன்; man of mean character.

*[களை → களைஞன் → கடைஞன்.]*

களைஞன் = நிலத்தில் களை எடுக்கும் தொழிலாளி.

கடையன், கடைஞன் என்னும் பெயர்கள் இழிவுசுட்டியனவல்ல; செய்யும் தொழில் சுட்டியவை. கடையர் மன்னரால் மதிக்கப்பட்டுச் சிறப்புப் பட்டங்களும் பெற்றமையின் பட்டங்கட்டி, நீட்டரசன் என்றும் அழைக்கப்பட்டனர். தென்னகக் குலம், குக்குலம் தொடர்பாக ஆய்ந்த எட்கார் தரசடன் இக்குலத்தினர் வேட்டுவர், சாணாரினும் உயர்ந்தவராக வாழ்ந்ததைக் குறிப்பிடுகிறார். எனவே குலத்தால் கடைப்பட்டவர் எனக் கூறப்படுவது முறையன்று. கடைஞர் [கடையர்] வயலில் களை பறிக்கும் உழவுத்தொழில் சார்பினர் என்பது, "கொண்டைக் கூழைத் தண்டழைக் கடைசியர் சிறுமா நெய்தல் ஆம்பலொடு கட்கும் மலங்குமிளிர் செறுவின்" .... [புறநா. 61:1,3.] என்னும் புறப் பாடலாலும் போதரும். சொற்பிறப்பு அறியாததால் நேர்ந்த பிழைபாடு குறிப்பிட்ட தொழிலாளரைத் தாழ்வாகக் கருத இடந் தந்து விட்டது.

**கடைத்தடம்** *kaḍai-t-taḍam,* பெ.(n.) வாயில் (வின்); gate way.

*[கடை + தடம் – கடைத்தடம். கடை = கடைவாயில். தடம் = அகன்ற வழி.]*

**கடைத்தரம்** *kaḍai-t-taram,* பெ.(n.) கீழ்த்தரம்; lowest grade; worst of its kind.

*[கடை + தரம். கடை = இழிவு. 'தரம்' சொ.ஆ.ஈறு. ஒ.நோ. நிலைத்தரம், படித்தரம், செந்தரம்.]*

**கடைத்தலை** *kaḍai-t-talai,* பெ.(n.) **கடைத்தலைவாயில்** பார்க்க; see *kaḍai-t-talai-vayil.* "*கடைத்தலை சீய்க்கப் பெற்றாற் கடுவினை களையலாமே" (திவ்.திருவாய்.10.2:7).*

*[கடை + தலை.]*

**கடைத்தலைவாயில்** *kaḍai-t-talai-vāyil,* பெ.(n.) புறத்தலை வாயில் (யாழ்ப்); outer gate, outer court.

*[கடை + தலை + வாயில்.]*

**கடைத்திண்ணை** *kaḍai-t-tiṉṉai,* பெ.(n.) அங்காடியின் வெளித் திண்ணை (சேரநா.); the outer veranda of a shop.

*[கடை + திண்ணை.]*

**கடைத்தும்** *kaḍaittum,* இடை. (part.) ஒரு வினையெச்ச ஈறு; even, when or where, although, used as an adverbial suffix. *"பல நல்ல கற்றக்கடைத்தும் மனநல்லர் ஆகுதல் மாணார்க் கரிது." (குறள்,823).*

*[கடை → கடைத்தும்.]*

**கடைத்தெரு** *kaḍai-t-teru,* பெ.(n.) அங்காடிகள் அமைந்த தெரு; a street having shops, market street, bazaar road.

*[கடை + தெரு.]*

**கடைத்தேற்றம்** *kaḍai-t-tēṟṟam,* பெ.(n.) ஈடேறுகை; rescue, deliverance, salvation.

*[கடை + தேற்றம்.]*

**கடைத்தேற்று-தல்** *kaḍai-t-tēṟṟu-,* 5 செ.கு.வி.(v.i.) ஈடேற்றுதல்; save, redeem. *இந்தஇக்கட்டிலிருந்து நீதான் கடைத்தேற்ற வேண்டும் (கிரியா.).*

*[கடை + தேற்று.]*

**கடைத்தேறு-தல்** *kaḍai-t-tēṟu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. ஈடேறுதல்; to be saved, to be rescued, to pull through difficulties. 2. நிறைவடைதல்; to be fullfilled (கரு.நா.). 3. வீடுபேறடைதல். attaining paradise.

தெ. கடதெரு

*[கடை + தேறு – கடைத்தேறு. கடை = இறுதி, முழுமை. கடைத்தேற்றல் = முழுமையாகத் தோன்றுதல்.]*

**கடைத்தொழில்**[1] *kaḍai-t-toḻil,* பெ.(n.) பொன்மாலை யாகச் செய்யப்படும் அணிகலன்களில் இரு தலைப்பிலும் அமைக்கப்பெறும் சுரை வேலைப் பாடு; ornamental work. *"நெல்லிக்காய் முத்து நூறும் கடைத்தொழில் இரண்டும் இவை கோத்த நூலும் உள்பட"* (S.I.I. Vol.8, insc.121).

*[கடை + தொழில் - கடைத்தொழில். கடை = இறுதி, எல்லை, விளிம்பு.]*

**கடைத்தொழில்**[2] *kaḍai-t-toḻil,* பெ.(n.) பதக்கத்தின் உறுப்பு; a part of a pendant. பதக்க மாலை (1) னால் நாயககண்டம் (9) அருகுகண்டம் (6) கடைத்தொழில் (2) (S.I.I.viii. 53).

*[கடை + தொழில்.]*

**கடைத்தொழில்**[3] *kaḍai-t-toḻil,* பெ.(n.) கடைசல் வேலை (தெ.இ.கோ.சா.Vol.iii.Part-II); fret.

*[கடை + தொழில் – கடைத்தொழில். கடை → கடைசல்.]*

**கடைத்தொழில்**[4] *kaḍai-t-toḻil,* பெ.(n.) ஏதமிகுந்த, நலக்கேடான பணிகள்; hazardous occupations.

*[கடை + தொழில்.]*

முத்துக் குளித்தல் சுண்ணாம்பு சுடுதல் போன்றன. ஏதமிகுந்ததும் நலக்கேடானது மாதலால் கடைத்தொழில் எனப்பட்டன.

**கடைதலை** *kaḍai-talai,* பெ.(n.) முடிவும் முதலும்; end and beginning.

*[கடை + தலை.]*

**கடைதலைப்பாடம்** *kaḍai-talai-p-pāḍam,* பெ.(n.) தலைகீழாகப் பாடம் பண்ணுதல்; reciting a lesson perfectly in any order.

**மறுவ.** நெட்டுரு, மனப்பாடம், கரதலைப்பாடம் (கொ.வ.).

*[கடை + தலை + பாடம். முடிவிலிருந்து முதல்வரை தலைகீழாக மனப்பாடம் செய்யும் திறன்.]*

**கடைதலைப்பார்-த்தல்** *kaḍai-talai-p-pār-,* 4 செ.குன்றாவி.(v.i.) 1. ஆராய்ந்து அறிதல்; thorough investigation. 2. உச்சி முதல் உள்ளங்கால் வரைக்கும் ஆராய்தல்; thorough examination of the body (சா.அக.).

*[கடை + தலை + பார்.]*

**கடைதலைப்பூட்டு** *kaḍai-talai-p-pūṭṭu,* பெ.(n.) பூட்டுவிற் பொருள்கோள்; a poetical construction in which the last nominal gets connected with the first word to disclose proper meaning.

*[கடை + தலை + பூட்டு]*

பாட்டின் இறுதிச் சொல் முதற் சொல்லோடு இயைந்து பொருள்கொள்ள இடந்தருவது. இதில் கடையும் தலையும் இயைந்து பொருள் தருவதால் கடைதலைப்பூட்டு என வழங்கலாயிற்று.

எ.டு. "திறந்திடுமின் தீயவை பிற்காண்டும் மாதர்
இறந்துபடிற் பெரிதாம் ஏதம் – உறந்தையர்கோன்
தண்ணார மார்பின் தமிழ்நர் பெருமானைக்
கண்ணாரக் காணக் கதவு" (முத்தொள்.85)

**கடைதலைவிற்பூட்டு** *kaḍai-talai-virpūṭṭu,* பெ.(n.) ***கடைதலைப்பூட்டு*** பார்க்க; see *kaḍai-talai-p-puṭṭu.*

*[கடை + தலை + வில் + பூட்டு.]*

**கடைதிறப்பு** *kaḍai-tirappu,* பெ.(n.) 1. கதவு திறக்கை; opening a door. *"கந்தங் கமழுங் குழல்கடை திறவாய்" (திருவா.18:3).* 2. போர்முடித்துத் திரும்பும் போர்வீரனை வாழ்த்தி வெற்றியைப் போற்றுவதான பரணி இலக்கியத்தின் உறுப்புகளுள் ஒன்று; a part in *Paraṇi* literature which praises the eulogy of the warrior returning home in triumph. *"கடவுள் வாழ்த்துக் கடைதிறைப் புரைத்தல்"(இலக்.வி.839).*

*[கடை + திறப்பு. கடை = வாயிற் கதவு. கடை திறப்பு = வாயில் திறத்தல்]*

போர்வயிற் பிரிவு முடிந்து காலம் தாழ்த்தித் திரும்பிய தலைவனிடம் ஊடிய தலைவி, கதவடைத்திருப்பாள். போர்ச் சிறப்பைத் தலைவன் பாடக்கேட்டு மகிழ்ந்து கதவைத் திறப்பதாகக் கற்பனை கொண்டு பாடப்பட்டதால் இப்பகுதி கடைதிறப்பு எனப் பெயர் பெற்றது. மகளிரின் தன்மைகள் அழகுறக் கூறி விளிக்கும் திறம் சிறப்புடைத்து.

**கடைதுடிப்பு** *kaḍai-tuḍippu,* பெ.(n.) செய்யுளினீற்றடி சிறந்து நிற்கை; sonority of the last line of a stanza. *"சீர்தளை விகற்பம் பொருந்திநன்னீ தியாய் கடைதுடிப்பாய்" (திருவேங்.சத.56).*

*[கடை + துடிப்பு.]*

**கடைநன்** *kaḍainaṉ,* பெ.(n.) கடைசல் வேலை செய்வோன்; turner. *"கோடுபோழ் கடைநரும் திருமணி குயினரும்" (மதுரைக்.511).*

*[கடை + நன்.]*

**கடைநாள்** *kaḍai-nāḷ,* பெ.(n.) 1. கடைசிநாள்; the last day. *"கார்தளி பொழிந்த வார்பெயற் கடை நாள்" (அகநா.139:5).* 2. இறக்கும் நாள்; the last day of one's life. *"கடைநா ளிதுவென் றறிந்தாரு மில்லை" (கலித்.12).* 3. ஊழிக்காலம்; the last day of the world. 4. தொழுபஃறி(ரேவதி) நாண்மீன்; the 27th naksatrā, from its being the last asterism.

*[கடை + நாள். கடை = கடைசி.]*

**கடைநிலை**[1] *kaḍai-nilai,* பெ.(n.) 1. புறவாயில்; outer-gate. 2. முடிவு; end. *"கால்கோள் விழவின் கடைநிலைசாற்றி" (சிலப்.5:144).* 3. இறுதி (விகுதி) (வின்.); ending. 4. சான்றோர் தம்வரவினைத் தலைவற்குணர்த்துமாறு வாயிலினின்று கடை காவலர்க்குக் கூறுதலாகிய புறத்துறை; theme of the poet who comes from a long distance resting awhile, to remove the discomforts of his tiresome journey, at the outer-gate of the residence of a patron or chief, while sending in the gate-keeper

to announce his (poets) arrival to the chief. *"சேய்வரல் வருத்தம் வீட வாயில் காவலர்க் குரைத்த கடைநிலையானும்" (தொல்.பொருள்.90).* 5. ஒரு சிற்றிலக்கியம் (தொல்.பொருள்.90); poem on the *kaḍai-nilai* theme.

*[கடை + நிலை.]*

**கடைநிலை**[2] *kaḍai-nilai,* பெ.(n.) இறுதி; last grade.

*[கடை + நிலை.]*

**கடைநிலைக்கேடு** *kaḍai-nilai-k-kēḍu,* பெ.(n.) சொல்லின் இறுதி நிலை கெடுதல்; loss of final letter or endings.

*[கடை + நிலை + கேடு.]*

**கடைநிலைத்தீவகம்** *kaḍai-nilai-t-tīvagam,* பெ.(n.) பாட்டின் இறுதிக்கண் நிற்கும் சொல்லானது பல விடங்களிலும் சென்று பொருள் விளக்கும் தீவக அணி வகை (தண்டி.38, உரை); figure of speech in which a word that is used at the end of a verse throws light upon, and is therefore considered to, be understood in, the other parts of the same.

*[கடை + நிலை + தீவகம்.]*

*"துறவுளவாச் சான்றோ ரிளிவரவுந் தூய*
*பிறவுளவா வூன்று வாவூணும் – பறைகறங்கக்*
*கொண்டா னிருப்பக் கொடுங்குழையா டெய்வமு*
*முண்டாக வைக்கற்பாற் றன்று"*
(தண்டி மேற்கோள் பாடல்)

இதில் "கடைநிலை வைக்கற்பாற் றன்று" என்பது இளிவரவு முதலியவற்றோடு சென்றியைந்து பொருள் கொண்டமையான் கடை நிலைத் தீவகம்.

**கடைநிலையெழுத்து** *kaḍai-nilai-y-eḻuttu,* பெ.(n.) சொல்லின் ஈற்றெழுத்து (வின்.); final letter of a word.

*[கடை + நிலை + எழுத்து.]*

**கடைநீர்**[1] *kaḍai-nīr,* பெ.(n.) கடைசியாகவுள்ள நிலத்திற்குப் பாய்ச்சுந் தண்ணீர் (S.I.I.iii, 287); water taken to a field which is to be irrigated last, opp. to *talai-nir.*

*[கடை + நீர்.]*

**கடைநீர்**[2] *kaḍai-nīr,* பெ.(n.) 1. இறுதிக் காலத்தில் கடைக்கண்ணில் ஒழுகும் நீர்; last tears. 2. கடைசியாகச் சேரும் நீர்; the fluid collected at the end in the process of distillation (சா.அக.).

*[கடை + நீர்.]*

**கடைநோய்** *kaḍai-nōy,* பெ.(n.) மூப்பியல் நோய்; the senile disease.

*[கடை + நோய்.]*

**கடைநோட்டம்** *kaḍai -nōṭṭam,* பெ.(n.) 1. ஓரக்கண்ணால் நோக்கல்; side glance. 2. இறுதியாகப் பார்த்தல்; last sight.

**க.** கடெநோட

*[கடை + நோட்டம்.]*

**கடைப்படி** *kaḍai-p-paḍi,* பெ.(n.) மிகச்சிறிய எடை அலகு; lowest unit of mass.

*[கடை + படி.]*

**கடைப்படு-தல்** *kaḍai-p-paḍu-,* 18 செ.கு.வி.(v.i.) 1. இழிவாதல்; to be inferior, to be lowest in quality or estimation, to sink into insignificance. *"காணிற் கடைப்பட்டான் என்றிகழார்" (நாலடி.136).* 2. நிறைவேறுதல்; to be fulfilled, accomplished. *"கன்றா நினைப்பது கடைப்படுதன் முன்னே" (இரகு. அயனு.38).*

**க.** காடவடு, கடெபடு; **தெ.** கடிபோவு (வழிதல்).

*[கடை + படு.]*

**கடைப்படுதானம்** *kaḍai-p-paḍu-tāṉam,* பெ.(n.) கைம்மாறு கருதும் கொடை; charity with a motive, such as that which is given for the sake of a return or through force considered as a very inferior kind of benevolence.

*[கடை + படு + தானம். கடை = இழிவு. கொடு → கொடை.]*

தலை, இடை, கடை என மூவகைக் கொடையுள் கேட்காமல் தருவது தலைக் கொடை; கேட்டுத் தருவது இடைக்கொடை; அச்சம் காரணமாகத் தருவது கடைக்கொடையாம். அரசனுக்கும் வலியவர்க்கும் தீங்கு விளைவிப் போருக்கும் அச்சம் காரணமாக வழங்கும் கொடையின் இழிவைக் கருதி கடைக்கொடை என்றனர். இதை வடநூலார் "பயதத்தம்" என்பர்.

**கடைப்பல்** *kaḍai-p-pal,* பெ.(n.) கடைசியாக முளைக்கும் பல்; the last molar tooth on either side of each jaw (சா.அக).

*[கடை + பல்.]*

**கடைப்பலகை[1]** *kaḍai-p-palagai,* பெ.(n.) அணிகலன்களின் முனைகளை இணைக்கும் தகடு; hook which joins the two ends of an ornament.

*[கடை + பலகை.]*

அணிகலன்களின் கடைக்கொக்கி தட்டையாக இருப்பதால் பலகை எனப்பட்டது.

**கடைப்பலகை[2]** *kaḍai-p-palagai,* பெ.(n.) கட்டு மரத்தின் இறுதியில் அமைந்த திசை திருப்பும் பலகை. rudder, helm.

*[கடை + பலகை.]*

**கடைப்பலகை[3]** *kaḍai-p-palagai,* பெ.(n.) கடையை மூடும் பலகை; separated wooden planks which are used to close petty shops.

*[கடை + பலகை.]*

சிறு கடைகளை அடைப்பதற்கு நெடுக்கு வாட்டில் கதவு நிலையின் மேற்சரத்திலும் கீழ்ச்சரத்திலும் பலகை நகரும் பாங்கில் குடைந்த குழிவுகளில் பொருத்தும் நெடும் பலகைகள். இக் கதவுப் பலகைகளுக்கு நெட்டிரும்புப் பட்டையை இடையாகக் கொண்டிகளில் மாட்டிப் பூட்டுவர்.

**கடைபரப்பு-தல்** *kaḍai-parappu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. கடையில் பொருள்களைப் பரப்பி வைத்தல் (வின்.); to display of goods in a shop. 2. ஒரு செயல் செய்யும்பொழுது அது பார்ப்பவர்களுக்குப் பெரிதாகத் தோன்றுமாறு பலவற்றையும் பரப்பி வைத்தல்; to make a show; to exhibit one's work in an attractive manner with intent more or less to deceive.

*[கடை + பரப்பு. கடை = அங்காடி.]*

**கடைப்பாட்டம்** *kaḍai-p-pāṭṭam,* பெ.(n.) 1.விளைச்சல் ஆண்டின் இறுதிப் பருவம்; last season for cultivation. 2. ஒருவகை வரி; a kind of tax. *"இறை நீக்கி நின்ற கடைப்பாட்டத்தால் வந்த கடமை" (தெ.கல்.தொ.8.கல்.288).*

*[கடை + பாட்டம். பாட்டம் = பருவகால விளைவு.]*

**கடைப்பாடு[1]** *kaḍai-p-pāḍu,* பெ.(n.) தீர்மானம்; determination.

*[கடை + பாடு. படு → பாடு. இறுதியாக வரவுபெற்றது, முடிவு செய்யப்பெற்றது.]*

**கடைப்பாடு[2]** *kaḍai-p-pāḍu,* பெ.(n.)இழிவு; inferiority.

*[கடை + பாடு. படு → பாடு. கடை = இழிவு. பகுதிப்பொருள் ஈறு. ஒ.நோ. செயற்பாடு.]*

**கடைப்பாடு[3]** *kaḍai-p-pāḍu,* பெ.(n.) இறுதியாய் வலையிற் கிடைக்கப்பெற்ற மீன் (தஞ்சை); fish obtained last in the net.

*[கடை + (படு) பாடு. படுதல் = வலையிற் படுதல்.]*

**கடைப்பான்மை** *kaḍai-p-pāṉmai,* பெ.(n.) இழிதன்மை; inferior kind, lowest class or grade. *"பண்ணாள் மறுத்துப் புரிதல் கடைப்பான்மையதே" (கந்தபு. காமதகன.45).*

*[கடை + பான்மை.]*

**கடைப்பிடி[1]-த்தல்** *kaḍai-p-piḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. உறுதியாகப் பற்றுதல்; to hold firmly to the end; to have an unwavering faith in. *"நன்மை கடைப்பிடி" (ஆ.சூ.).* 2. தெளிவுறவறிதல்; to ascertain clearly, know certainly, understand correctly *"அற்றதறிந்து கடைப்பிடித்து மாறல்ல துய்க்க" (குறள்,944).* 3. மறவாதிருத்தல்; to remember, bear in mind; to be grateful for as benefits. *"மற்றதன் கள்ளங் கடைப்பிடித்த னன்று" (நாலடி.20).* 4. சேர்த்து வைத்தல்; to accumulate, provide. *'வாழ்க்கைக்கு வேண்டும் பொருள்களை யறிந்து கடைப்பிடித்தலும்' (குறள்,51,உரை).* 5. மேற்கொள்ளுதல்; observe (mourning, etc.) *தலைவருக்கு இன்று துக்கநாள் கடைப்பிடிக்கப் படுகிறது (உ.வ.).*

*[கடை + பிடி – கடைப்பிடி. (இறுதிவரை பின்பற்றி வருதல், அதில் தளராமை).]*

**கடைப்பிடி[2]** *kaḍai-p-piḍi,* பெ.(n.) 1. உறுதி; determination, resolve. *"அரச ருள்ளும் அறங்கடைப் பிடித்த செங்கோல்" (அகநா.338:3).* 2. தேற்றம் (திவா.); certainty, established truth. 3. கொண்முடிபு (சித்தாந்தம்); doctrine, truth firmly believed in as necessary to salvation. *"நின் கடைப்பிடி யியம்பு" (மணிமே.27:4).* 4. பற்று; attachment predilection. *"இலக்கின்மேற் கடைப்பிடியோ விடப மலை யுவந்தனையே"*

(அழகர்கலம்.1). 5. ஆடவர்க்குரிய அறிவு; one of the four kinds of traits for men. 6. அறிந்தபடி நடத்தல்; to follow as (we) learnt. *கற்றதைக் கடைப்பிடி* (உ.வ.).

*[கடை + பிடி.]*

ஆணுக்குரிய நாற்குணங்களுள் கொண்ட பொருளை மறவாமையாகிய 'கடைப்பிடி' ஒன்றாகும். மற்ற மூன்று அறிவு, நிறை, ஓர்ப்பு என்பனவாகும்.

**கடைப்பிடிப்பு** *kaḍai-p-piḍippu,* பெ.(n.) இறுதிவரை பின்பற்றுகை; to be followed till the end.

*[கடை + பிடிப்பு. கடை → கடைசி = இறுதிவரை.]*

**கடைப்பிறப்பு** *kaḍai-p-piṟappu,* பெ.(n.) கீழ்ப்பிறப்பு; low birth.

*[கடை + பிறப்பு. கடை = கீழ்.]*

**கடைப்புணர்முரண்** *kaḍai-p-puṇar-muraṇ,* பெ.(n.) **கடைமுரண்** பார்க்க; see *kaḍai-muraṇ.*

*[கடை + புணர் + முரண்.]*

**கடைப்புணர்வு** *kaḍai-p-puṇarvu,* பெ.(n.) அணிகலன்களின் கொக்கி (வின்.); clasp, hasp.

*[கடை + புணர்வு. கடை = கடைசி.]*

**கடைப்புத்தி** *kaḍai-p-putti,* பெ.(n.) 1. முட்டாள்தனம்; stupidity. 2. பின்னறிவு; after thought, as folly.

*[கடை + புத்தி.]*

***வ.*** *புத்தி >* ***த.*** *அறிவு.*

**கடைப்புளி** *kaḍai-p-puḷi,* பெ.(n.) செயலை முடிக்கும் துணிவு, தேற்றம், மறவாமை; capacity to complete an action.

**கடைப்பூ** *kaḍai-p-pū,* பெ.(n.) நிலத்தின் கடைசிப் போகம் (S.11.Vol.II.117); last crop.

*[கடை + பூ.]*

**கடைப்பூட்டு** *kaḍai-p-pūṭṭu,* பெ.(n.) ***கடைப்புணர்வு*** பார்க்க (வின்.); see *kaḍai-p-puṇarvu.*

*[கடை + பூட்டு.]*

**கடைப்பூண்** *kaḍai-p-pūṇ,* பெ.(n.) 1. அணிகலனின் மூட்டுவாய் (நாமதீப.); clasp of ornaments. 2. உலக்கையின் முனையில் பொருத்தப்படும் மாழை (உலோகம்) வளையம்; ferrul.

*[கடை + பூண். கடை = நுனி.]*

**கடைப்போக்குநிலம்** *kaḍai-p-pōkku-nilam,* பெ.(n.) ஏரிப்பாய்ச்சலுக்குத் தொலைவிலுள்ள நிலம்; land at the far end of the irrigation channel, opp. to உள்ளடி நிலம்.

*[கடை + போக்கு + நிலம்.]*

**கடைப்போலி** *kaḍai-p-pōli,* பெ.(n.) சொல்லிறுதியில் ஓர் எழுத்திற்கு மாற்றாக அமையும் மற்றோர் எழுத்து; variant form of letter or syllable occuring at end of the words.

*[கடை + போலி.]*

பொருள் மாற்றம் ஏற்படுத்தாமல் ஒரு சொல்லின் இறுதியில் நிற்கும் ஓர் எழுத்துக்கு மாற்றாக மற்றோர் எழுத்து அமைவது கடைப்போலியாகும். [எ.டு] சாம்பல் – சாம்பர், பந்தல் – பந்தர்.

**கடைபொறுக்கி** *kaḍai-poṟukki,* பெ.(n.) எச்சிற் பொறுக்கி (நாஞ்.); one who lives by pcking up leavings of food.

*[கடை + பொறுக்கி.]*

**கடைபோ–தல்** *kaḍai-pō-,* 8 செ.கு.வி (v.i.) 1. முற்றுப்பெறுதல்; to end, terminate, conclude, be fulfilled. *"யாஅர் கடைபோகச் செல்வ முய்த்தார்"* (நாலடி.119). 2. நிலைநிற்றல்; to endure to the end. *"வனப்பும் பொலிவுங் கடைபோகா"* (சூளா.அரசி. 337).

*[கடை + போ.]*

**கடைபோடு[1]–தல்** *kaḍai-pōḍu-,* 20 செ.கு.வி.(v.i.) 1. வணிகந் தொடங்குதல்; to set up a shop. 2. திருவிழா போன்ற சிறப்புக் காலங்களில் தற்காலிகக் கடை அமைத்தல் to set up a temporary shop.

மறுவ. கடைவைத்தல்

*[கடை + போடு.]*

**கடைபோடு[2]–தல்** *kaḍai-pōḍu-,* 20 செ.கு.வி.(v.i.) வம்பளத்தல்; to indulge in useless talk.

*[கடை + போடு.]*

**கடைமடக்கு** *kaḍai-maḍakku,* பெ.(n.) நான்கடி ஈற்றிலும் ஒரே சொல் மடங்கி வரும் சொல்லணிவகை (தண்டி.94 உரை); a mode of constructing verse in which words apparently similar in sound but different in meaning are repeated at the end of each line.

*[கடை + மடக்கு.]*

எ.டு. *"சொன்ன நாளிது சுரும்பிமி ரிதழிபொன் கால*
*மின்னு வாள்விட வில்வளைத் தூன்றிய கால*
*இன்ன கார்முகி லினமிருண் டெழுதரு கால*
*மன்னர் வாரலர் தான் வரு மயின் மருங்கால"*
*(தண்டி. 95,உரை மேற்.)*

மடக்கு – [யமகம்] – வந்த சொல்லே வந்து வேறுபொருளைத் தருவது.

**கடைமடை** *kaḍai-maḍai,* பெ.(n.) 1. கடைசி மதகு (சீவக.1614, உரை); the last sluice of a tank, opp. to *talaimadai.* 2. கடைசியாகயுள்ள வயலிற் பாயுங் கால்வாய் (இ.வ.); the opening of a channel into the last field irrigated by it. *'தலைமடையாலே நீர்பாயவும் கடைமடையாலே விழவும்' (தெ.கல். தொ.23 கல்.490).* 3. வாய்காலில் நீர் கடைசியாகப் பாயும் நிலம் (இ.வ.); land at the far end of an irrigation channel.

*[கடை + மடை.]*

**கடைமணி**[1] *kaḍai-maṇi,* பெ.(n.) 1. ஆராய்ச்சி மணி; bell hung outside the gate of the King's palace so that any one who had a grievance to be redressed might pull and ring to obtain the kings audience. *"வாயிற்கடைமணி நடுநா நடுங்க" (சிலப்.20:53).* 2. வேல் முதலியவற்றின் அடிப்பகுதி; handle of a spear. *"எஃகங் . . . கடைமணி காண்வரத் தோன்றி" (களவழி.19).* 3. பரவ மகளிர் கையணி வகை bracelet of Parava women. 4. காளையின் கழுத்தில் கட்டும் மணி (சேரநா.); bell tied to the neck of a bullock. 5. தாலியுடன் சேர்த்தணியும் மணி; bead attached to the *tali.* *"கட்டின தாலிக்குக் கடைமணி யில்லாதது போய்" (பஞ்ச.திருமுக.1332).*

ம. கடமணி

*[கடை + மணி.]*

மணியை ஒலித்துத் தனக்குற்ற ஏதத்தை வேந்தனின் ஆராய்ச்சிக்கு [விசாரணைக்கு]க் கொணர்ந்தமையால் ஆராய்ச்சிமணி எனப்பட்டது. இது தலைவாயிலில் இருந்தமையால் கடைமணி எனப்பட்டது.

**கடைமணி**[2] *kaḍai-maṇi,* பெ.(n.) கண்மணிக்கடை; edge of the eye ball. *"ஆவின்கடை மணி யுகுநீர் (சிலப்.20:54).*

*[கடை + மணி.]*

**கடைமரம்** *kaḍai-maram,* பெ.(n.) 1. கடைசற்பட்டை (வின்.); turning lathe. 2. வெண்கல ஏனம் செய்வோர் மண்ணைக் கொண்டு உருவாக்கும் கரு அமைப்பிற்குப் பயன்படுத்தும் தடி (சேரநா.); turning pole, a kind of wooden lathe used by braziers for shaping earthen crucibles.

ம. கடமரம்

*[கடை + மரம்.]*

**கடைமருந்து** *kaḍai-marundhu,* பெ.(n.) 1. ***கடைச் சரக்கு*** பார்க்க; see *kaḍai-c-carakku.* 2. கடையில் விற்கும் ஆயத்த மருந்து; prepared or ready made medicine sold in the bazaar. 3. கடையில் விற்கும் பசுமூலி; green herbs sold in bazaars. (சா.அக.)

*[கடை + மருந்து.]*

**கடைமாணாக்கர்** *kaḍai-māṇākkar,* பெ.(n.) கற்கும் திறனில் மூன்றாம் நிலை மாணாக்கர்; the last of the three grades of students. *"அன்னர் தலையிடை கடைமா ணாக்கர்" (நன்.38).*

*[கடை + மாணாக்கர். கடை = கடைசி.]*

**கடைமீன்** *kaḍai-mīṉ,* பெ.(n.) இருபத்தேழாவது நாண்மீன் (தொழுபஃறி–ரேவதி); the 27th naksatra from its being the last of the asterisms.

*[கடை + மீன். கடை = கடைசி.]*

**கடைமுகம்**[1] *kaḍai-mugam,* பெ.(n.) 1. தலைவாயில்; gateway, entrance. *"ஆங்கட் கதுமென கடவுட் டோன்றிக் கடைமுகங் குறுக" (சீவக.1124).* 2. துலை

(ஐப்பசி) மாதத்து இறுதிநாள்; last day of the month *Aippasi.*

*[கடை + முகம்.]*

**கடைமுதல்** *kaḍai-mudal,* பெ.(n.) ஒரு பாடலின் இறுதிச் சொல் அல்லது எழுத்து அடுத்த பாடலின் முதற் சொல்லாக அல்லது எழுத்தாக வரும் பாடல்வகை (அந்தாதி); poem in which the last letter syllable or foot of the last line of one stanza is identical with the first letter, syllable or foot of the succeeding stanza, the sequence being kept on between the last and the first stanza of the poem as well.

மறுவ. ஈறுதொடங்கி

*[கடை + முதல்.]*

**கடைமுரண்** *kaḍai-muraṇ,* பெ.(n.) அடிதோறும் இறுதிச் சீர்க்கண் சொல்லினும் பொருளினும் மறுதலைப்படத் தொகுக்குந் தொடை (யாப்.வி.39); a mode of constructing verse in which the last foot of each line contains words conveying opposite meanings.

*[கடை + முரண்.]*

*எ.டு. "கயல் மலைப் பன்ன கண்ணிணை **கரிதே;***
*சுடமுலைத் தவழும் தனிவடம் **வெளிதே;***
*நூலினும் நுண்ணிடை **சிறிதே;***
*ஆடமைத் தோளிக் கல்குலோ **பெரிதே**" (யா.கா.40 மேற்.).*

**கடைமுழுக்கு** *kaḍai-muḻukku,* பெ.(n.) துலை (ஐப்பசி) மாதத்துக் கடைநாளன்று மயிலாடுதுறையி லோடுங் காவிரியில் நீராடுகை (இ.வ.); bathing in the cauvery at Mailadudurai, on the last day of the month Tulai (Appaci).

*[கடை + முழுக்கு.]*

**கடைமுள்ளந்தண்டு** *kaḍai-muḷḷantaṇḍu,* பெ.(n.) முதுகின் முள்ளந்தண்டின் கீழ்ப்பகுதி; the last portion of the spinal column, comprising the five vertebrae (சா.அக.).

*[கடை + முள் + அம் + தண்டு – கடைமுள்ளந்தண்டு. 'அம்' சாரியை.]*

**கடைமுள்ளெலும்பு** *kaḍai-muḷḷelumbu,* பெ.(n.) முதுகின் வரிசையில் கடைசியாக உள்ள எலும்பு; the lowest and the last part of the terminal vertebrae at the sacrum (சா.அக.).

*[கடை + முள் + எலும்பு.]*

**கடைமுளை** *kaḍai-muḷai,* பெ.(n.) நுகத்தடியின் இரு முனைகளிலும் இடப்படும் குச்சி; wooden pin at either either end of a yoke.

*[கடை + முளை.]*



கடைமுளை

**கடைமுறி-தல்** *kaḍai-muṟi-,* 4 செ.கு.வி(v.i.) வணிகத்தொழிலழிதல்; to fail in business.

*[கடை + முறி. கடை = வணிகம்.]*

**கடைமுறை**[1] *kaḍai-muṟai,* பெ.(n.) இழிந்த நிலை; meanest condition. *"கடைமுறை வாழ்க்கையும் போம்" (திவ்.திருவாய்.9.1:9).*

*[கடை + முறை.]*

**கடைமுறை**[2] *kaḍai-muṟai,* பெ.(n.) முடிவில்; at last *"கடைமுறை தான்சாந் துயரம் தரும்" (குறள்,792).*

*[கடை + முறை.]*

**கடைமை** *kaḍaimai,* பெ.(n.) கீழ்மை; meanest condition. *"கையாற் கடைமைத் தலைநின்றான்" (பெரியபு.சண்டேசுர.50).*

**க.** கடமெ, கடிமெ; **து.** கடமெ; **தெ.** கடம.

*[கடை → கடைமை.]*

**கடைமோர்** *kaḍai-mōr,* பெ.(n.) கட்டித்தயிரைக் கடைந்தபின் நீராளமாக நிற்கும் மோர்; churned butter milk.

துட. சுற்மொற்

*[கடை + மோர். கடை = கடைதல்.]*

**கடைமோனை** *kaḍai-mōnai,* பெ.(n.) அடிதோறும் கடைச்சீரின் முதலெழுத்து ஒன்றிவரத் தொடுக்கும் மோனைத் தொடை (யாப்.வி.39); a mode of constructing verse in which the initial letters of the last foot of each line are the same or assonant.

*[கடை + மோனை. கடை = கடைசி.]*

எ.டு. *"வளரிளங் கொங்கை வான்கெழு* ***மருப்பே;***
*பொறிவண் டோதியிற் பாடுமா* ***மருளே***
*வாணுதல் ஒண்மதி* ***மருட்டும்***
*மாயோன் இவளென் நோய்தணி* ***மருந்தே"***

**கடையக்குடி** *kaḍaiyakkuḍi,* பெ.(n.) திருத்தவத் துறை (இலால்குடி) வட்டத்துத் திருநெடுங்களம் கோயிலுக்கு கி.பி.15ஆம் நூற்றாண்டில் வழங்கப் பட்ட ஊர்; a village donated to Thirunedungalam temple in Lalgudi taluk during 15th century A.D. *'பாண்டி குலாசனி வாளநாட்டு வடகவிநாட்டு கடையக்குடியை கம்பரச நல்லூர் என்று கட்டி' (தெ.இ.கல்.தொ.26.கல்.724).*

*[கடையன் + குடி.]*

**கடையடைக்காய்** *kaḍai-aḍai-k-kāy,* பெ.(n.) ஒரு பழைய வரி (S.I.I.Vol.ii 521); an ancient tax.

*[கடை + அடைக்காய்.]*

**கடையடைப்பு** *kaḍai-y-aḍaippu,* பெ.(n.) பொதுக் காரணங் கருதிக் கடைத்தெரு முழுதும் மூடுகை; total closure of business, shops for a common purpose.

*[கடை + அடைப்பு.]*

**கடையண்ணம்** *kaḍai-y-aṇṇam,* பெ.(n.) அண்ணத் தின் உட்பகுதி; velum.

*[கடை + அண்ணம்.]*

மேற்பல் வரிசையை அடுத்த பகுதியை நுனியண்ணம் என்றும், அதற்கடுத்த பகுதியை இடையண்ணம் என்றும் அதற்கடுத்த பகுதியைக் கடையண்ணம் இற்றை மொழியியலார் பிரிப்பர். இலக்கணங்கள் இதற்கு நேர்மாறாக குரல்வளைப் பகுதியிலிருந்து முதல் அண்ணம், இடையண்ணம், நுனியண்ணம் எனக் கணக்கிடுகின்றன. இதே போல் நுனிநா, இடைநா, கடைநா, என நாக்கின் நுனியிலிருந்து இன்றைய மொழியியல் பெயரிடுகின்றது. ஆனால் இலக்கணங்கள் உள்பகுதியிலிருந்து முதல்நா, இடைநா, நுனிநா எனப் பெயரிடுகின்றன.

**கடையண்ணவொலி** *kaḍai-y-aṇṇa-v-oli,* பெ.(n.) நாமுதலும் அண்ணமுதலும் பொருந்தப் பிறக்கும் ஒலி; velar sound. *"ககார ஙகாரம் முதல்நா அண்ணம்" (தொல்.எழுத்து.பிறப்.7).*

*[கடை + அண்ணம் + ஒலி.]*

**கடையந்தரம்** *kaḍai-y-andaram,* பெ.(n.) **கடை யாந்தரம்** பார்க்க see *kaḍai-y-āndaram.*

*[கடை + அந்தரம். கடை = இறுதி.]*

**கடையம்**[1] *kaḍaiyam,* பெ.(n.) பதினோராடல்களுள் ஒன்றான, இந்திரை (இந்திராணி) உழத்தியர் வடிவுகொண்டு ஆடிய கூத்து; a drama acted by Indrani in the garb of a female farm-hand. *"அயிராணி மடந்தை யாடிய கடையமும்" (சிலப்.6:63).*

*[கடை → கடையம் (அழித்தலைக் குறிக்கும் ஆடல் வகை).]*

**கடையம்**[2] *kaḍai-yam,* பெ.(n.) நெல்லை மாவட்டம் தென்காசி வட்டத்தில் அமைந்த ஓர் ஊர்; a village in Thirunelveli district.

*[கடை → கடையம்.]*

**கடையயல்** *kaḍai-y-ayal,* பெ.(n.) ஈற்றயல்; penultimate.

*[கடை → கடையயல்.]*

**கடையர்**[1] *kaḍaiyar,* பெ.(n.) 1. வேளாளரில் ஒருவகையினம் (பழ.தமி.109); a subdivision among velala community. 2. மருதநிலத் தொழிலாளர்; agricultural labourer. *"உழவர் உழத்தியர் கடையர் கடைச்சியர்" (நம்பியகப்.23).*

ம. கடவன், கடசன்.

*[களை → களைஞர் → கடைஞர் → கடையர். கடைஞர் = களைபறிப்போர். நிலத்தில் களை பறித்தல் போன்ற வேளாண்மைத் தொழிலாளரை இச்சொல் குறிப்பினும் பொதுவாக உழவுத்தொழில் பூண்டோருக்கே உரிய பெயராம். இவர்களைத் தாழ்ந்தோர் என்றும் இழிந்தோர் என்றும் பிற அகரமுதலிகளில் குறிப்பிட்டிருப்பது தவறு.]*

**கடையர்**[2] *kaḍaiyar,* பெ.(n.) 1. பள்ளரில் சுண்ணாம்பு சுடுதலும், முத்துக்குளித்தலும் ஆகிய தொழில்களை செய்யும் வகுப்பார் (வின்.); name of a subdivision of pallars, who are lime-burners and divers for pearls. 2. இழிந்தோர்; mean fellows. *"கடையரே கல்லா தவர்" (குறள்,395).*

*[கடை → கடையர்.]*

**கடையர்**[3] *kaḍaiyar,* பெ.(n.) வாயில் காப்போர் (பெருங்.உஞ்சை.32:84); gate-keepers.

*[கடை → கடையர். கடை = வாயில். கடையர் = வாயில்காப்போர்.]*

**கடையல்** *kaḍaiyal,* பெ.(n.) 1. கடைகை; turning in a lathe. 2. கடையும் வேலை; turner's work. 3. அலைக்கை; agitating, shaking, churning. *"காமக்கடலைக் கடையலுற்றான்" (சீவக.2030).*

**மறுவ.** கடைச்சல்

**ம.** கடச்சல்; **க.** கடெசலு, கடசலு; **து.** கட்சில், கடிசில்.

*[கடை → கடையல். கடை = கடைதல்.]*

**கடையவாடல்** *kaḍaiya-vāḍal,* பெ.(n.) இந்திரை (இந்திராணி) யாடல்; dance of Indrani.

*[கடையம் + ஆடல்.]*

***கடையம்**[1] பார்க்க;* see *kaḍaiyam*[1].

**கடையழி[1]-தல்** *kaḍai-y-aḻi-,* 2 செ.கு.வி.(v.i.) தேய்தல் (யாழ்.அக.); to diminish by degrees.

*[கடை + அழி. கடை = நுனி.]*

**கடையழி[2]-தல்** *kaḍai-y-aḻi-,* 2 செ.கு.வி.(v.i.) 1. வருந்துதல்; suffer, to be afflicted with a painful lingering disease (சா.அக.). 2. மதிப்பிழத்தல்; to lose respectabilites. கணவனை இழந்ததில் கடையழிந்து போனேன் (நெல்லை.)

*[கடை + அழி.]*

கருவியின் முனை தேய்வதுபோல உடலுறுப்புத் தேய்வதால் வருத்தமுண்டாதல்.

**கடையழி[3]-தல்** *kaḍai-y-aḻi-,* 2 செ.கு.வி.(v.i.) 1. வறுமையுறுதல்; to be distressed with poverty. 2. கேடுறுதல்; to degenerate.

*[கடை + அழி.]*

**கடையளபெடை** *kaḍai-y-aḷabeḍai,* பெ.(n.) செய்யுளில் அடியின் இறுதிக்கண் அளபெடுத்து வருவது (யாப்.வி.ப.163); elongation of syllable in the end of a line.

*[கடை + அளபெடை. கடை = இறுதி. அளபெடை = உயிரளபெடை.]*

*எ.டு. "தொடுகடற் றுறைதுறை திரிதரும் **சுறாஅ;***
*கருங்கழி கலந்து கலிதரும் **கராஅ;***
*மறிதிரை மகரமும் **வழாஅ***
*எறிநீர்ச் சேர்ப்ப! இந் நெறிவரத் **தகாஅ"***

**கடையன்**[1] *kaḍaiyaṉ,* பெ.(n.) 1. சுண்ணாம்பு சுடுதலும் முத்துக் குளித்தலும் செய்யும் பரதவப் பிரிவினன் (க.ப.அக.); fisher fold who engage in coral fishing and lime-kiln work. 2. உழவுத்தொழிலாளன்; agricultural labour.

*[களை → களைஞன் → கடைஞன் → கடையன்.]*

பிற அகரமுதலிகளில் கடும் உடலுழைப்புத் தொழில்களில் ஈடுபட்டவர்களை தாழ்ந்தவர்களாகக் கருதி நால்வருணக் கோட்பாட்டில் நாலாம் பிரிவாகக் குறித்து இழிவுபடுத்தியிருப்பது மிகவும் கேடானது. உழைப்பவர்களை உயர்வாகக் கருதுவதே தமிழ் மரபு. 'உழுவார் உலகத்தார்க்கு ஆணி என்றார் திருவள்ளுவர்'.

**கடையன்**[2] *kaḍaiyaṉ,* பெ.(n.) இழிந்த பண்புடையவன்; a mean fellow.

*[கடை (இழிவு) → கடையன்.]*

**கடையன்பு** *kaḍai-y-aṉbu,* பெ.(n.) தலைவனைக் கூடிய காலத்து நிலையழிகையான அன்பு; inferior kind of conjugal love of a woman only during sexual union.

*[கடை + அன்பு.]*

தலைவனைப் பார்த்தபோதும், அவர்தம் பெயரைக் கேட்டபோதும் நிலையழிதலே அன்பு பூண்ட தலைவியின் உயர் பண்பாகும். அஃதின்மையின் கடையன்பு எனப்பட்டது.

**கடையனல்** *kaḍai-y-aṉal,* பெ.(n.) ஊழித்தீ (பிங்.); deluge of fire.

**க.** கடெகிர்சு

*[கடை + அனல். கடை = இறுதி.]*

**கடையா** *kaḍaiyā,* பெ.(n.) **கடையால்** பார்க்க; see *kaḍaiyāl.* *"கடையாவின் கழிகோற்கைச் சறையினார்" (திவ்.திருவாய்.4.8:4).*

*[கடையால் → கடையா. கடையால் = மூங்கிற்குழாய்.]*

**கடையாகுமோனை** *kaḍai-y-āgu-mōṉai,* பெ.(n.) இனத்தானும், மாத்திரையானும், பிறவற்றானும் வரத் தொடுப்பது (யாப்.வி.37,உரை); a variety of intial mōṉai.

*[கடை + ஆகு + மோனை.]*

(எ.டு.) *"பகலே பல்பூங்கானற் கிள்ளை ஒப்பியும்*
*பாசிலைக் குளவியொடு கூதளம் விரைஇ".*

இனத்தான் வந்த கடையாகு மோனை.

**கடையாகெதுகை** *kaḍai-y-āgedugai,* பெ.(n.) இனத்தானும், மாத்திரையானும், பிறவற்றானும் வரத்தொடுப்பது (யாப்.வி.37,உரை); a variety of initial edugai.

*[கடை + ஆகு + எதுகை.]*

எ.டு. *"ஆவின் இடையர் விதையழிப்பர்; அவ்விதையைக்*
*காமினோ என்றாற் கதம்படுவர்; – நாமினிப்*
*பொல்லா தெனினமப் பூந்தோட்ட வாழ்நருங்*
*கொள்ளாரா நஞ்சொற் குணம்."*

இது பிறவற்றான் வந்த கடையாகு எதுகை.

**கடையாட்டம்**[1] *kaḍai-y-āṭṭam,* பெ.(n.) 1. வருத்தம்; lingering in disease, acute pain. 2. உலைவு; vexation, teasing trouble, annoyance, as mean work.

*[கடை + ஆட்டம்.]*

**கடையாட்டம்**[2] *kaḍai-y-āṭṭam,* பெ.(n.) கடைசி விளையாட்டு; last play in a game. கடையாட்டத்தி லாவது வெற்றி பெற முயல்க (உ.வ.).

*[கடை + ஆட்டம்.]*

**கடையாட்டம்**[3] *kaḍai-y-āṭṭam,* பெ.(n.) இறக்கும் நேரத்தில் அடையும் துன்பம்; the agony as the time of death (சா.அக.).

*[கடை + ஆட்டம்.]*

**கடையாணி**[1] *kaḍai-y-āṇi,* பெ.(n.) 1. அச்சாணி (C.G.); linchpin. 2. பூட்டாணி (வின்.); pin used to keep a tenon in a mortice.

**க.** கடாணி; **தெ.** கடசீல; **து.** கடாணி, கடெயாணி.

*[கடை + ஆணி.]*

**கடையாணி**[2] *kaḍaiyāṇi,* பெ.(n.) ஆணிப்பொன்; pure gold.

**க.** கடெயாணி, கடியாணி; **தெ.** கடானி.

*[கட்டு + ஆணி – கட்டாணி → கடையாணி. கட்டு = திரட்சி.]*

**கடையாணி**[3] *kaḍai-y-āṇi,* பெ.(n.) குதிரைக் கடிவாளம் (கருநா.); bridle.

**க.** கடாணி; **கசபா.** கடேனி.

*[கடியாணி → கடையாணி.]*

**கடையாந்தரம்** *kaḍai-y-ān-taram,* பெ.(n.) கடைசி (வின்.); the very last stage, extremity.

*[கடை + ஆம் + தரம் – கடையாந்தரம். 'தரன்' 'தரம்' பெயரீறுகள். ஒ .நோ. மன் + தரம் – மந்தரம் → மந்தரன் → மாந்தரன்.]*

**கடையாமரப்பண்ணை** *kaḍai-yā-marap-paṇṇai,* பெ.(n.) கட்டுமரத்தின் அகலமான கடைப்பகுதி (செங்கை மீனவ.); the broader end of catamaran.

*[கடையா + மரம் + பண்ணை. (விரிவு, அகற்சி).]*

**கடையாயம்** *kaḍai-y-āyam,* பெ.(n.) அங்காடி களுக்கு இடப்பட்ட வரி; a tax levied on shops.

**ம.** கடயாயம்

*[கடை + ஆயம். ஆயம் = வரி.]*

**கடையால்** *kaḍaiyāl,* பெ.(n.) பால்கறக்கும் மூங்கிற் குழாய்க்கலம் (வின்.); bamboo bottle. 2. ஒருவகைப் பால் ஏனம் (சேரநா.); a kind of milk-can. 3. நீரிறைக்கும் ஏனம்; a vessel made of wood, used for drawing water.

ம. கடயால்; பட. ஒணெ.

[கழை → கழையல் → கடையல் → கடையால். கழை = மூங்கில். கடையால் = மூங்கிற் குழாய், முகக்கும் ஏனம்.]



கடையால்

**கடையிணைத்தொடை** *kaḍai-y-iṇai-t-toḍai,* பெ.(n.) மோனை முதலிபவை அடிகளின் ஈற்றிரண்டு சீர்களில் வரத்தொடுக்கும் தொடை (யா.கா.5, உரை.); a kind of verse in which the last two feet of a line have *mōṉai* and other features.

[கடை + இணை + தொடை.]

**கடையிணைமுரண்** *kaḍai-yiṇai-muraṇ,* பெ.(n.) ஓரடியின் கடையிரு சீர்க்கண்ணும் முரணி வருவது; a mode of versification where the final feet are in opposite meaning.

[கடை + இணை + முரண்.]

எ.டு. "மீன்தேர்ந்து வருந்திய **கருங்கால் வெண்குருகு**
தேனார் ஞாழல் **விரிசினைக் குழூஉம்**
தண்ணந் துறைவன் **தவிர்ப்பவுந் தவிரான்**
தேரோ **காணலங் காண்டும்**
பீரேர் வண்ணமுஞ் **சிறுநுதல் பெரிதே**" (யா.கா.40 மேற்)

**கடையிணையளபெடை** *kaḍai-y-iṇai-aḷabeḍai,* பெ.(n.) ஓரடியின் கடையிருசீர்க்கண்ணும் அளபெடை வருவது; elongation of syllable in last two feet.

[கடை + இணை + அளபெடை.]

எ.டு. "மெல்லிணார் நறும்பூ **விடாஅள் தொடாஅள்**" (யாப்.வி.39 மேற்.)

**கடையிணையியைபு** *kaḍai-y-iṇai-y-iyaibu,* பெ.(n.) ஓரடியின் முதலிரு சீர்க்கண்ணும் இயைபு வருவது; mode of versification where the first two feet one with concord meaning.

[கடை + இணை + இயைபு.]

எ.டு. "புயலும் போலும் பூங்குழற் பிழம்பே" (யாப்.வி.39.மேற்.)

**கடையிணையெதுகை** *kaḍai-y-iṇai-y-edugai,* பெ.(n.) ஓரடியின் கடையிரு சீர்க்கண்ணும் எதுகை வருவது; consonance in the last two feet.

[கடை + இணை + எதுகை.]

எ.டு. "வஞ்சியங் கொடியின் வணங்கிய நுணங்கிடை" (யாப்.வி.39.மேற்.)

**கடையியைபு** *kaḍai-y-iyaibu,* பெ.(n.) அடிதோறும் முதற்சீர்க் கடைஒத்து வந்தமையால், கடைஇயைபு (யா.வி.39); a mode of versification where the first feet concord.

எ.டு. "**அளவறியான்** நட்டவன் கேண்மையே கீழ்நீர்த்
**தறியறியான்** பாய்ந்தாடி அற்று" (யாப்.வி.39.மேற்.)

**கடையில்நரம்பு** *kaḍaiyıl-narambu,* பெ.(n.) ஈற்றெலும்பு; terminal bone.

**கடையெலும்பு** பார்க்க; see *kaḍai-elumbu.*

**கடையிலக்கம்** *kaḍai-y-ilakkam,* பெ.(n.) கணக்கின் முடிவு; final figures arrived at in an account or computation. *"பிரித்தெழுதிக் கடையிலக்கம் பிரித்துவிட லாகும்" (பெரியபு.சேக்.51).*

[கடை + இலக்கம். கடை = இறுதி.]

**கடையிலாக்காட்சி** *kaḍai-y-ilā-k-kāṭci,* பெ.(n.) அருகன் எண் குணங்களுள் எல்லையில்லாது யாவற்றையும் காணும் குணம் (சீவக.2847); boundless vision, omniscience, one of eight attributes of Arugaṉ (*Arugaṉ-eṉ-kuṇam*).

[கடை + இலாத + காட்சி. இலாத → இலா (ஈ.கெ.எ.ம.பெ.எ.).]

**கடையிலாவறிவு** *kaḍai-y-ilā-v-aṟivu,* பெ.(n.) அருகன் எண் குணங்களுள் முடிவில்லா அறிவுடைமை (சீவக.2847); boundless knowledge, omniscience one of *Arugaṉ-eṉ-kuṇam.*

[கடை + இலாத + அறிவு. இலாத → இலா (ஈ.கெ.எ.ம.பெ.எ.).]

**கடையிலாவின்பம்** *kaḍai-y-ilā-v-iṉbiam,* பெ.(n.) அருகன் எண் குணங்களுள் முடிவில்லா இன்ப முடைமை (பிங்.); boundless bliss, one of *Arugaṉ-eṉ-kuṇam.*

[கடை + இலாத + இன்பம். இலாத → இலா (ஈ.கெ.எ.ம.பெ.எ).]

**கடையிலாவீறு** *kaḍai-y-ilā-vīṟu,* பெ.(n.) அருகன் எண் குணங்களுள் எல்லையில்லா ஆற்றலுடைமை (பிங்.); boundless strength, omnipotence, one of *Arugaṉ-eṇ-kuṇam.*

**மறுவ.** கடையிலாவீரியம்

*[கடை + இலாத + வீறு. இலாத → இலா (ஈ.கெ.எ.ம.பெ.எ).]*

**கடையிறை** *kaḍai-y-iṟai,* பெ.(n.) 1. பழைய வரிவகை (S.I.I.Vol.i.87); an ancient tax. 2. இறுதித் தவணை வரி; final instalment of tax (கல்.கலை.அக.).

**ம.** கடயிற

*[கடை + இறை.]*

**கடையீடு**[1] *kaḍai-y-īḍu,* பெ.(n.) கடைத்தரமான நிலம் (C.G.); land of the poorest quality.

**ம.** கடயீடு

*[கடை + ஈடு. கடை = தாழ்வு.]*

**கடையீடு**[2] *kaḍai-y-īḍu,* பெ.(n.) கீழதிகாரியின் ஆணை; order issued by a subordinate officer. *'திருமுக மறுத்தவன் கடையீட்டுக்குக் கேட்கப் புகுகிறானோ' (ஈடு,1.4:4).*

*[கடை + ஈடு. கடை = கீழ், கீழதிகாரி. ஈடு = இட்டது, ஆணை.]*

**கடையீடு**[3] *kaḍai-y-īḍu,* பெ.(n.) முடிவான அரசாணை; the final order of a king, as in making grants. *'உடையார் கடையீடும் வந்தமையில்' (S.I.I. Vol.V. 312).*

*[கடை + ஈடு. கடை = இறுதி. ஈடு = ஆணை.]*

**கடையீற்று** *kaḍai-y-īṟṟu,* பெ.(n.) கடைசியாக ஈன்ற கன்று; the last calf, opp. to தலையீற்று.

**க.,து.** கடெகஞ்சி

*[கடை + ஈற்று.]*

**கடையுகம்** *kaḍai-y-ugam,* பெ.(n.) ***கடையூழி*** பார்க்க; see *kaḍai-ūḻi*

**க.** கடெகால

*[கடை + உகம்.]*

**கடையுண்ணல்** *kaḍai-y-uṇṇal,* பெ.(n.) வருத்தப் படல்; feeling sorry.

*[கடை + உண்ணல். கடை = இழிவு, துன்பம்.]*

**கடையுணி** *kaḍai-y-uṇi,* பெ.(n.) கீழ்மக-ன்-ள் (யாழ்ப்.); mean or worthless person, eating leavings or anything he or she can pick up.

*[கடை + உணி. உண்ணி → உணி.]*

**கடையுவா** *kaḍai-y-uvā,* பெ.(n.) காருவா (கம்பரா. மீட்சி.139); new moon.

*[கடை + உவா – கடையுவா. உவா = நிலவு. கடை = கடைசி.]*

**கடையுற** *kaḍai-y-uṟa,* வி.எ.(adv.) முழுவதும்; entirely, completely. *"புனல் கடையுறக் குடித்தலின்" (கம்பரா.வருணனை.28).*

*[கடை + உற.]*

**கடையுறுநோக்கு** *kaḍai-y-uṟu-nōkku,* பெ.(n.) இறுதியாகத் தோன்றும் மெய்யுணர்வு; the final realization of truth (சா.அக.).

*[கடை + உறு + நோக்கு.]*

**கடையூழி** *kaḍai-y-ūḻi,* பெ.(n.) கடைசி ஊழி (தொல். பொருள்.70 உரை); Kaliyuga, as the last aeon.

*[கடை + ஊழி. ஊழி = ஊழிக்காலம்.]*

**கடையூறு** *kaḍai-y-ūṟu,* பெ.(n.) செயல் முடிவில் நீக்க முடியாதபடி வரும் தடை; insurmountable difficulty. *'இதுக்கு வந்த கடையூறும் இடையூறும் நீக்கி' (கல்வெட்டு)*

*[கடை + ஊறு.]*

**கடையெதுகை** *kaḍai-y-edugai,* பெ.(n.) அடிதோறும் கடைச்சீர்க்கண் இரண்டாம் எழுத்து ஒன்றிவரத் தொடுப்பது (யாப்.வி.39); consonance of second letter of last feet.

*[கடை + எதுகை.]*

*"கரிதரு மென்குழல் மேலும் மாலைகள் **சூட்டினீர்;***
*புரிமணி மேகலை யாளை ஆரமும் **பூட்டினீர்;***
*அரிதவழ் வேனெடுங் கண்களும் அஞ்சனம் **ஊட்டினீர்***
*வரிவளை பெய்திளை யாளை நுண்ணிடை **வாட்டினீர்**"*
*(யாப்.வி.39.மேற்.)*

**கடையெலும்பு** *kaḍai-y-elumbu,* பெ.(n.) 1. ஈற்றெலும்பு; the terminal bone. 2. பசையற்ற எலும்பு; marrowless bone (சா.அக.).

*[கடை + எலும்பு.]*

**கடையெழுஞ்சனி** *kaḍai-y-eḻuñ-caṉi,* பெ.(n.) பன்னிரண்டாம் நாண்மீனாகிய மானேறு (உத்தரம்) (பிங்.); the 12th naksatra being the last naksatra of the fifth sign of the Zodiac in which Saturn is said to be very malignant.

*[கடை + எழும் + சனி.]*

**கடையெழுத்து** *kaḍai-y-eḻuttu-,* பெ.(n.) கையொப்பம்; subscription, signature. *"கடையெழுத் தோலைக் கணக்குவரி காட்டி" (பெருங்.உஞ்ஞைக்.32:70).*

*[கடை + எழுத்து. கடையெழுத்து = கடைசியில் எழுதுவது, கையொப்பம்.]*

**கடையேடு** *kaḍai-y-ēḍu,* பெ.(n.) சாவுச்சீட்டு; death warrant. *"யமராசன் விட்ட கடையேடு வந்தென் செயுமே" (கந்தரலங்.87).*

*[கடை + ஏடு – கடையேடு (வாழ்நாள் இறுதி அறிவிக்கும் ஏடு).]*

**கடையேழுவள்ளல்கள்** *kaḍai-y-ēḻu-vaḷḷalgaḷ,* பெ.(n.) கடைக்கழகக் காலத்தில் வள்ளல்களாகச் சிறந்து விளங்கிய குறுநில மன்னர் எழுவர்; seven well known philanthropists of Śangam age.

மறுவ. கடைவள்ளல்கள்

*[கடை + ஏழு + வள்ளல் + கள்.]*

பாரி, எழினி, நள்ளி, ஆய், காரி, ஓரி, பேகன் ஆகிய எழுவர் கடையேழு வள்ளல்களாவர். கடையேழு என்ற தொடரை வைத்து முதலேழு, இடையேழு, வள்ளல்கள் இருந்ததாகக் குறிப்பிடுவர். ஆயின் அப்பெயர்களுள் பெரும்பான்மை [முதல் ஏழு: சகரன், காரி, விராடன், நிருதி, துந்துமாரி, நளன், செம்பியன்; இடை ஏழு: அக்குரன், சந்திமான், அந்திமான், சிசுபாலன், வக்கிரன், கன்னன், சந்தன்] தமிழ்ப்பெயர் அல்ல. கடையேழு என்பது இங்குக் கடைக்கழக காலத்தைக் குறிக்குமேயன்றி கடை [கடைசி] என்ற பொருள் பொருந்தாமை காண்க.

**கடையைக்கட்டு-தல்** *kaḍyai-k-kaṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) ***கடைகட்டு-தல்*** பார்க்க; see *kaḍai-kaṭṭu-.*

*[கடை + ஐ + கட்டு.]*

**கடையொடுக்கு-தல்** *kaḍai-y-oḍukku-,* 7 செ.கு.வி. (v.i.) வணிகத்தைச் சுருக்குதல்; to limit the scope of commercial transactions. 2. வணிகத்தை நிறுத்திவிடுதல்; to wind up business.

*[கடை + ஒடுக்கு.]*

**கடைவயிறு** *kaḍai-vayiṟu,* பெ.(n.) அடிவயிறு; abdomen.

ம. கடவயிறு

*[கடை + வயிறு.]*

**கடைவரி** *kaḍai-vari,* பெ.(n.) கடைக்காரர் செலுத்தும் வரி; tax levied on shops.

ம. கடவரி

*[கடை + வரி.]*

**கடைவழி** *kaḍai-vaḻi,* பெ.(n.) சாவின்பின் உயிர் செல்லும் வழி; the path beyond the grave referring to life after death. *"காதற்ற வூசியும் வாராது காணுங் கடைவழிக்கே" (பட்டினத்.பொது.10).*

*[கடை + வழி.]*

**கடைவள்ளல்கள்** *kaḍai-vaḷḷalgaḷ,* பெ.(n.) ***கடையேழு வள்ளல்கள்*** பார்க்க; see *kaḍai-y-ēḻu-vaḷḷalgaḷ.*

*[கடை + வள்ளல்கள். கடை = கடைக்கழகம்.]*

**கடைவளர்-தல்** *kaḍai-vaḷar-,* 4 செ.கு.வி.(v.i.) ஈனுங் காலத்து விலங்கின் பெண்குறி விரிதல் (வின்.); to dilate, as the genitals of an animal before yeaning.

*[கடை + வளர்.]*

**கடைவாசல்** *kaḍai-vāsal,* பெ.(n.) 1. ***கடைவாயில்*** பார்க்க; see *kaḍai-vāyil.* 2. கடைத்தெரு; market. கடைவாசலுக்குச் சென்றுவரக் காசில்லை (உ.வ.).

ம. கடவா

*[கடை + (வாயில்) வாசல்.]*

**கடைவாய்** *kaḍai-vāy,* பெ.(n.) 1. வாயின் கடை; corner of the mouth. *"உண்கள் வார் கடைவாய்மள்ளர்" (கம்பரா.நாட்டு.10).* 2. கடைவாய்ப் பற்களுக்கு அருகில் உள்ள இடம்; region in the mouth near molar teeth. *புகையிலையைக் கடைவாயில் அடக்கிக் கொண்டார் (உ.வ.)*

ம. கடவாயி; **துட.** கட்பொய்

*[கடை + வாய்.]*

**கடைவாய்க்கஞ்சி** *kaḍai-vāy-k-kañji,* பெ.(n.) கடைவாயிலொழுகும் உமிழ்நீர்; the saliva flowing out through the corner of the mouth.

ம. கடவாக்கஞ்சி

[கடை + வாய் + கஞ்சி.]

**கடைவாய்நக்கி** *kaḍai-vāy-nakki,* பெ.(n.) ஈயாதவன்; unyielding miser. lit, one who licks the corners of one's mouth.

[கடை + வாய் + நக்கி.]

கடைவாயிலொழுகும் உணவின் எச்சமும் வீணாக்காமல் விழுங்கிக் கொள்ளும் கடும் இவறன் என்பது குறிப்பு.

**கடைவாய்ப்பட்டி** *kaḍai-vāi-p-paṭṭi,* பெ.(n.) பனை அகணியால் முடையப்பட்ட சிறுகூடை; small basket made up of upper rind of stem of palmyrah frond.

[கடை + வாய் + பட்டி.]

**கடைவாய்ப்பல்** *kaḍai-vāy-p-pal,* பெ.(n.) பாலூட்டிகளின் வாயின் கடைப்பகுதியில் அமைந்த பல்; grinding teeth, back teeth, molar.

க. கடெவல்லு; ம. கடபல்.

[கடை + வாய் + பல். கடைவாய் = வாயறையின் உட்பகுதி. கடை = கடைசி.]

**கடைவாய்வழி-தல்** *kaḍai-vāy-vaḻi-,* 2 செ.கு.வி. (v.i.) கடைவாயிலிருந்து எச்சில் தானே ஒழுகுதல்; to drivel at the corners of the mouth.

[கடை + வாய் + வழி. கடைவாய் = உதட்டின் கடை.]

**கடைவாயில்** *kaḍai-vāyil,* பெ.(n.) புறவாயில்; back entrance '...கழக்கடை வாயில் நின்று கிழக்கு நோக்கி' (S.I.I.Vol.xix. insc.48.S.No.14).

[கடை + வாயில்.]

**கடைவாயொழுக்கு** *kaḍai-vāy-oḻukku,* பெ.(n.) **கடைவாய்வழி-தல்** பார்க்க; see *kaḍai-vāi-vaḻi-.*

[கடை + வாய் + ஒழுக்கு.]

**கடைவிரி[1]-த்தல்** *kaḍai-viri-,* 4 செ.கு.வி.(v.i.) 1. வணிகப் பொருள்களைப் பரப்புதல்; to spread out goods in a shop for sale. *"கடைவிரித்தேன் கொள்வாரில்லை" (அருட்பா.).* 2. பலர்முன் தன் ஆற்றலைச் சொல்லுதல்; to brag, swagger about one's own abilities.

ம. கடவிரிக்குக

[கடை + விரி.]

**கடைவிரி[2]-த்தல்** *kaḍai-viri,* 4 செ.கு.வி.(v.i.) 1. வெளிக்குச் செல்லுதல்; to give off stool. 2. பதுங்கியிருத்தல்; to lie in ambush (as hunters) (சேரநா.)

ம. கடவிரிக்குக

[கடை + விரி.]

**கடைவீதி** *kaḍai-vīdi,* பெ.(n.) ***கடைத்தெரு*** பார்க்க; see *kaḍai-t-teru.*

[கடை + வீதி.]

**கடைவு** *kaḍaivu,* பெ.(n.) கடைதல்; fret.

[கடை → கடைவு.]

**கடோரன்** *kaḍōraṉ,* பெ.(n.) கடுமையானவன்; tyrant.

[கடு → கடூரன் → கடோரன் (கொ.வ.).]

**கண்[1]** *kaṇ,* பெ.(n.) 1. கருமணி கொண்ட பார்வையுறுப்பு, விழி; the organ of sight in man and vertebrate animals, eye. *"கண்ணிமை நொடியென அவ்வே மாத்திரை" (தொல்.எழுத்து.நுன்.7).* 2. முன்னிலை, முன்னால்; front. *"கண்ணின் றிரப்பவர்" (குறள்,1055).* 3. கண்ணோட்டம், அருள்; kindness, benignity, graciousness, as expressed by the eye. *"கண்ணின்று பெயர்ப்பினும்" (தொல். பொருள்.கற்பி.9).* 4. பார்வை; sight. 5. பீலிக்கண்; star of a peacock's tail. *"ஆயிரங் கண்ணுடையாய்க்கு" (கம்பரா.பம்மை.27).* 6. தேங்காய், பனங்காய்களின் கண்; one of the three basal pores or marks on the shell (endocarp) of a coconut or palmyra shell. 7. முரசு முதலியவற்றில் அடிக்குமிடம்; centre of a drum head where it is rapped. *"கண்மகிழ்ந்து துடிவிம்ம" (பு.வெ.2:8 கொளு).* 8. ஊற்றுக்கண்; a fountain or spring. 9. விரல் நகரத்திற்கும் விரல் தசைக்கும் இடைப்பட்ட சிறு இடம்; the small open place between a finger-nail and flesh under it. 10. முலைக்கண்; nipple, teat. 11. புண்ணின் கண்; core of a boil. 12. சல்லடை, பலகணி போன்றவற்றில் உள்ள சிறுதுளை; perforation, small openings. 13. வலைக்கண்; mesh of a net etc. 14. வித்துகளில் முளை வரும் பகுதி; a node, sprout, seed-bud.

**ம.,பட.,கோத.** கண், கண்ணு; **க.** கண், கணு, கண்ணு; **தெ.**கனு, கன்னு; **கை.** காண், கன்ன; **இரு.** கண்ணு; **எர.** கன்; **மா.** க்வன்; **பிரா.** கன்; **கட.** கண்; **துட.** கண்ணு, தொண்; **குரு., கசபா.** கண்ணு; **குட.** கன்னு, கண்ணி; **கோண்.** கான், கண், கன்; **கொலா.** கண்ண, கன்; **நா.** கன், கன்ன; **பர்.** கன்; **கூ.** கன்னு; **குவி.** கன்னு; **து.** கண், கண்ணு; **கோண்.(கோயா).** கண்டு; **கோண்.(அடிலா).** காற்; **கொர.** கண்ணி.

**Chin.** kuan, ngan, yan; **Comb.** odiya. ngan; **Khasi.** kahnat; **Pkt.** ankan; **Vedic.** ank, aksh; **Mar.** kaad-khen. **Gk.** auge; **O.E.** auye; **G.** auge; **E.** eye; **Turk.** goz; **Nil.Abys.** kanne-me, kanno-no, kan-ken; **Warrgauy.** gayga (eyes).

[கள் (கருமை) → கண் = கருமணி கொண்ட பார்வையுறுப்பு ஒ.நோ. உள் →உண், நள் →நண், பெள் →பெண்.]

கண் எல்லாப் பொருள்களொடும் பார் வையாற் கலப்பதாலும் கருமையாயிருப் பதனாலும், உடம்பிற்கு விளக்கமாயிருப்பதனாலும், இருகடை யும் கூர்மையாயிருப்பத னாலும், மேற்கூறிய நாற் பொருளும் அதன் பெயருக்குப் பொருந்துமேனும், ஒருவர் பார்த்த மட்டில் தெளிவாகப் புலனாவது கண்ணின் கருவிழியேயாதலாலும், சில சிற்றுயிர் கட்கும், பறவைகட்கும் கருவிழியேயன்றி வெள் விழியின்மையாலும் கருமைக் கருத்தே 'கண்' என்னும் சொல்லின் பொருட் கரணியமாகும். பெண்களின் கண்ணிற்கு உவமையாகக் கருங்கு வளை மலரைச் சிறப்பாகக் குறித்தலையும் நோக்குக.

கண்ணுதல் = அகக்கண்ணாற் காணுதல், கண் → கண்ணு. கணித்தல் = கண்ணாற் பார்த்தல். கடைக் கணித்தல் = 1. கடைக் கண்ணாற் பார்த்தல். "கருமலர்க் கூந்தலொருத்தி தன்னைக் கடைக்கணித்து" [திவ்.பெருமாள்.6:3]. 2. அருள் நோக்கு நோக்குதல். "கரு வெந்து வீழ்க் கடைக் கணித்து" [திருவாச.11:5]. **சிறக்கணித்தல்** = 1. கண்ணைச் சுருக்கிப் பார்த்தல். 2. கடைக்கண்ணாற் பார்த்தல்.

**புறக்கணித்தல்** = 1. கவனியாதிருத்தல் [பொருட்படுத் தாதிருத்தல்] 2. அவமதித்தல். அளவிடுதலைக் குறிக்கும் கணித்தற் சொல்லும் கண்ணாற் காணுதலைக் குறிக்கும் கணித்தற் சொல்லும் வெவ்வேறென அறிக. [செல்வி. 78. சிலை 243,244].

மனத்தின் உணர்வுகளைக் காட்டும் கருவியாகிய கண் மன வெழுச்சிகளைக் காட்டும் பல சொற்களுக்கு அடியாய் அமைகிறது. [எ.டு.] இன்கண், தறுகண், உறுகண், புன்கண், அலக்கண், இடுக்கண், பழங்கண், வன்கண்.

மனத்திற்கும் புறவுலகத்திற்குமிடையே யானத் தொடர்பு பெரும்பாலும் கண்வழியே நடை பெறுவதால் மனநெகிழ்வையும் பிறவற்றையும் காட்டும் சொற்களில் 'கண்' அடியாப் அமையும் என்க. [எ.டு.] கண்ணோட்டம், கடைக்கண். மக்கள் வழக்கில் எள்ளற் பொருட்டு முட்டைக்கண், பூசைக்கண், நொள்ளைக்கண், ஒன்றரைக்கண் [ஒண்ட்ரெகண்] பொட்டைக்கண், என வகைப் படுத்தலும் உண்டு.

மருத்துவ நோக்கில் "சாம்பசிவம் பிள்ளை மருத்துவ அகரமுதலி" கண்களைக் கருடக்கண், காக்கைக்கண், முண்டைக்கண், ஆந்தைக்கண், யானைக்கண், பூனைக்கண், மீன்கண், ஓரக்கண், செங்கண், அல்லது அரத்தக் கண், மயிர்கண், மாட்டுக்கண், மைக்கண், சாக்கண் அல்லது பஞ்சடைந்த கண், சாயல்கண், மஞ்சட்கண், குண்டு மணிக்கண், குருட்டுக்கண், இராக்கண், அழிகண், ஒற்றைக்கண், முக்கண், கூச்சக்கண், கூர்மைக்கண், ஊனக்கண், மயக்குங்கண், ஒட்டுக்கண், மாலைக் கண், பகற்கண், புளித்தகண், இளித்தற்கண், கொள ளிக்கண், உள்ளங்கண், விரிகண், சுழற்கண், சுற்றுக் கண், பறவைக்கண், சுருங்குக் கண், கடைக்கண், புகைச்சற்கண், பூக்கண், பீளைக்கண், இருட்கண், கீழ்க்கண், திறந்தகண், சிமிட்டுக்கண், நிலைக் குத்தற்கண், பொய்க்கண், பிரிகண், சுழிகண் அல்லது உள் வளைந்த கண், நாலுகண், இழிகண் என்று 51 வகையாகப் பிரித்துள்ளது.

"... . Welsh. (**ceniaw**, to see; English **ken**. view, power or reach of vision to kan, to know by sight. In Webster's 'English Dictionary' **kanna** was said to be "an eye" in Sanskrit; where as it is exclusively a Dravidian word. This error may be compared with Klaproth's representing **kuraṭa**, a blind, as a Sanskrit word; instead of referring it to the Dravidian languages to which alone it belongs. There is a curious word in Sanskrit, kāna, one - eyed which seems to have some Dravidian relationship. It becomes in bengali, kānā, blind, which in form at least, is identical with the Dravidian negative kānā, that sees not. Possibly the Dravidian kāṉ, to see, kaṉṉu, to consider may have some ulterior connection with the Gothic **kunn-an**, to know: Greek gnō-nai; Sans. ñā; Latin gna (gnarus); old High German **chann**. The different shades of meaning which are attributed in greek to **gnō-nai**, and eide-nai, seem to corroborate this supposition; for the latter is represented as

meaning to know by reflection, to know absolutely, whereas the former means to perceive, to mark, and may therefore have an ulterior connection with the Dravidian root" (C.G.D.F.L.P 591)

**கண்**[2] *kaṇ,* பெ.(n.) 1. திரட்சி; well grown or bulky object. 2. உருண்டை; round object. 3. மரக்கணு; joint in bamboo or sugarcane, connection between a bough or flower and its stem. 4. மூங்கில் (திவா.); bamboo. 5. வித்து; seed. *"நாதமாஞ் சத்தியதன் கண்ணாம்" (சி.போ.9 3:3).*

*[குல் → குள் → கள் → கண்.]*

**கண்**[3] *kaṇ,* பெ.(n.) 1. துளை; aperture, orifice. *"கால்வாய்த் தலையின் கண்கள்" (பாரத.முதற்.72);* சல்லடைக்கண், வலைக்கண் (உ.வ.). 2. பகடைக் காயின் பக்கத்துளை அல்லது வரி; bore or line on the sides of the dice.

**தெ.** கன்னமு; **ம., து., க.** கண்.

*[குல் → குள் → கள் → கண்.]*

**கண்**[4] *kaṇ,* பெ.(n.) பற்றுக்கோடு; protection, support. *"கண்ணன் கண்ணல்ல தில்லையோர் கண்ணே" (திவ்.திருவாய்.2.2:1).*

*[கண் = பார்வை, பார்க்கும் ஆசை, பற்று.]*

**கண்**[5] *kaṇ,* பெ.(n.) பாயின் நெட்டிழையாகிய நூல் (G.Tn.D.1.220); longitudinal threads used for the warp of a mat.

*[கண் = துளை, இடைவெளி, இடைவெளி யடுத்த நூல்.]*

**கண்**[6] *kaṇ,* பெ.(n.) 1. இடம்; place, site. *"ஈங்கண்மா ஞாலம்" (குறள்,1058).* 2. உடம்பு; body. *"பொன்கட் பச்சை" (பரிபா.3:82).* 3. மேற்பரப்பிடம் (சொ.ஆ.க.48); high level ground.

*[கண் = துளை, பெரிய துளை, விடுபட்ட இடைப்பரப்பு, பரந்த இடம், பருமை, பருமையான பொருள்.]*

**கண்**[7] *kaṇ,* பெ.(n.) 1. பெருமை (திவா.); greatness. 2. அறிவு; knowledge, wisdom. "கள்ளொற்றிக் கண் சாய்பவர்" (குறள்,927). 3. உணர்த்துவது; that which reveals. *"சொன்ன சிவன் கண்ணா" (சி.போ.5.2:1).*

*[கண் = இடம், பருமை, பெருமை.]*

**கண்**[8] *kaṇ,* பெ.(n.) 1. வெளிச்சம்; lightness. விளக்கு கண் சிமிட்டுகிறது (உ.வ.). 2. ஒளி; light. நிலவு கண் விரிந்தது (இ.வ.).

*[கண், காணும் திறனால் ஒளிக்கு ஆகி வந்தது.]*

**கண்**[9] *kaṇ,* பெ.(n.) 1. அழகு; beauty. 2. செல்வம்; wealth.

*[கண் = கண்போல் அழகியது, சிறந்தது.]*

**கண்**[10] *kaṇ,* பெ.(n.) 1. ஒன்றின்மேல் வைக்கும் விருப்பம்; liking. கண்ணாகப் போற்றுவான். 2. இன்றியமையாத பொருள்; the most important object, etc. இதைக் கண்ணாகக் கருதுக.

**ம.** கண்

*[கண் = கண்ணுறக் காணும் வேட்கை.]*

**கண்**[11] *kaṇ,* பெ.(n.) கருமை; black.

*[கள் → கண்.]*

**கண்**[12] *kaṇ,* பெ.(n.) முளை; sprout. அவரை விதை நேற்றுக் கண் விட்டது (உ.வ.); *அக்குள் கட்டி மருந்திட்ட பின் கண்ணுடைந்தது (உ.வ.).*

**து.** கண்

*[குள் → கள் → கண் (முளை).]*

**கண்**[13] *kaṇ,* பெ.(n.) சிறுமை, சிறியது; small, that which is small. *"கண்ணஞ்சா வேலாள் முகத்த களிறு" (குறள்,500).*

*[குள் (சிறியது) → கள் → கண். சிறிய சுள்ளி விறகைக் கண்விறகு என்றும் சிறிய விரலைக் கண்விரல் என்றும் கூறுவர்.]*

**கண்**[14] *kaṇ,* பெ.(n.) 1. அதிகார இடம், பதவி; rank in a state (சேரநா.). 2. கண்காணிப்பு; keeping an eye.

**ம.** கண்

*[குள் → கள் → கண்.]*

**கண்**[15] *kaṇ,* இடை.(part.) 1. ஏழனுருபு (நன்.302.); ending of the locative. 2. ஓர் அசை நிலை; an expletive. *"மீன் கண்ணற்று" (பறநா.109: 10).*

*[கண் = இடம். இடப்பொருளில் வந்த ஏழாம் வேற்றுமை சொல்லுருபு. காண் → கண் (அசைநிலை).]*

**கண்**[16] *kaṇ,* இடை.(part.) பண்புப் பெயரீறு; abstract noun ending. அலக்கண், இடுக்கண், புண்கண்.

*[கள் → கண். திரட்சி கருத்து வினையியைபுக் கருத்துக்கு அரணாயிற்று.]*

**கண்கட்டி**[1] *kaṇ-kaṭṭi,* பெ.(n.) 1. கண்ணிலுண்டாகும் பரு; sty on the eye lid.

**ம.,க.** கண்குரு; **தெ.** கனுகுருபு; **து.** கண்ணுகளுவெ; **பட.** கண்ணுகட்டி.

*[கண் + கட்டி.]*

**கண்கட்டி**[2] *kaṇ-kaṭṭi,* பெ.(n.) கண்ணைக்கட்டிக் கொண்டு பிறரைத் தொட முயலும் சிறுவர் விளையாட்டு; a children's game blind-folding the eyes with a cloth and trying to touch others.

**மறுவ.** கண்ணாம்பொத்தி

**தெ.** கன்னுகட்டு

*[கண் + கட்டி – கண்கட்டி = கண்ணைத் துணியால் கட்டிக் கொள்ளுதல்.]*

**கண்கட்டிவித்தை** *kaṇ-kaṭṭi-vittai,* பெ.(n.) ***கண்கட்டுக்கலை*** பார்க்க; see *kaṇ-kaṭṭu-k-kalai.*

**மறுவ.** கண்கட்டுவித்தை

**து.,தெ.** கன்னுகட்டுவித்ய

*[கண்கட்டு → கண்கட்டி + வித்தை.]*

**கண்கட்டு**[1]**–தல்** *kaṇ-kaṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) கண்ணைக்கட்டி விடுதல்; to blind–fold. 2. மந்திரத்தால் கண்ணை மறைத்தல்; to blind the eyes by magic. *"ஈதென்ன கண்கட்டு மாயம்" (இராமநா.ஆரணிய.28).* 3. வஞ்சித்தல்; to deceive.

**ம.** கண்கெட்டுக; **க.,பட.** கண்கட்டு, கண்ணுகட்டு. **து.** கண்ணுகட்டுநி.

*[கண் + கட்டு.]*

**கண்கட்டு**[2] *kaṇ-kaṭṭu,* பெ.(n.) கண்ணைப் பொத்துகை; blindfolding, blindman's buff. *'கண்ணைக் கட்டிக் காட்டிற் விட்டார் போல்' (பழ.).*

**து.** கண்ணுகட்டு

*[கண் + கட்டு.]*

**கண்கட்டுக்கலை** *kaṇ-kaṭṭu-k-kalai,* பெ.(n.) மாயத்தால் கண்ணை கட்டும் கலை; to blind the eyes by magic.

*[கண் + கட்டு + கலை.]*

**கண்கட்டுவித்தை** *kaṇ-kaṭṭu-vittai,* பெ.(n.) ***கண்கட்டுக்கலை*** பார்க்க; see *kaṇ-kaṭṭu-k-kalai.* *"கண்கட்டு வித்தைகளும் காட்டி" (குற்றா.குற.116:1).*

*[கண்கட்டு + வித்தை.]*

**கண்கடி** *kaṇ-kaḍi,* பெ.(n.) 1. கண்ணில் ஏற்படும் அரிப்பு; itching sensation in the eyes. 2. பொறாமை; jealousy, envy (சேரநா).

**ம.** கண்கடி; **தெ.** கனுகட்டு.

*[கண் + கடி.]*

**கண்கடை** *kaṇ-kaḍai,* பெ.(n.) ***கடைக்கண்*** பார்க்க; see *kaḍai-k-kaṇ.*

*[கண் + கடை.]*

**கண்கண்டதெய்வம்** *kaṇ-kaṇḍa-teyvam,* பெ.(n.) நேரருள் இறைவன்; God whose presence is easily manifest. *"உன்போற் கண்கண்ட தெய்வமுளதோ" (குமர.பிர.சகலகலா.10).* 2. தெய்வத்திற்கு ஒப்பா னவர்; man of divine quality.

*[கண்கண்ட + தெய்வம். கண்கண்ட = நேரில் தோன்றுகின்ற.]*

**கண்கண்ணாடி** *kaṇ-kaṇṇaḍi,* பெ.(n.) பார்வைக் குறையுடையோர் அணியும் ஆடி; eye-glass, spectacle.

**மறுவ.** மூக்குக்கண்ணாடி

**க.** கண்ணடக்க

*[கண் + கண்ணாடி.]*

**கண்கண்ணி** *kaṇ-kaṇṇi,* பெ.(n.) குறுங்கண்ணி; small garland; coronal.

*[கண் + கண்ணி. கண் = சிறிது.]*

**கண்கயில்** *kaṇ-kayil,* பெ.(n.) உடைத்த தேங்காயின் மேல்மூடி (யாழ்ப்.); top piece of a coconut shell with the kernel. அடிக்கயில் (யாழ்ப்).

**மறுவ.** கண்சொட்டை, கண்மூடி.

*[கண் + கயில். கயில் = தேங்காயின் பகுதி.]*

**கணகா!-ததல்**[1] *kaṇ-kari-,* 4 செ.குன்றாவி.(v.t.) கண்ணில் எரிச்சல் உண்டாதல்; to feel irritation in the eye.

*[கண் + கரி.]*

**கண்கரி-த்தல்**[2] *kaṇ-kari,* 4 செ.கு.வி.(v.i.) பரிவுணர்வை வெளிப்படுத்துதல்; to express sense of pity. *`கண்ணுக்குக் கரித்தவர்களும் மண்ணுக்குப் பிறந்தவர்களும் வேண்டும்' (பழ.).*

**து.** கண்கர; **க.** கநிகர.

*[கண் + கரி – கண் கரி = கண்செய்தல், கண்ணோடுதல், மனமிரங்கல்.]*

**கண்கரித்தல்** *kaṇ-karittal,* பெ.(n.) பொறாமை (உ.வ.); envy.

*[கண் + கரித்தல்.]*

**கண்கருப்பு** *kaṇkaruppu,* பெ.(n.) உடம்பின் சூட்டி னால் கண்ணில் ஏற்படும் வலி; irritation in the eye due to excessive heat of the body. (சா.அக.)

*[கண் + கருப்பு. கடு → கடுப்பு → கருப்பு.]*

**கண்கல-த்தல்** *kaṇ-kala-,* 3 செ.கு.வி.(v.i.) ஒருவரையொருவர் பார்த்தல்; to look at each other, to exchange glances. 2. எதிர்ப்படுதல்; to come in sight. *"கண்கலக்கப் பூத்த கற்பக மொத்தது" (சீவக.2545).*

**க.** கண்காண், கண்ணுகாண்.

*[கண் + கல.]*

**கண்கலக்கம்** *kaṇ-kalakkam,* பெ.(n.) கண்ணுறு துன்பம்; affliction in the eyes. 2. வருத்தம்; distress. *"பாவிபடுங் கண்கலக்கம் பார்த்துமிரங் காதிருத்தல்" (தாயு.பராபரக்.261).*

*[கண் + கலக்கம்.]*

**கண்கலங்கு-தல்** *kaṇ-kalaṅgu-,* 7 செ.கு.வி.(v.i.) தூசி முதலியன விழுதலால் கண்கலக்கமடைதல்; to be dimmed, as the eyes from dust, tears, etc. *"தண்ணிமையைக் கண்டிருக்க மாட்டாமற் கண்கலங்கு மாறன்" (திவ்.திருவாய். நூற்.39).*

*[கண் + கலங்கு.]*

**கண்கலவி** *kaṇ-kalavi,* பெ.(.n.) காதற்குறிப்போடு முதன்முறை தலைவனுந் தலைவியுங் காண்கை; first meeting of eyes signifying union of hearts, exchange of amorous glances between lovers for the first time. *"தைவயோகத்தாலே இருவர்க்குங் கண்கலவி யுண்டாய்" (ஈடு,5.3 பிர.).*

*[கண் + கலவி.]*

**கண்கவர்-தல்** *kaṇ-kavar,* 2 செ.கு.வி.(v.i.) பிறர் பார்வையை ஈர்த்தல்; to fascinate, attract.

*[கண் + கவர்.]*

**கண்கலிழ்-தல்** *kaṇ-kaliḻ-,* 2 செ.கு.வி.(v.i) ***கண்கலங்கு-தல்*** பார்க்க; see *kaṇ-kalaṅgu-* *"மெய்ம்மலி யுவகையின் எழுதரு கண்கலிழ் உகுபனி அரக்குவோர் தேற்றாம்" (குறுந்.398).*

*[கண் + (கலுழ்) கலிழ்.]*

**கண்கழுவு-தல்** *kaṇ-kaḻuvu,* 7 செ.கு.வி.(v.i.) 1. கண்களைக் கழுவுதல்; to wash eyes. 2. இளம்பயிர்க்கு நீர் பாய்ச்சுதல்; to water young plants or newly sown seeds.

*[கண் + கழுவு.]*

**கண்களவுகொள்(ளு)-தல்** *kaṇ-kaḷavu-koḷ(ḷu)-,* 7 செ.குன்றாவி.(v.t.) தான் பிறனைப் பார்ப்பதை அவன் காணாதவாறு அவனைக் களவாகப் பார்த்தல்; to stealthily gaze at one without being seen by that one. *"கண்களவு கொள்ளுஞ் சிறுநோக்கம் காமத்தில்" (குறள்,1092).*

*[கண் + களவு + கொள்.]*

**கண்கனல்(லு)-தல்** *kaṇ-kaṉal(lu)-,* 13 செ.கு.வி. (v.i.) கண்சிவத்தல்; to be inflamed, as the eyes with anger. *"கண்கனன்று வேலை விறல்வெய்யோ னோக்குதலும்" (பு.வெ.6:23).*

*[கண் + கனல்.]*

**கண்காசம்** *kaṇ-kāśam,* பெ.(n.) ***கண்புரை*** பார்க்க; see *kaṇ-purai.*

*[கண் + காசம்.]*

**கண்காட்சி** *kaṇ-kāṭci,* பெ.(n.) 1.பார்வையிற்படும் காட்சி; view at sight. 2. பார்த்து உணர்ந்து பயன்பெறும் வகையிலமைந்த பொருட்காட்சி; exhibition, fair, show. சென்னைத்தீவுத்திடலில் கண்காட்சி நடைபெறும் (உ.வ.).

*[கண் + காட்சி.]*

**கண்காட்சிச்சாலை** *kaṉ-kāṭci-c-cālai,* பெ.(n.) அரும்பொருட்காட்சி யரங்கம்; museum, place where an exhibition is held. சென்னைக் கண்காட்சிச் சாலை சிறப்பாயிருக்கிறது (உ.வ.).

*[கண் + காட்சி + சாலை.]*

**கண்காட்டி**[1] *kaṉ-kāṭṭi,* பெ.(n.) அழகுள்ளவன் (திவ்.பெரியதி.8.6:3.வியா.); one who looks handsome or beautiful.

*[கண் + காட்டி.]*

**கண்காட்டி**[2] *kaṉ-kāṭṭi,* பெ.(n.) கண்காணிப்பாளர், நிருவாகி (திவ்.பெரியதி.1.2:9 வியா.ப.84); master, superintendent.

*[கண் + காட்டி.]*

**கண்காட்டிவிடு-தல்** *kaṉ-kāṭṭi-viḍu-,* 18 செ. குன்றாவி.(v.t.) பார்வைக் குறிப்பால் ஏவி விடுதல்; to instigate with a wink, set on with a significant look. *"என்மேற் கண்காட்டி விட்ட" (குற்றா. குற. 116.2.)*

*[கண் + காட்டி + விடு.]*

**கண்காட்டு-தல்** *kaṉ-kāṭṭu-,* 5 செ.குன்றாவி.(v.t.) கண்சிமிட்டிக் குறிப்புணர்த்தல்; hint one's intention by wink. *"காமனையுங் கண்காட்டி" (தமிழ்நா.90).*

ம. கண்காணிக்கு

*[கண் + காட்டு.]*

**கண்காட்டுவான்** *kaṉ-kāṭṭuvāṉ,* பெ.(n.) 1. குருடர்களுக்கு வழிகாட்டுவோன் (S.I.I.VIII,381); one who leads the blind. 2. வழிகாட்டுவோன்; one who guide. 3. ***கடைக்கண்*** பார்க்க see *kaḍai-k-kaṉ.*

*[கண் + காட்டுவோன்.]*

**கண்காண்-தல்** *kaṉ-kāṉ-,* 16 செ.குன்றாவி(v.t.) விழியால் உணர்தல்; to perceive with the eyes (in opposition to மனம்காண்) (கருநா.).

க. கண்காண்; **தெ.** கனுகோனு, கனுங்கோனு.

*[கண் + காண்.]*

**கண்காண்கை** *kaṉ-kāṇgai,* பெ.(n.) 1. விழியால் பார்க்கை; looking. 2. வழிகாட்டுகை; showing path, guidance. (கருநா.)

**க.** கண்காணிகெ

*[கண் + காண்கை. 'கை' பண்.பெ.ஈறு.]*

**கண்காணக்காரன்** *kaṉ-kāṇa-k-kāraṉ,* பெ.(n.) ***கண்காணச் சேவகன்*** பார்க்க; see *kaṉ-kāṇa-c-cēvagaṉ.*

*[கண்காணம் + காரன்.]*

**கண்காணச்சேவகன்** *kaṉ-kāṇa-c-cēvagaṉ,* பெ.(n.) காவற்காரன் (வின்.); watchman.

*[காண்கானம் + சேவகன்.]*

**கண்காணம்** *kaṉ-kāṇam,* பெ.(n.) 1. மேற்பார்வை (திருவாலவா.நாட்டுச்.4); supervision. 2. பயிர்க் காவல் (R.F.); watch kept over fields or produce on behalf of the landlord. 3. கதிறுக்கக் கொடுக்கும் ஆணை (R.F.); permission granted by landlord to his tenant to harvest his crop. 4. ஒப்படி மேற்பார்வைச் சம்பளம் (இ.வ.); fee paid in kind for watching the sheaves of grain.

*[கண் + காண் + அம் – கண் காணம் (நேரிற் பார்த்தல்).]*

**கண்காணாதோடல்** *kaṉ-kāṇā-d-ōḍal,* பெ.(n.) மறுபடியும் நோய்திரும்பாது முற்றிலும் குணமாதல்; curing of diseases radically without a recurrence or relaps (சா.அக.).

*[கண் + காணாது + ஓடல்.]*

**கண்காணி**[1]**-த்தல்** *kaṉ-kāṇi-,* 4 செ.குன்றாவி.(v.t.) மேலாய்வுசெய்தல் (கல்வெட்டு); to oversee, supervise, superintend.

ம. கண்காணிக்குக; **தெ.** கனிபெட்டு.

*[கண்காணம் → கண்காணி = நேரிற் கண்ணாரக் கண்டு ஆய்பவர் (செல்வி.78,சிலை 245).]*

**கண்காணி**[2] *kaṉ-kāṇi,* பெ.(n.) மேற்பார்வையாளன்; supervisor. *"பண்டாரம் பல்கணக்குக் கண்காணி பாத்தில்லார்" (சிறுபஞ்.38).* 2. விளையுள் பணி அலுவலர்; inspector of crops, measurer of grain on a village establishment. 3. கூலியாட்களை மேற்பார்ப்போன்; supervisor of coolies. கூலியாள் கூட்டத்திற்குக் கண்காணி வேண்டும் (உ.வ.). 4. மேற்பார்வை (T.A.S.i.163); supervision.

5. கண்காணியர்; (Chr.) Bishop. 6. ஆட்சேர்க்கும் பணியைச் செய்பவர், முகவர்; agent.

மறுவ. கங்காணி (கொ.வ.)

ம. கண்காணி

*[கண் காணம் → கண்காணி (செல்வி.78. சிலை 245).]*

**கண்காணி**[3] *kaṉ-kāṇi,* பெ.(n.) மேற்பார்வை யிடுதற்குரிய பழைய வரி (S.I.I.1,91); an ancient tax in kind, for supervision.

*[கண் + காணி.]*

**கண்காணிக்கணக்கர்முதல்** *kaṉkāṇi-k-kaṇakkar-mudal,* பெ.(n.) பழைய வரிவகை (S.I.I.VI,33); an ancient tax.

*[கண்காணி + கணக்கர் + முதல்.]*

**கண்காணிக்கை** *kaṉ-kāṇikkai,* பெ.(n.) ***கண்காண்கை*** பார்க்க; see *kaṉ-kāṇgai.*

*[கண்காணி → கண்காணிக்கை.]*

**கண்காணிநாயகம்** *kaṉ-kāṇi-nāyagam,* பெ.(n.) மேற்பார்வைப் பணித்தலைவர்; office of head -overseer. *"ஸ்ரீராஜராஜீசுவர முடையார்க்கு ஸ்ரீகாரியக் கண்காணிநாயகஞ் செய்கின்ற"* (S.I.I.II.149).

*[கண்காணி + நாயகம்.]*

**கண்காணிப்பாளர்** *kaṉ-kāṇi-p-pāḷar,* பெ.(n.) அலுவல் நடைமுறைகளைக் கவனிக்கும் பொறுப்புடைய அலுவலர்; superintendent. உதவியாளராய் இருந்த அவர், கண்காணிப்பாளராய் பதவியுயர்வு பெற்றார்.

*[கண் + காணிப்பு + ஆளர்.]*

**கண்காணிப்பு** *kaṉ-kāṇippu,* பெ.(n.) மேற்பார்த்தல்; supervision.

*[கண் + காணிப்பு.]*

**கண்காணிப்பூ** *kaṉ-ṇ-kāṇi-p-pū,* பெ.(n.) கண்ணில் விழும்பூ; leucoma.

*[கண்ணாணி + பூ. கண்ணாணி = கருவிழி. கண் + ஆழி – கண்ணாழி → கண்ணாளி → கண்ணாணி.]*

**கண்காணியார்** *kaṉ-kāṇiyār,* பெ.(n.) கிறித்துவ மன்றங்களை மேற்பார்க்கும் குரவர் (Chr.) Christain Bishop.

*[கண்காணி + ஆர் – கண்காணியார் (செல்வி.78. சிலை 246).]*

**கண்காந்தல்** *kaṉ-kāntal,* பெ.(n.) கண்ணெரிவு; burning sensation in the eyes.

*[கண் + காந்தல்.]*

**கண்காரன்**[1] *kaṉ-kāraṉ,* பெ.(n.) குறிசொல்லுவோன் முன்னிருந்து, வினாவிய செய்தியைக் கண்டுபிடிக்க மையைப் பார்ப்பவன் (வின்.); he who sits before a conjuror looking at the magical paint without winking, to make discoveries.

*[கண் + காரன்.]*

**கண்காரன்**[2] *kaṉ-kāraṉ,* பெ.(n.) 1. மேற்பார்ப்போன்; supervisor. *"கரைதுறைக ளேழிலுள்ள கண்கார ரெல்லாம்" (நெல்விடு.221).* 2. நோட்டக்காரன்; one who assays coins, etc., shroff. *"கண்காரச் செட்டிகள் பால வட்டமறக் காட்டி மதிப்பிடுவீர்" (பஞ்ச.திருமுக.1421).* 3. குறிப்பறியத் தக்கவன் (யாழ்.அக.); shrewd person.

*[கண் + காரன். காரன் [illegible]பாரீறு ஒ.நோ. கடன்காரன், வேலைக்காரன்.]*

**கண்கிடங்கில்விழல்** *kaṉ-kiḍaṅgil-viḻal,* பெ.(n.) செரிமானமில்லாத கழிச்சல், கக்கல் முதலிய நோய்களினால் கண், ஆழப் பதிதல்; sinking of the eyes as with in a hole, observed in cases of diarrhoea, cholera etc. (சா.அக.)

*[கண் + கிடங்கில் + விழல்.]*

**கண்கிறங்கு-தல்** *kaṉ-kiṟaṅgu-,* 5 செ.கு.வி.(v.i.) ***கண்சுழலு-தல்*** பார்க்க; see *kaṉ-šuḻalu.*

பட. கண்எரெ (தர)

*[கண் + கிறங்கு. கிறங்குதல் = மிகச் சோர்தல்; செயல்குன்றுதல்.]*

**கண்குத்தவிடல்** *kaṉ-kutta-viḍal,* பெ.(n.) 1. விழி நிலை கொள்ளுதல்; eye becoming fixed penetrating or pin-prick pain experienced in the eye, this is said to arise from the derangement of vayu in the system. 2. கண்ணைக் குத்தல்; to prick the eye with something (சா.அக.).

*[கண் + குத்த + விடல்.]*

**கண்குத்திக்கள்வன்** *kaṉ-kutti-kaḷvaṉ,* பெ.(n.) விழித்திருக்கத் திருடுபவன்; one who steals some-

thing evenwhile it is being watched. *"வைகற் பதின்மரைக் காமுற்றுச் செல்வாயோர் கட்குத்திக் கள்வனை" (கலித்.108:48).*

*[கண் + குத்தி + கள்வன். கண்குத்துதல் = நன்கு விழித்திருத்தல். கண்குத்திக் கள்வன் என்பது இகழுரை.]*

**கண்குத்திப்பாம்பு** *kaṉkutti-p-pāmbu,* பெ.(n.) 1. பச்சைப்பாம்பு (பிங்.); whip-snake, green. 2. ஒருவகைப் பாம்பு (m.m.); pit-viper, arboreal snake.

**ம.** கண்கொத்தி

*[கண் + குத்தி + பாம்பு.]*



கண்குத்திப்பாம்பு

**கண்குத்து** *kaṉkuttu,* பெ.(n.) கண்ணோய் வகை; a kind of eye disease.

*[கண் + குத்து.]*

**கண்குந்தம்** *kaṉ-kundam,* பெ.(n.) கருவிழியின் நடுவேயுள்ள கண்மணியின்மேல் அழற்சியினால் பருவைப் போன்ற சிலந்தியுண்டாகிப் புடைத்துக் காணும் ஒரு கண்ணோய்; a tubercle causing the protrusion of the cornea due to inflammation of the central part of the retina. (சா.அக.)

*[கண் + குந்தம். குந்தம் = குறைபாடு, நோய்.]*

**கண்குரு** *kaṉ-kuru,* பெ.(n.) கண்ணிமையிலுண் டாகும் சிறுகட்டி; boil on eyelid, sty.

**ம.,க.** கண்குரு; **தெ.** கணுகுருபு.

*[கண் + குரு. குரு = சிறு, சிறு கட்டி. ஒ.நோ. வேர்க்குரு.]*

**கண்குவளை** *kaṉ-kuvaḷai,* பெ.(n.) ***கண்குழி*** பார்க்க; see *kaṉ-kuḻi.*

*[கண் + குவளை.]*

**கண்குழி**[1] *kaṉ-kuḻi,* பெ.(n.) கண்கூடு; eye-socket.

**ம.** கண்குழி. **து.** கண்ணகுரி, கண்ணகூடு.

*[கண் + குழி.]*

**கண்குழி**[2]**—தல்** *kaṉ-kuḻi-,* 2 செ.கு.வி.(v.i.) விழி உள்ளடங்குதல்; sinking of the eyes, by disease, by emaciation or by nature.

*[கண் + குழி.]*

**கண்குழிவு** *kaṉ-kuḻivu,* பெ.(n.) எளிமை; poverty, destitution. *`தன்னிற் காட்டிலும் கண்குழிவுடை யார்' (ஈடு,3.3:1).*

*[கண் + குழிவு.]*

**கண்குளிர்—தல்** *kaṉ-kuḷir-,* 2 செ.கு.வி (v.i.) பார்த்து மகிழ்தல்; to be refreshed by looking at a pleasing object.

**க.** கண்தணிவு; **து.** கண்ணு தப்பாபுநி.

*[கண் + குளிர்.]*

**கண்குளிர்ச்சி** *kaṉ-kuḷircci,* பெ.(n.) கண்களிப்பு; gratification of the eye.

*[கண்குளிர் → கண்குளிர்ச்சி.]*

**கண்குறிப்பு** *kaṉ-kuṟippu,* பெ.(n.) கண்சாடை; hint conveyed by the eye.

*[கண் + குறிப்பு.]*

**கண்குறை—த்தல்** *kaṉ-kuṟai-,* 4 செ.குன்றாவி.(v.t.) கண்ணைப் பறித்திடுதல் (தொல்.பொ.258,உரை); to put out one's eyes; to gouge out the eyes.

*[கண் + குறை.]*

**கண்கூச்சம்** *kaṉ-kūccam,* பெ.(n.) மிகுந்த ஒளியாற் கண்கூசுகை; dazzling of the eyes by strong light.

*[கண் + கூச்சம்.]*

**கண்கூசு—தல்** *kaṉ-kūśu-,* 5 செ.கு.வி.(v.i.) பேரொளி யால் கண்ணொடுங்குதல்; get pricks in the eye due to glare.

**க.** கண்ணுகுக்கிசு; **து.** கண்ணு கந்துநி.

*[கண் + கூசு.]*

**கண்கூடு[1]–தல்** *kaṇ-kuḍu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. ஒன்று கூடுதல்; to join, come together. *"பொருந்திய வுலகினும் புகழ்கண் கூடிய" (சிவக. 327)* 2. நெருங்குதல்; to be crowded together. "கண் கூடியிருக்கை" *(பொருந.15).*

*[கண் + கூடு.]*

**கண்கூடு[2]** *kaṇ-kūḍu,* பெ.(n.) ***கண்குழி*** பார்க்க; see *kaṇkuḻi.*

**க.** கண்ணிந கூடு, கண்ணுகுதுரு.

*[கண் + கூடு.]*

**கண்கூடு[3]** *kaṇ-kūḍu,* பெ.(n.) 1. ***கண்குழி*** பார்க்க (இங்.வைத்.8); see *kaṇ-kuḻi.* 2. தோற்றப்பாடு; that which is evident to actual vision. *"கண் கூடல்லது கருத்தள வழியும்" (மணிமே.27:274).* 3. காட்சித் துறை (சிலப்.8:77 உரை); first view of the heroine by the hero or vice versa. 4. மிகவும் தெளிவு, வெளிப்படை; plain, obvious.

*[கண் + கூடு.]*

**கண்கூடுவரி** *kaṇ-kūḍu-vari,* பெ.(n.) ஒருவர் கூட்டவன்றித் தலைவன் தலைவியர் தாமே சந்திக்கும் நிலைமையை நடித்துக் காட்டும் நடிப்பு (சிலப்.8:77 உரை); a dramatic play which expresses the first meeting of lovers.

*[கண் + கூடு + வரி. கண் கூடுதல் = ஒருவரையொருவர் நேரிற் காணுதல்.]*

**கண்கூர்மை** *kaṇ-kūrmai,* பெ.(n.) பார்வை நுட்பம்; acuteness of eye-sight.

*[கண் + கூர்மை. கூர்மை = கூரியநோக்கு.]*

**கண்கூலி[1]** *kaṇ-kūli,* பெ.(n.) இழந்த பொருளைக் கண்டுபிடிக்கக் கொடுக்கும் அன்பளிப்பு (வின்.); present for finding a lost article (சேரநா.).

**ம.** கண் கூலி

*[காண் → கண் + கூலி. கண் = கண்டுபிடித்தல்.]*

**கண்கூலி[2]** *kaṇ-kūli,* பெ.(n.) சேர்ப்புச் சீட்டு நடத்துவதற்கான ஊதியம்; allowances given to the manager of a chit fund.

*[கண் + கூலி. கண் = கண்காணிப்பு.]*

**கண்கூலி[3]** *kaṇ-kūli,* பெ.(n.) பழைய வரிவகை (S.I.I.Vol.iv,122); a kind of an ancient tax.

*[கண் + கூலி.]*

**கண்கெடச்செய்–தல்** *kaṇ-keḍa-cey-,* 1 செ.குன்றாவி. (v.t.) 1. பார்வையை அழித்தல்; to cause the lose of one's sight. 2. அறிவழித்தல்; to cause the lose of one's wits. 3. அறிந்து தீமை செய்தல்; to cause evil which one knows to be wrong.

*[கண் + கெட + செய்தல். கண்கெட = நேரிற் கண்டும் அறியாமை மீதூரல்.]*

**கண்கெடப்பேசு–தல்** *kaṇ-keḍa-p-pēsu-,* 7 செ.கு.வி.(v.i.) 1. அறிந்ததை மறைத்துப் புறம்பேசுதல்; to falsify the evidence of one's own in delivering testimony. 2. பிறரது அறிவழியப் பேசுதல்; to brain wash.

*[கண் + கெட + பேசு. கண் = கண்டது, பார்த்தது, அறிந்தது.]*

**கண்கெடு–தல்** *kaṇ-keḍu-,* 20 செ.கு.வி(v.i.) 1. பார்வையழிதல்; to lose one's sight. 2. அறிவழிதல்; to lose one's wits.

*[கண் + கெடு.]*

**கண்கொட்டு–தல்** *kaṇ-koṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) கண்ணிமைத்தல்; to wink.

**தெ.** கனுகீடு

*[கண் + கொட்டு. கொட்டு – அடி, சேர், ஒட்டு.]*

**கண்கொடுத்தவன்** *kaṇ-koḍuttavaṉ,* பெ.(n.) 1. கண்கொடை (கண்தானம்) செய்தவன்; eye-donor. 2. இறைவன், படைத்தவன்; God. 3. ஆசிரியர்; teacher.

**பட.** கண்ணுகொட்டம

*[கண் + கொடுத்தவன். கண் = ஊனக்கண், உயிர், அறிவு.]*

**கண்கொதி** *kaṇ-kodi,* பெ.(n.) ***கண்ணாறு*** பார்க்க; (யாழ்ப்.) see *kaṇṇāṟu.*

*[கண் + கொதி.]*

**கண்கொதிப்பு** *kaṇ-kotippu,* பெ.(n.) கண்ணுக்கு ஏற்படும் அழற்சி; inflammation of the eye.

*[கண் + கொதிப்பு.]*

**கண்கொழுப்பு** *kaṇ-koḻuppu,* பெ.(n.) செருக்கும், தானெனும் இறுமாப்பும் கொண்ட நோக்கு; the sight which expresses conceit, or ego.

*[கண் + கொழுப்பு.]*

**கண்கொள்-(ளு)-தல்** *kaṇ-koḷ(ḷu)-,* 16 செ.கு.வி. (v.i.) முற்றிலும் பார்த்தல்; look at as a whole. 2. கண்ணைக் கவர்தல்; to attract the eyes.

*[கண் + கொள்.]*

**கண்கொள்ளாக்காட்சி** *kaṇ-koḷḷā-kāṭci,* பெ.(n.) விபத்தகு தோற்றம்; a rare and wonderful scene.

*[கண் + கொள்ளாத + காட்சி. கொள்ளாத → கொள்ளா (ஈ.கெ.எ.ம.பெ.எ.).]*

**கண்சவ்வு** *kaṇ-šavvu,* பெ.(n.) விழியோரத்தசை; conjunctiva.

*[கண் + சவ்வு.]*

**கண்சா-தல்** *kaṇcā-,* 19 செ.கு.வி.(v.i.) கண்ணொளி மங்குதல்; to decline as of eye sight.

*[கண் + சா. சாதல் = வலிவிழத்தல்.]*

**கண்சாடை** *kaṇ-šāḍai,* பெ.(n.) கண்ணாற் காட்டும் குறிப்பு; instigating by wink.

**மறுவ.** கண்குறி. கண்ணடி

**க.** கண்சாடெ; **தெ.** கனுசன்ன; **பட.** கண்ணுசாடெ.

*[கண் + சாடை.]*

மக்களின் பேச்சில் வெளிப்படை [மொழித் தொடர்பான நிகழ்வுகள்] குறிப்பு [மொழித் தொடர்பற்ற நிகழ்வுகள்] ஆகியன இருக்கும் கருத்தை வெளிப்படுத்துவதற்கு மொழித் தொடர் பான நிகழ்வுகள் மிகுதியாகப் பயன்படும் என்றாலும் மொழித் தொடர்பற்ற நிகழ்வுகளால் வெளிப்படுத்தும் கருத்துகளும் உண்டு. இவை கண்ணிமைத்தல், தலை யசைத்தல், கையசைத்தல், புன்னகை பூத்தல் போன்ற உடல் உறுப்புகளால் வெளிப்படுத் துவன வாக அமையும். இதை ஆங்கிலத்தில் body language என்பர். இவற்றுள் கண்ணால் காட்டும் குறிப்புகள் அகலத்திறத்தல், முறைத்துப் பார்த்தல், ஓரக்கண் ணால் பார்த்தல் முழுவதுமாக மூடுதல், கண் கொட்டுதல் போன்று பல வகையில் அமையும்.

**கண்சாத்து-தல்** *kaṇ-šāttu,* 5 செ.குன்றாவி.(v.t.) அன்பொடு நோக்குதல்; to look upon with love. *"கயலுருவ நெடுங்கண் சாத்தாய்" (காஞ்சிப்பு. கழுவத.204).*

*[கண் + சாத்து. சார்த்து → சாத்து.]*

**கண்சாய்-தல்** *kaṇ-šāy-,* 2 செ.கு.வி. (v.i.) 1. அறிவு தளர்தல்; to lose one's wits. *"கள்ளொற்றி கண்சாய் பவர்" (குறள்,927).* 2. அன்பு குறைதல்; to grow cold in love.

*[கண் + சாய்.]*

**கண்சாய்ப்பு** *kaṇ-šāyppu,* பெ.(n.) 1. வெறுப்பான பார்வை (வின்.); side-look which expresses displeasure. 2. இசைவுப்பார்வை (வின்.); connivance. 3. குறிப்பாகக் காட்டும் இரக்கம் (வின்.); favour shown by a wink. 4. ***கண்ணூறு*** பார்க்க; see *kaṇṇūṟu.*

*[கண் + சாய்ப்பு.]*

**கண்சாய்வு** *kaṇ-šāyvu,* பெ.(n.) சாய்ந்த பார்வை; oblique look; side-look (சா.அக.).

*[கண் + சாய்வு.]*

**கண்சிம்புளி-த்தல்** *kaṇ-šimbuḷi-,* 4 செ.கு.வி (v.i.) கண்கூசுதல் (தொல்.பொருள்.292,உரை); to shrink from light, to be sensitive to light, as the eye.

*[கண் + சிம்புளி. சிம்பு → சிம்புளி = துள்ளுதல், அசைதல்.]*

**கண்சிமிட்டி** *kaṇ-šimiṭṭi,* பெ.(n.) எப்பொழுதும் ஓயாது கண்ணிமைக்கும் இயல்புள்ளவன்-ள்; one who is habituated to winking.

**து.** கண்முச்செலே; **பட.** கண்ணுமுச்சி.

*[கண் + சிமிட்டி.]*

**கண்சிமிட்டு–தல்** *kaṇ-šimiṭṭu-,* 5 செ.கு.வி (v.i.) 1. கண் இமைத்தல்; to wink, as the eye. *"கண்சிமிட்டா நோக்கும்" (ஒழிவி.யோகக்.4).* 2. கண்சாடை செய்தல்; to make a signal with the eye. *"கண்சிமிட்டில் பேசி மாதர்கள்" (திருப்பு.574).*

**க.** கண்சிமிடு. கண்சிவிடு.

*[கண் + சிமிட்டு. சிமிழ்த்து → சிமிட்டு.]*

**கண்சிரட்டை** *kaṇ-širaṭṭai,* பெ.(n.) முக்கண்ணுள்ள கொட்டாங்கச்சி (வின்.); top half a coconut shell, having three 'eyes' or depressions, dist. for அடிச்சிரட்டை.

**ம.** கண்ணஞ்சிரட்ட

*[கண் + சிரட்டை.]*

**கண்சிவ[1]–த்தல்** *kaṇ-šiva-,* 3 செ.கு.வி.(v.i.) நோய்முதலியவற்றாற் கண் செந்நிறமடைதல்; செம்மைநிறை மடைதல்; to redden, as the eyes from disease or other causes.

*[கண் + சிவ.]*

**கண்சிவ[2]–த்தல்** *kaṇ-šiva-,* 3 செ.குன்றாவி.(v.t.) சினத்தல்; to redden the eye as a result of anger. *"கறுவொடு மயங்கிக் கண்சிவந்தன்று" (பு.வெ.12. பெண்பாற்.11 கொளு).*

*[கண் + சிவ.]*

**கண்சுருட்டு[1]–தல்** *kaṇ-šuruttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) அழகு முதலியவற்றால் ஈர்த்தல் (வின்.); to entice, bewitch, captivate, fascinate by uncommon beauty or by lustre.

*[கண் + சுருட்டு.]*

**கண்சுருட்டு[2]–தல்** *kaṇ-šuruṭṭu,* 5 செ.கு.வி.(v.i.) கண்ணுறங்குதல்; to sleep; doze.

*[கண் + சுருட்டு.]*

**கண்சுருள்(ளு)–தல்** *kaṇ-šuruḷ(lu)-,* 10 செ. குன்றாவி.(v.t.) கண்ணிமை மடங்குதல்; the folding of the eye lids (சா.அக.).

*[கண் + சுருள்.]*

**கண்சுழல்(லு)–தல்** *kaṇ-šuḻal(lu)-,* 13 செ.கு.வி.(v.i) விழிகள் மயங்குதல்; to be dazed, as from a blow, sudden light, dizziness or wonder. *"பாலாழி நீ கிடக்கும் பண்பையாம் கேட்டேயும்... கண்சுழலும்" (திவ்.இயற்.பெரியதிருவ.34).*

*[கண் + சுழல்.]*

**கண்செம்மு–தல்** *kaṇ-šemmu-,* 9 செ.கு.வி.(v.i.) கண்பொங்குதல் (வின்); to be inflamed, as the eyes.

**து.** கண்ணுஅர்லுநி

*[கண் + செம்மு. செறுமுதல் → செம்முதல். செறுமு = வெளிப்படுத்துதல், வெளித்தள்ளுதல், பீளை முதலியன வெளித்தள்ளுதல்.]*

**கண்செருகு–தல்** *kaṇ-šerugu-,* 9 செ.கு.வி. (v.i.) விழிகள் உள்வாங்குதல்; to roll up the eyes, as in a swoon, a fit or at death.

**து.** கண்பாருனி; **ம.** கண்மரிச்சல்.

*[கண் + செருகு. செருகு = உட்செல்லுதல், உள்ளடங்குதல்.]*

**கண்செறியிடு[1]–தல்** *kaṇ-šeṟi-y-iḍu-,* 20 செ.கு.வி. (v.i.) பார்வையால் முழுமையும் அகப்படுத்துதல்; to enclose within itself; to envelope. *"ஆகாசத்தைக் கண்செறியிட்டாற் போலே யிருக்கை" (ஈடு,5.9:1).*

*[கண் + செறி + இடு. கண் = இடம். செறியிடல் = அகப்படுத்தல்.]*

**கண்சைகை** *kaṇ-šeikai,* பெ.(n.) ***கண்சாடை*** பார்க்க; see *kaṇ-šaḍai.*

*[கண் + (செய்கை) சைகை.]*

**கண்சொக்கு–தல்** *kaṇ-šokku-,* 5 செ.கு.வி.(v.i.) 1. தூக்கம் முதலியவற்றால் கண் மயங்குதல்; to become sleepy. வயிறார உண்டதனால் கண்சொக்கியது (உ.வ.). 2. மனங்கவர் பேரழகால் கண் மயங்குதல்; to be over whelmed by dazzling beauty. அவளழகில் கண் சொக்கிப் போனேன் (உ.வ.). 3. கூடற்காலத்து உணர்ச்சி மிகுதியால் கண்மயங்குதல்; eyes getting wearied owing to the sensation experienced in sexual act.

*[கண் + சொக்கு.]*

**கண்டக்கரப்பன்** *kaṇḍa-k-karapaṉ,* பெ.(n.) கரகரப்பு புகைச்சல் முதலியன உண்டாக்கும் ஒருவகைத் தொண்டை நோய். (வின்.); disease of the throat, causing irritation, hoarseness.

*[கண்டம் + கரப்பன். கண்டம் = தொண்டை. கரு - கரப்பன். மேடு, திட்டு, தடிப்பு, புடைப்பு.]*

**கண்டக்கருவி** *kaṇḍa-k-karuvi,* பெ.(n.) மிடற்றுக்கருவி (சூடா.); larynx, cavity in throat containing vocal cords, considered as a musical instrument.

*[கண்டம் + கருவி. கண்டம் = தொண்டை, மிடறு.]*

**கண்டக்கல்** *kaṇḍa-k-kal,* பெ.(n.) நில அளவையிற் பெரும்பிரிவுக் கல்; main survey stone.

*[கண்டம் + கல். கண்டம் = பிரிவு, பகுதி.]*

நில அளவையின் போது நிலத்தைப் பல பிரிவுகளாகப் பிரித்து ஒவ்வொரு பிரிவின் மூலையிலும் நடப்படும் பெருங்கல்.

**கண்டக்காறை** *kaṇḍa-k-kāṟai,* பெ.(n.) ஒருவகைக் கழுத்தணி; a kind of neck ornament.

*[கண்டம் + காறை. காறை = பெண்களும் குழந்தைளும் கழுத்தில் அணிந்து கொள்ளும் ஒருவகையணி.]*

**கண்டகசங்கம்** *kaṇḍagaśaṅgam,* பெ.(n.) முட்சங்கு (வின்.); mistletoe berry thorn.

*[கண்டகம் + சங்கம். கண்டகம் = முள்.]*

**கண்டகட்டு** *kaṇḍa-kaṭṭu,* பெ.(n.) சித்திரப் பாவகை (யாப்.வி.51); a kind of fanciful poem.

*[கண்டம் + கட்டு.]*

**கண்டகத்தூணம்** *kaṇḍaka-t-thūṇam,* பெ.(n.) கதிரவன் நின்ற விண்மீன் முதல் குருகு (மூலம்) விண்மீன் வரை எண்ணி அவ் வெண்ணோடு செவ்வாய் நின்ற விண்மீன் முதல் குருகு (மூலம்) விண்மீன் வரை எண்ணி வரும் எண்ணைக் கூட்டித் அத்தொகையை குருகு (மூலம்) விண்மீன் முதல் எண்ணி வந்த விண்மீன் (விதான.குணாகுண.37); (Astrol.) the particular naksatra which when counted from Mulam gives the number which is the sum of the numbers obtained of count up to Mulam from the naksatras in which Sun and Mars respectively stand on a particular day.

*[குண்டகம் → கண்டகம் + தூணம்.]*

கண்டகத்தூணம் = வட்டத்தூண், வட்டச் சுழல், கணக்கீடு.

**கண்டகம்**[1] *kaṇḍagam,* பெ.(n.) மரவைரம் (வின்.); heart, core, of the tree.

*[கண்டு → கண்டகம் = காழ்ப்பு, திரட்சி.]*

**கண்டகம்**[2] *kaṇḍagam,* பெ.(n.) 1. முள்; thorn. *"இளங்கண்டகம் விடநாகத்தின் நாவொக்கும்" (இறை.41:172).* 2. நீர்முள்ளி; white long flowered nail dye. *"கண்டகங்காள் முண்டகங்காள்" (தேவா.268-2).* 3. காடு (பிங்.) forest, jungle. 4. உடைவாள் (திவா.); dirk or short sword worn in the girdle. வீரன் இடையில் கண்டகம் தொங்குகிறது (உ.வ.). 5. வாள் (சூடா.); sword. 6. கொடுமை; cruelty, hard-heartedness. *"கண்டகப்பழிப் பதகரை" (உபதேசகா. சிவபுண்.289).*

த. கண்டகம் > **Skt.** kantaka

*[கள் → கண்டு → கண்டகம் = முள், நீர்முள்ளி, உடைவாள், வாள். ஒ.நோ. முள் → முண்டு. முண்டகம் = முள், முள்ளி, முள்தூறு, தாழை, கருக்குவாய்ச்சி.]*

**கண்டகம்**[3] *kaṇḍagam,* பெ.(n.) 1. விளைநிலத்தின் பரப்பளவு *(I.M.P.Sm.100);* a measure of agricultural land. *ஒரு கண்டகம் நிலம் இல்லாதவன் (இ.வ.).* 2. ஒரு முகத்தல் அளவை, மரக்கால்; a cubic measure. *பத்துக் கண்டகம் நெல் விளைந்தது (இ.வ.).*

க. கண்டக; பட. கண்டுக (ஓர் அளவு).

*[கண்டு → கண்டகம் → கண்டு = திரட்சி. கண்டகம் = குறிப்பிட்ட அளவு, பழைய பட்டணம் படியால் 120 பட்டணம்படி அளவுள்ள தவசம். 3 பட்டணம் படி = 1 வள்ளம். 40 வள்ளம் = 1 கண்டகம்.]*

**கண்டகம்**[4] *kaṇḍagam,* பெ.(n.) புளகம் (யாழ்.அக.); horripilation. 2. கம்மாலை (யாழ்.அக.); smithy. 3. தடை (யாழ்.அக.); obstacle.

*[கண்டு → கண்டகம்.]*

**கண்டகம்**[5] *kaṇḍagam,* பெ.(n.) மை (அஞ்சனம்) (சித்.அக.); collyrium, black pigment.

*[கள் → கண் → கண்டு → கண்டகம்.]*

**கண்டகவிதைப்பாடு** *kaṇḍaga-vidaippāḍu,* பெ.(n.) ஒரு கண்டகம் அளவுள்ள தவசத்தை விதைத்தற் குரிய 5 குறுக்கை (ஏக்கர்) பரப்பளவுள்ள நிலம்; land measuring approximately five acres enabling the to sow a unit measure of *kaṇḍagam* (120 Madras measure.)

*[கண்டகம் + விதைப்பாடு. இதனைக் கண்டக விரைப்பாடு என்றும், கந்தக விரைப்பாடு என்றும் பிற அகரமுதலிகள் குறித்திருப்பது முற்றிலும் வழுவாம்.]*

**கண்டகன்** *kaṇḍagaṉ,* பெ.(n.) 1. கொடியோன்; cruel, harsh, unfeeling man. *"கன்னமே கொடு போயின கண்டகர்" (இரகு.யாக.42).* 2. பகைவன்; enemy. 3. அரக்கன்; demon. 4. இரக்கமற்றவன்; unsympathetic person.

*[கள் → கண்டு → கண்டகன். கள் = முள். கண்டகன் = முள்ளன், பிறர்க்குத் தீங்கு விளைப்பவன்.]*

**கண்டகாந்தாரம்** *kaṇḍakāntāram,* பெ.(n.) பண்வகை (திவா.); a musical mode.

*[கண்டம் + காந்தாரம். கண்டம் = துண்டு, பகுதி, கிளை. காந்தாரப்பண்ணின் சிறுகிளைப்பண் ஆகலாம்.]*

**கண்டகாரம்** *kaṇḍa-kāram,* பெ.(n.) 1. கண்டங்கத்தரி; yellow berried night shade. 2. முள்ளிலவு; thorny silk cotton. 3. கோடரி; axe.

*[கண்டம் (முள்) + காரம்.]*

**கண்டகாரிகை** *kaṇḍakārigai,* பெ.(n.) 1. கண்டங்கத்தரி; yellow berried night shade.

*[கண்டம் + காரிகை.]*

**கண்டகி**[1] *kaṇḍagi,* பெ.(n.) தீயவள் *"முதுகண்டகி யிவளா மசமுகி"* (கந்தபு.அசமுகிப்.14); cruel, harsh, hard - hearted woman.

*[கள் → கண்டு → கண்டகி. கள் = முள். கண்டகி = முட்செடி, முட்செடி போன்று துன்பம் விளைப்பவள்.]*

**கண்டகி**[2] *kaṇḍagi,* பெ.(n.) 1. தாழை; fragrant Screw-Pine. *"வெம்மினது கண்ட வியன் கண்டகி யெனவும்" (கந்தபு.தேவர்புல.20).* 2. ஒருவகை மூங்கில்; a variety of bamboo. 3. இலந்தை (இலக்.அக.); jujube-tree. 4. கருங்காலி; ebony tree. 5. சதுரக்கள்ளி; red quadrangular spurge.

**ம.** கண்டகி; **வ.** கண்டகி, கண்டகின்.

*[கள் → கண்டு → கண்டகி (வ.மொ.வ.105).]*

**கண்டகி**[3] *kaṇḍagi,* பெ.(n.) 1. முதுகெலும்பு; vertebra.

*[கள் → கண்டு → கண்டகி.]*

**கண்டகிக்கல்** *kaṇḍagi-k-kal,* பெ.(n.) வடபுல ஆறுகளில் கிடைக்கும் ஒருவகைக் கல்; a kind of stone found in certain rivers of Nothern India.

*[கண்டகி + கல், கண்டகி = கண்டகி ஆறு. காசிக்கருகிலுள்ள கண்டகி என்னும் ஆற்றில் கிடைப்பதால் இப் பெயர் பெற்றது. மாலியர் (வைணவர்) வழிபாட்டுக்குத் திருமேனி செய்ய இக் கல் பயன்பட்டதாகத் தெரிகிறது.]*

**கண்டகுச்சம்** *kaṇḍakuccam,* பெ.(n.) தொண்டையில் உண்டாகும் ஒருவகை நோய்; a kind of throat disease.

*[கண்டம் + குச்சம். கண்டம் = தொண்டை. குற்றம் → குத்தம் → குச்சம் (குறைபாடு, நோய்).]*

**கண்டகுட்டி** *kaṇḍa-kuṭṭy,* பெ.(n.) *சதைப்பற்றுள்ள ஒருவகை மீன்; a kind of fleshy fish.*

*[கண்டம் + குட்டி. கண்டம் = திரட்சி, திரண்ட தசை.]*

**கண்டகுரண்டம்** *kaṇḍa-kuraṇḍam,* பெ.(n.) நீலச்செம்முள்ளி; crested purple nail-dye (சா.அக).

*[கண்டம் + குரண்டம். கண்டம் = கழுத்து. குரு → குரண்டம் = சிவந்தது.]*

**கண்டகோடரி** *kaṇḍa-kōḍari,* பெ.(n.) ஒருவகைப் படைக்கலன் (பரசு); a kind of weapon, battle axe.

**ம.** கண்டகோடாலி

*[கண்டம் + கோடரி. கோடு + அரி – கோடரி.]*

**கண்டகோடாலி** *kaṇḍa-kōḍāli,* பெ.(n.) 1. ***கண்ட கோடரி*** பார்க்க; see *kaṇḍa-kōḍari. "பாவவெங் கானகந் தனக்கே... கண்ட கோடாலியே யாகுவர்" (சிவரக.பூசாயோக.8).* 2. துறவிகளுள் ஒருசாரார் தோளில் தாங்கிச் செல்லும் கைக்கோடரி; hatchet carried on the shoulder by a class of ascetics.

**ம.** கண்டகோடாலி; **Skt.** khandaka.

*[கண்டம் + கோடாலி. கோடு + அரி – கோடரி → கோடலி → கோடாலி. கண்டம் = வன்மை, வலியது.]*

**கண்டகோபாலன்மாடை** *kaṇḍa-kōbalan-māḍai,* பெ.(n.) பழைய நாணயவகை; an ancient coin, issued by the chief, Vijaya-gaṇḍagōpāla.

*[கண்டம் கோபாலன் + மாடை.]*

**கண்டங்கத்தரி** *kaṇḍaṅkattari,* பெ.(n.) மருத்துவ குணமுள்ள படர் முட்செடி; a highly thorny medicinal plant.

மறுவ. முள்கொடிச்சி, பொன்னிரத்தி, கண்டங்காரி கண்டங்காலி.

*[கண்டு → கண்டம் + கத்தரி.]*

கண்டம் = முள். இச் செடியின் அனைத்துப் பகுதிகளிலும் முட்கள் நிறைந்திருக்கும் பொன் நிறமுடையது.



கண்டங்கத்திரி

**கண்டங்கருவழலை** *kaṇḍaṅkaruvaḻalai,* பெ.(n.) ஒருவகைப் பாம்பு; a kind of snake.

மறுவ. கண்டங்கருவில

*[கண்டம் + கரு + வழலை.]*

கண்டம் = துண்டம். உடம்பில் இடையிடையே வெண்ணிற வளைவுகள் அமைந்து கண்டம் கண்டமாகக் காட்சியளிக்கும் வழலைப் பாம்பு.

**கண்டங்காலி** *kaṇḍaṅkāli,* பெ.(n.) ***கண்டங்கத்தரி*** பார்க்க; see *kaṇḍaṅkattari.* 'கண்டங்காலி யிடவும் அமையும்' (ஈடு,1.6:1).

*[கண்டம் + (கத்தரி → கத்தலி) காலி. கள் = முள். கள் + து – கத்து → கத்தல் → கத்தலி = முள்ளுடையது.]*

**கண்டங்கி**[1] *kaṇḍaṅgi,* பெ.(n.) உருவிற் பெரிய கருங்குரங்கு; a large black monkey, the Madras langur.

*[கண்டம் (பெரியது) → கண்டங்கி.]*

**கண்டங்கி**[2] *kaṇḍaṅgi,* பெ.(n.) உருப்பெருத்த கடல் மீன்; a kind of sea fish. *கண்டங்கி மீன்பிடிச்சு கமகமவெனக் குழம்பு வைத்து (உ.வ.).*

*[கண்டம் = திரட்சி, தடிப்பு. கண்டம் → கண்டங்கி.]*

**கண்டங்கி**[3] *kaṇḍaṅgi,* பெ.(n.) ***கண்டாங்கி*** பார்க்க; see *kaṇḍāṅgi.* *"கண்டங்கிக்காரி கடைக்கண்" (தனிப்பா.ii,37:88).*

ம. கண்டங்கிகறுப்புகள்

*[கண்டாங்கி → கண்டங்கி.]*

**கண்டங்கிப்பாறை** *kaṇḍaṅgi-p-pāṟai,* பெ.(n.) ஒருவகைப் பாறை மீன் (தஞ்சை மீனவ.); a kind of sea fish.

*[கண்டங்கி + பாறை.]*

கடலடிப் பாறை இடுக்குகளில் வாழ்வதால் பாறை என வழங்கப்பட்டது.



கண்டங்கிப்பாறை

**கண்டங்கோல்** *kaṇḍaṅ-gōl,* பெ.(n.) நாலுகோல் நீளமுள்ள ஒரு பெரிய அளவுகோல்; a linear measure of four kōls (சேரநா.).

ம. கண்டங்கோல்

*[கண்டம் + கோல்.]*

**கண்டச்சங்கு** *kaṇḍa-c-caṅgu,* பெ.(n.) முட்சங்கு; a kind of thorned conch.

*[கண்டு = முள். கண்டு + சங்கு – கண்டச்சங்கு.]*

**கண்டச்சுருதி** *kaṇḍa-c-curuti,* பெ.(n.) குரல்; musical, vocal sound.

*[கண்டம் + சுருதி.]*

**கண்டசரம்** *kaṇḍaśaram,* பெ.(n.) ***கண்டமாலை*** பார்க்க; see *kaṇḍa-mālai.* *"முத்தின் சால்வுறு கண்டசரம்" (கந்தபு. அவைபுகு.34).*

ம. கண்டஞாண்; தெ. நானு (ஒருவகைக் கழுத்தணி).

[கண்டம் + சரம். கண்டம் = கழுத்து. சரம் = சரப்பளி, மாலை.]

**கண்டசருக்கரை** *kaṇḍa-carukkarai,* பெ.(n.) கட்டிச் சருக்கரை; candied sugar. *"சேர்ப்பாலுங் கண்ட சர்க்கரையும்" (ஈடு,9.3:7).*

மறுவ. கண்டு சருக்கரை

க. கண்ட சக்கரெ; ம. கண்டச்சர்க்கர; Skt. khandksarkara.

[கண்டம் + சருக்கரை. கண்டம் = கட்டி.]

**கண்டசருக்கரைத்தேறு** *kaṇḍa-carukkarai-t-tēṟu,* பெ.(n.) கற்கண்டுக் கட்டி (சீவக.2703); lump of sugar-candy.

[கண்டம் + சருக்கரை + தேறு.]

**கண்டசாதி** *kaṇḍa-šādi,* பெ.(n.) தாள வகை யைந்தனுள் ஒன்று. (பாரத.தாள.47,உரை); a sub-division of time measure, one of five 'šādi' in music.

[கண்டம் (ஜதி → சதி) + சாதி.]

**கண்டசாலிகம்** *kaṇḍa-šāligam,* பெ.(n.) கழுத்தில் வரும்நோய், கழுத்துக்கழலை; an acute infections disease in throat.

[கண்டம் + சாலிகம்.]

**கண்டசித்தர்** *kaṇḍa-šiddar,* பெ.(n.) சித்தர்களுக் குள் நல்ல பட்டறிவு வாய்த்தவர்; the most cultured in the school of Šiddhars (சா.அக.).

[கண்டம் + சித்தர். கண்டம் = பருமை, பெருமை.]

**கண்டசித்தி** *kaṇḍa-šitti,* பெ.(n.) அரசன் உள்ளத் திலுள்ள கிளர்ச்சிமிக்க கருத்தைப்பற்றி, அரி கண்டம் பூண்டு பாடும் பாடல் (பழ.தமி.119); ability to compose verses according to instruction given at the moment.

[அரிகண்டம் → கண்டம் + சித்தி. சித்தி = குறிப்பிட்ட வண்ணம் பாடாவிட்டால் கழுத்தை அறுத்துக்கொண்டு சாவதாக ஒப்புக்கொண்டு கழுத்தில் வாள் கட்டித் தொங்க விட்ட நிலையில் பாடும் பாட்டு.]

**கண்டசுண்டி** *kaṇḍašuṇḍi,* பெ.(n.) ஒருவகைத் தொண்டை வீக்கம்; a swelling of the tonsils (சா.அக.).

[கண்டம் (தொண்டை) + சுண்டி (வீக்கம்).]

**கண்டசூலை** *kaṇḍa-šūlai,* பெ.(n.) கழுத்து நோய் வகை; a glandular disease of the neck.

[கண்டம் + சூலை.]

**கண்டடை-தல்** *kaṇḍaḍai-,* 3 செ.கு.வி.(v.i.) பெறுதல்; to get; find; *'தேடுங்கள், அப்பொழுது கண்டடைவீர்கள்'* என்பது ஏசுநாதரின் மொழி.

[கண்டு + அடை.]

**கண்டணை** *kaṇḍaṇai,* பெ.(n.) உடன்படிக்கையை நிறைவேற்றல்; execution of an accord, treaty, capitulation (கருநா.).

க. கண்டணெ

[கொண்டு + அணை – கொண்டணை → கண்டணை.]

**கண்டத்திட்டு** *kaṇḍa-t-tiṭṭu,* பெ.(n.) பெருநிலப்பகுதி; continental shelf.

[கண்டம் + திட்டு.]

**கண்டத்திரை** *kaṇḍa-t-tirai,* பெ.(n.) பல்வண்ணத் திரை; curtain made of multi coloured material. *"பட்டியன்ற கண்டத்திரை வளைத்து" (சீவக.647).*

க. கண்டவட, கண்டபட; தெ. கண்டவட.

Skt. kandapata

[கண்டம் + திரை.]

**கண்டத்துவாரவுளி** *kaṇḍa-t-tuvāra-vuḷi,* பெ.(n.) ***கண்டத்துளையுளி*** பார்க்க; see *kaṇḍa-t-tuḷai-yuḷi.*

**கண்டத்துளையுளி** *kaṇḍa-t-tuḷai-y-uḷi,* பெ.(n.) பச்சைப்பாம்பின் தலைபோல நீண்ட முனையுள்ள கல் உளி (கம்.வழ.); a long chisel used to make holes.

[கண்டம் + துளை +உளி.]

**கண்டத்தூய்மை** *kaṇḍa-t-tūymai,* பெ.(n.) 1. தொண்டையிலுள்ள கோழையை வெளிப்படுத்த ஓகிகள் பின்பற்றும் முறை; a process of cleaning the throat adopted by a practising yogi for freeing it from plematic obstructions. 2. முகம் கழுவும்

போது தொண்டையைத் தூய்மையாக்கல்; cleaning the throat, ordinarily when washing the face.

*[கண்டம் + தூய்மை.]*

**கண்டதசபந்தம்** *kaṇḍa-taša-pandam,* பெ.(n.) ஏரி குளம் முதலியவை வெட்டியதற்கு ஈடாக கொடுக்கப் படும் நிலம் (C.G.); land given as compensation for the construction of a tank, well or channel.

*[கண்டம் + தசம் + பந்தம். தோயம் = நிலம். தோயம் = நீர். தோயம் → தயம் → தசம். (கொ.வ.). பந்தம் = கட்டுதல், தசபந்தம் = நீர்க்கட்டு, ஏரி, நீர்நிலை.]*

**கண்டதலம்** *kaṇḍadalam,* பெ.(n.) தாழம்பூ அல்லது தாழை; fragrant screw-pine (சா.அக.).

*[கண்டல் + தாலம் – கண்டல்தாலம் → கண்டதலம் (கொ.வ.). கண்டல் = முள்தாழை.]*

**கண்டதிப்பிலி** *kaṇḍa-tippili,* பெ.(n.) கொடிவகை (மலை.); long pepper.

*[கண்டு + திப்பிலி – கண்டதிப்பிலி.]*

**கண்டது** *kaṇḍadu,* பெ.(n.) 1. காணப்பட்ட பொருள்; that which has been seen. *"கண்டதெல்லாம் பகை" (திவ். இயற். திருவிருத். 35, அரும்.).* 2. தொடர்பற்ற செய்தி; irrelevant matter. *'கண்டதைக் கற்கப் பண்டிதனாவான்' (பழ.).*

**ம., பட.** கண்டது

*[கண்ட + அது – கண்டது. (அஃறிணையொருமை வினையாலணையும் பெயர்.]*

**கண்டதுகடையது** *kaṇḍadu- kaḍaiyadu,* பெ.(n.) இழிவான பண்டங்கள்; waste and worthless stuff or trash.

*[கண்டது + கடையது (மரபிணைமொழி).]*

**கண்டதுங்கடியதும்** *kaṇḍaduṅ-kaḍiyadum,* பெ.(n.) நல்லதும் கெட்டதும் (திவ்.இயற்.திருவிருத்.2,அரும்.); everything, including the good and the bad. *கண்டதும் கடியதும் உண்பது உடலுக்கு ஆகாது. (உ.வ.).*

**ம.** கண்டகடச்சாணி

*[கண்டதும் + கடியதும்.]*

**கண்டதுண்டம்** *kaṇḍa-tuṇḍam,* பெ.(n.) பல பகுதிகள்; many pieces. *"சரிகையாற் கண்ட துண்டங்க ளாக்கியே" (குற்றா.தல.கவுற்சன.49).*

**ம.** கண்டம்துண்டம்

*[கண்டம் + துண்டம் (மரபிணைமொழி).]*

**கண்டதுண்டமாக்கு-தல்** *kaṇḍa-tuṇḍam-ākku-,* 5 செ.குன்றாவி.(v.t.) துண்டுதுண்டாக்குதல்; to break in to pieces. போர்வாளை எடுத்துக் கண்ட துண்ட மாக்கு (உ.வ.).

*[கண்டம் + துண்டம் + ஆக்கு.]*

**கண்டந்திற-த்தல்** *kaṇḍan-tiṟa-,* 3 செ.கு.வி.(v.i.) 1. குரல் நன்றாக வெளிவருதல்; to become clear or shrill, as the voice. 2. கூக்குரலிடுதல் ; to make a loud cry.

*[கண்டம் + திற.]*

**கண்டந்துண்டமாக** *kaṇḍan-tuṇḍamāga,* வி.எ.(adv.) துண்டுதுண்டாக; into pieces. சினம்வந்தால் கண்டந்துண்டமாக்கிவிடுவேன் (உ.வ.).

*[கண்டம் + துண்டம் + ஆக.ஆகு + அ(வி.எ.ஈறு) → ஆக.]*

**கண்டநாண்** *kaṇḍa-nāṇ,* பெ.(n.) கழுத்தணி வகை (S.I.I.Vol.ii,192); a kind of necklace.

**ம.** கண்டஞாண்; **தெ.** நானு.

*[கண்டம் + நாண். கண்டம் = கழுத்து.]*

**கண்டநாளம்** *kaṇḍa-nāḷam,* பெ.(n.) 1. தொண் டைக்குழி (வின்.); gullet, throat. 2. கழுத்துப்பகுதி களில் ஓடும் குருதிக் குழாய்கள்; the veins of neck side.

*[கண்டம் + நாளம்.]*

**கண்டநேரம்** *kaṇḍa-nēram,* பெ.(n.) நேரவொழுங்கு இல்லாமல் இருப்பது; being irregular in keeping time. கண்ட நேரத்தில் தூங்காதே (உ.வ.).

*[கண்ட (நினைத்த) + நேரம்.]*

**கண்டப்படை**[1] *kaṇḍa-p-paḍai,* பெ.(n.) உத்தரத்தைத் தாங்கும் பட்டைவடிவ மரத்துண்டு; piece of wood which is placed on a pillar to rest the beam.

*தென்சதுரத்து உத்திரத்தின் கீழ்க் கண்டப் படையில்' (S.I.I. Vol.ii.87).*

*[கண்டம் + படை. கண்டம் = வரையறுத்தப்பகுதி]*

**கண்டப்படை**[2] *kanda-p-padai,* பெ.(n.) கோயிற் கட்டட உண்ணாழிகை அடிப்பட்டறையின் கழுத்துப்பகுதி (கம்.வழ.); pertuberant lintel top portion in sanctum sanctorum of a temple.

*[கண்டம் + படை.]*

**கண்டப்பனி** *kanda-p-pani,* பெ.(n.) கொடும்பனி; heavy dew. கண்டப்பனி கால்நடைகளுக் கொவ்வாது (உ.வ.).

**பட.** *கெண்ட அனி*

*[கண்டம் + பனி. கண்டம் = மிகுதி.]*

**கண்டப்புற்று** *kanda-p-purru,* பெ.(n.) தொண்டைப் புண்வகை; a kind of throat cancer.

*[கண்டம் + புற்று.]*

**கண்டபடி**[1] *kanda-padi,* வி.எ.(adv.) 1. ஒழுங்கில்லாமல்; indiscriminately. கண்டபடி நடப்பவன் தறுதலையாவான் (உ.வ.). 2. அளவில்லாமல்; beyond the limit. கண்டபடி உண்டு வயிற்றைக் கெடுத்துக்கொண்டான் (உ.வ.). 3. குழப்பமாக; confused, out of order. கண்டபடி பேசிக் காரியத்தைக் கெடுத்துவிட்டான் (உ.வ.).

**ம.** கண்டமானம்; **து.** கண்டாபட்டெ.

*[கண்ட + படி.]*

**கண்டபடி**[2] *kanda-padi,* வி.எ.(adv.) பார்த்ததுபோல்; as you have seen. மருத்துவக் குறிப்பில் கண்டபடி மருந்து கொடுத்தேன் (உ.வ.).

*[கண்ட + படி.]*

**கண்டபடி**[3] *kanda-padi,* வி.எ.(adv.) 1.சரியற்ற, காரணமற்ற; unreasonable, improper. 2. தோன்றிய வாறு; as actually seen. 3. எண்ணப்படி; at random. கண்டபடி பேசுகிறான் (உ.வ.).

**து.** கண்டாபட்டெ

*[கண்ட + படி.]*

**கண்டபதம்** *kanda-padam,* பெ.(n.) 1. மண்ணுளிப் பாம்பு; earthworm. *"குண்டபதமீளு மோக்காள மையமும்போம் கண்டபத மென்னுங்கால்" (பதார்த்த. குண. 1231).*

*[கண்டம் + பாதம் – கண்டபாதம் → கண்டபதம். கண்டம் = வளையம் வளையமாக.]*

**கண்டபலம்** *kanda-palam,* பெ.(n.) இலவு(சித்.அக.); silk-cotton tree.

*[கண்டு(முள்) → கண்ட + பலம்.]*

**கண்டபலி** *kanda-pali,* பெ.(n.) மரத்தின் அகக்காழ்; the middle hardest portion of a tree.

*[கண்டம் + பலி. பொலி → பலி.]*

**கண்டபாடம்** *kanda-pādam,* பெ.(n.) நெட்டுருப் பண்ணப்பட்டது; that which has been learnt by rote. அவனுக்குத் தொல்காப்பியம் முழுதும் கண்டபாடம் (உ.வ.).

*[கண்டம் (தொண்டை) + பாடம்.]*

**கண்டபாடலி** *kanda-pādali,* பெ.(n.) பாதிரி; trumpet flower tree (சா. அக.).

*[கண்டம் + பாடலி. கண்டம் = முள். பாதிரி → பாடலி.]*

**கண்டபாதி** *kanda-pādi,* பெ.(n.) சரிபாதி; equal share. *கண்டபாதி வேண்டுமென்று கையேந்தி நின்றான் (இ.வ.).*

*[கண்டதில் + பாதி – கண்டபாதி.]*

**கண்டபித்தம்** *kanda-pittam,* பெ.(n.) பித்தத்தாலெழுந்த ஒருவகைத் தொண்டை நோய்; a throat disease due to the deranged condition of bile in the system (சா.அக.).

*[கண்டம் + பித்தம்.]*

**கண்டபீடம்** *kanda-pidam,* பெ.(n.) தொண்டைக் குத்தல்; a sharp or acute pain in the throat. (சா.அக.)

*[கண்டம் + (பீழை → பீடை →) பீடம். கண்டம் = தொண்டை. பீழை = நோய்.]*

**கண்டபேரண்டம்** *kanda-pērandam,* பெ.(n.) யானையையும் தூக்கிச் செல்லவல்ல இருதலைப் பறவை (சீகாளத்.பு.தென்கை.63); fabulous two-

headed mythical bird, which can hold even elephants in its beak and claws.

*[கண்டம் = பெரியது. கண்டம் + (பெரு) பேர் + அண்டம். அண்டம் = முட்டையுட் பிறந்த பறவை.]*

**கண்டம்**[1] *kaṇḍam,* பெ.(n.) 1. கள்ளி (மலை.); spurgewort. 2. குன்றிவேர் (மூ.அ); crab's-eye root. 3. சாதிலிங்கம் (மூ.அ); vermilion.

*[கள் → கண்டு → கண்டம் (முள்ளுடையது)]*

**கண்டம்**[2] *kaṇḍam,* பெ.(n.) 1. தொண்டை; throat. *"காராருங் கண்டனை" (தேவா.1071,1).* 2. கழுத்து; neck. கண்டக்குளியல் (உ.வ.). 3. குரல்; voice, vocal sound. *"குழலொடு கண்டங்கொள" (மணிமே.19:83).* 4. யானைக் கழுத்திடு கயிறு (பிங்.); elephant's neck rope.

*[கண்டு → கண்டம் (தொண்டை).]*

**கண்டம்**[3] *kaṇḍam,* பெ.(n.) 1. துண்டம்; piece, fragment. *"செந்தயிர் கண்டம்" (கம்பரா.நாட்டுப்.19).* 2. பகுதி; section, part. 3. நடுவிடம் (கேந்திரம்) (astrol.); the rising fourth seventh, and tenth signs. *"பொன்னவன் கண்டத் துறினும் அமுதெனப் போற்றுவரே"(விதான. குணாகுண.25).* 4. நிலத்தின் பெரும்பிரிவு; continent (geography). 5. வயல்வரப்பு (இ.வ.); small ridges between paddy fields. 6. நெற்கண்டம்; heap of the winnowed paddy. கடாவிட்டுத் தூற்றிக் கண்டத்தில் அளந்துவா (உ.வ.).

*[கண்டு + அம் - கண்டம். கண்டு = துண்டு, கட்டி, சருக்கரைக்கட்டி, நூற்பந்து. கண்[illegible]கண்டம் = துண்டு, மாநிலப் பிரிவு. ஒ.நோ. துண்டு – துண்டம். கண்டு – கண்டிகை = நிலப்பிரிவு. உப்புக்கண்டம், கண்டங்கண்டமாய் நறுக்குதல் என்பன உலகவழக்கு. அம் என்பது இங்கு பெருமைப்பொருள் பின்னொட்டு.]*

**கண்டம்**[5] *kaṇḍam,* பெ.(n.) பல்வண்ணத்திரை; multicoloured curtain.

*[கண்டு → கண்டம்.]*

**கண்டம்**[6] *kaṇḍam,* பெ.(n.) 1. வெல்லம்; jaggery. 2. கண்டசருக்கரை; a kind of sugar.

*[கண்டு → கண்டம்.]*

**கண்டம்**[7] *kaṇḍam,* பெ.(n.) 1. முள்; thorn. 2. எழுத்தாணி; iron style for working on palmyra leaves. 3. வாள்; sword.

**தெ.** கண்ட; **Palli.** kantako.

*[கள் = முள். கள் → கள்ளி. ஒ.நோ. முள் → முள்ளி. கள் → கண்டு = கண்டங்கத்தரி (முட்கத்தரி). கண்டு → கண்டம் = கள்ளி, கண்டங்கத்தரி, எழுத்தாணி, வாள். வடமொழியில் இதற்கு மூலமில்லை.]*

**த.** கண்டம் > **Skt.** kant. (வ. மொ.வ.105.)

**கண்டம்**[8] *kaṇḍam,* பெ.(n.) 1. தசை, புலால்; a lump or piece of flesh or pulp. 2. பொதிமூட்டை; bundle luggage.

**க., தெ.** கண்ட

*[கண்டு → கண்டம் (திரட்சி.)]*

**கண்டம்**[9] *kaṇḍam,* பெ.(n.) கோயில் முகமண்டபப் பகுதி (S.I.I.v,236); frontal portion of the temple.

*[கண்டு → கண்டம்.]*

**கண்டம்**[10] *kaṇḍam,* பெ.(n.) கண்டங்கத்தரி (சங்.அக.); *kaṇḍankattari,* a thorny plant.

*[கண்டு (முள்) → கண்டம் + கத்திரி.]*

**கண்டம்**[11] *kaṇḍam,* பெ.(n.) 1. ஒக மிருபத்தேழனு ளொன்று; a division of time, one of 27 yogas. 2. இடருறுகாலம்; critical period.

**தெ.** கண்டமு; **க.** கண்ட.

*[கண்டு (முடிச்சு, கருமை) → கண்டம்.]*

**கண்டம்**[12] *kaṇḍam,* 1. மணி (வின்.); bell. 2. மெய்புதை அரணம் (கவசம்) (திவா.); coat of mail.

**க. தெ.** கண்ட

*[கண்டு → கண்டம் (கழுத்து,) கழுத்தில் கட்டும் மணி. கழுத்தின் கீழாக அணியும் அரண உடை.]*

**த.** கண்டம் >**Skt.** ghanta.

**கண்டம்பயறு** *kaṇḍam-payaṟu,* பெ.(n.) காராமணி (இ.வ.); cholee-bean.

*[கண்டம் (சிறுமை) + பயறு.]*

**கண்டமட்டும்** *kaṇḍa-maṭṭum,* வி.எ.(adv.) மிகுதியாய்; excessively. காசில்லாமல் கிடைத்தால் கண்டமட்டும் உண்ணுவதா (உ.வ.).

க. கண்டாபட்டி

[கண்ட + மட்டும்.]

**கண்டமண்டலம்**[1] *kaṇḍa-maṇḍalam,* பெ.(n.) குறைவட்டம் (யாழ்.அக.); segment of a circle.

[கண்டம் (துண்டு) + மண்டலம். மண்டலம் = வட்டம்.]

**கண்டமண்டலம்**[2] *kaṇḍa-maṇḍalam,* பெ.(n.) கழுத்துப்பாகம்; neck.

[கண்டம் + மண்டலம் (பகுதி)]

**கண்டமணி** *kaṇḍa-maṇi,* பெ.(n.) 1. கழுத்திலுள்ள முருண்டு; thyroid cartilage (சா.அக.). 2. ***கண்டாமணி*** பார்க்க; see *kaṇḍā-maṇi.*

[கண்டம் + மணி.]

**கண்டமரம்** *kaṇḍa-maram,* பெ.(n.) கடற்கரைப் பகுதியில் காணப்படும் ஒருவகை மரம்; a kind of tree seen on seashore.

[கண்டு → கண்டல் + மரம். கண்டல் = முள்தாழை.]

**கண்டமாலை**[1] *kaṇḍa-mālai,* பெ.(n.) கழுத்தைச் சுற்றி உண்டாகும் புண் (சிவதரு.சுவர்க்க.தரகசே.30); scrofula, tubercular glands in the neck.

[கண்டம் + மாலை.]

**கண்டமாலை**[2] *kaṇḍa-mālai,* பெ.(n.) கழுத்தணி வகை; a kind of necklace. *"கண்டமாலை தன்னை வெட்டிப்பிடித்தது".(திருவிளை. கல்லானை.17).*

ம. கண்டமால

[கண்டம் + மாலை.]

**கண்டமாலை**[3] *kanda-mālai,* பெ.(n.) கோபுர உச்சிப்பகுதி; a part of the turret of a temple.

[கண்டம் + மாலை.]

**கண்டமுட்டு** *kaṇḍa-muṭṭu,* பெ.(n.) ***கண்டுமுட்டு*** பார்க்க; see *kaṇḍu-muṭṭu.*

[கண்டு + முட்டு.]

**கண்டமூங்கில்** *kaṇḍa-mūṅgil,* பெ.(n.) மூங்கில் வகைகளுலொன்று; a kind of bamboo tree.

[கண்டம் + மூங்கில்.]

மூங்கில் கணுவுடையது. அழிக்கக் கணுவுடைய மூங்கில் கண்ட மூங்கில் எனப்பட்டது.

**கண்டமூலம்** *kaṇḍa-mūlam,* பெ.(n.) கழுத்தின் அடிப்பாகம்; deepest part of the throat.

[கண்டம்' + மூலம் (அடிப்பகுதி).]

**கண்டமேனி** *kaṇḍa-mēṉi,* பெ.(n.) முன்பின் ஆராயாமல் செய்யும் செய்கை; unrestrained act. *ஆத்திரத்தில் கண்டமேனிக்குப் பேசிவிட்டான் (இ.வ.).*

[காண் → கண் → கண்ட + மேனி.]

**கண்டயம்** *kaṇḍayam,* பெ.(n.) ***கண்டையம்*** பார்க்க; see *kaṇḍaiyam. "திருவா சிகையுந் திகழ்கண டயமும்" (திருவாரூ.370).*

[கண்டை + அம் – கண்டையம் → கண்டயம்.]

**கண்டர்** *kaṇḍar,* பெ.(n.) 1. துரிசு (மூ.அ.); blue vitriol. 2. வலிமை; strength. 3. சோழர் குடிப்பெயர்; a clan name of the *Chōḻa* dynasty.

[கண்டு → கண்டர். கண்டு = கட்டியான கனிமம், திண்மை, வலிமை.]

**கண்டர்கோடரி** *kaṇḍār-kōḍari,* பெ.(n.) மீனை வெட்டும் கத்தி; a kind of knife to cut the fishes.

[கண் = சிறியது. கண்டம் = துண்டம். கண்டம் → கண்டர் + கோடரி.]

**கண்டரம்வை–த்தல்** *kaṇḍaram-vai-,* 4 செ. குன்றாவி.(v.t.) அறுக்குமிடத்தை அரத்தைக் கொண்டு அடையாள மிடுதல்; to make mark by file.

[கண்டு + அரம் + வை.]

**கண்டராதித்தர்** *kaṇḍar-ādittar,* பெ.(n.) புலமை நிரம்பிய சோழ மன்னன்; a Chōḻa king and Tamil poet.

[கண்டர் + ஆதித்தர். கண்டர் = சோழர் குடிப்பெயர்.]

பன்னிரு திருமுறையுள், ஒன்பதாம் திருமுறையாகிய, திருவிசைப்பாவை அருளிய ஒன்பதின்மருள் ஐந்தாமவர்; முதற்பராந்தக சோழனின் இரண்டாவது மகன். காலம் கி.பி.955–957. "சிவஞான கண்டராதித்தர்" என்னும் சிறப்புப் பெயர் உடையவர்.

**கண்டரிப்புண்** *kaṇḍari-p-puṇ,* பெ.(n.) தொண் டைக்குள் ஏற்படும் அரிபுண்; phagedemic ulcer with erosions inside the throat.

*[கண்டம் (சிறியது) + அரி + புண்.]*

**கண்டருளப்பண்ணு-தல்** *kaṇḍaruḷa-p-paṇṇu-,* 5 செ.குன்றாவி.(v.t) கடவுளுக்குப் படைத்தல் (மாலியம்); to present offering before the almighty.

*[கண்டு + அருள + பண்ணு.]*

**கண்டருளு-தல்** *kaṇḍaruḷu-,* 5 செ.கு.வி.(v.i.) உருவாக்குதல்; to create. *"நாடெங்குஞ் சோற்று மலை கண்டருளி தென்னவன் வந்தபடி பணிய" (S.I.I. Vol.17 Insc.135,S.No.6).*

*[கண்டு + அருளு.]*

**கண்டரை** *kaṇḍarai,* பெ.(n.) இதயத்தின் மேற்புறத் திலுள்ள இடப்பெருந் தமனி; aorta, the great artery issuing from the left ventricle of the heart.

*[கண்டு → கண்டரை.]*

**கண்டல்**[1] *kaṇḍal,* பெ.(n.) 1. சதுப்பு நிலத்தில் வளரும் சிறுமரம்; mangrove. 2. வெண்கண்டல்; white mangrove. 3. பூக்கண்டல்; dichotomous mangrove. 4. தாழை; fragrant screw-pine. *"கண்டல் திரை யலைக்குங் கானல்" (நாலடி.194).* 5. முள்ளி (சூடா.); Indian nightshade. 6. நீர்முள்ளி (மலை.); white long-flowered nail dye. 7. முள்ளிக்கீரை; prickly tree. 8. பேய்க்கண்டல் மரம்; a small tree, fire fly tree (சா.அக.).

**ம.** கண்டல்; **குட.** கண்டெ (ஆணிவேர்); **து.** காண்டேலு (உப்பு நீருக்கு அருகில் வளரும் ஒருவகை மரம்); **தெ.** கட்ட (வேர்.); **க.** கட்டே, கெட்டெ; **கொலா.** கட்ட; **குவி.** கிட்ட; **Sinh.** *kaḍol* (Mangrove).

*[கண்டு → கண்டல். (வே.க.174.). கண்டு = முள். கண்டல் = முள்ளுடையது.]*

**கண்டல்**[2] *kaṇḍal,* பெ.(n.) செம்பழுப்பு நிறமுடையதும் 12 விரலம் வளர்வதுமான கடல் மீன்வகை; a kind of sea fish pale coloured attaining 12 inch. in length.

*[கண்டு → கண்டல்.]*

**கண்டல் கரைசல்** *kaṇḍal-karaišal,* பெ.(n.) கட்டியும் குழம்பும்; solid and semi-solid. *கண்டலும் கரைசலுமாய்க் கழிச்சல் போகிறது (சா.அக.).*

*[கண்டல் (கட்டி) + கரைசல்.]*

**கண்டலம்** *kaṇḍalam,* பெ.(n.) 1. முள்ளி (மூ.அ.); Indian nightshade. 2. கருவேல்; black babul.

*[கண்டல் → கண்டலம் (வே.க.174).]*

**கண்டலி** *kaṇḍali,* பெ.(n.) நீர்முள்ளி; water-thorn (சா.அக.).

*[கண்டல் → கண்டலி. கண்டல் = முள்.]*

**கண்டவர்** *kaṇḍavar,* பெ.(n.) 1. ***கண்டோர்*** பார்க்க; see *kaṇḍōr.*

*[கண்ட + அவர்.]*

**கண்டவல்லி** *kaṇḍavalli,* பெ.(n.) சீயற்காய்; soapnut.

*[கண்டல் + வல்லி. கண்டல் = முடிச்சு.]*

**கண்டவலை** *kaṇḍa-valai,* பெ.(n.) சிறு துண்டுகளால் சேர்த்துப் பின்னப்பட்ட வலை; a net composed of different pieces (கருநா.).

**ம.** கண்டவல; **க.** கண்டவலெ, கண்டபலெ.

*[கண்டம் + வலை. கண்டம் = சிறுதுண்டு.]*

**கண்டவளையம்** *kaṇḍa-vaḷaiyam,* பெ.(n.) குற்ற வாளியின் கழுத்தில் மாட்டும் இருப்புவளையம் (பாண்டி); a kind of iron ring put a round the neck of a culprit.

*[கண்டம் + வளையம். கண்டம் = தொண்டை, கழுத்து.]*

**கண்டவன்** *kaṇḍavaṉ,* பெ.(n.) 1. வெளியார், பழக்க மற்றவர்; person who has no concern. கண்டவனெல்லாம் இதைப்பற்றிப் பேசலாமா?(உ.வ.). 2. ஒரு பொருளையோ நிகழ்ச்சியையோ கண்டவன்; one who has seen, an eye-witness. 3. தொடர் பில்லாதவன்; a man not invited; கலியாணத்திற்குக் கண்டவன் எல்லாம் வரமாட்டான் (உ.வ.).

**ம.** கண்டவன்; **க.** கண்டவனு; **கோத.** கண்டோன்; **குட.** கண்டவென்; **பட.** கண்டம.

*[கண்ட + அவன் – கண்டவன்.]*

**கண்டவிடம்** *kaṇḍa-v-iḍam,* பெ.(n.) 1.பார்த்த இடம்; a place which is seen. 2. இடம்; any place.

**ம.** கண்டடம்

*[கண்ட + இடம்.]*

**கண்டழிவு** *kaṇḍaḻivu,* பெ.(n.) எதிர்பாராத செலவு. (S.I.I.Vol.iii,271); unforeseen expenses.

*[கண்ட + அழிவு. அழிவு = செலவு, வீணடிப்பு.]*

**கண்டற்குயம்** *kaṇḍaṟ-kuyam,* பெ.(n.) தழுதாழை விழுது ( தைலவ.); aerial roots of the screw-pine.

*[கண்டல் + குயம். குயம் = அரிவாள், அரிவாள் போன்ற விழுது.]*

**கண்டறி-தல்** *kaṇḍaṟi,* 2 செ.கு.வி. (v.i.) பட்டறிதல்; to learn by experience. *`கண்டறிந்த நாயுமல்ல களமறிந்த கொப்பறையுமல்ல' (பழ.)*

*[கண்டு + அறி.]*

**கண்டறை** *kaṇḍaṟai,* பெ.(n.) 1. கற்புழை (திவா.) ; cavern in a rock. 2. சிறுபாலம்; a culvert. (சேரநா.) 3. மலைக்குகை; cave.

**ம.** கண்டற

*[கண்டு (கல்) + அறை.]*

**கண்டறைவை-த்தல்** *kaṇḍaṟai-vai-,* 4 செ.குன்றாவி. (v.t.) மரத்தில் வெட்டுமிடத்தை வரையறை செய்தல் (இ.வ.); to mark the portion to be cut in timber.

*[கண்டு + அறை + வைத்தல். அறு → அறை = அறுப்புக்குரிய இடம்.]*

**கண்டன்**[1] *kaṇḍaṉ,* பெ.(n.) 1. தலைவன்; master. 2. வீரன்; warrior. *"தெவ்வர் புரமெரி கண்டரி" (கோயிற்பு.நடராச.26).* 2. கணவன் (பிங்.); husband. 4. சோழர்குலப் பட்டப் பெயர்; title of Choḻa kings. *"கண்டன் வேங்கை யெந்நாட்டு மெழுதி". (பாரத. பாஞ்.20).* 5 மாந்தன்; man.

**க., பட.** தண்ட; **ம.** கண்டன்; **கோத.** கண்ட(ஆண்); **துட.** கொட்ண்; **குட.** கண்டெ(பூனையல்லாப் பிற விலங்குகளில் ஆண்); **து.** கண்டணி, கண்டாணி; **தெ.** கண்டு (விலங்குகளின் ஆண்.).

**Port.** gente; **Skt.** ganda, gandira.

*[கண்டு + அன் – கண்டன். கண்டு = திரட்சி, வன்மை.]*

**கண்டன்**[2] *kaṇḍaṉ,* பெ.(n.) கொடியோன்; cruel man. *"கண்ட மானபடி கண்வடக் கண்டன்" (கம்பரா. யுத்த. நாகபாச.69).*

**ம.** கண்டன் (தீங்குவிளைவிக்கும் சிறுதெய்வம்)

*[கண்டு → கண்டன் = வலிமை வாய்ந்த ஆண், கொடியவன்.]*

**கண்டன் வாளராயன்** *kaṇḍaṉ-vāḷarayaṉ,* பெ.(n.) திருக்கோவலூர் வட்டம் ஆலூர் ஏரியில் தூம்பு வைத்துக் கொடுத்த வள்ளல்; a donor, who constructed a sluice in the tank at Alur in Thiruk kovalur taluk. *"பாவடங்குடையார் மகந் கண்டந் வாளறாயந் செய்பிச்ச தூம்பு. (தமிழில் ஆவணம். ப.156).*

*[கண்டன் + வாள் + அரையன் – கண்டன் வாளரையன். வாளறாயன் என்றிருப்பது எழுத்துப் பிழை.]*

**கண்டனம்** *kaṇḍaṉam,* பெ.(n.) பிறர் கொள்கை யையோ கூற்றையோ கண்டித்தல்; censure, confutation, refutation.

**H.** kandan

*[கண்டி + அனம் –கண்டனம்(மு.தா.101).]*

**த.** கண்டனம் > **Skt.** khandana. 'அனம்' சொல்லாக்க ஈறு. *கண்டி = துண்டி. ஒ.நோ.முண்டி → முண்டனம்.*

**கண்டனை** *kaṇḍaṉai,* பெ.(n.) 1. கண்டித்தல் (இராட்.); chastening. 2. ஏற்றுக்கொள்ளாமை; to refrain from acceptance. 3. தள்ளுதல்; to reject, remove.

*[கண்டு → கண்டனை = வெட்டித்தள்ளுதல், ஒதுக்குதல்.]*

**கண்டனைக்காரன்** *kaṇḍaṉai-k-kāraṉ,* பெ.(n.) நூல் முதலியவற்றிற் குற்றங்காண்பவன்(பாண்டி.); cansor, adverse critic.

*[கண்டனை + காரன்.]*

**கண்டா** *kaṇḍā,* பெ.(n.) வாரியின் வளையப்பகுதி; water surging area. (நெல்லை. மீனவ.).

*[குண்டா → கண்டா.]*

**கண்டாஏனம்** *kaṇḍā-ēṉam* பெ.(n.) கோயில் மணியைப்போல் கவிழ்ந்துள்ள மூடும் ஏனம்; the vessel resembling a temple-bell.

**தெ.** கண்டா (பூசைமணி.)

*[கண்டா + ஏனம் – கண்டாஏனம் = பூசை மணி போன்ற ஏனம்.]*

**கண்டாகண்டன்** *kaṇḍā-kaṇḍaṉ,* பெ.(n.) சிவனடி யார்; a Śivā devotee.

*[கண்டன் + கண்டன். நீலமணிமிடற்றுக் கண்டத்தை யுடைய சிவனைக் கண்டவராகக் கருதப்படும் சிவனடியார்.]*

**கண்டாங்கி** *kaṇḍāṅgi,* பெ.(n.) கட்டம் போட்ட நூற்சேலை; a kind of chequered cotton saree. *"கண்டாங்கிக் காரி கடைக்கண்" (தனிப்பா, ii 37, 38).*

மறுவ. கண்டாங்கி

*[கண்+ தாங்கி. கண்டம் = துண்டு, கட்டம், சிறு கட்டங்கள் நிறைந்த புடைவை]*

**கண்டாஞ்சி** *kaṇḍāñci,* பெ.(n.) 1. மரவகை; entire-leaved staff-tree. 2. குடைவேல்; buffalo thorn cutch.

*[கண்டாங்கி → கண்டாஞ்சி.]*

**கண்டாஞ்சூலி** *kaṇḍāñ-cūli,* பெ.(n.) ஒருவகை முள்ளி; prickly nail dye (சா.அக.).

*[கண்டம் + சூலி – கண்டாஞ்சூலி.]*

**கண்டாடி** *kaṇḍāḍi,* பெ.(n.) ஒருவகை வலை; a kind of net (சேரநா.)

ம. கண்டாடி

*[கண்டு + ஆடி.]*

**கண்டாணி** *kaṇḍāṇi,* பெ.(n.) செருமானின் ஊசி (இ.வ.); awl.

*[கண்டம் (முள்முனை) + ஆணி.]*

**கண்டாந்த நாழிகை** *kaṇḍānda-nāḻigai,* பெ.(n.) இரலை (அசுவினி), கொடுநுகம் (மகம்),குருகு (மூலம்) முதலான விண்மீன்களின் முதற் பாதத் தினின்று முறையே கவ்வை (ஆயில்யம்), தழல் (கேட்டை), தொழுபஃறி (இரேவதி) முதலிய விண்மீன்களின் நான்காம் பாதமுடிய பிறப்பு ஒரை (இலக்கினம்) செல்வதற்கான நாழிகை (சோதிட. சிந்.56); time taken by the lakknam to pass from the first quarter of *aśuviṇi, magam or mūlam* to the end of the fourth quarter of *āyiliyam, kēttai or rēvadi* respectively.

*[கண்டம் + அந்தம் + நாழிகை.]*

**கண்டாமணி** *kaṇḍā-maṇi,* பெ.(n.) 1. பெரிய மணி; large bell. *"சேமக்கலம் ....கண்டாமணி யதனொடு மடிப்ப".(பிரபோத.11:41)* 2. யானைக் கழுத்திற் கட்டும் மணி (வின்.); bell tied to the neck of an elephant. 3. வீரக்கழல்; tinkling ankle rings worn by distinguished warriors.

மறுவ. காண்டாமணி

*[குண்டு + மணி – குண்டுமணி → குண்டாமணி → கண்டாமணி]*

**கண்டாய்** *kaṇḍāy,* இடை.(part.) ஒரு முன்னிலை அசைச்சொல் (திருக்கோ.114, உரை); expletive of the 2nd pers.,something like 'you see'. *"ஆரியன் கண்டாய் தமிழன் கண்டாய்" (தேவா.).*

ம. கண்டாயோ(பார்த்தாயோ)

*[காண் → கண்டு (இ.வி.எ) + ஆய் – கண்டாய். உரையாடுங்கால் "நீ இதனைக்கண்டாயா" என்னும் பொருளில் உரையசையாகப் புணர்க்கப்படும் முன்னிலை அசைச்சொல்.]*

**கண்டாயம்** *kaṇḍāyam,* பெ.(n.) வழி (யாழ்ப்.); opening, outlet, avenue, passage.

*[கண் → கண்டை. கண்=சிறுமை,சிறியது. கண்டை → கண்டையம் → கண்டயம் → கண்டாயம். கண்டை = சிறுவழி, சிறுதுளை, சிறு இடைவெளி.]*

**கண்டார்** *kaṇḍār,* பெ.(n.) 1. பார்த்தவர்; person who sees. 2. தொடர்பில்லாதவர்; person not concerned, stranger. *"கண்டார்கள் கையேற்கு மாறே" (பிரபோத.27: 44).*

*[கண்டவர் → கண்டார்.]*

**கண்டாரம்** *kaṇḍāram,* பெ.(n.) ஒருவர் ஒருவரோடு மோதும் நேரடிப் போர்; a quarrel among two heroes.

*[கண்டர் → கண்டாரம். கண்டர் = வீரர். 'ஆரம்' சொ.ஆ. ஈறு. முதனிலைச்சொல்லின் தன்மை யுணர்த்தி நின்றது.]*

**கண்டாரவம்** *kaṇḍā-ravam,* பெ.(n.) 1. மணியோசை; sound of a bell. 2. ஓர் இசை(வின்.); a musical mode. 3. கிலுகிலுப்பை; large rattle (சா. அக.).

*[தெ. கண்டா + அரவம். அரவம் = ஓசை.]*

**கண்டால்**[1] *kaṇḍāl,* இடை. (conj.) அன்றி; except. *அதற்காகப் போனேனே கண்டால் வேறெதற்கும் இல்லை (இ.வ.).*

மறுவ. கண்டி

*[தெ. கண்ட்டே > த. கண்டால்.]*

**கண்டால்**[2] *kaṇḍāl,* இடை (part.) ஓர் அசைச்சொல்; an expletive. *உன்னைக் கண்டால் கேட்டேனா? (நெல்லை).*

*[காண் → காண்டு → காண்டால் → கண்டால் (அசைநிலையாய் வந்த வறுமொழி).]*

**கண்டாலி**[1] *kaṇḍāli,* பெ.(n.) வெள்ளெருக்கு; white madar plant (சா.அக.).

*[கண்டு + ஆலி. ஆலி = வெண்மை.]*

**கண்டாலி**[2] *kaṇḍāli,* பெ.(n.) வெள்ளறுகு (சங்.அக.); white species of harialli grass.

*[கண்டல் → கண்டாலி. கண்டல் = திரட்சி, திரண்ட தூறுடையது.]*

**கண்டாவளி** *kaṇḍāvaḷi,* பெ.(n.) ***கண்டமாலை***[2] பார்க்க; see *kaṇḍa-mālai. "கண்டாவளியைக் களிறுண்டது" (திருவிளை. கல்லானை.18).*

*[கண்டம் + ஆவளி – கண்டாவளி. கண்டம் = கழுத்து. ஆவளி = மாலை.]*

**கண்டாவிழிதம்** *kaṇḍāviḷidam,* பெ.(n.) தொண்டை உறுத்தலைப் போக்கும் மருந்து; medicine that relieves the trouble of the throat (சா.அக.).

*[கண்டம் + அவிழ்தம். கண்டம் = தொண்டை, அவிழ்தம் = நோய்தணிப்பது, நீக்குவது.]*

**கண்டாளம்**[1] *kaṇḍāḷam,* பெ.(n.) 1. பொதி; pack-saddle. 2. எருத்தின் மேலிடும் பொதி (வின்.); wallet placed on a bullock.

**க.** கண்டலெ; **தெ.** கண்டலெமு; **Mar.** kantali.

*[கண்டம் (திரட்சி பொதி) → கண்டாளம். ஆளம். தொ.பெ.ஈறு.]*

**கண்டாளம்**[2] *kaṇḍāḷam,* பெ.(n.) ஒட்டகம்; camel.

*[கண்டம் + ஆளம். கண்டம் = பொதி. கண்டம் சுமப்பதால் கண்டாளம்.]*

**கண்டாளம்**[3] *kaṇḍāḷam,* பெ.(n.) போர்; battle, war.

**மறுவ.** கண்டாலம்

*[கண்டர் → கண்டாரம் → கண்டாலம் → கண்டாளம் (கொ.வ.).]*

**கண்டாளவெருது** *kaṇḍāḷa-v-erudu,* பெ.(n.) பொதிமாடு (வின்.); pack-bullock.

**க.** கண்டாளவெருது

*[கண்டாளம் (பொதி) + எருது.]*

**கண்டானுமுண்டானும்** *kaṇḍāṉumuṇḍāṉum,* பெ.(n.) வீட்டுத் தட்டுமுட்டுகள்; household utensils. *கண்டானு முண்டானும் இத்தனை எதற்கு? (இ.வ.).*

**தெ.** கண்டே (கரண்டி)

*[கரண்டி → கராண்டான் → கண்டான். (கொ.வ.). மொள்ளு → மொண்டல் → மொண்டான் முண்டான்(அகப்பை). கண்டான் முண்டான் = கரண்டியும் அகப்பையும்.]*

**கண்டி**[1]**–த்தல்** *kaṇḍi,* 4 செ.கு.வி.(v.i.) 1. குற்றஞ் செய்தவன் திருந்துமாறு கடிந்து கூறுதல்; to reprove, censure. *குழந்தையைத் தண்டிப்பதை விடக் கண்டிப்பதே மேல்.* 2. துண்டித்தல் (தி.வா.); to chop mince, slash out into pieces. கரும்பைக் கண்டித்துக் கொடு (உ.வ.) 3. பகிர்தல் (வின்.); to divide. காணி நிலத்தைக் கண்டிப்ப தெப்படி (உ.வ.) 4. பருத்தல்; to grow fat. *ஆள் நன்றாய்க் கண்டித்திருக்கிறான் (இ.வ.)* 5. வரையறைப் படுத்துதல்; to prescribe *பேசும் போதே கண்டித்துப் பேசிவிடு* 6. முடிவுகட்டிப் பேசுதல் (வின்); to have a precoeived talk. வீட்டிற்கு வரமாட்டாயா? கண்டித் துச்சொல் (உ.வ.). 7. நோயைத் தணித்தல்; to cure as of adisease. இம்மருந்தை முறையாய் உண்டால் அந்நோயைக் கண்டிக்கும் (உ.வ.).

**த.** கண்டி > **Skt.** khant.

*[கண்டு → கண்டி. ஒ.நோ. துண்டு → துண்டி. கண்டித்தல் = துண்டு துண்டாக வெட்டுதல், வெட்டுவதுபோற் கடிந்து கூறுதல், முகத்தை முறித்தல், வெட்டிப் பேசுதல் என்னும் கண்டி – கடி → கடிதல் = கழறுதல். வழக்குகளை நோக்குக கண்டி → கண்டிப்பு. (வ.மொ.வ.105.)]*

கண்டித்தலின் வகைமைகள் :

தெழித்தல் - விலங்குகளை அதட்டி ஓட்டுதல். அதட்டுதல் - மக்களை உரத்த குரலால் அல்லது சில அசைவுகளால் கடிதல். கடிதல் - குற்றஞ் செய்தவனைச் சீறுதல், எச்சரித்தல் - குற்றஞ் செய்தவன் திருந்துமாறு அச்சுறுத்தல்; கழறுதல் - மென்மையாகக் கண்டித்தல். (சொ. ஆக.54).

**கண்டி**[2] *kaṇḍi,* பெ. (n.) 1.கழுத்தணி வகை; neck ornament. 2.அக்கமாலை; necklace of rudrakssa beads. *"கண்டியிற் பட்ட கழுத்துடையீர்" (தேவா. 586,6).*

**ம.** கண்டி

*[கண்டு (முள், மொட்டு) – கண்டி. (வேக. 158,174).]*

**கண்டி**[3] *kaṇḍi,* பெ. (n.) அடைத்து மீன்பிடிக்கும் வலைப்பு வகை (யாழ்ப்.); a kind of portable hurdle used by fishermen for catching fish in shallow waters.

ம. கண்டாடி (ஒருவகை வலை)

*[கண்டு + இ – கண்டி.]*

**கண்டி**[4] *kaṇḍi,* பெ.(n.) கள்; toddy *அவன் கண்டியடிப்பவன் (நாஞ்.).*

*[கள் – கண்டி(இ.வ.).]*

**கண்டி**[5] *kaṇḍi,* பெ.(n.) ***கண்டியூர்*** பார்க்க; see *kaṇḍiyūr "பூமன் சிரங்கண்டி" (தனிப்பா.)*

மறுவ. கண்டிகம்

*[கண்டியன் → கண்டி.]*

**கண்டி**[6] *kaṇḍi,* பெ.(n.) 1. 500 கல்லன் (பவுண்டு) எடையுள்ள பார மென்னும் நிறையளவு; candy, a weight stated to be roughly equivalent to 500 lbs. 2. 500 கல்லன் (பவுண்டு.) தவசம் விளையத்தக்க. எழுபத்தைந்து ஏக்கருள்ள நிலவளவு; a unit of land, as much as will produce a candy of grain, approximately 75 acres. 3. நான்கு கலம் தவசம் கொள்ளும் முகத்தலளவு; a unit of capacity. 360 படி = 4 கலம்.

ம.,தெ.,க.,து.கண்டி; **Mar.** khandil.

*[கண்டு→ கண்டி. (வே.க.158,174.)]*

*குண்டி = உருண்ட புட்டம். குண்டு → கண்டு = நூற்பந்து. (குண்டகம்) கண்டகம் = வட்டமான மரக்கால். கண்டு → கண்டி = ஒருகலம், ஓர் அளவு. (வட.வர.6.)*

**கண்டி**[7] *kaṇḍi,* பெ. (n.) சிறுகீரை (மலை.); a species of amaranthus campestris.

மறுவ. கண்டிகை, கண்டிலை

ம. கண்டி

*[கண்டு → கண்டி – கண்டு = துண்டு, சிறிது.]*

**கண்டி**[8] *kaṇḍi,* பெ.(n.) இலங்கையின் பழைய தலைநகர்களுள் ஒன்று; Kandy, one of the ancient capital cities of Ceylon.

*[குண்டி → கண்டி (நுழைவாயில், பெருவாயில்)]*

**கண்டி**[9] *kaṇḍi,* பெ.(n.) 1. துளை, ஒட்டை, இடை வெளி; a gap in a hedge or fence, breach in a wall. கதவை மூடும்முன் கண்டியை அடை(உ.வ.). 2. இடைவழி, சந்து; a lane, narrow path. கண்டிவழியே காற்று வருகிறது(உ.வ.). 3. நுழைவாயில்; an entrance, a gateway. கண்டியில் நமது காவலனுண்டா(உ.வ.). 4. வயலின் வரப்பில் உள்ள நீர் செல்லும் வழி; a gap or breaeth in the ridge of rice field. கண்டிவாய்க்கால் வழியாக வடித்துவிடு(உ.வ.). 5. கணவாய்; a mountain pass. 6. துளையை அடைக்கும் அடைப்பு; that which is put to cover a breach or gap (சேரநா.).

ம. கண்டி; க. கண்டி, கிண்டி,; கோத, கண்ட்ப; குட. கண்டி; து. கண்டி,; தெ. கண்டி, கண்டிக; பிரா. கண்ட.

**Skt.** khand (உடை,பிரி,அழி)

*[குண்டி (குழிவினது) → கண்டி.]*

**கண்டி**[10] *kaṇḍi,* பெ. (n.) 1. துண்டு; piece (நெல்லை.) 2. கட்டட வேலையில் கட்டுவதற்கு ஏதுவாக இருக்க விடும் சிறு இடைவெளி; space for breaking joints.

க. கண்டிகெ

*[கண்டு → கண்டி.]*

**கண்டி**[11] *kaṇḍi,* பெ. (n.) 1.தோட்டம்; garden. 2. குழு, கூட்டம்; group.

ம. கண்டி

*[கண்டு (திரட்சி, தொகுதி) → கண்டி.]*

**கண்டி**[12] *kaṇḍi,* பெ. (n.) மலைப்பாதையிலுள்ள கடை; shop on mountain pass.

பட. கண்டி

*[கண்டி = நுழைவாயில், கணவாய்]*

**கண்டி**[13] *kaṇḍi,* பெ. (n.) ஒதுக்கிய நிலப்பகுதி; portion of land alloted for some purpose.

**Eng.** country; **Turk.** kent (a city).

*[கண்டு – கண்டி.]*

**கண்டி**[14] *kaṇḍi,* பெ. (n.) கணு; node. *"கண்டி நுண்கோல் கொண்டுகளம் வாழ்த்தும்" (பதிற். 43-27.)*

*[கண்டு → கண்டி (கணு). ஒ.நோ. முண்டு → முண்டி (பி.வி.) உண்ணப்படுவது உண்டி என்றும், கொள்ளப்படுவது கொண்டியென்றும் வருவது போல கண் கண்ணாக - கணுக்கணுவாகக் கண்டிக்கப்படுவது கண்டி என வந்தது (கண்டித்தல் = துண்டித்தல்.).]*

**கண்டி**[15] *kaṇḍi,* பெ. (n.) 1. எருமைக்கடா; buffalo bull. *"எருமையுள் ஆணினை கண்டி என்றலும்" (தொல். பொருள்.623).* 2. மந்தை (இ.வ.); flock, herd. 3. ***கண்டிக்கல்*** பார்க்க; see *kaṇḍi-k-kal.*

**க., பட.** கோண; **ம.** கூன (எருமையின் கடாக்கன்று); **தெ.** கோடெ; **Skt.**gone; **Pali.** gono; **Pkt.** gona.

*[கண்டு = திரட்சி, பருமை, கூட்டம். கண்டு → கண்டி = பருமையும் வலிமையும் மிக்க ஆண் எருமை.]*

**கண்டிக்கல்** *kaṇḍi-k-kal,* பெ. (n.) 1. கல் கட்டுமானத்தில் இசைமாற்றுவதற்காக (இடைவெளி நிரப்புவதற்காக) முதற்கல்லை அடுத்து இடப்படும் உடைத்த கல்; broken stones used as spacer stones to break joints.2. உடைத்த செங்கற்கள்;small siged links used for buildings this walle.

*[கண்டு → கண்டி + கல்.]*

**கண்டிகம்** *kaṇḍigam,* பெ. (n.) கடலை (நாமதீப.); bengal gram.

*[கண்டு → கண்டிகம்.]*

**கண்டிகை**[1] *kaṇḍigai,* பெ. (n.) ஒருவகைப் பறை (பிங்.); a kind of drum.

*[கண்டு → கண்டிகை (வே.க.158,174.).]*

**கண்டிகை**[2] *kaṇḍigai,* பெ.(n.) 1. துண்டு; piece 2. பாகம்; division (கருநா.).

**க.** கண்டிகெ

*[கண்டி - கண்டிகை.]*

**கண்டிகை**[3] *kaṇḍigai,* பெ.(n.) 1. கழுத்தணி (பிங்.); necklace. *"பல்பல கண்டிகைத் தார்மணி பூண்ட" (கலித்.96:14).* 2. அக்கமாலை (பிங்.); necklace of rudraksa beads (வ. கண்டிகா.) 3. பதக்கம் திவா.); breast plate of gold set with precious stones. 4. வாகுவலயம். (குடா.); armlet, bracelet. 5. அணிகலன் செப்பு (பிங்.); jewel casket. 6.மாணிக்க வளை (சிலப்.6,89. உரை); ruby bracelet

**ம.** கண்டி; **க.** கண்டி; Skt. kaṇṭikā

*[கண்டி[9] → கண்டிகை.]*

தோலிலே மூன்று நிரையாகப் பல நிறத்து மணியை வைத்துத் தைத்துக் கழுத்திற் கட்டுவது கண்டிகை. பதக்கம், வளையல் போன்றவற்றின் கண்டியில் கற்களைப் பதித்து உருவாக்கியமையால் கண்டிகை எனப்பட்டது.

குண்டி = உருண்ட பிட்டம். குண்டு - கண்டு = நூற்பந்து. [குண்டகம்] - கண்டகம் = வட்டமான மரக்கால். கண்டி = ஒருகலம், ஓர் அளவு.கண்டி - கண்டிகை = பதக்கம், தோட்கடகம் [வட.வர.6]

**கண்டிகை**[4] *kaṇḍigai,* பெ.(n.) நிலப்பிரிவு (வின்.); division of a field. ***கண்டி*** பார்க்க see *kaṇḍi.*

**ம.** கண்டம்; **து.** கண்ட (வயல்).

*[கண்டி → கண்டிகை.]*

**கண்டிகை**[5] *kaṇḍigai,* பெ.(n.) அக்குள் கைக்குழி; arm- pit (சா.அக.).

*[கண்டு →கண்டிகை. கண்டு = சேர்ப்பு, பொருத்து, அக்குள் பொருத்து.]*

**கண்டிகை**[6] *kaṇḍigai,* பெ.(n.) சிறுகீரை; a species of amaranth. *"கண்டிகை யாவரேனும் நத்தியே யுண்பாரானால்" (நீதிசாரம்.83).*

*[கண்டு → கண்டிகை.]*

**கண்டிடங்கடத்தி** *kaṇḍidaṅ-kaḍatti,* பெ.(n.) சமயத்துக்குத் தகுந்தபடி பேசுகிறவன் (நாஞ்.); one who is shifty in speech.

*[கண்டு + இடம் + கடத்தி.]*

**கண்டிடு-தல்** *kaṇḍiḍu-,* 20 செ.கு.வி.(v.i.) நூலைக் கதிரிற் சுற்றுதல் (வின்.); to wind thread on a spindle.

*[கண்டு' + இடு.] 'இடு' (து.வி.)]*

**கண்டிடைத் தூக்கல்** *kaṇḍidai-t-tūkkal,* பெ.(n.) ***கண்டி*** பார்க்க; see *kaṇḍi.*

*[கண்டு + எடை + தூக்கல் - கண்டெடைத் தூக்கல் - கண்டிடைத் தூக்கல் (கொ.வ.).]*

**கண்டிதக்காரன்** *kaṇḍida-k-kāraṉ,* பெ.(n.) கடுஞ்சினத்தன் (பாண்டி.); irascible person.

க. கண்டிதம்

த. கண்டிதம் > Skt. khandita.

*[கண்டி → கண்டிதம் = கண்டிப்பு.]*

**கண்டிப்பானவன்** *kaṇḍippāṉavaṉ,* பெ.(n.) சொல்லுறுதியுள்ளவன்; a man of his word. *கொள்கையில் கண்டிப்பானவனைக் காண்பதரிது (உ.வ.).*

க. கண்டிதவாதி

*[கண்டிப்பு + ஆனவன்.]*

**கண்டிப்பு**[1] *kaṇḍippu,* பெ.(n.) 1. கடிந்துகொள்கை; reproof, rebuke. தவற்றைக் கண்டிப்பவரே ஆசிரியர் (உ.வ.). 2. வரையறை; strictness, exactness, precision. உடன்படிக்கையில் கண்டிப்பான வழிமுறை களைக் குறிப்பிட வேண்டும் (உ.வ.) 3. உறுதி (வின்.); certainly, assurance. 4. துண்டிப்பு. (வின்.); cutting, sundering. பழகியோரிடம் தீக்குணங்களைக் காணுங்கால் அவர் தொடர்பைக் கண்டிப்பதே சாலச்சிறந்தது (உ.வ.). 5. அழிவு; damage, as done by a falling tree. 6. கடுமையான அதிகாரம்; firm control. அவள் அம்மாவின் கண்டிப்பில் வளர்ந்தவள்(உ.வ.).

ம. கண்டிப்பு; க. கண்டித; உரா. கண்டீச.

*[கண்டித்தல் = வெட்டுதல், வரையறுத்தல். கண்டி → கண்டிப்பு = வெட்டு ஒன்று துண்டு இரண்டு என்றாற் போல் தெளிவாக வரையறுத்துத் துணிந்து கூறும் கூற்று.]*

**கண்டிப்பு**[2] *kaṇḍippu,* பெ. (n.) வீக்கம்; swelling (சா.அக.).

*[கண்டு → கண்டி → கண்டிப்பு.]*

**கண்டிப்புப்பண்ணு-தல்** *kaṇḍippu-p-paṇṇu-,* 12 செ.குன்றாவி.(v.t.) திட்டம் செய்தல்; to impose strict discipline. கண்டிப்புப் பண்ணினால் கரை சேருவான் (உ.வ.).

*[கண்டிப்பு + பண்ணு.]*

**கண்டிபிடி-த்தல்** *kaṇḍi-piḍi-,* 4 செ.குன்றாவி.(v.t.) மேற்றளத்தைக் கண்டிக் கல்லாற் குத்தி மூடுதல்; to cover the upper floor of a house with terrace bricks.

*[கண்டி + பிடி.]*

**கண்டிமுத்திரை** *kaṇḍi-muttirai,* பெ.(n.) முத்திரை வகை (சைவாது.வி.19.); a kind of seal.

*[கண்டி + முத்திரை.]*

**கண்டியடி-த்தல்** *kaṇḍi-y-aḍi-,* 4.செ.குன்றாவி.(v.t.) கட்குடித்தல் (நாஞ்.); to drink spiritous liquour.

*[கள் → கண்டி + அடி-]*

**கண்டியத்தேவர்** *kaṇḍiya-t-tēvar,* பெ.(n.) ஓமலூர் வட்டம் தீவட்டிப்பட்டி அருகிலுள்ள கைலாயமுடையார் திருக்கோயிலுக்குச் சதிர்நெல்லி என்னும் ஊரை இறையிலி நிலமாக வழங்கியோருள் ஒருவர்; one of the chief men who donated the village Cadirnelli as tax free gift to Kailāyamudāyar temple at Thivatti Patti in Omalur taluk. *“முகைநாட்டுப் பொன்னார் கூடலில் சீகைலாய முடையனாயற்கு கண்டியத் தேவரும் வண்ணாவுடையாரும்” (ஆவணம், 1991:5).*

*[கண்டியன் + தேவர்.]*

**கண்டியர்** *kaṇḍiyar,* பெ.(n.) பாணர், bards, lyrist (அக.நி.).

*[கண்டி → கண்டியர். கண்டி = கூட்டம், குழு, கண்டி→ கண்டியர் = குழுவாகப் பாடிச் செல்லும் பாணர்.]*

**கண்டியூர்**[1] *kaṇḍiy-ūr,* பெ.(n.) 1.தஞ்சை மாவட்டத் திலமைந்த சிவபெருமானின் எட்டுத் திருக் கோயில்களுள் ஒன்றுள்ள ஊர். (தேவா.); name of a town with a Siva shrine, in the Taṉjavūr district. 2. மாலியக்(வைணவ)கோயில் அமைந்த அவ்வூரின் ஒரு பகுதி. *(திவ். திருக்குறுந்.19);* another part of the above town noted for its Višnū shrine.

*[கண்டி = வீரன், மறவன். கண்டி + ஊர்.]*

**கண்டியூர்**[2] *kaṇḍiy-ūr,* பெ.(n.) சேர்நாட்டு ஊர்ப்பெயர்; a place name in Kerala.

*[கண்டி = ஒதுக்கப்பட்ட நிலப்பகுதி. அவ்விடத்து குடியிருப்புகள் அமைந்தமையால் இப் பெயர் பெற்றது.]*

ம. கண்டியூர். *நடுத் திருவாங்கூர்ப் பகுதியில் மாவேலிக் கரைக்கு அருகிலுள்ள ஓரிடத்தின் பெயர். இஃது ஓடநாடு (காயம்குளம்) அரசின் தலைநகரமாகவும் விளங்கியுள்ளது.*

**கண்டிராயபணம்** *kaṇḍirāya-paṇam,* பெ.(n.) மைசூர் அரசில் கண்டீரவ நரச அரசன் வெளியிட்ட ஒருவகை நாணயம் (G.Sm. D.1.i.290); a coin issued by Kantirava Narassa Raja of Mysore, 17th C.

*[கண்டீரன் + அரையன் + பணம் – கண்டீர அரையன் பணம் → கண்டிராயபணம் (மரூஉ.).]*

**கண்டிரு-த்தல்** *kaṇḍiru-,* 2 செ.கு.வி.(v.i.) 1. தோன்றியிருத்தல்; to set in, being; அவனுக்குக் காய்ச்சல் கண்டிருக்கிறது (உ.வ.). 2. குறிக்கப்படுதல்; to be noted down. புத்தகத்தில் அந்தக்கணக்குக் கண்டிருக் கிறதா?(உ.வ.).

*[காண் → கண்டு + இரு.]*

**கண்டில்** *kaṇḍil,* பெ.(n.) 1. இருபத்தெட்டுத் துலாங் கொண்ட ஒரு எடையளவு; a unit of measure of weight equal to 28 tulām.2. திரட்சி; round. 3. முடிச்சு; round in shape resdue nodule.

**க.** கண்டி; **தெ.** கண்டி.

*[கண்டி – கண்டில்.]*

**கண்டில்வெண்ணெய்** *kaṇḍil-veṇṇey,* பெ.(n.) 1. பெருஞ்சீரகம் (கம்பரா.ஆற்றுப்.13.2); Chinese anise. 2. குறிஞ்சி நிலத்துள்ள ஒரு மரம்; a tree in the mountain tract. 3. குங்கிலிய வெண்ணெய்; ointment prepared from bdellium. 4. யானைக் கன்றின் மலம்; the faces of an elephant cub (சா.அக.).

*[கண்டி → கண்டில் + வெண்ணெய்.]*

**கண்டிலைப்பாலை** *kaṇḍilai-p-pālai,* பெ.(n.) ஒரு காட்டலரி; wax flower, dog-bane (சா.அக.).

*[கண்டு + இலை + பாலை.]*

**கண்டினி** *kaṇḍiṉi* பெ.(n.) முண்டினி மரம்; a tree which has more thorns.

*[கள் → கண்டு → கண்டி→ கண்டினி.]*

**கண்டீர்** *kaṇḍīr,* இடை. (part.) ஒரு முன்னிலையசை; expletive which expresses the mea.

*[காண் → காண்டிர் → கண்டீர்.]*

**கண்டீரம்** *kaṇḍīram,*பெ.(n.) 1. சதுரக்கள்ளி; square-spurge. 2. செவ்வியம்; the root of black pepper plant. 3. ஒருவகை அவரை; a kind of kidney bean (சா.அக.)

**மறுவ.** கண்டீரவம், கண்டீரவன்.

*[கண்டு + ஈரம்.]*

**கண்டீரவம்** *kaṇḍīravam,* பெ.(n.) 1. அரிமா (சிங்கம்); lion. 2. புலி; tiger.

*[கண்டி → கண்டிரம் → கண்டீரவம்.]*

**கண்டீரன்** *kaṇḍīraṉ.* பெ.(n.) ஆண்பால் இயற்பெயர்; proper name of male.

*[கண்டன் → கண்டிரன் → கண்டீரன். கண்டன் → உடல் வலிமை சான்ற ஆண்மகன். ஒ.நோ. அண்டன் → அண்டிரன். மாந்தன் → மாந்தரன்.]*

**கண்டீரே** *kaṇḍīrē,* இடை. (part.) கண்டீர் பார்க்க; see *kaṇḍīr.* *"கண்டீ ரென்றா கேட்டீ ரென்றா" (தொல். சொல்.425).*

*[கண்டீர் → கண்டீரே; அசைநிலையாய் வந்த முன்னிலை வினைமுற்று.]*

**கண்டீரை** *kaṇḍīrai,* பெ.(n.) செவ்வியம் (தைலவ. தைல.82); the root of black pepper plant (சா.அக.).

*[கண்டீரம் → கண்டீரை.]*

**கண்டு**[1] *kaṇḍu,* பெ.(n.) 1. கட்டி (தைலவ.தைல.99); clod, lump. 2. கழலைக்கட்டி; wen. 3. ஓர் அணிகலவுரு; bead or something like a pendant in an ornament for the neck. *'புல்லிகைக் கண்ட நாண் ஒன்றிற் கட்டின கண்டுஒன்றும்'* (S.I.I.ii, 429).

*[குண்டு → கண்டு, குண்டு = திரட்சி.]*

**கண்டு**[2] *kaṇḍu,* பெ.(n.) 1.நூற்பந்து; ball of thread. இரண்டு நூற்கண்டு போதும் (உ.வ.). 2. நெசவாளரின் பாவில் ஊடே செல்லும் ஊடைக் குச்சியில் சுற்றப் பட்டுள்ள நூல் கண்டு; a roll of thread on a small stock or straw which is put into the weaver's shuttle.

**மறுவ.** கண்டுநூல்

**க.** கண்டு, கண்டிகெ; **துட.** கொடி (மூங்கிலின் இழை); **தெ.** கண்டெ, கண்டிய.

*[குண்டு → கண்டு (வே.க.158.).]*

**கண்டு**[3] *kaṇḍu,* பெ.(n.) முள்ளுள்ள கண்டங்கத்தரி. (மலை.); a prickly plant with diffuse branches.

*[கள் →கண்டு. (வே.க.158.).]*

**கண்டு**[4] *kaṇḍu,* பெ.(n.) 1. கற்கண்டு; sugarcandy, rock candy. *"வாயூறு கண்டெனவும்" (தாயு. சித்தர்க.8.)* 2. கருப்பங்கட்டி; a ball of jaggery

(சா.அக.).

ம. கண்டு. த. கண்டு. Skt. khanda.

[கள் → கண்டு (திரட்சி).]

**கண்டு**[5] *kaṇḍu*, பெ.(n.) அக்கி (இ.வ.); herpes.

[கள் → கண்டு, (சிறுமுள் போன்ற சின்னஞ்சிறு பரு.]

**கண்டு**[6] *kaṇḍu*, பெ.(n.) பாத்தி; garden bed.

[கள் → கண்டு (துண்டு, பகுதி, பாத்தி, வயல்).]

**கண்டு**[7] *kaṇḍu*, பெ.(n.) 1. வயல். (w.g.); field. 2. திருத்தப்பட்ட விளைநிலம்; cultivated land.

[கண்டு = (துண்டு, சிறியது, பகுதி.)]

**கண்டு**[8] *kaṇḍu*, பெ.(n.) முடிச்சு, கணு; nodule.

[கள் → கண்டு.]

**கண்டு**[9] *kaṇḍu*, பெ.(n.) பந்து; ball.

தெ. கண்டெ; ம. கண்டி; க; து. செண்டு.

[குண்டு → கண்டு.]

**கண்டு**[10] *kaṇḍu*, பெ.(n.) கண்டுபாரங்கிச்செடி; knot plant (சா.அக.).

[கள் → திரட்சி, முடிச்சு, கள் → கண்டு.]

**கண்டு**[11] *kaṇḍu*, பெ.(n.) காஞ்சொறி; nettle plant (சா.அக.)

[கள் → முள் → கள் → கண்டு.]

**கண்டு**[12] *kaṇḍu*, பெ.(n.) 1. ஆமையோடு; tortoise shell 2. எலும்பு; bone. (சா.அக.).

[கள் = கட்டி. கள் → கண்டு.]

**கண்டு**[13] *kaṇḍu*, பெ.(n.) 1. மண்புழு; earthworm 2. புழு; worm (சா.அக.).

[கிண்டு → கண்டு.]

**கண்டுக்கி** *kaṇḍukki*, பெ.(n.) கருப்பு வாகை; fragrant acacia (சா.அக.).

[கண்டு + உக்கி.]

**கண்டுகட்டல்** *kaṇḍu-kaṭṭal*, பெ.(n.) முடிச்சு முடிச்சாக எழும்பும் கட்டி; a nodular swelling (சா.அக.).

[கண்டு + கட்டு–தல். கண்டு = முடிச்சு.]

**கண்டுகட்டுகை** *kaṇḍu-kaṭṭugai*, பெ.(n.) சொத்துகளைப் பறிமுதல் செய்தல் (நாஞ்.); (legal) attachment of properties.

ம. கண்டுகெட்டுக.

[கண்டு + கட்டுகை. கண்டு = தொகுதி, முழுமை.]

**கண்டுகத்தரி** *kaṇḍukattari*, பெ.(n.) காய்க்கும் தன்மையற்ற கத்தரி; brinijal plant which yields nothing (சா.அக.).

மறுவ. குருட்டுக்கத்தரி, ஈனாக்கத்தரி.

[கண்டு + கத்தரி.]

**கண்டுகம்**[1] *kaṇḍugam*, பெ.(n.) மஞ்சிட்டி (சிறுமரவகை); arnotto

[கண்டு → கண்டுகம்.]

**கண்டுகம்**[2] *kaṇḍugam*, பெ.(n.) இருபது குளகம் கொண்ட அளவு; a measure of capacity, twenty kūḷagas (கருநா.).

க., பட. கண்டுக.

[கள் → கண்டு → கண்டகம் → கண்டுகம். 120 பட்டணம்படி அல்லது 40 வள்ளம் கொண்ட முகத்தல் அளவு.]

**கண்டுகரி** *kaṇḍu-kari*, பெ.(n.) பூனைக்காலி; cowage plant (சா.அக.).

மறுவ. கண்டுரா, கண்டுரை, கண்டுதி.

[கண்டு + கரி.]

**கண்டுகழி**[1]**–த்தல்** *kaṇḍu-kaḻi*, செ.குன்றாவி.(v.t.) சலிப்புண்டாகுமளவும் நுகர்ந்து கழித்தல்; to enjoy to satiety.

[கண்டு + கழி–.]

**கண்டுகழி**[2]**–த்தல்** *kaṇḍukaḻi-*, 4 செ.கு.வி.(v.i.) சமையற்காரர்களுக்கு உணவுப்பண்டங்களோடு புழங்கிக்கொண்டிருந்தமையால் ஏற்படும் பசிமந்தம்; to lose one's appetite from having too much to do with food, as cooks.

[கண்டு + கழி–]

**கண்டுகழி**[3]**–த்தல்** *kaṇḍukaḻi-*, 4 செ.குன்றாவி.(v.t.) கட்டியை அறுத்தெடுத்தல்; remove a tumour.

[கண்டு + கழி–தல். கண்டு = கட்டி.]

**கண்டுகளி–த்தல்** *kaṇḍukaḷi,* செ.கு.வி.(v.i.) ஒன்றைக்கண்டு மனநிறைவடைதல், மகிழ்தல்; to enjoy to one's satisfaction. அருங்காட்சியகப் பொருள்களை மாணவர்கள் கண்டு களித்தனர். (உ.வ.).

*[கண்டு + களி–]*

**கண்டுகாண்(ணு)–தல்** *kaṇḍu-kāṇ-,* 16 செ.குன்றாவி. (v.t.) கவனமாய்ப் பார்த்தல்; to look at a thing attentively.*"குவளை .... நின்கண் ணொக்குமேற் கண்டுகாண்." (திருக்கோ.162)*

*[கண்டு + காண்.]*

**கண்டுகாணு–தல்** *kaṇḍu-kāṇu-,* 16 செ.குன்றாவி. (v.t.) கழலைக் கட்டி தோன்றுதல்; the formation of a tumour (சா.அக.).

*[கண்டு + காணுதல். கண்டு = கட்டி.]*

**கண்டுகுணம்பாடி** *kaṇḍukuṇam-pāḍi,* பெ.(n.) முகமன் பேசுவோன்; flatterer. இவன் கண்டுகுணம் பாடி என்பது தெரியாததா? (உ.வ.).

*[கண்டு – குணம் + பாடி.]*

**கண்டுகொள்ளாமலிரு–த்தல்** *kaṇḍu-koḷḷāma-liru-,* 12 செ.கு.வி.(v.i.) தெரிந்தும் தெரியாததுபோல் இருத்தல்; to take no notice of.செய்யும் தவறு களைக் கண்டுகொள்ளாமலிருக்க முடியுமா? (உ.வ.).

*[கண்டுகொள் + ஆ + மல் + இரு.]*

**கண்டுங்காணாமை** *kaṇḍuṅ-kāṇāmai,* பெ.(n.) 1. பார்த்தும் பாராதது போலிருக்கை; pretending not to have seen whil actually having seen.அவர் என்னைக் கண்டுகொள்ளாமல் போய்விட்டார் (உ.வ.). 2. கண்ணாற் கண்டும் கருத்துணர இயலாமை (விவிலி.மார்க்.4, 12); seeing with one's eyes and yet failing to observe. அவளுக்கு இந்த மாப்பிள்ளை பிடிக்கவில்லை என்பது கண்டுங்காணாமையால் இப்படி நேர்ந்துவிட்டது (உ.வ.). 3. கவனிப்பின்மை; overlooking, as if not seeing.அண்ணனின் கண்டுங் காணாமை காரணமாகத் தம்பியின் முன்னேற்றம் தடைப்பட்டது(உ.வ.). 4. போதியதும் போதாது மாகுதல்; state of being at once sufficient and insufficient; apparent insufficiency.

*[கண்டும் + காணாமை. இலக்கிய வழக்கில் இதனை நோக்கல் நோக்கம் என்பர்.]*

**கண்டுசோளம்** *kaṇḍucōḷam,* பெ.(n.) வெள்ளைச் சோளம்; Indian millet or great millet (சா.அக.).

*[கண்டு + சோளம். கண்டு = திரட்சி. கண்டுச்சோளம் = முட்டைச்சோளம், உருண்டைச்சோளம்.]*

**கண்டுசருக்கரை[1]** *kaṇḍu-sarukkarai,* பெ.(n.) நுகர்தற்குரிய ஒருவகை மணப்பொருள் (சிலப்.4: 35, உரை.); an imported white fragrant substance used as incense.

*[கண்டு + சருக்கரை.]*

**கண்டுசாடை** *kaṇḍu-šāḍai,* பெ.(n.) **கண்சாடை** பார்க்க; see *kaṇšāḍai.*

*[கண்டு + சாடை.]*

**கண்டுசாய்ப்பு** *kaṇḍu-šāyppu,* பெ.(n.) **கண்சாடை** பார்க்க; see *kaṇšāḍai.*

*[கண்டு + சாய்ப்பு.]*

**கண்டுசெய்–தல்** *kaṇḍu-sey-,* 1 செ.குன்றாவி. (v.t.) போலித்தல், பின்பற்றுதல், போலச்செய்தல்(வின்.); to imitate an action.

*[கண்டு + செய்–.]*

**கண்டுத்துத்தி** *kaṇḍu-t-tutti,* பெ.(n.) ஒரிலைத் துத்தி. (வின்.); a species of mallow, side acuminate.

*[கண்டு + துத்தி.]*

**கண்டுபாரங்கி** *kandu-pāraṅgi,* பெ.(n.) 1. சிறு தேக்கு; beetle killer. (பதார்த்த.980). 2. சிறுமரம்; (L.) Indian lotus croton.

ம. கண்டுபரங்கி; க., தெ. கண்டுபாரங்கி.

*[கண்டு + பாரங்கி. பரு → பரங்கி → பாரங்கி. பாரங்கி = வடிவில் பருத்தது.]*

**கண்டுபாவி–த்தல்** *kaṇḍu-pāvi-,* 4 செ.குன்றாவி. (v.t.) ஒன்றைப் பின்பற்றிச் செய்தல்; to imitate an action.*"பலாயனற் கண்டு பாவித்தாங்கு" (பாரத. நிரைமீட். 21).*

**Skt.** bhavi > த. பாவி.

*[கண்டு + பாவி]*

**கண்டுபிடி–த்தல்** *kaṇḍupiḍi-,* 4 செ.குன்றா.வி.(v.t.) 1. ஆய்ந்து கண்டறிதல்; to find out. 2. புதிதாகக்

கண்டுபிடித்தல்; to discover. எடிசன் மின் விளக்கைக் கண்டுபிடித்தார்(உ.வ.). 3. தேடிக் கண்டு பிடித்தல்; to search and find. காவலர் திருடனைக் கண்டுபிடித்தனர்(உ.வ.). 4. உண்டாக்குதல்; to invert. மார்க்கோனி வானொலியைக் கண்டுபிடித்தார் (உ.வ.).

ம. கண்டு பிடிக்குக; க., பட. கண்டுகிடி

*[கண்டு + பிடி. கண்டுபிடி = பருப்பொருளைக் கண்டுபிடித்தல். கண்டறிதல் = நுண்பொருள் செய்திகளைக் கண்டறிதல்.]*

இரண்டு சொற்கள் சேர்ந்து ஒருசொல் நீர்மைத்தாகி வேறொரு சொல் தம்மிடையே வர இடந்தராததாய் நிற்கும் வினையடிகள் கூட்டு வினையடிகளாகும்.

பெயர், செய்தென் எச்சம், செயவென் எச்சம், குறிப்பு வினை, இடைச்சொல் போன்றவற்றுடன் துணை வினைகள் சேர்ந்து கூட்டு வினையடிகள் உருவாகின்றன. இங்குச் செய்தென் எச்சம் துணைவினை யடியுடன் இணைந்து கூட்டு வினையடி உருவாக்கியுள்ளது.

**கண்டுபிடிப்பு** *kaṇḍupiḍippu,* பெ.(n.) 1. புதிய உருவாக்கம்; invention. ரேடியம் மேடம் கியூரியின் கண்டுபிடிப்பு (உ.வ.). 2. நுட்பம் காணல்; discovery. அவரது கண்டுபிடிப்பு அரிய முயற்சி (உ.வ.).

*[கண்டு + பிடிப்பு.]*

**கண்டுபேசு-தல்** *kaṇḍu-pēšu-,* 5 செ.குன்றாவி. (v.t.) நேரிற்சென்று உரையாடுதல்; to talk in person. "*கண்டுபேசக் கவையுமிருக்கிறது; முகத்தில் முழிக்க வெட்கமும் இருக்கிறது*".(பழ.)

*[கண்டு + பேசுதல்.]*

**கண்டுமுட்டு** *kaṇḍu-muṭṭu,* பெ.(n.) 1. வேதியரைக் கண்டால் தீட்டுப்படுவதாகச் சமணர் மேற்கொள்ளும் வழக்கம்; pollution by sight term applied to a fast observed by Jains when they happen to see Vēdic Hindus. "*மதுரையிற் சைவ வேதியர் தாம் மேவ லாலின்று கண்டுமுட்டியா மென்று*" *(பெரியபு. திருஞான. 683).* 2. நேரிற்காணல்; to look in person.

ம. கண்டுமுட்டு;

*[கண்டு + முட்டு – கண்டுமுட்டு =கண்டு தீட்டுப்படுதல். முட்டுதல் = எதிர்படுதல் தாக்குதல், தீங்காதல்.]*

கண்டமுட்டு, கேட்டமுட்டு, தொட்டமுட்டு எனவும் முட்டில் மூன்று வகை கூறுவர்.

**கண்டுமுதல்** *kaṇḍu-mudal,* பெ.(n.) கதிரடித்துத் திரட்டிய தவசக்குவியல்; actual produce of a field when the harvest has been reaped and threshed. *கம்பு ஐந்து மூட்டை கண்டுமுதல் ஆனது (உ.வ.).*

*[கண்டு + முதல். கண்டு = திரட்சி, மொத்தம், முழுமை. கண்டுமுதல் = முழுமையான வருவாய் ஆதல்.]*

**கண்டுமுதல்பண்ணு-தல்** *kaṇḍu-mudal-paṇṇu-,* 12 செ.குன்ற.வி.(v.t.) முழுவதும் ஒப்படி செய்து குவித்தல்; to collect net produce.

*[கண்டு + முதல் + பண்ணு. கண்டு = மொத்தம். மொத்த முதல் பண்ணுதல் என்பது துப்புரவு செய்த மொத்த தவசக்குவியலைக் குறித்தது.]*

**கண்டுமூலம்**[1] *kaṇḍu-mūlam,* பெ.(n.) 1. சிறுதேக்கு (மலை.); beetle-killer. 2. திப்பிலி (யாழ்.அக.); long pepper. 3. திப்பிலி வேர்; root of long pepper (சா.அக.).

*[கண்டு + மூலம்.]*

**கண்டுயில்(லு)-தல்** *kaṇḍuyil-,* 13 செ.கு.வி.(v.i.) 1. சிறுதூக்கம் கொள்ளுதல்; to nap. "*மாசுணங் கண்டுயில*" *(நீதிநெறி.34).* 2. பார்வை மங்குதல்; to grow dim, as of sight. "*கண்துயின்று முன்றிற் போகா முதிர்வினள்*" *(புறநா.159. 4).*

*[கண்டு + துயில்.]*

**கண்டுயிலிடம்** *kaṇḍuyiliḍam,* பெ.(n.) உறங்குமிடம்; dormitary, bed room.

மறுவ. *உறையுள், அமளி, சேக்கை, சட்டகம், சேர்விடம், பள்ளி, பட்டம், பாழி, பாயல், கிடக்கை, ஆய்வை, கண்படை.*

*[கண் + துயில் + இடம்.]*

**கண்டுரம்** *kaṇḍuram,* பெ.(n.) 1. தினவெடுத்தல்; itching. 2. சொறிதல்; scratching. 3. ஒரு நாணல்; a species of reed. 4. பாகற்காய்; bitter gourd (சா.அக.).

*[கண்டு (முள்) → கண்டுரம்.]*

**கண்டுராய்** *kaṇḍurāy* பெ.(n.) வயலினின்று தண்ணீர் வெளியேறும் சிறு வாய்க்கால்; a sluice or small channel in a paddy-field (சேரநா.).

ம. கண்டுராயி

*[கண் + திறவு + வாய் கண்திறவுவாய் – கண்டிறாய் → கண்டிராய். (கொ.வ.).]*

**கண்டுருவு** *kaṇḍuruvu,* பெ.(n.) அச்சுரு; a mould.

**தெ.** *கண்டருவு*

*[கண்டு (திரண்டது) + உருவு.]*

**கண்டுவகை** *kaṇḍuvagai,* பெ.(n.) கற்கண்டின் வகை; a kind of sugar candy.

*[கண்டு + வகை.]*

**கண்டுவழிபடு–தல்** *kaṇḍu-vaḻipaḍu-,* 4 செ.குன்றாவி.(v.t.) நேரில் வணங்குதல்; to pay one's respect to, as great personage.

**மறுவ.** கண்டுதரிசித்தல்

*[கண்டு + வழிபடு.]*

**கண்டுழவு** *kaṇḍuḻavu,* பெ.(n.) அரசனுடைய சொந்த நிலம் (S.I.I.v.322); private lands of a king.

**ம.** *கண்டுழவு.*

*[கண்டு = தொகுதி, திரட்டு, நன்கு திருத்திய விளைநிலம். கண்டு + உழவு – கண்டுழவு = மிகச் செப்பமான நிலத்து வேளாண்மை.]*

**கண்டூதி** *kaṇḍūdi,* பெ.(n.) 1. தினவு; itching, tingling. *"கண்டூதி யாற்றாறு" (கந்தபு. முதனாட்.188.).* 2. காஞ்சொறி (திவா.); climbing nettle. 3. காமவேட்கை; sexual desire, chiefly of a woman (சா.அக.).

*[கண்டு = திரட்சி, பெருக்கம், மிகுதி. ஊர்தல் = தினவெடுத்தல். கண்டு + (ஊர் → ஊரி) ஊதி. ஊரி → ஊதி (ஈற்றுத்திரிபு).]*

**கண்டூயம்**[1] *kaṇḍūyam,* பெ.(n.) கால்நடைகள் உராய்ந்து கொள்ள நடப்பட்ட மரத்துண்டு; stake for cattle to rub themselves against.

*[கண்டு (திரண்ட மரத்துண்டு) + (ஊதம்) → ஊயம்.]*

**கண்டூயம்**[2] *kaṇḍūyam,* பெ.(n.) **கண்டூதி**[1] பார்க்க; see *kaṇḍūdi*[1]. *"விலங்கு தத்தம் மெய்யகண்டூயம் யாவும் போவது கருதி" (கந்தபு.மார்க்கண்.4.).*

*[கண்டு + (ஊதம்) – ஊயம்.]*

**கண்டூரம்**[1] *kaṇḍūram,* பெ.(n.) 1. காஞ்சொறி (திவா.); climbing nettle. 2. பூனைக்காலி (மலை.); cowhage.

*[கண்டு + (ஊர்) ஊரம். ஊர்தல் → நமைச்சல் உண்டாதல், அரித்தல்.]*

**கண்டூரம்**[2] *kaṇḍūram,* பெ.(n.) வன்மையான கலப்பு மருந்து.(வின்.); strong compound medicine.

*[கண்டு + (ஊதம்) → ஊரம். – கண்டூரம்.]*

**கண்டெடு–த்தல்** *kaṇḍēḍu-,* 18 செ. குன்றாவி.(v.t.) 1. பார்த்து எடுத்துக்கொள்ளுதல்; to happen upon, as a thing of value and pick it up. 2. தற்செயலாக எடுத்தல்; to pick up something by chance. இந்தப் பையை வழியில் கண்டெடுத்தேன் (உ.வ.).

*[கண்டு + எடு.]*

**கண்டெடுத்தான்** *kaṇḍeḍuttāṉ,* பெ.(n.) ஆண்பாற் குறித்த காரணப்பெயர் (இ.வ.); a proper name denoting masculine gender.கண்டெடுத்தானுக்குத் தாய் யாரோ தந்தை யாரோ (உ.வ.).

**மறுவ.** *தொட்டில் குழந்தை, ஏதிலிக்குழந்தை, காட்டுப்பிள்ளை.*

*[கண்டு + எடுத்தான் – கண்டெடுத்தான் = பெற்றோரால் கைவிடப்பட்டுக் கிடந்த இடத்திலிருந்து கண்டெடுத்த காரணத்தால் பெற்ற பெயர்.]*

**கண்டெழுத்து**[1] *kaṇḍeḻuttu,* பெ.(n.) அரசின் நிலத்தீர்வை ஏற்பாடு (நாஞ்.); land revenue settlement.

*[கண்டு + எழுத்து. கண்டு = திருத்தப்பட்ட விளைநிலம்.]*

**கண்டெழுத்து**[2] *kaṇḍeḻuttu,* பெ.(n.) பார்த்து எழுதுதல்; copying (சேரநா.).

**ம.** கண்டெழுத்து.

*[கண்டு + எழுத்து.]*

**கண்டெழுத்துப் பிள்ளை** *kaṇḍeḻuttu-p-piḻḻai,* பெ.(n.) நிலம் முதலியவற்றை அளக்கும் ஆள்; a surveyor.

**ம.** கண்டெழுத்து பிள்ள

*[கண்டு +(எழுது) எழுத்து + பிள்ளை. கண்டு திருத்தப்பட்ட விளைநிலம்.]*

**கண்டேணி** *kaṇḍēṇi,* பெ.(n.) சிறிய ஏணி, கை ஏணி; a short ladder (சேரநா.).

ம. கண்டேணி

*[கண்டு = கணு, மூங்கிற்கணு. கண்டு + ஏணி (மூங்கிற்கணுவில் குறுக்குச்சட்டம் கோத்த ஏணி).]*

**கண்டேறு** *kaṇḍēṟu,* பெ.(n.) ஒருவகைப் பந்தாட்டம்; a kind of ball-game (சேரநா.).

ம. கண்டேறு

*[கண்டு + ஏறு. கண்டு = திரட்சி, பந்து. ஏறு = எறிந்து விளையாடல்.]*

**கண்டை**[1] *kaṇḍai,* இடை. (part.) ஓர் அசைநிலை (தொல்.சொல்.426); an expletive.

*[காண் → கண்டாய் → கண்டை.]*

**கண்டை**[2] *kaṇḍai,* பெ.(n.) நெசவுத்தாறு; reel of weaver's shuttle.

*[கண்டு → கண்டை.]*

**கண்டை**[3] *kaṇḍai,* பெ.(n.) 1. சிறுதுகில் (பிங்.); small cloth for wear. ஒள்ளிழை gold or silver lace.

**தெ.** கண்டுவா; **கொலா.** கண்ட்வா(துணி); **நா.** கண்ட, கண்ட்வா(துணி); **பர்.** கண்ட; **கட.** கர்ண்ட; **குவி.** கந்தா.

**Ori.** khandna(shawl)

*[கண்டு → கண்டை.]*

**கண்டை**[4] *kaṇḍai,* பெ.(n.) 1. வட்டமான அல்லது திரண்ட பெருமணி (திவா.); bell, large bell. 2. தோற் கருவி வகை.(பிங்.); a drum. 3. வீரக்கழல்; warrior's ankle rings or bells.

**தெ.** கண்ட

**த.** கண்டை > **Skt.** ghanta.

*[குண்டு – குண்டலம் = வட்டம், வளையம். குண்டு → குண்டை = உருண்டு திரண்டது. குண்டை → கண்டை.]*

**கண்டைக்கடுவன்** *kaṇḍai-k-kaḍuvaṉ,* பெ.(n.) ***கெண்டைக் கடுவன்*** பார்க்க; see *keṇḍai-k-kaḍuvaṉ.*

*[கெண்டை → கண்டை + கடுவன்.]*

**கண்டைப்பாய்** *kaṇḍaippāy,* இடை.(int.) பார்க்க; see *behold.* *"இப்போர் புறஞ்சாய்ந்து கண்டைப்பாய்" (கலித். 89.13).*

*[காண் – கண்டாய் – கண்டை – கண்டைப்பாய் (பி.வி.)]*

**கண்டையம்** *kaṇḍaiyam,* பெ.(n.) ***கண்டை***[4] பார்க்க; see *kaṇḍai.*

*[கண்டை → கண்டையம்.]*

**கண்டைவேட்டி** *kaṇḍai-vēṭṭi,* பெ.(n.) ஒள்ளிழைத் துணி; cloth with lace border.

*[கண்டு – கண்டை + வேட்டி. கண்டை → முடிச்சு, விளிம்பு.]*

**கண்டொழிவொற்றி** *kaṇḍoḻivoṟṟi,* பெ.(n.) ஒருவகை நில ஒற்றிமுறை; a kind of land mortgage (சேரநா.).

ம. கண்டொழிவொற்றி

*[கண்டு (வயல்) + ஒழிவு + ஒற்றி.]*

**கண்டொளி-த்தல்** *kaṇḍoḷi-,* 4 செ.கு.வி.(v.i.) ஒளித்து விளையாடுதல் (இ.வ.); to play the game of hide and seek.

*[கண்டு + ஒளித்தல். ஒளித்தல் = தன்னை மறைத்தல்.]*

**கண்டொளி-தல்** *kaṇḍoḷi-,* 4 செ.கு.வி.(v.i.) ஒளிந்து விளையாடுதல்; to play blind man's buff.

*[கண்டு + ஒளி.]*

**கண்டோங்கிப்பிலால்** *kaṇṭōṅgippilāl,* பெ.(n.) பெரிய கடல்மீன் வகையுள் ஒன்று (முகவை. மீனவ.); a kind of big sea fish.

*[கண்டு (மொத்தம், கூட்டம்) + உண்கு + இரும்பிலால்.]*

இப்பெருமீன் இரைவேண்டிய விடத்துக் கடலிற் பசையுள்ளதோர் உமிழ்நீரை உமிழ அதனை இரையென்றெண்ணிச் சிறுமீன் கூட்டம் உண்ண வரும்போது இம் மீன் விழுங்கிவிடும்.

**கண்டோட்டி** *kaṇḍōṭṭi,* பெ.(n.) வயலில் நீரைத் திருப்பும் ஆள்; one who regulates water for irrigation.

ம. கண்டோட்டி

*[கண்டு + ஓட்டி. கண்டு = வரப்பு(திருத்திய வயல், பாத்தி)]*

**கண்டோட்டு** *kaṇḍōṭṭu,* பெ.(n.) தண்ணீர்த் தட்டான போது முறைப்படி நீர் பாய்ச்சுகை (Tinn); regulation of water for irrigation during periods of scarcity.

*[கண் + ஒட்டு. கண்டு = திருத்திய வரப்பு அமைந்த வயல்.]*

**கண்டோதி** *kaṇḍōtti,* பெ.(n.) வெளிப்படையான சொல் (ஈடு, 4, 1,9 ஜீ); unambiguous, plain word or statement.

*[கண்ட + உத்தி – கண்டுத்தி → கண்டோத்தி. இதனைக் கண்டோக்தி என்பது வழு.]*

**கண்டோர்** *kaṇḍōr,* பெ.(n.) 1. **கண்டோன்** பார்க்க; see *kaṇḍōṉ* *"மலர்த்தார் மார்ப நின்றோட் கண்டோர் பலர்தில்". (அகநா. 82:14).* 2. செய்தோர்; doer *"தீமை கண்டோர் திறத்தும் பெரியோர் தாமறிந்து உணர்க" (நற். 116:1).*

*[கண்ட + ஓர் (ஐவர்) – கண்டோர்.]*

**கண்டோர்கூற்று** *kaṇḍōrkūṟṟu,* பெ.(n.) ஓர் அகப்பொருள் துறை; a conventional theme in ham poetry.

*[கண்டோர் + கூற்று.]*

**கண்டோலம்** *kaṇḍōlam,* பெ.(n.) பெருங்கூடை; a big basket.

*[கண்டு = திரட்சி, பெரியது, ஓலம் = ஓலைக்கூடை கண்டு + ஓலம் - கண்டோலம்.]*

**கண்டோன்** *kaṇḍōṉ,* பெ.(n.) 1. பார்த்தோன்; one who has seen, a spectator, onlooker, beholder. 2. பிற ஆள்; a stranger.

ம. கண்டோன்; **க.** கண்டோனு; **தெ.** கன்னவாடு.

*[கண்டவன் → கண்டான் → கண்டோன்.]*

**கண்டௌடதம்** *kaṇḍouḍadam,* பெ.(n.) மிக்க இசிவு மிகுந்த காலத்துக் கொடுக்கும் ஒருவகைக் கட்டுமருந்து; strong compound medicine, applied to the tongue in lock-jaw.

*[கண்டு + ஔடதம். கண்டு = திரட்சி.]*

**கண்ண** *kaṇṇa,* கு.வி.எ.(adv.) விரைவாக; speedily, quickly. *கடைக்குப்போய்க் கண்ணவா (சென்னை.வ.).*

**தெ.** க்ரன்னை, க்ரன்ன.

*[கள் = திரட்சி, நெருக்கம், முடுக்கம், விரைவு, கள்→கண்→ கண்ண.]*

**கண்ணகப்பை** *kaṇ-ṇ-agappai,* பெ.(n.) 1. தேங்காய்ச்சிரட்டையாற் செய்த அகப்பை (இ.வ.); a kind of ladle, made of coconut shell. 2. துளையோடு கூடிய இரும்புச் சட்டுவம்; perforated ladle made of iron.mod.

ம. கண்ணாப்ப

*[கண்(துளை) + அகப்பை.]*

**கண்ணகற்று–தல்** *kaṇ-ṇ-akaṟṟu-,* 10 செ.கு.வி.(v.i.) 1. துயில் நீங்கி விழித்தல்; to wake up, as opening one's eyes. *"அர்த்தராத்திரியில் கண்ணகற்றி... நினைந்தருளு மெல்லைக்கண்". (பாரத.வெண்.154, உரை).* 2. பார்வை மாற்றுதல்; to change the sight.

*[கண் + அகற்று–]*

**கண்ணகன்** *kaṇṇagaṉ,* பெ.(n.) ஓர் ஆண்பால் இயற்பெயர்; a proper name of male ; ***கண்ணகி*** பார்க்க; see *kaṇṇagi.*

*[கண் + அகம் – கண்ணகம் → கண்ணகன்.]*

**கண்ணகனார்** *kaṇṇagaṉār,* பெ.(n.) கடைக் கழகக் காலப் புலவருள் ஒருவர்; one of Tamil poets in Sangam age.

*[கண்ணகன் + ஆர் (உயர்வுப்பன்மையீறு).]*

**கண்ணகி** *kaṇṇagi,* பெ.(n.) 1. சிலப்பதிகார கதைத் தலைவி; name of the heroine in Silappatigāram. 2. கடையெழு வள்ளல்களுள் ஒருவனான பேகன் என்பானுடைய புலமை வாய்ந்த மனைவி (புறநா.143); a poetess, the wife of Pēgaṉ, an ancient chief of the Tamil country who was famed for his munificence.

ம. கண்ணகி

*[கண் + அகம் → கண்ணகம் – கண்ணகன் (ஆண்பாற்பெயர்) – கண்ணகி (பெண்பாற்பெயர்)கண்ணகம் = கண். கண்ணகி= கண்போன்றவள்.]*

மண்ணகம் – மண் என்றும் விண்ணகம் விண் என்றும் பொருள்படுதலைக் காணலாம்.

விண்ணகம் – விண்ணாகிய இடம், மண்ணகம் – மண்ணாகிய – இடம் என்றும் இருபெயரொட்டுப் பண்புத் தொகையாயின. கண்ணகம் என்னும் சொல் கண்ணாகிய இடம்

அல்லது கண்ணாகிய சிறப்புப் புலன் என இருபெயரெட்டுப் பண்புத்தொகையாகிப் பாலீறு பெற்றது. கண்ணே, கண்மணியே எனக்கெழு தகைமைப் புலப்படுத்தும் பெயர்ச் சொல்லாகிக் கண்ணகன் என ஆண்பாற் பெயராகவும், கண்ணகி எனப் பெண்பாற் பெயராகவும் வழங்கலாயின. இனி கண்ணகனைக் கண்ணகத்தான், கண்ணகி – கண்ணகத்தாள் எனவும் பொருள்பட்டுக் கண்போற் போற்றப்படுதலைக் குறித்தது எனக் கூறுவது பொருந்துவதன்று. ஏனெனில், கண்ணகத்தான், கண்ணகத்தாள் என்பன குறிப்பு வினைமுற்றும் குறிப்பு வினையாலணையும் பெயரும் ஆதலன்றிப் இயற் பெயராமாறு இல்லை.

**கண்ணகித்தோற்றம்** *kaṇṇagi-t-tōṟṟam,* பெ.(n.) கண்ணகியைப்பற்றிக் கூறும் சேரநாட்டு நாட்டுப் பாடல்; a ballad on Kaṇṇagi (சேரநா.).

**ம.** கண்ணகித்தோற்றம்

*[கண்ணகி + தோற்றம். தோற்றம் = வரலாறு, வரலாற்றுக்கதை.]*

**கண்ணங்குடி** *kaṇṇaṅguḍi,* பெ.(n.) ஓர் ஊர்ப்பெயர்; name of a village.

*[கண்ணன் + குடி.]*

**கண்ணங்குத்து** *kaṇṇaṅguttu,* பெ.(n.) தென்னங் கீற்றுகளில் புள்ளிபோல் உண்டாகும் ஒருவகை நோய்; a kind of disease affecting the leaves of coconut palms, leaf-blight (சேரநா.).

**ம.** கண்ணங்குத்து.

*[கண் + அம் + குத்து. கண்ணம் = இடம், இடப்பரப்பு. குத்து = நோய்]*

**கண்ணங்கூத்தனார்** *kaṇṇaṅ-kūttaṉār,* பெ.(n.) கார்நாற்பது என்னும் நூலையியற்றிய ஆசிரியர், Kūttan, the son of Kaṇṇaṉ, name of the author of Kār-nāṟpadu.

*[கண்ணன் + கூத்தன் (கண்ணன் மகன் கூத்தன்).]*

**கண்ணங்கோடி** *kaṇṇaṅkōḍi,* பெ.(n.) ஒருவகை மீன்; a kind of shark (சேரநா.).

**ம.** கண்ணங்கோடி

*[கண் + அம் + கோடி.]*

**கண்ணச்சன்** *kaṇṇaccaṉ,* பெ.(n.) **கண்ணத்தன்** பார்க்க; see *kaṇṇattaṉ.*

**ம.** கண்ணச்சன்

*[கண் + (அத்தன்)அச்சன்.]*

**கண்ணசாரம்** *kaṇṇa-šāram,* பெ.(n.) 1. கலைமான்; spotted antelope. 2 சதுரக்கள்ளி; square spurge. 3. நூக்கமரம்; sissoo wood.

*[கண் = அகலம், அகற்சி. கண் + அ + சாரம். சாலம்– சாரம் நீட்டுமரம் – நீண்டது. நீண்டகொம்பு.]*

**கண்ணஞ்சிரட்டை** *kaṇṇañjcraṭṭai,* பெ.(n.) தேங்காய்ச்சிரட்டையின் கண்ணுள்ள பாகம்; the upper half of a coconut shell having the three 'eyes' on it.

**ம.** கண்ணஞ்சிரட்ட

*[கண் + அம் + சிரட்டை. கண் = துளை. அம் – சொற்சாரியை.]*

**கண்ணஞ்சு** *kaṉ-ṉ-añju-,* 10 செ.கு.வி.(v.i.) 1. கண் கூசுதல்; to dazzle as of the eye. 2. கண்மூடி அச்சத்தைப் புலப்படுத்துதல்; to quake through fear. *"கடாஅக் களிற்றினுங் கண்ணஞ்சா வேற்றை". (கலித்.101:36).* 3. மென்மையான அச்சம் கொள்ளுதல்; to fear lightly.

*[கண் + அஞ்சு.]*

**கண்ணஞ்சேந்தனார்** *kaṇṇañ-cēndaṉār.* பெ.(n.) கடைக்கழகம் (சங்கம்) மருவிய காலத்துப் புலவர்களுள் ஒருவர்; one of poets belonging to post-Sangam age.

*[கண்ணன் + சேந்தன் + ஆர் (உ.ப.ஈறு).]*

**கண்ணஞ்சேறு** *kaṇṇañ-cēṟu,* பெ.(n.) கடலடிச்சேறு (செங்கை மீனவ.); mole at the sea bed.

*[கண் + அம் + சேறு. கண் = இடம். தரை. 'அம்" சொற்சாரியை.]*

**கண்ணடி[1]–த்தல்** *kaṉ-ṉ-aḍi-,* 4. செ.கு.வி.(v.i.) கண்ணாற் குறிப்புக் காட்டல், கண்சாடை செய்தல்; to instigate, to encourage by winking at.

**மறுவ.** கண்ணசைத்தல்

**து.** கண் ஒத்துநி

*[கண் + அடி.]*

**கண்ணடி**[2] *kaṇṇaḍi,* பெ.(n.) ***கண்ணூறு*** பார்க்க; see *kaṇṇūṟu. கல்லடிபட்டாலும் கண்ணடி படக் கூடாது (பழ.).*

*[கண் + அடி.]*

**கண்ணடி**[3] *kaṉ-ṇ-aḍi,* பெ.(n.) கண்ணாடி பார்க்க; see *kaṇṇāḍi. பரந்தொளி யுமிழும் பைம்பொற் கண்ணடி (சீவக.629).*

ம. கடக்காரன்; பட. கண்ணடி; து. கண்ணடி,கன்னடி; குட.கன்னடி; க. கனடக, கனடி, கன்னடி; துட. கொணொடி.

*[கண் + ஆடி – கண்ணாடி → கண்ணடி(கொ.வ.)]*

**கண்ணடுங்கு–தல்** *kaṇṇaḍuṅgu-,* 5 செ.கு.வி.(v.i.) இமை படபடத்தல்; to shake, tremble as of the eye.

*[கண் + நடுங்கு.]*

**கண்ணடை–தல்**[1] *kaṉ-ṇ-aḍai-,* செ.கு.வி. (v.t.) 1. துளை அடைபடுதல்; to be blocked up, as a hole. இடியப்பக்குழல் கண்ணடைந்து போயிற்று (உ.வ.). 2. பயிரின் குருத்துக் கண்ணடைதல்; to cease shooting, as the head of a plant. 3. திரிந்து கேடுறுதல்; to be spoiled, as milk when kept too long. *கண்டைந்த பால் (வின்.).*

*[கண் + அடை.]*

**கண்ணடை**[2]**–தல்** *kaṇṇ-aḍai-,* 2 செ.கு.வி.(v.i.) 1. கண் பஞ்சடைந்து போதல் ஒரு சாக்குறி; to dim the eyes as symptom of death. 2.கண் நேர் கொள்ளுதல்; to close the eyelid (சா.அக.).

*[கண் + அடை.]*

**கண்ணடை**[3]**–த்தல்** *kaṉ-ṇ-aḍai-,* 7 செ.குன்றாவி. (v.t.) 1. துளையடைத்தல்; to be choked; to be stopped up, as the orifice of a spring.ஊற்று முழுதும் கண்ணடைத்துக் கொண்டது (உ.வ.). 2. வழியடைத்தல்; to be blocked up, closed, as a way. *"பெருவழி அறுகையு நெருஞ்சியு மடர்ந்து கண்ணடைத் தாங்கு" (மணி 12:60).* 3. உறங்குதல்; to close the eyes and sleep. 4. இறந்தவரின் திறந்த கண்ணை மூடுதல்; closing the eyes of dead body.

*[கண் + அடை.]*

**கண்ணடைப்புள்ளி** *kaṇṇaḍai-p-puḷḷi,* பெ.(n.) 1. மாட்டின் கண்ணருகே உள்ள புள்ளி; a speck near the corner of the eye. 2. புள்ளியுள்ள மாடு; a cow having a speck near the eye.

ம. கண்ணடப்புள்ளி

*[கண் + அண்டை + புள்ளி. அண்டை = அடை. அருகில்.]*

**கண்ணப்பநாயனார்** *kaṇṇappa-nāyaṉār,* பெ. (n.) தம் கண்ணைப் பிடுங்கிச் சிவனுடைய கண்ணுக்கு மாற்றாக வைத்து முத்திபெற்ற சிவத்தொண்டராகிய அறுபத்துமூன்று நாயன்மாருள் ஒருவர் (பெரியபு.); one among the sixty three canonized šaiva saints, who from his intense love to šiva gouged out his own eyes to engraft them on to him.

ம. கண்ணப்பசித்தர்

*[கண் + அப்பன். (அப்பியவன்) கண்ணப்பன் + நாயனார்.]*

**கண்ணம்மா** *kaṇṇammā,* பெ.(n.) 1. பெண்ணுக் கிடும் பெயர்; a name given to a female child. "சின்னஞ் சிறு கிளியே கண்ணம்மா" (பாரதி) 2.தாய்வழிப் பாட்டி; a grandmother (சேரநா.) ***கண்ணம்மாள்*** பார்க்க; see *kaṇṇammāl.*

ம. கண்ணம்ம

*[கண் + அம்மா(ள்). (கண் போன்று சிறந்தவள்).]*

கண்ணம்மாள் என்பதே செவ்விய வழக்கு. கண்ணம்மா என்பது விளியாதலின் இயற்பெயராக எழுவாய்த் தன்மை எய்தாது. இதனை வழுவமைதியாக உலக வழக்கில் வழங்கினும் இலக்கண வழக்கிற்கு ஏற்புடைத்தன்று. இவ்வாறு பெயரிடுதலைத் தவிர்த்தல் வேண்டும்.

**கண்ணம்மாள்** *kaṇṇammāl,* பெ.(n.) பெண்பால் இயற்பெயர்; proper name of a female.

*[கண் + அம்மாள். கண் = பெரிய, சிறந்த.]*

**கண்ணமங்கை** *kaṇṇa-maṅgai,* பெ.(n.) மாலியர் களால் 108 திருப்பதிகள் என்று போற்றப்படுவன வற்றுள் ஒன்று; one of the 108 sacred shrines of the Vaišhnarrites.

*[கண்ணன் + மங்கை.]*

**கண்ணமரம்** *kaṉ-ṇ-amaram,* பெ.(n.) கண்சூட்டு நோய்; granular opthalmia, conjunctivitis.

*[கண் + அமரம்.]*

**கண்ணமுது** *kaṇṇamudu,* பெ.(n.) கன்னல் (பாயாசம்); payasam milk porridge.

*[கண் + அமுது. கண்ணை + அமுது – கண்ணமுது. கண்ணை = தேனடை. இனிப்புத் தேனடைபோல் தித்திக்கும் இனிய உண்டி. "அரிசியும் பிற இன்சுவைப் பொருள்களும் கலந்து அட்ட பாற்கன்னல் (பாயசம்)".]*

**கண்ணமைப்பு** *kaṇ-ṇ-amaippu,* பெ.(n.) தமிழ் மருத்துவ நூலின்படி கண் முழுவதும் நான்கு பகுதிகளாகப் பிரிக்கப்பட்ட அமைப்பு; structure of the eye.

*[கண் + அமைப்பு.]*

கருவிழி, வெள்விழி, இமை, கடைக்கண் போன்றனவற்றைக் கண்ணின் அமைப்பு என்பர்.

**கண்ணய்யன்** *kaṇṇayyaṉ,* பெ.(n.) பாட்டன், தந்தையின் தந்தை; a grandfather (சேரநா.).

**மறுவ.** கண்ணப்பச்சி

**ம.** கண்ணய்ய; **தெ.** கன்னய்ய

*[கண் = பருமை, பெருமை, அகற்சி, உயர்ச்சி. கண் + ஐயன் கண்ணையன் – கண்ணய்யன்.]*

**கண்ணய–த்தல்** *kaṇ-ṇaya-,* 3 செ.குன்றாவி.(v.t.) விரும்புதல் (திருக்கோ.109, துரை); to desire greatly.

*[கண் + நயத்தல். நயத்தல் விரும்புதல்.]*

**கண்ணயர்–தல்** *kaṇ-ṇ-ayar,* 3 செ.கு.வி.(v.i.) உறக்க நிலையை அடைதல்; to be heavy with sleep, as the eyes.

*[கண் + அயர்.]*

**கண்ணராவி** *kaṇ-ṇ-arāvi,* பெ.(n.) 1. பார்வைக்கு வெறுப்பானது; that which is unpleasant for sight. காயப்பட்ட கோலத்தைக் காணக் கண்ணரா வியாய் இருந்தது (உ.வ.). 2. துயரம்; sorrow. வாழ்ந்த குடும்பம் வறுமையில் இருப்பதைக்காணக் கண்ணராவியாய் இருக்கிறது (உ.வ.). 3. எதிர்பாராத துன்பம்; *misfortune.*

**ம.** கண்ணராவுக (வருத்தத்திற்குள்ளாதல்)

*[கண் + அராவு. அராவி = கண்ணால் பார்த்துப் பொறுக்கமாட்டாத துன்பம்.]*

**கண்ணரி[1]–த்தல்** *kaṇ-ṇ-ari-,* 4 செ.கு.வி.(v.i.) கண் இமையை அரிக்கும் நோய்; an itching eye disease.

*[கண் + அரி.]*

**கண்ணரி[2]–தல்** *kaṇ-ṇ-ari-,* 2 செ.குன்றாவி.(v.t.) நீக்குதல் ; to desist, cease, as from doing a duty. *"கடங்கண்ணரிந்த கையராகி" (பெருங். உஞ்சைக். 33, 47).*

*[கண் +அரி.]*

**கண்ணரி[3]** *kaṇṇari,* பெ.(n.) வெள்விழியில் அமைந்த செவ்வரி; streak of the eye.

*[கண் + அரி. அரி = வரி.]*

**கண்ணரிசி** *kaṇ-ṇ-ariśi,* பெ.(n.) நொய்யரிசி; broken rice.

**ம.** கண்ணரி

*[கண் + அரிசி. கண் = சிறுமை.]*

**கண்ணரிப்பு** *kaṇ-ṇ-arippu,* பெ.(n.) கண்ணில் ஏற்படும் நமைச்சல்; slight irritation of the eye.

*[கண் + அரிப்பு.]*

**கண்ணருகு–தல்** *kaṇ-ṇ-arugu-,* 9 செ.கு.வி.(v.i.) 1. கண்ணை இடுக்குதல். (சீவக.3124.உரை); to twitch the eye. 2. கண்ணுறுத்தல்; irritation of the eye.

*[கண் + அருகு. அருகு = சேர்தல், நெருங்குதல்.]*

**கண்ணருவல்** *kaṇ-ṇ-aruval,* பெ.(n.) 1. கண் கரித்தல்; the burning sensation. 2. கண் இமை கெடல்; a trophy of the eyelids. 3. ***கண்ணருகு–தல்*** பார்க்க; see kannarugu-,.

*[கண் + அருவல்.]*

**கண்ணரை** *kaṇṇarai,* பெ.(n.) 1. குறைந்த பார்வை; partial eyesight. *கண்ணரையால் பார்க்கிறான் (உ.வ.).* 2. கண் பகுதி; a part of the eyes (சா.அக.).

*[கண் + அரை.]*

**கண்ணலர்** *kaṇṇalar,* பெ.(n.) ***கண்ணீர்*** பார்க்க; see *kaṇ-ṇīr* (கோழி.கோ.286).

*[கண் + அலர்.]*

**கண்ணலை** *kaṇ-ṇ-alai,* பெ.(n.) கப்பற்குறுக்கு பாதையில் கட்டும் பாய்க்கயிறு; rope used to tie yard-arm in a vessel.

*[கண் + ஆலை = கண்ணாலை → கண்ணலை. ஆலை = சுற்றிக் கட்டும் கயிறு.]*

**கண்ணவர்** *kaṇṇavar,* பெ.(n.) அமைச்சர்; minister. adviser to the king. *"கடன் அறி காரியக் கண்ணவர்" (பரிபா.19.23).*

*[கண் + அவர் – கண்ணவர் = பற்றுக்கோடமைந்த தம் மக்களைக் கண்போல் காக்கும் அரசருக்கும் கண் போன்றவர்.]*

**கண்ணவி–தல்** *kaṇ-ṇ-avi,* 2 செ.கு.வி.(v.i.) பார்வை கெடுதல்; to lose the vision.

*[கண் + அவி.]*

**கண்ணவேணி** *kaṇṇa-vēṇi,* பெ.(n.) கிருட்டிணை ஆறு (திருவிளை. தலவி.11); a name of the river Krišnā.

*[கண்ண + வேணி. கண் = கருமை. வேள் → வேளி → வேணி = அரசி, பெண்ணரசி.]*

**கண்ணழகன் குறுகை** *kaṇ-ṇ-aḻagaṉkuṟugai,* பெ.(n.) குறுவை நெல்; a kind of paddy (சேரநா.).

ம. கண்ணழகன் குறுக.

*[கண் + அழகன் + குறுகை.]*

**கண்ணழகு** *kaṇṇaḻagu,* பெ.(n.) உடற்கூற்று அமைப்பின்படி கண்ணின் அமைப்பினால் ஏற்பட்ட அழகு; the structural beauty of the eyes as described in physiognomy (சா.அக.).

*[கண் + அழகு. கண் = திரட்சி.]*

**கண்ணழகுக்கொடி** *kaṇ-ṇ-aḻagu-k-koḍi,* பெ.(n.) கேந்திர வள்ளிக் கொடி; a creeper of the dioscorea genus.

*[கண் + அழகு + கொடி.]*

**கண்ணழல்** *kaṇ-ṇ-aḻal,* பெ.(n.) கண் எரிச்சல்; inflammation of the eye.

*[கண் + அழல்.]*

**கண்ணழற்சி** *kaṇ-ṇ-aḻaṟci,* பெ.(n.) 1. கண்ணெரிவு; burning sensation of the eyes. 2. பொறாமை (வின்.); envy.

*[கண் + அழற்சி.]*

**கண்ணழி[1]–த்தல்** *kaṇ-ṇ-aḻi-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. சொல்லுக்குச் சொல் பொருள் கூறுதல்; to dissect the words of a poem and interpret the same, word by word.

*[கண் + அழி, கண் = கட்டு, தளை.]*

**கண்ணழி[2]–த்தல்** *kaṇ-ṇ-aḻi-,* 4 செ.குன்றா.வி.(v.t.) 1. கண் பார்வையைக் கெடுத்தல்; to spoil or injure the sight. 2. கண் முழுவதும் கெடுத்துவிடுதல்; total destruction of the eye.

மறுவ. கண்ணழிவு

த. கண்ணழி

*[கண் + அழி.]*

**கண்ணழித்துரை** *kaṇ-ṇ-aḻitturai,* பெ.(n.) சொற்பொருள்; paraphase of a verse, word by word. *"கண்ணழித்துரைபற்றிச் சூத்திரத்துக்குச் சொற்பொருள் கூறும்" (சி.போ.1. சிற்.பக்.12.).*

*[கண் + அழித்து + உரை. கண் = கட்டு, சேர்ப்பு, தளை.]*

**கண்ணழிவு[1]** *kaṇ-ṇ-aḻivu,* பெ.(n.) வகையுளி செய்து சொற்பொருள் கூறுகை; interpreting a verse, word by word. *"பாடங் கண்ணழிவு தாரண மென்றிவை" (தொல். எழுத்.சிறப்புப்.உரை).*

*[கண் + அழிவு.]*

**கண்ணழிவு[2]** *kaṇ-ṇ-aḻivu,* பெ.(n.) 1. குறைவு; defect, flaw, imperfection. *"விபூதித்வயத்துக்குங் கண்ணழிவு சொல்லாநின்றீர்" (திவ்.திருமாலை, 3, வ்யா.).* 2. தாழ்ச்சி; delay. *அத் தலையாலே பெறுமிடத்தில் ஒரு கண்ணழி வின்றிக்கே யிருந்தது (ஈடு.7,6:7).*

ம. கண்ணழிவு

*[கண் + அழிவு. கண் = இடம். இடத்தாற் பெற்ற தகுதி. கண்ணழிவு = தகுதிக்குறைவு.]*

**கண்ணழுக்கு** *kaṇṇaḻukku,* பெ.(n.) கண்பீளை; rheum.

*[கண் + அழுக்கு]*

**கண்ணழுத்தங்கோல்** *kaṇ-ṇ-aḻuttaṅ-kōl,* பெ.(n.) 1. சித்திரமெழுதும் கோல்; the painter's brush, pencil. *"சோமே விருந்தொரு கோறாவெனிற் ..... கண்ணழுத்தங்கோல் கொடுத்தலும்". (சி.சி. அளவை.1.மறை).* 2. ஈரமட்பாண்டத்தைச்சுடுமுன் எழுத்து பொறிக்க உதவும் நாணற்குச்சி; a style madke of reed to inscribe letters on the clay pot before being burnt.

*[கண் + அழுத்தும் + கோல். கண் = துளை, பள்ளம்.]*

**கண்ணளத்தை** *kaṉ-ṉ-aḷattai,* பெ.(n.) கண்ணாற் காணுகின்ற தொலைவு; the distance which the eye can see.

க. கண்ணளதெ; ம. கண்ணுவெட்டத்து.

*[கண் + அளத்தை. அளவு → அளத்தை. காண் → கண்.]*

**கண்ணளவு**[1] *kaṉ-ṉ-aḷavu,* பெ.(n.) 1. கண்திட்டம்; visual estimate,an estimation of things made by mere a rough calculation.

மறுவ. கண்மதிப்பு

க. கண்ணூதெ; து. கண்ணந்தாசி.

*[கண் + அளவு (மதிப்பீடு).]*

**கண்ணளவு**[2] *kaṉ-ṉ-aḷavu,* பெ.(n.) வலைக் கண்ணின் அளவு (மீனவ.) ; sieve of the fishing net.

*[கண் + அளவு. கண் = துளை.]*

**கண்ணளவு**[3] *kaṉ-ṉ-aḷavu,* பெ.(n.) பார்ப்பதற்கு ஏற்றது, தகுதி வாய்ந்தது.; that which is proper to see.

க. கண்ணளவு

*[கண் + அளவு. காண் = கண்.]*

**கண்ணளி** *kaṉ-ṉ-aḷi,* பெ.(n.) கண்ணாற் செய்யும் அருள்; grace bestowed by the look. *"கண்ணளி காண்மின்" (கல்லா 10, 13).*

*[கண் + அளி.]*

**கண்ணறல்** *kaṉ-ṉ-aṟal,* பெ.(n.) நீங்கல்; move away.

*[கண் (இடம்) + அறல் (நீங்க)]*

**கண்ணறி-தல்** *kaṉ-ṉ-aṟi-,* 2 செ.கு.வி.(v.i.) 1. கண்ணால் பார்த்தல்; to be able to see. 2. கண்ணால் கண்ட பின் மனத்திலிருத்தல்; to recognise, understand. 3. சூழலறிதல்; to know the surroundings. 4. அறிவுடன் செயற்படுதல்; to act with wisdom (கருநா.).

ம. கண்ணறியுக; க. கண்ணறி.

*[கண் + அறிதல்.]*

**கண்ணறு**[1]**-தல்** *kaṉ-ṉ-aṟu-,* 4 செ.கு.வி.(v.i.) நீங்குதல்; to depart. *"நெடுநாணுங் கண்ணற" (கம்பரா.மிதிலைக்.45).*

*[கண் + அறு. கண் = இடம். அறு = விட்டுப் பெயர்தல்.]*

**கண்ணறு**[2]**-தல்** *kaṉ-ṉ-aṟu-,* 4 செ.கு.வி.(v.i.) 1. கண்ணோட்டமாறுதல்; to be wanting in kindness, courtesy, compassion. 2. நட்புக்குலைதல்; to cease to be friendly. *"தம்முன்னே கண்ணற்றார் கமழ் சுண்ணத்தினென்பவே". (சீவக.878).*

*[கண் + அறு. கண் = அன்பு நோக்கம், அன்புப் பார்வை]*

**கண்ணறை** *kaṉ-ṉ-aṟai,* பெ.(n.) 1. பார்வையின்மை; blindness. *"கண்ணறையன்".(தேவா.678,9).* 2. பார்வையற்றவன்; blind person. *"கணணறை மன்னன்" (பாரத.நான்காம்.41).* 3. வன் னெஞ்சு(வின்.); pitilessness, hard-heartedness. 4. துளை (யாழ்ப்); hole, crevice, chink, orifice. 5. வலை முதலியவற்றின் கண்(வின்.); mesh of a net, interstice in rattan work. 6. தேன்கூடு முதலியவற்றின் அறை (வின்.); cell in a honeycomb,in a white ant's nest. 7. அச்சுருவின் குழி (இ.வ.); cavity in a moulding, fluting, groove. 8. கண்ணின் குழி; the socket or orbit of the eye. 9. திசுக்களில் காணப்படும் துளை; the small protoplasmic holes in a tissue-cell. 10. நுரையீரலின் காற்றறை; air cell in the lungs (சா.அக.).

ம. கண்ணற

*[கண் + அறை. கண்ணறை = அகன்ற அறை பிரிக்கப்பட்ட இடம்.]*

**கண்ணறைத்தசை** *kaṉ-ṉ-aṟai-t-tašai,* பெ.(n) உடலிற் சிறு அறைகளாக அமைந்த தசை; cellular tissue. mod.

*[கண் + அறை + தசை. தடி = தசை.]*

**கண்ணறையன்** *kaṉ-ṉ-aṟaiyaṉ,* பெ.(n) 1. பார்வையில்லாதவன்; blind man. *"கண்ணறையன் கொடும் பாட னென்றுரைக்க வேண்டா" (தேவா.678,9).* 2.வன்னெஞ்சன்; hard hearted person. கண்ணறைய னென்று பலரா லிகழப்பட்டான் (உ.வ.).

ம. கண்ணறயன்

*[கண் + (அறு) அறை + அன்.]*

**கண்ணறையுருவம்** *kaṉ-ṉ-aṟaiyuruvam,* பெ.(n.) சல்லடைக்கண் போன்ற வடிவம்; a form with small apertures like those of a sieve (சா.அக.).

*[கண் + அறை + உருவம்.]*

**கண்ணன்**[1] *kaṇṇaṉ,* பெ.(n.) 1. கண்ணுடையவன்; one who has eyes. 2. பெரிய கண்ணுள்ளவன்; one

with large eyes. 3. கண்ணூறு உள்ளவன்; one with an evil-eye (சேரநா.).

ம. கண்ணன்

[கண் + அன்.]

**கண்ணன்**[2] *kaṇṇaṉ,* பெ.(n.) 1. கரியவன்; Krisna. *"கண்ணன்வரக் காணேனடி, கவலை மெத்தக் கொண்டேனடி" (தனிப்பா.)* 2. திருமால் (திவா.); Viṣṇu.

மறுவ. மால், பெருமாள், நெடியோன்.

ம. கண்ணன். **Skt.**Krishna; **Pkt., Pali.** kanha; **H.** kanhaiya.

*[கள்ளன் → கண்ணன். கள் = கருமை. கள் → கண் → கண்ணன்.]*

கண்ணன் பிறக்குமுன்பே, கிருஷ்ண என்னும் சொல் கறுப்பு என்னும் பொருளில் இருக்கு வேதத்தில் வழங்கிற்று. கிருஷ்ண பக்ஷ [கரும்பக்கம்], கிருஷ்ண ஸர்ப்ப [கரும்பாம்பு] என்னும் பெயர்களை நோக்குக. கிருஷ்ண என்னும் சொற்கு வேதமொழியில் வேரில்லை; தமிழிலேயே உள்ளது.

கள்→கரு→கருள் = 1.கருமை. 'கருள்தரு கண்டத்து ....கைகலையார். [தேவா.337.4] 2.இருள்[பிங்.] 3. குற்றம். 'கருள்தீர்வலியால்' [சேதுபு.முத்தீர்த்.] கருள்= கருஷ். ளகர மெய்யீறு வேதமொழியில் ஷகர மெய்யீறாகத் திரியும். சுள் – சுஷ் (to dry), உள்–உஷ்(to burn) 'ரு' இடைச்செருகல் ஒ.நோ. கத்[தி] –க்ருத். [பண். நா.ப.83.]

**கண்ணன்**[3] *kaṇṇaṉ,* பெ.(n.) 1. கையாந்தகரை, கரிசலாங்கண்ணி (சா.அக.); a plant growing in wet places. 2. ஒருவகைச் செய்நஞ்சு; a kind of mineral poison.

*[கள் → கண் → கண்ணன்.]*

**கண்ணன்பறவை** *kaṇṇaṉ-paṟavai,* பெ.(n) கலுழன்; a brahmin kite.

*[கண்ணன்(திருமால்) + பறவை.]*

**கண்ணன்மூலி** *kaṇṇaṉ-mūli,* பெ.(n.) துளசி; holy basil. 2. கையாந்தகரை; eclipse plant.

*[கண்ணன் + மூலி.]*

**கண்ணனூர்** *kaṇṇaṉūr,* பெ.(n.) கி.பி.13ஆம் நூற்றாண்டில் போசள அரசகுலத்தின் தலைநகர மாக இருந்ததும் இலால்குடி வட்டத்தில் சமயபுரம் அருகிலுள்ளதுமான ஊர்; capital of Hoysala dynasty during 13th century and located near Samayapuram in the Lalgudi taluk.

*[கண்ணன் + ஊர்.]*

**கண்ணா**[1]**-தல்** *kaṇṇā-,* 6 செ.கு.வி.(v.i.) 1. கருத்துவைத்தல்; to be intently bent upon, mindful. *"கருமமே கண்ணாயினார்". (நீதிநெறி.53).* 2. அருமையாதல்; to be as precious as the eye. என் கண்ணான குழந்தை (உ.வ.).

*[கண் + ஆதல்.]*

**கண்ணா**[2] *kaṇṇā,* பெ.(n.) குழந்தைகளை விளிக்கும் கெழுதகைப் பொதுச்சொல்; word of endearment, preferably when addressed to children.

*[கண்ணன் → கண்ணா.]*

**கண்ணா**[3] *kaṇṇā,* பெ.(n.) 1. திப்பிலி (மலை.); long pepper. 2. சிறுமரவகை(l.); recenned lance-leaved digitate Ivy, heptapleurum racemosum. 3. ஆலந்தைக் கொடி; lance-leaved digitate Ivy.

மறுவ. கண்ணிடம், திப்பிலி.

*[கள் → (கருமை) கண் → கண்ணா (கொ.வ.).]*

**கண்ணாஞ்சுழலை** *kaṇṇāñ-cuḻalai,* பெ.(n.) கண் சுழற்றுதல்.; rolling the eyes about. *"கண்ணாஞ் சுழலையிட்டு அதிசங்கை பண்ணுங்காட்டில்" (ஈடு.8,1,4.).*

*[கண் + ஆம் + சுழலை. 'ஆம்' – சாரியை.]*

**கண்ணாட்டி**[1] *kaṉ-ṉ-āṭṭi,* பெ.(n.) காதலி; she who is regarded with the greatest affection, woman greatly beloved, a term of endearment. lit., apple of the eye. *"கண்ணாட்டி போனவழி" (இராமநா. ஆரணி.26).*

ம. கண்ணாட்டி

*[கண் + ஆள் + தி – கண்ணாட்டி= கண்ணைப்போல் அன்புக்குரியவள்.]*

**கண்ணாட்டி**[2] *kaṇṇāṭṭi,* பெ.(n.) மார்பெலும்பு; the chest bone; thorax.

*[கண் + அட்டி → கண்ணட்டி → கண்ணாட்டி. கண் = அகற்சி மார்பு. அட்டி = எலும்பு.]*

**கண்ணாடி**[1] *kaṉ-ṉ-āḍi,* பெ.(n.) 1. உருவம் காட்டும் மெருகாக்கப்பட்ட பொன் அல்லது மாழைத்தகடு; mirror made of burnished gold or of any polished metal. 2. கண்ணாடியாலான பொருள்; glass things. *புண்ணுக்குக் கண்ணாடி எதற்கு? (பழ.)* 3. முகம் பார்க்கும் கண்ணாடி; looking glass. 4. மூக்குக் கண்ணாடி (கொ.வ.); spectacles. 5. தென்னங்கன்றின் குருத்தோலை; the shoot of a young coconut-palm (சேரநா.).

**ம.** சுண்ணாடி; **க.** கன்னடி; **து., குட.** கன்னடி, கண்ணடி; **தெ.** கன்னடி; **துட.**கொணொடி; **பட.**கண்ணாடி; **உரா.**கண்ணாடி; **Sinh.** kannadi.

*[காண் + ஆடி – காணாடி → கண்ணாடி. ஆழி → ஆடி = வட்டத்தகடு, வட்டமான கண்ணாடி.]*

**கண்ணாடி**[2] *kaṉ-ṉāḍi,* பெ.(n.) மின்மினி (பச்.மூ.); glow-worm.

*[கண் + ஆடி. கண் = பார்வை, வெளிச்சம். ஆடு – ஆடி = புறந்தள்ளல், வெளித்தோற்றம்.]*

**கண்ணாடிக்கதவு** *kaṉṉāḍi-k-kadavu,* பெ.(n.) கண்ணாடியிட்டமைத்த கதவு. (c.e.m.); glazed door.

*[கண்ணாடி + கதவு.]*

**கண்ணாடிக்கயிறு** *kaṉṉāḍi-k-kayiṟu,* பெ.(n.) கட்டுமரத்தில் பாயையும் மூங்கிலையும் இணைக்கும் கயிறு; a rope or cable which binds the sail and bamboo in catamaran (சேரநா.).

**ம.** கண்ணாடிக்கயிறு

*[கண்ணாடி + கயிறு – கண்ணாடிக்கயிறு. கண்ணாடி = வட்டம். சுற்றிக்கட்டும் கயிறு.]*

**கண்ணாடிக்கல்** *kaṉṉāḍi-k-kal,* பெ.(n.) நிலவளவையில் நடப்பட்ட கல்; survey stone (சேரநா.).

**ம.** கண்ணாடிக்கல்லு

*[கண்ணாடி + கல் – கண்ணாடிக்கல் = வட்ட முகட்டுக்கல். கண்ணாடி = வட்டம்.]*

**கண்ணாடிக்கள்ளி** *kaṉṉāḍi-k-kaḷḷi,* பெ.(n.) கள்ளிவகை. (இ.வ.); a kind of spurge.

*[கண்ணாடி + கள்ளி.]*

**கண்ணாடிக்கூத்தன்** *kaṉṉāḍi-k-kūttaṉ,* பெ.(n.) நெல்வகை (குருகூர்ப்.37); a kind of paddy.

*[கண்ணாடி + கூத்தன்.]*

**கண்ணாடிக்கெண்டை** *kaṉṉāḍi-k-keṇḍai,* பெ.(n.) பளபளத்த செவுளுடைய கெண்டை மீன்; kind of fresh water fish.

**மறுவ.** கண்ணாடி மீன்

*[கண்ணாடி + கெண்டை. கண்ணாடி பளபளப்பு.]*



கண்ணாடிக்கெண்டை

**கண்ணாடிச்சால்** *kaṉṉāḍi-c-cāl,* பெ.(n.) எதிருங் குறுக்குமாக உழும் உழவில் நடுவில் விடப்படும் திடர் (வின்.); blank spaces or balks left between the furrows, in cross ploughing.

**மறுவ.** உழவடை

*[கண்ணாடி + சால் – கண்ணாடிச்சால் = வட்டச்சால், வட்டத்திடர். கண்ணாடி = வட்டம்.]*

**கண்ணாடிச்சுவர்** *kaṉṉāḍi-c-cuvar,* பெ.(n.) அடுப்பையடுத்த சிறுசுவர் (வின்.); small wall raised to screen the oven in a room.

*[கண்ணாடி + சுவர் – கண்ணாடி= வட்டம்,வளைவு. சுவல் → சுவர்.]*

**கண்ணாடித்திடம்** *kaṉṉāḍitiḍam,* பெ.(n.) இடை, இடுப்பு; the hip and loins, hip - bone.(சேரநா.).

**ம.** கண்ணாடித்தடம்

*[கண்ணாடி + தடம். கண்ணாடி = வட்டம், வளைவு.]*

**கண்ணாடித்திண்ணை** *kaṉṉāḍi-t-tiṉṉai,* பெ.(n.) கண்ணாடி போல் தேய்த்துப் பளபளப்பூட்டிய முன்றிலில் அமைந்த சிறுதிண்ணை; a narrow verandah around the main verandah (சேரநா.).

**ம.** கண்ணாடித் திண்ண

*[கண்ணாடி + திண்ணை. கண்ணாடி = வட்டவடிவு.]*

**கண்ணாடிப்பலகை** *kaṉṉāḍi-p-palagai,* பெ.(n.) 1. பார்ப்பதற்கேற்பக் கதவிலுள்ள துளையை மூடும் சிறு பலகை; a piece of blank covering the peep-hole of a door. கண்ணாடிப்பலகையைத் திறந்து நிற்பது யாரென்று சொல் (உ.வ.). 2. வாசற்காலின் தலை முகப்பில் பொருத்தப்படும் சிறு பலகை; a plank fixed on the top face of a door frame. வீட்டுத் திறவை (சாவியை)க் கண்ணாடிப்பலகையில் வைத்து விட்டுப்போ (உ.வ.).

ம. கண்ணாடிப்பலக

*[கண்ணாடி + பலகை.]*

**கண்ணாடிப்புடைவை** *kaṉṉāḍi-p-puḍaivai,* பெ.(n.) 1. ஒருவகை மெல்லிய ஆடை (வின்.); a kind of thin sari. கண்ணாடிப்புடவை காட்டுகிறாள் அழகை யெல்லாம் (உ.வ.). 2. மெல்லிய தரமற்ற புடவை; a thin inferior kind of sari. எனக்கு இந்தக் கண்ணாடிப் புடைவையைக் கொடுக்கலாமா?(உ.வ.).

*[கண்ணாடி + புடவை. காணாடி → கண்ணாடி.]*

**கண்ணாடிப்புறம்** *kaṉṉāḍi-p-puṟam,* பெ.(n.) கால்நடைகளின் பின்பகுதி; buttock of cattle (சேரநா.).

ம. கண்ணாடிப்புறம்

*[கண்ணாடி + புறம். கண்ணாடி = வட்டம், வளைவு, சரிவு.]*

**கண்ணாடிமணி** *kaṉṉāḍi-maṇi,* பெ.(n.) வெண் கலத்தாலான மணி; a bell made of bronze.

*[கண்ணாடி + மணி.]*

வெண்கலத்தையே ஆடியாக பயன்படுத்தி வந்தமையால் இப்பெயர் வந்தது.

**கண்ணாடியிலை** *kaṉṉāḍi-y-illai,* பெ.(n.) 1. வாழை யின் ஈற்றிலை (இ.வ.); last leaf of a plantain at the time of bringing forth a stem with flowers. 2. சுந்தரி மரம் (I.); sunder-tree.

*[கண்ணாடி + இலை.]*

வாழைமரம் குலை ஈனுமுன் வெளிவரும் இலை கண்ணாடி போன்று மென்மையும் வழவழப்பும் கொண்டிருத்தலால் கண்ணாடி இலை எனப்பட்டதாம். சுந்தரிமரத்தின் இலையும் இத்தன்மை பெற்றமையால் இம் மரத்திற்கும் இலைக்கும் கண்ணாடி இலையென வழங்கப் பட்டதைக் காண்க.

**கண்ணாடியிழை** *kaṉṉāḍi-y-iḻai,* பெ.(n.) 1. மிக உயர்ந்த இழை; yarn of very fine texture (சேரநா.). 2. கண்ணாடி நுண்ணிழை; fiber glass.

ம. கண்ணாடியிழ

*[கண்ணாடி + இழை.]*

**கண்ணாடிவலை** *kaṉṉāḍivalai,* பெ.(n.) உறிகட்டு வதற்குப் பயன்படுத்தும் வலை; a net for suspending earthen vessels (துளுநா.).

து. கண்ணடிபல

*[கண்ணாடி + வலை. கண்ணாடி = வட்டம்.]*

**கண்ணாடிவளையல்** *kaṉṉāḍi-vaḷaiyal,* பெ.(n.) 1. கண்ணாடித்துண்டுகள் பதித்த வளையல்; a bracelet of lac in which small bits of a mirror are set (கருநா.) 2. கண்ணாடியாலான வளையல்; a glass bangle.

க. கண்ணாடி புளெ; து. கண்ணடிபுளெ; பட. கண்ணாடி பே.

*[கண்ணாடி + வளையல்.]*

**கண்ணாடிவிசிறி** *kaṉṉāḍi-viśiṟi,* பெ.(n.) நிலை யின்மேல் அமைக்கும் விசிறி வடிவமான கண்ணாடி யடைப்பு (c.e.m.); fan light, fan-shaped window over a door.

*[கண்ணாடி + விசிறி.]*

**கண்ணாடிவிரியன்** *kaṉṉāḍi-viriyaṉ,* பெ.(n.) விரியன் பாம்பு வகை; a kind of snake - viriyaṉ.

மறுவ. கண்ணாடிப் புடையன்

ம. கண்ணாடி விரியன், கண்ணாரம்; க. கன்னடி காவு.

*[கண்ணாடி + விரியன்.]*



கண்ணாடிவிரியன்

**கண்ணாணி**[1] *kaṉ-ṉ-āṇi,* பெ.(n.) கருவிழி; pupil of the eye. *"கண்ணாணியாகவிறே காண்பது" (ஈடு,4,7,4).*

து., க. கண்ணாலி; ம. கண்ணாணி.

*[கண் + ஆழி – கண்ணாழி – கண்ணாளி. → கண்ணாணி, ஆழி = வட்டமான விழி.]*

**கண்ணாணி**[2] *kaṉ-ṉāṇi,* பெ.(n.) எருவாய், குதம்; anus. *"விண்டுமுறை பாயுருக் கண்ணாணி யாகும்". (உடலறிவி.5.).*

*[கண் + ஆழி – கண்ணாழி → கண்ணாணி. கண் = துளை. ஆழி = வட்டம்.]*

**கண்ணாணி**[3] *kaṉ-ṉ-āṇi,* பெ.(n.) உரையாணி; touch-needle. *"கண்ணாணி யாகக் கண்டு தந்த பொன்னுக்கு" (பாடு.78,2).*

*[காண் + ஆணி – காணாணி → கண்ணாணி. கண் = கூர்மை. பொன்னின் மாற்றை உரைத்தறிய உதவும் ஆணி]*

**கண்ணாணை** *kaṉ-ṉāṇai,* பெ.(n.) இருகண்ணில் கையை ஒற்றி இடும் சூளுரை; oath taken upon one's own eyes. கண்ணாணை யாகச் சொல்கிறேன் (உ.வ.).

*[கண் + ஆணை.]*

**கண்ணாதல்** *kaṉṉādal,* பெ.(n.) கருத்தாயிருத்தல்; கருத்துவைத்தல்; to concentrate.(நீதிநெறி.23).

*[கண் + ஆதல்.]*

**கண்ணாம்பட்டை** *kaṉṉām-paṭṭai,* பெ.(n.) ***கண்ணிமை*** பார்க்க; see *kaṉṉimai* (நெல்லை.).

*[கண் + ஆம் + பட்டை. அம் – சாரியை. அம் → ஆம் (நீட்டல் திரிபு).]*

**கண்ணாம்பூச்சி**[1] *kaṉṉā-mpūcci,* பெ.(n.) மின்மினிப்பூச்சி; glow worm.

*[கண் → ஒளி, வெளிச்சம். கண் + அம் + பூச்சி (சிற்றுயிர்.)]*

**கண்ணாம்பூச்சி**[2] *kaṉṉām-pūcci,* பெ.(n.) பொய்த் தோற்றம், கண்மயக்கம்; false appearence to the eye (சா.அக.).

*[கண் + ஆம் + பூச்சி. மின்மினி ஒலி போன்ற பொய்த்தோற்றம்.]*

**கண்ணாம்பூச்சிபற–த்தல்** *kaṉṉām-pūcci-paṟa-,* 3 செ.கு.வி.(v.i.) கண்ணுக்கு மின்மினி பறப்பது போல் தோன்றுதல் (இ.வ.); to be dazzled, as the eyes from glare; to swim, as the eyes from weakness or from defective vision.

மறுவ. கண்ணாம்பூச்சியாடுதல்

*[கண் + ஆம் + பூச்சி + பற–. அம் சாரியை, அம் – ஆம் → நீட்டல் திரிபு.]*

**கண்ணாம்பூச்சியாடு–தல்** *kaṉ-ṉ-ām-pūcci-y-āḍu-,* 5 செ.கு.வி.(v.i.) ***கண்ணாம்பூச்சிபற–*** பார்க்க; see *kaṉ-ṉ-am-pūcci-paṟa-.*

*[கண் + ஆம் + பூச்சி + ஆடு.]*

**கண்ணாம்பொத்தி** *kaṉṉam-potti,* பெ.(n.) கண்ணைத் துணியால் மறைத்துக்கட்டிக் குழந்தைகள் விளையாடும் விளையாட்டுவகை; game of blindman's buff.

மறுவ. கண்ணாம்பூச்சியாட்டம்

ம. கண்ணாம்பொத்தி, கண்ணாம்பூச்சி–; க. கண்ணுமுச்சாட, கண்முச்சலெ, கண்ணாமூச்சி; தெ. கணுமூசிகந்தலு.

*[கண் + ஆம் + பொத்தி.]*

**கண்ணாமடை** *kaṉṉā-maḍai,* பெ.(n.) சுவையான உணவு; tasty food. *"இருக்கண்ணா மடைக்கு அரிசி இருநாழியும்" (S.I.I. Vol.3.Insc.2).*

*[கண்ணமுது + மடை – கண்ணாமடை]*

**கண்ணாமண்டை** *kaṉṉā-maṇḍai,* பெ.(n.) 1. கண் மேலுள்ள எலும்பு (வின்.); frontal bone. 2. கன்னப் பொட்டு; the forehead or the temple.

*[கண் + ஆம் + மண்டை.]*

**கண்ணாமிண்டை** *kaṉṉā-miṇḍai,* பெ.(n.) கண்விழி (இ.வ.); eyeball.

*[கண் + (அம்) ஆம் + இண்டை (உருண்டை).]*

**கண்ணாமூய்ச்சி** *kaṉṉā-mūycci,* பெ.(n.) ***கண்ணாம்பொத்தி*** பார்க்க(யாழ்ப்); see *kaṉṉām-potti.*

*[கண் + அம் + மூய்ச்சி. (மூய்தல்=மூடுதல்.]*

**கண்ணாய்ப்பார்-த்தல்** *kaṉṉāy-p-pār-,* 4 செ.குவி. (v.t.) 1. கருத்தூன்றிப் பார்த்தல்; to look with care. 2. நல்ல முறையில் கவனித்துக் கொள்ளுதல்; to look after with affection. கட்டிக் கொண்டு வந்தவளைக் கண்ணாய்ப் பார்த்துக் கொள் (உ.வ.).

*[கண் + ஆய் + பார்.]*

**கண்ணாயம்** *kaṉ-ṉ-āyam,* பெ.(n.) 1. சிறந்த ஆடை; fine cloth. 2. சிறிய துளை; small hole. 3. மென்மையானது; thinness (சேரநா.).

**ம.** கண்ணாயம்

*[கண் + ஆயம்.]*

**கண்ணாயிரம்** *kaṉ-ṉ-ayiram,* பெ.(n.) 1. கடவுள்; god. 2. மக்கட் பெயர்; a given name for a male.

**ம.** கண்ணாய வேந்தன்

*[கண் + ஆயிரம். கடவுள் எல்லாவற்றையும் காண்பவர் என்னும் கருத்தில் ஆயிரம் கண்ணுடைவன் என்பது உலக வழக்கு. மாரியம்மனையும் ஆயிரம் கண்ணுடையாள் என்பர்.]*

இச் சொல் இந்திரனைக் குறித்து வழங்குவது ஆரியரால் புகுத்தப்பட்ட தொல்கதையை அடிப்படையாகக் கொண்டது. ஆதலின் தமிழ் மரபன்று.

**கண்ணாயிரு-த்தல்** *kaṉṉāyiru-,* 2 செ.கு.வி.(v.i.) 1. விழிப்பாயிருத்தல்; to be watchful, vigilant, closely attentive; to look steadfastly. 2. அருமையாய் இருத்தல்; to be dear, precious. 3. உன்னிப்பாயிருத்தல்; to look keen (சா.அக.).

*[கண் + ஆய் + இருத்தல்.]*

**கண்ணார்** *kaṉṉār,* பெ.(n.) பகைவர்; enemies, foes. *"கண்ணார் மதிக்கும் கவிராச சிங்கம்." (தமிழ் நா.240).*

**ம.** கண்ணார்

*[கண்ணு +ஆ + ஆர். கண்ணார், கண்ணுதல் = சேர்தல், நெருங்குதல். கண்ணார் = சேராத பகைவர். ஆ எ.ம. இ.நி.]*

**கண்ணார்வி-த்தல்** *kaṉṉārvi-,* 4 செ.கு.வி.(v.i) கண்ணுக்கு இன்பமூட்டுதல்; to please the eyes. *"பெருங்கோயில் பலவுங் கட்டிக் கண்ணார் வித்து" (திருத்.பு.சா.73).*

*[கண் + ஆர்வி.]*

**கண்ணார** *kaṉṉāra,* வி.எ.(adv.) 1. கண்கூடாக; with (one's) own eye, directly. *"தமிழர் பெருமானைக் கண்ணாரக் காணக் கதவு" (முத்தொள்..).* 2. கண்ணால் பார்க்கக்கூடிய அளவு முழுவதுமாக; eyeful, as much as the eye can take in at once. *"கண்ணாரக் கண்டோர் கருப்பொருள் காணா மலருள்" (தாயு.பராபரக். 2).* 3. இன்புற; pleasant by.

**து., க.** கண்ணாரெ; **பட.** கண்ணார.

*[கண் + ஆர.]*

**கண்ணாரக்காண்(ணு)-தல்** *kaṉṉāra-k-kāṇ-,* 4 செ.கு.வி.(v.i.) 1. கண் கூடாகப் பார்த்தல்; to see with one's own eyes. *"தொழுவதும் சூழ்வதும் செய்தொல்லை மாலைக் கண்ணாரக் கண்டு கழிவதோர் காதலுற் றார்க்கும்" (திவ்.இயற்.திருவிரு.97.).* 2. ஆசைதீரப்பார்த்தல்; to have a full view to one's complete satisfaction. *"கண்ணாரக் கண்டோர்" (தாயு.பராபரக்.2).*

**க.** கண்ணாரெ நோடு.

*[கண் + ஆர + காண்.]*

**கண்ணால்பார்-த்தல்** *kaṉṉāl-pār-,* 4 செ.கு.வி. (v.i.) நேரடியாகப் பார்த்தல், to see (with one's own eyes). அவன் வெட்டியதை என் கண்ணால் பார்த்தேன் (உ.வ.).

*[கண்ணால் + பார்-. பொதுவாக ஐயத்தை நீக்குவதற்கு நேரில் பார்த்தேன் என்பதைக் கண்ணால் பார்த்தேன் என்பர்.]*

**கண்ணாலக்காணம்** *kaṉṉāla-k-kāṇam,* பெ.(n.) திருமணத்தின் பொருட்டுச் செலுத்தும் ஒரு பழைய வரி. (i.m.p. cd. 563); ancient tax on marriage.

*[கலியாணம் → கண்ணாலம் + காணம் (கொ.வ.).]*

**கண்ணாலம்** *kaṉṉālam,* பெ.(n.) **கலியாணம்** பார்க்க; see *kaliyāṇam.*

*[கலியாணம் → கண்ணாலம் (கொ.வ.).]*

**கண்ணாலமுருங்கை** *kaṉṉāla-muruṅgai,* பெ.(n.) **கலியாணமுருங்கை** பார்க்க; see *kaliyāṇa muruṅgai.*

*[கலியாணம் → கண்ணாலம் + முருங்கை.]*

**கண்ணாலமூடி** *kaṉṉāla-mūḍi,* பெ.(n.) கஞ்சி வடிப்பதற்குப் பயன்படும் துளைகள் உள்ள தட்டு; a plate with holes (used to filter boiled rice).

து. கண்ணரே

*[கண் + ஆலம் + மூடி. கண் = துளை.]*

ஒநோ., கண் உள்ள மூடி கண்ணாலமூடி

**கண்ணாலவாய்** *kaṉṉāla-vāy,* பெ.(n.) வாய்க்காலி லிருந்து நீர் பிரிந்து செல்லும் வழி; branch channel. "..... கண்ணாலவாய் கீழ்தலைவில்லி வாய்க்குத் தெற்கு நிலம்'' (S.I.I. Vol.19.Insc.141.S.No. 40-43).

*[கண் + ஆலம் + வாய்.]*

கண் = சிறு, சிறிது. ஆலம் = நீர். கண்ணால வாய் = நீர் சிறிதாகப் பெருக்கெடுக்கும் கால்வாய்.

**கண்ணாள்**[1] *kaṉṉaḷ,* பெ. (n.) அறிவுத்தெய்வமாகப் போற்றப்படுகிற கலைமகள் (பிங்.); Saraswati the goddess of learning, wisdom.

*[கண் + ஆள். கண் = பெருமை, சிறப்பு.]*

**கண்ணாள்**[2] *kaṉṉāḷ,* பெ.(n.) கண்ணாட்டி (யாழ்.அக.); beloved woman.

*[கண் + ஆள் + தி – கண்ணாட்டி 'ஆள்' (பெ.பா.ஈறு.).]*

**கண்ணாளர்**[1] *kaṉṉālar,* பெ.(n.) 1. கம்மாளர்; smith. 2. ஓவியர்; artist.

*[கண் + ஆளர். கண் = துளைத்தல், பொறித்தல், செதுக்கல்.]*

**கண்ணாளர்**[2] *kaṉṉāḷar,* பெ.(n.) 1. நண்பர்; friends. 2. தலைவன்; chief.

*[கண் + ஆள் + அர். கண் = உயர்வு, சிறப்பு.]*

**கண்ணாளன்** *kaṉṉāḷaṉ,* பெ.(n.) 1. கணவன்; husband. *காக்கனுக்கும் போக்கனுக்கும் பூத்தனையோ புன்னை, கண்ணாளன் வருந்தனையும் பொறுக் கலையோ புன்னை (பழ.)* 2. நாயகன்; lover, used as a term of endearment. *"மதுமலரின் கண்ணாளா" (திவ். பெரியதி 8.10.4).* 3. அன்பன்; affectionate friend. *"கண்ணாளன் கண்ணமங்கை நகராளன்" (திவ்.பெரியதி.11.6.7).* 4. மேற்பார்வை யாளன்; a supervisor.

ம. கண்ணாளன். கண்ணாளி.

*[கண் + ஆள் + அன்.]*

கணவன் மனைவியர் இருவரும் ஒருவர்க்கொருவர் கண்போற் சிறந்தவராதலின் கண்ணாளன், கண்ணாட்டி எனவுங் கூறப்படுவர்.

**கண்ணாளன்**[2] *kaṉṉāḷaṉ,* பெ.(n.) 1. ஓவியன் (யாழ்.அக.); painter, artist. 2. கம்மாளன்; smith.

*[கண் + ஆளன். கண்ணுதல் = பொறித்தல், வரைதல்.]*

**கண்ணாளி** *kaṉṉāḷi,* பெ.(n.) கண்ணாளன், அன்புக்குரியவன்; a dear one (சேரநா.).

ம. கண்ணாளி

*[கண் + ஆளி.]*

**கண்ணாற்சுடு–தல்** *kaṉṉāṟ-cuḍu-,* 18 செ.கு.வி. (v.t.) ***கண்ணேறு*** பார்க்க; see *kaṉṉēṟu.*

*[கண் + ஆல் + சுடு–.]*

**கண்ணாறு**[1] *kaṉṉāṟu,* பெ.(n.) 1. பேராற்றினின்று நீர் செல்ல வெட்டப்படும் பாசன வாய்க்கால். (பழ.தமி.110.); irrigation water-course leading to a paddy field. 2. சிற்றோடை; a stream issuing from a sluice. 3. நன்செய்ப் பிரிவு (G.tn.D.i.285); block or division of wet lands. 4. சிறுபாலம் (இ.வ.); culvert. 5. சிற்றாறு; rivulet.

ம. கண்ணாறு

*[கண் + ஆறு. கண் = சிறு.குள் →(கள்) → கண் = சிறியது.]*

**கண்ணாறு**[2] *kaṉṉāṟu,* பெ.(n.) சிறுதுளை; small hole or opening. "மகதநாட்டுச் சித்திரவறைக் கண்ணாறு போல" (நீலகேசி.272,உரை).

ம. கண்ணாயம்.

*[கண் + ஆறு. கண் = சிறிய. ஆறு = வழி, புறப்பாதை, உட்டுளை.]*

**கண்ணாறுதடி** *kaṉṉāṟu-taḍi,* பெ.(n.) வாய்க்காலை யொட்டி அமைந்த வழி; foot path adjacent to any channel. "கோட்டாறு வள்ளையறை கண்ணாறு தடி." (S.I.I.Vol.6. Part II.Insc,97,S.No.4.).

*[கண்ணாறு + தடி. தடம் → தடி (வளைந்து செல்லும் ஒற்றையடிப் பாதை).]*

**கண்ணி**[1] *kaṉṉi,* பெ.(n.) 1. தலையிற்சூடும் பூமாலை; wreath worn on the head, chaplet. *"கண்ணியுந் தாரு மெண்ணின ராண்டே" (தொல்.பொருள். 634).* 2. இவ்விரு பூவாக இடைவிட்டுத் தொடுத்த மாலை; garland having pairs of flowers with small interval. *"புன்னை மெல்லிணர்க் கண்ணி மிலைந்த மைந்தர்" (புறநா. 24:8.)* 3. போர்மறவர் சூடும்

பூமாலை; flower garland used as military badge. *"சுரும்பார் கண்ணிப் பெரும்புகன் மறவர்" (மதுரைக்.596).* 4. பூங்கொத்து; bunch of flowers. 5. அணிகலன்களின் இணைப்பு வளையம்; ring hook of a ornament.

**ம.** கண்ணி; **க.** கண்ணி, கணி (முடிச்சு); **கோத.** கய்ண். **து.** கண்ணி; **தெ.** கன்னெ; **குட.** கெணி.

*[கண் → கண்ணி. (சொ.ஆ.க).]*

பூவை நெருங்கத் தொடுத்தாக்கிய தொடையல் அல்லது மாலைக்கும், இடையிட்டுக் கட்டிய சரம் அல்லது கண்ணிக்கும் நிகழும் வேற்றுமை பெரிது. பூவின் நெருக்கம் நெருக்கமின்மை யென்பவற்றோடு அவை தொடுக்கப்படுந் தன்மையிலும் வேற்றுமை யுள்ளது. கண்ணி போன்ற முடிச்சினுட் பூவின் காம்பைச் செருகி இறுக்கி முடிப்பது கண்ணி; மாலையோ, பூவின் காம்புகளை ஒரு நாரடியோடு சேர்த்துப் பிணைத்து நெருங்கத் தொடுக்கப்படுவது.

கண்ணியென்னுஞ் சொல் 'கண்' என்னும் இடப் பொருண்மை சுட்டும் இடைச் சொல்லடி யாகப் பிறந்த பெயராகவும் எடுத்துக் கொள்ளலாம்.

"கண்ணார் கண்ணிக் கலிமான் வளவ" [புறநா.93:2.] என்னும் அடிக்கு 'கண்ணுக்கு அழகு செய்வ' தெனப் பண்டையுரையாசிரியர் தந்த பொருள் பிற்காலத்துப் புகுந்த பொருளுரையேயாம். [சில தமிழ்ச்சொல்லாராய்ச்சி. ப.3].

**கண்ணி**[2] *kaṉṉi,* பெ.(n.) 1. அரும்பு; bud. *"கண்ணி வாய்விடுங் காலையில்" (உப தேசகா.சிவ. புண்.308.)* 2. கொழுந்து; sprout, shoot, tender leaf

*[கள் (இளமை) → கண் → கண்ணி.]*

**கண்ணி**[3] *kaṉṉi,* பெ.(n.) 1. பறவை பிடிக்கும் சுருக்குக் கயிறு; snare, noose. "பறவை சிக்க .... காட்டிற் கண்ணி வைப்போர்" (தாயு.மாதரைப் பழித்தல்.2). 2. வலை, வலைக்கண்; net, mesh. *"கண்ணியுட் பட்டதோர் கலையின்" (கந்தபு. மாயைப் 317).* 3. கால் நடைகளின் கழுத்தில் கட்டும் கயிறு; noose of a rope for cattle's neck. 4. முடிச்சு; knot; tie; *"கண்ணிநுண் சிறு தாம்பினால்" (திவ்.கண்ணி நுண்.1).* 5. கயிறு; rope;

**மறுவ:** தாமணி

**தெ.** கன்னெ; **ம.,க.,து.,பட.** கண்ணி; **உரா.** கண்ணி

*[கள் (கட்டுதல்) → கண் → கண்ணி.]*

**கண்ணி**[4] *kaṉṉi,* பெ.(n.) 1. கலிவெண்பா முதலியவற்றில் இரண்டிர ண்டாய் வரும் உறுப்பு; the distichous part of Kali-veṇbā. *"மூதுலாக் கண்ணிதோறும்" (சங்கர.உலா).* 2. ஒருவகை இசைப்பாட்டு; a kind of musical lyric.

*[கள் (சேர்தல்) – கண் – கண்ணி.]*

**கண்ணி**[5] *kaṉṉi,* பெ.(n.) 1. கிளைவாய்க்கால்; branch channel. கண்ணிவாய்க்காலில் நீர் வழிந்தோடு கிறது (உ.வ.). 2. ஆற்றங்கரை; river-bank. கண்ணியை வெட்டிக் கழனி சேர்க்காதே (உ.வ.). 3. உப்பங்கழி; salt pan.

*[கள் (சேர்தல்) → கண் → கண்ணி.]*

**கண்ணி**[6] *kaṉṉi,* பெ.(n.) பக்க அடுப்பு; side oven. பாலைக் கண்ணியில் வைத்து காய்ச்சு (உ.வ.).

*[கள் → கண் → கண்ணி. கள் = சேர்தல், அடுத்திருத்தல்.]*

**கண்ணி**[7] *kaṉṉi,* பெ.(n.) 1. ***கரிசலாங்கண்ணி*** பார்க்க; (தைலவ. தைல.103); see *karišalaṅgaṇṇi.* 2. ***பொன்னாங்கண்ணி*** பார்க்க; see *poṉṉāṅgaṇṇi.* 3. அழு கண்ணி மரம்; Indian weeping water. 4. தொழுகண்ணிச் செடி; hedyssrum. 5. காடைக் கண்ணிச் செடி; Indian oats.

*[கண் + இ. கண்ணி என முடியும் செடிகளும் மரங்களும் சொற் சுருக்கத்தால் கண்ணி என்றே குறிக்கப்பட்டுள்ளன.]*

**கண்ணி**[8] *kaṉṉi,* பெ.(n.) கண்ணுள்ளவள்; having eye.

**ம.** கண்ணி

*[கண் + இ.]*

**கண்ணிக்கயிறு**[1] *kaṉṉi-k-kayiṟu,* பெ.(n.) 1. நெய் வாரது விழுதுக்கயிறு (வின்.); thread of linen wound on the two beams of a weaver's loom, which the reed moves up and down.

*[கண்ணி + கயிறு. கண்ணுதல் = நெருங்குதல், சேர்தல் (இருபெயரொட்டுப் பண்புத்தொகை.).]*

**கண்ணிக்கயிறு**[2] *kaṉṉi-k-kayiṟu,* பெ.(n.) 1. பூட்டாங்கயிறு (எங்களூர்,91.); string by which a bullock is fastened to the yoke. 2. முடிகளை யுடைய கயிறு; knotted rope.

**க.** கண்ணி

*[கண்ணி + கயிறு.]*

**கண்ணிக்கால்** *kaṇṇi-k-kāl,* பெ.(n.) கிளைவாய்க் கால்; branch channel.

**மறுவ.** கண்ணாறு

*[கண்ணி + கால்.]*

**கண்ணிக்குறடு** *kaṇṇi-k-kuṟaḍu,* பெ.(n.) சிறிய பற்றுக்குறடு; small forceps. கண்ணிக்குறட்டால் கம்பியை முறுக்கு (உ.வ.).

ம. கண்ணிக்கொறடு

*[கண்ணி + குறடு. கண் → கண்ணி = சிறிய, சிறிது.]*

**கண்ணிக்கொடி** *kaṇṇi-k-koḍi,* பெ.(n.) ***கருங்காக்கணம்*** பார்க்க (மூ.அக.); see *karuṅkākkaṇam.*

*[கண்ணி + கொடி.]*

**கண்ணிகட்டு[1]–தல்** *kaṇṇi-kaṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) அரும்புகொள்ளுதல்; to bud.

*[கண்ணி + கட்டு–.]*

**கண்ணிகட்டு[2]–தல்** *kaṇṇi-kaṭṭu,* 5 செ.குன்றாவி.(v.t.) வலைகட்டுதல்; to set a snare, a net.

*[கண்ணி + கட்டு–.]*

**கண்ணிகண்ணு–தல்** *kaṇṇi-kaṇṇu-,* 5 செ.கு.வி.(v.i.) சூடிய போர்அடையாளப் பூவிற்கேற்ப வினை செய்யக் கருதுதல்; to act according to the donned symbolic flower, in ancient Tamil mode of war. *"கண்ணி கண்ணிய வயவர் பெருமகன்" (பதிற்றுப்.58:8).*

*[கண்ணி + கண்ணு.]*

**கண்ணிகம்** *kaṇṇigam,* பெ.(n.) மணித்தக்காளி (மலை.); black night-shade.

*[கண்ணி → கண்ணிகம்.]*

**கண்ணிகுடி** *kaṇṇikuḍi,* பெ.(n.) சிறப்பான குடி; a famous clan. "கோயில் படாரற்குக் கீழிரணிய முட்டத்து கண்ணி குடிச்(சொ)லமை" (S.I.I.Vol.14. Insc. 49. SN.66).

*[கண் – கண்ணி + குடி. கண்ணி = கண்போல் சிறந்த.]*

**கண்ணிகுத்து–தல்** *kaṇṇi-kuttu-,* 10 செ.கு.வி. (v.i.) சுருக்குக்கயிறு வைத்தல்; to set a noose *"கண்ணிகுத்தி வலை தொடுத்து" (தணிகைப்பு. அகத்.439).*

*[கண்ணி + குத்து–.]*

**கண்ணிகை** *kaṇṇigai,* பெ.(n.) 1. தாமரைப் பொகுட்டு; pericarp of the lotus. 2. பூவரும்பு (யாழ்.அக.); flower bud.

**த.**கண்ணிகை **>Skt;** karnika.

*[குள் → கள் → கண் (முளை) → கண்ணிகை. 'கை' சிறுமைப் பொருள் சொல்லீறு. த. கண்ணிகை > வ. கர்ணிகா. வடமொழிச்சொல்லான கர்ணிகா தமிழில் கண்ணிகை ஆயிற்று எனக் கூறுவது பொருந்தாது. இச் சொல்லின் வேரும் ஈறும் முற்றும் தமிழாய் இருத்தல் காண்க. வடமொழியில் இச் சொல்லுக்கு வேரும் ஈறும் உய்த்துரைக்கப்படவை.]*

**கண்ணிச்சாறு** *kaṇṇi-c-cāṟu,* பெ.(n.) கண்ணிச் செடிவகைகளின் சாறு; juice of eclipse or sessile plants.

*[கண்ணி + சாறு.]*

**கண்ணிட்டுக்காணம்** *kaṉ-ṉ-iṭṭu-k-kāṇam,* பெ.(n.) பழைய வரிவகைகளி லொன்று. (S.I.I.ii.352); a kind of an ancient tax.

**மறுவ.** கண்ணோட்டுக்காணம்

*[கண் + இடு + காணம்–கண்ணிடுகாணம்→ கண்ணிட்டுக்காணம் (கிளைவாய்க்கா லமைப்பிற்காக இடப்பட்ட வரி.) கண்ணிட்டுக்காணம் (கொ.வ.).]*

**கண்ணிடிவிழு–தல்** *kaṇṇiḍi-viḻu,* செ.கு.வி.(v.i.) கண் உள்வாங்குதல்; to sink as of the eye.

*[கண் + இடிவிழு. இடிவிழுதல் =இடிந்துவிழுதல், பள்ளமாதல்.]*

**கண்ணிடுக்கு–தல்** *kaṉ-ṉ-iḍukku-,* 5 செ.கு.வி.(v.i.) தூக்கமயக்கமாயிருத்தல்; to be half asleep, to be drowsy.

*[கண் + இடுக்கு.]*

**கண்ணிடுகாணம்** *kaṉ-ṉ-iḍu-kāṇam,* பெ.(n.) காட்டுக்கொள்ளு; jungle horse-gram.

*[கண் + இடு + காணம். காணம் = கொள்(ளு). நாட்டு மருத்துவர் இதன் பொடியைக் கண்ணிலிடுவர் என்பதால் பெற்ற பெயர்.] (சா.அக.)*

**கண்ணிடு[1]–தல்** *kaṉ-ṉ-iḍu-,* 20 செ.கு.வி.(v.i.) 1. கண்ணால் பார்த்தல்; to set an eye on, to aim. 2. இரக்க உணர்வுடன் நோக்குதல்; to look upon with gracious favour. 3. கண்ணூறு தரும் வகையில் பார்த்தல்; to cast an evil eye (சேரநா.). 4. (ஒன்றை) விரும்புதல், மனம் வைத்தல்; to like. 5. விழிப்புடனிருத்தல், காவலிருத்தல்; to be cautious, to guard.

**மறுவ.** கண்வைத்தல்

**ம.** கண்ணிடுக; **க.** கண்ணிடு; **தெ.** கன்னுந்த்சு.

*[கண் + இடு–.]*

**கண்ணிடு[2]–தல்** *kaṉṉiḍuḍal-,* செ.கு.வி.(v.i.) மைதீட்டுதல்; apple collyrium. அவள் கண்ணிட்டுக் காத்திருந்தாள் (உ.வ.).

*[கண் + இடு.]*

**கண்ணிடுமருந்து** *kaṉṉiḍu-marundu,* பெ.(n.) 1. கண்ணில் துளித்துளியாக விடும் மருந்து; a fluid preparation to be dropped into the eyes, eye drops. 2. கண்ணுக்கிடும் கலிக்கம்; an ointment used as an external application to the eye-lids etc. (சா.அக.).

*[கண் + இடு + மருந்து.]*

**கண்ணிடை** *kaṉ-ṉ-iḍai,* பெ.(n.) வலைக்கண் உள்ளீடு; sieve of a net.

*[கண் + இடை.]*

**கண்ணிணை** *kaṉ-ṉ-iṉai,* பெ.(n.) 1. இருகண்கள்; both the eyes. 2. ஒருவர் கண்களோடு ஒருவர் கண்கள்; eye to eye *"கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின்" (குறள், 1100).*

**ம.** கண்ணிண; **தெ.** கனுதுவ, கன்துவ.

*[கண் + இணை.]*

**கண்ணிநடு–தல்** *kaṉṉi-naḍu-,* 20 செ.கு.வி. (v.t.) கண்ணி வைத்தல் (வின்.); to set a snare.

*[கண்ணி + நடு–.]*

**கண்ணிநார்** *kaṉṉi-nār* பெ.(n.) தென்னோலையின் அடிக்காம்பிலிருந்து விளிம்பிலிருந்து சீவியெடுக்கும் நார்; the thread like marginal fibre of the leaflet of the coconut-palm.

**ம.** கண்ணி நாரு

*[கண்ணி + நார்.]*

**கண்ணிநுண்சிறுத்தாம்பு** *kaṉṉi-nuṉ-ciṟu-t-tāmbu,* பெ.(n.) ஆழ்வார்களுள் ஒருவரான மதுரகவி யாழ்வார் அருளிச்செய்த பாடலின் தொடக்கம்; a poem commencing with this phrase sung by Madurakavialvār, one of the Vaisṇāva saints.

*[கண்ணி + நுண் + சிறுத்தாம்பு. கண்ணிநுண்சிறுத்தாம்பு எனத் தொடங்குதலால் பெற்ற பெயர்.]*

**கண்ணிப்பலகை** *kaṉṉi-p-palagai,* பெ.(n.) மீன் பிடிக்குங் கருவி; mesh-board (கட.பர.க.சொ.அக.).

*[கண்ணி + பலகை. கண்ணு = வலை.]*

**கண்ணிப்பாறை** *kaṉṉi-p-pāṟai,* பெ.(n.) ஓரடி நீளம் வளரக்கூடியதும், நீலப்பச்சை நிறமுடையதுமான குதிரைவடிவக் கடல்வாழ் மீன்; horse mackerel bluish green attaining atleast one foot in length (சா.அக.).

*[கண்ணி + பாறை (பாறைமீன்வகை.)]*



கன்னிப்பாறை

**கண்ணிமாங்காய்** *kaṉṉi-māṅgāy,* பெ.(n.) மாவடு; small and tender mangoes.

**ம.** கண்ணிமாங்ங

*[கண்ணி + மாங்காய். கண்ணி = சிறியது.]*

**கண்ணிமை[1]** *kaṉ-ṉ-imai,* பெ.(n.) 1. கண்ணிதழ்; eye lid. 2. கண்பீலி; eye lashes.

**மறுவ.** கண்ணிதம், கண்ணிரப்பை.

**ம.** கண்ணிம; **க.** கண்ணிமெ.; **பட.** கண்ணிமெ. **து.** கண்ணிம், கண்ணபாமெ.

**கண்ணிமை**[2] *kaṇṇimai* பெ.(n.) 1. ஒருமாத்திரைக் கால அளவு; measure of time which equals an eye-wink. *"கண்ணிமை நொடியென" (தொல்.எழுத்.7).*

மறுவ. இமைப்பொழுது

*[கண் + இமை.]*

கண்ணிமைப்பதற்கு ஆகும் நேரம் கண்ணிமை எனப்படும். கண்ணிமை அல்லது கைநொடிப் பொழுதினை இலக்கணிகர் மாத்திரை என்பர். ஆயின் இற்றை அறிவியலார் கண்ணிமைக்கும் நேரம், கை நொடிக்கும் நேரத்தினும் குறைவானது என்பர்.

**கண்ணிமை**[3]**—த்தல்** *kaṇ-ṇ-imai-,* 4 செ.கு.வி.(v.t.) இமைகொட்டுதல்; to wink. *"கண்ணிமைத்தலான்" (நள.சுயம்வர.153).*

தெ. கனுகீடு

*[கண் + இமை.]*

**கண்ணிமைக்கழலை** *kaṇ-ṇ-imai-k-kaḻalai,* பெ.(n.) ***கண்கட்டி*** பார்க்க. see *kaṇ-kaṭṭi.*

*[கண் + இமை +கழலை.]*

**கண்ணிமைக்கோளம்** *kaṇṇimai-k-kōḷam,* பெ.(n.) ***கண்கட்டி*** பார்க்க see *kaṇ-kaṭṭi.*

*[கண் + இமை + கோளம். கோளம் = கட்டி.]*

**கண்ணிமைதிற—த்தல்** *kaṇ-ṇ-imai-tiṟa-,* 2 செ.கு.வி. (v.i.) பரக்கவிழித்தல்; to open the eyes wide.

*[கண் + இமை + திற.]*

**கண்ணிமைதுடித்தல்** *kaṇ-ṇ-imai-tuḍi-,* 4 செ.கு.வி. (v.t.) ***கண்துடித்தல்*** பார்க்க; see *kaṇ-tuḍi-.*

**கண்ணிமைப்பசபசப்பு** *kaṇ-ṇ-imai-p-paša-pašappu,* பெ.(n.) கண்ணிமையின் அரிப்பு; itching of the eyelids.

*[கண் + இமை + பச + பசப்பு.]*

**கண்ணிமையார்** *kaṇ-ṇ-imaiyār,* பெ.(n.) கண்ணிமைக்காதவர், தேவர்; gods, who never wink their eyes. *"கண்ணிமையார் விழித்தேயிருந்தறங்கள் வெளவ" (சீவக.248).*

*[கண் + இமை + ஆ + அர் ('ஆ' எம.).]*

**கண்ணிமைவிழு—தல்** *kaṇ-ṇ-imai-viḻu-,* 2 செ.கு.வி. (v.i.) நோயினால் இமை தொங்குதல்; dangle the upper eyelid by paralysis.

*[கண்ணிமை + விழு-.]*

**கண்ணியக்கம்** *kaṇ-ṇ-iyakkam,* பெ.(n.) விழியசைவு; movement of the eye.

*[கண் + இயக்கம்.]*

**கண்ணியம்**[1] *kaṇṇiyam,* பெ.(n.) சால்புடைமை, excellence, nobility.

Skt. gaṇya

*[கண் → கண்ணியம் .]*

**கண்ணியம்**[2] *kaṇṇiyam,* பெ.(n.) மரமஞ்சள்; tree turmeric.

*[கண் → கண்ணியம்.]*

**கண்ணியல்** *kaṇṇiyal,* பெ.(n.) கண்மருத்துவத் துறை; opthalmology.

*[கண் → இயல்.]*

**கண்ணியவான்** *kaṇṇiyavāṉ,* பெ.(n.) சால்புடையோன்; excelleancy.

த. கண்ணியம் >Skt. ganya.

*[கண் → கண்ணியம் → கண்ணியவான். ஒ.நோ. புண்ணியம் → புண்ணியவான்.]*

**கண்ணிரங்கு—தல்** *kaṇ-ṇ-iraṅgu-,* 9 செ.கு.வி. (v.i.) 1. ஒலித்தல்; to sound. *"மின்னிருங் கலாபம் வீங்கி மிளிர்ந்துகண் ணிரங்க வெம்பித்" (சீவக.1985).* 2. அருள்செய்தல்; to pity; to have compassion.

*[கண் + இரங்கு.]*

**கண்ணிருட்டு—தல்** *kaṇṇruṭṭu-,* 5 செ.கு.வி.(v.t.) பார்வை மங்குதல்; to get dimness as of the eye sight.

*[கண் + இருட்டு. இருள் → இருட்டு.]*

**கண்ணிரு—த்தல்** *kaṇṇiru,* 3 செ.கு.வி.(v.i.) ***கண்வை—த்தல்***[1] பார்க்க; see *kaṇ-vaiṭ-.*

*[கண் + இரு.]*

**கண்ணில்(ற்)—த(ற)ல்** *kaṉ-nil-*, 14 செ.கு.வி.(v.i.) எதிர்நிற்றல்; to stand before one's eyes. *"கண்ணின்று கண்ணறச் சொல்லினும்" (குறள்,184).*

**எரு.** கண்ரெப்பெ; **கொர.** கன்னுப்பு.

*[கண் + நில்–.]*

**கண்ணில்படு—தல்** *kaṇṇil-paḍu*, 20 செ.கு.வி.(v.i.) 1. மற்றவர் பார்வைக்கு உள்ளாதல்; to fall under one's sight. ஒளிந்துபோக நினைத்தேன் கண்ணில் பட்டுவிட்டேன் (உ.வ.). 2. வெளியாதல்; to come to light. மறைத்து வைத்தது அவன் கண்ணில் பட்டு விட்டது. (உ.வ.).

**க.** கண்படு; **தெ.** கனுபடு; **பட.** கண்ணுகபடு.

*[கண்ணில்+ படு.]*

**கண்ணிலகு—தல்** *kaṇṇilaku-*, செ.கு.வி.(v.i.) கண் துலங்குதல்; lustire of the eye.

*[கண் + இலகு. இலங்குதல் – இலகுதல்.]*

**கண்ணிலன்** *kaṉ-ṉ-ilaṉ*, பெ.(n.) 1. பார்வை இல்லாதவன்; blind man. 2. இரக்கமில்லாதவன்; merciless man. *"கடுஞ்சொல்லன் கண்ணில னாயின்" (குறள்,566).*

மறுவ. கண்ணிலான்.

*[கண் + இலன்.]*

**கண்ணிலி[1]** *kaṉ-ṉ-ili*, 1. கண்ணில்லாதவன்; blind person. *"கண்ணிலி குமர வெம்பி" (பாரத.பதின் மூன்.91).*

**தெ.** கண்ணிதி; **க.** கண்ணிலி.

*[கண் + இலி.]*

**கண்ணிலி[2]** *kaṇṇili*, பெ.(n.) எறும்பு (யாழ்.அக.); ant.

*[கண் + (இல்லி) இலி.]*

**கண்ணிவலை** *kaṇṇi-valai*, பெ.(n.) கயிற்றால் பின்னப் பட்ட வலை; net knitted by rope (கருநா.).

**க.** கண்ணிவலெ.

*[கண்ணி + வலை. கண்ணி = கயிறு.]*

**கண்ணிவாய்க்கால்** *kaṇṇi-vāykkāl*, பெ.(n.) கிளை வாய்க்கால் (இ.வ.); branch channel.

*[கண்ணி = சிறிய கிளை. கண்ணி + வாய்க்கால்.]*

**கண்ணிவிரல்** *kaṇṇi-viral*, பெ.(n.) சிறிய விரல்; little finger.

*[கண்ணி = சிறிய. கண்ணி + விரல்.]*

**கண்ணிவெடி** *kaṇṇi-veḍi*, பெ.(n.) 1. சிறுவெடி; small crackers. 2. துளையிட்டு வைத்து வெடிக்கும் வெடி; land mine.

*[கண்ணி + வெடி.]*

கண்ணில் படாத வகையில் நிலத்தின் அல்லது நீரின் அடியில் வைக்கப்பட்டு, ஊர்தி அல்லது ஆள் அதனைக் கடக்கும்போது வெடிக்கக் கூடிய அல்லது தொலைவிலிருந்து வெடிக்கச் செய்யக் கூடிய குண்டு வகை.

**கண்ணிவெற்றிலை** *kaṇṇi-veṟṟilai*, பெ.(n.) சிறு வெற்றிலை; betel leaf of smaller size.

*[கண்ணி = சிறிய, கண்ணி + வெற்றிலை.]*

**கண்ணிறுக்கம்** *kaṉ-ṉ-iṟukkam*, பெ.(n.) நடுவிழி அல்லது கண்ணிமையின் வீக்கத்தால் கண்ணிற்கு ஏற்படும் இறுக்கம்; the pressure or the constricting force experienced due to swelling of eye-ball or eye-lids.

*[கண் + இறுக்கம்.]*

**கண்ணீட்டுக்காணம்** *kaṇṇīṭṭu-k-kāṇam*, பெ.(n.) தமிழ்வேந்தரின் அரசு துறைகளில் மேற்பார்வை அதிகாரிகளுக்குத் தரப்பட்ட காணிக்கைப்பணம்; an allowance given to the supervisors of government departments during period of Tamil kings.

*[கண் + இடு + காணம் – கண்ணிடுகாணம் → கண்ணீட்டுக்காணம். கண்ணிடுதல் = மேற்பார்வை செய்தல். இடு → ஈடு (மு.தி.தொ.பெ.). காணம் = பழங்காலப் பொற்காசு. இதனைக் கண்ணிட்டுக்காணம் என்றும் கண்ணோட்டுக்காணம் என்றும் வழங்குவது வழுவாம்.]*

**கண்ணீர்[1]** *kaṇṇīr*, பெ.(n.) விழிக்கோளத்துக்கு ஈரத் தன்மையைத் தந்து தூய்மையாக்குவதும் துன்பம், உணர்ச்சிவயப்படுதல், இருமல் போன்ற நிலைகளால் வெளிப்படுவதுமாகிய தூய உவர்நீர்; tears. *"தண்ணீர் பெறாஅத் தடுமாற் றருந்துயரங் கண்ணீர் நனைக்குங் கடுமைய காடு" (கலித்.65).*

**ம.** கண்ணீர்; **க.** கண்ணீர்; **தெ.** கன்னீரு; **து.** கண்ணநீர்; **கோண். (கோயா).** கண்டேர்; **பர்.** கன்னீர்; **கட.** கனீர்; **கோண்.** கானேர்; **கூ.** கன்ச்ர; **குவி.** கன்த்ரு; **மால்.** க்வனமு; **பிரா.** கரீங்க்; **பட.** கண்ணீரு. **உரா.** கண்ணநீரு;

Finn. kēlyb; **Hung**. konniy; **Sum**. er; **Comp., Finn.** Kōnyu.

[கண் + நீர்.]

**கண்ணீர்**[2] *kaṉṉir*, பெ.(n.) கள்ளாகிய நீர்; toddy. *"கண்ணீர் கொண்டு காலுற நடுங்கல்" (சிலப். 13:188).*

[கள் + நீர். ஒ.நோ. தெள் + நீர் – தெண்ணீர்.]

**கண்ணீர்க்குடை** *kaṉṉir-k-kuḍai* பெ.(n.) மூக்கிரட்டை (வித்.அக.); spreading hogweed.

மறுவ. கண்ணீர் நடுக்குறை

[கண்ணீர் + குடை.]

**கண்ணீர்கலங்கு–தல்** *kaṉṉir-kalaṅgu-*, செ.கு.வி. (v.i.) ***கண்கலங்குதல்*** பார்க்க; see *kaṉ-kalaṅgu.*

[கண்ணீர் + கலங்கு–.]

**கண்ணீர்ச்சுரப்பி** *kaṉṉir curappi*, பெ.(n.) கண்ணீரைச் சுரக்கும் உறுப்பு; a gland which secretes tears.

மறுவ. கண்ணீர்க்கோளம்.

[கண்ணீர் + சுரப்பி.]

**கண்ணீர் சொரி–தல்** *kaṉṉir-cori-*, 2 செ.கு.வி.(v.i.) அழுதல்; to shed tears. துக்கம் தாளாமல் கண்ணீர் சொரிந்தான் (உ.வ.).

பட. கண்ணீர்சோரு

[கண்ணீர் + சொரி–.]

**கண்ணீர்த்தாரை** *kaṉṉir-t-tārai*, பெ.(n.) ***கண்மழை*** பார்க்க; see *kaṉ-maḻai.*

[கண்ணீர் + தாரை.]

**கண்ணீர் துடை–த்தல்** *kaṉṉir-tuḍai-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. கண்ணீரை நீக்குதல்; to wipe the tears. அழுகின்ற குழந்தையின் கண்ணீரைத் துடை (உ.வ.). 2. ஆறுதல் கூறுதல்; to console. மக்களின் கண்ணீரைத் துடைக்க அரசு ஆவன செய்யும் (உ.வ.).

து. கண்ணீர் நச்சுநி; பட. கண்ணீரதொடெ.

[கண்ணீர் + துடை–.]

**கண்ணீர்ப்புகை** *kaṉṉir-p-pugai*, பெ.(n.) கண்ணீரை வரவழைக்கும் ஒருவகைப் புகை; tear gas.

ம. கண்ணீர்வாதகம்

[கண்ணீர் + புகை.]

பிற புகைகளைக் காட்டிலும் மிகுதியாகக் கண்ணீர் வரவழைக்கும் வல்லமை நோக்கிக் கண்ணீர்ப்புகை எனப்பட்டது.

**கண்ணீர்முட்டல்** *kaṉṉir-muṭṭal*, பெ.(n.) கண்ணீர் வழியச் செய்யும் ஒருவகை நோய்; an eye disease caused by increased fluid-pressure within the eye-ball, glaucoma.

[கண் + நீர் + முட்டல்.]

**கண்ணீர்மை** *kaṉṉirmai*, பெ.(n.) கண்ணின் இயல்பு; nature of the eye.

[கண் + நீர்மை.]

**கண்ணீர்விடு–தல்** *kaṉṉir-viḍu-*, 20 செ.கு.வி.(v.i.) 1. கண்ணீர் சிந்துதல்; shed tears. 2. துன்பப்படுதல்; to grieve, feel sad.

க. கண்ணீரிடு; பட. கண்ணீராக்கு; து. கண்ணீர் ஒப்புநி.

[கண்ணீர் + விடு–.]

**கண்ணீரம்** *kaṉṉiram* பெ.(n.) கண்ணிற்கு இடும் மை; collyrium for the eyes (சா.அக.).

[கண் + ஈரம்.]

**கண்ணீரருகல்** *kaṉṉir-arugal*, பெ.(n.) தொடர்ந்து கண்ணீர் வழியச் செய்யும் ஒருவகை நோய்; an eye disease which causes to shed tears continously.

மறுவ.: கண்ணீரொழுக்கு

**கண்ணீராக்கி** *kaṉṉir-ākki*, பெ.(n.) பச்சைக் கருப்பூரம் (வின்.); crude camphor.

[கண்ணீர் + ஆக்கி.]

**கண்ணீரும் கம்பலையுமாய்** *kaṉṉirum-kambalai-yumāy*, வி.எ.(adv.) பெருந்துன்பத்தில் கண்ணீருடன் புலம்பலும் சேர்ந்தது; tearful, grief stricken. கணவனை இழந்தவள் கண்ணீரும் கம்பலையுமாய் இருந்தாள்(உ.வ.).

[கண்ணீர் + உம் + கம்பலை + உம் + ஆய். 'உம்' எண்ணும்மை.]

**கண்ணு¹–தல்** *kaṉṉu-*, 12 செ.குன்றாவி.(v.t.) 1. கருதுதல்; to propose, think, consider. *"கண்ணிய துணர்

தலும்" (மணி. 2:25). 2. பொருந்துதல்; to be attached to, fastened to. "புடைகண்ணிய வொளிராழியின்" (இரகு.யாக.17).

[குள் → கள் → கண் = சேர்தல், சேர்த்தல், செய்தல். கள் → கண் – கண்ணு –. (செல்வி.78சிலை.244.) கண்ணுதல் = செய்தல். செய்தல் வினை கருதும் வினைக்குப் பொருள் தாவியது.]

**கண்ணு²–தல்** *kaṇṇu-,* 2 செ.குன்றாவி. (v.t.) பார்த்தல்; to see (நாமதீப.).

[குள் → கள் → கண் → கண்ணு = சேர்தல், சேர்த்தல். செய்தல். செய்தல் வினை நினைத்தல் வினைக்கும், நினைத்தல் வினை பார்த்தல் வினைக்கும் பொருள் தாவின.]

**கண்ணுக்கணிமூலி** *kaṇṇu-k-kaṇimūli,* பெ.(n.) பொன்னாங்கண்ணி; an edible plant (சா.அக.).

[கண்ணுக்கு + அணி + மூலி (மூலம்.)]

**கண்ணுக்கினியான்** *kaṇṇukkiṉiyāṉ,* பெ.(n.) 1. பொன்னாங்கண்ணி; an ediple plant growing in wet place. 2. கையாந்தகரை; a plant growing in wet places.

[கண்ணுக்கு + இனியான்.]

இவ்வகைக் கீரைகள் உண்பதால் கண்ணுக்கு நலன் பயக்கும் என்னும் மருத்துவக் கருத்தின் அடிப்படையில் இவ்வாறு அழைக்கப்பட்டிருக்கலாம்.

**கண்ணுக்குக்கணணா–தல்** *kaṇṇukku-k-kaṇṇa-,* 6 செ.கு.வி.(v.i.) மிகவும் போற்றுதல்; to be very dear, precious, as the eye. அவளைக் கண்ணுக்குக் கண்ணாய்க் காப்பாற்ற வேண்டும் (உ.வ.).

[கண்ணுக்கு + கண்ணா–.]

**கண்ணுக்குத்தை–த்தல்** *kaṇṇukku-t-tai-,* 4 செ.கு.வி.(v.i.) கண்கவரப்படுதல் (வின்.); to attract the eyes

[கண்ணுக்கு + தை–.]

**கண்ணுக்குப்படு–தல்** *kaṇṇukku-p-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) பார்வையில் படுதல்; to come to view, to happen to see.

**து.** கண்ணக் பூருநி; **பட.** கண்ணுக படு.

[கண்ணுக்கு + படு.]

**கண்ணுக்குறங்கு–தல்** *kaṇṇukkuṟangu-,* 5 செ.கு.வி. (v.i.) விழிப்புநிலை உறக்கம், அறிவு அல்லது உணர்ச்சி குன்றாது தூங்கும் தூக்கம், அறிதுயல்; a semi-conscious sleep. குழந்தை கண்ணுக்குறங்கிறது (நெல்லை.).

[கண்ணுக்கு + உறங்கு..]

கண்ணை நோக்கினால் உறங்குவது போன்ற தோற்றம் தரும் அறிதுயில் நிலை கண்ணுக்குறக்கம் என வழங்கலாயிற்று.

**கண்ணுக்கேற்றாள்** *kaṇṇu-k-kēṟṟāḷ,* பெ.(n.) கொடி நெல்லி; gooseberry creeper (சா.அக.).

[கண்ணுக்கு + ஏற்றாள்.]

**கண்ணுங்கருத்துமாய்** *kaṇṇuṅ-karuttumāy,* (வி.எ.) (adv.) சிதறவிடாமல் கருத்தூன்றிப் பேணுதல்; with full attention, concentration. அகரமுதலிப் பணியைக் கண்ணுங்கருத்துமாய்ச் செய்ய வேண்டும் (உ.வ.).

[கண்ணும் + கருத்துமாய்.]

**கண்ணுடை–தல்** *kaṇṇuḍai-,* 2 செ.கு.வி.(v.i.) முளைக் குருத்து, தவசம் போன்றவற்றின் முளைப் பகுதி வெளி வருதல்; to germinate as of grain.

[கண் + உடை.]

**கண்ணுடைமூலி** *kaṇṇuḍai-mūli,* பெ.(n.) வெப்ப நிலத்தில் வளரும் செடி; a plant that grows only in hot and dry places.

[கண்ணுடை + மூலி.]

**கண்ணுடையம்மை பள்ளு** *kaṇṇuḍai-y-ammai-paḷḷu,* பெ.(n.) 18ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த முத்துக் குட்டிப் புலவரால் இயற்றப்பட்ட சிற்றிலக்கியம்; a Pallu literature of 18th century by MuthuKutty Pulavar.

[கண்ணுடை + அம்மை + பள்ளு.]

**கண்ணுடையவள்ளலார்** *kaṇṇuḍaiya-vaḷḷalār,* பெ.(n.) ஒழிவிலொடுக்க நூலாசிரியர்; name of the author of oḻivil-oḍukkam, a šaivite philosophical work of the 15th cir.

[கண் + உடைய + வள்ளலார்.]

**கண்ணுதல்** *kaṉṉudal,* பெ.(n.) 1. நெற்றிக்கண்; forehead having an eye. *"கண்ணுத லுடையதோர் களிற்று மாமுகப் பண்ணவன்" (கந்தபு.கடவுள்.8)* 2. சிவன்; šiva, who has an eye in his forehead. *"எம்மண்ணல் கண்ணுதல் பாத நண்ணி" (திருவாச.35:1).*

*[கண் + நுதல். நுதல் = நெற்றி. நுதற்கண் என்பது கண்ணுதல் என முன் பின்னாக மாறியது – இலக்கணப்போலி.]*

**கண்ணுதலான்** *kaṉṉutalāṉ,* பெ.(n.) 1. நெற்றிக் கண்ணுடைய சிவன்; God šiva (சா.அக.).

*[கண் + நுதல் + ஆன்.]*

**கண்ணுதன்மலை** *kaṉṉudan-malai,* பெ.(n.) கைலாயமலை (பிங்.); mount Kailasa, the abode of šiva.

*[கண் + நுதல் + மலை.]*

**கண்ணுந்தல்** *kaṉṉundal,* பெ.(n.) 1. விழிக்கோளம் வெளித்தள்ளுதலாகிய பிணி; protrusion of the eye.

*[கண் + உந்தல்.]*

**கண்ணுமை** *kaṉṉumai,* பெ.(n.) காட்சி; vision, sight. *"கட்டமை யொழுக்கத்துக் கண்ணுமை யானும்" (தொல்.பொருள்.76).*

*[கண் → கண்ணுமை:கண்ணியது, கண்டது.]*

**கண்ணுயிர்–த்தல்** *kaṉ-ṉ-uyir,* 3 செ.கு.வி.(v.i.) உறங்கி எழுதல்; to wake-up.

*[கண் + உயிர்.]*

**கண்ணுரி–த்தல்** *kaṉ-ṉuri-,* 4 செ.குன்றாவி.(v.t.) கண்புரை நீக்குதல்; to remove cataract.

*[கண் + உரி.]*

**கண்ணுரு** *kaṉ-ṉ-uru,* பெ.(n.) கண்ணின் உருவம்; structure of the eye.

*[கண் + உரு.]*

**கண்ணுருளு–தல்** *kaṉ-ṉ-uruḷu-,* 7 செ.கு.வி.(v.i.) 1. அச்ச மூட்டுதல்; to frightenen, threat. கண்ணுருட்டலைப் பார்த்துக் குழந்தை கதறி அழுதது (உ.வ.). 2. கண்ணை உருளச் செய்தல்; to roll the eye. கண்ணிலிட்ட மருந்து பரவுவதற்காகக் கண்ணுருளச்செய் (உ.வ.).

ம. கண்ணுருட்டு

*[கண் + உருளு-.]*

**கண்ணுலைமூடி** *kaṉ-ṉ-ulai-mūḍi,* பெ.(n.) வடிதட்டு (சிப்பல்) (வின்.); rice-strainer; colander.

மறுவ. கண்ணாலமூடி (கொ.வ.)

*[கண் + உலை + மூடி. கண் = துளை.]*

**கண்ணுவம்** *kaṉṉuvam,* பெ.(n.) நுண்கலைத் தொழில் (வின்.); artisanship.

*[கண் → கண்ணு → கண்ணுவம்.]*

**கண்ணுவலிப்பூ** *kaṉṉu-vali-p-pū,* பெ.(n.) கலப்பைக் கிழங்குக் கொடியின் பூ; ňovember flower plant.

மறுவ: காந்தட்பூ

*[கண் + வலி + பூ.]*

கண்ணோயால் கண் சிவந்து காணப்படுவது போல் இதன் பூ மிகச் சிவந்திருப்பதால் இப் பெயர் பெற்றது.

**கண்ணுழற்சி** *kaṉ-ṉ-uḻaṟci,* பெ.(n.) ***கண்சுழற்சி*** பார்க்க (சா.அக.); see *kancuḻaṟci.*

*[கண் + உழற்சி.]*

**கண்ணுள்**[1] *kaṉṉuḷ,* பெ.(n.) 1. நுட்பத்தொழில்; skilled labour. 2. தொழில்திறன்; workmanship. 3. கூத்து (திவா.); acting. dance. 4. அரும்புத்தொழில்; fine, delicate workmanship in jewellery. *"பலவுறு கண்ணுட் சிலகோ லவிர்தொடி" (கலித்.85;7).*

*[கள் → கண் + உள் – கண்ணுள். உள் – தொ.பெ.ஈறு. ஒ.நோ. இயவுள், கழுவுள்.]*

கள் = கூடுதல், சேர்தல், சேர்த்தல், செய்தல். கூர்ந்து செய்யும் நுட்பத்தொழில் ஒன்றைச் செய்யுமுன் மனக்கண்ணால் வடிவமைத்துச் செய்யப்புகுதலின் கண்ணுதல் என்னும் வினை சிறப்பாகச் சிற்பம், ஓவியம், கூத்து போன்ற நுண்கலைத் தொழில்களையே குறிக்கும். கண்ணுள் = மனக்கண்ணால் கருதி மதிப்பிட்டுச் செய்யும் பணி.

**கண்ணுள்**[2] *kaṉṉuḷ,* பெ.(n.) கண்ணின் உட்பக்கத் தசை; inner skin of the eye (சா.அக.).

*[கண் + உள் – கண்ணுள்.]*

**கண்ணுள்வினைஞன்** *kaṇṇuḷ-viṉaiñaṉ,* பெ.(n.) 1. ஓவியன்; painter, artist. *"கண்ணுள் வினைஞரும் மண்ணீட் டாளரும்" (சிலப்.5:30.).* 2. கம்மாளன். (சூடா.); artisan.

*[கண்ணுள் + வினைஞன். கண்ணுள் = மனக்கண்ணால் வடிவமைத்துப் புதிதாக ஒன்றைச் செய்யுந் தொழில்.]*

**கண்ணுள்** பார்க்க; see *kaṇṇuḷ.*

**கண்ணுளர்** *kaṇṇuḷar,* பெ.(n.) கூத்தர்; bards. *"கலம்பெறு கண்ணுள ரொக்கல் தலைவ" (மலைபடு.50).*

*[கண்ணுள் + அர் – கண்ணுளர். **கண்ணுள்** பார்க்க; see kaṇṇuḷ.]*

**கண்ணுளன்**[1] *kaṇṇuḷaṉ,* பெ.(n.) கூத்தன்; dancer.

*[கள் → கண் = கூடுதல், சேர்தல். கண்ணுதல் = கூர்ந்து செய்தல். கள் → கண் + உள் (தொ.பெ.ஈறு.) + அன் (ஆ.பா.ஈறு.) கண்ணுளன் = புதிதாக ஒன்றைப் படைக்கும் அல்லது திறம்படச் செய்யும் தொழில் திறமையுள்ளவன். கூர்ந்து செய்யும் நுட்பத்தொழிலன்.]*

**கண்ணுளன்**[2] *kaṇṇuḷaṉ,* பெ(n.) கம்மியன், கண்ணுள் வினைஞன்; smith.

*[கண் → கண்ணுள், கண்ணுதல் = செய்தல். கண்ணுள் + அன் – கண்ணுளன்.]*

**கண்ணுளாளன்** *kaṇṇuḷ-āḷaṉ,* பெ.(n.) 1. கூத்தன்; actor, dancer, masquerader.

*[கண்ணுள் + ஆளன். கண்ணுளாளன் = கூர்ந்து செய்யும் நுட்பத் தொழிலன்.]*

**கண்ணுளைவு** *kaṉ-ṇ-uḷaivu,* பெ.(n.) கண்ணழற்சி; inflammation of the eye.

*[கண் + உளைவு.]*

**கண்ணுறக்கம்** *kaṉ-ṇ-uṟakkam,* பெ.(n.) துயில் (சூடா.12:10); dozing, slumber, sleep.

*[கண் + உறக்கம்.]*

**கண்ணுறங்கு–தல்** *kaṉ-ṇ-uṟaṅgu-,* 5 செ.கு.வி.(v.i.) கண்மூடித் தூங்குதல்; go to sleep.

*[கண் + உறங்கு.]*

**கண்ணுறு–த்தல்** *kaṇṇuṟu-,* 4 செ.கு.வி.(v.i.) கண்ணுருட்டல்; to roll the eyes.

*[கண் + உறு–.]*

**கண்ணுறு–தல்** *kaṉ-ṇ-uṟu-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. பார்த்தல்; to see, view, look at. *"கற்கனியக் கனி கின்ற துயரானைக் கண்ணுற்றான்" (கம்பரா.குகப்.29).* 2. எதிர்ப்படுதல்; to meet, to come upon by chance. *"கொய்ம்மலர்த் தாரினானைக் கண்ணுறு" (சீவக. 1214).* 3. கிட்டுதல்; to approach, reach. *"வெட்சி யாரைக் கண்ணுற்று" (பு.வெ.2:4,கொளு).*

*[கண் + உறு.]*

**கண்ணுறு**[2]**–தல்** *kaṉ-ṇ-uṟu-,* 4 செ.கு.வி.(v.i.) இயலுதல்; to be possible. *"ஒரு கருத்தனின்றி யவை கண்ணுறா" (பிரபோத.39:221).*

*[கண் + உறு–.]*

***பெயருடன் துணைவினை இணைந்து கூட்டுவினை உருவாகியுள்ளது.***

**கண்ணுறுத்து–தல்** *kaṉ-ṇ-uṟuttu-,* 10 செ.கு.வி.(v.i.) 1. கண்ணோதல்; to smart, as the eyes. 2. பொறாமை உண்டாதல்; to be envious.

**மறுவ.** கண்ணையுறுத்துதல்

*[கண் + உறுத்து–.]*

**நோயாலும், தூசு முதலியன கண்ணில் படுவதாலும் ஏற்படும் உறுத்தல் வேறு; பொருளின் கவர்ச்சியாலுண் டான பொறாமையால் ஏற்படும் உறுத்தல் வேறு.**

**கண்ணுறை**[1] *kaṉ-ṇ-uṟai,* பெ.(n.) மேலிடுவது, மேலீடு; that which is placed over.

*[கண் + உறை. கண் = இடம். உறை = ஓரிடத்திற் பொருந்தியது, இட்டது, இடுவது.*

*ஒ.நோ. கையுறை (காணிக்கை), வாயுறை (உணவு, மருந்து), செவியுறை (காதுமருந்து, அறிவுரை) (வேர்.கட்.41).]*

**கண்ணுறை**[2] *kaṉ-ṇ-uṟai,* பெ.(n.) 1. கறி; curry; relish. *"வெண்சோற்றுக் கண்ணுறை யாக" (புறநா.61;5).* 2. உசிலை (மசாலை); curry-stuff. *"அடகின் கண்ணுறை யாக" (புறநா.140:4).*

*[கண் + உறை. கண் = இடம். உறை = இடத்தக்கது.]*

**கண்ணுறை**[3] *kaṉ-ṇ-uṟai,* பெ.(n.) 1. கண்ணாற் கண்டஞ்சும் அச்சம்; fear at the mere sight of a thing; fright. *"மத்திகைக் கண்ணுறை யாக" (கலித்.96:12).* 2. கண்ணோய் தீர்க்கும் மருந்து; a medicine effective in treating eye disease (சா.அக.).

**ம.** கண்ணுருட்டு

*[கண் + உறை. உறை = 1. உறுத்தல், துயர். 2. இடத்தக்க மருந்து.]*

**கண்ணூடு** *kaṉ-ṉ-ūḍu,* பெ.(n.) கூர்ந்து நோக்குதல்; attention. *"மட்டை முதலான சாமான்களைக் கண்ணூடாய்ப் பார்த்திருந்து" (மதி.க.11.189).*

**க.** கண்ணூறு

*[கண் + ஊடு.]*

**கண்ணூமை** *kaṉ-ṉ-ūmai,* பெ.(n.) கண்ணில் யாதொரு குற்றமும் காணப்படாமலே ஏற்படும் குருட்டுத் தன்மை; the loss of vision or blindness without apparent lesion of the eye (சா.அக.).

*[கண் + ஊமை.]*

**கண்ணூர்–தல்** *kaṉṉūr-,* செ.கு.வி.(v.i.) ***கண்ணிடு தல்*** பார்க்க; see *kaṉṉiḍu-* (கருநா.)

**க.** கண்ணூறு.

*[கண் + ஊர்.]*

**கண்ணூல்** *kaṉṉūl,* பெ.(n.) 1. கண்நோய்களைப் பற்றிக் கூறும் நூல்; the science which treats of diseases of the eyes. 2. அகத்தியர் செய்த கண் நெறி (நயனவிதி.); an ophthalmic science compiled by Agastya siddha (சா.அக.).

*[கண் + நூல்.]*

**கண்ணூறு**[1] *kaṉ-ṉ-ūṟu,* பெ.(n.) கண்நோய்; sore eyes, opthalmia.

**க.** கண்ணூறு, கண்ணேறு

*[கண் + ஊறு.]*

**கண்ணூறு**[2] *kaṉ-ṉ-ūṟu,* பெ.(n.) தீய பார்வையால் கேடுநேர்தல்; evil eye, blight of the eyes causing sickness or misfortune. *"அந்திநின்று கண்ணூ றழித்தா ளணிநீ றளித்தே" (தணிகைப்பு. களவு.329).*

**ம., க.** கண்ணேறு

*[கண் + ஊறு. ஊறு = தீங்கு.]*

**கண்ணூறுகழி–த்தல்** *kaṉṉūṟukaḻi-,* 4 செ.குன்றாவி. (v.t.) கண்ணூறு கழியச் செய்யப்படும் சடங்கு; to perform certain rituals toward of evil eye. இவனுக்குக் கண்ணூறு கழித்தால் நோய் தீரக்கூடும் (உ.வ.).

**மறுவ.** கண்ணேறு கழித்தல்

*[கண்ணூறு + கழி–.]*

**கண்ணெச்சில்** *kaṉ-ṉ-eccil,* பெ.(n.) ***கண்ணூறு*** பார்க்க; see *kaṉ-ṉ-ūṟu கண்ணெச்சிற் படாமைக்குக் கரிபூசுகிறார் (ஈடு,5:1,2.).*

**க.** கண்ணெஞ்சல், கண்ணெஞ்சலு.

*[கண் + எச்சில்.]*

**கண்ணெடுத்துப்பார்–த்தல்** *kaṉ-ṉ-eḍuttu-p-pār-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. கவனித்துப் பார்த்தல்; to lift up one's eyes and see; to look intently at a thing. 2. அருள்செய்தல்; to look with favour, as a superior.

**க.** கண்ணெத்து.

*[கண் + எடுத்து + பார்.]*

**கண்ணெடுப்பு** *kaṉ-ṉ-eḍuppu,* பெ.(n.) கடைக் கண்ணில் உண்டாகும் வீக்கம். (சீவரட்.269.); swelling at the corner of the eye.

**க.** கண்ணொத்து

*[கண் + எடுப்பு.]*

**கண்ணெரி**[1]**–த்தல்** *kaṉ-ṉ-eri,* 4 செ.கு.வி.(v.i.) (நோயினால்) கண்குவளையை நெரிப்பது போல உணருதல்; to affect (disease) the socket of the eye, attended with pain.

*[கண் + நெரி.]*

**கண்ணெரி**[2]**–த்தல்** *kaṉṉeri,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. கண்ணெரியச் செய்தல்; to cause or induce burn-

ing sensation in the eyes. 2. கண்ணில் வளரும் கெட்ட தசையைக் காரப்பொருள் கொண்டு கரைத்தல்; to remove the morbid tissue in the eye by applying corossive medicine.

*[கண் + எரி.]*

**கண்ணெரி³-தல்** *kaṉ-ṉ-eri-,* 2 செ.கு.வி.(v.i.) கண்ணில் எரிச்சல் உண்டாதல் ; to have burning sensation in the eyes (சா.அக.).

**க.** கண்ணுரி; **து.** கண்ணுஅர்லுநி.

*[க்ண் + எரி.]*

**கண்ணெரிச்சல்** *kaṉ-ṉ-ericcal,* பெ.(n.) கண்ணில் உண்டாகும் கரித்தல் உணர்வு; burning sensation of the eye. தூக்கமின்மையால் கண்ணெரிச்சலாக இருக்கிறது (உ.வ.).

*[கண் + எரிச்சல்.]*

**கண்ணெழுத்தாளன்** *kaṉ-ṉ-erḷuttāḷan,* பெ.(n.) வேந்தனது திருமுகங்களை வரைவோன் (சிலப்.26,170.); writer of letters for the king.

*[கண் + எழுத்தாளன். கண் = துளை, பள்ளம் கீறல். **கண்ணெழுத்து** பார்க்க; see kaṉ-ṉ-eḷuttu.]*

**கண்ணெழுத்தாளர்** *kaṉ-ṉ-eḷuttāḷar,* பெ(n.) 1. உருவங்களை அல்லது எழுத்துகளை எழுதும் பரப்பில் கீறியும் செதுக்கியும் பொறிக்கும் எழுத்துப் பணியாளர்; the scribe who uses to write by engraving. 2. திருமந்திர ஓலை எழுதுவோர்; writer of letters for king. *"கண்ணெழுத்தாளர் காவல் வேந்தன்" (சிலப்.26:170).*

*[கண்ணெழுத்து + ஆளர்.]*

**கண்ணெழுத்து** *kaṉ-ṉ-eḷuttu,* பெ.(n.) 1. எழுதும் பரப்பில் பள்ளம் விழுமாறு கீறியோ செதுக்கியோ எழுதும் பழங்கால எழுத்துமுறை; method of writing on palm leaf or on any hard surface by making scratches or deepening with chisel. *"கண்ணெழுத் துப் படுத்தன கைபுனை சகடமும்" (சிலப். 26:136).*

*[கண் = துளை, பள்ளம். கண் + எழுத்து.]*

தாள், துணி போன்றவற்றில் மையால் எழுதிய எழுத்து கோலெழுத்து, ஓலைச்சுவடியில் எழுதிய எழுத்து கண்ணெழுத்து, எனப்பட்டது.

**கண்ணெழுது-தல்** *kaṉ-ṉ-eḷudu-,* 5 செ.கு.வி.(v.i.) கண்ணுக்குமை எழுதுதல்; to anoint the eye with collyrium.

*[கண் + எழுது.]*

**கண்ணெறி¹** *kaṉ-ṉ-eṟi,* பெ.(n.) 1. ***கண்ணூறு*** பார்க்க; see *kaṉ-ṉ-ūṟu.* *"கல்லெறிக்குத் தப்பினாலும் கண்ணெறிக்குத் தப்பமுடியாது"(பழ).* 2.தோற் கருவிகளை இசைக்கை; skilful playing on the drum. *"தண்ணுமைக் கருவிக் கண்ணெறி தெரிவோர்." (மணிமே.19:82).* 3.கண்ணில் வெள்விழியில் தோன்றும் புண்; corneal ulcer.

*[கண் + எறி. எறி = தாக்கு, நோய், புண்.]*

**கண்ணெறி²-தல்** *kaṉ-ṉ-eṟi-,* 2 செ.கு.வி.(v.i.) கடைக் கண்ணாற் பார்த்தல்; to glance out of the corner of the eye. 2. விரும்புதல்; to like.

**ம.** கண்ணிடுக; **பட.,க.** கண்ணிடு; **தெ.** கன்னுந்த்ன்சு.

*[கண் + எறி.]*

**கண்ணே** *kaṇṇē,* பெ.(n.) அன்பின் விளிச்சொல்; a word of endearment.

**து.** கண்ணோசி, கண்ணுமெ.

*[கண் + ஏ – கண்ணே. ஏ–விளியிடைச்சொல்.]*

**கண்ணேணி** *kaṉ-ṉ-ēṇi,* பெ.(n.) கணுக்களிலே அடிவைத்து ஏறிச்செல்லும்படி யமைத்துள்ள மூங்கில் ஏணி (புறநா.105.உரை.); a single bamboo pole used as a ladder.

*[கண் + ஏணி. கண் = மூங்கிற்கணு.]*

**கண்ணேறு¹** *kaṉ-ṉ-ēṟu,* பெ.(n.) ***கண்ணூறு*** பார்க்க; see *kaṉ-ṉ-ūṟu* *"கண்ணேறெலா மின்றறத் துடைப்பாம்" (அரிசமய.பதுமை.140).*

*[கண்ணூறு → கண்ணேறு (கொ.வ.).]*

**கண்ணேறு**[2] *kaṉ-ṉ-ēṟu,* பெ.(n.) 1. கண்ணூறு படத்தக்க அழகு; beauty that evokes the evil eye. *"வெண்ணீ றெழுதிய கண்ணேறும்" (சேக்கிழார்பு. 92).* 2. பக்கப்பார்வை; a side-glance, a glance (சேரநா.).

ம. கண்ணேறு

*[கண் + ஏறு. ஏறு = தாக்கம், அம்புபட்டாற் போன்ற தீங்கு. அத் தீங்கு உண்டாக்கத்தக்க அழகு.]*

**கண்ணை** *kaṇṇai,* பெ.(n.) 1. கட்டி, திரட்சி; hard substance. 2. தேனடை; honey comb.

*[கள் → கண் → கண்ணை (திரட்சி).]*

**கண்ணைக்கசக்கு**[1]**-தல்** *kaṇṇai-k-kašakku-,* 5 செ.குன்றாவி.(v.t.) கண்ணைத் தேய்த்தல்; to rub the eyes. தூசு விழுந்ததும் கண்ணைக் கசக்கி விடாதே (உ.வ.).

*[கண் + ஐ + கசக்கு.]*

**கண்ணைக்கசக்கு**[2]**-தல்** *kaṇṇai-k-kašakku-,* செ.கு.வி.(v.i.) வருத்தப்படுதல்; to be sorrowful. சின்ன செய்திக்குக்கூடக் கண்ணைக் கசக்குகிறான் (உ.வ).

மறுவ. கண்ணைம் பிசைதல்

*[கண் + ஐ + கசக்கு.]*

**கண்ணைக்கசக்கு**[3]**-தல்** *kaṇṇai-k-kašakku,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. தேனடையைப் பிழிதல்; to squeeze the honey-comb. 2. கட்டியை நசுக்குதல்; to crush the boils.

*[கண்ணை + கசக்கு.]*

**கண்ணைக்கவர்-தல்** *kaṇṇai-k-kavar-,* 2 செ.குன்றாவி. (v.t.) ***கண்கவர்தல்*** பார்க்க; see *kaṉ-kavar-,* உதகை மலர்க்காட்சி கண்ணைக்கவரும் பேரழகு (உ.வ.).

*[கண் + ஐ + கவர்.]*

**கண்ணைக்காட்டு-தல்** *kaṇṇai-k-kāṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) ***கண்காட்டு-தல்*** பார்க்க; see *kaṉ-kāṭṭu-.* *"கண்ணைக் காட்டி அழைத்தால் வாராதவள், கையைப் பிடித்து அழைத்தால் வருவாளா?" (பழ.).*

*[கண்ணை + காட்டு-.]*

**கண்ணைப்பறி-த்தல்** *kaṇṇai-p-paṟi-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. கண்பார்வையைக் கவர்தல்; to attract the eyes, as a beautiful thing etc. குழந்தையின் அழகு கண்ணைப்பறிக்கிறது (உ.வ.). 2. கண்களைக் கூசச் செய்தல்; dazzle the eyes, blind. வெளிச்சம் கண்ணைப் பறிக்குது (உ.வ.).

*[கண் + ஐ + பறி.]*

**கண்ணைமூடு-தல்** *kaṇṇai-mūḍu-,* 5 செ.குன்றாவி. (v.i.) ***கண்மூடு-தல்*** பார்க்க; see *kaṉ-mūḍu-.*

*[கண் + ஐ + மூடு.]*

**கண்ணொட்டு-தல்** *kaṉ-ṉ-oṭṭu-,* 5 செ.கு.வி.(v.t.) கண் தூக்கநிலையடைதல்; to be heavy with sleep, எனக்குக் கண்ணொட்டிக்கொண்டு வருகிறது (வின்.).

*[கண் + ஒட்டு.]*

**கண்ணொடி**[1] *kaṇṇoḍi,* பெ.(n.) இமைப்பொழுது; the time of winking. கண்ணொடிப் பொழுதும் கடமை மறவேன் (உ.வ.).

*[கண் + நொடி.]*

**கண்ணொடி**[2]**-த்தல்** *kaṇṇoḍi-,* செ.கு.வி.(v.i.) கண்ணால் பேசுதல்; to express certain feelings through winking.

*[கண் + நொடி-.]*

**கண்ணொடு** *kaṉ-ṉ-oḍu,* பெ.(n.) கண்நோய்வகை. (பரராச.1,208.); an eye-disease.

*[கண் + ஒடு (ஒடுங்கு.)]*

**கண்ணொடையாட்டி** *kaṇṇoḍai-y-āṭṭi-,* பெ.(n.) கள்விற்பவள்; toddy seller (female) *"காழியர் கூவியர் கண்ணொடை யாட்டியர்" (சிலப்.5:24.).*

*[கள் + நொடை + ஆட்டி.]*

நொடை = கடன், தவணை அடிப்படையில் செலுத்தத்தக்க கடன். விலைப்பணத்தை உறுதியாகத் திருப்பித்தருவான் என்னும் நம்பிக்கையால் கடனாக விற்பது நொடுத்தல், நொடை எனப்படும்.

**கண்ணொத்து**[1] *kaṇ-ottu,* பெ.(n.) 1. பேரெழில்; appearing to be beautiful, agreeable. 2. கண்ணைப் பறிக்கும் தன்மையது; appealing to the eye.

**து.** கண்பத்து

*[கண் + (ஒற்று) – ஒத்து → கண்ணொற்று – கண்ணொத்து = கண்ணில் ஒற்றிக் கொள்ளும்படியான அழகு.]*

**கண்ணொத்து**[2] *kaṇṇottu,* பெ.(n.) கண்நோய்; swelling at the corner of the eye (கருநா.) ***கண்தொற்று*** பார்க்க; see *kaṇ-toṟṟu.*

**க.** கண்ணொத்து

*[கண் + தொற்று – கண்தொற்று → கண்ணொற்று → கண்ணொத்து (கொ.வ.). கண்ணோய் அருகிலிருந்து காண்பவனுக்கும் தொற்றிக்கொள்ளும் என்னும் கருத்தில் தோன்றிய சொல்.]*

**கண்ணொளி** *kaṇ-ṇ-oḷi,* பெ.(n.) பார்வை; lustre of the eyes. கண்ணொளி மழுங்கியது (உ.வ.).

**க.** கண்பௌகு, கம்பௌகு.

*[கண் + ஒளி.]*

**கண்ணோக்கம்** *kaṇṇōkkam,* பெ.(n.) பார்வை; sight (சா.அக.)

*[கண் + நோக்கம்.]*

**கண்ணோக்காடு** *kaṇṇōkkāḍu,* பெ.(n.) 1. ***கண்ணோய்*** பார்க்க; see *kaṇṇōy,* pain in the eye. 2. கண் ஊதை (கண்வாதம்); neuralgic pain in the eye. (சா.அக.)

*[கண் + நோக்காடு. நோ → நோக்காடு, ஒ.நோ.சா → சாக்காடு, வே → வேக்காடு.]*

**கண்ணோக்கு**[1]**–தல்** *kaṇṇōkku-,* 5 செ.கு.வி.(v.t.) 1. பார்த்தல்; to look at, see. 2. அருளோடு பார்த்தல்; to look with grace.

*[கண் + நோக்கு.]*

**கண்ணோக்கு**[2] *kaṇṇōkku,* பெ.(n.) முதன் முறையாக இழவு வீட்டிற்குச் செல்லல்; the first visit to a moaning house (சேரநா.).

**ம.** கண்ணோக்கு.

*[கண் + நோக்கு.]*

**கண்ணோக்கு**[3] *kaṇṇōkku,* பெ.(n.) 1. பார்வை; gaze, glance, look. 2. அருட்பார்வை; favour, grace. *"கண்ணோக் கரும்பா" (நீதிநெறி.37).*

**ம.** கண்ணோக்கம்.

*[கண் + நோக்கு.]*

**கண்ணோட்டம்** *kaṇ-ṇōṭṭam,* பெ.(n.) 1. கண் பார்வை; vision, look (கலைசைச்.97). 2. கனிவுள்ளம்; regard, blindness, glow of kind feeling towards a friend etc. *"கண்ணோட்ட மென்னுங் கழிபெருங் காரிகை" (குறள்,571).* 3. தன்னோடு பயின்றாரைக் கண்டால் அவர் கூறியன மறுக்க மாட்டாமை (குறள், பரி.அதி.முன்.); not denying due to intimacy. 4. பார்வையிடுகை; discerning by the eye, close examination, careful scruting. இவர் கண்ணோட்டத்திலேயே அளவிடும் வல்லமை உடையவர் (உ.வ.). 5. கடைக்கண் பார்வை; a skant look; looking obliquely towards one corner of the eye, graceful look. முதலாளியின் கடைக்கண் பார்வை கிடைக்குமாறு நடந்துகொள் (உ.வ.). 6. சுழிமுனை நோக்கு (ஓகநெறி); in yoga philosophy, looking at the space between the eye-brow, concentration (சா.அக.).

*[கண் + நோட்டம்.]*

**கண்ணோடு[1]-தல்** *kaṇṇōḍu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. விரும்பிய பொருளின்மேற் பார்வைசெல்லுதல்; to run out as the eyes on a desired object. அவனுக்கு அங்கே கண்ணோடுகிறது (உ.வ.). 2. இரங்குதல்; to be kind: benignant, gracious, indulgent, sympathetic, tender. "கூற்றுக்கண் ணோடிய வெருவரு பறந்தலை" (புறநா.19). 3. கனிவுடன் இருத்தல்; to be loving, compassion. "கருமஞ் சிதையாமற் கண்ணோட வல்லார்க்கு" (குறள்,578).

[கண் + ஒடு.]

**கண்ணோடு[2]-தல்** *kaṇṇōḍu-,* 5 செ.குன்றாவி.(v.t.) மேற்பார்வையிடுதல்; to supervise. 'உடையவன் கண்ணோடாப் பயிர் உடனே அழியும்' (பழ.).

[கண் + ஒடு. கண் = பார்வை. ஒடு = செலுத்து.]

**கண்ணோடை** *kaṇṇōḍai,* பெ(n.) கண்ணீர்த் தாரை; lacrimal duct.

[கண் + ஒடு → ஒடை. கண்ணோடு கண்ணீர்வழிதலைக் குறித்தது.]

**கண்ணோய்** *kaṇṇōy,* பெ(n.) கண்ணுக்கு உண்டாகும் பிணி; eye-disease.

[கண் + நோய். நோய் - அகக்கரணியத்தாலும் புறக்கரணியத்தாலும் உடலுக்குண்டாகும் வருத்தம்.]

**கண்ணோய்க்காரம்** *kaṇṇōy-k-kāram,* பெ.(n.) கண்நோய்க்கான மருந்து (இ.வ.); stimulant applications in affections of the eye.

[கண் + நோய் + காரம்.]

**கண்ணோரம்** *kaṇṇōram* பெ.(n) கண்ணின் ஓரம்; the edge of the eye.

மறுவ: கடைக்கண். விழியோரம்.

க. கண்மொனெ, கண்கொனெ.

[கண் + ஓரம்.]

**கண்ணோவு** *kaṇṇōvu,* பெ.(n) கண்ணுக்குண்டாகும் வலி; sore eyes, ophthalmia, conjunctis.

ம. கண்நோவு; க. கண்ணுநோவு; து. கண்ணுபேநெ; பட. கண்ணுநோ.

[கண் + நோவு. நோ → நோவு. நோ = வலி.]

**கண்ணோவுப்பூண்டு** *kaṇṇōvu-p-pūṇḍu,* பெ.(n.) செங்காந்தள்; red species of the glory - lilly.

[கண்ணோவு + பூண்டு.]

**கண்தசை** *kaṇ-tašai,* பெ.(n.) கண்ணில் வளரும் தசை; unwanted growth of tissue in eye.

[கண் + தசை.]

**கண்தப்பு-தல்** *kaṇtappu-,* 5 செ.கு.வி.(v.i.) பார்வைக்குத் தப்புதல்; to escape from eye sight.

து. கண்தப்புனி; ம. கண்ணதப்பு.

[கண் + தப்பு.]

**கண்திட்டம்** *kaṇ-tiṭṭam,* பெ.(n.) பார்வையால் செய்யும் மதிப்பீடு; estimation by sight. இவர் கண் திட்டமாய்க் கணக்கிடுவதில் வல்லவர் (உ.வ.).

[கண் + திட்டம்.]

**கண்திட்டி** *kaṇ-tiṭṭi,* பெ.(n.) **கண்ணூறு** பார்க்க; see *kaṇ-ṇūṟu.*

து. கண்ணதிட்டி; Skt. dristi; த. திட்டி.

[கண் + திட்டி.]

**கண்திரை[1]** *kaṇ-tirai,* பெ.(n.) கண்ணோய்க்காலத்தில் வெளிச்சம் தூசு முதலியன படாதபடி கண்ணுக்கிடும் திரை; screen for the eyes to protect them from light and dust.

[கண் + திரை.]

**கண்திரை[2]** *kaṇ-tirai,* பெ.(n.) 1. அகவை முதிர்ச்சியால் கண்களிலேற்படும் சுருக்கம்; contraction of the eyes due to old age.

[கண் + திரை. திரை = அலை. அலை போன்றிருக்கும் சுருக்கம்.]

**கண்தி(டி)ற[1]-த்தல்** *kaṇ-tiṟa-,* 3 செ.குன்றாவி.(v.t.) 1. சிலை முதலியவற்றிற்குக் கண்விழி வரைதல் அல்லது செதுக்குதல்; to chisel or paint the eyes of an idol or a picture. 2. குடிப்பதற்கேற்ப இளநீரின்

கண்ணைத் திறத்தல்; to cut open eyes; sip off the tender coconut.

[கண் + திற.]

**கண்தி(டி)ற²-த்தல்** *kaṇ-tiṟa-,* 3 செ.கு.வி.(v.i.) 1. பிறந்த குட்டிகள் விழியைத் திறத்தல்; to open eyes, as a kitten. 2. அறிவு உண்டாக்குதல்; to illumine the mind, to impart instruction,as opening the eyes of a disciple's mind. பொதுநலத் தொண்டரின் வருகையால் இவ் வூரார்க்குக் கண் திறந்தது (உ.வ.). 3. கல்வி கற்பித்தல்; to educate, instruct. *இவர்தாம் எனக்குக் கல்விக்கண் திறந்த ஆசான்* (உ.வ.). 4. இரக்கம் காட்டுதல்; to show mercy. இந்த ஏழையைக் கண்திறந்து பார்க்க மாட்டீரோ (உ.வ.). 5. வானம் வெளியாதல்; to clear, as sky free from clouds and with the sun shining. இன்றைக்காவது வானம் கண்திறக்குமா? (உ.வ). 6. அருள் செய்தல்; to be gracious. தெய்வம் கண் திறக்க வேண்டும் (உ.வ.) 7. அறிவு உண்டாதல்; to be enlightened in mind. அவரது நட்புக்குப் பிறகுதான் எனக்குக் கண்திறந்தது (உ.வ.).

ம. கண்துறக்குக; பட. கண்தரே; து. கண்ணபுளாபுநி

[கண் + திற.]

**கண்தினவு** *kaṇtiṉavu,* பெ.(n.) கண் சிவந்து அரிப்பும் உறுத்தலும் உண்டாகி நீர்வடிந்து எரிச்சல் தூக்கமின்மை முதலிய தன்மைகளைக் காட்டும் கண்ணோய்; a disease of the eye characterised by inflammation itching irritation, liquid discharge burning sensation, sleeplessness etc (சா.அக).

[கண் + தினவு.]

**கண்துஞ்சு-தல்** *kaṇ-tuñju,* செ.கு.வி.(v.i.) 1. தூங்குதல். 2. விழிப்புணர்வு இல்லாமல் இருத்தல்; to be not alert or vigilant. செயல் முடியும் வரை கண்துஞ்சார் (உ.வ.).

[கண் + துஞ்சு.]

**கண்துடி-த்தல்** *kaṇ-tuḍi-,* 4 செ.கு.வி.(v.i.) இமை படபடத்தல்; to throb as the eye,confront with an omen.

து. கண்ணுஅதுருதி

[கண் + துடி.]

பெண்களுக்கு இடக்கண் துடிப்பதும் ஆண்களுக்கு வலக்கண் துடிப்பதும் நன்னிமித்தம் (சகுனம்). பிறழ்ந்து துடிப்பது தீநிமித்தம் எனக் கருதப்படுகிறது

**கண்துடைப்பு** *kaṇ-tuḍaippu,* பெ.(n.) 1. செயலைச் செய்யாமல் செய்ததாகக் காட்டும் பேச்சு; eye wash; mere pretentious concealment. 2. போலியான ஆதரவு; false support.

[கண் + துடைப்பு.]

**கண்துயில்-தல்** *kaṇ-tuyil,* 13 செ.கு.வி.(v.i.) *கண்டுயி(லு)-தல்* பார்க்க; see *kaṇḍuyilu-.*

[கண் + துயில்.]

**கண்துயிலிடம்** *kaṇ-tuyiliḍam,* பெ.(n.) *கண்டுயிலிடம்* பார்க்க; see *kaṇṭuyiliḍam.*

[கண் + துயில் + இடம்.]

**கண்தெறி-த்தல்** *kaṇ-teṟi-,* 4 செ.கு.வி.(v.i.) 1. மிகு வெளிச்சத்தாற் கண்ணொளி மழுங்குதல்; to be dazed, as the eyes by very strong light. *மின்னலடித்தது கண்தெறித்தது* (உ.வ.). 2. பேரழகைக் காண விழிகொள்ளல்; to get eye full as of seeing great beauty. கண்தெறிக்கும் பேரழகைக் கண்டேன் (உ.வ.).

[கண் + தெறி.]

**கண்நடு-தல்** *kaṇ-naḍu-,* 20 செ.கு.வி.(v.i.) 1. விழியசையாமல் ஓரிடத்தில் பார்வை நிற்றல்; eyes to become motionless, by looking intently. 2. சாக்குறி; a symptom of death. கண் நட்டு விட்டது, இனி பிழைப்பது அரிது (உ.வ.).

ம. கண்நடுக

[கண் + நடு.]

**கண்நிலைகுத்து-தல்** *kaṇ-nilai-kuttu-,* 5 செ.கு.வி.(v.i.) *கண்நடு-தல்* பார்க்க; see *kaṇ-naḍu-*

[கண் + நிலை + குத்துதல்.]

**கண்நிறை-தல்** *kaṇ-niṟai-,* 2 செ.கு.வி.(v.i.) 1. முழுமன நிறைவடைதல்; to satisfy totally. 2. கண்ணீர் நிரம்புதல்; to be filled with tears. கண்டவுடன் கலக்கமுற்றுக் கண்ணிறைந்து நாத்தழுதழுத்தது

(உ.வ.). 3. இரக்கவுணர்வு காட்டுதல்; to be full of pity. 4. விழியால் காணக்கூடிய அளவு முழுமையும் பார்த்தல்; to see as much an eye can take it.

ம. கண்நிறையுக; க. கண்தும்பு.

[கண் + நிறை.]

**கண்நோவு** *kaṇ-nōvu*, பெ.(n.) **கண்ணோவு** பார்க்க; see *kaṇṇōvu*.

[கண் + நோவு.]

**கண்பகிர்-தல்** *kaṇ-pagir-*, 2 செ.கு.வி.(v.i.) **கண்வெடிப்பு** பார்க்க; see *kaṇ-veḍippu*.

[கண் + பகிர்.]

**கண்பச-த்தல்** *kaṇ-paša-*, 3 செ.கு.வி.(v.i.) காதல் உணர்வால் கண்ணில் வெளிப்படும் பொலிவுக் குறைபாடு; to lose lustre, complexion, or colour due to love sickness. *"அரிமத ருண்கண் பசப்ப நோய்செய்யும்" (கலித்.82:20).*

[கண் + பசத்தல் = பசலை (பரத்தல்).]

பசலை காதல் உணர்வால் ஏற்படும் நோய்க்குறி. இந் நோயுற்றவள் உடல் மெலிவதும், மெய்ந்நிறம் மாறுவதும் கண்ணும் நுதலும் ஒளிகுன்றுதலும் உண்டென்பதனைக் "கண்ணும் தோளும் தண்நறும் கதுப்பும் பழநலம் இழந்து பசலை பாய" (நற்.210) என்னும் நற்றிணை இலக்கிய வரிகளில் காண்க.

**கண்பட்டசட்டி** *kaṇ-paṭṭa-caṭṭi*, பெ.(n.) ஓட்டைகள் அமைந்த சட்டி; a pot with holes in it (சா. அக.).

[கண் + (படு) → பட்ட + சட்டி. கண் = துளை.]

**கண்பட்டை** *kaṇ-paṭṭai*, பெ.(n.) 1. கண்புருவம்; eye lash. 2. குதிரைக்கண்ணுக்குக் கட்டும் பட்டை; an eye flap as of a horse.

ம. கண்பட்ட; க. கண்பட்டெ.

[கண் + பட்டை.]

**கண்படு[1]-த்தல்** *kaṇ-paḍu-*, 4 செ.குன்றாவி.(v.t.) பதிக்கப்பட்டிருத்தல்; to be set, as gems in jewels. *"காசுகண் படுக்கு மாடம்" (நைடத.சுயம்வர.157).*

[கண் + படு.]

**கண்படு[2]-தல்** *kaṇ-paḍu-*, 20 செ.கு.வி.(v.i.) 1. உறக்கம் கொள்ளுதல்; to sleep. *"அன்னங் கண்படு தண்பணை" (நைடத.நாட்டுப்.2).* 2. பரவுதல்; to spread over a surface. *"வயலும் புன்செய்யுங் கண்பட வேர்பூட்டி" (பு.வெ.12,வென்றிப்.4).* 3. கண்ணோடுதல்; to be in favour of, partial to. *"கண்பட் டாழ்ந்து நெகிழ்ந்து" (சிறுபஞ்.78).* 4. கண்ணூறுபடுதல்; to be affected by the evil eye. என்பிள்ளைக்கு யார் கண்பட்டதோ? (உ.வ.).

க. கண்படு

[கண் + படு. படு = தொடல், ஏற்படுதல், சாய்தல், தூங்குதல்.]

**கண்படை[1]** *kaṇ-paḍai*, பெ.(n.) 1. உறக்கம்; sleep. *"மண்டமர் நசையொடு கண்படை பெறாஅது" (முல்லைப்.67).* 2. மாந்தர் துயிலிடம் (சூடா.); bed, bedroom.

மறுவ. கண்பாடு, உறக்கம், தூக்கம், தூக்காடு, துயில், கண்வளர்தல், கண்பொலி.

[கண் + படை. படு → படை (தொ.பெ.).]

**கண்படை[2]-த்தல்** *kaṇ-paḍai-*, 4 செ.குன்றாவி.(v.t.) பார்வையடைதல்; to have sight (கருநா).

க. கண்படெ

[கண் + படை.]

**கண்படைநிலை** *kaṇ-paḍai-nilai*, பெ.(n.) 1. உறக்கம்; sleep. *"வேந்தன் கண்படைநிலை மலிந்தன்று" (பு.வெ.8.29.கொளு).* 2. மன்னனைத் துயில்கொள்ள வேண்டும் புறத்துறைகளுளொன்று; (Purap.) theme of the court physicians, ministers and other attendants of a king sitting in audience humbly suggesting to his majesty that it is time for him to go to bed. 3. சிற்றிலக்கிய வகைகளிலொன்று; name of the poem containing *kaṇpaḍainilai* theme.

[கண் + படை + நிலை. படு → படை = படுதல், உறங்குதல். கண் உறக்கம் வரும்நிலை எனப் பொருள்படும். மன்னர் இனிது உறங்குதற்கு அதற்குரியதாகத் தெரிந்தெடுக்கப்பட்ட பண்ணும் அப் பண் சுமந்த பாடலும் இப் பெயர்பெற்றுள்ளன.]

ஒ.நோ. துயிலெடைநிலை

அவையிலுள்ள மருத்துவர், அமைச்சர், பிற உதவியாளர்கள் போன்றோர், இரவில் நெடுநேரம்

அவையிலிருக்கும் அரசனைத் துயில் கொள்ளக் கருதிக் கூறும் புறத்துறை கண்படைநிலையாகும்.

**கண்பரி-தல்** *kaṇ-pari-,* 2 செ.கு.வி.(v.i.) மூட்டறுதல்; to break at the joints. *"கானிமிர்த்தாற் கண்பரிப வல்லியோ" (பெருந்தொ.516).*

*[கண் + பரி. கண் = கணு, மூட்டு. பரிதல் = பிரிதல், அறுதல், முறிதல்.]*

**கண்பரிகாரம்** *kaṇ-parigāram,* கண்மருத்துவம் (வின்.); medical treatment of the eyes; profession of an oculist.

*[கண் + பரிகாரம்; பரிகரித்தல் பரிகாரமாயிற்று. பரிதல் = நீங்குதல். 'பரிகரித்தல்' நீங்கச் செய்தல் பரிகாரமாயிற்று.]*

**கண்பரிகாரி** *kaṇ-parikāri,* பெ.(n.) கண்மருத்துவன் (வின்.); eye-doctor, oculist.

*[கண் + பரிகாரி.]*

**கண்பரை** *kaṇ-parai,* பெ.(n.) **கண்புரை** பார்க்க; see *kaṇ-purai.*

**க.** கண்பரெ

*[கண் + பரை.]*

**கண்பறை-தல்** *kaṇ-paṟai-,* 2 செ.கு.வி.(v.i.) கண்ணொளி குறைதல் (சம்.அக.Ms.); to have dimmed vision.

*[கண் + பறை. பறு → பறை. பறுதலும் பறிதலும் குறைபடுதல் குறைதல் தாழ்தல் கண் எனப் பொருள் படுதலான் கண்பறை பார்வைக்குறைவைக் குறிக்கும் சொல்லாயிற்று.]*

**கண்பனி[1]-த்தல்** *kaṇ-paṉi-,* 4 செ.கு.வி.(v.i) கண்ணீர் தளும்புதல்; to be tearful. *"நெஞ்சுருகிக் கண்பனிப்ப" (திவ்.திருநெடுந்.12).*

*[கண் + பனி. பனித்தல் = நடுக்குதல். பனிதல் = நடுங்குதல், பிலிற்றல். தளும்புதல்.]*

**கண்பனி[2]** *kaṇ-paṉi,* பெ.(n.) கண்ணீர்; tears (கருநா.).

**க.** கண்பனி; **து.** கம்பனி.

*[கண் + பனி. பனிதல் = பிலிற்றல். பனி - வானிலிருந்து மேகங்கள் பிலிற்றும் நுண்திவலை (பனி) எனப்பட்டது. பல் → பன் = நெருங்கல், செறிதல், செறிந்து வீழ்தல்.]*

**கண்பாடு[1]** *kaṇ-pāḍu,* பெ.(n.) உறக்கம்; sleep. *"நிரப்பினுள் யாதொன்றும் கண்பா டரிது" (குறள், 1049).*

**மறுவ.** கண்படை, துயில், உறக்கம், தூக்கம், தூக்காடு.

*[கண் + பாடு. படு → பாடு (முதன்னிலை திரிந்த தொழிற்பெயர்).]*

**கண்பாடு[2]** *kaṇ-pāḍu,* பெ.(n.) பார்வை; range of vision, eye-shot.

**ம.** கண்பாடு; **தெ.** கநுகலி.

*[கண் + பாடு. காண் → கண். படு → பாடு.]*

**கண்பாய்ச்சல்[1]** *kaṇ-pāyccal,* பெ.(n.) 1. பார்வை (வின்.); glance, look. 2. கண்ணூறு; evil eyes. *அவரது கண்பாய்ச்சலிலிருந்து தப்ப முடியவில்லை (உ.வ).*

**க.** கண்பச

*[கண் + பாய்ச்சல். பாய் → பாய்ச்சல். பாய்ச்சல் = பரவுதல்.]*

**கண்பார்-த்தல்** *kaṇ-pār-,* 4 செ.கு.வி.(v.i.) 1. மனநெகிழ்வுடன் பார்த்தல்; to look upon graciously, compassionately. *"கண்பார்க்க வேண்டுமென்று கையெடுத்துக் கும்பிட்டாள்" (பாஞ்சாலிசப.65-15).* 2. தேர்ந்து தெளிதல் (வின்.); to become clear after examination.

**து.** கண்ணண் பார்த்மல்புனி, கண்ணண்பாடுனி.

*[கண் + பார். கண்பார்த்தல் = இரங்குதல், மனம் வைத்தல், கனிவுகாட்டுதல், தெளிவுபெறல், தெரிவு செயல்.]*

**கண்பார்வை** *kaṇ-pārvai,* பெ.(n.) 1. பார்க்கும் ஆற்றல்; eye sight. 2. மேற்பார்வை; supervision. 3. மதிப்பீடு; estimate from personal examination.

**து.** கண்ணசோரிகெ

*[கண் + பார்வை.]*

**கண்பாவை** *kaṇpāvai,* பெ.(n.) கருவிழி; pupil of the eye.

மறுவ. கண்பாப்பா; தெ. கநுபாப.

*[கண் + பாவை.]*

**கண்பிசை-தல்** *kaṇ-pišai-,* 2 செ.குன்றாவி.(v.t.) ***கண்ணைக்கசக்குதல்*** பார்க்க; see *kaṇṇai-k-kašakku-.* "கண்பிசைந் தொருசே யின்னுங் கலுழினும்" (பிரபுலிங்.கைலாச.5).

**கண்பிடி** *kaṇ-piḍi,* பெ.(n.) 1. ஒரு காம்பிற் பெருங்காயோடு கூடியுள்ள சிறுகாய்கள் (யாழ்ப்.); small jack fruit, small bunch of palmyra fruits, fruits attached to a larger fruit. 2. இளங்காய்; tender fruit (சா.அக.).

*[கண் + பிடி. கண் = சிறியது, சிறிய காய்கள்.]*

காய்கள் காம்புடன் பிடிப்புக் கொண்டிருத்தலால் கண்பிடி எனப்பட்டது.

**கண்பிணி** *kaṇpiṇi,* பெ.(n.) ***கண்ணோய்*** பார்க்க; see *kaṇṇōy.*

*[கண் + பிணி.]*

**கண்பிதுங்குதல்** *kaṇ-pitungu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. விழிக்கோளம் வெளிவருதல்; to protrude, bulge as of eyes. *ஒரே அடியில் கண்பிதுங்கிவிடும் (உ.வ.).* 2. வேலை மிகுதியால் துன்பம் மேலிடுதல்; to be fatigued due to heavy work. *இந்த வேலை கண் பிதுங்கச் செய்கிறது (உ.வ.).*

*[கண் + பிதுங்குதல். பிதுங்குதல் = உள்ளீடு வெளிக்கிளம்புதல், அத்தகைய தாங்க முடியாத துன்பம்.]*

**கண்பீலி**[1] *kaṇ-pīli,* பெ.(n.) 1. கால்விரலின் அணிவகை; a kind of ornament worn on toes (சேரநா.).

ம. கண்பீலி

*[கண் + பீலி.]*

**கண்பீலி**[2] *kan-pīli,* பெ.(n.) ***கண்மயிர்*** பார்க்க; see *kaṇ-mayir.*

*[கண் + பீலி.]*

**கண்பீளை** *kaṇ-pīḷai,* பெ.(n.) உடற்சூட்டினால் கண்ணிலுண்டாகும் அழுக்கு; rheum, viscid discharge from the eye, the morbid secretions of the eye.

ம. கண்பீள; க. கண்புழுங்கு; து. கண்ணமாலு; பட. கண்கீடு.

*[கண் + பீளை.]*

**கண்பீளைச்செடி** *kaṇ-pīḷai-c-ceḍi,* பெ.(n.) பெரும்பூம்பாதிரி; long leaved trumpet plant (சா.அக.).

*[கண் + பீளை + செடி.]*

**கண்பு** *kanbu,* பெ.(n.) சம்பங்கோரை; elephant grass. "செருந்தியொடு கண்பமன் றூர்தர" (மதுரைக்.172).

*[கண் → கண்பு.]*

**கண்புகை** *kaṇ-pugai,* பெ.(n) காலிலுள்ள நுண்ணிய இடங்களுள் ஒன்று; a mortal spot in the sole (சேரநா.).

ம. கண்புக.

*[கண் + புகை - கண்புகை. கண் = கணு. ஒருகா. முகை → புகை.]*

**கண்புகைச்சல்** *kaṇ-pugaiccal,* பெ.(n.) 1. கண்ணோய் வகை; a disease of the eye. 2. கண்மங்கல் (வின்.); dimness of sight from age or disease.

*[கண் + புகைச்சல்.]*

**கண்புணராமை** *kaṇ-puṇarāmai,* பெ.(n.) ஏரணமுறை யளவைகளுளொன்று (Logic), அஃதாவது சிலவற்றைக் கண்டவற்றின் பெயரறியாதிருத்தல்; one of the syllogisms.

*[கண் + புணராமை. புணராமை = பொருந்தாமை. கண்புணராமை கண்டும் அதன் பெயரறியாதிருத்தல்]*

**கண்புதை**[1]**-த்தல்** *kaṇ-pudai-,* 4 செ.கு.வி.(v.i.) 1. ***கண்பொத்து-தல்*** பார்க்க; see *kaṇpottu-.* "வைவேற் கண்புதைத்து" (திருக்கோ.43).

*[கண் + புதை.]*

**கண்புதை**[2]**-தல்** *kaṇ-pudai-,* 2 செ.கு.வி.(v.i.) 1. அறிவு கெடுதல்; to weaken, as understanding. "கண்புதைந்த மாந்தர்" (நல்வழி,28). 2. மறைத்தல், மூடப்பட்டு மறைதல்; to lie covered and hidden.

"பாருருவும் பார்வளைத்த நீருருவுங் கண்புதையக் காருருவன் நிமிர்ந்த கால்" (திவ்.இயற்.பெரிய திருவ.21).

[கண் + புதை.]

**கண்புதை³-தல்** *kaṇ-pudai-*, 2 செ.கு.வி.(v.i.) கண் உள்ளுக்கு ஆழ்தல், the sinking of the eye. நாட்பட்ட நோயினால் கண்புதைந்து கிடக்கிறார் (உ.வ.).

[கண் + புதை.]

**கண்புதையல்** *kaṇ-pudaiyal*, பெ.(n.) ***கண்ணாம் பொத்தி*** பார்க்க; see *kaṇṇāmpotti.* "கண்புதையல் விளையாட்டைக் கழிக்கின்றானே" (தேசிகப்.2:46).

[கண் + புதையல். புதையல் = புதைத்தல், விழி மூடுதல்]

**கண்புரை** *kaṇ-purai*, பெ.(n.) கண்ணில் வளரும் படலம் (இ.வ.); cataract.

க. கண்பரெ, கண்பொரெல்; து. கண்ணபரெ.

[கண் + புரை.]

**கண்புழு** *kaṇpul̲u*, பெ.(n.) கண்ணிமையில் தோன்றும் நுண்புழுவகை; a kind of micro worm on the edges of the eye lid.

[கண் + புழு.]

**கண்புழுவெட்டு** *kaṇ-pul̲uveṭṭu*, பெ.(n.) இமையில் நுண்புழுக்களால் உண்டாகும் அழற்சி; inflammation on the edges of the eye lid due to the micro worm.

[கண் + புழு + வெட்டு.]

**கண்புள்ளி** *kaṇ-pulli*, பெ.(n) ***கண்பூ*** பார்க்க; see *kaṇ-pū.*

[கண் + புள்ளி.]

**கண்புளிச்சை** *kaṇ-puliccai*, பெ.(n) ***கண்பீளை*** பார்க்க; see *kaṇ-pīlai.*

[கண் + புளிச்சை.]

**கண்புனல்** *kaṇ-puṉal*, பெ.(n) கண்ணீர்; tears (சேரநா.).

ம. கண்புனல்; க. கண்பனிவெழெ.

[கண் + புனல்.]

**கண்பூ¹-த்தல்** *kaṇpū-*, 4 செ.கு.வி.(v.i.) வறுமையால் கண் ஒளி குன்றுதல்; dimness of eyes due to penury. பட்டினியால் கண் பூத்தது (உ.வ.).

து. கண்ணு

[கண் + பூத்தல். பூத்தல் = பஞ்சடைதல். கண்பூத்தல் = கண்ணகல விரித்து நோக்குதலால் உண்டாகும் சோர்வு]

**கண்பூ²** *kaṇ-pū*, பெ.(n.) கருவிழியில் ஏற்படும் வெண்புள்ளி நோய்; opacity of the cornea,eye-spot.

ம., க., து. கண்பூ.

[கண் + பூ. பூ-பூப்போன்ற வெண்படலம் படர்ந்து ஒளிமங்குதல்]

**கண்பூர்-தல்** *kaṇ-pūr-*, 2 செ.கு.வி.(v.i.) கண்நிறைவு கொள்ளுதல் (யாழ்.அக.); to be satiated with seeing.

[கண் + பூர்.]

**கண்பூளை** *kaṇ-pūlai*, பெ.(n.) சிறுபூளைப்பூடு weed (M.M.)

மறுவ. கண்ணுபூளை (கொ.வ.)

[கண் + பூளை. கண் = சிறிது.]

**கண்பெறு-தல்** *kaṇ-per̲u-*, 20 செ.கு.வி.(v.i.) 1. பார்வையடைதல்; to regain the power of sight. "கண்பெற்ற வாண்முகமோ" (நள.கலிநீங்.92). 2. அருணோக்கிற்கு இலக்காதல்; to come under one's gracious favour, as from a superior. "ஆயிழாய் நின் கண்பெறினல்லால்" (கலித்.88,8).

க. கண்பெறு

[கண் + பெறுதல். கண் = பார்வை. சினைப்பெயர் தொழிலுக்கு ஆகிவந்தது.]

**கண்பொங்கு-தல்** *kaṇ-poṅgu-*, 7 செ.கு.வி.(v.i.) வெம்மையின் காரணமாகக் கண்கள் சிவந்து பீளைதள்ளுதல்; to suffer from an eye disease which discharges rheum due to heat.

[கண் + பொங்கு.]

**கண்பொத்திக்குட்டல்** *kaṇ-potti-k-kuṭṭal*, பெ.(n.) ***கண்பொத்து-தல்*** பார்க்க; see *kaṇ-pottu-.*

[கண் + பொத்தி + குட்டல்.]

**கண்பொத்து-தல்** *kaṇ-pottu*, 5 செ.குன்றாவி.(v.t.) கண்மூடி விளையாடுதல்; to blindfold, in the game of blindmans buff. அவள் கண்பொத்தி விளையாடும் பருவம் (உ.வ.).

ம. கண்பொத்தான்களி (கண்ணாம்பூச்சி விளையாட்டு)

*[கண் + பொத்து.]*

**கண்பொலி–தல்** *kaṉ-poli-,* 2 செ.கு.வி.(v.i.) *1.* ***கண்வளர்–தல்,*** பார்க்க; see *kaṉ-vaḷar-.* *2.* ***கண்மலர்–தல்*** பார்க்க; see *kaṉ-malar-.*

ம. கண்பொலியுக

*[கண் + பொலி. பொலி = வளர், செழி, பெருகு, மலர்.]*

**கண்பொறிதட்டு–தல்** *kaṉ-poṟi-taṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. விழி கலங்குதல்; to agitate, as the eyes. விழுந்த அறையில் கண்பொறி தட்டியது (உ.வ.). 2. கண்ணொளி மழுங்குதல்; to be dazzled, light.

*[கண் + பொறி + தட்டுதல்.]*

**கண்பொன்று–தல்** *kaṉ-poṉṟu-,* 5 செ.கு.வி.(v.i.) அகவை, நோய், களைப்பு போன்றவற்றால் கண்பார்வை குறைதல்; to have the power of vision diminished or dimmed, by age, by disease of the eyes, by eye strain etc.

*[கண் + பொன்று. பொன்றுதல் – பார்வை குறைதல்.]*

**கண்போடு–தல்** *kaṉ-pōḍu-,* 20 செ.கு.வி.(v.i.) 1. விருப்புடன் நோக்குதல்(வின்.); to cast wishful looks on 2. பார்வையால் தீங்கு விளைவித்தல்; to cast the evil eye.

ம. கண்ணிடுக; க. கண்ணிடு; தெ. கன்னுத்ன்சு; து. கண்ணுகாகுநி பட. கண்ணாகு.

*[கண் + போடு.]*

**கண்போரு** *kaṉ-pōru,* பெ.(n.) விழிப்பின்மை; carelessness, oversight. பார்க்க ***கண்பொன்று–தல்;*** see *kanponru-*

ம. கண்போரு

*[கண் + போரு. பொன்று – போறு – போரு.]*

**கண்போளம்** *kaṉ-pōḷam,* பெ.(n.) ***கண்ணிமை*** பார்க்க; see *kaṉṉimai.*

ம.கண்போளம்.

*[கண் + (போழும்)–போளம் = பிரியும் தன்மையுள்ள கண்ணிமை.]*

**கண்மங்கு–தல்** *kaṉ-maṅgu-,* 5 செ.கு.வி.(v.i.) கண்ணொளி குறைதல்; to diminish as the eye sight. பசியால் கண்மங்குகிறது (உ.வ.).

து. கண்ணு அட்டட்டாபுநி, கண்ணு அட்டாபுநி.

*[கண் + மங்கு.]*

**கண்மங்குலம்** *kaṉ-maṅkulam,* பெ.(n.). 1. பார்வை மங்குகை; dimness of eyesight. 2. வெள்ளெழுத்து; long sight.

க. கண்ணுமஞ்சு

*[கண் + மங்குலம். மங்கு – மங்குலம். "அம்" பெயரீறு.]*

**கண்மட்டம்** *kaṉ-maṭṭam,* பெ.(n.) ***கண்திட்டம்*** பார்க்க; see *kaṉ-thiṭṭam.* கண்மட்டம் பார்த்துக் கற்சுவர் எழுப்பு (உ.வ.).

ம. கண்மட்டம்

*[கண் + மட்டம். மட்டு – மட்டம் = அளவு.]*

**கண்மட்டு** *kaṉ-maṭṭu,* பெ.(n.) ***கண்திட்டம்*** பார்க்க; see *kanntiṭṭam.* கலிங்கின் அளவை கண்மட்டில் சொல் (உ.வ.)

*[கண் + மட்டு. மட்டு = அளவு]*

**கண்மடல்** *kaṉ-maḍal,* பெ.(n.) கண் இமை; eyelid.

*[கண் + மடல். மடல் = இதழ், ஏடு, கண்ணிமை.]*

**கண்மடை** *kaṉ-maḍai,* பெ.(n.) 1. நீர் செல்லுதற்கான சிறிய வாய்க்கால்; small channel for flowing water. 2. நீரை நிறுத்துதற்கான தடுப்பு; blocking plank in a channel. கண்மடையைத் திறந்தால்தான் வாய்க் காலில் நீர் வரும் (உ.வ.).

*[கண் + மடை, துளை]*

**கண்மண்டை** *kaṉ-maṇḍai,* பெ.(n.) கண்ணெலும் புக்கூடு (வின்.); bones forming the eye-socket.

*[கண் + மண்டை.]*

**கண்மண்தெரியாமல்** *kaṉ-maṉ-teriyāmal,* வி.எ. (adv) கட்டுப்பாடு இல்லாமல்; reckless கண்மண் தெரியாமல் வண்டியை ஓட்டிக் கெடுத்துவிட்டான் (உ.வ.).

*[கண்மண் + தெரியாமல் – கண்மண் தெரியாமல் =*

*கண்ணாரக்காணாமல். கண்மண் என்பது எதுகைகுறித்த மரபிணைச்சொல். கண் என்றே பொருள் தரும்.]*

**கண்மணி**[1] *kaṇ-maṇi,* பெ.(n.) கண்ணின் கருமணி; pupil of the eye. *"கண்மணி குளிர்ப்பக் கண்டேன்" (சிலப்.11,55).*

**ம,க.** கண்மணி; **தெ.** கனுகுட்டு; **பட.** கண்மணி; **து.** கண்ணமணி.

*[கண் + மணி. மணி = கண்ணின் பாவை.]*

**கண்மணி**[2] *kaṇmaṇi,* பெ.(n.) அக்கமணி; rudraksa bead. *"வெண்பொடி கண்மணி திகழ மெய்யணிந்து". (திருவானைக். திருமால்.13)*

*[கள் + மணி = கண்மணி = முட்போற் கூர்முனையுள்ள உருத்திராக்கம். முண்மணியென்றும் பெயர் பெறும்.]*

"முண்மணிகள் காய்க்குமரம் முப்பதுட னெட்டே" என்று விருத்தாசலப் புராணம் [உருத் திராக்.4] கூறுதல் காண்க. பலாக்காயின் மேற்காணப் படும் முனைகளும் முள்ளென்று பெயர் பெற்றிருத் தலை நோக்குக. ஆரியர் தென்னாடு வருமுன்னரே சிவநெறிகுமரிநாட்டில் தோன்றிய தொன்மத மாதலால், அதை ஆரியப்படுத்திய வடவர் கண்மணி யென்னுங் கூட்டுச் சொல்லின் பொருளைப் பிறழவுணர்ந்து அதற்கேற்ப, முள்ளுள்ள தென்றே பொருள்படும் அக்கம் [அக்கு – முள், முள்ளுள்ள உருத்திராக்கம்] என்னும் சொல்லை அக்ஷ என்று திரித்து, உருத்திரன் கண்ணீரில் தோன்றிய தென்று முப்புர எரிப்புக் கதை யொன்றுங் கட்டி விட்டனர்.[வேர்ச்.கட்.173]

**கண்மதியம்** *kaṇ-madiyam,* பெ.(n.) பார்வையால் செய்யும் தோராய மதிப்பு; rough estimate, made at sight (யாழ்.அக.).

**ம.** கண்மதி

*[கண் + மதியம். மதி – மதியம் = மதிப்பு.]*

**கண்மயக்கம்**[1] *kaṇmayakkam,* பெ.(n.) 1. உறக்கம்; sleepiness. காலை ஏழுமணியாகியும் கண்மயக்கம் தீரவில்லையா? (உ.வ.). 2. சிற்றுறக்கம்; nap. படித்துக் கொண்டிருக்கும் பொழுது கண்மயக்கம் ஏற்பட்டுவிட்டது (உ.வ.).

*[கண் + மயக்கம்.]*

**கண்மயக்கம்**[2] *kaṇmayakkam,* பெ.(n.) அலைச் சலால் கண்மயங்கிக் காணப்படும் நிலை; drowsiness. காலைவெயிலில் கண்மயக்கம் அடைந்தான் (உ.வ.).

**ம.** கண்மயக்கம்; **து.** கண்மயமய; **க.** கண்மப்பு.

*[கண் + மயக்கம்.]*

**கண்மயக்கு–,** *kaṇ-mayakku,* பெ.(n.) 1. கண்களால் ஈர்த்தல்; bewitching, captivating with the eyes. 2. மாயத்தோற்றம்; illusion; hallucination

*[கண் + மயக்கு.]*

**கண்மயக்குக் கலை** *kaṇ mayakku-k- kalai,* பெ.(n.) 1. தந்திரக்கலை; magic. கழைக்கூத்தாடி கண் மயக்குக் கலையில் கைதேர்ந்துள்ளான்(உ.வ.). 2. தன் வயமிழப்பு; hypnotism.

*[கண் + மயக்கு+ கலை.]*

**கண்மயக்கு வித்தை** *kaṇmayakkuvittai,* பெ.(n.) சூழ்ச்சி வித்தை; illusion created by magic. 2. கண் மயங்கும் படிச் செய்யும் வித்தை; hypnotism. (சா.அக.)

*[கண் + மயக்கு + வித்தை.]*

**கண்மயம்** *kaṇ-mayam,* பெ.(n.). 1. அருள்; mercy, kindness, humanity, compassion. *"களித்த கண் மயமில்லவர்" (உபதேசகா. உருத்திராக்.106).* 2. கண்ணைப்போல் பாதுகாக்கப்படுவது; as dear as the eye (சேரா.).

**ம.** கண்மயம்

*[கண் + மயம்]*

**கண்மயிர்** *kaṇ-mayir,* பெ.(n.) இமையிலுள்ள முடி (வின்.); eyelash.

**ம.** கண்பீலி; **பட.** கண்மயிலு.

*[கண் + மயிர்.]*

**கண்மருட்சி** *kaṉ-maruṭci,* பெ.(n.) 1. பார்வை மயக்கம்; pervession of the vision. 2. கண்ணால் மயக்குகை; fascinating or bewitching by the e ye.

*[கண் + மருட்சி. மருள் + சி – மருட்சி. சி – பெயராக்க ஈறு.]*

**கண்மருட்டு** *kaṉ-maruṭṭu* பெ.(n.) ***கண்மருட்சி*** பார்க்க; see *kanmarutci*

*[கண் + மருட்டு. மருள் – மருட்டு.]*

**கண்மருத்துவம்** *kaṉ-maruttuvam,* பெ.(n.) கண்ணோய்களுக்கு செய்யும் மருத்துவம்; eye treatment.

*[கண் + மருத்துவம்.]*

**கண்மருத்துவமனை** *kaṉ-maruttuva-maṉai,* பெ.(n.) கண்மருத்துவம் செய்யும் மருத்துவமனை; eye hospital.

*[கண் + மருத்துவம் + மனை.]*

**கண்மருத்துவர்** *kaṉmaruttuvar,* பெ. (n.) கண்ணோய்களுக்கு மருத்துவம் செய்யும் வல்லுநர்; eye specialist,eye doctor.

*[கண் + மருத்துவர்.]*

**கண்மருந்து** *kaṉ-marundu,* பெ.(n.) 1. கண்ணோய்க்குப் போடும் மருந்து; medicines for eye diseases 2. கண்மை; collyrium, used for the eye-lids,

**க.** கண்ணுபட்டு

*[கண் + மருந்து.]*

**கண்மலர்[1]–த்தல்** *kaṉ-malar-,* 4 செ.கு.வி.(v.i.) ஆர்வம் ததும்ப நோக்குதல்; to see with eagerness. *"மார்புறவே தழீஇயினா னவள் கண்மலர்த்தாள்"* (சீவக .228)

*[கண் + மலர்.]*

**கண்மலர்[2]–தல்.** *kaṉ-malar-,*2. செ.கு.வி(v.i.) விழித்தல்; to open wide.

**க.** கண்மலர், கண்மலரு.

*[கண் + மலர். மலர்தல் = விரிதல் பரத்தல், விளங்குதல். பூவிரிதல் போன்று கண்திறத்தல் கண்மலர்தலாயிற்று.]*

**கண்மலர்[3]** *kaṉ-malar,* பெ.(n.) 1. மலர்போன்ற கண்; the eye regarded as aflower (metaphor). *"கருவிளை கண்மலர் போல் பூத்தன" (கார்.9.1).* 2. கடவுள் திருமேனிகட்கு அணிவிக்கும் செயற்கை விழிமலர்; an ornament resembling the eye made of gold or silver and put on an idol.

**ம,க.** கண்மலர்

*[கண் + மலர் உருவகம்.]*

**கண்மழை** *kaṉ-maḻai,* பெ.(n.) கண்ணீர்வெள்ளம்; profuse tears. *"மண்ணவர் கண்மழை பொழிந்தார்".* (பெரியபு.மனுநீதி.45.)

*[கண் + மழை.]*

**கண்மறிக்காட்டு–தல்** *kaṉ-maṟi-k-kāṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) கண்ணால் குறிப்புக் காட்டுதல் (வின்.); to hint by the eye.

*[கண் + மறி + காட்டுதல். மறி – மறித்தல், சிமிட்டுதல், அடையாளம்]*

**கண்மறு** *kaṉmaṟu,* பெ.(n.) 1. குறைபாடுடைய கண்; defect is eye. 2. கண்ணழுக்கு; rheum. 3. கண்புரை; cataract.

*[கண் + மறு.]*

**கண்மறை–தல்** *kaṉmaṟai-,* 2 செ.கு.வி.(v.i.) இறத்தல்; to die. என் கண் மறைவதற்குள் பேரனைக்காட்டிவிடு (உ.வ.).

*[கண் + மறை.]*

**கண்மறைப்பு** *kaṉ-maṟaippu,* பெ.(n.) 1. கண்ணை மறைக்க இடும் திரை; eye screen. புரைநீக்கிய பின் சில நாட்களுக்குக் கண்மறைப்பு இடல் வேண்டும் (உ.வ.). 2. கண்புரை; cataract.

*[கண் + மறைப்பு. (மறை – மறைப்பு) ]*

**கண்மாசு** *kaṉmāssu,* பெ.(n.) கண்ணழுக்கு; rhemu.

*[கண் + மாசு.]*

**கண்மாய்** *kaṉmāy,* பெ.(n.) ***கண்வாய்*** பார்க்க; see *kaṉvāy*

*[கண் + (வாய்) மாய்.]*

**கண்மாய்க்கிழங்கு** *kaṉ - -māikiḻaṅgu,*பெ.(n.) கண்மாய்க்கொட்டி பார்க்க; see *kanmaikotti*

*[கண்மாய் + கிழங்கு.]*

**கண்மாய்க்கொட்டி** *kaṉmāy-k-koṭṭi,*கொட்டிக் கிழங்கு; a bulbous roots, Indian water lilly.

*[கண்மாய் + கொட்டி.]*

**கண்மாயம்** *kaṉ-māyam,*பெ.(n.) 1.கண் கட்டு ஆட்டம் (கண்கட்டு வித்தை); ocular deception by magic, illusion visual trick. *"கண்டும் கண்டிலே னென்ன கண் மாயமே"* (திருவாச. 5.42.). 2. பார்வை யால் ஈர்த்தல்; enticing, fascination. 3. குறிப்புப் பார்வை; a furtive glance.

ம. கண்மாயம்; க. கண்மாய.

*[கண் + மாயம்.]*

**கண்மாயம்**[2] *kaṉ-māyam,*பெ.(n.) 1. கண்ணூறு விளைவு, evil eye, causing diseases or misfortune. *"வேற்கண்ணிக் கென்ன கண் மாயம் கலந்தது"* (மதுரை. கோ. 98). 2. பொய்க்காட்சி; an imaginary or illusive appearance. 3. உருவெளித்தோற்றம்; optical illusion. 4. நோயினால் ஏற்படும் பொய்த் தோற்றம்; a false vision resulting from a disease (சா.அக).

*[கண் + மாயம்.]*

**கண்மாறு-தல்** *kaṉ-māṟu,*7 செ.கு.வி.(v.i.) 1. தோன்றி உடனே மறைதல்; disappearing immediately after appearance.*"கண்மாறாடவர்"*. 2. நிலை கெடுதல்; to be humbled down from a high position; to be humbled. *"நலனே .... கண்மா றின்றே"* (குறுந்.125). 3. நட்பாயிருந்து பகையாதல்; to be indifferent to, to neglect. *"கொண்டுகண் மாறல் கொடுமையிற்றுவ்வாது"* (முதுமொழி).

*[கண்+ மாறு.]*

**கண்மிச்சில்** *kaṉ-micoil,* பெ.(n.) ***கண்ணூறு*** பார்க்க; see *kaṉṉūṟu.* போக்கும் பொருளாற் கண்மிச்சில் போக்கி.

*[கண் + மிச்சில். மிச்சில் = எச்சில்.]*

**கண்மின்னு-தல்** *kaṉ-miṉṉu-,*11 செ.கு.வி. (v.i.) ***கண்பொறிதட்டு (வின்.)*** பார்க்க ; see *kaṉ-poṟitaṭṭu*

*[கண் + மின்னு.]*

**கண்முகப்பு** *kaṉ-mugappu,*பெ.(n.) நேரெதிர் பார்வைப்படுமிடம்; space to which the power of vision extends. *"நங்கண்முகப்பேமாவேறிச் செல்கின்ற மன்னவரும்" (திவ்.இயற். 2 : 69).*

*[கண் + முகப்பு.]*

**கண்முகிழ்[1]-த்தல்** *kaṉ-mugiḻ-,*4. செ.கு.வி.(v.i.) 1. கண்மூடுதல்; to shut the eyes.*"திசையானை கண்கள் முகிழா வொடுங்க" (கம்பரா. நாகபா. 244.).* 2. தூங்குதல்; to goto sleep.

*[கண் + முகிழ்.]*

**கண்முகிழ்**[2] *kaṉ-mukiḻ,*பெ.(n.) இமை; eye lid. *"கண்முகிழ் திறந்தால்" (வெங்கைக்கோ.218).*

*[கண் + முகிழ்.]*

**கண்முனை** *kaṉmuṉai,* பெ.(n.) 1. கடைக்கண்; the outer corner of the eye. 2. பார்வை படுமிடம்; space to which the power of vision extends

ம. கண்முன; க. கண்கடெ, கங்டெ

*[கண் + முனை.]*

**கண்மூக்கி** *kaṉ-mūkki,*பெ.(n.) எறும்பு (நாமதீப.); ant.

*[கண் + மூக்கி மூக்கு → மூக்கி கண்ணையே மூக்காய்ப் பயன்படுத்துவது. ஒ.நோ கட்செவி]*

**கண்மூடி**[1] *kaṉ-mūḍi,* பெ.(n.) 1. குருடு (யாழ். அக.); blind person. கண்மூடிக்குக் கைக்கோல் கொடு (உ.வ.); 2. தூக்க மருந்து; a drug inducing sleep narcotic

*[கண் + மூடி.]*

**கண்மூடி**[2] *kaṉmūḍi,*பெ.(n.) 1. ஆராயாது செய்பவன் one who lacks foresight. 2. பிறர் சொல் கேளாதவன் one who turns a deaf ear to other's advice. 3. அறிவிலி; one who lacks mental perception. 4. கவனமில்லாதவன்; lit., one who has his eyes shut, fig., one who is lacking in mental perception, discernment or foresight; inconsiderate, heedless, reckless person.

து. கண்ணு முச்சொல; பட. கண்ணு முச்சி.

*[கண் + மூடு + இ.]*

**கண்மூடித்தனம்** *kaṉ-mūḍi-t-taṉam*, பெ.(n.) மூடப் பழக்கவழக்கங்கள் stupid habits. கண் மூடித் தனமாய் நடந்து கொள்ளாதே (உ.வ.).

*[கண் + மூடி + தனம்.]*

**கண்மூடு-தல்** *kaṉ-mūḍu-*, 5 செ.கு.வி.(v.i.) 1. இமை குவித்தல். to close the eyelids *"கண்மூடி மௌனியாகி"* (தாயு. சச்சிதா. 5). 2. தூங்குதல் ; to sleep 3. சாதல்; to die, an euphemism

*[கண் + மூடு.]*

க. கண்முச்சு கண்ணுமுச்சு; து. கண்ணாட; பட. கண்முச்சு.

மக்கள் பிறப்பு கண்விழிப்பும், இறப்பு கண்ணடைப்பும் போன்றது. வாழ்க்கை முழுவதும் ஒருபகல் நடவடிக்கை போன்றதே. பெற்றோர் தம் பிள்ளைகளைத் தம் கண்ணுள்ள போதே கரையேற்ற வேண்டுமென்று சொல்வது வழக்கம். பகல் முடிந்து இரவு வந்தபின் கண்மூடித் தூங்குவது போல, வாழ்க்கை முடிந்தபோதும் மக்கள் தம் கண்மூடி அழியாத் துயில் கொள்வர் [சொல். கட் 9.].

**கண்மூலம்** *kaṉmūlam*, பெ.(n.) கண்ணோய் வகை; an affliction in the eye.

*[கண் + மூலம்.]*

**கண்மை**[1] *kaṉ-mai*, பெ.(n.) கண்ணுக்கிடும் மை; collyrium.

ம. கண்மசி; பட. கண்மை.

*[கண் + மை.]*

**கண்மை**[2] *kaṉ-mai*, பெ.(n.) 1. கண்ணோட்டம் (பிங்.); gracious look, favour, sympathy, kindliness. 2. காட்சி; view, scenery. *"கண்மையிந்நகர்" (கம்பரா. ஒற்றுக்.51).*

ஒ.நோ-பெண்மை

*[கண் + மை மை.-பெயரீறு.]*

**கண்ரெப்பை** *kaṉ-reppai*, பெ (n.) ***கண்ணிறப்பை*** பார்க்க; see *kaṉṉiṟappai*.

க. கண்ணுரெப்பெ.; தெ. கனுரெப்பெ

*[கண் + இறப்பை. கண்ணிறப்பை - கண்ரெப்பை (கொ.வ.).]*

**கண்வட்டக்கள்ளன்** *kaṉvaṭṭa-kaḷḷaṉ*, பெ.(n.) கள்ளநாணய மடிப்பவன், (ஈடு. 1, 9, 8, ஜீ); counterfeiter of coins.

*[கண் + வட்டம் + கள்ளன். கண்வட்டம் = நாணயம் துளைப்பொற்காசு.]*

**கண்வட்டம்**[1] *kaṉ-vaṭṭam*, பெ.(n.) 1. பார்வைக்குட் பட்ட இடம்; space circle to which the power of vision extends. *"தங்கள் கண்வட்டத்திலே உண்டுடுத்துத்திரிகிற" (ஈடு 3, 5, 2).*

*[கண் + வட்டம்.]*

**கண்வட்டம்**[2] *kaṉvaṭṭam*, பெ.(n.) 1. துளையிட்ட பொற்காசு; a gold coin with a hole 2. நாணயச்சாலை; mint. கண்வட்டக்கள்ளன் (ஈடு)

ம.கண்வட்டம். க.கண் பொல

*[கண் + வட்டம்.]*

**கண்வரி** *kaṉ-vari*, பெ.(n.) வெள்விழியின் செவ்வரி (வின்.); red streaks in the white of the eye.

*[கண் + வரி.]*

**கண்வருத்தம்** *kaṉvarutam*, பெ.(n) கண்நோய்; eye disease (யாழ்ப்.)

*[கண் + வருத்தம்.]*

**கண்வலி** *kaṉ-vali*, பெ.(n.) ***கண்ணோவு*** பார்க்க; see *kaṉ-ṉōvu*. அவன்கண்வலியால் அவதியுறுகிறான் (உ.வ.).

க. கண்ணுரி

*[கண் + வலி.]*

**கண்வலிப்பூ**[1] *kaṉ-vali-p-pū*, பெ.(n.) நந்தியாவட்டை; east indian rosebay.

*[கண் + வலி+பூ.]*

**கண்வலிப்பூ**[2] *kaṉvali-p-pū*, பெ.(n.) காந்தட் பூ malabar glory lily.

*[கண் + வலி + பூ. வலி. = ஈர்த்தல், கண்ணை ஈர்க்கும் வண்ணத்தில் அமைந்துள்ளமையால் காந்தளும் கண்வலிப்பூ எனப்பட்டது.]*

**கண்வலிபோக்கி** *kaṉvalipōkki*, பெ.(n.) நந்தியா வட்டைப்பூ; East Indian rose bay.

*[கண் + வலி + போக்கி. போக்கு –போக்கி இ = வினை முதல் குறித்து வந்தது நந்தியாவட்டைப்பூ கண்வலிக்கு மருந்தாய் அமைவதால் இப்பெயர் பெற்றது.]*

**கண்வழுக்கு—தல்** *kaṇ-vaḻukku*, 7 செ.கு.வி. (v.i.) கண்கூசுதல்; to be dazzled. as the eye. *"கண்வழுக்கு சுடர்மாலை" (கூர்மபு. திருக்கல்.18.)*

*[கண் + வழுக்கு.]*

**கண்வளர்[1]—த்தல்** *kaṇvaḷar-,*5 செ.கு.வி. (v.i.) வலை பின்னுதல் to knit a net.

**மறுவ.** வலைக் கோலுதல், வலை வளர்த்தல் (மீனவ.).

*[கண் + வளர்த்தல்.]*

**கண்வளர்[2]—தல்** *kaṇ-vaḷar-,*4 செ.கு.வி. (v.i.) 1. தூங்குதல் to sleep *"இளந்தளிர் மேற் கண்வளர்ந்த வீசன்தன்னை"* (திவ். பெரியதி. 2, 10,1.) 2. குவிதல்;to close, as the petals of a flower *"கருங்குவளை கண்வளருங் கழனி"* (தேவா. 621, 1.).

*[கண் + வளர்.]*

**கண்வளையம்** *kaṇ-vaḷaiyam,*பெ.(n.) மத்தளத்தின் கண்ணைச் சுற்றியுள்ள வட்டம். (பரத. ஒழிபி.12. உரை.); dark ring around the beaten centre of a drum-head.

*[கண் + வளையம்.]*

**கண்வளையமிடு—தல்** *kaṇvaḷayamiḍu-*, 20 செ.கு.வி. (vi) கண்புதைவால் தோற்சுருக்கம் உண்டாதல். to develop shirinking around the eye. கண்வளைய மிட்டுள்ளது (உ.வ.).

*[கண் + வளையம் + இடல்.]*

**கண்வாங்கு[1]—தல்** *kaṇ-vāṅgu-,* 7 செ.கு.வி. (v.i.) கண்ணைக் கவர்தல் to attract attention; to be inviting *"காந்தள் கடிகமழுங் கண்வாங் கிருஞ்சிலம்பில்" (கலித். 39, 15).*

*[கண் + வாங்கு.]*

**கண்வாங்கு[2]—தல்** *kaṇvāṅgu,* 5 செ.குன்றா.வி. (v.t.) 1. நோக்கம் ஒழிதல்; to withdraw attention; to cease to take notice. (v.t.) 2. தூர்வை எடுத்தல்; to clean out a well, *"இதொரு பழங்கிணறு கண்வாங்கிறதென்" (ஈடு. 6, 8, 1.)*

*[கண் + வாங்கு.]*

**கண்வாட்டி** *kaṇvāṭṭi,*பெ.(n.) மனைவி (யாழ். அக.); wife.

*[கண்ணாட்டி – கண்வாட்டி (கொ.வ.).]*

**கண்வாய்** *kaṇvāy,* பெ.(n.) நீர்த்தேக்கம்; tank.

*[கண் + வாய். கண் – சிறுவாய்க்கால். -வாய் – வாயில்.]*

சிறு வாய்க்கால் வழியாக நீர் நிரம்பும் நீர்த்தேக்கம். இதை, கம்மாய் என்பதும் கண்மாய் என்பதும் கொச்சைவழக்கு.

**கண்வாரு—தல்** *kaṇ-vāru-,* 5 செ.குன்றாவி (v.t.) ***கண்வாங்கு*** பார்க்க; see *kaṇvāṅgu. "பழங்கிணறு கண்வாருகிறதென்"* (திவ். திருமாலை. 36. வ்யா.120.)

*[கண் + வார் (வாரு).]*

**கண்வாளன்[1]** *kaṇvāḷaṉ,* பெ.(n.) ***கம்மாளன்*** பார்க்க (யாழ். அக.); see *kammāḷaṉ.*

*[கம்மாளன் – கண்வாளன். (கொ.வ)]*

**கண்வாளன்[2]** *kaṇvāḷaṉ,* பெ.(n.) ***கண்ணாளன்*** பார்க்க; (யாழ். அக.); see *kaṇṇāḷaṉ.*

*[கண் + ஆளன் – கண்ணாளன் – கண்வாளன் (கொ.வ.).]*

**கண்சட்டி** *kaṇcaṭṭi,* பெ.(n.) துளைவைத்துச் செய்த சட்டி; a pot made wi th holes perforated in it.

**மறுவ.** பொத்தல்சட்டி.கண் + சட்டி

**கண்விட்டசட்டி** *kaṇviṭṭacaṭṭi,* பெ.(n.) ஓட்டைச்சட்டி; broken pot .

*[கண் + விட்ட + சட்டி, கண்விடல் – துளைபடல். உடைதல்.]*

**கண்விட்டாடல்** *kaṇviṭṭāḍal,* தெ.பெ. (vbl.n.) மாழை உருகும் போது ஒளிவிடல்; a term denoting the state of complete fusion of metals etc; shining with brilliance as metals do when heated to a higher temparature after fusion (சா. அக.).

*[கண் + விட்டு + ஆடல்.]*

**கண்விடு[1]—த்தல்** *kaṇ-viḍu-,*18 செ.குன்றாவி (v.t.) 1. விழித்துப்பார்த்தல்; to open the eyes. *"கடவுண் மால்வரை கண்விடுத் தன்ன"* (சிறுபாண். 205). 2. ***கண்திற[1]*** பார்க்க; see *kaṇḍiṟa. "கவ்வியற் நோக்கினாற் கண்விடுத்து" (சீவக. 180.).*

க. கண்பிடு, கண்ணுபிடு.

[கண் + விடு.]

**கண்விடு²-தல்** *kaṉ-viḍu-,*20 செ.கு.வி. (v.i.) 1. ஊசி முதலியவற்றின் காது ஒடிதல் (வின்.); to break, as the eye of a needle. 2. வெண்ணெய் திரளுதல், (வின்.). to form, as butter while churning. 3. வெள்ளிமுதலியன உருகுதல் (யாழ். அக.); to melt, as silver 4. துளையுண்டாதல்; to form, as opening. in an ulcer. புடைவை கண்விட்டுப் போயிற்று (உ.வ.).

[கண் + விடு.]

**கண்விடு³—தல்** *kaṉviḍu-,* 7 செ.குன்றாவி. (v.t.) அறுந்த வலையைச் செப்பம் செய்தல்; to reknit a net.

[கண் + விடு.]

**கண்விதிர்ப்பு** *kaṉvidirppu,* பெ.(n.) கண்நடுக்கம்; throb in the eyes;

[கண் + விதிர்ப்பு.]

**கண்விடுதூம்பு** *kaṉ-viḍu-tūmbu,*பெ.(n.) தோற் கருவிவகை (சிலப். 3,27, உரை); kind of drum.

[கண் + விடு + தூம்பு.]

**கண்விதுப்பழி—தல்** *kaṉ-vituppaḻi-,* 2 செ.கு.வி.(v.i.) காணும் வேட்கை யால் வருந்துதல்; (erot.) to blur, as the eyes of a maiden eagerly longing to see her lover; to be distressed in mind as a consequence of such wistful gazing; *"கண் விழுதுபழீதல்" (குறள் அதி. 118).*

[கண் + விதுப்பு + அழி. விதுப்பு = வேட்கை. அழிதல் = வருந்துதல். கண்]

**கண்விதுப்பு** *kaṉ-vituppu,* பெ.(n.) காணும் வேட்கைமிகுதல், கண்கள் காண்டற்கு விரைகை; (குறள். அதி.118). longing of the eyes to see.

[கண் + விதுப்பு (வேட்கை).]

**கண்விழி¹—த்தல்** *kaṉ-viḻi-,* 4 செ.கு.வி. (v.i.)1. கண் திறத்தல்; to open the eyes. 2. தூங்காதிருத்தல்; to keep awake. சிவராத் திரியில் கண்விழிக்க வேண்டும் (உ.வ.). 3. உறக்கம் நீங்குதல்; to awake from sleep. *"துயில்கண் விழித்தோன்றோளிற் காணான்".* (சிலப். 16,195). 4. தோன்றுதல்; to dawn, appear. *"கதிர்க்கடவுள் கண்விழித்த காலை"* (சீவக.1943), 5. வாடினபயிர் மீண்டுஞ்செழித்தல் (வின்.); to revive as withered plants after watering.

தெ. கனுவிச்சு; து. கண்ணுபே புனி.

[கண் + விழி.]

**கண்விழி²** *kaṉ-viḻi,* பெ.(n.) 1. கண்மணி; pupil of the eye. 2. கண்; the eye.

ம. கண்மிழி; தெ. கனுபாப

[கண் + விழி.]

**கண்விழிப்பு** *kaṉ-viḻippu,*பெ.(n.) 1.விழித்திருக்கை; wakefulness. *"இந்த சிவனிராவுக்கு கண்விழிப்புண்டா?" (உ.வ.)* 2. எச்சரிக்கை; watchfulness, caution.

[கண் + விழிப்பு.]

**கண்விழுந்த சட்டி¹** *kaṉviḻundacaṭṭi,* பெ.(n.) **கண்சட்டி** பார்க்க, see *kaṉcaṭṭi.*

[கண் + விழுந்த + சட்டி.]

**கண்விளக்கம்** *kaṉviḷakkam,*பெ.(n.) பார்வைத் தெளிவு; clear vision.

[கண் + விளக்கம்.]

**கண்விளி—த்தல்** *kaṉ-viḷi-,*4 செ.குன்றாவி. (v.t.) அழைத்தல்; to summon, invite. *"கூற்றுக் கண்விளிக்கும் குருதி வேட்கை" (மணி. 1, 30.);*

[கண் + விளி – கண்விளி = கண்ணாற் குறிப்பு காட்டி அழைத்தல் நாளடைவில் பொதுவாக அழைத்தற்குறிய சொல்லாயிற்று.]

**கண்விளிம்பு** *kaṉ-viḷimbu,*பெ.(n.) இமை (நாமதீப.); eye-lid.

[கண் + விளிம்பு.]

**கண்விறகு** *kaṉ-viṟagu,* பெ.(n.) சிறுவிறகு (தஞ்சை); twigs.

[குள்(கள்) → கண் = சிறியது. கண்+விறகு. (முதல்தாய்மொழி 128.)]

**கண்வினை** *kaṉviṉai,* பெ.(n.) நுண்கலைத் தொழில் நுட்பத் தொழில் ; artistic work

மறுவ. கண்ணுத்தொழில், கண்ணுள்

[கண்+வினை. கண்=சிறிய, நுண்ணிய.]

**கண்வினைஞன்** *kaṉviṉaiñaṉ*, பெ.(n.) **கண் வினையாளன்** பார்க்க; see *kaṉ-viṉai-y-āḷaṉ*

*[கண் + வினைஞன். குள் → கள் → கண் = சிறிய, நுண்ணிய கண்வினை = நுட்பத்தொழில். தஞ்சைமாவட்டத்தார் சிறுவிறகைக் கண்விறகு என்பர். நுட்பமான செய்திறனை 'கண்ணுள் வினை' என்பர்.]*

**கண்வினையாளன்** *kaṉ-vinai-y-āḷaṉ*, பெ.(n.) கம்மாளன் (வின்.); smith, artisan.

*[கண்வினை + ஆளன். கண்வினை = கண்ணுள்பணி, நுட்பத் தொழில்.]*

**கண்வெளி—த்தல்** *kaṉ-veḷi-*, 4 செ.கு.வி.(v.i.) நோய் நீங்கிப்பார்வை தெளிவாதல் (வின்.); to have the power of vision restored after disease.

*[கண் + வெளித்தல்.]*

**கண்வெறிப்பு** *kaṉ-veṟippu*, பெ.(n.) அச்சத்தாலோ, வியப்பினாலோ கண்மருளுதல் (சீவக.2397, உரை); staring, as from fear or wonder.

*[கண் + வெறிப்பு.]*

**கண்வேக்காடு** *kaṉvēkkāḍu*, பெ.(n.) கண்சூடு; inflammation of the eyes (சா. அக.).

*[கண் + வேக்காடு.]*

**கண்வேற்றுமை** *kaṉvēṟṟumai*, பெ.(n.) ஏழாம் வேற்றுமை; locative case

*[கண் + வேற்றுமை.]*

'கண்' ஏழாம் வேற்றுமை உருபாகும். உருபின் பெயரால் வேற்றுமையைக் குறிப்பதை,

"அவைதாம் பெயர் ஐ ஒடு கு
இன் அது கண் விளி என்னும் ஈற்ற"

என்னும் தொல்காப்பிய [தொல். சொல். 65] நூற்பாவால் அறியலாம். வீட்டின்கண், ஊரின் கண் என வருவனவெல்லாம் கண்வேற்றுமையாம்.

**கண்வைத்தியசாலை** *kaṉ-vaittiya-šālai*, பெ.(n.) **கண்மருத்துவமனை** பார்க்க; see *kaṉmaruttuva maṉai*.

*[கன் + வ.வைத்தியம்+சாலை.]*

**கண்வைத்தியம்** *kaṉ-vaittiyam*, பெ.(n.) **கண் மருத்துவம்** பார்க்க; see *kaṉ-maruttuvam*.

ம. கண்ணுவைத்ய

*[கண் + வைத்தியம்.]*

**கண்வை[1]—த்தல்** *kaṉvai-*, 4 செ.கு.வி.(v.i.) 1. அருள் செய்தல், to be benignant, gracious, kind. *"கண் வைத்தமரரை யோம்பிய கந்தன்"* (தணிகைப்4. சீவரி. 65), 2. பார்த்தல்; to see. *"திசையில் கண் வைக்குந் தொறும்" (கம்பரா. பிணி. 44.)*, 3. பெறுதற்கு ஆசை வைத்தல்; to look wishfully, to gaze upon amourously அவன் அதனிடத்துக் கண் வைத்திருக்கிறான் (உ.வ.).

க., பட. கண்ணு பீ; ம. கண்ணு வைக்குக.

*[கண் + வை.]*

**கண்வை[2]—த்தல்** *kaṉvai-*, 4 செ.கு.வி.(v.i.) கண்காணித்தல், நோட்டமிடுதல்: to keep an eye, watch. அவன் போக்குச்சரியில்லை, அவன் மேல் ஒரு கண்வை (உ.வ.).

தெ. கனிபெட்டு, கனுபெட்டு.

*[கண் + வை. காண் – கண்.]*

**கண்வை[3]—த்தல்** *kaṉvai*, 4 செ.குன்றாவி.(v.t.) மாற்றுக்கண் பொருத்துதல்; to fix an alternative eye.

*[கண் + வை.]*

**கண்வை[4]—த்தல்** *kaṉvai*, 4 செ.கு.வி.(v.i.) கண்ணூறு படுதல்; to cast the evil eye. அவன் கண்வைத்தால் அழிவு (உ.வ.).

ம. கண்ண வைக்குக; க., பட. கண்ணுபீ.

*[கண் + வை. கண்—பார்வை, அழுக்காறுடன் பார்த்தல்.]*

**கண்வை[5]—த்தல்** *kaṉvai-*, 4 செ.கு.வி(v.i.) புண்ணில் துளை விழுதல்; to form as an opening in an ulcer.

*[கண் + வை. கண்—துளை.]*

**கண—த்தல்** *kaṉa-*, 4 செ.குன்றாவி.(v.i.) 1. கூடுதல்; to come together, 2. பொருந்துதல்; to agree, consent. 3. ஒத்தல்; to be similer; குரங்கு கணக்க ஓடுகிறான் (நெல்லை வழக்கு)

*[கள் → களம் (கூட்டம்) → கணம், கூட்டு = ஒப்புமை.]*

மடங்கல் கூட்டற எழுந்து எரி வெகுளியான் [கம்பரா. யுத்த.அதிகாய 1.] கெழுது என்பது ஓர்

உவமையுருபு [தொல்.பொருள் 286 உரை] குழு-கெழு-கேழ் = ஒப்பு. "கேழே வரையு மில்லோன் [திருக்கோவை 269]. கொள்ளுதல்=ஒத்தல். "வண்டினம் யாழ் கொண்ட கொளை" [பரிபா. 11:125]. இனம் இனத்தோடே வெள்ளாடு தன்னோடே என்னும் முறைமை பற்றிக் கூடுதற்கருத்தில் ஒப்புமைக் கருத்தும் பிறந்தது [வேர்ச். கட். 140.].

**கணக்கக்காணி** *kaṇakka-k-kāṇi,* பெ.(n.) ஊர்க் கணக்கருக்கு விடும் மானிய நிலம் (S.I.I.I,78); land granted as inam to village karnams.

*[கணக்கன் + காணி.]*

**கணக்கதிகாரம்** *kaṇakkādigāram,*பெ.(n.) காரியார் இயற்றிய ஒரு கணக்குநூல்; a treatise on arithmetic by kāriyār.

*[கணக்கு + அதிகாரம்.]*

**கணக்கப்பண்டாரி** *kaṇakkapaṇḍāri,* பெ.(n.) கணக்கிடும் கருவூல அதிகாரி; accountant. இவை கணக்கப்பண்டாரி வேளாண் குணபாலன் எழுத்து (S.I.I.Vol.14 Insc 74 S.No.5.).

*[கணக்கு + பண்டாரி,* பண்டாரம் – பண்டாரி. பண்டாரம் = வைப்பறை, கருவூலம்.*]*

**கணக்கப்பிள்ளை** *kaṇakka-p-piḷḷai,* பெ.(n.) ***கணக்குப் பிள்ளை*** பார்க்க; *kaṇakkup-p-iḷḷai.*

ம. கணக்கப்பிள்ள

த. கணக்கப்பிள்ளை > E con[illegible]icopoly.

*[கணக்கு + அ + பிள்ளை.]*

**கணக்கப்பேறு** *kaṇakka-p-pēṟu,*பெ.(n.) 1. கணக்கர் செலுத்து வரி; tax paid by kaṇakkar. 2. பொருளாகப் பெறும் வரி; a tax in kind (S.I.I.iv.195).

*[கணக்கன் + பேறு →பெறு → பேறு.]*

வரியாகச் செலுத்தப்படுவது விளை பொருளான நெல்லாக இருந் தால் நெல்லாயம் கணக்கப்பேறு எனப்பட்டது.

**கணக்கம்பாளையம்** *kaṇakkampāḷaiyam,*பெ.(n.) கோவை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Coimbatore district.

*[கணக்கன் + பாளையம் – கணக்கம் பாளையம்.]*

**கணக்கமேரை** *kaṇakka-mērai,*பெ.(n.) ஊர் கணக்கனுக்குச் சம்பளத்துக்கு ஈடாகக் கொடுக்கும் தவசம் (W.G.); fee in grain, given to the village accountant.

*[கணக்கன் + மேரை.]*

கரணத்தானுக்குச் சம்பளம், ஒரு நாளைக்கு ஒரு நாழி நெல்லும், அதனோடு ஓராண்டிற்கு ஏழு கழஞ்சு பொன்னும் இரு கூறையுமாகும். அவனுக்குக் கொடுக்கப்படும் நெல் கணக்கமேரை எனப்படும் [பழ.தமி.ப. 41].

**கணக்கர்** *kaṇakkar,* பெ.(n.) ***கணக்கன்***[1] பார்க்க; see *kaṇakkaṉ.*

*[கணக்கு + அர்.]*

**கணக்கல்மேடு** *kaṇakkalmēḍu,*பெ.(n.) விழுப்புரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Viluppuram district.

*[குண + கல் + மேடு – குணக்கல் மேடு → கணக்கல் மேடு → குணக்கல் : கீழ்க்கல்.]*

**கணக்கவரி** *kaṇkkavari,* பெ.(n.) கணக்கனுக்காகக் கொடுக்கப்படும் பொருள்;tax levied for kanakkan; பாடகாவில் கண்காணி கணக்கவரி (S.I.I. Vol.1. insc.64, S.No.12-13).

*[கணக்கன் + வரி.]*

**கணக்கழிவு** *kaṇakkaḻivu,* பெ.(n.) முறைகேடு; injustice. *"கையர்செயுங் கணக்கழிவு" (திருவையா. பு. சைவச்.9).*

*[கணக்கு + அழிவு. இங்கு கணக்கு என்னும் சொல் ஒழுங்கு முறைமை, நேர்மை எனப் பொருள்பட்டது.]*

**கணக்கன்** *kaṇakkaṉ,*பெ.(n.) 1. கணக்கெழுது வோன் (திருவாலவா.30,22); accountant, book-keeper 2.ஊர்கணக் கெழுதுவோன்; village accountant. 3. ஓர் இனம் (இலக்.வி.52, உரை); a certain caste. 4. கணக்கில் வல்லவன் (வின்.); arithmetician. 5. அறிவியல், சமயம், கோட்பாடு ஆகியவற்றில் வல்லவன்; one who is well versed in the philosophy of religion, or any science. *"சமயக் கணக்கர்" (மணி.27:2).* 6. அறிவன் (புதன்) கோள் (திவா.); the planet Mercury. *'கணக்கன் கணக்கு அறிவான்; தன் கணக்கைத் தானறியான்' (பழ.).* 7. ஆசிரியன்; teacher.

ம. கணக்கன்

*[கள் → கள → கண → கனக்கன்.]*

கள்ளுதல் = கூடுதல், பொருந்துதல், ஒத்தல். கள்ள=போல. "கள்ளக் கடுப்ப ஆங்கவை எனாஅ" [தொல். 1232] கள் →கள →கண. கணத்தல் = கூடுதல், ஒத்தல். கள் → களம் = கூட்டம், அவை. களம் → கணம் = கூட்டம். கணவன் = மனைவியோடு கூடுபவன். கண → கணக்கு = கூட்டு, மொத்த அளவு. கணக்கு என்னுஞ்சொல், முதன்முதற் கூட்டற் கணக்கையே குறித்தது. 'அதற்குக் கணக்கில்லை, கணக்கு வழக்கில்லாமல், ,அது கணக்கன்று' என்பனவற்றில் கணக்கு என்பது அளவு அல்லது கூட்டு என்றே பொருள் படுதல் காண்க. கணக்க = போல. 'குரங்கு கணக்க ஓடுகிறான்' என்னும் உலக வழக்கை நோக்குக. அந்தக்கணக்கில் [கணக்காய்] = அதைப்போல. கணக்கு → கணக்கன் = கணக்குப் பார்ப்பவன், கணக்குத் தொழிற்குலத்தான். வடவர்காட்டும் gan என்னும் மூலம் இதற்குரி யதன்று [வ.மொ.வ. 106].

**த.** கணக்கன்>**Skt.** gaṇika.

**கணக்கன்காடு** *kaṇakkaṉ-kāḍu,* பெ.(n.) புதுக் கோட்டை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Pudukkottai district.

*[கணக்கன் + காடு. காடு = காடழித்துச் செய்த நிலம்.]*

**கணக்கன்குப்பம்** *kaṇakkaṉ-kuppam,* பெ.(n.) விழுப்புரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Viluppuram district.

*[கணக்கன் + குப்பம்.]*

**கணக்கன்கோடாலி** *kaṇakkaṉ-kōḍāli,* பெ.(n.) கணக்கில் வல்லவன் (நாஞ்); expert in accounts.

*[கணக்கன் + கோடாலி.]*

**கணக்காக்கு-தல்** *kaṇakkākku-,* 5 செ.குன்றாவி. (v.t.) ***கணக்குபோடு-தல்*** பார்க்க; see *kaṇakkupōḍu.*

**ம.** கணக்காக்கு. **பட.** கணக்காக்கு

*[கணக்கு + ஆக்கு.]*

**கணக்காக** *kaṇakkāga;* கு.வி.எ. (adv.) 1.(கால) அளவில்; (time) together. பேருந்துக்கு மணிக் கணக்காகக் காத்திருந்தேன் (உ.வ). 2. சரியான; exactly. கணக்காக ஒரு மணிக்குச் சாப்பிட்டு விடுவான் (உ.வ). 3. (ஒன்றின்) தன்மையில்; after the manner of, so, like. முனிவர் கணக்காக முடிவளர்க் கிறான் (உ.வ.).

**மறுவ.** கணக்காய்

*[கணக்கு + ஆக. ஆகு + அ(வி.எ.ஈறு)– ஆக.]*

**கணக்காய்** *kaṇakkāy,* கு.வி.எ.(adv) ***கணக்காக*** பார்க்க; see *kaṇakkāga.*

*[கணக்கு + ஆய்.]*

**கணக்காய்இரு[1]-த்தல்** *kaṇakkāy-iru,* 3 செ.கு.வி. (v.i.) திட்டமிட்டுச்செய்தல்; to be with calculative. கணக்காய் இருந்து கச்சிதமாய்ப்பிழை (உ.வ).

*[கணக்கு + ஆய் + இரு.]*

**கணக்காய்இரு[2]-த்தல்** *kaṇakkāy-iru,* 3 செ.கு.வி. (v.i.) திட்டமிட்டுச்செய்தல்; to be with calculative. கணக்காய் இருந்து கச்சிதமாய்ப்பிழை (உ.வ).

*[கணக்கு + ஆய் + இரு.]*

**கணக்காய்ச்சல்** *kaṇa-k-kāyccal,* பெ.(n.) ***கணைச் சூடு*** பார்க்க; see *kaṇai-c-cūḍu.*

*[கணை + காய்ச்சல்.]*

**கணக்காய்வாளர்** *kaṇakkāyvāḷar,* பெ.(n.) கணக்கைச் சரிபார்க்கும் அதிகாரி; auditor.

*[கணக்கு + ஆய்வாளர்.]*

**கணக்காயர்** *kaṇakkāyar,* பெ.(n.) 1. பயிற்று விப்போர்; teachers, instructors. *"கணக்காயர் பாடத்தாற் பெற்றதாம் பேதையோர் சூத்திரம்" (நாலடி.314).* 2. ***கணக்கன்*** பார்க்க; see *kaṇakkaṉ;* ***கணக்காயன்*** பார்க்க; see *kaṇak-k-āyaṉ.*

*[கணக்கு + ஐயர். ஐயர்– ஆயர்.]*

**கணக்காயன்** *kaṇakkāyaṉ,* பெ.(n.) 1. ஆசிரியன்; teacher. 2. புலவர்; poet.

*[கணக்கு + ஐயன்(ஆயன்). கணக்கு = தமிழ் நெடுங்கணக்கு(தமிழ் எழுத்துகள் 247). கணக்காயன் = தமிழ் எழுத்து கற்பிக்கும் ஆசிரியன்.]*

ஆசிரியன்மார் பழங்காலத்தில் புலவராக இருந்தமை யால் இச்சொல் புலவரையும் குறித்தது.

**கணக்கான** *kaṇakkāṉa,* பெ.எ.(adj.) குறிப்பிட்ட எண்ணிக்கை கொண்ட; in the number of. நூற்றுக் கணக்கான பேர் அங்குக் குழுமி யிருந்தனர் (உ.வ.).

*[கணக்கு + ஆன.]*

**கணக்கிடு–தல்** *kaṇakkiḍu-*, 17 செ.குன்றாவி. (v.t.) 1.அளவிடுதல்; to measure. இவ்வறையின் நீளத்தைக் கணக்கிடு (உ.வ.). 2. எண்ணுதல்; to reckon, to count. “அச்சிட்டப்படிவங்களைக் கணக்கிடு (உ.வ.). 3. மதிப்பிடுதல்; to estimate. அவன் நடத்தையைக் கணக்கிட்டு உறவு கொள் (உ.வ.). 4. கணக்குப்பார்த்தல்; calculate the accounts. நான் தரவேண்டியதைக் கணக்கிட்டுச் சொல் (உ.வ.).

*[கணக்கு + இடு.]*

**கணக்கியல்** *kaṇakkiyal*, பெ.(n.) வணிகவியல் சார்ந்த கணக்குப்பாடம்; accountancy.

*[கணக்கு + இயல்.]*

**கணக்கில்லாமல்** *kaṇakkillāmal*, பெ.எ.(adj.) அதிகப்படியான, மிகுதியான; immensely, exceedingly, very much.

ம. கணக்கா; பட. கணக்கில்லாதெ.

*[கணக்கு + இல்லாமல்.]*

**கணக்கிலக்கை** *kaṇakkilakkai*, பெ.(n.) வரிவகை; a tax (S.I.I. v136).

*[கணக்கு + இலக்கை.]*

**கணக்கிலெடு–த்தல்** *kaṇakkileḍu* -, 4 செ.குன்றாவி. (v.t.) பொருட்டாகக்கொள்ளுதல், மனங் கொள்ளுதல்; to take into account, to consider.குடிகாரன் பேச்சைக் கணக்கிலெடுக் கலாமா? (உ.வ.).

ம. கணக்கிலெடுக்கு க., பட. கணக்குக எத்து.

*[கணக்கு + இல் + எடு.]*

**கணக்கீடு** *kaṇakkīḍu*, பெ.(n.) மதிப்பீடு; valuation equation.துயர்துடைப்பு நிதியை மாவட்ட வாரியாக கணக்கீடு செய்து வழங்கவும் (உ.வ.).

*[கணக்கு + ஈடு.]*

**கணக்கு**[1] *kaṇakku*, பெ.(n.) 1. எண்; number. *“எண்ணெழுத்திகழேல்” (ஆத்திசூடி).* 2. கூட்டல், கழித்தல், பெருக்கல், வகுத்தல் ஆகிய கணித முறைகள்; the four simple rules of arithmetic viz. adding, deducting, multiplying and subtracting. 3.அளவு; limit, count.*“கணக்கிலாத் திருக்கோலம்” (திருவாச.30,4.).* 4. வரவு – செலவுக்குறிப்பு; account book, ledger.*“காவலர் கணக்காய் வகையின் வருந்தி”* (குறுந்.261) 5. கணக்கியல்; mathmatics. 6. திட்டம்; plan proposal. அவன் போட்ட கணக் கொன்று, இவன் போட்ட கணக்கொன்று, இரண்டுமே தவறானவை (உ.வ.).

ம. கணக்கு; க. கணிகெ.

E. calculaton L.calculatio Skt. ganaka

*[குள் – (கூடுதல், சேர்தல்) கள் – கண் – கணக்கு.]*

கூட்டல், கழித்தல், பெருக்கல், வகுத்தல் என்னும் நால்வகைக் கணக்குள், முதலாவது தோன்றியது கூட்டற் கணக்கே. கூடு–கூட்டல். கணத்தல் = கூடுதல். கண – கணக்கு = கூட்டு, கூட்டுத்தொகை, மொத்த அளவு, அளவு, வரம்பு, கூட்டற்கணக்கு, கணக்கு. [வேர்ச்.கட். 141]. கணக்கு என்னுஞ்சொல் முதன்முதற் கூட்டற் கணக்கையே குறித்தது. அதற்குக் கணக்கில்லை, கணக்கு வழக் கில்லாமல், அது கணக்கன்று, என்பவற்றில் கணக்கு என்பது அளவு அல்லது கூட்டு என்றே பொருள் படுதல் காண்க [வ.மொ.வ.106].

வடவர் காட்டும் gan என்னும் மூலம் இதற்குரிய தன்று. “எண்ணும் எழுத்தும் கண ணெத்தகும்” என்னும் வழக்கில் வரும் எண் கணக்கைக் குறிப்பதாகும். இதுவே முந்தியது. பழந்தமிழர் கணக்கு முறை சிற்றிலக்கம், கீழ் வாயிலக்கம், போன்றவற்றை உள்ளடக்கியது. ஒன்று, இரண்டு போன்ற எண்ணுப் பெயர்களும், முக்கால், அரைக்கால், மா,முந்திரி, இருமா, மாகாணி, கீழரை போன்ற கீழ்வாயிலக்க [பின்ன]ச் சொற்களும் மக்களிடையே பெருவழக்கெய்தி இருந்தன.

பண்டமாற்றுக்கும், நிலம் அளப்பதற்கும், தவசம் வாங்கவும், எஞ்சியதைப் பாதுகாக்கவும், படைவீரர்கள் அணிவகுக்கவும் கணக்கறிவு மிகவும் இன்றியமையாதது. மேற்குறிப்பிட்ட துறைகளில் பழந்தமிழர் சிறந்திருந்தமை அவர்களது கணக் கறிவைப் பறை சாற்றுவதாக அமைகிறது.

கூட்டல், கழித்தல், பெருக்கல், பங்கிடல், அடுக்கு [வருக்கம்], அடுக்கு மூலம் [வருக்க மூலம்] கணம் [ஓர் எண்ணை அதனாலேயே இரண்டு முறை பெருக்கல்] கணமூலம் (cube root) ஆகியவற்றை உள்ளடக்கிய எண்கணித [அட்டகணிதம்] த்தை பெரும்பாலும் மனக்கணக்கு முறையிலேயே பயின் றனர்.

**கணக்கு**[2] *kaṇakku*, பெ.(n.) 1. முறைமை; order sequence. *“அசித்தையும் இவனையும் காட்டுகிற*

*கணக்கிலே"* (ஈடு. 3–4.ப்ர). 2. ஒழுங்கான ஏற்பாடு; orderly arrangement, system. அவனது செயல் யாவும் கணக்காக இருக்கும் (உ.வ.). 3. வகை; manner, way. *"புகுவதெக்கணக்கம்மா"* (இரகு.திக்கு.163) 4. தொகை; sum. இத்திங்களின் மளிகைச் செலவின் கணக்கென்ன? (உ.வ.). 5. முடிவு; result, consequence, event 6. சாக்கு; pretext. திருமணத்திற்கு வந்த கணக்கிலே பெண்ணைப் பார்த்துச் சென்றான்(உ.வ.).

*[கள் – கண் – கணக்கு.]*

**கணக்கு**[3] *kaṉakku,* பெ.(n.) 1. எழுத்து; letter,writting *"இங்கு நின்றும் நெடுங்கணக்கு முறைமை"* (தொல்.எழுத்து94 உரை) 2. நூல்; literature. மேற்கணக்கும் கீழ்க்கணக்கும் சங்கம் மருவிய காலத்தவை (உ.வ.).

*[கள் – கண் – கண்ணு (குழித்தல், எழுத்துப்பொறித்தல்)– கணக்கு. கண்ணெழுத்து, கண்ணழுத்தங்கோல் என்னும் சொல்லாட்சிகளை நோக்குக.]*

**கணக்கு**[4] *kaṉakku,* பெ.(n.) 1. வழக்கு; litigation. *"இக்கணக்கிப் படிக்கார் வெல்லுவார்" (திருவாலவா 41.28).* 2. சூழ்ச்சி; strategem, artifrice, expedient. *"கதுமென வேக விடுத்தது நல்ல கணக்கன்றோ" (பிரபோத.24.25)* 3. செயல்; thing, affair, circumstance. எல்லாம் கணக்காய் முடித்திட்டான் (உ.வ.).

*[கன் (சேர்தல், கூட்டுதல்) – கண்ட, (செய்தல்) கணக்கு.]*

**கணக்குகாட்டு–தல்** *kaṉakku-kāṭṭu,* 5 செ.கு.வி. (v.i.) கணக்கொப்புவித்தல்; to render account.

*[கணக்கு + காட்டு.]*

**கணக்குசுமத்து–தல்** *kaṉakku-c-cumattu-,* 5 செ.குன்றாவி. (v.t.) ***கணக்கேற்றுதல்*** பார்க்க; see *kaṉakkēṟṟuthal.*

*[கணக்கு + சுமத்து.]*

**கணக்குச்சுருணை** *kaṉakku-c-curuṇai,* பெ.(n.) கணக்கோலைக்கற்றை; roll or file of acounts on palmyra leaves,

*[கணக்கு + சுருணை.]*

**கணக்குச்சுருள்** *kaṉakku-c-curuḷ,* பெ.(n.) ***கணக்குச்சுருணை*** பார்க்க; see *kaṉakku-c-curuṇai.*

*[கணக்கு + சுருள்.]*

**கணக்குசொல்(லு)–தல்** *kaṉakku-cul-,*13 செ.கு.வி. (v.i.) கணக்கு விளத்தம் சொல்லுதல்; to give details of receipts and disbursements.

ம. கணக்கு பரயுக.

*[கணக்கு + சொல்.]*

**கணக்குதீர்**[1]**–த்தல்** *kaṉakku-tir-,* 4 செ.கு.வி.(v.t.) 1. ஒருமனதாய் அறுதியிட்டு நீக்கி விடுதல்; to dismis totally. கணக்கைத்தீர்த்தல்; to settle account. அவனிடம் நேர்மையில்லை; கணக்கைத் தீர்த்துவிடு (உ.வ.). 2. கொல்லுதல்; to slay, kill. எதிர்த்தவனைக் கணக்குத்தீர்த்துவிட்டான் (உ.வ.).

பட. கணக்கிதீதெ

*[கணக்கு + தீர்.]*

**கணக்குதீர்**[2]**–தல்** *kaṉakku-tir-,*4.செ.கு.வி.(v.i.) 1. கணக்கு முடிதல்; to be closed, as an account. அந்தக் கடையிலிருந்த கணக்குதீர்ந்தது (உ.வ.). 2. வழக்குமுடிதல்; to be made, as a settlement அவனுக்கும் எனக்கும் இருந்த கணக்கு தீர்ந்தது (உ.வ).

ம. கணக்குதீர்க்குக; பட. கணக்கதிருசு.

*[கணக்கு + தீர்.]*

**கணக்குப்படி** *kaṉakku-p-paḍi,* வி.எ.(adv.) வரையறுக்கப்பட்டாங்கு; prescribed limit or formula

*[கணக்கு + படி.]*

**கணக்குப் பதிவியல்** *kaṉakku-p-padiviyal,*பெ.(n.) ***கணக்கியல்*** பார்க்க; see *kanakkiyal*

*[கணக்கு +பதிவு + இயல்.]*

**கணக்குபார்**[1]**–த்தல்** *kaṉakku-pār-,*4. செ.குன்றாவி (v.i.) 1. எண்ணிக்கணக்கிடுதல்; to reckon, calculate. கணக்குப் பார்த்து வை, நாளை பணம் தருகிறேன் (உ.வ.). 2. கருதுதல்; to consider to think. எதையும் கணக்குப் பார்த்துச் செயற்படு (உ.வ.).

ம. கணக்காக்குக; பட.கணக்குநோடு.

*[கணக்கு + பார்.]*

**கணக்குப்பார்**[2]**–த்தல்** *kaṉakku-p-pār,* 4 செ.குன்றாவி. (v.t.) கணக்கு சரிபார்த்தல்; to audit, accounts.

*[கணக்கு + பார்.]*

**கணக்குப்பிள்ளை** *kaṇakku-p-piḷḷai,* பெ.(n.) 1. ஊர்க்கணக்கு எழுதுபவர்; village karnam. 2.காசாளர்; cashier. 3. நிறுவனக்கணக்கர்; bursar 4. எழுத்தர்; writer. 5. முகவர்; agent. 6. கப்பல் எழுத்தர்; shipping clerk. 7. பணம் தண்டுநர்; bill collector. 8. திண்ணைப்பள்ளி ஆசிரியர்; village teacher.

*[கணக்கு + பிள்ளை.]*

கணக்கு, கணக்கன் என்பனவே சாலும். பிள்ளை என்பது இடைக்காலச் சேர்ப்பு. அரண்மனைக் கணக்கெழுதுபவனுக்குத் திருமுகக் கணக்கு என்றும் பெயர் [பழந்தமிழாட்சி.30].

**கணக்குப்பிள்ளை வலசை** *kaṇakku-p-piḷḷai valasai,* பெ.(n.) நெல்லை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Thirunelveli district.

*[கணக்கு + பிள்ளை + வலசை - கணக்குப்பிள்ளை வலசை.]*

**கணக்குபூட்டு-தல்** *kaṇakku-p-pūṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) கணக்கைப் பேரேட்டுக்குக் கொண்டு வருதல் (இ.வ); to post up accounts into the ledger.

**மறுவ.** கணக்குச் சுமத்துதல், கணக்கேற்றுதல்.

*[கணக்கு + பூட்டுதல்.]*

**கணக்குப்போடு-தல்** *kaṇakkuppōḍu,* செ.குன்றாவி.(v.t.) 1. எண்ணுதல், கருதுதல்; to consider, think. 2. கணக்குக் கூட்டுதல்; to estimate, enumerate, regard.

**க.** கணகிசு; **ம.** கணக்காக்குக; **பட.** கணக்காக்கு.

*[கணக்கு + போடு.]*

**கணக்குமானியம்** *kaṇakku-māṉiyam,* பெ.(n.) கணக்கனுக்குக் கொடுக்கும் இறையிலி நிலம்; land granted rent-free to the village accountant for his services, a service in am.

*[கணக்கு + மானியம்.]*

**கணக்குருவம்** *kaṇakkuruvam,* பெ.(n.) அறுதியிட்ட கணக்குக் குறிப்பு(w.g.); written memorandum of an adjusted account.

*[கணக்கு + உருவம்.]*

**கணக்குவழக்கு** *kaṇakku-vaḻakku,* பெ.(n.) 1. முறைமை; justice, order, regulation. *"அடியேன் கண்கொள்வதே கணக்குவழக்காகில்" (தேவா.1110 4)* 2. அளவு; limit,bound *"கணக்கு வழக்கைக் கடந்தவடி" (தேவா.969,3)* 3. பணி; accounts, pecuniary affairs. அவனுடைய கணக்குவழக்கு எப்படி இருக்கிறது? (உ.வ). 4. கொடுக்கல் வாங்கல்; money dealings. எனக்கும் அவனுக்கும் கணக்கு வழக்குண்டு (உ.வ).

**கணக்கு வாய் பாடு** *kaṇakku-vāy-pāḍu-,* பெ. (n.) orthematical table.

*[கணக்கு + வாய் பாடு.]*

**கணக்குவாரியம்** *kaṇakku-vāriyam,* பெ.(n.) ஊரவையின் வரவு செலவுகளை மேற்பார்க்கும் குழு; supervising board on income and expenditure. *"காவிரிப்பாக்கமாகிய அவநிநாராயண சதுர்வேதி மங்கலத்துள் இவ்வாட்டை ஸம்வத்சரவாரிய பெருமக்களும், கணக்கு வாரியப் பெருமக்களும் உள்ளிட்ட மஹாசபை" (தெ.கல்.தொ.3.3:கல்.156)*

*[கணக்கு + வாரியம்.]*

**கணக்குவிடு[1]-தல்** *kaṇakku-viḍu,* 18 செ.குன்றாவி. (v.t.) 1. எண்ணிக்கைத் தவறுதல்; to miss a link in counting. 2. தொடர்பற்றுப்போதல்; to cut as a relationship.

*[கணக்கு + விடு.]*

**கணக்குவிடு[2]-தல்** *kaṇakkuviḍu-,* செ.கு.வி. (v.t.) கதைவிடுதல்; to concoct, fabricate.(யாழ்ப்)

*[கணக்கு + விடு.]*

**கணக்குவை-த்தல்** *kaṇakkuvai,* 4 செ.குன்றாவி (v.t.). 1. ***கணக்கிடுதல்*** பார்க்க; see *kaṇakkiḍu.* 2. கடன் கணக்கு வைத்துக் கொள்ளுதல்; have a credit account.

*[கணக்கு + வை.]*

**கணக்கெடு-த்தல்** *kaṇakkeḍu,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. எண்ணுதல்; to count. மந்தையிலுள்ள மாடுகளை கணக்கெடுத்துவா (உ.வ). 2. மக்கள் தொகை கணக்கெடுத்தல்; to enumerate. வாக்காளர் பட்டியல் கணக்கெடுத்தல் பணி முடிந்த பின்னார்த் தேர்தல் நடத்தப்படும் (உ.வ).

*[கணக்கு + எடு.]*

**கணக்கெடுப்பவர்** *kaṇakkeḍuppavar,* பெ.(n.) மக்கள்தொகை போன்ற கணக்குகளைத் தொகுப்பவர்; enumerator.

*[கணக்கு + எடுப்பவர்.]*

**கணக்கெடுப்பு** *kaṇakkeḍuppu,* தொ.பெ.(vbl.n.) மக்கள் தொகை முதலியவற்றை கணக்கிடுதல்; enumeration. வாக்காளர் பட்டியல் கணக்கெடுப்பு நிறைவடைந்து விட்டது (உ.வ.).

*[கணக்கு + எடுப்பு.]*

**கணக்கேற்று–தல்** *kaṇakkēṟṟu-,*4 செ.கு.வி.(v.t.) 1. கணக்குப்பதிதல்; to charge into an account. நாள்தோறும் வரவு செலவினைக் கணக்கேற்று (உ.வ).

*[கணக்கு + ஏற்று.]*

**கணக்கொதுக்கு–தல்** *kaṇakotukku-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. கணக்குத்தீர்த்தல்; to settle an account. 2. கெடுத்தல்; to ruin, reduce to poverty.

*[கணக்கு + ஒதுக்கு.]*

**கணக்கொப்பி–த்தல்** *kaṇakkoppi-,* 4 செ.குன்றாவி (v.t.) ***கணக்கொப்புவி*** பார்க்க; see *kaṇakkoppuvi-*

*[கணக்கு + ஒப்பி.]*

**கணக்கொப்பிவி–த்தல்** *kaṇakkōppuvi-,*4 பி.வி. (caus.) கணக்குகளைப் பிறர் ஒப்புக் கொள்ள வழங்குதல்; to render account.

*[கணக்கு + ஒப்பு + வி. 'வி' பி.வி.ஈறு.]*

**கணச்கோலை** *kaṇakkōlai,* பெ.(n.) 1. கணக் கெழுதப் பெற்ற ஏடு; palmyra leaf on which accounts are written. 2. கணக்கெழுதற்கேற்ற ஓலை (வின்.); indented palmyra leaves useful for writing accounts.

ம. கணக்கோல

*[கணக்கு + ஓலை.]*

**கணகண**[1]**–த்தல்** *kaṇakaṇa-,* 4.செ.கு.வி.(v.i.) ஒளித்தல்; to sound, rattle, jingle, tinkle. *"மேரு திருக்குளம்பிற் கணகணப்ப" (திவ்.பெரியதி.).*

*[கண + கண (இரட்டைக்கிளவி).]*

க. தணகணசு, தணகண; து. தணிலு, தணங்கு; தெ. தணகண; பட. தணானு (உரையாடு). **Pali;** genṭa. **Turk.**chan.

**கணகண**[2]**–த்தல்** *kaṇa-kaṇa-,*4.செ.கு,வி.(v.i.) உடம்பு சூடுறதல்; to be hot as of the body. காலையிலிருந்து உடம்பு கணகணக்கிறது (உ.வ.).

*[குண் → கண் → கண. கணகண–த்தல் (வே.க.187).]*

**கணகணப்பு** *kaṇa-kaṇappu,*பெ.(n.) இயல்பிற்கு மீறிய உடற்காங்கை; temperature of the body slightly more than normal. காய்ச்சலால் உடல் கணகணப்பாக இருக்கிறது (உ.வ.).

க. கணகணி; **Mar.** kanakana.

*[கண + கணப்பு.]* ஒலிக்குறிப்பின் அடியாகப் பிறந்த பெயர்ச்சொல்.]

**கணகணெனல்** *kaṇa-kaṉ-eṉal,*பெ.(n.) 1. ஒலிக் குறிப்பு; thintinnabulati on. *"உடைமணி கணகணென" (திவ். பெரியாழ்.1,7,7).* 2. மிக்கெரிதற் குறிப்பு; burning fiercely, as fire with a hollow roar. 3. உடம்புச் சூட்டுக் குறிப்பு; feeling feverish.

*[கண + கண + எனல். கணகண – ஒலிக்குறிப்பு இரட்டைக் கிளவி.]*

**கணகம்** *kaṇagam,* பெ.(n.) 27 தேர் யானைகளும், 81 குதிரைகளும், 135 காலாட்களுமுள்ள படைப்பிரிவு (பிங்.); division of an army consisting of 27 chariots and elephants, 81 horses and 135 footmen.

*[கணம்›கணகம்›கணம் = கூட்டம்,திரள். (வே.க.135).]*

**கணகன்** *kaṇagaṉ,*பெ.(n.) 1.கணக்கன்; accountant இவ்வூர்க் கணகன் பஞ்சநதி குமணன் (S.I.I.iii.88). 2. கணியன்; astrologer.

ம. கணக்கன்

*[கணக்கன் – கணகன்]*

**கணகாட்டு** *kaṇa-kāṭṭu,*பெ.(n.) தொல்லை; trouble (ம. அக).

*[கணகம் + ஆட்டு – கணகாட்டு = போராட்டம், தொல்லை.]*

**கணங்கம்** *kaṇaṅgam,* பெ. (n.) சுண்ணாம்பு; lime.

*[கணம் – கணங்கம்.]*

**கணச்சூடு** *kaṇaccūḍu,* பெ.(n.) ***கணைச்சூடு*** பார்க்க; see *kaṇaiccūḍu.*

*[கணைச்சூடு – கணச்சூடு]*

**கணட்டி** *kaṇaṭṭi,* பெ.(n.) குறிப்பிட்ட அளவுடைய வயல் (ம.அக); wet land, field.

*[கள் – களத்தி – கணட்பு.]*

**கணத்தார்** *kaṇattār,* பெ. (n.) ஊரவை மேலாளர்கள் (S.M.P.TJ.569); managers of village affairs.

ம. கணத்தார்.

*[கணம் + அத்து + ஆர். அத்து–சாரியை. ஆர்(ப.பா.ஈறு)]*

**கணத்தாளி** *kaṇatāḷi,* பெ.(n.) கூந்தற்பனை; talipot-palm.

*[ கணம் + தாளி. தாளி = பனை]*

**கணத்தி** *kaṇatti,* பெ.(n.) 1. ஒருவகை வைப்பரிதாரம். (மூ.அ.); a kind prepared arsenic. 2. செங்கடம்பு; small Indian oak. 3. கணைச்சூட் டைத் தணிக்கும் மருந்து; medicine which decsreases the heat of the body.

*[கண+கணத்தி.]*

**கணதரன்** *kaṇa-daraṉ,* பெ.(n.) அருகன்; Arhat, *"கணதர ரேறுசெந் தாமரைகாண்" (திருநூற்.59)*

*[கணம் + தரன். கணம் = கூட்டம், குழு.]*

**கணந்துள்** *kaṇandu!,* பெ.(n.) கூட்டமாக வாழும் பறவை; a kind of bird. *"இருங்கோட் டஞ்சிறை நெடுக்காற் கணந்துள்" (குறுந்.350).*

*[கணம் – கணந்துள் (வே.க.135).]*


கணந்துள்

**கணநாதநாயனார்** *kaṇa-nāda-nāyaṉār,* பெ.(n.) அறுபத்து மூன்று நாயன்மாருள் ஒருவர். (பெரியபு); one among the 63 canonized Saiva saints.

*[கணம் + நாதன் + நாயனார்.]*

**கணநாதன்** *kaṇa-nādaṉ,* பெ.(n.) 1. சிவகணத் தலைவன்; chief of Siva's hosts. நடந்தெதிர்ந்த கணநாதரை யெல்லாம் (கந்தபு.தாரக.123) 2. பிள்ளையார்; ganesa. 3. ***கணநாத நாயனார்*** பார்க்க; see *kananadanayanar. "கடற்காழிக் கணநாத னடியார்க்கு மடியேன்" (தேவா.737,6).*

*[கணம் + நாதன்.]*

**கணப்படுப்பு** *kaṇa-p-paḍuppu,* பெ.(n.) கரியடுப்பு; coal oven.

மறுவ. குமுட்டி, கரியடுப்பு.

*[கணப்பு + அடுப்பு]*

**கணப்பறை**[1] *kaṇa-p-aṟai,* பெ.(n.) வெப்ப அறை; hot room

*[கணப்பு + அறை.]*

**கணப்பறை**[2] *kaṇa-p-paṟai,* பெ.(n.) தோற்கருவி வகை; a kind of drum (சிலப்.3,27 உரை). *"திமிலை குடமுழாத்தக்கை கணப்பறை"*

ம. கணப்பற.

*[கணை + பறை.]*

**கணப்பாண்டு**[1] *kaṇappāṇḍu,* பெ.(n.) குழந்தைகட்கு ஏற்படும் ஒருவகை குருதி சோகை; a childrens' deseases as of anaemia.

*[கணை + பாண்டு. கணை = குழந்தைநோய்.]*

**கணப்பாண்டு**[2] *kaṇa-p-pāṇḍu,* பெ.(n.) 1. குளிர் காயுங்கனல்; fire kindled give warmth to one feels cold. குளிர் அதிகமாக இருப்பதால் கணப்படுப்புப் போடு (உ.வ.). 2. ***கணப்புச்சட்டி*** பார்க்க; see *kaṇappu-c-caṭṭi*

*[கணப்பு + பாண்டு.]*

**கணப்பு**[2] *kaṇappu,* பெ.(n.) உடற்காங்கை, கணகணப்பு, சூடு (யாழ்.அக.); warmth

*[கள் – கள – கண. கணப்பு (செல்வி78.சிலை242]*

**கணப்பு காட்டு—தல்** *kaṇappu-k-kāṭṭu*,5 செ.குன்றாவி. (v.t.) சூடுண்டாக்குதல்; to heat, to make hot.

*[கணப்பு + காட்டு.]*

**கணப்புச்சட்டி** *kaṇappu-c-caṭṭi*, பெ. (n.) 1. நெருப்புச் சட்டி; fire-pot 2. குளிர்காய்தற்குரிய தீப்பெய் கலம்; fire kindled earthen vessel. In which fire is kept to provide heat against cold weather.

மறுவ. கும்பிடுசட்டி

*[கணப்பு + சட்டி.]*

குள்→குண்→குண்பு→கும்பு. ஓ.நோ: சண்பு →சம்பு, கொண்பு→கொம்பு. கும்புதல் = சமைக்கும் உணவு தீய்ந்து போதல், கும்பல் = கும்பல் நாற்றம். கும்பி வீசுகிறது என்னும் வழக்கை நோக்குக. கும்பு→கும்பி = —தழல், 2. சுடுசாம்பல் எரி நரகம் "கும்பி கும்மு நரகர்கள்" [திவ். திருவாசம். 3; 7;8] வடமொழியிலுள்ள கும்பீ என்னுஞ்சொல், கும்பத்தையன்றி நரகத்தைக் குறிக்காது. ஆதலால் கலத்திற் சமைத்தல் அல்லது கலத்தைச்சுடுதல் என்று பொருள் படும் 'கும்பீபாக' என்ற தொடர்ச்சொல்லை கும்பி [நரகம்] என்னும் சொற்கு மூலமாகச் செ.அக. காட்டியிருப்பது தவறு.தீயோர்க்குத் தீயுழி [நரகம்]. கலஞ்சுடு சுள்ளையும் சுடுகலமும் போன்றிருக்கிறதாம்!

கும்பியிடுசட்டி = கும்பிடுசட்டி 1. கணப்புச் சட்டி 2. தட்டார் நெருப்புச் சட்டி. தெ. கும்பட்டி, க. கும்பட்டெ. கணப்பு = 1. எரிதல், 2. சுடுதல். கணகணவென்று எரிகிறது என்பது உலக வழக்கு கண →கணப்பு = குளிர்காயும் தீ. கணைப்புசட்டி = குளிர் காயும் நெருப்புச் சட்டி (வே.க. 186-187).



கணப்புச்சட்டி

**கணப்புல்** *kaṇappul*, பெ.(n.) ஒருவகைப்புல்; a kind of grass.

*[கண + புல். கண = திரட்சி.]*

**கணப்பூண்டு** *kaṇa-p-pūṇḍu*, பெ.(n.) மருந்துச் செடிவகை. (பதார்த்த.550.); a medicinal plant.

மறுவ. சின்னம்மான் பச்சரிசி

ம. கணப்பூடு, கணப்பூட்டு.

*[கணம் + புல்]*

கணச்சூட்டைத் தணிக்கும் தன்மையுடையது.

**கணப்பெருமக்கள்** *kaṇa-p-peru-makkaḷ*, பெ.(n.) பழங்கால ஊரவை மேலாளர்கள்; managers of village affairs in ancient times. *"அரசாணைப்படி ஊரை ஆள்வதற்கு ஊர்மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அவையினர், கணப்பெருமக்கள்" (பழ.தமி.31).*

மறுவ. வாரியப்பெருமக்கள், கணவாரியப்பெருமக்கள்.

*[கணம் + பெருமக்கள்.]*

**கணப்பொருத்தம்** *kaṇa-p-poruttam*, பெ.(n.) 1. செய்யுள் முதன்மொழிப் பொருத்த வகைகளுள் ஒன்று; rule of propriety which lays down that the first word in a poem shall be one of *nir-k-kanam*, one of the ten *ceyyunmutan-moli-p-poruttam*. (வெண்பாப். முதன்.20.) 2. திருமணப் பொருத்தங்களுள் ஒன்று.(சோதிட. சிந். 195); (Astrol) correspondence between the horoscopes of the prospective bride and bride-groom in respect of the three kanams, viz, dēva-kanam, irāṭcata-kanam, mānta-kanam, one of ten kaliyāṇa-p-poruttam.

*[கணம் + பொருத்தம்.]*

**கணப்பொழுது** *kaṇa-p-poḻudi*, பெ.(n.) நொடிப் பொழுது; instant, moment of time. கணப்பொழுதில் கடைக்குச் சென்று வா (உ.வ.).

*[கணம் + பொழுது. கணம் = நொடி.]*

**கணபங்கம்** *kaṇa-paṅgam*, பெ.(n.) **கணஅழிவு** பார்க்க; see *kaṇaaḻivu*. *"புத்தி கணபங்கமெனப் புத்திகெட்டபுத்தனுரை" (சிவப்.பிரபந்.சிவஞா. நெஞ்சு 210.).*

*[கணம் + பங்கம். **Skt.**banga>பங்கம்.]*

**கணபங்கவாதி** *kaṇa-panga-vati*, பெ.(n.) 1. உலகம் நொடிதோறும் தோன்றியழியும் என்று வழக்கிடுபவன்; (சி.போ.பா.அவை.); one who asserts that the universe incessantly appearing every instant and

is also is rapidly dissolving. ***கணஅழிவாளி*** பார்க்க; see *kanaalivali.*

*[கணம் + பங்கம்+வாதி. **Skt.**bangavadi>த.பங்க.]*

**கணபதி** *kana-padi,* பெ.(n.) 1. பிள்ளையார் *"தச்சியின் விகடசக்ரக்கணபதிக்கு" (கந்தபு.காப்பு);* Ganēsa, who is the chief of Siva's hosts. 2. நூற்றெட்டு சிற்றிலக்கியங்களுள் ஒன்று; name of a citrilakiyam.

*[கணம் + பதி.]*

**கணபர்** *kanabar,*பெ.(n.) சிவகணத் தலைவர்; chief attendant, as guardians of their hosts. *"கணபர்கள் வானோரொடு"(கோயிற்பு.திருவிழா.47).*

*[கணம் + அர் = கணமர் – கணபர்.]*

**கணபிச்சை** *kana-piccai,*பெ.(n.) இல்வாழ்வோன் எடுக்கும் அரிசிப்பிச்சை. (சைவச.பொது.257,உரை) rice gleaned by an householder, as alms from door to door.

*[கணம் = சிறிது, சிறிதுநேரம் இரப்பவன்.]*

**கணம்[1]** *kanam,* பெ.(n.) 1. திரட்சி; sphericity; globularity. *"கணங்குழை நல்லவர்" (கலித்.71.19).* 2. வட்டம்; circle.

*[கள் – களம் – கணம்.கணம் – கூட்டம்.]*

பல பொருள்கள் ஒன்றாகச் சேரின் திரட்சியுண்டாகு மாதலால், கூடுதற் கருத்தில் திரட்சிக் கருத்து தோன்றும். குள்→ களம்பு = விலங்குகளின் திரண்ட காலுகிர். குழு → குழை = திரண்ட காதணி குழு →கழு → கழுகு = பெரும்பறவை குல் →குண்டு →கண்டு = கட்டி, நூற்றிரளை. கண்டு → கண்டம் = பெரிய துண்டு. கணைக்கால் = திரண்ட கெண்டைக்கால். கணை = திரண்டபிடி. கணையம் = திரண்ட எழு. குறடு = திண்ணை. குண்டை [காளை] குண்டாந்தடி, குண்டடியன் [ஆண்சிவிங்கி], குண்டுக்கழுதை என் பனவும் திரட்சி பற்றியனவே [வே.க. பக். 143].

**கணம்[2]** *kanam,*பெ.(n.) 1. மக்கட்கூட்டம்; group of people. 2. பொருட்தொகுதி; collection of articles. 3. இனவகுப்பு; class. 4. இனமரபுக்குழு; tribe. 5.கிளைமரபு, தனிக்குழு; clan.6.மந்தை; flock. 7. விலங்குக்கூட்டம்; herd. 8. தொடர் நிகழ்வு; series. 9.திரண்டோர் ; concourse of people 10. குழு; company. 11. ஒருங்குகூடுதல்; assembly.

*[கள் – களம் – கணம். த. கணம்>**Skt**. gaña. **கணக்கன்** பார்க்க; see kanakkan.]*

**கணம்[3]** *kanam,* பெ.(n.) 1. பதினெண்கணம்; celestial hosts. 2. பதினெட்டு எண்ணும் எண் (தைலவ.); the number 18. 3. பேய்; devil, demon.(பிங்).
4.**கணகம்** பார்க்க; see *kana* (விதான. கடிமண.4)
5. **கணப்பொருத்தம்** பார்க்க; see *kana-p-poruttan.*

*[கள்–களம்–கணம்]*

**கணம்[4]** *kanam,*பெ.(n.) 1. நொடிப்பொழுது; moment of time shortest duration of time. *"வெகுளி கணமேயுங் காத்தலத்து" (குறள்.29.).* 2. வாய்ப்பான நேரம்; appropriate time, opportune moment, occasion. அதை, அக்கணத்தில் முடிப்பதே நன்று (உ.வ). 3. மீச்சிறியது; minute. 4. நீர்த்துளி; a drop of water (சா.அக).

*[கண்–கணம். 'கண்' இடப்பொருளொடு நேரப்பொருளையும் குறித்து வந்தது. 'அம்' சொல்லாக்க ஈறு.]*

**கணம்[5]** *kanam,* பெ.(n.) 1. திப்பிலி; (பிங்.) long pepper. 2. மிளகு; pepper.

*[கள் → கண் → கணம் → (கரியது).]*

**கணம்[6]** *kanam,*பெ.(n.) குழந்தை நோய் வகை; child's disease.

*[குண் → கண் →கண →கணம் (வேர்ச். கட் 187).]*

**கணம்[7]** *kanam,* பெ.(n.) ஒருவகைக் கணக்கு மொழி; set in set theory of new mathematics.

*[கள் → கண் → கணம்.]*

**கணம்[8]** *kanam,*பெ.(n.) ஒருவகைப் புல்; species of grass.

*[கண →கணம்.]*

**கணம்புல்** *kanampul,* பெ.(n.) ***கணைப்புல்*** பார்க்க; see *kanaippul. "ஆயமுயற்சியில் லரிந்த கணம்புல்லுக் கொடுவந்து" (பெரியபு.கணம்புல்.5).*

**ம.** கணப்புல்லு.

*[கணைப்புல் → கணம்புல்.]*

**கணம்புல்ல நாயனார்** *kanam-pulla-nāyanār,*பெ.(n.) அறுபத்துமூன்று நாயன்மாருள் ஒருவர்; a canonized saiva saint *one of 63. "கலை நிலவாரடி பரவும் கணம் புல்லர்"(பெரியபு.திருத்தொண்டர்–51).*

[கணம்புல்லர் + நாயனார் → அர் – ஆண்பாலீறு. இவர் கணம் புல்லைக் கொண்டு விளக்கெரித்து வீடுபேறடைந்ததாகத் திருத்தொண்டர் மாக்கதை கூறும்.]

**கணமாந்தம்** *kaṇa-māndam*, பெ.(n.) காய்ச்சலோடு கூடிய மாந்தநோய்(வின்.); one of eight mantam arising out of fever and disordered bowels.

[கணம் + மாந்தம்.]

**கணமூலம்**[1] *kaṇamūlam*, பெ.(n.) சூட்டினால் உண்டாகும் மூலநோய்; piles.

[கணை – கணம் + மூலம், கணை = சூடு.]

**கணமூலம்**[2] *kaṇamūlam*, பெ.(n.) திப்பிலி வேர்; root of long pepper.

[கணம்[5] + மூலம். மூலம் = வேர்.]

**கணமூலி** *kaṇamūli*, பெ.(n.) திப்பிலி; long pepper.

[கணமூலம் – கணமூலி.]

**கணமொழி** *kaṇa-moḻi*, பெ.(n.) கூட்டத்தாரைக் குறிக்கும் சொல் (பேரகத்.139); word denoting a group.

[கணம் + மொழி. முழு → மொழு → மொழி = கூட்டத்தார். கணம் = வாரியம்.]

**கணவம்** *kaṇavam*, பெ.(n.) அரசமரம்; pipal tree. *"சாகை கணிறைபணைக் கணவம்." (அரிசமய.பரமபத.2)*

ம. கணவம்

[கணம் = கணவம். கணம் = திரட்சி.]

**கணவர்**[1] *kaṇavar*, பெ.(n.) கூட்டத்தார்; members of a group or assemblage. *"பூதகணவர்" (கந்தபு.திருக்கயி.8).*

[கணம் = கணவர். 'அர்' பன்மையீறு.]

**கணவர்**[2] *kaṇavar*, பெ.(n.) ***கணவன்*** பார்க்க; see kanavan.

[கணவன் – கணவர். அர்–உயர்வுப்பன்மை ஈறு.]

**கணவலர்** *kaṇa-valar*, பெ.(n.) அலரி; sweet oleander. *"கள்ளார்துழாயுங்கணவலரும்" (திவ்.பெரியதி.11,7,6).*

க. கணகலு

[கணம் +அலர். கணம் = கொத்து. கணவலர் – கொத்தானமலர்.]

**கணவன்**[1] *kaṇavaṉ*, பெ.(n.) மண உறவால் ஒருத்தியுடன் வாழும் உரிமை பெற்றவன்; a man joined to a woman by marriage, husband. *"எங்கணவரெந்தோண் மேற் சேர்ந்தெழினும்."(நாலடி. 385)*

**மறுவ.** கொழுநன், கொள்நன், கட்டினவன், கண்டன், வீட்டுக்காரன், கேள்வன், மணவாளன், உரிமையோன், துணைவன், அகமுடையான், கொண்கன்.

**ம.** கணவன்; **க;** பட. தண்ட; **கோத.** கண்ட் (ஆண்) குட. கண்டெ (ஆண்) **து.** கண்டுசு, கண்டணி, கண்டண்யெ, **தெ.** தண்டு (வீரம், விலங்குகளின் ஆண்).

[கள்தல் = கூடுதல், பொருந்துதல், ஒத்தல். கள் →கள → கண. கணத்தல் = கூடுதல்,ஒத்தல். கள் →களம் = கூட்டம்,அவை களம் → கணம் = கூட்டம். கணம் → கணவன் = மனைவியொடு கூடுபவன் (வ. வர. 166).]

**கணவன்**[2] *kaṇavaṉ*, பெ.(n.) தலைவன், அதியன் (யாழ்.அக); leader, chief.

[கணம்(கூட்டம்) + அன் – கணவன் – கூட்டத்திலீ தலைவன்]

**கணவன்**[3] *kaṇavaṉ*, பெ.(n.) ஒருவகை இதளியச் செய் நஞ்சு (சூத பாடாணம்); a kind of mercurial poison. (சா. அக)

[கள் – கண் + கணம் + அன் – கணவன் (கூட்டி செய்யப்பட்டது)]

**கணவாட்டி** *kaṇavāṭṭi*, பெ.(n.) கணவாள இனப்பெண் (நன்.276, மயிலை); woman of the kanavalam caste.

[கணவாள் + த் + இ – கணவாட்டி.]

**கணவாய்**[1] *kaṇavāy*, பெ. (n.) இரண்டு மலைகளுக்கிடையேயுள்ள பிளவு.(பிங்.); defile between hills; mountain pass, ravine ghat. தென்மேற்குப் பருவக்காற்று பாலக்காட்டுக் கணவாய் வழியாக வருவதால் கோவை குளிர்ச்சியாயிருக்கிறது (உ.வ.).

**ம.** கணவா; **க.** கணவெ, கணிவெ, கணமெ, கணுவெ; குட. கணுவென்(சமவெளிப்பகுதி); **தெ.** கனும, கனம; **து.** கணிமெ.

[கணம் + வாய் = கணவாய். இருமலைகள் கூடும் இடத்திலுள்ள வழி.]

**கணவாய்**[2] *kaṇavāy,* பெ. (n.) தொல்லையுறுங்கால் கருப்பு நீர்மத்தை வெளிப்படுத்தும் சிப்பிவகை (யாழ்ப்); cuttlefish, which sheds black liguid when it comes under hardship.

ம. கணவ; க. கணப.

*[கணவாய் = மலைகளின் இடைவழி, பாறையிடுக்கு, கடற்பாறை இடுக்கில் வாழும் இயல்பால் இஃது கணவாய் எனப்பட்டது.]*

**கணவாய்ச் சுறா** *kaṇavāy-c-cuṟā,* பெ.(n.) சுறாமீன் வகை (நெல்லை. மீனவ.); a kind of shark fish.

*[கணவாய் = நீண்ட்வாய். கணவாய் + சுறா.]*

**கணவாய்ப்பாறை** *kaṇavāy-p-pāṟai,* பெ. (n.) கணவாய் மீன் மேயு மொருபாறை (தஞ்சை.மீனவ.); a kind of rock where the cuttlefish graze.

*[கணவாய் + பாறை.]*

**கணவாய்ப்பூச்சிக்கூடு** *kaṇavay-p-pūcci-kūḍu,* பெ.(n.) ஒருவகைச்சிப்பி; a chephalopod (சா.அக).

*[கணவாய் + பூச்சி + கூடு.]*

**கணவாய்மை** *kaṇavāymai,* பெ.(n.) ஒருவகைச் சிப்பியின் கருநீர்(வின்.); black liquid found in the shell of a cuttlefish, sometimes used for ink.

*[கணவாய் + மை. மை = கருமை கருநீர்.]*

**கணவாய்விளக்கு** *kaṇavāy-viḷakku,* பெ.(n.) கடல் விளக்கு; sea lamp.

*[கணவாய் + விளக்கு.]*

**கணவாரியப்பெருமக்கள்** *kaṇa-vāriya-p-perumakkaḷ,* பெ. (n.) **கணப்பெருமக்கள்** பார்க்க; see *kaṇa-p-perumakkaḷ.* "... *கோயிற் கணவாரியப் பெருமக்களோமே ..."(S.I.I. Vol.13. Insc.274. Sn.17.).*

*[கணவாரியம் + பெருமக்கள்.]*

**கணவாளம்** *kaṇavāḷam,* பெ.(n.) ஒரு பழைய குலம்; an ancient caste. *"கணவாள குலத்தின் செட்டிப் பிள்ளையப்பன் (பெருந்தொ.1349.).*

*[கணம்(கூட்டம்) + ஆளம் கணம் = கூட்டம், ஒற்றுமை ஆளம் – ஆளுந்தன்மை கணவாளம் = கூடிவாழும் ஒற்றுமையைப் பேணிக்காக்கும் கூட்டத்தார்]*

**கணவாளன்** *kaṇavāḷaṉ,* பெ.(n.) கணவாள இனத்தான் (இலக்.வி.52,உரை); man of the kanavalam caste.

*[கணவாளள் + அன்]*

**கணவி** *kaṇavi,* பெ.(n.) மனைவி; wife.

*கணவன்(ஆ.பா.) – கணவி(பெ.பா). 'இ'.பெ.பா.ஈறு (கோவலன்கர்ணகதை.)*

*[கணம் = கூட்டம், குழு கணம் → கணவி (குடும்பத்தலைவி.).]*

**கணவிரம்** *kaṇaviram,* பெ.(n.) **கணவீரம்** பார்க்க; see *kaṇavīram."கணவீரமாலை" (மணிமே. 3,104.).*

*[கணம் + விரி – கணவிதி.]*

**கணவிரி** *kaṇaviri,* பெ.(n.) **கணவிரம்** பார்க்க; see *kaṇaviram. "கணவிரிமாலையிற்கட்டிய திரள்புயன்" (மணிமே.மலர்வன.104).*

*[கணம் = கொத்து. கணம் + விரி. கணவிரி கொத்தாக விரியும் தன்மையது.]*

**கணவிருமல்** *kaṇa-v-irumal,* பெ.(n.) கணநோயினால் ஏற்படும் இருமல்; cough owing to.

*[கணம் + இருமல்.]*

**கணவீரம்** *kaṇavīram,* பெ.(n.) செவ்வலரி; red oleander. *"பெருந்தண் கணவீர நறுந்தண் மாலை" (திருமுரு.236.).*

ம. கணவீர; தெ. கன்னெரு, கன்னெரு, கென்னேரு, கெண்டெனெ; **Mar.** kanera; **Skt.** karavira; **H.** kanera; **Pkt.** kane, kanvira.

*[கணம் + விரி – கணவிரி. கணவீரம்.]*

மணமிகுந்த இச்செடியின் வேர் நச்சுத்தன்மை வாய்ந்தது. இதன் இலையை இலக்கியத்தில் ஈட்டிக்கு ஒப்புமைப்படுத்துவர்.

**கணவுமூலி** *kaṇavumūli,* பெ.(n.) நச்சுமூங்கில்; poisionous bamboo.

*[கணவு + மூலி.]*

**கணவெட்டை** *kaṇavettai,*பெ.(n.) வெப்ப நோய்வகை; the whites due to heat. *"அணத்தடர் வெண்மையும் கணவெட்டையும்." (தைல.தைலவ.110)*

*[கணம் + வெட்டை. கணம் = சூடு.]*

**கணவெதுப்பு** *kaṇaveduppu,* பெ.(n.) **கணச்சூடு** பார்க்க; see *kaṇaccūḍu.*

*[கணம் + வெதுப்பு.]*

**கணன்**[1] *kaṇaṉ,* பெ.(n.) திருடன் (சைவசு.பொது. 248); thief, rogue.

*[கள்ளன் கணன் → களன் →கணன்.]*

**கணன்**[2] *kaṇaṉ,*பெ.(n.) கூட்டம், தொகுதி; collection, aggregation, whole series. *"கணனடங்கக் கற்றானு மில்" (சிறுபஞ்.31.).*

*[கணம் – கணன்.(வே.க.135.)]*

**கணனம்** *kaṇaṉam,* பெ.(n.) 1. கோள்களின் இயக்கத்தைக் கணிக்கை; (astro.) calculation of the movement of planets etc. 2. எண்ணல்; counting.

*[கண் → கணம் + அன் + அம் – கணனம்]*

**கணனை** *kaṇaṉai,*பெ.(n.) எண்; number.*"பரிசங் கணனை பரிமாணம்." (பிரபோத. 42.2)*

*[கண் – அன் + ஐ - கணனை. கண்ணுதல் = கணித்தல், 'அன்' சாரியை, 'ஐ' – ஒன்றன்பாலீறு.]*

**கணா** *kaṇā,* பெ.(n.). 1. திப்பிலி. (சங்.அக.); long pepper. 2. சீரகம்; cummin seed (சா.அக).

*[கள் → கண. கணம்(திரள்) → கணவுள் →கணா(மரூஉ).]*

**கணாதமதம்** *kaṇada-madam,*பெ.(n.) சிறப்பு (வைசேடிக) மதம்; the vaisesika branch of the n yāya system of philosophy founded by kaṇātan

*[கணாதன் + மதம்.]*

**கணாதர்** *kaṇādar,*பெ.(n.) ஏரணத்தர்(தர்க்கிகர்); logicians. *"ஆய்ந்த கணாதர்கள்"(திருக்காளத். பு.5, 41).*

*[கணம் = கூட்டம்.குழு,மன்று. கணம் + ஆதர். ஆதர் = தலைவர்.]*

**கணாதன்** *kaṇādaṉ,*பெ.(n.) சிறப்பு(வைசேடிக) மதஆசிரியனான முனிவன்; name of the founder of the vaisēsika system of Indian philosophy, *"அக்கபாதன் கணாதன் சைமினி." (மணிமே2,7,82)*

*[கணம் + ஆதன். கணம் = கூட்டம். ஆதன் = தலைவன்]*

**கணாதி** *kaṇādi,* பெ.(n.) வெண்சீரகச்செடி; white cummin plant.

*[கணம் (தொகுதி) + ஆதி.]*

**கணாமூலம்** *kaṇā-mūlam,*பெ.(n.) திப்பிலிவேர். (தைலவ.தைல.82); long pepper root.

*[கணம் + மூலம் – கணாமூலம்.]*

**கணார்கணாரெனல்** *kaṇar-kāṇar-eṉal,*பெ.(n.)ஓர் ஒலிக்குறிப்பு.(திவ்.பெரியாழ்.1,7,7 வியா.பக்.149.); onom. expr. of tintinnabulation.கொல்லன் பட்டறையிலிருந்து கணார் கணாரென ஒலி வருகிறது (உ.வ.).

*[கணார் + கணார் + எனல். கணார்கணார் – ஒலிக்குறிப்பு இடைச்சொல்.]*

**கணாரிடல்** *kaṇar-iḍal,* பெ.(n.) மணியொலித்தல், வெண்கலப்பேரொலி, எதிரொலி போன்றவற்றைக் குறிக்கும் ஒலிக்குறிப்பு; ringing, as of a bell; sonorous pealing; clanging, as sounding brass; echoing, as rock.

*[கணார் + இடல். இடு – இடல் இடு – து. வி. 'கணார்' ஒலிக்குறிப்பு இடைச்சொல்.]*

**கணி**[1]**–த்தல்** *kaṇi-,* 4 செ.குன்றாவி(v.t.) 1. கணக்கிட்டுக் கண்டுபிடித்தல்; to compute, reckon, calculate, count. 2. அளவிடுதல்; to estimate, conjecture, surmise. *"கணித்த நாள்களேழ்" (சீவக.2518.).* 3. மதித்தல்; to esteem, honour, res pect. அவன் என்னைக்கணிக்கவில்லை. (இ.வ.) 4. படித்தல்; to study. *"கணியாது முழுதுணர்ந்த" (சூளா. இரத. 64.)* 5. தோற்று வித்தல்; to create.*"மலரின் மேலான் கணித்த வுலகு." (பிரமோத் 21,53.)* 6. நெஞ்சாரப் போற்றுதல்; to repeat mentally in worship as mantram. *"திருவஞ்செழுத்து அவ்விதிப்படியறிந்து கணிக்கப் படும்" (சி.போ.பா.).* 7. கருதுதல்; to see,to consider(கருநா.).

**க.** கணிசு; **து.** கணி > **Skt.** gan.

**Sinha.**ganinne; **Portu.** contar, clmin, giri.

*[கண் – கணி. கணித்தல் = புறக்கண்ணாற் காணுதல். அகக்கண்ணாற் காணுதல். மதித்தல், அளவிடுதல், கணக்கிட்டு வகுத்தல். கடைக்கணித்தல், சிறக்கணித்தல், புறக்கணித்தல் என்பன புறக்கண்ணாற் காண்டலைக் குறித்தல் காண்க (வ.மொ.வ.106).]*

**கணி**[2] *kaṇi,*பெ.(n.) மருதநிலம். (பிங்.); agricultural tract.

*[களி – கணி. களிமண் பரந்த நிலப்பகுதி.]*

**கணி**[3] *kaṇi,* பெ.(n.) 1.நூல் வல்லவன்; learned man; one who is well versed in some branch of knowledge. *"கணிபுகழ் காளை" (சீவக.722).* 2. ஓவிய மெழுதுவோன்; painter *"நற்கணி நேமித் தெழுதாச் சித்திரம்." ( திருப்பு.597)* 3. கணியன்; astrologer. *"விளைவெல்லாங் கண்ணியுரைப்பான் கணி" (பு.வெ.8,20).* 4. கலை; science; any branch of knowledge.*"பெருகுங் கணியிற் கணி" (சீவக. 1062.).*

*[குணி கணி. (மு.தா.223)]*

**த.**கணி >**Skt.** gani

கணி, கணிகன், கணியன், கணிவன் என்னும் வடிவங்கள் வடமொழியிலில்லை.

**கணி**[4] *kaṇi,*பெ.(n.) 1.வேங்கைமரம்; East Indian kino.*"ஒள்ளிணர் கணியின் கொம்பருலவியே." (கந்தபு.12)* 2. சண்பகம் (அரு.நி.); champak tree. 3. மூங்கில்; bamboo. 4. மிளகரணை; prickly scopolia. 5.கையாந்தகரை; eclipse plant.(சா.அக)

*[கணம் – கணி (திரட்சி, கொத்து, தொகுதி.]*

**கணி**[5] *kaṇi,* பெ.(n.) கல்; stone.

**க.**கணி

*[ கணம் – கணி. திரண்டகல், உருண்ட பாறை]*

**கணி**[6] *kaṇi,* பெ.(n.) ஒரு இனம்; a sect or subcaste.

*[கணம் – கணி.]*

**கணி**[7] *kaṇi,* பெ.(n.) அணிகலன் (நாமதீப); ornament.

*[கணம் (திரட்சி ) – கணி.]*

**கணி**[8] *kaṇi,* பெ.(n.) சந்தனக் குழம்பு; sandal paste

*[களி – கணி.]*

**கணிக்காரத்தி** *kaṇi-k-kāratti,*பெ.(n.) ***கணிக் காரிகை*** பார்க்க; see *kaṇaikārigai.*

**க.** கணிகார்த்தி

*[கணி + கார்த்தி.]*

**கணிக்காரம்** *kaṇi-k-kāram,*பெ.(n.) கோங்கு; red cotton tree. *"கணிகாரங் கொட்டுங்கொல்" (கலித். 143.5).*

*[கணி → கணிகாரம். உண்ணமரம் போல் நிமித்தம் பார்க்க உதவும் மரம். கணி = நிமித்தம்.]*

**கணிக்காரன்** *kaṇi-k-kāraṉ,*பெ.(n.) குறி சொல் வோன்; fortune teller.

**க.** கணிகார

*[கணி + காரன்.]*

**கணிக்காரி** *kaṇi-k-kāri,*பெ.(n.) ***கணிக்காரிகை*** பார்க்க; see *kaṇi-k-kārigai* (தொல்.பொருள்.60, உரை).

*[கணி (கணியம்) + காரி.]*

**கணிக்காரிகை** *kani-k-kārigai,* பெ.(n.) குறி சொல்பவள் (தொல். பொருள் (10, உரை, பழைய பதிப்பு.); female fortune teller.

**க.** கணிகார்த்தி

*[கணி (கணியம்) + காரிகை (வெண்.).]*

**கணிக்கூறு** *kaṇikkūṟu,*பெ.(n.) நுண்ணிய பிரிவு; minute portion.*"கணிக்கூற்றொடு நீர்பெறுவதாக வும்" (S.I.I.vol14 insc.17. S.No.14.).*

*[கணி + கூறு.]*

**கணிகம்**[1] *kaṇigam,* பெ.(n.) 1. நூறுகோடி:(வின்.); one thousand milliions. 2. பத்தாயிரங்கோடி; ten thousand crore.

*[கள் (திராட்சி)–கணி – கணிசைகம்.]*

**கணிகம்**[2] *kaṇigam,*பெ.(n.) 1. குறுகிய காலம்; moment, short duration of time.*"காலங்கணிகமெனுங்*

குறுநிகழ்ச்சியும்" (மணி.27,191) 2. கணப் பொழுது இருக்கக்கூடியது; that which is momentary, transient. 3. தற்காலிக வழிபாட்டிற்காக மண் முதலிய வற்றாற் செய்யப்பெறும் இலிங்கம். (சைவச. பொது. 555, உரை.); Temporary lingam made of earth, rice or any material, for occational worship.

[கணம்[4] → கணிவம் → கணிகம்]

**கணிகவாதி** *kaniga-vādi,* பெ.(n.) கணந்தொறும் ஒவ்வொன்றும் மாறக் கூடியது என்னும் கொள்கை யாளன். (கணபங்கவாதி); one who holds that the world undergoes transformation every instant. (phil.)

[கணிவம் → கணிகம் →வாதி.]

**கணிகவெற்பு** *kaniga-verpu,*பெ.(n.) திருத்தணிகை மலை; the hill of Tiru-t-tani, in Thiruvallur district. *"கணிகமே பரிந்து கருத்துமுற்று வாற் கணிகவெற்பு." (தணிகை. வீராட. 121.)*

[கணிகம் + வெற்பு. கணிகம் = வேங்கை.]

**கணிகன்** *kanigan,* பெ.(n.) கணியன்; astrologer. *"கணிகரிம மைந்தன் வைகிற் காவல னிறக்கு மென்ன"(காசிக. வீரேசன்.11).*

மறுவ. கணியன், கணிச்சன்

**Skt.** *ganaka.*

[கணியன்→ கணிகன் வ – க,திரிபு.]

**கணிகாகுளம்** *kanikā kulam,* பெ.(n.) குமரி மாவட்டத்து சிற்றூர்; a village in Kanniyakumari district.

[கணியன் + கா + குளம் – கணியன்காகுளம் → கணிகாகுளம். காகுளம் = தோட்டக்குளம்.]

**கணிகை[1]** *kanikai,*பெ.(n.) தாளங்கதி தருபவள்; dancer who dances according to time measure. 2. பொதுமகள்; harlot courtesan, prostitute. *கணிகையொருத்தி கைத்தூணல்க."(மணிமே.166.6)*

**Skt.** ganika

*[கண் = கருது, மதி, அள. கண்+ இயம் = கண்ணியம்(மதிப்பு). கண் – கணி = to calculate. கணி + கை = கணிகை, தாளங்கணித்தாடும் கூத்தி(ஒப்.மொழி.135).]*

**கணிகை[2]** *kanigai,*பெ.(n.) ஊசிமுல்லை; eared jasmine. *"கணிகைதுன் றளப்பில் கோங்கு"(இரகு – இந்தும.14).*

[கணம் → (கூட்டம், திரட்சி, கொத்து). கணம் → கணி → கணிகை = கொத்தாய் மலர்வது.]

**கணிச்சன்** *kaniccan,* பெ.(n.) **கணியன்** பார்க்க; see *kaniyan. "ஓலை நாயகன் சிக்கருக்கன் கணிச்சன் நான் சோழ மூவேந்த வேளான்" (S.I.I.vol.19.insl 92).*

[கணியன் – கணிச்சன்.]

**கணிச்சி[1]** *kanicci,* பெ.(n.) 1. மழு; battle-axe. *"மாற்றருங் கணிச்சி மணிமிடற்றோன்"(புறநா.56,2).* 2. குந்தாலி; a kind of pick-axe. *"கணிச்சிகளிற் கயம்பட நன்கிடித்து" (சீவக.592).* 3. யானைத் தோட்டி(பிங்.); goad for urging the elephant. 4. உளி (திவா.); chisel. 5. கோடரி.(பிங்.); axe, hotchet. 6. இலைமூக்கரி கத்தி (பிங்.); knife for cutting the stalk of the betel.

ம.கணிச்சி

**Swed;** kniv. **Guj;** hanjar; **E.**knife; **OE.**chif.

[குள் → குணி → குணிச்சி → கணிச்சி. குத்துவது, வெட்டுவது.]

**கணிச்சி[2]** *kanicci,* பெ.(n.) தருமபுரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Dharumapuri district.

[கணி → கணித்தி → கணிச்சி. கணி சொல்பவன், குறிசொல்பவன் பெயரிலமைந்த ஊர்.]

**கணிச்சியோன்** *kaniciyōn,*பெ.(n.) மழுவேந்தி யாகிய சிவன்; Siva,who holds the battle axe in his hand. *"சீரருங்கணிச்சியோன் சினவலின்." (கலித்.2,6)*

[கணிச்சி + ஆன் – கணிச்சியான் – கணிச்சியோன். ஆன் – ஓன்(திரிபு)]

**கணிச்சிலந்தி** *kaṇu-c-cilanthi,*பெ.(n.) உடற்சந்து களிலுண்டாகும் சிலந்தி நோய்(வின்.); veneral ulcer affecting the joints in the body.

*[கணு + சிலந்தி.]*

**கணிசக்காரன்** *kaṇiša-k-kāraṉ,* பெ.(n.) மதிப்புடையவன்; esteemable person.

க. கணிகாரா.

*[கணியம் – கணிசம் + காரன்.]*

**கணிசம்**[1] *kaṇisam,*பெ.(n.) 1. மதிப்பு; estimating, guessing, rough calculation. *"கைக்கணிசமாகத் தூக்கிப் பார்த்தான்."* 2. மேம்பாடு; honour, dignity, respectability, worth, weight of character. *"கண் கணிசமாய்ச் சொல்லுவாள்" (பழ.).* 3. அளவு; measure, weight in the hand, size, bulk, in a limited sense. *"ஒரு பாக்குக் கணிசம் அபின்" (வின்.)*

ம. கணிசம்; க. கணிச; தெ. கணிச.

*[கண் → கணி. கணித்தல் = அளவிடுதல், மதித்தல். கணி – கணிதம் = கணிப்பு, பல்வகைக் கணக்கு. கணிதம் → கணிசம் = மதிப்பு(உத்தேசம்). கணிசம் என்னும் வடிவம் வடமொழியில் இல்லை. "குழம்பிற்குக் கணிசமாய் உப்புப்போடு." என்னும் வழக்கை நோக்குக (வ.மொ.வர.107).]*

**கணிசம்**[2] *kaṇisam,*பெ.(n.) அதிகம் (யாழ்.அக.); excess.

*[கணம் = கூட்டம், மிகுதி. கணம் – கணி – கணிசம். (கொ.வ.)]*

**கணிசம்**[3] *kaṇisam,*பெ.(n.) ஒலி; voice. *"பெருமாளை யேத்தி வசமாக்கிக் கணிசங் கொண்டு" (ஈடு.6,93).*

*[கண் → கணீர் → கணி → கணிசம்.]*

**கணிசம்பார்**[1]**–த்தல்** *kaṇisam-pār-,*4 செ.குன்றாவி. (v.t.) 1. மதிப்பிடுதல்; to estimate, value, appraise. 2. கையால் நிறையறிதல் (வின்.); to estimate roughly the weight of an article by taking it inthe hand. 3. தகுதியறிதல்; to discriminate in respect of caste, or of rank; to examine worth.

*[கண் – கண்ணியம் – கணியம் – கணிசம் + பார்.]*

**கணிசம்பார்**[2]**–த்தல்** *kaṇisam-pār-,*செ.கு.வி.(v.i.) தன்மானம் காத்தல்; to be zealous of one's own dignity.

*[கண்ணியம் – கணியம் – கணிசம் + பார்.]*

**கணிசமரம்** *kaṇisa-maram,*பெ.(n.) வலையைக் கண்காணித்தற் குரிய சிறிய கட்டுமரம் (தஞ்சை மீனவ); a small kattumaram which is used to watch fishing net.

*[கணியம் – கணிசம் + மரம்.]*

**கணிசமாக** *kaṇišamāga,* வி.எ. (adv.) குறிப்பிடத் தகுந்தபடியாக; considerably, fairly.இவ்வாண்டு வரிவிதிப்புக் கணிசமாகக் குறைக்கப்பட்டுள்ளது (உ.வ.).

*[கணியம் → கணிசம் + ஆக.]*

**கணிசி–த்தல்** *kaṇicit-,*செ.கு.வி.(v.i.) 1. சிந்தித்தல்; to meditate; to contemplate. 2. உய்த்துணர்தல்; to discern (சா.அக.)

*[த. கணி>க.கணிக>த.கணிசி–த்தல்.]*

**கணித்தி** *kaṇitti,*பெ.(n.) ***கணிக்காரிகை*** பார்க்க; see *kaṇik-k-ārigai.*

க. கணிதி, கணதி.

*[கணி+த் + இ = கணித்தி. 'த்' எழுத்துப்பேறு, 'த' சாரியை, 'இ' பெண்பாலீறு.]*

**கணித்தொழில்** *kaṇittōḻil,* பெ.(n.) நிமித்தங்கூறும் தொழில்; astrology. *"கொடுச்சிமார்க்குக் கணித் தொழில் புரியும் வேங்கை" (இராமா. வரைக்.33).*

*[கணியம் + தொழில்.]*

**கணிததீபிகை** *kaṇidadībigai,*பெ.(n.) ஒரு கணித நூல்; treatise of mathematics.

*[கணி → கணிதம் + தீபிகை.]*

**கணிதம்** *kaṇidam,*பெ. (n.) 1. கணக்குவகை. (பிங்.); methods of arithmetical calculation, process of computation, of which eight are mentioned. *கூட்டல், கழித்தல், பெருக்கல், வகுத்தல், வருக்கம், வருக்கமூலம், கணம், கணமூலம் ஆகியவை எண் கணிதம்.* 2. கணித நூல்; arithmetic, mathematics. 3. கணியம்; astrology including astronomy. (தொல். பொருள்.25, உரை). 4.கணிக்கப்பட்டது; that which is predicted by astronomy or prognosticated by astrology. 5.அளவு; measure, limit. *"கணித மில்புகழ்" (சேதுபு.கந்தமா.86).*

**Skt.** ganita; **H.**Kganit.

*[கண் = கருது, மதி, அள, எண்ணு. கண் → கணி + த் + அம் – கணிதம். 'த்' எழுத்துப்பேறு. 'அம்' சொல்லாக்க ஈறு.]*

கண் + இயம் = கண்ணியம் [மதிப்பு]. கண் → கணி = to calculate. கணி + கை = கணிகை [தாளங்கணித் தாடும் கூத்தி] கணி + அன் = கணியன் [சோதிடன்] கண் + அக்கு = கணக்கு. அக்கு என்பது ஓர் ஈறு. எ.கா, இலக்கு, விலக்கு, கணி → குணி = அளவிடு கண், கணி என்னும் தென்சொற்களையே gan, gani என உரப்பியொலித்த வடசொல்லாக்கக் காட்டுவர். கண்ணுதல் என்னுஞ்சொல், அகக் கண்ணின் தொழிலைக் குறித்தலால் வடமொழி வடிவங்கள் தென் சொற்களின் திரிபே என்பது தெற்றன விளங்கும். "கண் படை கண்ணிய கபிலை" "கண்ணிய" என்று தொல் காப்பியத்திலேயே வருதல் காண்க. [ஒப். மொழி. 135.]

**கணிதரத்தினம்** *kaṇita-rattiṉam,* பெ.(n.) ஒரு தமிழ்க் கணித நூல் (கணக்கதி.பாயி); name of a mathematical work in Tamil.

*[கணிதம் + ரத்தினம்.]*

**கணிதன்**[1] *kaṇidaṉ,* 1. கணியன்; astronomer, astrologer. *"கணிதர் சொற்ற வோரையில்" (நைடத. அரசா.9).* 2. கணக்கறிவோன் (வின்.); arith matician, mathematician. 3. கணக்கு எழுதுவோன் (வின்.); accountant.

**து.** கணியெ

*[கணி → கணியன் → கணிதன்]*

**கணிதன்**[2] *kaṇidaṉ,* பகைவன் (யாழ்.அக.); enemy.

*[கள் = நீங்கு. கள் → கணி → கணிதன்]*

**கணிப்பான்** *kaṇippāṉ,* பெ.(n.) கணக்கிடும் கருவி; calculator.

*[கணிப்ப + ஆன்]*

**கணிப்பு** *kaṇippu,* பெ.(n.) 1. அளவிடுகை; computing, counting. *"வெம்படை கணிப்பில் கொண்ட" (கந்தபு.முதனாட்.42)* 2. போற்றுதல்; esteeming honouring, reverencing, venerating. *"நமைக் கணிப்பிலன்" (சேதுபு.இலக்.9).* 3. மதிப்பிடுகை; estimating, appraising. விளைச்சல் பற்றிய உனது கணிப்புத் தவறாகிவிட்டது (உ.வ.). 4. முன்னறிவிப்பு; forecast, prediction. வானிலை ஆய்வாளர்களின் கணிப்புப்படி இவ்வாண்டு நல்லமழை பெய்யும் (உ.வ).

*[கணி + கணிப்பு.]*

**கணிப்பொறி** *kamippōṟi,* பெ.(n.) கொடுக்கப்படும் செய்திகளைத் தன்னுள் பதிந்து தொகுத்தும் பகுத்தும் கணித்தும் காட்டி அச்சீடு செய்யும் வினைத்திட்டம் வாய்ந்த மின்னணுக்கருவி; computer.

**மறுவ.** கணிணி, கணிப்பி.

*[கணி + பொறி.]*

எண்ணிலக்கக் கணிப்பொறி, ஒப்புமைக்கணிப் பொறி, கலப்பினக் கணிப்பொறி என்பன கணிப் பொறியின் வகைகள். இவற்றுள் நடைமுறையில் நன்கு செயற்படுவது எண்ணிலக்கக் கணிப்பொறியே [அறிவியல் அகராதி].

**கணிமுற்றூட்டு** *kaṇi-muṟṟūṭṭu,* பெ.(n.) கணியனுக்குக் கொடுக்கும் மானியம் (S.I.I.ii,43); land granted as inam to an astrology.

*[கணி + முற்றூட்டு.]*

**கணிமேதாவியார்** *kaṇi-mēdāvi-yār,* பெ.(n.) ஏலாதி, திணைமாலை நூற்றைம்பது என்ற நூல்களின் ஆசிரியர்; name of the author of Elādi and Tiṇai-mālai-nūṟṟaimbadu.

*[கணி + மேதாவி + ஆர்]*

**கணியநூல்** *kaṇiyanūl,* பெ.(n.) நிமித்திக நூல்; treatise on astrology.

*[கணியம் + நூல்.]*

இன்று தமிழ்நாட்டில் வழங்கும் கணிய [சோதிட] நூல், குமரி நாட்டிலேயே தமிழரால் முற்றும் அறியப்பட்டுவிட்டது. அதை வழிவழி கையாண்டு வந்த வள்ளுவரைத் தீண்டாதவரென்று தாழ்த்தி, ஆரியர் பெரும்பாலும் தமக்கே அந் நூலாட்சியை உரிமையாக்கிக் கொண்டனர்.

எழுகோள்களும் இருபத்தேழு நாண்மீகளும் ஓர் ஆண்டு வட்டத்தையமைக்கும் பன்னிரு திங்கட் குரிய பன்னீரோரைகளும், தமிழர் கண்டவையே. இன்று உலகம் முழுவதும் வழங்கிவரும் எழுகோட் பெயர்களைக் கொண்ட ஏழுநாட் கிழமையமைப்பு, தமிழரதே. ஆரியர் வந்தபின் அறிவன் [புதன்],

காரி[சனி] என்னும் இரு கிழமைப் பெயர்கள் வழக்கு வீழ்த்தப்பட்டதால், பண்டைத்தமிழர் ஐங்கோளே அறிந்திருந்தனர் என்று கால்டுவெலார் பிறழ்ந் துணரவும், அதனால் உலகம் முழுவதும் தமிழ் நாகரிகத்தைத் தாழ்வாகக் கருதவும், நேர்ந்துவிட்டது.

பன்னீரோரைப் பெயர்களுள் மிதுன, சிம்ம, விருச்சிக, தநு, மகர என்னும் ஐந்தே மொழி பெயர்ப்பாகும். ஏனையவையெல்லாம் எழுத்துப் பெயர்ப்பே.

குமரிக் கண்டத்தில் பன்னீரோரைப் பெயர் களே பன்னிரு மாதப்பெயர்களாய் வழங்கி வந்தன. ஆரியர் வந்த பின் அவை நாட்பெயர்களாக மாற்றப்பட்டு விட்டன [வ.மொ. வ. 272].

**கணியம்**[1] *kaṉiyam*,பெ.(n.) 1. குறிசொல்லுதல்; fore telling the future. 2.விண்ணில் கோள்களின் இருப்புக்கும் மாந்த வாழ்க்கை நடப்புக்கும் உள்ளதாகக் கருதப்படும் தொடர்பைக் கூறும் பிறப்பியம் (ஜாதகம்) சார்ந்த கணிப்புமுறை; study of supposed planetary influence on human affairs.

*[கணி + அம் – கணியம்.]*

கணியன், கணியான் எனப்படுவோர் தொன்று தொட்டு கணியக் கலையில் வல்லுநராய் இருந்தமை தமிழர் வரலாறு காட்டும் உண்மை.

**கணியம்**[2] *kaṉiyam*,பெ.(n.) 1. தொகை; quantity. 2.மிகுதி; excessive.

*[கள் = கூடுதல், மிகுதல். கள் → கணி → கணியம்.]*

**கணியன்**[1] *kaṉiyaṉ*, பெ.(n.) நிமித்திகன்; astrologer. 2. குறிசொல்பவன்; fortune teller, fore teller.

மறுவ. கணியான், கணி.

*[கணி + அன் – கணியன்.]*

இன்னின்ன குறிப்புகள் அல்லது அறிகுறிகளால் இன்னின்ன நலந்தீங்குகள் நேரும் எனக் கணித்து, வருவது முன்னுரைக்கும் தொழிலினன் ஆதலின் பெற்ற பெயர்.

**கணியன்**[2] *kaṉiyaṉ*, பெ.(n.) கடலில் மீன் பிடித்தற்காக மலை, மற்றும் உடுக்களை அடையாளக் குறியாக வைத்துப் போடப்படும் பெரிய வலைகளை அறியும் திறனுடையான் (சங்.நூல்.மீன்); one who is skilled in locating big nets laid in the sea estimating location by sighting stars and hills.

*[கணி வன் → கணியன்.]*

**கணியன் பூங்குன்றனார்** *kaṉiyaṉ-pūṅkuṉṟaṉār*, பெ.(n.) கடைக்கழகப்புலவர்; Sangam poet.

*[கணி – கணியன் + பூங்குன்றன் + ஆர்.]*

இவர் பூங்குன்றம் என்னும் ஊரில் பிறந்தமையால் இவ்வாறழைக்கப்பட்டார். இவ்வூர் இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள மகிபாலன் பட்டியே என்பதை அவ்வூர்க்கோவில் கல்வெட்டு களால் அறியலாம். யாதுமூரே யாவருங் கேளிர் என்னும் புகழ்மிக்க புறநானூற்றுப் பாடலைப் பாடியவர்.

**கணியாம்பூண்டி** *kaṉiyāmpūṇḍi*,பெ.(n.) கோயம்புத் தூர் மாவட்டத்தில் தொல் அகழ்வாய்வில் பழங்கற் காலச் சின்னங்கள் கிடைத்த சிற்றூர்; a village in Coimbatore district where megalithic materials were found in archaeological excavations.

*[கணியன் + பூண்டி – கணியன் பூண்டி → கணியான் பூண்டி → கணியாம் பூண்டி. அன் → ஆன் → ஆம் – புணர்ச்சித்திரிவு.]*

**கணியாமூர்** *kaṉiyāmūr*, பெ.(n.) விழுப்புரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Viiuppuram district.

*[கணியன் + ஆமூர் = கணியனாமூர் → கணியாமூர். ஆவூர் → ஆமூர்.)]*

**கணியான்**[1] *kaṉiyāṉ*, பெ.(n.) ஒரு பழங்குடி இனத்தான் (G.Tn.d.227); man of a backward tribe, noted for his skill in magic and his knowledge of astrology.

மறுவ. கணி

க. கணிய

*[கணியன் → கணியான்.]*

**கணியான்**[2] *kaṉiyāṉ*,பெ.(n.) கூத்தாடி (யாழ்.அக.); dancer, actor.

*[கணி + ஆன் = கணியான். காலங்கணித்துத் தாளத்திற்கேற்ப நாட்டியமாடுபவள். ஒநோ. கணிகை.]*

**கணியான்விளை** *kaṉiyāṉ viḷai,* பெ.(n.) குமரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kanniyakumari district.

*[கணியன் + விளை – கணியன்விளை → கணியான்விளை. விளை = பனந்தோப்பு.]*

**கணிலெனல்** *kaṉil-eṉal,* பெ.(n.) ***கணீரெனல்*** பார்க்க; see *kaṉireṉal "கவின்மணி கணிலென்னும்" (கம்பரா.மூலபல.228).*

*[கணில் + எனல். கணில் = ஒலிக்குறிப்பு இடைச்சொல்.]*

**கணிவம்** *kaṉivam,* பெ.(n.) விண்ணிலுள்ள நாண்மீன்கள், கோள்கள் ஆகியவற்றின் தொகுதி, இருப்புநிலை, நிலைப்பு ஆற்றல் ஆகியன குறித்துக் கணித்தறிந்த வானநூல் அறிவியல்; astronomy, the scientific study of celestial bodies.

*[கணி → கணிவு + அம் – கணிவம்.]*

வான நூல் வல்லுநனை "தொல் கேள்விக் கணிவன்" எனப் புறப்பொருள் வெண்பா மாலை [8. கொளு.வ.] குறிப்பிடுதல் காண்க.

**கணிவன்** *kaṉivaṉ,* பெ.(n.) வானநூல் கணிப்பில் வல்லுநன்; astronomer. *"தொல்கேள்விக் கணிவன்." (பு.வெ.8, கொளு, 20).*

*[கணி → கணிவு (கணிப்பு) + அன். கணிவன். கணியன் கணிவன் என்னும் சொல்லாட்சிகள் தலையன் தலைவன் என்றாற் போன்று சுட்டும் பொருளால் வேறுபடுவனவாம். கணி → கணிக்கும் தொழில். கணிவு → கணிக்கும் தொழில்திறமை. கணிவன் → கணிக்கும் தொழில் வல்லுநன். கணி என்னும் சொல் நிமித்தக்கணிப்புக்கும் வானநூல் கணிப்புக்கும் பொதுச் சொல்லாயினும் கணிவன் வானநூல்வல்லுநனையே குறிக்கும். கணியன் நிமித்திகனையே குறிக்கும்.]*

கணிவன் = காலக்கூறுகளை உணர்பவன், காலம், மாத்திரை, முதலாக நாழிகை, யாமம், பொழுது, நாள், பக்கம், திங்கள், பெரும் பொழுது, அயநம், யாண்டு, ஊழி எனப் பலவகைப்படும், இவற்றையும் ஞாயிறு முதலிய கோணிலைகளையுங் கணித்தறிவான் கணி என்க.

**கணிவன்முல்லை** *kaṉivaṉ-mullai,* பெ.(n.) காலக் கணிதனுடைய திறத்தைப் புகழ்ந்து கூறும் புறத்துறை(பு.வெ.8,20); theme of praising the fame of the skilled astrologer.

*[கணிவன் + முல்லை. முல்லை = சிறப்பியல்பு.]*

முல்லை → இயல்பு, மிகுதி, வெற்றி. இயல்பாகப் பெற்ற வெற்றி முல்லை. பொருது பெற்ற வெற்றி வாகை.

**கணினி** *kaṉiṉi,* பெ.(n.) ***கணிப்பொறி*** பார்க்க; see *kaṉi-p-poṟi.*

**கணீர்கணீரெனல்** *kaṉir-kaṉireṉal,* பெ.(n.) ஒலிக் குறிப்பு; ono. expr. signifying ringing of a bell.

*[கணீர் + கணீர் + எனல். கணீர்கணீர் = ஈரடுக்கு ஒலிக்குறிப்பு.]*

**கணீரிடு-தல்** *kaṉiridu-,* 20 செ.கு.வி.(v.i.) வெண் கலம் போன்ற ஒலித்தல்; to sound as of the brass.

*[கணீர் + இடு.]*

**கணீரெனல்** *kaṉir-eṉal,* பெ.(n.) மணியோசை, வெண்கல ஏனத்தைத்தட்டுவதால் எழும் ஒலி. ஓங்கிய குரலில் பேசுவது, தெளிவாகப் பேசுதல் போன்றவற்றைக் குறிக்கும் ஒலிக்குறிப்பு; ringing, as of a bell, clanging as sounding brass; speaking audibly and clearly with a metallic ringing of voice.

*[கணீர் + எனல்.]*

**கணு** *kaṉu,* பெ.(n.) 1. கரும்பு, மூங்கில் முதலிய வற்றின் துண்டுப் பகுதிகள் சேரும் இணைப்பு; joint of a bamboo, cane, etc. ஆளுக் கொரு கணு கரும்பு வெட்டித் தா (உ.வ.). 2. தண்டில் இலை தளிர்க்கக் கூடிய இடமாகவும், இறுக்கமுடைய தாகவும் சற்றுப் பருத்தும் காணப்படும் பகுதி; node, hard swelling point at which leaves spring from stem. கணுவாய் இருப்பதால் பிளக்கக் கடினமாய் இருக்கிறது (உ.வ.). 3. உறுப்புப் பொருத்து: **knuckle**; joint of the spine, vertebra. கணுவுக்குக் கணு வலிக் கிறது (உ.வ.). 4. எலும்புக் கணு (வின்); tubercle of a bone 5. மூங்கில் (மலை); bamboo. 6. உடம்பிலேற் படும் நரம்பு முடிச்சுகள்; nodules. 7. கணுக்கால்; ankle.

**க.** கண; **தெ.** கனுபு.

*[கண்ணுதல் = பொருத்துதல். கண் → கணு = பொருத்து, பொருத்தில் தோன்றும் புடைப்பு.]*



கணு

**கணுக்காரி** *kaṉu-k-kāri,* பெ.(n.) ***உசில்*** பார்க்க; see *usil.*

*[கணு + காரி.]*

**கணுக்கால்** *kaṉu-k-kāl,* பெ.(n.) பாதமும் கெண்டைக் காலின் கீழ்ப்பகுதியும் இணையுமிடம்; காற்பரடு; ankle. *ஆற்றிலே கணுக்கால் தண்ணீரிலும் அஞ்சி நடக்கவேண்டும்.( பழ).*

ம. கணங்கால், கணங்கழல்; க. கணகால்; பட. தணகாலு

*[கணு + கால்.]*

**கணுக்கால்ஊதம்** *kaṉukkāl-ūdam,* பெ.(n.) கணுக் காலிலும் விரற் சந்துகளிலும் பரவி வலி உண்டாக் கும் ஒரு ஊதை நோய்; a kind of arthiritis affecting the ankle and the parts between the toes.

*[கணுக்கால் + ஊதம்]*

**கணுக்கால் சூலை** *kaṉukāl-cūlai,* பெ.(n.) கணுக்காலில் ஏற்படும் ஒருவகைக் குத்தல் நோய்; an acute or excruciating pain in the ankle.

*[கணுக்கால் + சூலை.]*

**கணுக்காலுறை** *kaṉukkāluṟai,* பெ.(n.) காலுறை வகை (பாண்டி); garters,

*[கணுக்கால் + உறை.]*

**கணுக்காலெலும்பு** *kaṉu-k-kāl-elumbu,* பெ.(n.) பாதத்தில் பிதுங்கி நிற்கும் எலும்பு; ankle-bone upon which the tibia rests (சா.அக.).

*[கணுக்கால் + எலும்பு.]*

**கணுக்கை** *kaṉu-k-kai,* பெ.(n.) மணிக்கட்டு (இ.வ,); wrist.

*[கணு + கை.]*

**கணுச்சூலை** *kaṉu-c-cūlai,* பெ.(n.) எலும்பின் பொருத்துகளி லேற்படும் ஒரு குத்தல்நோய்; an acute pain in the joints.

*[கணு + சூலை.]*

**கணுப்பாலை** *kaṉu-p-pālai,* பெ.(n.) 1. கரியபாலை; obtuse-leaved ape flower. 2. ஏழிலைப்பாலை; seven-leaved milky plant. (சா.அக)

*[கணு + பாலை. பாலை – பாலுடையது.]*

**கணுமருது** *kaṉu-marudu,* பெ.(n.) மருது மரவகை; a hard - wood tree (செ.அக.).

*[கணு + மருது.]*

**கணுமாந்தம்** *kaṉu-māndam,* பெ.(n.) நகச்சுற்று. (m.l.); whitlow.

*[கணு + மாந்தம்.]*

**கணுவட்டு** *kaṉu-vaṭṭu,* பெ.(n.) சிறுவாழைக்குலை. (யாழ்); small bunch of plantains.

*[கணு + வட்டு.வட்டு – திரட்சி, ஒன்றாதல்.]*

**கணுவவரை** *kaṉu-v-avarai,* பெ.(n.) கணுக்களிற் காய்க்கும் அவரை வகை.(வின்.); a kind of pulse that bears fruit in its boughs also.

*[கணு + அவரை.]*

**கணுவாதம்** *kaṉuvādam,* பெ.(n.) ***கணுவூதம்*** பார்க்க; see *kaṉvūdam*(சா. அக)

*[கணு + வாதம்]*

**கணுவிரல்** *kaṉ-viral,* பெ.(n.) விரற்கணு; knuckle.

*[கணு + விரல்.]*

**கணுவூதம்** *kaṉuvūdam,* பெ.(n.) மூட்டுகளைத் தாக்கி வீக்கம், வலி முதலியனவற்றை உண்டாக்கும் ஊதை நோய்; an inflammatory disease which affects joints (சா.அக).

*[கணு + ஊதம். ஊதை – ஊதம்.]*

**கணுவை** *kaṉuvai,* பெ.(n.) ஒருவகைத் தோற்கருவி; a kind of drum. *"கணுவை யூமை சகடையோ டார்த்த வன்றே." (கம்பரா.பிமாத்.5.)*

*[கணு – கணுவை.]*

**கணை**[1] *kaṉai,* பெ.(n.) 1. திரட்சி; cylindrical or globular shape. *"கடு விசைக் கணைக்கோல்" (மலைபடு.380).* 2. செக்குரலின் அடிப்பாகம்; cylindrical wood of an oil press. *"செக்கின் கணை போன்றினிச் சென்றுருள்"(நீலகேசி,407)*

*[கண் – கணை(திரட்சி, திரண்டு பருத்த பகுதி).]*

ம. கண; க. கணெ, கணி; பட. கணெ(தொழுவத்தின் வாயிலை அடைக்கும் பலகை)

**கணை**[2] *kaṉai,* பெ.(n.) 1. அம்பு; arrow. *"கணை கொடிது" (குறள்.279).* 2. அம்பினலகு; arrow head. *"கணைக்கோ லெய்யுங் குனிசிலை" (சீவக.90 ).* 3. பதினோராவது விண்மீன் (பிங்.); the 11th naksatra. 4. மண்வெட்டி, குந்தாலி போன்ற வற்றிப் போடும் மரத்தாலான பிடி; wooden handle of a hoe, of a spade, or of other tool. 5. சிவிகை யின் வளை கொம்பு; curved pole of a palanquin. *"சிவிகைக் கணை"* 6. ***கணைக்கால்*** பார்க்க; see *kaṉai-k-kāl.* 7. ***கணைய மரம்*** பார்க்க; see *kaṉaiya-maram.* 8. கரும்பு (மலை.); sugar-cane. 9. மூங்கில்(நாமதீப.); bamboo.

**க.** கணெ; **ம.** கண; **து.** கணெ, கணெ. **கோண்.** தணீ; **பர்.** கணய(ஈட்டி); **கோத.** கண்கெய்த் (அரிவாள்); **துட.** கண்கோத்ய் (பிணத்துடன்) எரிக்கப்படும் உடைவாள் வடிவக்கத்தி); **கொண்.** கண்சி(மண்வாரி) ; **Skt., Pali.** kanaya (a kind of lance).

*[கண் – கணை திரட்சி (திரண்ட அலகுடையது).]*

**கணை**[3] *kaṉai,* பெ.(n.) 1. ***கணைச்சூடு*** பார்க்க; see *kaṉai-c-cūḍu.* 2. கால்நடை நோய்வகை (இ.வ.); a cattle disease. *"அயநாக மேனியடி கணைகை" (இராசவைத்.101).*

*[கண → கணை.]*

**கணை**[4] *kaṉai,* பெ.(n.) திப்பிலி (தைலவ.); long-pepper.

**ம.** கண; **க.** கண, கணெ; **Skt.** kaṇa.

*[கணம் → கணை.]*

**கணைக்கட்டு** *kaṉai-k-kaṭṭu,* பெ.(n.) அம்புக்கட்டு (திவா.); bundle of arrows.

*[கணை + கட்டு.]*

**கணைக்காடு** *kaṉai-kāḍu,* பெ.(n.) துன்பம் (j.m); distress.

*[கணை + காடு. கணைக்காடு – மிகுந்த துன்பம். கணை = திரட்சி, மிகுதி. கடு – காடு. கடுத்தல் – வலித்தல், துன்பம்.]*

**கணைக்காய்ச்சல்** *kaṉaik-d-kāy-c-cal,* பெ.(n.) ***கணக்காய்ச்சல்*** பார்க்க; see *kaṉa-k-kāyccal.*

*[கணை + காய்ச்சல்.]*

**கணைக்கால்** *kaṉai-k-kāl,* பெ.(n.) 1. முழங்காலுக்கும் பரட்டுக்கும்(பாதத்துக்கும்) இடையிலுள்ள உறுப்பு; the skin, forepart of the leg between the knee and the ankle. *"பூங்கணைக்காற் கொரு பரிசுதான் பொரும்" (கம்பரா.உருக்கா.43).* 2. திரண்ட நாளம்; main stem of a flower, as of a lotus. *"கணைக் காலலர்கூம்ப்" (கலித்.119,5).*

**ம.** கணங்கால்; **க.** கணகால், கணகாலு, கணெகால்; **பட.** தணகாலு.

*[கணை + கால். கணை = திரட்சி.]*

**கணைக்கை** *kaṉai-k-kai,* பெ.(n.) முழங்கையிலிருந்து மணிக்கட்டுவரையிலுள்ள கை (இ.வ.); arm, ante-brachium.

**ம.** கணங்கை; **க.** கணிகை; **பட.** தணகை.

*[கணை + கை. கணை = திரட்சி, வலிமை, நீண்டது.]*

**கணைக்கொம்பன்** *kaṉai-k-kombaṉ,* பெ.(n.) கட்டைக்கொம்புள்ள எருது (வின்.); ox with stunted horns.

*[கணை + கொம்பன். கணை = திரட்சி.]*

**கணைச்சுரம்** *kaṉai-c-curam,* பெ.(n.) ***கணக்காய்ச்சல்*** பார்க்க (சா.அக.); see *kaṉa-k-kāyccal.*

*[கணை + சுரம்.]*

**கணைச்சூடு** *kaṉai-c-cūḍu,* பெ.(n.) 1. குழந்தை நோய் வகை; disease of children, tabes mesenterica. 2. மூலச்சூடு; piles.

*[கணை + சூடு. கண – கணை – உடம்பு காங்கை.]*

**கணைத்தலை** *kaṉaittalai,* பெ.(n.) நெற்றிக்கும் காதுக்கும் இடையேயான தட்டையான பாகம்; temple.

**ம.** கணதலெ

*[கணை + தலை.]*

**கணைநாண்** *kaṉai-nāṉ,* பெ.(n.) அம்பு ஏவும் விசைகள்; bowstring.

*[கணை + நாண். ஞாண் – நாண்.]*

**கணைப்புல்** *kaṉai-p-pul,* பெ.(n.) 1. ஒட்டுப்புல் (வின்); sticking grass. 2. காளான்; mushroom.

**ம.** கணப்புல்லு; **க.** கணிகெ; **தெ.** கனுபு கெட்டி.

*[கணை + புல்.]*

**கணைப்பூடு** *kaṉai-p-pūḍu*,பெ.(n.) திருவாலிப்பூடு, என்னும் செவ்வாமணக்கு; red castor plant.(சா.அக)

*[கணை + (பூண்டு) பூடு.]*

**கணைபாரி–த்தல்** *kaṉai-pāri-*,4 செ.குன்றாவி(v.t.) அம்புஎய்தல்; to shoot an arrow.

*[கணை + பாரி. பாரித்தல் – பரவுதல்,விடுதல்.]*

**கணைமார்க்கம்** *kaṉaimārgam*, பெ.(n.) ***கணைவோட்டம்*** பார்க்க; see *kaṉaivōṭṭam*.

*[கணை + மார்க்கம்.]*

**கணைமூங்கில்** *kaṉai-mūṅgil*,பெ.(n.) பொன்னாங் கண்ணி (இ.வ.); a p lant growing in damp places.

*[கணை + மூங்கில்.]*

**கணையக்கோளம்** *kaṉaya-k-kōḷam*,பெ.(n.) ஆண்களின் சிறுநீர்ப்பைக்கும் நீர்த் தாரைக்கும் நடுவே சுற்றியுள்ள கோளம்; a gland sourrounding the neck of the bladder and the urethra in the male (சா.அக).

*[கணையம் +கோளம்.]*

**கணையநீர்** *kaṉayanīr*, பெ.(n.)கணையத்தில் சுரக்கும் நீர்; a thick transparent fluid secreted by the panereas (சா.அக).

*[கணையம் + நீர்.]*

**கணையம்**[1] *kaṉaiyam*, பெ.(n.) இரைப்பைக்குப் கீழ் இடது பக்கம் அமைந்தள்ளதும். உணவைச் செரிக்கச் செய்யும் ஒருவித நீர்மத்தைச் சுரப்பதுமான உறுப்பு; panereas..

*[கணை + அம்.]*

**கணையம்**[2] *kaṉaiyam*,பெ.(n.) 1.மறத்தண்டு, தண்டாயுதம்; club, used as a weapon. *"அம்பொடு கணையம் வித்தி" (சீவக.757).* 2. வளைதடி; curved club.*"தண்டமாலங் கணையங் குலிசாயுத மாதியாக"(கந்தபு.தாரக.157).* 3. யானைக் கட்டுத்தறி (சீவக.81, உரை); post to, which an elephant is tied. 4. காவற்காடு (பிங்.); jungle growth specially formed to serve as a protective barrier to a fort. 5. கோட்டை; fort. *"அஞ்சுவர்களோ கணையத்துக் குள்ளேயிருப்பர்" (ஈடு,5,4,7).* 6. ***கணையமரம்*** பார்க்க; see *kaṉaiyamaram*,*"அவன் களிறுதாம் கணையமரத்தால் தடுக்கப்பட்ட கதவைப் பொருது" (புறநா.97,உரை).* 7. போர் (பிங்.); war.8. இசைக் கருவிவகை; a kind of drum, ***"கடிபடுகரடி கை, கணை யஞ்சலிகை" (கந்தபு.கயமுகனு.214)***

**மறுவ.** எழு, பரிகம்.

**ம.** கணயம்; **க.** கணெய, கணய; **தெ.** கணய.

**H.** kanaiya.

*[கணை + அம். கணை = திரட்சி, செறிவு]*

**கணையம்**[3] *kaṉaiyam*, பெ.(n.) பொன் (யாழ்.அக); gold.

*[கணை + அம் – கணையம். கணை – திரட்சி,கட்டி, கட்டிப்பொன்.]*

**கணையமரம்** *kaṉaiya-maram*,பெ.(n.) 1. கோட்டை மதிற்கதவுக்குத் தடையாகக் குறுக்கேயிடும் எழுமரம் (புறநா.98,உரை); cross bar of wood set behind the doors of a fortress. 2.குறுக்குமரம்; cross-bar, torr bar, wooden bar, set to bar an entrance.3. யானையைக் கட்டும் தூண்; a post to which an elephant is tethered.

**மறுவ.** நுகம்.

**ம.** கணயமரம், கணயாரல்.

**கணையர்** *kaṉaiyar*, பெ.(n.) வில்லாளர்; those who have arrows, archers. *"கணையர் இணையர் கைபுனை கவணர்" (நற்.108.4).*

**ம.** கணயன்

*[கணை + அர்.]*

**கணையல்** *kaṉaiyal*,பெ.(n.) சிரித்தல்; laughing. *"இலங்கெயின் மூன்று மெரியுண்ணக் கணையல் செய்தான்."(தேவா.திருக்கழுக்.4.திருஞா)*

*[கணை + அல்.]*

**கணையன்** *kaṉaiyaṉ*,பெ.(n.) ***கணையர்*** பார்க்க; see *kaṉaiyar*.

**ம.** கணயன்

*[கணை + அன். கணை = அம்பு.]*

**கணையாகன்னி** *kaṉaiyākaṉṉi*,பெ.(n.) 1. வாடா மல்லிகை; ever lasting jasmine. 2. வளைந்த தடி; a curved club. (த.அக)

*[கணை + ஆம் + கன்னி.]*

**கணையாரல்** *kaṉaiyāral*,பெ.(n.) ஒருவகை மூங்கில்; a kind of bamboo.

ம. கணயாரல்.

*[கணை + ஆரல். கணை = திரட்சி.]*

**கணையாழி** *kaṉai-āḻi*, பெ.(n.) 1. முத்திரை விரலாழி (மோதிரம்); finger ring, signet ring. 2. கால்விரலில் அணியும் ஒருவகை அணிகலன்; a kind of foot - ornament.

ம. கணையாழி.

*[கணை + ஆழி – கணையாழி = உருட்டு மோதிரம். கணை = திரட்சி. ஆழி = வட்டம்.]*

**கணையாழி மோதிரம்** *kaṉai-āḻi-mōdiram*,பெ.(n.) ***கணையாழி*** பார்க்க(வின்.); see *kaṉaiyāḻi*.

*[கணை + ஆழி + மோதிரம்.]*

**கணையுலக்கை** *kaṉai-ulakkai*, பெ.(n.) பூணில்லா உலக்கை.(சா.அக)

*[கணை + (திரட்சி) + உலக்கை.]*

**கணையெண்ணெய்**[1] *kaṉai-y-eṉṉey*, பெ.(n.) செக்கில் எண்ணெய் எடுக்கும் போது உலக்கையின் கீழ்த்தங்கும் வடிபெண்ணெய்; oil extracted from the wooden roller of an oil press.(சேரநா.)

ம. கணயெண்ண.

*[கணை + எண்ணெய்.]*

**கணையெண்ணெய்**[2] *kaṉai-y-eṉṉai*, பெ.(n.) கண நோய்க்குத் தரும் மருந்து எண்ணெய்; herbal in edible oil for tabes mesenteric.

*[கண – கணை + எண்ணெய்.]*

**கணையோட்டம்** *kaṉai-y-ōṭṭam*,பெ.(n.) குதிரையின் நேரோட்டம் (திருவாலவா.28,58.); a pace of the horse, resembling the straight course of an arrow.

*[கணை + ஓட்டம். கணை = அம்பு.]*

**கணைவெட்டை** *kaṉai-veṭṭai*, பெ.(n.) ஒரு வகை வெட்டை நோய். (m.l.); tuberculosis in the mesenteric glands.

*[கணை + வெட்டை.]*

**கத்தக்கதி–த்தல்** *katta-k-kadi-*, 4.செ.கு.வி.(v.i.) நிரம்பமிகுதல்; to increase vastly, grow immensely. கத்தக் கதித்துக் கிடந்த பெருஞ்செல்வம் (திங். பெரியாழ். 1,9,3.)

*[கட்டு – கத்து + கதி – கத்தக்கதி = அளவுக்குமீறுதல், கட்டுக்குமேம்படல்.]*

**கத்தக்காம்பு** *katta-k-kāmbu*, பெ.(n.) தாம்பூலத் தோடு வாயிலிடும் ஒரு பண்டம்; extract prepared from the leaves and young shoots of a malay shrub. used in mastication with betel.

*[கற்றை – கத்தை + காம்பு.]*

**கத்தசம்** *kattaśam*,பெ.(n.) சாணம்; the cowdung.

*[கழித்து – கத்து – கத்தசம்.]*

**கத்தபம்** *kattabam*, பெ.(n.) 1.கழுதை; ass.*"கத்தபத்தின் பாற்குக்கரிய கிரந்தியறும்" (பதார்த்தகுண. 108)* 2. கழுதைப்புலி; a hyaena (சேரநா.)

ம. கத்தப்புலி; **Skt.** gardaba.

*[கழுதை . வ. கர்த்தபம் த. கத்தபம்.]*

**கத்தம்**[1] *kattam*,பெ.(n.) சாணச்சேறு; mire, dung, sloppy mud of a cow-house.

*[கழித்தம் – கத்தம்.]*

**கத்தம்**[2] *kattam*, பெ.(n.) 1. பொல்லாங்கு; evil *"கத்தமேவும் பிரகிருதி"(சி.சி.பர.பக்.381).* 2. கதை (யாழ்.அக.); tale.

ம. கத்தம்

*[கடுத்தம் – கத்தம்.]*

**கத்தம்**[3] *kattam*, பெ.(n.) தோள்(புயம்); arm, shoulder (யாழ்.அக.).

*[குந்து – குத்து – கத்து – கத்தம்.]*

**கத்தரி**[1]**–த்தல்** *kattari-*,4. செ.குன்றாவி (v.t.) 1. சிறிது சிறிதாய் வெட்டியறுத்தல்; to cut with scissors, clip, snip, shear. 2. புழு வரித்தல்; to gnaw, nibble off, as insects, as vermin. செடியை எலி கத்தரித்து விட்டது (உ.வ.). 3. அறுத்தல்; to cut away, to chop off. *"தலைபத்துங் கத்தரிக்க வெய்தபுன்." (கந்தரலங்.22)* 4. நட்புப் பிரித்தல்; to

separate from, break away from friendship. அவன் தொடர்பைக் கத்தரித்துக் கொள் (உ.வ.).

க. கத்தரிசு; தெ. கத்திரிஞ்சு, கத்தரில்லு; து. கத்தெரியுனி. கத்தெருனி.

*[கள் – கடு – கட்டு – கத்து – கத்தலி – கத்தரி.]*

கத்துதல் = வெட்டுதல். இவ்வினை பிற்காலத்து வழக்கற்றது. கத்து – கத்தி = அறுக்கும் அல்லது வெட்டுங் கருவி. ஒ.நோ; கொத்து-கொத்தி. வெட்டு – வெட்டி. கத்து + அரி = கத்தரி. கத்தரித்தல் = வெட்டி நறுக்குதல். அரிதல் = சிறிதாய் நறுக்குதல். அரித்தல் = அராவித் தேய்த்தல். "கதக்குக் கதக்கென்று வெட்டுதல்" என்பது உலக வழக்கு. [வ.மொ.வ.107.]

த. கத்தரி>**Skt.** karttari.

**கத்தரி[2]–த்தல்** *kattari-,4* செ.கு.வி.(v.i.) 1. நெருப்பு ஒழுங்காய்ப் பற்றாமல் இடைவிடுதல்; to flash, as priming powder, to go out, as a match or a lighted bamboo. 2. கவராதல்; to divide, fork, as a path, to branch off. "*கழி கத்தரித்துப் போகிறது.*" 3. மாறுபடுதல்; to change, alter, as fortune. "ஆ கூழ்க் கத்தரித்துப் போயிற்று" (உ.வ.).

*[கத்துதல் – வெட்டுதல். கத்து + அரி = கத்தரி.]*

**கத்தரி** *kattari,* பெ.(n.) வேனிற்காலத்துக் கடுங் கோடையில் மிகவும் வெப்பமான மேழ (சித்திரை)த் திங்கள் 23 முதல் விடை (வைகாசி)த் திங்கள் 7ம் நாள் வரைப்பட்ட காலம்; period of the greatest heat in summer, usually the fortnight from 23rd chitirai to 7th vaikasi. "இவ்வாண்டு கத்தரி மிகவும் கடுமையாயிருக்கிறது" (உ.வ).

*[கத்திரி – கத்தரி.]*

**கத்தரிக்கட்டு** *kattari-k-kaṭṭu,* பெ.(n.) கத்தரிக் கோல் போல வீட்டுமுகட்டுக்கைகளின்ச் சேர்க்கை. (இ.வ.); scissorwise coupling of rafters.

*[கத்திரி + கட்டு – கத்தரிக்கட்டு.]*

**கத்தரிக்கரப்பான்** *kattari-k-karappāṉ,* பெ.(n.) கரப்பான் வகை; a kind of eruption.

*[கத்திரி + கரப்பான்.]*

**கத்தரிக்காய்** *kattari-k-kāy,* பெ.(n.) ***கத்தரி*** பார்க்க; see *kattari.*

*[கத்தரி + காய்.]*

கத்தரிக்காய் வகைகள்:

1. முட்டைக்கத்தரி - egg plant. 2. கொத்துக் கத்தரி -west indian turkey-berry. 3. நித்தக் கத்தரி - brinjal. 4. நீலக்கத்தரி - purple brinjal. 5. காரல் கத்தரி அல்லது காருகத்தரி - jew's apple. 6. முள்ளுக்கத்தரி - prickly brinjal. 7. கொடிக்கத்தரி - creeper brinjal. 8. காட்டுக் கத்தரி - wild brinjal. 9. செங்கத்தரி - red brinjal. 10. சிறுகத்தரி - small brinjal. 11. பந்தற் கத்தரி - moon flower brinjal. 12. கண்டங்கத்தரி - yellow -berried night-shade. 13. குத்துக் கண்டங்கத்தரி - another species yellow berried night shade. 14. ஆகாயக் கத்தரி - rose mallow. 15. கார்க் கத்தரி - jew's apple (சா.அக).

**கத்தரிக்குண்டான்** *kattari-k-kuṇḍāṉ,* பெ.(n.) 1. வெள்ளரி; field melon. 2. முலாம்பழம்; musk-melon.

*[கத்தரி + க்கு + உண்டான்]*

வெள்ளரியும், முலாம்பழமும் உடற்சூட்டைத் தணிக்கு மென்பதால் கடுங்கோடையான கத்தரிக்கு இதன் பயன் பாட்டை நோக்கி இப்பெயர் உண்டாயிற்றென்க.

**கத்தரிகை[1]** *kattari-kai,* பெ.(n.) கத்தரித்தல்; cutting.

*[கத்தரி + கை.]*

**கத்தரிகை[2]** *kattari-kai,* பெ.(n.) 1. கத்தரிக்கோல்; scissors, "*மயி ரரிதற்கொரு கத்தரிகை தருகென*" (*பெருங்.வத்தவ 14,7*). 2. இணையா வினைக்கை வகை; gesture with one hand in which the forefinger and the middle finger are held together and pointed upward, while the thumb and the ring finger remain bent, the little finger being kept stretched (சிலப். 3,18. உரை.).

**Pkt.** kattiyā

*[கத்தரி கத்தரி + கை. கை – சிறுமைப் பொருள் பின்னொட்டு.]*

நாட்டியக் கையமைப்பில் ஆள்காட்டி விரலும் நடுவிரலும் இணைந்து மேனோக்க பெருவிரலும் மோதிரவிரலும் வளைந்துநிற்கும் நளிநய (அபிநய)ப் பங்கு இணையாவினைக்கை எனப்படும்.

**கத்தரிகைக்கால்** *kattarikai-k-kāl,* பெ.(n.) 1. கத்தரிக் கோலின் அலகு; shanks of scissors. 2. கத்தரி போற்பிணைத்த கால்; beams or poles crossed and

placed on the ground for supporting a weight. 3. நாற்காலி முதலியவற்றின் மடக்குக் கால்; legs of a camp-table or camp-chair.

*[கத்திரிகை + கால்.]*

**கத்தரிகைக்கை** *kattarigai-k-kai,* பெ.(n.) ***கத்தரிகை*** பார்க்க; see *kattari-kai.*

மறுவ. இணையா வினைக்கை

*[கத்திரிகை கத்தரிகை + கை.]*

**கத்தரிகைப்பூட்டு** *kattarikai-p-pūṭṭu,* பெ.(n.) ***கத்தரிக்கட்டு*** பார்க்க; see *kattari-k-kaṭṭu.*

*[கத்தரிகை + பூட்டு.]*

**கத்தரிநத்தம்** *kattarinattam,* பெ.(n.) ஊர்ப்பெயர்; name of a village.

*[கத்தரி + நத்தம்.]*

கத்தரிக்காய் விளையும் அடிப் படையில் அமைந்த ஊர்ப் பெயராகும்.

**கத்தரிநாயகம்** *kattari-nāyagam,* பெ.(n.) பெருஞ் சீரகம் அல்லது யானைச்சீரகம்.(சா.அக); chinese anise.

*[கத்தரி + நாயகம் – மெலிந்து நீண்ட நீட்சி குறித்த பெயர்.]*

**கத்தரிபாண்டு** *kattari-pāṇḍu,* பெ.(n.) கட்டடக் கலைச் சொல்; architectural technical word.

*[கத்தரி + பாண்டு.]*

கற் கட்டடச் சுவரில் ஆறடி அல்லது எட்டடிக்கு ஒரு பாண்டுக்கல் போடப்படும். சுவரில் அகலம் அதிகமானால் இரண்டு பாண்டுக்கற்கள் கத்தரிபோல் போடப்படுவதால் பெற்றபெயர்.

**கத்தரிப்பிடி** *kattari-p-piḍi,* பெ.(n.) 1. கத்தரிக் கோலின் பிடி; handle of scissors. 2. மற்போரில் எதிராளியைத் தாக்கும் பிடி வகை; a mode of wrestling.

*[கத்தரி – கத்தரி + பிடி.]*

**கத்தரிப்புழு** *kattari-p-puḻu,* பெ.(n.) 1. கத்தரிச் செடியிலுண்டாகும் புழுவகை; small worm or insect found in the brinjal. 2. அரிக்கும் புழு; a burrowing parasite.

*[கத்தரி + புழு.]*

**கத்தரிப்பூட்டு** *kattari-p-pūṭṭu,* பெ.(n.) 1. கத்தரியைப் போல் மரக்கொம்புகளைக் கட்டுதல்; sticks tied in form of shears. 2. கத்தரிப் பிடியைப் போன்றி ருக்குமாறு முடிதல்; a mode of head-dress.

ம. கத்திரிப்பூட்டு

*[கத்திரி – கத்தரி + பூட்டு.]*

**கத்தரிமணியன்** *kattari-maṇiyaṉ,* பெ.(n.) 1. எலிவகை.(வின்.); a kind of poisonous rat. 2. பாம்புவகை (யாழ்.அக); a kind of snake.

*[கத்திரி – கத்திரி + மணியன்.]*

**கத்தரிமூக்குப்பறவை** *kattarimūkku-p-paṟavai,* பெ.(n.) நீண்ட இறக்கைகளும் வாத்து போன்ற உடலமைப்பும் வலிய அலகையும் உடைய கடற்பறவை வகை; a sea bird having.

*[கத்தரி + மூக்கு + பறவை.]*

**கத்தரியம்** *kattariyam,* பெ.(n.) ஆடு தின்னாப் பாலை; worm killer.

*[கத்தரி + அம்.]*

**கத்தரிவிரியன்** *kattari-viriyaṉ,* பெ.(n.) கண்ணாடி விரியன்; russell's viper.

*[கத்திரி – கத்தரி + விரியன்.]*

**கத்தரிவேலை** *kattari-vēlai,* பெ.(n.) ***கத்தரிக்கட்டு*** (இ.வ.) பார்க்க; see *kattari-k-kaṭṭu.*

*[கத்தரி + வேலை.]*

**கத்தரை** *kattarai,* பெ.(n.) கொடிவழி(கோத்திரம்) (யாழ்ப்); family, race.

வ. கோத்திரம்>த. கத்தரை.

**கத்தல்** *kattal,* பெ.(n.) 1.உரத்த குரல் பேச்சு; loud talk; shout 2. அலறல்; loud cry; shriek.குழந்தை *"வீல்"*என்றுகத்தியது (உ.வ.). 3. உரத்த ஒலி; noise.

*[கழல் – (கழறு – கழல் + து – கழத்து – கத்து.]*

**கத்தல்காலி** *kattalkāli,* பெ.(n.) கசப்புச் சுவையுள்ள புகையிலை; inferior kind of tobacco.

ம. கத்தல் காலி

*[கச்சல் (கசப்பு) – கத்தல் + காலி.]*

கால் = துளை. புகையிலையைத் துளை யிட்டுப் பதப்படுத்துவர். அவ்வாறு இடப்படும் துளையே புகையிலைக்குப் பெயராயமைந்தது.

**கத்தலாச்சிக்குருவி** *kattalāccikkuruvi,* பெ.(n.) செம்மஞ்சள் நிறமும் இறக்கையில் வெள்ளைப் பட்டையும் உடைய பறவை; dittas.

*[கத்தலைச்சி + குருவி.]*

**கத்தலை**[1] *kattalai,* பெ.(n.) இருள்; darkness.

**க.** கத்தலெ, கத்தலு, கழ்தலெ, கர்தலெ, கள்தலெ. **பட., து.** கத்தலெ.

*[கல் = கருமை. கல் → கழ் → கழ்த்தல் → கத்தல் → கத்தலை.]*

**கத்தலை**[2] *kattalai,* பெ.(n.) தலையில் சிறு கல்லுடைய கடல்மீன் வகை; a genus of sea fish, sciaena.

*[கல் + தலை – கற்றலை → கத்தலை.]*

கத்தலை மீன் வகை:1. கருங்கத்தலை - black sciaena. 2. சாம்பற் கத்தலை - gray sciacena. 3. துருக்கத்தலை - rusly sciacena. 4. வரிக்கத்தலை - striped sciacena. 5. வெள்ளைக் கத்தலை - white sciacena. 6. குறுங்கத்தலை - small sciacena. 7. ஆனைக்கத்தலை - elephant sciacena.

**கத்தன்** *kattaṉ,* பெ.(n.) 1. செய்பவன்; agent, doer, maker, author. 2. கடவுள் (புலியூரந்.32.); god. 3. கிறித்துவ மதப் பூசகன்; a christian priest (சேரநா.).

**ம.** கத்தன்

**த.** கருத்தன் > **Skt.** karta.

*[கரு = செய். கரு → கருத்தன்.]*

**கத்தனம்**[1] *kattaṉam,* பெ.(n.) கவசம்; jacket, tunic, coat of mail *"கத்தனங் கடிது பூண்டார்" (இரகு. மீட்சிப்.7).*

**தெ.** கத்தளமு; **க.** கத்தள.

*[கட்டு → கத்து → கத்தணம்.]*

**கத்தனம்**[2] *kattaṉam,* பெ.(n.) கத்தரித்தல்; to cut with scissors.

*[கள் = வெட்டு. கள் → கட்டு → கத்து. (கொ.வ.)]*

**கத்தாக்கு** *kattākku,* பெ.(n.) கூத்தில் அணியும் உடை; கூத்துடுப்பு. (ம.அக.); dancers dress.

*[கூத்து + ஆக்கு – கூத்தாக்கு → கூத்தாக்கு 'ஆக்கு' சொல்லாக்க ஈறு.]*

**கத்தாமார்** *kattāmār,* பெ.(n.) ***கற்றாழைச்சாறு*** பார்க்க; see *kaṟṟāḻai-c-cāṟu* (சா.அக).

*[கற்றாழை → கத்தாழை +சாறு– கத்தாமார் (கொ.வ.).]*

**கத்தாழம்பட்டு** *kattāḻampaṭṭu,* பெ.(n.) வேலூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Velur district.

*[கற்றாழை + பற்று – கற்றாழைப் பற்று → கத்தாழைப்பட்டு → கத்தாழப்பட்டு.]*

**கத்தாழம்பால்** *kattālamāl,* பெ.(n.) ***கற்றாழைச்சாறு*** பார்க்க; see *kaṟṟaḻai-c-cāṟu* (சா.அக).

*[கற்றாழை → கத்தாழை + அம் + பால்.]*

**கத்தாழை**[1] *kattaḷai,* பெ.(n.) கடலூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kadalur district.

*[கற்றாழை + கத்தாழை.]*

**கத்தாழை**[2] *kattāḻai,* பெ.(n.) ***கற்றாழை*** பார்க்க; see *kaṟṟaḻai* (சா.அக).

**க.** கத்தாளெ; **பட.** கத்தாளெ.

*[கல் + தாழை – கற்றாழை. கல் = திண்மை.]*

**கத்தாளம்பட்டி** *kattalampaṭṭi,* பெ.(n.) தூத்துக்குடி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Tuttukkudi district.

*[கற்றாழை + பட்டி.]*

**கத்தாளை**[1] *kattāḷai,* பெ.(n.) மேட்டுப்பாங்கான நிலத்தில் விளையும் நெல்வகை (w.g.); a kind of paddy, growing on high ground.

**மறுவ.** குத்தாளை

*[கற்றாழை → கத்தாளை. புன்செய் மேட்டுநிலத்தில் கற்றாழை இயல்பாய் வளர்வது போல் வளரத்தக்க ஒப்புமை கருதி பெற்ற பெயர்]*

# கத்தரிக்காய் வகைகள்


கொடிக்கத்தரி


காருகத்தரி


நீலக்கத்தரி


முள்ளுக்கத்தரி


செங்கத்தரி


முட்டைக்கத்தரி

**கத்தாளை**[2] *kattāḷai,* பெ.(n.) ஒருவகைக் கடல் மீன்; a kind of sea fish (அறி.கள.).

**மறுவ.** முரசொலி மீன்

*[கல் + தலை – கற்றலை → கத்தாளை.]*



கத்தாளை மீன்

**கத்தி** *katti,* பெ.(n.) 1. பிடிபொருத்திய நெடும்பட்டை வடிவக் கூர்மையுடைய வெட்டுக் கருவி; knife. கத்தியைத் தீட்டாதே(புத்தி) மதியைத் தீட்டு (உ.வ). 2. மழிப்புக் கத்தி(சவரக்கத்தி); razer. கத்தியால் தலையை மழித்துக் கொண்டான் (உ.வ.). 3. அறுவைக் கத்தி ; lancet, கொதி நீரில் போட்ட கத்தியையே மருத்துவத்திற்குப் பயன்படுத்த வேண்டும் (உ.வ.). 4. வாள்; sward. கத்திச்சண்டைக் காட்சிகள் நிறைந்த படம் (உ.வ.). 5. குறுவாள்; dagger. காவலாளி இடுப்பில் கத்தி இருக்கும் (உ.வ.). 6. குத்துவாள்; short scimiter. கத்திக்குத்துக் காயம் எளிதில் ஆறாது (உ.வ.). 7. அரிவாள்; sickle. மரமேறி இடுப்புக் கத்தியுடன் மரத்திலேறினார் (உ.வ.). 8. கொடுவாள், வளைந்த பட்டாக்கத்தி; scimitar.மரத்தைக் கத்தியால் வெட்டினான் (உ.வ.). 9. மடக்குக்கத்தி; pen knife. கத்தியால் கரிமுனையைச் சீவு (உ.வ.). 10. வெட்டுங்கருவி; cutting instrument.விதைப்புல் வெட்ட கத்தியை வாங்கி வா (உ.வ.). 11. கப்பியிடிக்க உதவும் கட்டைக்கத்தி; rammer. 12. அட்டைக்கத்தி; sword mode of card board.

**ம., க., தெ., கு., பட.** கத்தி; **து.** கத்தி, கத்தெ; **கோத.**கத்ய்; **கூ.**கசேரு; **பிரா.** கத்தார். **கச.** கட்டி; **கொர.** கத்தெ; **Hind.**katti.

*[கள் = வெட்டுதல். கள் → கட்டு → கத்து → கத்தி.]*

kad-i, to cut, to rend, to reprove; katti, a knife, a sword comp. **Sa.** kṛit, to cut, but especially the **E.** cut; **Norman-French**. cotu; **Welsh.** cateia, to cut; **Lat.** caed-o. **Perpsian** and **Ossete**. kard, a knife, and probably also the Dravidian katti, a knife, kattiri, scissors, is from kartari, **Sans**. a derivative of krit (C.G.D.F.L. 591).

**கத்திகட்டிச்சேவல்** *katti-kaṭṭi-c-cēval,*பெ.(n.) கால்களிற் கத்திகட்டிச் சண்டைக்கு விடப்படுஞ் சேவல்; fighting cock, having knives with sharp blades fastened to its spurs.

*[கத்தி + கட்டி + சேவல்]*

**கத்திக்கப்பல்** *kattik-kappal,*பெ.(n.) கீழ்ப்புறம் கத்தி முனை போன்ற பகுதியைக் கொண்ட தாளால் செய்த சிறுவர் விளையாட்டுக் கப்பல்; a children`s play paper - boat with a sharp edge at the bottom.

*[கத்தி + கப்பல்.]*

**கத்திக்காணம்** *katti-k-kāṇam,* பெ.(n.) படைக்களன்; tax on weapons like swords, knives etc.*"கூலமுந்தரகுங் கத்திக்காணமும்" (S.I.I.i.151).*

**ம.** கத்திக்காணம்

*[கத்தி + காணம். காணம் = வரி.]*

**கத்திக்காய்** *katti-k-kāy,* பெ.(n.) கத்தி போலுள்ள காய்; knife-shaped fruit of horse-gram etc.

**ம.** கத்திக்கா

*[கத்தி + காய்.]*

**கத்திக்காயம்** *katti-k-kāyam,*பெ.(n.) கத்தி வெட்டியதால் ஏற்பட்ட புண்; injury or wound caused by stabbing, cutting etc., with a knife (சா.அக.).

*[கத்தி + காயம்.]*

**கத்திக்காரன்** *katti-k-kāraṉ,* பெ.(n.) கள் இறக்குபவன்; a toddy-drawer. ஒரு மரக்கள்ளிற்குக் கத்திக்காரனிடம் சொல்லி வை (உ.வ.).

**ம.** கத்திக்காரன்

*[கத்தி + காரன் – கத்திக்காரன். கத்தி = பாளையறுவாள்]*

**கத்திக்குத்து** *katti-k-kuttu,*பெ.(n.) 1. கத்தியால் குத்துவது; stabbing with a knife. கண்டபடி பேசினால் கத்திக்குத்து விழும் (உ.வ.). 2. கத்தி குத்துவதால் ஏற்பட்ட காயம்; stabbing wound. கத்திக்குத்து ஆறுவதற்குப் பலநாளாகும் (உ.வ.).

**ம.** கத்திக்குத்து

*[கத்தி + குத்து.]*

**கத்திக்குழாய்** *katti-k-kuḻāy,* பெ.(n.) விலங்குகட்கு மருந்தூட்டும் குழாய்; bamboo or other tube for administering medicine to animals.

*[குத்தி + குழாய் – குத்திக்குழாய் →கத்திக்குழாய்.]*

**கத்திக்கூடு** *katti-k-kūḍu,* பெ.(n.) 1. கத்தியை வைக்கும் உறை; a case for keeping a sword. கத்திக்கூட்டுக்குள் கத்தியை வை (உ.வ.). 2. கத்தியை வைக்கும் கூடை; the case which holds the toddy-knife. கத்திக்கூடில்லாமல் கள்ளிறக்கச் செல்லாதே (உ.வ.).

ம. கத்திக்கூடு

*[கத்தி + கூடு.]*

**கத்திக்கோரை** *katti-k-kōrai,* பெ.(n.) பெருங்கோரை; a kind of sedge. (சா.அக)

*[கத்தி + கோரை – கத்திக்கோரை (கத்திபோல் நீண்ட கோரை).]*

**கத்திகட்டி** *katti-kaṭṭi,* பெ.(n.) 1. போர்வீரன்; warrior, carrying a sword. 2. கத்திகட்டியாடுபவன்–ள்; sword dancer, man or woman.

*[கத்தி +கட்டி.]*

**கத்திகட்டு–தல்** *katti-k-kāttu-,* 5 செ.கு.வி. (v.i.) கம்பலைப்படுதல்; to quarrel toomuch.

*[கத்தி + கட்டு.]*

**கத்திகை[1]** *kattikai,* பெ.(n.) 1. பலவகைப்பூக்களால் தொடுத்த மாலை; a kind of garland, made up of variety of flowers. *"செங்கழுநீ ராயிதழ்க் கத்திகை"(சிலப்.8,47).* 2. குருக்கத்தி; common delight of the woods. *"கத்திகைக் கண்ணி நெற்றி" (சீவக. 971.).* 3. கருக்குவாய்ச்சி அல்லது கருக்கு வாலிமரம் (சா.அக); jagged jujube. 4. படர்கொடி; spreading creeper (சா.அக.).

*[கொத்து – கத்து – கத்துகை – கத்திகை.]*

**கத்திகை[2]** *kattikai,* பெ.(n.) சிறிதுகிற்கொடி, பதாகை(திவா.); banner, streamer, small flag.

*[கட்டு – கத்து + கை – கத்துகை – கத்திகை = வெட்டப்பட்ட துணி.]*

**கத்திகையன்** *katti-kaiyaṉ,* பெ. (n.) கள் இறக்குபவன்; a toddy - drawer (சேரநா.).

ம. கத்திக்கையன்

*[கத்தி + கையன். கத்தி = பாளையறுவாள். பாளை சீவுதற்காகக் கையில் பாளையறுவாள் வைத்திருத்தலால் கள் இறக்குவோனை இச்சொல் குறித்தது.]*

**கத்திதீட்டு–தல்** *katti-tiṭṭu-,* 5 செ.கு.வி(v.i.) 1. வெட்டுங்கருவிகளைக் கூர்மைப்படுத்துதல்; to gring or sharpen cutting tools. கத்தியைத்தீட்டாதே வுந்தன் அறிவை (புத்தியை)த் தீட்டு(உ.வ.). 2. பகைத்தல்; to be at daggers drawn; to be on hostile terms. 3. தீங்கிழைக்க நேரம்பார்த்தல்; to bide one's time seeking opportunities to injure. அவனைக் கவிழ்க்க இவன் கத்தி தீட்டுகிறான்(உ.வ.).

மறுவ. சாணைப்பிடி

க. கத்திஇரி

*[கத்தி + தீட்டு.]*

**கத்திதீட்டுவான்** *kattitiṭṭuvāṉ,* பெ.(n.) **கத்திதீட்டுவோன்** பார்க்க ; see *katti-tiṭṭuvōṉ,*

*[கத்தி + தீட்டுவான். தீட்டுவோன் – தீட்டுவான்.]*

**கத்திதீட்டுவோன்** *katti-tiṭṭuvōṉ,* பெ.(n.) வெட்டுங் கருவிகளைக் கூர்மைப்படுத்தும் தொழிலாளி; knife-grinder, an itinerant grinder or sharpener of knives, scissors and cutting instruments.

மறுவ. சாணைபிடிப்போன்

*[கத்தி + தீட்டுவான்.]*

**கத்திநுணா** *katti-nuṇā,* பெ.(n.) நிலவேம்பு (மலை.); creat.

*[கத்தி + நுணா. கத்தி = கத்தி போன்ற இலையுள்ளது.]*

**கத்திப்பணம்** *katti-p-paṇam,* பெ.(n.) கள்ளிறக்குவதற்கு போடப்பட்ட ஒரு வரி; a tax for toddy-drawing (சேரநா.).

ம. கத்திப்பணம்

*[கத்தி + பணம்.]*

**கத்திப்பிட்டல்** *kattippiṭṭal,* பெ.(n.) **கத்திக்கூடு** பார்க்க; see *katti-k-kūḍu.*

ம. கத்திப்பிட்டல்

*[கத்தி + பிட்டல். கத்திப்பிட்டல். புட்டி – புட்டில் பிட்டல் (கொ.வ).]*

# கத்தலை மீன் வகைகள்



கருங்கத்தலை



சாம்பற்கத்தலை



துருக்கத்தலை



வரிக்கத்தலை

**கத்திபோடு-தல்** *kattipōḍu*,செ.குன்றாவி(v.t.) 1. அறுவை மருத்துவம் செய்தல்; to treat by surgery. 2. கத்தியிட்டறுத்தல்; to use surgical knife for curing physical illness. 3. மழித்தல்; to shave.

*[கத்தி + போடு.]*

**கத்திமீன்** *katti-mīṉ*, பெ.(n.) ஒருவகைமீன்; a kind of fish.

*[கத்தி +மீன்.]*



கத்திமீன்

**கத்தியம்** *kattiyam*, பெ.(n.) நல்லாடைவகை. (திவா.);a kind of cloth of superior quality.

**Pkt.** katta; **U.** kātna.

*[கத்தி – கத்தியம்.]*

**கத்தியம்பு** *kattiyambu*, பெ.(n.) இருபக்கமும் முனையுள்ள வாள்; double-edged sword.

**ம.** கத்தியம்பு.

*[கத்தி + அம்பு.]*

**கத்தியரம்** *kattiy-aram*, பெ.(n) ஒருவகை அரம்; a kind of file.

**ம.**கத்தியரம்

*[கத்தி + அரம்.]*

**கத்தியவாடு** *kattiyavāḍu*, பெ.(n.) வேலூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Velur dt.

*[கத்தியன் + பாடி – கத்தியன்பாடி – கத்தியவாடு.]*

**கத்தியன்** *kattiyaṉ*, பெ.(n.) போர்வீரன்; warrior.

**Pkt.** kathrian

*[கத்தி – கத்தியன்.]*

**கத்தியாள்** *kattiyāḷ*,பெ.(n.) வெட்டுபவன்; a chopper (சேரநா.).

**ம.** கத்தியாள்

*[கத்தி + ஆள்.]*

**கத்தியெழுத்தாணி** *katti-yeḻuttāṇi*, பெ.(n.) கத்தியுடன் இணைந்துள்ள எழுத்தாணி; an iron style fixed to a knife (formerly used for writing on palm leaves).

**ம.** கத்தியெழுத்தாணி

*[கத்தி + எழுத்தாணி.]*

**கத்திரி[1]-த்தல்** *kattiri*, செ.குன்றாவி.(v.t.) ***கத்தரி-த்தல்*** பார்க்க; see *kattari-*.

*[கத்தரி – கத்தரி (கொ.வ.).]*

கத்தரி – கத்திரி, 'கத்தரி' என்ற சொல்லிலுள்ள இறுதி இகரத்தின் தாக்கத்தால் அதற்கு முன்னுள்ள தகரத்துடன் இகரம் சேர்ந்து கத்திரி என மாற்றியொலிக்க இடம் தந்தது.

**கத்திரி[2]** *kattiri*, பெ.(n.) **கத்தரி** பார்க்க; see *kattari*.

**ம.** கத்திரி; **க.** காச்சீ திட.

*[கத்தரி – கத்திரி(இ.வ.). கத்தரிக்காயைக் கத்திரிக்காய் என்பது வழுவாம்.]*

**கத்திரி[3]** *kattiri*, பெ.(n.) 1. நன்மையில்லாத நாள் (விதான குணா.குண.48); an inauspicious day. 2. ***கத்தரிவிரியன்*** பார்க்க; see *kattari-viriyaṉ*. 3. தலைவிரிபறை (பிங்.); a kind of drum.

*[கத்தரி– கத்திரி. வெட்டிக் கூறாக்கும் கத்தரிக்கோல் போல் நலன்களைச் சிதைத்துத் தீங்கு பயக்கும் என்று கருதப்பட்ட நாள்.]*

**கத்திரி[4]** *kattiri*, பெ.(n.) ***கத்தரி[5]*** பார்க்க; see *kattari[5]*.

*[கத்தரி – கத்திரி.]*

**கத்திரி[5]** *kattiri*, பெ.(n.) தமிழ்நாட்டிலுள்ள சௌராட்டிரர் பேசும் மொழி. (G. Madu.D.74); dialect of Gujarati and the spoken language of the Saurastras in Tamil Nadu.

*[கத்தியவார் – கத்தியவாரி – கத்திரி. குச்சரநாட்டுக் கத்தியவார் பகுதியில் பேசப்பட்ட கிளைமொழி.]*

**கத்திரி[6]** *kattiri,* பெ.(n.) செடி வெட்டுங் கத்தரி; pruring knife.

*[கத்தரி – கத்திரி.]*

**கத்திரிக்கள்ளன்** *kattiri-k-kaḷḷaṉ,* பெ.(n.) முடிச்சவிழ்ப்பவன், முடிச்சுமாறி (இ.வ.); a pick-pocket.

**க.** கத்தரிகள்ள

*[கத்திரி + கள்ளன்.]*

**கத்திரிக்கை[1]** *kattirikkai,* பெ.(n.) நாட்டியத்தில் கத்தரிக்கோல் தவசக் கதிர் போன்றவற்றைக் குறிக்க இருகை சுட்டுவிரல்கள் நீட்டி மற்றவிரல் களை மடக்கிக் காட்டும் அடையாளம்; இணைக்கை நளிநய(அவிநய) வகை.(பரத.பாவ.64); (natya) gesture with both hands in which the fore-fingers of either hand are stretched out together whilst the rest are kept bent to represent a pair of scissors, ear of corn, etc.

*[கத்தரி – கத்திரி + கை.]*

**கத்திரிக்கை[2]** *kattiri-k-kai,* பெ.(n.) மயிரெறி கருவி; scissors.

*[கத்தரி – கத்திரிக்கை.]*

**கத்திரிக்கோல்** *kattiri-k-kōl,* பெ.(n.) இரண்டு சம நீள மாழைப்பட்டைகளைக் குறுக்கில் ஒன்றன்மேல் ஒன்றாக வைத்திணைத்து அவற்றின் கூர்மையான உள்அலகுகளால் துணி முதலியவற்றை வெட்டப் பயன்படுத்துங் கருவி; scissors, shears, snuffers.

*[கத்தரி – கத்திரி +கோல். கத்தரிக்கோல் பார்க்க; see kattari-k-kōl.]*

**கத்திரிக்கைப்பூட்டு** *kattiri-k-kai-pūṭṭu,* பெ.(n.) ஒருவகைப் பூட்டு; a kind of lock.

*[கத்தரி – கத்திரி + கை + பூட்டு.]*

**கத்திரிகம்.** *kattirigam,* பெ(n.) கால்மாறிநிற்கை. (தத்துவப்.109, உரை); (Saiva) standing posture with legs crossed.

*[கத்தரி – கத்திரி – கத்திரிகம். கத்தரி போல் கால் மாறி நிற்றல்.]*

**கத்திரிகை[1]** *kattirigai,* பெ.(n.) தலைவிரிபறை; a kind of drum. *"கத்திரிகை துத்திரி....கருவித்திர ளலம்ப." (தேவா.837,5).*

*[கத்தரி – கத்திரி + கை.]*

**கத்திரிகை[2]** *kattirigai,* பெ.(n.) திரிபதாகையின் முடங்கிய அணிவிரல் புறைத்ததாகிய நடுவிரலைச் சுட்டு விரலோடு பொருந்த நிமிர்ப்பது. (சிலப்பு.3; 18உரை); a danceing posture with fingers crossed. *"படக நெடுங்கத்திரிகை" (கோயிற்பு. 39).*

*[கத்தரி – கத்தரி +கை.]*

**கத்திரிசரம்** *kattiri-saram,* பெ.(n.) கைமரங்களை இணைக்கும் குறுக்குமரம்; rafer.

*[கத்தரி – கத்திரி +சரம்.]*

**கத்திரிசால்** *kattirisāl,* பெ.(n.) மெழுகுவத்தி நின்று முழுதும் எரிதற்கு தாங்கலான கருவி; candle-stick.

*[கத்தரி – கத்திரி + சால்.]*

**கத்திரிநாயகன்** *kattiri-nāyagaṉ,* பெ.(n.) ***கத்தரிநாயகம்*** பார்க்க; see *kattari-nāyagam.*

*[கத்தரி – கத்திரி + நாயகம்.]*

**கத்திரிநோய்** *kattiri-nōy,* பெ.(n.) 1. ஒருவகை இடுப்பு நோய்; a cutting pain in the hip. 2. கத்திரிப்பது போல் உண்டாகும் வலி; a severe cutting pain in general. 3. மகப்பேற்று நோய்; dilating pains of labour (சா.அக).

*[கத்தரி – கத்திரி + நோய்.]*

**கத்திரிபாவல்** *kattri-pāval,* பெ.(n.) ***கத்திரிபாவிலி*** பார்க்க; see *kattiri-pāvili. "கத்திரிபாவல் செவிபுனையா" (தனிப்பா. ii, 250,590)*

*[கத்திரி + பாவல்.]*

**கத்திரிபாவிலி** *kattri-pāvili,* பெ.(n.) மகளிர் காதணி வகை; an ornament for the ear, made of gold and gems worn by women near the top of each ear.

**ம.**கத்திரிபாவல்

**க.** கத்தரிபாவுலி; **தெ.** கத்தெரபாவிலி.

# கத்தலை மீன் வகைகள்



வெள்ளைக் கத்தலை



குறுங்கத்தலை



ஆனைக் கத்தலை

[கத்தரி → கத்திரி + பாவலி. பாவலி = பரவலான தட்டை அணி.]

**கத்திரிமணியன்** *kattiri-maṇiyaṉ,* பெ.(n.) ***கத்தரி மணியன் (வின்.)*** பார்க்க ; see *kattari-maṇiyaṉ.*

[கத்திரி → கத்திரி + மணியன்.]

**கத்தரிமல்** *kattirimal,* பெ.(n.) கைமரங்களை இணைக்கும் குறுக்கு மரம் (நெல்லை); rafter.

[கத்தரி → கத்திரி + (மால்)மல்]

**கத்திரிமாறு-தல்** *kattirimāṟu-,* செ.கு.வி(v.i.) கத்தரியைப்போல் ஓரிடத்தில் சேர்ந்து இருபக்கமும் மாறி இருத்தல்; to converge two sides at a place where they cross each other, as two blades of a scissors.

[கத்திரி + மாறு.]

**கத்திரியன்** *kattiriyaṉ,* பெ.(n.) இரண்டாம் இனத்தான்; kṣatriya, man of the warrior caste, the second of the four castes. *"கத்திரியர்கான்"(திவ்.பெரியாழ்.1,9,6)*

[கத்தியன் → கத்திகாரன் → கத்திரியன் **த.** கத்தியன் >Skt. ksatria.]

**கத்திரிவிரியன்** *kattiri-viriyan,* பெ.(n.) ***கத்தரி விரியன்*** பார்க்க; *kattari-viriyan.*

[கத்திரி + விரியன்.]

**கத்திரிவெயில்** *kattiriveyil,* பெ.(n.) மேழத் (சித்திரை) திங்கள் இறுதி ஏழுநாள்களிலும் விடைத்(வைகாசி) திங்கள் முதல் ஏழு நாள்களிலும் அடிக்கும் கடுமையான வெயில்; highly tormenting hotdays of last seven days of cittirai month and first seven days of vaigasi month.

[கத்தரி → கத்திரி + வெயில்.]

**கத்திரிவேலை** *kattiri-vēlai,* பெ.(n.) ***கத்திரிக் கட்டு*** பார்க்க; see *kattēri-kaṭṭu.*

[கத்திரி + வேலை]

**கத்திரு** *kattiru,* பெ.(n.) கருத்தன்; agent, doer, maker, creator. *"நுவல்கத்திருவோடு போத்திருவே" (வேதா.கு.37)*

[கரு → கருத்தன் → கருத்தர் → கத்திரு (கொ.வ.).]

**கத்திவாக்கம்** *kattivākkam,* பெ.(n.) காஞ்சிபுரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kanchipuram district.

[கத்தரி → கத்தி + பாக்கம்– கத்திரிப்பாக்கம் → கத்திவாக்கம்.]

**கத்திவால்** *kattival,* பெ.(n.) கத்திபோல் வால் உள்ள ஒரு மீன்; a kind of fish.

[கத்தி + வால்.]



கத்திவால்மீன்

**கத்திவாள்** *katti-vāl,* பெ.(n.) 1. வளைவாள்.(வின்.); scimitar. 2. வெட்டுக்கத்தி; a chopper.

**ம.** கத்திவாள், கத்தியாள்.

[கத்தி + வாள்.]

**கத்திவாளி அம்பு** *kattivāḷi-ambu,* பெ.(n.) வாள் வடிவினதான அம்பு; an arrow shaped sword, a semicirlular arrow.

**தெ.** கத்திவாலி அம்மு

**கத்திவீச்சு** *katti-viccu,* பெ.(n.) கத்தியாட்டம்; sword dance.

**க.** கத்திவரசெ

[கத்தி + வீச்சு.]

**கத்திவீசுதல்** *katti-visu-,*5. செ.கு.வி.(v.i.) வாள்வீசி விளையாடுதல், to brandish a sword, perform sword exercises or sword dance.

[கத்தி + வீசு.]

**கத்திவெட்டு** *katti-veṭṭu,* பெ.(n.) கத்தி வெட்டினால் ஏற்பட்ட காயம்; a cut with a knife.

**தெ.** கத்திவாடு

*[கத்தி + வெட்டு.]*

**கத்து[1]–தல்** *kattu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. காக்கை கரைதல், மயில் அகவுதல், குயில் கூவுதல், கோழி, கவுதாரி போன்றன கொக்கரித்தல், நாய் குரைத்தல், நரி ஊளையிடுதல், யானை பிளிறல், அரிமா உரப்புதல், வரிமா உறுமுதல், குதிரை கனைத்தல், வண்டு முரலுதல், மாடு, கழுதை, தவளை, பூனை போன்றவை கத்துதல்; to caw as a crow, to screch as a peacock, to coo as a cuckoo , to chuck as a partridge and cock, to yelp as a puppy, to howl as a bear, to trumpt as an elephant, to roar as a lion, to growl as a tiger, to neigh as a horse, to hum as a bee, to croak as a frog, to maa as a cow, to browl as a donkey, to mew as a cat. 2. குரலெழுப்பிச் சொல்லுதல்; to scream.தன் கருத்தை வலியுறுத்த கத்திப் பேசினான் (உ.வ.). 3.கூவுதல்; to bowl, cry.கூப்பிடு தொலைவில் உள்ளவனையும் கத்தி அழைக்க இயலாதவன் (உ.வ.). 4. இரைச்சலிடுதல்; to make continued noise. வகுப்பறையில் மாணவர்கள் கத்திக் கொண் டுள்ளனர் (உ.வ.). 5. அழுதல்; cry. பாலுக்காக குழந்தை கத்திக் கொண்டிருக்கிறது (உ.வ.). 6. பிதற்றுதல்; to babble, jabber, chatter talk in vain.*"பேதையோராய்க் கத்திடு மான் மாக்கள்" (சி.சி.பா.பாயி.8).* 7. முழங்குதல்; to roar as the sea .*"கத்துகடல் சூழ் நாகை"(தனிப்பா.i.31.58).*

**ம.** கத்துக; **க.** கத்து.

*[கழல்(கழறு) → கழல் + து – கழத்து→ கத்து.]*

**கத்து[2]–தல்** *kattu,* 5 செ.கு.வி.(v.i.) 1. எரிதல்; to burn, kindle, burn with flame.2. பசியால் வயிற்றெரிச்சல் உண்டாதல்; to pinch, to feel a burning sensation in the stomach due to hunger.

**ம.** கத்துக; **க,பட.** கத்து; **கோத.**கத்; **துட.**கொத்; **குட.**கத்த்; **து.** கத்துணி; **தெ.**கத்து.

*[கனல் + து – கனற்று → கனத்து→ கத்து.]*

**கத்து[3]–தல்** *kattu,* 5 செ.குன்றாவி.(v.t.) வெட்டுதல்; to cut.

*[கள்→ கத்து.இவ்வினை பிற்காலத்து வழக்கற்றது.]*

இருதிணை யுயிரிகளும் இயல்பாகத் கத்துவதைக் குறிக்கும் வினைச்சொற்கள், ஒலித்தல், கூப்பிடுதல் என்னும் இருபொருட்கும் ஏற்கும்.

கத்துதல் – ஒலித்தல், கூப்பிடுதல்

கரைதல் – " "

கூவுதல் – " "

விளித்தல் " "

அழைத்தல் – கத்துதல், கூப்பிடுதல். இவற்றுள் கரை அழை என்னும் சொற்கள் அழுதலையுங்குறிக்கும் (மு.தா.6.).

**கத்து[4]–தல்** *kattu,*5 செ.குன்றாவி.(v.t.) ஓதுதல்; to recite, read.*"பொய்நூல் கத்திக் குவித்த பல்புத்தகத்தீர்" (அஷ்டம், திருவேங்கடத்தந்.33).*

*[கழல்(கழறு) + து – கழத்து → கத்து.]*

**கத்து[5]** *kattu,* பெ.(n.) 1. அழைக்கை; crying, bawling, calling. 2. பிதற்றுகை; chattering, idle talking, babbling.*"அச்சமயக் கத்தினார்" (அஷ்டப். திருவேங்கடமா.59).*

*[கழல் (கழறு) + து – கழத்து → கத்து.]*

**கத்து[6]** *kattu,*பெ.(n.) எழுத்துப்பதிவு.(c.g.); letter, writing, entry in a book.

**க.** கத்து; **Ar.**khatt.

*[கொத்து→கெத்து → கத்து = வெட்டி அல்லது செதுக்கிப் பொறிக்கும் எழுத்துக் கல்வெட்டு.]*

**கத்து[7]** *kattu,*பெ.(n.) உடற்பொருத்து. (நாமதீப.); joints of the body.

*[கள்→ கழு → கழுத்து → கத்து.]*

**கத்து[8]** *kattu,* பெ.(n.) சடைவு, களைப்பு(நாமதீப.); weariness.

*[கனத்து → கத்து (வெப்பமிகுதியால் உண்டாகும் சோர்வு.]*

**கத்தூரிச்சேறு** *kattūri-c-cēṟu,* பெ.(n.) நறுமணத்திற்காகப் பயன்படுத்தும் கத்தூரிக் குழம்பு; a jellied musk preparation in perfumery(சா.அக).

*[கடத்துரு → கத்தூரி + சோறு.]*

**கத்தூரிநாமம்** *kattūri-nāmam,* பெ.(n.) கத்தூரியால் திருமேனியின் ஊர்வத்துவமாக திருமால் நெற்றி யிலிடுங் குறி; vertical streak of musk, painted in the middle of the forehead of the idol of Viṣnu, as

in the shrine in Srirangam. *"சீரிதாளமுது கத்தூரிநாமமும்" (அஷ்டப் திருவரங்க கலம்.).*

*[கத்தூரி + நாமம்]*

**கத்தூரிநாரத்தை** *kattūri-nārattai,* பெ.(n.) நாரத்தை வகை. (யாழ்.அக); a fragrant kind of orange.

*[கத்தூரி + நாரத்தை]*

**கத்தூரிநாவி** *kattūri-nāvi,* பெ.(n.) கத்தூரிமான் (யாழ்.அக); musk deer.

*[கத்தூரி + நாவி. நவ்வி – நாவி.]*

**கத்தூரிநாறி** *kattūri-nāṟi,* பெ.(n.) கத்தூரி மணமுடைய ஒரு மரம்; a tree with the small of musk (சா.அக).

*[கத்தூரி + நாறி]*

**கத்தூரிப்பட்டை** *kattūri-p-paṭṭai,* பெ.(n.) கத்தூரி மணமுள்ள அலரிப்பூச்செடிகளை; musk scented oleander.

**மறுவ.** கத்தூரி அலரி

*[கத்தூரி + பட்டை.]*

**கத்தூரிப்பிழம்பு** *kattūri-p-piḻambu,* பெ.(n.) கத்தூரியை முதன்மையாகக் கொண்டு வழக்கும் அமிலம்; an acid extracted from a mixture with musk as a chief ingredient (சா.அக.).

*[கத்தூரி +பிழம்பு.]*

**கத்தூரிப்பிள்ளை** *kattūri-p-piḷḷai,* பெ.(n.) ***கத்தூரி நாவி*** பார்க்க **(யாழ்.அக.);** see *katturi-navi.*

*[கத்தூரி + பிள்ளை.]*

**கத்தூரிப்பூ** *kattūri-p-pū,* பெ.(n.) கத்தூரி மணமுள்ள அலரிப்பூ; musk scented oleander flower.

*[கத்தூரி + பூ.]*

**கத்தூரிப்பூடு** *kattūri-p-pūḍu,* பெ.(n.) கத்தூரி மணமுள்ள பூண்டு வகை; a genus of malvaceous plants(சா.அக).

*[கத்தூரி + பூடு.]*

**கத்தூரிப்பூனை** *kattūri-p-pūṉai,* பெ.(n.) 1. சவ்வாதுப் பூனை; large civeticat. 2. புனுகுப் பூனை; civet cat (சா.அக.).

*[கத்தூரி + பூனை.]*

**கத்தூரிப்பொட்டு** *kattūri-p-poṭṭu,* பெ.(n.) நெற்றி யிலிடும் குறி; mark of musk on the forehead.

*[கத்தூரி + பொட்டு.]*

**கத்தூரிமஞ்சள்** *kattūri-mañjaḷ,* பெ.(n.) மஞ்சள் வகை; long and round zedoary shrub.

*[கத்தூரி + மஞ்சள்]*

**கத்தூரி மல்லிகை** *kattūri-mālligai,* பெ.(n.) கத்தூரி மணமுடைய மல்லிகைமலர்; musk jasmine (சா.அக.).

*[கத்தூரி + மல்லிகை.]*

**கத்தூரிமான்** *kattūri-māṉ,* பெ.(n.) கத்தூரி உண்டாகும் மான்வகை(யாழ்.அக.); musk-deer.

*[கத்தூரி + மான்.]*

**கத்தூரிவாணன்** *kattūri-vāṉaṉ,* பெ.(n.) ஒரு நெல் வகை; a kind of paddy *"கத்தூரிவாணன் கடைக் கழுத்தன்" (முக்கூடற்பள்ளு.).*

*[கத்தூரி + வாணன்.]*

**கத்தூரி வைப்பு** *kattūri-vaippu,* பெ.(n.) செயற்கைக் கத்தூரி; prepared musk.

*[கத்தூரி + வைப்பு.]*

கல்மதம் அல்லது உறைந்து காய்ந்த அரத்தத்தை மீன் அம்பர் எண்ணெயோடு இரண்டறக் கலந்து வெடியுப்பு அமிலத்தைச் சேர்த்துப் பிறகு தண்ணீர் விட்டு அலம்பி எடுத்தால் கத்தூரியைப் போல் நறுமணம் வீசும் [சா.அக].

**கத்தை** *kattai,* பெ.(n.) ***கழுதை*** பார்க்க; see kaḻudai.

**ம.** கழுத; **க.** கத்தெ, கழ்தெ, கர்தெ, கள்தெ; **து; குட.;** **பட.** கத்தெ; **தெ.** காடித; **கை.** கெதி; **குற.** கதி; **துட.** கத்ய், க்வத்தெ; **கோண்.** காயத்; **கூ.**தொடொ; **நா.** காட்தி; **கொலா.** கத்தி, காட்தி; **பர்.** கரத்,கதெ; **குரு.** கத்ய. **மால்.** கதகொள்தி.

*[கழுதை → கழ்தை → கத்தை.]*

**கத்தோயம்** *kattōyam,* பெ.(n.) கள்; toddy.

*[கள் + தோயம் – கட்டோயம் → கத்தோயம் தோயம் = நீர்மம், நீராளமான பொருள்.]*

**கதகத–த்தல்** *kadakada-,* 4 செ.கு.வி.(v.i.) 1. நடுங்குதல்; to tremble. 2.வெப்பமாதல்; a smart heat, warm. வெந்நீர் கதகதப்பாக இருக்கிறது (உ.வ.).

க. கதகதிசு, கதக்கதிசு.

*[கதழ் → கத + கத.]*

**கதகதப்பு** *kadakadapu,* பெ.(n.) 1. வெம்மை; heat. "கதகதென் றெலியுதே காமாக்கினி"(இராமநா. ஆரணி.) 2. வெதுவெதுப்பு; warm மழைக்காலத்தில் கூரைவீடு கதகதப்பாக இருக்கும் (உ.வ.).

*[கத + கத – கதகத → கதகதப்பு.]*

**கதகதெனல்** *kada-kadenal,* பெ.(n.) 1. வெப்பமாதற் குறிப்பு; being hot from fever or from the closeness of a crowded room. *"கதகததென் றெரியுதெ காமாக்கினி" (இராமநா. ஆரணி. 8).* 2. குளிரில்லாமல் இதமாயிருத்தல்; to feel warm. மழைக் காலத்தில் கூரைவீடு கதகதவென இருக்கும் (உ.வ.). 3. கொதித்தல், வடிதல், பீச்சிடுதல் போன்ற வற்றைக் குறிக்கும் ஒலிக்குறிப்பு; sound produced in boiling , as a liquid; in flowing as water from a sluice; in gushing, as blood from the artery.

*[கத + கத + எனல்.]*

**கதகம்** *kadagam,* பெ.(n.) தேற்றாங்கொட்டை; clearing nut. *"பின்னையுளதோ கதகமலாற் பெருநீர் தெளித்தற்கு" (பிரபுலிங்.ஆரோகண.51).*

*[கதுவு→ கதுவம்→ கதுகம் → கதகம்.]*

**கதண்டு** *kadandu,* பெ.(n.) காட்டுக் கருவண்டு. (வின்.); wild black beetle (சா.அக).

*[கருவண்டு → கதண்டு.]*

**கதண்டுக்கல்** *kadandukkal,* பெ.(n.) கதண்டின் தலையில் உள்ள ஒருவகைக்கல்; a stone supposed to be on the head of a beetle.

**மறுவ.** கானத்தும்பி, வாகைப் புதைச்சி, புதையற் குடியிருப்பு.

*[கதண்டு + கல்.]*

இக்கல் மந்திர ஆற்றல் பொருந்தியதாகக் கருதப்படுகிறது.

**கதண்டுத்தேன்** *kadandut-tēn* பெ.(n.) கருவண்டுத் தேன்; honey collected by wild black beetle (சா.அக).

*[கருவண்டு + வாணன்.]*

**கதம்**[1] *kadam,* பெ. (n.) சினம்; anger. *"கானுறை வாழ்க்கை கதநாய்வேட் டுவன்" (புறநா.33).* 2. வற்கடம்; famine, scarcity. கதம் பிறந்தது (வின்.) 3. வரம்பு; snake. 4. வலிமை; strength. 5. விரைவு; speed. பெருங்கதத் திருநதி (கல்லா. 56.23).

**ம.**கதம்; **க.,கொலா.** கதி; **து.**காவுட(சண்டை, போர்).

*[குதம் → கதம் (வே.க.142.)]*

**கதம்**[3] *kadam,* பெ. (n.) அரத்தக்கதிப்பு; deranged condition of blood.

*[குல்→ குதம்→ கதம்.]*

**கதம்பம்**[1] *kadampam,* பெ.(n.) கானங்கோழி (வின்.); bald coot.

*[கது → கதும்பு → கதும்பம். குட்டையான வாலுடைய கானக்கோழி]*

**கதம்பம்**[2] *kadambam,* பெ.(n.) 1. பலவகைப் பூக்களாலும், பச்சிலைகளாலும் வேர்களாலுந் தொடுக்கப்பட்ட மாலை; garland made of different kinds of fragrant flowers, leaves and fibrous roots. 2. அவை(அரு.நி.); assembly. 3. மாட்டுமந்தை (யாழ்.அக.); herd of cows. 4. ***கத்திகை[1]*** பார்க்க, see *kattigai.*

**ம.** கதம்பன்மால

*[கல → கலம்பு → கலம்பம் → கதம்பம் = பல்வேறு வகை மலர்கள் கலந்த மாலை. ல –ச. போலித்திரிபு, ஒ.நோ. சலங்கை சதங்கை. வடவர் காட்டும் கத் என்னும் மூலம் கல்லென்னும் தென்சொல். வேர்த்திரிபே. (வ.மொ.வ.107)]*

**த.** கதம்பம்> **Skt.** kadamba.

**கதம்பம்**[3] *kadambam,* பெ.(n.) 1. ***கடம்பம்[1],*** பார்க்க (திவா);see kadambam[1]. 2. வெண்கடம்பு; seaside Indian oak. *"சுரும்பணி கதம்பநாற்றி"* 3. சிறுமரம்; a species of roudeletia wort. 4. கூட்டம்; multitude, assemblage, collection, herd. 5. கலப்புணவு (இ.வ.); mixure of food offered in a temple, as boiled rice mixed with curry, relishes and vegetables. 6. மணப்பொடிக் கலவை.(வின்.); fragrant powder used as a perfume on festive occasion.

*[கல → கலம்பம் → கதம்பம்.]*

**கதம்பம்**[4] *kadambam,* பெ. (n.) முகில் (பிங்.); cloud.

*[கல → கலம்பம் → கதம்பம். கல → கலத்தல் – திரளுதல்.]*

**கதம்பம்**[5] *kadambam,* பெ. (n.) 1. மஞ்சள்; turmeric. 2. கம்புத்தவசம்; spiked-millet. 3. கடுகுசெடி; mustard plant.

*[கடு → கட → கடம்பம் → கதம்பம்.]*

**கதம்பம்**[6] *kadambam,* பெ. (n.) 1. சோறு, குழம்பு, கறி ஆகியன சேர்ந்த கலப்புணவு; mixture of food consisting of boiled rice, sauce and vegetable curry. 2. பல்வேறு நறுமணப் பூக்களைக் கலந்து தொடுத்த பூச்சரம்; garland of several fragrant flowers. 3. பல விலங்குகள் அல்லது பொருள்கள் சேர்ந்த கூட்டம்; a general term for collection of things or animals.

*[கல → கலம்பம் → கதம்பம்.]*

**கதம்பம்**[7] *kadambam,* பெ.(n.) காட்டுக் கோழி; wood or rail hen.

*[கல → கலம்பம் → கதம்பம் (பல நிறங் கொண்டது.)]*

**கதம்பமாக்கு-தல்** *kadambam-ākku-,*5 செ.குன்றாவி (v.t.) கலக்குதல்; to mix, jumble.

*[கதம்பம் + ஆக்கு.]*

**கதம்பமுகுள நியாயம்** *kadamba-mugla-niyāyam,* பெ.(n.) ***கதம்பமொட்டு முறைமை*** பார்க்க; see *kadamba-mottu-muraimai.*

*[கதம்பம் + முகுளம் + நியாயம். முகுள நியாயம் என்னும் வடசொல் தமிழில் மொட்டு முறைமை எனப்படும்.]*

**கதம்பமொட்டு முறைமை** *kadamba-mottu-muraimai,* பெ. (n.) சிறப்பு (வைசேடிக) முறைமையில் ஒலி உறுப்பிலிருந்து வெவ்வேறு சிற்றொலிகளும் பேரொலிகளும் செவிக்கு ஒருங்கே எட்டுவதை விளக்க மழை பெய்யுங்காலத்துக் கதம்ப மொட்டுகள் ஒரே காலத்தில் பூப்பதை உவமைகாட்டிச் செயற் பாடுகள் ஒருங்கு தோன்றுகின்றன எனக் காட்டும் நெறி (சி.சி. 2.61 சிவாக்.); The illustration of the kadamba buds shooting upon all sides simultaneously, which is used in the Vaisedika and Nyaya systems to explain how different series of sounds from the same sounding body are transmitted simultaneously to the ears of hearers at equidistant points on all sides, usually contrasted with vicitaraṅkanyāya, the illustration of larger and smaller waves in the same context.

*[கதம்பம் + மொட்டு + முறைமை.]*

**கதம்பவுணவு** *kadamba-v-uṇavu,* பெ. (n.) நறுமணப் பொருள்கள் சேர்த்து ஆக்கிய சோறு (புலவு); food highly flavoured with spices (சா.அக.).

*[கல → கலம்பம் → கதம்பம் + உணவு, உசிலை (மசாலா) கலந்த உணவு.]*

**கதம்பாரி** *kadambāri,* பெ. (n.) தேற்றாங்கொட்டை (மலை); clearing nut.

*[கடு → கடம்பு → கதம்பு + ஆரி – கதம்பாரி.]*

**கதம்பு**[1] *kadambu,* பெ. (n.) கதம்பம்; a fragrant powder (சா.அக.).

*[கதம்பம் → கதம்பு. 'அம்' ஈறு கெட்டது.]*

**கதம்பு**[2] *kadambu,* பெ.(n.) ***கடம்பம்*** பார்க்க; see *kadambam.*

*[கடம்பு → கதம்பு.]*

**கதம்பை** *kadambai,* பெ.(n.) 1. தேங்காய் மட்டை அல்லது நார், கதம்பைக் கயிறு; coconut husk or fibre that covers the nut, rope made up of a coconut fibre. 2. புல்வகை. (வின்.); a kind of grass. 3.எழுதுதற்கு வார்ந்த பனையோலையிற் கழிக்கப்பட்ட பகுதி (யாழ்ப்.); ends and bits of palmyra leaves cut for writing. 4. வைக்கோல்; hay. 5. புல்லின் தாள்; the stalk of grass.

ம. கதம்ப.

*[கோது → கோதும்பு → கதம்பு → கதம்பை.]*

*கோது : காய், நெற்று, தாள், வித்து, தவசம் ஆகியவற்றைப் போர்த்துள்ள புறத்தீடு. **கோது** பார்க்க; see kōdu]*

**கதம்பைக்கயிறு** *kadambai-k-kayiṟu,* பெ.(n.) தேங்காய் மட்டை நாராலான கயிறு; rope made up of the fibre of coconut husk.

*[கதம்பை + கயிறு. கதம்பை பார்க்க.]*

**கதம்பைக்குழி** *kadambai-k-kuḻi,* பெ.(n.) தேங்காய் மட்டை நாரைப் போடும் குழி; a pit for putting coconut husks.

ம. கதம்பக்குழி

[கதம்பை + குழி. கதம்பை பார்க்க.]

**கதம்பைப்புல்** *katambai-p-pul,* பெ.(n.) புல்வகை (வின்.); a kind of bearded grass with twisted awns.

[கதம்பை + புல்.]

**கதம்பையுப்பு** *kadambai-y-uppu,* பெ.(n.) கதம்பைப் புல்லை எரிப்பதால் கிடைக்கும் உப்பு; salt obtain by burning the kadamhai pul (சா.அக.).

[கதம்பை + உப்பு.]

**கதரம்** *kadaram,* பெ.(n.) யானைத்துறட்டி; elephant-goad.

[கதழ் → கதல் → கதலும் → கதரம்.]

**கதரி** *kadari,* பெ.(n.) புல்லூரி; a parasitic plant (சா.அக.).

[கது → கதல் → கதரி. கது = விளைதல், பரவுதல்.]

**கதரோகம்** *kadarōgam,* பெ.(n.) ***கதநோய்*** பார்க்க; see *kada-nōy.*

[கதம் + ரோகம்.]

**கதல்(லு)-தல்** *kadal-* 5 செ.கு.வி.(v.i.) 1. அசைதல் (யாழ்.அக.); to move (செ.அக.). 2. நடுங்குதல், அஞ்சுதல்; to tremble, fear. 3. இருக்கும் இடத்தை விட்டுச் சரிதல்; to slip, to go away (கருநா.).

**க.** கதலு; **தெ.** கதலு; **ம.** கதர்து; **து.** கதலு, கதெலு; **பர்.** கத்ல்.

[கதழ் → கதல்.]

**கதலம்** *kadalam,* பெ.(n.) வாழை (மலை.); plaintain.

[கதலி → கதலம்.]

**கதலமெதலவொட்டு-தல்** *kadala-medala-voṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) அசைய இடங்கொடுத்தல்; to allow to move about. இவனைக் கதலமெதல வொட்டாமற் பிடித்துக்கொண்டான் (வின்.).

[கதல் + மெதல (ஒலிக்குறிப்பு) + ஒட்டு.]

**கதலல்** *kadalal,* பெ.(n.) அசைதல்; moving, shaking.

**க.** கதலு.

[கதழ் → கதழல் → கதலல்.]

**கதலாடு-தல்** *kadalāḍu,* 5 செ.கு.வி.(v.i.) அசைதல், தள்ளாடுதல்; to move about, to be unsteady, to shake.

**க.** கதலாடு

[கதழ் + ஆடு - கதழாடு → கதலாடு. கதழ்தல் = அசைதல்.]

**கதலி**[1] *kadali,* பெ.(n.) 1. வாழை; plantain tree. *"நெட்டிலைப் பைங்கதலி" (திருக்காள.பு.தாருகா.15).* 2. ***கதலி வாழை*** பார்க்க; see *kadali-vāḻai.* 3. துகிற்கொடி; banner, flag, pennon. *"கானெடுந் தேருயர் கதலியும்" (கம்பரா. முதற்போர். 104).* 4. பறக்கவிடுங் காற்றாடி; a big paper kite. *"ஆகாய முற்ற கதலிக்கு" (கம்பரா. கடறாவு. 85).*

**ம., க.** கதளி; **தெ.** கதனி, கதளமு.

**த.** கதலி. > **Skt.** kadali; **H., U.** kela; **Pali.** kadali; **Ori.** kadali; **Mar.** keelevi; **Sinh.** kehel gedi.

மகளிர் கொண்டையாக முடிந்த கூந்தல் முடிபோன்ற தோற்றமுடைய வாழைக்குலை கதலி எனப்பட்டது.

கதலி = சிறுவாழைப்பழம். கதலி → கசலி = மீன்குஞ்சு. இச் சொல் குதலை என்பதனொடு தொடர்புடையது. மிக இனிக்கும் சிறுவாழைப்பழவகை தேங்கதலி எனப் பெறும்.

வடசொல் சிறுமை என்னும் சிறப்புப் பொருளிழந்து, பொதுவாய் எல்லா வாழைப்பழ வகைகளையுங் குறிக்கும். [வ.மொ.வ. 107]

**கதலி**[2] *kadali,* பெ.(n.) தேற்றாங்கொட்டை (பிங்.); clearing-nut.

[கடலி (அகற்றுவது) → கதலி.]

**கதலிக்கட்டை** *kadali-k-kaṭṭai,* பெ.(n.) வாழை மரத்தின் அடியும் வேரும்; the root and stem of the plantain tree.

[கதலி + கட்டை.]

**கதலிகை** *kadaligai,* பெ.(n.) 1. ***கதலி***[1] பார்க்க; see *kadali "கதலிகைக் கானம்" (சீவக. 2212).* 2. துகிற் கொடி; banner, flag. *"கதலிகைக் கொடியும் காழூன்று விலோதமும்" (மணிமே. 1:52).* 3. ஓர் அணிகல உறுப்பு; a part of the girdle. *"திருப்பட்டிகைக் கதலிகை"* (S.I.I. ii. 144).

[கதலி - கதலிகை.]

**கதலிகை தங்கனை** *kadaligai-taṅgaṉai*, பெ.(n.) இடைப்பட்டிகையிலும், தோள்களிலும் அணியப் பெறுவதற்குரியதாகக் குஞ்சம் போன்ற அமைப்பில் மணிகளாலும் முத்துகளாலும் அரும்பிடப் பெறும் அணிகலன்; pendant adorned with jewels and pearls which were worn on shoulders and as girdles.

*[கதலிகை + தொங்கனை → தங்கனை. கதலி = வாழை. வாழைப்பூ மொட்டுப் போன்ற தொங்கல் அணி.]*

**கதலிச்சி** *kadalicci*, பெ.(n.) கருப்பூரம் (மூ.அக.); gum camphor.`

*[கதழி = கசிவு நீர்மம், பசை. கதழி → கதலி → கதலிச்சி.]*

**கதலித்தேன்** *kadali-t-tēṉ*, பெ.(n.) தேன்வாழைப் பழத்தினின்று வடியும் இனிப்புச் சுவையுள்ள நீர்மம்; honey-like sweet fluid oozing from one variety of banana fruit.

*[கதலி + தேன்.]*

**கதலிநோய்** *kadali-nōy*, பெ.(n.) தலைமுடி உதிரும் நோய்; the disease which cause to remove hair.

*[கதலி + நோய்.]*

**கதலிப்பூ**[1] *kadali-p-pū*, பெ.(n.) 1. வாழைப்பூ; the flower of the plantain tree. 2. நெஞ்சாங்குலை; the heart 3. குண்டலி; the seat of the vital power in the human system (சா.அக.).

*[கதலி + பூ.]*

*[நெஞ்சாங்குலையும் குண்டலியும் வாழைப்பூ வடிவின என்ற அடிப்படையில் இவ் விரண்டிற்கும் இப் பெயர் பொருந்தியது.]*

**கதலிப்பூ**[2] *kadali-p-pū*, பெ.(n.) பச்சைக் கற்பூரம். (மூ.அக.); preparation of campor.

*[கதலிச்சிப் பூ → கதலிப்பூ.]*

**கதலிப்பூ வெட்டு-தல்** *kadali-p-pū- veṭṭu-*, 5 செ.குன்றாவி.(v.t.) வாயில் நிலையில் வாழைப்பூ போன்று மரவேலை செய்தல்; to engrave a form of plantain fruit on the front door frame.

*[கதலிப்பூ + வெட்டு.]*

**கதலிபாகம்** *kadali-pāgam*, பெ.(n.) வாழைப்பழத்தை உரித்துச் சுவைப்பது போன்ற எளிய முயற்சியிலேயே செய்யுட் சுவையுணரும் பாங்குடைய செய்யுளமைதி; one of the three levels of of understandability of pāgam easy, felicitious style of poetry, delicious as plantain fruit.

*[கதலி + பாகம். பாங்கு → பாகு → பாகம்.]*

செய்யுட் பாகங்கள் மூன்றாவன திராட்சை பாகம் (திராட்சா பாகம்), கதலி பாகம், தேங்காய் பாகம் (நாளிகேரப் பாகம்).

வாழைப்பழத்தின் இன்சுவை போன்றதோர் பாட்டமைதிச் சுவை கதலிபாகம் எனப்பட்டது. இச் சொல் வடமொழியில் கதலீபாகம் எனத் திரிந்தது.

**கதலிமணம்** *kadali-maṇam*, பெ.(n.) வாழையை மணப்பெண்ணாகக் கருதி மணம் புரியும் சடங்கு; performing marriage ceremony considering plantain tree as a bride (C and T.47).

*[கதலி + மணம்.]*

மூத்தவனிருக்க இளையவனுக்கு மணமுடிக்க நேரும் பொழுது, வாழையை மணப்பெண்ணாகக் கருதி, மூத்தவனை வாழைக்கு நாணணியச் செய்தலாகிய சடங்கு; ஒருவனுக்கு மறுமணம் இருப்பதாக அவனது பிறப்பியம் (சாதகம்) கூறுமாயின் அவனுக்கும் இத்தகைய சடங்கினைச் செய்தலுண்டு.

**கதலிமலடி** *kadali-malaḍi*, பெ.(n.) **கதலிமலடு** பார்க்க; see *kadali-malaḍu*.

**மறுவ.** ஒற்றை மலடி

*[கதலி + மலடி. கதலி = வாழைவகை.]*

**கதலிமலடு** *kadali-malaḍu*, பெ.(n.) ஒரே முறை ஈன்றவள்; woman who gives birth to but one child. (சீவரட். 205).

*[கதலி + மலடு. கதலியைப் போல் ஒருமுறை மட்டுமே ஈன்றவள்.]*

**கதலிமூலம்** *kadali-mūlam*, பெ.(n.) வாழைக்கிழங்கு; the bulbous root at the bottom of the plantain tree.

*[கதலி + மூலம்.]*

**கதலிவஞ்சி** *kadali-vañji*, பெ.(n.) நவரை வாழை வகை; a species of plantain tree.

*[கதலி + வஞ்சி. கதலி = வாழை. வஞ்சி = குடை. ஒருகால் குடை போன்றமைப்புடைய வாழையாகலாம்.]*

**கதலிவாணன்** *kadali-vāṉaṉ,* பெ.(n.) நெல்வகை (A.); a kind of paddy.

*[கதலி + வாணன்.]*

**கதலிவாழை**[1] *kadali-vāḻai,* பெ.(n.) சிறுவாழைவகை; very small species of plantain-tree. *"கறியுமா மிளகொடு கதலியு முந்தி" (தேவா. திருத்துருத்தி. 4–93).*

*[கதலி + வாழை.]*

**கதலிவாழை**[2] *kadalivāḻai,* பெ.(n.) சிறுகாய் வாழை (மொந்தன் வாழைக்கு எதிரானது); plantain or banana tree.

*[கதலி + வாழை.]*

**கதலி விவாகம்** *kadali-vivāgam,* பெ.(n.) ***கதலி மணம்*** பார்க்க; see *kadali-maṉam.*

*[கதலி + மணம்.]*

**கதலை** *kadalai,* பெ.(n.) கூட்டம்; கும்பல்; a mass, a multitude (கருநா.).

**க.** கதலெ

*[கதுவுதல் = நெருங்குதல், குவிதல். கது → கதலை.]*

**கதவடிக்காரர்** *kadavaḍi-k-kārar,* பெ.(n.) மொண்டிப்பிச்சைக்காரர் (வின்.); a group, members of which have royal permission to ask for alms.

*[கதவு + அடி + காரர் – கதவடிக்காரர் = கதவு தட்டி உணவு இரக்கும் பிச்சைக்காரர்.]*

**கதவடைப்பு** *kadhavaḍaippu,* பெ.(n.) தொழிற் சாலையில் வேலை செய்ய உரிமையாளர் அனுமதி மறுத்தல்; lockout.

*[கதவு + அடைப்பு.]*

தொழிலாளர் சிக்கல் தீரும் வரை தொழிற் சாலையை உரிமையாளர் மூடுதல் கதவடைப்பாம்.

**கதவம்** *kadavam,* பெ.(n.) ***கதவு*** பார்க்க; see *kadavu. "பொறிவாசல் போர்க்கதவஞ் சாத்தி" (திவ். இயற். 1, 4).*

*[கதவு → கதவம் (தமி.வர.138)]*

**கதவனம்பட்டி** *kadavaṉampaṭṭi,* பெ.(n.) தருமபுரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Dharumapuri district.

*[கதவன் + பட்டி – கதவன்பட்டி – கதவனம்பட்டி.]*

**கதவு**[1] *kadavu,* பெ. (n.) 1. கோட்டை, கோயில், மனை, அறை போன்றவற்றின் நுழைவாயில்களை மூடித் திறக்கும் தடுப்பு; a sliding barrier for closing entrance of fort, temple, house, room etc., door. கள்ளனை உள்ளே வைத்துக் கதவைச் சாத்தினாற் போல் (பழ.). 2. காப்பறை, பேழை போன்றவற்றின் கதவு; door of safe, almirah etc. 3. ஊர்திகளின் கதவு; door of vehicle. 4. பலகணியின் கதவு; door of window. 5. மதகு கதவு; sluice. 6. தொழுவம், குடிசை போன்றவற்றை மூடும் பலகை; leaf of a door.

**ம.** கதவு, கதகு; **க.** கதவு, கத, கதகு; **கொர.** கடு; **தெ.** கவனு, கவகு (வெளிவாசல்)

*[கடவு → கதவு. (தமி.வ. 138). கடவு = கடந்து செல்லும் வழி, வாயில். வாயிலைக் குறித்த சொல் வாயிலைச் சாத்தும் கதவைக் குறித்தது. கடவு → கதவு (இடைத்திரிபு).]*

**கதவு**[2] *kadavu,* பெ.(n.) காவல் (திவா.); guard.

*[கதவு = தடுப்பு. பொருட்பெயர் அதன் தொழிலுக்கு ஆகி வந்தது.]*

**கதவு**[3]**–தல்** *kadavu-,* செ.குன்றாவி.(v.t.) 1. சினம் கொள்ளுதல்; to be angry with; to be displeased with; to quarrel with. *"கதவிக் கதஞ்சிறந்த கஞ்சன்" (திவ். இயற். 2, 89).* 2. பொங்குதல்; to heave. 3. துடித்தல்; to pant.

**ம.** கதய்க்குக.

*[கதம் → கதவு (வே.க.182).]*

**கதவு**[4]**–தல்** *kadavu-,* செ.கு.வி.(v.i.) விரைதல்; to fasten.

*[கடவு → கதவு.]*

**கதவு**[2] *kadav,* பெ.(n.) சினம்; anger, wrath. *"அவன் யானை மருப்பினுங் கதவலால்" (கலித். 57;19).*

*[கதம் → கதவு (வே. க. 182)]*

**கதவுக்கம்பை** *kadavu-k-kambai,* பெ.(n.) கதவின் முன் பகுதியில் உள்ள மரப்பட்டை; a small wooden plank at the front side of a door.

*[கதவு + கம்பை.]*

**கதவுக்குடுமி** *kadavu-k-kuḍumi,* பெ.(n.) கதவு தாங்குங் கொடுங்கை; projecting pivots at either end of a door on which it swings, in place of hinges.

*[கதவு + குடுமி.]

**கதவுக் கைப்பிடி** *kadavu-k-kai-p-piḍi,* பெ.(n.) கதவை முன்னும் பின்னும் இயக்கப் பயன்படும் கைப்பிடி; handle of a door.

*[கதவு + கைப்பிடி.] (கட்.தச்.தொ.வ.)*

**கதவுக்கொண்டி** *kadavu-k-koṇḍi,* பெ.(n.) நிலையில் கதவு இயங்கப் பயன்படும் இரும்புக் கருவி. (மது.வ.); hinge.

*[கதவு + கொண்டி.]*

**கதவுச்சட்டம்** *kadavu-c-caṭṭam,* பெ.(n.) ***கதவுக் கம்பை*** பார்க்க; see *kadavu-k-kambai.*

*[கதவு + சட்டம்.] (கட்.தச்.தொ.வ.)*

**கதவு திற-த்தல்** *kadavu-tiṟa-,* 2 செ.குன்றாவி.(v.t.) 1. வீடு முதலியவற்றின் கதவைத் திறத்தல்; to open door as of house etc. 2. தொடர்பு, நட்பு, உறவு ஆகியன கொள்ள விரும்புதல்;to like to resume contact, friendship, relation. தொழிலாளர் பேச்சு வார்த்தைக்காக அரசின் கதவு திறந்திருக்கிறது என்று அமைச்சர் கூறினார் (உ.வ.). 3. திருக்கோயில் விழா தொடங்குதல்; commencement of the temple festival.

*[கதவு + திற-.]*

**கதவுநிலை** *kadavu-nilai,* பெ.(n.) வாசற்கால்; threshold, doorsill.

*[கதவு + நிலை.]*

**கதவுமட்டம்** *kadavu-maṭṭam,* பெ.(n.) கதவு நிலையளவு வரையிலான சுவரினது மட்டம் (உயரம்) (கோவை); level of wall upto door frame.

*[கதவு + மட்டம்.]*

**கதழ்[1]-தல்** *kadaḻ,-* 2 செ.குன்றாவி.(v.t.) 2. அசைதல்; to move. 2. பிளத்தல்; to cleave, cut into to; *"கனக னாகிய கடுந்திறலோ னெஞ்சு கதழ்ந்த" (பாகவத 1. மாயவ. 31).*

**க.** கதழ்

*[கட - கத - கதழ்.]*

**கதழ்[2]-தல்** *kadaḻ-,* 2 செ.கு.வி.(v.i.) 1. விரைதல்; to be hasty, impetuous; to run swiftly. *"கதழெரி சூழ்ந்தாங்கு" (கலித். 25:4). 2. வெப்பமாதல்;* to be furious; to rage, as fire. *"இந்தனங் கதழ விட்டு" (கந்தபு. மாயையுட்.19).* 3. மிகுதல்; to abound. *"கதழொளி" (சீவக.1749).* 4. சினத்தல்; to be angry with, displeased with.

**க.** கதடு, கதரு, கரடு; **து.** கதலு, கதெலு; **தெ.** கதலு; **பா.** கத்லெ.

*[கத → கதழ் → கதழ்தல் (வே.க. 182).]*

**கதழ்[3]** *kadaḻ,* பெ.(n.) 1. ஏவல்; *"கதழ்சினந் தலைக் கொண் டானே" (கூர்மபு.அந்தகா.82)* 2. வேகம்; speed. *"கதழெரிச் செக்கர் பேழ்வாய்" (நைடத - சுயம். 25).*

*[கது → கதழ்.]*

**கதழ்வு** *kadaḻvu,* பெ.(n.) 1. அசைவு; movement 2. விரைவு (திவா.); haste, speed, impetuosity. 3. வெப்பம்; fury, heat, vehemence. 4. மிகுதி (திவா.); abundance. 5. பெருமை (திவா.); greatness. 6. ஒப்பு (வின்.); likeness, comparison, contrast, rivalry. 7. நீளம் (அரு.நி.); length (செ.அக.).

**ம.** கதய்க்குக (விரைதல்.)

*[கதழ் → கதழ்வு. (வே.க. 182. குது → குதுகுது → குதுகுதுப்பு = விரைவு. குது → கது - கதும் (வி.கு.). கது → கதழ் → கதழ்வு = விரைவு. 'கதழ்வும் துனைவும் விரைவின் பொருள' (தொல்.உரி. 17.) (மு தா. 58.).]*

**கதழ்வுறு-தல்** *kadaḻ-v-uṟu-,* 4 செ.கு.வி.(v.i.) அச்சத்தாற் கலங்கிக் கூச்சலிடுதல்; to shriek or raise a violent cry out of sudden fright or terror. *"வேழங் கதழ்வுற் றாங்கு" (பெரும்பாண். 259.).*

**க.** கதுபுகொள்

*[கதழ் + உறு-.]*

**கதளகம்** *kadaḷagam,* பெ.(n.) ***கதலி*** பார்க்க; see *kadali.*

*[கதள் + அகம் - கதளகம். கதலி → கதளி → கதள.]*

**கதறு-தல்** *kadaṟu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. உரக்க அழுதல்; to cry aloud from pain or grief, to shriek; to scream, as a child. *"கதறி யோலமிட" (தேவா. 68, 9).* 2. விலங்கு முதலியன கத்துதல்; to bellow, as a cow for its calf; to roar, yell, as a beast. *"கானேறு கரிகதற வுரித்தார் போலும்" (தேவா. 596,1).*

**ம.** கதறுக; **க.** கதறு; **தெ.** கதுமு, கத்தின்சு; **து.** கத்தல.

*[கதல் - கதறு.]*

**கதனம்**[1] *kadaṉam,* பெ. (n.) 1. கடுமை (திவா.); vehemence. 2. கலக்கம் (பிங்.); confusion; disorder; disturbance.

*[கது → கதனம். இச் சொல் வடதமிழ் வழக்கு.]*

**கதனம்**[2] *kadaṉam,* பெ.(n.) குதிரையின் நடைவகை (அரு.நி.); a pace of horse.

*[கது → கதி → கதனம். கதி = விரைவு, பரிப்பு (வேகம்.)]*

**கதனம்**[3] *kadaṉam,* பெ.(n.) போர் (யாழ்.அக.); battle.

*[கது → கதனம். கதுவுதல் = பற்றுதல். மோதுதல், தாக்குதல்.]*

**கதாசிரியன்** *kadāśiriyaṉ,* பெ.(n.) **கதையாசிரியன்** பார்க்க; see *kadai-y-āśiriyaṉ.*

*[கதை → கதா (வடமொழித்திரிவு) + ஆசிரியர்.]*

**கதாநாயகன்** *kadā-nāyagaṉ,* பெ.(n.) **கதைத் தலைவன்** பார்க்க; see *kadai-t-talaivaṉ.*

*[கதை → கதா + நாயகன்.]*

**கதாநாயகி** *kadā-nāyaki,* பெ.(n.) **கதைத் தலைவி** பார்க்க; see *kadai-t-talaivi.*

*[கதை → கதா + நாயகி.]*

**கதாய்** *kadāy,* பெ.(n.) கந்தல் (யாழ்.அக.); rag.

*[கோது → கது → கதாய், (பயன்படாத கழிசடைப் பொருள்).]*

**கதாவு-தல்** *kadāvu-,* 5. செ.கு.வி.(v.i.) செல்லுதல்; to pass, move. *"கதாவுகின்ற கிராமியமாங் கருமச் சழக்கில்" (ஞானவா. நிருவா.11).*

ம. கதாவுக

*[கடவு → கடாவு → கதாவு.]*

**கதி**[1]**-த்தல்** *kadi-*[1], 4 செ.குன்றா.வி.(v.t.) சொல்லுதல்; to tell, direct. *"கண்ணனுக் குதவென கதித்தான்" (பாரத. இராசசூ.112).*

*[கழல் → கழறு. கழல் → கதல் → கதை = கதைத்தல், பேசுதல் → கதை → கதி. (பேசு)]*

**கதி**[2]**-த்தல்** *kadi-,* 2 செ.கு.வி.(v.i.) 1. விரைதல்; to hasten, move rapidly. *"அரியேறு கதித்தது பாய்வதுபோல்" (கம்பரா.பஞ்சசே. 56).* 2. நடத்தல் (வின்.); to go, move proceed. 3. எழுதல் (பிங்.); to rise, to be high, to grow high; to start. 4. நற்கதி யடைதல்; to attain final bliss. *"கதிப்பவ ரில்லை யாகும்". (சி.சி.1, 46, சிவஞா.)* 5. பருத்தல்; to become large, to grow big. *"கதித்தெழுந்த தனம்". (தஞ்சைவா. 235).* 6. மிகுதல்; to abound. *"மல்கதிக்க" (இரகு. நகரப். 74).* 7. ஒலித்தல்; to sound.

க. கதெ; தெ. கதி.

*[கது → கதி. கதித்தல் = விரைதல் (முதா.58) ஒ.நோ. கதழ்தல் = அசைதல், நடத்தல்.]*

**கதி**[3]**-த்தல்** *kadi-,* 4 செ.குன்றாவி. (v.t.) சினம் கொள்ளுதல்; to be angry with. *"கதியாதி யொள்ளிழாய்" (கலித். 83).*

*[கொதி → கதி.]*

**கதி**[5] *kadi,* பெ.(n.) 1. நடை; movement. 2. இயக்கம்; motion. 3. விரைவு; swiftness, rapidity. *"கதிகெழு களிறு" (கந்தபு.திக்.35).* 4. குதிரை நடை; pace of a horse. *"ஈரிரு கதியு முண்டாங் குலப்பரி யினங்கள்" (திருவாத. திருப்பெரு. 114).*

*[கது → கதி. கதித்தல் = விரைதல். கதி = விரைவு, வேகம்.]*

**கதி**[6] *kadi,* பெ.(n.) 1. வழி; way, path. *"கதிநடந் திளைத்த செங்கமலம் பற்றுவோம்" (செவ்வந்திப்பு. தாயான. 25)* 2. புகலிடம்; refuge. *"எனக்கினிக் கதியென் சொல்லாய்" (திவ். திருமாலை.30).* 3. அமர ருலகு; heaven, final beatitude, deliverance from further births, absorption into the deity. *"காதலும் வெறுப்பு நீங்கிக் கதிவிழைந் திருக்கின்றோம்" (குற்றா.தல. திருமால். 60).* 4. நிலை; state, condition. அவன் கதி என்ன வாயிற்று? (உ.வ.) 5. உயிர்கள், தேவகதி, மக்கட்கதி, விலங்குகதி நரககதி என நான்கு நிலைகளாக எடுக்கும் பிறப்பு (சீவக. 374. உரை.); (Jaina) stages of existence, of which there are four. 6. ஆற்றல்; ability, means, கொடுக்கக் கதியில்லை (உ.வ.).

*[கது → கதி.]*

**கதி**[7] *kadi,* பெ.(n.) 1. பற்றுக்கோடு; support. 2. நிலைமை, இயல்பு; nature, quality, character; *"யானை முழக்கங் கேட்ட கதியிற்றே" (பரிபா. 8:17).* 3. ஆகூழ் (வின்.); luck, fortune. 4. படலம் (பிரபுலிங்.) section, chapter. 5. மெய்யியலின் (தத்துவம்) அடிப் படைக் கோட்பாடுகள்; true principles or elementary properties according to śankhya philosophy. *"முதலிரு பத்தைந் தாங்கதி" (பிரபுலிங்*

*துதி.13).* 6. கருவி; means, instrument. *"உலகிற் றிரியுங் கரும கதியாய்" (திவ். திருவாய். 6,9,7).*

*[கது → கதுவுதல் = பற்றுதல். கது → கதி = பற்றுக்கோடு, தாங்குதல் உற்ற துணை.]*

**கதி**[8] *kadi,* பெ.(n.) 1. நேர்; straight. 2. செம்மை, செப்பம்; correct. 3. ஒழுங்கு; regularity.

மரா; சிந். சீதே; Turkh. kader.

*[குத்து → குது குது கதி.]*

**கதி–த்தல்** *kadi,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. கடத்தல் (வின்.); to exceed in quality; to out weigh to be superior to; to out do, outstrip, out match. 2. அறிதல்; to know, understand, *"தாதை கதித்துரைத்த மொழி" (காஞ்சிப்பு, திருநெறிக். 42).*

*[கது → கதி = அசைதல், நடத்தல், கடத்தல், அறியாமை நிலையைக் கடத்துதல், அறிதல்.]*

**கதிக்க** *kadikka,* கு.வி.எ.(adv.) 1. நேராக; straight, directly. நீ கதிக்கப் போனால் அந்த இடத்தை அடையலாம் (நெல்லை). 2. கனமாக; thickly. கதிக்க நெற்றிக்கு இட்டுக்கொண்டான் (இ.வ.).

*[கதி → கதிக்க (வே.க. 177).]*

**கதிக்கும்பச்சை** *kadikkum-paccai,* பெ.(n.) நாகப் பச்சைக்கல் (வின்.); a kind of emarald.

*[கதி = நேர், செப்பம். கதி → கதிக்கும்.]*

**கதிக்கை** *kadikkai,* பெ.(n.) **கருக்குவாய்ச்சி** பார்க்க (வின்.) ; see *karukuvāycci.*

*[கதி → கதிக்கை.]*

**கதிகலக்கு–தல்** *kadi-kalakku-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. நிலைகுலைய வைத்தல்; to shake up badly, to make one upset. 2. அச்சமும் கலக்கமும் தோன்றச் செய்தல்; to create panic.

*[கதிகலங்கு (த.வி.) → கதிகலக்கு (பி.வி.)]*

**கதிகலங்கு–தல்** *kadi-kalaṅgu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. நிலைகுலைதல்; to be badly shaken up, be upset. 2. அச்சமும் கலக்கமும் தோன்றுதல்; to be paniced.

*[கதி + கலங்கு–.]*

**கதித்தவிலை** *kaditta-vilai,* பெ.(n.) 1. அதிக விலை; high price. 2. முறையற்ற விலை; exorbitant price.

*[கதித்த (பெ.எ.) + விலை.]*

**கதித்துவரு–தல்** *kadittu-varu-,* 18 செ.கு.வி.(v.i.) மிகுதியாக உண்டாதல்; to be in excess, said of the increase of any one of the humours in the system (சா.அக.).

*[கதித்து + வா (வரு–).]*

**கதித்துவாங்கு–தல்** *kadittu-vāṅgu-,* 5 செ.கு.வி. (v.t.) அளவு, பண்பு ஆகியன மிகுந்து பின் குறைதல் அல்லது தணிதல்; to become excess in quantity or quality and then diminished (சா.அக.).

*[கதித்து + வாங்கு–.]*

**கதிதம்** *kadidam,* பெ.(n.) உரைக்கப்பட்டது; that which has been narrated or described. *"கதித்த மகபாதகந் தன்னில்" (சிவதரு. பாவ. 102).*

*[கதை → கதைத்த → கதித்த → கதிதம்.]*

**கதிப்பு**[1] *kadippu,* பெ.(n.) கூர்மை; sharpness. கெளுத்தியின் முள் கதிப்பா யுள்ளது (நெல்லை மீனவ.).

*[கதி → கதிப்பு.]*

**கதிப்பு**[2] *kadippu,* பெ.(n.) இறுகல்; thickness. *"கதிப்பையுடைத்தான வண்டல்கள்" (திவ். திருவாய். 6,1,5, பன்னீ.).*

*[கடி → கதி → கதிப்பு.]*

**கதிப்பொருத்தம்** *kadi-p-poruttam-,* பெ.(n.) செய்யுண் முதன்மொழிப் பொருத்தங்கள் பத்தனு ளொன்று (Poet); one of ten ceyyuṇ mutaṉ-moḻi-p-poruttam.

*[கதி = நிலை. கதி + பொருத்தம்.]*

செய்யுண முதன்மொழிப் பொருத்தங்கள் பத்தாவன: 1. மங்கலப் பொருத்தம், 2. சொற் பொருத்தம், 3. எழுத்துப் பொருத்தம், 4. தானப் பொருத்தம், 5. பாற் பொருத்தம், 6. உண்டிப் பொருத்தம், 7. வருணப் பொருத்தம், 8. நாட்டுப் பொருத்தம், 9. கதிப் பொருத்தம், 10. கணப் பொருத்தம். இவற்றுள் கதிப்பொருத்தம் நான்கு வகையாகும்.

அவை, I. அ இ உ எ க ச ட த ப - தெய்வ கதி.

2. ஆ ஈ ஊ ஏ ங ஞ ண ந ம - மக்கட் கதி. 3. ஒ ஓ ய ர ல ழ ற - விலங்கு கதி. 4. ஐ ஔ வ ள ன - நரக கதி (வெண்பாப். முதன். 18).

**கதிமாறல்** *kadi-māṟal,* பெ.(n.) 1. பிறவி மாறல்; change of birth. 2. ஆதன் அடையும் மாற்றம்; the changes undergone by the soul (சா.அக.).

*[கதி = பிறப்பு. கதி + மாறல்.]*

**கதிமை**[1] *kadimai,* பெ.(n.) கூர்மை; sharpness.

*[கதி[2] → கதிமை.]*

**கதிமை**[2] *kadimai,* பெ.(n.) பருமை; largeness, greatness.

*[கது → கதி → கதிமை.]*

**கதியற்றவன்** *kadi-y-aṟṟavaṉ,* பெ.(n.) ஆதரவற்ற வறியோன்; destitute, impoverished man.

*[கதி + அற்றவன்.]*

**கதியால்** *kadiyāl,* பெ.(n.) வேலியில் நாட்டுங் கிளை; stakes for hedging.

*[கதி = நேர். கதி → கதியல் → கதியால் (நேராக நடப்படுவது.) அல் – ஆல் (ஈற்றுத்திரிபு).]*

**கதிர்**[1]**–த்தல்** *kadir-,* 4 செ.கு.வி.(v.i.) 1. ஒளிர்தல்; to shine; glow. *"கதிர்த்த நகைமன்னும்" (திருக்கோ. 396).* 2. வெளிப்படுதல்; to become manifest. வாய்மை கதிர்ப்பச் சென்ற (கம்பரந். 1.) 3. மிகுதல்; to abound, increase. கதிர்த்த கற்பினார். 4. இறுமாத்தல் (யாழ். அக.); to be conceited, puffed up.

**ம.** கதிர்க்குக; **க.** கதிரு; **தெ.** கதுரு.

*[கதி → கதிர். → கதிர்த்தல்.]*

**கதிர்**[2]**–த்தல்** *kadir-,* 4 செ.கு.வி.(v.i.) கூர்த்தல் (யாழ்.அக.); to be sharp (செ.அக.).

*[கதி – கதிர்.]*

**கதிர்**[3]**–த்தல்** *kadir-,* 4 செ.கு.வி.(v.i.) 1. கதிர் தோன்றுதல்; to appear ear of grain; சோளம் கதிர்த்தது (இ.வ.). கன்னித்தன்மையடைதல்; to attain the stage of puberty.

*[கதி → கதிர் → கதிர்த்தல்.]*

**கதிர்**[4] *kadir,* பெ.(n.) 1. நேராகச் செல்லும் ஒளியிழை (கிரணம்); ray of light, beam, gleam. *"தண்கதிர் மதியம்" (புறநா. 6:27).* 2. ஒளி (திவா.); light. 3. வெயில்; sunlight. *"உறைபனி கதிர்போற்று மோலையன்" (கந்தபு. தவங். 2).* 4. கதிர்வீசும் இருவெண்சுடர் (ஞாயிறும் திங்களும்); sun and moon. *"கதிர்விலகிச் சூழும்" (சேதுபு. முத்தீர். 5).* 5. ஆண்டு (விதான.); year.

*[குத்து → குது → கதி → கதிர்.]*

கதித்தல் = நேராதல், நேர்கிழக்காகச் செல்லுதலைக் கிழக்கே கதிக்கச் செல்லுதல் என்பர் நெல்லை நாட்டார். கதி → கதிர் = வளையாமல் செல்லும் ஒளியிழை [மு.தா. 111].

**கதிர்**[5] *kadir,* பெ.(n.) 1. ஆரக்கால் (வின்.); spoke of a wheel; radius of a circle. 2. ஆரக்கால் போல் நெடுகக் கிளைக்கும் கேழ்வரகு, சோளம் முதலியவற்றின் கதிர்; ear of grain, spear of grass. *"நெல்லுமிடை பசுங்கதிரும்" (கம்பரா. நாட்டுப். 7).* 3. நூல்நூற்கும் கருவி; spinner's spindle. *"கதிரே மதியாக" (நன். 24).* 4. தட்டார் கருவிவகை; goldsmith's pin, spike.

**ம.** கதிர், கதிரு; **க.** கதிர், கதரு, கதிரு; **து.** கதிரு, கதுரு, கதிர்; **பிரா.** கதீம்; **குட.** கதீ.

*[குதிர் → கதிர் (வே.க. 176). கதிர் = கேழ்வரகு, சோளம் முதலியவற்றின் கதிர். நெல், தினை முதலியவற்றின் கதிரை, அலகு அல்லது குரல் என்பர் (சொல். கட் 63).]*

**கதிர்**[6] *kadir,* பெ.(n.) 1. நீண்ட நிலப்பகுதி; a land division of a lengthy area. 2. நீண்ட தீவு; a long island.

*[குதிர் → கதிர். கதிர்த்தல் → நீளுதல், நேராகச் செல்லுதல்.]*

**கதிர்**[7] *kadir,* பெ.(n.) 1. ஊர்ப்பெயர்; name a place. 2. குச்சர மாநிலத்தில் சிந்துவெளி நாகரிகம் நிலவிய ஊர்ப்பகுதி; a place name in Gujarat, an Indus Valley Civilisation site area.

*[கதிர்[5] → கதிர்[6]. கதிர்காமம், கதிர்ப்பட்டி எனும் ஊர்ப் பெயர்களைக் காண்க.]*

**கதிர்**[8] *kadir,* பெ.(n.) 1. செருமான் ஊசி (புதுவை); year. 2. துளை (சங். அக.); hole.

*[குத்து → குது → கதி → கதிர்.]*

**கதிர்**[9] *kadir*, பெ.(n.) கயிறு திரிக்க அல்லது முறுக்கேற்றப் பயன்படும், *'தக்களி'* யை ஒத்த சிறு *கருவி (செங். மீனவ.);* rope making device.

*[கதிர் = ஆரக்கால் கொண்ட சக்கரம்.]*

**கதிர்**[10] *kadiri*, பெ.(n.) நாயுருவி. (நாமதீப.); a plant (செ.அக.).

*[குது→ கது கதிர்.]*

**கதிர்க்கட்டில்** *kadir-k-kāṭṭil*, பெ.(n.) நல்ல வேலைப் பாடுகளுடன் அமைந்த கட்டில்; a cot of superior workmanship (சேரநா.).

**ம.** கதிர்க்கட்டில்

*[கதிர் + கட்டில். கதிர் = தினைக்கதிர் போன்ற பூவேலைப்பாடு.]*

**கதிர்க்கட்டு** *kadir-k-kaṭṭu*, பெ.(n.) அரிக்கட்டு; sheaf.

*[கதிர் + கட்டு.]*



கதிர்க்கட்டு

**கதிர்க்கடவுள்** *kadir-k-kaḍavuḷ*, பெ.(n.) பகலவன், கதிரவன்; the sun as the radiant deity. *"கனை கதிர்க் கடவுள்" (சீவக. 1943).*

*[கதிர் + கடவுள்.]*

**கதிர்க்கம்பி** *kadir-k-kambi*, பெ.(n.) ***கதிர்க்கோல்*** பார்க்க; see *kadir-k-kōl.*

*[கதிர் + கம்பி.]*

**கதிர்க்காணம்** *kadir-k-kāṇam*, பெ.(n.) பழைய வரி வகை (S.I.I. ii. 352); an ancient tax paid in sheaves of corn.

**ம.** கதிர்க்காணம்

*[கதிர் + காணம்.]*

**கதிர்க்காம்பு** *kadir-k-kāmbu*, பெ.(n.) பயிர்க்கதிரின் தாள் (வின்.); stem of grain-heads.

*[கதிர் + காம்பு.]*

**கதிர்க்குஞ்சம்** *kadir-k-kuñjam*, பெ.(n.) கதிர்க் கற்றை (யாழ்ப்.); bunch of ears of corn to adorn a house, first fruit.

*[கதிர் + குஞ்சம்.]*

**கதிர்க்குடலை** *kadir-k-kuḍalai*, பெ.(n.) மணிபிடியாத கதிர் (வின்.); corn with ears in the process of formation.

*[கதிர் + குடலை.]*

**கதிர்க்குருவி** *kadir-k-kuruvi*, பெ.(n.) ஒரு சிறிய பறவை; the ashy wren warbler (சேரநா.).

**ம.** கதிர்க்கருவி

*[கதிர் + குருவி.]*

**கதிர்க் குருவி வகைகள்:**

1. அகன்றவால் கதிர்க்குருவி, 2. நாணல் கதிர்க்குருவி, 3. இலைக் கதிர்க்குருவி, 4. வெண் தொண்டைக் கதிர்க்குருவி, 5. பெரிய நாணல் கதிர்க்குருவி.

**கதிர்க்குலை** *kadir-k-kulai*, பெ.(n.) பயிர்க்கதிர்; ear of grain.

**ம.** கதிர்க்குல

*[கதிர் + குலை.]*

**கதிர்க்கோல்** *kadir-k-kōl*, பெ.(n.) 1. நூல்நூற்குங் கருவி; spindle. 2. தட்டார் கருவிவகை; goldsmith's pin, spike.

*[கதிர் + கோல்.]*

**கதிர்காமம்** *kadir-kāmam*, பெ.(n.) இலங்கையின் தென்பகுதியிலுள்ள ஒரு முருகன் திருக்கோயில்; name of a Skanda shrine in South Ceylon. *"தென் கதிர்காமப் பெருமாள்" (தமிழ்நா. 145).*

*[கதிர் = தோற்றம், விளங்கித் தோன்றுதல். நீரிடைத் தோன்றும் நிலப்பகுதியும் கோவில்களிடை விளங்கித் தோன்றும்*

*முருகன் கோயிலும் சிறப்புக் கருதி கதிர் எனப்படுதல் மரபு. கம்மம் (சிற்றூர்) → காமம்.]*

**கதிர்குளி–த்தல்** *kadir-kuḷi-,* 4 செ.கு.வி.(v.i.) 1. கோயிலில் கடவுளுக்கு மணவிழா முடிந்த நான்காம் நாள் அம்மன் நீராடுதல் (நெல்லை); to bathe the image of a goddess ceremoniously on the fourth day of the marriage in the annual festival. 2. திருமணத்தில் மங்கல நாண் பூட்டுவதற்குச் சற்று முன் மணமகள் நீராடல் (நாஞ்.); to have a ceremonial bath as the bride, just before wearing šhāli. (செ.அக.)

*[கதிர்த்தல் = கன்னிமையடைதல், முதன்மைச் செயலாதல். கதிர் குளித்தல் = முதன்மைச் செயலாக நிறைவுறுத்தல்.]*

**கதிர்ச்சாலேகம்** *kadir-c-cālēgam,* பெ.(n.) கம்பி களாலான சாளரம்; window with bars. *"கதிர்ச்சா லேகமுங் கந்துங் கதிர்ப்ப" (பெருங். உஞ்சைக். 40, 10).*

*[கதிர் + வ. சாலேகம்.]*

**கதிர்ச்சிலை** *kadir-c-cilai,* பெ.(n.) கதிரவன்கல் (சூரியகாந்தம்); sunstone. *"கதிர்ச்சிலையில் ..... பரிதியினா லழல்வரல்போல்" (வேதா. சூ. 81).*

*[கதிர் + சிலை.]*

**கதிர்செய்–தல்** *kadir-cey-,* 1 செ.கு.வி.(v.i.) ஒளி விடுதல்; to emit rays, as the sun. *"கதிர்செய் மாமணி" (சீவக. 197).*

*[கதிர் + செய்.]*

**கதிர்த்தவசம்** *kadir-t-tavašam,* பெ.(n.) கதிரில் தோன்றும் தவசம்; grains obtained from ear of corn.

*[கதிர் + தவசம்.]*

**கதிர்த்தாக்கம்** *kadir-t-tākkam,* பெ.(n.) கதிர் முதிர்ந்து சாய்கை (வின்.); bending of the stalks under the weight of grain as the corn ripens.

*[கதிர் + தாக்கம்.]*

**கதிர்த்தானியம்** *kadir-t-tāṉiyam,* பெ.(n.) ***கதிர்த் தவசம்*** பார்க்க; see *kadir-t-tavašam.*

*[கதிர் + தானியம்.]*

**கதிர்நாவாய்ப்பூச்சி** *kadir-nāvāy-p-pūcci,* பெ.(n.) நெற்பயிரை அழிக்கும் ஒருவகைப் பூச்சி; earhead bug.

*[கதிர் + நாவாய் + பூச்சி.]*

**கதிர்நாள்** *kadir-nal,* பெ.(n.) மானேறுநாண்மீன் (உத்தரம்) (திவா.); the 12th nakšatra, whose presiding deity is the Sun.

*[கதிர் + நாள்.]*

**கதிர்நேசமருவம்** *kadir-nēša-maruvam,* பெ.(n.) கஞ்சாங்கோரை; hoary basil. (சா.அக.)

*[கதிர் + நேசம் + மருவம்.]*

**கதிர்ப்பகை** *kadir-p-pagai,* பெ.(n.) 1. ஞாயிற்றுக்கும் திங்களுக்கும் நட்பல்லாததாகக் கருதப்படும் செங்கோள், கருங்கோள் (இராகு, கேது கோள்கள்); Rāgu and Kētu, the ascending and descending nodes regarded as planets, and considered as being deadly inimical to the sun and the moon. 2. ஞாயிறு ஒளியில் சுருங்கும் அல்லி (மலை.); water-lily, which shrinks in sunlight. 3. குவளை (மலை.); blue lotus.

*[கதிர் + பகை.]*

**கதிர்ப்பச்சை** *kadir-p-paccai,* பெ.(n.) ஒருவகை நறுமணச்செடி (இ.வ.); a fragrant plant (செ.அக.).

*[கதிர் + பச்சை.]*

**கதிர்ப்பயிர்** *kadir-p-payir,* பெ.(n.) இளங்கதிர்த் தவசம்; grain just earing.

*[கதிர் + பயிர்.]*

**கதிர்ப்பாரி** *kadir-p-pāri,* பெ.(n.) தாமரை (மலை.); lit., wife of the Sun, the lotus flower so called because it blossoms in his presence.

*[கதிர் + பாரி. பாரித்தல் = மலர்தல்]*

**கதிர்ப்பாளை** *kadir-p-pāḷai,* பெ.(n.) ஆண்பனையின் பாளை (சங்.அக.); sheath of the flower of the male palmyra.

*[கதிர் + பாளை.]*

**கதிர்ப்பு**[1] *kadirppu,* பெ.(n.) ஒளிர்ப்பு (வெளிச்சம்); radiance, brightness, brilliance. *"காட்சியங் கதிர்ப்பு" (சூளா. இரத. 86).*

*[கதிர் → கதிர்ப்பு.]*

**கதிர்ப்பு**[2] *kadirppu,* பெ.(n.) பாக்கு, பனை முதலியவைகளின் குலைப்பகுதி; bunch of fruits, part of the blossoms of palm trees.

# கதிர்க்குருவிவகைகள்



அகன்றவால் கதிர்க்குருவி



நாணல் கதிர்க்குருவி



இலைக் கதிர் குருவி



வெண் தொண்டைக் கதிர்க்குருவி

ம. கதிப்பு.; து. கதுப்பு.

*[கதிர் → கதிர்ப்பு.]*

**கதிர்ப்புல்** *kadir-p-pul,* பெ.(n.) கதிர்விடும் புல் (வின்.); grass which bears ears.

*[கதிர் + புல்.]*

**கதிர்ப்புளி** *kadir-p-puḷi,* பெ.(n.) குழந்தைகட்கு மெலிவுண்டாக்கும் நோயை நீக்கப் பயன்படுத்தும் முக்கவர் சூட்டுக் கோல்; a three-pronged iron instrument used in branding across the breasts of children for curing them of atrophy.

ம. கதிர்ப்புளி.

*[கதிர்ப்பு + உளி.]*

**கதிர்ப்போர்** *kadir-p-pōr,* பெ.(n.) கதிர்க்குவியல். (வின்.); stack of grain, rick of corn.

*[கதிர் + போர். பொல் → பொரு (நெருங்கு) → போர் (குவியல்).]*

**கதிர்பொறுக்கு-தல்** *kadir-poṟukku-,*5 செ.குன்றாவி.(v.t.) கம்பு, கேழ்வரகு போன்றவற்றின் கதிர்களை அறுத்தல் (இ.வ.); to cut off the heads of dry crops like millet, ragi, etc.

*[கதிர் + பொறுக்கு.]*

**கதிர்மகன்** *kadir-magaṉ,* பெ.(n.) 1. ஞாயிற்றின் மகனாகக் கருதப்படும் எமன் (சங். அக.); supposed to be the son of Sun-God. 2. காரி (சனி) (திவா.); saturn. 3. சுக்கிரீவன் (கம்பரா.); Sugriva. 4. கன்னன் (திவா.); Karṇa, a hero of the Mahābhārata.

*[கதிர் + மகன்.]*

**கதிர்மடங்கல்** *kadir-madaṅgal,* பெ.(n.) அறுவடை முடியும் பருவம் (w.g.); ending of the harvest season.

*[கதிர் + மடங்கல்.]*

மடங்கல் – இறுதி, முடிவு எனினும், ஈண்டுச் செயல் இடையறவு படுவதையே குறித்து நின்றது.

**கதிர்மண்டபம்** *kadir-maṇḍabam,* பெ.(n.) கதிர்களைக் கொண்டு ஒப்பனை செய்யப்பட்ட மணவறை (நாஞ்.); The dias which is decorated with ear of corns for performance of marriage rites.

*[கதிர் + மண்டபம்.]*

கதிர்க்கற்றைகளைக் கட்டி மணமண்டபம் அமைப்பது வேளாண் மரபின் அல்லது உழவர் குடியின் செழுமையையும் மங்கலத்தன்மையும் குறித்தல் காண்க. இதனால் திருமணங்கள் இன்றளவும் அறுவடைக் காலங்களில் (தை) பெரும்பாலும் நடத்தப்பெறுகின்றன.

**கதிர்மணி** *kadir-maṇi,* பெ.(n.) ***கதிர்முத்து*** பார்க்க; see *kadir-muttu* (கல்.அக.).

ம. கதிர்மணி

*[கதிர் + மணி.]*

**கதிர்மம்** *kadirmam,* பெ.(n.) 1. ஒளி; shining. 2. கூர்மை; sharpness.

ம. கதிர்மம்; க. கதரு, கதுரு.

*[கதிர் → கதிர்மம்.]*

**கதிர்மான்** *kadirmāṉ,* பெ.(n.) ஓரின மான்; a kind of deer.

ம. கதிருமான்

*[கதிர் + மான்.]*

**கதிர்முகம்** *kadir-mugam,* பெ.(n.) பிறைத்திங்கள்; crescent moon (அப்.1 - 302).

*[கதிர் + முகம்.]*

**கதிர்முத்து** *kadir-muttu,* பெ.(n.) ஆணிமுத்து; superior pearl. *“தொகுகதிர் முத்துத் தொடைகவிழ்பு மமுக” (பரிபா. 6: 16)* 2. கட்டி முத்து; solid pearl.

ம. கதிர்மணி,

*[கதிர் + முத்து.]*

**கதிர்மூக்காரல்** *kadir-mūkkāral,* பெ.(n.) மூக்கு நீளமாகவும் கூர்மையாகவும் இருக்கும் ஒருவகை மீன்; a kind of fish with has long and sharp nose.

*[கதிர் + மூக்கு+ ஆரல்.]*



கதிர்மூக்காரல்

**கதிர்வட்டம்** *kadir-vaṭṭam,* பெ.(n.) கதிரவன்; lit, radiant sphere, applied to the sun. *"ஒடு கதிர்வட்டமென" (சீவக. 281).*

*[கதிர் + வட்டம்.]*

**கதிர்வனை** *kadir-vaṉai,* பெ.(n.) மொச்சைக்காய்; country bean (சா.அக.).

*[கதிர்வு + அனை – கதிர்வனை.]*

**கதிர்வாங்கு–தல்** *kadir-vāṅgu-,* 5 செ.கு.வி.(v.i.) கதிரீனுதல்; to shoot out ears, of grain. பயிர் கதிர்வாங்கி விட்டது.

**க.** கதிருகடெ

*[கதிர் + வாங்கு.]*

**கதிர்வால்** *kadir-vāl,* பெ.(n.) பயிர்க்கதிரின் நுனி (வின்.); awn or bristle of grain.

*[கதிர் + வால்.]*

**கதிர்விட்டெறி[1]–த்தல்** *kadirvitteṟi-,* 4 செ.குன்றாவி (v.t.) கதிர்விட்டிலங்குதல்; to shootout ears of grains.

*[கதிர் + விட்டு + எறி.]*

**கதிர்விட்டெறி[2]–த்தல்** *kadir-vitteṟi-,* 4 செ.கு.வி. (v.i.) 1. ஒளிவிடுதல்; to radiant, lusture. 2. செல்வம் பொலிந்து விளங்குதல்; to augument as of wealth.

*[கதிர் + விட்டு + எறி–.]*

**கதிர்விடு[1]–தல்** *kadirviḍu-,* 17 செ.கு.வி.(v.i.) ஒளிவிடுதல்; to emit light rays. *"கதிர்விடு திருமணி" (சீவக. 28. 50).*

*[கதிர் + விடு.]*

**கதிர்விடு[2]–தல்** *kadir-viḍu-,* 17 செ.கு.வி.(v.t.) ***கதிர் வாங்குதல்*** பார்க்க; see *kadir-vāṅgutal.*

**க.** கதிரேறு

*[கதிர் + விடு–.]*

**கதிர்வீச்சு[1]** *kadir-viccu,* பெ.(n.) வெப்பத்தினால் உண்டாகும் ஒருவகைக் காய்ச்சல்; thermic fever (சா.அக.).

*[கதிர் + வீச்சு.]*

**கதிர்வீச்சு[2]** *kadir-viccu,* பெ.(n.) ***கதிரியக்கம்*** பார்க்க; see *kadir-iyakkam.*

*[கதிர் + வீச்சு.]*

**கதிர்வீசு–தல்** *kadir-vēśu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. ***கதிர்வாங்கு–தல்*** பார்க்க; see *kadir-vāṅgu-.*

*[கதிர் + வீசு–.]*

**கதிர்வேல்** *kadirvēl,* பெ.(n.) ஒளிபொருந்திய வேல்; shining lance.

**ம.** கதிர்வேல்.

*[கதிர் + வேல்.]*

**கதிரடி–த்தல்** *kadir-aḍi-,* 4 செ.கு.வி.(v.i.) நெல்லின் கதிர்களை ஒன்றாகச் சேர்த்துத் தரையிலடித்து மணிகளைச் சிதறப் போரடித்தல்; to beat or treat out grain.

*[கதிர் + அடி–.]*

**கதிரநல்லூர்,** *kadiranallur,* பெ.(n.) நாமக்கல் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Namakkal dt.

*[கதிரன் + நல்லூர்.]*

**கதிரம்[1]** *kadiram,* பெ.(n.) 1. அம்பு. (பிங்.); arrow. 2. காசுக்கட்டி (வின்.); downy foliaged cutch.

**ம.** கதிரம்.

*[கதிர் → கதிரம்.]*

**கதிரம்**[2] *kadiram,* பெ.(n.) ***கருங்காலி*** பார்க்க; see *karuṅgāli.*

*[கதிர் → கதிரம்.]*

**கதிரம்**[3] *kadiram,* பெ.(n.) அழகு; beauty, radiance.

**ம.** கதிரம்.

*[கதிர் → ஒளி, வெயில். கதிர் → கதிரம்.]*

**கதிரம்**[4] *kadiram,* பெ.(n.) உப்பிட்டு உணக்கிய தசைத்துண்டு; a slice of flesh.

**ம.** கதிரம்

மூவேந்தருள் சோழர் கதிரவனைத் தங்குல முதல்வனாகக் கூறி வந்தனர். குணபுலமாகிய சோழநாடு கதிரவர் எழுந் திசையிலிருந்ததால் சோழர் தம்மைக் கதிரவன் வழியினராகக் கூறிக் கொண்டதாகத் தெரிகின்றது [பழந்தமிழாட்சி. ப. 19].

**கதிரரிவாள்** *kadir-arivāḷ,* பெ.(n.) கதிரறுக்கும் அரிவாள்; garden knife.

*[கதிர் + அரிவாள்.]*



கதிரரிவாள்

**கதிரவன்** *kadiravaṉ,* பெ.(n.) ஞாயிறு; Sun, as emitting rays of light. *"கதிரவன் குணதிசைச் சிகரம் வந் தணைந்தான்" (திவ். திருப்பள்ளி - 1).*

**மறுவ.** பகலவன், வெய்யோன், இருள்வலி, சூரியன், சுடரவன், உதையன், ஆதவன், எல்லை, பனிப்பகை, பரிதி, செங்கதிர், அலரி வெஞ்சுடர், வேந்தன், ஆயிரங்கதிரோன், அழலவன், என்றூழ், கனலி, சான்றோன், அருக்கன், தேரோன், எல்லோன், கனலி, கனலோன், ஒளியோன், பகல், வெய்யிலோன், வெய்யோன், பொழுது, எல்லி, விண்மணி, சுடரோன்.

**ம.** கதிரவன்

*[கதி → கதிர் → வளையாமற் செல்லும் ஒளியிழை. கதிர் → கதிரவன் (மு.தா. 119).]*

**கதிரவன் புதல்வி** *kadiravaṉ-pudalvi,* பெ.(n.) ஞாயிற்றின் மகளாகக் கருதப்படும் யமுனை; suposed to be the dauther of the Sun God.

*[கதிரவன் + புதல்வி.]*

**கதிரறு-த்தல்** *kadir-aṟu-,* 4.செ.குன்றா.வி(v.t.) நெல், தினை முதலியவற்றின் தாளையறுத்தல்; to reap stalk of paddy, millet etc.

*[கதிர் + அறு-.]*

**கதிராந்தலை** *kadir-ān-dalai,* பெ.(n.) நெல்லின் முற்றிய கதிர்ப்பருவம்; (Rd.) matured stage of paddy on the stalk.

*[கதிர் + ஆம் + தலை.]*

**கதிராமங்கலம்** *kadirāmaṅgalam,* பெ.(n.) தஞ்சை மாவட்டத்தில் உள்ள ஒரூர்; a village in Tanjavur district.

*[கதிரன்+ மங்கலம் – கதிரன்மங்கலம்–கதிராமங்கலம்.]*

**கதிராவிமுகம்** *kadirāvi-mugam,* பெ.(n.) 1. ஞாயிற்றுக் கோள்மறை (சூரியகிரகணம்); solar eclipse.

*[கதிர் + அவி + முகம் = கதிரொடுங்குமுகம். கதிரவிமுகம் → கதிராவிமுகம் = ஒளி மறைக்கும் பகுதி, ஒளிகுன்றிய பகுதி.]*

**கதிரியக்கம்** *kadir-iyakkam,* பெ.(n.) சில தனிமங் களின் அணுக்களைப் பிளக்கும் பொழுது வெளிப் படும் ஆற்றல்; raidiation.

*[கதிர் + இயக்கம்.]*

**கதிரீன்(னு)-தல்** *kadir-īṉ-,* 13 செ.கு.வி.(v.i.) ***கதிர் வாங்கு*** பார்க்க; see *kadir-vāṅgu.*

**க.** கதலொடெ

*[கதிர் + ஈனு.]*

**கதிரெடுப்பு** *kadir-eḍuppu,* பெ.(n.) கதிர்க்கட்டைக் களத்துக்குக் கொண்டு போதல் (இ.வ.); taking the bundles of sheaves to the threshing floor.

*[கதிர் + எடுப்பு.]*

**கதிரெழுதுகள்** *kadir-eḻu-tukaḷ,* பெ.(n.) ஞாயிற்றின் ஒளிக்கற்றையில் தோன்றும் துகள் *"கதிரெழு துக*

*ளெண்மூன்று கசாக்கிரகந் தானாகும்" (கந்தவு 4. அண்டகோ);* dust in a sunbeam.

*[கதிர் + எழு + துகள்.]*

மயிரின் அரைப்பாகத்தின் 24ல் ஒரு பகுதி கதிரெழுதுகளாகும்.

**கதிரை**[1] *kadirai,* பெ.(n.) ***கதிர்காமம்*** பார்க்க; see *kadir-kāmam.*

*[கதிர்காமம் → கதிரை (மரூஉ மொழி).]*

**கதிரை**[2] *kadirai,* பெ.(n.) நாற்காலி (யாழ்ப்.); chair.

*[கதிர் = ஆரக்கால், கால். கதிர் → கதிரை.]*

**கதிரோலை** *kadir-ōlai,* பெ.(n.) முடையாத ஓலை; unbraided palm leaf.

ம. கதிரோல

*[கதிர் + ஓலை.]*

**கதிரோன்** *kadirōṉ,* பெ.(n.) ***கதிரவன்*** பார்க்க; see *kadiravaṉ.*

*[கதிரவன் → கதிரான் → கதிரோன்.]*

**கது** *kadu,* பெ.(n.) 1. வடு; cicatrice, scar. *"கதுவா யெஃகின்" (பதிற்றுப். 45: 4).* 2. மலைப்பிளப்பு; mountain clef. *"கதுப்புகுந் துறங்குபு கழுதுஞ் சோர்ந்தவே" (சூளா. கல்யா. 234).*

*[கதுவு → கது.]*

**கதுக்கு**[1]**-தல்** *kadukku-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. பெருந்தீனி கொள்ளுதல் (இ.வ.); to gorge, glut, swallow greedily. 2. அதக்குதல்; to cram in the mouth, as betel, as a monkey, its food.

*[அதுக்கு → கதுக்கு.]*

**கதுக்கு**[2] *kadukku,* பெ.(n.) இராட்டினத்தில் நூலைப் பற்றும் உறுப்பு (சங்.அக.); the clip that holds the thread of a reeling machine.

*[கது(வு) → கது → கதுக்கு.]*

**கதுக்கெனவீழ்-தல்** *kadukkena-vīḻ-,* 4 செ.கு.வி. (v.i.) துண்டாக வெளிப்பட்டு வீழ்தல்; to fall out in a lump as the phlegm does when coughed out.

*[கதுக்கு + என + வீழ்-.]*

**கதுகொது-த்தல்** *kadukodu-,* 4 செ.கு.வி.(v.i.) 1. கொதித்தல்; to boil. 2. தளபளவென்று கொதித்தல்; to agitate as of a liquor in boiling.

*[குது → குதுத்தல் → குதுகுதுத்தல் → கதுகொதுத்தல். ஒலிக்குறிப்படைப்படியில் உருவான வினை.]*

**கதுப்பு**[1] *kaduppu,* பெ.(n.) 1. கன்னச் சதை; cheek, side of the face. *"தும்பி தொடர்கதுப்ப" (பரிபா.19: 30).* 2. தலைமயிர்; human hair, locks of hair. *"கதுப்பின் குரலூத" (பரிபா. 10: 120).* 3. பழத்தின் நடுவேயுள்ள கொட்டையை நீக்கி அறுத்த துண்டம்; fleshy part of a fruit on each side of the seed in the centre. மாம்பழம் நறுக்குகையில் ஆளுக்கு நான்கு கதுப்புகள் கிடைத்தன (இ.வ.).

*[கது(வு) = பற்றுதல். கது → கதுப்பு = பற்றியிருப்பது.]*

**கதுப்பு**[2] *kaduppu,* பெ.(n.) ஆநிரை; herd of cattle.

*[கதுவுதல் = பற்றுதல், ஒன்றோடொன்று பிணைந் திருத்தல் (மந்தை). கதுவு → கதுப்பு.]*

**கதுப்பு**[3] *kaduppu,* பெ.(n.) மஞ்சள் (அரு.நி.); turmeric (செ.அக.).

*[கதிர் → கதிர்ப்பு → கதிப்பு → கதுப்பு.]*

**கதுப்பு**[4] *kaduppu,* பெ.(n.) யானை மதம்; rut of elephant.

*[கடி → கதி → கதிப்பு → கதுப்பு மிகுதியாகப் பெருகுவது.]*

**கதுப்புத்துடுப்புமீன்** *kaduppu-t-tuḍuppumīṉ,* பெ.(n.) கடல்வாழ் மீன்வகை; a kind of see fish.

*[கதுப்பு + துடுப்பு + மீன்.]*



கதுப்புத் துடுப்பு மீன்

**கதுப்புளி** *kaduppuḷi,* பெ.(n.) ***கதிர்ப்புளி*** பார்க்க; see *kadirppuḷi.*

ம. கதிர்ப்புளி

*[கதிர்ப்புளி → கதுப்புளி.]*

**கதுப்புளிக்கோல்** *kaduppuḷi-k-kōl,* பெ.(n.) ***கதிர்ப் புளி*** பார்க்க; see *kadirppuḷi.*

*[கதிர்ப்பு → கதுப்புளி + கோல்.]*

**கதுமு–தல்** *kadumu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. ஒட்டாரம் பிடித்தல், பிடிவாதஞ் செய்தல் (வின்.); to be obstinate, perverse, self-willed. 2. கடிந்துகொள்ளுதல் (த.மொ.அக.); to reprove, rebuke, chide.

*[கதுவு → கதுமு-.]*

**கதுமெனல்** *kadum-eṉal,* பெ.(n.) விரைவுக்குறிப்பு; expression denoting quickness. *"கதுமெனக் கரைந்து" (பொருந. 101).*

பட. கதமன

*[கதும் + எனல்.]*

**கதுமை** *kadumai,* பெ.(n.) ***கதிமை*** பார்க்க; see *kadimai.*

*[கதிமை → கதுமை.]*

**கதுவல்** *kaduval,* பெ.(n.) பற்றுதல்; catch; to seize. *"கட்புலன் கதுவல் செல்லா" (நைடத. அன்னத்தைக் கண்–2).*

*[கதுவு + அல். அல் = தொ.பெ.ஈ.]*

**கதுவாய்** *kaduvāy,* பெ.(n.) 1. வடுப்படுகை (திவா.); being scarred. 2. குறைகை; diminishing, decreasing, *"கதுவாய்பட நீர்முகந் தேறி" (திவ். பெரியாழ். 3,5,4).* 3. மேற்கதுவாய், கீழ்க்கதுவாய் தொடை வேறுபாடு (இலக். வி. 723); (pros. mōṉai, of two kinds. 4. முரிந்தவாய்; wry mouth (சுந்.415).

*[கது + வாய் – கதுவாய். கது = பற்று, வெட்டு.]*

**கதுவாய்ப்படு–தல்** *kaduvāy-p-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) வடுப்படுதல்; to be scarred.

*[கதுவாய் + படு–. படு = து.வி.]*

**கதுவாலி**[1] *kadu-vāli,* பெ.(n.) கவுதாரி (இ.வ.); Indian pastridge.

மறுவ. கவுதாரி

H.kabuthar

*[கது + வாலி. கது = குட்டையான. கதுவாலி = குட்டையான, வாலுடையது.]*

**கதுவாலி**[2] *kaduvāli,* பெ.(n.) ஒருவகை மரம்; Ceylon tea.

*[கருவாலி → கதுவாலி.]*

**கதுவாலிப்புடம்** *kaduvāli-p-puḍam,* பெ.(n.) கவுதாரி அளவாக மூன்று எருவிட்டெரிக்கும் மருந்துப்புடம்; measure determining the strength of fire in the calcination or reduction of metals with three dry dung cakes.

*[கதுவாலி + புடம்.]*

**கதுவு**[1]**–தல்** *kaduvu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. நார் முதலியன வரிந்து இழுத்தல் (யாழ்.அக.); to tighten, as strands, etc. (செ.அக.). 2. அழுத்துதல்; to press. 3. இறுக்கிப்பிடித்தல்; to seize or hold firmly. 4. தொல்லை தருதல்; to distress, to trouble. 5. ஒட்டாரத்துடன் (பிடிவாதத்துடன்) ஊக்குதல்; to urge with vehemence (கருநா.). 6. கவ்வுதல்; to grosp.

**க.** கதுபு; **தெ.** கதுமு.

*[குது → கது → கதுவு.]*

**கதுவு**[2]**–தல்** *kaduvu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. பற்றுதல்; to seize, catch, grasp, lay hold of. *"கராவதன் காலினைக் கதுவ" (திவ். பெரியதி. 2,3,9).* 2. கைப் பற்றுதல் (யாழ்ப்.); to take more than a proper share of, encroach upon. 3. செதுக்குதல் (வின்.); to pare, share off, slice off, whittle, strip off, as fibres from a nut; to chisel.

**க.** கதுபு, கதுகு, கதும்பு, கதுபு; **தெ.** கதுமு; **து.** கதிபு.

*[குது → கது → கதுவு. கதுவுதல் (மு.தா.210.).]*

**கதுவு**[3]**–தல்** *kadavu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. கலங்குதல்; to be troubled perturbed. 2. எதிரொளித்தல்; to be reflected as in a mirror; *"தற்படிக மணிக்கதுவு மறிவொளி" (வேதா.சூ.107).*

*[கது → கதுவு.]*

**கதேர்த்தவி** *kadhērtavi,* பெ.(n.) மாதவிலக்கு நின்ற பெண்; a woman past her courses or past child bearing (சா.அக.).

*[கதுவு + தவிர்.]*

**கதை** *kadai,* பெ.(n.) 1. உரையாடல் (யாழ்ப்.); talk, conversation. ***கதைத்தல்*** பார்க்க; see *kadai-.*

2. செய்தியைச் சுவைபடச் சொல்லுதல்; story. இவர் இனிமையாகக் கதை சொல்வதில் வல்லவர் (உ.வ.). 3. நடந்ததை எடுத்துரைத்தல்; narration. விடுதலைப் போர்க் கதையைச் சொல்லும் பெரியோர் இன்று முளர் (உ.வ.). 4. நொடிச்செய்தி; anecdote. பழந்தமிழ் வரலாற்றை ஆங்காங்கே கதை சொல்லி விளக்கி னார் (உ.வ.). 5. இயலாததையும் பொருந்தக்கூறல்; talk tale. மணலைக்கயிறாகத் திரித்ததாகக் கதை கூறுகிறான் (உ.வ.). 6. எதிராடலுக்கான பொருள்; subject of conversation. இன்றைய பொழுதை வீணடிக்க இவனுக்கு கதை கிடைத்துவிட்டது (உ.வ.). 7. வாழ்க்கை; life அவர் கதை முடிந்து ஆறு திங்களாகி விட்டது(உ.வ.). 8. பெரிய வரலாறு; long story; கருமாயம் பேசிற் கதை" (திவ்.இயற். நான்மு 3.1). 9. தொல்பழங்கதை, (இதிகாசம்), தொன்மங்கள் (புராணங்கள்); epic, and legend. 10. பெருங்கதை (சிலப். உரைப்பாயிரம் ப.9); Perunkatai, the story of Udayanan. 11. பொய்ப் பொருள் புணர்த்துக் கூறுவது; fabrication, fallshood, lie. *"கதையெனக் கருதல் செய்யான், செய்யெனத் தானுங் கொண்டான்" (சீவக. 2144).* 12. புத்தார்வமிக்க காதல் கதை; rom ance. புதுவகைக் காதல் கதைகள் அதிகமாக வெளிவந்துள்ளன. 13. கட்டுக்கதை; Table, apolo gue, fiction. 14. செய்தி; message, communication. 15. விதம்; manner; *"கக்கல் வந்திட மிடற்றினை யொடுக்குமக் கதைபோல்" (அரிச்.பு.சூழ்வி.100).*

**தெ.** கதா; **து.** கதெ; **பட.** கதெ (பாட்டு); **க.** கதெ; **Skt.** katha; **Ori.** kadha; **H.** kadha, kahani; **Pali.** kadh; **Guj.** kahani; **Indon.** kata.

**த.** கதை > **Skt.** katha

*[கழல் (கழறு) → கதல் → கதைத்தல் → கதை.]*

**கதைக்கரு** *kadai-k-karu,* பெ.(n.) புதினம், சிறுகதை, நாடகம், காப்பியம், கதைப்பாடல் ஆகியவற்றில் தொடர்புடைய நிகழ்ச்சிகளின் அமைப்பு; plot in novels, short stories, drama, epic, story-poems etc.

*[கதை + கரு.]*

**கதைக்களி** *kadai-k-kaḷi,* பெ.(n.) கேரளத்தின் நாட்டியக் கலைகளுள் ஒன்று; a classical dramatic art of Kerala.

**ம.** கதகளி

*[கதை + களி – கதைக்களி.]*

மலையாளத்தில் சிறப்பெய்தியுள்ள ஒரு நாட்டியக் கலை. களி– விளையாட்டு, ஆடல். கதையை ஆட்டத்தில் காட்டும் கதைபொதி ஆடல் கதைக்களியாகும். இவ் வாட்டத்தில் பயன்படுத்தும் கதையினை ஆட்டகதா [ஆட்டத்திற்குரிய கதை] என்பர். பல கதைகளும் இலக்கியங்களும் இதற்காக உருவாகியுள்ளன.

**கதைகட்டு**[1]**–தல்** *kadai-kaṭṭu-,* 5 செ.குன்றாவி.(v.t.) பொய்ச்செய்தி கிளப்புதல் (வின்.); to concoct a slander.

*[கதை + கட்டு–.]*

கதையைப் போல் பொய்யைப் புனைந்து சொல்வதன் அடிப்படையில் பொய்த்தூற்றுப் பொருளில் இச் சொல் ஆளப்பட்டது.

**கதைகட்டு**[2]**–தல்** *kadai-kaṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. கதை உருவாக்குதல்; to fabricate a story, construct a fable, romance or other fiction. 2. நாடகக் கதையின் நிகழ்ச்சிக்கூறு உருவாக்குதல்; to form the plot of a story of drama.

*[கதை + கட்டு–.]*

**கதைகந்தலா(கு)–தல்** *kadai-kandalāgu-,* 5செ.கு.வி.(v.t.) 1. குட்டு வெளிப்படுதல்; secrets being known widely *"cat out of the bag".* பொய் சொல்லுகிறாய் என்று உன் கதை கந்தலாகுமோ? (உ.வ.). 2. அவலம்; affliction. உன் நடைமுறையை மாற்றிக்கொள்ள வில்லையென்றால் வருங் காலத்தில் உன் கதை கந்தலாகிவிடும் (உ.வ.).

**ம.** கதகேடு

*[கதை + கந்தல். கந்தல் → நைந்துபோதல்.]*

**கதை–த்தல்** *kadai-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. சொல்லுதல். (திவா.); to tell, narrate, say. 2. சிறப்பித்துச் சொல்லுதல்; to speak well of; to praise. *"கதையுந் திருமொழியாய் நின்ற திருமாலே" (திவ். இயற். 2, 64).*

**ம.** கதிக்குக; **குவி.** கதஆ, கதங்ஆ; **Pkt.** kattha; **H.** kahana.

*[கழல் (கழறு) → கதல் → கதை.]*

**கதைகாரன்** *kadai-kāraṉ,* பெ.(n.) 1. வீண் பேச்சுக் காரன்; talkative person, babbler. 2. கதைசொல்லு வோன்; story teller, narrator. 3. கதை எழுதுபவன்; story-writer. 4. தந்திரமுள்ளவன் (Madr.); trickster, clever man.

க. கதெகார, கதிக; ம. கதாகாரன், கதிகன்; **Skt.** kathika.

*[கதை + காரன்.]*

**கதைகாவி** *kadai-kāvi,* பெ.(n.) குறளை கூறுவோன் (யாழ்ப்.); tablebearer.

*[கதை + காவி. (காவுதல் = சுமத்தல். காவு → காவி. காவி = காவிச் (சுமந்து) செல்பவன்.]*

**கதைகேள்(ட்)–தல்** *kadai-kēḷ-,* 3.செ.கு.வி.(v.i.) கதை கேட்டல்; to hear a story.

க. கதெகேள்

*[கதை + கேள்–.]*

**கதைச்சாரம்** *kadai-c-cāram,* பெ.(n.) 1. கதைச் சுருக்கம்; purport of a story. 2. கதையால் தெரிவிக்கும் நீதி; the moral of a story.

ம. கதாஸாரம்; க. கதாசார; **Skt.** kathā - šāra.

*[கதை + சாரம்.]*

**கதைசொல்(லு)–தல்** *kadai-col-,* 13 செ.கு.வி.(v.i.) 1. கதைகூறுதல்; to relate or narrate stories. ஒரு கதை சொல்லவேண்டும். 2. அலப்புதல். (வின்.); to tattle, babble. 3. சிறு குழந்தை சிரித்து விளையாடுதல்; to show signs of intelligence by smiles, as an infant. குழந்தை கதை சொல்லுகிறதா? (வின்.).

க. கதெவேழ்

*[கதை + சொல்.]*

**கதைத்தலைவன்** *kadai-t-talaivaṉ,* பெ.(n.) கதையின் தலைவனாக இருப்பவன்; hero of a story, or of a poem.

ம. கதாநாயகன்; **Skt.** kathānāyak.

*[கதை + தலைவன்.]*

நல்லெண்ணம், நற்செய்கை, நற்பண்பு, நல்லொழுக்கம், அறிவுக்கூர்மை, வன்மை ஆகிய எல்லாம் நிறைந்த சால்புடையவனையே கதைக்குத் தலைவனாக்குவது பண்டையோர் மரபு. மக்களைப் பண்படுத்தும் குறிக்கோள் நிறைவுற இது வழி வகுத்தது.

**கதைத்தலைவி** *kadai-t-talaivi,* பெ.(n.) கதையின் தலைவியாக இருப்பவள்; heroine of a story or of a poem.

*[கதை + தலைவி.]*

**கதைத்திருப்பம்** *kadai-t-tiruppam,* பெ.(n.) கதையின் திருப்புமுனை; turning point of a story.

*[கதை + திருப்பம்.]*

**கதைதிரும்பு–தல்** *kadai-dirumbu-,* 5 செ.கு.வி.(v.i.) நிகழ்வுகள் தம் வழியினின்று திரும்புதல்; to turn an event of its course.

*[கதை + திரும்பு–.]*

**கதைதீர்–தல்** *kadai-tīr-,* 4 செ.கு.வி.(v.i.) இறத்தல்; to die, to end. அவன் கதை தீர்ந்தது (உ.வ.).

ம. கததீருக

*[கதை + தீர்–.]*

**கதைநாயகன்** *kadai-nāyagaṉ,* பெ.(n.) ***கதைத் தலைவன்*** பார்க்க; see *kadai-t-talaivaṉ.*

*[கதை + நாயகன். நாயன் → நாயகன். வ. நாயக > த. நாயகன் (நேர்மையான சான்றோன்.).]*

**கதைப்பாட்டு** *kadai-p-pāṭṭu,* பெ.(n.) ***கதைப்பாடல்*** பார்க்க; see *kadai-p-pāḍal.*

*[கதை + பாட்டு.]*

**கதைப்பாடல்**[1] *kadai-p-pāḍal,* பெ.(n.) கதையினைத் தழுவிய பாடல்; story-poem. தெய்வம் அல்லது ஒரு தலைவனின் வரலாற்றைப் பாட்டுவடிவில் கூறும் நாட்டுப்புற இலக்கியம்; folk epic-poem; folk ballad.

*[கதை + பாடல்.]*

**கதைப்பாடல்**[2] *kadai-p-pāḍal,* பெ.(n.) கதையைப் பாடல் வடிவில் கூறுவது; ballad.

*[கதை + பாடல்.]*

நாட்டுப்புற மக்களின் கூட்டு முயற்சியால் வாய்மொழி இலக்கியமாக இசைக்கருவிகளின் துணைகொண்டு பாடப்படும் புகழ்மிக்க கதை பொதி பாடல் திரட்டு.

**கதைப்புணர்ச்சி** *kadai-p-puṇarcci,* பெ.(n.) கிளைக் கதைகளைப் பெருங்கதையுடன் இணைக்கும் இணைப்பு; connection of a story or narrative, in its several parts, thread of a narrative.

*[கதை + புணர்ச்சி.]*

**கதைப்பொருள்** *kadai-p-poruḷ,* பெ.(n.) ஒரு கதையிலிருந்து பெறப்படும் பொதுக்கருத்து; theme of a story, novel etc.

*[கதை + பொருள்.]*

**கதைபடி–த்தல்** *kadai-paḍi-,* 4 செ.கு.வி.(v.i.) 1. முறைப்படித் தொன்மம் படித்தல்; to read sacred stories according to rule. 2. பொய் கூறுதல்; to spin out falsehood.

*[கதை + படி–.]*

**கதைபண்ணு–தல்** *kadai-paṇṇu-,* 12 செ.கு.வி. (v.i.) 1. கதைப்பாட்டுரைத்தல். (கதாகாலட்சேபம்); to rehearse or narrate Purāṇic stories with musical accompaniments. 2. கட்டிப்பேசுதல்; to talk nonsense, indulge in idle prattle, spin a long yarn. "தாயிடம் அப்படி எல்லாம் கதைபண்ணாதே". 3. தெரிந்தும் தெரியாதததுபோல் பேசுதல்; to feign ignorance, dissemble.

*[கதை + பண்ணு–.]*

**கதைபிடுங்கு–தல்** *kadai-piḍuṅgu-,* 7 செ.குன்றாவி. (v.i.) பிறரிடமிருந்து கமுக்கம் வெளிவரும்படிச் செய்தல்; to pump out information by cajolery, elicit a secret by coaxing words; to fish out a matter. "கதைவிட்டுக் கதைபிடுங்குவதில் அவன் கெட்டிக்காரன்" (யாழ்ப்.); 2. பேசிக் காரியமறிதல்; to known secrecy by idle talk. காவலர்கள் கதை பிடுங்குவதில் கெட்டிக்காரர்கள்.

*[கதை + பிடுங்கு–.]*

**கதைமாறு–தல்** *kadai-māṟu-,* 5 செ.கு.வி.(v.i.) பொருள் பலபடப் பேசுதல். (வின்.); to prevaricate, quibble.

*[கதை + மாறு–.]*

**கதைமுடி–த்தல்** *kadai-muḍi-,* 4 செ.குன்றாவி.(v.t.) கொல்லுதல்; to kill. பாண்டியன் நெடுஞ்செழியன் கோவலன் கதையை முடித்துவிட்டான் (உ.வ.).

**ம.** கதகழிக்குக, கததீர்க்குக.

*[கதை + முடித்தல் (பி.வி.).]*

**கதைமுடி–தல்** *kadai-muḍi-,* 4 செ.கு.வி.(v.i.) 1. கதை முடிதல்; to close a story. அடுத்த இதழோடு இக்கதை முடிகிறது (உ.வ.). 2. இறத்தல்; to die.

**ம.** கத கழியுக

*[கதை + முடி–.]*

**கதையள–த்தல்** *kadai-yaḷa-,* 3 செ.கு.வி.(v.i.) 1. பொய் பேசுதல்; to talk non-sense, indulge in idles prattle. அவன் உண்மையைச் சொல்லாமல் கதை யளக்கிறான். 2. தேவைக்கதிகமாக நீட்டிப் பேசுதல்; to spin a long yarn. கதையளக்காமல் சுருக்கமாகச் சொல் (உ.வ.).

*[கதை + அள–. **கதைவிடு** பார்க்க.]*

**கதையறி–தல்** *kadai-y-aṟi-,* 2 செ.கு.வி.(v.i.) உள வறிதல் (வின்.); to spy out, as an enemy, to watch in disguise the movements of an enemy.

*[கதை + அறி–.]*

**கதையாசிரியன்** *kadai-y-āśriyaṉ,* பெ.(n.) கதை எழுதும் எழுத்தாளன்; story writer.

*[கதை + ஆசிரியன் → கதையாசிரியன். இதனை வடமொழி ஒலிப்பாக்கிக் கதாசிரியன் என வழங்குதல் வழுவாம்.]*

**கதையுண்டாக்கு–தல்** *kadai-y-uṇḍākku-,* 7 செ.கு.வி. (v.i.) 1. கதைகட்டுதல்; to fabricate a story. கதை கட்டிப் பேசியும் காரியம் முடியவில்லை.2. பொய்யான செய்திகளைப் பரவச்செய்தல்; to spread a rumour. சிலை, பால் குடிப்பதாகக் கதையுண்டாக்கி விட்டனர் (உ.வ.).

*[கதை + உண்டாக்கு–.]*

**கதையெடு–த்தல்** *kadai-y-eḍu-,* 4 செ.கு.வி. (v.i.) 1. தேவையில்லாமல் முரணாகப் பேசுதல்; to raise unnecessary arguments. 2. செய்தி தொடங்குதல் (வின்.); to introduce a subject.

*[கதை + எடு.]*

**கதைவளர்–த்தல்** *kadai-vaḷar-,* 4 செ.கு.வி.(v.i.) பேச்சை விரித்தல் (வின்.); to prolong a story or a conversation.

*[கதை + வளர்–.]*

**கதைவிடு–தல்** *kadai-viḍu-,* 20 செ.கு.வி.(v.i.) 1. பொய்ப்பேச்சு எழுப்புதல்; to tell a false story for some sinister end. எல்லோரிடத்தும் கதை விட்டுக் கொண்டலைகிறான் (உ.வ.). 2. மறைபொருள் (இரகசியம்) வெளியே வரும்படி சூழ்ச்சியாய் (தந்திரமாய்) சொல்லாடல்; to tell something pleasing to one in order to put him in good humour and

fish out secrets from him. கதைவிட்டுக் கக்கச் செய்தான்(உ.வ.). 3. நம்பமுடியாத அளவில் கூறுதல்; to spin a yarn. எனக்குத் தெரியும், கதைவிடாதே (உ.வ.).

**மறுவ.** கயிறுதிரித்தல்,சரடு விடல், கரடி விடல், அளத்தல்.

*[கதை + விடு–.]*

எளிய செய்தியை அல்லது நிகழ்ச்சியைக் கற்பனையால் விரித்துக் கூறுவது கதையாகும். சொல்லாததைச் சொன்னதாகவும் நிகழாததை நிகழ்ந்ததாகவும் கூறுவது கதை விடுதலாகும்.

**கந்தக்கினி** *kandakkini,* பெ.(n.) கெட்ட நாற்றத்தைப் போக்கும் பொருள்; a substance which has the power of destroying fetid smell (சா.அக.).

*[கந்தம் + அக்கினி.]*

**கந்தக்குடிச்சி** *kanda-k-kudichi,* பெ.(n.) ஒருவகைக் காட்டுக்கொடி; a kind of moonseed - creeper.

*[கந்தகம் + குடிச்சி (சா.அக.) கொடிச்சி → குடிச்சி (கொ.வ.).]*

**கந்தகஅமிலம்** *kandaga-amilam,* பெ.(n.) கந்தகத்தை மூலக்கூறாகக் கொண்ட அமிலம்; Sulphuric acid ($H_2SO_4$).

*[கந்தகம் + அமிலம்.]*

**கந்த இளகியம்** *kandaga-iḷagiyam,* பெ.(n.) பதங்கித்த கந்தகத்தோடு மற்ற பொருள்களையும் சேர்த்துச் செய்யும் ஒருவகை இளகியம்; an electuary prepared from sublimed sulphur mixed with other ingredients (சா.அக.).

*[கந்தகம் + இளகியம்.]*

**கந்தகக்கலப்பியம்** *kandaga-k-kalappiyam,* பெ.(n.) கந்தகத்தோடு சேர்ந்துள்ள காரீயம்; native sulphide of lead.

*[கந்தகம் + கலப்பு + ஈயம்.]*

**கந்தகக்களிம்பு** *kandaga-k-kaḷimbu,* பெ.(n.) கந்தகம், இதளியம், செய்நஞ்சு, மெழுகு முதலியவை சுளாலான களிம்பு; ointment prepared with sulphur, mercury, organic, wax, etc (சா.அக.).

*[கந்தகம் + களிம்பு.]*

இது புண், புரைகளுக்கு மருந்தாகப் பயன்படுகிறது.

**கந்தகச்சிந்தூரம்** *kandaga-c-cindūram,* பெ.(n.) கந்தகச் செந்நீறு (வின்.); calcined brimstone.

*[கந்தகம் + சிந்தூரம்.]*

**கந்தகச் சுண்ணம்** *kandaga-c-cuṉṉam,* பெ.(n.) 1. நெருப்பிற்கு ஓடாதபடி கட்டிய கந்தகத்துடன் பிற சரக்குகள் சேர்த்து அரைத்துப் புடமிட்டெடுத்த சுண்ணம்; a compound prepared by consolidating calcinated sulphur added with other drugs. 2. கந்தகம் கலந்த சுண்ணாம்பு; sulphurated lime.

*[கந்தகம் + சுண்ணாம்பு]*

இவ்விரு வகைகளில் முன்னையது சித்த மருத்துவ முறைப்படியும், பின்னையது ஆங்கில மருத்துவ முறைப்படியும் உருவாக்குவனவாம் [சா.அக.].

**கந்தகச் சுரங்கம்** *kandaka-c-curaṅgam,* பெ.(n.) கந்தகப் படிமங்களை வெட்டி எடுக்குமிடம்; mines of sulphuric ore.

*[கந்தகம் + சுரங்கம்.]*

**கந்தகச் செந்தூரம்** *kandaga-c-cendūram,*பெ.(n.) ***கந்தகச் சிந்தூரம்*** பார்க்க (சா.அக.); see *kandaga-c-cindūram.*

*[கந்தகம் + செந்தூரம்.]*

**கந்தகத்துகள்** *kandaga-t-tugaḷ,* பெ.(n.) கந்தகத் தனிமத்தின் தூள்; powdered sulphur.

**மறுவ.** கந்தகப்பொடி

*[கந்தகம் + துகள்.]*

**கந்தகத்தைலம்** *kandaga-t-tailam,* பெ.(n.) கந்தகக் கலப்புள்ள எண்ணெய்; sulphur oil.

*[கந்தகம் + தைலம்.]*

இவ்வெண்ணெயைச் சொறிக்கு மருந்தாக இடுவர்.

**கந்தகநீறு** *kandaga-nīṟu,* பெ.(n.) கந்தகப்பொடி; calcinated sulphur.

*[கந்தகம் + நீறு.]*

**கந்தகப்பாகு** *kandaga-p-pāgu,* பெ.(n.) கந்தகத்தை உருக்கிக் குளிர்நீரில் கலப்பதால் உண்டாகும் சவ்வு

போன்ற கந்தகம்; a tough elastic material which is obtained when sulphur is poured into cold water (சா.அக.).

*[கந்தகம் + பாகு.]*

**கந்தகப்புகை** *kandaga-p-pugai.* பெ.(n.) சொறி, சிரங்கு, புண் முதலிய தோல்நோய்களுக்குக் கந்தகத்தை எரியவிட்டுக் காட்டும் புகை; fumigation of sulphur (சா.அக.).

*[கந்தகம் + புகை.]*

**கந்தகப்பூ** *kandaga-p-pū,* பெ.(n.) மருந்துச் சரக்குவகை; flowers of sulphur.

*[கந்தகம் + பூ.]*

**கந்தகபூமி** *kandaga-būmi,* பெ.(n.) 1. கந்தகத்தன்மை மிகுந்துள்ள நிலம்; soil containing sulphur. 2. வெப்பமிகு பூமி; torri area with hot climatic condition of soil.

**Skt.** bhumi > **த.** பூமி

*[காந்து → காந்துகம் → கந்தகம் + பூமி.]*

**கந்தகம்** *kandagam,* பெ.(n.) எளிதில் தீப்பற்றக் கூடியதும், மஞ்சள்நிற முடையதும், மூன்று வேற்றுருக்கள் கொண்டதும், குறைந்த உருகுநிலையுடையதுமான தனிமம்; sulphur (S).

**Mar.** gandhak; **H.** kandak.

*[காந்து → காந்தகம் → கந்தகம். காந்துதல் → எரிதல்.]*

இது படிகம் (தூள்), நீள்வடிவ படிகம், கூழ் என மூன்றுருக்களையுடையது.

**கந்தகமலை** *kandaga-malai,* பெ.(n.) **கந்தகச்சுரங்கம்** பார்க்க (வின்.); see *kandaka-c-curaṅgam.*

*[கந்தகம் + மலை.]*

**கந்தகமுறிவு** *kandaga-muṟivu,* பெ.(n.) கந்தகப் பண்பை மாற்றுதல்; changing or neutralising the effects of sulphur.

*[கந்தகம் + முறிவு.]*

**கந்தகவிரும்பு** *kandaga-virumbu,* பெ.(n.) கந்தகம் கலந்த இரும்புத்தாது; Iron ore (pyrites) with sulphur (சா.அக.).

*[கந்தகம் + இரும்பு.]*

**கந்தகவுப்பு** *kandaga-uppu,* பெ.(n.) கந்தக மணமுள்ள உப்பு, கடுங்கூர்மையுப்பு (வின்.); black salt (சா.அக.).

*[கந்தகம் + உப்பு.]*

**கந்தசட்டி** *kandaśaṭṭi,* பெ.(n.) **கந்தன் அறுமி** பார்க்க; see *kandan-aṟumi.*

**Skt.** shasṭi > சட்டி (ஆறாம் நாள்).

*[கந்தன் + சட்டி.]*

**கந்தசாலி** *kanda-šāli,* பெ.(n.) மணமுள்ள ஒருவகைச் சிறந்த செந்நெல்; a superior kind of paddy with a sweet smell. *"கந்தசாலியின் கழிபெரு வித்தோர்" (மணிமே. 10:46).*

*[கந்தம்[2] + சாலி. சாலி = நெல்வகை.]*

**கந்தடி–த்தல்** *kandaḍi-,* 4 செ.கு.வி.(v.i.) சூடு மிதித்தபின் கதிர்த்தாளைக் கோல்கொண்டடித்தல். (வின்.); to thresh, beat out straw after it has been trodden over.

*[கந்து + அடித்தல்.]*

**கந்தடை–த்தல்** *kandaḍai-,* 4 செ.கு.வி.(v.i.) களத்தைச் சுற்றி வைக்கோலால் வேலிகட்டுதல் (வின்.); to form an enclosure with straw around the threshing floor.

*[கந்து[2] + அடை–.]*

**கந்ததைலம்** *kanda-tailam,* பெ.(n.) 1. நறுமணப் பொருள்களைக் கொண்டு செய்யப்பட்ட எண்ணெய்; a medicated oil prepared with fragrant substances. 2. சந்தனாதி (எண்ணெய்); medicated oil prepared with sandalwood as the chief ingredient.

*[கந்தம் + வ. தைலம்.]*

**கந்தநாகுலி** *kanda-nākuli,* பெ.(n.) 1. மிளகு (மலை.); black pepper. 2. செவ்வியம்; black pepper plant creeper. 3. மாசிபத்திரி; Indian absinth (சா.அக.).

*[கந்தம் + நாகுலி.]*

**கந்தப்பட்டி** *kanda-p-paṭṭi,* பெ.(n.) குறுக்குச்சட்டம்; braces. *"கதவுகால் கந்தப்பட்டி" (மேருமந். 1163).*

*[கந்தம் + பட்டி.]*

**கந்தப்பார்–த்தல்** *kanda-p-pār-t-tal,* தொ.பெ. (vbl.n.) தேவையில்லாதவற்றை நீக்குதல் (ம.அக.); to remove unnecessary things.

*[கந்தம் + பார்.]*

*[கல் → கண் = வெளிவரல், பிறத்தல், நீக்குதல். கன் → கந்து → கந்தம்.]*

**கந்தப்பொடி** *kanda-p-poḍi,* பெ.(n.) மணப்பொடி; fragrant; scented powder. *"சந்தடி சாக்கிலே கந்தப்பொடி காற்பணம்" (பழ.).*

*[காந்து = பரவு. காந்து → கந்து → கந்தம் + பொடி.]*

**கந்தப்பொடிக்கோலம்** *kanda-p-poḍi-k-kōlam,* பெ.(n.) மணப்பொடி தூவிச் செல்லும் திருமண ஊர்வலம் (இ.வ.); marriage procession in which scented powder is freely strewn over each other among the processionists.

*[கந்தம் + பொடி + கோலம். ஊர்வலம் → ஊர்கோலம் (கொ.வ.).]*

**கந்தப்பொடித்திருவிழா** *kanda-p-poḍi-t-tiruviḻā,* பெ.(n.) இறைத்திருமேனி மீதும் அதை வணங்கு பவர்கள் மீதும் நறுமணப்பொடி தூவும் ஒரு திருவிழா (இ.வ.); festival, a prominent feature of which is the strewing of sweet-scented powder upon the idol, as well as on the worshippers.

*[காந்துதல் = பரவுதல். காந்து → கந்து → கந்தம் + பொடி + திருவிழா]*

**கந்தப்பொடியுற்சவம்** *kanda-p-poḍi-y-uṟcavam,* பெ.(n.) ***கந்தப்பொடித்திருவிழா*** பார்க்க; see *kanda-p-poḍi-t-tiruviḻā.*

*[கந்தம் + பொடி + வ. உற்சவம்.]*

**கந்தபத்தம்** *kanda-pattam,* பெ.(n.) புனுகு சம்பா நெல் (இ.வ.); a superior kind of paddy having a fragrant smell.

*[கந்தம் + பதம் – கந்தபதம் → கந்தபத்தம். (கந்தம் = நறுமணம். பதம் = நெல்.).]*

**கந்தபரணி** *kanda-paraṇi,* பெ.(n.) ஏழிலைப் பாலை; seven-leaved form tree (சா.அக.).

*[கந்தம் + பரணி + (இலை).]*

**கந்தபாகம்** *kanda-pāgam,* பெ.(n.) எண்ணெய்க்கு நறுமணமூட்டும் முறை; the process of subjecting an oil to a further process of rendering it more fragrant (சா.அக.).

*[கந்தம் + பாகம்.]*

**கந்தபாடாணம்** *kanda-pāḍāṇam,* பெ.(n.)1. கந்தகம்; ordinary sulphur. 2. கந்தக[illegible] சார்ந்த செய்நஞ்சு; any poisonous compound of sulphur (சா.அக.).

*[கந்தகம் + பாடாணம். **Skt.** pāsāṇa. > த. பாடாணம்.]*

**கந்தபுராணம்** *kanda-purāṇam,* பெ.(n.) கச்சியப்ப சிவாசாரியாரியார் வடமொழி கந்தபுராணத்தில் சிவ ரகசிய காண்டத்து முதலாறு காண்டங்களைத் தமிழில் பாடிய, முருகக்கடவுளின் திருவையும் புகழையும் ஆற்றலையும் போற்றும் பெருநூல்; name of the Tamil poetic version by Kacciyappa šivacariyār of the first six Kandas of the šiva-rahasya Khanda of the Kanda purana relating the story of kanda.

*[கந்து = பற்றுக்கோடு. கந்து→கந்தன் கந்தன் + வ. புராண > த. புராணம்.]*

**கந்தம்**[1] *kandam,* பெ.(n.) 1. மணம்; scent, odour, fragrance. *"கந்தமா மலர்" (திவ். பெரியதி 3,5,6).* 2. இலவங்கம், ஏலம், கருப்பூரம், சாதிக்காய், தக்கோலம் முதலியவற்றாலான முகமணப்பொருள் (பிங்.); perfumery, spices, of which five are mentioned, viz., clove, cardamom, camphor, nutmeg, cubeb. 3. வசம்பு (மலை.); sweet flag. 4. வெள்ளைப் பூண்டு (மலை.); garlic. 5. நறுமணவேர்; fragrant root.

த.கந்தம்; **Skt.** gandha.

*[காந்து → கந்து → கந்தம்.]*

**கந்தம்**[2] *kandam,* பெ.(n.) அன்பு (அரு.நி.); love.

*[காந்து = மணம் வீசுதல், உணர்ச்சி வெளிப்பாடு. காந்து → கந்தம்.]*

**கந்தம்**[3] *kandam,* பெ.(n.) 1. கிழங்கு (திவா.); esculent root. *"கந்தமும் பிறவு மாக விலை பொலி கலத்தி லிட்டு" (கந்தபு. வள்ளி. 208).* 2. கருணைக் கிழங்கு (திவா.); a tuberous rooted herb. 3. வெள்ளைப் பூண்டு (பாலவா. 379); garlic.

*[கள் = திரட்சி. கள் → கந்து → கந்தம்.]*

**கந்தம்**[4] *kandam,* பெ.(n.) 1. சந்தனமரம் (வின்.); sandal wood. 2. சந்தனக்குழம்பு; sandal-wood paste.

ம. கந்தம்; **க.** கந்த; **தெ.** கந்தமு; **பிரா.** கந்த; **நேபா., இந்.** கந்த.

*[காந்து → கந்து → கந்தம். காந்து = பரவு, மணம் பரவு.]*

**கந்தம்**[5] *kandam,* பெ.(n.) 1. தொகுதி; aggregate. 2. கூட்டம்; crowd. *"கந்தமொடுயிர் படுகண பங்கம் மெண" (கந்தபு. கடவுள்வா. 23).* 3. ஐந்து வகைக் கட்டு (பஞ்சகந்தம்); the five constituent elements of being. *"ஐந்துவகைக் கந்தத் தமைதி யாகி" (மணிமே. 30, 33).* 4. அணுத்திரள்; collection of atoms or minute particles. 5. மஞ்சு (மேகம்); cloud. 6. வீக்கம்; swelling.

*[கள் = திரட்சி. கள் → கந்து → கந்தம்.]*

**கந்தம்**[6] *kandam,* பெ.(n.) 1. பங்கு; part, portion. 2. வகுத்தல் (சூடா.); division. 3. ஐம்புலன்கள் (அக.நி.); organ of sense.

*[கந்து = பற்று, பற்றுக்கோடு.]*

**கந்தம்**[7] *kandam,* பெ.(n.) 1. தூண்; pillar "கலிகெழு கடவுள் கந்தங் கைவிட" (புறநா.52). 2. உடம்பு; body. 3. கழுத்தடி (அக.நி.); nape of neck. *"அவளைக் கந்த மேற்கொடு நன்றெனப் போய களிறு" (கந்தபு. விடைபெறு.9).* 4. முருங்கை; moringa tree. 5. கற்றாழை; aloe.

*[கந்து → கந்தம் → கந்து = பற்றுக்கோடு, தூண்.]*

**கந்தம்**[8] *kandam,* பெ.(n.) 1. வெடியுப்பிற்குப் பயன் படும் கனிமம் (கந்தகம்); sulphur. 2. வெள்ளைப் போளம்; white myrrh. 3. ஒருவகைச் செய்நஞ்சு; a kind of mineral poison. 4. இதள் (பாதரசம்); mercury. கந்தங் கஃசிட்டு (தைலவ.தைல. 70).

*[கந்தகம் → கந்தம். காந்து → காந்தகம் → கந்தகம் காந்துதல் = எரிதல்.]*

**கந்தம்**[9] *kandam,* பெ.(n.) விலங்குகளின் கரு; the foetus of beasts.

**ம., க.** கந்து; **து.** கஞ்சி; **குரு.** கத்த், கதா.

*[கல் → கன் (பிறத்தல், தோன்றுதல்) → கந்து → கந்தம்.]*

**கந்தம்**[10] *kandam,* பெ.(n.) 1. பெண்ணின் பிறப்புறுப்பு; vagina. 2. பிறப்புறுப்புப் பகுதியில் வளரும் மயிர்; pubic hair.

**ம.** கந்து; **துட.** கொத்.

**Skt.** kanda (clitoris); **Nep.** kanda (the belt which supports the loin cloth)

*[கல் → கன் → கந்து → கந்தம்.]*

**கந்தம்மை** *kandammai,* பெ.(n.) பெண்குழந்தை; female child. அந்தக் கந்தம்மாவை என்னிடம் கொடு (உ.வ.).

**க.** கந்தம்ம

*[கந்தன் (ஆ.பா.) → கந்தம்மை (பெ.பா.)]*

**கந்தமூலபலம்** *kanda-mūla-palam,* பெ.(n.) மணமுடைய இலை, கிழங்கு, வேர், கனிகள்; leaves, esculent roots and fruits, which are the foods of sages.

*[கந்தம் + மூலம் + பலம். கந்தம் = வேர். மூலம் = அடிப்படை. பலம் = பயன்.]*

**கந்தமூலம்** *kanda-mūlam,* பெ.(n.) கிழங்கு; root.

*[கந்தம் + மூலம். கந்து → கந்தம்.]*

**கந்தர்** *kandar,* பெ.(n.) ***கந்தன்*** பார்க்க; see *kandaṉ* *"கந்தர் கலிவெண்பா".*

*[கந்து + அன் – கந்தன் → கந்தர். ஆர் – அர், மதிப்புரவு குறித்த உயர்வுப் பன்மையீறு.]*

**கந்தர்ப்பநகரம்** *kandarppa-nagaram,* பெ.(n.) ***கந்தருவநகரம்*** பார்க்க; see *kandaruva nagaram.* *"கந்தர்ப்ப நகர மெங்கணுந் தெரியும்" (கம்பரா. காட்சி. 45).*

*[கந்தருவர் → கந்தர்ப்பர் + நகரம்.]*

**கந்தர்ப்பமகளிர்** *kandarppa-magaḷir,* பெ.(n.) கந்தருவ மகளிர்; celestial woman. *"கந்தர்ப்ப மகளி ராடும்" (கம்பரா. ஊர்தேடு. 104).*

*[கந்தருவர் →கந்தர்ப்பர் + மகளிர்.]*

**கந்தர்ப்பர்** *kandarppar,* பெ.(n.) ***கந்தருவர்*** பார்க்க; see *kandaruvar. "கந்தர்ப்ப ரியக்கர் சித்தர்" (கம்பரா. இராவணன் கோ. 38).*

*[கந்தருவர் → கந்தர்ப்பர்.]*

**கந்தர்ப்பன்** *kandarppaṉ,* பெ.(n.) காமன், மன்மதன் (திவா.); appellation for Manmatan, the god of love.

*[கந்து →கந்தம் →கந்தர்ப்பன். கந்தம் = அன்பு, அன்பால் பிணைப்பவன்.]*

**கந்தர்பச்சை** *kandar-paccai,* பெ.(n.) பச்சைக் கருப் பூரம்; crude camphor (சா.அக.).

*[கந்தர் + பச்சை. கந்தம் → கந்தர்.]*

**கந்தரகோளம்** *kandara-kōḷam,* பெ.(n.) ***கந்தல் கூளம்*** பார்க்க; (உ.வ.); *kandal-kūḷam.*

தெ. கத்ரகோளமு

*[கந்தல் + கூளம் – கந்தல்கூளம் → கந்தரகோளம்.]*

**கந்தரந்தாதி** *kandar-andādi,* பெ.(n.) அருணகிரி நாதர் முருகக்கடவுள்மேல் இயற்றிய 100 பாடல்களைக் கொண்ட ஈறு தொடங்கி (அந்தாதி) நூல்; a poem of 100 stanzas of andadi type in praise of kanda by Aruṇakiri-nādar.

*[கந்தர் + அந்தாதி.]*

**கந்தரம்**[1] *kandaram,* பெ.(n.) 1. புனமுருங்கை (மலை.); three-leaved Indigo. 2. கடற்பாசி; sponge.

*[கந்து → கந்தரம்.]*

**கந்தரம்**[2] *kandaram,* பெ.(n.) 1. கனிம நஞ்சுகளுள் ஒன்று; a mineral poison. 2. தீமுறுகற் செய்நஞ்சு; a prepared arsenic.

*[கந்தகம் → கந்தம் + கந்தரம்.]*

**கந்தரம்**[3] *kandaram,* பெ.(n.) 1. கழுத்து; neck. *"பிருகுடி நாப்பண்ணொரு பெருங்கந்தரம்" (ஞானா. 9.10).* 2. காலிலோடும் நரம்புக் கால்வாய்கள்; nerve tracks of the leg (சா.அக.).

*[கந்து → கந்தம் → கந்தரம். கந்து = தூண்.]*

**கந்தரம்**[4] *kandaram,* பெ.(n.) 1. முகில்; cloud *"நந்தனங் கந்தரஞ்சேர் புலியூரனை" (புலியூ. 8).* 2. மலைக்குகை; mountain cave. *"கந்தரத் தினிலிருள்" (சிவப். பிரபஞ். சோனகை. 15).*

*[கந்து → கந்தம் → கந்தரம்.]*

**கந்தரம்**[5] *kandaram,* பெ.(n.) அழகு (அரு.நி.); beauty.

*[காந்து = ஒளிவீச்சு, அழகு. காந்து → காந்தரம் → கந்தரம்.]*

**கந்தரமுட்டி** *kandara-muṭṭi,* பெ.(n.) நேரே அம்பெய்தற்கு விற்பிடிக்கை (சீவக. 1680 உரை.); method of holding the bow for shooting in such a way as to bring the right hand very near to one's neck.

*[கழுந்து → கந்து + (ஆர) அர + முட்டி.]*

**கந்தரலங்காரம்** *kandar-alaṅgāram,* பெ.(n.) அருணகிரிநாதர் இயற்றிய நூல்களுள் ஒன்று; a poem of 100 stanzas on Skanda by Aruna-giri-nādar.

*[கந்தர் + அலங்காரம்.]*

**கந்தருப்பன்** *kandaruppaṉ,* பெ.(n.) காமன்; the god of love (சா.அக.).

*[கந்தரம் = அழகு. கந்தரப்பன் → கந்தருப்பன்.]*

**கந்தருவநகரம்** *kandaruva-nagaram,* பெ.(n.) வானத்தில் தோன்றிமறையும் மேகவடிவாய்க் கருதப்பட்ட நகரம்; clouds, sometimes imagined to be the city of the Gandarvās in the sky. *"இவ்வுலகங் கந்தருவ நகரமும் புன்கனவும் போலாம்" (பிரபோத. 43, 5.).*

*[கந்தருவர் + நகரம்.]*

**கந்தருவநூல்** *kandaruva-nūl,* பெ.(n.) இசைநூல்; science of music. *"கந்தருவ நூலின்கண்ணும் ஒரு சீரிற் சுருங்கின வாரா" (தொல். பொருள். 457, உரை.).*

*[கந்தருவம் + நூல்.]*

**கந்தருவம்**[1] *kandaruvam,* பெ.(n.) 1. யாழ்; harp. 2. குயில்; cuckoo bird. ***கந்துருவம்*** பார்க்க; see *kanduruvam.*

*[கந்துருவம் → கந்தருவம்.]*

**கந்தருவம்**[2] *kandaruvam,* பெ.(n.) 1. கந்தருவ இனம்; the Gandarvas. *"கந்தருவ மற்றுள்ள பிற பயந்தாள்." (கம்பரா. சடாயுகாண்.26).*

*[கந்துரு → கந்துருவம் → கந்தருவம்.]*

**கந்தருவம்**[3] *kandaruvam,* பெ.(n.) குதிரை (திவா.); horse. 2.இரவு பதினைந்து முழுத்தங்களுள் ஐந்தாவது (விதான. குணாகண. 73, உரை); the fifth of the 15 divisions of the night.

*[கந்து → கந்தருவம்.]*

**கந்தருவம்**[4] *kandaruvam,* பெ.(n.) காலைப் பொழுது; morning.

*[கந்தரு → கந்தருவம் → கந்தருவம். கந்தரு → யாழ். இரவு முடிந்த வைகறைப் பொழுது இனிய பண்களுக்குரிய காலமாதலின் இப் பெயர் பெற்றிருக்கலாம்.]*

**கந்தருவம்**[5] *kandaruvam,* பெ.(n.) 1. இசை; music, harmony, song. *"சாமவேத கந்தருவம் விரும்புமே"*

*(தேவா. 964.1).* 2. ***கந்தருவ மணம்*** (தொல். பொருள். 92. உரை) பார்க்க; see *kandaruva-maṇam.*

*[கந்துரு → கந்துருவம் → கந்தருவம்.]*

**கந்தருவமணம்** *kandaruva-maṇam,* பெ.(n.) தலைவனுந் தலைவியுந் தாமே எதிர்ப்பட்டுக் கூடுங் கூட்டம்; a form of marriage which proceeds entirely from mutual love and which has no ritual whatever, as common among Gandarvās.

*[கந்தருவம் + மணம்.]*

**கந்தருவர்** *kandaruvar,* பெ.(n.) பதினெண்கணத்துள் ஒரு தொகுதியார் (திவா.); Gandharvas, a celestial group of singers, one of patinen-kanam. *"வாவுகிந்நரருவணர் கந்தருவர்" (கந்தபு. திருநகர - 34.).* ***கந்தருவம்*** பார்க்க; see *Kandaruvam.*

*[கந்தருவம் → கந்தருவர். ]*

**கந்தருவவேதம்** *kandaruva-vēdam,* பெ.(n.) இசைநூல்; science of music.

*[கந்தருவம் + வேதம்.* **Skt** - veda = **த.** வேதம்.*]*

**கந்தருவன்** *kandaruvaṉ,* பெ.(n.) குயில்; the Indian cuckoo (சா.அக.).

*[கந்தருவம் → கந்தருவன்=இசைக்குரலோசையுடையது.]*

**கந்தல்**[1] *kandal,* பெ.(n.) 1. துண்டுதுண்டாக இருப்பது, கந்தை; rags, tatters. 2. ஒழுக்கக்கேடு. (திவா.); loss of moral character. *"நந்தனங் கந்தலென்பார்" (புலியூரந்.8).* 3. அறியாமையால் விளையும் குற்றம்; fault, blemish due to ignorance. *"கந்தல் கழிந்தால்". (ஸ்ரீவசன. 239).*

**து.** கப்பட, கப்படி, கப்படெ.

*[கிழி → கிழிந்தல் → கிந்தல் → கந்தல்.]*

**கந்தல்**[2] *kandal,* பெ.(n.) மண்ணாற் செய்த சிறு வட்டில்; a small earthern vessel.

**மறுவ.** கன்னல்

**க.** கந்தல்

*[குல் → கல் (தோண்டுதல், பள்ளம்) → கன் → கன்னல் → கந்தல் (உட்குழிந்த ஏனம்).]*

**கந்தல்**[3] *kandal,* பெ.(n.) 1. முளை; a sprout. 2. மென்மை; softness.

**க.** கந்தல்

*[கன் (ஈனுதல், பிறத்தல்) → கந்து → கந்தல்.]*

**கந்தல்**[4] *kandal,* பெ.(n.) தீ எரியும்போது பறக்கும் தூசி; (ம.அக.); dust from the burning fire.

*[காந்து → காந்தல் → கந்தல்.]*

**கந்தல்கூளம்** *kandalkuḷam,* பெ.(n.) தாறுமாறு; confusion; disdrder.

*[கந்தல்+ கூளம்.]*

**கந்தலம்**[1] *kandalam,* பெ.(n.) 1. இனிய ஓசை; melodious sound. 2. இன்னிசை; music.

**க.** கந்தல்

*[கந்தல்[3] → கந்தலம் (மெல்லோசை, மெல்லிசை).]*

கன் →கந்து →கந்தல் = பயிர்களின் மெல்லிய முளை. கந்தலம் = மெல்லிய முளையைக் குறித்த சொல், மெல்லிய இனிய ஓசையையும் குறிப்பதாயிற்று. இச்சொல்லே கந்தரம், கந்தருவம் எனத் திரிந்து இன்னிசை எழுப்பும் யாழைக்குறித்தது. கந்தருவவித்தை என்பதும் இசைக்கலையைக் குறித்தது.

**கந்தலம்**[2] *kandalam,* பெ.(n.) 1. கதிர்; rays. 2. மூளை; brain.

*[கதிர்தலம் → கந்தலம்.]*

**கந்தவகம்** *kandavagam,* பெ.(n.) 1. மோப்பம்; smelling scent. 2. மூக்கு (வின்.); nose. 3. காற்று; air (சா.அக.).

*[கந்தம் = சந்தனம், நறுமணம். கந்தம் → கந்தவகம் → மணம் பரவுதல், மணத்தை உணரும் மூக்கு; மணம் பரவும் காற்று.]*

**கந்தவடி** *kanda-vaḍi,* பெ.(n.) நறுமண எண்ணெய், (யாழ். அக.); fragrant oil.

*[கந்தம் + வடி (நறுமணம் கூட்டி வடித்தது).]*

**கந்தவனப்பொய்கை** *kanthavaṉappoygai,* பெ.(n.) இராமநாதபுரம் மாவட்டத்துச் சிற்றூர்;a village in Ramanathapuram district.

*[கந்தன் + வனம் + பொய்கை–கந்தவனப்பொய்கை.]*

**கந்தவிண்ணனார்** *kanda-viṉṉaṉār,* பெ.(n.) வாணகோவரையர் மருமக்களுள் ஒருவர்; one of the son-in-laws of vānakōvaraiar. *"வாணகோ அரைசரு*

*மருமக்கள் கந்தவிண்ணனார் மேல்மருத்திச் சென்ற ஞான்று" (தநா.தொ. 1971/63. கிபி ஏழாம் நூற்றாண்டு; முதலாம் மகேந்திர வருமனின் 33 ஆம் ஆண்டு செங்கம் நடுகற்கள்.).*

*[கந்தன் + விண்ணன் + ஆர். 'ஆர்' உயர்வுப் பன்மையீறு.]*

**கந்தவுத்தி** *kanda-v-utti,* பெ.(n.) நறுமணப்பொருள்; perfumes, spices. *"கந்த வுத்தியி னாற்செறித்தரைப் போர்" (மணிமே.28:15).*

*[கந்தம் + உத்தி.]*

**கந்தவெற்பு** *kanda-verpu,* பெ.(n.) முருகப்பெருமான் எழுந்தருளியிருந்த மலை (கந்தபு.); a hill abode of lord Muruga.

*[கந்தன் + வெற்பு.]*

**கந்தழி** *kandali,* பெ.(n.) 1. பரம்பொருள்; Supreme Being, Divine Essence. *"கொடிநிலை கந்தழி வள்ளி யென்ற...... மூன்றும்" (தொல். பொருள். 88).* 2. கண்ணன் வாணனது சோ நகரத்தை அழித் ததைக் கூறும் புறத்துறை (பு.வெ. 9,40); (Purap.) theme of celebrating the destruction of Bāṇa's fortress by Krisna. 3. முடிவில்லாதது; infinite.

*[கந்து → பற்றுக்கோடு, கந்தழி = பற்றுக் கோடில்லாதது கண்ணபிரான் வாணனுடைய 'சோ' என்னும் மதிலை (கந்தை) அழித்த வீரத்தைக் கந்தழி என்ற சொல்லால் குறிப்பிடுவதுண்டு.]*

**கந்தளம்**[1] *kandalam,* பெ.(n.) மெய்க்காப்பு உடை (கவசம்); armour for the body, coat of mail.

தெ. கத்தளமு

*[கந்து → கந்தளம். கந்து = பற்றுக்கோடு, காப்பு. கந்திளம் + திறலர் + கந்தளந்திறலர் → கந்தளேந்திறலர்.]*

**கந்தளம்**[2] *kandalam,* பெ.(n.) பொன்; gold.

*[காந்து → கந்து → கந்தளம். காந்து = ஒளிர்தல்.]*

**கந்தளம்**[3] *kandalam,* பெ.(n.) போர்; battle.

*[காந்து = சினத்தல். காந்து → கந்து → கந்தளம்.]*

**கந்தளம்**[4] *kandalam,* பெ.(n.) கதுப்பு (கன்னம்); check.

*[கன் → கந்து = பற்றி இருத்தல். கந்து → கந்தளம்.]*

**கந்தளம்**[5] *kandalam,* பெ.(n.) தளிர்; shot, sprout.

*[கன் → கந்து → கந்தனம்.]*

**கந்தறுத்தல்** *kandaruttal,* தொ.பெ.(vol.ii.) பேரழிவை யேற்படுத்தல் (ம.அக.); ruin.

*[கந்து = பற்றுக்கோடு. கந்து + அறுத்தல்.]*

**கந்தன்**[1] *kandan,* பெ.(n.) குழந்தை; child. அது ஒரு மாசத்துப் பச்சைக்கந்தன், மெதுவாக எடு (உ.வ.).

**மறுவ.** மகவு, மழவு, குழந்தை, பிள்ளை, முன்னி, பசலை, முளகு.

**ம.** கந்த; **க.** கந்த; **தெ.** கந்து, கந்துவு; **குரு.** கத்த்; **மால்.** கதே.

*[குல் → கல் → கன் (ஈனுதல்) → கந்தன் (ஈன்றெடுத்த குழந்தை).]*

**கந்தன் என்பது குழந்தையைக் குறித்த பழந்தமிழ்ச் சொல், வடதிரவிட மொழிகளிலும் பரவிய தொன்மையுடையது. குழந்தைப் பொருள் சுட்டிய சொல்லே முருகனையும் குறித்த 'கந்தன்' எனப் பொருள்பட்டு விரிவு பெற்றது.**

**கந்தன்**[2] *kandan,* பெ.(n.) 1. சிவபெருமானின் இளைய மகன் (முருகன்); Skanda, the youngest son of siva. *"கந்தனே நமது மாதைக் கவர்ந்தனன்".* (கந்தபு.வள். 1.194). 2. பற்றுக்கோடானவன்; sole supporter.

*[கந்து + அன் - கந்தன் = பற்றுக்கோடானவன், பாதுகாப்பு அளிப்பவன்.]*

**த.** கந்தன் > **Skt.** Skanda.

**முருகனுருவம் பொறித்த தூண்களை அம்பலங்களில் நிறுத்தியதால் அவனுக்குக் கந்தன் என்னும் பெயரும் தோன்றியது என்பர். கந்து = தூண். கந்தம் = தூணம் [பெருந்தூண்.]**

*"கலிகெழு கடவுள் கந்தங் கைவிடப்*
*பலிகண் மாறிய பாழ்படு பொதியில்"* (புறம். 52)

***கற்றூண்களில் தெய்வ உருவம் பொறிப்பதை, "கந்திற்பாவை" என்னும் மணிமேகலைச் சொல் லாலும் [21] அறியலாம் [த.ம. 30].***

**கந்தன்**[3] *kandan,* பெ.(n.) ஐம்பொறிகளை வெற்றி கண்டவர்; அருகன்; Arhat, who has conquered the sense. *"கந்தனி பள்ளிக் கடவுளர்க் கெல்லாம்" (சிலப். 11,5).*

*[கந்தன் → கந்தன்[2]. தமிழ்க்கடவுளைக் காத்தற் கடவுளாகக் கருதியதால் அருக சமயத்திற்கு மதம் மாறிய காலத்தில் அருகனையும் இப் பெயரிட்டே அழைத்தனர்.]*

**கந்தன் அறுமி** *kadaṉ-aṟumi,* பெ.(n.) முருகக்கடவுள் சூரபதுமனை வென்றதைக் குறித்து, துலைமாதத்து வளர்பிறையில் ஆறாம் நாள் நடத்தப்படும் திருநாள்; Kandar sasti, a festival ending on the sixth day of the bright fortnight in the month of Aippaši, which is held in commemotration of skanda's victory over the ašurašurapatumaṉ.

*[கந்தன் + அறுமி – கந்தன் அறுமி. அறுமி = ஆறாம் நாள். வடமொழியாளர் இதன் skanda sasti என்பர்.]*

**கந்தன்சிறுகரண்டி** *kandaṉ-šiṟu-karaṇḍi,* பெ.(n.) முட்டைக் கரண்டி; an oval-shaped spoon (சா.அக.).

*[கந்தன் + சிறுகரண்டி. கந்தன் = குழந்தை.]*

**கந்தன்பாட்டு** *kandaṉ-paṭṭu,* பெ.(n.) ஒருவகை வரிக்கூத்து (சிலப். 3:13,உரை); a kind of masquer-ade dance.

*[கந்தன் + பாட்டு. கந்தன் = முருகன்.]*

**கந்தனுப்பு** *kandaṉuppu,* பெ.(n.) ***கந்தகவுப்பு*** பார்க்க; see *kandaka-v-uppu.*

*[கந்தகவுப்பு → கந்தனுப்பு.]*

**கந்தாசாரம்** *kandā-šāram,* பெ.(n.) காற்பாகம் மேல்வாரத்தாருக்கும் முக்காற்பாகம் குடிகட்குமாக ஒழுங்கு செய்து இருவரும் சமபாகமாக வரி செலுத்தும்படி விடும் குத்தகை (G.sm.D.i, 242); lease in which the lessor receives one-fourth, and the lessee three-fourths, of the produce, each party paying half the kist.

**ம.** கந்தாசாரம்.

*[கந்தாயம் + ஆசாரம் – கந்தாயாசாரம் → கந்தாசாரம். கந்தாயம் = நிலவரி. **வ.** ஆசாரம் = ஒழுங்குமுறை.]*

**கந்தாட்டத்தலை** *kandāṭṭat-talai,* பெ.(n.) முன்னும் பின்னும் மாறிமாறிப் பார்க்கும் தலை நளிநயம் (பரத. பாவ. 76); (Natya) a gesture in dancing consisting in turning the head alternately, so as to be able to see forward and backward.

*[கந்து + ஆட்டம் + தலை. இதனைக் கந்தான சிரம் என்பர். கந்து + (ஆலை) ஆனை + சிரம். கந்து = பந்து. ஆலை = சுற்றுதல், வீசுதல்.]*

முன்னும் பின்னும் பந்து வீசுதல் போல் தலையை முன்னும் பின்னும் ஆட்டுதல்.

**கந்தாடை** *kandadai,* பெ.(n.) ஒரு பார்ப்பனக் குடி; name of a family of Brahamins. *"வாதூல கோத்திரத்து .... கந்தாடை வாசுதேவச் சதுர்வேதி" (S.I.I. ii. 526).*

*[கந்தாடி → கந்தாடை (ஒருகா. இடப்பெயரால் அமைந்த குடிப்பெயராகலாம்.)]*

**கந்தாதி இளகியம்** *kandādi-iḷakiyam,* பெ.(n.) திப்பிலிமூலம், பேரரத்தை, சித்திரமூலம், சுக்கு, சிறுதேக்கு ஆகிய சரக்குகளை முதன்மையாகக் கொண்டு மற்றச் சரக்குகளையும் சேர்த்துச் செய்யுமோர் வகை இளகியம்; a kind of electuary prepared with the root of piper longum, greater galamgal, leadwort, dried ginger and fire brand teak as chief ingridients although mixed with other bazaar a rungs.

*[கந்து + ஆதி + இளகியம். கந்தம் + ஆதி + இளகியம். கந்தம் = கிழங்கு.]*

**கந்தாயம்** *kandāyam,* பெ.(n.) 1. ஆண்டில் மூன்றிலொரு பாகம்; astrological period for four months. 2. தவணை; instalment. 'இப்பொன் பத்தும் மூன்று கந்தாயமாகத் தரக்கடவராகவும்' (S.I.I.i.104) 3. தவணைப்படி செலுத்தும் வரி (C.G.); assessment, kist paid in cash in a lump sum or by instalments. 4. வருவாய்த் துறையின் வருமானம் (C.G.) ; revenue income from lands either in kind or in money. 5. அறுவடைக்காலம் (வின்.); harvest season. புரட்டாசி முப்பதும் ஒரு கந்தாயம் (பழ.).

**ம.** கந்தாயம்; **க., து.** கந்தாய; **தெ.** கந்தாயமு; **பட.** கந்திய; **Skt.** kandāya.

*[கந்து = துண்டு, பகுதி, தவணை. ஆயம் = வரி. கந்து + ஆயம் – கந்தாயம் = தவணை முறையில் வாங்கப்படும் வரி.]*

**கந்தார்த்தம்** *kandārttam,* பெ.(n.) ஓர் இசைப்பாட்டு; a kind of poem set to music.

*[கந்தருவம் → கந்தருத்தம் → கந்தார்த்தம் (கொ.வ.)]*

**கந்தாரம்**[1] *kandāram,* பெ.(n.) மது; a kind of intoxi-cating liquor. *"தெளிப்ப விளைந்த தீங்கந் தாரம்". "கந்தார வீணைக்களி" (இராமா. கடறா. 75) (த.மொ.அக.).*

*[காந்தாரம் → கந்தாரம். காந்து = எரிதல்.]*

**கந்தாரம்**[2] *kandāram,* பெ.(n.) ஒரு பண்; a musical mode. *"கந்தாரஞ் செய்து களிவண்டு முரன்று பாட"* (சீவன. 1959).

*[கந்து → கந்தாலி. கந்து + ஆரம் – கந்தாரம். கந்து = நறுமணம், இனிமை. ஆர்தல் = நிறைதல். கந்தாரம் = செவிக்கினிமை நிறைவிக்கும் பண். இப் பண் காந்தாரம் எனத் திரிந்தது.]*

**கந்தாலி** *kantāli,* பெ.(n.) கச்சோலம் (நாமதீப.); long zedoary.

*[கந்து → கந்தாலி.]*

**கந்தானசிரம்** *kandāṉaśiram,* பெ.(n.) ***கந்தாட்டத் தலை*** பார்க்க; see *kandātta-t-talai.*

*[கந்து + ஆனை + சிரம்.]*

**கந்தி**[1]**–த்தல்** *kandi-,* 4 செ.கு.வி.(v.i.) மணத்தல்; to waft fragrant smell. *"தாதகித்தார் கந்தித்த மார்பன்" (குலோத். கோ. 291).*

*[காந்து → கந்து → கந்தி.]*

**கந்தி**[2] *kandi,* பெ.(n.) 1. நறுமணப்பொருள்; spices, a romatics. "குங்கும மேனைபகந்திகள் கூட்டி" (கந்தபு. அவைபுகு. 31); 2. கமுகு; areca palm. *"கந்திகள் ... பாளை விரித்து" (கந்தபு. யுத்தமுதனாட். 38).*

**க.** கந்து; **தெ.** கந்தி; **பர்.** கெர்தி.

*[காந்து → கந்து → கந்தி.]*

**கந்தி**[3] *kandi,* பெ.(n.) சமணப் பெண்துறவி, (ஆரியாங் கனை); female ascetic among the Jains. *"கறந்த பா லனைய கந்தி" (சீவக. 2649).*

**க.** கந்தி

*[கந்தி = பற்றுக்கோடானவள்.]*

**கந்தி**[4] *kandi,* பெ.(n.) 1. கந்தகம் (மூ.அக.); sulphur. 2. முப்பத்திரண்டு செய்நஞ்சுகளுள் ஒன்றான செய் நஞ்சு (கந்தக பாடாணம்) (மூ.அக.); a mineral poison, one of 32).

*[கந்தகம் → கந்தி.]*

**கந்தி**[5] *kandi,* பெ.(n.) துவரை (இராசவைத்.); dhal.

**தெ.** கந்து, கந்தி.

*[கருந்தொலி → கருந்து → கந்து → கந்தி.]*

**கந்தி**[6] *kandi,* பெ.(n.) பச்சைக்கல் (மரகதம்) (சங். அக.); emerald.

*[காந்து → காந்தி → கந்தி. காந்து = ஒளிர்தல்.]*

**கந்தி**[7] *kandi,* பெ.(n.) பெருங்காயம் (நாமதீப.); asofoetida.

*[காந்து → கந்து → கந்தி. காந்து = மணம்.]*

**கந்திக்காய்** *kandi-k-kāy,* பெ.(n.) பாக்கு; areca nut.

*[கந்தி + காய். துவரை போன்ற நிறமுடையது.]*

**கந்திக்கிழங்கு** *kandi-k-kiḻaṅgu,* பெ.(n.) 1. கிட்டிக் கிழங்கு; root of acalycha. 2. நறுமணக் கிழங்கு; a fragrant bulbous root (சா.அக.).

*[காந்து → கந்து + கிழங்கு – கந்திக்கிழங்கு.]*

**கந்திகை** *kandigai,* பெ.(n.) சிறுதேக்கு; beetle-killer. *"புழுப்பகை கந்திகை" (தைல. தைலவ. 66).*

*[கந்தம் → கந்திகை. கந்தம் = கிழங்கு.]*

**கந்தியுப்பு** *kandi-y-uppu,* பெ.(n.) ***கந்தகவுப்பு*** பார்க்க; (பதார்த்த. 1100.); see *kandaga-v-uppu.*

*[கந்தி + உப்பு.]*

**கந்திருவர்** *kandiruvar,* பெ.(n.) ***கந்தருவர்*** பார்க்க; see *kandaruvar. "கந்திருவ ரங்காரித் தின்னிசை பாட" (அஷ்டப். திருவரங்கத்தந்.1).*

*[கந்தருவர் → கந்திருவர் (கொ.வ.).]*

**கந்திலம்** *kandilam,* பெ.(n.) 1. முருங்கை வகை (சங்.அக.); a kind of horse - radish tree. 2. தூது வளை; three-lobed night shade (சா.அக.).

*[கந்து → கந்திலம்]*

**கந்திலி** *kandili,* பெ.(n.) வேலூர் மாவட்டம் திருப்பத்தூர் வட்டத்துச் சிற்றூர்; a village in Tirupattur taluk in Vellur dt.

*[கந்து + இலி –கந்திலி. கந்தழி என்பது போன்று கந்தலி கடவுளைக் குறித்த பெயர்.]*

**கந்திற்பாவை** *kandiṟ-pāvai,* பெ.(n.) புகார், காஞ்சி ஆகிய நகரங்களிலே கம்பங்களில் புடைப்புச் சிறப்பு வடிவாயமைந்த பெண்தெய்வம். (மணிமே. 28: 185); a female deity whose figure was carved in the columns in the ancient cities of Kaviri-p-pum-pattiṉam and Kanugipuram.

*[கந்து + இல் + பாவை. கந்து → தூண். தூணில் அமைந்ததால் இப் பாவை இவ்வாறு பெயர் பெற்றது.]*

**கந்து–தல்** *kandu-,* 10 செ.கு.வி.(v.i.) 1. கெடுதல். (வின்.); to be injured, spoiled, ruined. 2. நாணுதல். (இ.வ.); to fell shy.

*[குன்று → குந்து → கந்து.]*

**கந்து**[1] *kandu,* பெ.(n.) மாடுபிணைக்குந் தும்பு. (யாழ்ப்.); rope for tying oxen together by the neck.

*[கும் → கம் → கந்து (வடமொ.வர.73).]*

**கந்து**[2] *kandu,* பெ.(n.) 1. நெற்களத்தைச் சுற்றி வைக்கப்படும் வைக்கோல் வரம்பு; heap of straw enclosing the threshing floor. 2. நெற்களத்திற் பொலிப்புறத்தடையும் பதர்; heap of chaff which gathers outside the threshing floor. 3. அறுகு; harialli grass.

*[கொங்கு → கங்கு → கந்து (பதர், கூளம்).]*

**கந்து**[3] *kandu,* பெ.(n.) 1. திரண்ட தூண்; post, pillar. *"கந்துமா மணித்திறள் கடைந்து" (சீவக. 155).* 2. யானைகட்டுந் தறி.; post to tie an elephant to. *"கந்திற் பிணிப்பர் களிற்றை" (நான்மணி.12).* 3. ஆதீண்டு குற்றி; post for cows to rub against, an ancient charity. 4. தெய்வமுறையுந் தறி; post representing a deity which is worshipped. *"வம்பலர் சேக்குங் கந்துடைப் பொதியில்" (பட்டினப். 249).* 5. பற்றுக்கோடு; staff, crutch, support. *"காதன்மை கந்தா" (குறள். 507).* 6. உடற்சந்து (திவா.); a joint in the body. 7. பண்டியுளிரும்பு (திவா.); axle-tree. (தென்மொழி. பெப். 65).

**க.** கந்து; **து.** கந்த.

*[கம் → கந்து.]*

**கந்து**[4] *kandu,* பெ.(n.) நறுமணம்; fragrant smell.

*[காந்து → கந்து. காந்துதல் = பரவுதல்.]*

**கந்து**[5] *kandu,* பெ.(n.) குதிரையின் முழுப்பாய்ச்சல். (பு.வெ.12, ஒழிபு. 13); full gallop, as of a horse.

*[கது → கந்து (விரைவு).]*

**கந்து**[6] *kandu,* பெ.(n.) 1. கிழங்கு; esculent or bulbous root. 2. கட்டி; hard substance.

**க.** கந்த

*[கன் (ஈனுதல்) → கந்து (வேரில் தோற்றம்கொண்டது, திரண்டது).]*

**கந்து**[7] *kandu,* பெ.(n.) புடவையின் நிறம் பிறங்கும் சாயக்கப்பு (இ.வ.); bright colour of dye in a cloth.

*[காந்து → கந்து.]*

**கந்து**[8] *kandu,* பெ.(n.) 1. கழுத்தடி; nape of neck. 2. வண்டி; cart.

*[கழுந்து → கந்து.]*

**கந்து**[9] *kandu,* பெ.(n.) தோள்பட்டை, தோள்; shoulder.

**க.** கந்த

*[கந்து = பற்றுக்கோடு, சுமப்பதற்கு இடனாகிய தோள்.]*

**கந்து**[10] *kandu,* பெ.(n.) தவணை; instalment. கந்து வட்டிக்குக் கடன் வாங்காதே (உ.வ.).

*[கம் → கந்து (துண்டு, சிறுபகுதி).]*

**கந்துகட்டு–தல்** *kandu-kaṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. காய்கறிகளை வேக வைக்கும் போது நீரில் அவை ஒதுங்கி மிதத்தல்; to float or recede to a side of the pot in boiling, as curry stuffs. 2. களத்தைச்சுற்றி வைக்கோல் சேர்தல்; to settle in a heap around the threshing floor, as bits of straw.

*[கங்கு + கட்டு. கங்கு = ஓரம், விளிம்பு.]*

**கந்துகம்**[1] *kandugam,* பெ.(n.) பந்து; ball for play. *"கந்துகக் கருத்தும்" (மணிமே. 2;22).*

**Pali.** genduka; **த.** கந்துகம்> **Skt.** Kanduka.

*[கள் → கண்டு (நூற்பந்து). கந்து கந்தகம். கும் → கம் → கந்து → கந்துகம் என்றுமாம். (வ.மொ.வ.108).]*

**கந்துகம்**[2] *kadugam,* பெ.(n.) 1. குதிரை. (திவா.); horse. *"கந்துகஞ்சிரிக்குமோதை" (திருவிளை. தண்ணீர். 19).* 2. குறுநிலமன்னர் ஏறுங்குதிரை. (திவா.); riding horse of a petty chief.

*[கது → கந்து (விரைவு) → கந்துகம்.]*

**கந்துகம்**[3] *kandugam,* பெ.(n.) தான்றிமரம்; devil's abode tree (சா.அக.).

*[கந்து → கந்துகம்.]*

**கந்துகவரி** *kanduga-vari,* பெ.(n.) மகளிர் பந்தாடும் போது பாடும் பாடல் (சிலப். 29); song sung by girls while playing with balls.

*[கந்துகம்'+வரி. கந்துகம் = பந்து. வரி = காமங்கண்ணிய இசைப்பாட்டு.]*

**கந்துகளம்** *kandu-kaḷam,* பெ.(n.) நெல்லும் பதருங் கலந்த களம் (வின்.); threshing floor with a layer of chaff mixed with a few grains, the remains left after paddy has been trodden on and removed.

*[கந்து + களம்.]*

**கந்துகன்** *kandugaṉ,* பெ.(n.) தான்றி (மலை.); belleric myrobalan.

*[கந்து → கந்துகன்.]*

**கந்துடை-த்தல்** *kanduḍai-,* 4 செ.குன்றாவி. (v.t.) மாட்டின் தும்பை அவிழ்த்தல் (யாழ்ப்.); to untie the noose of the string tied to an ox's neck.

*[கந்து' + உடை-.]*

**கந்துமங்கல்** *kandu-maṅgal,* பெ.(n.) துணியின் சாயம் ஓரிடத்திற் கப்பும், ஓரிடத்தில் மங்கலுமாயிருத் தல்; (இ.வ.); brightness as well as paleness of dye in patches in the colour of a cloth.

*[கந்து[6] + மங்கல்.]*

**கந்துமாறிக்கட்டு-தல்** *kandu-māṟi-k-kaṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) ***கந்துமாறு*** பார்க்க; see *kandu-māṟu.* 2. வேறோரிடத்திலிருந்து கடன் வாங்கிக் கடனை அடைத்தல், புரட்டுதல்; to scheme, as in trying to pay one's debts by borrowing from others.

*[கந்து[3] + மாறி + கட்டு-.]*

**கந்துமாறு-தல்** *kandu-māṟu-,* 5 செ.கு.வி.(v.i.) நுகத்திற் பூட்டியுள்ள மாடுகளை வலமிடம் மாற்றிக் கட்டுதல் (யாழ்ப்.); to transfer an ox from one side of the yoke to the other.

*[கந்து + மாறு. கந்து = ஓரம், விளிம்பு, எல்லை.]*

**கந்துமுரி-த்தல்** *kandu-muri-,* 4 செ.கு.வி.(v.i.) 1. போரடிக்கும் களத்தினின்று வெளியே எருது நெறிகடந்து செல்லுதல்; to turn out of the course, break the bounds, as of an ox from treading grain. 2. களத்திலிருந்து நுழைவாயில் வழியல்லாமல் வெளியேறுதல்; to break out as men from the threshing floor otherwise than through the entrance. கந்து முரித்துப் போட்டுப் போகிறான். (யாழ்ப்.).

களத்தினின்று நெறிகடந்து செல்லுதல் போகூழ் [துரதிஷ்டம்] எனக் கருதப்படுகிறது. இஃது எருது, மக்கள் ஆகிய இருவருக்கும் பொருந்தும்.

*[கந்து + முரி-. கந்து + எல்லை.]*

**கந்துமுறி** *kandu-muṟi,* பெ.(n.) பதர்; chaff (ம.அக.).

*[கந்து + முறி.]*

**கந்துரு** *kanduru,* பெ.(n.) யாழ்; harp.

*[கள் → கந்து = கட்டுதல், பிணைத்தல். கந்து → கந்துள் → கந்துல் → கந்துரு = யாழில், இழுத்துக் கட்டப்பட்ட நரம்புகள் ஒ.நோ. இயவு → இயவுள். கடவு → கடவுள்.]*

**கந்துருவம்**[1] *kanduruvam,* பெ.(n.) யாழ்; harp. **கந்துரு** பார்க்க; see *kanduru.*

*[கந்துரு → கந்துருவம்.]*

**கந்துருவம்**[2] *kanduruvam,* பெ.(n.) 1. இசை; music.

*[கந்துரு (யாழ்.) → கந்துருவம் (யாழில் எழுப்பப்படும் ஏழிசை.)]*

**கந்துருவர்** *kanduruvar,* பெ.(n.) பழந்தமிழகத்தில் யாழ் மீட்டும் இசைவல்லோர், கந்தருவர்; experts in music preferably in a play in yāḷ (harp) of ancient Tamilnadu.

*[கந்துரு → யாழ். கந்துரு + அர் – கந்துருவர். இச் சொல் கந்தருவர் எனத் திரிந்தது.]*

**கந்துவட்டி** *kandu-vaṭṭi,* பெ.(n.) 1. பிடிப்புவட்டி, *கடன் தொகைக்கு முன்கூட்டியே வாங்கும் வட்டி* (இ.வ.); discount. 2. மிக அதிக வட்டி; exorbitant rate of interest. 3. தவணை வட்டி; instalment interest.

*[கந்து + வட்டி.]*

**கந்துவான்** *kanduvāṉ,* பெ.(n.) மாடுபிணைக்குங் கயிறு (யாழ்ப்.); rope for tying oxen together.

*[கும் → கம் → கந்து = உடற்சந்து (திவா.), மாடு பிணைக்குந் தும்பு. கந்து → கந்துவான்.]*

**கந்துள்** *kanduḷ,* பெ.(n.) கரி; charcoal. *"செந்தீ.... கந்துள் சிந்தி"* (சூளா. இரத. 46).

*[கள் → கந்து → கந்துள்.]*

**கந்துளம்** *kandulam,* பெ.(n.) பெருச்சாளி (R.) bandicoot.

[கந்துள் (கருமை) → கந்துளம்.]

**கந்தை**[1] *kandai,* பெ.(n.) 1. கிழிந்த துணி; rag, tatters, torn or patched garment. *'ஆடையுங் கந்தையே' (பெரிய. திருக்கூட்.) கந்தையானாலும் கசக்கிக் கட்டு; கூழானாலும் குளித்துக் குடி (பழ.)* 2. சிறு துகில் (பிங்.); small cloth.

**ம.** கந்த; **க.** கன்தெ; **தெ.** கன்த.

**த.** கந்தை > **Skt.** kantā

[கத்து → கந்து → கந்தல் → கந்தை (வ.மொ.வ. 108.).]

**கந்தை**[2] *kandai,* பெ.(n.) கரணைக் கிழங்கு. (மலை.); a tuberous rooted herb.

[கள் = திரட்சி. கள் → கந்து → கந்தம் = கிழங்கு. கந்தம் → கந்தை.]

**கந்தைபுரை–தல்** *kandai-purai-,* 2 செ.கு.வி.(v.t.) கிழிந்த துணிகளைத் தைத்தல் (வின்.); to mend old clothes.

[கந்தை + புரை–.]

**கந்தையன்** *kandaiyan,* பெ.(n.) ***கந்தன்*** பார்க்க; see *kandan.*

[கன் (ஈனுதல்) → கந்து → கந்தன் → கந்தையன்.]

**கப்பக்காடி** *kappa-k-kāḍi,* பெ.(n.) படகினுஞ் சற்றே பெரிய வடிவுடைய மூன்று அல்லது நான்கு பாய் கட்டிக் கடலில் விரைவாய்ச் செல்லும் கலம்; ship having three or four sailings and bigger than a ordinary boat (மீ.தொ.வ.).

[கப்பல் + காடி – கப்பல்காடி → கப்பக்காடி.]

**கப்பக்காரி** *kappa-k-kāri,* பெ.(n.) ஒழுக்கங் கெட்டவள்; a prostitute (சேரநா.).

**ம.** கப்பக்காரி.

[கப்பை + காரி – கப்பைக்காரி → கப்பக்காரி.]

**கப்பக்கிழங்கு** *kappa-k-kilangu,* பெ.(n.) கப்பற்செடியின் கிழங்கு; the edible root of tapioca.

**மறுவ.** ஆழ்வள்ளி, மரவள்ளி, சவ்வாரிக்கட்டை, குச்சிக்கிழங்கு, ஏழிலைக் கிழங்கு.

**ம.** கப்பக்கிழங்ஙு

[கப்பல் + கிழங்கு. போர்ச்சுகீசியர்களால் கப்பலில் கொண்டு வந்து நடப்பட்ட கிழங்கு.]

**கப்பக்கிழங்கு**[2] *kappa-k-kilangu,* பெ.(n.) சருக்கரை வள்ளிக்கிழங்கு; sweet potato, ipomoca batatas.

**மறுவ.** கொடிவள்ளி, சக்கரைவள்ளி.

**ம.** கப்பக்கிழங்ஙு

[கப்பு + கிழங்கு. கப்பை → கவர்படுதன்மை. கப்பை – கப்பு.]

**கப்பக்கோழி** *kappa-k-kōḻi,* பெ.(n.) பெரிதாக வளரும் ஒருவகைக் கோழியினம்; a variety of imported domestic fowl (சேரநா.).

**ம.** கப்பக்கோழி

[கப்பல் + கோழி. கப்பல் வழியாகப் பிற நாடுகளிலிருந்து கொண்டுவரப்பட்ட கோழி.]

**கப்பங்கட்டு–தல்** *kappaṅ-kaṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) திறைகொடுத்தல். to pay tribute, as a petty king to his suzerain.

[கப்பம்' + கட்டு–.]

**கப்பங்காய்** *kappaṅgāy,* பெ.(n.) ஓமக்காய், பப்பாளிக்காய்; papaya fruit (சேரநா.).

**ம.** கப்பங்ஙு

[கப்பல் +காய்.]

**கப்பங்கொள்–தல்** *kappaṅ-gol-,* 10 செ.குன்றாவி (v.t.) திறை கொள்ளுதல்; to take tribute as a suzerain from a petty king (கருநா.).

**க.** கப்பங்கொள்

[கப்பம் + கொள்–.]

**கப்பச்சு** *kappaccu,* பெ.(n.) கம்மாளர் கருவியுள் ஒன்று (யாழ்.அக.); a blacksmith's tool.

[கப்பு + அச்சு. கப்பு = கவர்கொம்பு, சிறுகொம்பு.]

**கப்படகம்** *kappaḍagam,* பெ.(n.) தங்கரளி; a species of oleander probably of a golden colour (சா.அக.).

[கப்பு → கப்படகம். கப்பு = கவர்ச்சி.]

**கப்படம்** *kappaḍam,* பெ.(n.) 1. கந்தற்சீலை; clothing in rags, tatters. *"தேவசாதி கப்படங் கட்டிக் கொண்டு செல்ல" (ஈடு. 6,4,5)* 2. இடையாடை; cloth for wear. *"அரையிற் கூட்டுமக் கப்படம்" (பதினொ. நம்பியாண். திருத்தொண். 80).*

**ம.** கப்படம்; **க.** கப்பட.

*[கவ்வு → கப்பு → கப்படம்.]*

**கப்படா** *kappaḍā,* பெ.(n.) அரை (யாழ்.அக.); waist.

*[கப்பு → கப்படா.]*

**கப்படி** *kappaḍi,* பெ.(n.) கொடுக்கு; sting. *"கப்படியாற் கொட்டினாற் றேளின் குணமறிவார்" (பஞ்ச. திருமுக. 1654).*

*[கப்பு + அடி.]*

**கப்படிமரம்** *kappaḍi-maram,* பெ.(n.) வேரிலிருந்து கிளைகள் கொண்ட மரவகை (வின்.); a kind of tree with branches from the root.

*[கொப்பு → கப்பு + அடி + மரம்.]*

**கப்பணம்**[2] *kappaṇam,* பெ.(n.) 1. ஒரு கழுத்தணி (வின்.); a kind of necklace; gold collar. 2. அரிகண்டம் (வின்.); iron collar for the neck worn by religious mendicants. 3. காப்புநாண். (இ.வ.); saffron cord around the wrist worn, as an amulet or as preliminary to the performance of a ceremony. 4. கொச்சைக் கயிறு (இ.வ.); fibre rope.

*[காப்பு → கப்பு. கப்பு + அணம் (சொல்லாக்க ஈறு) – கப்பணம்.]*

**கப்பம்**[1] *kappam,* பெ.(n.) 1. வேந்தனுக்குச் செலுத்தும் திறை (திவா.); tribute, as paid by an inferior prince to his suzerain. 2. தொழில்வரி; professional tax.

**ம.** கப்பம்; **க., து., பட.** கப்ப; **தெ.** கப்பமு.

*[கப்பு → கப்பம். (மூட்டையாகக் கட்டிய திறைப்பணம்). கள் → கவ் → கவ்வு → கப்பு. (மூடுதல்)]*

தெலுங்கு மொழியில் கப்பு என்னும் சொல் மூடுதல் பொருளில் வழங்கி வருகிறது. கப்படம் = கூரை வீடு போர்த்துதற்குரிய வைக்கோல், கஞ்சம்புல், சோளத்தட்டு, தென்னங்கீற்று, பனை மடல், போன்ற போர்வடைப் பொருள்கள். கப்பம் என்னும் சொல் அரசனுக்காகத் திரட்டப்பட்ட பல்வகைத் திறைப் பொருள்களை [தவசமாகவும் பணமாகவும் நகையாகவும்] மூட்டையாகக் கட்டிய பொதியைக் குறித்தது. கப்பம் = பொதி மூட்டை.

**கப்பம்**[2] *kappam,* பெ.(n.) ***கற்பம்***[2] பார்க்க; see *kaṟpam. "கப்பத் திந்திரன் காட்டிய நூலின்" (சிலப். 11: 154).*

**Pkt.** kappa

*[கற்பம் → கப்பம்.]*

**கப்பம்**[3] *kappam,* பெ.(n.) பொன் அல்லது வெள்ளியால் ஆன கைக்கடகம்; a ring of gold or silver-wire for the wrist worn as an ornament (கருநா.).

**க.** கப்ப

*[காப்பு → கப்பம்.]*

**கப்பம்**[4] *kappam,* பெ.(n.) வாலுளுவை; intellect tree (சா.அக.).

*[கப்பு → கப்பம்.]*

**கப்பம்**[5] *kappam,* பெ.(n.) 1. கைவேல். (திவா.); javelin. *"கப்பணப் படையும் பாசமும்" (இராமா. கரன். 351).* 2. ஆனை நெருஞ்சிமுள்போல இரும்பால் பண்ணிய கருவி; small caltrop. *"கப்பணஞ் சிதறினான்" (சீவக. 285). "எரிமுத்தலை கப்பணம் எற்பயில் கோல்" (பெரியபு. புகழ்ச்.260).*

*[கொம்பு → கொப்பு → கப்பு → கப்பணம்.]*

**கப்பம்பட்டி** *kappampatti,* பெ.(n.) கரூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Karur Dt.

*[கலப்பன் → கப்பன் + பட்டி – கப்பன்பட்டி → கப்பம்பட்டி.]*

**கப்பரை** *kapparai,* பெ.(n.) 1. இரப்போர் ஏனம், பிச்சைக்கலம்; bowl of a begger or mendicant. *"கப்பரை கைக்கொள வைப்பவர்"* 2. மட்கலம்; earthern vessel. *"கப்பரைதனிலுணலாகா"* (காசிக. இல்லறங். 35). 3. திருநீற்றுக்கலம் (சங்.அக.); vessel for keeping sacred ashes in temples. 4. கிடாரம் (யாழ்.அக.); brass vessel. 1. பழைய பொன்னனே பொன்னன் பழைய கப்பரையே கப்பரை. (பழ.). 2. கண்டறிந்த நாயுமில்லை. கனமறிந்த கப்பரையுமில்லை. (பழ.)

**ம.** கப்பர; **க.** கப்பர, கப்பரி, கபரி, கப்பரெ; **தெ.** கப்பெர. **து.** கப்பர்.

**Pkt.** khappara

*[கொப்பரை → கப்பரை.]*

**த.** கப்பரை > **Skt.** karparam

*[கப்புதல் (குழிவிழுதல்) கப்பு → கப்பரை உட்குழிந்த ஏனம்.]*

**கப்பல்** *kappal,* பெ.(n.) 1. பல கிளைகளைக் கொண்ட பாய்மரமுள்ள மரக்கலம்; ship, sailing vessel. *"கப்பல் பிழைத்துக் கரைகாணும்." (ஒழிவி.சந்நிதி.22.)* 2. பொறிகளாலோ பாய்மரத்தின் உதவியாலோ இயங்கும் அளவில் பெரிய கடல்வழிக் கலம்; a large sea going vessel using engines or sails, ship. 3. மாந்தரையும் பொருள்களையும் ஏற்றிச் செல்வதற் கான நீர்வழிப் போக்குவரத்துக் கலம்; ship. *"கப்பல் பிழைத்துக் கரைகாணும்" (ஒழிவி. சந்நிதி. 22).*

**ம., து.** கப்பல்; **க., பட.** கப்பலு; **தெ.** கப்பலி.

*[கள் → கய் → கவ். கப்பு → கப்பம் (பள்ளம், குழி). கப்பல் = உட்குழிந்த மரக்கலம். கள் = வெட்டுதல் (ஒ.நோ. களை கட்டதனொடு நேர் – குறள்). கய் → கயம் (குழிந்த நீர்நிலை, கவ் → கவிகை (குழிந்த குடை.) **க.** கப்பு = தோண்டு, குழியாக்கு, கப்பல் = குழி, யானை வீழ்த்தும் குழி. கப்பல் வீழ்தல் = குழிவிழுதல். கப்பல் → கப்பரை = இரப்போர் உண்கலம்.]*

கப்பல் என்னும் சொல் உட்குழிந்த மரக்கலம் என்னும் பொருளில் தோன்றிப் பண்டுதொட்டே உலகமொழிகளில் பெருமளவு பரவியிருப்பது குறிப்பிடத்தக்கது.

kapp-al, a ship, a vessel, probably a verbal noun from kapp-u. Tel. to cover over; derivative Telugu noun kapp-u, a covering, the verb is not found in Canarese or Tamil, but the canarase noun kapp-u, a subterraneous room, a pit -fall for catching elephants (covered over with branches of trees and grass), and the Tamil noun kappal, a ship, properly a decked vessel, in contradistinction to padugu, an open vessel, are evidently identical in origin with the Telugu verb and noun. The Malay word for 'ship' is kapal; but this has probably been borrowed direct from Tamil, and forms one of a small class of Malay words which have sprung from a Dravidian origin, and which were introduced into Eastern Archipelago; either by means of the Klings (kalingas) who settled there in primitive times, or by means of the Arab traders, whose first settlements with East were on the Malabar Coast, where the Malayalam, the oldest daughter of the Tamil is spoken. The following Sythian words for 'ship' appear to be analogous to the Tamil, and have certainly not been borrowed from it; Vogul kap or kaba: Samoiede kebe; Jenesei kep; Yerkerian kaf; Ostiak chap, sea also the analogis adduced under the word kebi, a cave (C.G.D.F.L. pp. 615-616).

**கப்பல்சிந்து** *kappalsindu,* பெ.(n.) கப்பலில் பாடக் கூடிய சிந்து வகைப்பாட்டு; a kind of sindu verse usually sung while travelling in the ship.

*[கப்பல் + சிந்து.]*

**கப்பல்நூல்** *kappal-nūl,* பெ.(n.) நாவாய் நூல்; science of navigation.

*[கப்பல் + நூல் தோணி, கப்பல் ஆகியன கட்டும் கலை.]*

**கப்பல்படை** *kappalpaḍai,* பெ.(n.) ***கப்பற்படை*** பார்க்க; see *kappaṟpaḍai.*

*[கப்பல் + படை.]*

**கப்பல்பாட்டு** *kappal-paṭṭu,* பெ.(n.) ***கப்பற்பாட்டு*** பார்க்க; see *kappaṟpāṭṭu.*

*[கப்பல் + பாட்டு.]*

**கப்பல்மிளகு** *kappal-miḷagu,* பெ.(n.) மிளகாய் (இ.வ.); chilli.

**ம.** கப்பல் முளகு

*[கப்பல் + மிளகு.]*

**கப்பல் வழுங்கினோன்** *kappal-vaḻanginōṉ,* பெ.(n.) ***கப்பலாதி*** பார்க்க; see *kappalādi.*

*[கப்பல் + வழுங்கினோன். கப்பல்வழி வந்த பொருள்.]*

**கப்பல்வள்ளி** *kappal-vaḷḷi,* பெ.(n.) கிழங்குவகை (இ.வ.); a variety of the alligator yarn.

*[கப்பல் + வள்ளி.]*

**கப்பல்வாணம்** *kappal-vāṇam,* பெ.(n.) வாணவகை; (யாழ்.அக.); a kind of rocket.

*[கப்பல் + வாணம்.]*

**கப்பல்வாழை** *kappal-vāḻai,* பெ.(n.) ஒருவகை வாழை (இரசதாளி (யாழ்ப்.); red costate-leaved banana.

*[கப்பல் + வாழை.]*

**கப்பல்வீழ்–தல்** *kappal-vīḻ,* செ.கு.வி.(v.i.) குழி விழுதல், பள்ளம் உண்டாதல்; to get deepened, to make a hole.

**க.** கப்பல் பீள்

*[கப்பல் (குழி) + வீழ்–.]*

**கப்பல்வெள்ளி** *kappal-veḷḷi,* பெ.(n.) இரவு 8 மணி முதல் பின்னிரவு 3 மணி வரை கப்பல் வடிவில் தோன்றும் விண்மீன் (நெல்லை மீனவ.); a group of stars which resemble a ship and visible during 8 p.m. to 3 a.m.

*[கப்பல் + வெள்ளி.]* (மீ.தொ.வ.)

**கப்பல்வேடன்** *kappal-vēḍaṉ,* பெ.(n.) ஒருவகைப் பெரிய மீன்; a kind of big fish (மீ.தொ.வ.).

*[கப்பல் + வேடன்.]*

**கப்பல்வை[1]-த்தல்** *kappal-vai,* 4 செ.கு.வி.(v.i.) மரக்கலம் வாடகைக்கு அமர்த்தல் (வின்.); to engage a ship.

*[கப்பல் + வை.]*

**கப்பல்வை[2]-த்தல்** *kappal-vai,* 4 செ.கு.வி.(v.i.) துறைமுகத்தில் நங்கூரமிட்டு மரக்கலத்தினை நிறுத்துதல்; to anchor a ship.

*[கப்பல் + வை-.] (மீ.தொ.வ.)*

**கப்பலடி** *kappal-aḍi,* பெ.(n.) துறைமுகம்; port. (மீ.தொ.வ.).

*[கப்பல் + அடி.]*

**கப்பலண்டி** *kappal-aṇḍi,* பெ.(n.) 1. நிலக்கடலை விதை; groundnut. 2. முந்திரிக்கொட்டை; cashewnut (சேரநா.).

**ம.** கப்பலண்டி

*[கப்பல் + அண்டி. ஆண்டு = முளை. ஆண்டு → அண்டி. கப்பல் வழிவந்த அண்டி கப்பலண்டி.]*

அண்டி = முளை, விதை.

**கப்பலரி** *kappalari,* பெ.(n.) கருமை கலந்த பழுப்பு வண்ண அலரி; a dark brownish oleander.

*[கப்பு + அலரி. கப்பு = கருமை.]*

**கப்பலரிப்பால்** *kappalari-p-pāl,* பெ.(n.) கப்பலரிச் செடியினின்று வடியும் பால்; the milky juice of a species of oleander (சா.அக.).

*[கப்பலரி + பால்.]*

இப்பாலை, துரிசுக்குத் தடவிப் புடமிடத் தூளாகும்.

**கப்பலேற்று-தல்** *kappal-ēṟṟu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. கப்பற் பயணிகளை வழியனுப்புதல்; to send off a person in a dock yard. இன்று அவரைக் கப்பலேற்ற வேண்டும் (உ.வ.). 2. கப்பலில் சரக்கை ஏற்றுதல்; to embark to a ship. அந்தமானுக்குப் போக வேண்டிய காய்கறிகளைக் கப்பலேற்றவேண்டும் (உ.வ.). 3. நாடு கடத்துதல்; to deport. தீவிரவாதிகளைக் கப்பலேற்று மாறு தீர்ப்பளித்தார் (உ.வ.).

*[கப்பல் + ஏற்று-.]*

**கப்பலேற்று[2]-தல்** *kappal-ēṟṟu-,*[5] செ.குன்றாவி.(v.t.). மானக்கேடு உண்டாக்குதல்; to put some one to shame. அவன் மானத்தைக் கப்பலேற்றாமல் விடமாட்டேன் (உ.வ.).

*[கப்பல் + ஏற்று. குற்றங்குறைகளைச் செய்தலைக் குறித்து நின்றது.]*

**கப்பலேறு[1]-தல்** *kappal-ēṟu-,*[5] செ.கு.வி.(v.i.) கடற்பயணம் மேற்கொள்ளல்; to sail by ship. அந்தமான் செல்லக் கப்பலேறினான் (உ.வ.).

*[கப்பல் + ஏறு-.]*

**கப்பலேறு[2]-தல்** *kappal-ēṟu,*[5] செ.கு.வி.(v.i.) மானக்கேடு உண்டாதல்; to be got ashame. நேற்றைய நிகழ்வில் அவனுடைய மானம் கப்பலேறி விட்டது (உ.வ.).

*[கப்பல் + ஏறு.]*

**கப்பலோட்டம்** *kappal-ōṭṭam,* பெ.(n.) ***கப்பலோட்டு*** பார்க்க; see *kappal-ōṭṭu.*

**ம.** கப்பலோட்டம்

*[கப்பல் + ஓட்டம்.]*

**கப்பலோட்டி** *kappal-ōṭṭi,* பெ.(n.) 1. கப்பலின் வேலையாள்; sailor, seaman. 2. மீகாமன், மாலுமி; captain of the ship, chief sailor.

*[கப்பல் + ஓட்டி-.]*

**கப்பலோட்டி[2]** *kappal-otti,* பெ.(n. ஒருவகை மீன்; a kind of fish.

*[கப்பல் + ஓட்டி-.]*

**கப்பலோட்டு[1]–தல்** *kappal-ōṭṭu-,* 5. செ.குன்றாவி. (v.t.) மரக்கலஞ் செலுத்துதல்; to sail a ship, steer a vessel.

*[கப்பல் + ஓட்டு.]*

**கப்பலோட்டு[2]** *kappal-ōṭṭu,* பெ.(n.) கப்பலின் ஓட்டம்; sailing of a ship, navigation.

*[கப்பல் + ஓட்டு.]*

**கப்பலோடு–தல்** *kappal-ōḍu-,* 5.செ.கு.வி.(v.i.) 1. நாவாய் செல்லுதல்; to sail, as a ship. 2. கடல் வணிகம் செய்தல்; to carry on trade by sea. கப்பலோடிப் பட்ட கடன்.

*[கப்பல் +ஓடு–.]*

**கப்பளாங்கரை** *kappaḷaṅkarai,* பெ.(n.) கோவை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Coimbatore dt.

*[கப்பல் + அன்– கப்பலன் + கரை – கப்பலங்கரை. கப்பலாங்கரை→கப்பளாங்கரை ல–ளகரத்திரிபு இடவழக்கு.]*

**கப்பளாம்பாடி** *kappaḷāmbādi,* பெ.(n.) விழுப்புரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Villuppuram dt.

*[கப்பல் +அன்+பாடி–கப்பலம்பாடி→கப்பலாம்பாடி→ கப்பளாம்பாடி. ல–ளகரத்திரிபு இடவழக்கு.]*

**கப்பற்கடலை** *kappaṟ-kaḍalai,* பெ.(n.) 1. பட்டாணிக் கடலை; seed of the garden-pea. 2. பெருங்கடலை; a large species of bengal gram (சா.அக.).

*[கப்பல் + கடலை.]*

**கப்பற்கடுக்காய்** *kappaṟ-k-kaḍukkāy,* பெ.(n.) பெருங்கடுக்காய்; a large species of gallnut, obtained from foreigrn countries (சா.அக.).

*[கப்பல் + கடுக்காய்.]*

**கப்பற்கதலி** *kappaṟ-kadali,* பெ.(n.) வாழைவகை; an exotic plantain.

*[கப்பல் + கதலி.]*

**கப்பற்கலை** *kappaṟ-kalai,* பெ.(n.) கப்பல் கட்டும் நுணுக்கம்; art of ship-building.

*[கப்பல் + கலை.]*

**கப்பற்கன்மணி** *kappaṟ-kaṉ-maṇi,* பெ.(n.) பரவமகளி ரணியும் கழுத்தணிவகை; a necklace worn by Parava women.

*[கப்பல் + கல் + மணி.]*

**கப்பற்காய்** *kappaṟ-kāy,* பெ.(n.) இலங்கைத் தீவினின்று வருந் தேங்காய் (Mod.); coconut imported from Ceylon.

*[கப்பல் + காய்.]*

**கப்பற்காரன்** *kappaṟ-kāraṉ,* பெ.(n.) 1. கப்பற்றலைவன்; master of a ship, ship-holder. முன்னேரங் கப்பற் காரன், பின்னேரம் பிச்சைக்காரன். 2. கப்பலில் வேலை செய்வோன்; mariner, shipman.

ம. கப்பல்க்காரன்

*[கப்பல் + காரன்.]*

**கப்பற்கால்** *kappaṟ-kāl,* பெ.(n.) படகு (நாஞ்.); boat.

*[கப்பல் + கால்.]*

**கால் = கப்பலின் கால் போன்றது. படகு, தோணி கப்பலிலிருந்து சரக்கு இறக்கிக் கரைசேர்க்கும் படகுகள்.**

**கப்பற்கூடம்** *kappaṟ-kūḍam,* பெ.(n.) கப்பல் கட்டும் அல்லது பழுதுபார்க்கும் இடம்; shipyard; dock.

*[கப்பல் + கூடம்.]*

**கப்பற்கொள்ளை** *kappaṟ-koḷḷai,* பெ.(n.) ***கடற் கொள்ளை*** பார்க்க; see *kaḍaṟ-koḷḷai.*

*[கப்பல் + கொள்ளை.]*

**கப்பற்கொள்ளைக்காரன்** *kappaṟ-k-koḷḷaikkāraṉ,* பெ.(n.) ***கடற்கொள்ளைக்காரன்*** பார்க்க; see *kadaṟ-koḷḷaikāraṉ.*

**கப்பற்கோவை** *kappaṟ-kōvai,* பெ.(n.) கப்பலூர்த் தலைவனான கருமாணிக்கன்மேற் பாடப்பட்ட ஒரு கோவைநூல்; name of a kovai poem in praise of the patron, Karumāṇikkaṉ of Kappalūr.

*[கப்பலூர் → கப்பல். + கோவை.]*

**கப்பற்சண்டை** *kappaṟ-caṇḍai,* பெ.(n.) ***கப்பற்போர்*** பார்க்க; see *kappaṟ-pōr.*

*[கப்பல் + சண்டை.]*

**கப்பற்சாத்திரம்** *kappaṟ-cāttiram,* பெ.(n.) ***கப்பல் நூல்*** பார்க்க; see *kappal-nūl.*

*[கப்பல் + சாத்திரம்.]*

**கப்பற்சால்** *kappaṟ-cāl,* பெ.(n.) கடலில் கப்பல் போகும் வழி; a navigation channal (சேரநா.).

ம. கப்பல்ச்சால்

*[கப்பல் + சால்.]*

**கப்பற்சேதம்** *kappaṟ-cēdam,* பெ.(n.) மரக்கலத்தின் அழிவு; shipwreck.

ம. கப்பல்ச்சேதம்

*[கப்பல் + சேதம்.]*

**கப்பற்படை** *kappaṟ-paḍai,* பெ.(n.) 1. கடற்படை; naval force; battleships. 2. கப்பலுக்குரிய பொருள் (வின்.); whatever belongs to a ship, as cordage, etc.

ம. கப்பல்ப்பட

*[கப்பல் + படை.]*

**கப்பற்பாட்டு** *kappaṟ-pāṭṭu,* பெ.(n.) 1. கப்பற்காரர் பாடும் ஓடப்பாடல்; mariners' song. 2. ஒரு நூல்; name of a book.

ம. கப்பல்ப்பாட்டு

*[கப்பல் + பாட்டு.]*

**கப்பற்பாய்** *kappaṟ-pāy,* பெ.(n.) கப்பலிற் காற்றை முகப்பதற்காகக் சீலையாலமைந்த பாய்; sail made of canvas.

ம. கப்பல்ப்பாயு

*[கப்பல் + பாய்.]*

**கப்பற்போர்** *kappaṟ-pōr,* பெ.(n.) கப்பலிலிருந்து புரியும் சண்டை; naval warfare.

*[கப்பல் + போர்.]*

**கப்பற்றுரைச்சி** *kappaṟṟuraicci,* பெ.(n.) சாதிக்காய்; nutmeg (சா.அக.).

*[கப்பல் + துரைச்சி. துரை → துரைச்சி = துரையின் மனைவி போல் பெருமைக்குரியது.]*

**கப்பற்றுறை** *kappaṟṟuṟai,* பெ.(n.) கப்பல் வரும் அல்லது புறப்படும் துறைமுகம்; sea port.

*[கப்பல் + துறை.]*

**கப்பறை**[1] *kappaṟai,* பெ.(n.) தாய விளையாட்டில் ஒரு கணக்கு (வின்.); blank in the play of dice.

*[கப்பு + அறை. கப்பு = கருங்கோடு.]*

**கப்பறை**[2] *kappaṟai,* பெ.(n.) ***கப்பரை*** பார்க்க; see *kapparai.*

*[கப்பரை → கப்பறை.]*

**கப்பாங்கொட்டை** *kappaṅ-koṭṭai,* பெ.(n.) தவளை (இ.வ.); frog. கப்பாங்கொட்டை கத்தினால் கப்பலா முழுகிப்போய் விடும் (பழ.).

*[கப்பை + கால் + கொட்டை – கப்பைக்கால்கொட்டை → கப்பாங்கொட்டை. கப்பை → வளைந்த, கொட்டை = பருத்த கொட்டை போன்று உப்பி இருப்பது.]*

**கப்பாசு** *kappāsu,* பெ.(n.) ஒப்படி (சுத்தம்) பண்ணாத பருத்தி (G.Tn.D.1, 161.); raw cotton.

*[காய் + பருத்தி – காய்ப்பருத்தி → காப்பருத்தி → கப்பாத்தி → கப்பாசு (கொ.வ.) வடதமிழ் எனப்படும் பிராகிருதமொழிக் காலத்தில் கப்பாசு என திரிந்த இச் சொல் வடபுல மொழிகள் அனைத்திலும் பருத்தியைக் குறிக்கும் பொதுச் சொல்லாயிற்று.]*

**கப்பாளம்** *kappāḷam,* பெ.(n.) 1. தலையோடு; skull. 2. இரப்போர்கலம்; begger's bowl.

க. கப்பாள (கன்னம்).

*[கன்னம் + புலம் – கன்னப்புலம் → கப்பளம். கப்பளம்.> **Skt.** kapala.]*

இருபால் கன்னத்திற்கு மேற்பட்ட மண்டையோடு பொதுவாகக் கன்னப்புலம் எனக் குறிப்பிடப்பட்டதால் நாளடைவில் இச் சொல் மண்டையோட்டைக் குறிப்பதாயிற்று.

**கப்பி**[1]**–த்தல்** *kappi-,* 4 செ.கு.வி.(v.i.) 1. கவர்படுதல்; to fork, as a branch. *"கப்பித்த காலையுடைய ஞெண்டினது" (பெரும்பாண். 208, உரை).* 2. பெருத்தல்; to grow in size. *"அரும்பிக் கப்பித்த தனத்தந்திரி." (திருப்பு. 412).* 3. முகையரும்பல்; to bud.

ம. கப்பு; க. கப்பு; து. கப்பு (கிளை)

*[கவர்ப்பி → கவர்ப்பித்தல் → கப்பித்தல்.]*

**கப்பி**[2] *kappi,* பெ.(n.) 1. தெள்ளிநீக்கிய நொய்; grits in flour comminuted imperfectly; coarse grits; grain half-ground. "கப்பி கடவதாக் காலைத் தன் வாய்ப்பெயினும்'' (நாலடி. 341). 2. பருமணலும் சிறிய கற்களும் கலந்த சரளைமண், சல்லி (உ.வ.); gravel road-metal concrete of brick, dust and broken pieces of brick used for foundations or flooring. 3. தேவையில்லையென்று கழித்து நீக்கியது;

neglected and removed as rubbish. கலமாவு இடித்தவள் பாவி, கப்பி இடித்தவள் புண்ணியவதி (பழ.).

ம. கப்பி

[கழி → கழிப்பு → கழிப்பி → கப்பி.]

**கப்பி**[3] *kappi,* பெ.(n.) 1. கயிறிழுக்குங் கருவி; pulley. 2. நெய்தற்கருவியுளொன்று; (weav.) block and wheel in a loom.

ம. கப்பி; க. கபலி; தெ. கபிலி; Ar. gabb.

**கப்பி**[4] *kappi,* பெ.(n.) பொய்யுரை; lie, barefaced falsehood.

U. gappi

[கய → கயப்பு → கப்பு → கப்பி.]

**கப்பி**[5] *kappi,* பெ.(n.) 1. தவசம் (யாழ்.அக.); grain. 2. தவிடு; husk of paddy grain. கப்பி என்றால் வாய் திறக்கும், கடிவாளம் என்றால் வாய் மூடிக் கொள்ளும் (பழ.).

[கவ்வு → கப்பு → கப்பி. (பற்றிக்கொண்டிருக்கும் தவசமணி அல்லது தவிடு).]

**கப்பி**[6] *kappi,* பெ.(n.) மரக்கிளையில் தங்கும் குரங்கு; monkey. *"கோடுவாழ் குரங்கும் குட்டி கூறுப" (தொல். 1512) (வ.மொ.வ. 279).*

[கப்பு → கப்பி. கப்பு = மரக்கிளை. கப்பி = மரக்கிளையில் தங்குவது. வடமொழியாளர் கம்ப் என்று மூலங்காட்டுவது பொருந்தாது.) (=நடுங்கு) மொ.வ. 279.]

த. கப்பி > Skt. kapi

**கப்பி**[7] *kappi,* பெ.(n.) வெள்ளைக் கிலுகிலுப்பை; white crotoloria (சா.அக.).

[சிப்பி → கப்பி. சிப்பி = சுட்டால் சுண்ணாம்பாகும் சிப்பி வகை.]

**கப்பி**[8] *kappi* பெ.(n.) கழிசடை; that which is rejected after filteration. இச் சுண்ணாம்பில் கப்பி மிகுதியாய் உள்ளது (உ.வ.).

[கழி → கழிப்பு → கப்பி.]

**கப்பிகொள்(ளு)-தல்** *kappi-koḷ(ḷ)u-,* செ.கு.வி. (v.i.) இசிப்பு முதலில் நோய் பற்றிக்கொள்ளல்; to be attached as by delirium, apaplexy etc.

- [கவ்வு → கப்பு → கப்பி → கொள்-.]

**கப்பிட்டி** *kappiṭṭi,* பெ.(n.) கருப்பட்டி வகை; a kind of sirissa tree named (சா.அக.).

[கரும்புல் + அட்டி - கருப்பட்டி (கொ.வ.)]

வெல்லம் போன்ற இனிப்புச் சுவையால் பெற்ற பெயராம்.

**கப்பிப்பிஞ்சு** *kappi-p-piñju,* பெ.(n.) 1. இளம்பிஞ்சு; very tender fruit. 2. அகாலத்தில் தோன்றிய பிஞ்சு (யாழ்ப்.); tender fruit out of season.

[காய்ப்பு + பிஞ்சு → காய்ப்புப்பிஞ்சு → கப்பிப்பிஞ்சு.]

**கப்பிப்பூ** *kappi-p-pū,* பெ.(n.) உரிய காலத்தில் ஒரு சேர இலுப்பைப்பூ விழுகை (யாழ்ப்.); fall of the iluppāipp in due season, dist. fr . பந்தர்ப்பூ, பாவாடைப்பூ and கலியாணப்பூ.

[கப்பி + பூ.]

**கப்பியம்** *kappiyam,* பெ.(n.) உண்ணத்தக்கது; that which is ordained as edible. *"கப்பியந் தின்றலே" (நீலகேசி. 319, உரை).*

[கவ்வு → கப்பு → கப்பியம்.]

**கப்பிர்** *kappir,* பெ.(n.) கருவம்; pride, haughtiness. கப்பிர்பிடித்து அலைகிறான் (இ.வ.).

[கவ்வு → கப்பு → கப்பிர்.]

**கப்பிலக்குறிஞ்ச்சி** *kapilakkuriccy,* பெ.(n.) நாமக்கல் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Namakkal district.

[கபிலன் + குறிச்சி - கபிலக்குறிச்சி. குறிச்சி = மலைநிலத்துச் சிற்றூர்.]

**கப்பு**[1]**-தல்** *kappu-,* செ.கு.வி.(v.t.) 1. தோண்டுதல்; to dig. 2. குழி செய்தல்; to make a hole.

[கள் → கவ் → கப்பு.]

**கப்பு**[2]**-தல்** *kappu-,* 5 செ.கு.வி.(v.t.) 1. மூடிக் கொள்ளுதல்; to overspread, as cloud. *"நற்பொற் சரத்தினொளி கப்பத்தெருக்களளவும்" (தனிப்பா. 11, 195, 471).* 2. கொள்ளுமளவு வாயிலிட்டு வேகமாக விழுங்குதல்; கவளங்கவளமாக விழுங்குதல். to gorge, cram into the mouth. *"அவல்பொரி கப்பிய கரிமுகன்" (திருப்பு. விநாயகர்.1).* 3. பிறர் பொருளை ஒளித்துக்கொள்ளுதல்; to steal. 4. உரையாடலின் போது களைத்தல்; to be hoarse (சேரநா.).

ம. கம்முக; க. கப, கம்பு, கபும்பு; குட. கம்பம்; து. கப்புனி; தெ. கமுசு; கூய். கப்ப; குரு. கப்னா; பட. தப்பு; குவி. கப்.

**Pali.** kabala; **Skt.** kavala.

*[கவ்வு → கப்பு → கப்புதல். (மு.தா. 13)]*

**கப்பு**[3] *kappu,* பெ.(n.) 1. கவர்கொம்பு. (பிங்.); forked branch. 2. கிளை; branch, bough. *"கப்பங் கொடுக் குங்லைசையே" (கலைசை.95).* 3. பிளவு; cleavage, cleft. *"கப்புடை நாவி னாகர்" (கம்பரா. எதிர்.2).* 4. சிறுதூண், (யாழ்ப்.); small pillar, post. 5. தோள்; shoulder. *"கப்பா லாயர்கள் காவிற் கொணர்ந்த" (திவ். பெரியாழ். 3,1,5.).* 6. பற்றுக்கோடு; support, refuge. *"இரட்யரட்சகபாவம் தன்கப்பிலே கிடக்கும்" (ஸ்ரீவசன. 244).* 7. கவர்ச்சி; that which draws unto itself. *"கப்பின்றா மீசன் கழல்" (சி.போ. 11,5,வெண்.).*

*[கவை → கவர் → கவர்ப்பு → கப்பு]*

ஒரு மரத்தில், ஒரே அடியினின்று பல கவைகளும், அக் கவைகளினின்று பல கிளைகளும், அக் கிளைகளினின்று பல கொம்புகளும், அக் கொம்புகளினின்று பல கப்புகளும், அக் கப்புகளினின்று பல வளார்களும் தோன்றுகின்றன. பாவாணர் → ஒப்பியன் மொழிநூல். ப. 24.

**கப்பு**[4] *kappu,* பெ.(n.) 1. கறுப்புநிறம்; blackness, darkness. 2. சாயத்தின் அழுத்தம்; fastness of colour of the dye used for dyeing cloth. 3. செஞ்சாய வகை (G.Tj.D.1,121); a kind of red tint. 4. மயிர்க்கு ஊட்டுஞ் சாயம் (வின்.); hair-dye.

**க.** கர்ப்பு, கப்பு. கழ்பு; **பட,தெ.** கப்பு.

*[கருப்பு → கப்பு.]*

**கப்பு**[5] *kappu,* பெ.(n.) வீண்பேச்சு (உ.வ.); idle or vain talk.

**U.** gap

*[கவிழ்ப்பு → கப்பு (பொய், புரட்டு = பேசுதல்).]*

**கப்பு**[6] *kappu,* பெ.(n.) கமுக்கம் (இ.வ.); privacy; secrecy.

*[காப்பு → கப்பு.]*

**கப்பு**[7] *kappu,* பெ.(n.) உயரம் (நாமதீப.); height.

*[உகப்பு → கப்பு.]*

**கப்பு**[8] *kappu,* பெ.(n.) 1. மூடி; a covering, a cover, 2. தவசங்களின் மேற்றோல்; the husk of grain. 3. கொழுப்பு; fat.

**க., தெ.** கப்பு.

*[கவ்வு → கப்பு.]*

**கப்புக்கால்** *kappu-k-kāl,* பெ.(n.) 1. வளைகால்; bandy legs. 2. முட்டுக்கால்; support, prop.

*[கப்பு[2] + கால்.]*

**கப்புக்கால் பூச்செடி** *kappu-k-kāl-p-ūceḍi,* பெ.(n.) ஒருவகைப் பூச்செடி; the moorman's flower shurb (சா.அக.).

*[கப்பு + கால் + பூ + செடி.]*

**கப்புக்காலன்** *kappu-k-kālaṉ,* பெ.(n.) 1. வளைந்த காலை உடையவன்; a bandy legged man. 2. குறுங் காலை உடையவன்; one who is having short legs.

*[கப்பு + கால் + அன்.]*

**கப்புக்காவடிப்பூ** *kappu-k-kāvaḍi-pū,* பெ.(n.) செவ்வலரிச்செடி; oleander plant.

**மறுவ.** சுடுகாட்டுப்பூ

*[கப்பு + காவடிப்பூ.]*

(பிணக்குழியின் மீது அலரிச் செடியை நடுவதால் நாய்நரி அண்டாது என்பது நம்பிக்கை.)

**கப்புக்குனையறு-த்தல்** *kappu-k-kuṉai-y-aṟu-,* 4 செ.குன்றாவி.(v.t.) இழையோட்டுதல் (வின்.); to render a piece of coloured cloth perfect by substituting proper threads for such as are unfit.

*[கப்பு[3] + குனையறு-.]*

**கப்புகனார்** *kappugaṉār,* பெ.(n.) கோவில் பூசகர்; temple priest.

**கப்புச்சாயம்** *kappu-c-cāyam,* பெ.(n.) மயிர்க்கிடும் சாயம்; a dye for the hair (சா.அக.).

*[கறுப்பு → கப்பு + சாயம்.]*

**கப்புச்சிப்பெனல்** *kappu-c-cippeṉal,* பெ.(n.) பேச்சின்றி அடங்குகைக் குறிப்பு; phrase signifying the keeping of perfect silence.

*[கப்பு→ சிப்பு + எனல். எதுகை நோக்கிய மரபிணைக் குறிப்பு.]*

**கப்புத்தோள்** *kappu-t-tōḷ,* பெ.(n.) காவுதோள்; வலத்தோளும் இடத்தோளுமாக மாறிக் காவ கை

(யாழ்.அக.); bearing on the right and left shoulder alternately.

*[காவு → கப்பு + தோள்.]*

**கப்புமஞ்சள்** *kappu-mañjal*, பெ.(n.) கொச்சியிலிருந்து கிடைக்கும் ஒருவகை உயர்ந்த மஞ்சள் (வின்.); a superiof kind of turmeric from Cochin.

*[கப்பு[2] + மஞ்சள்.]*

**கப்புரம்** *kappuram*, பெ.(n.) ***கருப்பூரம்***பார்க்க; see *karuppūram*. *"கப்புரப் பசுந்திரை" (சீவக. 197).*

**Pkt.** kappura; **Skt.** karpūra.

**கப்புவலை** *kappu-valai*, பெ.(n.) வலைவகை (இ.வ.); a kind of fishing net.

*[கப்பு + வலை.]*

**கப்புவிடு[2]-தல்** *kappu-vidu-*, 20 செ.கு.வி.(v.i.) புரட்டுப்பேசுதல்; to lie, utter falsehood.

*[கவிழ்ப்பு → கப்பு + விடு.]*

**கப்புறுக்காய்** *kappuṟu-k-kāy*, பெ.(n.) சீயக்காய்; soap-nut (சா.அக.).

*[கருப்பு → கப்பு (அழுக்கு). கப்பு + (அறு) உறு + காய்.]*

**கப்பூர்** *kappūr*, பெ.(n.) நாகப்பட்டினம் விழுப்புரம் மாவட்டங்களில் உள்ள சிற்றூர்; a village in Nagapattinam dt.

*[கருப்பு→கப்பு + ஊர்– கப்பூர்.]*

**கப்பை** *kappai*, பெ.(n.) ***கப்பாங்கொட்டை*** பார்க்க; see kappāṅgoṭṭai

*[கப்பாங்கொட்டை → கப்பை (மரூஉ.)]*

**க., து., பட., குட.**கப்பெ; **தெ.,குவி.** கப்ப;**கோத.** கெபக்; **துட.** கொபின்; **கொண்.** கபொகி; **Sinh.** gamba.

**கப்பைக்கால்** *kappai-k-kāl*, பெ.(n.) ஒருபக்கமாக வளைந்த கால்; bandy legs.

*[கப்பை + கால்.]*

**கப்பைக்காலன்** *kappai-k-kālaṉ*, பெ.(n.) தொட்டிக் காலன்; bow-legged man.

*[கப்பு[2] + காலன்.]*

**கப்பொட்டி** *kappoṭṭi*, பெ.(n.) ***கப்பிட்டி*** பார்க்க; see *kappaṭṭi*.

*[கருப்பட்டி → கப்பொட்டி.]*

**கபகபவெனல்** *kaba-kapa-v-eṉal*, பெ.(n.) 1. ஓர் ஒலிக்குறிப்பு; the sound of gurgling, as produced by water when poured out of a vessel with a narrow mouth. 2. பசி முதலியவற்றால் வயிறெரிகைக் குறிப்பு; burning sensation in the abdomen from hunger or from strong passion.

*[கபகப + எனல். 'கபகப' ஒலிக்குறிப்பு.]*

**கபட்டுநாக்கு** *kabaṭṭu-nākku*, பெ.(n.) ***கவட்டுநாக்கு*** பார்க்க; see *kavaṭṭu-nākku*.

*[கபட்டு + நாக்கு. கவட்டு → கபட்டு.]*

**கபட்டுப்படிக்கல்** *kabaṭṭu-p-paḍi-k-kal*, பெ.(n.) ***கவட்டுப் படிக்கல்*** பார்க்க; see *kavaṭṭu-p-paḍi-k-kal*.

*[கவட்டு → கபட்டு.]*

**கபடக்காரன்** *kabaḍa-k-kāraṉ*, பெ.(n.) ***கவடுக்காரன்*** பார்க்க; see *kavaḍu-k-āraṉ*.

*[கபடம் + காரன்.]*

**கபடதாரி** *kabaḍa-dāri*, பெ.(n.) ***கவடன்*** பார்க்க; see *kavadāṉ*. கபடதாரிகளின் வேடத்தைக் கலைக்க வேண்டும்.

*[கபடம் + தாரி. கவடம் → கபடம்.]*

**கபடநாடகம்** *kabaḍanāḍagam*, பெ.(n.) ***கவட நாடகம்*** பார்க்க; see *kavaḍa-nāḍagam*. *"கபட நாடகத்தை மெய்யென்று நம்பி" (அருட்பா.1 நெஞ்சளி. 528).*

*[கபடம் + நாடகம். கவடம் → கபடம்.]*

**கபடம்** *kabaḍam*, பெ.(n.) ***கவடம்*** பார்க்க; see *kavaḍam*.

**H.** kapaṭ; **Skt.** kapaṭa.

*[கவை → கவடு → கவடம் → கபடம்.]*

**கபடவித்தை** *kabaḍa-vittai*, பெ.(n.) ***கவடக்கலை*** பார்க்க; see *kavaḍa-k-kalai*.

*[கவடம் → கபடம் + வித்தை.]*

**கபடவைத்தியன்** *kabaḍavaittiyaṉ*, பெ.(n.) ***கவட மருத்துவன்*** பார்க்க; see *kavaḍa-maruthuvaṉ*

*[கபடம் + வைத்தியன்.]*

**கபடி[1]** *kabaḍi*, பெ.(n.) ***கவடி*** பார்க்க; see *kavaḍi*. (திருப்பு.109).

*[கவறு → கவடு → கவடி → கபடி.]*

**கபடி**[2] *kabaḍi,* பெ.(n.) விளையாட்டு வகை; a kind of game.

[கபடிகபடி → கபடி.]

ஏழு பேர் கொண்ட ஓர் அணியிலிருந்து ஒருவர் விடாமல் 'கபடி, கபடி' என்று கூறிக் கொண்டு எதிர் அணியிரைத் தொட்டுத் திரும்பி


கபடி

வரும் ஒருவகை விளையாட்டு.

**கபடு** *kabaḍu,* பெ.(n.) ***கவடு*** பார்க்க; see *kavaḍu.*

[கவடு → கபடு.]

**கபத்தம்** *kabattam,* பெ.(n.) துளசி; holy basil. (சா.அக.).

[கார்ப்பு→ கப்பு→கபத்தம்.]

**கபந்தலைவலி** *kaban-talaivali,* பெ.(n.) உடம்பு முழுவதும் வலித்து, குத் தல், கக்கல், காது நமைச்சல் முதலிய குணங்களைக் காட்டுமோர் தலைவலி.

[கள் → கப்பு + தலைவலி.]

**கபாடபுரம்** *kabāḍa-puram,* பெ.(n.) தமிழாய்தற்காக இரண்டாம் தமிழகக் கழகம் அமைத்த பாண்டிய மன்னர்களின் தலைநகராயிருந்த ஊர். (இறை.1, உரை.); the ancient Pandyan capital which was the seat of the second Tamil academy.

[கவாடம் + புரம் – கவாடபுரம் → கபாடபுரம். கவாடம் = கதவு, கோட்டை.]

**கபாடம்**[1] *kabāḍam,* பெ.(n.) கதவு; door *"அறிவென் கபாடச் செந்தாள்" (ஞானா. 34, 3).* 2. காவல் (வின்.); guard, defence, protection.

**Skt.** kapāṭa; **Turk.** kapi.

[காவடம் → கவாடம் → கபாடம்.]

**கபாடம்**[2] *kabāḍam,* பெ.(n.) பொதி. (C.G.); beasts burden, as wood.

[காவு → காவடம் → கவாடம் → கபாடம்.]

**கபால்** *kabāl,* பெ.(n.) ***கபாலம்*** பார்க்க; see *kabālam.* கைவத்த வனிகபாலி மிசை. (திவ். திருச்சந்.42).

**Tib.** gwah

[கபாலம் → கபால்.]

**கபாலக்கரப்பான்** *kabāla-k-karappāṉ,* பெ.(n.) தலையில் வருங் கரப்பான்; scald head, tinea, porrigo, especially of children.

[கன்னப்புலம் → கபாலம் + கரப்பன்.]

**கபாலக்காரன்** *kabāla-k-kāraṉ,* பெ.(n.) ***கபாலக்கரப்பான்*** பார்க்க; see *kabāla-k-kara-p-pāṉ.*

[கபாலம் + காரன்.]

**கபாலக்குத்து** *kabala-k-kuttu,* பெ.(n.) கடுந்தலை வலி (இங்.வை.217); severe headache, acute meningitis cephalalgia.

[கபாலம் + குத்து.]

[சில நேரங்களில் கபாலக்குத்து பார்வை இழக்கச் செய்யும்.]

**கபாலச்சூலை** *kabāla-c-cūlai,* பெ.(n.) ***கபாலக்குத்து*** பார்க்க (இங். வை. 217); see *kabāla-k-kuttu.*

[கபாலம் + சூலை.]

**கபாலம்**[1] *kabālam,* பெ.(n.) ***கப்பாளம்*** பார்க்க; see *kappāḷam.*

[கட்பாளம் → கபாலம்.]

**கபாலம்**[2] *kabālam,* பெ.(n.) ***கபாலக்கரப்பான்*** பார்க்க; see *kabāla-k-karappāṉ.*

**கபாலம்**[3] *kabālam,* பெ.(n.) ***கபாலக்குத்து*** பார்க்க; see *kabāla-k-kuttu.*

[கப்பாளம் → கபாலம்.]

**கபாலமூர்த்தி** *kabāla-mūrtti,* பெ.(n.) ***கபாலதரன்*** பார்க்க (திவா.); see *kabāla-daraṉ.*

[கபாலம் + மூர்த்தி.]

**கபாலமோட்சம்** *kabāla-mōṭcam,* பெ.(n.) 1.தலை யோடு கூடுடைந்து உயிர்செல்கை (இ.வ.); deliverance of the soul, in the case of a yogi, from the body through the bursting out of the skull. 2. மண்டையை யுடைக்கை (உ.வ.); breaking the head.

[கன்னப்புலம் → கபாலம் + வ. மோட்சம்.]

**Skt.** kapalamokša

**கபாலவிடி** *kabāla-viḍi,* பெ.(n.) ***கபாலக்குத்து*** பார்க்க; see *kabāla-k-kuttu.*

*[கபாலம் + இடி. கபாலம் → மண்டையோடு, தலை. இடி → குத்துதல், வலித்தல். கபாலவிடி = மண்டை (தலை) யிடித்தல், வலித்தல்.]*

**கபாலி** *kabāli,* பெ.(n.) 1. சிவன்; Lord Siva. 2. பதி னோரு உருத்திரருள் ஒருவர். (திவா.); name of the rudra, one of ēkāta caruttirar. 3. வைரவன் (பிங்.); Bhairava. 4. உமை (யாழ்.அக.) parvadi.

*[கன்னப்புலம் → கப்பாளம் → கபாலம். காபலம் → கபாலி. மண்டையோட்டை மாலையாக உடையவன்.]*

**கபாலி** *kabāli,* பெ.(n.) காபாலிக நோன்பினான சைவ சமயத்தான்; name of a certain šaiva sect of the left hand order, members of which carry about their person human skulls in the form of garlands and also eat and drink from them. *"கம்பக் கபாலிகாண்" (திவ். பெரியாழ். 2,8,9).*

*[கபாலம் → கபாலி. கபாலம்' பார்க்க.]*

**கபி**[1] *kapi,* பெ.(n.) குரங்கின் ஒருவகை; ape.

*[கப்பு →கிளை. கப்பி →மரக்கிளையில் தங்கும் குரங்கு. கப்பி →கப. "கேடுவாழ் குரங்கும் குட்டி கூறுப" (தொல். 1512.).]*

வடமொழியார் காட்டும் கம்ப் [நடுங்கு] என்பது மூலமாகாது [வ.மொ.வ. 279].

**த.** கபி > **Skt.** kapi.

மாந்தர்க்கு முற்பட்டவையாகக் கொள்ளப் படும் முசு (lemur), வானரம் (monkey), கபி (ape), மாந்தற்போலி (anthropoid) என்னும் நால்வகைக் குரங்கும் குமரிக்கண்டத்திற்கே யுரியன... கபிக்கும் நிமிர்ந்த குரங்குமாந்தனுக்கும் (pithecanthropos erectun) இடைப்பட்டது மாந்தற்போலி... கபிகள் மாந்தற்போலிக்கு நெருக்கமாயிருப்பது பற்றி அவற்றை மாந்தற் போலிக் கடா (anthropoid ape) என அழைப்பர் [மு.தா. முன்னுரை.].

**கபி**[2] *kabi,* பெ.(n.) ***கப்பி***[3] (வின்.) பார்க்க; see *kappi*

*[கப்பி → கபி.]*

**கபிஞ்சலம்** *kabiñjalam,* பெ.(n.) 1. காடை (பிங்.); rain quail, turuix taigoor. 2. காடைவகை (வின்.); francolin partridge, francolinus vulgaris. 3. ஆந்தை (யாழ்.அக.); owl.

*[கப்பு→கப்பிஞ்சல் →கபிஞ்சலம்.]*

**கபித்தம்**[1] *kabittam,* பெ.(n.) (பிங்.); சுட்டுவிரல் நுனியும் பெருவிரல் நுனியும் உகிர்நுனை கவ்வ ஒழிந்த மூன்று விரலும் மெல்லெனப் பிடிக்கும் இணையா வினைக்கை (சிலப். 3, 182 உரை.); (Natya). a gesture with one hand in which the tips of the thumb closely and of the forefingers are closely joined while the other three fingers are held loose, one of 33 iṇaiya-viṉai-k-kai.

*[கபோதம்→கபித்தம்.]*

**கபித்தம்**[2] *kabittam,* பெ.(n.) 1. கொட்டிக்கிழங்கு (தைலவ.); a plant that yields an odoriferous medicinal oil. 2. விளாமரம்; wood apple tree.

*[குவி → கவி → கவித்தம் → கபித்தம்.]*

**கபிலப்பொடி** *kabila-p-poḍi,* பெ.(n.) மரவகை (L.) kamela dye, scariet croton.

*[கவி → கபி → கபித்தம்.]*

**கபிலபுரம்** *kabila-puram,* பெ.(n.) கலிங்க நாட்டிலுள்ள ஓர் ஊர்; a village in Kalinga country.

*[கபிலம் + புரம்.]*

**கபிலம்** *kabilam,* பெ.(n.) 1. புகர்நிறம் (திவா.); tawny, dim colour; dinginess, dustiness, brown. 2. காபிலம் (வின்.); name of secondary purana. 3. கபிலப்பொடி பார்க்க; see kabila-ppodi. 4. கரிக்குருவி (பிங்.); king-crow.

*[கபில் → கபிலம்.]*

*[காவி → கபி → கவில் → கபில் → கபிலம்.]*

**கபிலமதம்** *kabila-madam,* பெ.(n.) கபிலரால் தொடங்கப்பெற்ற சாங்கிய மதம்; Sānkhya system of philosophy, founder by Kabila.

*[கபிலம் + மதம்.]*

**கபிலர்** *kabilar,* பெ.(n.) கடைக்கழகக் காலத்தில் வாழ்ந்த தமிழ்ப் புலவர்; a Tamil poet of third Sangam period. ***கபிலன்*** பார்க்க; see *kabilaṉ.*

*[கவிர்→கவிரம்→கபிலம் = காவிநிறம். கபிலம் →கபிலர் (காவி நிறமுடையவர்).]*

**கபிலரகவல்** *kabilar-agaval,* பெ.(n.) கி.பி. 9ஆம் நூற்றாண்டில் 138 அடிகளுடைய ஆசிரியப் பாவாலான, ஆசிரியர் பெயர் அறியப்படாத ஒரு நூல்; a booklet in veṇba metre containing 138 lines composed by an unknown author in the 9th century A.D.

*[கபிலர் + அகவல்.]*

**கபிலவெலி** *kabila-veli,* பெ.(n.) கபில நிறமுடைய ஒருவகை எலி; a kind of rat.

*[கபிலம் + எலி.]*

**கபிலன்** *kabilaṉ,* பெ.(n.) 1.குறிஞ்சிப்பாட்டு, குறிஞ்சிக்கலி முதலியவற்றின் ஆசிரியரான கடைக்கழகப் புலவர்; Kabilan a poet of the age of the third sangam, author of Kuṟiñci-p-pāṭṭu Kuṟiñci-k-kali and other poems. *"பொய்யா நாவிற் கபிலன்" (புறநா. 174:10).* 2. ஒரு முனிவர்; Kabilan the founder, or rather the earliest known exponent of the Saṅkhya system of philosophy. *"கபிலனக்கபாதன் கணாதன் சைமினி" (மணிமே. 27;81).* 3. கபிலரகவல் பாடிய பிற்காலப் புலவர்; a later poet, author of Kabilar Agaval.

*[கவிர் → கவிரம் → கபிரம் → கபிலம் = காவிநிறம். கபிலம் → கபிலன் (கவிர நிறமுடையவன்).]*

**த.** கவிர>**skt.** kabila

**கபிலாசிலந்தி** *kabilā-cilandi,* பெ.(n.) ஒருவகைச் சிலந்தி (இ.நூ.த.பெ.அக.); a kind of spider.

*[கபிலை + சிலந்தி.]*

**கபிலை**[1] *kabilai,* பெ.(n.) எருதுகளைக்கட்டி நீரிறைக்கும் ஏற்றம்; a contrivance for drawing water from wells. ***கமலை***[2] பார்க்க; see *kamalai*[2].

**ம.**கப்பி; **க.**கபிலெ, கபலி, கபலெ, கப்பலி, கவிலெ; **தெ.**கபிலெ; **Ar.**qubb.

*[கமலை → கபிலை.]*

**கபிலை**[2] *kabilai,* பெ.(n.) 1. புகர்நிறம் (c.g.); tawny, brown, or swarthy colour. 2. குரால் நிற ஆன் *"கபிலையொடு குடநாட்டோரூ ரீத்து" (பதிற்றுப். 60, பதி);* dim coloured cow. 3. தெய்வஆன் (சூடா.); cow of the Heaven. 4. தென்கீழ்த்திசைப் பெண்யானை; name of the female elephant of the South-East quarter, being the mate of Puntarikam.

**த.**கபிலை > **skt.** kapila

*[கவிர் → கவிரம் → கபிலம்.]*

**கபிலையம்பதி** *kabilaiyampadi,* பெ.(n.) 1. கபிலநகர்; Kapila city. 2.கபிலவசுது (புத்தர் பிறந்த ஊர்); birth place of Buddha *"கரவரும் பெருமைக் கபிலையம் பதியின்" (மணிமே. 26:44).*

*[கவிர் → கவிரம் → கபிலம் → கபிலை.]*

**கபுக்குக் கபுக்கெனல்** *kabukku-k-kabukkeṉal,* பெ.(n.) ஓர் ஒலிக்குறிப்பு; onom. sounding impetuously, sound of gurgling water.

**பட.,க.** கபகப.

*[கபுக்கு + கபுக்கு + எனல்.]*

**கபோதகத்தலை** *kabōtaka-t-talai* கொடுங்கை–யைத்தாங்கும் பலகை (நெடுநல்.48. உரை); wooden support under a cornice or other projection.

*[கரும் புறா → கரும்புதா → கபோதா + கபோதகம் + தலை.]*

மேற்பாரத்தைத் தூணுக்கு மாற்றுகிற உறுப்பாய தாங்கு பலகையைச் சிற்ப வேலைப்பாட்டுடன் அமைப்பது உண்டு. புறாவின் தலையைப் போல் அமையும் தன்மையை நோக்கி வீட்டின் வெளிப்புறம் நீண்டு வளைந்துள்ள கொடுங்கைப் பலகையைக் கபோதம் எனக்குறித்தனர்.

**கபோதகநியாயம்** *kabōdaga niyāyam,* பெ.(n.) ***கரும்புறாநயன்*** பார்க்க; see *karumpuṟānayaṉ*. *"கபோதக நியாயமே கடுப்ப" (பூவாளூர்ப்.).*

*[கரும்புறா → கபோதகம் > **வ.** கபோதகம் வ.நியாய > த. நியாயம்.]*

***கபோதம்*** பார்க்க

**கபோதகம்**[1] *kapōdagam,* பெ.(n.) 1.கரும்புறா; black dove (திவா.). 2. புறா (திவா.); dove. 3. வீட்டின் கொடுங்கை; overhanging projections of a house. *"பதலைக் கபோதகக் கொளமாட நெற்றி" (திவ்.பெரியதி.3,8,2).*

**H.** kabutar, kabutār; **Pkt.** kabōt; **Skt.** kapota.

*[கரும்புறா→கரும்புதா → கபோதம்.]*

**த.** *கரும்புறா (கரும்புதா) >* **Skt.** kapota. *இத்தமிழ்ச் சொல் வட இந்திய மொழிகளிலும் கபுதார், கபுத்தர், கபோத்தர் எனப் பலவாறாகத் திரிந்துள்ளது.*

**கபோதகம்**[2] *kapōdagam,* பெ.(n.) 1.பெருவிரல் விட்டு நிமிர மற்றை நான்கு விரல்களும் ஒட்டி நிமிரும் இணையாவினைக்கை; (Natya) a gesture with one hand in which all the fingers but the thumb is kept as far away as possible, one of 33 iṉaiyā-viṉai-k-kai. *"காணுங்காலைக் கபோத மென்பது பேணிய பதாகையிற் பெருவிரல் விட்டு*

*மென்பது பேணிய பதாகையிற் பெருவிரல் விட்டு நிமிரும்" (சிலப்.3:18.உரை.).* 2. இரண்டு கைகளையும் கபோதகக் கையாகக் காட்டும் இணைக்கை (Natya) a gesture with both hands in which they are joined in Kapotam pose. *"கருதுங்காலைக் கபோத விணைக்கை யிருகையும் கபோதமிசைந்து நிற்பதுவே" (சிலப் 3:18 உரை.).*

*[த. கரும்புறா → கரும்புதா >* **Skt.** *kapōta]*

**கபோதி** *kapōdi,* பெ.(n.) ***கண்போகி*** பார்க்க; see *kaṇpogi.* 1. கண்தெரியாதவன்; blind person. 2. பண்பில்லாதவன்; characterless person. 3. ஒன்றுக்கும் உதவாதவன்; worthless chap.

**க.** கபோதி, கபோசி; **தெ.** கபோதி.

*[கண்+போகி – கண்போகி → கபோகி → கபோதி (கொ.வ.).]*

**கபோலம்** *kabōlam,* பெ.(n.) கன்னம்; cheek ***கப்பலம்*** பார்க்க; *see kappalam. "அந்நாயகன் கபோலத் திட்ட கையுகிர்க்குறியும்" (திருவிளை. இரச.30.).*

**க.** கபோல, கப்பால.

*[கப்பல் = பள்ளம். கப்பல் → கப்பலம் → கூப்போலம் = குழிவான கன்னம்.]*

**கம்**[1] *kam,* பெ.(n.) நீர்; water.

*[அம் → கம் (தண்ணீர்).]*

**கம்**[2] *kam,* பெ.(n.) 1.வெண்மை (பிங்.); whiteness. 2.ஆடு (அக.நி.); goat, sheep.

*[அம் → கம் = தண்ணீர், நீரின் நுரை, வெண்மை வெள்ளாடு.]*

**கம்**[3] *kam,* பெ.(n.) 1. தலை (திவா.); head. 2. மண்டை யோடு; skull. *"காதுவேலன்ன கண்ணார் கம்கை நீர் சுமந்தது ஏதுக்கோமின்" (திருவிளை.).* 3. முகில் (சூடா.); cloud. 4. வீட்டின்பம்; final bliss. *"கம்மெனும் பெருவீட்டின்ப நுகர்விக்கும் காட்சி யானும்" (காஞ்சிப்பு. திருவேகம்ப.49).*

*[உம் → அம் → கம். உம் = மேல், உயரம், உயரத்திலிருப்பது.]*

**த.** கம் > **Skt.** ka.

**கம்**[4] *kam,* பெ.(n.) 1. தொழில்; act, operation, employment. *"கம்மு முருமென் கிளவியும்" (தொல். எழுத்து.328.).* 2. கம்மியர் தொழில்; (நன்.223,விருத்.); smith's work (செ.அக.).

*[கரு → கருத்தல் = செய்தல். கரு → கருமம் → கம்மம் → கம் = தொழில்.]*

**கம்**[5] *kam,* பெ.(n.) நறுமணம்; fragrance. ***கமகமத்தல்*** பார்க்க; see *kama kama-,*

**தெ.** கம்பு; **க.** கம்பு; **கொலா.** கம்.

*[கம் → கமம் = நிறைதல், பரவுதல். கம் = பரவும் நறுமணம்.]*

**கம்**[6] *kam,* பெ.(n.) 1.காற்று; air, wind. 2.உயிர்; soul.

*[அம் → கம் (நிறைதல், பரவுதல், வீசுதல், இயங்குதல்.) கமம் = நிறைதல்.]*

**கம்**[7] *kam,* இடை, (part) கூட, உடன் also, and, with.

*[கும் → கம். கும் = கூடுதல்.]*

கூடுதலைக் குறிக்கும் கும் என்னும் வினைச்சொல், உ–அ திரிபு முறைப்படி, கம் என்று திரியவுஞ் செய்யும்.

"கமம்நிறைந் தியலும்" [தொல்.சொல். உரி.57]

நிறைதல் = நிரம்புதல், மிகுதல், கூடுதல்.

cum என்னும் இலத்தீன அடிச்சொல்லும் முன்னொட்டாகும் போது com என்று திரிந்து, வருஞ்சொல் முதலெழுத்திற்கேற்ப con, col, cor என்று ஈறுமாறும். சில எழுத்துகள் முன் co என்று ஈறு கெடவுஞ் செய்யும். ஆங்கிலத்திலும் இவ்வாறே மாறும்.

இங்ஙனம் இலத்தீனத்தில் கும்–கொம் என்றும், ஆங்கிலத்திற் கம் என்றும் திரியும் முன்னொட்டு, கிரேக்கத்தில் ஸூம் (sum) என்றும் ஸிம் (sym) என்றும், சமற்கிருதத்தில் ஸம் (sum) என்றும் திரியும். கிரேக்க முன்னொட்டும், இலத்தீன முன்னொட்டுப் போற் பின்வரும் எழுத்திற்கேற்ப, சின் (syn), சில(syl) என்றும், திரியும் சமற்கிருத முன்னொட்டு ஈறுகெட்டு ஸ (sa) என்றும் நிற்கும்.

இவற்றிற்கெல்லாம், கூட [உடன்] என்பதே பொருள்.

கூட என்பதற்கு நேரான கும்மல் என்னும் தென்சொல்லே, முன்னெட்டாகிக் கும் என்று

குறுகியும், கும்→ கொம் → கம்; கும் → ஸூம்; ஸூம் ஸம் என்று திரிந்தும், ஆரிய மொழிகளில் வழங்கும் அதன் முதன்மெய், ஐரோப்பாவின் வடமேற்குப் பகுதியிலும் மேற்குப் பகுதியிலும் இயல்பாகவும் அதன் தென் கிழக்குப் பகுதியிலும் இந்தியாவிலும் ஸகரமாகத் திரிந்தும், வழங்குகிறது.

**கம்பக்கட்டை** *kamba-k-kaṭṭai,* பெ(n.) தாங்குசாரக் கட்டை; temporary wall erected for supporting an arch under construction (கொ.வ.).

*[கம்பு = கழி. கோல். கம்பு + அம் + கட்டை = கம்பங்கட்டை → கம்பக்கட்டை.]*

**கம்பக்கணை** *kamba-k-kaṇai,* பெ.(n.) வல்லாளன், திறனாளன் (யாழ்.அக.); a person of strong will.

*[கம்பம் + கணை – கம்பக்கணை. கம்பத்தில் குறிப்பிட்ட இலக்குப் புள்ளியில் தவறாது கணை (அம்பு) எய்யும் திறமையாளனைக் குறித்த சொல். நாளடைவில் மனவுறுதி கொண்டவனைக் குறித்தது.]*

**கம்பக்காய்ச்சல்** *kamba-k-kāyccal,* பெ.(n.) ஒருவகை நடுக்கக் காய்ச்சல்; a kind of fever (சா.அக.).

கம்பம் = அசைவு, நடுக்கம்.

*[கம்பம் + காய்ச்சல்.]*

**கம்பக்காரன்** *kamba-k-kāraṉ,* பெ.(n.) மனநிலை குன்றியவன், கிறுக்கன்; a madman.

ம. கம்பக்காரன்

*[கம்பம் = அசைவு, நடுக்கம். கம்பம் + காரன்.]*

**கம்பக்காலம்** *kamba-k-kālam,* பெ.(n.) பனிக்காலம்; the cool dewy season.

ம. கம்பனம்

*[கம் = நீர். கம், கம்பம் + காலம்.]*

**கம்பக்கூத்தாடி** *kamba-k-kūttāḍi,* பெ(n.) கழைக் கூத்தாடி; pole dancer.

ம. கம்பக்கூத்தாடி

*[கம்பம் + கூத்தாடி – கம்பக்கூத்தாடி. நட்டுவைத்த கம்பத்தில் அல்லது மூங்கிற்கழையில் ஏறிக் கூத்தாடுபவன்.]*

**கம்பக்கூத்து** *kamba-k-kūttu,* பெ.(n.) கழைக்கூத்து; pole-dancing, acrobatic performance (செ.அக.).

மறுவ. தொம்பன் ஆட்டம்

ம. கம்பக்களி, கம்பக்கூத்து.

*[கம்பம் + கூத்து – கம்பக்கூத்து. கம்பத்தில் ஏறி ஆடிக்காட்டும் பொழுதுபோக்கு, உடலாற்றல் விளையாட்டுக் கலை.]*

**கம்பங்கஞ்சி** *kambaṅ-kañji,* பெ.(n.)கம்பரிசிக்கஞ்சி; gruel prepared from bulrush millet from. *'காணாது கண்ட கம்பங்கூழைச் சிந்தாது குடியடி சில்லிமூக்கி'* (பழ.).

*[கம்பு + அம் + கஞ்சி. 'அம்' சாரியை.]*

**கம்பங்களி** *kambaṅ-kaḷi,* பெ.(n.) கம்புமாவாற் சமைத்த களி; porridge made of the flour of bulrush millet.

*[கம்பு + அம் + களி – கம்பங்களி. 'அம்' சாரியை.]*

**கம்பங்கூழ்** *kambaṉkūḻ,* பெ.(n.) கம்பரிசியினின்று சமைத்த கூழ்; pudding prepared from spiked millet (சா.அக.).

*[கம்பு + அம் + கூழ். 'அம்' சாரியை.]*

**கம்பங்கொளுத்து-தல்** *kambaṉ-koḷuttu,* 5.செ.குன்றாவி.(v.t.) கம்பவாணத்துக்கு நெருப்பு வைத்தல் (இ.வ.); to ignite fire-works fastened to a post.

*[கம்பம் + கொளுத்து.]*

**கம்பங்கோரை** *kambaṉkōrai,* பெ.(n.) ஒருவகைக் கோரைப்புல்; a kind of Korai grass (சா.அக.).

*[கம்பு + அம் + கோரை.]*

**கம்பசூத்திரம்** *kamba-šūttiram,* பெ.(n.)1.கம்பங்கள் இடையில் கயிறு கட்டி அதன்மேலேறி நடந்தும், ஓடியும், ஆடியும் காட்டும் அருஞ்செயல்கள்; daring feats of an acrobat on the rope. 2.அருஞ்செயல்கள்; rare deeds.

*[கம்பம் + சூத்திரம். **Skt.** சூத்ர = கயிறு. கழைக் கூத்தரின் கம்பக்கயிறு, கம்பசூத்திரம் எனப்பட்டது. கழையாடல் எனின் முற்றுந் தமிழாம். **கழையாடல்** பார்க்க; see kaḻai-yāḍal.]*

கம்பசூத்திரம் என்னும் சொல்லுக்குச் சென்னை அகரமுதலியில் 'கம்பர் இராமா யணத்தில் அமைத்த உய்த்துணர் பொருள் தரும்

அருங்கவி' எனப்பொருள் கூறியிருப்பது பொருந்துவதன்று. உய்த்துணரப் பாடுவது எல்லாப் புலவர்க்கும் பொதுவானது. கயிற்றின் மேல் நடப்பதைப் போல், பல்வேறு இக்கட்டுகளிடையே செயலாற்றுவதைக் கம்பசூத்திரம் என்று கூறுவது உலக வழக்கு.

**கம்பசேவை** *kamba-šēvai,* பெ.(n.) கம்பத்தில் திருவிளக்கு ஏற்றிச் செய்யும் பூசை (தஞ்சை.); a festival in which an oil lamp mounted on a stand, is worshipped.

பட. கம்புவ (கூட்டுணவு).

*[கம்பம் + சேவை – கம்பசேவை. செய் → செய்வு → சேவை.]*

வடித்த சோற்றை மலைபோல் குவித்து அதன் நடுவில் நாமமிட்ட விளக்குக் கம்பத்தை நட்டு, பெருமாளாகக் கருதி வணங்கியபின் அவ்வுணவைப் பிறவெஞ்சணங்களோடு அனை வரும் உண்ண வழங்கப்படுவது.

**கம்பஞ்சம்பா** *kambañ-cambā,* பெ.(n.) சம்பா நெல்வகை; a kind of paddy resembling bulrush millet.

*[கம்பு + அம் + சம்பா – கம்பஞ் சம்பா. 'அம்' சாரியை. இது வடிவத்தில் கம்பைப்போன்ற உருளரிசி நெல்வகை; நறுமணமிக்கது.]*

**கம்பஞ்சோறு** *kambañcōṟu,* பெ.(n.) கம்பரிசிச் சோறு; cooked millet (சா.அக.).

*[கம்பு + அம் + சோறு. 'அம்' சாரியை]*

**கம்பட்டக்காரன்** *kambaṭṭa-k-kāraṉ,* பெ.(n.) நாணயம் செய்வோன் (வின்.); coiner.

**க.** கம்மடி; **கோத.** கம்மட்ட *(இ.பெ.).*

*[கம் → கம்பட்டம் + காரன் – கம்பட்டக்காரன்.]*

கம் = கொல்லுத்தொழில். கம்முத்தொழில் செய்வோன் கம்மாளன் என்றும் கம்பட்டன் என்றும் அழைக்கப்படுவது மரபு.

**கம்பட்டக்கூடம்** *kambatta-k-kūḍam,* பெ.(n.) நாணயச்சாலை (வின்.); mint.

*[கம்பட்டம் + கூடம் – கம்பட்டக்கூடம்.]*

**கம்பட்டசாலை** *kambaṭṭa-šālai,* பெ.(n.) ***கம்பட்டக் கூடம்*** பார்க்க; see *kambaṭṭa-k-kūḍam.*

*[கம்பட்டம் + சாலை.]*

**கம்பட்டம்** *kambaṭṭam,* பெ.(n.) 1. நாணயம் (வின்.); coinage, coin. 2.அச்சு; a mint (சேரநா.) (ச.அக.). ***கம்*** பார்க்க; see *Kam.*

**ம.** கம்மிட்டம், கம்மட்டம்; **க., கோத.** கம்மட.

*[கம் → கம்பட்டம்.]*

**கம்பட்டமடி–த்தல்** *kambaṭṭamaḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) காசடித்தல் (இ.நூ.த.பெ.அக.); to mint money.

*[கம் → கம்பட்டம் + அடித்தல். கம்மம் = கருமான் தொழில், இரும்பு போன்ற மாழைத்தொழில். கம்மம் → கம்மடம் → கம்பட்டம்.]*

**கம்பட்டமுளை** *kambaṭṭa-muḷai,* பெ.(n.) நாணய முத்திரை (வின்.); die, coining stamp.

*[கம்பட்டம் + முளை – கம்பட்டமுளை. முளை = கரு, மூலவடிவம்.]*

**கம்படி** *kambaḍi,* பெ.(n.) ஊர்ப்புறத்துக் கம்பு விளைவிக்கும் நிலம்; கம்பங்கொல்லை (G.Tn.D.i. 159.); plot of land on the out skirts of a village set apart for growing bulrush millet.

**ஒ.நோ.** மலையடி

*[கம்பு + அடி – கம்படி. அடி = அடிவாரம், தாழ்வான நிலம்.]*

**கம்பத்தக்காரன்** *kambatta-k-kāraṉ,* பெ.(n.) நிலவுடைமையாளன்; one who owns, landed property. ஏழூர்க் கம்பத்தக்காரன் (இ.வ.).

**தெ.** கம்மதமு (பண்ணை).

*[கம் → கம்பத்தம் + காரன் – கம்பத்தக்காரன். கம்பத்தம் = உழவுத்தொழில். உழவுத்தொழில் செய்பவனைக் கமக்காரன் என்பது ஈழத்து வழக்கு.]*

**கம்பத்தம்** *kambattam,* பெ.(n.) 1.சொந்த வேளாண்மை; agriculture, cultivation by the owner with his own stock. 2. வேளாண்நிலம்; agricultural land.

தெ. கம்மதமு

*[கம் → கம்மம் → கம்மத்தம் → கம்பத்தம். அம் → கம் = நீர். நீரைக்குறித்த சொல் நன்செய்ப்பயிர் செய்யும் வேளாண்மையைக் குறித்தது.]*

**கம்பத்தன்** *kambattaṉ,* பெ.(n.) இராவணன்; Erāvaṇan, the king of Ceylon.

*[கம்பத்தன் = பெருநிலக்கிழார், தலைவன், அரசன்]*

**கம்பத்திளையனார்** *kambattiḷaiyaṉār,* பெ.(n.) முருகன்; Lord Murugaṉ.

*[கம்பம் + அத்து + இளையனார். இளையனார் = இளையவன், முருகன்.]*

**திருவண்ணாமலை அண்ணாமலையார் கோயில் குளத்தருகேயுள்ள சிறு கல்மண்டபத் தூணில் வடிக்கப்பட்டுள்ள முருகனின் வடிவம்.**

கந்து = தூண், பற்றுக்கோடு. கந்து = கந்தன் = தூணிற்பொறிக்கப்பட்டவன் அல்லது பற்றுக் கோடானவன், முருகன்.

**கம்பதாளி** *kambatāḷi,* பெ.(n.) ஒருவகை மன நரம்பியல் நோய்; a kind of hysteria due to menstrual disorder; *"சூலைநோய் கம்பதாளி குன்மமும்" (தேவா. 995.4).*

*[ஒருகா. கம்பு + அதளி – கம்பதளி → கம்பதாளி = கம்பினால் குத்துவது போன்ற வலிமிகுக்கும் நோய். அதளி = குழப்பம், வலி.]*

**கம்பதியக்கம்** *kambadiyakkam,* பெ.(n.) ஒருவகை மனநோய்; a variety of acute insanity (சா.அக.).

*[கம் → கம்மம் → கம்பம் (நடுக்கம்) + தியக்கம் (கலக்கம்).]*

**கம்பந்தட்டு** *kambantaṭṭu,* பெ.(n.) **கம்பந்தட்டை** பார்க்க; see *kambantaṭṭai.*

*[கம்பு + அம் + தட்டு. 'அம்' சாரியை.]*

**கம்பந்தட்டை** *kambantaṭṭai,* பெ.(n.) கம்பங்கதிரின் தாள்; straw of the bulrush millet.

*[கம்பு+அம்+தட்டை – கம்பந்தட்டை. 'அம்' சாரியை. தாள் → தாட்டு → தாட்டை → தட்டை.]*

**கம்பந்தாளி** *kamban-tāḷi,* பெ.(n.) தாளிக்கொடி வகை (யாழ்.அக.); convolvulus.

*[கம்பு + அம் + தாளி – கம்பந்தாளி.]*

**கம்பந்திராய்** *kambantirāy,* பெ.(n.) ஒருவகைத் திராய்ச்செடி; a species of bitter grass plant (சா.அக).

*[கம்பம் + திராய், திராய் = செடிவகை.]*

**கம்பநாட்டாழ்வான்** *kamba-nāṭṭāḷvāṉ,* பெ.(n.) கம்பன்; poet Kamban, spoken of as a devotee of Visṅu. *"ஆதித்தன் கம்பநாட்டாழ்வான் கவி" (கம்பரா. தனி.1.).*

*[கம்பநாடு + ஆழ்வான். கம்பனைக் கம்பநாடன் என்றழைப்பதுண்டு. 'ஆழ்வான்' மதிப்புரவு கருதிய அடைமொழி.]*

**கம்பநாடன்** *kamba-nāḍaṉ,* பெ.(n.) கம்பன்; Kamban so called because he lived probably in Kamba-nādu. *"கம்பநாடன் சொன்ன மும்மணிக் கோவை" (தமிழ்நா.102.).*

*[கம்பநாடு + அன் – கம்பநாடன்.]*

கம்பனும் கம்பனின் முன்னோரும் வாழ்ந்த சோழநாட்டுப் பகுதி கம்பநாடு என்றழைக் கப்பட்டதால் பெற்ற பெயர். நாடு என்னும் பிரிவு சோழர் காலத்தில் கூற்றம் என்னும் மாவட்டப் பிரிவின் உட்பிரிவு. இன்றைய வட்டம் (taluk) என்னும் நிலப்பிரிவுக்கு ஒப்பானது. காவிரிக்குத் தென்கரையில் கம்பநாடும் வடகரையில் கரகநாடும் இருந்ததாகக் கூறப் படுவது செவிவழிச் செய்தி. ***கம்பநாடு*** பார்க்க; see *kambanāḍu.*

**கம்பநாடு** *kamba-nāḍu,* பெ.(n.) சோணாட்டைச் சார்ந்த குறுநிலப் பகுதி; a taluk in Cōla-nāḍu. *"கம்பநாடுடைய வள்ளல் கவிச்சக்ரவர்த்தி" (கம்பரா. தனி.6.) (செ.அக.).*

ம. கம்பநாடு

*[கம்பம் + நாடு – கம்பநாடு.]*

காவிரிக்குத் தென்கரையில் கம்பநாடும் வடகரையில் கரகநாடும் இருந்ததாக நிலவும் செவிவழிச் செய்தி பிற்காலத்தில் மாரியம்மன் விழாவாக மாறிய அம்மன் வழிபாட்டிலும் இடம்

செவ்வாய்க்கிழமையன்று அம்மன் கோவிலில் 15 நாளுக்கு முன்பே நடப்பட்ட முத்தலை வெட் பாலைக்கம்பத்திற்குப் பலிதந்து பொங்கல் இட்டுப்பூசை செய்து பாடிவிழாக்கோள் எடுப்பது கம்பநாட்டு வழக்கம். கம்பம் நடாமல் கரகம் எனப்படும் தீச்சட்டி சுமந்து வேப்பிலை எடுத்து ஆடிக்கொண்டுவந்து தீமிதிப்பது கரகநாட்டார் வழக்கம்.

முத்தலை வெட்பாலைக் கம்பம் நடும் வழக்கமுடையவர்கள் வாழ்ந்த ஊர்ப்பகுதி கம்பநாடு எனப்பட்டது. இவர்கள் தீமிதிக்காமல் விழாப்பறையறைந்து கம்பம் நட்ட நாள்முதல் கம்பத்திற்குப் பலியிடும் 15ஆம் நாள்வரை அதனைச் சுற்றி ஒயிலாட்டம் ஆடுவர்.

**கம்பபாணம்** *kamba-bāṇam,* பெ.(n.) **கம்பவாணம்** பார்க்க; see *kamba-vāṇam.*

*[கம்பவாணம் → கம்பபாணம்.]*

**கம்பம்**[1] *kambam,* பெ.(n.) 1. அடிமரம்; stump of a tree. தெருக்கம்பத்தில் மாட்டைக் கட்டக் கூடாது (உ.வ). 2. தூண்(திவா.); post, pillar.3. விளக்குத் தண்டு; lamp-stand, candle stick. 4. கழைக் கூத்திற்குப் பயன்படும் கொம்பு; pole used by rope-dancers. 5.வெடிகளை வெடிக்கப் பயன்படும் தூண்; a post erected for fireworks.

**ம.**கம்பம்; **க.**கம்ப; **து.**கம்ப; **தெ.**கம்ப; **பட.**கம்பு.

**Skt.** stambha; **Pkt.** khambha.

*[கொம்பு → கம்பு → கம்பம் = பெருமரத்தூண். 'அம்' பெருமைப் பொருட் பின்னொட்டு.]*

வடமொழியில் "ஸ்தம்ப்" = ஊன்று, நில் தாங்கு, ஸ்தம்ப = ஊன்றிய [மரம் அல்லது கல் அல்லது செங்கல்] தூண் எனக் கூறப்படினும் அச்சொல் "ஸ்கம்ப்" என்பதன் திரியாயிருக்கலாம் என மானியர் வில்லியம்சு அகரமுதலி கூறுகிறது.

வடமொழியில் 'stambha' ஐரோப்பிய மொழிகளில் stump எனும் சொல் காலால் மிதித்தல் அல்லது அழுத்துதலைக் குறிப்பிடுகிறது. தமிழில் உள்ள "கம்பு" நீட்சிப்பொருள் குறித்தது. கட்டடக் கலை பண்டைத் தமிழரிடை மலர்ந்த காலம் சிந்துவெளி நாகரிகத்திற்கும் முந்தையது. கி.மு. 1000 வரையிலும் கூட ஆரியர் கட்டடக்கலை அறியாதவர்களாயிருந்தனர். ஆதலின் "ஸ்தம்ப்" என்பது தூணைக் குறிக்கும் சொல்லாக வழக்கூன்றியிருக்க வாய்ப்பில்லை. தமிழ் கம்பு → கம்பம் சொல்லே வடமொழி 'ஸ்தம்ப' சொல்லுக்கு மூலமாகும்.

**கம்பம்**[2] *kambam,* பெ.(n.) 1. அசைவு; vibration, shaking, motion. *"கம்ப மில்லாக் கழிபெருஞ் செல்வர்" (மணிமே.17:63).* 2. நடுக்கம்; tremor, tremulousness, quaking, *"கம்பஞ்செய் பிரிவு நீங்கி"* (சீவக.1737.).

**து.** கம்ப; **ம.** கம்பம்; **Skt.** kamba;**Indon.** gempa bumi; **Mal.** gempa.

*[கம் = நீர், நீரலை, அலைவு. கம் → கம்பம் = நீரலைபோன்று அசையும் நடுக்கம், அலைவு.]*

கம்பு என்னும் சொல்லும் நீர் எனப்பொருள் படும். சேக்கிழார் இப்பொருளில் இச்சொல்லை ஆண்டுள்ளார்.

**த.** கம்பம் > **Skt.** kamba

**கம்பம்**[3] *kambam,* பெ.(n.) கச்சியேகாம்பரர் கோயில்; the Šiva shrine at Kanchipuram. *"கண்ணுதற் பரமற்கிடங் கம்பமே" (தேவா.1035.1.).*

*[ஏகம்பம் → கம்பம். (முதற்குறை)]*

**கம்பம்**[4] *kambam,* பெ.(n.) தாலம்பம், வெள்ளை சாலாங்கம் கற்பரி முதலிய வைப்பு நஞ்சுகள் (மூ.அ.); mineral poisons.

*[கம் → கம்பம் = நடுங்கச்செய்வது, சாவிப்பது.]*

**த.** கம்பம் > **Skt.** kamba (to tremble)

**கம்பம்**[5] *kambam,* பெ.(n.) பாய்மரம் (யாழ்.அக.); mast.

*[கொம்பு → கம்பு → கம்பம்.]*

**கம்பம்**[6] *kambam,* பெ.(n.) சிற்றூரின் பெயர்; a village name.

**Pkt.,Pali.** kammam; **H.** gām; **Port.**campo; **Mal.** kampung.

*[கம் → (நீர்) கம்மம் → கம்பம். கம்பம்=வயல் சார்ந்த ஊர்.]*

**கம்பம்**[7] *kambam,* பெ.(n.) 1. பேய்ப்புல்; a kind of wild grass. 2. அரிசிப்புல்; a kind of grass. 3. வாலுளவை மரம்; intelect tree (சா.அக).

*[கம் → கம்பம் = அசைவு, நடுக்கம், அச்சம் தரத்தக்கது.]*

**கம்பம்**[8] *kambam,* பெ.(n.) வேளாண்மை; agriculture.

[கம்மம் → கம்பம்.]

**கம்பம்**[9] *kambam,* பெ.(n.) சுருளிமலை அருகில் உள்ள வேளாண் வளமிக்க ஊர்; a municipal town near surulimalai town famous for agriculturel.

[கம்பம் → கம்மம் → கம்பம். கம்மம் = வேளாண்மை.]

**கம்பம்**[10] *kambam,* பெ.(n.) வழலை; a universal salt used in alchemy.

[கம் → கம்பம்.]

**கம்பம்புல்** *kambam-pul,* பெ.(n.) புல்வகை (வின்.); செந்தினை; stalk grass, bulrush millet.

ம. கம்பம்

[கம்பு + அம் + புல் – கம்பம்புல். 'அம்' சாரியை.]

**கம்பம்பொரி** *kambampori,* பெ.(n.) பொரித்தகம்பு; fried millet (சா.அக).

[கம்பு + அம் + பொரி. 'அம்' சாரியை]

**கம்பர்** *kambar,* பெ.(n.) ***கம்பன்*** பார்க்க; see *Kamban* *"கம்பர் கொள்ளும் துணை" (பெரியபு.87.).*

[கம்பன் → கம்பர். 'அர்' உயர்வுப் பன்மையீறு.]

**கம்பர்மேடு** *kambarmēdu,* பெ.(n.) கம்பர் பிறந்த ஊரான தேரழுந்தூரில் உள்ள மேட்டுப்பகுதி; a mound at Therazhundur, the birth place of the poet Kambar.

[கம்பர் + மேடு.]

கம்பர் மேட்டில் செய்த அகழ்வாராய்ச்சியில் பெருங்கற்காலச் சின்னங்களும், இடைக்காலச் சின்னங்களும் கிடைத்துள்ளன. சீன எழுத்து கொண்ட வெண்கலமணியும் சீனச் செப்புக் காசுகளும் கிடைத்துள்ளன. மணியில் உள்ள "பீனாஸ்" என்ற சீனச்சொல் "அமைதி" என்ற பொருள் கொண்டது.

**கம்பரசம் பேட்டை** *kambarasam pēttai,* பெ.(n.) திருச்சி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Thiruchy district.

த.பட்டி> E. pet >த.பேட்டை

[கம்பம் + அரசன் + பேட்டை – கம்பரசன் பேட்டை → கம்பரசம் பேட்டை. கம்பம் = வயல் சார்ந்த ஊர்.]

**கம்பராசபுரம்** *kambarāsapuram,* பெ.(n.) காஞ்சி புரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kanchi puram district.

[கம்பம் + அரசன் + புரம்–கம்பரசன் புரம் → கம்பராசபுரம். கம்பம் = வயல் சார்ந்த ஊர்.]

**கம்பராமாயணம்** *kambarāmāyaṇam,* பெ.(n.) கம்பரியற்றிய இராமன் கதைக் காப்பியம்; the story of Rama written in Tamil by the poet Kambar.

[கம்பர் + இராமாயணம்.]

இடைக்காலத் தமிழிலக்கியத்துள் நிலைத்த சிறப்புகள் பலவற்றைக் கொண்டதும், தொன் மக்கதையை அடிப்படையாகக் கொண்டதும், கம்பரால் யாக்கப்பட்டதுமான இப்பேரி லக்கியம் வால்மீகியின் காப்பியத்தை முதல் நூலாகக் கொண்டு அமைந்த வழிநூலாகும்; என்றாலும் முதல் நூற்றன்மைகள் பலவற்றைத் தமிழ் மரபு, பண்பாட்டிற்கேற்ப அமைத்து ஆறு காண்டங் களையும் பத்தாயிரம் பாடல்களையும் பெற்று விளங்கும் பேரிலக்கியம். உலகப்புகழ் பெற்ற இலக்கியங்களுள் ஒன்றாகும்.

**கம்பரிசி** *kambariśi,* பெ.(n.) கம்புத் தவசம்; husked grain of bulrush millet.

ம. கம்பப்பயறு (ஒருவகைத்தவசம்).

[கம்பு + அரிசி – கம்பரிசி.]

**கம்பல்**[1] *kambal,* பெ.(n.) ஆடை; garment, clothing. *"தறைந்த தலையுந் தன் கம்பலும்" (கலித்.65:6.).*

[கம் = நீர். கம் → கம்பல் = ஈரத்துணி.]

**கம்பல்**[2] *kambal,* பெ.(n.) பேரொலி (பெருங். இலா வாண. 2: 138); roar, noise.

[கும் → கம் → கம்பல் → கம்பலை = திரண்டெழும் பேரோசை. முழங்கும் பேரோசை எழுப்பும் சங்கும், கம்பு அல்லது கம்பம் என வழங்கியது. ஐந்திர விடமொழிகளுள் ஒன்றான மராத்தியில் கம்பு எனுஞ்சொல் ஊதுசங்கைக் குறிக்கும். கண்ணீரும் கம்பலையுமாய் என்னும் வழக்கை ஒப்புநோக்குக.]

**கம்பல்**[3] *kambal,* பெ.(n.) மீன் பிடிப்பதற்கு ஏதுவாகச் சிறுகுச்சிகளையும், மரத்து இலைகளையும் கொண்டு ஆற்றின் குறுக்கே எழுப்பப்படும் தடை; a small barrage of twigs and leaves of trees put up across a canal for fishing.

ம. கம்பல்

[கம்பு→ கம்பல்.]

**கம்பலம்**[1] *kambalam,* பெ.(n.) கம்பளிப்போர்வை (பிங்.); woollen blanket, rug. *"கம்பலத்தன்ன" (நற். 24.).* 2.செம்மணிக் கம்பளம்; carpet. *"செய்ய கம்பலம் விரித்தென" (சீகாளத்.பு.நான்முக.108).* 3. மேற்கட்டி; canopy, tester. *"மேகக் கம்பல நிழற்கீழ் வைகுங் கடவுளர்" (இரகு. குசன 66.).*

[கரும் + படம் = கரும்படம் → கம்படம் → கம்பளம் → கம்பலம். கம்பளத்தைக் கம்பலம் எனக்குறிப்பது வழுவாம்.]

**கம்பலம்**[2] *kambalam,* பெ.(n.) ***கம்பலை***[1] பார்க்க; see *kambalai*[1]. *"கம்பலம் பொலிவெய்த" (சீவக.56.).*

[கம்பலை → கம்பலம்.]

**கம்பலி** *kambali,* பெ.(n.) பறைவகை; a kind of drum. *"கம்பலி யுறுமை தக்கை"(கம்பரா.பிரமாத். 5.).*

[கம்பலை → கம்பலி.]

**கம்பலை**[1] *kambalai,* பெ.(n.) 1. ஒலி; sound, noise, clamour, roar. *"வம்பமாக்கள் கம்பலை மூதூர்" (மணிமே.3:126).* 2. யாழோசை (திவா.); sound of a lute. 3. மருதநிலம் (திவா.); agricultural tract. 4. யானையின் பிளிறல்; trumpeting of an elephant. *"களிறு விளிப்படுத்த கம்பலை வெறீஇ" (அகநா.165:2).* 5. பறவைகள் பேரிரைச்சல்; noise of the birds. *"வம்பப் புள்ளின் கம்பலை" (அகநா.181:9).* 6. அலர்மொழி; the idle talk in a village about any two lovers. *"கல் என் கம்பலை செய்து அகன்றோர்" (அகநா.227:22).* 7. ஓசை; sound. *"எங்கோ னிருந்த கம்பலை மூதூர்" (புறநா.51:1).* 8. சுழலோசை; roar. *"சுழற்கம்பலை" (புறநா.120:20).*

[கும் → கம் → கம்பல் → கம்பலை = திரண்டெழும் பேரோசை, யாழ்கள் பல இயைந்து எழுப்பத்தக்க இன்னோசை, இசை முழக்கம் அல்லும் பகலும் அறாத மருதநிலம்.]

**கம்பலை**[2] *kambalai,* பெ.(n.) 1. நடுக்கம் (சூடா.); trembling;fuivering, quaking. *"கண்ணீருங் கம்பலையுமாகி" (தாயு.நினைவொன்று.9).* 2. அச்சம் (பிங்.); fear, dread. 3.துன்பம் (திவா.); distress, suffering. 4.சச்சரவு (வின்.); uproar, tumult, quarrelling.

த. கம்பல் > **Skt.** kampa.

[கம் → கம்பல் → கம்பலை. கம்பல் = நடுக்கம்.]

**கம்பலை**[1]**-த்தல்** *kambalai-,* 4.செ.கு.வி.(v.i.) பேரொலிசெய்தல்; to roar, shout. *"கம்பலைத்தெழு காமுறு காளையர்"(தேவா.3,4.).*

து. கம்பியுனி (நடுங்குமாறு செய்).

[கம்பல் → கம்பலை.]

**கம்பலைகட்டு-தல்** *kambalai-kaṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) ***கம்பலைப்படு-*** பார்க்க; see *kambalai-p-paḍu.*

[கம்பலை + கட்டு]

**கம்பலைப்படு-தல்** *kambalai-p-paḍu-,*20 செ.கு.வி (v.i.) சச்சரவு செய்தல்; to quarrel, raise a tumult.

[கம்பலை + படு.]

**கம்பலைமாரி** *kambalai-māri,* பெ.(n.) 1.வேடர் வணங்கும் ஒரு பெண் தெய்வம்; female demon worshipped especially by hunters. 2.சீற்றங் கொண்டவள்; termagant, Kirago (செ.அக.).

[கம்பலை + மாரி. கம்பலை = ஆரவாரம், போர், போரூக்கம். சினம், மாரி = பெண் தெய்வம்.]

**கம்பவம்** *kambavam,* பெ.(n.) மாந்த உடம்புகளிலும், அணியும்துணிகளிலும் காணும் நுண்ணுயிரி, சீலைப்பேன்; a parasitic insect found upon man and his clothes (சா.அக.).

[கம் = நீர், வியர்வை. கம் → கம்பு →கம்பவம்.]

**கம்பவலை** *kamba-valai,* பெ.(n.) ஒருவகைப் பெரிய வலை; a kind of large fishing net (சேரநா.).

ம. கம்பாவல, கம்பவல.

[கம்பம் + வலை.]

**கம்பவாணம்** *kamba-vāṇam,* பெ.(n.) நீண்ட கம்பத்தில் இணைத்துக் கொளுத்தப்படும் வாணம் (கொ.வ.); fireworks shot from a tall post .

[கம்பம்[1] + வாணம். வாணம் = நீட்சி.]

**கம்பவாதம்** *kamba-vādam,* பெ.(n.) ***கம்பவூதம்*** பார்க்க; see kamba-vūdam.

[கம்பம்[2] + ஊதம்.]

**கம்பவிளக்கு** *kambaviḷakku,* பெ.(n.) பல அடுக்குத் தட்டுகள் அமைந்த வெண்கலக் குத்துவிளக்கு; a

large brass lamp with several oil pans one above the other (சேரநா.).

மறுவ. ஆயிரம் விளக்கு; அடுக்கு தீபம்.

ம. கம்பவிளக்கு

*[கம்பம் + விளக்கு.]*

**கம்பவூதை** *kambavūdai,* பெ.(n.) நடுக்கும் ஊதை நோய்; shaking palsy.

*[கம்பம் + ஊதை. கம்பம் = நடுக்கம்.]*

**கம்பளத்தாயி** *kambaḷattāyi,* பெ.(n.) தொட்டியர் வணங்கும் ஒரு பெண் தெய்வம் (இ.வ.); female deity worshipped by the toṭṭiya caste (செ.அக.).

*[கம்பளம் + அத்து + ஆயி – கம்பளத்தாயி. கம்பளம் = ஆந்திர மாநிலத்துப்பகுதி. 'அத்து' சாரியை. ஆயி = பெண்தெய்வம்.]*

**கம்பளத்தான்** *kambaḷattāṉ,* பெ.(n.) 1.தொட்டிய இனத்தவன் (E.T.); man of the toṭṭiya caste. 2. குடு குடுப்பாண்டி (இ.வ.); a soothsaying beggar in a motley attire playing on a taborine.

க. கம்பளக்கார-(கூலியாள்).

*[கம்பளம் + அத்து + ஆன் – கம்பளத்தான். 'கம்பளம்' இடப்பெயர். 'அத்து' சாரியை. 'ஆன்' ஆண்பாலீறு.]*

**கம்பளம்**[1] *kambaḷam,* பெ.(n.) 1. விலங்கினங்களின் மேல்படர்ந்திருக்கும் இழை; fleece of sheeps, goats, yaks etc. 2. கம்பளிப்போர்வை; woollen shawl, blanket. 3. செம்படாம் (திவா.); red cloth. 4. மயிர்ப்படாத்தாலாகிய தரைவிரிப்பு; wollen rug to be spread on the floor. *"இந்திரன் பாண்டு கம்பளந் துளக்கியது" (மணிமே.14:29.).* 5. தொட்டிய இனத்தினர்; the toṭṭiya caste. *"கம்பள வல்லக்கர் குலன்" (தனிப்பா.1, 339,51).* 6. செம்மறிக்கடா (சூடா.); ram of the fleecy kind. 7. மயிர் அடர்ந்த ஒரு மான்; a species with thick hair (சா.அக.).

ம. கம்பளம்; க. கம்பல; தெ. கம்பளமு.

த. கம்பளம் > Skt.kambala.

*[கரும் + படம் – கரும்படம் → கம்படளம் → கம்பளம் = கருமை நிறமுடையது.]*

**Skt.** kambala, a blanket, a cumley (very often a black colour). Its Tbh. is said to be kambaḷi, Gt. (p.520) is quite right in saying that kambala is composed of D.kar, black, and paṭa, cloth (that may appear as paḍa in D.) cf. The kuṟuba term kerimbaḍa (i.e. D. kari and paḍa=paṭa), a cumley. Kambaḷi, is no doubt, originally was karbaḷi (i.e. kar - paḷi), black cloth (K.K.E.D. xxxii).

**கம்பளம்**[2] *kambaḷam,* பெ.(n.) பரங்கிக்காய்; சருக்கரைப்பூசணி; squash gourd.

*[கும்பளம் → கம்பளம்.]*

**கம்பளர்**[1] *kambaḷar,* பெ.(n.) மருதநிலமக்கள் (திவா.); inhabitants of the agricultural tract.

*[கம் = நீர், வேளாண்மை, நன்செய் நிலம். கம் → கம்பளம் → கம்பளர்.]*

**கம்பளர்**[2] *kambḷar,* பெ.(n.) தொட்டிய இனத்தார்; men of the toṭṭiy a caste.

மறுவ. கம்பள நாயக்கர், கம்பளத்தான்.

*[கம் → கம்பு + அளர்– கம்பளர் = நன்செய், உழவுத்தொழில் மேற்கொண்ட உழவரினத்தார்.]*

கம்பளர் காம்பிலிச் சீமையினின்று வந்தவராவர் [சொ.ஆ.க.25].

**கம்பளவு** *kambaḷavu,*பெ.(n.) குறிப்பிட்ட அளவுடைய கம்பினைக் (கோல்) கொண்டு அளக்கும் நிலவளவை; measuring a plot of land with a rod.

ம. கம்பளவு

*[கம்பு + அளவு.]*

**கம்பளி**[1] *kambaḷi,* பெ.(n.) 1. மயிர்ப்படாம்; coarse, woollen blanket, woollen stuffs, hair cloth. *'கம்பளி மூட்டை என்று கரடி மூட்டையை அவிழ்த்தானாம்' (பழ.).* 2. தாறுமாறு (கொ.வ.); confusion, disorder. 3. ***கம்பளிச்செடி*** (மூ.அ.) பார்க்க; see kambaḷi-c-ceḍi.

தெ. கம்பிளி; க. கம்பளி, கம்பழி; ம.கம்பளி; து. கம்பொளி; பட. கம்பிகெ

**Skt.** kambala; **Mar.** kambeli.

*[கரும் + படம் – கரும்படம். கரும்படம் → கம்படம் → கம்பளம் → கம்பளி.]*

**கம்பளி**[2] *kambaḷi,* பெ.(n.) 1.ஒருவகை ஆடு (யாழ்.அக.); a kind of sheep. 2. ஒருவகைக் கரடி; a kind of woolly bear.

**து.** கம்பொளி

*[கரும் + படம் – கரும்படம் → கம்படம் → கம்பளம் → கம்பளி. கம்பளி ஆடை நெய்தலுக்குத் தேவையான கம்பளி இழைதரும் விலங்கு.]*

**கம்பளிக்கயிறு** *kambaḷi-k-kayiṟu,* பெ.(n.) கண்ணேறு படாமலிருக்க வீட்டின்முன் பிற பொருள் களுடன் கட்டப்படும் கயிறு; woollen rope (with certain articles) displayed before door of house to avert evil eye.

*[கம்பளி + கயிறு.]*

**கம்பளிக்கொண்டான்**[1] *kambaḷi-k-koṇḍāṉ* பெ.(n.) 1.கம்பளிப்பூச்சி; cater-piller, 2.குளப்பாலை; coorg milk plant. 3. முசுமுசுக்கை; bristly brigony (சா.அக.).

*[கம்பளி + கொண்டான்.]*

**கம்பளிக்கொண்டான்**[2] *kambaḷi-k-koṇḍāṉ,* பெ.(n.) ***கம்பளிச்செடி*** பார்க்க; see *kambaḷi-c-ceḍi.*

*[கம்பளி + கொண்டான்]*

**கம்பளிச்சட்டைமுனி** *kambaḷi-c-caṭṭaimuṉi,* பெ.(n.) ஒருமுனிவர்; a saint.

*[கம்பளி + சட்டை + முனி.]*

சிங்களத்தில் பிறந்து, தஞ்சை மாவட்டச் சீர்காழியில் முத்தியடைந்த சித்தர்; இவர் ஊத மருத்துவம், ஓகஅறிவு நூல்களையும் வைத்திய நிகண்டையும் பாடியுள்ளார். கைலாசச் சட்டைமுனி, சட்டைநாதர் என்னும் பெயர்களும் இவருக்குண்டு.

**கம்பளிச்செடி** *kambaḷi-c-ceḍi,* பெ.(n.) ***முசுக் கொட்டை*** (மூ.அ.) பார்க்க; see *musu-koṭṭai,.*

**க.** கம்பளிகிட; **ம.** கம்பளிச்செடி.

*[கம்பளி + செடி = கம்பளிப் புழுக்கள் விரும்பித்தின்னும் செடியாதலின் பெற்றபெயர்.]*

**கம்பளித்துணி** *kambaḷi-t-tuṇi,* பெ.(n.) கம்பளியால் நெய்த துணி; woollen shawl.

*[கம்பளி + துணி.]*

**கம்பளிப்பழம்** *kambaḷi-p-paḻam,* பெ.(n.) முசுக் கொட்டைப்பழம்; mulberry fruit (சா.அக.).

*[கம்பளி + பழம்.]*

**கம்பளிப்பிசின்** *kambaḷi-p-piśiṉ,* பெ.(n.) சிறு மரவகை (m.m.); white Emetic nut.

*[கம்பளி + பிசின் .]*

**கம்பளிப்புழு** *kambaḷi-p-puḻu,* பெ.(n.) உடலில் மயிருள்ள ஒரு வகைப் புழு (வின்.); hairy caterpillar (செ.அக).

**ம.** கம்பளிப்புழு; **க.** கம்பளிகழு; **து.** கம்பொளிபுரி; **தெ.** கம்பளிபுருகு.

*[கம்பளி + புழு.]*

**கம்பளிப்பூச்சி** *kambaḷi-p-pūcci,* பெ.(n.) ***கம்பளிப்புழு*** பார்க்க; see *kambaḷi-p-puḻu.*



கம்பளிப்பூச்சி

*[கம்பளி + பூச்சி.]*

**கம்பளிப்பூச்சிக்கடி** *kambaḷi-p-pūcci-k-kaḍi,* பெ.(n.) கம்பளிப்பூச்சிக் கடியினாலேற்பட்ட ஒருவகை அரிப்பு நோய்; a variety of such skin itching disease caused by a species of caterpillar (சா.அக.).

*[கம்பளி + பூச்சி கடி.]*

**கம்பளிப்பூச்சிச்செடி** *kambaḷi-p-pūcci-c-ceḍi,* பெ.(n.) ***கம்பளிச்செடி*** பார்க்க; see *kambaḷi-c-ceḍi* (செ.அக.).

*[கம்பளி + பூச்சி + செடி.]*



கம்பளிப்பூச்சி செடி

**கம்பளிப்பேச்சு** *kambaḷi-p-pēccu,* பெ.(n.) 1.வீண் பேச்சு (கொ.வ.); idle talk, vain talk. 2.குடும்ப வழக்குகளில் இருதரப்பாரும் நடுநிலை மக்களுடன் கம்பளியில் அமர்ந்து விரிவாகப்பேசி நன்முடிவு காணல்; detailed discussion held over a carpet among the two parties of a family brawl along with common people. *"கம்பளி பேசினால்தான் தகராறு தீரும்" (கோவை.).*

*[கம்பளி + பேச்சு – சிவப்புநிறக் கம்பளியில் உட்கார்ந்து கொண்டு பேசுவது செல்வர் குடும்பத்து வழக்கமாக, முதுபண்டைக்காலச் சிற்றூர்களிலும் பழங்குடிமக்கள் குடியிருப்புகளிலும் நிலவியது.ஒ.நோ: திண்ணைப்பேச்சு.]*

**கம்பளியாடு** *kambaḷi-y-āḍu,* பெ.(n.) குறும்பாடு (வின்.); a kind of fleecy sheep.

*[கம்பளி + ஆடு.]*

**கம்பளியாடை** *kambaḷi-y-āḍai,* பெ.(n.) கம்பளி இழையால் நெய்தஆடை; woollen cloth.

*[கம்பளி + ஆடை.]*

**கம்பளியிழை** *kambaḷi-yiḻai,* பெ.(n.) விலங்கினங் களின் மேல் படர்ந்திருக்கும் மயிரிழை; the fleece of sheep, goats, yaks, etc.

*[கம்பளி + இழை.]*

**கம்பற்று** *kambaṟṟu,* பெ.(n.) கப்பலில் விழும் ஓட்டை (யாழ்.அக.); leakage in a ship.

*[கம் + பற்று. கம் = நீர்.]*

**கம்பன்**[1] *kambaṉ,* பெ.(n.) தமிழில் இராமாயணம் இயற்றிய பெரும்புலவர்; an eminent poet, author of the Ramayana, 12th c. *"யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல் வள்ளுவர் போல் இளங்கோவைப் போல் பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை" (பாரதி).*

**ம.** கம்பன்

*[கம்பன் → கம்பம் என்னும் கம்பநாட்டு பகுதியினன். காவிரியின் ஒருசார் தென்கரைப்பகுதி அக்காலத்தில் கம்பநாடு எனப்பட்டது.]*

கையில் கம்பு வைத்திருந்தவன் கம்பன் என்றும் கம்பங்காடு காவல் காத்தவன் கம்பன் என்றும் கூறும் காரணங்கள் ஏற்புடையனவல்ல. கம்பனை 'கம்பநாட்டாழ்வான், கம்பநாடன், என்றே புலவர் பலரும் குறிப்பிட்டுள்ளனர். சேரனை வஞ்சியான் என்றும் சோழனைக் கோழியான் என்றும் ஊர்ப்பெயரால் அழைப்பது போல் கம்பனையும் அவன்முன்னோர் ஊர்ப் பெயரால் அழைத்தனர் என்பதே பொருந்துவதாம்.

**கம்பன்**[2] *kambaṉ,* பெ.(n.) காஞ்சிபுரத்துச் சிவன் (ஏகம்பன்); Šiva who is worshipped at Kanchipuram. *"கம்பனிலங்கு சரணே" (தேவா.103, 80).*

*[ஏகம்பன் → கம்பன்.]*

**கம்பன்**[3] *kambaṉ,* பெ.(n.) கந்திற்பாவை; deity, as a bas relief.

*[கம்பம் → கம்பன் = மரத்தூணில் உருவம் எழுதி அல்லது செதுக்கி எழுந்தருளுவித்த தெய்வம். கம்பத்தில் அல்லது மரத்தறியில் முன்னுரு வடித்த தெய்வ வடிவ வெளிப்பாடுகள் (bas relief); கந்திற்பாவை என்றும் கூறப்படும்.]*

**கம்பனம்** *kambaṉam,* பெ.(n.) 1. அசைவு; motion, vibration, shaking. 2.நடுக்கம்; quaking, trembling with fear. *"கம்பனமெய்தி" (காஞ்சிப்பு. தழுவக்.)* 3. மழைக்காலம்; the cool or dewy season.

**ம.** கம்பனம்

**த.** கம்பல் > **Skt.** Kampana.

*[கம்பல் → கம்பளம்.]*

**கம்பாகம்**[1] *kambāgam,* பெ.(n.) கப்பற்கயிறு (வின்.); ship's cable, stong rope (செ.அக.).

**ம.**கம்பாய்

*[கம் + பாகம். கம் = நீர். பாகம் = இரண்டு கையும் பக்கவாட்டில் நீட்டிய நீட்டல் அளவு, கடலில் ஆழம்பார்க்கும் நெடுங்கயிறு. பகு → பகம் → பாகம் (பிரிவு).]*

**கம்பாகம்**[2] *kambāgam,* பெ.(n.) காற்று; wind.

**ம.**கம்பாகம்

*[கம் → கம்ப → கம்பம் = அசைவு, அசைவுண்டாக்கும் காற்று. கம் + பாகம். பாங்கு → பாகு → பாகம் (தன்மை).]*

**கம்பாயம்** *kambāyam,* பெ.(n.) முகம்மதியர் உடுக்கும் இடுப்புத்துணி; tartan waist cloth, in chequered designs worn by Mohammadans in the Straits and in Ceylon. 2. கைத்தறித் துணி; handloom cloth.

**U.** cabāy

**ம.**கம்பாயம்; **து.** கம்பயி, கம்பாயி.

*[கம்பு → கம்பாயம். கம்பு அல்லது குச்சியைப் போன்று நெடுங்கோடுகள் குறுக்கிட்ட மூட்டுத்தையல் வேட்டி. இதனைச் சாரம் (கைலி) என்றும் கூறுவர். சதுரம் → சாரம்.]*

**கம்பாரி** *kambāri,* பெ.(n.) குமிழஞ்செடி; a kind of thorny tree.

*[கும்→ கம் + பாலி – கம்பாலி → கம்பாரி. பாலி = முளைத்தல், தோன்றுதல்.]*

**கம்பாலை** *kambālai,* பெ.(n.) தருமபுரி மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர்; a place in Dharmapuri district.

*[கரும்பு + ஆலை– கரும்பாலை→கம்பாலை.]*

**கம்பான்** *kambāṉ,* பெ.(n.) ***கம்பாகம்***[1](வின்.) பார்க்க; see *kambāgam*[1].

*[கம் →கம்பு + ஆன்.]*

**கம்பி**[1]**–த்தல்** *kambi-,* 4 செ.கு.வி. (v.i.) 1.அசைதல்; to toss, shake. *"கம்பித் தலையெறி நீர்" (கம்பரா. பரசுராமப்.8.).* 2. நடுங்குதல்; to tremble, quake. *"அழுதுடல் கம்பித்து" (திருவாச.4:61).* 3. முழங்குதல்; to roar, sound. *"அதிரக்கம்பிக்குந் தெய்வ முரசுடையான்" (காளத்.உலா.540).*

*[கம் → கம்பம் → கம்பித்தல். கம் = நீர், நீரின் அலைவு, அசைவு, நடுக்கம். **த.**கம்பித்தல் > **skt.** kamba.]*

**கம்பி**[2]**–த்தல்** *kambi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1.அசைத்தல்; to shake, vibrate. *"செவ்விய செங்கையுஞ் சிரமுங் கம்பியா" (பிரபோத.23:12).* 2. நடுங்கச்செய்தல்; to cause to tremble; to frighten. *"இவனைக் கம்பித்தனை யென்னைகொல் காரணமே" (உபதேசகா. சிவநாம.48.).*

*[கம் → கம்பம் → கம்பித்தல். கம்பித்தல்[1] → கம்பித்தல்[2]]*

**கம்பி**[3] *kambi,* பெ.(n.) 1. பொன், இரும்பு முதலியவற்றின் கம்பி; wire of gold, silver, iron or other metal. *"கம்மியர்.. கம்பி வாங்கு மச்சென" (இரகு.திக்கு. 189.).* 2. கம்பிபோல் பருமனற்ற மாழைத்தடி; a metal bar, rod. 3. காதணி வகை; a kind of ear-ring. கம்பி இருபதினால் பொன் அறுகழஞ்சே குன்றி (S.I.I.ii.19,73.). 4.கடிவாளம்; bit of a horse's bridle. *"கம்பியுங் கயிறுங் கரத்தேந்தி" (பாரத. நாடு.21).* 5. ஆடையின் ஓரச்சிறு கரை; narrow stripe, a long border of cloth. கம்பிக்கரைவேட்டி (இ.வ.). 6. சித்திரவேலை வகை (வின்.); narrow moulding in carpenter's or mason's work. 7. காசு (வின்.); money. 8. நீண்டகொம்பு; joist, beam, slender post. இந்தக்கம்பி பந்தற்காலுக்கு உதவும் (இ.வ.).

**ம., க., பட., து.**கம்பி; **தெ.** கம்மி.

*[கொம்பு → கம்பு → கம்பி = மரக்கிளையின் சிறுவளார் போன்று மெலிந்து நீண்டது.]*

**கம்பி**[4] *kambi,* பெ.(n.) 1.வெடியுப்பு (மூ.அ.); saltpetre. 2. இலவண வைப்பு நஞ்சு (வின்.); a mineral poison.

**க.**கம்பி (உப்பு வரி)

*[கம்பலை = பேரோசை, வெடித்தல், தகர்த்தல், கம்பல் → கம்பி.]*

**கம்பி**[5] *kambi,* பெ.(n.) 1.ஒருவகைமரம்; carey's myrtle bloom. 2. கம்பளிப்பிசின் (M.N.A.D. i. 29.); dikmali gum-plant.

*[கம்பு → கம்பி. வடிவும் தன்மையும் நோக்கிய பெயர்.]*

**கம்பி**[6] *kambi,* பெ.(n.) வெறிச்சி (அன்) (நாமதீப.); opium.

*[கம் → கம்பி = அசைவு, நடுக்கத்தைத் தருவது.]*

**கம்பி**[7] *kambi*, பெ.(n.) தொலைவரி (நாஞ்.); telegram.

ம.கம்பி

[கம்பி = கம்பிவழியாக அனுப்பப்படும் தொலைவரிச் செய்தி.]

**கம்பி**[8] *kambi*, பெ.(n.) தண்டவாளம்; railway line.

ம., க., து. கம்பி.

[கம்பி[4] → கம்பி. கம்பு = கழை, கழை போன்ற நெட்டிரும்புப் பாளம்.)]

**கம்பிக்கடுக்கன்** *kambi-k-kaḍu-k-kan*, கடுக்கன் (வின்.); ear ring formed of a wire of metal.

[கம்பி + கடுக்கன்.]



கம்பிக்கடுக்கன்

**கம்பிக்கரை** *kambi-k-karai*, பெ.(n.) ஆடையின் ஓரச்சிறுகரை; narrow strip along the border of a cloth.

ம.கம்பிக்கர

[கம்பி + கரை.]

**கம்பிக்கவணி** *kambi-k-kavaṇi*, பெ.(n.) இரும்புக் கம்பிகளால் பின்னிய வலை;wire gauze (சா.அக).

[கம்பி + (கவளி) கவணி = பின்னல்.]

**கம்பிக்காடிக்காரம்** *kambi-k-kāḍi-k-kāram*, பெ.(n.) கம்பி கம்பியாக இருக்கும் ஒரு செயற்கைக் காடிக்காரம்; an artificially prepared silver nitrate which assumes the form of long crystals (சா.அக.).

[கம்பி + காடி + காரம்.]

**கம்பிக்காரன்** *kambi-k-kāraṉ*, பெ.(n.) 1. தட்டார்; goldsmith. 2.காசுக்காரன் (வின்.); moneyed man.

[கம்பி + காரன் – கம்பிக்காரன். அணிகலன் செய்வோர் முதலில் கம்பியாக நீட்டிய மாழையைத் துண்டாக நறுக்கி அணிகலன் வடித்தலின் பெற்றபெயர்.]

**கம்பிக்குறடு** *kambi-k-kuṟaḍu*, பெ.(n.) கம்மியக் கருவி (மதுரை.); smith's instrument

[கம்பி + குறடு – கம்பிக்குறடு. கம்பியாக நீட்டும் பணிக்கு உதவும் அடிமணை மாழை.]

**கம்பிக்குறி** *kambi-k-kuṟi*, பெ.(n.) **கம்பிக்கரை** (வின்.) பார்க்க; see *kambi-k-karai*.

[கம்பி + குறி.]

**கம்பிக்கொடி** *kambi-k-koḍi*, பெ.(n.) பூசணிக் கொடியைப் போன்ற கொடி; a turning plant resembling that of the pumpkin creeper.

[கம்பி + கொடி.]

**கம்பிகட்டு–தல்** *kambi-kaṭṭu-*, 5. செ.குன்றாவி. (v.t.) 1.ஆடைக்குச் சாயக்கரையிடுதல்; to form or make the border of a cloth, as a dyer. 2. அழுகுச் சுதை வேலை செய்தல்; to make a narrow moulding. 3.கம்பியால் குடைபோன்று அணிகலன்கட்கு முத்து முதலியவை கட்டுதல்; to fasten with wire, as a jewel, an umbrella,

[கம்பி + கட்டு.]

**கம்பிகட்டுவேலை** *kambi-kaṭṭu-vēlai*, பெ.(n.) வலுவூட்டிய கற்காரைத்தளம், தூண் முதலியன அமைப்பதற்காக இரும்புக் கம்பிகளை இணைத்துப் பிணைக்கும் வேலை; centering work.

[கம்பி + கட்டு + வேலை.]

**கம்பிகை** *kambigai*, பெ.(n.) இசைக்கருவி வகையு ளொன்று (சங்.அக.); a kind of musical instrument.

[கம்பல் → கம்பிகை (ஓசையெழுப்புவது).]

**கம்பிச்சட்டம்** *kambi-c-caṭṭam*, பெ.(n.) 1.மின்சாரக் கம்பியைப் பதிக்கும் மரச்சட்டம்; cleat. 2. கம்பியச்சு (இ.வ.); perforated iron plate, used by smiths for drawing wires.

[கம்பி + சட்டம்.]

**கம்பிச்சம்பா** *kambi-c-cambā,* பெ.(n.) நெல்வகை (இ.வ.); a kind of paddy.

*[கம்பி + சம்பா.]*

**கம்பிச்சரவீணை** *kambi-c-cara-viṇai* பெ(n.) கருவண்டு; black beetle (சா.அக.).

*[கம்பி + சரம் + வீணை (நரம்புக்கருவி போன்று ஓசை எழுப்பும் வண்டு).]*

**கம்பிச்சு** *kambiccu,* பெ.(n.) **கம்பியச்சு** (இ.வ.) பார்க்க; see *kambi-y-accu.*

*[கம்பி + அச்சு = கம்பியச்சு → கம்பிச்சு (கொ.வ.).]*

**கம்பிச்சேலை** *kambi-c-cēlai,* பெ.(n.) கம்பிக் கரையிடப்பெற்ற சேலை (வின்.); woman's cloth with small striped border.

**க.**கம்பிசீரெ

*[கம்பி + சேலை.]*

**கம்பிச்சோமன்** *kambi-c-cōmaṉ,* பெ.(n.) கம்பிக் கரையுள்ள வேட்டி; man's cloth with a thin striped border.

*[கம்பி + சோமன். தூ = வெண்மை. தூ = தூம் → தூமம் → சூமம் → சோமம் → சோமன் = வெண்ணிற வேட்டி, வேட்டியைச் சோமம் என்பது கொங்குநாட்டு வழக்கு.]*

**கம்பிதம்** *kambidam,* பெ.(n.) 1. நடுக்கம்; fuivering, quivering trembling, shaking. *"கம்பிதமும் கண்ணீரும் வரக்கவற்சி யுறும் போதில்" (திருவாத. 4. மண்சுமந்த.56).* 2. அலுக்கம் (கமகம்) பத்தனுள் ஒன்று (பாரத.இராக.24.); tremola, a trill one of ten kamagam.

*[கம் → கம்பலை = நடுக்கம், அசைவு. கம் → கம்பி → கம்பிதம். இதம் 'சொல்லாக்க ஈறு'.]*

**கம்பிதை-த்தல்** *kambi tai-* , 4 செ.குன்றாவி.(v.t.) தாள் போன்றவற்றைக் கம்பியால் கட்டடம் செய்தல்; to staple.

*[கம்பி + தை-]*

**கம்பிநாடி** *kambinādi,* பெ.(n.) ஒடுக்கத்தில் சிறிய அளவாக ஓடும் நாடித்துடிப்பு; a small tense pulse (சா.அக.).

*[கம்பி + நாடி.]*

**கம்பிநீட்டு-தல்** *kambi-niṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) திருட்டு முதலிய செயல்களால் தலைமறைவாதல்; to run away, go off slily, steal away, take to one's heels. திருடன் அகப்பட்டதைச் சுருட்டிக்கொண்டு கம்பி நீட்டிவிட்டான் (உ.வ.).

**து.**கம்பிநீடுனி; **க.**கம்பிகீளிசு.

*[கம்பி + நீட்டுதல். கம்பியின் நீளும் இயல்பு, மெல்லநழுவி ஓடிவிடும் செயலைக்குறிப்பாகப் புலப்படுத்திய்து. (மரபுத்தொடர்).]*

**கம்பிப்பிசின்** *kambi-p-pišiṉ,* பெ.(n.) ஒருவகை மரப்பிசின் (வின்.); dikmali gum.

*[கம்பி + பிசின்.]*

**கம்பிமணி** *kambi-maṇi,* பெ.(n.) கழுத்தணி வகையு ளொன்று (வின்.); a kind of wire necklace (சு.அக.).

*[கம்பி + மணி.]*

**கம்பிமத்தாப்பு** *kambi-mattāppu,* பெ.(n.) பூக்களைப் போல் தீப்பொறிகள் சிதறும் வெடி (பட்டாசு) வகை; a kind of sparkler.

*[கம்பி + மத்தாப்பு.]*



கம்பி மத்தாப்பு

**கம்பியச்சு** *kambi-y-accu,* பெ.(n.) கம்பி இழுப்பதற்காகக் கம்மியரால் பயன்படுத்தப்படும் இரும்புக்கருவி; perforated iron plate used by goldsmiths and silversmiths for drawing out wire.

**ம., க.** கம்பியச்சு; **தெ.** கம்மச்சு; **து.** கம்பெசி, கம்பெச்சி.

*[கம்பி + அச்சு.]*

**கம்பியடி-த்தல்** *kambiyaḍi-*, 4 செ.குன்றாவி.(v.t.) ***கம்பிதை-த்தல்*** பார்க்க; see *kambi-tai-*.

*[கம்பி + அடி.]*

**கம்பியில்லாத்தொலைவரி** *kambi-y-illā-t-tolaivari*, பெ.(n.) கம்பி இணைப்பு இல்லாமல் ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குச் செய்தியை மின்காந்த அலைகளாக மாற்றி அனுப்பப்பயன்படும் கருவி; wireless telegraph.

*[கம்பி + இல்லா + தொலைவரி.]*

**கம்பியில்லாத்தந்தி** *kambi-y-illā-t-tandi*, பெ.(n.) ***கம்பியில்லா தொலைவரி*** பார்க்க; see *kambi-y-illā-t-tolaivari.*

**கம்பியிழு-த்தல்** *kambi-y-iḻu-*, 4 செ.குன்றாவி.(v.t.) பொற்கம்பி முதலியன நீளச்செய்தல் (உ.வ.); to draw out wire.

*[கம்பி + இழு.]*

**கம்பியுப்பு** *kambi-y-uppu*, பெ.(n.) வெடியுப்பு (வின்.); a superior kind of saltpetre in bars or pieces.

*[கம்பி + உப்பு.]*

**கம்பியெண்ணு-தல்** *kambi-yeṇṇu-*, 5 செ.குன்றாவி. (v.t.) சிறைத்தண்டனை பெறுதல்; to undergo imprisonment. திருடியதால் இன்று கம்பி யெண்ணுகிறான் (உ.வ.).

*[கம்பி + எண்ணு.]*

இரும்புக் கம்பிகளால் அடைக்கப்பட்டி-ருக்கும் சிறையமைப்பு நிலையில், செய்த குற்றத்திற்குத் தண்டனையாகச் சிறைப்படுபவர் அக்கம்பிகளை எண்ணிக்கொண்டு காலம் கடத்த வேண்டும் என்னும் நகையாட்டுக் குறிப்பில் வழங்கிவரும் சொல்லாட்சி.

**கம்பில்**[1] *kambil*, பெ.(n.) 1. கம்பளிப்பிசின்; dikmali gum-plant. 2. பெருங்கம்பில்மரம்; broad-leaved Gardenia.

**மறுவ.** கம்பிழ்

*[கம்பி → கம்பில்.]*

**கம்பில்**[2] *kambil*, பெ.(n.) அப்பம் (அக.நி.); sweet cake.

*[கம் → கம்பில் (நீராவியில் வெந்தது) கம் = நீர்.]*

**கம்பில்லம்** *kambillam*, பெ.(n.) 1. சௌராட்டிர தேயத்தில் சுரங்கங்களிலிருந்து வெட்டியெடுக்கப்-படும் செங்கற் பொடியைப் போன்ற, மலமிளக்கியாகப் பயன்படும் பொருள்; a red mineral substance like, brick dust obtained from the mines in Sourastra. 2.ஒரு குருவி; a kind of sparrow (சா.அக.).

*[கம்பு → கம்பில் (இளக்கம்) → கம்பில்லம்]*

**கம்பிலி**[1] *kambili*, பெ.(n.) ***கம்பி***[3] பார்க்க; see *kambi*[3].

*[கம்பில் → கம்பிலி.]*

**கம்பிலி**[2] *kambili*, பெ.(n.) வடநாட்டிலுள்ள ஓரூர்; a city in north-India. *"கம்பிலிச் சயத்தம்ப நட்டதும்" (கலிங்.190.புதுப்.).*

*[கம்பில் → கம்பிலி. கம்பில் = ஒருவகை மரத்தின் பெயர். மரத்தின் பெயரால் பெற்றபெயர் ஒ.நோ: ஆர்க்காடு, கடம்பவனம்.]*

**கம்பிலியம்** *kambiliyam*, பெ.(n.) ஒருவகைச்சாயம்; a kind of dye.

*[கம்பில்*[1] *→ கம்பிலியம் → கம்பில் மரத்திலிருந்து செய்யப்பட்டது.]*

**கம்பிலியம்பட்டி** *kambiliyampaṭṭi*, பெ.(n.) ஈரோடு மாவட்டத்துச் சிற்றூர்; a village in Erode district.

*[கம்பளி + அன் + பட்டி – கம்பளியன்பட்டி → கம்பிலியம் பட்டி (கொ.வ.).]*

**கம்பிவாங்கு-தல்** *kambi-vāṅgu-*, 7 செ.கு.வி.(v.i.) ***கம்பிநீட்டு-,*** பார்க்க; see *kambi-nīṭṭu-*.

*[கம்பி + வாங்கு.]*

**கம்பிவிளக்கு** *kambi-viḷakku*, பெ.(n.) மின்விளக்கு; electric light.

*[கம்பி + விளக்கு. மின் விளக்கினுள் கம்பிபோன்ற மாழை எரிவதால் பெற்ற பெயர்.]*

**கம்பிவிறிசு** *kambi-viṟišu*, பெ.(n.) கம்பி கம்பியாகத் தீப்பொறியும் ஒருவகை வாணம் (வின்.); fire-works which shoot forth in pencils of light.

*[கம்பி + (விரிசு) விறிசு.]*

**கம்பிவேட்டி** *kambi-vēṭṭi,* பெ.(n.) கம்பிக்கரையுள்ள வேட்டி; man's cloth with a thin striped border.

**க.**கம்பிபஞ்செ

*[கம்பி + வேட்டி.]*

**கம்பு[1]** *kambu,* பெ.(n.) 1.கட்டுத்தறி; post for tying elephants, stake. *"கம்பமருங் கரியுரியன்" (தேவா.1092.4.).* 2.கழி; pole, rod, stick. *"வெந்தற்ற கிருகத்திலே ஒரு கம்பாயினுங் கிடைக்குமோ" (ஈடு, 4,1, ப்ர.).* 3. மரக்கொம்பு (திவா.); branch of a tree. 4.கொடிசெடிகளின் சிறுதண்டு; slender twig of a climber, or shrub. *"அளியின மல்லிகைப்பூங் கம்பு" (வெங்கைக்கோ.191.).* 5. தச்சுமுழம் எனப்படும் 2 3/4 அடி நீளமுள்ள அளவுகோல்; a pole (linear measure) of 33 inches known as taccu-muḷam.

**ம.**கம்பம்; **தெ.** கம்பமு; **து.,பட.** கம்பு.

**Pkt.**khambha; **Skt.**stambha.

*[கொம்பு → கம்பு. (வே.க.168) கம்பைக் கொம்பு என்பது வடார்க்காடு வழக்கு(மு.தா.28)]*

**கம்பு[2]** *kambu,* பெ.(n.) 1.கம்புத்தவசம்; bulrush millet. *"கம்பு குளிர்ச் சியென...சொல்லுவர்" (பதார்த்த. 829).* 2. செந்தினை (பிங்.); Italian millet.

**மறுவ.** ஏனல், கவலை, புல்.

**தெ.,க.** கம்பு; **ம.** கம்பச்சோளம்; **Skt.**kambū.

*[கொம்பு → கம்பு = கோல். கோல் போன்று ஒரே தண்டாக வளரும் புல்லினம்.]*

**கம்பு[3]** *kambu,* பெ.(n.) நீர்; water.

*[கம் = நீர். கம் → கம்பு.]*

**கம்பு[4]** *kambu,* பெ.(n.) 1. சங்கு; conch. *"கம்புக்குழை யானே" (சிவராத்.சாலிகோ. 27).* 2. உட்காதின் ஒரு பகுதி; the conic cavity of the internal ear. 3. கழுத்து; neck. 4. ஆகூழைக் குறிக்கும் கழுத்தின் மூன்றுவரி; the three lines or marks in the neck indicating good fortune. 5.குழாய் எலும்பு; tubular bone. 6. உடம்பின் நாளம்; tubular vessel in the body.

**து.**கம்பு; **Skt.** kambu.

*[கம்பு = மூங்கில். மூங்கில் போன்ற மென்மையும் வடிவமைப்பும் கொண்ட சங்கு, கழுத்து, எலும்பு ஆகியவற்றைக் குறித்தது. ]*

**கம்பு[5]** *kambu,* பெ.(n.) விலாமிச்சிவேர்; fragrant root of a grass.

*[கம் → கம்பு. கம் = நறுமணம், மணம் வீசும் வேர், கிழங்கு]*

**கம்புக்கட்டு** *kambu-k-kaṭṭu,* பெ.(n.) மூங்கில் தடிகளின் தொகுப்பு; bundle of bamboo sticks.

*[கம்பு (மூங்கில்) + கட்டு.]*

**கம்புக்கழி** *kambu-k-kaḻi,* பெ(n.) மூங்கிற்கழி; bamboo pole.

*[காம்பு → கம்பு + கழி. காம்பு = மூங்கில்]*

**கம்புக்கள்ளி** *kambu-k-kaḷḷi,* பெ.(n.) 1. இலையில்லாது கொம்பைப் போறகாணும் கொம்பு கள்ளி; twig spurge. 2.திருகுகள்ளி; spiral spurge.

*[கம்பு + கள்ளி. கள் = முள், கள் → கள்ளி.]*

**கம்புக்காடு** *kambu-k-kāḍu,* பெ.(n.) மூங்கில் தோப்பு; bamboo field.

*[கம்பு + காடு. காம்பு → கம்பு = மூங்கில்]*

**கம்புக்குச்சி** *kambu-k-kucchi,* பெ.(n.) மூங்கிற் குச்சி; bamboo stick.

*[காம்பு → கம்பு + குச்சி. காம்பு = மூங்கில்.]*

**கம்புக்கூடு** *kambu-k-kūḍu,* பெ.(n.) அக்குள் (நெல்லை.); arm pit.

**மறுவ.** கக்கம், அக்குள், கைக்குழி, கமுக்கட்டு.

*[கம்பு + கூடு.]*

**கம்புக்கூடை** *kambu-k-kūḍai,* பெ.(n.) மூங்கிற் சிம்பால் வேய்ந்த கூடை; bamboo basket.

*[காம்பு →கம்பு + கூடை.]*

**கம்புக்கெளுத்தி** *kambu-k-keḷutti,* பெ.(n.) நன்னீரில் வாழ்வதும் ஆறடி வரை வளர்வதும் ஆகிய மீன்வகை; a fresh water fish, bluish, attaining six ft. in length.

*[கம்பு + கெளுத்தி.]*

**கம்புக்கொங்கை** *kambu-k-koṅgai,* பெ.(n.) தவசம் நீக்கப்பட்ட கம்பங்கதிரின் கோதுக்கட்டை; cob of the bulrush millet after the grain has been removed.

*[கம்பு + கொங்கை. கொங்கு → கொங்கை. கொங்கு = கோது, தவசமணி நீங்கிய கோதுக் கட்டை]*

**கம்புகட்டி** *kambu-kaṭṭi,* பெ.(n.) ஏரிநீர் பாய்ச்சுவோன்; one who irrigates. *"கடல்வருணன் கம்புகட்டி" (சேக்கிழார். பு.4.) (செ.அக.).*

*[கம் → கம்பு = நீர். கம்பு + கட்டி. கம்புகட்டி = நீர்கட்டுபவன்.]*

**கம்புகட்டு-தல்** *kambu-kaṭṭu,* 5 செ.குன்றாவி. (v.t.) படித்தபின் சுவடியைக் கட்டுதல் (இ.வ.); to close a book after reading.

*[கம்பு + கட்டு. கம்பு = சுவடியின் இருமருங்கிலும் வைத்துக்கட்டும் மூங்கிற்பிளாச்சு.]*

**கம்புகம்** *kambugam,* பெ.(n.) வெறிச்சி (அபின்) (தைலவ. தைல.94.); opium.

*[கம் → கம்பு, கம் = அசைவு, நடுக்கம். கம்பு → கம்பகம்]*

**கம்புச்சண்டை** *kambu-c-caṇḍai,* பெ.(n.) சிலம்பம்; art of fencing.

*[கம்பு + சண்டை.]*

**கம்புத்தடி** *kambu-t-taḍi,* பெ.(n.) நீண்ட மூங்கில் தடி; lengthy bamboo stick.

*[காம்பு → கம்பு + தடி.]*

**கம்புதை-த்தல்** *kambu-tai-,* 4. செ.குன்றாவி.(v.t.) கதவு முதலியவற்றிற் சட்டமடித்தல்; to nail a beading or border on a door or the edge of a box.

*[கம்பு + தை. கம்பு = கோல், கோல்போன்று நீண்ட மரச்சட்டம்]*

**கம்புப்பட்டு** *kambu-p-paṭṭu,* பெ.(n.) *திருவண்ணா மலை மாவட்டத்துச் சிற்றூர்;* a village in Thiruvannamalai district.

*[கம்பு + பற்று-கம்புப்பற்று → கம்புப்பட்டு. பற்று = விளைநிலம்.]*

**கம்புலம்** *kambulam,* பெ.(n.) வயலில் விடும் எருதுப் பந்தயம்; a bullock race in a rice-field (துளுநா).

**து.** கம்பல, கம்புள.

*[கம்பலை → கம்புலம். (கொ.வ.)]*

சிலப்பதிகாரத்தில் ஏரோர் கம்பலை என்று இப்பந்தயம் குறிக்கப்படுகிறது. ***ஏரோர் கம்பலை*** பார்க்க; see ērōrkamblai.

**கம்புள்**[1] *kambuḷ,* பெ.(n.) 1. ஒருவகை நீர்ப்பறவை; a kind of water fowl; *"கம்புட் சேவ லின்றுயி லிரிய" (மதுரைக்.254.)* 2. வானம்பாடி (சூடா.); Indian sky-lark.

*[கம் + புள் – கம்புள் = நீர்ப்பறவை. கம் = நீர். புள் = பறவை. மழைக்காலத்தில் வருவதால் வானம்பாடியும் கம்புள் எனப்பட்டது]*



கம்புள்

**கம்புள்**[2] *kambuḷ,* பெ.(n.) சங்கு; conch. *"பழனக் கம்புள்" (ஐங்.90).*

*[கம்பு → கம்புள். கம்பு = நீர். கம்புள் = நீருள் இருப்பது.]*

**கம்பூர்** *kambūr,* பெ.(n.) மதுரை, விழுப்புரம் மாவட்டங்களில் உள்ள சிற்றூர்; a village in Madurai and Viluppuram dt.

*[கம்பு + ஊர்-கம்பூர். கம்பு = புன்செய்த்தவச வகை.]*

**கம்பை**[1] *kambai,* பெ.(n.) 1.கதவு முதலியவற்றின் சட்டம் (இ.வ.); ledge, frame of a door, etc. 2. ஏட்டுச்சுவடிச் சட்டம்; slips of wood forming the binding of a book made up of palm leaves. *"சுவடியுங்கயிறுங் கம்பையும்" (பிரபோத.11,8).* 3. அதிகாரவரம்பு; jurisdiction (வின்.).

**ம.** கம்ப

*[கம்பு → கம்பை = மரக்கொம்பைப் பிளந்து செய்த மரச்சட்டம், ஒழுங்கு, வரம்பு.]*

**கம்பை**[2] *kambai,* பெ.(n.) 1.***கம்பைமரம்*** பார்க்க; see *kambai maram.* 2. சிறுகீரை; pig's green. 3. ஒரு வகை மல்லி; cape jasmine.

*[கம் → கம்பை]*

**கம்பை**[3] *kambai,* பெ.(n.) காஞ்சிபுரத்திலுள்ள ஒரு ஆறு; a river near Kanchipuram. *"கம்பை சூழ்தரு காஞ்சியந்திருநகர் கண்டான்" (கந்தபு. வழிநடை.9.).*

*[கம் → கம்பு → கம்பை. கம் = நீர்.]*

**கம்பைக்கல்** *kambai-k-kal,* பெ.(n.) படிகவகையு ளொன்று; cambay pebble, a kind of opal found in Cambay (சா.அக.).

*[கம்பை + கல்.]*

**கம்பைநல்லூர்** *kambainallūr,* பெ.(n.) தருமபுரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Dharumapuri dt.

*[கம்பம் + ஐயன் – கம்பையன் + நல்லூர் – கம்பை நல்லூர் (கொ.வ.). கம்பம் = வயல் சார்ந்த ஊர்.]*

**கம்பைமரம்** *kambai-maram,* பெ.(n.) கடற் களாப் பாலை; broad leaved gardenia (செ.அக.).

*[கம்பை + மரம்.]*

**கம்போசம்** *kambōśam,*பெ.(n.) ஒருவகைச் சங்கு; a species of conch (சா.அக.).

*[ஒருகா. கம்போசம் → காம்போச நாட்டையடுத்த கடற்புறத்துச் சங்கு ஆகலாம்.]*

**கம்போத்தம்** *kambōttam,* பெ.(n.) குவளை (சங்.அக.); blue nelumbo.

*[கம் + பொத்தம் – கம்பொத்தம் → கம்போத்தம். பொத்தம் = நீரில் பொத்தி, பொருந்தியிருப்பது.]*

**கம்மக்குடம்** *kamma-k-kudam,* பெ.(n.) கம்மியர் செய்த குடம் (நன்.222.மயிலை.); pot made by a smith.

*[கரு → கருமம் → கம்மம் + குடம்.]*

**கம்மக்கை** *kamma-k-kai,* பெ.(n.) 1.நெருக்கடி வேலை (யாழ்ப்.); pressure of work. 2. கடுமையான பணி; difficult work.

*[கம்மம் + கை. கருமம் → கம்மம் = தொடர்ந்து செய்யும் வேளாண்மைப் பணி.]*

**கம்மகாரர்** *kammakārar,* பெ.(n.) கப்ப லோட்டிகள்; sailors, mariners. *"கம்மகாரர் கொண்டாடும்படி நன்றாக ஓடிற்று" (சீவக.501, உரை.).*

*[கருமம் + காரர் – கருமகாரர் → கம்மகாரர் = குறிப்பிட்ட பணிக்குரியவர். காரர் = செய்பவர். கரும்காரர் = வேலை செய்பவர் ( இரண்டன் தொகையாதலின் வல்லெழுத்து மிகாதாயிற்று).]*

**கம்மஞ்செய்மக்கள்** *kammañcey-makkaḷ,* பெ.(n.) கைத்தொழிலாளர்; craftsmen (இ.நூ.த.பெ.அக).

*[கருமம் → கம்மம் + செய் + மக்கள்.]*

**கம்மட்டம்** *kammaṭṭam,* பெ.(n.) ***கம்பட்டம்*** பார்க்க; see *kambaṭṭam.*

*[கம்பட்டம் → கம்மட்டம்.]*

**கம்மன்தாங்கல்** *kammaṉtāṅgal,* பெ.(n.) திருவண்ணா மலை விழுப்புரம் மாவட்டங்களில் உள்ள சிற்றூர்; a village in Thiruvanamalai and Viluppuram dt.

*[ கம்மம் → கம்மன்+தாங்கல்– கம்மன் தாங்கல். தாங்கல் = ஏரி.]*

**கம்மணாட்டி** *kammaṇāṭṭi,* பெ.(n.) கையாலாகாதவன், திறமையில்லாதவன்; a usless person, misfit.

**மறுவ.** கம்மாளாமட்டி

*[கருமம் → கம்மம் + ஆளா + மட்டி – கம்மாளாமட்டி → கம்மணாட்டி (கொ.வ) = செயல்திறமையில்லாத பேதை.]*

**கம்மத்தம்** *kammattam,* பெ.(n.) 1. வேளாண் பண்ணை; zamindar's or Inamdar's land which he cultivates with his own labourers. 2. மனைவியின் செலவுப் பயன்பாட்டிற்காக விடப்படும் ஊர் (m.m.249.); grant of a village for a wife's pocket expenses.

**தெ.**கமத, கம்மத; **க.**கமத, கம்மத, கம்மத்த.

*[கம் → கம்மத்தம் = நன்செய்நிலம்.]*

**கம்மந்தூர்** *kammandūr,* பெ.(n.) விழுப்புரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Viluppuram dt.

*[கம்மன் + ஆந்தன் + ஊர்–கம்மாந்தனூர் → கம்மந்தூர்.]*

**கம்மம்**[1] *kammam,* பெ.(n.) முதற்றொழிலாகிய பயிர்த்தொழில்; agriculture.

**தெ.** கம்மமு; **குவி.** கம(வேலை).

*[கருமம் → கம்மம் (வ.மொ.வ.274).]*

**கம்மம்**[2] *kammam,* பெ.(n.) கம்மியர் தொழில்; smith's work. *"கம்மஞ்செய் மாக்கள்" (நாலடி. 393.).*

**ம.** கம்மம்

**Skt.** karman; **Pkt.** kamma; **Pali.** kammaro (a black-smith, a smith.).

*[கரு → கருமம் → கம்மம். கருத்தல் = செய்தல்.]*

**கம்மம்**[3] *kammam,* பெ.(n.) ஊர் (கிராமம்), சிற்றூர்; village.

*[கம் + அம் – கம்மம். கம் = நீர். கம்மம் = நீர் சார்ந்த நன்செய் நிலத்துச் சிற்றூர்.]*

**கம்மம்**[4] *kammam,* பெ.(n.) தொழில்; occupation. *"சென்றுமட்கலஞ்செய் கம்மி" (பாரத. திரௌபதி 64.).*

*[கருமம் → கம்மம். (வ.மொ.வ.274.).]*

**கம்மல்**[1] *kammal,* பெ.(n.) 1.குரலடைப்பு; hoarseness, sore throat. 2.மங்கல்; dimness, as of gem, of a lamp, of glass, of spectacles. 3.மந்தாரம்; cloudiness, haziness. 4.குறைவு; defect, deficiency, as in growth; fall in price. பயிர் கம்மலாய்ப் போயிற்று (வின்.).

**க.**கம்மல், (குரலடைப்பு, இருமல்).

**H., Guj., Mar.** kam (deficiency).

*[செறுமுதல் → செம்முதல் → கெம்முதல் → கெம்மல் → கம்மல் = வழியடைத்தல், தடுத்தல், குறைவுபடுத்துதல், ஒளிகுன்றச்செய்தல்.]*

**கம்மல்**[2] *kammal,* பெ.(n.) மகளிர் காதணிவகை; a kind of ear-ring worn by women in the lobe of the ear.

**தெ.** கம்மர்; **கொலா.**கம்ம.

*[கமலம் → கம்மலம் → கம்மல் (தாமரைமலர் போல் சிவப்புக்கல் பதித்த காதணி (தோடு).]*

முற்காலத்தில் ஆடவரும் அணிகலன் அணிவது பெருவழக்கு. வணிகர் காதிற் குண்டலமும் தோளில் [புயத்தில்] கடகமும், மார்பில் மணிக் கண்டிகையும் அணிந்திருந்தனர். பிறவகுப்பார் காதிற் கடுக்கனும், கையிற் காப்பும் அணிந்திருந்தனர். கடுக்கனைப் பின்பற்றியே பிற்காலக் கமலம் [கம்மல்] என்னும் மகளிர் காதணி எழுந்தது. [பண்.நா.ப.54.].

**கம்மல்**[3] *kammal,* பெ.(n.) மாசு; dirt (த.மொ.அக).

*[கம் →கம்மல், கம் = குறைவு, மாசு. அல் (தொ.பெ.ஈறு).]*

**கம்மவார்** *kammavār,* பெ.(n.) தெலுங்கு மொழி பேசும் உழவருள் ஒரு பிரிவினர்; a Telugu agricultural caste.

**தெ.** கம்மவாரு; **க.** கம்மே.

*[கம்மம் + ஆள் – கம்மவாள் → கம்மவார் → கம்மவாரு. கம்மம் = நன்செய் உழவுத்தொழில், தெலுங்குநாட்டில் வாழும் தமிழ்க்குடி உழவனின் குடிப்பெயர். (வ.மொ.வ.274)]*

**கம்மற்குரல்** *kammaṟkural,* பெ.(n.) 1.குறைந்த குரலோசை, dull voice. 2.குரலடைப்பு; hoarse voice (சா.அக.).

*[கம்மல் + குரல்.]*

**கம்மற்பூண்டு** *kammaṟpūṇḍu,* பெ.(n.) தொண்டைச் சளி; mucous in the throat (சா.அக.).

*[கம்மல் + பூண்டு.]*

**கம்மா** *kammā,* பெ.(n.) ***கண்மாய்*** பார்க்க; see *kaṇmāy.*

*[கண்மாய் → கம்மாய் → கம்மா (கொ.வ.). கண் + வாய்.]*

**கம்மாக்காரர்** *kammā-k-kārar,* பெ.(n.) மீனவர்; fishermen.

*[கண்மாய் + காரர் – கண்மாய்க்காரர் → கம்மாக்காரர். கண்மாய் = ஏரி. கண்மாய் காவலுக்கு மீனவரை அமர்த்துவது பழந்தமிழ் நாட்டுவழக்கு.]*

**கம்மாட்டி** *kammāṭṭi,* பெ.(n.) ***கம்மாளத்தி*** பார்க்க (வீரேசோ. தத்தி5. உரை); see *kammāḷatti.*

*[கம்மாளன் → கம்மாட்டி = கம்மியனின் மனைவி.]*

**கம்மாணன்** *kammāṇaṉ,* பெ.(n.) ***கம்மாளன்*** பார்க்க; see *kammāḷaṉ.* பறைச்சேரியும் கம்மாணச் சேரியும் (s.I.I.ii.43.).

*[கம்மாளன் → கம்மாணன் (கொ.வ.).]*

**கம்மாபுரம்** *kammāpuram,* பெ.(n.) கடலூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Cudalore dt.

*[கண்மாய்–கம்மாய் + புரம் – கம்மாய்புரம்→கம்மாபுரம் (கொ.வ.).]*

**கம்மாய்** *kammāy,* பெ.(n.) ***கண்வாய்*** பார்க்க; see *kaṇvāy.*

*[கண் + வாய் – கண்வாய் → கண்மாய் → கம்மாய். கம் = தண்ணீர்.]*

**கம்மார்வெற்றிலை** *kammār-veṟṟilai,* பெ.(n.) கறுப்பு வெற்றிலை; a kind of betel-leaf which is dark-coloured and pungent.

*[கரு + மார் – கரும்மார் → கம்மார். கம்மார் + வெற்றிலை. மார் = அகற்சி. அகன்ற வெற்றிலையாதலின் இப்பெயர்பெற்றது.]*

**கம்மால்**[1] *kammāl,* பெ.(n.) பித்தளை வேலை செய்யுமிடம்; brazier's forge.

*[கம் = கம்மியன். ஆலை = இடம்; கம் + ஆலை – கம்மாலை→கம்மால் = கம்மியன் வேலை செய்யும் உலைக்களம்]*

**கம்மால்**[2] *kammāl,* பெ.(n.) ஏமாற்றுதல்; cheating.

*[கம் + ஆலை – கம்மாலை → கம்மால் = கம்மியனின் பித்தளை வேலை. இரண்டு மாழைகளைக்கலந்து புதியமாழையாகிய பித்தளை செய்வதால் வியத்தகு புதுமை செய்தல், மாயம் செய்தல், ஏமாற்றுதல் என்னும் பொருளிலும் இச்சொல் புடை பெயர் நீத்தது. இது கமால் செய்தல் எனவும் வழங்கிவருகிறது.]*

**கம்மால்செய்–தல்** *kammālšey-,* 1. செ.கு.வி.(v.i.) ஏமாற்றுதல்; to cheat. ***கம்மால்***[2] பார்க்க; see *kammāl*[2].

*[கம்மால்[2] + செய்.]*

**கம்மால்வேலை** *kammālvēlai,* பெ.(n.) ஏமாற்று வேலை; cheating.

*[கம்மால்[2] + வேலை.]*

**கம்மாலை**[1] *kammālai,* பெ.(n.) கம்மியனின் உலைக் களம்; blacksmith's forge.

*[கம் + ஆலை – கம்மாலை = கம்மியனின் உலைக்களம். கம் = கம்மியன், ஆலை = இடம்.]*

**கம்மாலை**[2] *kammālai,* பெ.(n.) எருதுகளைக் கொண்டு கிணற்று நீரை இறைக்கும் ஏற்றம்; water lift consisting of a large hemispherical leather or iron bucket worked with bullocks.

*[கம் + ஆலை.]*

கால்வாய் நீரிறைக்க இறைபெட்டி [இறைகூடை] உழனி [ஓணி] முதலிய கருவிகளும், கிணற்று நீரிறைக்க ஏற்றம், கம்மாலை என்னும் பொறிகளும் தோன்றின. அம் = நீர். அம் – கம் = நீர். ஆலுதல் = ஆடுதல், சுற்றுதல். ஆல் – ஆலை = சுற்றி வரும்பொறி. செக்காலை, கரும்பாலை முதலிய வற்றை நோக்குக. இன்றும் திருக்கோவிலூர்க்கும் வில்லிபுரத்திற்கும் இடைப்பட்ட ஊர்களிற் சுற்றுக் கவலையாடுதல் காண்க. கம்மாலை – கமலை – கவலை. ஏற்றம் கையால் இயக்கப்படுவது. அது கைத்துலா, ஆலேறுந்துலா என இருவகை. கம்மாலை எருது பூட்டி இயக்கப்படுவது [தமிழ்.வரலாறு.45.].

கமலையேற்றத்தைக் கபிலையேற்றம் என்று சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் அகர முதலி குறித்திருப்பது தவறாகும். கபிலை என்பது குரால் என்னும் ஆவகை. ஆவைக்கட்டி நீரிறைப்பது வழக்கமன்று.

**கம்மாளச்சி** *kammāḷacci,* பெ.(n.) ***கம்மாளத்தி*** பார்க்க; see kammāḷatti.

*[கம்மாளத்தி → கம்மாளச்சி.]*

**கம்மாளத்தி** *kammāḷatti,* பெ.(n.) கம்மாளக்குடியைச் சார்ந்த பெண்; woman of Kammāḷaṉ family.

*[கம் + ஆள் + அத்தி = கம்மாளத்தி. கம் = கம்முத்தொழில், கம்மியர் பணி.]*

**கம்மாளப்பட்டி** *kamāḷappaṭṭi,* பெ.(n.) கோவை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Coimbatore dt.

*[கம்மாளன்+பட்டி – கம்மாளன் பட்டி → கம்மாளப்பட்டி.]*

**கம்மாளம்பூண்டி** *kammāḷampūṇḍi,* பெ.(n.) காஞ்சிபுரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kanchipuram district.

*[கம்மாளன்+பூண்டி – கம்மாளன்பூண்டி → கம்மாளம் பூண்டி. பூண்டி = ஏரி.]*

**கம்மாளன்** *kammāḷaṉ,* பெ.(n.) பொன்வேலை முதலான தொழில் செய்வோன்; smith, mechanic, artisan, of five communities viz, tattāṉ, kaṉṉāṉ, ciṟpaṉ, taccaṉ, kollaṉ.

**தெ.**கம்மரமு; **து.**கம்மாரெ (கொல்லன்).

**Skt.** kārmāra; Pkt., Pali. kammāra.

*[கருமம் → கம்மம் + ஆளன் – கம்மாளன் = பணிசெய்பவன்.]*

பொற்பணி செய்பவனைத் தட்டான் என்றும் செம்புக்கொட்டியைக் கன்னான் என்றும், கற்பணி மட்பணி சுதைப்பணி செய்பவனைச் சிற்பன் என்றும், இரும்பு வடிப்பவனைக் கொல்லன் என்றும் மரப்பணி செய்பவனைத் தச்சன் என்றும் இவரனைவரையும் ஐவகைக் கம்மியர் என்றும் குறிப்பிடுவது மரபு. கருமகாரர் என்பது பண்டைக்கால வழக்கு.

**கம்மாளாமட்டி** *kammāḷāmaṭṭi,* பெ.(n.) செயல் திறமையில்லாத பேதை; misfit, a good for nothing person.

**மறுவ.** கம்மணாட்டி

*[கருமம் → கம்மம் (வேலை) + ஆளா + மட்டி – கம்மாளாமட்டி. மட்டி = மடையன், பேதை.]*

**கம்மி**[1] *kammi,* பெ.(n.) தொழிலாளி; lobourer, workman. *"மட்கலஞ்செய் கம்மி" (பாரத. திரௌ.64.).*

*[கருமம் → கம்மம் → கம்மி.]*

**கம்மி**[2] *kammi,* பெ.(n.) ***கம்மாளன்*** பார்க்க; see *kammāḷaṉ (த.ம.47).*

*[கருமம் → கருமி → கம்மி.]*

**கம்மி**[3] *kammi,* பெ.(n.) குறைவு; deficiency, deficit, scantiness. ***கம்மல்***[1] பார்க்க; see *kammal*[1].

**ம., க., பட., கோண்**(அடிலா). கம்மி.

**Guj., Mar.** kami.

*[கம்மல் → கம்மி. கம்மல் = குறைதல்.]*

**கம்மிடு–தல்** *kammiḍu-,* 20 செ.கு.வி.(v.t.) மணம் பரவுதல்; to emit fragrance.

**க.** கம்மேறு

*[கம் + இடு.]*

**கம்மிபண்ணு–தல்** *kammi-paṇṇu-,* 12 செ.குன்றாவி. (v.t.) அளவைக்குறைத்தல்; to reduce.

**பட.** கம்மிமாடு

*[கம்மல் = குறைதல். கம்மல் → கம்மி + பண்ணு.]*

**கம்மியநூல்** *kammiya-nūl,* பெ.(n.) சிற்பநூல்; science of architecture. *"எயிலகழிக்கிடங்கு கம்மிய நூற்றொல்வரம் பெல்லைகண்டு" (திருவிளை. திரு நகரங்.38.).*

*[கருமம் → கம்மம் → கம்மியம் + நூல்.]*

**கம்மியம்** *kammiyam,* பெ.(n.) 1.கைத்தொழில்; handicraft work, labour (வின்.); 2. கம்மாளத் தொழில்; smith's work.

*[கருமம் → கம்மம் → கம்மியம்.]*

**கம்மியர்** *kammiyar,* பெ.(n.) ***கம்மியன்*** பார்க்க; see *kammiyaṉ.*

*[கம்மியன் → கம்மியர்.]*

**கம்மியன்** *kammiyaṉ,* பெ.(n.) 1.தொழிலாளி; servant, labourer. *"கம்மிய மூர்வர்களிறு" (சீவக. 495.).* 2. கம்மாளன் (திவா.); smith, artisan. 3.நெய்பவன்; weaver. *"கம்மியர் குழீஇ" (மதுரைக்.521).*

**ம.** கம்மியன்; **தெ.** கம்ம, கம்மவாரு.

**Skt.** karmmin

*[கருமம் → கம்மம் → கம்மியன். த. கம்மியன்>skt. karmin.]*

**கம்மியன்கணக்கு** *kammiyaṉkaṇakku,* பெ.(n.) கோயில் தொழிலாளர் கணக்குகளைப் பார்ப்பவன்; an accountant in charge of temple servants (கல்.அக.).

**ம.** கம்மியன் கணக்கு

*[கம்மியன் + கணக்கு.]*

**கம்மு[1]–தல்** *kammu-,* 5 செ.கு.வி. (v.i.) 1.குரல்குன்றி மாறுபடுதல்; to become hoarse, to be rough, jarring, as a wind instrument. *"மென்குரல் கம்மாமே" (குமர.பிர.முத்துக்.18).* 2. ஒளிகுறைதல் (இ.வ.); to be overcast, cloudy, gloomy, dark.

**ம.** கம்முக; **க.** கம்மு; **Mar.**kammi.

*[செறுமு → செம்மு → கெம்மு → கம்மு → கம்முதல்.]*

**கம்மு[2]–தல்** *kammu-,* 5. செ.குன்றாவி.(v.t.) மூடுதல் (யாழ்.அக.); to cover. ***கம்மல்[1]*** பார்க்க; see *kammal.*

*[செறுமு → செம்மு → கெம்மு → கம்முதல் = அடைத்தல், மூடுதல்.]*

**கம்முருட்டு** *kammuruṭṭu,* பெ.(n.) ஏமாற்றுதல்; deceiving, treachery.

**ம.** கம்முருட்டு

*[கம் + உருட்டு. கம் = மறைவு, ஒளிவு. உருட்டு = புரட்டு, ஏமாற்று.]*

**கம்மூகாரி** *kammūkāri,* பெ.(n.) மந்தாரை; purple mountain ebony.

*[கும்→ கம் → கம்மு = மணம் பரவுதல். கம்மு + காரி.]*

**கம்மெனல்[1]** *kam-m-eṉal,* பெ.(n.) 1.தெளிவின்றி ஒலித்தற்குறிப்பு (இ.வ.); term signifying indistinct sound. 2. ஓசையடங்கற் குறிப்பு; being calm, still, silent. *"கானமுங் கம்மென்றன்றே" (நற்.154.).*

*[கம்மல் → கம்மெனல்.]*

**கம்மெனல்[2]** *kam-m-eṉal,* பெ.(n.) 1. மணங்கமழ்தற் குறிப்பு; emitting of fragrance. *"ஒருங்குபிணி யவிழக் காடே கம்மென்றன்றே" (அகநா.23:4).* 2. விரைவுக் குறிப்பு; hastening. *"கம்மென வம்பு விரித்தன்ன பொங்குமணற் கான் யாற்றுப் படுசினை தாழ்ந்த பயிலிண ரெக்கர்" (அகநா.11:7).*

**க.**கம்ம, கம்பு, கம்மு; **து.**கம்மென, கம்யன; **தெ.**கம்பு; **கொலா.**கம்; நா.கப்; பட. தமலு; **கோத.** கமன்; **H.**gamak.

*[கும்மல் → கம்மல் → கம்மெனல். கும்மல் = பெருகுதல், பரவுதல், விரைதல்.]*

**கம்மை** *kammai,* பெ.(n.) சிறுகீரை (மலை.); a green ciṟukīrai.

*[கம் = நறுமணம். கம் → கம்மை.]*

**கம–த்தல்** *kama-,* 3 செ.கு.வி. (v.i.) நிறைதல்; to be full, to occupy fully. *"கமந்த மாதிரக் காவலர்" (கம்பரா.மிதிலைக்.132.).*

*[கும் → கம் → கமத்தல். கும் = நிறைதல், திரளுதல்.]*

**கமக்கட்டு** *kamakkaṭṭu* பெ.(n.) அக்குள்; arm-pit (சா.அக.).

*[கும் → கம் + அ + கட்டு – கமக்கட்டு. 'அ' சொற்சாரியை. கமக்கட்டு = சேரும் இணைப்பு.]*

**கமக்காரன்** *kama-k-kāraṉ,* பெ.(n.) உழவன் (யாழ்ப்.); cultivator, farmer.

*[கம் → கம்மம் = நன்செய் உழவுத்தொழில். கம்மம் + காரன் – கம்மக்காரன் → கமக்காரன்.]*

**கமகம–த்தல்** *kama-kama-,* 4 செ.கு.வி.(v.i.) மிகமணத்தல்; to be very fragrant. பூக்கடைக்குப் போனால் மணம் கமகமக்கும் (உ.வ.).

**க., பட.** தமதம; **தெ.** குமகும.

*[கம் → கம + கம – கமகம. கும் → கம் = நிறைதல், பெருகுதல், பரவுதல்.]*

**கமகன்** *kamagaṉ,* பெ.(n.) ஆசிரியன்; teacher. *"நிறைமதியாற் கல்வியானீள் கலைகள் கல்லா தறையுமவன் கமகனாகும்" (வெண்பாப்.செய்.49.).*

*[கம் = பரவுதல், நிறைதல். கம் → கமகன் = அறிவு நிறைந்தவன், ஆசிரியன்.]*

**கமங்கட்டு–தல்** *kamaṅ-kaṭṭu-,* 5. செ.குன்றாவி. (v.t.) உரிமைநிலத்தில் வேளாண்மை செய்தல் (யாழ்ப்.); to cultivate one's own farm.

*[கம்மம் → கமம் + கட்டுதல்.]*

**கமங்களம்** *kamaṅgaḷam,* பெ.(n.) நாயுருவி; Indian burr (சா.அக).

*[கமம் = நிறைதல், பரவுதல். கமம் + களம்.]*

**கமஞ்சூல்** *kamañ-cūl,* பெ.(n.) முகில்; cloud, full of moisture. *"முகடுகெந்து ஏறி நிரைத்து நிறைகொண்ட கமஞ்சூல் மாமழை" (நற்.89.).*

*[கம் + அம் + சூல். கம் = நீர். 'அம்' சாரியை. சூல் = நிறைதல். கமஞ்சூல் = நீர்கொண்ட மேகம்.]*

**கமட்டுக்கள்ளன்** *kamṭṭu-k-kaḷḷaṉ,* பெ.(n.) ***கமுக் கட்டுக்கள்ளன்*** பார்க்க; see *kamu-k-kaṭṭu-k-kaḷḷaṉ* (சா.அக).

*[கமுக்கட்டுக்கள்ளன் → கமட்டுக்கள்ளன்.]*

**கமடத்தரு** *kamaḍa-t-taru,* பெ.(n.) சீவதாரு என்னும் மரம் (யாழ்.அக.); civa-taru, a tree.

**மறுவ.** ஓமைமரம்

*[கமடம் + தரு – கமடத்தரு. கமடம் = ஆமை. ஓமை மரத்தை ஆமை மரம் என்று கூறும் கொச்சை வழக்கினடியாகத் தோன்றிய வடமொழிச்சொல்லாகலாம்.]*

**கமடத்தோடு** *kamaḍa-t-tōḍu,* பெ.(n.) ஆமையோடு; tortoise shell.

*[கமடம் + அத்து + ஒடு. 'அத்து' சாரியை]*

**கமடப்பொடி** *kamaḍa-p-poḍi,* பெ.(n.) ஆமை ஒட்டுப்பொடி; calcinated powder obtained from turtle shell.

*[கமடம் + பொடி.]*

**கமடம்**[1] *kamaḍam,* பெ.(n.) ஆமை; turtle; tortoise *"அவனுறு கமடமீத்தயங்கிய காப்பினை" (கந்தபு. ததீசியுத்.28.).*

*[கும் = கூட்டுதல், அடங்கல். கும் = கும → குமடம் = உறுப்புகளை அடக்கிக் கொள்வது, ஆமை.]*

**கமடம்**[2] *kamaḍam,* பெ.(n.) ***கமண்டலம்*** பார்க்க; see *kamaṇḍalam.*

*[கமண்டலம் → கமடம் (கொ.வ.).]*

**கமடற்பம்** *kamaḍaṟpam,* பெ.(n.) ***கமடப்பொடி*** பார்க்க; see *kamaḍa-p-poḍi.*

*[கமடம் + பற்பம்.]*

**கமடி** *kamaḍi,* பெ.(n.) பெண்ணாமை; the female turtle (சா.அக).

*[கமடம் → கமடி. 'இ' பெ.பா.ஈறு.]*

**கமண்டலம்** *kamaṇḍalam,* பெ.(n.) துறவியர் கையிலேந்தும் நீர்க்கடிகை, (வளைந்த கைப்பிடி யுடைய மூக்குச் செம்பு); a vessel for holding water used by ascetics. *"தண்டொடு பிடித்த தாழ் கமண்டலத்து" (குறுந்.156:3.).*

**ம.** கமண்டலம்; **க.** கமண்டல; **தெ.** கமண்டலு.

**Skt., Pali., Mar., Guj., Nep.** kamaṇḍalu.

*[கரம் + மண்டலம் – கரமண்டலம் → கமண்டலம் = கையிலெடுத்துச் செல்லும் மண் ஏனம். கரு → கரம் (கை).]*

கமண்டலத்தைக் கமண்டலு என்பது தெலுங்குச்சொல். கம்பர் கமண்டலத்தைக் கமண்டலு எனப்பாடியிருப்பது கொச்சை வழக்காகிய திசைச்சொல்லாட்சி. "கமண்டலுவி னன்னீர்" (கம்பரா.அகத்.48.). இதனை, செ.அக. தலைப்புச் சொல்லாகத்தந்திருப்பதும் தவறு. மராத்தி சொற்பிறப்பு அகர முதலியில் இச்சொல்லுக்குச் சுரைக்குடுவை எனப் பொருள் தந்திருப்பதும் ஏற்புடையதன்று.



கமண்டலம்

**கமண்டலமுருந்து** *kamaṇḍalamurundu,* பெ.(n.) குரல்வளையின் இரண்டு முக்கோண முருந்துகள்; the two ditcher shaped cartilages of the back of the larynx (சா.அக.).

*[கமண்டலம் + முருந்து.]*

**கமண்டலவிளநீர்** *kamaṇḍala-v-iḷa-nīr,* பெ.(n.) ஒரு கமண்டலமளவு நீர்தரக்கூடிய இளநீர் வகை (வின்.); large and tender coconut containing enough water to fill a kamaṇḍalam.

*[கமண்டலம் + இளநீர்.]*

**கமத்தொழில்** *kama-t-toḻil,* பெ.(n.) பயிர்த்தொழில், வேளாண்மை (யாழ்ப்.); tillage, cultivation.

*[கம் → கமம் + தொழில் – கமத்தொழில். நன்செய்

*நிலத்து வேளாண்மை.]*

**கமதாயம்** *kama-tāyam,* பெ.(n.) நிலவாகை (நாமதீப.); senna.

*[ஒருகா. கம் → கமம் + தாயம் – கம்மத்தாயம் → கமதாயம் (கொ.வ.).]*

**கமம்[1]** *kamam,* பெ.(n.) நிறைவு; fullness, entirely. *"கமம் நிறைந்தியலும்" (தொல்.சொல்.உரி.57.)*

*[கும் → கம் → கமம். கும் = நிறைதல்.]*

**கமம்[2]** *kamam,* பெ.(n.) 1.வேளாண்மை; cultivation, agriculture. 2.வயல்; field, farm. 3. நுழைவாயில்; entrance.

*[கம் = நீர். கம் + அம் – கமம் = நீர்பாயும் நிலம், நீர்நிலை, அகழிவாயில், நன்செய்ப்பயிர் விளைவிக்கும் வேளாண்மை.]*

**கமம்[3]** *kamam,* பெ.(n.) வெட்பாலை; dystantry rosebery (சா.அக.). ***கமல்[1]*** பார்க்க; see *kamal.*

*[கம் → கமம்.]*

**கமம்புலம்** *kamam-pulam,* பெ.(n.) நிலமும் புலமும், நன்செயும் புன்செயும் (யாழ்ப்.); lands and fields.

*[கமம் + புலம். கமம் = நன்செய். புலம் = புன்செய்.]*

**கமர்[1]–தல்** *kamar-,* 2 செ.கு.வி.(v.i.) எண்ணெய் போன்றவற்றைக் காய்ச்சும்பொழுது முடைநாற்றம் வீசுதல்; to spread disagreable smell of oil etc.

**மறுவ.** கமரு

*[குமிழ் → குமுல் → கமல் → கமர்]*

**கமர்[2]** *kamar,* பெ.(n.) நிலப்பிளப்பு (திவா.); crack, chasm, cleft in the ground caused by drought. *"கமர்பயில் வெஞ்சுரத்து" (தேவா. திருநன்னிலை.9.).*

*[கவல் → கவர் → கமர் (கொ.வ.) கவல் = பிளவு, பிரிவு, உடைப்பு.]*

**கமரகம்** *kamaragam,* பெ.(n.) தமரத்தை; carambola tree (சா.அக.).

*[கமர் + அகம் .]*

**கமரி** *kamari,* பெ.(n.) 1. பிளவுகளில் முளைக்கும் புல்; grass growing in crevices. 2.மான்; deer (சா.அக).

*[கவர் → கமர் → கமர்.]*

**கமரிப்புல்** *kamari-p-pul,* பெ.(n.) புல்வகையுளொன்று; cleft grass.

**ம.** கவரப்புல்லு

*[கமர் = பிளவு. கமர் → கமரி + புல்.]*

**கமரு[1]–தல்** *kamaru-,* 2 செ.கு.வி.(v.i.) அழுதல்; to weep (இ.வ.).

**க.** குமுலு

*[குமுழ் → குமுல் → கமுல் → கமலு → கமருதல் = மனம் விம்மிப் பொங்குதல், அழுதல்.]*

**கமரு[2]–தல்** *kamaru-,* 2 செ.கு.வி.(v.i.) தொண்டை கரகரத்தல்; to feel irritation in the throat.

*[கமல் → கமர் = சளியால் தொண்டை ஈரமுற்றிருத்தல்.]*

**கமரோட்டம்** *kamarōṭṭam,* பெ.(n.) பிளவுபட்ட உதடு; hare-lip (சா.அக.).

*[கமர் + (ஒட்டம்) கமரொட்டம் – கமரோட்டம். ஒட்டம் = உதடு.]*

**கமல்[1]** *kamal,* பெ.(n.) 1.வெட்பாலை (மூ.அ.) ivory-tree. 2.குடசப்பாலை; a twining plant known as twining swallow wort (சா.அக.).

**மறுவ.** கொடிப்பாலை

*[கம் + அல் – கமல் = கடுங்கோடையிலும் மரப்பட்டையில் ஈரங்காத்து உலராது நிற்கும் மரம். கம் = நீர்.]*

**கமல்[2]** *kamal,* பெ.(n.) ***கமலம்[1]*** பார்க்க; see *kamalam.*

*[கம் + அல். 'அல்' சொல்லாக்க ஈறு. கம்=நீர். கமல் = நீரில் வளரும் செடி.]*

**கமலக்கண்ணன்** *kamala-k-kaṇṇaṉ,* பெ.(n.) திருமால் (திவா.); Visnu, the lotus-eyed.

*[கமலம் + கண்ணன் – கமலக்கண்ணன்.]*

**கமலக்கருவி** *kamala-k-karuvi,* பெ.(n.) 1.கொப்பூழின் கீழிருக்கும் உறுப்பு; organ below the navel. 2.***மணிபூரகம்*** பார்க்க; see *maṇipūragam.*

*[கமலம் + கருவி.]*

**கமலக்குளிகை** *kamala-k-kuḷigai,* பெ.(n.) எழுவகை இதளியக் குளிகைகளில் ஒன்று; one of the seven varieties of animated mercurial pills (சா.அக.).

*[கமலம் + குளிகை.]*

**கமலகோசிகம்** *kamala-kōšigam,* பெ.(n.) கைகுவித்து ஐந்துவிரலும் அகலவிரித்துக் காட்டும் தாமரையிதழ் என்னும் இணையாவினைக்கை (சிலப் 3,18.உரை.); a gesture with one hand in which the fingers are so held as to appear like the calyx of a lotus, one of 33.*iṉaiyā-r-viṉaikkai* (செ.அக.). ***தாமரைக்கை*** பார்க்க; *see tāmarai-k-kai.*

*[கமலம் + கோசிகம். skt.kosiga>த. கோசிகம். இதனைத்தாமரைக்கை அல்லது கமலக்கை என்று கூறுவர்.]*

**கமலத்தீ** *kamala-t-tī,* பெ.(n.) இரண்டு விரல் கனமுள்ள விறகால் சிற்றளவாக எரிக்கும் தீ; a fine of moderate heat obtained by burning a fuel of two fingers thickness (சா.அக.).

*[கமலம் + தீ.]*

**கமலத்தேவி** *kamala-t-tēvi,* பெ.(n.) திருமகள் Lakshmi, whose abode is the pink lotus. *"கமலத் தேவியென்றே யையஞ் சென்றதன்றே" (திருக்கோ.41.).*

*[கமலம் + தேவி.]*

**கமலநாட்டியம்** *kamala-nāṭṭiyam,* பெ.(n.) கூத்து வகையுளொன்று, வட்டக்கூத்து (யாழ்.அக.); a kind of dance; circular dance.

*[கமலம் + நாட்டியம் – கமலநாட்டியம்.]*

**கமலபிண்டம்** *kamalapiṇḍam,* பெ.(n.) கருப்பையில் வளரும் தாமரை மொக்கையொத்த பிண்டம்; a foetus in the uterus which has developed to a stage resembling in shape and size of lotus bud (சா.அக).

*[கமலம் + பிண்டம்.]*

**கமலம்**[1] *kamalam,* பெ.(n.) 1.தாமரை (திவா.); lotus. 2.நீர் (திவா.); water. *"வண்ணவொண் கமலஞ் செய்யமுளரியை" (கந்தபு.திருவ.91).* 3. தாமரைப்பூ வடிவிலான தட்டு ; circular salver, like a full blown lotus. 4. பட்டைத்தீட்டிய வட்டக்கோணமுக வயிரம்; circular faceted diamond. 5. பேரெண்; large number.

**ம.** கமலம்; **க.** கமல; **தெ.**கமலமு; **H.** kamal; **Skt.**, **Pali.** kamalam.

*[கம் = நீர். கம் + அல் + அம் – கமலம் = நீரில் வளரும் பூங்கொடியாகிய தாமரை. 'அல்' சொல்லாக்க ஈறு. 'அம்' துணையீறு.]*

கம் என்பது நீரைக் குறிக்கும் செந்தமிழ்ச் சொல். கமம் = நன்செய் நிலம். ஆதலால் கமலம் தூய தமிழ்ச் சொல்லாகும். இதனை வடசொல்லாகக் கூறுவோர் இதற்கு விரும்பத்தக்கது என்னும் சொல்மூலம் காட்டுவர். அதுவும் கம்→ கமம் = நிறைதல், பெருகுதல், உவத்தல், ஆசைமேலிடுதல் என்னும் தமிழ் வேர்ச்சொல்லடி விரிவேயாம். அம்→அமல் [நெருக்கம்] என்றாற் போன்று, கம் → கமல் [கமலம்] என்று நிறைவையும் ஒடுக்கத்தையும் குறித்தபோது எண்ணிக்கையில் மிகுந்த பேரெண்ணுக்குப் பெயராயிற்று.

**கமலம்**[2] *kamalam,* பெ.(n.) செந்நிற ஆடை, செம்படாம் (அக.நி.); scarlet-cloth.

*[கமலம் = தாமரைப்பூ. செந்நிற ஒப்புமையால் செந்நிறத் துணியைக் குறித்தது.]*

**கமலம்**[3] *kamalam,* பெ.(n.) ஆமை; tortoise.

*[கமடம் → கமலம்.]*

**கமலம்**[4] *kamalam,* பெ.(n.) 1.திருவாய்ச்சி; aura 2.உடம்பின் (மூலநிலை) ஆதாரம்; the mystic nerve centre in the human body.

*[கமல் → கமலம் = தாமரைப்பூ, தாமரைப்பூவையொத்த வட்டவடிவ ஒளிச்சுற்று, தாமரை வடிவினதான மூலநிலை.]*

**கமலம்**[5] *kamalam,* பெ.(n.) 1. பித்தளை; brass. 2. வெண்கலம்; bronze.

*[ஒரு கா. கமல்→ கமலம் = தாமரை. தாமரை நிறத்தைப் பெற்றிருப்பதால் இப்பெயர் பெற்றிருக்கலாம்.]*

**கமலம்**[6] *kamalam,* பெ.(n.) அடுக்கிய கோடிகளில் தாமரை என்னும் எண்ணுப்பெயர். *"நான்கு அடுக்கிய கோடி" (கோடி[4]);* number crore[4] generally known as thamarai. *"கையில் கமலமும் வெள்ளமும் நுதலிய" (பரிபா.2, 14).* ***அடுக்கிய கோடி*** பார்க்க; see *aḍukkiyakōdi.*

*[தாமரை → கமலம் (மறுபெயர்).]*

பழந்தமிழ் எண்ணுப் பெயர்களுள் பேரெண்களைக் குறிக்கும் போது, அடுக்கிய கோடிகள்

அவற்றுக்குரிய தனிப்பெயர்களால் வழங்கப்பெறும்.

| எண் | பெயர் | இடமானம் | (தானம்) |
|---|---|---|---|
| 1 | கோடி | கோடி | 8 (100 00 000) |
| 2 | கோடி[2] | கும்பம் | 15 |
| 3 | கோடி[3] | நெய்தல் | 22 |
| 4 | கோடி[4] | தாமரை | 29 |
| 5 | கோடி[5] | குவளை | 36 |
| 6 | கோடி[6] | ஆம்பல் | 43 |
| 7 | கோடி[7] | வெள்ளம் | 50 |
| 8 | கோடி[8] | ஊழி | 57 |

**கமலமுனி** *kamalamuṉi,* பெ.(n.) பதினெண் சித்தர் களுள் ஒருவர்; Kamalamuṉi, who is considered to be one of eighteen of the Siddars school of thought.

*[கமலம் + முனி.]*

**கமலரேகை** *kamalarēgai,* பெ.(n.) ***கமலவரி*** பார்க்க; see *kamalavari.*

*[கமலம் + ரேகை.]*

**கமலவரி** *kamalavari,* பெ.(n.) உள்ளங்கையில் உள்ள கைவரி வகை; certain lines on the palm of the hand.

*[கமலம் + வரி.]*

**கமலவூர்தி** *kamal-v-ūrdi,* பெ.(n.) தாமரையை ஊர்தியாகவுடைய அருகக்கடவுள் (திவா.); arhat, who rides on a lotus.

*[கமலம் + ஊர்தி.]*

**கமலவைப்பு** *kamala-vaippu,* பெ.(n.) தாமரையுள்ள நீர்நிலை; lotus tank or pool. *"வண்டினமே நீர்... வாழ்க மலவைப்பில்" (மாறன். 261. 652, உதா.).*

*[கமலம் + வைப்பு. வைப்பு = நிலப்பகுதி, இடம்.]*

**கமலன்** *kamalaṉ,* பெ.(n.) நான்முகன்; brahma, the lotus-born. *"மலர்செழுங் கமலத்துதித்தலாற் கமலனெனப் பெயர்மருவி" (கூர்மபு.8.).*

*[கமலம் → கமலன்.]*

**கமலா** *kamalā,* பெ.(n.) 1. கிச்சிலி வகை; loose-jacket, sylhet orange. 2. ஒருவகை நாரை; a kind of Indian crane. 3. சிறுநீர்ப்பை; urine bladder. 4. ஒரு மருந்து; a medicament. 5. ஒருவகைமான்; a kind of deer. 6. அல்லித்தாமரை; nymphaea lotus (சா.அக.).

**கமலாக்கினி** *kamalākkiṉi,* பெ.(n.) ***கமலத்தீ*** பார்க்க; see *kamalat-ti.*

*[கமலம் + அக்கினி.]*

**கமலாசனம்** *kamalāšaṉam,* பெ.(n.) ***தாமரை இருக்கை*** பார்க்க; see *tāmarai irukkai.*

*[கமலம் +ஆசனம்.]*

Skt. āsana> த.ஆசனம்.

**கமலாப்பழம்** *kamalā-p-paḻam,* பெ.(n.) இனிப்புக் கிச்சிலி; sweet orange.

*[கமலம் + பழம். கமலம் = சிவப்பு.]*

**கமலாப்பொடி** *kamalā-p-poḍi,* பெ.(n.) குரங்கு மஞ்சள் நாரி; kamala powder.

*[கமலம் + பொடி – கமலப்பொடி → கமலாப்பொடி.]*

**கமலாபுரம்** *kamalāpuram,* பெ.(n.) திருவாரூர், தூத்துக்குடி, சேலம், கரூர் மாவட்டங்களில் உள்ள சிற்றூர்கள்; a Villages in Karur, Tiruvarūr, Tūtukkudi district.

*[கமலன் + புரம் – கமலன்புரம்→கமலபுரம்→கமலாபுரம்.]*

**கமலாலயப்புராணம்** *kamalā-laya-p-purāṇam,* பெ.(n.) 16ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த மறை ஞான சம்பந்தராலியற்றப்பட்ட தொன்மநூல்; a puramic composition *Maṟaiñāṉašambandar* of 16th C.

*[கமலாலயம் + புராணம்.]*

**கமலாலயம்** *kamalā-layam,* பெ.(n.) திருவாரூர்; Tiruvarur, a town sacred to siva-, in Tiruvarūr dt. *"முந்துசீர்க் கமலாலயத்து" (கந்தபு. தெய்வயா.61.).*

*[கமலம் + ஆலயம் – கமலாலயம். ஆலையம் = ஆலயம் (திருச்சுற்று மதில்களைக் கொண்ட கோவில்.]*

**கமலி** *kamali,* பெ.(n.) **குங்குமப்பாடாணம்** (மூ.அ.) பார்க்க; see *kuṅguma-p-pāḍāṇam,* a prepared arsenic.

*[கமலம் → கமலி.]*

**கமலிகம்** *kamaligam,* பெ.(n.) சிறுதாமரை; small lotus (சா.அக.).

*[கமலம் → கமலி → கமலிகை → கமலிகம். `கை' சிறுமைப் பொருள் பின்னொட்டு.]*

**கமலிப்பட்டு** *kamali-p-paṭṭu,* பெ.(n.) பட்டாடைவகை (சங்.அக.); a kind of silk-cloth.

*[கமலம் → கமலி + பட்டு – கமலிப்பட்டு.]*

**கமலை**[1] *kamalai,* பெ.(n.) 1.திருமகள்; Lakshmi. *“கமலை நோக்கும்” (கம்பரா.பாயி.பயன்.1).* 2. திருவாரூர் (திவா.); Tiruvarūr. *“கைந்நாகமிசை யூர்ந்து கமலையெனும் பதியடைந்தான்” (கந்தபு.120).*

*[கமலம் → கமலை.]*

**கமலை**[2] *kamalai,* பெ.(n.) பறிஇணைத்துக் கிணற்று நீரிறைக்கும் காளையேற்றம்; water-lift, consisting of a large hemispherical leather or iron bucket, worked with bullocks, a contrivance for drawing water from wells.*“முகட்டுக் கமலை வட்டத்தில்” (முக்கூடற்.46.).*

**க.**கவலெ; **ம.** கமல; **தெ.** கபில.

*[அம் = நீர். அம்→கம்→கம்மாலை→ கமலை(வே.க.74.).]*

காளை ஏற்றத்தைக் கமலை என்பது பாண்டி நாட்டு வழக்கு. கவலை என்பது சோழ, கொங்கு நாட்டு வழக்கு.

கன்னடத்திலும், தெலுங்கிலும் வகரம் பகரமாகத் திரிவதால் அதைத் துணைக்கொண்டு கவலையைக் கபிலை என்று திரித்து, அச்சொல்லை வடசொல் என்று சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் அகரமுதலி குறிப்பது பொருந்துவதன்று. 'கபிலை' என்பது குரால் [புகர்நிற ஆன்]. ஆவைக் கட்டி நீரிறைக்கும் வழக்கம் தமிழகத்தில் இல்லை. கவலை என்னும் தென்சொல்லை வடசொல்லாக்கவே கபிலை என்னும் திரிசொல்லை ஆண்டுள்ளனர். கம் என்பதும் தென்சொல்லே [வே.க.74].

**கமலைவண்டி** *kamalaivaṇḍi,* பெ.(n.) கமலை ஏற்றத்தின் மேலுள்ள உருளை; pulley (உ.வ.).

*[கமலை + வண்டி.]*

**கமவாரம்** *kamavāram,* பெ.(n.) உழவுக்கருவி களுக்காக விளைச்சலில் வாங்கும் பங்கு (யாழ்ப்.); share of the produce of land given in return for agriculturual implements loaned for cultivation.

*[கமம் + வாரம் – கமவாரம். கமம் = நன்செய்நிலம். வாரம் = வருவாய், பங்கு. (வருவது வாரம் ).]*

**கமழ்**[1]**-தல்** *kamal-,* 2.செ.கு.வி.(v.i.) நறுமணம் வீசுதல்; too emit fragrance. *“தேங்கமழ் நாற்றம்” (நாலடி. 199.).* 2. தோன்றுதல்; to appear. *“மணங்கமழ் மாதரை மண்ணியன்ன” (பொருந.19.)* 3. பரத்தல்; to spread. *“வியலிடங் கமழ விவணிசையுடை யோர்க்கு” ( புறநா.50;13.).*

**ம.** கமிழுக; **க.** கமரு (நெடி); **தெ.** கம்பு (நறுமணம்); **பட.** தமலு (நறுமணம்).

*[கம் → கமழ் → கமழ்தல். கம் = நிறைதல், பெருகுதல், பரவுதல், மணம் பரப்புதல்.]*

**கமழ்**[2] *kamal* பெ(n.) 1.மருது; marudah tree. 2.நறுமணம்; sweet smell (சா.அக.).

*[கம் → கமழ். கமழ் = மணமுள்ளது.]*

**கமழ்ப்புல்** *kamal-p-pul,* பெ.(n.) ஒருவகை நறுமணப் புல்; a fragrant grass (சா.அக.).

*[கமழ் + புல். கமழ் = மணம்.]*

**கமழுகம்** *kamalugam,* பெ.(n.) மருது; murdah tree (சா.அக.).

*[கமழ் + உகம். இகம் → உகம்.]*

**கமறு-தல்** *kamaṟu-,* 5 செ.கு.வி.(v.i.) 1.மிக வொலித்தல்; to roar as thunder. *“முகிலுங் கமற” (திருப்பு. 750.).* 2. மிக அழுதல் (வின்.); to weep bitterly, cry very loud. 3. மிக வேகுதல்; to be excessively heated, to become dry and hard. *“கடல்தீவுகள் கமற வெந்தழல் வேல்விடு சேவக” (திருப்பு. 784.).* 4. நெடியுண்டாதல்; to feel a pungent sensation as that produced by chillies on the fire; மிளகாய் கமறுகிறது (கொ.வ.).

**ம.** கமக்குக; **க.** கமரிசு; **பட.** கமரு(நெடி).

*[கம் → கமல் → கமறு → கமறுதல் = பெருகுதல், பரவுதல், மிகுதல்.]*

**கமனகுளிகை** *kamaṉa-kuḷigai,* பெ.(n.) வான் வழியே நினைத்தவுடன் செல்லுதற்குரியதாகக் கருதப்பட்ட சித்தர்குளிகை (வின்.); magical mercury pill, reputed to give a person the power of freely travelling through space.

*[கமனம் + குளிகை. கம் → கமனம் = பரவுதல், செல்லுதல்.]*

**கமனி¹–த்தல்** *kamaṉi-,* 4 செ.கு.வி. (v.i.) செல்லுதல் (யாழ்.அக.); to go, pass swiftly.

*[கம் → கமனம் → கமனித்தல். கம் = பரவுதல், செல்லுதல்.]*

**கமனி²** *kamaṉi,* பெ.(n.) காற்றுமண்டலத்தில் செல்லும் ஆற்றலுடையவன்; one who flies in the aerial region (சா.அக.).

*[கம் → கமனம் → கமனி. 'இ' உடைமை குறித்த ஈறு.]*

**கமார்** *kamār,* பெ.(n.) ***கமர்²*** (வின்.) பார்க்க; see *kamar²*.

*[கமர்² → கமார்.]*

**கமாரக்காரர்** *kamāra-k-kārar,* பெ.(n.) தம் தலைவனுக்கு அடங்காத பரவர் வகுப்பினர்; (G.Tn.D.i.123.); a division among the fisherman caste who impugn the authority of their caste leader.

*[கமாரம் + காரன் – கமாரக்காரன். கமர் → கமார் → கமாரம் = வெடிப்பு, வெடிக்கும் ஓசை இங்கு எதிர்ப்புணர்வைச் சுட்டியது.]*

**கமாரிடு–தல்** *kamār-iḍu-,* 20.செ.கு.வி.(v.i.) மெதுவாய் ஓசை எழுப்புதல், ஒலிசெய்தல்; to cry softly, utter a faint sound. அங்கே ஒருவருங் கமாரிடக் கூடாது (வின்.).

*[கமர் → கமார் + இடு – கமாரிடு. கமார் = வெடிப்பு, வெடிக்கும் அல்லது பொரிக்கும் ஓசை.]*

**கமாரெனல்** *kamār-eṉal,* பெ.(n.) மெதுவான ஒலிக்குறிப்பு (வின்.); onoam.,expr. crying softly, uttering a faint sound.

*[கம் → கமார் + எனல் – கமாரெனல். 'கமார்' ஒலிக்குறிப்பு.]*

**கமால்செய்–தல்** *kamālšey-,* 1 செ.குன்றாவி. (v.t.) ***கம்மால் செய்–தல்*** பார்க்க; see *kammālšey.*

*[கம்மால் – கமால் + செய்.]*

**கமி¹–த்தல்** *kami,* 4 செ.கு.வி. (v.i.) நடத்தல் (பிங்.); to walk.

*[கம் (அசைதல்,நகர்தல்) → கமி.]*

**கமி²–த்தல்** *kami-,* 4 செ.குன்றா.வி.(v.t.) 1. தாங்குதல்; to support. *"கமித்துநின்றிடு களையெலாம்" (சேதுபு.மங்கல.64.)* 2. பொறுத்தல்; to bear with, endure, forgive, pardon. *"எங்க ளறியாமையாதி கமி" (தேவா. 1184,7.).*

**த.**கமி. >**Skt.** ksami.

*[காவு → கவு → கமு → கமி (கொ.வ.) → கமித்தல் = சுமத்தல், பொறுத்தல், தாங்குதல்.]*

**கமி³** *kami,* பெ.(n.) மிளகு (மலை.); black pepper.

*[கருமிளகு → கமி (கொ.வ.).]*

**கமிகை** *kamigai,* பெ.(n.) கடிவாளம்; bridle.

*[கமி → கமிகை. கமி = சுமத்தல், பொறுத்தல, தாங்குதல், தாங்கி நிறுத்துதல்.]*

**கமிச்சு** *kamiccu,* பெ.(n.) ***கம்பியச்சு*** (இ.வ.) பார்க்க; see *kambi-y-accu.*

*[கம்பியச்சு → கமிச்சு (கொ.வ.).]*

**கமிழுகம்** *kamiḻugam,* பெ.(n.) 1. முள்ளம்பன்றிக் கொம்பு; the long erectile spine of a porcupine (சா.அக). 2. முள்ளம்பன்றி; porcuine.

*[கம் = பரவுதல், பரப்புதல். கம் → கமி → கமிழ் + உகம் –கமிழுகம் = முள்ளைப்பரப்பக்கூடியது.]*

**கமுக்கக்காரன்** *kamukka-k-kāraṉ,* பெ.(n.) அடக்கமுள்ளவன்; reserved, reticent man.

*[கமுக்கம் + காரன் = கமுக்கக்காரன்.]*

**கமுக்கட்டு** *kamu-k-kaṭṭu,* பெ.(n.) அக்குள் (பிங்.); armpit.

[கம் → கம்மு + கட்டு – கம்முக்கட்டு → கமுக்கட்டு. கம்முதல் = அடக்கிக்கொள்ளுதல். கமுக்கட்டு = ஏதேனும் பொருளை அடக்கி வைத்துக்கொள்ளும் இடம்.]

**கமுக்கட்டுக்கள்ளன்** *kamu-k-kaṭṭu-k-kaḷḷaṉ,* பெ.(n.) அக்குளில் உண்டாகும் ஒரு கட்டி; an abscess arising in the arm-pit,

[கமுக்கட்டு + கள்ளன்.]

**கமுக்கம்** *kamukkam,* பெ.(n.) மறைபொருள், மந்தணம்; secret. கை மூடிக்கொண்டிருந்தால் கமுக்கம், திறந்தால் வெட்டவெளி (உ.வ.).

ம. கமுக்கம்; **கோண்.** கம்மெகெ.

[கும் → குமு → குமுக்கு → கமுக்கு → கமுக்கம்.]

**கமுக்குக்கமுக்கெனல்** *kamukku-k-kamukkeṉal,* பெ.(n.) மந்தணத்தைக் காட்டும் ஒலிக்குறிப்புச் சொல்; onom. expr. signifying confidential matter.

[கமுக்கு + கமுக்கு + எனல். ஈரடுக்கொலிக் குறிப்பு]

**கமுகக்குடி** *kamuga-k-kuḍi,* பெ.(n.) திருவாரூர் மாவட்டத்தைச் சார்ந்த சிற்றூர்; a village inTiruvarūr district.

[கமுகு + குடி – கமுகக்குடி. கமுகு = பாக்கு.]

**கமுகங்காய்** *kamugaṅkāy,* பெ.(n.) பாக்கு; areca-nut.

[கமுகு + அம் + காய். 'அம்' சாரியை.]

**கமுகந்தொலி** *kamugantoli,* பெ.(n.) பாக்கின் மீதுள்ள தோல்; the outer covering of an areca-nut.

[கமுகு + அம் + தொலி.]

**கமுகம்பிள்ளை** *kamugampiḷḷai,* பெ.(n.) பாக்கு மரக்கன்று; the young areca.

[கமுகு + அம் + பிள்ளை. 'அம்' சாரியை.]

**கமுகம்பூச்சம்பா** *kamugam-pūccambā,* பெ.(n.) கமுகம்பூவின் மணமுடைய சம்பாநெல்வகை; a kind of paddy, having the odour of areca flowers.

[கமுகம் + பூ + சம்பா – கமுகம் பூச்சம்பா.].

**கமுகமடல்** *kamuga-maḍal,* பெ.(n.) பாக்குமரத்தின் இளமடல்; the pinnate leaves of areca tree.

**து.** கங்கொலி

[கமுகம் + மடல்.]

**கமுகமுத்தம்** *kamugamuttam,* பெ.(n.) ***கமுகமுத்து*** பார்க்க; see *kamugamuttu.*

[கமுகமுத்து → கமுகமுத்தம் .]

**கமுகமுத்து** *kamugamuttu,* பெ.(n.) பாக்கு; arecanut.

[கமுகு + அம் + முத்து. 'அம்' சாரியை.]

**கமுகவலிச்சல்** *kamugavaliccal,* பெ.(n.) ***கமுகஞ் சலாகை*** பார்க்க; see *kamugañjcalāgai.*

[கமுகம் + வலிச்சல். வலி → வலிச்சல் = வரிச்சை.]

**கமுகாஞ்சலாகை** *kamugāñ-calāgai,* பெ.(n.) கட்டுதற்குகந்த பாக்குமரத்துவரிச்சல் (வின்.); areca laths.

[கமுகு + அம் + சலாகை – கமுகஞ்சலாகை.]

**கமுகு** *kamugu,* பெ.(n.) 1.பாக்குமரம்; betel-nut palm tree, areca-nut tree. *"காய்க்குலைக் கமுகும்" (மணிமே.1,46.)* 2.பாக்கு; arecanut. *"கைக்காய்த்தால் கமுகுகாய்க்கும்" (பழ.).*

**மறுவ.** பாக்கு, பூகம், பூக்கம், கந்தி, அடைக்காய்மரம்.

**ம.** கமுகு, கவுங்ஙு, கமுங்ஙு, கமுங்கு; **க.** கவுங்கு, கங்கு; **து.** கங்கு, கங்ஙு.

**Skt.** kramuka; **Pali.** kamuko.

[கம் → கமு → கமுகு (சுவையுடையது). கம் = மணம், சுவை.]

**கமுகுக்குலை** *kamugku-k-kulai,* பெ.(n.) பாக்குக்குலை, a bunch of arecanut (சா.அக).

[கமுகு + குலை.]

**கமுகை** *kamugai,* பெ.(n.) ***கமுகு*** பார்க்க (சா.அக.); see *kamugu.*

*[கமுகு → கமுகை.]*

**கமுனை** *kamuṉai,* பெ.(n.) மாதுளை; pomegranate.

*[கம் → கமுனை. கம் = நீர்; கமுனை = நீர், சாறு நிறைந்த முத்துகளையுடையது.]*

**கமை[1]–த்தல்** *kamai-,* 4.செ.குன்றாவி.(v.t.) ***கமி[3]*** பார்க்க; see *kami[3]*. *"அடியேன் பிழைத்தேனாயினும் நீ கமைக்க வேண்டும்" (விநாயகபு. 33.13.).*

*[கமி[3] → கமை.]*

**கமை[2]–தல்** *kamai-,* 4 செ.கு.வி.(v.i.) நிரம்புதல்; to be full. *"கமையாக் காதல்" (சங்கற்ப.2.).*

*[கம் → கமை. கம் = பரவுதல், நிறைதல்]*

**கமை[3]** *kamai,* பெ.(n.) 1.பொறுமை; patience, forbearance, lenity, endurance. *"கமையினை யுடையராகி" (தேவா. 1104.5).* வம்பு தும்பு பண்ணாமல் கமையாக இருந்து கொள் (இ.வ.). 2. அழகு; beauty (த.மொ.அக.).

*[கம் → கமை. கம் = பரவுதல், நிறைதல். கமை = பொறை, அழகு.]*

**கமை[4]** *kamai,* பெ.(n.) மலை; mountain. *"கமையாகி நின்ற கனலே போற்றி" (தேவா. 1160.8).*

*[உம் → கம் (உயரம், மலை) → கமை.]*

**கமை[5]** *kamai,* பெ.(n.) கரும்பு; sugarcane (சா.அக).

*[கம் → கமை. கம் = இனிமை, சுவை, மணம்]*

**கமைப்பு** *kamaippu,* பெ.(n.) பொறுமை; endurance. *"கமைப்புறு நாண்முதற் காப்பு நீங்கினார்" (திருவிளை. வளை.28.).*

*[கம் → கமை → கமைப்பு.]*

**கய[1]–த்தல்** *kaya-,* 3 செ.கு.வி.(v.i.) கசத்தல்; to be bitter.

**ம.** கைக்க. கசக்க; **க.** கய், கயி,கய்யி; **கோத.** கச்; **துட.** கொய்; **குட.** கய்; **மா.** காசெ; **பட.** கயி.

*[கள் → கய.]*

**கய[2]–த்தல்** *kaya-,* 3 செ.குன்றாவி.(v.t.) வெறுத்தல்; to abhor, loathe, detest. *"கயந்து நவின்றீரே" (சிவதரு. சுவர்க்கநரக.188.).*

*[கள் → கய.]*

**கய[3]** *kaya,* கு.பெ.எ.(adj.) 1.பெரிய; great. *"தேடுங் கயமா முகனைச் செருவில் சாடும்" (கந்தரனுபூ–1).* 2. மெல்லிய; tender, smooth, delicate. கயந்தலை மடப்பிடி (தொல்.சொல்.322.உரை.) .

*[கரு → கய.]*

**கயக்கம்** *kayakkam,* பெ.(n.) 1.வாட்டம்; strain, stress. *"புதல்வனைப் பயந்த புனிறுதீர் கயக்கந் தீர்வினை மகளிர்" (மணிமே. 7,75.).* 2. இடையீடு; intermission, interruption. *"கயக்கமி றுயிற்சிக் கும்பகருணெனக் கண்ணிற் கண்டான்" (கம்பரா. ஊர்தேடு.121.).* 3.கலக்கம்; confusion, perturbed condition. "கவ்விய வெஃகிநின்ற கயக்கமி னிலைமை நோக்கி" (சீவக.395.) .

*[கய → கயங்கு → கயங்கம் → கயக்கம்.]*

**கயக்கால்** *kayakkāl,* பெ.(n.) ஊற்றுக்கால்; channel issuing from a spring; river channel. *"ஐம்பூண்டிக் கயக்காலுக்கு வடக்கும்" (S.I.I.i.87).*

**மறுவ.** ஊற்றுக்கால்

*[கய → கயம் + கால். கயம் = நீர்நிலை.]*

**கயக்கு[1]–தல்** *kayakku-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. கசங்கச்செய்தல்; to squeeze in the hand, rub, bruise, mash. 2. கலக்குதல்; to disarrange, throw into confusion. *"கயக் கருங் கடற்றானை" (பு.வெ.9,35.கொளு.).*

*[கல் → கல → கய → கயக்கு.]*

**கயக்கு[2]** *kayakku,* பெ.(n.) 1.சோர்வு (திவா.); weariness, exhaustion. 2.மனக்கலக்கம்; confusion of mind, doubt, perplexity. *"கயக்கறு மாக்கள் கடிந்தனர்" (மணிமே. 16,85.).*

*[கல் → கய → கயக்கு.]*

**கயங்கு–தல்** *kayaṅgu-,* 5 செ.கு.வி. (v.i.) 1.கசங்குதல்; to be squeezed in the hand, bruised, mashed, to shrivel. *"கயங்கி வாடாதே" (அருட்பா,vi, திருவருட் பேறு, 10, பக்.565.).* 2. சோர்தல்; to be tired, exhausted, to droop. *"கயங்கா நிலையும்" (அருட்பா. திருவருள்.203.).* 3. கலங்குதல்; to be disturbed, as in mind. *"கயங்கு நெஞ்சு" (திருக்காளத். பு. 4,5.).*

*[கல்→ கல → கய → கயங்கு.]*

**கயச்சோளம்** *kaya-c-cōḷam,* பெ.(n.) ஆற்றுப் படுகைச் சோளம்; maize cultivated in river beds (சா.அக.).

*[கயம் + சோளம். கயம் = நீர்நிலை.]*

**கயத்தார்** *kayattār,* பெ.(n.) தூத்துக்குடி மாவட்டத் துச் சிற்றூர்; a village in Tūttukkudi dt.

*[கயம் + அத்து + ஊர். கயத்தூர்–கயத்தார் (கொ.வ.). கயம் = குளம். 'அத்து' சாரியை.* ***கயத்தூர்*** *பார்க்க;* see *kayattur. ]*

**கயத்தாற்றரசன் உலா** *kayattāṟṟaraśaṉ-ulā,* பெ.(n.) 17-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த அந்தகக் கவி வீரராகவரால் இயற்றப்பட்ட சிற்றிலக்கிய நூல்; a poetical work by Andagak Kavi Vīrarāgavar of 17th c.

*[கயத்தாறு + அரசன் + உலா.]*

**கயத்தாறு** *kayattāṟu,* பெ.(n.) தூத்துக்குடி மாவட்டத் திலுள்ள ஓரூர்; name of a village in Tūttukkudi dt.

*[கயம் + அத்து + ஆறு. கயம் = நீர்நிலை. 'அத்து' சாரியை.]*

இந்திய விடுதலைப் போராட்ட மறவன் கட்டபொம்மன் ஆங்கிலேயரால் தூக்கிலிடப்பட்ட ஊர்.

**கயத்தி** *kayatti,* பெ.(n.) 1.கீழ்மகள்; base, unworthy woman.2.கொடியவள்;cruel-woman. *"அரங்கின்மே லிவளைத் தந்த தாய்கொலோகயத்தி" (சீவக.678.).*

*[கய + அத்தி. அத்தி (பெ.பா.ஈறு). கய → கயம் = கீழ்மை[illegible]]*

**கயத்தூர்** *kayacttūr,* பெ.(n) திருவாரூர் மாவட்டத்தில் உள்ள ஒரூர்; a village in Tuticorin and Tiruvarur district.

*[கயம் + அத்து + ஊர் – கயத்தூர். கயம் = குளம். 'அத்து' சாரியை.]*

**கயத்தூர்க்கிழார்** *kayattūrkkiḻār,* பெ.(n.) கடைக்கழகக் காலப் புலவருள் ஒருவர். குறுந். 354 ஆம் பாடலைப் பாடியவர், one of the poets of the Sangam period.

*[கயத்தூர் + கிழார்.]*

**கயந்தலை**[1] *kayandalai,* பெ.(n.) குழந்தையின் மெல்லிய தலை; soft head, as of a child. *"முக்காழ் கயந்தலைத் தாழ்" (கலித். 86,2.2. குழந்தை (நாஞ்); child. 3.யானைக்கன்று (பிங்.);* young elephant, having a tender head. *"துடியடிக் கயந்தலைக் கலக்கிய சின்னீரை" (கலித்.11.).*

*[குள் → கள் → கய → கயம் + தலை – கயந்தலை. சிறுபிள்ளைகளைக் கன்று கயந்தலை யென்பது பாண்டி நாட்டு வழக்கு.]*

**கயந்தலை**[2] *kayandalai,* பெ.(n.) மனத்துயர் (யாழ்.அக.); sorrow, grief.

*[கயம் + தலை – கயந்தலை. கயம் = கலக்கம். 'தலை' பெயரீறு.]*

**கயந்தலை**[3] *kayandalai,* பெ.(n.) யானையறுகு; elephant grass.

*[கயம் + தலை. கயம் = மென்மை.]*

**கயப்பங்கொட்டை** *kayappaṅkoṭṭai,* பெ.(n.) எட்டியின நச்சுச்செடி விதை; Saint Ignatius bean

*[கயப்பு + அம் + கொட்டை.]*

**கயப்பாக்கம்** *kayappākkam,* பெ.(n.) காஞ்சிபுரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kanchipuram district.

*[கயம்+ பாக்கம்=கயப்பாக்கம். கயம்=குளம். பாக்கம் நெய்தல் நிலத்திலுள்ள சிற்றூர்.]*

**கயப்பிணை** *kaya-p-piṇai,* பெ.(n.) வங்கமணல்; sand mixed with lead,lead ore (சா.அக).

**மறுவ.** ஈயமணல்

**கயப்பு** *kayappu,* பெ.(n.) கசப்பு, கைப்பு; bitterness. *“வாய் கயப்புறா” (கம்பரா. மந்தரை.63.).*

**ம.** கைப்பு; **க.**கய்பு, கய்ப; **து.** கைபெ, கயிபெ, கைபெலு; **தெ.**கச (பிஞ்சுக்காய்); **கொலா.** செந்த்; **கட.** கேம்புர்; **கொண்.** கெகெ.

Pali. kasāya, kasāva-kasaṭa.

*[கள் → கய + கயப்பு.]*

**கயப்பூ** *kaya-p-pū,* பெ.(n.) நீர்ப்பூ; aquatic flower. *“கயப்பூப்போன் முன்மலர்ந்து பிற்கூம்புவாரை” (நாலடி, 215.).*

*[கயம் + பூ – கயப்பூ. கயம் = நீர்நிலை.]*

**கயம்**[1] *kayam,* பெ.(n.) 1.பெருமை (பிங்.); greatness, superiority, eminence. *“வெங்கயகடகரி வேந்தன்” (பாரத. குருகுல–51).*

*[கள் = கூடுதல். கள → கய→கயம்.]*

**கயம்**[2] *kayam,* பெ.(n.) 1.மென்மை (பிங்.); tenderness, softness, smoothness. *“கயவென் கிளவி மென்மையுஞ் செய்யும்”(தொல்.உரி.24).* 2.இளமை (திவா.); youthfulness.

*[கள்→ (நெருங்கல், இளகல், மென்மை.) கய → கயம்]*

**கயம்**[3] *kayam,* பெ.(n.) 1.கீழ்மை; inferiority, baseness, meanness. *“கயம்பெருகிற் பாவம் பெரிது” (நான்மணி.92.).* 2. கீழ்மக்கள்; the mean, the wicked, the vicious. *“இரும்பிற் பிணிப்பர் கயத்தை” (நான்ம ணி.12.).*

**ம.** கயம்; **க.** கெய்த, கெய்மெ.

*[குள் → கள் → கய்→கயம் (மு.தா.295, 297).]*

**கயம்**[4] *kayam,* பெ.(n.) கரிக்குருவி; black sparrow. *“கோக்கயம்” ( திருவாலவா. 60,13.).*

*[கள் → கய → கயம்(கருநிறம்) (வே.க.125).]*

**கயம்**[5] *kayam,* பெ.(n.) 1.நீர் (பிங்.); water. 2.ஆழமான குளம்; tank, lake. *“துணிகயந் துகள்பட” (மணிமே.24:84.).* 3. கடல்; sea. *“கயங்கரத்துறை யரக் கரை”*(உபதேசகா.விபூதி.201.). 4.ஆழம்; depth. *“கயங்கொள் கடலின் முன் சேதுக்கண்ட முறையின் கதையீதால்”* (சேது. சேதுவந்.42.). 5. அகழி (யாழ்.அக); moat. 6. கழிமுகம்; estuary.

**ம.** கயம்; **து.** கய.

*[குள் → கள் → கய → கயம்.]*

**கயம்**[6] *kayam,* பெ.(n.)1.யானை; elephant. *“கயந்தனைக் கொன்று” (திருவாச.9,18.).* 2.யானைக் கன்று; calf of an elephant. *“கோளரி பங்கயம் மூழ்கக் குளிர் கயம்” (இரரமா. வரைக்.62)*

*[கள் → கய → கயம் = கரியது, கரிய யானை.]*

**த.** கயம்> **Skt.** gaja.

**கயம்**[7] *kayam,* பெ.(n.) 1.தேய்வு; decay, wane, diminution. *“பயந்த தீவினை பின்னுவா மதியெனப் பாரிற் – கயந்தருங்கொலாம்” (திருச்செந்.பு செந்தூர்வை. 11).* 2. குறைபாடு (சூடா.); deficiency, defect. 3. கேடு(சூடா.); loss, destruction, ruin.

*[கள் = நெருங்கல், தேய்தல், குறைபடல். கள் → கய → கயம்.]*

**கயம்**[8] *kayam,* பெ.(n.) அகில் (சங்.அக.); eaglewood.

*[கள் → கயம்.]*

**கயம்**[9] *kayam,* பெ.(n.) ஊர்ப் பெயர்களுக்கு முன் அடையாக அல்லது பின் அடையாக வரும் பெயர்ச் சொல்; noun used as prefix or suffix of place names. எ.டு. கயத்தாறு, ஆலங்காயம் (ஆலங்கயம்).

*[கய → கயம். (குளம், நீர்நிலை).]*

**கயமலர்** *kaya-malar,* பெ.(n.) பெரியமலர்; big flower.

*[கயம் + மலர். கயம் = பெரியது.]*

**கயமனார்** *kayamaṉār,* பெ.(n.) அகம், புறம், குறுந்தொகை, நற்றிணை ஆகிய நூல்களிற் பல பாடல்கள் பாடியுள்ள கடைக்கழகப் புலவருள் ஒருவர்; a poet of Sangam age whose contribution of

poems are in Agananūru, Puranāнūru, Kurunthogai, Narrinai etc.,

[கயம் = யானை. வாகு = வலிமைதோள். கய(ம்) + வாகு.] கரியவன், யானை போன்றவன். கயமன் + ஆர். (உயர்வுப்பன்மையீறு)]

**கயமுகன்** *kaya-mugan,* பெ.(n.) 1. யானைமுகத் தோன் (விநாயகர்) (சூடா); Gaṇēsā, the elephant-headed. 2.யானைமுகனாற் கொல்லப்பட்ட ஓர் அரக்கன் (விநாயகபு.); an asura slain by Gaṇēsā.

[கயம் + முகன்.]

**கயமுனி** *kayamuni,* பெ.(n.) யானைக்கன்று; young elephant. *"பொய்பொரு கயமுனி முயங்கு கை கடுப்ப" (மலைபடு.107.).*

[கயம் + முனி – கயமுனி. கயம் = கரிய யானை. முனி = கன்று.]

**கயர்** *kayar,* பெ.(n.) 1.துவர்ப்பு; astringency. 2. உறைப்புண்டாக்கும் துவர் உள்ள பொருள்; astringent matter, as juices that taint metals, linen, skin. 3. தேங்காயின் கண்ணுள்ளபகுதி; soft, spongy top of a coconut.

[காழ் → காள் → கள் → கய → கயர்.]

**கயர்ப்பாக்கு** *kayar-p-pākku,* பெ.(n.) துவர்மிக்க பாக்கு (யாழ்ப்.); highly astringent areca-nut.

[கய → கயர் + பாக்கு – கயர்ப்பாக்கு.]

**கயர்ப்பு** *kayarppu,* பெ.(n.) துவர்ப்புச் சுவை; astringency.

[கயர் + பு – கயர்ப்பு.]

**கயர்ப்புச்சரக்கு** *kayarppu-c-carakku* பெ.(n.) துவர்ப்புச் சரக்கு; a drug that arrests discharges (சா.அக.).

[கயர்ப்பு + சரக்கு.]

**கயல்** *kayal,* பெ.(n.) கெண்டை மீன்; carp, a tank fish. *"கயலெனக் கருதிய வுண்கண்" (ஐங்குறு.36.).*

**ம.** கயல்; **தெ.** சேப; **கொலா.** கயெ; **நா.**கய்யெ; **பர்.**கெய்; **Skt.** kaivarta, kevarta (fisherman); **Pkt.** kavaṭṭa.

[கயவு (கழிமுகம்) → கயவல் → கயல்.]

**கயவஞ்சி** *kaya-vañji,* பெ.(n.) கருமி (யாழ்ப்.); niggard, stingy person.

[கயவன் → கயவஞ்சி.]

**கயவர்** *kayavar,* பெ.(n.) கீழ்மக்கள்; unworthy person. *"கயவரைக் கையிகழ்ந்து வாழ்தல்" (திரிகடு.77). "மக்களே போல்வர் கயவர்" (குறள், 1071).*

[கய + அர் – கயவர்.]

**கயவரி** *kaya-vari,* பெ.(n.) கழிமுகம் (நாமதீப.); river-mouth.

[குள் → கள் → கய → கயம் + வரி. கயவரி. வாரி → வரி.]

**கயவளாகம்** *kaya-vaḷāgam,* பெ.(n.) கீழுலகம் (யாழ்.அக.); the nether world.

[குள் → கள் → கய + வளாகம் – கயவளாகம். கயம் = பள்ளம், தாழ்வு, ஆழம்.]

**கயவன்**[1] *kayavan,* பெ.(n.) 1.கீழ்மகன்; base unworthy person. *"கல்லாக் கயவன்" (மணிமே. 23,94.).* 2. கொடியவன்; cruel man. *"கண்ணிசூட்டி யவர்கொலோ கயவர் சொல்லீர்" (சீவக.678.).* 3. ஏமாற்றுபவன்; deceiver. கயவன் நல்லவனாக நடித்து ஏமாற்றிவிட்டான் (உ.வ.).

[கய + வ் + அன்.]

**கயவன்**[2] *kayavan,* பெ.(n.) 1.கரியவன்; the black man. 2. கரியநிறத்துத் தெய்வம்; name of a village deity of few communities.

[கள் → கய + வ் + அன் – கயவன்.]

**கயவாகு** *kayavāgu,* பெ.(n.) சேரன் செங்குட்டு வனுக்குச் சமகாலச் சிங்கள அரசன்; Sinhala king contemporary of Cēran Sengutṭuvan. *"கடல் சூழ் இலங்கைக் கயவாகு வேந்தன்" (சிலப். வரந்தரு.160).*

[கயம் = யானை. வாகு = வலிமை. கய(ம்) + வாகு.]

**Skt.** gajabagu

**கயவாசம்** *kayavāšam,* பெ.(n.) பெருங்காஞ்சொறி; climbing nettle.

*[கயம் + வாசம். கயம் = யானை, பெரியது.]*

**கயவாய்**[1] *kayavāy,* பெ.(n.) 1.கழிமுகம்; estuary *"கயவாய் மருங்கிற் காண்போர்த் தடுக்கும்" (சிலப். இந்திர.9).*

*[கயம் + வாய் – கயவாய்.]*

**கயவாய்**[2] *kayavāy,* பெ.(n.) பெரியவாய்; wide open, bigmouth. *"கயவாய் வேங்காய்" (அக.நா.221–11).*

*[கயம் + வாய் . கயம் = யானை, பெரியது.]*

**கயவாய்**[3] *kaya-vāy* பெ.(n.) 1.**கரிக்குருவி** பார்க்க; see *kari-k-kuruvi, "தேற்றமில் கயவாயாகிச் செனித்தலால்" (திருவிளை.கரிக்.3.).* 2. எருமை (பிங்.); buffalo.

*[கள் → கய + வாய் – கயவாய் = கரிய வாயுடையது.]*

**கயவாளி**[1] *kayavāḷi,* பெ.(n.) **கயவன்** பார்க்க; see *kayavaṉ.*

*[கய + ஆளி – கயவாளி.]*

**கயவாளி**[2] *kayavāḷi,* பெ.(n.) 1.உண்மைக்குப் புறம்பானவன்; dishonest person. 2.பேராசைக்காரன்; extortioner. 3. தகுதியிழந்தவன்(அயோக்கியன்); unscrupulous fellow.

*[கய(ம்) + ஆளி – கயவாளி.]*

**கயவு**[1] *kayavu,* பெ.(n.) **கயம்**[1, 2] பார்க்க (திவா.); see *kayam*[1,2].

*[கயம் → கயவு.]*

**கயவு**[2] *kayavu,* பெ.(n.) 1.மென்மை; tenderness. 2.களவு (பிங்.); theft, pilfering, larceny.

*[கள் → கய → கயவு.]*

**கயவு**[3] *kayavu,* பெ.(n.) 1.கழிமுகம் (யாழ்.அக.); river-mouth. 2.உயரம்; height. 3. ஆழம்; depth.

**மறுவ.** கயம்

*[கள் → கய → கயவு.]*

**கயவு**[4] *kayavu,* பெ.(n.) **கரிக்குருவி** (பிங்.); black sparrow.

*[கள் → கய → கயம் → கயவு (வே.க.125).]*

**கயவுவாய்** *kayavu-vāy,* பெ.(n.) பெரியவாய்; wide open. *"கயவுவாய் வெல்லிபந் துளைத்து மள்ளர் விட்ட வாளி" (திருவிளை.45–18).*

*[கயவு + வாய்.]*

**கயற்கண்ணிமாலை**[1] *kayaṟ-kaṇṇi-mālai,* பெ.(n.) 19ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த சரவணப் பெருமாள் கவிராயர் என்பவரால் இயற்றப்பட்ட நூல்; a treatise by Saravana Perumal Kavirayar of 19th c.

*[கயல் + கண்ணி + மாலை.]*

**கயற்கூடு** *kayaṟ-kūḍu,* பெ.(n.) இணைக்கயல்; pair of kayal fish.

*[கயல் + கூடு. (கூடு = இணை.).]*

**கயற்கெண்டை** *kayaṟ-keṇḍai,* பெ.(n.) கருங் கெண்டை மீன்வகை (வின்.); a kind of keṇḍai fish.

*[கயல் + கெண்டை – கயற்கெண்டை (கருங்கெண்டை).]*

**கயறி** *kayaṟi,* பெ.(n.) ஒருவகைத் தென்னை; a kind of coconut tree (ம.அக).

*[கய → கயறி (பெரியது,உயரமானது.).]*

**கயறு–தல்** *kayaṟu-,* 5 செ.கு.வி.(v.i.) மேலே ஏறுதல்; to climb, ascend, mount. 2. நுழைதல்; to get in, instruded, enter. 3. முன்னேறுதல்; to advance, to go ahead. 4.பெருகுதல்; to increase. 5.பரவுதல்; to spread (சேரநா.).

**ம.** கயறுக; **தெ.** கசரு.

*[கள் → கய (நெருங்குதல், பெருகுதல், பரவுதல் பொருளில் வளர்ந்த இச்சொல் முன்னேறுதல், மேலேறுதல் பொருள்களில் புடை பெயர்ந்தது.]*

**கயா** *kayā,* பெ.(n.) இழப்பு; loss.

*[கள் = களை. கள் → கயா.]*

**கயாதரம்** *kayā-daram,* பெ.(n.) இராமேசுவரத்தைச் சேர்ந்த கயாதரர் கலித்துறைப் பாடல்களாக இயற்றிய நிகண்டு; a glossary in Kalitturaiverse, compiled by Kayadarar of Rameswaram (செ.அக.).

*[கயாதரன் → கயாதரம்.]*

**கயிங்கரியம்** *kayiṅgariyam,* பெ.(n.) ஏவற்றொழில்; service,office of a servant. *"வாசாகயிங்கரிய மன்றி" (தாயு.பரிபூரண.1).*

*[கை + காரியம் – கைக்காரியம் → கயிங்கரியம் (கொ.வ.).]*

***கைக்காரியம்*** பார்க்க; see *kaikkāriyam.*

**கயிப்பு** *kayippu,* பெ.(n.) மயக்குறு பொருள்; intoxication (சா.அக.).

*[கய(கயக்கம்) → கயப்பு → கயிப்பு (கொ.வ.).]*

**கயிர்** *kayir,* பெ.(n.) தவறு; fault,mistake.

*[கயம் + கயல் → கயர் → கயிர்.]*

**கயிரிகம்** *kayirigam,* பெ.(n.) காவிக்கல் (சூடா.); red ochre, red chalk.

*[கள் → கய = கருமை. கய → கயிர் + இகம்.]*

**கயிரை** *kayirai,* பெ.(n.) சுற்றம் (அக.நி.); relation.

*[கம் → கமில் → கயில் → கயிரை.]*

**கயில்**[1] *kayil,* பெ.(n.) 1.பூண் கடைப்புணர்வு, அணிகளின் இணைப்புப் பகுதி (திவா.); clasp of a necklace. *"கயில் கலந்திருண்டு தாழ்ந்த கருங்குழல்" (சூளா. சுயம்.112).* 2.பிடர்; nape of the neck.

*[கும் → கம் → கய் → கயல். கும் = சேர்தல், இணைதல்.]*

**கயில்**[2] *kayil,* பெ.(n.) தேங்காயிற் பாதி (யாழ்ப்.); half of a coconut.

*[கும் → கம் → கய் → கயில். கும் = சேர்தல், ஒட்டுதல், ஒட்டியிருத்தல்.]*

**கயில்**[3] *kayil,* பெ.(n.) உச்சி, முகடு; crest.

*[கள் = முள், கூர்மை. கள் → கய் → கயில்.]*

**கயிலகம்** *kayilagam,* பெ.(n.) காட்டவரைக் கொடி; wild-bean creeper (சா.அக.).

*[கயம் → கயில் + அகம். கயம் = பெரியது.]*

**கயிலாயம்** *kayilāyam,* பெ.(n.) சிவன் உறைவதாகக் கருதப்படும் பனிமலைப்பகுதி; place in Himalayas, supposed to be the abode of lord Šiva. *"முற்று மொளி பெற்ற கயிலாய மலையே" (தேவா.1156.2).*

**Skt** kailasa

**கயிலாயன்** *kayilāyaṉ,* பெ.(n.) சிவன் (வின்.); Šiva, lord of Kailasa (செ.அக.).

*[கயிலாயம் → கயிலாயன்.]*

**கயிலாயன்உத்தி** *kayilāyaṉutti,* பெ.(n.) கும்பகோணம் வட்டம், திருவிசலூர்க் கோயிலுக்கு அணையா விளக்கு எரிப்பதற்காக 15 கழஞ்சு பொன்கொடுத்த பெருமாட்டி; lady who donated 15 kalanju of gold for burning perpetual lamp in Thiruvisalur koil in, Kumbakonam taluk. *"இவ்வூர் அறுவைவாணிகன் எழுவன் பிடவன் மணவாட்டி கயிலாயன் உத்தி நொந்தாவிளக்கு எரிப்பதற்கு" (தெ.இ.கல். 23 கல் 23).*

*[கயிலாயம் → கயிலாயன் + உத்தி. உத்தன் (ஆ.பா.) → உத்தி (பெ.பா.பெ.).]*

**கயிலை** *kayilai,* பெ.(n.) ***கயிலாயம்*** பார்க்க; see *kayilāyam "கயிலை மலையானோ" (தேவா.1159).*

*[கயிலாயம் → கயிலை (மருஉ).]*

**கயிலைச்சித்தனார்** *kayilai-c-cittaṉār,* பெ.(n.) இதளியமுறைகளை இயற்றிய ஒரு சித்தர்; one of the school of Siddhars who compiled works on alchemy (சா.அக.).

*[கயிலை + சித்தன் + ஆர்.]*

**கயிலைமலை** *kayilai-malai,* பெ.(n.) ***கயிலாயம்*** பார்க்க; see *kayilāyam "கயிலை மலையானே" (தேவா.1159).*

*[கயிலை + மலை.]*

**கயிலையாளி** *kayilai-y-āḷi,* பெ.(n.) சிவன்; siva lord of Kailasa.

*[கயிலை + ஆளி – கயிலையாளி.]*

**கயிற்கடை** *kayir-kadai,* பெ.(n.) கொக்குவாய்; curved extremity of a hook. *"கயிற்கடை ஒழுகிய" (சிலப்.கடலாடு. 101.).*

*[கள் → கய் → கயில் + கடை – கயிற்கடை. கள் = முள், கூர்மை.]*

**கயிற்றம்பா** *kayirrambā,* பெ.(n.) கரைவலை எனப்பெறும் வலையின் முன்கூறா யமைந்த கயிற்றை இழுக்கும் பொழுது மீனவர் பாடும் பாடல்; a kind of fishermen's song.

*[கயிறு + அம்பா. அம் + பாவை – அம்பாவை → அம்பா.]*

**கயிற்றரவு** *kayirraravu,* பெ.(n.) பழுதையிற் றோன்றும் பாம்புணர்வு; illusion of mistaking a rope for a snake. *"கயிற்றர விப்பி வெள்ளி" (சித்.சிகா.23.5.).*

*[கயிறு + அரவு.]*

**கயிற்றளவு** *kayirralavu,* பெ.(n.) 88 அடி நீள அளவு; a linear measure of 88 feet.

*[கயிறு + அளவு – கயிற்றளவு.]*

கயிற்றளவு என்பது எட்டுத்தண்டம் அல்லது 88 அடி கொண்ட ஓர் அளவாம்.

| | | | |
|---|---|---|---|
| 1 | விரல் | – 1 3/8 விரலம் (அங்குலம்) | |
| 6 | விரல் | – ஒரு சாண் | (8¼ விரலம்) |
| 2 | சாண் | – ஒரு முழம் | (16½ விரலம்) |
| 2 | முழம் | – ஒரு தச்சுமுழம் | ( 33 விரலம்) |
| 4 | தச்சுமுழம் | – ஒரு கோல்(தண்டம்) | (11 அடி) |
| 8 | கோல்(தண்டம்) | – ஒரு கயிறு | ( 88 அடி) |

**கயிற்றுக்கொடி** *kayerrukkodi,* பெ.(n.) துணி உலர்த்துவதற்குக் கட்டிய கயிறு; cloth-line.

*[கயிறு + கொடி.]*

**கயிற்றுக்கோல்** *kayirru-k-kōl,* பெ.(n.) காய்கறி முதலியன நிறுக்கும் ஒருவகை நிறைகோல் (வின்.); a kind of balance in which vegetables are generally weighed, similar to the Danish steel-yard.

*[கயிறு + கோல்.]*

**கயிற்றுக்கோலாட்டம்** *kayirru-k-kōlāttam,* பெ.(n.) பின்னற்கோலாட்ட விளையாட்டு (வின்.); playing with strings and sticks so that a weft of lace is formed there by.

*[கயிறு + கோல் + ஆட்டம்.]*

**கயிற்றுப்பாய்** *kayirru-p-pāy,* பெ.(n.) கதம்பைக் கயிற்றால் பின்னப்பட்ட பாய் (நாஞ்.); coir mat.

*[கயிறு + பாய்.]*

**கயிற்றுப்பொருத்தம்** *kayirru-p-poruttam,* பெ.(n.) திருமணப்பொருத் தங்களுள் ஒன்றான தாலிக் கயிற்று (இரச்சு)ப் பொருத்தம்; a felicitous agreement in the naksatras as of the bridegroom and the bride necessary for the assumption of the marriage badge (விதான. கடிமண.4).

*[கயிறு + பொருத்தம்.]*

**கயிற்றுமணிவலை** *kayirru-mani-valai,* பெ.(n.) உப்பங்கழியில் விரித்தற்குரியதோர் வலை; a kind of net which is designed to be spread in saltpan.

*[கயிறு + மணி + வலை.]*

**கயிற்றுமரம்** *kayirru-maram,* பெ.(n.) சிறுகட்டுமரம் (நெல்லை.மீனவ); small catamaran (மீன்பிடி. தொழி.).

*[கயிறு + மரம்.]*

**கயிற்றுமீன்** *kayirru-mīn,* பெ.(n.) தூண்டிலிற் பிடிபடும் மீன் (குமரி.மீனவ.); the fish which is caught in a net.

*[கயிறு + மீன்]*

**கயிற்றுவழி** *kayirru-vali,* பெ.(n.) கயிறுகள் மூலமாகப் பொருள்களையோ, மக்களையோ ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு அனுப்ப உதவும் வழி; ropeway.

*[கயிறு + வழி]*

**கயிற்றுவிரியன்** *kayirru-viriyan,* பெ.(n.) விரியன் பாம்பு வகை; (m.m.); rope-viper.

*[கயிறு + விரியன்]*

**கயிற்றேணி** *kayirṟēṇi,* பெ.(n.) நூலேணி (வின்.); rope-ladder.

*[கயிறு + ஏணி – கயிற்றேணி.]*

**கயிறடி–த்தல்** *kayiṟaḍi-,* 4.செ.கு.வி.(v.i.) 1.அறுக்கும் மரங்களுக்கு நூல் வைத்துக் காவி முதலியவற்றால் குறிதட்டுதல்; to mark lines with thread soaked in colour, on timber that has to be sawn, as in carpentry. 2. தரைப்பூச்சிற்குப் பின் கயிற்றால் கோடு தட்டுதல்; to make chequered lines after floor finish, with rope.

*[கயிறு + அடி – கயிறடி.]*

**கயிறறுந்தவாள்** *kayiṟṟundavāḷ,* பெ.(n.) சோம்பித் திரிபவன் (யாழ்ப்.); vagrant, vagabond, stroller, one who wanders about aimlessly as a boat that is drifting on account of the rope that had secured it to ship having snapped.

*[கயிறு + அறுந்த + ஆள் – கயிறறுந்தவாள்.]*

**கயிறு**[1] *kayiṟu,* பெ.(n.) 1.தாம்பு, நூல், கட்டுகயிறு; rope, cord, string, twine, cable. *"திருவினைத் தீராமை யார்க்கும் கயிறு" (குறள், 482.).* 2. மங்கலநாண்; thread of the marriage badge. *"கயிறுநீத்து விதவையாய்" (உபதேசகா.சிவபுண். 186.).* 3. அறிவியல், அறநூல்; science, treatise. *"யாத்த சிற்பக்கயிற்றின் வாழ்நரும்" (பெருங்.வத்தவ. 2.51.).* 4. வானநூல் கணிக்குங்காலத்தமைந்த கோள்நிலை; zodiacal sign rising at the moment when a person just consults the astrologer. மணலைக் கயிறாய்த் திரிக்கிறது, வானத்தை வில்லாய் வளைக்கிறது (உ.வ.).

**ம.** கயறு; **கோத.** கீர்நாண்: **குட.** கேரி; **தெ.** சேரு.

*[கள் → கய் → கயில் → கயிறு. கள் = கட்டுதல், பிணைத்தல்.]*

**த.** கயிறு>**E.** coir.

**கயிறு**[2] *kayiṟu,* பெ.(n.) தமிழ்நாட்டில் வழங்கிய 88 அடி நீளமுள்ள நீட்டல் அளவு; a linear measurement, measuring 88 feet in ancient Tamilnadu.

*[கள் → கய் → கயில் → கயிறு. அளக்கைத் துறையில் பயன்படுத்தும் சங்கிலி போன்ற அளவு. அளக்கைச் சங்கிலி 66 அடி; பொறியாளர் சங்கிலி 100 அடி; கயிறு 88 அடி.]*

**கயிறுகட்டிவிடு–தல்** *kayiṟu-kaṭṭi-viḍu-,* 20.செ.கு.வி. (v.i.) பொய்ச்செய்தியுண்டாக்கிப் பரப்புதல்; to noise abroad false news; to spread a false rumour.

*[கயிறு + கட்டி + விடு – கயிறுகட்டிவிடுதல். காற்றில் பட்டம் பறக்க விடுவோர் கயிறுள்ள மட்டும் உயர உயரப் பறக்க விடுவது போலப் பிறரைத் தம்மாலான மட்டும் தூற்றுதல் கயிறுகட்டி விடுதல் எனப்பட்டது.]*

**கயிறுகட்டு**[1]**–தல்** *kayiṟukaṭṭu-,* 5 செ.கு.வி (v.i.) 1. இல்லாததை உண்டாக்கிச் சொல்லுதல் (கொ.வ.); to invent a story, spin a yarn. இல்லாத செய்திகளைக் கயிறு கட்டி விட்டு வேடிக்கைப் பார்க்கிறான் (உ.வ.). 2. நாட்கழித்தல் (வின்.); to put off from day to day. கொடுத்த கடனைத் திருப்பித்தர கயிறு கட்டுகிறான் (உ.வ.). 3. பாசாங்கு செய்தல் (வின்.); to show a pretended consent, as a seller to one who offers a low price. கேட்ட விலைக்குத் தருவதாகக் கயிறுகட்டி ஏமாறச்செய்தான் (உ.வ.). 4. ஒருவனைக் கொண்டு மற்றொருவனை வஞ்சித்தல் (வின்.); to cheat a person using another person. ***கயிறுகட்டிவிடுதல்*** பார்க்க.

*[கயிறு + கட்டு.]*

**கயிறுகட்டு**[2]**–தல்** *kayiṟukaṭṭu,* 5 செ.குன்றாவி.(v.t.) இசுலாமிய மதச்சடங்கில் சிறார்களுக்குக் கயிறு கட்டுதல்; to tie a black thread in Muslim's religious ritual (பாண்டி.).

*[கயிறு + கட்டு.]*

**கயிறுகுத்து–தல்** *kayiṟu-kuttu-,* 5 செ.குன்றாவி. (v.i.) அறுந்த கயிற்றை இணைத்தல் (செங்கை மீனவ.); to tie a broken rope.

*[கயிறு + குத்து. குத்துதல் = தைத்தல்.]*

**கயிறுசாத்து–தல்** *kayiṟu-cāttu-,* 10.செ.கு.வி.(v.i.) நிமித்தம் பார்க்குங்கால், இராமாயணம் தேவாரம் போன்ற நூலினுட் கயிறிடுதல்; to pass a string between the leaves of a sacred book in order to divine by it.

*[கயிறு + சாத்து.]*

**கயிறுசாம்பு-தல்** *kayiṟu-šāmbu-,* 5. செ.கு.வி.(v.i.) வலைக்கயிற்றை வள்ளம் அல்லது எந்திரப்படகில் இழுத்துக் கட்டுதல் (கட. பர. க. சொ.புக); to tie the rope of fishing net to the main vessel.

*[கயிறு + சாம்பு → சாம்புதல் = இழுத்தல்.]*

**கயிறு சிக்குப்படு-தல்** *kayiṟu-cikku-p-paḍu-,* 20 செ.கு.வி.(v.i.) தொந்தரவு படுதல் (வின்.); to be embroiled, to disagree, quarrel, get into a tangle (செ.அக.).

*[கயிறு + சிக்கு + படு.]*

**கயிறுசெய்-தல்** *kayeṟušey-,* 15 செ.கு.வி.(v.t.) கண்ணுக்கிடும் வகையில் மருந்துப் பசையை நீளமாகச் செய்தல்; to prepare medicinal long pill as to apply to the eye.

*[கயிறு + செய், கயிறு = நீட்டம்.]*

**கயிறுடை[1]-த்தல்** *kayiṟuḍai,* 4 செ.குன்றாவி.(v.t.) கயிற்றின் முறுக்கைப் பிரித்தல்; to untwist, as of a cord or rope.

*[கயிறு + உடை. உடை = பிரிதல்.]*

**கயிறுடை[2]-தல்** *kayiṟuḍai-,* 3 செ.கு.வி.(v.i.) கயிற்றின் முறுக்குப் பிரிதல்; to be untwisted as of a cord or rope. கயிறு உடையாமலிருக்க முனையில் முடிச்சுப்போடு (உ.வ.).

*[கயிறு + உடை.]*

**கயிறுதடி** *kayiṟu-taḍi,* பெ.(n.) ஒரு நெசவுக் கருவி; a weaving instrument.

*[கயிறு + தடி.]*

**கயிறுதிரி-த்தல்** *kayiṟu-tiri-,* 4 செ.கு.வி.(v.i.) கயிறு முறுக்குதல்; to twist or twine, cord, rope. 2. கட்டியுரைத்தல்; to invent a story, spin a yarn. மணலைக் கயிறாய்த் திரிப்பதுபோல (உ.வ.).

*[கயிறு + திரி. திரித்தல் = முறுக்குதல், முறுக்கிநீட்டுதல்.]*

கயிறு திரிப்போர் தாம் வேண்டுமளவுக்கு நீளமாகத் திரித்துக்கொள்வது போல ஒரு செய்தியைத் தம் விருப்பப்படி மாற்றி, இல்லாததும் நடவாததுமாகிய பொய்ச்செய்திகளையும் சேர்த்துச் சிறிதைப் பெரிதாக்கிச் சொல்வது கயிறு திரித்தல் எனப்பட்டது.

**கயிறுபிடித்தறி-தல்** *kayiṟu-piḍi-t-taṟi,* 2.செ.கு.வி (v.i.) கட்டடமுதலியவற்றுக்காகக் கயிறு பிடித்து நேர்மையறிதல்; to measure, sound or test by the plumb-line, to adjust erections to a vertical line by means of the plummet.

*[கயிறு + பிடித்து + அறிதல்.]*

**கயிறுபோடு[1]-தல்** *kayiṟu-pōḍu-,* 20 செ.கு.வி (v.i.) 1. கயிறுதிரித்தல் (இ.வ.); to twist a rope. 2. ***கயிறுசாத்து-***. பார்க்க; see *kayiṟu-cāttu.*

*[கறு + போடு.]*

**கயிறுபோடு[2]-தல்** *kayiṟu-pōḍu-,* 20 செ.கு.வி.(v.i.) அச்சத்தினாலேற்பட்ட குற்றங்களை விலக்க வேண்டி, மந்திரக்காரன் மந்திரித்துக் கழுத்தில் அல்லது கையில் மந்திரக் கயிறு கட்டுதல்; tying a magic or talismanic string either in the neck or on the wrist by a magician as a cure against shock from, fear, fever and other morbified, diathesis (சா.அக.).

**கயிறுபோடு[3]-தல்** *kayiṟu-pōḍu-,* 19 செ.குன்றாவி. (v.t.) தாலி அணிவித்தல்; to tie a *"Thali".*

*[கயிறு + போடு.]*

**கயிறுமாலைப்படு-த்தல்** *kayiṟu-mālai-p-paḍu-,* 18 செ.கு.வி.(v.i.) வருத்தப்படுத்துதல் (யாழ்.அக.); to vex.

*[கயிறு + மாலை + படு-.]*

**கயிறுமாறு-தல்** *kayiṟu-māṟu-,* 5 செ.குன்றாவி. (v.t.) கால்நடைகளின் விற்பனையை உறுதிப்படுத்த அவற்றின் கயிறு மாற்றிக்கொள்ளுதல்; to exchange and give cord-strings of a newly bought animal, as a cattle, by new tethering in confirmation of purchase. *"பரிகள் என்பாலின்று கயிறுமாறி நின்ன வாக் கொள்ளு நீரால்" (திருவிளை. நரிபரி.83.).*

*[கயிறு + மாறு.]*

**கயிறுமாற்று-தல்** *kayiṟumāṟṟu-,* 5 செ.குன்றாவி. (v.t.) கால்நடை விற்பனையில் வாங்குவோன் கயிற்றை மாற்றுதல்; to replace the cord-strings in cattle purchase.

*[கயிறு + மாற்று. மாறு (தழுவி) → மாற்று (பி.வி)]*

கால்நடைகளைக் கட்டியுள்ள கயிற்றுடன் விற்றால் தன் கால்நடை வழி மரபு அற்றுப்போகும் என்ற நம்பிக்கையின் அடிப்படையில் விற்பவன் பழைய கயிற்றை எடுத்துக் கொள்வதுண்டு. வாங்குவோன் புதுக்கயிற்றுடன் கால்நடையை ஓட்டிச் செல்வான். இவ்வாறு கயிறு மாற்றுவதனால் இச்சொல் விற்பனையின் உறுதிப் -பாட்டைக் குறித்து நின்றது. வாலினின்று முடியைப் பிடுங்கி வருவதும் இந்நம்பிக்கை அடிப்படையில் அமைதலைக் காண்க.

**கயிறுமுறுக்கு-தல்** *kayiṟu-muṟukku-,* 5 செ.கு.வி. (v.i.) ***கயிறுதிரித்தல்*** பார்க்க; see *kayiṟutirittal.*

*[கயிறு + முறுக்கு.]*

**கயிறுருவிவிடு-தல்** *kayiṟuruvi-viḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. எருது முதலியவற்றை மோதலுக்காக வெளியிற் செல்லுமாறு அவிழ்த்து விடுதல்; to untether, as a bull in jalli-k-kattu. 2. தூண்டி விடுதல்; to unleash and urge, as a hound. *"மற்றிவளைக் காவார் கயிறுரீஇ விட்டார்" (திணை மாலை.47.).*

*[கயிறு + உருவி + விடு.]*

**கயிறுவிடு-தல்** *kayiṟu-viḍu-,* 20 செ.கு.வி(v.i.) ***கயிறுகட்டிவிடுதல்*** பார்க்க; see *kayiṟukaṭṭi viḍu-,*

*[கயிறு + விடு.]*

**கயிறுவெட்டுப்புண்** *kayiṟuveṭṭu-p-puṉ,* பெ.(n.) கயிற்றினால் வடுவுண்ட புண்; abrasion caused by the grating of a rope (சா.அக.).

*[கயிறு + வெட்டு + புண்]*

**கயினி**[1] *kayiṉi,* பெ.(n.) கைம்மீன் (அத்தநாள்) (பிங்.); the 13th naksatra, supposed to resemble the hand in shape.

*[கை → கைனி → கயினி (கொ.வ.).]*

**கயினி**[2] *kayiṉi,* பெ.(n.) கைம்பெண்; widow *"கயினிவரிற் கண்ணுற்று" (இரகு.இந்து.27.).*

*[கை → கைனி → கயினி (கொ.வ.) 'கை' ஒருமையும் சிறுமையும் குறித்த முதனிலை; இங்குத் தனிமையுற்ற கைம்பெண்ணைக் குறித்தது. கை + இல் – கையில் → கயில் → கயிலி → கயினி. இல் → இல்லி → இலி → இனி = இல்லாள், மனைவி. கைம்மை = தனிமை. கைனி = தனித்திருக்கும் இல்லாள்.]*

**கர**[1]**-த்தல்** *kara-,* 3 செ.குன்றாவி.(v.t.) 1. மறைத்தல்; to conceal, hide, disguise. *"தன்னு ளடக்கிக் கரக்கினும்" (புறநா.1,8.).* 2.கவர்தல்; to steal, pilfer. *"கழுத்தின தெழிலைச் சங்கங் கரந்தன" (கந்தபு. மாயை.48.).* 3. கொடாதிருத்தல் (பிங்); to withhold; to refuse to give.4. முதற்காரணத் தோடு ஒடுக்குதல்; அழித்தல்; to destroy, to reduce to primal elements. *"காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடி" (திருவாச. 7,12.).*

*[கள் → கள → கர.]*

**கர**[2]**-த்தல்** *kara-,* 3.செ.கு.வி.(v.i.) 1. சேர்தல், அடைதல்; to join, to unite with. *"பதுக்கையு மிருங்கதி கரக்கும்" (உபதேசகா. சிவபுராண.42.).*

*[கள் → கள → கர.]*

**கர**[3]**-த்தல்** *kara-,* 3 செ.கு.வி.(v.i.) 1. மறைதல்; to hide, abscond, lie hidden, keep one's self out of sight. *"கரந்துறை கணக்கு" (மணிமே. 226.).* 2.கெடுதல்; to be injured, ruined. *"புரங்கரப்ப" (திருக்கோ.213.)*

*[கள் → கர. (வே.சொ.க.20).]*

**கரக்கோயில்** *kara-k-kōyil,* பெ.(n.) வட்டமான விமான அமைப்புடைய கற்கோயில்; a stone - temple having a round shaped vimāna. *"திரைக்கும் தண்புனல் சூழ் கரக்கோயில்" (தேவா. அப்பர்.134:11).*

*[கரகம் + கோயில் – கரக்கோயில். "திருக்கடம்பூர் கோயில் இவ்வகைத்து. கரகம் = மட்குடத்தைக் கவிழ்த்து வைத்தாற்போன்ற முகடு அல்லது மேற்கூண்டுடைய கோயில் கரக் கோயில் எனப்பட்டது.]*

**கரகத்திக் கோட்டை** *karakatti-k-kōṭṭai,* பெ.(n.) புதுக்கோட்டை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Pudukkōṭṭai dt.

*[குறு+அத்தி–குறுவத்தி → கரகத்தி+கோட்டை – கரகத்திக்கோட்டை (கொ.வ.).]*

**கரகம்**[1] *karagam,* பெ.(n.) 1.கமண்டலம்; ewer, pitcher, water-vessel with a spout. *"நூலே கரகம் முக்கோல் மனையே" (தொல். பொருள். 625.).* 2.ஆலங்கட்டி (பிங்.); hailstone. 3. நீர்த்துளி (பிங்.); drop of water. 4. நீர் (பிங்.); water. 5. கங்கை (பிங்.); Ganges.

**க.**கரக; **ம.**கரகம்.

**த.** கரகம் > **Skt.** karaka;

*[கலம் → கலயம் → கரகம் = கமண்டலம்.]*

**கரகம்**[2] *karagam,* பெ.(n.) 1. தாதுமாதுளை (சங்.அக.); a kind of pomegranate.2. பூண்டுகளின் பொதுப் பெயர்; a common name of many plants. 3. மலையத்தி; wild fig. 2. பளாசம்; Indian coral tree.

**க.** கரக; **ம.** கரகம்.

*[கலம் = மட்கலம். கலம் → கலயம் → கரசம் → கரகம் (மட்பாண்டம்).]*

**கரகம்**[3] *karagam,* பெ.(n.) 1. தேங்காய்க் குடுக்கை; coconut shell. 2. உண்கலம்; plate for eating.

*[கலயம் → கரயம் → கரசம் → கரகம்.]*

**கரகம்**[4] *karagam,* பெ.(n.) நேர்த்திக்கடன் செலுத்து வதற்கு வேப்பிலை மாலையணிவித்துத் தலையில் சுமந்து வரும் நீருள்ள சிறுகுடம் போன்ற கலம்; a pot with water and neem leaves carried on the head by way of due to vow. 2. ஏழடுக்குக்கலம்; seven vessels which are kept one above one; a special pot for religious rituals.

*[கலம் → கலயம் → கரசம் → கரகம்.]*

**கரகம்**[5] *karagam,* பெ.(n.) ஒருவகைப்பறவை; a kind of bird.

**ம.** கரகம்

*[ஒருகா. கரை(தல்)→கரவம் → கரகம்.]*

**கரகம்**[6] *karagam,* பெ.(n.) நகத்தால் கீறிய வடு; abrasion or injury caused by scratching from a finger nail.

*[கரள் → கரளம்→ கரகம்]*

**கரகமாடு-தல்** *karagam-āḍu,* 5 செ.கு.வி.(v.i.) கடவுளர்க்கு வேண்டுதலின் பொருட்டுப் பூங்குட மெடுத்து ஆடுதல்; to carry about in procession a decorated water-pot and dance with it on the head, in fulfilment of a vow.

**ம.** கரகமாடு

*[கரகம் (குடம்) + ஆடு. நீர் எடுத்துச்செல்ல உதவிய சிறிய மட்குடத்தையும், கடவுளர்க்கு நீர்சுமந்து செல்லும் நோன்புக் குடத்தையும், நோன்புக்காகச் சுமந்து செல்லும் தீச்சட்டியையும், விழாக்காலங்களில் தலையில் சுமந்து ஆடும் ஒப்பனைக் குடத்தையும் குறித்தது.]*



கரகம் ஆடுதல்

**கரகமெடு-த்தல்** *karagam-eḍu-,* 4 செ.கு.வி.(v.i.) ***கரகமாடு*** பார்க்க; see *karagam-āḍu-.*

*[கரகம் + எடு-]*

**கரகர**[1]**-த்தல்** *karakara-,* 4.செ.கு.வி.(v.i.) 1. உறுத்தல்; to feel irritation, as from sand or grit in the eye. மணல் கண்ணிலே கரகரக்கிறது (உ.வ.). 2. சீதளம் முதலியவற்றால் தொண்டையில் அரிப்புண் டாதல்; to feel irritation in the throat, to experience a predisposition to cough; to be hoarse. 3. கடித்தற்குக் கரகரப்பாதல்; to be crisp in the mouth, as fried cake.

**ம.** கரகரக்குக; **க.,து.** கரகர; **தெ.,பட.** கரகர.

*[கரகர = ஒலிக்குறிப்பு.]*

**கரகர**[2]**-த்தல்** *karakara-,* 4.செ.குன்றாவி.(v.t.) 1.விடாமல் வேண்டுதல்; to importune. 2. அலைக் கழித்தல்; to tease, harass.

க. கரகரிசு, கரகரசு.

*[கரகர = ஒலிக்குறிப்பு. தொடர்ந்து தரும் தொல்லையைக் குறித்தது.]*

**கரகரணம்** *kara-karaṇam,* பெ.(n.) கையினாற் காட்டும் முத்திரை; gesticulation by hand in dancing.

*[கர(ம்) + கரணம்.]*

**கரகரப்பு** *kara-karappu,* பெ.(n.) 1.தொண்டை அரிப்பு; irritation in the throat. 2. குரல் தடித்திருக்கை (வின்.); hoarseness or heaviness of voice. 3. ஒயாது வேண்டுகை (வின்.); importunity. 4. அலைக்கழிப்பு (வின்.); teasing, harassing. 5. உள்ளத்தில் தோன்றும் கடுகடுப்பு; irritation of mind.

ம. கரகரப்பு; க.கரகர, கரகரி, கரகரெ, கரெகரெ; தெ. கரகர, கரகரி; து. கரகர.

*[கரகர → கரகரப்பு. கரகர = ஒலிக்குறிப்பு.]*

**கரகரப்புப்பாகம்** *karakarappu-p-pāgam,* பெ.(n.) அகப்பையால் முகந்தமாத்திரத்தில் மணல்வடிவ முண்டாகும் நிலையிலுள்ள எண்ணெய் (தைல) பக்குவம். (தைலவ. பாயி.43.); a particular state or consistency of medicinal oil, in which it becomes granulated the moment it is taken up in a ladle.

*[கரகரப்பு + பாகம்.]*

**கரகரெனல்**[1] *karakareṉal,* பெ.(n.) 1.தொண்டை அரித்தற்குறிப்பு; being irritated in the throat. 2. வருத்துதற் குறிப்பு; teasing, carping. கரகரென் றரிக்கிறான் (உ.வ.). 3. கடிப்பதற்குக் கரகரப்பா யிருத்தற் குறிப்பு; being crisp in the mouth. முறுக்குக் கரகரென்று இருக்கிறது (உ.வ.).

*[கரகர → கரகரெனல்.]*

**கரகரெனல்**[2] *karakareṉal,* பெ.(n.) வலுவந்த மாயிழுத்த லொலிக்குறிப்பு; onom, expr. of dragging violently. *"பாஞ்சாலி கூந்தலினைக் கையினாற் பற்றிக் கரகரெனத் தானிழுத்தான்" (பாரதி. பாஞ்சாலி).*

*[கரகர + எனல்.]*

**கரகை** *karagai,* பெ.(n.) 1.ஆலங்கட்டி; hailstone. 2. மழை; rain (சா.அக.).

*[கர → கரகை]*

**கரங்கம்**[1] *karaṅgam,* பெ.(n.) உடம்பினெலும்பு; any bone in the body (சா.அக.).

*[கர + அங்கம் = உடலுள் மறைந்திருக்கும் எலும்பு.]*

**கரங்கம்**[2] *karaṅgam,* பெ.(n.) ஒருவகைக் கரும்பு; a kind of sugarcane.

*[கரு → கரம் → கரங்கம்.]*

**கரச்சி** *karacci,* பெ.(n.) ***கடிச்சைமீன்*** பார்க்க; see *kaḍiccai-miṉ.*

*[கடிச்சை → கரச்சி.]*

**கரசம்**[1] *karasam,* பெ.(n.) தொட்டாற் சுருங்கி போன்ற செடிவகை; a sensitive plant whose flower shrinks when smelled (சா.அக.).

*[கர → கரசம். கரத்தல் = ஒளித்தல், மறைத்தல் சுருங்கல்.]*

**கரசம்**[2] *karasam,* பெ.(n.) கூரிய நுனியுடையதாய்க் கைவடிவாகச் செய்யப்பட்ட இரும்புப்படைக்கலம். (சுக்கிரநீதி.331.); a sharp pointed steel weapon shaped like an arm.

*[கரம் → கரசம்.]*

**கரசல்**[1] *karaśal,* பெ.(n.) மருத்துவநூல்; a medical work. தேரையர் கரசல்(வின்.).

*[ஒருகா. கரைசல் → கரசல்.]*

**கரசல்**[2] *karasal,* பெ.(n.) புன்செய் (யாழ்.அக.); dry land.

*[கரம்பு → கரிசல் → கரசல்.]*

**கரசீரகம்** *karasīrakam,* பெ.(n.) இளநீர்; water of the tender coconut (சா.அக.).

*[கரசு + ஈரகம். கரு → கரசு = இளமை.]*

**கரசை**[1] *karaśai,* பெ.(n.) கரணம் பதினொன்றனுள் ஒன்று (விதான. பஞ்சாங்க. 29, உரை.); a division of time, one of eleven karaṇam.

க. கரசெ.; Skt. gara.

*[கரம் → கரசை. கரம் = கை.]*

**கரசை**[2] *karašai,* பெ.(n.) நானூறு மரக்கால்கொண்ட ஓரளவு; cubic measure for grain, 400 marakkal or 9256¼ rāttal.

தெ. கரிசெ; க. கரசெ.

*[கரு → கர → கரசை. கரு = பெரியது.]*

**கரஞ்சகம்** *karañcagam,* பெ.(n.) ***கரஞ்சம்*** பார்க்க (சூடா.); see *karañjam.*

*[கரு → கரஞ்சம் → கரஞ்சகம்.]*

**கரஞ்சகம்**[2] *karañjakam* , பெ.(n.) 1.புங்கமரம்; the Punka tree 2. பெருமரம்; large bastard poon.

*[கரு = பெரிய, கரு → கர → கரம் → கரஞ்சு → கரஞ்சகம்.]*

**கரஞ்சம்**[3] *karañcham,* பெ.(n.) புன்கு (தைலவ. தைல.73.); Indian beach.

*[கரு → கருஞ்சம் → கரஞ்சம்.]*

**கரட்டாடு** *karaṭṭādu,* பெ.(n.) குரைக்கும் மான்வகை; barking deer.

மறுவ: பழுவெலும்புமுகமான் (rib faced deer.)

*[கரடு + ஆடு. இவற்றின் ஒலி நாய் குரைப்பது போலக் கேட்பதால் இப்பெயர் பெற்றது.]*



கரட்டாடுகள்

**கரட்டான்** *karaṭṭāṉ,* பெ.(n.) ***கரட்டோந்தி*** பார்க்க; see *karaṭṭōndi.*

*[கரடு → கரட்டான்.]*

**கரட்டி** *karaṭṭi,* பெ.(n.) காய்ந்த சுண்ணாம்பு; dry lime (ம.அக.).

*[கரள் → கரட்டி.]*

**கரட்டு** *karaṭṭu,* பெ.(n.) நெஞ்சிலுண்டாகும் ஓர் ஒலி; an abnormal noise in the lungs.

*[கர → கரட்டு.]*

**கரட்டுஊதை** *karaṭṭu-ūdai,* பெ.(n.) உடம்பின் மூட்டெலும்புகளில் கரடுகட்டி அசைக்க முடியாமற் செய்யுமோர் ஊதை நோய்; knotty formations in the bone of the joints of the body, rendering motion impossible (சா.அக.).

*[கரடு + ஊதை.]*

**கரட்டுக்கந்தகம்** *karaṭṭu-k-kandagam,* பெ.(n.) முரடான கந்தகம்; crude or rough sulphur (சா.அக.).

*[கரடு + கந்தகம்.]*

**கரட்டுக்கரட்டெனல்** *karaṭṭu-k-karaṭṭeṉal,* பெ.(n.) கரகரப்பைக் காட்டும் ஓர் ஒலிக்குறிப்பு (வின்.); onom-expr. signifying hoarseness.

*[கரட்டு + கரட்டு + எனல்.]*

**கரட்டுக்கல்** *karaṭṭukkal,* பெ.(n.) செப்பனிடப்பெறாத முருட்டுக்கல்; unpolished rough stone.

*[கரடு + கல்.]*

**கரட்டுத்தரை** *karaṭṭu-t-tarai,* பெ.(n.) 1.மேடு பள்ளமான நிலம்; rugged, uneven ground. 2. கரிசல் நிலம் (இ.வ.); hard, clayey soil.

*[கரடு + தரை – கரட்டுத்தரை.]*

**கரட்டுத்தாளகம்** *karaṭṭu-t-tāḷagam,* பெ.(n.) ***கரட்டரிதாரம்*** பார்க்க; see *karaṭṭari-tāram.*

*[கரடு + தாளகம்.]*

**கரட்டுநிலம்** *karaṭṭu-nilam,* பெ.(n.) வன்தரை; hard land.

*[கரட்டு + நிலம்.]*

**கரட்டுப்பபடி** *karaṭṭu-p-paḍi* பெ.(n.) திருந்தாப்படி; rough copy

*[கர → கரட்டு + படி.]*

**கரட்டுவாதம்**[1] *karaṭṭu-vādam,* பெ.(n.) ***கரட்டு ஊதை*** பார்க்க; see *karaṭṭu-ūdai.*

*[கரடு + வாதம்.]*

**கரட்டுவாதம்**[2] *karaṭṭu-vādam,* பெ.(n.) கழலை; wen (pond.)

*[கரட்டு + வாதம். ஊதை = வாதம்.]*

**கரட்டுவாதம்**[3] *karaṭṭu-vādam,* பெ.(n.) பயனற்ற முரட்டுச் சொற்போர்; abstinate perverse argument.

*[கரள் → கரடு + வாதம் – கரட்டுவாதம். வாள் = பேசுதல். வாள் → வாளம் → வாதம்.]*

**கரட்டுவிரியன்** *karaṭṭu-viriyaṉ,* பெ.(n.) செந்நிற முள்ள விரியன் பாம்புவகை (m.m.); blood viper, reddish in colour.

*[கரடு + விரியன் – கரட்டுவிரியன்.]*

**கரட்டை** *karaṭṭai,* பெ.(n.) ஒணான்; blood-sucker.

*[கரடு → கரட்டை(மு.தா.122). கரட்டை = கரட்டுத் தோலுள்ள ஓணான்.]*

**கரட்டோணான்** *karattōṇāṉ,* பெ.(n.) கரட்டோந்தி பார்க்க; see karaṭṭōndi.

*[கரடு + ஓணான் – கரட்டோணான்.]*

**கரட்டோணான்பிச்சு** *karaṭṭōṇāṉ-piccu,* பெ.(n.) சொரசொரப்புள்ள ஓணானின் பித்தப்பை; the bile duct of the rough lizard used in magic (சா.அக.).

*[கரடு + ஓணான் + பிச்சு.]*

**கரட்டோந்தி** *karaṭṭōndi,* பெ.(n.) ஓணான் வகை; blood-sucker.

*[கரடு + ஓந்தி – கரட்டோந்தி.]*

**கரடகம்**[1] *karaḍagam,* பெ.(n.) ஏய்ப்பு (வஞ்சம்); deceit, fraud (வின்.).

*[கரள் → கரடு → கரடகம்.]*

**கரடகம்**[2] *karaḍagam,* பெ.(n.) 1.நண்டு; crab. 2. நரி; jaikal(சா.அக.).

ம. கரகடம்

*[கர→கரள்→ கரடு. கரத்தல் = மறைந்து கொள்ளுதல்.]*

**கரடகம்பம்** *karaḍa-kambam,* பெ.(n.) ***கரடகம்*** (வின்.) பார்க்க; see *karḍagam.*

*[கரடகம் → கரடகம்பு→கரடகம்பம்.]*

**கரடகன்** *karaḍagaṉ,* பெ.(n.) 1. ஏய்ப்பவன், ஏமாற்று பவன்; crafty, cunning person. 2. பஞ்சதந்திரக் கதைகளில் இடம் பெற்ற நரியின் பெயர்; name of a crafty fox in Panca-tandiram.

Skt. Karataka

*[கரள் → கரடம் → கரடகம் → கரடகன்.]*

**கரடம்** *karaḍam,* பெ.(n.) 1. காக்கை (பிங்.); crow. 2. யானை மதம்பாய் சுவடு (திவா.); trace of 'must' on an elephant's cheek. 3. யானைக் கவுளினின்றும் மதம் பாயுந் துளை; aperture in an elephant's temple from which 'must' flows out. *"யானையின் கொடிறுவாய் கரடம தடைத்தல் சூடுமே" (இரகு. திக்கு.120).*

Skt. karata

*[கரு →கருள் →கரள்→ கரடம்.]*

**கரடன்** *karaḍaṉ* பெ.(n.) எலிவகை (வின்.); a kind of rat.

*[கரு → கருள் → கரள் → கரடன்.]*

**கரடா** *karaḍā,* பெ.(n.) முரட்டுத்தன்மையுள்ள சுரசுரப் பான தாள், மட்டித்தாள்; coarse country paper. 2. சுரசுரப்பான முரட்டுத்துணி; coarse cloth.

*[குர் → (குர) → கர → கரகர → கரகரப்பு = தொண்டையில் சுரசுரத்தல் போன்ற உணர்ச்சி. கர → கார் → காறு. காறுதல் = கரகரத்தல். கர → கரண் → கரணை = சுரசுரப்பான கிழங்கு. கரண் → கரடு → கரடா = சுரசுரப்பான தாள் (மு.தா. 122).]*

கரடா என்னும் சொல் ஏனை இந்திய மொழிகளில் காடா (gāda) எனத் திரிந்து முரட்டுத் துணியைக் குறித்தது.

**கரடி** *karaḍi,* பெ.(n.) 1. உடல் முழுவதும் அடர்த்தியான கருநிற மயிரை யுடையதும் கால்களில் கூரிய நகத்தை யுடையதுமான விலங்குவகை; Indian black-bear, sloth- bear. *"கொடுநாகமோடு கரடி" (தேவா. 1172, 6.).* 2. கரடி கத்துவது போலும் ஓசை யுடைய பறை; drum emutting sound similar to a bear to the growling. *"கரடி சயம் வளர் படகம் பாவ நாசம்" (குற்றா. தல. சிவபூசை. 49).*

**மறுவ.** உளியம், எண்கு, பல்லம், குடாவடி, பல்லூகம், மிளிறு, எலு.

**ம., து.** கரடி; **கூய்.** கரடி (புலி, சிறுத்தை); **தெ.** கரடி (யானை); **கோத.** கர்டி; **க., குட., பட.** கரடி; **கொலா.** கெடியக் (புலி); **நா.** கரையக் (சிறுத்தை); **குவி.** க்ரணி (புலி); **Skt.** karaṭin (elephant); **Pkt.** karaḍa (tiger).

*[கரு → கருள் → கரள் → கரடி (கரிய நிறத்தது).]*

karaḍi, a bear, from karaḍu, rough, knotty, uneven, the ultimate base of which must be **kara** or **kar**. The Tuda word for 'a bear' is karsh (kar). Comp. the **Persian chars**, kurd, harj, and even the **Latin** urs-us. Comp. also the


கரடி

**samoiede** korao, and the **Tungusian** kuti. (C.G.D.F.L. p. 591) என்று **கர், கரடு** அடிப்படையில் கால்டுவெல் கருதிப்பார்த்துள்ளார்.

**கரடி**[2] *karaḍi,* பெ. (n.) 1. சிலம்பம்; fencing. 2. மல், சிலம்பம் முதலியன பயிலும் சாலையாகிய கரடிக் கூடம்; a fencing school, a place for wrestling, boxing and other athletic exercise. 3. இருப்பிடம், ஒய்விடம்; an abode, a place of resort. 4. புரட்டு; deceit, falsehood.

**தெ.** தூரடி, தளரி, களிக; **ம.** களரி; **க.** தருடி, தூரடி; **து.** தூரடி, தூரோடி; **Mar.** karata (a bird's nest); **Skt.** khatūrika.

**த.** களரி ← **தெ., க.** (கரளி → கரடி).

**கரடி**[3] *karaḍi,* பெ.(n.) முத்து (அக.நி.); pearl.

*[கரு → கருடி → கரடி (கருமுத்து).]*

**கரடி**[4] *karaḍi,* பெ.(n.) ***கரடிப்பூடு*** பார்க்க; see karaḍi-p-pūḍu.

*[கரு → கரடு → கரடி.]*

**கரடிக்கூடம்** *karaḍi-k-kūḍam,* பெ.(n.) மல், சிலம்பம் முதலியன பயிலுஞ் சாலை; school or gymnasium where wrestling and fencing are taught.

**க.** தூரடி, தருடி; **து.** தூரடி, தூரோடி; **தெ.** தூரிடி, தூரிடீ; **ம.** களரி.

*[களரி → கரளி → கரடி[2] + கூடம்.]*

**கரடுகட்டு[1]-தல்** *karaḍu-kaṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) மூட்டுகள் கெட்டிப்படல்; joints to swell and get pathology rigid.

*[கரடு+கட்டல்.]*

**கரடுகட்டு[2]-தல்** *karaḍu-kaṭṭu-,* 5 செ.கு.வி(v.i.) சரியாக எரிக்காத குற்றத்தினால் மாழைகள் கட்டிப்படுதல்; to form a knot in metals due to imperfect methods in their fusion.

*[கரடு+கட்டல்.]*

**கரடிகை** *karaḍigai,* பெ.(n.) கரடி கத்துவது போலும் ஓசையுடைய பறைவகை (சிலப். 3: 27, உரை.); a kind of drum, producing a sound similar to the growling of a bear. *"கடிபடு கரடிகை கணையமுஞ் சல்லிகை" (கந்தபு. கயமுக. 214).*

**மறுவ.** கரடிப்பறை

**க.** கரடி, கரடெ; **Skt.** karaṭa; H. karaṇā; Pkt. Karṇā; PPkt. karṇā.

*[க. கரடி → கரடிகை.]*

**கரடித்தாங்கல்** *karaḍi-t-taṅgal*, பெ.(n.) திருவண்ணா மலை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Thiruvaṇṇā malai dt.

*[கரடு → கரடி+தாங்கல்–கரடித்தாங்கல். தாங்கல் = ஏரி.]*

**கரடிப்பயிற்சி** *karaḍi-p-payiṟci*, பெ.(n.) சிலம்பப் பயிற்சி, art of fencing.

*[கரடி + பயிற்சி.]*

**கரடிப்பறை** *karaḍi-p-paṟai*, பெ.(n.) ***கரடிகை*** (திவா.) பார்க்க; see *karaḍigai*.

*[கரடி + பறை.]*

**கரடிப்புங்கன்** *karaḍi-p-puṅgaṉ*, பெ.(n.) ***கரடிப் புன்கு***, பார்க்க; (சா. அக.) see *karaḍi-p-puṉgu*.

*[கரடி + புங்கன். புன்கு → புன்கன் →புங்கன்.]*

**கரடிப்புண்** *karaḍi-p-puṇ*, பெ.(n.) வழியல்லா வழியில் புணருதலால் ஆண்குறியில் உண்டாகும் புண்; a sore or an ulcer in the male organ due to unnatural intercourse (சா. அக.).

*[கரள் → கரடு → கரடி + புண்.]*

**கரடிப்புன்கு** *karaḍi-p-puṉgu*, பெ.(n.) புன்கு மரவகை; four leaved soapnut.

*[கரடி + புன்கு.]*

**மறுவ.** நெய்க்கொட்டான், நெய்க்கொட்டை, பூவந்தி.

**கரடிப்பூடு** *karaḍi-p-pūḍu*, பெ.(n.) விரியன் பூடு, common sebesten (சா.அக.).

*[கரடி + பூடு.]*

**கரடியாய்க்கத்து–தல்** *karaḍi-y-āy-k-kattu-*, 5 செ.கு.வி. (v.i.) ஒரு செய்தியைப் பிறர் கேட்காத போதும் திரும்பத்திரும்பக் கூறுதல்; to reiterate, no purpose to shout oneself hoarse. நீ என்னதான் கரடியாய்க் கத்தினாலும் நான் ஒன்றும் கேட்பதாக இல்லை (உ.வ.).

*[கரடி+ஆய்+கத்து.]*

**கரடிவணிகம்** *karaḍi-vaṇigam*, பெ.(n.) புகழ்ச்சி யாகப் பேசி நினைத்ததை நிறைவேற்றிக் கொள்ளல் (mud.); coaxing by flattery, toadying, fawning.

*[கரடி[2] + வணிகம்.]*

**கரடிவிடு[1]–தல்** *karaḍi-viḍu-*, 20 செ.கு.வி.(v.i.) பொய்யைக் கூட்டிக் கூறுதல்; to spin a yarn. தன்னால் எதையும் சாதிக்க முடியும் என்று கரடி விடுகிறான் (உ.வ.).

*[கரடி = புரட்டு, பொய். விடு (து.வி.) கரடி+விடு–.]*

**கரடிவிடு[2]–தல்** *karaḍi-viḍu-*, 20 செ.கு.வி.(v.i.) தொடர்பற்ற ஒன்றைக் கூறிக் கலங்கச் செய்தல்; to confuse by expressing an unconnected incident or false news.

*[கரடி+விடு–.]*

கரடியைக் கட்டுப்பாட்டினின்று தளர்த்தி விடுதல் அச்சமுண்டாக்கும். அதுபோல் கலக்கத்தை யுண்டாக்கும் செயல்கள் கரடி விடுதல் என மரபுத்தொடராய் அமைந்துள்ளது. "சிவன் பூசையில் கரடி விட்டாற்போல்" என்ற பழமொழி, கரடியைக் குறித்ததன்று, கமண்டலத்தைக் குறித்தது எனக் கூறுவாரும் உளர். சிவ பூசைக்குத் தேவையான கரடிகை, கமண்டலத்தை மறந்துவிட்ட நிகழ்வையே சிவ பூசையில் கரடி [கரண்டம் → கரண்டிகை → கரடிகை → கரடி] விட்டதாக இப்பழமொழி சுட்டுகிறது என்பர்.

**கரடிவித்தை** *karaḍi-vittai*, பெ.(n.) ***கரடிப்பயிற்சி*** பார்க்க; see *karaḍi-p-payiṟci*.

*[களரி → கரளி → கரடி + வித்தை.]*

இச்சொல் பல்வகை உடற்பயிற்சிகளையும் சுட்டியது. இதனைக் கருமாய [மாயாசால] வித்தையைக் கருதி காரடிவித்தை என்பது தவறு.

**கரடு[1]** *karaḍu*, பெ.(n.) 1. கற்பாங்கான பெருந்திடல்; roughness, ruggedness, unevenness. *"ஈண்டுருகாக் கரடு" (அருட்பா, iv, பத்தி.6).* 2. முரட்டுக்குணம்; churlish temper. 3. குன்றினுஞ் சிறியது (இ.வ.); hillock, low hill. 4. வளர்ச்சியற்றது; that which is stunted in growth. கரட்டுப்பசு (உ.வ.). 5. ஒரு வகை முத்து (S.I.I. ii, 549.); a variety of pearl.

**க., ம.** கரடு; **கோத.** கர்ப் (சூறாவளிக்காற்று); **து.** கரடு; **தெ.** கரடி (விடாப்பிடி); **கோத.** கர்ப்; **தெ.** கர, கரகச.

*[கரண் → கரடு. (மு.தா. 122). (கரண் = திரட்சி, முருடு).]*

**கரடு**[2] *karaḍu,* பெ.(n.) 1. காற்பரடு (பிங்.); ankle. 2. மரக்கணு; knot in wood. "கரடார் மரம்" (திருப்பு. 70.). 3. புற்கரடு; tuft.

**மறுவ.** பரடு, மிசைத்திரள்.

**ம.** கரண (கரும்புக்கணு), குரட்ட (விரற்கணு); **க.** கரணெ, கண்ணெ (கட்டி, மொத்தை); **தெ.** கருடு (கட்டி, மொத்தை).

*[கரண் → கரடு (மு.தா. 122).]*

**கரடு**[3] *karaḍu,* பெ.(n.) யானையின் மதவெறி; running amuck of an elephant. *"கரடு பெயர்த்தது" (பெருங். உஞ்சை. 32, தலைப்பு).*

**Skt.** karaṭa

*[கரண் → கரடு.]*

**கரடு**[4] *karaḍu,* பெ.(n.) நரித்தலை ஊதைநோய், (மூட்டுகள் வீங்கிக் கெட்டிப்படல்); induration of a bone or bony substance as in Rheumatoid Arthritis. வீங்கிய இடம் கரடுதட்டிவிட்டது (உ.வ.).

*[கரள் → கரண் → கரடு.]*

**கரடு**[5] *karaḍu,* பெ.(n.) 1. சிற்றூர்ப் பெயர்; a village name. கரட்டுப்பாளையம். 2. ஊர்ப்பெயரீறு; place name sufix. புளியங்கரடு.

*[கரடு= குறுமரச் சிறுகுன்று, புதர்க்குன்று, அதனைச் சார்ந்த ஊர்.]*

**கரடுமுரடு** *karaḍu-muraḍu,* பெ.(n.) ***கரடுமுருடு*** பார்க்க; see *karaḍu-muruḍu.*

*[குரு → கரு → கருடு → கரடு + முரடு. முருடு → முரடு.]*

**கரடுமுருடு** *karaḍu-muruḍu,* பெ.(n.) 1. ஒழுங்கின்மை; மேடும் பள்ளமும், குண்டும் குழியும்; unevenness, ruggedeness, roughness. 2. மரத்து வைரமும் கணுவும் கொண்ட பகுதி; knotty, induration part of a tree (சா.அக.).

**ம.** கரடும் முரடும்

**Rus.** grubiya

*[கருடு → கரடு + முருடு.]*

**கரண்**[1] *karaṇ,* பெ.(n.) 1. காய்கறிகளின் முண்டு; the uneven surface in vegetables and fruits. 2. புண்வடு; scar.

*[கரள் → கரண்.]*

**கரண்**[2] *karaṇ,* பெ.(n.) புற்பற்றை (குருகூர்ப் 26.); grass sod.

*[கரு → கருள் → கரள் → கரண், கரு = அறுகம் புல், கருக்கம் புல்.]*

**கரண்டக்கை** *karaṇḍa-k-kai,* பெ.(n.) முன்கை; fore arm.

*[கரள் → கரண் → கரண்டு + அ + கை 'அ' சொற் சாரியை. கரண் = திரட்சி.]*

**கரண்டகம்** *karaṇḍagam,* பெ.(n.) 1. தென்னை ஒலையால் முடைந்த பூக்குடலை; basket made of plaited coconut - leaves for carrying flowers for divine worship. *"கரண்டகநீர் தரியாபோல்" (ஞானவா. வைராக்.74).* 2. சுண்ணாம்புச் செப்பு (கொ.வ.); small metal box for keeping quick lime to be used with betel. 3. அணிகலச் செப்பு (பிங்.); Jewel box.

**க.** கரடகெ, கரடிகெ, கரண்டகெ, கர்டிகெ (இலிங்கப்பெட்டி); **ம.**கரண்டகம்; **து.** கரடிகெ (சிறுபெட்டி).

**த.** கரண்டகம் > **Skt.** karaṇḍa

*[கரண்→காண்டகம். கரண் = திரட்சி, உருண்டை.]*

**கரண்டம்**[1] *karaṇḍam,* பெ.(n.) நீர்க்காக்கை; water crow, coot. *"கரண்டமாடு பொய்கை" (திவ்.திருச் சந்த. 62).*

**Skt.** *karaṭa (a crow)*

*[கரு → கருள் → கருண்ட → கரண்டம் (கருநிற முடையது).]*

**கரண்டம்**[2] *karaṇḍam,* பெ.(n.) 1. கமண்டலம் (அக.நி.); water-vessel used by ascetics. 2. ***கரண்டி*** பார்க்க; see *karaṇḍi.*

**மறுவ.** கரண்டை

*[கரம் + மண்டை (மட்பாண்டம்) = கமண்டம் → கரண்டம் = கையிலேந்தும் மொந்தை அல்லது சிறிய நீர்க்கடிகை.]*

கரம் = கை, [வடதமிழ் என்னும் பாகதச் (Pkt.) சொல்லான கரம், கருத்தல் = செய்தல் என்னும் தமிழ்வேர் வழி விரிந்ததேயாகும்.].

**கரண்டி**[1] *karaṇḍi,* பெ.(n.) மாழையினாலாகியதும் (உலோகம்) காம்புள்ளதுமாகிய முகத்தற்கருவி (பிங்.); சிற்றகப்பை; spoon or ladle, made of metal. *"கச்சவே கரண்டிகொண்டு" (த.மொ.அக.).*

**ம., பட., கசபா., உரா.** கரண்டி; **த.** கரிடெ, கள்டெ.

*[கரள் → கரண் → கரண்டு → கரண்டி.கரண்டுதல் = தோண்டுதல், பொள்ளுதல்]*

**கரண்டி**[2] *karaṇḍi,* பெ.(n.) கொல்லூறு; trowel; சுவரில் அழகு வேலைப்பாடு செய்யச் சிறு கரண்டியைக் கொண்டுவா (உ.வ.).

**ம.** கரண்டி

*[கரள் → கரண் → கரண்டு → கரண்டி.]*

**கரண்டிகை** *karaṇḍigai,* பெ.(n.) பூக்கூடை; flower-basket, flower vessel. *"கரண்டிகையுட் சாலும் பலபோது" (கோயிற்பு. வியாக்கிர.15).* 2. மணி முடியின் ஒருறுப்பு; name of a special part of the crown. *'கரண்டிகையிற் கோத்தவடம்' (S.I.I. ii,87).*

**ம.,**கரண்டிகா; **க.,** கரண்ட, கராட.

*[கரண்டு → கரண்டகம் → கரண்டிகை. ]*

**த.** கரண்டகம் > **Skt.** *karaṇḍikā.*

கரண்டு = அழகுவேலைப்பாட்டிற்காகச் சிறிது சிறிதாகச் செதுக்குதல்,சுரண்டுதல். கரண்டிகை, அழகுறப் பின்னப்படுவதால் பூக்கூடைக்கும், அழகு வேலைப்பாடுகளுடன் கூடிய அணிகலப் பெட்டிக்கும், அழகிற்காக மன்னர் முடியில் பதிக்கும் அணிகலனுக்கும் ஆகி வந்துள்ளது.

**கரண்டிகைச் செப்பு** *karaṇḍigai-c-ceppu,* பெ.(n.) சுண்ணாம்புச் செப்பு; small metal box for keeping quicklime to be used with betel.

*[கரண்டு → கரண்டி → கரண்டிகை. கரண்டிகை + செப்பு.]*

**கரண்டிப்பாறை** *karaṇḍi-p-pāṟai,* பெ.(n.) ஓரடி நீளமுடைய பச்சை நிறமுடைய கடல் மீன் வகை; horse-mackerel, greenish, generally attaining 1.ft. in length.

*[கரண்டி + பாறை – கரண்டிப்பாறை. (வடிவ அமைப்பு நோக்கிப் பெயர் பெற்ற பாறை மீன்வகை).]*

**கரண்டியலகன்** *karaṇḍi-y-alagaṉ,* பெ.(n.) நீர்வாழ் பறவை வகை; spoon bill.

*[கரண்டி+அலகன்.]*

கரண்டி போன்ற அலகுடையதால் இப்பெயர் பெற்றதென்க.



கரண்டியலகன்

**கரண்டு-தல்** *karaṇḍu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. அரித்தல், தோண்டுதல்; to gnaw as a rat, to paw as a dog. *"நாவினையென்பால்... கரண்டுகின்ற நாய்க்கும்"(அருட்பா, 1, மகாதேவ.86).* 2. சுரண்டுதல், செதுக்குதல்; to scrape. 3. சிறிது சிறிதாகத் தன்வயப்படுத்துதல்; to usurp gradually.

**ம.** கரண்டுக

*[கரண்டு = சுரண்டு, சிறிது சிறிதாகச் செதுக்குதல், மேலும் கீழும் அசைதல்; கரண்டு → கரண்டை = பக்குவமாக மேலுங் கீழுஞ் சிறகசைத்துப் பறத்தல்.]*

**கரண்டு** *karaṇḍu,* பெ.(n.) 1. உருண்டை; global shape. 2. திரட்சி, குவியல்; heap.

**க.,** கரணே; **தெ.,** கரடு, கருடு, கருவு.

**கரண்டை**[1] *karaṇḍai,* பெ.(n.) 1. கற்பாழி (திவா.); rocky cave, cavern. *"கல்பொறிந்தன்ன விட்டுவாய்க் கரண்டை" (மதுரைக். 482).* 2. முனிவர் வாழிடம் (திவா.); the abode of sages, as mountain cave.

*[கரள் → கரண்டு → கரண்டை. கரண்டு = சுரண்டுதல், சுழிதல், வளைதல்.]*

**கரண்டை**[2] *karaṇḍai*, பெ.(n.) கமண்டலம்; water-vessel, used by ascetics. *"சிமிலிக் கரண்டையன்"* (மணிமே.3: 86).

மறுவ. கரண்டம்

*[கரம் + மண்டை – கரமண்டை → கரண்டை. மண்டை = மட்கலம்.]*

த். கரண்டை > Skt. karaṇḍa

**கரண்டை**[3] *karaṇḍai*, பெ.(n.) பறவை பறப்பதில் சிறப்பு நிலை; a mode in the flight of birds (காசிக.திரிலோ.6).

*[கரள் → கரண் → கரண்டு. கரள் = வளைதல், சுழலுதல். கரண்டு = சுழற்சி.]*

**கரண்டை**[4] *karaṇḍai*, பெ.(n.) கொட்டைக் கரந்தை; a low annual herbs; sphaeranthus indicus.

க. கரண்டே; து. கர்ண்டே.

*[கரள் → கரண் → கரண்டை.]*

**கரண்டைக்காய்** *karaṇḍai-k-kāy*, பெ.(n.) காய்களின் கொத்து; a bunch of unripe fruit.

*[கரண்டு = திரட்சி, கொத்து. கரண்டு → கரண்டை + காய்.]*

**கரண்டைக்காய் மோதிரம்** *karaṇḍai-k-kāy-mōdiram*, பெ.(n.) பரவமகளிர் ஒரு விரலுக்கு நாலைந்து மேனி ஐவிரலிலும் அணியும் மோதிரம்; a kind of finger-ring worn by Parava women on all the five fingers, four or five such rings being worn on each finger.

*[கரண்டைக்காய்+மோதிரம், கரண்டைக்காய் = திரட்டுக் காய், காய்க்கொத்து.]*

**கரண்டைக்கால்** *karaṇḍai-k-kāl*, பெ.(n.) கணுக் கால்; ankle.

மறுவ. கெண்டைக்கால்

*[கரள் → கரண் → கரண்டு → கரண்டை + கால்.]*

**கரண்டைக்கை** *karaṇḍai-k-kai*, பெ.(n.) முன்கை (இ.வ.); fore-arm.

மறுவ. கெண்டைக்கை

*[கரள் → கரண்டை = திரட்சி. கரண்டை + கை.]*

**கரணக்கணக்கன்** *karaṇa-k-kaṇakkaṉ*, பெ.(n.) ஆவணம் எழுதுவோன்; a document - writer.

ம. கரணக்கணக்கன்

*[கரணம் + கணக்கன்.]*

**கரணகம்** *karaṇagam*, பெ.(n.) மனம்; mind.

ம. கரள்; **கோத.** கர்ல்.

*[கரள் → கரண் + அகம்.]*

**கரணத்தண்டம்** *karaṇa-t-taṇḍam*, பெ.(n.) கட்டுப்பாட்டை மீறியமைக்காகச் செலுத்தும் தண்டம்; fine.

*[கரணம் + தண்டம். கரணம் = ஒழுங்குபடுத்தப்பட்ட செயல்முறை; நெறிமுறை; தண்டம் = தப்பு.]*

**கரணத்தார்** *karaṇattār*, பெ.(n.) ஊர்ப் பொதுச் செயல்களைச் செயற்படுத்துவோர்; village executive groups; *"இவ்வூர் கரணத்தார் கண்டு செய்வித்து" (தமிழில் ஆவணம். 157).*

*[கரணம் + அத்து + ஆர்.]*

**கரணத்தான்** *karaṇattāṉ*, பெ.(n.) ஊரவைக் கணக்கெழுதுபவன் (படித்தவன்); an accountant. *"அருள்பெறு கரணத்தானு மாவணந் தொழுது வாங்கி" (பெரிய.பு. தடுத்தாட். 58).*

ம. கரணத்தான்

*[கரணம் + அத்து + ஆன்.]*

**கரணத்தியலவர்** *karaṇattiyalavar*, பெ.(n.) அரசனுக்குத் துணையாகும் எண்பெருந் துணை வருள் ஒருவரான, கணக்கு மேற்பார்வையாளர்; account officers working under a king, one of *eṉperu-n-tuṇaivar.*

*[கரணம் + அத்து + இயலவர்.]*

**கரணப்பல்படை** *karaṇa-p-palpaḍai*, பெ.(n.) பல்வ கைப்படை ; all type of military forces.

*[கரணம்+பல்+படை, கரு + அணம் – கரணம் = செய்கை.]*

**கரணம்**[1] *karaṇam*, பெ.(n.) 1. அறிவுக்கருவி (அகக் கருவி), உறுப்புக் கருவி (புலனறிவு); intellect, cognition. 2. மனம்; mind. *"பொறியொடு கரணத் தப்புறம்" (கம்பரா.தைல.27).*

*[கரு → கரணம் (செய்கை).]*

**கரணம்**[2] *karaṇam,* பெ.(n.) 1. கையாற் செய்யுந்தொழில்; work by one's hand. *"சித்திரக் கரணஞ் சிதைவின்று செலுத்தும்" (சிலப். 3: 54.).* 2. பொறிகள்; organ of sense. *"கரணங்க ளெல்லாங் கடந்து" (திருவாச. 10. 9).* 3. வதுவைச்சடங்கு ; marriage ceremony. *"ஐயர் யாத்தனர் கரண மென்ப" (தொல். பொருள். 145).* 4. கலவி (சூடா.); coition. 5. கூத்தின் மாறுபாடு; a variety in dramatic action, a kind of dancing. *"கரணமிட்டுத் தன்மை பேசி" (தேவா. 56:3).* 6. தலைகீழாகப் பாய்கை; somer-sault, tumbling heels over head, caper. வயிற்றுப் பிழைப்புக்குக் கம்பத்திலே கரணம் போடுகிறான் (உ.வ.). 7. இன்றியமையாது வேண்டப்படும் கருவி; மூலப்பொருள்; implement, means, material, instrument. *"அதனதனுக்குரிய வாய பல்கரண முந்தருதி" (கந்தபு. குமாரபுரி. 65).*

**ம.** கரணம்

**த.** கரணம் > **Skt.** karaṇa (மு.தா.176)

*[கரு → கரணம். கருத்தல் = செய்தல்.]*

**கரணம்**[3] *karaṇam,* பெ.(n.) 1. கணக்கன்; (S.I. I.I,65.); accountant, karanam. 2. ஆவணம்; title-deed, document.

*[கரு → கருணம் → கரணம். கரு = செய். கரணம் = செய்பவன், எழுத்துப்பணியாளன், அவனால் எழுதப்பட்ட ஆவணம்]*

**த.**கரணம் > **Skt.** karaṇa.

**கரணம்**[4] *karaṇam,* பெ.(n.) நீத்தார் நிகழ்விற்குரிய பண்டங்கள்; ingredients mixed and used in connection with funeral rites.

*கரு → கருணம் → கரணம். கரு = செய். கரணம் = செய்யப்பட்ட பண்டம், நீத்தார்க்குப் படைக்கும் பண்டங்கள்.*

**கரணம்**[5] *karaṇam,* பெ.(n.) மெய்ப்பொருள்; philosophy. *"கரணமனைத்தும்" (கோயிற்பு. நடராச. 22).*

*[கரு → கருணம் → கரணம். கரு = செய். கரணம் = உடற்பொருள், மனம், பூதங்கள் நிலையைத்துழாவி ஆராய்வது.]*

**கரணம்**[6] *karaṇam,* பெ.(n.) விருப்பம் (யாழ்.அக.); desire.

**ம.**கரணம்

*[கரு → கருள் → கருளம் → கருணம் → கரணம். கருள் = மனம், இதயம்.]*

**கரணன்** *karaṇan,* பெ.(n.) கணக்கன்; accountant. *"கரணர்கள் வந்தனர் கழல் வணங்கினர்" (கந்தபு. மார்க்கண். 210).*

**ம.** கரணன்

*[கரணம் → கரணன்.]*

**கரணாப்பட்டி** *karaṇā-p-paṭṭi,* பெ.(n.) புதுக் கோட்டை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Pudukkottai dt.

*[கரணன் – கரணம் + பட்டி – கரணம்பட்டி → கரணாப்பட்டி. கரணன் = ஊர்க்கணக்கன்.]*

**கரணாவூர்** *karaṇāvūr,* பெ.(n.) விழுப்புரம் மாவட்டத்து ஊர்; a village in Viluppuram dt.

*[கரணன் + ஊர் – கரணனூர் → கரணவூர். கரணாவூ (கொ.வ.) கரணன் = ஊர்க்கணக்கன்.]*

**கரணி**[1] *karaṇi,* பெ.(n.) செய்பவன் (யாழ். அக.); doer. *"கரணிச் சித்தருள் கச்சிப்பதியோனே" (திருப்பு. 432.) (த.மொ.அக.).*

*[கரு → கருணி → கரணி 'இ' வினைமுதல் குறித்த ஈறு.]*

**கரணி**[2] *karaṇi,* பெ.(n.) மருந்து; medicine. *"மருத்துவன் கைக் கரணி யுண்ணே" (தைலவ. பாயி.1).*

*[கரு → கரண் → கரணி . கருத்தல் = செய்தல். கரணி = செய்யப்பட்டது.]*

**கரணி**[3] *karaṇi,* பெ.(n.) வகை, வழி, முறை; manner, way, mode (ஆந்.).

**தெ.** கரணி

*[கருத்தல் = செய்தல். கரணம் = செய்முறை, செயல்வகை. கரு → கரணி.]*

**கரணிக்கன்** *karaṇikkan,* பெ.(n.)சிற்றூர்க் கணக்கன்; village accountant.

*[கரு → கரணிகன் → கரணிக்கன். (செய்வோன், கணக்கிடுவோன்).]*

**கரணிகம்** *karaṇigam,* பெ.(n.) 1. அந்தக்கரணம் (வின்.); intellectual power, any of the four *anda-k-karaṇam.* 2. கூத்தின் மாறுபாடு (வின்.); a kind of dramatic action or dancing. 3. கலவி (அக.நி.); copulation. *"கரணிகத்தில் சுரோணிதத்தின் வாதமினால்"* (அக.நி.குருநாடி.191). 4. கருணீகம் (இ.வ.); office of accountant.

*[கரு → கரணி → கரணம் → கரணிகம். கருத்தல் = செய்தல்.]*

**த.** கரணிகம் > **Skt.** karaṇa.

**⚘கரணியம்** *karaṇiyam,* பெ.(n.) காரணம்; reason, cause.

மறுவ. காரணம்

*[கரு → கரணி → கரணியம். ஒ.நோ. அரு → அரண் → அரணியம்.]*

கருத்தல் = செய்தல். கரணம் = செயல்வகை, செய்முறை, வழிவகை. வடதமிழில் காரணம் என்று இச் சொல் திரிந்தது. கரணியம் தென்தமிழ்ச் சொல்லாம். – **படைத். பாவாணர்.**

**கரணியமேனிக்கல்** *karaṇiya-mēṇi-k-kal,* பெ.(n.) கரும்புள்ளிக்கல் (வின்.); a kind of metal-ore.

*[கரு → கரண் = கருமை. கரணியம் + மேனி + கல்.]*

**கரணை**[1] *karaṇai,* பெ.(n.) 1. கரணைக்கிழங்கு; elephant yam; 2. சேனைக்கிழங்கு; tuberous rooted herb.

*[கரள் → கரணை. கரணை = மேற்பாகம் சமனற்றுக் கரடு முரடாக அமைந்துள்ளமை காண்க.]*

**கரணை**[2] *karṇai,* பெ.(n.) 1. கொத்துக்கரண்டி (வின்.); small trowel.

*[கரள் → கரண் → கரணை. கரள் = திரட்சி, கட்டி, உருண்டை.]*

**கரணை**[3] *karaṇai,* பெ.(n.) 1. கரும்பு முதலியவற்றின் துண்டு; piece cut off, as sugarcane cut crosswise. 2. வீணைத்தண்டு (வின்.); main body of vīna 3. புண்வடு; scar of wound (வின்.). 5. ***பாவட்டை*** பார்க்க (L.) ; see *pāvaṭṭai.*

*[கரள் → கரண் → கரணை. (மு.தா.133). கரண் = திரட்சி, உருண்டை.]*

**கரணைக்கிழங்கு** *karuṇai-k-kiḻaṅgu,* பெ.(n.) கறிக்கு உதவும் ஒருவகைக் கிழங்கு; elephant yam.

*[கரணை + கிழங்கு.]*

**கரணைக்கொட்டி** *karuṇai-k-koṭṭi,* பெ.(n.) காறற் கொட்டிச்செடி; a medicinal plant.

*[கரணை + கொட்டி.]*

**கரணைப்பலா** *karaṇai-p-palā,* பெ.(n.) வெருகுச் செடி (மலை.); a medicinal plant.

*[கரணை + பலா.]*

**கரணைப்பாவட்டை** *karaṇai-p-pāvaṭṭai,* பெ.(n.) பாவட்டைச்செடி (வின்.); pāvaṭṭai plant.

*[கரணை + பாவட்டை.]*

**கரத்தை** *karattai,* பெ.(n.) ஒற்றைமாட்டு வண்டி; cart. ஒரு கரத்தைப் பிடித்துகொண்டு 'வா' (யாழ்ப்.).

E.cart

*[கரு → கரத்தை; கரு → கருத்து = சேர்த்து, பொருத்து. கரத்தை = பொருத்திய வண்டி. இச்சொல் முன்னெழுத்து மறைந்து வடபுல மொழிகளில் ரதம் எனத் திரிந்து தேரைக் குறிப்பதாயிற்று. ஒ.நோ. நகர் (வீடு) > **இந்.** கர்.]*

**கரதப்பத்திரம்** *karada-p-pattiram,* பெ.(n.) அரசிறையை அறுதியிடும் ஆவணம் (சுக்கிரநீதி. 93); document fixing the tax.

*[**Skt.** patra > **த.** பத்திரம் (இலை. ஓலை).]*

*[கரத்தை → கரதம் + பத்திரம். கரு → கருத்து → கரத்தை = நன்கு பொருத்தியது. செப்பம் செய்தது.]*

**கரதலப்பாடம்** *karadala-p-pāḍam,* பெ.(n.) ***கடைதலைப்பாடம்*** பார்க்க; see *kaḍai-talai-p-pāḍam.*

*[கடைதலை → கரதலை (கொ.வ.) + பாடம்.]*

**கரதலம்** *kara-talam,* பெ.(n.) கைத்தலம்; palm of the hand. *"மானுற்ற கரதல மொன்று" (தேவா.44,3).*

**க., து.** கரதாள; **தெ.** கரதாளமு.

*[கரு → கரம் + தலம். கரு = செய்.]*

**கரதாளம்**[1] *kara-tāḷam,* பெ.(n.) 1. கையாற் போடும் தாளம்; keeping time with the hands.

**தெ.** கரதாளமு; **க., து.** கரதாள.

*[கரம் + தாளம் – கரதாளம் = கைத்தாளம்.]*

**கரதாளம்**[2] *kara-tāḷam,* பெ.(n.) ***கருதாலம்*** பார்க்க; see *karu-tālam.*

**க.,** கரதாள (பனையோலை, கைவிசிறி); **தெ.** கரதாளமு (சிறு மடற்பனை); **து.** கரதாள.

*[கரு + தாலம் – கருதாலம் → கரதாளம்.]*

**கரந்தகற்படை** *karanda-kaṟpaḍai,* பெ.(n.) *"கற்படுத்து மூடப்பெற்ற நகரநீர்க்கால்" (சிலப். 14: 65, உரை.);* covered drainage channel in a city.

*[கரந்த + கல் + படை. கர = மறைந்த.]*

**கரந்தல்** *karandal,* பெ.(n.) திருநீற்றுப்பச்சை; sweet basil.

*[கரு → கரந்தை → கரந்தல்.]*

**கரந்துபடை** *karandu-paḍai,* பெ.(n.) ***கரந்தகற்படை*** பார்க்க; see *karanda-kaṟpaḍai.*

*[கரந்து + படை.]*

**கரந்துவரலெழினி** *karandu-varal-eḻiṉi,* பெ.(n.) நாடகத் திரைச்சீலை; a kind of over-hanging curtain put up on the ancient Indian stage. *"ஒருமுக வெழினியும் பொருமுக வெழினியும் கரந்துவர லெழினியும்" (சிலப். 109:110.).*

*[கரந்து + வரல் + எழினி. எழினி = இடுதிரை.]*

**கரந்துறை** *karanduṟai,* பெ.(n.) மறைந்து வாழ்தற் குரிய நிலவறை; underground room.

*[கரந்து + உறை.]*

**கரந்துறைகிளவி** *karanduṟai-kiḷavi,* பெ.(n.) உள்ளக்குறிப்பை மறைத்துச் சொல்லும் மொழி (திருக்கோ. 50, கொளு.); words that mask one's innermost feelings and purpose.

*[கரந்து + உறை + கிளவி.]*

**கரந்துறைகோள்** *karanduṟai-kōḷ,* பெ.(n.) மறைந்து சிறுபான்மையாகப் புலப்படும் கோள்கள்; வால் வெள்ளி, வானவில் போன்ற ஒளி வீச்சுகள்; phenomena of the heavens sometimes visible and sometimes not, for the most part regarded as ominous, such as Rāgu, Kēdu, pari-vēḍam, vāl-veḷḷi, vāṉa-vil. *"கரந்துறைகோ -ளொடு நிரந்தவை நிறீஇ" (பெருங். உஞ்சைக் 58, 57).*

*[கரந்து + உறை + கோள்.]*

**கரந்துறைச்செய்யுள்** *karanduṟai-c-ceyyuḷ,* பெ.(n.) ***கரந்துறைப் பாட்டு*** பார்க்க; see *karanduṟai-p-pāṭṭu.*

*[கரந்துறை+செய்யுள்.]*

**கரந்துறைப்பாட்டு** *karanduṟai-p-pāṭṭu,* பெ.(n.) ஒவ்வோரெழுத்து இடைவிட்டுப் படிக்கும்போது வேறு ஒரு பாட்டாகத் தோன்றும்படி, எழுத்துகள் அமைத்துப் பாடப்படும் ஒரு மிறைச்செய்யுள் (தண்டி. 95, உரை); stanza composed in such a way that when the alternate letters of the words in it are put together, in a correct sequence, they form by themselves another verse altogether.

*[கரந்து + உறை + பாட்டு.]*

**கரந்துறைமாக்கள்** *karanduṟai-mākkaḷ,* பெ.(n.) மறைந்து தங்கும் மாந்தர் (மணிமே.); hiding people.

*[கரந்து + உறை + மாக்கள். கரந்து உறைதல் = மறைந்து வாழ்தல்.]*

**கரந்தை**[1] *karandai,* பெ.(n.) 1. திருநீற்றுப்பச்சை; sweet basil. 2. கொட்டைக்கரந்தை; Indian globe-thistle. *"காய்த்த கரந்தை" (பதிற்றுப். 40:5.).* 3. மரவகை (மலை.); iron-weed. 4. நீர்ச்சேம்பு (L.); arrow-head aquatic plant.

ம. கரண்டெ; க. கரண்டெ; து. கரண்டெ, கர்ண்டெ.

*[கரு → கரந்தை. கரு = கரிய.]*

**கரந்தை**[2] *karandai,* பெ.(n.) 1. நிரைமீட்போர் அணியும் கரந்தைப் பூமாலை (பிங்.); chaplet of karandai flowers worn by warriors when recovering cows that had been seized by the enemy. 2. ***கரந்தைத்திணை*** பார்க்க; see *karandai-t-tiṇai.* *"கரந்தையுங் கரந்தைத் துறையு மென்ப" (பு.வெ. 2,1.).*

*[கள் → கர் → கர → கரந்தை (வே.க.121).]*



கரந்தை

**கரந்தை**[3] *karandai,* பெ.(n.) குரவன் (குரு.); priest. *"கரந்தைக ளாண்டி லொருக்கால் வருவது" (தனிப்பா. 1, 87, 171.).*

*[குரவன் → குரந்தை → கரந்தை (கொ.வ.).]*

**கரந்தை**[4] *karandai,* பெ.(n.) தவணை; time limit. சித்திரைக் கரந்தை (நெல்லை).

*[கரு → கரந்தை. கரந்தை = செயற்பட வேண்டிய அல்லது செய்யப்பட வேண்டிய காலம்.]*

**கரந்தை**[5] *karandai,* பெ.(n.) தஞ்சை மாவட்டத்துச் சிற்றூர்; name of a village in Thanjavur dt.

*[கருந்தட்டான் + குடி – கருந்தட்டாங்குடி → கரந்தை (மரூஉ.).]*

**கரந்தைக்கொடி** *karandai-k-kodi,* பெ(n.) கொட்டைக் கரந்தை; Indian globe - thistle. (பதிற்றுப். 40.).

*[கரந்தை + கொடி]*

**கரந்தைக்கோவை** *karandai-k-kōvai,* பெ.(n.) 18ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த பலபட்டடைச் சொக்கநாதப் புலவரால் இயற்றப்பட்ட சிற்றிலக்கியம்; a treatise by Palapattadai Cokkanata-p-pulavar of 18th C.

*[கரந்தை + கோவை.]*

**கரந்தை சூடி** *karandai-šūḍi,* பெ.(n.) சிவன்; Šiva.

*[கரந்தை + சூடி. கரந்தை = ஆநிரை மீட்கும்போரில் மறவர் சூடும் பூ. இங்கு வெற்றி குறித்தது .]*

**கரந்தைத்திணை** *karandai-t-tiṇai,* பெ.(n.) பகைவர் கவர்ந்த ஆநிரை மீட்டலைக் கூறும் புறத்திணை (பு.வெ.. 2,1, உரை); theme of recovering the herd of cows seized by the enemy as a signal of the declaration of hostilities.

*[கரந்தை + திணை.]*

வெட்சியார் ஆநிரைகளைக் கவர்ந்தமை கேட்ட அவ்வாவினுடைய அரசன் படைமறவர் விரைந்து வெட்சியாரோடு இடைவழியிற் பொருது தமது நிரையினை மீட்பது கரந்தைத் திணையாம். இவ்வொழுக்கத்திற்குக் கரந்தைப் பூச்சூடுதல் மரபு. கரந்தை = ஒருவகைப் பூடு. இதனைக் கொட்டைக் கரந்தை என்றும் கூறுவர்.

**கரந்தைத்திணை:** 1. கரந்தையரவம் 2.அதரிடைச்செலவு 3.போர்மலைதல் 4. புண்ணொடு வருதல் 5. போர்க்களத் தொழிதல் 6. ஆளெறி பிள்ளை 7.பிள்ளைத்தெளிவு 8. பிள்ளையாட்டு 9.கையறுநிலை 10. நெடுமொழி கூறல் 11. பிள்ளைப் பெயர்ச்சி 12. வேத்தியன் மரபு 13. குடிநிலை என்றவாறு பதின்மூன்று துறைப்படும் எனப் புறப்பொருள் வெண்பாமாலை கூறும்.

**கரந்தையரவம்** *karandai-y-aravam,* பெ.(n.) கரந்தைத் திணைத் துறை பதின்மூன்றனு ளொன்று; one of the 13 Karandai tuṟai.

*[கரந்தை + அரவம். அரவம் = ஆரவாரம், அது ஆநிரையைக் கைப்பற்றினமை கேட்டுச் செய்யாநின்ற காரியந்தவிரக் கடுகினராகித் திரளுங் கூறுபாட்டைச் சொல்லுவது (பு.வெ).]*

**கரந்தையார்** *karandaiyār,* பெ.(n.) பகைவர் கவர்ந்த நிரையை மீட்கும் மறவர்; warriors who rescue the cows that have been seized by the enemy. *"கரந்தையார் அலறும்படி கைக்கொண்ட இன நிரைகள்" (சிலப். 12, உரைப்பாட்டு.).*

*[கரந்தை + ஆர்.]*

**கரநொடி** *kara-nodi,* பெ.(n.) கை சொடுக்கிப் போடும் தாளம்; snapping the fingers (பதினோராந் திருமுறை. 34.82).

*[கரு → கரம் + நொடி.]*

**கரப்பறை** *karapparai,* பெ.(n.) ஒளிந்திருத்தற்குரிய அறை; room to hide one self in, retreat. *"கரப்பறை வீதியுங் கள்ளப் பூமியும்" (பெருங். உஞ்சைக். 33:17).*

*[கரப்பு + அறை. கரத்தல் = ஒளிந்திருத்தல். கரப்பு = ஒளிவு, மறைவு.]*

**கரப்பன்**[1] *karappaṉ,* பெ.(n.) ***கரப்பான்*** (யாழ்ப்.) பார்க்க; see *karappāṉ.*

ம. கரப்பன்

*[கரப்பான் → கரப்பன்.]*

**கரப்பன்**[2] *karappaṉ,* பெ.(n.) ***கரகரப்பு*** பார்க்க; see *kara-karappu.*

*[கரகரப்பு → கரப்பு → கரப்பன்.]*

**கரப்பன்பண்டம்** *karappaṉ-paṇḍam,* பெ.(n.) கரப்பானையுண்டாக்கும் உணவுப்பொருள் (வின்.); eatables which promote eruptions.

*[கரப்பான் → கரப்பன் + பண்டம்.]*

**கரப்பன்பூடு** *karappaṉ-pūḍu,* பெ.(n.) ***கரப்பான்பூடு*** பார்க்க; see *karappāṉ-pūḍu.*

*[கரப்பன் + பூடு.]*

**கரப்பாக்கு** *karappākku,* பெ.(n.) ***கரப்பு*** பார்க்க; see *karappu. "கண்ணும் எழுதேம் கரப்பாக் கறிந்து" (குறள், 1127).*

*[கர + பாக்கு (தொ.பெ.ஈறு.) கரப்பு = மறைவு, ஒளிவு. கரப்பாக்கு = மறைத்தல். ஒ.நோ: "ஏதம்படு பாக்கு"]*

**கரப்பான்**[1] *karappāṉ,* பெ.(n.) குழந்தை சொறிபுண்வகை; eruption on children unaccompanied with fever, any contaminable disease, rash, eczema, erysipelas, etc.

**ம.** கரப்பன்

H. karpān

*[கரப்பு → கரப்பான். கரப்பு = சொறி, சுரசுரப்பு.]*

மூன்று அல்லது நான்கு திங்கள் முதல் மூன்றாண்டு வரை குழந்தைக்கு உண்டாகும் சொறி. கடுவான் கரப்பான், செங்கரப்பான், கொள்ளிக்கரப்பான், குட்டக்கரப்பான், மண்டைக் கரப்பான் என்பன கரப்பானின் வகைகளாகும். இதில் இருபத்தொன்பது வகைகளுண்டு என்பர்.

**கரப்பான்**[2] *karappāṉ,* பெ.(n.) பகலில் மறைந்து திரியும் பூச்சி; kind of insect, cockroach.

*[கரவு → கரப்பான் (வே.க.127).]*

உலகில் மிகப் பரவலாகக் காணப்படும் பூச்சியினங்களுள், கரப்பான் பூச்சியினமும் ஒன்றாகும். இறக்கைகளுடைய பூச்சியினங்களிடையே இது மிகத் தொன்மையானது.

**கரப்பான்கட்டு** *karappāṉ-kaṭṭu,* பெ.(n.) கரப்பான் நோய் வகை; cellulitis.

*[கரப்பான் + கட்டு.]*

**கரப்பான்கொல்லி** *karappāṉ-kolli,* பெ.(n.) கரப்பானைப் போக்கும் மருந்து (m.m.); antidote for eruptions, anti-scorbutic.

*[கரப்பான் + கொல்லி.]*

**கரப்பான்பித்தம்** *karappāṉ-pittam,* பெ.(n.) ஒருவகைப் பித்தநோய்; a kind of bile.

*[கரப்பான் + பித்தம்.]*

**கரப்பான்பூச்சி** *karappāṉ-pūcci,* பெ.(n.) ***கரப்பான்***[2] பார்க்க; see *karappāṉ*[2].

*[கரப்பு → கரப்பான் + பூச்சி.]*

**கரப்பான்பூடு** *karappāṉ-pūḍu,* பெ. (n.) ஒருவகை முட்செடி (வின்.); a lowly flowering thorny shrub.

*[கரப்பான் + பூடு.]*

**கரப்பான்றைலம்** *karappāṉ-ṟailam,* பெ.(n.) கருப்பூரம் கலந்த ஒரு தைலம்; an oil mixed with camphor. *"பூரந்துடி..... கரப்பானும் வாங்கு மன்றே"* (தைல. தைலவ. 49).

*[கரப்பான் + தைலம். த. நுல் (எள்) → தில் >* **Skt.** taila *> த. தைலம்.]*

**கரப்பிடும்பை** *karappiḍumbai,* பெ.(n.) உள்ளது கரத்தலாகிய நோய்; habit of concealing. *"கரப்பிடும்பை யில்லாரைக் காணின்..." (குறள், 1056).*

*[கரப்பு + இடும்பை. கர → கரப்பு = ஒளித்துவைத்தல். இடும்பை = நோய். ஈயாமல் மறைத்து வைத்தல் ஒரு நோயாகக் கூறப்பட்டுள்ளது.]*

**கரப்பு**[1] *karappu,* பெ.(n.) 1. மறைக்கை; concealing, screening, hiding, as one's thoughts. *"கரப்பிலா நெஞ்சிற் கடனறிவார்" (குறள், 1053).* 2. களவு (திவா.); theft. 3. வஞ்சகம்; fraud, deceit. *"கரப்புறு சிந்தையர் காண்டற் கரியவன்" (தேவா. 524:3).* 4. மீன் பிடிக்குங் கூடை, பஞ்சரம் முதலியன (யாழ்ப்.); conical basket for catching fish, weel, hen-coop. 5. மத்து (யாழ்.அக.); churn. 6. ***கரப்பான் பூச்சி*** பார்க்க; see *karappāṉ-pūcci. "பூழை கரப்பருந்த நாடுங்கடன்" (அருட்பா.).*

**ம.** கரப்பு

*[கள் → கள → கர → கரப்பு.]*

**கரப்பு**[2] *karappu,* பெ.(n.) மூங்கில், மரம், துணி போன்றவற்றால் செய்த தடுப்பு (pond.); screen.

மறுவ. தட்டி

*[கர → கரப்பு (மறைப்பு)]*

**கரப்புக்குடில்** *karappu-k-kuḍil,* பெ.(n.) சிறுகுடில் (யாழ்ப்.); small hut.

*[கரப்பு + குடில் – கரப்புக்குடில் = ஓராள் ஒளிந்துகொள்ளும் அளவிலான சிறுகுடில்.]*

**கரப்புக்குத்து-தல்** *karappu-k-kuttu-,* 10 செ.கு.வி. (v.i.) மறைவாகக் கூடுவைத்து ஒளிபாய்ச்சி மீன் பிடித்தல் (யாழ்ப்.); to catch fish with a basket, dazzling them by a strong light and thrusting the weel upon them.

*[கரப்பு + குத்து.]*

**கரப்புடுப்பு** *karappuḍuppu,* பெ.(n.) நாடக வுடுப்பு ; dramatic dress.

*[கரப்பு + உடுப்பு.]*

**கரப்புடையான்பட்டி** *karappuḍaiyāṉpaṭṭi,* பெ.(n.) கரூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Karur dt.

*[கருப்பு+ உடையான்+பட்டி– கருப்புடையான்பட்டி → கரப்புடையான்பட்டி.]*

**கரப்புநீர்க்கேணி** *karappu-nīr-k-kēṇi,* பெ.(n.) மறைகிணறு; well containing water that is hidden from view, covered wells. *"பரப்புநீர்ப் பொய்கையுங் கரப்புநீர்க் கேணியும்" (மணிமே. 19 : 104).*

*[கரப்பு + நீர் + கேணி.]*

**கரப்பூண்டி** *karappūṇḍi,* பெ.(n.) திருவண்ணா மலைமாவட்டத்துச் சிற்றூர்; a village in Thiruvanna malai dt.

*[கரை + பூண்டி – கரைப்பூண்டி →கரப்பூண்டி. பூண்டி = ஏரி.]*

**கரப்பொறி** *kara-p-poṟi,* பெ.(n.) 1. குரங்கு பிடிக்கும் ஒருவகைப் பொறி (வின்.); a kind of trap for catching monkeys.

*[கரப்பு + பொறி – கரப்புப்பொறி → கரப்பொறி (மரூஉ).]*

**கரம்**[1] *karam,* பெ.(n.) இடை (part.). ஓர் எழுத்துச் சாரியை; expletive used in designating the short vocalic letters of the Tamil alphabet. *"இருமைக் குறிலிவ் விரண்டொடு கரமுமாஞ் சாரியை பெறும்" (நன்.1126.).*

*[கரு → கரம்–செய்தற்குறிப்புடைய சொல் சாரியை யாயிற்று.]*

"காரமும் கரமும் கானொடு சிவணி நேரத் தோன்றும் எழுத்தின் சாரியை" என்பது தொல் காப்பியம் [134].

உயிரெழுத்தின் உதவியின்றித் தாமாக வொலிக்காத மெய்யெழுத்துகளை ஒலிப்பித்தற் பொருட்டும், தாமாக வொலிக்கும் உயிரெழுத்து களையும் எளிதாக ஒலிப்பித்தற் பொருட்டும், சில துணை யொலிகளைப் பண்டைத் தமிழிலக்கண நூலார் அமைத்துள்ளனர். அவை எழுத்துச் சாரியை எனப்படும்.

உயிரெழுத்துகளுள் குறிற்குக் கரமும், நெடிற்குக் காரமும் சாரியையாம் .

வடமொழியார் கரம், காரம் என்னும் இரண்டையே தமிழினின்று கொண்டுள்ளனர். அதோடு குறிற்கு இரண்டையும் வேறுபாடின்றி ஆள்வர். இதனாற் சாரியை யமைப்பின் தமிழ் மூலம், தெளிவாகத் தெரிகின்றது. கரம், காரம் என்பன வடமொழியில் கர, கார என்று ஈறுகெட்டு நிற்கும். சாரியை என்னுங் குறியீடும் வடமொழியிலில்லை [வ.மொ.வ.299].

**கரம்**[2] *karam,* பெ.(n.) கை; hand. *"கரமலர் மொட்டித்து" (திருவாச.4.84).* 2. முழம்; cubit. *"அங்குல மறுநான் கெய்தி னதுகரம்" (கந்தபு. அண்டகோ.6).* 3. துதிக்கை; elephant's trunk. 4.ஓலைக்கொத்தின் திரள் (யாழ்ப்.); heap of palm leaves. 5. ஒளிக்கற்றை; ray of light. *"ஆயிரந் தழற் கரத்து" (கல்லா.13.).* 6. ஒளி; light. *"அக்கரக் கணக்கர்" (தனிப்பா.ii,30,70).* 7. குடியிறை (திவா.); tax, duty.

த. கரு > Skt. kri.

கரு = செய். [ஒநோ: கருவாளி = உழைப்பாளி]. இச்சொல் உலகமொழிகளில் ஊடாடியுள்ளது. கருத்தல் = செய்தல். கரு → கரம். கரம் = செய்தற்குரியது, செய்தற்கு உதவியாக இருக்கும் கை. ஒளிக்கற்றை கதிரவனின் கையாகக் கருதப்பட்டமை நோக்கி 'கரம்' எனப்பட்டது.

**கரம்**[3] *karam,* பெ.(n.) 1. செய்வது; that which causes, used only as the second member of some compound nouns, as பயங்கரம். 2. வரிவகை; a tax.

*[கரு → கரம்]*

**கரம்**[4] *karam,* பெ.(n.) 1. வெப்பம் (வின்.); heat. 2. இடுமருந்து (சீவரட். 325); medicine for winning over a person, love philtre administered to a person without his knowledge or consent. 3. விலையேற்றம்; high price. விலை கரமா யிருக்கிறது (இ.வ.).

*[குரு = ஒளி, வெப்பம். குரு → கரு → கரம், வெப்பத்தைக் குறித்த சொல் சூடேற்றப் பொருளில் மிகுந்த விலையேற்றத்தைக் குறித்தது.]*

**கரம்**[5] *karam,* பெ.(n.) நஞ்சு; poison. *"கரம்போலக் கள்ளநோய் காணுமயல்" (சிறுபஞ். 62).*

**Skt.** gara

*[கரு → கரம் = நஞ்சு. கருத்திருப்பது நோக்கிக் கரம் எனப்பட்டது. களம் → கரம் (வே.க.126).]*

**கரம்**[6] *karam,* பெ.(n.) அழிவு; destruction, destructibility. 2.சிறுமை; insignificance, smallness.

*[குரு → கரு → கரம்.]*

**கரம்பக்காடு** *karamba-k-kāḍu,* பெ.(n.) தஞ்சை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Thanjavur dt.

*[கரம்பு + காடு – கரம்புக்காடு → கரம்பக்காடு.]*

**கரம்பக்குடி**[1] *karamba-k-kuḍi,* பெ.(n.) திருவாரூர், புதுக்கோட்டை மாவட்டங்களில் உள்ள சிற்றூர்ப் பெயர்; a village name in Tiruvārur and Pudukkottai district.

*[கரம்பு + குடி = கரம்புக்குடி → கரம்பக்குடி.]*

**கரம்பக்குடி**[2] *karamba-k-kuḍi,* பெ.(n.) ***கரம்பைக் குடி*** பார்க்க; see *karambai-k-kuḍi.*

*[கரம்பு → கரம்பை + குடி – கரம்பைக்குடி → கரம்பக்குடி (கொ.வ).]*

**கரம்பதிவுக்கணக்கு** *karam-padivu-k-kaṇakku,* பெ.(n.) வரிப்பதிவுப் புத்தகம்; register of assessment.

*[கரம் + பதிவு + கணக்கு.]*

கையால் குறித்து வைக்கும் கணக்கு, வரிக்கணக்கைக் கொண்ட பொத்தகத்திற்கும் ஆகிவந்துள்ளமை காண்க.

**கரம்பம்** *karampam,* பெ.(n.) 1. பொடிமா; nice-flour. 2. அரிசிமா; rice-flour.

*[கரம்பு → கரம்பம்.]*

**கரம்பல்** *karambal,* பெ.(n.) தூசு (ம.அக.); dust.

*[கரம்பு → கரம்பல்.]*

**கரம்பவிடுதி** *karambaviḍudi,* பெ.(n.) புதுக் கோட்டை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Pudukkottai dt.

*[கரம்பு + விடுதி – கரம்புவிடுதி → கரம்பவிடுதி.]*

**கரம்பவிளைச்சேரி** *karambaviḷai-c-cēri,* பெ.(n.) குமரி மாவட்டத்து அகத்தீசுவரம் வட்டத்துச் சிற்றூர்; a village in Agathīswaram taluk in Kanyakumari dt.

*[கரம்பு + விளை + சேரி – கரம்புவிளைச்சேரி → கரம்பவிளைச்சேரி. விளை = களவற்காடு, பனங்காடு.]*

**கரம்பற்று-தல்** *karam-paṟṟu-,* 5 செ.கு.வி.(v.i.) திருமணம் செய்தல்; to marry.

*[கரம் + பற்று. கரம் = கை. பற்று = பிடி.]*

கரம் பிடித்தலாவது, இருபாலருக்கும் பொதுவாயினும் பெரும்பான்மை நாணம் முதலிய குணங்களால், பெண் ஆடவனைத் தீண்டத் தயங்கும் தன்மை நோக்கி ஆடவருக்கே உரியதாய் அமையுமென்க. பெண்பால் கரம் பிடித்தலாவது கொழுகொம்பைப் பற்றும் கொடிபோலன்றி மனத்தளவில் பற்றி நிற்கும் தன்மை எனக் கொள்ளலே பொருந்தும். பெண்ணைக் கொடியென உவமையாகு பெயராற் குறிப்பது அவளது மென்மைத் தன்மையை நோக்கியே யாகும்.

"புல், பூண்டு, செடி, கொடி, மரம் என்னும் ஐவகை நிலத்திணை (தாவர) உயிர்களுள்

பெரும்பாலும் மெல்லியதும் விரைந்து வளர்வதும், கொம்பைப் பற்றிப் படர்வதும் கொடியே. பெண்ணைக் கொடியென்று சொன்னவளவிலேயே அவள் ஆடவனிலும் மெல்லியள் என்றும், அவனிலும் விரைந்து வளர்பவளென்றும், ஒரு கொழுநனைத் துணைக்கொண்டே வாழ்பவளென்றும் மூன்று பெண்பாற் குணங்கள் குறிப்பறியக் கிடக்கின்றன" (சொ.ஆ.க.).

**கரம்பு**[1] *karambu,* பெ.(n.) 1. பயிர் செய்யாத நிலம் (கொ.வ.); waste land uncultivated though cultivable of two kinds,viz. Cey and kāṟ-karambu. இரண்டாண்டாகப் பயிர் செய்யாததால் நிலம் கரம்பாக கிடக்கிறது (உ.வ.).

மறுவ. கராய்

க.கரம்பு

*[கரு = கருக்கம்புல், அருகம்புல். கரு → கர → கரம்பு (வெறும் புல் மட்டும் படர்ந்த வறண்ட நிலம்).]*

**கரம்பு**[2] *karambu,* பெ.(n.) கரிசல் நிலம்; black soil.

*[கரு → கர → கரம்பு. கரு = கருமை; பு – சொ.ஆ. ஈறு.]*

**கரம்பை**[1] *karambai,* பெ.(n.) 1. வண்டல் பரந்த நிலம்; land with a surface layer of alluvium (R.F.). 2. வறண்ட களிமண்ணிலம்; hard, clayey soil. *"இருநிலக் கரம்பைப் படுநீறாடி" (பெரும்பாண்.93.).* 3. போடுநிலம், பொட்டல் நிலம்; waste land. *"விடுநிலக் கரம்பை விடரளை நிறைய" (பதிற்றுப். 28).* 4. கரிசல் மண் (முகவை.மீனவ.); black soil (வே.க.121).

*[கரு → கர → கரம்பு → கரம்பை.]*

**கரம்பை**[2] *karambai,* பெ.(n.) சிறுகளா (மலை.); a low spreading spiny, evergreen shrub.

*[கள் → கள → கர → கரம்பை.]*

**கரம்பைக்குடி** *karambai-k-kuḍi,* பெ.(n.) ஓர் ஊர்ப்பெயர்; a name of a village.

*[கரம்பை + குடி.]*

**கரம்பைமீன்** *karambai-mīṉ,* பெ.(n.) கருநிற மீன் வகையுளொன்று; a kind of black fish.

*[கரு → கரம்பு → கரம்பை + மீன்.]*

**கரமுகிழ்–த்தல்** *kara-mugiḻ-,* 4 செ.கு.வி.(v.i.) கைகூப்புதல்; to join the palms of the hands in worship. *"கரமுகிழ்ப்ப நின்னருளைக் கருத்தில் வைப்போம்" (தாயு. பொருள்வ.10.).*

*[கரம் + முகிழ்.]*

**கரமூக்கு** *kara-mūkku,* பெ.(n.) நீர்விழும் கெண்டியின் உறுப்பு; spout of a pitcher or kettle.

*[கரகம் + மூக்கு.]*

**கரமை** *karamai,* பெ.(n.) யானை(சங். அக.); elephant.

*[கரு → கரமை (கருமையானது). மை (ப.பெ.ஈறு.)]*

**கரமொழி** *karam-oḻi,* பெ.(n.) வரிநீக்கம் (நாஞ்.); freedom from taxation.

*[கரம் = குடியிறை. கரம் + ஒழிவு – கரமொழிவு → கரமொழி]*

**கரல்** *karal,* பெ.(n.) ஒருவகை மீன்; a kind of fish.

*[கரு → கரல்.]*



கரல் மீன்

**கரலப்பாக்கம்** *karalappākkam,* பெ.(n.) காஞ்சிபுரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kanchipuram dt.

*[கரளை+பாக்கம் – கரளைப்பாக்கம் → கரளப்பாக்கம் → கரலப்பாக்கம். கரளை = மண்வகை.]*

**கரவடநூல்** *kara-vaḍa-nūl,* பெ.(n.) களவைப்பற்றிக் கூறும் நூல் (சிலப். 16:180, அரும்.); a treatise on theft. ***களவடம்*** பார்க்க; see Kaḷavaḍam.

*[களவு → களவடம் → கரவடம் + நூல் = கரவடநூல்]*

களவடம் என்னும் பெயரிலிருந்த பண்டைத் தமிழ் நூலின் மொழிபெயர்ப்பாக வடமொழியில் இயற்றப்பட்டதே கரவடம். இது தமிழாக்கப்பட்டதாகச் செ.ப.அக. கூறுவது தவறு.

**கரவடம்**[1] *karavaḍam*, பெ.(n.) 1. களவு (திவா.); theft, stealing. 2.களவுபற்றிய பண்டைத் தமிழ்நூல்; an ancient Tamil treatise on stealing.

*[களவு + அடம் – களவடம் → கரவடம். 'அடம்' சொல்லாக்க ஈறு.]*

ஒ.நோ: **ஒத்தடம். களவடம்** பார்க்க; see kaḷavaḍam.

**கரவடம்**[2] *karavaḍam*, பெ.(n.) பொய், தவறு; falsehood. 2. ஏய்ப்பு; deceit, fraud. *"மார்பின் மீதிலே தாழ்வடங்கண் மனத்திலே கரவடமாம் வேடம்" (தண்டலைசத.29).*

ம. கரவடம்

*[கரவு → கரவடம். 'அடம்' சொல்லாக்க ஈறு (வே.க.129).]*

**கரவடம்**[3] *karavaḍam*, பெ.(n.) காக்கை; crow.

*[கரவு + அடம் – கரவடம். திருடித் தின்னும்பறவை, காக்கை.]*

**கரவடர்** *karavaḍar*, பெ.(n.) 1. திருடர் (திவா.); thieves. 2. ஏய்ப்போர்; deceivers, crafty persons.

தெ. கரடி; **து.** கரவடர் > **Skt.** kharpara.

*[கரவு → கரவடர் (வே.க.129).]*

**கரவடி** *karavaḍi*, பெ.(n.) 1. தங்கநகைக்கிடும் மெருகு வகை (நாஞ்.); rough polish for gold jewels. 2. நகைகளுக்கு மெருகூட்டப் பயன்படுத்தும் கருவி; a brush like instrument for polishing gold ornaments.

ம. கரவடி

*[குரு → குருவடி → கரவடி. குரு → கரு = ஒளி, ஒளிக்கதிர்.]*

**கரவதம்** *karavadam*, பெ.(n.) ***கரவடம்*** பார்க்க; see *karavaḍam*.

*[கரவடம் → கரவதம். கரவடம் = திருடித்தின்னும் பறவை, காக்கை.]*

**கரவம்** *karavam*, பெ.(n.) காட்டீந்து; wild date-palm.

*[கரு → கர → கரவு + அம்.]*

**கரவர்** *karavar*, பெ.(n.) கள்வர்(பிங்.); thieves.

*[கரவு + அர். கள் → கர → கரவு. 'அர்' ப.பா.ஈறு.]*

**கரவல்** *karaval*, பெ.(n.) யாருக்கும் தாராமல் ஒளித்து வைத்தல்; concealment of an article without giving to any one. *"கரவலருங் கற்பகமும்" (கம்பரா. சடாயுகாண்.21).*

*[கர → கரவு + அல். 'அல்' தொ.பெ.ஈறு.]*

**கரவா** *karavā*, பெ.(n.) கடல்மீன்வகை; a sea-fish of vermilion colour.

ம. கரவா

*[கரு → கரவா.]*

**கரவாதி** *karavādi*, பெ.(n.) சுரிகைக்கத்தி (சங்.அக.); poniard.

*[கரம் + வாள் – கரவாள் → கரவாளி → கரவாதி (கொ.வ.)]*

**கரவாரம்** *kara-vāram*, பெ.(n.) கையை எடுத்து வீசுகை; raising the arm, as while singing. *"பாடகர் வியந்து கரவாரங் கொண்டு" (திருவாத.பு.மந்திரி. 36).* 2. கைதட்டல்; claps (திருவாத. 4.43).

*[கரம் + ஆரம் – கரவாரம்.]*

**கரவாலம்** *kara-vālam*, பெ.(n.) நகம் (சங்.அக.); nail.

*[கர + வாலம். வாளம் → வாலம்.]*

**கரவாள்** *karavāḷ*, பெ.(n.) கைவாள்; dagger, poniard. *"கரவாள்கொடு.... ....தடிந்திட்டு" (பிரபுலிங்.துதி.8).*

ம. கரவாள்

*[கரம் + வாள் – கரவாள்.]*

**கரவாளம்** *karavāḷam*, பெ.(n.) ***கரவாள்*** பார்க்க; see *kara-vāḷ* *"கரவாளங் கைதுளங்க" (திருவாலவா.28, 34).*

ம.கரவாளம்; Pali. karaba.

*[கரம் + வாள் + அம் – கரவாளம். 'அம்' சொல்லீற்றுச் சாரியை.]*

**கரவிமானம்** *kara-vimāṉam*, பெ.(n.) பக்கச்சிறையமைப்புடைய கோயில் விமான வகை (ம.ப.மதம்); a kind of tower structure over temple entrance.

*[கரம் + விமானம் – கரவிமானம் = கோயில் முகட்டுக்கு இருபாலும் கைபோல் அமைந்த பக்கச்சிறகு.]*

**கரவீரம்**[1] *kara-viram,* பெ.(n.) அலரி; oleander. *"சரணெனக்கஞ்–சங்கரவீரமிட்டேத்து" [மருதூரந். 36].*

**ம.** கரவீரம்

*[கரவீரம் = கைவாள். வாள் வீரர் நடுகல்லுக்கு நீரொடு அலரிப்பூ தூவலின் இப் பெயர்பெற்றது.]*

**கரவீரம்**[2] *kara-viram,* பெ.(n.) வாள் (சங்.அக.); sword. 2. இடுகாடு; burial ground.

**ம.** கரவீரம்

*[கரம் + ஈரம். ஈர் → ஈரம் = ஈர்த்துவிடுவது, துண்டாக்குவது. கரவீரம் = கைவாள், வாள் வீரர் புதைக்கப்பட்ட இடுகாடு.]*

**கரவு**[1] *karavu,* பெ.(n.) 1. மறைவு; concealment. *"கரவி லுற்றவை" (அரிச்.பு.வேட்டஞ்.9).* 2. ஏய்ப்பு; deceit. *"களவறிந்தார் நெஞ்சிற் கரவு" (குறள், 288).* 3. களவு(திவா.); theft. *"அம்பொனின் கரவை யிரண்டாயிரம்" (சேதுபு. சேதுச்சரு.39).* 4. பொய்; falsehood. *"கரவெனு முன்றனூலில்" (திரு வாத.பு.புத்த.55).*

**Gk.** Cryptos

*[(கர்) → கர → கரவு (வே.க.121,127).]*

**கரவு**[2] *karavu,* பெ.(n.) முதலை; alligator. *"கரவார் தடம்" (திரு.திருவாய்.8,9,9).*

**மறுவ.** கராம், கரா.

*[கள் → கள → கர → கரவு.]*

**கரத்தல் = மறைதல். நீருள் மறைந்து வாழும் இயல்பு நோக்கி முதலைக்குக் கரவு, கரா, கராம் என்னும் பெயர்கள் வழங்கின.**

**கரவுடையான்** *karavudaiyāṉ,* பெ.(n.) அழுத்த மானவன்; hard-hearted man.

*[கரவு + உடையான்.]*

**கரவுளி** *karavuḷi,* பெ.(n.) கூர்மையான முகவமைப் புடைய கடல்மீன் (நெல்லை. மீனவ.); a kind of sea fish.

*[கரவு + உளி – கரவுளி.]*



கரவுளி மீன்

**கரவை**[1] *karavai,* பெ.(n.) கூத்து (அக.நி.); dance.

*[கள் → கள → கர → கரவை. கரவு = மறைவு, புனைவு, வடிவமாற்று. இங்கு வடிவமாற்றுப்பொருள் கொண்டது.]*

**கரவை**[2] *karavai,* பெ.(n.) கம்மாளர் கருவியுளொன்று (சங்.அக.); a. smith's instrument.

*[கரு → கர → கரவு → கரவை. கரு = திரண்டது, உருண்டையானது.]*

**கரவொலி** *kara-v-oli,* பெ.(n.) கைதட்டுவதால் உண்டாகும் ஒலி; applause.

*[கரம் + ஒலி.]*

**கரவோர்** *karavōr,* பெ.(n.) கரவர்; deceitful persons.

*[கரவு + அர் – கரவர் → கரவார் → கரவோர்.]*

**கரள்**[1] *karaḷ,* பெ.(n.) உருண்டை; roundness.

*[கரு → கருள் → கரள்.]*

**கரள்**[2] *karaḷ,* பெ.(n.) 1. நெஞ்சகம் (இதயம்); heart. 2. குடல்; intestine.

**மறுவ.** குண்டிக்காய், குண்டிகை, மாங்காய்.

**ம.** கரளு; **க.** கரளு, கர்ள்; **கோத.** கர்ல்; **குட.** கரி; **து.** கர்லு.

*[கரு → கருள் → கரள் (உருண்டை, திரட்சி) = திரண்ட வடிவுள்ளது.]*

L. kārd, cārdia; E. heart; Yid. harts; Gk. kardia., F. Coeur; Sp. corazon; It. cuore; G. harz; Du. hart; Swed; hjarta; Dan. hjerte; Norw. hijerte; Turk. kalf.

**கரள்**[3] *kara!,* பெ.(n.) முரட்டுக்கல்; rough stone.

Samo. gaoā

*[கரு → கர → கரள். கர = கரகரப்பு.]*

**கரளம்**[1] *karaļam,* பெ.(n.) 1. நஞ்சு (திவா.); poison, venom. 2.எட்டி(மலை.). strychnine tree.

த. கரளம் > Skt. garaļa.

*[கரு → கர → கரளம். நஞ்சின் கரிய தன்மையும், கைப்பும் உட்பொருளாயின.]*

**கரளம்**[2] *karaļam,* பெ.(n.) உலர்ந்த பழம்; dried fruit.

ம. கரள; க. கரட, கரடு, கடட் (உலர்ந்த வைக்கோல்போர்)

*[கரு → கர → கரளம்.]*

**கரளவாடி** *karalavādi,* பெ.(n.) ஈரோடு மாவட்டம் கோபிசெட்டிபாளையம் வட்டத்துச் சிற்றூர்; a village in Kobichettipālaiyam taluk in Erode dt.

*[கறளை + பாடி – கரளைப்பாடி → கரளப்பாடி → கரளவாடி.]*

**கரளாக்கட்டை** *karaļā-k-kaţţai,* பெ.(n.) சுரைக்காய் வடிவில் கைப்பிடிப்பக்கம் சிறுத்தும் மறுபக்கம் தடித்தும் உருண்டையாக அமைந்த உடற்பயிற்சிக் கருவி; heavy wooden club.

*[கரு → கருள்(பருமை) + கட்டை → கருளக்கட்டை → கரளாக்கட்டை.]*



கரளாக்கட்டை

**கரளிமாதப்பூர்** *karavaļimāda-p-pūr,* பெ.(n.) கோவை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Coimbatore dt.

*[கரை+வழி+மா+தோப்பூர்–கரைவழி மாத்தோப்பூர் → கரவளிமாதப்பூர் → கரளி மாதப்பூர் (கொ.வ.).]*

**கரளை**[1] *karaļai,* பெ.(n.) ***கறளை*** பார்க்க (இ.வ.); see *karaļai.*

ம. கரள

*[குறள் → குறளை → கரளை.]*

**கரளை**[2] *karaļai,* பெ.(n.) கரிசல் மண் வகை; clayay soil.

*[கரு → கரளை.]*

**கரளையாளமரம்** *karaļaiyāļa-maram,* பெ.(n.) அழுத்தமான வலிமையுள்ள மரம்; hardwood.

*[கரளை + ஆள் + மரம்.]*

**கரளை வித்தை** *karaļai-vittai,* பெ.(n.) சிலம் பவித்தை; art of fencing.

*[கரளை + வித்தை.]*

**கரன்** *karan,* பெ.(n.) 1. நிலையுள்ளவன்; firm, steady person. *"கரந்தெங்கும் பரந்துளன் இவையுண்ட கரனே"* (*திவ்.திருவாய்.* 1,1,10). 2. இராமனால் காட்டிற் கொல்லப்பட்ட ஓர் இயக்கன் (கம்பரா. கரன்வதைப்.); a cousin of Rāvaņā, a powerful Iyakkan slain by Rāmā during his stay in the Dhandag āranyam.

த. கரன் > Skt. khara.

*[கரு → கரன். கரு = பெருமை, வலிமை.]*

கரன் என்பவன் தண்டக ஆரணியத்தின் காவல்பூண்ட இயக்கர் குடிப் பெருமகன். காட்டைக் கொளுத்தி வேள்விக்காகக் கால்நடைகளைக் கவரும் ஆரியப் பகைவரை எதிர்த்துப் போரிட்டவன்.

**கரனீவாடு** *karanivādu,* பெ.(n.) கரையில் ஏற்படும் நீரோட்டம் (நெல்லை. மீனவ.); stream of water in sea occuring near shore.

*[கரை + நீர் + வாடு = கரைநீர்வாடு → கரனீவாடு. வாடு = வட்டம், ஓட்டம்.]*

**கரா** *karā,* பெ.(n.) 1.முதலை; a species of alligator. *"கராவதன் காலினைக் கதுவ"* (*திவ்.பெரியதி. 2,3,9).* 2. ஆண் முதலை (பிங்.); male alligator.

*[கரவு[2] → கரா. கராம் பார்க்க]*

த. கரா > Skt. grāha

**கராகரி** *karākari,* பெ .(n.) தேவதாரு (சங்.அக.); deodar, cedar.

*[கரு = பெரிய, உயர்ந்த. கரு → கர.]*

**கராசலம்** *karāšalam*, பெ.(n.) யானை; elephant lit., mountain with a trunk (யாழ் அக.). *"கராசலத்தின் வன்றோல் வியன்புயம் போர்த்தாய்" (கந்தபு. கந்தவி.63).*

*[கரம் + அசலம் – கராசலம். கரம் = கை. அசலம் = மலை.* **Skt.** acala > **த.** *அசலம். கையுடைய மலை என யானை உருவகமாகியது. கைம்மலை எனின் முற்றுந்தமிழாம்.]*

**கராடம்** *karādam*, பெ.(n.) தாமரைக் கிழங்கு (நாநார்த்த.); tuber of the lotus plant.

*[கரு → கரா + அடம். கரு = பருமை, உருண்டை.]*

**கராம்** *karām*, பெ.(n.) 1. முதலை வகை; a species of alligator, gavial: *"முதலையு மிடங்கருங் கராமும்" (குறிஞ்சிப். 257).* 2. ஆண் முதலை (திவா.); male alligator.

**Skt.** grāha

*[கரவு[2] → கரா → கராம் = நீருள் கரந்து (மறைந்து) இரை கொள்வது. கரவு → கராம்* **ஒ.நோ.** *புலவு + பாசறை - புலாம் பாசறை (பதிற்று.7).]*

**கராமம்** *karāmam*, பெ.(n.) வெண்கடம்பு (மலை.); seaside Indian oak.

*[கடம்பு → கடம்பம் → கரம்பம் → கராமம் (கொ.வ.).]*

**கராமுத்து** *karā-muttu*, பெ.(n.) முதலையிற் பிறந்த வெண்ணிற முத்து (இ.நூ.த.பெ.அக.); a pearl like substance from crocodile.

*[கராம் + முத்து – கராமுத்து.]*

**கராய்** *karāy*, பெ.(n.) புற்கரடு(இ.வ.); turf.

**மறுவ.** கரம்பு

*[கரு → கராஇ → கராய் = புல்படர்ந்த நிலம். கரு = கருக்கம்புல், அறுகம்புல். நீர்வளமில்லாததால் வெறும் புல் மட்டும் படர்ந்த தன்மை நோக்கிக் கரம்புநிலம் கராய் எனப்பட்டது.]*

**கராலகம்** *karālagam*, பெ.(n.) ***கராலம்*** பார்க்க; see *karālam.*

*[கராலம் → கராலகம்.]*

**கராலம்** *karālam*, பெ.(n.) கருந்துளசி (செல்வி. சிலம்பு 65. ப. 85.); purple stalked basil.

*[கரு → கரால் → கராலகம்.]*

**கராளம்[1]** *karāḷam*, பெ. (n.) 1. தீக்குணம் (சீவரட்.281); wickedness, vice. 2. கொடுமை; frightfulness, terribleness, fierceness. *"கராளமுகமும் முக்கரமுமுடைய கூஷ்மாண்டர்" (கி.போ.பா.).*

*[கரு → கரா → கராளம்.]*

**கராளம்[2]** *karāḷam*, பெ.(n.) மான்மணத்தி (கத்தூரி யுடைய மான்); musk, musk deer, (செல்வி, சிலம்பு.65.ப.85).

*கரு = பெருமை, உயர்வு.*

*[கரு → கராளம். மான்மணத்தியின் பெருமை குறித்த பெயராகலாம்.]*

**கராளன்** *karāḷaṉ*, பெ.(n.) சிவகணத் தலைவருள் ஒருவன்; name of a chief of Šiva's host. *"பதுமனே கராளன் றண்டன்" (கந்தபு.ஏமகூட.13).*

*[கரு + ஆள் + அன் – கராளன். கரு = பெருமை, தலைமை]*

**கராளி** *karāḷi*, பெ.(n.) 1. தீக்குணம் (வின்.); wickedness. 2. தீக்கடவுளின் ஏழு நாக்குகளில் ஒன்று; one of the seven tongues of God Agni.

*[கராளம் → கராளி.]*

**கராளை** *karāḷai*, பெ.(n.) குள்ளன், வளராதவன்; a short person.

*[கறளை → கரளை → கராளை.]*

**கரி[1]** *kari*, பெ.(n.) 1. அடுப்புக்கரி (தி.வா.); charcoal. கரி விற்ற பணம் கறுப்பாயிருக்குமா (பழ.). 2.கரிந்தது; charred wood, snuff of lamp. 3. நஞ்சு (மூ.அக.); poison. 4 கண்ணிடு மை; collyrium black for the eye. *"கரிபோக்கினாரே" (சீவக.626).* 5. மரவைரம் (வின்.); the hard part of timber.

**ம., க., தெ., து., குட., பட., உரா.** கரி; **கோத.** கர்; **துட.** கர்ய்; **பர்.** கெர்; **கூ.** க்ருமு; **கட.** கரித்; **கொலா.** காரி; **பிரா.** கர்.

*[கள் (கர்) → கரி (வே.க.121).]*

**கரி[2]–தல்** *kari-*, 4 செ.கு.வி.(v.i) 1. கரியாதல்; to char, to become charcoal. *"கரிகுதிர் மரத்த கான வாழ்க்கை" (அகநா.75).* 2. கருமையாதல்; to become black. *"கரிந்த நீள்கயல்" (திருவிளை. விருத்தகு. 20).* 3. தீய்தல்; to be scorched, burnt. *"தளிர்.... காயெரிக் கரியக் கரிய" (கம்பரா.மிதிலை. 81).*

ம. கரிக்க

**Akkadian**. jara-na; **Brahu**. khar; **Fin.** hili; **Basq.** gari **yiddl.** keulen; **Arabic**. kari; **Dut**. steen-kool; **Swed**. kol; **Dan.** kul; **Nor.** kull; **Gr.** kar-vouno; **Russ**. gor.

*[கள் → கரு → கரி.]*

**கரி[3]–த்தல்** *kari-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. எரித்துக் கரியாக்குதல்; to become charred. *"கரித்த மூன்றெயில்" (கம்பரா. ஊர்தேடு.44).* 2. தாளித்தல் (வின்.); to season, as curries, with ghee or oil and spices.

ம. கரிக்குக; **கோண்** (அடிலா) கரூ.

*[கள் → கரு → கரி.]*

**கரி[4]–த்தல்** *kari-,* 4 செ.கு.வி.(v.i.) 1. உப்புச்சுவை மிகுதல்; to be saltish to the taste. இந்தக் குழம்பு உப்புக்கரிக்கிறது (உ.வ.). 2. உறுத்துதல்; to smart, as the eyes from oil or soap or chilly. கண்ணில் பட்டால் கரிக்குமா புருவத்தில் பட்டால் கரிக்குமா (பழ.). 3. உண்ட உணவு செரியாமையினால் நெஞ்சில் உறுத்துதல்; to feel an irritating sensation in the chest due to acidity of the stomach. உண்ட சோறு நெஞ்சிற் கரிக்கிறது (உ.வ.).

*[கடு → கடி → கரி → கரித்தல் (வே.க.88.).]*

**கரி[5]–த்தல்** *kari-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. குற்றங்கண்டு குறைகூறுதல்; to nag, worry; to blacken. என் பெண்ணைக் கரிக்கிறான் (உ.வ.). 2. வெறுத்தல்; to shun, despise. *"கரித்து நின்றான் கருதாதவர் சிந்தை" (திருமந். 2431).*

*[கரி[4] → கரி[5].]*

**கரி[6]** *kari,* பெ.(n.) யானை; elephant. *"கொடுங்கரிக் குன்றுரித்து" (திருவாச.6,19).*

**மறுவ.** தும்பி. கடிவை, புகர்முகம், தோல், உம்பல், வயமா, நால்வாய், கரிணி, கயம், மருண்மா, ஒருத்தல், களிறு, சிந்துரம், கறையடி, எறும்பி, வழுவை, வாரணம், வேழம், வல்விலங்கு, நாகம், மதகயம், அத்திரி, உவா, தூங்கல், மறமலிகைம்மா, ஆம்பல், கோட்டுமா, மொய், பொங்கடி, கைம்மா, ஒங்கல், கைம்மலை, தும்பி, புழைக்கை, பூட்கை, பெருமா, மதமா, மறமலி, மாதிரம்.

ம. கரி; **தெ.** கரி.

**Skt.** karin (having a trunk, an elephant) **L.** corri; **Mar.** khari.

*[கல் = கருத்தல், பெருகுதல், உயர்தல், மேடாதல். கல் → கரு = உயர்வு; கரு → கரி = உயரமான ஆண் யானை.]*

**கரி[7]** *kari,* பெ.(n.) 1. பயிர்கள் தீய்கை; failure of crops. கரியுள்ள காலத்து (T.A.S.iii,62). 2. வற்கடம்; famine. வறுமை மிகுந்த காலம் (பஞ்சம்).

*[கரு → கரி = மழையற்ற, வெப்பமிகுதியால் பயிர்பச்சைகள் கரிந்து வறுமை நீடிய நிலைமை. இதனைக் கறுவுக்காலம், கறுப்புக்காலம் என்றும் கூறுவதுண்டு.]*

**கரி[8]** *kari,* பெ(n.) 1. சான்றுரைப்போன்; witness. *"இந்திரனே சாலுங் கரி" (குறள்,25).* 2. சான்று; proof, evidence, testimony, *"கரி போக்கினா ராதலானும்" (தொல்.பொருள்.649, உரை).*

**தெ.** கரி

*[கள் → கரு → கரி – (மு.தா.200.) கரு = பெருமை, வலிமை. கரி = வலிமை அல்லது சார்பாகும் துணைப்பொருளில் முறைமன்றங்களில் சான்றாளியைக் (சாட்சி) குறித்தது.]*

**கரி[9]** *kari,* பெ.(n.) விருந்தினன்–ள்; guest. *"கரியுட னுண்ணார்" (கல்லா.92.8).*

*[கரு = பெருமை, மேன்மை, புதுமை. கரு → கரி = புதிதாக வந்தவர்; விருந்தினர்.]*

**கரி[10]** *kari,* பெ.(n.) வயிரக்குற்றங்களுள் ஒன்று (சிலப். 14:180, உரை); a flaw in diamonds.

*[கள் → கரு → கரி = குறைபாடு.]*

**கரிக்கட்டை** *kari-k-kaṭṭai,* பெ.(n.) 1. எரிந்த கட்டை; burnt, charred wood. *தேய்ப்புப் பெட்டியில் கரிக்கட்டைகளைப் பொறுக்கிப் போடு.* 2. மரவகை (L.); red ebony of South India. கரி சுட ஒரு வண்டி கரிக்கட்டை வாங்கிவா (உ.வ.).

ம. கரிக்கட்ட

*[கரி + கட்டை – கரிக்கட்டை = எரிந்து கரியாக நிற்கும் கட்டை, கரியாக்குவதற்குப் பயன்படும் துண்டு மரம்.]*

**கரிக்கண்டு** *kari-k-kaṇḍu,* பெ.(n.) ***கரிசலாங் கண்ணி (மலை.)*** பார்க்க; see *karisalāṅ-kaṇṇi.*

*[கரி + கண்டு. கள் → கரு → கரி = கருமை, கருநீலம். கண்டு = துண்டு, பருமனான, தடித்த.]*

**கரிக்கணை** *kari-k-kaṇai,* பெ.(n.) யானைத்திப்பிலி; monkey creeper. *"முட்டிவித்தோம மிரு நிசிகரிக்கணை வேணி" (தைல.தைலவ.74).*

**த.** கரிக்கணை > **Skt.** kari-kaṇa.

*[கரி = யானை. கரி + கணை.]*

**கரிக்கல்** *kari-k-kal,* பெ.(n.) கரிசல் மண்; black soil.

*[கரி→ கரிக்கல்.]*

**கரிக்கல்பாறை** *kari-k-kal-pārai,* பெ.(n.) கடலடிப் பாறையுள் ஒன்று (நெல்லை. மீனவ.); a kind of rock found under sea.

*[கருங்கல் → கரிக்கல் + பாறை.]*

**கரிக்களி** *kari-k-kaḷi,* பெ.(n.) புண்ணுக்குக் கட்டுங் கரிப்பசை; charcoal poultice.

*[கரி + களி.]*

**கரிக்காடி** *kari-k-kāḍi,* பெ.(n.) கஞ்சி; சோறு; gruel, boiled rice.

ம. கரிக்காடி

*[கரு → கரி (பெரிய, மூத்த) பழைய. கரி + காடி.]*

**கரிக்காந்தல்** *kari-k-kāndal,* பெ.(n.) 1. கருகிக் காந்தினது (யாழ்.அக.); anything charred or burnt. 2. கலத்தில் அடிப்பற்றின உணவு; cooked food charred and sticking to the pot.

*[கரி + காந்தல். காந்தல் = வேதல். கரிக்காந்தல் = கரிந்த நிறம் ஏற்படும் அளவுக்கு மிகுதியாக எரிந்தது அல்லது வெந்தது.]*

**கரிக்காப்பு** *kari-k-kāppu,* பெ. (n.) 1. ஓலையெழுத்து விளங்கக் கரிபூசுகை (உ.வ.); smearing charcoal. 2. திருமேனியைத் துப்புரவு செய்யும் புற்கரி; charred grass used for cleaning an idol.

*[கரி + காப்பு]*

தெளிவாகத் தெரியும் பொருட்டும் எழுத்துகள் அழியாமல் நீண்டநாள் இருக்கும் பொருட்டும், ஓலைகளுக்குக் கரிக்காப்பு செய்யப்படும். அழுக்கை அகற்றுவதே பொருளுக்குப் பாதுகாப்பாக அமைதல் பற்றி, விளக்குதலுக்குக் கரிக்காப்பு ஏற்புடைத் தாயிற்று.

**கரிக்காய்ப்பட்டி** *karikkāy-p-paṭṭi,* பெ.(n.) சேலம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Salem dt.

*[கக்கரிக்காய்+பட்டி→கக்கரிக்காய்ப்பட்டி → கரிக்காய்ப்பட்டி.]*

**கரிக்காரன்** *kari-k-kāraṉ,* பெ.(n.) கரிவிற்பவன் (வின்.); charcoal-dealer.

*[கரி + காரன்.]*

**கரிக்கால்**[1] *kari-k-kāl,* பெ.(n.) அழிவுவேலை செய்பவன்-ள்; one whose advent brings calamity in its train, lit. one having an evil foot.

க. கரிகாலு

*[கரி = தீமை, அழிவு. கரி + கால் – கரிக்கால் (கால் வைத்த (சென்ற) இடமெல்லாம் அழிவு செய்பவன்.]*

**கரிக்கால்**[2] *kari-k-kāl,* பெ.(n.) செக்கின் கணை; the roller of an oil-press.

ம. கரிக்கால்

*[கரு = பெரிய, திரண்ட. கரு → கரி + கால்.]*

**கரிக்காலன்** *kari-k-kālaṉ,* பெ.(n.) அழிவு வேலைக் காரன், வேலைக்காரி; man, woman whose advent brings calamity.

க. கரிகால

*[கரி + கால் + அன் – கரிக்காலன். கரி = அழிவு, தீமை.]*

**கரிக்காலி** *karikkāli,* பெ.(n.) திண்டுக்கல் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Dindigul dt.

*[கரிக்கல்→கரிக்கலி→கரிக்காலி.கரிக்கல் = கரிசல் மண்.]*

**கரிக்காளவாய்** *kari-k-kāḷavāy,* பெ.(n.) 1.சுண்ணாம்புக்காளவாய் வகை; a kind of lime-kiln (இ.வ.). 2. கரிசுடும் காளவாய்; a kiln for charcoal.

*[கரி = கரிந்தது. கரி + காளம் + வாய்.]*

**கரிக்கிடங்கு** *kari-k-kiḍaṅgu,* பெ.(n.) 1.அடுப்புக்கரி உண்டாக்குமிடம் (வின்.); pit or hole for burning wood for the production of charcoal. 2. கரிக்கடை; charcoal bazaar.

*[கரி = கரிந்தது, கரி + கிடங்கு = கரிக்கிடங்கு.]*

**கரிக்கிலி** *karikkili,* பெ.(n.) காஞ்சிபுரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kanchipuram dt.

*[கரிக்கல்+கரிக்கில்–கரிக்காலி.கரிக்கல் = கரிசல் மண்.]*

**கரிக்கீற்றிடு–தல்** *kari-k-kīṟṟiḍu-,* 20 செ.கு.வி.(v.i.) ***கரிக்கோடிடு–தல்*** பார்க்க; see *karikkōḍiḍu-.*

*[கரி + கீற்று + இடு.]*

**கரிக்கீற்று** *karikkīṟṟu-,* பெ.(n.) 1. ***கரிக்குச்சு*** பார்க்க; see *kari-k-kuccu.* 2. கரிக்கோடு; black mark line.

*[கரி + கீற்று. கீறு → கீற்று.]*

**கரிக்குச்சு** *karikkuccu,* பெ.(n.) புகைக் கரியால் ஏற்படும் கறை; smut.

*[கரி + குச்சு.]*

**கரிக்குடல்** *kari-k-kuḍal,* பெ.(n.) 1. மலக்குடல் (யாழ்ப்.); the large intestine, rectum. 2. கற்குடல் (இ.வ.); sluggish intestine causing constipation.

*[கரு = வலிய. கரு → கரி + குடல்.]*

**கரிக்குருந்தக்கல்** *kari-k-kurundakkal,* பெ.(n.) கட்டட வேலைகளில் பயன்படுத்தப்படும் கற்களுள் ஒருவகை; a kind of stone used in construction work.

*[கரு = சிறந்த. குருந்தம் = குருவிந்தம். கரு → கரி + குருந்தம் + கல் – கரிக்குருந்தக்கல்.]*

**கரிக்குருமான்** *kari-k-kurumāṉ,* பெ(n.) ***கரிக்குருவி*** பார்க்க; *see kari-k-kuruvi.*

**மறுவ.** கரிக்குருவி

*[கரி + குருமான். குறு → குரு → குருமன் → குருமான் (சிறிய பறவை) (செல்வி. சிலம்பு. 65. ப.135).]*

**கரிக்குருவி** *kari-k-kuruvi,* பெ.(n.) கறுப்பு நிறமும் பிளந்த வாலும் உள்ள குருவி; king-crow, glossy black bird with long forked tail. Turdus merula *"கரிக்குருவி குருமொழிகேட் டருளடைந்த கதை" (திருவிளை. கரிக்குருவி.).*

**மறுவ.** கரிச்சான், வலியன், வலியான், ஆனைச்சாத்தன், காரி பாரத்துவாசன், இரட்டைவாலன், கருவாட்டு வாலி.

**ம.** கரிங்குரிகில், கரிங்குருவி; **பட.** கரி அக்கிலு.

*[கரி + குருவி.]*



கரிக்குருவி

**கரிக்கை**[1] *kari-k-kai,* பெ.(n.) ***கரிசலாங்கண்ணி (மலை.)*** பார்க்க; see *kariśalāṅ-kaṇṇi.*

*[கரி → கரிக்கை.]*

**கரிக்கை**[2] *kari-k-kai,* பெ. (n.) கேடுவிளைக்குங் கை; hand the very touch of which is enough to cause loss or misfortune.

**க.** கரிகை

*[கரி = அழிவு, தீமை. கரி + கை = கரிக்கை.]*

**கரிக்கொட்டான்** *kari-k-koṭṭāṉ,* பெ.(n.) ***கருக்குவாய்ச்சி*** பார்க்க; see *karukku-vāycci.*

*[கரி + கொட்டான்.]*

**கரிக்கொடி** *kari-k-koḍi,* பெ.(n.) கருங்கொடிவேலி (சித்.அக.); a variety of Ceylon leadwort.

*[கரி + கொடி.]*

**கரிக்கொள்ளி** *kari-k-koḷḷi,* பெ.(n.) குறைகொள்ளி (வின்.); charred brand.

*[கரி + கொள்ளி.]*

**கரிக்கோடிடு–தல்** *kari-k-kōḍiḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. கருஞ்சாந்தால் நெற்றிக்குறியாகக் கோடு இடுதல்; to put a black mark line on the fore-head. 2. மோவாயில் மயிர் அரும்புதல் (வின்.); to appear, as soft hair, on the chin of a young man.

கரிக்கோடிடுதல், புள்ளிக்காரன், முகத்தில் கரியைப்பூசுதல் முதலிய வழக்குகள், ஊருக்கு மாறான குற்றவாளிகளை, ஊரார் செம்புள்ளி கரும்புள்ளி குத்தியும், முகத்தில் கரியைப் பூசியும், கரிக்கோடிட்டும், அவமானப்படுத்தியதை நினைவுறுத்தும் [சொல்.கட்.23.].

*[கரி + கோடு + இடு–.]*

**கரிக்கோடு** *kari-k-kōḍu,* பெ.(n.) 1.மாத்துவர் நெற்றியில் இடும் கருஞ்சாந்துக் கோடு; upright streak of black pigment worn on the forehead by Mādhva Brāhmins. 2. முகத்திற்றோன்றும் இளமயிர்; soft sprouting hair young beard or moustache.

*[கரி + கோடு]*

**கரிக்கோல்** *karikkōl,* பெ.(n.) கலப்பைத் தண்டு; the pole of shaft of a plough.

ம. கரிக்கோல்

*[கரு → கரி + கோல். கரு = பெரிய, அடிப்படையான.]*

**கரிக்கோலம்**[1] *kari-k-kōlam,* பெ.(n.) 1. கணவன் இறந்த பின் முதல் பத்து நாள் வரை, மனைவிக்குச் செய்யும் ஒப்பனைகள்; adorning a widow in weeds within 10 days of her husband's death, as the last adornment, she will ever receive. 2. கறுத்துத் தோன்றும் நிலை; unclean state, dirtiness. *"அழகு மேனி கரிக்கோல மானேன்" (தனிபா. ii., 238, 562).*

*[கரி = தீமை, அழிவு. கரி + கோலம்.]*

**கரிக்கோலம்**[2] *kari-k-kōlam,* பெ.(n.) அழிஞ்சில்; sage leaved alangium.

*[கரி = தீமை, அழிவு. கரி + கோலம்.]*

ஏறழிஞ்சில், இறங்கழிஞ்சல் என்னும் இருவகை அழிஞ்சில் மரவகைகளுள் இறங்கழிஞ்சில் தீவினைகளுக்குப் பயன்படும் என்னும் கருத்தில் இடப்பட்ட பெயராகலாம்.

**கரிகரம்** *kari-karam,* பெ.(n.) காதலின்ப விளையாட்டிலொன்று; a mode of sexual play. *"கரிகர மாதி யாய கனங்குழை மகளிர் வெஃக" (கந்தபு. இந்திரா.44).*

*[கரி + கரம் – கரிகரம். கரி = ஆண் யானை. கரிகரம் = யானையின் செய்கை, யானையின் புணர்ச்சிக்கோலம்.]*

**கரிகரலீலை** *kari-kara-līlai,* பெ.(n.) ***கரிகரம்*** பார்க்க; see *kari-karam.*

*[கரி + கரம் + லீலை. **Skt.** leela > **த.** லீலை.]*

**கரிகரவிளையாட்டு** *kari-kara-viḷaiyāṭṭu,* பெ.(n.) ***கரிகரம்*** பார்க்க; see *kari-karam.*

*[கரி + கரம் + விளையாட்டு.]*

**கரிகறு–த்தல்** *kari-kaṟu-,* 4 செ.கு.வி. (v.i.) மிகக் கறுத்தல் (வின்.); to grow very dark.

*[கரி + கறு.]*

கருத்தலும், கறுத்தலும் கருப்புநிறம் குறித்தனவாயினும், முன்னது தன்வினையும், பின்னது பிறவினையுமாம். ஓ.நோ.இருத்தல் → இறுத்தல். கரிகறுத்தல் = மிகக் கறுப்பாகக் கறுக்கச்செய்தல். கரிதல் = கருப்பாதல், கறுத்தல் = கறுப்பாக்குதல்.

**கரிகன் தாங்கல்** *karigantāṅgal,* பெ.(n.) வேலூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Vellur dt.

*[கருக்கன் + தாங்கல்–கருக்கன் தாங்கல் → கருக்கந் தாங்கல் → கரிக்கன்தாங்கல் → கரிகன் தாங்கல் (கொ.வ.).]*

**கரிகன்னி** *kari-kaṉṉi,* பெ.(n.) 1. காட்டுப்பூனை; wild cat. 2. வெருகங்கிழங்கு (மலை.); a tuberous-rooted herb.

*[கரி + கன்னம் → கன்னி.]*

கரிகன்னி கருநிறக் கன்னத்தையுடையதும், கடும்பார்வை யுடையதும், கண்டாரை வெருள வைப்பதுமாகிய வெருகு (பூனை). இதன் வண்ணம் குறித்தே கரிகன்னி என்னும் பெயர் வந்ததாம். (சிலம்பு. மத.ப.86).

**கரிகாடு** *kari-kāḍu,* பெ.(n.) 1. கரிந்த பாலைநிலம் (திவா.); burnt desert tract. 2. சுடுகாடு; burning-ground. *"கரிகாட் டெரியாடி" (தேவா. 102, 3).*

*[கரி + காடு]*

**கரிகாத்தாள்** *karikāttāḷ,* பெ.(n.) அங்காளம்மை; Aṅgāḷammai, a village Goddess.

ம. கரிங்காளி

*[கரி + காத்தாள் – கரியைக்காத்தாள் (இரண்டன் தொகை). கரி = வறுமை, வற்கடம் (பஞ்சம்). கரிகாத்தாள் என்னும் பெயர் கருக்காத்தம்மன் என்றும் வழங்கும். வற்கடம் நேராமல் காத்தல் என்பது வறுமை நேராமல் மழைபெய்யச் செய்பவள் எனப்பொருள் தரும். மழைத் தெய்வமாகிய மாரியம்மனைக் கரிகாத்தாள் என வழங்குவது மரபு.]*

**கரிகால்** *kari-kāl,* பெ.(n.) ***கரிகாலன்*** பார்க்க; see *kari-kālaṉ. "பெருவளக் கரிகால் முன்னிலைச் செல்லார்" (அகநா.125).*

*[கரி + கால் – கரிகால் = கரிகாற்சோழன். கரிகாலன் என்னும் இயற்பெயர் 'அன்' ஈறுகெட்டுக் கரிகால் என நின்றது. ஒ.நோ. வேந்தன் → வேந்து. ஆண்பாலீறு 'அன்' சேர்த்தும், சேர்க்காமலும் இயற்பெயர்களை வழங்குவது பண்டைத் தமிழ் மரபு.]*

**கரிகால்வளவன்** *kari-kāl-vaḷavaṉ,* பெ.(n.) கடைக்கழகக் காலத்தில் (கி.மு. 350 – கி.பி 175) வாழ்ந்த சோழ மன்னன்; Chōḷa king, Kari-kālaṉ. *"கண்ணார் கண்ணிக் கரிகால் வளவன்" (பொருந. 148).*

*[கரி + கால் + வளவன். கரிகால் = கரிகாலன். வளவன் = சோழன். கரி = ஆண்யானை. களிறு அடக்கும் திறனால் கரிகளுக்குக் காலன் (எமன்) போன்றவன் என்னும் பொருளில் கரிகாலன் என்னும் பெயர் அமைந்திருக்கலாம். கால்கரிந்ததால் வந்த பெயராயின் கரிக்காலன் என்றிருத்தல் வேண்டும்.]*

இவன் கி.மு. 5ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த கரிகாலன் பெயர் கொண்டவனும் கி.பி. முதல் நூற்றாண்டில் வாழ்ந்தவனுமான கடைக்கழகக் காலச் சோழன். இவன் காவிரிக்குக் கரையமைத்துக் கல்லணை கட்டி நன்செய் வேளாண்மை பெருக்கியதால் கரிகால் வளவன் என்றும், கரிகாற் பெருவளத்தான் என்றும் புகழப்பட்டான். இவன் கால் கரிந்தவன் அல்லன். தன் முன்னோன் கரிகாலனின் பெயர் கொண்டவன். கரிகால் வளவன் ஈழத்தின்மேற் படையெடுத்துப் பன்னீராயிரம் குடிகளைச் சிறைப் பிடித்துக் கொண்டுவந்து, காவிரிக்குக் கரை கட்டுவித்ததாக, அவன் மெய்க்கீர்த்தி கூறும் [சொல். கட்.25].

**கரிகாலன்** *kari-kālaṉ,* பெ.(n.) சோழமரபினருள் புகழ்பெற்ற கரிகாற்சோழன்; a Chōḷa king of very great renown, whose achievements and fame have been sung by several poets, *"இச்சக் கரமே யளந்ததால்... கரிகாலன் கானெருப்புற்று" (பட்டினப். தனிப்பா.).*

*[கரி + காலன் – கரிகாலன் = இளமைக்காலத்தில் தீச்சுட்டதால் கால்கரிந்த சோழமன்னன் எனக் கருதப்படுபவன். ஆயின், கரிக்குக் காலன் (யானைகளுக்கு எமன் போன்றவன்) – [ஒ.நோ. காலகாலன் (காலனுக்குக் காலன், சிவன்.)]என்பதே பொருத்தமாகத் தெரிகிறது. கால் கரிந்ததால் பெற்ற பெயராயின் கரிக்காலன் என்றிருத்தல் வேண்டும். ஒ.நோ. கரிக்கட்டை.]*

கரிகாற்சோழன் கி.மு. 5ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவன். நரைமுடித்து முதியவர் இருவர்க்கு முறை வழங்கிய பெருமைக்குரியவன்.

*"உரைமுடிவு காணான் இளமையோன் என்ற*
*நரைமுது மக்கள் உவப்ப – நரைமுடித்துச்*
*சொல்லால் முறைசெய்தான் சோழன் குலவிச்சை*
*கல்லாமற் பாகம் படும்"*

என்னும் வெண்பாவும் இதனை வலியுறுத்துகிறது.

கரிகாலன் இளம் பருவத்திலேயே சிக்கலான வழக்கினைத் தீர்த்து முறை வழங்கிய கதை அலெக்சாந்தர் காலத்தில் பஞ்சாபு மாநிலத்துச் சிற்றூரிலும் வழங்கி வந்தது. இந்தியிலும் இக்கதை "சச்சா நியாய" என்னும் தலைப்பில் வழக்கூன்றியுள்ளது. ஆதலால் இந்த முதல் கரிகாலனின் காலம் கி.மு. 5ஆம் நூற்றாண்டு என்று கருதப்படுகிறது.

**கரிகேரி** *karigeri,* பெ.(n.) வேலூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Velur dt.

*[கரு+ சேரி – கருஞ்சேரி → கருகேரி.* **து.***சேரி >* **க.** *கேரி.]*

**கரிகை** *karigai,* பெ.(n.) செந்நிறமுள்ள கத்தூரிமான் (பதார்த்த. 1081); red musk, one of five kinds of kastūri.

*[கரு → கரி → கரிகை.]*

**கரிங்காலிப்பாடி** *kariṅgāli-p-pāḍi,* பெ.(n.) திருவண்ணாமலை மாவட்டத்துச்சிற்றூர்; a village in Thiruvannamalai dt.

*[கருங்காலி+பாடி – கருங்காலிப்பாடி → காரிங்காலிப்பாடி.]*

**கரிச்சக்காய்** *kariсca-k-kāy,* பெ.(n.) 1. பேரீச்சங்காய்; datefruit. 2. பணிகார வகையுளொன்று; a preparation in confectionery, a puff.

*[கரு → கரிச்சம் + காய்.]*

**கரிச்சட்டி** *kari-c-caṭṭi,* பெ.(n.) கரிபடிந்த ஏனம்; begrimed, smutty pot.

*[கரி + சட்டி.]*

**கரிச்சலாத்து** *kari-c-calāttu,* பெ.(n.) நிலத்திலிருந்து வெட்டியெடுக்கப்படும் ஒருவகைப் பொருள் (கட்டட.சாத்.); asphalt.

சிலை = கல். **த.** சிலை > **Skt.** சிலா.

*[கரி + சிலா + சத்து – கரிச்சிலாசத்து → கரிச்சலாசத்து (கொ.வ.).]*

**கரிச்சாம்பல்** *kariccāmbal,* பெ.(n.) தக்கைக்கல் செய்யப் பயன்படும் சாம்பல்; ash used for making light weight building blocks.

*[கரி + சாம்பல்.]*

**கரிச்சால்** *kari-c-cāl,* பெ.(n.) ***கரிசலாங்கண்ணி*** (வின்.) பார்க்க; see *karišalāṅ-kaṇṇi.*

*[கரி + சால்.]*

**கரிச்சான்**[1] *kariccāṉ,* பெ.(n.) ***கரிக்குருவி*** பார்க்க; *see kari-k-kuruvi.*

*[கரி → கரிச்சான் (வே.க.122).]*

**கரிச்சான்**[2] *kariccāṉ,* பெ.(n.) ***கரிசலாங்கண்ணி*** பார்க்க; see *karišalāṅ-kaṇṇi.*

*[கரி + சால் – கரிச்சால் → கரிச்சான்.]*

**கரிச்சான்பூடு** *kariccāṉ-pūḍu,* பெ.(n.) ***கரிசலாங் கண்ணி*** (மலை.) பார்க்க; see *karišalāṅ-kaṇṇi.*

*[கரி + சால் – கரிச்சால் + பூண்டு → கரிச்சால்பூண்டு → கரிச்சான் பூண்டு → கரிச்சான் பூடு.]*

**கரிச்சை** *kariccai,* பெ.(n.) கையாந்தகரை (சித்.அக.); kaiyāntagarai, a plant.

*[கரி → கரிச்சை.]*

**கரிச்சோளம்** *kari-c-cōḷam,* பெ.(n.) கருஞ்சோள வகை (G.sm.D.I.i.22 0.); a black variety of millet of Hosur grown for fodder.

**ம.** கரிஞ்சோளம்

*[கரி + சோளம்.]*

**கரிசங்கு** *kari-saṅgu,* பெ.(n.) தோணியின்மேற் கட்டுந் தென்னங்கீற்று (யாழ்ப்.); temporary / roof of coconut leaves put up in an Indian raft for protection against inclemencies of weather.

*[சங்கு = வளைவு, வளைந்த கூரை. கரி = வாடிய உலர்ந்த கீற்று. கரிசங்கு = கீற்றுக்கூரை. கரி + சங்கு.]*

**கரிசம்**[1] *karišam,* பெ.(n.) 1. தேய்கை; emaciation. *"காயமுங் கசாயமுங் கரிச மானவே" (மேருமந்.543).* 2. வற்கடம் (பஞ்சம்); famine.

*[கரி = அழிவு, தீமை. கரி → கரிசம்.]*

**கரிசம்**[2] *karišam,* பெ(n.) யானைக்குட்டி; young of an elephant.

*[கரி → கரிசம்.]*

**கரிசல்**[1] *karišal,* பெ.(n.) 1. கருமை (வின்.); darkness, blackness. 2. நீண்டநாள் ஈரத்தைத் தன்னுள் நிறுத்தி வைத்துக்கொள்ளும் தன்மையுடைய கருப்பு நிறமண்; black cotton-soil. இந்த நிலம் கரிசல் (உ.வ.).

*[கள் → கரு → கருப்பு = கருமை, பேய். கரு → கரம்பு → கரம்பை = காய்ந்த களிமண். கரு → கரி = கருத்தது. கரி → கரிசு → கரிசல் (மு.தா.180).]*

**கரிசல்**[2] *karišal,* பெ.(n.) விலையேற்றம் (யாழ்.அக.); dearness of price.

*[கரு → கருசல் → கரிசல். கரு = பெருமை, அருமை, உயர்வு, மிகுதி.]*

**கரிசலாங்கண்ணி** *karišalāṅ-kaṇṇi,* பெ.(n.) தடித்த சிறு இலைகளையும், கருநீலத் தண்டுப் பகுதியையும் உடைய ஒருவகைக் கீரை; a kind of greens with short thick leaves, eclipse plant.

**மறுவ:** கையாந்தகரை, கையாந்தகீரை. கரப்பான் கரியசாலை, கரிசா, கைகேசி, கரிசனம்.

*[கரிசல் + அம் + கண்ணி.]*



கரிசலாங்கண்ணி

**கரிசலை** *karišalai,* பெ.(n.) ***கரிசலாங்கண்ணி*** (மலை.) பார்க்க; see *karišalāṅ-kaṇṇi.*

*[கரி → கரிதல் → கரிசல் → கரிசலை.]*

**கரிசற்காடு** *karišaṟ-kāḍu,* பெ.(n.) 1.கரிசலான நிலம்; black soil tract. 2. அடர்ந்த காடு; dense forest.

*[கரிசல் + காடு.]*

**கரிசனம்**[1] *karišaṉam,* பெ.(n.) யானைக்கோடு; elephant's tusk. *"கரிசன மன்ன கொங்கை" (கந்தபு.தெய்வயா.87).*

*[கரி +சனம். **Skt.** jan (பிறத்தல், தோன்றிய கொம்பு) > த. சனம்.]*

**கரிசனம்**[2] *karišaṉam,* பெ.(n.) பொற்றலைக் கையாந்தகரை (மலை.); Ceylon verbisina.

*[கரிசல் → கரிசனம்.]*

**கரிசனம்**[3] *karišaṉam,* பெ.(n.) ஆர்வம் கலந்த அன்பு (யாழ்ப்.); tenderness, affection, as of a parent for the child, affectionate solicitude, concern, interest. *அதிகக் கரிசனமானாலும் ஆம்புடையானை அப்பா என்று அழைக்கலாமா (பழ.).*

*[கருதல் = நினைவுகூர்தல், எண்ணுதல். கரு → கருதல் → கருதலம் → கருசலம் → கரிசனம் (கொ.வ.).]*

**கரிசனை** *karisaṉai,* பெ.(n.) ***கரிசனம்***[3] பார்க்க see *karišaṉam*[3].

*[கரிசனம் → கரிசனை.]*

**கரிசாலை** *karišālai,* பெ.(n.) கரிசலாங்கண்ணி (வின்.); a plant usually found in wet places. *"மதின்முசுக்கை கரிசாலை" [தைலவ. தைல.13).*

*[கரிசலை → கரிசாலை (கரிசல் நிலத்தில் விளைந்தது).]*

**கரிசு**[1] *karišu,* பெ.(n.) 1.கருமையானது; that which is black. 2. குற்றம்; fault, blemish, taint. *"வினை கரிசறுமே" (தேவா.129.1.).* 3. பாழ்வினை, அறங்கடை (பாவம்); sin. *"கரிசினை மாற்றி" (சைவ.பொது 568).*

*[கரி → கரிது → கரிசு. (வே.க.122). கரிதல் = கருமையாதல்.]*

*கரிசு = கசடு, மண்டி போன்ற குற்றம், கரிசு = பாழ்வினை (பாவம்), கரிசில் = கொடுமை, களங்கம், கருத்தொளிப்பு, கறை, வாழை நுங்கு முதலியவற்றின் சாற்றாலுண்டாகும் சாயம் (சொல்.கட்.42.).*

**கரிசு**[2] *karišu,* பெ.(n.) ***கரிசை***[1] (வின்.) பார்க்க; *see karišai*[1].

*[கரு → கரி → கரிசு. கரு = பெரிய.]*

**கரிசு**[3] *karišu,* பெ.(n.) உறுதிப்பிடி; firm-hold. *"கரிசுடன் முன்கையைக் கடித்து" (பஞ்ச. திருமுக.728).*

*[கரு → கரிசு.]*

**கரிசூழ்ந்த மங்கலம்** *karisuḷnda-mangalam,* பெ.(n.) திருநெல்வேலி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Thirunelveli dt.

*[கரி + சூழ்ந்த + மங்கலம். மங்கலம் = நன்கொடையாக அளிக்கப்பட்ட ஊர்.]*

**கரிசை**[1] *karišai,* பெ.(n.) 1. நானூறு மரக்காலளவு; measure of capacity 400 marakkāl, approximately 185. cu.ft. 320 cu.in. 2.48 படி கொண்ட மூட்டைகள் 64 கொண்டது. (G.T. D.i. 134.); a measure of capacity, 64 bags of 48 measures paḍi each.

**தெ.** கரிசெ; **க.** கரசெ.

கரு= பெரிய

*[கரு → கரி → கரிசை (பெரிய அளவு).]*

**கரிசை**[2] *karišai,* பெ.(n.) தவசங்களைக் கொட்டி வைக்கும் மட்கலம்; earthen receptacle for storing grains. கிராமாதிகாரிகள் வீட்டில் கரிசை கட்டி வைத்திருப்பார்கள் (மதி.க.11.21).

**மறுவ.** குதிர், ஒடை, சேர், குளுமை, இருவாய்சால், பத்தாயம், பந்தாயம், நெல்வரைவு, படப்பு, தொம்பை, சேந்தி.

*[கரு + சால் – கருசால் → கரிசை. கரு: பருமை, பெரிய அளவு. கரிசை: 80 பறை அல்லது 400 மரக்கால் கொண்ட முகத்தல் அளவு, பெரிய அளவு, பெரிய சால். கரு → கரிசை.]*

**கரிஞ்சம்** *kariñjam,* பெ.(n.) அன்றில்; a bird celebrated by poets for its staunch attachment to its mate and held up as a model of love which bears no separation. *"கரிஞ்சமென் றுள்ளபேர் வியூகமும்" (பாரத.ஆறாம் போ. 5).*

**த.** கரிஞ்சம் > **Skt.** kạrauñca

*[கரு → கருஞ்சம் → கரிஞ்சம். கரு = அன்பு.]*

**கரிஞ்ஞாங்கோடு** *karijñjaṅkāḍu,* பெ.(n.) குமரி மாவட்டத்துக் கல்குளம் வட்டத்துச் சிற்றூர்; a village of Kalkulam in Kanniyakumari dt.

*[கரு → கரி–கரிச்சான்+கோடு – கரிச்சான்கோடு→ கரிஞ்ஞான் கோடு. கோடு = ஏரி.]*

**கரிண்டு** *kariṇḍu,* பெ.(n.) சிறுகத்தரி (n.) hedge caper plant.

*[கரு = கருமை. கரு → கரி → கரிண்டு.]*

**கரிணி**[1] *kariṇi,* பெ.(n.) 1.மலை (சூடா.); mountain.

*[கரு → கருணி → கரிணி. கரு = உயர்வு.]*

**கரிணி**[2] *kariṇi,* பெ.(n.) மலைக்குகை; mountain cave.

*[கரு = கருமை, இருள். கரு → கரி → கரிணி.]*

**கரிணி**[3] *kariṇi,* பெ(n.) பெண்யானை (பிங்.); female elephant. *"கார்மிசை வருவாருங் கரிணியில் வருவாரும்" (இராமா.கடிம.35).* 2.யானை; elephant.

*[கரு → கரி (வடிவில் பெரிய ஆண்யானை).]*

கரி → கரினி [கரிணி என்பது வழு]. கரி = ஆண் யானை என்னும் சிறப்பு இழந்து வடமொழி யாளரால், யானைக்குரிய பொதுப் பெயராக ஆளப்பட்டபோது, அதனின்று கரி → கரினி என்னும் பெண்பாற் சொல் படைத்திட்டுக் கொண்டனர்.

**த.** கரி > **Skt.** karini.

**கரித்தண்ணீர்** *kari-t-tannīr,* பெ.(n.) கரிச்சட்டியைக் கழுவிய நீர் (வின்.); water in which begrimed pots have been washed.

*[கரி + தண்ணீர்.]*

**கரித்திப்பிலி** *kari-t-tippili,* பெ.(n.) யானைத்திப்பிலி (மலை.); monkey creeper.

*[கரி = யானை. கரி + திப்பிலி.]*

**கரித்துண்டு**[1] *kari-t-tuṇḍu,* பெ.(n.) 1. ***கரித்துணி*** பார்க்க; see *kari-t-tuṇi.* 2. அடுப்புக்கரியின் துண்டு; a piece of charcoal.

*[கரி + துண்டு.]*

**கரித்துண்டு**[2] *kari-t-tuṇḍu,* பெ.(n.) ***கரிச்சாரம்*** பார்க்க; see *kari-c-cāram.*

*[கரி + துண்டு.]*

**கரித்துணி** *kari-t-tuṇi,* பெ.(n.) அழுக்குச்சீலை; dirty begrimed cloth. *"கரித்துணி யாடையும்" (பட்டினத். திருப்பா. பொது.29).*

*[கரி + துணி.]*

**கரித்தூபம்** *kari-tūbam,* பெ.(n.) கரிப்புகை (நெல்லை); lamp-black.

**க.** கரிதூப

*[கரி + தூபம். தூ = வெண்மை. தூவம் (வெண்புகை) → தூபம்.]*

**கரித்தூள்** *kari-t-tūḷ,* பெ.(n.) ***கரிப்பொடி*** பார்க்க; see *kari-p-poḍi.*

*[கரி + தூள்.]*

**கரிதொட்டாம்பாளையம்** *kari-toṭṭām-pāḷaiyam,* பெ.(n.) ஈரோடு மாவட்டம் கோபிசெட்டிப்பாளையம் வட்டத்துச் சிற்றூர்; a village in Kobichettipalaiyam taluk in Erode dt.

*[கரியன் + தொட்டம் + பாளையம் – கரியன்தொட்டம் பாளையம் → கரிதொட்டாம் பாளையம் க. தொட்டம் > த. தொட்டாம். க. தொட்ட = பெரிய. கரியன் பெரியபாளையம் எனின் முற்றும் தமிழாம்.]*

**கரிந்தமிழ்** *karintamiḻ,* பெ.(n.) 1. மலையாள மொழியின் பழைய வடிவம்; the early stage of Malayāḷam. 2. கொடுந்தமிழ்; colloquial Tamiḻ.

**ம.** கரிந்தமிழ்

*[கரு + தமிழ் – கரிந்தமிழ்.]*

**கரிநாக்கு** *karinākku,* பெ.(n.) ***கருநாக்கு*** பார்க்க see *karu-nākku.*

*[கரு → கரி + நாக்கு.]*

**கரிநாள்**[1] *kari-nāḷ,* பெ.(n.) தீயநாள்; an inauspicious day, specified days after a death, etc. *"மலரடிகள் .... வந்திக்க வராச் சிறுநாளே கரிநாள்" (தனிப்பா. 11,207,495).*

**க.** கரிதின; **ம.** கரிநாள்.

*[கரி = அழிவு, தீமை. கரு → கரி + நாள்.]*

செ.ப.அகர முதலியில் கரிநாள் என்பது தீய நாள் எனும் பொருளில் பொங்கல் இறுதி நாள் எனக் குறித்திருப்பது தவறு.

**கரிநாள்**[2] *kari-nāḷ,* பெ.(n.) 1. பொங்கல் விழாவின் இறுதி நாளில், மன்னன் கரி (மதயானை)யின் மீது ஊர்வலம் வந்த நாள்; procession day of the king on elephant on the last day of Pongal festival. 2. *காணும் பொங்கல்;* the last day of merriment and visiting good places during pongal festival.

*[கரி = களிறு, ஆண்யானை. கரி + நாள்.]*

பொங்கல் விழாவின் இரண்டாம் நாள் மாட்டுப் பொங்கலன்று எருதாட்டமும், மஞ்சு விரட்டும் நடைபெறுவது போன்று பண்டைத் தமிழகத்தில் மூன்றாம் நாள் மன்னன் களிற்றின் மீது ஊர்வலம் வரும் காட்சி நடைபெற்றதாகலின் பெற்ற பெயர். கருநாடக மாநிலத்தில் மன்னன் களிறூர்ந்து வருதல் நீடுநிலைத்திருத்தல் காண்க.

**கரிப்பான்** *karippāṉ,* பெ.(n.) ***கரிசலாங்கண்ணி*** (மலை.) பார்க்க; see *karišalāṅ-kaṇṇi.*

*[கரு → கரி → கரிப்பான்.]*

**கரிப்பு**[1] *karippu,* பெ.(n.) 1. அச்சம் (திவா.); fear. 2. கவலை, துன்பம்; worry, nagging distress. 3. காரம்; pungency. *"ஐயமுங் கரிப்பு மாகலு மூரித்தே" (தொல்.சொல். 384.).* 4. வெறுப்பு; disgust, aversion.

**ம.** காரம்; **க.** கார.

**Indo.** garam. **Thai.** kluer; **Mal.** garam.

*[கரி → கரிப்பு.]*

**கரிப்பு**[2] *karippu,* பெ.(n.) உப்புச்சுவை; saltiness மிளகுநீர் உப்புக் கரிக்கிறது (உ.வ.).

*[கடி → கரி → கரித்தல் = மிகுதல் (வே.க.188)]*

**கரிப்புளிப்பு** *kari-p-pu!ippu,* பெ.(n.) கரியமிலம்; carbonic acid (mod.).

*[கரி + புளிப்பு. கரி = காரம், உரைப்பு, மிகுதி.]*

**கரிப்புறத்திணை** *kari-p-pura-t-tiṇai,* பெ.(n.) புறத்திணையில் ஒன்று; சான்றோர் கூற்றைச் சான்றாகக் காட்டுகை (தொன்.வி.161); citing learned authors in support of one's opinion a Puram theme.

*[கரி = சான்று. கரி + புறத்திணை.]*

**கரிப்பூட்டை** *kari-p-pūṭṭai,* பெ.(n.) சோளப்பயிருக்கு வரும் ஒரு நோய் (இ.வ.); smut which blights maize crop.

*[கரு → கரி + பூட்டை. கரு = கருகுதல், கரியாதல்.]*

மணிக்கரிப்பூட்டை, தலைக்கரிப்பூட்டை, நீளக்கரிப் பூட்டை, கம்பின் கரிப்பூட்டை என நான்கு வகைக் கரிப்பூட்டை நோய்கள் சோளப் பயிரைத் தாக்குகின்றன.

**கரிப்பை** *karippai,* பெ.(n.) ஒருவகைக் கடல்மீன்; a kind of sea-fish.

*[கரி → கரிப்பு → கரிப்பை.]*

**கரிப்பொடி** *kari-p-poḍi,* பெ(n.) பல்தேய்க்கப் பயன்படுவது; charcoal powder or burnt husk used as tooth - powder.

**ம.** கரிப்பொடி

*[கரி + பொடி.]*

**கரிபிடி–த்தல்** *karipiḍi-,* 4 செ.கு.வி.(v.i.) கரிபற்றுதல் (உ.வ.); to be begrimed with soot, as a pot on the fire.

**மறுவ.** கரிபற்றுதல்

**ம.** கரிப்பிடி; **பட.** கரிகிடி.

*[கரி + பிடி.]*

**கரிபிப்பிலி** *kari-pippili,* பெ.(n.) யானைத்திப்பிலி (சங்.அக.); elephant-pepper, climber.

*[கரி = யானை. கரி + பிப்பிலி. திப்பிலி → பிப்பிலி]*

**கரிபூசு**[1]**–தல்** *kari-pūšu-,* 5 செ.கு.வி. (v.i.) கண்ணூறு நீங்கக் கரி தீற்றுதல்; to begrime with the smut of charcoal to avert the effects of the evil eye. ரிஷி கரிபூசுகிறான் (ஈடு.7,4, ப்ர).

*[கரி + பூசு.]*

**கரிபூசு**[2]**–தல்** *kari-pūšu-,* 5 செ.குன்றாவி.(v.t.) வெட்கித் தலைகுனியச் செய்தல்; to deliberately put a person to shame, to disgrace one, lit., to begrime a person's face.

*[கரி + பூசு.]*

**கரிபோக்கு**[1]**–தல்** *kari-pōkku-,* 9 செ.கு.வி.(v.i.) கண்ணுக்கு மையெழுதுதல்; to paint the eyelids with black collyrium. *"கருங்கய லல்ல கண்ணே யெனக் கரிபோக்கினாரே" (சீவக. 626.).*

*[கரி + போக்கு-.]*

**கரிபோக்கு**[2]**-தல்** *kari-pōkku-,* 9 செ.கு.வி.(v.i.) சான்று கூறுதல்; to give testimony. *"அது கூறிக் கரிபோக்கினா ராதலானும்" (தொல்.பொருள். 69.உரை.).*

*[கரி(சான்று) + போக்கு.]*

**கரிமணம்** *kari-maṇam,* பெ.(n.) தீய்ந்த நாற்றம்; smell of scorched food.

*[கரி + மணம்]*

**கரிமணி** *kari-maṇi,* பெ.(n.) ***கருமணி*** பார்க்க; see *karumaṇi "கட்டக் கரிமணி யில்லாமற் போனாலும் பேர் பொன்னம்மாள்" (பழ.).*

*[கரு → கரி + மணி.]

**கரிமக்காலக்கணிப்பு** *karima-k-kāla-k-kaṉippu,* 14 பெ.(n.) அகழாய்வில் கிடைக்கின்ற கரித்துண்டு, மரத்துண்டு, எலும்புத்துண்டு ஆகியவற்றின் கரிமத் தன்மையை ஆய்ந்து காலத்தைக் கணிக்கும் முறை; a method of dating from the available pieces of carbon, wood, bone etc. from the archaeological excavations by the loss of radio activity in the carbon remains.

*[கரிமம் + காலம் + கணிப்பு.]*

**கரிமம்** *karimam,* பெ.(n.) கரியின் மூலக்கூறுகள் அடங்கியவை; organic substances.

*[கரி → கரிமம்.]*

**கரிமரநாய்** *kari-maranāy,* பெ.(n.) கறுப்பும் உறுப்புக்கேடுமானது (யாழ்.அக.); that which is black and malformed.

*[கரி + மரம் + நாய்.]*

**கரிமருந்து** *kari-marundu,* பெ.(n.) வெடிமருந்து (வின்.); the mixture of charcoal, sulpher, saltpetre, used for fire-works; gun powder.

ம. கரிமருந்நு

*[கரி + மருந்து.]*

**கரிமலப்பாடி** *karimala-p-pāḍi,* பெ.(n.) திருவண்ணா மலை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Thiruvanna malai dt.

*[கெழுமல் → கழுமல் → கழுமலம் → கரிமலம் + பட்டி – கரிமலப்பட்டி. கழுமலம் = (குடியிருப்புகள்) செறிந்த ஊர்.]*

**கரிமவேதியியல்** *karima-vēdi-y-iyal,* பெ.(n.) வேதியியலிற் கரியை மூலக்கூறாகக் கொண்ட கூட்டுப்பொருள் பற்றிய வேதியியல்; organic chemistry.

*[கரிமம் + வேதியியல்.]*

**கரிமா** *karimā,* பெ.(n.) யானை; elephant.

*[கரி + மா. கரி = ஆண்யானை. கரிமா – இருபெயரொட்டுப் பண்புத் தொகை.]*

**கரிமுகவம்பி** *kari-muga-v-ambi,* பெ.(n.) யானைமுகவோடம் (சிலப். 13: 176.); boat with a figure of an elephant's head or prow. *"பரிமுக வம்பியுங் கரிமுக வம்பியும்" (சிலப்.புறஞ்சேரி.179).*

*[கரி + முகம் + அம்பி. அம் → அம்பு = நீர்வடிவானது; நீர்த் தொடர்பானது.]*



கரிமுகவம்பி

**கரிமுகன்** *kari-mugaṉ,* பெ.(n.) ஆனைமுகக் கடவுள்; Gaṇēśa, the elephant faced. *"கரிமுகனடி பேணி" (திருப்பு.1).*

ம. கரிமுகன்

*[கரி + முகன்.]*

**கரிமுட்டி** *kari-muṭṭi,* பெ.(n.) பாதி எரிந்த கட்டை; a, half burnt stick. 2. கயவன், இழிமகன்; blackguard

ம. கரிமுட்டி

*[கரி + முட்டி (திரள், திரட்டு).]*

**கரிமுட்டு** *kari-muṭṭu,* பெ.(n.) கரிக்குவியல்; heap of charcoal. சூளைக்கருகில் கரிமுட்டுக் கிடக்கின்றது (உ.வ.).

*[கரி + முட்டு. முட்டு = மேடு, குவியல்.]*

**கரிமுட்டைச்சுறா** *kari-muṭṭai-c-cuṟā,* பெ.(n.) கடல் மீன் வகை; a shark, grey. 2. நீண்ட கடல்மீன் வகை; a shark attaining 12 ft in length.

ம.கரிமுத்துச்ராவு

*[கரி + முட்டை + சுறா.]*

**கரிமுண்டம்** *kari-muṇḍam,* பெ.(n.) 1. மிகக் கறுத்த ஆள்; person of very dark complextion, lit., a lump of charcoal. 2.கொடிய உருவம் (வின்.); bogey mentioned to frighten children.

ம. கரிமுண்டன்

*[கரி + முண்டம்.]*

**கரிமுரடு** *kari-muradu,* பெ.(n.) கரிக்கட்டை (வின்.); quenched fire-brand.

*[கரி + முரடு.]*

**கரிமுள்** *kari-muḷ,* பெ.(n.) 1. உறுதியான முள்; hard thorn. 2.பலாக்காயின் மேல்முள்; thorn-like projections on the rind of jack-fruit.

**ம.** கரிமுள்ளு

*[கரு = வலி. கரி + முள்.]*

**கரிமுள்ளி** *kari-muḷḷi,* பெ.(n.) நாய்முள்ளிச்செடி; Indian night-shade.

**ம.** கரிமுள்ளி

*[கரி + முள்ளி.]*

**கரிமூஞ்சிப்பாறை** *kari-mūñji-p-pāṟai,* பெ.(n.) ஓரடி நீளத்திற்கு மேல் வளரக்கூடிய சாம்பல் நிறமுடைய சிறுகடல் மீன்வகை; horse-mackerel, grey, attaining more than a foot in length.

*[கரி + மூஞ்சி + பாறை.]*


கரிமூஞ்சிப்பாறை மீன்

**கரிமூட்டம்** *kari-mūṭṭam,* பெ.(n.) ***கரியாக்கம்*** பார்க்க see *kariyā-kam.*

*[கரி + மூட்டம்.]*

**கரிய** *kariya,* கு.பெ.எ.(adj.) கருப்பான, கருமை நிறம் உடைய; black.

**க.** கரிது., **ம.** கரி, கரு; **தெ., து.** கரிய.

**Gk.** gree

*[கரு = கருமை. கரு → கரி + அ = கரிய (கு.பெ.எ.) 'அ' பெயரெச்ச ஈறு, வினையாக்க உருபாகிய 'இகரம் பெற்று, கரு → கரி என்று பிறிது பொருள் சுட்டிய வினையாயிற்று. பிறிது பொருள் வினை என்பது 'கரு' என்னும் பொது வேரடியினின்றும் குறித்தவோர் தனிப்பொருளில் வளர்ந்த வினைச்சொல்லாட்சி.]*

**கரியடுப்பு** *kari-y-aḍuppu,* பெ.(n.) கரியிட்டெரிக்கும் அடுப்பு; charcoal stove.

*[கரி + அடுப்பு. அடு = சுடுதல், சமைத்தல். அடு → அடுப்பு.]*

**கரியநாழிகை** *kariya-nāḻigai,* பெ.(n.) அந்திவேளை; dusk.

*[கரிய = இருள் படரக்கூடிய. கரி → கரிய (கு.பெ.எ.) + நாழிகை.]*

**கரியநிம்பம்** *kari-ya-nimbam,* பெ.(n.) கறிவேம்பு (தைலவ. தைல.39);curry-leaf tree.

*[கரி → கரிய (கு.பெ.எ.) + நிம்பம். நிம்பம் = வேம்பு.]*

**கரியபோளம்** *kariya-pōḷam,* பெ.(n.) 1. ஒரு பூடு (பதார்த்த 1051.); socotrine aloe. 2. அரத்த போளம்; hepatic aloes. *"புகழான கூகைநீறுகரிய போளங் கூட்டே" (வை.120.)* (த.மொ.அக.).

*[கரு → கரி → கரிய + போளம்.]*

**கரியமணி** *kariya-maṇi,* பெ.(n.) 1. கருகுமணி (யாழ்.அக.); small black beads. 2. கண்மணி (யாழ்.அக.); pupil of the eye. 3. கருஞ்சீரகம் (சங்.அக.); black cumin.

*[கரு → கரி → கரிய + மணி.]*

**கரியமால்** *kariya-māl,* பெ.(n.) 1. திருமால்; Vishṇu, who is dark in complexion. "கன்னி கரியமால்" (கலித். 92.உரை). 2. காய்ச்சல் நஞ்சு (பாடாணம்) (மூ.அக.); a mineral poison. 3. துளசி (சங்.அக.); sacred basil.

*[கரு → கரி → கரிய + மால்.]*

**கரியமான்** *kariya-māṉ,* பெ.(n.) கறுப்பு மான்; Indian antelope, black buck, having a dark back.

**ம.**கரிமான்

*[கரு → கரி → கரிய + மான்.]*

**கரியர்** *kariyar,* பெ.(n.) சான்று சொல்வோர்; witnesses. *"கரியரோ வேண்டா" (பழ.148).*

*[கரு → கரி → கரியர். கரி = சான்று. கரியர் = சான்றாளர்.]*

**கரியல்**[1] *kariyal,* பெ.(n.) 1.வளராத மரம்; tree or plant stunted and grown blackish. 2.ஒருவகைத் துகில் (சிலப்.14, 108, உரை); a kind of cloth.

*[கரி → கரியல்.]*

**கரியல்**[2] *kariyal,* பெ.(n.) 1. கருகல் (யாழ்.அக.); that which is black or charred. 2. தொடுகறி (சரவண. பணவிடு.274.); a kind of relish.

*[கரு → கரி + அல் – கரியல். 'அல்' தொ.பெ.ஈறு.]*

**கரியல்வடலி** *kariyal-vadali,* பெ.(n.) பனங்கருக்கு (யாழ்ப்.); young stunted palmyra having dried leaves on it.

*[கரியல் + வடலி. மடல் → வடல் → வடலி.]*

**கரியவன்**[1] *kariyavan,* பெ.(n.) 1. கரியநிற முடையவன்; darkman. 2.திருமால்; Vishnu. *"வாழி கரியவன்" (கம்பரா.பள்ளி.55).* 3. இந்திரன் ; Indira. *"பீடிகை கரியவ னிட்ட காரணம்" (மணிமே. 25.55).* 4. காரி (சனி); Saturn. *"கரியவன் புகையினும்" (சிலப்.10:102.).*

*[கரு → கரி + அவன் – கரியவன்.]*

இந்திரனைக் கரியவன் என்றது யானைமீதமர்ந்தவன் என்னும் கருத்தினது. கரி = யானை.

**கரியவன்**[2] *kariyavan,* பெ.(n.) கள்வன் (சூடா); robber, thief.

*[கர → கரவன் → கரியவன்.]*

**கரியவன்**[3] *kariyavan,* பெ.(n.) சான்று சொல்வோன் (பிங்.); one who gives evidence as witness.

*[கரு → கரி + அவன் – கரியவன். கரி = சான்று.]*

**கரியவாகு–தல்** *kari-y-a-v-āgu-,* 7 செ.கு.வி.(v.i.) எரிந்து சாம்பலாகுதல்; to be burnt into ashes.

*[கரி → கரிய + ஆகு–.]*

**கரியன்**[1] *kariyan,* பெ.(n.) திருடன் (இராட்.); thief.

*[களவன் → கரவன் → கரியன்.]*

**கரியன்**[2] *kariyan,* பெ.(n.) ***கரியவன்*** பார்க்க; see *kariyavan (வே.க.122).*

**க.** கரியன், கரியவனு;

*[கரி + அன் – கரியன்.]*

கருநீலவண்ணமுடைய காரணத்தால் கரியன் திருமாலைக் குறித்தது.

**கரியாக்கம்** *kari-y-ākkam,* பெ.(n.) 1. விறகைக் கரியாக்குதல்; preparation of charcoal. 2. கரிமப் பொருள்களிலுள்ள கரியின் மூலக்கூறுகளை மிகுதியாக்குதல்; carbonisation.

*[கரி + ஆக்கம்.]*

**கரியாக்கு–தல்** *kariyākku-,* 5 செ.குன்றாவி.(v.t.) பயனற்ற வகையில் செலவு செய்தல், வீண்செலவு செய்தல்; to squander. காசைக் கரியாக்காதே (உ.வ.).

*[கரி + ஆக்கு = ஆகு(த.வி.) → ஆக்கு (பி.வி).]*

**கரியார்**[1] *kariyār,* பெ(n.) 1. கருநிறமுடையார்; people who are of dark complexion. 2.கீழ்மக்கள்; Inferior people. *"கரியாரை நள்ளான்" (சிறுபஞ்.21).*

*[கரு → கரி → கரியார்.]*

**கரியார்**[2] *kariyār,* பெ.(n.) சான்று கூறுவோர்; witness. *"வன்றொண்டர்க் கரவணங் கரியார் முன்பு காட்ட வல்லார்" (மருதூ.11.).*

*[கரு → கரி → கரியர் → கரியார்.]*

**கரியாவட்டம்** *kariyā vattam,* பெ.(n.) திருவனந்தபுரம் அருகே உள்ள சிற்றூர்; a village near Thiruvanathapuram.

*[கரியன் → கரியான் + வட்டம் – கரியாவட்டம்.]*

**கரியான்** *kariyān,* பெ(n.) குதிரைவகை (அசுவசா.152); horse, of the black-coloured variety.

*[கரு → கரி → கரியான். கரு = கருமை 'ஆன்' உடைமையீறு.]*

**கரில்** *karil,* பெ.(n.) 1. கார்ப்பு; pungency. 2. குற்றம்; fault, defect. 3. கொடுமை; cruelty, tyranny, severity.

*[கரு → கரி → கரில்.]*

**கரி வலம் வந்த நல்லூர்** *karivalamvandanallur,* பெ.(n.) திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள ஒருசிற்றூர்; a place in Thirunelveli dt.

*[கரி+வலம்வந்த+ நல்லூர். கரி = யானை.]*

**கரிவாகனன்** *kari-vāganan,* பெ.(n.) ஐயனார்; Aiyanār, who rides on an elephant.

*[கரி + வாகனன்.]*

**கரிவாய்** *karivāy,* பெ.(n.) தீய அல்லது அழிவுபற்றிப் பேசும் வாய்; the mouth whose uttering brings calamity.

க. கரிபாயி

*[கரி = அழிவு, தீமை. கரி + வாய்.]*

**கரிவாரி** *kari-vāri,* பெ.(n.) கரியைவாரும் கருவி; spade.

*[கரி + வாரி. வார் → வாரி. 'இ' உடைமை குறித்த ஈறு.]*

**கரிவாளன் கோலா** *kari-vāḷaṉ-kōlā,* பெ.(n.) மூன்றரை அடி நீளமும், நீலமும் பச்சையுங் கலந்த நிறமுடைய கடல்மீன் வகை; garfish, bluish green, attaining 3½ ft. in length.

*[கரி + வாளன் + கோலா.]*


கரிவாளன் கோலா

**கரிவாளை** *kari-vāḷai,* பெ.(n.) பன்னிரண்டடி நீளமுள்ளதும், நீலமும் பச்சையும் கலந்த நிறமுள்ளதுமான பெரிய கடல்மீன்வகை; large herring-like sea-fish, bluish-green, attaining 12 ft. in length.

ம. கரிவாள

*[கரு → கரி + வாளை. கரு = பெரிய, வலிய.]*


கரிவாளை மீன்

**கரிவு¹** *karivu,* பெ.(n.) பயிர்தீகை (நாஞ்.); failure of crops.

*[கரி → கரிவு.]*

**கரிவு²** *karivu,* பெ.(n.) தீவு; Island.

*[கரை → கரைவு → கரிவு.]*

**கரிவேடு** *kari-vēḍu,* பெ.(n.) வேலூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Vellore dt.

*[கரியன் + பேடு → கரியபேடு → கரியவேடு → கரிவேடு. பேடு = பொட்டல் நிலம்.]*

**கரிவைரி** *kari-vairi,* பெ.(n.) வெள்ளைச் செய்ந்நஞ்சு; prepared arsenic.

*[கரி + வைரி. வைரம் → வைரி (திண்மையானது, கொடியது).]*

**கரு¹-த்தல்** *karu,* 4 செ.குன்றாவி. (v.i.) செய்தல்; to do.

*[குல் → குரு → கரு. குல் = தோன்றற் கருத்து வேர், செய்தற் பொருளில் விரிந்தது.]*

"கரு என்னும் முதனிலை இன்று வழக்கற்றது. கருத்தல் = செய்தல், கருங்களமரும், வெண்களமரும் போலப் பல்வகைப்பட்ட கரியரும், பல்வகைப்பட்ட பொன்னருமென, இருவேறு நிறவகையினராகத் தமிழர், தொன்றுதொட்டு இருந்து வந்திருக்கின்றனர். வருந்தியுழைப்பதன் விளைவாகக், கரியர் கைமிகக் கருப்பதும், பொன்னர்கை சிவப்பதும் இயல்பு.

"கருங்கை வினைஞருங் களமருங் கூடி" [சிலப். 10:125].

'செய்தகை சேவேறும், செய்யாத கை நோவேறும்' [பழ].

கை கருத்தல் பற்றிக் கரு என்னும் வினைச்சொல்லும், சிவத்தல் பற்றிச் செய் என்னும் வினைச்சொல்லும் தோன்றியதாகத் தெரிகின்றது. இவற்றிற்குப் பிறவினை வடிவம் வேண்டியதில்லை.

ஒ.நோ. வெளுத்தல் = வெள்ளையாதல் [த.வி.], துணியை வெள்ளையாக்குதல் [பி.வி.].

கருமம் → கம்மம் → கம். கம்மம் = முதற்றொழிலாகிய பயிர்த்தொழில்.

கம்மவர் → கம்மவாரு = பயிர்த்தொழில் செய்யும் தெலுங்கர்

கம் = பல்வேறு கனிம (உலோக)த் தொழில்.

'ஈமுங் கம்மும்' (தொல்.328).

கம்மாளன் = பொற்கொல்லன், ஐங்கொல் லருள் ஒருவன்.

கம்மியன் = கற்றச்சன் (சிற்பி).

கரு + வி – கருவி. கரு + அணம் – கரணம் = செய்கை,

திருமணச் சடங்கு, கருவி, அகக்கருவி.

'கற்பெனப் படுவது கரணமொடு புணர' (தொல். 1088). இதிற் கரணம் என்பது, திருமண வினை யாகிய சடங்கைக் குறித்தது.

வடவர் கரு என்னும் முதனிலையைக் க்ரு எனத் திரித்துள்ளனர். இங்ஙனம், சொன்முதல் உயிர்மெய்யில், உயிரை நீக்குவது ஆரிய மரபு.

ஒ.நோ. பொறு – bhru, திரு – sri, வரி – Vrhi, கரை – E.cry, துருவு – E.through, புருவம் – E.brow.

வடவர் கரணம் என்னும் சொல்லைக் காரண என நீட்டி, அதற்கேற்பக் 'கார்ய' என்னும் சொல்லையுந் திரித்துள்ளனர். காரணம் என்னும் நீட்டம் தமிழுக் கேற்கும் ஆயின், 'கார்ய' என்னும் திரிபு ஏற்காது.

ஏற்கெனவே, கரணம் என்பதினின்று, கரணியம் என்னும் சொல் திரிந்துள்ளது. அதற்கேற்பக் கருமம் என்பதினின்று கருமியம் (காரியம்) என, ஒரு சொல்லைத் திரித்துக் கொள்ளலாம்.

செய், பண்(ணு), புரி முதலிய பல பிற ஒரு பொருட் சொற்கள், தமிழில் இருப்பதனாலும், கரு என்பது வழக்கற்றுப் போனதினாலும், பின்னது வடசொல்லென மயங்கற் கிடந் தருகின்றது. தமிழ் வடமொழிக்கு முந்தியதென்றும் பெருஞ்சொல்வள மொழியென்றும் அறியின், இம் மயக்கந் தெளிந்துவிடும். தமிழ் திராவிட மொழிகட்குரிய இல், மனை, வீடு முதலிய சொற்களை மட்டுமன்றி, ஆரிய மொழிகட்குரிய 'குடி' என்னுஞ் சொல் லையுந் தன்னகத்துக் கொண்டுள்ளதென்று, கால்டு வெலார் கூறியிருப்பதைக் கூர்ந்து நோக்குக. (வ.மொ. வ.பக்.274,275).

கருத்தல் = செய்தல், வினையாற்றுதல் என்ற பொருளுடன், வினை வடிவத்தில் நெல்லை மீனவர் வழக்கில், ஆளப்படுதல் நோக்குக. உழைப்பாளியைக் "கருவாளி" எனக் குறிக்கும் வழக்கம், இன்றும் அங்கு உள்ளது.

த. கரு > **Skt**. kri தமிழிலிருந்துக் கடன் கொள்ளப்பட்ட இவ்வினை வடமொழியில் பெருவழக்காக வழக்கூன்றியுள்ளது. இவ் வினை யடியிலிருந்தே, கரம்(கை), கரி (தும்பிக்கையை உடைய யானை) என்பன போன்ற பல சொற்கள் உருவாகியுள்ளன.

**கரு**[2] *karu-,* பெ.(n.) 1.கருப்பு (தேவா.10,1.); dark colour. 2.நிறம் (பிங்.); colour, tint, tinge. 3.அழகு; beauty.

*[கள் → கரு.]*

karu-u; black, an euphonised form of which is kār; Gujarāthi karo, comp, Turkish quara or kara; Calmuck chara; Mongolian kara; Japanese Kuroi - one of the eight words belonging to the language of the ancient Turks of the Altae; recorded by the Chinese, was koro, black. These Scythian affinities are too distint to admit of the smallest doubt. There is evidently a connection between this Scytho-Dravidian root and this Sanskrit kāla, black; Tamiḷ kāḷam; from which there is a derivative, kāḷagam, that throws light on the relation of kāla to kar-u. Comp. Greek K-aivos(Kel-ainos). Probably also kri(kar), the radical portion of Krishṇa, Sans. black cadjectivel form kārshṇa) is related to the same Scythian theme, and ultimately to kāl-a (C.G.D.F.L.p.616).

**கரு**[3] *karu,* பெ.(n.) குப்பைமேடு (பிங்); dunghill.

*[கரி → கரு.]*

**கரு**[4] *karu,* பெ.(n.) கருவிகளில் உள்ள பல்; prong, barb, pine, spike. *"கருவாணையுற"* (அருட்பா. அறநிலை1.).

**மறுவ.** கருக்கு

*[குல் → குரு → கரு. குல் = குத்துதல். கரு = முட்போன்ற கூர்மையுடையது.]*

**கரு**[5] *karu,* பெ.(n.) 1. கருப்பம்; foetus, embryo. *"மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்" (புறநா.34:2.).* 1. முட்டைக்கரு; yolk of an egg. *"புறவுக் கருவன்ன புன்புல வரகின்" (புறநா.34:9).* 3. முட்டை; egg, germ. 4. உடம்பு; body. *"கருவுள் வீற்றிருந்து" (திவ்.திருவாய்.5.10,8.).* 5. பிறப்பு; birth. *"கருவைத் துடைப்ப" (பிரபுலிங். கொக்கி.15).* 6. குழந்தை; child. *"சோரர்தங் கருவைத் தங்கள் கருவெனத் தோளி லேந்தி" (பாரத.நிரை.116).* 7. குட்டி; the young of an animal. *"காசறைக் கருவும்" (சிலப். 25:52.).* 8. அச்சுக்கரு; mould, matrix. *"திருவுருவினைக் கருவினாற் கண்டு" (திருவிளை. இரச.9.).*

**ம., க.** கரு; **து.** கரு; **தெ.** கருகு, கருவு; **கோத.** கர்வ்; **பர்.** கொ்ப; **கட.** கர்பெ; **உரா.** கர்ப்ப.

*குருத்தல் = தோன்றுதல். குரு → கரு → (கருப்பு) → கருப்பம். கரு = சூல், மீன், முட்டை, சேய், குட்டி. வடமொழியாளர் 'க்ரு' (விளி) என்றும், grabh → grah (பற்று) என்றும், மூலங்காட்டுவது பொருந்தாது.*

**த.** கரு > **Skt.** garbha (வ.மொ.வ.108).

சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் அகரமுதலி, கரு என்னும் தூய தென்சொல்லை, கருப்பம் (garbha) என்னும் வடசொல்லினின்று திரித்துள்ளது. வடசொல்லே தென் சொல்லினின்று தோன்றியிருத்தல் வேண்டும் [வே.க. 148.].

**கரு[6]** *karu,* பெ.(n.) உயரம்; height.

*[குல் → குரு → கரு.]*

**கரு[7]** *karu,* பெ.(n.) 1. சிறப்புடைக் காரணம்; efficient cause. *"கருவா யுலகினுக்கு" (திருவாச. 10,14).* 2. நடு; middle. *"உள்ளூர்க் கருவெலா முடல்" (கம்பரா.கிங்கரர்.44).* 3. உட்பொருள் (வின்.); substance, contents. 4. அடிப்படை; foundation, basement. *"கருவோ டிவரடி... காணாமையின்" (இரகு.நகரப் 20).* 5. கருப்பொருள்; characteristic regional features of the five tracts. "தெய்வ முணாவே... கருவென மொழிப" (தொல்.பொருள்.18) 6. எண்வகைக் கருமக்கரு(வின்.); ingredients for magical preparations employed in aṭṭa karumam. 7. அணு; atom. *"கருவளர் வானத்து" (பரிபா.2:5).* 8. இயற்கையறிவு(வின்.); genius, ingenuity.

*[குல் → குரு → கரு. கரு = நடு.]*

*ME., **E.** core.*

**கரு[8]** *karu,* பெ(n.) பெருமை; greatness.

*[குல் → குரு → கரு (மு.தா.236). கருமாடம் = உயர்ந்த மாளிகை. கருநாடு = பெரிய நாடு.]*

**கரு[9]** *karu,* பெ(n.) 1.பொன்; gold. *"கருக் கலந்த காளமேக மேனியாய்" (திவ்.திருச்சந்த.104, வியா. ப.305).* 2. காரியம் (சம்.அக.); வணிகம்; business, affair. 3. முகில்(சம்.அக.); cloud. 4. நடுமேடு (அக.நி.); central elevation, that which is raised in the middle.

*[குரு → கரு. குரு = ஒளி, சிறப்பு, அழகு, மேன்மை.]*

**கருக்கட்டான்** *karu-k-kaṭṭāṉ,* பெ.(n.) ***கருக்கு வாய்ச்சி*** பார்க்க; see *karukku-vāycci.*

*[கரு + கட்டான்.]*

**கருக்கட்டு[1]-தல்** *karu-k-kaṭṭu-,* 5 செ.கு.வி. (n.) 1. மாழையால் (உலோகத்தால்) உருவம் வார்ப்பதற்கு அச்சுக்கரு அமைத்தல்; to make a mould. 2. மழைக் குணங் கொள்ளுதல்; to become dense with watery vapour, as clouds.

**க.** கருக்கட்டு

*[குரு → கரு[3] + கட்டு.]*

**கருக்கட்டு[2]-தல்** *karu-k-kaṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) எண்ணுதல், நினைத்தல்; ஆய்வு செய்தல்; to think, to consider.

*[கரு + கட்டு.]*

**கருக்கட்டை** *karu-k-kaṭṭai,* பெ.(n.) நன்கு முற்றிய மரம் (ம.அக.); fully grown wood.

*[கரு + கட்டை.]*

**கருக்கண்ணி** *karu-k-kaṇṇi,* பெ.(n.) வெள்ளைக் கண்ணி; clerodendron.

*[கரு + கண்ணி.]*

**கருக்கபாளையம்** *karukkapāḷaiyam,* பெ.(n.) ஈரோடு மாவட்டத்துச் சிற்றூர்; a village in Erode district.

*[கருக்கன் + பாளையம் - கருக்கம்பாளையம் → கருக்கபாளையம்.]*

**கருக்கம்** *karukkam,* பெ.(n.) கார்முகில்; rain-cloud. *"கருக்க மெல்லாங் கமழும் பொழில்" (தேவா.884,8.).*

*[கருக்கு → கருக்கம். (வே.க.122.) கருகு → கருக்கு.]*

**கருக்கம்புல்** *karukkam-pul,* பெ.(n.) அறுகம்புல்; karigalli grass. களையெடுத்தாலும் கருக்கம்புல் வளர்ந்துகொண்டே இருக்கிறது (செங்.வ.).

**க.** கருக்கெ; **தெ.** கரிக; பட. கரிக்கெ.

**Mar.** gavat; **Guj.** ghās; **H., U.** ghās; **Punj.** ghāh; **Sind.** gāhu; **Kas.** gāsu; **Beng.** gās; **Ass.** ghanh; **Ori.** ghās; **Chin.** cao; **E.** grass; **M.E.** gras, gres, gers; **O.E.** graes; **O.N.,**

**O.S., DU., G., O.H.G., M.H.G.,** goth, gras; **Dan.** graes; **Swed.** gras; **L.**gramen.

*[அறுகம் → அருக்கம் → கருக்கம் + புல்.]*

**கருக்கரிவாள்** *karukkarivāḷ*,பெ.(n.) பற்கள் உள்ள அரிவாள்; sickle with serrated edge.

*[கருக்கு + அரிவாள்.]*



கருக்கரிவாள்

**கருக்கரை-தல்** *karukkarai-*, 4 செ.கு.வி.(v.i.) கருப்பஞ்சிதைதல்; to miscarry.

*[கரு + கரை-.]*

**கருக்கல்**[1] *karukkal*, பெ.(n.) 1.காரிருள்; darkness. அமாவாசைக் கருக்கல் (வின்.). 2. மங்கலிருட்டு; twilight, விடியற்காலைக் கருக்கிருட்டு (மு.தா.180). 3. காலையில் பொழுது விடியும் முன் உள்ள மெல்லிருட்டு ; pre-dawn darkness. 4. வானத்தில் முகில் படிதல்; cloudiness. வானம் கருக்கலிட் டிருக்கிறது (உ.வ.). 5. காய்ந்த பயிர் (யாழ்ப்.); sunburnt paddy crop. 6. ***கருக்கல்நெல்*** (வின்.) பார்க்க; see *karukkal-nel.*

ம.கருக்கல்; தெ.கனுமபீபு.

*[கார் → கரு → கருத்தல் = கருப்பாதல். கரு → கருகு= நிறங்கருத்தல், இருளாதல், பயிர்தீய்ந்து போதல். கருகு →கருக்கு = மருந்துச்சரக்கு; காய்ச்சிய சாறு. கருக்கு →கருக்கல் (வேக.122).]*

**கருக்கல்**[2] *karukkal*, பெ.(n.) சப்பட்டை (யாழ்.அக.); shoddy, useless. *"கருக்கா மெருகுப் பச்சை நெய்யிதே" (தைல.தைலவ.84).*

*[கரு = மேடு, திட்டு. கரு →கருக்கல் = மேற்புறம் திட்டானது.]*

**கருக்கல்**[3] *karukkal*, பெ.(n.) வெப்பத்தால் கருகுதல்; withering.

*[குள் → கள் → கரு → கருக்கல். கரு=கருகல், வேதல்.]*

**கருக்கல் நெல்** *karukkal-nel*, பெ.(n.) மணிபிடியாத நெல்; (இ.வ.); thin corn of paddy, not fully matured.

*[குரு → கரு → கருக்கல் + நெல். கருக்கல் = கரு அளவிலேயே வளர்ச்சி நின்று போன நெல்.]*

**கருக்கலிடு-தல்** *karukkal-iḍu-*, 20 செ.கு.வி.(v.i.) அடர்த்தியாகக் கார்மேகம் திரளுதல்; to become dark with clouds, as the sky. வானங் கருக்கலிட்டிருக்கிறது (உ.வ.).

*[கருக்கல் = கருமேகத் திரட்சி. கருக்கல் + இடு. 'இடு (து.வி.)]*

**கருக்கலை**[1]**-தல்** *karukkalai-*, 2 செ.கு.வி.(v.i.) கரு உரிய வளர்ச்சி பெறுவதற்கு முன் அழிதல்; to get aborted.

*[கரு + கலை-.]*

**கருக்கலை**[2]**-த்தல்** *karukkalai-*, 4செ.குன்றாவி.(v.t.) கருவை அழித்தல்; to cause to abort.

*[கரு + கலை.]*

**கருக்கலைப்பு** *karukklaippu*, பெ.(n.) கருவழித்தல்; abortion.

*[கரு+கலை – கலைப்பு. 'பு'.சொ.ஆ.ஈறு.]*

கருவளர் காலத்தின் முதல் இருபத்தெட்டு கிழமைகளுள் தாயின் உடலைவிட்டு வெளிவந்து தனியாக வாழக்கூடிய தன்மையை ஒரு கரு அடையாத நிலையில் கருப்பையினின்று முதிர்கரு வெளியேற்றப்படுவதே கருக்கலைப்பாகும். கருக்கலைதல் செயற்கை முறையாலன்றி இயல்பாகவும் நிகழலாம்.

**கருக்கழி-தல்** *karukkaḻi-*, 2 செ.கு.வி.(v.i.) 1. கூர்மழுங்குதல் (வின்.); to lose sharpness, as the edge of a cutting instrument. 2.புதுமை குலைதல்; to lose freshness, as cloth. சேலை கருக்கழிந்து விட்டது (கொ.வ.).

*[கரு = கூர்மை, புதுமை. குரு → கரு + கழி-.]*

**கருக்கன்**[1] *karukkaṉ*, பெ.(n.) ஆணின் இயற்பெயர்; proper name of a male.

*[கரு → கருக்கு + அன். கரும் = பெருமை, உயர்ச்சி.]*

**கருக்கன்**[2] *karukkaṉ,* பெ.(n.) எலி; rat.

*[கரு → கருக்கன் (கரியது).]*

**கருக்கா** *karukkā,* பெ.(n.) எலியின் முகம் போன்ற, வெண்மை நிறமுடைய ஒருவகை மீன் (நெல்லை. மீனவ.); a kind of fish.

*[கருக்கன் → கருக்கா (கொ.வ.). கருக்கன் = எலி.]*

**கருக்காக்கு-தல்** *karuk-kā-kku-,* 5 செ.குன்றாவி. (v.t.) கூராக்குதல்; to sharpen.

*[கரு → கருக்கு + ஆக்கு.]*

**கருக்காடி** *karukkāḍi,* பெ.(n.) சிறிய இறால்மீன் (முகவைமீனவ.); a kind of small fish, prawns

*[கரு = கூர்மை, சிறுமை. கரு → கருக்கு + (ஆனி)ஆடி.]*

**கருக்காப்பாரை** *karukkā-p-pārai,* பெ.(n.) கடல்மீன் வகை; horse mackerel, silvery.

*[கருக்காய் = பிஞ்சு, இளமை. கருக்காய் + பாரை – கருக்காய்ப்பாரை → கருக்காப்பாரை.]*

**கருக்காம்பாறை** *karukkām-pāṟai,* பெ.(n.) இரத்த சூறை மீன்; tiny fish.

*[கருக்கு + ஆம் + பாறை.]*

**கருக்காமரம்** *karukkā-maram,* பெ.(n.) ***கருக்குவாய்ச்சி(வின்.)*** பார்க்க; see *karukku-vāycci.*

*[கருக்குத்தாமரம் → கருக்காமரம்.]*

**கருக்காமலை** *karukkāmalai,* பெ.(n.) காஞ்சிபுரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kanchipuram Dt.

*[கருக்கன் + மலை –கருக்கன்மலை→ கருக்கான்மலை→ கருக்காமலை.]*

**கருக்காய்**[1] *karukkāy,* பெ.(n.) பிஞ்சு; young and immature fruit. *“கருக்காய் கடிப்பவர்போல்” (திவ். திருவிருத்.64).*

**ம.**கரிங்ங, கரிக்கு; **து.**தர்தாயி; **கட.** கர்கெ (பிஞ்சு மாங்காய்).

*[குரு → கரு + காய் – கருக்காய் = கரு நிலையில் அல்லது பிஞ்சு நிலையில் உள்ள காய்.]*

**கருக்காய்**[2] *karukkāy,* பெ.(n.) 1. ***கருக்கு*** பார்க்க; see *karukku,* 2. எள்ளு கொள்ளு முதலியவற்றின் மாறு (திருநெல்.); dry stalk, as seasame, gram, etc, after threshing out the grains. 3. முற்றாத காய் (சொ.ஆக.67.; unripe fruit.

*[கரு + காய் – கருக்காய் → கருக்காய்ந்தது, வளர்ந்து முற்றியது அல்லது வெப்பத்தால் கருகியது.]*

**கருக்காலம்** *karu-k-kālam,* பெ.(n.) மகப்பேற்றுக் காலம்; gestation period.

*[கரு + காலம்.]*

**கருகாவூர்** *karugāvūr,* பெ.(n.) தேவார வைப்புத் தலங்களுள் ஒன்று; name of a village *“கருகாவூரார்” (தேவார. திருவீழி. 19.).*

*[கரு + கா + ஊர்]*

**கருக்கான்** *karukkāṉ,* பெ.(n.) 1. எலி; rat. 2.பெருக்கான், பெருச்சாளி; bandicoot.

*[கரு = பெரிய. கருக்கான் = பெரிய எலி.]*

**கருக்கானபணம்** *karukkāṉa-paṇam,* பெ.(n.) புதுநாணயம் (வின்.); newly minted money.

*[குரு → கரு → கருக்கான் + பணம். கரு = புதியது.]*

**கருக்கானவன்** *karukkāṉavaṉ,* பெ.(n.) 1. ஒழுங்குள்ளவன்; straight forward man. 2. கண்டிப்புள்ளவன்; strict man.

*[கரு→ கருத்து → கருக்கு + ஆனவன் – கருக்கானவன்.]*

**கருக்கிக்கொடு-த்தல்** *karukki-k-koḍu-,* 4 செ.கு.வி. (v.i.) பத்தியத்துக்குக் கஞ்சி முதலியன காய்ச்சிக் கொடுத்தல் (வின்.); to cook food, as slops, and give it to a patient, as diet

*[கருக்கி + கொடு.]*

**கருக்கிடு-தல்** *karukkiḍu-,* 18 செ.குன்றாவி.(v.t.) கூர்மையாக்குதல் (வின்.); to grind, whet, sharpen edge.

*[கருக்கு = வெப்பமுண்டாக உரசித் தேய்த்துக் கூர்மையாக்குதல்.]*

*[கருக்கு + இடு-.]*

**கருக்கிடை** *karu-k-kiḍai,* பெ.(n.) கலந்தாய்வு (ஆலோசனை) (யாழ்.அக.); counsel, consideration.

*[குரு → கரு → கருத்து + இடு – கருத்திடு → கருத்திடை → கருக்கிடை (கொ.வ.). இடு → இடை (பெ.).]*

**கருக்கு[1]–தல்** *karukku-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. கருகச்செய்தல்; to burn, scorch, tan, darken by heat. 2. காய்ச்சுதல்; to toast, fry, parch, boil. *"கருக்கா மெருகுப்பச்சை நெய்யிதே" (தைலவ. தைல.84).* 3. எரித்தல்; to burn up, consume. *"இவன்றனைக் கருக்கி" (அரிச்.பு.மயான.33).* 4.திட்டுதல்; to harass, to abuse. ஆளைக் கருக்கிப் போட்டார்கள் (உ.வ.).

**க.** கரகிசு; **பட.** கரக்கு.

*[கரு → கருகு (த.வி.) → கருக்கு (பி.வி.) = வெப்பத்தாற் கருக்குதல்.] (மு.தா.180)*

**கருக்கு[2]–தல்** *karukku-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. செய்தல்; to do. 2. வெட்டுதல்; to cut.3. உருவம் துக்குதல்; to engrave a figure. கருக்கிய கோழி(அரசலவூர் கல்.). 4. எழுத்துப் பொறித்தல்; to engrave script.

*[கரு → கருக்கு.]*

**கருக்கு[3]** *karukku,* பெ.(n.) 1. ஆயுதப் பற்கூர்; teeth of a saw, of a sickle, sharp edge of a newly ground cutting instrument. என் ஈரலைக் கருக்கரிவாள் கொண்டு அறுக்கிறது (உ.வ.). 2. பனைக்கருக்கு, பனைமட்டைத் தண்டின் விளிம்புகளில் அமைந்த கூர்மையான பகுதி; jagged edge of the palmyra leaf stalk. *"கருக்கின்... போந்தை" (குறுந்.281).* 3. இலையின் கருக்கு (வின்.); jagged indentation of leaves. 4. கூர்மை; sharpness. *"கருக்கு வாளருள் செய்தான்" (தேவா. 35,8).* 5. அறிவுக்கூர்மை; keenness of intellect. மூத்த பையன் கருக்காய் இருக்கிறான் (உ.வ.). 6. நேர்மை; strictness, accuracy, correctness. 7.பனங்காய்த் தோற்கருக்கு(வின்.); external rind of palmyra fruit which dries and peels off in flakes. 8.கொத்துளி (Pond.); a kind of chisel.

**தெ.**கருகு

*[குல் → கரு → கரு → கருக்கு.]*

**கருக்கு[4]** *karukku,* பெ.(n.) 1. மருந்துச் சரக்கைக் கருக்கிக் காய்ச்சிய சாறு (கியாழம்); decoction in water of several charred drugs. 2.சாம்பலாக்கிய மருந்துச் சரக்கு; medicinal drugs burnt to ashes. 3. போதைப்பொருள்; narcotic drug as hemp. *"கஞ்சாக் கருக்கு வகை" (அழகர் கல. 41).*

**தெ.**கருகு

*[கரு → கருக்கு (காய்ச்சியது).]*

**கருக்கு[5]** *karukku,* பெ(n.) 1. பொறித்த ஓவியம்; engraving carving, embossed work. "முகையுரு மேற்சேரி (இட்) டியாடிக்க கரு(க்)கிய கோழி" (அரசலாவூர்.கல்.), 2. புதுமை; newness, freshness. பாத்திரம் கருக்கழியவில்லை (உ.வ.). 3. தூய்மை; neatness, tidiness, அவன் காரியமெல்லாம் கருக்காயிருக்கும் (உ.வ.). 4. அழகு; beauty. *"கருக்குச் சரிகைக் கச்சை" (கவிகுஞ்.4).*

*[குரு → கரு → கருக்கு.]*

**கருக்கு[6]** *karukku,* பெ.(n.) இளநீர் (நெல்லை.); tender coconut.

*[கரு = பிஞ்சு. கரு → கருக்கு.]*

**கருக்கு[7]** *karukku,* பெ.(n.) மரம் வெட்டுதல் போன்ற வற்றில் உண்டாகும் பேரொலி; a sharp noise like that made in cutting or sawing (ஆந்.).

**தெ.**கருக்கு

*[கரு → கருக்கு = தீட்டுதல், உரசுதல் அறுத்தல், வெட்டுதலால் உண்டாகும் ஓசை.]*

**கருக்குச்சுருட்டு** *karukku-c-curuṭṭu,* பெ.(n.) ஏய்ப்பு (வஞ்சகம்) (வின். ); guilefulness, crookedness of mind.

*[கரு → கருக்கு = மூலம், அடிப்படை, முதற்பணம். கருக்கு + சுருட்டு.]*

**கருக்குப்பணி** *karukku-p-paṇi,* பெ.(n.) சிற்பவேலை, கடைசல் வேலை; embossed work, sculpture fret-work.

**ம.**கருக்குப்பணி; **க.**கரு.

*[கருக்கு + பணி.]*

**கருக்குப்பீர்க்கு** *karukku-p-pīrkku,* பெ.(n.) ஒருவகைப் பீர்க்கங்கொடி; a kind of sponge gourd.

*[கருக்கு + பீர்க்கு.]*

**கருக்குமட்டை** *karukku-maṭṭai,* பெ.(n.) கருக் குள்ள பனைமட்டை; stem of a palmyra-leaf with the sharp jagged edges.

*[கருக்கு + மட்டை.]*

**கருக்குமீசை** *karukku-mīšai,* பெ.(n.) முறுக்கிய மீசை; curled moustache.

*[கருக்கு + மீசை.]*

**கருக்குவராகன்** *karukku-varāgaṉ,* பெ.(n.) புது நாணயம் (வின்.); new pagoda coin on which the figures are well defined.

*[கரு → கருக்கு = பிஞ்சு, இளமை, புதுமை. கருக்கு + வராகன். வராகன் = பன்றி இலச்சினை பொறித்த காசு.]*

**கருக்குவாய்ச்சி** *karukku-vāychi,* பெ.(n.) மரப் பொது; jagged jujube.

*[கருக்கு + வாய்ச்சி.]*

**கருக்குவாய்ப்படு-தல்** *karukku-vāy-p-paḍu-,* 20.செ.கு.வி.(v.t.). ஆயுதவலகு கூர்மைப்படுதல் (வின்.); to become sharp edged, as a cutting instrument.

*[கரு = கூர்மை, கரு → கருக்கு. கருக்கு + வாய் + படு. படுதல் = உண்டாகுதல்.]*

**கருக்குவாள்** *karukku-vāḷ,* பெ.(n.) கூரிய வாள்; sword with a sharp edge. *"கருக்கு வாளருள் செய்தான்" (தேவா.135.8).*

*[கரு = கூர்மை. கரு → கருக்கு. கருக்கு + வாள்.]*

**கருக்குவேலை** *karukku-vēlai,* பெ.(n.) சிற்பவேலை (வின்.); work in stone or metal raised work, basrelief, fret-work.

*[கருக்கு + வேலை – கருக்கு வேலை = காய்ச்சி, வார்க்கும் வேலை வார்ப்பு வேலை, இது மரச்சிற்பம், கற்சிற்பம் செதுக்குதலையும் குறித்தது.]*

**கருக்குழாய்** *karu-k-kuḻāy,* பெ.(n.) கருப்பப்பைக் குழாய்; womb tube.

*[கரு + குழாய்.]*

**கருக்குழி** *karu-k-kuḻi,* பெ.(n.) கருப்பப்பை, சூற்பை; womb. *"கருக்குழி வாய்ப்படுந் தொல்லைச் சென்மம்" (மறைசை. 32).*

H. karpāsay

*[கரு + குழி.]*

**கருக்கூட்டம்** *karu-k-kūṭṭam,* பெ.(n.) சூல் கொள்ளல்; conception, impregnation.

*[கரு + கூட்டம்.]*

**கருக்கூட்டு[1]-தல்** *karu-k-kūṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. *கருக்கட்டு–* பார்க்க; see *karu-k-kaṭṭu-.* 2.திட்டமிடுதல், வழிவகுத்தல் (வின்.); to scheme, contrive, plan.

*[கரு + கூட்டு–.]*

**கருக்கூட்டு[2]-தல்** *karu-k-kūṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) சினையாக்குதல்; to impregnate.

*[கரு + கூட்டு.]*

**கருக்கூட்டு[3]-தல்** *karu-k-kūṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) நடுவுநிலைமை பிறழாது செயற்படுதல்; to maintain justice.

*[கரு + கூட்டு.]*

**கருக்கூடு** *karu-k-kūḍu,* பெ.(n.) சினைப்பை (வின்.); ovary.

*[கரு + கூடு.]*

**கருக்கூடு-தல்** *karu-k-kūḍu-,* 5 செ.குன்றாவி.(v.t.) சினையுண்டாதல்; to impregnate, to conceive.

*[கரு + கூடு–.]*

**கருக்கை** *karukkai,* பெ.(n.) கடலூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kadalur taluk.

*[கருக்கன் + ஊர் – கருக்கனூர் – கருக்கை(மரூஉ).]*

**கருக்கொள்(ளு)-தல்** *karuk-koḷ(ḷu)-,* 16 செ.கு.வி.(v.i.); 1. ஒரு பொருளைக் குறித்து எண்ணுதல்; to form a concept in mind, 2. நீர்கொண்ட மேகங்கள் ஒன்றுசேர்தல்; to form clouds. 3. மலர்களில் துகள் (மகரந்தச்) சேர்க்கை நடந்து முடிதல்; to pollinate, 4. குழந்தைப் பேற்றிற்காகக் கருப்பம் உண்டாதல்; to conceive, to be impregnated.

*[கரு + கொள்–.]*

**கருக்கோடு-தல்** *karu-k-kōḍu-,* 5 செ.கு.வி.(v.i.) மீசை அரும்புதல் (உ.வ.); to appear, as young growth, as the soft hair on a young man's upper lip.

*[கரு + கோடு.]*

**கருக்கோளம்** *karu-k-kōḷam,* பெ.(n.) கருவுற்ற முட்டை அடையும் கோள வடிவம்; blastula.

*[கரு + கோளம்.]*

**கருகம்பத்தூர்** *karukambattur,* பெ.(n.) வேலூர் வட்டத்துச் சிற்றூர்; a village in Vellore taluk.

*[கருக்கன் + புத்தூர் – கருக்கம்புத்தூர் → கருக்கம்பத்தூர் (கொ.வ.)]*

**கருகரு–த்தல்** *karu-karu-,* 4 செ.கு.வி.(v.i.) அரிகண்டப்படுத்தல் (இ.நு.த.பெ.அக.); to part into pieces.

*[கரு = கூரிய, சிறிய. கருகரு = சிறிது சிறிதாதல், துண்டம் துண்டமாதல்.]*

**கருகருவெனல்** *karu-karu-v-eṉal,* பெ.(n.) 1.மிகவும் கருமையாதல் குறிப்பு; in onom. expr. signifying utter blackness. 2. செழிப்பாதற் குறிப்பு; onom. expr. signifying flourishing, ever green.

*[கரு + கரு + எனல்.]*

**கருகல்**[1] *karugal,* பெ.(n.) 1.சோறுகறிகளின் காந்தல் (உ.வ.); charred rice or curry, in cooking. 2. கருகின பொருள் (வின்.); dried betel leaves, grain or other vegetation, scorched or blackened by the sun. 3. தீய்ந்து போகை (கொ.வ.); state of being partially charred or over-roasted. 4.நெற்பயிர் போன்ற வகைகளுக்கு வரும் நோய்; disease of paddy crops.

*[கருகு → கருகல்.]*

**கருகல்**[2] *karugal,* பெ.(n.) மங்கல் வெளிச்சம்(வின்.); dusk of the evening or of the dawn. 2. தெளிவில்லா வாக்கு (உ.வ.); obscurity in language, ambiguity in meaning, considered as a defect.

*[கரு → கருகு → கருகல். 'அல்' தொ.பெ. ஈறு.]*

**கருகல்**[3] *karugal,* பெ.(n.) மரகதக் குற்றம் எட்டனுள் ஒன்றாகிய இருள் (சிலப். 14: 184.உரை); a flaw in emeralds, one of eighth such flaws.

*[கருகு → கருகல்.]*

**கருகற்புண்** *karukaṟ-puṇ-,* பெ.(n.) ஆறின புண் (வின்.); healed or dried sore.

*[கருகல் + புண்.]*

**கருகு**[1]**–தல்** *karugu-,* 5 செ.கு.வி.(v.i.) 1.உருகுதல்; to melt, dissolve, liguety. 2. நிறங்கறுத்தல்; to be scorched, scarred, to blacken by fire or the sun; to be tanned, as the face. *"ஒளிகருகா" (பாரத. அருச்.தீர்த்.5).* 3. பயிர் முதலியன தீய்தல்; to turn brown, to wither from lack of water, as plants. 4. இருளுதல்; to become dark, grow dim, to deepen into night, as the shades of evening twilight. *"கருகு கங்குலிற் போதரும்" (உபதேசகா. சைலை.46).*

**க.**கரங்கு, கரகு; **து.**கரகுனி: **தெ.** கரகு; **பட.** கரகு.

*[கள் → கரு → கருகு. கரு = கருப்பாகு(மு.தா.100)]*

**கருகு**[2]**–தல்** *karugu-,* 5.செ.கு.வி.(v.i.) 1.மனம் வருந்துதல்; to be pained. *"இப்படியிருக்கிறவனை நான் கருக நியமிக்கமாட்டேன்" (திவ். பெரியாழ். 2,9,2. வ்யா. ப. 454).* 2. வாடுதல்; to fade, to be famished, உடல் கருகிப் போயிற்று (உ.வ.).

**க.**கருகொள்; **து.**கரகுனி.

*[கள் → கரு → கருகு.]*

**கருகுமணி** *karugu-maṇi,* பெ.(n.) மகளிர் உட் கழுத்தில் அணியும் கறுப்பு மணிவகை; string of small black beads with a pendant in the centre, worn close- fittingly, around the neck by girls and young women generally.

*[கரு → கருகு + மணி – கருகுமணி. கருகு = கரியது.]*

**கருகுமாலை** *karugu-mālai,* பெ.(n.) மாலையில் தோன்றும் மங்கல் வெளிச்சம் (வின்.); twilight, dim light of the evening.

*[கருகு + மாலை.]*

**கருகூலம்**[1] *karukūlam,* பெ.(n.) **கருவுகலம்** பார்க்க; see *karuvukalam* *"கருகூலத்... தேடிவைத்த கடவுண்மணியே" (மீனாட். பிள்ளைத். முத்த.1).*

*[கருவுகலம் → கருகூலம்.]*

**கருகூலம்**[2] *karukūlam,* பெ.(n.) கருப்புக்கட்டி (யாழ்.அக.); palmyra-jaggery.

*[கரும்புல் + கூழ் + அம் – கரும்புல் கூழம். கருங்கூழம் → கருகூலம் (கொ.வ.). கரும்புல் = கரும்பு.]*

**கருங்கஞ்சம்** *karuṅ-kañjam,* பெ.(n.) வெண்கலம் (சங். அக.); bell-metal.

*[கரும் + கஞ்சம்.]*

**கருங்கடல்**[1] *karuṅ-gaḍal,* பெ.(n.) ஐரோப்பா கண்டங்களுக்கு நடுவில் உள்ள ஒரு கடலின் பெயர்; the black sea.

ம. கரிங்கடல்

*[கரு → கரும் + கடல்.]*

**கருங்கடல்**[2] *karuṅ-gaḍal,* பெ.(n.) தூத்துக்குடி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Tuttukudi dt.

*[கரும் + கடலன் – கருங்கடலன் → கருங்கடல். கடலன் = கடல்வணிகன். கருங்கடலனைச் கருங்கடல் என்றழைத்த வழக்கினால் அவன் பெயரிலமைந்த ஊர்.]*

**கருங்கடல்வண்ணன்** *karuṅ-kaḍal-vaṇṇaṉ,* பெ.(n.) திருமால் (திவா.); Vishnu whose complexion is as dark as the colour of the deep sea. 2. ஐயனார் (வின்.); Aiyaṉār.

*[கரும் + கடல் + வண்ணன்.]*

**கருங்கடுக்காய்** *karuṅ-kaḍukkāy,* பெ.(n.) கறுப்புக் கடுக்காய் (பதார்த்த.971.); black variety of chebulic myrobalan (செ.அக.).

*[கரு → கரும் + கடுக்காய் – கருங்கடுக்காய்.]*

**கருங்கடுகு** *karu-ṅ-kaḍugu,* பெ.(n.) கருமை நிற முள்ள கடுகுவகை; balck mustard.

ம. கரிங்கடுகு

*[கரு → கரும் + கடுகு.]*

**கருங்கண்** *karu-ṅ-kaṇ,* பெ.(n.) 1. கரியகண்; dark eye *"கருங்கண் தாக்கலை பெரும்பிறி துற்றெனக்"* (குறுந்–69.). 2. கண்ணேறு படுங் கண் (இ.வ.); evil eye.

மறுவ. கொள்ளிக்கண்

க. கரியகண். ம. கரிங்கண்ணு.

*[கரு → கரும் + கண்.]*

**கருங்கண்ணன்** *karu-ṅ-kaṇṇaṉ,* பெ.(n.) கண்ணேற்றை உண்டாக்கும் பார்வையுடையவன்; one who has evil eye (male). அந்தக் கருங்கண்ணன் பார்வையில் பட்டால் எந்தச் செயலும் வெற்றி பெறாது (உ.வ.).

ம. கரிங்கண்ணன்

*[கரும் + கண்ணன்]*

**கருங்கண்ணாளன்** *karu-ṅ-kaṇṇāḷaṉ,* பெ.(n.) மீன் வகை; a kind of fish. *"ஒலைவாலன் கருங்கண் ணாளன் ஊரிற்பெரிய மீனெலாம்" (பறாளை. பள்ளு.16.).*

ம. கரிங்கண்ணி

*[கரு → கரும் + கண் + ஆளன்.]*

**கருங்கண்ணி**[1] *karuṅkaṇṇi,* பெ.(n.) பருத்தி வகை (G.Tn.D.1.191); a species of cotton.

*[கரும் + கண்ணி.]*

**கருங்கண்ணி**[2] *karu-ṅ-kaṇṇi,* பெ.(n.) 1. கரிய கண் களையுடையாள்; black-eyed woman. *"மையார் கருங்கண்ணி" (திவ். திருவாய்.9,4,1).* 2. கண்ணேற்றை உண்டாக்கும் பார்வையுடையவள்; one who has evil eye (female). 3. மீன்வகை (வின்.); a kind of fish.

ம. கரிங்கண்ணி

*[கரு → கரும் + கண்ணி.]*

**கருங்கண்ணி**[3] *karuṅ-kaṇṇi,* பெ.(n.) பூரான்; centipede (சேரநா.).

மறுவ. ஆயிரக்காலி

ம. கரிங்கண்ணி

*[கரு → கரும் + கண்ணி.]*

**கருங்கண்ணி**[4] *karuṅ-kaṇṇi,* பெ.(n.) நாகப்பட்டினம் மாவட்டத்தில் உள்ள சிற்றூர்; a village in Naga patinam (சேரநா.).

*[கருங்கண்ணன் → கருங்கண்ணி. கருங்கண்ணன் பெயரிலமைந்த ஊர்.]*

**கருங்கண்ணிப்பாறை** *karuṅ-kaṇṇi-p-pārai,* பெ.(n.) ஒருவகை மீன் (வின்.); a kind of fish.

ம. கரிங்கண்ணு

*[கரும் + கண்ணி + பாரை.]*

**கருங்கண்தோகை** *karuṅ-kaṇ-tōgai,* பெ.(n.) மயிலிறகு; peacock's feather (சா.அக.).

*[கரும் + கண் + தோகை.]*

**கருங்கண்வாளை** *karuṅ-kaṇ-vāḷai,* பெ.(n.) மீன் வகை; a kind of fish. *"வாவு கருங்கண்வாளை பவளவாளை" (பறாளை.பள்ளு.16.).*

*[கரும் + கண் + வாளை.]*

**கருங்கத்தரி** *karu-ṅ-kattari,* பெ.(n.) நீல நிறக் கத்தரிக்காய்; purple brinjal (சா.அக.).

*[கரு → கரும் + கத்தரி.]*

**கருங்கத்தலை** *karuṅkattalai,* பெ.(n.) ஒருவகை ஆற்று மீன்; a kind of river fish (சா.அக.).

*[கரு → கரும் + (கல்+தலை – கற்றலை) கத்தலை.]*



கருங்கத்தலை

**கருங்கந்தன்** *karu-ṅ-kandaṉ,* பெ. (n.) கார்க்கோடல்; acute-leaved mangrove (சா.அக.).

*[கரும் + (காந்தள்) கந்தன்.]*

**கருங்கந்து** *karu-ṅ-kandu,* பெ.(n.) நெற்களத்தில் பொலிக் கந்துக்கு அடுத்துவிழும் பதர் (வின்.); the second layer of chaff in a threshing floor, next to the poli-k-kandu.

**மறுவ.** கருக்காய் நெல்

*[கரும் → கந்து.]*

**கருங்கரணை** *karuṅkaraṇai,* பெ.(n.) கருப்புக் கரணைக் கிழங்கு; a black variety of elephant foot yam (சா.அக.).

*[கரும் + கரணை.]*

**கருங்கரப்பான்** *karuṅkarappāṉ,* பெ.(n.) கரப்பான் வகை; a kind of dark eruption.

*[கரும் + கரப்பான்.]*

**கருங்கரிசலாங்கண்ணி** *karuṅkarišalāṅkaṇṇi,* பெ.(n.) கருநிறக் கரிசலாங் கண்ணி; a black or blue variety of the eclipse plant.

*[கரிசல் + ஆம் + கண்ணி.]*

**கருங்கரிசாலை** *karuṅkarišālai,* பெ.(n.) ***கருங்கரி சலாங்கண்ணி***பார்க்க; see *karu-ṅ-karišalāṅkaṇṇi* (சா.அக.).

*[கரும் + கரிசாலை. கரிசலாங்கண்ணி → கரிசாலை.]*

இது சித்தர் கூறியுள்ள பெரு மூலிகை இருபத்தி மூன்றில் ஒன்று. இதன் சிறப்பு திருமூலர் கருக்கிடை என்னும் நூலில் பின் வருமாறு குறிக்கப்பட்டு உள்ளதால், இது காயகற்பத்திற்குச் சிறந்ததாம் [சா.அக.].

*"தின்னக் கரிசாலை தேகந் திரை போக்கும்*
*தின்னக் கரிசாலை சிறந்த நரை போக்கும்*
*தின்னக் கரிசாலை தேகஞ் சிறு பிள்ளை*
*தின்னக் கரிசாலை சிதையாதிவ் வாக்கையே.*

**கருங்கரிப்பான்** *karuṅkari-p-pāṉ,* பெ.(n.) ***கருங்கரி சலாங்கண்ணி*** பார்க்க; see *karu-ṅ-karišalāṅ kaṇṇi.*

*[கல் + (கரி → கரிப்பு) கரிப்பான்]*

**கருங்கல்** *karuṅkal,* பெ.(n.) 1. மலைக்கல்;boulder of black rock, large granite stone. *"எருமையன்ன கருங்கல்" (புறநா,5,1.).* 2. ஞெகிழிக்கல், சக்கிமுக்கிக் கல் (தைலவ.தைல.); flint for striking fire. 3. பாறை யுடைத்த கல்; pebble or stone. 4. சித்திரக்கல்; ornamental granite of bright colour. 5. பொன்னின் மாற்றறியப் பயன்படுத்தும் உரைகல்; a black siliplous fossil touch stone, 6. காரீயக்கல்; black lead stone-Graphite. 7. தீ முருகற் செய்நஞ்சு (பாடாணம்); a kind of mineral poison with properties of phosphorous.

**ம., பட.** கரிங்கல்லு **க.** கர்கல்.

*[கரும் + கல்.]*

**கருங்கலம்** *karuṅkalam,* பெ.(n.) கருநிற மட் பாண்டம்; earthen vessel. *"கருங்கலந் தோய் விலாக் காமர் பூந்துறை" (சீவக.97.).*

**மறுவ.** கருஞ்சட்டி

**ம.** கரிங்கலம்

*[கரும் + கலம்.]*

வளைந்து காய்ந்த மண் ஏனங்களைப் பெரிய கலத்தினுள் இட்டு, காற்றுப்புகாமல் மூடிச் சுடும்போது, சுட்ட ஏனங்கள் முழுதும் கருமையாக இருக்கும்.

**கருங்கலி**[1] *karuṅgali,* பெ.(n.) வற்கடம் (பஞ்சம்); famine. புதுமதிபோல வெண்குடைமீமிசை நிழற்றக் கருங்கலியொளித்து வன்பிலத்திடைக் கிடப்ப.

மறுவ. வறம், வற்கடம்.

*[கரும் + கலி கரும் = மிகுந்த. கலி = துயர்.]*

**கருங்கலி**[2] *karuṅkali,* பெ.(n.) ***கருங்கற்றாழை*** பார்க்க see *karuṅkaṟṟāḻai.*

*[கரும் + கலி.]*

**கருங்கழுகு** *karuṅkaḻugu,* பெ.(n.) கருப்பு நிறக் கழுகு; black vulture; king vulture (சா.அக.).

*[கரும் + கழுகு.]*

பிற கழுகுகள் இதைக் கண்டு அஞ்சும் இயல்புடையன.


கருங்கழுகு

**கருங்கழுதை** *karuṅkaḻudai,* பெ.(n.) கருப்பு நிறம் வாய்ந்த கழுதை; black ass (சா.அக.).

ஒ.நோ. கருநாய், கரும்பூனை.

*[கரும் + கழுதை]*

**கருங்களத்தூர்** *karuṅkaḷattur,* பெ.(n.) இராமநாத புரம் மாவட்டத்தில் உள்ள சிற்றூர்; a village in Rāmaṉādapuram district.

*[கரும் + களம் + அத்து+ ஊர்–கருங்களத்தூர். 'அத்து' சாரியை.]*

**கருங்களம்** *karuṅkaḷam,* பெ.(n.) களைவெட்டி; grass hoe (ம.அக.).

*[கரும் + களம். கலம் → களம்.]*

**கருங்களமர்** *karuṅkaḷamar,* பெ.(n.) உழுதுண்ணும் வேளாளரில் ஒருவகையினர்; a sect in vēḷāḷas who are tillers of the soil (பழ.தமி.109.).

*[கரு → கரும் + களமர். கருத்தல் = செய்தல், உழைத்தல், நிலத்தில் பாடுபடுதல்.]*

**கருங்களர்** *karu-ṅ-gaḷar,* பெ. (n.) கடல்மீன் வகை; sea-fish.

*[கருமை + களர்.]*

**கருங்களிமண்** *karuṅkaḷimaṉ,* பெ.(n.) இரும்புச் சத்து கலந்துள்ள களிமண்; fine clay containing manganese and iron.

*[கரும் + களிமண்.]*

**கருங்கற்றலை** *karuṅkaṟṟalai,* பெ.(n.) 1. கடல்மீன் வகை; umbrine, dark brown or coppery, attaining 9 inch. in length.

*[கரும் + கற்றலை.]*

**கருங்கற்றாழை** *karuṅ-kaṟṟāḻai,* பெ.(n.) ஆனைக் கற்றாழை; elephant aloe.

*[கரும் + தாழை = கற்றாழை. கல் → கரும் = பெரிய.]*

**கருங்காக்கட்டான்** *karuṅkākkaṭṭāṉ,* பெ.(n.) ***கருங்காக்கணம்*** பார்க்க; see *karuṅkākkaṇam.*

*[கரு → கரும் + காக்கட்டான்.]*

**கருங்காக்கணம்** *karuṅkākkaṇam,* பெ.(n.) காக்கணங் கொடிவகை; mussell-shell creeper.

*[கரும் + காக்கணம்.]*

**கருங்காக்கொன்றை** *karuṅkākkoṉṟai,* பெ.(n.) கொடிவகை(புட்ப.3.); a creeper.

*[கரும் + காக்கொன்றை.]*

**கருங்காசி** *karuṅkāši,* பெ.(n.) வெண்கலம்; bell metal.

*[கரும் + காசி. கஞ்சம் → காஞ்சம் → காஞ்சி → காசி (கொ.வ.).]*

**கருங்காசு** *karuṅkāšu,* பெ.(n.) ஈழக்காசு; an ancient coin of Ceylon.

*[கரு = பெரிய. கரு → கரும் → காசு = கருங்காசு.]*

**கருங்காஞ்சொறி** *karuṅkāñcoṟi,* பெ.(n.) கருப்புக் காஞ்செறி; elinbring the black variety of a small chimbix nettle.

*[கரும் + காஞ்சொறி.]*

**கருங்காடிகம்** *karuṅkāḍigam,* பெ.(n.) இனிப்பு நாவற்பழம்; sweet jamoon.

*[கள் → கான் → காளகம் → காடிகம்(கரியது.) கரு → கரும் + காடிகம்.]*

**கருங்காடு**[1] *karuṅkāḍu,* பெ.(n.) சுடுகாடு; cremation ground.*"வெண்டலைக் கருங்காடுறை வேதியன்" (தேவா.39,2).*

*[கரு + கரும் + காடு = கருங்காடு. கருத்தல் = வேகவைத்தல், சுடுதல்.]*

**கருங்காடு**[2] *karuṅkāḍu,* பெ.(n.) திருநெல்வேலி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Thirunelvēli district.

*[கரும் + காடு – கருங்காடு.]*

**கருங்காடை** *karuṅkāḍai,* பெ.(n.) கறுப்புக் காடைப் புள்; black-breasted bustard quail.

*[கரும் + காடை – கருங்காடை.]*

**கருங்காணம்** *karuṅkāṇam,* பெ.(n.) காட்டுக் கொள்; black horse-gram.

*[கரும் + காணம் – கருங்காணம்.]*

**கருங்காந்தள்** *karuṅkāndaḷ,* பெ.(n.) கார்க் கோடல்; brown-backed acute-leaved mangrove.

*[கரும் + காந்தள் – கருங்காந்தள்.]*

**கருங்காமாலை** *karuṅkāmālai,* பெ.(n.) உடலில் ஆங்காங்கு தோன்றும் கருநிறக் காமாலை; a kind of scrofuloderm marked by deep black scars (சா.அக.).

*[கரும் + காமாலை.]*

**கருங்காய்** *karuṅkāy,* பெ.(n.) 1. இளம்பாக்கு (வின்.); dark areca-nut, not yet turned red. 2. சற்றே முதிர்ந்த தவசம் அல்லது காய்;grain or fruit almost ripe. 3. களிமண்கட்டி; clay sand.

*[கருத்தல் = தோன்றுதல், பிறத்தல். கரு = தோன்றிய தொடக்க நிலை. இளமைப்பொருள் சுட்டியது. கரு → கரும் + காய்.]*

**கருங்காய்ப்பனை** *karuṅkāy-p-paṉai,* பெ.(n.) பழம் கருநிறமாக இருக்கும் பனைவகை (சங்.அக.); palmyra tree bearing black fruit.

*[கரும் + காய் + பனை.]*

**கருங்காரம்** *karuṅkāram,* பெ.(n.) காடிக்காரம்; silver nitrate (சா.அக).

*[கரும் + காரம்.]*

**கருங்காரை** *karuṅkārai,* பெ.(n.) சல்லி, சரளைக்கற்களுடன் கலந்த புகைக்கீல் (தார்) கொண்டமைக்கப் படும் தளம்; asphalt.

*[கரும் + காரை.]*

**கருங்கால்** *karuṅkāl,* பெ.(n.) மாட்டு நோய் வகை (கால்.வி.23.); black leg, symptomatic anthrax.

*[கரும் + கால்.]*

**கருங்கால்நாரை** *karuṅkāl-nārai,* பெ.(n.) கரியநிற முள்ள கால்களுடைய ஒருவகை நாரை; a kind of crane with black legs (சாஅக.).

*[கரும் + கால் + நாரை.]*


கருங்கால்நாரை

**கருங்காலக்குடி** *karuṅkāla-k-kuḍi,* பெ.(n.) மதுரை, இராமநாதபுரம் மாவட்டங்களில் உள்ள சிற்றூர்கள்; a villages in Madurai and Rāmanādhapuram dts.

*[கருங்காலி + குடி – கருங்காலிக் குடி → கருங்காலக்குடி (கொ.வ.) கருங்காலி = கருங்காலிபுரம்.]*

**கருங்காலன்** *karuṅkālaṉ,* பெ.(n.) ஒருவகைக் கருப்பு எலி; a black rat (சா.அக.).

*[கரும் + காலன்.]*

**கருங்காலி**[1] *karuṅkāli,* பெ.(n.) எருமையூர் (மைசூர்)க் காடுகளில் காணப்படும் கருநிற மரம்; black wood/ coromandal ebony of Mysore. 2. மரவகை; Ceylon ebony. 3. எட்டி (மலை); strychnine tree. *'கருங்காலி உலக்கைத்கு வெள்ளிப்பூண் கட்டினதுபோல' (பழ.).*

ம. கரிங்காலி; க. கரிமர, கக்கலி.

*[கரும் + காலி.]*

**கருங்காலி**[2] *karuṅgāli* பெ.(n.) 1. தொழிலாளர் போராட்டங்களில் பெரும்பான்மையோர்க்கு ஆதரவாகப் போராட்டத்தில் கலந்து கொள்ளாமல் வேலைக்குச் செல்லும் பணியாள்; workman who works for the master whose men are on strike, black leg. 2. ஆளுவத்தை (நிருவாகத்தை) எதிர்ப்பவர்களுடன் இருந்து கொண்டு ஆளுவத்துக்கும்(நிர்வாகத்துக்கும்) ஆதரவாகச் செயற்படுபவர்; black leg scab. தொழிலாளர்கள் 'கருங்காலிகள்' ஒழிக என்று கூக்குரலிட்டனர் (உ.வ.).

ம. கரிங்காலி

*[கரும் + காலி.]*

**கருங்காலி**[3] *karuṅgāli* பெ.(n.) திருவள்ளூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Thiruvaḷḷur dt.

*[கரும் + காலி – கருங்காலி (கருங்காலிமரம்).]*

**கருங்காலி**[4] *karuṅgali,* பெ.(n.) புன்செய் நிலத்தில் விளையும் கருப்பு நிற நெல்வகை; a species of paddy which grows in dry land.

*[கரும் + காலி.]*

**கருங்காலிப்பட்டி** *karuṅgāli-p-paṭṭi,* பெ.(n.) வேலூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Vēlur dt.

*[கருங்காலி + பட்டி– கருங்காலிப்பட்டி. கருங்காலி = கருங்காலிபுரம்.]*

**கருங்காலிப்பட்டு** *karuṅgāli-p-paṭṭu,* பெ.(n.) விழுப்புரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Villuppuram dt.

*[கருங்காலி + பற்று – கருங்காலிப் பற்று → கருங்காலிப் பட்டு.]*

**கருங்காலிப்பாடி** *karuṅgāli-p-pāḍi,* பெ.(n.) மீவேண்ணாட்டைச் சார்ந்த ஊர்; a village of mīvēṇṇāḍu. *"மீவேண்ணாட்டு கருங்காலிப்பாடி ஆள்" (த.தொ.1971/113 கி.பி ஏழாம் நூற்றாண்டு. முதலாம் மகேந்திரவருமனின் 14 ஆம் ஆண்டு.).*

*[கருட்காலி + பாடி. கருங்காலி = மரப்பெயர்.]*

**கருங்காலிப்பாடிப்பட்டு** *karuṅgāli-p-pāḍi-p-paṭṭu,* பெ.(n.) திருவண்ணாமலை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Thiruvannamalai dt.

*[கருங்காலி + பாடி + பட்டு– கருங்காலிப்பாடிப்பட்டு.]*

**கருங்காவகம்** *karuṅ-kāvagam,* பெ.(n.) கடுக்காய்ப்பூ; gallnut flower (சா.அக.).

*[கரும் + (காவிகம்) → காவகம்.]*

**கருங்காவயல்** *karuṅgāvayal,* பெ.(n.) இராமநாதபுரம் மாவட்டதில் உள்ள சிற்றூர்; a village in Rāmanathapuram dt.

*[கருங்காலி + வயல் – கருங்காலிவயல் → கருங்காவயல். கருங்காலி = ஒருவகைமரம்.]*

**கருங்காவி** *karuṅkāvi,* பெ.(n.) ***கருங்குவளை*** (மலை.) பார்க்க; see *karuṅkuvaḷai.*

*[கரும் + காவி.]*

**கருங்காவிகம்** *karuṅkāvigam,* பெ.(n.) கருங்குவளை; blue Indian water lily. 2. அவுரி மருந்துண்டை; indigo cake of commerce (சா.அக.).

*[கரும் + காவிகம்.]*

**கருங்காற்சம்பான்** *karuṅkāṟ-cambāṉ,* பெ.(n.) கருநிறக்காலுள்ள குதிரை வகை (அசுவசா.152.); a species of horse, having dark coloured legs.

*[கரும் + கால் + சம்பான்.]*

**கருங்காற்றலையன்** *karuṅkāṟṟalaiyaṉ,* பெ.(n.) ஒருவகையெலி; a kind of rat (சா.அக.).

*[கருங்கால் + தலையன்.]*

**கருங்கிளி** *karuṅ-kiḷi,* பெ.(n.) கழுத்தைச்சுற்றி கருநிறமுள்ள கிளிவகை; having a black colour around its neck.

ம. கரிங்கிளி

*[கரும் + கிளி.]*



கருங்கிளி

**கருங்கீச்சான்** *karuṅ-kiccāṉ,* பெ.(n.) கருநிறக் கீச்சான் மீன் (மீனவ.); a kind of fish.

*[கரும் + கீச்சான்.]*

**கருங்குங்கிலியம்** *karuṅkuṅgiliyam,* பெ.(n.) கருநிறப் பிசின்; black-dammer.

*[கரும் + குங்கிலியம்.]*

இது வெள்ளைக் குங்கிலியத்தை விட அதிகமான புகை தருவதும் பளபளப்புத் தன்மை கொண்டதுமாகும்.

**கருங்குட்டம்** *karuṅkuṭṭam,* பெ.(n.) குட்டவகை (கலித்.65, உரை); black leprosy.

*[கரும் + குட்டம்.]*

**கருங்குண்டகம்** *karuṅkuṇḍagam,* பெ.(n.) பாறைகளில் முளைக்கும் கருப்புப் பாசி; stone lichen. (சா.அக.).

*[கரும் + குண்டகம். குண்டு = பாறை.]*

**கருங்குண்டு** *karuṅguṇḍu,* பெ.(n.) காசுக்கட்டி; catachue.

*[கரும் + குண்டு. பாக்கைக்காய்ச்சிச் சிறுபகுதிகளாகக் காயவைத்து எடுப்பது காய்ச்சுக் கட்டியாம். இது கருநிறமாகவும் சிறுசிறு துண்டுகளாகவும் இருப்பதால் கருங்குண்டு எனப்பெயர் பெற்றது.]*

**கருங்குண்டுமிளகாய்** *karuṅguṇḍu miḷagāy,* பெ.(n.) கருஞ்சிவப்பு குண்டுமிளகாய்; a blackish chilly which is round in shape.

*[கரும் + குண்டு + மிளகாய்.]*

**கருங்குணம்** *karuṅguṇam,* பெ.(n.) தீக்குணம்; bad, malevolent disposition. *"கருங் குணத்தார் கேண்மை கழிமின்"(சிறுபஞ்.26.).*

*[கரும் + குணம் – கருங்குணம்.]*

**கருங்குந்தம்** *karuṅkundam,* பெ.(n.) கண்ணோய் வகை (வின்.); a disease of the eye.

*[கரும் + குந்தம். குல் → குன்று → குந்தம். குந்தம் = குற்றம், குறைபாடு, நோய்.]*

**கருங்கும்மெனல்** *karuṅkummeṉal,* பெ.(n.) மிக இருளுதல் குறிப்பு (வின்.); phrase signifying pitch dark.

*[கரும் + கும் + எனல் – கருங்கும்மெனல். 'கும்' ஒலிக்குறிப்பு.]*

**கருங்குமிழ்** *karuṅkumiḷ,* பெ.(n.) கருங்குமிழ் பூமரம்; black kandahar tree, bearing blue or black flowers (சா.அக).

*[கரு → கரும் + குமிழ்.]*

**கருங்குமுதம்** *karuṅ-kumudam,* பெ.(n.) ஒருவகைக் கண்ணோய்; a kind of eye disease.

*[கரும் + குமுதம்.]*

**கருங்குயில்** *karuṅkuyil,* பெ.(n.) கரும்பச்சை நிறமுள்ள ஆண்குயில்; the black indian cukkoo.

**ம.** கரிங்குயில்

*[கரும் + குயில். குயிலின் சேவலைக் கருங்குயில் என்றும், பெட்டையைப் புள்ளிக்குயில் என்றும் வழங்குவர்.]*

**கருங்குரங்கு** *karunṅ kuraṅgu,* பெ.(n.) குரங்கு வகை(சீவக.1893,உரை);black monkey.

**ம.** கரிங்குரங்ங்ு

*[கரும் + குரங்கு.]*

**கருங்குரவை** *kauṅkuravai,* பெ.(n.) கருமை நிறமுடையகுரவை மீன்வகை (மீனவ.); ***கருங்குறவை*** பார்க்க; see *karuṅkuṟavai.*

*[கரும் + (குறவை) →குரவை.]*

**கருங்குரா** *karuṅkurā,* பெ.(n.) காட்டுக் கரணைக் கிழங்கு; wild yam root.

*[கரும் + குரா.]*

**கருங்குருந்து** *karuṅkurundu,* பெ.(n.) மருந்து அரைக்கும் குழியம்மி செய்வதற்குப் பயன்படும் கருங்கல்; a black stone for preparing cancave grinding stone used for making medicine.

*[கரு + கரும் + குருந்து.]*

**கருங்குருவி** *karuṅkuruvi,* பெ.(n.) ***கரிக்குருவி*** பார்க்க; see *kari-k-kuruvi. "கருங்குருவி யெந்நாளுங் காக்கைக் கொளித்தே" (திருவாலவா.60.2.).*

**மறுவ.** கரிக்குருவி

**ம.** கரிங்குரிகில்

*[கரும் + குருவி – கருங்குருவி.]*

**கருங்குவளை** *karuṅkuvaḷai,* பெ.(n.) 1. கருநீல நிறக்குவளைப்பூ; blue nelumbo. 2. நெய்தல் பார்க்க(குறிஞ்சிப்.84, உரை.); see neydal.

மறுவ. நீலம், கல்லாரம், பானல், காவி.

*[கரும் + குவளை – கருங்குவளை.]*

**கருங்குழல்** *karuṅkuḻal,* பெ.(n.) கருங்குருவி; common drango.

*[கரு → கரும் + குழல். குழல் = கூந்தல். நீண்டகூந்தல் போன்ற வாலுடையது.]*

**கருங்குழி** *karuṅkuḻi,* பெ.(n.) காஞ்சிபுரம், விழுப்புரம் மாவட்டங்களில் உள்ள சிற்றூர்; a village in Kanchipuram and Villuppuram dt.

*[கரும் + குழி = கருங்குழி.]*

**கருங்குழிக்கரும்பு** *karuṅkuḻi-k-karumbu,* பெ.(n.) காட்டுக் கரும்பு; wild sugarcane (சா.அக.).

*[கரும்குழி + கரும்பு. கருங்குழி என்னும் இடத்தில் முதலில் பயிராக்கப்பட்ட காட்டுக்கரும்பாகலாம்.]*

**கருங்குழித்தாவு** *karuṅkuḻi-t-tāvu,* பெ.(n.) புதுக்கோட்டை மாவட்டத்து அறந்தாங்கி வட்டத்தில் உள்ள ஊர்; a village in Arantangi taluk Pudukkottai dt.

*[கரும் + குழி + தாவு– கருங்குழித்தாவு . தடவு→தாவு (சமமான இடம்).]*

**கருங்குளந்தான்விளை** *karunkuḷandāṉviḷai,* பெ.(n.) குமரிமாவட்டத்து அகத்தீசுவரம் வட்டத்துச் சிற்றூர்; a village in Agathiswaram taluk in Kanniyakumari dt.

*[கருங்குளம் + அத்து + அன் + விளை – கருங்குளத்தன் விளை→ கருங்குளத்தான் விளை. 'அத்து' சாரியை. 'அன்' ஆ.பா.ஈ.று. விளை= காவற்காடு, பனங்காடு.]*

**கருங்குளவி** *karuṅkuḷavi,* பெ.(n.) குளவி வகை; a species of wasp. *"கருங்குளவிச் சூரைத் தூற்றீச்சங் கனிபோல்" (தனிப்பா.1,110,50.).*

*[கரும் + குளவி – கருங்குளவி.]*

**கருங்குளிரி** *karuṅkuḷiri,* பெ.(n.) நஞ்சுள்ள கடற்பாம்பு; poisonous sea-snake.

*[கரும் + குளிரி. குளிர்தல் = சாதல், சாகச்செய்யும் நஞ்சு.]*

**கருங்குற்றி** *karuṅkuṟṟi,* பெ.(n.) 1. கருப்புக்கம்பம்; a black stake or post. 2. ஒருவகைப் புழு; a kind of pest.

ம. கரிங்குற்றி

*[கரு → கரும் + குற்றி. குற்றி = சிறியது, குட்டையானது.]*

**கருங்குறிஞ்சி** *karuṅkuṟiñji,* பெ.(n.) கருநிறப்பூப் பூக்கும் குறிஞ்சி; a kind of medicinal plant.

மறுவ. கருங்குறிஞ்சான், கருங்கோற் குறிஞ்சி.

ம. கரிங்குருஞ்ஞி

*[கரும் + குறிஞ்சி.]*

**கருங்குறிஞ்சிகா** *karuṉkuṟiñjikā,* பெ.(n.) மணித்தக்காளிக்காய்; berries of black night show.

*[கரும + குறிஞ்சி + கா. கரிய சிறிய காய்.]*

**கருங்குறுவை** *karuṅkuṟuvai,* பெ.(n.) மூன்று மாதத்தில் விளையும் ஒருவகை நெல்; a dark variety of paddy maturing in three months.

ம. கரிங்குறுவ

*[கரும் + குறுவை – கருங்குறுவை.]*

**கருங்குன்றி** *karu-ṅ-kuṉṟi,* பெ.(n.) கருநிறக் குன்றி மணி (l.); a black species of crab's-eye.

ம. கரிங்குன்னி

*[கரும் + குன்றி – கருங்குன்றி.]*

**கருங்கூத்து** *karuṅkūttu,* பெ.(n.) இழிவான நாடகம்; drama of a very low order. *"முதுபார்ப்பான் வீழ்க்கைப்பெருங் கருங்கூத்து" (கலித்.65: 29).*

*[கரு = பெரிய, வலிய, கொடிய, தாழ்ந்த, இழிந்த. கரும் + கூத்து.]*

**கருங்கூலம்** *karuṅkūlam,* பெ.(n.) அகிற்கட்டை; eagle - wood.

*[கரும் + கூலம்.]*

**கருங்கெண்டை** *karuṅkeṇḍai,* பெ.(n.) ஆற்றுமீன் வகை; bitter crap, silvery attaining 5 inch.in length.

*[கரும் + கெண்டை – கருங்கெண்டை. கள் → கண்டு → கெண்டை.]*


கருங்கெண்டை

**கருங்கெளுத்தி** *karuṅkeḷutti,* பெ.(n.) கரியநிறம் கொண்ட கெளுத்தி மீன்வகை; black coloured scorpion fish.

மறுவ. தேளிமீன்

*[கரும் + கெளுத்தி.]*


கருங்கெளுத்தி

**கருங்கை** *karuṅkai,* பெ.(n.) 1. வலிமையுடைய கை; brawny hand of labour, as of smiths. *"கருங்கைக் கொல்லர்" (சிலப். 5:29.).* 2. கொல்லுங்கை (திவா.); slaughtering hand. *"கன்றிய தொழிற்கை கருங்கை யெனப்படும்"* (திவா.). 3. மேகநோய் கொண்ட கை; rendered black from venereal causes (சா.அக.).

*[கரும் + கை – கருங்கை. கரு = பெரிய, வலிய, கொடிய. வினை செய்து காய்ப்பேறும் போது செந்நிறத்தார் அல்லது பொன்னிறத்தார் கை மிகச் சிவந்தும், கருநிறத்தார் கை மிகக் கறுத்தும், தோன்றுவது இயல்பு. 'செய் தகை சேவேறும் செய்யாத கை நோவேறும்' என்பது பழமொழி. இது செந்நிறத்தார் கையைக் குறித்தது. கருநிறத்தார் கை கருங்கை எனப்படும். "கொன்றுவாழ் தொழிலினும் வன்பணித் தொழிலினும் கன்றிய தொழிற்கை கருங்கையெனப்படும்" (திவா.). கருங்கை என்பதற்கு வலியகை என்று பொருளுரைப்பார் அடியார்க்கு நல்லார். அப்பொருள் இருவகை நிறத்தார்க்கும் பொதுவாகும். கருநிறத்தாராயின், கருங்கை என்பது கருமையையும் வலிமையையும் ஒருங்கே உணர்த்தும். கருநிறத்தாரின் பெரும்பான்மை பற்றியே, கருங்கை யென்பது செங்கையையும் தழுவிற்றென அறிக (வே.க.128).]*

**கருங்கையான்** *karuṅkaiyāṉ,* பெ.(n.) **கரிசலாங் கண்ணி** (சங்.அக.) பார்க்க; see *kariśalāṅ-kaṇṇi.*

*[கரும் + கையான் – கருங்கையான். 'கை' என்பது இங்கு இலைகளைக் குறித்தது.]*

**கருங்கொக்கு** *karuṅkokku,* பெ.(n.) கொக்கு வகை (பதார்த்த.889.); a dark kind of paddy-bird.

ம. கரிங்கொக்கு

*[கரும் + கொக்கு – கருங்கொக்கு.]*


கருங்கொக்கு

**கருங்கொட்டி** *karuṅ-koṭṭi,* பெ.(n.) 1. கருநெய்தல்; black Indian water lily. 2. கருப்புக் கொட்டிக்கிழங்கு; the root of black Indian water lily.

*[கரு → கரும் + கொட்டி.]*

**கருங்கொட்டை** *karuṅkoṭṭai,* பெ.(n.) கருக்காத்தா மரம்; jagged jujube (சா.அக.)

*[கரும் + கொட்டை.]*

**கருங்கொடி** *karuṅkoḍi,* பெ.(n.) 1. கொடிவகை (வின்.); a kind of creeper that yields berries. 2. வெற்றிலை வகை (G.sm.d.215.); one of the two chief varieties of betel. 3. குறிஞ்சா; common delight of the wood (சா.அக.).

ம. கரிங்கொடி

*[கரும் + கொடி.]*

**கருங்கொடிக்கத்தரி** *karuṅkoḍi-k-kattari,* பெ.(n.) வெற்றிலைத் தோட்டத்தில் ஊடுபயிராகப் பயிரிடும் கத்தரி; brinjal cultivated in the betel-vine gardens.

*[கரும் + கொடி + கத்தரி.]*

**கருங்கொடிவேலி** *karuṅkoḍi-vēli,* பெ.(n.) கருப்புச் சித்திர மூலம்; black flowered leadwort (சா.அக.).

*[கரு → கரும் + கொடிவேலி.]*

**கருங்கொண்டல்** *karuṅkoṇḍal,* பெ.(n.) 1. தென்கீழ்க் காற்று (வின்.); south-east wind. 2. வடமேற்கு காற்று (யாழ்.அக.); north-west wind. 3. மழைமேகம்; rainy clouds.

*[கரு = பெரிய, வலிய. கரும் + கொண்டல் – கருங்கொண்டல்.]*

**கருங்கொம்பு** *karuṅkombu,* பெ.(n.) ஊதுகொம்பு வகை (நாஞ்.); a kind of bugle.

*[கரும் + கொம்பு – கருங்கொம்பு (நீண்ட பெரிய கொம்பு).]*

**கருங்கொல்** *karuṅkol,* பெ.(n.) இரும்பு (சூடா.); iron.

*[கரும் + கொல் – கருங்கொல். 'கொல்' = தட்டுதல், அடித்தல். கொல்லன் உலையில் தட்டிச் செய்யப்படும் மாழை 'கொல்' தொழிலாகுபெயராகி மாழைப்பொது வாயிற்று (மாழை = உலோகம்) 'கொல்' முன்பின்னாக மாறி (இலக்கணப் போலியாகிக் கொல்(லு) → லோக (loha) என, வடபுல மொழிகளில் திரிந்தது.]*

**கருங்கொல்லன்** *karuṅkollaṉ,* பெ.(n.) கருமான்; blacksmith.

*[கரும் + கொல்லன். கரு → கரும் + கொல் = கருங்கொல்(இரும்பு). கருங்கொல் + அன்(ஆ.பா.ஈறு.). கருங்கொல்லன் = இரும்புப்பணி செய்பவன்.]*

**கருங்கொள்** *karuṅkoḷ,* பெ.(n.) ***கருங்காணம்*** (வின்.) பார்க்க; see *karuṅkāṇam.*

ம. கரிங்கொள்ளு

*[கரும் + கொள் – கருங்கொள்.]*

**கருங்கொள்ளிக்கரப்பன்** *karuṅkoḷḷi-k-karappaṉ,* பெ.(n.) கருப்புக் கொள்ளிக் கரப்பன்; a kind of strop hulus in children attended with dark spots (சா.அக.).

*[கரு →கரும் + கொள்ளி + கரப்பான்.]*

**கருங்கொன்றை** *karu-ṅ-koṉṟai,* பெ.(n.) மஞ்சட்கொன்றை; Siamese tree senna.

*[கரும் + கொன்றை – கருங்கொன்றை.]*

**கருங்கோங்கு** *karuṅ-kōṅgu,* பெ.(n.) 1. கருப்புக் கோங்கு; tinnevely black dammer. 2. நெடுவார்க் கோங்கு; dipterocarp dammer (சா.அக.).

*[கரு → கரும் + கோங்கு.]*

**கருங்கோலம்** *karuṅkōlam,* பெ.(n.) இரும்பு; iron (சா.அக.).

*[கருங்கொல் → கருங்கோலம். கருங்கோல் இரும்பு.]*

**கருங்கோலா** *karuṅkōlā,* பெ.(n.) கட்டா என்னும் மீன் வகை (முகவை மீன.).

*[கரு → கரும் + கோலா.]*

**கருங்கோவை** *karuṅkōvai,* பெ.(n.) கரும்புக் கோவை; black bitter melon (சா.அக.).

*[கரு → கரும் + கோவை.]*

**கருங்கோழி** *karuṅkōḻi,* பெ.(n.) 1. கறுப்புக் கோழி (பதார்த்த.869.); fowl of a black variety. 2. கறுப்பு உயர்வகைக் கோழிகளுள் ஒன்று; a highly prized variety of black fowl (சேரநா.).

ம. கரிங்கோழி



கருங்கோழி

*[கரும் + கோழி.]*

**கருங்கோழிகன்னிமுட்டை** *karuṅkōḻikaṉṉi muṭṭai,* பெ.(n.) கருங்கோழி முதல் ஈடாக இடும் முட்டை; the first set of eggs laid by the black foul.

*[கரு → கரும் + கோழி + கன்னி + முட்டை. இது உடலுக்கு வலுவைத் தரும் என்பர்.]*

**கருங்கோள்** *karuṅkōḷ,* பெ.(n.) இராகு என்னும் நிழற்கோள் (வின்.); Rāhu, the ascending node.

2. ஒருவகை நச்சுப்பாம்பு; a snake, highly poisonous (சேரநா.).

ம. கரிங்கோளி

*[கரும் + கோள் – கருங்கோள்.]*

**கருச்சிதை-தல்** *karu-c-cidai-,* 2 செ.கு.வி.(v.i.) ***கருக்கலை-தல்*** பார்க்க; see *karu-k-kalai-,*

*[கரு + சிதை.]*

**கருச்சிதைவு** *karu-c-cidaivu,* பெ.(n.) ***கருக்கலைப்பு*** பார்க்க; see *karu-k-kalaippu.*

*[கரு + சிதைவு.]*

**கருச்சீலை** *karu-c-cīlai,* பெ.(n.) 1. கருமருந்து தடவிய துணி; piece of cloth smeared with magic paint. 2. மாதவிடாய்ச் சீலை; menstrual cloth.

*[கரு + சீலை. சீரை → சீலை.]*

**கருச்சீவல்** *karu-c-cīval,* பெ.(n.) கடற்பாசி; sea weed.

*[கரு + சீவல்.]*

**கருஞ்சங்கங்குப்பி** *karuñcaṅgaṅkuppi,* பெ.(n.) கருப்புச் சங்கங்குப்பி; black-flowered glory tree.

*[கரு → கரும் + சங்கங்குப்பி.]*

**கருஞ்சங்கு** *karuñ-caṅgu,* பெ.(n.) மீன்வகை (சங்.அக.); shell - fish. 2. கருப்புச் சங்கஞ்செடி; a black variety of four-spined monetia. 3. கருப்புச் சங்கு; black conch (சா.அக.).

*[கரும் + சங்கு – கருச்சங்கு.]*

**கருஞ்சடைச்சி** *karuñcaḍaicci,* பெ.(n.) 1. கருப்புச் சடைச்சி; a black variety of Indian snake root. 2. கருப்பு நெட்டிச் செடி; black solar (சா.அக.).

*[கரு → கரும் + சடைச்சி.]*

**கருஞ்சந்தனம்** *karuñcandaṉam,* பெ.(n.) கருப்புச் சந்தனம்; black sandal wood.

*[கரு → கரும் + சந்தனம்.]*

**கருஞ்சரக்கு**[1] *karuñcarakku,* பெ.(n.) மேன்மையான சரக்குகள்; superior kind of drugs.

கரு = பெரிய, உயர்ந்த, சிறந்த, மேன்மையான.

*[கரு → கரும் + சரக்கு.]*

**கருஞ்சரக்கு**[2] *karu-ñ-carakku,* பெ.(n.) 1. கூலம் (சிலப்.5,23, அரும்); grains, as paddy, millet, etc. 2. பலசரக்கு; groceries. 3. கருப்பு நிறமான சரக்குகள், கருஞ்சீரகம், கருஞ்சூரை, கருநெல்லி முதலியன; black variety of drugs such as black common hedge caper shrub,black goose berry.

*[கரும் + சரக்கு.]*

**கருஞ்சாட்டியம்** *karuñ-cāṭṭiyam,* பெ.(n.) கருந்துவரை; apple fruited bony (சா.அக.).

*[கரு → கரும் + சாட்டியம்.]*

**கருஞ்சாணி** *karuñcāṇi,* பெ.(n.) ***கருஞ்சாளி*** பார்க்க; see *karuñcāḷi.*

*[கரு → கரும் + சாணி.]*

**கருஞ்சாந்து** *karu-ñ-cāndu,* பெ.(n.) 1. குழைசேறு (தைலவ.தைல); clay used as mortar for building. 2. புனுகு, மான்மணத்தி, அகில் ஆகியவை சேர்ந்த கருப்புக் கலவைச்சாந்து; a black mixture of perfumes such as a civet,musk, agil, etc. (சா.அக.).

*[கரும் + சாந்து – கருஞ்சாந்து.]*

**கருஞ்சாமிக் கவுண்டன் பாளையம்,** *karuñcāmi-k-kavuṇḍaṉpālaiyam,* பெ.(n.) கோவை மாவட்டம் கோயம்புத்தூர் வட்டத்துச் சிற்றூர்; a village in Coimbatore taluk in Coimbatore dt.

*[கரும் + சாமி + கவுண்டன்+ பாளையம்.]*

**கருஞ்சாமை** *karuñcāmai,* பெ.(n.) சாமைவகை; a species of little millet.

*[கரும் + சாமை – கருஞ்சாமை.]*

**கருஞ்சாயவேர்** *karuñcāya-vēr,* பெ.(n.) சாயவேர் வகை (வின்.); madder root.

*[கரும் + சாயம் + வேர்.]*

**கருஞ்சார்** *karuñcār,* பெ.(n.) அரைப்பொருத்து (இ.வ.); hip-joint.

*[கரும் + சார் – கருஞ்சார். சார் = சார்தல், சேர்தல், பொருந்துதல், கரு = பெரிய. கருஞ்சார் = பெரிய மூட்டுப் பொருத்து.]*

**கருஞ்சாரை** *karuñcārai,* பெ.(n.) 1. சாரைப்பாம்பு வகை; black rat-snake. 2. வழலை; a mystic name for the quintessance used in alchemy. 3. ஒரு வகைப் பூடு; a plant, black rusty varnish.

*[சால் → சார் → சாரை (நீட்சி, நீளமானது).]*

**கருஞ்சாரைப்பிச்சு** *karuñcārai-p-piccu,* பெ.(n.) மருந்திற்குப் பயன்படும் கருப்புச் சாரைப் பாம்பின் பித்தப்பை; the bile duct of black rat-snake used in medicine (சா.அக).

*[கரு → கரும் + சாரை + பிச்சு(பித்தப்பை). பித்து → பிச்சு.]*

**கருஞ்சாளி** *karuñcāḷi,* பெ.(n.) கல்யானை (காண்டா மிருகம்); rhinoceros.

*[ஆள்(ஆண்) → ஆளி → சாளி (ஆண்விலங்கு) கரு = பெரிய. கரு → கரும் + சாளி.]*

**கருஞ்சாளை** *karuñcāḷai,* பெ.(n.) தரங்குறைந்த கருப்பு மீன் வகை (வின்.); a dark, inferior kind of fish.

*[கரும் + சாளை – கருஞ்சாளை. கரு = பெரிய. சாளை = ஆண் விலங்கு, மீன்களுள் ஆணினம்.]*

**கருஞ்சிட்டை** *karuñciṭṭai,* பெ.(n.) கருந்தழும்பு; a black scar (சா.அக.).

*[கரு → கரும் + சிட்டை.]*

**கருஞ்சிலந்தி** *karuñcilandi,* பெ.(n.) 1. ஒருவகைப்பூ மரம்; golden blossomed pear tree. 2. கருப்புச் சிலந்திப்புண்; black ulcer. 3. கருப்புப் புற்றுநோய்; black cancer (சா.அக.)

*[கரு → கரும் + சிலந்தி. சிலை = கல். சிலை → சிலந்தி (கட்டி).]*

**கருஞ்சிலி** *karuñcili,* பெ.(n.) குறிஞ்சான்; indian ipecacuanha (சா.அக.).

*[கரு → கரும் + சிலி.]*

**கருஞ்சிலை** *karuñcilai,* பெ.(n.) கருநிறக்கல் (வின்.); black-rock.

*[கரும் + சிலை – கருஞ்சிலை.]*

**கருஞ்சிலைக்குளான்** *karuñcilai-kuḷāṉ,* பெ.(n.) கருங்கல்லிற் குள்ளிருக்கும் கெண்டகச் சிலை; இது மருந்துச் சரக்குகளுள், துணைச் சரக்காகும்; a mineral substance found in the strata of granite stones (சா.அக.).

*[கரு → கரும் + சிலைக்கு + (உள்ளான்) உளான்.]*

**கருஞ்சிலைக்கூழன்** *karuñcilai-k-kūḻaṉ,* பெ.(n.) கருங் கூழாங்கல்; a black pebble found on the sea-shore (சா.அக.).

*[கரு → கரும் + சிலை + கூழன்.]*

**கருஞ்சிவதை** *karuñcivadai,* பெ.(n.) கருப்புச் சிவதைக்கொடி; the black variety of indian Jalap.

*[கரு → கரும் + சிவதை.]*

இது காரமும் கசப்பும் கலந்த சுவையுடையது. எலி கடித்த நஞ்சை நீக்கும் என்பர்.

**கருஞ்சிவதைவேர்** *karuñcivadhaivēr,* பெ.(n.) நச்சுத்தன்மையுடைய கருஞ்சிவதைவேர்; black turpeth root poisonous by nature (சா.அக.).

*[கரு → கரும் + சிவதை + வேர்.]*

**கருஞ்சிற்றகத்தி** *karuñciṟṟagatti,* பெ.(n.) 1. கருப்புச் சிற்றகத்தி; a black variety of sesbane. 2. கருஞ்செம்பை; bastard sensitive plant (சா.அக.).

*[கரு → கரும் + சிறு + அகத்தி]*

**கருஞ்சிறைப்பறவை** *karuñciṟai-p-paṟavai,* பெ.(n.) மயில்; peafowl. *"கருஞ்சிறைப் பறவையூர்திக் காமரு காளை தான்கொல்" (சீவக. 1261.).*

*[கரும் + சிறை + பறவை.]*

**கருஞ்சீந்தில்** *karu-ñ-cīndil,* பெ.(n.) பேய்ச்சீந்தில்; black moon-creeper (சா.அக.).

*[கரு (பெரிய) + சீந்தில்.]*

**கருஞ்சீரகம்** *karuñ cīragam,* பெ.(n.) சீரகவகை (பதார்த்த. 1034.); black cumin.

ம. கரிஞ்சீரகம்; க. கடசீரிகெ., கர்சீரிகெ.

*[கரும் + சீரகம்.]*

கருஞ்சீரக விதைகள் மணத்தோடு காரச்சுவையும் கொண்டவை. இவ்விதைகளைக் கறி, உணவுப்பண்டங்களில் சேர்ப்பதுண்டு. இவ்விதைகளைத் துணிகளின் மடிப்புகளிடையே வைத்தால் பூச்சித்தொல்லை கட்டுப்படும்.


கருஞ்சீரகம்

**கருஞ்சுக்கான்** *karuñcukkāṉ,* பெ.(n.) 1. ஒருவகைக்கல் (வின்.); black kanker. 2. சுடாத கருப்புச் சுக்கான் கல்; black limestone. 3. மணற்பொருக்குஞ்சுக்கான் (போக. நிகண்டு.), கருப்புச் சுண்ணாம்புக்கல்; a black variety of quick lime as opposed to white.

*[கரும் + சுக்கான். சுள் → சுக்கு → சுக்கான் = கோடை வெப்பத்தால் சூடேறிப் பாதத்தைச் சுடும் கல்.]*

**கருஞ்சுக்கிரன்** *karuñcukkiraṉ,* பெ.(n.) விழியைச் சுற்றிலும் சிறுபுள்ளிகளை உண்டாக்கும் கண்ணோய்; a disease of the eye causing white specks in the eye.

*[கரு → கரும் + சுக்கிரன். சுக்கல் = மிகச்சிறியது. சுக்கல் → சுக்கரம் → சுக்கிரன் (கொ.வ.)]*

**கருஞ்சுண்டி** *karuñcuṇḍi,* பெ.(n.) தொட்டால் சிணுங்கிச் செடி; sesa sitire plant.

*[சுள் + தி = சுண்டி. சுள் = சுருங்கு. கரு → கரும் + சுண்டி.]*

**கருஞ்சுருட்டை** *karuñcuruṭṭai,* பெ.(n.) ஒருவகைக் கருப்புப் பாம்பு; a kind of black carpet snake.

*[கரு → கரும் + சுருட்டை.]*

**கருஞ்சுருமா** *karuñcurumā,* பெ.(n.) கருப்புச் சுருமாக்கல்; a black variety of sulphuret of antimony (சா.அக.).

*[கரு → கரும் + சுருமா.]*

**கருஞ்சுரை**[1] *karuñcurai,* பெ.(n.) 1. சுரைக்காய் வகை (வின்); a black guard. 2. காட்டுக்கத்தரி; hedge caper shrub.

**ம.** கரிச்சுர

*[கரும் + சுரை – கருஞ்சுரை.]*

**கருஞ்சுரை**[2] *karuñcurai,* பெ.(n.) 1. புகையிலை; tobacco. 2. நீர்முள்ளி; water-thorn (செ.அக.).

*[கரும் + சுரை.]*

**கருஞ்சுரை**[3] *karu-ñ-curai,* பெ.(n.) நீர் முள்ளி; water thirst (சா.அக.).

*[கரு + சுரும் + சுரை. சுல் → சுரை = முட்போன்ற சுணைப்புடையது.]*

**கருஞ்சுழுந்து** *karuñ-cuḻundu,* பெ.(n.) நீண்ட இலையுடைய காட்டுமரம், வெள்ளைக் கோரான்; long-leaved jungle geranium (செ.அக.).

*[கரும் + சுழுந்து – கருஞ்சுழுந்து. சுளுந்து = காட்டு மரவகை. சுளுந்து → சுழுந்து.]*

**கருஞ்சூகம்** *karuñcūgam,* பெ.(n.) அகச்சம்பங்கி; a kind of primrose creeper (சா.அக.).

*[கரும் + சூகம். சூகம் = தாமரை.]*

**கருஞ்சூரகம்** *karuñcūragam,* பெ.(n.) ***கருஞ்சூரை*** பார்க்க; see karuñcūrai.

*[கரு → கரும் + (சூரை) சூரகம்.]*

**கருஞ்சூரை**[1] *karuñcūrai,* பெ.(n.) 1. காட்டுக்கத்தரி (வின்.); hedge caper shrub. 2. ***செங்கத்தரி*** **(மலை.)** பார்க்க; see *seṅkattari.*

*[கரும் + சூரை – கருஞ்சூரை.]*

**கருஞ்சூரை**[2] *karuñcūrai,* பெ.(n.) நெல்வகை; a kind of paddy. *"கருஞ்சூரை சூரை கறுத்ததிக்க ராதி" (நெல்விடு. 187.).*

*[கரும் + சூரை – கருஞ்சூரை.]*

**கருஞ்சூளை** *karuñcūḷḷai,* பெ.(n.) மண் ஏனங்கள் முழுமையும் கருப்பாக இருக்கும் வண்ணம், சுடுவதற்கேற்ற சூளை; kiln arrangement to get fully black clay ware. ***கருங்கலம்*** பார்க்க; see *karuṅgalam.*

*[கரும் + சூளை.]*

**கருஞ்சூளைப்பானை** *karuñcūḷḷai-p-pāṉai,* பெ.(n.) கருஞ்சூளையில் வைத்துச் சுடப்பட்ட பானை; pots baked in black kiln.

**மறுவ.** கருஞ்சுள்ளைப்பானை

*[கரும் + சூளை + பானை.]*

**கருஞ்செண்பகம்** *karuñ-ceṇbagam,* பெ.(n.) கருஞ் செண்பகப்பூ; a black variety of champak (சா.அக.).

*[கரும் +செண்பகம்.]*

**கருஞ்செந்தாமரை** *karuñ-cendāmarai,* பெ.(n.) கருஞ்சிவப்புத் தாமரைப்பூ; the lotus of a dark red colour (சா.அக.).

*[கரு → கரும் + செந்தாமரை.]*

**கருஞ்செந்தொட்டி** *karuñcen-dotti,* பெ.(n.) ***கருங்காஞ்சொறி,*** பார்க்க; karuṅkāñcoṟi (சா.அக.).

*[கரு → கரும் + செந்தொட்டி.]*

**கருஞ்செம்பருத்தி** *karuñcemparutti,* பெ.(n.) செம்பருத்தி; common sesban.

**மறுவ.** கருஞ்செம்பை, சகுடை, செம்பை, கருஞ்செம்பருத்தி, கருஞ்சிற்றகத்தி.

*[கரும் + செம்பருத்தி.]*

**கருஞ்செய்**[1] *karuñcey,* பெ.(n.) நன்செய்; wet cultivation *"நீர்நிலமுங் கருஞ்செய்புன்செயும்" (S.I.I.V. 170.).*

*[கரும் + செய். கரு = பெருமை, சிறப்புக் குறித்த சொல்லாகலான், சிறப்பு நோக்கி நன்செய் நிலப்பொருளில் கருஞ்செய் எனப் பண்பு குறித்து, முன்மொழி சிறந்தது.]*

**கருஞ்செய்**[2] *karuñcey,* பெ.(n.) உழப்படாத புன்செய்; dry land, uncultivated waste. *"இந் நான்கெல்லைக்குட்பட்ட நஞ்செய் கருஞ்செய்களும்" (S.I.I.iv.106.). "நான்கெல்லைக்குட்பட்ட நீர் நிலமும் கருஞ்செய் புன்செய்யும்" (S.I.I.v.170.).*

*[கரு = வலிய, கரடான. கரும் + செய் – கருஞ்செய் = கரம்பு நிலம்.]*

**கருஞ்செவ்வாப்பு** *karuñcevvāppu,* பெ.(n.) பிறந்த குழந்தையின் நோய்க்கு அறிகுறியான நிற வேறுபாடு (இ.வ.); unhealthy colour of a new infant, as patches of dark on the skin.

*[கரும் + செவ்வாப்பு – கருஞ்செவ்வாப்பு. செவ்வாப்பு = செந்நிறத் தோல்நோய்]*

**கருஞ்சேம்பு** *karuñcēmbu,* பெ.(n.) ***கல்லடிச் சேம்பு*** பார்க்க; see *kalladi-c-cēmbu.*

*[கரு + சேம்பு.]*

**கருஞ்சேரா** *karuñcērā,* பெ.(n.) கடித்தலால் உடம்பில் கறு நிறமான தடிப்பை உண்டாக்கும் ஒரு நச்சுப்பூச்சி (சீவரட்.); a poisonous insect whose bite produces dark patches on the skin (செ.அக.).

*[கரும் + சேரா. சேரா = உடலுக்கு ஒவ்வாமை விளைவிப்பது.]*

**கருஞ்சேல்** *karuñ-cēl,* பெ.(n.) கரு நிறமுடைய ஆற்றுக்கெண்டை மீன்; a black Carnatic carp.

*[கரு = கருமை. கரு + சேல்.]*

**கருஞ்சேவகம்** *karuñcēvagam,* பெ.(n.) பெருவீரச்செயல்; daring act of heroism. *"கருஞ் சேவகஞ்செய்து செஞ்சோறறச்செய்த கைம்மாறு." (கலிங். 477, புதுப்.).*

*[கரும் + சேவகம். கரு = பெரிய, உயர்ந்த.]*

கருஞ்சேவகம் பெரிதும், போர்த்தொழிலையே குறித்தது. உயிர் வழங்கும் பெருஞ்செயல் என்னும் குறிப்பினது. செய் →சேவை → சேவகம் [வடதமிழ்.].

**கருஞ்சொறி** *karuññcoṟi,* பெ.(n.) உடலிற் கருப்புத் தழும்பையுண்டாக்கும் ஒரு வகைச் சொறி; a kind of itch leaving a dark stain on the skin (சா.அக.).

*[கரு + சொறி.]*

**கருஞ்சோளம்** *karuñ-cōḷam,* பெ.(n.) சோளவகை; (பதார்த்த. 833.); black maize.

மறுவ. காக்காச்சோளம், இருங்குச் சோளம்.

ம. கரிஞ்சோளம்

*[கரும் + சோளம்.]*

**கருஞாயிறு** *karuñayiṟu,* பெ.(n.) கதிரவன் மறைப்பு (சூரிய கிரகணம்); solar eclipse. *"தண்டாமரை போற் கரு ஞாயிறென" (கம்பரா. ஆரண்ய. சரபங்க.24).*

*[கரு + ஞாயிறு.]*

**கருஞானம்** *karuñāṉam,* பெ.(n.) பாம்பாட்டிச் சித்தர் இயற்றிய (ஞான.) அறிவ நூல்; a treatise on philosophy compiled by Pampatti Cittar (சா.அக.).

*[கரு + ஞானம்.]*

**கருட்டம்** *karuṭṭam,* பெ.(n.) ஏற்றம்; maximum.

*[கரு = பெரிய, உயர்ந்த. கரு – கருத்தம் – கருட்டம்.]*

**கருடக்கண்** *karuḍa-k-kaṇ,* பெ.(n.) 1. ஓரக்கண்; squint eye. 2. கூர்மையான பார்வை; acute vision (சா.அக.).

*[கருடன் + கண்.]*

**கருடக்கண்ணன்** *karuḍa-k-kaṇṇaṉ,* பெ.(n.) 1. கூர்மையான பார்வையுடையவன்; one who has acute vision. 2. ஓரக்கண்ணன்; scquint eyed person (சா.அக.).

*[கருடன் + கண்ணன். கலுழன் → கருடன்.]*

**கருடக்கல்** *karuḍa-k-kal,* பெ.(n.) பாம்புக்கடி நஞ்சை நீக்கக்கூடிய தன்மையுள்ளதாகக் கருதப்படும் ஒருவகைக் கல்; a kind of stone which is considered as charm or antidote for snake bite.

மறுவ. கருடப்பச்சைக்கல்

[கருடன் + கல். கலுழன் → கருடன்]

**கருடக்கல்வி** *karuḍa-k-kalvi,* பெ.(n.) கடிநஞ்சை நீக்கும் மந்திரம்; an art of curing bite as of snake etc. ***கருடன்*** பார்க்க; see *karuḍan.*

[கருடன் + கல்வி.]

**கருடக்கொடி**[1] *karuḍu-k-koḍi,* பெ.(n.) 1. பெருமருந்துக்கொடி; Indian birth-wort. 2. குறிஞ்சான்; common delight of the woods.

[கருடன் + கொடி. கருடன் = பாம்புக்கடி, நஞ்சை முறிக்கும் தன்மை.]

**கருடக்கொடி**[2] *karuḍa-k-koḍi,* பெ.(n.) 1. பெருங்கஞ்சா; Indian hemp. 2. பேய்ச்சீந்தில்; a variety of moon creeper.

[கருடன் + கொடி. கருடன் = வலிய, பெரிய.]

**கருடக்கொடிச்சி** *karuḍa-k-koḍicci,* பெ.(n.) ***கருடக்கொடி***[1] பார்க்க; see *karuḍa-k-koḍi*[1] (சா.அக.).

[கலுழன் → கருடன் + கொடிச்சி.]

**கருடக்கொவ்வை** *karuḍua-k-kovvai,* பெ.(n.) காக்கணங்கொவ்வை; mussel - shell creeper.

மறுவ. கருவரை

[கலுழன் → கருடன் + கொவ்வை.]

**கருடக்கோவை** *karuḍa-k-kōvai,* பெ.(n.) 1. ***கருடக் கொவ்வை*** பார்க்க; see *karuḍa-k-kovai,* 2. அப்பைக் கோவை; saffron indian creeper (சா.அக.).

[கலுழன் →கருடன் + (கொவ்வை) கோவை.]

**கருடகம்** *karuḍagam,* பெ.(n.) குறிஞ்சா; Indian Ipecacuanha (சா.அக.).

**கருடத்தொண்டை** *karuḍa-t-toṇḍai,* பெ.(n.) ***கருடக் கொவ்வை*** பார்க்க; see *karuḍa-k-kovvai* (சா.அக.).

[கருட + தொண்டை.]

**கருடதிசை** *karuḍadišai,* பெ.(n.) கணியத்தில் குறிப்பிடப்படும் கீழ்த்திசை; east side used in astrology.

[கருட + திசை.]

**கருடப்பார்வை** *karuḍa-p-pārvai,* பெ.(n.) ***கருடக்கண்*** பார்க்க; see *karuḍa-k-kaṉ.*

[கருடன் + பார்வை.]

**கருடப்பாலை** *karuḍa-p-pālai,* பெ.(n.) ஒருவகைப் பாலைச் செடி; a kind of brahminy kite paulay.

[கருட + பாலை.]

**கருடமாணிக்கம்** *karuḍa-māṇikkam,* பெ.(n.) பச்சைக்கல்; emerald (சா.அக.).

[கருட + மாணிக்கம்.]

**கருடமூக்கு** *karuḍa-mūkku,* பெ.(n.) தேள் கொடுக்கி; scorpion sting plant.

[கருடன் + மூக்கு.]

**கருடல்** *karuḍal,* பெ.(n.) விருப்பம்; desire.

[கரள் → கரடல் → கருடல்.]

**கருடவித்தை** *karuḍa-vittai,* பெ.(n.) ***கருடக்கல்வி*** பார்க்க; see *karuḍa-k-kalvi.*

**கருடன்**[1] *karuḍaṉ,* பெ.(n.) ***கலுழன்*** பார்க்க; see kaluḷaṉ. கருடனைக் கண்ட பாம்பு போல (உ.வ.).

**Skt.** garuda; **H.** karut; **Pali.** karul; **Mal.** garuda.

[கலுழன் → கருடன்.]

**கருடன்**[2] *karuḍaṉ,* பெ.(n.) 1. கொல்லங் கோவை; snake caper. 2. கருடாழ்வார்; a mythical bird known as Vishnu's vehicle.

[கருடன்[1] → கருடன்[2].]

**கருடன்**[3] *karuḍaṉ,* பெ.(n.) ***கலுழன்*** பார்க்க; see *kaluḷaṉ.*

[கலுழன் (மங்கிய நிறமுடையது.) → கருடன்.]

**கருடன்கிழங்கு** *karuḍaṉ-kiḷaṅgu,* பெ.(n.) 1. பெருமருந்து; Indian birth-wort. 2. ஆகாச கருடன் கிழங்கு; snake caper (சா.அக.).

[கலுழன் → கருடன் + கிழங்கு.]

**கருணம்** *karuṇam,* பெ.(n.) எலுமிச்சமரம்; lemon tree.

*[கரு → கருண் → கருண் + அம். கரு = நல்ல. பல்லாற்றானும் நன்மை விளைவிப்பதால் இப்பெயர் பெற்றது. அம் = பெருமைப்பொருள் பின்னொட்டு.]*

**கருணிகை** *karuṇigai,* பெ.(n.) 1. பூவினிற் கொட்டை; the pericarp of a flower. 2. தாமரைப் பொகுட்டு; the pericarp of lotus. 3. காயின் நெற்று; the germ or rudiment of the future fruit; dried fruit. 4. காதணி; ear ring (சா.அக.).

**த.** கருணிகை > **Skt.** karṇigā.

**கருணை**[1] *karuṇai,* பெ.(n.) ***கரணை*** பார்க்க; see *karaṇai, 'காறிப்போன கருணைக்கிழங்கு பழம் புளியால் பதம் பெற்றது' (பழ.). 'வாய் வாழைப்பழம் கை கருணைக் கிழங்கு' (பழ.).*

**ம.** கரண கிழங்ஙு

*[கரணை → கருணை.]*

**கருணை**[2] *karuṇai,* பெ.(n.) ***கரணைக் கிழங்கு*** பார்க்க; see *karaṇai-k-kiḻaṅgu.*

*[கரணை → கருணை.]*

**கருணைக்கிழங்கு** *karuṇai-k-kiḻaṅgu,* பெ.(n.) ***கரணைக்கிழங்கு*** பார்க்க; see *karaṇai-k-kiḻaṅgu.*

*[கரணைக் கிழங்கு → கருணைக்கிழங்கு.]*



கருணை—பிடிகரணைக்கிழங்கு

**கருணைத்தண்டு** *karuṇai-t-taṇḍu,* பெ.(n.) ஒருவகைக் கடற்கரைச் செடி; typhonum trilobatum.

*[கரணைத்தண்டு → கருணைத்தண்டு.]*

**கருணைப்பலா** *karuṇai-p-palā,* பெ.(n.) ***கரணைப் பலா*** பார்க்க; see *karaṇai-p-palā.*

*[கருணை + பலா.]*

**கருத்த** *karutta,* கு.பெ.எ. (adj.) கருமையான; black; dark.

*[கரு → கருத்த.]*

**கருத்தகடப்பு** *karutta-k-kaḍappu,* பெ.(n.) நெல்வகை (w.g.); a kind of paddy.

*[கருத்த + கடப்பு.]*

**கருத்தங்கல்** *karuttaṅgal,* பெ.(n.) கருப்பம் தங்கல் (சூல்); foetus settling in the ovary.

*[கரு + தங்கல்.]*

**கருத்தடை** *karuttaḍai,* பெ.(n.) கருவுறாவண்ணம் தடுத்தல்; birth control.

*[கரு + தடை.]*

**கருத்தடைக் கருவி** *karuttaḍai-k-karuvi,* பெ.(n.) கருத்தடை செய்ய உதவும் கருவி; appliance used for birth control.

*[கருத்தடை + கருவி.]*

**கருத்தடை மாத்திரை** *karuttaḍai-māttirai,* பெ.(n.) கருவுறாவண்ணம் தடுக்கும் மருந்து; medicine used for birth control.

*[கருத்தடை + மாத்திரை.]*

**கருத்ததிகாரி** *karuttadigāri,* பெ.(n.) அதிகார முடையவர்; authority. இன்றும், பாவாணர் சொல்லாராய்ச்சியின் கருத்ததிகாரியாக விளங்குகிறார் (உ.வ.).

*[கருத்து + அதிகாரி.]*

**கருத்தபத்தை** *karuttapattai,* பெ.(n.) இராமநாதபுரம் மாவட்டத்துச்சிற்றூர்; village in Ramanathapuram dt.

*[கரு → கருத்த + பற்றை – கருத்தப்பற்றை → கருத்தப்பத்தை. பற்றை = பகுதி.]*

**கருத்தரங்கம்** *karuttaraṅgam,* பெ.(n.) ***கருத்தரங்கு*** பார்க்க; see *karuttaraṅgu.*

*[கருத்து + அரங்கம்.]*

**கருத்தரங்கு** *karuttaraṅgu,* பெ.(n.) கலந்துரையாடி, ஆய்வு செய்யும் வல்லுநர் குழுக்கூட்டம்; seminar.

*[கருத்து + அரங்கு.]*

**கருத்தரி–த்தல்** *karu-t-tari-,* 4. செ.குன்றாவி. (v.t.) சூல்கொள்ளுதல்; to be conceived.

*[கரு + தரி.]*

**கருத்தரியாமை** *karu-t-tariyāmai,* பெ.(n.) கருப்பமுண்டாகாமை; incapability of conception (சா.அக.).

*[கரு + தரி + ஆ + மை. 'ஆ' எதிர் மறை இடைநிலை.]*

**கருத்தழி–தல்** *karuttaḻi-,* 2 செ.கு.வி.(v.i.) மனநிறைவின்றி வருந்துதல்; to afflict. *"தம்மின் கற்றாரை நோக்கிக் கருத்தழிக" (நீதிநெறி. 15.).*

*[கருத்து + அழிதல்.]*

**கருத்தளவு** *karu-t-taḷavu,* பெ.(n.) ஊகம், மதிப்பீடு; approximation, estimation.

*[கருத்து + அளவு.]*

**கருத்தளவை** *karu-t-taḷavai,* பெ.(n.) ஊகவளவை; வழியளவை; inference. *"பிரத்தியங் கருத்தள வென்ன" (மணிமே. 29: 48.).*

*[கருத்து + அளவை.]*

**கருத்தன்** *karuttaṉ,* பெ.(n.) 1. செய்வோன்; doer, maker, agent, author, managing member of a family, one who performs, as a religious ceremony. 2. கடவுள்; God as creator. 3. தலைவன்; (விவிலியம். மத். 7, 22); master, chief, lord.

*[கரு → கருத்து + அன் – கருத்தன்.]*

'கரு' செய்தற்பொருளில் செய்வோனையும், பெருமைப்பொருளில், தலைவன், கடவுள், மேலோன் ஆகியோரையும் குறித்தது.

**கருத்தனாகு பெயர்** *karuttaṉāgu-peyar,* பெ.(n.) செய்பவன் பெயர், செய்யுஞ் செயலைக் குறித்து வழங்கும் ஆகுபெயர் (நன். 290, விருத்.); metonymy, where the doer is put for the work done, திருவள்ளுவர் படித்தான், திருக்குறள் படித்தான்.

*[கருத்தன் + ஆகுபெயர் – கருத்தனாகு பெயர். இதனைக் கருத்தாவாகுபெயர் என வழங்குவது நன்றன்று. 'கருத்தா' என்பது, வடமொழியாளர் தம்மொழிக்கேற்பத் திரித்துக்கொண்ட திரிபு.]*

**கருத்தா** *karuttā,* பெ.(n.) ***கருத்தன்*** பார்க்க; see *karuttaṉ.*

**த.** கருத்தன் > **Skt.** karta.

**கருத்தாக்கம்** *karu-t-tākkam,* பெ.(n.) ஒரு தன்மைத்தாகியவைகளைப் பற்றிய பொதுநோக்கு பொருள்; concept.

*[கருத்து + ஆக்கம்.]*

**கருத்தாடு** *karuttāḍu,* பெ.(n.) வெள்ளாடு; goat (சா.அக.).

*[கரு → கருத்த + ஆடு.]*

**கருத்தாப்பொருள்** *karuttā-p-pōruḷ,* பெ.(n.) செய்பவனை அல்லது கருத்தாவைக் குறிக்கும் பொருள்; sense of agency.

*[கரு → கருத்தா + பொருள்.]*

"அரசனால் ஆகிய கோயில்" என்பது, போன்று உயர்திணையாய் அமைவது கருத்தாப் பொருள்.

கருத்தா, முதல் வேற்றுமையாய் இருக்கும் பொழுது செயப்படுபொருள் இரண்டாம் வேற்றுமை யாய் வரும். [எ.டு.] 'தச்சன் கோவிலைக் கட்டினான்'. கருத்தா மூன்றாம் வேற்றுமையாய் இருக்கும் பொழுது, செயப்படுபொருள் முதல் வேற்றுமையாய் வரும். [எ.டு.] 'தச்சனால் கோயில் கட்டப்பட்டது.'

**கருத்தாய்வு** *karuttāyvu,* பெ.(n.) ஒரு கருத்தைப் பற்றித் திறனாய்வு செய்தல்; critical discussion of a concept.

*[கருத்து + ஆய்வு.]*

**கருத்தாவாகு பெயர்** *karuttā-v-āgupeyar,* பெ.(n.) ***கருத்தனாகு*** பெயர் பார்க்க; see *karuttaṉāgu-peyar.*

*[கருத்தன் → கருகருத்தா + ஆகுபெயர்.]*

**கருத்தாளி[1]** *karuttāḷi,* பெ.(n.) 1. அறிவாளி; மதிநுட்பமுடையவன் (வின்.); person of genius, judgement, discrimination, acumen, penetration, discernment. 2. கருத்துள்ளவன் (யாழ்ப்.); one who is careful, industrious, diligent.

*[கருத்து + ஆள் + இ – கருத்தாளி. 'இ' உடைமை குறித்த ஈறு.]*

**கருத்தாளி[2]** *karuttāḷi,* பெ.(n.) 1. உடைமையாளி, உரிமையாளி; heir. அம்மான் சொத்துக்கு மருமான் கருத்தாளி (இ.வ.).

*[கருத்து + ஆள் + இ – கருத்தாளி. 'இ' உடைமை குறித்த ஈறு.]*

**கருத்தாளி**[3] *karuttāḷi,* பெ.(n.) மரவகை (யாழ்.அக.); a kind of tree.

*[ஒருகா. கரு + தாளி.]*

**கருத்தாளி**[4] *karuttāḷi,* பெ.(n.) ***கருந்தாளி*** பார்க்க; see *karundāḷi.*

*[கருந்தாளி → கருத்தாளி.]*

**கருத்திணக்கம்** *karuttiṇakkam,* பெ.(n.) உடன்பாடு; compromise, consent.

*[கருத்து + இணக்கம்.]*

**கருத்தியல்** *karuttiyal,* பெ.(n.) கோட்பாடு; ideology.

*[கருத்து + இயல்.]*

**கருத்து** *karuttu,* பெ.(n.) 1. நோக்கம்; தன் முனைப்பாற்றல்; object, design, purpose. *"திருவுளத்துக் கருத்தெதுவோ" (பாரத. கிருட்டி. 32.).* 2. உட்பொருள்; கருத்துப்பிழிவு; gist, substance or pith of a matter. *"பாடங் கருத்தே" (நன். 21.).* 3. கொள்கை; opinion, notion, idea, doctrine. காந்தியடிகளின் கருத்து மக்களைக் கவர்ந்தது (உ.வ.). 4. சீரிய விழிப்புணர்வு; earnestness, awakening. அவன் ஆசிரியர் சொல்வதைக் கருத்தாய்க் கேட்கிறான் (உ.வ.). 5. விருப்பம், ஆசை; wish, desire, inclination. *"கருத்திலாட் டொடுதல்" (கம்பரா. திருவடி. 65.).* 6. அறிவு, நடுநிலை சார்ந்த அறிவுக்கூர்மை; discrimination, judgement. கருத்தாய்ப் பணி செய்தால் கவலைக்கு இடமில்லை (பழ.). 7. உடன்படிக்கை, ஏற்றுக்கொள்கை; agreement. *"அதுவெனக்குங் கருத்தென்றான்" (பாரத. கிருட்டி. 32.).* 8. மனம்; mind. *"தாபதர் நால்வரு மெனக்கருத்திடை முற்பக லெய்தினார்" (கந்தபு. மேருப். 56.).* 9. பயன், நன்மை; good, benefit, use. *"அந்த மருந்திலே கருத்தில்லை" (வின்.).*10. மனவுறுதி; will, determination. *"கருத்தில்... எல்லாப் பொருளும் வருத்தித்த" (திவ். திருவாய். 2, 2, 8.).* 11. தன் மதிப்பு; self-esteem. *"கற்றாரை நோக்கிக் கருத்தழிக" (நீதிநெறி.15.).* 12. எண்ணம்; intention.

ம. கருத்து

*[குரு → கரு → கருத்து. குருத்தல் = தோன்றுதல், ஒளிர்தல், விருப்பமாதல், மனநிறைவாதல், உள்ளடங்குதல், நோக்கமாதல், பெரிதாதல்.]*

**கருத்துக்குறிப்பு** *karuttu-k-kuṟippu,* பெ.(n.) விளக்கவுரை; explanation.

*[கருத்து + குறிப்பு.]*

**கருத்துக்கொள்(ளு)-தல்** *karuttu-k-koḷḷu-,* 16. செ.கு.வி.(v.i.) நோக்கமுறுதல்; to have an inclination for to set one's mind upon.

*[கருத்து + கொள்.]*

**கருத்துச்சாயல்** *karuttu-c-cāyal,* பெ.(n.) ***கருத்துப்பாங்கு*** பார்க்க; see *karuttu-p-pāṅgu.*

*[கருத்து + சாயல்.]*

**கருத்துத் தோன்று-தல்** *karuttu-t-tōṉṟu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. மனத்தகத்தே தோன்றுதல்; to occur to the mind as an idea; plan. 2. கருத்து விளங்குதல்; to be clear to the mind, to be well understood.

*[கருத்து + தோன்று.]*

**கருத்துப்படம்** *karuttu-p-paḍam,* பெ.(n.) கருத்தை விளக்க வரையும் படம்; cartoon.

*[கருத்து + படம்.]*

**கருத்துப்படிவம்** *karuttu-p-paḍivam,* பெ.(n.) மனக்கருத்து; mental impression.

*[கருத்து + படிவம்.]*

**கருத்துப்பாங்கு** *karuttu-p-pāṅgu,* பெ.(n.) தனிக்கோட்பாடு, எண்ணப்போக்கு; notion; opinion.

*[கருத்து + பாங்கு.]*

**கருத்துப்பிசகு** *karuttu-p-piśagu,* பெ.(n.) தவறான விளக்கம்; erroneous interpretation.

*[கருத்து + பிசகு. பிழை → பிழகு → பிசகு.]*

**கருத்துப்பிரி-தல்** *karuttu-p-piri-,* 4. செ.கு.வி. (v.i.) ***கருத்துத்தோன்றுதல்*** பார்க்க; see *karuttu-t-tōṉṟu-.*

*[கருத்து + பரி.]*

**கருத்துப்பொருள்** *karuttu-p-poruḷ,* பெ.(n.) மனத்தாற் கருதப்பட்ட பொருள்; object of thought, a thing imagined, dist. from kāṭci-p-poruḷ. *"காட்சிப் பொருளும் கருத்துப்பொருளும்" (தணிகைப்பு. களவு. 89.).*

*[கருத்து + பொருள்.]*

**கருத்துரு** *karutturu,* பெ.(n.) செய்யக் கருதுவது; proposal.

*[கருத்து + உரு.]*

**கருத்துருவம்** *karut-t-uruvam,* பெ.(n.) *கருத்துரு* பார்க்க; see *karutturu.*

*[கருத்துரு+ கருத்துருவம்]*

**கருத்துரை** *karutturai,* பெ.(n.) உட்பொருள், கருத்துப்பிழிவு (நன்.22,உரை.); gist, substance of a text.

*[கருத்து + உரை.]*

**கருத்துரையாடல்** *karutturaiyāḍal,* பெ.(n.) ஒரு பொருள் குறித்த உரையாடல்; dialogue about particular case.

*[கருத்து + உரையாடல்.]*

**கருத்தூன்று-தல்** *karuttūṉṟu-,* 5. செ.கு.வி.(v.i.) எண்ணம் ஒரு வயப்படுதல்; to concentrate. கருத்தூன்றிப் படி (உ.வ.).

*[கருத்து + ஊன்று.]*

**கருத்தெடு-த்தல்** *karutteḍu-,* 4. செ.கு.வி.(v.i.) 1. சூழ்ச்சி செய்தல் (வின்.); to plan a project. 2. உட்கருத்தறிதல்; to find out the purport of a passage.

*[கருத்து + எடு.]*

**கருத்தெழுத்து** *karutteḻuttu,* பெ.(n.) ஒரு சொல்லைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்ட வடிவம்; ideograph.

*[கருத்து + எழுத்து. கருத்தெழுத்தாவது, ஒவ்வொரு கருத்தையும் படவெழுத்தடிப்படையில் ஒரு குறியாற் குறிப்பது.]*

**கருத்தொட்டு-தல்** *karuttoṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. பொருள் காணுதல் (வின்.); to construe a difficult passage, put a construction on a passage. 2. தொக்கு நின்ற சொல்லை விரித்துப் பொருள் காணுதல்; to interpret a passage after supplying the word or words understood. 3. பிறர் பாடத்தில் தன் கருத்தை ஒட்டுதல்; to read one's own meaning in a passage and to distort the idea intended by the author. 4. மனத்தை ஒருமுகப்படுத்துதல்; to concentrate the mind.

*[கருத்து + ஒட்டு.]*

**கருத்தொண்டை** *karuttoṇḍai,* பெ.(n.) 1. காக்கணங்கொவ்வை; crow creeper. 2. காக்கை; crow.

மறுவ: கருடக்கொவ்வை

*[கரு + தொண்டை.]*

**கருத்தொழில்**[1] *karu-t-toḻil,* பெ.(n.) பேறுகாலப்பணி; the practice of a mid-wife.

*[கரு + தொழில்.]*

**கருத்தொழில்**[2] *karu-t-toḻil,* பெ.(n.) அச்சு வார்க்கும் தொழில்; mould work.

*[கரு + தொழில்.]*

**கருத்தொழில்**[3] *karu-t-toḻil,* பெ.(n.) பாழ்வித்தை; sorcery or magic.

*[(கரு + தொழில்) கரு = கருமை, இழிந்த.]*

**கருத்தொற்றுமை** *karuttoṟṟumai,* பெ.(n.) இணக்கம்; agreement.

*[கருத்து + ஒற்றுமை.]*

**கருத்தோன்றும் காலம்** *karuttōṉṟumkālam,* பெ.(n.) மகளிர் பூப்பெய்தல் முடிந்த நாளிலிருந்து பன்னிரண்டு நாள் வரையான காலம் (தொல். பொருள். இளம். 185); the period of twelve days from the day of menstruation.

*[கரு + தோன்றும் + காலம்.]*

*கருத்தோன்றும் காலம், இல்லறத்தார் கூட்டத்திற்கு இன்றியமையாதது எனக்கருதப் படுவதை, "பரத்தையர் சேரியானாலும், பூப்புத்தோன்றி மூன்று நாள் கழித்த பின்பு, பன்னிரண்டு நாளும் நீங்குதல் அறமன்று" என்று இளம்பூரணர் கூறும் விளக்கத்தால் அறியலாம்.*

**கருதல்**[1] *karudal,* பெ.(n.) புனைவுகோள், ஓர்ந்தறிதல், ஊகித்தல்; inference. *"அளவை காண்டல் கருத லுரை" (சி.சி. அளவை.1.).*

*[கருது + அல் – கருதல். 'அல்' தொ.பெ.ஈறு.]*

**கருதல்**[2] *karudal,* பெ.(n.) 1. எண்ணுதல், சிந்தித்தல்; thinking, pondering. 2. உறுதிப்படுத்தல்; ascertaining. 3. மதித்தல்; estimate. 4. விரும்பல்; liking.

*[கருது + அல். 'அல்' தொ.பெ.ஈறு.]*

**கருதலர்** *karudalar,* பெ.(n.) பகைவர்; foes, enemies. *"கருதலர் பெருமை" (கம்பரா. திருவடி.10.).*

*[கருது + அல் + அர் – கருதலர். 'அல்' எ.ம.இ.நி. 'அர்' ப.பா.ஈறு.]*

**கருதலளவை** *karudal-aḷavai,* பெ.(n.) 1. உன்னித் துரைத்தல், ஓர்ந்துரைக்கை. (குறள். 930, உரை.); law of inference. 2. குத்துமதிப்பு; approximate.

*[கருதல் + அளவை.]*

**கருதலார்** *karudalār,* பெ.(n.) **கருதலர்** பார்க்க; see *karudalar. "கருதலார் புரமூன் றெரித்தானை" (தேவா. 178, 1.).*

*[கருது + அல் + ஆர் – கருதலார். 'அல்' எ.ம.இ.நி. 'ஆர்' ப.பா.ஈறு.]*

**கருதாதார்** *karudādār,* பெ.(n.) சிந்தனை செய்யாதார், நினையாதார்; one who is not thinking. *"திண்சிலைவாய்க் கணை சிதறியும் வரகிரியிற் கருதாதவர் வரகரி குளநிறை வாரியும்" (S.I.I. vol.3. insc. 206.).*

*[கருது + ஆ + த் + ஆர். "ஆ" (எ.ம.இ.நி.) "த்" எழுத்துப்பேறு. 'ஆர்' பலர் பாலீறு.]*

**கருதார்** *karudār,* பெ.(n.) **கருதலர்** பார்க்க; see *karudalar, "கருதார் குலக்கட்டை வாங்கி" (உத்தரரா. திருவோலக்.6.).*

*[கருது + ஆ + ஆர் = கருதார். 'ஆ' எ.ம.இ.நி. புணர்ந்து கெட்டது. 'ஆர்' ப.பா.ஈறு.]*

**கருதியிரு–த்தல்** *karuti-iru-,* 2 செ.குன்றாவி.(v.t.) எதிர்பார்த்திருத்தல்; காத்திருத்தல்; to expect.

*[ கருதி + இரு. 'இ' வி.எ.ஈறு.]*

**கருதுகோள்** *karudukōḷ,* பெ.(n.) உண்மை நிலையை வெளிப்படுத்தும் முகத்தான், காரணகாரியங்களடிப் படையில், இவ்வாறு இருக்கலாம் எனக்கொள்ளுதல்; hypothesis.

*[கருது + கோள்.]*

**கருது–தல்** *karudu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. சற்று விருப்பத்தோடு முன்னுதல் (பிங்.); to intend, purpose, design. 2. மறந்ததை நினைத்தல்; to recall to mind, recollect. *"கருத லாராய்ச்சி" (தொல். பொருள். 260.).* 3. தீர்மானித்தறிதல்; to judge calmly, take heed. *"காலங் கருதி யிருப்பர்" (குறள்., 485.).* 4. ஓர்ந்தறிதல்; ஊகித்தல்; உறுதிசெய்தல்; to suppose, consider, imagine, to take it into one's head. 5. மதித்தல்; to regard. *"செல்வத்தே புக்கழுந்தி நாடோறும் மெய்யாக் கருதி" (திருவாச.10, 17.).* 6. விரும்புதல் (வின்.); to wish for, desire. 7. உன்னித்தறிதல்; to infer, deduce. *"அளவை காண்டல் கருதல்" (சி.சி. அளவை.1.). 8.* இறுதியாக ஆராய்தல்; to ponder, think deeply, meditate. *"கருதி நீமனம்" (தேவா. 889,2.).* 9. ஒத்தல்; to resemble. *"கார்கருதி வார்முரச மார்க்கும்" (பு.வெ. 6, 9.).*

ம. கருதுக; **கோத.** கர்ந்த்; **க.**கரு (குறித்தல்).

**Chin.** Kaolu

*[உல் → உரு → குரு → கரு → கருது. உல் = ஒத்தல், பொருந்துதல்கருத்து வேர்ச்சொல். ஒன்றனோடொன்றைப் பொருத்தி நினைத்தலால் தோன்றும் எண்ணங்களின் திரட்சி, கருதுதலாயிற்று.]*

**கருந்தக்காளி** *karuntakkāḷi,* பெ.(n.) 1. மருத்துவத்திற்குப் பயன்படும் கருப்புத்தக்காளி; a black takkāḷi for medicinal use. 2. மிளகு தக்காளி; mad apple (சா.அக.).

மறுவ. தக்காளி

**கருந்தகரை** *karuntagarai,* பெ.(n.) செடிவகை (வின்.); a species of fetid cassia plant.

ம. கரிந்தகர

*[கரும் + தகரை.]*

**கருந்தகி** *karundagi,* பெ.(n.) காக்கைக் கொல்லி விதை; the seed of the crow-killer or the crowberry (சா.அக.).

*[கரும் + தகி.]*

**கருந்தட்டாங்குடி** *karuntaṭṭāṅ-kuḍi,* பெ.(n.) தஞ்சை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Thañjāvūr dt.

*[கரும் + திட்டை + குடி – கருந்திட்டைக்குடி → கருந்தட்டாங்குடி → கருந்தட்டான்குடி.]*

**கருந்தட்டைப்பயறு** *karuntaṭṭai-p-payaṟu,* பெ.(n.) கருப்புத் தட்டைப் பயிறு; a kind of flat black pulse of the Dolichos genus (சா.அக.).

*[கரும் + தட்டை + பயிறு.]*

**கருந்தண்ணீர்** *karu-n-taṇṇīr,* பெ.(n.) 1. அயம் சேர்ந்த தண்ணீர்; a black mineral water. 2. பாறை நீர்; water found deposited on the beds of granite rocks.

*[கரும் + தண்ணீர்.]*

**கருந்தண்ணீர்க்கல்** *karuntaṇṇīr-k-kal,* பெ.(n.) பூச்சிலை என்னுங்கல் (யாழ்.அக.); a kind of stone.

*[கரும் + தண்ணீர் + கல்.]*

**கருந்தண்பை** *karundaṇbai,* பெ.(n.) 1. ***கறுப்புத் தாமரம்*** பார்க்க; see *karu-p-pu-t-tāmaram.* 2. உறப்புப்பிசின்; rock dammer (சா.அக.).

*[கரும் + தண்பை – கருந்தண்பை.]*

**கருந்தணல்** *karuntaṇal,* பெ.(n.) செந்நாயுருவி; a red variety of Indian burr (சா.அக.).

*[கரும் + தணல்.]*

**கருந்தமிழ்** *karuntamiḻ,* பெ.(n.) 1. கொச்சைத் தமிழ்; colloquial, unrefined Tamiḻ. *"கருந்தமிழுஞ் செந்தமிழாங் கோவைத் தினகரா" (தினகர. 75.).* 2. மலையாளமொழியின் பழைய வடிவம்; the early stage of Malayāḷam.

**ம.** கரிந்தமிழ்

*[கரு = தாழ்ந்த. கரும் + தமிழ்.]*

**கருந்தரை** *karu-n-darai,* பெ.(n.) 1. கருப்பு மண்ணிலம்; black soil. 2. பாழ்நிலம் (ஈடு.); barren land, waste land.

*[கரும் + தரை. கரு → கரும். கரு = கருமை நிறம், தீமை, அழிவு, பாழ்.]*

**கருந்தலாக்குறிச்சி** *karuntalākkuricci,* பெ.(n.) விழுபுரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Viḻuppuram dt.

*[கரும் + தலை + குறிச்சி – கருந்லைக்குறிச்சி→ கருந்தலாக்குறிச்சி.]*

**கருந்தலை** *karuntalai,* பெ.(n.) 1. காற்பாகம்; a quarter, the fraction ¼. *"கருந்தலை செந்தலை தங்காறிரிக்கால்" (தனிப்பா.1,87,171.).* 2. முடிவு; end, close. ஆனிக்கருந்தலை (C.N.). 3. தொடக்கம்; beginning. கருந்தலையிற் பேசாமல் விட்டது தவறு (இ.வ.) 4. கொடிவழி, தலைமுறை; generation.

**ம.** கரிந்தல, கருந்தல.

*[கரும் + தலை. கருத்தல் = தோன்றுதல், பகுதி.]*

**கருந்தலைக்குத்தகை** *karuntalai-k-kuttagai,* பெ.(n.) குறுங்காலக் குத்தகை (இ.வ.); temporary lease.

*[கரும் + தலை + குத்தகை. கொத்து→ கொத்தகை குத்தகை = மொத்தப் பணம். கருந்தலை = பாகம், பிரிவு.]*

**கருந்தவளை**[1] *karuntavaḷai,* பெ.(n.) கறுப்புத்தவளை; black frog.

*[கரும் + தவளை. கரு = கருமை.]*

**கருந்தவளை**[2] *karuntavaḷai,* பெ.(n.) மிடாத்தவளை; bull frog.

*[கரும் + தவளை. கரு = வலிய, பெரிய.]*

**கருந்தளிர்** *karundaḷir,* பெ.(n.) இளந்தளிர்; tender shoot.

**ம.** கருந்தளிர்

*[கரு→ கரும் + தளிர்.]*

**கருந்தனம்**[1] *karundaṉam,* பெ.(n.) 1. பொன் (திவா.); gold. 2. பணம்; money. *"கருந்தனம் கைத்தலத்த வுய்த்துச் சொரிந்திட்டு" (நீதிநெறி.9.).*

**Skt.** dhana > **த.** தனம்.

*[கரும் + தனம். கரும் = சிறப்பு. வ. தனம் = மாடு, பணம்.]*

**கருந்தனம்**[2] *karundaṉam,* பெ.(n.) கரும்பொன்; இரும்பு; iron.

*[கரும் + தனம்.]*

**கருந்தாது** *karuntādu,* பெ.(n.) 1. இரும்பு; iron. *"கருந்தாது கொட்கு மிருஞ்சிலை" (ஞானா.57, 29.).* 2. இரும்பு மாழை; iron ore. 3. நிலக்கரி; coal.

*[கரும் + தாது. தாழ்து→தாது (நிலத்தினடியிற் கிடைப்பது).]*

**கருந்தாமக்கொடி** *karuntāma-k-koḍi,* பெ.(n.) சிறுசெங்குரலி என்னும் மலைக்கொடி (குறிஞ்சிப். 82, உரை.); a mountain creeper.

*[கரும் + தாமம் + கொடி. தாமம் = சிவப்பு.]*

**கருந்தாமரை** *karuntāmarai,* பெ.(n.) மருந்திற்குப் பயன்படும் கருப்புத் தாமரை; black lotus.

*[கரும் + தாமரை.]*

**கருந்தாரை** *karundārai,* பெ.(n.) 1. மாட்டின் மீதுள்ள கரியகோடு (வரைவு.) (வின்.); black streak on an ox. 2. காரொளி; black-light.

*[கரும் + தாரை.]*

**கருந்தாள்** *karuntāḷ,* பெ.(n.) அறுபட்ட தாளடி; stubble.

*[கரும் + தாள். கருத்தல் = தோன்றுதல், அடிப்பகுதி.]*

**கருந்தாளி** *karuntāḷi,* பெ.(n.) காட்டத்தி; devil fig.

ம. கரிந்தாளி; க. கரிதாளி.

*[கரும் + தாளி.]*

**கருந்திடர்** *karuntiḍar,* பெ.(n.) பெரியமேடு (வின்.); high mound, hillock.

*[கரும் + திடர். கரும் = பெரிய. திடல் → திடர்.]*

**கருந்திப்பிலி** *karuntippili,* பெ.(n.) யானைத்திப்பிலி; elephant long pepper (சா.அக.).

*[கரு → கரும் + திப்பிலி. கரு = பெரிய.]*

**கருந்திருக்கை** *karuntirukkai,* பெ.(n.) திருக்கை மீன் வகை; a kind of tirukkai fish.

*[கரும் + திருக்கை.]*

**கருந்திரைச்சூட்டுமணல்** *karuntirai-c-cūṭṭumaṇal,* பெ.(n.)கடலோரத்தில் அலைகளினால் ஒதுக்கப்பட்ட கருமணல்; black sand driven to the shore by sea-waves.

*[கரும் + திரை + சூட்டு + மணல்.]*

**கருந்தினை** *karuntiṉai,* பெ.(n.) கரிய தினை வகை; black Italian millet. *"கருந்தினை யோம்பக் கடவுட் பராவி" (திருக்கோ. 279.).*

மறுவ. இறடி கங்கு, இறுங்கிறடி.

*[கரும் + தினை.]*

**கருந்து** *karundu,* பெ.(n.) 1. மரக்கன்று; sapling, young tree. 2. வாழையின் இளநிலை; tenderness of plantain tree.

*[குருந்து → கருந்து.]*

**கருந்துத்தி** *karuntutti,* பெ.(n.) கறுப்புத்துத்தி; serrate morning mellow (சா.அக.).

*[கரும் + துத்தி.]*

**கருந்தும்பி** *karuntumbi,* பெ.(n.). கருங்காலி; Mysore cormandel ebony. 2. கருந்தண்பை மரம்; black dammer. 3. கரும்பிலிமரம்; South Indian pine.

*[கரும் +தும்பி.]*

**கருந்தும்பிமீன்** *karuntumbi-mīṉ,* பெ.(n.) உடலில் பட்டைகளுடன் கூடிய செந்நிற மீன்வகை; a kind of red fish.

*[கரும் + தும்பி + மீன்.]*



கருந்தும்பிமீன்

**கருந்தும்பை** *karuntumbai,* பெ.(n.) 1. பேய்மருட்டி; malabar catamint. 2. கருங்காலி (L.); coromandel ebony. 3. செடிவகை; an ornamental plant.

ம. கரிந்தும்ப; க. கரிதும்பெ; தெ. நல்லதுமிக்கி.

*[கரும் + தும்பை. தூ = தும்பை வெண்ணிறம் கொண்டது.]*

**கருந்துவரை**[1] *karuntuvarai,* பெ.(n.) 1. மலைத் துவரை; hill dhall. 2. மரவகை; bourdillon's apple-fruited ebony. 3. தோதகத்தி; dark black wood. 4. கருப்புத் துவரை; topasi ebony. 5. இரும்பிலி; common satin ebony.

*[கரும் + துவரை.]*

**கருந்துவரை**[2] *karuntuvaṟai,* பெ.(n.) சிற்றிலைப் புலவு (வண்டி அடிக்கட்டை, தூண்டிற்கோல் முதலியவற்றிற்குப் பயன்படும் கெட்டியான மரவகை); lance wood (சா.அக.).

*[கரும் + துவரை.]*

**கருந்துழாய்** *karuntuḻāy.* பெ.(n.) ***கருந்துளசி*** பார்க்க; see *karuntuḷasi.*

*[கரும் + துழாய்.]*

**கருந்துளகம்** *karuntuḷakam,* பெ.(n.) கருப்பூர வெற்றிலை; camphor betel (சா.அக.).

*[கரும் + துளகம்.]*

**கருந்துளசி** *karuntuḷaši,* பெ.(n.) துளசிவகை (பதார்த்த. 304.); purple-stalked basil.

க. கரிதுளசி; ம. கரிந்துளசி; து. கப்புதொளசி.

*[கரும் + துளசி.]*

துளவம் → துளசி. கருந்துளசி = துளசி போன்று சற்றே காரல் மணம் கொண்டது.

**கருந்துளை** *karuntuḷai,* பெ.(n.) அண்டப்பெரு வெளியின் ஓரிடத்தில், அனைத்துக் கோள்களும் உள்ளொடுங்கும், பெரிய கருந்துளை வாயில்; black hole as discovered by scientists in the greater universe.

*[கரு → கரும் + துளை.]*

**கருந்தூள் செந்தூள் பறத்தல்** *karuntūḷ-sentūḷ-paṟattal,* பெ.(n.) கடுமுனைப்பாய் முயலுகை (இ.வ.); making much ado; bustling feverish activity.

*[கரும் + தூள் + செம் + தூள் + பறத்தல்.]*

போர்க்காலத்தில் பகைவர் இடங்களுக்குத் தீக்கொளுவிக் கருந்தூள் பறக்க விரைந்து செல்லுதலானும், செல்லும்போதும் திரும்பி வரும்போதும், வழிநெடுகச் செந்தூள் பறக்க விரைந்து இயங்குதலானும், போர்த்தொழிலின் கடுமையும் விரைவும் கருதிக் கருந்தூள் செந்தூள் பறக்க வினையாற்றுதல், பொதுவாக ஊக்க மிகுதியுணர்த்தும் மரபுச் சொல்லாயிற்று.

**கருந்தேள்** *karuntēḷ,* பெ.(n.) கருப்புத்தேள்; black scorpion.

ம. கரிந்தேள்; க. கரிதேளு, கரிசேள்.

*[கரும் + தேள்.]*

**கருந்தேளி** *karundēḷi,* பெ.(n.) கருநிறத்துத் தேளி மீன்; black scorpion-fish.

*[கரும் + தேளி.]*

**கருந்தேன்** *karuntēṉ,* பெ.(n.) 1. கொம்புத்தேன்; honey collected from honeycombs from branches of a tree, pure honey (சா.அக.). 2. நெல்லிக்காய்ச் சாறு; the juice of Indian gooseberry.

*[கரு → கரும் + தேன். கடு = உயர்ந்த, சிறந்த.]*

**கருந்தை** *karundai,* பெ.(n.) 1. காடைக்கண்ணிநெல்; common paddy of the colour of quail's eyes. 2. மதுக்காரை; common emetic nut (சா.அக.).

*[கரு → கருந்தை. கரு = சிறந்த, உயர்ந்த. கருந்தை = சிறந்த நெல்வகை.]*

**கருந்தொழில்**[1] *karuntoḻil,* பெ.(n.) வலிய தொழில்; strong workmanship. *"கருந் தொழில் வினைஞர்" (சிறுபாண். 257).*

*[கரும் + தொழில்.]*

**கருந்தொழில்**[2] *karuntoḻil,* பெ.(n.) கொலைத் தொழில்; foul deed, dark assassin's work, killing. *"கருந்தொழிற் கொல்லன்" (சிலப். 16: 154.).*

*[கரும் + தொழில்; கரும் = இழிந்த, கீழான.]*

**கருந்தோல்விரல்** *karu-ṅ-tōl-viral,* பெ.(n.) நூக்க மரம்; black wood of Southern India (சா.அக.).

*[கரும் + தோல் + (விரில்) + விரல்).]*

**கருந்தோலி** *karu-n-dōli,* பெ.(n.) அவுரி; indigo plant.

*[கரும் + தோல் + இ. 'இ' உடைமைப் பொருளீறு.]*

*(சென்னை அகரமுதலியில் "தோழி" என்று குறித்திருப்பது பிழை வடிவமாகும்.)*

**கருந்தோளி** *karuntōḷi,* பெ.(n.) ***கருந்தோலி;*** பார்க்க see *karuntōli.*

*[கருந்தோலி → கரும்தோளி (கொ.வ.).]*

**கருந்தோற்புலவு** *karuntōṟpulavu,* பெ.(n.) சிற்றிலைப் புலவு; rusty leaved lancewood (சா.அக.).

*[கரும் + தோல் + புலவு.]*

**கருநச்சுழி** *karu-nacculi,* பெ.(n.) பச்சைக்கல் நிறமும், ஆறங்குலநீளமுமுடைய கடல்மீன்வகை; goby, a sea-fish greenish, stone coloured, attaining more than 6 inches in length.

*[கரு + நச்சுழி.]*

**கருநஞ்சிப்பயறு** *karunañci-p-payaṟu,* பெ.(n.) 1. ***கரும்பயறு*** பார்க்க; see *karumpayaṟu* 2. சிறுதுவரை; small dhall (சா.அக.).

*[கரு + நஞ்சு + பயறு.]*

**கருநடம்** *karu-naḍam,* பெ.(n.) ***கருநாடு*** பார்க்க; see *karu-nāḍu. "கருநடப்பேர் வெள்ளத்து விழாமல்" (பாரத. சிறப்புப். 18.).*

*[கருநாடு→கருநடம்.]*

**கருநந்து** *karu-nandu,* பெ.(n.) நத்தைவகை (பிங்.); a species of snail.

*[கரும் + நந்து.]*

**கருநன்னாரி** *karu-naṉṉāri,* பெ.(n.) கருப்பு நன்னாரி; a species of dark sarasaparilla.

[கரு + நன்னாரி.]

**கருநாக்கு** *karu-nākku,* பெ.(n.) 1. சிறு கரும் புள்ளிகளையுடைய நாக்கு; tongue with black dots. 2. தீயநாக்கு; vile tongue. 3. தீயநாக்குள்ளவ-ள்-ன்; evil-tongued person.

ம. கரிநாக்கு; க. கரிநாலகெ.

[கரும் + நாக்கு – கருநாக்கு.]

**கருநாகத்தி** *karunāgatti,* பெ.(n.) காட்டத்தி; downry grislea (சா.அக.).

[கரு + நாகத்தி.]

**கருநாகதாளி** *karunāgatāḷi,* பெ.(n.) 1. கருப்பு நாகதாளி; black and few spined prickly pear. 2. நாகப்படம் போன்ற தாளிக்கொடி; snake-hood creeper (சா.அக.).

[கரு + நாக + தாளி.]

**கருநாகம்**[1] *karu-nāgam,* பெ.(n.) 1. கருநிறமுடைய கொடிய நச்சுப்பாம்பு; a highly poisonous black-snake, black cobra. 2. நஞ்சுள்ள கடற்பாம்பு; a poisonous sea-snake.

ம. கரிநாகம்; க. கரிநாக.

[கரு + நாகம்.]

**கருநாகம்**[2] *karu-nāgam,* பெ.(n.) ஒன்பது கோள்களு ளொன்று (ராகு); one among the nine planets.

[கரு + நாகம்.]

**கருநாங்கு** *karu-nāṅgu,* பெ.(n.) மரவகையுளொன்று (L.); long-pointed broad-leaved Ceylon iron-wood.

ம. கரிநாங்கு

[கரும் + நாங்கு – கருநாங்கு.]

**கருநாடகம்**[1] *karu-nāḍagam,* பெ.(n.) 1. பழங்கால ஐம்பத்தாறு நாடுகளுளொன்று; name of the Kanarese country including Mysore and the West Coast between Malabar and Goa, one of 56 nāḍu. *"கொங்கணங் கன்னடங் கொங்கந் தெலிங்கம்" (நன்.272, மயிலை.).* 2. நவாபு ஆட்சி செய்த தென்பகுதி; the carnatic, as ruled by the Nawābs.

[கரு + நாடு + அகம் – கருநாடகம்.]

கருநடம் அல்லது கருநாடகம் என்னும் சொல்லுக்கு, இரு பொருள்கள் கூறப்படுகின்றன. அவை, 1. கரிய நாடு, 2. கருங்கூத்து என்பன.

கன்னட நாட்டிற் பெரும்பகுதி கரிசல் நிலமா யிருப்பதால், கரியநாடு என்று பொருள் கொண்டனர் குண்டெட் பண்டிதரும், (Dr. Gundert) கால்டுவெல் கண்காணியாரும் (Dr. Caldwel).

கூத்துகளில் இழிந்த வகைக்குக் கருங்கூத்து என்று பெயர். "முதுபார்ப்பான் வீழ்க்கைப்பெருங் கருங்கூத்து" [கலித். 65:29].

நடம் = கூத்து. நடன் = கூத்தன். "வளிநடன் மெல்லிணர்ப் பூங்கொடி மேவர நுடங்க" [பரிபா. 22: 42].

நடர் = கூத்தர். "விடரும் தூர்த்தரும் நடரும் உள்ளிட்ட" [குறள். பரிமே. உரை.].

நாடகம் = கதை தழுவிவரும் கூத்து. மிகப் பழைமையான கண்மூடிப் பழக்கத்தைப், "பழைய கருநாடகம்" என்பர். இங்கு கருநாடகம் என்பது, பழைமையான நிலையைக் குறிக்கலாம். ஆகவே, கருநடம் அல்லது கருநாடகம் என்னும் பெயர், கருங்கூத்து நிகழும் நாடு என்னும் பொருள் கொண்டதாயிருக்கலாம். சிலப்பதிகாரத்தில் கருநாடர் குறிக்கப்படும் போதெல்லாம், திருந் தாமையைக் குறிக்கும் 'கொடு' என்னும் அடைகொடுத்தே குறிக்கப்படுகின்றனர்.

'கொங்கணர் கலிங்கர் கொடுங்கரு நாடர்' [சிலப். 25 : 156].
கொங்கணக் கூத்தருங் கொடுங்கரு நாடரும் [சிலப். 26 : 106].

இன்றும், 'யக்ஷகானம்' என்னும் கருங்கூத்து, கன்னட நாட்டில் நடிக்கப்பட்டு வருவதாகக் கூறப்படுகின்றது.

"ஆயினும், கருநடரைக் கருநாடர் என்னும் வழக்கும் உண்மையானும், கூத்தாகிய காரணத் தினும், நிலவகையாகிய காரணம் பெயர்ப்பேற்றிற்குச் சிறத்தலானும், கரிசற்பாங்கான நாடு என்று பொருள் கொள்வதே பொருத்தமாம். கரைநாடு என்பது கருநாடு என மருவிற்றென்பர் சிலர் " [திரவிடத்தாய். பக். 54,55].

க. கருநாடகம் > Skt. karṇāṭaka.

**கருநாடகம்**[2] *karu-nāḍagam,* பெ.(n.) 1. தென்னாட்டு இசை; pure-South - Indian music. 2. பண்வகையு

ளொன்று; a musical mode. கருநாடக இசையில் இவர் வல்லவர்(உ.வ.). 3. பழைய பழக்க வழக்கங்களைக் கடைப்பிடிப்பவர்; old fashion, amepithet applied in facetious disparagement, to a person of old fashioned ways. அவன் ஒரு கருநாடகம் (உ.வ.).

கருநாடகம் என்ற சொல், தென்னக வடபால் பகுதியாகிய தக்காணத்தையே முதலிற்குறித்தது. இப்பகுதி முகமதியர் ஆட்சிக்குட்பட்டபோது, தென்னக இசை கருநாடக இசை எனப்பெயர் பெறுவதாயிற்று. முன்மையாகிய பழமைப் பொருளும் அதன்வழி நிலைப்பதாயிற்று.

**கருநாடகம்**[3] *karu-nāḍagam,* பெ.(n.) 1. பழைமை யானது (இ.வ.); that which is old fashioned or antiquated. 2. நாகரிகமானது (யாழ்.அக.); that which is civilised.

*[கருநாடகம்² → கருநாடகம்³.]*

மலையாளமொழி தோன்றாத காலத்தில் தமிழகம், கருநாடகம், ஆந்திரம், மராத்தியம், குச்சரம், ஆகிய ஐந்தும் ஐந்திரவிட [பஞ்ச திராவிடம்] நாடுகளாக வடமொழியாளரால் வகைப்படுத்தப்பட்டன. தமிழிசை, தமிழ் நாகரிகமே இப்பகுதிகளில் நிலவியதால், பழமைப்பொருளும் நாகரிகச் செம்மைப் பொருளும், இச்சொல்லுக்கு உரியனவாயின.

**கருநாடர்** *karu-nāḍar,* பெ.(n.) கன்னட நாட்டார்; Kanarese people. *"கொடுங் கருநாடரும்" (சிலப். 25, 156.).*

ம. கர்நாட; Pkt. kannāṭa.

*[கரு + நாடு + அர். 'அர்' ப.பா.ஈறு.]*

தொடக்கத்தில் மராத்திய மாநிலத்தையும் கன்னட மாநிலத்தையும் சேர்த்துக் குறித்த இச்சொல், நாளடைவில் கன்னட மாநிலத்தை மட்டும் குறிப்பதாயிற்று.

**கருநாடு** *karunāḍu,* பெ.(n.) 1. திருந்திய திராவிட மொழிகளுள் ஒன்றான கன்னடம் பேசுகின்ற பகுதி; the area where the Kannaḍa language is spoken. 2. கன்னட நாட்டின் மொழி; Kannaḍa, one of the principal Dravidian languages. 3. ஒரு இசை; name of a raga in Carnatic music.

த. கருநாடு>Skt. karnāṭa.

*[கரு + நாடு. கரு → கரிய, கரிசற் பாங்கான நிலம்..]*

**கருநாணல்** *karu-nāṇal,* பெ.(n.) கருப்பு நாணல்; black reed (சா.அக.).

*[கரு + நாணல்.]*

**கருநாய்** *karu-nāy,* பெ.(n.) செந்நாய்; a wolf.

ம. கருநாய்

*[கரு + நாய். கரு = கொடுமை.]*

**கருநாயுருவி** *karu-nāyuruvi,* பெ.(n.) கருப்பு நாயுருவி; a black variety of Indian burr.

*[கரு + நாயுருவி.]*

**கருநார்** *karu-nār,* பெ.(n.) பனையின் கறுப்புநார்; black palmyra fibre (சா.அக.).

*[கரு + நார்.]*

**கருநார்ப்பெட்டி** *karu-nār-p-peṭṭi,* பெ.(n.) பனையின் கருநாரால் முடையப்பட்ட பெட்டி (வின்.); basket made of good black fibre.

*[கரும் + நார் + பெட்டி.]*

**கருநாரத்தை** *karu-nārattai,* பெ.(n.) கருப்பு நாரத்தை; a black or dark variety of bitter orange.

*[கரு + நாரத்தை.]*

**கருநாரை** *karu-nārai,* பெ.(n.) நாரை வகை (பிங்.); black ibis.

ம. கரிநார

*[கரு + நாரை.]*

**கருநாவி** *karu-nāvi,* பெ.(n.) 1. நாவிப்பூடுவகை (பதார்த்த.1056); black species of aconite. 2. கல்லுப்பு; a mystic name for sea-salt (சா.அக.).

*[கரு + நாவி.]*

**கருநாழி** *karunāḻi,* பெ.(n.) சுழுத்திநிலை; one of the five stations of the soul in the body (சா.அக.).

*[கரு = கருநிறம், இருள். கரு + நாழி.]*

**கருநாழிகை** *karu-nāḻigai,* பெ.(n.) இரவு; night. *"கரு நாழிகைதான் ... விடியாவிடின்" (கம்பரா. கடிமண.5.).*

*[கரு + நாழிகை. கரு = கருநிறம், இருள்.]*

**கருநாள்** *karu-nāḷ,* பெ.(n.) ***கரிநாள்*** பார்க்க; see *kari-nāḷ, "தொழாமற் செலுத்திய நாள் கருநாள்" (அருட்பா.1, வடிவுடை.38.).*

**ம.** கரிநாள்

*[கரு + நாள்.]*

**கருநிமிளை** *karunimiḷai,* பெ.(n.) நீலநிறமைக்கல்; black antimony or trisulphide of antimony (சா.அக.).

*[கரு + நிமிளை. நிமிளை = ஒருவகை மாழை.]*

**கருநிலம்** *karu-nilam,* பெ.(n.) 1. பயன்படாத நிலம் (திவா.); barren soil, useless, waste land. 2. கருமண் வயல்; paddy field with black soil.

**ம.** கரிநிலம்; **க.** கரிநெல.

*[கரு + நிலம்.]*

**கருநிறம்** *karu-niṟam,* பெ.(n.) 1. கந்தகச் செய்நஞ்சு; a kind of prepared black arsenic. 2. கருமை; darkness.

*[கரு + நிறம்.]*

**கருநீர்** *karunīr,* பெ.(n.) பனிக்குடத்துநீர்; amniotic fluid with womb (சா.அக.).

*[கரு + நீர்.]*

**கருநீர்ப்பறவை** *karunīr-p-paṟavai,* பெ.(n.) 1. கருப்பு நீர்க்கோழி; black water-fowl. 2. கருப்பைக்குள் பனிக்குடத்து நீரில் மிதக்கும் பிண்டம்; foetus floating in the amniotic fluid in the womb.

*[கரு + நீர் + பறவை. பறவை உயிரைக் குறித்த உருவகம்.]*

**கருநீலப்பிறப்பு** *karunīla-p-piṟappu,* பெ.(n.) மிகவும் இழிந்த பிறப்பு; birth in the lowest state of existence. *"கரும்பிறப்பும் கருநீலப்பிறப்பும்" (மணிமே.27:150.).*

*[கருநீலம் + பிறப்பு.]*

**கருநீலம்** *karunīlam,* பெ.(n.) கருமை கலந்த நீலநிறம்; dark-blue colour.

*[கருமை + நீலம்.]*

**கருநூல்** *karu-nūl,* பெ.(n.) சுழிய (சூனிய) நூல்; treatise on black magic.

*[கரு + நூல்.]*

**கருநெய்க்காரம்** *karu-ney-k-kāram,* பெ.(n.) மரங்களைக் காக்கப் பூசும் எண்ணெய்; a kind of oil used for the preservation of timber.

*[கரு + நெய் + காரம்.]*

**கருநெய்தல்** *karu-neydal,* பெ.(n.) அல்லி (பிங்.); blue Indian water-lilly.

**மறுவ.** நீலோற்பலம்

**ம.** கன்னல்; **க.** கன்னெய்தில்.

*[கரு + நெய்தல்.]*

**கருநெருஞ்சி** *karu-neruñji,* பெ.(n.) நெருஞ்சிவகை; black nerinjy, a prostrate herb.

*[கரு + நெருஞ்சி.]*

**கருநெல்**[1] *karunel,* பெ.(n.) 1. கருப்பு நெல்; black paddy in common. 2. கருங்குறுவை நெல்; a special kind of black paddy the rice of which is red and is highly esteemed as a yogic diet.

**ம.** கருநெல்லு

*[கரு + நெல்]*

**கருநெல்**[2] *karu-nel,* பெ.(n.) மணிபிடித்த நெற்பயிர்; paddy-crop bearing the corns.

*[கரு + நெல். கரு = கருமை.]*

**கருநெல்**[3] *karunel,* பெ.(n.) நெருப்பு; fire. ***கருஞெகிழி*** பார்க்க; see *karuñegiḻi*

**மறுவ.** கருஞெலி

*[கருஞெகிழி → கருஞெலி → கருநெலி → கருநெல் (கொ.வ.).]*

**கருநெல்லி**[1] *karu-nelli,* பெ.(n.) கருநெல்லிச் செடிவகை (பதார்த்த.226.); small papery-downy-glabrate elliptic-ablong-obtuse-or-acute-leaved feather-foil.

*[கரு + நெல்லி.]*

**கருநெல்லி**[2] *karu-nelli,* பெ.(n.) 1. மிளகு; pepper. 2. உச்சிலிந்தி; a variety of phyllanthus.

*[கரு + நெல்லி. நெல் = நெற்று முதிர்ந்த வித்து. நெல் → நெல்லி.]*

**கருநெல்லி**[3] *karunelli,* பெ.(n.) நஞ்சுக்கொடி; umbilical cord (சா.அக.).

*[கரு + நெல்லி.]*

**கருநெறி** *karu-neṟi,* பெ.(n.) நெருப்பு (பிங்.); fire. ***கருஞெகிழி*** பார்க்க; see *karu-ñegiḻi.*

மறுவ. கருநெல்

*[கரு + ஞெகிழி – கருஞெகிழி → கருஞெலி → கருநெறி.]*

**கருநொச்சி** *karu-nocci,* பெ.(n.) 1. நொச்சிவகையு ளொன்று (வின்.); a plant, dark-leaved evergreen, planted in gardens by the side of walks.

ம. கரிநொச்சி; **க., து.** கரிநெக்கி.

*[கரு + நொச்சி. நொச்சில் → நொச்சி.]*

**கருநொச்சிகம்** *karunoccigam,* பெ.(n.) விந்து; semen (சா.அக.).

*[கரு + நோச்சிகம். நெல் (வித்து) → நெத்திகம் → நெச்சிகம். கருநொச்சியம் = கருவுக்கு வித்தாக இருக்கும் வித்து.]*

**கருநொச்சில்** *karu-noccil,* பெ.(n.) ***கருநொச்சி*** பார்க்க; see *karu-nocci.*

*[கரு + நொச்சில்.]*

**கருநோய்** *karu-nōy,* பெ.(n.) மாட்டுநோய் வகை (யாழ்ப்.); a kind of mange in cattle.

*[கரு + நோய்.]*

**கருப்பஇசிவு** *karuppa-iśivu,* பெ.(n.) பேறுகாலங்களில் பெண்களுக்குண்டாகும் ஒருவகை நோய்; a kind of disease occuring during delivery time.

*[கருப்ப(ம்) + இசிவு.]*

**கருப்பக்காலம்** *karuppa-k-kālam,* பெ.(n.) கருவுற்றிருக்கும் காலம்; the period of pregnancy.

**த.** கருப்பக்காலம் >**Skt.** garbhakala.

*[கருப்பம் + காலம்.]*

**கருப்பக்கீரை** *karuppa-k-kīrai,* பெ.(n.) சாணாக் கீரை; a kind of edible greens (சா.அக.).

*[கருப்பம் + கீரை. கருப்பம் = முளை, முளைக்கீரை போன்றது.]*

**கருப்பக்கு** *karu-p-pakku,* பெ.(n.) கருமருது; black murdah.

*[கரு + பக்கு. பக்கு = மரப்பட்டை.]*

கரிய பிதிர்ப் பட்டை உடைமையின், புறத் தோற்றத்தால் பெற்ற பெயர்.

**கருப்பக்குழி** *karuppa-k-kuḻi,* பெ.(n.) ***கருக்குழி*** பார்க்க; see *karu-k-kuḻi.*

*[கருப்பம் + குழி.]*

**கருப்பக்கோள்** *karuppa-k-kōḷ,* பெ.(n.) கருப்பையின் தன்மை, பண்பு, கோட்பாடுகள் முதலியன; the nature condition etc. of the womb (சா.அக.).

*[கருப்பம் + கோள்.]*

**கருப்பக்கோளகை** *karuppa-kōḷogai,* பெ.(n.) கருப்பப்பை (யாழ்ப்.அக.); womb.

*[கருப்பம் + கோளகை. கோளகை = பை.]*

**கருப்பக்கோளாறு** *karuppa-k-kōḷāṟu,* பெ.(n.) கருப்பையிலேற்படும் ஒருவகை நோய்; disorder of the uterus (சா.அக.).

*[கருப்பம் + கோளாறு.]*

**கருப்பக்கோளிலக்கணம்** *karuppa-k-kōḷ-iliakkaṇam,* பெ.(n.) கருப்பையின் தன்மை, அமைப்பு, செயற்பாடு முதலியவைகளைப் பற்றிச் சொல்லும் நூல்; the science relating to the nature, structure, function etc. of the womb (சா.அக.).

*[கருப்பக்கோள் + இலக்கணம்.]*

**கருப்பங்கட்டி** *karuppaṅkaṭṭi,* பெ.(n.) வெல்லக் கட்டி; jaggery.

*[கரும்புக்கட்டி → கருப்பங்கட்டி.]*

**கருப்பங்கரை–தல்** *karuppaṅ-karai-,* 2 செ.கு.வி. (v.i.) 1. கருச்சிதைதல்; to be aborted. 2. அச்ச மிகுதல்; to be frightened out of one's wits.

*[கருப்பம் + கரைதல்.]*

அச்சப்பொருள் அணிவகை சொல்லாட்சியால் விளைந்தது.

**கருப்பங்கலங்கு–தல்** *karuppaṅ-kalaṅgu-,* 5 செ.கு.வி.(v.i.) ***கருப்பங்கரை–தல்*** பார்க்க; see *karuppaṅ-karai-.*

*[கருப்பம் + கலங்கு.]*

**கருப்பங்கழல்(லு)-தல்** *karuppaṅkaḻal(lu)-*, 13 செ.கு.வி.(v.i.) ***கருப்பங்கரைதல்*** பார்க்க; see *karuppaṅ-karai* (சா.அக.).

*[கருப்பம் + கழல்.]*

**கருப்பங்கழி** *karuppaṅkaḻi*, பெ.(n.) ***கரும்பு*** பார்க்க; see *karumbu* (தஞ்சை.).

*[(கரும்பு) கருப்பு + அம் + கழி.(மு.தா. 212.).]*

**கருப்பங்காடி** *karuppaṅkāḍi*, பெ.(n.) கரும்புச் சாற்றிலிருந்து எடுக்கப்படும் ஒருவகைப் புளித்த காடி; an acetous fermentation of the juice derived from sugar-cane (சா.அக.).

*[கரும்பு + அம் + காடி – கருப்பம்காடி → கருப்பங்காடி. கரும்பு → கருப்பு எனத் திரிந்தது வலித்தல் திரிபு. 'அம்' சாரியை.]*

**கருப்பங்கொல்லை** *karuppaṅ-kollai*, பெ.(n.) கரும்புத்தோட்டம்; sugar cane field.

*[கரும்பு + அம் + கொல்லை. கரும்பு → கருப்பு (வலித்தல் திரிபு).]*

**கருப்பங்கொள்(ளு)-தல்** *karuppaṅ-koḷḷu-*, 13 செ.குன்றாவி.(v.t.) ***கருக்கொள்ளு-தல்*** பார்க்க; see *karu-k-koḷḷu-*

*[கருப்பம் + கொள்.]*

**கருப்பச்சிதைவு** *karuppa-c-cidaivu*, பெ.(n.) கருக்குலைவு; abortion.

*[கருப்பம் + சிதைவு.]*

**கருப்பச்சின்னம்** *karuppa-c-cinnam*, பெ.(n.) ***கருப்பவடையாளம்*** பார்க்க; see *karuppava ḍaiyāḷam.*

*[கருப்பம் + சின்னம்.]*

**கருப்பச்சூடு** *karuppa-c-cūḍu*, பெ.(n.) 1. பெற்றோர் வழியாகக் குழந்தைக்கு வரும் நோய்வகை; constitutional debility of an infant brought on by antenatal conditions. 2. நாக்கில் காணும் நோய்; a disease of the tongue.

*[கருப்பம் + சூடு.]*

**கருப்பச்சூலை** *karuppa-c-cūlai*, பெ.(n.) ஒருவகைச் சூலை (குத்தல்) நோய்; a kind of ulser.

*[கருப்பம் + சூலை.]*

**கருப்பசன்னி** *karuppa-šanni*, பெ.(n.) ***கருப்பஇசிவு*** பார்க்க; see *karuppa-išivu.*

*[கருப்ப(ம்) + சன்னி.]*

**கருப்பஞ்சாறு** *karuppañ-cāṟu*, பெ.(n.) கரும்புச் சாறு; sugarcane juice.

*[கரும்பு + அம் + சாறு. கரும்பு → கருப்பு.]*

**கருப்பஞ்சீனி** *karuppañ-cīni*, பெ.(n.) கரும்பின் சருக்கரை; cane sugar.

*[கரும்பு + அம் + சீனி.]*

**கருப்பஞ்சோகை** *karuppañ-sōgai*, பெ.(n.) ***கருப்பந்தோகை*** பார்க்க; see *karu-p-pantōgai.*

*[கரும்பு + அம் + தோகை = கருப்பந்தோகை → கருப்பஞ்சோகை; 'அம்' சாரியை. தொகு → தோகை → சோகை. (கொ.வ.).]*

**கருப்பட்டி** *karuppaṭṭi*, பெ.(n.) 1. பனைவெல்லம்; jaggery, made from palmyra juice. *"சீவன் கருப்பட்டியோ" (இராம. உயுத். 69.).* 2. பனங்கற் கண்டு (யாழ்.அக.); candy made from palmyra juice. 3. வெல்லம் (வின்.); jaggery.

ம. கரிஞ்சக்கர, கரிப்பட்டி; துட. கபோடி; H. gud.

*[கரும்புல் + அட்டி – கரும்புல்லட்டி → கரும்பட்டி → கருப்பட்டி. கரும்புல் = பனைமரம். அட்டி = அடப்பட்டது, காய்ச்சப்பட்டது.]*

**கருப்பட்டிக்கற்கண்டு** *karuppaṭṭi-k-kaṟkaṇḍu*, பெ.(n.) பனங்கற்கண்டு; palmyra sugar-candy (சா.அக.).

*[கருப்பட்டி + கற்கண்டு.]*

**கருப்பட்டிப்பாகு** *karuppaṭṭi-p-pāgu*, பெ.(n.) பனை வெல்லப்பாகு; the sacchrina fluid consisting of the inspisated juices or decoctions of the palmyra plant (சா.அக.).

*[கருப்பட்டி + பாகு.]*

**கருப்படம்** *karu-p-paḍam*, பெ.(n.) கந்தற்புடைவை (யாழ்.அக.); rags.

*[கரு + படம். கரு = இழிந்த, பயன்படாத.]*

**கருப்படித்துண்டு** *karuppadi-t-tuṇḍu,* பெ.(n.) கடலூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kadalūr dt.

*[கரும்பு + அடி + துண்டு – கரும்படித் துண்டு→ கரும்படித்துண்டு (கரும்பு வயலைச் சார்ந்த கீழ்ப்பகுதித் துண்டு நிலம், அந்நிலத்திலமைந்த சிற்றூர்.]*

**கருப்பணி** *karruppaṇi,* பெ.(n.) பனையினின்று இறக்கும் பதநீர் (யாழ்ப்.); sweet toddy of the palmyra, drawn into an earthen vessel smeared within with lime to prevent fermentation.

*[கரும்பு + பதநீர் – கரும்புப் பதநீர் → கருப்பநீர் → கருப்பணி (கொ.வ.). கரும்புல் = பனைமரம். கரும்புல் → கரும்பு (லகர ஈறு கெட்டது.)]*

**கருப்பத்துளை** *karuppa-t-tuḷai,* பெ.(n.) 1. இயற்கை யாகவே அமைந்துள்ள துளை; any natural hole or cavity (சா.அக.). 2. பவளங்கள் உண்டாகும் போதே காணும் உட்டுளையாகிய குற்றம்; inner hole or cavity formed at the first formation of a coral, a flaw in coral. *"கருப்பத்துளையவுங் கல்லிடை முடங்கலும்" (சிலப். 14:197.).* 3. கருப்பையிலேற்படும் துளை; rupture or perforation in the womb.

*[கருப்பம் + அத்து + துளை. 'அத்து' சாரியை.]*

**கருப்பதும்பம்** *karuppa-tumbam,* பெ.(n.) கருப்பத்தை மூடியிருக்கும் நஞ்சுப்பை; after birth; the membranous covering containing the embryo. *"கர்ப்பதும்பமாகிற பையிலே கட்டுண்டு" (திவ். திருமாலை, அவ. வ்யா, பக். 4.).*

*[கருப்பம் + தும்பம். தூம்பு → தும்பம்.]*

**கருப்பந்தெப்பம்** *karuppanteppam,* பெ.(n.) பேய்க்கரும்பு பிணைத்துச் செய்யப்படும் மிதவை (பதிற்றுப். 87, 4, உரை.); raft made of wild sugarcane reeds.

*[கரும்பு = பேய்க் கரும்பு. கரும்பு + அம் + தெப்பம் – கரும்பந்தெப்பம்→ கருப்பந்தெப்பம். 'அம்' சாரியை.]*

**கருப்பந்தோகை** *karuppan-tōgai,* பெ.(n.) கரும்பின் நெட்டிலை (அ) தாள் (இ.வ.); leaf of the sugar-cane plant.

*[கரும்பு + அம் + தோகை . 'அம்' சாரியை. கரும்பு → கருப்பு (வலித்தல் திரிபு.]*

**கருப்பநாடி** *karuppa-nāḍi,* பெ.(n.) கொப்பூழ்க்கொடி (யாழ்.அக.); navel cord.

*[கருப்பம் + நாடி. நாளி → நாடி (உட்டுளையுடையது).]*

**கருப்பநாள்** *karuppa-nāḷ,* பெ.(n.) 1. குழந்தை பிறந்த ஒன்பதாம் நாள் (யாழ்.அக.); the ninth day after ch[illegible] birth. 2. கருப்பிணியாய் இருக்கும் காலம்; the [illegible]riod of pregnancy. 3. கருக்கொள்ளுங்காலம்; period of conception (சா.அக.).

*[கருப்பம் + நாள்.]*

**கருப்பநீர்**[1] *karuppa-nīr,* பெ.(n.) பனிக்குடத்து நீர்; discharge from the amniotic sac.

*[கருப்பம் + நீர்.]*

**கருப்பநீர்**[2] *karuppa-nīr,* பெ.(n.) 1. கருப்பஞ்சாறு; sugar cane juice. 2. பனை, தென்னை முதலியவற்றின் நீர் (பதநீர், கள்); the sap or toddy extracted from palmyra, coconut trees etc. 3. இளநீர்; tender coconut water.

*[கரும்பு + நீர் → கரும்பு நீர் → கருப்பநீர். கரும்பு → கருப்பு (வலித்தல் திரிபு).]*

**கருப்பநோக்காடு** *karuppa-nōkkāḍu,* பெ.(n.) கருப்பவலி; pain in the womb.

**மறுவ.** இடுப்புநோவு, இடுப்பு வலி.

*[கருப்ப + நோக்காடு. நோய் + காடு = நோக்காடு]*

**கருப்பப்பரிசம்** *karuppa-p-parišam,* பெ.(n.) மகப்பேறு வாய்க்கை (யாழ்.அக.); pregnancy.

*[கருப்பம் + பரிசம் – கருப்பபரிசம். பரிசு → பரிசம்.]*

**கருப்பப்பேழை** *karuppa-p-pēḷai,* பெ.(n.) தவசங்கள் வைக்க மண்ணால் செய்யப்படும் கூடு; large earthen receptacle for storing grain.

*[கருப்பம் + பேழை.]*

இவ்வகைப்பேழைகள் செய்ய நண்டுவளை மண், யானைக்கொம்புமண், புற்றுமண், குளத்துமண் ஆகிய மண்வகைகள் பயன்படுத்தப்படுகின்றன [மனைநூல்].

**கருப்பப்பை**[1] *karuppa-p-pai,* பெ.(n.) கருத்தங்கும் உறுப்பு; the uterus.

*[கருப்பம் + பை.]*

**கருப்பப்பை**[2] *karuppa-p-pai,* பெ.(n.) ***கருப்பை*** பார்க்க; see *karuppai* (செ.அக.).

*[கருப்பம் + பை.]*

**கருப்பம்**[1] *karuppam,* பெ.(n.) 1. கரு; embryo, foetus, the young in the womb. 2. கருப்பப் பை; womb, matrix uterus.

மறுவ. கரு, கருவு, கருவம். கருபு, கருபம்.

த. கருப்பம் > **Skt.** garbha.

*[குருத்தல் : தோன்றுதல். குரு → கரு → (கருப்பு) கருப்பம். கரு = சூல், பீள், முட்டை, சேய், குட்டி. வடமொழியாளர் 'க்ரு' (விளி) என்றும் grabh = grah (பற்று) என்றும் மூலங்காட்டுவது பொருந்தாது (வட. வர. 108.).]*

**கருப்பம்**[2] *karuppam,* பெ.(n.) 1. பொருள் பொதிந்தது, உட்கொண்டது; fig., essence, substance, inside, inner contents of anything. கருப்பமுள்ள பாட்டு. 2. நாடக வுத்தி யைந்தனுள் ஒன்று; crisis of a plot in a drama, one of five nāḍaga-utti. 3. நூற்றெட்டு உபநிடதங்களுள் ஒன்று; name of one of 108 Upanisads.

வ. கருப்ப

*[கரு → கருப்பம். குரு → கரு = உட்குருத்து, உள்ளடங்கியது.]*

**கருப்பம்**[3] *karuppam,* பெ.(n.) உட்பொருளாகக் கொண்டது (சிலப்.17: 442.); that which is suggestive, prognosticative.

**Skt.** garpha

*[கரு → கருப்பம்.]*

**கருப்பம்**[4] *karuppam,* பெ.(n.) 1. வித்தினின்று தோன்றும் முளை; sprout from the seed. 2. மழை பொழிதற்கான மேகத்திரட்சி; cloud formation in the rainy season.

**Skt.** garpha

*[கரு → கருப்பம். கருத்தல் = தோன்றுதல்.]*

**கருப்பம்கொள்-தல்** *karuppam-koḷ-,* 7 செ.குன்றாவி.(v.t.) கருக்கொள்ளுதல்; to conceive, to be pregnant.

*[கரு → கருப்பம் + கொள்.]*

**கருப்பம்பாகு** *karuppam-pāgu,* பெ.(n.) வெல்லப் பாகு (வின்.); sugar-cane treacle, medicated molasses.

*[கரும்பு + அம் + பாகு – கரும்பம்பாகு. கருப்பம்பாகு. 'அம்' சாரியை. கரும்பு → கருப்பு (வலித்தல் திரிபு).]*

**கருப்பமழி-தல்** *karuppam-aḻi-,* 2 செ.குன்றாவி.(v.t.) ***கருக்கலை-தல்*** பார்க்க; see *karukkalai-.*

*[கரு → கருப்பம் + அழி-.]*

**கருப்பரம்**[1] *karupparam,* பெ.(n.) 1. தலையோடு; skull. 2. எலும்பு; bone. 3. இருப்புப்பாண்டம்; iron utensil.

*[கரு + பரம் – கருப்பரம். பரம் = மேலிருப்பது. மூடியிருப்பது. கரு = அடிப்படையானது, வலுவானது, மூலமானது.]*

**கருப்பவடையாளம்** *karuppavaḍaiyāḷam,* பெ.(n.) சூலுற்றதற்கான அறிகுறிகள்; signs and symptoms of pregnancy.

*[கருப்பம் + அடையாளம்.]*

மாதவிலக்கு நிற்றல், மசக்கையுண்டாதல், கொங்கை விம்மல், மூலைக்காம்பில் கருப்புப் படர்தல், வயிறு பருத்தல், குழந்தையசைதல் போன்றன கருப்பவடையாளங்களாகும். சூலுற்ற பெண்ணின் பண்பு, நடை ஆகியவற்றிலும் மாறுபாடு காணப்படும்.

**கருப்பவதி** *karuppa-vadi,* பெ.(n.) கருவுற்ற பெண்; pregnant woman. ***கருவத்தி*** பார்க்க; see *karuvatti*

மறுவ. உண்டானவள், சூலி, சூலாள், வயிறி, முழுவாதவள், கருவத்தி.

*[கருப்பம் + வதி – கருப்பவதி. அத்தி → வதி. (பெ.பா.ஈறு.)]*

**கருப்பவலி** *karuppa-vali,* பெ.(n.) தாய்மைப்பேற்று வலி; travail, pains of child-birth; labour pain.

மறுவ. இடுப்புவலி, இடுப்புநோவு.

*[கருப்பம் + வலி – கருப்பவலி.]*

**கருப்பவேதனை** *karuppavēdaṉai,* பெ.(n.) ***கருப்ப நோவு*** பார்க்க; see *karuppanōvu* (சா.அக.).

*[கருப்பம் + வேதனை.]*

**கருப்பவேர்** *karuppavēr,* பெ.(n.) ஆணிவேர்; main root (சா.அக.).

*[கரு → கருப்பம் + வேர்.]*

**கருப்பவோட்டம்** *karuppa-v-ōṭṭam,* பெ.(n.) சிலை (மார்கழி) மாதத்தின் பிற்பகுதியில் கருக்கொண்ட மேகத்தின் தென்திசை நோக்கிய ஓட்டம்; southern passage of the rain clouds about the latter half of the Mārgaḻi month.

*[கருப்பம் = மழைநீரைக் கருக்கொண்டமேகம். கருப்பம் + ஓட்டம் – கருப்பவோட்டம்.]*

**கருப்பழிஞ்சில்** *karuppaḻiñjil*, பெ.(n.) கருப்பு அங்கோலம்; sage-leaved alangium (சா.அக.).

மறுவ. காரழிஞ்சில்

*[கருப்ப + அழிஞ்சில்.]*

**கருப்பற்று** *karu-p-paṟṟu*, பெ.(n.) தாய்மைப்பேறு அடைதல்; attaining mother-hood.

*[கரு + பற்று.]*

**கருப்பறுகு** *karupparugu*, பெ.(n.) இருளறுகு; a dark variety of panic grass (சா.அக.).

*[கருப்பு + அறுகு.]*

**கருப்பாசயம்** *karuppāšayam*, பெ.(n.) கருப்பப்பை; uterus womb. *"கர்ப்பாசயக் குழிக்கே தள்ளுமோ" (பட்டினத். திருப்பா. திருச்செங்காடு. பக். 142.).*

*[கருப்பம் + ஆசயம். ]*

Skt. asaya (resting place) > **த.** ஆசயம்.

**கருப்பாணி** *karuppāṇi*, பெ.(n.) பனைமரத்தின் பாளையினின்று வடிக்கும் பதநீர்; a sweet juice extracted from the palmyra tree (சா.அக.).

*[கரும்புல் = பனைமரம். கரும்புல் → கரும்பு + பதநீர். கரும்பதநீர் → கரும்பாணி (கொ.வ.).]*

**கருப்பாதம்** *karuppādam*, பெ.(n.) செம்முருங்கை; a kind of moringa (சா.அக.).

*[கரு + (பதம்) பாதம். கரு = சிறந்த. பதம் = உணவு.]*

**கருப்பாலை** *karuppālai*, பெ.(n.) கரும்பாட்டும் ஆலை; sugar-cane press. *"கருப்பாலைச் சோதி நெடும்புகை" (சேக்கிழார். 4, 74.).* 2. கரும் பாலைமரம்; ape-flower tree.

*[கரும்பு + ஆலை – கரும்பாலை→ கருப்பாலை. கரும் + பாலை (மரம்). கரும்பு → கருப்பு (வலித்தல் திரிபு).]*

**கருப்பி**[1] *karuppi*, பெ.(n.) (பேய்கட்குத்தலைவியாகிய) காளி; kāḷi.

*[கருப்பு→கருப்பி.]*

**கருப்பி**[2] *karuppi*, பெ.(n.) 1. நீலச் செய்ந்நஞ்சு; a kind of arsenic. 2. இரும்பு; iron. 3. கருநொச்சி; a three-leaved chaste tree.

*[கரு = கரியநிறம். கரு → கருப்பு → கருப்பி 'இ' கரம் உடைமை குறித்த ஈறு.]*

**கருப்பி**[3] *karuppi*, பெ.(n.) புற்றாஞ்சோறு; an artificial cellular receptacle like beehive, for the habitation of white-ants.

*[கரு → கருப்பு → கருப்பி.]*

**கருப்பிடி–த்தல்** *karu-p-piḍi-*, 4 செ.கு.வி.(v.i.) 1. அச்சில் வார்த்தல்; to cast in a mould. *"இவனை மயிலோடே கூடக் கருப்பிடித்த தென்னும்படியா யிருக்கை" (திவ். திருப்பள்ளி. 6, வ்யா. பக். 33.).* 2. ஒருமைப்படுத்தல்; to concentrate. 3. எண்ணத்தை மட்டுக்கட்டுதல் (யாழ்.அக.); to stick to the point. 4. கரு உண்டாதல்; conception.

**ம.** கருப்பிடிக்குக

*[கரு + பிடி.]*

**கருப்பிண்டம்** *karuppiṇḍam*, பெ.(n.) கருப்பத்திலுள்ள கரு (கொ.வ.); foetus.

*[கரு + பிண்டம்.]*

**கருப்பில்லம்** *karuppillam*, பெ.(n.) 1. இருட்டறை; dark room. 2. சிறை; jail.

**து.** கர்பில், கர்பில்லு.

*[கருப்பு + இல்லம்]*

**கருப்பிலவு** *karuppilavu*, பெ.(n.) முள்ளிலவு; thorny cotton tree (சா.அக.).

*[கரு → கருப்பு + இலவு.]*

**கருப்பிலை** *karuppilai*, பெ.(n.) கறிவேப்பிலை; curry-leaf (சா.அக.).

*[கறி + வேம்பு + இலை. கறிவேப்பிலை → கருப்பிலை (கொ.வ.)]*

**கருப்பிணிசூல்** *karuppiṇisūl*, பெ.(n.) கருக்கொண் டிருக்கும்போதே மறுபடியும் சூல் கொள்ளல்; a second conception of a female who has already a foetus in the womb (சா.அக.).

*[கருப்பம் → கருப்பிணி 'இன்' சாரியை 'இ' பெ.பா.ஈறு ஒ.நோ. பார்ப்பு → பார்ப்பினி.]*

**கருப்பு**[1] *karuppu*, பெ.(n.) ***கரும்பு*** பார்க்க; see *karumbu.*

**ம.** கருப்பு

*[கரும்பு → கரும்பு.]*

**கருப்பு**[2] *karuppu,* பெ.(n.) 1. கருமை; blackness. 2. இருள்; dark. 3. இருண்டு தோன்றும் பேய்; devil. 4. இன்மை, வறுமை, அருமை; famine, dearth, scarcity, *"மழையின்றிப் பசையில் கருப்புவர" (சேதுபு. வேதாள–20.).*

**க.** கப்பு; **ம.** காப்பு; **தெ.** கரவு, கருவு; **குவி.** கா்வு; கொலா, **நா., கோண்.** கரு (பசி); **பட.** கப்பு; **து.** கா்பு.

*[கள் → கரு → கருப்பு = கருமை.]*

*இருள், இருண்டு தோன்றும் பேய், இருட்காலம் போன்ற பஞ்சம் (வே.க. 122 .).*

**கருப்பு**[3] *karuppu,* பெ.(n.) 1. கரி; charcoal. 2. கருந்தும்பி; crow ebony.

*[கரு → கருப்பு.]*

**கருப்பு அகில்** *karuppu-agil,* பெ.(n.) கருப்பு அகிற் கட்டை; a black variety of agilwood (சா.அக.).

மறுவ. காரகில்

*[கருப்பு + அகில்.]*

**கருப்புக் கச்சோலம்** *karuppu-k-kaccōlam,* பெ.(n.) கருப்பு ஏலத்தோல்; skin of black cardamom (சா.அக.).

*[கரு → கருப்பு + கச்சு + ஏலம்.]*

**கருப்புக் கசகசா** *karuppu-k-kašakašā,* பெ.(n.) ஒருவகைக் கருப்புக் கசகசா; black and bitter poppy seed (சா.அக.).

*[கருப்பு + கசகசா.]*

**கருப்புக் கசடு** *karuppu-k-kašaḍu,* பெ.(n.) 1. மருந்தின் அடி வண்டல்; percipitated medicine. 2. மருந்தெண்ணெயின் மேலாகப் படியும் அழுக்கு; the deposit on the surface of medicinal oils etc. (சா.அக.).

*[கரு → கருப்பு + கசடு.]*

**கருப்புக்கட்டி** *karuppu-k-kaṭṭi,* பெ.(n.) 1. வெல்லம் (திருவானைக். திருநீற்று. 13.); sugar-cane jaggery. 2. பனைவெல்லம்; palmyra jaggery. 3. கற்கண்டு (வின்.); rock candy.

*[கரும்புல் = பனைமரம், கரும்பு. கரும்பு + கட்டி – கரும்புக்கட்டி → கருப்புக்கட்டி.]*

**கருப்புக்கடலாரை** *karuppu-k-kaḍalārai,* பெ.(n.) ***கடலாரை*** பார்க்க; see *kaḍalārai.*

*[கரு → கருப்பு + கடலாரை.]*

**கருப்புக் கடுக்காய்** *karuppu-k-kaḍukkāy,* பெ.(n.) 1. கடுக்காய் வகை; a black variety of gallnut. 2. பிஞ்சுக் கடுக்காய்; tender gallnut.

*[கரு → கருப்பு + கடுக்காய்.]*

**கருப்புக் கரிக்கான்** *karuppu-k-karikkāṉ,* பெ.(n.) உளுந்து; black dhall (சா.அக.).

*[கரு → கருப்பு + (கரிக்கன்) கரிக்கான்.]*

**கருப்புக் கரிசலை** *karuppu-k-karisalai,* பெ.(n.) கருங்கரிசலாங்கண்ணி; black eclipse plant (சா.அக.).

*[கரு → கருப்பு + கரிசலை.]*

**கருப்புக்கரும்பு** *karuppu-k-karumbu,* பெ.(n.) கருஞ்சிவப்புக் கரும்பு; a dark red sugar-cane (சா.அக.).

*[கரும் + சிவப்பு + கரும்பு.]*

**கருப்புக்கலியாணமுருங்கை** *karuppu-k-kaliyāṇa muruṅgai,* பெ.(n.) ***கலியாண முருங்கை*** பார்க்க; see *kaliyāṇamuruṅgai.*

*[கருப்பு + கலியாண + முருங்கை.]*

**கருப்புக்களிமண்** *karuppu-k-kaḷimaṇ,* பெ.(n.) ***கருங்களிமண்*** பார்க்க; see *karuṅkaḷimaṇ.*

*[கருப்பு + களிமண்.]*

**கருப்புக் காஞ்சொறி** *karuppu-k-kāñjoṟi,* பெ.(n.) ***கருங்காஞ்சொறி*** பார்க்க; see *karuṅkāñjoṟi.*

*[கருப்பு + காஞ்சொறி.]*

**கருப்புக்காடை** *karuppu-k-kāḍai,* பெ.(n.) ***கருங் காடை*** பார்க்க; see *karuṅkāḍai.*

*[கருப்பு + காடை.]*

**கருப்புக்காமரம்** *karuppu-k-kāmaram,* பெ.(n.) கருப்பு உகா மரம்; a black variety of uga tree.

*[கரு → கருப்பு + உகா + மரம்.]*

**கருப்புக்காரம்** *karuppu-k-kāram,* பெ.(n.) ***கடுங் காரம்*** பார்க்க; see *kaduṅkāram.*

*[கரு → கருப்பு + காரம்.]*

**கருப்புக்கிட்டி** *karuppu-k-kiṭṭi,* பெ.(n.) சோளப்பயிர்க்கு வரும் ஒருவகை நோய் (இ.வ.); a pest that affects the maize or Indian corn.

*[கரு → கருப்பு + கிட்டி.]*

**கருப்புக்கொண்டைக்குருவி** *karuppu-k-koṇḍai-k-kuruvi,* பெ.(n.) பெரும்பாலும் மலைப்பகுதிகளில் வாழும் கருப்பு நிறக் கொண்டையுடைய பறவை வகை; south Indian black bulbul.

*[கருப்பு + கொண்டை + குருவி.]*



கருப்புக்கொண்டைக்குருவி

**கருப்புச்சடை** *karuppu-c-caḍai,* பெ.(n.) ஒருவகை சிப்பி (நெல்லை மீனவ.); a kind of shell.

*[கரு → கருப்பு + சடை.]*

**கருப்புச்சந்தை** *karuppu-c-candai,* பெ.(n.) ***கள்ளச் சந்தை*** பார்க்க; see *kaḻḻaccandai.*

*[கருப்பு + சந்தை.]*

**கருப்புச்சாறு** *karuppu-c-cāṟu,* பெ.(n.) ***கருப்பஞ்சாறு*** பார்க்க; see *karuppañjāṟu...* உழுந்து நானாழி யுந்தின நானாழியுங்கருப்புச் சாறு நானாழியும் இளநீர் நானாழியும். (S.I.I. vol.19, insc. 341, S.No.9.).

*[கருப்பு + சாறு – கருப்புச்சாறு.]*

**கருப்புத்தேளி** *karuppu-t-tēḷi,* பெ.(n.) ***கருந்தேளி*** பார்க்க; see *karuntēḷi.*

*[கரு → கருப்பு + தேளி.]*

**கருப்புப் பணம்** *kauppu-p-paṇam,* பெ.(n.) கணக்கில் காட்டாது பதுக்கப்படும் பணம்; black-money.

*[கருப்பு + பணம்.]*

**கருப்புப்பாறை** *karuppu-p-pāṟai,* பெ.(n.) கடற்பாறை வகை (தஞ்சை.மீனவ.); a kind of sea rock.

*இவ்வகைப் பாறை கடலின் 12 அடி ஆழத்தில் காணப்படும்.*

*[கரு → கருப்பு + பாறை.]*

**கருப்புப்பூனை** *karuppu-p-pūṉai,* பெ.(n.) ***கரும் பூனை*** பார்க்க; see *karumpūṉai.*

*[கருப்பு + பூனை.]*

**கருப்பு மட்டலா** *karuppu-maṭṭalā,* பெ.(n.) ஒரு வகை மீன்; a kind of fish.

*[கருப்பு + (மட்டில்) மட்டலா.]*

**கருப்பு மட்டி** *karuppu-maṭṭi,* பெ.(n.) கிளிஞ்சில் வகையுள் ஒன்று; a kind of shell.

*[கரு → கருப்பு + மட்டி (மட்டில்).]*

**கருப்புமட்டிவாய்** *karuppu-maṭṭi-vāy,* பெ.(n.) ஒரு வகைக் கடல் மீன்; a kind of sea - fish.

*[கருப்பு + மட்டிவாய்.]*

இவ்வகைக் கடல் மீன் மூன்றடி வரை வளரக் கூடியதும், வெள்ளி போன்ற நிறமுடையதுமாகும்.

**கருப்புமுரல்** *karuppu-mural,* பெ.(n.) கருமை நிற முரல்வகை; a kind of black needle fish.

*[கரு → கருப்பு + முரல்.]*

**கருப்புரம்**[1] *karuppuram,* பெ.(n.) ***கருப்பூரம்*** பார்க்க; see *karuppūram.* *"கருப்புரந் துதைந்த கல்லுயர் மணித்தோள்" (கல்லா.10.).*

*[கருப்பூரம் → கருப்புரம்.]*

**கருப்புரம்**[2] *karuppuram,* பெ.(n.) 1. நெல்; a kind of paddy. 2. நீர்; water. 3. பாழ்வினை; sin. 4. பொன்; gold (இ.நூ.த.பெ.அக.).

*[கரு → கருப்பு → கருப்புரம். கருப்பு = உயர்வு, மேன்மை, வறுமை, துன்பம்.]*

**கருப்புவட்டு** *karuppu-vaṭṭu,* பெ.(n.) வெல்லம்; sugar-cane jaggery. *"கன்னறரும் பாகாய்க் கருப்பு வட்டாய்" (தாயு.பராபர. 248.).*

*[கரும்பு + வட்டு – கரும்புவட்டு→ கருப்புவட்டு. வட்டு = வட்டமாயிருப்பது. தொடக்கத்தில் பனைவெல்லத்தையே குறித்த சொல், நாளடைவில் கரும்பு வெல்லத்தையும் குறித்தது.]*

**கருப்புவரால்** *karuppu-varāl,* பெ.(n.) கருநிறமுடையதும் இரண்டடி நீளம் வளரக்கூடியதுமான நன்னீர் மீன்; a kind of fish.

*[கரு → கருப்பு + வரால்.]*

**கருப்புவழலை** *karuppu-vaḻalai,* பெ.(n.) நச்சுப்பாம்பு வகையுளொன்று; a venomous kind of snake.

*[கருப்பு + வழலை.]*

**கருப்புவில்** *karuppu-vil,* பெ.(n.) கரும்பு வில்; sugar-cane bow of the god of love. *"கருப்புநாண் கருப்புவி லருப்புக்கணை தூவ" (மணிமே .18:105.).*

*[கரும்பு → கருப்பு + வில் – கருப்புவில்.]*

**கருப்புவில்லி** *karuppu-villi,* பெ.(n.) கரும்பு வில்லை உடையவனாகக் கருதப்படுபவன், காமன்; Kāma, the God of love, whose bow is made of sugar-cane. *"மீன்றிகழ் கொடியனைக் கருப்பு வில்லியை" (மணிமே.20: 92.).*

*[கரும்பு கருப்பு + வில்லி – கருப்புவில்லி. வில்லி = வில்லுடையவன். 'இ' உடைமைப்பொருளீறு.]*

**கருப்பூர்** *karuppūr,* பெ.(n.) கரூர், காஞ்சிபுரம், தஞ்சை, தூத்துக்குடி மாவட்டங்களில் உள்ள சிற்றூர்; name of villages in Karur, Kancipuram, Thanjavur and Thuttukkudi dt.

*[கருப்பன் + ஊர் – கருப்பனூர் → கருப்பூர்.]*

**கருப்பூர் உக்கடை** *karuppūr-ukkaḍai,* பெ.(n.) புதுக்கோட்டை மாவட்டதுச் சிற்றூர்; a village in Pudukkottai dt.

*[கருப்பன் + ஊர் – கருப்பனூர் → கருப்பூர் + உக்கடை. உக்கடை=மேற்பக்கம், மேற்பக்கத்துச் புதுக்குடியிருப்பு.]*

**கருப்பூர்தோட்டம்** *karuppūr-tōṭṭam,* பெ.(n.) தஞ்சை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Thanjavur dt.

*[கருப்பன் + ஊர் – கருப்பனூர் → கருப்பூர் + தோட்டம்.]*

**கருப்பூர்வழக்கு** *karuppūr-vaḻakku,* பெ.(n.) தீராத வழக்கு (வின்.); undecided suit.

*[கருப்பு + ஊர் + வழக்கு. கருப்பு = துன்பம். ஊர் = ஊர்தல், தொடர்தல்.]*

**கருப்பூரக்கிளுவை** *karuppūra-k-kiḷuvai,* பெ.(n.) மலைமா (L.); hill balsam tree.

*[கருப்பூரம் + கிளுவை.]*

**கருப்பூரக்கொடி** *karuppūra-k-koḍi,* பெ.(n.) வெற்றிலை வகை; a variety of betel (G.Sm.D.215.).

*[கற்பூரம்→ கருப்பூரம் + கொடி – கருப்பூரக்கொடி.]*

கருப்பூரவெற்றிலையை மெல்லும்போது, கருப்பூர மணம் வீசுவது போலவும், சற்று காரச்சுவை உடையதாகவும் இருப்பதால் இதனைக் கருப்பூர வெற்றிலை என்றும், கருப்பு வெற்றிலை என்றும் அழைப்பர். மற்றொரு வகைக்கு வெள்ளை வெற்றிலை என்று பெயர்.

**கருப்பூரத்துளசி** *karuppūra-t-tuḷaśi,* பெ.(n.) கருப்பூர மணமுள்ள துளசிவகை; a kind of tulasi plant that diffuses the smell of camphor.

*[கருப்பூரம் + துளசி .]*

**கருப்பூரநீர்** *karuppūra-nīr,* பெ.(n.) ஒரு மருந்து; a kind of medicine.

*[கருப்பூரம் + நீர்.]*

**கருப்பூரப்புல்** *karuppūra-p-pul,* பெ.(n.) நறுமணப்புல் வகையுளொன்று (வின்.); lemon-grass, camphor grass.

*[கருப்பூரம் + புல்.]*

**கருப்பூரம்**[1] *karuppūram,* பெ.(n.) 1. எரிக்குங் கருப்பூரம்; common camphor. *"கருப்பூரமும் சுமந்துடன் வந்த" (சிலப்.14,109.).* 2. முக மணங்களுள் ஒன்றான பச்சைக் கருப்பூரம் (சீவக.838, உரை.); camphor in its native state one of five muga-vāšam. 3. ***கருப்பூரமரம்*** பார்க்க; see *karuppūra-maram.*

**ம.** கற்பூரம்; **க.** கர்பூர; **தெ.** கர்பூரமு; **ம.** கர்பூர.

**Gk.** Campora; **Skt**. Kāpūr; **Mar.** kafur; **H., Ar., Persn.** kapur; **U.** Kapur; **Mal.** karpūra; **Sinh.** kapūru.

*[பீர்→பீரம் (ஊறுவது, கசிவது) →பூரம். கரு = பெரிய, மிக. கரு + பூரம் = கருப்பூரம் (மிகக் கசியும் பசையுள்ள பட்டை மூடிய மரம், அம்மரத்தின் கசிவான கருப்பூரம்).]*

**கருப்பூரமரம்** *karuppūra-maram,* பெ.(n.)1. கருப்பூரம் உண்டாதற்குரிய மரம்; camphor tree. 2. மரவகையுளொன்று (வின்.); blue-gum tree.

*[கருப்பூரம் + மரம்.]*

**கருப்பூரயெண்ணைய்** *karuppūra-y-eṇṇay,* பெ.(n.) ஒரு மருந்து எண்ணெய்; medicinal oil.

*[கருப்பூர + எண்ணெய். எள் + நெய் – எண்ணெய்.]*

**கருப்பூரவல்லி** *karuppūra-valli,* பெ.(n.) ***கருப்பூரவள்ளி*** பார்க்க; see *karuppūra-vaḷḷi.*

*[கருப்பூரவள்ளி → கருப்பூரவல்லி.]*

**கருப்பூரவழுதலைக்கனி** *karuppūra-vaḻudhalaik-kaṉi,* பெ.(n.) நச்சுத் தன்மை பொருந்திய பழம்; a poisonous fruit (சா.அக.).

*[கருப்பூரம் + வழுதலைக்கனி.]*

**கருப்பூரவள்ளி** *karuppūra-vaḷḷi,* பெ.(n.) 1. ஒருவகை மருந்துச் செடி; thick-leaved lavender. *"நெஞ்சிற்பட்டு கபம் வாதமும்போம்.... கர்ப்பூரவள்ளி"* (பதார்த்த. 330.). 2. ஒருவகை நறுமணச் செடி; country borage. 3. ஒருவகை வாழை; banana.

*[கருப்பூரம் + வள்ளி. இங்குக் கற்பூர மணத்தைக் குறித்தது.]*

**கருப்பூரவாழை** *karuppūra-vāḻai,* பெ.(n.) ஒருவகை வாழை; a kind of banana.

*[கருப்பூரம் + வாழை.]*

**கருப்பூரவில்வம்** *karuppūra-vilvam,* பெ.(n.) ஒருவகை வில்வம்; a kind of Vilva tree.

*[கருப்பூரம் + வில்வம்.]*

**கருப்பூரவிலை** *karuppūra-vilai,* பெ.(n.) 1. திருக்கோயிலைச் சார்ந்த நிலங்களுக்கு மக்கள் கொடுக்கும் விலை (இ.வ.); price paid for temple lands. 2. ஒருவகை வரி; a kind of tax.

*[கருப்பூரம் + விலை.]*

**கருப்பூரவெற்றிலை** *karuppūra-veṟṟilai,* பெ.(n.) மணமிக்க வெற்றிலை வகை (வின்.); fragrant white betel.

*[கற்பூரம்→ கருப்பூரம் + வெற்றிலை.]*

**கருப்பெட்டி** *karu-p-peṭṭi,* பெ.(n.) ***கருப்பை*** பார்க்க (யாழ்.அக.); see *karu-p-pai.*

*[கரு + பெட்டி .]*

**கருப்பேந்திரம்** *karuppēndiram,* பெ.(n.) ***கரும்பியந்திரம்*** பார்க்க; see *karumbiyandiram.* *"கருப்பேந்திர முதலாயின கண்டாள்"* (கம்பரா. கங்கை. 6.).

*[கரும்பு + (இயந்திரம்) எந்திரம் – கரும்பெந்திரம் → கருப்பேந்திரம் (கொ.வ.).]*

வடமொழியிலக்கண மரபு தழுவிக் கரும்பேந்திரம் எனக்கம்பர் எடுத்தாண்ட சொல்லாட்சி தமிழிலக்கண மரபுக்கு ஒவ்வாதது; கரும்பியந்திரம் என்பதே செவ்விய சொல்லாட்சி.

**கருப்பேரண்டம்** *karuppēraṇḍam,* பெ.(n.) கருப்பா மணக்கு; a dark variety of castor seed (சா.அக.).

*[கரு → கருப்பு + ஏரண்டம்.]*

**கருப்பை**[1] *karuppai,* பெ.(n.) கருத்தங்கும் பை, சூற்பை; womb. *"கருப்பைக்குண் முட்டைக்கும்"* (தனிப்பா. 1,120,3.).

*[கரு + பை – கருப்பை.]*

**கருப்பை**[2] *karuppai,* பெ.(n.) 1. எலி; rat. *"அணிலொடு கருப்பை யாடாது"* (பெரும்பாண்.85.). 2. கருங்காய்ப் பனை (யாழ்ப்.); palmyra, that bears black fruit.

*[கருப்பு → கருப்பை = கரிய நிறமுடையது.]*

**கருப்பைக்கட்டி** *karuppai-k-kaṭṭi,* பெ.(n.) பெண்களின் கருப்பையினுள் ஏற்படுங் கட்டி; a tumour formed in the womb (சா.அக.).

*[கரு +பை + கட்டி – கருப்பைக்கட்டி.]*

**கருப்பைக்கழலை** *karuppai-k-kaḻalai,* பெ.(n.) ***கருப்பைக்கட்டி*** பார்க்க; see *karuppaikkaṭṭi.*

*[கருப்பை + கழலை.]*

**கருப்பொருள்** *karu-p-poruḷ,* பெ.(n.) 1. அடிப்படையாக அமையும் மூலப்பொருள்; theme. 2. காரணப் பொருள்; God, the efficient cause, the originator of all things. *"அந்தக்கரணங் கடந்த கருப்பொருளே"* (பதினொ.திருக்கழு. மும்மணிக்.3.). 3. ஐந்திணைகளுள் ஒவ்வொன்றுக்கு முரிய தெய்வமுதலிய பொருள்கள் (நம்பியகப். 19.உரை.); distinctive regional features of each of the *aindinai* or five tracts of land embracing 14 items, viz., teivam, talaivar, makkaḷ, puḷ, vilaṅgu, ūr, nīr, pū, maram, uṇā, paṟai, yāḻ, paṇ, toḻil.

*[கரு + பொருள் = கருப்பொருள் = எல்லாவற்றுக்கும் அடிப்படையானது. காலமும் இடமும் ஆகிய முதற்பொருளிலிருந்து கருக்கொண்டு தோன்றியது.]*

மக்கள், தெய்வம், தலைவர், விலங்கு, புள், ஊரார், நீர், பூ, மரம், உணவு, பண், பறை, யாழ் என 14 வகைப்படும்.

**கருப்பொருளியல்** *karu-p-poruḷiyal,* பெ.(n.) கனிப்பொருள் இயல்; minerology.

*[கரு + பொருள் + இயல். கரு = கனிமம்.]*

**கருப்போட்டம்** *karuppōṭṭam,* பெ.(n.) கருப்பப் பையில் பிண்டத்தின் அசைவு; the movements of the child in the womb (சா.அக.).

*[கரு = கருப்ப(ம்) + ஓட்டம்.]*

**கரும்** *karum,* பெ.எ.(adj.) கரிய; black.

*[கரு → கரும்.]*

**கரும்பக்கம்** *karumpakkam,* பெ.(n.) தேய்பிறை; descending moon.

*[கரும் + பக்கம். பக்கம் = பகுதி.]*

*த. கரும்பக்கம்* > skt. krisṇapaksa.

**கரும்பச்சை** *karumpaccai,* பெ.(n.) கருமை கலந்த பச்சை நிறம்; deep green.

ம. கரிம்பச்ச

*[கருமை + பச்சை.]*

**கரும்பசலி** *karumpašali,* பெ.(n.) கருப்புப்பசலை; a black bitter variety of Indian spinach (சா.அக.).

*[கரு → கரும் + பசலை.]*

**கரும்பசு** *karumpašu,* பெ.(n.) காராவு, (காராம் பசு); cow with black dugs (சா.அக.). ***காராவு*** பார்க்க; see *kārāvu.*

*[கரு → கரும் + பசு.* **Skt.** *pasu > த. பசு.]*

**கரும்பட்டியல்** *karumpaṭṭiyal,* பெ.(n.) குற்றம் கண்டபின் பொதுப்பட்டியிலிலிருந்து நீக்கித் தனியாக வைத்தல்; black-list.

*[கரும் + பட்டியல்.]*

**கரும்படை** *karum-paḍai,* பெ.(n.) மேகப்படை (m.l.); ringworm.

*[கரும் + படை.]*

**கரும்பணி** *karumbaṇi,* பெ.(n.) பெண்களின் தோள்மார்புகளில் சந்தனக் குழம்பு முதலியவற்றால் கரும்பின் வடிவமாக எழுதப்படுங்கோலம்; figure of sugar-cane drawn with sandal paste on women's arms and breasts, an adornment for women in ancient times. *"அன்றுதானீத்த கரும்பணி வாட" (கலித். 131. 29.).*

*[கரும்பு + அணி – கரும்பணி. அணி = கோலம், அழகு.]*

**கரும்பந்தன்** *karumpandaṉ,* பெ.(n.) சாரைப்பாம்பு; male cobra (சா.அக.).

*[கரு → கரும் + (பாந்தள்) பந்தன்.]*

**கரும்பயறு** *karumpayaṟu,* பெ.(n.) சிறுபயறு; a small black variety of pulse (சா.அக.).

*[கரு → கரும் + பயறு.]*

**கரும்பருந்து** *karu-m-parundu,* பெ.(n.) பருந்து வகை (வின்.); spotted eagle.

ம. கரிம்பருந்து

*[கரும் + பருந்து.]*

**கரும் பல்லி**[1] *karumpalli,* பெ.(n.) கறுப்புப் பல்லி; black lizard (சா.அக.).

*[கரு → கரும் + பல்லி.]*

**கரும் பல்லி**[2] *karumpalli,* பெ.(n.) கறுப்புப் பல்லிப்பூடு; black lizard plant (சா.அக.).

*[கரு → கரும் + பல்லி.]*

கரும்பல்லிப்பூடு சித்தருண்ணும் காயகற்ப மூலிகையாகும். இதுபோல், சிவப்புப் பல்லிப்பூடும் இருக்கின்றதென்பர்.

**கரும்பலகை** *karum-palagai,* பெ.(n.) பள்ளியில் மாணவர்களுக்கு எழுதிக்காட்டிப் பாடங்களை விளக்கப்பயன்படும் கருப்பு வண்ணம் பூசப்பட்ட பெரிய பலகை; black-board.

*[கரு → கரும் + பலகை.]*

**கரும்பவளம்** *karumpavaḷam,* பெ.(n.) கருப்புப் பவளம்; black coral (சா.அக.).

*[கரும் + பவளம்.]*

**கரும்பளிங்கு** *karumpaḷiṅgu,* பெ.(n.) பளிங்குக் கல்வகை (m.m.247.); basalt, crystaline form of dolerite.

*[கரு → கரும் + பளிங்கு.]*

**கரும்பன்** *karumbaṉ,* பெ.(n.) கரும்பை வில்லாக வுடைய காமன்; God of love who has a sugar-cane bow. *"சாற்றுக் கரும்பனைக் கூற்றென்னும்" (அஷ்டப்.அழகரந்.17.).*

*[கரும்பு + அன்.]*

**கரும்பன்பள்ளம்** *karumbaṉ-paḷḷam,* பெ.(n.) அம்பாசமுத்திரம் வட்டம் ஆழ்வார்க் குறிச்சி கோயிலுக்கு இறையிலியாக விடப்பட்ட ஊர்; village gifted tax free to the temple of Alwarkkuruchi in Ambasamudram taluk; *"திருப்பணிப் புறத்துக்கு விட்ட சோலைச்சேரி சாம்பன் குளமும் கரும்பன் பள்ளம் ஏலேலசிங்கத்துக்கும் பெருநான்கெல்லை"* (தெ.இ.கல்.தொ.23 கல்.119.).

*[கரும்பு + அன் + பள்ளம். கரும்பன்பள்ளம்; கரும்பன் பெயரிலமைந்த சிற்றூர்.]*

**கரும்பனசை** *karu-m-baṉašai,* பெ.(n.) ***கருப்பு வழலை*** பார்க்க; see *karuppuvaḻalai.*

*[கரும் + பனசை. பனையன் → பனசை.]*

**கரும்பனிச்சை** *karumbaṉiccai,* பெ.(n.) ஒருவகை அம்மை நோய்; a kind of variola or small pox. (சா.அக.).

*[கரு → கரும் + பனிச்சை. (கொப்புளம்).]*

**கரும்பனை** *karumpaṉai,* பெ.(n.) பனைமரம்; palmyra tree (சா.அக.).

*[கரு → கரும் + பனை.]*

**கரும்பனைக்கண்ணி** *karumpaṉai-k-kaṇṇi,* பெ.(n.) பனைமரம்; palmyra tree (சா.அக.).

*[கரு → கரும் + பனை+கண்ணி (பெண்ணாகக் கருதிய உருவகம்).]*

**கரும்பனையன்** *karu-m-baṉaiyaṉ,* பெ.(n.) பாம்பு வகை (வின்.); krait, as black in colour.

*[கரும் + பனையன்.]*

**கரும்பாடு** *karu-m-bāḍu,* பெ.(n.) ஏரியின் நீர்ப்பிடி வரையுள்ள நிலம்; margin of a tank between the bund and the water limit, usually clayey.

*[கரு → கரும் + பாடு – கரும்பாடு. கரு = மேடு. நீர்ப்பரப்பைத் தொடும் நிலப்பரப்பு கரும்பாடு எனப்பட்டது. படு → பாடு = தொடுதல்.]*

**கரும்பாம்பு** *karu-m-bāmbu,* பெ.(n.) 1. கறுப்பு நிறமுள்ள பாம்பு; black snake. 2. ஒன்பது கோள் களுள் ஒன்றாகக் கருதப்பட்ட பாம்புக் கோள். (இராகு.) (பிங்.); Rahu, the ascending node, which accg. to mythology is regarded as a serpent.

**ம.** கரிம்பாம்பு; **க.** கரிஹாவு.

*[கரும் + பாம்பு.]*

**கரும்பாலை**[1] *karu-m-bālai,* பெ.(n.) கரும்பாட்டும் இயந்திரம் (கொ.வ.); sugar-cane press.

**மறுவ.** கரும்பியந்திரம்

**ம.** கரும்பால

*[கரும்பு + ஆலை –.]*

**கரும்பாலை**[2] *karu-m-bālai,* பெ.(n.) பாலைமரவகை; obtuse-leaved ape flower.

*[கரும் + பாலை.]*

**கரும்பாவை** *karum-pāvai,* பெ.(n.) ஒருவகைக் கண்ணோய்; a kind of an eye disease (சா.அக.).

*[கரு → கரும் + பாவை.]*

**கரும்பித்தம்** *karu-m-pittam,* பெ.(n.) 1. பித்தநீர் வகையுளொன்று; black bile. 2. அறிவு திரிதல்; மூளைக்கோளாறு; madness, dementia.

**ம.** கரும்பித்தம்

*[கரும் + பித்தம்.]*

**கரும்பியந்திரம்** *karumbiyantiram,* பெ.(n.) ***கரும்பாலை*** பார்க்க; see *karumbālai.*

*[கரும்பு + இயந்திரம் (இயங்குவது).]*

**கரும்பிலாச்சை** *karu-m-bilāccai,* பெ.(n.) கடல்மீன் வகை; globe-fish, dull reddish.

*[கரும் + பிலாச்சை.]*

**கரும்பிள்ளை** *karumpiḷḷai,* பெ.(n.) காக்கை; crow. *"அலர்கதிர் கரும்பிள்ளை மடுப்பி" (சீவக. 1252.).*

**வெரு.** காஉரகம்

*[கரும் + பிள்ளை.]*

**கரும்பிறப்பு** *karumpiṟappu,* பெ.(n.) நிரயத்திலுள்ள அறுவகைப்பிறப்புகளுள் மிகவும் இழிந்ததாகக் கருதப்படும் ஒரு பிறப்பு; lowest form of existence, in a naragam. *"கரும்பிறப்புங் கருநீலப்பிறப்பும்" (மணிமே.27:150.).*

ம. கரும்பிறப்பு

*[கரும் + பிறப்பு.]*

பல்வகைப் பிறப்புகளுக்கு நிறங்கூறும் இயல்பு சிந்தாமணி முதலிய சமண நூல்களில் காணப் படுகிறது.

**கரும்பிறை** *karumpiṟai,* பெ.(n.) 1. கரும்பளிங்குக் கல் (வின்.); black marble. 2. கருஞ்சுக்கான்கல்; black limestone.

*[கரும் + பிறை.]*

பிறை என்பது நிலவைக்குறித்துப் பிறகு குளிர்ந்த வெண்ணிறப்பளிங்குக் கல்லுக்கும், சுக்கான் கல்லுக்கும் பளபளக்கும் இயல்பு நோக்கி ஆகுபெயராயிற்று.

**கரும்பு**[1] *karumbu,* பெ.(n.) 1. புல் வகையைச் சார்ந்ததும் மூங்கிலும் நாணலும்போற் கணுக் களுள்ளதும், இனிக்கும் சாறுள்ளதும், கழை வடிவானதும், வெப்ப நாடுகளில் 6 அடி முதல் 26 அடி வரை வளர்வதும், சருக்கரை, வெல்லம் செய்ய மூலப்பொருளானதுமான, உயிர்க்கால் நெடும் பயிர்வகை; sugar-cane, major source of the world's sugar and molasses, a giant perennial grass of the genus Saccharum officinarum cultivated in tropical and sub-tropical regions. *"கரும்புபோற் கொல்லப் பயன்படுங் கீழ்" (குறள். 1078.).* 2. கழை (புனர்பூசம்) என்னும் ஏழாம் நாண்மீன் (திவா.); puṉarpūsam, the seventh nakshatra. 3. காமனின் வில்; bow of Manmatha. *"கைக்கரும் பென்ன கணையென்ன நீயென்ன மன்மதா" (குற்.குற.34).* 4. இனிப்பு; sweetness. அவன் பேசினால் கரும்பு; நான் பேசினால் வேம்பா? (உ.வ.).

மறுவ. கழை, இக்கு, செறுக்கு, கன்னல்.

ம. கரிம்பு; **க.** கர்வு, கர்பு. கப்பு; **து.** கர்ம்பு; **குட.** கப்பி. **கோத. துட.** கப்; **பட.** கப்பு; **உரா** கரும்பு.

*[கரு = கருமை. கரு → கரும்பு = கரிய நிறமுள்ளது. 'கல்' கருமைக் கருத்து வேர்ச்சொல். குல் → குலவு. குல் → கல் → கலவு. குலவுதல் = கூடுதல், கலத்தல். கலத்தற் கருத்தினின்று மயக்கற் கருத்தும், மயக்கற் கருத்தினின்று இருண்மைக் கருத்தும் இருண்மைக் கருத்தினின்று கருமைக் கருத்தும் தோன்றும்.]*

கல் → கன் → கன்னல் = கரியவகைக் கரும்பு (திவா.). கல் = கரு. (ஒ.நோ : இல் → இரு). கரும்புல் = பனைமரம். கரும்புல் பனைமரத்தைக் குறிப்பதுபோன்றே, கரும்பையுங் குறித்ததாகிப் பண்டு வழக்கிலிருந்து, பின் கரும்பு எனக் குறுகியது.

கரும்பு கரியது; வேழம் (வேழக்கரும்பு) வெளியது; இராமக்கரும்பு வெண்மையும் செம்மையுங் கலந்தது" (சொல்.கட்.67.).

பனையும் கரும்பும், வெல்லங்காய்ச்ச இன்சாறு உதவும் பயிர்வகைகளாக இருந்ததால், பனை வெல்லத்தையும் கரும்பினாற் செய்த வெல்லத் தையும் குறிக்கக் கருப்பட்டி என்னும் சொல் வழக்கூன்றியது. இது வட்புலமொழிகளில் கொர்டு என்றும், கூடு (gud.) என்றும் வழங்குதல் காண்க.

கரும்புல் = பனை. கருப்பணி = பதநீர். கருப்பட்டி = பனை வெல்லம். கரும்புல்லினின்று அட்டது கருப்பட்டி; கரும்பினின்று அட்டதும் கருப்பட்டி.

மூங்கில் போன்றிருத்தலான் கரும்பைக் 'கழை' என்றனர். முழுநீளக் கரும்பை 'கடெ' (gade) 'ஜொளெ' என்னும் இட வழக்குகள் கழை என்பதன் திரிபே. கழை → கடெ, ஒ.நோ : மழ → மட (இளமை). கழை → களெ → சொளை → ஜொளை. நீர்வளம் மிக்க வயலில் விளைவிக்கப் படுதலாலும், இனிப்பான நீர்க்கோப்புடை மையாலும், 'செறுக்கு' என்னும் பெயர் பெற்றது.

**தெ.** செறுக்கு = கரும்பு. **குச்.** செர்டி.

*செறு = வயல். செல் = நீர் கொண்ட மழைமேகம். செல் → சேல் = நீரிற் பிறழும் மீன். சேறு → சாறு = நீர் கலந்த பொருள். சேறு → செறு = நீர் தேங்கும் வயல். செறுகு → செறுக்கு = நீர்வளம் மிக்க வயலில் விளைவதும் இனிப்பான நீர்கோப்புடையதுமான கரும்பு*

வடஇந்திய மொழிகள் பெரும்பாலனவற்றுள், கரும்பு, இக்கு, ஈக், கன்னா எனப்படும். **இந். ஈக்,** கன்னா. **வங்.** அக், **ஆக். மரா. ஈக், ஊன்ஸ், உரு.** என்னா, **ஈக். அரபி** கஸ்புஸ்கர். இள் → இள (இளகிய). இள் + கு = இக்கு = கரும்பு. (ஒ.நோ : சுள் + கு = சுக்கு). இனிய சாற்றுக்கோப்பால், ஒடித்தால் ஒடியும் அளவிற்கு, இளக்கமான தண்டையுடையது. வடமொழியிலும் இப்பழந்தமிழ்ச் சொல் சென்று 'இக்ஷீ' என வழங்குகிறது. அவர்கள் இச் சொல்லுக்கு, 'இஷ்' (விரும்புதல்) என்பதை வேராகக் காட்டுவர். விரும்பப்படுவன கரும் பொன்றே அன்மையான் அது பொருந்தாமை அறிக. ஒடியும் அளவிற்கு இளகிய தண்டாக இருப்பது இஃதொன்றே என்பதும், ஏனைய நாணல், மூங்கில்,

கொடி போன்றவை காற்றுக்குச் சாய்ந்து கொடுக்கும் இயல்பின்றி ஓடியும் இயல்புடையன அல்ல என்பதும், தெரிதருதேற்றம்.

கரும்புக்குரிய கழை என்னும் பெயர், சாலித்தீவினரின் [Java] மொழியில் 'கோள' [Goela] என்று வழங்குகிறது.

புதிதாக உண்டாக்கப்பட்ட கலப்பினக் கரும்புகளில் 68 வகைகள் உள்ளன. கரும்பு இந்நாட்டின் தொல்பழங்காலப் பயிர். இன்றைக்கு ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே இந்தியாவில் கரும்பு இருந்ததாக பிரித்தானியக் கலைக்களஞ்சியம் கூறுகிறது. விவிலிய நூலில் தேனொன்றே இனிப்புப் பொருளாக இடம்பெறினும், வடமொழி வேதங்களில் கரும்பு குறிப்பிடப் படுகிறது. கி.பி. முதல் நூற்றாண்டில், இந்தியாவிலிருந்து சீன அரசனுக்குக் கரும்பு அனுப்பப்பட்டது. கி.பி. 424–இல் தென்சீனத்தில் கரும்பு பயிராக்கப்பட்டது. ஆறாம் நூற்றாண்டில் பாரசீகத்திற்குச் சென்றது. கி.பி. 641–இல் கரும்பு எகுபதுநாட்டுக்கு அறிமுகமாகியது. அதற்குமுன், மேலைநாடுகளில் மருத்துவர்களிடம் மட்டும் பனைவெல்லம், சருக்கரை போன்றவை மருந்துச் சரக்காக அருகிய அளவில் பயன்பட்டன. கி.பி. பதினைந்தாம் நூற்றாண்டில்தான் கரும்பு, கொலம்பசின் முயற்சியால் அமெரிக்காவுக்கு அறிமுகமாகியது.

ஆத்திரேலியாவின் வடகீழ்த்திசையிலுள்ள நியூகினியாத் தீவிலும், சாலமன் தீவிலும் கரும்பு இயற்கையாகவே பயிராகியது என்பர். சேரமன்னரின் கிளை மரபினனான அதியமானின் முன்னோன் அதியஞ்சேரல் கடல்கடந்து நெடுந்தொலைவு சென்று, பெறற்கரிய கரும்புப் பயிரைக்கொணர்ந்து, தமிழகத்திலும் அடுத்துள்ள பகுதிகளிலும் பரப்புதற்கு வழிகோலினான் என்னும் செவிவழிச் செய்தி, இது தெருக்கூத்து உரையாடலில் இடம் பெற்றிருக்கிறது.

"அரும்பெறல் மரபின் கரும்பிவண் தந்து
நீரக விருக்கை ஆழி சூட்டிய
தொன்னிலை மரபினின் முன்னோன் போல"

[புறம்.99.]. என்னும் புறப்பாடலாலும் தெளிவாகிறது.

தொல்பழங்காலச் சேர இளவரசர்கள் தம் கடற்பயணத்தின்போது எதிர்பாராமல் புதிது கண்டுபிடிக்கும் ஆற்றலுடையவராய் இருந்தனர் என்பதற்குச் சான்றான, ஈழத்துத் தொல்கதையைத் தழுவி serendipity [எதிர்பாராமல் புதிது காணல்] என்னும் ஆங்கிலச்சொல் படைக்கப்பட்டுள்ளது.

serendipity : the faculty of making happy chance finds. (Serendip, a former name for Ceylon. Horace Walpole coined the word (1754) from the title of the fairy-tale "The Three princes of Serendip', whose heroes `were always making discoveries by accidents and sagacity, of things they were not in quest of!). (Chambers Twentieth century Dictionary)

ஆத்திரேலியாவையடுத்ததும், இயற்கையாகவே உலகில் முதன்முதல் கரும்பு விளைந்ததாகக் கருதப்படுவதுமான சாலமன் முதலிய தீவுகளில் வாழும் பழங்குடி மக்கள், தம் முன்னோர் கரும்பிலிருந்து தோன்றியதாக நம்புவது, கரும்பு காரணமாக அங்குக் குடியேறிய முன்னோர் வரலாற்றை உட்கொண்டிருக்கும் எனக் கருதப்படுகிறது.

தென்கிழக்காசிய நாடுகளிலுள்ள பழங்குடிகளின் மொழிகள் தமிழோடு தொடர்புடையன என ஆய்வாளர் கூறிவருவதும், தமிழ் முன்னோரே முதன்முதல் கரும்பு கண்டுபிடித்துப் பரப்பியவர் என்பதற்குச் சான்றாகிறது.

சருக்கரை, நாட்டுச் சருக்கரை, வெல்லம் ஆகியன செய்ய உதவும் கரும்பு, மருத்துவத்திற்கும் பயன்படுகிறது. குருதியைத் தூய்மைப்படுத்தவும், இருமல், பித்தம் தணிவிக்கவும், பசி மிகுவிக்கவும், கரும்பஞ்சாற்றை ஏலங்கலந்து பருகுவர்.

பழமொழிகள் :

*கரும்பிருக்க இரும்பைக் கடிக்கலாமா?*
*கரும்பென்றால் வாயினிக்குமா?*
*கரும்பு தின்னக் கூலி வேண்டுமா?*
*கரும்பு கட்டுக்கு எறும்பு தானே வரும்*
*கரும்பு கசக்கிறது வாய்க்குற்றம்*
*கரும்பும் எள்ளும் கசக்கினால் பலன்தரும்*
*கரும்பிலே தேன் இருக்கும் கள்ளியிலும் பால் இருக்கும்*
*கரும்புக்குக் கணு இருந்தாலும் கசக்குமா?*
*கரும்புருசி என்று வேரோடு பிடுங்கலாமா?*

கரும்பன் என்னும் தொண்டை நாட்டு வள்ளல், தன் தோட்டத்திலுள்ள கரும்பை எவரும் வந்து நாணாது தின்னுக என யாவரையும் அழைத்தபோது, சிலர் மறுக்க, அவர்களுக்குக் கூலி கொடுத்து அழைத்திருந்தான் என்றும், கரும்பு தின்னக் கூலி என்னும் பழமொழி இவனால் வந்தது என்றும், கூறுவர்.

# கரும்பு வகைகள்


கன்னல்


கழைக்கரும்பு


சீனிக்கரும்பு


பேய்க்கரும்பு


செங்கரும்பு


வெண்கரும்பு

**கரும்பின் வகைகள் :** 1. செங்கரும்பு - red-coloured sugar-cane. சிவந்த நிறமுள்ள கரும்பு. 2. பேய்க் கரும்பு - wild sugar-cane - saccharum spontaneum. பட்டினத்தார் கையில் கொண்டிருந்த கரும்பைப் பேய்க்கரும்பு என்பர். இது நாணல் வகையைச் சார்ந்தது. உண்மையில் கரும்பன்று. இதனை வேழக்கரும்பு என்றும் கூறுவர். (பெரும்பா.263). 3. வெண்கரும்பு - white coloured sugar-cane - saccharum officinar தடித்து மென்மையாயிருக்கும் கிழக்காசியக் கரும்பு வகை. வெளுத்தும் வெளிர்ப் பச்சையாயுமிருக்கும். 4. வெண்கதலிக்கரும்பு - a superior kind of sugar-cane - Saccharum genus. உயர்வகைக் கரும்பு. இதனைக் இரசதாளிக் கரும்பு என்பர். 5. நாட்டுக்கரும்பு - Saccharum barberi. சன்னமான கரும்புவகை. வடஇந்தியாவில் மிகுதியாகப் பயிராகிறது. நோயும் தட்பவெப்ப வேறுபாடும் தாங்கும் வன்மையுள்ளது. 6. காட்டுக்கரும்பு - Saccharum Spontania. சமதட்பவெப்ப நிலையில் விளையும் கரும்பு. 7. கீழைக்கரும்பு - Saccharum Robausta. நீயூகினித் தீவில் விளையும் கரும்பு வகை. 8. **சீனக் கரும்பு** - Saccharum Sinensia. சிறிது தடிப்பான சீனநாட்டுக் கரும்பு. 9. **கழைக்கரும்பு** - தென்னாட்டுக் கரும்பு வகை; இதனை மூங்கிற் கரும்பு என்பர். 10. **நாணற்கரும்பு** - நாணல்போல் பருமன் குறைந்த கரும்பு. 11. **வரிக்கரும்பு** - இதனை இராமக்கரும்பு என்றும், நாமக்கரும்பு என்றும் கூறுவர். 12. **சாலிக்கரும்பு** - சாவா எனப்படும் சாலித் தீவினின்றும் வந்த கரும்பு சாலிக் கரும்பு எனப்பட்டது. இது 10 அடி முதல் 26 அடி வரை வளரும். 13. **கன்னல் - கருங்கரும்பு**. 14. **குட்டைக் கரும்பு** - குட்டையாக வளரும் கரும்பு. (இதனைக் கட்டைக் கரும்பு என்றும் கூறுவர்.) 15. **சீமைக்கரும்பு** - வெளிநாட்டுக் கரும்பு. கலப்பின வகை. 16. **சீனிக்கரும்பு** - வெண்சருக்கரை எடுக்க உதவும் கரும்பு.

**கரும்பு**[2] *karumbu,* பெ.(n.) பேய்க்கரும்பு, கரும்பு போன்ற பொய்த் தோற்றமுடையது; sugar-cane, a saccharine grass.

*[கரும்பு[1] → கரும்பு[2] (கரும்பு போன்ற தோற்றமுடையது).]*

**கரும்பு-தல்** *karumbu-,* 5 செ.குன்றாவி.(v.t.) ஒரு பொருளின் ஓரத்தில் சிறிது சிறிதாய்க் கடித்தல் (சொ.ஆ.க.55.); to nibble.

*[கொறி → கொறிம்பு → கறிம்பு → கரும்பு.]*

**கரும்புஅம்பர்** *karuppuambar,* பெ.(n.) கருப்பு நிறமான் ஒருவகை அம்பர்; a black variety of amber (சா.அக.).

மறுவ. காரம்பர்

*[கருப்பு + அம்பர்.]*

**கரும்புக்கட்டி** *karumbu-k-katti,* பெ.(n.) கருப்பங் கட்டி; jaggery.

*[கரும்பு + கட்டி.]*

**கரும்புடையன்** *karumpudaiyan,* பெ.(n.) புடையன் பாம்பு வகை; black wart snake.

*[கரும் + புடையன்.]*

**கரும்புமுத்து** *karumbu-muttu,* பெ.(n.) கரும்பில் பிறந்த மஞ்சள் நிறமுத்து; yellowish pearl supposed to be born in the sugar-cane.

*[கரும்பு + முத்து.]*

**கரும்புரசு** *karum-purašu,* பெ.(n.) 1. புரசு மரம்; yellow-wood. 2. முதிரைமுரம்; east Indian satin wood.

*[கரும் + புரசு.]*

**கரும்புல்** *karumpul,* பெ.(n.) 1. பனை (மலை.); palmyra-palm. 2. கரும்பு; sugarcane.

மறுவ. கரும்புறம்

*[கரும் + புல் – கரும்புல். கரும் = பெரிய, உயர்ந்த. புல் = புல்வகையைச் சார்ந்த பயிரினம். ஆதலின் கரும்புல் பனைமரத்தைக் குறிப்பதாயிற்று. ஒ.நோ. கருமாடம் = உயர்ந்த மளிகை. பனையைப் போல் கரும்பும் வெல்லங்காய்ச்ச உதவுதலின், கரும்புல் எனப்பட்டது.]*

**கரும்புலி** *karumpuli,* பெ.(n.) ஒருவகைப் புலி; a kind of tiger.

*[கரு → கரும் + புலி.]*

**கரும்புவில்லி** *karumbu-villi,* பெ.(n.) காமன்; kāmaṉ, god of love.

*[கரும்பு + வில்லி.]*

வில் + இ. 'இ' உடைமை குறித்த ஈறு.

**கரும்புள்** *karumbul,* பெ.(n.) 1. வண்டுவகை (பிங்.); a kind of black-beetle. 2. பெண்வண்டு (சூடா.); female beetle. 3. காக்கை (யாழ்.அக.); crow.

*[கரும் + புள் – 'புள்' பறவையைக்குறித்த சொல்லாயினும் பறக்கும் இயல்பு நோக்கி வண்டினையும் குறித்தது.]*

**கரும்புள்ளி**[1] *karumpuḷḷi,* பெ.(n.) உடலிற் கரும் புள்ளிகளை உண்டாக்கும், ஒருவகைப் பாலியல் நோய்; a kind of venereal disease producing black spots all over the body. *"சரணமுறுப்பங்கையாங் கரும்புள்ளி" (தைல.தைலவ.71.).*

*[கரும் + புள்ளி.]*

**கரும்புள்ளி**[2] *karumpuḷḷi,* பெ.(n.) 1. குற்றங் குறை யுடையோர்; list of persons under suspicion. 2. தண்டனைக் குரியோர்; mark of discredit, against one's name.

*[கரும் + புள்ளி.]*

**கரும்புள்ளிக்கல்** *karumpuḷḷi-k-kal,* பெ.(n.) மாழைக் (உலோகம்) கனிமமுள்ள கல்வகை (வின்.); a kind of stone containing metal.

*[கரும் + புள்ளி + கல்.]*

**கரும்புள்ளிதீட்டு-தல்** *karumpuḷḷi-tiṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) கோலம் போடுதல்; to tattoo.

*[கரும்புள்ளி + தீட்டு.]*

**கரும்புளி-த்தல்** *karumpuḷi-,* 4 செ.கு.வி.(v.i.) களிம்பூறுதல் (வின்.); to become spoiled, as acid, food kept in a brass vessel.

*[கரு → கரும் + புளி – கரும்புளி. கருத்தல் = மிகுதல். கரும்புளித்தல் = அதிகப் புளிப்புத்தோன்றுதல். அச்சுவைக்குரிய களிம்பு மிகுதல்.]*

**கரும்புற்று** *karumpuṟṟu,* பெ.(n.) கருநிறமுள்ள புண்வகை (இங்.வை.307.); black cancer.

*[கரும் + புற்று.]*

**கரும்புறத்தான்**[1] *karumpuṟattāṉ,* பெ.(n.) மதுரை நெல்லை மாவட்டத்தில் வாழும் இனத்தார். (E.T.); man of a minor caste found in Madura and Nellai districts who use the title Pillai.

*[கரும்புறம் → கரும்புறத்தான். கரும்புறம் = பனைமரம். பனைத்தொழிலாளியைக் குறித்த சொல், பிறதொழிலாளரையும் குறித்தது.]*

**கரும்புறத்தான்**[2] *karumpuṟattāṉ,* பெ.(n.) முதுகில் கருப்பு நிறமுடைய விலங்கு; any animal having a dark back (சா.அக.).

*[கரும் + புறம் + அத்து + ஆன். புறம் = முதுகு. 'அத்து' சாரியை.]*

**கரும்புறத்தோர்** *karumpuṟattōr,* பெ.(n.) விலங்கு களை வேட்டையாடிக் கொன்றுண்ணும் இனத்தார் (சீவக. 2751, உரை.); hunters who live by chase. ***கரும்புறத்தான்*** பார்க்க; see *karum-puṟattāṉ.*

*[கரும்புறத்தான் → கரும்புறத்தார் → கரும்புறத்தோர்.]*

**கரும்புறம்** *karu-m-puṟam,* பெ.(n.) 1. பனை (பிங்.) palmyra-palm. 2. கருமை; blackness. *"நீலமே! .... நின்வண்ணம் யாது? கரும்புறமல்லவோ" (சீவக. 2514, உரை.).*

*[கரும் + புறம் – கரும்புறம் = கரியதோற்றமுடையது.]*

**கரும்புறவு** *karumpuṟavu,* பெ.(n.) புறாவகையு ளொன்று; turtle dove.

*[கரும் + புறவு.]*

**கரும்புறா** *karu-m-puṟā,* பெ.(n.) ***கரும்புறவு*** (திவா.) பார்க்க; see *karum-puṟavu.*

*[கரும் + புறா. புறவு → புறா.]*

**கரும்புறாநயன்** *karumpuṟā-nayaṉ,* பெ.(n.) ஒரு புறா ஒரிடஞ்சேர, அதன் இனமான புறாக்களெல்லாம் உடனே அதனைப் பின்பற்றி அங்குச் சேர்தல் போல, ஒன்று நிகழ அதனினமான பலவும் உடனிகழும் நெறி; illustration of the flock of dove showing how one thing is immediately followed by a multitude of other, as doves flock down successively one after another.

*[கரும்புறா+நயன். நயன் = நெறி, ஒழுங்கு.]*

த. கரும்புறாநயன் > **Skt.** kapotaka nyaya.

**கரும்பூ** *karum-pū,* பெ.(n.) 1. நீலோற்பலம், அல்லி (யாழ்.அக.); blue indian water lilly. 2. கரூவூமத்தை; black dautura.

*[கரும் + பூ.]*

**கரும்பூசம்** *karumpūšam,* பெ.(n.) கருப்பு முசுக் கட்டைச் செடி; black mulberry (சா.அக.).

*[கரும் + பூசம்.]*

**கரும்பூமத்தை** *karum-pū mattai,* பெ.(n.) கருவூமத்தை (யாழ்.அக.); purple stramony.

*[கரும் + பூ + மத்தை. ஊமத்தை → மத்தை (முதற்குறை).]*

**கரும்பூல்** *karumbūl*, பெ.(n.) ***கரும்பூலா*** பார்க்க; see *karumpūla* (சா.அக.).

*[கரும்பூலா → கரும்பூல்.]*

**கரும்பூலா** *karumbūlā*, பெ.(n.) கருப்புப் பூலாஞ்சி; black honey shrub (சா.அக.).

*[கரும் + பூலா. இது முடிவளர்ச்சிக்குகந்தது.]*

**கரும்பூவரசு** *karumpūvarašu*, பெ.(n.) கருப்புப் பூவரசு; black portia tree.

*[கரும் + பூவரசு.]*

**கரும்பூனை** *karumpūṉai*, பெ.(n.) கருப்புப்பூனை; black cat (சா.அக.).

*[கரும் + பூனை.]*

**கரும்பெலாச்சி** *karumpelācci*, பெ.(n.) ***கரும் பிலாச்சை*** பார்க்க; see *karu-m-pilāccai*.

*[கரும்பிலாச்சை → கரும்பெலாச்சி (கொ.வ.).]*

**கரும்பேன்** *karumpēṉ*, பெ.(n.) ஈரமிகுதியாற் சீலையில் தோன்றுங் கரும்புள்ளி (யாழ்ப்.); black spots that form in cloth kept wet for long.

ம. கரும்பன்

*[கரும் + பேன். பேன் = பேன் போன்ற கரும்புள்ளி.]*

**கரும்பை** *karumbai*, பெ.(n.) நாயுருவி; Indian burr (சா.அக.).

*[கரும் → கரும்பை.]*

**கரும்பொன்** *karumpoṉ*, பெ.(n.) இரும்பு; iron. *"கரும்பொனியல்பன்றி" (சீவக. 104.).*

மறுவ. இரும்பொன், இரும்பு.

ம. கரும்பொன்; க. கப்பின; து. கர்பு; படை. கபுப்ன; துட. கபின்.

*[கரும் + பொன் = கரும்பொன் = கருநிறமுடைய மாழை. ஒ.நோ. இரும்பொன் – இரும்பு. இரும் = கரிய. பொன் என்ற சொல்லிற்கு அடையாகக் கரும், செம் ஆகியன அமைந்து, முறையே கரும்பொன் இரும்பையும், செம்பொன் செம்பையும், குறித்துவரும் சொல்லமைப்பின் அடிப்படையில் இரும்பு, செம்பு மாழைகளின் பயன்பாட்டிற்கு முன்னரே, பொன்னின் பயன்பாடு தமிழருக்குத் தெரிந்திருந்தது என்பது தெளிவு.]*

**கரும்பொன்மகன்** *karumpoṉmagaṉ*, பெ.(n.) இரும்புக்கொல்லன்; blacksmith.

*[கரும் + பொன் + மகன் – கரும்பொன்மகன். கரும்பொன் = இரும்பு.]*

**கரும்பொன்மம்** *karumpoṉmam*, பெ.(n.) கருஞ் சாம்பல் நிற மாழைத்தனிமம்; titanium.

*[கரும் + பொன்மம்.]*

**கரும்பொன்னர்** *karumpoṉṉar*, பெ.(n.) கருவங்கம்; black lead (சா.அக.).

*[கரும் + பொன்னர்.]*

**கருமக்கருத்தன்** *karu-ma-k-karuttaṉ*, பெ.(n.) 1.பயனிலைக்கு நேரடி எழுவாயாகாத, வினை முதல்வன், தொழிலமைப்போன் (வின்.); doer, actor, performer. 2. செயப்படுபொருள் வினைமுதல் போல வருவது (பி.வி.11, உரை.) ; subject of a sentence in which the predicate is active in form, but passive in sense, as in பெற்றம்கறந்தது.

*[கருமம் + கருத்தன். வினைமுதல்வனை இயற்றுதற் கருத்தன், ஏவுதற்கருத்தன் எனப்பிரிப்பராதலின், கருமக்கருத்தன் என்பது, செயப்படுபொருள் வினைமுதல் போல வருவதையே குறிக்கும்.]*

**கருமக்கருத்தா** *karuma-k-karuttā*, பெ.(n.) ***கருமக் கருத்தன்*** பார்க்க; see *karumakkaruttaṉ*.

*[கருமம் + (கருத்தன்) கருத்தா.]*

த. கருத்தன் > Skt. karta > த. கருத்தா.

கருமக்கருத்தன் என்பதே, செவ்விய வழக்கு. கருத்தா பிறிதொன்றாய் நில்லாது கருமமுங் கருத்தாவும் தானேயாய் நிற்பது கருமக் கருத்தாவாகும் [வீர. 40,41.].

**கருமக்கழிபலம்** *karuma-k-kaḻi-palam*, பெ.(n.) கரிசினைக் (பாவத்தை) கழிக்கும் நற்செயல் (புண்ணியம்); virtue or merit that expiates sin. *"கருமக்கழிபலங் கொண்மினோ" (சிலப்.15: 62.).*

*[கருமம் + கழி + பலம். கருமம் = கருவினை, தீவினைப்பயன். பலன் → பலம் (இங்கு வினையினைக் குறித்தது).]*

**கருமக்காமம்** *karuma-k-kāmam*, பெ.(n.) செயல் ஈடேறுவதன் பொருட்டு மேற்கொண்ட பொய்க்காமம்; love, that is professed with a purpose dist. fr. that which is sincerely felt as a natural emotion or

passion, amour de convenance. *"கருமக் காம மல்ல தவண்மாட், டொருமையி னோடாது புலம்பு முள்ளமும்" (பெருங். வத்தவ. 7, 9.).*

*[கருமம் + காமம். கருமம் = ஆர்வத்தோடு மேற்கொண்ட பணி.]*

**கருமக்காரகம்** *karuma-k-kāragam,* பெ.(n.) வினையைப் பொருளிற் புலப்படுத்தும் உருபுடைப் பெயர்; case marker denoting action of the verb in its meaning.

*[கருமம் + காரகம்.]*

**கருமக்காரன்** *karuma-k-kāran,* பெ.(n.) கம்மாளன்; blacksmith.

*[கரு → கருமம் + காரன். 'காரன்' பெயரீறு.]*

**கருமக்கிழவர்** *karuma-k-kiḻavar,* பெ.(n.) ஊர்த் தலைவர்; village head... திருவொற்றியூர்க் கருமக் கிழவராயின ஊரோம் (S.I.I. vol.12. part 1, insc. 92.).

*[கருமம் + கிழவர்.]*

**கருமக்கோட்பாடு** *karuma-k-kōṭpāḍu,* பெ.(n.) மேற்கொண்ட சூள்வினை; a vowed-object. *"கோசிகன் தான் வந்த கருமக்கோட்பாட்டினைக் கூறுகின்றவன்" (சிலப். 13:56. உரை.).*

*[கருமம் + கோட்பாடு. கருமம் = மேற்கொண்டவினை. கோட்பாடு = கொள்கைப் பிடிப்பு, பற்று. ஒ.நோ. ஆடுகோட்பாடு → ஆடு கோட்பாட்டுச் சேரலாதன். ஆடு = வெற்றி.]*

**கருமகள்** *karu-magaḷ,* பெ.(n.) 1. இழிவானவள், தீயவள்; base, infamous woman. *"கருமகளிலங்கையாட்டி" (திவ். பெரியதி. 4,5,5.).* 2. காக்கை (வின்.); crow.

*[கரு + மகள். கரு = கருமை, தீமை, இழிவு.]*

**கருமகன்** *karu-magan,* பெ.(n.) கொல்லன்; blacksmith. *"கருமகக் கம்மியன்" (கம்பரா. பம்பா.37.).*

**மறுவ.** கருமான், கம்மாளன்.

**Pali.** kammāro

*[கரும்(பொன்) + மகன் – கருமகன். இது இரும்புக்கொல்லனைக் குறித்த கரும்பொன்மகன் என்பதன் மரூஉ. கரும்பொன் = இரும்பு.]*

**கருமகாண்டம்** *karuma-kāṇḍam,* பெ.(n.) அகத்திய ரால் எழுதப்பட்டதும், நோய்களின் முந்தைய வரலாற் றையும், அவைகருமத்தாலேற்படும் முறைகளையும் குறிப்பதுமான நூல்; a treatise on diseases, their history and origin as attributed to karma (actions of previous birth) written by Agastiya, the father of Tamil medicine (சா.அக.).

*[கருமம் + காண்டம்.]*

**கருமகாரன்** *karuma-kāran,* பெ.(n.) வேலையாள்; servant.

*[கருமம் + காரன் – கருமகாரன். காரன் = செய்பவன். 'கருமகாரன்' இரண்டன் தொகையாதலின் இடையில் வல்லெழுத்து மிகாதாயிற்று.]*

**கருமங்கட்டுப்படல்** *karumaṅ-kaṭṭu-p-paḍal,* பெ.(n.) 1. தீச்செயல் செய்கை (யாழ்.அக.); sinning. 2. வினை தீராது நிற்கை; existence of unexhausted viṉai.

*[கருமம் + கட்டுப்படல் (கட்டுண்டிருத்தல்) கருமம் = தீவினை.]*

**கருமச்சார்ச்சி** *karuma-c-cārcci,* பெ.(n.) ***கருமச்சார்பு*** (தொல்.சொல்.84, உரை.) பார்க்க; see *karuma-c-cārbu.*

*[கருமம் + சார்ச்சி.]*

**கருமச்சார்பு** *karuma-c-cārbu,* பெ.(n.) இரண்டன் உருபேற்ற செயப்படுபொருளை, வினைமுதல்வன் மெய்யுறுஞ் சார்பு; direct relationship of the nominative of a verb with its object denoted only by the accusative case, as in tūṉai-c-cārndāṉ. தூணைச்சார்ந்தான் (தொல்.சொல். 84. சேனா.).

*[கருமம் + சார்பு. எழுவாயின் வினைப்பாங்கு செயப்படுபொருளைச்சார்தலின், கருமச்சார்பாயிற்று. கருமம் இங்குச் செயப்படுபொருளைக் குறித்தது. கருமச்சார்பு தூணைச்சார்ந்தான் என, ஒன்றனையொன்று மெய்யுறுதலாம்.]*

**கருமசாட்சி** *karumasāṭci,* பெ.(n.) கதிரவன் (சங்.அக.); sun.

*[கருமம் + சாட்சி.]*

சான்றுரைப்பவரும் சூளுரைப்பவரும் கதிரவனையே முன்னிறுத்தி உரையாடுவதால் இச்சொல் கதிரவனைக் குறிப்பதாயிற்று.

**கருமஞ்செய்தல்** *karumañ-cey-,* செ.கு.வி.(v.i.) நீத்தார் நிகழ்வினை யாற்றுதல் (கொ.வ.); to perform funeral rites.

*[கருமம் + செய். கருமம் = செய்யக்கடவது.]*

**கருமட்டி** *karu-matti,* பெ.(n.) கடல்வாழ் மட்டிப்பூச்சி வகை (வின்.); a large edible sea oyster.

*[கரு + மட்டி.]*

**கருமணத்தக்காளி** *karu-mana-t-takkāli,* பெ.(n.) மணித்தக்காளி வகை (பதார்த்த.282.); black night-shade. ***கருமணித்தக்காளி*** பார்க்க; see *karumani-t-takkāli.*

*[கரு + மணி + தக்காளி - கருமணித்தக்காளி → கருமணத்தக்காளி (கொ.வ.) = கருமணிபோன்ற தோற்றமுடைய பழங்களைக் காய்ப்பது.]*

**கருமணல்** *karu-manal,* பெ.(n.) 1. கடற்கரை அல்லது ஓடு புனல் மருங்குள்ள கரிய நுண்மணல்; fine black sand found on the sea-shore or near the bed of running stream. 2. சென்னைக்கு அருகிலுள்ள ஓர் ஊர்ப்பெயர்; name of a small village near Chennai.

**மறுவ.** கருந்திரை, சூட்டுமணல், ஒளிமணல், நீலமணல், அறல்.

*[கரு + மணல். கரு = கரிய.]*

**கருமணல்வாரி** *karumanalvāri,* பெ.(n.) மாழைமணல் இருக்குமிடம்; place of iron ore deposit.

*[கருமணல் + வாரி]*

**கருமணற்சுக்கான்** *karumanar-cukkān,* பெ.(n.) கருப்புச்சுக்கான்கல்; black lime-stone (சா.அக.).

*[கருமணல் + சுக்கான்.]*

**கருமணி**[1] *karu-mani,* பெ.(n.) கண்மணி; the apple of the eye. *"கருமணிப் பாவையன்னான்" (சீவக.1508.).*

*[கரு + மணி. கரு → கரிய. கருமணி போன்ற ஒப்புமை கருதி கண்மணியைக் கருமணி குறிப்பதாயிற்று.]*

**கருமணி**[2] *karu-mani,* பெ.(n.) 1. கருநிறமுள்ள மணி (யாழ்.அக.); small black beads. 2. நீலமணி (சங்.அக.); sapphire.

*[கரு + மணி. கரு = கரிய.]*

**கருமணிக்கெண்டை** *karumani-k-kendai,* பெ.(n.) சிவப்பு நிறமுள்ளதும் சற்றொப்ப இரண்டடி நீளம் வரை வளர்வதுமாகிய, ஆற்றுக் கெண்டை மீன்; a reddish river fish of about 2 ft. in length (சா.அக.).

*[கரு + மணி + கெண்டை.]*

**கருமத்தம்** *karu-mattam,* பெ.(n.) ***கருவூமத்தை*** (பதார்த்த. 271.) பார்க்க; see *karu-v-ūmattai.*

*[கரு + மத்தம். ஊமத்தம் → மத்தம் (முதற்குறை).]*

**கருமத்தலைவன்** *karuma-t-talaivan,* பெ.(n.) அரசர்க்குத் துணைவன், செயலாளன், வினை முதல்வன்; superintendent, secretary, *"மன்னர்க் குள்படு கருமத்தலைவர்க்கு" (திவா. 2, 129.).*

*[கருமம் + தலைவன்.]*

**கருமநிலம்** *karuma-nilam,* பெ.(n.) 1. உழவு, வாணிகம் முதலிய தொழில்களைச் செய்வதற்குரிய நிலம் (திவா.); the earth which is adapted for the occupations of agriculture, commerce, etc. 2. சுடுகாடு (வின்.); cremation ground.

*[கருமம் + நிலம். கருமம் = செயல்.]*

**கருமநோய்** *karuma-nōy,* பெ.(n.) முன்செய்த தீவினையால் வந்ததாகக் கருதப்பட்ட தீராநோய் (கொ.வ.); incurable disease , believed to be the result of the sins committed in the previous birth.

*[கரும(ம்) + நோய்.]*

**கருமப்பழி** *karuma-p-pali,* பெ.(n.) தீச்செயல் (யாழ்.அக.); evil.

*[கருமம் + பழி (பழிக்கத்தக்க தீச்செயல்.).]*

**கருமப்பிறப்பு** *karum-p-pirappu,* பெ.(n.) கரிசுப் பிறப்பு (யாழ்.அக.); sinful birth.

*[கருமம் + பிறப்பு. கரிசு = பாழ்வினை (பாவம்).]*

**கருமபலன்** *karuma-palan,* பெ.(n.) வினைப்பயன்; effect of deeds as pain , pleasure, etc. *"கருமமுங் கருமபலனுமாகிய காரணன்றன்னை" (திவ். திருவாய். 3,5,10.).*

*[கருமம் + பலன்.]*

**கருமபூதகி** *karuma pūtagi,* பெ.(n.) சுடலை யாவாரை; tanner's senna grown in burial grounds (சா.அக.).

*[கருமம் + பூதகி. பூதகி = தோன்றியது.]*

**கருமம்**[1] *karumam,* பெ.(n.) 1. செயல்; action, work. 2. ஆள்வினைச்செயல் (சொ.ஆக.53); deed. 3. வினைப் பயன்; fruit of deeds. *"கருமவரிசையாற் கல்லாதார் பின்னும் பெருமையுடையாருஞ் சேறல்" (நாலடி.*

*249.).* 3. தொழில்; business, profession, occupation. *"தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்" (குறள், 266.).* 4. கடமைச்செயல்; moral duty, specific obligation. *"கானப்பேர் கைதொழல் கருமமே" (தேவா. 897,10.).* 5. நீத்தார்க் கடன்; funeral ceremonies. 6. செயப்படுபொருள் (வீரசோ. வேற்றுமை.1.); object of a verb.

**Indon.** kerja; **Beng., Mar.,H.** kar; **Skt**. kru; **E.** cre; **Chin.** kay; **Mar.** kām; **Vedic.** karmam;**Pali**; kammam.

குல் → குரு → கரு → கருமம் → கம்மம் (பே.வ.) kamma: pali & park எ.கா.: (கருமான்) – கருமாளன், கம்மாளன்; Kammari : Te Kammara : Pali Karuma.

*கரு என்னும் முதனிலை இன்றுவழக்கற்றது. கருத்தல் = செய்தல்.*

*கருமம் → கம்மம் → கம். கம்மம் = முதற்றொழிலாகிய பயிர்த்தொழில். கம்மவர் → கம்மவாரு = பயிர்த்தொழில் செய்யும் தெலுங்கர். கம் = பல்வேறு கனிம (உலோக)த் தொழில். 'ஈமுங் கம்மும்' (தொல். 328.).*

கம்மாளன் = பொற்கொல்லன், ஐங் கொல்லருள் ஒருவன். கம்மியன் = கற்றச்சன் [சிற்பி]. கரு+வி = கருவி. கரு + அணம் = கரணம் = செய்கை. திருமணச் சடங்கு, கருவி, அகக்கருவி. "கற்பெனப்படுவது கரணமொடு புணர" [தொல். 1088.].

இதிற்கரணம் என்பது திருமண வினையாகிய சடங்கைக் குறித்தது. வடவர் 'கரு' என்னும் முதனிலையைக் 'க்ரு' எனத் திரித்துள்ளனர். இங்ஙனம் சொன் முதல் உயிர்மெய்யில், உயிரை நீக்குவது ஆரியமரபு.

ஒ.நோ. பொறு – ப்ரு, திரு – ச்ரீ, வரி – வ்ரீஹி.

கரை – E. cry, துருவு – E. through, புருவம் – E. brow.

வடவர் கரணம் என்னும் சொல்லைக் காரண என நீட்டி, அதற்கேற்பக் கார்ய என்னும் சொல்லையுந் திரித்துள்ளனர். காரணம் என்னும் நீட்டம் தமிழுக்கேற்கும். ஆயின், காரிய என்னும் திரிப்பு ஏற்காது. ஏற்கனவே காரணம் என்பதினின்று கரணியம் என்னும் சொல் திரிந்துளது. அதற்கேற்பக் கருமம் என்பதினின்று, கருமியம் [காரியம்] என ஒரு சொல்லைத் திரித்துக் கொள்ளலாம்.

செய், பண்[ணு], புரி முதலிய பல பிற ஒரு பொருட் சொற்கள் தமிழில் இருப்பதனாலும், கரு என்பது வழக்கற்றுப் போனதினாலும், பின்னது வடசொல்லென மயங்கற் கிடந்தருகின்றது. தமிழ் வடமொழிக்கு முந்தியதென்றும் பெருஞ் சொல்வள மொழியென்றும் அறியின், இம்மயக்கந் தெளிந்து விடும். தமிழ் திராவிட மொழிகட்குரிய இல், மனை, வீடு, முதலிய சொற்களை மட்டுமன்றி, ஆரிய மொழிகளில் புகுந்த 'குடி' என்னுஞ் சொல்லையுந் தன்னகத்துக் கொண்டுள்ளதென்று, கால்டுவெலார் கூறியிருப்பதைக் கூர்ந்து நோக்குக [வ.வர. 274.].

கரு – கருத்தல் = செய்தல். வினையாற்றுதல். நெல்லை மாவட்ட மீனவர், உழைப்பாளியைக் கருவாளி என இன்றும் குறிப்பிடுதலைக் காணலாம். கருத்தல் என்னும் வினை வடதமிழில் வழக்கூன்றித் தென்னகத்தில் வழக்கிழந்ததெனினும், இது தொன்முது செந்தமிழ்ச் சொல் என அறியத்தகும்.

**கருமம்**[2] *karumam,* பெ.(n.) வெப்பம் (பிங்.); heat.

*[உல் → குல் → குரு → கரு → கருமம்.]*

**கருமம்**[3] *karumam,* பெ.(n.) தீவினை, பாழ்வினை; illdeed.

*[கரு = கரிய, தீய. கரு → கருமம்.]*

கருமம், காரியம், வினை, நாற்றம், வீச்சம் என்பன தீப்பொருளிலும், உலகவழக்கில் வழங்கும். கருமம் என்று பழந்தீவினையையும் வினை என்று பிறப்பிற் கேதுவான செயலையும், காரியம் என்று கருமாந்தரத்தையும் குறிப்பர். [சொல்.கட்.97.].

**கருமம்**[4] *karumam,* இடை. (Part.) செயப்படுபொருள் (வீரசோ. வே ற்றுமை. 1.); object of a verb.

*[கரு → கருமம்.]*

கருமம், கர்மன் என்னும் இரு சொற்களும் செய்கை, வினை, தொழில் எனப் பொருள்படும் ஒரே சொல்லின் இருவேறு வடிவுகளே. கருமம் என்பதனொடு தொடர்புடைய கருவி என்னும் சொல், வடமொழியிலில்லை. காரணம், காரியம் என்னும் வடசொல்லினையொத்ததே. கருவி, கருமம் என்னும் தென்சொல்லிணையும்.

*"மூன்றாகுவதே ஒருவெனப் பெயரிய வேற்றுமைக்கிளவி*
*வினை முதல் கருவி அனைமுதற் றதுவே" (தொல்.557.)*

*"கருமம் அல்லாச் சார்பென் கிளவிக்கு*
*உரிமையும் உடைத்தே கண்என் வேற்றுமை" (தொல். 568.)*

இங்ஙனம் கருவி, கருமம் என்னும் இரு சொற்களும், தொன்றுதொட்டு த் தமிழில் வழங்கி வருவதுடன், இலக்கணக் குறியீட்டுறுப்புகளாகவும் அமைகின்றன. இவ்விரண்டும் கரு என்னும் ஒரே

முதனிலையினின்று பிறந்தவை. ஆதலால், கருவி என்னும் சொற்போன்றே, கருமம் என்னும் சொல்லும், தென்சொல்லாதல் தெளிவு [வ.மொ.வ. 273.].

**கருமமல்லாச்சார்பு** *karumam-allā-c-cārbu,* பெ.(n.) செயப்படு பொருளையேனும், பற்றுக் கோட்டினையேனும், வினைமுதல்வனின் மெய்யுறுதலின்றிச் சாரும் சார்பு (தொல். சொல். 84.); relationship of the subject of a verb with its object denoted either by the accusative case or locative case, as in *arasarai-c-cārndāṉ, arasar-kaṭ-cārndāṉ. அரசர்கட் சார்ந்தான் (தொல். சொல். 84. சேனா.).*

*[கருமம் + அல்லா(த) + சார்பு]*

**கருமமுடி—த்தல்** *karumamuḍi-,* 4 செ.குன்றாவி.(v.t.) செய்தொழில் முடித்தல்; to finish a work.

*[கருமம் + முடி.]*

**கருமமூலம்** *karumamūlam,* பெ.(n.) தருப்பைப்புல்; sacrificial grass so called from its use in ceremonies (சா.அக.).

*[கருமம் + மூலம்.]*

**கருமயிர்** *karu-mayir,* பெ.(n.) கரடி (அக.நி.); black bear.

*[கரு + மயிர். (கருமயிர் அடர்ந்த கரடியைக் குறித்த அன்மொழித் தொகை.]*

**கருமயிர்த்தொங்கலி** *karumayir-t-toṅgali,* பெ.(n.) மயிர்மரம் (சா.அக.); a species of tree.

*[கருமயிர் + தொங்கலி]*

**கருமயிலை** *karu-mayilai,* பெ.(n.) இருண்ட சாம்பல் நிறம் (மாட்டுவை.); iron grey colour.

ம. கருமைல்

*[கரு + மயிலை.]*

**கருமர்** *karumar,* பெ.(n.) ***கருமகன்*** பார்க்க; see *karumagaṉ.*

*[கருமன் (கருமான்) → கருமர்.]*

**கருமரமாத்தி** *karumaramātti,* பெ.(n.) வெங்காயம்; onion (சா.அக.).

*[காரம் + உறு + ஆத்தி.]*

**கருமருட்கிழங்கு** *karumaruṭkiḻaṅgu,* பெ.(n.) கருப்புமருள் கிழங்கு; a black variety of bow-string hemp (சா.அக.).

*[கரு + மருள் + கிழங்கு.]*

**கருமருது** *karu-marudu,* பெ.(n.) மருத மரவகை; brown-hard-felted-backed-leaved winged Myrobalan.

ம. கரிமருது; க. கரிமத்தி; தெ. நல்லமத்தி.

*[கரு + மருது.]*



கருமருது (பூ)

**கருமருதை** *karumarudhai,* பெ.(n.) கருங்கொடி; spring creeper (சா.அக.).

*[கரு + மருதை.]*

**கருமருதோன்றி** *karumarutōṉri,* பெ.(n.) கருப்பு மருதோன்றி; a black species of fragrant nail dye (சா.அக.).

*[கரு + மருதோன்றி.]*

**கருமருந்து**[1] *karu-marundu,* பெ.(n.) வெடிமருந்து (நெல்லை.); gun-powder.

ம. கரிமருந்து

வெடி மருந்துகளுக்கு மூலம் கருமருந்து. அவை கந்தகம் , கரி, வெடியுப்பு என்ற மூன்றன் கலவையாகும். இம்மூன்றும் இந்திய நாட்டில் தொன்று தொட்டுக் கிடைக்கின்றன. கரிய நிறத்தானும், மருந்து போன்ற தோற்றத் தானும், மருந்துச் சரக்காகிய கந்தகத்தின் சேர்க்கையானும் கருமருந்தெனப்பட்டது [செல்வி. 1932. பரல்.3.].

*[கரு = கருநிறம். கரு + மருந்து.]*

**கருமருந்து**[2] *karumarundu,* பெ.(n.) 1. கருப்பத்திலிருக்கும் இளங்கருவை வெளிப்படுத்தும் மருந்து; medicine that induces or faciliates the child-birth. 2. கருவைக் கரைக்கும் மருந்து; medicines that cause abortion. 3. கருவைக் கொண்டு செய்யும் தந்திர வித்தை மருந்து; a black magic drug pre-

pared from foetus or the product of it as a chief ingredient.

*[கரு + மருந்து.]*

**கருமலாகி** *karumalāgi,* பெ.(n.) நாயுருவி; Indian burr (சா.அக.).

*[கரும் + அலகி.]*

**கருமலை** *karu-malai,* பெ.(n.) இருப்புக்கனியுள்ள மலை (வின்.); mountain containing iron ore.

*[கரும்பொன் = இரும்பு. கரும்பொன்மலை → கருமலை என மரூஉச் சொல்லாயிற்று.]*

**கருமலைப்பழம்** *karumalai-p-paḻam,* பெ.(n.) கருப்புநிற மலைவாழைப் பழம்; black fruit of hill plantain tree (சா.அக.).

*[கரு + மலைப்பழம்.]*

**கருமவதிகாரர்** *karuma-v-adigārar,* பெ.(n.) நாட்டின் பல்வேறு துறைகளை ஆளும் தலைவர் (பிங்.); head of the various departments of administration in a state.

*[கருமம் + அதிகாரர்.]*

**கருமவிதிகள்** *karumavidigaḷ,* பெ.(n.) அரசனின் மேற்பார்வை அதிகாரிகளை ஏவி நடத்துவோன்; a man who directs the supervisors of a king.

*[கருமம் + விதிகள்.]*

**கருமவினைஞர்** *karuma-viṉaiñar,* பெ.(n.) மத விழாக்களை நிகழ்த்துவோர்; those who officiate as priests in conducting the religious rites and ceremonies performed by the householder. *"கரும வினைஞருங் கணக்கியல் வினைஞரும்" (சிலப். 26:40.).*

*[கருமம் + வினைஞர்.]*

**கருமவுவமம்** *karuma-v-uvamam,* பெ.(n.) செயலுவமம்; simile derived from an action.

*[கரும(ம்) + உவமம்.]*

**கருமறு-த்தல்** *karumaṟu-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. கருவுண்டாகாதபடி தடுத்தல்; to resort to contraception. 2. பிள்ளையுண்டாகாதிருத்தல்; to be barren, sterile.

*[கரு + மறு.]*

**கருமன்** *karumaṉ,* பெ.(n.) கொல்லன் (பிங்.); blacksmith.

**ம.** கருவான்

*[கரும்பொன் = இரும்பு. கரும்பொன் + மகன் – கருமகன் → கருமான் → கருமன் (மரூஉச்சொல்).]*

**கருமா**[1] *karumā,* பெ.(n.) யானை (பிங்.); elephant.

*[கரு + மா. கரு = கரிய. மா = விலங்கு.]*

**கருமா**[2] *karumā,* பெ.(n.) பன்றி; hog. *"கருமாலுங் கருமாவாய்" (பெரியபு. திருஞான. 1003.).*

**மறுவ.** இருளி, கனலி, ஏனம், மோழன், மிறுதாறு, வல்லுளி, கேழல், எறுழி, கோலம், களிறு, கோணி, போழ்முகம், அரி, மைம்மா, கோணவாயன்.

*[கரு + மா. மா = விலங்கு. கரு = கரிய.]*

**கருமாடக்காரி** *karumāḍakkāri,* பெ.(n.) ஓணான்; lizard; blood-sucker.

*[ஒருகா. கருமாடம் + காரி, கருமாடம் – மேல் மாடம் உயர்வான இடம். 'காரி' பெபா.ஈறு. மேல் மாடத்தில் உலவும் பெண் என உருவகப்படுத்திய சொல்லாட்சி.]*

**கருமாடம்** *karumāḍam,* பெ.(n.) 1. மேல்மாடம்; a lofty dwelling, an upstair house (கருநா.). 2. உயர்ந்த மாளிகை; multi-storyed building.

**க.** கருமாட, கருவாட, கருவாடு.

*[கரு = உயர்ந்த. கரு + மாடம்.]*

**கருமாண்டபதி** *karumāṇḍapadi,* பெ.(n.) தருமபுரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Dharamapuri dt.

*[கருமன் + ஆண்ட + பதி – கருமாண்டபதி.]*

**கருமாண்டி சொல்லிபாளையம்** *karumāṇḍi sellipālāiyam,* பெ.(n.) ஈரோடு மாவட்டத்துச் சிற்றூர்; a village in Erode dt.

*[கருமன் + ஆண்ட + செல்லி + பாளையம். கருமனாண்ட செல்லிபாளையம் → கருமாண்டி செல்லி பாளையம். செல்லன் (ஆ.பா.பெ.) → செல்லி (பெ.பா.பெ.).]*

**கருமி** *karumi,* பெ.(n.) 1. தீவினையாளன் (வின்.); atrocious sinner. 2. ஈயாதவன்; miser.

*[கருமம் → கருமி. கருமம் = தீவினை.]*

**கருமாணிக்கம்** *karu-māṇikkam,* பெ.(n.) திருமால்; vishnu.

*[கரு = கரிய கரு + மாணிக்கம்.]*

**கருமாணிக்காழ்வான்** *karumāṇi-k-kāḻvāṉ,* பெ.(n.) கல்லிடைக்குறிச்சிக் கோயில் அதிகாரி; an officef, of the Kalliḍaikkurucci temple. *"கருமாணிக் காழ்வானான வேணாவுடையானுக்குக் குடுத்து" (தெ.இ.கல். தொ. 23. கல். 105.).*

*[கருமாணிக்கம் + ஆழ்வான்.]*

**கருமாணிக்காழ்வான் நந்திவருமன்** *karumāṇi kkāḻvāṉ-nandi-varumaṉ,* பெ.(n.) ஆந்திரமாநிலம் கடப்பா மாவட்டம் இராசம்பேட்டை வட்டம் நந்தலூர்க் கோயிலுக்கு நிலம் வழங்கிய வள்ளல்; donor of land to the temple of Nandalūru in Rajampet taluk, Kadappa district; *"ஜயங்கொண்ட சோழமண்டலத்து மணவிற் கோட்டத்துத் தோழூர் நாட்டுத் தோழூர்ச் சிறுமலிகிழான் கருமாணிக்க ஆழ்வானான நந்திவர்மநேன்" (தெ.இ.கல்.தொ.23 கல்.594.).*

*[கருமாணிக்கம் + ஆழ்வான் + நந்தி + (வர்மன்) வருமன்.]*

**கருமாதி செய்தல்** *karumādi-sey-,* 1 செ.குன்றாவி. (v.t.) ஈமக்கடன் செய்தல்; to perform final obsequies.

*[கருமம் + ஆதி + செய். கருமாதி = அருங்கடன்கள் (சடங்குகள்). நீத்தார் இறுதிக்கடன்களை இறந்த நாள் தொடங்கி, முதல் நாள், மூன்றாம் நாள், பதினாறாம் நாள் நடப்பு என இறுதிநாள் வரை செய்தல் கருமாதி எனப்பட்டது.]*

**கருமாந்தம்** *karumāndam,* பெ.(n.) **கருமாந்தரம்** பார்க்க; see *karumāndaram.*

*[கருமம் + அந்தம் – கருமந்தம் → கருமாந்தம். அந்தம் = இறுதி.]*

**கருமாந்தரம்** *karumāndaram,* பெ.(n.) இறந்தவர்க்கு 16ஆம் நாளில் அல்லது 11ஆம் நாளில் செய்யும் இறுதிக்கடன்; final ceremony, usually performed among Dravidians on the 16th day or 11th day after death, as the end of funeral obsequies.

*[கருமம் + அந்தம் – கருமந்தம். கருமாந்தம் → கருமாந்தரம்.]*

**கருமாந்தியம்** *karumāndiyam,* பெ.(n.) நீத்தார் இறுதிக்கடன் (யாழ்.அக.); funeral rites, obsequies.

**மறுவ.** கருமாந்திரம், கருமாந்தம்.

*[கருமம் + அந்தம் – கருமந்தம் → கருமாந்தம் → கருமாந்தியம். அந்தம் = இறுதி. அந்தம் → அந்தியம். (திரிபு).]*

**கருமாநிமிளை** *karumānimiḷai,* பெ.(n.) கண்களுக்கு மையிடுதற்குரிய அம்பரை வகை; black bismuth, used as antimony to blacken the eye lids.

*[கரு + மா + நிமிளை.]*

**கருமாமிழ்தம்** *karumāmiḻdam,* பெ.(n.) கழுதைத் தும்பை; donkey's tumbai or Indian borage (சா.அக.).

*[கரு + மா + அமிழ்தம்.]*

**கருமாயம்** *karu-māyam,* பெ.(n.) 1. அதிகவிலை; exorbitant price. கத்திரிக்காய் கருமாயமாய் விற்கிறது (கொ.வ.); 2. அருமையானது (வின்.); that which is scarce.3. ஏவல் தீவினை; black magic.

*[கரு + மாயம். கரு = பெருமை, அருமை, சிறப்பு, மிகுதி, தீமை. மயம் → மாயம் (தன்மை).]*

**கருமார்** *karumār,* பெ.(n.) கொல்லர்; black smith.

*[கருமான் → கருமார்.]*

**கருமார்பட்டு** *karumārpaṭṭu,* பெ.(n.) திருவண்ணாமலை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Thiruvannamalai dt.

*[கருமான் → கருமார் + பற்று – கருமார்பட்டு.]*

**கருமாரன்** *karumāraṉ,* பெ.(n.) கொல்லன் (யாழ்.அக.); blacksmith.

*[கரும்பொன் + மாறன் – கரும்பொன்மாறன் → கருமாறன் கருமாரன் (மரூஉச்சொல்). கரும்பொன் = இரும்பு. மாறுதல் = அடித்தல். மாறன் = அடிப்பவன்.]*

**கருமாரி**[1] *karumāri,* பெ.(n.) கருமாரியம்மன்; a female deity.

*[கரு + மாரி. கரு = கரிய. மாறல் = அடித்தல், தாக்குதல். மாறல் → மாறி → மாரி (தீமையை அழிக்கும் தெய்வம்).]*

**கருமாரி**[2] *karu-māri,* பெ.(n.) 1. மகப்பேற்றால் விளையுந் துன்பம் (வின்.); labour pains. 2. மகப்பேற்றுத் துன்பத்திற்குப் பயன்படுத்தும் பட்டையையுடைய மரவகை (யாழ்.அக.); a tree which is used medicinally in child-birth.

*[கரு + மாரி. கரு = கருவுயிர்த்தல், மகப்பேறு. மாறல் = அடித்தல், தாக்குதல். மாறு → மாறி → மாரி (நோய், துன்பம்.) = நோய் நீக்கும் மருந்து அல்லது தெய்வம். இந்திய மொழிகள் பலவற்றுள் மாரி என்பது அம்மை நோயைக் குறித்த சொல்லாக வழங்கி வருவதைக் காண்க.]*

**கருமாலிகை** *karumāligai,* பெ.(n.) பேரீச்சை; date fruit.

*[கரு + மாலிகை. மால் → மாலிகை.]*

**கருமாளிகை** *karu-māḷigai,* பெ.(n.) 1. இன்றியமையாத சிறப்பமைப்புகளுடன் கட்டப்பட்ட அரசமாளிகை; palace. 2. உயர்ந்த கட்டடம்; tall building. 3. மந்திரச் சுற்றம் கூடுமிடம்; conference hall of the top level committee of the administration. *"அரசுறை கருமாளிகை பொடியாக்கி" (தெ.கல். தொ.5.கல்.465.).*

*[கரு + மாளிகை.]*

**கருமாறிப்பட்டை** *karumāṟippaṭṭai,* பெ.(n.) முருங்கை மரப்பட்டை; bark of moringa tree.

*[கரு + மாறி + பட்டை.]*

முருங்கைப்பட்டைக் கியாழம் எளிமையான மகப்பேற்றிற்கு உதவும் என்ற அடிப்படையில் கரு [குழந்தை] மாறி என்று முருங்கைக்குப் பெயர் அமைந்திருத்தலைக் காண்க [சா.அக.].

**கருமாறிப்பாய்-தல்** *karu-māṟi-p-pāy,* 2 செ.கு.வி. (v.i.) கழுமாறிப் பாய்ச்சல் போன்ற செயற்கரிய செயலைச் செய்தல்; to do a very difficult and hazardous feat as jumping between two impaling stakes into a tank from a high place. *"கருமாறிப் பாய்ந்தாலும் பேற்றுக்குத் தக்கது போராதாய்" (திவ். திருவிருத். 21, வ்யா.).* ***கழுமாறிப்பாய்-தல்*** பார்க்க; see *kaḻumāṟi-p-pāy-,*

*[கழு → கரு + மாறி + பாய்தல். கழு = கழுவேற்றும் கூர்முனைக்கழி. நீர்நிலையில் நடப்பட்டுள்ள கூர்முனையுள்ள கழிகளுக்கிடையில் நீருள் குதித்தல் கழு மாறிப்பாய்தல் எனப்பட்டது. இதில் கழு என்னும் சொல் கருவெனத் திரிந்தது.]*

**கருமாறிப்பாய்ச்சல்** *karu-māṟi-p-pāyccal,* பெ.(n.) காஞ்சிபுரத்துக் காமாட்சி கோயிற் குளத்துள் நாட்டப் பட்ட இரண்டு கழுக்கோல்களின் இடையே உயரமான இடத்தினின்றுந் தவறாது குதிக்கை; very difficult and hazardous feat, as that of jumping from a high place between two impaling stakes planted into the tank in the temple of Kamatchi at Kanchipuram *"கருமாறிப் பாய்ச்சல் யார்க்குமினிது" (தனிப்பா. 1, 21, 37.).* ***கழுமாறிப்பாய்-தல்*** பார்க்க; see *kaḻumāṟi-p-pāy.*

*[கழு→ கரு + மாறி + பாய்ச்சல்.]*

**கருமான்**[1] *karumāṉ,* பெ.(n.) 1. ஆண்மான் (பிங்.); stag. 2. பன்றி; hog. *"கருமானுரைத் திடின் .... மருமத் தணிபடுப்பேன்" (தணிகைப்பு. கனவுப். 198.).*

ம. கரிமான்

*[கரு + மான். மா → மான் = விலங்கு. கரு = பெரிய, வலிய.]*

**கருமான்**[2] *karumāṉ,* பெ.(n.) ***கருமகன்*** (கொ.வ.) பார்க்க; see *karu-magaṉ.*

*[கருமகன் → கருமான்.]*

**கருமானம்**[1] *karu-māṉam,* பெ.(n.) மாயக்கலை (மாயவித்தை.); witchcraft, black magic.

*[கரு + மானம். மானம் = ஒழுங்கு, நேர்த்தி. கரு = செயல்.]*

**கருமானம்**[2] *karumāṉam,* பெ.(n.) கரிய வானம்; black sky.

*[கருவானம் → கருமானம்.]*

**கருமிகள்** *karumigaḷ,* பெ.(n.) அரசனுக்குத் தேவை யானவற்றை நிறைவேற்றும் பணியாளர்; supervisors or personal servants of a king.

*[கருமம் = கருமி. 'இ' உடையானைக் குறித்த ஈறு. ஒ.நோ: தருமம் → தருமி.]*

*அரசியல் அல்லது அரண்மனை தொடர்பான உணவு, உடை, உறையுள், உண்கலம், அணிகலம், ஊர்திகள், தட்டு முட்டுகள் முதலிய பல்வகைப் பொருள்களையும், பணியாளர் வாயிலாக ஆக்குவித்து, அரசாணையை நிறைவேற்றும் தலைவர், பொதுவாகக் கருமிகள் அல்லது கன்மிகள் என அழைக்கப் பெறுவர். இவர் ஆக்கவினைத் துறையர் (பழந்தமிழாட்சி. 31).*

**கருமியம்** *karumiyam,* பெ.(n.) 1. செயல் கருமம்; work-deed. 2. செயற்பாடு (காரியம்); nature of work.

*[கரு → கருமம் → கருமியம்.]*

**கருமிளகு** *karumiḷagu,* பெ.(n.) ***குருமிளகு*** பார்க்க; see *kurumiḷagu.*

*[குருமிளகு → கருமிளகு.]*

**கருமிளகுதக்காளி** *karumiḷagutakkāḷi,* பெ.(n.) ***கருந்தக்காளி*** பார்க்க (சா.அக.); see *karuntakkāḷi*

*[கருமிளகு + தக்காளி.]*

**கருமுகம்** *karumugam,* பெ.(n.) ***கருங்குரங்கு*** பார்க்க; see *karuṅkuraṅgu.*

*[கரு + முகம்.]*

**கருமுகில்** *karu-mugil,* பெ.(n.) நீருண்ட மேகம்; black cloud laden with rain. *"கருமுகிற் பொடித்த வெய்யோன்" (சீவக. 1724.).*

ம. கரிமுகில்

*[கரு + முகில்.]*

**கருமுகில்வண்ணம்** *karumukilvannam,* பெ.(n.) 1. கருமுகில் நிறம்; colour of a dark cloud. 2. தீமுறுகற்செய்நஞ்சு; a prepared arsenic of the colour of a dark cloud, perhaps refers to crude phosphorous (சா.அக.).

*[கருமுகில் + வண்ணம்.]*

**கருமுகில்வைப்புநஞ்சு** *karu-mugil-vaippu-nañju,* பெ.(n.) வைப்புநஞ்சு முப்பத்துஇரண்டு வகையுள் ஒன்று; a prepared arsenic one of thirty two.

*[கரு + முகில் + வைப்பு + நஞ்சு.]*

**கருமுகிற்சிலை** *karumugircilai,* பெ.(n.) 1. காந்தக் கல்; magnet; load stone. 2. கருப்புக் காந்தக்கல்; black load stone. 3. கருமுகில் வண்ணக்கல்; a stone of the colour of a dark cloud.

*[கருமுகில் + சிலை.]*

**கருமுகை** *karumugai,* பெ.(n.) 1. சாரல் மல்லிகை (பிங்.); cādimalligai, malabār jasmine. 2. நள்ளிருள் நாறி (இருவாசி); மலை; iru-vatci, tuscan jasmine. 3. சிறுசண்பகம் (திவா.); kanaga flower tree. 4. முல்லை; smooth jasmine (சா.அக.).

*[கரு + முகை. கரு = சிறப்பு.]*

**கருமுசுட்டை** *karumušuttai,* பெ.(n.) கருப்பு முசுட்டை; black-leaved bindweed. It is used in preparing collyrium (சா.அக.).

*[கரு + முசுட்டை.]*

**கருமுட்டை** *karu-muttai,* பெ.(n.) கருப்பையிலிருந்து வெளிப்படும் முட்டை; ovum.

*[கரு + முட்டை.]*

**கருமுரசு** *karu-murašu,* பெ.(n.) உடலில் அதிகமான வங்கம், கந்தகம் சேருவதால் கருநிறமாகமாறும் பல்லீறு; bluish gum, due to the existence of lead in the system acted upon by H2S1 (சா.அக.).

*[கரு + முரசு. கரு = கருமை.]*

**கருமுரடன்** *karu-muradan,* பெ.(n.) கீழ்ப்படியாதவன் (யாழ்.அக.); unruly person.

*[கரு = தீய, கொடிய. கரு + முரடன். முருடு → முரடன்.]*

**கருமுரல்** *karu-mural,* பெ.(n.) கருநிறமான கடல்மீன் வகை (வின்.); a kind of black sea-fish.

ம. கருவாரமுரல், கருமுதல்.

*[கரு + முரல்.]*

**கருமுருகி** *karu-murugi,* பெ.(n.) கையாந் தகரை; eclipse plant (சா.அக.).

*[கரு + (முகம்) முகி.]*

**கருமுல்லை** *karu-mullai,* பெ.(n.) காட்டுமுல்லை; smooth jasmine (சா.அக.).

*[கரு + முல்லை.]*

**கருமுலை** *karu-mulai,* பெ.(n.) சில விலங்குகளின் கரிய நிற முலை; black dug of smith animals.

*[கரு + முலை.]*

**கருமுழிக்கெண்டை** *karumuli-k-kendai,* பெ.(n.) ***கருமணிக்கெண்டை*** பார்க்க; see *karu-mani-k-kendai.*

*[கரு + விழி (முழி) + கெண்டை.]*

**கருமுள்ளி** *karumulli,* பெ.(n.) ***கரிமுள்ளி*** பார்க்க; (சா.அக.) see *kari-mulli.*

*[கரு + முள்ளி. முள் → முள்ளி.]*

**கருமூக்குவாய்** *karumūkku-vāy,* பெ.(n.) தமிழ் அறுவை மருத்துவத்தில் சொல்லிய 26 வகைக் கருவிகளுள் ஒன்று; one of the twenty-six instruments used in Tamil surgery (சா.அக.).

*[கரு + மூக்கு + வாய்.]*

**கருமூஞ்சிப்பாரை** *karumūñji-p-pārai,* பெ.(n.) இருப்பாரைமீன்; grey horse-mackerel.

*[கரு + மூஞ்சி + பாரை.]*

**கருமூலி**[1] *karumūli,* பெ.(n.) 1. கருப்பு மூலிகை; black herb. 2. ***அழிஞ்சில்*** பார்க்க; see *aliñjil.* பசியெடுக் காதிருக்க வேண்டிச் சித்தர்கள் உண்ணும் பொதிய மலையில் விளையும் மூலிகை. a rare herb grown in pothigai hills and taken by Siddhars to keep off hunger (சா.அக.).

*[கரு + மூலி.]*

**கருமூலி**[2] *karumūli,* பெ.(n.) மந்திரக்கலையில் பிண்டக் கருவைக்கொண்டு செய்யும் மருந்து; a drug prepared with foetus as chief ingredient in the art of sorcery.

*[கரு + மூலி.]*

**கருமேகம்**[1] *karu-mēgam,* பெ.(n.) உடம்பில் கரும் புள்ளிகளையுருவாக்கும் பாலியல் நோய்; a kind of syphillis characterized by dark spots over the body.

*[கரு + மேகம்.]*

**கருமேகம்**[2] *karu-mēgam,* பெ.(n.) ***கருமுகில்*** பார்க்க; see *karu-mugil.*

*[கருமை + மேகம்.]*

**கருமேகன்** *karu-mēgaṉ,* பெ.(n.) 1. துரிசு; blue vitriol. 2. கருமேகம் கொண்டோன்; one, whose skin is turned black from syphilitic causes (சா.அக.).

*[கரு + (மேகம்) மேகன்.]*

**கருமேதை** *karu-mēdai,* பெ.(n.) எருமை; buffalo (சா.அக.).

*[கரு + (மேதி) மேதை. மேதி = எருமை.]*

**கருமேற்கரு** *karu-mēṟ-karu,* பெ.(n.) கருப்பத்தின் மேற்கருப்பம்; conception after conception of a female (சா.அக.).

*[கரு + மேல் + கரு.]*

**கருமேற்கருகொள்(ளு)-தல்** *karumēṟkarukoḷ(ḷu),* 7 செ.குன்றாவி.(v.t.) கருப்பத்தின் மேல் கருப்பம் உண்டாதல்; to form conception after conception (சா.அக.).

*[கரு + மேல் + கரு + கொள்.]*

**கருமேனி** *karu-mēṉi,* பெ.(n.) அழிந்தொழியும் பருத்தவுடல் (சி.சி. 1, 55, ஞானப்.); corpulent body.

*[கரு + மேனி. கரு = தீமை, அழிவு.]*

**கருமேனி ஓடை** *karu-mēṉi-ōḍai,* பெ.(n.) புதுக்கோட்டை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Pudukkottai dt.

*[கருமேனி + ஓடை = கருமேனிஓடை. கருமேனி = இயற்பெயர்.]*

**கருமை**[1] *karumai,* பெ.(n.) கருநிறம்; blackness, dark colour. *"கருமை பெற்ற கடல்." (தேவா. 62,5.).*

**ம.** கரும; **க.** கரு, கருவ, கரிது, கரி; **கோத.** கர்; **துட.** க, கங்கத்; **குட.** கரி; **து.** கர்து, கரிய, காரு, காரி; **தெ.** காரு; **கொலா.** காரி; **கோண்.** காரியல்; **பட.** கப்பு.

*[கல் → கரு + மை – கருமை. 'மை' பண்புப்பெயரீறு. கரு = கரியநிறம்.]*

**கருமை**[2] *karumai,* பெ.(n.) 1. பெருமை (திவா.). greatness, excellence. *"கருங்கறிமூடையொடு" (சிலப்.10. 210.).* 2. உயர்வு; highness.

**க.** கரு

*[குல் → குரு → கரு → கருமை. மு.தா. 236.]*

**கருமை**[3] *karumai,* பெ.(n.) 1. வலிமை; greatness, strength. *"கருங்கைக்கொல்லன்" (புறநா.21.).* 2. ஆற்றல்; power.

**ம.** கரு, கறு (பருமை, வன்மை), கரும (வன்மை); **க.** கர, கரு, கருமெ.

*[கல் → கரு → கருமை. கல் = அடர்த்தி, செறிவு, வலிமை.]*

**கருமை**[4] *karumai,* பெ.(n.) 1. கொடுமை (சிலப்.15:20. அரும். 8); cruelty, severity. 2. தீமை; evil.

**ம.** கரும

*[குல் → கல் → கரு → கருமை. குல் = குத்துதல், துன்புறுத்துதல்.]*

**கருமை**[5] *ka..:mai,* பெ.(n.) வெள்ளாடு; goat. *"கருமை யமுதெணெயிரண்டிரண்டளைஈ" (தைல.தைலவ. 19.).*

*[கரு = பெரிய, சிறந்த. மை = கருநிறமுள்ள ஆடு. கரு + மை – கருமை (சிறந்த ஆடு), வெள்ளாடு ஆடுகளுள் சிறந்ததென, நாட்டு மருத்துவ நூலார் குறிப்பிடுவர். வெள்ளாட்டின் புலால் நோயாளர்க்குப் பக்க விளைவுகள் உண்டாக்குவதில்லை என்பது, அக்காலத்தோர் நம்பிக்கை.]*

**கருமை**[6] *karumai,* பெ.(n.) 1. ***கருமம்***[2] பார்க்க; see *karumam.* 2. வெம்மை; heat.

*[உல் → குல் → குரு → கரு → கருமை. உல் = வெப்பம்.]*

**கருமை**[7] *karumai,* பெ.(n.) நஞ்சு; poison (சா.அக.).

*[கரு +: தீய. கரு → கருமை.]*

**கருமை**[8] *karumai,* பெ.(n.) அறியாமை; ignorance.

*[கரு = இருள். கருநிறம். கரு + மை = கருமை (இருள் போன்ற தெளிவில்லாத அறியாமை. 'மை' பண்புப் பெயரீறு.]*

**கருமொச்சை** *karumoccai,* பெ.(n.) கருப்பு மொச்சை; black hyaclinth bean.

*[கரு + முத்தை – மொத்தை → மொச்சை. கரு = கருப்பு.]*

**கருமொட்டு** *karumoṭṭu,* பெ.(n.) இளமொட்டு; young flower bud.

ம. கரிமொட்டு

*[கரு + மொட்டு. கரு = இளமை ]*

**கருமொழிசாணான்வயல்** *karumoḻicāṇānvayal,* பெ.(n.) இராமநாதபுரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Ramanathapuram dt.

*[கருமொழி + சாணான் + வயல். கருமொழி = ஊர்ப்பெயர்.]*

**கருமோலி** *karumōli,* பெ.(n.) காத்தொட்டி; thorny cape, ***ஆதொண்டை*** பார்க்க (சா.அக.).

*[கரு + (மூலி) மோலி.]*

**கருவக்கணை** *karuvakkaṇai,* பெ.(n.) வக்கணை மரம்; yellow wood ebony (சா.அக.).

*[கரு + வக்கணை.]*

**கருவங்கச்செந்தூரம்** *karuvaṅga-c-cendūram,* பெ.(n.) காரீயத்தைக் கொண்டு செய்யப்படும் செந்தூரம்; இதனால் முதிர் நரை மாறும்; calcined red oxide prepared from black lead which is said to turn long standing grey hairs into black (சா.அக.).

**கருவங்கம்** *karuvaṅgam,* பெ.(n.) காரீயம்; black lead (சா.அக.).

*[கரு + வங்கம்.]*

**கருவங்கு** *karuvaṅgu,* பெ.(n.) கருப்பாக முகத்தில் படரும் வங்கு; black spots on the face foreboding some evil (சா.அக.).

*[கரு + (மங்கு) வங்கு.]*

**கருவச்சி** *karuvacci,* பெ.(n.) ***கருவத்தி;*** see *karuvatti.*

*[கருவத்தி → கருவச்சி.]*

**கருவசம்பு** *karuvašambu,* பெ.(n.) கருநிற வசம்பு; black sweet flag (சா.அக.).

*[கரு + வசம்பு.]*

**கருவஞ்சி** *karuvañji,* பெ.(n.) எழுத்தாணிப் பச்சிலை; style-plant.

*[கரு + வஞ்சி.]*

**கருவடகம்** *karuvaḍagam,* பெ.(n.) ***கறிவடகம்*** (இந்துபாக. 260.) பார்க்க; see *kaṟi-vaḍagam.*

*[கறி → கரி → கரு + வடகம்.]*

**கருவடம்**[1] *karu-vaḍam,* பெ.(n.) மலையும் ஆறும் சூழ்ந்த ஊர் (சூடா.); town or village surrounded by mountains and rivers.

**Pkt., Pali.**, karvaḍa.

*[கரு + இடம் – கருவிடம் → கருவடம் = மேடான இடம், மலையும் குன்றும் சூழ்ந்த பகுதி. மலைகள் இருத்தலால், ஆறும் ஓடைகளும் பாய்தல் இயல்பு. ஒ.நோ. கருநாடு = மேடான நாடு. கருகாலன் (கரிகாலன்) = நெடிய கால்களையுடையவன். கரு → கரி = கருத்தது, பெரியது (யானை).)]*

**கருவடம்**[2] *karuvaḍam,* பெ.(n.) பூ நீர்; efflorescence found in the sanid of fuller's earth (சா.அக.).

*[கரு + வடம்.]*

**கருவடம்**[3] *karuvaḍam,* பெ.(n.) ***கறிவடகம்*** பார்க்க; see *kaṟivaḍagam.*

*[கறிவடகம் → கருவடம் (கொ.வ.).]*

**கருவடிநாசம்** *karuvaḍināšam,* பெ.(n.) பாழ் வித்தைக்குதவும் கருநாய்; black dog useful in sorcery and witchcraft (சா.அக.).

*[கரு + அடி + நாசம்.]*

**கருவண்டிறால்** *karu-vaṇḍiṟāl,* பெ.(n.) கறுப்பு நண்டுவகை; black prawn.

*[கரு + வண்டு + இறால். வண்டு = வளைவு.]*

**கருவண்டு** *karu-vaṇḍu,* பெ.(n.) கறுப்புவண்டு (வின்.); black beetle.

*[கரு + வண்டு.]*

**கருவத்தி** *karuvathi,* பெ.(n.) கருவுற்றவள்; pregnant woman.

*[கரு +அத்தி – கருவத்தி. 'அத்தி' பெ.பா.ஈறு.]*

மறுவ. கருவச்சி

**கருவதை** *karuvadai,* பெ.(n.) கருவழித்தல்; abortion.

*[கரு + வதை.]*

**கருவப்பை** *karuva-p-pai,* பெ.(n.) விலைமதிப்புடைய பொருள்கள் வைக்கும் பை (சம்.அக.); bag for keeping valuables.

*[கரு + அம் – கருவம் + பை – கருவப்பை. 'அம்' சாரியை. கரு = பெருமை, உயர்வு.]*

**கருவம்**[1] *karuvam,* பெ.(n.) செருக்கு, ஆணவம்; haughtiness, arrogance, pride.

**க.** கர்வ; **தெ.** கர்வமு;

**த.** கருவம் >skt. garva.

*[கரு + அம் – கருவம். 'அம்' சொல்லாக்கஈறு. கரு = உயர்வு, பெருமை, செருக்கு.]*

**கருவம்**[2] *karuvam,* பெ.(n.) கருப்பம் (வின்.); foetus, embryo.

**மறுவ.** கருப்பம், கருவு (கர்ப்பம்).

*[குல் = கூடுதல் கருத்துவேர். குல் → கல் → கரு → கருவம். கரு + அம். 'அம்' பெயரீறு.]*

**கருவம்பம்** *karuvambam,* பெ.(n.) திருகுக்கள்ளி; twisted spurge (சா.அக.).

*[கரு + (அம்பு+அம்) அம்பம்.]*

**கருவமரம்** *karuvamaram,* பெ.(n.) ***கருவேல்*** பார்க்க; see *karu-vēl.*

*[கருவேல் மரம் → கருவமரம்.]*

**கருவயிரக்கல்** *karuvayira-k-kal,* பெ.(n.) உறைகல்; touchstone.

**தெ.** கல்லச்சு

*[கரு + வயிரம் + கல்.]*

**கருவரங்கம்** *karuvarangam,* பெ.(n.) 1. கருப்பை; womb. 2. உண்ணாழிகை; sanctuary.

*[கரு + அரங்கம்.]*

**கருவரி**[1] *karuvari,* பெ.(n.) கண்ணிலுள்ள கரியவரைவு (ரேகை); dark lines in the eye, dist. fr. cevvari. *"செவ்வரி கருவரிபரந்த. ... மையுண்டவிழியும்" (பு.வெ. 11. ஆண்பாற். 3, உரை.).*

*[கரு + வரி. கரு = கரிய.]*

**கருவரி**[2] *karu-vari,* பெ.(n.) இருள் (பிங்.); darkness.

*[கரு + வரி. கரு = கரிய. வரை → வரி (எல்லை.).]*

**கருவல்**[1] *karuval,* பெ.(n.) குட்டையாள் (கொ.வ.); short person, person of stunted growth.

*[குறு → குறுவல் → குருவல் → கருவல் (கொ.வ.).]*

**கருவலடி-த்தல்** *karuvaladi-* 4 செ.கு.வி.(v.i.) தீய்ந்த மணம் பரவுதல்; to spread as of burn smell.

*[கரு → கருவல். கரு + அல். அல் = பெ.ஆ.ஈறு.]*

**கருவல்**[2] *karuval,* பெ.(n.) 1. கரிய நிறம்; black colour. அந்த ஆள் கருவலாய் இருந்தான் (கொ.வ.). 2. தீய்ந்த சோறு முதலியன; charredfood. கருவலைக் கிளறாமல் உணவைப் பங்கிடு (உ.வ.). 3. தீய்தல் வாடை; the smell of burn things. *"கருவலடிப்பதற்குள் உணவை இறக்கிவிடு."*

*[கரு + அல் – கருவல். 'அல்' பண்புப்பெயரீறு.]*

**கருவலி** *karu-vali,* பெ.(n.) மிகுந்த வலிமை; great strength. *"கருவலி . ..... காளையை" (சீவக. 2269.).*

*[கரு + வலி . கரு = பெருமை, மிகுதி.]*

**கருவவ்வால்** *karuvavvāl,* பெ.(n.) கருநிற வாவல்; black pomfret.

*[கரு + (வாவல்) வவ்வால்.]*

**கருவழலை** *karu-valalai,* பெ.(n.) வழலைப்பாம்பு வகை (சீவக.1276, உரை.); a highly venomous nocturnal serpent of the black variety.

**ம.** கரிவழல

*[கரு + வழலை. கரு = கரிய.]*

**கருவழி**[1]**-தல்** *karuvali-,* 2 செ.கு.வி. (v.i.) ***கருக்கலைதல்*** பார்க்க; see *karukkalai-.*

*[கரு + அழி.]*

**கருவழி**[2]**-த்தல்** *karuvali-,* செ.கு.வி.(v.t.) ***கருக் கலைத்தல்***[2] பார்க்க; see *karukkalai-.*

**ம.** கருவழிக்குக

*[கரு + அழி.]*

**கருவழிப்பு** *karuvalippu,* பெ.(n.) ***கருக்கலைப்பு*** பார்க்க; see *karu-k-kalaippu* (சா.அக.).

*[கரு + அழிப்பு.]*

**கருவழிவு** *karu-v-alivu,* பெ.(n.) கருச்சிதைவு; abortion.

*[கரு + அழிவு.]*

**கருவளைச்சுக்கான்** *karu-valai-c-cukkān,* பெ.(n.) கருஞ்சுக்கான்கல் (வின்.); black limestone.

*[கரு →கருவல் →கருவளை + சுக்கான் + கல்.]*

**கருவளையம்** *karuvaḷaiyam,* பெ.(n.) கண்ணைச் சுற்றி உண்டாகும் கருப்பு நிறவட்டம்; black ring around the eye. *"கண்ணைச் சுற்றி உண்டாகும் கருப்பு நிறத்தோற்றம், கவலை, நோய் போன்றவற்றால் தோன்றும்."*

*[கரு + வளையம்.]*

**கருவளையல்** *karuvaḷaiyal,* பெ.(n.) பூநீரைக் கொண்டு செய்யப்படும் கருப்பு வளையல்; black bangle made from fuller's earth.

*[கரு + வளையல். கருவளையல் மருந்திற்கும் மந்திர வித்தைக்கும் பயன்படுவதாகும் (சா.அக.).]*

**கருவறி[1]-தல்** *karu-v-aṟi-,* 2 செ.கு.வி.(v.i.) பகுத்தறியும் பருவமடைதல் (வின்.); to attain the age of discretion.

*[கரு + அறி. கரு = கருத்து.]*

**கருவறி[2]-தல்** *karuvaṟi-,* 2 செ.குன்றாவி.(v.t.) கருப்பத்தை அறிதல்; to confirm pregnancy.

*[கரு + அறி.]*

**கருவறிந்தோர்** *karuvaṟindōr,* பெ.(n.) கருவேலை செய்யும் மந்திர வித்தைக்காரர்; magicians skilled in black art (சா.அக.).

**கருவறிந்தோன்[1]** *karuvaṟindōṉ,* பெ.(n.) சிவன்; shiva.

*[கரு = அடிப்படை, மூலம். கரு + அறிந்தோன்.]*

**கருவறிந்தோன்[2]** *karuvaṟindōṉ,* பெ.(n.) மந்திர வித்தைக்காரன்; magician.

*[கரு + அறிந்தோன். கரு = மந்திர அடிப்படை, மூலம்.]*

**கருவறு-த்தல்** *karu-v-aṟu-,* 4 செ.குன்றாவி.(v.t.) பூண்டோடு அனைத்தையும் அழித்தல்; to ruin, as an enemy, to exterminate, as a family. *"தான வரைக் கருவறுத்து" (கம்பரா. சூர்ப்ப. 111.).*

*[கரு + அறு + கரு = மூலம்.]*

**கருவறை[1]** *karu-v-aṟai,* பெ.(n.) ***கருப்பை*** பார்க்க; see *karu-p-pai. "ஆணவக் கருவறையிலறிவற்ற .... குழவியைப்போல்" (தாயு. சின்மயா. 6.).*

**ம.** கருவற

*[கரு + அறை – கரு = கருப்பம்.]*

**கருவறை[2]** *karu-v-aṟai,* பெ.(n.) கோவிலில் இறைவன் கொலுவீற்றிருக்கும் அறை; sanctum sanctorum of a temple.

**Skt.** garbhagrha

*[கரு + அறை. கரு = மூலம்.]*

**கருவன்** *karuvaṉ,* பெ.(n.) செருக்கன், ஆணவக் காரன்; arrogant man.

*[கரு + அன். கரு = பெருமை, உயர்வு, செருக்கு. 'அன்' ஆ.பா.ஈறு.]*

**கருவா** *karuvā,* பெ.(n.) 1. இலவங்கப்பட்டை மரம்; cinnamon tree. 2. மரவகை; cassia cinnamon.

*[கரு → கருவு → கரு= உயர்வு, பெருமை, சிறப்பு, நறுமணம்.]*

**கருவாக்குறிச்சி** *karuvā-k-kuṟicci* பெ.(n.) திருவாரூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Thiruvarur dt.

*[கருவன்+குறிச்சி – கருவன்குறிச்சி→ கருவங்குறிச்சி → கருவாங்குறிச்சி→கருவாக்குறிச்சி.]*

**கருவாகை** *karuvāgai,* பெ.(n.) வாகைமரவகை (பதார்த்த. 223.); fragrant sirissa.

**ம.** கருவாக

*[கரு + வாகை.]*



கருவாகை

**கருவாட்சி** *karuvāṭci,* பெ.(n.) விழுப்புரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Viluppuram dt.

*[கருவன் + வாழ்ச்சி– கருவன் வாழ்ச்சி → கருவாழ்ச்சி → கருவாட்சி. வாழ்ச்சி = வாழ்வு, வாழிடம்.]*

**கருவாட்டுவாலி** *karuvāṭṭu-vāli,* பெ.(n.) 1. எருத்து வாலன் குருவி; a bird having a long tail. 2. வலியான் குருவி; king-crow.

*[கருவாடு + வாலி – கருவாட்டுவாலி.]*

கருவாடு போன்ற வாலுடையது [சா.அக.].

**கருவாடு** *karu-vāḍu,* பெ.(n.) மீன் உணங்கல், காய்ந்த உப்புமீன் (பதார்த்த. 921.); salted and dried fish. *'கடல்வற்றி கருவாடு தின்னலாம் என்று குடல்வற்றிச் செத்ததாம் கொக்கு' (பழ.).*

ம. கரிவாடு; தெ. கரவாடு; Port. caravado

*[கரு + வாடு (கருக வாடியது, நன்கு உலர்ந்தது). கரு = கருமை. வாடுன் → வாடு.]*

**கருவாதியுப்பு** *karuvāthiyuppu,* பெ.(n.) 1. மாழை மாற்றுப்பு; an alchemical salt. 2. கருப்பத்திற்குக் காரணமான உப்பு; salt inducing conception (சா.அக.).

*[கரு + ஆதி + உப்பு.]*

**கருவாப்பட்டை** *karuvā-p-paṭṭai,* பெ.(n.) இலவங்கப்பட்டை (மூ.அ.); cinnamon, the dry bark of cinnamonum zeylanicum.

*[கரு → கருவு. கருவா + பட்டை – கருவாப்பட்டை.கரு = மணம்.]*

**கருவாப்பு** *karuvāppu,* பெ.(n.) பிறந்த குழந்தைகளுக்குக்காணும் கருஞ்செவ்வாப்பு என்னும் நோய்; a disease attacking chiefly new-born children by which their skin is rendered dark (சா.அக.).

*[கரு + ஆப்பு.]*

**கருவாப்பூ** *karuvāppū,* பெ.(n.) இலவங்கப்பூ; flower of the clove-tree.

*[கருவப் + பூ – கருவப்பூ → கருவாப்பூ.]*

**கருவாமணக்கு** *karu-v-āmaṇakku,* பெ.(n.) 1. கருப்பு ஆமணக்கு; black castor plant as opposed to செவ்வாமணக்கு, a variety of castor with red seeds. 2. பொட்டிலுப்பு ; nitre.

*[கரு + ஆமணக்கு.]*

**கருவாமம்** *karuvāmam,* பெ.(n.) சாராயம்; arrack (சா.அக.).

*[கரு + ஆமம். ஆமம் = சீர்மை செய்யப்படாதது. கரு = இழிந்த.]*

**கருவாமரம்** *karuvāmaram,* பெ.(n.) இலவங்கப் பட்டை மரம்; cinnamon - bark tree (சா.அக.).

*[கருவு→ கருவா + மரம்.]*

**கருவாமுப்பு** *karuvāmuppu,* பெ.(n.) வெடியுப்பு; nitre (சா.அக).

*[கரு → கரு + ஆம் + உப்பு.]*

**கருவாய்**[1] *karu-vāy,* பெ.(n.) கரு உருவாதற்கு ஏந்தான பெண்குறி; vulva.

*[கரு + வாய். வாய் = இடப் பொருளீறு ஒ.நோ. எருவாய்.]*

**கருவாய்**[2] *karu-vāy,* பெ.(n.) இலவங்கம் (நாமதீப்.); cloves.

*[கரு → கருவு →கருவா → கருவாய். கரு = நறுமணம்.]*

**கருவாய்க்கால்** *karuvāykkāl,* பெ.(n.) முதல் வாய்க்கால், தலை வாய்க்கால்; prime canal.

*கீழ்பாற்கெல்லை கருவாய்க்காலுக்கு மேற்கும், தென்பாற்கெல்லை பெருமான் வாய்க் காலோடைக்கும். (S.i.i. vol.5. Part2. insc. 723.).*

*[கரு + வாய்க்கால். கரு = பருமை, பெருமை, உயர்வு, தலைமை.]*

**கருவாய்ச்சி** *karuvāycci,* பெ.(n.) 1.கரிய முகமுடையவள்; a woman who has dark face. 2. கரிய நிறத்தினள் (கொ.வ.); woman with dark complexion.

*[கரு + வாழை.]*

*[கரு + வாய்ச்சி. கரு → கரிய; வாய் = முகம்; 'சி' பெண்பால் ஒருமையீறு. வாய் என்ற சொல், வாயைக் கொண்ட முகத்தையும் குறிக்கும்.]*

**கருவாய்ச் செய்–தல்** *karuvāy-c-cey,* 1செ.குன்றா.வி. (v.t.) மாழைகளை உருக்கிச் சாய்த்து வார்ப்பு செய்தல்; to mould of casting melted metals.

*[கருவாய் + செய்.]*

**கருவாய்த்தோட்டா** *karu-vāy-t-tōṭṭā,* பெ.(n.) கரிய வாயுடைய தோட்டா என்னும் மீன் வகை; a kind of fish with black mouth.

*[கரு + வாய் + தோட்டா.]-*

**கருவாயன்** *karuvāyan,* பெ.(n.) 1. கரிய முகமுடையவன்; a man who has black face. 2. கரிய நிறத்தினன்; dark complexed man. 3. தீய நாக்குள்ளவன்; evil tongued-person.

*[கரு + வாய் + அன். கரு = கரிய, தீய.]*

**கருவால்குறுவை** *karu-vāl-kuṟuvai,* பெ.(n.) நெல்வகை (விவசா. நான்மு. 2.); a kind of paddy.

*[கரு + வால் + குறுவை.]*

**கருவால்திருக்கை** *karuvāltirukkai,* பெ.(n.) ***கருவாற்றிருக்கை*** பார்க்க see *karuvāṟṟirukkai.*

*[கரு + வால் + திருக்கை.]*

**கருவாலன்செந்திருக்கை** *karuvālaṉsendirukkai,* பெ.(n.) திருக்கை மீன் வகைகளுள் ஒன்று; a kind of tirukkai fish.

*[கருவாலன் + செந்திருக்கை.]*

**கருவாலி**[1] *karuvāli,* பெ.(n.) 1. கருக்குவா; Ceylon tea. 2. கவுதாரி; partridge (சா.அக.).

**கருவாலி**[2] *karuvāli,* பெ.(n.) 1. மரவகை; Ceylon tea. 2. கறுவாலி; partridge.

*[கரு + வாலி.]*

**கருவாழை**[1] *karuvāḻai,* பெ.(n.) அளவில் சிறியன்வும், கரும்பச்சை நிறமுடையனவுமாகிய பழங்கள், ஒரு குலையில் 200 முதல் 400 வரை விளையக் கூடிய வாழையினம் (G.Sm.D.iv.216.); a kind of plantain tree bearing small fruits of dark green colour, from 200 to 400 to a bunch.

**மறுவ.** காளி வாழை

*[கரு + வாழை.]*

**கருவாழை**[2] *karuvāḻai,* பெ.(n.) 1. கருப்புப் பழங்கள் காய்க்கும் வாழைமரம்; plantain tree yielding dark coloured fruits. 2. காட்டு வாழை; wild plantain. 3. பெருமூலிகை 23–ல் ஒன்றானதும், சித்தருண்ணும் ஒருவகைக் கற்ப மூலியானதும் கருஞ்சிவப்பாய் இருப்பதுமான கானல் வாழைப்பழம்; dark red plantain used by siddars, one of the classified drug of 23 kinds of drugs restoring lost youth or rejuvenation (சா.அக.).

**கருவாளி**[1] *karu-v-āḷi,* பெ.(n.) அறிவாளி, கூர்த்த மதியினன் (யாழ்.அக.); sagacious person, genius.

*[குரு→ கரு + ஆள் + இ – கருவாளி. குருத்தல் = தோன்றுதல், விளங்குதல், ஒளிர்தல், அறிவு சிறத்தல். 'இ' உடைமை குறித்த ஈறு.]*

**கருவாளி**[2] *karuvāḷi,* பெ.(n.) கடும் உழைப்பாளி; hard worker. அவன் பெரிய கருவாளியா? (நெல்லை.).

*[கருத்தல் = செய்தல். கரு + ஆள் + இ – கருவாளி. 'இ' உடைமை குறித்த ஈறு. நெல்லை மீனவரிடை இச்சொல் செய்தற்பொருளில் வழக்கூன்றியுள்ளதால், இதன் தொன்மையை அறியலாம்.]*

**கருவாற்றிருக்கை** *karu-vāṟṟirukkai,* பெ.(n.) சாட்டை போன்று தட்டையும் வால் நீட்சியுமுடைய கடல்மீன் வகை; broad flat sea-fish, greyish olive, attaining upwards of 6 ft. in width, with whip-like tail three or four times as long as the body.

*[கரு + வால் + திருக்கை – கருவாற்றிருக்கை. கரு = பெரிய, நீண்ட.]*



கருவாற்றிருக்கை

**கருவானம்** *karuvāṉam,* பெ.(n.) கார்மேகம் மூடிய வானம்; murky sky.

**ம.** கரிமானம்

*[கரு + வானம்.]*

**கருவி**[1] *karuvi,* பெ.(n.) 1. தொழிற்றுணைக்கலன், துணைக்கருவி; instrument, tool, implement. *"கருவிகொண்டு ... பொருள் கையுறின்" (சிலப். 16, 186.).* 2. வரும்படி, வழி, செய்பொருள், மூலப்பொருள்; means, materials, as for a sacrifice. *"அறிவற்றங் காக்குங் கருவி" (குறள். 421.).* 3. கவிப்பு, மெய்புதையரணம், மெய்யுறை (திவா.); armour, coat of mail. *"இளைஞருங் கருவி வீசினார்" (சீவக. மண. 113.).* 4. கேடகம்; shield. *"கருவித்தேன்" (சீவக. 1606.).* 5. குதிரைக்கலணை (திவா.); saddle. 6. குதிரைச் சாட்டை (சூடா.); horse-whip.

கருவி வகை:

கருவி-பருப்பொருள், ஆய்தப்பொது (instrument) : ஆயுதம் ஒரு தொழிற்குரிய கருவி (Tool); படை-போர்க்கருவி (weapon) கரணம் அறிவுக் கருவி அல்லது உறுப்புக்கருவி; காரணம் காரியத்தை விளைவிப்பது (cause); ஏது-வாதக் காரணம் (reason); முதல் - வணிக முதல் போன்ற முதனிலை. அடி-மரத்தின் அடிபோன்ற முதனில; மூலம் - மரத்தின் வேர் போன்ற முதனிலை; வித்த-மரம் முளைத்த விதை போன்ற முதனிலை; தலைக் கீடு - போலி ஏது (pretext) (சொல்.கட். 43.).

**ம.** கரி, கரிவி, கருவி, கரு.

*[கருத்தல் = செய்தல், வினையாற்றுதல். கரு → கருவி (வினையாற்ற உதவுவது.).]*

**கருவி**[2] *karuvi,* பெ.(n.) 1. தொகுதி (தொல். சொல். 354. உரை.); கூட்டம், ஒருங்கிணைப்பு, மந்தை; assembly, collection, flock, group. *"கருவிவானம்" (பெரும்பாண்.24.).* 2. தொடர்பு (திவா.); connection, concatenation. 3. ஆடை (சூடா.); garment. 4. ஓவியம்; painting. *"கருவியுயிர் பெற வெழுதி" (ஈடு.).* 5. துணைக்காரணம்; secondary or instrumental cause.

*[குல் → குரு → கரு → கருவி. குல் = கூடுதல், ஒன்று சேர்தல்.]*

**கருவி**[3] *karuvi,* பெ.(n.) 1. யாழ் (திவா.); lute. *"கருவியாக்கள்" (புறப்.வெ.கரந்தை.10.).* 2. இசையுண்டாதற்கு உரிய துணைக்கருவிகள்; one of the musical instruments, of which there are four kinds, viz., தோற்கருவி, துளைக்கருவி, நரம்புக்கருவி, கஞ்சக்கருவி. to which கண்டக்கருவி (the larynx) is sometimes added as the fifth. 3. கைத்தாளம்; cymbal. *"கருவித்தேன்." (சீவக.கனக.50.).*

*[குல் → கரு → கரு → கருவி. தொகுதியான இசைக் கருவிகளைக் குறித்த சொல், தனித்த இசைக்கருவியையும் குறித்தது.]*

**கருவி**[4] *karuvi,* பெ.(n.) அணிகலன்; jewel.

*[கருவி = தொகுதி, அடைவு, அடைவாகத் தொகுத்து அணியப்படும் அணிகலன்களின் வரிசை.]*

**கருவி**[5] *karuvi,* பெ.(n.) முகில் (அக.நி.); cloud. *"கருவி வானம்"*

*[கருவீ – கருவீ.]*

**கருவி**[6] *karuvi,* பெ.(n.) மனமும் ஐம்புலன்களும் ஆகிய அகப்புறக்கருவிகள்; organs or faculties either of the mind or the body (சா.அக.).

*[கரு → கருவி.]*

**கருவிக்கருத்தன்** *karuvi-k-karuttaṉ,* பெ.(n.) கருவி வினைமுதலாக. வருவது (இறை. 18, உரை.); instrument, as agent, as - 'வாள் எறியும்'.

*[கருவி + கருத்தன். கருவி = மூன்றாம் வேற்றுமை உருபு ஏற்றற்குரிய சொல். கருத்தன் = எழுவாய்.]*

**கருவிக்காரகம்** *karuvi-k-kāragam,* பெ.(n.) கருவிப் பொருளைக் காட்டும் உருபுடைப்பெயர்; noun which denotes instrumental significrnce.

*[கருவி + காரகம்.]*

**கருவிக்குயிலுவர்** *karuvi-k-kuyiluvar,* பெ.(n.) தோற்கருவி வாசிப்பவர்; drummer. *"கண்ணுளாளர் கருவிக் குயிலுவர்" (சிலப். 5, 184.).*

*[கருவி + குயிலுவர் – கருவிக்குயிலுவர். குயிலுதல் = இசைத்தல்.]*

**கருவிகரணங்கள்** *karuvi-karaṇaṅgaḷ,* பெ.(n.) 1.திறமைகள்; faculties. 2. ஐம்பொறிகளும் மனமும் (வின்.); senses and intellectual powers.

*[கருவி + கரணம் + கள். 'கள்' பன்மையீறு. கருவி = உள்ளாற்றல், மனம். கரணம் = பொறி.]*

**கருவிகலத்தொகுதி** *karuvikalattogudi,* பெ.(n.) துணைக்கலத்தொகுதி; outfit.

*[கருவி + கலம் + தொகுதி.]*

**கருவிகழல்(லு)–தல்** *karuvi-kaḻal-,* 13 செ.கு.வி. (v.i.) வலியழிதல் (வின்.); to be greatly exhausted, to lose one's strength.

*[கருவி + கழல் (கழலுதல்) கருவி = உள்ளாற்றல், வலிமை.]*

**கருவிகாண்டம்** *karuvi-kāṇḍam,* பெ.(n.) ***கருவி நூல்*** பார்க்க(வின்.); see *karuvi-nūl.*

*[கருவி + காண்டம். கண்டு → காண்டம் (நூல்).]*

**கருவிச்சூது**[1] *karuvi-c-cūdu,* பெ.(n.) சதுரங்கம் முதலியவற்றால் ஆடுஞ்சூது; gambling. *"கருவிச் சூதாடிவென்றும்" (திருவிளை. நகாப். 48.).*

**கருவிச்சூது**[2] *karuvi-c-cūdu,* பெ.(n.) சூதாட்டம்; gambling. *"கண்ணுளாளர் கருவிக் குயிலுவர்" (சிலப். இந்திர. 184.)* (த.மொ.அ.).

*[கருவி + சூது.]*

**கருவிஞ்சி** *karuviñji,* பெ.(n.) 1. கருநொச்சி; a three-leaved chaste tree. 2. மலைவாழை; hill plantain (சா.அக.).

*[கருவிச்சி → கருவிஞ்சி.]*

**கருவிடு-தல்** *karuviḍu-,* 20 செ.கு.வி. (v.i.) கருவுண்டாதல்; to conceive, to be pregnant. *"கருவிடும் வாசல்" (திருமந். 584.).*

*[கரு + விடு.]*

**கருவிடும்வாசல்** *karu-viḍum-vāsal,* பெ.(n.) ஆண்குறி; penis. *"கருவிடும் வாச லிருவிரற் கீழே" (திருமந். 584.).*

*[கரு + விடும் + வாசல்.]*

**கருவிண்டு** *karuviṇḍu,* பெ.(n.) கருப்பு இண்டஞ்செடி; a black variety of indu plant (சா.அக.).

*[கரு + இண்டு. கரு = கருமை.]*

**கருவிநாசம்** *karuvi-nāśam,* பெ.(n) ஐம்புலனறுத்தல்; mortification of the five senses (சா.அக.).

*[கருவி + நாசம்.]*

**கருவிநீர்** *karuvi-nīr,* பெ.(n.) 1. மழைநீர்; rainwater. 2. உடல் நீர்; water from the body (சா.அக.).

*[கருவி + நீர். கரு = கருமை = கருமையான மேகம்.]*

**கருவிநூல்**[1] *karuvi-nūl,* பெ.(n.) கல்வியறிவினை வளர்ப்பதற்கும் கற்கும் போது ஏற்படும் ஐயங்களைத் தீர்ப்பதற்கும் பயன்படும் நூல்; book of reference.

*[கருவி + நூல். கருவி = உள்ளாற்றல், அறிவு.]*

**கருவிநூல்**[2] *karuvi-nūl,* பெ.(n.) 1. தொடக்க நூல் (வின்.); primer, elementary book. 2. துணை நூல்; reference book.

*[கருவி + நூல். கரு = மூலம், அடிப்படை.]*

**கருவிநூல்**[3] *karuvi-nūl,* பெ.(n.) உடற்கருவிகளைப் பற்றிக் கூறும் கட்டளை; a work on bodily organs (சா.அக.).

*[கருவி + நூல்.]*

**கருவிநூற்பட்டி** *karuvi-nūṟpaṭṭi,* பெ.(n.) குறிப்பிட்ட ஆய்விற்குத் துணை நின்ற கருவி நூல்கள்; bibilography.

மறுவ. துணைநூற்பட்டி, நோக்கு நூற்பட்டி, பார்வை நூற்பட்டி.

*[கருவிநூல் + பட்டி.]*

**கருவிப்புட்டில்** *karuvi-p-puṭṭil,* பெ.(n.) படைக் கலவுறை (பிங்.); scabbard, sheath. *"கருவிப் புட்டிலின் கண்டமும்" (சூளா. காசி. 230.).*

*[கருவி + புட்டில்.]*

**கருவிப்பெயர்** *karuvi-p-peyar,* பெ.(n.) கருவிகளைக் குறிக்கும் பெயர்ச்சொல்; name of instrument, tool etc.

*[கருவி + பெயர்.]*

**கருவிப்பை** *karuvi-p-pai,* பெ.(n.) முடியொப்பனை யாளனின் அடைப்பை (வின்.); barber's bag.

*[கருவி + பை.]*

**கருவிப்பொருள்** *karuvi-p-poruḷ,* பெ.(n.) கருவியைக் குறிக்கும் வேற்றுமைப் பொருள்; instrumental case.

*[கருவி + பொருள்.]*

கருவிப்பொருள் அகக்கருவி, புறக்கருவி, ஒற்றுமைக்கருவி என மூன்றாய் வரும் [சிவ. நன். 297.].

'கருவி' வினை முதற்றொழிற் பயனைச் செயப்படு பொருட்கணுய்ப்பது [சேனா. தொல். சொல். 73; நச். தொல். சொல். 74.].

அதுவும் [கருவியும்], இயற்றுதற்கருவியாகிய காரகக் கருவியும், அறிதற் கருவியாகிய ஞாபகக் கருவியுமென இருவகைப்படும் [நச்.தொல். சொல்.74]. வினைமுதற்றொழிற் பயனைச் செயப்படு பொருளிற் சேர்ப்பது. கருவி, காரணம், ஏது என்பன, ஒருபொருட் சொற்கள், கருவிப் பொருள், முதற் கருவியுந் துணைக் கருவியுமென இருவகைப்படும் [ஆறு.நன்.297.].

**கருவிபணம்** *karuvi-paṇam,* பெ.(n.) வரிவகை (S.I.I.viii.188); a tax.

*[கருவி + பணம்.]*

**கருவிமாக்கள்** *karuvi-mākkaḷ,* பெ.(n.) யாழ் மீட்டும் பாணர்; bards, minstrels. *"கருவி மாக்கள் கையுற வுரைத்தன்று" (பு.வெ.2, 10, கொளு.).*

*[கருவி + மாக்கள். கருவி = இசைக்கருவிகளின் தொகுதி.]*

**கருவிமொழி** *karuvi-mōḻi,* பெ.(n.) ஒரு மொழியை விளக்கிக் கூறப் பயன்படும் மொழி; metalanguage.

*[கருவி + மொழி.]*

**கருவியமைப்பு** *karuvi-yamaippu,* பெ.(n.) ஐம்புலன்களின் அமைப்பு; the organic structure of the five senses.

*[கருவி + அமைப்பு.]*

**கருவியல்** *karuviyal,* பெ.(n.) கருதோற்றம், வளர்ச்சி பற்றிய கல்வி; embryology.

*[கருவி + இயல்.]*

**கருவியாகுபெயர்** *karuvi-y-āgu-peyar,* பெ.(n.) கருவி, ஆற்றப்படும் செயலுக்கு (காரியம்) ஆகி வரும்பெயர் (நன். விருத். 290.); metonymy in which cause is put for effect, as திருவாசகம்.

*[கருவி + ஆகு + பெயர்.]*

திருவாசகம் என்ற சொல்லில் வாசகம் என்னும் முதற்கருவியின் பெயர் அதன் காரியமாகிய நூலிற்காயிற்று.

**கருவியிசை** *karuviisai,* பெ.(n.) குரலிசையினும் வேறான தோற்கருவி துளைக் கருவி, நரம்புக் கருவி, கஞ்சக்கருவி போன்ற இசைக்கருவிகளின் துணைகொண்டு எழுப்பும் இசை; music produced with the help of musical instruments, i.e. instrumental music. opp. to oral music.

*[கருவி + இசை.]*

**கருவியுப்பு** *karuvi-y-uppu,* பெ.(n.) கமுக்கவுப்பு; secret salt prepared for controlling the senses and thus enabling one to be absorbed in eternity (சா.அக.).

*[கருவி + உப்பு.]*

**கருவியைந்து** *karuviyaindu,* பெ.(n.) இசை உண்டாவதற்குரிய துணைக் கருவிகள் ஐந்து; the five musical instruments. *"புரவி பூண்ட தாரொலி கருவியைந்துந் தழங்கொலி" (திருவிளை. 35.).*

*[கருவி + ஐந்து.]*

தோற்கருவி, துளைக்கருவி, நரம்புக்கருவி, கஞ்சக்கருவி ஆகிய நால்வகைக் கருவிகளுடன் மிடற்றுக்கருவியையும் சேர்த்து கருவியைந்து எனக் கணக்கிடுவர் [த.மொ.அ.].

**கருவிரலூகம்** *karu-viral-ūgam,* பெ.(n.) பழங்காலக் கோட்டைகளில் அமைக்கப்பட்டதும் அணுகும் பகைவரைப் பற்றிக் கடிக்கும் கருவிரல் குரங்கு வடிவு கொண்டதுமாகிய மதிற்பொறி; a catapultic machine, of the shape of a monkey with black claws, mounted on the walls of a fort in ancient times and intended to seize and bite the approaching enemy. *"கருவிர லூகமுங் கல்லுமிழ் கவணும்" (சிலப். 15, 208.).*

*[கரு + விரல் + ஊகம். ஊகம் = குரங்கு.]*

**கருவிரி-தல்** *karu-viri-,* 4 செ.கு.வி. (v.i.) 1. தவசக் கதிர் பரிதல் (வின்.); to ear; to come into ear. 2. கருப்பை விரிதல்; dilatation of the womb (சா.அக.).

*[கரு + விரி.]*

**கருவிருகணம்** *karavirukaṇam,* பெ.(n.) காட்டெள்ளுச்செடி; wild gingelly plant (சா.அக.).

*[கரு + (இருள்) இரு + கணம். காணம் → கணம்.]*

**கருவிலங்கு** *karuvilaṅgu,* பெ.(n.) 1. கருத்த விலாங்கு மீன் (தஞ்.மீன.); black eel. 2. கரிய விலங்கு; any animal black in colour.

*[கரு + விலங்கு.]*

**கருவிலம்** *karuvilam,* பெ.(n.) நுண்ணுயிரிகளில் உண்டான சிறு கொப்புளம்; germinal vesicle (சா.அக.).

*[கரு + விலம். விலம் = பள்ளம், குழி.]*

**கருவிலி**[1] *karuvili,* பெ.(n.) பாம்புவகை (யாழ்ப்.); a nocturnal ground snake.

*[கருவல் → கருவலி → கருவிலி (கொ.வ.).]*

**கருவிலி**[2] *karuvili,* பெ.(n.) குழந்தையில்லாத பெண்; barren woman.

*[கரு + இலி.]*

**கருவிலி**[3] *karuvili,* பெ.(n.) தஞ்சைப்பகுதியில் அமைத்த ஓர் ஊர்; name of village in Thanjavur region.

*[கருவலி → கருவிலி.]*

**கருவிவேற்றுமை** *karuvivēṟṟumai,* பெ.(n.) தொழிலுக்குக் கருவியாக அமையும் வேற்றுமை; instrumental case.

*[கருவி + வேற்றுமை. 'ஆல், ஆன்' உருபுகள் இப்பொருளில் வரும்.]*

**கருவிழி**[1] *karu-viḻi,* பெ.(n.) கண்மணி; apple of the eye.

ம. கருமிழி

*[கரு + விழி. கரு = கரிய.]*

**கருவிழி**[2] *karuviḻi,* பெ.(n.) 1. கருத்த கண்; dark eye. 2. கருத்த கண் உள்ளவள், அழகி; a woman with black eyes, a beautiful woman.

ம. கரிமிழி

*[கரு + விழி.]*

**கருவிழிக்கெண்டை** *karu-viḻi-k-keṇḍai,* பெ.(n.) ***கருமணிக் கெண்டை*** பார்க்க; see *karu-maṇi-k-keṇḍai.*

*[கரு + விழி + கெண்டை.]*

**கருவிளங்கம்** *karuviḷaṅgam,* பெ.(n.) கருவேம்பு; balsam tree (சா.அக.).

*[கரு + விளங்கம்.]*

**கருவிளங்கனி**[1] *karu-viḷaṅ-kaṉi,* பெ.(n.) மூன்று நிரையசைச் சீரைக் குறிக்கும் வாய்பாடு (காரிகை. உறுப். 7, உரை.); formula denoting a foot of three nirai, yšai (செ.அக.).

*[கருவிளம் + கனி.]*

**கருவிளங்காய்**[1] *karu-viḷaṅ-kāy,* பெ.(n.) நிரை நிரை நேர் கொண்ட மூவசைச்சீரைக் குறிக்கும் வாய்பாடு (காரிகை, உறுப். 7, உரை.); formula denoting a foot of two nirai yasai followed by a nēr.

*[கருவிளம் + காய்.]*

**கருவிளந்தண்ணிழல்** *karuviḷan-taṇ-ṇiḻal,* பெ.(n.) நிரை நிரை நேர் நிரை என்னும் நான்கசைச் சீரைக் குறிக்கும் வாய்பாடு (காரிகை, உறுப். 5, உரை.); mnemonic for the metrical foot of *nirai-nirai-ner-nirai.*

*[கரு + விளம் + தண் + நிழல் – கருவிளந்தண்ணிழல்.]*

**கருவிளந்தண்பூ** *karuviḷan-daṇ-pū,* பெ.(n.) நிரை நிரை நேர் நேர் என்னும் நாலசைச் சீரைக் குறிக்கும் வாய்பாடு, (காரிகை, உறுப். 5, உரை.); mnemonic for the metrical foot of *nirai-nirai-nēr-nēr.*

*[கரு+ விளம் + தண் + பூ = கருவிளந்தண்பூ.]*

**கருவிளநறுநிழல்** *karuviḷa-naṟu-niḻal,* பெ.(n.) நிரை நிரை நிரை நிரை என்னும் நாலசைச் சீரைக் குறிக்கும் வாய்பாடு (காரிகை, உறுப். 5, உரை.); mnemonic for the metrical foot of *nirai-nirai-nirai-nirai.*

*[கரு + விளம் + நறு + நிழல் = கருவிளநறுநிழல்.]*

**கருவிளநறும்பூ** *karuviḷa-naṟum-bū,* பெ.(n.) நிரை நிரை நிரை நேர் என்னும் நாலசைச் சீரைக் குறிக்கும் வாய்பாடு (காரிகை, உறுப். 5, உரை.); mnemonic for the metrical foot of *nirai-nirai-nirai-nēr.*

*[கரு + விளம் + நறும் + பூ = கருவிளநறும்பூ.]*

**கருவிளநீர்** *karu-viḷa-nīr,* பெ.(n.) சொறி புண்களைப் போக்கக் கூடிய கருநிறமுள்ள இளநீர் (பதார்த்த. 68.); a young or tender coconut with dark water inside capable of curing sores and itches.

*[கரு + இளநீர்.]*

**கருவிளநெல்லி** *karuviḷa-nelli,* பெ.(n.) கீழ்க்காய் நெல்லி; feather foil (சா.அக.).

*[கருவிளம் + நெல்லி.]*

**கருவிளம்**[1] *karu-viḷam,* பெ.(n.) இரண்டு நிரையசைச்சீரைக் குறிக்கும் வாய்பாடு; formula denoting a foot of two nirai. *"தேமா புளிமா கருவிளங்கூவிளஞ் சீரகவற்கு" (காரிகை. உறுப். 4.) (த.மெ ா.அ.).*

*[கரு + விளம்.]*

**கருவிளம்**[2] *karu-viḷam,* பெ.(n.) 1. காக்கட்டான், (மலை.); mussel-shell creeper. 2. வில்வம் (மலை.); bael.

*[கரு + விளம்.]*

**கருவிளா** *karu-viḷā,* பெ.(n.) 1. விளா (மலை.); wood-apple. 2. வில்வம் (மூ.அ.); bael.

*[கரு + (விளம்) விளா.]*

**கருவிளை** *karu-viḷai,* பெ.(n.) காக்கணம்; mussel-shell creeper. *"கண்ணெனக் கருவிளை மலர" (ஐங்குறு. 464.). "மணிகண்டன்ன மாநிறக் கருவிளை" (நற். 221.).*

*[கரு + விளை.]*

**கருவின்மலர்** *karuviṉmalar,* பெ.(n.) மயிலிறகு; the feather of a peacock (சா.அக.).

*[கரு + இன் + மலர்.]*

**கருவின்வெளி** *karuviṉveḷi,* பெ.(n.) முடித்தசை; the flesh on the top of the head (சா.அக.).

*[கரு + இன் + வெளி.]*

**கருவினை** *karu-viṉai,* பெ.(n.) பாழ்வினை, தீவினை (பாவம்); sin. *"ஐம்பதங்க ணீராக் கருவினை கழுவப்பட்டு" (சீவக. 931.).*

**மறுவ.** கரிசு, பாழ்வினை.

*[கரு + வினை.]*

**கருவீ** *karuvī* பெ.(n.) காக்கை; crow.

*[கரு → கருவி → கருவீ.]*

**கருவீடு** *karuvīḍu,* பெ.(n.) நஞ்சுக் கொடி; navel or umbilical cord, placenta (சா.அக.).

*[கரு + வீடு.]*

**கருவீரல்** *karu-vīral,* பெ.(n.) கல்லீரல்; liver.

*[கரு + ஈரல்.]*

**கருவீழ்-தல்** *karuvīḻ,* 2 செ.கு.வி.(v.i.) ***கருக்கலை-தல்*** பார்க்க; see *karukkalail.*

*[கரு + வீழ்.]*

**கருவீழ்-த்தல்** *karuvīḻ,* 2 செ.குன்றாவி(v.t.) ***கருக்கலை-த்தல்*** பார்க்க; see *karukkalai*[2].

*[கரு + வீழ்.]*

**கருவீழி** *karuvīḻi,* பெ.(n.) கருப்பு விழுதியாகிய பெருமூலிகை இருபத்துமூன்றனுள் ஒன்று; dark vizhudhi - one of the 23 rare drugs of high potency (சா.அக.).

*[கரு + வீழி.]*

**கருவு** *karuvu,* பெ.(n.) கருப்பம், சூல் கொள்ளுதல், வயிறு வாய்த்தல்; pregnancy.

**மறுவ.** கருப்பம், கருவம், கருபு, கருபம்.

கரு (உயிர்க்கரு) + உ = கருவு. கருப்பம், சூல்.

**கருவுகலம்** *karuvu-kalam,* பெ.(n.) பொருளறை; கருவூலவறை; treasury, treasure-house. *"கருவு கலத்திலே ஒரு நெஞ்சைத் தந்தாய்" (ஈடு. 2, 7, 7.).*

*[கரு → கருவு + கலம். கரு = மூலம், தலைமை, முதன்மை.]*

**கருவுண்டா-தல்** *karuvuṇḍā-,* 5 செ.குன்றாவி(v.t.) கருப்பம் ஏற்படுதல்; to conceive.

*[கரு + உண்டாகு.]*

**கருவுணாயகன் பிள்ளையடியார்** *karuvuṇāyagaṉ piḷḷaiyaḍiyār,* பெ.(n.) கிபி.1116 ஆம் ஆண்டு கும்பகோணம் வட்டம் திருச்சிறை கோயிலுக்கு நிலம் விற்றுக் கொடுத்தவர்; One who helped in the sale of land of the temple at Thiruchirai in Kumba konam taluk in 1116AD. *"வீதிவிடங்கன் கருவுணாயகன் பிள்ளையடியாரும்" (தெ.இ.கல். தொ. 26; கல் 661).*

*[கரு + ஊர் + நாயகன் + பிள்ளை + ஆடியார் - கருவுணாயகன் பிள்ளையடியார். கருவுள் – கருவறையினுள் உள்ள நாயகன் – தலைவன் கடவுள்.]*

**கருவுப்பு**[1] *karu-v-uppu,* பெ.(n.) 1. எள்ளுப்பு (சங்.அக.); salt extracted out of sesamum seed. 2. கல்லுப்பு; crystallised sea-salt.

*[கரு + உப்பு. கரு = சிறப்பு, உயர்வு.]*

**கருவுப்பு**[2] *karuvuppu,* பெ.(n.) கருப்புப்பு; impure common salt (சா.அ க.).

*[கரு + உப்பு. கரு = கரிய.]*

**கருவுப்பு**[3] *karuvuppu,* பெ.(n.) பிண்டவுப்பு; salt extracted from the foetus (சா.அக.).

*[கரு + உப்பு.]*

**கருவுமரி** *karuvumari,* பெ.(n.) கருப்பு உமரிப்பூடு; greater indian salt wort (சா.அக.).

*[கரு + உமரி.]*

**கருவுயிர்–த்தல்** *karu-v-uyir-,* 4 செ.கு.வி.(v.i.) ஈனுதல்; to bring forth, bear. *"கருவுயிர்ப்பன கங்குடிப்பன" (தணிகைப். திருநாட்டு. 145.).*

*[கரு + உயிர்-.]*

**கருவுள்ளி** *karuvuḷḷi,* பெ.(n.) பேயுள்ளி; a black thorny shrub (சா.அக.).

*[கரு + உள்ளி.]*

**கருவுளமைப்பு** *karuvuḷamaippu,* பெ.(n.) உயிர் வாழ்வுக்கும் உடலுக்கும் ஏதுவான ஆறுவகை ஒழுங்குகள் (நியமங்கள்); the six orders of things essential to sentient beings after assuming the corporeal existence.

*[கரு + உள் + அமைப்பு. பேறு, இழவு, இன்பம், பிணி, மூப்பு, இறப்பு என்பன ஆறுவகை ஒழுங்குகளாகும். இவை பல பிறப்புகளால் ஏற்படும் விளைவு என்பர் (சா.அக.).]*

**கருவுறு–தல்** *kavu-v-uṟu-,* 21 செ.கு.வி. (v.i.) 1. சூல் கொள்ளுதல்; to be gravid, to conceive. 2. மலர்தல்; to bloom. *"காந்தள் கருவுற" (திருக்கோ. 279, கொளு.).*

*[கரு + உறு = கருவுறு.]*

**கருவூமத்தை** *karu-v-ūmattai,* பெ.(n.) ஊமத்தை வகை (பதார்த்த. 271.); purple stramony.

*[கரு + ஊமத்தை.]*



கருவூமத்தை

**கருவூர்** *karu-v-ūr,* பெ.(n.) 1. சேரர் தலைநகரங் களுள் ஒன்று; Karur one of the capitals of the Chera kingdom. *"நெடுந்தேர்க் கோதை ... கருவூர் முன்றுறை" (அகநா.93.).* 2. கருவூர்த் தேவர் பார்க்க; see karuvūr-t-tēvar. *"கருவூரறைந்த சொன்மாலை" (திருவிசை. கருவூர்த். 6, 10.).*

**மறுவ.** கரூர்

**க.** கரவூர் (பெருமை வாய்ந்த நகரம்)

*[கரு + ஊர். கரு = பெருமை. கருவூர் = பேரூர், பெருநகரம். இனி, கரு = நடு. கருவூர் = நடுஊர் என்றுமாம்.]*

**கருவூர்**[2] *karu-v-ūr,* பெ.(n.) கருப்பை; the womb. *"கருவூரிலே பிறந்து கருவூரிலே வளர்ந்து" (ஞானவெட்டி.) (சா.அக.).*

*[கரு + ஊர்.]*

**கருவூர்க்கந்தப்பிள்ளை சாத்தனார்** *karuvūr-k-kandappiḷḷai-cāttaṉār,* பெ.(n.) கடைக்கழகப்புலவர்; a Sangam poet (த.ம. 75.).

*[கருவூர் + கந்தப்பிள்ளை சாத்தனார்.]*

**கருவூர்த்தேவர்** *karuvūr-t-tēvar,* பெ.(n.) திருவிசைப்பாவாசிரியருள் ஒருவர் (திருவிசை. கருவூர்த்தேவர்.); a Saiva saint, one of the authors of Thiru-v-isai-p-pa.

*[கருவூர் + தேவர்.]*

**கருவூரார் நொண்டி மாலை** *karuvūrar-noṇḍi-mālai,* பெ.(n.) 15-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த

கருவூர்ச் சித்தரால் இயற்றப்பட்ட சிற்றிலக்கிய நூல்; a poetic composition written by Karuvur-c-cittar of 15th century.

*[கருவூரர் + நொண்டி + மாலை.]*

**கருவூரன்** *karu-v-ūraṉ,* பெ.(n.) ***கருவூர்த்தேவர்*** (திருவிசை. கருவூர்த். 7, 10.) பார்க்க; see *karu-v-ūr-t-tēvar.*

*[கருவூர் + அன். 'அன்' ஆ.பா.ஈறு.]*

**கருவூரானிலை** *karuvūr-aṉilai,* பெ.(n.) கருவூரி லுள்ள சிவன் கோயில் (தேவா.); the Siva temple at Karur.

*[கருவூர் + ஆனிலை. ஆலை = சுற்றுமதில், ஆலை > ஆல் + நிலை – ஆனிலை = சுற்றுமதிலுடைய கோவில்.]*

**கருவூலம்** *karu-vūlam,* பெ.(n.) 1. பொருளறை; treasure, treasure-house. *"புந்தியதாகுமெய்க் கருவூலப் பொருளை" (பிரபோத. 27, 72.).* 2. அரசுக் கருவூலம்; government treasury.

ம. கரிவலம்

*[கருவுலம் → கருவூலம். கருவு = முதன்மை, தலைமை.]*

முன்பு விலையுயர்ந்த பொருள் சேமிப்பைக் குறிக்கும் சொல்லாக இருந்த கருவூலம் இன்று அரசுப் பணம் கொடுக்கல் வாங்கல் இடத்தைக் குறிப்பதாயிற்று.

**கருவூலவரி** *karuvūla-vari,* பெ.(n.) வரிவகை; (S.I.I. vii. 46.); a kind of tax.

*[கருவூலம் + வரி.]*

**கருவேங்கை** *karuvēṅgai,* பெ.(n.) வேங்கை மரம்; Indian kino (சா.அக.).

*[கரு + வேங்கை.]*

**கருவேசரிக்கொடி** *karuvēršari-k-kōḍi,* பெ.(n.) ***கழுதைப் பாலாட்டங்கொடி*** பார்க்க; see *kaḻudai pālāṭṭaṅgoḍi.*

*[கரு + வேசரி + கொடி.]*

**Skt.** vēsara > **த.** வேசரி = கழுதை.

**கருவேட்டி** *karuvēṭṭi,* பெ.(n.) காவி வேட்டி; cloth of a dark red colour or the one dyed in red ochre used by the Indian ascetics (சா.அக.).

*[கரு + வேட்டி. கரு = அழுத்தமான நிறம்.]*

**கருவேப்பிலை** *karu-vēppilai,* பெ.(n.) 1. கறி வேம்பின் இலை (பதார்த்த. 523.); curry leaf. 2. ***கறி வேம்பு*** (கொ.வ.) பார்க்க; see *kaṟi-vēmbu.* 3. செடி வகை (L.); china box.

**ம.** கரிவேப்பில; **க., து.** கரிபேவு; **தெ.** கரிவேமு; படகரம்பெலெ

*[கறி + வேப்பிலை – கறிவேப்பிலை → கருவேப்பிலை.]*

**கருவேம்பு** *karu-vēmbu,* பெ.(n.) 1. கருவேப்பமர வகை; black neem tree. 2. கறிவேம்பு; curry-leaf tree.

**தெ.** கரிவேமு; **ம.** கரிவேப்பு; **க.** கரிபேவு; **து.** கரிபேவு.

*[கரு + வேம்பு.]*



கருவேம்பு

**கருவேல்** *karu-vēl,* பெ.(n.) வேலமரவகை (பதார்த்த. 462.); black babul *"கருவேலின் வேர்க்கு" (பதார்த்த. 505.).*

**ம.** கருவேலம்; **க.** கரிபெலே.

*[கரு + வேல்.]*

சிறிய இலைகளும் முட்களும் நிறைந்த கருமையான மரம். தண்ணீரால் விரைந்து கெட்டுப்போகாத தன்மை உடையது உழவுக் கருவிகள், கடல்கலங்கள் முதலியன செய்யப் பயன்படுவது.



கருவேல்

**கருவேலம்பாடு** *karuvelampāḍu,* பெ.(n.) தூத்துக்குடி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Tuttukkudi dt.

*[கருவேல் + கம் + பேடு – கருவேலம்பேடு → கருவேலம்பாடு. பேடு = பொட்டல் நிலம்.]*

**கருவேலன்** *karuvēlaṉ,* பெ.(n.) ***கருவேல்*** பார்க்க; see karuvēl.

*[கருவேல் → கருவேலன்.]*

**கருவேலி** *karuvēli,* பெ.(n.) கருங்கொடி வேலி; black-flowered lead-wort.

*[கருங்கொடிவேலி → கருவேலி.]*

**கருவை**[1] *karuvai,* பெ.(n.) வரகு வைக்கோல்; millet straw. *"கருவை வேய்ந்த கவின் குடிச்சீறூர்" (பெரும்பாண்.191.).* 2. கருவேலமரம்; black babul.

*[கரு + வை. கரு = கரிய. வை = வைக்கோல்.]*

**கருவை**[2] *karuvai,* பெ.(n.) திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள சிவன் கோயில்; a Siva temple in Tirunelvēli district. திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி.

*[கரு → கருவை.]*

**கருவை**[3] *karuvai,* பெ.(n.) மீன்வகை; aetobatus flagellum, spotted eagle ray.

*[கரு → கருவை.]*

**கருவை**[4] *karuvai,* பெ.(n.) வேதைக்குரு; a quintessence used in alchemy (சா.அக.).

*[கரு → கருவை.]*

**கருவைக்காய்க்கொலுசு** *karuvai-k-kāy-kolusu,* பெ.(n.) காலணி வகை (கொ.வ.); a kind of ornament for the ankle.

*[கருவை + காய் + கொலுசு.]*

**கருவோடு** *karuvōḍu,* பெ.(n.) பேரண்டம் என்னும் தலை மண்டையோடு; human skull (சா.அக.).

*[கரு + ஓடு.]*

**கருவௌவால்** *karu-vauvāl,* பெ.(n.) கடல் மீன் வகை; black pomfret, deep brown, attaining 2ft. in length.

*[கரு + வௌவால்.]*

**கருள்**[1]**(ளு)–தல்** *karuḷ,* 15 செ.கு.வி.(v.i.) கருநிறமடைதல்; to become black. *"அம்பொனல் வானங் கருண்டொன்று கூறுதலிற் கார்" (பதினொராந். காரொட்டு. 3.)*

*[கல் → கரு → கருள் → கருளுதல் = கருத்தல். ஒ.நோ. இருள் → இருளுதல்.]*

**கருள்**[2] *karuḷ,* பெ.(n.) 1. இருள்; darkness. *"கருளினொடு வெயில் கலந்த காட்சியன்ன மாட்சி" (சேதுபு. சீதைகு. 12.).* 2. கருப்பு; black, blackness. *"கருடரு கண்டத்து ... கைலையார்" (தேவா. 337, 4.).* 3. குற்றம்; blot, stain. *"கருடீர் வலியால்" (சேதுபு. முத்தீர்த். 5.) (த.மொ.அ.).*

**க.** கழ்தலெ, கத்தலு, கத்தலெ, கர்தலெ, கள்தலெ; **து., பட.** கத்தலெ.

*[கள் → கர் → கரு → கருள் = இருள், கருமை.]*

**த.** கருள் > **Skt.** க்ருஷ். கருள் → க்ருஷ் → கிருஷ்ண =

கருமை. க்ருஷ்ணபக்ஷ = கரும்பக்கம், தேய்பிறை, க்ருஷ்ண ஸர்ப்ப = கரும் பாம்பு (வ.மொ.வ. 108.).

**கருள்**[3] *karul,* பெ.(n.) 1. காங்குப்புடவை (நாநார்த்த.); a kind of coloured cloth. 2. நல்லாடை (திவ்.); excellent clothing.

*[கரு → கருள் (கருநிறங்கலந்த புடைவை.).]*

**கருள்**[4] *karul,* பெ.(n.) சீற்றம்; wrath; indignation. *"கருளுடைய பொழின் மருதும்" (திவ். பெரியாழ். 4, 9, 3.).*

*[கல் → கறு → கறுள் → கருள். கறுவுதல் = சீறுதல், மிகச்சினத்தல்.]*

**கருளக்கொடி** *karula-k-kodi,* பெ.(n.) **கருடக்கொடி** பார்க்க; see *karudakkōdi.*

*[கருடன் + கொடி = கருடக்கொடி → கருளக்கொடி. கருடன் = பாம்புக்கடி நஞ்சை முறிக்கும் தன்மை.]*

**கருளன்** *karulan,* பெ.(n.) வெண்தலைக் கழுகு; white headed kite, sacred to Visnu. *"நாகம் விண்ணின் முரிக்குங் கருளன்" (இராமா. ஊர். 77.) (த.மொ.அ.).*

*[கருள் + அன் – கருளன். 'அன்' ஒன்றன் பாலீறு. கருள் = நஞ்சு.]*

**கருனை** *karunai,* பெ.(n.) பொரிக்கறி; any preparation which is fried. *"கருனைச்சோ றார்வர் கயவர்" (நாலடி, 200.)*

*[கரு → கருனை. கருக்கப்பட்டது, வறுக்கப்பட்டது.]*

**கரூர்** *karūr,* பெ.(n.) **கருவூர்** பார்க்க; see *karuvūr.*

*[கரு + ஊர்.]*

**கரை**[1]**–தல்** *karai-,* 3 செ.கு.வி.(v.i.) 1. கரைந்து போதல், நீரில் கரைதல், நீரியலாதல்; to dissolve, as salt or sugar in water. 2. மண்ணரிப்பு உண்டாதல்; to wear away as soil by the action of water. 3. உருகுதல்; to be reduced from a solid to a liquid form. *"கருங்கற்றான் வெண்ணெயெனக் கரைந்தோட" (அழகர்கல. 1.).* 4. இளைத்தல்; to become emaciated as the body. உடம்பு கரைந்துவிட்டது (கொ.வ.). 5. கெடுதல்; to become gradually attenuated. *"இந்திரன் செருக்குக் கரைய" (திருவிளை திருநகரப். 101.).* 6. வருந்துதல்; to undergo difficulties. *"ஞெகிழங் கரையாமல் வாங்கிய கள்வன்" (சிலப். 18, 26.).* 7. காலந்தாழ்த்தல் (சிலப். 18, 26, உரை.); to linger, delay. 8. அழுதல்; to weep, lament. *"கரையாவயா் வேனெனை" (கம்பரா. நகர்நீங். 33.).* 9. பதனழிதல்; to be overripe, as fruit. *"கரைந்த பழம்" (வின்.).* 10. கனிதல்; to become ripe.

**க.** கரகு, கரங்கு; **து.** கரகுனி; **தெ.** கராகு; கோண். கரெமன்; **பட.** கரகு; **கோத.** கா்க்; **துட.** கா்க்;

**E.** Cry (to weep).

*[குள் → கள் → கரை (மு.தா. 312.).]*

கரைதலாவது ஒருபொருள் சிறிது சிறிதாய் மறைதல். கர → கரை. கரைதல் = சிறிது சிறிதாய் சுரத்தல், உருகுதல் [வே.க.130.].

**கரை**[2]**–தல்** *karai-,* 2 செ.குன்றாவி.(v.t.) 1.அழைத்துச் சொல்லுதல்; to call, invite. *"அஞ்சிலோதியை வரக் கரைந்தீமே" (ஐங்குறு. 391.).* 2. சொல்லுதல்; to tell, expound. *"அறங்கரை நாவின்" (தொல். பாயிரம்.)* 3. ஒலித்தல்; to sound, roar. *"கல்லெனக் கரைந்து வீழும்" திருவிளை திருநா.) (தேவா. 742.1.).*

**மறுவ.** கரைதல், இயம்பல், இசைத்தல், அறைதல்.

**ம.** கர; **க.** கரெ; **து.** கரெ; **பர்.** கெரிப்; **குரு.** கா்க்கா; **மா.** கா்க்ரெ

**S.** gritar; **E.** call, kalde; **Nor., Dan.** kalle; **Gk.** Kalo Skrike; **OF.** cier; **Port.** gritar; **It.** gridare; **L.** quizitare **Aramic.** keri. **Hebrew.** kara; **Pol.** kryzyemec; **Czeco;** kricetc **Russ;** Kri-chat. **Fr; Cier, Span;** gri-tar; **E.** Cry; Aram : Keri. **Swedish;** Skrike

*[கா் → கரை → கரைதல். கரை = அழை. அழைத்தலைக் குறிக்கும் அகவல் என்னும் சொற்போல், கரைதல் என்னும் சொல்லும் பாடுதலை; உணர்த்தும். ஆதலால் வடமொழியில் பாணனை அல்லது பாவலனைக் 'காரு' என்பர். (வ.மொ.வ. 314.).]*

**கரை**[3]**–த்தல்** *karai-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. கரையச் செய்தல்; to dissolve in water. 2. உருக்குதல்; to melt, as metal, to liquify. 3. அழித்தல்; to extirpate. *"உள்குவார் வினையைக் கரைக்கும்" (தேவா. 1040,5.).* 4. நிமிண்டுதல்; to pinch, squeeze so as to cause pain. 5. பணம் செலவழித்தல்; to expend. கையில் இருந்த பணம் கரைந்துவிட்டது (உ.வ.).

**ம.** கரக்குக; **தெ., பட.** கரகு; **க.** கரங்கு, கரகு; **துட., கோத.** கா்க்; **க.,குட.** கா் (செறித்தல்); **து.** கரகுனி, கரவுனி; **கோண்.** கரெமன்; **குவி.** கரன்கலி; **கசபா.** கரா.

*[கர → கரை–. (வே.க.130).]*

**கரை[4]—த்தல்** *karai-,* பி.வி.(caus.v.) அழைப்பித்தல், வரவழைத்தல்; to call, summon. *"உழையரிற் பலரைக் கரைத்து" (கந்தபு. குமாரபுரி. 66.).*

**க., து.** கரெ; **ம.** கர; **பர்.** கெரிப்; **குரு.** கர்க்னா; **மா.** கக்ரெர்

*[கர் → கரை → கரைத்தல்.]*

**கரை[5]—தல்** *karai-,* 2 செ.குன்றாவி.(v.t.) கொண்டு போதல்; to take, as a load. *"கருங்கடல் வளந்தரக் கரையும் பண்டியும்" (சீவக. 63.).*

*[து. கரை > க. கரெ > கரை.]*

**கரை[6]** *karai,* பெ.(n.) 1. கடற்கரை; shore of a sea. *"நாவாய் கரையலைக்குஞ் சேர்ப்ப" (நாலடி. 224.).* 2.நீர்க்கரை; bank, bund, as of a tank. *"யமுனைக் கரைக் கென்னை யுய்த்திடுமின்" (திவ். நாய்ச்சி. 12,4.).* 3. எல்லை; bound, limit. *"கல்வி கரையில" (நாலடி, 135.).* 4. செய்வரம்பு; embankment between fields. 5. புடைவைத் தலைப்பு; border, of a cloth. *"பூங்கரை நீலம்" (கலிங். 111.).* 6. பக்கம்; side, proximity, usu. in compounds, as அடுப்பங்கரை, வழிக்கரை. 7. இடம் (சூடா.); place.

**மறுவ.** கோடு, கட்டை, சிறை.

**தெ., ம.** கர; **க., து., குட.** கரெ; **பிரா.** கர்ரக்.

**Norw;** Kyst. grense; **Gk.** haros; **Nubian;** gar

*[குரு → கரு → கரை. கரு = மேடு, உயரம்.]*

**கரை[7]** *karai,* பெ.(n.) ஊரின்பெரு நிலப்பங்கு (S.I.I.ii.114; G.S.A.D. I, 288.); large division of co-parcenary land in a village consisting of dry and wet lands and garden fields.

*[கரு → கரை. கரு = பெருமை, மிகுதி.]*

**கரை[8]** *karai,* பெ.(n.) சொல் (நன். 458.); word. *"மாற்றநுவற்சி செப்புரைகரை" (நன். உரியி. 17.).*

*[கரை[2] → கரை.]*

**கரை எல்ல பாளையம்** *karaiellapāḷaiyam,* பெ.(n.) ஈரோடு மாவட்டத்துச் சிற்றூர்; a village in Erode dt.

*[கரை + எல்லை + பாளையம் – கரையெல்லைப் பாளையம் → கரை எல்லபாளையம்.]*

**கரைக்கச்சான்** *karai-k-kaccāṉ,* பெ.(n.) தெற்கிலிருந்து வடமேற்காய்க் கரைநோக்கி வீசுங்காற்று (குமரி மீன.); south-west wind.

*[கரை + கச்சான். **கச்சான்** பார்க்க.]*

**கரைக்கட்டு** *karai-k-kaṭṭu,* பெ.(n.) 1. நீர்க்கரைக்கு அடிப்படையாகக் கட்டியது; buttress for strengthening the bund of a tank. 2. புடைவையின் விளிம்பு; border of a saree.

**க.** கரெகட்டு

*[கரை + கட்டு.]*

**கரைக்கட்டுக்கயிறு** *karai-k-kaṭṭu-k-kayiṟu,* பெ.(n.) கரையோரக் கடலில் கலத்தை நிறுத்துதற்கு ஏதுவாய வலியதொரு கயிறு (முதவை மீன.); rope used in anchoring a boat etc in the shore.

*[கரை+ கட்டு + கயிறு.]*

**கரைக்கட்டுக்கொம்பு** *karai-k-kaṭṭu-k-kombu,* பெ.(n.) அலைவாயில் நிறுத்தப்பட்ட மரக்கலம் கடலில் தொலைவாய்ச் சென்றிடாமல் அதை அவ்விடத்திலே நிறுத்தற்கேதுவாய சிறுமரக்கொம்பு (முக வை மீன்.); wooden plank used for anchoring a boat.

*[கரை + கட்டு + கொம்பு.]*

**கரைக்கடமை** *karai-k-kaḍamai,* பெ.(n.) வரப்பிடச் செலுத்தும் வரி; tax for bund. புதுக்குளம் கரைக் கடமையில் (திருவாங். தொகுதி.6. பகுதி II கல்வெட்டு 100 வரிசை. 6.).

*[கரை + கடமை.]*

**கரைக்கடல்** *karai-k-kaḍal,* பெ.(n.) ஆழமில்லாத கடற்பரப்பு; shallow expanse of the sea shore.

*[கரை + கடல்.]*

**கரைக்கல்** *karrikkal,* பெ.(n) எல்லைக்கல், ஊர் அமைக்கும் பொழுது நடப்பட்ட கல்; boundary stone.

**க.** கரெகல்லு

*[கரை + கல்.]*

**கரைக்கல்லோலம்** *karai-k-kallōlam,* பெ.(n.) கடற்பாசி (மலை.); sponge, duck-weed.

*[கரை + கல்லோலம்.]*

**கரைக்கல்லோலன்** *karai-k-kallōlaṉ,* பெ.(n.) ***கரைக் கல்லோலம்*** பார்க்க; see *karaikkallōlam.*

*[கரைக்கல்லோலம் → கரைக்கல்லோலன்.]*

**கரைக்காரன்** *karai-k-kāraṉ,* பெ.(n.) 1. நிலப்பங்குக் குரியவன்; owner of a karai or determinate share in a co-parcenary village. 2. ஊர்மணியகாரன்; village officer. 3. சீட்டு நடத்துபவன் (நாஞ்.); conductor of a chit-fund. 4. கடற்கரையில் முதல் மதிப்புக்குரியவர்; one who gets respect at first at sea-shore.

*[கரை + காரன்.]*

**கரைக்காற்று** *karai-k-kāṟṟu,* பெ.(n.) கரையினின்று வீசுங் காற்று (வின்.); land breeze, dist. fr. கடற்காற்று, long shore wind.

*[கரை + காற்று.]*

**கரைக்கூறு** *karai-k-kūṟu,* பெ.(n.) 1. நிலப்பங்கு; partition in land (கல்.அக.). 2. வரப்பின் பங்கு; partition in bund.

*[கரை + கூறு.]*

**கரைக்குலை–தல்** *karaikulai-,* 4 செ.குன்றாவி.(v.t.) வரப்பை நீக்குதல்; to remove the bund.

*[கரை + குலை.]*

**கரைக்குலை** *karaikulai,* பெ.(n.) வரப்பை நீக்கிய இடம்; land modified by removing bund. பாண்டவாய்க் கரைக்குலையுமாக இறையிலி (நிலம். S.i.i. vol.2. insc.4.).

*[கரை + குலை.]*

**கரைக்கூறுசெய்வார்** *karai-k-kūṟu-ceyvār,* பெ.(n.) நிலத்தைப்பங்கிட வேண்டி நிலவளவை செய்யும் ஊரவை அதிகாரிகள் (கல்வெட்டு); officer, whose duty is to measure the lands in village, at the time of partition in land.

*[கரை + கூறு + செய்வார். கரை = எல்லை.]*

**கரைகட்டு–தல்** *karai-kaṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) 1.நீர்க்கரைக்கு வரம்பு உண்டாக்குதல்; to construct a bank or a bund. 2. புடைவை விளிம்பைக் கட்டுதல்; to make the selvedge of cloth, put on a coloured border. கரைகட்டிச் சலவை செய்யவேண்டும்.

*[கரை + கட்டு –.]*

**கரைகட–த்தல்** *karai-kaḍa-,* 3 செ.கு.வி.(v.i.) 1.கரையை மீறுதல்; to overflow a bank, as a tank, a river. *"உலகுடைய தாயே கரைகடக்கலாகாது காண்" (தமிழ்நா. 81.).* 2. எல்லை மீறுதல்; to pass or transgress the limit.

*[கரை + கட–.]*

**கரைகண்டர்** *karaikaṇḍar,* பெ.(n.) துருசு; blue vitriol (சா.அக.).

*[கரை + கண்டர்.]*

**கரைகண்டவன்** *karai-kaṇḍavaṉ,* பெ.(n.) கலைகளை முற்றாகச் செவ்வனே கற்றவன்; one whose learning in any branch of knowledge is at once profound and extensive; one who is skilled in business, master in science or learning.

*[கரை + கண்டவன்.]*

**கரைகரு** *karaikaru,* பெ.(n.) அழிந்த கருப்பம்; an aborted child or foetus (சா.அக.).

**மறுவ.** கரைகன்று, கரைஒட்டி.

*[கரை + கரு.]*

**கரைகன்று** *karai-kaṉṟu,* பெ.(n.) பருவத்துக்கு முன் ஈன்ற கன்று (யாழ்ப்.); a calf born prematurely.

**மறுவ.** கரைகுட்டி

*[கரை + கன்று.]*

**கரைகாட்டாங் குறிச்சி** *karai-k-kāṭṭāṅkuric-ci,* பெ.(n.) பெரம்பலூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Perambalur dt.

*[கரைக்காடு + அம் + குறிச்சி–கரைக்காட்டங்குறிச்சி கரைச்காட்டாங்குறிச்சி.]*

**கரைகாண்(ணு)–தல்** *karai-kāṇ-,* 12 செ.கு.வி.(v.i.) எல்லையறிதல்; to get to the very end; to reach a distined port; to master thoroughly an art or science. *"நற்றவ முனிவர் கரை கண்டோர்" (திவ். திருவாய். 8,3,10.).*

*[கரை + காண்–.]*

**கரைகாணாப்பேரொளி** *karai-kāṇāppēroḷi,* பெ.(n.) கடவுள்; god.

*[கரை + காணா + பேரொளி.]*

**கரைகாரன்** *karai-kāraṉ,* பெ.(n.) ***கரைக்காரன்*** பார்க்க; see *karai-k-kāraṉ.*

*[கரை + காரன் → கரை = எல்லை.]*

**கரைகுட்டி** *karai-kuṭṭi,* பெ.(n.) பருவத்துக்கு முன் ஈன்ற குட்டி (யாழ்ப்.); young animal born prematurely.

மறுவ. கன்று

*[கரை + குட்டி. கரை = அழிதல்.]*

**கரைகொள்(ளு)-தல்** *karaikoḷ(ḷu),* 10செ. குன்றாவி. (v.t.) கரைபோடுதல், வரப்பமைத்தல்; to bund ... குலைக்கீழ் வாய்க்கால் நின்றும் சாமந்தியில் மேல்பாடு கரைகொள்ள கலத்தால் வாய்க்கால் பெற்று (கல்.அக.).

*[கரை + கொள்.]*

**கரைச்சங்கு** *karai-c-caṅgu,* பெ.(n.) கரையோரக் கடலடியில் திரியும் அல்லது மேயுஞ் சங்கு. (தஞ். மீனவ.); a kind of conch near the shore.

*[கரை + சங்கு.]*

**கரைச்சல்**[1] *karaiccal,* பெ.(n.) உருக்குகை (யாழ்.அக.); melting.

*[கரை→ கரைச்சல்.]*

**கரைச்சல்**[2] *karaiccal,* பெ.(n.) தொல்லை; trouble, botheration.

*[கரை → கரைச்சல்.]*

**கரைச்சல்**[3] *karaiccal,* பெ.(n.) கவலை; anxiety, care. *"கரைச்சல் கெட்டு மார்பிலே கைவைத்து உறங்கப்புக்கார்" (திவ். திருப்பள்ளி. அவ. வ்யா. பக். 11.).*

*[கரை → கரைச்சல்.]*

**கரைச்சி** *karaicci,* பெ.(n.) 1. உடம்பை இளைக்கச் செய்யும் மருந்து; a medicine or agent reducing a corpulent body to a slender one. 2. தசையை அரிக்கக்கூடிய மருந்து; the substance which corrodes the flesh of animals as caustics. (சா.அக.).

*[கரை → கரைச்சி 'சி' சொ.ஆ.ஈறு.]*

**கரைச்சுத்துஉவரி** *karai-c-cuttu-uvari,* பெ.(n.) திருநெல்வேலி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Thirunelveli dt.

*[கரை + சுற்று + உவரி - கரைச்சுற்று உவரி → கரைச்சுத்து உவதி. உவரி = கடல் அலை..]*

**கரைச்சை** *karai-c-cai,* பெ.(n.) உவர்மண்; fuller's earth (ம.அக.).

*[கரை→ கரைச்சை (நீரில் கரைவது).]*

**கரைசல்**[1] *karaišal,* பெ.(n.) ஒரு திடப் பொருள் கரைந்திருக்கும் நீர்மம் (திரவம்.); a solution in which a solid substance is dissolved.

*[கரையல் → கரைகளற சல்.]*

**கரைசல்**[2] *karaišal,* பெ.(n.) ***கரையல்*** பார்க்க; see *karaiyal.*

*[கரையல் → கரைசல்.]*

**கரைசாந்து** *karai-šāndu,* பெ.(n.) கற்சுவர்களில் அடுக்கப்பட்ட கற்களின் இடைவெளியை யடைக்கப் போடப்படும் சாந்து; paste used to plaster the gap between two bricks or stones of a wall.

*[கரை + சாந்து.]*

**கரைசிலை** *karaicilai,* பெ.(n.) கல்லுப்பு, இந்துப்பு; rock or sindh salt (சா.அக.).

*[கரை + சிலை. சிலை = கல்.]*

**கரைசெய்-தல்** *karaisey*[1], 1 செ.குன்றாவி.(v.t.) கரையையுயர்த்துதல்; to increase the level of mound ... *"மன்னுமடைக்கு மேக்குக்கருங் குளத்துக் குக் கிழக்கு நிலத்திட்டு கரைசெய்து" மடைவைப் பித்து" (S.I.I. vol. 14. insc. 43. S.No.5.5).*

*[கரை + செய்.]*

**கரைசேர்-தல்** *karaišēr-,* 2 செ.கு.வி.(v.i.) 1. கரை யடைதல்; to reach the shore. 2. வெற்றி பெறுதல்; to get victory. 3. நலம் பெறுதல்; to be curred as of disease.

*[கரை + சேர்தல்.]*

**கரைசேர்-த்தல்** *karai-sēr-,*4 செ.கு.வி.(v.i.) ஒருவனை நல்ல நிலைக்குக் கொண்டு வருதல்; to help one's dependents until they become self-supporting. என் தம்பி பிள்ளைகளைக் கரை சேர்ப்பது என் பொறுப்பு (உ.வ.).

*[கரை + சேர்-.]*

**கரைசைமணி** *karaisai-maṇi,* பெ.(n.) பட்டை தீட்டிய பளிங்குமணி; a kind of bell (ம.அக.).

*[கரைசை + மணி. கரைசை = கரைத்தல், பட்டைதீட்டுதல்.]*

**கரைஞ்சால்** *karaiñjāl,* பெ.(n.) ***கரைஞ்சான்*** பார்க்க; see *karaiñjāṉ.*

*[கரைஞ்சான் → கரைஞ்சால் (சா.அக.).]*

**கரைஞ்சான்** *karañjāṉ,* பெ.(n.) 1. அகில்; a fragrant wood. 2. வாழைப்பழம்; banana (ம.அக.).

*[கரை → கரைஞ்சான் = மணம் பரப்புவது (சா.அக.).]*

**கரைத்தண்டயல்** *karai-t-taṇḍayal,* பெ.(n.) கொண்டடித் தோணியின் சொந்தக்காரன்; owner of a boat (ம.அக.).

*[கரை + தண்டயல்.]*

**கரைத்தாம்பு** *karai-t-tāmbu,* பெ.(n.) கரைக்கு அண்மையிலுள்ள இருவேறு அலைகட்கிடைப்பட்ட சமதள நீர்ப்பரப்பு (செங்கை மீனவ.); the levelling space between two waves near a shore.

*[கரை + தம்பு.]*

**கரைத்துக்குடி–த்தல்** *karaittu-k-kuḍi,* 4 செ. குன்றாவி. (v.t.) 1. உணவு முதலியவற்றைக் கஞ்சியாக்கிக் கரைத்து நீர்மமாக்கி உட்கொள்ளுதல்; to drink any liquid in which solid food or medicine has been dissolved. 2. முற்றக்கற்றறிதல்; to learn thoroughly the contents of a book or books. அவன் பல நூல்களையும் கரைத்துக் குடித்தவன் (உ.வ.).

*[கரைத்து + குடி.]*

**கரைதட்டு–தல்** *karai-taṭṭu-,* 5. செ.கு.வி.(v.i.t.) கப்பல் மணலிற் பாய்தல்; to be stranded, as a ship. *"கப்பல் மூவாயிரமுங் கரைதட்டிப் போனதினால்" (கோவல. கதை. 1, 67.).*

*[கரை + தட்டு.]*

**கரைதலைப்பாடம்** *karai-talai-p-pāḍam,* பெ.(n.) ***கடைதலைப்படலம்*** பார்க்க; see *kaḍai-talai-p-pāḍalam.*

*[கடை + தலைப்பாடம் – கரைதலைப்பாடம் (கொ.வ.).]*

**கரைதாண்டு–தல்** *karaitāṇḍu-,* 11 செ.கு.வி.(v.i.) 1.சிக்கல் அல்லது துன்பத்திலிருந்து விடுபடுதல்; to extricate from sorrow, trouble or concer.

*[கரை + தாண்டு.]*

**கரைதிறன்** *karaitiṟaṉ-,* பெ.(n.) திண்மம் நீர்மத்தில் கரையும் அளவு; solvency.

*[கரை + திறன்.]*

**கரைதுறை** *karai-tuṟai,* பெ.(n.) 1. இறங்குமிடம் (வின்.); landing place. 2. முடிவு; end. 3. துறைமுகம்; port.

*[கரை→துறை. கரை = எல்லை, முடிவு, முடிவிடம்.]*

**கரைதுறைக்காவற்காரன்** *karai-tuṟai-k-kāvaṟkāraṉ,* பெ.(n.) துறைமுகங் காப்பவருள் தலைவன் (வின்.); tide-waiter, master attendant.

*[கரை + துறை + காவல் + காரன்.]*

**கரைநிலம்** *karainilam,* பெ.(n.) வரப்பிட்ட நிலம்; land partitioned land by bund (கல். கலை. அக.).

*[கரை + நிலம்.]*

**கரைநீளமட்டு–தல்** *karai-nīḷamaṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) ஏரி போன்றவற்றின் கரையை நீளமாக்குதல்; to extend the bund. *"இக்குளந்தான் வேண்டுமாறு கல்விக் கரைநீளம் அட்டப்பெறுவதாகவும்" (S.I.I. Part. 3:3. 106.).*

*[கரை + நீளம் + அட்டு.]*

**கரைப்பங்கு** *karai-p-paṅgu,* பெ.(n.) ஊர் நிலப்பங்கு; share in the village lands.

*[கரை + பங்கு.]*

**கரைப்படகு** *karai-p-paḍagu,* பெ.(n.) கரையோரப் பயணப்படகு; shore boat.

*[கரை + படகு.]*

**கரைப்படு[1]–தல்** *karai-p-paḍu-,* 20 செ.கு.வி.(v.i.) கரைசேர்தல்; to get to the shore, as a vessel.

*[கரை + படு–.]*

**கரைப்படு[2]–த்தல்** *karai-p-paḍu-,* 18 செ.குன்றாவி. (v.t.) 1.கரையிற் சேர்த்தல்; to convey to the shore.

*"கரைப்படுத் தாங்குக் காட்டினன் பெயரும்" (சிலப். 11, 127.).* 2. நற்பேறு அடைவித்தல் (வின்.); to land one on the shores of bliss, as a guru.

*[கரை + படு-.]*

**கரைப்படை** *karai-p-paḍai,* பெ.(n.) கரைகளைப் பாதுகாக்கும் பணியாளர்; men employed for maintenance of bund. *"இவர்கட்கு இறைப்புணைப்பட்ட கரைப்படையிலார்க்கு தண்டல் நாயகம்" (S.I.I. Vol. 5. Insc. 990.)*

*[கரை + படை.]*

**கரைப்பற்று** *karai-p-parṟu,* பெ.(n.) கரையோடிணைந்த நிலம்; land abutting bund.

*[கரை + பற்று.]*

**கரைப்பாட்டுமீன்** *karai-p-pāṭṭu-mīṉ,* பெ.(n.) குடைமீன், கரையோரக் கடற்பரப்பில் மேயும் மீன் (தஞ்ச மீன.); fish found near shore.

*[கரை + பாட்டு + மீன். படு → பாட்டு (பகுதி).]*

**கரைப்பாதை** *karai-p-pādai,* பெ.(n.) 1. கரைவழி (யாழ்ப்.); land route. 2. கரைவழியே செய்யும் பயணம் (வின்.); journeying by land.

*[கரை+பாதை.]*

**கரைப்பாம்பு** *karai-p-pāmbu,* பெ.(n.) நிலத்தில் வாழும் பாம்பு; ground snake as opposed to கடற்பாம்பு, நீர்ப்பாம்பு; (sea-snake or water-snake.) (சா.அக.).

*[கரை + பாம்பு.]*

**கரைப்பான்** *karai-p-pāṉ,* பெ.(n.) கரைக்கும் பொருள்; dissolvent.

*[கரைப்பு + ஆன்.]*

**கரைப்பு** *karaippu,* பெ.(n.) வீட்டின் மேற்றளத்தை நீர்வாட்டமுறும்படிச் செய்கை (C.E.M.); sloping course in roofing.

*[கரை → கரைப்பு (தாழ்ப்பு, வாட்டம்).]*

**கரைப்புக்கல்** *karaippu-k-kal,* பெ.(n.) தளத்திற்கு இழைப்போட்டுங்கல் (C.E.M.); crystal-stone rubber.

*[கரைப்பு + கல்.]*

**கரைப்பூடு** *karai-p-pūḍu,* பெ.(n.) கடற்கரையோரங்களில் பயிராகும் செடிவகை; plant found grown or cultivated near the sea shore (சா.அக.).

*[கரை + பூடு. இவ்வகைச்செடிகள் மருந்து உருவாக்கத்திற்குப் பயன்படாதவையாம்.]*

**கரைப்பொந்து** *karai-p-pondu,* பெ.(n.) 1. வடிகால் மடை; sluice. 2. கரையில் உள்ள நண்டு போன்றவற்றின் வளை; hole as of crab etc. *"இந்நிலம் ஐவேலிக்கும் கரைப்பொந்து போதாததுக்கு இக்கலிங்குச் சாலுக்கு மேற்கு" (தெ.கல்.தொ.5.).*

*[கரை + பொந்து.]*

**கரைப்போக்கு**[1] *karai-p-pōkku,* பெ.(n.) கடற்கரை (வின்.); sea-coast.

*[கரை + போக்கு.]*

**கரைப்போக்கு**[2] *karaippōkku,* பெ.(n.) 1.***கரைப் போக்குக்கல்*** பார்க்க; see *karaippōkkukkal.* 2. இழிவானது; that which is base or inferior.

ம. கரப்போக்கு; தெ. கரம்போக.

*[கரை + போக்கு.]*

**கரைப்போக்குக்கல்** *karaippōkkukkal,* பெ.(n.) போலிச் செம்மணிக்கல்; spurious gem, found in alluvial soil.

*[கரை + போக்கு + கல். போக்கு - பகுதி]*

**கரைப்போக்குப்பொடி** *karaippōkkuppoḍi,* பெ.(n.) ***கரைப்போக்குக்கல்*** பார்க்க; see ***karaippōkkukkal.***

*[கரை + போக்கு + பொடி.]*

**கரைப்போர்** *karai-p-pōr,* பெ.(n.) கரையிலிருந்து செய்யும் போர் ; sea-shore war.

*[கரை + போர்.]*

**கரைபடு[1]–தல்** *karai-paḍu-,* 20 செ.கு.வி.(v.i.) பங்குக்கு ஏற்ப நிலம் பிரிவுபடுதல்; to be divided into lots according to the shares in the land.

*[கரை + படு . கரை = எல்லை, வரம்பு, பங்கு.]*

**கரைபடு[2]–தல்** *karaipaḍu-,* 20 செ.கு.வி.(v.i.) 1. கரைந்து போதல்; to dissolve. 2. உருகுதல்; to melt.

*[கரை + படு. படு- து.வி.]*

**கரைபறி–தல்** *karaipaṟi-,* 2 செ.குன்றாவி.(v.t.) நிலத்திடை அமைத்த கரையை நீக்குதல்; to remove bund. *"கீழ்பாதத்து ஒரு துருவும் கரைப் பறிச்சுப் பட்டம் கடித்துப் பிழையாமே சொன்னார்" (S.I.I. Vol.13. Insc. 250. S.No. 19.).*

*[கரை + பறி.]*

**கரைபாடு** *karaipāḍu,* பெ.(n.) கரையோரக் கடலிலிறக்கிய வலையிற் தென்படும் மீன்; (தஞ்.மீன.); the fish which came into fishing net near seashore.

*[கரை + பாடு. படு→ பாடு.]*

**கரைபிடி–த்தல்** *karai-piḍi-,* 4 செ.கு.வி.(v.i.) மரக்கலந்துறைசேர்தல் (வின்.); to arrive at a port.

ம. கரபிடி

*[கரை + பிடி .]*

**கரைபிடித்தோடு–தல்** *karai-piḍittōḍu-,*5 செ.கு.வி. (v.i.) மரக்கலம் கரையோரமாய்ச் செல்லுதல்; to sail along the coast.

*[கடை + பிடித்து + ஓடு .]*

**கரைபுரட்டு–தல்** *karai-puraṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) கரைபுரள் பார்க்க; *karai-puraḷ.*

*[கரை + புரட்டு. புரள் → புரட்டு.]*

**கரைபுரள்(ளு)–தல்** *karai-puraḷ-,* 16 செ.கு.வி.(v.i.) 1. வெள்ளப் பெருக்கெடுத்தல்; to overflow as a river. 2. மிகுதல்; to exceed bounds. குளங்கள் கரைபுரண்டிருந்தால் (ஈடு, 1.1.1.).

*[கரை + புரள் .]*

**கரைபோடு–தல்** *karai-pōḍu-,* 20 செ.கு.வி.(v.i.) 1.செய்கரை கட்டுதல்; to construct an embankment, as of a tank. 2. நிலம் பிரித்தல் (வின்.); to fix the boundaries of land. 3. சீட்டுப்போடுதல் (வின்.); to cast lots.

*[கரை + போடு .]*

**கரைமடி** *karai-maḍi,* பெ.(n.) கரைவலை (வின்.); a shore-net, dist. fr.; தட்டுமடி.

*[கரை + மடி.]*

**கரைமதிப்புவை–த்தல்** *karaimadippu-vai-,* 4 செ.குன்றாவி. (v.t.) கடற்கரையில் உயர்ந்த கோபுரம் அல்லது பெரியமரத்தைக் கலங்கரை விளக்கு போல் அடையாளமாக வைத்தல்; to keep high building or tall tree as a light house at sea-shore.

*[கரை + மதிப்பு + வை.]*

**கரைமரஞ்சேர்–தல்** karai-marañ-cēr-, 2 செ.கு.வி. (v.i.) உயர்வடைதல்; to attain salvation, as a boat reaching the shore. "லௌகிகர் நம்மையே பற்றிக் கரைமரஞ்சேரும் விரகோ" (ஈடு, 4, 8, 9.).

*[கரைமரம் + சேர்-. கரைமரம் = கரைசேர்க்கும் மரக்கலம்.]*

**கரைமானியம்** *karai-māṉiyam,* பெ.(n.) ஏரிக்கரையைப் பழுதுபார்ப்பதற்கு வேண்டிய ஆளைக் கூட்டுவதற்கு விடப்பட்ட இறையிலி நிலம் (m.m.); tax-free land assigned for the service of collecting workmen to repair tanks.

*[கரை + மானியம் .]*

**கரைமீறு–தல்** *karaimīṟu-,* 5 செ.கு.வி.(v.i.) ஒரு செயல் அல்லது நிலைமை வரம்பு கடந்து போதல்; to go to the extreme.

*[கரை + மீறு-.]*

**கரைமுகம்** *karai-mugam,* பெ.(n.) **கடற்கரை** (செங்கை மீனவ.) பார்க்க; see *kaḍaṟkarai.*

*[கரை + முகம்.]*

**கரைமுண்டாக் கோட்டை** *karaimuṇḍā-k-koṭṭai,* பெ.(n.) தஞ்சை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Thanjavur district.

*[கரைமுண்டன் + கோட்டை – கரைமுண்டக்கோட்டை → கரைமுண்டாக்கோட்டை.]*

**கரையட்டுவி-த்தல்** *karaiyaṭṭuvi-,* பி.வி. (v.caus.) கரையை யுருவாக்கிக் கட்டுவித்தல்; to cause to make bund. *"குளத்தைப் பெருக கரையட்டுவிச்சு காடும் வெட்டுவிச்சு" (S.I.I. Vol.5. Part 1. 724.).*

*[கரையட்டு + வி.]*

**கரையடி** *karaiyaḍi,* பெ.(n.) அலை மோதும்படியாக வுள்ள கரை, நீருக்குப் பக்கத்திலுள்ள கரை; land adjoining a water body, bund (சேரநா.).

ம. கரயடி

*[கரை + அடி.]*

**கரையத்தெரு** *karaiya-t-teru,* பெ.(n.) கடற்கரையை யொட்டிய தெருவொன்றின் பெயர் (முகவை. மீனவ.); street near a sea-shore.

*[கரை + தெரு – கரை + அ + தெரு → கரையத்தெரு.]*

**கரையம்பட்டி** *karaiyam paṭṭi,* பெ.(n.) ஓர் ஊர்ப்பெயர்; name of a village.

*[கரையன் + பட்டி. கரையோரக் குடிசைகளில் வாழும் பழங்குடியினத்தவர் ஊர். பட்டி = சிற்றூர்.]*

**கரையமரத்துவலை** *karaiya-marattu-valai,* பெ.(n.) கரையோரக் கடற்பரப்பில் வலைத்தற்குரிய வலை (தஞ். மீன.); fishing net for putting into sea near seashore.

*[கரையமரத்து + வலை.]*

**கரையல்** *karaiyal,* பெ.(n.) 1. கரைகை; dissolving. 2. உருகுகை; melting. 3. கரைந்த பொருள்; that which is dissolved, reduced.

*[கரை +அல் – கரையல். 'அல்' தொ.பெ.ஈறு.]*

**கரையல்பொன்** *karayalpoṉ,* பெ.(n.) 1. உருகிய பொன்; melted gold. 2. பொன் துகள்; gold dust.

*[கரை – கரையல் + பொன். 'அல்' சொ.ஆ.ஈறு.]*

**கரையலடிசில்** *karaiyal-aḍišil,* பெ.(n.) குழைந்த சோறு (யாழ்ப்.); over cooked rice.

*[கரையல் + அடிசில்.]*

**கரையற்சோறு** *karaiyaṟ-cōṟu,* பெ.(n.) ***கரையலடிசில்*** பார்க்க; see *karaiyal-aḍišil.*

*[கரையல் + சோறு.]*

**கரையனூல்** *karaiyaṉūl,* பெ.(n.) எளிதிற்பிரியக் கூடிய நூல் (வின்.); loose yarn that easily parts.

*[கரையல் + நூல்.]*

**கரையாக்கு** *karaiyākku,* பெ.(n.) அசோகு போன்ற மரம்; a kind of tree (ம.அக.).

*[கரை + ஆக்கு.]*

**கரையாக்கு-தல்** *karai-y-ākku-,* 5 செ.கு.வி.(v.t.) நன்றாகக் கற்றல்; to learn thoroughly. *"கணித நூலில் உள்ள சகல பாவங்களையும் கரையாக்கும் வரை" (நித்தியானு. 174.).*

*[கரை + ஆக்கு-தல். (வரம்பாக்குதல், எல்லை கண்டறிதல், முற்றக்கற்றல்.).]*

**கரையாக்குமணல்** *karaiyākkumaṇal,* பெ.(n.) ***கருமணல்*** பார்க்க; see *karumaṇal.*

*[கரை + ஆக்கு + மணல்.]*

**கரையாமை** *karaiyāmai,* பெ.(n) தரையில் வாழும் ஆமை; tortoise.

ம. கரயாம

*[கரை + ஆமை.]*

**கரையார்** *karaiyār,* பெ.(n.) கடலோரத்தில் அல்லது உப்பங் கழியில் குறிப்பிட்டதோர் பருவத்தில் மட்டும் மீன்பிடி தொழில்செய்வோர் (செங்கை மீனவ.); those who are adjacent to a sea-shore or salt-pan for catching fish during a particular season.

*[கரை + ஆர். 'ஆர்' ப.பா.ஈறு.]*

**கரையாளன்** *karaiyāḷaṉ,* பெ.(n.) 1. சிற்றூர்க் கரைப் பங்கிற்குரியவன்; village proprietor. 2. மறவரிடையர் களின் பட்டப் பெயர் (E.T.); caste-title of Maravas and some Iḍaiyas.

ம. கரையாளன்

*[கரை + ஆளன் – கரையாளன். கரை = தன் பாய்ச்சல் நிலம், விளைநிலம், நன்செய்நிலம். கரையாளன் = நிலவுடைமையாளன்.]*

**கரையான்**[1] *karaiyāṉ,* பெ.(n.) 1. கடற்கரை அல்லது ஆற்றங்கரை பக்கத்தில் வாழ்பவன்; one who resides near a sea-shore or river bank. 2. மீனவருள்

ஒரு பிரிவினர்; a sect among fishermen or boat people.

[கரு → கரை (மேடு). கரை + ஆன். 'ஆன்' ஆ.பா.ஈறு.]

**கரையான்**[2] *karaiyāṉ,* பெ.(n.) கறையான் பார்க்க; see *kaṟaiyāṉ.*

[கறையான்→கரையான் (கொ.வ.).]

கறையானைக் கரையான் என வழங்குவது தவறு.

**கரையிடுக்கு** *karaiy-iḍukku,* பெ.(n.) இரு பெரிய நிலப்பாகங்கள் சேரும் குறுகிய கரை; an isthmus.

ம. கரயிடுக்கு

[கரை + இடுக்கு.]

**கரையிடு–தல்** *karai-y-iḍu-,* 20 செ.கு.வி.(v.i.) 1.நிலப்பங்கு பிரித்தல்; to divide land into portions. 2. நிலங்களைப் பயிரிடுமாறு பிரித்துக் கொடுத்தல் (வின்.); to assign portions of land to be cultivated.

[கரை + இடு. கரை = எல்லை.]

**கரையீடு**[1] *karai-y-īḍu,* பெ.(n.) ஊர்நிலங்களை மாற்றிபமைக்கை (C.G.); tenure by which the lands of a village are exchanged amongst the co-parceners or owners periodically.

ம. கரயீடு

[கரை + ஈடு – கரையீடு.]

**கரையீடு**[2] *karai-y-īḍu,* பெ.(n.) அடைமானம் (I.m.P.Tj.140.); lease.

[கரை + ஈடு. கரை = நிலம். ஒ.நோ.: காடுகரை வீடு வாசல். ஈடு = ஒற்றிடல், அடைமானம் வைத்தல்.]

**கரையூர்** *karaiyūr,* பெ.(n.) மீனவர் குப்பம்; habitation of fishermen.

[கரை + ஊர்.]

**கரையேற்றம்** *karai-y-ēṟṟam,* பெ.(n.) 1. நற்பேறு பெறுகை; salvation, final deliverance of the soul. 2. வறுமை முதலியவற்றினின்று ஈடேறுகை; emancipation from poverty, etc.

[கரை + ஏற்றம்.]

**கரையேற்று–தல்** *karai-y-ēṟṟu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. நற்பேறு சேர்த்தல்; to save, redeem, emancipate, as from karumam or previous deeds. 2. வறுமை முதலியவற்றினின்று ஈடேற்றுதல்; to raise from indigence, to reinstate in affluent circumstances. 3. திருமணம் பெறச் செய்தல் (வின்.); to marry and settle, as destitute girl.

ம. கரயேற்றுக

[கரை + ஏற்று–.]

பிறவிக் கடலினின்று ஆதன்களை [ஆன்மாக்களை]க் கரையேற்றுபவர் என்னும் கருத்தையுட்கொண்டே சமயகுரவரைத் தீர்த்தங்கரர் என்பர் சமணர் [சொல்.கட்.5.].

**கரையேறவிட்டகுப்பம்** *karaiēṟa-viṭṭa-kuppam,* பெ.(n.) கடலூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Cuddalore district.

[கரை + ஏற + விட்டான் + குப்பம் – கரையேறவிட்டான் குப்பம் →கரையேறவிட்டகுப்பம். கரையேறவிடுதல் = கரை உயர்த்துதல்.]

**கரையேறவிட்டநல்லூர்** *karai-y-ēṟa-viṭṭa-nallūr,* பெ.(n.) ஒரு சிவன்கோயில் உள்ள இடம்; name of a village which has an ancient Shiva shrine.

[கரையேற + விட்ட + நல்லூர்.]

இது திருப்பாதிரிப் புலியூருக்கு [கடலூர்] அருகில் ஆற்றங்கரையில் அமைந்துள்ளது. கெடில ஆறு பெருகி மாணிக்கவாசகரைத் தடுக்க சிவன் சித்தராய் வந்து வழி அமைத்துத் தந்த ஊர் இது என்பர்.

**கரையேறு–தல்** *karai-y-ēṟu,* 5 செ.கு.வி. (v.i.) 1. நீரினின்று கரையடைதல்; to get ashore, land. *"கடலோடி மீண்டு கரையேறினாலென்" (நல்வழி. 6.).* 2. உலகப்பற்றொழித்துப் பேரின்பம் அடைதல்; to be saved, rescued, as from the sea of transmigration, to gain heavenly bliss. *"உந்தை கரையேற வேண்டின்" (குற்றா.தல.கவுற்சனச்.83.).* 3.இடரினின்று விடுபட்டு முன்னேறுதல்; to ascend, mount, to be free from danger. 4. வறுமையினின்று ஈடேறுதல் (வின்.); to be freed from poverty. 5. வாழ்க்கைப்படுதல் (வின்.); to get married. 6. விரும்பியதை அடைதல் (வின்.); to attain an object of desire.

ம. கரயேறுக

*[கரை + ஏறு.]*

இவ்வுலக வாழ்க்கை ஓர் ஆற்றை அல்லது கடலைப் போன்றது. இவ்வுலக இன்பமாகிய சிற்றின்பத்திற் பற்று வைத்து வாழ்வது, அந்நீர் நிலையில் மூழ்கியிறப்பதையும் பற்றற்று வாழ்வது அதை நீந்திக் கரையேறி யுய்வதையும் நிகர்க்கும். இதனால், உலகப் பற்றொழித்துப் பேரின்ப வீட்டையடைவதற்குக் கரையேறுதல் என்றும் வீட்டுலக வாசிகளுக்கு அக்கரையர் என்றும் பெயர் [சொல். கட். 5.].

**கரையோட்டு** *karai-y-ōṭṭu,* பெ.(n.) கப்பலைக் கரைபிடித்தோட்டுகை (யாழ்.அக.); sailing along the coast.

*[கரை + ஓட்டு.]*

**கரையோரம்** *karaiyōram,* பெ.(n.) கடல், ஆறு போன்றவற்றின் கரை; shore, bank.

**ம.** கரயோரம்; **க.** கராவளி (கரையோரப்பகுதி)

*[கரை + ஓரம்.]*

**கரையோலை** *karai-y-ōlai,* பெ.(n.) பிரிவினை யாவணம் (இ.வ.); partition deed.

*[கரை + ஓலை – கரையோலை.]*

**கரைவலம்** *karaivalam,* பெ.(n.) கப்பல்; ship.

*[கரை + வலம்.]*

**ஒரு கரையினின்று மற்றொரு கரைக்குச் சென்று வருதலை, அதாவது வலம் வருதலைக் குறிக்கும் அடிப்படையில் கரைவலம் கப்பலைக் குறித்துள்ளது.**

**கரைவலை** *karai-valai,* பெ.(n.) சின்னஞ்சிறு துளைகள் பொருந்திய ஒரு பையைத் தன்னகத்தே கொண்டதாய்க் கரையிலிருந்து அரைகல் தொலைவுக்கு வட்டமாக வீசி மீன்களைத் துரத்திப் பிடிக்கப் பயன்படும் ஒருவகை வலை; drag-net, having a cotton bag with fine meshes in the centre, sometimes 1/2 miles in length spread out from the shore in a semi-circle and after an hour or two withdrawn from the water, while the boys beat it shouting so as to drive the fish into the bag as it nears the shore.

**ம.** கரவல

*[கரை + வலை.]*

**கரைவலைக்காரர்** *karai-valai-k-kārar,* பெ.(n.) கரையாரில் ஒரு பிரிவு மக்கள்; a sect of *'karaiyar'* people.

*[கரை + வலை + காரர்.]*

**கரைவலைத்தோணி** *karai-valai-t-tōṇi,* பெ.(n.) கரைவலையை இழுத்துச்செல்லுந் தோணி (வின்.); boat for fishing with the drag-net.

*[கரை + கலை + தோணி.]*

**கரைவலைப்பு** *karaivalaippu,* பெ.(n.) கரையோரக் கடற்றொழில் (முகவை மீனவ.); sea-shore marine business.

*[கரை + வலைப்பு. வலை→ வலைப்பு.]*

**கரைவலையம்பா** *karai-valai-yambā,* பெ.(n.) *'கரைவலை'*யை இழுக்கும் பொழுது மெய் வருத்தம் மறந்து செயற்பட மீனவர் பாடுமோர் பாடல் (மீனவ.); a song of fishermen which is sung by fishermen while pulling karaivalai.

*[கரை + வலை + அம்பா. அம்பாவை→அம்பா.]*

**கரைவழி** *karai-vaḻi,* பெ.(n.) 1. நீர்க்கரைப்பாதை, கடல் வழிக்கு எதிரானது (வின்.); road or path along the shore. 2. ஆற்றோரமான நிலம் (இ.வ.); lands lying along the banks of a river. 3. கடலோர நிலம்; the sea-coast, coastline.

**ம.** கரவழி; **க., து.** கராவளி.

*[கரை + வழி.]*

**கரைவழித்தீர்வை** *karai-vaḻi-t-tīrvai,* பெ.(n.) வேற்றூர்களிலிருந்து உள்நாடு வழியாக வரும் பண்டங்களுக்கு வாங்கப்படும் வரிவகை (வின்.); land customs, duty.

*[கரை + வழி + தீர்வை.]*

**கரைவழிநாடு** *karaivalinadu,* பெ.(n.) உடுமலைப் பேட்டை வட்டத்தில் உள்ள சோழமாதேவி என்ற ஊர் அமைந்துள்ள பகுதியின் பழைய நாட்டுப் பெயர்; the old name of the region involving Chozhamadevi in Udumalpet taluk. *"கரை வழிநாட்டு சோழமா தேவினல்லூர்" (தெ.இ.கல். தொ.26. கல்.243.)*

*[கரை + வழி + நாடு.]*

**கரைவாடை** *karai-vāḍai,* பெ.(n.) வடமேல் காற்று (வின்.); north-west wind.

*[கரை + வாடை. கரை = மேடு, மேற்கு. வாடை = வடக்கிலிருந்து வீசும் காற்று.]*

**கரைவாரம்** *karaivāram,* பெ.(n.) நெல்வயல் பக்கத்தில் உள்ள நிலம் ; land adjoining paddy fields.

ம. கரவாரம்

*[கரை + வாரம். வாரம் = பக்கம்.]*

**கரைவாளை** *karai-vāḷai,* பெ.(n.) அலைவாய்ப் பரப்பில் மேயுமொரு வகை வாளைமீன்; a kind of sea-fish.

*[கரை + வாளை.]*

**கரைவான்** *karaivāṉ,* பெ.(n.) காக்கை; crow.

*[கரை → கரைவான்.]*

**கரைவிளங்கு** *karai-viḷaṅgu,* பெ.(n.) சிறியமரவகை (L.); a species of white Cedar.

*[கரு → கரை + விளங்கு.]*

**கரைவு** *karaivu,* பெ.(n.) 1. கரைகை; dissolving. 2. மன இளக்கம் (வின்.); tenderness of mind. 3. சரிவு; slope. மலைக்கரைவு (இ.வ.).

*[கரை → கரைவு.]*

**கரைவெட்டி** *karaivetti,* பெ.(n.) பெரம்பலூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Perambalur dt.

*[கரை + வெட்டி + கரைவெட்டி. மண்ணை வெட்டிக் கரை உயர்த்துவோர் குடியிருப்பு.]*

**கரோடி** *karōḍi,* பெ.(n.) மண்டையோட்டு மாலை; garland of skulls. *"கரோடி விரிசடைமேல் ..... அணி நாயகன்" (தேவா. 524. 8.).*

*[கரு + ஒடு + இ – கரோடி. ஒடு = மண்டையோடு 'இ' உடைமை குறித்த ஈறு.).]*

**கரோடிகை** *karōḍigai,* பெ.(n.) 1. **கரோடி** பார்க்க; see *karōḍi. "புலவுகமழ் கரோடிகை யுடையபுனிதர்" (பதினொ. கோயினான் மணி. 23.).* 2. கழுதை; donkey.

*[கரோடி → கரோடிகை.]*

**கரோய்நாடு** *karōiy-nāḍu,* பெ.(n.) கிரேக்கப் பயணி *"தாலமி"* கொற்கைப் பகுதிக்குத் தனது நூலில் சுட்டும் பெயர்; the term used by Ptolemy in his travalogue to represent Korkai port.

*[கொற்கை → கரோய் (இ.வ.).]*

**கல்(லு)[1]–தல்** *kallu-,* 14 செ.குன்றாவி.(v.t.) 1. குத்துதல்; to pierce, to stab, to make a hole. 2. தோண்டுதல்; to dig.

*[குல் → கல் (கல்லு). குல் = குத்தற்கருத்துவேர்.]*

**கல்[2](லு)–தல்** *kal(lu)* 14 செ.குன்றாவி.(v.t.) 1. தோண்டி வெளிக்கொணர்தல், தோண்டி எடுத்தல்; to dig out. 2. கல்லடைப்பை நீக்குதல்; to remove the obstruction of the stone.

*[உல் → குல் → கல். குல் = குத்தற்கருத்துவேர்.]*

**கல்[3](ற்)–த(ற)ல்** *kal-,* 9 செ.கு.வி.(v.i.) 1. படித்தல்; to learn, study. *"கல்லென்று தந்தை கழற" (நாலடி, 253.).* 2. பயின்றறிதல்; to practise, as arts; to acquire skill in the use of arms. *"கல்லாமா வன்னார்" (குறள். 814.).*

தெ.கரசு; ம., க., து.கல்; பட. கல்லு.

*[குல் → கல். கல்லுதல் = தோண்டுதல். ஆய்தல், ஆய்ந்தறி தல்.]*

**கல்[4]** *kal,* பெ.(n.) 1. வெட்டி எடுக்கப்பட்ட பெருங்கல்; stone. *"வாழ்நாள் வழியடைக்குங் கல்" (குறள். 38.).* 2. சிறுகல்; gravel, pebble, grit. *"கற் கொண்டெறியுந் தவறு" (நாலடி. 364.).* 3. பாறை; boulder, ledge, crag. *"கல்லகழ் கிடங்கின்" (மலைபடு. 91.).* 4. மலை; rock, hill, mountain. *"கல்சேர்பு மாமழை தலைஇ" (பதிற்றுப். 84, 23.).* 5. சிவப்புக்கல் (இரத்தினம்); precious stone. குருவிந்தக்கற்கள் (கம்பரா. சித்திர. 17.). 6. காவிக்கல்; red ochre, reddle, *"முக்கோலுங் கற்றோய் முழுமடியும்" (இலக். வி. 707, உரை.).* 7.முத்து; pearl. *"கற்குளிமாக்கள்" (42, 2.).* 8. வீரக்கல்; memorial stone in a village, as for a hero. *"பலர் என்னை முன்னின்று கன்னின்றவர்" (குறள், 771.).* 9. நீத்தார் நினைவால் இறந்தார் பொருட்டுப் பத்து நாளைக்கு நாட்டப்படுங் கல்; a stone fixed in the house of a deceased person for ten days since his demise. 10. மரகதக் குற்றம் எட்டனுள் ஒன்று (சிலப். 14:184, உரை.); a flaw in emerlads, one of eight maragada-k-kurram. 11. செங்கல் (கொ.வ.); brick. 12. ஒரு கல் தொலைவு அளவுக்கு நாட்டுங்கல்; milestone 13. ஒரு கல் தொலைவு (5280 அடி நீளங்கொண்டது) (mod.); mile. 14. அரைகல், ஆட்டுக்கல் முதலானவை;

grinding or pounding stone, etc. 15. எல்லைக்கல்; boundary stone. 16. சாணைக்கல்; a sharpening stone. 17. சிறுநீரகத்தில் உருவாகும் கல்; stone in the bladder. 18. கடுமையான பொருள்; a hard substance. 19.தோசை முதலியன சுடும் தட்டையான கல்; griddle for frying dosai, etc. 20. உப்பின் கட்டி; a crystal of bit of salt.

**ம.** கல்லு; **க.** கல்; கலு, கல்லு; **தெ.** கல்லு, கலு. கண்ட்லு (பன்மை); **து., பட., எரு.** கல்லு; **துட., கோத.** கல்; **குட.** கல்லி; **கை.** கல்; **பர்.** கெல்; **கட.** கன்ட், கண்டு, கண்கல் (பன்மை); **கோண்டி.** கல்/கள்; **இரு.** கல்லு; **கொண்.** கலு; **குரு.** கல்லு; **பிரா. கல்.**

**Sinh.** gal; **Gael.** clach; **Ir.** Chloich. Serbo-croation; komen. **L.** calculus.

**W.** carreg; **Afrik**. klip; **E.** hill, hillock; **Nubian.** kulu; **Hebrew**. sela; **Skt**. sal / sila, Chinishanghai. (k = s & lan) **San. Chin.** Nanking, pelcing; **Contonese & Amay.** shan / shan. **AS.** hill; **ME.** hil, hul, hull; **OE.** hyll; **MDU.** hil, hilk; **Lita.** kalnos; **L.** collis; **GK.** kolenos; **LG.** hull; **ON.** hallr; **Goth.** hallus.

Kal, a stone. comp. Lappish Kalle, also keke or kerke; Lesghian gul; kamtsc hadale kual, kualla. Probably these words have an ulterior connection with the Finnish Kiwi; Hungarian Kō; Ostiak Key, Kauck. Comp. also (through the interchange of l and r) the Tamil krā, gravel, a pebble, with the Greek XEP-a's (cher-as), gravel and XEP-Mas (cher-mas); a stone, and the Armenian K'ar, Kuar, a stone. The Dravidian root cannot be traced further than Kal, a stone; but the corresponding Lappish Kalle appears to be derived from, or connected with, Kalw-at, to become hard. Comp. also karra, Lappish, hard, rough (C.G.D.F.L. P. 616.).

*[குல் → கல். கல் = குத்துதல். கற்காலமுதலே நிலத்தைக் குத்திக்கிளைத்துக் கிழங்கு அகழவும் ஏனைய உணவுப் பண்டங்களை உடைத்து உண்ணவும் பயன்பட்டதால் இப்பெயர் பெற்றது. கல்லுவது கல் என்றாயிற்று.]*

**கல்**[5] *kal,* வி.அடி. (v.r.) கருமைக் கருத்து வேர்ச்சொல் (வே.க.119.); verbal base denoting darkness and black colour.

**கல்**[6] *kal,* பெ.(n.) ஒலிக்குறிப்பு; onom. expression signifying sound.

*[குல் → கொல் (கொல்லெனல்) = ஒலிக்குறிப்பு.]*

**கல்கண்டு** *kalkaṇḍu,* பெ.(n.) ***கற்கண்டு*** பார்க்க; see *kaṟkaṇḍu.*

*[கல் + கண்டு.]*

**கல்கம்பி** *kalkambi,* பெ.(n.) ***கற்கம்பி*** பார்க்க; see *kaṟkāmbi.*

*[கல் + கம்பி.]*

**கல்கரி** *kalkari,* பெ.(n.) ***கற்கரி***[2] பார்க்க; see *kaṟkari*[2].

**ம.** கல்க்கரி

**Welsh** : glo; **Guj** ; kolsa.

*[கல் + கரி.]*

**கல்கலிங்கி** *kalkaliṅgi,* பெ.(n.) ***கற்கலிங்கி*** பார்க்க; see *kaṟkaliṅgi.*

*[கல் + கலிங்கி.]*

**கல்கவி உத்தரம்** *kalkavi-utharam,*பெ.(n.) கற்றளி வாயிலில் இரண்டு நிலைக் கற்களின் மேல் அமையும் மேற்கல்; the top stone over the side vertical stones of the entrance. *"கல்வாசலில் கல்கவி உத்தரமும்"* (ஆவணம் 1971–2.).

*[கல் + கவி + உத்தரம்; கல்லில் வட்டப் பூவடிவம் செதுக்கி, அது கீழ் நோக்குமாறு அமைக்கப்படுவதால், கவிந்த உத்தரம் கவி உத்தரம் ஆயிற்று; உத்தரக் கற்கவி = கதவு நிலைக்கு மேற் சித்திரம் வகுக்கப்பட்ட உத்தரம் (நெடுநல். 82. உரை.). இச்சொல் கற்கவி உத்தரம் என்றிருத்தல் வேண்டும்.]*

**கல்காரம்**[1] *kalgāram,* பெ.(n.) பாறைக்கட்டடம்; stone building. நாலு அம்பலமும் திருமடைப்பள்ளியும் ரிஷபமண்டபமும் கல்காரமாய்ப் பணி செய்வித்து (T.A.S. 179.).

*[கல் + காரம் (கொ.வ.) கரு → காரம். கருத்தல் = செய்தல். கல்காரம் = கற்பணி. இச்சொல் கற்காரம் என்றிருத்தல் வேண்டும்.]*

**கல்காரம்**[2] *kalkāram,* பெ.(n.) ***கற்காரம்*** பார்க்க; see *kaṟkaram.*

*[கல் + காரம். கல் = கட்டி, கட்டியானது.]*

**கல்கி** *kalki,* பெ.(n.) ***கற்கி***[2] பார்க்க; see *karki*[2].

**கல்கூனி** *kal-kūṉi,*பெ.(n.) பச்சை நிறமுடைய இறால் (முகவை. மீனவ.); greenish seer-fish.

*[கல் + கூனி.]*

**கல்கோட்டம்** *kal-kōṭṭam*, பெ.(n.) இறந்தவரின் நினைவாக 15–ஆம் நாள் நடத்தப்படும் நடப்பில் (சடங்கில்) இறந்த இடத்தில் அல்லது வீட்டின் ஓரிடத்தில், பூக்களாலும் வாழைப்பட்டைகளாலும் அமைக்கும் வீடு (செங்கை.); a temporary shed built with flowers and barks of plantain in a house for performing ritual, in memory of a dead person on 15th day from his death.

*[கல் + கோட்டம்.]*

**கல்சட்டி** *kalcaṭṭi*, பெ.(n.) ***கற்சட்டி*** பார்க்க; see *karcaṭṭi*.

*[கல் + சட்டி.]*

**கல்சாலர்வேலை** *kal-sālar-vēlai*, பெ.(n.) தேன்கூடு போல் செய்யப்பட்ட செங்கற் கட்டடவேலை (கட்டட. நாமா.); an ornamental building works.

*[கல் + சாலர் + வேலை; சாளரம் → சாலர்.]*

**கல்சிலை** *karsilai*, பெ.(n.) ***கற்சிலை*** பார்க்க; see *karsilai*.

*[கல் + சிலை.]*

**கல்சுத்தி** *kalšutti*, பெ.(n.) 1. கல்லுடைக்கும் சுத்தியல்; a hammer for breaking stones. 2. கல்லாலான சுத்தியல்; a hammer with a stone head.

*[கல் + சுத்தி.]*

**கல்தறி** *kal-tari*, பெ.(n.) தூண் (இ.வ.); post, pillar.

*[கல் + தறி.]*

**கல்திட்டை** *kaldiṭṭai*, பெ.(n.) பெருங்கற்கால ஈமச்சின்னம்; an indication of Megalithic burial.

*[கல் + திட்டை. தரைக்குள் புதைக்கப்பட்ட, ஈமப்பேழை, கல்லறை ஆகியவற்றின் மேல் வட்டவடிவில் அடுக்கிய கற்களும் குவித்த கற் குவியலும் கல் திட்டை எனப்படும்.]*

**கல்தும்பி** *kal-tumbi*, பெ.(n.) (தஞ்.மீன்.); a kind of sea fish.

*[கல் + தும்பி.]*

**கல்தூண்** *kal-tūṇ*, பெ.(n.) ***கற்றூண்*** பார்க்க; see *karrūṇ*.

**ம.** கல்த்தூண்; **பட.** கல்லகம்பு; **து.** கல்லதகம்ப.

*[கல் + தூண்.]*

**கல்தேக்கு** *kaltēkku*, பெ.(n.) ***கற்றேக்கு*** பார்க்க; see *karrēkku*.

**தெ.** கல்லதேக்கு

*[கல் + தேக்கு.]*

**கல்நடுதல்** *kal-naḍudal*, பெ.(n.) இறந்தார்பொருட்டு நடத்தும் நிகழ்வு; rite of planting a stone as a symbol of a deceased person, in funeral ceremonies.

*[கல் + நடுதல். **நடுகல்** பார்க்க.]*

**கல்நடு–தல்** *kalnaḍu-*, 17 செ.குன்றாவி.(v.t.) மறவன் நினைவாகக் கல்நடுதல்; to erect a stone (pillar) in memory of a hero.

**க.** கல்நாடு

*[கல் + நடு.]*

**கல்நவரை** *kalnavarai*, பெ.(n.) கடல்மீன்வகை; a sea-fish, purple red, attaining at least 16 in. in length.

**ம.** கல்நவர

*[கல் + நவரை.]*

**கல்நாட்டு–தல்** *kalnāṭṭu-*, 5 செ.குன்றாவி.(v.t.) மறவன் நினைவாகக் கல் நடுதல்; to set an hero stone (கருநா.).

**க.** கல்நாட்டு, கல்நட்டு, கல்நடு, கல்நாட்டு, கல்நாடு.

*[கல் + நாட்டு.]*

**கல்நாடு**[1] *kalnāḍu*, பெ.(n.) 1. மலைநாடு; hilly region. 2. கன்னட நாட்டின் பழைய பெயர்; an ancient name of Karnataka state.

*[கல் + நாடு. கல் = மலை. (ஒ.நோ. கல்லிறந்தோரே = மலை கடந்து சென்றவர்) கல் நாடு = மலைகள் அடர்ந்த நிலப்பகுதி. கருநாடக மாநிலம் மலைகள் மிகுந்த இயற்கைப் பாங்குடையதாதலால் பழங்காலத்தில் இதனை கல்நாடு என்றழைத்தனர். இது நாளடைவில் கல்நாடு – கன்னாடு – கன்னடம் என அந்நாட்டு மொழியைக் குறிக்கும் பெயராகவும் திரிபுற்றது. கன்னட அகரமுதலியில் "கன்னடமே, கர்னாட்ட நாமம்", "கன்னடம் நான்காயிரம்" – காவேரி கோதாவரிக்கிடையில் 4000 வேலி நிலப்பரப்பு எனும் மேற்கோள்கள் எடுத்தாளப் பட்டுள்ளன.]*

**கல்நாடு**[2] *kalnāḍu*, பெ.(n.) 1. வீரக்கல்; hero-stone, cenotaph *"நாகத்தைச் சிறு கட்டியார் கல்நாடு"*

(S.I.I. V.11. 345.). 2. போரில் இறந்த வீரன் நினைவாகக் கல்நட்டு, அவன் உறவினர் வளர்ச்சிக்கு அளிக்கப்பட்ட ஆவணம்; the deed shows the presents offered to the relations of a hero after erecting hero stone in memory of that particular hero. 3. வீரச்சாவு அடைவோருக்கு நடுகற்கள் வைப்பதற்கு ஊரின் நடுவே ஒதுக்கப்பட்ட பார்வையிடம்; an allotted place in a village for erecting herostone in memory of hero's death.

*[கல் + (நாட்டு) நாடு – கல்நாடு. இது கல்நாட்டு என்றிருத்தல் வேண்டும் (கொ.வ.).]*

**கல்நார்** *kal-nār*, பெ.(n.) 1. சித்த மருந்து வகைகளி லொன்று; a kind of medicine in siddha. 2. தீப் பிடிக்காத ஒருவகைக் கூட்டுப் பொருள்; a kind of compound which is non-inflammable (fire proof asbestos).

**மறுவ.** கல்லுக்குள் சவளை

**க.** கல்நாரு, கல்லநாரு, கல்லுநாரு; **ம.** கல்நாரு.

*[கல் + நார்.]*

**கல்நார்பற்பம்** *kalnār-p-paṟpam*, பெ.(n.) கல்நார்ப் பொடி; calcinated country asbestos (சா.அக.).

*[கல்நார் + பற்பம்.]*

**கல்நிலை** *kal-nilai*, பெ.(n.) கல்லால் அமைந்த வாயில்; door frame made of stone.

**பட.** தாரங்கல்லு

*[கல் + நிலை.]*

**கல்நீர்** *kalnīr*, பெ.(n.) கருப்பத்திலுண்டாகும் பனிக்குடத்து நீர்; ammontic fluid contained in a sac in the womb (சா.அக.).

*[கல் + நீர்.]*

**கல்நுங்கு** *kal-nuṅgu*, பெ.(n.) முதிர்ந்த நுங்கு (இ.வ.); hard kernel of palmyra fruit.

*[கல் + நுங்கு.]*

**கல்நெஞ்சம்** *kalneñjam*, பெ.(n.) ***கன்னெஞ்சம்*** பார்க்க; see *kaṉṉenjam*.

*[கல் + நெஞ்சம்.]*

**கல்பட்டறை** *kalpaṭṭarai*, பெ.(n.) ***கற்பட்டறை*** பார்க்க; see *kaṟpaṭṭarai*.

*[கல் + பட்டறை.]*

**கல்பட்டன்** *kalpaṭṭaṉ*, பெ.(n.) ***கற்பட்டன்*** பார்க்க; see *kaṟpaṭṭaṉ*.

*[கல் + பட்டன்.]*

**கல்பட்டு** *kalpaṭṭu*, பெ.(n.) ***கற்பட்டு*** பார்க்க; see *kaṟpaṭṭu*.

**ம.** கல்பட்டு

*[கல் + பட்டு.]*

**கல்படிவு** *kalpaḍivu*, பெ.(n.) ***கற்படிவு*** பார்க்க; see *karpaḍivu*.

*[கல் + படிவு.]*

**கல்பணம்** *kalpaṇam*, பெ.(n.) ***கற்பணம்*** பார்க்க; see *kaṟpaṇam*.

**ம.** கல்பணம்

*[கல் + பணம்.]*

**கல்பிடிப்புவேலை** *kal-piḍippu-vēlai*, பெ.(n.) செங்கல் ஒன்றோடொன்று சேரும்படி இணைத்துச் செய்யுங் கட்டட வேலை (யாழ்ப்.); bonding of bricks.

*[கல் + பிடிப்பு + வேலை (கொ.வ.). இது கற்பிடிப்பு வேலை என்றிருத்தல் வேண்டும்.]*

**கல்பிணைப்பு** *kalpiṇaippu*, பெ.(n.) ***கற்பிணைப்பு*** பார்க்க; see *kaṟpiṇaippu*.

*[கல் +பிணைப்பு.]*

**கல்மடி** *kalmaḍi*, பெ.(n.) 1. ஆவின் (பசுவின்) காய்மடி (இ.வ.); hard udder of a cow. 2. கெட்டிமுலை; hardened breast of a female (சா.அக.).

*[கல் + மடி. பால்சுரப்பு நன்கு அமையாததால் கல்மடி எனப்பட்டது.]*

**கல்மதம்** *kal-madam*, பெ.(n.) ***கன்மதம்*** பார்க்க; see *kaṉ-madam*.

*[கல் + மதம்.]*

**கல்மதமாலி** *kalmadimāli*, பெ.(n.) நெய்க் கொட்டான் மரம்; soap-nut tree (சா.அக.).

*[கல்மத + மாலி.]*

**கல்மதனம்** *kal-madaṉam,* பெ.(n.) கடல்மீன்வகை; a sea-fish, pale dull red, attaining at least a foot in length.

*[கல் + மதனம்.]*

**கல்மந்தாரம்** *kal-mandāram,* பெ.(n.) அடைபட்டு அலைவின்றியுள்ள முகில் (இ.வ.); cloudiness, the state of being overcast.

*[கல் + மந்தாரம். மங்கு → மந்து → மந்தரம் → மந்தாரம்.]*

**கல்மரம்[1]** *kal-maram,* பெ.(n.) ***கன்மரம்[1]*** பார்க்க; see *kaṉmaram[1].*

*[கல் + மரம்.]*

**கல்மரம்[2]** *kalmaram,* பெ.(n.) ***கன்மரம்[2]*** பார்க்க; see *kaṉmaram[2].*

*[கல் + மரம்.]*

**கல்மரவை** *kal-maravai,* பெ.(n.) கற்சட்டி (திருநெல்.); utensils made of potstone.

*[கல் + மரவை.]*

**கல்மழை** *kal-maḻai,* பெ.(n.) ***கன்மழை*** பார்க்க; see *kaṉmaḻai.*

**க.** கல்மளெ, கலுமளெ, கலுவளெ; **பட.** கல்லுமே.

**AS.** hagol; **Gee.** hagl; **Due., Dan., G.,** hagel; **OE.** hagalian, hagol; **ME.** hagel, hawel; **OS.** hagal; **ON., Dan.,** hagl; **OHG.** hagl.

*[கல் + மழை.]*

**கல்மா** *kalmā,* பெ.(n.) ***கன்மா*** பார்க்க; see *kaṉmā.*

*[கல் + மா.]*

**கல்மாசுணம்** *kalmāšuṇam,* பெ.(n.) கருங்குன்றிமணி; black jeweller's bead (சா.அக.).

*[கல் + மாசுணம்.]*

**கல்மாடம்** *kalmāḍam,* பெ.(n.) ***கன்மாடம்*** பார்க்க; see *kaṉmāḍam.*

**ம.** கன்மாடம்

*[கல் + மாடம்.]*

**கல்மாந்தம்** *kalmāntam,* பெ.(n.) குழந்தைகளுக்கு ஏற்படும் ஒருவகை ஈரல் நோய்; an affection of the liver in children (சா.அக.).

*[கல் + மாந்தம்.]*

**கல்மாரி[1]** *kalmāri,* பெ.(n.) ***கன்மழை*** பார்க்க; see *kaṉmaḻai.*

*[கல் + மாரி.]*

**கல்மாரி[2]** *kalmāri,* பெ.(n.) ***கன்மாரி[2]*** பார்க்க; see *kaṉmāri[2].*

*[கல் + மாரி.]*

**கல்மிளகு** *kalmiḷagu,* பெ.(n.) கெட்டி மிளகு; solid and matured pepper seed (சா.அக.).

*[கள் + மிளகு.]*

**கல்மீசை** *kal-mīcai,* பெ.(n.) கன்னமீசை (C.G.); whiskers.

*[கல் + மீசை.]*

**கல்மீன்** *kal-mīṉ,* பெ.(n.) பாறை இடுக்கில் தங்கும் மீன் (முகவை. மீனவ.); a kind of fish which lives in the gap of rocks.

*[கல் + மீன்.]*

**கல்முடி** *kal-muḍi,* பெ.(n.) உறுதியாகக் கட்டிய மணிமுடிச்சு (இ.வ.); well-tightened knot, hard like a stone.

*[கல் + முடி.]*

**கல்முடிச்சு** *kal-muḍiccu,* பெ.(n.) ***கல்முடி*** பார்க்க; see *kal-muḍi.*

*[கல் + முடிச்சு.]*

**கல்முதிரை** *kal-mudirai,* பெ.(n.) 1. கரும்புரசு மரம் (வின்.); karumpurasu, a tree. 2. கெட்டிப்பட்டதவசம்; hardened grain (சா.அக.).

*[கல் + முதிரை.]*

**கல்முரசு** *kalmurašu,* பெ.(n.) ***கன்முரசு*** பார்க்க→ (சா.அக.); see *kaṉmurašu.*

*[கல் + முரசு.]*

**கல்முருக்கு** *kalmurukku,* பெ.(n.) ***கலியாண முருக்கு*** பார்க்க; see *kaliyāṇamurukku.*

*[கல் + முருக்கு.]*

**கல்மூங்கில்** *kal-mūṅgil,* பெ.(n.) 1. உட்டுளை சிறுகிய கட்டியான மூங்கில் வகை; a variety of bamboo in which the hollow is half filled up. 2. முள்ளில்லாத சிறுமூங்கில் வகை (L.); thornless reed.

*[கல் + மூங்கில்.]*

**கல்மூடி** *kalmūḍi,* பெ.(n.) குப்பி வாயையடைக்கும் கண்ணாடிக்கல்; glass-stopper which closes the mouth of a bottle any vessel (சா.அக.).

*[கல் + மூடி.]*

**கல்மொந்தன்** *kal-mondaṉ,* பெ.(n.) வாழைவகை (இ.வ.); a species of plantain.

*[கல் + மொந்தன். மொந்து → மொந்தன் = தடித்த வாழை வகை.]*

**கல்யாணச்சாவு** *kalyāṇaccāvu,* பெ.(n.) ***கலியாணச் சாவு*** பார்க்க; see *kaliyāṇccāvu.*

*[கலியாணச்சாவு → கல்யாணச்சாவு.]*

**கல்யாணப்படிப்பு** *kalyāṇa-p-paḍippu,* பெ.(n.) திருமாலுக்கு நடத்தும் ஒருவகை விழா (ம.அக.); a kind of festival to Vishnu.

*[கலியாணம்→ படிப்பு.]*

**கல்யாணம்** *kalyāṇam,* பெ.(n.) ***கலியாணம்*** பார்க்க; see *kaliyāṇam. "கல்யாணஞ் செய்து கடிபுக்கு" (நாலடி. பிறர்மண.9.).*

**எரு** : கல்யாணம்

**Vedic**. kalyan

*[கலியாணம் → கல்யாணம்.]*

**கல்யானை** *kalyāṉai,* பெ.(n.) கனத்த மேற்றோல் கொண்டதும் மூக்கின் மேல் கொம்பு வளர்ந்தது மாகிய நாற்கால் விலங்கு (காண்டாமிருகம்); rhinoceros (சா.அக.).

*[கல் + யானை – கல்யானை. கல்போன்று உறுதியான தோலுடம்பு பெற்று யானையைப் போன்ற உருண்ட உடலமைப்புக் கொண்டிருத்தல் பற்றி இது தமிழில் கல்யானை எனப்பட்டது. பழந்தமிழர் இவ்விலங்கை வடஇந்தியாவில் கண்டிருத்தல் கூடும்.]*

**கல்லக்காரம்**[1] *kal-l-akkāram,* பெ.(n.) பனங் கற்கண்டு (யாழ்ப்.); candied molasses made from palmyra juice.

**ம.** கல்லக்காரம்

*[கல் +அக்காரம் – கல்லக்காரம்.]*

**கல்லகச்சத்து** *kal-l-aga-c-cattu,* பெ.(n.) கற்சத்து (பதார்த்த. 1130.); fossil or mineral drug, supposed to ooze from mountains, bitumen.

*[கல் + அகம் + சத்து –. கல்லகம் = மலை.]*

**கல்லகநாடு** *kallaganāḍu,* பெ.(n.) கிபி.1446 அன்று தென்காசிக் கோயிலில் எழுதப்பட்ட ஒப்பந்தத்தில் குறிப்பிடப்படும் நாடு; a region mentioned in an agreement drawn at Tenkasi Temple on 6.5.1446 AD. *"கல்லகநாட்டு வீரசிகாமணிப்பற்றில் துட்டார்வர்கண்டப் பேரேரி உள்ளிட்ட பற்றும்" (தெ.இ.கல்.தொ. 26; கல்.561).*

*[கல் + அகம் – கல்லகநாடு. (கற்பாங்கான நாடு)]*

**கல்லகம்** *kallagam,* பெ.(n.) 1. மலை (திவா.); mountain. *"கல்லகம் குடைந்த செவ்வேற் கந்தன்" (கந்தபு. வள்ளி. 257.)* 2. கல்வீடு; stone house. 3. பொன்; gold (த.மொ.அ.).

**Norw**; gyle

*[கல் + அகம் – கல்லகம்.]*

**கல்லகாரம்** *kallagāram,* பெ.(n.) செங்குவளை (யாழ்.அக.); red Indian water-lilly (செ.அக.).

*[கல் + அக்காரம் – கல்லக்காரம் → கல்லகாரம். (பனங்கற்கண்டுபோன்ற நிறமுடையது.)]*

**கல்லங்கரை** *kallaṅgarai,* பெ.(n.) 1. கற்பாங்கான; நிலம்; stony-bank. 2. ஓர் ஊர்ப்பெயர்; name of a village.

*[கல் + அம் + கரை.]*

**கல்லங்காய்** *kal-l-aṅgāy,* பெ.(n.) இறுகிய காய் (வின்.); fruit which becomes as hard as stone.

*[கல் + அம் + காய் – 'அம்' சாரியை.]*

**கல்லங்கோரை** *kal-l-aṅ-gōrai,* பெ.(n.) கோரை வகை; a kind of sedge.

*[கல் + அம் + கோரை. 'அம்' சாரியை.]*

**கல்லச்சகம்** *kallaccagam,* பெ.(n.) அச்சுப்பொறி களைக் கொண்ட அச்சகம்; litho press.

*[கல் + அச்சகம்.]*

**கல்லட்டிகை** *kall-aṭṭigai,* பெ.(n.) அரியமணிகள் வைத்திழைக்கப் பெற்ற அட்டிகையணி; necklace set with precious stones.

*[கல் + அட்டிகை.]*

**கல்லடார்** *kal-l-aḍār,* பெ.(n.) விலங்குகளை அகப்படுத்தும் பொறி; trap for tigers and other animals. *"புனவன் சிறுபொறி மாட்டிய பெருங்கல்லடார்" (நற்.119.).*

*[கல் + அடார்.]*

**கல்லடி** *kallaḍi,* பெ.(n.) கற்கடகச் செய்நஞ்சு; a kind of native arsenic (சா.அக.).

*[கல் + அடி.]*

**கல்லடி-த்தல்** *kal-l-aḍi-,* 4 செ.கு.வி.(v.i.) 1.கல் வெட்டுதல்; to hew or cut stone. 2. காலிற் கல்லடி படுதல்; tc strike the foot against a stone.

*[கல் + அடி.]*

**கல்லடிக்காளான்** *kallaḍi-k-kāḷāṉ,* பெ.(n.) கல்லடியிலும் பாறைகளின் சந்துகளிலும் முளைக்கும் பெருங்காளன்; a large species of mushroom generally found grown under stone or in the crevices of rocks (சா.அக.).

*[கல்லடி + காளான்.]*

**கல்லடிக்குறிச்சி** *kallaḍi-k-kuṟicci,* பெ.(n.) நெல்லை மாவட்டம், அம்பா சமுத்திரம் வட்டம் கல்லிடைக் குறிச்சியின் பழைய பெயர்; old version of kallidaikkurichi in Ambasamudram taluk; Nellai district. *"தங்கள் பற்றில் தென்பிடாகையில் கல்லடைக் குறிச்சியில் வேணாவுடையாள்" (தெ.இ.கல்.தொ. 23, கல்.105.). "கல்லடிக் குறிச்சி நாலா இரவி விண்ணகர் எம்பெருமானுக்கு" (தெ.இ.கல்.தொ.23. கல்.107.).*

**மறுவ.** கல்லடைக் குறிச்சி, கல்லிடைக் குறிச்சி.

*[கல் + அடி + குறிச்சி (கல் = மலை) மலையடிவாரத்துக் குடியிருப்பு.]*

**கல்லடிச்சேம்பு** *kal-l-aḍi-c-cēmbu,* பெ.(n.) சேம்பு வகை (வின்.); an edible vegetable, an inferior kind of cembu.

*[கல்லடி + சேம்பு.]*

**கல்லடிப்பி-த்தல்** *kallaḍippi-,* பி.வி.(v.caus.) 1. கல்லில் செதுக்கச் செய்தல்; to cause to engrave stones. குமுக்கப் படைக்கு மேல் திருக்கற் சாத்த வாங்கி கோவளத்து கல்லடிப்பிக்கவும் படவு கூலிக்கும் போகவிட்டோம் (S.i.i. Part. 11 No. 561. S.No. 23.). 2. பெரும் கற்களை உடைக்கச் செய்தல்; to cause to break big stones.

*[கல் + அடி + பி. பி-காரண வினைகுறிக்கும் பிறவினை ஈறு.]*

**கல்லடிமூலம்** *kallaḍi-mūlam,* பெ.(n.) பாறைகளின் அடியினின்று வெட்டியெடுக்கப்படும் நஞ்சு; a mineral poison, being found under rocks (சா.அக.).

*[கல்லடி + மூலம்.]*

**கல்லடியிழுவைக்கூலி** *kallaḍ-y-iḻuvaikkūli,* பெ.(n.) கல்குதைக் குழியிலிருந்து ஓரளவு செதுக்கிய கற்களை, மேலும் செப்பம் செய்வதற்காக இழுத்து வந்து கோயில் களத்தில் சேர்ப்பதற்கான கூலி; payment made to drag the semi dressed stones to the temple site for final dressing. "கல்வாசலில் கல்கவி உத்திரமும், கோமுகமும், மலையினின்று கொ(டு)வரக் கல்லடியிழுவைக் கூலி" (ஆவணம் 1991-2) .

*[கல் + அடி + இழுவை + கூலி.]*

**கல்லடைசல்** *kallaḍaisal,* பெ.(n.)1. நீர்த்தாரையில் கல்லடைத்துக் கொள்ளல்; obstruction of stone in the urethra. 2. கல்லுறுத்துதல் ; irritation due to rubbing of the stone in the bladder (சா.அக.).

*[கல் + அடைசல்.]*

**கல்லடைப்பு** *kal-l-aḍaippu,* பெ.(n.) 1. நீர்டைப்பு நோய்வகை; stone in the bladder, retention of urine by gravel. 2. குழியை, குறிப்பாகச் சவக்குழியை மூடப்பயன்படுத்தும் கல்; a stone lid especially of a grave (சேரநா.).

*[கல் + அடைப்பு.]*

**கல்லண்டம்** *kal-l-aṇḍam,* பெ.(n.) அண்டவீக்க நோய்வகை (m.l.); blood-swelling.

*[கல் + அண்டம்.]*

**கல்லணை**[1] *kal-l-aṇai,* பெ.(n.) 1. கல்லாற் கட்டிய நீரணை; dam built of stone, anicut, causeway. 2. சோழமன்னன் கரிகாலனால் கட்டப்பட்ட அணை; the dam built by Chola King Karikālaṉ.

*[கல் + அணை.]*

சோழ மன்னன் கரிகாலனால் காவிரியாற்றின் மீது திருச்சிக்கருகே கட்டப்பட்ட கல்லணை பாசன அறிவியல் அணையாக இன்றளவும் கருதப்படுகிறது. இது ஆயிரத்தெண்பது அடி நீளமுடையது. சோழ மன்னர்கள் இலங்கையை வென்ற பொழுது அங்கிருந்து சிறைபிடிக்கப்பட்ட பன்னீராயிரம் பணியாளர்களைக் கொண்டு கட்டப்பட்ட அணை.

**கல்லணை**[2] *kallaṇai,* பெ.(n.) குதிரைமேல் உள்ள இருக்கை; seat on the hourse. *"வாளுழவர் வாம்பரிக்கும் கல்லணைகள் கைக்குங் கலைசையே" (கலைசைச். 42.).*

*[கலணை → கல்லணை.]*

**கல்லணை**[3] *kal-l-aṇai,* பெ.(n.) பழைய வரிகளுள் ஒன்று; a tax; *"மேற்காவிரி மாகணைக்குள்ளே நடந்துவருகிற கோடி, சூலவரி, கல்லணை, நாட்டுக் காணிக்கை, இராயவத்தனை, ஹவதரவத்தனை உட்பட நடந்து வருகிற தொண்ணூறு பொன்னும்" (தெ.இ.கல். தொ.23 கல்.493).*

*[கல்+அணை–கல்லணை = கல்லால் அடைத்த கட்டுமானம். அதிலிருந்து பாயும் நீருக்காகச் செலுத்தும் வரி.]*

**கல்லத்தாணி** *kallattāṇi,* பெ.(n.) கல்லால் அமைக் கப்பட்ட சுமை தாங்கி; a porter's rest made of stone (சேரநா.).

**ம.** கல்லத்தாணி

*[கல் + அத்தாணி (மேற்கட்டு).]*



கல்லத்தாணி

**கல்லத்தி** *kal-l-atti,* பெ.(n.) 1. அத்திமரவகை; hill banyan. பாலைகல்லத்தி தோதகத்தி (மச்சபு. நைமிச.8.) 2. ஒருவகை அத்தி; nooga. 3. கல்லால்; stone banyan. 4. பூதாளம்; great council tree (சா.அக.).

**க., ம.** கல்லத்தி.

*[கல் + அத்தி.]*

**கல்லத்துவம்** *kallattuvam,* பெ.(n.) செவிட்டுத் தன்மை; the state or condition of being deaf (சா.அக.).

*[கல்லம் → கல்லத்துவம்.]*

**கல்லதர்** *kal-l-adar,* பெ.(n.) பருக்கைக் கற்கள் பொருந்திய சிறுவழி; narrow path full of stones in a desert tract. *"கல்லத ரத்தங் கடக்க" (சிலப். 16, 57.) (செ.அக.).*

**க.** கல்லதாரி; **பட.** கல்லுதாரி

*[கல் + அதர். அதர் = வழி, பாதை.]*

**கல்லம்**[1] *kallam,* பெ.(n.) செவிடு (சங்.அக.); deafness.

**Skt.** kalla

*[கல் + அம்.]*

**கல்லம்**[2] *kallam,* பெ.(n.) 1. மஞ்சள்; turmeric. 2. விந்தியமலை; mount Vindhiya.

*[கல் + அம்.]*

**கல்லம்பலம்** *kallambalam,* பெ.(n.) கருங்கல் தரையமைத்த ஊரவை கூடும் அம்பலம்; village assembly, where the floor was paved with stones. *"இவ்வூர் கல்லம்பலத்து சந்திராதித்தவல் ஆற்றுத் தண்ணீர் அட்டுவதாகக் குடுத்தநிலம்" (தெ.கல்.தொ.8. கல்.607.).*

*[கல் + அம்பலம்.]*

**கல்லம்மை** *kallammai,* பெ.(n.) காயம்மை; stone-pox (சா.அக.).

*[கல் + அம்மை.]*

**கல்லரசி** *kallarasi,* பெ.(n.) ***கல்லரசு*** பார்க்க; see *kallarašu* (சா.அக.).

*[கல் + அரசி.]*

**கல்லரசு** *kal-l-aršu,* பெ.(n.) கொடியரசு மரம்; wild pipal-tree (செ.அக.).

*[கல் + அரசு.]*

**கல்லரவிந்தம்** *kal-l-ara vindam,* பெ.(n.) பூடு வகை, கற்றாமரை (மலை.); a mountain shrub (செ.அக.).

*[கல் + அரவிந்தம். அரவிந்தம் = தாமரை.]*

**கல்லரளி** *kal-l-arali,* பெ.(n.) 1. நச்சுக்கல்; poison stone. 2. சரளைக் காடுகளில் முளைக்கும் பூடு oleander. 3. காட்டரளி; wild oleander (சா.அக.).

*[கல் + அரளி.]*

**கல்லரிதாரம்** *kal-l-aridāram,* பெ.(n.) கட்டரிதாரம் (வின்.); orpiment or arsenic crystal.

*[கல் + அரிதாரம்.]*

**கல்லல்**[1] *kallal-,* தொ.பெ.(vbl.n.) 1. அரித்தல்; sifting, *"கரைகல்லித்திரை" (தேவா.10.).* 2. துருவல்; scooping. 3. தோண்டல்; boring. *"யோசனைய கலங்கல்லி" (திரு விளை – 11) (த.மொ.அ.).*

*[கல் + அல். 'அல்' தொ.பெ.ஈறு.]*

**கல்லல்**[2] *kallal,* தொ.பெ.(vbl.n.) கல்லடைப்பை நீக்குதல்; removing the obstruction of stone in the bladder.

*[கல் + அல். 'அல்' தொ.பெ.ஈறு.]*

**கல்லல்**[3] *kallal,* பெ.(n.) குழப்பம்; disturbance,chaos, confusion, tumult. *"கல்லலற வொன்றை யருள்வோனே" (திருப்பு. 291.).*

*[கல் + அல். 'அல்' தொ.பெ.ஈறு.]*

**கல்லல்**[4] *kallal,* பெ.(n.) ஒரே காலத்தில் பலர் பேசுவதாலெழு மொலி (யாழ்.அக.); noise due to many people speaking at the same time.

*[கல் → கல்லல்.]*

**கல்லல்**[5] *kallal,* பெ.(n.) மூன்று உடல் பொருந்திய மூன்று முகமுடைய ஒரு தோற்கருவி; a kind of musical instrument. *"தெண்கடிப்பு வாசித்த கல்லல் செறிய" (கல். 85. 23.).*

*[கல்லெனல்→ கல்லல்.]*

**கல்லல்**[6] *kallal,* பெ.(n.) ஓர் ஊரின் பெயர்; name of a village in (Pasumpon) Ramanathapuram district.

*[கல் + அல் – கல்லல் (கற்பாங்கு நிலம்).]*

**கல்லலகு** *kallalagu,* பெ.(n.) இசைக்கருவி வகையு ளொன்று; a kind of musical instrument. *"கல்லலகு பாணி பயின்றார்" (தேவா. 519, 1.).*

*[கல் + அலகு.]*

**கல்லலசு** *kallalašu,* பெ.(n.) ***கல்லலகு*** பார்க்க; see *kallalagu. "கல்லலசு துத்தரி யேங்க" (கல்லா. 34.).*

*[கல்லலகு → கல்லலசு.]*

**கல்லவடத்திரள்** *kallavaḍattiral,* பெ.(n.) ***கல்லவடம்*** பார்க்க; see kallavaḍam. *"கல்லவடத்திரண் மணிவாய்த் தண்ணுமை" (கல்லா. 39.) (த.மொ.அ.).*

*[கல்லவடம் + திரள்.]*

**கல்லவடம்** *kallavaḍam,* பெ.(n.) பறைவகையு ளொன்று; a kind of drum. *"கல்ல வடமிட்டுத் திசைதொழுதாடியும்" (தேவா. 576, 6.).*

*[கல் + அ + வடம்.]*

**கல்லவம்** *kallavam,* பெ.(n.) மலைநெல்; mountain paddy (சா.அக.).

*[கல் + அவம்.]*

**கல்லவல்** *kallaval,* பெ.(n.) நாடறிசொற் பொருள் பயப்பப் பிழையாமையை முதன்மையாகக் கொண்ட மிறைக்கவி வகை (யாப். வி. 511.); a kind of verse in which common words are used in their plain meanings.

*[கல் → கல்ல + வல். கற்கவல்லது, எளிதானது.]*

**கல்லவி** *kallavi,* பெ.(n.) சச்சவிர்ப்பூடு; honey sweet tree (சா.அக.).

*[கல் + அவி.]*

**கல்லவுத்து** *kallavuthu,* பெ.(n.) ஆனைப்பிச்சான் கொடி; battle of plassey creeper (சா.அக.).

*[கல் + அவுத்து.]*

**கல்லவுரி** *kallavuri,* பெ.(n.) ஒருவகை அவுரி; bastard indigo (சா.அக.).

*[கல் + அவுரி.]*

**கல்லழிஞ்சில்** *kal-l-aliñjil,* பெ.(n.) மரவகை (யாழ். அக.); a kind of tree.

*[கல் + அழிஞ்சில்.]*

**கல்லளை** *kal-l-aḷai,* பெ.(n.) 1. மலைக்குகை; cleft or cave in a rock or mountain. *"புலி சேர்ந்து போகிய கல்லளை போல" (புறநா. 86, 4.).* 2. மண்பானை வனையும் பொழுது சிறுகற்களால் உண்டாக்கும் துளை; a hole as in earthen-ware utensils (due to defective moulding.) (சேரநா.).

**ம.** கல்லள, கல்லழ.

*[கல் + அளை – கல்லளை (கற்குகை).]*

**கல்லறு–த்தல்** *kal-l-aṟu-,* 4 செ.கு.வி.(v.i.) பச்சை செங்கல் அறுத்தல் (கொ.வ.); to mould raw bricks.

*[கல் + அறு.]*

**கல்லறுப்புச்சட்டம்** *kallaṟuppu-c-caṭṭam,* பெ.(n.) செங்கற்கள் அறுக்கப்பயன்படும் மரச்சட்டம்; mould for making bricks.

*[கல்லறுப்பு + சட்டம்.]*

**கல்லறை**[1] *kal-l-aṟai,* பெ.(n.) 1. கல்லாலாகிய அறை; room having stone walls and roof. 2. குகை; cave, hewn in a rock, cavern. *"கல்லறையி னுழுவை சினங்கொண்டு" (தேவா. 1155, 4.).* 3. பிணக்குழி; vault, tomb hewn out in a rock, sepulchre, grave.

**க.** கல்லறெ; **ம.** கல்லற.

*[கல் + அறை.]*

**கல்லறை**[2] *kal-l-aṟai,* பெ.(n.) நிலத்தினடியில் யாரும் அறியாதபடி அமைத்திருக்கும் மூலபண்டார அறை. (இ.வ.); underground room or cellar for secretly storing main treasure.

*[கல் + அறை.]*

**கல்லறைப்பெட்டி** *kallaṟai-p-peṭṭi,* பெ.(n.) உறுதி யான பணப்பெட்டி; safety locker.

**மறுவ.** கல்லாப்பெட்டி

*[கல் + அறை + பெட்டி. இது இக்காலத்தில் கல்லாப்பெட்டி எனத் திரிந்துவிட்டது.]*

**கல்லறைப்பெட்டி**[2] *kallaṟai-p-peṭṭi,* பெ.(n.) பலசரக்கு வணிகரின் பணப்பெட்டி; grocer's cash box.

*[கல் + அறை + பெட்டி.]*

**கல்லன்** *kallaṉ,* பெ.(n.) 1. தீயோன்; vile, wicked, hard-hearted fellow. *"கழித்தவூன் முதலுண் கல்லன்" (சிவதரு. சுவர்க்கநரக. 30.)* 2. கற்றச்சன்; a stone mason (சேரநா.).

**ம.** கல்லன்

*[கல் + அன். கல் = கருமை, தீமை, இன்னல். 'அன்' ஆ.பா.ஈறு.]*

**கல்லாகம்** *kallāgam,* பெ.(n.) செங்குவளை; red Indian water lily (சா.அக.).

*[கல் → கல்லகம் → கல்லாகம். கல் = கருமை, கருமை கலந்த செம்மை.]*

**கல்லாகு–தல்** *kallāgu-,* 7 செ.கு.வி.(v.i.) கல்போன்று இறுகுதல்; to petrify.

*[கல் + ஆகு.]*

**கல்லாங்காசு** *kal-l-āṅ-kāsu,* பெ.(n.) சிறுவர் விளையாட்டிற் பயன்படுத்தும் வட்டமான ஓடு (வின்.); small round tile for a child's game.

**மறுவ.** கலவோடு

*[கல் + ஆம் + காசு. கல் = ஓடு.]*

**கல்லாங்காய்** *kallāṅgāy,* பெ.(n.) சிறுமியர் சிறுகற்களைக் கொண்டு ஆடும் விளையாட்டு; female children's play with small pebbles.

**மறுவ.** அஞ்சாங்கல்

**க.** கல்லாட

*[கல் + ஆம் + காய்.]*

**கல்லாங்குத்து** *kal-l-āṅkuttu,* பெ.(n.) வன்னிலம் (சொ.ஆ.க.29.); rugged, hard ground.

*[கல் + ஆம் + குத்து. 'அம்' சாரியை.]*

**கல்லாங்குத்துநிலம்** *kal-l-āṅ-kuttu-nilam,* பெ.(n.) மேற்பரப்பில் சிறுகற்களை மிகுதியாகக் கொண்ட நிலம் (முகவை ); hard or stony ground.

*[கல் + ஆம் + குத்து + நிலம்.]*

**கல்லாசாரி** *kallāšāri*, பெ.(n.) கல் வேலை செய்பவன்; a stone-mason (சேரநா.).

ம. கல்லாசாரி

*[கல் + ஆசாரி.* ***கல்லாசான்*** *பார்க்க.]*

**கல்லாசான்** *kal-l-āašān*, பெ.(n.) 1. கற்றச்சன் (கொ.வ.); stone mason. 2. கற்றச்சர் தலைவன் (வின்.); master mason, architect.

ம. கல்லாசாரி

*[கல் + ஆசான் – கல்லாசான்.]*

**கல்லாசிரியம்** *kallāširiyam*, பெ.(n.) ***கல்லுப்பனை*** பார்க்க; see *kallu-p-panai* (சா.அக.).

*[கல் + ஆசிரியம்.]*

**கல்லாடம்**[1] *kallādam*, பெ.(n.) 1. சிவன் கோவில்; name of a Šiva shrine. 2. கற்பாங்கான நிலம்; hard or stony ground. *"கல்லாடத்துக் கலந்தினிதருளி" (திருவாச. 2, 11.).*

*[கல் → கல்லடம் (ஊர்ப்பெயர்). கல்லடம் → கல்லாடம் (ஊர்ப்பெயரால் அமைந்த கோயில்.).]*

**கல்லாடம்**[2] *kallādam*, பெ.(n.) கல்லாடரால் அகப்பொருளின் துறையமைய நூறு அகவற் பாக்களாற் செய்யப்பட்ட ஒருநூல்; name of an amatory poem describing the erotic emotions in 100 agaval stanzas by Kallādar.

*[கல்லாடன் → கல்லாடம். கல்லாடனாரால் இயற்றப்பட்ட நூல் ( கருத்தனாகு பெயர்).]*

**கல்லாடர்** *kallādar*, பெ.(n.) 1. ***கல்லாடனார்*** பார்க்க; see *kallādaṉār*. *"ஆக்கவுங் கெடவும் பாடல் தரும் கபிலர் பரணர் கல்லாடர் மாமூலர்" (யாப்.வி.93, பக்.351.).* 2. கல்லாடநூல் இயற்றிய புலவர்; the author of Kallādam. *"கல்லாடர் செய்யனுவற் கல்லாட நூறும்" (கல்லா.பாயி.).*

*[கல்லாடம் → கல்லாடர். கல்லாடம் என்னும் ஊரிற் பிறந்தவர்.]*

**கல்லாடனார்** *kallādaṉār*, பெ.(n.) கடைக்கழகப் புலவருள் ஒருவர் (புறநா. 23.); a poet of the third Tamil academy (sangam). *"தொல்காப்பியத்துக் குரையிடையிட்ட விரகர் கல்லாடர்" (சிலப். 3.).*

*[கல்லாடம் → கல்லாடன் + ஆர். 'ஆர்' உ.ப.ஈறு. கல்லாடம் என்னும் ஊரிற் பிறந்ததனாற் பெற்றபெயர்.]*

**கல்லாடை** *kal-l-ādai*, பெ.(n.) காவியுடை; cloth dyed in red ochre, worn by those who have renounced the world. *"கோத்த கல்லாடையும்" (தேவா. 590. 2.).*

ம. கல்லாட

*[கல் + ஆடை. காவிக்கல்லின் நிறம் ஊட்டப்பட்ட துணி. கல் = காவிக்கல்.]*

**கல்லாணக்காணம்** *kallāna-k-kāṉam*, பெ.(n.) திருமணத்தின் பொருட்டுச் செலுத்தும் ஒரு பழையவரி (S.I.I. ii. 509.); an ancient marriage cess.

*[கலியாணம் → கல்லாணம் (கொ.வ.) + காணம்.]*

**கல்லாதார்** *kallādār*, பெ.(n.) ***கல்லார்*** பார்க்க; see *kallār*. *"மேற்பிறந்தா ராயினுங் கல்லாதார் கீழ்ப் பிறந்துங் கற்றார் அனைத்திலர் பாடு" (குறள். 409.).*

*[கல் + ஆ + த் + ஆர். 'ஆ' எ.ம.இடைநிலை. 'த்' இ.கா.இடைநிலை.]*

**கல்லாந்தலை** *kal-l-ān-dalai*, பெ.(n.) ஒருவகைக் கடல் மீன்வகை (யாழ்.அக.); a fish.

*[கல் + ஆம் + தலை.]*

**கல்லாப்பலகை** *kallā-p-palagai*, பெ.(n.) வணிகர்கள் அமரும் பலகை (தஞ்.); merchant's wooden seat.

*[கல்லறைப்பலகை → கல்லாப்பலகை.* ***கல்லறை பார்க்க.****]*

**கல்லாப்பாறை** *kallā-p-pāṟai*, பெ.(n.) மீன்வகை; caranse armatus (கட.பர.க.சொ.அக.).

*[கல் → கல்லா + பாறை.]*



கல்லாப்பாறை மீன்

**கல்லாப்பெட்டி** *kallā-p-petti*, பெ.(n.) ***கல்லறைப் பெட்டி*** பார்க்க (இ.வ.); see *kallaraippetti*

*[கல்லறைப்பெட்டி → கல்லாப்பெட்டி.]*

**கல்லாம்பல்** *kallāmbal,* பெ.(n.) நீர்க்குளிரி; water archer (சா.அக.).

*[கல் + ஆம்பல்.]*

**கல்லாமணக்கு** *kal-l-āmaṇakku,* பெ.(n.) புல்லாமணக்கு (m.m.); creeping castor.

*[கல் + ஆமணக்கு.]*

**கல்லாமறவர்** *kallāmaṟavar,* பெ.(n.) இயல்பாகவே மறத்தன்மையுடையவர்; natural heros.

*[கல் + ஆ + மறவர். படைப்பயிற்சியன்றிப் பிறவற்றைக் கல்லாத மறவர்.]*

**கல்லாரம்**[1] *kallāram,* பெ.(n.) 1. செங்கழுநீர். (பிங்.); red Indian water lily. *"கல்லாரமாலை மென் கூந்தற்கைக் காந்தட்கவுரி பங்கன்" (மருதூரந். 57.).*

*[கல் + ஆ + மை 'ஆ' எ.ம.இ.நி. 'மை' ப.பெ.ஈறு.]*

**கல்லாமை**[2] *kallāmai,* பெ.(n.) ஆமை வகை; starred tortoise.

**மறுவ.** கரட்டாமை

*[கல் + ஆமை.]*

**கல்லாய்-தல்** *kallāy-,* 2 செ.குன்றாவி.(v.t.) ***கல்லாராய்-தல்*** பார்க்க; see *kallāray.*

*[கல் + ஆய்.]*

**கல்லாய்வுநூல்** *kallāyvu-nūl,* பெ.(n.) கற்பாறைகளின் தோற்றம், அமைப்பு முதலியவை பற்றிய நூல்; petrology.

*[கல் + ஆய்வுநூல்.]*

**கல்லாயம்** *kal-l-āyam,* பெ.(n.) வரிவகை (S.I.I.viii.188.); a tax.

*[கல் + ஆயம்.]*

**கல்லார்** *kallār,* பெ.(n.) கல்லாதவர்; the unlettered or ignorant persons. *"கல்லார்கண் பட்ட திரு" (குறள், 408.).* 2. கீழ்மக்கள்; inferior people.

**ம.** கல்லாதவர்

*[கல் + ஆ + ர்.]*

**கல்லாரம்**[1] *kallāram,* பெ.(n.) 1. செங்கழுநீர். (பிங்.); red Indian water lily. *"கல்லாரமாலை மென் கூந்தற்கைக் காந்தட்கவுரி பங்கன்" (மருதூரந். 57.).*

2. ***நீர்க்குளிரி*** *(பிங்.)* பார்க்க; see *nīr-k-kuḷiri.* 3.கருங்குவளை (திவா.); blue nelumbo (த.மொ.அ.).

**மறுவ.** செங்குவளை, அரத்தம், எருமணம்.

**க.** கல்லார

*[கல்லகாரம் → கல்லாரம்.]*

**கல்லாரம்**[2] *kallāram,* பெ.(n.) (த.மொ.அ.) மஞ்சள் (அக.நி.); turmeric.

*[கல் → கல்லாரம்.]*

**கல்லாரல்** *kal-l-āral,* பெ.(n.) கற்களுக்கிடையில் பதுங்கி வாழ்வதும், கூர்மையான வாலையுடையதும் இரண்டடிக்கு மேல் நீளமுள்ளதும் ஆகிய நன்னீர் மீன்வகை; spiny-eel, a fresh-water fish of rich brown colour, attaining, 2 ft. or more in length.

**ம.** கல்லாரல்

*[கல் + ஆரல்.]*

**கல்லாராய்-தல்** *kallārāy-,* 2 செ.குன்றாவி.(v.t.) 1. ஒரு பொருளில் கல் கலந்திருக்கின்றதா என ஆராய்ந் தறிதல்; to examine if stones are mixed with a thing. 2. தவசம் போன்றவற்றில் கலந்துள்ள கற்களைப் பொறுக்கி எடுத்தல்; to remove stones from grains etc.

*[கல் + ஆராய்.]*

**கல்லாரிகம்** *kallārigam,* பெ.(n.) குருவேர்; a fragrant root (சா.அக.).

*[கல் + ஆரிகம்.]*

**கல்லாரை** *kal-l-ārai,* பெ.(n.) கரந்தை (மலை.); iron weed.

**க.** கல்லு கூவு, கல்லு கூ.

*[கல் + ஆரை.]*

**கல்லால்** *kal-l-āl,* பெ.(n.) 1. ஆலமர வகை; banyan tree. *"கல்லானிழல் மேயவனே" (தேவா. 437, 3.).* 2. குருக்கத்தி (L.); white fig with fruits in clusters. 3. ஆல்வகை (L.); white fig. 4. பூவரசு (L.); portia tree.

**ம., க.** கல்லால்.

*[கல் + ஆல்.]*

**கல்லாலம்** *kal-l-ālam,* பெ.(n.) ***கல்லால்*** பார்க்க; see *kal-l-āl.*

*[கல் + ஆலம்.]*

**கல்லாலி** *kallāli,* பெ.(n.) ***கல்லால்*** பார்க்க; see *kallāl.* கல்லாலியோடு அடைப்படா பாறையும் (S.i.i. vol.2. (3-5) insc. 76. S.No.91.).

*[கல் + ஆலி. ஆல்→ ஆலி.]*

**கல்லாளிகம்** *kallāligam,* பெ.(n.) குருந்து; Indian wild lime (சா.அக.).

*[கல் + ஆளிகம்.]*

**கல்லான்**[1] *kal-l-āṉ,* பெ.(n.) கல்வியில்லாதவன், எழுத்தறிவற்றவன்; unlearned, illiterate person. *"கல்லானே யானாலும்" (நல்வழி. 34.).*

**பட.** கல்லாதம

*[கல் + ஆ + ஆன். 'ஆ' எ.ம.இ.நி. புணர்ந்துகெட்டது. 'ஆன்' ஆ.பா.ஈறு.]*

**கல்லான்**[2] *kal-l-āṉ,* பெ.(n.) கடப்பாரை (யாழ்.அக.); crow bar.

*[கல் + (அன்)ஆன். கல் = தோண்டுதல். 'அன்' ஒருமை குறித்த ஈறு.]*

**கல்லான்**[3] *kallāṉ,* பெ.(n.) பாறை; rock (சா.அக.).

*[கல் → கல்லான். 'ஆன்' ஒருமை குறித்த ஈறு.]*

**கல்லான்காரி** *kallāṉkāri,* பெ.(n.) கல்வாழை; rock plantain (சா.அக.).

*[கல்லான் + காரி.]*

**கல்லானை** *kallāṉai,* பெ.(n.) கல்லில் வடித்த யானை உருவம்; life size elephant carved out of a single block of stone. கல்லானைக்குக் கரும்பருத்திய படலம். *"கல்லானை தின்னக்கம்பீந்த கதையும் சொல்வாம்" (திருவி. 21.).*

*[கல் + (யானை) + ஆனை.]*

**கல்லானை**[2] *kallāṉai,* பெ.(n.) 1. சுக்கான்கல்; lime-stone. 2. பூநீறு; fuller's earth (சா.அக.).

*[கல் → கல்லன் → கல்லானை.]*

**கல்லி**[1] *kalli,* பெ.(n.) 1. பருவத்துக்கு மேற்பட்ட நுண்ணறிவு; precocity. குழந்தை கல்லியாய்ப் பேசுகிறது (உ.வ.). 2. பருவத்துக்கு மேற்பட்ட நுண்ணறி வுள்ள குழந்தை; precocious child. அவன் அதிகக் கல்லி, அவனுடன் பேச்சுக் கொடுக்காதே (உ.வ.).

*[கலி → கல்லி. 'இ' உடைமை குறித்த ஈறு. குழந்தை கலி கலியாய்ப் பேசுகிறது என்பது உலகவழக்கு.]*

**கல்லி**[2] *kalli,* பெ.(n.) கிழங்கு தோண்டும் கருவி; hoe. *"கருங்குறமங்கையர் - கல்லியங்கசுழ்காமர் கிழங்கெடா" (இராமா - 91).*

*[கல் → கல்லி 'இ' வி.மு.ஈறு.]*

**கல்லி**[3] *kalli,* பெ.(n.) 1. ஆமை (மூ.அ.); tortoise. 2. ஊர்க்குருவி (வின்.); sparrow.

*[கல் → கல்லி. கல்லிடை வாழ்வது, கல்லிடை கூடு கட்டுவது.]*

**கல்லி**[4] *kalli,* பெ.(n.) 1. சுற்றுவாரியென்னுங் கட்டடவுறுப்பு (திவா.); outer sloping roof beyond the main wall, caves. 2. தேர் (அக.நி.); cart. 3. எலும்பு மூட்டு; joint of the bones.

*[கல் + கல்லி.]*

**கல்லி**[5] *kalli,* பெ.(n.) 1. நகையாட்டு (கேலி); ridicule, derision, mockery. கல்லிபண்ணுகிறான்(உ.வ.). 2. வேடிக்கை; fun, as of a child. குழந்தை கல்லி கல்லியாய்ப் பேசுகிறது (உ.வ.).

*[கல் → கல்லி.]*

**கல்லி**[6] *kalli,* பெ.(n.) விரிவு. கீழ்முனை விரிவாக்க மான கைச்சட்டை; a kind of shirt with a widened lowerpart.

*[கல்லுதல் = கல் பாவுதல், விரிவாக்குதல். கல் → கல்லி.]*

**கல்லி**[7] *kalli,* பெ.(n.) 1. கல் பாவிய பாதை; a footpath paved by stones. 2. கல்பாவிய தெரு; a street paved by stones.

**H. Guj.** gali; **Spanish.** calle.

*[கல் → கல்லி.]*

**கல்லிசை–த்தல்** *kal-l-isai-,* 4 செ.கு.வி.(v.i.) சரிந்து விழாதபடி கற்களை அமைத்தல் (C.E.M.); to join stones by means of joggles so as to prevent their sliding apart.

*[கல் + இசை–.]*

**கல்லிடலை** *kalliḍalai,* பெ.(n.) ஒருவகை மரம்; the tree Linocierr courtallensis.

ம. கல்லிடல

[கல் + இடலை. இடலை = மரவகை.]

**கல்லிடுக்கு** *kalliḍukku,* பெ.(n.) அடுக்கிய கற்களுக் கிடையே அல்லது கற்பாறைகளுக்கிடையே உள்ள இடைவெளி; a space between two stones .

ம. கல்லிடுக்கு

[கல் +இடுக்கு.]

**கல்லித்தி** *kal-l-itti,* பெ.(n.) இத்தி வகையுளொன்று; stone fig.

ம. கல்லித்தி

[கல் + இத்தி. கல்லித்தி = கல்லிடை முளைத்து வளர்வது.]

**கல்லித்திருத்து–தல்** *kalli-t-tiruttu-,* 5 செ.கு.வி. (v.i.) மேடான நிலத்தை வெட்டித்திருத்துதல் (S.I.I. iii.170): to lower the level of a field and render it fit for cultivation.

[கல்லி + திருத்து.]

**கல்லிதளை** *kalliḍaḷai,* பெ.(n.) மலை இதளை; hill olive.

[கல் + இதளை. இடளை → இதளை.]

**கல்லிமசக்கு–தல்** *kallimasakku-,* 5 செ.குன்றாவி. (v.t.) ***கல்லி வயக்கு–தல்*** பார்க்க; *see kallivayakku.* *"பூமியை கல்லி மசக்கி குடுத்த னீர்நிலம்" (S.I.I. Vol.19. insc. 402. S.No.8.).*

[கல்லி + மசக்கு.]

**கல்லிமயக்கு–தல்** *kallimayakku-,* 5 செ.குன்றாவி. (v.t.) ***கல்லிவயக்குதல்*** பார்க்க; see *kallivayakku.* இவ்வூர் தேவதான பொன் (கா)க்குடி புன்செய் கல்லிமயக்கின நிலத்திற்கு கீழ்பாற் கெல்லை.

[கல்லிவயக்கு → கல்லிமயக்கு.]

**கல்லிரும்பிலை** *kallirumbilai,* பெ.(n.) இரும்பறுப்பி; jungle geranium (சா.அக.).

[கல் + இரும்பு + இலை.]

**கல்லில் நாருரி–த்தல்** *kāllil-nār-uri-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. இல்லாத பொருளைப் பெற முயலுதல்; to seek for the unattainable, strive for the impossible, as stripping fibre from stone. 2. ஒரு பொருளைப்பாடுபட்டு முயன்று பெறுதல்; to obtain by very great labour.

[கல்லில் + நார்–.]

கல்லிலிருந்து நார் உரிக்க முடியாது. அதுபோன்ற நடவாதசெயல், அரிய செயலுமாம்.

**கல்லிவசக்கு–தல்** *kalli-vaśukku-,* 5 செ.குன்றாவி. (v.t.) ***கல்லிவயக்கு–தல்*** பார்க்க; see *kallivayakku.* *"வளைச்சறியாத நிலம் கல்லிவசக்கின நிலம்" (S.I.I. Vol.19. Insc. 389. S.No.5.).*

[கல்லி + வசக்கு.]

**கல்லிவயக்கு–தல்** *kallivayakku-,* 5 செ.குன்றாவி. (v.t.) சமனற்ற நிலத்தை வெட்டிச் சமமாக்குதல்; to level the land for wet cultivation. *"நாட்டாண்மை மங்கலத்துத் திடல் ... கல்லிவயக்கின நிலம் இரண்டுமா" (S.I.I. Vol.8. Insc. 556.).*

[கல் → கல்லி + வயக்கு. கல்லுதல் = தோண்டுதல். கல்லி = வெட்டியெடுத்து. வயக்கு = தமக்கிசைந்தவாறு மாற்றியமைத்தல், நிலத்தைச் சமமாக்குதல்.]

**கல்லிழை–த்தல்** *kal-l-iḻai-,* 4 செ.கு.வி.(v.i.) அரிய கற்களைப் பதித்தல்; to set precious stones. கல்லிழைத்த அட்டிகை (உ.வ.).

[கல் + இழை–.]

**கல்லிறாமூலி** *kalliṟāmūli,* பெ.(n.) அழுகண்ணி; a plant from which water is continuously oozing and dripping.

[கல் + இறால் + மூலி. இறால் = தேன்கூடு போல் வடிவம் உள்ளது.]

**கல்லிறால்** *kal-l-iṟāl,* பெ.(n.) 1. ஈர்க்கிறால்; lobster. 2. கருப்பு இறால்மீன் வகை (வின்.); black prawn.

ம. கல்லுறாளு

[கல் + இறால்.]

**கல்லிறால்வலை** *kalliṟālvalai,* பெ.(n.) மீன்பிடிவலை வகை; a kind of fishing net.

[கல் + இறால் + வலை.]

**கல்லீயம்** *kal-l-īyam,* பெ.(n.) 1. வெள்ளீயங்காரீயங் களின் கலப்பு ( வின்.); pewter. 2. ஈயத்தின் வகை (மூ.அ.); a kind of lead.

[கல் + ஈயம். கல் = பொடி.]

**கல்லீரல்** *kal-l-īral,* பெ.(n.) 1. மண்ணீரலுக்கு அருகிலுள்ள சாம்பல்நிறச் சிற்றீரல்;liver. 2. பறவைகளுக்கும் மீன்களுக்குமுள்ள இரண்டாம் இரைப்பை (இ.வ.); gizzard, so called because of its hardness.

*[கல் + ஈரல்.]*

**கல்லு** *kallu,* பெ.(n.) 1. ***கல்லுருவி,*** பார்க்க; see *kalluruvi* (சா.அ க.).

*[கல் → கல்லு.]*

**கல்லு[1]–தல்** *kallu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1.தோண்டுதல்; to work away gradually, as earth, pebbles, to dig out, as a hole; to hollow, as a rat; to excavate. *"கல்லுற்றுழி" (நாலடி, 185.).* 2.துருவுதல் (வின்.); to scoop out, as a nut. 3. நீர் அரித்தல்; to wash out, erode, as flowing water. வெள்ளம் கரையைக் கல்லிவிட்டது (உ.வ.). 4. தின்னுதல்; to eat away, as caustic. இந்தக் காரமருந்து கல்லிக்கல்லி எடுத்துவிடும் (வின்.); 5. எழுத்தாணிக் கூர் கழித்தல் (யாழ்ப்.); to tear, as a style, the palmyra leaf when writing upon.

ம. கல்லுக; **கோத.** கெல்வ்; **பர்.** கெல்ச்.

*[உல் → குல் (குத்துதல்) → கல் → கல்லு.]*

**கல்லு[2]–தல்** *kallu-,* 15 செ.கு.வி.(v.i.) ஒலித்தல்; to cause to sound, as a drum. *"மங்கல வியங் கல்ல" (திருவிளை. திருமணப். 103.).*

*[குல் → கல் → கல்லு.]*

**குத்துதல் கருத்து மோதுதல் பொருளிலும் புடைபெயர்தலால், ஒலித்தல் பொருள் தோன்றியது.**

**கல்லுக்கடல்** *kallu-k-kaḍal,* பெ.(n.) குன்று அல்லது பாறைகள் மலிந்த கடல் (செங்கை. மீனவ.); sea which has more peaks and rocks.

*[கல் → கல்லு + கடல்.]*

**கல்லுக்கரண்டி[1]** *kallu-k-karaṇḍi,* பெ.(n.) வீம்பு செய்பவன், ஒட்டாரம் பிடிப்பவன் (இ.வ.); one who is stubborn or obstinate.

*[கல்→கல்லு + கரண்டி. கல் = கெட்டி.]*

**கல்லுக்கரண்டி[2]** *kallu-k-karaṇḍi,* பெ.(n.) உள்துளையுடனோ, தகடாகவோ இல்லாதவாறு மாழையால் கெட்டியாகச் செய்யப்பட்ட கரண்டி; solid state karandi.

*[கல்லு + கரண்டி.]*

**தட்டித் தகடாக்கமுடியாத கல்லுக்கரண்டி. முரட்டுத்தனத்தைக் குறிப்பால் உணர்த்தியது.**

**கல்லுக்காரர்** *kallu-k-kārar,* பெ.(n.) செம்மணி (இரத்தினம்) விற்போர்; lapidaries.

*[கல் + காரர்.]*

**கல்லுக்குடல்** *kallu-k-kuḍal,* பெ.(n.) செரிப்புக் கடுமையுள்ள குடல்; intestine which performs not well.

*[கல் → கல்லு + குடல்.]*

**கல்லுக்குத்து–தல்** *kallu-k-kuttu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. மேற்றளம் முதலியவற்றிற்குக் கண்டிக்கல், பாவுகல் குத்துதல்; to arrange bricks edgewise, as in terracing a roof, arch-work, etc. 2. செயலை (காரியத்தை)த் தடைசெய்தல் (யாழ்ப்.); to frustrate a business by misrepresentation or by creating obstacles.

*[கல் + குத்து –.]*

**கல்லுக்குருவி** *kallukkuruvi,* பெ.(n.) ஆட்காட்டிக் குருவி போன்ற தோற்றத்துடன், வறண்ட மேய்ச்சல் நிலங்களில் வாழும் குருவிவகை; a kind of snipe (அறி. களஞ்.).

*[கல்→கல்லு + குருவி.]*



கல்லுக்குருவி

**கல்லுக்குள்சவளை** *kallukkuḷšavaḷai,* பெ.(n.) ***கல்நார்*** பார்க்க; see *kalnār* (சா.அக.).

*[கல்லுக்குள் + சவளை.]*

**கல்லுக்குறைத்தான்** *kallukkuṟaittāṉ,* பெ.(n.) பொன்; gold (சா.அக.).

*[கல்லுக்கு + உறைத்தான்.]*

**கல்லுக்கொடி** *kallu-k-kodi,* பெ.(n.) ***கல்லுருவி***[1] பார்க்க (சா.அக.); see *kalluruvi*[1].

*[கல்லு + கொடி.]*

**கல்லுக்கோழிமீன்** *kallu-k-kōḻi-mīṉ,* பெ.(n.) கடல்மீன்வகை; a sea-fish, bluish.

*[கல் + கோழி + மீன்.]*

**கல்லுகம்** *kallugam,* பெ.(n.) பெருவாகை மரம் (மூ.அ.); large sirissa.

*[கல்→கல்லுகம்.]*

**கல்லுகொம்பு** *kallu-kombu,* பெ.(n.) தரை தோண்டும் முனை; stake for digging the earth.

*[கல்லு + கொம்பு.]*

**கல்லுசில்** *kallušil,* பெ.(n.) ஒருவகை உசிலி, ஊடுசில் (சா.அக.); a kind of black sirissa.

*[கல் + உசில்.]*

**கல்லுடம்பு** *kalluḍambu,* பெ.(n.) 1. கல்போன்ற உறுதியான உடம்பு; body as hard as a stone. 2.வலுவுள்ள உடல்; strong body (சா.அக.).

*[கல் + உடம்பு.]*

**கல்லுண்டை** *kal-l-uṇḍai,* பெ.(n.) ***கல்லுண்டைச் சம்பா (சங்.அக.)*** பார்க்க; see *kal-l-uṇḍai-c-cambā.*

*[கல்-கல்லு + உண்டை.]*

**கல்லுண்டைச்சம்பா** *kal-l-uṇḍai-c-cambā,* பெ.(n.) ஆறு மாதத்தில் விளையும் சம்பா நெல்வகை (பதார்த்த. 805); a kind of paddy yielding hard round rice, maturing in 6 months

*[கல் → கல்லுண்டை + சம்பா.]*

**கல்லுணி** *kalluṇi,* பெ.(n.) ***கல்லுருணி*** பார்க்க; see *kalluruṇi.*

*[கல்லுருணி → கல்லுணி.]*

**கல்லுத்தரம்** *kalluttaram,* பெ.(n.) கல்லால் அமைந்த உத்தரம்; a stone-beam (that supports the lower roof.) (சேரநா.).

**ம.** கல்லுத்தரம்

*[கல் + உத்தரம்.]*

**கல்லுத்தீர்-தல்** *kallu-t-tīr-,* 4 செ.கு.வி.(v.i.) செம்மணி (இரத்தினம்) செதுக்குதல் (வின்.); to cut and polish, as gems.

*[கல் → கல்லு + தீர்.]*

**கல்லுத்தூக்கு-தல்** *kallu-t-tūkku-,* 5 செ.கு.வி.(v.i.) நங்கூரந் தூக்குதல் (வின்.); to weigh anchor.

*[கல்→கல்லு + தூக்கு.]*

**கல்லுதிரி**[1] *kal-l-udiri,* பெ.(n.) நெல்வகை (சங்.அக.); a kind of paddy.

*[கல் + உதிரி.]*

**கல்லுதிரி**[2] *kal-l-udiri,* பெ.(n.) அம்மைவகை (வின்.); a variety of small-pox producing hard pustules.

**ம.** கல்லுருதி

*[கல் + உதிரி.]*

**கல்லுநீராக்கி** *kallu-nīrākki,* பெ.(n.) கல்லை நீராளமாக்கும் ஒரு வகை வேதிப் பொருள்; a kind of chemical with the peculiar virtue of converting stone into a liquid (சா.அக.).

*[கல்→ கல்லு + நீராக்கி.]*

**கல்லுப்பயற்றங்கொடி** *kallu-p-payaṟṟaṅkodi,* பெ.(n.) சிறுபயற்றங்கொடி; creeper of kallu-p-payaṟu (சா.அக.).

*[கல் + பயிறு + அம் + கொடி.]*

**கல்லுப்பயறு** *kallu-p-payaṟu,* பெ.(n.) பயறு வகை (திருநெல்.); a kind of bean.

*[கல்→கல்லு + பயிறு.]*

**கல்லுப்பனை** *kallu-p-paṉai,* பெ.(n.) 1. மலைப்பனை என்னும் தொட்டிப்பனை; palmyra growing on hills. 2. ஆண்பனை; male palmyra.

*[கல்(லு) + பனை.]*

**கல்லுப்பிடி-த்தல்** *kallu-p-piḍi-,* 4 செ.கு.வி.(v.i.) 1.அரிசி களையும்போது சிறுகற்கள் கீழே தங்குதல் (இ.வ.); small stones settle at the bottom of a pot, as grit, when rice is washed prior to cooking.

2. தொலைக்க வழிதேடுதல் (உ.வ.); to scheme or plan for ruining a person.

[கல்→கல்லு + பிடி –.]

**கல்லுப்பு** *kal-l-uppu,* பெ.(n.) உப்புவகை (பதார்த்த. 1091); mineral or rock salt.

**தெ., க., ம., து.** கல்லுப்பு.

[கல் + உப்பு.]

**கல்லுப்புக்கட்டு** *kalluppu-k-kattu,* பெ.(n.) கட்டுப்பு; consolidated or fixed salt (சா.அக.).

[கல்லுப்பு + கட்டு.]

**கல்லுப்பொறுக்கி** *kallu-p-porukki,* பெ.(n.) கல்லை விழுங்கும் புறாவகை (வின்.); a species of dove which swallows little pebbles.

[கல்→கல்லு + பொறுக்கி.]

**கல்லுப்போடு–தல்** *kallu-p-pōdu-,* 20 செ.கு.வி.(v.i.) 1. நங்கூரம் போடுதல்; to lay anchor. 2. செயலைத் தடைசெய்தல்; to frustrate a business by malicious misrepresentation or by creating obstacles. 3. எதிர்பாராத துன்பத்தை உண்டாக்குதல் (உ.வ.); to bring out an unforeseen calamity.

[கல் → கல்லு + போடு–.]

**கல்லுரல்** *kal-l-ural,* பெ.(n.) கல்லாற் செய்த உரல்; stone mortar.

**க.** கல்லொரள், கல்லொரளு.

[கல் + உரல்.]

**கல்லுருஞ்சி** *kalluruñci,* பெ.(n.) கடல் மீன் வகையு ளொன்று (குமரி. மீனவ.); a kind of sea-fish.

[கல் + உருஞ்சி.]

**கல்லுருட்டு** *kalluruttu,* பெ.(n.) கேழ்வரகு வகை; a kind of ragi.

[கல் + உருட்டு.]

பிணையலோட்டி அல்லது கடாவிட்டுக் கதிரடிக் காமல், கல்லுருளையை ஓட்டிக் கதிரடித்த தவசம், கல்லுருட்டு எனப்பொதுவாக வழங்கப் படினும், மிகுதியாகக் கேழ்வரகு விளைக்கும் கருநாடக மாநிலத்தார், கல்லுருளை ஓட்டிக் கதிரடித்தலே பெரும்பான்மையாதலின், இப்பெயர் வழக்கூன்றி யதாகலாம்.

**கல்லுருணி** *kalluruni,* பெ.(n.) 1. **புல்லுருவி** *(வின்.)* பார்க்க; see *pulluruvi.* 2. குருவிச்சி; honey suckle mistletoe (சா.அக.).

[கல் + உருணி.]

**கல்லுருவி**[1] *kal-l-uruvi,* பெ.(n.) கல்லைக் கரைக்கும் தன்மையுள்ள ஒருவகைப் பூடு (பதார்த்த. 287); blistering plant.

[கல் + உருவி.]

**கல்லுருவி**[2] *kal-l-uruvi,* பெ.(n.) 1. புல்லுருவி (சங்.அக.); vegetable parasite. 2. நீர் மேல் நெருப்பு என்னும் மூலிகைச் செடி; water-fire plant (சா.அக.).

[கல் + உருவி.]

**கல்லுலக்கை** *kallulakkai,* பெ.(n.) கல்லாலான உலக்கை; stone pestle (கருநா.).

**க.** கல்லொனகெ

[கல் + உலக்கை.]

**கல்லுவம்** *kalluvam,* பெ.(n.) மருந்தரைக்கும் குழியம்மி; a mortar for mascerating medicine.

[கல் = தோண்டுதல், குழித்தல், கல் → கல்லு → கல்லுவம் = நடுவில் குழிந்த கல்லுரல்.]

**கல்லுவார்** *kalluvār,* பெ.(n.) தோண்டுபவர்; excavator. *நிவேதனத்துக்கு நீரிறைச்சுகளை கல்லுவார் இருவர்க்குப் புடவை முதல் உட்பட நிசதம் நெல்லும் பதக்கு. (S.I.I. Vol.17. Insc. 243. S.No. 40.).*

[கல்லு + வ் + ஆர்.]

**கல்லுவி–த்தல்** *kalluvi-,* 1 பி.வி.(v.caus.) அகழ்தல், தோண்டுதல்; to dig out, excavate.

[கல்லு + வி.]

**கல்லுவிச்சல்** *kalluviccal,* பெ.(n.) **கல்லுவித்தல்** பார்க்க; see *kalluvi.* *"நான் கல்லுவிச்ச ஸ்ரீகரணப் பெருவிளாகத்து" (S.I.I. Vol.19. Insc. 27. S.No.24.).*

[கல்லுவித்தல் → கல்லுவிச்சல்.]

**கல்லுவை** *kalluvai,* பெ.(n.) ***கல்லுளுவை*** பார்க்க; see *kalluluvai.*

*[கல்லுளுவை → கல்லுவை.]*

**கல்லுவை[1]–த்தல்** *kallu-vai-,* 4 செ.கு.வி.(v.i.) 1.நங்கூரமிடுதல்; to lay anchor. 2. கடிவாயில் மந்திரங்கூறி நச்சுக்கல் வைத்தல்; to apply, with appropriate mantra, an antipoisonous stone tothe wound caused by a venomous bite. 3. நெற்றியிற் கல்லை வைத்துத் தண்டித்தல்; to set a stone on the forehead, the face being turned upwards to the sky and the head thrown back, a method of punishment.

*[கல் → கல்லு + வை–.]*

**கல்லுவை[2]–த்தல்** *kallu-vai-,* 4 செ.கு.வி.(v.i.) 1.இறந்தோர் நினைவாகக் கற்படிமம் நடுதல்; to erect a stone temporarily at a funeral ceremony to represent the deceased. 2. அணிகளில் விலைமதிப்பற்ற அரியகற்களைப் பதித்தல்; to set precious stones in jewels.

*[கல் → கல்லு + வை.]*

**கல்லுவை[3]–த்தல்** *kallu-vai-,* 4 செ.குன்றாவி.(v.i.) 1.ஆற்றுஞ்செயலைத் தடை செய்தல்; to obstruct and prevent fruition. 2. செற்றங்கொள்ளுதல்; to be at enmity with a person.

*[கல் → கல்லு + வை–.]*

**மனவருத்தம் பெருகிய நிலையில், இருசாராரும் ஒருவர்க்குரிய பாதையில் மற்றவர் இயங்குவதில்லை எனச் சூளுரைத்து, வழியில் குத்துக்கற்களை இடுவதுண்டு; வெறுப்பைக் காட்டும் உணர்வு வெளிப்பாடு.**

**கல்லுளான்கல்** *kallulāṉ-kal,* பெ.(n.) கருடக்கல்; a stone or concretion having the virtue of removing poisons.

*[கலுழன் → கல்லுழன் → கல்லுளான் + கல்.]*

**கல்லுளி[1]** *kal-l-uli,* பெ.(n.) 1. கல்வெட்டும் உளி; stone cutter's chisel. *'கல்லுளிமங்கன் போனவழி, காடு மேடெல்லாம் தவிடுபொடி' (பழ.).* 2. இரும்புக் கடப்பாரை; an iron crow bar (சேரநா.). 3. ஒருவகை யுருக்கு; a kind of hard steel.

**க., ம.** கல்லுளி.

*[கல் + உளி.]*

**கல்லுளி[2]** *kalluli,* பெ.(n.) 1. பேய்க்களா (மலை.); a species of whortle-berry. 2. மலைக்களா; carbolic acid plant. 3. பேய்ச்சுரை; a bitter species of bottle gourd (சா.அக.).

*[கல் + உள் + இ.]*

**கல்லுளிச்சித்தன்** *kal-l-uli-c-cittaṉ,* பெ.(n.) 1.ஓகநிலை கைவரப்பெற்ற துறவி; name of an ascetic who had the power of transporting himself to any place at will. 2. ***கல்லுளிமங்கன்*** பார்க்க; see *kall-uli-maṅgaṉ. 'கல்லுளிச்சித்தன் போனவழி கதவுகளெல்லாந் தவிடுபொடி' (பழ.).*

*[கல் + உளி = கல்லுளி = கல்லை உடைக்கும் வன்மை வாய்ந்த உளி. இங்கு வன்மையையும் ஆற்றலையும் குறித்தது.]*

**கல்லுளித்தச்சன்** *kal-l-uli-t-taccaṉ,* பெ.(n.) ***கற்றச்சன்*** பார்க்க; see *karraccaṉ.*

**ம.** கல்பணிக்கன்; **க.** கல்லுகுடக, கல்லுகுடிக.

*[கல் + உளி + தச்சன்.]*

**கல்லுளிமங்கன்** *kal-l-uli-maṅgaṉ,* பெ.(n.) தன்னைத் தானே வருத்திக்கொள்ளளும் அருவருப்பான செய்கைகளால் ஒட்டாரம் பிடிக்கும் பிச்சைக்காரன்; a pertinacious beggar who threatens to hack himself with his knife if he be not given alms, a kind of repulsive mendicant. *'கல்லுளி மங்கன் போனவழி காடுமேடெல்லாம் தவிடுபொடி' (பழ.).* 2. தான் எண்ணியது நிறைவேறும் வரை விட்டுக்கொடுக்காத முரடன்; a rogue, never yields until and unless his desire is fulfilled.

*[கல் + உளி + மங்கன்.]*

**கல்லுளியுருக்கு** *kal-l-uli-y-urukku,* பெ.(n.) கல்லைச் செதுக்கும் எஃகு (வின்.); a kind of very hard steel used for cutting stones.

*[கல் + உளி + உருக்கு. (எஃகு)]*

**கல்லுளுவை** *kal-l-uluvai,* பெ.(n.) கல்லிடுக்கில் தங்கும் கடல் மீன்; a sea-fish, whitish, attaining at least 5in. in length.

*[கல் + உளுவை.]*

**கல்லுறவாலி** *kalluṟavāli,* பெ.(n.) குதிரை வாலிப்புல்; horse tail grass (சா.அக.).

*[கல் + உறல் + வாலி.]*

**கல்லுறுத்து-தல்** *kalluṟuttu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1.கால், கண்போன்ற இடங்களில் கல்லழுத்துதல்; to press, as a rough or uneven surface on one sitting or lying down, to produce irritation as a dust in the eye. 2. சிறுநீரகத்தில் உருவாகும் கல் ஏற்படுத்தும் உறுத்தல்; to irritation caused by stone, formed in the kidney.

*[கல் + உறுத்து. உறு → உறுத்து (பி.வி.).]*

**கல்லூசி** *kal-l-ūci,* பெ.(n.) 1. ஒருவகை மருந்துக்கல் (வின்.); a medicinal stone. 2. ***கல்நார்*** பார்க்க (சா.அக.); see *kalnār.*

*[கல் + ஊசி.]*

**கல்லூஞ்சை** *kallūñjai,* பெ.(n.) ***கருவாகை*** பார்க்க; see *karuvāgai.*

*[கல் + ஊஞ்சை.]*

**கல்லூடான்** *kal-l-ūḍāṉ,* பெ.(n.) வெள்ளியைப்போல் பளபளப்பாயும் 9 விரல் நீளமாயும் இருக்கும் சிறிய கடல் மீன் வகை; a sea-fish, silvery, attaining more than 9 in. in length.

*[கல் + ஊடான்.]*


கல்லூடான்

**கல்லூரி[1]** *kallūri,* பெ.(n.) 1. தேவாரம் கற்பிக்கும் சுற்றுத்தாழ்வாரம் (வின்.); verandah used for reciting hymns used for *'தேவாரச் சுற்றுக் கல்லூரியிலிருந்து' (கல்வெட்.).* 2. திண்ணைப் பள்ளிக் கூடம்; pial school of ancient days. 3. உயர்கல்வி பயிலிடம்; academy, college institution where instruction is given in arts and sciences. *"கல்லூரி நற்கொட்டிலா" (சீவக. 995.).*

*[கல் + ஊரி – கல்லூரி = கல்பரப்பிய திண்ணை, திண்ணைப் பள்ளிக் கூடம். தேவாரம் ஓதுதற்கு ஒதுக்கப்பட்ட திண்ணையொடு பொருந்திய சுற்றுத்தாழ்வாரம். இச்சொல் இந்நாளில் உயர்கல்வி பயிலும் நிறுவனத்தைக் குறிப்பதாயிற்று.]*

**கல்லூரி[2]** *kallūri,* பெ.(n.) கல்லுப்பைக் கட்டக் கூடியதும், இரும்பைச் செந்தூரமாக்குவதுமான சிறு கல்லூரியெனும் அரிய மூலிகை; a rare drug; which helps to consolidate sea-salt and convertion into a redoxide by calcination (சா.அக.).

*[கல் + ஊரி.]*

**கல்லூரிக்கல்வி** *kallūri-k-kalvi,* பெ.(n.) கல்லூரியில் பயிலும் படிப்பு வகைகள்; collegiate education.

*[கல்லூரி + கல்வி.]*

**கல்லூருணி** *kallūruṇi,* பெ.(n.) 1. பாறையிலூறும் கிணற்றுத் தண்ணீர்; well-water which springs from rocks. 2. பாறைக்கிணறு; rock well (சா.அக.).

*[கல் + ஊருணி.]*

**கல்லூவல்** *kallūval,* பெ.(n.) ***கல்மூங்கில்*** பார்க்க; see *kalmūṅgil* (சா.அக.).

*[கல் + ஊவல். உவல் → ஊவல்.]*

**கல்லூற்று** *kal-l-ūṟṟu,* பெ.(n.) கல்லிடைக்கசிந்து ஊறும் நீரூற்று (கொ.வ.); spring in a rocky soil.

*[கல் + ஊற்று.]*

**கல்லூன்று-தல்** *kal-l-ūṉṟu-,* 5 செ.கு.வி.(v.i.) நடுகல்லுக்கு மாற்றாக ஏதேனும் ஒரு கல்லை இறந்தாரை அடக்கம் செய்த இடத்தில் நடுதல்; (கொ.வ.); to erect temporarily a stone at a funeral ceremony to represent the deceased.

*[கல் + ஊன்று-.]*

**கல்லெடுப்பு** *kal-l-eḍuppu,* பெ.(n.) 1. இறந்தார்க்கு நடுகல் எழுப்புதல்; funeral rite of setting a stone, as a sign of respect for the departed soul. *'இதென்ன கல்லெடுப்பாகப் போய்விட்டதே' (இ.வ.).* 2. சாவுச்சடங்கில் வைத்தக் கல்லை 8 அல்லது 16வது நாள் எடுத்தல்; removing the stone which kept on funeral ceremony.

*[கல் + எடுப்பு.]*

**கல்லெண்ணெய்** *kalleṇṇey,* பெ.(n.) மண்ணெண்ணெய்; kerosene (கருநா.).

க. கல்லெண்ணெ

*[கல் + எண்ணெய்.]*

**கல்லெரிப்பு** *kal-l-erippu,* பெ.(n.) கல்லெரிப்புமேகம் பார்க்க; see *kal-l-erippu-mēgam. "கல்லெரிப்பு முதலவிடாப் பிணியால்" (திருக்காளத். பு. 17, 25.).*

*[கல் + எரிப்பு.]*

**கல்லெரிப்புமேகம்** *kal-l-erippu-mēgam,* பெ.(n.) நீர்ச்சுருக்குநோய் (வின்.); incontinence of urine.

*[கல் + எரிப்பு + மேகம்.]*

**கல்லெலி** *kalleli,* பெ.(n.) கல்லிற்குள் புதைந்து கிடக்கும் எலி; rat found under heaps of stones (சா.அக.).

தெ. கல்லெலுக, கல்லெல்க.

*[கல் + எலி.]*

**கல்லெலும்பு** *kallelumbu,* பெ.(n.) உறுதியான எலும்பு; hard bone (சா.அ க.).

*[கல் + எலும்பு.]*

**கல்லெழுத்து** *kalleḻuttu,* பெ.(n.) 1. கல்வெட்டு; a stone inscription. 2. கல்வெட்டு போல் நிலைத்து நிற்கக்கூடியது; anything not erasable, permanent (சேரநா.).

ம. கல்லெழுத்து

*[கல் + எழுத்து.]*

**கல்லெறி** *kal-l-eṟi,* பெ.(n.) 1. கல்லைவீசுகை; throwing of a stone. *"கண்டனமாகிய கல்லெறிக் கஞ்சி" (சிவசம. 45.)* 2. ***கல்லெறி தூரம்*** பார்க்க (வின்.); see *kal-l-eṟi-tūram.*

ம. கல்வேறு

*[கல் + எறி.]*

**கல்லெறிஞ்சான்காணி** *kal-l-eṟiñjāṉ-kāṇi,* பெ.(n.) 1. கல்லெறியும் தொலைவு அகலநீளமுடைய நிலப்பகுதி (தஞ்சை.); a big plot of land whose sides are each of the length of a stone's throw. 2.பெரும்பகுதியாகவுள்ள நிலத்தின் உரிமை (இ.வ.); ownership of a big plot of land.

*[கல் + (எறிந்தான்) எறிஞ்சான் (கொ.வ.) + காணி.]*

**கல்லெறிதூரம்** *kal-l-eṟi-tūram,* பெ.(n.) முழுவலிமையோடு கல்லை வீசியெறிய அதுவிழும் தொலைவின் அளவு (கொ.வ.); distance of a stone's throw from a strong arm.

ம. கல்வேர் தூரம்

*[கல் + எறி + தூரம்.]*

**கல்லெனல்** *kal-l-eṉal,* பெ.(n.) 1. பேரோசைக்குறிப்பு; onom.expr. signifying excitement. *"கல்லென் பேரூர்" (சிலப். 12, 12.)* 2. அழுதற்குறிப்பு; onom expr. signifying weeping *"கல்லென் சுற்றமொடு" (பெருபாண்.21.).*

*[கொல் → கல் – கல்லெனல். (வே.க. 117.).]*

**கல்லேரிமலை** *kallērimalai,* பெ.(n.) ஆம்பூர் குடியாத்தம் சாலையில் மேல்பட்டிக்குச் செல்லும் வழியில் அமைந்துள்ள, தொல்லியல் அகழ் வாராய்ச்சி நடைபெற்ற ஊர்; an archaeological site on the road leading to Melpatti from Ambur-kudiyatham road.

*[கல் + ஏரி + மலை.]*

இவ்வூருக்கு, இராசகிரிப்பட்டினம் என்ற பழைய பெயர் உண்டு. முந்திய பெருங்கற்காலம், இடைக்காலம் ஆகிய மூன்று பண்பாட்டு பிரிவுகளின் நாகரிகமும், இங்குக் கண்டுபிடிக்கப் பட்டது.

**கல்லேற்று-தல்** *kallēṟṟu,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. கல்லால் அடித்தல்; to throw stones on a person as a punishment. 2. வரி கொடாதவர் முதுகில் கல் ஏற்றி வைத்து ஒறுத்தல்; placing stone over the back of revenue defaulters as a punishment.

*[கல் + ஏற்று – கல்லேற்று (கல்லால் தாக்குதல்.)]*

**கல்லேறு** *kal-l-ēṟu,* பெ.(n.) 1. முத்தின் குற்றங்களுள் ஒன்று (சிலப். 14, 193, உரை.); flaw in a pearl. 2.கல்லெறிகை; throwing of a stone.

*[கல் + ஏறு.]*

**கல்லை**[1] *kallai,* பெ.(n.) 1. தையலிலைக் கலம் தொன்னை; plate made of leaves sewn together.

"சருகிலையிணைத்த கல்லை" (பெரியபு. கண்ணப்ப. 118.). 2. பாதக்குறட்டின் குமிழ் (பிங்.); knob in wooden sandals.

[கல் → கல்லை = குத்தி தைத்தஇலை. > Skt. khalla. (வ.மொ.வ.110.).]

**கல்லை**[2] *kallai*, பெ.(n.) பழிச்சொல்; calumny, aspertion; கல்லைப்பட்டுப் போனவன் (வின்.).

[கல்லை = இலைக்கலம், எச்சில் இலை, எச்சிற்கலம் போல் இழிவுக்குரியவன். இச்சொல் கலிப்பட்டுப்போனவன் என்றும் திரித்து வழங்குவதுண்டு.]

**கல்லை**[3] *kallai*, பெ.(n.) இறந்தவர்கட்கு 8 அல்லது 30 வது நாள் வழிபாடு செய்து உணவிடுதல். (ம.அக.); feeding others on 8th or 30th day of death of person. 'சோற்றுக்கல்லையிலிருக்கும்போது எமனும் அணுகான்' (பழ.).

[கல் → கல்லை – குத்தி வைத்தல்.]

**கல்லைகுத்து-தல்** *kallai-kuttu-*, 10 செ.கு.வி.(v.i.) இலைக்கலந் தைத்தல்; to sew leaves together into a plate to eat from.

[கல்லை + குத்து.]

**கல்லைநீராக்கி** *kallai-nīr-ākki*, பெ.(n.) இறைச்சியைக் கரைக்குந் தன்மையுள்ள கனிமம் (வின்.); a kind of ore.

[கல் + ஐ + நீராக்கி.]

**கல்லொட்டர்** *kal-l-oṭṭar*, பெ.(n.) கற்சுவர் எடுக்கும் ஒட்ட இனத்தார் (வின்.); a caste of people usually employed to build stone walls.

ம. கல்லொட்டர்; பட., க. கல்லொட்ட.

[கல் + ஒட்டர். ஒட்டர் – ஒட்டிர (ஒரிசா) நாட்டிலிருந்து வந்த தொழிலாளர்.]

**கல்லொட்டி** *kal-l-oṭṭi*, பெ.(n.) 1. நத்தை (வின்.); snail. 2. கற்பாசி; lichen, rock-moss.

ம. கல்லொட்டி (ஒருவகை ஆற்றுமீன்)

[கல் + ஒட்டி. (கல்லில் ஒட்டிக்கொள்வது.).]

**கல்லொத்து** *kallottu*, பெ.(n.) காலில் கல் குத்துவதனால் ஏற்படும் கட்டி; stone-pressure, a kind of hard boil (abscess) appearing especially at the bottom of the heel from the effects of a bruise by a stone (கருநா.).

தெ. கல்லெத்து; க., து., பட. கல்லொத்து.

[கல் + ஒத்து, ஒத்துதல் = குத்துதல்.]

**கல்லொழுக்கு** *kallolukku*, பெ.(n.) கல்மதம்; fossil exudation from rocks (சா.அக.).

[கல் + ஒழுக்கு.]

**கல்லோலம்** *kallōlam*, பெ.(n.) அலை; billow, wave, surge. "பெருங்கல்லோலப் புணரியின் மூழ்க" (திருவாலவா. 9, 5.).

க. கல்லோல; ம. கல்லோலம்; Pali. kallolo; Skt., Pkt. kallōla.

[கல் + ஓலம். 'கல்' ஒலிக்குறிப்பு இடைச்சொல்.]

**'கல்' லெனல் ஓர் ஓசைக்குறிப்பு. கல் – கலி. 'கலகல' ஒலிக்குறிப்புகள். ஓ → ஓல் = ஒலி. ஓல் → ஓலம் = ஓசை. 'கல்' என ஒலிக்கும் அலை கல்லோலம் எனப்பட்டது. ஒ.நோ. அல்லோல கல்லோம்.**

**கல்வட்டம்** *kalvaṭṭam*, பெ.(n.) கற்பலகையாலான அறை, ஈமப் பேழை போன்ற ஈமப்புதைவுகள் அமைந்த தரையில் அவை அடையாளம் தெரியும் வண்ணம் வட்டமாக அமைக்கப்பட்ட கல்வரிசை; stones arranged in a circle over the burial in sarchophagus or dolmen.

[கல் + வட்டம்.]

**கல்வம்** *kalvam*, பெ.(n.) ***கல்லுவம்*** பார்க்க; see *kalluvam*.

[கல் → கலுவம் → கல்வம். (வ.மொ.வ.10.).]

**கல்வரி** *kalvari*, பெ.(n.) 1. செங்கற் சூளை அமைத்த தற்குரிய வரி; tax on kiln. 2. கல்லுடைத்தலுக்குரிய வரி; tax on quarry (கல்வெ.கலை.).

[கல் + வரி.]

**கல்வருக்கை** *kal-varukkai*, பெ.(n.) ***காட்டுப்பலா (வின்.);*** பார்க்க; see *kāṭṭu-p-palā*.

[கல் + வருக்கை.]

**கல்வழி** *kal-vaḷi*, பெ.(n.) 1. கல்லை வைத்தெண்ணும் ஒருவகைக் கணக்கு (கணக்கதி. பாயி.); a kind of

computation with the aid of pebbles. 2. கற்கள் நிறைந்த வழி; a stony path (கருநா.).

க. கல்வழி, கல்லதாரி.

*[கல் + வழி.]*

**கல்வளை** *kal-vaḷai,* பெ.(n.) 1. மலைப்பிளப்பு (R.); cleft or chasm in a mountain. 2. மலைக்குகை (யாழ். அக.); cave.

*[கல் + வளை. கல் = மலை.]*

**கல்வாசல்** *kalvāšal,* பெ.(n.) கற்றளியின் திருவாயில்; entrance to stone temple. *"கல்வாசலில் கல்கவி உத்திரமும்" (ஆவணம். 1991-2.).*

*[கல் + வாசல்; வாயில் = வாசல்.]*

**கல்வாசல் நாடு** *kalvāsalnādu,* பெ.(n.) திருமயம் வட்டம் பகுதியில் இருந்த பண்டைய நாட்டுப் பெயர்; name of an old division in Thirumayam vaṭṭam. *"கல்வாசல் நாட்டுத் தந்திரிமாற்கும், கானனாட்டுத் தந்திமாற்கும்" (தெ.இ.கல்.தொ. 23 கல்.156.).*

*[கல் + (வாயில்) வாசல் + நாடு.]*

**கல்வாயில் நாடாழ்வான்**[1] *kalvāyilnādāḷvaṉ,* பெ.(n.) திருப்பத்தூர் வட்டம், குன்றக்குடி கோயிலிலுள்ள கல்வெட்டு பொறித்த அலுவலர்; an officer, who inscribled in Tirupattur taluk. *"இப்படி கண்டன் ஆளுடையான் ஆன கல்வாயில் நாடாழ்வான் எழுத்து" (தெ.இ.கல்.தொ. 23 கல்.156.).*

*[கல்வாயில் + நாடாழ்வான்.]*

**கல்வாயில் நாடாழ்வான்**[2] *kalvāyilnādāḷvaṉ,* பெ.(n.) திருமயம் வட்டம் மேலக்கோயில் கல்குகைவாயில் உள்ள கல்வெட்டை வெட்டிக் கொடுத்தவர்; one who engraved the incripion in the sides of the rock-cut cave in the Melakkoyil of Thirumayam taluk. *"கல்வெட்டிக் குடுத்தேன் கல்வாயில் நாடாழ்வானேன்" (தெ.இ.கல்.தொ. 23 கல்.152.).*

*[கல் + வாயில்; கல்லாலான குகையின் வாயில்; பின்னர் ஊரின் பெயராகிவிட்டது.]*

**கல்வாழை** *kal-vāḷai,* பெ.(n.) 1. பூவாழை; Indian shot. 2. காட்டுவாழை; wild plantain. Hill plantain, stony plantain.

க. கல்வாழெ, கல்வாளெ; **து.** கல்லுபாரெ; **ம.** கல்லுவாழ

*[கல் + வாழை.]*

உவமையடிப்படையில் வன்மைப் பண்பு குறித்த 'கல்' பெயரெச்சமாயிற்று. (ஒ.நோ.) கல்விருசு.



கல்வாழை

**கல்வாழைமணி** *kalvāḷaimaṇi,* பெ.(n.) 1.கல்வாழையின் விதை; Indian head (flava) 2. மணிவாழை; Indian bead. (typica.) 3. குன்றிமணி வாழை; liquorice plantain (சா.அக.).

*[கல்வாழை + மணி]*

**கல்வி**[1] *kalvi,* பெ.(n.) 1. கற்கை (குறள், 40, அதி.); studying. 2. படித்துப் பெறும் கல்வியறிவு; learning, erudition. *"ஒருமைக்கட்டான்கற்ற கல்வி" (குறள், 398.).* 3. அறிவு; science, literature. 4. பயிற்சி (அக.நி.); practice. 5. நூல் (வின்.); scientific work. *"கல்வி கரையில" (நாலடி. கல்வி. 5.) (த.மொ.அ.).*

**ம.** கல்வி; **க.** கல்பி, கலிகெ; **கோத.** கல்பி; **துட.** கல்ப்ய; **பட.** கலிவி (அறிவுக்கூர்மை); **து.** கல்புனி (கற்றல்); **தெ.** கறசு (கற்றல்); **கொலா.** கர்ப்; **நா.** கரப்; **கோண்.** கரீநாநா. **கூ.** கராம்ப்.

*[கல் → கல்வு → கல்வி. 'கல்' என்னும் ஏவலோடு உகர ஈறு சேர்ந்து 'கல்வு' (ஒ.நோ. செல் →செல்வு (அழகு)செல்வி) எனவும் கல் → கல்வு → கல்வி எனத் திரிந்திருத்தலை ஒப்பு நோக்குக.]*

**கல்வி**[2] *kalvi,* பெ.(n.) கல்; stone. 2. கற்பலகை; stone slab.

*[கல் → கல்வு →கல்வி. கல்வுதல் = தோண்டுதல். கற்காலத்தில் மண்ணைத் தோண்டப் பயன்பட்டகல் இப்பெயர் பெற்றது.]*

**கல்விக்களஞ்சியம்** *kalvi-k-kaḷañjiyam,* பெ.(n.) கற்றுத்துறை போகியவ-ன்-ள்; lit. repository of learning, a very learned person.

*[கல்வி + களஞ்சியம்.]*

**கல்விக்கூடம்** *kalvi-k-kūḍam,* பெ.(n.) கல்வி பயிலும் இடம்; college, school, a seat of learning.

*[கல்வி + கூடம்.]*

**கல்விச்சாலை** *kalvi-c-cālai,* பெ.(n.) ***கல்விக்கூடம்*** பார்க்க; see *kalvikkūḍam.*

*[கல்வி +சாலை.]*

**கல்விச்சுற்றுலா** *kalvi-c-cuṟṟulā,* பெ.(n.) கலை, பண்பாடு, நாகரிகம் முதலியவற்றின் நிலைக்களனாகவுள்ள இடங்களுக்குக் கூட்டமாகச் சென்று, அவற்றின் சிறப்புகளை அறிந்து கொள்ள உதவும் சுற்றுப்பயணம்; educational tour.

*[கல்வி + சுற்றுலா.]*

**கல்வித்துறை** *kalvittuṟai,* பெ.(n.) கல்வி தொடர்பான பணிகளைச் செய்யும் துறை; educational department.

*[கல்வி + துறை.]*

**கல்விநாயகன்** *kalvi-nāyagaṉ,* பெ.(n.) நெல்வகை (A.); a kind of paddy.

*[கல்வி + நாயகன்.]*

**கல்விநிலையம்** *kalvinilaiyam,* பெ.(n.) கல்வி நிறுவனம் பார்க்க; see *kalviniṟuvaṉam.*

*[கல்வி + நிலையம்.]*

**கல்விநிறுவனம்** *kalviniṟuvaṉam,* பெ.(n.) கல்வி கற்கும் இடம்; educational institute.

*[கல்வி + நிறுவனம்.]*

**கல்விப்பணி** *kalvippaṇi,* பெ.(n.) படிப்பறிவை வளர்க்கும் செயல்; academic work.

*[கல்வி + பணி.]*

**கல்விப்பொருள்** *kalvi-p-pōruḷ,* பெ.(n.) கல்வியாகிய செல்வம் (திவா.); learning as a material possession, dist. fr. செல்வப்பொருள்.

*[கல்வி + பொருள்.]*

**கல்விபயில்களம்** *kalvipayil-kaḷam,* பெ.(n.) ***கல்வி நிறுவனம்*** பார்க்க; see *kalviniṟuvaṉam.*

*[கல்வி + பயில்களம்.]*

**கல்விபயிலிடம்** *kalvipayiliḍam,* பெ.(n.) கற்கின்ற இடம்; training centre.

**மறுவ.** கல்வியூரி, கல்லூரி, கழகம், பட்டிமம், கல்வி, சுற்றுவாரி, கல்வி பயில்களம்.

*[கல்வி + பயில் + இடம்.]*

**கல்விமதம்** *kalvi-madam,* பெ.(n.) கல்விச்செருக்கு; pride of learning.

*[கல்வி + மதம்.]*

**கல்விமான்** *kalvi-māṉ,* பெ.(n.) படிப்பாளி (கொ.வ.); learned man, scholar.

*[கல்வி + (மகன்) மான்.]*

*மான் என்பது மகன் என்பதன் மரூஉ.*

**கல்வியறிவு** *kalvi-y-aṟivu,* பெ.(n.) படிப்பால் உண்டாகும் அறிவு; knowledge, the result of study.

*[கல்வி + அறிவு.]*

**கல்வியாண்டு** *kalviyāṇḍu,* பெ.(n.) கல்வி நிறுவனங்களில் படிப்புக்காலம் தொடங்கி முடியும் வரையிலான கால அளவு; academic year.

*[கல்வி + ஆண்டு.]*

**கல்வியார்வலர்** *kalviyārvalar,* பெ.(n.) கல்வியில் நாட்டமுடையவர்; one, interested in educational field.

*[கல்வி + ஆர்வலர்.]*

**கல்வியாளர்** *kalvi-y-āḷar,* பெ.(n.) கல்வித்துறை தொடர்பான எல்லாப் பணிகளிலும் தேர்ச்சி பெற்றவர்; educationist.

*[கல்வி + ஆளர்.]*

**கல்வியியல்** *kalvi-iyal,* பெ.(n.) பாடம் கற்பிக்கும் முறை; pedagogy teaching.

*[கல்வி + இயல்.]*

**கல்வியூரி** *kalvi-y-ūri,* பெ.(n.) கல்லூரி (யாழ்.அக.); school, educational institution.

*[கல்→கல்வு + ஊரி. கல்வி = கல், கற்பலகை. கல்லூரி பார்க்க.]*

**கல்வியொழுக்கம்** *kalvi-y-oḷukkam,* பெ.(n.) ஒளவையார் இயற்றிய ஒரு அறநூல்; a collection of moral aphorisms arranged alphabetically and ascribed to Auvaiyar.

*[கல்வி + ஒழுக்கம்.]*

**கல்விருசு**[1] *kal-virušu,* பெ.(n.) மரவகை (திருநெல்.); a kind of tree.

*[கல் + விருசு.]*

**கல்விருசு**[2] *kalvirušu,* பெ.(n.) ஒருவகைக் கொடி; a mountain creeper.

*[கல் + விருசு.]*

**கல்விளக்கு** *kal-viḷakku,* பெ.(n.) மாக்கல்லாலாகிய விளக்கு; lamp made of soap-stone.

*[கல் + விளக்கு.]*

**கல்வினையர்** *kal-vinaiyar,* பெ.(n.) 1. சிற்பாசிரியர் (பிங்.); architects. 2. கருங்கல்லில் சிற்பம் செய்யும் கருவி; stone sirpi.

*[கல் + வினையர்.]*

**கல்வீச்சு** *kalviccu,* பெ.(n.) கற்களை வீசுவதன் மூலம் வெறுப்பையும் எதிர்ப்பையும் காட்டுதல்; throwing stone as a mark of contempt and opposition.

*[கல் + வீச்சு. வீசு → வீச்சு.]*

**கல்வீடு** *kal-vidu,* பெ.(n.) 1. கல்லாற்கட்டிய வீடு; house built of brick or stone. 2. உறுதியான கட்டடம்; strong building.

ம. கல்க்கெட்டு

*[கல் + வீடு.]*

**கல்வீரியம்** *kal-viriyam,* பெ.(n.) அன்னங்கரைப்பான் (மூ.அ.); green vitriol.

*[கல் + வீரியம்.]*

**கல்வெட்டாங்கிடங்கு** *kalveṭṭāṅkiḍaṅgu,* பெ.(n.) ***கல்வெட்டுங்கிடங்கு*** பார்க்க; see *kalvettun kidangu.*

*[கல்வெட்டுங்கிடங்கு → கல் வெட்டாங்கிடங்கு.]*

**கல்வெட்டாங்குழி** *kalveṭṭāṅkuḷi,* பெ.(n.) *கல் வெட்டுக்குழி* பார்க்க; see *kalveṭṭukkuḷi.*

*[கல்வெட்டுக்குழி → கல்வெட்டாங்குழி.]*

**கல்வெட்டி**[1] *kal-veṭṭi,* பெ.(n.) 1. அரிய மணிகளைச் செதுக்குவோ-ன்-ள்; one who cuts precious stones, as rubies, lapidary. 2. பச்சை வெட்டுக்கல் அறுத்தற்கு உரிய கத்தி (C.E.M.); brick-knife.

*[கல் + வெட்டி.]*

**கல்வெட்டி**[2] *kal-veṭṭi,* பெ.(n.) மீன் வகை; a kind of fish (கட. பர. க. சொ. அக.).

*[கல் + வெட்டி.]*

**கல்வெட்டிக்கொடு-த்தல்** *kalveṭṭikkoḍu-,* 4 செ.குன்றாவி.(v.t.) ***கல்வெட்டு***[2] பார்க்க; see kalveṭṭu[2]. இறுக்கக் கடவோமாக சம்மதித்து கல்வெட்டிக் கொடுத்தோம் (S.I.I. Part.5. 459.).

*[கல் + வெட்டி + கொடு.]*

**கல்வெட்டு**[1] *kal-vettu,* பெ.(n.) 1. கல்லிற் பொறிக்கை; stone-cutting , engraving on stone, inscription on stone. 2. தவறாத சொல்; unalterable word, as if engraven on stone. அவன் பேச்சுக் கல்வெட்டுத் தான்.

க. கல்வெட்டு; ம. கல்லுவெட்டு

*[கல் + வெட்டு.]*

**கல்வெட்டு**[2] *kal-vettu,* பெ.(n.) 1. முன்னோர் பெயரும் பெருமையும் கல்லிற் செதுக்கிய செய்யுள் அல்லது செய்தி (யாழ்ப்.); stanza or lines commemorative of the name fame and date of death of an ancestor. 2. இரங்கற் செய்யுள் (யாழ்ப்.); elegy.

*[கல் + வெட்டு.]*

நடுகல்லிற்பொறித்த செய்தியும் பொது வகையான் கல்வெட்டு என வழங்கப்படலாயிற்று.



கல்வெட்டு

**கல்வெட்டுக்குழி** *kalveṭṭukkuḻi,* பெ.(n.) 1. கல் தோண்டி எடுத்த இடம்; place where the stones were digged off. 2. ஓர் இடப்பெயர்; name of a place.

*[கல் + வெட்டு + குழி.]*

**கல்வெட்டுங்கிடங்கு** *kalveṭṭuṅkiḍaṅgu,* பெ.(n.) கற்களைப் பெயர்தெடுக்குமிடம்; the place where the stones digged off.

*[கல் + வெட்டு + கிடங்கு.]*

**கல்வெடி** *kal-veḍi,* பெ.(n.) 1. மலைகளையுடைக்கப் பயன்படும் வெடிமருந்து வகை; blast. 2. உரத்த வொலியுடன் வெடிக்கும் வெடி (கொண்டல்விடு. 265.); detonator.

*[கல் + வெடி.]*

**கல்வெள்ளங்கு** *kal-veḷḷaṅgu,* பெ.(n.) காட்டுப் பச்சிலை (L.); bastard rose-wood.

*[கல் + வெள்ளங்கு]*

**கல்வெள்ளி** *kal-veḷḷi,* பெ.(n.) 1. இரும்பும் வெள்ளீயமுங் கலந்தது (வின்.); amalgam of iron and tin. 2. கலப்புவெள்ளி (C.G.); hard inferior silver mixed with much alloy.

**ம.** கல்லுவெள்ளி

*[கல் + வெள்ளி.]*

**கல்வெள்ளை** *kalveḷḷai,* பெ.(n.) கற்சுண்ணாம்பு; lime stone (சா.அக.).

*[கல் + வெள்ளை.]*

**கல்வெள்ளைநீர்** *kalvellainīr,* பெ.(n.) கற் சுண்ணாம்பின் தெளிந்தநீர்; lime water (சா.அக.).

*[கல் + வெள்ளை + நீர்.]*

**கல்வேகம்** *kal-vegam,* பெ.(n.) ***கல்வீரியம் (மூ.அ.)*** பார்க்க; see *kal-viriyam.*

*[கல் + வேகம்.]*

**கல்வேல்** *kalvēl,* பெ.(n.) உடைவேல்; pea-podded black babul.

*[கல் + வேல்.]*

**கல்வேலை** *kal-velai,* பெ.(n.) 1. கல்லிற்செய்யும் வேலை; stone-mason's or sculptor's work. 2. அரிய மணியைச்செதுக்கும் பணி; work of a lapidary.

**க.** கல்லுகெசல; **ம.** கல்பணி.

*[கல் + வேலை.]*

**கல[1]-த்தல்** kala-, 3 செ.கு.வி.(v.i.) 1. கூடுதல்; to mix, unite, join; to commingle, combine; to be absorbed, as the individual soul into the Godhead. *"கலந்து நின்னடியாரோடன்று" (திருவாச. 32, 1.).* 2.கூட்டுறவாடுதல்; to unite in friendship, grow intimate, to hold communion with, associate in friendship with, or matrimonial alliance friendly. *"ஒரு மூவேங்கலந்த காலை" (கம்பரா. சூர்ப்ப. 140.).* 3. பரத்தல்; to spread as news. *"கட்டுரை கலந்த காலை" (கம்பரா. கரன். 68.).* 4.தோன்றுதல்; to appear, come into being. *"அமுதொடு கலந்த நஞ்சை மிடற்றினி லடக்கிய" (தேவா. 473, 1.).* 5. நெருங்குதல்; to get close together; to come into close quarters with. *"கலந்து போர்செய்தா ரோர்சிலர்" (கந்தபு. சகந்திரவா. 32.)* 6. பொருந்துதல்; to be welded, held. *"அலங்கலந் தார்" (புலியூரந். 1.).*

**க.** கலெ, கலசு; **தெ.** கலயு; **ம.** கலருக; **து.** கலடுனி; **துட.** கசவ்; **குட.** கல (பிசைதல்.); **கோத.** கல்வ்; **கொலா;** கலய்; **நா.** கல்ய் **கோண்.** கலீதாநா; **குவி.** கன்கினை; **குரு.** கன்நா; **உரா.** கலாசு; **எரு.** கலிப்பி; **கசபா.** கலாக்கி. **கோண்.** (கோயா): கல்பு; **Skt.** kalka (a medicinal mixture.).

*[குல்→கல்– கல.]*

**கல[2]-த்தல்** *kala-,* 3 செ.குன்றாவி.(v.t.) 1. கூட்டுதல்; to mix, blend, compound, amalgamate. *"பாலொடு தேன்கலந் தற்றே" (குறள், 1121).* 2 . புணர்தல், கூடுதல்; to copulate. *"பெரிதாற்றிப் பெட்பக் கலத்தல்" (குறள், 1276.).*

**க.** கலசு

**Basq.** gale (wishful); **E.Hamit.** e-kala in-kala; **Rum & Allan.** galash.

*[குல் → கல் → கல.]*

**கல[3]-த்தல்** *kala-,* 3 செ.கு.வி.(v.i.) இடைவிட்டிருத்தல் (இ.வ.); to have intervening spaces.

*[குல் → கல் → கல.]

**கலக்கடல்** *kala-k-kaḍal,* பெ.(n.) கச்சத்தீவுக்கு அண்மையில் உள்ள கடல் பரப்பு. (கட. ப. சொ. அக.); sea portion adjacent to Kacha island.

*[கலம் + கடல்.]*

**கலக்கடி**[1] *kalakkaḍi,* பெ.(n.) குழப்பம் (யாழ்ப்.); confusion, perturbation, tribulation.

*[கல → கலக்கு + அடி – கலக்கடி. கலக்கிபடித்தல் குழப்புதல் பொருள் தந்தது.]*

**கலக்கடி**[2] *kalakkaḍi,* பெ.(n.) அச்சம் (இ.வ.); terror, fear.

*[கலக்கம்→கலக்கடி 'அடி' சொல்லாக்க ஈறு.]*

**கலக்கம்**[1] *kalakkam,* பெ.(n.) 1. நீர் முதலியன குழம்பி இருத்தல், கலங்குகை; being shake, as the surface of a sheet of water. 2. மனக்குழப்பம்; disquiet, discomposure, embrasssment. *"நலத்தகு நாடிற் கலக்கமு மதுவே" (தொல். பொருள். 270.)* 3. துன்பம்; distress, affliction. terror, dread. *"மகபதி கலக்கங் கொண்டு" (கந்தபு. தாரக. 2.)* 5. அறிவுமாறாட்டம்; perplexity, distraction, bewilderment. *"சித்துவிகாரக் கலக்கந் தெளிவித்த. வித்தகத் ... தேவர்க்கே சென்றூதாய் கோத்தும்பி" (திருவா. 10, 6.).* 6. அழுகை (திவா.); weeping, bewailing.

**ம.** கலங்ஙல், கலக்கம்; **க.** கலகு; **து.** கலங்கு **தெ.** கலாக, கலாகுவ.

*[கல → கலகு → கலங்கு → கலக்கு → கலக்கம் (செல்வி. செப்டம்பர் 76,பக். 21).]*

ஒரு கவர்த்த வழியைக் காணின் எது வழியென்று தெரியாது கலங்கவும், அறியாதார் பலர் கூடியிருக்கக் காணின், அவருட் காண வேண்டியவர் யாரென்று தெரியாது மயங்கவும் நேரும். இதனால், பொருட் கலக்கத்திற்கும் மனக் கலக்கத்திற்கும் ஏதுவாம்.

அமைதியான மனத்தில் கவலை அல்லது அச்சம் கலப்பின் மனக்கலக்கம் உண்டாகும். மனத் தெளிவு முற்றும் நீங்குவதே மயக்கம். அது தீய பொருள் உடம்பிற் கலப்பதாலும் உண்டாகும்.

**கலக்கம்**[2] *kalakkam,* பெ.(n.) 1. இடைவெளி யுடைமை; clearness, distinctness; being clearly; spaced out. எழுத்துக் கலக்கமாயிருக்கிறது (உ.வ.).

*[கலை + கலக்கம்.]*

**கலக்கம்**[3] *kalakkam,* பெ.(n.) பொருத்தம் (இ.வ.); agreement.

*[குல் → கல் → கல → கலக்கம்; குல் = பொருந்துதல்வேர்.]*

**கலக்கம்**[4] *kalakkam,* பெ.(n.) ஆரவாரம் (யாழ்.அக.); uproar, bustle.

*[குல் → கல் → கல → கலக்கம்.]*

**கலக்கமடை—தல்** *kalakkamaḍai-,* 2 செ.கு.வி.(v.i.) மனக்குழப்பமடைதல்; to be confused.

*[கலக்கம் + அடை.]*

**கலக்கல்** *kalakkal,* பெ.(n.) 1. கலங்கச்செய்தல்; making things unclear. 2. குழப்பல்; confusion. 3. கூட்டல்; making addition. 4. சேருதல்; joining. 5. புணர்தல்; copulation.

*[கல → கலக்கல்.]*

**கலக்கழி—தல்** *kalakkaḻi-,* 2 செ.கு.வி. (v.ri.) கட்டுக்குலைதல்; to become loose and weak from the firm structure. *"கள்ளச்சகரு கலக்கழிய" (திவ்ய. பெரியாழ். 2:2:4.).*

*[கலக்கு + அழி – கலக்கழிதல் = கலக்குற்று அழிதல்.]*

**கலக்கிக்குடி—த்தல்** *kalakki-k-kuḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) நீர்ம மருந்துகளை அருந்துவதற்கு முன் குலுக்கிக் குடித்தல்; to drink medicine etc. after shaking.

*[கலக்கு[3] → கலக்கி + குடி]*

**கலக்கு**[1]**—தல்** *kalakku-,* 5 செ.குன்றாவி.(v.t.)) கலங்கச்செய்தல்; to confuse. *"கலக்கியமா மனத்தினளாய்க் கைகேசி வரம் வேண்ட" (திவ். பெரியாழ். 3, 10, 3.).*

**ம.** கலக்குக; **க.** கலகு, கலகிசு; **தெ.** கலயு, கலியு, கலசு; **கோத.** கல்வ்; **துட.** கல்வ்; **குட.** கல (பிசைதல்); **து.** கலபுனி; **கொலா.** கல்ய்; **நா.** கலய், கல்ப்; **கோண்.** கலீநானா (சந்தித்துத் தழுவி); **குவி.** கல்பினெய்; **குரு.** கல்; **Skt.** avakalkana (mingling, mixing together.).

*[கலங்கு →கலக்கு.]*

**கலக்கு**[2] *kalakku,* பெ.(n.) கலக்கம் பார்க்க; see *kalakkam, "பெருங்கலக் குற்றன்று" (புறநா. 41, 16.).*

**தெ.** கலகுவ; **க.** கலகு.

*[கலங்கு → கலக்கு.]*

**கலக்கு**[3] *kalakku,* பெ.(n.) 1. பொருத்து; joint. *"சகடங் கலக்கழியக் காலோச்சி" (திவ். திருப்பா. 6.)* 2. கலங்கல் நீர்; muddy water (சேரநா.).

**ம.** கலக்கு

*[கல → கலக்கு.]*

**கலக்குத்தொண்டன்** *kalakku-t-toṇḍaṉ,* பெ.(n.) தொண்டன் என்னும் மீன் வகையுள் ஒன்று. (முகவை. மீனவ.); a kind of 'tondan' fish.

*[கலக்கு + தொண்டன்.]*

**கலக்குமட்டிச்சுறா** *kalakku-maṭṭi-c-cuṟā,* பெ.(n.) மீன்வகை; carcharhinus melmopterus (செ. அக.).

*[கலக்கு + மட்டிச்சுறா.]*

**கலக்கெறி—தல்** *kalakkeṟi-,* 3 செ.கு.வி.(v.i.) மீன்கள் பெருந்தொகையாய்ச் சேர்ந்து, வலையின் நெருக்கங் காரணமாக அங்குமிங்கும் ஓடும்போது ஏற்படும் நீர்ச்சுழிவால் கடலடியில் சேறு மேல் வருதல் (செங்கை. மீனவ.); mud at the sea-bed coming above because of the fish chased together on all directions by the closely laid fishing nets.

*[கலக்கு + எறி—]*

**கலக்கை** *kalaga-k-kai,* பெ.(n.) இரு கைவிரல் களையும் நிமிர்த்தி வளைக்கும் முத்திரைக்கை (பரத. பாவ. 59.); a gesture in which the fingers of both hands are brought together and bent from an upright position.

*[கலம் + கை.]*

**கலகம்**[1] *kalagam,* பெ.(n.) 1. சச்சரவு, சண்டை; strife, quarrel, wrangle, altercation. *"மாலொடொரு கலகந்தனை வாளா வருவித்தாள்" (சேதுபு. சேதுமா. 24.).* 2. ஒருவன் மேற் பிறர்க்குப் பகை உண்டாகும்படி தூண்டிவிடுகை; inciting one to break off from another. 3. பேரொலி (திவா.); uproar, tumult. 4. நாட்டுக் குழப்பம்; insurrection, revolt, rebellion. 5. போர் (வின்.); war, fight, skirmish.

**க.** கலக; **H. Skt.** kalaha; **Malay**. kelahi.

*[கலத்தல் = பொருந்துதல், பொருந்திப்போர் செய்தல், ஒ.நோ : பொரு → போர், சமம் → சமர். கைகலத்தல் = சண்டையிடுதல். கல் → கலாம் = போர், கலகம். கல → கலவு → கலகு → கலகம் = கூட்டச்சண்டை. கலகு → கலகி. கலகித்தல் = கலகஞ்செய்தல். வடமொழியில் மூலமில்லை.]*

**Skt., Pkt., Nep., Sinh., Pali.** kalaha; **H., Ass., Beng.** kalah; **Ori.** kaḷaha; **Guj.** kaḷo; **Mar.** kaḷho; **Kas.** kōla-kōl; **Mal.** kelani.

**த.** கலகம் > **Skt.** kalaha (வ.மொ.வ.109.)

இருகுழுவார் அல்லது கூட்டத்தார் செய்யும் போர் கலகமாகும் [சொல். கட். 59.].

மாறுபட்ட இருவர் அல்லது இருக்கூட்டத்தார் கலந்தே போர் செய்வர். கைகலத்தல் என்னும் வழக்கை நோக்குக. கல → கலகு = கலகம். கலகித்தல் = கலகஞ்செய்தல். கலகம் → கலாம். கலாய்த்தல் = சினத்தல், மாறுபடுதல். கலாவுதல் = சினத்தல், கலாவு → கலாவம் → கலாபம் = கலகம். கலாபித்தல் → கலகஞ்செய்தல் [வே.க. 40.].

**கலகம்**[2] *kalagam,* பெ.(n.) 1. நிரையம் (நரகம்); a hell. *"கலகக் கனற்கொடி" (தக்கயாகப். 457.).* 2.கலகக்குருவி (யாழ்.அக.); kingfisher.

*[கலக்கம் → கலகம்.]*

**கலகம்**[3] *kalagam,* பெ.(n.) 1. மீன்வகை (சங்.அக.); a kind of fish. 2. ஒரு பறவை; a bird.

*[கலங்கு → கலகம்.]*

**கலகக்காரன்** *kalaga-k-kāraṉ,* பெ.(n.) 1.கலகஞ்செய்வோன்; insurgent, rebel. 2. சச்சரவு விளைப்போன் (கொ.வ.); quarrelsome person, wrangler, one who bickers.

**க.** கலகார்தி

*[கலகம் + காரன்.]*

**கலகக்குருவி** *kalaga-k-kuruvi,* பெ.(n.) 1. ***மீன்குத்தி*** பார்க்க; see *mīn-kutti.* 2. கலகம் செய்வோன் (கொ.வ.); mischievous person, meddler.

*[கலகம் + குருவி.]*

**கலகசெந்தயன்** *kalaga-cendayaṉ,* பெ.(n.) விச்சுளி; a swift little bird; pied king fisher (சா.அக.).

*[கலகம் + செந்தலையன்.]*

**கலகண்டம்** *kala-kaṇḍam,* பெ.(n.) 1. குயில்; koel. 2. புறா; pigeon.

*[கள் → கள → கல + கண்டம் (தொண்டை, கழுது).]*

**கலகல**[1] *kala-kala,* பெ.(n.) ***கலகலெனல்*** பார்க்க; see *kala-kal-enal. "கலகல கூவுந் துணையல்லால்" (நாலடி, 140.).*

*[கல = ஒலிக்குறிப்பு இடைச்சொல். கல + கல – கலகல. (இரட்டைக்கிளவி).]*

**கலகல**[2]**–த்தல்** *kala-kala,* 3 செ.கு.வி.(v.i.) 1.கலகலவென்று ஒலித்தல்; to reiterate in sound; to rustle, as dry leaves, to tinkle, as little bells; to chink, as money; to clink, as chains; to rattle, as pebbles in a shell. *"வற்றிய வோலை கலகலக்கும்" (நாலடி, 256.).* 2. கட்டுக்குலைதல்; to become shaky, get loose in the joints, as an old cart. இந்த வண்டி கலகலத்துப் போயிற்று.

**க.** கலகலிசு, களகளிசு.

*[கல + கல. கலகல–த்தல்.]*

**கலகல–**[3]**த்தல்** *kalakala-,* 3 செ.கு.வி.(v.i.) 1.நன்றாகக் காய்தல் (யாழ்.அக.); to dry thoroughly. 2. மிகப்பேசுதல்; to talk too much.

**ம.** கலகலய்க்குக

*[கல + கல – கலகலத்தல்.]*

மரத்தில் முற்றிய காய்கள் காய்ந்தபின் காற்றில் கலகலத்தலால் காய்ந்து உலர்தலையும், ஒலித்தல் ஆகிய பேசுதலையும் குறித்தது.

**கலகலக்கக்காய்–தல்** *kalakalakka-k-kāy-,* 2 செ.கு.வி.(v.i.) நன்றாக உலர்தல் (கொ.வ.); to dry thoroughly.

*[கலகலக்க + காய்-.]*

**கலகலத்தவாய்** *kalakalatta-vāy,* பெ.(n.) 1.அரட்டை யடிப்பவன், அலப்பும்வாயன்; a chatterbox, an incessant jabberer. 2. மனத்திலுள்ளதை மறையாது பேசுவோன்; an outspoken man.

*[கலகலத்த + வாய்.]*

**கலகலப்பாயிரு–த்தல்** *kalakappāyiru-,* 3செ.கு.வி. (v.i.) 1. ஊக்கம் கொண்டிருத்தல்; to be joyful, exhilerate. 2. கலந்து பழகுதல்; to be sociable with others. 3. நோயற்ற நிலையில் உடல் நலமுடன் இருத்தல்; to be healthy.

*[கலகலப்பு + ஆய் + இரு.]*

**கலகலப்பு** *kalakalappu,* பெ.(n.) 1. ஒலிக்கை; rustling. 2. கலந்துபழகுகை; sociability. அவன் கலகலப்பாய் இருக்கிறான். 3. களிப்பு மேலிடுதல்; joyfulness, exhilaration. திருமணவீடு கலகலப்பாயிருக்கிறது (உ.வ.). 4. நோயற்ற நிலையில் உடல் நலமுடனிருத்தல்; sound health. உடம்பு கலகலப்பாயிருக்கிறது (உ.வ.).

**ம.** களகள; **து.** கலகல, தல்தல், களகள, தளதள; **தெ.** கலகல; **க.** கலகல, களகள; **கோத.** தல் தல் **மா.** கல், கல்ட்ரெ.

[கலகல → கலகலப்பு.]

த. கலகலப்பு > Skt. kalakala.

**கலகலம்**[1] *kala-kalam,* பெ.(n.) 1. பறவையொலி (உரி.நி.); chirping of birds. 2. பேரிரைச்சல் (வின்.); hullabaloo, confused noise of a crowd.

தெ. கலகல

*[கல + கல – கலகல → கலகலம்.]*

**கலகலம்**[2] *kalagalam,* பெ.(n.) அணிகலச் செப்பு (யாழ்.அக.); box for jewels.

*[கல + கல – கலகல → கலகலம். ஒலிக்கும் உட்பரல் பெற்ற சிலம்புபோன்ற அணிகலன்களை வைக்கும் செப்பு.]*

**கலகலெனல்** *kala-kal-enal,* பெ.(n.) ஓர் ஒலிக்குறிப்பு; onom. expr. signifying tinkling, chinking. *"பசும்பொன் வளையல் கலகலென" (தனிப்பா. 11, 2, 2.).*

க. கலகலகுட்டு

*[கல + கல + எனல்.]*

**கலகவாய்க்குருவி** *kalaha-vāy-k-kuruvi,* பெ.(n.) ஒரு வகைக்குருவி; a sparrow.

*[கலகம் + வாய் + குருவி.]*

**கலகவாயன்** *kalaga-vāyan,* பெ.(n.) சண்டைக் காரன்; pugnacious, quarrelsome person.

*[கலகம் + வாயன்.]*

**கலகி**[1]**–த்தல்** *kalagi-,* 4 செ.கு.வி.(v.i.) கலகஞ் செய்தல்; to create a disturbance, cause a commotion.

*[கலகம் → கலகி .]*

**கலகி**[2] *kalagi,* பெ.(n.) கலகக்காரி; quarrelsome, intriguing woman. *"மால் கலகியாம்" (சினேந். 269.).*

*[கலகம் → கலகி.]*

**கலங்கடி–த்தல்** *kalaṅgadi-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1.கலங்கச் செய்தல்; to discomfit, put to rout, as the forces of an enemy. எதிரி சேனையைக் கலங்கடித்தான் (உ.வ.). 2. திகைக்கச் செய்தல்; cause surprising.

*[கலங்க + அடி .]*

**கலங்கரைவிளக்கம்** *kalaṅ-karai-viḷakkam,* பெ.(n.) திக்குக்குறி காட்டிக் கலத்தை அழைக்கும் விளக்கம், கப்பல்களை அழைக்கும் வழி காட்டும் விளக்குக் கம்பம்; lit., light that invites vessels, beacon light, light-house. *"இலங்கு நீர் வரைப்பிற் கலங்கரை விளக்கமும்" (சிலப். 6, 141.).*

*[கலம் + கரை + விளக்கம். விளக்கு + அம் – விளக்கம். ('அம்' பெருமைப்பொருள் பின்னொட்டு. கடலிற் செல்லும் மரக்கலத்திற்குத் துறைமுகம் உள்ள இடத்தை அடையாளம் காட்டி அழைக்கும் விளக்கு. கரைதல் = அழைத்தல்.]*

**கலங்கல்**[1] *kalaṅgal,* பெ.(n.) 1. கலங்குகை; turbidity, muddiness. *"தெளிவிலாக் கலங்க னீர்சூழ்". (திவ். திருமாலை. 37.).* 2. கலங்கல் நீர்; muddy water. *"செங்கலங்கல் வெண்மணன்மேற் றவழும்" (திவ். பெரியதி. 4, 4, 7.).* 3. அழுகை (சங்.அக.); weeping. 4. அச்சம் (வின்.); fear. 5. மயங்குகை; perturbation. 6. கலங்கிய கள்; toddy. *"எமக்கே கலங்க றருமே" (புறநா.298:1). 7. நீர்;* water *(ம.அக.).*

ம. கலங்ஙல்; க., பட. கலகு; குவி. கங்கல; H; kalank; Mal. keroh.

*[நீரும் மண்ணுங்கலத்தல் கலங்கல். கல → கலகு → கலங்கு → கலங்கல். கல → கலுழ். கலுழ்தல் = கலங்கல். கலுழ் = நீர்க்கலக்கம் (வே.க. 142.).]*

**கலங்கல்**[2] *kalaṅgal,* பெ.(n.) **கலிங்கு** பார்க்க; see *kalingu.*

*[கலிங்கு → கலிங்கல் → கலங்கல் (கொ.வ.).]*

**கலங்கன்** *kalaṅgan,* பெ.(n.) 1. கலிங்கைக் காப்பதாகக் கருதப்படும் சிறு தெய்வம்; a demigod considered to be protecting sluice. 2. ஆண்பாற் பெயர்; name of a person.

*கலிங்கு காத்த அம்மன் → கலங்காத்தம்மன் (கொ.வ.). (பெ.பா.) → கலங்கன் (ஆ.பெ.) வடார்க்காடு மாவட்ட வழக்கு.*

**கலங்கனீர்** *kalaṅganīr*, பெ.(n.) கலங்கல் தண்ணீர்; muddy water.

*[கலங்கல் + நீர்.]*

**கலங்காச்சுடர்** *kalaṅga-c-cuḍar*, பெ.(n.) தஞ்சாவூர் வட்டம் திருச்சோற்றுத் துறை (திருச்சாத்துரை)க் கோயிலுக்கு அணையா விளக்கு நல்கிய நங்கை; a lady who donated a lamp at Thiruchatturai in Thanjavur taluk. *"ஆயிரத்தளி தேவநார் மகள் கலங்காச்சுடர்" (தெ.இ.கல்.தொ. 19 கல்.148.).*

*[கலங்கா + சுடர்– கலங்காச்சுடர்.]*

**கலங்காப்பெருநகரம்** *kalaṅgā-p-peru-nagaram*, பெ.(n.) விண்ணுலகம்; Vaigundha, Vishnu's heaven. *"கலங்காப் பெருநகரத்துப் போலியாயிருக் கும்" (ஈடு, 10, 2, 1.).*

*[கலங்கு + ஆ + பெரு + நகரம். 'ஆ' எ.ம.இ.நி.]*

**கலங்காவரிச்சு** *kalaṅgā-variccu*, பெ.(n.) கூரை யின் கைமரங்களுக்கிடையே இடைவிட்டுக் கட்டிய வரிச்சுக்கட்டு (செங்கை.); thin rafters fixed equidistantly in a roof.

*[கலங்கு + ஆ + வரிச்சு 'ஆ' எ.ம.இ.நி. கலங்காத = ஒன்றோடொன்று ஒட்டாத, நெருங்காத.]*

**கலங்கிண்ணி** *kalaṅkiṇṇi*, பெ.(n.) 1. வெண்கலம்; bell-metal. 2. உணவுண்ணும் கிண்ணி; eating dish (சா.அக.).

*[கலம் + கிண்ணி.]*

**கலங்கு–தல்** *kalaṅgu-*, 5 செ.கு.வி.(v.i.) 1. நீர் முதலியன குழம்புதல் ; to be stirred up, agitated, ruffled as water. *"கலங்க முந்நீர் கடைந்து" (திவ். பெரியதி. 6, 5, 1.)* 2. மனங்குழம்புதல்; to be confused, confounded. *"கலங்காமற் காத்துய்க்கும்" (நாலடி, 59-).* 3. மயங்குதல்; to be abashed, embarrassed, perplexed. *"காம நலியக் கலங்கி" (பு.வெ. 11. பெண்பாற். 1.);* 4. அஞ்சுதல்; to fear, to be intimidated; to be cowed. *"விண்ணு மண்ணுமெல்லாங் கலங்க" (திருவாச. 6, 28.).* 5. துன்பமுறுதல் (வின்.); to be sad; to grieve; to experience sorrow. 6. தவறுதல்; to fail. *"கலங்காது ஞாலங் கருதுபவர்" (குறள், 485.).*

**ம.** கலங்ஙுக; **கோத.** கல்க்; **க., பட.,** கலங்கு; **குட.** **கலங்க். து.** கலங்குனி; **தெ.** கலாகு. **கூ.** கல்ப; **குரு.** கலாக்சனா; **மால்.** கல்லுகெ

**Skt.** kalusa (turbid of water or mind.).

*[குல் → கல் → கல → கலங்கு.]*

**கலங்கொம்பு** *kalaṅ-kombu*, பெ.(n.) கலைமான் கொம்பு (யாழ்ப்.); stag's horn.

**ம.** கலங்கொம்பு

*[கலை → கல + கொம்பு.]*

**கலசச்சுரை** *kalaša-c-curai*, பெ.(n.) கும்பச்சுரை; a species of bottle -gourd in the shape of a pot (சா.அக.).

*[கலசம் + சுரை = கலயம் போன்ற வடிவுடையது.]*

**கலசநிறுத்து–தல்** *kalaša-niruttu-*, 5 செ.கு.வி.(v.i.) மாவிலை தேங்காய் நிறுத்திய நிறைகுடம் அமைத்தல்; to set up with mantras, on religious occasions, a pot full of water covered with sprays of mango leaves and a coconut a top of it.

*[கலயம் → கலசம் → நிறுத்து–.]*

**கலசப்படை** *kalaša-p-paḍai*, பெ.(n.) பரவ மகளிர் காதணி வகை; an ear ornament worn by parava women.

*[கலயம் → கலசம் + படை.]*

**கலசப்பால்** *kalaša-p-pāl*, பெ.(n.) முலைப்பால்; woman's breast milk (சா.அக.).

*[கலசம் + பால். கலசம் = குடம், கிண்ணம், இவைபோன்றிருக்கும் முலை.]*

**கலசப்பானை** *kalaša-p-pāṉai*, பெ.(n.) 1. விளக்குக் கலசம் (திவா.); censer. *"கலசப்பானை யொன்று மூக்கும் அடியுமுட்பட" (S.I.I. ii. 5.).* 2. காளாஞ்சி

(சது.); spittoon. 3.வழிபாடு, மணவிழா போன்ற வற்றின் போது பயன்படுத்தும் அடுக்குப் பானைகள்; set of pots in different sizes used for prayer.

*[கலயம் + கலசம் + பானை.]*

**கலசம்** *kalašam*, பெ.(n.) 1. குடம்; small vessel, pot. *"செப்புஎன்பன் கலசமென்பன்" (கம்பரா. நாடவி. 43.).* 2. கிண்ணம் (விவிலி. மத். 10, 42.); cup. 3. விளக்குக்கலசம்; censer. 4. விளக்குத் தூண்; (arch.) dome, cupola. கலசக்கோட்டை. 5. ஆயிரம் பாக்கு (அபி. சிந். பக். 204.); a standard measure of capacity = 1000 பாக்கு.

**ம.** கலம்; **கோத.** கல்ம்; **க.** கல; **குட.** கல (பெரியபானை); **து.** கர.

H. kalah; Pkt. kalas; **Skt.** kalasa.

*[கலயம் → கலசம்.]*

**கலசமாட்டு[1]–தல்** *kalašam-āṭṭu-*, 5 செ.கு.வி.(v.i.) *"கலசத்தால் திரு முழுக்காட்டுதல்" (S.I.I. iii. 102.);* to bathe an idol with the consecrated water from a kalasam reciting appropriate mantras as the water is poured.

*[கலயம் → கலசம் + ஆட்டு–.]*

**கலசமாட்டு[2]** *kalašam-āṭṭu*, பெ.(n.) கலசங் கொண்டு திருமுழுக்குச் செய்கை (இ.வ.); pouring consecrated water on an idol, from a kalasam, with mantras.

*[கலயம் → கலசம் + ஆட்டு.]*

**கலசமுனி** *kalašamuṉi*, பெ.(n.) குடத்தினின்றுப் பிறந்தவராகக் கருதப்படும் அகத்திய முனிவர்; agattiya was supposed to have been born from a pot. *"அன்று கலச முனி வயிற்றி லற்றா யென்னில்" (நைட.சந்.4.).*

*[கலயம் → கலசம் + முனி.]*

**கலசர்** *kalašar*, பெ.(n.) இடையர்; shepherd.

*[கலயம் → கலசம் → கலசன் → கலசர்.]*

**கலசன்** *kalašaṉ*, பெ.(n.) இடையன் (யாழ்.அக.); cow-herd.

*[கலயம் → கலயன் → கலசன்.]*

கையில் கூழ்மொந்தையொடு ஆடுமேய்க்கச் செல்லும் இடையனைக் கலயம் ஏந்தியவன் என்னும் பொருளில் கலயன் → கலசன் என அழைத்ததனால் பெற்ற பெயராகலாம். இச்சொல் நாளடைவில் ஏவிய தொழில் செய்யும் தாழ்ந்த பணியாளன் என்னும் பொருளில் கலாசி என வழங்கலாயிற்று.

**கலசு–தல்** *kalašu-*, 10 செ.கு.வி.(v.i.) கலத்தல்; to mingle. பிரமருத்திரர்கள் நடுவே கலசி நின்றான் (ஈடு.).

**க.** கலசு

*[கல → கலசு → கலயு → கலசு (கொ.வ.).]*

**கலஞ்சாரி** *kalañjāri*, பெ.(n.) ஆன்மணத்தி (கோரோசனை); cow's bezoar (சா.அக.).

*[கலம் + சாரி.]*

**கலஞ்செய்கோ** *kalañceycō*, பெ.(n.) மட்பாண்டம் வனையும் தொழில் வல்லவர், குயவர்; pot maker, potter. *"கலஞ்செய் கோவே கலஞ்செய் கோவே நனந்தலை மூதூர்க் கலஞ்செய் கோவே" (புறம். 256.).*

**மறுவ.** குயவர், வேட்கோ.

*[கலம் (மட்கலம்) + செய் + கோ. கோ = குயவர்.]*

**கலஞ்செலுத்து–தல்** *kalañceluttu-*, 6 செ.குன்றாவி. (v.t.) கப்பல் செலுத்துதல்; to sail the ship. *"அலைகடல் நடுவுட் பலகலஞ் செலுத்தி" (S.I.I. Vol.5. Part.II. 404.).*

*[கலம் + செலுத்து.]*

**கலட்டிக்காய்** *kalaṭṭi-k-kāy*, பெ.(n.) பிஞ்சும் முதிர்வும் அற்ற காய் (ம.அக.). fruit just formed.

**கலடு** *kalaḍu*, பெ.(n.) கற்பாங்கான நிலம் (யாழ். அக.); stony ground.

*[கல் → கல்லது → கலது → கலடு.]*

**கலணை** *kalaṇai*, பெ.(n.) ***கலனை***[2] பார்க்க; see *kalaṇai*[2], *"கலணை விசித்து ... புரவி செலுத்தி" (திருப்பு. 405.).*

*[கலனை → கலணை (கொ.வ.).]*

**கலத்திற்பிரிவு** *kalattir-pirivu,* பெ.(n.) 1. கடல்கடந்து செல்வதனால் ஏற்படும் பிரிவு (பழ.தமி.114) separation due to going on sea voyage.

*[கலம் + அத்து + இல் + பிரிவு. கலம் = மரக்கலம். 'அத்து' சாரியை, 'இல்' ஏழன் உருபு.]*

**கலத்திற்போடுதல்** *kalattirpōdudal,* தொ.பெ.(vbl.n) மணமகள் மணமகனுக்கு (முதன்முதல்) படைக்கும் உணவு (ம.அக); The first meal served by the bride to the bridegroom immediately after marriage.

*[கலம் = உண்கலம். கலம் + அத்து + இல் + போடுதல்.]*

**கலத்தோசை** *kalattōšai,* பெ.(n.) வெண்கலம்;bell-metal (சா.அக.).

*[கலம் + அத்து + ஓசை.]*

**கலதம்** *kaladam,* பெ.(n.) வழுக்கைத் தலை; baldhead.

க. கலதி (மட்பாண்டம்)

*[கலம்+அத்தி–கலத்தி (மட்பாண்டம்) → கலதம் (மட்பாண்டம்போன்ற வழுக்கைத்தலை).]*

**கலதி**[1] *kaladi*[1], பெ.(n.) 1. தலைவழுக்கையை உண்டாக்கும் நோய் *"கலதிரோகம்" (சிவரட்.294) (சீவரட்.);* the disease that produces bald head. 2.தலைவழுக்கை; baldness

க. கலதி(மட்பாண்டம்)

*[கலம் → கலத்தி (மட்பாண்டம்). மட்பாண்டம் போல் தலைவழுக்கை உண்டாக்கும் நோய்.]*

**கலதி**[2] *kaladi,* பெ.(n.) 1. கேடு; ruin, destruction, disaster. *"கலதியம் பிவையுங் காய்ந்த" (சீவக.769.)* 2. மூதேவி; the goddess of misfortune. *"கலதிபூதவேதாளி" (திருப்பு.381) (பிங்.).* 3. தீக்குண முடையவன்; wicked man. *"கள்வன் கடியன் கலதியிவன்" (திருவாச.10,19).*

ம.கலதி ; க.கலதி (தீயவன்).

H.galti; E.guilty.

*[கல → கலக்கம் → கலத்தம் → கலத்தி → கலதி.]*

**கலதிமை** *kaladimai,* பெ.(n.)தீவினை;misfortune. *"நல்லறங் காய்வது கலதிமைப் பாலதாகுமே" (சீவக.2932.).*

*[கல→கலதி→கலதிமை. 'மை' ப.பெ.ஈறு]*

**கலதை**[1] *kaladai,* பெ. (n.) குழப்பம் (வின்.); confusion, tumult, turmoil. 2. அழுக்குத்தன்மை;dirtiness

*[கலக்கம் → கலத்தம் → கலத்தை → கலதை.]*

**கலதை**[2] *kaladai,* பெ.(n.) மூதேவி. (யாழ்அக); the goddess of misfortune. 2.கீழ்மை;meanness (த.மொ.அ).

ம.கலத

*[கலக்கம்→கலத்தம் → கலத்தை → கலதை.]*

**கலந்தருநன்** *kalan-tarunan,* பெ.(n.) 1.பொற்கொல்லன்(சூடா.); goldsmith,jewel-maker. 2.குயவன் (யாழ்.அக); potter.

*[கலன்+தருநன். கலன்=அணிகலன், கலன்+தருநன். கலம்=மட்பாண்டம், ஏனம், தருநன்= தருபவன், மட்கலம் செய்பவன்.)*

**கலந்தருவார்** *kalantaruvār,* பெ.(n.) யாழ்ப்பாணர்; கந்தருவர்; bards who play lutes;gandharvas.

*[கலம்+தருவார்–கலந்தருவார்.கலம்=யாழ். தருதல்=உடன் கொணர்தல், எடுத்துச்செல்லுதல், யாழானாகிய இசையெழுப்புதல். இச்சொல் கலந்தருவார் → கலந்தருவர்→ காந்தருவர்→கந்தருவர் எனத்திரிந்தது. கந்தர்வ என்னும் வடசொல்லுக்கு அம்மொழியில் மூலச்சொல் இல்லை.]*

**கலந்தவர்** *kalandavar,* பெ.(n.)அன்பர்;well-wishers, *"கலந்தாரைக் கைவிடுதல்"(நாலடி,பொறை.76)* 2. உறவினர்; relatives 3. சேர்ந்தவர்;one who mingles.

*[கல→ கலந்தவன்→ கலந்தவர். வி.அ.பெ. 'அர்' (ப.பா.ஈறு).]*

**கலந்தாய்–தல்** *kalandāy-,* 2 செ.கு.வி.(v.i.) ஒரு பொருள்குறித்துப் பிறருடன் கருத்தாய்வு மேற்கொள்ளல்; to confer with others on a particular subject.

*[கலந்து + ஆய்வு.]*

**கலந்தார்** *kalandār,*பெ.(n.) ***கலந்தவர்*** பார்க்க; see *kalandavar.*

*[கல → கலந்தவர் → கல்ந்தார் (த.மொ.4).]*

**கலந்தான்** *kalandān,* பெ.(n.) மைக்கூடு (C.G.); ink-stand (செ.அக.).

[கல→கலந்தான். நிறங்களைக் கலந்து கூட்டிய மை உள்ள மைக்கூடு.]

**கலந்துகட்டி** *kalandu-kaṭṭi,* பெ.(n.) நல்லதும் கெட்டதும் கலந்தது; admixture of the good and bad; haphazard interlarding. *"தேவதாந்தரங் களையும் கலந்துகட்டியாக ப்ரதிபாதிக்கையாலும்" (ஈடு,4,10.ப்ர.).*

*[கல→ கலந்து+கட்டி.]*

**கலந்துகட்டிப்பரிமாறு-தல்** *kalandu-kaṭṭi-p-arimāṟu-,* 5 செ.கு.வி.(v.i.) வேறுபாடின்றிக் கலத்தல்; to mix freely without any distinction, as caste, rank, etc.

*[கலந்து+கட்டி+பரிமாறு.]*

**கலந்துகட்டிப்பரிமாறு²-தல்** *kalandu-kaṭṭi-p-parimāṟu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. அணிகலன் முதலியவற்றைப் பொதுவில் பயன்படுத்தல்(வின்.); to use ornaments or other property in common. 2.விழாக்களில் உணவுப்பரிமாற்றத்தில் பற்றாக்குறை நேருங்கால் இருப்பனவற்றைக்கலந்து அனைவ ருக்கும் கிடைக்குமாறுசெய்தல்; to serve by adjusting food for all, with available items in a function etc.

*[கலந்து + கட்டி + பரிமாறு.]*

**கலந்துகொள்-தல்** *kalandukoḷ-,*16 செ.கு.வி. (v.i.) விழாவில், பங்கேற்றல்; to participate.தலைவர் அந்தத் திருமண நிகழ்ச்சியில் கலந்து கொள்ள வில்லை(உ.வ.). 2.ஒன்றோடொன்று கலத்தல்; to mix.

*[கலந்து+கொள். 'கொள்' துணை வினை.]*

**கலந்துபரிமாறு-தல்** *kalandu-parimāṟu-,* 5 செ.கு.வி. (v.i) 1.கூடிக்கலந்து வினையாற்றுதல்; to co-operate. 2. ஒன்றாக இணைந்து இன்பம் நுகருதல் (திவ்.திருவாய்.4.2.ப்ர.ஆறா); to enjoy in common.

*[கலந்து + பரிமாறு.]*

**கலந்துரை-த்தல்** *kalandurai-,* செ.கு.வி.(v.i.) ***கலந்துரையாடுதல்*** பார்க்க; see *kalanduraiyāḍutal*

*[கல → கலந்து+உரை.]*

**கலந்துரையாடல்** *kalanduraiyāḍal,* பெ.(n.) ஒன்றுக்கு மேற்பட்டோர் பங்குப்பெறும் உரையாடல்; conversation, discussion. ஒரு கலந்துரை யாடலுக்கு ஏற்பாடுசெய் (உ.வ.).

*[கலந்து+உரை+யாடல்.]*

**கலந்துரையாடு-தல்** *kalanduraiyāḍu,* செ.கு.வி. (v.t.) ஒன்றுக்கு மேற்பட்டோர் உரையாடுவது; to converse, discuss. இன்றே கலந்துரையாடு நான் கலந்து கொள்கிறேன் (உ.வ.).

*[கலந்து + உரை+யாடு.]*

**கலந்தை** *kalandai,* பெ.(n.) பெருமை (திவா.) greatness.

*[கல் → கலந்தை. கல்வியால் சேர்ந்த பெருமை.]*

**கலந்தோர்** *kalandhōr,* பெ.(n.) நட்புற்றோர்; friends

*[கலந்தவர் → கலந்தோர்.]*

**கலப்படக்காரன்** *kalappaḍakkāraṉ,* பெ.(n.) கலப்படம் செய்பவன்;one who adulterates.

*[கலப்படம் + காரன்.]*

**கலப்படம்** *kalappaḍam* பெ.(n.)1. ஒன்றுக்கும் மேற்பட்டபொருள்கள் கலந்த கலவை; mixture 2. தரம்வாய்ந்ததோடு தரமற்றதைச் சேர்த்து கலந்த கலவை;adulterated things. கலப்படம் செய்வது சட்டப்படிக்குற்றமாகும் (உ.வ.).

**தெ.** கலப்படமு

*[கல → கலப்பு + அடம். அடம். – சொ.ஆ.ஈறு.]*

**கலப்படம்செய்-தல்** *kalappaḍamšey-,* செ.குன்றாவி. (v.t.) தரமற்றபொருளைத் தரம் வாய்ந்த பொருளோடு கலத்தல்; to adulterate

*[கல → கலப்பு + அடம் + செய்.]*

**கலப்படமாக்கு-தல்** *kalappaḍamākku-,* 5 செ. குன்றாவி. (v.t.) ***கலப்படம்செய்*** பார்க்க; see *kalappaḍamšey.*

*[கலப்படம் + ஆக்கு.]*

**கலப்படை** *kalappaḍai,* பெ.(n.) ***கடற்படை*** பார்க்க; see *kaḍaṟpaḍai.*

*[கலம் + படை.]*

**கலப்பத்துஆள்** *kala-p-pattu-āḷ,* பெ.(n.) மரக் கலத்தைச் செப்பனிடும் ஆள் (நெல்லை. மீனவ.); repairer of a ship.

*[கலம்+பற்று+ஆள்டி.]*

**கலப்பத்துக்கட்டை** *kala-p-pattu-k-kaṭṭai,* பெ.(n.) கொட்டாப்புளி (நெல்லை–மீன.); hammer.

*[கலம்+பற்று+கட்டை (மீன.தொ.).]*

**கலப்பத்துவேளை** *kala-pattu-vēḷai* பெ.(n) மரக் கலத்தைச் செப்பனிடும் வேலை; repair work in a ship.

*[கலம் + பற்று + வேலை (மீன்.தொ).]*

பற்று = செப்பணீடு.

**கலப்பரப்புநெல்** *kala-p-parappu-nel,* பெ.(n.) கலசத்தின் கீழ் இடும் நெல்; paddy spread under a kalasam, in relgious rites.

*[கலம் + பரப்பு + நெல்.கலயம் = கலம்.]*

**கலப்பற்றடி–த்தல்** *kala-p-parṟaḍi-,*4 செ.கு.வி.(v.i.) ***கலப்பற்றுப்பார்*** பார்க்க; see *kala-p-parṟu-p-pār,*

*[கலம்பு + அற்று + அடி.]*

**கலப்பற்று** *kala-p-parṟu,* பெ.(n.) படகின் நீக்கல் அடைக்கை (யாழ்ப்.); calking of a boat.

*[கலம் + பற்று. கலம் = மரக்கலம். பற்று = இணைப்புப் பலகை இடைவெளி நீக்கிச் சேர்த்தல்.]*

**கலப்பற்றுக்காரன்** *kala-p-parṟu-k-kāraṉ,*பெ.(n.) படகின் நீக்கலடைப்பவன்;one whose occupation is the calking of ships, boats, etc., calker.

*[கலம் + பற்று + காரன்.]*

**கலப்பற்றுத்தோணி** *kala-p-parṟu-t-tōṇi,* பெ.(n.) நீக்கல் அடைக்கப்பட்டுள்ள படகு(வின்);calked boat, surf-boat,the seams of which are formed by joining planks without lapping.

*[கலம் + பற்று + தோணி.]*

**கலப்பற்றுப்பார்–த்தல்** *kalap-p-parṟu-p-pār-,* 4 செ.கு.வி.(v.t.) படகின் நீக்கலடைத்தல்; to calk a boat.

*[கலம் + பற்று + பார்.]*

**கலப்பற்றுளி** *kala-p-parṟuḷi,* பெ.(n.)படகின் நீக்கலடைக்குங் கருவி; calking-iron.

*[கலம் + பற்று + உளி.]*

**கலப்பாச்சி** *kala-p-pācci,* பெ.(n.) கல்பாசி; very small mossy plants without stems or leaves, growing on rocks.

*[கல் + (பாசி) பாச்சி.]*

**கலப்பாடு** *kalappāḍu,* பெ.(n.) ஒரு கலம் விதை விதைக்கக்கூடிய நிலப்பரப்பு; the extent of rice field in which one kalam of seeds can be sown. ***கலவித்துப்பாடு*** பார்க்க see *kalavittu-p-pāḍu*

*[கலம் + வித்து + பாடு – கலம்வித்துப்பாடு → கலப்பாடு.]*

**கலப்பாந்தத்தி** *kalap-pāndatti,* பெ.(n.) புளியாரை; indian sorrel (சா.அக.).

**கலப்பிரு–த்தல்** *kalappiru-,* செ.கு.வி.(v.t.) கூடியிருத்தல், ஒன்றாயிருத்தல்; to be united.

**க.** கலப்பிரு

*[கலப்பு + இரு.]*

**கலப்பினம்** *kalappiṉam,* பெ.(n.) ஓர்இனத்தின் இருவகைகளை ஒன்று சேர்த்து உருவாக்கும் ஆற்றல் மிகுவகை; (of animal, seed etc.) hybrid, கலப்பின விதைகள், கலப்பின மாடு.

*[கலப்பு + இனம்.]*

**கலப்பு**[1] *kalappu,* பெ.(n.)1 மொத்தம், கூட்டுத் தொகை; gross, total, the whole 2. நிரவல் (சராசரி); average.

**ம.** கலப்பு

*[கல → கலப்பு.]*

**கலப்பு**[2] *kalappu,* பெ.(n.)1. கலக்கை; cordiality, *"கலப்புறக்குழுமி" (சேதுபு.3);* combination, mixture. 2. வந்து கூடுகை; meeting. 3.நட்பாகை; friendship,fellowship, intimacy. பெரியோருடன் கலப்பு நன்மைதரும் (உ.வ.). 4. கலந்து கட்டி யாகுகை; adulteration; alloyage. 5. மெய்யுறு புணர்ச்சி; copulation. *"கந்திருவர் கண்ட கலப்பு" (தொல்.பொருள்92உரை).* 6.கலவை;mixture *"கலப்பினாற்ற" (தணிகைப்பு.57).*

க. கலபு; தெ., து., ம.கலப்பு.

[கல → கலப்பு (வே.க.133).]

**கலப்பு-தல்** *kalappu-*, 5 செ.குன்றா.வி.(v.t.) ஒன்று சேர்த்தல் இணைத்தல்; to join, to unite.

க.கலபு; பட. கலப்பு.

[கல → கலப்பு = ஒன்று சேர்த்தல்.]

**கலப்புக்கதிர்** *kalappu-k-kadir*, பெ.(n.) 1. கதிர் அங்கொன்றும் இங்கொன்றுமாகக் காணும் பருவம் (தஞ்.); the stage when ears of corn appear here and there in a field. 2. ஒருவகைக் கதிரோடு வேறுவகைக் கதிர் கலந்திருத்தல்; a variety of corn which is mixed with other variety.

[கலப்பு + கதிர்.]

**கலப்புக்கீரை** *kalappu-k-kīrai*, பெ.(n.) ***கலவைக் கீரை*** பார்க்க see *kalavaikīrai*

[கல → கலப்பு + கீரை.]

**கலப்புவன்னி** *kalappuvaṉṉi*, பெ.(n.) ஒன்பது வகை மாழைகளையும், செய்ந்நஞ்சையும் வேறுபடுத்தும் மூலிகை; an unknown herb said to act upon the nine metals and the arsenical compounds.

[கலப்பு + வன்னி.]

**கலப்புச்சரக்கு** *kalappu-c-carakku*, பெ.(n.) கவப் படம் செய்தபண்டம்; adulterated article. ***கலப்படம்*** பார்க்க.

[கலப்பு + சரக்கு.]

**கலப்புத்திருமணம்** *kalappu-t-tirumaṇam*, பெ.(n.) இரு வேறு குல மக்களிடை நடைபெறும் மணவுறவு; inter-caste marriage.

[கலப்பு + திருமணம்.]

**கலப்புநெய்** *kalappuney*, பெ.(n.) 1. முக்கூட்டு நெய்; a mixture of three kinds of oil of oil viz, gingelly oil, castoroil and ghee. 2. தரக்குறைவான நெய்; adultrerated ghee (சா.அக).

[கவப்பு + நெய்.]

**கலப்புமணம்** *kalappumaṇam*, பெ.(n.) ***கலப்புத் திருமணம்*** பார்க்க see *kalappu-t-tirumaṇam.*

[கலப்பு + மணம்.]

**கலப்புமேற்கட்டு** *kalappu-mērkaṭṭu*, பெ.(n.) கல்லும் மரமும் கொண்டு அமைக்கப்படும் கோயில் மேற்கட்டு; turret of a temple made of stone and wood.

[கலப்பு+மேல்+கட்டு.]

**கலப்புமொழி** *kalappumoḻi*, பெ.(n.) ஒன்றுக்கு மேற்பட்ட மொழிக்கூறுகள் கலந்துள்ள மொழி; hybrid language.

[கலப்பு + மொழி.]

**கலப்புவிமானம்** *kalappu-vimāṉam*, பெ.(n.) ***கலப்பு மேற்கட்டு*** பார்க்க; see *kalapumērkaṭṭu*

[கலப்பு + மேல் + கட்டு.]

**கலப்புவினை** *kalappuviṉai*, பெ.(n.) பிறமொழிச் சொற்கள் தமிழ் வினையுடன் சேர்ந்து உருவாகும் கூட்டு வினை; a mixed compound verb, a foreign noun and a native auxiliary verb.

[கலப்பு + வினை.]

பெரும்பாலும் ஒருமொழி பிறமொழியினின்று பெயர்ச்சொல்லையே கடன் கொள்ளும். அவ்வாறு கடன் கொண்ட செயர்ச் சொற்களுடன் தம்மொழித் துணை வினைகளை இணைத்துக்கலப்பு வினை உருவாக்குவது அனைத்து மொழிகளிலும் காணப் படும் பொதுத்தன்மை எனினும் இது முற்றிலும் விலக்கத்தக்கது.

எடு: (சாந்தி) பண்ணு, try- பண்ணு, copy அடி.

**கலப்புறம்** *kalappuṟam*, பெ.(n.) 1. மருந்து அரைக்கும் குழியம்மி; apthecary's stone-mortar. *"கலப் புறத்திற்றேய்த்து" (பரரா.ச.1.235.).* 2. உண்கலத்தின் அடிப்பக்கம்; the bottom of an eating plate made of bell metal (சா.அக).

[கலம் + புறம்.]

**கலப்புறுமொழி** *kalappuṟu-moḻi*, பெ.(n.) இருதிணை யிலும் வருஞ்சொல் (பேரகத்.139.); words which occur in both genders, uyardiṇai and akriṇai.

[கலப்பு + உறு + மொழி.]

**கலப்புறை** *kalappuṟai*, பெ.(n.)மருந்தின் மூன்று பகுப்புகளுள் ஒன்று; one among the mixture of drugs

[கலப்பு + உறை.]

**கலப்பூ** *kalappū,* பெ.(n.) கற் பிளவுகளில் முளைக்கும் கற்பாசி; stone-moss-lichen,

*[கல்லு + பூ – கல்லுப்பூ → கலப்பூ.]*

**கலப்பெண்** *kalappeṇ,* பெ.(n.) கீழிலக்கத்துடன் (பின்னத்துடன்) சேர்ந்த முழு எண்; mixed number.

*[கலப்பு + எண்.]*

**கலப்பை**[1] *kalappai,* பெ.(n.) உழுபடை; plough,ploughshare. *"கலப்பை பூண்ட வேரால்" (சேக்கிழார்.பு.16.).* 2. ஒன்றற்கமைந்த உறுப்புகள்; parts as of a sacrifice. *"ஆயதற் குரியன கலப்பை யாவையும்" (கம்பரா.திருவவ. 84.).*

**மறுவ.** மேழி, ஏர், உழுபடை, நாஞ்சில், அலம்.

**ம.**கலப்பு; **க.**கலபு; **தெ.**கலப; **கசபா.** கலப்பெ; **து.**கலப்பு. **Skt.**hala,vedic.hal, **H.**hal.

*[கலன் →கலம் + பை – கலப்பை. பெய் = பை. கலப்பை → கலன் (கொழு) சேர்த்து, கொழுமுனை செருகப்பட்டது, உழுபடை.]*


கலப்பை

**கலப்பை**[2] *kalappai,* பெ.(n.)1. இசைக்கருவி முதலிய முட்டுகள் வைக்கும் பை; hold-all for keeping musical instruments and other articles.*"சுருக்கிக் காய கலப் பை"(மலைபடு.13.)* 2.யாழ்;*"காவினெங்கலனே சுருக்கினெங்கலப்பை" (புறநா,206)*

*[கலன் + பை. பெய் – பை.]*

**கலப்பைக்கட்டை** *kalappaikkaṭṭai,* பெ.(n.) கலப்பை செய்வதற்கான மரம்; piece of wood for making plough

*[கலப்பை + கட்டை.]*

**கலப்பைக்கிழங்கு** *kalappai-k-kiḻaṅgu,* பெ.(n.) கார்த்திகைக் கிழங்கு; root of Malabar glory lily.

**மறுவ.** நாபிக்கொடிக்கிழங்கு; வெண் தோன்றிக் கிழங்கு.

**ம.** கலப்பக்கிழங்கு

*[கலப்பை + கிழங்கு.]*

**கலப்பைக்குத்தி** *kalappai-k-kutti,* பெ.(n.) மரத்தூண்களின்தலைப்பில் போதிகைக் கட்டை போலக் கூரைவளையைத் தாங்குவதற்காக வைக்கப்படும் கட்டை; cornice.

*[கலப்பை + குத்தி.]*

**கலப்பைக்கூர்** *kalappai-k-kūr,* பெ.(n.) கலப்பையின் கொழுமுனை; sharp point of the colter of a plough.

*[கலப்பை + கூர்.]*

**கலப்பைகோ–த்தல்** *kalappaikō-,* 4 செ.குன்றாவி. (v.t.) கலப்பையின் வடிவமைத்த உறுப்புகளைக் கோத்தல்;to assemble a plough.

*[கலப்பை + கோ.]*

**கலப்பைச்சக்கரம்** *kalappai-c-cakkaram,* பெ.(n.) ஏர்ப்பொருத்தம் பார்க்கும் சக்கரம் (விதான.ஏர்மங். 4.தலைப்பு); (Astrol.) diagram in the form of plough used in determining the auspicious day for commencing ploughing during the season.

*[கலப்பை + சக்கரம்.]*

**கலப்பைசேர்–த்தல்** *kalappai-cēr-,* 4.செ.குன்றாவி. (v.t.) கலப்பை செய்தல் (வின்.); to make a plough.

*[கலப்பை + சேர்.]*

**கலப்பைநாக்கு** *kalappainākku,* பெ.(n.) கொழு; ploughshare

*[கலப்பை + நாக்கு.]*

**கலப்பைநூல்** *kalappai-nūl,* பெ.(n.) உழவுநூல்; science of agriculture. *"நுண்கலப்பை நூலோதுவார்" (சிறுபஞ்.60.)*

*[கலப்பை + நூல்.]*

**கலப்பைப்படை** *kalappai-p-paḍai,* பெ.(n.) பலராமர் பயன்படுத்திய போர்ப்படையாகிய ஏர்ப்படை; the plough used as a weapon of war by Balarama.

*[கலப்பை + படை.]*

**கலப்பையெலும்பு** *kalappaiyelumbu,* பெ.(n.) மூக்கின் துளையை இரண்டாகப் பிரிக்கும் எலும்பு;

a bone in the centre of the nose dividing the nostrils (சா.அக).

[கலப்பை + எலும்பு.]

**கலபம்** *kalabam,* பெ.(n.) மயிற்றோகை; peacock's tail-covert. *"மாக்கவின் மிகுங் கலப மஞ்ஞை" (திருவாத.பு.திருபெருந்.13.).*

[கல → கலவு → கலவம் → கலபம். கலவம்=தொகுதி.]

**கலபி** *kalabi,* பெ.(n.) மயில்;peacock. *"செழுங் கலபி யாலித்து" (கந்தரலங்.97).*

த.கலபி->Skt.kalapin.

[கலவம் → கலபம் → கலபி.]

**கலம்**[1] *kalam,* பெ.(n.) 1.குழிந்த உண்கலம், ஏனம்; vessel;hollow utensil, as a cup; plate, whether of earth or metal; earthenware. *"பொற்கலத் தூட்டி" (நாலடி,345.).* 2.குப்பி; bottle-shaped vessel. *"யவனர் நன்கலந்தந்த....தேறல்" (புறநா.56,18).* 3. மரக்கலம்;ship, boat. *"கலங்கவிழ் மாக்களை" (மணி,மே.16,120).* 4. அணிகலன்; jewel. *"நன்கலம் பரிசின் மாக்கட்கு நல்கி" (புறநா.6,15).*

க. கல; ம. கலம்; தெ. கலமு(கப்பல்); கோத. கல்ம்; குட. கல; து. கர; பிரா. கலண்; (உடைந்த பானையோடு).

மா. கால் (தொன்னை) Skt.kala(boat).

[குல் → கல் → கலம்=தோண்டப்பட்டது. கர;பிரா. கலண்ட் (உடைந்த பானை ஒடு)அல்லது குழிந்த ஏனம் (வே.க.190, senegalese;gal (boat); manding;kulu(boat) ஒ.மொ.நூ.178.]

பழங்காலத்தில் சமைப்பதற்குக் கற்கலம் உதவிற்று. கல்லுதல், தோண்டுதல் அல்லது குடைதல்; கல்லப்பட்ட ஏனம் கலம் எனப்பட்டது [தமி.வர.33] Galleon (Sp.galeon-low.L.galea), galley(o.Fr.galee.)என்னும் பெயர்கள் கலம் என்னும் பெயரைப் பெரும்புடை ஓத்திருக்கின்றன. நில வாணிகம் போன்றே நீர்வாணிகமுஞ் சிறந்தது. ஆற்றைக் கடக்கப் பரிசல்,அம்பி,ஓடம்,பள்ளியோடம் முதலிய கல வகைகளும்;கால்வாய் 'ஆறு' கரையோரக் கடல் ஆகியவற்றிற் சரக்குகளைக் கடத்து தற்குதோணி, பஃறி முதலிய கடத்து வகைகளும் கடலினுட்சென்று மீன் பிடிக்கக் கட்டுமரம், மேங்கா, திமில், படகு முதலிய சிறுகல வகைகளும்; முத்துக் குளிக்கச் சலங்குப் படகும், ஆழ்கடலைக் கடந்து அக்கரை நாடுகளில் வணிகஞ் செய்து மீளக் கப்பல், நாவாய், வங்கம் முதலிய பெருங்கல வகை களும் ஏற்பட்டன [தமி.வர.92,93].

**கலம்**[2] *kalam,* பெ.(n.) 1.உழுபடை(சூடா); plough. 2.படைக்கலம்; weapon. *"கையினுங்கலத்தினு மெய்யுறத் தீண்டி" (பட்டினப்.70).*3.வெண்கலம் ;bell-metal (சா.அக).

[குல் → கல் → கலன்பொருத்தியது,பொருந்தத்தக்கது பணியாற்ற உதவியாய் அமைந்தது.]

**கலம்**[3] *kalam,* பெ.(n.) 1.யாழ்; lute. *"கலத்தொடு புணர்ந்தமைந்த கண்டத்தால்" (சிலப்.7,24.).* 2. ஓலையாவணம் (தொல்.சொல்.81. உரை.); document written on palm-leaf.

[குல் → கல் → கலம் (உட்குழிவானது).]

**கலம்**[4] *kalam,* பெ.(n.) மூன்று தூணிகொண்ட ஒரு முகத்தலளவு (தொல்.எழுத்து.168);a measure of capacity. *'நல்லநாளில் நாழிப்பால் கறவாதது கன்று செத்துக் கலப்பால் கறக்குமா?' (பழ.).*

ம.கலன்; க.கலம்.

[குல் → கல் → கலம் = உட்குழிவானது, முகத்தல் அளவை]

பன்னிரண்டு மரக்கால் ஒருகலம். இரண்டுகலம் ஒருமூட்டை பன்னிரண்டு கலம் ஒருபொதி. நாலு மரக்கால் ஒரு தூணி. மூன்று தூணி ஒரு கலம்.

**கலம்**[5] *kalam,* பெ.(n.)பத்தி; column, a narrow division of a sheet, page,etc.

[கால் → காலம் → கலம் (நீண்டது ,உயரமானது, நெடுகப்பிரிக்கப்பட்ட பகுதி.)]

**கலம்**[6] *kalam,* பெ.(n.) வில்லங்கம்;encumbrance. *"நிலத்துக்கு எப்பேர்ப்பட்ட கலமும் இறையுமில்லை"* (S.I.I.VII,279.).

H. galti.

[குல் → கலம். கல் = கருப்பு,குற்றம்]

**கலம்**[7] *kalam,* பெ.(n.)தொழு பஃறி (இரேவதி) நாண்மீன்; the 27th naksatra. *"பூரம் பரணி கலம்" (சிலம்பு.3,123,உரை).*

[குல் → கல் → கலம். (கலம் போன்ற வடிவுடையது.]

**கலம்சாம்பலிடு-தல்** *kalamšāmbalidu-,* 17 செ.குன்றாவி. (v.t.) எச்சிற் கலத்தைச் சாம்பலிட்டுக் கழுவுதல்; to wash

vessels with ash. எச்சில் எடுத்து எச்சில் மண்டலம் செய்து கலம் சாம்பல் இடுவாள் ஒருத்திக்கு நிசதம் நெல்லு (S.I.I.vol.19.insc.357. S.No.64,65).

*[கலம் + சாம்பல் + இடு.]*

**கலம்பகக்கலி** *kalambaga-k-kali,* பெ.(n.) அடிகள் எழுத்தொவ்வாது வருங்கலி (யாப்.வி.95,470.); stanza consisting of lines of unequal number of letters, opp.to கட்டளைக்கலி.

*[கலம்பகம் + கலி.]*

**கலம்பகம்[1]** *kalambagam,* பெ.(n.) 1.பூக்கலவை; mixture;compound;combination;miscellany;perfumed ointment containing several ingredients. *"கலம்பகம்புனைந்த வலங்கலந் தொடையல்" (திவ்.திருப்பள்ளி.5.).* 2. குழப்பம்(வின்.); confusion, tumult, disturbance. 3. ஒரு கணித நூல்(கணக்கதி,5, உரை.); a work in mathematics.5. கடப்பமரம்; seaside indian oak (சா.அக).

ம.கலம்பன்

*[கலம்பம் → கலம்பகம்; 'அகம்'சொல்லாக்க ஈறு.வே.க.133]*

**கலம்பகம்[2]** *kalambagam,* பெ.(n.) பல்வகை செய்யுட்களாலாகிய சிற்றிலக்கிய வகை (இலக்.வி.812); a kind of poem composed of different kinds of stanzas.

*[குல → கல →கலவை, கல → கலம் → கலம்பம்→ கதம்பம் = பலவகைப் பூக்கள் கலந்தமாலை, கலம்பு → கலம்பகம் = பலவுறுப்புகள் கலந்து வருஞ்செய்யுள் நூல் (மு.தா.176).]*

ஒரு போகுவெண்பாக் கலித்துறை முதல் கலியுறுப்பாகக் கூறிப் புயவகுப்பு;மதங்கம், அம்மானைக் காலம், சம்பிரதம், கார், தவம், குறம், மறம், பாண், களி, சித்து, இரங்கல், கைக்கிளை, தூது, வண்டு, தழை, ஊசல் என்னும் மிப்பதினெட்டுறுப்பு மியைமடக்கு, மருட்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, ஆசிரியவிருத்தம், கலிவிருத்தம், கலித்தாழிசை, வஞ்சி விருத்தம், வஞ்சித்துறை, வெண்டுறை யென்னும் மிவற்றின் இடையே வெண்பாவுங் கலித்துறையும்விரவிவன் அந்தாதித் தொடையான் முற்றுறக் கூறுவது.

**கலம்பகமாலை** *kalambaga-mālai,* பெ.(n.) 1. பல பூக்கள் கலந்த மாலை; garland of flowers of different kinds; *'கலம்பகமாலையைப் பணியாக' (ஈடு,அவ.).* 2. சிற்றிலக்கிய வகை (வின்.); a kind of poem formed of different kinds of verses.

ம. கலம்பன்மால

*[கலம்பகம் + மாலை, கலம்பு →கலம்பகம்.]*

**கலம்பகன்** *kalambagan,* பெ.(n.) செவிட்டூமன்; dumb and deaf person.

*[கலம்பு (குழப்பம் = செயலறுதல்) → கலம்பகன்.]*

**கலம்பங்கயிறு** *kalambaṅkayiṟu,* பெ.(n.) தும்பினால் செய்த கயிறு (ம.அக); rope made of coconut fibre.

**கலம்பம்[1]** *kalambam,* பெ.(n.) வைப்பு நஞ்சு வகைகளிலொன்று; a mineral poison.

*[கல் → கல → கலம்பு → கலம்பம்.]*

**கலம்பம்[2]** *kalambam,* பெ.(n.) கடப்பமரம் (சங்.அக.); common Kadamba tree.

*[கடம்பம் → கலம்பம் (கொ.வ.).]*

**கலம்பாடு** *kalam-pāḍu,* பெ.(n.) ***கலவித்துப்பாடு*** (T.A.S.I.i.10.) பார்க்க; see *kalavittu-p-pāḍu.*

*[கலவித்துப்பாடு → கலம்பாடு.]*

**கலம்பாவேர்** *kalambāvēr,* பெ.(n.) மிகுக் கசப்புச் சுவையுடையதும் உடலுக்கு வலுவைக் கொடுக்கக் கூடியதுமான ஒருவகைச் செடியின் வேர்; a bitter root which gives strength to body(சா.அக).

**கலம்பி** *kalambi,* பெ.(n.)1. கொத்துப்பசளை (மலை.); cluster of Malabar night shade. 2. கொடிப்பசலை; red malabar night shade (சா.அக).

*[குல் → குலம்பி → கலம்பி.]*

**கலம்பூச்சு** *kalam-pūccu,* பெ.(n.) ஏனந்தேய்க்கும் ஓசை; sound produced when scouring household utensils. *"கலம்பூச் சாவஞ் சிலஞ்சி முற்றத்து" (பெருங்.உஞ்சைக். 40,128.).*

*[கலம் + பூச்சு.]*

**கலமடல்** *kalamatal,* பெ.(n.) அஞ்சல் முறையிலன்றிக் கலம் வாயிலாக அனுப்பப்படும் மடல் (அ) முடங்கல்; letter (or) written message.

*[கலம் + மடல்.]*

**கலமம்** *kalamam,* பெ.(n.) சின்னச்சம்பா நெல்; a small variety of south Indian paddy.

[கலவம் → கலமம்.]

**கலமர்** *kalamar,* பெ.(n.) பாணர்(அக.நி.); a class of minstrels in ancient Tamil country.

[கலம் + அர் – கலமர், கலம்=யாழ். கலமர்=யாழிசைக்கும் பாணர்.]

**கலமலக்கு–தல்** *kalamalakku-,* 5 செ.குன்றாவி. (v.t.) உழக்குதல்; to cause to flounder; to stir, agitate,confound. *"மன்த்துள்ளே கலமலக்கிட்டுத் திரியும் கணபதி" (தேவா.949,5.).*

[கலக்கு + மலக்கு. கலக்குமலக்கு → கலமலக்கு.]

**கலமறு[1]–த்தல்** *kalamaru-,* 5. செ.குன்றாவி.(v.t.) கடலில் பகைவரின் மரக்கலங்களைப் போரிட்டு அழித்தல்; to destroy ships of the enemies or pirates.

[கலம் + அறு.]

காந்தளூர்ச் சாலை கலமடுத்த (கல்.வெ) சோழப்பேரரசன் இராசராசனின் (985–1014) மெய்க் கீர்த்தியில் அவன் ஈழமண்டலம் முந்நீர்ப்பழந்தீவு பன்னீராயிரம் போன்ற பலஇடங்களை வென்ற வெற்றிச்சிறப்போடு காந்தளூர்ச்சாலை கலமறுத் தருளிய அருஞ்செயலும் குறிப்பிடப்படுகிறது. விக்கிரம சோழனுலா, குலோத்துங்கசோழன் பிள்ளைத்தமிழ் கலிங்கத்துப்பரணி ஆகிய நூல்களும் இதனைப்போர்வெற்றியாகவே குறிப்பிடுகின்றன. கலமறுத்தான் என்பதற்கு வடமொழி பயிலும் மாணவரின் பாடசாலைக்கு இத்தனைக் கலம்நெல் என்று அளவீடு செய்ததாக உரை கூறுவது பொருந்தாது. கோக்கருநந்தடக்கனின் (கி.பி.885) பார்த்திப சேகரபுரத்துச்செப்பேட்டில், காந்தளூர்மர் யாதியால் தொண்ணூற்று ஐவர் சட்டர்க்குச் சாலையும் செய்தான் என்னும் மேற்கோளும் கலமறுத்த செய்திக்குத்தக்க எடுத்துக் காட்டு ஆகாது. 'இச்சாலைக்குப் பெய்த கலத்தில் பவிழிய சரணத்தார் கலம் நாற்பத்தைந்து' என்னும் தொடரிலும் கலமறுத்தல் என்னும் சொல்லாட்சி இடம் பெறவில்லை. வடமொழி பயிலும் மாணவர்க்கு உணவளித்த சேரநாட்டு நான்கு ஊர்களிலும் அவர்களுக்கு வேண்டிய நெல் அவ்வூர் கோயிலி லிருந்து தரப்பட்டதாகத் திரவிடக் கலைக் களஞ்சியம் கூறுகிறது. அந்த நெல் அளவு 5 மரக்கால் கொண்ட பறை அளவாகக் குறிக்கப்பட்டுள்ளது. தமிழக முறையைப் பின்பற்றி 8 மரக்கால் கொண்ட கல அளவாகக் கூறப்படவில்லை. கோயிலில் ஏற் கெனவே நெல் தரப்பட்ட நிலையில் இராச ராசனும் நெல் வழங்க வேண்டியதில்லை. நெல் வழங்குவதும் ஓர் அருஞ்செயலாகாது. இராசராசன் தன் ஆசிரியருக்கு (அவர் எந்த நாட்டிலிருந்தாலும்) ஆண்டுக்கு ஈராயிரம் கலம் நெல் வழங்கி யிருக்கிறான். நெல் தருவது அருஞ்செயலாயின் அதுவும் மெய்க்கீர்த்தியில் குறிப்பிட்டிருக்க வேண்டு மல்லவா? ஆதலின் கலமறுத்தல்என்பதற்கு நெல் வழங்கும் அளவை வரையறுத்தான் என்பது முற்றிலும் பொருந்தாது.

மற்றும் ஒரு சாரார் கலம் என்னும் வடசொல், பிழை என்று பொருள் தருதலால் வடமொழிவேதம் பயிலும் மாணவர் ஓதுதலிலும் எழுதுதலிலும் பிழைதவிர்ந்தார்க்கு என்னும் பொருளில் கலமறுத்து என்னும் சொல் ஆளப்பட்டிருப்பதாகக் கூறுவதும் இங்குப்பொருந்தாது. தஞ்சை தேவராயன் பேட்டைக் கல்வெட்டில், "கலமறுத்து நல்லாரா யினார் ஒருவற்கு" எனவும் திருச்சி காமாரசவல்லி கல்வெட்டில், " கலமறுத்துச் சொல்லினாரானார்" எனவும் கூறப்பட்டிருப்பினும் பிழையின்றி எழுதவும் சொல்லவும் வல்லராக்குவது ஆசிரியனின் கடமை யாகுமே யன்றி அரசனின் பொறுப்பும் சிறப்பும் ஆகாது. ஆதலின் இவை பொருந்தா உரைகளாகும்.

மெய்க்கீர்த்தியில் கூறப்பட்ட வெற்றிகள் திண்டிறல் தண்டாற் கொண்ட கோப்பரகேசரி என்று தெளிவாகக் கூறப்பட்டிருப்ப தாலும், கலிங்கத் துப்பரணியில் காந்தளூர்ச்சாலை என்னும் ஊர்ப் பெயரையே குறிக்கும் சாலை என்னும் சொல்லைக் கையாண்டிருப்பதாலும்,

"வேலை கொண்டு விழிகும் அழித்ததும்
சாலை கொண்டதும் தண்டு கொண்டே அன்றோ"

காந்தளூர்ச்சாலை என்னும் கடல் துறையில் பகைவரின் மரக்கலங்களை அழித்த கடற்போர் வெற்றியையே ஐயமின்றி கலமறுத்தருளி என்னும் சொல் குறிக்கிறது என்பது உறுதிப்படுகிறது. அருளி என்னும் வினையெச்சம், கடற்கடம்பர்களாலோ பிற வன்முறையாளர்களாலோ கடல் வணிகரும் கடலோடிகளும் பட்ட துன்பங்களிலிருந்து அவர் களைக் காத்தருளிய அருஞ்செயலைச்சுட்டி நிற்கிறது.

இடைக்காலச் சோழர்கள் கடலில் நிலையான பெரும்படை வைத்திருந்தனர் என்பது கடலகப்

பெரும்படைத் தலைவன் என்னும் கல்வெட்டுத் தொடராலும் உறுதிப்படுகிறது.

**கலமறு²–த்தல்** *kalamaṟu-*, 5-செ.குன்றாவி.(v.t.) வடமொழிப்பாடசாலையில் இத்தனைப் பேர்க்கு உணவளிக்க வேண்டும் என்று வரையறுத்தல்; to fix the number of persons to be fed in sanskrit school.

*[கலம் (உண்கலம்) + (அறு வரைறைசெய்).]*

**கலமறுப்பி–த்தல்** *kalamaruppi-*, 1 பி.வி. (caus.) மரக்கலங்களை அழித்தல்; to destroy boats etc., வேணாட்டாரை சேணாட்டொதுக்கி மேவு புகழி ராமகுடமூவர் கெடமுனிந்து வேலைகெழு காந்தளூர்ச்சாலை கலமறுப்பித்தா கவமல்லனும் அஞ்ச (S.I.I.17,23,:19.).

*[கலம் + அறு + பி. கலம் (மரக்கலம், கப்பல்) + அறுத்தல் = அழித்தல்.]*

**கலமா** *kalama,* பெ.(n.) மாக்கல்; pot-stone used for making pots and dishes. 2. எழுதுகல் (பற்பக்கல்); soapstone (சா.அக).

*[கலம் → கலமா.]*

**கலமிடு–தல்** *kalamiḍu-*, 7 செ.குன்றாவி.(v.t.) ஏனம் செய்து தரல்; to provide vessel. சாலைக்குக்கலம் இட குசவன் நொருவனுக்கு நிசதம் நெல்லு இருநாழியாக (S.i.i.vol.19.insc.357.s.no.68).

*[கலம் + இடு.]*

**கலமிழ–த்தல்** *kalamiḻa-*, செ.குன்றாவி.(v.t.) உண்கலத்தைத் துறத்தல்; to renounce eating plate 'சட்டர்–பொருவார் அற்றைக்கலம் இழப்பது (கல்.கலை.அக).

*[கலம் + இழ.]*

**கலமூர்–தல்** *kalamūr-*, செ.குன்றாவி.(v.t.) கப்பல் செலுத்துதல்; to sail.

*[கலம் + ஊர்.]*

**கலமெடு–த்தல்** *kalameḍu-*, 4 செ.குன்றாவி.(v.t.) வரி நிலுவைக்காக வெண்கல ஏனங்களைப் பறிமுதல் செய்தல்; to seize bronze vessels for the tax dues. *"இம் முதல்கள் தண்டுமிடத்து மண் கலந்தந்தும் வெண்கல மெடுத்தும்" (ஆவணம் 1991:10–iii:2).*

*[கலம் + எடுத்தல் – கலமெடுத்தல்.]*

**கலயம்** *kalayam,* பெ.(n.)1. மாழை அல்லது மண்ணாலாகிய கலம்; small pot of earth or metal. *"கலயத்தின் முகந்து தண்புனலாட்ட" (சிவப்.பிரபந். சோணசைல.10).* 2. நீர்பருகும் சிறுகுவளை (கிறித்.); tumbler.

H; gat cup vedi; kala-ska, **pali**;kalavam vagri **Boli;** kali pkt kalas. **skt**; kala sa **arab**; kala

*[குல் → கல் → கலயம். (உட்குழிவானது).]*

**கலயன்** *kalayan,* பெ.(n.) இடையன்; cowherd

*[கலயம் → கலயன்.]*

**கலயனார்** *kalayanār,* பெ.(n.) அறுபத்து மூன்று நாயன்மாருள் குங்கிலயக்கலயர் என்னும் நாயனார்; a canonized Saiva Saint, one of 63 Nāyaṉmārs கலயனார் (பெரியர் குங்கிலியக்.9.).

*[கலயம் → கலயன் + ஆர்.]*

**கலர்** *kalar,* பெ.(n.) 1. கீழோர்; the vulgar, the rabble. *"கலரெனத் தணித்தலும்" (ஞானா.48,19.).* 2.தீமக்கள்; the wicked. *"கலராயினர் நினையார் தில்லை" (திருக்கோ.259.).*

*[கல் → கலர். கல் = கருப்பு, தீமை.]*

**கலரவம்** *kalaravam,* பெ.(n.) 1. புறா; dove 2. குயில்; cuckoo.

ம. கலரவம்; **skt.** kalaravam.

*['கல்' ஒலிக்குறிப்பு கல் + அரவம், அரவம் = ஆரவாரம், ஒலி எழுப்புதல்.]*

**கலரை** *kalarai,* பெ(n.) ஒன்றரைக்கலம் அளவைக் குறித்த முகத்தல் அளவு (தொல். எழுத்து.171.உரை); a measure of capacity, prob. equal to a kalam and a half.

*[கலம் + அரை; கலமும் அதன்மேல் அரைக்கலமும் ஆக 1.5 கல அளவு.]*

**கலல்** *kalal,* பெ.(n.)1. ***கல்லல்*** (C.G.) பார்க்க; see *kallal.* 2. செய்தல்; making, doing 3. சேர்த்தல்; joining, affixing.

க. கலன

[கல்லல் → கலல்.]

**கலலம்** *kalalam*, பெ.(n.) கருவைச் சூழ்ந்து தோன்றுந் தோல்; thin membrance covering the foetus. *"சேருமற்றைத்தினங் கலலம்"(சூத.ஞான.10,9.).*

[குல் → கல் → கலல் → கலலம் (சுற்றிச்சூழ்வது).]

**கலவகம்** *kalavagam*, பெ.(n.) காக்கை (வின்); crow.

[கல் → கலவம் → கலவகம் (கருப்பாய் இருப்பது).]

**கலவங்கீரை** *kalavaṅ-kīrai*, பெ.(n.) ***கலவைக்கீரை*** (இ.வ);பார்க்க;see *kalavai-k-kīrai.*

[கலவை → கலவம் + கீரை.]

**கலவஞ்சம்பா** *kalavañ-cambā*, பெ.(n.) ஆறு மாதத்திற் பயிராகக் கூடிய சிறுமணி நெல்.(இ.வ.); a variety of small camba paddy maturing in six months.

[கலவம் + சம்பா.]

**கலவடை**[1] *kalavaḍai*, பெ.(n.) 1. ஏனம் (பாத்திரம்) உருண்டு போகாமல் இருப்பதற்காக ஏனத்தின் அடியில் வைக்கப்படும் கயிறு வைக்கோல் போன்றவற்றால் செய்யப்பட்ட வளையம்; plaited coil of straw or coir used for resting vessels; mouth of broken pot, also used as a rest, as above. 2.உரலிலிட்டுக் குற்றும் பொழுது தவசம் சிதறாமலிருக்க உரலின் மேல் பாகத்தில் வைக்கும் கல், இரும்பு, மண் போன்றவற்றாலான வட்ட வடிவ அடைப்பு ; circular piece of stone, iron, earth fitted to the mouth of a mortar to keep the grain within.

[ கலம் + அடை. அடை = துணையாகும் சேர்ப்பு.]


கலவடை

**கலவடை**[2] *kalavaḍai*, பெ.(n.) அறிவிலியைக் குறிக்கும் வசைச்சொல்; a reproaching term.

[கலம் + அடை – கலவடை.]

தனித்துப்பயன்படாத் தன்மையைக் கொண்டது. அதனால் இது தனித்து இயங்கும் திறமின்மையைக் கொண்டோரைக் குறிக்கும் வசையாயிற்று.

**கலவம்**[1] *kalavam*, பெ.(n.) 1. கற்றையான மயிற் றோகை; peacock's tail. *"கலவம் விரித்த மஞ்ஞை" (பொருந.212.).* 2.மயில் (சினையாகுபெயர்); peacock. *"கலவஞ்சேர் கழிக்கானல்" (தேவா.532,4).* 3.கலாப மென்னும் இடையணி; women's jewelled girdle. *"பூந்துகில் கலவங்கண் புதையாது" (சீவக.1982).*

*[கல → கலவு. கலவுதல் = கலத்தல். கலாவுதல் = கலத்தல். கலவம் → கலாவம் = மயில் தோகை.சினையாகு பெயராய் மயிலைக்குறித்தது. மயில் தென்னாட்டுக் குறிஞ்சி நிலத்திற்குரிய பறவை;குறிஞ்சித் தெய்வமாகிய முருகன் ஊர்தி. வடமொழியின் கலா (சிறுபகுதி) + ஆப் (கொள் to obtalin) என்று பிரித்து, பல பகுதிகளை ஒன்று சேர்த்து கற்றை (" that which holds single parts together, a bundle" என்று காரணங்கூறுவது, வட்டஞ்சுற்றி வலிந்தும் நலிந்தும் பொருள் கொள்ளுவ தாயிருத்தல் காண்க.]*

**த.** கலவம் > **skt.** kalaba.

**கலவம்**[2] *kalavam*, பெ.(n.) தோணி; boat. *"கலவஞ்சேர் கழிக்கானல்" (தேவா.532,4.).*

[கலம் + அம் – கலவம்.]

**கலவம்**[3] *kalavam*, பெ.(n.) குழியம்மி (நாமதீப.); chemist's mortar., an apothecary's mortar in which drugs are rubbed with a pestle.

**தெ.** கலவமு

[கல + அம் – கலவம்(உட்குழிவானது).]

**கலவர்** *kalavar*, பெ.(n.) 1. மரக்கலமாக்கள்; navigators, sailors. *"கடற்குட்டம் போழ்வர் கலவர்" (நான்மணி.16.).* 2. கப்பலிற் செல்வோர்; passengers in a ship. *"காற்றத்திடைப்பட்ட கலவர் மனம்போல்" (திவ்.பெரியதி.11,8,2).* 3. நெய்தனில மாக்கள்; inhabitants of a maritime tract, fishermen. *"கலவர்.... மீனெறி சால நேர்விரித் துலர்த்தலும்" (சேதுபு .கந்தமா.91).* 4. படைவீரர்(வின்.); warriors.

**தெ.**கலமரி; **Skt.** kalā.(boat)

[கலம் + அர் – கலமர் → கலவர். கலம் = மரக்கலம்.]

**கலவரம்**[1] *kalavaram*[1], பெ.(n.) 1. குழப்பம், மனக் கலக்கம்; confusion of mind, perturbation, perplexity. 2.பூசல், சிறுசண்டை; quarrel.

**மறுவ:** கலவரை

**க.** களவள, களவளிகெ; **து.** களவள; **தெ.** களவளமு, கலவரமு ; **H.** kalātta.

*[குல் → கல் → கல + வரல் – கலவரல் → கலவரம்.]*

**கலவரி–த்தல்** *kalavari-*, 4 செ.கு.வி.(v.i.) 1. கலங்குதல் (வின்); to be confused, perturbed. 2. சச்சர விடுதல்; to fight.

**க.** களவளம்படு; **தெ.** களவளின்சு.

*[கலவரம் → கலவரி.]*

**கலவரை**[1] *kalavarai*, பெ.(n.) ***கலவரம்*** பார்க்க; see *kalavaram*.

**க.** களவளிகெ

*[கலவரம் → கலவரை.]*

**கலவரை**[2] *kalavarai*, பெ.(n.) ஒன்றரைக்கலம் அளவு; a measure of one and a half kalam. *"நிசதி கலவரை அரிசி" (கல்.வெ.கலை.அ.).*

*[கலம் + அரை – கலமரை → கலவரை.]*

**கலவல்** *kalaval*, பெ.(n.) 1. கலக்கை (பிங்.); mixing, combining. 2. எழுத்திலாவோசை (வின்); inarticulate sound.

**தெ.** கலபமு

*[கலவு → கலவல் (வே.க.133).]*

**கலவறை** *kalavaṟai*, பெ.(n.) அணிகலன் வைக்கும் அறை; strong room, guarded chamber in a palace in which ornaments are kept. *"வியனகர்க் கலவறை காக்கும்" (பெருங்.உஞ்சைக்.32,61.).*

*[கலன் → கலம் → கல + அறை – கலவறை.]*

**கலவன்** *kalavaṉ*, பெ.(n.) கலப்பானது (இ.வ.); medley, hotch-potch, mixture of various things.

*[கல → கலவன்.(வே.க. 133)]*

**கலவாங்கட்டி** *kalavāṅ-kaṭṭi*, பெ.(n.) உடைந்த ஓடு (யாழ்ப்); (சில்லு) small potsherd.

*[கலயம் → கலவம் + சட்டி – கலவஞ்சட்டி → கலவாங்கட்டி. (கொ.வ.)]*

**கலவாணியன்** *kalavāṇiyaṉ*, பெ.(n.) குயவன்; potter (திருவாங்கூர். கல் .அக.பக்.37).

*[கல + வாணியன்.]*

**கலவாய்**[1] *kalavāy*, பெ.(n.) கடல்மீன்வகை (வின்.); the sea-perches.

*[கல + வாய்.]*

கலவாய்மீன் வகை

1. கலவாய் - perch
2. சிவப்புக் கலவாய் - red perch
3. வடுத்தலைக்கலவாய் - sore headed perch
4. புள்ளிக் கலவாய் - spotted perch
5. வரிக்கலவாய் - striped perch
6. மஞ்சட்கலவாய் - yellow perch (சா.அக)

**கலவாய்**[2] *kalavāy*, பெ.(n.) வெடிவகை (சங்.அக.); a kind of crackers.

*[கல + வாய் – கலவாய்.]*

**கலவாய்**[3] *kalavāy*, பெ.(n.) நீலஅல்லி;blue Indian water lily (சா.அக).

*[கலம் → கல+ வாய்.]*

**கலவாயோடு** *kalavāy-ōdu*, பெ.(n.) கடனுரை (யாழ்ப்.) foam.

*[ஒருகா. கடல்வாய் → கலவாய் + ஒடு – கலவாயோடு.]*

**கலவார்** *kalavār*, பெ.(n.) பகைவர்; enemies. *"கலவார் முனைமேற் செலவமர்ந்தன்று" (பு.வெ.1,3, கொளு.).*

*[கலவு + (ஆ) ஆர் – கலவார். 'ஆ' எ.ம.இ.நி.புணர்ந்து கெட்டது.]*

**கலவாள்** *kala-vāḷ*, பெ.(n.) மரக்கலத்தில் அல்லது கப்பலில் பணியாற்றும் ஆடவன்; a worker in the sailor's boat or ship.

**H.,U., Ar., Pern.** kalāsi.

*[கலம் = மரக்கலம்; கப்பல். கலம் + ஆள் – கலவாள். 'வ்' உடம்படுமெய். கலம் + ஆள் – கலஆள் எனற் பாலது வட இந்திய மொழிகளிலும் பாரசிக அரபி மொழிகளிலும் கலாள்→கலாசி எனத்திரிபுற்றது. கலாசி என்னும் சொல்லுக்கு அரபி பாரசீக*

*மொழிகளிலும் வடஇந்திய மொழிகளிலும் வேர்மூலம் இல்லை. தமிழிலிருந்து அரபி முதலிய மொழிகளுக்கு 'கலாள்' கடன் சொல்லாகச் சென்றுள்ளது.]*

**கலவான்** *kalavāṉ,* பெ.(n.) கலவாய் மீன்; the sea perch (சா.அக.).

*[கலவாய் → கலவான்.]*

**கலவி** *kalavi,* பெ.(n.) 1. கலக்கை (திவா.); union combination. 2. புணர்ச்சி; sexual union. *"கலவியான் மகிழ்ந்தான் போல்" (சிலப்.7,24, கட்டுரை.).*

*[கல → கலவு → கல்வி.]*

**கலவித்துப்பாடு** *kala-vittu-p-pāḍu,* பெ.(n.) ஒருகல விதை விதைத்தற்குரிய நிலம் (T.A.S.I,i,7.);land sufficient in extent for sowing one kalam of paddy.

*[கலம் + வித்து + பாடு, கலம் = அளவு.]*

**கலவியிற்களி-த்தல்** *kalaviyiṟkaḷi-,* 4 செ.கு.வி.(v.i.) புணர்ச்சியின் மகிழ்தல்; to enjoy in clandestine union between lovers before marriage.

*[கலவி + இல் + களி.]*

**கலவிருக்கை**[1] *kalav-irukkai,* பெ.(n.) இன்பம் நுகருமிடம்; pleasant abode. *"மாவலியை.... பாதாளங் கலவிருக்கை கொடுத்து" (திவ்.பெரியாழ். 4,9,7,.).*

*[ கலவு + இருக்கை. கலவுதல் = மகிழ்தல்.]*

**கலவிருக்கை**[2] *kala-v-irukkai,* பெ.(n.) சரக்கறை; store-house. *"வேயாமாடமும் வியன் கலவிருக்கையும்" (சிலப்.5,7.).*

*[கலம் + இருக்கை. கலம் = கொள்கலம்;பெட்டி, பேழை, போல்வன.]*

**கலவிருக்கை**[3] *kalavirukkai,* பெ.(n.) ஓலக்க மிருக்கை; sitting in stage, as in an audience hall.

*[கல → கலம் + இருக்கை. தமக்கு வேண்டிய துணைக் கலங்களுடன் கூடியிருத்தல்.]*

**கலவிரைப்பாடு** *kala-virai-p-pāḍu,*பெ.(n.) ***கலவித் துப்பாடு*** (கொ.வ.) பார்க்க; see *kalavittu-p-pāḍu.*

*[கலம் + (விதைப்பாடு) விரைப்பாடு (கொ.வ.).]*

**கலவினார்** *kalaviṉār,* பெ.(n.)1.நண்பர்;friends, loving associates, relations. *"கலவினார் பழிகரக்கு மேதை" (தணிகைப்பு. திருநாட்டு.142.).* 2. உறவினர்; relations.

*[கல → கலவு + இன் + ஆர். கலவு = கூடுதல். உறவாதல் 'இன்'சாரியை. 'ஆர்'ப.பா.ஈறு.]*

**கலவினை** *kalaviṉai,* பெ.(n.) குயவன் செய்யும் கலத்தொழில்; pottery.

*[கல(ம்) + வினை.]*

**கலவு**[1]**-தல்** *kalavu-,* 5. செ.கு.வி. (v.t.) கலத்தல்; to mix. *"கனியின் றிரளுங் கலவி" (சூளாசீய.230.).*

*[கல → கலவு(வே.க.133).]*

**கலவு**[2] *kalavu,* பெ.(n.) உடலின் மூட்டுவாய்; joint of the body. *"கலவுக் கழி கடுமுடை" (அகநா.3.).*

*[கல → கலவு.]*

**கலவு**[2] *kalavu,*பெ.(n.) 1. துயரம்; grief. 2. பகைமை; enmity.

து. கலவு

*[அலவு → கலவு.]*

**கலவூர்** *kalavūr,* பெ.(n.) ஓர் ஊரின் பெயர்; a place name.

க. கலவூர்

*[கலம் = மட்கலம், கலம் + ஊர்.]*

**கலவை**[1] *kalavai,* பெ.(n.)1.பல்பொருட்கலப்பு; mixture,compound, medley. 2.விரை(மண) நீர்கலந்த சந்தனக் குழம்பு; perfumed paste of sandal *"தழுவிய நிலவெனக் கலவை" (கம்பரா.கடிமணப்.51.).* 3. கலந்த உணவு; mixture of different kinds of food, scraps, leavings. *"கலவை களுண்டு கழிப்பர்" (நாலடி, 268).* 4. மணல்கலந்த சுண்ணாம்பு (கொ.வ.); lime and sand mixed for mortar.5. சுதைமாவினை மணல், சல்லிக்கல், ஆகிய வற்றொடு நீரளாவி கலக்கிய கலவை; cement mixed with sand, gravel and water to prepare concrete.

*[கல + வை – கலவை.]*

**கலவை**[2] *kalavai,* பெ.(n.) மீன்வகை (G.TN.D.i,229); Indian rock cod.

*[கல் → கல → கலவை.]*

# கலவாய் மீன் வகைகள்



கலவாய்



சிவப்புக்கலவாய்



வடுத்தலைக்கலவாய்



வரிக்கலவாய்



புள்ளிக்கலவாய்



மஞ்சட்கலவாய்

**கலவை**[3] *kalavai,* பெ.(n.) ஒருவரியின் பெயர்; name of a tax "கடமை அந்தராயம், சில்வரி, பெருவரி, நாடு... கலவை, காடுவெட்டி, முடிப்பொன், மற்றும் எப்பேர்ப்பட்ட தேவையும் தரகுந்தரவிட்டு" (தெ.இ.கல்.தொ. 23 கல் 19).

*[கலவல் → கலவை.]*

**கலவைக்கீரை** *kalavai-k-kīrai,* பெ.(n.) பலவகைக் கீரைகள் கலந்தது (பதார்த்த.592.); edible greens of sorts mixed together.

*[கல → கலவை + கீரை.]*

**கலவைச் சந்தனம்** *kalavai-c-candaṉam,* பெ.(n.) நறுமணப் பொருள்கள் சேர்ந்த சந்தனம். (பரத. பாவ.23. உரை); sandal paste prepared with the addition of many aromatic substances.

Skt. sandana > த. சந்தனம்.

*[கலவை + சந்தனம்.]*

**கலவைச்சாந்து** *kalavai-c-cāndu,* பெ.(n.) நறுமணச் சந்தனம் (இ.வ .); unguent of sandal paste with other aromatic ingredients.

*[கலவை + சாந்து.]*

**கலவைச்சாறு** *kalavai-c-cāṟu,* பெ.(n.) பலவகை மூலிகைகளினின்று பிழிந்தெடுக்குஞ் சாறு; a mixture of the expressed juices of several plants, (சா.அக).

*[கலவை + சாறு.]*

**கலவைச்சுண்ணாம்பு** *kalavai-c-cuṇṇāmbu,* பெ.(n.) மணலோடு கலந்த சுண்ணாம்பு; lime and sand mixed with water, mortar.

*[கலவை + சுண்ணாம்பு).]*

**கலவைச்சேறு** *kalavai-c-cēṟu,* பெ.(n.) ***கலவைச் சந்தனம்*** (திவா.) பார்க்க. see *kalavai-c-candaṉam.*

*[கலவை + சேறு. செறு → சேறு).]*

**கலவைத்தசை** *kalavai-tašai,* பெ.(n.) இறுகியமைந்த தசை (வின்); complex muscle. 2.பின்னலான தசை; a network of muscles (சா.அக.).

*[கலவை + தசை.]*

**கலவைத்தொட்டி** *kalavai-t-toṭṭi,* பெ.(n.) கலவை கலப்பதற்குப் பயன்படும் சிறிய தொட்டி; bucket used for mixing cement. sand etc.

*[கலவைத் + தொட்டி.]*

**கலவைநீர்** *kalavai-nīr,* பெ.(n.) நறுமணங் கலந்த நீர்; fragrant solution for ladies bath. *"கருங்குழல் கழீஇய கலவை நீரும்" (மணி மே 28. 6.)* பனிநீர்; dew water. 3. கருப்பை நீர்; water in the amniotic sac (சா.அக.).

*[கலவை + நீர்.]*

**கலவைப்பொடி** *kalavaippoḍi,* பெ.(n.) பல மூலிகைகளையிடித்துக் கலந்த மருந்துத்தூள்; a medicinal powder containing a mixture of several herbs pounded and pulverised. நறுமணக் கலப்புப் பொடி; a powder of different perfumes (சா.அக.).

*[கலவை + பொடி.]*

**கவவைப்பொருத்து** *kalavai-p-poruttu,* பெ.(n.) ஒரு வகை மூட்டு நோய்; a kind of disease in joints (சா.அக).

*[கலவை + பொருத்து.]*

**கலவைப்பொன்** *kalavai-p-poṉ,* பெ.(n.) தரக் குறைவான பொன்; gold mixed with other metals such as copper etc.

*[கலவை + பொன்.]*

**கலவையணி** *kalavai-y-aṇi,* பெ.(n.) நீரும்பாலும் போலப் பிரிக்க வியலாதவாறு பலவகை எழில் நலன் விரவி வரும் அணி (அணியி.பக்.43.).; figures of speech indistinguishably blended together, dist. fr. சேர்வையணி.

*[கலவை + அணி.]*

**கலவோடு** *kala-vōḍu,* பெ.(n.) மட்பாண்டடச்சல்லி (யாழ்.அக.); Potsherd.

*[கலம் + ஓடு.]*

**கலன்**[1] *kalaṉ,* பெ.(n.) தடை, வில்லங்கம்; encumbrance. *"மனைக்கு... எப்பேர்ப்பட்ட கலனுமில்லை" (S.I.I.i.104.).*

*[கல் + அன் – கலன். கல் = கருமை, குற்றம்.]*

**கலன்**[2] *kalaṉ*, பெ.(n.) 1. பூண்; jewel. 2. நாவாய்; ship. 3. யாழ்; lute. *"கலனிடைத் தருவதும்" (கந்தபு. திருநாட்டு 48.).*

*[குல் → கல் → கலன். (உட்குழிவானது. உள்ளீடு கொண்டது.]*

**கலன்**[3] *kalaṉ*, பெ.(n.) பன்னிரண்டு மரக்கால் கொண்ட முகத்தலளவு; a measure of capacity

*[குல்→கல்→கலன்.]*

**கலன்**[4] *kalaṉ*, பெ.(n.) கோட்சொல்பவன் (நாநார்த்த.); tale-bearer. 2. தீயவன்; wicked person. *"வற்கலக்கல னிற்க லின்றியே சொரிந்தனன்" (சேதுபு.17.).*

*[கலம் → கலன்.]*

**கலன்கழிமடந்தை** *kalaṉ-kaḻi-maḍandai*, பெ.(n.) கைம்பெண் (சூடா); lit., woman who has given up wearing ornaments, widow.

*[கலன் + கழி + மடந்தை, கலன் = அணிகலன்.]*

**கலன்கொம்பு** *kalaṉkombu*, பெ.(n.) கலைமான் கொம்பு; stag's horn (சா.அக.).

*[கலை → கலன் + கொம்பு.]*

**கலனம்** *kalaṉam*, பெ.(n.) 1. வாய்பிதற்றுகை; prattling, as in sleep. *"கலனமுறு சொப்பனத்தில்" (ஞானவா.உற்பத்.65).* 2. விள்ளு (விந்து) நெகிழ்ச்சி; seminal emission; செந்தீயிந்தியக் கலனஞ் செய்தான் (திருவிளை. மாணிக்.64.3. பெரும்பாடு) (யாழ்.அக); profuse discharge of menstrual blood. 4. வடித்தல்; filteration.

*[கலுழ் → கலுழம் → கலுனம் → கலனம்.]*

**கலனரசு** *kalaṉarašu* ,பெ.(n.) திருமணப்பூட்டு; lit., the paramount ornament. tali, the marriage badge.

*[கலன் + அரசு. (அணிகலன்களுள் தலைமையானது. தாலி.]*

**கலனி** *kalaṉi*, பெ.(n.) வடித்தல்; filteration (சா.அக.).

*[கலு → கலுழ் → கலுனி → கலனி.]*

**கலனிருக்கை** *kalaṉirukkai*, பெ.(n.) 1. **கலவிருக்கை** (திவா.) பார்க்க; see *kalavirukkai*.

*[கலவிருக்கை → கலனிருக்கை.]*

**கலனிலி** *kalaṉili*, பெ.(n.) கைம்பெண் (நாமதீப.); widow.w

*[கலன் + இலி. இல்லி → இலி. கலன் = அணிகலன்.]*

**கலனை**[1] *kalaṉai*, பெ.(n.) 1. கலப்பை (திவா.); plough. 2. ஒன்றற்கமைந்த பல்வகை உறுப்புகள் (திவா); parts, as of a whole.

*[கலன் → கலனை (கலன்களின் சேர்ப்பு).]*

**கலனை**[2] *kalaṉi*, பெ.(n.) சேணம்; horse-saddle. *"மேற்கலனையினுக்க செம்மணி" (காஞ்சிப்பு.நகர. 17.)*

**ம.** கலன; **க.** கலின.

**த.** கலனை > **Skt.** Khalinam.

*[கலன் → கலனை (கலன்கள் சேர்த்தது).]*

'கலன்' என்னுஞ்சொல் வட புலமொழிகளில் 'லகான்' எனத் திரிந்தது.

**கலாங்கம்** *kalaṅgam*, பெ.(n.) துத்தவைப்புநஞ்சு (வின.); tutta vaippu-nanju, a mineral poison.

*[கல் → கலங்கு → கலாங்கம் (கலந்து செய்யப்பட்டது).]*

**கலாங்கழி** *kalāṅ-kaḻi*, பெ.(n.) **கலாங்கம்** *(யாழ்.அக.)* பார்க்க; see *kalāṅgam*.

*[கல → கலங்கு → கலாங்கு → கலாங்கழி.]*

**கலாசாலை** *kalā-sālai*, பெ.(n.) **கலைச்சாலை** பார்க்க; see *kalaic-cālai*.

*[கலைச்சாலை → கலாசாலை. ஐ – ஆ வாகத் திரிவது வடசொற்றிரிபு.]*

**கலாசி**[1] *kalāši*, பெ.(n.) 1. முன்கை (யாழ்.அக.); forearm. 2. சிற்றாள்; labourer who does helping work to a mason.

**த.** கலாசி > **Skt.** kalachi.

*[குலம் → கலம் = பொருத்து. மூட்டு, முட்டிக்கை. முன்கை. கலம் = கலமுட்டுகளாகிய துணைக்கருவித்தொகுதி. கலம் → கலத்தி → கலாத்தி → கலாச்சி → கலாசி (கொ.வ.).]*

யாழ்ப்பாணத்துச் சொல்லாட்சிகளில் எத்தகைய தொழிலிலும் துணைக்கருவிகளை அருகிருந்து எடுத்துத் தரும் சிற்றாளும் அத்தொழிலுக்குத் துணையான பணியாளனும் கலாத்தி, கலாசி என வழங்கப்படுதல் மரபாயிற்று.

**கலாசி**[2] *kalāśi,* பெ.(n.) ***கலவாள்*** பார்க்க; see *kalavāḷ.*

*[கலவாள் → கலாசி.]*

**கலாட்டா** *kalāṭṭā,* பெ.(n.) ***கலாட்டு*** பார்க்க;see *kalāṭṭu.*

*[கலாட்டு → கலாட்டா (கொ.வ.).]*

**கலாட்டு** *kalāṭṭu* பெ.(n.) குழப்பம்; disturbance. 2. கலவரம், riot, commotion, tumult. 3. வேடிக்கை; merry making, fun.

தெ.கலாத

*[கலகம் → கலாம் + ஆட்டு – கலாட்டு.]*

**கலாதன்** *kalādaṉ,* பெ.(n.) தட்டான் (யாழ்.அக.) goldsmith.

**த.** கலாதன் >**Skt.** kaladaka.

*[கலம் → கலத்தன் → கலாதன் (கொ.வ.).]*

**கலாப்பு** *kalāppu,* பெ.(n.) காதணிவகை; an ear-ornament.

*[கலம் → கலாப்பு.]*

**கலாபம்**[1] *kalābam,* பெ.(n.) 1. பதினாறு கோவையுள்ள மாதரிடையணி; women's gurdle of beads or bells consisting of 16 strands. *"வெண்டுகிற் கலாபம் வீக்கி" (சீவக.624.).* 2. மேகலை (பிங்.); jewelled girdle of a woman. 3.மயிற்றோகை; peacock's tail. *"மணிவயிற் கலாபம்" (சிறுபாண்.15).* 4. மயிற்றோகைக் குடை (திவா.); umbrella made up of peacock's feathers.

**க.** கலாப, களாப.

**த.** கலாவம் > **Skt.** kalapa (peacock's tail)

*[கலாவம் → கலாபம். கலாவம் = மயிற்றோகை.]*

**கலாபம்**[2] *kalābam,* பெ.(n.) கலகம் சண்டை, எழுச்சி; rising, disturbance, uproar, raid, invasion.

**ம.** கலாபம்

*[கலகம் → கலவம் → கலாவம் → கலாபம் (கொ.வ.).]*

**கலாபம்**[3] *kalābam,* பெ.(n.) 1. தொகுதி; collection, cluster. 2.அம்புக்கூடு; quiver. 3. குமுகாயம்; society. மந்திரகலாப மார்க்கம் (சி.சி.99.9.மந).

*[கலம் → கலவம் → கலாபம்.]*

**கலாபி** *kalābi,* பெ.(n.) 1.மயில்; peacock. 2. பெண்மயில்; pea-hen. 3.மயிலிறகு;peacock's quill (சா.அக.).

*[கலாவம் → கலாபம் → கலாபி.]*

**கலாபினை** *kalāpiṉai,* பெ.(n.) கலகம் (யாழ்.அக.); disturbance.

*[கலாம் + (வினை) பினை.]*

**கலாம்**[1] *kalām,* பெ.(n.) 1.போர்; way, battle. *"கலாஅத் தானையன்" (புறநா.69இ11.).* 2. மாறுபாடு; rivalry, competition. *"போர்க்கலாமின்று கண்டும்" (சீவக.620.).* 3. சினம். சீற்றம்; (பிங்.); rage, fury. *"அருங்கலா முற்றிருந்தானென்னினும் (இராம.சூர்ப்ப.141).* 4. கொடுமை (பிங்.); severity, impetuosity. 5. பகை; enmity.

**த.** கலாம்>**Skt.** kalaba

*[குல் → கல் → கல → கலாம்.]*

சண்டை இருவர் செய்யும் போர்; மல் இருவர் தம் வலிமை காட்டச் செய்யும் போர்; கலாம் பலர் செய்யும் போர் (சொல்.கட்.55.).

**கலாம்**[2] *kalām,* பெ.(n.) 1.ஊடல் (யாழ்.அக.); bouderie, feigred dislike as of a women to her husband.

*[கல → கலாம் (மு.தா.180).]*

**கலாய்–த்தல்** *kalāy-,* 4. செ.கு.வி.(v.i.) 1.கலகித்தல்; to quarrel, to be at variance. *"யாமினிக் கலாய்த்தல் வேண்டலொழிகென" (காஞ்சிப்பு. அனந்த.5.).* 2. சினத்தல்; to get angry. *"கலாய்த் தொலைப் பருகு வார் போல்" (சீவக.1950.).*

**து.** கலம்புனி

*[கல → கலாய் → முதா 188.]*

**கலாயம்** *kalāyam,* பெ.(n.) பட்டாணி;pea. 2.மோர்; butter milk. 3.தயிர்; curd.

*[கல → கலாவு → கலாவம் → கலாயம் = நீருடன் கலந்தது.]*

**கலார் கூற்றம்** *kalārkūṟṟam,* பெ.(n.) இலால்குடி வட்டம் ஆதிக்குடிப் பகுதியின் பழைய பெயர்;old name of Adikkudi of Lalgudi taluk. *"வடகரை மழநாட்டு கலார்க் கூற்றத்துக் கீழ்க் கூற்று பிரமதேயந் திருவாதிக்கு" (தெ.இ.கல்.தொ.19.கல் 57).*

*[ஒருகா. கழார் + கூற்றம்–கழார்கூற்றம்→கலார்கூற்றம்.]*

**கலால்** *kalāl,* பெ.(n.) **கள்ளாள்** பார்க்க see *kaḷḷāḷ.* 1. கள் (கொ.வ.); toddy. 2. சாராயம்; arrack. 3. புளிக்க வைத்த மது; any fermented liquor.

**க.** கலா

**Skt.**kalyapāla; **H., Mar.,**Kalāl; **Pkt.**kallāl.

*[கள் + ஆள் – கள்ளாள் → கள்ளால் → கலால் (கொ.வ.). கள்ளாள் = கள் விற்கும் ஆளுக்கு இடப்பட்ட வரியைக்குறித்த சொல் 'கலால்' எனத் திரிந்தது. நாளடைவில் மது வகையைக் குறிக்கும் பொதுச் சொல்லாயிற்று.]*

**கலால்தீர்வை** *kalāl-tīrvai,* பெ.(n.) கள்வரி (கொ.வ.); excise duty.

*[கள்ளாள் = கள் விற்பவன் ; கள் விற்பவனுக்கு இடப்பட்ட வரி. கள் + ஆள் → கள்ளாள் → கலால் (கொ.வ).]*

**கலாவம்** *kalāvam,* பெ.(n.) **கலாபம்**[1] பார்க்க;see *kalabam.* *"கலிமயிற் கலாவம்" (புறநா.1468.).*

*[கல → கலவு → கலவம் → கலாவம் (மு.தா.116).]*

**கலாவு–தல்** *kalāvu-,* 5.செ.கு.வி.(v.i.) கலத்தல்; to mix, join together, unite. *"வானத்து வீசுவளி கலாவலின்" (குறிஞ்சி.48.).*

*[கலவு → கலாவு (வே.க.133).]*

**கலாவு–தல்** *kalāvu-,* 5 செ.கு.வி.(v.i.)1. கலக்க மடைதல்; to be perturbed, confused. *"கண்ணி நீரலைக் கலாவ" (நெடுநல்.6.).* 2. சினத்தல்; to be displeased, angry. *"வசந்த மோகினி பெரு நிலாவினொடு கலாவினாள்" (குற்றா.குற.29).).*

*[குல் → கல் → கலவு → கலாவு.]*

**கலி[1]–த்தல்** *kali-,* 4. செ.கு.வி.(v.i.) 1. ஒலித்தல்; to sound, clamour, roar. *"கடவுட் பராவி நமர்கலிப்ப" (திருக்கோ.279.).* 2. யாழொலித்தல் (திவா.); to sound as Yāḷ. 3. செழித்தல்; to grow luxuriantly. *"ஆர்பெயற்கலித்த... நெல்லின்" (நெடுதல்.21.).*

**தெ.** கலுகு. கலிகின்சு (உருவாக்கு).

*[குல் → கல் → கலி.]*

**கலி[2]–த்தல்** *kali-,* 4 செ.கு.வி.(v.i.) 1.முளைத்தல், பிறத்தல்; to sprout , come into being. *"களியிடைக் கலித்த தென்ப" (ஞானா.11). மழை பெய்தால் மீன் கலிக்கும் (நெல்லை).* 2. எழுதல் (யாப்.வி.55.207.) to appear. become manifest. 3. உயர்தல்; to grow high. 4. பெருகுதல்; to increase. *"செய்யார் தேஎந் தெருமரல் கலிப்ப" (பொருந.134.).* 5. மகிழ்தல்; to rejoice. *"கலித்த வியவர்" (மதுரைக்.304.).* 6. செருக்குதல்; to swell, to be proud, to grow arrogant. *"காஅல் கலித்த... அகழி" (புறநா.37.7).* 7. வேகமாதல் (யாப்.வி.55,207.); to be swift, quick. 8.நெருங்கி யிருத்தல் (யாப்.வி.55,207.); to be dense, crowded. 9. கக்குதல்; rejecting through the mouth. 10. தழைத்தல்; sprouting (சா.அக.) *"கலிகொள் யாணர் வெண்ணிப்பறந்தலை" (புறநா.99).*

*[குல் → கல் → கலி (வே.க.117).]*

**கலி[3]–த்தல்** *kali-,* 4 செ.குன்றாவி.(v.t.) செலுத்துதல் (சி.போ.பா.151.); to cause to go, move.

*[குல் → கல் → கலி.]*

**கலி[4]–த்தல்** *kali-,* 4 செ.கு.வி. (v.i.) நழுவுதல்; to trickle, flow gently. *"சுக்கிலங் கலித்தலாற் பெருந்தவ வலிகுன்றும்" (வைராக். சத. 43).*

*[கலி[2] → கலி[4].]*

**கலி[5]–த்தல்** *kali-,* 4 செ.குன்றாவி.(v.t.) நீக்குதல் (சி.போ.பா.151.) to remove.

*[கழி → கலி.]*

**கலி[6]** *kali,* பெ.(n.) 1.ஒலி (தொல்.சொல்.349);sound. 2.கடல் (பிங்.); sea. 3. வலி (பிங்.); strength, force. 4. செருக்கு; haughtiness, conceit, self-esteem. *"இக்கலி கேஎ்ரே" (கலித்.52.).* 5. தழைக்கை; flourishing, thriving, prospering. *"கலிகொள் யாணர் வெண்ணிப் பறந்தலை" (புறநா.66.6.).* 6. துளக்கம்; perturbation, discomposure, uneasiness. *"கலியினெஞ்சினேம்" (பரிபா.2.74.).* 7. மனவெழுச்சி; spiritedness, sprightliness, animation. *"கலிமாப் பலவுடன் பூட்டி" (பு.வெ.12. வென்றிப்.14.).* 8. போர் (வின்); dissension, war, strife. 9. போர் வீரன்; warrior. 10. ஆண்மை; manliness.

**தெ.** கலிதனமு (வீரத்தனம்); **ம.,து.** கலி; **க.** கலி (வலியவன், வீரன்).

*[குல் → கல் → கலி.(வே.க.117).]*

**கலி[7]** *kali,* பெ.(n.) 1. ***கலிப்பா*** பார்க்க (தொல் பொருள்.53.); see *kali-p-pā.* 2. இடைக்கழகக் காலத்து இயற்றப்பட்ட ஒரு நூல் (இறை.1, உரை.); a poem of the Second Sangam period, not extent. 3.***கலித்தொகை*** பார்க்க; see *kali-t-togai.* *"கற்றறிந்தார் ஏத்தும் கலியோடகம் புறமென்று" (புறநா.முகவுரை.).*

*[கலி[2] → கலி[4].]*

**கலி[8]** *kali,* பெ.(n.) 1. தோற்றம்; appearance. 2. அரும்பு; bud.

**க.** கலி

*[குல் → கல் → கலி.]*

**கலி[9]** *kali* பெ.(n.) கலியூழி, கலியுகம் என்னும் ஆண்டுமானம்; cycle of year known as Kaliyugam.

*[கலி → கலித்தல் = தோன்றுதல். கி.மு.3101 ஆண்டு கலியூழியின் தொடக்கம் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.]*

**கலி[10]** *kali,* பெ.(n.) 1. காரிக்கடவுள்; the deity presiding over the iron age. *"கலி நீங்கு காண்டம்" (நள.).* 2. காரிக்கோள்; Saturn, as a malignant planet. 3. துன்பம், அழிவு; mishap, disaster, calamity. *"ஆழ்கலத் தன்ன கலி" (நாலடி.12.).* 4. வறுமை; poverty, want. *"கலி கையா னீக்கல் கடன்'' (பு.வெ.12, வென்றிப்.2.).* 6. ஏமாற்று; deceit, fraud. *"கலிக்கிறை யாய நெஞ்சிற் கட்டியங்காரன்" (சீவக.266.).* 7. இழிவு, தாழ்வு; low, mean.

**Pali.** kali

*[கல் → கலி. கல் = கருப்பு, வறுமை, துன்பம்.]*

**கலி[11]** *kali* பெ.(n.) புதுமை; novelty. குழந்தை கலிகலியாய் பேசுகிறது (கொங்.வ.).

*[கல் → கலி = தோன்றுதல், புதுமை.]*

**கலி[12]** *kali,* பெ.(n.) கலிப்பா வகை; a poetic form in Tamil Prosody.***கலிப்பா*** பார்க்க; see *kalippā.*

*[குல் → கல் → கலி.]*

**கலி[13]** *kali,* பெ.(n.) 1. இரும்பு; iron. 2. பனங்கிழங்கு; palmyra root (சா.அக.). 3. பெருக்கு; increase. *"ஒலிபோவாக் கலியாணர்" [மதுரைக்.118].* 4. தடிப்பு; swelling (சா.அக.).

*[குல் → கல் → கலி.]*

**கலிஎழுத்து** *kali-ēḷuttu,*பெ.(n.) குறிப்புணர்த்தும் அடையாளம் (யாப்.536.); a secret code.

*[கலி + எழுத்து.]*

**கலிக்கந்திட்டு–தல்** *kalikkantiṭṭu,* 5 செ.குன்றாவி. (v.t.) கண்ணோய்க்கு மருந்திடுதல்; to apply pungent eye - salve for curing eye-disease (சா.அக.).

*[கலிக்கம் + தீட்டு. கலிக்கம் = கரியமை.]*

**கலிக்கம்** *kalikkam,* பெ.(n.) கண்ணிலிடும் மருந்து; pungent eye-salve used as a stimulantive to revive a person who is in an unconscious condition, or to cure a person of chronic headache. 2. கண்ணுக்கிடும் மை; collyrium.

**தெ.** கலிகமு

*[கல் → கலி → கலிக்கம் (கருமையானது).]*

**கலிக்கம்பநாயனார்** *kali-k-kamba-nāyaṉār,* பெ.(n.) அறுபத்து மூன்று நாயன்மாருள் ஒருவர் (பெரியபு.); a canonized Saiva saint, one of 63 Nayanmars.

*[கலி = வீரன். கம்பன் – இயற் பெயர். நாயன் = தலைவன் கலிக்கம்பன் + நாயன் + ஆர். 'ஆர்' உயர்வுப் பன்மையீறு.]*

**கலிக்கிமரம்** *kalikki-maram,* பெ.(n.) மரவகை (A.); a tree.

*[கலி → கலிக்கி + மரம்.]*

**கலிக்கொண்டை** *kali-k-koṇḍai,* பெ.(n.) போர் வீரர் முடிந்து கொள்ளும் தலைக்கொண்டை; hair-knot of warriors.

*[கலி = வீரன். கலி + கொண்டை.]*

**கலிக்கோட்டை** *kali-k-kōṭṭai,* பெ.(n.) வலிமை வாய்ந்த கோட்டை; a strong fort.

**க.** கலிகோண்ட்டெ

*[கலி = வலிமை. கலி + கோட்டை.]*

**கலிக்கோடை** *kali-k-kōḍai,* பெ.(n.) கோடைக்கால வெப்பம்; sultriness. *"கன்றுபிணி நெருப்பவியுங் கலிக்கோடை தீரும்" (தஞ்.சர. 11,94).*

*[கலி + கோடை. கலி = துன்பம்.]*

**கலிகடிந்த பாண்டிய தேவர்** *kalikāḍindapaṇḍiya dēvar,* பெ.(n.) கிபி1284இல் திருமயம் பகுதியில் வாழ்ந்த பாண்டியநாட்டுச் சிற்றரசர்; local chieftan around 1284 AD over Thirumayam area. *"இந்நாயனாற்குச் சோலை கயிலாய முடையானான கலிகடிந்த பாண்டிய தேவர் எளுந்தருவித்த" (தெ.இ.கல்.தொ.23 கல் 149.).*

*[கலி = ஒலித்தல், காஞ்சி = இடையணிகலன். கலி + காஞ்சி = கலிகாஞ்சி → கலகாஞ்சி.]*

**கலிகம்**[1] *kaligam,* பெ.(n.) ***கலிக்கம்*** பார்க்க; see *kalikkam. "கலிகங் கியாழம்" (திருவேங். சத.68.).*

*[கலிக்கம் → கலிகம்.]*

**கலிகம்**[2] *kaligam,* பெ.(n.) வன்னிமரம் (சித்.அக.); Indian mesquit.

*[கலி → கலிகம் → கலி = வீரம். கலிகம் = வீரத்திற்கு அடையாளமாகியமரம்.]*

**கலிகள்** *kaligaḷ,* பெ.(n.) போர் வீரர்கள்; warriors.

**க.** கலிகள்

*[கலி = வீரன். கலி + கள்.]*

**கலிகன்றி** *kali-kaṉṟi,* பெ.(n.) திருமங்கையாழ்வார் (திவ். பெரியதி. 1,1,10.); lit., one who puts down with a strong hand the might of Kali-purusan, an appellation of Tirumangai-y-āḷvār.

*[கலி + கன்றி. கன்றி = அழித்தவன்.]*

**கலிகாஞ்சி** *kalikāñji,* பெ.(n.) ஒலிக்கும் ஒட்டியாணம்; waist ornament of women which produces light sound.

**க.** கலகாஞ்சி

*[கலி = ஒலித்தல், காஞ்சி = இடையணிகலன். கலி + காஞ்சி = கலிகாஞ்சி → கலகாஞ்சி.]*

**கலிகாரம்** *kaligāram,* பெ.(n.) நள்ளிருள் நாறி, இருள்வாசி (சங்.அக.); Tuscan jasmine.

*[கலி →கலிகாரம்.]*

**கலிகாலம்** *kali-kālam,* பெ.(n.) 1.இரும்புக் கருவிகளை மக்கள் பயன்படுத்திய காலம்; the iron age. *"கங்குபூசி வருகின்ற கலிகாலமெனவே" (கம்பரா.விராதன்.14.).* 2. தீமை, கொடுமை ஆகியவை பெருகிவிட்ட காலம்; time in which evils and atrocities abound. கலிகாலத்தில் எது தான் நடக்காது (உ.வ.).

*[கலி + காலம். கலி = கருப்பு. கருநிறத்து இரும்பு. இது இரும்பொன் (இரும்பு) கரும்பொன் என்றும் வழங்கப்பட்டுள்ளதை ஒப்பு நோக்குக.]*

**கலிகி** *kaliki,* பெ.(n.) 1.அழகு; a beauty. 2.பெண்; a lady (ஆந்.). 3. பூவரும்பு; bud.

**க.**கலிகி; **தெ.** கலிகி.

*[கலி = தோற்றம், அழகு. கல் → கலி → கலிகி.]*

**கலிகை**[1] *kaligai,* பெ.(n.) மொட்டு (திவா.); tender bud.

**மறுவ.** முகை, நனை, முகிழ், சினை, நகை, கன்னிகை, போகில், மொட்டு, கலுவடம், அரும்பு, முகிளம், மொக்குள், சாலிகை, கண்ணி.

**க.** கலி

**த.** கலிகை > **Skt.** kalikā.

*[குல் → கல் → கலி[2] → கலிகை. கலி = தோன்றுதல், அரும்புதல்.]*

**கலிகை**[2] *kaligai,* பெ.(n.) 1. உசில் (சங்.அக.), black sirissa.2. நாகமல்லி (மலை.); snake-jasmine. 3.சீக்கிராத்தூள்; powder of the washing tree (சா.அக.).

*[கலி[2] →கலிகை.]*

**கலிகேசரி** *kalikēsari,* பெ.(n.) கும்பகோணம் வட்டம் திருவிசலூர்க் கோயிலுக்கு அணையாவிளக்கு வழங்கிய பெண்ணின் கரைவர்; husband of one who made donations for a perpetual. *"கலிகேசரி மணவாட்டி நயனவல்லி வைத்த நொந்தா விளக்கு" (தெ.இ.கல்.தொ.23; கல் 33.).*

*[கலியன் +கேசலி—கலியன் கேசரி→கலிகேசரி. வ. கேசரி > த. கேசரி (அரிமா).]*

**கலிகொள்—தல்** *kali-koḷ,* 16 செ.கு.வி.(v.i.) வருந்துதல், துன்பப்படுதல்; to feel sorry.

**க.** கலிகொள்

*[கலி = துன்பம். கலி + கொள்.]*

**கலிகொள்ளு—தல்** *kalikoḷḷu-,* 16 செ.கு.வி.(v.i.) வெளிப்படுதல்; to be revealed, to be discovered.

*"உரூடி யானுங் கலிகொள வறியலாகும்" (ஞானா.15,23).*

*[கலி = தோன்றுதல், வெளிப்படுதல். கலி² + கொள்ளு.]*

**கலிங்கச்சம்பா** *kaliṅga-c-cambā,* பெ.(n.) நாலைந்து மாதத்திற் பயிராகும் சம்பா நெல் வகை; a kind of paddy, maturing in four or five months, so called because it was prob. brought from Kalingam.

*[கலிங்கம் + சம்பா.]*

**கலிங்கத்தரையன்** *kaliṅgattaraiyaṉ,* பெ.(n.) பாண்டியன் சீரிவல்லபன் ஆட்சியிலிருந்து ஒரு திணைக்களத்து நாயகன்; head of a department in the rule of Pandyan Srivallabam. *கீழ்க் குண்டாற்று "வெளியாற்றூடையார் அரைய நமச்சிவாயத்தாரான கலிங்கத்தரையன்" (ஆவணம் 1991).*

*[கலிங்கம் + அத்து + அரையன் 'அத்து' சாரியை.]*

**கலிங்கத்துப்பரணி** *kaliṅgattu-p-paraṇi,* பெ.(n.) முதற்குலோத்துங்க சோழனது படைத்தலைவனான கருணாகரத் தொண்டைமான் கலிங்க நாட்டின் மீது படையெடுத்து வென்றதைப் பொருளாகக் கொண்டு சயங்கொண்டார் இயற்றியதொரு பரணி நூல்; a poem by Seyankondar describing the successful invasion of the Kalinga country by Karunagarat-tondaiman, the Generalissimo of king Kulottunga I, 1115 A.D. cir.

*[கலிங்கம் + அத்து + பரணி. 'அத்து' சாரியை.]*

**கலிங்கத்துருமம்** *kaliṅgatturumam,* பெ.(n.) தான்றிக்காய்; unripe fruit of deirl's tree (சா.அக.).

*[கலிங்கம் + அத்து + உருமம் (வெப்பம்).]*

**கலிங்கம்¹** *kaliṅgam,* பெ.(n.) 1. ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று (பிங்.); country comprising modern Orissa and Ganjam, one of the 56 Nadus. 2.ஒரு மொழி (திவா.); language of Kalinga, one of 18 languages known to the ancient Tamil.

**Skt.** kalinga; **Pali.** kalinga.

*[கலிங்கு +கலிங்கம்.]*

கோதாவரிக்கும் மகாநதிக்கும் இடையிலமைந்த வளமான நாடு. இதனை ஆட்சி செய்த மன்னர் கலிங்கர் எனப் பெயர் பெற்றனர். முதல் இராசராசன் கைப்பற்றிய நாடுகளுள் ஒன்று. "குடமலை நாடும் கொல்லமும் கலிங்கமும்" முதல் இராசராசன் மெய்க்கீர்த்தி [கல்.அகர].

**கலிங்கம்²** *kaliṅgam,* பெ.(n.) ஆடை; cloth, garment. *"கலிங்கம் பகர்நரும்" (மதுரைக்.513).*

**மறுவ.** மடி, கோடி,

**Heb.** hali, haifa, halifoshpali, kamen, matay, kam, kalingam →ka-in: indonesian.

*[கலிங்கு → கலிங்கம்.]*

ஒரு காலத்தில் க்லிங்கம் ஆடை நெசவுக்குப் பெயர் பெற்றிருந்தது. அதனால் ஆகுபெயராகக் கலிங்கம் எனபது ஆடையைக் குறித்தது.

**கலிங்கம்³** *kaliṅgam,b* பெ.(n.) 1. வானம்பாடி. (பிங்.); skylark, 2.ஊர்க்குருவி, (பிங்.); sparrow.

**ம.** கலிங்கம்

*[கலிங்கு → கலிங்கம். த. கலிங்கம் > **Skt.** kalinga.]*

**கலிங்கம்⁴** *kaliṅgam,* பெ.(n.) மிளகு (மலை); black pepper.

**தெ.** கலிகமு

*[கல் → கலி → கலிங்கம் = கரு நிறமுடைய மிளகு.]*

**கலிங்கம்⁵** *kaliṅgam,* பெ.(n.) 1.தும்மட்டி (பதார்த்த 720) country cucumber. 2. வெட்பாலை மர வகை; kind of tree (as Ivory tree). 3. விப்பாலை a kind of poisonous tree.

*[கலி → கலிங்கம்.]*

**கலிங்கம்⁶** *kaliṅgam,* பெ.(n.) 1. குதிரை (யாழ். அக.); horse. 2.பட்டாடை; silk cloth. *"மணிமுடி கலிங்கமாலை" (மேருமந்.123).*

**G.** kleid; **Norw.** kjole; **Yid.** kleid; **Swed.** klanning; **Serbo.** halijina; **Swa.** kanga; **Dan.** kjole; **W.** gwisg.

*[கலிங்கு →கலிங்கம். கலிங்கத் துறைமுகத்தின் வாயிலாக வந்தவை]*

**கலிங்கமுரல்** *kaliṅgamural,* பெ.(n.) பச்சை நிறமுடைய முட்களைக் கொண்ட மீன்; a kind of greenish thorned fish.

*[கலிங்க + முரல். இறல் → இரல் → முரல் (கொவ) முரல் = மீன்வகை. ஒருகா. கலிங்கல் + முரல் என்றாகலாம். கலிங்கல் = ஏரியின் கால்வாய் முகம்.]*

**கலிங்கர்** *kaliṅgar,* பெ.(n.) 1. கலிங்க நாட்டினர். an inhabitant of Kalinga country. 2. கோமட்டிகளின் குலப் பிரிவு, name of a sub-sect among Komattis in south India.

*[கலிங்கம் → கலிங்கர்.]*

**கலிங்கல்**[1] *kaliṅgal,* பெ.(n.) **கலிங்கு** பார்க்க; see *kaliṅgu.*

*[கலிங்கு → கலிங்கல்.]*

**கலிங்கல்**[2] *kaliṅgal,* பெ.(n.) ஓர் ஊர்ப்பெயர்; name of a village.

*[கலிங்கு + கல்.]*

**கலிங்கி** *kaliṅgi,* பெ.(n.) மலைக்கொன்றை (L.); shingle tree.

*[கலி → கலிங்கி.]*

**கலிங்கிடு–தல்** *kaliṅgiḍu,* 20 செ.கு.வி.(v.i.) மதகு அமைத்தல்; to construct sluice.

*[கலிங்கு + இடு.]*

**கலிங்கு**[1] *kaliṅgu,* பெ.(n.) 1. ஏரியின் வடிகால் மடை; sluice or water weirs for surplus vents; to prevent soil erosion. *"வாட்கண் கலிங்குக டிறந்த" (சீவக .2476).* 2. நீர்வழியும் அணைக்கட்டு (வின்.); calingula.

**மறுவ.** தூம்பு

**தெ.** கலிங்க; **க.** கலுகு (மதகிற்காகப் போடப்பட்ட வரி)

*[கலி → கலுழ் → கலிங்கு = நீர்க்கசிவது, வழிவது, மதகு, ஏரியின் கால்வாய் முகம், அணைக்கட்டு.]*

நீர் நிலை நிறைந்து வழிந்தோடும் பொழுது கரை உடையாமல் தடுக்க ஏரியின் கோடியில் கல்லால் அமைக்கப்படும் வடிகால் மடை. கல்லை நெட்டுக் குத்தாக வைத்துக் கலிங்கு அமைத்தலும் உண்டு.

**மறுவ.** கலிஞ்சு

**கலிங்கு**[2] *kaliṅgu,* பெ.(n.) கலிங்கு வரி; a tax on irrigation from the tank.

**க.** கலிகு

*[கலிங்கு = மதகு நீர்ப்பாசனம். நீர்ப்பாசன வரி]*

**கலிங்குவாரியம்** *kaliṅguvāriyam,* பெ.(n.) பாசனத்திற்கு நீர் விடப்படும் மதகு, தூம்பு ஆகியவற்றைக் கண்காணிக்கும் குழு; village committee which looks after the irrigation facilities.

*[கலிங்கு + வாரியம்.]*

ஏரியில் கட்டப்பெறும் மிகு நீர் வடிகாலா கலிங்கு, பாசனத்திற்கு விடப்படும் மதகு, தூம்பு ஆகியவற்றைக் கண்காணிக்கும் குழு. இக்குழு கிராம மகாசபையின் உட்பிரிவிகளிலொன்றாகும். ஏரிகளின் கரைகளில் அமைக்கப்படும் வலிமையான சுவரின் மேற்பகுதியில் கற்களால் மடைகளமைக்கப் பெறும். ஏரியின் அளவுக்கு மேல் மிகுங்காலத்துக் கலிங்குகளின் மடைகள் வழியே நீர் வழிந்தோடும் [கலிங்கு வேறு மதகு வேறு] 'ஏரியும் துகுந்து மதகுகளும் முறிந்து கலிங்குகளும் அழிந்து கிடக்கையில் உடைந்த மடைகளும் அடைத்து ஏரியும் கல்லி, கரையும் கற்கட்டி மதகுகளும் அட்டுவித்து கலிங்குகளும் செய்தபடி' [தெ.கல். தொ.12.கல்.126] [கல்.அக.].

**கலிச்சி** *kalicci,* பெ.(n.) இரட்டைப்பிள்ளைகளுட் பெண் (வின்); female of twins when they happen to be of opposite sexes.

**ம.** கலிச்சி; **தெ.** கலிகி (பெண்).

*[கலி → கலித்தி → கலிச்சி.]*

**கலிசம்** *kalicam,* பெ.(n.) வன்னிமரம் (திவா.) Indian mesquit tree.

*[கலி → கலியம் → கலிசம்.]*

**கலிசெய்–தல்** *kalisey-,* 1 செ.கு.வி.(v.i.) 1. ஊக்கம் ஊட்டு; to encourage. 2. ஆத்திரம் ஊட்டு; to enrage.

**க.** கலிசெய்

*[கலி + செய்.]*

**கலிஞ்சகம்** *kaliñjagam,* பெ.(n.) (மீன்; fish. 2. வன்னி; vanni tree. 3. வாகை; sirissa tree (சா.அக.).

*[கலிகம் → கலிஞ்சம் → கலிஞ்சகம்.]*

**கலிஞ்சிடு–தல்** *kaliñjiḍu,* செ.கு.வி.(v.i.) **கலிங்கிடு** பார்க்க; see *kaliṅgiḍu.* *"வாமநிலை நி(ற்ற)குங் கலிஞ்சிட்டு நிமிர வைய்கை மலைக்கு நீடூழி" (S.I.I.Vol.1 insc.66. S.No.7-8).*

*[கலிங்கு → கலிங்கி + இடு.]*

**கலிஞ்சு** *kaliñju,* பெ.(n.) **கலிங்கு** (S.I.I.i.5). பார்க்க; see *kaliṅgu.*

**தெ.** கலூசு

*[கலிங்கு → கலிஞ்சு → (கொ.வ.).]*

**கலித்தம்**[1] *kalittam,* பெ.(n.) 1. பேரொல; tumult uproar. 2. பொலிவு; grand appearance.

*[கலி → கலித்தம்.]*

**கலித்தம்**[2] *kalittam,* பெ.(n.) 1. கக்குகை; vomiting, emitting. 2. பொசிகை; oozing. 3. வெடிக்கை; bursting.

*[கலி = தோன்றுதல், வெளிவருதல். கலி கலித்தம்.]*

**கலித்தரையன்** *kalingadaraiyan,* பெ.(n.) கி.பி.1249இல் ஆழ்வார் திருநகரிக்கோயில் பதியப்பட்ட ஒப்பந்தம் ஒன்றில் கையொப்பமிட்டவர்; a signatory of an agreement in the temple at Alwar Thirunagari in tThiruchendur taluk during 1249 AD. *"இவை கீழ்வேம்பு நாட்டு தச்சனூர் அரையன் கதிராயிரமுடையானான கலிங்க தரையன் எழுத்து" (தெ.இ.கல்.தொ.26; கல் 495).*

*[கலிங்கம் + தரையன்.]*

**கலித்தளை** *kali-taḷai,* பெ.(n.) வெண்பா உரிச்சீர் நின்று தன்வருஞ்சீர் (நிரை) முதலசையோ டொன்றாது வரும் தளை (யா.கா.10); metrical connection between two successive feet in which a kay-c-cir is followed by a foot beginning in nirai.

*[கலி + தளை.]*

"செல்வப்போர்க் கதக்கண்ணன் செயிர்த்தெறிந்த சினவாழி
முல்லைத்தார் மறமன்னர் முடித்தலையை முருக்கிப்போய்
எல்லை நீர் வியன் கொண்மூ இடை நுழையு மதியம் போல்
மல்லலோங் கெழில் யானை மருமம் பாய்ந் தொளித்ததே."

**கலித்தாழிசை** *kali-t-tāḻ-iśai,* பெ.(n.) இரண்டடியாயும் பல வடியாயும் வந்து, ஈற்றடிமிக்கு, அல்லாதவடி தம்முள் ஒத்தும்,ஒவ்வாதும் நிற்பத் தனித்தேனும் ஒரு பொருள் மேல் மூன்று அடுக்கியேனும் வரும் கலிப்பாவின் இனம் (யாப்.காரி.44); a kind of Kali verse consisting of lines of equal length the last one being longer than the rest.

*[கலி + தாழிசை.]*

*"கொய்தினை காத்துங் குளவியடுக்கத் தெம்*
*பொய்தற் சிறுகுடி வாரல் நீ ஐய நலம் வேண்டின்"*
*ஆய்தினை காத்தும் அருவியடுக்கத்தெம்*
*மாசில் சிறுகுடி வாரல் நீ ஐய நலம் வேண்டின்"*
*"மென்தினை காத்தும் மிகுபூங் கமழ்சோலைக்*
*குன்றச் சிறுகுடி வாரல் நீ ஐய நலம் வேண்டின்"*

இவை இரண்டடியாய், ஈற்றடிமிக்கு ஒரு பொருள் மேல் மூன்றடுக்கி வந்த கலித்தாழிசை.

**கலித்தி** *kalitti,* பெ.(n.) பெண்ணின் இயற்பெயர்; proper name of a female.

*[கலி → கலித்தி. இரட்டைப்பிள்ளைகளுள் ஒன்று ஆணும் ஒன்று பெண்ணு மாயிருப்பின் பெண் குழந்தைக்கு இடும் பெயர்.]*

**கலித்துரிஞ்சல்** *kalitturiñjil,* பெ.(n.) கருவாகை. (L); fragrant sirissa.

*[கலி + துரிஞ்சல். கலி = கருப்பு.]*

**கலித்துறை** *kali-t-tuṟai,* பெ.(n.) 1.நெடிலடி (ஐஞ்சீரடி) நான்கு கொண்டு வருவதாகிய கலிப்பாவின் இனம் (காரிகை. செய்.13.); a kind of verse allied to Kali metre. 2. **கட்டளைக் கலித்துறை** பார்க்க; see *kattaḷai-k-kali-t-tuṟai. "கலித்து றைதானா னூறு அகப் பொருள்- மேல் வாய்ந்தநற் கோவையாம்" (வெண்பாப். செய்.15.).*

*[கலி + துறை.]*

*எ.டு.*
*"யானுந் தோழியும் ஆயமும் ஆடுந் துறைநண்ணித்*
*தானுந் தேரும் பாகனும் வந்தென் நலனுண்டான்*
*தேனும் பாலும் போல்வன சொல்லிப் பிரிவானேல்*
*கானும் புள்ளும் கைதையு மெல்லாங் கரியன்றே"*

**கலித்தொகை** *kali-t-togai,* பெ.(n.) எட்டுத் தொகையுள் நல்லந்துவனார் தொகுத்த 150 கலிப்பாக் களைக் கொண்ட நூல்; an ancient anthology of 150 verses written in kali metre describing the erotic emotions characteristic of the five tracts of land, composed by Nallanduvanār, one of Ettu-t-togai.

*[கலி + தொகை.]*

**கலிதம்** *kalidam,* பெ.(n.) 1. பொருத்தம் (யாழ். அக.); fitting, 2. பெருக்கு; an abnormal flow or discharge of any fluid (சா.அக.).

*[குல் → கல் → கலி → கலித்தம் → கலிதம் (கொ.வ.).]*

**கலிதி** *kalidi,* பெ.(n.) திப்பிலி (மல); long pepper.

*[கலி = கருநிறம் → கலி → கலிதி (கரியது).]*

**கலிந்தம்** *kalintam,* பெ.(n.) 1.ஒரு மரம்; an unknown tree. 2.ஒரு மலை; a mountain. 3. வெந்தயம்; dillseed. 4. மலைதாங்கிப்பூடு; sickle leaf (சா.அக.).

*[கலி → கலிந்தம் (கரியது).]*

**கலிநடம்** *kali-nadam,* பெ.(n.) கழாய்க்கூத்து (சிலப்.3,12, உரை); acrobatic performance. ***கழைக்கூத்து*** பார்க்க; see kalai-k-kūttu.

**த.** கலி நட. > **Skt.** kalinda.

*[கலி + நடம். கலி = உயர்வு, எழுச்சி. இங்கு மூங்கிற் கழைமேல் ஏறிநிற்றலைக் குறித்தது.]*

**கலிநீதியார்** *kali-nidiyār,* பெ.(n.) ***கலியநாயனார்*** (பெரியபு. கலிக்கம்.10.) பார்க்க; see *kaliya-nāyanār.*

*[கலித்தல் = உயர்தல். கலி + நீதி + ஆர். கலிநீதி = உயர்ந்த நீதி. 'ஆர்' உயர்வுப் பன்மையீறு.]*

**கலிநெய்க்கொட்டான்** *kaliney-k-koṭṭāṉ,* பெ.(n.) நெய்க்கொட்டான் மரம்; soapnut tree (சா.அக.).

*[கலி + நெய் + கொட்டான்.]*

**கலிப்பணம்** *kali-p-panam,* பெ.(n.) ஈமச்சடங்கிற்குப் பயன்படுத்திய பண்டைக் காலத்து ஒரு நாணயம்; a coin of ancient times used in funeral ceremonies = $3^1/_2$ annas, = cakkaram (in Trav.) = $^1/_{10}$ pon, (in.J).

*[கலி + பணம் – கலிப்பணம்.]*

இறந்தவரின் நெற்றியில் வைத்துப் பட்டுத் துணியால் கட்டும் பொற்காசு கலிப்பணம் எனப்படும். இது பட்டங் கட்டி வானுலகுக்கு வழியனுப்பும் பழங்கால மக்களின் நம்பிக்கையைக் குறித்தது. சென்னை அகர முதலி இதனைக் கலிபணம் எனக்குறித்திருப்பது தவறு.

**கலிப்பா** *kalippā,* பெ.(n.) நால்வகைப் பாக்களுள் ஒன்று (திவா); one of the four kinds of stanza forms in Tamil. ஆசிரியப்பா, வெண்பா, கலிப்பா, வஞ்சிப்பா எனப் பாவகை நான்கு (உ.வ.).

*[கலி + பா – கலிப்பா (கலித்தளையும் துள்ளலோசையும் பெற்று வரும் பாவகை.]*

*கலிப்பா*

*(தரவு)*

*அரிதாய அறனெய்தி அருளியோர்க் களித்தலும்*
*பெரிதாய பகைவென்று பேணாரைத் தெறுதலும்*
*புரிவமர் காதலிற் புணர்ச்சியும் தருமெனப்*
*பிரிவெண்ணிப் பொருள் வயிற் சென்ற நம் காதலர்*
*வருவர் கொல் வயங்கிழாஅய் வலிப்பல்யான் கேளினி.*

*(தாழிசை)*

*அடிதாங்கும் அளவின்றி அழலன்ன வெம்மையாற்*
*கடியவே கனங்குழாஅய் காடென்றார் அக்காட்டுள்*
*துடியடிக் கயந்தலை கலக்கிய சின்னீரைப்*
*பிடியூட்டிப் பின்னுண்ணுங் களிறெனவும் உரைத்தனரே;*

*2*

*இன்பத்தின் இகந்தொரீஇ இலைதீயுந்த உலவையால்*
*துன்புறூஉம் தகையவே காடென்றார் அக்காட்டுள்*
*அன்பு கொண் மடப்பெடை அசைஇய வருத்தத்தை*
*மென்சிறக ராலாற்றும் புறவெனவும் உரைத்தனரே*

*3*

*கன்மிசை வேய்வாடக் கனைகதிர் தெறுதலால்*
*துன்னரூஉம் தகையவே காடென்றார் அக்காட்டுள்*
*இன்னிழல் இன்மையான் வருந்திய மடப்பிணைக்குத்*
*தன்னிழலைக் கொடுத்தளிக்கும் கலையெனவும்*
*உரைத்தனரே;*

*என வாங்கு*

*இனைநல முடைய கானம் சென்றோர்*
*புனைநலம் வாட்டுநர் அல்லர் மனைவயிற்*
*பல்லியும் பாங்கொத் திசைத்தன*
*நல்லெழில் உண்கணும் ஆடுமால் இடனே' (கலித்.11)*

இது காட்டு வழியாய்த் தொலைவான இடத்திற்குப் பொருள் தேடச் சென்ற கணவனார், காட்டிலுள்ள ஆண் யானை பெண் யானைக்கும், ஆண்புறா பெண் புறாவிற்கும் ஆண்மான் பெண் மானிற்கும் காட்டும் அன்பை ஏற்கனவே தனக்குச் சொல்லியிருத்தலால், அவற்றை நேரிற் கண்டபின் நீண்ட நாள் வேற்றிடத்தில் தங்கியிராது விரைந்து வருவாரென்றும், அதற்கேற்ற நற்குறிகளும் தோன்றுகின்றனவென்றும், மனைவி தன் தோழிக்குச் சொல்லியது.

இது நாலுறுப்பமைந்த நேரிசையொத் தழிசைக் கலி. ஐறுப்பமைந்த அம்போதரங்க வொத் தாழிசைக் கலியும், ஆறுறுப்பமைந்த வண்ணக வொத்தாழிசைக் கலியும் இலக்கண நூல்களுட் கண்டு கொள்க. காதலையும் கடவுளையும் வண்ணித்துப் பாடுவதற்கு அவற்றிலும் சிறந்த செய்யுள் வகை எதிர்காலத்திலும் இருக்கமுடியாது. அம்போதரங்கம், வண்ணகம் என்னும் இரண்டும் தென் சொற்களே [பண். நா.ப.30].

குமரிக் கண்டத் தமிழர் செய்யுட் கலையின் கொடுமுடியேறி அறுவகை வெண்பாக்களையும் நால்வகை அகவற்பாக்களையும் நாலும் ஐந்தும் ஆறுமான உறுப்புகளையுடைய நால்வகைக் கலிப் பாக்களையும் இருவகை வஞ்சிப்பாக்களையும் யாத்திருந்தனர்.

வெண்பாவும் கலிப்பாவும் போன்ற செய்யுள் வகைகளை வேறெம் மொழியிலும் காண்டலரிது.

**கலிப்பு** *kalippu,* பெ.(n.) 1. ஒலிக்கை; sounding, murmuring, as of a brook. *"கலிப்புடை நறும்புனல் படிந்து" (இரகு, இரகுவ.30.).* 2.பொலிவு (விங்.); brightness, freshness. 3. தரா(செம்பும் தகரமும் கலந்த கலப்புமாழை) (வின்.); amalgam of copper and tin. 4. கக்குதல்; ejection. 5. மிகுதி; excess. 6.வெடிப்பு; fissure (சா.அக.). 7.உயரம்; height. 8. இனப்பெருக்கம்; excessive breed.காட்டில் முயல் கலிச்சுப்போச்சு (உ.வ.).

*[கலி → கலிப்பு.]*

**கலிப்புநுரை** *kalippunurai,* பெ.(n.) நீர்மப் பகுதியின் மேல்பாகத்தில் படியும் கசடு; scum.

*[கலிப்பு + நுரை.]*

**கலிப்பேடு** *kalippēḍu* பெ.(n.) ***கலிப்புநுரை*** பார்க்க; see *kalippunurai.*

*[கலிப்பு + ஏடு.]*

**கலிபலி** *kalipali,* பெ.(n.) ***கலிபிலி*** பார்க்க; see kalipili

*[கலிபிலி → கலிபலி.]*

**கலிபிலி** *kalibili,* பெ.(n.) 1.சச்சரவு; quarrel, wrangle. ஆரவாரம்; uproar, disturbance, hubbub.

**ம.** கலிபிலி; **க.,தெ.,து.**தலிபிலி; **U.** ghalibili; **Mar.** galbalne.

*[கலி = ஆரவாரம். கலி → கலிபிலி → எதுகை நோக்கி வந்த இணைமொழி.]*

**கலிமகிழ்** *kali-magiḷ,* பெ.(n.) ஓலக்கம்; public audience or levee of an Indian king, royal court, durbar. *"விழவினன்ன நின் கலிமகிழானே" (பதிற்றுப்.61,18.).*

*[கலி + மகிழ் – கலிமகிழ். கலி =பெருக்கம், மிகுதி, ஆரவாரம்.]*

**கலிமத்தி** *kalimatti,* பெ.(n.) ***கலிமதி*** பார்க்க; see *kalimadi* (சா. அக.).

*[கலிமதி → கலிமத்தி.]*

**கலிமதி** *kalimatti,* பெ.(n.) மருது; black-winged myrobalan.

*[கலி → கலிமதி (கலி = கரிய).]*

**மறுவ.** கலிமத்தி

**கலிமருது** *kali-marudu,* பெ.(n.) ஒருவகை கருப்பு மருத மரம்; black-winged myrobalan (சா.அக.).

*[கலி → கலிமருது (கலி = கரிய) கலி + மருது – கலிமருது. கலி → கரி, கருப்பு.]*

**மறுவ.** கலிமி

**கலிமனம்** *kalimaṉam,* பெ.(n.) போராடும் மனம்; agitating mind.

**க.** கலிமன

*[கலி + மனம்.]*

**கலிமா** *kalimā,* பெ.(n.) மொட்டு; bud.

*[கலி + மா. கலி = உயர்ந்த.]*

**கலிமாரகம்** *kalimāragam,* பெ.(n.) 1.கிலுகிலுப்பை (மலை); a species of rattle wort. 2.மயிற்கொன்றை; peacock crest.

*[கலி + மாரகம். கலி = ஓசை. மரம் → மாரகம் (கொவ.).]*

**கலிமி** *kalimi,* பெ.(n.) கரியமருதமரம்; black winged myrobalan.

*[கலிமருது → கலிமி.]*

**கலிமிக்காவிமரம்** *kalimi-k-kāvi-maram,* பெ.(n.) கலிமி மரத்தின் அடிக்கட்டைக்கு மேலுள்ள பாகம் (M.navi.81); mizzen-top-mast.

*[கலிமி + காவிமரம். கலம் → கலமி → கலிமி.]*

**கலிமி சவர்மரம்** *kalimi-cavar-maram,* பெ.(n.) கலிமி மரத்தின் பகுதியான காவிமரத்துக்கு அடுத்து மேலுள்ள பாகம் (M.navi.81.); mizzen-top-gallant mast.

*[கலம் → கலமி → கலிமி. கலிமி + சவர்மரம்.]*

**கலிமிடவர்மரம்** *kalimiḍavar-maram,* பெ.(n.) கலிமிமரத்தின் உச்சிப்பாகம் (M.navi.81); mizzen-royal mast.

*[கலிமி + இடவல் + மரம். கலம் → கலமி → கலிமி.]*

**கலிமிடவர்பறுவான்** *kalimiḍavarpaṟuvāṉ,* பெ.(n.) கலிமிடவர் மரத்தின் குறுக்கே போடப்பட்டிருக்கும் பறுவான் (M. navi.82.); mizzen-royal yard.

*[கலிமி + இடவல் + பறுவான் ; கலம் → கலமி → கலிமி.]*

**கலிமிமரம்** *kalimi-maram,* பெ.(n.) கப்பலின் பின்னணியத்தில் இருக்கும் பாய்மரம் (m.navi.80); mizzen-mast.

*[கலம் = கப்பல். கலம் → கலமி → கலிமி + மரம்.]*

**கலியகம்** *kaliyagam,* பெ.(n.) வெட்பாலையரிசி (சங்.அக.); seeds of conessi bark.

*[கலி + அகம். அகம் = உள்ளீடு, அரிசி.]*

**கலியங்கன்** *kaliyaṅgaṉ,* பெ.(n.) இயற்பெயர்; a proper name.

க. கலியங்க

*[கலி = வீரன். 'அங்கன்' இயற்பெயர். கலி + அங்கன் – கலியங்கன்.]*

**கலியநாயனார்** *kaliya-nāyaṉār,* பெ.(n.) அறுபத்து மூன்று நாயன்மாருள் ஒருவர் (பெரியபு.); name of canonized Saiva saint, one of 63 Nāyanmār.

*[கலியன் = போர் வீரன். கலியன் + நாயன் + ஆர் (ஆர். உயர்வுப்பன்மை ஈறு).]*

இவர் திருவொற்றியூரில் பிறந்தவர். சிவாலயத்திற்குத் திருவிளக்கிடும் பெருந் தொண்டிற்குத் தமது செல்வங்களைச் செலவிட் டமையால் வறுமையுற்று, தமது மனைவியையும் அத் தொண்டிற்காக விற்கப்புகுந்தும் வாங்குவோர் இன்மையால் தமதூட்டியையறிந்து கொள்ளத் துணிந்தபோது சிவன் வெளிப்பட்டு அருள் புரியப் பெற்றவர் எனப் பெரியபுரணம் கூறுகிறது.

**கலியம்** *kaliyam,* பெ.(n.) குடிப்பெயர்; name of a dynasty or clan.

க. கலியம

*[கலி = வீரன். கலி + அம் – கலியம்.]*

**கலியன்**[1] *kaliyaṉ,* பெ. (n.) 1.படைவீரன் (திவா); warrior. 2. திருமங்கை ஆழ்வார் (திவ்.பெரியதி 5.2.10); Tirumaṅgai āḻvār, who was a warrior before he became a saint.

*[கலி + அன். கலி = பெருக்கம், வலிமை.]*

**கலியன்**[2] *kaliyaṉ,* பெ.(n.) இரட்டைப் பிள்ளைகளுள் ஆண் (வின்); male of twins when they are of cpposite sex.

ம. கலியன்; க. கலிக.

*[கலி + அன் – கலியன் ('அன்' ஒன்றன்பாலீறு).]*

கலி = புதுமை. இரட்டைக் குழந்தைகளுள் இரண்டும் ஆணாக அல்லது இரண்டும் பெண்ணாகப் பிறத்தல் பெரும்பான்மை. ஒன்று ஆணும் ஒன்று பெண்ணுமாகப் பிறப்பது புதுமையாகக் கருதப்பட்டதால் கலியன், கலிச்சி எனப் பெயரிடப்பட்டன.

**கலியன்**[3] *kaliyaṉ,* பெ.(n.) 1. கலியிறைவன்; the deity presiding over the iron age. *"தணந்த வெந்திறற் கலியனைச்சபிக்குவன்"* (நைடத.கலிநீ.16.). 2.காரி (வின்.); saturn.

ம. கலியன்

*[கலி → கலியன். கலி = கருநிறம்.]*

**கலியன்**[4] *kaliyaṉ,* பெ.(n.) 1. பசித்தவன்; hungry man. *"கலியர் சோற்றின் மேலே மனம் என்னுமா போலே" (ஈடு.4, 3, 7.).* 2. வறுமையாளன்; poor man; needy indigent person. *"மூதேவி மூடிய கலியனை" (திருப்பு).*

*[கலி → கலியன். கலி = வறுமை.]*

**கலியன்**[5] *kaliyaṉ,* பெ.(n.) சீர்காழிவட்டம் திருக்கருகாவூர் கோயில் அதிகாரி; officer connected

with Thirukkarukarur Temple of Sirkazhi taluk during 10th Century A.D. *"கொம்மைப் பாக்கமுடைய சிங்கன் கலியனான உத்தமசோழ மூவேந்த வேளான் விண்ணப்பத்தால்". "சாத்தன் பகவதியான கலியன் தண்டேசுவரனும்" (தெ.இ.கல். தொ.19. கல். 130).*

*[கலி → கலியன்.]*

**கலியாச்சா** *kaliyācca,* பெ.(n.) பசலாத்தி; spathe trumpet tree (சா.அக.).

*[கலி + (ஆச்சான்) ஆச்சா.]*

**கலியாண்டு** *kaliyāṇḍu,* பெ.(n.) கலியூழி (கலியுக) ஆண்டுமானத்தின்படி கணிக்கப்பட்ட ஆண்டு; year reckoned according to Kaliyuga calculation from 3102 BC.

மறுவ. கலியுக ஆண்டு

*[கல் → கலி (தோன்றுதல்) + ஆண்டு.]*

**கலியாண ஒப்பந்தம்** *kaliyāṇaoppandam,* பெ.(n.) திருமண உடன்படிக்கை (வின்.); contract of betrothal in which the parties or their friends bind themselves under penalty to perform the marriage.

*[கலியாணம் + ஒப்பந்தம்.]*

**கலியாணக்கத்தரி** *kaliyāṇakkattari,* பெ.(n.) புல்லிவட்டம் காய் முழுவதையும் மூடிக் கொண்டிருக்கும் ஒரு வகைக் கத்தரிக்காய்; a kind of brinjal which is fully covered by sepals.

*[கலியாணம் + கத்தரி.]*

**கலியாணக்காரர்** *kaliyaṇa-k-kārar,* பெ.(n.) 1. மணமக்கள்; married couple, bride and bridegroom. கலியாணக்காரரை மணமேடையில் அமரச்செய்(உ.வ.). 2. மணமக்களின் பெற்றோர், விழைவர். (கொ.வ.); people related to either of the parties in a marriage. கலியாணக்காரர்களே நேரில் அழைப்பிதழ் கொடுத்தனர்(உ.வ.). 3. திருமண விருந்தினர்; guests attending a wedding. இந்தப் பேருந்து முழுவதும் கலியாணக்காரர்களே(உ.வ.).

*[கலியாணம் + காரர்.]*

**கலியாணக்கால்** *kaliyāṇa-k-kāl,* பெ.(n.) ஆணுடை சாத்திப் புதுமனைச் சுவரில் பொருத்திய பசுங்கொம்பு (யாழ்ப்.); one of the new posts set in the wall of a new house placed over against the kanni-k-kal and dressed with a new cloth as a male.

*[கலியாணம் + கால்.]*

**கலியாணக்கூடம்** *kaliyāṇa-k-kūḍam,* பெ.(n.) திருமண வீட்டில் மணச்சாலையாகப் பயன் படுத்துமிடம்; a central hall in a storeyed or terraced house, commodious and well ventilated to serve as a hall for celebrating marriages.

*[கலியாணம் + கூடம்.]*

**கலியாணக்கூடை** *kaliyāṇakkūḍai,* பெ.(n.) மணமகளை அழைக்கச் செல்லும்போது மணமகன் வீட்டிலிருந்து கொண்டு செல்லும் சீர்வரிசைப் பொருள்கள் கொண்ட கூடை; the basket which contains present and articles to bride by bridegroom's party.

*[கலியாணம் + கூடை.]*

**கலியாணக்கோலம்** *kaliyā-ṇa-k-kōlam,* பெ.(n.) மணக்கோலம்; wedding attire.

*[கலியாணம் + கோலம்.]*

**கலியாணங்கூறு-தல்** *kaliyā-ṇaṅ-kūṟu-,* 5 செ.கு.வி. (v.i.) திருமண அறிக்கை படித்தல் (கிறித்.); to publish the banns of marriage.

*[கலியாணம் + கூறு.]*

**கலியாணச் சடங்கு** *kaliyāṇa-c-caḍaṅgu,* பெ.(n.) 1.திருமணச் சடங்கு; wedding ceremony. 2.திருமணத்திற்குமுன் மாப்பிள்ளை காதணி யணியுஞ் சடங்கு. (யாழ்ப்.); ceremony of the wearing of earrings by a bridegroom just before the wedding.

*[கலியாணம் + சடங்கு.]*

**கலியாணச்சாவு** *kaliyāṇaccāvu,* பெ.(n.) மூதாளரின் இயற்கைச் சாவு; natural death of a person at a ripe old age (which is not considered a sorrowful event.).

*[கலியாணம் + சாவு.]*

**கலியாணசுந்தரர்** *kaliyāṇa-sundarar,* பெ.(n.) சிவத் திருமேனிகளுள் ஒன்றான மணக்கோலநம்பி; one of the forms in which Śiva is worshipped.

**Skt** - Sundara → **த.** சுந்தரர்.

**கலியாணஞ்சொல்(லு)-தல்** *kaliyāṇañ-col-,* 13 செ.கு.வி. (v.i.) திருமண முழுத்தத்தை அறிவித் தழைத்தல்; to invite to a wedding.

*[கலியாணம் + சொல்(லு).]*

**கலியாணத்துவரை** *kaliyāṇa-t-tuvarai,* பெ.(n.) துவரை வகை; a species of dhall (சா.அக.).

*[கலியாணம் + துவரை.]*

**கலியாணப்பந்தல்** *kaliyāṇa-p-pandal,* பெ.(n.) மணப்பந்தல்; temporary shed put up for celebrating a marriage.

*[கலியாணம் + பந்தல்.]*

**கலியாணப் புத்தகம்** *kaliyāṇa-p-puttagam,* பெ.(n.) திருமணத்தைப் பதிவு செய்யும் புத்தகம் (சிறித்.); marriage register.

*[கலியாணம் + புத்தகம்.]*

**கலியாணப்பூ** *kaliyāṇa-p-pū,* பெ.(n.) மூன்றாம் முறையாக நிறைந்து விழும் இலுப்பைப்பூவின் வீழ்ச்சி (யாழ்ப்.); the third plentiful fall during the season of the flowers of the iluppai, dist-fr. பந்தர்ப்பூ, பாவாடைப்பூ and கப்பிப்பூ.

*[கலியாணம் + பூ.]*

**கலியாணப்பூசணி** *kaliyāṇa-p-pūšaṇi,* பெ.(n.) 1. பெரும்பூசணி (m.m.); a gourd, common pumpkin. 2.நீற்றுப்பூசணி; white gourd melon.

*[கலியாணம் + (பூசுணி) பூசணி.]*

**கலியாணப்பொருத்தம்** *kaliayāṇa-p-poruttam,* பெ.(n.) 1. திருமணத்தி ற்குப் பார்க்கும் பொருத் தங்கள் (பஞ்.); (Astrol.) hormonious correspondence between the naksatras of a man and a woman which is a determinining factor in reference to their fitness for marriage examined in ten aspects, viz., natcattira-p-poruttam, kana-p-poruttam, magendirap-poruttam, pentirkka-p-poruttam, Yoni-p-poruttam, irasi-p-poruttam, irasi-y-adipadipporuttam, vasiyapporuttam, vedaip-poruttam, iraccu-p-poruttam.

*[கலியாணம் + பொருத்தம்.]*

**கலியாணம்**[1] *kaliyāṇam,* பெ.(n.) புதிய பொருள்கள்; new objects, natural or artificial, invented or discovered, ***கலியாணர்*** பார்க்க; see *kaliyāṇar.*

*[கலி + யாண் + அம்.]*

கலி = மிகுதி. யாண் = புதுமை. 'அம்' சொல்லீறு. கடல் கடந்த நாடுகளிலிருந்தும் தொலை நாடுகளிலிருந்தும் தருவித்த பொருள்கள் புதுமை விளைத்தலின் பெற்ற பெயர். இப் பொருள்களை விற்போர் கலியாணர் எனப்பட்டனர்.

**கலியாணம்**[2] *kaliyāṇam,* பெ.(n.) 1. திருமணம், (திவா.) wedding. "கலியாணஞ் செய்தார்கள்" (பெரியபு. காரை. 12.) 2. நன்னிகழ்ச்சி, மகிழ்வூட்டும் செயல், விழா; festivity, conviviality, joyful celebration. 3.பொன் (சூடா.); gold. 4. நற்குணம்; good character, virtue.

த. கலியாணம் > **Skt**. kalyāṇa.

*[கலி + யாணம் - கலியாணம்.]*

கலித்தல் = ஆரவாரித்தல், மிக்கெழுதல், பெருகுதல், செருக்குதல், தருக்குதல், செருக்கி வளர்தல், தழைத்தல், மகிழ்தல்.

கலி = ஆரவாரம், பெருக்கு, செருக்கு, தழைத்தல், மகிழ்ச்சி. யாணம் = அழகு "யாணஞ் சான்ற அறிவர் கண்டோர்" [தொல்.1446].

ஏண் → ஏணம் [எழுச்சி, அழகு] → யாணம் = அழகு. யாணம் → யாணர் = புதுமை, புதுவருவாய்

"கலியாணர்" = மனச்செருக்கு எழுதற்குக் காரணமான புது வருவாய் [பட்டினப்.32]

"கலிகொள்யாணர்" = தழைத்தலைக் கொண்ட புது வருவாயையுடைய [புறம்.66]

"கலியாணர்" = ஓசையுடைய புதுப்பெயல் [புறம்.205] "கலியாணர்" = செருக்கினை யுடைத்தாகிய புதுவருவாய் [மதுரைக்.330] "கலியாணர்" = பெருக்கினையுடைத்தாகிய புதுவருவாய் [மேற்படி.118]. யாணர் எனபது யாணம் என்பதன் திரிபாதலின், கலியாணம் என்பதே முன்னை வடிவாம்.

"கல்யாண" என்னும் வடசொற்கு, அழகிய, மனத்திற்கேற்ற சிறந்த, உயர்ந்த, நல்ல, நலமான, மங்கல, மகிழ்ச்சியான, ஆக்கமான, என்னும் பொருள்களும், அதன்கல்யாணம் என்னும் வடிவிற்கு ஆசுழ், மகிழ்ச்சி, ஆக்கம், தழைப்பு, நல்லொழுக்கம், அறப்பண்பு என்னும் பொருள்களும் கூறப்பட்டிருப்பதால், அது கலியாணம் என்னும் தென்சொல்லின் திரிபோ என ஐயுறக் கிடக்கின்றது.

அதன் மூலமாகக் காட்டும் "கல்ய" என்னும் சொற்கு நல்ல, நலமான என்னும் பொருள்களும், அதன் "கல்யம்" என்னும் சொற்கு நல்ல, நலமான என்னும் பொருளும் கூறப்பட்டுள. ஆயினும் இச்சொல் "கல்யாண" என்பதன் சிதைவாகவு மிருக்கலாம். யாண என்னும் பிற்பகுதியை ஈறாகக் கொள்ளாது கிளவியாகக் கொள்வதே பொருத்தமாம்.

வடசொல்லாகக் கருதப்படும் கல்யாணம் என்னும் சொற்கு உலக வழக்குத் தமிழில் திருமணம் என்னும் பொருளுண்டு; வடமொழியில் அஃதில்லை. மங்கலம் என்னும் பொருளே இருமொழிக்கும் பொதுவாம். ஆகவே, திருமணம் பொருள் தென் நாட்டிலேயே வட சொற்குக் கொள்ளப்பட்டிருத்தல் வேண்டும். மங்கலம் என்னுஞ் சொல் வடமொழியில் நன்மை என்று பொருள்படுமேயன்றித் திருமணத்தைக் குறிக்காது. கல்யாண குணம் = நல்ல பண்பு, கலி என்னும் சொல் இசைக்கருவி முழக்கத்தையும்; யாணம் என்னுஞ் சொல் பந்தற்சுவடிப்பும் மணமக்கள் கோலமுமாகிய அழகையும், வரிசை வைத்தலும் மொய்யெழுதுதலும் சீர்செய்தலுமாகிய புதுவருவாயையும் குறிப்பது கவனிக்கத்தக்கது [வ.மொ.வ.278, 279].

**கலியாணம்பண்ணு-தல்** *kaliyāṇampaṇṇu-,* 11 செ.குன்றாவி.(v.t.) 1. திருமணம் புரிதல்; to marry. 2. மொய்யிடவேண்டி விருந்து செய்தல் (யாழ்ப்.); to give a treat for the sake of obtaining presents from the guests, as by persons in reduced or indigent circumstances.

*[கலியாணம் + பண்ணு-.]*

**கலியாணமண்டபம்** *kaliyāṇamaṇḍabam,* பெ.(n.) 1. தெய்வத் திருமேனிகளுக்குவிழாக்காலங்களில் திருக்கலியாணம் நடக்குங்கோயில் மண்டபம்; spacious hall in a temple for marriage celebrations. 2. திருமணம் முதலிய சிறப்பு நிகழ்ச்சிகளுக்கு வாடகைக்கு விடப்படும் மிகப்பெரிய மாளிகை; rented building with a large hall for conducting marriages, etc.,

*[கலியாண + மண்டபம்.]*

**கலியாணமுடி-த்தல்** *kaliyāṇamuḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. திருமணம் பேசி உறுதிப்படுத்துதல் (இ.வ.); to settle a marriage. 2. திருமணம் புரிதல்; to marry.

*[கலியாணம் + முடி.]*

**கலியாணமுருக்கு** *kaliyāṇa-murukku,* பெ.(n.) ***முண்முருங்கை-***[2] பார்க்க; see *muṇmuruṅgai*[2]

*[கலியாணம் + முருக்கு.]*

**கலியாண முருங்கை** *kaliyāṇamuruṅgai,* பெ.(n.) கரி முருக்கு, ஒரு வகை முருங்கை மரம்; black coral tree with glassy black seeds.

*[கலியாணம் + முருங்கை.]*

**கலியாணமெழுது-தல்** *kaliyāṇam-eḻuḍu-,* 10 செ.குன்றாவி. (v.t.) திருமணப்பதிவு செய்தல்; (யாழ்ப்.) to register a marriage.

*[கலியாணம் + எழுது.]*

**கலியாணர்** *kaliyāṇar,* பெ.(n.)கடல் வணிகர்; treader by sea.

*[கலி = மிகுதி, யாண் = புதுமை, பெரிதும் புதுமையான பொருள்களை விற்பவர்கள்.]*

**கலியாண வஞ்சி** *kaliyāṇavañci,* பெ.(n.) வீரவஞ்சி மரம்; an unknown tree (சா.அக.).

*[கலியாணம் + வஞ்சி, கலி = வீரம். கலி → கலியாணம்.]*

**கலியாண வாழ்த்து** *kaliyāṇa-vāḻttu,* பெ.(n.) வாழ்த்துதல் (வின்.); felicitation, blessings to the married couple.

*[கலியாணம் + வாழ்த்து.]*

**கலியாணன்** *kaliyāṇaṉ,* பெ.(n.) நற்பண்பு நற்செய்கை யுள்ளவன்; man of excellent character, of a noble

disposition. *"என்னையின்றோர் கலியாணனாகக் காண்மின்" (திருவாலவா.27,85.).*

*[கலி + யாண் + அன்.]*

**கலியாணி**[1] *kaliyāṇi,* பெ.(n.) 1.உயர்குணங்களை உடையவள்; மலைமகள்; அலைமகள்; a woman endowed with auspicious features and excellent traits, usually applied to goddesses like Laksmi and Parvati. *"பரம கல்யாணி தன் பாலகனே" கந்தரல.80) (த.மொ.அ.)*

த. கலியாணி > **Skt** kalyaṇ (illustrious]

*[கலி + யாண் + இ – கலியாணி.]*

**கலியாணி**[2] *kaliyāṇi,* பெ.(n.) நீர்க்கடம்பு; female cadamba tree called also wild jack (சா.அக.).

*[கலி + யாண் + இ.]*

**கலியாறு** *kaliyāṟu,* பெ.(n.) வறுமை; drought.

*[கலி + யாறு – கலியாறு. வறட்சி நீட்டிப்பால் உண்டான வறுமையாகிய வற்கடத்தை ஆறாகக் கூறிய உருவகம்.]*

வறுமைக்காலம் கரை கடந்துபெருகியழிக்கும் ஆறாக உருவகப்படுத்தப்பட்டது. பருவ மழையின்மையால் நாட்டில் பெருகிய வறுமையாகிய ஆறு கலியாறு ஆயிற்று. 'மனுவாறு பெருக கலியாறு வறப்ப' (முதற்குலோத்துங்கன் மெய்க்கீர்த்தி).

**கலியிராகன்** *kaliyirāgaṉ,* பெ.(n.) கி.பி.பத்தாம் நூற்றாண்டில் கச்சிப்பேட்டில் வாழ்ந்த குடிமகன்; a resident of Kaccipedu during 10th CenturyA.D. *"கலியிராகனேன் கச்சிப்பேட்டுப் பெரிய" (தெ.இ.கல். தொ.19 கல்.337).*

**கலியுக ஆண்டு** *kaliyuga āṇḍu,* பெ.(n.) கலியூழி ஆண்டுமானத்தின் வண்ணம் குறிக்கப்படும் ஆண்டு; a year reckoned according to Kaliyuga calculation. see *kaliyāṇḍu.*

**மறுவ.** கலியாண்டு

*[கலி + உக + ஆண்டு – கலியுக ஆண்டு.]*

**கலியுகம்** *kaliyugam,* பெ.(n.) கி.மு. 3102 ஆண்டில் தொடங்கியதாகக் கணிக்கப்படும் ஆண்டுமானம்; நான்கு ஊழிகளுள் இறுதியானதாகக் கருதப் படுவது, நான்காம் ஊழி; Kali-yuga, the present Iron age, the last of the four great ages of the world which is reckoned as having begun in 3102 B.C. *"கலியுகமொன்று மின்றிக்கே" (திவ். திருவாய். 5,2,11.).*

**த.** கலியுகம் > **Skt.** kaliyuga.

*[கலி + உகம் = கலியுகம். **கலியூழி** பார்க்க; see kaliyuli.*

**கலியுஞ்சை** *kaliyuñjai,* பெ.(n.) கலித்துரிஞ்சில் மரம்; fragrant sirissa.

*[கலி + உஞ்சை. கலி = கருப்பு. உஞ்சை = ஊஞ்சை மரம்.]*

**கலியூழி** *kaliyūḻi,* பெ.(n.) கலிகாலம் எனப்படும் நெடுங்காலப் பிரிவு; name of an era - kali.

*[கலி + ஊழி = கலியூழி. கலி = கருப்பு, கரிய இரும்பு. கலியூழி = இரும்பின் பெயரால் அமைந்த ஊழி.]*

தமிழ் வானநூல் வல்லுநரால் கணிக்கப்பட்ட ஊழிப்பிரிவுகளுள் கலியூழியும் ஒன்று. அவை பொன்னூழி, வெள்ளியூழி, செப்பூழி, கலியூழி என்பன. இவற்றை வட மொழியாளர் கிரேதா யுகம், திரேதா யுகம், துவாபர யுகம், கலியுகம் என்பர். கலியூழி கி.மு.3102–ம் ஆண்டு பிப்பிரவரித் திங்கள் 18ஆம் நாள் பிறந்ததாகக் கணித்தனர். நான்கு ஊழிகளுக் கும் சேர்த்து நான்கூழி (சதுர்யுகம்) எனப் பெயரிட் டனர். இதற்குரிய காலம் 43,20,000 ஆண்டுகள்.

| ஊழியின் பெயர் | ஆண்டுகள் |
|---|---|
| 1. பொன்னூழி (கிரேதா யுகம்) (சத்திய யுகம்) | 17,28,000 |
| 2. வெள்ளியூழி (திரேதா யுகம்) | 12,96,000 |
| 3. செப்பூழி (துவாபர யுகம்) | 8,64,000 |
| 4. கலியூழி (கலியுகம் – இரும்பூழி) | 4,32,000 |

இந்நான்கு ஊழிகளும் 12:8:6:3 என்னும் ஈவுபாட்டில் (விகிதத்தில்) உள்ளன. ஊழிக் காலங்கள் அனைத்தும் 1,440 ஆல் (360X4) மீதமின்றி வகுபடக்கூடியவை.

**கலியேற்று**[1]**–தல்** *kali-y-ēṟṟu-,* பி.வி.(caus.) வெறுப் பேற்றுதல்; to tease.

*[கலி = துன்பம், வருத்தம். ஏற்று = உண்டாக்கு. கலி + ஏற்று.]*

**கலியேறு[2]–தல்** *kali-ēṟu-,* செ.கு.வி.(v.i.) மறம் (வீரம்) கொள்; to become courageous, heroic.

க. கலிஏறு

*[கலி = வீரம். கலி + ஏறு.]*

**கலிரம்** *kaliram,* பெ.(n.) 1.முள்ளு முருக்கு; east Indian coral tree. 2. பலாசம்; palas-tree (மலை).

*[கலி + ஈரம்.]*

**கலிரெனல்** *kalir-eṉal,* பெ.(n.) ஓர் ஒலிக்குறிப்பு; onom. expr. of sounding, as small bells, a brass vessel. *'கெட்டித் தங்கமானாலும் கலி ரென்று ஒலிக்குமா' (பழ.).*

*[கலீர் + எனல்.]*

**கலிவிராயன்** *kalivi-rayāṉ,* பெ.(n.) நெல்வகை (வின்.); a kind of paddy.

க. கலம, களம (நெல்).

*[கலி → கலிவி + ராயன்.]*

**கலிவிருத்தம்** *kali-viruttam,* பெ.(n.) நாற்சீரடி நான்காய் வரும் கலிப்பாவின் இனம் (யாப்.45.); a kind of verse allied to kali having four feet in each of its four lines. *"அளவா நான்கின கலிவிருத்தம் மே" (யாப், செய்யுள்.89 (த.மொ.அ.).*

*"வேய்தலை நீடிய வெள்ளி விலங்கலின்*
*ஆய்தலின் ஒண்சுடர் ஆழியி னான்றமர்*
*வாய்தலின் நின்றனர் வந்தென மன்னர்முன்*
*நீதலை சென்றுரை நீள்கடை காப்போய்"*

*[கலி + விருத்தம்.* **Skt.** vrutta **> த.** விருத்தம்*]*

**கலிவெண்பா** *kali-veṇbā,* பெ.(n.) கலித்தளை தட்டுக் கலியோசை தழுவி ஈற்றடி வெண்பாப் போல முச்சீரடியான் வருவதான கலிப்பாவின் இனம் (யாப்.85.); a kind of verse allied to kali in which the last line has three feet similar to a venba. *"தன்றளையோசை தழீஇநீற்றடி வெண்பாவியலகலி வெண்பாவே" (யாப்.85).*

*[கலி + வெண்பா.]*

*"பண்கொண்ட வரிவண்டும் பொறிக்குயிலும் பயில்வானா*
*விண்கொண்ட அசோகின் கீழ் விழுமியோர் பெருமானைக்*
*கண்ணாலும் மனத்தாலும் மொழியாலும் பயில்வார்கள்*
*விண்ணாளும் வேந்தரா வார்".*

**கலிவெண்பாட்டு** *kali-veṇ-pāṭṭu,* பெ.(n.) ***கலி வெண்பா*** (திவா.); பார்க்க; see *kali-veṇbā.*

*[கலி + வெண் + பாட்டு.]*

**கலிழ்[1]தல்** *kaliḻ-,* 4 செ.கு.வி.(v.i.) 1. அழுதல்; to weep shed tears; to be troubled in mind. *"கூதிராயிற்றண் கலிழ்தந்து" (ஐங்குறு.45.).* 2. ஒழுகுதல்; to shine forth, as beauty. *"அங்கலிழ் மேனி" (ஐங்குறு.174.).* 3. புடைபெயர்தல்; to change position. *"காலொடு மயங்கிய கலிழ்கடலென" (பரிபா.8,31).*

*[கலுழ் → கலிழ்.]*

**கலிழ்[2]** *kaliḻ,* பெ.(n.) ***கலிழிநீர்*** பார்க்க; see *kaliḻinīr. "விரை மண்ணுக் கலிழ" (கரிபா.6,44).*

*[கலுழ் → கலிழ்.]*

**கலிழிநீர்** *kaliḻi-nīr,* பெ.(n.) கலங்கல்நீர்; muddy water, puddle. *"மானுண்டெஞ்சிய கலிழி நீரே" (ஐங்குறு.203.).*

*[கலுழி → கலிழி + நீர்.]*

**கலின்கலினெனல்** *kaliṉ-kaliṉ-eṉal,* பெ.(n.) ஓர் ஒலிக்குறிப்பு; onom. tinkling of anklet bells. *"கிண்கிணி சிலம்பொடு கலின்கலினென"(குமர.பிர. முத்துக்.வருகைப்.1.).*

*[கலின் + கலின் + எனல். 'கலின்' ஒலிக்குறிப்பு இடைச்சொல்.]*

**கலினம்[1]** *kaliṉam,* பெ.(n.) கடிவாளம்; bit of a horse's bridle. *"கலினமா" (சீவக.2258.).*

*[கலன் → கலினம்.]*

**கலினம்[2]** *kaliṉam,* பெ.(n.) 1.கற்பரி வைப்பு நஞ்சு; karpari-vaippu-nanju, a mineral poison. 2.வன்னி மரம்; palas tree.

*[கலன் → கலின் → கலினம்.]*

**கலினா** *kaliṉa,* பெ.(n.) கூ வாகு ; millet (சா.அக.).

*[கலி → கலனா.]*

**கலினி[1]** *kaliṉi,* பெ.(n.) கைம்பெண் (வின்.); widow, as afflicted.

*[கலன் + இலி – கலனிலி → கலினி.]*

**கலினி**[2] *kalini,* பெ.(n.) 1. திப்பிலி; long pepper. 2. திரிபலை; the three galls viz. galnut, Tandrinut and goose berry fruit (சா.அக.).

*[கலன் = குற்றம்; கலன் + இல் – கலனில் → கலினி.]*

**கலினெனல்** *kalin-enal,* பெ.(n.) ***கலின்கலினெனல்*** பார்க்க; see *kalin-kalin-enal. "கலினென வறைகழ லமரேசன்"(சேதுபு. சேதுபல.40.).*

*[கலின் + எனல்.]*

**கலினை**[1] *kalinai,* பெ.(n.) 1.***மிளகு*** (சூடா.) பார்க்க; see *milagu.* 2. கொள்ளு. (மலை.); horse gram. 3. கீழாநெல்லி; feather foil. 4. கழற்சேம்பு; a plant unknown, probably one of colacasia genus. 5.வெண்மிளகு; white pepper (சா.அக.).

*[கலி = பெருக்கம், மிகுதி, புதுமை.]*

**கலினை**[2] *kalinai,* பெ.(n.) ***கலினம்*** (வின்.) பார்க்க; see *kalinam.*

*[கலினம் → கலினை.]*

**கலினை**[3] *kalinai,* பெ.(n.) கைம்மை (யாழ்.அக.); widow-hood.

*[கலினிலி → கலினி → கலினை.]*

**கலீயம்** *kaliyam,* பெ.(n.) கடிவாளம்; bit of a horse's bridle.

*[கலினம் → கலீயம்.]*

**கலீரிடல்** *kaliridal,* பெ.(n.) ***கலீரெனல்*** பார்க்க; see *kalir-enal.*

*[கலின் – கலீர் + இடல்.]*

**கலுக்குப்பிலுக்குப் பண்ணு–தல்** *kalukku-p-pilukku-p-pannu-,*11.செ.கு.வி.(v.i.) அணிகல னொலி பட நடத்தல் (வின்.); to walk in such a way as to make ornaments tinkle on the stage.

*[கலுக்கு + பிலுக்கு + பண்ணு–.]*

**கலுக்குப்பிலுக்கு** *kalukku-p-pilukku,* பெ.(n.) 1.அணிகலனொலி (வின்.); tinkling sounds of ornaments worn by women and children, clinking of little bells. 2.செருக்கு, பெருமிதம்; ostentation.

*[கலுக்கு + பிலுக்கு.]*

**கலுக்கெனல்** *kalukkenal,* பெ.(n.) சிரிப்பினால் உண்டாகும் ஒலியைக் குறிக்கும் ஒலிக் குறிப்பு; onom. expr. of loud, sharp sound, as when laughing.

*[கலுக்கு + எனல்.]*

**கலுகுலுத்தல்** *kalukuluttal,* பெ.(n.) பல சிற்றொலி களிலுண்டான ஓசை (யாழ். அக.); confused noise due to various low sounds.

*[கலு + குலுத்தல்.]*

**கலுகுலுப்பூ** *kalukuluppū,* பெ.(n.) ஒலிக்குறிப்பு; onom. expr. of sound.

*[கலு + குலுப்பூ.]*

**கலுங்கு** *kalungu,* பெ.(n.) ***கலிங்கு*** பார்க்க; see *kalingu.*

*[கலிங்கு → கலுங்கு.]*

**கலுடம்** *kaludam,* பெ.(n.) 1. கலங்கனீர் (வின்.); muddy, turbid water. 2. கரிசு, தீவினை, பாழ்வினை (பிங்.); sin.

*[கலுழ்→ கலுழம்→கலுடம் (வ.மொ.வ.110.).]*

**கலும்பு** *kalumbu,* பெ.(n.) களிம்பு (இ.வ.); ointment.

பட. கிலும்பு

*[களிம்பு → கலும்பு. (கொ.வ.).]*

**கலுமி** *kalumi,* பெ.(n.) கூழ்; pudding (சா.அக.).

*[கலுழ் → கலுழி → கலுமி.]*

**கலுமிச்சங்காய்** *kalumiccankāy,*பெ.(n.) எலுமிச் சங்காயைப் போல் குளிர்ச்சியை உண்டாக்கும் ஒரு வகைக்காய்; a kind of fruit causing chilness like the lime fruit (சா.அக.).

*[கலுமித்தல் + காய்.]*

**கலுமொலெனல்** *kalumolenal,* பெ.(n.) ஓர் ஒலிக் குறிப்பு (வின்.), onom. expr. of chattering, clacking.

*[கலு + மொலு + எனல்.]*

**கலுவடம்** *kalu-vadam,* பெ.(n.) பூவரும்பு (பிங்.); flower-bud.

*[கலி → கலு + அடம். 'அடம்' சொல்லாக்க ஈறு.]*

**கலுவம்** *kaluvam,* பெ.(n.) மருந்து அரைக்குங் குழியம்மி; an apothecary's mortar in which drugs are rubbed with a pestle. *"கலுவத்தில் வெள்வேற்றோற் குடிநீராலரைத்து" (தைலவ. தைல.33.).*

**தெ.** கலவமு; **Pkt.** khala.

**த.** கலுவம் > **Skt.** khalva, khalla. (வ.மொ.வ.110).

*[கல் → கலுவம் = மருந்தரைக்கும் சிற்றுரல். கல்லுதல் = தோண்டுதல், குழித்தல்.]*

**கலுழ்[1]–தல்** *kalul,* 2 செ.கு.வி. (v.i.) (பிங்.) கலங்குதல்; to become turbid, as water. *"உண்கண் கலுழ்ந்து வாரரிப்பனி" (புறநா.144.)* 2. தடுமாறுதல்; to be troubled, disturbed in mind. *"தன்னெஞ்சு கலுழ்ந்தோனை" (தொல்.பொருள்.39.)* 3. அழுதல்; to weep, wail, shed tears. *"கண்டாங் கலுழ்வ தெவன் கொலோ" (குறள்.1171.).* 4. ஒழுகுதல்; to shine forth, as beauty. *"அங்கலுழ்மாமை" (அகநா.41.).* 5. உருகுதல்; to be touched, as the heart. *"கலுழத் தன்கையிற் றீண்டி" சீவக.1926).* 6. கலத்தல்; to mix (த.ம.50.).

**ம.** கலம்புக

*[நீரும் மண்ணுங் கலத்தல், கலங்கல், கல் → கலகு → கலங்கு → கலங்கல். கல → கலுழ். கலுழ்தல் = கலங்கல், கலுழ்.]*

**த.**கலுழம் > **Skt.** kaludi. (வே.க.142)

**கலுழ்[2]–தல்** *kalul-,* 2 செ.குன்றாவி.(v.i.) பொருந் துதல்; to join with. *"கண்முத்தமாலை கலுழ்ந் தனவே" (திருக்கோ.397.).*

*[குல்→கல் → கலுழ் (வே.க.133.).]*

**கலுழ்[3]** *kalul,* பெ.(n.) 1. அழுகை (பிங்.);weeping. 2.நீர்க்கலக்கம்; muddiness. *"கடும்புனல் கால்பட்டுக் கலுழ்தேறி" (கலித்.31.).*

*[குல்→ கல் → கலுழ்.]*

**கலுழ்ச்சி** *kalulcci,* பெ.(n.) 1.துன்பம், அவலம்; sorrow. *"உவகைக் கலுழ்ச்சி யோவிலரே" (ஞானா. 31,14.).* 2. அழுகை (பிங்.); weeping.

*[குல் → கல் → கலுழ் → கலுழ்ச்சி.]*

**கலுழ்வு** *kalulvu,* பெ.(n.) **கலுழ்ச்சி** பார்க்க; see *kalulcci. "கோயிலெல்லாம்... கலுழ்வுற்றதன்றே" சீவக.3137.).*

*[கலுழ் → கலுழ்வு.]*

**கலுழக்கல்** *kalulakkal,* பெ.(n.) **கருடக்கல்** பார்க்க; see *karudakkal.*

*[கலுழன் + கல் – கலுழக்கல்.]*

**கலுழம்** *kalulam,* பெ.(n.) கலங்கல் நீர்; muddy turbid water.

**த.** கலுழம் >**Skt.** kaluṣa.

*[கலுழ்தல் = கலங்குதல். கலுழ் = நீர்க்கலக்கம். 'கலுழ் தேறி' (கலித்,31.) கலுழ் → கலுழி = கலங்கல் நீர் (தி.வா.) கலுழ் → கலுழம் = வடவர் காட்டும் கல் (துண்டு) என்னும் மூலம் பொருந்தாது. (வ.மொ.வ.110).]*

**கலுழன்[1]** *kalulan,* பெ.(n.) 1.கருடன்; kite. 2.வெண்மையும் செம்மையும் கலந்த பருந்தினம்; a mythical bird, vehicle of Viṣṇu, *"கலுழன் மேல் வந்து தோன்றினான்" (கம்பரா.திருவவ.13.).*

*[கல் → கலுழ், கலுழ்தல் = கலத்தல். கலுழ் → கலுழன் = வெண்மையும் செம்மையும் கலந்த பருந்தினம்.]*

**த.** கலுழன் > **Skt.** garuḍa.

வடமொழியார் க்ரு [g] என்பதை மூலமாகக் காட்டி, எல்லாவற்றையும் விழுங்குவது என்று பொருட் காரணங் கூறுவர் [வ.மொ.வ.110.]. இது பொருந்தாது.

**கலுழி[1]** *kaluli,* பெ.(n.) 1. கலங்கனீர் (திவா.); disturbed water; puddle. 2. காட்டாறு (திவா.); jungle river. 3. நீர்ப்பெருக்கு; flood. *"நுரையுடைக் கலுழி" (குறிஞ்சிப்.178).* 4. கண்ணீர்; tears. *"மடவாள் கலுழிதனை மாற்றி" (நல்.பாரத. சர்ப்பயா.11.)* 5. கலக்கம்; confusion, perturbation. *"அஞ்சனக் கலுழி அஞ்சே றாடிய" (சீவக. 2318).).*

*[கல் → கலுழ், கலுழி (கலங்கல் நீர்) கலுழ்தல் = கண்கலங்கி, மனங்கலங்கி அழுதல்.]*

**Skt.** kalus

பல பொருள்கள் ஒன்றாகக் கலக்கும்போது கலக்கம் உண்டாகின்றது. பொருட் கலக்கத்தால் சில விடத்து மனக் கலக்கமும் விளைகின்றது.

நீரும் மண்ணுங் கலப்பது கலங்கல். அது பொருட் கலக்கம். பலர் கூடியிருக்கும்போது குறிப்பிட்ட ஒருவர் யார் என்று தெரியாது திண்டாடுவதும், பல வழிகள் கூடுமிடத்தில் செல்லவேண்டிய வழி எதுவென்று தெரியாது

மயங்குவதும், ஒன்றைத் துணியாது ஊசலாடுவதும், மனக் கலக்கமாகும்.

*[குல → கல → கலங்கு → கலங்கல் → கலங்கு → கலக்கு → கலக்கம் → கல் → கலுழ் → கலுழி = கலக்கம், கலங்கல் நீர். கலுழ்தல் = = கலங்குதல், கண்கலங்கி அல்லது மனங்கலங்கி அழுதல்.]*

**கலுழி**[2] *kaluḷi,* பெ.(n.) காட்டெருமை (சங்.அக.); wild buffalo.

*[கலுழி → கலுளி (கொ.வ.).]*

கலங்கல் நீரில் மகிழ்ந்து திளைக்கும் இயல்பு கருதி எருமைக்குக் கலுழி என்னும் பெயர் பொருந்துவதாயிற்று.

**கலேர்** *kalēr,* பெ.(n.) ***கலேல்*** பார்க்க; see *kalēl.*

*[கலேல் → கலேர்.]*

**கலேல்** *kalēl,* பெ.(n.) ஓர் ஒலிக்குறிப்பு (வின்.); an imitative sound.

*[கல் + ஏல் – கலேல் = ஒலிக்குறிப்பு.]*

**கலை**[1]**–தல்** *kalai-,* 4.செ.கு.வி.(v.i.) 1. கூட்டம் முதலியன பிரிந்து போதல், குலைதல்; to disperse, as an assembly, a defeated army; to be driven to different parts, as a herd pursued by dogs; to be scattered, as clouds. *"உடலுமுயிரு நினைவுந் தம்மிற்கலையா" (அஷ்டப்–அழகரந்.12.).* 2. அழிதல் to be ruined, destroyed. *"காத்தும் படைத்துங் கலைத்து நிற்போர்" (அருட்பா.* விண்ணப்பக்கலி, 50.). 3. நிலைகுலைதல்; to be absent minded, to wonder in thought. ஊழ்கம் (தியானம்) கலைந்துவிட்டது. 4. பலகை முதலியவற்றில் எழுதப்பட்டவை அழிதல்; to be blurred beyond recognition, as the writing on slate. பலகையில் எழுதியது கை பட்டு கலைந்து போயிற்று (இ.வ.).

**ம.** கலயுக; **தெ.** கலயு.

*[குலை → கலை.]*

**கலை**[2]**–தல்** *kalai-,* 4. செ.கு.வி. (v.i.) 1. இசையில் சுரம் குலைதல். (வின்.); to be out of tune, as an instrument. 2.பண் (இராகம்) மயங்குதல்; to glide from one tune into another.

*[குலை → கலைதல்.]*

**கலை**[3]**–தல்** *kalai-,* 4.செ.கு.வி.(v.i.) மிரளுதல் (திருநெல்.); to be startled, to shy. குடையைக் கண்டால் மாடு கலையும் (நெல்லை.).

*[கல் → கலைதல். 'கல்' ஒலிக்குறிப்பு.]*

**கலை**[4]**–த்தல்** *kalai-,* 4.செ.குன்றாவி.(v.i.) 1.குலைத்தல்; சிதைத்தல்; to disperse, derange, break up, disorganize, scatter, rout. *"பற்றலரைக் கலை... வேந்தர்" (அஷ்டப். திருவரங்கத்.25.).* 2. பிரித்து நீக்குதல்; to separate from a company, detach, banish, exile, exclude. *"குருவிக் கூட்டைக் கோலால் கலைத்தது போல"* 3. எண்ணத்தைக் கணித்தல்; to frustrate or thwart an object. *"இராட்சத குலத்தைத் தொலைக்கின்றான் இராவணனைக் கலைக்கின்றானே" (இராமநா. உயுத்.31.).* 4. பலகை முதலியவற்றில் எழுதப்பட்ட வற்றை அழித்தல்; to erase, as writing on slate. 5. ஓட்டுதல்; to chase. *அவன் என்னை வெகுதூரம் கலைத்தான் (யாழ்ப்.).*

**ம.** கலய்க்குக

*[குலை → கலை (வே.க.190).]*

**கலை**[5]**–த்தல்** *kalai-,* 4.செ.குன்றாவி.(v.t.) இசையின் ஓசை குலைத்தல் (வின்.); to relax, put out of tune, as stringed instruments.

*[குலை → கலை–.]*

**கலை**[6] *kalai,* பெ.(n.) 1.ஆண்முசு; male black monkey. (தொல்.பொருள்.601, உரை.). 2. சுறாமீன் (பிங்.); shark. 3. மகரவோரை (திவா.); capricorn of the zodiac.

*[கல் → கலை. கலை = வலிமை வாய்ந்தது, உறுதியானது.]*

**கலை**[7] *kalai,* பெ.(n.) 1. சீலை, புடைவை; cloth, garment. *"அருங்கலையயலுற" (பாரத. குருகல.57.).* 2. குதிரைக்கலனை (பு.செ.7, 7, உரை.); saddle of a horse.

*[கல் → கலை. கல் = வன்மை.]*

**கலை**[8] *kalai,* பெ.(n.) ஆண்மான்; stag, buck. *"கலையின் பிணை கன்றிடுமென்று கசிந்து" சீவக.1188).*

**மறுவ.** இரலை, மானேறு, கருமான், புல்வாய்.

*[கல் → கலை. கலை = வலிமை வாய்ந்த ஆண்மான், வலிமை வாய்ந்தது, உறுதியானது.]*

**கலை**[9] *kalai,* பெ.(n.) 1.அழகு; beauty. 2.பொலிவு; brightness or bloom of countenance. 3. கவர்ச்சி; attractiveness. 4.இயலிசை நாடகம் போன்ற கவின் கலைகள்; fine arts.

**க., து.** கலெ

*[குல் = தோற்றம், அரும்பு, அழகு. குல் → கல் → கலை.]*

**கலை**[10] *kalai,* பெ.(n.) 1. சிறப்பு நிலை; special portion. *"தத்துவக்கலையினில்" (ஞானா.1,26.).* 2. திங்களமைப்பில் பதினாறு நிலைகளுள் ஒன்று; moon's phase corresponding to a tidi. *"வெண்மதியினொற்றைக் கலைத்தலையாய்" (திருவாச. 6,40.).* 3.ஒளி; brightness, splendour. *"நிறைகலை வீச" (அரிசமய. பத்திசார.106.).* 4.முப்பது காட்டை கொண்ட நுட்பமான காலம் (கூர்மபு. பிரமாவி.3.); minute portion of time, 30 kattai, about 8 seconds. 5. ஒரு பாகையின் அறுபதிலொன்று (வின்.); Indian hour = 1/60 of a pagai = 1/60 of a zodiacal sign. 6. மரக்கவடு (பிங்.); branch of a tree.

**ம.** கல; **Skt., H.** kalā.

*[குல் → கல் → கலை. (பிரிவு)]*

**கலை**[11] *kalai,* பெ.(n.) மறு, தழும்பு, வடு; a scar, mark, mole (சேரநா.).

**ம.** கல; **க.** கலெ, கலி; **து., குட.** கலெ

*[கலம் → கலை.]*

**கலை**[12] *kalai,* பெ.(n.) 1. இசையின் கால நிலையிலொன்று; (mus.) a time measure. 2. ***அறுபத்து நாலுகலை*** பார்க்க; see arupattu-nalu-kalai. *"எண்ணெண் கலையோ ரிருபெரு வீதியும்" (சிலப்.14,127.).* 3. கல்வி (திவா.); learning, erudition. 4. நீதிநூல்; treatise, book. *"கலை நவின்ற பொருள்களெல்லாம்" (திருவாச.12, 13.).* 5. மொழி; language. *"தென்கலையே முதலுள்ள பல்கலை" (கந்தபு.நகரப்.49.).* 6. வண்ணப்பாட்டின் ஒரு பாகம்; part of a vaṇṇam. 7.கலைத்தன்மை ஏழனுள் ஒன்று; (Saiva) specific power of any of the superior deities as manifested in an avadāram or in a theophany for a specific purpose, manifestation of a deity; forms of the female energy of a deity as they appear, one of seven kinds of viddiyatattuvam. 8. இடைகலை பிங்கலைகள் (வின்.); breath passing from the nostril.

**Skt., Pkt.,Mar.,Ori.** kalā.

*[கல் → கலை (வ.மொ.வ.110) வடமொழியில் மூலம் இல்லை.]*

kalā, any practical art, mechanical or fine; assumed derivation ***kal***, to sound, to count. Tamil makes use of the same word (kalei for kala), but includes in the signification every science, as well as every art. We cannot, I think, doubt the derivation of ***kalei*** or ***kalā*** from the primitive Dravidian root ***kal***, to learn (another derivative of which is ***kalvi***, learning) the other meanings of the Sanskrit word ***kalā*** are so entirely unconnected with this, that it is evident that two different words spelled in the same manner (one of them Dravidian) have erroneously been supposed to be one and the same (C.G.D. F. L.P.569).

"கலை" தமிழிலிருந்து வடமொழி பெற்ற சொல் என்பது பாவாணர் கருத்து. நுண்கலை (fine arts), விரிகலை (liberal arts), ஒழுக்கக் கலை (arts of conduct) என்பன கலையின் பெரும் பிரிவுகளாகும்.

**கலை**[12] *kalai,* பெ.(n.) 1.உடல்; body. *"கலை யிலாளன்" (காமவேள்) (சிலப்.10,28.).* 2. புணர்ச்சிக் குரிய நிலைகள் (சீவக.1625இ உரை.); postures in sexual enjoyment.

*[குல் → கல் → கலை (கூடுதல், கூடாகிய உடல் கூடுதலாகிய புணர்ச்சி.]*

**கலை**[13] *kalai,* பெ.(n.) மேகலை, காஞ்சியென்னும் இடையணிகள் (திவா.); woman's girdle consisting of seven strands of jewels. *"வாமாண் கலைசெல்ல நின்றாா" (திருக்கோ.263.).*

*[கல் → கலை (கல் பதித்த இடையணிகலன்.]*

**கலை**[14] *kalai,* பெ.(n.) 1. மரவயிரம் (பிங்.); core, solid part of timber. 2. காஞ்சிமரம் (யாழ். அக.); river portia tree.

*[கல் → கலை. கல் = வன்மை ( வ.மொ.வ. 110).]*

**கலை**[15] *kalai*[11], பெ.(n.) கருப்பூரவகை (சிலப்.14,109, உரை.); a kind of camphor imported from Kalah in the Malay peninsula.

*[கலாய் → கலை. மலயத்தீவகப் பகுதியில் உள்ள கலாய் என்னுமிடத்திலிருந்து வந்த கருப்பூரமாதலின் இடவாகு பெயராயிற்று.]*

**கலை**[16] *kalai,* பெ.(n.) உமையவள் (கூர்மபு. திருக்கல்யாண.23.); Parvati consort of Siva.

*[கல் → கலை. கல் = மலை. கலை = மலைமகள்.]*

**கலைக்கல்லூரி** *kalaika-kallūri,* பெ.(n.) கலைப் பாடங்கள் பயிற்றுவிக்கப்படும் கல்லூரி; Arts college.

*[கலை + கல்லூரி.]*

**கலைக்களஞ்சியம்** *kalai-k-kaḷañjiyam,* பெ.(n.) ஒரு துறை பற்றியோ பல துறைகள் பற்றியோ செய்திகளைப் பல கட்டுரைத் தலைப்புகளில் உள்ளடக்கிய நூற்றொகுதி, அகர வரிசையில்; encyclopaedia.

*[கலை + களஞ்சியம்.]*

**கலைக்கூடம்** *kalai-k-kūdam,* பெ.(n.) 1.கலை நிகழ்ச்சிகள் நடத்துதற்கேற்ற பெரிய கூடம்; auditorium. 2. கலைப்பொருள்கள் காட்சிக்காக வைக்கப்பட்டிருக்குமிடம்; art gallery.

*[கலை + கூடம்.]*

**கலைக்கோட்டுத்தண்டு** *kalai-k-kōṭṭu-t-taṇḍu,* பெ.(n.) ஒரு பழைய நூல் (இறை.1, உரை.); an ancient poem.

*[கலை + கோட்டு + தண்டு. கலைக்கோடு = மான் கொம்பு. கலைக்கோட்டு முனிவரால் இயற்றப்பட்ட நூலாகலாம்.]*

**கலைக்கோட்டுமுனி** *kalai-k-kōṭṭu-muṉi,* பெ.(n.) உருசிய சிருங்க முனிவர்; name of Rsiyasringa, a famous Risi in the *Ramayana*. *"கலைக்கோட்டு முனிவரின் வான்பிலிற்றும்" (கம்பரா.திருவவ.37,).*

*[கலை + கோடு + முனி. கலைக்கோடு = மான்கொம்பு.]*

**கலைகணாளர்** *kalai-k-kaṇalar,* பெ.(n.) அமைச்சர்; ministers of a king, who have the eyes of knowledge. *"கலைக்கணாளரு மிங்கில்லை" (சீவக.1924.).*

*[கலை + கண் + ஆளர். கலைக்கண் = அறிவுக்கண்.]*

**கலைகுறை[1]–தல்** *kalai-kuṟai-,* 4.செ.கு.வி. (v.i.) தெய்வவன்மை குறைதல்; to diminish, as divinity in an idol, by the neglect of worship, etc.

*[கலை + குறை.]*

**கலைகுறை[2]–தல்** *kala-kuṟai,* 4 செ.கு.வி. (v.i.) சத்துக் குறைதல்; decrease in vitality or strength (சா.அக.).

*[கல் → கலை + குறை. கல் = வன்மை, சத்து.]*

**கலைக்கொம்பு** *kalai-k-kombu,* பெ.(n.) கலைமான் கொம்பு (பதார்த்த. 1138.); stag's horn.

*[கல் → கலை + குறை. கல் = வன்மை, சத்து.]*

**கலைச்சாலை** *kalai-c-cālai,* பெ.(n.) கல்வி பயிலுமிடமான கல்லூரி அல்லது பள்ளி; college or school. *"மந்தனெனப் பயின்ற கலைச்சாலை யினின்றகற்றி" (அருட்பா, VI, குடும்ப. குருதரி.36.).*

*[கலை + சாலை.]*

**கலைச்சுவை** *kalai-c-cuvai,* பெ.(n.) கலை நுகர்ச்சியால் விளையும் இன்பம்; pleasure obtained out of fine arts.

*[கலை + சுவை.]*

**கலைச்சுவைஞர்** *kalai-c-uvaiñar,* பெ.(n.) கலை யார்வலர்; one who is interested in fine arts.

*[கலை + சுவைஞர்.]*

**கலைச்செம்பு** *kalai-c-cembu,* பெ.(n.) ஓர் உயர்ந்த தூய்மையான செம்பு; a superior kind of refined copper (சா.அக.).

*[கலை + செம்பு.]*

**கலைச்சொல்** *kalai-c-col,* பெ.(n.) 1. துறைசார்ந்த கோட்பாட்டுச் சொல்; technical term. 2. துறை சார்ந்த சிறப்புச் சொல்; word used in special field.

*[கலை + சொல்.]*

**கலைஞன்** *kalaiñaṉ,* பெ.(n.) 1.கல்விமான் (திவா.); learned man, savant. 2.கலைவல்லான்; an artiste.

**H**; kākar; **Guj**. karigar

*[கலை + அன் – கலையன் → கலைஞன்.]*

பண்டைத் தமிழில் ஞ், ந், என்பவைகளும் உடம்படு மெய்களாக இருந்திருக்கின்றன. வினைஞர், அரிநர் முதலிய சங்க காலத்துச் சொற்கள் இவ்வுடம்படுமெய்களைப் பெற்று வருதலைக் காண்க.

**கலைஞானம்** *kalaiñāṉam,* பெ.(n.) 1. ***கலையறிவு*** பார்க்க; see *kalaiyaṟivu "கற்றறியேன் கலைஞானம்" (திருவாச.38, 5.).* 2. ***அறுபத்து நாலு கலை*** பார்க்க; see *aṟupāttun ālu-kalai.*

Skt. gñānam > த. ஞானம்.

[கலை + ஞானம் – கலைஞானம்.]

**கலைஞானி** *kalai-ñāṉi,* பெ.(n.) **கலையறிவாளன்** பார்க்க; see *kalaiyaṟivāḷaṉ.* *"நண்ணிலேன் கலைஞானிக டம்மொடும்" திருவாச.26.6.).*

[கலை + ஞானி.]

**கலைத்திறன்** *kalai-t-tiṟaṉ,* பெ.(n.) கலை வல்லமை; effeciency in arts; artistry.

[கலை + திறன்.]

**கலைத்துறை** *kalaituṟai,* பெ.(n.) ஆடல், பாடல் போன்றவற்றைக் குறிக்கும் துறை; department of fine arts.

[கலை + துறை.]

**கலைத்தொழில்** *kalai-t-toḻil,* பெ.(n.) 1. யாழ்மீட்டுதலுக்குரிய செய்கைகள் (சீவக.657, உரை.); the eight kinds of action involved in playing the yāḻ, viz, paṇṇal, parivattanai, ārāydal, taivaral, celavu, vilāiyaṭṭu, kaiyuḷ, kurum-bōkku. 2. ஆடல் பாடல் முதலிய கலைகளைக் கொண்டிருக்கும் தொழில்; profession of arts.

[ கலை + தொழில்.]

எண்வகை யாழ்மீட்டும் செயல்கள் : பண்ணல், பரிவட்டணை, ஆராய்தல், தைவால், செலவு, விளையாட்டு, கையுள், குறும்போக்கு.

**கலைத்தோல்** *kalai-t-tōl,* பெ.(n.) ஆண்மான் தோல்; the skin of a male deer (சா. அக.).

[கலை + தோல். கலை = ஆண்மான்.]

**கலைநாட்டம்** *kalai-nāṭṭam,* பெ.(n.) கலைத் துறையில் காட்டும் ஈடுபாடு; involvement in arts.

[கலை + நாட்டம்.]

**கலைநாதன்** *kalai-nādaṉ,* பெ.(n.) கலைவல்லார்; expert in arts. 2.புத்தன் (சூடா.); Buddha, the enlightened.

[கலை + நாதன். நாயன் → நாதன்.]

**கலைநாறி** *kalaināṟi,* பெ.(n.) மான்மணத்தி; musk (சா.அக.).

[கலை + நாறி. கலை = மான். நாறு → நாறி.]

**கலைநிகழ்ச்சி** *kalainigaḻcci,* பெ.(n.) கலைஞர் களால் நிகழ்த்தப்படும் ஆடல் பாடல் முதலிய நிகழ்ச்சிகள்; fine arts programme.

[கலை + நிகழ்ச்சி.]

**கலைநியமம்** *kalai-niyamam,* பெ.(n.) மதுரையிலிருந்த சிந்தாதேவி கோயில்; the temple of Sarasvathi which existed in Madura at the time when Manimegalai was written. *"சிந்தா விளக்கின் செழுங்கலை நியமத்து" (மணிமே.13,106.).*

[கலை + நியமம்.]

**கலைப்பற்றில்லார்** *kalai-p-paṟṟillar,* பெ.(n.) கலையறி வில்லாதவர்; one who has no knowledge or taste in fine arts.

[கலை + பற்று = இல்லார்.]

**கலைப்பற்று** *kalai-p-paṟṟu,* பெ.(n.) **கலையார்வம்** பார்க்க; *kalai-y-ārvam.*

[கலை + பற்று.]

**கலைப்பாகி** *kalai-p-pāgi,* பெ.(n.) 1. கொற்றவை; Durga who rides on a stag. *"வெய்ய கலைப்பாகி கொண்டவளாய் நின்றாள்" (திவ்.பெரியாழ். 1, 3, 9.).* 2. கலைமகள்; Kalaimagaḷ the goddess of learning.

[கலை + பாகி. கலை = ஆண்மான், கல்வி, பாகன் (ஆ.பா.) பாகி (பெ.பா.).]

**கலைமகள்** *kalai-magaḷ,* பெ.(n.) கல்வித்தெய்வம், கலைவாணி (பிங்.) Sarasvathi, goddess of learning.

[கலை + மகள்.]

**கலைமகள்கண்ணி** *kalaimagaḷkaṇṇi,* பெ.(n.) வாடாமல்லிகை; everfresh jasmine (சா.அக.).

[கலை + மகள் + கண்ணி. கண்ணி = மாலை.]

**கலைமகள்நிறம்** *kalaimagaḷniṟam,* பெ.(n.) வெள்ளைச் செய்ந்நஞ்சு; white arsenic (சா.அக.).

[கலைமகள் + நிறம்.]

**கலைமகள்பண்டாரம்** *kalaimagal-pandāram,* பெ.(n.) நூல் நிலையம்; library (உ.வ.).

*[கலை + மகள் + பண்டாரம்.]*

பண்டாரம் என்பது பல பொருள்கள் நிறைந்த சரக்கறைப் பெயர். அது முறையே பல அறிவுப் பொருள்களை உள்ளத்தில் தொகுத்து வைத்த பேரறிஞனையும், அப்பேரறிவு காரணமாக உலகப் பற்றைத் துறந்த துறவியையும், அத்துறவி போலக் கோலம் பூண்டவனையும், அக்கோலம் பூண்ட இரப்போரையும் குறித்தது.

களஞ்சியத்தைப் பண்டாரம் என்பதும், நூல் நிலையத்தைக் கலைமகள் பண்டாரம் என்பதும் உலக வழக்கு [சொல்.ஆ.கட்.88].

**கலைமடந்தை** *kalai-madandai,* பெ.(n.) ***கலைமகள்*** பார்க்க; see *kali-magal.* *"உற்ற கலைமடந்தை ஓதுகிறாள்"*

*[கலை = கல்வி, கலை + மடந்தை.]*

**கலைமருது** *kalai-marudu,* பெ.(n.) கருப்பு மருதமரம்; black winged myrobalan (சா.அக.).

*[கலை + மருது.]*

**கலைமலைவு** *kalai-malaivu,* பெ.(n.) இயல், இசை, கணிதம் முதலிய கலை நூல்களிற் கூறியவற்றோடு மாறுபட வருவது (தண்டி, 118, தலைப்பு.); anything opposed to accepted tenets in arts and sciences.

*[கலை + மலைவு.]*

**கலைமாமணி** *kalaimāmani,* பெ.(n.) கலைகளில் துறைபோயவர்களுக்குத் தமிழக அரசு ஆண்டு தோறும் வழங்கும் விருது; Tamilnadu State award to eminent artistes.

*[கலை + மா + மணி.]*

**கலைமான்**[1] *kalaimān,* பெ.(n.) 1. ஆண்மான்; male of deer. *"பிணைமா இனிதுண்ண வேண்டி கலைமா தன்கள்ளத்தின் ஊச்சும்" (கலி.)* மான் வகை; spotted deer. *"கலைமான் வினாயது" (திருக்கோ.53, கொரு.).* 2. செம்பழுப்பு நிற உடலில் வெள்ளைப் புள்ளிகளை உடைய மான் வகை; spotted deer.

*[கலை = ஆண், அழகு. கலை + மான்.]*

**கலைமான்**[2] *kalaimān,* பெ.(n.) கலைவாணி; the Kalaivāni, the goddess of learning. *"கலைமான்றனை நன்முறை மாதிரியாக் காயத்திரியை முக நோக்கி" (சேதுபு.காயத்.32.).*

*[கலை + மான்.]*

**கலைமான்மூலி** *kalaimānmūli,* பெ.(n.) திருகுக் கள்ளி; Indian tree spurge (சா.அக.).

*[கலை + மான் + மூலி.]*

**கலையப்பட்டி** *kalaiyappatti,* பெ.(n.) புதுக்கோட்டை மாவட்டம், குளத்தூர் வட்டத்தில், பெருங்கற்கால ஈமச்சின்னங்கள் உள்ள ஊர்; a place in Kulathur taluk of Pudukkottai where remains of megalithic cuture excavated.

*[கலையம் + பட்டி.]*

**கலையம்** *kalaiyam,* பெ.(n.) ***கலயம்*** பார்க்க, see *kalayam.*

*[கலையம் → கலயம்.]*

**கலையரங்கம்** *kalai-yarangam,* பெ.(n.) கலை நிகழ்ச்சிகள் பார்க்கும் மேடை; a stage for cultural activities.

*[கலை + அரங்கம். அர் → அரங்கு → அரங்கம் = நாடக மேடை, நாடக சாலை, விளையாடிடம், படைக்கலம் பயிலுமிடம், போர்க்களம், ஆற்றிடைக்குறை, திருவரங்கம். (பண்.தமி.நா .பண்.129)]*

**கலையரங்கு** *kalaiyarangu,* பெ.(n.) ***கலையரங்கம்*** பார்க்க; see *kalaiyarangu.*

*[கலை + அரங்கு.]*

**கலையறிபுலவன்** *kalai-y-ari-pulavan,* பெ.(n.) முருகக் கடவுள் (பிங்.); Muruga, well versed in all branches of knowledge.

*[கலை + அறி + புலவன். புலவன் = புலமையாளன். முருகன் தமிழ்க் கடவுளாதலின் கலையறி புலவன் எனப்பட்டான்.]*

**கலையறிவாளன்** *kalaiyarivālan,* பெ.(n.) பலதுறை வல்லுநன்; one well versed in different arts.

*[கலை + அறிவாளன்.]*

**கலையறிவாளி** *kalaiyarivāḷi,* பெ.(n.) ***கலையறி வாளன்*** பார்க்க; see *kalaiyarivāḷaṉ.*

*[கலை + அறிவாளன்.]*

**கலையறிவு** *kalaiyarivu,* பெ.(n.) பல துறையறிவு; knowledge of different arts.

*[கலை + அறிவு.]*

**கலையார்வம்** *kalai-y-ārvam,* பெ.(n.) கலைகளில் ஈடுபாடு காட்டுதல்; evincing keen interest in fine arts.

*[கலை + ஆர்வம்.]*

**கலையானத்தி** *kalai-yāṉatti,* பெ.(n.) ***கலையூர்தி*** (சூடா.) பார்க்க; see *kalai-y-ūrdi.*

*[கலை + யானத்தி. யானம் = ஊர்தி, யானத்தி = ஊர்பவள், இயனம் → யானம் → யானத்தி.]*

**கலையியல்** *kalaiyiyal,* பெ.(n.) கலையியல் படிப்பு; studies in arts i.e. humanities subjects.

*[கலை + இயல்.]*

**கலையிளக்குங்காரி** *kalaiyiḷakkuṅkāri,* பெ.(n.) தசையைக் கரைக்கும் வேதிக்கல்; a mineral stone supposed to dissolve flesh (சா.அக.).

*[கலை = கட்டியானது. கலை + இளக்கும் + காரி.]*

**கலையினன்** *kaliyiṉaṉ,* பெ.(n.) திங்களவன் (சூடா.); moon, as having phases.

*[கலை + இன் + அன். 'இன்' ஐந்தன் உருபு ஆறன் பொருளில் வந்து உருபு மயக்கமாயிற்று.]*

**கலையுருவினோன்** *kalai-y-uruviṉōṉ,* பெ.(n.) கலைகளை உருவாகவுடையவன் எனப்படும் சிவன்; Siva, who is the embodiment of all knowledge. *"கட்டி நிற்போனுங் கலையுருவினோனும்" (மணிமே. 27,91).*

*[கலை + உருவு + இன் + (ஆன்) ஒன். 'இன்' சாரியை 'ஆன்' (ஆ.பா. ஈறு.]*

**கலையூர்தி** *kalai-y-ūrdi,* பெ.(n.) கொற்றவை (திவா.); Durga, who rides on a stag.

*[கலை = ஆண்மான், கலை + ஊர்தி.]*

**கலையேற்று-தல்** *kalai-y-ēṟṟu-,* 5 செ.கு.வி. (v.i.) உருவேற்றுதல்; to chisel, paint, as of sculpture, painting etc.

*[கலை + ஏற்று.]*

**கலையேறு-தல்** *kalai-y-ēṟu-,* 5 செ.கு.வி.(v.i.) 1.தெய்வ வலிமை மிகுதல்; to increase as divinity in an idol, with the increase of worship by way of mantras. 2. செருக்கடைதல் (வின்.); to grow arrogant by prosperity, promotion.

*[கலை + ஏறு.]*

**கலையொடுமலைவு** *kalai-y-oḍu-malaivu,* பெ.(n.) செய்யுட் குற்றங்களுள் ஒன்று (யாப்.வி.525.); a defect in poetry.

*[கலை + ஒடு + மலைவு.]*

**கலையோன்** *kalaiyōṉ,* பெ.(n.) நிலவன் (பிங்.); moon, as having phases.

மறுவ. நிலவு, அம்புலி, திங்கள் தண்கதிர், இரவோன், அலவன், அல்லோன், மதி, களங்கன், முயற்கூடு.

*[கலை + (ஆன்) ஒன். ஆன். ஆ.பா.ஈறு.]*

**கலையோன் என்பதின் கலையென்பது நிலவொளியின் ஒரு பகுதியைக் குறிக்கும்; நாளுக்கொரு கலையாக வளர்தலும் தேய்தலுமாகிய தோற்றந் திங்களில் காணப்படுதலால் அதற்குக் கலையோன் எனும் பெயர் போந்தது.**

**கலை வல்லமை** *kalaivallamai,* பெ.(n.) பல்கலைத் தேர்ச்சியுடமை; well versed in arts; artistry.

*[கலை + வல்லமை.]*

**கலைவல்லார்** *kalai-vallār,* பெ.(n.) 1. புலவர் (திவா.); learned men, the literati. 2. பரத்தையர்; dancing-girls, who are skilled in the arts of music, dancing etc. *"கலைவல்லார் நெஞ்சிற் காமமே போன்றும்" (சீவக.2107.).*

*[கலை + வல்லார்.]*

**கலைவாணன்** *kalaivāṇaṉ,* பெ.(n.) ***கலைஞன்*** பார்க்க; see *kaliñyaṉ.*

*[கலை + வாணன். வாழ்நன் → வாணன்.]*

**கலைவிழா** *kalai-viḻā,* பெ.(n.) நாட்டின் பண்பாட்டை விளக்கும் வகை அமைந்த கலை நிகழ்ச்சிகளைக் கொண்ட விழா; cultural festival.

*[கலை + விழா.]*

**கலைவு** *kalaivu,* பெ.(n.) 1. குலைவு; derange. 2.குழப்பம்; confusion.3 . பிரிவு; separate.

*[குல் → கல் → கலை → கலைவு.]*

**கவ்வக்குன்று** *kavva-k-kuṉṟu,* பெ.(n.) மந்தர மலை (வின்.); mt. mandara with which the gods churned the sea of milk.

*[கவ்வ(ம்) + குன்று. கவ்வம் = மத்து.]*

**கவ்வம்**[1] *kavvam,* பெ.(n.) மத்து; churning-stick.

**தெ.** கவ்வமு

*[கவ்வு → கவ்வம்.]*

**கவ்வம்**[2] *kavvam,* பெ.(n.) மாட்டுச்சுழிவகை. (பெரிய.மாட்.); a mark of cattle.

*[கவ்வு → கவ்வம்.]*

**கவ்வாணம்** *kavvāṇam,* பெ.(n.) குறிஞ்சி யாழ்த்திறங்களுள் ஒன்று (பிங்.); an ancient secondary melody-type of the Kuṟiñji class.

*[கவ்வு + ஆணம்.]*

**கவ்வு**[1]**-தல்** *kavvu-,*5 செ.கு.வி.(v.i.) வெளவுதல்; to seize, grasp with eagerness. *"கவ்வித் தோறின்னும் குணுங்கர் நாய்" (நாலடி.322.).*

*[அவ் → அவ்வு → வவ்வு → கவ்வு → வாயாற் பற்றுதல் (மு.தா.11).]*

ஒன்றைக் கவ்வுதலையொத்த வாய்ச்சைகை நிலை, அவ் என்னும் ஒலியைத் தோற்றுவித்தற் கேற்றதாதல் காண்க. மேல் வாய்ப்பல் கீழுதட்டோடு பொருத்துவதே கவ்வும் நிலையாம். இந்நிலை வகர மெய்யொலிப்பிற்கே ஏற்கும்.

"மேற்பல் லிதழுற மேவிடும் வவ்வே" [நன்.85]

"பல்லிதழியைய வகாரம் பிறக்கும்" [தொல். எழுத்.98] பிற்காலத்தில் கவ்வுதல் என்னும் சொல் வாயினாற் பற்றுதலுக்கும் வவ்வுதல் என்னும் சொல் கையினாற் பற்றுதலுக்கும் வரையறுக்கப் பெற்றன. ஆயினும் இன்னும் அவ்வுதல் உலக வழக்கில் வாயினாற் பற்றுதலை உணர்த்தும்.

**எ.டு.** கன்று புல்லை ஔவித் தின்கிறது.

*அவ்வு → ஔவு, கவ்வு → கௌவு, வவ்வு → வௌவு.* (தமி.வர.64).

**கவ்வு**[2] *kavvu,*பெ.(n.) 1. வாயாற் கவ்வுகை; bite, seizing by the mouth, as dog. *"இந்திர கோபங் கவ்வி நோக்கினவென்று" (இராமா.வரைக்.9)* நாய் ஒரு கவ்வுக் கவ்வியது. 2. தின்கை; eating. *"கருங்காக்கை கவ்வுமுனையின்" (பொருந.184).* 3. கவட்டை (வின்.); fork of a branch or horn.

*[அவ் → அவ்வு → கவ்வு.]*

**கவ்வை**[1] *kavvai,* பெ.(n.) 1.ஒலி, உறுமல்; sound, din, noise, roar *"எவ்வையர்சேரி யிரவு மிமை பொருந்தாக் கவ்வை" (பு.வெ.12.வெண்பாற்.10.).* 2. பழிச்சொல்; scandal, slander, calumny. *"கவ்வையற்ற நடை பயில" (தாயு.சிற்சுகோ.8.).* 3. துன்பம்; affliction, distress. *"கவ்வையொழிந் துயர்ந்தனன்" (கம்பரா. திருவவ.66.).* 4. கவலை; anxiety, care. *"கவ்வையாற் கலங்குமனம்" (திருக்காளத். பு.18,27,).* 5.பொறாமை; jealousy. 6. கள் *(பிங்.; toddy.).*

*[கவ் → கவ்வை (மு.தா.14.).]*

**கவ்வை**[2] *kavvai,* பெ.(n.) செயற்படுத்துகை, வணிகம்; concern, business, affair. *"இவன் சேர்ந்த கவ்வை யுரைத் தருள்க" (கம்பரா. திருவவ.63.).*

*[கவ் → கவ் → கவ்வை.]*

**கவ்வை**[3] *kavvai,* பெ.(n.) எள்ளிளங்காய்; green sesamum seed. *"சிறுதினை கொய்யக் கவ்வை கறுப்ப"* (மதுரைக்.271).

**மறுவ.** எள்காய்

*[கவ் → கவ்வை. உள்ளொடுங்கி ஒட்டியிருப்பது.]*

**கவ்வை**[4] *kavvai,* பெ.(n.) ***ஆயிலியம்*** (சூடா.) பார்க்க; see *āyiliyam*[2].

*[கல் → கவ் → கவ்வை.]*

**கவ்வை பார்த்தல்** *kavvai-pār-,* 4 செ.கு.வி.(v.i.) பணியாற்றுதல் (வின்.); to be employed, to attend to business.

*[கவ்வை + பார்.]*

**கவக்கட்டை** *kava-k-kaṭṭai,* பெ.(n.) **கவைக்கட்டை** பார்க்க; see *kavai-k-kaṭṭai.*

*[கவைக்கட்டை → கவக்கட்டை.]*

**கவக்குன்று** *kava-k-kuṉṟu,* பெ.(n.) கவ்வக்குன்று (வின்.); mount Mandara.

*[கவ்வம் → கவம் + குன்று. கவ்வம் = மத்து.]*

**கவக்கால்** *kavakkāl,* பெ.(n.) முன் தூக்கப் பயன்படும் கவட்டையான கம்பு.

**கவசங்கட்டு-தல்** *kavašaṅ-kaṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. தீயதேவதைகளால் தீங்கு நேராதபடி மந்திரத் தினாற் காப்புச் செய்தல் (வின்.); to bind or restrain malignant deities by repeating mantras while beginning daily worship in order to prevent their depriving the worshipper of benefit. 2. சீலை மண்ணால் சட்டியின் வாயைக் கட்டுதல் (கொ.வ.); to cover the mouth of a vessel with a cloth over-spread with loam or clay.

*[கவ்வு → கவ்வியம் → கவயம் → கவசம் + கட்டு.]*

**கவசப்பூடு** *kavacappūḍu,* பெ.(n.) அங்கப் பிச்சு, bile enclosed in a sac; bile in the duct (சா.அக.).

*[கவச +பூடு. கசவம் → கவசம்.]*

**கவசம்**[1] *kavašam,* பெ.(n.) 1. மெய்புகு கருவி; armour mail, coat of mail, *"புலிநிறக் கவசம் பூம்பொறி சிதைய"* *(புறநா.13,2.)* 2. பாதுகாக்கை; amulet, charm worn as a protection against evil, phylactery. *"நீற்றுக் கவசம்"* *(திருவாச.46, 1.).* 3. பாதுகாப்புக் கயிற்றி(இரட்சை)னையுண்டாக்கு வதற்காகச் சொல்லப்படும் மந்திரம்; a kind of mantra as a means of protection. *"உளத்தாற் கவச முரைத்து"* *(சைவச.பொது.285.).*

**க.** கவச: **H.** kavac; **Skt.** kavaca; **Pkt.** kavaya.

*[கவ்வு → கவ்வியம் → கவயம் → கவசம்.]*

**கவசம்**[2] *kavašam,* பெ.(n.) 1. மருந்தெரிக்கும் பாண்டங்களை மூட இடும் சீலை மண்; Lute, clay composition with which cloth to close vessels. 2. காயத்திற்கு இடுங் கட்டு (இராட்.); dressing of a wound, application of medicine.

*[கவ்வு → கவ்வியம் → கவயம் → கவசம்.]*

**கவட்டடி** *kavaṭṭaḍi,* பெ.(n.) 1. எட்டி அடிவைத்தல் (யாழ்ப்.); to stride, pace. 2. ஆண்குறி அல்லது பெண்குறி; private parts of the humans.

**ம.** கவட்டடி

*[கவடு + அடி – கவட்டடி.]*

கவடு = பிளவு, பிரிவு, இடைவெளி, இடைவெளி விட்டுக் காலெடுத்து வைப்பது கவட்டடி.

**கவட்டன்** *kavaṭṭaṉ,* பெ.(n.) ஏமாற்றுபவன்; diceitful person. *"உளமழிக்கும் கவட்டர்களிணக்கந் தவிர்த்து"* *(திருப்பு.238.).*

**Skt.** kapaṭa

*[கவடு → கவட்டன்.]*

**கவட்டி** *kavaṭṭi,* பெ.(n.) **கவட்டை** பார்க்க; see *kavaṭṭai.*

*[கவடு → கவட்டி (மு.தா.13.).]*

**கவட்டுக்கால்** *kavaṭṭu-k-kāl,* பெ.(n.) வளைந்த பாதம்; bandy legs.

**மறுவ.** கடப்புக்கால்

*[கவடு + கால் – கவட்டுக்கால்.]*

**கவட்டு**[1]**-தல்** *kavaṭṭu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. மெல்லுதல்; to chew. 2. சப்புக் கொட்டல்; touching the palate witht the tongue and withdrawing it by a sound to find the taste of anything (சா.அக.).

*[கவள் → கவட்டு.]*

**கவட்டு**[2]**-தல்** *kavaṭṭu-,* 5 செ.கு.வி.(v.t.) 1. வளைத்தல் (யாழ். அக.); to bend.

*[கவடு → கவட்டு.]*

**கவட்டுநாக்கு** *kavaṭṭunākku,* பெ.(n.) ஏய்ப்பு (வஞ்சகம்) பேசும் நா; deceitfulness of speech, double-tongue.

*[கவடு = இரட்டைத் தன்மை. கவட்டு + நாக்கு.]*

**கவட்டுநெஞ்சன்** *kavaṭṭuneñjaṉ,* பெ.(n.) ஏமாற்றும் இயல்பினன்; cunning, shy person man of guile.

**க.** கவடு நடெக

*[கவடு + நெஞ்சன் – கவட்டுநெஞ்சன்.]*

**கவட்டுப் படிக்கல்** *kavaṭṭu-p-paḍikkal*, பெ.(n.) கள்ள நிறைகல்; false weight.

*[கவட்டு + படிக்கல்.]*

**கவட்டுப் பேச்சு** *kaṭṭu-p-pēccu*, பெ.(n.) ஏமாற்றுப் பேச்சு; cunning speech (கருநா.).

**க.** கவடுநுடி, கவடுமாது.

*[கவடு + பேச்சு.]*

**கவட்டை**[1] *kavaṭṭai*, பெ.(n.) 1. மரக்கிளையின் கவர்; fork of a branch, branching root. 2. இரு தொடை களுக்கு இடையே உள்ள இடைவெளி; fork of the legs, crotch. கவட்டையில் கையைக் கொடுத்துத் தூங்கிக் கொண்டிருந்தான் (உ.வ.).

**ம.** கவட்ட; **க.** கவதெ, கவடு, கவெ, கவல்; **கோத.** கவ்ட்; **துட.** கவ; **து.** கபெ, கபர்; **தெ.** கவட.

*[கவடு → கவட்டை (மு–தா.14).]*

**கவட்டை**[2] *kavaṭṭai*, பெ.(n.) 1. கவை, பிரிவு; clevage. 2. சுண்டுவில்; the bow for shooting pellets.

*[கவை → கவடு → கவட்டை.]*

**கவடஆரா** *kavaḍa-ārā*, பெ.(n.) ஒருவகை மீன்; a kind of fish.

*[கவடம் + ஆரா. கவடம் = ஏய்ப்பு.]*

**கவடக்கலை** *kavaḍa-k-kalai*, பெ.(n.) மாயக்கலை, மாயவித்தை; jugglery.

*[கவடம் + கலை.]*

**கவடகம்** *kavaḍagam*, பெ.(n.) வெண்கடம்பு; white cadambu (சா.அக.).

*[கவடு + அகம் – கவடகம்.]*

**கவடநாடகம்** *kavaḍanāḍagam*, பெ.(n.) போலி நடிப்பு; deceitful dealing.

*[கவடம் + நாடகம்.]*

**கவடம்** *kavaḍam*, பெ.(n.) ஏமாற்றுதல்; ஏய்ப்பு; deceit, guile.

**த.**கவடம் > **Skt.** kapaṭa.

*[கவடு → கவடம்.]*

**கவடமஞ்சி** *kavaḍamañji*, பெ.(n.) சிறுதுவரை; a small variety of dhall.

*[கவடம் + மஞ்சி.]*

**கவடமருத்துவம்** *kavaḍamaruttuvam*, பெ.(n.) மருத்துவம் செய்பவன் எனப் பொய்யாக நடிப்பவன்; a pretender to medical skill.

*[கவடம் + மருத்துவம்.]*

**கவடன்** *kavaḍaṉ*, பெ.(n.) ஏமாற்றுபவன்; man with guile.

*[கவடு → கவடன்.]*

**கவடி**[1] *kavaḍi*, பெ.(n.) 1. வெள்வரகு (பு.வெ.6,26, உரை.); a coarse kind of white millet, unfit for food. 2. பலகறை, சோழி; cowry. *"கவடி வெண்பற்கள்" (திருவாலவா. 38,47.).* 3. ஒருவகை விளையாட்டு; game of leap - frog.

**மறுவ.** பலகறை, சோழி.

**தெ.** கவ்வ; **க., ம.** கவடி.

**H.** kauri, kaudi; **Mar.** kavadi; **Skt.** kaparda; **Hung.** keszpenz; **Finn.** kateinen; **Pol.** gotowka; **Eng.** cowrie; **G., Du., Yid.** geld; **O.Ir.** karpardah; **Ser.Croa.** gotovina; **Cz.** kotore; **It.** contente; **Norw., Swed.** kontanter; **Indon.** kontan; **Jap.** genkin.

*[கவை → கவடு → கவடி (பிளவுண்டது. பிரிவுக் கட்டங்களுள்ள பலகைகளை வைத்து விளையாடும் விளையாட்டு).]*

**கவடி**[2] *kavaḍi*, பெ.(n.) கரவு (வஞ்ச) மனத்தினன்; deceitful person. *"கவடி களாகத்திரியுங் கள்ளர்காள்" (தமிழ்நா.237.).*

*[கவடு→கவடி (ஒருபாற் படாமல் பலதிசை செல்லும் குற்றமுள்ள இயல்பினன்).]*

**கவடி**[3] *kavaḍi,* பெ.(n.) தகரம்; tin.

*[கவை → கவடு → கவடி = வளைக்க அல்லது சுருட்டத் தக்கது.]*

**கவடி**[4] *kavaḍi,* பெ.(n.) படிகாரம்; alum.

*[கவடம் → கவடி.]*

**கவடி**[5] *kavaḍi,* பெ.(n.) சிறுவர் விளையாட்டு வகை; game of leap-frog.

ம. கவடி

*[கவடு → கவடி. (கவைத்த கால் கொண்ட தவளை. தவளைப் போல் தத்தி ஆடும் ஆட்டம்.).]*

**கவடி**[6] *kavaḍi,* பெ.(n.) எதிரணியார் மறித்தும் வளைத்தும் பிடித்தடக்க முயலவும் பிடி கொடாமல் ஒட்டங்காட்டி ஓடியாடி ஒருவரையோ பலரையோ தொட்டுத் தோல்வி காட்டி தொடுகோட்டை எட்டித்தாவித் தன்னணிக்கு, ஆட்டச்சொல்லைப் பாடிக்கொண்டே, ஓடிவரும் தமிழ் இளைஞர் விளையாட்டு; kabadi game.

*[கவடு → கவடி (இரண்டு அணியாகப் பிரிந்து நின்று ஆடும் ஆட்டம்).]*

**கவடித்து** *kavaḍittu,* பெ.(n.) சிறு ஆலமரவகை; a kind of short or stunted banyan tree (சா.அக.).

*[கவடு → கவடித்து – வளைந்தது, குட்டையானது.]*

**கவடிவித்து–தல்** *kavaḍivittu,* 5 செ.குன்றாவி.(v.t.) வெள்வரகு விதைத்தல்; to sow coarse kind of white millet. *"கழுதை கொண்டுழுது கவடி விச்சி" (S.i.i.vol5. part, II431.6).*

*[கவடி + வித்து → விச்சு (கொ.வ.). கவடி = வளைந்த வரகுக்கதிர்.]*

**கவடு**[1] *kavaḍu,* பெ.(n.) 1.மரக்கிளை; branch of a tree. *"காதலுங் களிப்பு மென்னுங் கவடுவிட்டு" (சீவக.1389.)* 2. கவையுள்ள மரக்கிளை; forked branch. 3. தொடைச்சந்து; fork of the leg. அவன் கவட்டிலே நுழைந்தான் (உ.வ.). 4.யானை கழுத்திலிடுங் கயிறு (திவா.); rope of an elephant's neck. 5. பகுப்பு; separation, division. *"கவடுபடக் கவைஇய .... உந்தி" (மலைபடு.34).* 6. அடிவைப்பு (யாழ்ப்.); stride, pace.

**தெ.** கவட; **க.** கவடு.

*[கவை → கவடு.]*

**கவடு**[2] *kavaḍu,* பெ.(n.) ஏமாற்று; ஏய்ப்பு; fraud, guile. *"பிரியக் கருதினான் கவடு போலும்" (இறை.51, அரை).*

**க.** கவடு, கவட, கெளடி; **Skt.** kapaṭa.

*[கவை → கவடு.]*

**கவடு**[3] *kavaḍu,* பெ.(n.) உட்பிரிவு; section, ramification. *"கார்ப்பண்யத்தின் கவடுகளையெல்லாம்" (ரஹஸ்ய.504.).*

*[கவை → கவடு, கவை = சிறுகிளை.]*

**கவடுக்காரன்** *kavaḍu-k-kāraṉ,* பெ.(n.) ஏமாற்றுக் காரன்; cheat, deceiver.

*[கவடு + காரன்.]*

**கவடு தாக்கி** *kavaḍutākki,* பெ.(n.) அடிவைப்பு (இ.வ.); pace, as a measure.

*[கவடு + தாக்கி.]*

**கவடுபடு–தல்** *kavaḍu-paḍu-,* 20 செ.கு.வி.(v.i.) 1. யாழ்ப்பத்தர் போல இருபுறமும் தாழ்ந்து நடுவுயர்தல்; to slope down on either side, as the belly of a yāḻ. *"குளப்பு வழியன்ன கவடுபடு பத்தல்" (பொருந.4.)* 2. பிரிவுபடுதல்; to be separated, divided.

*[கவடு + படு.]*

**கவடுவட்டம்** *kavaḍu-vaṭṭam,* பெ.(n.) முத்துவகை (சிலப்.14,196, உரை .); a kind of pearl.

*[கவடு + வட்டம்.]*

**கவடுவை–த்தல்** *kavaḍu-vai-,* 4 செ.கு.வி.(v.i.) எட்டி நடத்தல் (யாழ்ப்.); to pace, straddle, stride.

*[கவடு + வை] கவடு = இடைவெளி, இடைவெளி விட்டு நடத்தல்.*

**கவண்** *kavaṇ,* பெ.(n.) கல்லெறியுங் கருவி; sling, made up of forked branch. *"கடுவிசைக் கவணி*

னெறிந்த சிறுகல்" (அகநா.292.). 2.கயிற்றில் கட்டப்பட்ட பட்டையான தோலில் கல் வைத்துச் சுழற்றி எறியும் சிறுவிசைக் கருவி, sling which discharges stones etc.

**மறுவ.** கவணை, கவண்டு, கவண்டி, கவண்டை.

**ம.**கவண; **க.**கவணெ; **கோத.** கிவ்ண்டிகன்; **துட.** திவிண்ய; **து.** கவணெ.

*[கவண் = கல் கவ்வுமாறு அழுத்திப் பிடித்து விட்டோச்சுதல். கவள்→கவண் (மு.தா.13.).]*

**கவண்கல்** *kavaṇ-kal,* பெ.(n.) கவணில் வைத்து எறியுங்கல்; stone pelted from a sling, catapult. ***கவண்*** பார்க்க; see *kavaṇ.*

**ம.** கவணக்கல்லு; **க.** கவணெ கல்லு

*[கவண் + கல்.]*

**கவண்காரன்** *kavaṇ-kāraṉ,* பெ.(n.) கவண்கல் வீசுவோன்; slinger.

*[கவண் + காரன்.]*

காரன், உடைமை அல்லது உரிமை பற்றிய ஆண்பால் ஈறு. கடுமை = மிகுதி, வலிமை. கடு → கடி → கரி → காரம் = கடுமை, மிகுதி, வலிமை, அதிகாரம், உரிமை, உடைமை. காரம் → காரன் = உரிமையாளன், உடையவன். கவண்காரன் = கவணைக் கொண்டவன்.

**கவண்டன்** *kavaṇḍaṉ,* பெ.(n.) ***கவுண்டன்*** பார்க்க; see *kavuṇḍaṉ.*

*[கவுண்டன் → கவண்டன் (கொ.வ.)]*

**கவண்டி** *kavaṇḍi,* பெ.(n.) ***கவண்*** (வின்.) பார்க்க; see *kavaṇ.*

*[கவண் → கவண்டு → கவண்டி.]*

**கவண்டு** *kavaṇḍu,* பெ.(n.) ***கவண்*** பார்க்க; see *kavaṇ.* கவண்டுக் கல்லால் எறிந்தான் (கொ.வ.).

*[கவண் → கவண்டு. 'டு' ஒருமை குறித்த மிகைச் சொல்லாக்க ஈறு.]*

**கவண்டை** *kavaṇḍai,* பெ.(n.) கவண் (கலித்.பக்.242, கீழ்க்குறிப்பு); sling.

*[கவண் → கவண்டு → கவண்டி → கவண்டை.]*

**கவணங்கட்டு-தல்** *kavaṇaṅ-kaṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) காயத்தைக் கட்டுதல்; to dress a wound (சா.அக.).

*[கவணம் + கட்டு.]*

**கவணச்சீலை** *kavaṇa-c-cīlai,* பெ. (n.) காரச்சீலை (பரராச.1, 231.); corrosive plaster.

*[கவ்வு → கவ்வணம் → கவணம் + சீலை.]*

**கவணம்** *kavaṇam,* பெ. (n.) 1. காயக்கட்டு; bandage for wound. கவணங்கட்ட(வின்.). 2. கட்டுமருந்து; medicine for external application before bandaging.

*[கவ்வு → கவ்வணம் → கவணம்.]*

**கவணமத்தளம்** *kavaṇa-mattaḷam,*பெ.(n.) கோயில் இறைவழிபாட்டின் போது முழக்கப்படும் ஒருவகைத் தோற் கருவி; a kind of percussion instrument layed during worship at temple.

*[கவண(ம்) + மத்தளம்.]*


கவணமத்தளம்

**கவணி**[1] *kavaṇi,* பெ. (n.) 1. புண்களுக்கிடும் மெல்லிய சீலை; lint. 2. மெல்லிய சீலை வகை; kind of muslin cloth.

**ம.** கவணி; **க.** கவுதி.

*[கவ் → கவ்வணி → கவணி.]*

**கவணி**[2] *kavaṇi,* பெ.(n.) பொன்,வெள்ளி நுண் இழை களைக் (சரிகை) கொண்டு ஆடைகளில் செய்யும் பூ வேலை. (புதுவை.); lace work.

*[ஒருகா. கவின் → கவினி → கவணி (கொ.வ.). கவின்= அழகு.]*

**கவணி**[3]**-த்தல்** *kavaṇi-,* 4 செ.குன்றாவி.(v.t.) மூடிக் கட்டுதல்; to pack. கட்டுச்சோற்றைக் கவணித்த வகை ஒழுங்காக இருந்தது (உ.வ.).

*[கவுள் → கவளி → கவணி.]*

**கவணிச்சால்வை** *kavaṇi-c-cālvai,* பெ.(n.) மெல்லிய சால்வை வகை (யாழ்ப்.); muslin shawl.

*[கவள் →கவளி →கவணி. கவணி*[2] *+ சால்வை.சால்- சால்வை. சால்வை = நீளம் அதிகமுள்ள துணி. கவணிச்சால்வை = மிகச்சிறிதாக மடிக்கத்தக்க வகையில் நெய்யப்பட்ட மெல்லிய சால்வை வகை.]*

**கவணை**[1] *kavaṇai,* பெ.(n.) ***கவண்*** பார்க்க; see *kavaṇ. "இலங்கொளி மருப்பிற் கைம்மா உளம்புநர் புலங்கடி கவணையிற் பூஞ்சினை யுதிர்க்கும்" (கலித். 23.).*

**க.** கவணெ; **து.** கவணெ; **ம.** கவண; **கோத.** கிவ்ண்டிகல்.

*[கவள் → கவண் = கவட்டை போன்ற கயிற்றுக்கருவி. கவண் → கவணை (மு.தா.13).]*

**கவணை**[2] *kavaṇai,* பெ.(n.) 1. தொழுவத்தில் மாட்டிற்கு வைக்கோல் புல் முதலியன போடும் தடுப்பு; a wickered ring for feeding cattle. கவணையில் வைக்கோல் போட்டு விட்டீரோ (உ.வ.). 2. இரு கையால் அள்ளக்கூடிய அளவுடைய வைக்கோல்; handful of straw. மாட்டுக்கு ஒரு கவணை வைக்கோல் போதுமா? (உ. வ.).

**தெ.** கவணமு; **க.** கவண, கவணெ.

**மறுவ.** மாட்டுக்காடி

*[காவு + அண் + ஐ = காவணை → கவணை. காவு = கதிரடிக்கும் போது உதிரும் தவசத்தொலிகளாகிய கொங்கு. வளர்ப்பு விலங்குகளுக்கு நீரில் கலந்து வைக்கும் ஊட்டத்தீனி. அண் = இடம். 'ஐ' சொல்லாக்க ஈறு.]*

**கவந்தம்**[1] *kavandam,* பெ.(n.) 1. தலையற்ற உடல்; trunk, headless body. *"கவந்த மெங்கணு மாடவும்". (சீவக. 2310.).* 2. தலைதறிந்த மரம் (இ.வ.); stump of a tree. 3. செக்கு (பிங்.); oil - press. 4. பேய் (பிங்.); demon. 5. நீர்; water. *"கவந்த மலைந்தனவே". (பாரத.பதினாறாம்.58.).* 6. வயிறு; stomach (த.சொ.அக.).

*[கவை → கவந்தம். (பிரிந்தது, குறைவுற்றது, வாய்பிளந்து நிற்பது, சுனைவாய் நீர்).]*

**கவந்தம்**[2] *kavandam,* பெ.(n.) மருக்காரை; common emetic nut.

*[கவை → கவந்தம் → சுனைவாய் நீர், கக்கல் (வாந்தி) எடுக்க உதவும் மருந்து.]*

**கவந்தலைக்கண்ணி** *kavandalai-k-kaṇṇi,* பெ.(n.) காடைக்கண்ணி என்னும் தவச வகை; a kind of grain resembling the eye of a quail.

**மறுவ.** காடைக்கண்ணி

*[கவந்தலை + கண்ணி]*

**கவந்தன்** *kavandaṉ,* பெ.(n.) இராமனால் கொல்லப் பட்ட ஓர் அரக்கன் (கம்பரா.கவந்த.2.); a demon killed by Rama.

*[கா →காவு (காடு) → காவன் –காவந்தன் → கவந்தன்.]*

**த.** கவந்தன் > **Skt.** kabandha.

**கவந்தி** *kavandi,* பெ.(n.) 1. கந்தைகளாலாகிய மெத்தைப்போர்வை; quilted cover made of rags to keep off cold. *"ஓடுங் கவந்தியுமே யுறவென்றிட்டுள் கசிந்து தேடும் பொருளும் சிவன்கழலே எனத் தெளிந்து" (திருவாச.40,1).* 2. கோவணம்; loin-cloth.

**ம.** கவியன்; **க.** கவதி, கவிதி, கவுதி; **கோத.** கவ்தி

*[கவி → கவிதி → கவிந்தி → கவந்தி (கொ.வ.).]*

பொதியெருது அல்லது பொதி சுமக்கும் விலங்குகளின் மீது, பொதியின் அடியில் முதுகின் மீது விரிக்கப்படும் கந்தைத்துணிகளால் தைத்த மெத்தை; கவித்துப்போர்த்தும் இயல்பு பற்றிக் கவிதி அல்லது கவந்தி எனப்பட்டது. 'கவித்தல்' வளைத்தல் பொருளும் தருதலான் வளைத்துக்கட்டும் கோவணத்தையும் குறித்தது.

**கவந்திகை** *kavandigai,* பெ.(n.) ***கவந்தி*** பார்க்க; see *kavandi. "போர்வைக் கவந்திகை கரியுரி... அரவங் கோவணம்". (திருவிசை. கருவூ. திருச்சாட்.3.).*

*[கவிதி → கவிந்தி → கவிந்திகை → கவந்திகை.]*

**கவம்**[1] *kavam,* பெ. (n.) ***கவ்வம்*** பார்க்க; see *kavvam.*

*[கவ்வம் → கவம்.]*

**கவம்**[2] *kavam,* பெ.(n.) மார்ச்சளி; phlegm. *"கவம் புருடராகம் பொருந்து செங்குருதி மாணிக்கம்" (திருவாலவா. 25,10.).* "கவம் பிடித்து மனிதனை வாட்டுகிறது".

*[கவ்வம் → கவம்.]*

**த.** கவம் > **Skt.** kapha.

**கவயம்**[1] *kavayam,* பெ.(n.) காட்டுமாடு (திவா.); bison, wild cow.

*[கோ → கோவு → கோவயம் → காவயம் → கவயம் (கொ.வ.).]*

**கவயம்**[2] *kavayam,* பெ.(n.) கவசம்; armour,coat of mail. *"வீரக் கழலினார்க்கொரு கவயமுங் கண்ணு மாய் நடப்பார்" (திருவிளை. பன்றிக்குட்டிகளை.12.).*

*[கவ்வு → கவு → கவயம்.]*

**த.** கவயம் > **Skt.** kavaca.

**கவயமா** *kavaya-mā,* பெ.(n.) ***கவயம்***[1] பார்க்க; see *kavayam*[1]. *"அவைய மிட்டன கவயமா" (சேதுபு. சங்கர.19.).*

*[கவயம் + மா – கவயம்மா → கவயமா.]*

**கவயல்** *kavayal,* பெ.(n.) ***கவயம்***[1] பார்க்க; see *kavayam*[1].

*[கவயம் → கவயல்.]*

**கவயன்** *kavayaṉ,* பெ.(n.) குரங்கினத் தலைவன்; king of monkeys (த.சொ.அக.).

*[கவயம் → கவயன்.]*

**கவர்**[1]**–தல்** *kavar-,* 2 செ.குன்றாவி.(v.t.) அகப் படுத்துதல்; to seize, grasp, catch, capture, take by force, steal. *"கான்முளை மூங்கிற் கவர்கிளை போல உய்தல் யாவது நின்னுடற்றியோரே" (பதிற்றுப்.84,12.).* 2. கொள்ளையிடுதல்; rob,plunder, pillage. *"கூடார் முனை கொள்ளை சாற்றி வீடறக் கவர்ந்த வினைமொழிந்தன்று" (பு.வெ.3,15,கொளு.).* 3. தன்னகப்படுத்துதல்; to get control of, charm, captivate. *"காடுடைய சுடலைப் பொடி பூசியென் உள்ளங்கவர் கள்வன்" (தேவா.1;1.).* 4. கைப்பற்றுதல்; to confiscate. *"கண்கவர் வனப்பிற் சிந்துரம்" (நைடத. அன்னத்தைத்தூ.12.).* 5. ஆசைப்பெருக்கம் (பேரவா); extreme desire. *"அடியவரேசிவமாகக் கவர்ந்தொழுகி அருச்சிக்குங் கடப்பாட்டின் நெறி நின்றோன்" (திருவிளை மெய்க்கா.).* 6.விரும்புதல். (திவா.); to desire. *"கவர்வு விருப்பாகும்" (தொல்.உரி.64.).* 7. பெற்றுக் கொள்ளுதல்; to receive. *"வறியோர் கவர முத்துந்துகிரு மிரங்குந்தரங்க முகந்தெறிந்து" (தஞ்சைவா.26.).* 8. நுகர்தல்; to experience, enjoy. *"கனியிருப்பக் காய்கவர்ந்தற்று" (குறள்.100.).* 9. முயங்குதல்; to have sexual connection with *"காமர் நடக்கு நடைகாண் கவர்கணைச் சாமனார் தம்முன் செலவு காண்க" (கலித்.94,33–34.).* 10. பிடித்தல்; to catch, hold. *"கவர்வான் வரல்கண்டு" (நைடத. அன்னத்தைத்தூ. 48.).* 11. கடைதல் (திவா.); to churn, reduce by trituration or attrition. 12. அழைத்தல்; to call, summon. *"கானக்கோழிக் கவர்குரற் சேவல் கானப்பலவின் முழவும்" (மலைபடு.510–511.).*

**ம.** கவருக; **க.** கவர்; **தெ.** கமுசு;

*[கவ்வு → கவள் → கவல் → கவர்.]*

**கவர்**[2]**–தல்** *kavar-,* 2 செ.கு.வி.(v.i.) 1. பிளவுபடுதல்; to split. *"கவராதவன்" (திருவிளை. மெய்க்கா.11.) (ஒ.மொ.37.).* 2. பல பிரிவாகப் பிரிதல்; to separate into various channels . *"காவிரி வந்து கவர்பூட்டத் தோடுகொள் வேலின் தோற்றம் போல" (புறநா.35, 8–9).* 3. மாறுபடுதல்; to deviate, depart from instructions. *"கவராக் கேள்வியோர் கடவாராகலின்" (மணிமே.1,10.).*

*[கவை → கவல் → கவர்.]*

**கவர்**[3]**–த்தல்** *kavar-,* 2 செ.கு.வி.(v.i.) 1. பிரிவுபடுதல்; to branch off, as roads. *"அறைவாய்ச் சூலத் தருநெறி கவர்க்கும்" (சிலப்.11,73.).* 2. கவடுபடுதல்; to fork, bifurcate. கவர்த்த கொம்பு (உ.வ.).

**தெ., ம.** கவ; **க.** கவலு; **உரா.** கவர்.

*[கவை → கவல் → கவர்.]*

**கவர்**[4] *kavar,* பெ.(n.) 1. மரம், ஆறு போன்றவற்றில் பிரியுங்கிளை; bifurcated branch, as of a tree or river. *"கவர்க்கண் வைகிடும் வானரங்கள்" (சேதுபு. கவிதீர்.3.).* தெற்கு நோக்கி நீர்பாய்கிற கவ்ருக்குக் கிழக்கும் (s.i.i. iii.45.). 2. பலவாகப் பிரிகை; divergence of branches, roads, rivers. *"மாற்றரு மணநெறி மகளிர் நெஞ்சமேபோற் பலகவர்களும் பட்டது" (சீவக.1212.).* 3. சூலத்தின் கவர் (வின்.); prong, as of a trident. 4. நீண்ட திருமண்கட்டி; cone-shaped white clay for marking the forehead. 5. உத்தரம் புகுத்துஞ் சுவர்ச்சந்து (வின்.); groove or

a kind of mortise on the top of a gate or door-post to receive a beam. 6. ஏய்ப்பு (வஞ்சம்); deception. *"கவரிலா யுகந்தராயணன்" (சேதுபு. விதூம.118.).* 7.வாழை(பிங்.);plantain tree. 8. அணையில் நீர் செல்லுதற்கு விடும் வழி. (இ.வ.); opening in a dam to let water out. 9. விருப்பு; desire, wish. *"கவர்வு விருப்பாகும்" (தொல்.சொல்.341.).*

*[கவை → கவல் → கவர்.]*

**க.** கவல், கவடு, கவலு, கவலெ; **ம.** கவ, கவர், கவர; **து.** கவ, கபர்; **தெ.** கவ, கவலு (இரட்டை.).

**கவர்[5]** *kavar,* பெ.(n.) 1. மறைப்பு; cover.

**உரா.** கவரு

*[கவை → கவல் → கவர்.]*

**கவர்** *kavar,* பெ.(n.) சிறுவாய்க்கால்; field channel. *"ஊராண்மைக் கண்ணாற்றுக் கவருக்கு மேற்கும்" (தெ.இ.கல்.தொ.26. கல்155.).*

*[கவல் → கவர் (கிளைத்துச்செல்லும் வாய்க்கால்).]*

**கவர்க்கட்டை** *kavar-k-kaṭṭai,* பெ.(n.) பட்டிமாட்டுக் கிடும் கட்டை (புதுவை.); stocks.

*[கவை → கவர் + கட்டை.]*

**கவர்க்கழி** *kavar-k-kaḻi,* பெ.(n.) ***கவர்க்கோல்*** பார்க்க; see *kavar-k-koḻ.*

*[கவர் + கழி.]*

**கவர்க்கால்** *kavar-k-kāl,* பெ.(n.) 1. கவராயுள்ள முட்டுக்கட்டை; forked prop. 2. கப்புள்ள மரம் (வின்.); tree with forked branches. 3. கிளை வாய்க்கால்; branch channel, in irrigation.

**க.** கவர்கோலு

*[கவை → கவல் → கவர் + கால்.]*

**கவர்க்குளம்பு** *kavar-k-kuḷambu,* பெ.(n.) பிளவுபட்ட குளம்பு; cloven hoof.

*[கவல் → கவர் + குளம்பு.]*

**கவர்க்கை** *kavar-k-kai,* பெ.(n.) கைப்பெரு விரலுக் கும் ஆள்காட்டி விரலுக்கும் இடைப்பட்ட சந்து; the cleft between the thumb and the fore finger (துளுவ.).

**து.** கபெகை

*[கவர் + கை.]*

**கவர்க்கோல்** *kavar-k-kōl,* பெ.(n.) மேல்பகுதியில் பிளவுபட்டகோல்; a post or stick forked at the top.

**து.** கபுகோலு; **க.** கவலுகோலு.

*[கவர் + கோல்.]*

**கவர்கடப்பாரை** *kavar-kaḍappārai,* பெ.(n.) ஆணி பிடுங்கும் கம்பி, சுத்தியல் (கோவை.வழ.); claw of hammer.

*[கவர் + கடப்பாரை.]*

**கவர்கோடல்** *kavar-kōḍal,* பெ.(n.) ஐயநிலை; a state of doubt. *"சுட்டல் திரிதல் கவர்கோட றோன்றாது" (மணிமே. 27,22.).*

*[கவல் → கவர் + கோடல்.]*

**கவர்ச்சி[1]** *kavarcci,* பெ.(n.) வெள்ளைக்காக்கணம். (மலை.) பார்க்க; veḷḷai-k-kākkaṇam.

*[கவல் → கவர் → கவர்த்தி → கவர்ச்சி.]*

**கவர்ச்சி[2]** *kavarcci,* பெ.(n.) 1. மனம் பற்றுதல், இழுக்கை; captivation, attraction. 2. அழகு; beauty.

*[கவர்தல் = பற்றுதல், அகப்படுத்துதல், வசப்படுத்துதல். கவர் → கவர்ச்சி. (மு.தா.13.).]*

**கவர்சுத்தியல்** *kavar-cuttiyal,* பெ.(n.) சுத்தியற் கருவிவகை; claw hammer. ஒருபுறம் ஆணியை அடிப்பதற்கும், மறுபுறமுள்ள வளைவினால் அடித்த ஆணியைப் பிடுங்குதற்கும் பயன்படும் சுத்தியல்.

*[கவல் → கவர் + சுத்தியல். கவல் = பிளவுண்டது.]*



கவர்சுத்தியல்

**கவர்த்தடி** *kavar-t-taḍi,* பெ.(n.) 1. முள்ளைத்தூக்கும் கவர்க்கோல். (வின்.); forked stick, used as a pitch-fork. 2. இருபுறமும் முனையுள்ள அம்பு;arrow sharp-ened at both ends (கருநா.).

**க.** கவல்கோல், கவலுகோலு, கவளுகோல், கவுளகோல்; **து.** கபெகோலு, கபெ.

*[கவல் → கவர் + தடி.]*



கவர்த்தடி.

**கவர்தொடை** *kavar-toḍai,* பெ.(n.) 1. விரும்பத்தக்க மாலை; pleasant garland. 2. உயிர்கவர் கணை; a fatal arrow.

*[கவர் + தொடை. தொடை = தொடுக்கும் அம்பு]*

**கவர்ந்தூண்** *kavarndūṇ,* பெ.(n.) அடித்துண்ணும் உணவு; food seized by force. *"காய்ந்த பசியெருவை கவர்ந்தூ ணோதையும்" (மணிமே.6,117.).*

*[கவர்ந்து + உண் – கவர்ந்துண் → கவர்ந்தூண். உண் → ஊண் .]*

**கவர்நாக்கு** *kavar-nākku,* பெ.(n.) கொடுத்த வாக்குறுதியைத் தள்ளி வேறொன்று பேசும் நாக்கு ; insincere talk. பொய் பேசும் நாக்கு; the tongue which utters falsehood.

**க.** கவலு நாலகெ

*[கவர் + நாக்கு.]*

**கவர்நெறி** *kavar-neṟi,* பெ.(n.) கிளைவழி. (திவா.); fork in a road.

**க.** கவலுதாரி

*[கவர் + நெறி.]*

**கவர்ப்பு** *kavarppu,* பெ.(n.) பலவாகப் பிரிகை (சீவக.1212, உரை.); forking, bifurcation, ramifica-tion.

*[கவல் → கவர் → கவர்ப்பு.]*

**கவர்படு-தல்** *kavar-paḍu-,* 20 செ.கு.வி.(v.i.) 1.பிரிவுபடுதல்; to be forked, as a road. வழி கவர்பட்டிருக்கிறது (உ.வ). 2. பலபொருள்படுதல்; to be ambiguous, as language equivocation.

**க.** கவலொடெ

*[கவல் → கவர் + படு.]*

**கவர்படுபொருண்மொழி** *kavar-paḍu-poruṇmoḻi* பெ.(n.) ஒரு பொருளைக் கருதிச் சொல்லப்பட்ட சொல் அதனை ஐயுறும் படி, பல பொருண் மேனிற்கும் வழு; the error where a word signifies ambiguous meaning when uttered to express a particular meaning. *"ஒரு பொருடுணிய வுரைக்க லுற்ற சொல் இருபொருட் கியைவது கவர்படு பொருண்மொழி" (தண்டி. சொல்லணி. 107.).*

*[கவர்படு + பொருள் + மொழி.]*

"புயலே புறம்பொதிந்து பூந்தா தொழுக்கி
மயலே கடவுளர்க்கு வாய்த்துச் – செயலை
எரிமருவு பூந்துணர்த்தாய் யாவருமூ டாடார்
அரிமருவு சோலை யகத்து"

இப்பாடலில் "அரிமருவு சோலை யகத்து" என்ற வழி அரியென்பது –வண்டு, மடங்கல் [சிங்கம்] நெருப்பு முதலிய பலபொருள்களுக்கும் பொதுவாதலான் ஒன்று துணியப் படாமையான் வழுவாயிற்று [தண்டி. சொல்லணி .107. உரை.]

**கவர்படுமொழி** *kavar-paḍu-moḻi,* பெ.(n.) பல பொருள்தரும் சொல்; double meaning, ambiguous language.

*[கவல் → கவர் + படு + மொழி.]*

*இருவகைப் பொருள்களைத் தந்து நிற்கும் தொடர்கள் கவர்படு மொழியாகும் [எ–டு] செம்பொன் பதின்றொடி, குன்றேறாமா. (செம்பொன் + பதின் (பத்து) தொடி (எடையளவு). செம்பு + ஒன்பதின் + தொடி. குன்று + ஏறு + ஆமா. குன்று + ஏறா + மா.)*

**கவர்பரிப்புரவி** *kavar-pari-p-puravi,* பெ.(n.) விரைந்து செல்லுங் குதிரை; galloping horse.

*[கவர் + பரி + புரவி.]*

**கவர்பு** *kavarbu,* பெ.(n.) வேறுபடுகை; differing. *"கவர்பு முண்டோ கற்றோய்" (ஞானா.66,13.).*

க. கவலெணிகெ

*[கவல் → கவர் + பு.]*

**கவர்வழி** *kavar-vaḻi,* பெ.(n.) கிளைவழி (பிங்.); fork in a road.

க. கவலுதாரி

*[கவர் + வழி.]*

**கவர்விடு-தல்** *kavar-viḍu-,* 20 செ.கு.வி.(v.i.) 1. கப்புவிடுதல்; to become forked, divaricate. 2. பிரிவுபடுதல்; to ramify, branch out, as a subject. 3. பல பொருள்படுதல்; to be ambiguous, as words. 4. புரை யோடல்; (in anatomy) the forming of sinuses as in an ulcer or a wound (சா.அக.).

*[கவல் → கவர் + விடு.]*

**கவர்வு**[1] *kavarvu,* பெ.(n.) 1. விருப்பம்; desire (தொல். சொல் 362.). *"கவர்வு விருப்பாகும்"* 2. ***கவர்ச்சி***[1] பார்க்க; see *kavarcci*[1]. 3. துன்பம்; sorrow. *"களிப்புங் கவர்வு மற்றுப் பிறப்புப்பிணி மூப்பிறப்பற்று ஒளிக்கொண்ட சோதியுமாய் உடன் கூடுவது என்று கொலோ." (திவ்.திருவாய். 2,3,10.).*

*[அவ்வு → கவ்வு → கவர் → கவர்வு.]*

**கவர்வு**[2] *kavarvu,* பெ.(n.) துன்பமின்மை, வன்முறை யின்மை (சம்.அக.); harmlessness, non-violence.

*[காவு → காவல் → கவல் → கவர்வு.]*

**கவரக்கோல்** *kavarakkōl,* பெ.(n.) 1. பளுவான பொருள்களைத் தூக்கப் பயன்படுத்தும் கவடு பட்டகழை; a fork used for lifting heavy things. 2. மரத்தச்சர் பயன்படுத்தும் கருவி; a carpenter's set square.

ம. கவரக்கோல்

*[கவரம் + கோல்.]*

**கவரச்சு** *kavaraccu,* பெ.(n.) பூவரசு; portia tree (சா.அக.).

*[கவர் + அச்சு.]*

**கவரம்** *kavaram.* பெ.(n.) சினம். (வின்.); fury, rage, wrath.

*[கவல் → கவர் → கவரம்.]*

**கவரம்**[2] *kavaram,* பெ.(n.) உப்பு; salt (சா.அக.).

*[கவல் → கவர் → கவரம்.]*

**கவரவிளக்கு** *kavaraviḻakku,* பெ.(n.) பிளவுபட்ட தண்டுள்ள குத்து விளக்கு; a bronze lamp borne on a forked stand (சேரநா.).

ம. கவரவிளக்கு



கவரவிளக்கு

*[கவரம் + விளக்கு.]*

**கவராசம்** *kavarāšam,* பெ.(n.) ***கவராயம்*** பார்க்க; see *kavarāyam.*

*[கவராயம் → கவராசம்.]*

**கவராமொழிமாதேவன்** *kavarā-moḻi-madēvan,* பெ.(n.) கும்பகோணம் வட்டம் திருவிடைமருதூர் கோயிலுக்கு விட்ட நிலத்தைத் திருத்தி உழுதவர்; a peasant who developed land given to Thiruvidaimarudur temple in Kumbakonam taluk. *"இந்நிலம் கல்லி திருத்தி உடையார் பட்டாரகிக்கு கவராமொழி மாதேவனாகிய தொண்டரடிப் பொடி குடுக்கக் கடவானாக" (தெ.இ.கல்.தொ.23.கல்207.).*

*[கவரா + மொழி + மா + தேவன்- கவராமொழிமாதேவன். கவராமொழி = மயக்கில்லாத, ஏமாற்றமில்லாத வாய் மொழி.]*

**கவராயம்** *kavarāyam,* பெ.(n.) வட்டம் வரையுங் கருவி (வின்.); pair of compasses. கணக்குத் தேர்வுக்குக் கவராயம் கொண்டு செல் (உ.வ.).

க. கவபர

*[கவர் → கவரம் → கவராயம்.]*

*கவ → கவ்வு = கவட்டை. கவர்தல் = கவ்வும் அலகு போற் பிரிதல். கவர் = பிரிவு, கவை. கிளை. கவராசம் = இரு கவருள்ள கருவி (divider) (மு.தா.13.).*

**கவராயுதம்** *kavarāyudam,* பெ.(n.) கவராயம் பார்க்க; see kavarāyam.

*[கவராயம் → கவரயுதம்.]*

**கவரி**[1] *kavari,* பெ.(n.) தேர் (திவா.); car, chariot.

*[கவி → கவிரி → கவரி. மேற்கவிப்பு அமைந்த குறுந்தேர்.]*

**கவரி**[2] *kavari,* பெ.(n.) 1. காட்டெருமை; bison. 2. எருமை; buffalo. *"படிந்துசே டெறியுஞ் செங்கட் கவரியும்" (கல்லா.56,30.).*

*[கவரம் (சினம்) → கவரி (திரு.தமி. மர. 740.) கவிரி = சினமிக்க காட்டெருமை, எருமை.]*

**கவரி**[3] *kavari,* பெ.(n.) 1. சாமரை; yak-tailfan, used for fanning idols and great personages. *"வெண்மதிக் கதிர் பெய்கற்றைபோல் இவர் கவரிவீச (சீவக.541.)"* 2. அடர்ந்து வளரும் சம்பா நெற் பயிர் வகை; a kind of samba paddy. *"புரவிச் சூட்டுமூட்டுறு கவரி தூக்கி யன்ன செழுஞ்செய் நெல்லின் சேயரி" (அகநா, 156.).*

*[கவ்வு → கவ்வரி → கவரி = அடர்ந்தது, அடர்ந்த கூந்தல் உள்ளது, கவரி மயிர் போல அடர்ந்து வளரும் சம்பா நெற்பயிர்.]*

*கவரி → சவரி → சவரம் → சமரம் → சாமரம். சவரி >* **Skt.** samrī *சாமரம் >* **Skt.** sāmara *(திரு.தமி.மர.740.).*

**கவரி**[4] *kavari,* பெ.(n.) 1. ***கவரிமான்*** பார்க்க; see *kavarimāṉ. "கவிர்ததை சிலம்பிற்றுஞ்சுங் கவரி" (பதிற்றுப் 11–21).* 2. கவரிமான் மயிர்; hair of musk deer. *"கவரி முச்சிக் கார்விரி கூந்தல் ஊசன் மேவற் சேயிழை மகளிர்" (பதிற்றுப்.43.1.).*

**கவரி**[5] *kavari,* பெ.(n.) முடி, பின்னல், சடை; a braid or fillet of hair.

**ம.** கவரம், கவரி (அழகான கூந்தல் உடையவள்); **க.** கபரி, கவரி; **து.** கபரி; **Skt.** kavara, kabara, kavarī, kabari; **Wol.** kawar; **Sp.** cabellos.

*[கவ்வு → கவ்வரி → கவரி (அடர்ந்தது).]*

**கவரி**[6] *kavari,* பெ.(n.) தணக்கு மரம்; catamaran tree. (சா.அக.)

*[கவர்[4] → கவரி.]*

**கவரிச்சம்பா** *kavari-c-cambā,* பெ.(n.) ஐந்து மாதங்களில் விளையுஞ் சம்பா நெல்வகை; a kind of sambā paddy, sown in Aṉi, Purattāsi, and maturing in five months.

*[கவரி + சம்பா.]*

**கவரிபந்தம்** *kavari-pandam,* பெ.(n.) தலைமயிர்க் கற்றை; bunch of hair. *"நிலத்தின் கதிரையெல்லாங் கறந்தொரு கற்றையாக்கி வைத்ததாங் கவரிபந்தம்" (மேருமந்.769.).*

*[கவரி + பந்தம்.]*

**கவரிமா** *kavari-mā,* பெ.(n.) ***கவரிமான்*** பார்க்க; see *kavarimāṉ. "மயிர்நீப்பின் வாழாக் கவரிமா" (குறள்,969.).*

*[கவரி + (மான்) மா.]*

**கவரிமான்** *kavari-māṉ,* பெ.(n.) மான்வகை; a kind of deer, yak. *"கொள்ளிக் கூரெரி வெள்ளி விளக்கிற் கவரி மானேறு கண்படை கொள்ளும்" (பெருங். உஞ்சைக்.50,20.).*

**ம.** கவரிமான்

*[கவரி + மான்.]*



கவரிமான்

**கவரிமான்மயிர்** *kavari-māṉ-mayir,* பெ.(n.) 1. சாமரம்; chowrie or bushy tail of the camari, the Tibetan yak set in a decorated handle, used as a fly-flap or fan before an idol or a great personage. 2. கூந்தலுடன் இணைத்துப் பின்னும் சவரி (யாழ்ப்.); the bushy tail of the yak used as false hair.

*[கவரி + மான் + மயிர். மான் = விலங்கு இங்குச் சடை பெருமையைக் குறித்தது.]*

**கவரியம்** *kavariyam,* பெ.(n.) கூந்தற்பனை; fan palm (சா.அக.)

*[கவர் → கவரியம்.]*

**கவரிறுக்கி** *kavarirukki,* பெ.(n.) வேலி முதலிய வற்றின் முகப்பில் விலங்குகள் உட்புகாதபடி இடப் படும் தடைமரம் (பிங்.); fork of a branch planted at the mouth of a fence, path, etc., to prevent animals from entering fields, houses, etc.

*[கவர் + (இறுக்கு) இறுக்கி.]*

**கவரிறுக்கு** *kavarirukku,* பெ.(n.) 1. ***கவரிறுக்கி (பிங்.)*** பார்க்க; see *kavarirukki.* 2. கடவு மரம்; catamaran tree (சா.அக.).

மறுவ. தணக்கு

*[கவர் + இறுக்கு.]*

**கவருகோல்** *kavaru-kōl,* பெ.(n.) மட்பாண்டத் தொழிற் கருவிகளுளொன்று; one of the of potter's instruments.

*[கவர் → கவரு + கோல்.]*

**கவரெழுசங்கம்** *kavar-eḻu-šaṅgam,* பெ.(n.) சங்கஞ்செடி. (வின்.); mistletoe berry thorn.

*[கவர் + எழு + சங்கம்.]*

**கவல்[1](லு) –தல்** *kaval-,* 13 செ.கு.வி.(v.i.) மனம் வருந்துதல்; to be distressed, anxious, troubled. *"மாணிழை மகளிர் கவல் ஏமுற்று வெய்துவீழ் அரிப்பணி" (நற்.30) "யாதுநீ கவல வேண்டா" (சீவக. 1456.).*

*[கவ → கவல். கவலுதல் = பல கவர்படுதல், பல கவர் படுதல் போலப் பல நினைவு கொண்டு கலங்குதல். கவல் → கவலி. கவலித்தல் = கவலைப்படுதல் (மு.தா.14).]*

**கவல்[2]** *kaval,* பெ.(n.) கவலை; sorrow. *"மனங்கவ லொழிகென மந்திரங் கொடுத்ததும்" (மணிமே. பதி.52.)*

*[கவல்[1] → கவல்[2].]*

**கவல்பு** *kavalbu,* பெ.(n.) கவலை; sorrow. *"மனங்கவல் பின்றி மாழாந் தெழுந்து" (பொருந. 95.).*

*[கவல் → கவல்பு. பு = சொ.ஆ.ஈ.று.]*

**கவல்வு** *kavalvu,* பெ.(n.) கவலை; sorrow. *"மனங் கவல் வின்றி மனையகம் புகுந்து" (மணிமே.16.47.)*

*[கவல் → கவல்வு.]*

**கவலம்** *kavalam,* பெ.(n.) கவலை; sorrow. *"கவலங் கொள் பேய்த்தொகை பாய்தரக் காட்டிடை யாட்டு வந்து" (திருக்கோ.389.).*

*[கவல் + அம் → கவலம்.]*

**கவலம்[2]** *kavalam,* பெ.(n.) எருமைக்கொம்பு; buffalo's horn (சா.அக.).

*[கவரம் → கவரி = எருமை, சினமுடைய காட்டெருமை, கவரம் → கவலம் = எருமைக் கொம்பு, எருமையின் சினமுடைமையைக் காட்டும் உறுப்பு.]*

**கவலி–த்தல்** *kavali-,* 4 செ.கு.வி.(v.i.) ***கவல்*** பார்க்க (சிலப்.13,91,உரை.); see *kaval.*

*[கவல் → கவலி (மு.தா.14.)]*

**கவலி[2]** *kavali,* பெ.(n.) கவலை; sorrow.

*[கவல் – கவலி.]*

**கவலி[3]** *kavali,* பெ.(n.) கவலங்கொடி; star flower swallow wort (சா.அக.).

*[கவல் + அம் + கொடி. கவல் → கவலி.]*

**கவலிகம்** *kavaligam,* பெ.(n.) கொத்தவரை; clustor bean (சா.அக.).

*[கவல் → கவலிகம்.]*

**கவலிகா** *kavaligā,* பெ.(n.) செந்தினை; red millet.

*[கவல் → கவலிகை → கவலிகா.]*

**கவலிகை** *kavaligai,* பெ.(n.) பஞ்சு; cotton (சா.அக.).

*[கவல் → கவலிகை.]*

**த.** கவலிகை> **Skt.** kavalikā. (piece of cloth over a wound).

**கவலை** *kavalai,* பெ.(n.) 1. பல ஊர்களுக்குச் செல்லும் வழிகள் ஒன்று கூடும் கவர்த்த வழி; diverging roads. *"கல்லதர் கவலை செல்லின் மெல்லியல் புயல் நெடுங் கூந்தல் புலம்பும்" (ஐங்குறு.304.).* 2. பல தெருக்கள் கூடுமிடம்; place where several ways meet. *"கவலை முற்றங் காவனின்ற" (முல்லைப்.30.)* 3. மரக்கிளை (பிங்); branch, forking of branches, fork. 4. ஆற்றிடைக் குறை; dry place in a river, river island. 5. பலநினைவு அலைபாயுமெண்ணம்; wandering thought. *"கவலை கொணெஞ்சினேன்" (கலித்.134,13.).* 6. மனத்துயர், வருத்தம், துன்பம்; distress, affliction. *"மனப்பேரின்பமுங் கவலையுங்

*காட்டும்" (மணிமே.30.63).* 7. மனத்தடுமாற்றம்; hesitation and confusion of mind. மறையினைக் கவலையின்றிச் சொல்பவர் (உ.வ.). 8. அச்சம் (திவா.); fear. dread. *"தலைதுமிந் தெஞ்சிய வாண்மலியூப மொடு உருவில் பேய்மகள் கவலை கவற்ற." (பதிற்றுப்.67.10–11).* 9. பற்றார்வம்; care, anxiety. 10. அக்கறை; concern,interest. அவனுக்குக் கல்வியிற் கவலையில்லை (உ.வ.).

**க.** கவலெ; **ம.** கவ. கவர், கவர, கவல; **து.** கபர்; **தெ.** கவலு (இரட்டைக் குழந்தை).

*[கவ → கவல். கவலுதல் = பல கவர்படுதல்.]*

பலகவர் படுதல் போலப் பல நினைவு கொண்டு கலங்குதல். கவல் – கவலை = கவை, கிளை, கவர்த்தவழி, பல நினைவுக்கலக்கம், அக்கறை, கவல் → கவலி. கவலித்தல் = கவலைப் படுதல் [மு.தா.14.]

**கவலை**[2] *kavalai,* பெ.(n.) 1. கிழங்குள்ள ஒரு வகைக் கொடி; a rooted creeper. *"ஆய்கொடிக் கவலையும்" (சிலப்.11,82.).* 2. செந்தினை; Italian millet.

*[கவல் → கவலை. கவலை = கிளைத்தல், வளைவு .வளைந்த கிழங்கும். வளைந்த தினையும் கவலை எனப் பெயர் பெற்றன.]*

**கவலை**[3] *kavalai,* பெ.(n.) கடலில் வாழும் சிறு மீன் வகை; Malabar sardine of beautiful green colour, attaining 7in, in length.

*[கவ → கவல் → கவலை.]*

**கவலை மீன்வகை:** 1.மத்துக்கவலை, 2. செதில்கவலை, 3. குடக்கவலை, 4. பேய்க்கவலை, 5. நட்டைக்கவலை.

**கவலை**[4] *kavalai,* பெ.(n.) இரு மாடுகள் அல்லது எருதுகளைக் கட்டி நீரிறைக்கச் செய்யும் நீரேற்றம்; a kind of waterlift drawn by a pair of oxen.

**தெ.** கபிலெ; **க.** கபலி; **ம.** கப்பி, **து.** கபி.

*[கவை → கவல் → கவலை. (மாட்டைப் பிணைத்துக் கட்டி ஓட்டும் நீரேற்றம்). கவைத்தல் = சேர்த்துக் கட்டுதல்.]*

**கவலை**[4] *kavalai,* பெ.(n.) நோய்வகை. (அக.நி.); a disease.

*[கவல் → கவலை.]*

**கவலைக்கிடம்** *kavalai-k-kiḍam,* பெ.(n.) இறக்குந் தறுவாயிலிருக்கும் நிலை; critical condition or state. இந்த நோயாளியின் நிலை கவலைக்கிட மாயுள்ளது. (உ.வ.)

*[கவலை + கு + இடம். 'கு' நான்கன் உருபு.]*

**கவலைகவற்று–தல்** *kavalai-kavaṟṟu-,* 5 செ.கு.வி. (v.i.) வருத்தஞ் செய்தல்; to cause distress. *"தலைதுமிந் தெஞ்சிய வாண்மலி யூபமொடு உருவில் பேய்மகள் கவலைகவற்ற" (பதிற்றுப்.67, 10–11.).*

*[கவலை + கவற்று–.]*

**கவலைகொள்–ளுதல்** *kavalai-koḷ,*16. செ.கு.வி.(v.i.) ***கவலைப்படுதல்*** பார்க்க; see *kavalai-p-paḍu.*

*[கவலை + கொள்.]*

**கவலைச்சால்** *kavalai-c-cāl,* பெ.(n.) கவலையேற்றத் தில் நீர் தூக்குஞ்சால்; large leather bucket for a kavalai waterlift.

*[கவலை + சால்.]*

**கவலைபடு–தல்**[1] *kavalaipaḍu,* 20.செ.கு.வி.(v.i.) கவலை மீன் வலையிற் படுதல் (மீன.வழ.); to fall into a net as of kavalai fish.

*[கவலை + படு.]*

**கவலைபடு–தல்**[2] *kavalaipaḍu,* 20. செ.கு.வி.(v.i.) மனம் வருந்துதல்; to be distressed.

*[கவலை + படு.]*

**கவலைபாய்–தல்** *kavalai-pāy-,* 2 செ.கு.வி.(v.i.) 1. கவலைமிகுதல்; to be very anxious. 2. மயங்குதல் (கொ.வ.); to be so confused that one cannot attend to anything, 3. மறையோதும் போது வரிசை தவறியோதுதல்; to be confused while chanting the Veda.

*[கவலை + பாய்.]*

**கவலைமாப்பு** *kavalai-māppu,* பெ.(n.) கவலை மீன் கூட்டம்; shoal of kavalai fish.

*[கவலை + மாப்பு, மாப்பு = மீன்றிரள்.]*

**கவலையேற்றம்** *kavalai-y-ēṟṟam,* பெ.(n.) மாடு கட்டி நீரிறைக்கும் ஏற்றம்; a kind of water lift. "கவலையேற்றத்திற்கு இரண்டு காங்கேயக்காளை வேண்டும்" (உ.வ.).

*[கவலை + ஏற்றம்.]*

**கவலைவலை** *kavalai-valai,* பெ.(n.) கவலை மீன் பிடிப்பதற்காகப் பின்னப்பட்ட வலை (மீன..வழ.); a kind of net for catching kavalai fish. "கவலைவலையைக் கொண்டு சென்றால் கை நிறைய பணம் கிடைக்கும்" (உ.வ.).

*[கவலை + வலை.]*

**கவவு[1]-தல்** *kavavu-,* 5 செ.குன்றா.வி.(v.t.) 1. அகத் திடுதல்; to put in, insert. *"ஆயிடைக் கவவுக்கை நெகிழ்ந்தமை போற்றி" (அகநா.26.16-17)* 2.விரும்புதல்; to desire. *"கன்னிக் கலிங்கமகிலார்ந்து ... கவவிக் கிடந்த குறங்கினாள்" (சீவக.1658.)* 3. கையால் தழுவுதல்; to embrace. *"கவவுக்கை தாங்கும் மதுகை அம் குவவுமுலை" (நற்.350.7.) "கண்ணு நுதலுங் கவுளுங் கவவியார்க்கு" (கலித்.83,17.).* 4. முயங்குதல்; to copulate. *"வார்முலை முற்றத்து நூலிடை விலங்கினும் கவவுப்புலந்துறையுங் கழிபெருங் காமத்து" (அகநா.361.5-6.).*

**Sp.** querido

*[கவ்வு → கவவு.]*

**கவவு[2]-தல்** *kavavu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. நெருங்குதல்; to crowd, to draw near. *"நயந்தகாதலர் கவவுப் பிணித்துஞ்சிப் புலர்ந்து விரிவிடிய லெய்த விரும்பி" (மதுரைக்.663-664.).* 2. பொருந்துதல்; to be connected. *"பவபயங் கவவ" (ஞானா.62,21.).*

*[கவ்வு → கவவு-.]*

**கவவு[3]** *kavavu,* பெ.(n.) 1. அகத்திடுதல்; being contained. *"கவவு அகத்திடுமே" (தொல்.சொல்.353.).* 2. உள்ளீடு; the contents of anything. *"அயிருருப் புற்றவாடமை விசயம் கவவொடு பிடித்த வகையமை மோதகம்" (மதுரைக்.625-626.).* 3. முயக்கம்; embracing; copulation. *"கண்ணிலா நீர்மல்கக் கவவி நாம் விடுத்தக்கால்" (கலித்.35.).*

பட. கவ (அன்பு); துட. கவ் (அன்பு,அருள்)

*[கவ → கவவு (மு.தா.13.).]*

**L.** Capio; **G.** haben; **AS.** habban; **Dan.** have; **E.** have (to hold or poseess) (ஒ.மொ.332.).

**கவவுக்கை** *kavavu-k-kai,* பெ.(n.) அகத்திட்டகை, அணைத்த கை; embracing arms. *"கவவுக்கை தாங்கும் மதுகை அம் குவவுமுலை" (நற்.350.7.)*

*[கவ → கவவு = கவ்வுதல், கவ்வினாற் போல் அணைத்தல், அகப்படுத்துதல், அகத்திடுதல். "கவவகத் திடுதல்" (தொல். உரியியல்.59.) கவவுக்கை = அணைத்த கை. மு.தா. 13.]*

**கவழம்** *kavaḷam,* பெ.(n.) ***கவளம்*** பார்க்க; see *kavaḷam. "கவழ மறியாநின் கைபுனை வேழம் - புரிபுனை பூங்கயிற்றிற் பைபய வாங்கி" (கலித்.80.)*

*[கவளம் → கவழம்.]*

**கவழிகை** *kavaḻigai,* பெ.(n.) திரைச்சீலை (வின்.); curtain.

**க.** கவதிகெ

*[கவளிகை → கவழிகை.]*

**கவள்** *kavaḷ,* 5. செ.குன்றாவி. (v.t.) 1. வளைத்தல்; to bend. 2.கட்டுதல்; to bend.

*[கவ்வு → கவள்.]*

**கவளம்[1]** *kavaḷam,* பெ.(n.) 1. கவுள் என்னும் கன்னக் கதுப்பு அளவு கொண்ட உணவு; a mouthful, a morsel, as much curry rice or other food as is taken-up with the hand and put into the mouth. 2. யானை ஒருமுறை வாயிலிட்டு உண்ணும் அளவு; a lump of food that an elephant can take at one mouth. *"கானயானைக்கவளம் கொள்ளும்" (அகநா. 157.8.)* 3. கைப்பிடி அளவான சோற்று உருண்டை; a small lump of rice kneaded into a ball. 4. சோற்றுப்பருக்கை; a grain of boiled rice. *"காய் நெல் லறுத்துக் கவளங் கொளினே மாநிறை வில்லதும் பன்னாட் காகும்" (புறநா. 184.1.2.).*

**க.** அகுளு; **Pali.** kabala.

*[கவ்வு → கவளம். (மு.தா.13.).]*

வடமொழியாளர் kri என்னும் மூலத்தைக் காட்டி இச்சொல்லுக்கு உண்ணுதல் விழுங்குதல் பொருளுள்ளது எனக்காட்டுதல் பொருந்தாது. kri – krita எனப் பெயராகும் போது வடமொழியில் வேர் முதலில் உள்ள ரகரம் மறைவது மரபன்று. ஆதலின் "கவளம்" தமிழ்ச்சொல்லே என்பதும், கவ்வு என்னும் வினையடியாகத் தோன்றியதென்பதும் விளங்கும்.

*கவ்வு → கவள் → கவளம். கவ்வும் அளவான உணவு. வடமொழியில் மூலமில்லை. த. கவளம் > **Skt.** kavala (வ.மொ.வ.110).*

**கவளம்[2]** *kavaḷam,* பெ.(n.) 1. கன்னக் கதுப்பு; bulging cheek. 2. யானை மதம். (திவ்.பெரியதி.4,8,1.); must of an elephant.

**H.** kaval

*[கவுள் → கவுளம் → கவளம்.]*

**கவளம்**[3] *kavaḷam,* பெ.(n.) வெற்றிலைக்கட்டு (யாழ்.அக.); bundle of betel leaves. "திருமணத்திற்கு 50 கவளம் வெற்றிலை இருந்தால் போதுமானது."

*[கவ் → கவளம்.]*

**கவளமான்** *kavaḷamāṉ,* பெ.(n.) யானை; elephant.

*[கவள் → கவள + மா(ன்).]*

**கவளி** *kavaḷi,* பெ.(n.) 1. ***கவளிகை*** பார்க்க; see *kavaḷigai, "கையினில் படைகரந்த புத்தகக் கவளி யேந்தி" (பெரியபு. மெய்ப்.7.)* 2. வெற்றிலைக்கட்டு. "விழாவிற்கு ஐந்து கவளிவெற்றிலை வேண்டும்." ; pack of betel leaves its number varying in different places. 3. கவ்வினாற்போல் மேலும் கீழும் சட்டம் வைத்துக் கட்டும் புத்தகக் கட்டு, கட்டு; bundle of books tied by keeping frames on the top and bottom.

*[கவ்வு (கவள்) கவளி – கவ்வினாற் போல் மேலும் கீழும் சட்டம் வைத்துக்கட்டும் புத்தகக்கட்டு, கட்டு, வெற்றிலைக்கட்டு (மு.தா.13.).]*

*'கவளி' – நூறு வெற்றிலை.*

**கவளி–த்தல்**[1] *kavaḷi,* 4. செ.குன்றாவி.(v.t.) 1. கவுள்அளவு அல்லது வாய் கொள்ளுமளவுக்கு நீரைக் கொப்புளித்தல்; to gargle with a mouth full of water. 2. கவுள் அல்லது வாய்கொள்ளும் அளவுடைய உணவு உண்ணுதல்; to eat a mouthful of food.

*[கவள் → கவளி → கவுளி.]*

**கவளி–த்தல்**[2] *kavaḷi,* 4. செ.குன்றாவி.(v.t.) மடித்துக் கட்டுதல்; to pack

*[கவ்வு → கவள் – கவளி.]*

**கவளிகரி–த்தல்** *kavaḷigari-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. முழுவதையும் விழுங்குதல்; to take in at one sweep. 2. அனைத்தும் எடுத்துக் கொள்ளுதல் (கொ.வ.); to misappropriate.

**க.** கவர்தெகொள்

*[கவுள் → கவுளி → கவளி + கரி – கவளிகரி கவளிகரி.]*

*கவளித்தல் என்னும் வினையே போதுமானது. வடமொழித் தாக்கத்தால் கரித்தல் துணைவினையாயிற்று. கவுளிகரித்தல் = கவுளுள் அடக்குதல், விழுங்குதல். இச்சொல் வடமொழியின் கபளீகர எனத்திரிந்து, வாய்க்கொப்பளிக்கும் அளவுள்ள நீரையே குறித்தது.*

**கவளிகை**[1] *kavaḷigai,* பெ.(n.) கட்டு; bundle, as of books. *"புத்தகங் கட்டியார்த்த கவளிகையே கொலோ" (சேதுபு.இராமதீர்.49.)*

**க.** கவளிகெ, கவளிக.

*[கவளி → கவளிகை.]*

**கவளிகை**[2] *kavaḷigai,* பெ.(n.) ***கவளம்***[2]*. (யாழ்.அக.)* பார்க்க; see *kavaḷam.*

*[கவளம் → கவளிகை.]*

**கவளிகைக்கட்டு** *kavaḷigai-k-kaṭṭu,* 12. செ.குன்றாவி. (v.t.) ஒன்றாகச் சேர்த்துக் கட்டுதல்; to pack, to bundle.

**க.** கவளிகெகட்டு

*[கவளிகை + கட்டு.]*

**கவற்சி** *kavaṟci,* பெ.(n.) 1. ஆர்வத்துடிப்பு; anxiety, concern. *"இரங்கினர் கவற்சியெய்தி புணைவிழச் சலதி யாழ்ந்து புலம்புகொள் மாக்களே போல்" (கந்தபு.மேரு.19.).* 2. மனவருத்தம்; grief, sorrow, anguish.

*[கவல் = பிளவு, வருத்தம் (கவலல்) கவல் + சி = கவற்சி. 'சி' பண்புப் பெயரீறு.]*

**கவற்சி**[2] *kavaṟci,* பெ.(n.) விருப்பம்; desire *"நாட்டிய கவற்சியோடு நண்ணியங் கிருந்தானன்றே" (சேதுபு. வேதாள 39.)*

*[கவ்வு → கவ்வல் → கவல் + சி → கவற்சி.]*

**கவற்சீரகம்** *kavaṟcīragam,* பெ.(n.) பிளவுச் சீரகம்; a split cumin seed (சா.அக.).

*[கவல் = பிளவு. கவல் + சீரகம்.]*

**கவற்றி** *kavaṟṟi,* பெ.(n.) ஆர்வத்துடிப்பு; anxiety. *"புடை கவற்றியில்லா நிலைமைக்கண் வந்தால் ஒரு மறுமாற்றஞ் சொல்லும் பிற" (இறை.12,உரை.).*

*[கவல் + தி = கவற்றி.]*

**கவற்று–தல்** *kavaṟṟu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. கவலையுறுத்துதல்; to cause anxiety or sorrow. *"காதல் கவற்று மனத்தினால் கண்பாழ்பட்டேதில வரை இரவு." (நாலடி,306.)* 2. வருத்துதல்; afflict. *"களிகொண்ட நோக்கங்கவற்ற" (பு.வெ.15.)*

*[கவல் → கவற்று –.]*

**கவற்றுமடி** *kavarru-madi,* பெ.(n.) பட்டாடை வகை (சிலப்.14, 108, உரை.); a kind of silk used in an ancient times.

*[கவற்று + மடி. கவான் + து. கவாற்று → கவற்று (இடையில் கச்சாக உடுத்தத்தக்க) மடி = மடித்த துணி.]*

**கவறல்** *kavaral,* பெ.(n.) 1. ஆர்வம் மீதூர்தல்; being anxious. 2. வருந்துகை; sorrowing, grieving. *"கவறல் கொண்டு கலங்கரு ரெய்தினார்" (கந்தபு.மேரு.68.).*

**க.** கழல், களல், களலு.

*[கவல் → கவலு → கவறு → கவறல்.]*

**கவறாடல்** *kavarādal,* பெ.(n.) சூதாடுகை; gambling. *"ஏகவின்பக் காமக் கவறாட லியைவ தன்றே" (சீவக.1657.).*

*[கவறு + ஆடல்.]*

**கவறு[1]** *kavaru,* பெ.(n.) சோழி; cowrie.

**ம.** கவடு; **க.** கவடெ, கவடு; **து.** கவடெ, கவடு; **தெ.** கவ்வ கவறறு.

**Skt.**kapardikā; **Mar.** kavadi; **H.** kaudi; **Pkt.** kavaddinu.

*[கவல் → கவர் → கவறு (பிளவுண்ட தோற்றமுடையது.]*

**கவறு[2]** *kavaru,* பெ.(n.) 1.சூதாடுகருவி; dice. *"பொதும்புதோறு அல்கும் பூங்கண் இருங்குயில் கவறுபெயர்த்து அன்ன" (நற்.243:4–5).* 2. சூது; gambling. *"கள்ளுங் கவறுந் திருநீக்கப் பட்டார் தொடர்பு" (குறள்,920).*

*[கவர்தல் = பற்றுதல், பறித்தல். கவா அன் = கவருங்கள் வன். கவர் → கவறு = கவருஞ்சூதாட்டு, சூதாடுகருவி (மு.தா.13.).]*

தனிக்காய் நகர்த்தியும் காய்களைக் குறிப்பிட்ட எண்ணிக்கையில் பிரித்து வைத்தும் ஆடும் தாயக்கட்டம், ஆடுபுலி, பல்லாங்குழி போன்ற ஆட்டங்கள் பொழுது போக்கு அகமனை விளையாட்டுகளாகத் தொடங்கிப் பணயம் வைத்தாடும் பந்தயச் சூதாட்டங்களாக மாறியன என்பதால் பிரித்து வைத்தல், பிரித்தெடுத்துக் கொள்ளல், பறித்துக் கொள்ளல் என்னும் பொருள்களில் கவறு, எனுஞ்சொல் வளர்ந்து சூதாட்டத்தைக் குறித்தது.

**கவறு[3]** *kavaru,* பெ.(n.) 1. பனைவிட்டம் (யாழ்ப்.); palmyra timber. 2. பனைமட்டை; the stem of palmyra leaves (சா.அக.).

*[கவல் → கவறு = அறுத்தது. நெடுகப்பிளந்தது.]*

**கவறுருட்டு–தல்** *kavaruruttu-,* 5 செ.கு.வி.(v.i.) சூதாடுதல்; to play at dice.

*[கவறு + உருட்டுதல்.]*

**கவறை** *kavarai,* பெ.(n.) வடுகருள் ஒரு பிரிவினர்; Balija caste among the Telugus.

**ம.** கவர; **க.** கலரிக.

*[கவர் → கவறு பிரிவு, கவறு → கவறை. சோழியர் பிரிவைச்சேர்ந் தவர்.]*

**கவனஈர்ப்புத்தீர்மானம்** *kavana-īrppu-t-tirmānam* பெ.(n.) அவையில் ஒரு பொருள்பற்றிய பேச்சு நடந்து கொண்டிருக்கும் போது வேறொரு விரைவு பொதுச் சிக்கலை அவைத் தலைவரின் இசைவோடு அவையில் முன்வைக்கும் தீர்மானம்; Call Attention motion in legislative bodies.

*[கவனம் + ஈர்ப்பு + தீர்மானம்.]*

**கவனக்குறைவு** *kavana-k-kuraivu,* பெ.(n.) முன் னெச்சரிக்கை இல்லாமை; lacking in foresight, not attentive.

**கவனம்[1]** *kavanam,* பெ.(n.) அக்கறை; interest. குழந்தையைக் கவனமாகப் பார்த்துக்கொள் (உ.வ.).

*[கவலம் → கவனம்.]*

**கவனம்[2]** *kavanam,* பெ.(n.) நினைவோட்டம்; mental activity

*கவ்வு → கவ்வல் → கவல்(கவர்) = உள்ளத்தில் பதிதல். கவல் → கவலம் → கவனம் (வடதமிழ்ச்சொல்லாட்சி).*

வடமொழியாளர் gamana [செல்லுதல் என்னும் சொல்லிலிருந்து 'கவனம்' வந்ததாகக் காட்டுவது பொருந்தாது. வடமொழி gamana நினைத்தல், கருதுதல் பொருளில் யாண்டும் ஆளப்படவில்லை.

**கவனம்[3]** *kavanam,* பெ.(n.) 1. கருத்து; attention, care. படிப்பில் உன் கவனத்தைச் செலுத்து (உ.வ.). 2. பரிப்பு, வேகம்; swiftness, rapidity, velocity, *"கவன மாம்பரி இரதமேற் பனிபடுங்காலைத்" (கந்தபு படையெழு.18).*

**ம.** கவ்வ, கவனம்; **க.** கவன; **து.** கவ; **கோத., துட.,** **பட.** தவ (இரக்கம், அன்பு).

*[கவல் → கவலம் → கவனம்.]*

**கவனம்**[4] *kavaṉam,* பெ.(n.) காடு, (திவா.); forest, jungle

*[கா → காவு → காவணம் → கவனம். (கொ.வ.)]*

**கவனி-த்தல்**[1] *kavaṉi,* 4 செ.குன்றாவி.(v.t.) நுட்பமாய்ப்பாத்தல்; to be attentive to, to attend to, take notice of, heed, observe. போக்குவரத்துச் சாலையைக் கவனித்துக் கடக்கவும் (உ.வ.).

*[கவ்வு → கவல் → கவலி → கவனி.]*

**கவனி**[2] *kavaṉi,* பெ.(n.) கந்தகச் செய்நஞ்சு (மு.அ.); mineral poison.

*[கவல் → கவலி → கவனி.]*

**கவனி**[3] *kavaṉi,* பெ.(n.) கொன்றை; common cassia (சா.அக).

*[கவனம் → கவனி.]*

**கவனிப்பு** *kavaṉippu,* பெ.(n.) கருத்தூன்றுகை; attention, செய்யும் வேலையில் கவனிப்புத் தேவை (உ.வ.).

**Chin.** guān

*[கவனி → கவனிப்பு.]*

**கவா** *kavā,* பெ.(n.) 1. வெள்ளைக் காக்கணம்; white flowered mussel-shell creeper. 2. காட்டுமல்லிகை; wild jasmine (சா.அக.).

*[கல் → கவவு → கவா.]*

**கவாஅன்** *kavāaṉ,* பெ.(n.) கள்வன்; thief, robber, thief, *"விண்ணுயர் விறல்வரைக் கவாஅ னொருவன்" (இலக்.வி.580 உரை).*

*[கவ்வு → கவாஅன்.]*

**கவாஅன்**[2] *kavāaṉ,* பெ.(n.) 1. பக்கமலை (ஐங் குறு.299, உரை); side mountain. *"குன்றநாடன் குன்றத்துக் கவாஅன்" (ஐங்குறு 299).* 2. மலைப் பக்கம்; slope of hill. *"மாயோன் அன்ன மால்வரைக் கவாஅன்" (நற்.32).* 3. ஒட்டிய மலைப்பிரிவு; இரு குவடுகள் சேருமிடம்; mountain slope. *"வான்றோய் சிமைய விறல்வரைக் கவாஅன்" (அகம் 3.6.).* 4. பக்கம் (நற்.357,உரை.); side *"சேண்உறத் தோன்றும் குன்றத்துக் கவாஅன்" (நற். 357).*

*[கவை → கவாஅன்.]*

**கவாஅன்**[3] *kavāaṉ,* பெ.(n.) கள்வன்; robber. *"விண்ணுயர் விறல்வரைக் கவாஅ னொருவன்" (இலக்.வி.5.க,உரை).*

*[கவ்வு → கவா → கவாஅன்.]*

**கவாட்டி** *kavāṭṭi,* பெ.(n.) சிப்பி; oyster. துரைமார் கவாட்டிபிடிக்கப் போயிருக்கிறார்கள் (யாழ்ப்).

*[கவை → கவாள் + தி – கவாட்டி.]*

**கவாடஇளகியம்** *kavāḍa-iḷagiyam,* பெ.(n.) துவர்ப்புச் சரக்குகளால் ஆன, வயிற்றுப் போக்கைக் கட்டுப்படுத்தும் இளகியம்; an electuary prepared by astringent drugs, to arrest dysentery (சா.அக).

*[கவாடம் + இளகியம்.]*

**கவாடக்காரன்** *kavāḍa-k-kāraṉ,* பெ.(n.) 1. பொதி மாட்டுக்காரன் ( வின்); he who conveys burdens on bullocks. 2. புல்வெட்டுவோன் (யாழ். அக); grass-cutter.

*[**தெ.** கபாடமு + காரன்.]*

**கவாடகுளிகை** *kavāḍa-kuḷigai,* பெ.(n.) வயிற்றுப் போக்கைக் கட்டும் துவர்ப்பான மாத்திரை. (பைசச.154); a kind of astringent styptic pill.

*[கவாடம் + குளிகை.]*

**கவாடபுரம்** *kavāḍapuram,* பெ.(n.) பாண்டி நாட்டுத் துறைமுக நகர் (பழந்.தமி. 115); a port city in the kingdom of Pandya's

*[கவாடம் + புரம்.]*

**கவாடம்**[1] *kavāḍam,* பெ.(n.) ஓர் எருது சுமக்கக் கூடிய விறகு அல்லது புல் அல்லது வைக்கோலின் பொதி; (வின்); a bullock-load of wood or grass or straw.

*[**தெ.** கபாடமு. > **த.** கவாடம்.]*

**கவாடம்**[2] *kavāḍam,* பெ.(n.) கதவு; door. *"மன்னு மறையோர் திருநரையூர் மாமலை போல் பொன்னி யலுமாடக் கவாடம் கடந்து புக்கு" (திவ் இயற். பெரிய.ம.43).*

*[கவை → கவல் → கவள் → கவடு → கவடம் → கலாடம் = இரட்டைக் கதவு அமைந்த நுழை வாயில் இரண்டாகப் பிளவுபட்ட ஓடுடைய சிப்பியை கவாட்டி என்பது ஈழநாட்டு வழக்கு.]*

**கவாடம்**[3] *kavāḍam,* பெ.(n.) பாண்டி நாட்டுத்துறை முக நகர் (பழந்.தமி.115.); a port city in the kingdom of Pandyas.

*[கவாடம்² → கவாடம்]*

**கவாலி** *kavāli,* பெ.(n.) ***கபாலி*** பார்க்க; see *kabāli*. *"கவாய் கதிர்முடி மேற் கங்கைதனை" (பதினோ பரண.சிவ. திருவந்.12.)*

**Skt.** kapālin.

*[கபாலி → கவாலி.]*

**கவாளம்** *kavāḷam,* பெ.(n.) காயக்கட்டு (இராட்.); bandage for wound.

*[கவ்வு → கவ்வளம் → கவாளம்.]*

**கவான்** *kavāṉ,* பெ.(n.) 1. இரு குவடுகள் சேருமிடம்; mountain slope. *"மால்வரைக் கவான்" (பட்டினப் 138)* 2. தொடைச்சந்து, தொடை; thigh *"கழுமியவுவகையிற் கவாற்கொண்டிருந்து" (மணிமே. பதி,27):* 2. திரள்; multitude; collection, as of trees in a forest, *"கவானுயர் சோலையின் வாய்வண்டல் ஆருழைக் கண்டனமே" (தஞ்சைவா. 119).*

*[கவை → கவான்: கவைத்த தொடைச்சந்து, அது போன்ற மலை.சந்து. வடமொழியில் மூலமில்லை.*

**கவான்செறி** *kavāṉ-ceṟi,* பெ.(n.) தொடையில் அணியும் ஓர் அணிகலன் (சிலப்.6,86,அரும்.); an ornament worn on the thigh.

*[கவான் + செறி]*

**கவானக்கவுட்டி** *kavāṉa-k-kavuṭṭi,* பெ.(n.) கிட்டிப் புள்ளு விளையாட்டில் வெற்றிபெற்றவன், தொடைகளின் வழியாய் எறியும் புள்ளை எறிந்த இடத்திற்கு, ஒரே மூச்சில் தோற்றவன் எடுத்துவரும் ஒறுப்பு; (இட.வ.) punishment by which defeated party in the game of kiṭṭi-p-puḷḷu takes to the post in one breath, the stick thrown by the winner between his thighs.

*[கவான் + அம் + கவுட்டி.]*

**கவி**[1]**–தல்** *kavi-,* 4 செ. குன்றாவி.(v.t.) 1. மூடுதல்; to cover, overspread, bend in or over, over shadow. *"வாய்கவிந்த வையகம் எல்லாம் பெறினும் உரையற்க பொய்யோ டிடைமிடைந்த சொல்"(நாலடி 80.).* 2. வளைதல்; to surround, hem in, invest *"கயந்தலைக் குழவிக் கவியுகிர் மடப்பிடி" (அக.நா.229).*

**ம., க.,** கவி; **தெ.** கவிபு; **து.** கபி.

*[குவி → கவி]*

**கவி**[2] **–தல்** *kavi,* 4 செ.கு.வி (v.i.) 1. கருத்தூன்றுதல்; to be eagerly intent upon, to be absorbed earnestly in. அவர் மனம் அதிற்கவிந்திருக்கிறது (உ.வ.). 2. இடிதல்; to break down, as the bank of a river; to crash, fall. *"பிணியகத்திருந்து, பீடுகாழ் முற்றி அருங்கரை கவியக் குத்தி" (பட்டினப்.222.223).* 3. கவிழ்தல்; to hang down, as the head. *"கவிதலை எண்கின் பருஉமயிர் ஏற்றை" (நற்.325.1.).*

*[குவி → கவி]*

**கவி**[3]**–த்தல்** *kavi-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. வளைந்து மூடுதல்; to cover as with an umbrella; to overshade; to cover over, as an arch. *"கொல்லாற் செய்த வேலாற்குக் குடையாய் நின்று கவித்ததுவே" (சூளா. அரசி. 213).* 2. முடியைக் கவித்துச் சூட்டுதல்; to invest with, as a crown. *"இளையவற் கவித்த மோலி யென்னையுங் கவித்தியென்றான்" (கம்பரா. விபீடன.145).* 3. மூடுதல்; to close. *"கன்றுபுகு மாலை நின்றோள் எய்திக் கைகவியாச் சென்று கண்புதையாக் குறுகி" (அகநா.9–21).*

**Port.** cobrir

*[குவி → கவி → கவி – த்தல்.]*

**கவி**[4] *kavi,* பெ.(n.) குரங்கு; ape, monkey. *"கவிக்குல மவற்றுக்கெல்லாம் நாயகன் சுக்கிரீவன்" (கம்பரா. உருக்காட்.29).*

**Skt.,H.** kavi; **Nep.** kabi.

*[கவி → கவிழ் : தொங்குதல், மரம், மற்றும் கொடிகளில் தொங்கும் தன்மையுடையதால் இப்பெயர் பெற்றிருக்கலாம்.]*

**கவி**[5] *kavi,* பெ.(n.) 1. பூனைக்காலி (மலை); cowhage. 2. முருங்கை; drum stick tree (சா.அக).

*[கவி⁴ → கவி⁵]*

**கவி**[6] *kavi,* பெ.(n.) 1. பள்ளம்; depth, pit deep valley. 2. அளை, குகை; cave, cavern in a mountain or rock.

**க.,தெ.,து.,** கவி. **Skt.** guhā.

*[கவி³ → கவி]*

**கவிக்கட்டை** *kavikkaṭṭai,* பெ.(n.) 1. ஐம்பான் முடிகளுள் ஒன்று; a mode of dressing the hair of women. 2. கழுத்தின் பின்குழி; depression on the nape of the neck. 3. ஒருவகைப் பிளவை; swollen ulcer on the back of the head.

*[குவி → கவி + கட்டை.]*

**கவிகண்ணோக்கு** *kavi-kaṇṇōkku,* பெ.(n.) புருவத்திற்கு அண்மையில் கையைக் கவித்துக் கொண்டு பார்க்கும் பார்வை; looking at objects by shading one's eyes with the hand *"கவி கண்ணோக்கின் செந்தொடை பிழையா வன் கணாடவர்" (புறநா.3,19).*

*[கவி + கண் +நோக்கு.]*

**கவிகம்**[2] *kavigam,* பெ.(n.) கடிவாள இரும்பு (சங்.அக); bit of a bridle, the metal part of the bridle put into a horse's mouth.

*[கவ்வு → கவி +கம்]*

**கவிகை**[1] *kavigai,* பெ.(n.) 1. வளைவு; bending, being concave *"உமணர் கீழ்மரத் தியாத்த சேமவச் சன்ன இசைவிளங்கு கவிகை நெடியோய்" (புறம் 102.).* 2. குடை; umbrella. *"வேந்தன் கவிகைகீழ்த் தங்கு முலகு" ( குறள். 389) "நெடுங்கவரி கவிகையென" (இரகு. அரசி 14.)* 3. நன்மை தீமை; good and evil *"நொதுமலர் கவிகை" (ஞானா.29,4).*

*[குவி → கவி + கை.]*

**கவிகை**[2] *kavi-kai,* பெ.(n.) ஈகம் (தியாகம்); lit, inverted palm of the hand, transfer, liberality, munificence,bounty. *"காரினை வென்ற கவிகையான்" (பு.வெ.9,29).* 2. கொடுத்துக்கவிந்த கை; munificient hand. *"வரையாது சென்றோர்க் கானாது ஈயுங் கவிகை வண்மை" (புற.நா. 54, 6–7).*

*[கவி + கை.]*

**கவிச்சடி–த்தல்** *kaviccaḍi-,* 4 செ.கு.வி.(v.i.) அழுகிய மீன் நாற்றம் வீசுதல்; to smell, rankle

**து.** கௌண்டுனி

*[கவிச்சு + அடி]*

**கவிச்சி** *kavicci,* பெ.(n.) **கவிச்சு** பார்க்க; see *kaviccu.* ஆசாரப் பூசைச் சட்டி அதன் மேல் கவிச்சிச் சட்டி; (பழ).

*[கவிச்சு → கவிச்சி (கொ.வ.)]*

**கவிச்சு** *kaviccu,* பெ.(n.) புலால் நாற்றம்; stench of fish, of raw flesh, of rotten eggs. *"கழுவிக்கழுவி ஊற்றினாலும் கவிச்சு நாற்றம் போகாது" (பழ.).*

**ம.** கவர்; **க.** கவுரு, கவரு, கமரு; **து.** கௌண்டு; **தெ.** கமரு.

*[குமிழ்) → குமிர் → கமர்(தல்) =பொங்கிவருதல், உணர்வு வெளிப்படுமாறு வரும் அழுகை; கமர் → கமர்ச்சு → கவர்ச்சு → கவிச்சு = தன்னுள் அடங்கிய இயல்பு நாற்றம் வெளிப்படுதல்.]*

**கவிச்சுக்கடை** *kaviccu-k-kaḍai,* பெ.(n.) 1. மீன் கடை; fish-stall. 2. இறைச்சிக் கடை;muttan stall.

*[கவிச்சு + கடை.]*

**கவிசனை** *kaviśaṉai,* பெ.(n.) 1. உறை (மாறனலங். 120, 248, உரை); wrapper, envelope, cover, sheath. 2. சேணம் (சங்.அக); saddle-pad, saddle.

**தெ.** கவிசென; **ம.** கவியன்

*[கவிழ் + அணை → கவிழணை → கவிசணை.]*

**கவிசுகட்டி** *kaviśukaṭṭi,* பெ.(n.) பாண்டுவினால் வயிற்றில் ஏற்படும் கட்டி; a tumour in the stomach arising from dropsy (சா.அக).

*[கவிச்சு + கட்டி.]*

**கவிசை** *kaviśai,* பெ.(n.) வயிற்றுக்கட்டி (வின்); tumour in the stomach.

*[கவிசு → கவிசை. கவிசு = கட்டி.]*

**கவிணியன் சங்கரன்** *kaviṇiyaṉsankaraṉ,* பெ.(n.) கும்பகோணம் வட்டம் திருவிசலூர்க் கோயிலுக்கு அணையா விளக்கு எரித்திட நன்கொடை வழங்கிய பெண்ணின் கணவர்; husband of a lady who made donations for a perpetual lamp in the Thiruvisalur temple in Kumbakonam taluk. *"தென்கரைத் திருமழலை கவிணியன் சங்கரன் தோலன் பிராமணி சமாதி கொற்றி வைத்த விளக்கு" (தெ.இ.கல்.தொ.23 கல் 321).*

*[கவுணியன் →கவிணியன் + சங்கரன். கவுணியன் = ஆரிய வகுப்பினருள் ஒரு பிரிவைக் குறித்த பெயர்.]*

**கவிப்பர்** *kavippar,* பெ.(n.) ஆ (பசு) மறையச் சொறி யும் அளவுக்கு தேடிய பொருளுள்ள வணிகவகையினர் (சிலப்.15,179, அரும்); one of three main divisions of Vaisya caste, as those whose store of wealth is so large as to immerse a cow within it, the other two being ippar and peruṅ-kuḍiyar.

*[கவி → கவிப்பர்.]*

**கவிப்பு** *kavippu,* பெ.(n.) 1. மூடுகை; covering, over shading. 2. குடை (பிங்.); canopy, umbrella, awning. 3. மனம் பற்றுகை; partiality, bias, predilection. அவர் இவர்கள் மேல் கவிப்பாயிருக்கிறார் (வின்.).

*[கவி → கவிப்பு.]*

**கவியம்** *kaviyam,* பெ.(n.) கடிவாளம். (பிங்.); bit of a horse's bridle.

**Pkt.** kaviya

*[கவி + அம்]*

**கவிர்** *kavir,* பெ.(n.) 1. முள் முருக்கு; Indian coral tree. *"கவிரி தழ் அன்ன காண்பின் செவ்வாய் அந் தீங் கிளவி ஆயி தழ் மடந்தை" (அகநா.3.:14,15).* 2.உவர்நீரின் மினுமினுப்பு; glitter, glittering of salt water.

*[கவி → கவிர்.]*

**கவிரநாடு** *kaviranādu,* பெ.(n.) திருக்கோகர்ணம் அமைந்துள்ள நாட்டுப் பகுதியின் பெயர்; name of the region containing Thirukkōkarnam. *"கவிர நாட்டுத் திருவெரும்பியூர் ஊரோம்" (தெ.இ.கல். தொ.19 கல் 395).*

*[கவிர் → கவிரம்.]*

**கவிரம்**[1] *kaviram,* பெ.(n.) 1. தெய்வத் தன்மையுள்ள ஒரு மரம். (சீவக.1710, உரை); a celestial tree. 2. அலரி; oleandar.

*[கவிர் → கவிரம்.]*

**கவிரம்**[2] *kaviram,* பெ.(n.) ஆய்வள்ளலின் நாட்டி லிருந்த பக்க மலைகளுள் ஒன்று (அகநா.198, உரை); one of the mountain sides which can be seen from the kingdom of Aayvallal.

*[கவி → கவிர் + அம். கவி = மூடு, வளைந்து சூழ்ந்துள்ளது.]*

**கவிவு** *kavivu,* பெ.(n.) 1. உள்வளைவு; inner bend (சா.அக). 2. குழிவு; conical shape.

*[கவி → கவிவு.]*

**கவிழ்–தல்** *kavil-,* 4 செ.கு.வி.(v.i.) 1. தலைகீழாதல்; to be capsized, turned bottom upwards, to turn down. தோணிக விழ்ந்தது (உ.வ.). 2. நாணமுதலிய வற்றால் தலையிறங்குதல்; to bow one's head from modesty; to hang down, as the head, with shame, confusion, defeat. *"காணின் குவளை கவிழ்ந்து நிலனோக்கும் மாணிழை கண்ணொவ்வேம் என்று" (குறள் 1114.).* 3. குனிதல்; to stoop, bend down. *"கவிழ்ந்து நிழறுழாம் யானை" (யாப்.36.).* 4. நிலை குலைதல்; to be overthrown, discomfited, routed. எதிரிகள் சேனை கவிழ்ந்தது. 5. அழிதல்; to die, perish *"தான் சாவ உலகு கவிழும்" (சிலப்.7,50. அரும்.)* 6. முழுகிப்போதல்; to be submerged, to founder. *"மாரி யிரவின் மரங்கவிழ் பொழுதின்" (புறநா.238.16). "கங்கையிற் கவிழ்ந்திட்டான் கொலோ" (பாகவ.1,6,6.).* 7. தாழ்தல்; to fall low. *"கதிர்தெறக் கவிழ்ந்த உலறுதலை நெறியயல் மராஅம் ஏறி" (அகநா.81, 7–8).*

**ம.** கவிழ்; **க.** கவிசு, கவசு, கவுசு; **குட.** கவின்; **து.** கப்பெ, கப்ய.

*[கவி → கவிழ்.]*

**கவிழ்**[2]**–த்தல்** *kavil-,* 11 செ.குன்றாவி.(v.t.) 1. கவிழச் செய்தல், தலைகீழாக இறங்குதல்; to turn upside down,capsize,invert. *"கவிழ்மயி ரெருத்திற் செந்நா யேற்றை குருளைப்பன்றி கொள்ளாது கழியும்" (ஐங்குறு.397,1–2).* 2. கெடுத்தல்; to topple,ruin, destroy நாட்டையெல்லாங் கவிழ்த்துப் போட்டான் (உ.வ.). 3. மூடுதல்; to put a cover. பானையின்மேல் சட்டியைக் கவிழ். 4. ஒழுகவிடுதல்; to pour out. *"இருகவுள் கவிழ்த்த மதநதி உவட்டின்" (கல்லா. கணபதிதுதி).* 5. வெளிப்படுத்துதல்; to shed, as tears;to emit *"கார்கண்டு கவிழ்த்த விழிப்புனல்" (தணிகைப். நாட்டுப்.71).* 6. நிலை குலைத்தல்; to overthrow. ஆட்சியைக் கவிழ்த்து விட்டார்கள் (உ.வ).

**க.** கவிசு; **ம.** கவிழ்த்து, கமிழ்த்துக; **குட.** கவின்ம்ப், **பட.** கவுசு.

*[கவி → கவிழ் → கவிழ்த்தல்.]*

**கவிழ்தும்பை** *kavil-tumpai,* பெ.(n.) 1. கவிழ்ந்து பூக்கும் தும்பை வகை; a low annual plant flourishing in dry localities. 2. மலைத்தும்பை; hill toombay (சா.அக).

*[கவிழ் + தும்பை.]*


கவிழ்தும்பை

**கவிழ்வேல்** *kavilvēl,* பெ.(n.) குடைவேல்; umbrella thorn babool (சா.அக.).

*[கவி → கவிழ் + வேல்.]*

**கவிழம்** *kavilam,* பெ.(n.) மோர்; butter milk (சா.அக).

**மறுவ.** கவிளம் (கொ.வ)

**க.** கழல்

*[குவி → கவி → கவிழ்→ கவிழம்]*

**கவின்**[1] *kavin,* பெ.(n.) அழகு; beauty,grace, fairness,comeliness. *"கார் செய் தன்றே கவின்பெறு கானம்" (அகநா.4.7.).*

*[கவி→கவின். கவி = சூட்டுதல், அணிவித்தல், அழகுபடுத்துதல்.]*

**கவின்கலை** *kavin-kalai,* பெ.(n.) உணர்வுகளைத் தொடும் பாடல், இசை, ஓவியம், சிற்பம், கட்டடக் கலை போன்றவற்றின் அழகுத் தன்மை; those apealing to sense of beauty, as poetry music,painting, sculpture, architecture.

*[கவின் + கலை. கவின் = அழகு.]*

**கவின்**[2]**(னு)-தல்** *kavin,* 13 செ.கு.வி.(v.i.) அழகு பெறுதல்; to be beautiful, fair,graceful,comely.

*[கவி → கவில்→ கவின் → கவினுதல்.]*

**கவின்**[3] *kavin,* பெ.(n.) கொடிமுந்திரிப்பழம்; vine fruit (சா.அக).

*[கவி (தொங்குதல்) → கவின்.]*

**கவினம்**[1] *kavinam,* பெ.(n.) கடிவாளம் (நாமதீப); bit, metal mouth piece in bridle.

*[கவ் → கவி → கவினம்.]*

**கவினம்**[2] *kavinam,* பெ.(n.) 1. வெண்ணெய்; butter 2. மோர்; butter milk. 3. பன்னீர்; rose water.

*[கவி → கவிழ் → கலக்கம், கவிழம் → கவினம்]*

**கவினல்** *kavinal,* பெ.(n.) 1.அழகு; beauty 2.பண்பு; culture.

*[கவின் → கவினல், 'அல்' சொ.ஆ.ஈறு.]*

**கவுக்கை** *kavukkai,* பெ.(n.) பாறையினடியில் தங்கும் கடல் மீன் (தஞ்.மீன.வழ); a kind of sea fish

**த.** கவுக்கை>**Skt.** kavika akind of fish.

*[கவி → கவு → கவுக்கை, பாறைகளால் வளைந்து மூடப்பட்ட பொந்துகளில் வாழ்வன.]*

**கவுகம்** *kavugam,* பெ.(n.) அம்மைப்பால்; lymph used in vaccination (சா.அக).

*[கோ → கோவு → கோவுகம் → கவுகம்.]*

**கவுச்சுமாறி** *kavuccūmāri,* பெ.(n.) தசையாசை பற்றிய காம வெறியன்; lustful person.

*[கவுச்சு + மாறி. (மாறியவன், தாவியவன் – நல்லியல்பு இருந்து தீய ஒன்றுக்கு மாறியவன்).]*

**கவுச்சு** *kavuccu,* பெ.(n.) 1. புலால், மீன் போன்றவற்றின் இயற்கை மணம், a natural smell of fresh meat, fish etc. 2. ஊன் உணவு; non vegetarian food.

*[கவுல் → கவுசு → கவுச்சு.]*

**கவுசனை** *kavušanai,* பெ.(n.) 1. உறை; wrapper, envelope,cover. *"கண்மூடா விண்மூடத் தேடுங் கவுசனை போல்" (ஒழிவி. யோகக்.8)* 2. சேணம்; saddle.

*[கவிழணை → கவுசனை.]*

**கவுசி**[1] *kavuši,* பெ.(n.) 1. குழைவு; fainting. 2. வருத்தம்; affliction.

**தெ.** காசி

*[கவல் → கவுல் → கவுசி.]*

**கவுசி**[2] *kavuši,* பெ.(n.) 1. ஒரு வகை வரிக்கூத்து. (சிலப்.3,13,உரை.) ; a kind of dancing with gestures. 2. பாட்டு (அக.நி.); song.

*[கவிழி → கவிசி → கவுசி.]*

**கவுசி**[3] *kavuši,* பெ.(n.) ஒருவகை நோய்; a kind of disease. *"கண்ட மாலை கவுசி மகோதரம்" (திருவாலவா.27,14.)*

*[கவுசி[1] → கவுசி[3].]*

**கவுசிகம்**[1] *kavusigam,* பெ.(n.) 1. வெண்பட்டு; silk. 2. கோட்டான்; rock horned owl. 3. குக்கில்; Indian olibanum (சா.அக).

*[கவுசி[1] → கவுசிகம்.]*

**கவுசிகம்**[2] *kavušigam,* பெ.(n.) 1. ஒரு பண் (சூடா.); a musical mode. 2. சாமமறை; Sāmavēda. *"வெளி யிடற்குள நுதலிய கவுசிகம்" (அரிசமய. பராங்குச.9).*

*[கவுசி[2] → கவுசிரம்.]*

**கவுசுத்தி** *kavušutti,* பெ.(n.) சுத்தியல்வகை (C.E.M.); claw-hammer.

*[கவை + சுத்தி → கவுசுத்தி.]*

**கவுட்டி** *kavutti,* பெ.(n.) தொடைச்சந்து;space between thighs.

*[கவை → கவுட்டி]*

**கவுடம்**[1] *kavuḍam,* பெ.(n.) கொடிவகைகளு ளொன்று (சூடா.); a kind of creeper.

*[கவை → கவடம் → கபுடம்.]*

**கவுடமாய்** *kavuḍam-āy,* கு.வி.எ.(adv.) பொருள் வெளிப்படையின்றி; with hidden meaning. *"செந்தமிழினுங் கவுடமாக வுரைசெய்தார்" (சிவதரு.சிவஞானயோ.124.).*

*[கவை → கவடு → கவடமாய்.]*

**கவுடி**[1] *kavuḍi,* பெ.(n.) ***கவடி***[2] (சூடா.) பார்க்க; see *kavuḍi*.[2] **U.** *kauḍi.*

*[கவடி → கவுடி.]*

**கவுடி**[2] *kavuḍi,* பெ.(n.) ஒருபண்; a musical mode. *"நெடிய கவுடியிசை" (திருப்பு.319).*

*[கவுள் → கவுளி → கவுடி.]*

**கவுடிகம்** *kavaḍu,*பெ.(n.) குளிர்தாமரை; sky lotus. (சா.அக.)

*[கவுள் → கவுளிகம் → கவுடிகம்.]*

**கவுடிப்பாய்வு** *kavuḍi-p-pāyvu,* பெ.(n.) ஒருவகை விளையாட்டு; kind of game.

*[கவடி + பாய்வு.]*

**கவுடு** *kavuḍu,* பெ.(n.) கழுத்தில் அணிவதும் பொற் குப்பியில் அமைந்ததுமான அக்கமணி; sacred eleocarpus bead enclosed in gold and worn round the neck.

*[கவுள் → கவுடு.]*

**கவுண்டதனம்** *kavuṇḍatanam,* பெ.(n.) ***கவுண்டிக்கை*** பார்க்க; see *kavuṇḍikkai.*

**க.** தவுடதன

*[கவுண்ட(ன்) + தனம்]*

**கவுண்டர்** *kavuṇḍar,* பெ.(n.) ***கவுண்டன்*** பார்க்க; see *kavuṇḍaṉ,*

*[கவுண்டன் → கவுண்டர் ; அர்' (உயர்வுப்பன்மை ஈறு)]*

**கவுண்டன்** *kavuṇḍaṉ,* பெ.(n.) தமிழர், கன்னடர் சிலர்க்குள் வழங்கும் (கொங்க வேளாளன், அனுப்பன், காப்பிலியன், பள்ளி, செம்படவன், ஊராளி, வேட்டுவன்) பட்டப் பெயர்; a caste title of certain Tamil and Canarese folk, as Kongavelalan Anuppan, Palli, Sembadavan, Urali, Vettuvan, Kappiliyan.

**மறுவ.** சாமந்தன், சாமுண்டன், காமுண்டன், கவுண்டன்.

**க.** காமண்ட, கஉண்ட, தவுட, தமண்ட, தவுண்ட, தவுண்டு, தவுடு, காமுண்டு, காவுண்ட, காவுண்டு, கொண்ட, கோவுண்டு, கௌஉட, கௌண்ட, கௌண்டு, கௌட, கௌடு, கௌவுண்ட; **தெ.** கௌடே.

**Pkt.** gāmauḍa,gāmaūḍa; **Skt.** gramavrutti.

கவுண்டன், காமுண்டன், காமிண்டன் என்பவை படைத்துறை மறவரின் பதவிப் பெயர்களாயிருந்து குலப் பெயர்களாக மாற்றப் பட்டவை. இவை எயின்குடி, வேளாண்குடி என்றாற் போன்ற குடிப்பெயராகவோ, குயவர்,மீனவர் என்றாற் போன்ற தொழில்வழி குலப்பெயராகவோ; சேர்ப்பன், குன்றன், பொருப்பன்,மூப்பன் என்றாற் போன்ற குலவழி தலைமக்கள் பெயராகவோ;

ஊராளி, நாட்டார் என்றாற் போன்ற ஆட்சிவழி அதிகாரப் பெயராகவோ வழங்கப்படவில்லை. பத்தாம் நூற்றாண்டில் தான் முதன்முதலாக நன்னி காமுண்டன் என்னும் பெயர் கல்வெட்டில் பயின்றுள்ளது. அதற்குமுன் இச்சொல்லாட்சி எங்கும் காணப்படவில்லை. சிற்றூர்த் தலைவர்கள் நாடுமுழுதும் கவுண்டன் என்னும் பெயரால் அழைக்கப்பட வேண்டும் என்று எந்த அரசர் காலத்திலும் ஆணை பிறப்பிக்கப்படவில்லை.

படை மறவர்களுள் சாமன், சாமந்தன், மாசாமந்தன் என்பவை படிப்படியாக உயர்ந்த பதவிகளைக் குறித்தன. பெரும்படைத் தலைவர் மாசாமந்தன் எனப்பட்டான். அவனுக்குக் கீழ் நிலையிலுள்ள அதிகாரி 'சாமந்தன்' எனப் பட்டான். இச்சொல் கன்னட ஆட்சியின் போது காமுண்டன் என்றும்,சோழர் ஆட்சியின் போது சாமுண்டன் என்றும் திரிந்தது. காமுண்டன் நாளடைவில் காவுண்டன் →கவுண்டன் எனத் தமிழிலும், கவுடு, கவுட எனத்தெலுங்கு கன்னட மொழிகளிலும் திரிபுற்றது. போர்க்காலத்திய பதவிப்பெயர் நாளடைவில் குலப்பெயராகி விட்டது. வழிவழி போர்மறவராயிருந்தவர் பற்றி, படையாட்சி என்றும் அழைக்கப்பட்டனர். யாழ்ப்பாணத்துப் பண்டார வன்னியனைக் கவுண்டன் எனக் குறிப்பிடவில்லை: உழவர்குடியில் பிறந்த திருநாவுக்கரசர் கவுண்டர் என அறியப்படவில்லை. வேளாளக் குடியினர் பத்தாம் நூற்றாண்டுக்கு முன்பு கவுண்டர் எனக் குறிக்கப்பட்டதில்லை. கன்னட, தெலுங்கு தாக்கம் பெறாத போதிலும் தென் தமிழகத்தில் இச்சொல் குலப்பெயராகவோ, குடிப்பெயராகவோ எப்பொழுதும் ஆளப்படவில்லை.

படைத்துறையில் தலைமை ஏற்றதால் பெற்ற முதலி என்னும் படைத்துறைப் பதவிப்பெயர் நாளடைவில் குலங்குறித்த (சாதி) பெயரானது போல், படைத்துறை பதவிப்பெயரான சாமந்தன் என்பது சாமுண்டன் → காமுண்டன் →கவுண்டன் எனத் திரிந்திருக்கிறது.

தொழில் வழி இன்ன குடியினர் என வகைப்படுத்துவ தல்லது தொழில் வழியைப் பிறப்புக்குரிய தொழில் எனத் தவறாக இட்டுக்கட்டி, தொழிலே பிறவிக் குலம் எனக் குறியிட்டுக் காட்டுவது தமிழர் மரபன்று. தமிழர் தொழில் வழிப் பதினெண்குடிகளைப் பிரித்தனரேயன்றி பிறப்புவழி நால்வலகைக் குலம் பிரித்து அதில் பற்பல குக்குலங்களை எக்காலத்திலும் பிரிக்கவில்லை என அறிக. தொழில்வழி குடியும் கொடிவழி குலமும் கூறப்படுதல் தமிழர் மரபு. பிறப்புக் கருதியும் நிறங்கருதியும் சாதிப் பாகுபாடு செய்வது ஆரியர் மரபு.

**கவுண்டி** *kavundi,* பெ.(n.) ***கவைக்கோர் கருவி*** பார்க்க; see *kavaik-kōr-karuvi.*

*[கவண்டி → கவுண்டி.]*



கவுண்டி

**கவுண்டிக்கை** *kavuṇḍikkai,* பெ.(n.) மிடுக்கான சிற்றூர் ஆட்சி அதிகாரம்; the business of a village

பட. தவுண்டிக்கெ; க. தவுடிகெ.

*[கவுண்டன் → கவுண்டிக்கை.]*

**கவுண்டிச்சி** *kavuṇḍicci,* பெ.(n.) சிற்றூர்த் தலை வரின் மனைவி; wife of a village chief.

க. கவுடகித்தி; பட. கவுடிச்சி.

*[கவுண்டன் (ஆ.பா) → கவுண்டிச்சி (பெ.பா).]*

**கவுணி** *kavuṇi,* பெ.(n.) ***கவுணியன்*** பார்க்க; see *kavuṇiyaṉ "கடையார்கொடி நன் மாடவீதிக் கழுமலவூர்க் கவுணி நடையார் பனுவன் மாலையாக ஞானசம்பந்தன்" (தேவா 138,12).*

**கவுணியர்கோன்** *kavaṇiyar-kōṉ,* பெ.(n.) கவுணிய குலத்துப் பெரியோரான திருஞானசம்பந்தர்; Campandar, the Saiva saint, so called from his being the most famous personage in the Caundinya Gotra *"கைந்நிறைந்த வொற்றறுத்துக் கலைப் பதிகங் கவுணி யர்கோன் பாடுங்காலை" (பெரியபு. திருஞா. 102).*

*[கவுணி → கவுணியர் + கோன்.]*

**கவுணியன்** *kavuṇiyaṉ,* பெ.(n.) 1. கவுணிய குலத்தான்; one born in the Caundinya Gotra சோணாட்டு பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் கவுணியன் விண்ணந்தாயனை ஆவூர் மூலங்முகிழார் பாடியது (புறநா,166). 2. கடைக்கழகப்புலவர் (அபி. சிந்); Sangam poet.கவுணியனார் பாடிய பாடலாகத் திருவள்ளுவமாலையில், *"சிந்தைக் கினிய செவிக்*

*கினிய வாய்க்கினிய வந்த இருவினைக்கு மாமருந்து –முந்திய நன்னெறி நாமறிய நாப்புலமை வள்ளுவனார் பன்னிய இன் குறள் வெண்பா"* எனக் காணப்படுகிறது.

*[கவுணி→ கவுணியன்.]*

**கவுணியன் விண்ணந்தாயன்** *kavuṇiyaṉ viṇṇandāyaṉ,* பெ.(n.) கடைக்கழகப் புலவர்; a poet of sangam age.

*[கவுணியன் (குடிப்பெயர்) + விண்ணந்தாயன்.]*

சோணாட்டுப் பூஞ்சாற்றூர்ப்பார்ப்பான் கவுணியன் விண்ணந் தாயனை ஆவூர் மூலங்கிழார் பாடியுள்ளார் [புறநா.166]. தாயன் என்னும் அடைமொழி துளுநாட்டில் வழங்குவதாதலின் இப்புலவர் துளுநாட்டிலிருந்து வந்தவராகலாம்

**கவுத்து[1]கவாதம்** *kavuttuga-vādam,* பெ.(n.) அறுபத்துநாலு கலைகளுள் வருந்துகின்ற மனத்தை மகிழ்விக்கும் விச்சை; art of bringing delight to a sorrowful mind, one of arupattu-nalu-kalai.

*[குவி→ கவி→ கவு→ கவுத்துகம் (மனத்தை ஓரிடத்தில் ஈர்ப்பது).]*

**கவுத்துவம்** *kavuttuvam,* பெ.(n.) திருமால் மார்பில் அணியும் மணி; jewel obtained from churning the sea of milk, and worn by Višnu on his chest. *"கவுத்துவங் கிடந்த மார்பின்" (கூர்மபு. அந்தகா.85).*

*[கவ்வு →கவு → கவுத்துவம் (வயிரமணி அழுத்திய நகை).]*

**கவுத்துவாய்** *kavuttuvāy,* பெ.(n.) வெண்ணிற மானதும், வெளவால்போல் உடல்பரப்பு அகலமானதும், வால்துடுப்பு மொட்டையானதுமான. ஒரு வகைக் கடல் மீன்; a kind of sea fish.

*[கவி→ கவு → கவுத்து = வளைந்து மூடிய. கவுத்து + வாய்.]*

**கவுதம்[1]** *kavudam,* பெ.(n.) மீன்கொத்தி (பிங்); common kingfisher.

*[கவ்வு→ கவு]*

**கவுதம்[2]** *kavudam.* பெ.(n.) மழைநீரால் சுவர் நனையாதிருக்க சுவரின் உச்சியில் கட்டப்படும் கட்டட அமைப்பு; super structure of a wall.

*[கவி→ கவு →கவுதம்.]*

**கவுதாரி** *kavudāri,* பெ.(n.) ***கதுவாலி*** பார்க்க; see *kaduvāli "சிவல்குறும்பூழ்.... பொறிமயிர்க் கவுதாரிகள்" (கம்பரா.பள்ளி.14).*

*[கதுவாலி→ கவுதாரி (இலக்கணப் போலி) (த.வ.134).]*

***கவுதாரி வகைகள்:*** *1. கல் கவுதாரி 2. வண்ணக் கவுதாரி 3. சாம்பற் பழுப்பு நிறக் கவுதாரி 4. கவுதாரி.*

**கவுதாரிபுடம்** *kavudāri-puḍam,* பெ.(n." ***கதுவாலிப் புடம்*** பார்க்க;see *kaduvāli-p-puḍam*

*[கதுவாலிப்புடம்→ கவுதாரிப்புடம்.]*

**கவுந்தியடிகள்** *kavundi-y-aḍigaļ,* பெ.(n.) சிலப்பதி காரம் குறிக்கும் சமணப்பெண் துறவி; female Jain ascetic *"காவதங் கடந்து கவுந்திப் பள்ளிப் பூமரப் பொதும்பர் பொருந்தி ஆங்கண்" (சிலப்.10.36,37).*

*[கந்து = பற்றுக்கோடு. கந்தன் (ஆ.பா.பெ.) →கந்தி (பெ.பா.பெ.) கந்தி = பற்றுக்கோடான பெண், பெண்தெய்வம்.* **த.** கந்தி >**வ.** கெளந்தி > **த.** கவுந்தி, காவுந்தி. கவுந்தி + அடிகள்

*அக்காலத்துச் சமணப் பெண்துறவிகளுக்குக் கந்தி என்ற பொதுப் பெயர் இருத்திருக்க வேண்டும் (பாவாணர் – செல்வி.66.பக்.392)*

**கவுமாரம்** *kavumāram,* பெ.(n.)1. இளமை; adolescence,youth. *"கவுமாரமாய் வயங்கு" (பாகவ.1,1,23).* 2.**கௌமாரம்** பார்க்க;see *kaūmāram.*goddess Sarasvati.

*[குமரம்→ கௌமாரம்→ கவுமாரம்.]*

**கவுமாரி** *kavu-māri,* பெ.(n.) மலைமகள்; Parvati.

*[குமரி→ கௌமாரி→ கவுமாரி.]*

**கவுமோதகி** *kavumōdagi,* பெ.(n.) திருமாலின் படைக்கலம்; mace of Višnu *"மாயோன் செங்கை மூரிநெடுந்தண்டு கவுமோதகி" (சேதுபு. துராசா.34).*

*[காவு + மோத (மோதும் தண்டு).]*

**கவுரகாசு** *kavura-kāšu,* பெ.(n.) அக்குமணி (சங்.அக.); conch bead.

*[கவை (பிளவு)→ கவுரி → கவுரி + காசு.]*

**கவுரம்** *kavuram,* பெ.(n.) 1. வெண்மை; white colour *"கவுரவா நிறத்தனாய்" (காஞ்சிப்பு. கழுவாய்.23)* 2. மஞ்சட்கரு; the yolk of an egg (சா.அக).

*[கவுரி→ கவுரம்.]*

**கவுரி** *kavuri,* பெ.(n.) சோழி; cowrie. 2. வெண்மை நிறம்; white colour.

*[கவடி → கவுரி (கொ.வ.).]*

**கவுரிக்கொம்பு** *kavuri-k-kombu,* பெ.(n.) மாட்டுக் கொம்பு; a cow's or bull's horn (சா.அக).

**கவுரிசங்கரம்** *kavuri-šaṅgaram,* பெ.(n.) கவுரி சங்கரர்களது உருவினதாய் இருபிளவுபட்ட ஒற்றை அக்கமாலை (உருத்திராக்கம்); a double rudraksa bead believed to represent Parvadi and Siva.

**கவுரிசெந்தூரம்** *kavurisenthūram,* பெ.(n.) சித்தர் நூல் முறைப்படி கவுரிச் செய்ந்நஞ்சைக்கட்டி அதனின்று செய்யப்படும் செந்தூரம்; a red-oxide prepared from consolidated yellow arsenic according to the Siddha process.

*[கவுரி + செந்தூரம்.]*

**கவுல்**[1] *kavul,* பெ.(n.) கெட்ட நாற்றம்; fetid odour, bad smell.

**க.** கவுலு, கவலு, கௌலு; **தெ.** கவுலு, கௌலு.

*[கமர் → கவுர் → கவுல்.]*

**கவுல்**[2] *kavul,* பெ.(n.) ஏய்ப்பு, (வஞ்சனை) (உ.வ.); deceit, fraud.

*[கவை → கவுல்.]*

**கவுல்**[3] *kavul,* பெ.(n.) இரவில் பளபளப்பாகத் தோன்றும் கடல் நீர். (செங்.மீன்.வழ.); glittering sea water at night.

*[கவின் → கவில் → கவுல்.]*

**கவுள்** *kavuḷ,* பெ.(n.) 1. கன்னம்; cheek. *"அங்குழை நெடுநிலையாஅம் ஒற்றி நனை கவுள்படி ஞிமிறு கடியும்" (அகநா.59.7–8).* 2.யானையின் கன்னம்; temple of an elephant. *"வினையான் வினையாக்கிக் கோடல் நனைகவுள் யானையால் யானையாத் தற்று" (குறள், 678).* 3. யானையின் உள்வாய்; jaw of an elephant. *"களிறு கவுளடுத்த எறிகற் போல" (புறநா.30,8.)* 4. பக்கம்; side. *"ஒலிகவுள் அம்சிலம்பும் கலையும் ஆரா கிண்கிணியும்" (சீவக.2967).*

**ம.** கவிள்; **க.** கவட; **H., Ur.** gāl; **Punj.** galha; **Sind.** gila-gito, **Mar., Guj.** gal-gala; **Beng.** Ass, gōla; **Ori.** gāla; **Skt.** kaola, gāla; **GK.** ghavolo.

*[கவ்வு → கவுள்=குறடுபோற்கவ்வும் அலகு, கன்னம். வடவர் காட்டும் கீரப்–கப் (இரங்கு) மூலம் இம்மியும் பொருந்தாது. த.கவுள் >* **Skt.** *kahola (வ.மொ.வ.110).]*

**கவுளி–த்தல்** *kavaḷi,* 4. செ.குன்றாவி (v.t.) கவுளில் அடக்கிக் கொள்ளுதல், வாய்கொள்ளும் சிற்றளவாக உண்ணுதல்; to chew slowly what is held between cheek and teeth.

*[கவுள் → கவ்வு = கவுளி.]*

**கவுளி**[2] *kavuḷi,* பெ.(n.) கவளி,வெற்றிலைக்கட்டு; pack of betel leaves,its number varying in different places.

*[கவ்வு → கவுள் → கவுளி.]*

**கவுளி**[3] *kavuḷi,* பெ.(n.) 1. பல்லி;lizard. *"இடத்தெழுந்த கவுளி நன்று" (குமர.பிர.மீனாட்.குற.11)* 2. சங்கு; conch.

**ம., து.,** தௌளி; **க.** தவுளி, கன்வளி; **கோண்.** கூவால்; **குட.** கவ்ளி; **தெ.** கவுலி கௌளி. **Skt.** gauli, godha (iguana).

*[கவ்வு → கவ்வுளி → கவுளி.]*

**கவுளி**[4] *kavuḷi,* பெ.(n.) தெங்கு வகை (சங்.அக); a kind of coconut-palm.

*[கவுள் → கவுளி.]*

**கவுளி**[5] *kavuḷi,* பெ.(n.) மரத்திலிருந்து கிளை பிரியுமிடம்;angular part of a branch.

*[கவை → கவுள் → கவுளி.]*

**கவுளிப்பாத்திரம்** *kavuḷi-p-pāttiram,* பெ.(n.) சங்குவலை; conch net.

*[கவுளி → பாத்திரம்.]*

**கவுளெலும்பு** *kavuḷelumbu,* பெ.(n.) கன்னவெலும்பு cheek bone or molar-bone (சா.அக).

*[கவுள் + எலும்பு.]*

**கவுனி** *kavuṉi,* பெ.(n.) கோட்டை வாயில் (இ.வ.); gate of a fort or a city. யானைக் கவுனி (இ.பெ.) (யானை புகும் வாயில்).

**தெ.** கவினி

*[கவாடம் = கதவு, வாயில். கவாடம் → கவானி → கவுளி → கவுனி.]*

**கவுனொட்டடை** *kavunōṭṭaṭai,* பெ.(n.) ஒட்டடை நெல்வகை (இட.வ.); a kind of oṭṭaḍai paddy.

*[கவின் → கவுன் + ஒட்டை.]*

# கவுதாரி வகைகள்



வண்ணக்கவுதாரி



கல்கவுதாரி



சாம்பற் பழுப்புநிறக்கவுதாரி



கவுதாரி

**கவேதனம்** *kavēthaṉam,* பெ.(n.) 1. ஒருவகை வெள்ளரி; a species of cucumber. 2. காக்கணம்; mussel-shell creeper (சா.அக).

*[கவை → கவேதனம்.]*

**கவேது** *kavēdu,* பெ.(n.) காட்டுக் கோதுமை. (சங். அக.); wild species of wheat.

*[கா = காடு. கா + கோது – காகோது → கவேது.]*

**கவேரகன்னி** *kavēra-kaṉṉi,* பெ.(n.) கவேரன் மகளான காவேரி ஆறு; the river Kaveri said to be the daughter of kavēraṉ. *"கவேர கன்னி பெயரோடு விளங்கிய தவாக்களி மூதூர்" (மணிமே.9.52)*

*[கவிரன் → கவேரன் + கன்னி.]*

**கவேரகாடு** *kavēra-kāḍu,* பெ.(n.) காவிரிப் பூம்பட்டினத்தருகில் கவேர முனிவர் வாழ்ந்த காடு; a forest near kāviri-p-pūm-paṭṭiṉam where kavēraṉ lived.

**மறுவ.** கவேரவனம்

*[கவேரன் + காடு.]*

**கவேரவனம்** *kavēra-vaṉam,* பெ.(n.) ***கவேர காடு*** பார்க்க; see *kavēra-kāḍu. "கவேரனாங் கிருந்த கவேரவனமும்" (மணிமே.3,56).*

*[கவேரன் + வனம்.]*

**கவேரன்** *kavēraṉ,* பெ.(n.) ஓர் அரச முனிவர் ; a royal sage (மணிமே.3.56).

*[கவரன் → கவேரன்.]*

**கவேலம்** *kavēlam,* பெ.(n.) குவளை (சங்.அக); Indian water-lily.

*[குவளை + கவேலம்.]*

**கவை[1]–த்தல்** *kavai-,* 4 செ.கு.வி.(v.i.) 1. கவடுபடுதல்; to fork, as a branch. *"கவைமுள்ளிற் புழை யடைப்பவும்" (புறநா.98–8).* 2. உளதாதல்; to be, exist. *"சிற்றிடைப் பெருமுலைப் பொற்றொடி மடந்தைதன் கவைஇய கற்பினைக் காட்டுழி இதுவே" (கல்லா.6,21–22).*

**ம.** கவய்க்குக

*[கவ(கவல்) → கவை.]*

**கவை[2]–த்தல்** *kavai-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. அகத்திடுதல்; to contain within oneself, to include. *"கழுஉ விளங்கு ஆரங் கவைஇய மார்பே" (புறநா.19,18.).* 2. அணைத்தல்; to join with embrace. *"நாணுமுட்கு கண்ணுவழி யடைதர ஒய்யெனப் பிரியவும் விடாஅன் கவைஇ" (குறிஞ்சிப்.185–186).*

*[கவ் + கவ – கவை.]*

**கவை[3]** *kavai,* பெ.(n.) 1. கவர்; division, cleavage as of a hoof, crab's claws *"பெயன்மழை துறந்த புலம்புறு கடத்துக் கவைமுட் கள்ளிக் காய்விடு கடுநொடி" (குறுந்,174,1–2).* 2. அடிமரத்தினின்று பிரியும் மரக்கிளை; branch of a tree *"கள்வர் பகைமிகு கவலைச் சென்னெறி காண்மார், மிசைமரஞ் சேர்த்திய கவைமுறி யாத்து" (அகநா, 257,12-14).* 3. கவ்வும் அலகு போன்ற கவட்டை, கவைக்கோல்; forked stick *"தொடுதோல் கானவன் கவை பொறுத்தன்ன" (அகநா,34,3).* 4. முனை கவரான இருப்பாயுதம்; a weapon with forked iron points 5.கவர்வழி(சூடா.); cross roads, diverging path. 6.எலும்புக் கவை (வின்); notch in a bone.

**ம.** கவ; **க.** கவத; **கோத.** கவ்ய்; **து.** கம்ப; **தெ.**கவ, **ட.** கவெ

*[கவ →கவை (மு.தா.14).]*

**கவை[4]** *kavai,* பெ.(n.) 1. காடு (பிங்); wood, jungle. 2. ***அகில்*** (மலை) பார்க்க; see *Agil.* 3. கோட்டை (வின்); fort, fortification.

*[கவ் → கவ → கவை.]*

**கவை[5]** *kavai,* பெ.(n.) ஒருவரின் நலனில் அன்பு கலந்த ஈடுபாடு; affectionate interest in one's welfare.

*[கவ → கவை.(மு.தா.14).]*

**கவை[6]** *kavai,* பெ.(n.) 1. செயல்; business *"நமனார்க் கிங்கேதுகவை" (பதார்த்த.1499).* 2. தேவை (பாண்டி.,); need necessity. 3. தொழில் (சம்.அக.); activity.

*[கள் → கர்(கரு) → கய் → கவ் → கவை.]*

**கவை[7]** *kavai,* பெ.(n.) பிரிவு, பிளவு குற்றம், பழுது; cleavage-deficit, fault. கவையில்லை (பரவாயில்லை) (யாழ்ப்.); 2. எள்ளின் இளங்காய்; young sesame pod, 3. ஒன்பதாவது நாண்மீன்; ninth naksatra.

*[கவை = பிளவுபட்டது.]*

**கவைக்கட்டு** *kavai-k-kaṭṭu,* பெ.(n.) அக்குள்; armpit.

**மறுவ.** கமுக்கட்டு, கவைக்குழி.

*[கவை + கட்டு.]*

**கவைக்கட்டை** *kavai-k-kaṭṭai,* பெ.(n.) வேலியில் ஆள் செல்வதற்காக மட்டும் நடும் கவர்த்த கொம்பு; cleavage passage in fencing. வேலியில் கவைக் கட்டை வைத்து நடு (உ.வ.).

*[கவை + கட்டை.]*

**கவைக்கம்பு** *kavai-k-kambu,* பெ.(n.) 1. கவையை யுடைய கம்பு; stick with forked branch. 2. முனிவர் கையைத் தாங்கும்படியான 'Y'வடிவக் கட்டை;'Y' shaped arrest.

*[கவை + கம்பு.]*

முனிவர்கள் வைத்திருக்கும் கம்பு, பிளவுபட்டு இருப்பதால் இப்பெயர் பெற்ற தென்க.

**கவைக்கல்** *kavai-kal,* பெ(n.) பந்தல் கழையைத் தாங்குவதற்காகச் சுவரில் பதிக்கப்படும் கல் (முகவை.வழ.); stone built in a wall to be used to shoulder a shed. கவைக்கல்லை ஆழமாகப் பதித்தால் தான் தாழ்வாரம் நீண்டநாள் நிற்கும் (உ.வ.).

**மறுவ.** ஆழாங்கல் (முகவை).

**கவைக்காகாமை** *kavaikkāgāmai,* பெ.(n.) பயன் படாமை; uselessness, unprofitableness. அவன்படிப்பு கவைக்காகாமை தெரிந்ததே (உ.வ.).

*[கவை +கு+ ஆகாமை.]*

**கவைக்கால்** *kavai-k-kāl,* பெ.(n.) பிளவுபட்டுத் தோன்றுங்கால்; forked post. வேலியில் நடுவதற்கு ஒரு கவைக்கால் கொண்டுவா (உ.வ.).

*[கவை + கால்.]*

**கவைக்கால்நண்டு** *kavai-k-kāl-naṇḍu,* பெ.(n.) கவைபோல் பிளந்த கால்களையுடைய நண்டு (நெல்லை மீனவ.); crab with cleavaged legs.

*[கவை + கால் +கண்டு]*

**கவைக்குதவாத** *kavai-k-kudavāda,* பெ.எ.(adj.) நடைமுறைக்குப் பயன்படாத; useless, worthless, fubile; இது கவைக்குதவாத கருத்து (உ.வ.).

*[கவை + கு +உதவாத. கவைக் கோலாகவும் பயன்படாத பயனற்றது.]*

**கவைக்குழி** *kavai-k-kuḻi,* பெ.(n.) அக்குள்; armpit.

**க.** கவுங்குழ், கங்குழ், கங்கழ், கங்குழ, கொங்குழ், கொங்கழ், கொங்கழ; **து.** கங்குள; **கோத.** கஞ்குய், கஞ்குளி; **துட.** கொம்க்வீள்; **பர்.** கவ்கொர், கவ்கொட்; **கோண்.** காக்ரி

**H., Mar.** kākh.

*[கவை + குழி.]*

**கவைக்குளம்பு** *kavai-k-kuḷambu,* பெ.(n.) விலங்கின் பிளவுபட்ட கால் குளம்பு; cloven hoof.

*[கவை + குளம்பு.]*

**கவைக்கொம்பு** *kavai-k-kombu,* பெ.(n.) 1.பிரிவு ற்ற மரக்கொம்பு; forked stick. முட்கட்டைத்தூக்க ஒரு கவைக் கொம்பு கொண்டுவா (உ.வ.). 2. கலைமான் கொம்பு; branched stag's horn (சா.அக).

*[கவை → கொம்பு.]*

**மறுவ.** கவைக்குச்சி

**கவைக்கோல்** *kavai-k-kōl,* பெ.(n.) 1. கவரான கழி (அகநா.34உரை); forked stick. 2. குத்துக்கோல் (சிலப் 16,142அரும்); pikestaff. 3. ***கொடிற்றுக்கோல்.*** (சிலப்.16,142,உரை) பார்க்க;see *koḍiṟṟu-k-kōl.*

*[கவை + கோல்.]*

**கவைக்கோற்கருவி** *kavaikkōṟkaruvi,* பெ.(n.) கவைக்கொம்பைப் போன்ற ஆயுதம்; a weapon made with forked branch.

*[கவைக்கோல் + கருவி.]*

**கவைத்தடி** *kavai-t-taḍi,* பெ.(n.) கவர்த்தடி; forked wooden pole.

*[கவை + தடி.]*

**கவைத்தாம்பு** *kavai-t-tāmbu,* பெ.(n.) தாமணியை யுடைய தாம்பு; slip-knot, noose. *"பகட்டாவீன்ற கொடு நடைக் குழவி கவைத்தாம்பு தொடுத்த காழ்" (பெரும்பாண். 244).*

*[கவை + தாம்பு.]*

**கவைத்தாள்** *kavai-t-tāḷ,* பெ(n.) 1. பிளவுபட்ட கால்; forked divaricated claws. *"மிதியுலைக் கொல்லன் முறி கொடிற்றன்ன கவைத்தாள் அலவன்" (பெரும் பாண்.208)* 2. நண்டு(பிங்); crab, having forked claws.

*[கவை + தாள்.]*

**கவைநா** *kavai-nā,* பெ.(n.) 1. பிளவுபட்ட நா; forked tongue, as of a snake or iguana *"கவைநா வரவின் அணைப்பள்ளியின் மேல்" (திவ்.பெரியதி.3,2,4).* 2. பாம்பு; snake.

*[கவை + நா.]*

**கவைமகன்** *kavaimagaṉ,* பெ.(n.) இரட்டைப்பிள்ளை; twins. *"கவைமக நஞ்சுண் டாஅங்கு" (குறுந்.324–6).*

*[கவை + மகன்.]*

**கவைமுட்கருவி** *kavai-muṭkaruvi,* பெ.(n.) யானையை அடக்கும் குத்துக்கோல்; elephant-goad,having spikes. *"கவைமுட் கருவியுமாகிக் கடிகொள்" (மணிமே.18.164).*

*[கவை + முள் + கருவி.]*

**கவைமுள்** *kavaimuḷ,* பெ.(n.) வேலமரத்துமுள்; acacia thorn (சா.அக).

*[கவை + முள்.]*

**கவையடி** *kavai-y-aḍi,* பெ.(n.) பிளவுள்ள அடி; cloven foot *"கவையடி பெயர்த்து" (மணிமே,6,165)*

*[கவை + அடி.]*

**கவையம்** *kavayam,* பெ.(n.) காட்டெருமை; wild buffalo (சா.அக).

*[காவு → காவையம் (காடு).]*

**கவையமா** *kavayamā,* பெ.(n.) காட்டு ஆ; wild cow. (சா.அக).

*[காவு – காவையம் = ஆ.]*

**கவையல்** *kavayal,* பெ.(n.) மாதுளை; pomegranate (சா.அக).

*[கவையம் → கவையல்.]*

**கவையாயிரு–த்தல்** *kavai-y-āy-iru-,* 3 செ.கு.வி.(v.i) 1. வேலையாயிருத்தல் (இட.வ); to be busy. 2. அக்கறையாயிருத்தல்; to be interested.

*[கவை + ஆய் + இரு.]*

**கவையாள்வார்** *kavaiyāḷvār,* பெ.(n.) இருநிலை ஆளுவப்பணியை மேற்கொள்பவர்; one who looks after two portfolios.சிறுபுலியூர் சபையாரிடை நிலை கொண்ட கவையாள்வாருக்கு... (S.I.I.vol.19.insc.68 s.no 4-6).

*[கவை (இரண்டு) + ஆள்வார்.]*

**கவையேணி** *kavai-yēṇi,* பெ.(n.) தலையில் பிணிக்கப் பட்டுக் கவராகவுள்ள இரட்டை யேணி; forked ladder.

*[கவை + ஏணி.]*



கவையேணி

**கழகண்டு** *kaḻa-kaṇḍu,* பெ.(n.) தீம்பு; mischief *"கண்ணைப் புரட்டி விழித்துக் கழகண்டு செய்யும் பிரானே" (திவ்.பெரியாழ்,2,4,6).*

*[கழகு → கழகண்டு.]*

**கழகு** *kaḻagu,* பெ.(n.) 1. பேசுதல்; speaking. 2. கூடுதல்;to assemble. 3. விளையாட்டு; play, game. 4. குறும்பு; mischief.

*[கல் → கல → கழ → கழகு.]*

**கழங்கம்** *kaḻaṅgam,* பெ.(n.) கவறாடு கருவி; conical pieces in the game of dice.

*[கழங்கு → கழங்கம். கழங்கு = கழற்சிக்காய்.]*

**கழங்காடல்** *kaḻaṅgāḍal,* பெ.(n.) பெண்கள் ஆடும் கழற்சிக் காயாட்டம்.(பிங்.); girl's game with molucca-beans.

*[கழங்கு + ஆடல்.]*

**கழங்கிட்டுரை–த்தல்** *kaḻaṅkiṭṭurai-,* 4 செ.குன்றாவி.(v.t.) கழற்சிக்காயாற் குறியறிந்து சொல்லுதல்; to divine with Molucca-beans. *"களமாவது கட்டுங் கழங்கும் இட்டுரைக்குமிடமும் வெறியாட்டிடமுமாம்" (தொல்.பொருள்.114.உரை.).*

*[கழங்கு + இட்டு + உரை.]*

**கழங்கு**[1] *kaḻaṅgu,* பெ.(n.) 1. கழற்சிக்காய்; Molucca-bean *"மகளிர் பொலஞ்செய் கழங்கிற்றெற்றி யாடும்" (புறநா.36,4.).* 2. கழற்சிக்காய் விளையாட்டு; play among girls with molucca-beans.

3. ***கழங்குப் பருவம்*** (இலக்.வி.807.) பார்க்க; see *kaḻaṅgu-p-paruvam* 4. கழற்சிக்காயைக் கொண்டு வெறியாட்டில் வேலன் சொல்லுங்குறி; divination with the help of Molucca-beans by a soothsayer when possessed. *"அணங்கறி கழங்கிற் கோட்டங்காட்டி"* (நற்.47.) 5. சூது. (சூடா.); gambling.

**ம.** கழச்சி; **க.** கூ கூ க; **து.** கசிதெ; **தெ.** தச்ச.

*[கழ(ல்) → கழ → கழங்கு.]*

**கழங்கு**[2] *kaḻaṅgu,* பெ.(n.) 1. வேலனாடல் (அக.நி.); vēlaṉ-āḍal, a frenzied dance. 2. உயிர்ச்சத்து இந்திரியம்; semen.

*[கழ → கழங்கு.]*

**கழங்குக்காய்** *kaḻaṅgu-k-kāy,* பெ.(n.) கழற்சிக் கொட்டை; banduc nut (சா.அக).

*[கழங்கு + காய்.]*

**கழங்குப்பருவம்** *kaḻaṅgu-p-paruvam,* பெ.(n.) பெண்பாற் பிள்ளைத் தமிழ்க்குரிய பருவங்களுள் கழற்சிக்காய் கொண்டு ஆடுவதை விளக்கிக் கூறும் பருவம்; section of Piḷḷai-t-tamil on women which describes the stage of childhood in which the girl plays kalangu game.

*[கழங்கு + பருவம்.]*

காப்புப்பருவம், செங்கீரைப்பருவம், தாலப்பருவம் சப்பாணிப்பருவம், முத்தப்பருவம், வருகைப்பருவம், அம்புலிப்பருவம், கழங்கு அல்லது நீராடற்பருவம், அம்மானைப் பருவம், ஊசற்பருவம் என்பன அப்பருவங்களாகும்.

**கழங்குபடு-த்தல்** *kaḻaṅgu-paḍu-,* 20 சென்றா.கு.வி.(v.t.) கழங்கு கொண்டு குறியறிதல்; to practise soothsaying or divination with the help of molucca -beans. *"பெய்ம்மணல் வரைப்பில் கழங்குபடுத் தன்னைக்கு முருகென மொழியும் வேலன்"* (ஐங்குறு.249.).

*[கழங்கு + படு.]*

**கழங்குமெய்ப்படு**[1]**-த்தல்** *kaḻaṅgu-mey-p-paḍu-,* 20 செ.குன்றா.வி(v.t.) பயிர்களை விலங்குகள் அழிக்காத படி புலிபோற் செய்துவைக்கும் உருவுக்குக் கழற்சிக் காயைக் கண்ணாக அமைத்தல்; to use molucca-beans to serve as eyes for tiger-like figures put up in fields to prevent wild beasts from ravaging on the crop. *"கன்முகை வயப்புலி கழங்கு மெய்ப்படுஉம்"* (ஐங்குறு.246.).

*[கழங்கு + மெய் + படு.]*

**கழங்குமெய்ப்படு**[2]**த்தல்** *kaḻaṅgu-mey-p-paḍu-,* 20 செ.குன்றா.வி.(v.t.) கழற்சிக்காய் மூலம் குறியறிதல்; to practise soothsaying with the help of molucca-beans. *"கழங்குமெய்ப் படுத்து.... முருகென மொழி யுமாயின்"* (ஐங்குறு.245.).

*[கழங்கு +மெய் + படு.]*

**கழஞ்சு**[1] *kaḻañju,* பெ.(n.) ஓர் எடுத்தலளவை; a weight equal in modern measure to 1/6 oz. troy. *"விழுக்கழஞ்சிற் சீருடைய விழைபெற்றிசினே"* (புறநா.11,12.).

**க.** கணசு; **தெ.** கணுசு, களஞ்சு; **ம.** கழஞ்சு.

*(கழஞ்சு =1.77கிராம்.)* கழஞ்சு வ. கிலஞ்ச

கழங்கு → கழஞ்சு = ஒரு நிறை, கழங்கு = கழற்சிக்காய்.

வடமொழியில் முலமில்லை. **த.** கழஞ்சு **Skt.** kalanja (வமொ.வ.11)

**கழஞ்சு**[2] *kaḻañju,* பெ.(n.) தங்கத்தை அளக்கும் (1.77கிராம் எடை உள்ள) ஓர் அளவு; a unit of weight (1.77 gram) used for weighing gold.

*[கழங்கு → கழஞ்சு.]*

**கழஞ்சு**[3] *kaḻañju,* பெ.(n.) சிறிது; a little, a small quantity. *"இந்தக் கழஞ்சு மண்ணுமழிந்தால் பின்பு ஸ்ருஷ்டிக்கை அரிதாய்" (திவ்.திருக்குறுந்.4.வ்யா. பக்.16.).*

**Skt.** *kaṇa (related to kanā, kanishta, kaniyas, kanyā, in all of which smallness is implied)*

*[கழல் → கழஞ்சு (கழற்சிக்காய் போல் சிறியது).]*

**கழந்து** *kaḻandu,* பெ.(n.) ***கழஞ்சு*** பார்க்க; see *kaḻañju.* *"விலைப்பொருள் முக்கழந்து பொன்"* (S.I.I.vol.19. insc.203.s.no.7-8).

*[கழஞ்சு → கழந்து (கொ.வ.).]*

**கழப்பன்** *kaḻappaṉ,* பெ.(n.) ***கழப்பாளி*** பார்க்க; see *kaḻappāḷi.*

**ம.** கழப்பன்

*[கழ → கழப்பன். 'அன்' ஆ.பா.ஈறு.]*

**கழப்பாகம்** *kaḻappāgam,* பெ.(n.) வெண்மிளகு; white pepper (சா.அக).

*[கழ + பாகம்.]*

**கழப்பாடி** *kaḻappāḍi,* பெ.(n.) ***கழப்பாளி***பார்க்க; see *kaḻappāḷi.*

*[கழப்பாளி → கழப்பாடி.]*

**கழப்பாளி** *kaḻappāḷi,* பெ.(n.) வேலையைச் செய்யாமல் வீண்பொழுது போக்குபவர்; idle,shuffling person, shirker.

ம. கழப்பாளி

*[கழ → கழப்பு + ஆளி – கழப்பாளி.]*

**கழப்பு[1]–தல்** *kaḻappu-,* 5 செ.கு.வி.(v.i.) வேலை செய்யாது வீண்பொழுது போக்குதல்; to be idle,making excuses, to shirk work.

*[கழ → கழப்பு.]*

**கழப்பு[2]** *kaḻappu,* பெ.(n.) 1. சோம்பல்; laziness, idleness, slothfulness. *"கழப்பின் வாராக் கையற வுளவோ"* (பதினொ.திருவிடை. மரு.மும்மணிக். 10.). 2. மூட்டுவலி; pain of joints and muscles. 3. களைப்பு; fatigue, exhausition, weakness. 4. மனவருத்தம்; distress or pain (of the mind).

ம. கழப்பு, கழய்பு.

*[கள் → கள → கழ → கழப்பு.]*

**கழப்புணி** *kaḻappuṇi,* பெ.(n.) ***கழப்பாளி (வின்);*** *பார்க்க; see kaḻappāḷi.*

*[கழப்பு + உண்ணி – கழப்புண்ணி → கழப்புணி.]*

*கழப்பு = சோம்பல்*

**கழம்பு** *kaḻambu,* பெ.(n.) 1. செடிகளின் காம்பு; stalk of vegetables, pot herbs etc. 2. பழச்சதை; pulp of fruit, pith, essence.

ம. கழம்பு

*[கழி → கழ → கழம்பு.]*

**கழர்** *kaḻar,* பெ.(n.) களாமரம்; Bengal currant (சா.அக).

*[களா → கழா → கழர்.]*

**கழல்[1](லு)–தல்** *kaḻal-,* 13 செ.கு.வி. (v.i.)1. நெகிழ்ந்து போதல்; to become loose, as a fastening, nail, shoe, handle, lock, leaf, hair, braclets,knot,part of any mechanism, to be unhinged,to slip off,to slough off, as s snake's skin, to become extricated, disentangled. *"நங்கைதன்றுகிலொடு சரிவளை கழல்கின்றதே" (திவ்.பெரியாழ்.3,4,8.).* 2.உடற் பொருத்து விலகுதல்; to be put out of joint, dislocated.விழுந்து முழந்தாள் கழன்றது (இ.வ.). 3.வெளியேறுதல்; to pass through as an arrow. *"தங்கா தப்புறங் கழன்று" (கம்பரா. தாடகை.72.).* 4. ஒடுதல்; to run away. *"அவரைக் கழல வுழக்கி எதிர் சென்று சாடி" (கலித். 106,20).* 5.நீங்குதல்; to pass away, to disappear. *"துயரெல்லாங் கழன்றது" (உபதேசகா.சிவபுரா.16)* 6.பிதுங்குதல்; to prot rude,bulge out. *"கழல்கட் கூகையொடு கடும் பாம்பு தூங்க" (திருமுரு.49).* 7.விழுதல்; to fall out,as a loose tooth. *"சொல்தளர்ந்து கோல் ஊன்றிச் சோர்ந்த நடையின ராய்ப் பல்கழன்று" (நாலடி,13.).* 8.செலவாதல்; to be expended. மாதம் எவ்வளவு தொகை கழலும் (இ.வ.). 9.அவிழ்தல்; to loose as knot.

ம., க. கழல்; **கோத.** ககெ; **துட.** கோள்; குட.கய். **து.** கனெயுனி. **தெ.** க்ராலு; **கட.** கரைங்கான; **பெங்.** கரங், **கூ.** கரெங்கு.

*[கழ → கழல்.]*

**கழல்[2]** *kaḻal,* பெ.(n.) 1. வீரக்கழல்; anklet given as a token of honour to a warrior. *"ஓடாப் பூட்கை யொண் பொறிக்கழற்கால்" (பதிற்றுப்.34,2.).* 2. சிலம்பு; anklet. *"அறைகழ லருளொலி" (ஞானா.2.9.).* 3. காஞ்சொறி; toe-ring *"கட்டுவடக் கழலினர்".*

ம. கழல்; **க.** கழல், கழலு.

*[கழ → கழல்.]*

**கழல்[3]** *kaḻal,* பெ.(n.) நடக்கும் உயிரினங்களின் உடற்பகுதிகளில் ஒன்றாகவும் அதன் துணை கொண்டு நிற்கவும், நடக்கவும் பயன்படும் பகுதியாகிய கால்; the part of its body on which a human or animal stands or walks, foot. கணவன் கழல் வாழ்த்தி (பு.வெ.10.முல்லைப்).

**மறுவ.** கால், அடி, பதம், பாதம், தாள்.

ம. கழல்

*[கழ → கழல்.]*

**கழல்**[4] *kaḻal,* பெ.(n.) மோர், தயிர்; butter-milk,curd (கருநா.).

க.கழல்–களலு

*[குழ → கழ → கழல்.]*

*Skt kadara,curds,this word exactly represents kaḻal (l=d) curds,which meaning also buttermilk mixed with water is the origin also of the Skt terms katura,katuara,kadvara, kaccarr,and kankara (K.K.E.D.P.xxxvi).*

**கழல்**[5] *kaḻal,* பெ.(n.) காற்றாடி (திவா.); weather cock moved by the wind.

*[கல் → கல → கழ → கழல்.]*

**கழல்**[6] *kaḻal,* பெ.(n.) ***கழற்சி*** பார்க்க; see *kaḻaṟci.* *"கழற்கனி வகுத்த துணைச்சில் லோதி" (புறநா. 97.23).*

*[கழ → கழல்.]*

**கழல்மணி** *kaḻalmaṇi,* பெ.(n.) கழற்சிக்காய்; bonduc nut. *"கழல்மணி வெள்ளை யுள்ளி" (தேரையர்) (சா.அக).*

*[கழல் + மணி.]*

**கழல்வளை** *kaḻal-vaḷai,* பெ.(n.) வளைவகை; a variety of bangles.*"என்னுடைய கழல்வளையைத் தாமும் கழல்வளையே யாக்கினரே" (திவ்.நாய்ச்.11.2.).*

*[கழல் + வளை.]*

**கழலக்குத்து–தல்** *kaḻala-k-kuttu,* 5 செ.கு.வி.(v.i) குற்றஞ்சொல்லி செயலைத் தடுத்தல் (யாழ்ப்.); to defeat an object by an unfavourable remark.

*[கழல் + அ + குத்து. 'அ'வினையெச்ச ஈறு.]*

**கழலடி** *kaḻaḍi,* பெ.(n.) கழற்சிக் கொடிவேர்; the root of nut creeper (சா.அக).

*[அழல் + அடி.]*

**கழலடை–தல்** *kaḻaḍai-,* 4 செ.கு.வி.(v.i.) வேற்றரசர்கள் பணிதல்; to surrender,as of rival kings.தம் கழலடைந்த மன்னவர் (S.I.I.vol.5.insc.408).

*[கழல் + அடை.]*

**கழலவிடு–தல்** *kaḻala-viḍu-,* 18 செ.குன்றாவி.(v.t.) அன்பின் மிகுதியால் வெண்டுமென்று நெகிழ விடுதல்; to connive at, let pass or escape without notice, through leniency or partiality.

*[கழல் + விடு.]*

**கழலாபு** *kaḻalābu,* பெ.(n.) பீர்க்கு;sponge-gourd (சா.அக)

*[கழல் → கழலாப்பு. கழல் = சமமற்ற.]*

**கழலி** *kaḻali,* பெ.(n.) ***பிரண்டை*** பார்க்க; see *piraṇḍai.*

*[கழல் → கழலி.]*

**கழலிச்சிட்டு** *kaḻali-c-ciṭṭu,* பெ.(n.) சிட்டுக்குருவி வகை (யாழ்.அக.); a kind of a ciṭṭu bird.

*[கழலி + சிட்டு.]*

**கழலிலை** *kaḻalilai,* பெ.(n.) கழற்சியிலை; the leaves of bonduc nut creeper (சா.அக.).

*[கழல் + இலை.]*

**கழலூதை** *kaḻalūdai,* பெ.(n.) 1. காலில் ஏற்படும் ஊதைநோய்; rheumathism affecting the leg. 2. பொன்வண்டு; a golden coloured beetle.

*[கழல் + ஊதை.]*

**கழலேறுஊதை** *kaḻalēṟu ūdai,* பெ.(n.) காலின் நரம்புகளைப் பற்றிய ஓர் ஊதை நோய்; a rheumatic affection of the nerves of the leg (சா.அக).

*[கழல் + ஏறு + ஊதை.]*

**கழலை** *kaḻalai,* பெ.(n.) ***கழலைக்கட்டி*** பார்க்க; see *kaḻalai-k-kaṭṭi.*"கீழ்வயிற்றுள் கழலை" (ஈடு.1.1.3.).*

*[கழல் → கழலை. கழல்=கழற்சிக்காய். கழற்சிக்காய் போன்ற கட்டி.]*

**கழலைக்கட்டி** *kaḻalai-k-kaṭṭi,* பெ.(n.) 1. கழுத்து முதலிய உடற்பகுதியில் பெருத்துத் தோன்றும் தசைக்கட்டி நோய்; wen, tubercle, Adenoid cyst. 2. புண்கட்டி; tumour. 3. வழக்கத்திற்கு மாறாக உண்டாகும் திசுக்களின் பெருக்கம்; abnormal growth of tissues, tumour.

*[கழலை + கட்டி.]*

**கழலைக்கரப்பான்** *kaḻalai-k-karappāṉ,* பெ.(n.) ஒரு வகைச் சொறி நோய்; a kind of eruption on various parts of the body. *"கழலைக் கரப்பான் போலே எங்கும் ஒக்கச்சஞ்சரிக்கும் நோய்" (திவ்.திருநெடுந். 23. வியா).*

*[கழலை + கரப்பான்.]*

**கழற்காய்** *kaḻaṟ-kāy,* பெ.(n.) 1. கழற்சிக்காய் (பதார்த்த.793.); molucca-bean. 2. கிழங்கு; bulbous root (சா.அக.).

*[கழல் + காய் –கழற்காய்.]*

**கழற்காய்வல்லி** *kaḻaṟkā-y-valli,* பெ.(n.) ஒரு வகைக் கொடி; elephant cow-hitch (சா.அக.).

*[கழற்காய் + வல்லி. வள்ளி – வல்லி.]*

**கழற்கொடி** *kaḻaṟ-koḍi,* பெ.(n.) ***கழற்சி*** பார்க்க; see *kaḻaṟci.*

*[கழல் + கொடி – கழற்கொடி.]*

**கழற்சி** *kaḻaṟci,* பெ.(n.) 1. ஒருவகைக் கொடி (வின்); molucca-bean. 2. கழற்சிக்காய்; bonduc nut.

*[கழல் + சி – கழற்சி. 'சி' சொல்லாக்க ஈறு.]*



கழற்சி

**கழற்சிக்காய்** *kaḻaṟcikkāy,* பெ.(n.) கழற்காய்; molucca bean.

*[கழற்சி + காய்.]*

**கழற்சிக்கொட்டை** *kaḻaṟci-k-koṭṭai,* பெ.(n.) 2. ***கழற்சி*** பார்க்க; see *kaḻaṟci.*[2]

*[கழற்சி + கொட்டை.]*

**கழற்சிங்கநாயனார்** *kaḻar-šiṅga-nāyaṉār,* பெ.(n.) அறுபத்துமூன்று நாயன்மாருள் ஒருவர் (பெரியபு.53.); name of canonized saiva saint,one of 63.

*[கழல் + சிங்கம் + நாயனார் – கழற்சிங்கநாயனார்.]*

இவர் காடவர்குல அரசர் என்றும் திருவாருரில் இறைவனை வழிபடுங்கால் தம் மனைவி ஒரு பூவை எடுத்து முகர்ந்த குற்றத்திற் காகக் கையை வெட்டிச் சிவனருள் பெற்றதாகவும் திருத்தொண்டர் மாக்கதை கூறும்.

**கழற்சேவகம்** *kaḻarsēvagam,* பெ.(n.) கொள்ளிக் கட்டைத் தேக்கு; fire-brand teak (சா.அக.).

*[கழல் + சேவகம்.]*

**கழற்பதி** *kaḻaṟ-padi,* பெ.(n.) ***பெருங்குமிழ்*** (மலை) பார்க்க; see *peruñ-kumiḻ*; ஒரு வகைத் தேக்கு; a kind of teak,coomb teak.

*[கழல் + பதி.]*

**கழற்பேதி** *kaḻaṟ-bēdi,* பெ.(n.) பாச்சான் கள்ளி; a kind of a spurge (சா.அக.).

*[கழல் + பேதி.]*

**கழற்றல்** *kaḻaṟṟal,* தொ.பெ.(vbl.n.) நீக்குதல்; omiting.

*[கழல் (த.வி) → கழற்று(பி.வி). கழற்றல்(தொ.பெ.).அல் தொ.பெ.ஈறு.]*

**கழற்றி** *kaḻaṟṟi,* பெ.(n.) கழலப் பண்ணுவது; that which causes one to slip off, to disappear. *"யோகக்கழற்றி" (ஒழிவி.3,106).*

*[கழல் → கழற்றி.]*

**கழற்று[1]–தல்** *kaḻaṟṟu-,* 5 செ.குன்றா.வி.(v.t.) 1. நெகிழச் செய்தல்; to make loose,to unfasten, loosen, unhinge, dislocate, unlock, unbolt, unscrew, unbutton, disentangle, extricate, disencumber.] 2. ஆடையணிகலன் போன்றவைகளை நீக்குதல்; to strip, take off, divest,dismantle, unrig, to slough off, as a snake, its skin,. *"கழற்றிப் பொன்னணி" (இரகு.திக்கு.255.).* 3.போக்குதல்;to remove,to be freed, as from sin. *"வல்வினையைக் கழற்றலாமே" (தேவா.1225,7.).*

*[கழல் →கழற்று.]*

**கழற்று²** *kaḻaṟṟu,* பெ.(n.) உறுதிமொழி; admonition, expostulation, criticism, at once kind and severe.

*[கழறு → கழற்று.]*

**கழற்றுரை** *kaḻaṟṟurai,* பெ.(n.) 1. உறுதிச்சொல் (பிங்.); charge, rebuke. 2. இகழ்ந்துரைத்தல்; censure.

*[கழற்று + உரை – கழற்றுரை.]*

**கழற்றெதிர்மறு–த்தல்** *kaḻaṟṟedir-maṟu-,* 4 செ.குன்றாவி. (v.t.) பாங்கனது உறுதிமொழியைத் தலைவி கேளாது மறுத்தல் (திருக்கோ.23,தலைப்பு.); to reject the dissuasions of a friend, as a lover.

*[கழற்று + எதிர் + மறு.]*

**கழற்றெதிர்மறை** *kaḻaṟṟedir-maṟai,* பெ.(n.) தலைவன், பாங்கன் உறுதிமொழியைக் கேளாது மறுத்துச் சொல்லுஞ் சொல் (இறை.3.47.); rejecting as a lover, the dissuasions of a friend.

*[கழற்று + எதிர் + மறை. மறு → மறை-மறுத்தல்.]*

**கழறல்** *kaḻaṟal,* பெ.(n.) 1. சொல்லுகை; speech, word, speaking. *“இனையன கழறலுற்றான்” (கந்தபு.தாரக.128.).* 2. உறுதிமொழி (திவா.); exhortation, admonition.

**H.** kakh; **Samo.** gagana.

*[கழறு → கழறல்.]*

**கழறியுரை–த்தல்** *kaḻaṟi-y-urai,* 4. செ.கு.வி.(v.i.) 1.இடித்துரைத்தல்; to protest, find fault with and advice, as a minister, to the king.மந்திரி அரசனுக்குக் கழறியுரைத்தான்(உ.வ.). 2.பாங்கன் தலைவனுக்கு இடித்துரைத்து உறுதிமொழி கூறுதல். (திருக்கோ.22.தலைப்பு); to dissuade a lover from his intention, as a friend.

*[கழறு + இ + உரை – 'இ'வினையெச்ச ஈறு.]*

**கழறிற்றறிவார்** *kaḻaṟiṟṟaṟivār,* பெ.(n.) சேரமான் பெருமாள் நாயனார்; name of Šaiva saint, CēramānPerumal.[ who is so called because he is said to have been able to understand the language of the lower animals.] *“பிறவுயிர்கள் வேறு கழறிற்றறிவார்” (பெரியபு.சிறுத்.88).*

*[கழறிற்று + அறிவார்.]*

மாந்தரல்லாப் பிறவுயிர்கள் பேசுவனவற்றை [கழறியவற்றை]யும் புரிந்து கொள்ளும் ஆற்றலுள்ளமையால் பெற்ற பெயரென்பர்.

**கழறு¹–தல்** *kaḻaṟu,* 5 செ.கு.வி. (v.i.) 1. இடித்தல்; to thunder. *“கமஞ்சூல் அகலிரு விசும்பின் அதிர்சினஞ் சிறந்து... கடுஞ்சிலை கழறி” (பதிற்றுப்.81.4.).* 2.சூளுரைத்தல்; to make solemn declaration,bind oneself by a vow. *“கொல்வோ மென்றாங் கவரவர் கழறிப்பேசி” (திருவாலவா.36.17.).* 3.உறுதி சொல்லுதல்; to urge,exhort,charge earnestly. *“கல்லென்று தந்தை கழற அதனையோர் சொல்லென்று கொள்ளா திகழ்ந்தவன்” (நாலடி.253).*

**க.** களரு (அறிவுரை)

*[கழ → கழல் → கழறு.]*

**கழறு²–தல்** *kaḻaṟu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. கடிந்து சொல்லுதல்; to say angrily declare, tell. *“சிலர் கழறிச் சோர்வார்” (பாகவ.1.4.35.).* 2.வன்மையாகக் கண்டித்தல்; scold angrily. *“கடிந்தது மிலையாய் நீ கழறிய வந்ததை” (கலித்.76.13.).* 3.அவமதித்தல்; to abuse,dishonour. *“கற்றவர் தம்மையும் கழற நோக்குமே” (சூளா.முத்.16.).*

மறுவ. கடிதல்

*[கழ → கழல் → கழறு.]*

**கழனி** *kaḻaṉi,* பெ.(n.) கழுநீர் (இ.வ.); water in which rice has been washed.

**க.** கச்சலு; **பட.** கோநீர்

*[கழு + நீர் – கழுநீர் → கழுநி → கழணி (மருஉ.).]*

**கழனி¹** *kaḻaṉi,* பெ.(n.) 1. போரடிக்கும் களமுள்ளவயல்; field,paddy-field. *“கழனியுழவர் சூட்டொடு தொகுக்கும் கொழுமீன்” (புறநா.13.11.).* 2. மருதநிலம். (பிங்.); agriculture tract. 3. சேறு (வின்); mud.

**ம.** கழனி; **க.** கழநி, கலநி, களநி.

**W.** cae; **Norw.** gard; **S.** granja.

*[களம் → களன் → கழனி(வேக134).]*

**கழனி²** *kaḻaṉi,* பெ.(n.) ***கழினி*** (பிங்.) பார்க்க; see *kaḻiṉi.*

*[கழினி → கழனி.]*

**கழனி³** *kaḻaṉi,* பெ.(n.) ***கழுநீர்*** (இ.வ.) பார்க்க; see *kaḻunīr.*

*[கழு + நீர் – கழுநீர் → கழுநி → கழனி.(மருஉ.).]*

**கழனிக்கடைத்தவர்** *kaḻaṉi-k-kaḍaittavar,* பெ.(n.) மருத நில மக்கள் (திவா.); people of the agricultural tract.

*[கழனி + கு + அடைத்தவர்.]*

**கழனிக்குளம்** *kaḻaṉi-k-kuḷam,* பெ.(n.) நன்செய் நடுவிலுள்ள ஏரி (S.I.I.ii,43.); tank lying amidst cultivable lands.

*[கழனி + குளம்.]*

**கழனிக்கோல்** *kaḻaṉikkōl,* பெ.(n.) நிலமளக்கும் கோல்; a pole used to measure field (கல்.அக.).

*[கழனி + கோல்.]*

12, 14, 16, ஆகியசாண்கள் நீளம் கொண்ட மூவேறுபட்ட அளவினதாக இருந்த இவற்றுள், 16 சாண் கோலே பண்தொட்டு [அதாவது சிந்து சமவெளி நாகரிகக் காலத்தமிழர் வழக்கிலிருந்த வண்ணம்] செந்தரக் கோலாக (standard linear measurement) நிலவியது. 8.25" கொண்டது ஒரு சாண். 16 சாண் கொண்டது ஒரு கோல் – இதன் நீளம் 11 அடி.

**கழனிச்சுறா** *kaḻaṉi-c-cuṟā,* பெ.(n.) சுறா மீன் வகையுளொன்று; a kind of shark fish.

*[கழனி + சுறா.]*



கழனிச்சுறா

**கழனிநண்டு** *kaḻaṉi-naṇḍu,* பெ.(n.) வயல் நண்டு வகை (வின்); fresh water crab found in fields.

*[கழனி + நண்டு.]*

**கழனிப்பயிர்** *kaḻaṉi-p-payir,* பெ.(n.) நெல் (வின்.); paddy.

*[கழனி + பயிர்.]*

**கழனிப்பாக்கம்** *kaḻaṉippākkam,* பெ.(n.) வட ஆர்க்காடு மாவட்டத்திலுள்ள ஓர் ஊர்; name of a village in Vellore district.

*[கழனி + பாக்கம்.]*

**கழனியடுத்தவர்** *kaḻaṉi-yaḍuttavar,* பெ.(n.) உழவர், வேளாளர்; agtriculturist.

*[கழனி + அடுத்தவர்.]*

**கழனியூரன்** *kaḻaṉi-y-ūraṉ,* பெ.(n.) மருத நிலத் தலைவன்; cheiftain of agricultural tract. *"கரும்பி னலமருங் கழனி யூரன்" (ஐங்குறு.18.).*

*[கழனி + ஊரன்.]*

**கழனிலை** *kaḻaṉilai,* பெ.(n.) இளைஞனொருவன் போரிற் புறங்கொடாமை கண்டு வியந்த வீரர் அவனுக்கு வீரக்கழல் அணிவித்துப் புகழ்ந்தாடும் புறத்துறை; theme of warriors decorating a youthful victor with anklets and singing his praise to the accompaniment of a dance. *"வயவர் ஏத்திய ஓடாக்கழனிலை உளப்பட" (தொல். பொருள்.60). "அடுமுரண் அகற்றும் ஆளுகு ஞாட்பிற் கடுமுரண் வயவன் கழல் புனைந்தன்று" (பு.வெ. பொதுவியல் 7).*

*[கழல் + நிலை.]*

**கழனிவாரியப்பெருமக்கள்** *kaḻaṉi-vāriya-p-pērumakkaḷ,* பெ.(n.) வேளாண்மையைக் கவனிக்கும் ஊர்ச்சபையார் (S.I.I.iii,231.); members of the village assembly who looks after cultivation.

*[கழனி + வாரியம் + பெரு + மக்கள்.]*

**கழனிவாரியப் பெருமக்கள்** *kaḻānivāriyap perumakkaḷ,* பெ.(n.) வயல்களுக்குப் பாசனத் தண்ணீர் வழங்கும் பொறுப்பை ஏற்றுள்ள குழு; members of the irrigation committee. இவ்வாட்டை குடும்பு வாரியப் பெருமக்களும் ஏரிவாரியப் பெருமக்களும், கழநிவாரியப் பெருமக்களும், இருநூற்றுவப் பெருமக்களும் பட்டர்களும் (தெ.,க.தொ.19 கல்.179 கல். 84 & 297).

*[கழநி + வாரியம் + பெருமக்கள். உத்திரமேரூரிலுள்ள கல்வெட்டு மூலம் கழநி வாரியப் பெருமக்கள் குடவோலை முறைத் தேர்தல் மூலம் தேர்வு செய்யப்பட்டனர் எனத் தெரிகிறது.]*

**கழனீர்** *kaḻaṉīr,* பெ.(n.) **கழுநீர்** பார்க்க; see *kaḻunīr.*

*[கழுநீர் → கழனீர்.]*

**கழாஅல்** *kaḻāal,* பெ.(n.) கழுவுகை; washing, cleansing. *"ஊர்க்குறு மாக்கள் வெண்கோடு கழாஅலின்" (புறநா.94.1.).*

*[கழுவு + அல் – கழுவல் → கழால்(மருஉ.).]*

**கழாஅல** *kaḻāala,* இ.கா.வி.எ.(p.ple)கழற்ற; to unlose or divest.*"கடுஞ்சூன் முண்டகங் கதிர்மணி கழாஅலவும்" (சிறுபாண்.148.).*

*[கழல → கழாஅல (இடைநீட்சி).]*

**கழாத்தலையார்** *kaḻā-t-talaiyār,* பெ.(n.) கடைக் கழகப் புலவர்; Sangam poet.

*[கழார்த்தலை + ஆர்–கழாத்தலையார். ஊர்ப்பெயரால் அழைக்கப்பட்டவர்.]*

பரணர் காலத்தில் வாழ்ந்தவர்; இவர் சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனும் சோழன் வேற் பஃறடக்கைப் பெருவிறற் கிள்ளியும் பொருது களத்தில் விழுந்து கிடந்தபோது அவ்விருவர் பெருமையையும் அவர் தேவியர் துன்பத்தையும் எடுத்துப் பாடியவர்.

**கழாநிலம்** *kaḻā-nilam,* பெ.(n.) ***கழாலை*** (யாழ்.அக.) பார்க்க; see *kaḻālai.*

*[கழார் + நிலம் – கழார்நிலம் → கழா நிலம்.]*

**கழாய்** *kaḻāy,* பெ.(n.) சிறுகீரை (சங்.அக.); a species of amaranth.

*[கழு → கழாய்]*

**கழாய்**[2] *kaḻāy,* பெ.(n.) 1. மூங்கில்; spiny bamboo. 2. கழைக்கூத்தன் ஏறி நின்று ஆடுதற்கு நாட்டும் மூங்கிற்கம்பம் (சீவக.66.உரை.); acrobat's pole. 3. ***கமுகு*** (மலை.) பார்க்க; see *kamugu.*

*[கழை → கழாய்(தமிழ்வ.71).]*

**கழாய்**[3] *kaḻāy,* பெ.(n.) ***கழுகு;*** பார்க்க; see kaḻugu.

*[கழு → கழுகு → கழாய்.]*

**கழாய்க்கூத்து** *kaḻāy-k-kūttu,* பெ.(n.) ***கழைக்கூத்து*** பார்க்க; see *kaḻai-k-kūttu.* கானகக் கூத்தும் கழாய்க் கூத்தும் ஆடுபவராக (தொல். பொருள்.91.உரை.)

*[கழை → கழாய் + கூத்து.]*

**கழாய்வனம்** *kaḻāy-vaṉam,* பெ.(n.) ***சிறுகீரை*** (மலை.) பார்க்க; see *siru-kirai.*

*[கழாய் + வனம்.]*

**கழாயம்** *kaḻayam,* பெ.(n.) ***கழாய்*** (சங்.அக) பார்க்க; see *kaḻāy.*

*[கழாய் + அம் → கழாயம்]*

**கழாயர்** *kaḻāyar,* பெ.(n.) கழைக்கூத்தர் (சூடா.); pole-dancers, rope dancers, tumblers.

மறுவ. கம்பக்கூத்தர்

*[கழாய் + அர் – கழாயர்.]*

**கழாயினர்** *kaḻāyiṉar,* பெ.(n.) ***கழாயர்*** பார்க்க; see *kaḻāyar. "கோடியர் கழாயினர்" (கந்தபு.அசமுகி.14.)*

*[கழாய் + இனர் → கழாயினர்.]*

**கழால்** *kaḻāl,* பெ.(n.) களைகை; weeding,rooting up.*"களைகால் கழாலிற் றோடொலிபு நந்தி" (புறநா.120.5.).*

*[கழல் → கழால்.]*

**கழாலு–தல்** *kaḻālu-,* 13 செ.கு.வி.(v.i.) நெகிழ்தல்; to become loose, *"கழாலுகின்ற பல்காழுடை மேகலை" (கந்தபு.திருக்கல்.15.).*

*[கழல் → கழால் → கழாலு.]*

**கழாலை** *kaḻālai,* பெ.(n.) 1. உவர்நிலம் (யாழ்.அக); saline soil. 2. கழிநிலம்; brackish soils (சா.அக.).

*[கள் → கள → கழ → கழல் → கழால் →கழாலை.]*

**கழாற்றூக்கு** *kaḻaṟṟūkku,* பெ.(n.) ஆறுசீரளவுள்ள தாளவுறுப்பு (சிலப்.3.16.உரை.); Music: a mode of keeping time composed of six cīr.

*[கழல் + தூக்கு – கழற்றூக்கு → கழாற்றுக்கு.]*

**கழாறம்**[1] *kaḻāṟam,* பெ.(n.) கமுகு (சங்.அக); areca palm.

*[கழை → கழாறம்]*

**கழாறம்**[2] *kaḻāṟam,* பெ.(n.) கள்; toddy.

*[கழல் → கழாலம் → கழாறம்]*

**கழி**[1]**–தல்** *kaḻi-,* 4 செ.கு.வி.(v.i.) 1. கடந்து போதல்;to pass away. (அ). காலம், இடம், பருவம் முதலியன கடந்து போதல்; to pass as time, season. கோடைக் காலம் கழிந்து குளிர் காலம் வந்தது (உ.வ.). (ஆ) வளமை, இன்பம் முதலியன நழுவுதல்; to slip away as prosperity, adversity.2. செல விடுவதால் கழிதல்; to elapse, become spent.

*"பொழுதொடு நாளும் வாளா கழிந்தன போலும்" (கம்பரா.சூர்ப்ப.1+8).* 3.நடத்தல் (பிங்); to walk,proceed.

**ம.** கழியுக, கழிக்க; **க.** கழி, களி, கழெ, களெ; **து.** கரியுனி, கரிபுனி; **பட.** கயி; **து.இ.** கொடி; **குட.** கய்ய (பொழுதுகழித்தல்); **கெ.** கட சுட (பொழுது போதல்).

*[கள் → கழி.]*

**கழி[2]—தல்** *kaḻi-,* 4.செ.கு.வி.(v.i.) 1. குறைபடுதல்;to be abated,deducted, discounted.*"கழியாம லளித்தனை கண்ணதுகில்" (பாகவ.1.4.37).* 2. அழிதல்; to be ruined. *"அங்குரங் கழியும் வேனில்" (சிசி1.9.).* 3. ஒழிதல்; to be removed, பாவங்கழிந்தது (உ.வ.) . 4. இறத்தல்; to expire,die. கழியா தலந்தினையும் (பு.வெ.10.சிறப்பிற்.18.). 5.முடிவடைதல்; to finish, come to an end, cease. *"மாழைமென்னோக்கி யிடையாய்க் கழிந்தது" (திருக்கோ.61).*

**ம.** கழி

*[கள் → கழு → கழி.]*

**கழி[3]—தல்** *kaḻi-,* 4 செ.கு.வி.(v.i.) 1. துயருறுதல்; to suffer. 2. இன்னலுறுதல், வருந்துதல்; to be troubled. *"தாழிக்குவளையொடு தண்செங்கழுநீர் வீழ்பூஞ் சேக்கை மேவாது கழிய" (சிலப்.4.65.).*

*[கள் → கழு → கழி.]*

**கழி[4]—தல்** *kaḻi-,* 4 செ.கு.வி (v.i.) 1. சிறுநீர் மலம் போன்றவை உடம் பினின்று வெளியேறுதல்; materi-als like urine, excrement etc to be discharged. 2. நோயாளி குணமாகி மருத்துவ மனையினின்று வெளியேறுதல்; patient's discharge from hospital. 3. கசிதல்; leakage as of water or oil. குடிநீர்க் குழாயில் கழிவுண்டாகித் தண்ணீர் வீணாகிறது (உ.வ.).

*[கள் → கழு → கழி.]*

**கழி[5]—தல்** *kaḻi-,* 4 செ.கு.வி.(v.i.) அச்சங்கொள் ளுதல்; to be in terror. அவரைக் கண்டால் கழிவான் (உ.வ.).

*[கள் → கழு → கழி]*

**கழி[6]—தல்** *kaḻi-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. கடத்தல்; to pass through. *"விளிமுறை அறியா வேய்கரி கானம் வயக்களிற்றன்ன காளையொ டென்மகள் கழிந்தற்கு அழிந்தன்றோ இலனே" (அகநா.4-6).* 2. ஒத்தல் (பரிபா. 3, 32. உரை); to resemble.

*[கள் → கழு → கழி.]*

**கழி[7]—தல்** *kaḻi-,* 4 செ.கு.வி (v.i.) அளவில், தன்மையில் பண்பில் பரப்பில், பாங்கில், மிகுந்து நிற்றல்; to be great in a quantity or quality, exces-sive to be abundant, copious, intense, extensive, *"கழிகின்றதோர் கடலேபுரை காமந்தெறு நோயால்" (கந்தபு.அசமுகிப் .4).*

*[கள் → கழு → கழி.]*

**கழி[8]—தல்** *kaḻi,* 4 செ.குன்றாவி (v.t.) இயலுதல்; to be able. எனக்கு இது கழியாது (இ.வ.).

*[கள் → கழு → கழி.]*

**கழி[9]** *kaḻi,* பெ.(n.) 1. கடலையடுத்த உப்பு நீர்ப்பரப்பு; back-water,shallow sea-waters, salt river, marsh. *"மாக்கழி மலர்ந்த நெய்தலானும்" (புறநா.48.3.).* 2. உப்பளம் (பின்); salt-pan.

**ம.** கழிக்கண்டம், கழி.

*[கள் → கழு → கழி (மு.தா.232).]*

**கழி[10]—த்தல்** *kaḻi,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. நீக்குதல்; to reject, expel, discard,exclude, dislodge, remove, strip off, separate, eliminate. *"மாண்ட குணத்தொடு மக்கட்பேறில் லெனினும்பூண்டான் கழித்தற் கருமையால்" (நாலடி.56.)* 2.ஒதுக்குதல்; to eject, to leave as refuse, to abandon.ஆடு தின்று கழித்த பயிர் விளங்காது (உ.வ.). 3. பெரிய எண்ணினின்று சிறிய எண்ணைக் குறைத்தல்; to substract. பத்தில் ஐந்தைக்கழி (உ.வ.). 4. குறைத்தல்; to deduct, abate, discount, remit. பத்துவிழுக்காடு கழிவில் துணி வாங்கினேன் (உ.வ.). 5. வெட்டுதல்; to cut off, as hair, to pare off as nails; to clear off, clear away; to smooth off,as knots; to prune top. மூங்கிலில் இருந்து முள்ளைக் கழித்தான். 6.போக்குதல்; to spend, waste, as time. *"கருவிலே திருவிலாதீர் காலத்தை கழிக்கின் றீரே"* (திவ்.திருமாலை.11.). 7.வரி முதலியவை தள்ளிக்கொடுத்தல்; to exempt, release, free as from duties or postage. வருமானத்தில் பத்து விழுக்காடு கழிவு செய்து வரிகட்டினான்(உ.வ.). 8. மலம் முதலியவற்றை வெளிப் படுத்துதல்; to cast off, as exudate, to evacuate, void,as excreta. குழந்தை நின்ற இடத்திலேயே மலம் கழித்து விட்டது. 9. உருவுதல்; to unsheath. *"கழித்துறை செறியா வாளுடை எறுழ்த்தோள்" (அகநா.24.).*

**ம.** கழி, கழிக்குக; **க.** கழி, களி, கழெ, களெ; **து.** கரி, களெ; **பட.** கயி; **துட.** கொடி; **குட.** கய்ய (பொழுது கழித்தல்); **தெ.** கடசு (பொழுது போதல்); **உரா.** களெ.

*[கள் → கழு → கழி]*

**கழி**[11] *kal̤i,* பெ.(n.) 1. கோல்; rod,cudgel, staff, stick *"ஆயர்மேய்க்குங் கழி" (புலியூரந்.8.)* 2. நுகத் துளையில் இடுங்கழி; wooden peg to keep a yoke in place.*"தென்கட லிட்டதோர் நோன்கழிசிவணி" (சீவக.2749.).* 3. ஆய்தப்பிடி; handle of a tool. *"தோல் கழியோடு பிடிசெறிப்பவும்" (புறநா.98.11.).* 4.வரிச்சல்; lath, strip put across the rafters to support tiles.*"கழி நிறைத்து" (தேவா.838.4.).* 5. கரும்பின் அடி (சொ.ஆ.க65); base of sugarcane.

*[கள் → கழு → கழி.]*

**கழி**[12] *kal̤i,* பெ.(n.) இறைச்சி; flesh. *"கல்லுமிழ் கவணினர் கழிப்பிணிக் கறைத்தோல்" (சிலப்.5.81).*

*[கள் → கழு → கழி.]*

**கழி**[13] *kal̤i,* பெ.(n.) 1. செம்மெழுகு;red-wax. 2. மெழுகு வத்தி; candle (சா.அக).

*[கள் → கழி.]*

**கழி**[14] *kal̤i,* பெ.(n.) யாழின் இசையெழுப்புங் கருவி (வின்); lute-stick, plectrum.

*[கள் → கழு → கழி.]*

**கழி**[15] *kal̤i,* கு.பெ.எ.(adj.) மிகுந்த (நன். 456.); much, great, excessive.

*[கள் → கழு → கழி.]*

**கழி**[16] *kal̤i,* பெ.(n.) கயிறு; coir rope. *"கழிவிடும் பரிபிளந்து" (தக்கயாகப்.132.).*

ம. கழி

*[அழி → கழி.]*

**கழி**[17]**-த்தல்** *kal̤i-,* 4 செ.கு.வி(v.i.) 1. நீத்தார் கடன் நிகழ்த்துதல்; to perform funeral ceremonies. 2. விலக்கிக் கொள்ளுதல்; to keep aloof, to withdraw.

*[கள் → கழு → கழி.]*

**கழிகட்டை** *kal̤i-kaṭṭai,* பெ.(n.) கழிகடை (இ.வ.); useless person or thing.

*[கழி + கட்டை.]*

**கழிக்கரை** *kal̤i-k-karai,* பெ.(n.) 1. கழிமுகம்; river mouth. 2. உப்பங்கழியை யொட்டிய நிலப்பரப்பு (தஞ்சை. மீன்வ.); land space, around backwater canal.

*[கழி + கரை.]*

**கழிக்கரைப்புலம்பல்** *kal̤li-k-karai-p-pulambal,* பெ.(n.) 1. பிரிந்த தலைவனை நினைந்து தலைவி கடற்கரையிலிருந்து கொண்டு தனியே இரங்குகை; soliloquy of a maiden in a maritime tract lamenting the separation from her lover. 2. சமுத்திர விலாசம் என்னும் சிற்றிலக்கியம்; a poem on such a theme.

*[கழி + கரை +புலம்பல்.]*

**கழிக்காரை** *kal̤i-k-kārai,* பெ.(n.) ஒருவகைக் காரை முட்செடி; common honey-thorn.

*[கள் → கழி + காரை.]*

**கழிக்காறல்** *kal̤i-k-kāṟal,* பெ.(n.) கடல்மீன்வகை; a sea fish, silvery, attaining 5" in length.

*[கழி + காறல்.]*

**கழிக்குடி** *kal̤ikuḍi,* பெ.(n.) கன்னியாக்குமரியின் தொன்மைப் பெயர்; an ancient name of Cape Comorin (கல்.அக).

*[கழி + குடி.]*

**கழிக்கோல்**[1] *kal̤i-k-kōl,* பெ.(n.) ***கழிகோல்*** பார்க்க; see *kal̤ikōl.*

*[கழி + கோல் = கழிக்கோல்.]*

**கழிக்கோல்**[2] *kal̤i-k-kōl,* பெ.(n.) மூங்கில் (நாஞ்.); bamboo.

*[கழை → கழி + கோல்.]*

**கழிகடை** *kal̤i-kaḍai,* பெ.(n.) 1. மிக இழிந்த-வன்-வள்-து-வை; the worst, as applied to persons or things; refuse, that which is base.2. அறக்கெட்டது (கழ.அக); completely destroyed, fully spoiled. 3. பயனற்றதென நீக்கியது; that which is rejected or thrown out as worthless;refuse.

*[கழி + கடை.]*

**கழிகண்ணோட்டம்** *kaḻi-kaṇṇōṭṭam,* பெ.(n.) அளவிறந்த உவகை (குறள்.432.உரை.); lit, glance with overflowing eyes, great joy, delight.

[கழி + கண்ணோட்டம்.]

**கழிகணம்** *kaḻikaṇam,* பெ.(n.) வயிற்றுப் போக்கை உண்டாக்கும் குழந்தை நோய்வகை (பாலவா,40.); a disease of children attended with diarrhoea.

[கழி + கணம்.]

**கழிகம்** *kaḻigam,* பெ.(n.) வாலுளுவை (யாழ்.அக.); climbing staff plant.

[கழி → கழிகம்.]

**கழிகலமகடூஉ** *kaḻi-kala-magaḍūu,* பெ.(n.) கைம்பெண்; widow, who has been stripped of her ornaments. *"கொய்ம்மழித் தலையொடு கைம்மையுறக் கலங்கிய கழிகல மகடூஉப் போலப் புல்லென் றனை யால்" (புறநா.261.18.).*

[கழி + கலன் + மகடூஉ (பெண், மகள்.).]

**கழிகாலம்** *kaḻi-kālam,* பெ.(n.) சென்றகாலம்; past-time. *"வருங்காலம் நிகழ்காலம் கழிகால மாயுலகை ஒருங்காக அளிப்பாய்" (திவ். திருவாய்.3.1.5.).*

மறுவ. கழிந்தகாலம்

[கழி + காலம்.]

**கழிகாலம்**[2] *kaḻi-kālam,* பெ.(n.) கக்கற்கழிச்சல் காலம்; the time or season of cholera.

[கழி + காலம்.]

**கழிகெட்டவன்** *kaḻi-keṭṭavaṉ,* பெ.(n.) மிகக் கெட்டவன் (யாழ்ப்.); reprobate fellow, vile, wretch.

[கழி + கெட்டவன்.]

**கழிகோல்** *kaḻikōl,* பெ.(n.) 1. எளிதில் பால் கறவாத ஆவினை அசையாமல் நிறுத்திக் கறப்பதற்குப் பயன்படுத்தும் இணைப்புக்கழி; two rods joined at an angle and thrown round the horns of an intractable cow to keep it under control while milking. *"கடையாவின் கழி கோற்கைச் சறையினார்" (திவ். திருவாய்.4.8.4.).* 2. கன்று பாலுண்ணாதிருக்க முகத்திற்கட்டும் வாய்ப்பூட்டு (ஈடு.4.8.4.); wicker basket for the mouth of a calf to prevent it from sucking.

[கழி + கோல்.]

**கழிச்சல்** *kaḻiccal,* பெ,(n.) 1. வயிற்றுப்போக்கு; diarrhoea, looseness of bowels. *"குழந்தை கழிச்சலில் அழுகிறது" (உ.வ).* 2.கடும் வயிற்றுப்போக்கினால் ஏற்படும் அளவிற்கதிகமான அச்சம்; extreme fear, producing instantaneous diarrhoea.

[கழி → கழிச்சல்.]

**கழிச்சல் வகை:** 1. சீதக் கழிச்சல்- diarrhoea mucosa, 2. இரத்தக் கழிச்சல்- dysenteric diarrhoea, 3. சலக்கழிச்சல் அல்லது நீர்க் கழிச்சல்- watery diarrhoea diabetes, 4. சங்கரக் கழிச்சல்- diarrhoes attended with various symptoms-sympathetic diarrhoea, 5. சோபக் கழிச்சல்- diarrhoea followed by great weakness and exhaustion, 6. வெள்ளுடைக் கழிச்சல்- white diarrhoea, 7. வயிற்றுக் கழிச்சல்- gastrogenic diarrhoea (சா.அக.).

**கழிச்சியர்** *kaḻicciyar,* பெ.(n.) நெய்தனிலத்து மகளிர்; women of the maritime tracts. *"கழிச்சியர்க ளவரை யேனலுக்கு" (பெரியபு. திருக்குறிப்புத்.44.).*

[கழி[2] → கழிச்சியர்.]

**கழிசடை** *kaḻicaḍai,* பெ.(n.) கழிக்கப்பட்ட மயிர்ச்சடை போல இழிந்த–வன்–வள்–து (இ.வ.); person or thing that is cast away, as shaven hair, கழிசடைப் புத்தகம் படித்துக் காலத்தை வீணாக்காதே (உ.வ.).

[கழி + சடை.]

**கழிசல்** *kaḻišal,* பெ.(n.) கழிக்கப்பட்டது; that which is rejected. கழிசல்தாள்களுக்கு இந்நாளில் மதிப்பு அதிகம் (உ.வ.).

[கழிச்சல் → கழிசல்.]

**கழிசறை** *kaḻišaṟai,* பெ,(n.) ***கழிசடை*** (இ.வ.) பார்க்க; see *kaḻišaḍai.*

[கழிசடை → கழிசறை → கழிசிறை (கொ.வ.).]

**கழிசிறை** *kaḻisiṟai,* பெ,(n.) ***கழிசடை*** (இ.வ.) பார்க்க; see *kaḻišaḍai.*

[கழிசடை → கழிசறை → கழிசிறை (கொ.வ.).]

**கழிஞன்** *kaḻiṅaṉ,* பெ.(n.) உருட்டு வடிவுள்ள செம்பழுப்பு வண்ணக் கடல்மீன் (குமரி.மீன.வழ); a cylindrical sea fish of reddish brown colour.

[கழி → கழிஞன்.]

**கழித்தல்** *kaḻittal,* பெ.(n.) எண்ணின் கழிப்பு; subtraction. கழித்தல் கணக்கு கடினம் (உ.வ.).

[கழி → கழித்தல்.]

**கழித்துக்கட்டு[1]–தல்** *kalittu-k-kattu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. போக்குச் சொல்லி நெகிழ விடுதல்; to evade by excuses. நன்கொடை கேட்டால் ஏதாவது சாக்குப் போக்குச் சொல்லிக் கழித்துக் கட்டுவதில் கைதேர்ந்தவர் இவர் (உ.வ.). 2. இகழ்ந்து ஒதுக்குதல்; to cast off with contempt; பேதைகளின் பேச்சை பேரறிஞர் கழித்துக்கட்டுவர் (உ.வ.). 3.பயன்படாத தென ஒதுக்கி விடுதல்; avoiding as useless. "தைத்திங்களில் பழைய பொருள்களைக் கழித்துக் கட்டி வீட்டைத் துப்புரவு செய்வர்".

*[கழித்து + கட்டு.]*

**கழித்துக்கட்டு[2]–தல்** *kalittu-k-kattu-,* 5 செ.குன்றாவி. (v.t.) தனக்குப் பயன்படாதவற்றைப் பிறனிடஞ் சேர்த்தல்; to give away to others what is not useful to oneself. வீட்டுக்காரி வெளுத்துப்போன சேலைகளை வேலைக்காரியிடம் கழித்துக்கட்டினாள் (உ.வ.).

*[கழித்து + கட்டு.]*

**கழிந்தகாலம்** *kalindakālam,* பெ.(n.) 1. இறந்த காலத்தைக் குறிக்கும் இலக்கணக் கூறு; a grammatical category which shows past tense. 2. அகவை, பருவம், ஆண்டு, மாதம், நாள் போன்ற வற்றின் கழிந்த நிலை; past age, season period, years, month, day etc. நேற்று என்பது கழிந்த காலம் (உ.வ.).

*[கழி → கழிந்த + காலம்.]*

**கழிந்தார்** *kalindār,* பெ.(n.) 1. பொருளில்லாதவர்; poor, destitute persons. *"எடுப்பிற்கிளையுட் கழிந்தா ரெடுக்க" (நான்மணி62).* 2. *இறந்தவர்; deceased persons. "கழிந்தாரிடுதலை" (நாலடி.49).*

*[கழி → கழிந்தார்.]*

**கழிந்தோர்** *kalindōr,* பெ.(n.) வலிமிக்கோர்; very strong men. "கழிந்தோருடற்றுங் கடுந்தூ வஞ்சா". (பதிற்றுப்.90,5.).

*[கழி → கழிந்தோர்.]*

**கழிநிலம்** *kali-nilam,* பெ.(n.) 1. உப்பளம் (பின்.); natural salt pan. 2. உவர்த்தரை (வின்.); saline soil, marshy tract bordering on the sea. கழி நிலத்தில் விதைச்ச விதை கால்காசுக்கும் பயனில்லை (உ.வ.).

*[கள் → கழு → கழி + நிலம் – கழிநிலம்.]*

**கழிநெடியன்** *kali-nediyan,* பெ.(n.) மிகநெட்டையாக வளர்ந்தவன்; tallest person.

*[கழி + நெடியன்.]*

**கழிநெடில்** *kali-n-edil,* பெ.(n.) ***கழிநெடிலடி*** பார்க்க; see *kali-nedil-adi.*

*[கழி + நெடில்.]*

**கழிநெடிலடி** *kali-nedil-adi,* பெ.(n.) ஐந்தின் மிக்க சீரால் வரும் அடி (காரிகை, உறுப்பு.12.); lit., a very long line, a line in verse containing more than five feet.

(எ.டு.) *நீரிடை உறங்கும் சங்கம் நிழலிடை உறங்கும் மேதி*
*தாரிடை உறங்கும் வண்டு தாமரை உறங்கும் செய்யாள்*
*தூரிடை உறங்கும் ஆமை துறையிடை உறங்கும் இப்பி*
*போரிடை உறங்கும் அன்னம் பொழிலிடை உறங்கும் தோகை.*

*அறு சீரால் அமைந்த கழிநெடிலடிக்கு எடுத்துக்காட்டு.*

*[கழி + நெடில் + அடி.]*

**கழிப்பணம்** *kali-p-panam,* பெ.(n.) **கலிப்பணம்** பார்க்க; see *kali-p-panam.*

*[கலிப்பணம் → கழிப்பணம்.]*

**கழிப்பறை** *kali-p-parai,* பெ.(n.) ***கழிவறை*** பார்க்க; see *kali-varai.*

மறுவ. கழிப்பிடம், ஒதுங்கறை.

*[கழி – கழிப்பு + அறை.]*

**கழிப்பாக்கு** *kalippākku,* பெ.(n.) ***களிப்பாக்கு*** பார்க்க; see *kali-p-pākku.*

குட. களியடக்கெ

*[களி → கழி + பாக்கு (கொ.வ).]*

**கழிப்பாம்பு** *kali-p-pāmbu,* பெ.(n.) ஆறுகாலுடைய ஒரு விலங்கு (சிலப்.பக்.524, குறிப்பு.); kind of animal or creature having six legs.

*[கழி + பாம்பு.]*

**கழிப்பிடம்** *kalippidam,* பெ.(n.) கழிப்பறை; public convenience. இது கட்டணக் கழிப்பிடம் (உ.வ.).

மறுவ. கழிப்பறை, ஒதுங்கறை.

*[கழிப்பு → இடம்.]*

**கழிப்பிரண்டை** *kali-p-pirandai* பெ.(n.) கோப்பிரண்டை; a species of adamantine creeper (சா.அக.).

*[கழி → பிரண்டை.]*

**கழிப்பு[1]-தல்** *kalippu-*, 5 செ.கு.வி.(v.t.) 1. போக்குதல்; to spend, pass, as time. *"பன்னாட் கழிப்பி" (பொருந.111.).* 2. செய்து முடித்தல்; to complete. *"மூவேழ் துறையு முறையுளி கழிப்பி" (புறநா.152.20.).*

**க.** கழிபு, களிபு, களுபு. களுவு, களுகு, கழிப்பு, கழுபு, கழ்பு.

*[கழி → கழிப்பு.]*

**கழிப்பு[2]** *kalippu*, பெ.(n.) 1. ஒழிக்கை; expulsion, ejection. 2. சாந்தி கழிக்கை (உ.வ.); propitiating malignant deities by giving them offerings. 3. குற்றம் (திவா.); blemish, defect, fault.4. தள்ளுண்ட பொருள் (வின்.); that which is cast aside and rejected. 5. கழித்தல் (வின்.); subtraction.

**ம.** கழுப்பு, **க.** கழிபு.

*[கழி → கழிப்பு.]*

**கழிப்புக்கழி-த்தல்[1]** *kalippu-k-kali-*, 4 செ.கு.வி.(v.i.) 1. நோயாளி தலையைச்சுற்றிச் சோறு முதலியவற்றைக் கண்ணேறாகக் (திருஷ்டி) கழித்து எறிந்து விடுதல்; to throw away boiled rice, etc. after waving it round the head of a patient by way of averting the influence wrought by an evil eye or a malignant spirit. கழிப்புக் கழிச்சலைத் தாண்டினால் கால்நோய் வரும் (உ.வ.).

*[கழிப்பு + கழி.]*

**கழிப்புக்கழி[2]-த்தல்** *kalippukali-*, 4 செ.கு.வி.(v.t.) தீய ஆவிகளை ஒருவரின் உடலிலிருந்தோ ஒரிடத்தி லிருந்தோ நீக்கிவிடச் செய்யும் ஒருவித நடப்பு (சடங்கு); perform a ceremony, to expel the evil spirit,from a place or ones body.

*[கழிப்பு + கழி.]*

**கழிப்புச்சுற்றல்** *kalippu-c-curral*, பெ.(n.) ***கழிப்புக் கழித்தல்*** பார்க்க; see *kalippu-k-kalittal.* கண்ணேறு கழிவதற்குக் கழிப்புச் சுற்றிப் போடவேண்டும் (உ.வ.).

*[கழிப்பு + சுற்று.]*

**கழிப்புச்செய்-தல்** *kalippu-c-cey-*, 2 செ.குன்றாவி .(v.t.) ***கழிப்புக்கழித்தல்*** பார்க்க; see *kalippu-k-kalittal.* செய்வினை தீர கழிப்புச் செய்ய வேண்டும் (உ.வ.).

*[கழிப்பு + செய்.]*

**கழிப்புல்** *kali-p-pul*, பெ.(n.) உப்பு நிலத்தில் விளையும் புல்வகை; grass grown on saline soil (சா.அக.).

மறுவ. கழிமுட்டான்

*[கழி + புல்.]*

**கழிப்பெடு-த்தல்** *kalippedu-*, 4.செ.குன்றா.வி.(v.t.) கழிப்புக் கழி (இ.வ.) பார்க்க; see *kalippu-k-kali.*

*[கழிப்பு + எடு.]*

**கழிபடர்** *kali-padar*, பெ.(n.) அளவிடற்கரிய துன்பம்; great distress. *"தலைவிக்குக் காமமிக்க கழிபடர் சிறந்தாற் போல்வது" (தொல். பொருள்.111.உரை.).*

*[கழி + படர்.]*

**கழிபிறப்பு** *kali-pirappu*, பெ.(n.) முற்பிறப்பு (திவா.); previous birth; the birth preceding the present.

*[கழி + பிறப்பு.]*

**கழிபெரும்** *kaliperum*, பெ.எ.(adj.) மிக அதிகமாக; very excessive, enormous.

*[கழி + பெரும்.]*

**கழிபேருவகை** *kali-pēruvagai*, பெ.(n.) பெரு மகிழ்ச்சி; great joy.

*[கழி + பேருவகை.]*

**கழிமாந்தம்** *kali-māndam*, பெ.(n.) குழந்தைகட்கு வயிற்றுப் போக்கோடு வரும் மாந்த நோய்; infantile diarrhoea, one of eight kinds of mandam. கழிமாந்தம் வந்து குழந்தை இளைத்து விட்டது (உ.வ.).

*[கழி + மாந்தம்.]*

**கழிமீன்** *kaḻi-mīṉ,* பெ.(n.) உப்பங்கழியில் மேயுமோர் மீன் (செங்.மீனவ.); fish in back water.

*[கழி + மீன்.]*



கழிமீன்

**கழிமுகம்** *kaḻi-mugam,* பெ.(n.) 1.ஆறு கடலோடு கலக்குமிடம் (திவா.); mouth of a river; delta of a river, mountain torrent, waterfall.

**Indoni.** kali

*[கழி + முகம்.]*

**கழிமுட்டான்** *kaḻi-muṭṭāṉ-,* பெ.(n.) உவர்நிலத்தில் விளையும் ஒருவகைப்புல் வகை; a kind of grass grown on a saline soil.

**மறுவ.** கழிப்புல்

*[கழி + முட்டான்]*

*[இப்புல்வகை, கூரை வேயப் பயன்படுவதாம்.]*

**கழிமுள்ளி** *kaḻi-muḷḷi,* பெ.(n.) கழிநிலத்தில் வளரும் முட்செடி (மதுரைக்.96,உரை.); Indian night shade grown on saline soil.

*[கழி + முள்ளி.]*

**முள்ளிவகை:** 1. அடுக்குமுள்ளி, 2. ஆற்றுமுள்ளி, 3. கழுதைமுள்ளி, 4. செம்முள்ளி, 5. வெள்ளை முள்ளி, 6. நீர்முள்ளி, 7. வறட்டுமுள்ளி, 8. கறிமுள்ளி, 9. பப்பர முள்ளி, 10. கழிமுள்ளி.

*[கழி + முள்ளி.]*

**கழிமூலி** *kaḻi-mūli,* பெ.(n.) கழிநிலத்தில் வளரும் மூலிகை; herbaceous plant growing in saline soil or found on the banks of back water.

*[கழி + மூலி.]*

**கழிமை** *kaḻimai,* பெ.(n.) விலக்குகை (சங்.அக.); avoidance, riddance.

*[கழி + மை – கழிமை.]*

**கழிய** *kaḻiya,* கு.வி.எ.(adv.) மிகவும்; much; many exceedingly. *"கல்லாதா னொட்பங் கழியநன் றாயினும் கொள்ளார் அறிவுடையார்" (குறள், 404.).*

*[கழி → கழிய.]*

**கழியர்** *kaḻiyar,* பெ.(n.) 1. உப்பளவர்; dwellers in marine tract who are preparing salt. 2. நெய்தல் நில மக்கள்; people who are living in sea treact.

*[கழி → கழியர்.]*

**கழியல்**[1] *kaḻiyal,* பெ.(n.) 1. கழிகை; departing, passing. 2. கழிக்கப்பட்டது. (யாழ்.அக.); that which is cast away, rejected. 3. ***கழிச்சல்*** (இ.வ.) பார்க்க ; see *kaḻiccal.*

*[கழி → கழியல்.]*

**கழியல்**[2] *kaḻiyal,* பெ.(n.) 1. கழி. (திருநெல்.); cane, stick. 2. ***கடைமுளை.*** (நாஞ்.) பார்க்க; see *kaḍai-muḷai.*

*[கழி → கழியல்.]*

**கழியல்மாறு–தல்** *kaḻiyal-māṟu-,* 5. செ.கு.வி.(v.i.) பிணங்குதல் (நாஞ்.); to be at loggerhead.

*[கழியல் + மாறு.]*

**கழியவர்** *kaḻiyavar,* பெ.(n.) ***கழியர்*** பார்க்க; see kaḻiyar *"கழியவர் கானவர்க் களித்து" (பெரியபு. திருக்குறிப்.44.).*

*[கழி → கழியவர்.]*

**கழியிருக்கை** *kaḻi-y-irukkai,* பெ.(n.) ஆறுசூழ்ந்த இடம்; delta tract.

**மறுவ.** அரங்கம்; ஆற்றிடைக் குறை.

*[கழி + இருக்கை.]*

**கழியுடல்** *kaḻi-y-uḍal,* பெ.(n.) பிணம் (Pond.); carcass, corpse.

*[கழி + உடல் – கழியுடல்.]*

**கழியுப்பு**[1] *kaḻi-y-uppu,* பெ.(n.) கடலுப்பு (C.G.); salt from salt-pans.

*[கழி + உப்பு.]*

**கழியுப்பு**[2] *kaḻi-y-uppu,* பெ.(n.) மீனுக்கு உப்பு வைக்கும் போது சிதறிக் கிடக்கும் உப்பு; scattered salt while preparing dry fish.

*[கழி + உப்பு.]*

**கழியூணன்** *kaḻi-y-ūṇaṉ,* பெ.(n.) பெருந்தீனியுண் பவன்; glutton.

**மறுவ.** சாப்பாட்டு இராமன் (உ.வ.).

*[கழி + ஊண் + அன் – கழியூணன்.]*

**கழிவட்டம்** *kaḻivaṭṭam,* பெ.(n.) 1. கடைப்பட்டவன்–வள்–து.(இ.வ.); refuse,riff-raff,dregs of society. கழிவட்டப் பேர்வழியால் காரியம் உருப்படாது (உ.வ.). 2. கவைக்குதவாதவன்; a person who is good for nothing.

*[கழி + வட்டம் – கழிவட்டம்.]*

**கழிவட்டை** *kaḻi-vaṭṭai,* பெ.(n.) ***கழிவட்டம்*** பார்க்க (கொ.வ.); see kaḻi-vaṭṭam. கழிவட்டையை வேலைக்கு வைத்தால் காசுக்குத்தான் கேடு (உ.வ.).

*[கழி +(வட்டம்) வட்டை.]*

**கழிவலி** *kaḻivali,* பெ.(n.) பிரியும் எதிராற்றல்; negative current of electricity as opposed to. கவர் வலி; positive current (சா.அக.).

*[கழி + வலி.]*

**கழிவலை** *kaḻi-valai,* பெ.(n.) மீன்பிடிவலை; fishing net.

*[கழி + வலை.]*

**கழிவழி** *kaḻivaḻi,* பெ.(n.) கழிமுகப்பாதை; a path through backwater.

*[கழி + வழி.]*

**கழிவாசல்** *kaḻvāšal,* பெ.(n.) இரைப்பை; stomach (சா.அக).

*[கழி + வாசல்.]*

**கழிவாய்நஞ்சன்** *kaḻivāy-nañjaṉ-,* பெ.(n.) பாம்பு வகை (யாழ்.அக.); a kind of snake.

*[கழி + வாய் + நஞ்சன்.]*

**கழிவிடம்** *kaḻi-v-iḍam,* பெ.(n.) 1. குப்பைக் கொட்டும் இடம்; place or site for keeping refuse. 2. கழிப்பறை; lavatory.

*[கழி + இடம்.]*

**கழிவிரக்கம்** *kaḻivirakkam,* பெ.(n.) 1. நெக்கு உருகுதல்; அளவற்ற இரக்கம்; remorse, repentance. *"கற்றார்முற்றோன்றா கழிவிரக்கம்" (நான்மணி.8.).* 2. பிறர்மேற் காட்டும் இரக்கம்; sympathy. கழிவிரக்கங் கொண்டு அவன் தீச்செயலுக்குத் துணை போகாதே (உ.வ.). 3. நிகழ்ந்ததை யெண்ணி ஒருவன் தன்னைத்தானே நொந்து கொள்ளுகை; self pity கழிவிரக்கங் கொள்ளாதே, அது உன்னைச் செயலற்றவன் ஆக்கிவிடும் (உ.வ.).

*[கழிவு + இரக்கம்.]*

**கழிவு**[1] *kaḻivu,* பெ.(n.) 1. காலம், இடம் முதலியன கழிந்து போகை. தேர்வு விரைந்து எழுதியதால் கழிவு நேரம் இன்னும் இருக்கிறது. 2. இறந்தகாலம் (நன்.145.); past tense. 3. நிகழ்காலம்; present tense.*"இறப்பெதிர்காலக் கழிவுமானானை" (திவ். பெரியதி.4.3.2.).* 4. கழிகடை; waste, refuse, leaving, dross; that which is inferior, base, vile. 5. வயிற்றிலிருந்து வெளியேறும் மலம், சிறுநீர் முதலியன; discharge as from the bowels.

*[கழி → கழிவு.]*

**கழிவு**[2] *kaḻivu,* பெ.(n.) 1. தள்ளுபடியான தொகை; deduction, discount, rebate. மொத்தவட்டியில் எவ்வளவு கழிவு (உ.வ.). 2. ஈவு, மீதி; remainder. கட்டடம் கட்டியது போகக்கழிவு மிகுதியாகவே இருக்கிறது (உ.வ.). 3. ஏலச்சீட்டு முதலியவற்றில் கிடைக்கும் தள்ளுபடி; dividend in auction chit. ஏலக்கழிவு போகக் கட்ட வேண்டிய பணம் எவ்வளவு (உ.வ.). 4. விலைக்குறைப்பு; discount. இந்தச் சட்டை கழிவு போக ஐம்பது உருபாதான் (உ.வ.).

*[கழி → கழிவு.]*

**கழிவு**[3] *kaḻivu,* பெ.(n.) 1. ***கழுவாய்*** பார்க்க; see *kaḻuvāy*-sin. *"பெரும்பாவக் கழிவு" (காஞ்சிப்பு. கயிலாய.30.).* 2. உள்ளது சிறத்தல் (தொல். சொல்.314.); becoming excellent *"கூர்ப்பும் கழிவும் உள்ளது சிறக்கும்".*

*[கழி → கழிவு.]*

**கழிவு**[4] *kaḻivu,* பெ.(n.) 1. அழிவு; destruction. *"கழிவிலாத வாகாயம்"* (பிரபுலிங். *முத்தாயி.9.).* 2. சாவு, இறப்பு (சூடா.); death.

*[கழி[2] → கழிவு.]*

**கழிவு**[5] *kaḻivu,* பெ.(n.) மிகுதி; excess, abundance, surplus.

*[கழி[3] → கழிவு.]*

**கழிவு**[6] *kaḻivu,* பெ.(n.) 1. கெட்டுப்போன பொருள்; spoiled, destroyed materials. ஊசிப்போன கழிவுப் பொருளைக் குப்பையில் கொட்டு (உ.வ.). 2. தேவை யற்றது என்று கழிக்கப்பட்ட குப்பை கூளம்; waste, garbage. தொழிற்சாலைக் கழிவுகளால் குடிநீர் மாசுபடுகிறது (உ.வ.). 3. உரமாகப் பயன்படும் கழிவான இயற்கைப் பொருள்; agricultural waste. வேதிமஉரங்களின் வருகையால் இலைதழை முதலான இயற்கைக் கழிவுகள் வீணாகின்றன (இ.வ.). 4. தரக்குறைவால் நீக்கப்பட்டது; that which is discarded as inferior in quality. வெற்றிலைக் கழிவுகளை வாங்கி வந்து விற்கிறார் (உ.வ.).

*[கழி → கழிவு.]*

**கழிவுச்சங்கு** *kaḻivu-c-caṅgu,*பெ.(n.) வளையல் போன்ற பொருள்கள் செய்தபின் எஞ்சிய சங்கின் பகுதி (மீனவ.); the remaining part of conch after the bangles have been cut out.

*[கழிவு + சங்கு.]*

**கழிவுச்சரக்கு** *kaḻvu-c-carakku* பெ.(n.) தள்ளுபடி யான பொருள்; rejected goods. அடிபட்ட கழிவுச் சரக்குகளைக் குறைந்த விலைக்கு விற்பர் (உ.வ.).

*[கழிவு + சரக்கு.]*

**கழிவுசெய்-தல்** *kaḻivu-cey,* 1 செ.குன்றாவி.(v.t.) நீக்குதல்; omit, reject.

*[கழிவு + செய்தல்.]*

**கழிவுநீர்** *kaḻivu-nīr* பெ.(n.) 1. சாக்கடை நீர்; sewage water. 2. தொழிற்சாலை வீடு முதலியவற்றி லிருந்து வெளியேறும் அழுக்கு நீர்; industrial waste water.

*[கழிவு + நீர்.]*

**கழிவுநீர்க்கால்** *kaḻivu-nīr-k-kāl,* பெ.(n.) கழிவு நீர் செல்லும் வாய்க்கால்; sewer.

*[கழிவு + நீர்க்கால்.]*

**கழிவுப்பொருள்** *kaḻivu-p-poruḷ,*பெ.(n.) உடலிலிருந்து வெளியாகும் வியர்வை, சிறுநீர், மலம் முதலிய வேண்டாத பொருள்கள், excretory matters (சா.அக.).

*[கழிவு + பொருள்.]*

**கழிவுமுள்** *kaḻivu-muḷ,* பெ.(n.) 1. கடல் நடுவே உள்ள முட்காடுகள்; thorn forest (island)in the ocean 2. மீனிலிருந்து கழிக்கப்படும் முள்; scales, bones etc discarded before preparing fish for food.

*[கழிவு + முள்.]*

**கழிவெண்பிறப்பு** *kaḻiveṇpiṟappu,* பெ.(n.) அறுவகைப்பிறப்பையும் கடந்து ஆதன் அடையும் மேனிலை (நிருவாணநிலை); Jaina the final emancipation after passing through six kinds of births. *"கழிவெண் பிறப்பிற் கலந்து வீடணைகுவர்" (மணிமே.27:155.).* அறுவகைப் பிறப்பாவன: கரும் பிறப்பு, கருநீலப் பிறப்பு, பசும்பிறப்பு,செம்பிறப்பு, பொன்பிறப்பு, வெண்பிறப்பு (மணிமே. 27,150-152).

*[கழி + வெண் + பிறப்பு – கழிவெண்பிறப்பு (வெண்பிறப்பு கழிந்த அடுத்த நிலை).]*

**கழிவெளி** *kaḻi-veḷi,* பெ.(n.) 1. கடற்கழியுள்ள இடம் (இ.வ.); back-water. 2. பரந்த இடம்; large expanse of land.

*[கழி + வெளி.]*

**கழிவொற்றி** *kaḻivoṟṟi,* பெ.(n.) வட்டிக்கும் முதலுக்கு மாக ஒற்றிவைக்கப்பட்ட நிலத்தைக் குறித்த காலத்திற்குப் பயன்படுத்திக்கொண்டு, திருப்பிக் கொடுப்பதற்கான அடைமானம்; usufructuary mortgage which becomes automatically discharged by enjoyment for a fixed period in lieu of payment of principal and interest.

*[கழி + ஒற்றி.]*

**கழினி** *kaḻiṉi,* பெ.(n.) இடுதிரை(திவா.); curtain.

**மறுவ.** எழினி

*[கழி → கழினி.]*

**கழு**[1] *kaḻu-,* பெ.(n.) 1. கழுமரம்; stake for impaling criminals. *"கழுவிலேறி" (தமிழ்நா.235.).* 2. சூலம் (திவா.); trident. 3. கறவாத ஆவினைக் கறக்கும் பொருட்டு அதன் கழுத்தில் இரு முனையுஞ் சீவி மாலைபோற் கட்டியிடுங் கழி; piece of wood sharpened at both ends, strung together and put around the neck of fierce cows when milking. *"கழுவொடு சுடுபடை சுருக்கிய தோல்" (கலித்.106.).*

*[கள் → கழு. கள் = முள்.]*

**கழு**[2] *kaḻu*, பெ.(n.) பிணம்; dead body. கழுமரத்தில் ஏற்றிக் கொல்லப்பட்டவரின் பிணம்; body of a man killed on stake.

*[கள் → கழு² = கழுமறத்தில் ஏற்றிக்கொல்லப்பட்டவரின் பிணம்.]*

**கழு**[3] *kaḻu*, பெ.(n.) புற்பற்றை(வின்.); green turf.

*[கள்=கூர்மை. கள் → கழு (கூரியநீண்ட புல்முளை).]*

**கழு**[4] *kaḻu*, பெ.(n.) ***கழுகு*** பார்க்க; see *kaḻugu*. *"கழுக்குன்றமமர்ந்தான்றன்னை" (தேவா.1131.1).*

ம. கழு

*[கள் → கழு. (கூரிய அலகுடையது).]*

**கழு**[5] *kaḻu*, பெ.(n.) நொது நொதுப்பு, ஈரத்தால் ஆகிய சேற்றுப்பதம்; dampness in earth.

*[குள் → கழு.]*

**கழுக்கடை** *kaḻu-k-kaḍai*, பெ.(n.) 1. கழுவாயுதம் (திவா.); impaling stake with an iron point. 2. சிறிய ஈட்டி; spike, short spear. *"பிண்டி பாலங்கள் கழுக்கடைவாட்படை" (திருவிளை.திருமண.31.).* 3.சூலம்;trident. *"கழுக்கடை தன்னைக் கைக் கொண்டருளியும்" (திருவாத.2,110.).*

மறுவ. கழுமுள். ம. கழுமுள், கழுக்கோல்.

*[கழு + கடை.]*

**கழுக்களம்** *kaḻukkaḷam*, பெ.(n.)1. கழுவேற்றும் இடம்; place of execution by impaling. 2. கொலைக் களம்; murdering spot.

ம. கழுக்களம்

*[கழு + களம்.]*

**கழுக்காணி**[1] *kaḻu-k-kāṇi*, பெ.(n.) 1. உலக்கை (ஈடு.1.1.1. ஜீ.); pestle. 2. வேங்கை மரம் (ஈடு.1.1.1.ஜீ).; Indian kino tree. 3. அறிவற்ற தடியன்; stout man without common sense, thick head, dullard. *"கறுத்த செங்கழுக்காணிச் சமணரே" (திருவாலவா. 38.51.).*

ம.கழுக்காணி

*[கழு → கழுக்கு + ஆளி – கழுக்காளி → கழுக்காணி.]*

**கழுக்காணி**[2] *kaḻukkāṇi*, பெ.(n.) தாமரை (ஈடு.1.1.1.ஜீ); lotus.

**கழுக்குமொழுக்கெனல்** *kaḻukku-moḻukkeṉal.* பெ.(n.) உடல் மிகப் பருத்திருத்தற் குறிப்பு; expr. signifying corpulence, fatty appearance.

*[கழுக்கு + மொழுக்கு + எனல்.]*

**கழுக்குன்றம்** *kaḻu-k-kuṉṟam*, பெ.(n.) செங்கற்பட்டுக் கருகில் உள்ள திருக்கழுக் குன்றமலை; Thirukkaḻu-k-kuṉṟamalai, an ancient šaiva shrine near in chengalpaṭṭu. *"கணக்கில்லாத் திருக்கோலம் நிவந்து காட்டினாய் கழுக்குன்றிலே" (திருவாச.30–1).* ***கழு***[4] பார்க்க; see *kaḻu*[4].

*[கழுகு + குன்றம். கழு = கழுகு.]*

இங்கு, கழுகுகள் நண்பகல் வேளையில் உணவுக்காக வருவது வழக்கமாக உள்ளது.

**கழுக்கையர்** *kaḻukkaiyar*, பெ.(n.) மயிற்பீலிக்கு மாற்றாக கழுகுகளின் இறகு முடிப்பைக் கையில் எடுத்துச்செல்லும் சமணர்; Jain saints who take eagle's feather with them.

*[கழுகு + கையர்.]*

**கழுக்கோல்**[1] *kaḻu-k-kōl*, பெ.(n.) கழுமரம்; impaling stake. *"வேன்மழுக் கடைத்தலைக் கழுக்கோல்" (திருவாலவா.39.19.).*

ம.கழுக்கோல் (கூரை விட்டம்)

*[கழு + கோல்.]*

**கழுக்கோல்**[2] *kaḻu-k-kōl*, பெ.(n.) ***கழிக்கோல்*** (நாஞ்.) பார்க்க; see *kaḻi-k-kōl.*

*[கழு + கோல்.]*

**கழுகண்டு** *kaḻu-kaṇḍu*, பெ.(n.) வணங்காத தலையன் (யாழ்.அக.); refractory person.

*[கழுகன் → கழுகண்டு.]*

**கழுகரிப்பரி** *kaḻugari-p-pari*, பெ.(n.) இறக்கையுள்ள குதிரை(புதுவை); winged horse.

*[கழுகு + இறகு + பரி – கழுகிறகுப்பரி → கழுகரிப்பரி (கொ.வ.).]*

**கழுகழு–த்தல்** *kaḻu-kaḻu-*, 4 செ.கு.வி.(v.i.) ***கழுகுழு–த்தல்*** பார்க்க; see *kaḻu-kuḻu.-*,

*[கழுகுழு → கழுகழு.]*

**கழுகு** *kaḻugu,* பெ.(n.) 1. வளைந்த கூரிய அலகு டையனவும் பிணம் தின்பவையுமான பலவகைப் பறவைகளின் பொதுப் பெயர்; common name for vulture and eagle. *"கழுகொடு செஞ்செவி யெருவை திரிதரும்" (புறநா.370.25.).* 2. பறவை வகை; Pharaoh's chicken.3. பொன்னிறக் கழுகு; eagle.

**ம.**கழு,கழுகு,கழுகன்; **க.**கிடுக; **துட.**கழ்ள்; **து.**கரு; **தெ.,பர்.**தத்த; **கொலா.** தத்தா; **நா.**தத்தம்.

kaḻug-u, an eagle, comp. ***Persian.*** *kergish;* ***Ossete.*** *kartziga;* ***Sans.*** *garuḍa,* - the mythical eagle; *gridhra,* a vulture (C.G.D.F.L.591 and 616.). ***Ostiak.*** *kuruk*,an eagle (C.G.D.F.L.616)

*[கள் → கழு → கழுகு.]*

**கழுகுவகைகள்:** கருங்கழுகு, வெண்கழுகு, பிணந்தின்னிக் கழுகு, அரசாளிக் கழுகு.

**கழுகுப்பொறி** *kaḻugu-p-poṟi,* பெ.(n.) கோட்டை மதிலில் வைக்கப்படும் கழுகின் உருவமுள்ள பொறி (சிலப்.15.216.உரை.); ancient machine in the shape of an eagle mounted on a fort for defence.

*[கழுகு + பொறி.]*

**கழுகுழு–த்தல்** *kaḻu-kuḻu-,* 4 செ.கு.வி.(v.i.) ஈரத்தால் தரை முதலியன நொதுநொதுத்தல் (யாழ்.அக.); to feel damp and chilly.

*[கழு + குழு.]*

**கழுங்கு** *kaḻuṅgu* பெ.(n.) கமுகு, அடைக்காய்மரம்; arecanut tree (சேர. நா.)

**ம.** கழுங்கு

*[கமுகு → கமுங்கு → கழுங்கு (கொ.வ.).]*

**கழுச்சிறையன்** *kaḻu-c-ciṟaiyaṉ,* பெ.(n.) கழுவேற்றப் படத்தக்கவன்(வின்.); one who deserves implaing.

*[கழு + சிறையன்.]*

**கழுத்தகமுடையான்** *kaḻauttagam-uḍaiyāṉ,* பெ.(n.) கணவன் (இ.வ.); husband.

*[கழுத்து + அகம் + உடையான்.]*

**கழுத்தணி** *kaḻuttaṇi,* பெ.(n.) கழுத்தையொட்டி அணியும் அணிகலன்; necklace.

*[கழுத்து + அணி.]*

**கழுத்தல்** *kaḻuttal,* பெ.(n.) பொய் (வின்.); lie.

*[கழி → கழு→ கழுத்தல்.]*

**கழுத்தறு–த்தல்** *kaḻuttaṟu-,* 4 செ.கு.வி.(v.i.) 1. கழுத்தை அறுத்துக்கொல்லுதல்; slitting the throat. 2. சிறுசிறு செயலுக்காக முன்னெச்சரிக்கை இல்லாமல் பெருந்துன்பத்திற்கு உள்ளாக்குதல்; to put into great trouble without prior notice for small acts. 3. நம்பிக்கை தந்து ஏமாற்றுதல்; to deceive, causing frustration, to disappoint.

*[கழுத்து + அறு.]*

**கழுத்தறுப்பு** *kaḻuttaṟuppu,* பெ.(n.) 1. பெருந்துன்பம்; தொல்லை;distress,trouble as if the throat is being cut. அவன் தலையிட்டிருப்பது எனக்குக் கழுத்துறுப்புத்தான் (உ.வ.). 2. மிகுந்த தொந்தரவு; big nuisance. காலையிலேயே சரியான கழுத்தறுப்பில் மாட்டிக் கொண்டேன் (உ.வ.). 3. மிகுந்த துன்பம் தருபவ–ன்–ள்; a pain in the neck (said of a person).அவன் சரியான கழுத்தறுப்புப் பேர்வழியாக இருக்கிறான் (உ.வ).

*[கழுத்து + அறுப்பு.]*

**கழுத்தாடாளி** *kaḻuttāḍāḷi,* பெ.(n.) கழுத்தாடாத ஒட்டகம்; camel or any animal with a stiff neck. (சா.அக)

*[கழுத்து + ஆடா + ஆளி.]*

**கழுத்தாரம்** *kaḻuttāram,* பெ.(n.) 1. கழுத்தணி; ornament worn around the neck. 2. அலைதாடி (யாழ்.அக.); dewlap of cattle.

**ம.**கழுத்தாரம் (கழுத்துமாலை)

*[கழுத்து + ஆரம்.]*

**கழுத்திரு–த்தல்** *kaḻuttiru-,* 3 செ.கு.வி.(v.i.) ***கழுத் திறு–த்தல்*** பார்க்க see *kaḻuttiṟu.-,*

*[கழுத்து + இறு –கழுத்திறு → கழுத்திரு (கொ.வ).]*

**கழுத்திற்கட்டு–தல்** *kaḻuttiṟ-kaṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) ஒருவனைக் கட்டாயப்படுத்திப் பொறுப்பாளி யாக்குதல் (கொ.வ.); to consign to one's care against one's wishes, as a family which one cannot or will not maintain.

*[கழுத்து +இல் + கட்டு.]*

# கழுகு - வகைகள்



வெண்கழுகு



பிணந்தின்னிக்கழுகு



அரசாளிக்கழுகு



கருங்கழுகு

**கழுத்திறு–த்தல்** *kaluttiru* 4 செ.கு.வி.(v.i.) அதிகமான சுமையால் கழுத்து அழுங்குதல்; to press down the neck with heavy load.

*[கழுத்து + இறு.]*

**ழுத்து** *kaluttu.* பெ.(n.) 1. தலையையும் உடலையும் இணைக்கும் பகுதி; part of the body that connects the head with shoulder, neck. 2. தொண்டை அல்லது குரல்வளை அமைந்திருக்கும் பகுதி; part of the body where the throat is placed. 3.குடம்,குவளை, போன்றவற்றின் வாய்ப்பகுதியையும் பருத்த உடற் பகுதியையும் இணைக்கும் பகுதி; narrow part of vessel as of bottle, pot etc. 4. இருபொருள்களை இணைக்கும் குறுகிய பகுதி; narrow connecting part between two parts of things.5. நிலத்திற் பானை முதலியன வைத்தற்கேற்ற இடம்.elevation on or depression in the floor suitable for placing big pots.

**ம.** கழுத்து; **க.**கத்து, கழ்த்து; **தெ:** குத்துக, கொந்து; **து.** ·டெறு, கெக்கில் ; **கோத.** கழ்த்ல், கிட்க்; **பட.** கத்து; கட, கட்லி; **கோண்.** கடலி : **மால்.** க்வலர; **குரு.** கேசெர்.

**H.,V.** galla,gālam; **Kash.**kan. **Guj.** galum; **Beng.** ·ad; **Skt.** gala,griva; **E.**collar; **Gk.** kolla; **It.** collotto; **Sp.** ·uello; **F.** col; coll-n; **Dan.** halsi, hals ; **Cata:** coll; **Fin.** kausal; **·ung.** galler;**Pali.** Kol; neity; **Russ.** gule-n.

*[கள் = முள், கூர். கள்→கழு = கூரானகோல், குறுந்தடி. ·கழுந்து = குறுந்தடி; கழுந்து→ கழுத்து = குறுந்தடி போன்ற ·ற்ற முடைய கழுத்துப் பகுதி.]*

**·ழுததுக்கட்டி** *kaluttu-k-katti,* பெ.(n.) 1. கழுத்துக் ·முலை; tumour of the neck. 2. இடையூறு; obstacle, impediment. *"ஜ்ஞாந பக்திகளிரண்டும் கழுத்துக் ·ட்டியாய் விட்டன" (ஈடு.4.7.10).* 3. கழுத்துக் ·ட்டைவகை; woollen wrap for the neck.

*[கழுத்து + கட்டி.]*

**·ழுத்துக்கரப்பான்** *kaluttukkarappān,* பெ.(n.) குழந்தைகளுக்குக் கழுத்தைச்சுற்றிலும் வரும் ·ரப்பான் புண்; skin eruption found round the neck ·n children (சா.அக.).

*[கழுத்து + கரப்பான்.]*

**கழுத்துக்குக்கத்தி** *kaluttukku-k-katti,* பெ.(n.) அழிவை உண்டாக்கக்கூடிய–வன்–வள்–து (கொ.வ.); person or thing feared, as a fatal knife.

*[கழுத்து + கு +கத்தி.]*

**கழுத்துக்குட்டை** *kaluttu-k-kuttai,* பெ.(n.) அங்கிக்குமேலே கழுத்தைச் சுற்றிக் கட்டுந் துணி; neck-tie,cravat.

*[கழுத்து + குட்டை.]*

**கழுத்துக்கொடு–த்தல்** *kaluttu-k-kodu-,* 4 செ.கு.வி.(v.i.) 1. தன்வருத்தம்பாராமல் பிறராற்றும் பணியைத் தானேற்று நிற்றல்; to risk one's life for the sake of others. 2. உயிர்க்கு இறுதி தரக்கூடிய குற்றத்தைப்புரிதல்(வின்); to commit a heinous crime likely to bring about one's own destruction.3. வாழ்க்கைப்படுதல்(இ.வ.); to be married முரடனுக்குக் கழுத்துக் கொடுத்த பிறகு மிதிக்குப் பயந்து என்ன பயன் (உ.வ.).

*[கழுத்து + கொடு.]*

**கழுத்துக்கோல்** *kaluttu-k-kōl,* பெ.(n.) ***கயிற்றுக் கோல்*** பார்க்க; (G.TJ.D.i.133.); see *kayirru-k-kōl.*

*[கழுத்து + கோல்.]*

**கழுத்துச்சட்டை** *kaluttu-c-cattai,* பெ.(n.) பெண்களின் அங்கிவகை(யாழ்ப்.); a girl's jacket.

*[கழுத்து + சட்டை.]*

**கழுத்துச்சந்து** *kaluttu-c-candu,* பெ.(n.) கழுத்தின் மூட்டு (திவா); nape of the neck.

*[கழுத்து + சந்து.]*

**கழுத்துத்திருகு–தல்** *kaluttu-t-tirugu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. கழுத்தை முறித்தல் (கொ.வ.); to wring the neck as of a fowl. 2. கட்டாயப்படுத்தல்; lit, to twist the head, to persecute.

**மறுவ.** கழுத்திறுக்குதல், கழுத்துமுறித்தல்.

*[கழுத்து + திருகு.]*

**கழுத்துப்பட்டி** *kaluttu-p-patti* பெ.(n.) ***கழுத்துப் பட்டை*** பார்க்க; see *kaluttu-p-pattai*

*[கழுத்துப்பட்டை → கழுத்துப்பட்டி]*

**கழுத்துப்பட்டிகை** *kaḻuttu-p-paṭṭigai,* பெ.(n.) ***கழுத்துப்பட்டை*** பார்க்க; see *kaḻuttu-p-paṭṭai.*

*[கழுத்து + கட்டிகை.]*

**கழுத்துப்பட்டை** *kaḻuttu-p-paṭṭai,* பெ.(n.) 1. சட்டையின் கழுத்தைச் சுற்றித் தைத்திருக்கும் பட்டைத்துணி; collar of a cloak. 2. ***கழுத்துக் கட்டி***[3] பார்க்க; see *kaḻuttu-k-kaṭṭi*[3].

*[கழுத்து + பட்டை.]*

**கழுத்துப்பிடிப்பு** *kaḻuttu-p-piḍippu,* பெ.(n.) கழுத்துச் சுருக்கு; stiff neck, torticollis.

*[கழுத்து + பிடிப்பு.]*

**கழுத்துப்பொருத்தம்** *kaḻuttu-p-poruttam,* பெ.(n.) திருமணப்பொருத்தம் (வின்.); thirumana-p-poruttam,an agreement between the horoscopes of the bride and the bridegroom.

*[கழுத்து + பொருத்தம்.]*

திருமணத்தின் போது கழுத்தில் மாலை அணிவித்தல் இன்றியமையாச் சடங்காக அமைந்ததன் அடிப்டையில் கழுத்துப் பொருத்தம் திருமணப் பொருத்தத்தைக் குறித்தது.

**கழுத்துமணி** *kaḻuttu-maṇi,* பெ.(n.) கழுத்தணிவகை; a kind of neklace.

*[கழுத்து + மணி.]*

**கழுத்துமுடிச்சு** *kaḻuttu-maḍiccu,* பெ.(n.) குரல் வளை (C.G.); Adam's apple, projection formed by the thyroid cartilage in the neck.

*[கழுத்து + முடிச்சு.]*

**கழுத்துமுறி[1]–த்தல்** *kaḻuttu-muṟi-,* 4 செ.கு.வி.(v.i.) 1. உடன்பாடின்மையைக் குறிக்கும் பொருட்டு கழுத்தைத் திருப்பிக் கொள்ளுதல். (இ.வ.); to express dissent by turning the neck. 2. கழுத்தை திருகுதல்; to twist the head, to persecute.

*[கழுத்து + முறி.]*

**கழுத்துமுறி[2]–த்தல்** *kaḻuttu-muṟi-,* 4 செ.கு.வி.(v.i.) 1. ஒருவனை வருத்திப் பொருள் முதலியன பெறுதல்; to obtain by force, as by ruining a person. 2. தொல்லை (தொந்தரவு) செய்து கேட்டல்; to importune.

*[கழுத்து + முறி.]*

**கழுத்துமேல் நில்(ற்)–தல்(றல்)** *kaḻuttumēl-nil(r)-,* 14 செ.கு.வி.(v.i.) 1. கழுத்தை மிதித்தல்; to step upon one's neck. 2. தப்பித்துக் கொள்ளாதபடி வற்புறுத்தல்; to press one so as not to escape (சா.அக.).

*[கழுத்து + மேல் + நில்.]*

**கழுத்துரு** *kaḻutturu,* பெ.(n.) தாலியிற் கோக்கும் பலவகையான தங்க உருக்கள்; pieces of gold of various shapes and sizes forming the accompaniments of the tāli.

*[கழுத்து + உரு.]*

**கழுத்து வெட்டி** *kaḻuttu-veṭṭi,* பெ.(n.) கொலைகாரன் (வின்.); cut-throat, murderer, assassin.

*[கழுத்து + வெட்டி.]*

**கழுத்தூட்டி** *kaḻuttūṭṭi,* பெ.(n.) தொண்டை (வின்.); throat.

*[கழுத்து + ஊட்டி.]*

**கழுத்தேர்** *kaḻuttēr* பெ.(n.) முதலேரைப் பின்தொடரும் இரண்டாம் ஏர்; the second plough in a row.

*[கழுத்து + ஏர்.]*

**கழுத்தேறுதண்டம்** *kaḻuttēṟu-taṇḍam,* பெ.(n.) கழுத்தைத் துண்டிக்கும் தண்டனை; capital punishment.

*[கழுத்து + ஏறு + தண்டம்.]*

**கழுத்தைக்கட்டு–தல்** *kaḻuttai-k-kaṭṭu,* 5 செ.குன்றா வி (v.i.) விடாது கட்டாயப்படுத்துதல்; lit., to press the neck, to importune, trouble unceasingly, harass. அந்தக்குடும்பம் என் கழுத்தை கட்டிக் கொண்டு வருத்துகிறது (உ.வ.).

*[கழுத்து + ஐ + கட்டு.]*

**கழுத்தைக் கொடு–த்தல்** *kaḻuttai-k-koḍu-,* 4 செ.கு.வி.(v.i.) திருமணத்திற்கு உட்படுதல்; accept the inevitablity of marriage. பணக்காரன் என்பதற்காகப் படிக்காதவனுக்குக் கழுத்தைக் கொடுக்க முடியுமா? (உ.வ.).

*[கழுத்து + ஐ + கொடு.]*

**கழுத்தை நீட்டு–தல்** *kaḻuttai-niṭṭu-,* 5 செ.கு.வி (v.i.) ***கழுத்தைக்கொடு*** –பார்க்க; see *kaḻuttai-k-koḍu* காசு வைத்திருப்பவனுக்கெல்லாம் கழுத்தை நீட்ட முடியுமா? (உ.வ.).

*[கழுத்து + ஐ + நீட்டு.]*

**கழுதாழி** *kaḷu-tāḷi,* பெ.(n.) பேய்த்தேர்; lit, the devil chariot. *"எழுகழுதாழியினிடையே" (பகவற்.சாங்கிய. 22).*

*[கழுது + ஆழி. கழுது = பேய். ஆழி =சக்கரம்,சக்கரம் பொருத்திய தேர்.]*

**கழுதிரதம்** *kaḷudiradam,* பெ.(n.) ***கழுதாழி*** பார்க்க; see *kaḷu-tāḷi. "கனாக் கழுதிரதம்" (சி.சி.6.3.).*

*[கழுது + இரதம்.]*

**கழுது**[1] *kaḷudu,* பெ.(n.) 1. பேய்வகை; demon *"கூற்றுக் கொஃறேர் கழுதொடு கொட்ப" (மதுரைக்.633.)* 2. வண்டு (திவா.); beetle.

**ம.** கழுது

*[கழு → கழுது. கழு=தள்ளுதல், நீக்குதல், உதைத்தல், தாக்குதல், கழுது = தாக்குவது, தாக்கித் துன்புறுத்துவது.]*

**கழுது**[2] *kaḷudu,* பெ.(n.) காவற்பரண்;elevated plat form from which fields are guarded against damage from beasts and birds. *"சேணோனிழைத்த நெடுங்காற் கழுதில்" (நற்.276.).*

*[கழு = கூரியகோல், நெடுங்கழை,நெடுங்கால். கழு → கழுது= நெடுங்கால்கள் மீது அமைந்த பரண்.]*

**கழுதுக்குத்தி** *kaḷudu-k-kutti,* பெ.(n.) ***கடிச்சை*** பார்க்க; see *kaḍiccai.*

*[கழுது + கத்தி.]*

**கழுதும்பை** *kaḷu-tumbai,* பெ.(n.) கவிழ்தும்பை; dial.

*[கவிழ்தும்பை → கழுதும்பை.]*

**கழுதை** *kaḷudai,* பெ.(n.) 1. வெள்ளை நிற மூக்கும் நீண்ட காதுகளும் கொண்ட குதிரை இனத்தைச் சேர்ந்த விலங்கு; domestic ass, donkey. *"வெள்வாய்க் கழுதைப் புல்லினம்" (புறநா.392.9.).* 2. இழித்துப்பேசப் பயன்படுத்தும் வசைச்சொல் லாகவும் அன்பின் மிகுதியால் செல்லமாக அழைக்கப் பயன்படும் சொல்லாகவும் விளங்குவது a term of abuse as well as endearment. *சீ கழுதை,* வாயைமூடு (உ.வ.). 3. தாழ்ந்தது அல்லது இழிந்தது எனச் சுட்டும் அடைமொழி; an epithet to denoting meanness and lowness.

**ம.** கழுத; **க.**கழுதெ, கத்தெ; **தெ.**காடித; **து,**பட. கத்தெ; **கை.** கெதி; **துட.** கத்ய்,க்வத்தெ; **கோண்.** கதான்; **கூய்.** கொடொ; **நா.** காட்தி; **கொலா.** கத்தி, காட்தி; **பர்.** கரத்; **குரு.** கத்த; **மா.** கதகொள்ப்; **பிரா.** கத்த.

**H.,U.** gadha, gadha; **Mar.**gaddha, gaddhey, gadubha; **Pkt.** gaddaha; **Sind.** gadha gadhano;**Persian.** char; **Kurdish.** kerr; comp the **Laghmani** karatik (female ass). **Gk.** gaidaros; **Indon.** keladai; **Mal.** keldai; **Ori.** gadha. **Skt.** gardabha,khara as ass. compares **T.** kaḷudai an ass. The final bha of gardabha may have arisen from a **D.** sign of the nominative. The original idea of kaḷte is uncertain. Gardabha appears in Maharatta as gadhava [k.k.e.d.xx].

*காள் → காழ் → கழு → கழுதை. காள் காள் என்று கத்துவது கழுதை (தமி.வா. 107).*

*[கழுது → கழுதை. கள் → கழு = தள்ளுதல், உதைத்தல். கழுதை = உதைப்பது (ஒ.நோ. கழுது = பேய், தாக்குவது).]*

**கழுதைக்குடத்தி** *kaḷudai-k-kuḍatti,* பெ.(n.) ***கழுதைப்புலி*** பார்க்க; see *kaḷudai-p-puli.*

*[கழுதை + கடத்தி = கழுதைக்கடத்தி → கழுதைக் குடத்தி. கடம் = பாலை நிலம். கடத்தி = பாலைநிலத்துக் கொடுவிலங்கு (கழுதைப்புலி).]*

**கழுதைக்குரல்** *kaḷudai-k-kural,* பெ.(n.) நற்குறியாகக் கொள்ளப்படும் அவயக்குரல்; the call of an ass though disagreeable is considered a good omen (சா.அக.).

*[கழுதை + குரல்.]*

**கழுதைக்குளம்படி** *kaḷudai-k-kuḷamnaḍi.* பெ.(n.) வட்டக் குளம்படி; plant known as ass's hoof (சா.அக.).

*[கழுதைக் குளம்பு + அடி.]*

**கழுதைக்குளம்பு** *kaḷudai-k-kuḷambu,* பெ.(n.) குதிரை வலியைப் போக்கும் கழுதையின் கால் குளம்பு; ass's hoof used for curing convulsions attended with spasm,occurring in women subsequent to their confinement (சா.அக.).

*[கழுதை + குளம்பு.]*

**கழுதைக்குறண்டி** *kaḷudai-k-kuṟanḍi,* பெ.(n.) பூனை முட்குறண்டி; a species of plant of the cepidagathis genus.

*[கழுதை + குறண்டி.]*

**கழுதைக்குறத்தி** *kaḷudai-k-kuṟatti,* பெ.(n.) ***கழுதைப்புலி*** பார்க்க;see *kaḷudai-p-puli,* (சா.அக).

*[கழுதை + குறத்தி (குறம்(மலை) → குறத்தி).]*

**கழுதைக்கூத்து** *kaḻudai-k-kūttu,* பெ.(n.) எள்ளி நகையாடத் தக்க செய்கை; ridiculous behaviour. கழுதைக் கூத்தாடிக் காரியத்தைக் கெடுத்து விட்டான் (இ.வ.).

*[கழுதை + கூத்து.]*

**கழுதைகடி** *kaḻudai-kaḍi,* பெ.(n.) ஒருமூலை இடிந்த வீடு(யாழ்.அக.); house with one corner damaged, considered inauspicious.

*[கழுதை + கடி.]*

**கழுதைத் திசை** *kaḻudai-t-tišai,* பெ.(n.) வடமேற்குத் திசை; north-west direction.கழுதைத் திசையில் தலைவைத்துப்படுக்காதே (உ.வ.).

ம. கழுத திக்கு

*[கழுதை + திசை.]*

**கழுதைத்தும்பை** *kaḻudai-t-tumbai,* பெ.(n.) தும்பைச் செடிவகை (பதார்த்த.309.); a low annual plant with many hispid branches, flourishing in dry situation.

*[கழுதை + தும்பை.]*



கழுதைத்தும்பை

**கழுதைப்பாக்கு** *kaḻudai-p-pākku,*பெ.(n.) காட்டுப் பாக்கு; wild arecanut plant (சா.அக.).

*[கழுதை + பாக்கு. கழுதை = இழிந்தது, மட்டமானது.]*

**கழுதைப்பாலாட்டங்கொடி** *kaḻudai-p-pālāṭṭaṅkoḍi* பெ.(n.) ***கழுதைப்பாலை*** பார்க்க; see *kaḻudaippālai.*

மறுவ. நஞ்சறுப்பான் கொடி

*[கழுதைப்பால் + ஆட்டாங்கொடி.]*

கழுதைப்பால் போன்ற நீர்மத்தைக் கொண்ட கொடி. இது ஆட்டாங் கொடியினத்தைச் சார்ந்ததாகும் (சா.அக).

**கழுதைப்பாலை** *kaḻudai-p-pālai,* பெ.(n.) நஞ்சறுப் பான் கொடி; Indian ipecacuanha.

*[கழுதை + பாலை.]*

**கழுதைப்புலி** *kaḻudai-p-puli,* பெ.(n.) வெளிர் மஞ்சளும் சாம்பல் நிறமுங்கலந்த கோடுகளைக் கொண்ட ஒநாய் வடிவினதும் கழுதை போன்று கத்தும் தன்மையதும் புனுகுப்பூனை இனத்தைச் சார்ந்ததுமான காட்டுவிலங்கு; hyaena; it is of a pala yellowish grey colour with stripes though it somewhat resembles the dog in appearance it connects the cat with the civet. It's cry is disagreeable like that of an ass.

மறுவ. கழுதைக் குடத்தி, கழுதைக் குறத்தி.

ம.கழுதப்புலி; தெ.காடிதபுலி.

*[கழுதை +புலி.]*

**கழுதைமத்தி** *kaḻudaimatti,* பெ.(n.) ஒருவகை மீன்; a kind of fish.

ம. கழுத மத்தி

*[கழுதெ + மத்தி.]*

**கழுதைமறி** *kaḻudai-maṟi,* பெ.(n.) கழுதைக்குட்டி; young of ass.

*[கழுதை + மறி.]*

**கழுதைமான்** *kaḻudaimāṉ,* பெ.(n.) ஒருவகைமான்; a kind of deer.

ம.கழுதமான்

*[கழுதை + மான்.]*

**கழுதைமான்புள்ளி** *kaḻudai-māṉ-puḷḷi,* பெ.(n.) செய்நஞ்சைக் கட்டுமோர்வித மூலி; an unknown drug capable of binding or fixing arsenical poisons (சா.அக.).

*[கழுதை + மான் + புள்ளி.]*

**கழுதைமுள்ளி** *kaḻudai-muḷḷi,*பெ.(n.) செடிவகை; holly-leaved bear's breech.

ம. கழுமுள், கௌமுள்.

*[கழுதை + முள்ளி.]*

**கழுதையாட்டம்** *kaḻudai-y-āṭṭam,* பெ.(n.) ஒருவன் கையிற் சீட்டுக்குவிதலால் அவன் தோல்வியைக் குறிக்குஞ் சீட்டாட்ட வகை; a card game where an accumulation of cards in one's hand signifies one's defeat.

மறுவ: தழைவாரி

*[கழுதை + ஆட்டம்.]*

**கழுதையூர்தி** *kaḻudai-y-ūrdi,* பெ.(n.) கழுதையை ஊர்தியாகக்கொண்ட பெண் தெய்வம், மூதேவி (பிங்.); goddess of ill-luck who rides an ass.

*[கழுதை + ஊர்தி – கழுதையூர்தி.]*

**கழுதைவாகினி** *kaḻudai-vāgiṉi,* பெ.(n.) ***கழுதையூர்தி*** பார்க்க; see *kaḻudai-y-ūrdi.* *“நிணத்தசையில் வீழும்... கழுதை வாகினி பதாகை” (இரகு.திக்கு.112.).*

*[கழுதை + வாகினி.]*

**கழுதைவிடை** *kaḻudai-viḍai,* பெ.(n.) மரவகை; bloody drop ordure tree.

*[கழுதை +விடை.]*

**கழுதை விரியன்** *kaḻudai-viriyaṉ,* பெ.(n.) கருப்பு நிறமுடையதும், நீளமாக வளர்வதும், கடித்தால் கொல்லக்கூடிய நச்சுத் தன்மையுள்ளதுமான விரியன் பாம்புவகை; ass viper of the family of viperidae. It is of black colour and grows up to a large size. Its bite is deadly.

*[கழுதை + விரியன்.]*

**கழுந்தன்** *kaḻundaṉ,* பெ.(n.) கழுந்துபோற் பருத்து அறிவு மழுங்கினவன்; stout person without brains as the smooth end of a pestle. *“கழுந்தரா யுன்கழல் பணியாதவர்” (கம்பரா.தனியன்.9.).*

*[கழு → கழுந்தன்.]*

**கழுந்தாக்கு–தல்** *kaḻundākku-,* 5 செ.கு.வி.(v.i.) பலகையில் பொருத்துவாய் உண்டாக்குதல் (வின்.); to make tenons for dovetailing.

*[கழுத்து + ஆக்கு.]*

**கழுந்தி** *kaḻundi,* பெ.(n.) 1. முத்து(அக.நி.); pearl. 2. கரும்பு; sugarcane.

*[கழு → கழுந்தி.]*

**கழுந்து** *kaḻundu,* பெ.(n.) 1. உலக்கை, வில் முதலிய வற்றின் திரண்ட நுனி; rounded end as of pestle or of bow. *“கழுந்துடை வரிசிலை” (கம்பரா. கிளை.26.).* 2. முருட்டுத்தனம்; rashness, rudeness. *“கழுந்துறுமவுணர்”(கந்தபு.காசிபன்பு.25.).* 3. மரவயிரம்(வின்.); heart or core of a tree. 4. பலகைகளின் பொருத்துக்கூர்; tenon. கழுந்தாக்குதல் (யாழ்.அக.).

**ம.** கழுன்னு

*[கழு → கழுந்து.]*

**கழுந்துலக்கை** *kaḻundu-lakkai,* பெ.(n.) நெல் குற்று வதற்கு உதவும் பூணில்லாத உலக்கை (திருநெல்.); pestle without ferrule, used in husking paddy, as dist.fr. tiṭṭulakkai.

*[கழுந்து + உலக்கை.]*

**கழுநர்** *kaḻunar,* பெ.(n.) அழுக்கு, கரிசு (பாவம்) முதலியவை கழுவுவோர்; those who wash away dirt or sin. *“பாரகங் கழுநர்போல பரூஉத்தடி பலரு மேந்தி” (சீவக.2771.).*

*[கழுவு + நர் – கழுவுநர் → கழூஉ நர் → கழுநர்.]*

**கழுநீர்**[1] *kaḻu-nīr,* பெ.(n.) 1. செங்குவளை; purple Indian water-lily. *“கழுநீர்மாலை ஏலுடைத்தாக எழில்பெற அணிந்தும்” (திருவாச.2.113.).* 2. கருங்குவளை; blue Indian water lily. *“வள்ளிதழ்க் கழுநீர் மேய்ந்த கயவாய் எருமை” (சிறுபாண்–41–42).* 3. குவளை மலர்பூக்கும் கொடிவகை; water lily.

**ம.** கழுநீர்; **க.** கலுவெ; **கெ.**கலுவ.

*[கழு + நீர்.]*

**கழுநீர்**[2] *kaḻu-nīr* பெ.(n.) 1. அரிசி கழுவிய நீர்; water in which rice has been washed. *“கழுநீருட் காரட கேனும்” (நாலடி,217.).* 2. தீவினையைக் கழுவுதற்குரிய தூய்மையான நீர்; sacred water for cleaning away sin, as that of the Ganges. *“கழுநீர் கொண்ட வெழுநாளந்தி” (மதுரைக்.427.).*

**ம.** கழிநீர்; **க.** கழி (புளித்த கஞ்சி); **தெ.** கடுகுநீரு; **பட.** கோநீர்.

*[கழுவு + நீர் – கழுவுநீர் → கழுநீர்.]*

**கழுநெற்றி** *kaḻuneṟṟi,* பெ.(n.) அகலமான நெற்றி; broad forehead (சேரநா.).

**ம.** கழநெற்றி, கழுநெற்றி.

*[கழு + நெற்றி.]*

**கழுப்பற்றை** *kaḻu-p-paṟṟai,* பெ.(n.) புற்காடு (வின்.); tut of grass, turf.

*[கழு + பற்றை.]*

**கழுப்பாணி** *kaḻuppāṇi,* பெ.(n.) எதற்கும் பயன் படாதவன்; one who is good for nothing.

*[கழுக்காணி → கழுப்பாணி.]*

**கழுப்பு** *kaḻuppu,* பெ.(n.) சுணக்கம் (சம்.அக.); delay.

*[கள் → கழு → கழுப்பு.]*

**கழும்** *kaḻum,* பெ.(n.) மயக்கம்; mental delusion. *"கழுமென் கிளவி மயக்கஞ்செய்யும்" (தொல்.உரி.53).*

*[குள் → குழு → கழு → கழும் (மு.தா.177.).]*

**கழுமணி** *kaḻu-maṇi,* பெ.(n.) கடைந்த தூய்மையாக் கப்பட்ட செம்மணி; a spotless gem; polished gem. *"கழுமணியே யின்னும் காட்டு கண்டாய்" (திருவாச. 6,27.).* 2. தூய்மை செய்த சங்குமணி; polished beads made of conch (சா.அக.).

*[கழுவு + மணி – கழுமணி → கழுமணி.]*

**கழுமம்** *kaḻumam,* பெ.(n.) குற்றம்; fault. *"கழுமமி னெஞ்சகம்" (காஞ்சிப்பு.பன்னிரு.93.).*

*[கள் →கழு → கழுமம். கள் = குற்றம்.]*

**கழுமரம்** *kaḻu-maram,* பெ.(n.) கழுவேற்றுவதற்கு நடப்பட்ட மரம்; impaling stake.

ம. கழுமரம்

E. gallows; Oe. galgo; G.k.galwos; galgerv.

*[கழு + மரம்.]*

**கழுமல்**[1] *kaḻumal,* பெ.(n.) 1. மயக்கம்; confusion, fascination, delusion .*"கழுமலெய்திய காதற் றோழன்"* (திருக்கோ.28.கொளு.). 2. பற்றுகை (சூடா.); seizing. 3. நிறைவு (சூடா.); fulness.4. மிகுதி(சூடா); abundance.5. இணைப்பு; joint.

*[கழு → கழுமல்.]*

**கழுமல்**[2] *kaḻumal,* பெ.(n.) மாதுளை; common pomegranate (சா.அக.).

*[கழு → கழுமல்.]*

**கழுமலம்** *kaḻu-malam,* பெ.(n.) 1.திருஞான சம்பந்தர் பிறந்த ஊர்; the birth place of Thirugnana sambandar. *"கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை" (தேவா. 127–12).* 2. சீர்காழியின் பன்னிரு பெயர்களுள் ஒன்று; one of the twelve names for Sirgali, a Saiva shrine in Tanjore district. கருங்குவளை கருநெய்தல் கண்காட்டும் நாட்டி லுள்ள ஊர்; name of an ancient town in the cera country . *"நற்றேர்க் குட்டுவன் கழுமலத் தன்ன" (அகநா.270–9).*

மறுவ. சீர்காழி, திருப்பிரமபுரம், திருப்புகலி, திருச்சிரபுரம், திருச்சண்பை நகர், திருப்புறவம், திருப்பூந்தராய், திருவேணுபுரம், இருதோணிபுரம், திருக்கொச்சைவயம், திருவெங்குரு.(பெரியபு. திருஞான.14)

*[கழுவுமலம் → கழுமலம்.]*

**கழுமலை** *kaḻu-malai,* பெ.(n.) பிணக்குன்று; mound of carecasses. *"கன்டவிடமெடலலாம் கழுமலை யாக்குவே னென்றாரிறே" (திவ்.பெரியாழ்.4.3.7. வ்யா.பக்941.).*

*[கழு +மலை. கழு = கழுவிலேற்றப்பட்ட பிணம்.]*

**கழுமு**[1]**–தல்** *kaḻumu-,* 5. செ.கு.வி (v.i.) 1. சேர்தல்; to join, unite. *"பெண்டிர்...செந்தீக் கழுமினார்" (பு.வெ.7.28.)* 2. பொருந்தியதாதல்; to be fitting, suited. *"கழுமிய காதல்" (பு.வெ.10.முல்லைப்.5. கொளு)* 3. திரளுதல்; to come together, to crowd. *"மென்புகை கழுமு சேர்க்கை" (சீவக.1350.).* 4. கலத்தல்; to mix together. *"கழுமிய ஞாட்பு" (தொல்.சொல்.351.உரை.).* 5. நிறைதல்; to be full, complete.*"கழுமிற்றுக் காதல்" (சீவக.1870.).* 6. மிகுதல் (சூடா.); to be abundant, copious plentiful, to overflow. 7. மயங்குதல்; to be fascinated, bewildered,confused. *"கழுமிக் கோதை கண் படுக்கும்" (சீவக.349.).*

தெ. க்ரம்மு; கூய். தார்ச்

*[கழு → கழுமு]*

**கழுமு**[2] *kaḻumu,* பெ.(n.) 1. கலப்பு (தொல்.சொல். 351.); combination, mixture. 2. திரட்சி. (தொல். சொல்.351.உரை.); denseness as of the tuft of hair.

*[கல் → கல → கழ → கழு → கழுமு]*

**கழுமுள்** *kaḻu-muḷ*, பெ.(n.) 1. ***கழுக்கடை***[1] (சூடா.) பார்க்க; see *kaḻu-k-kaḍait*. 2. படைக்கலன் (திவா.); weapon. 3. ***மாதுளை*** (திவா.) பார்க்க; see *māduḷai.*

ம.கழுமுள்

*[கழு + முள்]*

**கழுமோது-தல்** *kaḻu-mōdu-*, 5 செ.கு.வி.(v.i.) தரையிற் புற்பற்றை அடித்தல்; to cover the ground with green sods, to turf.

*[கழு + மோது]*

**கழுவஞ்சம்பா** *kaḻuvañ-cambā*, பெ.(n.) ஆறு மாதத்தில் விளையும் நெல்வகை (விவசா.நான்மு.2.); a kind of paddy maturing in six months.

*[கழுவம் + சம்பா. சம்பு – சம்பா.]*

சம்பு என்பது சிறந்த நெல்வகைக்கும் சிறந்த கோரை வகைக்கும் பொதுப் பெயர். ஓங்கி வளர்ந்த சம்பாநெற் பயிரும் சம்பங் கோரையும் ஒத்த தோற்றமுடையன வாயிருத்தல் காண்க. நெல்லைக்குறிக்கும் சம்பு என்னும் பெயர் இன்று சம்பா என வழங்குகின்றது. உகரவீற்றுச் சொற்கள் ஆகார வீறு பெறுவது இயல்பே[எ.டு]கும்பு–கும்பா,தூம்பு–தூம்பா, குண்டு–குண்டா. கும்புதல் = திரளுதல் [சொ.ஆ.கட்.21.].

**கழுவடிக்கறுப்பன்** *kaḻu-v-aḍi-k-kaṟuppaṉ*, பெ.(n.) ***கழுவடியான்*** பார்க்க; see *kaḻuvaḍiyāṉ.*

*[கழு + அடி + கறுப்பன்.]*

**கழுவடியான்** *kaḻu-v-aḍiyāṉ*, பெ.(n.)கழுவடியில் ஆளுயரத்தில் கழியில் நிறுவப்பட்டுள்ள ஒரு சிறுதெய்வம். 5 (இ.வ.); a demon represented by a pole of the height of a man, on a raised platform beside an impaling stake.

*[கழு + அடியான்.]*

**கழுவண்டம்** *kaḻuvaṇḍam*, பெ.(n.) மருத்துவ முப்பு; a universal agent composed of three salts used in medicine (சா.அக.).

*[கழு + அண்டம்.]*

**கழுவல்** *kaḻuval* பெ.(n.) மழைநீர்வழிந் தோடும் நிலம்; terrain to drain rain water.

*[கழி → கழு→ கழுவு + அல்.]*

**கழுவறை-தல்** *kaḻu-v-aṟai-*, 4 செ.கு.வி.(v.i.) ***கழுமோது–,*** பார்க்க; see *kaḻu-mōdu-,*

*[கழு + அறை.]*

**கழுவன்** *kaḻuvaṉ*, பெ.(n.) 1. பொய்யில் நிலைப்பவன், கொடுந்தீயன்; daring villain, wretch, as deserving the stake. அவன் கழுவனாய்ச் சாதிக்கிறான் (கொ.வ.). 2. கழுவேறினவன்; One impaled.

ம. கழுவன்

*[கள் → கழு → கழுவன்.]*

**கழுவாணி** *kaḻu-v-āṇi*, பெ.(n.) கழுவிலுள்ள இருப்பு முள் (வின்.); iron point of an impaling stake.

*[கழு + ஆணி → கழுவாணி.]*

**கழுவாநெஞ்சன்** *kaḻuvā-neñjaṉ*, பெ.(n.) நெஞ் சுறுதியுள்ளவன் (இ.வ.); hard-hearted man.

*[கழு → கழுவம் + நெஞ்சன் → கழுவநெஞ்சன் கழுவாநெஞ்சன்.) கொ.வ.).]*

**கழுவாய்** *kaḻu-vāy*, பெ.(n.) தீங்கொழிப்பு, தீ வினையைப் (பாவத்தைப்) போக்கிக்கொள்ளுகை; ஆதனைத் தூய்மைப் படுத்துகை; purification, expiation from sin. *“வழுவாய் மருங்கிற் கழுவாயு முளவென” (புறநா.34,4,).*

*[கழு + வாய். 'வாய்' சொல்லாக்க ஈறு ஒ.நோ.எழுவாய்.]*

**கழுவாய்நிலம்** *kaḻu-vāy-nilam*, பெ.(n.) புற்பற்றை எடுக்கக்கூடிய நிலம் (வின்.); green fields from which sods are taken.

*[கழுவாய் + நிலம்.]*

**கழுவிக்குளிப்பாட்டு-தல்** *kaḻuvi-k-kuḷippāṭṭu-*, 5 செ.குன்றாவி.(v.t.) பிணத்தை நீராற் கழுவுதல் (இ.வ.); to wash a corpse.

*[கழுவி + குளிப்பு + ஆட்டு–.]*

**கழுவிழுங்கி** *ka-ḻu-viḻuṅgi*, பெ.(n.) சோம்பேறி (இ.வ.); sluggard.

*[கழு + விழுங்கி.]*

**கழுவு–தல்** *kaḻuvu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. நீரால் தூய்மையாக்குதல்; to wash, cleanse by washing, rinse, purify. *"கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றால்" (குறள்,840.).* 2. நீக்குதல்; to remove. *"அருவினை கழூஉ மாதி முதல்வன்" (மணிமே.12,36.).*

**ம.** கழுவுக, கழுகுக; **க.** கர்சு, கச்சு; **கோத.** கழ்த்; **குட.** கத்த். **தெ.** கக்கி, கடுகு, கட்சூட, கடுவு, கட்வு; **கூய்.** கடுப், **குவி.** க்லாபினை; **குரு.** கச்ச்னா; **மால்.** கசெ.

*[கள் → கழு → கழுவு-.]*

**கழுவு[2]–தல்** *kaḻuvu-,* 5செ.குன்றாவி.(v.t.) வட்டாக உருக்குதல்; to melt iron and mould as ingot. *"இரும்பறக் கழுவி" (சிவக.698.).*

*[கள் → கழு → கழுவு-.]*

**கழுவுநீர்** *kaḻuvu-nīr,* பெ.(n.) புண்கழுவும் மருந்து நீர். (mod.); lotion.

*[கழுவு + நீர்.]*

**கழுவுப்பற்றை** *kaḻuvu-p-paṟṟai,* பெ.(n.) ***கழுப்பற்றை*** பார்க்க; see *kaḻu-p-paṟṟai.*

*[கழுவு + பற்றை.]*

**கழுவுணி** *kaḻu-v-uṇi,* பெ.(n.) ***கழுவிழுங்கி*** பார்க்க; see *kaḻuviḻuṅgi.*

*[கழு + உண்ணி → உணி (இடைக்குறை).]*

**கழுவெண்ணெயுருக்கி** *kaḻuveṇṇey-urukki,* பெ. (n.)1. பிடித்தபிடி விடாது மனம்போல பணியாற்று பவ–ன்–ள். (யாழ்.அக.); one who persists pertinaciously in his work. 2. கொடியவ–ன்–ள்; cruel person.

*[கழு + வெண்ணெய் + உருக்கி.]*

**கழுவெளி** *kaḻu-veḷi,* பெ.(n.) ***கழுவாய் நிலம்*** (வின்.) பார்க்க; see *kaḻuvāy-nilam.*

*[கழு + வெளி.]*

**கழுவேற்றம்** *kaḻu-v-ēṟṟam,* பெ.(n.) கழுவில் ஏற்றுகை; impalement.

*[கழு + ஏற்றம் – கழுவேற்றம்.]*

**கழுவேற்றி** *kaḻuvēṟṟi,* பெ.(n.) கழுவேற்றுபவன்; one who executes the impalement.

*[கழு + ஏற்றி.]*

**கழுவேற்று–தல்** *kaḻuēṟṟu-,* 5 செ.குன்றாவி.(v.t.) கழுவினில் ஏற்றிக் கொல்லுதல்; to impale. *"வெங்கழுவேற்றுவா னிவ்வேந்தனே" (பெரியபு. திருஞான.798.).*

**ம.** கழுவேற்றுக

*[கழு + ஏற்று. ஏ → ஏற்று.]*

**கழுவேறி** *kaḻuvēṟi,* பெ.(n.) 1. கழுவேறினவன்; a malefactor, one impaled. 2. ***கழுவன்*** (வின்.) பார்க்க; see *kaḻuvaṉ.*

**ம.** கழுவேறி

*[கழு + ஏறி – கழுவேறி.]*

**கழுவேறு–தல்** *kaḻuvēṟu-,* 5 செ.குவி.(v.i.)1. கழுவின் கூரிய முனை உடலில் குத்தி ஊடுருமாறு செய்தல்; to be impaled. 2. பிறர் துன்பத்தைத் தாங்குதல்; to partake voluntarily in another's sufferings through friend-ship. *'கழுவேறத் துணிந்த நீலி கண்ணில் மைஇட்டதற்கு கரிக்கிறது என்கிறாளாம்' (பழ.).*

**ம.** கழுவேறுக

*[கழு + ஏறு.]*

**கழை[1]** *kaḻai,* பெ.(n.) 1. மூங்கில் (திவா.); spiny bamboo. *"கழைமாய் நீத்தம் காலை ஆர்ப்ப" (நற். 7).* 2. மூங்கிற்குழாய்; bamboo bottle. *"கழைபெய் தீந்தயிர்" (மலைபடு.523).* 3. வேய்ங்குழல்; musical bamboo-pipe. *"கண்ணன் மலர்வாய்க் கழைபெறிந்து" (சிவப். பிரபந். வெங்கையு 98.).* 4. கழைக்கூத்து; pole dance. *"கழைபா டிரங்கப் பல்லியங் கறங்க" (நற். 95.).* 5. கரும்பு (திவா.); sugar-cane. *"கழைகண்டன்ன தூம்புடைத் திரள்கால்" (அகநா.176).* 6. தூம்பு என்னும் மூங்கிலாலி என்றவோர் இசைக்கருவி (அகநா. 398. உரை); a kind of musical instrument. *"வாங்கமைக் கழையின் நரலும்" (அகநா. 398).*

**மறுவ.** மூங்கில், புல்.

**க.** கழிலெ, களிலெ, களலு, களலெ, களிலு, களிலெம்; **து.** கணிலெ; **பர்.** களீர; **தெ.,கட.,ம.** கழ; **பட.** கணெ; **Pkt.** karilla.

*(தொழு வாயிலை அடைக்கும் கம்பு)*

*[குல் → கல் → கழ → கழை = மூங்கில், மூங்கில் போன்ற பயிர்.]*

**கழை**[2] *kaḻai,* பெ.(n.) 1. ஓடக்கோல்; pole used for propelling boats. *"கழை நிலை பெறாஅக் காவிரி நீத்தம்" (அகநா.6).* 2. குத்துக்கோல், கோல்; elephant - goad, pole. *"கழை காண்டலுஞ் சுளியுங் களியானை" (திருக்கோ. 111). "இலங்கு பூங்கரும் பின் ஏர்கழை இருந்த வெண்குருகு நரல வீசும்" (அகநா.13.).* 3.தண்டு; stem of sugarcane; shaft of a bamboo. *"நெடுவரை ஆடுகழை யிருவெதிர்" (அகநா. 27.). "ஓங்கு மலை அடுக்கத்து ஆடுகழை நிவந்த பைங்கண் மூங்கில்" (நற். 28.).*

*[கழை¹ → கழை².]*

**கழை**[3] *kaḻai,* பெ.(n.) ஏழாவது விண்மீன் (புனர்பூசம்); the seventh asterism punarpusam *"திங்கட ருங்குழை சோனை" (விதாந. குணாகுண. 11).*

*[குழு → கழு → கழை.]*

**கழைக்கூத்தன்** *kaḻai-k-kūttaṉ,* பெ.(n.) ***கழைக்கூத் தாடி*** (திவா.) பார்க்க; see *kaḻai-k-kūttāḍi.*

*[கழை + கூத்தன்.]*

**கழைக்கூத்தாடி** *kaḻai-k-kūttāḍi,* பெ.(n.) மூங்கிற் கழியைப் பயன்படுத்திக் கூத்தாடுவோன்; pole-dancer, rope-dancer.

*[கழை + கூத்து + ஆடி.]*

**கழைக்கூத்து** *kaḻai-k-kūttu,* பெ.(n.) மூங்கிலில் நின்றாடுங் கூத்து; bamboo pole-dancing. *"மோகன மாடக் கழைக்கூத்தாட" (தனிப்பா. 1,235,1.).*

*[கழை + கூத்து.]*



கழைக்கூத்து

**கழைஞ்சு** *kaḻaiñju* பெ.(n.) ***கழஞ்சு*** பார்க்க; see *kaḻaiñju "நிறை ஊர்க்கல்லால் நானூற்றுக் கழைஞ்சு" (S.I.I.vol.19. insc. 107.).*

*[கழஞ்சு → கழைஞ்சு.]*

**கழைதின்யானையார்,** *kaḻaidiṉ-yāṉai-yār,* பெ.(n.) *"கழைதின் யானை"* என்ற தொடரைப் பயன்படுத்தி வல்வில் ஓரியைப் பாடிய பெயரறியப்படாத கடைக்கழகப் புலவர் (புறநா. 204); unknown Sangam poet known by one of the catching phrases used by him in his poems.

*[கழை + தின் + யானை + ஆர். கழை = கரும்பு. 'ஆர்' உயர்வுப் பன்மையீறு.]*

**கழைந்து** *kaḻaindu,* பெ.(n.) ***கழஞ்சு*** (T.A.S.i.9.) பார்க்க; see *kaḻañju.*

*[கழஞ்சு → கழைந்து (கொ.வ.).]*

**கழைநெல்** *kaḻainel,* பெ.(n.) மூங்கிலரிசி; bamboo seed. *"போகுயர் நீள்கழை நெல்லும்" (சீவக. 1422.).*

*[கழை + நெல்.]*

**கழைமுத்தம்** *kaḻaimuttam,* பெ.(n.) மூங்கிலிற் பிறந்த புகைநிற முத்து; a dark brown coloured pearl supposed to be formed in a bamboo.

*[கழை + முத்தம். முத்து → முத்தம்.]*

**கழைவளர்தூம்பு** *kaḻaivaḻartūmbu,* பெ.(n.) யானைத்துதிக்கை வடிவில் மூங்கிலால் செய்யப்பட்ட இசைவளரும் பெருவங்கியம்; long wind-instrument like an elephant's trunk, made up of bamboo. *"கழைவளர் தூம்பின் கண் ணிடம் இமிர" (மலைபடு. 533).*

*[கழை + வளர் + தூம்பு.]*

**கள்**[1]**-தல்** *kaḷ-,* 6 செ.கு.வி.(v.t.) 1. களைபிடுங்குதல்; to weed. *"ஏரினும் நன்றால் எருவிடுதல் நட்டபினீரினு நன்றதன் காப்பு" (குறள். 1038.).* 2. பறித்தல் (சூடா.); to pluck. 3. திருடுதல்; 5.115.); to rob, steal. *"கட்போ ருளரெனின்" (சிலப்.)* 4. ஏய்த்தல் (பிங்.); to deceive, entertain furtive designs upon.

**ம.** கள்க்குக, கக்குக; **கோத.** கள்வ்; **துட.** கொள்; **குட.** கள்; **க.**கள்; **து.**களு; **தெ.**கல்லெ; **பட.**கல்லு; **கோண்.** கல்லானா; குரு கர்னா; **மா.**கலெ.

*[குல (குத்தல் கருத்துவேர்) → கல் = கல்லுதல், தோண்டுதல், பறித்தல்.]*

**கள்**[2] *kaḷ,* பெ.(n.) களவு (சூடா.) stealing, theft, robbery.

**க.**கள்

*[கல் → கள்¹ → கள்²]*

**கள்**[3] *kaḷ,* பெ.(n.) 1. புளிக்க வைத்த பனை, தென்னை போன்றவற்றின் வடிநீர்.; the fermented sap, vinous liquor. *"கட்காதல் கொண்டொழுகுவார்" (குறள். 921.).* 2. கள்ளிற்கினமான தேன்; the saccharine juice formed in flowers; honey. *"கள்ளார்ந்த பூங்கொன்றை" (தேவா.1581.).* 3. தேனுண்ணும் வண்டு; bee *"கள்ளின மார்த்துண்ணும் வன்கொன் றையோன்" (திருக்கோ.295).*

**மறுவ.** சுடிகை, சுண்டம், சுண்டை.

**ம., க., பட.** கள், கள்ளு; **தெ.**கல்லி; கோத.கள்; **குட.** கள்ளி; **து.**கலி; கோண்.கல்; **நா.**கள்; **கூ.**கலு; **குவி.** காரூ.

**Skt.** kalyā; **Pkt.** Kallā; **H.**kal(w)ār; kalāl, **Mar., Guj.** khilo.

*[குல் → கல் → கள் = திரட்சி, ஊறி நிரம்பிய தேன் (மு.தா.196), வ.மொ.ச. 50.]*

கள்வகைகள்: தென்னங்கள், பனங்கள், ஈச்சங்கள், வேப்பங்கள், அத்திக்கள், அரசங்கள், சப்பாத்துக்கள், கூந்தற்பனைக்கள்.

கள் என்னும் சொல் வெறிநீர், பதநீர் [தெளிவு அல்லது பனஞ்சாறு] மட்டு [சர்பத்து], தேன் என்னும் நால்வகையையுங் குறிக்கும். இந்த நான்கையும் பயன்படுத்தினர் பண்டைத் தமிழர். இவற்றுள் வெறிநீர் வகையே வள்ளுவரால் கள்ளுண்ணாமை என்னும் அதிகாரத்திற் கண்டிக்கப்பட்டது.

வெறிநீர், இயற்கைக் கள்ளும் செயற்கைக் கள்ளும் என இருவகைத்து. பனங்கள்ளும் தென்னங்கள்ளும், ஈச்சங்கள்ளும் இயற்கை. அரிசிச்சோற்று நீரைப் புளிக்கவைத்து அரிக்கப் பட்ட அரியலும், மேனாடுகளினின்று புட்டிகளில் வந்த மதுக்கள்ளும் செயற்கை [பண்.நா.ப. 42.].

**கள்**[4] *kaḷ,* இடை (part) 1. பன்மை ஈறு; a plural surfix (usually of neuter). *"வாய்ச்சொற்க ளென்ன பயனுமில" (குறள். 1100).* 2. அசைநிலை; an expletive. *"சுட்டுங்களன்றே" (சீவக. 2773).*

*[குல் (கூடுதற் கருத்துவேர்) → கல் → கள் (திரட்சி, தொகுதி).]*

**க.** கள், களு; **ம.** கள்; **தெ.** குலு. லு, ளு; **குவி.** க; **கோண்.** க; பிரா. க், தள்; பட. தொ; **கோத.** தொளு.

பன்மையீறு மொழியில் பழமையுணர்த்ததற்குத் தொகுதிப் பெயர்களின் ஈற்றில் சேர்க்கப் படுகிறது.

*கா. : gin = man. kiai = whole or totality.*

gin - kiai = men. i = stranger. Pei = class. i = Pei - strangers. ngo - l. che = assembly. ngo -che. = we. தமிழில் 'கள்' ஈறு இங்ஙனம் தோன்றியதே (ஒ.மொ.நூ. 281.).

கள் ஈறு பலவின் பாற்குரியதென்று,

"கள்ளொடு சிவணும் அவ்வியற் பெயரே
கொள்வழி யுடைய பலவறி சொற்கே"

என்ற நூற்பா வரையறுக்கினும், இவ்வீறு பெற்ற 'மக்கள்' என்னும் சொல் தொல்காப்பியர் காலத்திலேயே உயர்திணை குறித்தமை, "உயர்திணை யென்மனார் மக்கட்சுட்டே" என்பதினா லறியப்படும். மக்கள் என்பது பலர்பால் வினைகொண்டு முடிதலின் தொகுதிப் பெயரன்றிப் பலர்பாற் பெயரே. மக + கள் = மக்கள். இது மரூஉப் புணர்ச்சி. மகவு என்னும் பெயர் குழந்தையைக் குறித்தலாலும், பகுத்தறிவில்லாத குழந்தை அஃறிணையின் பாற்பட்டதே யாதலாலும், மரபியலில் குரங்குக் குட்டிக்கும் மகவுப் பெயர் கூறப்பட்டிருத்தலாலும், முதலில் அஃறிணை மரபிற் சிறு பிள்ளைகளைக் குறித்த மக்கள் என்னும் பெயர் பிற்காலத்தில் ஒருவனின் மக்களான பெரியோ ரையும், ஓர் ஊர்த்தலைவனின் மக்களான பொது மக்களையும் குறிக்கத் தலைப்பட்டதென்று கொள்ள இடமுண்டு. முதுபண்டைக் காலத்தில் ஒவ்வோர் ஊரும் ஒவ்வொரு பெருங் குடும்பமாயிருந்து அவ்வக் குடும்பத் தலைவ ராலேயே ஆளப்பட்டு வந்தமை நோக்குக. மக்கள் என்னுஞ் சொல் முதன் முதல் அஃறிணை குறித்தமை கருதியே "மக்கள் என்னுஞ் சொல்லாற் சுட்டப்படும் உயர்குலம்" என்னும் கருத்தில் மக்கட்சுட்டென்று கூறியிருக்கலாம் தொல்காப்பியர் [பாவாணர். தொ.சொல். 169.அடிக்குறிப்பு].

**கள்**[5] *kaḷ,* பெ.(n.) முள்; thron.

*[குள் → கள். குள் = குத்தல் (வ.மொ.வ.10).]*

**கள்**[6] *kaḷ,* பெ.(n.) 1. மருதநிலம் (அக.நி.); agricultural region. 2. பொய்கை; tank.

*[குல் → கல் → கள். தாழ் நிலம்.]*

**கள்மரம்** *kaḷmaram,* பெ.(n.) கள்ளைத்தரக்கூடிய மரங்களான பனை தென்னை மரங்கள்; toddy-drawing trees, palmyra tree (சா.அக.).

*[கள் + மரம்.]*

**கள்வம்**[1] *kaḷvam,* பெ.(n.) திருட்டுச்செயல்; act of thieving. *"திருவளர் சோலைத் தென் நாட்கரை யென்னப்பன் கருவளர் மேனி என் கண்ணன் கள்வங்களே" (திவ். திருவாய். 9.6.5.).*

*[களவு → கள்வம் (வே.க.129.).]*

**கள்வம்**[2] *kaḷavam,* பெ.(n.) கவர்ச்சியுள்ளது; that which is charming, attractive. *"கள்வப் பணிமொழி நினைதொறு மாவிவேமால்" (ஈடு. 10,3,4. ஜீ.பக்.93).*

*[கள் → கள்வம்.]*

**கள்வர்கள்வன்** *kaḷvarkaḷvan,* பெ.(n.) சுவரன் மாறனின் சிறப்புப் பெயர்களுள் ஒன்று; one of the titles of Suvaranmāran (கல்.அக.).

*[கள்வர் + கள்ளன். கள்வன் → களவன் → களவரர் = (களப்பிரர்) களவர்க்குத் தலைவனான கள்வன்.]*

*கள்ளன் → கள்வன்.*

இவன் கி.பி. எட்டாம் நூற்றாண்டில் தஞ்சையைத் தலைநகராகக் கொண்டு இரண்டாம் நந்திவர்ம பல்லவனின் கீழிருந்து ஆட்சி செய்தவன். முத்தரையர் இனத்தைச் சார்ந்தவன்.

**கள்வன்**[1] *kaḷvaṉ,* பெ.(n.) 1. திருடன்; thief, robber *"என்னுள்ளங் கவர் கள்வன்" (தேவா. 1.1.).* 2. தீயவன்; a rogue, a bad fellow. 3. பொய்யுரைப்பவன், ஏமாற்றுபவன்; a liar, deceiver. *"கடைக்கணாற் கொல் வான் போல் நோக்கி நகைக்கூட்டஞ் செய்தானக் கள்வன் மகன்" (கலித். 51,15,16.).* 4. உள்ளங்கவர் பவன்; one who admires *"என்னுள்ளங் கவர்கள்வன்" (தேவா. 1:1.).*

**ம.** கள்ளன், களவன், களமன்; **க., பட., உரா.** கள்ள; துட. கெளு; **கசபா.** கள்ள, கள்ளா.

**Skt.** kalama; **Heb.** ganar; **Yid.** ganev; **Gk.** kleftis.

*[கள்ளுதல் = திருடுதல். கள் → களவு → கள்வு → கள்வன்.]*

*த.கள்வன் >skt. kalam (வ.மொ.வ.111).*

**கள்வன்**[2] *kaḷvaṉ,* பெ(n.) இடையீட்டாளர்; mediator.

*[களம் → களவன் → கள்வன் (கொ.வ.).]*

**கள்வன்**[3] *kaḷvaṉ,* பெ.(n.) 1. கரிய யானை (பிங்.); elephant. 2. கரியவன் (பிங்.); dark black person. 3. கருநண்டு; crab. *"புள்ளிக் கள்வன் ஆம்ப லறுக்கும் தண்டுறை யூரன்" (ஐங்குறு.21.).* 4. நண்டு வடிவான (கடக) ஓரை; karkadagam, cancer of the zodiac. 5. ஏய்ப்பவன்; deceitful or cunning person.

*[கள் → கள்வன். கள் = கருமை.]*

**கள்வி** *kaḷvi,* பெ.(n.) 1. திருடி; women thief. 2. ஏய்ப் பவள்; cunning woman. 3. மனமடக்கமுள்ளவள்; one who is able to conceal her mind. *"வெள்ளநீர்க் கிடந்தாயென்னும் எனக்கள்விதான் பட்ட வஞ் சனையே" (திவ். திருவாய். 2,4,7.).*

**ம.,பட.** கள்ளி; **க.**கள்ளதி

*[கள் → கள்ளி.]*

**கள்விலைஞன்** *kaḷ-vilaiñaṉ,* பெ.(n.) கள்விற்போன் (திவா.); toddy-seller.

**மறுவ.** படுவர், பழையர், பிழியர், கவுண்டியர், துவசர்.

*[கள் + விலைஞன். விலை + ஞ் + அன். 'ஞ்' சாரியை.]*

**கள்விலையாட்டி** *kaḷ-vilai-y-āṭṭi,* பெ.(n.) கள்விற் பவள்; she who sells toddy. *"கள்விலையாட்டி மறுப்பப் பொறாமறவன்" (சிலப்.12, உரைப்பாட்டுமடை, 13.பாடல்).*

*[கள் + விலை + ஆட்டி.]*

**கள்விற்போர்** *kaḷvirpōr,* பெ.(n.) ***கள்விலைஞன்*** பார்க்க; see *kaḷvilaiñaṉ.*

*[கள் + (விற்பவர்) விற்போர்.]*

**கள்வெறி** *kaḷveṟi,* பெ.(n.) குடிவெறி; drunkenness.

*[கள் + வெறி.]*

**கள்ள** *kaḷḷa,* இடை.(part.) ஓர் உவம உருபு; a particle of comparison *'கள்ள மதிப்பவெல்ல வீழ" (தொல். பொருள் 289.).*

*உல் – உ → உத்தல் = பொருந்துதல்.*

உத்தி = விளையாட்டில் இருவர் சேர்ந்து வரும் சேர்க்கை, அறிவிற்குப் பொருத்தமான இலக்கண நெறிமுறை.

உல் ஒல், ஒல்லுதல் = பொருந்துதல். ஒல் → ஒன். ஒன்னுதல் = பொருந்துதல். ஒல் → [ஒன்] → ஒண் → ஒண்ணுதல் = பொருந்துதல். ஒன் → ஒட்டு. ஒல் → ஒ. ஒத்தல் = பொருந்துதல். குல் → குலவு, குலவுதல் = கூடுதல். குல் → [குள்] → கள். கள்ளுதல் = நந்தல், கூடுதல். கள்ள = போல [தமிழ். வர. பக். 79.80.].

**கள்ளக்கடத்தல்** *kaḷḷa-k-kaḍattal,* தொ.பெ.(vbl.n.) பொருள்களைத் திருட்டுத்தனமாக ஒரிடத்திலிருந்து

மற்றொரு இடத்திற்குக் கொண்டு செல்லுதல்; smuggling.

ம. கள்ளக்கடத்து

*[கள்ள + கடத்தல்.]*

**கள்ளக்கடவி** *kaḷḷa-k-kaḍavi,* பெ.(n.) கொடி நெல்லி; gooseberry creeper said to possess refuvenating virtue (சா.அக.).

*[கள்ள(ம்) + கடவி.]*

**கள்ளக்கடவு** *kaḷḷakaḍavu,* பெ.(n.) திருட்டுவழி; secret passage.

பட. கள்ளதாரி

*[கள்ளம் + கடவு.]*

**கள்ளக்கடை**[1] *kaḷḷa-k-kaḍai,* பெ.(n.) திருட்டுப் பொருளை விற்குங்கடை; a repository of stolen goods.

*[கள்ள + கடை .]*

**கள்ளக்கடை**[2] *kaḷḷa-k-kaḍai,* பெ.(n.) ***கள்ளக்கடவு*** பார்க்க; see *kaḷḷak-k-kaḍavu.*

*[கள்ள + கடை.]*

**கள்ளக்கணக்கு** *kaḷḷa-k-kaṇakku,* பெ.(n.) பொய்க் கணக்கு; false accounts.

ம. கள்ளக்கணக்கு

*[கள்ளம்(ம்) + கணக்கு.]*

**கள்ளக்கத்தி** *kaḷḷa-k-katti,* பெ.(n.) உள்ளே கத்தியுள்ள கைத்தடி; hollow cane, with a knife inside it.

*[கள்ள + கத்தி.]*

**கள்ளக்கதவு** *kaḷḷa-k-kadavu,* பெ.(n.) பிறரறியாமற் செல்லுதற்குரிய கதவுள்ள வாயில் (C.E.M.); trap-door, secret door.

*[கள்ள + கதவு.]*

**கள்ளக்கப்பல்** *kaḷḷa-k-kappal,* பெ.(n.) கடற்கொள்ளைக் காரர்க்குரிய கப்பல் (வின்.); vessel of the pirates.

ம.கள்ளப்படகு

*[கள்ளம் + கப்பல்.]*

**கள்ளக்கப்பற்காரன்** *kaḷḷa-k-kappaṟ-kāraṉ,* பெ. (n.) கடற்கொள்ளையடிப்போன்; pirate.

*[கள்ள(ம்) + கப்பல்காரன்.]*

**கள்ளக்கம்மட்டம்** *kaḷḷa-k-kammaṭṭam,* பெ.(n.) கள்ள நாணயம் அடிக்கும் இடம்; a mint for counterfeit coins.

ம. கள்ளக்கம்மட்டம்

*[கள்ளம் + கம்மட்டம். கம்மம் = கருமான் தொழில், இரும்பு போன்ற மாழைத்தொழில். கம்மம் → கம்மடம் → கம்மட்டம்.]*

**கள்ளக்கயிறு** *kaḷḷa-k-kayiṟu,* பெ.(n.) 1. உறியின் சுருக்குக் கயிறு; ring or cord for holding articles firm in an *uri.* *"உறிகளிலே சேமித்துக் கள்ளக் கயிறுருவி வைத்த" (ஆடு. 2,3,8.)* 2. பையின் சுருக்குக் கயிறு; cord for opening and closing a bag or purse.

*[கள்ளம் + கயிறு.]*

**கள்ளக்கருப்பம்** *kaḷḷa-k-karuppam,* பெ.(n.) 1. பொய்க் கருப்பம்; psreudo-preganancy. 2. முறையிலாப் புணர்ச்சியினாலுண்டான கருப்பம்; pregnant following an illicit intercourse (சா.அக.).

*[கள்ள + கருப்பம்.]*

**கள்ளக்கல்** *kaḷḷa-k-kal,* பெ.(n.) நன்றாக வேகாததும் குறையுடையதுமான சுண்ணாம்புக்கல்; lime stone not properly burnt.

*[கள்ள + கல்.]*

**கள்ளக்கவறு** *kaḷḷa-k-kavaṟu,* பெ.(n.) கள்ளச் சூதுகருவி; false dice.

*[கள்ள(ம்) + கவறு]*

**கள்ளக்கவி** *kaḷḷa-k-kavi,* பெ.(n.) 1. பிறனொருவனது பாட்டைத் தனதென்று காட்டுபவன்; one who palms off another's poetical composition as one's own, plagiarist-poet. 2. ஒருவனுக்காகப் பாடிய பாட்டை மற்றொருவனுக்குக் கொடுப்போன் (வெண்பாப். செய். 48.,உரை) he who transfers a poem composed in honour of one to another. 3. ***கள்ளச் செய்யுள்*** பார்க்க; see *kaḷḷa-c-ceyyuḷ.*

*[கள்ள(ம்) + கவி.]*

**Skt.** kavi > **த.**கவி.

**கள்ளக்களவு** *kaḷḷa-k-kaḷavu,* பெ.(n.) ஒளிப்பு மறைப்பு; hiding, concealing.

*[கள்ளக் + களவு.]*

**கள்ளக்காசு** *ka||a-k-kāšu,* பெ.(n.) ***கள்ளநாணயம்*** பார்க்க; see *ka||a-nāṇayam.*

**க.**கள்ளநாண்ய

*[கள்ள(ம்) + காசு.]*

**கள்ளக்காதல்** *ka||a-k-kādal,* பெ.(n.) முறையற்ற காதல் தொடர்பு; illegal love.

*[கள்ள(ம்) + காதல்.]*

**கள்ளக்காதலன்** *ka||a-k-kādalan,* பெ.(n.) அயலாளுடன் காதல் கொள்ளும் ஆடவன்; illegal lover.

*[கள்ள(ம்) + காதலன்.]*

**கள்ளக்காதலி** *ka||a-k-kādali* பெ.(n.) முறையற்ற ஆடவனிடம் காதல் கொள்ளும் பெண்; lady engaged in illegal love.

*[கள்ள(ம்) + காதலி.]*

**கள்ளக்காது** *ka||a-k-kādu,* பெ.(n.) 1. தூர்ந்துபோன காது; blocked ears after growth. 2. செவிடுபோல் நடித்துப்பிறர் சொல்வதை அவரறியா வகையில் கேட்கும் செவி; the ear which hears others, voice by pretending to be deaf.

*[கள்ள(ம்) + காது.]*

**கள்ளக்காமம்** *ka||a-k-kāmam,* பெ.(n.) ஏதேனுமொரு வினை முடிவதற்காக மேற்கொண்ட பொய்க்காமம்; feigned or pretended love to gain some ulterior object. *"கரும நுதலிய கள்ளக் காமம்" (பெருங். உஞ்சைக். 35,228.).*

*[கள்ள(ம்) + காமம்.]*

**கள்ளக்காய்** *ka||a-k-kāy,* பெ.(n.) பழுக்காமற் பழுக்கும் காய்; unripe fruit even when simulated for ripening (சா.அக.).

*[கள்ளம் + காய்.]*

**கள்ளக்காய்படு-தல்** *ka||a-k-kāy-padu-,* 20 செ.கு.வி.(v.i.) பழுக்கவைத்த காய் பழுக்காமற் போதல் (வின்.); to fail in the process of ripening fruits by smoke.

*[கள்ள(ம்) + காய்படு.]*

**கள்ளக்கிடை** *ka||a-k-kidai,* பெ.(n.) 1. பொய்த்துயில், நோயாளி முதலியவர் போல பாசாங்கு காட்டி படுத்துக் கிடக்கை; malingering, feigning sickness or sleep. 2. மறைந்து பதுங்கியிருக்கை (வின்.); lying in ambush.

*[கள்ள(ம்) + கிடை.]*

**கள்ளக்கீலி** *ka||a-k-kili,* பெ.(n.) தூண்டிலிற் பிடிபடும் கீலிமீன் வகையுள் ஒன்று (முகவை.மீன.வழ.); a kind of kili fish caught by a fish hook.

*[கள்ள(ம்) + கீலி.]*

**கள்ளக்குணம்** *ka||a-k-kuṇam,* பெ.(n.) 1. திருட்டுக் குணம்; false, insidious, deceptive disposition, in man or beast. 2. மாறான தோற்றம் (வின்.); insidiousness, as in boils or diseases changeableness, as in weather, wind.

*[கள்ளம் + குணம்.]*

**கள்ளக்கும்பிடு** *ka||a-k-kumbidu,* பெ.(n.) கரவாக (வஞ்சகமாக)ச் செய்யும் வணக்கம்; hypocritical civility.

**மறுவ.** கள்ளக் கும்பிடு

*[கள்ள(ம்) + கும்பிடு.]*

**கள்ளக்குரல்** *ka||a-k-kural,* பெ.(n.) பொய்க்குரல்; pretended voice (சா.அக.).

*[கள்ள(ம்) + குரல்.]*

**கள்ளக்குழி** *ka||a-k-kuḷi* பெ.(n.) மேற்பரப்பில் இலை, தழை முதலியவற்றால் மூடப்பட்ட குழி; a hole by leaves etc (சே.நா.).

**ம.**கள்ளக்குழி

*[கள்ள(ம்) + குழி.]*

**கள்ளக்கூவை** *ka||a-k-kūvai,* பெ.(n.) போலிக் கூவைக் கிழங்கு; false arrow-root (சா.அக.).

*[கள்ள(ம்) + கூவை.]*

**கள்ளக்கையெழுத்து** *ka||a-k-kaiyeḷuttu,* பெ.(n.) ஒருவர் கையொப்பம் போன்று வேறொருவர் இடும் கைச்சாத்து; forged signature, forgery. அவர் கள்ளக்கையெழுத்திட்டு மாட்டிக்கொண்டார் (உ.வ.).

*[கள்ளம் + கை + எழுத்து.]*

**கள்ளக்கோல்** *kaḻḻa-k-kōl,* பெ.(n.) அளவைத் தவறாக நிறுத்துக்காட்டுந் துலாக்கோல்; false balance.

**ம.** கள்ளக்கோல்

*[கள்ளம் + கோல்.]*

**கள்ளக்கோலம்** *kaḻḻa-k-kōlam* பெ.(n.) குணக் கேடான சாயல்; one's pretended, appearance.

*[கள்ள(ம்) + கோலம்.]*

**கள்ளங்கடலி** *kaḻḻa-ṅ-kaḍali,* பெ.(n.) குருந்தோட்டி; common balah.

*[கள்ள(ம்) + கோலம்.]*

**கள்ளங்கபடம்** *kaḻḻaṅkabaḍam,* பெ.(n.) 1. பொய் களவு, சூழ்ச்சி, உள்ளிட்ட இழி செய்கை; guile, deceitfulness. 2. உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுகை; deceptive talk.

**மறுவ.** கள்ளங் கபடம்

*[கள்ளம் + கவடம் → கபடம்.]*

**கள்ளங்கவடு** *kaḻḻaṅ-kavaḍu,* பெ.(n.) ஏய்ப்பு (சூதுவாது); cunning, deceitful disposition.

**மறுவ.** கள்ளங்கபடு

*[கள்ளம் + கவடு – கள்ளங்கவடு (சொல்லிணை).]*

**கள்ளங்காய்படு–தல்** *kaḻḻaṅ-kāy-paḍu,* 20 செ.கு.வி. (v.i.) 1. ஆறிவரும் நேரத்தில் சொறிதல் முதலியவற் றால் புண் புடைகொள்ளுதல்; to reach an acute or aggravated stage, as a sore at almost the healing point when carelessly scratched or badly dressed. 2. செயல்முற்றுப் பெறுமுன் அதுபற்றிய செய்தி வெளியாகி அவ்வினை முடிய இடையூறு ஏற்படுதல்; to be thwarted in the accomplishment of a plan by premature disclosure.

*[கள்ளம் + காய் + படு.]*

**கள்ளச்சந்தை** *kaḻḻa-c-candai,* பெ.(n.) வரியேய்ப்பு வணிகம்; black market.

**க.**கள்ளச்சந்தெ; **ம.**கரிஞ்சந்த

*[கள்ள(ம்) + சந்தை.]*

**கள்ளச்சமயம்** *kaḻḻa-c-camayam* பெ.(n.) போலிச் சமயம்; false religion.

*[கள்ள + சமயம்.]*

**கள்ளச்சரக்கு** *kaḻḻa-c-carakku,* பெ.(n.)1. கள்ளத் தனமாகக் கொண்டுவரப்பட்ட சரக்கு; smuggled goods, contraband articles, articles conveyed evading public notice. 2. ஏமாற்றிவிற்கும் போலிச்சரக்கு; imitation goods sold as genuine articles. 3. திருடிய பொருள்; stolen property (சேரநா.).

**ம.**கள்ளச்சரக்கு; **க.**கள்ளமாலு.

*[கள்ள(ம்) + சரக்கு.]*

**கள்ளச்சாட்சி** *kaḻḻa-c-cāṭi,* பெ.(n.) 1.பொய்ச்சான்று; false evidence. 2. பொய்ச்சாட்சி சொல்லுவோன்; one who bears false witness.

**ம.** கள்ளச்சாட்சி; **து.** கலுசாட்சி

*[கள்ளம் + சாட்சி. Skt. Sākshi > த. சாட்சி.]*

**கள்ளச்சாமம்** *kaḻḻa-c-cāmam,* பெ.(n.) திருடுவதற் குகந்த நடுஇரவு; dead of night; midnight, as suitable for thieving.

*[கள்ளம் +சாமம். யாமம் → சாமம்.]*

**கள்ளச்சாராயம்** *kaḻḻa-c-cārāyam,* பெ.(n.) அரசு இசைவு பெறாமல் காய்ச்சப்படும் சாராயம்; illicit liquor

*[கள்ள(ம்) + சாராயம்.]*

**கள்ளச்சாவி** *kaḻḻa-c-cāvi,* பெ.(n.) ***கள்ளத்திறவு கோல்*** பார்க்க; see *kaḻḻathiṟavukōl*

*[கள்ள(ம்) + சாவி.]*

**கள்ளச்சி**[1] *kaḻḻacci,* பெ.(n.) கள்ளனினத்தைச் சேர்ந்தவள்; woman of kalla cast.

*[கள்ளன் (ஆ.பா.)→ கள்ளத்தி →கள்ளச்சி (பெ.பா.).]*

**கள்ளச்சி**[2] *kaḻḻacci,* பெ.(n.) திருடி; woman thief.

*[கள்ளன்→ கள்ளத்தி → கள்ளச்சி .]*

**கள்ளச்சி**[3] *kaḻḻacci,* பெ.(n.) வாழைப்பூவின் உள்ளுள்ள நரம்பு; a hard membranous substance inside the plantain flower (சா.அக.).

*[கள்→ கள்ளச்சி.]*

**கள்ளச்சிந்தை** *kaḻḻa-c-cindai,* பெ.(n.) ஏய்ப்பு எண்ணம்; proneness to deceive, cunning *"வெள்ளைக் கில்லை கள்ளச்சிந்தை"*

*[கள்ள(ம்) + சிந்தை.]*

**கள்ளச்சிரிப்பு** *ka*l*la-c-ciruppu,* பெ.(n.) 1. நெஞ்சினுள் பொய்மை வைத்து வெளிக்கு இனிமை காட்டுஞ் சிரிப்பு; simulated smile. 2. காதலர்களுக்குள் நிகழும் சிரிப்பு; smile between lovers.

*[கள்ள(ம்) + சிரிப்பு.]*

**கள்ளச்சீட்டு** பெ.(n.) பொய் ஆவணம்; false or note or draft.

*[கள்ள(ம்) + சீட்டு.]*

**கள்ளச்சுரம்** *kal̤la-c-curam,* பெ.(n.) 1. உள்மறைவான காய்ச்சல் நோய்; a lingering fever often deceptive and evading diagnosis. 2. விட்டு விட்டுக் காயும் காய்ச்சல்; intermittent fever. 3. பொய்ச்சுரம்; feverishness. 4. பொய்யாக நடித்த சுரம்; feigned or pretended fever. 5. பகுத்தறிய முடியாத சுரம்; any fever difficult to diagnose.

*[கள்ள(ம்) + சுரம்.]*

**கள்ளச்சூள்** *kal̤la-c-cūl̤,* பெ.(n.) பொய்யான உறுதி மொழி; false oath, perjury.

**மறுவ.** கள்ளச்சத்தியம்

*[கள்ளம் + சூள்.]*

**கள்ளச்செய்யுள்** *kal̤la-c-ceyyul̤,* பெ.(n.) தன்னுடையதென்று காட்டப்பட்ட மற்றொருவனுடைய செய்யுள்; of another person poetical composition shown as one's own.

*[கள்ள(ம்) + செய்யுள்.]*

**கள்ளச்சோறு** *kal̤la-c-cōṟu,* பெ.(n.) பணி செய்யாமல் உண்ணும் உணவு; food got without doing anywork. 2. திருட்டுச்சோறு; stolen meals.

**ம.**கள்ளச்சோறு

*[கள்ள(ம்) + சோறு.]*

**கள்ளஞானம்** *kal̤la-ñāṉam,* பெ.(n.) ***கள்ளவறிவு*** பார்க்க; see *kal̤l̤avaṟivu*

*[கள்ளம் + ஞானம்.]*

**கள்ளஞானி** *kal̤la-ñāṉi,* பெ.(n.) ***கள்ளவறிஞன்*** பார்க்க; see *kal̤l̤avaṟiñaṉ.*

*[கள்ள(ம்) + ஞானி.]*

**கள்ளடிமங்கன்** *kal̤l̤aḍi-maṅgaṉ,* பெ.(n.) ***கல்லுளிமங்கன்*** (இ.வ.). பார்க்க; see *kal̤l̤uḷi-maṅgaṉ*

*[கள்ளடி + மங்கன்.]*

**கள்ளத்தனம்** *kal̤l̤attaṉam.* பெ.(n.) ஏய்ப்பு, சூழ்ச்சி, போலித்தன்மை, பாசாங்கு, பொய்மை (வஞ்சம்); cunning, craftiness. pretence, hypocrisy. dishonesty, falsehood.

**தெ.**கள்ளத்தனமு; **ம.**கள்ளத்தரம்; **க.,குட.** கள்ளத்தன; **து.**கள்ளண்டி, கள்ளண்டிகெ.

*[கள்ளம் + தனம்.]*

**கள்ளத்தாலி** *kal̤la-t-tāli,* பெ.(n.) பிறர் மணஞ்செய் யாதிருக்கும் பொருட்டு தனக்கு உரிமையுள்ள பெண்ணிற்குத் திருட்டுத்தனமாகக் கட்டும் தாலி; string surreptitiously tied by certain people round the neck of a female relative, to prevent her from being married without consent.

**ம.** கள்ளத்தாலி

*[கள்ள(ம்) + தாலி.]*

**கள்ளத்திருக்கை** *kal̤la-t-turukki,* பெ.(n.) திருக்கை மீன்வகை; a kind of shrik fish.

*[கள்ள(ம்) + திருக்கை.]*



கள்ளத்திருக்கை

**கள்ளத்திறவுகோல்** *kal̤l̤attiṟavukōl,* பெ.(n.) பூட்டைத் திருட்டுத்தனமாகத் திறப்பதற்குப் பயன் படுத்தும் திறவுகோல்; duplicate key used illegally

**மறுவ.** கள்ளச்சாவி

**ம.** கள்ளத்தாக்கோல்

*[கள்ள(ம்) + திறவு + கோல்.]*

**கள்ளத்தீனி** *kallattīṉi,* பெ.(n.) திருட்டுத்தனமாக உண்ணும் உணவு; food taken by a patient clandestinely when prohibited in diet (சா.அக).

*[கள்ளம் + தின் → தீன் → தீனி.]*

**கள்ளத்தும்பு** *kalla-t-tumbu,* பெ.(n.) முடிச்சில் ஒருவகை; a kind of knot.

*[கள்ளம் + தும்பு.]*

**கள்ளத்துறை** *kalla-t-turai,* பெ.(n.) ஏற்றுமதி இறக்குமதியினைத் திருட்டுத்தனமாகச் செய்யுந் துறைமுகம் (வின்.); port where export and import are carried on stealthily.

*[கள்ளம் + துறை.]*

*கள்ளத்தும்பு = முடிச்சில் ஒரு வகை.*

**கள்ளத்தூக்கம்** *kalla-t-tūkkam,* பெ.(n.) பொய் யுறக்கம்; pretended sleep.

*[கள்ள(ம்) + தூக்கம்.]*

**கள்ளத்தொழில்** *kalla-t-toḻil,* பெ.(n.) பிறரை ஏமாற்றிச் செய்யும் வேலை; false, deceitful, cunning act; indolent or knavish action.

ம. கள்ளத்தொழில்

*[கள்ள(ம்) + தொழில்.]*

**கள்ளத்தோணி** *kalla-t-tōṇi,* பெ.(n.) 1. கடற் கொள்ளைக்காரர் படகு; a piratical vessel engaged in plunder. 2. திருட்டுத்தனமாகச் சரக்குகளைக் கடத்துவதற்கு உதவும் படகு; boat used for smuggling. 3. கள்ளத்தனமாகக் குடியேற உதவும் படகு; boat used for illigal migration from one country to another.

ம. கள்ளப்படகு

*[கள்ள(ம்) + தோணி.]*

**கள்ளத்தோற்றம்** *kalla-t-tōṟṟam,* பொய்த் தோற்றம்; false appearance, incognito.

*[கள்ள(ம்) + தோற்றம்.]*

**கள்ளநடத்தை** *kallanaḍattai,* பெ.(n.) 1. பொய் யொழுக்கம்; false, deceitful or fraudulent conduct. 2. தகாத உடலுறவு; adultery.

*[கள்ள(ம்) + நடத்தை.]*

**கள்ளநாடு** *kallanāḍu,* பெ.(n.) ***கள்ளர்நாடு*** பார்க்க; see *kallarnāḍu.*

*[கள்ளர் + நாடு.]*

**கள்ளநாணயம்** *kalla-nāṇayam,* பெ.(n.) போலி நாணயம்; counterfeit coin.

க. கள்ளநாண்ய; ம. கள்ளநாணயம்.

*[கள்ள(ம்) + நாணயம்.]*

**கள்ளநிலம்** *kallanilam,* பெ.(n.) பகைவரை அகப்படுத்த, உள்ளிடம் படுகுழியாய் மேலிடம் தரைபோல் அமைக்கப்பட்ட நிலம், பொய்க்குழி; covered hollow ground, meant as a trap to ensnare enemies.

*[கள்ள(ம்) + நிலம்.]*

**கள்ளநீர்** *kalla-nīr,* பெ.(n.) 1.ஆறவொட்டாமல் புண்ணிலிருந்து வடியும் தீ (துர்)நீர்; morbid humour in the body preventing the healing of ulcers. 2. அரத்தம்; blood (சா.அக.).

*[கள்ள(ம்) + நீர்.]*

**கள்ளநேரம்** *kalla-nēram,* பெ.(n.) 1. களவு முதலியன நடத்துவதற்கேற்ற வேளை; time favourable for theft or other illicit acts. 2. கன்னிருட்டுவேளை; darkness before dawn. 3. உறங்கும் நேரம்; sleeping time.

க. கள்ளகொத்து

*[கள்ள(ம்) + நேரம்.]*

**கள்ளநோக்கம்** *kallanōkkam,* பெ.(n.) 1.கள்ளப் பார்வை; sly, furtive look, opp. to vellai-nokkam (plain look) (திருக்கோ. 65 உரை.).2. மாற்றுக் கருத்து; insidious motive; deceitful object.

ம. கள்ளக்கண்ணு; க. கள்ளநோட.

*[கள்ள(ம்) + நோக்கம்.]*

**கள்ளநோக்கு** *kallanōkku,* பெ.(n.) ***கள்ளநோக்கம்*** பார்க்க; see *kalla-nokkam, "கள்ளநோக்கி லகப் படாதவர்"(திருவிளை. விடை. 12).*

*[கள்ள (ம்) + நோக்கு]*

**கள்ளநோய்** *kallanōy* பெ.(n.) கண்டுணர முடியாத நோய்; deceptive disease difficult of diagnosis (சா.அக.).

*[கள்ள (ம்)+ நோய்.]*

**கள்ளப்பசி** *kallappaši,* பெ.(n.) பொய்ப்பசி; illusive appetite.

*[கள்ளம்(ம்) + பசி.]*

**கள்ளப்படு—தல்** *kalla-p-padu-,* 20 செ.கு.வி (v.i.) பொய்யாதல்; to become false. *"கள்ளப்படாத களிவந்த வான்கருணை" (திருவாச.10,16).*

*[கள்ளம்(ம்) + படு.]*

**கள்ளப்பணம்** *kallappanam,*பெ.(n.) 1. போலிப்பணம்; counterfeit currency. 2. கணக்கில் காட்டி வரி செலுத்தாத பணம்; கருப்புப் பணம்; black money.

**க.**கள்ளவண, கள்ளகண.

*[கள்ளம்(ம்) + பணம்.]*

**கள்ளப்பணி** *kallappani,* பெ.(n.) 1. திருட்டுவேலை; trickery. 2. திருட்டுத்தனமாக அல்லது தலைத் தாழ்வு [illegible] பணி; a tricky knavish and indolent work (சேரநா.).

**ம.**கள்ளப்பணி, கள்ளவேல.

*[கள்ளம்(ம்) + பணி.]*

**கள்ளப்பருந்து** *kallapparundu,* பெ.(n.) ஒருவகைப் பருந்து; a kind of kite.

*[கள்ளம்(ம்) + பருந்து.]*

வானத்தில் வட்டமிட்டவாறே யாரும் அறியாவண்ணம் திடீரென்று இறங்கி இரை எடுத்தலால் இதன் செயல் போலியாய்ப்பட்டு கள்ளம் என அடைபெற்றது.

**கள்ளப்பல்** *kallappal,* பெ.(n.) பொய்ப்பல்; artificial teeth.

**ம.**கள்ளப்பல்லு

*[கள்ளம்(ம்) + பல்.]*

**கள்ளப்பாடம்** *kalla-p-pādam,* பெ.(n.) ஆசிரியரை ஏமாற்றி மறைவாக ஏட்டைப் பார்த்தோ அருகிலிருப் பவர் மெதுவாகக் கூறக்கேட்டோ ஒப்பிக்கும் பாடம்; lesson recited by a student who, though unprepared, is prompted or uses an open page to satisfy the teacher.

*[கள்ளம்(ம்) + பாடம்.]*

**கள்ளப்பார்வை** *kalla-p-pārvai,* பெ.(n.) 1. ஏய்ப்பு (வஞ்சக) நோக்கம்; thievish, designing look. 2. காமக்குறிப்போடு நோக்கும் நோக்கம்; sly look of lovers or libidinous persons. 3. பலர் முன்பு பிறர் அறியாவண்ணம் பார்க்கும் பார்வை; sly look.

**க.** கள்ளநோட

*[கள்ளம்(ம்) + பார்வை.]*

**கள்ளப்பாரை** *kalla-p-pārai,* பெ.(n.) விரகுள்ள (தந்திரமுள்ள) ஒருவகைக் கடல்மீன்; a sea-fish, attaining in length, bluish green, cunning in its habits. 2. கடல்மீன்வகை; a sea-fish.

*[கள்ளம்(ம்) + பாரை.]*

**கள்ளப்பிரான்** *kallappirān,* பெ.(n.) ***கள்ளழகர்*** பார்க்க; see *kallalagar... "திருவழுதிவள நாட்டு ஸ்ரீவைகுந்தத்து கள்ளப்பிரான் கோயிலில் திருப்பதி..." (S.I.I. vol.v part II insc. 74.).*

*[illegible]*

**கள்ளப்பிள்ளை** *kalla-p-pillai,* பெ.(n.) முறையற்ற உறவால் பெற்ற பிள்ளை; unnatural offspring, illegitimate child, bastard.

*[கள்ளம்(ம்) + பிள்ளை.]*

**கள்ளப்புணர்ச்சி** *kalla-p-punarcci,* பெ.(n.) திருமணத்திற்கு முன்பு பெற்றோரறியாமல் தாமே கூடுங் கூட்டம் (நம்பியகப்.34.); secret union between lovers before marriage without the knowledge of parents.

*[கள்ளம்(ம்) + புணர்ச்சி.]*

**கள்ளப்புனைவு** *kalla-p-punaivu,* பெ.(n.) ஏமாற்றும் பொருட்டு மேற்கொண்ட மாறுகோலம்; பொய்ப் புனைவு; guise of a dissembler, disguise for purposes of deception. *"கள்ள வேடத்தைக் கொண்டு போய்ப் புறம் புக்கவாறும்" (திவ். திருவாய். 5,10,4.).*

*[கள்ளம்(ம்) + புனைவு.]*

**கள்ளப்பூட்டு** *kalla-p-pūttu,* பெ.(n.) நுட்பமாகத் தகவுற அமைத்த பூட்டு; lock with an intricate mechanism.

ம. கள்ளப்பூட்டு

*[கள்ள(ம்) + பூட்டு.]*

**கள்ளப்பூமி** *kaḷḷa-p-pūmi,* பெ.(n.) ***கள்ளநிலம்*** பார்க்க; see *kaḷḷa-nilam, "கரப்பறை வீதியுங் கள்ளப்பூமியும்" (பெருங். உஞ்சைக் 33, 17).*

*[கள்ள(ம்) + பூமி. புவி → பூவி →பூமி.]*

**கள்ளப்பெயர்** *kaḷḷappeyar,* பெ.(n.) பொய்ப்பெயர்; false name.

ம. கள்ளப்பேரு

*[கள்ள(ம்) + பெயர்.]*

**கள்ளப்பேச்சு** *kaḷḷa-p-pēccu,* பெ.(n.) ஏய்ப்பு (வஞ்சக)ப் பேச்சு; insincere talk.

*[கள்ள(ம்) + பேச்சு.]*

**கள்ளப்பேட்டை** *kaḷḷa-p-pēṭṭai,* பெ.(n.) ***கள்ளச் சந்தை*** பார்க்க; see *kaḷḷa-c-candai.*

க. கள்ளப்பேடெ

*[கள்ள(ம்) + பேட்டை.]*

**கள்ளப்பேறு** *kaḷḷa-p-pēṟu,* பெ.(n.) நெறியற்ற முறையில் திருட்டுத்தனமாகப் பெறும் பிள்ளைப் பேறு; illegitimate child bearing.

*[கள்ள(ம்) + பேறு.]*

**கள்ளப்பொன்** *kaḷḷa-p-poṉ,* பெ.(n.) போலிப் பொன்; a counterfeit, base gold coin.

க. கள்ளகொன்னுது

*[கள்ள(ம்) + பொன்.]*

**கள்ளம்** *kaḷḷam,* பெ.(n.) 1. ஏய்ப்பு; guile, deception, dissimulation, trickishness, secrecy, slyness. *"கள்ளம் பிறவோ பசப்பு" (குறள், 1184).* 2. பொய்; lie, falsehood. *"கள்ளமே பேசி" (தேவா. 1115,6).* 3. களவு (சூடா); stealing, robbery, fraud, embezzlement. 4. குற்றம்; fault, defect, blemish. 5. மெய்யியல் அறியாமை, அவிச்சை; spiritual ignorance. *"ஞானத்தீயாற் கள்ளத்தைக் கழிய நின்றார்" (தேவா. 1103.).* 6. புண்ணிலுள்ள அசறு; morbid matter concealed in a boil or lodged in the system causing irritation.

**தெ**.கல்ல; **ம**.கள்ளம்; **க**.கள்ள; **து**.கள்ளெ; **கோத**. கள்வ்.

*[கள் →கள்ளம் = பொய். பொய்யாவது, சொல்லால் ஒன்றை மறைத்தல்.]*

**கள்ளம்பண்ணுதல்** *kaḷḷampaṇṇu-,* 9 செ.கு.வி.(v.i.) 1. வேலை செய்யாமல் ஏமாற்றுதல்; to play the truant. 2. வேலை செய்யச் சோம்புதல்; to be idle in work, to be dull, slow. 3. போலிப்புப் பண்ணுதல் (வின்.); to practise deception; to use alloy, cheat, act of the rogue, dissemble, pretend. 4. பொய்வேடமிட்டு ஏமாற்றுதல்; deception.

*[கள்ளம் + பண்ணு.]*

**கள்ளமடை** *kaḷḷamaḍai,* பெ.(n.) கள்ளவழியால் நீரைச் செலுத்தும் மடை; sluce for letting in water stealthily. *"வெள்ளத்தைக் கள்ளமடையாலே பள்ளத்தில் விடுமாபோலே" (திவ். அமலனாதி. 1.வியா.).*

*[கள்ளம் + மடை.]*

**கள்ளமணம்** *kaḷḷamaṇam,* பெ.(n.) பெற்றோர் இசைவின்றி மணமொத்தோர் தாமே செய்து கொள்ளும் மணம்; clandestine marriage *"கள்ள மணம் எம்குலத்தின் பழையசொத்து" (மாங்கனி).*

*[கள்ள(ம்) + மணம்.]*

**கள்ளமயிர்** *kaḷḷa-mayir,* பெ.(n.) பொய்ம்மயிர்; ஒட்டுமுடி; false hair. கள்ள மயிர் வைத்தால் உள்ள மயிரும் போய்விடும் (உ.வ.).

*[கள்ள(ம்) + மயிர்.]*

**கள்ளமனம்** *kaḷḷamaṉam* பெ.(n.) கள்ளத்தனமான மனம்; deceitful heart. *'கள்ளமனம் துள்ளும்' (பழ.).*

*[கள்ள + மனம்.]*

**கள்ளமாடு** *kaḷḷa-māḍu,* பெ.(n.) 1. பட்டிமாடு; cattle that intrude and graze by stealth, cow or bullock prone to stray. 2. சண்டி மாடு; ox that refuses to work. 3. திருடப்பட்ட மாடு; stolen cattle.

க. கள்ளதன

*[கள்ள(ம்) + மாடு.]*

**கள்ளமுத்திரை** *kallamuttirai,* பெ.(n.) போலிமுத்திரை; fake seal.

ம. கள்ளமுத்ர; க.கள்ளச்சு

[கள்ள(ம்) + முத்திரை.]

**கள்ளர்** *kaḷḷar* பெ.(n.) முக்குலத்தோரில் ஒரு பிரிவினர்; one of the divisions of Mukkulattōr.

[கள் = கள்ளுதல், கவர்தல். கள் + அர் – கள்ளர் = பண்டையர்.]

தமிழ் வேந்தர் காலத்தில் வெட்சிப்படை மறவருள் ஒரு பிரிவினர். இவர்கள் கொள்ளைக் காரர்களோ, கள்வர்களோ அல்லர். கள்ளர், மறவர், அகமுடையோர் என்ற முக்குத்தோர்களுள் ஒரு பிரிவினராகிய கள்ளர் முன்னர் வெட்சிப் படை மறவர்களாக இருந்து போர் தொடங்குமுன் பகையரசரின் ஆநிரைகளைக் கவர்ந்து வரும் தொழிலைச் செய்தவர்களாவர். வெட்சிப்பூச்சூடி இவர்கள் ஆநிரை கவர்ந்ததை 'வெட்சி நிரை கவர்தல்' என்னும் செய்யுள் வரியும் நிறுவ வல்லது. இவர்களையும் வேறு சில இனத்தவரையும் குற்ற மரபினர் (tribes) என்று வெள்ளையர் வகைப் படுத்தியது பொருந்துவதன்று.

**கள்ளர்தடி** *kaḷḷar-taḍi,* பெ.(n.) கள்ளர் எறியும் வளைதடி ஆய்தம்; throwing stick used by the Kallas and maravas resembling a boomerang.

[கள்ளர் + தடி.]

இன்றைக்கு 10,000 ஆண்டுகட்கு முன்னரே தொல் தமிழருக்கும் ஆத்திரேலியப் பழங்குடி மக்களுக்கும் தொடர்பு அறுந்து விட்டது. எனினும் இன்றும் அவர்கள் பேசும் மொழிகள் தமிழியத் தன்மை கொண்டுள்ளன. அவர்கள் பூமராங் ஆயுதமும் வளைதடி போன்றதே. ஒருசார் வளைதடி எறிந்தால் திரும்பி வராது. பெரும் பாலான 'பூமராங்' குகளும் அவ்வாறே. "Is the Boomerang oriental?" by D.S. Davidson. Journal of the American orental society: 1935.

**கள்ளர்நாடு** *kaḷḷar-nāḍu,* பெ.(n.) கள்ளர் இன மக்கள் மிகுதியாய் வாழும் பாண்டி நாட்டுப்பகுதி; region inhabited mostly by Kallar in and around Pudukottai Sivaganga Ramanathapuram and Madurai districts.

[கள்ளர் + நாடு.]

**கள்ளர்பற்று** *kaḷḷar-paṟṟu,* பெ.(n.) கள்ளர் வாழும் ஊர்; village or villages inhabited by Kallas.

[கள்ளர் + பற்று (வளநாட்டின் உட்பிரிவு).]

**கள்ளல்**[1] *kaḷḷal,* பெ.(n.) திருடுகை; stealing

[கள் → கள்ளல். 'அல்' தொ.பெ.ஈறு.]

**கள்ளல்**[2] *kaḷḷal,* பெ.(n.) கள்குடிக்கை; drinking toddy.

[கள் → கள்ளல்.]

**கள்ளல்**[3] *kaḷḷal,* பெ.(n.) கரும்பு; sugarcane.

[கள் → கள்ளல். கள் → கருமை.]

**கள்ளவலி** *kaḷḷavali,* பெ.(n.) மகப்பேற்றில் ஏற்படும் பொய்வலி; pains which do not indicate the beginning of real labour.

[கள்ள + வலி.]

**கள்ளவறிஞன்** *kaḷḷa-v-aṟiñaṉ,* பெ.(n.) கரவு (வஞ்சம்) நெஞ்சமுள்ள அறிஞன்; hypocrite

[கள்ள(ம்) + அறிஞன்.]

**கள்ளவறிவு** *kaḷḷavaṟivu,* பெ.(n.) போலியறிவு; pseudo-knowledge.

[கள்ள(ம்) + அறிவு.]

**கள்ளவறை** *kaḷḷa-vaṟai,* பெ.(n.) 1. பிறர் அறிய முடியாதபடி அமைந்துள்ள அறை; concealed or closed, room whose existence no one would suspect. 2. பெட்டி முதலியவற்றுள் பிறர் அறியா வகை அமைக்கப்படும் அறை; a secret case or cell within a box.

மறுவ. கள்ளறை

ம. கள்ளற, கள்ளயற.

[கள்ள(ம்) + அறை.]

**கள்ளவாதி** *kaḷḷavādi,* பெ.(n.) பொன் செய்வதாக நடிக்கும் திருட்டு மருத்துவர்; dabblers in alchemy.

[கள்ள(ம்) + வாதி. ஆளி → வாளி → வாதி.]

**கள்ளவாயில்** *kaḷḷavāyil,* பெ.(n.) 1. கமுக்கவழி; trap-door. 2. திட்டிவாசல்; wicket -gate.

[கள்ளம் + வாயில்.]

**கள்ளவாள்** *kaḷḷavāḷ,* பெ.(n.) பொய்யாக இளமை கொண்டாடல்; pretended youthfullness.

[கள்ள + ஆள் – கள்ளவாள்.]

**கள்ளவிலை** *kaḷḷa-vilai,* பெ.(n.) திருடர் விற்கும் குறைவு விலை; fabulousely low price, as of stolen goods. அந்த நகையைக் கள்ளவிலைக்கு விற்றாலும் நூறுரூபாய் கிடைக்கும் (உ.வ.).

*[கள்ளம் + விலை.]*

**கள்ளவிழி** *kaḷḷaviḻi,* பெ.(n.) பிறர் உள்ளபொழுதே அவர்களுக்குத் தெரியாமல் தான் பேச விரும்பும் ஆளுடன் குறிகாட்டும் கண்; the eyes which signal even without the knowledge of others.

*[கள்ள(ம்) + விழி.]*

**கள்ளவுப்பு** *kaḷḷa-v-uppu,* பெ.(n.) பரவர் (பரதவர்) ஆடும் விளையாட்டு வகை; a Paravadavar game.

*[கள்ளம் + உப்பு.]*

**கள்ளவுரி** *kaḷḷavuri,* பெ.(n.) 1. போலி அவுரி; bastard indigo. 2. கள்ளவுரிச்சாயம்; dye from the same.

*[கள்ள(ம்) + அவுரி.]*

**கள்ளவெட்டு** *kaḷḷa-veṭṭu,* பெ.(n.) ***கள்ளத்தனம்*** (யாழ்.அக.) பார்க்க; see *kaḷḷa-t-taṉam* (செ.அக.).

*[கள்ள(ம்) = கள்ளத்தனம். கள்ள(ம்) + அட்டு– கள்ளவட்டு கள்ளவெட்டு. அட்டு = மிகுதி, பெருக்கம்.]*

**கள்ளவெள்ளி** *kaḷḷaveḷḷi* பெ.(n.) மட்டமான வெள்ளி inferior silver.

**க.** கள்ளவெள்ளி

*[கள்ள(ம்) + வெள்ளி.]*

**கள்ளவேடம்** *kaḷḷa-vēḍam,* பெ.(n.) ***கள்ளப்புனைவு*** பார்க்க; see *kaḷḷa-p-puṉaivu.*

*[கள்ள(ம்) + வேடம்.]*

**கள்ளவேலை** *kaḷḷavēlai* பெ.(n.) ***கள்ளப்பணி*** பார்க்க; see *kaḷḷappaṇi.*

**ம.** கள்ளவேல

*[கள்ள(ம்) + வேலை.]*

**கள்ளழகர்** *kaḷḷaḻagar,* பெ.(n.) கள்ளர் நாட்டில் உள்ள அழகர் மலையில் கோயில் கொண்ட திருமால்; vishnu, in Alagar-koil, situated in the Kallar-nādu.

*[கள்ள(ர்) + அழகர்.]*

**கள்ளன்**[1] *kaḷḷaṉ,* பெ.(n.) 1. திருடன்; thief, robber, depredator. கள்ளன் புத்தி திருட்டு மேலே (உ.வ.). 2. ஏய்ப்பவன் (வஞ்சகன்;) deceitful or cunning person.

**ம.** கள்ளன், களவன்; **க.** கள்ள. கள; கள்ளால்; **து.** கள்வெ; **குட.** கள்ளே; **கோண்.** கல்லெ, கல்லே, கல்வால்; குரு கல்பச்; **மா.** கல்வே, க்வல்வ; **பிரா.** கள்ளே; **துட.** கொள்ண்; **தெ.** கல்லரி **பட.** கள்ள.

**Skt.** kalama

*[கள் → கள்ளன் → கள் = கருமை.]*

**கள்ளன்**[2] *kaḷḷaṉ,* பெ.(n.) ***கள்ளர்*** பார்க்க; see *kaḷḷar.*

*[கள் → கள்ளன்.]*

**கள்ளன்**[3] *kaḷḷaṉ,* பெ.(n.) ஒருவகைச் செய்நஞ்சு; a preparced arsenic (சா.அக.).

*[கள் → கள்ளன்.]*

**கள்ளாகிச்சொரிந்த உப்பு** *kaḷḷākicerinda-v-uppu.* பெ.(n.) வழலையுப்பு; quintessence salt (சா.அக.).

*[கள் + ஆகி + செரிந்த + உப்பு.]*

**கள்ளாட்டு** *kaḷḷāṭṭu,* பெ.(n.) களியாட்டம், drunken revel. *“கன்றிய காமக் கள்ளாட் டயர்ந்து” (மணிமே. 22, உரை).*

*[கள்[3] + ஆட்டு.]*

**கள்ளாம்பல்** *kaḷḷāmbal,* பெ.(n.) வெள்ளாம்பல் (மலை.); white Indian water-lily.

*[கள்[3] + ஆம்பல்]*

**கள்ளாமை** *kaḷḷāmai,* பெ.(n.) 1. களவு செய்யாமை; not stealing. 2. திருக்குறள் அதிகாரங்களுள் ஒன்று; one of the chapters of Tirukural.

*[கள் + ஆ + மை] ‘ஆ’ எ.ம.இடைநிலை*

**கள்ளி**[1] *kaḷḷi,* பெ.(n.) 1. முட்செடிவகை; spurge. *“கள்ளியங் கடத்திடை கேழல் பார்க்கும்” (ஐங்குறு. 323.).* 2. திருகுகள்ளி; milk-hedge, 3. இலைக்கள்ளி; five - tubercled spurge. 4. சதுரக்கள்ளி; square spurge. *‘கள்ளிக் கொம்புக்கு வெள்ளிப்பூண் கட்டினாற் போல்’ (பழ.).* 5. மண்டங்கள்ளி; cement

plant. 6. சப்பாத்துக்கள்ளி; common prickly pear. 7. சாதிக்காய் மரம்; deal-tree. கள்ளிப்பெட்டியில் சீமைச் சாமான்கள் வரும் (உ.வ.).

ம., க.,தெ.,து.கள்ளி.

*[கள் = முள். கள் → கள்ளி. ஒ.நோ. முள்ளி.]*

**கள்ளிவகைகள்** : 1. ஆட்டான்கள்ளி 2. இரணக்கள்ளி 3. இலைக்கள்ளி 4. ஈத்தக்கள்ளி 5. ஈரக்கள்ளி 6. எருமை நாக்குக்கள்ளி 7. ஐங்கணுக் கள்ளி 8. கடற்கள்ளி 9. கண்டங்கள்ளி 10. கணுக் கள்ளி 11. கருங்கள்ளி 12. காட்டெருமைக் கள்ளி 13. காம்புக்கள்ளி 14. குதிரைச் செவிக்கள்ளி 15.கொடிக்கள்ளி 16. கொம்புக்கள்ளி 17. கோடுகள்ளி (கோட்டுக்கள்ளி) 18. சதுரக்கள்ளி 19. சப்பட்டைக் கள்ளி 20. சப்பாத்துக்கள்ளி 21. சுரக்கள்ளி 22. செஞ்சதுரக்கள்ளி 23. சோற்றுக் கள்ளி 24. திருகுக்கள்ளி 25. திருவற்கள்ளி 26. தேர்க் கள்ளி 27. நண்டுக்கள்ளி 28. நாகதாளிக் கள்ளி 29. நாதாங்கிக்கள்ளி, 30. நாய் நாக்குக்கள்ளி 31. நானாங்கள்ளி 32. நிலக்கள்ளி 33. பட்டங்கள்ளி 34. பட்டணத்துக்கள்ளி 35. பயற்றங்கள்ளி 36. பலகைக்கள்ளி 37. பாச்சான் கள்ளி 38. புட்டன்கள்ளி 39. பூச்சிக்கள்ளி 40. பெருங் கள்ளி 41.பொத்தைக்கள்ளி 42. மரக்கள்ளி 43.மலைக்கள்ளி 44. மாந்தங்கள்ளி 45. மான் செவிக்கள்ளி 46. முப்பட்டைக்கள்ளி 47. முயற் செவி கள்ளி 48. முரித்தற்கள்ளி 49. முள்ளுக் கள்ளி 50. வயற்கள்ளி 51. வலங்கள்ளி (சா.அக.).

**கள்ளி**[2] *kaḷḷi,* பெ.(n.) 1. திருடி; a female thief. 2. கள்ளனின் மனைவி; the wife of a thief. 3. வேலை செய்யாது குழப்புபவள்; woman who shirks work. வேலைக்கள்ளிக்குப் பிள்ளைமேலே சாக்கு (உ.வ.).

**க.** கள்ளதி, கள்ளெ; **ம.** கள்ளி, கள்ளத்தி; **கோத.** கய்ள்; **குட.** கள்ளி; **தெ.** கல்லரி (பொய்யன்); **பட.** கள்ளெ; **கசபா.** கல்லி.

*[கள்ளம்→ கள்ளி.]*

**கள்ளிக்காக்கை** *kaḷḷi-k-kākkai,* பெ.(n.) செம் போத்து;crow pheasant.

*[கள்ளி + காக்கை.]*

**கள்ளிக்குருவி** *kaḷḷi-k-kuruvi,* பெ.(n.) பன்றிக்குருவி (m.m.815.); white headed babbler frequenting milk-hedge.

*[கள்ளி + குருவி.]*

**கள்ளிக்கோட்டை** *kaḷḷi-k-kōṭṭai,* பெ.(n.) கேரளாவில் உள்ள ஓரூர்; name of a town called kozhikode or calicut in kerala. ***கோழிக்கோடு*** பார்க்க; see *koḻikkōḍu.*

*[கோழிக்கோடு* **> E.** *Calicut > த. கள்ளிக்கோட்டை.]*

**கள்ளி கொள்ளு-தல்** *kaḷḷi-koḷḷu,* பெ.(n.) 10 செ.குன்றாவி (v.t.). கால்நடைகள் கள்ளியைத் தின்னுதல்; to graze tender spurge. (S.I.I. vol.19 insc.151.)

*[கள்ளி + கொள்.]*

**கள்ளிச்சிட்டு** *kaḷḷi-c-ciṭṭu,* பெ.(n.) ஒரு பறவை; kind of bird.

*[கள்ளி + சிட்டு.]*

**கள்ளிச்சொட்டு** *kaḷḷi-c-coṭṭu,* பெ.(n.) கள்ளிப் பாலின் திவலை; drop of spurge milk. பால் கள்ளிச்சொட்டு போல் இருக்கிறது (உ.வ.).

*[கள்ளி + சொட்டு.]*

**கள்ளிப்பால்** *kaḷḷi-p-pāl,* பெ.(n.) கள்ளிச்செடியின் பால்; spurge milk.

*[கள்ளி + பால்.]*

**கள்ளிப்புறா** *kaḷḷi-p-puṟā,* பெ.(n.) தவிட்டுப்புறா; little brown dove.

*[கள்ளி + புறா.]*

**கள்ளிப்பூ** *kaḷḷippū,* பெ.(n.) 1. ஓர் அணியுறுப்பு; part of a jewel. *"படுகன் நாலும் கள்ளிப்பூ நாலும் கொக்குவாய் ஒன்றும் சவக்கமிரண்டும் உட்பட பொன்" (S.I.I.II. 16.).* 2. கள்ளிச்செடியின் மலர்; spurge flower.

*[கள்ளி + பூ.]*

**கள்ளிப்பூப்புண்** *kaḷḷi-p-pūpuṇ,* பெ.(n.) ஒருவகைப் பால்வினை நோய்; secondary syphilis.

*[கள்ளி + பூ + கிரந்தி.]*

**கள்ளிப்பெட்டி** *kaḷḷi-p-peṭṭi,* பெ (n.) சாதிக்காய் மரப் பெட்டி; deal-wood box.

*[கள்ளி + பெட்டி.]*

**கள்ளிமட்டை** *kaḷḷimaṭṭai,* பெ.(n.) உலர்ந்த கள்ளி; dried spurge

*[கள்ளி + மட்டை. ஒ.நோ. தென்னைமட்டை.]*

# கள்ளி - வகைகள்



பொத்தைக் கள்ளி



ஐங்கணுக்கள்ளி



சப்பாத்திக் கள்ளி



திருவற்கள்ளி

**கள்ளிமடையான்** *kallimadaiyāṉ,* பெ.(n.) ***கள்ளி மந்தாரை*** பார்க்க; see *kalli-mandarai.*

*[கள்ளி + மடையான்.]*

**கள்ளிமந்தாரை** *kalli-mandārai,* பெ.(n.) பெருங் கள்ளி; (மலை.); pagoda tree.

மறுவ. கள்ளி மடையான்

*[கள்ளி + மந்தாரை]*



கள்ளிமந்தாரை

**கள்ளிமுளையான்** *kalli-mulaiyāṉ,* பெ.(n.) 1. ***கள்ளி மந்தாரை*** பார்க்க; (பதார்த்த. 371.); see *kalli-mandārai,* 2. செடிவகை; spurge sprout, fleshy plant with angular stems.

*[கள்ளி + முளையான்.]*

**கள்ளிமேடு** *kallimēdu,* பெ.(n.) திருத்துறைப்பூண்டி அருகிலுள்ள ஓர் சிற்றூர்; village near Thirutturai-p-pundi.

*[கள்ளி + மேடு = கள்ளிச்செடி அதிகமாக உள்ள மேடான இடம். இவ்வூர் தற்பொழுது கோடிக்கரை என வழங்கப்படுகிறது.]*

**கள்ளிமேற்புல்லுருவி** *kallimēṟpulluruvi,* பெ.(n.) கள்ளிச் செடியின் புல்லுருவி; a parasite of spurge tree (சா.அக.).

*[கள்ளி + மேல் + புல்லுருவி.]*

**கள்ளியிடையான்** *kalliyidayāṉ,* பெ.(n.) இலைக் கள்ளி; leaf spurge (சா .அக.).

*[கள்ளி + இடையான்.]*

**கள்ளியுப்பு** *kalli-y-uppu,* பெ.(n.) கள்ளியை எரித்து அதன் சாம்பலினின்று செய்த உப்பு; salt extracted from the ashes of the milk-spurge plant (சா.அக.).

*[கள்ளி + உப்பு.]*

**கள்ளில்ஆத்திரையனார்** *kallil āttiraiyanār,* பெ.(n.) கடைக்கழகப் புலவருள் ஒருவர்; a poet of the Sangam age.

*[கள்ளில் + ஆத்திரையனார்.]*

தொண்டை நாட்டிலுள்ள 'கள்ளில்' என்ற தேவாரப்பாடல் பெற்ற ஊரினர்; ஆத்திரையன் – அத்திரி குடிலத்தில் பிறந்த ஆரிய மரபினர்; இவராற் பாடப்பட்டோர் வேங்கடமலைக்குரிய தலைவ னாகிய ஆதனுங்கனும், ஆதியருமனு மானவர். இவர் செய்த பாடல்கள் 3. (புறநா. 175, 389. குறுந். 293.) (புறநா. உ.வே.சா. பதிப்பு).

**கள்ளிறக்கு–தல்** *kalliṟakku-,* 5 செ.குன்றாவி (v.t.). மரத்திலிருந்து கள்ளெடுத்தல்; to collect the toddy from the trees.

*[கள் + இறக்கு.]*

**கள்ளின்செருக்கு** *kalliṉcerukku,* பெ.(n.) கள்ளின் வெறி; intoxication of toddy.

*[கள் + இன் + செருக்கு.]*

**கள்ளுக்காசு** *kallu-k-kāšu,* பெ.(n.) பெரிய வலை மேற் செல்வோர் கள்ளுண்ணுதற் பொருட்டுப் பெறுங் காசு; the amount meant for drinking, given to those who go for deep sea fishing.

*[கள் → கள்ளு + காசு.]*

**கள்ளுக்காய்** *kallukkāy,* பெ.(n.) இளங்காய்; tender fruit, vegetable etc.

*[கள் → கள்ளு + காய்.]*

[உ → உல் → உர் → உரு → உருத்தல் = தோன்றுதல்

உல் → உல்லரி = தளிர். உலவை = தழை.

உல் → குல் → குள் → குளகு = தளிர், தழை

குள் → கள் = இளமை, பிஞ்சு (த.வா. 73–74).]

**கள்ளுண்ணி** *kalluṇi-,* பெ.(n.) தேனீ; honey bee (சா.அக.).

*[கள் + உண்ணி.]*

**கள்ளுண்ணு–தல்** *kalluṇ-,* 13 செ.குன்றாவி (v.t.) கள்ளைக் குடித்தல்; to drink toddy.

*[கள் + உண்ணு.]*

**கள்ளுணி** *kalluṇi,* பெ.(n.) 1. கள்ளுண்போன்; one who drinks toddy. 2. தேனுண்ணும் வண்டு; honey bee (சா.அக.).

*[கள் + உணி.]*

# கள்ளி வகைகள்


முப்பட்டைக்கள்ளி


நாகதாளிக்கள்ளி


பட்டங்கள்ளி


நிலக்கள்ளி

**கள்ளு-தல்** *kaḷḷu* 5 செ.கு.வி.(v.i.) கூடுதல்; to join. பன்மை பல்பொருட் கூட்டமாதலால், கூடுதலைக் குறிக்கும் 'கள்ளுதல்' என்னும் வினைச் சொல்லினின்று 'கள்' என்னும் பன்மையுருபு அமைக்கப் பட்டது. (எ.டு.) மக்கள் (மக + கள்), மரங்கள், விலங்குகள், யாங்கள், நீங்கள், இவர்கள் (வேர்ச். கட்.14.).

*[குல் → குள் → கள் → கள்ளு.]*

**கள்ளூறும்பனை** *kaḷḷūṟumpaṉai* பெ.(n.) ***இடுக்குப் பனை;*** palmyra tree.

*[கள் + ஊறும் + பனை.]*

**கள்ளேடுவிடு-தல்** *kaḷḷeḍu-viḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. படித்துக்கொண்டு அல்லது எழுதிக் கொண்டு போகும்போது சில ஏடுகளை வேண்டுமென்றே படியாமலோ எழுதாமலோ தள்ளிவிடுதல்; to pass over a leaf wilfully while reading or copying. 2. அரைகுறையாக வேலை செய்தல் (வி.); to perform duties perfunctorily.

*[கள் → கள்ள + ஏடு + விடு.]*

**கள**[1] *kaḷa,* பெ.(n.) ***களா*** பார்க்க (நன்.165, மயிலை); see *kaḷā.*

*[களா → கள. (செல்வி, 78 சிலை 242.).]*

**கள**[2] *kaḷa,* பெ.(n.) ***களவொழுக்கம்*** பார்க்க; see *kaḷavoḻukkam.* *"காமங் கள விட்டு" (பரிபா.11.42.).*

*[கள் → கள.]*

**களஆய்வு** *kaḷaāyvu,* பெ.(n.) ***களப்பணி*** பார்க்க; see *kaḷa-p-paṇi.*

**மறுவ.** களப்பணி

*[களம் + ஆய்வு.]*

**களக்கட்டை** *kaḷa-k-kaṭṭai,* பெ.(n.) நெற்களத்தில் பிணையல் ஒட்டும் போது நடுவில் நடும் கட்டை; a wooden rod erected in the middle of threshing floor when yoking oxen.

*[கள(ம்) + கட்டை.]*

**களக்கம்** *kaḷakkam,* பெ.(n.) குற்றம்; fault, defect. *"களக்கமில்லாதோன்" (திருவாலவா.50:8.).*

*[களங்கம் → களக்கம் (வேக 127).]*

**களக்கர்** *kaḷakkar,* பெ.(n.) 1. ஈனர்; inferiors by habits. 2. வேடர்; a hunting caste.

*[கள் → களக்கு → களக்கர்.]*

**களக்காட்டூர்** *kaḷakkāṭṭur,* பெ.(n.) செங்கை வட்டத்து மானாமதியின் பண்டைப் பெயர்; the old name of Manamathi of Chengalpet taluk. *"களக்காட்டூர் திருகக்கரபுரத்தாள்வார்க்கு" (தெ.இ. கல்.தொ.19 கல் 385.).*

*[களா + காடு + ஊர்- களாக்காட்டூர் → களக்காட்டூர். களாக்காடு = களாமரத்துக்காடு.]*

**களக்குக்கொளக்கெனல்** *kaḷakku-k-koḷakkeṉal,* பெ.(n.) சளக்குப் புளக்கெனத் தண்ணீரில் அலையடித்தல்; onomatopoeic expr. referring to the beating of the waves against.

*[களக்கு + கொளக்கு + எனல்.]*

**களக்குடி**[1] *kaḷakkuḍi* பெ.(n.) கும்பகோணம் வட்டம் திருக்கோடிகாவல் அருகில் உள்ள ஒரூர்; a place near Thirukkodikaval in Kumbakonam taluk. *"களக்குடி வாய்க்காலாறு பாயவும்" (தெ.இ.கல்.தொ. 19 கல் 114).*

*[களம் + குடி-களக்குடி= களத்தின் ஓரக்குடியிருப்பு.]*

**களக்குடி**[2] *kaḷakkuḍi* பெ.(n.) கல்லிடைக் குறிச்சியின் பழைய பெயர்; old name of Kalliḍaikkurucci of Ambasamudram taluk. *"களக்குடியில் எழுந்தருளியிருக்க" (தெ.இ.கல்.தொ. 23 கல் 91 கி.பி. குலசேகரன் காலம்.).*

*[களா + குடி-களாக்குடி= களக்குடி.]*

**களக்குறிப்பு** *kaḷa-k-kuṟippu,* பெ.(n.) களத்துத் தவசக்கணக்கு; account of the grain on the threshing-floor.

*[களம் + குறிப்பு.]*

**களக்கெனல்** *kaḷakeṉal,* பெ.(n.) திடுமெனச் சிரித்தற் குறிப்பு; onom. expr. signifying sudden burst of laughter.

**Mal.** gelak

*[களக்கு + எனல்.]*

**களக்கொட்டு** *kaḷa-koṭṭu,* பெ.(n.) நெற்களங் காத்தற்குக் கொட்டும் பறையொலி; beating of the drum to keep thieves away from the threshing - floor.

*[களம் + கொட்டு.]*

**களகண்டம்** *kaḷa-kaṇḍam,* பெ.(n.) குயில்; koel, the Indian cuckoo, as having a sweet throat.

*[கள + கண்டம்.]*

**களகண்டமாலை** *kaḷa-kaṇḍa-mālai,* பெ.(n.) ஒரு வகைச் சிலந்திக் கட்டி; absess.

*[களகண்ட (ம்) + மாலை.]*

**களகண்ணி** *kaḷakaṇṇi,* பெ.(n.) கழுத்தில் புண்களை உண்டாக்கும் கண்டமாலை என்னும் நோய்; sores or ulcers with sinuses in the neck (சா.அக.).

*[களம் = தொண்டை. களம் → கள + கண்ணி.]*

**களகம்**[1] *kaḷagam,* பெ.(n.) பெருச்சாளி; bandicoot.

*[கல் → கள் → கள → களகம் = களவாடுவது.]*

**களகம்**[2] *kaḷagam,* பெ.(n.) நெற்கதிர்; sheaf of paddy. *"வண்களக நிலவெறிக்கும்" (திவ்.பெரியதி. 6,9,10.).*

*[கள → களகம்.]*

**களகம்**[3] *kaḷagam,* பெ.(n.) சுண்ணாம்புச்சாந்து; lime mortar. *"களகப்புரிசைக் கவினார் சாருங். கலிக்காழி" (தேவா. 113,3.).*

*[கள்→ களகு → களகம்.]*

**களகம்**[4] *kaḷagam,* பெ.(n.) ஓதிமம்; hamsa, swan. (திவ்.பெரியதி. 6,9,10.வியா.).

*[கள் → களகு → களகம்.]*

**களகம்**[5] *kaḷagam,* பெ.(n.) மாட்டுவண்டி அச்சின் இருபுறமும் செங்குத்தாகச் செருகி வைக்கும் முளைக்குச்சி; pieces of wood which are perpendicularly inserted in the pieces of timber at either side of the platform of a cart bullock.

**க.** களிகெ, களக.

*[கழி → களி → களிகம் → களகம்.]*

**களகம்பளம்** *kaḷakambaḷam,* பெ.(n.) எருத்தின் அலைதாடி; bull's dew-lap. *"களகம்பளமாங் குறியுடைய தானெனல் போல்" (வேதா. சூ–30).*

*[களகம் + (வாளம்) பளம்.]*

**களகள**[1] *kaḷa-kaḷa,* பெ.(n.) ***களகளெனல்*** பார்க்க; see *kaḷakaḷeṉal. "கடாந்திறத்திட்டு வானிற் களகள முழங்கும் வேழம்" (சீவக. 806.).*

*[கள + கள.]*

**களகள[2]–த்தல்** *kaḷa-kaḷa-,* 4 செ.கு.வி. (v.i.) ஒலியெழுதல்; to rattle, chatter, gurgle.

*[கலகல → களகள.]*

**களகளப்பு** *kaḷa-kaḷappu,* பெ.(n.) 1. பேரொலி (பிங்.); lud and confused noise, as the din of the bazaar or the roar of the waters. 2. நெஞ்சில் கோழை கட்டுவதால் உண்டாகும் ஓசை; noise due to the accumulation of phlegm in the chest. 3. இறக்குந் தறுவாயில் நெஞ்சிற் காணும் ஓசை; the sound emited by the dying.

*[களகள → களகளப்பு.]*

**களகளெனல்** *kaḷa-kaḷeṉal,* பெ.(n.) ஈரடுக்கொலிக் குறிப்பு (திவா.); onam. expr. signifying tinkling, flowing with a gentle sound, chattering.

*[களகள + எனல்.]*

**களங்கட்டி**[1] *kaḷaṅkaṭṭi,* பெ.(n.) மீன்வகை (வின்.); kind of fish.

*[களம் + கட்டி.]*

**களங்கட்டி**[2] *kaḷaṅkaṭṭi,* பெ.(n.) நெல் முதலிய கூலங்களைப் போரடிக்கும் களத்தில் போடப்படும் சிறு குடிசை (செங்கை.); small hut erected on the threshing floor

*[களம் + கட்டி.]*

**களங்கட்டுவலை** *kaḷaṅkaṭṭu-valai,* பெ.(n.) கிழங்கான் மீன் பிடிக்கும் வலை; net used for fishing kiḻaṅgāṉ fish.

*[களம் + கட்டு + வலை.]*

**களங்கப்படு–தல்** *kaḷaṅga-p-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) புகழ்க் கேட்டிற்கு ஆளாதல்; to be defamed.

*[களங்கம் + படு.]*

**களங்கப்படுத்து–தல்** *kaḷaṅga-p-paḍuttu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. புகழ்க்கேடு உண்டாக்குதல்; to defame. 2. கறை உண்டாக்குதல்; to cause stain

*[களங்கம் + படுத்து.]*

**களங்கம்** *kaḷaṅgam,* பெ.(n.) 1. கரிய மறு (திவா.); stain, blot, tarnish. 2. கருத்தொலைப்பு குற்றவகை; fault, defect, moral guilt. 3. புகழ்க்கேடு; defamation, blame. 4. துரு (சூடா.); rust. 5. களிம்பு

# கள்ளி வகைகள்


கொடிக்கள்ளி


மான் செவிக்கள்ளி


பட்டணத்துக்கள்ளி


திருகுக்கள்ளி


முள்ளுக்கள்ளி

(சங்.அக.); verdigris. 6. கறுப்பு (திவா.); black colour. 7. கறுப்புபுள்ளியாகிய ஒருவகை வயிரக்குற்றம்; dark spot in a diamond. *“காகபாதமும் களங்கமும் விந்துவும்” (சிலப். 14,180).* 8. நீலம்; blue colour. 9. அடையாளம்; mark, sign, token *“களங்க மொன்றிட்டு மண்ணுறுத்தி நற்றுகில் கொடு பொதிந்தனன்” (கந்தபு. மார்க்கண்.133).*

**ம.** களங்கம்; **க.** கலங்க; **தெ.** கலங்கமு; **து.** களங்க்.

*கல் → கள் = கருமை. கள் → களம்=கருமை, களம் – களங்கு=கருமை; குற்றம். களங்கு → களங்கம் = கருமை, கறை, மறு, குற்றம்.*

*களங்கன் = மறுவுள்ளமா ; மா.வி.அ.க. 'இதன்மூலம் ஐயுறவிற்கிடமானது' (etym, doubtful) என்று குறித்திருப்பது கவனிக்கத் தக்கது. (வ.மொ.வ.111.)*

**த.**களங்கம் >**Skt.**kalam.

**களங்கன்** *kaḷaṅgaṉ,* பெ.(n.) 1. மறுவுள்ளமதி (திவா.); moon, as spotted. 2. மனத்தால் அல்லது ஒழுக்கத்தால் குறைபாடுள்ளவன்; person with mental, or moral defect.

*[களங்கம் → களங்கன் (வே.க.120.).]*

நிலவின் இடையிடையே கறையுடையது போற் காணப்படுதலான் களங்கன் என வழங்கப் படுகிறது.

**களங்கு**[1] *kaḷaṅgu,* பெ.(n.) களங்கம்; blemish *“திங்கள்... உடற்களங்கால்” (பிரபுலிங். கைலாச. 6.).*

*[களவு → (களகு) → களங்கு (வே.க.120.).]*

**களங்கு**[2] *kaḷḷaṅgu,* பெ.(n.) இதளியம் (பாதரசம்) முதலிய மாழைகளால் உண்டாக்கிய குளிகை (வின்.); pill prepared from several metals including mercury.

*[கள → களங்கு.]*

**களங்குமுறை** *kaḷaṅgu-muṟai,* பெ.(n.) ***களங்கு**[2]* (வின்.) பார்க்க; see *kaḷaṅgu*[2]

*[களங்கு + முறை.]*

**களங்கொள்(ளு)**[1]**–தல்** *kaḷaṅkoḷ(ḷu)* 13 செ. குன்றாவி (v.t.) இருப்பிட மாக்குதல்; to secure an abiding place *“கண்ணையு மனத்தையுங் களங்கொண்டிட்டவே” (சீவக. 1481).*

*[களம்[2] + கொள்.]*

**களங்கொள்(ளு)**[2]**–தல்** *kaḷaṅkoḷ(ḷu)-,* 13 செ. குன்றாவி. (v.i.) வெல்லுதல்; to gain a victory. *“ஆர்த்துக் களங்கொண்டோர்”(சிலம். 5, 83.).*

*[களம்[2] + கொள் = இருப்பிடத்தைத் தாக்குதல், அவ்விடத்திற்குரியவனை அடக்குதல், வெல்லுதல்.]*

**களஞ்சம்** *kaḷañjam,* பெ.(n.) கஞ்சா முதலிய போதைப்பொருள்கள்; intoxicating drugs like ganja. *“உணர்வழி களஞ்ச முண்டல்” (பிரபோத. 39,16).*

*[கள் → கள → களஞ்சம்.]*

**களஞ்சி**[1] *kaḷañji,* பெ.(n.) செய்நஞ்சுவகை; a prepared arsenic.

*[கள → களஞ்சு → களஞ்சி.]*

**களஞ்சி**[2] *kaḷañji,* பெ.(n.) 1. ***கழஞ்சி*** பார்க்க; see kaḻañji. 2. கழற்சிக்காய்; bonduc nut (சா.அக.).

*[கள → களஞ்சு → களஞ்சி.]*

**களஞ்சியம்** *kaḷañjiyam,* பெ.(n.) 1. தவசம் சேர்க்கும் இடம்; granary barn. 2. பண்டகசாலை, சரக்கறை; storeroom, repository *“திருக்காளத்தி ஞானக் களஞ்சியமே” (அருட்பா. 1.விண்ணப். 255.).* 3. கருவூலம்; treasury.

**தெ.** களஞ்சமு; **க.** களஞ்சி.

*[குள் → குளஞ்சி → களஞ்சி + அம்.]*

**களஞ்செதுக்கு–தல்** *kaḷañ-cedukku-,* 5 செ.கு.வி (v.i.) களத்தைச் செய்தல்; to clear an area of grass weeds etc., for threshing-floor.

*[களம் + செதுக்கு.]*

**களத்தடி** *kaḷattaḍi* பெ.(n.) 1. ***களத்துமேடு*** பார்க்க; see *kaḷattumēḍu. “இன்னமும் நாங்கள் விற்றுக் குடுக்கிற களத்தடி ஒன்று”* (S.I.I. vol5. Part II insc 984. s.no.5). 2. களத்தில் சிதறிக் கிடக்கும் தவசம்; sweeping of grain of a threshing floor.

*[களம் + அத்து + அடி.]*

**களத்தி** *kaḷatti,* பெ.(n.) கட்டடத்தில் நீட்டிக் கொண்டிருக்கும் பகுதி; extended part of a building to prevent rain, sunshine etc.

**மறுவ.** புறப்பாடு, கழிவு, பிதுக்கம். கவுதம்

*[கள் → கள (திரண்டது). கள → களத்தி (திரண்டபகுதி).]*

**களத்துட்டியிறு–த்தல்** *kaḷattuṭṭiyiṟu-,* 4 செ.குன்றாவி (v.t.) களத்து மேட்டிலேயே தீர்வையைச் செலுத்துதல்; to remit tax at threshing place itself.

*[களத்து + இட்டு – களத்திட்டு → களத்துட்டி இறுத்தல் (கொ.வ.).]*

**களத்துமேடு** *kaḷattu-mēḍu,* பெ.(n.) தவசங்கள் போரடிக்க அமைத்த மேடு; elevated place used as threshing-floor.

*[களம்² + அத்து + மேடு. 'அத்து' சாரியை.]*

**களத்துவாய்** *kaḷattuvāy,* பெ.(n.) ***களத்துமேடு*** பார்க்க; see *kaḷattumēḍu.*

*[களம் + அத்து + வாய். 'அத்து' சாரியை.]*

**களத்தூர்** *kaḷattūr,* பெ.(n.) செங்கற்பட்டுக்கருகில் உள்ள சிற்றூர்; a village near Chengalpattu.

*[களத்து + ஊர்.]*

**களத்தூர்கிழவர்** *kaḷattūr-kiḻāvar,* பெ.(n.) சுத்த மல்லி வளநாட்டு பாம்புணிக் கூற்றத்துப் பிழிசூர், தற்காலத் திருத்துறைப் பூண்டி வட்டத்தில் உள்ள களத்தூரில் நில உரிமை கொண்டவர்; possessers of land and rights in Kalathur of Pambunik kootram in Suthamalli valanadu, currently in Thiruthuraipoondi taluk. "இவ்வூரில் காணியுரிமை யுடைய களத்தூர்க் கிழவன் திருமா காளத்தாண்டார் & களத்தூர்க் கிழவன் தளரா நிலைக் காக்குநாயகன் உய்யவந்தாந்" (தெ.இ.கல். தொ. 23. கல் 475). *"களத்தூர் கிழவன் அரயன் அளவன்தாள்". "களத்தூர் கிழவன் தில்லையுள் வில்லி பெரியாழ்வார்" (கல் 476).*

*[களத்தூர் + கிழவர். கிழவர் = நிலக்கிழார்.]*

**களத்தூர்கிழார்** *kaḷattūr-kiḻār,* பெ.(n.) கடைக் கழகப்புலவர்; a Sangam poet.

*[களத்தூர் + கிழார்.]*

**களந்தூன்றி** *kaḷandūṉṟi,* பெ.(n.) தான்றி; *belleric myrobalan.*

*[ஒருகா. களம் + (தன்றி) தூன்றி – களந்தூன்றி.]*

**களந்தெளி–த்தல்** *kaḷanteḷi-,* 4 செ.கு.வி.(v.t.) செதுக்கிய களத்தில் சாணிப்பால் அல்லது நீர் தெளித்துப் புழுதியடங்கச் செய்தல்; to smear the levelled threshing floor with cowdung mixture or water.

*[களம் + தெளி.]*

**களந்தை** *kaḷandai,* பெ.(n.) களத்தூர்; Kalathur.

*[களத்தூர் → களந்தை (மரூஉ வழக்கு).]*

**களநடை** *kaḷa-naḍai,* பெ.(n.) கண்டுமுதல் (இ.வ.); actual produce of a field.

*[களம்² + நடை.]*

**களநடைக்கணக்கு** *kaḷa-naḍai-k-kaṇakku,* பெ.(n.) களத்துத் தவசக் கணக்கு (C.G.); account of the grain on the threshing-floor.

*[களம் + நடை + கணக்கு.]*

**களப்படி** *kaḷa-p-paḍi,* பெ.(n.) ஊர்ப்பணியா ளர்களுக்கும் வேலையாள்களுக்கும் களத்தில் பிரித்துக் கொடுக்கும் தசவம் (C.G.); grain distributed at the threshing-floor to labourers or village public servants.

*[களம்² + படி.]*

**களப்படையல்** *kaḷa-p-paḍaiyal,* பெ.(n.) போர்க்களத் தில் போர் தொடங்குமுன் கொற்றவைக்குக் கொடுக்கும் படையல்; sacrifice offered at the battle field to the goddess of victory before commencing battle.

*[களம் + படையல்.]*

**களப்பணி** *kaḷa-p-paṇi,* பெ.(n.) உரிய இடத்திற்குச் சென்று நேரிடையாகச் செய்யும் பணி; field work. field study.

*[கள(ம்) + பணி.]*

**களப்பணியாளர்** *kaḷa-p-paṇiyāḷar,* பெ.(n.) தொடர்பு டைய இடத்திற்குச் சென்று ஆய்வுப்பணி மேற்கொள் பவர்; field-worker.

*[கள(ம்)+பணி + ஆளர்.]*

**களப்பலி** *kaḷa-p-pali,* பெ.(n.) ***களப்படையல்*** பார்க்க; see *kaḷa-p-paḍaiyal. "களப்பலிக்குரியார் யாவர்" (வில்லிபா. உத்தி. 6:2).*

*[களம் + பலி. **பிராகி.** பலி = படையல்.]*

**களப்பலிகூட்டுதல்** *kaḷa-p-pali-kūṭṭudal,* (தொ.பெ.) (vbl.n.) முறையின்றிக் கொல்லுதல் (ம.அக.); to offer human sacrifice.

*[களம் + பலி + கூட்டுதல்.]*

**களப்பன்றி** *kaḷappaṉṟi,* பெ.(n.) பெருங்குமிழ்; coomb teak.

*[கள(ம்) + பன்றி.]*

**களப்பாட்டு** *kaḷa-p-pāṭṭu,* பெ.(n.) களத்தில் போரடிப் போர் பாடும் பாட்டு; song or ballad of the threshing-floor.

ம.களப்பாட்டு

*[கள(ம்)² + பாட்டு.]*

**களப்பாய்** *kaḷa-p-pāy,* பெ.(n.) களத்தில் விரிக்கும் பாய். (வின்.); mat spread on the threshing - floor to tread out grain.

*[கள(ம்) + பாய்.]*

**களப்பாழ்குடி** *kaḷappāḻkuḍi,* பெ.(n.) திருச்சோற்றுத் துறை (திருச்சாத்துறை) அருகில் இருந்த பண்டைய ஊர்; an old place near Thiruchatturai in Thanjavur taluk. "இப்பொன் இருபத்து ஐங்கழஞ்சும் மிறைக் கூற்றத்துப் பிரமதேயம் களப்பாழ்குடி சபையோம்." (தெ.இ.கல். தொ.19. கல்336.).

*[களப்பான்(களப்பாளர்)+குடி–களப்பான்குடி→களப்பாழ்குடி என்பதில் ள→ழகரத்திரிபு, கல்லெழுத்துப் பொறித்தோனின் எழுத்துப்பிழை.]*

**களப்பாள்** *kaḷappāḷ,* ***களப்பிரர்*** பார்க்க; see *kaḷapirar.*

**களப்பாளர்** *kaḷappāḷar,* ***களப்பிரர்*** பார்க்க; see *kaḷapirar.*

**களப்பாளராயன்**[1] *kaḷa-p-pāḷa-rāyaṉ,* பெ.(n.) களப்பிரர் வழிவந்த அரசன்; a descendant of Kalappirar king. *"களப்பாளராயன் சொன்னமையில் இப்படிச் செய்யக் கடவதாக" (S.I.I. 5, volI).*

*[களப்பாளர் + (அரையன்) ராயன்.]*

**களப்பாளராயன்**[2] *kaḷa-p-pāḷa-rāyaṉ,* பெ.(n.) கி.பி. 12ஆம் நூற்றாண்டில் இலால்குடி வட்டம் திருநெடுங்களம் கோயில் ஒப்பந்தம் ஒன்றில் கையெழுத்திட்டுள்ள பெருமகன் பெயர்; the name of a gentleman who had signed in an agreement of the temple at Thirunedungalam in Lalgudi taluk. *"இவை களப்பாளராயனெழுத்து" (தெ.இ.கல். தொ. 26 கல் 726).*

*[களப்பாளன் + அரையன்– களப்பாளராயன்.]*

**களப்பாளன்**[1] *kaḷappāḷaṉ,* பெ.(n.) ***களப்பாளராயன்*** பார்க்க; see *kaḷappāḷrāyaṉ.* கணவதி அழகனான களப்பாளனும் (S.I.I. vol.5 part I insc 412.).

*[களப்பான் + அன்.]*

**களப்பாளன்**[2] *kaḷappāḷaṉ,* பெ.(n.) கி.பி.12 ஆம் நூற்றாண்டில் செங்கை வட்டம் திருக்கச்சூர்க் கோயில் ஒப்பந்தம் ஒன்றில் கையெழுத்திட்ட பெருமானார்; a gentleman who had signed in the agree ment of the temple of Kachur of Chengalpet dt. *"களப்பாளன் எழுத்து" (தெ.இ.கல். தொ. 26 கல் 333.).*

*[களப்பாளன் → களப்பாளர் குடியினன்.]*

**களப்பிச்சை** *kaḷa-p-piccai,* பெ.(n.) இரப்பவர்க்குக் களத்திற் கொடுக்குந் தவசம் (C.G.); grain given in charity on the threshing floor.

*[கள(ம்) + பிச்சை.]*

**களப்பித்தம்** *kaḷa-p-pittam,* பெ.(n.) ஒருவகைப்பித்த நோய்; a kind of bile disease.

*[கள(ம்) + பித்தம்.]*

**களப்பிரர்** *kaḷa-p-pirar,* பெ.(n.) தமிழராயிருந்து மொழியால் வடுகர், கருநடராகவும் சமயத்தால் பவுத்த சமணராகவும் விளங்கி கி.பி. மூன்றாம் நூற்றாண்டு முதல் ஐந்தாம் நூற்றாண்டு வரை தமிழகத்தை ஆட்சி புரிந்த அரசமரபினர்; a dynasty of rulers from third century to fifth century A.D., who ruled over Tamilnadu, being Vaduga Kannadiga by language and Budha, Jaina by religion, and whose ancestry is traceable to ancient Tamils.

க. களபோர; skt. kaḍavabra

*[கள்→ கள்வர் →களவர்→களவாளர் →களப்பாளர் →களப்பிரர்.]*

போர் தொடங்குவதற்கு முன்னரே பகைவரின் ஆநிரைகளைக் கவர்ந்து வருதற்காகப் பண்டைத் தமிழ் வேந்தர் அமைத்திருந்த வெட்சிப் படைப் பிரிவுக்குக் கள்ளர் படை எனவும், கள்வர்

படை எனவும் பெயரிருந்தது. போர்க்காலத்தில் ஆநிரைகளின் மீது அம்பு படலாகாது என்னும் அறத்தின் அடிப்படையில் அமைக்கப்பட்ட படையாதலின் இம்மறவரைக் களவாடும் தொழிலினராக யாரும் கருதவில்லை. இக்குடியினர் கள்வர் என அழைக்கப்பட்டதை அகநானூற்றில் [295] வேங்கடத்துத் தலைவன் புல்லியை, "கள்வர் கோமான்" எனக் குறிப்பிடுவதிலிருந்து அறியலாம். இக்குடியினர் நாளடைவில் கள்வர் – களவாளர் – களப்பாளர்–களப்பிரர் என அறியப்பட்டனர். புகார் நகரிலிருந்து அரசாண்ட களப்பிர மன்னன் அச்சுதக் களப்பாளன் என யாப்பருங்கல விருத்தியுரை மேற்கோள் குறிப்பிடுகிறது.

மதுரையை ஆண்ட களப்பிர மன்னனை "கருநடர் வேந்தன்" எனக் கல்லாடமும் "கானக கடிகமழ் வடுக கருநாடர் மன்னன்" எனப் பெரியபுராணமும் குறிப்பிடுகின்றன.

களப்பாளக் குடியினரின் ஒரு பிரிவினர் இன்றைய கருநாடகத்துச் சிரவண பௌகுள பகுதியில் குடியேறி குறுநில மன்னர்களாயினர். இப்பகுதி, அக்காலத்தில் களபப்ப எனப்பெயர் பெற்றிருந்தது. மாமன்னன் அசோகனின் பாட்டனாகிய சந்திரகுப்த மௌரியன், பத்ரபாகு முனிவருடன் இந்நகருக்கு அருகிருந்த களபப்பு மலையில் தங்கியிருந்தான் எனவும் களபப்ப அரசர்கள் ஆட்சி இன்றைய கோலார் வரை அக்காலத்தில் பரவியிருந்தது எனவும் கி.பி. 250 இல் இப்பகுதியை ஆண்ட களப்பிர மன்னன் தமிழ் நாட்டின் மீது படையெடுத்து மூவேந்தர் நாடும் கவர்ந்து கொண்டான் எனவும் கூறப்படுகிறது. கி.பி. 475 இல் பாண்டியன் கடுங்கோன் களப்பிரரை வென்று பாண்டிய நாட்டை மீட்கும் வரை களப்பிரர் ஆட்சி நிலவிற்று.

**களப்பிரர்காலம்** *kaḷa-p-pirar-kālam,* பெ.(n.) தமிழ் நாட்டில் கி.பி. 250 முதல் 500 வரை ஆட்சி புரிந்த வடுகக் கருநட அரச மரபினரின் ஆட்சிக் காலம்; a period between 250 A.D. and 500 A.D. in which Vaduga Karnataga rulers known as Kalabras who ruled over Tamilnadu.

*[களவர்→ களவாளர் →களப்பாளர் →களப்பிரர் + காலம்;* ***களப்பிரர்*** *பார்க்க.]*

அக்காலத்தில் களபப்பெ என அறியப்பட்ட இன்றைய சிரவண பௌகுள கருநாடகப் பகுதியிலிருந்த களப்பிர மன்னன் கி.பி. 250 இல் தமிழ் நாட்டை வென்று ஆட்சி புரிந்தான். அன்று முதல் மூன்று நூற்றாண்டுகள் களப்பிரர் ஆட்சி தமிழ் நாட்டில் நீடித்தது.

பிற்காலத்தில் வந்த தமிழ் வேந்தர்கள் வேதந்தழுவிய இரண்டண்மை [அத்துவைதக்]க் கோட்பாட்டில் மிகுந்த பற்றுக் கொண்டவராதலால் அதற்கு முன் பவுத்த சமண மதங்களைப் பெரிதும் ஆதரித்த களப்பிரரைக் கலியரசர் எனத் தாழ்த்தியுரைத்தனர்.

கடைக்காலம் மருவிய களப்பிரர் காலத்தில் பெரும்பாலான தொகை நூல்கள் தொகுக்கப்பட்டுள்ளன. சீவக சிந்தாமணி, குண்டலகேசி, வளையாபதி போன்ற பெருங்காப்பியங்களம், கொங்குவேளின் பெருங்கதையும் பிற இலக்கியங்களும் தோன்றிய இலக்கிய வளம் செறிந்த காலம் இது எனப்படுகிறது. பின்னர் சிவனியமும் மாலியமும் தழைத்த காலத்தில் எழுந்த சமயப் பூசல்களில் களப்பிரர் கால இலக்கியங்கள் பலவும் கனலிலும் புனலிலும் அழிக்கப்பட்டன.

களப்பிரர் கால வரலாறு மிகுதியாக வெளிப்படாததால் அதனை இருண்ட காலம் என்றனர். எனினும் குறிப்பாக வேத வீச்சுகளையும் வடமொழி வல்லாண்மையையும் முன்று நூற்றாண்டுகளாக வளர வொட்டாமல் தடுத்து நிறுத்திய பெருமை களப்பிரருக்கு உண்டு எனலாம்.

**களப்பு**[1] *kaḷappu,* பெ.(n.) கடலில் ஆழமில்லாத இடம் (வின்.); shallow part of the sea.

*[களம் → களப்பு (உள்ளகமேடு) .]*

**களப்பு**[2] *kaḷappu,* பெ.(n.) பயிரிடுவதற்காகப் புல்வெட்டி நிலத்தைச் சீர்ப்படுத்துகை (W.G.); levelling a field for cultivation after removing the grass.

*[களை → களைப்பு →களப்பு.]*

**களப்பூசை** *kaḷa-p-pūšai,* பெ.(n.) நெற்களத்தில் கொடுக்கும் படையல்; sacrifice offered on the threshing - floor. களப்பூசைக்குப் பன்றி பிடிக்கப் போனேன் (இ.வ.).

*[களம் + பூசை.]*

**களப்பேச்சு** *kaḷa-p-pēccu,* பெ.(n.) பணிச்சுமை தெரியாமல் இருப்பதற்காகக் களத்தில் பேசிக்

கொள்ளும் நகையாட்டுப் பேச்சு (வின்.); dialect peculiar to the threshing - floor.

[களம் + பேச்சு.]

**களப்பேறு** *kaḷa-p-pēṟu,* பெ.(n.) நெற்களத்தில் குடிமக்கள் முதலியோர் பெறும் உரிமை (யாழ்ப்.); grain distributed on the threshing - floor at different fixed rates to religious mendicants, washermen, barbers and other dependants.

[களம் + பேறு.]

**களபம்**[1] *kaḷabam,* பெ.(n.) 1. கலவை (சூடா.); mixture. 2. சுண்ணச்சாந்து; mortar-lime. *"நுண்களபத் தொளிபாய" (திருக்கோவை. 15).* 3. கலவை மணச்சாந்து; perfumery. *"புலிவிரா யெறிந்திடக் களபம் போக்குவார்" (இரகு. இரகுவுற். 26.).*

[கல் → கல → கலவம் → களவம் களபம் (கொ.வ.). களகம் → களபம். ஒநோ. மண்டகம் → மண்டபம் வாணிகம் → வாணிபம் (வே.க. 134.).]

**களபம்**[2] *kaḷabam,* பெ.(n.) 1.கயம் (யானைக்கன்று); young elephant. *"மதகரிக் களபமும்" (சிலப். 25,49).* 2.யானை (திவா.); elephant.

[குளவு → களவு → களவம் → களபம்.]

த களபம் >**Skt.** kalabha

**களம்**[1] *kaḷam,* பெ.(n.) களாச்செடி (சூடா.); a low spreading spring evergreen shrub. *"காக்கையிற் கரிது களம்பழம்" (தொல். சொல். 79உரை).*

[கள → களம் (வே.க.119).]

**களம்**[2] *kaḷam,* பெ.(n.) 1. இடம் (திவா.); place, locality, open space, expanse. 2. கதிரடிக்கும் நிலம்; threshing - floor, place for treading grain. *"காவலுழவர் களத்தகத்துப் போரேறி" (முத்தொள்.).* 4. அவை; assembly, meeting, court, theatre. *"களனஞ்சி" (குறள். 730.).* 5. வேள்விச்சாலை; hall of sacrifice. *"யூபநட்ட வியன்களம் பலகொல்" (புறநா. 15.21.).* 6. போர்க்களம்; battle - field. *"ஈரைம்பதின்மரும் பொருதுகளத் தொழிய" (புறநா. 2,15).* 7. களர்நிலம் (பிங்.); saline soil. 8. உள்ளம்; mind. *"உயர்பின்மை களக்கொள" (ஞானா. 44,4.).* 9. கடலில் விழும் திட்டு; shallow shelf of rocks at sea, sand-bank. *"களத்திலே தோணி பொறுத்துப் போயிற்று" (வின்.).*

**ம.** களம்; **க.** கள, கண; **கோத.** கள்ம்; **துட.** கள்ண்; **குட.** கள; **கொலா.** கல்வெ; **நா.** களவெ; **பர்.** கலி; **கோண்.** கலின்; **கொண்.** கால்; **கூ.** க்லை; **குவி.** கலோமி; **குரு.** கலி; **மா.** க்வாலு.

*[கள் → களம் (வேக.119, 120.)]*

**த.** களம் > **Skt.** khala

இருக்கு வேதத்தில் khala (= threshing floor) என்னும்வடிவில் இச்சொல் வருவதை பரோ குறிப்பிடுகிறார். உல் → உத்தல் = பொருந்துதல். உத்தி = விளையாட்டில் இருவர் சேர்ந்து வரும் சேர்க்கை. உல் → குல் → குலவுதல் = கூடுதல். கள்ள = போல. கள் → களம் = கூட்டம். கூடும் ஏர்க்களம், போர்க்களம். அவைக்களம் என்பவற்றை நோக்குக [தமிழ் வர. 79, 80].

**களம்**[3] *kaḷam,* பெ.(n.) இன்னோசை; melodious sound. *"களங்கொள் திருநேரிசைகள்" (பெரியபு. திருநா. 337.).*

*[கல் → கலம் → களம்.]*

**களம்**[4] *kaḷam,* பெ.(n.) 1. கருமை (திவா.); blackness, dark colour. 2. முகில்; cloud. *"கனைக்களமென" (அரிசமய. பரசரா. 44).*

*[கல் → கள் → களம்.]*

**களம்**[5] *kaḷam,* பெ.(n.) 1. கழுத்து; neck, 2. தொண்டை; throat. *"பாடுகள மகளிரும்" (சிலப். 6,157.).*

**மறுவ.** கழுத்து, மிடறு.

**Skt**.gala; l.collum, gula

**H.** gala; **Punj.** gala; **Kas**. hot; **Sind.** galo; **Mar.** galo; ghasa; **Guj**. galum, ghar; **Beng.** gala; **Ori.** gala; **U.** gala, halak; **Ar.** halq; **Heb.** gorron; **Yid.** halts; **F.** garge; garganta (throat); **It.** gola; **Gk.** khela; **Sp., Port.** cullo; **Du.** keel; **Pol**. gardlo; **Czeach.** hrdly; **Ser.** grlo; **Fin.** kurkku; **Esper.** gargo; **Rus.** garlo.

*கள்ளுதல் = கலத்தல், பொருந்துதல். கள் → களம் = தலையை உடலுடன் பொருத்தும் கழுத்து, தொண்டை. களம் → (களுத்து) → கழுத்து. வடவர் கல் என்னும் செயற்கையடியை க்ரு(விழுங்கு) என்னும் சொல்லின் திரிபாகக் கொண்டு, கல என்பதற்கு விழுங்கும் உறுப்பு என்று பொருட்காரணங் காட்டுவர் (வ.மொ.வ.112) இது பொருந்துவதன்று.*

**களம்**[6] *kaḷam,* பெ.(n.) நஞ்சு (பிங்.); poison, venom.

*[கல் → கள் → களம். கல் = கருமை.]*

**களம்**[7] *kaḷam,* பெ.(n.) 1. கொட்டகை (P.T.L.); shed. 2. வீடு; house.

Sp. casa

*[கள்→களம் = களத்துமேட்டில் இடப்பட்ட கொட்டகை.]*

**களம்**[8] *kaḷam,* பெ.(n.) கொம்பில்லா யானை. (நாநார்த்த.); tuskless elephant.

*[களவம் (யானைக்கன்று) → களம்.]*

**களம்பழம்** *kaḷam-paḻam,* பெ.(n.) களாவின் கரியகனி; the black fruit of the kaḷā shrub. *"காக்கையிற் கரிது களம்பழம்" (தொல்.சொல். 7 9, உரை.).*

*[களா + பழம் – களாப்பழம் → களம்பழம்.]*

**களம்பாடு–தல்** *kaḷampāḍu-,* 5 செ.குன்றாவி. (v.t.) போர்க்களத்தில் புலவன் தன் அரசனுடைய மறச் செயல்களைப் புகழ்ந்து பாடுதல்; poet singing his king's victorious and heroic deeds at the battle-field.

*[களம் + பாடு.]*

**களம்பொலிதல்** *kaḷam-polidal,* தொ.பெ.(vbl.n.) சூடடித்தல் (ம.அக.); threshing.

*[களம் + பொலி.]*

**களம்விடு**[1]**–தல்** *kaḷam-viḍu-,* செ.கு.வி.(v.i.) 1. நெற்கதிரடிக்க ஆணை யிடுதல்; to give orders to commence threshing. 2. தவசக்குவியலை அளந்த பின் களத்தில் சிதறிய தவசத்தை உழுதவனுக்கு விடுதல்; to give away to the cultivator the grain scattered on the threshing - floor after the heap of grain is measured.

*[களம்[2] + விடு .]*

**களம்விடு**[2]**–தல்** *kaḷam-viḍu-,* 20 செ.கு.வி.(v.i.) நெல்லடித்த களத்திலுள்ள சிந்துமணி சிதறு மணிகளைக் குத்தகை விடுதல் (இ.வ.); to sell in one lot the grain scattered on the threshing- floor.

*[களம் + விடு .]*

**களம்வேட்டல்** *kaḷam-vēṭ-,* 14 போரிற் பகைப்படையைக் கொன்று பேய்கட்கு விருந்தூட்டுதல்; to destroy enemies in the battle-field and to feast devils with the dead bodies, as gods in a sacrifice. *"தொடித்தோட் துடுப்பின் துழந்த வல்சியின் அடுகளம் வேட்ட அடுபோர்ச் செழிய" (புறநா. 26,11.).*

*[களம்[2] + வேள்.]*

**களமடி–த்தல்** *kaḷam-aḍi-,* 4 செ.கு.வி.(v.i.) விளைந்த நெல் முதலியவற்றின் கதிர்களை அடித்து உதிர்த்தல்; to thresh out the corn from the stalks.

*[களம் + அடி.]*

**களமதிப்பு** *kaḷa-madippu,* பெ.(n.) களத்தில் குவிந்த தவச மதிப்பளவு; estimate of the produce of grain on the threshing-floor.

மறுவ. களமதி

*[களம்[2] + மதிப்பு.]*

**களமம்** *kaḷamam,* பெ.(n.) நெல்; paddy.

*[களம் → களமம் (வே.க.134.).]*

**களமமிடல்** *kaḷamam-iḍal,* தொ.பெ.(vbl.) நெற் குவியலுள் வைத்தல்; to keep buried under a heap of paddy.

*[களமம் + இடு.–]*

**களமர்** *kaḷamar,* பெ.(n.) 1. வேளாளரில் ஒருவகைப் பிரிவனர்; husbandmen in agricultural tract. *"கருங்கை வினைஞருங் களமருங் கூடி" (சிலப். 10,125).* 2. போர்மறவர்; warriors. *"கள்ளார் களமர் இருஞ்செரு மயக்கமும்" (மதுரைக். 393).* 3. பணியாளர் பண்ணையாள்கள்; workers. *"களமர் கதிர்மணி காலேகம் செம்பொன் வளமனை பாழாக வாரி" (பு.வெ.3,15.).*

*[களம்[2] → களமர் (வே.க.134.).]*

களத்தில் பணியாற்றுவோர் களமர் எனப் பெயர்பெற்றனர். நெற்களத்தில் பணியாற்றும் உழவரையும் போர்க்களத்தில் அமராற்றும் படை மறவரையும் இச்சொல் ஒருசேரக்குறித்தது. இச் சொல்லுக்குச் சூத்திரர் என்றும் அடிமைகள் என்றும் செ.அக. குறித்திருப்பது முற்றிலும் தவறாகும். அனைத்துத் தொழிற்பிரிவினரும் அமைச்சராகவும் புலவராகவும் படைத் தலைவராகவும் ஆகும் தகுதி பெற்றிருந்த பண்டைத் தமிழகத்தில் உயர்வு தாழ்வுகள் ஆரியரால் மென்மெலப்புதிதாகப் புகுத்தப் பட்டனவேயன்றி மரபார்ந்தனவல்ல.

வடபுலத்து மொழிகளில் இச்சொல்லின் அடியாகப்பிறந்த 'கலாசி' என்னும் சொல்லைக்

கீழ்நிலைப்பணியாளர்க்கு இட்டு வழங்குவது நாற்குல வேறுபாட்டில் வந்த மாற்றம் எனலாம்.

வடமொழியில் களம் என்ற சொல்லடியில் உண்டான களபு (kalapu) எனும் சொல், களத்தைத் தூய்மைப் படுத்துபவன், துப்புரவுத்தொழிலாளி என அதன் சொற்பொருளில் இழிவுபட்டு வந்திருப்பது இங்கு நோக்கத்தக்கதாகும்.

**களமள–த்தல்** *kaḷam-aḷa-,* 3 செ.கு.வி.(v.i.) களத்தில் தவசத்தை அளத்தல்; to measure at the threshing - floor.

*[களம் + அள–.]*

**களமன்** *kaḷamaṉ,* பெ.(n.) வேளாண் நிலத்தில் இருப்பவன், உழவன்; inhabitant of the agricultural tract.

**ம.** களமன்

*[களம் → களமன் (சு.வி. 74.).]*

**களமாலை** *kaḷa-mālai,* பெ.(n.) கண்டமாலை நோய்; goitre. *"வலிவாத பித்தமொடு களமாலை" (திருப்பு. 627.).*

*[களம் + மாலை – களமாலை. களம் = தொண்டை. மாலை = கழுத்தில் வளைவாக வீங்கும் நோய்.]*

**களமாற்றம்** *kaḷamāṟṟam,* பெ.(n.) விதைத்தபின் செய்யும் உழவு; ploughing after sowing seeds.

**ம.** களமாற்றம்

*[களம் + மாற்றம்.]*

**களமுறம்** *kaḷamuṟam,* பெ.(n.) நெற்களத்தில் பயன்படுத்தும் ஒரு வகை முறம்; a winnow used in the threshing-floor to sift grain.

**ம.** களமுறம்

*[களம் + முறம்.]*

**களமெழுத்து** *kaḷam-eḻuttu,* பெ.(n.) பகவதியம்மன் கோயிலில் அம்மன் உருவம் வரைந்து வழிபடுதல் (நாஞ்.); drawing the image of the goddess and singing her praises, in Bhagavadi temples.

**ம.** களமெழுத்து

*[களம் + எழுத்து. எழுத்து = ஓவியம்.]*

**களமேடு** *kaḷa-mēḍu,* பெ.(n.) ***களத்துமேடு*** பார்க்க; see *kaḷattu-mēḍu.*

*[களம் + மேடு.]*

**களர்**[1] *kaḷar,* பெ.(n.) 1. உவர்நிலம்; saline soil. *"பயவாக் களரனையர் கல்லாதவர்" (குறள், 406.).* 2. சேற்றுநிலம்; bog. *"காலாழ் களரின் நரியடும்" (குறள், 500.).*

**ம.** கழி; **க.** கறலு, கரலு, கர்லு, கறளு.

*[கள் → கள → களர்.]*

**களர்**[2] *kaḷar,* பெ.(n.) கூட்டம் (சூடா.); assemblage, meeting.

**ம.** களர்

*[களம் → களர் (வே.க.120.1340).]*

**களர்**[3] *kaḷar,* பெ.(n.) கறுப்பு (சூடா.); blackness.

**ம.** களர்

*[களம் → களர் (வே.க.120,134.)]*

**களர்**[4] *kaḷar,* பெ.(n.) கழுத்து (சூடா.); neck.

*[கள் → களம் → களர் (வே.க.120, 134).]*

**களர்நிலம்** *kaḷar-nilam,* பெ.(n.) உவர்நிலம்; saline soil; alkaline earth. *"களர்நிலத்துப் பிறந்த வுப்பினை" (நாலடி, 133.).*

*[களர்[1] + நிலம்.]*

**களர்ப்பாழ்** *kaḷar-p-pāḻ,* பெ.(n.) உப்புப்படிந்த பாழ் நிலம்; brackish waste. *"முது நிலத்தரிசான களர்ப் பாழாய்" (S.I.I. viii,109).*

*[களர் + பாழ்.]*

**களர்மண்** *kaḷar-maṇ,* பெ.(n.) உவர்மண்; saline soil.

*[களர் + மண்.]*

**களர்மண்ணுப்பு** *kaḷarmaṇṇuppu,* பெ.(n.) உவர் மண்ணுப்பு; crystal salts found in brackish soils.

*[களர் + மண் + உப்பு.]*

**களர்மேடு** *kaḷar-mēḍu,* பெ.(n.) விளைச்சலுக்குப் பயன்படாத மேட்டுநிலம் (இ.வ.); high land unfit for cultivation.

*[களர் + மேடு.]*

**களர்விழுதி** *kaḷarviḻudhi,* பெ.(n.) ஒருவகை மந்தாரை; purple mountain ebony (சா.அக.).

*[களர் + விழுதி.]*

**களராத்தி** *kaḷarātti,* பெ.(n.) களர் நிலத்தில் விளையும் ஆத்திவகை; wild sesban growing in the brackish soil.

*[களர் + ஆத்தி]*

**களரி**[1] *kaḷari,* பெ.(n.) 1. களர்நிலம்; saline soil. *"கள்ளி போகிய களரியம் பறந்தலை" (புறநா. 225.7.).* 2. பாழ்நிலம் (பிங்.); barren uncultivated ground. 3. காடு (பிங்.); jungle.

*[களம் (களர்) → களரி.]*

**களரி**[2] *kaḷari,* பெ.(n.) 1. விற்போர், மற்போர், நாடகம் முதலியன பயிலும் அரங்கு (யாழ்ப்.); circular area for dramatic performances, gladiatorial or gymnastic exhibitions, hall for literary performance. 2. அவை; assembly. *"அரங்கேற்றுங் களரியிலே" (திருக்கை.).* 3. அறமன்றம்; court of justice *"களரியிலே அநியாயம் அக்கிரமங்கள் நடவாமல் விசாரிக்கிறதும்"* (கோயிலொ. 64.). 4. போர்க்களம்; battle-field. *"பூசற் களரியிலே" (பு.வெ.2,6, கொளு, உரை.).* 5. தொழில் செய்யும் இடம் (திவா.); place of work or of business.

**ம.** களரி; **க.**கருடி; **தெ.** கரிடி; **து.** கரடி.

*[குல் → கல் → கள் → களர்[2] → களரி ஒ.நோ. முள் → முளரி, வள் → வளரி (வளை தடி).]*

**களரி**[3] *kaḷari,* பெ.(n.) மிடறு (யாழ்.அக.); throat.

*[களம் → களர் → களரி.]*

**களரிக்கோழை** *kaḷari-k-kōḻai,* பெ.(n.) அவையில் உரையாற்றவோ அல்லது நடிக்கவோ அஞ்சுபவன் (வின்.); person too bashful or diffident to play his part before an assembly.

**ம.** களரிக்கோழ

*[களரி[2] + கோழை.]*

**களரிகட்டு-தல்** *kaḷari-kaṭṭu-,* 7 செ.கு.வி.(v.i.) அறங்கூர் அவை வேலையாளைத் தன் வயப்படுத்துதல்; to ingratiate oneself with the attendants, officers at court; to secure the superior's good -will. 2. நாடக சாலை கட்டுதல்; to form an area for the performance, of a play. 3. கூத்தரை ஆடல்பாடல் செய்யவொட்டாமல் மந்திரத்தினாற் கட்டுதல்; to prevent an actor or dancer from playing his part by magic spells.

*[களரி + கட்டு.]*

**களரிகூட்டு**[1]**-தல்** *kaḷari-kuṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) நாடகவரங்கில் கூத்து ஆடுதற்கான ஏற்பாடுகள் தொடங்குதல்; to make necessary arrangements to commence a play on the stage, as the sounding of the drum, etc., *"களரிகூட்டியபின்பு கூத்திற்குச் செல்வோம்."*

*[களரி + கூட்டு.]*

**களரிகூட்டு**[2]**-தல்** *kaḷarikūṭṭu-,* 5 செ.குன்றாவி (v.t.) சின்ன சிக்கலையும் கலவரச் சூழ்நிலையாக மாற்றுதல்; to magnify even a small incidient and lead to quarrel. *"இந்தத் திருமணத்திற்கு வராதற்குப் பெரிய களரி கூட்டி விட்டாயே" (நெல்லை).*

*[களரி + கூட்டு.]*

**களரிச்சுற்று** *kaḷari-c-cuṟṟu,* பெ.(n.)கூத்தர் அரங்கைச் சுற்றிவருகை; actors who go around the stage (ம.அக.).

*[களரி + சுற்று.]*

**களரிப்பயிற்று** *kaḷari-p-payiṟṟu,* பெ.(n.) ***களரி***[2] பார்க்க; see *kaḷari* [2].

*[களரி + பயிற்று.]*

**களரியக்குளத்துழான் ஒற்றிகொண்டான் இராசராசதேவன்** *kaḷariya-k-kuḷa-t-tuḻāṉoṟṟik oṇḍāṉ irāsarāsadēvaṉ,* பெ.(n.) கிபி. 1218 ஆம் ஆண்டு செங்கை வட்டம் திருக்கச்சூர் கோயிலுக்கு அணையா விளக்கெரிக்க நன்கொடை வழங்கியவன்; One who had made donations for perpetual lamps in the temple of Thirukkachur of Chengalpet taluk during 1218AD. "செங்குன்ற

நாட்டு திருக்கச்சூர்காலை மாலை பாகம் வைத்தான் வில்லாழ்வானும் களரியக் குளத்துழான் ஒற்றி கொண்டான் இராசராசதேவனும்".

*[களரியம் + குளம் + அத்து+ உழான் + ஒற்றிகொண்டான். களரிக்குளம் = ஊரின்பெயர் 'அத்து' சாரியை உழவன்→ உழான் (ஒ.நோ. கிழவன் – கிழான்) ஒற்றிகொண்டான் = நிலத்தை ஒற்றிக்கு (குத்தகைக்கு)க் கொண்டவன்.]*

**களரியமர்த்து-தல்** *kaḷari-y-amarttu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. அவையோரை அரங்கில் உட்காரவைத்தல்; to seat the spectators around an arena. 2. பறைய றைந்து அவையை ஒலியெழுப்பாமல் அமரச்செய்தல்; to silence the spectators by the beating of drums.

*[களரி + அமர்த்து.]*

**களரியார்** *kaḷariyār,* பெ.(n.) அவையத்தார்; representatives of an assembly.

*[களரி + ஆர்.]*

**களரியாவிரை** *kaḷari-y-āvirai,* பெ.(n.) இறந்துபட்ட தலைக்கழக நூல்களுள் ஒன்று (இறை.1, உரை.4); a poem of the first Sangam, now extinct.

*[களரி + ஆவிரை.]*

களம் அல்லது அவையம் களரி எனப்படும். நெற்களத்தில் அல்லது போர்க்களத்தில் ஆவலித்துப் பாடும் பாடல்வகை களரியாவிரை என வழங்கப் பெற்றதாகலாம்.

**களரியேறு-தல்** *kaḷari-y-ēṟu-,* 5 செ.கு.வி(v.i.) அரங்கேறுதல்; to be presented for the first time to a learned body. சிலப்பதிகார நாடகம் நாளை களரியேறுகிறது (இ.வ.).

*[களரி + ஏறு.]*

**களரிதோன்றி** *kaḷaritōṉṟi,* பெ.(n.) கும்பகோணம் வட்டம் திருவிடைமருதூர் கோயில் ஆடவல்லானுக்கு கையணி வழங்கிய வணிகன்; merchant, who donated a hand ornament to the Nataraja of Thiruvidaimarudur, Tanjore dt. *"திரைமூர் நாட்டுத் திருவிடை மருதில் வயாபாரிய் களரிய் தோன்றிய் திருவிடை மருதில் ஆடல் விடங்க தேவர்க்கு" (தெ.இ.கல்.தொ.19. கல் 90.).*

*[களரி + தோன்றி. தோன்றல்→ தோன்றி (சிறந்தவன், வெற்றியாளன்) களரிப்போரில் வெற்றி வாகை சூடியவன் என்பதால் பெற்ற பெயராகலாம்.]*

**களரிவிடு-தல்** *kaḷari-viḍu-,* 18 செ.குன்றாவி.(v.t.) அரங்கில் முதன் முறையாக நாடகமாந்தரை ஆட விடுதல் (வின்.); to introduce a person on a stage for the first in a trial performance. நள்ளிர வாகப் போகிறது. விரைவில் களரிவிட ஏற்பாடு செய்யவேண்டும் (உ.வ.).

*[களரி[2] + விடு-.]*

**களவட்டி** *kaḷa-vaṭṭi,* பெ.(n.) சூடடிக்கும் களம்; threshing-floor (ம. அக.).

*[கள(ம்) + அட்டில் (முற்றம்) – கள வட்டி.]*

**களவடி[1]-த்தல்** *kaḷavaḍi-,* 4.செ.கு.வி.(v.i.) திருட்டுத்தனஞ்செய்தல்; to play the truant. அந்தப் பையன் பள்ளிக்கூடம் போகாமல் களவடிக்கிறான் (இ.வ.).

*[களவு + அடி.]*

**களவடி[2]** *kaḷavaḍi,* பெ.(n.) களத்திற் சிதறிய தவசம் (இ.வ.); sweepings of grain of a threshing-floor. களவடியைக் கூட்டியள்ளு (இ.வ).

*[களம் + அடி.]*

**களவம்[1]** *kaḷavam,* பெ.(n.) ***களா[1]*** பார்க்க; see *kaḷā[1]* *"கனிக்களவத் திருவுருவத் தொருவனை" (திவ். பெரியதி. 11,6,4).*

*[களா → கள → களவு → களவம். (வே.க.11).]*

**களவம்[2]** *kaḷavam,* பெ.(n.) 1. கலவை (சூடா.); mircture. 2. சுண்ணச்சாந்து; mortar, cement. *"நுண்களபத் தொளிபாய" (திருக்கோ. 15.).* 3. மணச் சாந்து; perfumery. *"புலிவிரா யெறிந்திடக் களபம் போக்குவார்" (இரகு.இரகுவற். 26.).*

*[கல → கலவம் → களபம்.]*

**களவம்[3]** *kaḷavam,* பெ.(n.) 1. யானைக்கன்று; the young of an elephant. *"மதகரிக் களபமும்" (சிலப். 25,49).* 2. யானை (திவா.); elephant.

*[குளவு → களவம்.]*

**களவர்** *kaḷavar,* பெ.(n.) 1. உழவர்; agriculturists. 2. போர்மறவர்; warriors.

*[களம் → களமர் → களவர்.]*

**களவழிநாற்பது** *kaḷavaḻi-nāṟpadu,* பெ.(n.) பதினெண் கீழ்க்கணக்கினுட்கோச் செங்கணானது

போர் வெற்றியைப் புகழ்ந்து பொய்கையார் பாடிய நூல்; name of an ancient poem of 50 stanzas on the victory of cō-c-ceṅkaṇāṉ over Cēramāṉ-Kaṇaikkāl-irumporai, by Poykaiyar, one of eighteen minor works.

*[களம்² + வழி + நாற்பது.]*

**களவழிவாழ்த்து** *kaḷa-vaḻi-vāḻttu,* பெ.(n.) அரசன் போர்க்களத்துப் பெற்ற செல்வத்தைப் பாணர் புகழ்ந்து கூறும் புறத்துறை (வு.வெ.9,19.); Puram theme of a bard praising the spoils of a victorious king in war.

*[களம்² + வழி + வாழ்த்து.]*

**களவன்¹** *kaḷavaṉ,* பெ.(n.) சான்று (சாட்சி) கூறுவோன்; deponent.

*[களம்(ம்) + அன்.]*

**களவன்²** *kaḷavaṉ,* பெ.(n.) கருநண்டு; crab. *"புள்ளிக் களவன் புனல் சேர் பொதுக்கம் போல்" (கலித். 88.10.).*

*[கள்→ களவன் (வே.க.119)]*

**களவாசம்** *kaḷa-vāšam,* பெ.(n.) 1. வாரம் பிரிப்பதற்கு முன் ஊர்ப்பணிக் குடிமக்களுக்கு களத்தில் கொடுக்கும் தவசம்; wages paid to the labourers or inferior village servants at the threshing-floor before the division of the produce. 2. நெற் களத்தில் வேலையாள்களுக்குக் கொடுக்கும் கூலி; grain given at the threshing-floor to the workmen.

**ம.** களவாரம்

*[கள + ஆயம் – களவாயம் →களவாசம். ஆயம் = குழு.]*

**களவாய்க்கால்** *kaḷavāykkāl,* பெ.(n.) களத்துமேட்டை யொட்டிச்செல்லும் வாய்க்கால்; the channel adjacent to threshing-floor.

*[களம் + வாய்க்கால்.]*

**களவாடு–தல்** *kaḷavāḍu-,* 5 செ.குன்றாவி (v.t.) திருடுதல்; to steal.

**கோண்.** (அடிலா)கல்ல; **உரா.** கள்ளு.

*[களவு1 + ஆடு (து.வி.)]*

**களவாணி** *kaḷavāṇi,* பெ.(n.) ***களவாளி*** பார்க்க; see *kaḷavāḷi.*

*[களவாளி → களவாணி (த.வ.74).]*

**களவாமீன்** *kaḷavāmīṉ,* பெ.(n.) தலைப்பகுதியில் முட்களைக் கொண்ட ஒருவகைக் கடல்மீன்; kind of sea fish having thorns on the head.

*[கள்→ கள → களவா + மீன். கள் = முள்.]*


களவாமீன்

**களவாரம்** *kaḷavāram,* பெ.(n.) களத்தில் வேலைக் காரர்களுக்குக் கொடுக்கும் தவசக்கூலி (வின்.); grain given at threshing-floor to the labourers.

**ம.** களவாரம்

*[களம் + வாரம். வாரம் = பங்கு, வருவது.]*

**களவாளன்** *kaḷa-vāḷaṉ,* பெ.(n.) ***களவாளி*** பார்க்க; see *kaḷavāḷi "களவாளனாவதூஉங் காண்டும்" (நீலகேசி, 338. உரை,மேற்.).*

**க.** களவளிக

*[களவு + ஆளன்.]*

**களவாளி** *kaḷavāḷi,* பெ.(n.) திருடன்; thief. *"சாதனைக் களவாணியாய்" (திருப்பு. 628.).*

**க.** களவளிக

*[களவு + ஆளி.]*

**களவியல்** *kaḷaviyal,* பெ.(n.) அகப்பொருளுறுப்புகளுள் ஒன்று (தொல்); a chapter in Porul-adikaram by Tolkappiyanar treating of clandestine union of lovers.

2. இறையனாரகப் பொருள்; treatise on Aga-p-porul, by Iraiyanar. *"சிறப்பினாற் பெயர் பெற்றது களவியல் என்பது" (இறை.1, உரை.).*

*[களவு + இயல்.]*

**களவிற்கூட்டம்** *kaḷaviṟ-kūṭṭam,* பெ.(n.) ***களவுப் புணர்ச்சி*** (ஐங்குறு) பார்க்க; see *kaḷavu-p-puṇarcci.*

*[களவில் + கூட்டம்.]*

**களவு**[1] *kaḷavu,* பெ.(n.) 1.திருட்டு; robbery, theft. *"களவினாலாகிய ஆக்கம்" (குறள், 283.).* 2. பிறர் உடைமைகளைப் பறித்து உரியவருக்கு உரிமை இல்லாமலாக்கிக் கொள்ளும் நோக்கத்தில் மேற்கொள்ளும் செயல்; the act of stealing, theft, robbery, the felonious taking and removing of the personal property with the intent to deprive the rightful owner of it. 3. திருடியபொருள்; stolen property. கையுங் களவுமாய் அவனைப்பிடித்துக் கொண்டான். 4. முறையற்ற செயற்பாடு; unlawful act. 5. ஏய்ப்பு (வஞ்சனை); deceit, treachery, hypocrisy. *"நங் களவறுத்துநின் றாண்டமை" (திருவாச.5.35.).* 6. ***களவுப்புணர்ச்சி*** பார்க்க; see *kaḷavu-p-puṇarcci. "கற்பு களவுபோல ஒரு தலையான அன்பிற்றன்று" (இறை.1,உரை.).*

**ம.** களவு; **க.** களவு, களக; **தெ., பட.** கல்லு; **துட.** கொள்; **குட.** கள்; **து.** களவு, களு; **கோண்.** கல்லானா; **குரு.** கர்நா.

*[கள் → களவு (திருக். (தமி.ம.) 551).]*

**த.** களவு>**Skt** khala.

**Kan.** kaḷa, to steal; **Tam.** kalavu; **Mal.** kaḷḷ-lat. **M.** a theft comp. **Lat.** clep-o, to steal; **Greek.** (klap-eis) comp. **Lappish keles**. a lie; **Hung.** tsal to cheat; also **Sans.** chhala, fraud (C.G.D.F.L.591. 616).

**களவு**[2] *kaḷavu,* பெ.(n.) ***களா***[1] பார்க்க; see *kaḷā*[1]

**ம.** களவு; **க.** களவெ; **தெ.** கலவெ;

*[களா→ களவு. ஒ.நோ. நிலா → நிலவு.]*

**களவு**[3] *kaḷavu,* பெ.(n.) ஊமத்தம்; datura (சா.அக.).

*[கள்(முள்) → கள → களவு.]*

**களவுகாண்(ணு)-தல்** *kaḷavu-kāṇ-,* 13. செ.குன்றாவி (v.t.) திருடுதல்; to steal. கைத்தலங் கண்ணாக் களவு காண்பா னொருவன் (இலக்.வி. 665. உரை.).

**க.**களவுகெய்

*[களவு + காண்.]*

**களவுச்சொத்து** *kaḷavu-c-cottu,* பெ.(n.) திருட்டுப் பொருள்; stolen property.

*[களவு + சொத்து.]*

**களவுகொள்(ளு)-தல்** *kaḷavu-koḷ-,* 16. செ.கு.வி (v.i.) திருடுதல்; to steal. *"களவு கொண்டாபரணம் பூண்டாற் போலே" (ரஹஸ்ய.13, 48).*

**க.** களவுகெய்

*[களவு + கொள்.]*

**களவுணி** *klavuṇi,* பெ.(n.) சிறுகளா; small Bengal currant (சா.அக.).

*[களா → களவு → களவுணி.]*

**களவுப்புணர்ச்சி** *kaḷavu-p-puṇarcci,* பெ.(n.) கொடுப்பாரும் அடுப்பாருமின்றிக் காதலர் தாமாகக் கூடும் கூட்டம்; clandestine union between lovers before marriage without the knowledge of others.

*[களவு + புணர்ச்சி.]*

காதலர் கூடும் கூட்டம், உடம்பாற் கூடுவதும் உள்ளத் தாற் கூடுவதும் என இருவகை. இவற்றுள் முன்னது மெய்யுறு புணர்ச்சி என்றும் பின்னது உள்ளப்புணர்ச்சி என்றும் சொல்லப் பெறும். கற்புடைய பெண்டிற்கு இரண்டும் ஒன்றே.

கொடுப்பாரும் அடுப்பாருமின்றிக் காதலர் தாமாகக் கூடும் கூட்டம், மறைவாகத் தொடங்குவதும் வெளிப்படையாய்த் தொடங்குவதும் என இருவகைப்படும். மறைவான கூட்டம் களவு என்றும் வெளிப்படையான கூட்டம் கற்பு என்றும் சொல்லப்பெறும். களவு பெரும்பாலும் இருமாதத் திற்குட்பட்டே இருக்கும். அது வெளிப் பட்டபின் கற்பாம் [பண்.நா. ப. 62.].

**களவுபிடி-த்தல்** *kaḷavu-piḍi-,* 5 செ.கு.வி. (v.i.) மந்திரம், சூழ்ச்சிகளால் திருடனைக் கண்டுபிடித்தல் (வின்.); to catch a thief by magic, stratgem etc.

*[களவு + பிடி.]*

**களவுபூசல்** *kaḷavu-pūšal,* பெ.(n.) நேர் முறையின்றி நடத்தும் போர்; irregular fight; guerilla warfare. *"களவுபூசல் செய்வார்க்கு ஒதுங்க நிழலான பைபலை" (ஈடு.10,6,8, பக்.205.).*

*[களவு + பூசல்.]*

**களவு போ-தல்** *kaḷavupō-,* 8. செ.கு.வி (v.i.) பறி போதல்: to be plundered.

**மறுவ.** திருட்டுபோதல்

**க.** களவு வோகு

*[களவு + போ.]*

**களவெட்டு** *kaḷaveṭṭu,* பெ.(n.) ***களம்*** பார்க்க (யாழ்ப்.); see *kaḷam.*

*[களம் + வெட்டு]*

**களவேர்வாழ்க்கை** *kaḷavērvāḻkkai,* பெ.(n.) திருட்டுத் தொழில்; lit. living by the plough of theft, profession of thieving. *"களவேர் வாழ்க்கையர் உறூஉங் கடுந்துயர்" (மணிமே. 23, 126.).*

*[களவு + ஏர் + வாழ்க்கை.]*

**களவேள்வி** *kaḷa-vēḷvi,* பெ.(n.) கொல்லும் வலிவுடைய பேய்கள், வயிறார வுண்ணும்படி பரந்தவலியினையுடைய வீரன் போர்புரிந்து பகை யழித்ததைக் கூறும் புறத்துறை (பு.வெ. 8,6.); Puram theme eulogising a warrior on his destroying his enemies to feast devils, as gods in a sacrifice.

*[களம்[2] + வேள்வி.]*

**களவேற்று-தல்** *kaḷavēṟṟu-,* 5.செ.கு.வி.(v.i.) திருட்டுக் குற்றஞ் சுமத்துதல்; to charge with theft. *"என் பிள்ளையைக் களவேற்றாதே" (திவ். பெரியாழ். 2,1,5, வியா. பக். 225.).*

*[களவு + ஏற்று-.]*

**களவொழுக்கம்** *kaḷavoḻukkam,* பெ.(n.) ***களவுப் புணர்ச்சி*** பார்க்க; see *kaḷavu-p-puṇarcci.* *"களவொழுக்கமென்னும் பெயர்பெற்று" (திருக்கோ.1, உரை.).*

*[களவு[1] + ஒழுக்கம்.]*

காதலர் இருவரின் மணவாழ்க்கை, தெய்வ ஏற்பாட்டால், ஒரோவழி பெற்றோர்க்கும் மற்றோர்க்கும் தெரியாத களவொழுக்கமாகத் தொடங்குவதுமுண்டு. அது இரு மாதத்திற்குள் வெளிப்பட்டுவிடும். மணவாழ்க்கை ஆயிரங் காலத்துப் பயிராதலால், தமிழர் களவொழுக்கம் ஆரியர் கூறும் அற்றைப் புணர்ச்சியான யாழோர் (கந்தருவர்) மணமன்று. மரபார்ந்த நல்லாசிரி யரிடம் கல்லாதவரும், அயல் நாட்டாருகள் சிலரும் கருது கின்றவாறு, இல்வாழ்க்கை யேற்படாத அநாகரிகக் காலத்துக் காமப்புணர்ச்சியன்று.

கற்பில் தொடங்கும் மணவாழ்க்கையே பெரும்பான்மை, களவில் தொடங்குவது மிகமிகச் சிறுபான்மை. கற்பாகத் தொடராத களவு இழிந்தோ ரொழுக்கமெனப் பழிக்கப்படுவது. இறைவன் ஏற்பாடும் இன்ப மிகுதியும் களவின் சிறப்பியல்புகள் (தமி. வர. 122, 123.).

**களவோலை** *kaḷavōlai,* பெ.(n.) பொய் ஆவணம்; false document (கருநா.).

**க.** கள்ளோலெ

*[களவு + ஓலை.]*

**களன்[1]** *kaḷaṉ,* பெ.(n.) 1. ***களம்[2]*** பார்க்க; see *kaḷam.* 2. மருதநிலம் (திவா.); agricultural tract.

**தெ.** கலனு

*[களம்[2] → களன். (வே.க.134)]*

**களன்[2]** *kaḷaṉ,* பெ.(n.) ஒலி (திவா.); sound, noise.

*[கல் → கள் → களன். 'கல்' ஒலிக்குறிப்பு இடைச்சொல்.]*

**களன்[3]** *kaḷaṉ,* பெ.(n.) கழுத்து (திவா.); throat, neck.

*[களம் → களன்.]*

**களன்[4]** *kaḷaṉ,* பெ.(n.) 1. தொடர்பு (திவா.); attachment, connection. 2. மயக்கம் (பிங்.); stupor, bewilderment.

*[கல் → கள் → களன்.]*

**களன்[5]** *kaḷaṉ,* பெ.(n.) பொய்கை (திவா.); natural reservoir of water.

*[குளம் → குளன் → களன்.]*

**களா** *kaḷā,* பெ.(n.) 1. சிறுகளா; a low spreading shrub. *"தீம்புளிக் களாவொடு துடரி முனையின்" (புறநா. 177.9).* 2. பெருங்களா; large Bengal currant. *'நாளை கிடைக்கும் பலாக்காயைவிட இன்று கிடைக்கும் களாக்காய் மேல்' (பழ.).* 3. களாவகை

(L.); small lancecrenate- acute-leaved wortleberry. 4. மலைக்களா; farkleberry. 5. முள் முருங்கை; (L.) nepal barberry. 6. தணக்கு (L.); whirling-nut.

ம. களவு; க. களவெ, களிவி; தெ. கலிவெ, கலிவி.

*[கல் → கள் → களா(கருநிறமுடைய பழம்.).]*

**களா வகைகள்:** 1.சிறுகளா 2.பெருங்களா 3. மலைக்களா 4. முள்ளுக் களா 5. சொத்தைக்களா 6. கொட்டைக்களா 7. சீமைக் கொட்டைக் களா 8. கொத்துக்களா 9. ஊசிக்களா (சா.அக.).

**களாக்காய்**[1] *kaḷākkāy,* பெ.(n.) களாச்செடியின் காய்; fruit of vaccinium Nilgherrence.

ம. களாக்கா(ய்)

*[களா + காய்.]*



களாச்செடி

**களாக்காய்**[2] *kaḷā-k-kāy,* பெ.(n.) 1.களாக்காயுருவாகப் பொன் வெள்ளி போன்றவற்றில் செய்யும் ஒருவகைக் கழுத்தணி; a circular piece of gold or silver in the shape of a carissa fruit attached to the necklace or tali worn by women.

*[களா + காய்.]*

**களாசம்** *kaḷašam,* பெ.(n.) பிரம்பு; cane, rattan. *"வேதகாமப் பவுரி வீசுங் களாசநிலை" (ஒழிவி. பொது.1.).*

ம. களாசம்

*[கழை → களை → களாயம் → களாசம். (கொ.வ.).]*

**களாசி** *kaḷāši,* பெ.(n.) சிறுகீரை; greens

*[கல் → கள் → களா + சி (கரியது).]*

**களாஞ்சி**[1] *kaḷāñji,* பெ.(n.) எச்சிற் கலம், எச்சிற் படிக்கம்; spittoon *"உருப்பசி களாஞ்சி தாங்க" (குற்றா. தல.திருமண. 131.).*

ம. காளாஞ்சி; தெ., க. களாஞ்சி.

*[காளாஞ்சி → களாஞ்சி.]*

**களாஞ்சி**[2] *kaḷāñci,* பெ.(n.) ஒருவகை ஊதைநோய்; a kind of rheumatism.

*[கோளாம்பி → காளாம்பி → களாஞ்சி.]*

**கோளாம்பி = எச்சில் ஏனத்தின் தண்டு பாகத்தைப் போல் பருக்கும் நோய்.**

**களாஞ்சு** *kaḷāñju,* பெ.(n.) தண்டங்கீரை; garden greens.

*[களாஞ்சி → களாஞ்சு.]*

**களாநூல்** *kaḷā-nūl,* பெ.(n.) காமநூல்; treatise on sexual love.

*[களவு → களா + நூல். களா = களவுப்புணர்ச்சி.]*

**களாப்பூக்கோரை** *kaḷa-p-pū-k-kōrai,* பெ.(n.) கோரைவகை (வின்.); a kind of sedge.

*[களா + பூ + கோரை.]*

**களாயம்** *kaḷāyam,* பெ.(n.) கீல்; joint (சா.அக.).

*[கள் = திரண்டது. கள் + ஆயம். ஆய் → ஆயம் = கூடியிருப்பது.]*

**களாவம்** *kaḷāvam,* பெ.(n.) 1. மயில்தோகை; peacock tail. 2. இடையணி; girdle *"களாவம் ஒன்றிற் கோத்த முத்துவட்டமும் அனுவட்டமும்" (S.I.I.ii.180.).*

*[கள் → களா → களாவம் (நெருங்கிய தோகையுடையது).]*

**களாவி** *kaḷāvi,* பெ.(n.) ஈயத்தைப் போன்ற தரா என்னும் ஒருவகைக் கனிமம்; a mineral resembling lead (சா.அக.).

*[கள் → கள → களா → களாவி. கள் = கருமை.]*

**களாவு** *kaḷāvu,* பெ.(n.) மலைக்களா; wortleberry. (சா.அக).

*[களா → களாவு.]*

**களி[1]–த்தல்** *kaḷi-,* 4 செ.கு.வி.(v.i.) 1. மகிழ்ச்சியில் திளைத்தல்; to exult. rejoice, glow with delight. *"கருணைமுட்டப் பருகிக்களித்து" (திருவாச. 6,33).* 2. கள்ளைப்பருகி வெறி கொள்ளுதல்; to be intoxicated to revel, as bees feeding on toddy. *"களிப்பவர் தமக்கு மோர்கதி யுண்டாகுமோ" (கந்தபு. திருநாட்.12.).* 3. மதமுடையதாதல்; to be in rut, as an elephant. *"கண்ணயற் களிப்பன வண்ணல் யானை" (சீவக. 566.).* 4. செருக்குதல்; to be proud, vain, conceited. *"முழுவதூஉங் கற்றனமென்று களியற்க" (நீதிநெறி. 14.).*

**ம.** களி, களிக்குக; **க.** கள்; **தெ.** கல்லு; **து.** கலி; **Afric.** ge luk.

*[கள்→ களி.]*

இச்சொல் முதலில் கள்ளுண்டு களித்தலையே குறித்தது. கள்ளுண்டு களித்திருப்போனைக் "களி" என்றழைத்தனர் [நன்–39]. பின்னர் இச்சொல் நால்வகை மகிழ்ச்சிகளைக் குறிக்கும் பொதுச் சொல்லாயிற்று. திருவள்ளுவர் காலத்திலேயே இவ்வுயர் மாற்றத்தை இச்சொல் பெற்றுள்ளது. உள்ளக் களித்தலும் [குறள்.1201] என்பதை நோக்குக.

**களி[2]** *kaḷi,* பெ.(n.) 1. மகிழ்ச்சி; joy, delight, exhilaration, exultation, mirth, hilarity. *"களிவந்த சிந்தையொடு" (திருவாச. 6,15.).* 2. கள்ளுண்டு களிக்கை; revelling, intoxication. *"சான்றோர் முகத்துக் களி" (குறள் 923.).* 3. தேன்;honey *"களிமகந்தி வண்டார் பொழில்" (தேவா. 555,6.).* 4. கள்; toddy. *"களிநொடை நுவல" (மதுரைக் : 662).* *5. கட்குடியன்,* drunkard; reveller. *"தண்ணறவுள் களிநீயென (திருக்கோ. 122.).* 6. கட்குடியன் கூற்றாகவரும் கலம்பகவுறுப்பு (இலக்.வி.812); stanza in Kalambagam embodying the effusions of a drunkard. 7. உள்ளச்செருக்கு (திருக்கோ. 52,உரை); arrogance, pride. 8. சினம்; anger. 9. தியக்கம் (திவா.); bewilderment. 10. யானைமதம்; 'must' in an elephant. *"காலவேகங் களிமயக் குற்றென" (மணிமே. 4,44).* 11. மதங்கொண்டயானை; elephant in rut. (களி கொள்வது களிறு.).

**ம., தெ., து., குட.** களி.

**U.,H.** gāle, kheel; **Mar.** khel; **H.** kaggi.

*[களித்தல் = கள்ளுண்டு மகிழ்தல், விளையாடுதல்; மயக்கம், செருக்கு.]*

**த.** களி > **Skt.** kēl (வ.மொ.வ. 112).

**களி[3]** *kaḷi,* பெ.(n.) 1. குழைவு; pulpiness, state of being mashed. *"கொழுங்களி மிதவை" (அகநா.86.).* 2. குழம்பு; thick pulp, liquid paste. *"வாசமென கலவைக்களி" (கம்பரா. மிதிலைக். 80.).* 3. மாவு முதலியவற்றால் ஆக்கிய களி; a kind of pasty pottage made with flour, etc., pasty pudding; poultice. *"அவையா வரிசி யங்களித் துழவை" (பெரும்பாண். 275).* 4. கஞ்சி; gruel, conjee. *"களிசெய் கோசிகம்" (சீவக. 1673.).* 5. வண்டல்; silt, sediment. *"இருங்களி பரந்த வீர வெண்மணல்" (நெடுநல். 16.).* 6. உருகிய மாழைநீர்; liquid metal. *"செம்புருகு வெங்களிக ளுமிழ்வ" (சீவக. 103.).* 7. களிமண் (சிலப். 3, 96 உரை); clay. 8. இறுகிய பழச்சாறு; jam.

**ம.** களி; **க.** கழி, கடி (புள்ளித்த கஞ்சி); **தெ.** கலி.

**F.** colli; **Sp.** cola; **It.** colla; **Rum.**clei; **G.** klebstoff; **Swed.** kli-ster; **Pol.** klej; **Cz.** kleh; Russ. klyey; **Gk.** kolla; **Yid.** kleb; **Mal.** kuala; **Skt.** kali, (sour rice gruel), khali (boiled ground rice gruel).

*[கள்→ களி. (கருமண் அல்லது களிமண்).]*

**களி[4]** *kaḷi,* பெ.(n.) விளையாட்டு; sport, games, play.

**Ori.** khela; **chin.** hauju; **H.** khel; **Skt.** keḷi.

*[கள் → களி.]*

**களி[5]** *kaḷi,* பெ.(n.) சினம் (யாழ்.அக.); anger.

*[கள்→ களி. களிப்பு = செருக்கினைக் குறித்துப் பின் சினத்தைக் குறிப்பதாயிற்று.]*

**களி[6]–த்தல்** *kaḷi-,* 4 செ.குன்றாவி.(v.t.) நுகர்தல்; enjoy, *"பொற்கொடிமாதரைக் களிப்பதினும்" (பாரதி. பாஞ்சாலி. 34.).*

*[கள்→ களி.]*

**களிக்கண்** *kaḷikkaṇ,* பெ.(n.) தட்டார் பயன்படுத்தும் கம்பி இழுக்குங் கருவி (யாழ்ப்.); instrument for drawing wire for chainwork in jewellry with different sizes of holes in it.

**ம.** களிக்கண்

*[கள் (முள்) → களி + கண்.]*

**களிக்கல்** *kaḷi-k-kal,* பெ.(n.) கல்லைப் போன்று .திண்மையுடைய களிமண் உருண்டை; clay stone.

*[களி + கல்.]*

**களிக் கவைக்கோல்** *kaḷi-k-kavai-k-kōl,* பெ.(n.) களி கிண்டும்போது ஏனம் அசையாவகை தாங்குங் கவைக்கோல் (இ.வ.); forked stick for bracing a pot in making pulp.

*[களி + கவை + கோல்.]*

**களிக்காய்** *kaḷi-k-kāy,* பெ.(n.) தசைப்பற்றுள்ள காய் (யாழ்ப்.); pulpy fruit.

*[களி + காய்.]*

**களிக்குரு** *kaḷi-k-kuru,* பெ.(n.) களிச்சுண்ணம் என்னும் குருமருந்து; universal solvent (சா.அக.).

*[கள் + குரு.]*

**களிகம்** *kaḷigam,* பெ.(n.) வாலுளுவை மரம் (மலை.); thorny-staff tree.

ம. களிகம்

*[கள் → களி→ களிகம். கள் = முள்.]*

**களிகிண்டு-தல்** *kaḷi-kiṇḍu-,* 5 செ.கு.வி.(v.i.) களியுணவாக்குதல்; to make paste or pap.

*[களி[3] + கிண்டு-.]*

**களிகூர்-தல்** *kaḷi-kūr-,* 2 செ.கு.வி.(v.i.) மகிழ்ச்சி மிகுதல்; to exult, be in ecstasy. *"சீரொரு கால் வாயோவாள் சித்தங் களிகூர" (திருவாச. 7,15.).*

*[களி[2] + கூர்-.]*

**களிகை[1]** *kaḷigai,* பெ.(n.) 1.மொட்டு (அக.நி); tender bud. 2. நாகமல்லி; ringworm plant (சா.அக.).

*[குள் → குளிகை→ களிகை.]*

**களிகை[2]** *kaḷigai,* பெ.(n.) ஒருவகைக் கழுத்தணி; a kind of necklace. *"நலம்பெருங் களிகையு நன்முத்தாரமும்" (பெருங். இலாவாண. 19,118.).*

*[குள் → குளிகை→ களிகை.]*

**களிங்கம்[1]** *kaḷiṅgam,* பெ.(n.) ஒருவகைப்பண் (பரத. ராக. 533.); a specific melody-type.

*[கள் → களிங்கம்(களிப்பு).]*

**களிங்கம்[2]** *kaḷiṅgam,* பெ.(n.) மரங்கொத்திப்பறவை; wood-pecker (சா.அக.).

*[கள் = வெட்டுதல். கள் → களி → களிங்கம்.]*

**களிச்செம்மண்** *kaḷi-c-cemmaṉ,* பெ.(n.) பூங்காவி; red ochre (சா.அக.).

*[களி+ செம்மண்.]*

**களித்தரை** *kaḷi-t-tarai,* பெ.(n.) களிமண் நிலம் (சிலப். 3,96, உரை.); clayey soil.

*[களி[3]+ தரை.]*

**களித்துடுப்பு** *kaḷi-t-tuḍuppu,* பெ.(n.) 1. களி கிண்டுந்துடுப்பு; wooden instrument for mashing pap. 2. இளகியம் கிண்டும் துடுப்பு; wooden stirring rod used in preparing electuaries (சா.அக.).

*[களி[3] + துடுப்பு.]*

**களித்துயிர்** *kaḷi-t-tuyir,* பெ.(n.) குளவி; wasp. (சா.அக.)

*[கள் +அத்து – களத்து + உயிர். கள் = முள் முள்ளை உடையது.]*

**களித்துயில்** *kaḷi-t-tuyil,* பெ.(n.) இன்பத்துயில்; happy sleep of lovers. *"கொழுநரகலத்து ஒடுங்கிக் காவியங்கண்ணார் களித்துயிலெய்த" (சிலப். 4,46.).*

*[களி[2] + துயில்.]*

**களித்துழவை** *kaḷi-t-tuḻavai,* பெ.(n.) களியாகத் துழாவி சமைத்த கூழ்; mashed pap. *"அவையா வரிசி யங்களித் துழவை" (பெரும்பாண். 275.).*

*[களி[3] + துழாவு – களித்துழாவு → களித்துழவை.]*

**களிதம்** *kaḷidam,* பெ.(n.) 1.வழுக்கல் (சது.); slipperiness. 2. பெருங்கல் (சங்.அக.); huge stone,.

*[கள் → களி → களிதம்.]*

**களிதின்னல்** *kaḷi-tiṉṉal,* பெ.(n.) 1. களியுண்கை; eating pap. 2. கையூட்டுப் பெறுகை; taking bribes.

*[களி[3] + தின்னல். களி = கள்ளத்தனமான மகிழ்ச்சி.]*

**களிதூங்கு-தல்** *kaḷi-tūṅgu-,* 5 செ.கு.வி.(v.i.) மகிழ்ச்சிமிகுதல்; to be in ecstasy; to rejoice greatly. *"மாலோ டும்பர்கணங் களிதூங்க" (சேதுபு. கடவுள்.5.).*

*[களி[2] + தூங்கு.]*

**களிந்தை** *kaḷindai,* பெ.(n.) யமுனை ஆறு; the river Jamuna. *"பாய்மையாங் களிந்தை தன்னை" (இரகு. மாலை. 100.).*

*[களி → களிந்தை (கலங்கல் நீருள்ளது).]*

**களிநடம்** *kaḷinaḍam,* பெ.(n.) மகிழ்ச்சியால் ஆடும் நாட்டியம்; dance of joy; ecstatic dance. *"கற்பெனும் பெயரதொன்றும் களிநடம் புரியக்கண்டேன்" (கம்ப. சுந்தர. 1275).*

*[களி + நடம்.]*

**களிநெஞ்சன்** *kaḷi-neñjaṉ,* பெ.(n.) 1. செருக்கன்; proud man. 2. வன்கொடுமையாளன்; cruel man.

*[களி + நெஞ்சன்.]*

**களிநோய்** *kaḷi-nōy,* பெ.(n.) கட்குடியாலுண்டாகும் நோய்; disease due to excessive drinking. *"கட்கொண்டாங்குக் களிநோய் கனற்ற" (பெருங். உஞ்சைக். 35,51.).*

*[களி + நோய்.]*

**களிப்பாக்கு** *kaḷi-p-pākku,* பெ.(n.) 1. வேகவைத்துச் சாயமூட்டிய பாக்கு (பதார்த்த. 1441.); boiled areca-nut covered with thick paste; areca-nut boiled and dried. 2. தெங்கம்பாக்கு; another kind of areca nut (சா.அக.).

**ம.** களப்பாக்கு

*[களி[3] + பாக்கு.]*

**களிப்பாவை** *kaḷippāvai,* பெ.(n.) பொம்மை; doll.

**ம.** களிப்பாவ

*[களி + பாவை = குழந்தைகட்கு மகிழ்ச்சி உண்டாக்கும் பாவை.]*

**களிப்பாறை** *kaḷippāṟai,* பெ.(n.) பாறை போன்று வலிமையுடைய களிமண்பரப்பு; shale.

*[களி + பாறை.]*

**களிப்பிரண்டை** *kaḷi-p-piraṇḍai,* பெ.(n.) கோப் பிரண்டை; a species of adamantine creeper (சா.அக.).

*[களி[3] + பிரண்டை.]*

**களிப்பு** *kaḷippu,* பெ.(n.) மனமகிழ்ச்சி; joy, exultation, delight, hilarity. *"களிப்புமான் செல்வக் காவற் பேரூர்" (மணிமே. 7.26.).* 2. செருக்கு (பிங்.); vanity, conceit, pride. 3. மயக்கம்; mental delusion, aberration of mind. *"காமமும் வெகுளியும் களிப்புங் கைத்து" (கம்பரா. திருவவ.48.).* 4. மதுவெறி; intoxication, inebriation. *"களிப்பாலே வறிதிடத்திலும் மாலைகொண்டோச்சி" (சிலப். 14, 135, அரும்.).* 5. சிற்றின்பம் (வின்.); sexual pleasure. 6. மண்ணின் பசை; adhesive power, as in clay. களிப்பு நிலத்தில் வைத்தபயிர் வீடு வந்து சேராது (உ.வ.).

**ம.** களிப்பு

**Indon.** kesukan; **Norw., Swed.** Glade. **Turk**. keyif; **Chin.** kuaile; **E.** gay.

*[களி + பு (சொல்லாக்க ஈறு)]*

**களிப்புக்கள்ளி** *kaḷippu-k-kaḷḷi,* பெ.(n.) கொடிக் கள்ளி; beak-flowered creeping milk-hedge (சா.அக.).

*[களிப்பு + கள்ளி. களிப்பு = செழிப்பு, அடர்த்தி.]*

**களிப்புச்சுண்ணாம்பு** *kaḷippu-c-cuṇṇāmbu,* பெ.(n.) புளித்த சுண்ணாம்பு; lime mortar, ground and left for sometime before using.

*[களிப்பு + சுண்ணாம்பு.]*

**களிப்புமண்** *kaḷippu-maṇ,* பெ.(n.) செம்மண்; red clay (சா.அக.).

*[களிப்பு + மண்.]*

**களிப்புறா** *kaḷi-p-puṟa,* பெ.(n.) மணிப்புறா; ring dove (சா.அக.).

*[களி + புறா.]*

**களிம்பகற்று-தல்** *kaḷimbakaṟṟu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1.செம்பு முதலியவற்றின் குற்றத்தைப் போக்கல்; removing the verdigiris of copper or the rust of iron etc. 2. புடமிடல்; refining by calcination (சா.அக.).

*[களிம்பு + அகற்று.]*

**களிப்புறம்** *kaḷippuṟam,* பெ.(n.) விளையாடும் இடம்; a place set apart for play, play house.

**ம.** களிப்புறம்

*[களி + புறம்.]*

**களிம்பற்றவன்** *kaḷimbaṟṟavaṉ,* பெ.(n.) குற்ற மற்றவன் (இ.வ.); man of unimpeachable character.

*[களிம்பு + அற்றவன்.]*

**களிம்பு** *kaḷimbu,* பெ.(n.) 1. செம்பின் மலப்பற்று; veridigris, sub-acetate of copper. *"செம்புதன் களிம்பு பாற்றறியாது" (தணிகைப்பு. அகத். 360.).* 2. துரு (வின்.) ; rust. 3. மாசு; spot, blemish, fault. defect *"கண்ணின்று காட்டிக் களிம்பறுத் தானே"* (திருமந். 113.). 4. பூச்சுமருந்து; ointment. *"கந்தகக் களிம்பு" (பைஷஜ.). 'புடம் போட்டால் பொன் வேறு களிம்பு வேறு' (பழ.).*

**ம.** களிம்பு; **க.** கிலும்பு, கிலிம்பு, கிலுவு; **தெ.** சிலுமு, கிலுமு; **து.** கிலிம்பு, கிலாம்பு; **கோத.** கில்ப்; **பட.** கிலும்பு; **குவி.** கில்மூ (துரு).

*[களி + களிம்பு (களி போன்ற மருந்து)]*

**களிம்புபதம்** *kaḷimbupadam,* பெ.(n.) பிசுபிசுப்பான பதம்; glutinous or viscous state (சா.அக.).

*[களிம்பு + பதம்]*

**களிம்பு மண்** *kaḷimbu-maṇ,* பெ.(n.) 1. செம்மண்; copper ore. 2. இரும்பு மண்; iron one (சா.அக.).

*[களிம்பு + மண்.]*

**களிம்புமலை** *kaḷimbu-malai,* பெ.(n.) செம்புமலை; mountain containing copper ore (சா.அக.).

*[களிம்பு + மலை.]*

**களிம்பூறு-தல்** *kaḷimbūṟu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. களிம்பு பிடித்தல்; to form, as verdigris. 2. தயிர் முதலியன களிம்பாற் கெடுதல்; to become spoiled, as curds, when kept in a brass vessel.

*[களிம்பு + ஊறு-.]*

**களிம்பேறு-தல்** *kaḷimbēṟu-,* 5.செ.கு.வி.(v.i.) ***களிம்பூறு*** பார்க்க; see *kaḷimbūṟu-.*

*[களிம்பு + ஏறு.]*

**களிமகன்** *kaḷi-magaṉ,* பெ.(n.) கட்குடியன்; drunkard. *"உண்மென விரக்குமோர் களிமகன் பின்னரும்" (மணிமே.3,103.).*

**ம.** களிமகன்

*[களி[2] + மகன்.]*

**களிமண்** *kaḷi-maṉ,* பெ.(n.) 1.பசையுள்ள மண்வகை; clay, potter's clay. 2. நிலத்தைச் செழிப்பிக்கும் பொருக்குமண்; a rich calcareous earth or clay much used for manure. 3. வண்டல்மண்; a deposit of clay or fine earth from running water (சா.அக.).

**Afrik.** kleius; **Rus.** glina.

*[களி[3] + மண்.]*

**களிமண்ஏடு** *kaḷimaṇēdu,* பெ.(n.) எழுத்துகள் பொறித்த சுடுமண் ஓடு; clay tile with inscribed letters.

*[களி + மண்+ ஏடு.]*

கோவைக்கருகிலுள்ள பேரூரில் பல களிமண் ஓடுகள் அகழ்ந்தெடுக்கப்பட்டுள்ளன. அவற்றுடன் சில சுடுமண் படிமங்களும் கிடைத் துள்ளன. அவற்றில் சிந்துவெளி எழுத்துகள் இடை யிடை கொண்ட தமிழ் (பிராமி) எழுத்துகள் கண்ணழுத்தங்கோலால் குடைவு செய்யப் பட்டுள்ளன. மண் ஓடு முற்றக் காய்வதற்கு முன் அழுத்தியும் கீறியும் எழுதப்பட்டுள்ளன. எழுத்துகள் இன்றும் முழுமையாக படித்தறியப்படவில்லை. எருமிநாடு, குமிழியூர் என்ற சொற்கள் அடிக்கடி தொடர்ந்து வருகின்றன. இவை செஞ்சூளையில் சுட்டு எடுக்கப்பட்டவை.

**களிமண்குளிர்ச்சி** *kaḷimaṇkuḷircci,* பெ.(n.) களிமண்ணைப்போல் மிக்க குளிர்ச்சி; clay-cold (சா.அக.).

*[களிமண் + குளிர்ச்சி.]*

**களிமண்சுண்ணாம்பு** *kaḷimaṉ-cuṉṉāmbu,* பெ.(n.) 1. களிமண் கலந்த சுண்ணாம்புவகை. (கட்டட.சாத்.); a kind of mortar mixed with clay. 2. பிசுபிசுப்பான சுண்ணாம்பு; lime-clay (சா.அக.).

*[களிமண் + சுண்ணாம்பு.]*

**களிமயக்கு** *kaḷimayakku,* பெ.(n.) மதத்தினால் ஏற்பட்ட மயக்கம்; dizziness due to infatuation (சா.அக.).

*[களி + மயக்கு.]*

**களிமுத்தை** *kaḷi-muttai,* பெ.(n.) கேழ்வரகு, சோளம், கம்பு முதலிய தவசத்தால் கிண்டிய களியுருண்டை

(வின்.); boiled ball of meal from millet or other grain.

[களி³ + முத்தை.]

**களியடி–த்தல்** *kaḷiyaḍi-,* 4 செ.குன்றாவி.(v.t.) உப்பள உருவாக்கலில் முதன் முதலாக வெற்று நிலத்தில் களிமண் கொட்டுதல்; to spread clay on (sea shore) vacant land for the preparation of salt-pan.

[களி + அடி.]

**களியடைக்காய்** *kaḷi-y-aḍaikkāy,* பெ.(n.) வேக வைத்துக் காயவைத்த பாக்கு (இ.வ.); arecanut boiled and dried, for chewing.

**மறுவ.** களிப்பாக்கு

**ம.** களியடய்க்க; **க.** களியடிகெ; **குட.** களியடகெ

[களி³ + அடைக்காய்.]

**களியம்** *kaḷiyam,* பெ.(n.) தேசிக்கூத்துக்குரிய கால்வகை (சிலப். 3, 14. உரை.); specific posture of feet in dancing.

**ம.** களியம்

[களி→களிய. நாட்டுப் பாடல்கள் களித்தாடுவதையே குறிக்கொண்டவையாதலின் பொதுமக்களின் நாட்டுப்புறக் கூத்து களியம் எனப் பெயர் பெற்றது.]

**களியம்புறா** *kaḷiyampuṟa,* பெ.(n.) ஒருவகைப்புறா; a kind of dove (சா.அக.).

[களி + அம் + புறா.]

**களியர்** *kaḷiyar,* பெ.(n.) 1. நெய்தனிலமாக்கள்; maritime people. 2. கட்குடியர்; drunkard.

[களி² களியர்.]

**களியர்வண்ணம்** *kaḷiyar-vaṇṇam,* பெ.(n.) குடியர் உண்டு குடித்து மகிழ்வதைச் சிறப்பித்துப் பாடும் வண்ணப்பாட்டு (வின்.); kind of Vannam verse extolling the pleasures of high living, dainty food, and winous liquors.

[களியர் + வண்ணம்.]

**களியலடி** *kaḷiyal-aḍi,* பெ.(n.) கும்மியாட்டம் (நாஞ்.); a kind of kummi dance.

[கழி → கழியல் + அடி – கழியலடி → களியலடி.]

**களியன்** *kaḷiyaṉ,* பெ.(n.) குடியன்; drunkard.

[களி² → களியன்.]

**களியாட்டம்** *kaḷiyāṭṭam,* பெ.(n.) 1. மகிழ்வுடன் ஆடும் ஆட்டம்; play, sport, merriment. 2. குடி, சிற்றின்பம் முதலியவற்றில் ஈடுபட்டு மகிழும் கேளிக்கை; revelry.

**ம.** களியாட்டம்

[களி² + ஆட்டம்.]

**களியாட்டு** *kaḷi-y-āṭṭu,* பெ.(n.) கள்ளுண்டு ஆடும் ஆட்டம்; drunken feast, bacchanal, revel.

**ம.** களியாட்டு

[களி² + ஆட்டு.]

**களியுப்பு** *kaḷi-y-uppu,* பெ.(n.) வழலை அல்லது முப்பு; the three alchemical salts forming an universal solvent (சா.அக.).

[களி + உப்பு.]

**களிர்** *kaḷir,* பெ.(n.) சுறாமீன்; shark (சா.அக.).

[கள் → களிர்.]

**களிவா–தல்** (களிவருதல்) *kaḷi-vā-,* 18 செ.கு.வி. மகிழ்வடைதல்; to be blissful. *"கள்ளப்படாத களிவந்த வான்கருணை" (திருவாச. 10.16.).*

[களி² + வா...]

**களிவாய்நஞ்சன்** *kaḷi-vāy-nañjaṉ,* பெ.(n.) கொடிய நஞ்சுடைய பாம்புவகை (வின்.); a very venomous snake.

[கடி → களி + வாய் + நஞ்சன்.]

**களிவாய் நிலம்** *kaḷi-vāy-nilam,* பெ.(n.) களிமண் நிலம் (இ.வ.); clayey soil.

[களி + வாய் + நிலம்.]

**களிவிரி—த்தல்** *kaḷi-viri-,* செ.கு.வி.(v.i.) களிமண் குவியலை உப்பளத்தில் பரப்புதல்; spreading the heaps of clay in the salt-pan (sand).

*[களி + விரி.]*

**களிற்றரசு** *kaḷiṟṟarašu,* பெ.(n.) தேவர்கோமான் ஆகிய இந்திரனின் ஊர்தியான ஐராவதம் என்னும் வெள்ளையானை; Indra's elephant as the king of elephants. *"வால்வெண் களிற்றரசு வயங்கிய கோட்டத்து" (சிலப். 5.143.).*

*[களிறு + அரசு.]*

**களிற்றியானை** *kaḷiṟṟi-yāṉai,* பெ.(n.) ஆண்யானை (திவா.); male elephant.

*[களிறு + யானை.]*

**களிற்றியானை நிரை** *kaḷiṟṟi-yāṉai-nirai,* பெ.(n.) அகநானூற்றின் முதற்பகுதி; first part of Aga-nāṉūṟu.

*[களிறு + யானை + நிரை.]*

அகநானூற்றுப் பாயிரப் பாடலின் பின் "வண்டுபடத் ததைந்த கண்ணி" என்பது முதலாக "நெடுவெண் மார்பின்" என்பது ஈறாகக் கிடந்த பாட்டு நூற்றிருபதும் களிற்றியானை நிரை யெனப்படும்.

நெடியவாகி நிமிர்ந் தோடும் அடிகளைக் கொண்டு செம்மாந்து செல்லும் பாட்டின் நடையும் பொருட்சிறப்பும் நன்கு விளக்கமுறும் பகுதி களிற்றியானை நிரை எனப்படும்.

களிறு = ஆண்யானை, நிரை = அணி, வரிசை. களிற்றியானை நிரை எனில் ஆண் யானைகளின் அணி என்பது பொருள்.

'களிற்றியானை' என்னும் வழக்காறு பழைய நூல்களில் பல இடங்களில் உள்ளமை ஈண்டு எண்ணத்தக்கது. பதிற்றுப்பத்தில் மூன்றாம் பத்தின் பதிகப்பாட்டின் இடையே,

"கருங் களிற்றியானைப் புணர் நிரை நீட்டி இருகடல் நீரும் ஒரு பகல் ஆடி" எனக் களிற்றி யானை நிரை என்னும் முழுத்தொடரும் அமைந் திருப்பதைக் காணலாம்.

தொல்காப்பியர் அகத்திணையியலில் 'முதல் கரு உரிப்பொருள் என்ற மூன்றே' என்று தொடங்கும் நூற்பாவின் கீழ் "வண்டுபடத் ததைந்த கண்ணி" என்று தொடங்கும் அகநானூற்றுப் பாடல் முழுவதையும் தந்து அதன்கீழே "இக்களிற்றி யானை நிரையுள் பாலைக்கு முதலும் கருவும் தந்து உரிப்பொருளாற் சிறப்பெய்தி முடிந்தது."— என்று நச்சினார்க்கினியர் எழுதியுள்ளது நோக்கத் தக்கது [தமி.நூ.தொ.களஞ்.].

**களிற்றுடனிலை** *kaḷiṟṟuḍaṉilai,* பெ.(n.) மறவ னொரு வன் யானையை வேலால் எறிந்து அதன்கீழ் இறந்துபட்டதைக் குறிக்கும் புறத்துறை (பு.வெ.7,20); (Puram) theme of a warrior being killed by the elephant that he has pierced through with his jav-elin.

*[களிறு + உடன் + நிலை.]*

களிற்றொடு உடன்மாய்ந்து வீழ்தலைக் குறித்த புறத்துறையாதலின் இப்பெயர்பெற்றது.

**களிற்றுத்தானை** *kaḷiṟṟu-t-tāṉai,* பெ.(n.) அறு வகைப் படையுள் ஒன்றான யானைப்படை (திவா.); elephantry, one of six kinds of armed forces.

*[களிறு + தானை.]*

**களிற்றுப்பன்றி** *kaḷiṟṟu-p-paṉṟi,* பெ.(n.) ஆண்பன்றி (தொல்.பொருள். 589, உரை.); boar.

*[களிறு + பன்றி.]*

**களிற்றுப்பொறி** *kaḷiṟṟu-p-poṟi,* பெ.(n.) பகைவரை அழிக்கக்கோட்டை மதிலில் வைக்கப்படும் யானை வடிவ இயந்திரம் (சிலப். 15,216.உரை.); elephant-shaped machine mounted on a fort for defence.

*[களிறு + பொறி.]*

**களிற்றுயிர்** *kaḷiṟṟuyir,* பெ.(n.) ***களிற்றுயிர்த்தூம்பு*** பார்க்க; see *kalirruyir-t-tūmbu. "களிற்றுயிர் கொடுமின்" (புறநா. 152.).*

*[களிறு + உயிர்.]*

**களிற்றுயிர்த்தூம்பு** *kaḷiṟṟuyir-t-tūmbu,* பெ.(n.) பெருவங்கியம் (புறநா.152.); a kind of blow-pipe.

**மறுவ.** களிற்றுயிர்

*[களிற்றுயிர் + தூம்பு.]*

களிற்றின் பிளிறல் ஒலி போன்று ஓசை எழுப்பும் இசைக்கருவி.

**களிற்றுவட்டம்** *kaḻirṟu-vaṭṭam,* பெ.(n.) நிரைய வகை (சூடா.); a hell.

*[களிறு + வட்டம். மத யானையின் கொடுமை போன்ற துன்பம் குறித்தது.]*

**களிறு** *kaḻiṟu,* பெ.(n.) 1. ஆண்யானை; male elephant. *"மண்டமர் முழக்குங் களிறனையார்க்கு" (மணிமே. 18.150.)* 2. ஆண்பன்றி; boar. *"கேழற் கண்ணும் கடிவரையின்றே" (தொல். 1534.).* 3.ஆண் சுறா மீன்; male shark. 4. கைம்மீன் (அத்தம்); the 13th star.

**ம.** களிறு

*[களி² → களிறு. களிகொள்வது களிறு (வே.க.131.)]*

**களிறுதருபுணர்ச்சி** *kaḻiṟu-taru-puṇarcci,* பெ.(n.) தலைவன் தலைவியை யானையினின்று காத்தமை பற்றி அவ்விருவருக்கும் உண்டான கூட்டம் (இறை. 14, உரை,97.); union of a young man with a maiden on his having rescued her from an elephant.

*[களிறு + தரு + புணர்ச்சி.]*

**களுக்களுக்கெனல்** *kaḻukaḻuk-k-eṉal,*பெ.(n.) சிரித்தல் ஒலிக்குறிப்பு; onom, expr. signifying laugh.

*[களுக்கு + களுக்கு + எனல்]*

**களுக்கென்று** *kaḻukkeṉṟu,* வி.எ.(adv.) சிரித்தல் ஒலிக்குறிப்பு; onom expr. signifying laugh. களுக்கென்று சிரித்துத் தன் முல்லைப்பல்லைக் காட்டினார் (உ.வ.).

*[களுக்கு + என்று.]*

**களேபரம்**[1] *kaḷēparam,* பெ.(n.) 1. உடம்பு; body, *"இக்களேபரத்தை போம்ப" (தேவா.1194,2).* 2. எலும்பு (பிங்.); bone. 3. பிணம் (திவா.); corpse.

*[கள் (கட்டுதல்) → கள + உரம் (உடம்பு) → களவுரம் → களவரம் → களேபரம் (கொ.வ.).]*

**களேபரம்**[2] *kaḷēparam,* பெ.(n.) **களேவரம்** பார்க்க; see *kalevaram.*

*[களேவரம் → களேபரம்.]*

**களேவரம்** *kaḷēvaram,* பெ.(n.) குழப்பம்; confusion.

**தெ.** கலவாமு

*[கலவரம் → களேவரம் (கொ.வ.).]*

**களை**[1]**–தல்** *kaḷai-,* 2 செ.குன்றாவி.(v.t.) 1. பிடுங்கி யெறிதல்; to weed, pull up, pluck out *"களையுநர் கைகொல்லும்" (குறள், 879.).* 2. நீக்குதல்; to remove, expel, separate; to extirpate, as disease; to share; to pare, as the nails, to moult as feathers. *"இடுக்கண் களைவதாம் நட்பு" (குறள், 788.).* 3. ஆடையணி முதலியன கழற்றுதல்; to strip or put off, as clothes or ornaments. *"உடுத்துக் களைந்தநின் பீதகவாடை" (திவ். திருப்பல்.9).* 4. அழித்தல்; to exterminate, as a family or foe; to kill, destroy. *"பொல்லா வரக்கனைக் கிள்ளிக் களைந்தானை" (திவ். திருப்பா.13.).* 5. குழைதல் (பிங்.); to soften, melt, as the heart. 6. அரிசி கழுவுதல்; to wash or cleanse as rice.

**ம.** கள; **க.** களெ; **தெ.** தடசு; **து.** களையுனி, களெவுனி

*[கள் → களை.]*

**களை**[2]**–தல்** *kaḷai-,* 2 செ.குன்றாவி (v.t.) கட்டி முடித்தல்; to tie, fasten, as a tuft of hair. *"குடுமி களைந்தா னெங்கோ" (பு.வெ.9.21.).*

*[கள் = சேர்த்தல், தட்டுதல். கள் → களை.]*

**களை**[3] *kaḷai,* பெ.(n.) 1. கழனியில் முளைக்கும் பயனற்ற பயிர்; any usless plant of small growth which is not wanted, weeds. *"பைங்கூழ் களை கட்டதனோடு நேர்" (குறள், 550.).* 2. குற்றம்; defect, fault *"என்களையறுக்கும்" (தேவா. 818,5.).*

**ம.** கள்; **க.** களெ; **தெ.** கலபு; **குட.** களெ; **பட.** கா(யெ.); **து.** களெ.

**Sp.** hierba; **Cata.** herba; **Guj.** ghas; **Pali.** kasambn; **H.** ghas.

*[களை¹ → களை²]*

**களை**[4]**–த்தல்** *kaḷai-,* 2 செ.கு.வி.(v.i.) இளைப்புறுதல்; to be fatigued or exhausted; to be languid; to flag, faint, swoon. *"ஓடிக் களைத்தோ" (இராமநா.பக்.20.).*

**தெ.** களாசின்சு

*[கள் → களை.]*

**களை**[5] *kaḷai,* பெ.(n.) சோர்வு; களைப்பு; weariness, exhaustion. *“வேட்கையாற் களையினோடு கறுமெனச் சென்று” (கந்தபு. தநீசியுத்.55.).*

*[களை³→ களை⁴.]*

**களை**[6] *kaḷai,* பெ.(n.) 1. நிலவின்கலை (சந்திரகலை); a digit of the moon. *“களைப்பான் மதிமுகக் காரிகையீர்” (வெங்கைக்கோ. 61.).* 2. அழகு; beauty. *“முகமுங் களைக ளின்று” (தாயு.வண்ணம்.).* 3. ஒலி; splendour, glow, lustre. கையில் காசுமில்லை; முகத்தில் களையுமில்லை (பழ.).

**க.** களெ

*[கள்→ களை (திரட்சி, செழிப்பு.).]*

**களை**[7] *kaḷai,* பெ.(n.) களைக்கோலால் வெட்டிய வெட்டு (அக.நி.); cut with hoe.

*[கள்→ களை.]*

**களை**[8] *kaḷai,* பெ.(n.) 80 விரற்கிடையளவு (சிற்பரத்.16.); a linear measure of 80 fingers breadth or viraṟkiḍai.

*[கள்→ களை.]*

விளைநிலத்தில் களைவெட்டுவார்க்கு ஒதுக்கப்படும் சால் அளவு அரைக்கோல் அகல முடையது. அரைக் கோல் என்பது 5½ அடி அல்லது 80 விரற்கிடையளவு [0.825" – 1 விரற்கிடை, 10 விரற்கிடை – 1 சாண் [8¼", 16 சாண் – 1 கோல்].

**களைகட்டா** *kaḷai-k-kaṭṭā,* பெ.(n.) கட்டா எனும் ஒருவகை கடல்மீன் (முகவை மீனவ.); a kind of katta sea fish.

*[களை + கட்டா]*

**களைகட்டு**[1]**–தல்** *kaḷaikaṭṭui,* 5.செ.குன்றாவி.(v.t.) பூண்டோடு ஒழித்தல்; to destroy completely. *“செருவிற்சினவி இருபத்தொரு... காலரைசு களைகட்ட பரசுராமன்”* (S.I.I.vol3. insc. 207. S.No.8).

*[களை + கட்டு.]*

**களைகட்டு**[2]**–தல்** *kaḷai-kaṭṭu-,* 5 செ.குன்றாவி (v.t.) 1. அழகு கூடுதல், வண்ணமேறுதல், செம்மையாக இருத்தல்; to get beauty, splendour, glow. 2. மகிழ்ச்சி உண்டாக்கு, களிப்பாய் இரு; to get happy.

**க.** களெகட்டு

*[களை⁵ + கட்டு.]*

**களைகட்டு**[3]**–தல்** *kaḷaikaṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) இசைக்கருவிகளின் ஓசை அடக்கமான இடத்தில் நன்கு ஒலித்தல் (உ.வ.); to sound effectively, as music within an enclosure.

*[களை⁵ + கட்டு.]*

**களைகண்** *kaḷai-kaṉ,* பெ.(n.)1. பற்றுக்கோடு; support, as relieving distress. *“மற்றோர் களைகண் இல்லேன்” (தேவா. 645,1).* 2. தலைவன்; master lord.

*[கள் = சேர்த்தல், கட்டுதல், கட்டிக்காத்தல். கள்→ களை + கண். களைகண் = கட்டிக்காப்பதற்குப் புகலிடமானவன்; தலைவன்.]*

**களைகள்–தல்** (களைகட்டல்) *kaḷai-kal-,* 12 செ.கு.வி. (v.i.) ***களைபறி*** பார்க்க; see *kaḷaipaṟi.* *“பைங்கூழ் களைகட்டதனோடு நேர்” ( குறள், 550.).*

**க.** களெகளெ

*[களை² + கள்.]*

**களைகூடு–தல்** *kaḷai-kūḍu,* 5 செ.கு.வி.(v.i.) ***களை கட்டு²–தல்*** பார்க்க; see *kaḷai-k-kaṭṭu.*

*[களை + கூடு.]*

**களைகெடு–தல்** *kaḷai-keḍu-,* 7 செ.குன்றாவி (v.t.) அழகு கெடுதல்; மெருகு குறைதல்; to lose beauty.

**க.** களெகளெ, களெகெடு.

*[களை⁵ + கெடு.]*

**களைகொட்டு** *kaḷai-koṭṭu,* பெ.(n.) ***களைக் கொத்து*** பார்க்க; see *kaḷai-k-kottu*

*[களை + கொட்டு–,]*

**களைகொத்து**[1]**–தல்** *kaḷai-kottu-,* 4 செ.குன்றாவி (v.t.) களைக்கொத்தால் கொத்திக்களை யெடுத்தல்; to remove weeds by using hoe.

**மறுவ.** களையெடுத்தல்

**க.** களெகீள், களெகீளு.

*[களை + கொத்து.]

**களைகொத்து**[2] *kaḷai-k-kottu,* பெ.(n.) களை பறிக்குங் கருவி; weeding - hook, grass-hoe, small iron pick with broad blade and wooden handle.

மறுவ. களைக்குச்சி, களைக் கொட்டு; களைக்கோல், களைச் சத்தகம் (யாழ்ப்.).

ம. களகொத்து

*[களை² + கொத்து.]*

**களைகொல்லி** *kaḷaikolli,* பெ.(n.) களைகளை அழிக்கும் மருந்து; a chemical used to destroy weeds.

*[களை + கொல்லி.]*

**களைகொள்(ளு)-தல்** *kaḷai-koḷḷu-,* 16 செ.கு.வி (v.i.) அயர்வு கொள்ளல்; tired or exhausted (சா.அக.).

*[களை³ + கொள்க.]*

**களைகோல்** *kaḷai-kōl,* பெ.(n.) ***களைக்கொத்து*** பார்க்க; see *kaḷai-k-kottu. "காரியன் நீந்த களைக்கோலும்" (தமிழ் நா. 45.).*

*[களை + கோல்.]*

**களைச்சத்தகம்** *kaḷai-c-cattagam,* பெ.(n.) (யாழ்ப்.) ***களைகொத்து*** பார்க்க; see *kalai-kottu.*

*[களை2 + சத்தகம்.]*

**களைஞன்** *kaḷaiñaṉ,* பெ.(n.) 1.களைபறிப்போன்; one who weeds. *"களைஞர்தந்த கணைக்கால் நெய்தல்" (பெரும்பாண். 213.).* 2.கொடியவன் (சூடா.); vllian, wretch.

*[களை → களைஞன்.]*

**களைதீர்-தல்** *kaḷaitīr-,* 4 செ.கு.வி. (v.i.) வருத்தம் தீர்தல்; to recover from fatigue or langour (சா.அக.).

*[களை + தீர்.]*

**களைதீர்க்கி** *kaḷaitīrkki-,* பெ.(n.) 1.மயில் விசிறி; peacock feather fan so called from its removing fatigue when used. 2. கஞ்சி; rice-gruel water (சா.அக.).

*[களை + தீர்க்கி.]*

**களை தெளி-தல்** *kaḷaiteḷi-,* 4 செ.கு.வி (v.i.) சோர்வு நீங்குதல்; to recover from fatigue or langour (சா.அக.).

*[களை³ + தெளி.]*

**களைப்படை-தல்** *kaḷaippaḍai,* 4 செ.கு.வி.(v.i.) ***களைத்தல்*** பார்க்க; see *kaḷai-,*

தெ. களாசின்சு

*[களைப்பு + அடை.]*

**களைப்பாயிரு-த்தல்** *kaḷai-p-pāyiru-,* 3 செ.கு.வி (v.i.) ***களைப்படை-தல்*** பார்க்க; see *kaḷai-p-paḍai*

*[களைப்பு + ஆக → ஆய் + இரு.]*

**களைப்பு** *kaḷauippu,* பெ.(n.) சோர்வு; fatigue, exhaustion. *"களைப்பாச்சோ வென்பார்" (குற்றா. குற. 27.).*

*[களை³ → களைப்பு.]*

**களைப்புல்** *kaḷai-p-pul,* பெ.(n.) பயிருக்குட் களையாக முளைக்கும் புல் (யாழ்.அக.); grass-like weed.

*[களை² + புல்.]*

**களைபறி-த்தல்** *kaḷai-paṟi-,* 4 செ.கு.வி.(v.i.) 1. களைபிடுங்குதல்; to weed. 2. இடையூற்றைப் போக்குதல்; to remove a hindrance. *"கைங்கர்யத்திற் களைபறித்து" (ஈடு. 10, 4. ப்ர.).*

க. களெகீளு; படு. காகீ.

*[களை² + பறி.]*

**களைபோடு-தல்** *kaḷai-pōḍu-,* 20 செ.கு.வி. (v.i.) சோர்வாய் இருத்தல்; to be languid.

*[களை³ + போடு.]*

**களையறு-த்தல்** *kaḷai-y-aṟu-,* 4 செ.கு.வி.(v.i.) ***களைபறி*** பார்க்க; see *kaḷai-paṟi-, "கைங்கர்யத்திற் களையறுக்கிறது" (அஷ்டாதச. முமுட்சு. திவ்ய.63.).*

*[களை² + அறு-.]*

**களையாவாரம்** *kaḷaiyāvaram,* பெ.(n.) குழப்பம் (இ.வ.); confusion.

தெ. கலவரமு

[களை + ஆவாரம். ஆவலம் → ஆவரம் (ஆவலித்தல், ஆரவாரித்தல்) களை = களைதல், அழித்தல், தாக்குதல்.]

**களையாவேட்கை** *kaḷaiyā-vēṭkai,* பெ.(n.) நீங்காத ஆசை; desire that cannot be got rid of.

*[களை + ஆ + வேட்கை.]*

**களையாற்று–தல்** *kaḷai-y-āṟṟu-,* 5 செ.குன்றாவி (v.t.) இளைப்பாற்றுதல்; to remove the effect of fatigue or weariness.

*[களை = களைப்பு. களை + ஆற்று.]*

**களையாறு–தல்** *kaḷai-y-āṟu-,* 5 செ.கு.வி.(v.i.) இளைப்பாறுதல்; to take rest (சா.அக.).

*[களை + ஆறு.]*

**களையான்** *kaḷaiyāṉ,* பெ.(n.) வானம்பாடி (இ.வ.); skylark.

*[களை → களையான். களை = பொலிவு, அழகு.]*

**களையெடு–த்தல்** *kaḷai-y-eḍu-,*4 செ.கு.வி.(v.i.) 1.தேவையான செடிகளை வைத்துக் கொண்டு தேவையற்றவற்றை நீக்குதல்; to uproot weeds.

*[களை² + எடு–.]*

**களையேறு–தல்** *kaḷai-y-ēṟu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. ஒளிமிகுதல்; to increase in lustre, as one's countenance. 2. தெய்வச்சிலையில் தெய்வத் தன்மை மிகுதல்; to grow in lustre on account of the increased manifestation of godhood in an idol. 3. நிலவின்கலை வளர்தல் (வின்.); to increase, as the phase of the moon.

*[களை⁵ + ஏறு.]*

**களைவாங்கு–தல்** *kaḷai-vāṅgu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. அழகு குறைதல்; to decrease in lustre, as one's countenance. 2. தெய்வச்சிலையில் தெய்வத் தன்மை நீங்குதல்; to lose lustre, on account of the decreased manifestation of godhood in an idol.

*[களை⁵ + வாங்கு–.]*

**களைவாரி** *kaḷai-vāri,* பெ.(n.) ***களைக்கொத்து*** (வின்.) பார்க்க; see *kaḷaikottu.*

ம. களவாரி

*[களை² + வாரு = களைவாரு → களைவாரி.]*

**களைவு** *kaḷaivu,* பெ.(n.) நீக்குகை; rejection; extirpation; weeding; stripping off. *"பிறர்தம் மதமேற் கொண்டு களைவே" (நன்.10).*

*[களை¹ → களைவு.]*

**களைவெட்டி** *kaḷai-veṭṭi,* பெ.(n.) களைவெட்டுங் கருவிவகை (C.E.M.); jumper, a tool that works with a jumping motion.

*[களை² + வெட்டி.]*

**களைவெட்டு–தல்** *kaḷai-veṭṭu,* 5 செ.கு.வி.(v.i.) ***களைகொத்துதல்*** பார்க்க; see *kaḷaikottu-,*

**கற்கசி–த்தல்** *kaṟkaśi-,* 4 செ.கு.வி.(v.i.) கடுமையாயிருத்தல்; to be hard or unyilding; to be firm. *"விலை கொடுக்கும் பொழுது கற்கசிப்பார்க்குக் கொடாதும்" (நீலகேசி. 337, உரை.).*

*[கள் + கசி – கற்கசி.]*

**கற்கட்டிமதகு** *kaṟkaṭṭimadagu,* பெ.(n.) ஏரிக்கரையில் கற்களால் அமைக்கப்படும் மடை; out flowing sluice made up of stone. கலிங்குகளும் இடக்கையில் உடைந்த மடைகளும் அடைத்து ஏரியும் கல்லி கரையும் கற்கட்டி மதகுகளும் அட்டுவித்து.... (S.I.I. vol.12. in 126.).

*[கல் + கட்டி + மதகு.]*

**கற்கட்டியிடையர்** *kaṟ-kaṭṭi-y-iḍaiyar,* பெ.(n.) பெண்களுக்குத் தாலியுடன் கருகுமணி கோத்துக் கட்டுவதை வழக்கமாகவுடைய இடையர் இனம்; (e.t.); division of the Idaiya caste, whose women wear glass beads with tāli.

*[கல் + கட்டி + இடையர்.]*

**கற்கட்டு¹–தல்** *kaṟ-kaṭṭu-,* 5 செ.குன்றாவி (v.t.). 1.கற்களைக் கொண்டு கட்டுதல்; to build wall with stone brick. 2. அணிகலன்களில் செம்மணி இரத்தினக் கற்களைப் பதித்துக் கட்டுதல்; to set stones in the frame work of a jewel.

*[கல் + கட்டு.]*

**கற்கட்டு**[2] *kaṟ-kaṭṭu,* பெ.(n.) கற்களாகிய கட்டடம்; a structure built of stone. *"கற்கட்டாகிய மடமும் காணியும்" (தண்டலை.43).*

ம. கல்க்கெட்டு

*[கல் + கட்டு.]*

**கற்கட்டு மோதிரம்** *kaṟ-kaṭṭu-mōdiram,* பெ.(n.) ***கற்கட்டு விரற்செறி*** பார்க்க; see *kaṟkaṭṭu-viraṟ-ceṟi,*

*[கல் + கட்டு + மோதிரம்.]*

**கற்கட்டுவிரற்செறி** *kaṟkaṭṭu-viraṟ-ceṟi,* பெ.(n.) மணிபதித்த கணையாழி; ring set with one or more precious stones.

*[கல் + கட்டு + விரல் + செறி.]*

**கற்கண்** *kaṟkaṉ,* பெ.(n.) கலிங்கின் நீர்செல்லும் துளை; the hole of a surplus *"கற்கண்ணு... க்குமேலைச் செய்க்கு" (S.I.I.vol.19. in 275. s14-150).*

ம. கல்க்கண்டம், கல்க்கண்டி, கல்க்கண்டு; **தெ.** கலகண்ட; **கசபா.** கல்க்கண்டி; படட. கல்கண்டு.

*[கல் + கண்.]*

**கற்கண்டம்** *kaṟkaṇḍam,* பெ.(n.) அகில் (சங்.அக.); eagle wood.

*[கல் + கண்டம்.]*

**கற்கண்டு**[1] *kaṟkaṇḍu,* பெ.(n.) அணிகலவகை; a kind of ornament. *'கற்கண்டு ஒன்றில் தடவிக் கட்டின பளிங்கு இரண்டு'* (s.i.i.ii. 413).

*[கல் + கண்டு.]*

**கற்கண்டு**[2] *kaṟkaṇḍu,* பெ.(n.) பளிங்கு போன்று இறுகிய கருப்பஞ்சாற்றுக் கட்டி (பதார்த்த. 188.); rock-candy, sugar-candy. *"கற்கண்டால் செய்த எட்டிக்கனியும் கசக்குமா?" (பழ.).*

*[கல் +கண்டு.]*

**கற்கண்டு வகைகள்:** 1. பனங்கற்கண்டு 2. ஈச்சங்கற்கண்டு 3. சீனிக்கற் கண்டு 4. பத்தைக் கற்கண்டு 5. தேன்கற்கண்டு.

**கற்கண்டுப்பானகம்** *kaṟ-kaṇḍu-p-pāṉagam,* பெ.(n.) கற்கண்டு முதலாகிய பண்டங்கள் கூட்டிச் செய்த சுவைநீர்; a syrup of rock candy and other ingredients.

*[கற்கண்டு + பானகம்]*

**கற்கந்து** *kaṟ-kandu,* பெ.(n.) கற்றூண்; stone pillar. *"கற்கந்தும் எறிபோத்தும் கடுங்கண் யானையும் தறுகட் பன்றியும் கருவரையும் இரு நிலனும் பெருவிசும்பும் அனையார்" (இறைவ.2, உரை.31.).*

*[கல் + கந்து.]*

**கற்கம்**[1] *kaṟkgam,* பெ.(n.) 1. இலுப்பைப்பூ (வின்.); mahula flower. 2. தாமரை (மலை.); lotus.

*[கல்+அகம்– கல்வகம் → கற்கம். கரு. நிறமுடையதாய் இலுப்பைக் கொட்டையும் தாமரைக் கொட்டையும் அமைந்த அடிப்படையில் இப்பெயர் பெற்றன வாகலாம்.]*

**கற்கம்**[2] *kaṟgam,* பெ.(n.) 1. ***கல்கம்*** பார்க்க (தைலவ. தைல. 135.); see *kalgam.* 2. கருக்குக் குடிநீர் (கஷாயம்) முதலியவற்றின் கசடு; residuum or sediment of decoctions, oil or ghee.

*[கல்→ கரு → கருமை. கல் + அகம். → கல்லகம்→ கற்கம்.]*

**கற்கம்**[3] *kaṟgam,* பெ.(n.) 1. பாழ்வினை (பாவம்);sin. 2. விட்டை; dung of animals. 3. இரும்புக் கிட்டம்; Iron ore. 4. தீ; fire.

*[கல் → கரு → கருமை. கல் +அகம் → கல்லகம் கற்கம்.]*

**கற்கருசிலை** *kaṟkarusilai,* பெ.(n.) ஒருவகைப்பூடு (வின்.); a plant of the cucurbita genus.

*[கல் + கருசிலை.]*

**கற்கலிங்கி** *kaṟ-kaliṅgi,* பெ.(n.) 1. மலைக் கொன்றை (L.); hingle tree. 2. சிவப்பு அகில்; pink cedar (சா.அக.).

*[கல் + கலிங்கி.]*

**கற்கலை** *kaṟ-kalai,* பெ.(n.) காவியுடை; cloth dyed in red ochre. *"வார்செஞ்சடையுங் கற்கலையும்" (திருவானைக். திருநீ. 7.).*

*[கல் + கலை.]*

**கற்கவி** *karkavi,* பெ.(n.) கதவுநிலையின் மேலே இடப்பட்டிருக்கும் பாவுகல் (நெடுநல். 86.) உரை; தமிழ்நா.. 256); stone vault put up on the portal or doorway.

*[கல் + கவி.]*

**கற்கவுதாரி** *kar-kavudāru,* பெ.(n.) காட்டுக் கோழிவகை (m.m.761.) ; common sand - grouse.

*[கல் + கவுதாரி.]*

**கற்கனல்** *karkanal,* பெ.(n.) ஒருவகைச் செய் நஞ்சு; a mineral poison.

*[கல் + கனல்.]*

**கற்கா** *kar-kā,* பெ.(n.) ***கற்காநாடு*** (நன்.272. மயிலை.) பார்க்க; see *karkānādu.*

*[கல் + கா[3].]*

**கற்காக்காச்சி** *kar-kākkacci,* பெ.(n.) ஒருவகைக் கடல் மீன்; a red coloured sea-fish.

*[கல் + காக்காச்சி.]*

**கற்காண்டல்[1]** *karkāndal,* பெ.(n.) ஆறுவிரற்கிடை நீளமும் சாம்பல் நிறமுமும் உடைய கடல்மீன்வகை; a sea-fish, greyish, attaining 6 inches in length.

*[கல் + (கண்டல்) காண்டல்.]*

**கற்காண்டல்[2]** *karkāndal,* பெ.(n.) போரிற் பட்ட மறவனது உருவம் செதுக்குவதற்கேற்ற கல்லைத் தெரிந்து கொள்வதைக் கூறும் புறத்துறை (பு.வெ.10, பொது வியற்.8); (Puram.) theme of selecting a stone to cut the form and inscribe the memoirs of a fallen hero.

*[கல் + காண்டல்.]*

**கற்காணம்[1]** *kar-kānam,* பெ.(n.) கல்லாலமைந்த செக்கு; stone oil-press.

*[கல் + காணம்.]*

**கற்காணம்[2]** *kar-kānam,* பெ.(n.) கருஞ்சீரகம். (மலை); black cumin.

*[கருமை + காணம். கல் = கரு → கருமை, கல் + காணம், கற்காணம்.]*

**கற்காந்தம்** *kar-kāndam,* பெ.(n.) ஒருவகைக் காந்தக்கல் (வின்.); a kind of load-stone.

*[கல் + காந்தம்.]*

**கற்காநாடு** *karkā-nādu,* பெ.(n.) பன்னிரு கொடுந் தமிழ் நாடுகளிலொன்று; one of the twelve Kodun-Tamil-nadu (தொல்.சொல். 400.சேனா).

*[கல் + கா – கற்கா + நாடு.]*

இந்நாடு மேற்குத் தொடர்ச்சி மலையின் கீழ்ப்புறத்தில் கற்குன்றுகள் நிறைந்ததாம். இது தற்காலக் கோவை மாவட்டத்தில் அமைந்துள்ளது.

**கற்காப்பு** *kar-kāppu,* பெ.(n.) மாற்றார் படையெடுப்பு நிகழும் காலங்களில் கோயில் கருவறையைக் காப்பதற்காக அதன் வாயிலை அடைத்து எழுப்பும் கற்சுவர் (யந்திரப். 10); stone wall erected to close the entrance to the inner sanctuary of Hindu temple, to keep it safe in times of foreign invasion.

*[கல் + காப்பு.]*

**கற்காய்** *karkāy* பெ.(n.) விளாம்பழம் போன்றவற்றின் ஓடு; shell, cockle (சேரநா.).

**ம.**கல்க்காய், கக்க; **து.** கசக்க.

*[கல் + காய்.]*

**கற்காரம்[1]** *karkāram,* பெ.(n.) 1. கற்களாகக் கிடைக்கும் காரச்சரக்குகள்; stone-lime alkaline substances found naturally. 2. வெண்காரம்; borax 3. படிக்காரம்; alum. 4. பனை செ[illegible]க்கட்டி; palmyra jaggery in a lump. 5. பனங்கற்கண்டு; sugar, candy prepared from palmyra juice.

*[கல் + காரம் கல் = கட்டியானது, இறுகினது.]*

**கற்காரம்[2]** *karkaram,* பெ.(n.) கருங்கல் கட்டுமானப் பகுதி; stone work portion in a building or temple.

*[கல் + காரம்.]*

கோயிலின் அடிமனைப்பகுதி கருங்கல்லாலும் மேற்பகுதி செங்கல்லாலும் கட்டுவதுண்டு.

கருங்கல் → பகுதியை கல்காரம் கற்காரம் என்பது சிற்பமரபு.

**கற்காரம்**[3] *kar-kāram,* பெ.(n.) கல்வேலை; stone-work *"புலிமுகமான சோபானத்துக்கு வேண்டும் பொன்விட்டுக் கற்காரஞ்செப்வித்தேன்" (S.I.iii.86.).*

*[கல் + காரம்.]*

**கற்காரம்**[4] *karkāra,* பெ.(n.) காரக்கல்; a kind of caustic mineral.

*[கல் + காரம்.]*

**கற்காலம்** *kar-kālam,* பெ.(n.) கல்லைக் கருவியாகப் பயன்படுத்திய காலம்; stone age.

*[கல் + காலம்.]*

வரலாற்றுக்கு முற்பட்ட் காலத்தைச் சிலபிரிவுகளாகப் பிரித்து, அவ்வக்காலங்களில் மக்கள் பயன் கொண்ட கருவி, மாழை போன்ற வற்றின் அடிப்படையில் குறித்தல் மரபு. அவ் வகையில் கற்களைக் கருவியாகக் கொண்ட மக்கள் வாழ்ந்த காலம் கற்காலமாம்.இதில் பழைய கற்காலம், புதியகற்காலம் என்ற இரு பிரிவுகள் உண்டு.

**கற்காவி** *kar-kāvi,* பெ.(n.) காவிக்கல் (தைலவ. தைல. 135.); ochre .

*[கல் + காவி.]*

**கற்கி**[1] *karki,* பெ.(n.) கோயில் (சது.); temple. *"கற்கிளர் கற்கிசெய்தோன்" (சேதுபு. இராமநா.43.).*

*[கல் →கற்கு = கற்படுத்துதல், கற்களால் செய்வித்தல். கல் (த.வி.)→கற்கி (பி.வி). கல் →கற்கு + இ – கற்கி (கல்லால் செய்விக்கப் பட்டது.) 'இ'ஒன்றன்பால் ஈறு ஒ.நோ. நில் → நிற்கு (நிற்கச்செய்.)]*

**கற்கி**[2] *karki,* பெ.(n.) 1. திருமாலின் பத்துத் தோற்றரவு களில் இனி நிகழவிருக்கும் தோற்றரவு; the future incarnation of Vishnu, when he is to assume the form of a horse, to restore righteousness, one of the ten incarnations. *"தாமோதரனாய்க் கற்கியு மானான்றன்னை" (திவ். பெரியதி.8,8,10.).* 2. குதிரை; horse, *"கனகமுற்றுங் கற்கிக ளிடுவதாக நம்முளோர் கைக் கொண்டார்கள்" (திருவாலவா. 28, 62.).*

**கற்கிடை**[1] *kar-kidai,* பெ.(n.) செங்கற்சூளை (S.I.I.ii, 54.); brick-kiln.

*[கல் + கிடை.]*

**கற்கிடை**[2] *kar-kidai,* பெ.(n.) துறுகற்களால் கோலப்பட்டு இடையே முதுமக்கள் தாழிகள் புதைக்கப்படும் இடம்; place of gravel where large earthen jar intended for, corpse is buried. *"இவ்வூர் ஈழச்சேரியும் பறைச்சேரியும் வெள்ளான் சுடுகாடும் பறைச் சுடுகாடும், கற்கிடையும் ஆக இறையிலி நீங்கு நிலம்" (தெ.கல்.தொ.2.கல்.4.).*

*[கற் + கிடை.]*

**கற்கிணறு** *karkinaru,* பெ.(n.) 1. கல்லால் கட்டிய கிணறு; well, built by stone. 2. பாறையை வெட்டி உண்டாக்கப்பட்ட கிணறு; well excavated in rocky ground.

*[கல் + கிணறு.]*

**கற்கிளிச்சி** *kar-kilacci,* பெ.(n.) ஒருவகைக் கடல்மீன், நீலமும் பச்சையும் கலந்தது; a sea-fish, bluish-green.

*[கல் + கிளிச்சில்.]*

**கற்குகை** *karkugai,* பெ.(n.) கல்லிடுக்குகளில் அமைந்த குழிவானபகுதி; cave.

*[கல் + குகை.]*

**கற்குடல்** *kar-kudal,* பெ.(n.) கழிச்சல் மருந்துக்கு எளிதில் மலம் நெகிழ்தலில்லாத குடல் (உ.வ.); hard or costive bowels, as not amenable to mild purgatives.

*[கல் + குடல்.]*

**கற்குரு** *karkuru,* பெ.(n.) ஒருவகை மருந்துக்கல்; foliated crystallized gypsum.

*[கல் + குரு.]*

**கற்குழி**[1] *kar-kul,* பெ.(n.) 1. கல்லை வெட்டி எடுக்கத் தோண்டும் குழி; stone pit, a quarry. 2. கல்லறை; a sepulchre (சேரநா.).

ம. கல்க்குழி

*[கல் + குழி.]*

**கற்குழி**[2] *kaṟkuḻi,* பெ.(n.) வயிற்றுக்குழி; stomach. *"கற்குழி தூரக் கனகமுந் தேடுவர்" (திருமந் 211).*

*[கல் + குழி.]*

**கற்குளி-த்தல்** *kaṟ-kuḷi-,* 4 செ.கு.வி (v.i.) முத்து, செம்மணி (பவழம்) முதலியவை எடுப்பதற்காகக் கடலில் மூழ்குதல்; to dive in the sea for pearls, gems, etc.

*[கல் + குளி.]*

**கற்குளிமாக்கள்** *kaṟ-kuḷi-mākkaḷ,* பெ.(n.) முத்துக் குளிப்போர் (கல்லா.); divers for pearls.

*[கற்குளி + மாக்கள்.]*

**கற்குறவை** *kaṟ-kuṟavai,* பெ.(n.) பாறையில் சேர்ந்து வாழும் சிறு கடல் மீன்வகை. (m.m.); rock doke which clings to rocks, attaining at least 8 inches. in length.

*[கல் + குறவை.]*

**கற்குறிச்சி** *kaṟkuṟicci,* பெ.(n.) அம்பாசமுத்திரம் வட்டம் பாப்பாங்குளம் கோயிலுக்கு இறையிலி யாகவிட்ட ஊர்; village given as tax free to the temple at Pappankulam in Ambasamutiram taluk. *"இந்நாட்டுக் கற்குறிச்சியாள விக்கிரம பாண்டிய நல்லூர்" (தெ.இ.கல்.தொ.23 கல்125.).*

*[கல் + குறிச்சி.]*

**கற்குறும்பு** *kaṟkuṟumbu,* பெ.(n.) 1.மலைமுகடு; peak. 2. மலைப்பாங்கான மேட்டுப்பகுதி; mound துரிஞ்சிலோடடைக் கற்குறும்பும்; (S.I.I. vol. 2. in 76. 93.).

*[கல் + குறும்பு.]*

**கற்கெண்டை** *kaṟ-keṇḍai,* பெ.(n.) ஒருவகை ஆற்றுமீன் (m.m.); rock carp, river-fish, dark-brown, haunting rocky streams.

*[கல் + கெண்டை.]*

**கற்கேணி** *kaṟ-kēṇi,* பெ.(n.) ***கற்கிணறு*** பார்க்க; see *kaṟkiṇaṟu* "நெடிய கயிறிட் டிறைக்கின்ற கற்கேணி நீருண்பதாய்" *(அறப். சத.49.).*

*[கல் + கேணி.]*

**கற்கை** *kaṟkai,* பெ.(n.) படிக்கை; learning *"பிச்சைப் புகினும் கற்கை நன்றே" (நறுந்.).*

*[கல் + கை. 'கை' பெயராக்க ஈறு,ஒ.நோ. வருகை.]*

**கற்கொத்தி** *kaṟ-kotti,* பெ.(n.) 1. கல்லைப்பொளிந்து வேலை செய்பவன்; a stone-cutter. 2. கல்லுப் பொறுக்கிப் புறா (வின்.); a species of dove.

**ம.** கங்கொத்தி, கல்க்கொத்தி; **க.** கல்லுகுடிக

*[கல் + கொத்தி.]*

**கற்கோட்டை** *kaṟkōṭṭai,* பெ.(n.) கல்லால் கட்டப்பட்ட அரண்மனை; fort built by stone.

*[கல் + கோட்டை.]*

**கற்கோடாலி** *kaṟkōḍāli,* பெ.(n.) கல்லால் ஆன கோடாரி; a stone axe.

**ம.** கக்கோடாலி

*[கல் + கோடாலி. கோடு + அரி→ கோடரி→ கோடாரி→ கோடாலி (கொ.வ.).]*

**கற்கோணிலை** *kaṟ-kōṇilai,* பெ.(n.) போரிற்பட்ட மறவனது உருவத்தை வடிப்பதற்காகத் தேர்ந்தெடுக் கப்பட்ட கல்லைக் கைக்கொள்ளுதலைக் கூறும் புறத்துறை (பு.வெ. 10, பொதுவியற். 9); Puram theme of removing a selected block of stone for a herostone.

*[கல் + கோள் + நிலை.]*

**கற்கோது-தல்** *kaṟ-kōdu-,* 5 செ.கு.வி.(v.i.) கற்களின் கரடுமுரட்டுத் தன்மையை நீக்குதல்; to polish the surface of a stone.... *"குளமாக்கிக் கற்கோதிக் குமுழி செய்வித்து" (S.I.I. Vol. 14. in. 24. S.No.:4).*

*[கல் + கோது.]*

**கற்கோயில்** *kaṟ-kōyil,* பெ.(n.) கல்லால் கட்டப்பட்ட கோயில்; stone temple.

*[கல் + கோயில்.]*

**கற்கோவை** *kaṟ-kōvai,* பெ.(n.) 1. கொல்லங் கொவ்வை (மலை.); a climbing shrub 2. இராமக் கோவை (m.m.); Rama's caper. 3. கருடன் கிழங்கு; Indian birthwort

*[கல் + கோவை.]*

**கற்கோளம்** *kaṟ-kōḷam,* பெ.(n.) உருண்டைக்கல்; lithosphere.

*[கல் + கோளம்.]*

**கற்சக்கரம்** *kaṟcakkaram,* பெ.(n.) கல்லால் செய்யப்பட்ட சக்கரம்; a stone-wheel.

**க.**கல்லுகாலி

*[கல் + சக்கரம்.]*

**கற்சட்டி**[1] *kaṟ-caṭṭi,* பெ.(n.) மாக்கல்லால் அமைத்த சட்டி; vessel, made of stone, soft stone.

**ம.** கல்லுச்சட்டி; **க.**கல்சட்டி.

*[கல் + சட்டி.]*

புளிக்குழம்பு, ஊறுகாய் போன்றவற்றைப் பாதுகாத்து வைக்கப்பயன்படுத்தும் மூடியில்லாத ஏனம். கற்சட்டி என்பது திருநெல்வேலி வழக்கு.

**கற்சட்டி**[2] *kaṟ-caṭṭi,* பெ.(n.) உட்பக்கம் சிறுகற்கள் பதித்த மண்சட்டி; clay vessel with small stone grits embedded inside at the bottom.

*[கல் + சட்டி.]*

கீரை கடையப் பயன்படும்.

**கற்சட்டிப்பாறை** *kaṟcaṭṭi-pāṟai,* பெ.(n.) களிமண் இறுகுவதால் ஏற்படும் மாக்கல் பாறை; a variety of stea slite consisting of hardened clay used for making vessels - soap stone (சா.அக.).

*[கல் + சட்டி + பாறை → கற்சட்டிப்பாறை.]*

**கற்சவளை** *kaṟ-cavaḷai,* பெ.(n.) கல்நார் (யாழ். அக.); asbestos.

*[கல் + சவளை.]*

**கற்சவுடு** *kaṟcavuḍu,* பெ.(n.) 1. கெட்டிப்பட்ட வண்டல்; hardened sedim ent. 2. கெட்டியான உவர்மண் தரை; hard soil of fuller's earth (சா.அக.).

*[கல் + சவுடு.]*

**கற்சாடி** *kaṟcāḍi,* பெ.(n.) கலலைக் குடைந்து உண்டாக்கிய சட்டி; soap stone jar, stone pitcher.

*[கல் + சாடி. தாழி → சாழி → சாடி.]*

**கற்சாலர்வேலை**[1] *kaṟ-cālar-vēlai,* பெ.(n.) செங்கல் கட்டடத்தில் அமைக்கப்பட்ட சாளரச் சித்திர வேலை (c.e.m.); artistic brick-work effected with fringed borders, serving the purpose of a window without doors.

*[கல் + சாலர் + வேலை. சாலரம் →சாளர் (கொ.வ.).]*

**கற்சாலர்வேலை**[2] *kaṟ-cālar-vēlai,* பெ.(n.) தேன்கூடுபோல் அமைக்கப்பட்ட செங்கற்கட்டட வேலை (கட்டநாமா.); honey-comb, brick-work.

*[கல் + சாலர் (சாளரம்) + வேலை.]*

**கற்சிட்டம்** *kaṟciṭṭam,* பெ.(n.) உருகின கல்; over burnt brick (சா.அக.).

*[கல் + சிட்டம்.]*

*கற்சிட்ட வகைகள்: 1. அரிச்சிட்டம் – half over - burnt brick. 2. கட்டுச்சிட்டம் – hard over - burnt brick. 3. நகற்சிட்டம் fully blown over-burnt. 4. நாறுஞ்சிட்டம் – fetid over burnt brick (சா.அக.).*

**கற்சிப்பி** *kaṟcippi,* பெ.(n.) பாறைகளில் கிடைக்கும் கிளிஞ்சில்; rock oyster (சா.அக.).

*[கல் + சிப்பி.]*

**கற்சிலை** *kaṟ-cilai,* பெ.(n.) கல்லால் உருவாக்கப்பட்ட உருவம் (mod,); statue, stone image.

*[கல் + சிலை.]*

**கற்சிற்பர்** *kaṟ-ciṟppar,* பெ.(n.) கற்றச்சர்; stone masons, stone cutters.

*[கல் + சிற்பர்.]*

**கற்சிறை** *kaṟ-ciṟai* பெ.(n.) கல்லணை; stone dam, anaicut, embankment *"புனலைக் கற்சிறை போல வொருவன் றாங்கிய" (தொல் பொருள். 63.).*

**மறுவ.** தத்து

*[கல் + சிறை.]*

மதுரைக்காஞ்சி [வரி 725], அகநானூறு 346 ஆகியவற்றிலும் "கற்சிறை" குறிப்பிடப்படுகிறது. அணையைக் குறிக்கும் "சிறை" என்னும் தமிழ்ச் சொல் sirah என்ற வடிவத்தில் இருக்கு வேதத்தில் ஏறியுள்ளது. [பி.எல்.சாமி. "கற்சிறையும் அரப் பாவும்" செந்தமிழ்ச் செல்வி நவம்பர் 1994]

**கற்சீரகம்** *kar-ciragam,* பெ. (n.) சீரக வகையுள் ஒன்று; a hard variety of cumin seed (சா.அக).

*[கல் + சீரகம். கல் = கருமை, உறுதி.]*

**கற்சுண்ணக்குகை** *karcunna-k-kugai,* பெ.(n.) கல்லுச் சுண்ணாம்பினாற் செய்த உருக்குங்குகை; crucicble made of common lime stone (சா.அக.).

*[கல் + சுண்ணம் + குகை.]*

**கற்சுண்ணம்** *karcunnam,* பெ.(n.) ***கற்சுண்ணாம்பு*** பார்க்க; see *karsunnāmbu.*

*[கல் + சுண்ணம்.]*

**கற்சுண்ணமுப்பு** *karcunnamuppu,* பெ.(n.) அண்டக்கற் சுண்ணத்தாற் செய்யும் முப்பு; a universal salt prepared with lime- stone (essence) as its chief ingredient (சா.அக.).

*[கற்சுண்ணம் + உப்பு.]*

**கற்சுண்ணாம்பு** *kar-cunnāmbu,* பெ.(n.) ஓடக் கல்லை நீற்றி யெடுக்கும் சுண்ணாம்பு; stone lime, dist. fr. kilinjal sunnambu.

**மறுவ.** கற்சுண்ணம்

**ம.** கல்ச்சுண்ணாம்பு; **க.** கல்லுசுண்ணாம்பு

*[கல் + சுண்ணாம்பு.]*

**கற்சுணை** *karcunai,* பெ.(n.) கல்லின் மேலுள்ள சொர சொரப்பு; sharp grains or roughness of the surface of stones (சா.அக.).

*[கல் + சுணை.]*

**கற்சுவர்** *karcuvar,* பெ.(n.) 1. கற்கள் வைத்துக் கட்டப்படும் சுவர்; a stone wall, a structure built of stone. 2. செங்கற்கள் வைத்துக் கட்டும் சுவர்; brick wall.

**ம.** கல்க்கெட்டு

*[கல் + சுவர்]*

மண்சுவர்க்கு எதிர்ச்சொல்லாக அமைந்த கற்சுவர் கருங்கல் சுவரையே முதலில் குறித்து நின்றாலும், பின் அது செங்கல், செம்பராங்கல் போன்றவற்றைக் கொண்டமைக்கும் சுவர்க்கும் ஆகிப் பொதுமைப்பட்டு வழங்கி வந்துள்ளமை காண்க.

**கற்சூரை** *kar-cūrai,* பெ.(n.) செக்கவுரி (சா.அக.) (L.); spinous wild indigo.

*[கல் + சூரை.]*

**கற்சூலை** *kar-šūlai,* பெ.(n.) வலிப்புநோய்வகை (மு.அ.); a kind of rheumatic pain.

*[கல் + சூலை.]*

**கற்சேம்பு** *kar-sēmbu,* பெ.(n.) சேம்பு வகை (இட.வ.); a kind of Indian kales.

*[கல் + சேம்பு.]*

**கற்பசு** *karpašu,* பெ.(n.) பயனற்றது; useless thing, as a cow made of stone. *"கழிய நின்றார்க்கொரு கற் பசுவாமே" (திருமந். 308.).*

*[கல் + பசு.]*

**கற்பட்டறை** *karpattarai,* பெ.(n.) கல்லுடைக்கும் இடம்; the place where stones are crushed into different sizes.

*[கல் + பட்டறை.]*

**கற்பட்டு** *karpattu,* பெ.(n.) ஒருவகைப்பட்டு; a kind of silk.

**ம.**கல்பட்டு

*[கல் + பட்டு.]*

**கற்படி** *karpadi,* பெ.(n.) கல்லினா லியன்ற படிக்கட்டு; a flight of stone steps.

**ம.**கல்பட(வு), கல்படி.

*[கல் + படி.]*

**கற்படி மாற்று—தல்** *kar-padi-mārru-,* 5 செ.கு.வி. (v.t.) கல்லில் உள்ளதைப் பொத்தகத்திற்குப்படி எடுத்தல்; to transcribe into a book from inscription. *"ஸ்ரீ விமானத்துள்ள கற்படி மாற்று சேர்க்க" (பொத்தகப்படி. (S.I.I. vol.5. in 654.).*

*[கல் + படி + மாற்று.]*

**கற்படிவு** *karpadivu,* பெ.(n.) அறப்பழங்காலத்து மரம், விலங்கு போன்றவற்றைக் காட்டும் புதைவடிவம்; fossil.

*[கல் + படிவு.]*

மண்ணுக்கடியில் புதையுண்டு கிடக்கும் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முந்தைய மரம், செடி, விலங்கு போன்றவற்றின் உருவங்கள் கல்லைப் போன்று இறுகிப் பிறதாக்குதல்களால் மாற்றங் களுக்கு உள்ளாகாமல் அல்லது மிகச் சிறிய அளவே மாற்றம் அடைந்தவனவாக இருக்கும். இவை பெரும்பாலும் தொல் பழங் காலத்து நிலை யைக் காட்டப் பெருந்துணை புரியும்.

**கற்படு–த்தல்** *karpadu-*, 4 செ.கு.வி (v.i.) கற்படுத்த நிலம் (திவா); stone paved area. 2. மடையில் மேற்பகுதியில் கல் பரவுதல்; to pave stones on the sluice. *"வெப்பமடை கற்படுத்தும்" (S.I.I. vol.14. 44. s.no. 21.).*

*[கல் + படு.]*

**கற்படை** *kar-padai*, பெ.(n.) 1. கற்பாவின இடம்; stone pavement. 2. நீர் செல்வதற்குக் கற்களால் மறைத்து மூடிய சுருங்கை (சூடா.); closed drain. 3. சுவரின் கல்வைப்பு (உ.வ.); layer of brick or stone in a wall. 4. கோட்டையின் கள்ளவழி (வின்.); secret way into a fort.

*[கல் + படை.]*

**கற்பணம்** *karpanam*, பெ.(n.) கல்லுடைத்தலுக்கு இடப்பட்ட வரி; a tax levied on quarrying.

ம.கல்பணம்

*[கல் + பணம்.]*

**கற்பணி** *karpani*, பெ.(n.) 1. கல்வேலை; stone masonry. 2. கற்சிலை செய்யும் வேலை; stone sculpture (திருவாங்கூர்.. கல்வெட்டுத் தொகுதி. பக். 37.).

ம. கல்பணி.

*[கல் + பணி.]*

**கற்பதி[1]–த்தல்** *karpadi-*, 4. செ.கு.வி.(v.i.) 1. கற்பாவுதல்; to pave with stones. 2. மணிபதித்தல்; to encase precious stones in ornaments.

*[கல் + பதி.]*

**கற்பதி[2]–த்தல்** *karpadi-*, 4.செ.கு.வி.(v.i.) கல்லில் எழுதுதல்; to inscribe on stone. *"கற்பதித்தான் சொன்ன கவி" (சாச. தமிழ்க். 34.).*

*[கல் + பதி.]*

**கற்பதுக்கை** *karpadukkai*, பெ.(n.) தரைக்குள் அமைக்கப்படும் கற்பலகைகளாலான கல்லறை; இறந்தோரை அவர்களின் சில உடைமைகளுடன் அடக்கம் செய்யும் இடம்; sub surface coffin made of stone slabs where the dead bodies are placed along with some materials used by the person.

*[கல் + பதுக்கை. படுக்கை → பதுக்கை. 'த்' திரிபு.]*

**கற்பம்[1]** *karpam*, பெ.(n.) நானூற்று முப்பத்திரண்டு கோடி ஆண்டுகள் கொண்ட காலம், நான்முகனின் ஒரு நாள்; a day of Brahma, a period of 4,320,000,000 years of mortals. *"கற்பம் பல சென்றன" (கம்பரா. சரபங். 18).* 2. நான்முகனின் வாழ்நாள் (திவா.); period of Brahma's life-time. 3. இந்திரன் முதலியதேவர்களின் வாழ்நாளளவு; the standard by which the life-time of Indra and other celestials is measured. *"ஆயுக்கற்பத்தினை மிகவுடைய இந்திரன்" (சிலப். 11, 154,உரை.).* 4. வாழ்நாளை நீட்டிக்கச் செய்யும் மருந்து; medicine to promote longevity. *"காயகற்பந்தேடி" (தாயு. பரிபூ. 13.)* 5. இலக்கங் கோடி (பிங்.); the number 1,000,000,000,000. 6. தேவர் உலகம் (பிங்.); the world of gods.

*[கல்பம்→ கற்பம். கல் → கலி = ஒன்று சேர்தல், கூடுதல், மிகுதல்,பெருகுதல். கல் → கல்பம் → கற்பம்.]*

**கற்பம்[2]** *karpam*, பெ.(n.) 1. ஆவின் சாணத்தை முறைப்படி பக்குவப்படுத்தி உண்டாக்கிய திருநீறு (சைவச.பொது. 178.); sacred ashes prepared according to Agamas from cowdung received directly from the cow, by hand. 2. புளியாரை. (மலை.); yellow wood-sorrel.

*[கல்→ கல்வம்→ கற்பம்.]*

**கற்பமூலிகை** *karpamūligai*, பெ.(n.) காயகற்ப மூலிகைகள்; Siddhar's rejuvenation herbs and drugs (சா.அக.).

*[கற்பம் + மூலிகை.]*

**கற்பயறு** *kar-payaru*, பெ.(n.) பயறுவகை (பெரிய மாட். 34.); a kind of greengram.

*[கல் + பயறு.]*

**கற்பரணை** *karparanai*, பெ.(n.) 1. கல்லினாற் செதுக்கிய மூடி; stone cork. 2. கண்ணாடியாற் செய்த மூடி; glass stopper, glass cork (சா.அக.).

*[கல் + பரணை.]

**கற்பலகை** *kar-palagai,* பெ.(n.) 1. பருமனின்றித் தட்டையான கல்; stone slab. 2. எழுதுபலகை; slate for writing.

**ம.**கல்பலக; **க.** கல்கலகெ.

*[கல் + பலகை.]*

**கற்பலா** *karpalā,* பெ.(n.) கல்லுப்பலா; stone-jack of the arrocarpus genus (சா.அக).

*[கல் + பலா.]*

**கற்பழி-த்தல்** *karpali-,* 4 செ.கு.வி(v.i.) கற்புக் கெடுதல்; to lose one's chastity. *"கொன்றானோ கற்பழியாக் குலமகளை" (கம்பரா. ஊர்தேடு. 226.).*

*[கற்பு + அழி.]*

**கற்பழிப்பு** *karpalippu,* பெ.(n.) வல்லந்தமாக, வலிய கொள்ளும் உடலுறவு; rape, molestation.

**மறுவ.** மெய்தீண்டல்

*[கற்பு + அழிப்பு. அழி→ அழிப்பு. 'பு' சொல்லாக்க ஈறு.]*

**கற்பள்** *karpal,* பெ.(n.) கற்புடையவள்; *"பொலிவுறு கற்பள்" (நீதிசாரம். 27);* chaste woman.

*[கற்பு + அள்.]*

**கற்பற்று** *kar-parru,* பெ.(n.) 1. கல்பற்றுகையாகி குற்றமுள்ள மாணிக்கம்; unpolished ruby adhering to the ore. *"லசுநியும் த்ராசமும் கற்பற்று முடையன " (s.I.I.ii.78.).* 2. கிட்டக்கல் (வின்.); stony concretion in chemical preparation, minerals.

*[கல் + பற்று கற்பற்று.]*

**கற்பன்** *karpan,* பெ.(n.) கல்வியுள்ளவன்; learned person, scholar. *"தொலையாக் கற்ப" (பதிற்றுப். 43.31.).*

**ம.** கற்ப்பன்

*[கல் + பு- கற்பு + அன் – கற்பன்.]*

**கற்பனை**[1] *karpanai,* பெ.(n.) கல்வி; learning, study. (திருக்கோ. 22. உரை.) 2. பயிற்றுவித்தல்; teaching, instruction. *"அருங்கற்பனை கற்பித்தாண்டாய்" (திருவாச. 21.7.).*

*[கல் + பு → கற்பு + அன் + ஐ → கற்பனை. ஒ.நோ. விற்பனை.]*

**கற்பனை**[2] *karpanai,* பெ.(n.) 1. மனவுறுதி; determination, vow. *"அவன்றிருக் களத்திலல்ல தலங்கல் போடே னென்னக் கற்பனை கொண்டனன்" (சேதுபு.அகத். 16.).* 2. கட்டளை; command, order, *"காவல்கொணீ யெனக் கற்பனை செய்தான்;" (கந்தபு.மகாசா.68).* 3. செயல், ஏற்பாடு; plan, prescribed *"அழல் வேள்வியின் கற்பனைக்குதவி தருகென" (பாரத. இராசசூ.64.).* 4. இல்லாததைக் கட்டிச் சொல்லுகை; fabrication, invention, guess. என்மேற்கூறிய மொழி கற்பனையாகும் (உ.வ.). 5. வண்ணனை; (poets.) description, imagination 6.ஏய்ப்பு; guile, deceit. *"வாதாபி கற்பனை யகன்று" (கந்தபு. திருக்கல். 61.).* 7. பொய்த்தோற்றம்; (வேதா. சூ. 68.உரை.); illusion or illusory superimposition.

**ம.**கல்பன; **து.** கல்பனெ **H. skt.** kalpana, **Guja;** kalpha.

*[கல் + பு + அன் + ஐ → கற்பனை.]*

**கற்பனை**[3] *karpanai* பெ.(n.) 1. அறிவு; knowledge. 2. சொல்லிக் கொடுத்தல்; teaching, instructiion. (சேரநா.).

**ம.** கறபன

*[கல் + பு + அன் + ஐ → கற்பனை.]*

**கற்பனைச்செருக்கு** *karpanai-c-cerukku,* பெ.(n.) கற்பனை செய்வதில் மிகைபடுதலாகிய குற்றம்; defect of cumbrousness in a hypothesis or an assumption. *"பந்தம் ஒன்றினாலென்னாமல் மூன்றைச் சொன்னது கற்பனா கௌரவம் எனின் அற்றன்று" (சி.சி. 1.1.சிவாக்.).*

*[கற்பனை + செருக்கு.]*

**கற்பனைசெய்** *karpanai-cey-,* 1.செ.குன்றாவி.(v.t.) வண்ணனை செய்தல்; இட்டுக்கட்டிச் சொல்லுதல்; to imagin.

*[கற்பனை + செய்.]*

**கற்பனைத்திறன்** *karpanai-t-tiran,* பெ.(n.) இல்லது புனைந்து கட்டுரைக்கும் ஆற்றல்; power of illusion and creativeness.

*[கற்பனை + திறன்.]*

**கற்பா** *kar-pā,* பெ.(n.) கோட்டை உள்மதில் வாரியுள் உயர்ந்த நிலம் (பிங்.); high ground in the narrow path on the inner side of the walls of a fort.

*[கல் + பாவு → கற்பாவு → கற்பா.]*

**கற்பாசி** *karpāši,* பெ.(n.) கல்லிற் பற்றியுள்ள பாசி வகை; lichen rock-moss.

*[கல் + பாசி.]*

**கற்பாசிச்சத்து** *karpāši-c-cattu,* பெ.(n.) கற்பாசியின் சத்து; essence of rock-moss (சா.அக.).

**க.** கல்லு கூவு, கல்லுகூ, கல்லகூவு.

*[கல் + பாசி.]*

**கற்பாட்டி** *karpātti,* பெ.(n.) கற்பை உடையவள் (பிங்.); chaste woman.

*[கற்பு + ஆட்டி– கற்பாட்டி. ஆள் + தி –ஆட்டி.]*

**கற்பாடு** *kar-pādu,* பெ.(n.) கல்லுள்ள நிலம் (யாழ்ப்.); stony ground left uncultivated.

*[கல் + பாடு – கற்பாடு. படு→ பாடு.]*

**கற்பாத்தி** *karpātti,* பெ.(n.) கல்லால் அமைத்த கால்வாய்; a stone conduit.

**ம.**கல்பாத்தி

*[கல் + பாத்தி.]*

**கற்பாம்பு** *karpāmbu,* பெ.(n.) கடற்குதிரைவகை; pipe-fish light brown, body scarcely deeper than broad.

**க.** கல்லு காவு (ஒருவகைப்பாம்பு).

*[கல் + பாம்பு – கற்பாம்பு.]*

**கற்பாரியம்** *karpāriyam,* பெ.(n.) ஒரு சிற்ப நூல் (வின்.); name of a treatise on architecture.

*[கல் + பாரியம் – கற்பாரியம்.]*

**கற்பாலம்** *karpālam,* பெ.(n.) கல்லால் அமைக்கப் பட்ட பாலம்; a stone - bridge (சேரநா.).

**ம.**கல்பாலம்

**கற்பாலை** *karpālai,* பெ.(n.) காட்டிலுப்பை; East Indian star apple (சா.அக.).

*[கல்பாலை → கற்பாலை; கல் = கருமை.]*

**கற்பாவு–தல்** *kar-pāvu-,* 5.செ.கு.வி.(v.i.) 1. கல்லால் தளம் போடுதல்; to pave with stones. 2. கற்கள் பரவியிருத்தல்; to lie scattered, as stones in a hill. *"கற்பாவிய வரைவாய்க் கடிதோட்ட களவகத்தே"* (திருக்கோ.8.).

*[கல் + பரவு.]*

**கற்பாவை** *kar-pāvai,* பெ.(n.) கல்லினால் இயன்ற படிவம் (வின்.); an effigy made of stone; stone statue.

*[கல் + பாவை + கற்பாவை.]*

**கற்பாழி** *kar-pāli,* பெ.(n.) 1. மலைக்குகை (திவா.); a rock-cut cave, cavern in a rock. 2. மலைப்பொந்து; deep cavern in a rock (சா.அக.).

*[கல் + பாழி – கற்பாழி. பாழி = இடம்.]*

**கற்பாள்** *karpāl,* பெ.(n.) மனைவி; wife. ஆனந்தத் தாண்டவ நம்பி கற்பாள் (மதுரைத்திருப். 13.).

**மறுவ.** மனைவி, இல்லாள்

*[கற்பு + ஆள் – கற்பாள்.]*

**கற்பாளம்** *karpālam,* பெ.(n.) மலையிலிருந்து பிளக்கப்பட்ட பெரும் பாறைத்துண்டு; boulder.

*[கல் + பாளம்.]*

**கற்பாளி** *karpāli,* பெ.(n.) மலைமுழைஞ்சு; cleft or cave in a rock or mountain.

*[கல் + (வாழி →பாழி) பாளி.]*

**கற்பாறை** *karpārai,* பெ.(n.) கல்லாக அமைந்த பாறை; rock.

**க.**கல்லுபண்டெ

*[கல் + பாறை → கற்பாறை.]*

**கற்பி[1]–த்தல்** *karpi-,* பி.வி. (cani.) பயிற்றுவித்தல்; to teach, instruct *"அருங்கற்பனை கற்பித்து" (திருவாச. 21.7.).*

**கற்பி[2]–த்தல்** *karpi-,* 4 செ.குன்றாவி (v.t.) 1. புதிதாக உண்டாக்குதல்; to create; to construct; to invent, as a term; to compose; as a poem. *"நான்முகன் கற்பிக்க வொருகடவுளோ" (தாயு. சுகவா.3).* 2. கட்டளையிடுதல்; to direct, command. *"கனையிருள் வாய்வரக் கற்பித்த நீ" (தஞ்சைவா. 193.).* 3. முறைப்படுத்துதல்; to prescribe, ordain. 4. ஏற்பாடு செய்தல்; to arrange. *"அருந்துமிடங் கற்பித்தானே" (பாரத. அருச்சுனன்றீர். 23.).* 5. நிலைகொள்ளச் செய்தல்; (insc.) to install as a deity in a temple. அக்கோயிலில் முருகனைக் கற்பித்தான் (இ.வ.). 6. கொடுத்தல்; to donate, present. *"மேற்படியூரில் இருக்கும் அம்மைமாரில் ஆண்டினார் மகள் சீரங்கம் வழிபாடாகக் கற்பித்த திருநந்தா விளக்கு" (S.i.i. vol.5. Part II insc. 748. S.9.).*

**ம.** கல்பிக்குக; **க.** கலிசு; **பட.** கல்சு.

*[கல் + ப் + இ – கற்பி. 'ப்' எதிர்கால இடைநிலை. 'இ' பிறவினை ஈறு.]*

**கற்பி[3]–த்தல்** *karpi-,* 4 செ.கு.வி.(v.i.) கற்பனை செய்தல்; to imagine, build castles in the air.

*[கல் + ப் + இ – கற்பி.]*

**கற்பிடிப்பு வேலை** *kar-pidippu-vēlai,* பெ.(n.) கற்களைப் பொருத்தும் வேலை (C.E.M.); art of laying brick or stone.**கற்பிரண்டைகற்பிரண்டை**

*[கல் + பிடிப்பு + வேலை.]*

**கற்பிணைப்பு** *karpiṇaippu,* பெ.(n.) கற்களை நெட்டாயமாகவும் கிடையாகவும் வைத்துக் கட்டடம் கட்டும் போது கற்களுக்கிடையே ஏற்படும் பிணைப்பு; The grip occuring when piling up stones for construction perpendicularly and horizontally.

*[கல் + பிணைப்பு.]*

**கற்பித்தஅளவு** *karpitta aḷavu,* பெ.(n.) பணியின் அளவு; the quantum of work instructed to be done. முட்டாமல் நடத்திக் கொண்டு போதும் படியும் கற்பித்த அளவுக்கு இம்மரியாதியிலே இவ்வோலை... (S.I.I. vol.5. Part II in 267, S. 8.).

*[கற்பித்த + அளவு.]*

**கற்பித்தநாள்** *karpitta nāḷ,* பெ.(n.) 1. ஆணை பிறப்பித்த நாள்; date of ordering. 2. புதியதாகச் செய்த நாள்; newly ordained day. நடத்திப் போகுமாறு கற்பித்த நாள் ஒன்றுக்கு அமுதுபடி (திருவாங். 6. பகுதி II கல். 127, வரிசை. 9, 10.).

*[கற்பித்த + நாள்.]*

**கற்பித்தமை** *karpittamai,* பெ.(n.)1. புதியதாகச் செய்தமை, படைக்கை; making, creating. 2. ஆணை பிறப்பித்தமை; ordering. (திருவாங்.கல். அக.). *'கற்பித்தவன் கண்ணைக் கொடுத்தவன்' (பழ.).*

*[கற்பி → கற்பித்தல் → கற்பித்தமை.]*

**கற்பித்தவன்** *karpittavan,* பெ.(n.) ஆசிரியன்; teacher, instructor. *'கற்பித்தவன் கண்ணைக் கெடுத்தவன்' (பழ.).*

*[கற்பி + த் + த் + அ + அவன். (வினையா. பெ.) 'த்' இறந்தகால இடைநிலை.]*

**கற்பிதம்[1]** *karpidam,* பெ.(n.) 1. மனதில் உருவகித்தல்; fancy, imagination. 2. புனையப்பட்டது; that which is invented, artificial. 3. பொய்; lie, fabrication. *"எல்லாங் கற்பித மென்று" (கைவல்ய. தத்துவ. 3.).*

**ம.** கல்பிதம்

*[கல் → கற்பி → கற்பிதம். 'த்' எழுத்துப்பேறு. 'அம்' பெயரீறு.]*

**கற்பிதம்[2]** *karpidam,* பெ.(n.) இன்ன நோய்க்கு இன்ன மருந்து என்று எழுதி வைத்த மருந்துப்பட்டி; a medicinal direction for remedies for diseaes (சா.அக.).

*[கற்பி → கற்பிதம் (தெளிவு).]*

**கற்பியல்** *karpiyal,* பெ.(n.) கற்பென்னும் கைகோளைப் பற்றிக்கூறும் அகப்பொருட்பகுதி; section in *aga-p-poruḷ* dealing with *karpu.*

*[கற்பு + இயல்.]*

**கற்பிரண்டை** *karpiraṇḍai,* பெ.(n.) முப்பிரண்டை; a rare species of adamantive creeper having three facets (சா.அக.).

*[கல் + பிரண்டை.]*

**கற்பிரம்** *kaṟpiram,* பெ.(n.) ***கல்லாரை*** பார்க்க; see *kallārai.*

*[சல் + (புறம் → புரம்) → பிரம்.]*

**கற்பிலக்கணம்** *kaṟpilakkaṇam,* பெ.(n.) கற்புநடை; அது உள்ள மகிழ்ச்சி; ஊடல், ஊடலுணர்த்தல், பிரிவு ஆகியவற்றையும் பிறவற்றையும் உணர்த்தும் தன்மை; feature of happiness, sulkiness, impressing sulkiness, separation etc. of married life.

*[கற்பு + இலக்கணம்.]*

**கற்பிலாச்சி** *kaṟ-pilācci,* பெ.(n.) பழுப்பு நிற முடையதும் ஒன்பதங்குலம் வளர்வதுமாகிய ஒரு வகைக் கடல்மீன் (m.m.688); coffer-fish, olive-brown, attaining at least 9 inches. in length.

*[கல் + பிலாச்சி – கற்பிலாச்சி.]*

**கற்பிள–த்தல்** *kaṟpiḷa-,* 3 செ.குன்றாவி.(v.t.) பாறைகளைத் துண்டாக்குதல்; to break rocks. *"மாலங்குடிப் பெருங்குளத்து மடைவைத்து மதன் குளவாய் நீலப் பெருங்கற் பிளந்து காலப்புனல்வர" (S.I.I. Vol. 14. in 44 S.22.).*

*[கல் + பிள.]*

**கற்பு**[1] *kaṟpu,* பெ.(n.) திருமணமானவர் தம் ஒழுக்கம் காக்கும் உறுதி; தூய அக ஒழுக்கம்; கற்பு நெறி; conjugal fidelity, chastity. *"வான்றரு கற்பின்" (மணிமே. 22, 53.).* 2. களவுக் கூட்டத்துக்குப்பின் தலைவன் தலைவியை முறைப்படி மணந்து இல்லறம்புரியும் ஒழுக்கம் (நம்பியகப். 26.); mutual love resulting in marriage. 3. பெண்ணின் கன்னித்தன்மை; virginity. 4. முல்லை (திவா); jasmine, an emblem of female chastity. *"முல்லை சான்ற கற்பின் மெல்லியள்" (சிறு. 30.).*

*[கல் → கற்பு (திருக். தமி. மர. 66.). கற்போல் உறுதியான இருபாலிடைக் காதற் பண்பு. "கற்பு றுத்திய கற்புடை யாடனை" (கம்பரா. அயோத். நகர்நீங்கு. 16.).]*

**கற்பு**[2] *kaṟpu,* பெ.(n.) 1. கல்வி; learning, study, knowledge. *"உலகந்தாங்கிய மேற்படு கற்பின்" (பதிற்று. 59. 8.).* 2. ஊழ்கம் (தியானம்); meditation. பல புவனமு நின்பாற் கற்பு வைத்துய்ய (திருவிளை. மாயப். 29.). 3. வேலைப்பாடு; workmanship. *"கற்பார் புரிசை" (திவ். பெரியதி. 5, 1, 4.).*

*[கல் + பு – கற்பி. 'பு' பெயராக்க ஈறு.]*

**கற்பு**[3] *kaṟpu,* பெ.(n.) 1. மனவுறுதி; vow, decision, determination. *"கற் பென்னும் திண்மையுண்டாகப் பெறின்" (குறள். 54.).* 2. ஆணை; ordinance, command. *"மறுவறு கற்பினில் ... ஆண்டு" (கம்பரா. கிளைகண். 72.).* 3. உய்யும் வழி; refuge; means of relieving distress. *"கண்டுவிடுவார்க்குண்டோ கற்பு" (சைவச. பொது. 103.).*

*[கல் + பு – கற்பு. கல் போன்ற மனவுறுதி, உறுதியான ஆணை, உறுதியான வழிவகை.]*

**கற்பு**[4] *kaṟpu,* பெ.(n.) ***கற்பா*** பார்க்க; see *kaṟpā.*

*[கற்பா → கற்பு.]*

**கற்புடைமை** *kaṟpuḍaimai,* பெ.(n.) பழி பிறங்கா ஒழுக்கமுடைமை, ஒருமையுடைமை; sincerity and loyalty evinced in wedded life.

*[கற்பு + உடைமை.]*

**கற்புநிலை** *kaṟpu-nilai,* பெ.(n.) ஒழுக்கந் தவறா நிலை; chastity, honesty, loyalty and sincerity attached to wedded life. *"கற்பு நிலையென்று சொல்லவந்தார் இரு கட்சிக்கும் அஃதைப் பொதுவில் வைப்போம்" (பாரதி.).*

*[கற்பு + நிலை.]*

**கற்புநிலை தவறு–தல்** *kaṟpu-nilai-tavaṟu-,* 5 செ.கு.வி. (v.i.) ஒழுக்கந்தவறுதல்; to lose chastity.

*[கற்பு நிலை + தவறு.]*

**கற்புமுல்லை** *kaṟpu-mullai,* பெ.(n.) 1. தலைவி தன்கொழுநன் நலத்தைப் பெருகச் சொல்லும் புறத்துறை (பு.வெ.10, முல்லைப். 8.); (Puram.) theme of wife extolling the virtues of her husband. 2. கணவனைப் பிரிந்த தலைவி தனியிருந்து தன் நிறைகாத்தலின் சிறப்பைக் கூறும் புறத்துறை (பு.வெ. 10, முல்லை.9.); (Puram.) theme of extolling a woman maintaining equanimity during the separation of her husband. 3. கணவனொடு தலைவி விருந்தோம்புஞ் செல்வத்தை வாழ்த்தும் புறத்துறை. (பு.வெ. 10. முல்லைப். 10.); (Puram.) theme of a wife praying for the continuance of the pleasure of welcoming guests with the kind co-operation of her husband.

*[கற்பு + முல்லை.]*

போரிலும் புறத்தே புலப்பாடான தொழில் திறங்களிலும் புறத்தார்க்குச் செவ்விதின் புலப்படும் வெற்றிகளெல்லாம் வாகைத் திணையின்கண் அடங்கும். அமைதியான இல்லற ஒழுகலாறு களாலும் பண்பாட்டுத் திறங்களாலும் அகவாழ்வின் செப்பங்களாலும் புறத்தார்க்குப் புலப்படும் வெற்றித் திறங்கள் முல்லைத் திணையின் பாற்படு வதனால் இது கற்புமுல்லை யாயிற்று.

"கற்புமுல்லை: பொன்போலிலங்கு சுணங்கி னையும் பொலிந்த கண்ணினையுமுடைய மடந்தை கொழுநனுடைய நன்மைமையைப்பெருகச்சொல்லுவதும், பொருந்துதலமைந்த கொழுநன் நீங்கத் தன்னிடத்துக் காவலைச் சொல்லுவதும், செல்வம் பெருகும் அழகிய மாளிகையிலே சேர்ந்த கணவன்றன் பெரிய செல்வத்தை வாழ்த்துவதுமாம்" என்னும் உரைக் குறிப்பு ஒப்பு நோக்கத்தக்கது.

**கற்புரம்** *kaṟpuram,* பெ.(n.) 1. பொன் (யாழ்.அக.); gold. 2. பொன்னாங்கண்ணி; an edible plant.

*[கல் + புரம் – கற்புரம். புரை = உயர்வு. புரை → புரம். விலையுயர்ந்த மணிக்கற்கள் பதிக்கத்தக்க பெருமையுடைமை பற்றிப் பொன்னுக்குக் கற்புரை → கற்புரம் என்னும் பெயர் வழங்கியிருக்கலாம். பொன்போன்ற சிறப்பு கருதி பொன்னாங் கண்ணியும் இப்பெயர் பெற்றது.]*

**கற்புரி** *kaṟpuri,* பெ.(n.) கற்புக்கு அடையாளமாகக் கூறப்படும் முல்லை; eared-jasmine (சா.அக.).

*[கற்பு + உரி – கற்புரி = கற்புக்கு உரியது.]*

**கற்புரை** *kaṟpurai,* பெ.(n.) நறைகல் (சாம்பிராணி); frankincense, olibanum.

*[கல் + புரை – கற்புரை = கல் போன்றது. புரைதல் = ஒத்தல்.]*

வடிவத்திலும் வண்ணத்திலும் கல்போன் றிருப்பதை (முற்பகுதி) கல்லும், தன்மையில் உறுதியின்மை இருப்பதை (பிற்பகுதி) புரையும் குறித்து வந்துள்ளமை ஓர்ந்து நோக்குக.

**கற்புழை** *kaṟ-puḻai,* பெ.(n.) 1. மலைக்குகை. (திவா.); cavern, cave. 2. கோட்டையின் கள்ளவழி (மறைவு வழி.); secret way of a fort. 3. கல்வளை; hole, hollow as in a stone.

*[கல் + புழை – கற்புழை. கல் = மலை. புழை = குகை.]*

**கற்புறை** *kaṟpuaṟi,* பெ.(n.) 1. கல்மாடம்; stone house. 2. கருவறையின் உட்பக்கம்; the inner part of sanctum sanctorium.

*[கல் + புறை. உறை → புறை (இருப்பிடம்).]*

**கற்பூ**[1] *kaṟ-pū,* பெ.(n.) பரவமகளிர் (மீனவப்பெண்கள்) அணியும் காதணிவகை; an upper ear ornament of Parava women.

ம. கொப்பு

*[கல் + பூ – கற்பூ. கற்பதித்துப் பூவடிவில் செய்யப்பட்ட நகை.]*

**கற்பூ**[2] *kaṟ-pū-,* பெ.(n.) 1. ***கல்லாரை*** பார்க்க; (மலை.); see *kallārai.* 2. கற்றாமரை (மலை.) mountain plant.

க. கல்லு கூவு

*[கல் + பூ – கற்பூ. கல் = வன்மை. பூ = பூத்தல், தோன்றுதல்.]*

**கற்பூ**[3] *kaṟ-pū,* பெ.(n.) நாகக்கனிமம், ஈயம்; lead.

*[கல் + பூ – கற்பூ. கல்லிடைப்பூத்தது அல்லது தோன்றியது என்னும் பொருளுடையதாகலாம்.]*

**கற்பூசரம்** *kaṟ-pūšaram,* பெ.(n.) நாகமலை; mountain containing lead ore (சா.அக.).

*[கற்பூ + அசலம் – கற்பூசரம். அசலம் = மலை.]*

**கற்பூசே** *kaṟpūšē,* பெ.(n.) கழுதை மான்புள்ளி என்னும் செய்நஞ்சைக் கட்டும் ஒரு மூலி; an unknown drug capable of binding or fixing arsenical poisons (சா.அக.).

*[கல் + (பூசி) பூசே.]*

**கற்பூடு** *kaṟpūḍu,* பெ.(n.) பவளம்; stone plant; coral (சா.அக.).

*[கல் + பூடு. கல் போன்று உறுதியான செடியின் தோற்ற முடையது.]*

**கற்பூண்டிநாடு** *kaṟpūṇḍināḍu,* பெ.(n.) திருக் கோவலூர் அருகில் உள்ள சேதிநாட்டின் ஒரு பகுதி; a part of Sethinadu near Thirukkovalur. *"சேதிப்பற்றான இவ்வேரியும் இக்கழனியும் இது தூம்பும் கண்டான் கற்பூண்டி நாட்டுக் கருத் தூருடைய" (ஆவணம். பக். 156.).*

*[கல் + பூண்டி + நாடு – கற்பூண்டிநாடு. கல் = மலை. பூண்டி = ஏரி.]*

**கற்பூணி** *kaṟpūṇi,* பெ.(n.) கல்லிற்குள் பதிந்து நிற்கும் பூ; any fossil or organic remains of animals or vegetables, imbedded in rocks (சா.அக.).

*[கல் + பூ + (உளி). உணி. (கல்லில் பூத்தது, கல்லில் படிந்த படிவு).]*

**கற்பூரக்கண்ணி** *karpūra-k-kanni,* பெ.(n.) பொன் னாங்கண்ணி; an edible plant (சா.அக.).

*[ கற்பூரம் + கண்ணி. கற்பூரம் = வெண்மை.]*

**கற்பூரக்கிச்சிலி** *karpūra-k-kiccili,* பெ.(n.) நறுமணக் கிச்சிலி (அக.) நறுமண ஆரஞ்சு வகை; a variety of sweet scented orange (சா.அக.).

*[ கற்பூரம் + கிச்சிலி.]*

**கற்பூரக்கிளுவை** *karpūrakiluvai,* பெ.(n.) மலைக் கிளுவை; mountain jujube (சா.அக.).

*[ கற்பூரம் + கிளுவை.]*

**கற்பூரக்கொடி** *karpūra-k-kodi,* பெ.(n.) வெற்றிலை வகை (G.Sm.D.215.); a kind of betel.

*[கற்பூரம் + கொடி. கற்பூரம் = வெண்மை.]*

**கற்பூரச்செடி** *karpūra-c-cedi,* பெ.(n.) கற்பூர நறுமணமுள்ள செடி; eucalyptus plant (சா.அக.).

*[ கற்பூரம் + செடி.]*

**கற்பூரணி** *karpūrani,* பெ.(n.) கற்றாழை; aloe (சா.அக.).

*[ கற்பூரம் – கற்பூரணி. கற்பூரம் = வெண்மை.]*

**கற்பூரத்தட்டு** *karpūra-t-tattu,* பெ.(n.) 1. கோயிலில் பயன்படும் விளக்கு வகை; a kind of temple-lamp. *"கற்பூரத் தட்டிற் கனல் வாய்ப்ப" (தமிழ்விடு. 238.).*

*[கற்பூரம் + தட்டு.]*

**கற்பூரத்திரி** *karpūrattiri,* பெ.(n.) கற்பூரத்திலான திரி; wick of camphor. தக்ஷிணமேரு விடங்கற்குத் தூபத்தொடு காட்டுந்தீபத்துக்குக் கற்பூரத்திரியிட்டு (S.I.I. Vol.2 insc.26.).

*[கற்பூரம் + திரி.]*

**கற்பூரப்பாண்டியன்** *karpūra-p-pāndiyan,* பெ.(n.) குங்குமப் பாண்டியனுக்குப் பின் முடிசூடிய பாண்டியன்; Pandiya king who was crowned after Kunguma Pandiyan.

*[கற்பூரம் + பாண்டியன்.]*

**கற்பூரம்**[1] *karpūram,* பெ.(n.) ***கருப்பூரம்*** பார்க்க (கலைசைச். 41.); see *karuppūram.*

*[கருப்பூரம் + கற்பூரம்.]*

**கற்பூரமணிக்காடி** *karpūramani-k-kādi,* பெ.(n.) பொன்னம்பரை வாலையிலிட்டு வடிப்பதனாற் கிடைக்கும் அமிலம்; Succinic acid obtained from amber by distillation (சா.அக.).

*[ கற்பூரமணி + காடி.]*

**கற்பூரவல்லி** *karpūravalli,* பெ.(n.) 1. ஒருவகை வாழை; a kind of plantain. 2. ஒருவகைப் பூண்டு; a kind of creeper.

**மறுவ.** கற்பூரவள்ளி

*[கற்பூரம் + வல்லி.]*

**கற்பூரவள்ளி** *karpūravalli,* பெ.(n.) ***கற்பூரவல்லி*** பார்க்க; see *karpūravalli.*

*[கற்பூரம் + வள்ளி.]*

**கற்பூரவழுதலை** *karpūravaludalai,* பெ.(n.) கருப்பூர நறுமணமுள்ள கத்தரிக்காய்; a species of brinjal.

*[கற்பூரம் + வழுதலை.]*

**கற்பூரவாழை** *karpūravālai,* பெ.(n.) நறுமணமுள்ள வாழை வகை; a kind of plantain which has aroma of camphor.

*[கற்பூரம் + வாழை.]*

**கற்பூரவிலை**[1] *karpūravilai,* பெ.(n.) வெற்றிலைக் கொடிக்கால்; land of betel leaves. *"நீர்நிலமும் புன்செயும், நத்தமும், தோட்டமும், காராண்மை, மீயாட்சி, வெட்டிப் பாட்டம், கற்பூரவிலை, காரியவாராட்சி மற்றும் எப்பேர்பட்டனவும்" (தொ.இ.கல்.தொ.26 கல் 18).*

*[கற்பூரம் + விளை →விலை.]*

கற்பூரவிலை என்பது நிலத்தின் விலையும், அதை வைத்துக் கொடுக்கும் வட்டித் தொகை எனவும் சிலரால் கருதப்படுகிறது

**கற்பூரவிலை**[2] *karpūra-vilai,* பெ.(n.) 1. மிகக் குறைந்த விலை. (இ.வ.); very low price, as of articles sold to temples. 2. விலை அறுதியிடும் அலுவலருக் காகச் செலுத்தும் வரி; tax paid to the price control authority. இந்நிலத்துக்கு காரிய வாராட்சியும் ஸபா விநியோக கற்பூரவிலை காரிய வாராட்சியும் மற்றும் எப்பேர்ப்பட்ட வரிகளும் தவிர்த்தோம் (S.I.I. vol.5. in. 738.).

*[கற்பூரம் + விலை.]*

**கற்பூரவிளக்கு** *karpūra-viḷakku,* பெ.(n.) விளக்காகப் பயன்படுத்தும் கிண்ணிக் கருப்பூரம்; camphor cast in moulds and used like lamps (சா.அக.). *"இக்கற்பூர விளக்கும் நொந்தா விளக்கும்."*

*[கற்பூரம் + விளக்கு.]*

**கற்பூரவுப்பு** *karpūravuppu,* பெ.(n.) சாறு வராத் தழைகளில் சாறு வரச் செய்யும் பூரம் சேர்ந்த ஒரு வகை வேதையுப்பு; an alchemical salt prepared with Chloride of Mercury as chief ingredient (சா.அக.).

*[கற்பூரம் + உப்பு.]*

**கற்பெலாச்சி** *kaṟ-pelācci,* பெ.(n.) சாம்பல் கலந்த பழுப்பு நிறமுடையதும் 5 விரலம் நீளமுடையதுமான கடல் மீன்வகை; a sea-fish, greyfish-brown attaining 5 inches in length.

*[கல் + பிலாச்சி – கற்பிலாச்சி → கற்பெலாச்சி (கொ.வ.).]*

**கற்பேதி** *kaṟpēti,* பெ.(n.) சிறுபீளைச் செடி; woolly caper (சா.அக.).

*[கள் = முள்; கள் + பேதி*

**skt.** bheta > *பேதம்→பேதி.]*

**கற்பை** *kaṟ-pai,* பெ.(n.) நிறைகல், துலாக்கோல், உரைகல் முதலியவற்றை வைப்பதற்காக வணிகர் அல்லது பொன் வணிகர் பயன்படுத்தும் பை; bag of weights, scales and touch stone, used by a jeweller or merchant.

*[கல் + பை – கற்பை. கல் = எடைகல்.]*

**கற்பொடி** *kaṟ-poḍi,* பெ.(n.) 1. கல்லின் துகள்கள்; debris. *"காயிலுலகனைத்துங் கற்பொடிகாண்" (திருவாச. 12,3.).* 2. சுண்ணாம்புக்கல் முதலியவற்றின் பொடி (பரிபா. 12, 19.); powder as of chalk. 3. கல் உடைக்கும் போது உண்டாகும் துகள்; stone-dust.

**ம.** கல்பொடி

*[கல் + பொடி – கற்பொடி.]*

**கற்பொடி**[2] *kaṟ-poḍi,* பெ.(n.) ***அன்னவேதி*** பார்க்க; see *aṉṉvēdi,* இரும்புக்கனிமம்; sulphate of iron, iron ore.

*[கல் + பொடி.]*

**கற்பொழுக்கம்** *kaṟpoḻukkam,* பெ.(n.) கற்புநெறி (தஞ்சவா. உரை, அவ. பக்.4.); chastity. *"பெண்ணின் பெருந்தக்க யாவுள கற்பென்னும் திண்மை உண் டாகப் பெறின்" (குறள் 54.).*

*[கற்பு + ஒழுக்கம்.]*

**கற்பொளி–தல்** *kaṟ-poḷi-,* 2 செ.கு.வி. (v.i.) உளியாற் கல்லைச் செப்பனிடுதல் (C.E.M.); to dress stones, as with a chisel.

**க.** கல்லுமுள்ளு

*[கல் + பொளி. புள் (பிள்) → பொள் → பொளி. பொளிதல் = உடைதல்.]*

**கற்பொறி** *kaṟ-poṟi,* பெ.(n.) 1. பற்றிரும்பு (பிங்.); clamp iron, iron brace, iron pincers. 2. கோட்டைமதிலில் வைக்கப்படும் கல்வடிவுள்ள இடங்கணி முதலிய பொறி (சீவக. 102.); machine mounted on a fort.

*[கல் + பொறி – கற்பொறி.]*

**கற்பொறுக்கி** *kaṟ-poṟukki,* பெ.(n.) புறாவகை (சங்.அக.); a species of pigeon.

*[கல் + பொறுக்கி – கற்பொறுக்கி.]*

**கற்போடு–தல்** *kaṟ-pōḍu-,* 20 செ.கு.வி.(v.i.) செயலைக் கெடுத்தல்; lit., to throw stones; to spoil, as a business, to cause ruin.

*[கல் + போடு–.]*

**கற்போன்** *kaṟpōṉ,* பெ.(n.) மாணாக்கன் (சூடா.); scholar, pupil.

*[கல் + ப் + (ஆன்) ஒன்.]*

**கற்றச்சன்** *kaṟṟaccaṉ,* பெ.(n.) 1. கல்வேலை செய்யும் தச்சன்; stone-mason, sculptor. 2. கல்லுடைப்பவன்; a stone-cutter; a hewer of stone.

**ம.** கற்றச்சன், கல்பணிக்கன்.

*[கல் + தச்சன் – கற்றச்சன்.]*

**கற்றசை** *kaṟṟašai,* பெ.(n.) 1 கடிதான தசை; muscles as hard as stone. 2. வாடாத தசை; irreducible flesh (சா.அக.).

*[கல் + தசை.]*

**கற்றசைவுடம்பு** *kaṟṟašaivuḍambu,* பெ.(n.) இளைக்காத உடல்; irreducible constitution (சா.அக.).

*[கல் + தசை + உடம்பு.]*

**கற்றடம்** *kaṟṟaḍam,* பெ.(n.) கல் அடர்ந்த காடு; rocky ground, stony region. *"கற்றடங் கண்டு நான் வருவன்" (கம்பரா. நகர்நீ. 221.).*

*[கல் + தடம் – கற்றடம்.]*

**கற்றடி விரியன்** *karradi-viriyan,* பெ.(n.) விரியன் பாம்பு வகை; a species of viper-snake (யாழ்.அக.).

*[கல் + தடி + விரியன் – கற்றடி விரியன்.]*

**கற்றது** *karradu,* பெ.(n.) கல்வி, கேள்வியாலும் பட்டறி வாலும் ஒருவன் பெற்ற அறிவு; knowledge attained by education and hearsay. *'கற்றது கையளவு கல்லாதது உலகளவு'; 'கற்றதைக் காப்ச்சியா குடிக்கப் போகிறாய்' (பழ.).*

*[கல் → கற்று → கற்றது. இஃது ஒன்றன் பால் வினைமுற்று போலத் தோன்றினும், வழக்கில் செய்ததுபோலத் தொழிற்படக் கிளந்த செயப்படுபொருளாகிக் கற்ற கல்வியைக் குறித்தது.]*

**கற்றரை** *karrari,* பெ.(n.) கல் பாவிய தரை; a stone-laid floor, an elevated ground covered by stones (சேர.நா.).

**ம.** கல்த்தற; **க.** கலுநெல.

*[கல் + தரை.]*

**கற்றலம்** *karralam,* பெ.(n.) கல்பாவிய மேடை; stone platform, as in a grove or village. புரையோர் தாமும்... கற்றலத் திருந்துழி (மணிமே. 28, 113.).

*[கல் + தலம்.]*

**கற்றலை** *karralai,* பெ.(n.) ஒருவகைக் கடல் மீன்; a species of sea-fish.

*[கல் + தலை.]*

**கற்றலை வகை** : 1. கூர்க்கற்றலை, 2. கருங் கற்றலை, 3. வரிக்கற்றலை, 4. பெருவாய்க் கற்றலை, 5. வெள்ளைக் கற்றலை, 6. தூறடிக் கற்றலை, 7. ஆனைவாய்க் கற்றலை (சா.அக.).

**கற்றலைக்கெண்டை** *karralai-k-kendai,* பெ.(n.) வெண்மை நிறமுடையதும் ஓரடிநீளம் வளர்வதுமாகிய ஆற்றுமீன்வகை; a river-fish, silvery, attaining 1 ft. in length.

*[கல் + தலை + கெண்டை – கற்றலைக்கெண்டை.]*

**கற்றவன்** *karravan,* பெ.(n.) கற்றறிந்தவன்; a man of erudition, scholar. 2. முனிவன்; learned sage. *"கற்றவர் விழுங்குங் கற்பகக் கனியை" (திருவிசை. சேந்தனார். திருவீழி.2.).*

**ம.** கற்றவன்; கற்றோன்; **பட.** கத்தம; **க.** கலிதவனு, கலித

*[கல் → கற்ற + அவன் – கற்றவன் (வினையா.பெ.).]*

**கற்றளம்**[1] *karralam,* பெ.(n.) கல்பாவிய மேடை; stone pavement.

**ம.** கல்தலம், கத்தளம்.

*[கல் + தலம் (தளம்) → தளம்.]*

**கற்றளம்**[2] *karralam,* பெ.(n.) 1. கற்கள் பதித்த தரை; pavement. 2. கல் பாவப்பட்டுள்ள அறை; a hall paved with stone, a stone-pavement.

**ம.** கற்றலம், கல்த்தளம்.

*[கல் + தளம் – கற்றளம்.]*

**கற்றளி** *karrali,* பெ.(n.) கற்கோயில்; temple built of stone. *"நாம் எடுப்பிச்ச திருக்கற்றளி" (S.I.I. ii. 2.).*

**ம.** கற்றளி

*[கல் + தளி – கற்றளி. தளி = கோயில்.]*

**கற்றளிப்பட்டாலகன்** *karrali-pattālagan,* பெ.(n.) தஞ்சைவட்ட திருப்பழனம் கோயிலுக்கு அணையா விளக்கு எரித்திட நிலம் வழங்கிய வீரன்; a soldier, who donated land for a perpetual lamp in the temple at Thiruppazhanam in Thanjavur dt. *"உடையார் அருள்மொழித் தேவச் தெரிஞ்ச கைக்கோளரில் கற்றளி பட்டாலகன் விலை கொண்டு மயக்கின நிலத்துக்கு" (தெ.இ.கல். தொ. 19 கல் 29).*

*[கல் + தளி + பட்டாலகன்.]*

**கற்றளிப்பிச்சன்** *karrali-p-piccan,* பெ.(n.) மயிலாடு துறை வட்டம் திருவாவடுதுறைக் கோயில் பூசைப் பணிகளுக்காக நிலம் நன்கொடை வழங்கியவர்; one who donated land for pooja affairs for the temple at Thiruvadudurai in Mayiladudurai taluk. *"திருவாடுதுறைக் கற்றளிப் பிச்சனேன்" (தெ.இ.கல். தொ. 19 கல் 69).*

*[கல் + தளி + பிச்சன்.]*

**கற்றளிப்பிராட்டியார் வேளம்** *karralai-p-pirātti yār,* பெ.(n.) தஞ்சாவூரில் கற்றளிப் பிராட்டியார் பெயரில் அமைந்த பணியாளர் குடியிருப்பு; servants quarters in the name of karralippirāthiyār at Thanjavur. *"இவ்வூர்க் குற்றத்துத் தஞ்சாவூர்க் குற்றத்துத் தஞ்சாவூர் கற்றளிப் பிராட்டியார் வேளத்துப் பெண்டாட்டி மாதே(ங்) கண்டி" (தெ.இ. கல்.தொ.19 கல் 131).*

*[கல் + தளி + பிராட்டி ஆரி + வேளம் – கற்றளிப்பிராட்டியார் வேளம். பெருமாட்டி = பிராட்டி.]*

**கற்றளிப்புரம்** *karrali-p-puram,* பெ.(n.) கோயிற்கு விட்ட இறையிலிநிலம் (M.E.R. 45 of 1928-29.); endowment made to a temple.

*[கல் + தளி – கற்றளி + புரம். புறம் = புரம்.]*

**கற்றளை** *karralai,* பெ.(n.) கடல்மீன்வகை (பதார்த்த. 935.); a genus of sea-fish.

**ம.** கற்றல

*[கல் + தலை – கற்றலை → கற்றளை.]*

**கற்றறிமூடன்** *karrari-mūdan,* பெ.(n.) படித்த முட்டாள்; learned fool.

*[கற்று + அறி + மூடன்.]*

**கற்றறிமோழை** *karrari-mōlai,* பெ.(n.) ***கற்றறி மூடன்*** பார்க்க; see *karrari-mūdan. "ஆயிரம் வேதங் கற்றும் நீயே கற்றறிமோழை" (இராமநா. உயுத். 82.).*

*[கற்று + அறி + மோழை.]*

**கற்றறிவு** *karrarivu,* பெ.(n.) கற்றதனாலாகிய அறிவு; knowledge acquired by learning.

*[கற்ற + அறிவு – கற்றறிவு.]*

**கற்றா** *karrā,* பெ.(n.) கன்றையுடைய ஆன்; cow with a young calf. *"கற்றாவின் மனம் போலக் கசிந்துருக வேண்டுவனே" (திருவாச. 39, 3.).*

**ம.** கற்றாவு

**aust;** karru. **nicho;** kapabo.

*[கன்று + ஆ – கன்றா → கற்றா.]*

*The Tamil adjectival form which is always the oldest, rejects the nasal and goes back to the original r which doubles by rule. Thus Kanru becomes adjectively karru-e.g. karr-a, a cow which has a calf. C.G.D.F.L.p. 325.*

**கற்றாமரை** *karrāmarai,* பெ.(n.) 1. மலைகளிலும் பாறைகளின் சந்துகளிலும் முளைக்கும் நீருதவி யில்லாத, பெரு மூலிகைகளில் ஒன்றான கல்தாமரை; dry lotus generally found grown inthe crevices or rocks and mountains. 2. ஒருவகைத் தாழை; a variety of screwpine (சா.அக.).

*[கல் + தாமரை – கற்றாமரை.]*

**கற்றார்** *karrār,* பெ.(n.) கல்வி அறிவு நிரம்பியவர்கள்; learned men. *"கற்றாருட் கற்றா ரெனப்படுவர் கற்றார்முன் கற்ற செலச் சொல்லுவார்" (குறள். 722.).*

**ம.** கற்றோன்; **க.** கலிதவனு; **பட.** கத்தம.

*[கல் கற்று + ஆர் – கற்றார்.]*

**கற்றாழஞ்சோறு** *karralañ-cōru,* பெ.(n.) கற்றாழையின் உள்ளீடான கூழ்ப் பகுதி (யாழ்ப்.); pith of the aloe.

*[கல் + தாழை + அம் + சோறு – கற்றாழையம்சோறு → கற்றாழஞ்சோறு.]*

**கற்றாழை** *karrālai,* பெ.(n.) 1. வெளிர்ப்பச்சை நிற மடல்களின் நுனியில் கருஞ்சிவப்பு நிற முள்ளோடு கூடிய ஒரு பூடு (பதார்த்த. 370, தலைப்பு); aloe. 2. சிவப்புக்கற்றாழை; curacoa aloes, 3. கற்றாழை வகை; Barbadoes aloe.

**ம.** கற்றவாழ; **க.** கத்தாளெ, கத்தாளெ; **தெ.** கலபந்த; **பட.** கத்தாளெ.

*[கல் + தாழை – கற்றாழை.]*

**கற்றாழை வகை :** 1. கருங்கற்றாழை, 2. நார்க்கற்றாழை, 3. இலைக் கற்றாழை, 4. சோற்றுக் கற்றாழை அல்லது காட்டுக் கற்றாழை, 5. செங் கற்றாழை, 6. எருமைக் கற்றாழை, 7. மலைக் கற்றாழை, 8. ஆனைக் கற்றாழை, 9. வெண் கற்றாழை, 10. பேய்க் கற்றாழை, 11. மருள் கற்றாழை, 12. வரிக் கற்றாழை, 13. துருக்கக் கற்றாழை, 14. சிறு கற்றாழை, 15. சீமைக் கற்றாழை, 16. சிவப்பு வரிக் கற்றாழை, 17. நாகபடக் கற்றாழை (சா.அக.).

**கற்றாழைச்சாறு** *karralai-c-cāru,* பெ.(n.) கற்றாழை யின் சாறு; juice extracted from aloe.

*[கற்றாழை + சாறு.]*

**கற்றாழைநாற்றம்** *karralai-narram,* பெ.(n.) 1. கற்றாழைச் சோற்றின் மணம்; the smell of pith of the aloe. 2. வியர்வையினால் உடலில் உண்டாகும் ஒருவகை நாற்றம்; a kind of strong smell of perspiration on a body (சா.அக.).

*[கற்றாழை + நாற்றம்.]*

**கற்றானை** *karranai,* பெ.(n.) காவித்துணி; garment dyed in ochre, as worn by ascetics. *"கற்றானை முக்கோ லந்தணீர்" (மறைசை. 84.).*

*[கல் + தானை – கற்றானை. கல் = காவிக்கல். காவிக்கல்லின் நிறம்.]*

**கற்றிருத்து–தல்** *kaṟṟiruttu-,* 5. செ.குன்றாவி.(v.t.) கல்லை உளியாற் செப்பமாக்குதல்; (C.E.M.); to shape stones, as with a chisel.

*[கல் + திருத்து.]*

**கற்றிருப்பணி** *kaṟṟirupaṇi,* பெ.(n.) கற்களாற் செய்யும் கோயில் கட்டுமானக்கலை; sacred task of erecting or repairing stone temples.

*[கல் + திருப்பணி.]*

**கற்றீட்டு** *kaṟṟīṭṭu,* பெ.(n.) கன்மதம் (யாழ்.அக.); rock alum.

*[கல் + தீட்டு – கற்றீட்டு.]*

**கற்றுக்குட்டி** *kaṟṟu-k-kuṭṭi,* பெ.(n.) 1. இள மாணாக்கன், கற்கும் மாணவன் (வின்.); very young student. 2. கல்வியில் நன்கு தேறாதவன்; superficial scholar, one who has a smattering of knowl edge. 3. ஏதாவது ஒரு துறையில் அல்லது தொழிலில் தெளிவற்ற நிலையிலிருப்பவன்; one who has not attained perfection in a field or profession. அவனோர் கற்றுக்குட்டி (உ.வ.).

*[கற்று + குட்டி.]*

**கற்றுக்கொடு–த்தல்** *kaṟṟu-k-koḍu-,* 4 செ. குன்றாவி (v.t.) பயிற்றுவித்தல்; to instruct. தில்லையில் பிறந்தவனுக்குத் திருவெம்பாவை கற்றுக் கொடுக்க வேண்டுமா (உ.வ.).

*[கற்று + கொடு–.]*

**கற்றுக்கொள்(ளு)–தல்** *kaṟṟu-k-koḷḷu-,* 10 செ. குன்றாவி (v.t.) பயிலுதல்; to learn. *"கற்றுக் கொள்வன வாயுள நாவுள" (தேவா. 1205, 6.).*

*[கற்று + கொள். செய்தென் வாய்பாட்டு எச்சம் துணைவினையொடு புணர்ந்து கூட்டுவினை யாயிற்று.]*

**கற்றுச்செற்றை** *kaṟṟu-cceṟṟai,* பெ.(n.) கிபி. 1462 இல் தென்காசிக் கோயிலுக்கு கொடையாக வழங்கப்பட்ட ஊர்களில் ஒன்று; One of the place donated to Tenkasi Temple found in an agreement drawn on 6-5-1462AD. "நல்லூரப்பற்றில் தஞ்சாவூர், காடேற்றிவள்ளை, முட்டம், பன்றி முட்டம், தண்ணம்பை, கற்றுச் செற்றை உள்ளிட்ட பற்றும்" (தெ.இ.கல்.தொ.26. கல்.561).

*[கல் + கற்று(செறு) + செற்றை – கற்றுச் செற்றை (மண்ணைத்தோண்டி அச்சு சுட்டி வயலாக்கிய நிலம்) கல் = குத்துதல், தோண்டுதல். செறு = வயல்.]*

**கற்றுச்சொல்லி** *kaṟṟu-c-colli,* பெ.(n.) ***கற்றுச் சொல்வோன்*** பார்க்க; see *kaṟṟu-c-colvōṉ.*

*[கற்று + சொல்லி.]*

**கற்றுச்சொல்வோன்** *kaṟṟu-c-colvōṉ,* பெ.(n.) புலவனொருவனிடங்கற்று அவனுக்குத் துணைப்புல வனாயிருப்பவன்; junior poet who always accompanies his teacher and speaks out for him. *"கற்றுச்சொல்வோர் பின்வர ... வந்தனன் புலவனாகி" (திருவாலவா. 16, 19.).*

**மறுவ.** கற்றுச்சொல்லி

*[கற்று + சொல்வோன்.]*

**கற்றுப்புல்** *kaṟṟu-p-pul,* பெ.(n.) புல்வெளி; meadow. உடும்போடு ஆமை தவழ்புற்று எழுந்த இடம் கற்றுப் புல் பேரகர முற்றூட்டும் இறுப்பதாக (S.I.I. Vol.3:1. p. 89.).

*[கன்று → கற்று + புல் – கற்றுப்புல் = கன்றுகள் தின்னத்தக்க மென்புல்வகை.]*

**கற்றுரிஞ்சில்** *kaṟṟuriñjil,* பெ.(n.) சாயமிறக்க உதவும் கல்லுத் துரிஞ்சில் என்னும் ஒரு வகை மரம்; a kind of tree used for dyeing; stipulated acacia.

*[கல் + துரிஞ்சில்.]*

**கற்றுருவல்** *kaṟṟuruval,* பெ.(n.) சிறுநீரகப் பையிலிருக்கும் கல்லைக் கரைத்தல்; the process adopted to crush and dissolve the stone in the urinal bladder with an instrument.

*[கல் + துருவல்.]*

**கற்றுளசி** *kaṟṟuḷaśi,* பெ.(n.) மலைத்துளசி (பதார்த்த. 307.); mountain basil.

*[கல் + துளசி – கற்றுளசி.]*

**கற்றூண்** *kaṟṟūṇ,* பெ.(n.) கற்பாறையைப் பிளந்து செதுக்கி உருவாக்கிய தூண்; a stone-pillar.

**ம.** கல்த்தூண்; **து.** கல்லதகம்ப; **பட.** கல்ல கம்பு.

*[கல் + தூண்.]*

**கற்றேக்கு** *kaṟṟēkku,* பெ.(n.) 1. கல்தேக்கு என்னும் ஒருவகை மரம்; racemed fish-bone tree. 2. கும்பிமரம். (L.); Carey's myrtle bloom.

*[கல் + தேக்கு – கற்றேக்கு.]*

# கற்றாழை வகைகள்



வெண் கற்றாழை



பேய்க்கற்றாழை



நாற்றுக்கற்றாழை



மருள் கற்றாழை



ஆனைக்கற்றாழை



சோற்றுக்கற்றாழை

**ற்றை** *karrai,* பெ.(n.) 1. திரள்; collection, as of hair, rays of the sun. *"சடைக்கற்றை" (திருக்கோ. 134.).* 2. கட்டு; bundle, as of straw, grass, paddy seedlings. 3. தென்னோலைக் கற்றை (வின்.); coconut leaves braided like ropes, as bands for hedging.

**ம.** கற்ற; **க.** கந்தெ; **தெ.** கட்ட; **து.** கந்தெ.

*[குல் → கல் → கற்றை. 'குல்' திரட்சிக்கருத்துவேர்.]*

**கற்றைபிடி–த்தல்** *karrai-pidi-,* 4 செ.கு.வி.(v.i.) 1. தென்னோலை பின்னுதல்; to braid coconut bands. 2. கூரைநிரைச்சல் வேய்தல்; to fasten a hedge with karrai, the thatch on a house. 3. நாற்றங்காலில் நெல்போன்றவற்றின் நாற்றினை முடிமுடியாகக் கட்டுதல்; to bundle the seedlings in nursery.

*[கற்றை + பிடி–.]*

**கற்றைபோடு–தல்** *karrai-pōdu-,* 20 செ.கு.வி.(v.i.) 1. கூரை வேய்தல் (வின்.); to thatch. 2. நடவு நடும் கழனியில் நாற்றுக் கட்டுகளைப் போடுதல்; to place the bundles of seedlings in a wetland.

*[கற்றை + போடு–.]*

**கற்றைவைத்துக்கட்டு–தல்** *karrai-vaittu-k-kattu-*,5 செ.கு.வி.(v.i.) 1. நிரைச்சல் கட்டுதல்; to tie a hedge with karrai. 2. மண்திரள் வைத்துக் கட்டுதல்; to build with handfuls of mud.

*[கற்றை + வைத்து + கட்டு–.]*

**கற்றொட்டி** *karrotti,* பெ.(n.) கருங்கல்லாற் செய்யப் பட்ட நீர்த்தொட்டி; a stone-trough.

**ம.** கல்தொட்டி; **க.** கல்தொட்டி, கல்லுதொட்டி.

*[கல் + தொட்டி.]*

**கற்றொழிலோர்** *karrolilōr,* பெ.(n.) கல்தச்சர்கள். (பிங்.); stone-masons, architects.

**மறுவ.** கல்வினையாளர், கல்வினைஞர், கற்கம்மியர்.

*[கல் + தொழிலோர்.]*

**கற்றோர்நவிற்சியணி** *karror-navirci-y-ani,* பெ.(n.) குணமிகுதிக்குக் காரணமாகாததைக் காரண மாக்கிச் செல்லும் அணி (அணியி. 63.); figure of speech in which enhancement of merit is attri buted to a seeming cause.

*[கற்றோர் + நவிற்சி + அணி.]*

**கற்றோன்** *karrōn,* பெ.(n.) ***கற்றவன்*** பார்க்க; see *karravan.*

**ம.** கற்றவன்; **க.** கலிதவனு.

*[கல் → கற்றான் → கற்றோன்.]*

**கற–த்தல்** *kara-,* 3 செ.குன்றாவி.(v.t.) 1. பால் கறத்தல்; to milk. *"ஆவின்பாலைக் கறந்து கொண்டாட்டக்கண்டு" (தேவா. 192, 3.). 'கறந்த பாலும் எச்சில், பிறந்த பிள்ளையும் எச்சில்' (பழ.).* 2. பால் கொடுத்தல்; to yield milk, as a cow. இந்த மாடு எத்தனைபடி கறக்கும்? (உ.வ.). 3. கவர்தல்; to misappropriate, as another's property; to extort. எதிரி சொத்துகளையெல்லாம் கறந்து கொண்டான். (இ.வ.). *கறக்கக் கறக்க ஊறும் பசுவின் பால் படிக்கப் படிக்க ஊறும் மெய்யறிவு (பழ.). 'முந்நாழி கறக்கிற பசுவானாலும் முன் இறப்பைப் பிடுங்குகிற பசு ஆகாது' (பழ.).*

**ம.** கறக்குக. **க.** கறெ, கரக; **பட.** கறெ; கோத. கா்வ்; **துட.** கற்; **உரா.** கற.

*[கல் → கறு → கற. கல் = தோண்டுதல், வெளிவரச்செய்தல் கல் (த.வி.) → கறு (பி.வி.).]*

**கறக்கு–தல்** *karakku-,* 5.செ.கு.வி.(v.i.)1. நூல் முறுக்கேற்றுதல்;to spin,as yarn. நூல் கறக்கினான் (இ.வ.). 2. நிமிண்டுதல்; to pinch, jerk so as to cause severe pain. அவன் துடையைக் கறக்கினான் (இ.வ.).

*[கற → கறக்கு.]*

**கறகற[1]–த்தல்** *kara-kara-,* 4.செ.கு.வி.(v.i.) 1. ஒலித்தல்; to utter a rattling sound. 2. கடித்தற்கு நறுமுறுவென்றிருத்தல்; to crackle in the mouth, as a crisp cake. 3. தொண்டையுறுத்தல்; to irritate the throat, as phlegm.

**ம.** கறகற

*[கற + கற – கறகற. ஒலிக்குறிப்பு அடிப்படையில் பிறந்த வினைச்சொல்]*

**கறகற[2]** *kara-kara,* 1. இடை. (Part.); ஓர் ஒலிக் குறிப்பு; onom. expr. signifying rattling sound. *"ஒருவன் கோல்பற்றிக் கறகறவிழுக்கை" (தேவா. 1111, 5.).*

**தெ.** கரகர

*[கற + கற – கறகற. இரட்டைக்கிளவி.]*

**கறகறப்பு** *kaṟa-kaṟappu,* பெ.(n.) 1. கறகறவென்று ஒலிக்கை; reiterative sound, rattling. 2. கடித்தற்கு நறுமுறுவென்றிருக்கை; crispness. தேங்குழல் கறகறப்பாயிருக்கிறது (உ.வ.). 3. தொண்டையறுப்பு; rattling in the throat. 4. மனவருத்தம்; misunderstanding. அவர்களுக்குக் கொஞ்சம் கறகறப்புண்டு (உ.வ.). 5. அல்லற் படுத்தல், அல்லாட்டம், தொல்லை செய்கை; importuning, teasing.

**ம.** கறகறப்பு

*[கறகற – கறகறப்பு.]*

**கறகறெனல்** *kaṟa-kaṟēṉal,* பெ.(n.) 1. ஒலிக்குறிப்பு; onom. exp. of sound. 2. விரைவுக்குறிப்பு; onom. exp. of speed.

*[கற + கற + எனல்.]*

**கறங்கல்** *kaṟaṅgal,* பெ.(n.) 1. ஒலிக்கை (பிங்.); sounding. 2. சுழற்சி (பிங்.); whirling. 3. பேய் (அக.நி.); devil, vampire. 4. வளைந்த தடி (அக.நி.); curved club, cudgel.

**ம.** கறங்கல்

*[குறங்கு → கறங்கு → கறங்கல் (வே.க. 156.).]*

**கறங்கு[1]–தல்** *kaṟaṅgu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. ஒலித்தல்; to sound. *"முரசங் கறங்க" (புறநா. 36, 12.).* 2. சுழலுதல்; to whirl. *"பம்பரத்து .... கறங்கிய படிய" (கந்தபு. திருநகரப். 28.) (ம. கரங்ஙு.).* 3. சூழ்தல்; to surround, overwhelm, envelop as darkness. *"கறங்கிருண் மாலைக்கும்போ" (வள்ளுவமா. 34.).*

**ம.** கறங்குக; **க.** கறங்கு; கற; **து.** கரு.

*[கற → கறங்கு. (சு.வி. 98.).]*

**கறங்கு[2]–தல்** *karuṅgu-,* 5.செ.கு.வி.(v.i.) கறுப்பு வண்ணமாதல்; to be blackened.

*[கல் → கற → கறங்கு–.]*

**கறங்கு[3]** *kaṟaṅgu,* பெ.(n.) 1. சுழற்சி (திவா.); whirling, gyration. 2. காற்றாடி; kite, wind-whirl. *"கறங்கு போல விற்பிடித்த காலதூதர் கையிலே" (கம்பரா. யுத்த.கா.1258.).* 3. ஒலி, அரவம் (பிங்.); sound.

**O.N.** hringer; **O.H.G., O.S., O.E.,** hring; **E.** ring.

*[கறு → கற → கறங்கு. (மு.தா. 216).]*

**கறங்கோலை** *kaṟaṅgōlai,* பெ.(n.) ஓலைக்காற்றாடி; wind-whirl made of palmyra leaf. *"கறங்கோலை கொள்ளிவட்டம்" (திருமந். 2313.).*

*[கறங்கு + ஓலை.]*

**கறட்டியோணான்** *kaṟaṭṭi-y-ōṇāṉ,* பெ.(n.) ***கரட்டோணான்*** பார்க்க; see *karattōṇāṉ.*

**கறட்டுகறட்டெனல்[1]** *kaṟaṭṭukaṟaṭṭeṉal,* பெ.(n.) புல் முதலியவற்றைச் செதுக்குதல் ஒலிக் குறிப்பு; onom. expr. signifyng shoveling the ground.

*[கறட்டு + கறட்டு + எனல். கறட்டுக் கறட்டென்று புல்லைச் செதுக்குறான், பறட்டுப் பறட்டென்று சொறிகிறான், வறட்டு வறட்டென்று பானையைச் சுறண்டுகிறான் என்பன வழக்கு. (மு.தா. 122).]*

**கறட்டுகறட்டெனல்[2]** *kaṟaṭṭukaṟaṭṭeṉal,* பெ.(n.) சளி முதலியவற்றால் தொண்டையிலேற்படும் ஒலி.

*[கறட்டு + கறட்டு + எனல்.]*

**கறட்டுழந்தான்** *kaṟaṭṭuḻandāṉ,* பெ.(n.) மாட்டுச் சுழிவகை. (சரிபா.மா.ஃ 22.); a curl-mark in cattle.

*[கறடு + உழந்தான் – கறட்டுழந்தான். கறடு = சுழி.]*

**கறடிகை** *kaṟaḍigai,* பெ.(n.) ஓர் அணிகலவுறுப்பு; component part of an ornament, as of a crown, bracelet or anklet. *"முத்தின் சூடகமொன்றில்... கறடிகை ஆறும்" (S.I.I. ii, 211.).*

*[கறள் → கறண்டு → கறண்டிகை → கறடிகை.]*

**கறடு[1]** *kaṟaḍu,* பெ.(n.) ***கரடு*** பார்க்க; see *kaṟaḍu. "தென்பாற்கெல்லை கறுங்கல் கறட்டுக்கு வடக்கும்" (S.i.i. vo.2.2. 51.).*

*[கரடு → கறடு.]*

**கறடு[2]** *kaṟaḍu,* பெ.(n.) 1. தரமில்லா முத்துவகை; crude or inferior pearl. *"ஒப்பு முத்துங் குறுமுத்துங் ... கறடும் நிம்பொளமும்" (S.I.I. ii, 143.).*

**ம.** கறடு; **க.** கரடு (தீட்டப்படாது); **தெ.** கறடி (விடாப்பிடி); **து.** கறடு.

*[கரடு → கறடு.]*

**கறடு[3]** *kaṟaḍu,* பெ.(n.) 1. குட்டையானது; that which is dwarfish. *"கறட்டுப்பேய் தின்று களிக்க" (மான்விடு. 117.)* 2. பொன் (அக.நி.); gold. கற்கறடு வியாபாரி (இ.வ.). 3. சிறுகுன்று; hillock.

*[குறள் → கறள் → கறடு.]*

**கறடுமுறடு** *kaṟḍumuṟaḍu,* பெ.(n.) ***கரடுமுருடு*** பார்க்க; see *karaḍumuruḍu.*

*[கரடுமுருடு → கரடு முரடு → கறடு முறடு.]*

**கறண்டி** *kaṟaṇḍi,* பெ.(n.) குறண்டுங் கருவி; a spoon, ladle.

**ம.** கறண்டி

*[குறண்டி → கறண்டி (மு.தா.132).]*

**கறண்டிகை** *kaṟaṇḍigai,* பெ.(n.) முடியுறுப்புகளுள் ஒன்று; component part of a crown. *"கறண்டிகையிற் கோத்த வடம்" (S.I.I. ii. 90.).*

*[குறள் → கறள் → கறண்டு → கறண்டிகை.]*

**கறண்டிகைச்செப்பு** *kaṟaṇḍaigai-c-ceppu,* பெ.(n.) 1. சுண்ணாம்புக் கரண்டகம் (S.I.I. ii. 5.); a chunam-box.

*[கறண்டிகை + செப்பு.]*

**கறண்டு-தல்** *kaṟaṇḍu-,* 5 செ.கு.வி.(v.i.) வறண்டுதல்; to scratch.

*[குறண்டு → கறண்டு (வே.க. 180).]*

**கறணை** *kaṟaṇai,* பெ.(n.) மாட்டுக்குற்றவகை (மாட்டுவா.); a defect in cattle.

*[கறள் → கறணை.]*

**கறத்தை** *kaṟattai,* பெ.(n.) ஒற்றை மாட்டுவண்டி (யாழ்ப்.); cattle cart.

*[கறங்கு (சுழலுதல்) → கறத்தை.]*

**கறந்தமேனியாய்** *kaṟanda-mēṉi-y-āy,* வி.எ.(adv.) இப்பொழுது கறந்தபால் போல் தூய்மையாய், வேறு கலப்பின்றித் துப்புரவாய்; in a pure unadulterated condition, as fresh milk; in a pure state; guilelessly, innocently.

*[கற → கறந்த (பெ.எ.) + மேனி + ஆய்.]*

**கறப்பற்று** *kaṟa-p-paṟṟu,* பெ.(n.) துருப்பிடித்தல் (யாழ்ப்.); formation of rust.

*[கறள் = துரு. கறள் + பற்று.]*

**கறப்பு** *kaṟappu,* பெ.(n.) கறக்கை; milking.

**ம.** கறப்பு

*[கற → கறப்பு. 'பு' பெயராக்க ஈறு.]*

**கறம்** *kaṟam,* பெ.(n.) 1. கொடுமை; severity, harshness. *"கறம்படு மனத்தின்" (திருவாலவா. 37, 51.).* 2. பழிவாங்கும் சினம்; respite.

**ம.** கறம்; **க.** கறமெ; **த.** கறம் > **Skt.** khara.

*[கறு → கறம்.]*

**கறமண்** *kaṟamaṇ,* பெ.(n.) காய்ந்து வறண்டது (யாழ்.அக.); that which is withered and dried.

*[கறள் + மண் – கறமண்.]*

**கறல்**[1] *kaṟal,* பெ.(n.) விறகு (பிங்.); firewood, fuel.

**தெ.** கர்ர

*[கறள் = வறண்டது. கறள் → கறல்.]*

**கறல்**[2] *kaṟal,* பெ.(n.) தவசத்தை அளக்கும் ஒரு அளவை; a measurement of grain (திருவாங். கல். அக. பக்.39.)

**ம.** கறல்

*[கறு → கறை = உரல். கறு → கறல் = உரல் போன்று குழிவுள்ள அளவை ஏனம்.]*

**கறவாமாடு** *kaṟavā-māḍu,* பெ.(n.) உதைகால் பெற்றம் (பசு) (பிங்.); intractable cow.

**மறுவ.** கறவாத்தேனு

*[கற → கறவா. (ஈ.கெ.எ.பெ.எ.) + மாடு.]*

**கறவு**[1] *kaṟavu,* பெ.(n.) திறை, கப்பம்; tribute. *"கஞ்சன்கடியன் கறவெட்டு நாளி லென்கைவலத் தாதுமில்லை" (திவ். பெரியதி. 10,7,10.).*

**ம.** கறவு

*[குல் → கல் → கற → கறவு.]*

**கறவு**[2] *kaṟavu,* பெ.(n.) கறவைமாடு; milch cow. *"கறவிடைப் பாலின்" (தேவா. 585, 5.).*

**ம.** கறவு

*[கற → கறவை → கறவு.]*

**கறவுமறப்பனி** *kaṟavumaṟappaṉi,* பெ.(n.) சதுரக்கள்ளி; square spurge (சா.அக.).

*[கறவு + மாறா + பெண் + ஆ – கறவுமாறப்பெணா → கறவுமறப்பிணா → கறவுமறப்பனி (கொ.வ). (பால் சொரிதல் நில்லாத சதுரக்கள்ளி.)]*

**கறவை**[1] பெ.(n.) பால் கறக்கும் மாடு; milch cow. கற்றுக்கறவைக்கணங்கள் (திருப்பா.11).

**மறுவ.** பெற்றம், ஆன், ஆவு.

**ம.** கறவ; **க.** கறாவு, கறப; **உரா.** கறாக்கதன.

**Siam.** karav; **Ahoom.** khrai; **Thai.** khamti; **Ucaos**: khai, khwaai, khww; **Mal.** kerbow; **Ar.** ba-qara; **Aust.** karak; **Ser.** krava; **Pol.** krowa; **Cz.** kravo; **Russ.** karova.

**கறவை**[2] *karavai,* பெ.(n.) 1. பால் சுரப்பு, கறக்கை, கறவி; milk yielding cow. மாட்டின் கறவை நின்றுவிட்டது (உ.வ.). 2. பால்மாடு; milch cow. *"கறவைகள் பின்சென்று" (திவ். திருப்பா. 28.). 'கறவையுள்ளான் விருந்துக்கு அஞ்சான்' (பழ.).* 3. கறக்கும் அளவு; the quantity that is milked in one round. 4. மாடு முதலியன பால் கறக்கும் காலம்; milking or lactation period of cows, buffaloes etc. கறவையில் உள்ள மாட்டை வாங்க வேண்டும் (உ.வ.).

**மறுவ.** பெற்றம், மாடு, கோ, ஆ.

*[கற – கறவை.]*

பால்தரும் உயிரினம், நிலைத்திணை (கள்ளி முதலியன), காலம், அளவை ஆகிய அனைத்தையும் கறவை குறித்து வந்தது.

**கறவைக்கலம்** *karavai-k-kalam,* பெ.(n.) பால் கறக்கும் ஏனம் (சீவக. 69, உரை.); milk pail.

*[கறவை + கலம்.]*

**கறவைக்காணம்** *karavai-k-kāṇam,* பெ.(n.) 1.கறவை மாட்டுக்கு வாங்கப்பட்ட வரி; tax levied on milch cow. 2. பால் கறக்கும் பொருட்டு கறவை மாட்டைப்பிறர்க்கு விட்டதற்காகப் பெறும் பணம்; money realised by the owner of a milch cow leased to another for the purpose of taking the milk.

**ம.** கறவக்காணம்

*[கறவை + காணம். காணம் = பொன், பொற்காசு, காசு.]*

**கறவைமாடு** *karavaimāḍu,* பெ.(n.) பால் கறக்கும் மாடு; a milch cow.

**ம.** கறவப்பசு

*[கறவை + மாடு.]*

**கறவையான்** *karavai-y-āṉ,* பெ.(n.) 1. பால்மாடு (வின்.); milch cow. 2. பால்காரன்; milk man.

**ம.** கறவு; **க.** கறாவு.

*[கறவை + ஆன். ஆன் = மாடு.]*

**கறள்**[1] *karaḷ,* பெ.(n.) 1. கறை (யாழ்ப்.); rust, dross, stain. 2. வன்மம்; grudge. அவர் என் மீது கறள் வைத்திருக்கிறார் (இ.வ.).

**க.** கறள்

*[கறு → கறள். (வே.க.124.).]*

**கறள்**[2]**(ளு)-தல்** *karaḷ-ḷu,* 16.செ.கு.வி.(v.i.) 1. வளர்ச்சியறுதல்; to be stunted in growth. 2. எண்ணெயின்மையால் திரி மங்கியெரிதல்; to burn low, as a wick for want of oil.

*[குறள் → கறள்.]*

**கறள்பிடி-த்தல்** *karaḷ-piḍi-,* 4 செ.கு.வி.(v.i.) 1. பல்லீற்றில் மாசுபடிதல்; formation of plaque or hard crust on the teeth. 2. துருப்பிடித்தல்; to become rusty (சா.அக.).

*[கறள் + பிடி. கறு → கறள்.]*

**கறளை** *karaḷai,* பெ.(n.) 1. வளர்ச்சியின்மை; defect in stature, under sizedness. 2. குள்ளன்; dwarf. 3. வளர்ச்சியற்றது; anything dwarfish, stunted in growth, as beast, fowl or tree. 4. பருக்காத காய்; fruit not grown to full size. 5. கட்டிவகை; cystitis. 6. ஒரு வகை மரம்; a kind of tree.

**மறுவ.** கறாளை

**ம.** கரள

*[குறள் → கறள் → கறளை. (மு.தா. 139.).]*

**கறா** *karā,* பெ.(n.) காடைக்குரல்; chirp of a quail.

*[குறு → கறு → கறா. (குறுகிய ஒலிக்குறிப்பு).]*

**கறாளி** *karāḷi,* பெ.(n.) 1. அடங்காமை; state of being ungovernable or unmanageable, intractableness. கறாளிக் குதிரை (இ.வ.). 2. அடங்காக் குதிரை; uncontrollable horse.

*[கறள் + ஆளி – கறாளி.]*

**கறாளை** *kaṟāḷai,* பெ.(n.) ***கறளை*** பார்க்க; see *kaṟaḷai.*

*[கறளை → கறாளை.]*

**கறி¹–த்தல்** *kaṟi-,* 4 செ.குன்றாவி.(v.t.) மெல்லக் கடித்தல்; to chew; to eat by biting or nibbling, as biscuits, grass. *"அரிமா கொடிப்புற் கறிக்குமோ" (நாலடி. 141.).*

**ம.** கறி; **க.** கர்சு, கர்ச்சி; **தெ.** கரசு; **து.** கசெபுனி, கச்சுனி; **கொலா., பர்.** கச்ச்; **கோண்.** கச்சானா, கசீன; **கூ.** கச; **குரு.** கச்சினை; **மா.** க்வலவெ; கசபா. கறி; **குவி.** கர்கி.

**Mal.** kerat, **Norw.** klippe.

*[குல் → கல் → கறு → கறி. குல் → குத்தல் கருத்துவேர். கறு - வெட்டுதல், துண்டாக்குதல். கறு ஒலிக்குறிப்புச் சொல். கறு → கறி (மு.தா. பக்.2.).]*

**கறி²** *kaṟi,* பெ.(n.) மிளகு; pepper. *"கறிக்கொடி கருந்துணர்" (திருமுருகா. 309.).* பசிக்குக் கறி வேண்டாம், தூக்கத்துக்குப் பாய் வேண்டாம் (பழ.).

**ம.** கறி; **கசபா.** கரி; **து.** கெரெ.

*[கறு → கறி.]*

கறிக்கும் கார இயல்பினால் மிளகுக்குக் கறி என்னும் பெயர் இடப்பட்டது.

**கறி³** *kaṟi,* பெ.(n.) கடித்துத் தின்னுதல்; chewing, eating by biting.

**ம., க., குட.** கறி; **தெ.** கூர; **து.** கசிபு; **பட.** கொரெ.

**Guj.** gost; **Skt.** kara; **Mal.** kari. **Chin.** gali. **Gk.** kre as; **Sp.** carne, **Cata.** carn; **It.** carne; **Port**. carne; **Swed.** koft; **Rum.** carne; **Dan., Norw**. kyo.

*[குறு → கறு → கறி.]*

**கறி⁴** *kaṟi,* பெ.(n.) 1.மரக்கறி; vegetables, raw or boiled. 2. வெந்த காய்கறி; cooked vegetables. *'கறிக்கு இல்லாத வாழைக்காய் பந்தலிலே கட்டித் தொங்கவோ' (பழ.).*

**கோண்.** (அடிலா) கரூ; **கசபா.** கறி.

*[குறு → கறு → கறி.]*

**கறி⁵** *kaṟi,* பெ.(n.) இறைச்சி; meat.

**ம., க., குட.** கறி; **தெ.** கூர; **து.** கசிபு; **பட.** கொரெ; **உரா.** கறி; **எரு.** கர்ரி;

**Mal.** kari; **Chin.** gali; **Gk.** kre'as; **Sp.** carne; **Port.** carne, **Kata.** carn; **Swed.** kotta; **Norw**. kyott; **Rum.** carne; **It**. carne; **Dan.** kod.

**கறி⁶** *kaṟi,* பெ.(n.) தசை; muscle

**கசபா.** கரி

*[கறி - மிளகு. கறி - மிளகிட்டுச் சமைத்தது.]*

**கறி அகப்பை** *kaṟi-agappai,* பெ.(n.) இறைச்சிச் சமையலின் போது மட்டுமே பயன்படுத்தும் அகப்பை; ladle used while cooking meat.

*[கறி + அகப்பை.]*

**கறிக்கடை** *kaṟi-k-kaḍai,* பெ.(n.) இறைச்சிக் கடை; meat stall.

*[கறி + கடை.]*

**கறிக்கத்தி** *kaṟikatti,* பெ.(n.) காய்கறி முதலியவற்றை நறுக்குவதற்குப் பயன்படுத்தும் கத்தி; a kitchen knife.

**ம.** கறிக்கத்தி

*[கறி + கத்தி.]*

**கறிக்கருணை** *kaṟi-k-karuṇai,* பெ.(n.) காராக் கருணை (வின்.); Tahiti arrowroot.

*[கறி³ + கருணை.]*

**கறிக்கன்று** *kaṟikkaṉṟu,* பெ.(n.) கையாந்தகரை; eclipse plant (சா.அக.).

*[கறி + கன்று.]*

**கறிக்காய்** *kaṟi-k-kāy,* பெ.(n.) மிளகு; black pepper.

*[கறி + காய்.]*

**கறிக்குடலை** *kaṟi-k-kaḍalai,* பெ.(n.) கறியைக் கொண்டு செல்லுதற்குரிய இலைக்கலம் (வின்.); wicker-work of leaf for carrying meat.

*[கறி³ + குடலை.]*

**கறிக்கும்மட்டி** *kaṟikkummaṭṭi,* பெ.(n.) சாம்பற் பூசணி; ash pumpkin (சா.அக.).

*[கறி + கும்மட்டி.]*

**கறிக்கூட்டு** *kaṟi-k-kūṭṭu,* பெ.(n.) 1. கூட்டுக்கறி; vegetable, or vegetables prepared in semi-liquid form. 2. ***கறிமசாலை*** பார்க்க; see *kaṟi-masālai.*

**Mal.** gulai

*[கறி + கூட்டு.]*

**கறிக்கொடி** *kaṟi-k-koḍi,* பெ.(n.) மிளகுக்கொடி; pepper creeper. *"கறிக்கொடி கருந்துணர் சாய" (திருமுருகா. ).*

*[கறி + கொடி. கறிப்பு = கார்ப்பு. கறி = கார்ப்புடைய மிளகு.]*

**கறிக்கோப்பு** *kaṟi-k-kōppu,* பெ.(n.) கறிப் பொருள்கள்; vegetables, condiments etc.

**ம.** கறிக்கோப்பு

*[கறி + கோப்பு.]*

**கறிச்சட்டி** *kaṟi-c-caṭṭi,* பெ.(n.) கறிசமைக்குஞ் சட்டி; pan used for cooking curry.

*[கறி + சட்டி.]*

**கறிச்சரக்கு** *kaṟi-c-carakku,* பெ.(n.) கறிமசாலை (அல்.) கறியோடு சேர்க்கும் சரக்குகள்; ingredients of curry.

*[கறி + சரக்கு.]*

**கறிச்சுரை** *kaṟi-c-curai,* பெ.(n.) 1. சுரைக்கொடி; calabash. 2. கறிக்குதவும் சுரைக்காய்; bottle gourd used for culinary purpose.

**ம.** கறிச்சுர

*[கறி + சுரை.]*

**கறிச்சூலை** *kaṟi-c-cūlai,* பெ.(n.) அடிவயிற்றில் உண்டாகும் ஒரு வகை நோய்; a kind of disease affecting the abdomen.

**ம.** கறிச்சூல

*[கறி + சூலை.]*

**கறிச்சேம்பு** *kaṟi-c-cēmbu,* பெ.(n.) சேப்பங்கிழங்கு; Egyptian yam.

*[கறி + சேம்பு.]*

**கறி-த்தல்** *kaṟittal,*4 செ.கு.வி.(v.t.) மெல்லக்கடித்தல்; to chew; to eat by biting or nibling, as biscuits, grass. *"அரிமா கொடிப்புற் கறிக்குமோ" (நாலடி. 141).*

**ம.** கறி; **க.** கர்சு, கர்ச்சி; **தெ.** கரசு; **து.** கசெபுனி, கச்சுனி; **கொலா., பர்.** கச்; **கோண்.** கச்கானா, கசீன; **கூ.** கச; **குரு.** கச்சினை; **மா.** க்வலெ; **கசபா.** கறி; **குவி.** கரிகி.

**Mal.** kerat; **Norw.** klippe.

*[குல் → கல் → கறு → கறி. குல்→குத்தல் கருத்துவேர். கறு = வெட்டுதல், துண்டாக்குதல். கறு ஒலிக்குறிப்புச் சொல். கறு → கறி (மு.தா.பக்.2.).]*

**கறித்தும்பை** *kaṟi-t-tumbai,* பெ.(n.) 1. பெருந்தும்பை; large leucase. 2. கொடித்தும்பை; a creeper with an edible fruit.

*[கறி + தும்பை.]*

**கறித்தூள்** *kaṟi-t-tūḷ,* பெ.(n.) கறிக்குரிய சம்பாரப் பொடி, (வின்.); curry powder.

*[கறி + தூள்.]*

**கறிதுமி-த்தல்** *kaṟitumi-,* 7 செ.கு.வி.(v.i.) கறியைக் கடைதல், மசித்தல்; to churn vegetables. எற்றிக் கறி ஐஞ்சினுக்குங் கறிபதின் பலம் கறிதுமிக்கவும் பொரிக்கவும் (S.I.I. vol. 14. insc. 13. S. 23.).

*[கறி + துமி.]*

**கறிப்பலா** *kaṟi-p-palā,* பெ.(n.) ஈரப்பலா; bread-fruit tree.

*[கறி + பலா.]*

**கறிப்பாகல்** *kaṟi-p-pāgal,* 1. கறிக்குதவும் பாகற்காய்; bitter-gourd. 2. மிதிப்பாகல்; ground bitter gourd.

*[கறி + பாகல்.]*

**கறிப்பாலை** *kaṟi-p-pālai,* பெ.(n.) 1. மரவகை. (L.); wild olive. 2. பாலைக்கீரை; edible paulay.

**ம.** கறிப்பால

*[கறி + பாலை.]*



கறிப்பாலை

**கறிப்புடல்**[1] *kaṟi-p-puḍal,* பெ.(n.) புடல்; snake gourd.

*[கறி + புடல்.]*

**கறிப்புடல்**[2] *kaṟippuḍal,* பெ.(n.) ஒருவகை வண்டு (வின்.); a kind of beetle.

*[கறுப்பு + உடல் – கறுப்புடல் → கறிப்புடல்.]*

**கறிப்பெருங்காயம்** *kaṟi-p-peruṅgāyam,* பெ.(n.) ஒருவகைப் பெருங்காயம். (மு.அ.); a kind of asafoetida.

*[கறி + பெருங்காயம்.]*

**கறிப்போளம்** *kaṟi-p-pōḷam,* பெ.(n.) ஒருவகை நறுமணப் பிசின்; a fragrant resin or gum (சா.அக.).

*[கறி + போளம்.]*

**கறிமசாலை** *kaṟi-mašālai,* பெ.(n.) கறிக்குரிய சம்பாரப்பொடி முதலியன; spices used for flavouring curries.

ம. கறிமசால

*[கறி + மசாலை. மசி → மசிலை → மசாலை.]*

**கறிமஞ்சள்** *kaṟi-mañjaḷ,* பெ.(n.) பொடியாக்கிக் கறியிற் சேர்த்தற்குரிய மஞ்சள்வகை; a kind of turmeric used in curry powder.

*[கறி + மஞ்சள்.]*

**கறிமுள்ளி** *kaṟi-muḷḷi,* பெ.(n.) கழிமுள்ளி; Indian nightshade.

*[கழி + முள்ளி – கழிமுள்ளி → கறிமுள்ளி.]*

**கறிமுள்ளிக்காளி** *kaṟimuḷḷikkāḷi,* பெ.(n.) மிளகுத் தக்காளி; pepper tomato (சா.அக.).

*[கறி + முள்ளிக்காளி. முள்ளித்தக்காளி → முள்ளிக்காளி.]*

**கறியசீரம்** *kaṟiyašīam,* பெ.(n.) **கருஞ்சீரகம்** பார்க்க; see *karuñcīragam.*

*[கறிய + சீரம். சீரகம் → சீரம் (சா.அக.).]*

**கறியபாட்டம்** *kaṟiyapāṭṭam,* பெ.(n.) ஒரு வகை வரி; a type of tax. கோயிற்றாமப் பேறாய்க் கடைகளில் எடுக்கும் கறியபாட்டம் உடையார் திருவண்ணாமலை நாயநாற்கு விட்டேன் (S.I.I. vol.8. insc. 136.).

*[கறியமுது + பாட்டம் – கறியமுது பாட்டம் → கறியபாட்டம். பாட்டம் = வரி.]*

**கறியமால்** *kaṟiyamāl,* பெ.(n.) துளசி; holy basil (சா.அக.).

*[கறிய +மால்.]*

**கறியமுது** *kaṟi-y-amadu,* பெ.(n.) 1. சமைத்த கறியாகக் கடவுளுக்குப் படைக்கும் உணவு; offerings of vegetable curry to deities. *"செழும் போனகமுங்கறியமுதும்" (பெரியபு. சிறுத். 73.).* 2. கறியாகிய உணவுப்பண்டம்; vegetables .... கறியமுதுசட்டிக ஆக ... (S.I.I. Vol. 5. In. 445. Part. II. S.4.).

*[கறி + அமுது.]*

**கறியமுதுவடகம்** *kaṟi-y-amudu-vaḍagam,* பெ.(n.) ***கறிவடகம்*** பார்க்க; see *kaṟi-vaḍagam.*

*[கறி + அமுது + வடகம்.]*

**கறியன்** *kaṟyan,* பெ.(n.) செந்நெல்லி; tapering nutmeg (சா.அக.).

*[கறி → கறியன்.]*

**கறியாமணக்கு** *kaṟi-y-āmaṇakku,* பெ.(n.) பப்பாளி (மு.அ.); papaya.

*[கறி + ஆமணக்கு.]*

சற்றொப்ப ஆமணக்கின் இலையைப்போன்ற இலைகளையுடையதாய் காய் கறிசமைக்க உதவுவதாய் இருத்தலின் இப்பெயர் பெற்றிருக்கலாம்.

**கறியுப்பு** *kaṟi-y-uppu,* பெ.(n.) கறிக்குரிய உப்பு. (பதார்த்த. 1090.); culinary salt, common salt, Sodium chloride.

ம., க. கறியுப்பு

*[கறி + உப்பு.]*

**கறிவகை** *kaṟi-vagai,* பெ. (n.) உணவுத் தொடு கறிகளாகப் படைக்கப்படுபவை; side dishes served while eating.

*[கறி + வகை.]*

கறிவகைகளைப் பண்டையோர் தொடு கறிகளாகக் கருதி 18 வகைப்படுத்தினர்.

**பதினெண் வகைக் கறிகள்:** அவியல் (உவியல்), கடையல், கும்மாயம், கூட்டு (வெந்தாணம்), துவட்டல், புரட்டல், பொரியல், வறுவல், புளிக்கறி, பச்சடி (ஆணம்), அப்பளம், துவையல், ஊறு காய், வற்றல், உழுந்துவடை, காரவடை, தேங் குழல், முக்கனிகளுள் ஒன்று என்பன (பண். நா.ப. 38.).

**கறிவடகம்** *kaṟi-vaḍagam,* பெ.(n.) கறியிற் சேர்ப்பதற்காகத் தனியே செய்து உலர்த்திவைக் கப்படும் வடகவகை; curry condiments ground together and dried in cakes to be kept for use.

மறுவ. கறியமுதுவடகம்

*[கறி + வடகம்.]*

**கறிவெஞ்சனம்** *kaṟiveñjaṉam,* பெ.(n.) சமைத்த கறியுணவு; vegetable relish.

*[கறி + வெஞ்சனம்.]*

**கறிவேப்பிலை** *kaṟivēppilai,* பெ.(n.) கறிதாளிக்கும் போது சேர்க்கும் இலை; curry-leaf.

ம. கறிவேப்பில; ப. கரம்பெ சொப்பு

*[கறிவேம்பு + இலை.]*



கறிவேப்பிலை

**கறிவேம்பு** *kaṟi-vēmbu,* பெ.(n.) கறிவேப்பிலை மரம்; curry-leaf tree.

ம. கறிவேப்பு; க., து. கரிபேபு; தெ. கறிவேமு, கறிவேப

*[கறி² + வேம்பு.]*

**கறு¹-த்தல்** *kaṟu-,* 4 செ.கு.வி.(v.i.) 1. கருமையாதல்; to grow black, darker. *"கறுத்தா யுருவம்" (கம்பரா. நகர்நீங். 58). [ம.கறு.]* 2. முற்றுதல்; to mature, come to a climax. *"கௌவை கறுப்ப" (மதுரைக். 271.).* 3. அழுக்காதல் (வின்.); to become impure, polluted, to contract moral defilement.

*[கல் → கறு.]*

**கறு²-த்தல்** *kaṟu-,* 4செ.குன்றாவி.(v.t.) சினத்தல்; to resent, to get angry with. *"வசையுநர்க்கறுத்த பகைவர்" (பதிற்றுப். 32, 15.).*

ம. கறுக்குக; க. கர்கு, கறங்கு; துட. கர்வ்; குட. கற.

*[கல் → கறு.]*

"கறுப்பும் சிவப்பும் வெகுளிப் பொருள" என்று தொல்காப்பியம் [855] கறுப்புச் சொல்லை சிவப்புச் சொல்லோடு சேர்த்துக் கூறுவதால், கறுப்பு என்பது இதில் நிறம் பற்றிய சொல்லாக இருத்தல் வேண்டும். வெண்களமர் கருங்களமர், வெள்ளாளர், காராளர், வெள்ளொக்கல், காரொக்கல், என்று தொன்று தொட்டு வழங்கிவரும் எதிரிணைச் சொற்கள் பண்டை நாளிலும் இன்று போன்றே தமிழருட் பொன்னருங் கரியரும் இருந்தமையை உணர்த்தும். ஆகவே அவ்விருசாராரும் சினந்தபோது அவர் முகம் சிவந்தும் கறுத்தும் போனமை உய்த்துணரப்படும். கறு, கறுவு, கறுமு முதலிய சொற்கள் இவ்வகையிற் சினங்குறிக்கத் தோன்றியவையாகும் [வே.க. 127.].

**கறு³** *kaṟu,* பெ.(n.) 1. மனவுரம்; rancour, enmity. *"அரக்கன் ... கறுவுடையான்" (கம்பரா. கும்பக. 357.).* 2. சினம்; anger.

*[கல் → கர் → கறு (வே.க. 126.).]*

**கறு⁴** *kaṟu,* பெ.(n.) 1. கருமை; black. 2. கறை; stain. 3. தழும்பு; scar. *"கைத்தலத் துணை கருப்புற" (உப. தேச. சிவபுண். 315).* 4. குற்றம்; mistake. *"உள்ளக் கறுப்பினையறுக்க". (சிவதரு. சிவதரும. 25.).* 5. பேய்; devil. *"கறுப்பென்னிலோ போய்ப் பணிகுவார்" (அறப். சற். 30.).* 6. கருவயிரம்; black diamond. 7. வெகுளி; fury

*[கல் → கரு → கறு.]*

சினக்கும்போது கருநிற மக்கள் முகம் மிகக் கருத்தலும், செந்நிற அல்லது பொன்னிற மஞ்சள் முகம் மிகச்சிவத்தலும் பற்றி கறுப்பும் சிவப்பும் வெகுளிப் பொருள் பெற்றன. முகத்தினுங் கண் சிவத்தல் விளங்கித் தோன்றுவதாம் [வே.க. 123.].

**கறுக்கட்டு-தல்** *kaṟu-k-kaṭṭu-,* 5 செ.குன்றாவி.(v.t.) தீராப்பகை கொள்ளுதல்; to entertain deep rooted malice. அவன் அதைச்செய்யக் கறுக்கட்டி விட்டான் (இட.வ.).

*[கறு + கட்டு-.]*

**கறுக்கன்வெள்ளி** *kaṟukkaṉ-veḷḷi,* பெ.(n.) மட்ட வெள்ளி; grey or inferior silver.

ம. கறுக்கன் வெள்ளி

*[கறுக்கன் + வெள்ளி.]*

**கறுக்கன்னி** *karukkanni,* பெ.(n.) வெள்ளைக் கண்ணி; volkemeria infortunata (சா.அக.).

*[கறு + கன்னி. கண்ணி → கன்னி.]*

**கறுக்காய்** *karu-k-kāy,* பெ.(n.) இளநீர்க்காயின் கண்பக்கத்துள்ள கயர் (யாழ்.அக.); soft spongy astringent top of a tender coconut.

*[கரு → கறு + காய்.]*

**கறுகறு-த்தல்** *karu-karu-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. மிகுந்த கருநிறமடைதல் (இலக்.வி. 325, உரை.); to become very black. 2. மிகச்சினத்தல்; to rage.

ம. கறுகறு

*[கல் → கர் → கறு. கறுத்தல் = கருநிறமாதல். கறுகறுத்தல் = மிகக் கருத்தல், மிகச்சினத்தல் (வே.க. 123.).]*

**கறுங்கரணை** *karunkarani,* பெ.(n.) கறுப்புக் கரணைக் கிழங்கு; black elephant yarn.

*[கறும் + கரணை.]*

**கறுங்காய்ஞ்சொறி** *karuṅkāyñcori,* பெ.(n.) கறுப்புக் காஞ்சொறி; black nettle plant (சா.அக.).

*[கறும் + காய்ஞ்செறி.]*

**கறுங்குறிஞ்சி** *karuṅkuriñci,* பெ.(n.) கறுப்பு மருதோன்றி; black henna.

*[கறு + குறிஞ்சி.]*

**கறுத்த கடப்பு** *karutta-kaḍappu,* பெ.(n.) நெல்வகை. (A.); a species of paddy.

*[கறுத்த + கடப்பு.]*

**கறுத்தகல்லுண்டை** *karutta-kal-l-unḍai,* பெ.(n.) நெல்வகை (A.); a species of paddy.

*[கறுத்த + கல்லுண்டை.]*

**கறுத்த காக்கட்டான்** *karutta-kākkaṭṭan,* பெ.(n.) ***கருங்காக்கணம்*** (யாழ்.அக.). பார்க்க; see *kruṅkākkanam.*

*[கறுத்த + காக்கட்டான்.]*

**கறுத்த கார்** *karutta-kār,* பெ.(n.) ஐந்துமாதத்தில் விளையக்கூடிய குறுவைநெல்வகை (G.Tj.D.94); a species of kuruvai paddy maturing in five months.

*[கறுத்த + கார்.]*

**கறுத்த கெளிறு** *karutta-keliru,* பெ.(n.) மீன்வகை; a species of fish. *“சின்னத்தாளங் கறுத்த கெளிற்று மீன்”* (பறாளைப் பள்ளு. 16.).

*[கறுத்த + கெளிறு.]*

**கறுத்த பாசி** *karutta-pāśi,* பெ.(n.) கரியமணி; black bead.

*[கறுத்த + பாசி.]*

**கறுத்த பூ** *karutta-pū,* பெ.(n.) கருங்காக்கணம் (சங்.அக.); mussel-shell creeper.

*[கறுத்த + பூ.]*

**கறுத்த மொச்சை** *karutta-moccai,* பெ.(n.) மொச்சை வகை (விவசா.4.); hyacinth bean.

*[கறுத்த + மொச்சை.]*

**கறுத்த வளை** *karuttavaḷai,* பெ.(n.) தூதுவளை; three lobed night shade (சா.அக.).

*[கறுத்த + வளை.]*

**கறுத்தவன்** *karuttavan,* பெ.(n.) 1.கருநிறமுடையவன்; black, dark person. 2. பகைவன் (யாழ்.அக.); enemy.

ம. கறும்பன்

*[கறு → கறுத்த + அவன்.]*

**கறுத்த வுப்பு** *karutta-v-uppu,* பெ.(n.) சில செடிகளைச் சாம்பராக்கி உண்டாக்கும் கருநிறமுள்ள உப்பு (வின்.); black salt produced from the ashes of certain plants.

ம. கறுத்துப்பு

*[கறு → கறுத்த + உப்பு.]*

**கறுத்தை** *karuttai,* பெ.(n.) 1. கரியவள்; a black woman. 2. கருங்காளை; black ox (வே.க.123.).

*[கறு → கறுத்தி → கறுத்தை (வே.க. 123.).]*

**கறுத்தோர்** *karuttōr,* பெ.(n.) பகைவர்; enemies. *“கறுத்தோ ருறுமுரண் டாங்கிய” (பதிற்றுப். 66,9).*

*[கறு → கறுத்தோர். கறுத்தல் = சினத்தல்.]*

**கறுநாகம்** *karunāgam,* பெ.(n.) காரீயம்; lead.

*[கறு + நாகம்.]*

**கறு நிமிளை** *karunimiḷai,* பெ.(n.) கறுப்பு நிமிளை; black bismuth (சா.அக.).

*[கறு + நிமிளை.]*

**கறு நிறத்தி** *karuniratti,* பெ.(n.) ***கருவூமத்தை*** பார்க்க; see *karuvūmattai.*

*[கறு + நிறத்தி. நிறம் → நிறத்தி 'இ' உடைமை குறித்த ஈறு.]*

**கறுப்பண்ணன்** *karuppaṇṇaṉ,* பெ.(n.) தமிழக நடுகல் தெய்வம் (த.ம.36.).

*[கறுப்பு + அண்ணன்.]*

**கறுப்பர்** *karuppar,* பெ.(n.) ***கறுப்பன்*** பார்க்க; see *karuppaṉ.*

*[கறுப்பு +அர்.]*

**கறுப்பறுகு** *karupparugu,* பெ.(n.) கறுப்பு அறுகம்புல்; black panic grass (சா.அக.).

*[கறுப்பு + அறுகு.]*

**கறுப்பன்** *karuppaṉ,* பெ.(n.) 1. கரியவன்; black man. 2. ஒரு சிறு தெய்வம்; a fierce demon worshipped by the lower castes. 3. மூன்று மாத்தில் விளையக்கூடிய கார்நெல் வகை (வின்.); a species of black paddy maturing in three months.

**ம.** கறுப்பன், கறும்பன், கறப்பன்; **பட.** கறப்ப

*[கறுப்பு → கறுப்பன் (வே.க. 123.).]*

**கறுப்பி**[1] *karuppi,* பெ.(n.) 1. கருநிறமுடையவள்; a black woman (ம. கறும்பி.). 2. நவச்சாரம் (மூ.அ.); salt petre. 3. பேய்த்தும்பை (சங்.அக.); flower tumbai. 4. நிமிளை வகை (சங்.அக.); a kind of bismuth. 5. நீலச் செய்நஞ்சு (சங்.அக.); a prepared arsenic. 6. கருவண்டு (வின்.); species of black beetle.

**ம.** கறும்பி

*[கறுப்பு → கறுப்பி (வே.க. 123.).]*

**கறுப்பி**[2] *karuppi,* பெ.(n.) மீனம்பர் (சங்.அக.); grey amber.

*[கறு → கறுப்பி.]*

**கறுப்பிறுங்கு** *karuppiruṅgu,* பெ.(n.) சோளவகை (விவசா.3.); a species of millet.

*[கறுப்பு + இறுங்கு. இறுங்கு = சோளம்.]*

**கறுப்பீரல்** *karuppīral,* பெ.(n.) மண்ணீரல்; spleen (சா.அக.).

*[கறுப்பு + ஈரல்.]*

**கறுப்பு**[1] *karuppu,* பெ.(n.) 1. கருமை. (பிங்.); blackness, darkness. 2. சினம்; anger, displeasure. கருப்பன்முகம் கறுத்துத்தோன்றும் (சினம். சொ.ஆ.க.52.). 3. குற்றம்; moral delinquency, blemish, fault. *"உள்ளக் கறுப்பினை யறுத்து" (சிவதரு. சிவதரும. 25.).* 4. கறை; spot, taint, pollution, moral defilement. 5. ***கறுப்புப்புள்ளி*** பார்க்க; see *karuppuppuḷḷi.* 6. தழும்பு; scar. *"கைத்தலத்துணை கறுப்புற" (உபதேசகா. சிவபுண்ய. 315).* 7. கருங்கோள் (இராகு.) (சூடா.); (Astron). Rahu, the ascending node. 8. பேய்பிசாசுகள். (இ.வ.); evil spirits. *"கறுப்பென்னிலோ போய்ப்பணிகுவார்" (அறப். சத. 30.).* 9. அபின் (நெல்லை.); opium. 10. மீனம்பர் (வின்.); ambergris. 11. தும்பிலி; ebony. 12. வயிர்த்த பகை; enmity.

**ம.** கறுப்பு; **க.** கப்பு, கர்பு, கறெ, கறி; **உரா.** கறுப்பு; **எரு.** கர்த்தடு; **தெ.** கற, கறி, கர்றி, கப்பு; **து., பட.** கப்பு; **கோத.** கர்ப்; **துட.** கப்; **குட.** கரபி, கரதெ; **பிரா.** கர்.

*கல் → கர் → கரு → கறு. கல் → கறு (பிங்.) ஒ.நோ. நில் → நிறு.*

*[கறு → கறுப்பு. (வே.க.123.) கறுத்தல் = மேன்மேலும் கருப்பாதல். கறுப்பு = கடுங்கருப்பு, அட்டக்கரிநிறம்.]*

கரு, கறு இரண்டும் நிறத்தைக் குறிக்கின்றன. கரு என்பதை நோக்கக் கறு என்பது நிறத்தைக் குறிப்பது மிகச்சிறுபான்மையே.

**கறுப்பு**[2] *karuppu,* பெ.(n.) சீட்டாட்டத்தில் தோற்றவர் பெறுங்குறியீடு (உ.வ.); minus mark againt the defeated party in the game of cards, etc.

*[கறு → கறுப்பு.]*

**கறுப்புக்கட்டு-தல்** *karuppu-k-kaṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. பயிர் முதிர்ந்து கருநிறங்கொள்ளுதல்; to become dark green, as corn or grain. 2. மழைக் கோலங் கொள்ளுதல்; to become cloudy and hence dark.

*[கறுப்பு + கட்டு.]*

**கறுப்புக்கண்ணாடி** *karuppu-k-kaṇṇāḍi,* பெ.(n.) குளிர்ச்சிக்காக அணியும் மூக்குக்கண்ணாடி, தண்ணாடி; sunglasses, cooling glasses.

*[கறுப்பு + கண் + ஆடி.]*

**கறுப்புக்கல்** *karuppu-k-kal,* பெ.(n.) நீலாஞ்சனக்கல்; sulphide of antimony.

*[கறுப்பு + கல்.]*

**கறுப்புக்கன்னிமார்** *karuppu-k-kannimār,* பெ.(n.) கருஞ்சிலையில் வரிசைப்படப் பொறிக்கப்பட்ட கன்னித் தெய்வங்கள் (இட.வ.); Black Virgins name for the ākāša-k-kannimar so called because they are carved all in a row on a black stone.

*[கறுப்பு + கன்னிமார்.]*

**கறுப்புக்காஞ்சொறி** *karuppu-k-kāñjori,* பெ.(n.) சிறுகாஞ்சொறி (வின்.); small climbing nettle.

*[கறுப்பு + காஞ்சொறி.]*

**கறுப்புக்காலிநெல்** *karuppu-k-kāli-nel,* பெ.(n.) நெல்வகை. (n.); a species of paddy.

**ம.** கருப்புகாலி

*[கறுப்பு + கால் + இ + நெல். கால் = தாள். 'இ' உடைமை குறித்த ஈறு. கறுப்பு = மிகக்கருப்பு.]*

**கறுப்புக்குங்கிலியம்** *karuppu-k-kungiliyam,* பெ.(n.) கருங்குங்கிலியம்; black dammer, resin.

*[கறுப்பு = மிகக்கருப்பு. கறுப்பு + குங்கிலியம்.]*

**கறுப்புக்கொடி** *karuppu-k-kodi,* பெ.(n.) துயரத்தையோ, எதிர்ப்பையோ தெரிவிக்கும் அடையாளமாக அணியும் கறுப்புத் துண்டுத்துணி; black flag or strip of black cloth used as a sign of mourning or protest.

*[கறுப்பு + கொடி.]*

**கறுப்புக்கொள்—தல்** *karuppu-k-kol-,* 16 செ.கு.வி. (v.i.) சினம் கொள்தல்; to get angry.

*[கறுப்பு = சினம். கறுப்பு + கொள்.]*

**கறுப்புக்கொள்** *karuppu-k-kol,* பெ.(n.) கருங்கொள், கருங்காணம் (வின்.); black horse gram.

*[கறுப்பு = மிகக்கருப்பு கறுப்பு + கொள்.]*

**கறுப்புச்சந்தை** *karuppu-c-candai,* பெ.(n.) ***கள்ளச்சந்தை*** பார்க்க; see *kalla-c-candai.*

*[கறுப்பு + சந்தை.]*

**கறுப்புச்சருக்கரை** *karuppu-c-carukkarai,* பெ.(n.) தூய்மை செய்யாத சருக்கரை (பாண்டி.); unrefined sugar; raw sugar.

*[கறுப்பு + சருக்கரை.]*

**கறுப்புச்சித்திரமூலம்** *karuppu-c-cittiramūlam,* பெ.(n.) கருங்கொடிவேலி; black-flowered leadwort (சா.அக.).

*[கறுப்பு + சித்திரமூலம்.]*

**கறுப்புத்தாமர்** *karuppu-t-tāmar,* பெ.(n.) ஒருவகை மரம்; green dammer.

*[கறுப்பு = மிகக்கருப்பு. கறுப்பு + தாமர்.]*

**கறுப்புத்தேயிலை** *karuppu-t-tēyilai,* பெ.(n.) சீனத்தேயிலை (L.); China tea-plant (சா.அக.).

*[கறுப்பு = கரும்பச்சை. கறுப்பு +தேயிலை.]*

**கறுப்புநாய்** *karuppunāy,* பெ.(n.) மூக்கத்தாரிச் செடி; an unknown plant (சா.அக.).

*[கறுப்பு + நாய்.]*

**கறுப்புப்படர்—தல்** *karuppu-p-padar-,* 2 செ.கு.வி. (v.i.) கருமேக நோய் உடலிற் பரவுதல்; to spread as a black eruption over the body.

*[கறுப்பு = மிகக்கருப்பு. கறுப்பு + படர்–.]*

**கறுப்புப்பணம்** *karuppu-p-panam,* பெ.(n.) 1. வருமானவரிக்கணக்கில் சேர்த்துக்கொள்ளாத பணம்; black money; money not accounted for income tax.

*[கருப்பு + பணம்.]*

**கறுப்புப்பயறு** *karuppu-p-payaru,* பெ.(n.) கருநிற முள்ள பயறு (D.); black variety of green gram.

*[கறுப்பு = மிகக்கருப்பு. கறுப்பு + பயறு.]*

**கறுப்புப்பிசானம்** *karuppu-p-pišānam,* பெ.(n.) தாளடிநெல் (A.); second crop of paddy.

*[கறுப்பு + பிசானம்.]*

**கறுப்புப்பு** *karuppuppu,* பெ.(n.) உப்புவகை (பைசச. 35.); black salt , impure chloride of sodium, containing a little sulphuret or iron.

*[கறுப்பு = மிகக்கருப்பு. கறுப்பு + உப்பு.]*

**கறுப்புப்புள்ளி** *karuppu-p-pulli,* பெ.(n.) 1. வயிரக் குற்றங்களுள் ஒன்று; dark spot, a flaw in diamond. 2. உடம்பில் கறுப்புப்புள்ளிகள் ஏற்படும் ஒரு வகை மேக நோய்; a veneral or syphilitic disease developing black spots in several parts of the body (சா.அக.).

*[கறுப்பு = மிகக்கறுப்பு. கறுப்பு + புள்ளி.]*

**கறுப்புப் பூலாஞ்சி** *karuppu-p-pūlāñji,* பெ.(n.) பூலா என்னுமோர் மூலிகை (L.); a large shrub, pūla.

*[கறுப்பு = மிகக்கருப்பு. கறுப்பு + பூலாஞ்சி.]*

**கறுப்புமட்டிவாய்** *karuppu-mattivāy,* பெ.(n.) முப்பது விரலம் நீளம் வளரக் கூடிய வெள்ளிநிற கடல்மீன் வகை; black rock-cod, sea-fish, silvery-grey, attaining 30 inches in length.

*[கறுப்பு = அடர் கருப்பு; படர் கருப்பு. கறுப்பு + மட்டிவாய்.]*

**கறுப்புமட்டிவாயன்** *karuppu-mattivāyan,* பெ.(n.) ***கறுப்புமட்டிவாய்*** பார்க்க; see *karuppu-mattivāy.*

*[கறுப்பு = அடர்கருப்பு. கறுப்பு + மட்டிவாயன்.]*

**கறுப்புமணித்தக்காளி** *karuppu-mani-t-takkāli,* பெ.(n.) மணித்தக்காளி வகை (பதார்த்த. 282.); black nightshade.

*[கருப்பு = மிகக்கருப்பு. கறுப்பு + மணித்தக்காளி.]*

**கறுப்புமரம்** *karuppu-maram,* பெ.(n.) தும்பிலி என்னும் கருந்தும்பி மரம் (m.m.); Coromandel ebony.

*[கறுப்பு + மரம்.]*

**கறுப்புமுருங்கை** *karuppumurungai,* பெ.(n.) முருங்கை மரவகை; a black variety of moringa (சா.அக.).

*[கறுப்பு + முருங்கை.]*

**கறுப்புவரால்** *karuppu-varāl,* பெ.(n.) மூன்றடி நீளத்துக்கும் மேலாக வளர்வதும் கறுப்பு அல்லது பழுப்பு நிறமுடையதும் நல்ல தண்ணீரில் வாழ்வதுமாகிய ஒரு மீன்வகை; a walking-fish, dark-grey or black, attaining 3ft. or more in length.

*[கறுப்பு = மிகக்கருப்பு. கறுப்பு + வரால்.]*

**கறுப்புவவ்வால்** *karuppu-vavvāl,* பெ.(n.) இரண்டடிநீளம் வளர்வதும் செம்பழுப்பு நிற முடையதுமான கடல்மீன்வகை; black pomfret, deep brown attaining 2 ft. in length.

*[கறுப்பு = அடர் கருப்பு. கறுப்பு + வவ்வால்.]*

**கறுப்புவீரம்** *karuppu-viram,* பெ.(n.) விளக்கின் கொழுந்தினால் படரும்கரி; lamp-black.

*[கறுப்பு = மிகக் கருப்பு. கறுப்பு + வீரம். பீரம் → வீரம். பீர்தல் = படர்தல்.]*

**கறுப்புவெற்றிலை** *karuppu-verrilai,* பெ.(n.) கம்மார் வெற்றிலை; a black variety of betel leaf.

*[கறுப்பு = மிகக் கருப்பு. கறுப்பு + வெற்றிலை.]*

**கறுப்பூனம்** *karuppūnam,* பெ.(n.) பச்சை மணியிலுள்ள குற்றவகை; a flaw in emeralds. *"பச்சை கறுப்பூனமாய்" (சரவண. பணவிடு. 206.).*

*[கறுப்பு + ஊனம்.]*

**கறுப்பேற்றிக் கொள்(ளு)-தல்** *karuppu-ērri-k-kol(lu)-,* 16 செ.கு.வி.(v.i.) அபினி தின்னுதல்; to eat opium.

*[கறுப்பு = மயக்கம் (போதை). கறுப்பு + ஏற்றிக்கொள்.]*

**கறும்பு-தல்** *karumbu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. துன் புறுத்தல்; to torment. *"கறும்பி யூர்வன வைந்துள காயத்தில்" (தேவா. 370, 6.).* 2. சிறிது சிறிதாகக் கடித்துண்ணுதல்; to eat bit by bit.

**ம.** கறும்புக

*[கல் → கறு → கறும்பு.]*

**கறுமு-தல்** *karmu-,* 5 செ.கு.வி.(v.i.) சினத்தல்; to show signs of anger, to be enraged.

*[கறுவு → கறுமு (வே.க. 124.).]*

**கறுமுறு-த்தல்** *karumuru-,* 4 செ.கு.வி.(v.i.) சினத்தல்; to get anger.

*[கறு + முறு.]*

**கறுமுறெனல்** *karumurenal,* பெ.(n.) ***கறுமொறெனல்*** பார்க்க; see *karumorenal.*

**ம.** கறுமுறெ

**கறுமொறெனல்** *karumorenal,* பெ.(n.) 1. இடி இடிக்கும் ஒலிக்குறிப்பு; onom. expr. signifying rumbling sound, as of thunder cloud. 2. சினக்குறிப்பு (வின்.); onom. expr. signifying signs of anger. 3. உணவுப் பண்டங்களை மெல்லும் போது ஏற்படும் ஒலிக்குறிப்பு; onom. expression of chewing the solid eatables.

*[கறு + மொறு + எனல். ஒலிக் குறிப்புச்சொல் சினத்தைக்குறித்தது.]*

**கறுவம்**[1] *karuvam,1* பெ.(n.) வெகுளி. (பிங்.); anger (செ.அக.).

**ம.** கறுவம்

*[கறுவு → கறுவம்.]*

**கறுவம்**[2] *karuvam,* பெ.(n.) செருக்கு, ஆணவம்; haughtiness, arrogance, pride.

**த.** கறுவம் > **Skt.** garva.

*[கல் → கறு → கறுவு → கறுவம்.]*

**கறுவல்** *karuval,* பெ.(n.) 1. கரியவன், கரியது; black, dark person, or animal of the larger kind. 2. கருநிறம்; black colour. 3. சினக்குறிப்பு (வின்.); sign of anger.

*[கறு → கறுவல்.]*

**கறுவலந்தான்** *karuvalandān,* பெ.(n.) விச்சுளி; swift bird or king-fisher (சா.அக.).

*[கறு[3] (மனவுரம்) + (வலந்தன்) வலந்தான்.]*

**கறுவா** *karuvā,* பெ.(n.) இலவங்க மரம்; clove tree.

*[கறி → கறு → கறுவா.]*

**கறுவாலன்** *karu-vālan,* பெ.(n.) நெல்வகை. (A.); a species of paddy.

*[கறு = மிகக்கரிய. கறு + வாலன்.]*

**கறுவியம்** *karuviyam,* பெ.(n.) தீராப்பகை. (யாழ். அக.); rancour, implacable hatred.

*[கறுவு → கறுவி → கறுவியம்.]*

**கறுவிருளை** *karuvirulai,* பெ.(n.) கருங்காக்கணம்; mussell-shell creeper.

*[கறு + இருளை.]*

**கறுவு**[1]**-தல்** *karuvu-,* 5செ.கு.வி.(v.i.)1. சினக் குறிப்புக் காட்டுதல்; to exhibit signs of displeasure, frown, look sternly.2. மனவுரங் கொள்ளுதல்; to rankle; to entertain malice, implacable hatred. *"கறுவி வெகுண்டுரைப்பான்" (திரிகடு. 46.).* 3.பல்லால் துருவுதல்; to nibble, as a rat. எலி. தேங்காயைக் கறுவுகிறது (செ.அக.).

*[குல் → கல் = குத்துதல், கடித்தல், துன்பஞ்செய்தல், பகைத்தல், சிதைத்தல். கல் → கறு → கறுவு.]*

**கறுவு**[2] *karuvu,* பெ.(n.) 1. தணியாச்சினம் (சொ.அக.52.); anger, wrath. 2. மனவுரம் (மனவைரம்.); enmity, hostility, hatred. *"கறுவொடும் பிரகலாதன் கதழ்சினந் தலைக்கொண்டானே" (கூர்மபு. அந்தகா. 86.).* எதிராளியை ஒழித்துக் கட்டுவதாக அவன் கறுவிக் கொண்டிருந்தான் (உ.வ.).

**ம.** கறுவம், கறுவு.

*[கல் → கறு → கறுவு (வே.க. 123.).]*

**கறுவை-த்தல்** *karu-vai-,* 4 செ.கு.வி.(v.i.) மனவுரங்கொள்ளுதல்; to entertain deep-rooted malice, cherish a grudge.

*[கறு + வை.]*

**கறுழ்** *karul,* பெ.(n.) கடிவாளம்; bridle. *"மாவே ... கறுழ் பொருத செவ்வாயான்" (புறநா. 4, 8.).*

**மறுவ.** கருள்

*[கறு → கறுழ் (கடித்தல்).]*

**கறுள்** *karul,* பெ.(n.) ***கறுழ்*** பார்க்க; see *karul.*

*[கறுழ் → கறுள்.]*

**கறேரெனல்** *karēr-enal,* பெ.(n.) ***கறேலெனல்*** பார்க்க; see *karēl-enal.*

*[கறேலெனல் → கறேரெனல்.]*

**கறேலெனல்** *karēl-enal,* பெ.(n.) மிகக் கறுப்பாதற் குறிப்பு; expr. signifying intense darkness. இந்தப் பூனை கன்னங் கறேலென்றிருக்கிறது (உ.வ.).

*[கறு → கறேல் + எனல்.]*

**கறை**[1] *karai,* பெ.(n.) 1. வாழை, நுங்கு முதலியவற்றின் சாற்றாலுண்டாகும் சாயம் (சொ.ஆ.க. 44.); rust; spot, as on the moon; as of the teeth. stain, tarnish, blemish, uncleanliness. *"பற்கறைகள் மாற்றல்" (காசிக. இல்லொழுக். 27.).* 2. குற்றம்; fault, defect. *"பிறக்கப் பிறக்கக் கறையேறுகை" (திவ். திருப்பா. 21. வியா.).* 3. கறுப்புநிறம்; black *"கறைமிடறு" (புறநா. 1,5.).* 4. நிறம். (பிங்.); colour, hue, tinge. 5. இருள்; darkness. *"கறைபடு பொழில்" (தேவா. 624, 8.).* 6. நஞ்சு; poison *"கறையுறு பகுவா யுரகம்" (ஞானா. பாயி. 7, 5.).* 7. அரத்தம்; blood. *"புறங் கறையொழுகு செம்புண்ணில்" (பிரபுலிங். துதி.15.).* 8. மாதவிலக்கு; defilement, as of catamenia. *"கொழுநனை யில்லாள் கறையும்" (திரிகடு. 66.).* 9. உரல்; mortar for pounding. *"கறையடி யானை" (பெரும்பாண். 351.).* 10. கருங்காலிவகை (வின்.); glabrous foliaged cutch.

**ம.** கற; **க., பட., குட.** கறெ; **தெ.** கர; **துட.** கர்.

**Sinh.** kunu

*[கல் → கரு → கறு → கறை. கறு = மிகக்கருப்பாதல், குடைதல், மிகவும் இருளாதல் (மு.தா.180.).]*

"ஆடையிற் பற்றுங் கறை பெரும்பாலும் கருநிறமாயிருப்பதால் கறுப்பு, கறை, களங்கம், முதலிய கருமைப் பெயர்கள் மாசும் மறுவுமான புள்ளிகளையும் பொட்டல்களையும் குறித்தன" [வே.க. 126.]. ஒரு கறை அதையுடைய பொருட்குக் குற்றமாதலாலும் கறுப்பு நிறம் பெரும்பாலும் மக்களால் வெறுக்கப்படுவதாலும் கறைக் கருத்திலும் கறுப்புக் கருத்திலும் குற்றக் கருத்துத் தோன்றிற்று [வே.க. 126.].

**கறை**[2] *karai,* பெ.(n.) குடியிறை; tribute, poll-tax. *"கறைவீடு செய்ம்மின்" (சிலப். 23, 127.).*

**மறுவ.** இறை, கடன், கடமை, காணிக்கை, தீர்வை, பகுதி, பாட்டம், பூட்சி, பேறு, மகமை, மகன்மை.

*[கல் → கற → கறை. கற = கறத்தல், உரிஞுதல், பெறுதல். கறை = பெறத்தக்கவரி. ஒ.நோ. பற → பறை (பறவை) பறைத்தொழுதி = பறவைக்கூட்டம். கற → கறை = பெறத்தக்கது.]*

**கறைக்கண்டன்** *karai-k-kandan,* பெ.(n.) 1. சிவன்; Siva, as having poison in his throat. *"கறைக்கண்ட னுறைகோயில் ... கோகரணம்" (தேவா. 1182, 9.).* 2. துருசு; blue vitriol (சா.அக.).

**ம.** கறக்கண்டன்; **க.** கறெகண்ட, கறெகொரல. **தெ.** கறகண்டுடு.

*[கறை[1] + கண்டன்.]*

**கறைக்கணி-த்தல்** *karai-k-kani-,* 4. செ.கு.வி. (v.i.) குறை வேண்டித்தொழுதல்; to pray for redress of grievances. *"எம்பெருமானென்று கறைக்கணித்தவர் கண்டவணக்கத்தாய்" (தேவா. 612, 2.).*

*[கறை[1] + கணி.]*

**கறைக்கோங்கு** *karai-k-kōngu,* பெ.(n.) இலைப் புன்கு; dipterocarp dammer (சா.அக.).

*[கறை + கோங்கு. கறை = கருமைபடர்ந்த இலை.]*

**கறைச்சூலை** *karai-c-cūlai,* பெ.(n.) சூலைநோய் வகை (சீவக. 123.); a form of neuralgia.

**ம.** கறிசூலா

*[கறை[1] + சூலை.]*

**கறைநிலம்** *karainilam,* பெ.(n.) 1. புன்செய் நிலம்; dry land. 2. களர் நிலம்; saline soil (கல். கலை. அக.).

*[கறை = குற்றம், பழுது. கறை + நிலம்.]*

**கறைநீக்கு-தல்** *karainīkku-,* 5 செ.கு.வி.(v.i.) மாசு நீக்கல்; to remove the stain or blemish (சா.அக.).

*[கறை + நீக்கல்.]*

**கறைப்பல்** *karaippal,* பெ.(n.) மாசுபடிந்த பல்; discoloured teeth, unclean teeth. *"கறைப்பற் பெருமோட்டுக் காடுகிழவோட்கு" (யாப்.வி. 94, 352.).*

*[கறை = குற்றம், அழுக்கு. கறை[1] + பல்.]*

**கறைப்பறுக்குழி** *karaipparu-k-kuli,* பெ.(n.) உவர் நிலம்; salty land. கரைப்பறுக்குழி ... முன்னூறும் (S.I.I. Vol.1. in. 503. S.2.).

*[கறை → கறைப்பு+உறு+குழி. உறகுழி → அறக்குழி எனத்திரிந்து.]*

**கறைப்போக்கன்** *karai-p-pōkkan,* பெ.(n.) கீழ்மகன்; loafer.

*[கறை + போக்கன்.]*

**கறைபடிதல்** *karaipadi-,* செ.கு.வி.(v.i.) களங்கம் ஏற்படுதல்; to be stained with accusation.

**க.** கறெவெரசு

*[கறை + படி.]*

**கறைபடு—தல்** *karaipadu-,* 20 செ.கு.வி.(v.i.) இருள் படர்தல்; to darken. பூங்கொடியே கறைபடுவது நிறைமதியே பட்டுண்பன அணியல்குலே (S.I.I. Vol.17. S.No. 585. S.4.).

*[கறை + படு.]*

**கறைபிடி—த்தல்** *karai-p-pidi-,* 4 செ.கு.வி.(v.i.) 1. துருவுண்டாதல்; to become rusty; to form, as rust. 2. மாசுபடுதல்; to be stained or soiled with rust or verdigris. 3. அரத்தங்கட்டுதல்; to collect, as blood in inflammation.

*[கறை = குற்றம், பழுது, அழுக்கு. கறை + பிடி–.]*

**கறைபோக்கி** *karai-pōkki,* பெ.(n.) சவர்க்காரம் (தைலவ. தைல.); lit., remover of stains, soap.

*[கறை = குற்றம், அழுக்கு. கறை' + போக்கி.]*

**கறைபோக்கு** *karai-pōkku,* பெ.(n.) கீழ்மை; lowliness.

*[கறை = அழுக்கு, குற்றம், கீழ்மை. கறை + போக்கு.]*

**கறைமிடற்றண்ணல்** *karai-midarrannal,* பெ.(n.) மிடற்றில் நஞ்சினை வைத்த சிவன் (திவா.); Šiva, as having poison in his throat..

**ம.** கறமிடறன்

*[கறை = நஞ்சு. கறை + மிடறு + அண்ணல்.]*

**கறைமிடற்றான்** *karai-midarrān,* பெ.(n.) ***கறைமிடற்றண்ணல்*** பார்க்க; see *karai-midar rannal. "கடிகமழ்மா மலரிட்டுக் கறைமிடற்றா னடி காண்பாம்" (தேவா. 198,1.).*

**ம.** கறமிடறான்

*[கறை = கஞ்சு. கறை + மிடற்றான்.]*

**கறைமுறி—த்தல்** *karai-muri-,* 4 செ.கு.வி.(v.i.) ஆடை முதலியவற்றின் கறையை நீக்குதல் (வின்.); to remove a spot or stain from cloth, etc.

*[கறை = ஒட்டிய அழுக்கு, கரி. கறை + முறி.]*

**கறையடி** *karai-y-adi,* பெ.(n.) உரல்போன்ற தடித்த காலுடைய யானை; elephant, as having legs like mortar. *"பொழிமதக் கறையடி" (கல்லா. 61, 22.).*

**ம.** கறயடி

*[கறை + அடி. கறை = உரல்.]*

**கறையான்** *karaiyān,* பெ.(n.) சிதல்; white ant. *"கறையானேறி" (பாரத. அருச்சுனன்றவ. 41.).* கறையான் புற்றில் கருநாகம் குடி கொண்டதுபோல் (உ.வ.).

**ம.** கறயான்

*[கற → கறை. உள்வாங்குதல், உரிஞுதல், அரித்தல். கறை → கறையான் = அரிக்கும் இயல்புடையது.]*

**கறையான்நோய்** *karaiyānnōy,* பெ.(n.) அரத்த நோய்வகை; disease relating to blood (சா.அக.).

*[கறையான் + நோய்.]*

**கறையான்புற்று** *karaiyānpurru,* பெ.(n.) சிதல்களினாற் கட்டப்பெற்ற வளைகளோடு கூடிய மண்புற்று; termite mound.

*[கறையான் + புற்று.]*

**கறையான்மேய்—தல்** *karaiyān-mēy-,* 2. செ.கு.வி. (v.i.) செல்லுப்பிடித்தல்; to be eaten, as a book, by white ants.

*[கறையான் + மேய்.]*

**கறையுரல்** *karai-y-ural,* பெ.(n.) பெரியவுரல்; large mortar.

*[கறை + உரல். கறை = மிகுதி பெருக்கம்.]*

**கறையோர்** *karaiyōr,* பெ.(n.) வரிசெலுத்துவோர்; tax-payers, rate-payers. *"கறையோரில்லாச் சிறையோர் கோட்டம்" (மணிமே. 19, 161.).*

*[கறை → கறையோர்.]*

**கறைவிலங்கு** *karai-vilangu,* பெ.(n.) செந்தரைப்பூடு (L.); a species of white cedar (சா.அக.).

**மறுவ.** கருவிலங்கம்

*[கறை + விலங்கு.]*

**கறைவிழியாள்** *karaiviliyāl,* பெ.(n.) கஞ்சாறு கோரை; wild basil (சா.அக.).

*[கறை + விழியாள்.]*

**கன்[1](னு)—தல்** *kan(nu)-,* 5 செ.குன்றாவி.(v.t.) ஈனுதல், பிள்ளைப் பெறுதல்; to give birth.

**தெ.** கனு

*[குல் → கல் → கன்.]*

**கன்**[2] *kaṉ,* பெ.(n.) 1. வேலைப்பாடு; workmanship. *"கன்னார் மதில்சூழ் குடந்தை" (திவ். திருவாய். 5, 8, 3.).* 2. கன்னார் தொழில் (வின்.); copper work. 3. செம்பு. (ஈடு. 5, 8, 3.); copper. 4. ***கன்னத்தட்டு*** (நன். 217, விருத்.) பார்க்க; see kanna-t-tattu.

*[கல் → கன் (வே.க.190.).]*

**கன்**[3] *kaṉ,* பெ.(n.) 1.கல்(சூடா.); stone.2. உறுதிப்பாடு (ஈடு, 5, 8, 3.); firmness.

*[கல் → கன்.]*

**கன்**[4] *kaṉ,* பெ.(n.) கன்னாரத்தொழில்; the occupation of smiths,smithy. *"மின்னும் பின்னும் பன்னும் கன்னும் அந்நாற் சொல்லும் தொழிற் பெயரியல" (தொல்.எழுத்து நூற்பா 345.).*

*[குல் → கல் → கன்.]*

**கன்கூட்டு** *kaṉ-kūṭṭu,* பெ.(n.) கற்சுருங்கை; cave, cavern. *"கன்கூட் டெய்தி கறந்தனனிருப்ப" (பெருங். இலாவண. 17, 17.).*

*[கல்+ கட்டு.]*

**கன்சருக்கரை** *kaṉ-šarukkarai,* பெ.(n.) கற்கண்டு; loaf sugar.

*[கண்டசருக்கரை → கன்சருக்கரை.]*

**கன்மகாண்டம்** *kaṉma-kāṇḍam,* பெ.(n.) முற்பிறப்புத்தீவினைகளால் தோன்றும் நோய்களையும் அவற்றிற்குரிய மருத்துவ முறைகளையும் விளக்கும் ஒரு மருத்துவ நூல்(வின்.); a medical treatise on diseases caused by the sins of former births, and their cure.

*[கருமம்→கன்மம் + காண்டம்.]*

**கன்மடி** *kaṉ-maḍi,* பெ.(n.) ஆவின் காய்மடி (யாழ்.அக.); hard udder of cows, yielding milk with difficulty.

*[கல் + மடி – கன்மடி.]*

**கன்மணவாரி** *kaṉ-maṇavāri,* பெ.(n.) நான்கு மாதங்களில் விளையும் ஒருவகை நெல்; (Rd.m.45.). a kind of coarse paddy sown in September maturing in four months.

*[கல் + மணவாரி.]*

**கன்மதம்** *kaṉ-madam,* பெ.(n.) ஒரு மருந்துச்சரக்கு (பதார்த்த. 1229.); rock alum.

**ம.** கன்மதம்

*[கல் + மதம்.]*

**கன்மதில்** *kaṉmadil,* பெ.(n.) கல்லால் அமைந்த மதில்; wall round a fort built by stone.

**ம.** கல்மதில்

*[கல் + மதில்.]*

**கன்மரம்**[1] *kaṉmaram,* பெ.(n.) கருஞ்சந்தனம்; black sandal wood.

*[கல் + மரம்.]*

**கன்மரம்**[2] *kaṉmaram,* பெ.(n.) நெடுங்காலத்திற்கு முன்பு மண்ணில் புதைந்த மரங்களின் ஊடே படிப்படியாகச் சுண்ணாம்புச் சத்துப் புகுந்து, அதன் பழைய வடிவிலேயே கல்லாகிப்போன மரம்; impression of a tree embedded in rock, fossilized tree.

*[கல் + மரம்.]*

**கன்மலி** *kaṉ-mali,* பெ.(n.) ஏலம் (மலை.); cardamom plant.

*[கல் + மலி.]*

**கன்மலை** *kaṉ-mali,* பெ.(n.) 1. பெரும்பாறையாலான மலை; rocky mountain. 2. படிக்காரம் (வின்.); rock, alum.

**ம.** கன்மல

*[கல் + மலை.]*

**கன்மழை** *kaṉ-maḻai,* பெ.(n.) ஆலங்கட்டியாகப் பெய்யும் மழை; hail. *"கன்மழை சொரிந்திடும்" (கந்தபு. திருநகரப். 15.).*

**மறுவ.** கன்மாரி

**ம.** கல்மழ; **க.** கல்மழெ; **பட.** கல்லுமே.

*[கல் + மழை.]*

**கன்மா** *kaṉ-mā,* பெ.(n.) காட்டுமா (L.); a species of Buchanan's mango.

*[கல் + மா.]*

**கன்மாடம்** *kanmādam,* பெ.(n.) கருங்கல்லால் அமைந்த கட்டடம்; a granite building, stone house.

ம. கன்மாடம்

[கல் + மாடம்.]

**கன்மாடன்** *kanmādan,* பெ.(n.) களங்கமுடையவன்; one who is spotted, as the moon. *"மேனிகருகிக் கன்மாட னானான்" (குற்றா. தல. வடவருவி. 17.).*

[கல் + மாடன்.]

**கன்மாரி**[1] *kanmāri,* பெ.(n.) ***கன்மழை*** பார்க்க; see *kanmalai.*

ம. கல்மாரி

[கல் + மாரி.]

**கன்மாரி**[2] *kanmāri,* பெ.(n.) உடலெங்கும் காய் காயாக கொப்பளம் உண்டாக்கும் ஒரு வகை அம்மை நோய்; a form of small pox.

[கல் + மாரி.]

**கன்மி**[1] *kanmi,* பெ.(n.) ***கருமி*** பார்க்க; see *karumi.*

**கன்மி**[2] *kanmi,* பெ.(n.) தொழிலாளி; labourer. *"மட்கலஞ்செய் கன்மி" (பாரத. திரௌபதிமாலை. 64.).*

[கருமி → கன்மி.]

**கன்மிகள்** *kanmigal,* பெ.(n.) ***கருமிகள்*** பார்க்க; see *karumigal.*

[கரு → கருமி→ கன்மா.]

**கன்மிளகு** *kanmilagu,* பெ.(n.) கெட்டி மிளகு; solid and matured pepper seed (சா.அக.).

[கல் + மிளகு – கன்மிளகு.]

**கன்மீன்** *kan-min,* பெ.(n.) பதினாறுவிரலம் வளரக் கூடியதும் மஞ்சட் பழுப்பு நிறமுடையதுமான ஒருவகைக் கடல்மீன்; bride-fish, purplish yellow, attaining 16 inches. in length.

ம. கல்மீன்

[கல் + மீன்.]

**கன்முகை** *kan-mugai,* பெ.(n.) மலைக்குகை; mountain cavern. *"கன்முகை வயப்புலி" (ஐங்குறு. 246.).*

[கல் + முகை.]

**கன்முரசு** *kan-murašu,* பெ.(n.) பெருவாகை (மலை.); siris.

[கல் + முரசு.]

**கன்முரிசு** *kanmurišu,* பெ.(n.) புரசு (சங்.அக.); east indian satinwood.

[கல் + முரிசு.]

**கன்முருக்கு** *kanmurukku,* பெ.(n.) கல் முருக்க மரம்; a species of moringa tree (சா.அக.).

[கல் + முருக்கு.]

**கன்முலை** *kan-mualai,* பெ.(n.) இறுகிய ஆவின்மடி; hard udder.

[கல் + முலை.]

**கன்முழை** *kan-mulai,* பெ.(n.) மலைக்குகை (புறநா. 86, உரை.); mountain cavern.

[கல் + முழை. முழை=குகை.]

**கன்மேய்வு** *kan-mēyvu,* பெ.(n.) மாடப்புறா (பிங்.); blue rock-pigeon.

[கல் + மேய் – கல்மேய் → கன்மேய் → கன்மேய்வு.]

**கன்மேலெழுத்து** *kan-mēl-eluttu,* பெ.(n.) அழிவில்லாக் கல்லில் எழுதிய எழுத்து; inscription on a stone, expressive of that which is stable and enduring. *"கன்மே லெழுத்து போற் காணுமே" (வாக்குண். 2.).*

[கல் + மேல் + எழுத்து.]

**கன்மொந்தன்** *kan-mondan,* பெ.(n.) வாழைவகை; a kind of Abyssinian banana.

[கல் + மொந்தன்.]

**கன்றல்** *kanral,* பெ.(n.) 1. சினக்குறி (பிங்); sign of anger. 2. எழுச்சியின் மிகுதி (திவா.); luxuriance.

[கன்று →கன்றல்.]

**கன்றி** *kanri,* பெ.(n.) சிறுகீரை; pig greens (சா.அக.).

[கன்று (இளமை) → கன்றி.]

**கன்றிப்போ–தல்** *kanripō-,* 8 செ.கு.வி. (v.i.) சதைக் கன்றுதல்; to become injured by blow without breaking the skin (சா.அக.).

[கன்று → கன்றி.]

**கன்றினகாயம்** *kaṉṟiṉa-kāyam,* பெ.(n.) கன்றிப் போன புண்; livid mark; contused wound.

*[கன்று – கன்றின + காயம்.]*

**கன்று-தல்** *kaṉṟu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. முதிர்தல்; to mature, grown intense. *"களவின்கட் கன்றிய காதல்" (குறள். 284.).* 2. அடிபடுதல்; to get accus-tomed. *"கன்றிய கள்வன்" (சிலப். 16, 152.).* 3. சினக் குறிப்புக் கொள்ளுதல். (தி.வா.); to be enraged. 4. வெயிலாற் கருகுதல்; to be scorched; to be sun-burnt, as the face. வெயிலில் முகம் கன்றிவிட்டது (உ.வ.). 5. களைகுன்றுதல்; to become dim or dull. 6. மனமுருகுதல்; to feel compassion; to melt, as the heart. *"கலையின்பிணை கன்றிடுமென்று" (சீவக. 1188.).* 7. வருந்துதல்; to suffer, to be aggrieved. நெஞ்சு கன்றக் கவிபாடுகிற (ஈடு. 3,9,6.). 8. குழப்ப மடைதல்; to be vexed, confused. 9. நோதல்; to become sore, as with a blow, as the feet with walking, as the hands with first using a tool. நடந்துநடந்து கால்கன்றியது (இ.வ.). 10. வாடுதல்; to fade, become pale, as from exhaustion. *"தன்னுடம்பு கன்றுங்கால்" (திரிகடு. 91.).* 11. அடி படுதலால் காய் முதலியன பதனழிதல்; to become hard and unfit for use, as fruits injured in their growth. காய்கன்றி விழுந்தது (உ.வ.).

**ம.** கன்னுக; **க., தெ., பட.** கந்து. **குட.** கந்தி; **து.** கந்துனி.

*[கல் → கன்று → கன்றுதல்.]*

*காய் கிழங்கு முதலியன கடினமாதல். [மு.தா.246]. கன் → கன்று → கன்று = சினத்தல், வெயிலாற் கருகுதல் [வ.மொ.வ.82.].*

**கன்று**[2] *kaṉṟu,* பெ.(n.) 1. கழுதை, கடமை, ஆன், எருமை, யானை, குதிரை, மரை, கவரிமா, கராம், ஒட்டகம் முதலிய விலங்குகளின் இளமைப் பெயர்; calf, colt; young of the animal. *"பிள்ளை குழவி கன்றே போத்தெனக் கொள்ளவும் அமையும் ஓரறிவுயிர்க்கே" (தொல். பொருள். 570.); "கன்று கூடி களம் அடித்தால் வைக்கோலும் ஆகாது செத்தையும் ஆகாது." – (பழ.).* 2. மா, புளி, வாழை முதலியவற்றின் இளநிலை.;sapling, young tree. *"கருப்புரக்கன்று" (சீவக. 1267.).* 3. சிறுமை (தி வா.); anything insignificant, trifle, particle. 4. கைவளை; bracelet. *"கன்றணிகரத்தெம் மன்னை" (சீகாளத். பு.கன்னி.147.).*

**ம.** கன்னு; **க.** கந்து, கரு, கறு, கறுவு; **தெ.** கந்து, கந்துவு (குழந்தை); **து.** கஞ்சி, கந்து; **தூட.** கொர்; **பட.** கரு; **பர்.** கர் (நாற்று); **கட.** கர் (ஈனுதல்); **கோண்.** கோண்ட (எருது); **கூ.** கோறு; **குரு.** கந்து; **மா.** கடெ(மகன்): **பிரா.** கணங்க (பெறுதல்); **கொர.** கஞ்சிகெ; **கசபா.** கய்ந்தி;

கன்– **தெ.** கனு = பிள்ளைபெறு (to bring forth young) ஆபிரகாமு ஈசாக்குனு கனெனு = ஆபிரகாம் ஈசாக்கைப் பெற்றான்.

**பிரா.** (பிராகுவீ). கன் (khan), to gibe brith to.

**KGad.** Karr, to yean; Kur (kurukh), kharj to be produced, to bear Fruit.

**LATIN WORDS:**

- L. geno, to beget. genero, to beget, produce, create, cause to exist, bring to life, generate.

**Gener,** a son-in-law.

**Generosus,** of noble birth.

genesis, the constellation which presides over one's birth.

**Genetivus. Genativus,** in norn, innate

**Genetrix,** one who brings forth or bears, a mother.

**Genitabilis,** relating to production or birth

genitalis. belonging to birth.

**Genitura,** a begetting, genitor, a begetter.

**Gens,** a clan, a number of families connected together by a common discent and the use of the same gentile name.

**Genus,** birth, descent, origin.

**GREEK WORDS**

GK, genos, race.

**genomai. gignamai,** I am born.

**genea,** race

**genēs,** born,of, produced by.

**gennān,** to beget.

**Teutonic words derived from Latin and Greek**

E. **gen,** GK. suf. forming nn. in Scientific use.

1. in the sense 'that which produces' Ex.oxygen, hydrogen, nitrogen.

2. in the sense 'growth'. Ex. undogen, acrogen, thallogen.

**gender,** ME f. OF gon(d)re, f. L. genus.

**gene,** modern formation of GEN.

**geneology,** ME f. OF (gie) f. LL. f. GK. genealogia.

**General,** ME f. OF f.L. generalia.

**generate,** of L. generare, to beget.

**generic,** f. F. **generique** or mod.

L, genericus.

**genesis,** L. f. GK. gen, to become.

**genetic,** f. L. **genesis**. **genial, generative**. f. L.

**genialis**. **genital**. f. OF. genital or L.

genitalis, genitalia (genit, to beget)

**genitive,** ME. f. OF **genitif** or L. genitivus

**genius**. f. root of L. **gignere,** to beget.

**genscide** f. GK. **genos**, race (cide, killing)

**gens,** clan. f. L. **gignere,** to beget. **genteel,** re- adoption of F. gentil. **gentile,** ME f.L. gentilis.

**gentle,** well-born. ME f. OF gentil f.L. gentilis.

**gentry,** prob. f. obs. gentrice f. OF genterise.

**Genuine,** pure-bred, f.L. genuinus

innate, authentic.

genus, group of species. f.L.

genus - aris. geny, suf. forming nn. indicating mode of production f. F. genie (gen)

Ex. monogeny, anthropogeny. **gony,** suf. signifying creation. E. cosmogony f. GK. cos-mogonia, cosmos, universe, **gonia** f. **gonos**, begetting.

**சமற்கிருதச் சொற்கள்.**

*(கன்* – gan - *ஜந்)*

*ஜந்,* to be born, RV, AV. to grow, AV. to generate beget, produce, create, cause RV, AV. to be grown or produced, come into existence, RV, AV.

*ஜந,* generating, creature, living being, man, person, race, RV.

*ஜநக,* (K) generative, generating, begetting, producing causing, a progenitor, father.

*ஜநந,* generating, begetting, producing, causing, a progenitor creator, birth.

*ஜநநீ,* mother.

*ஜநயதி,* (ti), generation.*ஜநி,* a woman, wife.

*ஜநித,* (ta) engendered, begetting, produced, occasioned.

*ஜநித்ர,* a birth place, place of origin, home, origin.

*ஜநீ,* a daughter-in-law *ஜந்து,* a child, off-spring, a creature, living being, man, person.

*ஜந்ம,* birth

*ஜந்மந்,* birth, production.

*ஜந்ய,* born, produced; born or arising or produced from, occasioned by.

*ஜந்–ஜ*

*ஜ,* born or descended from, produced or caused by, born or produced in or at or upon, growing in, living at.

*எ–டு: அக்ரஜ,* (g) *அண்டஜ, அநுஜ, கிரிஜ,* (g) *த்விஜ, நிஜ, பங்கஜ* .......(nk) *ஸஹஜ.*

*ஜ–ஜா*

*ஜா* born, produced. Ex. agraja, adrija *ஜாத* (ta), born, brought into existence by, engendered by, grown, produced, arisen, caused, appeared, appearing on orin, destined for. (taka) engendered by, born under an asterism, a new-born child, nativity, astrological calculation of a nativity, the story of a former birth of Gauthama Buddha. *ஜாதி* (ti), birth, production, re-birth, the form of existence fixed by birth, position assigned by birth, rank, causte, family, race, lineage, kind, genus, species, the generic properties, the character of a species.

*ஜாந* birth, origin, birth place. ஆங்கிலச் சொல்லாராய்ச்சியாளர், kind, king என்னுஞ்சொற்களையும் kin என்னுஞ்

சொல்லினின்று திரிக்கின்றனர். "kind, n. ME. kinde, kund, kende, fr. OE. cynd. ge-cynd, kind nature, quality, manner, origin, generation off-spring, rel. to OE. cyn. kind, kin."

"Kindergarten. n.G. kindergarten, lit. 'garden of childred' . . . . . kinder, Pl. of kind, child, and garten, garden, kin-kind" "Kinchin, n.child - corrupted fr. G.Kindchen, 'little child' dimin. of Kind, child, which is rel. to ON kunder, son" - klenis.

சமற்கிருதம் உட்பட்ட ஆரிய மொழிகளையெல்லாம் ஆழ்ந்து ஆராய்ந்த கீற்று (skeat) கிளேன் முதலிய பேரறிஞரெல்லாம் மேற்காட்டிய சொற்கட்கு ***gen, gene*** என்பதே வேர் என்று திட்ட வட்டமாய்க் குறித்துள்ளனர்.

க – ச, **ga** - ஜ ஆதலால், **gan (Kan)** என்பது மூலமும் **jan** என்பது அதன் திரிபுமாகும் என்று தெற்றெனத் தெரிந்து கொள்க (செல்வி சூலை 78, பக். 541–544).

*[கன் → கன்று.]*

கன்று – மா, புளி, வாழை முதலியவற்றின் இளநிலை. யானை, குதிரை, கழுதை, ஆ, எருமை முதலியவற்றின் கன்றுகளைக் குறித்த 'கன்று' இன்று ஆ, எருமைக் கன்றை மட்டும் குறித்து நிற்கிறது.

**கன்றுக்குட்டி** *kaṉṟu-k-kuṭṭi,* பெ.(n.) ஆன், எருமை களின் இளங்கன்று (உ.வ.); calf.கன்றுக் குட்டியிடமும் கடன்காரனிடமும் இருக்கக்கூடாது (உ.வ.).

**ம.** கன்னுகுட்டி; **G.** kalf; **Dan.** kalv; **Du.** kalf; **Norw.** kalv; **Swed.** kalv; **Yid.** kalf.

*[கன்று + குட்டி.]*

**கன்றுக்குட்டிப்புல்** *kaṉṟu-k-kuṭṭi-p-pul,* பெ.(n.) கானாவாழை (m.m.); calf's grass.

*[கன்று + குட்டி + புல்.]*

**கன்றுக்குடுமி** *kaṉṟu-k-kuḍumi,* பெ.(n.) குடுமியைச் சுற்றி வளர்க்குஞ் சிறுகுடுமி (உ.வ.); hair allowed to grow next to tuft.

*[கன்று + குடுமி.]*

**கன்றுகயந்தலை** *kaṉṟu-kayandalai,* பெ.(n.) சிறுபிள்ளைகள்; children.

*[கன்று + கயந்தலை.]*

**கன்றுகால்மாறு-தல்** *kaṉṟu-kālmāṟu-,*5செ.குன்றாவி (v.t.). 1. தீயனவாயுள்ள தங்கன்றுகளை மாற்றி வைத்து நல்லன வாயுள்ள பிறர் கன்றுகளை எடுத்துக்கொள்ளுதல்; to substitute stealthily one's bad calves for another's good calves. 2.கன்றுகளைக் களவிலே நிலை பேர்த்துக் கொண்டுபோதல்; to steal away calves.

*[கன்று + கால் + மாறு-.]*

**கன்றுகாலி** *kaṉṟu-kāli,* பெ.(n.) கன்றுகளுடன் கூடிய மாட்டுமந்தை (வின்.); cattle, young and old.

**ம.** கன்னுகாலி

*கன்னாலிப்பிள்ளர் (மாட்டுக்காரன்).*

*[கன்று + காலி.]*

**கன்றுகொல்லி** *kaṉṟu-kolli,* பெ.(n.) கன்றுகள் இறக்கும்படி கால்நடைகளுக்கு வரும் நோய் (வின்.); disease in cattle causing the death of their calves.

*[கன்று + கொல்லி.]*

**கன்றுதாய்ச்சி** *kaṉṟu-tāycci,* பெ.(n.) சினைஆன் (வின்.); pregnant cow.

*[கன்று + தாய்ச்சி.]*

ஒ.நோ. பிள்ளைத்தாய்ச்சி.

**கன்றுப்பொங்கல்** *kaṉṟu-p-poṅgal,* பெ.(n.) மாட்டுப்பொங்கலுக்கு அடுத்தநாள்; the day after the māttu-p-poṅgal.

*[கன்று + பொங்கல்.]*

காண்பொங்கல் அல்லது காணும் பொங்கல் என்ற வடிவம் கண்ணுப்பொங்கல் என்றும் ஆளப்படுதல் உண்டு. பின்னர்க் கண்ணு, கன்று என்பதின் கொச்சை வடிவமாக இருக்கக்கூடும் எனக்கொண்டு இதைக் கன்றுப் பொங்கல் என மாற்றிச் சொல்லியுள்ளனர்.

இதையே செ.அக. குறித்துள்ளது. ஆனால் காண் பொங்கல் அல்லது காணும் பொங்கல் என்பதே சரியான வழக்கு. காண் பொங்கல் பார்க்க.

**கன்றுபடு-தல்** *kaṉṟu-paḍu-,* 20.செ.கு.வி.(v.i.) ஆன் முதலியன சினைப்படுதல் (வின்.); to be pregnant, as a cow.

*[கன்று + படு. படுதல் = தோன்றுதல், உண்டாதல்.]*

**கன்றுபுக்கான்** *kaṉṟu-pukkāṉ,* பெ.(n.) கானா வாழை (வின்.); calf's grass.

*[கன்று + புக்கான்.]*

**கன்றுபோடு-தல்** *kaṉṟu-pōḍu-,* 20.செ.கு.வி.(v.i.) ஆன் முதலியன கன்றீனுதல்; to yean, calve.

*[கன்று + போடு-.]*

**கன்றுமேய்பாழ்** *kaṉṟu-mēy-pāḻ,* பெ.(n.) ஊரில் கால்நடை மேயும் பொதுநிலம் (S.I.I.iii,305.); village pasture land.

*[கன்று + மேய் + பாழ்.]*

**கன்றுவிடு-தல்** *kaṉṟu-viḍu-,* 20 செ.கு.வி.(v.i.) 1.பால்சுரக்கும்படி கன்றை ஊட்டவிடுதல்; to let the calf suck the cow for starting the flow of milk. 2. பால் கறத்தல்; to milk.

*[கன்று + விடு-.]*

**கன்றுவீசு-தல்** *kaṉṟu-vīsu-,* 5.செ.கு.வி.(v.i.) ஆன் முதலியன அகாலத்தில் ஈனுதல், கருக்கலைதல்; to miscarry as a cow.

*[கன்று + வீசு-.]*

**கன்னக்கட்டு** *kaṉṉa-k-kaṭṭu,* பெ.(n.) 1. கன்னத்தி லேற்படும் வீக்கம்; swelling of the cheeks. 2. கூகைக்கட்டு; mumps.

*[கன்னம் + கட்டு.]*

**கன்னக்களவு** *kaṉṉa-k-kaḷavu,* பெ.(n.) 1. சுவரில் துளைபோட்டு அதன்வழியாக வீட்டினுள் சென்று செய்யும் களவு; theft by house-breaking; burglary. 2. கன்னம் போட்டுத்திருடிக்கொண்ட பொருள்; property acquired by house - breaking.

**ம.** கன்னக்களவு; **க.** கன்னகளவு.

*[கன்னம்[3] + களவு.]*

**கன்னக்காரன்** *kaṉṉa-k-kāraṉ,* பெ.(n.) 1. கன்ன மிடுந்திருடன்; house-breaker, burglar. 2. ஏமாற்று பவர்; a deceitful person.

**ம.** கன்னக்காரன்; **க.** கன்னகார; **தெ.** கன்னகாடு.

*[கன்னம்[3] + காரன்.]*

**கன்னக்கிரந்தி** *kaṉṉa-k-kiranti,* பெ.(n.) தோல் நோயால் கன்னத்திலுண்டாகும் ஒருவகைக் கட்டி (மூ.அ.); swelling in the cheek due to skin disease.

*[கன்னம்[2] + கிரந்தி.]*

**கன்னக்கீரை** *kaṉṉakkīrai,* பெ.(n.) சிறுகீரை; pig green (சா.அக.).

*[கன்று → கன்னு + கீரை.]*

**கன்னக்குடுமி** *kaṉṉa-k-kuḍumi,* பெ.(n.) காதுக்கு மேற்பக்கமாக முடிக்குங்குடுமி (யாழ்ப்.); side-lock of tuft.

*[கன்னம் + குடுமி.]*

**கன்னக்குருகு** *kaṉṉa-k-kurugu,* பெ.(n.) நோய் வகை (பரராச. 1, 236.); a form of disease.

*[கன்னம் + குருகு.]*

**கன்னக்கொண்டை** *kaṉṉa-k-koṇḍai,* பெ.(n.) ஒரு வகை மயிர்முடிப்பு (வின்.); coil of hair tied in a special way.

*[கன்னம் + கொண்டை.]*

**கன்னக்கோல்** *kaṉṉa-k-kōl,* பெ.(n.) 1. சுவரைத் தோண்டுதற்குக் கள்ளர் கையாளுங் கருவி; iron-crow bar of thieves. *எங்கே திருடினாலும் கன்னக்கோல் வைக்க ஒரு இடம் வேண்டும் (பழ.).* 2. நெசவாளர் பயன்படுத்தும் ஒரு கருவி (சேரநா.); an implement of the weavers.

**மறுவ.** *கன்னகம்*

**ம.** கன்னக்கோல்; **க.** கன்னகத்திரி; **தெ.** கன்னக்கோல.

*[கல்லு → கன்னு → கன்னம். கல் = தோண்டுதல். கன்னம் = குழி, குழித்தல், வெட்டுதல். கன்னம்[4] + கோல்.]*

*கன்னக்கோல் = சுவரில் துளையிடும் சிறிய கடப்பாறை.*

**கன்னகம்** *kaṉṉagam,* பெ.(n.) **கன்னக்கோல்** பார்க்க; see *kaṉṉa-k-kōl. "கன்னக மின்றியுங் கவைக்கோ லின்றியும்" (சிலப். 16, 142.).*

*[கன்னம் → கனன்னகம்.]*

**கன்னகுப்பியம்** *kaṉṉa-kuppiyam,* பெ.(n.) இசிவு (சன்னி) வகை (தஞ்.சரசு. 111, 194); a kind of delirium.

*[கன்னம் + குப்பியம்.]*

**கன்னங்கரேல்** *kaṉṉaṅ-karēl*, பெ.(n.) மிகக் கறுப்பு நிறம்; deepest black colour (சா.அக.).

*[கல் → கன் → கன்னம் + கறேல்.]*

**கன்னங்கரேலெனல்** *kaṉṉaṅ-karēl-eṉal*, பெ.(n.) மிகக் கறுத்தகுறிப்பு; expr. signifying pitch like darkness.

*[கல் → கன்னம் + கறேல் + எனல்.]*

**கன்னச்சிலந்தி** *kaṉṉa-c-cilandi*, பெ.(n.) ***கன்னப் புற்று*** பார்க்க; see *kaṉṉa-p-puṟṟu* (சா.அக.).

*[கன்னம் + சிலந்தி.]*

**கன்னசந்தம்** *kaṉṉašandam*, பெ.(n.) செவித்துளை; ear-cavity.

*[கன்ன + சந்தம். கன்ன + சந்து (சந்தம்). சந்து = துளை.]*

**கன்னசாலை** *kaṉṉa-šālai*, பெ.(n.) மேல்மாளிகைப் பக்கங்களில் முன்புறம் நீண்டுள்ள பரண்கூடு; balcony. *"மீதொருபாற் கன்னசாலை குல வயிரத்தா லமைத்த கொள்கையாலே" (பெரியபு. திருக்குறிப். 91.).*

*[கன்னம் + சாலை.]*

**கன்னசூலை** *kaṉṉa-šūlai*, பெ.(n.) கன்னக்கழலை நோய்வகை (வின்.); tumour in the region of the cheek.

*[கன்னம் + சூலை.]*

**கன்னஞ்செய்–தல்** *kaṉṉañ-cey-*, 1. செ.குன்றாவி. (v.t.) கேட்டல்; to hear. *"கன்னஞ்செய்வா யாகில்" (பதினொ. சேத்திர. 20.).*

*[கன்னம் + செய்–.]*

**கன்னடகௌளம்** *kaṉṉaḍa-kauḷam*, பெ.(n.) ஒருவகைப்பண் (பரத. இராக. 55,); a musical mode.

*[கன்னடம் + கௌளம்.]*

**கன்னடம்** *kaṉṉaḍam*, பெ.(n.) 1. ஐந்து திராவிட மொழிகளுள் ஒன்றான கன்னடம் பேசுகின்ற நாடு; the Kannada country, the place where the Kannada language is spoken. கொங்கணங் கன்னடந் தெலிங்கம் (நன். 272. மயிலை.). 2. இந்தியப் பதினெண்மொழிகளுள் ஒன்று; language of the Kanarese, one of 18 languages of India mentioned in Tamil works. 3. ஒருவகைப்பண். (பரத. இராக. 55.); a musical note.

ம. கன்னடம்; க. கன்னட; தெ. கன்னடமு; து. கர்நாடக, கன்னட; மரா. கானட; Skt. karṇāṭa.

*[கல் = மலை, குன்று. கல்+நாடு–கன்னாடு→கன்னடம்.]*

மலையாளத்திற்கு அடுத்து தமிழோடு தொடர்புள்ளது கன்னடம். கன்னடம் என்பது கருநடம் என்னும் தமிழ்ச்சொல்லின் திரிபு. இது முதலாவது கன்னட நாட்டைக் குறித்தது. இதன் பழைய வடிவங்கள் கருநாடு, கருநாடகம் என்பன. கன்னட நாட்டார் கருநாடர் என்றும் கருநடர் என்றும் அழைக்கப்பட்டனர். [பாவாணர் – திராவிடத்தாய், பக். 54]

தொல்காப்பியர் காலத்தில் கன்னடம் தோன்றவில்லை. கன்னடம் தமிழிலிருந்து பிரிந்தது. ஏறத்தாழ கி.பி. 6ஆம் நூற்றாண்டு எனக்கூறலாம்.

திருந்திய திராவிட மொழிகளுள் ஒன்றான கன்னடம் இலக்கிய இலக்கண வளமுடையது.

**கன்னடர்** *kaṉṉaḍar*, பெ.(n.) கருநாடக நாட்டைச் சேர்ந்தவர்; people of Kannada country, the Canarese people.

ம. கன்னடர்

*[கருநாடர் → கன்னடர்.]*

**கன்னடா** *kaṉṉaḍa*, பெ.(n.) கன்னாடப் (கானடா) பண்; a musical mode.

*[கல் + நாடு – கன்னாடு → கன்னாடம் → கன்னாடா (கொ.வ.).]*

**கன்னடிகன்** *kaṉṉaḍigaṉ*, பெ.(n.) கன்னடநாட்டான், (S.I.I.i, 83); native of the Canerese country.

க. கன்னடிக

*[கல் + நாடு – கன்னாடு + அகன் – கன்னாடகன் → கன்னடிகன் (கொ.வ.).]*

**கன்னடுதல்** *kaṉṉaḍudal*, பெ.(n.) போரில் இறந்த மறவனது உருவகுத்துப் பெயர் பொறித்த நடுகல் நாட்டுதலைக் கூறும் புறத்துறை (பு. வெ. 10, பொதுவியற். 12.); theme of setting up a memorial stone for a warrior who died in battle.

*[கல் + நடுதல் – கன்னடுதல்.]*

**கன்னத்தசை** *kaṉṉattašai,* பெ.(n.) கன்னப் பகுதியின் தசை; buccinator.

*[கன்னம் + தசை.]*

**கன்னத்தட்டு** *kaṉṉa-t-taṭṭu,* பெ.(n.) சிறுதுலைத் (தராசு) தட்டு (நன். 217. விருத்.); scale-pan, pan of a small balance.

*[கன்[1] + தட்டு – கன்னத்தட்டு. கன்னான் செய்து கொடுத்த துலைத்தட்டு.]*

**கன்னதாளி** *kaṉṉatāḷi,* பெ.(n.) நிலப்பனை; ground palm (சா.அக.).

*[கல் → கன் → கன்னம் + தாளி.]*

**கன்னப்பரிசை** *kaṉṉa-p-parišai,* பெ.(n.) 1. கதுப்பு மயிர் (வின்.); whiskers on the cheek. 2. கீழலகு; mandible or lower jaw (சா.அக.).

*[கன்னம் + பரிசை.]*

**கன்னப்பால்** *kaṉṉappāl,* பெ.(n.) மாட்டின் ஈன்றணிமைப் பால்; beestings, especially of cow.

**மறுவ.** சீம்பால், திரட்டுப்பால், கடும்பு – தீம்பால்;

**க.** கிண்ணு வாலு, கிண்ணு காலு; **தெ.** சுன்னு.

*[கன்னு + அம் + பால். கன் → கன்னு (திரட்டு)]*

**கன்னப் பிளவை** *kaṉṉa-p-piḷavai,* பெ.(n.) கன்னத்தில் ஏற்படும் கட்டி வகை;

*[கன்னம் + பிளவை.]*

**கன்னப்புற்று** *kaṉṉa-p-puṟṟu,* பெ.(n.) பெரும்பாலும் குழந்தைகட்கு வரும் ஒரு கன்னப்பிளவை (யாழ்.அக.); a form of cancer in the form of a shallow ulcer, most frequently in the mouth of ill-fed delicate children after a debilitating disease (செ.அக.).

**ம.** கன்னப்புற்று

*[கன்னம் + புற்று.]*

**கன்னப்பூ** *kaṉṉa-p-pū,* பெ.(n.) காதணிவகை; jewel worn at the top of the ear, usually made of gold.

**ம.** கன்னப்பூ, கன்னப்பூவு.

*[கன்னம் + பூ (வே.க. 191).]*

**கன்னப்பொறி** *kaṉṉa-p-poṟi,* பெ.(n.) கன்னத்தின் பொட்டு (வின்.); temple, the flat part of either side of the face between forehead and ear.

*[கன்னம் + பொறி.]*

**கன்னம்[1]** *kaṉṉam,* பெ.(n.) 1. பொற்கொல்லர் கையாளும் சிறிய துலைத் தட்டு (திவா.); scale pan of a goldsmith. 2. நோய் தணியும் பொருட்டுக் கோயிற்கு நேர்த்தியாகச் செய்து கொடுக்கும் சிறுபடிமம்; small image presented to a temple for effecting a cure. *"கன்னந் தூக்கி" (ஐங்குறு. 245.).*

*[கன்[1] → கன்னம்–.]*

**கன்னம்[2]** *kaṉṉam,* பெ.(n.) 1. கதுப்பு; cheek. *"கன்னத்து விழுந்தது காளர்கதை" (உபதேசகா. சிவ நாம.51).*

**ம.** கன்னம்; **க.** கன்ன; கென்னெ; **பட.** கென்னி

*குல் → கல் → கன் → கன்னம் (குழிந்த பகுதி).*

**த.** கன்னம் < **Skt.** karna. (வ.மொ.வ.112.) **Pkt.** kanna. **Iraqi;** khadd.

**West Sudan;** gone; **Nil., Aby., Ger., Norw.** kinn; **It.** guan-cia; **Swed.** kin-d; **Dan.** kind, Berber; **Mzab.** Ka→ga.

**மறுவ.** கொடிறு, கவுள்.

*[கல் → கன் = துளை. கன் → கன்னம் = துளையுள்ள காது, யானைச்செவி, காதையடுத்த அலகுப்பக்கம். வடவர் காட்டும் 'த்' 'க்ரு' என்னும் மூலங்கள் பொருந்தா.]*

**கன்னம்[3]** *kaṉṉam,* பெ.(n.) 1. நாற்பக்கத்தின் (சதுரத்தின்) ஒரு மூலையினின்று அதற்கு நேர் மூலையிலுள்ள குறுக்கு; diagonal. 2. நேர்கோண முக்கோணத்தில் நேர்கோணத்திற்கு எதிரிலுள்ள கை; hypotenuse.

*[குல் → கல் → கன் → கன்னம் = குழி, நடு, நடுப்பக்கத்துக் கோடு.]*

**கன்னம்[4]** *kaṉṉam,* பெ.(n.) சுவரிடிக்கும் சிறிய கடப்பாரை (பிங்.); crow bar for breaking into a house, jemmy. கப்பல் மூழ்கினாலும் கன்னத்தில் கை வைக்காதே (பழ.). 2. கன்னக் கருவியால் அகழ்ந்த துளை; hole made by burglars in a house-wall. *'அன்னம் இட்டாரைக் கன்னம் இடலாமா?' (பழ.).* 3. களவு; theft, burglary. *"கன்னமே கொடுபோயின கண்டகர்" (இரகு. யாகப். 42.).*

**மறுவ.** சுவரகழ்கத்தி

*[கல் = பெரியது, பெருமை. கல் → கன் → கன்னம்.]*

**கன்னம்**[7] *kannam,* பெ.(n.) 1. துளையுள்ள காது; ear. 2. யானைச் செவி (திவா.); cheek of an elephant. 3. காதையடுத்த அலகுப் பக்கம்; temple.

**ம.** கன்னம்; **க.** கன்ன; **தெ.** கன்னம்; **Skt.** karna; **Pkt.** kanna.

*[கன் → கன்னம் (குழிந்த பகுதி). வடமொழியில் கன் என்னும் சொல்லிற்கு மூலமில்லை, மூலமாகக் காட்டப்படும் க்ருத், க்ரு என்பன மூலமாகா.]*

கன்னம் வடபுல மொழிகளில் கன் → கான் எனத் திரிந்து காதை உணர்த்தும் சொல்லாயிற்று. தொடக்க காலத்தில் 'கன்' காதையும், அம் ஈறு பெற்ற கன்னம் காதைச் சார்ந்த பகுதியையும் குறித்திருத்தல் வேண்டும். கான் (கானம்) → காடு எனத் திரிந்தது போன்று முந்து தமிழிலிருந்து கன்→கான் 'காது' எனத் திரிந்த தாகலாம்.

**கன்னம்**[8] *kannam,* பெ.(n.) மாழைகளால் ஏனம் செய்பவன்; brazier.

*[கன்னம்[5] → கன்னம்[8].]*

**கன்னம்போடு-தல்** *kannampōdu,* 18.செ.குன்றாவி.(v.t.) ***கன்னமிடுதல்*** பார்க்க; see *kannamidu-,*

*[கன்னம் + போடு.]*

**கன்னம்வற்று-தல்** *kannamvarru-,* 5 செ.கு.வி.(v.i.) மூப்பு, நோய் போன்றவற்றால் கன்னச் சதை சுருங்குதல்; to emaciate, of the blooming. Cheeks through old age, disease etc.

*[கன்னம் + வற்று.]*

**கன்னம்வை-த்தல்** *kannam-vai-,* 4. செ.குன்றாவி. (v.t.) ***கன்னமிடு-தல்*** பார்க்க; see *kannamidu-.*

*[கன்னம் + வை.]*

**கன்னமதம்** *kanna-madam,* பெ.(n.) ஆண் யானையின் கன்னத்தினின்று தோன்றும் மதநீர் (திவா.); secretion from the temples of male elephants while in rut - masth.

*[கன்னம் + மதம்.]*

**கன்ன மலம்** *kannamalam,* பெ.(n.) காதுக்குறும்பி; ear-wax.

*[கன்னம் + மலம்.]*

**கன்னமிடு-தல்** *kannam-idu-,* 20 செ.குன்றாவி. (v.t.) 1. கன்னக் கோலால் சுவரகழ்தல்; to break into a house through the wall. அன்னமிட்ட வீட்டிலேயே கன்னமிட்டு விட்டான்(உ.வ.). 2. கொள்ளை கொள்ளுதல்; to take in one sweep, as in plunder. *"ஒரு நாளைக் கன்னமிட்டார் தருமமெல்லாங் கன்னமிட்டார்" (குற்றா.தல.மூர்த்தி. 34.).*

**மறுவ.** கன்னம் போடுதல்; கன்னம் வைத்தல்.

**து.** கன்னகுரெபினி (துளை உண்டாக்கு); **க.** கன்னமிடு, கன்னவிடு.

*[கன்னம் + இடு.]*

**கன்னமிலை** *kannamilai,* பெ.(n.) தகரையிலை; leaf of ring worm plant (சா.அக.).

*[கன்னம் + இலை.]*

**கன்னமீசை** *kanna-mīšai-,* பெ.(n.) தாடைமீசை; whiskers.

*[கன்னம் + மீசை.]*

**கன்னமூலம்** *kannamūlam,* பெ.(n.) காதின் உட்புறத்தினடி; the inner ear (சா.அக.).

*[கன்னம் + மூலம்.]*

**கன்னர்** *kannar,* பெ.(n.) செங்குட்டுவனுக்கு நட்பினராகிய ஆந்திரவரசர், சாதவாகனர்; Andhra kings who were the friends of senguttuvan.

*[பிரா. சதகர்ணி > த. சதகன்னி → கன்னி → கன்னர்.]*

**கன்னரதேவர்** *kannaradēvar,* பெ.(n.) தமிழ்நாட்டில் ஆட்சியுரிமை பெற்றிருந்த இராட்டிரகூட அரசர் கிருட்டிணர் III; *"கச்சியுந் தஞ்சையுங்கொண்ட ஸ்ரீ கன்னர தேவர்க்கு" (தெ.இ.கல்.தொ.23 கல் 65 கிபி* 958–59). கன்னரதேவ பிரித்விகங்கரயர் என்பது இவ்வரசனின் முழுப்பெயர்.

*[கன்னரன் + தேவர்.]*

**கன்னல்**[1] *kannal,* பெ.(n.) 1. நீர்க்கலம் (கரகம்.); earthen vessel, water pot. *"தொகுவாய்க் கன்னற் றண்ணீ ருண்ணார்" (நெடுநல். 65).* 2. நாழிகை வட்டில்; a device with two glass chambers containing sand or water that takes an hour to pass from the upper to the lower chamber. *"கன்னலின் யாமங் கொள்பவர்" (மணிமே. 7, 65.).* 3. நாழிகை

வட்டிலால் அறியப்படும் அளவு, நாழிகை; measure of time - 24 minutes. "காவத மோரொரு கன்னலினாக" (கந்தபு. மார்க். 142.).

**ம.** கன்னல்; **க.** கந்தல்; **து.** கந்தெல்.

*[கன்¹→ கன்னல். (வேக. 191). கன் = வெளிவருதல், கசிதல். கன்னல் = கசிதல், ஒழுகுதல், சிறுதுளையுள்ள நீர்க்கலம், நீர்க்கடிகை, நாழிகை வட்டில், நாழிகை வட்டிலால் கணிக்கப்படும் நாழிகை.]*

**கன்னல்²** *kannal,* பெ.(n.) 1. கரும்பு (திவா.); sugar-cane. 2. கருப்பஞ்சாற்றிலிருந்து செய்யப்படும் சருக்கரை; sugar. 3. கற்கண்டு (திவா.); rock-candy. 4. மணற்பாகு (பிங்.); thick molasses.

**ம.** கன்னல்; **து.** கன்ன; **கோத.** கல்ன.

**Ma.** kannā; **L.**canna; **Chin.** gān - zhe; **G.** kanne; **F.**canne.

*[கன் → கன்னல் (ஈனுதல், முளைவிடுதல், வளர்தல்.]*

**கன்னல்³** *kannal,* பெ.(n.) 1. ஒருவகைச் சிறு குருவி; a kind of small bird, prob. tükkanāṅkuruvi. "கன்னலெனுஞ் சிறுகுருவி ... விள்க்கேற்றுங் கார்காலம்" (பெருந்தொ. 1196.).

**து.** கன்ன

*[கன் = ஈனுதல், ஈன்றகுட்டி, சிறுமை. கன் → கன்னல் → சிறுகுருவி.]*

**கன்னல்⁴** *kannal,* பெ.(n.) ***கன்னலமுது*** பார்க்க; see *kannalamudu.*

**கன்னல் சருக்கரை** *kannalšarukkarai,* பெ.(n.) கரும்பின் சாற்றினாற் செய்யப்படும் சருக்கரை; sugar manufactured from the expressed juice of sugar-cane.

*[கன்னல் + சருக்கரை.]*

**கன்னல் வெல்லம்** *kannalvellam,* பெ.(n.) கரும்பின் சாற்றினால் செய்யப்படும் வெல்லம்; jaggery prepared from sugar-cane juice (சா.அக.).

*[கன்னல் + வெல்லம்.]*

**கன்னலமுது** *kannal-amudu,* பெ.(n.) சருக்கரை கலந்து அடும் அடிசில் (பாயசம்.); a liquid food prepared from milk, rice, sago, etc., mixed with sugar or jaggery.

**மறுவ.** கன்னல்

*[கன்னல்¹ + அமுது.]*

**கன்னவகம்** *kannavagam,* பெ.(n.) சிறுகீரை (மலை.); a species of amaranth.

*[கன் → கன்னு + அகம் – கன்னுவகம்.(முளைவிடும் கீரை.)]*

**கன்னற்கட்டி** *kannar-katti,* பெ.(n.) 1. கருப்புக்கட்டி; molasses. "கோதவமிலென் கன்னற்கட்டி" (திவ். திருவாய். 2, 7, 3.). 2. கற்கண்டு. (வின்.); rock-candy.

*[கன்னல் + கட்டி.]*

**கன்னற்றடிப்பு** *kannarradippu,* பெ.(n.) அடி யினால் உண்டான வீக்கம்; protuberance, as on a slapped face; contusion.

*[கன்றல் + தடிப்பு – கன்றல் தடிப்பு → கன்னற்றடிப்பு (கொ.வ).]*

**கன்னன்** *kannan,* பெ.(n.) அங்கநாட்டரசனும் துரியோதனன் நண்பனுமான கர்ணன்; Karna, king of Anga and friend of Duryodhana.

*[கர்ணன் → கன்னன்.]*

**கன்னன்மணி** *kannan-mani,* பெ.(n.) கற்கண்டு; கண்டசருக்கரைத் தேறு; lump sugar. "கன்னன் மணியும் நறுநெய்யும்" (சீவக. 2703.).

*[கன்னல்² + மணி.]*

**கன்னா¹** *kannā,* பெ.(n.) காற்றின் வேகத்தால் கலம் சாயும்போது அதனைச் சமநிலைப் படுத்துதற்குரிய ஓரமைப்பு; an arrangement in a vessel which used to stabilise the vessel at the time of topling.

*[கல் → கன் → துளை, துளையுள்ள, கன் → கன்னா.]*

**கன்னா²** *kannā,* பெ.(n.) தில்லைமரம்; tiger's milk spurge.

*[கல் → கன் → கன்னா.]*

**கன்னாங்கீரை** *kannān-kirai,* பெ.(n.) கானாவாழை (L.); calf's grass.

*[கன்று + ஆம் + கீரை – கன்றாங்கீரை → கன்னாங்கீரை.]*

**கன்னாடகம்** *kannādagam,* பெ.(n.) தற்போது கன்னடம் பேசும் பகுதி; the region where kannada is spoken as mother tongue. "திருமலைப் பள்ளியில் நிசதமொரு அடிகள்மார்க்குச் சோறு வைத்தார் இம்மடிச்சோழக் கன்னாடகக் கடுத்தலை விற்சேவகன் பிடாரன் பூத்துகனும் மதுராந்தகக் கருநாடகக் கடுத்தலை விற்சம நாயகன் சந்தய னாயிரவனும்" (தெ.இ.கல்.தொ.19 கல் 89).

*[கல் + நாடு + அகம் – கன்னாடகம் → கருநாடகம்.]*

**கன்னாடம்** *kannāḍam,* பெ.(n.) ***கன்னடம்*** (வின்.) பார்க்க; see *kannaḍam.*

*[கல் + நாடு – கன்னாடு → கன்னாடம்.]*

**கன்னாடர்** *kannāḍar,* பெ.(n.) ***கருநாடர்*** பார்க்க; see *karunāḍar. "கன்னாடர் மண்கொண்ட வாணன்" (தஞ்சைவா. 356.).*

*[கல் + நாடு – கன்னாடு → கன்னாடர்.]*

**கன்னாடு**[1] *kannāḍu,* பெ.(n.) மலைநாடாகிய கல்நாடு, இன்றைய கருநாடகம்; Karnataka state.

**க.** கன்னாடு

*[கல் + நாடு.]*

**கன்னாடு**[2] *kannāḍu,* பெ.(n.) வீரன் நினைவாக நடுகல் நடுவதற்கான இடம்; place allotted to erect hero-stone. தகடூரில் பட்டார் நாகந்தை சிறுகுட்டி யார் கல்நாடு (s.i.i. vol. 7. insc. 345.).

*[கல் + நாடு.]*

**கன்னாத்தோணி** *kanna-t-tōni,* பெ.(n.) தனிபொரு மரத்திலேயே குடைந்து செய்யப்படும் பெரிய மரக்கலம்; a wooden vessel made of a single log.

[கல் → கன் → கன்னா = துளை, துளைக்கப்பட்ட. *கன்னா + தோணி.]*

**கன்னாரிறை** *kannārirai,* பெ.(n.) கன்னார் செலுத்தும் வரி; tax paid by brazier (தென்.சஅக.)

*[கன்னார் + இறை.]*

**கன்னாபின்னாவெனல்** *kannā-pinnā-v-enal,* பெ.(n.) பொருளின்றிக் குழறுதற் குறிப்பு; expr. signifying vain babble, meaningless talk; talking nonsense.

**பட.** கன்னா பின்னா (ஏறக்குறைய)

*[கன்னா + பின்னா (ஒலிக்குறிப்பு இணைச்சொல்.).]*

**கன்னார்**[1] *kannār,* பெ.(n.) ***கல்நார்*** (பதார்த்த. 1127) பார்க்க; see *kal-nār.*

**ம.** கன்னாரம்; **க.** கல்லுநாரு, கல்நாரு.

*[கல் + நார்.]*

**கன்னார்**[2] *kannār,* பெ.(n.) ஒருமடைக்குரிய பாசனப் பகுதி; area of irrigation.

**கன்னாருரி-த்தல்** *kannār-uri-,* 4 செ.கு.வி. (v.i.) ***கல்லில்நாருரி*** பார்க்க; see *kallil-nāruri. "கன்னாருரித் தென்னை யாண்டுகொண்டான்" (திருவாச. 13,9.).*

*[கல்நார் + உரி.]*

**கன்னான்** *kannān,* பெ.(n.) மாழைகளால் ஏனம் செய்பவன்; brazier, bell-metal worker, one of the divisions of the Kammala caste.

**ம.** கன்னான்; **தெ.** கஞ்சுப்பனிவாடு; **க., து.** கஞ்சுக்கார; **Skt.** kamsakara.

*[கன் → கன்னான்.]*

**கன்னி**[1] *kanni,* பெ.(n.) கரந்தை (சங்.அக.); fragrant basil.

*[கல் → கல்லி → கன்னி.]*

**கன்னி**[2] *kanni,* பெ.(n.) 1. குமரி; virgin, maiden, young, unmarried woman. *"கன்னி தன்னைப் புணர்ந்தாலும்" (சிலப். 7. கானல்வரி. ஆற்றுவரி இசைப்பாடல் 3.). "கன்னி யிருக்கக் காளை மனை ஏறலாமா?" (பழ.).* 2. இளமை; youthfulness, tenderness, juvenility, virginity. *"கன்னிப்புன்னை" (திருக்கோ.177).* 3. புதுமை; freshness. *"கன்னிநீலக்கட் கன்னி" (சீவக. 900).* 4. முதன் முதலான நிகழ்ச்சி; state of being earliest in time. கன்னிப்பேச்சு; கன்னிப்போர்(உ.வ.). 5. அழிவின்மை; imperishable state. *"கன்னிமா மதில்சூழ் கருவூர்" (திவ். பெரியதி. 2, 9, 7.).* 6. பெண் (சூடா.); woman. 7. தவப்பெண் (சூடா.); female ascetic. 8. என்றும் இளமையழியாத பெண்; female possessing perpetual youth, as celestials. சத்தகன்னியர் (பிங்.); 9. கொற்றவை; goddess Durga. *"கன்னிசெங் கோட்டம்" (கல்லா. 58.)* 10. மலைமகள் (பிங்.); Parvati. 11. குமரியாறு; name of a river that flowed in ancient times, south of Cape Comorin. *"கன்னியழிந்தனள் கங்கை திறம்பினள்" (தமிழ்நா. 81.).* 12. கன்னிஓரை. (பிங்.); virgo, a zodiacal sign. 13. புரட்டாசி மாதத்தின் தமிழ்ப்பெயர் (தைலவ. பாயி. 55.); Tamil name of Purattasi. 14. கைம்மீன் (அத்தம்); the 13th naksatra. 15. பத்துநாடியி லொன்று (சிலப். 3, 26 உரை.); a principal tubuler vessel of the human body, one of tasa-nāḍi. 16. கற்றாழை (சூடா.); aloe. 17. காக்கணம். (திவா.); mussel-shell creeper.

**ம.** கன்னி; **க., தெ.** கன்னெ.

த. கன்னி > **Skt. Guj.** Kanya; **Vedic ;** kanyaha; **Turk.** kanim; **Swed.** kvinna. **Norw**: kvinne; **Pkt.** kannaga.

*[கன் → கன்னு → கன்னி.]*

முழுகிப்போன குமரிக்கண்டம் தென்கோடியில் குமரி என்னும் மலைத் தொடரையும் வடகோடியில் குமரி என்னும் பேரியாற்றையும் கொண்டிருந்தது.

'வடவேங்கடம் தென்குமரி' என்னும் தொல்காப்பியச் சிறப்புப் பாயிர அடியிற் குறிக்கப் பட்டது குமரியாறே.

பரதன் என்னும் மாவேந்தனின் மகளாகிய குமரியின் பெயரால், பெயர் பெற்றது குமரிக்கண்டம் என்பது தொல்கதைக்கட்டே.

குமரி, கன்னி என்பன ஒரு பொருட் சொற்கள் ஆதலால், குமரியாறு கன்னியெனவும் படும்.

மன்னுமாலை வெண்குடையான்ஷ
வளையாச் செங்கோலது வோச்சிக்
கன்னி தன்னைப் புணர்ந்தாலும்
புலவாய் வாழி காவேரி".

என்னும் சிலப்பதிகாரக் கானல் வரிப்பாடல் குமரியாற்றைக் கன்னியென்க் குறித்தல் காண்க. கன்னி என்பதும் காளியின் பெயரே.

கன்னி என்னும் சொல், மக்களினத்துப் பெண்ணைக் குறிக்கும் போது, பூப்படைந்து மணமாகாத பெண்ணைக் குறிக்கும். ஒரு பெண் வாழ்நாள் முழுவதும் மணமாகாதிருக்கலாமாதலால், இளங்கன்னி கன்னிகை யெனப்படுவாள். கை என்பது ஒரு குறுமைப்பொருள் பின்னொட்டு (Diminutive suffix.)

ஒ.நோ. குடி (வீடு) குடிகை (சிறுவீடு) – குடிசை.

பூப்படையாத சிறுமியையும் மணமான பெண்ணையும், கன்னியென்று சொல்லும் வழக்க மில்லை. கன்னிகழிதல் கன்னியழிதல், கன்னி யழித்தல், என்னும் வழக்குகளை நோக்குக.

கன்னி என்னும் சொல்லைக் கன்யா என்றும், கன்னிகை என்னும் சொல்லை கன்யகா என்னும், வடமொழியாளர் திரித்து, சிறுமி, மகள் என்ற பொருள்களிலும் வழங்குவர். அதற்கேற்ப, கன் (இகழ்), கன (சிறு) என்பவற்றை வேராகக் காட்டுவர்.

இகழ்தலைக் குறிக்கும் கன்னெனும் சொல் வலிந்து பொருத்துவதாகும். சிறுமையைக் குறிக்கும் கன் என்னும் சொல் பூப்படைந்த பெண்ணிற்குப் பொருந்தாது. மிகச் சிறியதைக் குன்னியென்பது தமிழ் மரபு. குல் → குன் → குன்னி. குல் → குள் → குறு. நன்னியும் குன்னியும் என்பது பாண்டி நாட்டு வழக்கு. குன் → கன் → கன் (kana.).

'கன்னுதல்' என்பது பழுத்தலைக் குறிக்கும் ஓர் அருந்தமிழ்ச் சொல். வெப்பத்தினாலாவது அழுத்தத்தினலாவது உள்ளங் கையிலும் உள்ளங் காலிலும் அரத்தங்கட்டிச் சிவந்துவிட்டால், அதை அரத்தங் கன்னுதல் என்பர். கனி (பழம்) என்னும் சொல் 'கன்னி' (பழுத்தது) என்பதன் தொகுத்தலே. நகு என்னும் முதனிலை வழக்கற்றுப் போனபின், நகை என்னும் தொழிற் பெயர் முதனிலையாய் வழங்குவது போலவே கனி என்னும் முதனிலையும், பூப்பு என்னும் சொற் போன்றே கன்னுதல் என்பதும் நிலைத்திணைக் குரிய தாயிருப்பதும், Mature என்னும் ஆஙகில வழக்கும் இங்குக் கருதத்தக்கன (பண். நா. ப. 16.).

கனிந்த கனிபோன்ற பூப்படைந்த பெண்ணும் நுகர்ச்சிக் கேற்றவள் என்பதையே, கன்னி என்னும் சொல் உணர்த்தும். சமைந்தவள் (பக்குவமானவள்) என்னுஞ் சொல்லையும் நோக்குக (தமிழ். வர. பக். 57.).

**கன்னி**[3] *kaṉṉi*, பெ.(n.) பருவமடைந்தவள், பருவப் பெண்; matured woman.

*[கன் → கன்னி. கன்தல் = மகவுபெறுதல், ஈனுதல், குழந்தைபெறும் பூப்பு நிலை எய்தியவள்.]*

**கன்னி**[4] *kaṉṉi*, பெ.(n.) வெள்ளிநிறமும், கருப்பு உதடும் கொண்ட ஒரு வகை மீன்; black lipped silver belly fish.

*[கன் → கன்னி.]*

**கன்னிக்கருமம்கழி–த்தல்** *kaṉṉi-k-karumam kaḻi-*, 4. செ.குன்றாவி.(v.t.) ***கன்னிப்பழிகழி–த்தல்*** பார்க்க; see *kaṉṉi-p-paḻi-kaḻi.*

*[கன்னி + கருமம் + கழி.]*

**கன்னிக்காய்** *kaṉṉi-k-kāy*, பெ.(n.) முதன்முதலாகக் காய்க்கும் காய் (நாஞ்.); first fruits of a plant.

*[கன்னி + காய். கன்னுதல் = பிறத்தல், தோன்றுதல்.]*

**கன்னிக்காய்ச்சல்** *kaṉṉi-k-kāyccal,* பெ.(n.) கன்னி (புரட்டாசி) மாதத்தில் காயும் வெயில் மிகுதி; scorching rays of the September sun; hot September.

**ம.** கன்னிக்காய்ச்சல்

*[கன்னி + காய்ச்சல்.]*

**கன்னிக்கால்** *kaṉṉi-k-kāl,* பெ.(n.) 1. புதுவீட்டின் மதிலில் தென்முகமாக முதலில் நாட்டுஞ் சீலை சுற்றிய தூண் (வின்.); first post set up in the wall of a new house, facing south and decked with a woman's cloth. 2. வீட்டின் தென்மேற்குப்பகுதியில் நடும் திருமண முழுத்தக்கால்; the first marriage post erected in the south-west portion of a house. 3. வாய்க்காலிலிருந்து வெட்டிய சிறுகால் (இ.வ.); branch channel.

**ம.** கன்னிக்கால்

*[கன்னி + கால்.]*

**கன்னிக்காவல்** *kaṉṉi-k-kāval,* பெ.(n.) கன்னிப் பருவத்துக் காக்குங் கற்பு; virgin's chastity, maiden modesty. *"கன்னிகாவலுங் கடியிற் காவலும்" (மணிமே. 18, 98.).*

*[கன்னி + காவல்.]*

**கன்னிக்கிழங்கு** *kaṉṉi-k-kiḻaṅgu,* பெ.(n.) ***சின்னி*** பார்க்க. (மலை.); Indian shrubby copper-leaf.

*[கன்னி + கிழங்கு.]*

**கன்னிக்குட்டி** *kaṉṉi-k-kuṭṭi,* பெ.(n.) முதலீற்று ஆட்டுக்குட்டி, (யாழ்ப்.); first-born kid or lamb.

*[கன்னி + குட்டி.]*

**கன்னிக்குடம்** *kaṉṉi-k-kuḍam,* பெ.(n.) பனிக் குடம் (நெல்லை.); amnion.

*[கன்னி + குடம்.]*

**கன்னிக்குமரி** *kaṉṉi-k-kumari,* பெ.(n.) 1. கன்னியாக் குமரி முனை; cape of Kanya kumari. 2. கன்னியாக் குமரி மாவட்டத்தின் தலைநகர்; district capital of Kanyakumari. 3. கன்னியாக்குமரி என்னும் பெண் தெய்வம், அத்தெய்வம் கோயில் கொண்ட ஊர்; name of virgin deity and the temple town of the same deity.

*[கன்னி + குமரி – கன்னிக்குமரி (இரு பெயரொட்டுப் பண்புத் தொகை.]*

கன்னி, குமரி என்னும் இருசொற்களும் கொற்றவையான காளியையும் குமரியாற்றையும் குமரிப் பெண்ணையும் குறிப்பன.

மகப்பேற்றுப் பருவமடைந்து திருமணமாகாதவளையும் இளமை தீராதவளையும் குறிக்கும் கன்னி என்னும் சொல், வற்றா வளமும் மாறா எழிலும் கொண்ட குமரிநாடு, குமரி ஆற்றாலும் குமரித் தெய்வத்தாலும் முது பண்டைக் காலத்தில் அறியப்பட்டதாகலின் இன்றும் கன்னிக்குமரிப் பகுதி கடல் கொண்ட குமரிக் கண்டத்தின் எச்சமாகத் திகழ்கிறது. குமரித் தெய்வத்தின் அழகையும் முருகனின் அழகையும் மணங்கமழ் தெய்வத்து இளநலம் எனப்பாடி மகிழ்ந்துள்ளனர். கன்னிக் குமரியை கன்னியாக்குமரி என்பது வடமொழித் திரிபாகும்.

**கன்னிக்கொம்பு** *kaṉṉi-k-kombu,* பெ.(n.) சொக்கலைமரம். (L.); roxburgh's five-leaved tree of beauty.

**மறுவ.** செம்புளி

*[கன்னி + கொம்பு.]*

**கன்னிக்கோரை** *kaṉṉi-k-kōrai,* பெ.(n.) இளங் கோரை; a variety of tender sedge grass (சா.அக.).

*[கன்னி + கோரை.]*

**கன்னிக்கோழி** *kaṉṉi-k-koḻi,* பெ.(n.) முட்டையிடத் தகுதியுள்ள இளங் கோழி; pullet arrived at maturity.

**ம.** கன்னிக்கோழி

*[கன்னி + கோழி.]*

**கன்னிகம்** *kaṉṉigam,* பெ.(n.) மணித்தக்காளி (மலை.); black nightshade.

*[கன் → கன்னு → கன்னி → கன்னிகம்.]*

**கன்னிகழி–தல்** *kaṉṉi-kaḻi-,* 2 செ.கு.வி.(v.i.) 1. மணம்புரியப்பெறுதல்; to pass from maidenhood to married state. 2. புது மணப்பெண் கணவனுடன் கூடித் தன் கன்னிமை நீங்குதல்; consummate.

**ம.** கன்னிஅழியல்

*[கன்னி + கழி.]*

**கன்னிகாரம்** *kaṉṉigāram,* பெ.(n.) கோங்கு; false tragacanth. *"கன்னிகாரத்து .. ஒருத்தி தோன்றி" (சிலப். 11, 110.).*

*[கன்னி + காரம்.]*

**கன்னிகுமரி** *kaṉṉi-kumari,* பெ.(n.) ***கன்னிக் குமரி*** பார்க்க; see *kaṉṉi-k-kumari,"கன்னி குமரிமுதற் றீர்த்தமெல்லாம்" (திருக்காளத்.பு.கடவுள்வா. 16.).*

**ம.** கன்னிமாகுமரி

*[கன்னி + குமரி.]*

**கன்னிகை**[1] *kaṉṉigai,* பெ.(n.) 1. பூப்படைந்த இளைஞை, குமரிப்பெண்; virgin. 2. கொற்றவை; goddess Durga.

*[கன்னுதல் = பழுத்தல். கன் → கன்னி → கனி = பழுத்தது, பழம். கன்னி = பழுத்தவள். பூப்படைந்தவள். Mature என்னும் ஆங்கிலச் சொல்லை நோக்குக. கன்னி → கன்னிகை = பூப்படைந்த இளைஞை. கை என்பது இங்குச் சிறுமைப் பொருட் பின்னொட்டு. வடவர் காட்டும் கன் என்னும் மூலம், பல பொருளொரு சொல்லும் பொருந்தாப் பொருட் சொல்லும் ஆகும்.]*

*[**த.** கன்னிகை > Skt. kanyaka. (வ.மொ.வ.112.).]*

**கன்னிகை**[2] *kaṉṉigai,* பெ.(n.) 1. தாமரைக்கொட்டை; pericap of the lotus. 2. பூவின்மொட்டு; flower bud.

*[கன்னு → கன்னி → கன்னிகை. 'கை' சிறுமைப்பொருள் ஈறு.]*

**கன்னிகைமாடம்** *kaṉṉigai-māḍam,* பெ.(n.) ***கன்னி மாடம்*** பார்க்க; see *kaṉṉi-māḍam.*

**கன்னிச்சவ்வு** *kaṉṉi-c-cavvu,* பெ.(n.) கன்னிமை நீங்குதற்கு முன் பெண்ணுறுப்பை மூடியுள்ள மெல்லியதோல் (வின்.); virginal membrane stretched across the external orifice of the vagina, hymen.

**ம.** கன்னிகச்சிக்க

*[கன்னி + சவ்வு.]*

**கன்னிச்செயநீர்** *kaṉṉi-c-ceyanīr,* பெ.(n.) 1. சாகா உப்புச் செய்நீ ர்; a strong pungent saline preparation used in alchemy. 2. பெண்ணின் முதற் பூப்பு; the first menstruation of a girl (சா.அக.).

*[கன்னி + செயநீர் (சே → செய)]*

**கன்னிச்செவ்வாய்** *kaṉṉi-c-cevvāy,* பெ.(n.) கன்னி யோரையிற் படிந்த செவ்வாய்; Mars in the zodical sign, virgo, indicating drought and famine. கன்னிச் செவ்வாயிற் கடலும் வற்றும் (உ.வ.).

*[கன்னி + செவ்வாய்.]*

**கன்னிசாக்கிழங்கு** *kaṉṉi-šākkiḻaṅgu,* பெ.(n.) ஆண் பூவரசுக் கிழங்கு; the root of the male portia tree (சா.அக.).

**மறுவ.** வெருகு

*[கன்னி + (சே) சா + கிழங்க. சே = ஆண்.]*

**கன்னித்தமிழ்** *kaṉṉi-t-tamiḻ,* பெ.(n.) அழிவில்லாத தமிழ்மொழி; immortal Tamil. *"கன்னித் தமிழோர் கம்பலை யென்ப" (திவா. 11.).*

*[கன்னி + தமிழ்.]*

**கன்னித்தன்மை** *kaṉṉi-t-taṉmai,* பெ.(n.) கன்னியின் உடலுறவு கொள்ளாத தன்மை; virginity.

*[கன்னி + தன்மை.]*

**கன்னித்திங்கள்** *kaṉṉi-t-tiṅgaḷ,* பெ.(n.) கன்னி மாதம் (புரட்டாசி.); Tamil month Kanni (Purattasi).

*[கன்னி + திங்கள்.]*

**கன்னித்திசை** *kaṉṉi-t-tišai,* பெ.(n.) தென்மேற்கு மூலை (உ.வ.); south-west.

**மறுவ.** கன்னிமூலை

*[கன்னி + திசை.]*

**கன்னித்தீட்டு** *kaṉṉi-t-tīṭṭu,* பெ.(n.) முதற்பூப்புக்கு உரிய தீட்டு; ceremonial pollution at the attainment of puberty by a girl.

*[கன்னி + தீட்டு.]*

**கன்னித்தேங்காய்** *kaṉṉi-t-tēṅ-gāy,* பெ.(n.) தென்னையின் முதற்காய் (யாழ்.அக.); first fruit of a coconut tree.

*[கன்னி + தேங்காய்.]*

**கன்னிநகர்** *kaṉṉi-nagar,* பெ.(n.) பார்க்க; ***கன்னி மாடம்*** (கம்பரா. மதிலைக்.82.); see *kaṉṉi-māḍam* (செ.அக.).

*[கன்னி + நகர்.]*

**கன்னிநாகு** *kaṉṉi-nāgu,* பெ.(n.) ஈனாத இளம் பெற்றம் (யாழ்.அக.); heifer.

*[கன்னி + நாகு.]*

**கன்னிநாடு** *kaṉṉi-nāḍu,* பெ.(n.) பாண்டிநாடு; the Pandya country, which was, according to tradition, once ruled by a virgin princess Taṭātakai, identified with the goddess Mīnākshi, *"கன்னி நாட்டு நல்வினைப்பயத்தாற் கேட்டார்" (பெரியபு. திருஞான. 605.).*

*[கன்னி = குமரி ஆறு; கன்னி + நாடு.]*

பண்டைத் தமிழ் நாடு குமரி நாடு கன்னிநாடு என்றும் அறியப்பட்டது.

**கன்னிநீலம்** *kaṉṉinīlam,* பெ.(n.) கடற்றாமரை; sea-lotus (சா.அக.).

*[கன்னி + நீலம்.]*

**கன்னிப்பழி** *kaṉṉi-p-paḻi,* பெ.(n.) கன்னியைக் கற்பழித்ததால் உண்டான பழி (யாழ்.அக.); sin of deflowering a virgin.

**மறுவ.** கன்னிக்கருமம்

*[கன்னி + பழி.]*

**கன்னிப்பழிகழி-த்தல்** *kaṉṉi-p-paḻi-kaḻi-,* 4 செ.குன்றாவி. (v.t.) திருமணத்திற்கு முன் எதிர்பாரா வகையில் கற்பிழந்த பெண்ணின் பழி துடைப்பதற் காகச் செய்யப்படும் நடப்பு; a ceremonial ritual among certain sections of agriculturists in Dharmapuri district according to which a token fire bath is performed for a virgin who has been unexpectedly put to the shame of losing her chastity.

**மறுவ.** கன்னிக் கருமம் கழித்தல்

*[கன்னி + பழி – கழி.]*



கன்னிப்பழிகழித்தல்

எதிர்பாரா வகையில் கற்பிழந்த கன்னிப் பெண்ணின் பழி துடைப்பதற்காக ஏழு வகை முட் செடிகளை விறகாகச்சுற்றிலும் அடுக்கி அப் பெண்ணை ஈர ஆடை அணிகலன்களுடனும் தலையில் [எட்டி, எருக்குவிளார் சும்மாட்டின் நடுவே] முள் முடியுடனும் நடுவில் நிறுத்தி முள் விறகுக்குத் தீமூட்டி தீச்சுடர் தன்னைப் பற்றுமுன் முள்முடி, ஆடை அணிகலன்கள் ஆகியவற்றை ஒன்றில்லாமல் அனைத்தும் தீயில் எறிந்து விட்டுப் பிறந்தமேனியாய் தீயைக் குதித்துத் தாண்டி வெளி வரச் செய்யும் நாட்டுப்புற நடப்பு [சடங்கு] முறை. இது வெள்ளிக்கை வெள்ளாளர் என்னும் ஒருசார் உழவர் களிடையே அண்மைக் காலம் வரை நிலவி வந்தது. இதனைக் கன்னிக் கருமம் கழித்தல் என்றும் கூறுகின்றனர். இந்தப் பழி கழிப்பு நடப்பில் [சடங்கில்] நெருங்கிய உறவு முறைப்பெண்டிர் மட்டும் கலந்து கொள்ள இசைவளிக்கப்படுகிறது. ஊரடங்கிய நள்ளிரவு நேரத்தில் இது நடத்தப்பெறும்.

**கன்னிப்பறவை** *kaṉṉi-p-paṟavai,* பெ.(n.) பறவைக் குற்ற வகை நோய் (குழந்தைகளுக்கு உண்டாகும்.) (பரராச. 11, 214); a disease of children, believed to be caused by the shadow of birds being cast over them in the evening twilight.

*[கன்னி + பறவை.]*

**கன்னிப்பால்** *kaṉṉ-p-pāl,* பெ.(n.) 1. கற்றாழம் பால்; fresh juice of indian aloe. 2. இளம் பெண்ணின் முலைப்பால்; the breast milk of a young woman. 3. சதுரக்கள்ளிப்பால்; the milky juice drawn for the first time from the square spurge (சா.அக.).

*[கன்னி + பால்.]*

**கன்னிப்பாறை** *kaṉṉi-p-pāṟai,* பெ.(n.) கடல்மீன் வகை; horsemackerel bluish green, attaining at least 1ft. in length.

*[கன்னி + பாறை.]*

**கன்னிப்பிடி** *kaṉṉi-p-piḍi,* பெ.(n.) தைப் பொங்கலுக்கு (மாதப்பிறப்புக்கு) அடுத்தநாள் பெண்கள் தம் உடன்பிறந்தாருடைய ஆக்கங்கருதிக் காகங்களுக்கு இடும் பலவகை உணவுகளின் பலி; ball of coloured food thrown to feed crows by women praying for the welfare of their brothers on the day following Makara-cankaranti.

*[கன்னி + பிடி.]*

**கன்னிப்பிள்ளைத்தாய்ச்சி** *kanni-p-pillai-t-tāyacci,* பெ.(n.) முதற்கருவுற்றவள் (யாழ்ப்.); a woman in her first pregnancy.

*[கன்னி + பிள்ளை + தாயச்சி.]*

**கன்னிப்புதன்** *kanni-p-pudan,* பெ.(n.) பிறந்தவனுக்குக் கலை (வித்தை) நிரம்புவதன் அடையாளமாகக் கன்னி ஓரையிலுள்ள அறிவன் (புதன்) (வின்.); mercury in the zodiacal sign virgo, indicating learning for one born under such influence.

*[கன்னி + புதன்.]*

**கன்னிப்பூ**[1] *kanni-p-pū,* பெ.(n.) 1. காரறுவடை. (நாஞ்.); the harvest in the month of Purattaci, dist. fr. kumpa-p-pu. 2. முதன்முதல் பூக்கும் பூ; the first blossoming flower of a plant. 3. பெண்குறி; the genital of a female. 4. திருமணத்தைக் குறிக்கும் ஒரு பூ; a kind of flower indicating the approach of marriage (சா.அக.).

*[கன்னி + பூ.]*

**கன்னிப்பூ**[2] *kanni-p-pū,* பெ.(n.) பூப்பெய்துவதைக் குறிப்பதாகக் கருதப்படும் இல் மலர்; a flower said to indicate onset of first menstruation. கன்னிப்பூ மலராதவள் – (பழ.).

**கன்னிப்பூப்பு** *kanni-p-pūppu,* பெ.(n.) முதற்பூப்பு; first menstruration. கயலேர் மலருண்கண் கன்னிப்பூப் பெய்தி (இலக். வி. 485. உரை.).

*[கன்னி + பூப்பு.]*

**கன்னிப்பூமலர்–தல்** *kanni-p-pū-malar-,* 2 செ.கு.வி. (v.i.) பூப்படைதல் (இ.வ.); to attain puberty.

*[கன்னிப்பூ + மலர்.]*

**கன்னிப்பேச்சு** *kanni-p-pēccu,* பெ.(n.) 1. சட்டமன்றம், நாடாளுமன்றம் போன்ற அவைகளில் முதன் முறையாக உறுப்பினரானவர் பேசும் முதல் பேச்சு; maiden speech of a newly elected member for Assembly, Parliament etc. 2. ஆன்றோர் அவையில் பேசும் முதல் பேச்சு; maiden speech in an assembly of scholars.

*[கன்னி + பேச்சு.]*

**கன்னிப்பேறு** *kanni-p-pēru,* பெ.(n.) முதற்பேறு; the first delivery (சேரநா.).

ம. கன்னிப்பேறு; பட. கன்னெகெரிகெ.

*[கன்னி + பேறு.]*

**கன்னிப்பொங்கல்** *kanni-p-pongal,* பெ.(n.) சுறவத்திங்களின் (தை மாதம்) இரண்டாவது நாளில் கன்னிகைகளாற் கொண்டாடப்பெறும் ஒரு பண்டிகை; festival on the day following the Pongal specially celebrated by unmarried girls.

*[கன்னி + பொங்கல்.]*

**கன்னிப்போர்** *kanni-p-pōr,* பெ.(n.) வீரனது முதற் போர்; maiden battle. *"காகுத்தன் கன்னிப் போரில்" (கம்பரா. தாடகை. 76.).*

ம. கன்னிப்போரு

*[கன்னி + போர்.]*

**கன்னிமண்** *kanniman,* பெ.(n.) தொல்லியல் அகழ்வுக் குழிகளில், மாந்த நடவடிக்கையற்ற, தொல் பொருள்களற்ற அடிமண்பாகம்; vigin soil found at the bottom most part of the archaeological excavations, where there is no remains of human activities or archaeo-materials.

*[கன்னி + மணி.]*

**கன்னிமணி** *kanni-mani,* பெ.(n.) ஆடு, மான் முதலியவற்றின் மறி. young one of goat, deer etc.

*[கன்னி + (மறி) மணி (கொ.வ.).]*

**கன்னிமதில்** *kanni-madil,* பெ.(n.) அழியாத கோட்டை (கம்பரா. மதிலைக் 69.); impregnable fort.

ம. கன்மதில் (கற்சுவர்)

*[கன்னி + மதில்.]*

**கன்னிமரம்** *kannimaram,* பெ.(n.) வாழை; plantain tree (சா.அக.).

*[கன்னி + மரம்.]*

**கன்னிமரி** *kanni-mari,* பெ.(n.) **கன்னிமரியம்மாள்** பார்க்க; see *kanni-mariyammāl.*

*[கன்னி + (மேரி) மரி]*

**கன்னிமரியம்மாள்** *kanni-mari-ammāl,* பெ.(n.) ஏசுநாதரைப்பெற்றெடுத்த தாய்; virgin Mary.

மறுவ. கன்னிமரியாள்

*[கன்னி + மரியம்மாள்.]*

**கன்னிமரியாள்** *kaṉṉi-mariyāḷ,* பெ.(n.) ***கன்னி மரியம்மாள்*** பார்க்க; see *kaṉṉi-mariyammāḷ.*

**ம.** கன்யாமரியம்

*[கன்னி + மரியாள்.]*

**கன்னிமா** *kaṉṉimā,* பெ.(n.) மீன்பிடி தொழில் செய்வோர் வணங்கும் பெண் தெய்வம்; fisher man's goddess.

*[கன்னி + மா. அம்மா – மா.]*

**கன்னிமாங்காய்** *kaṉṉi-māṅgāy,* பெ.(n.) வடுமாங்காய் (இட.வ.); tender mango, used as pickles.

*[கன்னி + மாங்காய்.]*

**கன்னிமாடம்** *kaṉṉi-māḍam,* பெ.(n.) 1. அரசமகளிர் வாழும் மாளிகை; residence of virgin princesses. *"மற்றவள் கன்னிமாடத் தடைந்தபின்" (மணிமே. 22, 100.).* 2. கன்னியர் உடனுறையும் தனிமாடம் (பழ. தமி. 139.); palace where the royal maidens live.

**க.** கன்னெமாட, கன்னெவாட.

*[கன்னி + மாடம்.]*

**கன்னிமாதம்** *kaṉṉi-mādam,* பெ.(n.) ***கன்னித் திங்கள்*** பார்க்க; see *kaṉṉi-t-tiṅgaḷ.*

**கன்னிமார்** *kaṉṉimār,* பெ.(n.) 1. மணம்பெறாத மகளிர்; virgins, unmarried girls. 2. நற்கதிபெற்ற கற்புடைக் கன்னியர் (வின்.); deified females, pious virgins on earth, afterwards born in the supernatural worlds in one of the three lower states of bliss. 3. ஏழு மகளிர்; seven deified virgins. *"எங்கன்னிமா ரறியச் சொன்னேன்" (குமர. பிர. மீனாட். குறம். 22.).*

**ம.** கன்னிமார்

*[கன்னி → கன்னிமார்.]*

பாயவந்த முரட்டுக்காளைக்கு அஞ்சியோடிய உடன்பிறப்புகளான ஏழுகன்னிப் பெண்கள் ஆற்றில் விழுந்து இறந்த அவலத்தை நினைவு கூர்வதும், இனிமேல் கன்னிப்பெண் இறக்கும் அழிகேடு (பாவம்) நிகழலாகாது என்பதற்காகக் கன்னி மாடன் எனும் தெய்வத்தை வணங்குவதுமாகிய வழக்கம் மராட்டிய மாநிலத்தில் நிலவுகிறது.

**கன்னிமார் செய்-தல்** *kaṉṉimār-cey-,* 1 செ.கு.வி. (v.i.) எழுவர் கன்னியராம் தெய்வங்களுக்குப் பூசை செய்து துயர் நீக்க வேண்டுதல்; a ritual of worship to seven deified virgins to relieve from sufferings.

*[கன்னி – கன்னிமார் (ப.பா) + செய்.]*

**கன்னிமார்பொங்கல்** *kaṉṉimār-poṅgal,* பெ.(n.) பெண்குழந்தைகள் கொண்டாடும் பொங்கல் விழா, (எங்களூர். 94.); a festival on the first day of Tai, celebrated with pongal, by unmarried girls.

*[கன்னிமார் + பொங்கல்.]*

**கன்னிமுட்டை** *kaṉṉimuṭṭai,* பெ.(n.) கோழி முதல் ஈடாக இடும் முட்டை; eggs hatched for the first time (சா.அக.).

*[கன்னி + முட்டை.]*

**கன்னிமுத்திரை** *kaṉṉi-muttirai,* பெ.(n.) ***கன்னிச் சவ்வு*** பார்க்க; see *kaṉṉi-c-cavvu.*

*[கன்னி + முத்திரை.]*

**கன்னிமுயற்சி** *kaṉṉi-muyaṟcci,* பெ.(n.) ஒரு துறையில் ஒருவருடைய முதல் முயற்சி; maiden attempt. 'மலைமருவு நெடுங்கானிற் கன்னி வேட்டை மகன்போக' (பெரியபு. கண்ணம். 47).

*[கன்னி + முயற்சி.]*

**கன்னிமூலை** *kaṉṉi-mūlai,* பெ.(n.) தென்மேற்கு மூலை; south west corner.

**ம.** கன்னிமூல

*[கன்னி + மூலை.]*

**கன்னிமை** *kaṉṉimai,* பெ.(n.) கன்னித்தன்மை; virginity. *"கன்னிமை கனிந்து முற்றி" (சீவக. 1260.).*

**க.** கன்னெதன

*[கன்னி → கன்னிமை.]*

**கன்னியம்** *kaṉṉiyam,* பெ.(n.) நன்னாரி; Indian sarsaparilla (சா.அக.).

*[கன்னி → கன்னியம்.]*

**கன்னியழி-தல்** *kaṉṉi-y-aḻi-,* 2 செ.கு.வி.(v.i.) கன்னிமைகெடுதல் (வின்.); to lose virginity, be deflowered, as a virgin.

*[கன்னி + அழி-.]*

**கன்னியழி-த்தல்** *kaṉṉi-y-aḻittal,* பெ.(n.) விலை மகளிர் குடிப்பிறந்த கணிகையருடன் ஆடவர் முதன் முதற் கூடிக் கன்னித்தன்மையை நீக்கும் சடங்கு; the ceremonial celebration of the first sexual intercourse of a girl of the dancing-girl caste.

*[கன்னி + அழித்தல்.]*

**கன்னியன்னம்** *kaṉṉi-y-aṉṉam,* பெ.(n.) கற்றாழஞ் சோறு (மூ.அ.); pulp of the aloe leaf.

*[கன்னி + அன்னம்.]*

**கன்னியாக்கம்** *kaṉṉi-y-ākkam,* பெ.(n.) கருவுற்ற காலத்தில் பெண்கள் கொள்ளும் ஆசை; the longing of a pregnant woman during the first pregnancy (சேரநா.).

ம. கன்னியாக்கம்

*[கன்னி + ஆக்கம்.]*

**கன்னியாக்குமரி** *kaṉṉiyā-k-kumari,* பெ.(n.) 1. ***கன்னிக்குமரி*** பார்க்க; see *kaṉṉi-k-kumari.* குமரியாறு. (வின்.); the ancient river kanni, said to have been swallowed by the sea.

ம. கன்யாகுமரி; க. கன்னெகுமாரி.

*[கன்னிக்குமரி – கன்னியாகுமரி. கன்னி + குமரி.*

கன்னிக்குமரி. கன்னி எனும் சொல் வட மொழியில் கன்யா எனத் திரிந்தது. அதன் இருமடித் திரிபான கன்னியா செந்தமிழ்ச் சொல்லன்று.

குமரி என்பது காளியின் பெயர். காளி தமிழர் தெய்வங்களுள் ஒன்று. இறவாதவள் அல்லது என்றும் இளமையாயிருப்பவள் என்னும் கருத்தில், காளியைக் குமரி என்றனர்.

கும்முதல் = திரள்தல். கும்மல் →கும்மிலி = பருத்தவள்.

கும் → கும்மல் → குமர் – திரட்சி, திரண்ட கன்னிப்பெண்,

குமரி, கன்னி என்பன ஒரு பொருட் சொற்களாதலால், குமரியாறு கன்னியெனவும் படும்.

**கன்னியிருட்டு** *kaṉṉi-y-iruṭṭu,* பெ.(n.) வைகறைக்கு முன் தோன்றும் இருள் (உ.வ.); darkness before dawn.

ம. கன்னியிருட்டு

*[கன்னி + இருட்டு.]*

**கன்னியீற்று** *kaṉṉi-y-īṟṟu,* பெ.(n.) ஆவின் தலையீற்று (வின்.); first calving of a cow.

ம. கன்னியீற்று; படு. கன்னெயீத்து.

*[கன்னி + ஈற்று.]*

**கன்னியூஞ்சல்** *kaṉṉi-y-ūñjal,* பெ.(n.) திருமண விழாவின் தொடக்கத்தில் மணமக்கள் ஆடும் ஊஞ்சலாட்டம்; ceremonial swing of the bride and bridegroom at the beginning of marriage.

ம. கன்னூஞ்சல்

*[கன்னி + ஊஞ்சல் – கன்னூஞ்சல் (கொ.வ.).]*

**கன்னிலம்** *kaṉṉilam,* பெ.(n.) கற்கள் நிறைந்த நிலம்; a stony soil.

க. கல்லுநெல

*[கல் + நிலம்.]*

**கன்னில மேடு** *kaṉṉilamēḍu,* பெ.(n.) முரம்பு; hard or stony ground.

*[கல் + நிலம் + மேடு. கல் + நிலம் – கன்னிலம்.]*

**கன்னிவாழைப்பழம்** *kaṉṉi-vāḻai-paḻam,* பெ.(n.) திண்டுக்கல்லிற்கு அருகிலுள்ள கன்னிவாடி மலையில் விளையும் மலைப்பழ வகை; a kind of plantain from the hill of kannivadi near Dindigul (கீ.ரா.குறிப்பு.).

*[கன்னிவாடி → கன்னி + வாழைப்பழம்.]*

**கன்னிவிடியல்** *kaṉṉi-viḍiyal,* பெ.(n.) வைகறை; early dawn. *"கன்னிவிடியற் கணைக்காலாம்பல் ... மலரும்" (ஐங்குறு. 68.).*

*[கன்னி + விடியல்.]*

**கன்னிவெறி** *kaṉṉi-veṟi,* பெ.(n.) கன்னித்திங்களில் காயும் வெயில்; the heat of Purattāśi.

ம. கன்னிவெறி

*[கன்னி + வெறி.]*

**கன்னிவேட்டை** *kaṉṉi-vēṭṭai,* பெ.(n.) முதல் வேட்டை; first hunt. *"கன்னிவேட்டை மகன்போக" (பெரியபு. கண்ணப்ப. 47.).*

*[கன்னி + வேட்டை.]*

**கன்னிறம்** *kaṉṉiṟam,* பெ.(n.) சங்சகஞ்செடி. (மலை.); mistletoe-berry thorn.

*[கல் + நிறம் = கன்னிறம்.]*

**கன்னீர்** *kaṉṉīr,* பெ.(n.) 1. கருமையான நீர்; black water. 2. பனிக்குடத்து நீர்; amniotic fluid. contained in a sac in the womb (சா.அக.).

**க.** கன்னீர், கன்னீரு.

*[கல் + நீர்.]*

**கன்னீர்ப்படுத்தல்** *kaṉṉīr-p-paḍuttal,* பெ.(n.) 1. போரிலிறந்த வீரனது நடுகல்லை நீராட்டும் புறத்துறை (பு.வெ.10, பொதுவியற். 10.); (Puram). theme of bathing a memorial stone of a dead warrior. 2. போர்செய்து இறந்த வீரனது வீரச் செயலை வரைந்த கற்களைப் போர்க்களத்திலே மறவர் நிரைத்தலைக்கூறும் புறத்துறை. (பு.வெ.10, பொதுவியற்.11.); (Puram) theme of soldiers storing up the memorial stones of the dead warriors in the battle-field.

*[கல் + நீர்ப்படுத்தல்.]*

சுரும்பு சூழும் மாலை பக்கத்திலே அசைந்து வரப் பார்த்துக் கைக்கொண்ட கல்லினைப் புனலிலே யிட்டதைக் கூறுவது கன்னீர்ப்படுத்தல்.

**கன்னு** *kaṉṉu,* பெ.(n.) பருத்தி; cotton (சா.அக.).

*[குல் → கல் → கன் → கன்னு = பிறந்தவர், பூத்தல்.]*

**கன்னுகா** *kaṉṉugā,* பெ. (n.) கல்நார்; asbestos.

*[கல் → கன் → கன்னுகா.]*

**கன்னு**[1]**–தல்** *kaṉṉu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. பழுத்தல்; to rippen; 2. அரத்தங்கட்டிச் சிவப்பாதல்; to be black or yellow spot produced by extravasated blood caused by a contusion.

*[கன் → கன்னு. (வ.மொ.வ.112.).]*

கன்னுதல் என்பது பழுத்தலைக் குறிக்கும் ஓர் அருந்தமிழ்ச் சொல். வெப்பத்தினாலாவது அழுத்தத்தினலாவது உள்ளங்கையிலும் உள்ளங் காலிலும் அரத்தங்கட்டிச் சிவந்துவிட்டால் அதை அரத்தங்கன்னுதல் என்பர். கன்னுதல் வேறு; கன்றுதல் வேறு. முன்னது பழுத்தல்; பின்னது வலுத்தல். கனி [பழம்] என்னும் சொல் கன்னி [பழுத்தல்] என்பதன் தொகுத்தலே. [தமிழ் வரலாறு 56,57.]

**கன்னு**[2]**–தல்** *kaṉṉu-,* செ.குன்றாவி.(v.t.) குழந்தை பெறுதல், ஈனுதல்; to give birth to.

**தெ.** கன

*[குல் (தோன்றல் கருத்து) → கல் → கன் → கன்னு.]*

**கன்னுவர்** *kaṉṉuvar,* பெ.(n.) கன்னார் (திவா.); braziers, bell-metal workers.

*[கன் → கன்னுவர்.]*

**கன்னுறுகம்** *kaṉṉuṟugam,* பெ.(n.) சிறுகீரை. (மலை.); a speceies of amaranth.

*[கன்று + உறுகம் – கன்னுறுகம்.]*

**கன்னூஞ்சல்** *kaṉṉūñjal,* பெ.(n.) **கன்னியூஞ்சல்** பார்க்க; see *kaṉṉi-ūñjal.*

**ம.** கன்னூஞ்சல்

*[கன்னியூஞ்சல் கன்னூஞ்சல். (கொ.வ.).]*

**கன்னெஞ்சம்** *kaṉṉeñjam,* பெ.(n.) இரக்கவுணர்வு இல்லாத மனம்; வன்மனம்; hard heartedness.

**க.** கல்லெர்தெ; கல்லெதெ.

*[கல் + நெஞ்சம்.]*

**கன்னெஞ்சன்** *kaṉṉeñjaṉ,* பெ.(n.) வன்மன முள்ளவன்; hard-hearted, unfeeling, unrelenting person. *"அன்ப ரன்புக் கெளியை கன்னெஞ்சனுக் கெளியையோ" (தாயு. கருணா. 9.).*

**க.** கல்லெர்தெக, கல்லெதெக.

*[கல் + நெஞ்சன்.]*

**கன்னெஞ்சி** *kaṉṉeñji,* பெ.(n.) அவுரி (யாழ்.அக.); Indigo.

*[கல் (காவி நிறம்) + நிறஞ்சி – கன்னெஞ்சி.]*

**கன்னெஞ்சு** *kaṉṉeñju,* பெ.(n.) வன்மனம்; stony hearted, hard-hearted. *"கன்னெஞ் சுருக்கி" (திருவாச. 10, 11.).*

**க.** கல்லெதெ, கல்லொதெ.

*[கல் + நெஞ்சு.]*

**கன்னை** *kaṉṉai,* பெ.(n.) கட்சி; side; party, as in games, wrestling, fighting.

*[கன் → கன்னு → கன்னை (பிரிவு).]*

**கன்னைக்கோல்** *kaṉṉai-k-kōl,* பெ.(n.) ***கன்னக்கோல்*** பார்க்க; see *kaṉṉa-k-kōl.*

**ம.** கன்னக்கோல்; **க.** கன்னகத்தரி; **தெ.** கன்னக்கோல.

*[கன்னக்கோல் → கன்னைக்கோல்.]*

**கன்னைக்கொற்றி** *kaṉṉai-k-koṟṟi,* பெ.(n.) இரண்டு பக்கமும் உதவி செய்வோன் (யாழ்ப்.); one who helps both the parties, generally in play.

*[கன்னை + கொற்றி.]*

**கன்னைபிரி–த்தல்** *kaṉṉai-piri-,* 4 செ.குன்றா.வி. (v.t.) விளையாட்டில் பங்கு பெறுவோரை இருபிரிவு செய்தல் (யாழ்ப்.); to divide a company into two parties for a game.

*[கன்னை + பிரி.]*

**கன்னைமாறு–தல்** *kaṉṉai-māṟu-,* 5 செ.கு.வி.(v.i.) விளையாட்டிற் பக்கமாறி ஆடுதல் (யாழ்ப்.); to change sides for a new game.

*[கன்னை + மாறு.]*

**கன**[1] *kaṉa,* பெ.(n.) ***கனா*** பார்க்க; see *kaṉā.* *"துஞ்சு மிடைக் கன மூன்றவை தோன்றலின்" (சீவக.219.).*

**ம.** கனவு; **க., து.** கன; **தெ., கொலா., நா.** கல.

*[கனா → கன.]*

**கன**[2]**–த்தல்** *kanna-,* 4 செ.கு.வி.(v.i.) 1. பாரமாதல்; to be heavy. *"கனக்கும் வெண்டரள வடம்" (பாரத. குருகுல. 137).* 2. மிகுதியாதல்; to be abundant, copious, numerous. *"சாமந்தர்க்குப் புறம்பே நாடுகள் கனக்கவுண்டாகிலும்" (ஈடு.1,3,9.).* 3. பருத்தல்; to be stout. *"கனத்தெழு விலங்கற்றிண்டோர்" (இரகு. இரகுவு.59.).* 4. தடித்தல்; to grow dense or thick. 5. கட்டைக் குரலாதல்; to be hoarse; to break, as the voice of a youth. குரல் கனத்து விட்டது (உ.வ.). 6. பெருமையுறுதல்; to be honourable, noble, illustrious. கனத்த குடியிற் பிறந்தவன்(உ.வ.).

**ம.** கனக்குக; **H:** kan; **Skt.** ghana.

*[கல் → கன → கனத்தல்.]*

**கனக்குறைவு** *kaṉa-k-kuṟaivu,* பெ.(n.) 1. இலேசான தன்மை; loss of weight, lightness. 2. பெருமைக் கேடு; degradation. அந்தச் செயலில் தலையிடுவது கனக்குறைவு (உ.வ.).

**ம.** கனக்குறவு, கனக்கேடு.

*[கனம் + குறைவு.]*

**கனக்கேடு** *kaṉa-k-kēḍu,* பெ.(n.) மதிப்புக்குறைவு; loss of prestige, humiliation, degradation.

**ம.** கனக்கேடு.

*[கனம் + கேடு.]*

**கனகக்கதலி** *kaṉaga-k-kadali,* பெ.(n.) பொன் னிறமான வாழைவகை; a species of gold- coloured plantain (சா.அக.).

*[கனகம் + கதலி.]*

**கனகச்சண்பகம்** *kaṉaga-c-caṇbagam,* பெ.(n.) மஞ்சள் சண்பகம்; yellow champak (சா.அக.).

*[கனகம் + சண்பகம்.]*

**கனகச்சம்பா** *kaṉaga-c-cambā,* பெ.(n.) உயர்ந்த சம்பா நெல்வகை; a superior kind of paddy.

*[கனகம் + சம்பா.]*

**கனகச்சுற்றம்** *kaṉaga-c-cuṟṟam,* பெ.(n.) அரசர்க் குரிய எண் பெருந்துணைவருள் ஒரு வகையாராகிய கருவூலவதிகாரிகள் (திவா.); men in charge of the treasury, one of eṇ-peruntuṇaivar.

*[கனகம் = பொன், கருவூலப்பொருள்கள். கனகம் + சுற்றம்.]*

**கனகச்செம்பு** *kaṉaga-c-cembu,* பெ.(n.) தங்கச் செம்பு; highly concentrated gold of copper colour. (சா.அக.)

*[கனகம் + செம்பு.]*

**கனகசபை**[1] *kaṉga-šabai,* பெ.(n.) சிவபெருமான் நடனமிடும் பொன்னம்பலம்; lit. hall made of gold, hall roofed with gold plates in which the deity Nataraja is kept, as at Chidambaram. *"கனக சபைமேவு மெனது குருநாதா" (திருப்பு.).* ***பொன் னம்பலம்*** பார்க்க; see *poṉṉambalam.*

*[கனகம் +சபை.]*

**கனகசபை**[2] *kaṉaga-šabai,* பெ.(n.) தலைப் பேரண்டம்; human skull (சா.அக.).

*[கனக(ம்) + சபை.]*

**கனகத்தும்பி** *kaṉaga-t-tumbi,* பெ.(n.) பொன் வண்டு; dragonfly.

**ம.** கனகதும்பி

*[கனகம் + தும்பி.]*

**கனகதண்டி** *kaṉaga-taṇḍi,* பெ.(n.) **கனகதண்டிகை** பார்க்க; see *kaṉagataṇḍigai. "கனகதண்டி மேலுக்குப் பஞ்சணையில்லை யென்பார்க்கும் விசனமொன்றே" (தனிப்பா.).*

*[கனகம் + தண்டி.]*

**கனகதண்டிகை** *kaṉaga-taṇḍigai,* பெ.(n.) பொற் சிவிகை; taṇḍigai studded with gold.

**ம.** கனகத்தண்டு

*[கனகம் + தண்டிகை.]*

**கனகதப்பட்டை** *kaṉga-tappaṭṭai,* பெ.(n.) இசைக் கருவிவகை (வின்.); a small tabor.

*[கனகம் + தப்பட்டை.]*

**கனகதோராவல்லி** *kaṉaga-tōrāvalli,* பெ.(n.) ஒருவகை மணி; a kind of topaz. *"இவற்றின்க ணுதித்த ... தோராவல்லி கனகதோராவல்லி" (திருவாலவா.25,22.).*

*[கனகம் + தோராவல்லி.]*

**கனகந்தம்** *kaṉagandam,* பெ.(n.) காட்டுமா; wild mango.

*[கனம் + கந்தம். கனம் = மிகுதி. கந்தம் = சுவை, மணம்.]*

**கனகநிறத்தி** *kaṉaga-niṟatti,* பெ.(n.) மஞ்சள்; turmeric.

*[கனகம் = பொன். கனக(ம்) + நிறத்தி = கனகநிறத்தி = பொன்வண்ணமுடையது. 'இ' உடைமை குறித்த ஈறு.]*

**கனகப்பிரபை** *kaṉaga-p-pirabai,* பெ.(n.) முடக் கற்றான் (சா.அக.). palsy curer (சா.அக.).

**மறுவ.** நொடக்கத்தான்

*[கனகம் + பிரபை.]*

**கனகம்**[1] *kaṉagam,* பெ.(n.) பொன்; gold. *"காரார் வண்ணன் கனகமனையானும்" (தேவா.502,9.).*

**க.** கனக; **H.** kanagam; **Skt.** kanaka; **Pkt.** kaṇaka.

*[கல் → கன் → கனலுதல் = எரிதல், ஒளிர்தல். கன் → கன + அம் – கனவம் → கனகம். அம் = பெருமைப் பொருள் பின்னொட்டு.]*

kanaka, kandala, kala (Ct.I,47)., kāñcana, gold. There is the Sk. Verbal theme kan, to shine (cf.D.kāṉ1.), for which, however, there are no authoritative references. The D. terms for gold are cini, cinna, cinni, which are related to can1. etc. cf.D. keṅka, keñch, ken etc. (K.K.E.D. XXV.).

**கனகம்**[2] *kaṉagam,* பெ.(n.) மீன்கொத்தி; common king fisher.

*[குல் → கல் → கன் → கனகம் (கொத்துவது).]*

**கனகம்**[3] *kaṉagam,* பெ.(n.) 1. மிளகு; pepper. 2.வால் மிளகு; tail pepper. 3. ஊமத்தை; thorn apple. 4. நெல்லிக்காய்; Indian goose berry. 5. ஒருவகை மஞ்சட் சந்தன வகை; a species of yellow sandal wood (சா.அக.).

*[கனகம் = பொன். பொன் போன்று மதிக்கத்தக்க சிறந்த பொருள்கள்.]*

**கனகமலை** *kaṉaga-malai,* பெ.(n.) மேருமலை; Mēru, the gold mountain. *"புலியூர்க் கனக மலைச்சிலை வாணனை" (புலியூரந்.).*

**ம.** கனகமல, கனகமாமல; **க.** கனககிரி, கனகநக.

*[கனகம் + மலை.]*

**கனகமாரிபொழி-தல்** *kaṉaga-māri-poḻi-,* 2 செ.கு.வி. (v.i.) பொருளைச் சிறப்பாக வழங்குதல்; lit., to shower gold, to bestow gifts liberally.

*[கனகமாரி + பொழி.]*

**கனகமாழை** *kaṉaga-māḻai,* பெ.(n.) பொற்கட்டி; lump of gold, nugget. *"கப்பிய கனகமாழையால்" (சீவக.913.).*

*[கனகம் + மாழை.]*

**கனகமிளகு** *kaṉaga-miḷagu,* பெ.(n.) வால்மிளகு. (மலை.); cubeb.

*[கனக(ம்) + மிளகு.]*

**கனகமூலி** *kaṉaga-mūli,* பெ. (n.) சோற்றுக் கற்றாழை; Indian pulp aloe (சா.அக.).

*[கனகம் + மூலி – கனக மூலி = பொன் போன்ற நிறமுடையசெடி.]*

**கனகரம்பை** *kaṉaga-rambai,* பெ.(n.) ஒருவகை வாழை; a kind of plantain tree (சா.அக.).

*[அரம்பை = வாழை. கனகம் + அரம்பை.]*

**கனகவல்லி** *kaṉaga-valli,* பெ.(n.) கற்பூரவல்லி; thick leaved lavendar (சா.அக.).

*[கனக(ம்) + வல்லி.]*

**கனகவுப்பு** *kaṉga-v-uppu,* பெ.(n.) 1. ***கல்லுப்பு*** பார்க்க; see *salt.* 2. பொதுவகை யுப்பு; common salt (சா.அக.).

*[கனக(ம்) + உப்பு.]*

**கனகன்**[1] *kaṉagaṉ,* பெ.(n.) இரணியகசிபு; a Daitya king of golden colour. *"நன்றெனக் கனகன் சொன்னான்". (கம்பரா.இரணியன்வ.124.).*

*[கனக(ம்) + அன்.]*

**கனகன்**[2] *kaṉagaṉ,* பெ.(n.) காசுக்குற்றவகை. (சரவண.பணவிடு.67.). a blemish, in coins.

*[கல → கலகன் → கனகன் = குற்றம்.]*

**கனகனப்பு** *kaṉakaṉappu,* பெ.(n.) ***கணகணப்பு*** பார்க்க; see *kaṉakaṉappu.*

*[கணகணப்பு → கனகனப்பு.]*

**கனகாட்சி** *kaṉakāṭci,* பெ.(n.) சுடரும்புல் (சோதிப் புல்); luminous grass (சா.அக.).

*[கனக(ம்) + காட்சி.]*

**கனகாம்பரம்** *kaṉagāmbaram,* பெ.(n.) பூச்செடி வகை; unarmed orange nail dye, a kind of plant with golden yellow flowers.

**ம., தெ.** கனகாம்பரம்.

*[கனகம் + அம்பரம். அம்பரம் = ஆடை கனகாம்பரம் = பொன் போன்ற தோற்றமுடையது.]*

**கனகாரியம்** *kaṉa-kāriyam,* பெ.(n.) முகாமையான பணி; important business.

*[கன + காரியம். கன = பெரிய.]*

**கனகி** *kaṉagi,* பெ.(n.) ஊமத்தை; thorn-apple. *"கனகியின் முகை ... பொதிசடை முடியினன்" (தேவா.832,4.).*

*[கனகம் → கனகி (பொன்னூமத்தை).]*

**கனகு** *kaṉagu,* பெ.(n.) பொன்; gold.

*[கல் → கன் → கன → கனகு.]*

**கனங்காசிகம்** *kaṉaṅgāšigam,* பெ.(n.) சிவப்பு, அந்திமல்லிகை; (சா.அக.).

*[கனல் = எரிதல், சிவப்பு நிறமடைதல். கனல் + காசிகம்.]*

**கனங்காய்** *kaṉaṅkāy,* பெ.(n.) 1. கோரைக்கிழங்கு; Rōray root. 2. மனோரஞ்சிதம். (வின்.); fragrant heart's joy.

*[கனம் = மிகுதி, பெருமை + காய்.]*

**கனங்குழை** *kaṉaṅ-kuḻai,* பெ.(n.) கனவிய குழையணிந்த பெண்; woman, wearing heavy ear-rings. *"கனங்குழை மாதர்கொல்" (குறள்,1081).*

**ம.** கனக்குழயாள்

*[கனம் + குழை.]*

**கனங்கொள்(ளு)-தல்** *kaṉaṅ-koḷ-,* 16 செ.கு.வி. (v.i.) 1. சுமையுடைத்தாதல்; to become heavy, unwieldy. 2. பெருமையுடையதாதல் (வின்.); to become serious, important, momentous.

*[கனம் + கொள்–.]*

**கனச்சூடு** *kaṉa-c-cūḍu,* பெ.(n.) அதிகச்சூடு; intense heat (சா.அக.).

*[கனம் + சூடு. கனம் = மிகுதி.]*

**கனசாரம்** *kaṉašāram,* பெ. (n.) 1. பச்சைக் கருப்பூரம்; Crude Camphor. 2. சீதளம்; Camphor cinna momum. 3. மிகுதியான சத்து; highly concentrated essence; thick extract (சா.அக.).

*[கனம் + சாரம். கனம் = மிகுதி.]*

**கனசுரம்** *kaṉašuram,* பெ.(n.) கடுமையான சுரம்; high fever (சா. அக.).

*[கனம் + சுரம்.]*

**கனத்தகுரல்** *kaṉatta-kural,* பெ.(n.) வெடித்தகுரல்; coarse voice (சா.அக.).

*[கனம் → கனத்த + குரல்.]*

**கனத்தநாள்** *kaṉatta-nāl,* பெ.(n.) கோள் நிலையில் நோயைப்பெருகச் செய்வதாகக் கருதப்பட்ட காருவா வெள்ளுவா நாள்கள்; day which is supposed to have in itself powers to aggravate a disease in its course, as the new or full moon; when the influence of the planets is supposed to be unusually powerful.

*[கனத்த + நாள்.]*

**கனத்தி** *kaṉatti,* பெ.(n.) வைப்பரிதாரம் (வின்.); a kind of prepared arsenic.

*[கனம் → கனத்தி (மிகுவிப்பது).]*

**கனத்தொழிலியற்று-தல்** *kaṉa-t-toḻiliyaṟṟu-,* 8 செ.கு.வி.(v.i.) உடம்பினுறுப்பு அதிகமாகத் தொழிற் படுதல்; to function excessively on the part of an organ (சா.அக.).

*[கனம் + தொழில் + இயற்று.]*

**கனதண்டி** *kaṉataṇḍi,* பெ.(n.) கன முள்ளது; that which is heavy (சா.அக.).

*[கன(ம்) + தண்டி.]*

**கனதந்தி** *kaṉatandi,* பெ.(n.) நெருஞ்சி; caltrops thistle (சா.அக.).

*[கனம் + தந்தி. தந்தம் = பல், முள். தந்தம் → தந்தி.]*

**கனதனம்** *kaṉataṉam,* பெ.(n.) பெருஞ்செல்வம்; excessive wealth. காட்டில் புதைத்த கனதனமும், பாட்டில் புதைத்த பழம் பொருளும், வீட்டில் மனையாள் திருமனமும் அறிவது அரிது (பழ.).

*[கனம் + தனம்.]*

**கனதாது** *kaṉatādu,* பெ.(n.) உடம்பிற் றோய்ந்த தாது; inspissated element of the body (சா.அக.).

*[கன(ம்) + தாது.]*

**கனதாள்** *kaṉatāl,* பெ.(n.) உள்ளங்கால்; sole of the feet (சா.அக.).

*[கன(ம்) + தாள்.]*

**கனதி** *kaṉadi,* பெ.(n.) 1. சுமை; heaviness, ponderosity, gravity. 2. பருமை (வின்.); thickness. 3. இறுமாப்பு. (வின்.); pride, haughtiness.

*[கல் → கனம் → கனதி.]*

**கனதூக்கம்** *kaṉatūkkam,* பெ.(n.) அதிகமான தூக்கம்; deep sleep.

*[கன + தூக்கம்.]*

**கனதை**[1] *kaṉadai,* பெ.(n.) 1. மதிப்பு; honour, dignity. *"மற்றுள பொருளுந் தோற்றுக் கனதைபோய்" (குற்றா.தல.மந்தமா.43.).*

*[கனதி → கனதை.]*

**கனதை**[2] *kaṉadai,* பெ.(n.) மூட்டுகளை வளைத் தசைக்க முடியாமை; immobility of a joint.

*[கல் → கனம் = சுமையானது, உறுதியானது. கன(ம்) → கனதை = அசையாதது.]*

**கனநாள்** *kaṉa-nāl,* பெ.(n.) கனத்தநாள்; (Astrol.) unpropitious day considered as exerting evil influence, on sick person, etc. ***கனத்தநாள்*** பார்க்க; see *kaṉattanāl.*

*[கனம் + நாள்.]*

**கனநீர்** *kaṉa-nīr,* பெ.(n.) அணு உலைகளின் தேவைக்கேற்ப வேதியியல் முறைப்படி உண்டாக்கும் நீர்; heavy water.

*[கன(ம்) + நீர்.]*

**கனப்படுத்து-தல்** *kaṉa-p-paḍuttu-,* 5 செ.கு.வி. (v.i.) பெருமைப்படுத்துதல்; to honour, respect, esteem.

*[கனம் + படுத்து-.]*

**கனப்பாகு** *kaṉa-p-pāgu,* பெ.(n.) 1. கன்னல் சருக்கரை; sugar prepared from sugar-cane juice. 2. அதிகத் தடிப்பான பாகு; a thick syrap (சா.அக.)

*[கனம் + பாகு.]*

**கனப்பாடு** *kaṉa-p-pāḍu,* பெ.(n.) 1. கனமாயுள்ள தன்மை (திவ். பெரியாழ்.3,5,பிர.பக். 626); massiveness, weight. 2. அகற்சி; expanse. *"கனப்பாட்டிற் காயமே" (நீலகேசி.288.).*

*[கனம் + பாடு "பாடு" (தொ.பெ.ஈறு).]*

**கனப்பு** *kaṉappu,* பெ.(n.) 1. கனமாயிருக்கை; being heavy. 2. பருமை (வின்.); thickness. 3. சுமை (வின்.); weight, heaviness. 4. அழுத்தம்; hardness, as of a swelling. 5. கொழுப்பு (வின்.); fattiness. 6. இறுமாப்பு; pride, self-conceit. உன் கனப்பு எடுத்துப்போடுவேன். (வின்.). 7. மிகுதி;abundance. *"புதுமலரின் கனப்பெண்ணிறிரை சுமந்து" (பெரியபு.திருநா.3.).* 8. வீக்கம்; hard boil.

*[கனம் → கனப்பு.]*

**கனப்புக்காட்டு-தல்** *kaṉappu-k-kāṭṭu-,*5செ. குன்றாவி (v.t.) சூடுண்டாக்குதல்; to heat, to make hot.

*[கனப்பு + காட்டு.]*

**கனப்புச்சட்டி** *kaṉappu-c-caṭṭi,* பெ.(n.) ***கணப்புச் சட்டி*** பார்க்க; see *kaṉappu-c-caṭṭi.*

*[கணப்பு → கனப்பு + சட்டி.]*

**கனப்புப்போடு-தல்** *kaṉappu-p-pōḍu,* 19 செ.குன்றாவி. (v.t.) தீ மூட்டுதல்; to kindle fire (சா.அக.).

*[கனப்பு + போடு-.]*

**கனப்புற்று** *kaṉa-p-puṟṟu,* பெ. (n.) நார்த்தசை மிகுதியாகவுள்ள புற்று; cancer containing hard fibrous tissue (சா.அக.).

*[கனம் + புற்று.]*

**கனப்பேறு-தல்** *kaṉappēṟu-,* 20 செ.கு.வி.(v.i.) உடற்சூடு அதிகமாகுதல்; to get increased in temperature of the body (சா.அக.).

*[கனப்பு + போடு-.]*

**கனப்பொள்ளல்** *kaṉappoḷḷal,* பெ.(n.) மாழையில் பெரியதாக அமையும் உள்கூடு; inner hollow, as of statue. கனப் பொள்ளலாகச் செய்த ரிஷபம் ஒன்று. (S.I.I.Vol.2:2.inisc.46.)

*[கன(ம்) + பொள்ளல்.]*

**கனபண்டம்** *kaṉapaṇḍam,* பெ.(n.) 1. திண்மையான பொருள்; solid substance. 2. செரிக்காத பண்டம்; substance not easily digestible (சா.அக.).

*[கன(ம்) + பண்டம் கனம் = பருமையானது, உறுதியானது, கட்டியானது.]*

**கனபல்லவம்** *kaṉapallavam,* பெ.(n.) முருங்கை; drumstick tree. (சா.அக.)

*[கன(ம்) + பல்லவம் – கனபல்லவம் = பெருந்தளிர்.]*

**கனபார்வை** *kaṉapārvai,* பெ.(n.) எட்டப்பார்வை; far-sightedness Hyperopia. (சா.அக.)

*[கன(ம்) + பார்வை. கனம் = பெரியது, நீண்டது, தொலைவானது.]*

**கனபித்தம்** *kaṉa pittam,* பெ.(n.) உடம்பில் அதிகமாகும் பித்தம்; excessive secretion of bile. (சா.அக.)

*[கன(ம்) + பித்தம். கனம் = சுமையானது, மிகுதியானது, அதிகமானது.]*

**கனபுடம்** *kaṉa-puḍam,* பெ.(n.) ஐம்பது அல்லது நூறு எரு முட்டையாலான புடம் (யாழ்.அக.); calcination by using 50 or 100 cakes of dried cow-dung.

*[கனம் + புடம்.]*

**கனம்**[1] *kaṉam,* பெ.(n.) 1. சுமை (திவா.); heaviness, weight. 2. பருமன்; thickness; size. 3. பெருமை; honour, dignity, respectability, moral worth. 4. செறிவு (திவா.); density, closeness, hardness, solidity. 5. திரட்சி (திவா.); roundness. 6. உறுதி; firmness. *"கனமே சொல்லினேன்" (திவ்.திருவாய். 9,3,5.).* 7. மிகுதி; abundance, copiousness, excessiveness, plenty, much. 8. ஒரெண்ணை அதனாலேயே இருமுறை பெருக்க வரும் இலக்கம். (பிங்.); (math.) cube of a number, one of aṭṭa-kaṇidam. 9. கனவடிவு; cube, as a solid. 10. கூட்டம் (வின்.); multitude, assemblage, crowd. 11. வட்டம் (திவா.); circle. 12. அகலம்; width, breadth. 13. முகில்; cloud. *"கனமே குழல்" (தஞ்சைவா.49).* 14. கோரைக்கிழங்கு; tuber of kōraigrass.

*[கல் → கன் = கல், உறுதிப்பாடு. கன் → கன. கனத்தல் = பளுவாதல், மிகுதியாதல், பருத்தல், குரல் தடித்தல், பெருமையுறுதல். கன → கனம் = தடிமன், பருமன், பெருமை, செறிவு, திரட்சி உறுதி, மிகுதி, கூட்டம், மும்மான வடிவு.]*

பொதுவாகக் கனத்திற்கு எடுத்துக்காட்டாகச் சொல்வது கல்லே. கல்லைப்போற் கனக்கிறது என்பது உலகவழக்கு. பண்டைநாளிற் கனத்த எடைக் கெல்லாம் கல்லையே பயன்படுத்தியதால், படிக்கல் என்னும் வழக்கெழுந்தது. இங்கிலாந்திலும், அவ் வழக்கமிருந்ததை stone [14 பவுண்டு] என்னும் சொல் உணர்த்தும்.

வடமொழியில் கனத்தல் என்னும் வினை யில்லை. மா.வி.அகரமுதலி காட்டியிருக்கும் "ஹன்" [கொல்] என்னும் மூலம், வடமொழியிற் "கன" என்னும் சொற்குள்ள பல்வேறு பொருள் களுள் ஒன்றற்குத்தான் ஏற்கும்.

**த.** கனம்> **Skt.** ghana. (வ.மொ.வ.112,113.).

**கனம்**[2] *kaṉam,* பெ.(n.) விளங்கி ஒளிரும் பொன்; gold. *"கனங்குழாய்" (கலித்.57).*

*[கல் → கன் → கனம். (செல்வி.1978.பிப்.279).]*

**கனம்பாடு–தல்** *kaṉam-pāḍu-,* 5 செ.கு.வி.(v.i.) குரல்விட்டுப் பாடுதல் (வின்.); to sing with a full deep voice.

*[கனம் + பாடு–.]*

**கனம்பார்–த்தல்** *kaṉam-pār-,* 4 செ.கு.வி.(v.i.) 1. நிறையளவையை மதிப்பிடுதல்; to estimate weight. அந்த மூட்டையைக் கனம்பார்த்து எடையைச் சொல் (உ.வ.). 2. நிலைதெரிதல்; to consider conditions or external circumstances. அவன் பேசும்போதே என்னைக் கனம் பார்க்க வந்திருக் கிறான் என்பதை உணர்ந்து கொண்டேன் (உ.வ.).

*[கனம் + பார்–.]*

**கன்மாப்பலகை** *kaṉam-ā-p-palagai,* பெ.(n.) கடைக்கழக (சங்கப்பலகை); the famous miraculous seat of the members of the third Tamil̲ Šangam. *"கன்மாப்பலகை யேற்றிக் கீழிருந்து சூத்திரப் பொருளுரைப்ப" (இறை.1,உரை.).*

*[கல் + மா + பலகை – கன்மாப்பலகை.]*

**கனமூலம்**[1] *kaṉa-mūlam,* பெ.(n.) கனத்தொகை யினின்று அறியும் அதன்மூலம் (திவா.); (math.) cube root, one of aṭṭa-kaṉidam.

**H.** kanamul

*[கனம் + மூலம்.]*

**கனமூலம்**[2] *kaṉa-mūlam,* பெ. (n.) வேர் பருத்த செடி; thick rooted plant (சா.அக.).

*[கன(ம்) + மூலம்.]*

**கனமூலி** *kaṉa-mūli,* பெ.(n.) சிறந்த பண்புகளை யுடைய மூலிகைகள்; protent drugs (சா.அக.).

*[கன(ம்) + மூலி.]*

**கனரகத்தொழில்** *kaṉaraga-t-toḻil,* பெ.(n.) **கன வகைத்தொழில்** பார்க்க; see *kaṉavagai-t-toḻil.*

*[கன(ம்) + ரக + தொழில்.]*

**கனராகம்** *kaṉa-rāgam,* பெ.(n.) **வல்லராகம்** பார்க்க; see *vallarāgam,*

*[கனம் + அராகம். அராகம் → ராகம் (கொ.வ.).]*

**கனல்**[1] *kaṉal,* பெ.(n.) 1. நெருப்பு; fire. *"உழிதரு காலுங் கனலும்" (திருவாச.5,8.).* 2. வெப்பம்; heat.

**ம., க.** கனல்; **தெ.** கனலு; **கோத.** கன்; **து.** அனல், கனிமூரி (புகை நாற்றம்); **உரா;** கனலு; **பட.** கனகன.

*[குல் → குன் → கன் → கனல். (வே.க.182).]*

**கனல்**[2]**(லு)–தல்** *kaṉalu-,* 13 செ.கு.வி.(v.i.) 1. எரிதல்; to be hot; to glow, as fire. 2. கொதித்தல்; to boil, as hot water. *"தீப்பொறி கனலுமே" (நாலடி ,291).* 3. சினத்தல்; to be angry, to be enraged. *"மாமுனி கனல மேனாள்" (கம்பரா.நீர்விளை.2.).* 4. சிவத்தல்; to redden. *"கண்கனன்று ... நோக்குதலும்" (பு.வெ.6,23.).*

**க.** கனல்; **தெ.** கனலு. **கூ.** கம்ப.

*[கன் → கனல்(லு) (வேக.183).]*

**கனல்**[3]**(லு)–தல்** *kaṉal(lu)-,* 14 செ.குன்றாவி.(v.t.) சுடுதல்; to burn, to be warm, as body in temperature. *"சுலவி வயிற்றகங் கனலுஞ் சூலை நோய்" (பெரியபு. திருநா.62.).*

*[கல் → கனல் → கனறுதல் = எரிதல், கருகுதல், சினத்தல். கல் → கன் → கனல் = நெருப்பு. கனலுதல் = எரிதல், சினத்தல். (த.வர.56).]*

**கனல்கட்டை** *kaṉalkaṭṭai,* பெ.(n.) தணல்கரி; cinder.

*[கனல் + கட்டை.]*

**கனல்தட்டு** *kaṉal-taṭṭu,* பெ.(n.) நெருப்புக்கலம்; brazier.

*[கனல் + தட்டு.]*

**கனல்மூங்கில்** *kaṉal-mūṅgil,* பெ.(n.) நச்சுமூங்கில்; Asiatic poison bulb or Asiatic quill (சா.அக.).

*[கனல் + மூங்கில்.]*

**கனல்வாதை** *kaṉal-vādai,* பெ.(n.) பசி; hunger. *"கனல்வாதை அன்ளிப் புசித்து நான் கண்மூடி மௌனியாகி" (தாயுமான.).*

*[கனல் + வாதை (துன்பம்).]*

**கனல்வு** *kaṉalvu,* பெ.(n.) சினம்; anger. *"இங்கு நின்வர வென்னவெனக் கனல்வெய்த" (கம்பரா. சூளா.78.).*

**க.** கனல்; **தெ.** கனலு.

*[கனல் → கனல்வு (வே.க.183).]*

**கனலல்** *kaṉalal,* தொ.பெ.(vbl.n.) 1. எரிதல்; burning. வெப்பங் கொள்ளல்; growing warm (சா.அக.).

*[கனல் → கனல. 'அல்' தொ.பெ.ஈறு.]*

**கனலி**[1] *kaṉali,* பெ.(n.) 1. கதிரவன்; sun. *"வெங்கதிர்க் கனலி" (புறநா.41,6.).* 2. நெருப்பு. (திவா.); fire.

*[கல் → கன் → கனல் = நெருப்பு. கனலுதல் = எரிதல், சினத்தல். கனல் → கனலி. (வே.க.183).]*

**கனலி**[2] *kaṉali,* பெ.(n.) 1. கள்ளி (யாழ்.அக.); spurge. 2. பம்பவெட்டி (L.); apple bladder-nut. 3. காட்டாமணக்கு; physic nut. 4. கருப்புச் சித்திரமூலம்; a black variety of leadwort. 5. செய்ந்நஞ்சைக் கட்டுமொரு மூலிகையான கப்பட்டி; a plant. 6. கொடுவேலி; Ceylon lead wort *"முந்தூழ்—மாட்டுறு கனலியென" (கந்தபு. மகா.11.) (சா.அக.).*

*[கனல் → கனலி.]*

**கனலி**[3] *kaṉali,* பெ.(n.) 1. அரத்த மூலமென்னுமோர் நோய்; bleeding piles. 2. செவிட்டுத்தன்மை; deafness.

*[கனல் → கனலி.]*

**கனலி**[4] *kaṉali,* பெ.(n.) பன்றி; hog. *"இளமதியம் புரையுங் கனலி மருப்பு" (சிவப்.பிரபந். வெங்கைக்கல. 99.).*

*[கனல் → கனலி → கனல் = சினம். கனலி = கடுஞ்சினம் கொண்ட பன்றி.]*

**கனலிநாள்** *kaṉali-nāḷ,* பெ.(n.) கைம்மீன் (அத்தம்) என்னும் நாண்மீன்; the 13th nakshatra.

*[கனலி + நாள்.]*

**கனலை** *kaṉalai,* பெ.(n.) காயா; bilboary tree (சா.அக.).

*[கனல் → கனலை.]*

**கனலொழுக்கு** *kaṉal-oḻukku,* பெ.(n.) எரிமலைப் பிழம்பொழுக்கு; flowing of lava.

*[கனல் + ஒழுக்கு.]*

**கனலொழுங்கு** *kaṉal-oḻuṅgu,* பெ.(n.) தீக்கொழுந்து (சூடா.); flame.

*[கனல் + ஒழுங்கு.]*

**கனலொளி** *kaṉal-oḷi,* பெ.(n.) வெந்தழலொளி; glow.

*[கனல் + ஒளி.]*

**கனலோன்** *kaṉalōṉ,* பெ.(n.) கதிரவன்; lit., he who is hot, sun. *"காடுகனலக் கனலோன் சினஞ் சொரிய" (பு.வெ.10,பொதுவியற்.10.).*

*[கனல் → கனலோன்.]*

**கனவகைத்தொழில்** *kaṉavagai-t-toḻil,* பெ.(n.) எஃகு, இரும்பு போன்ற மூலப்பொருள்கள் உருவாக்கும் தொழில்துறை; heavy industry.

**மறுவ.** கனரகத் தொழில்

*[கன(ம்) + வகை + தொழில்.]*

**கனவட்டம்** *kaṉa-vaṭṭam,* பெ.(n.) 1. குதிரை (திவா.); horse. 2. பாண்டியன் குதிரை; the state horse of the Pāṇḍya kings. *"வழுதி கனவட்டம்". (பெருந்தொ.656.).*

*[கன + வட்டம். பருமனும், (கனமும்) உருட்சியும், உடைமை பற்றி, "கனம்" குதிரைக்கு அடையாக வந்தது.]*

**கனவமலம்** *kaṉava-malam,* பெ.(n.) உமரிப்பூடு; Indian salt-wort (சா.அக.).

*[கன + அமலம்.]*

**கனவரம்** *kaṉavaram,* பெ.(n.) உடலின் சிறந்த பகுதி; the vital part of the body (சா.அக.).

*[கன → கனவரம்.]*

**கனவரி—த்தல்** *kaṉavari-,* 4 செ.கு.வி.(v.i.) கனவில் தனக்குத் தானே பேசுதல்; to talk in sleep.

க. கனவரிசு; தெ. கலவரிஞ்சு; து. கனம்பர், கணம்பர்.

[கனவு + அரி. அல(ப்பல்) → அரி(ப்பல்).]

**கனவல்** *kaṉaval*, பெ.(n.) கனாக்காண்கை; dreaming. *"கனவலிற் பொருக்கென வெழுந்து" (தணிகைப்பு. திருநாட்டுப்.42.).*

[கனவு → கனவல்.]

**கன்வளர்த்தி** *kaṉavaḷartti*, பெ.(n.) மிக்கவுயரம்; excessive tallness (சா.அக.).

[கன + வளர்த்தி. வளர்ச்சி → வளத்தி.]

**கனவளவு** *kaṉa-v-aḷavu*, பெ.(n.) **கனவளவை** பார்க்க; see *kaṉa-v-aḷavai.*

[கன + (அளவை) அளவு.]

**கனவளவை** *kaṉa-v-aḷavai*, பெ.(n.) அகல நீளங்களுடன் ஆழம் அல்லது உயரம் அல்லது கனத்தைப் பெருக்குதலாற் பெறப்பட்ட கணக்கு; cubic measure.

மறுவ. கனவளவு

[கன(ம்) + அளவை.]

**கனவான்** *kaṉavāṉ*, பெ.(n.) பெருமகன்; benign lord.

[கன(ம்) + ஆன்.]

**கனவியன்** *kaṉaviyaṉ*, பெ.(n.) பற்று மிக்கவன்; one who is deeply immersed or attached with world affairs. *"சம்சாரத்தில் நம்மிலும் கனவியரா யிருப்பார்கள்" (ஈடு,10,4,2,பக்.3).*

[கனம் → கனவன் + கனவியன்.]

**கனவு[1]-தல்** *kaṉavu-*, 5 செ.குன்றாவி.(v.t.) தூக்கத்தில் நேரில் நிகழ்வது போன்ற காட்சிகளைக் காணுதல்; to have visions in sleep as seen while awake, to dream. *"பரந்திலங் கருவியொடு ... நரந்தங் கனவும்" (பதிற்றுப்.11,22).*

ம. கனவுக; க. கனகான்; தெ. கலகனு; பட. கனசு காணு.

[கலவு → கனவு-.]

**கனவு[2]-தல்** *kaṉavu-*, 5 செ.கு.வி.(v.i.) மயங்குதல்; to be charmed, allured. *"சிந்தை மாத்திரங் கனவலின்" (ஞானா.41,9.).*

[கலவு → கனவு-.]

**கனவு[3]** *kaṉavu*, பெ.(n.) 1. நனவில் உள்ளது போன்றே தூங்குபவனின் மனத்திரையில் தோன்றும் தொடர் நிகழ்வுகள் அல்லது காட்சிகள்; vision series of pictures or events, presented to sleeping person. *"கனவினாற் காதலர்க் காணாதவர்" (குறள்,1219.).* இராக் கண்ட கனவு மிடாப்போல வீங்கியது *(உ.வ.).* 2. தூக்கம்; sleep. *"கனவு முண்டேல்" (திருக்கோ.378.).* 3. மயக்கம் (திவா.); stupor, drowsiness.

ம. கனவு,கினாவு; க. கன,கனசு,கணச;தெ., கொலா.,நா. கல; பட. கனசு; து. கன.; குட. கெனசி; துட. கொனொவ்; பர். கெலய்; கட. கிர்க்; கோண். கனச்கானா (கனவு காண்).

குரு. கந்தர்னா (உறங்கு); மால். காந்த்ரெ (உறங்கு)

[கலவு → கனவு.]

**கனவுக்கன்னி** *kaṉavu-k-kaṉṉi*, பெ.(n.) மனதில் நிறைந்தபெண்; lovely damsel.

[கனவு + கன்னி.]

**கனவுகாண்-தல்** *kaṉavukāṇ-*, 13 செ.குன்றாவி.(v.t.) **கனாக்காண்** பார்க்க; see *kaṉā-k-kāṇ.*

க. கனகாண்; பட. கனசுகாண. கோண். கனச்கானா; பர். கெலய்; து. கனகட்டுனி.

[கனவு + காண்.]

**கனவுடல்** *kaṉa-v-uḍal*, பெ.(n.) தூங்கும் நிலையிலுள்ள மெய் (உடம்பு). (சி.போ.சூர்ணி); body of a person who is sleeping.

[கனவு + உடல்.]

**கனவுநூல்** *kaṉavunūl*, பெ.(n.) கனவைப்பற்றி சொல்லும் ஒரு நூல்; a book on dreams.

மறுவ. கனாநூல்

[கனவு + நூல்.]

**கனவுமூலி** *kaṉavu-mūli*, பெ.(n.) நச்சுமூங்கில். (மலை.); Asiatic poison bulb or asiatic quill (சா.அக.).

[கனவு + மூலி.]

**கனவுலகம்** *kaṉvulakam*, பெ.(n.) கற்பனையுலகம்; dream world.

[கனவு + உலகம்.]

**கனற்கண்** *kaṉaṟ-kaṉ,* பெ.(n.) 1. திட்டிவிடம், நஞ்சு; a kind of snake whose look is considered fatal, basilisk. 2. சினக்கண்; eye which shows the angry or enraged. 3. சிவந்தகண்; reddened eye.

*[கனல் + கண்.]*

**கனற்கூர்மை** *kaṉaṟ-kūrmai,* பெ.(n.) வளையலுப்பு; glass-gall.

*[கனல் + கூர்மை.]*

**கனற்கொடி** *kaṉaṟ-koḍi,* பெ.(n.) வால்மீன், புகைக் கொடி; comet. *"கலகக் கனற்கொடிகள்" (தக்கயாகப்.457.).*

*[கனல் + கொடி.]*

**கனற்சட்டி**[1] *kaṉaṟ-c-aṭṭi,* பெ.(n.) நெருப்புக்கலம்; brazier.

*[கனல் + சட்டி.]*

**கனற்சட்டி**[2] *kaṉaṟ-c-aṭṭi,* பெ.(n.) நோயாளியின் கழிகலம்; bed pan.

*[கனல் + சட்டி.]*

**கனற்சி** *kaṉaṟci,* பெ.(n.) 1. வெப்பம்; heat, glow. 2. உள்ளக் கொதிப்பு; rage, anger. வீரனது கனற்சியைச் சொல்லியது (பு.வெ,8,27,கொளு, உரை.).

*[கனல் → கனற்சி.]*

**கனற்சிலை** *kaṉaṟ-cilai,* பெ.(n.) 1. ஒருவகைக் கருங்கல்; a kind of black stone. 2. மந்தாரச்சிலை எனப்படும் ஒருவகை மருந்துக் கல்வகை; a kind of medicinal stone by name mandhāra-c-cilai.

*[கனல் + சிலை.]*

**கனற்சுக்கிரன்** *kaṉaṟ-cukkiraṉ,* பெ.(n.) விழியில் வலியையும், உள்ளே காந்தலையும் உண்டாக்கும் ஒரு கண்ணோய் (சீவரட்.265.); a disease of the eye.

*[கனல் + சுக்கிரன்.]*

**கனற்பு** *kaṉaṟpu,* பெ.(n.) 1. நெருப்பு; fire. அடுப்பு; oven.

*[கனல் + பு. 'பு'சொ.ஆ.ஈறு.]*

**கனற்று**[2]**-தல்** *kaṉaṟṟu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. எரி வித்தல்; to cause to burn. *"கலந்தவர் காமத் தைக் கனற்றலோ செய்தாய்" (கலித்.148.).* 2. சுடு வித்தல்; to heat gently, to impart heat by direct rays, not applicable to heating in a vessel. வெயில் பிள்ளையைக் கனற்றியது (வின்.): 3. வெதுப்புதல்; to render warm. *"கனற்றக் கொண்ட நறவென்னாம்" (புறநா.384.).*

*[கனல் → கனற்று (வே.க.183).]*

**கனற்று**[3]**-தல்** *kaṉaṟṟu-,* 5 செ.கு.வி.(v.i.) மிக விளங்குதல்; to shine brightly. *"காதல் கனற்ற நின்றானும்" (தேவா.696,7.)*

*[கனல் → கனற்று.]*

**கனறல்** *kaṉaṟal,* பெ.(n.) சினம் (வின்.); anger.

*[கனல் → கனறல்.]*

**கனன்மரம்** *kaṉaṉ-maram,* பெ.(n.) ஒளிமரம் (சங். அக.); a kind of tree said to shine in the dark.

*[கனல் + மரம் = கனன்மரம். 'ன்' ஈற்றுப்போலி. வடமொழியாளர் இதனைச் சோதிமரம் என்பர்.]*

**கனனஞ்செய்-தல்** *kaṉaṉañ-cey-,* 1 செ.குன்றாவி. (v.t.) பிணம் முதலியன புதைத்தல் (உ.வ.); to bury as a corpse.

*[கனனம் + செய்-. கனல் → கனலம் → கனனம் = எரியூட்டுதல், சுடுதல்.]*

**கனனத்தம்பம்** *kaṉṉana-t-tambam,* பெ.(n.) அறுபத்துநான்கு கலையுள் புதையலை அகப்படாமற் செய்யும் கலை (வின்.); art of preventing the discovery of buried treasures one of *aṟupattu-nālu-kalai.*

*[கல் = தோண்டுதல், கல் → கன் → கனனம் = தம்பம். தம்பம் = நிறுத்துதல், தடுத்தல், செயற்படாமற் செய்தல்.]*

**கனனம்** *kaṉaṉam,* பெ.(n.) குழிமுதலியன கல்லுதல்; digging. *"கனனாவபூரண சேசனமும்" (தத்துவர்.69.)*

*[கல் (தோண்டுதல்) → கன் + அன் + அம் = கனனம் 'அன்' சாரியை 'அம்' பெயரீறு.]*

**கனனிறக்கல்** *kaṉaṉiṟa-k-kal,* பெ.(n.) மாணிக்கம் (வின்.); ruby.

மறுவ. சிவப்புக்கல்

*[கனல் + நிறம் + கல்.]*

**கனா** *kaṉā,* பெ.(n.) கனவு; dream. *"கனாவுறு திறத் தினும்" (மணிமே.27,281.).* கிடக்கிறது ஒட்டுத் திண்ணை கனவு காண்பது மச்சுவீடு (வ.ழு.).

**ம.** கினாவு; **க., து.** கன; **தெ.**;கொலா, நா. கல

*[கலவு → கனவு → கனா = திரிபீற்றுப் பெயர்ச்சொல். ஒ.நோ நிலவு → நிலா.]*

**கனாக்காண்(ணு)-தல்** *kaṉā-k-kāṇu-,* 6 செ.குன்றாவி. (v.t.) 1. கனவு காணுதல்; to dream. *"கனாக்கண்டேன் தோழி நான்" (திவ்.நாய்ச்.6,1).* 2. கிடைத்தற்கரியதைப் பெற விழைதல்; to aspire for anything beyond reach.

**ம.** கனாவிக்குக; **க.** கனகான், கனசுகாண்.; பட. கனசுகாணு.

*[கனா + காண்.]*

**கனாநூல்** *kaṉā-nūl,* பெ.(n.) கனாப்பயன்களைப் பற்றிப் பொன்னவன் என்ற புலவர் இயற்றிய நூல். (சிலப்.15,106.உரை.); treatise on the significance of dreams by Poṉṉavaṉ.

*[கல → கலவு → கனவு → கனா + நூல்.]*

**கனி[1]-தல்** *kaṉi-,* 4 செ.கு.வி.(v.i.) 1. பழுத்தல்; to ripen, as fruits; to turn mellow, luscious sweet. *"கால மின்றியுங் கனிந்தன கனி" (கம்பரா.வனம்பு. 44.).* 2. அளிதல்; to be over ripe. 3. முதிர்தல்; to become complete, perfect. *"கன்னிமை கனியா" (பரிபா.11,136.).* 4. இனித்தல்; to be mellifluous, to be full of sweetness. *"கனிந்த சொல்லாய்" (தஞ்சைவா.174).* 5. மனமுதலியன இளகுதல்; to melt, grow tender, become soft, as the heart by affection, love, devotion. *"விஞ்சையர் கனிந்து சோர்ந்தார்" (சீவக.727)* (சூ.கரி.). 6. தழல்மிகுதல்; to be red-hot, to glow. நெருப்புக் கனிகின்றது (உ.வ.). 7. பழுக்கக் காய்தல்; to become red-hot, as a metal. கனிய வெந்த இரும்பு. 8. முன்சினம் அடைதல் (சூடா.); to get suddenly angry, to be irritable.

**ம.** கனியுக; **க.** கனிகரிசு, கழி, களி; **தெ.** கனி. **து.** கனி, கணி; **குவி.** கம்பலி.

*[கன் → கன்னு → கன்னி → கனி → கனிதல்.]*

**கனி[2]-த்தல்** *kaṉi-,* 4 செ.குன்றாவி.(v.t.) இளகச் செய்தல்; to melt, soften. *"அனங்கனைக் கனிக்கு நீராள்" (சீவக.607.).*

**ம.** கனிக்குக.

*[கன் → கன்னு → கன்னி → கனி → கனி-த்தல்.]*

**கனி[3]** *kaṉi-,* பெ.(n.) 1. கனிவு; ripeness, maturity. *"கனிவளர் கிளவி" (சீவக.486).* 2. பழம்; fruit; ripe, mellow fruit. *"கனியிருப்பக் காய்கவர்ந்தற்று"* (குறள்,100). 3. இனிமை. (சூடா.); sweetness. 4. சாரம்; essence. *"காமக் கொழுங்கனி சுவைத்து" (சீவக.1985.).* 5. **கனிச்சீர்** பார்க்க; see *kaṉi-c-cīr. "வெள்ளைத் தன்மை குன்றிப்போஞ் சீர்கனிபுகில்" (காரிகை,ஒழிபி.3.).* 6. மூவசைச்சீரில் இறுதியிலுள்ள நிரையசை; the last metrical division in a word of three syllables sounding like `Kaṉi'. *"அந்தங் கனியா.... வகுத்த வஞ்சிக்குரிச்சீர்" (காரிகை. உறுப்.7.).*

**மறுவ.** பழம், நெற்று, காய்ப்பழம், ஒதப்பழம்,.

**ம.** கனி.

*[குல் → கல் → கன் → கனி. (முதிர்தல், பழுத்தல்) கனி (பழம்) என்னும் சொல், கன்னி (பழுத்தது) என்பதன் தொகுத்தலே.]* (பண்.தமி.நா.ப.17).

**கனிவகைகள்:**

1. காய் – தெங்கு பூசணி முதலியவற்றின் கனி; 2. கனி – முந்திரி,நெல்லி முதலியவற்றின் கனி (கனிவாயிருப்பது); 3. பழம் – மா, வாழை முதலியவற்றின் கனி (பழுப்பு நிறமானது); 4. நெற்று – வேர்க்கடலை போன்றதின் முதிர்வு; 5. காய்ப்பழம் – பழுக்கத் தொடங்கிய காய்; 6. ஒதப்பழம் – புளியின் காய்ப்பழம். (சொ.ஆ.க.68.).

**கனி[4]** *kaṉi,* சுரங்கம்; mine. பெ.(n.)

**Oriya**; khani.

*[கல் → கல்லி (தோண்டுதல்) → கனி.]*

**கனிக்காய்** *kaṉi-k-kāy,* பெ.(n.) பழுக்கும் பதத் திலுள்ள காய் (சிலப்.16,24 உரை.); unripe fruit in the process of ripening. *"பூவாது காய்க்கும்*

*பாகலினுடைய கொழுவிய திரண்ட கனிக்காயும்" (சிலப்–கொலைக்.24.).*

*[கனி + காய்.]*

**கனிக்காழ்** *kaṉi-k-kāḻ,* பெ.(n.) பழத்தின்விதை. (திவா.); seedling, seed of a fruit.

*[கனி + காழ்.]*

**கனிகரம்** *kaṉi-garam,* பெ.(n.) அன்பு; affection, love.

**ம., க.** கனிகரம்; **தெ.**கனிகரமு; **து.** கனிகர.

*[கனி + கரம். கரம் = செய்தல். கனிகரம் = மனம் கனியச் செய்யும் பண்பு, அன்பு.]*

**கனிகாலம்** *kaṉi-kālam,* பெ.(n.) பழுக்குங் காலம். (வின்.); fruiting season.

*[கனி + காலம். கனிகாலம் – வினைத்தொகை. கனிதல் = முதிர்தல், பழுத்தல்.]*

**கனிச்சீர்** *kaṉi-c-cīr,* பெ. (n.) கனி என்ற வாய்ப்பாடு கொண்ட அசையை இறுதியிலுடைய வஞ்சியுரிச்சீர். (யாப்.வி.12.); (pros.); foot of three Asai necessarily ending in Nirai, of four kinds.

*தேமாங்கனி: நேர் – நேர் – நிரை*

*புளிமாங்கனி: நிரை – நேர் – நிரை*

*கருவிளங்கனி: நிரை – நிரை – நிரை*

*கூவிளங்கனி: நேர் – நிரை – நிரை.*

*[கனி[3] + சீர். கனி என்னும் சொல்லே, இருகுறில் இணைந்த நிரையசையாதலின், நிரையசையில் முடியும் முச்சீர் வாய்பாட்டிறுதி, "கனிச்சீர்" என இலக்கண நூலோரால் குறியிடப்பட்டு வழக்கூன்றியது.]*

**கனிந்தபாடம்** *kaṉinda-pāḍam,* பெ.(n.) தெளிந்த பாடம். (வின்.); well-learnt lesson, verse well committed to memory.

*[கனிந்த + பாடம்.]*

**கனிப்பு** *kaṉippu,* பெ.(n.) இனிமை; mellifluence, sweetness, pleasantness. *"கனிப்புறு சொல் லளைஇ" (சீவக.1020.).*

*[கனி → கனிப்பு.]*

**கனிப்பொருள்** *kaṉi-p-poruḷ,* பெ.(n.). **கனிமம்** பார்க்க; see *kaṉimam.*

**H.** kaniz

*[கனி + பொருள்.]*

**கனிபலா** *kaṉipalā,* பெ.(n.) வாகை; sirissa tree (சா.அக.).

*[கனி (நெற்று) + பலா.]*

**கனிமநீர்** *kaṉima-nīr,* பெ.(n.) இயற்கைக் கனிமம் நிறைந்த நீர்; mineral water.

*[கனிம(ம்) + நீர்.]*

**கனிமம்** *kaṉimam,* பெ.(n.) தனித்த பண்புகளைக் கொண்ட, இயற்கையான தோண்டப்பட்ட பொருள், இயற்கைப்பொருள்; mineral.

**மறுவ.** கனிப்பொருள்

**H.** kaniz; **Guj.** khanij.

*[கல் → கல்லி → கன்னி → கனி → கனிமம்.]*

**கனிமவியல்** *kaṉimaviyal,* பெ.(n.) கனிமங்களைப் பற்றிய பாடம்; mineralogy, science of mineral.

*[கனிமம் + இயல்.]*

**கனிமவேதியியல்** *kaṉima-vētdiyiyal,* பெ.(n.) கனிமங்கள் குறித்த வேதியியல்; inorganic chemistry.

*[கனிம(ம்) + வேதியியல்.]*

**கனிமுதல்** *kaṉimudal,* பெ.(n.) வெள்ளி; silver (சா.அக.).

*[கனி + முதல்.]*

**கனிமேதி** *kaṉimēdi,* பெ.(n.) கற்கண்டு; sugar-candy (சா.அக.).

*[கனி + மேதி. மேலி → மேதி.]*

**கனியளவு** *kaṉayaḷavu,* பெ.(n.) எலுமிச்சம் பழ அளவு; as big as lemon fruit.

*[கனி + அளவு.]*

**கனியாமணக்கு**[1] *kaṉi-y-āmaṇakku,* பெ.(n.) ஒரு வகையாமணக்கு; a kind of castor.

*[கனி + ஆமணக்கு.]*

**கனியாமணக்கு**[3] *kaṉi-y-āmaṇakku,* பெ.(n.) பப்பாளி; common papaw (சா.அக.).

*[கனி + ஆமணக்கு.]*

**கனியுறை** *kaṉi-y-uṟai,* பெ.(n.) விதைகளின் மேலுறை; pericarp.

*[கனி + உறை → கனியுறை.]*

**கனிவல்லி** *kaṉi-valli,* பெ.(n.) வெள்ளைக் குன்றி மணி; white country liquorice (சா.அக.).

*[கனி + வல்லி.]*

**கனிவாழை** *kaṉi-vāḻai,* பெ.(n.) வாழைவகை; a kind of sweet plantain. "தீங்கனி வாழையின் பழனும்" (சீவக.1562).

*[கனி + வாழை.]*

**கனிவு** *kaṉivu,* பெ.(n.) 1. முதிர்கை; ripening. 2. அன்பு; love. *"கண்டேனெஞ் சங்கனிவாய்க் கனிவாய்விடம்" (இராமா.நகர்நீங்.48.).* 3. மாந்த நேய வெளிப்பாடு; tenderness. 'கனிவுடன் நோக்கப் பிணிபாதி போகும்.' *(உ.வ.)* 4. இரக்கம்; compassion. *"கனிவுறுமன்பிலாழ்ந்து" (திருவிளை. மாய. 27.).*

**ம.** கனிவு; **க.** கனி, கனிகர; **தெ.** கனிகரமு; **து.** கனிகர.

*[கனி → கனிவு.]*

**கனுக்கு**[1]**–தல்** *kaṉukku-,* 5 செ.கு.வி.(v.i.) பாடும் போது கண்டத்தொனி உருளுதல்; to shake the voice in singing, quaver or flourish.

*[கல் → கனு → கனுக்கு–.]*

**கனுக்கு**[2]**–தல்** *kaṉukku-,* 5 செ.குன்றாவி. (v.t.) கசங்கப்பண்ணுதல்; to emaciate, to grow lean by disease or by labour, to train, inure, keep closely engaged; to cause to grow mellow by heat, or by reiterated pressure. காய்ச்சல் நாளுக்கு நாள் அவனைக் கனுக்கிப் போட்டது (உ.வ.).

*[கல் → கன் → கனுக்கு–.]*

**கனுக்குப்பினுக்கெனல்** *kaṉukku-p-piṉukkeṉal,* பெ.(n.) 1. மிகக்களித்தற் குறிப்பு; expr. signifying ecstasy, great joy, conviviality. 2. ஒலிக்குறிப்பு; onom, expr. signifying bustling, rustling.

*[கனுக்கு + பினுக்கு + எனல்.]*

**கனுகு–தல்** *kaṉugu-,* 7 செ.கு.வி.(v.i.) நோயால் இளைத்தல்; to emaciate as from diseases (சா.அக.)

*[கல் → கன் → கன்று. கன் → கனுகு.]*

**கனுப்பிடி** *kaṉu-p-piḍi,* பெ.(n.) ***கன்னிப்பிடி*** பார்க்க; see *kaṉṉi-p-piḍi.*

*[கன் → கன்னி → கனு + பிடி.]*

**கனுப்பொங்கல்** *kaṉu-p-poṅgal,* பெ.(n.) ***கன்னிப்பொங்கல்*** பார்க்க; see *kaṉṉi-p-poṅgal.*

*[கன் → கன்னி → கனு + பொங்கல்.]*

**கனை**[1]**–தல்** *kaṉai-,* 4 செ.கு.வி.(v.i.) 1. நெருங்குதல்; to be crowded. *"கனைதுளி சிதறென" (கலித்.16,7.).* 2. மிகுதல்; to be intense. *"காமங் கனைந்தெழ" (பரிபா.10,63.).* 3. ஒலித்தல்; to sound, as a drum. *"ஆடுதொறு கனையும் ... துடி" (அகநா.79.).*

**ம.** கனெக்க; **கோத.** கன்வ் (மாடு அல்லது எருமை கன்றுக்காகக் கத்துதல்) **துட.** கென்வ் (உருமுதல்); **க.** கனெ: **குட.** கெனெ; **பட.** கனெ (கால் நடைகள் ஒலி எழுப்புதல்)

*[கல் → கன் → கனை–.]*

கனை, அகவு, குரை, பிளிறு முதலிய கத்து வினைச்சொற்கள் ஒலிக்குறிப்பையடியாகக் கொண்டு பிறந்தவை. [மு.தா.4.]. சில அஃறிணை யொலிக்குறிப்புகளும் சொற்களும் கடுமை அல்லது இழிவுபற்றி, மக்கள் செயலையுங் குறிக்கவரும். எ.கா: ஏண்டா சும்மா கனைக்கிறே [உ.வ.].

**கனை**[2] *kaṉai,* பெ.(n.) 1. செறிவு (சூடா.); density, crowdedness, closeness, intensity. *"கனையிரு முந்நீர்" (மதுரைக்.235).* 2. நிறைவு ( உரி.நி.); fullness. repletion. 3. மிகுதி; abundance. *"கனையெரி" (புறநா. 23.11.).*

*[கல் → கன் → கனை.]*

**கனை**[3]**–த்தல்** *kaṉai-,* 4 செ.கு.வி.(v.i.) 1. தொண்டையைச் சீர்படுத்துதல்; to become clear or shrill as the voice. 2. ஒலித்தல்; to sound, as a drum; to bellow, as a buffalo. *"கனைகடற் றண்சேர்ப்ப" (நாலடி.349). "மேதி கன்றுள்ளிக் கனைப்ப" (கம்பரா. நாட்டுப்.13.).* 3. குதிரை முதலியன கத்துதல். (உ.வ.); to neigh, as a horse. 4. கொக்கரித்தல் (வின்.); to laugh in contempt, ridicule, hum and haw. 5. வடமொழி ஐவர்க்க எழுத்துகளுள் நான்கா மெய்களை அழுத்தியொலித்தல் (நன்.146,மயிலை); to sound the aspirated soft consonants in Sanskrit.

*[கல் → கன் → கனை.]*

**கனை**[4]**–த்தல்** *kaṉai-,* 4 செ.கு.வி.(v.i.) 1. திரளுதல்; to mature; to grow round, as fruits. *"கவிழ் கனைத்து ... தீங்கழைக் கரும்பு" (மலைபடு.117).* 2. இருளுதல் (சூடா.); to become darkened. 3. மூண்டு செல்லுதல்; to proceed in eager, haste. *"மனத்தினார் மாண்பலா நெறிகண்மேலே கனைப்பரால்" (தேவா.9,8.).* 4. கதறல்; to bleat. *"மேதி கன்றுள்ளிக் கனைப்பச் சோர்ந்த பாலுண்டு" (இராமா.நாட் டு.13).*

**ம.** கனய்க்குக; **க.** கெனெ; **கோத.** கன்வ்; **துட.** கென்வ்.

**E.** neigh

*[கல் → கன் → கனை-.]*

**கனை**[5] *kaṉai,* பெ.(n.) 1. ஒலி (சூடா.); sound,roar, resonance. 2. சிரித்தல்; laughing. கனைப்பு; neigh.

*[கல் → கன் → கனை.]*

**கனை**[6] *kaṉai,* பெ.(n.) பருத்துக் குறுகின வடிவும், பசும் பொன்னிறமு முள்ள பெண்; stout, short-statured woman of a golden complexion. *"தரித்தபேர் கனையென்றோதும்" (கொக்கோ.4,5.).*

*[குல் → கல் → கன் → கனை.]*

**கனை**[7] *kaṉai,* பெ.(n.) மூங்கில்; bamboo (சா.அக.).

*[கழை → கணை → கனை.]*

**கனைப்பு** *kaṉaippu,* பெ.(n.) 1. ஒலி; sound, roar. 2. குதிரை முதலியவற்றின் குரலோசை; neighing, braying, bellowing. 3. கொக்கரிப்பு (வின்.); laughter, giggling, chukling.

**ம.** கனய்பு, கனப்பு.

*[கனை → கனைப்பு.]*

**கனைவரிவண்டு** *kaṉai-vari-vaṇḍu,* பெ.(n.) பல வரிகளையுடைய வண்டுவகை; a kind of beetle with several stripes (சா.அக.).

*[கனை[2] + வரி + வண்டு.]*

**கனைவலங்கள்ளி** *kanai-valaṅ-kaḷḷi,* பெ.(n.) ஐங்கணுக் கள்ளி; five angled milk spurge (சா.அக.).

*[கனை[2] + வலம் + கள்ளி.]*

**கனைவு** *kanaivu,* பெ.(n.) நெருக்கம் (சங்.அக.); closeness, thickness.

*[குல் = கூடுதல், நெருங்கல். குல் → கல் → கன் → கனை → கனைவு.]*

